# சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்

## தொகுதி - 4

நக்கண்ணையார் - பீள்



தமிழ்ப் பல்கலைக்கழகம்

தஞ்சாவூர் - 613 010

# சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்

## தொகுதி - 4

**நக்கண்ணையார் - பீள்**

முதன்மைப் பதிப்பாசிரியர்

**முனைவர் சி. சுப்பிரமணியன்**

பதிப்புதவியாளர்கள்

முனைவர் வ. குருநாதன்

புலவர் த. முருகையன்

முனைவர் க. திலகவதி



**தமிழ்ப் பல்கலைக்கழகம்**

தஞ்சாவூர் - 613 005

ISBN : 81-7090-381-5

தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு : 320

*திருவள்ளுவராண்டு 2037, மார்கழி - திசம்பர் - 2006*

| | | |
|---|---|---|
| **துறை** | : | சங்க இலக்கியப் பொருட்களஞ்சியத் திட்டம் |
| **நூல்** | : | சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்<br>தொகுதி - 4 |
| **மொழி** | : | **தமிழ்** |
| **பொருள்** | : | **களஞ்சியம்** |
| **பதிப்பு** | : | **முதற்பதிப்பு - திசம்பர் 2006**<br>**இரண்டாம் பதிப்பு - சூன் 2013** |
| **பக்கம்** | : | **8 + 568** |
| **தாள்** | : | **டிஎன்பிஎல் மேப்லித்தோ 16 கிலோ** |
| **அளவு** | : | **1/4 டெம்மி** |
| **நூற்கட்டுமானம்** | : | **முழு காலிகோ** |
| **விலை** | : | உரூ. 900.00 |
| **படிகள்** | : | **500** |
| **அச்சு** | : | **பவர்மேன் பிரிண்டர்ஸ், சென்னை.** |

முனைவர் ம. திருமலை
துணைவேந்தர்



தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 010.

# அணிந்துரை

மொழி என்பது ஒரு கருத்துப் புலப்பாட்டுக் கருவி மட்டுமன்று; அது ஓர் இனத்தின் அடையாளம்; முகவரி. எந்த அளவுக்கு ஒரு மொழியில் படைப்புகளும் பரப்புகளும் உள்ளனவோ அந்த அளவுக்கு அம்மொழி வளமார்ந்த மொழியாகத் திகழ்கிறது என்பது பொருள். படைப்புகள் பல்துறையிலும் பெருகிட மொழி சொல்வளம் (Vocabulary) மிக்கதாக இருத்தல் வேண்டும். நம் தமிழ்மொழி மிக்க சொல்வளம் உடைய மொழியாகத் திகழ்கிறது. பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் எனும் வகையிலும், திசைச்சொல், குறிப்புச் சொல் முதலிய பல வகையிலும் ஏராளமான சொல் வளத்தைத் தமிழ்மொழி கொண்டிருக் கிறது. அத்துடன் உருவாக்கச் சொற்களும் நாள்தோறும் மிகுதியாக வருகின்றன. பல்வேறு துறைகளுக்கும் பொருண்மைகளுக்கும் உரியவாறு தொடர்ந்து புதிய புதிய சொற்கள் உருவாக்கப்பட வேண்டியது மிகவும் இன்றியமையாததாகும். இதற்கு, இருக்கின்ற சொற்களையும் அவற்றின் பொருள்களையும் முழுமையாக அறிந்திருப் பது அவசியம். அப்போதுதான் புதிய சொற்களை உருவாக்குவது எளிதாக இருக்கும். தமிழ் மொழியில் வெற்றுச்சொற்கள் எவையுமில்லை. ''எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே'' என்பார் தொல்காப்பியர். இது மட்டுமன்று; தமிழ்மொழிச் சொற்கள் - குறிப்பாகப் பகுதிச் சொற்கள் மிகக் குறுகிய வடிவமைப்புடையவை; நட, வா, மடி, சீ, விடு, கூ, படி, செய் முதலிய எண்ணற்ற சொற்கள் இத்தகையவை. பொருள் ஆழமும் அகலமும் உடையவை.

சங்க இலக்கியச் சொற்கள் இப்பெருஞ்சிறப்பிற்குரியனவாகும். இத்தகைய சுருக்கமான - ஆழ்ந்த - அகன்ற பொருள் தருகின்ற வேர்ச்சொல் அமைப்புதான் புதுப்புதுச் சொற்களை உருவாக்க உதவும். எனவே, சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள சொற்களையும், அவற்றிற்குரிய பொருள் விளக்கங்களையும் தொகுத்துச் 'சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்' எனும் நூல்களைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் ஏற்கெனவே வெளியிட்டுள்ளது. இது மிகப்பெரும் பணியாகும். இந்நூலின் நான்கு தொகுதிகள் முன்பு வெளியிடப்பட்டுள்ளன. ஐந்தாம் தொகுதிக்கும் ஆறாம் தொகு திக்கும் உரிய சொற்பொருள் விளக்கங்கள் பல ஆண்டுகட்கு முன்பே தொகுக்கப் பட்டிருந்தும் அவை அச்சேறாமல் இருந்துவிட்டன என்பது அறியப்பட்டது. அவற்றையும் நூல்களாக உடன் வெளிக்கொணர வேண்டியதன் இன்றியமை யாமையை உணர்ந்து, அரிதின் முயன்று, தேடிக் கண்டுபிடித்து, உரிய பணிகள் விரைந்து மேற்கொள்ளப்பட்டன. இம்முயற்சியின் காரணமாக ஐந்தாம் தொகுதி நூலும், ஆறாம் தொகுதி நூலும் புதிதாகத் தற்போது வெளியிடப்பட்டுள்ளன.

முந்தைய நான்கு தொகுதிகளின் தேவை கருதி அவையும் தற்போது மறுபதிப்பாகக் கொண்டுவரப்பட்டுள்ளன. இவ்வகையில் சங்க இலக்கியப் பொருட்களஞ்சியங்கள் ஆறு தொகுதிகளும் அறிஞர்களுக்குக் கிடைக்கும் நல்வாய்ப்பு அமைந்துள்ளது.

சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள சொற்கள், அவற்றிற்குரிய பொருள் விளக்கங்கள், ஒப்புமை மற்றும் உயர்வுகளையெல்லாம் அனைவரும் ஐயந்திரிபற அறிந்து இலக்கிய இன்பம் நுகரவும், புதிய புதிய சொற்களையும் படைப்புகளையும் உருவாக்கவும் இந்நூல்கள் முழுமையாய்ப் பயன்படும் என்பது உறுதி. இந்நூல்களை உருவாக்கிய அறிஞர்கள் அனைவரும் போற்றத்தக்கவர்களாவர். அனைவருக்கும் என் வணக்கமும் நன்றியும் உரியதாகும். புதிதாக வெளியிடப்பட்டுள்ள ஐந்தாம் தொகுதி, ஆறாம் தொகுதி ஆகியவற்றிற்குரிய மெய்ப்புத் திருத்தப் பணிகளை என் வேண்டுகோளை ஏற்றுக் கண்ணுங்கருத்துமாய்ச் செய்தளித்துள்ள முனைவர் சா. கிருட்டினமூர்த்தி, முனைவர் தா. ஈசுவரபிள்ளை, முனைவர் அர. கமலதியாக ராசன் ஆகியோருக்கு என் பாராட்டுகளையும் நன்றியையும் தெரிவித்துக் கொள் கிறேன். ஆறு தொகுதிகளின் அச்சுப் பணிகளுக்கு ஆவன செய்த பதிப்புத்துறை இயக்குநர் திரு. வை. கண்ணபுரக்கண்ணன், கணினியச்சு செய்த நிறுவனத்தார், அச்சகத்தினர் அனைவருக்கும் என் நன்றி!

சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத். | - | அகத்திணையியல் |
| அகம். | - | அகநானூறு |
| அ.சி. | - | அபிதான சிந்தாமணி |
| உ.வே.சா. | - | உ.வே.சாமிநாதையர் |
| ஔவை.து. | - | ஔவை துரைசாமிப்பிள்ளை |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| ஐங்.தி. | - | ஐங்குறுநூறு திரட்டு |
| க.க. | - | கலைக் களஞ்சியம் |
| க.வா. | - | கடவுள் வாழ்த்து |
| கலி. | - | கலித்தொகை |
| குறி. | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறு. | - | குறுந்தொகை |
| ச.சி.பெ. | - | சங்ககாலச் சிறப்புப் பெயர்கள் |
| சிறு. | - | சிறுபாணாற்றுப்படை |
| சூ. | - | சூத்திரம் |
| த.பே. | - | தமிழ்ப் பேரகராதி |
| த.வ.க. | - | தமிழ்ப்புலவர் வரலாற்றுக் களஞ்சியம் |
| தி. | - | திரட்டு |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நச்.,நச்சர் | - | நச்சினார்க்கினியர் |
| ந.சு. | - | ந. சுப்பிரமணியன் |
| ந.மு.வே. | - | ந.மு.வேங்கடசாமி நாட்டார் |
| நற். | - | நற்றிணை |
| நெடு. | - | நெடுநல்வாடை |
| பக். | - | பக்கம் |
| பட். | - | பட்டினப்பாலை |
| பதி. | - | பதிற்றுப்பத்து |
| பதி.தி. | - | பதிற்றுப்பத்து - திரட்டு |
| பதி.ப. | - | பதிற்றுப்பத்து - பதிகம் |
| ப.மு. | - | பல்லவர் காலத்துக்கு முன் (Pre-Pallavan Tamil Index) |
| பரி. | - | பரிபாடல் |
| பரி.தி. | - | பரிபாடல் - திரட்டு |
| பி.நா. | - | பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் |
| புறம். | - | புறநானூறு |
| பெரு. | - | பெரும்பாணாற்றுப்படை |
| பெருமழை | - | பெருமழைப் புலவர் பொ.வே. சோமசுந்தரனார் |
| பொரு. | - | பொருநராற்றுப்படை |
| பொருள் | - | பொருளதிகாரம் |
| மது. | - | மதுரைக்காஞ்சி |
| மலை. | - | மலைபடுகடாம் |
| முரு. | - | முருகாற்றுப்படை |
| முல்லை. | - | முல்லைப்பாட்டு |
| மொ.அ.து. | - | மொ.அ.துரையரங்கசாமி |
| வ.பி.அ. | - | வரலாற்றுப் பின்னணியில் அகநானூறு (Ahananuru in its Historical Setting) |
| வெ. | - | வெண்பா |
| வே.வி. | - | வேங்கட விளக்கு |
| வை.பி. | - | வையாபுரிப் பிள்ளை |

## பதிப்பு முகவுரை

சங்க இலக்கியப் பொருட்களஞ்சியத்தின் அகரம் முதல் ஔகாரம் முடியவுள்ள பெயர்களின் விளக்கங்கள் அமைந்த முதல் தொகுதி 1986 ஏப்பிரல் திங்களில் வெளிவந்தது; ககரம் முதல் கௌகாரம் முடிய வந்த பெயர்களின் விளக்கங்கள் அடங்கிய இரண்டாம் தொகுதி 1986 சூலைத் திங்களில் வெளிவந்தது; சகரம் முதல் தோகாரம் முடியநின்ற பெயர்களின் விளக்கங்களைக் கொண்ட மூன்றாம் தொகுதி 1988 செப்டம்பர் திங்களில் வெளிவந்தது; தொடர்ந்து, நகரம் முதல் பீகாரம் முடிய வரும் பெயர்களின் விளக்கங்களை உள்ளடக்கிய இந்த நான்காம் தொகுதி 1988-ஆம் ஆண்டிலேயே முடித்தளிக்கப்பெற்று, இப்போது வெளிவருகின்றது.

இந்த நான்காம் தொகுதியைப் பயன்படுத்துவோர், இக்களஞ்சிய உருவாக்கத்திற்கு மேற்கொண்ட நெறிமுறைகளை முதல் மூன்று தொகுதிகளின் பதிப்பு முகவுரைகளில் அறிந்து கொள்ளுதல், இதன் விளக்கங்களைத் தெளிவுற உணர்வதற்குத் துணையாகும். அவற்றுள் முதலிரு தொகுதிகளின் வேறாக மூன்றாம் தொகுதியில் மேற்கொண்ட ஒரு வேறுபாடு இந்நான்காம் தொகுதியில் மேற்கொள்ளப்படாமல் முன்னைத் தொகுதிகளையே பின்பற்றியிருப்பது குறிக்கத்தக்கது. அதாவது, ஒரு பொருளைக் குறிக்கும் ஒரு சொல்லின் வெவ்வேறு வடிவங்கள் அவற்றின் வரிசை முறையில் வெவ்வேறிடங்களில் அமைந்த முன்னை அமைப்புக்கு மாறாக, அவற்றை இணைத்து ஓரிடத்திலேயே அமைத்தது மூன்றாம் தொகுதி. எடுத்துக்காட்டாக, கூட்டம் என்ற ஒரே பொருளுக்குரிய கணம், கணன் என்ற எழுத்துப் போலிச் சொல்வடிவங்கள் இரண்டாம் தொகுதியில் வெவ்வேறிடங்களில் அமைந்தன; அவையொத்த சுரம், சுரன் என்ற சொல்வடிவங்கள் மூன்றாம் தொகுதியில் ஒரே இடத்தில் சுரம் / சுரன் என நிறுத்தப்பட்டுப் பொருள் விளக்கப் பெற்றன. இந்நான்காம் தொகுதி, முதலிரு தொகுதிகளின் அமைப்பிலேயே பதம், பதன், பயம், பயன் என்றவாறு வருகின்ற சொல் வடிவங்களை அவற்றின் வரிசை முறையில் வெவ்வேறிடங்களில் அமைத்துப் பொருள் விளக்கம் தந்துள்ளது. ஏனைய அமைப்புக்களில் இந்நான்காம் தொகுதி முதல்மூன்று தொகுதிகளின் தொடர்ச்சியே ஆகும்.

தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் சங்கஇலக்கியப் பொருட்களஞ்சியத்தை உருவாக்கத் திட்டம் வகுத்துத் தொடக்கிவைத்த முதல் துணைவேந்தர் முதுமுனைவர் வ.அய்.சுப்பிரமணியம் அவர்களுக்கும், இந்நான்காம் தொகுதி உருவாக்கத்திற்கு ஊக்கமும் ஆக்கமும் உவந்தளித்துப் பல்லாற்றானும் உதவிகள் புரிந்த முன்னைத் துணைவேந்தர் முனைவர் ச. அகத்தியலிங்கம் அவர்களுக்கும், பல்லாண்டுகளாக வெளிவராமல் கிடந்த இத்தொகுதியைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் வெள்ளிவிழா ஆண்டிலே வெளிவரச் செய்துள்ள இந்நாள் துணைவேந்தர் மாண்புமிகு முனைவர் சி. சுப்பிரமணியம் அவர்களுக்கும், இப்பணிக்கு உறுதுணையாய் இருந்த பல்கலைக்கழக நிர்வாகத்திற்கும் நன்றி.

இக்களஞ்சியத்து முதலிரு தொகுதிகளின் முதன்மைப் பதிப்பாசிரியர் முனைவர் இரா. சாரங்கபாணி, மூன்றாம் தொகுதியின் முதன்மைப் பதிப்பாசிரியர் முனைவர் ப. அருணாசலம் ஆகியோரைத் தொடர்ந்து, இந்நான்காம் தொகுதிக்கு முதன்மைப் பதிப்பாசிரியராய் விளங்கி இதனை உருவாக்கியவர் நாகர்கோயில் தென் திருவிதாங்கூர் இந்துக் கல்லூரியின் முன்னாள் துணை முதல்வரும் தமிழ்த்துறைத் தலைவருமாகிய பேராசிரியர் முனைவர் சி. சுப்பிரமணியன் அவர்கள் ஆவர். ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச் சான்றாண்மையோடு ஆழ்ந்த புலமையும் அமைந்த பேராசிரியர் அவர்கள் சிறந்த நெறியாண்மையோடு இத்தொகுதியை உருவாக்கியுள்ளார்கள். அத்தகைய சிறப்புமிக்க முதன்மைப் பதிப்பாசிரியர் முனைவர் சி. சுப்பிரமணியன் அவர்களுக்கும் நன்றி.

சங்க இலக்கியப் பொருட்களஞ்சியத் திட்டத்தைத் தன்னகத்தே கொண்ட தமிழ்ப் பல்கலைக்கழக இலக்கியத்துறையின் அந்நாள் தலைவர் பேராசிரியர் முனைவர் சோ.ந. கந்தசாமி அவர்களுக்கும், இத்தொகுதி வெளிவரும் இந்நாள் தலைவர் முனைவர் தா. ஈசுவரபிள்ளை அவர்களுக்கும் நன்றி.

இக்களஞ்சியத் தொகுதி உருவாவதற்கு முதன்மைப் பதிப்பாசிரியரின் கருத்திற்கிசைந்து என்னுடன் பணியாற்றி விளக்கங்களை எழுதியளித்த பதிப்புதவியாளர்கள் புலவர் த. முருகையன், முனைவர் க. திலகவதி ஆகியோர்க்கும், கையெழுத்துப் படிகளைத் தட்டச்சுச் செய்துதவிய திருமதி முனைவர் இரா. உமாமகேசுவரி, திரு நா. மோகன் ஆகியோர்க்கும் நன்றி.

இத்தொகுதியைச் செம்மையுற வெளியீடு செய்துள்ள தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்புத்துறை இயக்குநர் (பொ) முனைவர் ஆ. இராமநாதன் அவர்களுக்கும், பதிப்புத்துறையினர்க்கும் நன்றி.

இதனைத் தொடர்ந்து புகரம் முதலிய எழுத்துக்களை முதலாகக் கொண்ட பெயர்களின் விளக்கங்கள் அமைந்த களஞ்சியத்தின் ஐந்தாம் ஆறாம் தொகுதிகள் வெளிவரும். இக்களஞ்சியத்தைக் கண்ணுறும் அறிஞர் பெருமக்கள் இதன்கண் எவையேனும் குறைகளைக் காண்பராயின் அவற்றைத் தெரிவித்தால் நன்றியுடன் ஏற்று, அடுத்த பதிப்பினைத் திருத்தமுற வெளியிட வாய்ப்பாகும்.

தஞ்சாவூர் — வ. குருநாதன்
21.11.2006 — (முதன்மைப் பதிப்பாசிரியருக்காக)

# சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்

## ந

**நக்கண்ணையார்** - ஒரு புலவர். பெண்பாலார். பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார் எனவும் குறிக்கப் பெறுதலால் உறையூரின்கண் தலைமையுற்றிருந்த மரக்கல வணிகனொருவனின் மகளென்று இவரையறியலாம். இவ்வுறையூரை ஆண்ட தித்தன் என்பானுக்கு மகனான போர்வைக் கோப்பெருநற் கிள்ளியிடத்தே இவர் ஒருதலைக் காதலுற்றுப் பாடிய பாடல்கள் மூன்று, புறநானூற்றில் *[83,84,85]* இடம் பெற்றுள்ளன. அவனிடத்துக் காதலால் ஏங்கித் தொடிகள் கழலுமாறு தான் உடல் மெலிதலைத் தன் அன்னை காண்பதற்கு அஞ்சியும், அவனுடைய தோள்களைத் தழுவுதற்கு அவனைச் சார்ந்த அவையோரைக் கண்டு நாணியும் இவருற்ற பெருவிதுப்பினை ஒரு பாடலில் *[புற.83]* பொதிந்துரைப்பர். தந்தையொடு வெறுத்து, விலகி வந்து, முக்காவல் நாட்டு ஆமூரின்கண் தங்கியிருந்த அவன், வறியனாய்ப் புல்லரிசிக் கூழை உண்டும் வலிய பெருந்தோளனாயிருக்கையில், அவனுடைய சிறைப் புறத்திலேயிருந்து பலகாலும் அவனைக் கண்டும் மெய்யுறப் பெறாத வேட்கையால் வருந்தித், தான் பொன்போற் பசலை பூத்ததை மற்றொரு பாடலில் *[புறம்.84]*. மொழிவர். அவன் ஆமூர் மல்லனொடு பொருத போரில் அவனுக்கு இயல்பாய் வாய்த்த வெற்றியை அவனது வெற்றியாகவே மிகுத்து ஒரு சாரோரும், அவனது வெற்றியன்றென இழித்து மற்றொரு சாரோரும் ஒத்தும், ஒவ்வாமலும் கூறிய நிலையில், இவர் தாமே தம் காற்சிலம்பொலிப்ப ஓடிச்சென்று, அவனது வெற்றியைக் கண்டு பாடிய பாடலில் *[புற.85]* அவனிடத்தேயமைந்த இவரது ஆதரவு நன்கு வெளிப்படுகிறது.

புறநானூற்றில் அமைந்த இம்மூன்று பாடல்களேயன்றி அகநானூற்றில் 252-ஆம் எண்ணில் அமைந்ததொன்றும், நற்றிணையில் 19,87 ஆகிய எண்களில் அமைந்தனவிரண்டும் ஆக, வேறு மூன்று பாடல்களும் இவருடையனவாய் உள்ளன. இவரது அகவாழ்வின் ஆற்றாமை அவ்வகப் பாடல்களின் தலைவி நிலையிலும் இயல்புறப் படிந்துள்ளன. தன்னை அருங்கடிப்படுத்தி இரவெல்லாம் துயில் மறந்து காத்திருக்கும் அன்னைக்கு, மழைநாளிரவில் சிறுகரைப் பெருங்குளத்துக் காவலனைத் தலைவி உவமிப்பது *[அக.252]*, இவர் பாடலில் அமைந்த நயமான உவமையாம். ஊரினுள்ளிருக்கும் மாமரத்திலே தொங்கித் துயிலும் வெளவால், சோழர் மரபினனான அழிசியின் ஆர்க்காட்டு நெல்லியம் புளிச்சுவையைக் கனவு காண்பதுபோல் தானும் தலைவன் கூட்டத்தைக் கனவு கண்டு ஏங்கி மொழியும் தலைவியின் கூற்றினை இவர் உணர்வுற வடித்துள்ளார் *[நற்.87]*.

**நக்கீரர்** - ஒரு புலவர். நக்கீரர் என்றும், மதுரைக் நக்கீரர் என்றும், கணக்காயனார் மகனார் நக்கீரனார் என்றும், மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் என்றும் இவர் பெயர் பலவாறு வழங்கப்பெறும். இவற்றால் இவரது ஊர் மதுரை யென்பதும், தந்தையார் இலக்கண ஆசிரியரென்பதும் விளங்கும். இவர் தந்தையாருடைய பாடல்களும் சங்கத் தொகைகளில் காணப் பெறுதலால் இவரது புலமை மரபும் புலனாகும். இவர் பாடியனவாகப் புறநானூற்றில் மூன்றும் *[56,189,395]*, அகநானூற்றில் பதினேழும் *[36,57,78,93.120.126,141,205. 227.249,253,290,310,340,346,369,389]*, குறுந்தொகையில்ஏழும் *[78,105.143,161,266,280,368]*, நற்றிணையில் ஏழும் *[31.86,197,258. 340,358,367]*, பத்துப் பாட்டினுள் திருமுருகாற்றுப்படை, நெடுநல்வாடை ஆகிய இரண்டும் சேர, முப்பத்தாறு பாடல்கள் உள்ளன.

பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனைச் சிவபிரான், பலதேவன், மாயோன், முருகன் என்ற நால்வரோடும் இவர் ஒப்பிட்டு வாழ்த்தியுள்ளார் *[புற.56]*. சோழ நாட்டுப் பிடவூர் கிழான் மகன் பெருஞ்சாத்தனின் அருள்வண்மையைத் தடாரிப் பொருநன் கூற்றிலே இவர் புகழ்ந்து பாராட்டும் திறம் நயமிக்கது *[புற.395]*: 'யாவர்க்கும் உண்பது நாழி, உடுப்பவை இரண்டே, பிறவுமெல்லாம் ஒக்கும். ஆதலால், செல்வத்தாற்பெறும் பயனாவது ஈதலேயாம். அதனை யாமே நுகர்வேமெனக் கருதின், அறம் பொருள் இன்பம் என்ற பலவும் தவறிவிடும்' என்ற பொருளில் இவர் பாடிய புறப்பாடலால் *[189]* இவரது ஒப்புரவுக் கருத்தை உணரலாம். அன்பனை முருகனிடத்தே ஆற்றுப்படுத்துவதான திருமுருகாற்றுப்படை இவரது இறையருள் திளைப்பினை உணர்த்தும். பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைத் தலைவனாகக் கொண்டு இவர் பாடிய நெடுநல்வாடை அகப்பொருள் புறப்பொருள் ஆகிய இரு பொருட்சிறப்பும் சான்றதாம்.

அகநானூறு குறுந்தொகை, நற்றிணை ஆகிய முத்தொகைகளிலும் அமைந்த இவர் பாடல்கள், ஐந்திணைகளையும் அமைவுறப் பாடும் இவர்தம் புலமையாற்றலைப் புலப்படுத்தும். இவர் தமிழகத்தேயும் அதன் புறத்தேயும் அமைந்த நாடு, நகரங்களையும் அவற்றின் தலைவரையும் நன்கறிந்தவரென்பதை, இவர் பாடல்கள் பலவும்

பகர்கின்றன. சோழரது அறம் பொருந்தியதும், கெடாத நற்புகழுடையதுமான உறந்தையின் மதிப்பையும், *[அக. 93,369]*, வழுதியின் கூடல் நகரத்து நாளங்காடி மணத்தையும் *[அக.93]* சேரனது கருவூர் முன்றுறையில் ஓடும் ஆன்பொருநையாற்றின் மணற் குவியலையும், *[அக.93]*, கரிகால் வளவனது இடையாற்றுச் செல்வவளத்தையும் *[அக.141]* வேங்கடநாட்டுச் சுரத்தையும் *[அக.141]*, பொலம்பூட்கிள்ளியின் காவிரிப் பூம்பட்டினத்துச் செழுமையையும் *[அக.205]* மொழிபெயர் தேஎத்துச் சுரத்தையும் *[அக.205]* தழும்பனது மதிலெல்லை வாய்ந்த ஊணூர்க்கு அப்பாற்பட்டதும், செல்வச் சிறப்புடன் அழகு மிக்கதும், பசும்பூண் வழுதிக்குரியதுமாகிய மருங்கூர்ப் பட்டினத்துக் கடைத்தெருவின் ஆரவாரத்தையும். *[அக.227;நற்.258,358]* பல்வேல் முகண்டையின் வேம்பியமுகையும் *[அக.249]* வடுகர் பெருமகனாகிய எருமையென்பானது நாட்டில் ஓடும் அயிரியாற்றையும் *[அக.253]*, குட்டுவனது கடற்கரையில் அமைந்த தொண்டி முன்றுறையில் மலர்ந்த நெய்தற் சிறப்பையும் *[அக.290]*, திரையனது பலபூங்கானலையுடைய பவத்திரி நகரின் அழகையும் *[அக.340]*, வானவரம்பன் நாட்டிற்கு அப்பாலதான மலையையும் *[அக.389]*, கடுந்தேர்ச் செழியன் பெயரிலமைந்த பெருங்குளத்தையுடைய வாணன் சிறு குடியையும், *[நற்.340]* அருமன் சிறுகுடியையும் *[நற்.367]*, இவர் தம் பாடல்களில் புனைந்துள்ளமை காணலாம்.

பாண்டியன் நெடுஞ்செழியனின் தலையாலங் கானத்துப் போர்வெற்றி *[அக.36]*, அவனது முசிறி முற்றுகை *[அக.57]*, பாரி தன் பறம்பு மலையைப் பகைவேந்தர் முற்றியிருக்கையில் அரணிலுள்ளோர் உணவின்றி வருந்தாதவாறு கபிலரின் சூழ்ச்சியால் கிளிகளைப் பழக்கிப் புறத்தேயிருந்து நெற்கதிர்களைக் கொண்டு வரவிட்டு நெடுநாள் உள்ளேயே தங்கிப் பகைவரை ஒட்டியது *[அக.78]*, எவ்வியின் நயம்புரி நன்மொழிக்கு அடங்காத அன்னி, தன் பகைவனான திதியனின் காவற்புன்னையை வெட்ட விரும்பி அவனோடு பொருது மாண்டமை *[அக.126]*, பொலம்பூட் கிள்ளி, கோசரின் படைகளையழித்து அவர் நாடுகளைக் கவர விரும்பியமை *[அக.205]*, பசும்பூட் பாண்டியன் கொங்கரையோட்டி நாடு பல வென்று தன் கூடல்மாநகரில் வெற்றியாரவாரம் எடுத்தமை *[அக.253]*, கிள்ளி வளவன் பழையன் மாறனைக் கூடலிடத்தே போரில் சாய்த்துத் தன் பகைவருடைய ஊர்களைப் புரவிகளோடும் யானைகளோடும் கவர்ந்துகொண்ட போது கோதை மார்பன் உவந்தமை *[அக.346]* போன்ற வரலாற்றுச் செய்திகளையும் இவர் பாடல்களால் அறியலாம்.

'நன்மை தீமைகளைச் சிறிதும் ஆராய்ந்துணரும் அறிவில்லா தோரிடத்தும் சென்று தங்குகிற காமம் அறிவில்லாதது' எனப் பாங்கன் தலைவனது காதலைக் கழறுவதாகவும் *[குறு.78]*, 'என்னெஞ்சைப் பிணித்துக் கொண்ட பெருந்தோட் குறுமகளது சிறு மெல்லாகத்தை ஒரு நாள் யான் பொருந்தக் கூடுவேனாயின் பின் அரைநாளேனும் வாழ்தலை விரும்பேன்' எனத் தலைவன் பாங்கனிடம் கூறுவதாகவும் *[குறு.280]*, இவர் காமத்தன்மையை நயமுறப்பாடுவர்.

செவ்வானத்திற் பறக்கும் கொக்குகளின் வரிசைக்குச் செவ்வேளாகிய நெடுவேள் மார்பின் ஆரத்தை உவமிப்பது *[அக.120]* போன்ற அழகிய உவமையினையும் இவர் பாடல்களில் காணலாம்.

**நகர்-1.** பேரூர். - நெடிய நகரின்கண் - பேரூரின்கண் நல்ல- மனைகளிடத்து விரும்பும் அடுதீயைக் கெடுக்க, மிக்க தீ முழங்கிய பக்கத்தைப் பார்த்துப், பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் பகைவர் நாணுதல் *[புற.23:9]*. கள்ளைப் பருகுவார் தம் நடுங்குகையான் உகுத்தலால் ஏற்பட்ட நறிய சேற்றின்கண் ஆடிய யானை, நெடிய நகரிடத்து ஒலிக்கும் பறையினது ஓசையைச் செவிதாழ்த்துக்கேட்டல் *[புற.68:17]*. தைத் திங்களின் கண் குளிர்ந்த பொய்கையைப்போலக், கொள்ளக் கொள்ளக் குறையாத சோற்றையுடைய அகன்ற நகரிடத்து, அடு நெருப்பல்லது சுடு நெருப்பறியாத நல்ல நாட்டுக்கு வேந்தன், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் *[புற.70:7]*, நள்ளி, நெற்கூடு விளங்கும் அகன்ற நகரிடத்தே இருந்தவாறு, தன் முயற்சியானாய செல்வத்தை, விரும்பிவந்தோர்க்குப் பரிசில் அளித்து விடுதல் *[புற.148:4]*. பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனின் முன்னோர், பகைவர் தேய, அவருடைய அணிகலத்தைக் கொண்டு வந்து பொன்னுடைய நெடு நகரின்கண் பொலிய வைத்தனர் *[புற.198:16]*. உலகத்தைக் காக்கும் வேந்தருடைய செல்வமிக்க நெடுநகரின்கண் மதத்தான் மயங்கிய யானை நெட்டுயிர்ப்புக் கொள்ளுதல் *[புற.261:6]*. 'நொச்சியே! காவலையுடைய பெரிய நகர்க்கண்ணே அழகோடு பொலிந்த தொடியுடைய மகளிர் தம் அல்குலிடத்தும் கிடக்கின்றாய்,' எயில் காப்பார் சென்னியிலும் இருக்கின்றாய் என்று மறவன் கூறுவதாக மோசிசாத்தனார் பாடுவர் *[புற.272:4]*. அரசர் பணியினைச் செய்யும் அரிய தலைமையையுடைய சுற்றத்தோடு நெடுநகர்க்கண் வந்த செம்மல் பொருது நிலத்தில் வீழ்ந்தமை *[புற.285:8]*, அன்புடையவர் செல்ல முடியுமே தவிரப், பகையரசர் கனவினும் குறுக முடியாத காவலையுடைய பெரியநகர், அதியமான் நெடுமான் அஞ்சியினுடையது *[புற.390:6]*. பல்யானைச் செல்கெழு குட்டுவனது செழுநகர் நடுவே வேள்வித்தீயின் ஆவுதிப்புகையும், வருநர் வாரிக்கொள்ள வேண்டியும், விருந்தினர் உண்ண வேண்டியும் சமைத்தலால் எழுந்த ஆவுதிப்புகையும் பரந்து நிற்றல் *[பதி.21:12]*.

இந்திரன், யமன், வருணன், சோமன் என்னும் தெய்வங்களை உடைய, நல்ல நகர்கள் நிலைபெற்ற, உலகத்தைக் காக்கும் தொழிலையுடைவர் திருமால் *[முரு.160]*. 'செறிந்த மலைப்பக்கத்திலுள்ள நல்ல நகர்களைப் பசியும் பிணியும் பகையும் நீங்குக, என்று வாழ்த்தல்(நகர்-பிள்ளையார் (முருகன்) கோயில் என்றும் இங்குக் குறிப்பிடுவர்)

*[முரு.238].* குறச்சாதி மகள், முருகன் வரும்படி வழிப்படுத்தின அச்சம் பொருந்திய அகற்சியையுடைய நகரின்கண்ணே, வெறியாடுகின்ற களம் ஆரவாரிப்ப அதற்கேற்பனவற்றைப் பாடுதல் *[முரு.242].* விளங்குகின்ற மதில் சூழ்ந்த விண்ணைத் தீண்டும் மாடங்களையுடைய நன்னகர் *[பெரு.368].* பெரிய நகர்களிலே வெந்து வீழ்ந்த, கரிந்த குதிரிடங்களிலே கூகைச்சேவல் பேட்டுடன் இருந்து கதறியது *[மது.169].* மகளிர், நெடிய ஒளியினையுடைய விளக்கினை ஏற்ற நெடுநகரின் எல்லையெல்லாம், மாலைக்காலம் நயந்தோர்க்கு நோயைச் செய்தது *[மது.556]* 'தேவருலகத்தை ஒத்த செல்வத்தையுடைய நகர்கள் முன்புபோல் பொலிவுற்று விளங்க, உயர்ந்த உதவியைச் செய்த முயற்சியுடையாரைக் கொணர்மின்' எனக் கூறியவாறு தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் நாளோலக்கத்தில் இருந்தான் *[மது.741.]* பல்வேறு கொடிகள் விராவுகையினாலே இவற்றின் நிழலில், ஞாயிற்றின் கதிர்கள் நுழையாத தன்மையுடையது வள நகர் *[பட்.182].* நன்றாகிய அகங்களின் உயர்ந்த திண்ணைகளிலே யிருந்து பைங்கிளி மிழற்றும் பால் நிறைந்த செழுநகர் *[பட்.264].* சேரனது செல்வமிக்க சிறந்த அகன்ற நகராகிய கருவூர் *[அக.93:21].* மாந்தை நன்னகர் முற்றத்துப் பகைவர்திறை தந்த நன்கலம் நிறைந்திருந்தது *[அக.127:6].* ஊணூர்க்கு அப்பாலுள்ள, மிக்க பொருள் நிலைபெற்றிருக்கும் பெருமை கொண்ட அழகிய நகராகிய மருங்கூர்ப்பட்டினம் பெரிய உப்பங்கழிப் பக்கங்களையுடையது *[அக.227:19].* பசும்பூண்பாண்டியன் பொன்மிக்க பெரிய நகரமாகிய கூடற்கண் வெற்றிக் களிப்பினால் ஆடிய ஆராவாரத்தினும் அலர் பெரிதாயிருந்தது *[அக.253:6].* மாலைக்காலத்தே நகரின்கண் புகுதலை ஆய்ந்துணர்ந்து தலைவன் தேர்செல்லுதல் *[அக.324:15].* பழைய வேண்முதுமக்கள் தமது அகன்ற நகர்க்கண் மறைத்து வைத்த அரிய அணிகலமாகிய செல்வத்தைப்போல் பெறுதற்கு அருமையுடையவள் தலைவி *[அக.372:4].*

நீண்ட நகரத்தில் விடியலில் கோழிகூவும் *[குறு.234:4].* இரவில், கேட்போர் அச்சம் உறுதற்குரிய குறிஞ்சிப் பண்ணைப் பாடிக்கொண்டு அகன்ற நகரைக் காக்கும் கானவர் துஞ்சாதிருந்தனர் *[நற்.255:3].*

'ஊரனே! நீ நாள்தோறும் என் சுற்றத்தார் உறங்குகின்ற நெடிய நகரிடத்தேயுள்ள இல்லத்திற்கு இரவின்கண் வருகின்றாய்; இவள் தந்தையின் வேற்படையை நீ அஞ்சமாட்டாயா?' எனத் தலைவன் இரவுக்குறி வந்துழித் தோழி கூறினாள் *[ஐங்.60:3].* 'நம் நல்ல இல்லத்தையுடைய நெடிய நகர் தனிமை உடையதாயிற்று; எனவே நும்முடைய ஊருக்குச் செல்லுதற்குப் புறப்படுவேமோ "(அலர் உண்டானபோது) எனத் தோழி உடன்போக்கு நயந்து கூறினாள் *[ஐங்.236:2].*



வழுதி, நாடும் நகரும் (நகரிலுள்ளாரும்) தன்னை வந்தடைய முருகன் கோவிலை வழிபட்டான் *[பரி.19:27].* பாண்டியனது நான்மாடக் கூடலாகிய நகர் ஒரு தட்டிலும், உகலனைத்தும் ஒரு தட்டிலும் வைத்துப் புலவர் அறிவாகிய கோலால் ஆய்ந்தாலும், உலகனைத்தும் வாடத், தான் வாடாத தன்மையதாக விளங்கும் *[பரி.தி.6:4].*

2. இல்லம். - 'செல்வம் பொருந்திய அழகாகிய நகரே! - இல்லமே! - மயிரைக் குறைத்துத், தொடி நீக்கி, அல்லியரிசியாகிய உணவையுடைய மனையாளுடனே இப்பொழுது பொலிவழிந்துள்ளாய்' எனத் தாயங்கண்ணியார் பாடுவர் *[புற.250:6].* போரில் புண்பட்ட நெடுந்தகையின் புண்ணினை, ஐயவி சிந்திக், காஞ்சிப் பண்ணைப்பாடி, நெடிய நகரிடத்தே அகில் முதலியவற்றைப் புகைத்துப் பேய் தொடாமல் காத்தல் *[புற.281:6].* மருதநலத்தூர்களில் ஆழ்ந்த நீரையுடைய பொய்கைக்கண் கிளர்ந்தெழுந்த வாளை மீன், நெல்லையுடைய நெடுநகரின் புறத்தே நெற்கூட்டின்கண் வீழ்ந்து புரளும் *[புற.287:9].* தண்ணென்று அகிற்கட்டையினின்றெழுந்த நறிய புகையானது மெல்லச் சென்று படிந்த கபில நிறம் பெற்ற நெடுநகரில் தலைவி செறிக்கப்பட்டமையை, மகட்பாற் காஞ்சித் துறையில், கபிலர் பாடுவர் *[புற.337:11].* சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி இனிதுறங்கும் செல்வநகரிடத்தே, தடாரிப் பறையை இசைத்தவாறு சென்று, பரிசிலர், பரிசில் பெற்றனர் *[புற.337:3].* சோழவேந்தனுடைய அரண்மனைக்கண் உள்ள, மாடத்தையுடைய, குளிர்ச்சி பொருந்திய நெடிய நகரில் நின்று, பரிசிலர், வஞ்சித் துறைப் பாடல்களை இசைத்தனர் *[புற.378:7].* தலைவன் புகழைப் பரிசிலர் ஏத்தத், தேன் பரந்துள்ளதாகிய கள்தெளிவை, அழகிய மணம் கமழும் மடாரிற்பெய்து அவரை உண்ணச்செய்து, அகன்ற தன் பெரிய நகர்க்கண் அவர்கள் வருதலை அவன் விரும்பினான் *[புற.383:6].* அரசனது பெருநகரின், அகன்ற முற்றத்திடத்துத் தன் சிறுமை கண்டும், நல்கினான், எனச், செல்வக்கடுங்கோ வாழியாதனைக், குண்டுகட்பாலியாதனார் பாடுவர் *[புற.387:17].* நின் நகர்க்கண், நின்மனைவியொடு இனிய உறக்கத்தைப் பெறுவாயாக' எனப் பொறையாற்றுகிழானைக் கல்லாடனார் பாடுவர் *[புற.391:17].*

அழகினையுடைய குளிர்ந்த கிடங்கினையும், அரிய காவலையும், அகற்சியையுடைய நகர்களையுமுடையது ஆமூர் *[சிறு.187].* வில்லைச் சார்த்தி வைத்த அம்பு தங்கும் அகன்ற நகர்களையும், சங்கிலிகளாலே நாய்களைக் கட்டிவைத்த கட்டுதற்கரிய காவலையுடைய நகரினையும் உடையது, எயினர்தம் அரண் *[பெரு.121,125]* ஆப்பியான் நன்கு மெழுகப்பட்டது நன்னகர் *[பெரு.298].* செங்கல்லாற் கட்டப்பட்ட உயர்ந்த நகரைச் (புறப்படை வீட்டை) சூழ்ந்து மதில் அமைந்திருந்தது *[பெரு.405].* அகற்சியையுடைய நகர்களாலே

மதுரை மிக்க புகழ் எய்தியது *[மது.758]*. காவலையுடைய அகன்ற நகர்களில், குற்றேவல் வினைஞர், சாந்தம்மியிலே, கத்தூரி முதலிய பசுங்கூட்டினை அரைத்தனர் *[நெடு.49]*. பலரும் வந்து உண்ணும்படி, அகலக் கதவு திறந்து கிடக்கின்ற வாசலையுடையது வளநகர் *[குறி.202]*. அகல் நகரில் பொன்னாற் செய்த மகரக்குழை, சிறார் உருட்டும் சிறு தேரினது வழியினை விலக்கும் *[பட்.20]*.

நன்னனது பாழி என்னும் பதியை ஒத்த, காவல்மிக்க தந்தையது பெரிய நகரின் மிக்க காவலைத் தாண்டித், தலைவனோடு, தலைவி சென்றாள் *[அக.15:11]*. 'செல்வம் பொருந்திய அழகிய நகரின்கண்ணே சிறிது பொழுது பந்து எறிந்து ஆடினும், உடல் வருந்திற்று, என்று கூறி, என்னைச் குளிரத் தழுவி அமர்வள் என்மகள்; அது கழிந்ததே' என, மகட்போக்கிய செவிலித்தாய் கூறினாள் *[அக.17:1]*. தலைவன் மலர்களைச் சூடிக்கொண்டு, தலைவியின் நல்ல நெடிய நகரில், காவலர் அறியாத வண்ணம் சென்று அவளை முயங்கினான் *[அக.22:16]*. வானளாவிய மதிலையுடைய நன்றாகிய நகர் தனிமையுறத், தாயையும் நினையாது, தலைவி, தலைவனுடன் சென்றனள் *[அக.35:2]* புறாவின் சேவல், உயர்ந்த மேல்நிலைகளையுடைய பெரிய நகர்க்கண், தன் பேடையை அழைத்து *[அக.47:12]*. 'தலைவியை உடன் கொண்டு சேறலை அறிந்திருப்பின், தலைவியின் தந்தையது, உணவு மிகுந்துள்ள, காவல் பொருந்திய பெரிய நகரில், தலைவியை நிழல் போலத் தொடர்ந்திருப்பேனே, எனச், செவிலி உரைத்தாள் *[அக.49:14]*. 'மகனே! நின்தோழி, அழகிய நகரின் இடமெல்லாம் தனிமையுற, அத்தலைவனுடன் பெரிய மலையைத் தாண்டி உடன் போயது பற்றி யான் வருந்துகின்றேனல்லேன்; தலைவன் தோள் துணையாகத் துயிற்றத், துஞ்சாது, தண்ணுமை ஒலி கேட்டு அழுவனே' என, வருந்துவேன்' எனத், தலைமகள் புணர்ந்துடன் செல்லச், செவிலி தன் மகளுக்குக் கூறினாள். *[அக.63:2]* 'இருள் நீங்க, விடிவிளக்கு விளங்குகின்ற வானளாவிய பெரிய நகர்க்கண், காதலியின் நலம் பாராட்டித், தோளை அணைந்து மகிழ்வாயாக' என, வினைமுற்றி மீளுந் தலைமகன், இடைச்சுரத்துத் தன்னெஞ்சிற்குக் கூறினான் *[அக.87:13]*. 'மலையைக் குடைந்தியற்றியதை ஒத்த, வானையளாவிய நீண்ட நகரின் கண், நம் மார்பிலே, தலைவியின் மார்பகத்துப் பூண்கள் வடுச்செய்ய முயங்குதும் சென்மோ' என, வினைமுற்றிமீளலுறுந் தலைவன், தன்னெஞ்சிற்குக் கூறினான் *[அக.93:12]*. சீறூரின்கண்ணே, உறைவோர் விட்டுப்போன உயர்ந்த நிலையினையுடைய பெரிய நகரில், இறப்புநிழலின் ஒரு பக்கத்தே தங்கித், தனிமையால், வழிச்செல்வோர் பெருமூச்செறிந்தனர் *[அக.103:8]*. 'நிழற்கண் உள்ள குளம்போலக் குளிர்ந்த நீண்ட நகரிடத்தேயுள்ள, பெரிய செல்வத்தையும் நினையாளாய், வேனிற்காலத்தே செல்லுதற்குத், தலைவி, எங்ஙனம் வல்லுநள் ஆயினளோ?' என, மகட்போக்கிய தாய் கூறினாள் *[அக.105:7]* 'பகைவர் அஞ்சத்தக்க மூதூரில், செல்வமுள்ள நகரில் தங்கும் தலைவியைக் காண்போம்; தேரினை அங்கே செலுத்துவாயாக' என, வினைமுற்றி மீளுந்தலைமகன், தேர்ப்பாகற்குக் கூறினான் *[அக.114.13]*. தலைவி, அழகிய, தொழில்நலம் வாய்ந்த வளம் பொருந்திய செல்வமிக்க நகர் தனித்தொழியத், தலைவனுடன் சென்றனள் *[அக.117:4]* 'மாடங்களால் மாண்புற்ற நமது நகரில், படுக்கையின்கண் வெறுப்புற்ற கொள்கையினையுடைய நம் காதலியை எய்திடத், தேரினைச் செலுத்துவாயாக' எனத், தலைமகன், தேர்ப்பாகற்குக் கூறினான் *[அக.124:6]*. திங்களை உரோகிணி கூடிய குற்றமற்ற நன்னாளில், மண நகரை அழகுறுத்திக், கடவுள் பேணித், தலைவிக்கு மண நீராட்டினர். *[அக.136:6]*. புதிய மணமகள் மண நகரில், கல் அடுப்பில் பாலை உலையாக வார்த்தாள் *[அக.141:14]*. 'தந்தையின் நெடுநகரின் ஒரு பக்கம் நின்றேனாக, பெறுதற்கரியளாகிய நம் தலைவி, நமது நோயாகிய வருத்தம் நீங்க முயங்கினள்' என, இரவுக் குறிக்கண், தலைமகளைக் கண்ணுற்று நீங்கிய தலைமகன், தன்னெஞ்சிற்குக் கூறினான். *[அக.162:9]*. 'தலைவியுடன், விண்ணை அளாவும் நெடுநகரிடத்தே, பூஞ்சேக்கையின்கண் தங்குதலானே, இன்றைப் பொழுது முழுதும் இனிதாகக் கழிந்தது' எனத் தலைமகன், பொருள்கடைக் கட்டிய நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கினான் *[அக.167:4]*. 'நின் காதலியாகிய பரத்தை, எம்மைப் போலப், புதல்வரைப் பெற்று, நெல்லையுடைய நெடிய நகரில், நின்னைப் பிரிந்து தங்கக் கடப்பாடுடையளோ' எனத், தோழி, தலைமகனை வினவி, வாயில் மறுத்துக் கூறினாள் *[அக.176:20]*. 'தலைவர், நம்மைப் பிரிந்து சென்று நமது உயர்ச்சியைக் கருதினர்; அதனால், பூந்தொடை விழாவின் முதல்நாளை ஒத்த பொலிவினையுடைய மணல் பரந்த அழகிய நகரின் முற்றம் தனிமையுறுமோ?' எனப், பிரிவுணர்த்திய தோழிக்குத், தலைமகள் கூறினாள் *[அக.187:9]*. 'தோழி! நம் தலைவர் காவிரிப்பூம்பட்டினத்தை ஒத்த நம்செழுநகரில் நல்ல விருந்தாற்றுதற்குச் சிறந்த பொருளை எளிதினில் அடைவாராக; எனத் தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைவி தோழிக்குக் கூறினாள் *[அக.205:13]*. பரத்தையின் மார்பகத்தே, அமையாத காதலுடன், பூமாலை இடைப்பட்டுக் குழைய, முழவொலி ஓய்தலில்லாத விழாவினையுடைய பெரிய நகரில் தலைவன் மணத்தினை மேவினான் *[அக.206:11]*. சிறப்புப் பொருந்திய பெரிய நகரிடத்துச் சிலம்பு ஒலிக்க நடந்து சென்று, ஆயமகளிருடன் தலைவி பந்து விளையாடினாள் *[அக.219:1]*. காதலர் வருவரோ என்று பலமுறையும் அரிய காவலுடைய பெரிய நகரின் புறத்தே வந்து பார்த்துக் காதலி வருந்தினாள் *[அக.224:17]*. அன்னை, காவல் பொருந்திய அகன்ற நகர்க்கண் காத்தலைக் கருதித் தலைவியின் வேறுபாடு முருகனால் ஆயிற்றென, வேலனை அழைத்தாள் *[அக.232:13]*. 'தலைவனிடத்தே அவள் கொண்டுள்ள அன்பின் உறுதியை யான் அறிந்திருப்பேனாயின், வஞ்சிபோன்ற என் வளம் பொருந்திய நகர் சிறப்புற்று விளங்க, அவளை

இனிமையுறக் கூட்டிவைத்திருப்பேன்' என மகட்போக்கிய தாய் கூறினாள் [அக.263:12]. தந்தையின் காவலையுடைய பெரிய நகரின்கண் தலைவியைப் பாதுகாத்துத் தாய் அகலாதிருந்தாள் [அக.298:16]. 'தலைவியோ, தாய்மார் உள்ள பெரிய நகரில் தமர் பாராட்டக் காதலொடு வளர்ந்தவள்' எனத் தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி கூறினாள் [அக.310:7]. தலைவன், அரிய காவலையுடைய மதில் சூழ்ந்த அகன்ற நகரின் ஒருபாலுள்ள கதவினைத் திறந்து நள்ளிரவில் காவலர் மடிந்திருக்கும் செவ்வி பார்த்துத் தலைவியைக் கூடிச்சென்றான் [அக.311:2]. வழுதியின் கூடலையொத்த தன்னுடைய அழகிய காவலையுடைய நகரிலே சிலம்பு கழிநோன்பும் செய்யப் பெறாளாய்த் தலைவி தலைவனுடன் சென்றாள் [புற.315:8]. வெள்ளிய மணல் உயர்ந்த பொலிவு பெற்ற வாயிலையுடைய நெடுநகரில் களவொழுக்கம் வரம்பிகந்து சென்றது [அக.325:2]. உறையூர் போன்ற செல்வமுடைய நல்ல நகரில் புதுவதாக ஒப்பனை செய்து தன் தமர் மணம் செய்விக்கவும் பொருந்தாத மனம் உடையளாகித் தலைவி சுரநெறியில் கொண்டு சென்ற இளையோனிடத்திலேயே மனம் பொருந்தி இருந்தாள் [அக.369:15]. உறையூரையொத்த செல்வம் மிக்க நெடுநகரில் மேலோர் வதுவை செய்வித்தனர் [அக.385:5]. முழவின் ஒலி மாறாத விழாவுடைய அகன்ற நகரில் மணத்தின் வாயிலாகத் தலைவியைக் கொள்ளாமல் தலைவன் உடன்கொண்டு செல்லத் துணிந்தான் [அக.397:3]. விளங்கிய நகரிடத்தே அடங்கிய கற்பினையிடையவள் தலைவி [குறு.338:7].

நாடன், தலைவியின் தந்தையால் பாதுகாக்கப்படுகின்ற காவலையுடைய அகன்ற நகரிடத்தே, காவலர் சிறிதயர்ந்திருக்கும் காலம் பார்த்து, இரவில் வந்து முயங்கிச் சென்றனன் [நற்.98:8]. 'பாண! கொழுவிய மீனை உண்ணுதலையுடைய செழுமையுற்ற நகரில் இருந்த தலைவியின் ஐயன்மார் சினமுடையராய் இருத்தலின் நமது பாக்கத்தில் மெல்லம்புலம்பன் வருதலால் பயன் இல்லை' எனப் பாணற்குத் தோழி வாயில் மறுத்தாள் [நற்.127:4] கூரெயிற்று எகினம் நடுங்கும் இராப்பொழுதில் நல்ல நகரிடத்தே பாயலின் பக்கமும் காவல் இருந்தமையைத் தலைவிக்குத் தோழி கூறினாள் [நற்.132:5] உழையர் கொணர்ந்த மணல் பரப்பப்பெற்ற அழகிய நகர் முன்றிலின்கண் தோழியர் கூட்டம் ஓரையாடும் [நற்.143:2]. தலைவன், இருட்பொழுதினில் வந்து காவலையுடைய அகன்ற நகரின் உள்ளிடத்ததாகிய காவலையும் கடந்து தலைவியைக் கூடித் தன் அன்பினை வெளிப்படுத்தினான் [நற்.156:2]. 'புன்னை முன்றிலையுடைய, கொழுவிய மீனுணவையுடைய வளப்பமிக்க நகரகத்துச் செல்லும் பொருட்டு நீ எழுந்து வருவாயாக என்றழைத்தால் அவளும், அப்பகற்குறி இடத்தைவிட்டு நீங்க உடன்படாதிருக்கிறாள்' எனக் கூறி, தோழி வரைவுகடாவினள் [நற்.159:7] பெரிய சீர்த்தியையுடைய தந்தையினது நீண்ட புகழ் பொருந்திய நெடிய நகர்க்கண் தாயோடு பிரியாது வைகும் மிக்க இளமை உடையவள் தலைவி [நற்.162:7]. 'சிறிய குடிகளையுடைய பாக்கத்தின்கண் உள்ள எமது பெரிய நகரிடத்து நெடிய சுவரின்கண் இருக்கின்ற பல்லி, நாம் வருவதனை, அறிகுறியாக அடித்துத் தெரிவிக்குங் கொல்லோ', என வினைமுற்றி மீளும் தலைவன் தன் நெஞ்சிற்கு உரைத்தான் [நற்.169:10]. மாலைப் பொழுதினை மகளிர், தத்தம் நகரிடத்தே எதிர் கொண்டழையா நிற்பர் [நற்.215:4]. தலைவி, மின்னல்போல் ஒளிவிடுதலையுடைய அணிகலன்களால் நல்ல நகரெங்கும் விளங்காநிற்ப, நாட்காலையில் புதல்வன் தூங்குமிடத்திற்குச் சென்று 'எந்தை! வந்தீக' என அழைத்தாள் [நற்.221:9]. பகற்பொழுதிலே செல்வமுடைய அகன்ற நகரின்கண்ணே வருகின்ற விருந்தினர்களைப் பாதுகாக்க, மகளிர் சமைத்து, முற்றத்திலே பலியாகச் சோற்றினை இடுவர் [நற்.258:4]. தலைவி, விளையாடிய பந்தும் அவள் ஓம்பி வந்த வயலைக் கொடியும், நொச்சியும் காவலையுடைய அகன்ற நகரிடத்துத் தோன்றா நிற்பத் தலைவியைப் பிரிந்த நற்றாய் வருந்தினள் [நற்.305:3]. 'நற்றாய், சிறந்த அழகு விளங்கும் நகரிடத்தே இன்று வந்து, தலைவியைத் தழுவி மகிழ்ந்து, தோற்றப் பொலிவு வேறுபட்டிருப்பதன் காரணம் வினாவினாள்' எனத் தோழி, சிறைப்புறமாகத் தலைவன் கேட்பக் கூறினாள் [நற்.339:6]. குதிரைகள் தலைவனது தேரை, மாலைப்பொழுதில் மணல் மிக்க அகன்ற நகர் வாயிலிலேயே கொண்டு வந்து நிறுத்தின [நற்.361:6]. நெய்யுடனே கலந்து ஒளிர்கின்ற சிறுவெண் கடுகாகிய திரண்ட விதைகளை விளங்கும் நகர் எங்கும் விளங்கும்படி பூசித் தலைவி மகவீன்று பாயலிலே படுத்திருந்தாள் [நற்.370:4].

'அன்னை வெறியாட்டயர, வேலன் அழகிய நம் நகர்க்கண், கன்னத்தை (படிமரத்தைக்) கைக்கொண்டு, தலைவியின் மெலிவு முருகனாலாயது என்பான்; அப்பெயர் குறிஞ்சிக் கோமானாய நம் தலைவன் பெயராகவும் இருக்குமோ?" என வெறி விலக்கலுறும் தோழி தமர் கேட்பத் தலைமகளை வினவுவாளாய்க் கூறினாள் [ஐங்.247:3] தலைவன், பாலை நிலப்பரப்பில் சிறிது கண்படுப்பினும், தலைவியை நெடுநகர்க்கண் பாயலில் தன்னோடு உறைபவளாகக் கனாக் காண்பான் [ஐங்.324:3] 'நல்லறங்கள் நிகழ்தற்கிடனான நெடுநகர் கலங்கும்படி, என்மகளை நீத்துப் போகச் செய்த, அறப்பண்பற்ற 'ஊழ்' வெந்தொழிக', என, நற்றாய், விதியை வெகுண்டு கூறினாள் [ஐங்.376:3]

அகன்ற நகரில் உள்ளாரால் அடக்க வொண்ணாத அலரைத் தந்து, தலைவன் பிரிதலைத், தோழி மறுத்தாள் [கலி.19:4]. 'தோழி, நம் குடிக்கு வடுவாகாமல் கற்புக்கடம் பூண்டாள்,' என்று, நம் நகரிடத்தே நிகழ்கின்ற அரிய மணம், அவனை விட்டு நீங்காமல் அறத்தொடு வகையாற் கூறல் நன்று', எனத், தலைவி, தோழியிடம் கூறல். [கலி.54:16] 'நின்னுடைய இளமைப் பருவத்தாலே, நுந்தையுடைய பழைமையுடைத்தாகிய

அகற்சியையுடைய நகரில் நின்றும், பந்தோடே தளர்ந்து ஒதுங்கிப் புறப்படுதலைச் செய்தவளே', எனக், காமஞ் சாலா இளமையோளைத், தலைவன் விளித்தான் *[கலி.57:6].* 'நினக்கொத்த பரத்தையரை நெடிய நகரிலே கொண்டு தர, நின் பரத்தையர் ஆடும் துணங்கையரவம் வந்து, என் துயிலைப்போக்கும்; மேலும், நினது பரத்தையரைத் தமக்குரிய நெடிய நகரிலே கொண்டு வருகையினால் பிறந்த தேர்மணியின் ஒலி, துயிலைப் போக்கும்' எனத் தலைவி, வாயில் நேர்வாள் நெருங்கிக் கூறினாள் *[கலி.70:13,17].* தேரிலேயிருந்து அகன்ற நகர்க்குப் புதல்வன் மீள்தரும்போது, பரத்தையும் அவனை நோக்கி எதிர்கொள்வாள் *[கலி.83:11].* 'அந்த யானை, நல்ல நகர் வாசலிற் கதவமாகிய கம்பத்தைச் சேர்ந்து, அதனோடு துவக்குண்டு, தன்னழகைக் காட்டி, அவ்வழகாலே ஒருவரும் போகாதபடி காலைத் தடுத்து வீழ்த்தும் 'எனத், தலைவி, பரத்தையை, யானையாகக் கூறிப் புலந்தாள் *[கலி.97:16].* 'உயர்ந்த நகரிடத்தே நின்னை நினைந்து துயின்றவிடத்து, நின்னைக் கனவில் கண்டு, தலைவி செயலற்றுக் கலங்கினள்; எனத், தோழி, தலைவியது ஆற்றாமை கூறித், தலைவனை வரைவு கடாவினள் *[கலி.126:14].*

**3. அரண்மனை - (கோயில்).** தொண்டைமானுடைய தூதாகச் சென்ற ஔவையார், 'இவ்வேல் கடியுடைய வியன்நகரிடத்த'-அரண்மனையிடத்த-என, அவன் மறமற்ற தன்மையைச் சுட்டுவர் *[புற.95:3].* பாணர், பரிசிலைப் பெற்றுக் கொண்டு போனதால், ஆஅய் அரண்மனை, பொலிவிழந்து, சாய்ந்தது, என்பர்; ஆயினும், அடிசிலைப் பிறர்க்குக் கொடுத்துதவாது தம் வயிற்றை நிறைத்துக் கொள்ளும் வேந்தரது செல்வத்தையுடைய நகர், இதனை ஒவ்வாது *[புற.127:10]* விளங்கிய வாளையுடைய வேந்தரது ஒள்ளிய விளக்கத்தினையுடைய நெடுநகரிடத்தே, யானையினைப் பரிசிலாக இரவலர் பெறுவர் *[புற.177:1].* 'முழவினது கண் மார்ச்சனை புலராத, காவலையுடைய, வியன்கரிடத்தே, மிகச் சிறிது பொழுது தனித்திருப்பினும், இனிய உயிர் தளரும் எனப், பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு, கணவன் இறக்கத், தீப்பாய்வாளைக் கண்டு, மதுரைப் பேராலவாயார் பாடினார் *[புற.247:8].*

'நின் தொன்னகர்க்கு உரிய செல்வியாகிய பெருந்தேவி, அருந்ததி அனையாள்' எனக், களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரலைக், காப்பியாற்றுக் காப்பியனார் பாடுவர் *[பதி.31:28].* உயர்ந்த மதிலையுடைய நெடிய நகர் எல்லையில், உயர்ந்த சுவரில், தலைவன் பிரிந்து சென்ற நாள்களைக் கோடிட்டு எழுதி, அரிவையர் செவ்விரல்கள் மேலும் சிவந்தன *[பதி.68:16].* சித்திரத்தை ஒத்த அழகையுடைய மகளிர் நடுவே, இளஞ்சேரல் இரும்பொறை விளங்கினன் *[பதி.88:28].*

இளந்திரையனை நயக்க வேண்டி, மன்னர் பலரும், யானை முதலிய செல்வங்களோடே, வளநகர் முற்றத்தின்கண் கூடினர் *[பெரு.435].* கொல்லன் கூடத்து ஓசையை வெருவிய மாடத்திலுள்ள புறா, துயில் நீங்குதற்கிடனாயது, திருத்தங்குகின்ற அகலத்தையுடைய, இறைவன் உறைகின்ற வியன்நகர் *[பெரு.440].* திருமகள் நிலைபெற்ற குற்றமற்ற சிறப்பினையுடைய, மணல்பரந்த, அழகிய நகரின் முற்றத்திடத்தே, கவரிமாவோடு, அன்னமும் தாவித்திரியும் *[நெடு.90].* படைத்தலைவரோடே பொலிவுற்றுச், செல்வத்தையுடையதாய் விளங்கியது நகர் *[மலை.548].* நெடுஞ்செழியனது கூடல், மலையை ஒத்த நகரினையுடையது *[அக.296:12].*

**4. கோயில் - (கடவுளது)** - 'நின்குடை, முனிவராற் பரவப்படும் மூன்று திருநயனத்தையுடைய செல்வரது நகரை-கோயிலை - வலம் வருதற்குத் தாழ்க', எனப், பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக், காரிகிழார் பாடுவர் *[புற.6:18].*

குளிர்ச்சியாற் கயத்தைக் கண்டாற் போன்ற, விளங்குதலையுடைய நகரின் சுவர்களில், சித்திரம் எழுதப்பெற்றிருந்தது (அமணப் பள்ளி) *[மது.484].* பூதங்கள் வாசலிலேயே காத்திருக்கும், புகுதற்கரிய அச்சத்தையுடைய, நகர் (காளிகோட்டம்) இடத்தே குயில், புறவுகளுடனே குடியிருப்பாகத் தங்கும் *[பட்.57].*

தலைவன் மார்பினால் ஏற்பட்ட வருத்தத்தை அறியாது, வளம் பொருந்திய நகரில் ஒலியுண்டாகப் பாடித் தலைவிக்காகப் பலி கொடுத்தனர் *[அக.22:3].* பரவுக் கடன் பூண்ட தெய்வமுடைய நகரிடத்தே பூக்கள் கலந்து கிடந்தன *[அக.99:9].*

'வேலையுடைய வேளே! நின் குன்றத்தின்கண், எழுதிய அழகையுடைய அம்பலம், அம்பினது ஏத்தொழில் நிலைபெற்ற காமவேள் நகரை ஒக்கும்; எனச், செவ்வேளைப் புகழ்வர் *[பரி.18:29].* 'வழுதி, மகளிரோடும், அமைச்சரோடும் கூடிக்,குன்றில், தடவரை மேலேறி, நின் நகரை வலம் வந்தான்; எனச், செவ்வேளைப் புகழ்தல் *[பரி.19:29].* அறத்தில் திரியாத பதி ஒன்றில், நல்வினையின் பயனைத் துய்க்கும் துறக்கம் போல், படப்பொறியை அணிந்த வரைகெழு செல்வனது (ஆதிசேடனது) நகர் விளங்குகிறது. *[பரி.தி.1:49].* பூமுடி நாகர் நகரிலே, வண்டும், தும்பியும் யாழைப்போல முரலும்; மதயானை, முகில் போல் முழங்கும்; அருவியிசையும் முழவொலியும் ஒருங்கேயார்க்கும்; மைந்தரும், மகளிரும் கூடிச் செய்யும் ஆடலும், பாடலும் தோன்றும்; இத்தகையனவும், இவைபோல்வனவும் அங்கே பொருந்தும்' *[பரி.தி.1:59].* 'குளவாய்' என்னும் நகரிடத்தே, மகளிர், மைந்தரோடு வந்திறைஞ்சுவர்; இருளும், பிணியும் நீங்க, நல்லவையெல்லாம் அங்கே பொருந்தும்' *[பரி.தி.1:63].*

**நகரம்**-பேரூர். பகையரசர்கள், தம் நகரங்களிலே-பேரூர்களிலே-துயிலின்றி நடுங்குமாறு, மறப்புகழ் மிக்கவன், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் *[பதி.12:7]*. விறலியர் ஆடுகின்ற பழைய நகரங்களின் எல்லையில் சேரனைப் பற்றிய புகழ்ச்சியமைந்த சொற்கள் என்றும் ஒலிக்கும் *[பதி.47:8]*.

**நகல்** - ஒளி. தலைவன் நீங்கின போது பகலில் ஒளிபாழ்பட்ட மதிபோல் நகல் - ஒளி - இன்றித் தலைவி இருந்தாள் *[கலி.143:2]*.

**நகில்** - முலை. நகிலுக்கு - முலைக்கு - குங்குமக் குழம்பு அணிதல் *[பரி.6:18]*. நகில் முகட்டில் கலவைக் குழம்பு கொண்டு மெழுகல் *[பரி.10:73]*.

**நகுதல்** - 1. மகிழ்தல். 'தம்மை விரும்பியிருப்போரைப் புரந்து, தாம் விரும்பிய நட்டாரோடு இன்பம் மிக இயைந்து நகுதலை - மகிழ்தலை - ஆற்றார், வறுமையுற்றோர்' எனக் கூறித், தலைவன் பொருள் தேடச் சென்றான் *[அக.151:13]*.

கூனியும், குறளனும் காதல்கொண்டு உரையாடும் போது, குறளன், 'நம்முள்ளே நாம் நகுதற்கு, நின்மெய்யைத் தீண்டுதற்குக் 'குறியிடம் இன்னது என்று நம்முள்ளே நாம் உசாவக் கடவேம்', என்றான் *[கலி.94:35]*. பெருந்திணைத் தலைவி ஊண் சிறிதும் இலளாய், மேனி மெலிந்து, உயிரினும் சிறந்த நாணும் சிறிதுமிலளாய் நகுதலைச் செய்தாள் *[கலி.147:9]*.

2. **எள்ளுதல்** - 'திருமாலே! புகழ்களெல்லாம் நினக்கு இயல்பாவனவன்றி வியக்கப்படுவனவல்ல; இதனையறிந்தும், யாங்கள் இங்கும், அங்குமாகப் பிறழக் கூறுகின்றோம்; அதுகண்டு நீ நகுதலும் - எள்ளுதலும் - தகுதியே', எனக் கூறித் திருமாலைப் பரவினர் *[பரி.4:5]*.

**நகுபவள் - மகிழ்பவள்.** புறத்தொழுக்கத் தலைவனை அளித்தலாலே சிறிது நகுபவள் - மகிழ்பவள் - முகம் போலத் தாமரை அலர்ந்தது *[கலி.71:6]*. ஆயத்தாரோடு விளையாடும் போதும், பல்லின் நுனி தோன்றாமல் முறுவலித்தலைக் கொண்டு உள்ளடக்கிப் பிறரறியாமல் கண்ணாலும், முகத்தாலும் நகுபவள், எனப் பெருந்திணைத் தலைவியைக் குறிப்பிடுவர் *[கலி.142:8]*.

**நகுவார் - சிரிப்பார்.** 'மாலையே! நீ அருளில்லாத காதலர் விட்டு நீங்கி, அருளாதிருந்த காலத்தைப் பார்த்துப், போரிலே தோற்றிருந்தவர்களை, அவர்கள் பட்ட தோல்வியை இகழ்ந்து நகுவார் - சிரிப்பார் - போலே, வருத்தமுற்ற என்னை வருத்துவிக்க வந்தாயோ', எனத், தலைவி, மாலைப்பொழுது கண்டு வினவினாள் *[கலி.120:14]*. நீராடும் மகளிர் ஆர்ப்பாராகவும், நகுவாராகவும் இருந்தனர் *[பரி.தி.2:21]*.

**நகை** - 1. மகிழ்ச்சி - முறுவல் - இன்பம். 'இவ்வுலகத்தின் கண் பொருந்திய நகை - மகிழ்ச்சி-இடத்ததாக, நின் சுற்றம்; புகழ் இடத்ததாக, நீ காத்த பொருள்' எனச், சோழன் நலங்கிள்ளியை, உறையூர் முதுகண்ணன் சாத்தனார் பாடுவர் *[புற.29:25]*. 'பாண! இனிய நகையினையுடைய விறலியுடன் செல்வையாயின், செல்வையாகுவை, என்பது, பாணாற்றுப்படை *[புற.70:15]*. 'பகைவரைப் புறங்காணாது போவேனாயின், நட்டாரோடு கூடிய இனிய செருக்கையுடைய மகிழ் நகையைத் தப்பியவனாகி, இக்குடிப்பிறப்பின் நீங்கி, யான் பிறப்பேனாகுக; என, ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் வஞ்சினங் கூறினான் *[புற.71:16]*. முன் போர்ப்பரி எண்ணிய இனிய நகையையுடைய பாரிமகளிர் இப்போது உப்புச் சகடமெண்ணுவர் *[புற.116:3]*. கோப்பெருஞ்சோழன், பொத்தியென்னும் புலவனோடு கூடி மெய்ம்மையார்ந்த பெருநகையினை, நாள்தோறும், கொண்டு உறையூரில் இருந்தான் *[புற.212:10]*. தாய் மகளின் அழகினை வளர்த்தலால் அவள் நகையினை எய்தினாள் *[புற.336:11]*. இராமனுடன் போந்த சீதையை அரக்கன் கவர்ந்து சென்றபோது, சீதை கழற்றியெறிந்த அணிகலன்களைக் கண்டெடுத்த குரங்கின் சுற்றம் போன்று, சோழன் தந்த அணிகலன்களும், பிறபொருள்களுமாகிய செல்வத்தைத் தன் சுற்றத்துடன் எய்தி அரிய நகையினை இனிதே பெற்றோம், என, ஊன்பொதிபசுங்குடையார் பாடுவர் *[புற.378:22]*. பகைவேந்தர் தந்த திறையைத் தந்து, சேரமான் சிக்கற்பள்ளித் துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதன், நகைநல்கும் புலவாணர்தம் வறுமையை அகற்றினான் *[புற.387:13]*.

இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் பாசறையிருப்பில் நீட்டிக்க, இன்னகையோடு விளங்கும் அவன் தேவி அவனை உள்ளினாள் *[பதி.16:11]*. அடுப்புத் தொழிலுக்காகாத முகிழ்த்த நகையினையுடைய மடவரலாகிய விறலியர், விருந்து செய்ச் சமையல் தொழிலுக்கு உதவுக என்றனள் *[பதி.18:5]*. ஒளிமிக்க நகையினையுடைய விறலியரது பாடல் மிகுதியால் நெடிதுதங்குதலால், மன்னன், நெகிழ்ச்சியுடையனாகக் கருதப்பெற்றான் *[பதி.51:20]*. 'நின்தாள் நிழற்கண் வாழ்வோர், பகைவரின் உறைவிடத்தைப் பெறுதல் அல்லாது, வடபுலத்தில் (உத்தரகுருவில்) வாழ்வாரைப் போல, இனிய நகை மேவிய பலநாள் உறைதலைப் பெறுவார்களோ', எனச், செல்வக் கடுங்கோ வாழியாதனைக், கபிலர் பாடுவர் *[பதி.68:14]*. பாசறையிடத்தும் நன்கலன் ஈயும் நகைமிக்க இருக்கையினையுடையவன், சேரன் *[பதி.தி.4:3]*.

முருகனது ஒருமுகம் வள்ளியோடு நகையைப் பொருந்திற்று *[முரு.102]*. மகளிர் பாட்டாலும், கூத்தாலும் அரசனுக்கு இனிய நகையினைச் செய்வர் *[பெரு.85]*. நல்லியக்கோடன், பல மீன்களுக்கு நடுவிலிருந்த மதிபோல், இயலிசை நாடகத்தாலும், இனிய மொழிகளாலும் நகையினைச் செய்யும் ஆயத்தோடிருந்தான் *[சிறு.220]*.

நாவாற் பயின்று பேசப்படாத கேட்டார்க்கு நகையைத்தரும் இனிய குதலைச் சொற்களையுடையவன் புதல்வன் *[அக.16:4]*. நகையினால் சிறந்து விளங்கும் பவளம் போன்ற வாயினையுடையவள் தலைவி *[அக.27:10]*. 'எம்மை மறந்து விட்டீர் போலும்' என்று பற்கள் விளங்கும், பவளம் போன்ற வாயின் இனிய நகை கெடத், தலைவி, தலைவனை வினவினாள் *[அக.29:13]*. தலைவன், தலைவியைக் கனவிற்கண்டு, இனிய நகையினையுடையாய்! யாம் இங்ஙனம் வருந்தியிருப்பவும், நீ ஊடல் செய்தல் எங்ஙனம் என, அவள் கூந்தலைக் கோதி வினவினான் *[அக.39:19]*. வதுவைநன்மணம் கழிந்தபின்றை, நின்நெஞ்சம் நினைந்ததனை மறையாது உரையெனத் தலைவன் கூறத், தலைவி, இனிய நகையுடன் கூடிய இருக்கையின்கண், முகத்தினைத் தாழ்ந்து, விரைந்து தலைவணங்கினாள் *[அக.86:26]*. 'நெஞ்சே! கானத்திடத்துத் தலைவி, நிழலிலே தங்கி, நம்முடன் வரும் என்பர்; ஆதலின், நாம் நகையுடையேமாய் இராநின்றேம்', எனத், தலைமகள் உடன்வருமெனக் கேட்ட தலைவன், தன் நெஞ்சிற்குக் கூறினான் *[அக.121:1]*. (புன்) நகையினால் மாண்புற்று விளங்கும் நன்மை வாய்ந்த பவளம் போன்ற வாயினையுடையவள், தலைவி *[அக.162:13]*. தலைவனிடம் தோழி, 'இனிய நகையினையுடைய தலைவியைப் பிரிந்துறைதல் இயலுமோ', என்று வினவினாள் *[அக.179:10]*. இனிய நகையுடன் கூடிய பற்களையுடைய தலைவியைக் கூந்தல்வாரி, மருங்குலில் சுமந்து ஓம்பிய நலம்புனை உதவியும் உடையேன், என்றாள் செவிலி *[அக.195:8]*. 'தலைவனிடம் இனிய நகையை உடைய இளைபோளாகிய தலைவி தழுவ, நின் மார்பு அமைக', என்றாள் தோழி *[அக.314:21]*. நகையினை மிகுதியும் உண்டாக்கும் சிறப்புடன், கூரிய வாயினையுடையவள் தலைவி *[அக.335:22]*. அன்புமிக்க இனிய காதலியின் நகையுடன் கூடிய முகத்தினை அடையத், தேரினை விரைந்து செலுத்தத் தலைவன், தேர்ப்பாகற்குக் கூறினான் *[அக.344:13]*. புகழ் உண்டாக அளித்தலைச் செய்ய வேண்டுவோர், அச்சம் மிக்க பொதியிலில் ஒரு புறத்தே தங்கியிருந்து, இனிய நகையையும், மெல்லிய சாயலினையும் உடையாளது அழகை நினைந்து, மேலும் செல்லாநிற்பர்' எனப், பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் கூறினான் *[அக.377:11]*.

'ஒரு நாள், நகையுடைய முகத்தைக் கொண்ட விருந்தினனாகித் தலைவன் வந்தானாக, போர்க் களத்தின்கண் உள்ள ஊரினரைப் போல அன்னை துஞ்சாதுள்ளாள் 'எனத், தோழி, இரவுக் குறிக்கண், சிறைப்புறமாகக், காப்பு மிகுதி கூறினாள் *[குறு.292:7]*. நமர்மணம் உடம்பட்டனர்; இனிய நகையினையுடைய மகளிர் கூட்டத்தினர் இன்னும் அலருடையராவரோ? என்றாள், தோழி *[குறு.351:7]*.

'பாகனே! வேந்தன் பகை தணிந்தனன்; பிரிவால் வருந்தினளாயுறையும் காதலி விருந்துணவை வருந்தி அமைத்துக் களைத்து வெளிப்படுக்கும் முறுவலோடு கூடிய இனிய நகையைக் காண்போமாக', என வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குக் கூறினான் *[நற்.81:9]*. 'நாட! இனிய நகையையுடைய மடந்தை பசப்பப் பிரிதல் இன்னாது'எனத் தலைமகளது ஆற்றாமை கூறித் தோழி வரைவு கடாவினள் *[நற்.108:7]*. தலைவி, முருந்து போன்ற தன் எயிறுகளிலே நகையைத் தோற்றுவித்துச் செல்லுதற்கரிய சுரத்தின்கண்ணே தலைவனொடு சென்றனள் *[நற்.179:10]*. கொண்கனோடு தலைவி இனிய நகைபொருந்த விளையாடினாள் *[நற்.187:10]*. தலைவியின் சிலவாய மொழியையுடைய சிவந்த வாயினின்று எழுகின்ற நகைக்குத் தலைவன் மகிழ்ந்தான் *[நற்.190:9]*. ஆந்தையின் சேவல் நகை மிகப்பெற்று நகுந்தோறும் தன்பேடையை அழைக்கும் *[நற்.218:4]*. அழகிய இனிய நகையையுடைய மகளிர் காயும் தினையைக் கைவிரலால் துழாவினர் *(நற்.267:3)*. அழகிய எயிற்றினின்றொழுகிய, விருப்பமுற்ற, மாட்சிமைப்பட்ட நகையையுடையவள் காதலி *[நற்.269:4]*. அருவியாடுதலில் வெறுப்படையின் மடந்தை இனிய நகை நீங்கப்பெறாத கள்ளின் தெளிவைப் பருகுவள் *[நற்.341:3]*.

வெள்ளிய எயிற்றினையும் இனிய (அமர்த்த) நகையினையும் உடையவர் இளையர் *[ஐங்.198:1]*. முகிழ்த்த நகையினையுடைய மடவரலாகிய தலைவி தலைவனோடு சுரத்திடை உடன் சென்றனள் *[ஐங்.380:2]*. 'இனிய நகையோடு கூடிய முறுவல் கொண்ட என் ஆயத்தோர்க்கு என் வருகையை விரைந்து சென்றுரைமின்' என உடன்போய் மீளுகின்ற தலைமகள் தன்னூர்க்குச் செல்கின்றாரைக் கண்டு கூறினாள் *[ஐங்.397:5]*. பற்கள் தோன்றுதல் இல்லாத இனிய நகையினைச் செய்தவாறு தன் தந்தையின் பெயரன் சிறுதேர் உருட்டல் கண்டு தலைவன் மகிழ்தல் *[ஐங்.403:4]*. மனையோள் பக்கத்திருப்பப், புதல்வன் மார்பில் தவழ்ந்திடும், மகிழ்ச்சியும், நகையும் கலந்த இன்பத்திற்கு, யாழிசையும் ஒப்பாகாது எனக் கடிமனைச் சென்ற செவிலி தலைமகனும், தலைமகளும் புதல்வனோடு பாடல் கேட்டிருந்தமை கண்டு தன்னுள்ளே உவந்து கூறினாள் *[ஐங்.410:3]*.

நகை தரும் மொழியினையுடைய மகளிர் நாணும் நிலைபோல முற்றித் தினைக்கதிர் வளைந்தது *[கலி.40:2]*. தன் களவுக்காதலன், கடைக்கண்ணாலே கொல்வான் போல நோக்கி நகைதரும் கூட்டத்தைச் செய்தமையினைத் தலைவி தோழிக்குக் கூறினாள் *[கலி.51:15]*. புதல்வன் நகை முகங்காட்டென்பான் தலைமகள் தலைவன் பரத்தமையால் கண்ணீர் சொரிந்தாள் *[கலி.82:13]*. 'இன்னகை' எனத் தலைவன் தலைவியை விளித்தான் *[கலி.89:11]*. இனிய நகையினையுடைய நல்லாய் எனத், தலைவி விளிக்கப்பெறுதல் *[கலி.92:24]*. தன்னைக் கண்டாருடைய நலமாகிய கவளத்தை, முத்தையொக்கும் நகையினையுடைய வெண்பல்லைத் திறந்துகொள்ளும் எனத் தலைவி பரத்தையரை யானையாகக் கூறிப் புலந்தாள் *[கலி.97:15]*.

தலைவி நகையினை முகத்தேயுடைய வேழம்' எனப் பரத்தையைச் சுட்டினாள் *[கலி.97:20]*. யான் நகை வல்லேன் என்று நக்கு என் உயிரோடு போம்படி படைதொட்ட மாறுபாடுடையவளே! என அடியோர் பாங்கின் தலைவன் தலைவியை விளித்தான் *[கலி.108:6]*. 'நின்னோடு ஓர் நகை செய்தலைக் குறித்து, நீ என் மெய்யைத் தீண்டுதற்குத் தந்த அப்பொழுதே, எம்மைப் புணர்ச்சிக்கும் எளியேமாகக் கண்டாய்' என, வினைவல பாங்கிற் றலைவனிடம் வெண்ணெய் விற்கச் சென்ற தலைவி கூறினாள் *[கலி.110:4]*. நகைமுதலாக நாம் கொண்ட நட்பிலே தோன்றிய தகுதிப்பாடுகளாலே வருந்துதல் ஒழிய அவர் பகையாலே வருந்துதல் உடையரல்லர்; ஆயினும் அவர் நம்மை வருத்துநோய் பகைமையினும் கடியதாகும்' எனத் தலைவி வன்புறை எதிரழிந்து கூறினாள் (இங்கு நகை என்பதற்கு நகுநயம் மறைத்தல் என்னும் மெய்ப்பாடு எனப் பொருள் கூறுவர்) *[கலி.137:13]*. மாதர் முல்லையை ஒத்த எயிற்றையும், இனிய நகையினையுமுடையவர் *[கலி.139:28]*. தலைவன் மீண்டு வந்து தன்னடியைச் சேர்தலாலே, அவனால் இழந்த நலத்தைத் தலைவி இனிய நகையோடு எய்தினாள் *[கலி.143:60]*. 'நகையின் மிக்கதன் காமமும் ஒன்று என்ப (தேறுதல் ஒழிந்த காமத்தின் மிகுதிறமும் ஒரு காமம் என்று கூறுவர்) *[கலி.147:13]*. தலைவி, மனத்திடத்தே நகை உண்டாகத் தலைவனைச் சேர்ந்தாள் *[கலி.147:70]*.

'மோகினியாகிய நின் கையினை உடையை' எனத் திருமாலைப் புகழ்தல் வடிவினைக் கண்டு மகிழ்ந்த நகையே அச்சமாய் முடிய, அமரர்க்கு அமுதினைப் பகுத்திடும் *[பரி.3:33]*. நகை பொருந்திய காதலரைக் கூட்டும் *[பரி.6:12]*. 'இவள் பூத்தனள்; இவளைப் பொருந்தாதே' எல்று தோழி கூறச் செஞ்சாந்தின் நாற்றத்தால் பூப்பின்மையை உணர்ந்த தலைவன் நகையோடு சென்றான் *[பரி.16:26]*. பரத்தை எதிர, நகை செறிந்த தலைவி சித்தம் திகைத்து நின்றாள் *[பரி.20:47]*.

2. எள்ளல் - ஏளனச் சிரிப்பு - இகழ்ச்சி. பரத்தையரைக் கூட்டுவிக்கும் அவாவுடன் வரும் பாணன், ஆ பாய்ந்தமையின் இல்லத்தில் புகுந்து என்னைப் பார்த்து மயங்கிய நெஞ்சினனாய்த் தொழுது நின்றது நகையை -எள்ளலை- விளைவிப்பதாகின்றது' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் *[அக.56:1]*. 'ஒருவன் கண்ணியினைத் தலையிற் சூடிய பின் நீள நினைந்து போயினான். அவ்வளவிற்கே இவ்வூரார் புன்னையின் தாதினைப் பார்த்து, என்னையும் நோக்கும்; இது மிகவும் நகையினைத் தருவதொன்றாகும்' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் *[அக.180:1]*. 'தோழி, இரவு நிகழ்ந்த நகைக்கு இடனாய செய்தியொன்றைக் கேளாய்; நம்மில்லில் இரவில் வந்து நின்ற தலைவனைக் கண்ட அன்னை என் முகத்தினைப் பார்த்து நீ மிகவும் நல்லவள் என நகைத்துப் பெயர்ந்தனள்' என்று தலைவன் கேட்குமாறு தோழி தலைவியிடம் கூறினாள் *[அக.248:1]*. 'நெஞ்சே! உலகத்திலுள்ளோர்க்கெல்லாம் பெரு நகையாகக் காமம் அளவு கடந்து பெருகுதலால் அருந்துன்பத்தினை எய்துவித்தாய்' என்று அல்ல குறிப்பட்டு மீளும் தலைவன் கூறினான் *[அக.258:13]*. 'ஊரனே! நீ பரத்தை இல்லின்கண் இருந்தபொழுது அவள் மகிழ்ந்தனள்; யாங்கள் அதனைக் கருதியது இலம்; அங்ஙனமாகவும் நீ யாரையும் அறியேன் என்று மறுப்பது மிக்க நகையை விளைவிப்பதாகும்' என்று கூறித் தோழி வாயில் மறுத்தாள் *[அக.346:1]*. புலம்பன் பூக்கள் பலவற்றையும் சூடி வருதலைக் கண்டு அலர்மிக்க நம் ஊர், மிகவும் புதிய தன்மையினை உடையதாகின்றது. இது பெரிதும் நகையினை விளைவிப்பதாகும் என்று தோழி தலைவியிடம் உரைத்தாள் *[அக.400:1]*.

'தலைவியின் மெலிவு வேலனால் வந்ததென்று வெறியாட்டாளன் கூறுவான்; அன்னையும் அதுவென்று நினைப்பாளாயின், மலைநாடன் நம் வீட்டிலுள்ளாரது பெரிய நகைக்கிடமான செய்கையைக் கண்டு- செல்ல வந்து போவானாக' எனத் தலைவன் சிறைப்புறமாகத் தோழி கூறினாள் *[குறு.111:7]* 'தோழி! பெரிய நகைச் செய்தி ஒன்றனைக் கேள், தலைவன் ஒருநாள் பிரியினும் உயிரின் தன்மை வேறுபடுகின்ற நாம், தலைவன் வினைவயிற் செல்லத் தமியேயாய் இல்லில் உயிர்வாழ்ந்திருக்கக் கடவேம் என்று கூறுவர்; இஃதென்ன கொடுமை' என்று பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகளை முகம் புக்குக் கூறினாள் *[நற்.129:1]* 'பாண! நம் பெருமான் நகை நன்குடையன்' என்று பரத்தை தலைவனை நெருங்கிப் பாணற்கு உரைத்தாள் *[நற்.150:1]* 'தலைவன் நம்மை வருத்துதல் அறியானாய், நம்மால் அவன் வருந்தியது மட்டும் கூறித், தொழுது நின்றதைக் கருதுந்தோறும் நகையுடையதாகின்றது', என்று தோழி தலைவியிடம் உரைத்தாள் *[நற்.245:1]*

முடமுதிர் பார்ப்பானால் பெருநகை நிகழ்ந்தமையினைத் தலைவன் சிறைப்புறமாகத் தோழி தலைவிக்குக் கூறினாள் *[கலி.65:2]* 'புதுப்புனலைப் பலகாலும் ஆடல் வேண்டிச் செல்லுமிடத்து முறுவலுடையார்க்கு ஓர் நகையை உண்டாக்கி, நின்தேர் மணலினுள்ளே அகப்படுதலைப் பாதுகாப்பாய்' எனத்தலைவி தலைவனிடம் நீ ஆடிய புதுப்புனல் இதுவே என்று கூறினாள் *[கலி.98:38]* 'காமநோயாலே மிக்க நெஞ்சம், நம் துயிலைக் கவர்ந்து கொண்ட தலைவன்பால் பட்டதாயின் நாம் உயிர் வாழ்தல் நகை நனி உடைத்து' என்பது தோழி கூற்று. *[கலி.122:23]* 'ஊரவர்கெல்லாம் பெரியதோர் நகை (இகழ்ச்சி) உண்டாம்படி என் அரிய உயிர் போகாநிற்கும்; நீ தலைவன்பாற் சென்று என்குறையை முடிப்பாயாக', எனத் தலைவி திங்களிடம் கூறினாள் *[கலி.145:45]* ஊரிலுள்ளார் நகையைப் (எள்ளலை) போக்கி மனத்திடத்தே மகிழ்ச்சியுண்டாகத் தலைவி தலைவனைச் சேர்ந்தாள் *[கலி.147:69]*

**3. விளையாட்டு.** நகையிடத்தும் - விளையாட்டிடத்தும்- பொய் கூறுதலை அறியாத வாய்மையுடையவன் செல்வக் கடுங்கோ வாழியாதன் *[பதி.70:12]*

'மலைநாடற்கு நான் என்ன செய்வேன் என்று கூறி நீ அவனை இயற்பழித்தாய்; நீ அங்ஙனம் கூறியதை நான் நகை என உணராது போனால் நீ என்ன பாடுபடுவாய்; மிகவும் துன்புறுவாயன்றே' எனத் தலைவி தோழியைச் சினந்துரைத்தாள் *[குறு.96:3]*

'இப்புன்னை நும்முடன் பிறந்த தங்கையாகும் என்று அன்னை கூறினாள்; ஆதலின் இப்புன்னையின் முன்னர் நும்மோடு நகைக்கு (நகைத்து விளையாடுதற்கு) நாணுகின்றோம்' என்று தோழி தலைவனிடம் கூறினாள் *[நற்.172:6]*

தலைவன், நகையாக ஒரு நீக்கத்தைச் செய்து நீட்டிப்பினும் தலைவி கலங்குவள் *[கலி.10:14]* 'நின் மெய்ந்நடுக்கத்தைக் காணுதற்கு நகையாகப் பிரிவேன் என்று கூறினாரல்லது, தலைவர் பிரிவாரல்லர்' எனத்தோழி தலைவியிடம் கூறினாள் *[கலி.13:27]*

**4. ஒளி / விளக்கம்.** நகை - ஒளி - தங்கி அசையும் பொன்னாற் செய்த மகரக்குழை *[முரு.86]*. நகை தங்கும் வஞ்சிமாலைக்கு வெற்றியளித்தமையால் பகை நடுங்கும் பாசறை *[முல்லை.79]*.

நகையால் சிறந்து விளங்கும் பற்கள் பொருந்திய பவள வாயினையுடையவள் தலைவி *[அகம்.62:2]* நகைமுகத் தினையுடையராகிய பெண்டிரது நிறமூட்டிய நகம் போல, முருக்கிதழ் உதிரும் *[அக.317:5]*

கூந்தலில் கிடந்த நகையுடைய அணிகளும், பொன்மாலையும் போல, மணலிடத்துப் பிறமலரும், வேங்கை மலரும் நிரைத்தன *[கலி.32:4]* புதல்வனது தலையிற் கிடந்த முத்துவடத்தோடே நெற்றியில் கிடந்த சுட்டி, நகையோடு (விளக்கத்தோடு) அசையும் *[கலி.81:4]*

அயலாரோடு கூடுதற்கு நீ சென்று வருதல், நகைமிக்க மலரையுடைய, மாலைதோறும் உண்டாகாநின்றது, என்றாள் தலைவி. *[பரி.8:48]*.

**5. முகை / மலர்.** நறாம்பூவினது நகை- முகை - அவிழும் செவ்வியை நோக்கித் தும்பி சூழ்ந்து திரிந்தது *[கலி.105:41]*

நிறத்தால் எரியை ஒத்த நகையினை (வெட்சி மலரை) இடையிட்டு கட்டின துழாய் மாலையை அணிந்தவர், திருமால் *[பரி.13:59]*

**6. முத்துமாலை.** வண்டுகள், மகளிர் நலத்தைக் கைக்கொள்வனபோல், மொய்க்கையினாலே ஏற்பட்ட பூசலில், ஒருத்தியின் பூமாலையும், பண்ணுதல் அமைந்த நகையும் - முத்துமாலையும் - வேறொருத்தியுடைய தொடியோடே துடக்கிக் கொண்டன *[கலி.92:33]*

**7. எயிறு.** 'நின்தோளைச் சேர்ந்த பரத்தையரது, நகை- எயிறு - சேர்ந்த இதழினைப், பாணன், யான் அழும்படி எனக்குக் காட்டென்றானோ' எனக், காமக்கிழத்தி, தலைவனிடம் ஊடியுரைத்தாள் *[கலி.72:12]*

**8. அலர்ச்சி.** கமழ் முகைகளது மணத்தைத் தருகின்ற நகையால் - அலர்ச்சியால் - நயக்கப்படும், நறவம் பூவின் இதழ் *[பரி.8:74]* மகளிர் மாலைப்பொழுதில் நகையுடைய மலர்களை வேய்ந்தனர் *[பரி.10:114]*

**நகையவர்-மகிழ்ச்சியுடையார்.** விளங்கும் எயிற்றினையுடைய இனிய நகையவர் - மகிழ்ச்சியுடையார் - நீராடும்போது, வையைக்கு அணியாக விளங்கினர் *[பரி.22:31]*

**நகைவர் - நட்பினர்/மகிழ்ச்சிக்குக் காரணமானோர்.** நகைவர்க்குக்-நட்பினர்க்குக்-குறைவின்றி உதவும் பண்பினையுடையவன், சோழன் குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளி வளவன் *[புற.373:35]* நகைவர் அணுக முடியுமே தவிரப், பகைவர் அணுகுதற்கரியது மூதூர் *[புற.398:9]*

களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலின் தானை, நகைவர்க்கு அரணமாகி இருந்தது *[பதி.31:34]* களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் நகைவர் (மகிழ்ச்சிக்குக் காரணமான பாணர் முதலியோர்) பெறும்படி, நன்கலன்களை மிகுதியாகக் கொடுத்தான் *[பதி.37:4]* கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன், நகைவர் பெறும்படி, நன்கலன்களை மிகுதியாகக் கொடுத்தனன் *[பதி.43:20]*

**நங்கை - பெண்.** 'பரத்தையிற் பிரிந்தான் என்று, தலைவனொடு புலந்து தலைவி, இப்பொழுது, புனலிலே அவனோடு பிடியின் மீது ஏறினாள்; அந்நங்கை - பெண்-நாணுடையளல்லளோ', எனச், சிலர் கூறினர் *[பரி.12:49]* காதற்பரத்தையின் மீது செந்நிற நீரைவீசி, 'இந்நங்கை பூப்பெய்தினள்; பொலிக' என்று தோழியர் கூற அவள் நாணினள் *[பரி.16:30]*

**நச்சியார் - விரும்பியவர்.** 'பெரும! சீரிய பொருளை நச்சியார்க்குக்-விரும்பியவர்க்குக்-கொடுத்தலளவில் நின் தந்தையை ஒப்பாய்; மகளிரை நோய்ப்படுத்தும் நுந்தை பரத்தமையை ஒவ்வாதே' என மகனை முன்னிலைப்படுத்தித் தலைவி கூறினாள் *[கலி.86:21]*

**நச்சினார் - விரும்பியார்.** 'நும்மை நச்சினார் - விரும்பியார் ஆகிய காமுகர் நுமக்குத் தரும் பொருள்கள் நாடறிய நும்முடையவே என நீராடுவோர் பரத்தையிடம் கூறினார்' *[பரி.20:85]*

**நச்சுவர்** - விரும்புபவர். 'நும்பால் பரிசில் நச்சுவர் - விரும்புபவர் - வேண்டும் பொருளை நிரம்ப நல்குதலைப் பாதுகாப்பாயாக' எனத் தந்துமாறனைச் சங்கவருணர் என்னும் நாகரியர் பாடினார் *[புற.360:14]*

**நசை** - விருப்பம், வேட்கை, ஆசை. 'நின்பால் நசை - வேட்கையால் - (விருப்பத்தால்)-நின் வறுமை தீர்க்கும்வன்மை அறிந்து இரப்போர் வருகுவர்' எனப் பாண்டியன் கருங்கையொள்வாட் பெரும்பெயர்வழுதியை இரும்பிடர்த் தலையார் பாடுவர் *[புற.3:24]* 'நினது தூசிப்படையின் வலியைக் கெடுத்தல் வேண்டி நசை தர வந்தோர் (பகைவர்) அந்நசை ஒழிய வசையுண்டாக வாழ்ந்தனர்' எனப் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் பாடுவர் *[புற.15:15(2)]* புலி ஏற்றை, ஊன் நசையால் உள்ளம் துரப்ப, வேண்டியவிடத்தே விரும்பிச் சென்றது *[புற.52:3]* 'ஞாயிறு சுடப்பட்ட சுரத்தின்கண்ணே ஏறி இவ்விடத்துவந்த பெரிய நசையினையுடையேம்' என ஆயைத் துறையூர் ஓடைகிழார் பாடுவர் *[புற.136:19]* 'நள்ளி! கண்டார் நசை கொள்ளும் வளத்தை ஏத்திப் பீடில் மன்னரைப், புகழ்ச்சி வேண்டிக், கிளத்தலை எம்நா அறியாதாயிற்று' எனக் கண்டீரக் கோப்பெருநள்ளியிடம் வன்பரணர் உரைத்தார் *[புற.148:2]* 'துளியிடம் நசை கொள்ளும் வானம்பாடிபோல, நினது வண்மை நசையான் நினது அடி நிழற்கண் வாழ்வேன்' எனப் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனை வடம வண்ணக்கன் பேரிசாத்தனார் குறிப்பிடுவர் *[புற.198:25(2)]* கொடையாளர் கொடாராயின் இரப்போர் நசை கொள்ளும் இன்பத்தை இழப்பர் *[புற.203:8]* 'நினது நசை கொடுவரவந்து நின்புகழைக் கூறும் பரிசிலேன் யான், வறியனாய் மீளக் கடவேனோ? என மூவன் பரிசில் நீட்டித்தானைப் பெருந்தலைச் சாத்தனார் பாடினார் *[புற.209:11]* சோறாக்குதற்கேற்றிய உலைப்பானையில் சோறு வராது நெருப்பு வந்ததை உவமைகாட்டிப் பரிசிலை விரும்பி இருந்த நசை பழுதாக வெளிமான் இறந்தமையினைப் பெருஞ்சித்திரனார் புலப்படுத்துவர் *[புற.237:6]* 'நசையினைக் கொள்ளாது நடுவுரையாகிய அறத்தை மொழிந்து இரவலர்க்கு அருகாது கொடுத்து விடின் நீ மேலுலகம் சென்ற பின்னரும் இவ்வுலகில் நின் புகழ்நிற்கும்' என அந்துவன் கீரனைக் காவட்டனார் பாடுவர் *[புற.359:12]* சோற்றுக்குரிய அரிசி இல்லாமையால், வேறு எச்செயலையும் செய்ய விரும்பாது, பொருள் நசையே கொண்ட உள்ளத்தானாய்ப், பொருநன், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனிடம் சேர்ந்தான் *[புற.371:8]* சோழ நாட்டில் வாழும் பொருநன் 'யாம் நலங்கிள்ளியது நசைக்குரிய (விருப்பத்துக்குரிய) பொருநராவோம்' எனக் கூறினான் *[புற.382:5]* சமைத்தற்கண் உள்ள நசையினை மறந்த மட்பானையை மலர்த்தற்கு, வருந்துதற்கேதுவான நசை துணையாகச், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனிடம் சென்றமையினை, நல்லிறையனார் குறிப்பிடுவர் *[புற.393:4,7]* 'பழையோருடைய வழித் தோன்றலாகிய தாமான் தோன்றிக்கோன், நின்பால் அன்பு கொண்டு விட்டான்; நின் நசைக்கு ஏற்ற செல்வத்தை நீ பெறுவாயாக', என அறிந்தோர் கூறியதாக, ஐயூர் முடவனார், தாமான் தோன்றிக் கோனைப் பாடுவர் *[புற.399:21]*

'மழை பொய்ப்பினும், பரிசிலர் நசையினைப் போற்றுதலில் பொய்யலன்' என, இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைக், குமட்டூர் கண்ணனார் குறிப்பர் *[பதி.18:12]* நசை மிகுதற்குக் காரணமான, உண்மையான மொழியையுடைய, புகழ்மிக்க தலைவன், ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் *[பதி.55:12]* தும்பி, காந்தள் மலர் தெய்வம் நசைகொள்ளும் ஒன்றாதலை அறிந்தும், அதனை நீங்காமல் ஊதியது *[பதி.67:20]* 'நின்பால் நின்றும் பிரிந்து பல திசைசென்ற நின் நல்லிசைகள், கனவின்கண்ணும் பிறர்பால் நசை கொள்ளுதலை அறியா' எனப், பெருஞ்சேரலிரும்பொறையை, அரிசில்கிழார் பாடுவர் *[பதி.79:5]*

நீ முற்பிறப்பிற் செய்த நல்வினையாலே நெஞ்சத்திலுண்டாகிய இனிய நசையினைத் தப்பாமல் இப்போதே பெறுக' என வீடுபேறு பெறக்கருதிய இரவலனை நோக்கிக் கூறல் *[முரு.65]*. பெரிய ஊர்களிடத்து, விழாக்கழிந்த பின்னாளில், சோற்றில் நசையின்றிப், பொருநன் வேறுபுலம் செல்வான் *[பொரு.2]*. பெரும்பாணனை ஆற்றுப்படுத்தும்போது நசை கொண்டவிடத்தே (நசைவழி) தங்கிச் செல்லுமாறு கூறினர் *[பெரு.44]*. 'கொற்கையென்னும் ஊரிலுள்ளோர் நசை கொள்ளும் பொருநனே', எனத், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை, மாங்குடி மருதனார் குறிப்பிடுவர் *[மது.138]*. நசைமிக்க (நச்சுதலமைந்த) விளைவயலிடத்தே, பெண்பன்றியுடனே, ஆண்பன்றி ஓடித்திரிந்தது *[மது.173]*. நாவாயின் மேல்நட்ட, பாய்மரத்தின்மேலெடுத்த நசைக்கொடி, பிற கொடிகளோடு சேர்ந்து கதிர்களை மறைத்தது *[பட்.175]*. வளைந்த மேழியால் உழவுத் தொழிலிடத்து நசை கொண்டவர் உழவர் *[பட்.205]*. பிறரைக்கூறும் புகழாகிய விதையோடு, பிறர் பொருள்பால் நசையாகிய ஏருழவினையுடையவர் பரிசிலர் *[மலை.60]*. 'கோவலர் பாலைச் சொரிகையினாலே, பலத்தைப் பெறவேண்டும் என்னும் நசையுடனே, நும் ஊரின் நீங்கிச் சென்ற வருத்தம் நீங்குகையினாலே, விருந்தாம் தன்மையுடையீராகுவீர்' எனக், கூத்தரை ஆற்றுப்படுத்தும்போது கூறினர் *[மலை.411]*. 'என்மேலுள்ள நசை கொண்டு வருகையினாலே என்னிடம் வந்ததே அமையும்' என்று பரிசிலவர நன்னன் முகமன் கூறி வரவேற்றான் *[மலை.545]*.

தலைவன், மனையின்கணுள்ள காவலர் அறியாவண்ணம் வந்து தன்பால் நசை கொண்டுள்ள தலைவியின் உள்ளத்தின்

நசை நிறைவேறும்படி முயங்கினான் *[அக.22:17(2)]*. உயர்ந்த கிளையில் பேடைப்பருந்து புலால் நசைகொண்டு இருந்தது *[அக.51:4]*. பரிசில்பால் உள்ள நசையினால் வாழ்வார்க்குப் பிட்டன் நல்ல அணிகலன்களை அளித்தனன் *[அக.143:11]*. இரவலர்க்கு அவர் எண்ணிய நசை பிழைத்தல் அறியப்படாத ஈகையினையுடையவன் அதிகன் *[அக.162:18]*. பெரிய நசை கொண்ட உள்ளத்தோடு தலைவர் மீண்டுவரும் திசையை நோக்கித் தலைவி துன்பத்தோடிருந்தாள் *[அக.163:5]*. மாரா மலர் உதிர்தலை மழையெனமயங்கிய யானை நீர்நசையால் அலமருதல் *[அக.199:4]*. புதியர் சுரம் கடந்து நெடுந்தூரம் வந்ததால் நீர்நசை மிக்கனர் *[அக.271:6]*. ஊனிடம் நசை கொண்டுள்ள பிணவின்பசி போக்கச் செந்நாய், ஆண்மானின் தொடையினைச் சிதைத்தது *[அக.285:6]*. 'பொருள் நசை துரப்ப, இன்னாமையைத் தரும் கொடிய சுரநெறியில் நீ சென்று சேர்தலும் தகுமோ' எனத் தலைவன் பொருள் கடைக்கூடிய நெஞ்சினைக் கழறினான் *[அக.327:5]*. புலிக்குட்டி, நீர் நசையால் சுனையின் பாலிட்ட யானையின் கையினைக் கடித்து முழங்கியது *[அக.329:11]*. களிறு நீர் நசையால் துறையருகே செல்லப் பதுங்கியிருந்த புலியைக் கொன்றது *[அக.333:22]*. 'தலைவன் மீண்டுவரும் நசையுடன் விடுக்கும் தூது வரப்பெறின் நமது பசலை மறைதல் எளிது' எனப் பிரிவிடை வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் கூறினாள் *[அக.333:22]*.. தலைவன் தோழியின் கையினைப் குறைநீக்கப் பற்றி, நீண்ட நாளாகத் தலைவியால் வரும் நசை நீக்காமலேயே கைவிட்டனன் *[அக.356:8]*. தலைவன் இரவுக் குறிக்கண் வந்தபோது, 'நசை தருதலால் வந்த நன்னராளன்' என்று சிறப்பிக்கப்பட்டான் *[அக.362:8]* ஆண்பூ...ல, ஊனிடம் நசைகொண்ட பெண்பூனையின் பசியைப் போக்கக், கோழிச்சேவலைப் பற்றும் அற்றம் பார்க்கும் *[.அக.367:9]* 'பொருள் நசையால் வந்துற்ற, இரவலர் இரந்தபொருள்களை அளித்தலைச்செய்ய வேண்டுவோர், தலைவியின் பேரழகை நினைந்து ஏதிலராகி மேலேசெல்லாநிற்பர்' எனப் பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் கூறினான் *[அக.377:14]* கலைமான், பேய்த்தேரினை நீரென நசை கொண்டு ஓடும் *[அக.395:9]*

'தோழி! தலைவர் நின்பால் நசைபெரிதுடையர்; நல்குதலையும் செய்வர்' எனக்கூறித் தோழி தலைவியை ஆற்றுவித்தாள் *[குறு.37:1]* தலைவியது பசலை நீங்கும்படி தலைவரிடத்தே இவளுக்கு நசையாகும் தன்மையையுடைய ஒரு சொல்லானது இயலாதோ? எனக் கிழத்தியது வேறுபாடுகண்டு தோழி கூறினாள் *[குறு.48:6]* 'தலைவரது வரவை நீ கண்டாயோ? தலைவனைக் கண்டாரைக் கேட்டறிந்தாயோ? உண்மையினை அறிந்து தெளிய நசையுடையேம் (நசையினம்)' எனத் தலைவி பாணனிடம் கேட்டாள் *[குறு.75:2]*. 'தலைவர் நின்பால் நசை நன்குடையர்' எனத்தோழி தலைவியிடம் உரைத்தாள் *[குறு.213:1]*.

ஆறலை கள்வர் நீர்நிசை வேட்கையினை மரப்பட்டையை மென்று நீக்குவர் *[குறு.274:5]*. தலைவன், நசையினால் புதல்வனைத் தழுவினான் *[குறு.359:4]*.

'பிரிந்து சென்ற தலைவனோடு சென்ற நெஞ்சம், அவர் செய்யும் வினைக்கு உசாத்துணையாகி, அவருடன் ஒருங்கு வருதற்கு நசையோடு வருந்தியிருக்கின்றதோ; எனத், தோழிக்குத் தலைவி கூறினாள் *[நற்.56:6]*. 'மலை நாட்டையுடைய நங்காதலன், நின்பால் உள்ள நசையினால், அச்சத்தைத் தோற்றுவிக்கும் சிறிய நெறியின்கண் வாராதொழிவானாக; எனத், தலைவன் வரவுணர்ந்த தோழி, தலைவிக்குக் கூறினாள் *[நற்.85:11]*. பிடியானை நீருண்ணும் நசையினைக் கொண்டு செல்ல, நடக்கமாட்டாத கன்று ஆண்கன்றோடு ஊர் புகுந்தது *[நற்.171:1]*. தலைவன், குறித்த காலத்துத் தலையளி செய்யாமையின், தன் நசை பழுதாயினமையைத், தலைவி உரைத்தாள் *[நற்.272:7]*. இரை வேண்டிய நசையினால் ஏற்பட்ட வருத்தம் நீங்கப், பறவைகள் மரமிசைப் பிள்ளையொடு வதிந்தன *[நற்.385:4]*.

'மலையிறந்தோர் நசையினை மிகவும் அழித்தவர்' எனத், தலைமகள், பிரிவின்கண் இரங்கிக் கூறினாள் *[ஐங்.318:3]*. நீர் நசையினைப் போக்க யானை முயன்றது *[ஐங்.377:1]*. புதல்வனைத் தழுவிய தாயின் முதுகை முயங்கி, நசையுடையோன் (நசையினன்) ஆகத் தலைவன் கிடந்தான் *[ஐங்.402:2]*.

'நம்மைக் காத்தற்குரியான் இவன் என்று, நசைகொண்டு நிழலாக வந்தடைந்த குடிமக்களைக் காத்துத், தமக்கயலாகிய நாட்டிலே இருக்கின்ற தலைவர், நமக்கு அருளுதலைச் செய்வார்', என்று, தோழி, தலைவியிடம் மொழிந்தாள் *[கலி.26:15]*. மழை தன்னைப் புரக்க, நசைகொண்டுள்ள வேட்கையினாலே, வானத்தை வானம்பாடி பாடும் *[கலி.46:20]*. தலைவியைப் பெறுதற்குக் கொண்ட நசையால் குறியிடத்தே தலைவன் வந்தான் *[கலி.93:17]*. 'தலைவன் தெளிவித்த சொல்லை, நசையுடைய சொல் எனத், தலைவி தெளிந்தாள்' *[கலி.100:9]*. 'நின்மார்பை விரும்பினவளுடைய தொடி கழல, நின்னைச் சூழ நின்று இரந்தோரின் நசையினை வாட்டாய், எனக் கூறும் சொல், நினக்குக் கெடாதோ' என்று, அரசத் தலைவனை நோக்கிச், சான்றோர் கூறினர் *[கலி.100:12]*.

வையையில் நீராடுவோர் சிலர், யாமத்து ஊடற்குறையாகிய இனிய கலவி நசையைத் தரும் தேனை நுகர்ந்தனர் *[பரி.10:32]*.

**2.** அன்பு. கனவில் கண்டாங்கு நனவில் நல்கிய நசை - அன்பு - நிறைந்த தோன்றல்; எனச், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியை, உலோச்சனார் சுட்டுவர் *[புற.377:20]*. 'நசை சால் தோன்றல்' எனச், சேரமான் சிக்கற்பள்ளித் துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதனைக் குன்டுகட்பாலியாதனார் சுட்டுவர் *[புற.387:27]*.

**நசைஇயாள்** - விரும்பினவள். 'நின்னுடைய மணம் கமழ்கின்ற மார்பை நசைஇயாள் - விரும்பினவள் - தொடி கழலக் காணும்போது, நின்னை இரந்தவரின் விருப்பத்தை வாட்டாய், என்ற சொல், பொய்த்துவிடாதோ', எனச், சான்றோர் கூறினர் *[கலி.100:13].*

**நசைஇயோர் - நச்சினோர், விரும்பினோர்.** சேயிழாய்! நின்னை நசைஇயோர் - நச்சினோர் - திறத்து நீ செய்த கொடுமைக்கு ஓர் உதவி செய்யாயாயின், அத்தீமையின் பயன், நின்னைப் பற்றாது விடாது; எனத், தலைவன், தலைவியை நோக்கிக் கூறினான் *[கலி.59:26].*

**நசையுநர் - நச்சினோர், நசையுடையார், விரும்பியோர்.** நசையுநர்க்கு - நசையுடையார்க்கு - வீட்டின்பத்தை நுகர்விக்கும் பெரிய புகழை உடையவன், முருகன் *[முரு.270].* நசையுநர்க்குத் தடையில்லாத பெரிய வாயில் கரிகாலனுடையது *[பொரு.66].*

**நசைவர் - நசையுடையார், விரும்பினார், நண்பர்.** பிட்டங்கொற்றன் நசைவர்க்கு- நசையுடையார்க்கு - மெல்லியனேயன்றிப் பகைவர்க்கு வலிய ஆண்மையன் *[புற.170:14].* கோச்சேரமான் யானைக்கட்சேஎய் மாந்தரஞ் சேரலிரும்பொறை நசைவர்க்கு அளந்து கொடுத்தலறியாத வண்மையுடையோன் *[புற.229:25].* சோழன் குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளிவளவன் நசைவர்க்குக் (நகைவர்க்கு - பாட வேறுபாடு) குறைவின்றி உதவும் பண்பினன் *[புற.373:35].*

**நஞ்சு** - சாப்பொருள், தீது. நஞ்சு - சாப்பொருள்-உடைத்தாகிய வெளிய பல்லையுடையது நாகம் *[புற.37:1].*

இரட்டைப் பிள்ளைகள் நஞ்சுண்டால் இருவர் திறத்தும் ஒருதாய் வருந்துவது போலத் தலைவன் இரவுக் குறிக்கண் வருதலையும் தலைவி வருந்துதலையும் அஞ்சுவேன் எனக் கூறித் தோழி வரைவு கடாவினாள் *[குறு.324:6].*

நட்டோர், கண்ணோட்டமுடையோர்க்கு எதிரே சென்றிருந்து இதனை நீயிர் உண்பீராக என்று நஞ்சைக் கலந்து கொடுத்தாலும் அவர் அதனையும் உண்பர் *[நற்.355:6].*

'நஞ்சு தன்னை நுகர்ந்தார் உயிரைப் போக்குதலை அறிந்து வைத்தும் உண்டாற்போல நின் மனக்கருத்தில் அருளின்றி வருத்துதலைக் கண்டுவைத்தும் நின்பொய்மொழியை மெய்யாகத் தெளியும் பரத்தையரும் பித்தேறினார்' எனப் பரத்தையிற் பிரிந்துவந்த தலைவனிடம் காமக்கிழத்தி கூறினாள் *[கலி.74:8].*

**நட்டவர்-நட்புக் கொண்டவர், நண்பர்.** தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை, 'நட்டவர் - நட்புக் கொண்டவர் - குடியை உயரச் செய்வை' என மாங்குடி மருதனார் பாடுவர் *[மது.131].*

**நட்டவன் - நட்புக் கொண்டவன்-நண்பன்-புணர்ந்தவன்-பொருந்தியவன்.** 'நின்னோடு நட்டவன் - புணர்ந்தவனாகிய-(பிரகலாதன்) வருந்தாமல் அவன் நெஞ்சிற் பொருந்தி, நின்னோடு ஒன்றாக நட்டவனாகிய இரணியன் மார்பினை வகிர்ந்தாய்' எனத் திருமாலைப் புகழ்ந்தனர் *[பரி.4:16,17]*.

**நட்டார்-நட்புக் கொண்டார்.** தன்னோடு நட்டார்க்குக்-நட்புக் கொண்டார்க்குத்-தோற்றலை நாணாதவன் தலைவன் *[கலி.43:10].*

**நட்டோர்-நட்புச் செய்தோர், நண்பர்.** 'பாடுவாரது சுற்றம் கேடில்லையாகுக' என்று சொல்லிப் பொன்னணிகளை எளிதாக வழங்கித் தன்னுடைய நட்டோரினும் - நட்புச் செய்தோரினும் - எம்மோடு நட்புச் செய்தவன் குமணன் என அவனைப் பெருஞ்சித்திரனார் புகழ்வர் *[புற.160:12].* நம்பி நெடுஞ்செழியன் நட்டோரை மிகுத்துக் கூறினான் என்பர் பேரெயின் முறுவலார் *[புற.239:5].*

'நின்னோடு நட்டோர்க்கல்லது, கண்ணோட்டத்தால் அஞ்சமாட்டாய்' எனச் செல்வக்கடுங்கோவாழியாதனை கபிலர் பாடுவர் *[பதி.63:3].*

தம் மனத்து நிகழ்வதனை மறையாது கூறி நட்டோர் மனமகிழும்படி அவர்கள் வேண்டும் பொருள்களை நாடோறும் கொடுத்தவன் நள்ளி *[சிறு.104].*

தலைவியை விட்டு நீங்காதோர், நட்டோரது வறுமையைக் கண்டும் ஒரேயிடத்தில் மடிந்திருத்தலைப் பொறுத்துக் கொள்வார்கள், எனப் பொருள்வயிற் பிரிந்து போகும் தலைவன் தன்னெஞ்சிற்குக் கூறினான் *[அக.279:1].*

நட்டோர் ஆக்கம் வேண்டியே தலைவன் பிரிந்து சென்றதாகக் கூறித் தோழி தலைவியை வற்புறுத்தினாள் *[நற்.286:7].* 'நட்டோர் நஞ்சைக் கொடுத்தாலும் மிக்க நாகரிகமுடையார் அதனை உண்பர்' எனத் தோழி அடுத்துக் கூறினாள் *[நற்.355:6].*

நின்இயல்பினை அறிவார்க்கு இவர் பகைவர், இவர் நட்டோர் என்னும் கூறுபாடுண்டோ, எனத் திருமாலைப் புகழ்வர் *[பரி.3:57].*

**நட்பு** - கேண்மை / அன்பு. கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்தபோது, வேற்றுவேந்தனது நாட்டின்கண் இருந்த பிசிராந்தையார் நட்பே - அன்பே - பற்றுக்கோடாக அங்குச் சென்றார் *[புற.217:5].* 'உடம்போடு இனிய உயிர் விரும்புமாறு போல விரும்பும் உரிமையுடைய பழையதாகிய நட்பையுடையோர், தம்மிடத்தே செல்லின், நடுகல்லாகிய நிலையிலும் இடங்கொடுப்பர்' எனக் கல்லாகியும் இடங்கொடுத்த கோப்பெருஞ்சோழனைப் பொத்தியார் பாடினார் *[புற.223:6].* பெருமைமிக்க தலைமையினையுடைய நட்பிற்குப் பொருந்தாமல் ஈண்டுத் தவிர்க எனச் சொல்லிச் சென்றுவிட்டதாகப் பாரி துஞ்சிய வழிக் கபிலர் கூறினார் *[புற.236:6].* நாஞ்சில் வள்ளுவன்

நட்பினால் சென்றடைந்தவர்களுக்கு அவரது உள்ளங்கைபோல் நெருங்கிய அண்மையன் *[புற.380:11]*

நட்புக் கொள்ளுதலை வேண்டி விரும்பிய அரசர் தொண்டைமான் இளந்திரையனைப் பணிந்தனர் *[பெரு.425]*. 'தேவருலகாக அமுதத்தோடு பெறுவையாயினும் பொய் நின்னைக் கைவிட்டு நீங்க, மெய்யுடனே நட்புச் செய்தலை உடையை' எனத் தலையாலங்கானத்துச் செரு வென்ற பண்டியன் நெடுஞ்செழியனை மாங்குடி மருதனார் பாடுவர் *[மது.198]*.

'யாம், பிரிதல் இல்லாது கூடிய உவர்த்தல் இல்லாத நட்பினால் இருதலைப்பறவை போல இரண்டு உடற்கு ஓர் உயிரினம் ஆவேம்' எனக் கூறித்தோழி வரைவு கடாவினாள் *[அக.12:4]*. கேடுற்ற காலையும் நட்புத் தன்மையில் திரியாராய், அஃதையினைக்காவல் மிக்க இடத்தே கோசர் நிறுத்தினர் *[அக.113:1]*. 'ஊரனொடு எழுந்த அலரோ பெரிது; ஆயின் நட்போ, புணையினைத் துணையாகக் கொண்டு புனல் விளையாடும் அளவினதே' எனத் தலைமகட்குத் பாங்காயினார் கேட்ப இல்லிடைப் பரத்தை கூறினாள் *[அக.186:7]*. என் மகளை உடன் கொண்டு சென்ற தலைவன், ஈன்ற நட்பிற்கு (அன்புபற்றி) என்பால் அருள் செய்யானாயினும் அவள்பால் உதவியும் பெரிதும் உடையன் ஆவேன். 'அதனை அவன் அறியின் நன்று' என மகட்போக்கிய நற்றாய் கூறினாள். *[அக.195:7]*. 'நம் தலைவர், உயிருடன் கலந்து பொருந்திய பல பிறவிகளினும் தொடர்ந்து வரும் நட்பினால் குற்றமற்ற நெஞ்சத்தால் கலந்தோர் போல, பெண்ணே! பிரியேம் என்று யாம் விரும்புமாறு கூறி நாம் அழப் பிரிந்து சென்றார்' என வற்புறுக்கும் தோழிக்குத் தலைவி கூறினாள் *[அக.205:1]*. 'வெறுப்பின்றி ஒன்றிய என்றும் பிளவுபடாத நட்பினையுடைய இனிய குணங்களை உடையர் நம் தலைவர் எனப் பாராட்டிக் கூறினும் மலையிறந்து சென்றமையின் ஆற்றகில்லேன்' என வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் கூறினாள் *[அக.241:1]*. 'இவ்வுலகத்தின்கண் நாணும், நட்பும் இலராயினாரை ஆராயின் என்னையொழிய யாருமிலராவர்' எனக் குறைநேர்ந்த தோழி தலைமகட்குக் குறை நயப்பக் கூறினாள் *[அக.268:8]*. 'கொல்லி மலைபோல, நிலையாக, எஞ்ஞான்றும் வேட்கையுற்ற நெஞ்சத்திற்கு ஓர் உசாத் துணையாக, நட்புக் கெடாது நிலை பெறுவதாக' என அல்ல குறிப்பட்ட தலைவன் தன்னெஞ்சிற்குக் கூறினான் *[அக.338:15]*. 'உடலோடு உயிர் ஒன்றினாலொத்த நட்பினையும், அவ்வுயிர் இன்புற்று வாழ்தல் போலும் காதலையும் உடைய தலைவி வருந்தியிருப்பாளோ' எனத் தலைமகன் தன்னெஞ்சிற்குக் கூறினான் *[அக.339:12]*.

'தும்பியே! எழுமையும் என்னோடு பயிலுதல் பொருந்திய நட்பையுடைய தலைவியின் கூந்தலினும் மணமிக்க நறிய மலர் உளதோ' எனத் தலைவன் தலைவியின் நலம் பாராட்டினான் *[குறு.2:3]*. 'நாடனொடு யான் செய்த நட்பு நிலத்தினும் அகலமுடையது; வானினும் உயர்ந்தது; கடலைக் காட்டிலும் ஆழமுடையது எனத் தலைவி இயற்பட மொழிந்தாள் *[குறு.3:4]*. தலைவனோடு நின்மகள் செய்த நட்பானது நாலூர்க் கோசர் மொழி உண்மையாவதைப் போல முரசு முழங்கவும், சங்கு ஒலிக்கவும் மணம் செய்தலால் உண்மை ஆகியது' எனக் கூறிச் செவிலித்தாய் நற்றாய்க்கு அறத்தொடு நின்றாள் *[குறு.15:6]*. 'மலைநாடனொடு கலந்த நட்பு, நம்மொடு பிரிவின்றாயின் நன்று' என, வரைவிடை ஆற்றாளாய தலைமகள் ஆற்றுவிக்கும் தோழிக்குக் கூறினாள் *[குறு.134:7]*. 'மாயோளிடத்து இன்று போன்று என்றுமுள்ள நட்பையுடைய இந்தக் காமநோயானது அழிதலின்றி மறுமையுலகத்தும் நிலைபேற்றையடையும் எனத் தோழி செறிப்பறிவுறுப்பத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறினான் *[குறு.199:6]*. தலைவன், பிரிந்திருந்த நாளிலும் தலைவியின் நட்பையே நினைத்திருந்தமையினைத் தோழியிடம் கூறினான்' *[குறு.209:7]*. 'நாடனது மார்பை உரித்தாகப் பெற்ற குற்றமற்ற நட்பானது எழில்மிக உடையது' என்று தலைவியிடம் தோழி உரைத்தாள் *[குறு.247:7]*. 'மாமை நிறமுடையாய்! யான், கடல் சூழ்ந்த நிலவட்டத்தைப் பெறினும் நினது நட்பினை விடுதலை நினையேன்' என இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைவன் கூறினான் *[குறு.300:4]*. 'கடற்கரையையுடைய தலைவனோடு, உறுதியாகப் பகையைத் தருகின்றதொரு நட்பைச் செய்தேம்' எனத் தோழிக்குக் கிழத்தி கூறினாள் *[குறு.304:8]*. 'தலைவனோடு நம்மைக் கட்டினேம்; அங்ஙனம் கட்டப்பட்ட நட்பு நன்றாகப் பொருந்தியது; அது பிறரால் பிரித்தற்கு அரியதாகி முடிக்கப்பட்டு அமைந்தது' எனத் தலைமகள் இயற்பட மொழிந்தாள் *[குறு.313:4]*. 'சிற்றிலிடத்தே யாம் தலைவனோடு பொருந்திய நட்பு, அத்தலைவன் ஒருநாள் பிரிந்தால் பன்னாள் வரும் இன்னாமையையுடையது' எனச் சிறைப்புறமாகத் தலைவி கூறினாள் *[குறு.326:3]*. 'தலைவனோடு செய்து கொண்ட ஒரு சிறிய நல்ல நட்பானது கண்களின் அழகு நீங்கத், தோள் நெகிழ்ந்ததன் மேலும், பரிகாரம் ஆகின்றது' எனத் தோழிக்குக் கிழத்தி கூறினாள் *[குறு.377:5]*. 'அன்றிருந்ததைப் போன்று மாறுபாடின்றியிருக்கும் நட்பினையுடையவன் தலைவன்' எனத் தலைவி கூறினாள் *[குறு.385:6]*. 'தலைவனோடு ஒருநாள் நகைத்து விளையாடுதலையும், அவனுடைய மெய்யைத் தோய்ந்த நட்பானது நீக்கியது; இது வியத்தற்குரியது' என இற்செறிக்கப்பட்ட தலைமகள் தன்னுள்ளே கூறினாள் *[குறு.401:6]* .

'தோழி! சான்றோர் தம்மை வந்து ஒட்டியோர் திறத்து அவர் குணஞ்செயல்களை ஆய்ந்து நட்பின் (நட்புக் கொள்ளுதல்) அல்லது உறவு கொண்டபின் ஆய்ந்து பாரார் எனத் தோழி தலைவிக்குக் குறை நயப்பக் கூறினாள் *[நற்.32:8]*. 'தோழி! நாம் இத்தன்மையேமாகி வருந்தும் வண்ணம் நம்மைத் துறந்த தலைவர் நட்புத்தான் நமக்கு யாதுபயன்படும்' எனத் தூதுவிடக்

கருதிய தோழிக்குத் தலைவி கூறினாள் *[நற்.64:3]*. 'தோழி! உயிர் ஒன்றாயிருந்தாலொத்த குற்றமற்ற நட்பினையுடைய நினக்கு மறைப்பதானது எவ்வளவு தவறு? தலைவன் நட்பு இல்லையாய்விடுமோ? என்று என்னெஞ்சத்தில் அஞ்சாநிற்பேன்' எனத் தோழி சிறைப்புறமாகத் தலைவிக்கு உரைப்பாளாய்க் கூறினாள் *[நற்.72:3,10]*. 'நின்னைப் பிரியேமாகி ஒன்றியிருந்தும்' என்று கூறிய பழைமையாகிய நட்பினின்றும் காதலர் பிரிந்தகன்றதனாலே தலைவி கலங்கினாள் *[நற்.109:1]*. 'அன்பற்றவரது நட்பு அப்படியே அன்பில்லாமல் ஒழிவதாக என்று நீ வெறுத்துக் கூறுவதுபோல் தலைவன் கூறுகின்றலன்' எனத் தோழி அறத்தொடுநிலை பயப்பக் கூறினாள் *[நற்.165:7]*. தலைவன் கேண்மை நமக்குத் துன்பமாயிருக்கவும் அதனை அறிபவர் இல்லையே என்று நீ கூறாநிற்பை; அவருடைய நட்பை நான் மிக நன்றாகத் தெளிந்திருக்கிறேனாதலால் ஆற்றியிருப்பேன்' எனத் தோழியைத் தலைமகள் ஆற்றுவித்தாள் *[நற்.309:9]*. 'நின்பால் மயக்கமுற்ற நட்பினால் நலம் ஒழியவிட்டு, உன் உறவைக் கொண்ட காதலியைக் காண வரும் நெறி இதுவாகும்', எனக் கூறித்தோழி இரவுக்குறி நேர்ந்தாள் *[நற்.323:4]*. 'ஐயனே, நின் நட்பானது பழிச்சொல்லுக்கிடமாயிராநின்றது' எனத் தோழி வரைவு கடாவினாள் *[குறு.354:11]*.

'இவ்வூரிடத்தே அலர் எழாத போது கொண்கனது நட்பு நன்று' எனத் தலைமகள் வாயில் மறுப்பாள் பாணனுக்குக் கூறினாள் *[ஐங்.131:1]*. 'எமக்கு அவருடைய நட்பு கடலினும் பெரிது' எனக் கூறித் தலைமகள் வாயில்மறுத்துக் கூறினாள் *[ஐங்.184:4]*. 'நாடே! நின்னோடு பொருந்திய மடந்தையின் நட்பு, நீ பிரியினும் பிரிவதன்று' எனத் தலைமகற்குத் தோழி கூறினாள் *[ஐங்.297:4]*.

'தன்பொல்லாங்குகள் பலவற்றையும் கூறி யான் கழறுகையினாலே, களவொழுக்கத்திலே நம்மோடு மருவுதல் உறுகையினாலே, கூடின நட்பு அருகிற்று' எனத் தலைவன் வரைவு முயற்சி மேற்கொண்டு வருவதனைத் தோழி தலைவிக்குக் கூறினாள் *[கலி.45:22]*. வலி மிகுகின்ற கோபத்தாலே வாட்போரைச் செய்யத் தொடங்கின மன்னரைச் சான்றோர் நட்பாக்கும் வழிமுறையை ஆராய்ந்து கூட்டுவித்தனர் *[கலி.46:8]*. நீ வரையாமல் பிரியப்பட்டாளோடு கொண்ட நட்புப் பின்னுதலை நீ கொடுத்தல் வேண்டும் என்று தோழி வரைவு கடாவினாள் *[கலி.48:21]*. 'நகுநய மறைத்தல்' என்னும் மெய்ப்பாடு காரணமாக நாம் கொண்ட நட்பிலே தோன்றிய தகுதிப்பாடுகளால் வருந்துதல் ஒழிய, மாறுபாடு காரணமாக வந்த பகையாலே வருத்துதல் உடையரல்லர் எனத் தலைவி வன்புறை எதிரழிந்து கூறினாள் *[கலி.1:7:13]*.

நட்பும் பிரிவும் ஆகிய காமத்தையும், இதற்குச் செருக்கினை விளைவிக்கும் கள்ளையும் விரவி, யாவரும் பாராட்டத், தாம் விரும்பின காதலரோடு மகளிர் புனலாடினர் *[பரி.20:108]*.

**நடலை - நடிப்பு, வஞ்சனை, பொய்ம்மை.** விடலாய்! நின் பூழெல்லாம், நீ அளித்துப், பின்னர் கைவிடுதலின், நின் நடலையில் - நடிப்பிலே - அகப்பட்டு, நோயைப் பெரிதாகப் பொருந்தினை, எனப் பரத்தையர்க்கும், பூழிற்கும் ஏற்பத் தலைவி மொழிந்தாள் *[கலி.95:33]*.

**நடவை-வழி.** ஏறுதற்கும், இறங்குதற்கும் அரியவாகையினாலே, அகழிலே இழிந்தாற் போன்றன காட்டாற்று நடவை - வழி - *[மலை.214]*. பருக்கையையுடைய மேட்டு நிலத்திடம் உடைந்த நடவை, மழை பெய்து குளிர்ந்தது *[மலை.432]*.

**நடன் - நட்டுவன்.** காற்றாகிய நடன் - நட்டுவன் - பூங்கொடியாகிய விறலியை ஆடச் செய்தான் *[பரி.22:42]*.

**நடாஅக் கரும்பு - எழுதுகரும்பு.** காமநோயை உண்டாக்கும் நடாஅக்கரும்பு - எழுதுகரும்பு - நெருங்கின - தோளினையுடையவர் மகளிர் *[கலி.112:6]*.

**நடு - 1. இடை.** உண்டென்று பிறர் உணரப்படாத, வருந்தும் நடுவினை - இடையினை - உடையவள், பாடினி *[பொரு.38]*.

தலைக்கு மேல் நடுவுயர்ந்த, வளைந்த மடுப்பை உடையவள், கூனி *[கலி.94:17]*.

**2. இடைப்பகுதி.** ஞாயிறு முதுவேனிற் காலத்தும் நடு - இடைப்பகுதியில் (நாட்களில்) - நின்று காய்ந்தது *[அக.89:1]*.

ஆற்றுநடு (ஆற்றிடைக்குறையும்) ஆலமரமும், கடப்பமரமும், குன்றும், பிறவும் கடவுள் உறையும் இடங்களாகும் *[பரி.4:67]*.

**3. பொருள், மறைபொருள்.** திருமால் உயிர்கள் தோறும் நடுவாய் - மறைபொருளாய் - உள்ளார் *[பரி.2:25]*.

தாம் ஓமை மரநிழலில் இருந்தபோது, யானை நடுக்கஞ்செய்யாது வந்து, தழையை ஒடித்துத் தின்றதைப், பிரிவுணர்த்தப்பட்ட நிலையில், தலைமகற்குத் தோழி கூறினாள் *[நற்.318:4]*.

தனிமையில் நடுக்கஞ் செய்யும் இளவேனிற் காலத்தில் தலைவி கலங்குவள், எனத் தலைவன் தேரை விரைந்து செலுத்த வந்ததனைத், தோழி, தலைவிக்குக் கூறினாள் *[கலி.27:23]*. மன்னவன், அறநூல் நெறியாலே பல்லுயிர்களையும் பாதுகாத்துத், தீவினையால் உளதான நடுக்கம் மனத்தில்லையாம்படி தான் செய்தவாறே வினையின் பயனை நுகர்தற்குத் துறக்கம் வேட்டெழுந்தான் *[கலி.118:2]*. நான்கு திக்குஞ்சேர நடுக்கமுறும் ஊழிமுடிவாகிய காலத்திலே, கூற்றுவன் பிறையினை எயிறாகக் கொண்டு, பல்லுயிரையும் உண்டான் *[கலி.120:8]*. மாயவன், இருங்கடல் ஒலிக்க, இவ்வுலகெல்லாம் ஒரு படிப்பட நடுக்கமுற்று அச்சமுறும்படி தான் தோற்றுவித்த இருநிலத்தைத், தான் மீண்டு

தன்னிடத்தே ஒடுக்கிக் கொண்டான் [கலி.134:9] கொடுங்கோலன், அமைச்சரை, முன்னர் நடுக்கமான மொழிகளைக் கூறிப், பின்னர் இடும்பைகளை உறுவித்துக் கொல்வான் [கலி.146:2].

இரணியன் பலபிணிகள்படப் பிணித்த வழி, அத்துன்பத்தால், பிருங்கலாதன் நடுக்கமடைந்தான் [பரி.4:13]. புனலாட்டு முடிவில், தலைவன், தலைவியை எண்ணிப்பாட, அதனைக் கேட்டு வேறொருத்தி தலைவனோடு அளவளாவக் கருதி வருத்தமுற்றாள்; அதனையறிந்த, தலைவன், தலைவியைச் சேர்ந்து, நடுக்கமுற்றான் [பரி.7:69]. யானைப்பாகர், யானைகளை அடக்கி, மகளிர் நடுக்கத்தைக் களைந்தனர் [பரி.10:52].

**நடுக்கு** - துளக்கம். மந்திரச் சுற்றத்தோடு நெடுங்காலம் விளங்கி நடுக்கு - துளக்கம் - இன்றி நிற்பாயாக, எனச், சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதனை, முரஞ்சியூர் முடிநாகராயர் பாடுவர் [புற.2:20]. பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன்வழுதி; போரை ஏற்றுத், திறையை வேண்டுவனாயின், கொள்க எனச், சொல்லிக், கொடுத்த மன்னர் நடுக்குத் தீர்ந்தார் [புற.51:7]. 'இவன், ஆலமரத்தின் கொம்பை, அதன் வீழ்தாங்கினாற் போலத் தனது பழைய குடியை நடுக்கற அனைத்துச் செல்லும், போரின்கண் மாட்சிமைப்பட்ட, பாண்டியர் குடியுள், ஏறுபோல்வான்' எனப், பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியைக், காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் பாடுவர் [புற.58:5]. தண்டுக்கோலை ஊன்றி, நடுக்குற்று, முதுமையை யுடையேமாகிய எமக்குக், கல்லா இளமை கழிந்தமை இனி நினைந்து இரங்கத்தக்கது அரியது எனத், தொடித்தலை விழுத்தண்டினார் பாடுவர் [புற.243:12]. வெருகாகிய பகைக்கு அஞ்சிய கோழிப்பேடை, உயிர் நடுக்குற்று அரற்றியது [புற.326:3].

தம்மைக் கண்டாருடைய நெஞ்சை நடுக்கு உறுவித்துப் பொருள் வாங்குதலையுடையவர் பரத்தையர் [மது.583].

தலைவன் வினைக்கட் சேறலைத், தலைவிக்கு உரைக்க, அவள் நாவானது, நடுக்குற்ற திருந்தாத சொற்களால், 'நும் செலவு மாட்சியுற்றுச் செப்பமுறுக' எனக் கூறியது [அக.299:17].

பொறையனது பாசறைக்கண், நெஞ்சு நடுக்குறுகையினாலே, மறவர்கள் துஞ்சாதிருந்தனர் [நற்.18:6]. 'குன்றநாடனை நினைக்குந்தோறும், அவன் பண்பு தந்த துன்பமானது, நெஞ்சை நடுக்குறுத்துகின்றது' எனத், தோழி கூறினாள் [நற்.273:10].

தோழி! நெஞ்சு நடுக்குறும்படி, பல்கால் கேட்டும், ஐயுற்றும் தாம் அஞ்சியிருந்த பொருள், தாம் கேட்டபடியிலே மெய்யாய் வருத்தும் என்னும் பழமொழி, அறுதியாக உண்மை! எனத், தலைவன் பொருள்வயிற்பிரிகின்றான் எனத், துணிந்து ஆற்றாளாய்த், தலைவி, தோழிக்குக் கூறினாள் [கலி.24:1].

**நடுகல் - போரில் பட்டோர்க்கு எடுக்கும் கல்.** போரில் இறந்த வீரரின் உருவமும், பெயரும், பீடும் எழுதி அவரைப் புதைத்த விடத்தே நடும் சிலை. 'கேடில்லாத நல்ல புகழ்ச்சி மாலையைச் சூடி நடுகல்-பட்டோர்க்கு நட்டகல்-ஆயினன், எம்மைப் பாதுகாப்போன்; எனக், கோப்பெருஞ்சோழனைப், பொத்தியார் பாடினார் [புற.221:13]. 'உயிர் நீத்தலின், நிலைபெற்ற நடுகல்லானவிடத்தும், பழையதாகிய நட்பையுடையோர் தம்மிடத்தே செல்லின், நிச்சயமாக, இடங்கொடுத்தளிப்பர்' எனக், கல்லாகியும் இடங்கொடுத்த கோப்பெருஞ்சோழனை, வடக்கிருந்த பொத்தியார் பாடினார் [புற.223:3].. 'நடுகல்லின்கண் பீலியைச் சூட்டித், தேறலைச் சிறிய கலத்தான் உகுப்பவும், அதனைக் கொள்வானோ, நாடு முழுவதும் கொடுப்பவும் கொள்ளாதோன்' என, அதிகமான் நெடுமானஞ்சியை, ஔவையார் பாடுவர் [புற.232:3]. 'என் இறைவனது அடையாத பேரில்லே! ஆனிரையை இவ்வூரின்கண் மீட்டுத் தந்து, நடுகல்லாகிய இறைவன் மனைவியை ஒப்பப், பொலிவழிந்தனை' என, ஆவூர் மூலங்கிழார், தலைவன் ஒருவனைப் பாடுவர் [புற.261:15]. சீறூரின்கண் அரிவை, நடுகல்லைக் கைதொழுது பரவினாள் [புற.306:4]. நடுகற்களால் உயர்ந்த தழைகள் பெய்யப்பெற்றுள்ளது பறந்தலை [புற.314:3]. சீறூர்ப்பக்கத்தே நடப்பட்ட நடுகல்லுக்கு விடியற்காலத்துப் பலியைப் படைத்து நல்ல நீரையாட்டி நெய்விளக்கேற்றினர் [புற.329:2].

மறவரது நடுகல்லுக்கு வேலையூன்றிக், கிடுகை நிரைத்து, அரண் செய்தனர் [பட்.79].

கரந்தை வயவர் தங்கள் வலிய ஆண்மையால் இட்ட பதுக்கைக்கண் உள்ள கடவுளை வழிபடற்கு, அந்நடுகல்லில் பீலிசூட்டித் துடியை அடித்து, நெல்லாலாக்கிய கள்ளோடு செம்மறிக்குட்டியைப் பலி கொடுத்தனர் [அக.35:8]. அம்பினை மறவர் வில்லில் வைத்து எய்ய இறந்தோரது பெயரும், பீடும் எழுதிய எழுத்துக்களையுடைய நடுகல்லின் இனிய நிழலிலே வழிச்செல்வோர் தங்கியிருந்தனர் [அக.53:11]. போரினை வென்று பட்ட மானம் மிக்க கரந்தை வீரரது பெயரினையும், சிறப்பினையும் பொறித்து, நெறிதோறும் பீலி சூட்டிய நடுகல்லானைவை, ஊன்றியவேலும், சார்த்திய பலகையுங்கொண்டு பகைப்புலத்தை ஒத்துத் தோன்றின [அக.67:10]. பெயரும், பீடும் எழுதிப் பீலி சூட்டப்பெற்று விளங்கும் நடுகல்லின் முன் ஊன்றிய வேலும், அதன்கண் சார்த்திய பலகையும் பகைவர் போர்முனையிருப்பை ஒத்துத்தோன்றும் [அக.131:11]. வீழ்ந்திறந்த புதியரின் உடலைமூடிய கற்குவியல்களில் ஏறிப்படர்ந்த காட்டு மல்லிகையின் பூக்கள், உயர்ந்த நிலையினையுடைய நடுகல்லின் காலைப் பலிக்குக் கூட்டப்பெற்றன [அக.289:3]. மறவரது அம்பு தேய்த்ததால் பக்கம் மெலிந்த, அச்சம் மிக்க நடுகல்லில் பெயரும், பீடும் விரியத் தோன்றுமாறு பொறித்த எழுத்துக்களை ஒருங்கு சேர்த்து

நோக்குதல் மாட்டாராய்த் தளர்ச்சியுடன் வம்பலர் வழிச்சென்றனர் *[அக.297:7]*. உப்பு வணிகரது உருளின் பூண் சிதைத்த வலிய பாறையிலுள்ள நடுகல்லில், இடப்பெற்ற கண்ணி வாடப்பெற்றதும், நீராடப்பெறாததுமாகிய இடத்தில், கூரிய உளியால் இயற்றப்பெற்ற கீற்றுக்கள் மறைந்த எழுத்துக்கள் அவ்வழியேசெல்லும் புதியர்க்கு வேறுபொருளினவாகப் பிறழ்ந்து காணப்படும் *[அக.343:5]*. மாலைக் காலத்தே காட்டு நெறியிலுள்ள நடுகல்லை, யானை ஆள் என உதைத்தது *[அக.365:4]*. போரினை அழியக்கொன்று, நல்லபுகழை நிலைநாட்டிப் பட்ட மானம் மிக்க வீரரது வரிசையாக நிற்றலையுடைய நடுகல்லைப் பொருந்தியிருந்து பல்லி உணவை வேட்டுக் கிடக்கும் *[அக.387:15]*.

வில்லால் அழிந்தோரது, எழுத்துடைய நடுகல்லை ஒத்த மிக்க சருச்சரையினையுடைய பெரிய கையொடு கூடியது யானை *[ஐங்.352:2]*.

நடுநர் - நடுபவர் (நாற்று நடும் உழத்தியர்)

'உழவனே! சோற்றுத் திரளையை நிறைய மயக்கமுறவுண்டு, சேற்றிலே நாற்றுகளை அழுத்தும் நடுநரோடு-நடுபவரோடு (நடும் உழத்தியரோடு)-நீ செல்வையாயின், கோரையையும், நெய்தலையும் களையாது பாதுகாப்பாய், எனச், சிறைப்புறமாக, உழவற்குச் சொல்லுவாளாய்த், தோழி செறிப்பு அறிவுறுத்தினாள் *[நற்.60:8]*.

வயல்களிடத்தே உழவுக்குரிய ஓசையைச் செய்து திரிபவர்களும், ஆரவாரம் செய்து நடுநரும் கூடியிருந்தனர். *[பரிதி.1:16]*.

நடுநாள் - 1. நள்ளிரவு. நடுநாளாகிய-நள்ளிரவாகிய-யாமத்தும், பகலும் துஞ்சாது மாக்களைப் படுக்கக் கருதிக் கல்லா ஒருவன் சென்றான் *[புற.189:3]*.

நடுநாளில் மங்கையர் விளக்குகள் அவியுந்தோறும் தம்கையிலுள்ள பந்தத்தினால் கொளுத்தினர் *[முல்.50]*.

செந்தினையைக் குருதியுடன் கலந்து, முருகனை வரவழைத்த அச்சம் பொருந்திய நடுநாளில், தலைமகன் வரத் தலைவி நக்காள் *[அக.22:11]*. மிக்க பெயலையுடைய நடுநாளில் கரடி புற்றாஞ்சோற்றினைத் தோண்டியது *[அக.72:2]*. கொல்லும் புலி வழங்கும் அரிய இருள் சூழ்ந்த நடுநாளில் நீ, தனியையாகி வருதலை அஞ்சுகின்றோம்; எனக், கூறித் தோழி வரைவு கடாவினாள் *[அக.118:9]*. கரிய இருளையுடைய நடுநாள் சென்று, தன் தமையன்மார் விடியலில் கொணர்ந்த வாளை மீனுக்கு விலையாகப், பாண்மகள், முத்துக்களோடு, அணிகலன்களைப் பெற்றாள் *[அக.126:7]*. 'பாகனே! தேரின் ஒலியினைக் கேட்டால் மானேற்றுடன் பெண்மானினது நடுநாள் கூட்டம் நிகழ்தலும் கூடுமோ? எனவே, மெல்லெனச் செலுத்துவாயாக; என, வினைமுற்றி மீண்ட தலைமகன், பாகற்குக் கூறினான் *[அக.134:14]*. மதிநிறைவுற்றுக் கார்த்திகையைச் சேரும் இருளகன்ற நடுநாள், தெருக்களிலே விளக்குகளை நிரல்பட ஏற்றி, மாலைகளைத் தொங்கவிட்டு, மூதூரின்கண், பலரும் ஒருங்கு சேர்ந்து விழவினை நம்முடன் கொண்டாடச், சுரநெறியைக் கடந்து சென்றோர் வருவாராக; எனப், பிரிவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக், கிழத்தி கூறினாள் *[அக.141:8]*. 'அன்னை' மழைபெய்து நீங்கி ஒலியடங்கிய நடுநாளில் தலைவி பரணில் ஏறி, இறங்கி வரக்கண்டேன், என, வருந்தாதே;, எனத், தோழி, செவிலித்தாய்க்குச் சொல்லுவாளாய்த், தலைமகன் கேட்பக் கூறினாள் *[அக.158:2]*. கடுமையாக இடிக்கும் இடியுடன் நீரைச்சிதறி முகில் பெய்தலைச் செய்யும் நடுநாளில் தலைவி வந்து முயங்கிச் சென்றமையினைத், தலைமகளைக் கண்ணுற்று நீங்கும் தலைமகன், தன்னெஞ்சிற்குக் கூறினான் *[அக.162:6]*. 'தலைவ! மழையானது, இடியேற்றுடன் பரந்த மிக்க இருள் கொண்ட நடுநாளில், பெருமலைவிடரகம் அரிதென்று நினையாது, வரற்கு எளிதென்று எண்ணுகின்றனை; தண்ணிய மலைச்சாரலில், பகலில் வருவீராக, எனத், தோழி, பகற்குறி நேர்ந்த வாய்ப்பாட்டால், தலைமகனை வரைவு கடாவினாள் *[அக.218:6]*. காட்டின்கண் ஈன்ற வேட்கையினையுடைய பெண்புலி பசித்ததாக, மானுணவைக் கொணர்ந்து தர, நடுநாளில் ஆண்புலி இரைவேட்டெழுந்தது *[அக.238:13]*. இயங்குதற்கரிய நடுநாளில் பகைப்புலத்தைக் கெடுத்து ஆக்களை வீரர் ஓட்டிவந்தனர் *[அக.253:10]*. யானையின் கால் ஊன்றி நடக்கும் நடையைக் கூர்த்து அறிந்து நடுநாளில் கானவன் கவணால் எறிந்தான் *[அக.292:9]*. நம் தலைவி தனது இயல்பினையே எண்ணி, நம்பியல்பினை யறியாளாகி, இருளையுடைய நடுநாளில் அணையில்கிடந்து வெய்துற்றுப் புலக்கும்; எனத், தலைமகன், இடைச்சுரத்துத் தன் நெஞ்சிற்குக் கூறினான் *[அக.373:11]*.

சாரல் நாட! நடுநாள் வாரற்க; யாம் வருந்துவோம்; என, இரவுக்குறி விரும்பிய தலைவனைத் தோழி, மறுத்துக் கூறினாள் *[குறு.69:5]*. மலைநாடன், நடுநாள் வருதலையும் செய்வான்; அங்ஙனம் அவன் வருதலினால், நமக்குண்டாகும் பழிக்கு நாம் நாணேம்; எனத், தலைவன் இரவுக்குறி விரும்புதலைத், தோழி, தலைவிக்குக் கூறினாள் *[குறு.88:4]*. ஆண்புலி, செந்நாய் அகப்படும் செவ்வி பார்த்திருக்கும், நடுநாள் வருகின்றாய்; அங்ஙனம் வருதலை ஒழிக; அன்னை, தினை கடிதற்குச் செல்க; என்றாள், என, இரவுக்குறி வந்தொழுகும் தலைமகற்குப், பகற்குறி நேர்ந்த வாய்ப்பட்டான் (அதுவும் மறுத்துச்), சிறைப்புறமாகத், தோழிக்குத், தலைமகள் கூறினாள் *[குறு.141:7]*. இடியேறு முழங்குகின்ற அரையிருள் நடுநாள், தொழுவத்தில் ஆனேறு செல்லுந்தோறும் ஒலிக்கின்ற ஒற்றை மணியின் குரலை, அவர் அறிவாரோ, எனத், தலைவி, துயிலின்றிப்படும் துன்பத்தைத், தோழிக்குக் கூறினாள் *[குறு.190:5]*. தோழி! பாம்புகளின் பெரிய தலையைத்

துணிக்கும் இடி ஏற்றோடு கூடிய நடுநாள் என்று எண்ணாராகி, வந்து, தலைவியின் தோள்களை அடைந்த தலைவரைச், சேறிரோ எனவும், கூறமுடியவில்லை; வருவீரோ, எனவும் கூற முடியவில்லை; எனத், தலைமகன் சிறைப்புறத்தானாகத், தோழி கூறினாள் *[குறு.268:5]*. அரிவையே! நினது மார்பைப் பொருந்தும் இனிய தலைவன் நம்வீட்டிற்கு நடுநாள் வந்து செல்வான்! நம் ஒழுக்கத்தை மறைக்கும் காலம் இஃதன்று எனத், தோழி, கிழத்திக்கு, நொதுமலர் வரையுமிடத்து, அறத்தொடு நிற்பேன், எனக் கூறினாள் *[குறு.321:3]*. கடந்து சென்ற தலைவரை நினைந்து இருள் நிறைந்த நடுநாளில் துயிலல் அரியதாகிக், கண்ணில் நீர்த்துளிகள் எளிதிலே அரும்பின, எனப் பிரிவிடை மெலிந்த கிழத்தி, வற்புறுத்தும் தோழிக்கு, யான் ஆற்றுவல்; என்பதுபடக் கூறினாள் *[குறு.329:5]*.

நடுநாளில் மிக்க மழை பெய்ததனாலே ஆற்றில் புதுநீர் வந்தது *[நற்.53:5]*. தலைவர் குன்றம், ஒளியைப் பரப்ப, நடுநாளில் மழை பெய்தது *[அக.68:8]*. ஆண்கரடி, புற்றில் உறைகின்ற நல்ல பாம்பு நடுங்குமாறு முழங்கிக் கொல்லன் உலைமூக்கே போலப் பெருமூச்செறிந்து, பறிக்காநிற்கும் நடுநாள் வருதலை யாம் அஞ்சுதும்' எனத் தோழி தலைவனிடம் கூறினாள் *[நற்.125:5]*. அரவின்தலை நடுங்கும்படி பெய்கின்ற மழையின் இடிமுழக்கத்தை நடுநாளாகிய யாமத்தின்கண் தமியேமாய் இருந்து கேட்டும் உயிர்வாழ்தல் கொடுமை எனத் தோழி கூறினாள் *[நற்.129:9]*. நெடிய தேரைச் செலுத்தி நடுநாளில் வருகின்ற கொண்கனோடு நீ செல்லுமாறு நான் உடன்படாநின்றேன் எனத் தோழி தலைவியை உடன்போக்கு வலித்துக் கூறினாள் *[நற்.149:8]*. 'மலைநாடா! தலைவியின் இனிய உயிர்படுகின்ற துன்பமின்னதென்று கருதாமல், மிக்க இருள்சூழ்ந்த நடுநாள், வேற்படையையே துணையாகக் கொண்டு ஈங்குவரல் தகுதிப் பாடுடையதாமோ!' எனக் கூறித், தோழி இரவுக்குறி மறுத்தாள் *[நற்.168:8]*. முகில் சூல் முதிர்தலுடைமையால் செறிந்த இருளையுடைய நடுநாளில் அரிய வழியில் வந்து எம்மாட்டு அருளுதல் செய்யானோ எனத் தோழி, சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்பக் கூறினாள் *[நற்.228:3]*. வழிப்போவார் யாருமில்லாத சிறிய நெறியிலே கொடிய விலங்குகள் இயங்குவதனை அறிந்து வைத்தும் நடுநாள் வாரா நின்றனை; இதற்கு யான் நோகாநின்றேன்' எனத் தோழி தலைமகனது ஏதஞ்சொல்லி வரைவு கடாவினாள் *[நற்.257:10]*. 'மழை பெய்தலையுற்ற மயக்கத்தையுடைய இருளோடு கூடிய நடுநாளில், அவர் நம்மோடு முயங்கியிருப்பவும், குளிரின் கடுமையால் நாம் துஞ்சாதிருத்தலை அறிவோர், இப்போது கைவிட்டகன்றனர் கண்டாய்', எனத் தலைவி தோழிக்குக் கூறினாள் *[நற்.281:7]*. குன்றநாடன், இயங்குதற்கரிய இருள்மிக்க நடுநாளில் நம்பால் வருவதல்லாமலும், அயலோர் கூறும் பழிச்சொல்லைக் கேட்டு அகன்று போகானாகித் தினைப்புனத்தின்கண் பகற்பொழுதின்கண்ணும் வாரா நின்றான். 4எனத் தோழி சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்பக் கூறினாள் *[நற்.285:1]*. வண்டு பொய்கையிலே நடுநாள் சென்று மலரிலே தேனையுண்ணும் *[நற்.290:7]*. அகன்ற நெடிய தெருவிலே கூகைச் சேவல் பெடையோடு சென்று நால்வழி கூடுமிடத்தில் யாவர்க்கும் அச்சமுண்டாகும்படி குழறாநிற்கும்; பேய்களும் வெளிப்பட்டு உலவாநிற்கும்; மயங்கற்குக் காரணமாகிய இருள் சூழ்ந்த நடுநாள் முயங்கல் உள்ளி, யான் துஞ்சலன்' எனக் காப்பு மிகுதிக்கண் தலைமகன் தன்னுள்ளே கூறினான் *[நற்.319:6]*. நாடன், மழைபெய்கின்ற, மாந்தர் இயங்குதற்கரிய, இருள் நிறைந்த நடுநாளில், வேற்படையை ஏந்தி, மின்னல் விளக்கத்தில் வருவதாகக் கருதினன் என்றால், நம் இன்னுயிர் எவ்வாறு நிலைத்திருக்கும்' எனத்தோழி கூறினாள் *[நற்.334:6]*. 'தோழி! தலைவர் சொல்லிப்போன பருவமோ வந்து நீங்கலாயிற்று; பகற்பொழுதும், இருள்மிக்க நடுநாளின் காரிருளோடு ஒன்றி, முகில் நீர் நிறையப்பெற்று இயங்காநிற்ப, மாலைப்பொழுதும் வந்து கூடினால், நான் உயிர் வாழ்கிறேன்' எனத், தலைமகள் வரைவிடை மெலிந்து கூறினாள் *[நற்.364:2]*. நாட! ஈன்ற பெண் புலியின் பசி நீக்க, ஆண்புலி களிற்றைக் கொன்று முழங்கும் நடுநாளில் நீ வருதலால் அருளிலை, எனத், தோழி கூறினாள் *[நற்.383:5]*. பரதவர் விளக்கங்களைக் கொளுத்திக் கொண்டு நடுநாள் வேட்டை மேற்சென்று மீன்களைக் கொண்டு வருவர் *[நற்.388:5]*.

நாட! நடுநாளாகிய இருளில் வருகின்றாய்; யானை தாக்கின் விளைவது அறியேன்; எனத் தோழி கூறினாள் *[ஐங்.296:3]*. எங்கும் கலந்த பெயலாலே இருண்ட நடுநாளிலே, மின்னுண்டாக்கின ஒளியிலே, பிடியுடனே, யானை புன்செய்யிலே மேய்ந்தது *[கலி.41:5]*. நெஞ்சம், நடுநாள் யாமத்தில் நாம் கொள்ளுந்துயிலை வாங்கிக் கொண்டு, அவர் பகுதியிலே பட்டுவிட்டது, எனத் தலைவி தன்னெஞ்சம் தலைவன் வயத்ததாதலைக் கூறினாள் *[கலி.122:21]*. கடல், திரை, மணற் சிமையத்தை, வலம்புரிகளைக் கொம்புகளாகக் கொண்டு நடுநாட்கண்ணே, குத்தி, யானை போல முழங்கும் *[கலி.135:5]*.

2. **நண்பகல்.** என் தலைவனுடைய மார்பிலுண்டாகிய புண்களும் பெரியவாயுள்ளன; நடுநாள் நண்பகல் - வந்து வண்டுகளும் மொய்த்து ஒலிக்கின்றன; என விழுப்புண்பட்டுக் கிடந்தவனை, நப்பசலையார் பாடினார் *[புற.280:2]*. நெருங்கின மழையையுடைத்தாகிய நடுநாளிலே, யான் இடம் மாறப், பகற்குறியையும் பெறானாய்த், தலைவன் என்னிடத்துண்டாகிய பழியை நினக்குச் சொல்லாநிற்கும், எனத், தலைவி, தோழியிடம் உரைத்தாள் *[கலி.46:18]*..

**நடுவணது - நடுவிடத்தது.** இந்நிலவுலகத்தின் நடுவணதாக - நடுவிடத்ததாக - உடைவேலமரத்தின் இலையளவாகிய இடமும் பிறர்க்கு இல்லையாக, வேந்தர் ஆண்டனர் *[புற.363:2].*

தலைவி தந்தையின் சிறுகுடிப்பாக்கம், பனைகளின் நடுவணதாக உள்ளது *[நற்.323:2].*

**நடுவணன் - நடுவிடத்தவன்.** மான்குட்டியை இடையிலே படுக்க வைத்துள்ள, மானும், பிணையும் போலத், தலைவன், புதல்வன் நடுவணனாகத் - நடுவிடத்தவனாகக் - கிடத்தல் இனிது' எனக், கடிமனை சென்று வந்த செவிலி, உவந்த உள்ளத்தளாய், நற்றாய்க்குக் கூறினாள் *[ஐங்.401:2].*

**நடுவு - நடுநிலை.** நடுவு - நடுநிலை - நீங்கி, நீதியில்லாத அமைச்சன் சொற்கேட்டுக், கொடுந்தொழிலைச் செய்யும், அரசன் கோல்போல் கதிரவன் தெறும் *[கலி.8:1].*

**நடுவுநிலை - நடுநிலை.** மோகினியாகிய நின் வடிவினைக் கண்டு மகிழ்ந்த மகிழ்ச்சியே அவுணர்க்கு அச்சமாய் முடிய அமரர்க்கு நல்லமிர்தனைப் பகுத்துக் கொடுத்திடுதலால், நடுவுநிலையில்-நடுநிலையில் - தப்பிய நலமில்லாத ஒரு கையினை உடையை; எனத், திருமாலை, வஞ்சப்பழிப்பாகப் புகழ்ந்தனர் *[பரி.3:34].*

**நடை - 1. நடத்தல்.** அசைந்த பெருங்கையுடனே தலையெடுத்து நடக்கும் உயர்ந்த நடையை - நடத்தலை - உடையன களிறுகள் *[புற.22:1].* சிறிய மறியை அணைத்துக்கொண்ட துள்ளிய நடையையுடையது மான்பிணை *[புற.23:9].* குறிய நடையையுடைய புறாவின் அழிவிற்கஞ்சித் துலாவில் புகுந்தோன் (சிபி) *[புற.43:6].* தாளத்திற்கேற்ப நடக்கும் அசைந்த நடையையுடையன குதிரைகள் *[புற.240:1].* உழுந்தின் சக்கையுண்ட ஒய்ந்த நடையினையுடைய குதிரை, கடலில் தோணி போலப், படைமுகம் போழ்ந்தது *[புற.299:2].* வேலியடியில் தங்கும் மெத்தென்ற நடையையுடையது காட்டுப்பூனை *[புற.326:1].* தெருண்ட நடையினையுடைய குதிரைகளையும், யானைகளையும் குரிசில் பாடுநர்க்கு அருளினான் *[புற.361:7].* உருண்டு செல்லும் நடையினையுடைய தேர்களைப் புரவலன் ஈந்தான் *[புற.361:9].* தளர்ந்த நடையினையுடைய (பரிசிலன்) சுற்றத்தார் வறுமை நீங்க நெல் வழங்கினான் அதியமான் *[புற.390:19].*

இளைய அசைகின்ற நடையினையுடைய மழகளிறு குன்றினில் பிடியைச் சூழ்ந்த வண்டுகளை ஒட்டும் *[பதி.12:11].* தளர்ந்த நடையினையுடைய தலைவி, போர்வயிற் பிரிந்த நின்னை நினைந்து உய்வளோ? என்றல் *[பதி.16:13].* மன்னன் தளர்ந்த நடையினையுடைய விறலியரது பாடலில் காலம் நீட்டித்தான் *[பதி.51:21].*

கடிய நடையினையுடைய களிறு ஊர்ந்தோன், முருகன் *[முரு.80]* ஈரிரண்டு மருப்புடன் அழகிய நடையினையுடைய யானை ஏறியசெல்வன், இந்திரன் *[முரு.157].* பரல் பட்டுப் பழுத்த அடியையுடைய பாடினி, உச்சிக்காலத்தில் நடையினைத் தவிர்ந்தாள் *[பொரு.46].* மன்னன் துடியின் கண்ணையொத்த அடியுடைய அசைந்த நடையினையுடைய யானைக் கன்றுகளோடு, பிடியோடு, வேழத்தை இரவலர்க்கு வழங்கினான் *[பொரு.125].* விறலியர்தம் நடையால் இளைத்து ஒய்ந்த சிறிய அடியைக் கல்லா இளையர் வருடினர் *[சிறு.32].* ஏறிப்பார்த்து உண்மையாக ஓட்டமுண்டு என்று பெயர் பெற்ற அழகினையுடைத்தாகிய நடையையுடைய தேர் பரிசிலர்க்கு வழங்கப்பெற்றது *[சிறு.258].* உழவுத்தொழிலில் நடை பயின்ற பெரிய எருதுகள் பூட்டி தோட்டத்தை உழுதனர் *[பெரு.198].* ஆக்கள் ஈன்ற, வளைந்த நடை (அடி) உடைய கன்று கட்டிய இடம் *[பெரு.243].* இனம் ஓட, அகப்பட்டது, மடப்பத்தையுடைய நடையையுடைய ஆமானினது குழவி *[மலை.500].*

அசைந்த நடையையுடைய மரையாவைக் கொன்று, தின்று புலி துறந்த புலாலை எருவை கவரும் *[அக.3:7].* வலிய நடையினையுடைய நல்ல ஆனினங்கள் புல்லை மேய மடிசுரந்தது *[அக.14:9].* செருக்கிய நடையினையும், தலைமையினையுமுடைய ஆண்மான், பெண்மானைத் தழுவி, நீருண்டு தங்கியது *[அக.23:7].* மெல்லிய நடையினையுடைய புதல்வனை யாம் பொருந்தினோம்; நீயிர், பரத்தையரைப் பொருந்தினீர்; எனத், தலைமகள் தலைவனிடம் கூறினாள் *[அக.26:17].* குறுக அடியிட்டு நடக்கும் நடையினையுடைய சிவந்த காலினையுடையது புறாவின் சேவல் *[அக.47:11].* செருக்கிய நடையினையுடைய கன்றுகள் கட்டப்பட்ட இடம் நோக்கிப் பெருத்த மடியுடன் ஆக்கள் சென்றன *[அக.54:6].* 'இளைய மயிலை ஒத்த நடை தளர்ந்திட்ட தலைவி, சேக்கோள் பறையொலி கேட்க வல்லுநளோ என்றாள் செவிலி *[அக.63:15].* ஈன்றணிமை கழிந்த மெல்லிய நடை வாய்ந்த இளைய பிடிக்குக் களிறு மூங்கில் மூளையூட்டும், *[அக.85:6].* கூனிய முதுகினையும், குறுகக் குறுக அடியிட்டு நடக்கும் நடையினையுமுடையது கரடிக்கூட்டம் *[அக.112:1].* அலைகள் வீசிய முத்துக்கள், விரும்பும் நடையினையுடைய குதிரையது காலினை வடுச்செய்து அதன் செலவினைக் கெடுத்தன *[அக.130:10].* சுரநெறியிலே நெடுந்தூரம் கடந்து வருதலின் கன்று நடை ஒய்ந்து நின்று விட்டது *[அக.131:8].* அம்பின் வேகம் போலச் செல்லுதலைப் பழகின அழகிய நடையினையுடைய குதிரைகள் *[அக.160:11].* அசைந்த நடையினையுடைய யானைக்கன்று துயிலப் பிடியுடன் அதனைக் களிறு காக்கும் *[அக.168:10].* குதிரைகள் விரைந்து செல்லும் நடையினை ஒழிய கானலில், மாலையில், தலைவன் தங்கியதும்இலன்; எ தோழி *[அக.190:14].*

தன் இனங்கள் பாராட்டும் கடிய நடையினையுடையது வலிய களிறு [அக.218:1]. கடிய நடையினையும், காற்றின் வேகத்தையொத்த விரைந்த ஓட்டத்தினையுமுடையன குதிரைகள் [அக.224:4]. குதித்துச் செல்லும் நடையினையுடைய மானினங்கள் ஓடத் தேர் வருமோ, எனப், பார்த்துத் தலைவி வருந்துவாள் [அக.224:11]. துள்ளிச்செல்லும் நடையினையுடைய இளைய பெண்மான்கள், ஆண் மான்களோடு கூடி மகிழ்ந்தன [அக.234:10]. ஏறுபோன்ற எழுச்சி பொருந்திய நடையினையுடையவன் ஆட்டனத்தி [அக.236:14]. யாமை, கள்ளின் ஒழுக்கினையுண்ட களிப்புடன் செல்லும் நடையோடு, வயல்களைக் கலக்கி, ஆம்பலது மெல்லிய இலைகட்குள்ளே ஒடுங்கிக் கிடந்தது [அக.256:5]. தோள்களை விளக்கமுற வீசியவாறு நடைவன்மையுடையை ஆகின்றாய்; என உடன்போகாநின்ற தலைமகட்குத் தலைமகன் கூறினான்[அக.257:12]. உயர்ந்த நடையினையுடைய யானை சூழப், பாசறையில் தானை தங்கியது [அக.264:12]. மாண்புற்ற அன்னப்பெடைபோலும் அழகிய நடையால் தலைவி மெல்ல நடந்தாள் [அக.279:14]. வேங்கடத்தைச் சார்ந்த காடு நடை அரியது [அக.295:14]. செறிந்த நடையினையுடைய பெண்யானை ஒலியோடு, களிற்றொலி போன்று, தூம்பொடு, முழவொலித்தது. [அக.301:16]. நீர் வற்றும்பொழுது அதிலுள்ள மீன் நீருள்ள இடத்திற்கு மீண்டு சென்றாற் போல, யான் அவர் வழி நடைச் சேறலைத் துணிந்தேன், எனத், தலைவி தன்நெஞ்சிற்குக் கூறினாள் [அக.303:20]. சிறிய குட்டியினைத் தழுவிக் கொண்ட இளைய பெண்மான் துள்ளும் நடையினையுடையது [அக.304:8]. புலியோடு பொருதுழந்த களிறு வருந்திய நடையினையுடையது [அக.308:1]. தலைவ! குறுமகள் நலம் பாராட்டி, அழகிய நடையால் விளக்கமுற்ற அவளுடன் புனல் விழாவின்கண் செல்லுதல் நினக்குத் தகுவதாகும்; எனத், தோழி (தலைமகனை வாயில் மறுத்துக்) கூறினாள் [அக.326:7]. வேனிற் காலத்து, வெவ்விய காட்டில், வருந்திய நடையினையுடைய இளைய பிணையைக், கலைமான் உடன் கொண்டு, அறுகயம் நோக்கிச் சென்றது [அக.353:11]. கடிய நடையினையுடைய குதிரை, நெறியின் கண் ஓட, வலவன் வார் கொண்டான் [அக.354:7].

ஊர்க்குருவியின் துள்ளிய நடையையுடைய ஆண்பறவை ஈனில் இழைக்கக் கரும்பின் பூவைக் கவரும் [குறு.85:2]. மலை நாட்டில் மெல்லிய நடையையுடைய மரையா தழை தின்று, துஞ்சும் [குறு.115:5]. சுரநெறியில் குறுக அடியிடும் நடையினையுடைய பெண் புறா, ஆண் புறாவை நினைந்துக் கள்ளியின் கவட்டிலிருந்து கூவும் [குறு.154:4]. அழகு விளங்கும் அசைந்த நடையினையுடைய தலைவி, நெகிழ்ந்திலள் ஆகலின், மடன்மா நினைப்பேன் என்றான் தலைவன் [குறு.182:6]. குறுக அடியிட்டு நடக்கும் நடையையுடைய தோழி, பிரிவிடத்து, மடந்தை நட்பையன்றிப், பிற நினையேன், எனத், தலைமகன், தோழியிடம் கூறினான்[குறு.209:4]. துள்ளி நடக்கும் நடையை இயல்பாகவுடைய மான்குட்டிக்குக் கலை நிழலாகி மறைக்கும் [குறு.213:5]. வருந்திய நடையையுடைய பெரிய யானை நிரையை களிறு ஓமையைக் குத்திச், சரித்து, உண்பிக்கும் [குறு.255:3]. வருந்திய நடையையுடைய மடப்பிடியின் துன்பம் பொறாது யாமரத்தை யானை குத்தும் [குறு.307:5].

'குறுகிய நடையோடு சென்ற நின்புணர்ச்சியை அக்காலத்து விரும்பியவர் தலைவர்; எனப், பிரிவுணர்த்தப்பட்டு ஆற்றாளாகிய தலைமகளைத், தோழி உலகியல் கூறி வற்புறுத்தினாள் [நற்.41:10]. நல்ல நடையையுடைய கொடிச்சி! முருகனோடு சென்ற வள்ளியைப் போல வருகின்றனையோ? எனத் தலைவன் தலைவியை அழைத்தான் [நற்.82:3]. புலிக்கஞ்சி, விரைந்து செல்லாத நடையையுடைய யானைக்கன்றினை வேழம் நின்று காத்துச் செல்லும் [நற்.85:4]. முதுவேனிற்காலத்து வருந்திய நடையையுடைய ஒந்தியாகிய வழலை குன்றத்தே தன் துணையுடன் வாடும் [நற்.92:2]. கடிய நடையினையுடைய பிடியானை கன்றொடு வருந்தும், நீர், நிழலற்ற இடம் பாலைவழி [நற்.105:4]. எருமையின் இளநடையுடைய கன்றுகள் இல்லத்தில் தூண் தொறும் கட்டப்பெற்றிருந்தது [நற்.120:1]. பாலைநிலத்தில் கடிய நடையையுடைய களிற்றியானை தன் சினத்தைக் கொல்ல ஆளைக் காணாது, பனையில் தீர்க்கும் [நற்.126:3]. மென்மையான நடையையுடைய குதிரையில் வந்து, தாருங், கண்ணியுங் காட்டி, நெஞ்சம் கொண்டது விடுமோ? எனப், பரத்தை கூறினாள் [நற்.150:6]. நாட்காலையில் நடைபயின்றறியாத சீறடிகளையுடைய புதல்வனை, எந்தை வருக, என்னும் சொல்லைக் கேட்கத், தேரை விரையச் செலுத்துக, என்றான் தலைவன் [நற்.221:10]. நல்ல எருது நடையின் சிறப்பு நீங்கியதே, என்று, உழவர் புல்லுடைத் தோட்டத்தில் அதனை விட்டொழித்தனர் [நற்.315:4]. இளநடையையுடைய நாரையின் கூட்டம் கெட, எருமை கயத்தில் பாயும் [நற்.330:2]. பிள்ளைகளை ஈன்று காவல்பட்ட, வருந்திய நடையையுடையது பேடையாகிய புறவு [நற்.384:4]. கடிய நடையினையுடைய கயிறு கட்டிய உளியையுடைய, திமிலில் பரதவர் செல்வர் [நற்.388:3].

சுமையால் ஒய்ந்த நடையையுடைய பாண்மகள், சில மீன்பெய்து, பல நெல் பெறுவாள் [ஐங்.49:1]. தளர்ந்த நடையினையுடைய புதல்வனை நினைந்து தலைவன் வருதலும், உன்னைக் கவர்ந்தோள் யார்? என்றாள் தலைவி [ஐங்.66:3]. அணிநடை எருமை உழுதசேற்றில், நெய்தலும், ஆம்பலும் கலிக்கும் [ஐங்.96:1]. வெள்ளாங் குருகின் பிள்ளையெனக் கருதிச் சென்ற மடநடை நாரை, மிதிப்ப நெய்தல் மலரும் [ஐங்.151:160:2]. பிடி ஈன்ற நடுங்கும் நடையினையுடைய கன்று கொள்ளப், புலி பலா நிழலில் ஒளிக்கும் [ஐங்.216:3]. மயிலை ஒத்த அசை நடையினையுடைய கொடிச்சியை நாடன் வரையின்

நன்று *[ஐங்.258:2]*. அசை நடைச் கொடிச்சி, அருளாளாயினும், யான் மறவேன், என்றான் தலைவன் *[ஐங்.298:2]*. அசைநடை கொடிச்சியது கண்போல் குவளை மலர்தலும் அரிது; அவளின் சாயல் போல் பெறுதல் மஞ்ஞைக்கும் அரிது என்றான் தலைவன் *[ஐங்.299:3]*. நெடுந்தொலைவிலுள்ள இடத்தைக் கருதிய அசைந்த நடையையுடையவர் அந்தணர் *[ஐங்.384:1]*. இனிய நகையைப் பலகாலும் செய்து, புதல்வன் சிறிய தேரை உருட்டிச் செல்லும், தளர் நடையினைக் கண்டு, விரும்பிய உள்ளம் பெரிதாயிற்று, எனச் செவிலி கூறினாள் *[ஐங்.403:5]*.

அன்னம் தன் அணி நடைப்பெடையோடு ஊரில் திரிதரும் *[கலி.69:6]*. மடப்பத்தினை உடைத்தாகிய நடையினையுடைய அன்னத்திரள் இமயத்தொருபால் இருந்தனபோல, மணல் மீதிருந்தனர் மாதர் *[கலி.92:17]*. 'யாமையினை எடுத்து நிறுத்தினாற் போலத், தோளிரண்டும் வீசி எம்மை விரும்பி வருகின்ற காமனார் நடக்கும் நடையை, நெஞ்சே! காண்', எனக் கூனி, குறளனைப் பார்த்துக் கூறினாள் *[கலி.94:33]*. கொம்பிலேயிருந்த அசைந்த நடையினையுடைய நாரை, தலைவரைப்போல், நம் துயரறியாது, நரலும் *[கலி.128:3]*. மெல்லிய நடையினையுடைய அன்னப்பேடையைச் சேர்ந்த சேவல் போன்றவன் காதலன் *[கலி.147:65]*.

மடப்பம் பொருந்திய நடையினையுடைய பாட்டியரைத் தப்பித் தாம் வேண்டும் கணவரை மகளிர் கூடினர் *[பரி.10:37]*. பிடி தன் மேலிருந்த மகளிரோடு நடை சுருங்கிக் களிறிடத்தே சென்றது *[பரி.10:44]*. பொன்னால் செய்தநத்து, நள்ளி, நடையினையுடைய இறாமீன், வாளை முதலியவற்றை வையையில் வித்தி, விளைக; பொலிக என்றனர் புனலாடு மகளிர் *[பரி.10:85]*.

**2. ஒழுக்கம்** - ஒழுகல். நல்ல நடையைக் - ஒழுக்கத்தைக்- கற்பிப்பது, வேந்தனது கடமை *[புற.312:4]*.

கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன், வெற்றியைத் தோற்றுவிக்கும் நடையையுடைய பெருமையோன் *[பதி.44:7]*. பிறரை வெல்லுதலைப் பெற்ற, நடையை உடைய தலைவன், இளஞ்சேரல் இரும்பொறை *[பதி.86:8]*.

மயில் போலும் மடப்பம் பொருந்திய, நடையினையுடையவர் மகளிர்*[முரு.205]*. மடப்பத்தையுடைத்தாகிய, நடையினை யுடைய மயில்வெருவ, அருவி இழிதரும் *[முரு.310]* கானவர் நல்லகாட்டில் உறைகின்ற நடையினை வெறுத்தால், மருதநிலத்தே சென்று, அவ்வொழுக்கத்தைப் புகழ்வர் *[பொரு.202]*.

வென்றி நடையால் மேம்பட்ட விருப்பத்தினால், அதியன், அள்ளன் என்பானை நாட்டினைக் கொள்ளுமாறு பணித்தான் *[அக.325:7]*.

வெவ்விய காட்டிடத்தே போதலை இயல்பாகக் கொண்ட நடையினையுடைய அந்தணீர், என முக்கோற் பகவரை விளித்து, உடன்போய தலைவி பற்றிச், செவிலி வினவினாள் *[கலி.9:4]*. 'தலைவர் நினைவிடத்தே நீ நடை ஒழுகுதல் செய்யாது மிகவும் ஏங்கி நடுங்காதேகொள்' எனத், தோழி செலவழுங்குவித்தமை, தலைமகட்குக் கூறினாள் *[கலி.17:4]*. 'நடை (அறிவு நிறைவு ஓர்ப்புக் கடைப்பிடி என்னும் ஒழுக்கம்) தேய்ந்து மறுத்தலை எனக்கு உறுத்தி நாள்தோறும் என்னை நலிதற்குக் காரணமான நீ செய்த நோயை அறியாமல் போகின்றவளே' எனக், கைக்கிளைக் காமத்தால், தலைவன், தருக்கிக் கூறினான் *[கலி.58:11]*. நல்ல நீர்மையையுடைய நின் நடையைத் தடுக்கும்படி வந்த புதிய புனல், நீ குளித்த அவ்விடத்தே நின்னை இழுத்துச் செலுத்தக் கண்டாருமுளர், எனத், தலைவி நெருங்கிக் கூறினாள் *[கலி.98:24]*.

**3. போக்கு.** இயங்களின் தாள விதியால் ஆக்கிய மென்னடையதாய் - போக்குடையதாய் - மக்கட் கூட்டம் சென்றது *[பரி.10:25]*.

**நடைப்பரிகாரம் - இல்லறம் நடத்த வேண்டும் பொருள்கள்.** நட்புச் செய்தோர் மனமகிழும்படி நடைப்பரிகாரம் - இல்லறம் நடத்த வேண்டும் பொருள்களை - நாளும் கொடுத்தவன் நள்ளி *[சிறு.104]*.

**நடையோர் - நடையினையுடையோர்.** ஆதிசேடன் திருக்கோவிலில், ஆனேற்றோடு, மாறுபட்ட வெற்றி பொருந்திய நடையோரும் - நடையையுடைய மைந்தரும்- சென்றனர் *[பரி.தி.1:40]*.

**நண்ணார்** - பகைவர். பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், நண்ணார் - பகைவர் - நாணும்படி நாடோறும் தலைச்சென்றான் *[புற.23:12]*. கல்வி முகத்தால் நண்ணார் (தம்மோடு மலைந்தோர்) நாண தமது கல்வியான் வென்று தலையெடுத்து நடக்கும் இயல்பினர், புலவர் *[புற.47:8]*.

கண்ணின் முன்னர் உவப்பை வெளிப்படுத்தி, உட்கோளை வெளிப்படுத்தலையறியாத, நண்ணார் தேஎத்தும், பொய்த்தலறியான், இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் *[பதி.20:9]*. நண்ணாரை ஓடச்செய்து, பல போர்களை வஞ்சியாமல் எதிர்நின்று வென்றவன், செல்வக் கடுங்கோ வாழியாதன் *[பதி.ப.7:4]*.

நண்ணார், நல்ல அணிகலன்களைக் கொண்டுவந்து, அவற்றைக் களிற்றோடு திறையாகக் கொடுத்து, வேந்தனை வணங்கியதைக் கூறித், தலைமகன், பாகனிடம், தேரை விரைந்து செலுத்தக் கூறினான் *[அக.124:1]*.

நண்ணார், அரண்மிக்க மதிலிடத்தே இருப்பினும், அவரை வென்று செழியன் முரசைக் கைக் கொண்டான் *[நற்.39:7]*. 'தோழி! தலைவராகிய நம் காதலர் நாண, நண்ணாராயுள்ள ஏதிலாட்டியரும், சேரியம்பெண்டிரும் தூற்றும் பழிச்சொல்தான்'

உண்டன்றே, ஆதிலின், பிரிதல் துன்பம் புறத்தார்க்குப் புலனாகாதபடி மறைத்தல் வேண்டும்; எனத் தலைவி, தோழிக்குக் கூறினாள் *[நற்.382:9]*.

**நண்ணியார்** - முயங்கினவர். எம் புதல்வனைக் கொள்ளாதி; அவன் கண்ணியினை அறுப்பான்; அறுத்தால் நின்னை நண்ணியாரை - முயங்கினவர்களை - அறிவிப்பது இக்கண்ணி, எனக் கொண்டு, சினப்பவளல்லளோ எனத், தலைவி, தலைவனிடம் கூறினாள் *[கலி.79:17]*.

**நண்ப** - நட்புடையோய். இளைஞர் இன்புறுதற்குக் காரணமாகிய நண்ப!- நட்புடையோய்! - எனத் தலைமகன் பாங்கனை விளித்தல் *[குறு.129:1]*.

**நண்பகல்** - நடுப்பகல். முன்னாள் நண்பகற்கண் - நடுப்பகலில் - சுரன் உழந்து வருந்தியமையினைச் சோழநாட்டுப் பிடவூர் கிழார் மகன் பெருஞ்சாத்தனிடம் மதுரை நக்கீரர் கூறினார் *[புற.395:22]*.

நண்பகலும், கங்குலும் துஞ்சாது கடல் ஆரவாரித்தது, திரையனை யான் பயந்தேன் என்னும் செருக்கின் விளைவாகும். *[பெரு.வெ.1:1]*.

வெளியன் வேண்மான் ஆஅய் எயினன், பாழிப்போர்க்களத்தே, மிஞிலியோடு நண்பகற்பொழுதிலே செய்த போரின் கண், புண்பட்டான் *[அக.208:8]*.

துணையாகிய நீ, கைவிட்டு உன் மனையிடத்தே இருக்கையினாலே, ஞாயிற்றினது ஒளியாலே தன்ஒளி கெடுகின்ற நண்பகல் மதிபோல, நன்மை கெட்ட முகத்தினையுடையாட்கு, இராக்காலத்துச் சேவலைப்பிரிந்து வருந்தும் குருகே துணை எனத் தலைவியது ஆற்றாமை கூறித் தோழி வரைவு கடாவினாள் *[கலி.121:18]*.

**நண்பல்** - பற்களின் இடை. ஊனைத் தின்றதனால் நண்பல்லில் நட்புடையன் - பற்களின் இடையில் - சிக்கிக் கொண்ட ஊனைத் தோண்டியெடுத்தனர் *[புற.384:22]*.

**நண்பினர்** - நட்புடையார். இருவரும் பிரியா நண்பினர் - நட்புடையார் - என்று பிறர் கூறும் அலரதற்கு மலை நாட்டையுடைய தலைவன் அஞ்சினனோ, எனத் தோழிக்குத் தலைவி ஆற்றாமையின் காரணத்தைக் கூறினாள். *[குறு.302:5]*.

**நண்பினன்** - நட்புடையன். கோப்பெருஞ்சோழன், பிசிராந்தையைப் பிணித்த நண்பினன் - நட்புடையன் - என்றான் *[புற.216:6]*. கோப்பெருஞ்சோழன், சான்றோர் புகழ்ந்த திண்ணிய நண்பினன், என அவன் நடுகற்கண்டு பொத்தியார் கூறினார் *[புற.221:4]*.

**நண்பு** - நட்பு. சிறிய இல்லின்கண் வாழும் வாழ்க்கையின் நின்று நீங்கி, நின்பால் வருவார்க்கு, உதவிசெய்யும் நண்போடு-நட்போடு - கூடிய குணத்தையுடைய முறைமையுடைத்தாக நின்தொழில்', எனச், சோழன் நலங்கிள்ளியை உறையூர்முதுகண்ணன் சாத்தனார் பாடுவர் *[புற.29:21]*. பகைவரை அலறத் தாக்கிப் புறம் காணாது போவேனாயின், மாவனும், ஆந்தையும், அந்துவஞ்சாத்தனும், ஆதனழிசியும், இயக்கனும், இவருட்படப் பிறரும் எனது கண்போலும் நண்பினையுடைய, நட்டாரோடு கூடிய, இனிய செருக்கையுடைய, மகிழ்நகையைத் தப்பியவனாகிப் பிறக்கக் கடவேன் என ஒல்லையூர்தந்த பூதப் பாண்டியன் வஞ்சினம் கூறினான் *[புற.71:15]*. கோப்பெருஞ்சோழன் புரையில்லாத நண்பினையுடைய பொத்தி என்னும் புலவனோடு கூடி மெய்ம்மையார்ந்த மகிழ்ச்சியை நாடோறும் பெற்றிருந்தான் *[புற.212:9]*.

'பாதி இரவில் வந்து முயங்கி இரவெல்லாம் இனிமையாகப் பொருந்திய நண்பினை வெறுத்தலை நன்கு உணர்ந்திருப்பேமாயின் முயங்குந்தோறும் மார்பின் கண்ணே அடக்கியிருப்பேம்' என இரவுக்குச்குறிச் சிறைப்புறமாகத் தலைமகள் கூறினாள் *[அக.328:7]*.

நயனும், நண்பும், நாணும் தலைவியைக் காண்டற்குமுன், நும்மினும் உடையேனாயிருந்தேன் எனத் தலைவன் பாங்கன் கழறியபோது எதிர்மறுத்துக் கூறினான் *[நற்.160:1]*. 'சேர்ப்பனொடு ஆராய்ந்துபாராது பொருந்திய நண்பினது அளவானது, அலர் கூறுவோர் யான் உற்ற பசலையைக் குறித்து இழிந்த பாடல்களைப் பலவிடத்தும் பாடும் அளவிற்கு ஆகிவிட்டது' எனத் தோழி, சிறைப்புறமாகக் கூறினான் *[நற்.378:12]*.

**நண்மையன்** - அண்மையன். நட்புக்கொண்டு நேர்படு வோருக்கு அவரது உள்ளங்கைபோல நாஞ்சில் வள்ளுவன் நண்மையன் - அண்மையன்-ஆவான் *[புற.380:11]*.

**நத்து** - நந்து (நத்தை) பொன்னாற் செய்த நத்து - நந்து- நண்டு, வாளை முதலியவற்றை வையை நீரில் நீராடு மகளிர் வித்தினர் *[பரி.10:85]*.

**நந்து** - காண்க.

**நதி** - ஆறு. வையை நதியே! - ஆறே - கன்னி மகளிர் புல்கனளையடக்கித் தவத்தைப் பல்காற் செய்த பயனோ! தம் தாயருகில் நின்று தைந்நீராடலாகிய தவத்தை நின்பால் செய்யப் பெற்றனர் என வையையைப் புகழ்தல் *[பரி.11:92]*.

**நந்தர்** - பாடலிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட மன்னர், மன்னர் மரபினர்.

நந்தர் (மன்னர் மரபினர்) என்பாரது பாடலிபுரத்திலே திரண்டிருந்து, கங்கையின் நீரடியில் செல்வம் மறைவுற்றது *[அக.265:4]*.

**நந்தன்.** **பாடலிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட மன்னன்.** நந்தன் (மன்னன்) என்பான் செல்வம் தொகுத்து வைத்தவன் *[அக.251:5].*

**நந்தா விளக்கு** - அவியா விளக்கு. மகளிர் பாடும் அந்திக் காலத்தே கொளுத்தின நந்தாவிளக்கினை - அவியா விளக்கினை - யுடையது, பூக்களைச் சூட்டின தறியினையுடைய அம்பலம் *[பட்.247].*

**நந்தியாள்** - ஆக்கம் பெருகினவள். 'எக்கர் மணலிலே நீகூட, முற்பட இடுகின்ற தாயம் ஈரைந்தைப் பெற்றவனுடைய மனம்போலே நந்தியாள் - ஆக்கம் பெருகினவள் - சிறுதாயமிகுதலால் தோற்றவனைப் போலே அழகுகெட்டு வெய்தாகிய வருத்தத்திலே அழுந்தவோ? தாழை முடுக்குக்குள்ளே நீகூட, சிறுதாயம் இட வேண்டின அளவிலே சிறு தாயம் தங்கக் கண்டவனுடைய மனம்போலே நந்தியாள், நெறியல்லா நெறியிலே சூது பொருகையினாலே அதற்கென்று கட்டிவைத்த தன் பொருளை, இழந்தவனைப் போலே துயரிலே அழுந்தவோ? புன்னைக் கீழே நீ விரும்பிக்கூட இருகாற் சிறுதாயம் இட வேண்டிய அளவிலே இட்டவன் மனம்போலே நந்தியாள் இருகாற் சிறுதாயம் இடவேண்டிய அளவிலே ஒருகால் இட்டவனைப் போலே துயரிலே அழுந்தவோ' எனத் தோழி தலைவி ஆற்றாமைகூறிச் செலவு விலக்கி வரைவு கடாவினாள் *[கலி.136:6.10.14].*

**நந்து - 1.** நத்தை. கோடைக்காலமாயினும், ஆம்பல் இலையின் நிழற்கண், கதிர்போலும் கோட்டையுடைய நந்தினது - நத்தையினுடைய - சுரிமுகத்தையுடைய ஏற்றை, நாகாகிய இளைய சங்குடனே பகற்காலத்தே மணங்கூடியது *[புற.266:4].*

**2. சங்கு.** முன்ளுமுருங்கையின் பூக்கள் நீரிலே தங்குதலால் அழகுபெற்ற நெருப்பையொத்த நீரடைகரையில் நந்தொடும் -சங்கொடும் - நாரையொடும், செவ்வரி (நாரைவகை) குதித்தன *[பதி.23:21].*

சருச்சரை பொருந்திய வயிற்றினையும், பிளந்த வாயினையும் உடைய ஆண் நந்து (ஆண்சங்கு) ஆரல்மீன் கரி கூறுவோனாக, பொய்கையில் பெண்சங்கோடு மணம் புணர்ந்தது *[அக.246:1].*

**நத்து** - காண்க.

**நப்பசலையார் - ஓர் புலவர்.** இவர் பெயர் காமக்கணிப்பசலையார் என்று நற்றிணைப் பதிப்புகளில் (பி.நா.,மர்ரே) காணப்படுகின்றது. ஆயினும், வையாபுரிப்பிள்ளையின் சங்க இலக்கியப் பதிப்பு, நப்பசலையார் என்றே கொண்டுள்ளது. பெயரால் இவரைப் பெண்பாலோர் என்று உணரலாம். பசலையார் என்னும் இவரது இயற்பெயர் 'ந' (நல்) என்னும் சிறப்படையைப் பகுதியாகக் கொண்டு நப்பசலையார் எனவும், காமக்கணி என்னும் மற்றொரு பெயரை அடுத்துக் காமக்கணிப் பசலையார் எனவும் அமைந்தனவாம். நற்றிணையில் 243-ஆம் எண்ணிலமைந்த ஒரு பாடலே இவருடையது. பாலைத்திணையில் பிரிவிடை மெலிந்த தலைவியின் கூற்றாக இவர், அப்பாடலை இயற்றியுள்ளார். காதலியரைச் செயலறும்படி விட்டுப் பிரியும் காதலரை நோக்கி, 'நிலையில்லாத பொருளீட்டும் வாழ்க்கையை எதிரிட்டுக் கொண்டு நீவிர் நும் காதலியரைப் பிரிதலைத் தவிர்மின்' என்று கழறுவதுபோல் குயில்கள் இளவேனிற் காலத்தே மாஞ்சோலைதோறும் இருந்து கூவுவதாகத் தலைவியின் தற்குறிப்பேற்றத்தை இவர் அழகுறப் புனைந்துள்ளார். 'சூதாடு கருவியாகிய கவற்றினை உருட்டுவது போலும் நிலையில்லாதது' என வாழ்க்கையை இவர் உவமித்து விளக்கும் சிறப்பு உணரத்தகும்.

**நப்பண்ணனார்** - ஓர் புலவர். பண்ணனாரென்பது இவர்தம் இயற்பெயர்; 'ந' < (நல்) என்பது சிறப்பிடைச் சொல். பரிபாடல் 19-ஆம் எண்ணிலமைந்த பாடலொன்றே இவருடையதாகக் காணப்படுகின்றது. செவ்வேள் வாழ்த்தாகிய அதில் திருப்பரங்குன்றத்தையும், அதன் சிறப்புகளையும், சென்று வழிபடுவோரையும், செல்லும் வழியிடங்களையும் இவர் அழகுறப் புனைந்துள்ளார். வானுலகில் துறக்கத்தவளொடு (தேவயானையொடு) பெற்ற மணத்திற்கு மாறாகப் போலும் திருப்பரங்குன்றத்தில் மயிற்கொடி போல்வாளான வள்ளியை முருகன் மணந்தான் என்ற மணச்சிறப்பை இவர் பாடுவர். மதுரையிலிருந்து பாண்டியன் தன் சுற்றத்துடன் சென்று முருகனை வழிபட்ட சிறப்பை இவர் விரிவுறப் புனைவர். திருப்பரங்குன்றத்தில் எழுத்துநிலை மண்டபமாகிய ஓவியநிலையம் இருந்தமையினையும், அதில் மீன்களின் கோள்களின் நிலைமையும், இரதி, காமன் மற்றும் இந்திரன் (பூனை), அகலிகை, கவுதமன் ஆகியோர் செய்திகளும் வரையப்பட்டிருந்தமையினையும் காண்போரின் வினாவுரை வாயிலாய் இவர் புலப்படுத்திப் பண்டைக் கலைநிலையை உணர்த்தியுள்ளார். முருகனுடைய யானையைப் புனைந்து, பூசித்துப் படைத்த கவளத்தில், அஃதுண்டு எஞ்சியதை மகளிர் தாம் உண்டு அருள்பெறும் வழக்கினையும் இவர் பாடலில் அறிவித்துள்ளார்.

**நப்பாலத்தனார் - ஓர் புலவர்.** இவர் பெயர் சிறப்பிடைச் சொல்லின்றிப் பாலத்தனார் என்றும் காணப்படுகின்றது. நற்றிணையில் 52, 240 ஆகிய ஈரெண்களில் அமைந்த பாடல்கள் இரண்டே இவருடையனவாம். பாலைத்திணையில் தலைவியைப் பிரியமாட்டாது செலவழுங்கும் தலைவன் தன்னெஞ்சொடு கூறுவதாகவும், நெஞ்சினால் பொருள்

வலிக்கப்பட்டு ஆற்றானாய தலைமகன் சொல்லுவதாகவும் இவர் அப்பாடல்களை இயற்றியுள்ளார். பாலை நிலத்தைப் படைத்தோன் தானும் அதில் மெல்ல நடந்து அதன் வெம்மையில் வாடுவானாக என்று தலைவன் கருதுவதை இவர் பாடலில் அமைப்பர். மழவர் பெருமகனாகிய ஓரியின் கைவண்மையை இவர் சிறப்புறக் குறித்துள்ளார்.

நம்பிகுட்டுவனார் - ஓர் புலவர். குட்டுவன் என்ற பெயர் கொண்டு இவரைக் குட்ட நாட்டு அரசரான சேரர் மரபினர் எனக் கருதுவர் உ.வே.சா.வும், பி.நா.வும் (குறு.,நற்.பாடினோர் வரலாறுகள்). நம்பி என்ற சொல் ஆடவரிற் சிறந்தானைக் குறிக்கும். அவ்வகையில் நம்பிநெடுஞ்செழியன் என்றவாறு இவரும் நம்பிகுட்டுவனார் எனப் பெயர் பெற்றிருக்கலாம். குறுந்தொகையில் இரண்டும் *[109.243,]*. நற்றிணையில் மூன்றும் *[145.236.345]*. ஆக ஐந்து பாடல்கள் இவருடையன. பெரும்பாலும் நெய்தல் திணையைச் சிறப்பித்துப் பாடிய இவர், ஒரு பாடலில் *[நற்.236]*. குறிஞ்சித் திணையையும் பாடியுள்ளார். தலைவன் அளவளாவி உடனிருக்கும்போதும் தலைவியின் நெற்றி பிறர்கண்டு அலர் கூறுமாறு வேறுபட்ட தன்மையைத் தோழி, அவன் சிறைப்புறத்தே நிற்கையில், தலைவிக்குக் கூறுவாள் போல் அவனை வரைவு கடாவுவதையும், பிரிவிடை ஆற்றியிருக்குமாறு தோழி வற்புறுத்தும் நிலையில் தலைவி, 'சேர்ப்பனை இனி, யான் நினையேன்; என் கண்கள் துயில்வனவாக' என்று நெஞ்சழிந்து கூறுவதையும் இவர் குறுந்தொகைப் பாடல்களில் அமைத்துள்ளார். இரவுக்குறிக்கண் வந்து சிறைப்புறமாக நிற்கும் தலைவன் கேட்டு விரைவில் வரையுமாறு தோழி தலைவியின் களவொழுக்கத்தை அன்னை அறிந்தாளாகப் படைத்துக் கூறி வருந்துவதையும் இவர் பாடலிற் காணலாம் *[நற்.145]*. தலைவன் வரையாமல் வந்தொழுக ஆற்றாமை மீதூர்ந்த தலைவி, சிறைப்புறத்தானாய் நிற்கும் அவன் கேட்குமாறு, தோழியிடம், 'எனக்கு நோயும் மிக்கது; மெய்யும் வெப்பமுற்றது; இனி உய்யேன். அதனால், நீ அன்னையிடம் சென்று, 'அவர் மலையினின்று வரும் காற்று மெய்யிற் படுமாறு இவளை முன்றிலிலே கிடத்தினால் இவள் ஒருகால் உய்வாள்'' எனக்கூறு'' என்று வேண்டுவதாக இவர் பாடியுள்ள நற்றிணைப் பாடல் (236) நயமானது. சிறுவெண்காக்கை கொட்டாவி விட்டாற்போல் ஆம்பல் மொட்டவிழ்ந்து மலர்வதாக இவர் கூறும் உவமையும் *[நற்.345]*. உணர்ந்தின்புறத் தகுவதொன்றாகும்.

நம்பிநெடுஞ்செழியன் - ஓர் குறுநிலமன்னன் பெயர். ஆடவரிற் சிறந்தோன் என்ற பொருளையுடைய நம்பி என்பது இவன் இயற்பெயர். பாண்டியன் நெடுஞ்செழியன் காலத்தே அவனாட்டில் குறுநில மன்னனாய்த் திகழ்ந்து அவனுக்குப் படைத்துணை புரிந்தமையால் அவன் பெயரைச் சிறப்புப் பெயராய்க் கொண்டு இவன் நம்பி நெடுஞ்செழியன் என்று வழங்கப்பெற்றனன் என்பர் ஔவை.து. இந்நம்பி நெடுஞ்செழியன் வாழ்வாங்கு வாழ்ந்து இயற்கையெய்திய காலத்துப் பேரெயின் முறுவலார் பாடியதொரு பாடலால் *[புறு.239]*. இவனுடைய பண்புகளும், செயல்களும் விளங்குகின்றன. 'இளமகளிரது தோளை முயங்கினான்; இளமரக்காக்களில் பூச்சூடினான்; சாந்து பூசினான்; பகைத்தோரைக் கிளையொடும் கெடுத்தான்; நட்புக்கொண்டோரை மிகுத்துக் கூறினான்; வலியரென யார்க்கும் தான் வழிபாடு கூறியறியான்; மெலியரென யாரையும் தாழ்த்துத் தன்னை மிகுத்துச் சொல்லியறியான்; பிறரிடத்தே தான் இரந்தறியான்; தன்னிடத்து வந்து இரந்தோர்க்குத் தான் மறுத்தலையறியான்; வேந்தருடைய அவைக்களத்தின்கண் தனது உயர்ந்த புகழை வெளிப்படுத்தினான்; தன்மேல் வரும் படையைத் தன்னெல்லையுள் புகாமல் எதிர்நின்று தடுத்தான்; தனக்கு ஆற்றாது புறங்கொடுத்துப் பெயர்ந்த படையின் புறக்கொடை கண்டு அதன்பின் செல்லாது நின்றான்; விரைந்த செலவையுடைய குதிரையைத் தன் மனத்தினும் விரையச் செலுத்தினான்; நெடுந்தெருவில் தேரைச் சூழ இயக்கினான்; உயர்ந்த இயல்புடைய களிற்றை ஏறிச் செலுத்தினான்; மதுக்குடங்களைப் பலர்க்கும் வழங்கினான்; பாணர் உவப்ப அவர் பசியை மாற்றினான்; நடுவு நிலைமையிற் பிழையாதபடி மயக்கம் தீர மொழிந்தான்' என்று இன்பமும், பொருளும், அறனும் இயல்புற இயைந்துவர இவன் வாழ்ந்த வாழ்க்கையை அப்புலவர் அடுக்கிப் பாடுவர். 'இவ்வாறு செய்யத்தகுவன வெல்லாம் செய்து முடித்தானாகலான், புகழை விரும்புவோனாகிய இவன் தலையை வாளால் அறுத்துப் போகடினும் போகடுக; (இட்டுப்புதைப்பினும் புதைக்க) அன்றிச், சுடினும் சுடுக; யாதாயினும் செய்க' என இவனுக்குரிய ஈமச்சடங்கினைக் குறித்துக்கூறும் முறையில், அவற்றால் ஒன்றும் இவனது மறுமைநிலைக்கு மாற்றமில்லை என்பதை அவர் உணர்த்துவார்.

நயந்தார் - விரும்பினர். 'இளவேனிலே! யாங்கள் எம்மை விரும்பினார்க்கு நல்லேமாயினாற்போல, நீயும், எப்பொழுது வருவை என்று நயந்தார்க்கு - விரும்பினார்க்கு - மிகவும் நல்லை' எனத் தோழி கூறினாள் *[கலி.32:13]*.

நறவம், நீலப்பூ, அனிச்சப்பூ, முல்லைப்பூ பொருந்தின மார்பின் மாலையும், நறிய மலராற்செய்த கண்ணியும் நயந்தார் (பரத்தையர்) *[கலி.91:3]*.

நயந்திசினோர் - விரும்பினோர், விரும்பப்பட்டோர். நட்புக்கொளல் வேண்டி நயந்திசினோரும்-விரும்பினோரும்- பலவாகிய திறைகளோடு சென்று அரசனை வணங்கினர் *[பெரு.425]*.

'தோழி! நாம் நயந்திசினோர் (நம்மால் விரும்பப்பட்டோர்) நமக்கு அருளாரோ! ''எனப் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குக் கூறினாள் *[அக.103:15]*.

**நயந்தோய்** - விரும்பியோய். 'மலைநாடன் சொல்லை நயந்தோய்!-விரும்பியோய்- தலைவனைக் காணுமிடத்து நீ அவனுக்கு உணரக் கூறல் தக்கது' எனத்தோழி தலைமகட்குக் கூறினாள் (நயந்தோய்- விரும்பி ஏற்றனை எனமுற்றாகவும் ந.மு.வே கூறுவர்) *[அக.382:13].*

"அழகால் பிறமகளிரை வென்ற வெற்றியுடைய வள்ளியது நலத்தை நயந்தோய்!" எனச் செவ்வேளைப் புகழ்வர் *[பரி.14:22].*

**நயந்தோர்** - விரும்பியோர் / விரும்பப்படுவோர். 'மையல் நோக்கினையுடைய இத்தையால நயந்தோர் -விரும்பியோர்- அளிக்கத்தக்கவராவார்' என மகட்பாற் காஞ்சித்துறையில் அடை நெடுங்கல்வியார் பாடுவர் *[புற.345:11].*

தொண்டைமானிளந்திரையன், தன்னை நயந்தோர் நாடு திருமடந்தை பொலிவுபெற்றிருப்ப அளிப்பன் *[பெரு.424].* மாலைக்காலமானது, கணவனோடு கூடும் கூட்டத்தை நயந்தோர்க்கு நோயைச் செய்தலோடு புகுந்துபோயது *[மது.549].*

'தம்மை நயந்தோரைப் பற்றிக் கொள்ளுதலை அறியாவாய நம் தோள்களே தவறுடையன' எனத் தன் ஆற்றாமை கண்டு ஆற்றாளாய தோழிக்குத் தலைமகள் கூறினாள் *[அக.267:15].*

'தலைவி இங்கே துன்புற, நயந்தோர் துன்பத்தைத் தீர்க்கும் நல்வினைப் பயனை அடையாத இயல்புடையாய் என்னின் அவ்வியல்பு நினக்குத் தகுமோ' எனத் தலைமகனை நெருங்கித் தோழி வரைவு கடாவினாள் *[குறு.342:6].*

'நயந்தோர்க்கு உதவாத அன்பற்ற அவனது மார்பை நம்மில் இரந்து கேட்டவர் உளரோ?' எனத் தலைவி வன்புறை எதிரழிந்து கூறினாள் *[நற்.225:9].* 'தலைவனே! வாய்மை விளங்கிய நின் சொல்லை நயந்தோர்க்குப், பழைய அழகு கெடும்படியாக இத்தன்மையுடையையாதல் தகுமோ' எனப் பகற்குறி வந்த தலைமகனைத் தோழி வரைவுகடாவினாள் *[நற்.283:8].* 'நின்னயந்தோர் (நின்னால் விரும்பப்படுவோர்) எம்மைப்போல நெகிழ்ந்த தோளும், கலுழ்ந்த கண்ணும் உடையராய், மலர்ந்து, முறையே உயிர்த்து, அழியாது, மலர்ந்தவுடன் தீய்ந்தாற்போல்வர்காண்' எனத் தலைமகனைப் பரத்தை நொந்து கூறினாள் *[நற்.37:2].*

'மகிழ்நன், நயந்தோர் கண் பசலையூத்து, நீர் நிறையும்படி செய்ய வல்லன்' எனக் காதற்பரத்தை தலைமகட்குப் பாங்காயினார் கேட்பத் தன் தோழிக்குக் கூறினாள் *[ஐங்.37:2].*

'திண்ணிய தேரினையுடைய கொண்கனை நயந்தோர். தம் பண்டைய நலத்தைப் பெறுவரோ?' எனத் தலைவி கூறினாள் *[ஐங்.137:2].*

'இளவேனிலே! நீ நயந்தோர்க்கு நல்லை' எனத்தோழி கூறல் *[கலி.32:13].* நயந்தோர்க்குத் தேர் ஈயும் வண்கையனாகிய தலைவன், நீரினும் சாயலுடையன்; ஆகையால் வரையாமல் நமக்கு நோயைப் பொருந்தவிடான்' எனத் தலைவி கூறினாள் *[கலி.42:20].*

**நயந்தோள்** - விரும்பினவள். 'நீ நயந்தோள் - விரும்பினவள் - கண் நீர்த்துளியை நீங்கா' எனக் கிழவற்குத் தோழி கூறினாள் *[குறு.365:6].*

'நீ நயந்தோள் ஊர் பிணைமான் இரலையோடு வதியும் புறவினையுடையது' என வினைமுற்றி மீளும் தலைமகற்குத் தேர்ப்பாகன் கூறினான் *[நற்.121:5].*

'நீ நயந்தோள் கண் ஈரியவாய்க் கலுழாநிற்கும்' எனக்கூறித்தோழி வரைவு கடாவினாள் *[நற்.195:9].* 'உடன்போன, பொன்போலும் மேனியினையுடைய தன்மகளை நயந்தோள்- விரும்பியோள் (தாய்)- இரங்கத்தக்காள்' எனத் தலைமகள் பாங்கற்குக் கூறினாள் *[நற்.324:3].*

'நீ நயந்தோள் கண்கள் பசலை நிறம் எய்தின' எனக் கூறித்தோழி தலைமகனை வரைவு கடாவினாள் *[ஐங்.264:4].* 'நீ நயந்தோள் கண்கள் நீர்த்துளியைப் பெய்தன' எனக் கூறித்தோழி தலைமகனை வரைவு கடாவினாள் *[ஐங்.266:4].* 'நெஞ்சமே! நீ நயந்தோள் பண்புகள் சுரம்கடந்து வந்தன' என இடைச்சுரத்து உவந்து தலைவன் தன்வெஞ்சிற்குக் கூறினான் *[ஐங்.323:4].*

**நயப்பு** - அன்பு / காதல் / விருப்பம். 'நயப்பு - அன்பு- மிக்க இனிய காதலியின் நகைமுகம் பெற, வலவனே தேரினைச் செலுத்துக' என வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குக் கூறினான் *[அக.344:13].*

'பசப்பு என்மேனியின் கண்ணது; நயப்பு (காதல்) அவரது (அன்பற்ற) நெஞ்சத்திடத்தது' எனத் தலைவன் சிறைப்புறமாகத் தலைவி கூறல் *[குறு.219:1].*

நாணையும், - நிறையையும் நயப்பு - விரும்புதல் - இல்லாத, குடிப்பிறப்பிற்குரிய ஒழுக்க நெஞ்சு இல்லாத அவன் நம் ஆகம் நோக்கி நம் நட்பினைவிருப்புற்றான் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் *[கலி.60:29].*

**நயம் -1.** விருப்பம். 'சீறியாழ்க் கல்வியின் நன்மை நிறைந்த நயம்- விருப்பம்- வந்த பாணனே' எனப் பாணன் விளிக்கப்பெறுதல் *[புற.308:3].*

கள்வர், நடுநாளிலும், காவலில் தப்பிலராய்ப் போந்து, நயம் வந்து உலாவினர் *[மது.650].*

'இக்காடு பெரிதும் நயம் மிக்க ஒன்று' என்று உடன்போகும் தலைவன் தலைவியிடம் கூறினான் *[அக.99:10].*

இளவேனிலில் ஈங்கையின் தளிர் நயம்வருமாறு அசையும் *[நற்.86:8]*. வண்டில் நயம் பொருந்திய தீங்குரலை அசுணமான் செவி மடுத்தது *[நற்.244:3]*. காந்தட் குலை மலர்ந்த நயம் வரும் சாரல் *[நற்.313:7]*.

'வண்டுகள் உறையும் நயம் வருகின்ற பொய்கை *[ஐங்.88:1]*. 'நல்ல அழகு நயம் வருதலையுடையை! என்ன நோன்பு நோற்றனையோ', எனத், தலைவன் இடைச்சுரத்து மாவின் தளிர் கண்டு கூறினான் *[ஐங்.365:4]*. 'விலங்குகள் அனைத்தும் நயம் வரப் புணர்ந்தன காண்போம்; 'எனத், தலைவன், தலைவியிடம் கூறினான் *[ஐங்.419:3]*.

நயம் மிக்க கொம்போடு இளவேனில் அழகுபெற்றது *[கலி.32:10]*. 'என்னெஞ்சு நயம் வந்து செலுத்தும் வேள்விப் புகைபோல நெட்டுயிர்ப்புக் கொள்ளும்', எனத், தலைவியின் ஆற்றாமை கண்டு, தோழி கூறினாள் *[கலி.36:24]*. 'தாம் தலைவன் மலையைப் பாட, அவன் நயம் வந்து கேட்டருளி, வரைவோடு புகுந்தான்', எனத், தோழி, தலைவிக்கு உரைத்தாள் *[கலி.40:31]*. 'நயம் கொண்டு மணம் புரிந்து கற்புக்கடம் பூண்டேன் என்று யாய்க்குக் கூறின் புகழ் நமக்குப் பொருந்தும்', என்று, தலைவி, தோழியிடம் கூறினாள் *[கலி.54:18]*. 'நயம் வரும் தடமென்றோளும், கண்ணும் உடையோய்! உறுவித்த நோய் நீக்க வழி சொல்க', என்றான் தலைவன் *[கலி.113:1]*. பண்ணின் இனிமையைக் கேட்போர், செவி கொண்டு இன்புறுதற்கு முன்னே நயம் மிக்க இனிமையாகிய பொருள்கெட நரம்பின் முறுக்கு அறுபடுதலினும், காமம் பயனின்று *[கலி.142:4]*.

முகைகளது மணத்தைத் தருகின்ற அலர்ச்சியான் நயம் வருகின்ற நறவம்பூ *[பரி.8:75]*. மிகவும் நயம் வருகின்ற பல்லவங்கள் (தளிர்) வீழ்ந்து, மரைமலரை, முகையைச்சார, அவை, ஐந்தலை நாகமும், பார்ப்பும் போல் காணப்பட்டன *[பரி.19:67]*.

**2. அன்பு.** 'தலைவர் கானத்தை எம்மோடு கழித்தனராயின் கைவிரும்பும் முயக்கத்தினை நயம்-அன்பு-தோன்றப் பெறுகுவர்', எனத், தலைவி கூறினாள் *[அக.11:11]*.

'தலைவர் கொடுமையை நினைந்து, அவர் குன்றுகள் நம்பால் நயம் பெரிதுடைமையின், தம் கண்ணீர் அருவியாக அழும்', எனத், தோழி, தலைவியிடம் கூறினாள் *[நற்.88:7]*.

'நீ நயத்தின் பற்றினை விடுவையாயின் நீ செய்த தவம் முதலியவற்றின் பயனைப் பெறமாட்டாய்', என, இரந்து குறையுற்றுப் பின்னின்ற தலைவன், தலைவியிடம் உரைத்தாள் *[கலி.59:26]*. 'நின்னிடத்து நயம் தலைமாறுவார் மாறுக', எனப், பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் சிறைப்புறத்தானாகத், தலைவி, மகனிடம் கூறினாள் *[கலி.80:1]*.

**நயன் 1** - காண்க

**3. இன்பம்.** சீறியாழின் நயத்தை - இன்பத்தை-விரும்பியுறைவார், அவ்விசையின்பத்தாலே தலையசைத்துக் கொண்டாடும்படி, அவ்வியாழை வாசித்தனர் *[புற.145:6]*.

நயம் வரும்படி தன் பெருங்குணங்களுக்கு, ஏற்பப் பொருந்திய மென்சொல்லையுடையவன், சேரன் தேவி *[பதி.81:29]*.

நயம் தெரிகின்ற பாலை யாழ் வல்லோன் இயக்கத், துயர் ஆற்றுப்படுத்த இரவலன் வந்தான் *[சிறு.36]*. யாழ் வாசித்தாற்போலப் நயம் மிக்க பாட்டுப் பாடினர் *[மது.217]*. குயில் நயம் தோன்றக் கூவும் இளவேனிலிலும், வாரார் தலைவர்', எனத், தலைவி கூறினாள் *[அக.229:19]*. விளரி நரம்பின் நயம் பொருந்திய சீறியாழின் இசையும் குயிலிசையும் துயில் எழுப்பும் *[அக.279:11]*. 'நயம் நீங்காது கூறும் நின் இனிய மொழி உண்மையாகும்படி தலைவர் வருவர்' எனத், தலைவி, தோழியிடம் கூறினாள் *[அக.333:15]*. கமுகம்பாளை விரிய, நயம் பொருந்திய அழகினையுடைய, பூக்கள் ஆரம் போல் தோன்றின *[அக.335:17]*. 'நயம் மிக்க பண்ணைக் காட்டிலும், தலைவன் நமக்கு இனியன்'எனத், தலைவி, தோழிக்குக் கூறினாள் *[அக.352:13]*.

நயம் உடைய குரலையுடைய பல்லி, தலைவரை உள்ளுந்தோறும், குரல் தரும் என்றாள் தோழி. *[நற்.333:11]*.

**4. பண்பு.** அருளற்ற அறிவாலே அறஞ் செய்யானாய், நயம்-பண்பு-செய்யானாய் வாழ்ந்தவன் நெஞ்சம் மருட்சியுற்றது *[கலி.120:1]*.

**5. நலம்.** 'அசுரரை யொழித்து, அமரருக்கே அமுதத்தை அளித்தமையால், நடுவுநிலை திறம்பிய நயம் - நலம் - இல்லாத ஒரு கையையுடையவர், திருமால்; எனத், திருமாலை வஞ்சப் பழிப்பாகப் புகழ்வர் *[பரி.3:34]*

**நயவர் - நயத்தையுடையவர், விருப்பமுடையவர்.** ஒய்மான் நாட்டு நல்லியக்கோடன் நயவரது - நயத்தையுடைவரது (விரும்பி வந்தவரது) - புன்கண்மை தீர்த்தான் *[சிறு.248]*.

**நயவன் - யாழ் வல்லோன்.** நயவன் - யாழ்வல்லோன் - இயக்கும் நல்ல யாழின் செல்வழிப்பண் போன்றது இனிய சொல் *[அக.212:6]*.

**நயவினர் - நயமுடையவர், அன்புடையவர்.** 'தோழி, நம் காதலர் அளவுபடாத நயவினராய்த்-நயமுடையராய்த் தீயநெறியைக் கொள்ளாது ஒழுகுபவர்; எனத், தோழி கூறினாள். *[நற்.329:1]*

**நயன் 1. அன்பு.** 'நயன் - அன்பு - இல்லாத கூற்றமே, நீ அறிவுடையை யல்லை' எனக், கிள்ளிவளவன் இறந்தபோது, ஆடுதுறை மாசாத்தனார் பாடினார் *[புற.227:1]*.

இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் நயன் இல்லாத வன்சொல்லையுடையவனரைப் பிணித்தான் *[பதி.ப.2:8]*. ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் நயனுடைய நெஞ்சத்தினன் *[பதி.6:10]*. அறத்தை ஆராய்தல் மிக்க நயனுடைய நெஞ்சத்தையுடையவன் இளஞ்சேரலிரும்பொறை *[பதி.86:7]*.

நயனுடைய நெஞ்சாலே எக்காலமும் மெல்லிய சொல்லைச் சொல்லுபவர் (கந்தருவர்) *[முரு.141]*.

நாட்காலத்தே மீன் வேட்டைக்கு எழுந்த நயனில்லாத பரதவரது தோணி போல் தோன்றும் குன்றுடைய சுரன் *[அகம்:187:22]*.

தலைவ, நீ நின் நயன் உடைமையின் வருகின்றாய்; மடன் உடைமையின் வருந்துகின்றாள் இவள்; எனத் தோழி இரவுக்குறிமறுத்து, வரைவு கடாவினாள் *[குறு.324:4]*. தண்ணளி செய்தால் வாழ்கின்ற வறியோர்பால் நயன் இலராகுதல் நன்று, என, உணர்ந்த குன்றநாடனினும், கொடியை, எனத், தலைவி, ஆற்றை நோக்கிக் கூறினாள் *[குறு.327:2]*.

தலைவியைக் காண்டற்கு முன் நும்மினும் நயனும் பண்பும் உடையயேன்; எனப், பாங்கனிடம் தலைவன் கூறினான் *[நற்.160:1]*.

நடுவுநிலை நீங்க நயனில்லாத அமைச்சன் சொற்கேட்டு நடக்கும் அரசன் கொடுங்கோலனாவான் *[கலி.8:1.]*. நயனும், வாய்மையும், நடுநிலையும் இவனில் தோன்றிய எனக் கூறும்படி அரசன் ஆண்டான் *[கலி.130:1.]*. குலமகள் நலமுண்டு நயனில்லாத பரத்தையிற் பிரிந்தான் எனத், தலைவனை வெகுளல் *[பரி.12:45]*.

நயம் - 1 காண்க.

**2. நடுநிலை - நீதி.** நயன் - நடுநிலை - நீதி - இல்லாத மாக்கள், செல்வம் குறைந்தோரால் பயனின்மையின், அவர் பற்றினை ஒழித்து நீங்குவர் *[அக.71:3]*.

நொதுமலாளராகிய தலைவர் நயனறத் துறத்தல் வல்லியோராவர் எனத் தலைமகள் புலந்துரைத்தாள். *[அக.398:15]*.

நயனுடைய நெஞ்சினையுடைய கடப்பட்டாளன் செல்வம் போன்று, பசப்பு நிலையற்றது. *[குறு.143:4]*.

**3. நன்மை** - 'உன்னிடம் நயன் - நன்மை - இன்மையின் இது பயன் என்று கருதாமல் நகைத்துக்கூறின், என்னுள்ளம் உடையும்; எனத், தலைவன் கூறினான் *[நற்.75:1]*.

நயனில்லாத மாக்களோடு கூடிய வேந்தனின் அவைதான் பயனின்மை உடையதாயிற்று, எனக் கூறித் தோழி வாயின் மறுத்தாள் *[நற்.90:11]*.

'நின்னோடு யான் கொண்ட நயனில்லாத நாட்டத்தால் நீ அன்புடையையல்லை என்று கூறிக் கழறுவேன்; எனத், தோழி, தலைவனிடம் வரைவு கடாவினாள். *[கலி.125:6]*.

**4. விருப்பம்.** 'தலைவ, நீ நயன் - விருப்பம் - இல்லாதவற்றைச் செய்யினும், என் தோழி, நின்வழிப்படுவாள்; எனத், தோழி, தலைவனிடம் மொழிந்தாள் *[நற்.247:6]*.

**5. முறை/வழி.** வாட்போர் செய்யத் தொடங்கின மன்னரைச் சந்து செய்வோர், நயன் - முறை - நாடி நட்பாக்குவர் *[கலி.46:8]*.

**6. வளம்.** பெயல்வறப்பக், கானம் இலையிலவாக, மலை, கோடையினால் நயன் - வளம் - அற்றுப்போயிற்று *[அக.291:4]*.

**நயனிலாளன் - அன்பில்லாதவன்.** 'நனவில் வாராத நயனிலாளனை - அன்பில்லாதவனைக் - கனவில் கண்டு யான் செய்த செயலை இப்பொழுதே கேள்' எனத், தலைவி, தோழியிடம் தான் கண்ட கனவு நிலையைக் கூறினாள் *[கலி.128:8]*.

**நயனிலோர் - அன்பிலோர்.** நம்மைப் புணர்தலில்லாத நயனிலோர் - அன்பிலோர் - நட்பு, அதுவில்லாமல் ஒழிக; எனத், தோழி, தலைவிக்குரைத்தாள் *[நற்.165:7]*.

**நரந்தம் 1. - நரந்தப்புல்பூ.** 'நரந்தம் - நரந்தப்பூ - நாறும் தன்கையால் புலவு நாறும் என் தலையைத் தடவுவான்; அது கழிந்ததே' என்று, அதியமான் இறந்தபோது, ஔவையார் பாடினார் *[புற.235:8]*. நரந்த மலர்களாலாகிய மாலை சுற்றிய யாழினைப் பாணர்கள் கொண்டிருந்தனர் *[புற.302:4]*.

சிலம்பிடத்தே துஞ்சும் கவரிமான் பகற்காலத்தே தான் நுகர்ந்த அருவியையும், நரந்தத்தையுமே கனவிலும் கண்டது *[பதி.11:22]*.

தலைவியும், தோழியும் பறித்துக் குவித்த மலர்களுள், நரந்தமும் ஒன்றாகும் *[குறி.94]*.

வேங்கைப் பூக்களிடையே பெரிய கிளைகளையுடைய நரந்தத்தின் நறிய அழகிய புதுமலர்கள் உதிர, முசுக்கலை பாய்ந்து தாவியது *[அக.141:26]*. நரந்தம் நாறுகின்ற கூந்தலையுடையவர், மகளிர் *[அக.266:4]*.

நரந்தம் நாறும் தொகுதியாகிய கருங் கூந்தலை யுடையவள் தலைவி *[குறு.52:3]*.

நரந்தம் நாறும் கருங்கூந்தலை, மாலையோடு விரலிற் சுற்றித் தலைவன் மோந்தனன், *[கலி.54:5]*.

நரந்தப் புல்லின்கண் வேங்கையின் பூக்கள் உதிர்ந்து பரந்து கிடந்தன *[பரி.7:11]*. சோலை நரந்தம் போலும் நறுமலர்களை மிக அளிக்கும். *[பரி.16:15]*.

**2. நாரத்தை.** நறைக்கொடியும், நரந்தமும் - நாரத்தையும்- ஆகிய சுமையை நீர், துறைதோறும் தள்ளிச் சென்றது *[பொரு.238]*.

**3. கத்தூரி.** மகளிர், காதலையுடைய கணவரைக் கூடுதற்கு நரந்தம்- கத்தூரி - அரைக்க விளக்கினை ஏற்றினர் *[மது.553]*.

**நரந்தை** - நரந்தம் புல். இமயமலையில் நரந்தையை - நரந்தபுல்லை - மேய்ந்த கவரிமான் குவளைப் பூவையுடைய சுனை நீரைக் குடித்து, அதன் அயலிலுள்ள, தகரமர நிழலில், தன் பிணையுடனே தங்கும் *[புற.132:47].*

நரந்தம் - 1 காண்க.

**நரம்பு - 1.** யாழ் நரம்பு. இசை நரம்பு. வடித்து முறுக்கப்பட்ட நரம்பினையுடைய - இசை நரம்பினையுடைய - யாழை வாசித்துச் செல்லின் பாரி நாடும், குன்றும் ஒருங்கியும், *[புற.109:15].* பொன்னைக் கம்பியாகச் செய்தாற் போன்ற முறுக்கடங்கிய நரம்பினையுடைய, வரிப் பொருண்மையோடு பயிலும் பாட்டு நிலந்தோறும் மாறிமாறி ஒலித்தது *[புற.135:5]* பலவாக அடுக்கப்பட்ட பண்ணுதலமைந்த நரம்பினையுடைய நல்ல யாழையும், மத்தளத்தையும் உடையவர் கூத்தர் *[புற.164:11].* வளைந்த கோட்டையுடைய சிறிய யாழினுடைய, கை விரலால் இசைத்தொழில் புரிய இசைக்கும் நரம்பினை, இயக்கும் பாணர்கள் பாடினர் *[புற.302:6].* பொற்கம்பியினை யொத்த முறுக்கடங்கின நரம்பினை உடையது சீறியாழ் *[புற.308:1].* பாணர்களின் யாழ் நரம்பின் கோதுகளுடன், வயமான் சிங்கத்தின் மயிர், கொண்டு செய்யப்பெற்றது (புறாவின்) கூடு *[புற.318:5].*

முறுக்கிய நரம்பின் இனிதாகிய கட்டு முதிர்ந்த, வளைதல் அமைந்த நல்ல யாழினை இளையர் தாங்கினர் *[பரி. 41:1].* அசைகின்ற சிறையையுடைய கின்னரத்தை வென்ற யாழ்நரம்பின் இசையோடு ஒன்றுபட்டுச் சேர்ந்த இனிய குரலையுடையவர் விறலியர் *[பதி.43:21].* பாணரது கையின்கண் உள்ள பேரியாழ் பணிந்த கட்டினையுடைய நரம்பினையுடையது *[பதி.57:7].* பாணன் இனிய நரம்புக் கட்டையுடைய பாலையாழை வாசித்தலில் வல்லவன் *[பதி.65:14].*

ஈர நெஞ்சினையும், மெல்லிய சொல்லினையும் உடைய கந்தருவர் இனிய நரம்பை வாசித்தனர் *[முரு.142].* நரம்பு ஆரவாரித்தாலொத்த இனிய மிடற்றையுடையவர் பாடுமகளிர் *[முரு.212].*

குற்றம் போகிய விரலால் அசைக்கும் நரம்பினையுடைய இசை முற்றுப் பெற்ற நீண்ட விசித்தலையுடையது தொடையல் *[பொரு.17].*

பொற்கம்பியினை ஒத்த முறுக்கடங்கின நரம்பினது இனிய ஓசையையுடையது சீறியாழ் *[சிறு.34].* தேன் ஒழுகுகின்ற தன்மையைத் தன்னிடத்தே கொண்டு, முறுக்கடங்கின அமிழ்தத்தைத் தன்னிடத்தே பொதிந்து அளிக்கும் நரம்பினையுமுடையது இன்னியம் *[சிறு.227].*

பொன் கம்பியாய் ஒழுகினாலொத்த முறுக்கடங்கின நரம்பின் கட்டமைந்தது யாழ் *[பெரு.15].* குமிழினை கொம்பிடத்தே வளைத்துக் கட்டின மரற் கயிறாகிய விரலாலே தெறித்து வாசிக்கும் நரம்பினையுடைய வில்லாகிய யாழ் குறிஞ்சிப்பண் ஒலிக்கும் *[பெரு.181].*

யாழ் நரம்பு போன்ற ஒலியெழுப்பிப் பாடும் பாட்டினையுடையவர் விறலியர் *[மது.217].* யாழோர் தாளவறுதியை இனிதாகவுட் கொண்டு நரம்பை இனிதாகத் தெறித்து மருதத்தை வாசிப்பர் *[மது.657].*

நட்டராகம் முற்றுப்பெற்ற பாலையாழை வாசிக்க வல்லவன், தன் கையாலே வாசித்த நரம்பு போலே, வண்டினம் இம்மெனும் ஓசைஎழ ஒலித்தது *[குறி.147].* கூத்தருடைய மத்தளத்தில் தாளத்தோடே கூடின முறுக்குதல் புரிந்த நரம்பின் இனிதாகிய கட்டினையுடைய யாழைக் கேட்டனர் *[பட்.254].*

ஓசையை ஓர்ந்து பார்த்துக் கட்டின, வடித்து முறுக்கின, நரம்பினையுடையது யாழ் *[மலை.23].* மருதத்தை வாசித்த சிறிய யாழின் நரம்பின் ஓசைக்கு மேற்போகாது அவ்வோசையுடனே கூடி ஒரோசையாய் இனிதாகப் பாடினர் விறலியர் *[மலை.535].*

சோலையில், யாழின் நரம்பு ஒலித்தால் ஒத்த ஓசையினையுடைய வண்டுகள் தேனையுண்டன *[அக.4:9].* நல்ல யாழின் நரம்பு ஒலிப்பது போன்ற மிக்க இனிய மொழியினையுடையவள் தலைவி *[அக.109:2].* தலைவி, வடித்தல் அமைந்த யாழ் நரம்பின் ஒலிபோல இனிய மொழிகளைக் கூறித் தலைவனைத் தழுவினாள் *[அக.142:26].* இனிய தொடுத்தல் அமைந்த விளரி என்னும் நரம்பினது இனிமை பொருந்திய யாழின் இசை, குயிலின் ஒலியுடன் கூடித் துயில் எழுப்பும் *[அகம்.279:11].* ஒலித்து எழுகின்ற வண்டின் விட்டிசைக்கும் ஒலி, தெறித்துவிடும் விளரி நரம்பின் ஒலிபோல இம்மென ஒலித்தது *[அக.317:13].* மலையில் நின்றும் வீழும் அருவியொலியுடன் வண்டின் ஒலி கூடித் தண்ணுமை ஒலியுடன் கூடிய யாழ் நரம்பின் ஒலிபோல இம்மென்று ஒலித்தது *[அக.318:5].* யாழ் வல்லோன் தடவும் நரம்பு, இனிய இசை கொண்ட பாலைப்பண்ணை ஒலித்தாலொத்த இசையுடன் வண்டின் கூட்டங்கள் ஒலித்தன. பாணரது வடித்தல் உற்ற நல்ல யாழ் நரம்பு ஒலிப்பது போன்ற இனிய குரலுடன், முகில் மழை பெய்தது. *[அக.374:8].*

வண்டு, யாழிற்கட்டிய இனிய நரம்பு ஒலித்தாற்போல ஒலித்தது *[நற்.17:11].* நாவற் கனியைத் தம்மினம் என்று மொய்த்த வண்டுகள், அதனைக் கைக்கொண்ட நண்டை விலக்கி, யாழ் நரம்பின் ஓசைபோல மிக்கொளித்தன *[நற்.35:5].* நிலை பெறுதலையுடைய நல்ல யாழின் முறுக்கிய நரம்பினின்று 'படுமலை' என்னும் பண்ணினை எழுப்பினாற் போன்ற ஒலியோடு மழைபெய்தது *[நற்.139:4].* பாணர், தெறுகின்ற சினம் தணிதற்கரிய தெய்வத்தின் முன்புசென்று அதன் சினம் அடங்குமாறு சிறிய யாழின் நரம்பின் ஓசையை எழுப்பிப்பாடினாலொத்த, இனிய குரலையுடையன குருகுகள் *[நற்.189:4].* கைவிரும்புதற்குக் காரணமான நரம்பினையடைய

யாழிலே பாடும் இசைப்பாட்டு நூலை வல்லவன் பாணன் *[நற்.200:8]*. 'கணந்துள்' என்னும் பறவை தனிமையிலிருந்து கத்தும் ஓசை, சுரத்தின் கண்ணே செல்லும் கோடியர், வழிவருத்தம் நீங்குமாறு தங்கி விரைந்து இசைக்கும் யாழ் நரம்பின் ஒலியோடு சேர்ந்து ஒலித்தது *[நற்.212:4]*. நெய்வடிந்தால் ஒத்த பிசிர் அடங்கிய நரம்பு பூட்டியது யாழ் *[நற்.300:8]*. பொன் போன்ற நரம்பின் இனிய ஓசையையுடையது சீறியாழ் *[நற்.380:7]*.

'பாணர் எழுப்பும் நரம்பின் ஓசையைவிடவும் இனிய மொழியையுடையவள் தலைவி' எனத் தலைமகற்குத் தோழி கூறினாள் *[ஐங்.100:4]*. தலைவி யாழ் நரம்பு ஒலித்தாற்போன்ற இனிய சொல்லையுடையவள் எனத் தோழிக்குத் தலைமகன் கூறினான் *[ஐங்.185:4]*. புதல்வனைத் தழுவிய தாயினது முதுகை முயங்கியவாறு தலைவன் தங்கிய கிடக்கை, பாணர்கள், நரம்பு உணர்தலால் எழுப்பும் துள்ளலோசை போல இனிது, எனச் செவிலி கூறினாள் *[ஐங்.402:3]*.

'ஐயனே! விரும்புவார்க்கு நேயமாய் விரலாலே வாசிக்கப்பட்டு, கோல் ஏமும் தன் பயன் இன்றாம்படி இடை நின்ற நரம்பு அற்றுப்போம் யாழினுங்காட்டில் நிலைபேறில்லாத பொருளையும் அறிவுடையோர் நச்சுவார்களோ' எனத் தோழி தலைமகன் செலவமுங்கக் கூறினாள் *[கலி.8:10]*. நரம்பின் இனிய இசையைத் தாளத்திலே நிறுத்தும் வங்கியம் போல, ஒலிக்கும் ஓசையையுடைய மிஞிறோடே தும்பி தாதை ஊதியது *[கலி.33:22]*. வண்டோடு சுரும்புகளும், வடித்த நரம்புகள் ஒலிப்பனபோல் ஆரவாரித்தன *[கலி.36:3.]*. கணவர் பிரிந்த காலத்துச் செவ்வழியென்னும் பண்ணையுடைய யாழினது நரம்போசை போல வருந்திச் கூறும் மொழியினையுடையவர் மகளிர் *[கலி.118:15]*. தலைவி அழுமாறு காம இன்பத்தை ஊழானது நீக்குகையினாலே, இந்நிலையாமையை ஆராய்ந்து பார்ப்பாரிடத்து, அஃது, அறுதியாக நரம்பை மீட்டலைச் செய்ய அதனிடத்தே நின்ற பண்ணினுள் தோன்றிய இனிமையைக் கேட்போர் 'செவி கொண்டு இன்புறுவதற்கு முன்னே விரும்பி நின்ற இனிமையாகிய பொருள்கெட முறுக்கறும் நரம்பினும் காட்டிற் பயனின்றாயிருந்தது' எனப் பிரிந்து நீட்டித்தவிடத்துத் தலைவி கூறினாள் *[கலி.142:4]*.

பாலை ஏழினையுமுடைய புரிநரம்பின்கண், இனிய கொளையைத் தருகின்ற யாழும்மிடற்றுப் பாடலும் ஒக்க இசைத்தன *[பரி.7:77]*. தேவசேனையின் பாங்கியர் சுனையிடத்து வண்டாய் நின்று நரம்பினைப் போன்று முரன்றனர் *[பரி.9:63]*. நட்டபாடை என்னும் பண்ணைத் தருகின்ற யாழ் நரம்பிற்கு இயைந்த நின்பாட்டு நின் பொய்ம்மிகுதியை உணர்த்திற்று' என்று தலைவி பாணனை நோக்கிக் கூறினாள் *[பரி.18:20]*.

**2. உடல் நரம்பு** நரம்பு - உடல் நரம்பு - தோன்றி வற்றிய நிரம்பாத மெல்லிய தோள்களையுடையவள் முதியோள் *[புறம்.278:1]*.

நரி - விலங்கு வகை. 'சிறுவர்களே! கரிய பறவைகள் சூழ்ந்து செய்யும் ஆரவாரத்தை நீக்குவீர்களாக; யானும் விளரிப்பண்ணைச் சூழ்ச்சியுறப் பாடித் தின்னவரும் குறுநரிகளை - விலங்கு வகையை - ஓட்டுவேன்' என நெடுங்கழுத்துப் பரணர் பாடினார் *[புற.291:4]*. கூகையோடு பிணங்களைத் தின்னும் குறுநரிகள் தசையொட்டிய பற்களையுடையவாய்த் தின்று கொண்டிருந்தன *[புற.359:3]*. பேய்மகளிர் மொய்த்துச் சூழும் பிணங்கள் குவிக்கப் பட்டுயர்ந்த குவியல்களைக் கூட்டமாகிய நரிகளும், பேய்களும் ஈர்த்துண்டன *[புற.369:16]*. போர்க்களத்தில் பேயோடு நரிக்கூட்டம் திரிதரும் *[புறம்.373:37]*.

ஞாயிறு ஒருபாற் சாயாமல் நின்ற நடுபகற்பொழுதில், கவர்த்த வழிகளில் உள்ள வெள்ளிய நரிகள் கூவுதலைச் செய்தன *[பதி.22:35]*.

இடையன், கொள்ளியின் தீயில் அகங்கை காய்ந்திட, மிக்க இருளில் குறுநரிகளை ஒலி எழுப்பி அலைத்தோட்டினான் *[அக.94:8]*. கழுகு, தன் குஞ்சினை உண்பிக்க, அக்குஞ்சின் வாயினின்றும் தவறி வீழ்ந்த ஊனின்துண்டு, பழைய பசியினையுடைய முதுநரிக்கு உணவாயிற்று *[அக.193:10]*. இடையன், எழுப்பும் சீழ்க்கை விரைந்து சென்று ஒலித்தபின், செம்மறியாட்டின் குட்டியினைக் கவரப்பார்த்திருக்கும் குள்ளநரி அஞ்சிக், குறிய தூற்றின்கண் ஓடியது *[அக.274:10]*. நீள, ஒழுகிய குருதியுடன் தொங்கிக் கிடந்த குடலைக் கடித்து, வரிகளையுடைய மரலுள்ள நெறியில், ஓர் ஆண் நரி, கள்ளி நீழற் கண்ணே கூக்குரலிட்டுத் தங்கியிருந்தது *[அக.337:15]*. ஆறலைத்தலையன்றிப் பிற தொழிலையறியாத இளையர் செருக்கித் திரியும் கவர்த்த நெறிகளில், கூட்டமாய நரிகளின் இனத்தோடு கூடி நிணத்தினை உண்டன *[அகம்.375:6]*.

ஆறலை கள்வர் ஏதிலாளரைக் கொன்ற பிணங்கள், இலைகளால் மூடப்பெற்று முடைநாற்றம் மிகுதலின் அவற்றைத் தின்ன வந்த மிக்க பசியையுடைய குறுநரி அம்முடை நாற்றம் பொறாமையால் அவ்விடத்து நெருங்காது மீண்டு சென்றது *[நற்.164:9]*.

'புலி கோடற்கு நிறுத்தின வலையிலே ஒரு குறுநரி அகப்பட்ட தன்மை போலக் குறிநின்ற இடத்துத் தலைவனை எதிர்பார்க்க, முடமுதிர்ப்பார்ப்பான் ஒருவன் வந்தான் எனத், தோழி, அல்லகுறிப்பட்டமை கூறினாள்' *[கலி.65:25]*.

**நரிவெரூஉத்தலையார்** - ஒரு புலவர். இவர், யாது காரணத்தாலோ, சேரமான் கருவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ்சேரலிரும்பொறையைக் கண்டபோது தம் மெய் வேறுபாடு நீங்கப்பெற்று, நல்லுடம்பெய்தியவர். இதனால், 'நரியும் வெரும்படியான தலையையுடையவர்' என்ற இவரது பெயர் விளக்கம் ஒருவாறு விளங்கும். ஆயினும், இக் காரணத்தின் வேறாக, 'நரிவெரூஉத்தலை' என்ற

சொற்றொடரைப் பாடலில் பயிற்றி, அதனால் இவர் இப்பெயரைப் பெற்றிருக்கலாம் எனக் கருதுவர் மொ.அ.து. *(ச.சி.பெ.பக்.99)*. இவர் சேரமானைக் கண்டபோது அவனுக்குச் செவியறிவுறூஉவாகப் பாடிய புறப்பாடலும் *[புற.5]*, மற்றொரு பொருண்மொழிக் காஞ்சிப் பாடலும் *[புற.195]* இவர்தம் உலகியலுணர்வை உணர்த்தவல்லனவாம். 'அருளும், அன்பும் நீக்கித் தீவினை செய்தோரை நீங்காத நிரயத்தை (நரகத்தை) தமக்கிடமாகக் கொள்பவரோடு பொருந்தாது, நீ காக்கும் நாட்டினைக் குழவி வளர்ப்பாரைப்போல் காப்பாயாக' என்று அரசனுக்கு அறிவுறுத்தும் இவர், 'நல்லது (நல்வினை) செய்தலை மாட்டீராயினும் அல்லது (தீவினை) செய்தலைத் தவிர்மின்; அதுதான், யாவராலும் புகழப்படுவதன்றியும், நன்னெறிக்கண் செலுத்தும் வழியுமாம்' என்று, உலகோர்க்கு உணர்த்துவர். இவ்விரு புறப்பாடல்களேயன்றி, இவர் பாடிய அகப்பாடல்கள் இரண்டு குறுந்தொகையில் *[5,236]* உள்ளன. இரு பாடல்களையும் இவர் நெய்தல் திணையிலேயே அமைத்துப் பாடியுள்ளார்.

**நரை - 1.** - நரை முடி. அம்பலத்தில் நரை - நரைமுடி - உடைய முதியோர் சூதாடு கருவியிடக் குழித்த இடத்தில் காட்டுக்கோழி முட்டையிடும் *[புற.52:14]*. 'நுமக்குச் சென்ற ஆண்டுகள் பலவாயிருக்க நரை - நரை முடி - இல்லையாகுதல் எப்படியாயினீர் எனக்கேட்டபின், நன் மனைவி, மக்கள், நல்லிளையர், நல்வேந்தன், நற்சான்றோர் தொடர்பே! எனக், கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்தானுழைச் சென்ற பிசிராந்தையாரைக் கேட்ட சான்றோர்க்கு, அவர் கூறினார் *[புற.191:1]*. 'கயலினது முட்போன்ற நரை முதிர்ந்த, திரைந்த கதுப்பினையும், பயனில்லாத மூப்பினையும் உடைய சான்றீரே, நல்லது செய்தல் ஆற்றீராயினும் அல்லது செய்தல் ஓம்புமின்' என, நரிவெரூஉத்தலையார் பாடுவர் *[புற.195:2]*. நல்ல மனமுள்ள பொருளை நீக்கிய நரையுடைய தலையினையுடைய சிறுவர் தாயே! எனப், போரில் மகனை இழந்த தாயை முன்னிலைப் படுத்திக் கழாஅத்தலையார் பாடுவர் *[புற.270:5]*. நரைத்த வெண்கூந்தலையுடைய முதுபெண்டின் சிறாஅன், படைக்கு நோயாயினான் *[புற.276:1]*. கொக்கின் தூவி போன்ற வெள்ளிய நரையோடு கூடிய கூந்தலையுடையவள் முதியோள் *[புற.277:2]*.

நின்னை நல்வழியில் நடத்தும் நரை மூதாளனை, எல்லாப் பொருளும் தவமுடையோர்க்கெனக் கூறிக் காட்டிலே நீங்குமாறு, ஏவினை, எனப், பெருஞ்சேரல் இரும்பொறையைப் பாடுவர் அரிசில்கிழார் *[பதி.74:24]*.

அழகோடு, வடிவாலும், நிறத்தாலும் வலம்புரிச் சங்கினையொக்கும் வெள்ளிய நரை முடியினை உடையர், முனிவர் *[முரு.127]*. கோதிப், பின்னே முடித்துப்போட்ட, வெள்ளிய பெரிய நரைமயிரினையுடையவர் முதுபெண்டிர் *[மது.408]*. நரை கலத்தலுள்ள நறிய மெல்லிய மயிரினையுடையவர் செம்முகச் செவிலித்தாயர் *[நெடு.152]*.

நரை கலத்தலுற்ற நறிய மெல்லிய மயிரினையுடையவர் செம்முது செவிலித்தாயர் *[அக.254:1]*.

நரைமூதாளராகிய மருதநில மக்கள், நுளையர், உழவர் போரை நிறுத்திக், கள்ளைப்பரதவர்க்கு அளித்து மகிழ்ந்தனர் *[அக.366:10]*. பாழ்பட்ட மன்றத்தின்கண் நரை மூதாளர் தம் நடுங்கு தலையைக் கவிழ்த்து ஆடும் வல்லுத்தரையைக் கறையான் அரித்தது. *[அக.377:7]*.

பொன்போன்ற மேனியிலே, கருமணிபோலத் தாழ்ந்த நல்ல நெடிய கூந்தல், நரையுடனே முடிக்கப்பெற்றாலும், இவளைக் கைவிடாதேகொள்; என்று உடன்போக்குந் தோழி கூறினாள் *[நற்.10:3]*. மெல்லியவாய நரையோடு கூடிய கூந்தலையுடையவர் முதிய செவிலியர் *[நற்.110:6]*.

**2. வெண்மை.** பாம்பினை எறியும் நரை - வெண்மை - உடைய இடியேறு போன்றமையால் பாண்டியன் பகைவரைப் பொறாதவனாயிருந்தான் *[புற.58:7]*. வெண்மறி, நரை முகத்தினையுடைய ஊகமுடன் குதித்து விளையாடும் *[புற.383:19]*. நரைப்புறத்தினையுடைய இட்டிகையடுத்த ஆலின் தனித்த வீழினைக் கோடைக் காற்று வீழ்த்தியது *[அகம்287:6]*.

நரைமுகக்குரங்கு தன், பார்ப்பொடு நடுங்க, மழை பெய்தது *[குறு.249:2]*.

**3. பெருமை.** மரஞ்சுட்டு, மலையழிக்கும் நரை-பெருமை-உடைய உருமேறு போன்றவன், நெடுஞ்செழியன் *[மது.63]*.

நரையுடைய உரும் உரறும் நடுநாள், தொழுவில் ஆனேறு இயங்க, ஒலிக்கும் மணிக்குரலை அறிவரோ அவர் என்றாள் தலைவி (உரம் எனவும் பாடம்) *[குறு.190:5]*. மரையானி கருமையையும் நரையையும் உடைய நல்லேறு, நெல்லி மாந்தித் சுனைநீர் பருகும் *[குறு.317:1]*.

நரை உரும் உரறும் நள்ளிருளில், மலைநாடன் வரும், எனத், தோழி கூறினாள் (நகை எனவும் பாடம்) *[நற்.122:5]*.

**நரைமுடி நெட்டையார்** - ஓர் புலவர். இவரை உறுப்பாற் பெயர்பெற்றவராக வையாபுரிப்பிள்ளையின் சங்க இலக்கியப் பதிப்புக் கொண்டுள்ளது. அவ்வகையில் இவர் நரைமுடி காரணமாகவும், நெடிய உருவம் காரணமாகவும் இப்பெயர் பெற்றிருத்தல் கூடும். இவர் பெயரில் நரைமுடி என்பதற்கு மாறாக நிறைமுடி என்றும் பாடவேறுபாடு காணப்படுதலால் நிறைந்த முடியையுடையவர் என்ற முறையில் பெயர் அமைந்ததாகவும் கருத வாய்ப்பாகின்றது. நெட்டையார் என்பதற்கு மாறாக நெட்டிமையார் (ப:மு.தமிழ் அட்டவணை) *[ப.480]*. இப்புலவர் பாடியதாக அகநானூற்றில் 339-ஆம் பாடலொன்றே உள்ளது. பாலைத்திணையில் தலைவியைப் பிரிந்துபோகும் தலைவன் தன்னெஞ்சிற்குச் சொல்லுவதாக அமைந்த அப்பாடலில், ஆள்வினைக்கு எழுந்த அசைவிலா

உள்ளத்து ஆண்மைசெலுத்தவும், தலைவியின்பால் கொண்ட காமம் தடுக்கவும் இடையே இருபாற்பட்டு வருந்தும் நெஞ்சத்தின் நிலைக்குக் கணுக்களில் தீப்பற்றிக் கொண்டமையால் இருதலைக் கொள்ளியின் இடையே அகப்பட்டு வருந்தும் எறும்பின் நிலையை உவமித்து இவர் பாடியுள்ள திறம் பாராட்டத்தகுவதாம். உடம்போடு உயிர் இயைந்தாலொத்த நட்பினையும், அவ்வுயிர் இன்புற்று வாழ்தலையொத்த காதலையும், அது சாதலையொத்த துன்பந்தரும் பிரிதற்கருமையையும் உடையவள் என்று தலைவியைக் குறித்துத் தலைவன் கருதுவதாக இவர் பாடியுள்ளார்.

**நரையோர்**-நரையுடையோர். புனலாட, விரவு நரையோரும், வெறுநரையோருமாகிய முதிய மகளிர், சென்றனர் *[பரி.10:22(2)].* கடலில் அலைகளைப் போலக் கரிய நிறத்தினையுடைய நரைமயிர் விரவப் பெற்றவர்களும், மதியின் கதிரை ஒத்த தூய நரையோரும், திருக்கோவில் சென்று வழிபட்டனர் *[பரி.தி.1:42,43].*

**நல்காதார்** - கொடாதார். 'மாலையே, மகளிர் நலத்தைக் கைக்கொண்டு, பின்பு அவர்க்கு நல்காதாராய்க் - கொடாத (ஆட)வரால் - தந்நலம் போன மகளிர்க்குத் துணையாகாதே வருத்துவது நினக்குத் தக்கதன்றே' எனத் தலைவி வருத்தமிகுதியைக் கண்டார் கூறினர் *[கலி.148:14].*

**நல்கியாள்** - விரும்பப்பட்டவள். 'சுடரிழையினையுடைய நல்கியாள் - விரும்பப்பட்டவள் - எனக்குக் காதலித்துத் தந்தவை வருத்தமும், பனைமடலாற் செய்த குதிரையுமாகும்' எனத் தலைவன் உரைத்தான் *[கலி.138:13].*

**நல்கியோர்** - தந்தோர். 'மனைகிழவோயே! குமணன் வழங்கிய வளத்தை, நமது சுற்றத்தினது பசி நீங்க நினக்கு நெடுநாட்படக் குறித்த எதிர்ப்பை நல்கியோர்க்கும் தந்தோர்க்கும்-யாவர்க்கும் - வழங்குவாயாக' எனப் பெருஞ்சித்திரனார் கூறினார் *[புற.163:4].*

**நல்குநர்** - 1. கொடையாளர். நல்குநர்-கொடையாளர் - அஞ்சாது கொடுத்த பரிசில் ஆகிய சிறிய உணவினை, இடையறவின்றிப் பாதுகாவாதுண்டனர் *[அக.301:4].*

**2. அருளுவார்.** மனம் விரும்பிய நல்குநரால் - அருளின (கண)வரால் - நலனுண்டு விடப்பட்ட மகளிர், குடியிருப்பார் போகிய பாழூரையொப்பார்' எனத் தலைவி உடன்கொண்டு செல்லாத நிலையில் கூறினாள் *[கலி.23:10].*

**நல்குரவு** - வறுமை. 'யாம் மிகப்பெரிய துன்பமுறினும் சிறிதும் அறிவில்லாதோருடைய செல்வத்தை நினையேம்; நல்லறிவுடையோரது நல்குரவு - வறுமை - பயன்படுதலின் அதனை உவந்து மிகப் பெரிதும் நினைப்பேம்' என்று, சோழன் குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவன் பரிசில் நீட்டித்தானைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார் பாடினார் *[புற.197:17].* நல்குரவினையும், பசித்துன்பினையும் உடையராய் வந்து நலங்கிள்ளிபால் தொன்முறையறிந்த சிறுவர் பரிசில் பெற்றுச் சென்றமையினைக் கோவூர்கிழார் குறிப்பிடுவர் *[புற.382:10].* 'பகைவேந்தர் பணிந்து தந்த திறையைக் கொண்டு இரவலர், நண்பர் ஆகியோரது நல்குரவைப் போக்கினாய்' எனச் சேரமான் சிக்கற்பள்ளத்துஞ்சிய செல்வக்கடுங்கோ வாழியாதனைக் குன்றுகட்பாலியாதனார் பாடினார் *[புற.387:13].*

**நல்குறுமகள்** - பெற்றமகள். 'கானவர் நல்குறுமகள் - பெற்றமகள் - என் காமநோய்க்கு மருந்து வேண்டுமெனின் மருந்தாவாள்; நுகரச் செல்வம் வேண்டும் என்று கருதின் எனக்குச் செல்வமுமாவாள்' எனப் பொருள் கடைக்கட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லிச் செலவழுங்கினான் *[குறு.71.4].*

**நல்கூர்ந்தார்** - மிடிப்பட்டார், வறுமையுற்றார். தலைவி, பிள்ளையால் நல்கூர்ந்தார் - மிடிப்பட்டார்-உடைய செல்வத்தையுடைய மகள் *[கலி.50:14].*

**நல்கூர்ந்தார்**- வறுமையுற்றோர். தம்மை விரும்பியிருப் போரைப்புரந்து, தாம் விரும்பிய இனிமைபொருந்திய நட்டாரோடு இன்பம் மிக இயைந்து, நல்கூர்ந்தார் - வறுமையுற்றோர் - நகுதல் ஆற்றார், எனத், தலைவன் பொருள்வயிற் பிரிய நினைந்தான் *[அக.151:3].*

'ஆறே! தான் தண்ணளி செய்தலினால் வாழ்கின்ற நல்கூர்ந்தோரிடம் அன்பு இலராதல் நல்லது என்று உணர்ந்த தலைவன் நிலையைக் காட்டிலும், நினது இயல்பு கொடியது; எனத், தலைவன் கேட்கும் அண்மையனாக, அவன் மலையினின்றும் வரும் யாற்றோடு உரைப்பாளாய்த், தலைவி உரைத்தாள் *[குறு.327:1].*

**நல்கூர்மை** - வறுமை. 'என்னைக் கருதி வந்த விருந்தினரைக் கண்டு வைத்தும், அவர்க்கு விருந்தாற்றமாட்டாமல் ஒளிக்கும் நன்மையில்லாத இல்வாழ்க்கையையுடைய, ஐம்பொறியும் குறைவின்றிப் பொருந்திய, எனது யாக்கையின்கண் தோன்றி, அவற்றானாய பயன் கொள்ளாதபடி எனது அறிவுகெட நிலைபெற்ற நல்கூர்மையை - வறுமையை- விரைந்து களைவாயாக' எனச் சோழன் உருவப் பஃறேர் இளஞ்சேட்சென்னியைப், பெருங்குன்றூர்கிழார் பாடினார் *[புற.266:13].*

**நல்லச்சுதனார்** - ஓர் புலவர். பரிபாடலில் 21-ஆம் எண்ணில் அமைந்த செவ்வேள் பற்றிய பாடலொன்றே இவருடையதாக உள்ளது. அப்பாடலில் இவர் செவ்வேள் ஊரும் யானை, தொடும் அடையற் செருப்பு, கைக்கொண்ட வேல், பூண்ட

கடப்பந்தார், அமர்ந்த திருப்பரங்குன்றம், அப்பரங்குன்றத்தை வழிபடுவோருடைய பல்வகைச் செயல்கள், அக்குன்றத்தின் இயல்புகள் ஆகியவற்றைப் புனைந்துள்ளார். திருப்பரங் குன்றத்தை யானையாக உருவகித்திருக்கின்றார். செவ்வேளைப் போற்றிப் பாடும் இவர் தம் சுற்றத்துடன் அக்கடவுளின் அடிக்கண் உறைதல் என்றும் இயைவதாக எனப் பரவி அருள்புரிய வேண்டுகின்றார். இசைப்பாடல் புனையும் புலவராகிய இவர் பரிபாடலில் 16,17,18,20 ஆகிய எண்களில் அமைந்த பாடல்கள் நான்கிற்கு இசையமைதி வகுத்துள்ளமையால் இவரது இசையறிவையும் உணரலாம். பரிபாடலிலேயே 6,8,9,10,15,19 ஆகிய எண்களைக் கொண்ட பாடல்கள் ஆறினுக்கும் இசையமைத்தவர் பெயர் மருத்துவன் நல்லச்சுதனார் எனக் காணப்படுகின்றது. அப்பெயரும் இவருடையதேயாயின் இவர் மருத்துவராகவும் விளங்கினமை புலனாம்.

**நல்லடி சோழன்.** சோழர் மரபினான நெடிய கதிர்களையுடைய நெல் மலிந்த வல்லத்தின் கிழவோன் நல்லடி என்பான் இருக்கவும் பகைவர் அவனாட்டைக் கவர்ந்து கொள்ள முயன்றனர் *[அக.356:14]*.

**நல்லது** - நல்வினை. 'நல்லதன் - நல்வினையினது நன்மையும் தீவினையினது தீமையும் இல்லையென்று சொல்வார்க்கு இனமாகாது ஒழிவாயாக' எனச் சோழன் நலங்கிள்ளியை உறையூர் முதுகண்ணன் சாத்தனார் முதுமொழிக்காஞ்சியாகப் பாடினார் *[புற.29:11]*. நல்லது செய்தல் ஆற்றீராயினும் தீவினையைச் செய்தலைக் காப்பீராக என நரிவெரூஉத்தலையார் பொருண்மொழிக் காஞ்சியாகப் பாடுவர் *[புற.195:6]*. 'பொருள்வயிற் பிரிந்தாயானாலும், பிரியாது இவ்வழியிருந்தாயானாலும் நெஞ்சே! நீ நல்லது ஒன்றைச் செய்தற்குரியை' எனப் பொருள் கடைக்கட்டிய நெஞ்சினை நெருங்கித் தலைவன் செலவழுங்கினான் *[நற்.16:3]*. நோய்செய்யும் மகளிரைக் கண்டால் போகவிடாதே, என்று எம் சுற்றத்தார் கூறினார் என வினைவல பாங்கிற்றலைவன் கூறக்கேட்ட தலைவி, அதுவேயன்றி, நல்ல மகளிரைக் கண்டாயாயிற் போகாமல் தடுத்து, அவர் கண்ணையும், தோளையும் பாடும்படி நல்லது (நல்லதொருதொழில்) கற்பித்தார் என இகழ்ந்து கூறினாள் *[கலி.112:10]*.

2. அறம் - இரப்போரது இன்மையை நோக்கி அவர் 'ஈ' என்பதைச் சொல்லுதற்கு முன்பே நல்லது - அறம் - விரும்பி அவர் நயக்கும் கொடையை வையையில் புனலாடுவோர் புரிந்தனர் *[பரி.10:88]*.

**நல்லந்துவனார்** - ஓர் புலவர். இவர் பெயர் ஆசிரியன் நல்லந்துவனார் என்றும், மதுரையாசிரியர் நல்லந்துவனார் என்றும் காணப்படுகின்றது. ஆசிரியனென்பதனால் இவரது கல்விச் சிறப்பும், மதுரையென்பதனால் இவரது ஊரும் புலனாகின்றன. நல்லந்துவனார் என்ற பெயரை நவ்வந்துவனார் என்று கலித்தொகை இ.வை.அ. பதிப்புக் கொண்டுள்ளது. எவ்வாறாயினும் அந்துவன் என்பதே இவரது இயற்பெயர் என்று கொள்ளலாம். இவர் பாடியனவாக அகநானூற்றில் ஒன்றும் *[43]*, நற்றிணையில் ஒன்றும் (88), கலித்தொகையில் கடவுள் வாழ்த்துப்பாடல் ஒன்றும், நெய்தற்கலி முப்பத்து மூன்றும், பரிபாடலில் நான்கும் *[6,8,11,20]*. ஆக நாற்பது பாடல்கள் உள்ளன. தலைவியுடன் இருக்கும் தலைவன் பொருள்வயிற் பிரியக் கருதிய நெஞ்சிற்குப் பிரிவருமை பேசுவதாக இவர் அகப்பாடலை அமைத்துப் பாடியுள்ளார். நற்றிணைப் பாடலில் தலைவன் வரையாது களவொழுக்கம் நீட்டிக்கும் நிலையில் தலைவி நெஞ்சுருகுதற்குக் கடல் விளையமுதமாகிய உப்பு, மழையில் அகப்பட்டு நனைந்து உருகுதலை இவர் உவமை கூறுவர். தம்மிடத்துத் தலைவன் செய்யும் கொடுமையை நினைந்து அவனது மலையும், அருவியே கண்ணீராக அழுகின்றதெனத் தோழி கூற்றில் இவர் அதனைப் பாடியுள்ளார். கலித்தொகைக் கடவுள் வாழ்த்தினால் இவர் சிவனிடத்துக் கொண்டுள்ள ஈடுபாட்டையும் பரிபாடல் எட்டாம் பாடலால் இவர் செவ்வேளிடத்துக் கொண்டுள்ள ஈடுபாட்டையும் உணரலாம். மற்றும், திருமால், திருமகள், நம்பிமூத்தபிரான், நான்முகன், மூப்பத்துமூவர் ஆகியோரையும் இவர் தம் பாடல்களில் பரவலாகக் குறிப்பிட்டுப் பாடுவர். வறுமையால் இரப்பவன் நெஞ்சம் போல் பொலிவழிந்து, இரப்போரைக் கண்டு கரப்பவன் நெஞ்சம்போல் மரங்களெல்லாம் இலைகள் கூம்ப மாலை வருதல் *[கலி.120]* போன்ற உலகியல் உவமப்புனைவுகளும், ஏனை இயற்கை உவமப்புனைவுகளும் இவர் பாடல்களில் சிறந்து விளங்குகின்றன. 'ஆற்றுதல் என்பதொன்று அலந்தவர்க்கு உதவுதல்' *[கலி.133:6]*. என்பது போன்ற அறக்கருத்துக்களை இவர் பாடல்களில் ஆங்காங்கே காணலாம். பரிபாடலில் செவ்வேளை ஒரு பாடலில் *[8]* பாடிய இவர் வையையை மூன்று பாடல்களில் *[6,11,20]* பாடியுள்ளார். மதுரை, திருப்பரங்குன்றம், இரண்டிற்கும் இடைப்பட்ட வழி, வையை வெள்ளம், புனலணிவிழா முதலானவற்றை அப்பாடல்களில் இவர் புனைந்துள்ளார். இவர் மழை பெய்வதற்குரிய வானவியல் விளங்கப்பாடியுள்ளதும் *[பரி.11]* காணலாம். இவர் திருப்பரங்குன்றத்தைப் பாடிய சிறப்பு, மதுரை மருதனிளநாகனார் பாடலொன்றினாலும் புலனாம் *[அக.59]*.

**நல்லரா** - நல்ல பாம்பு. நல்லரா - நல்ல பாம்பு - உறையும் புற்றும் கொல்லேறு திரியும் மன்றம் போன்றது தலைவன் உறையும் பாசறை *[புற.309:3]*.

ஆண் பன்றியினைக் கொன்ற ஆண்புலி அதனை அச்சந்தரும் நல்லரா மேய்தற்குச் செல்ல, ஒளியுண்டாக உமிழ்ந்து வைத்த மணியாகிய விளக்கில், உதிரம் தோய்ந்து தூய, இழுத்துச் செல்லும் *[அக.72:14]*.

'தோழி! தலைவர் பிரிந்து செல்லார் என்று யான் சோர்ந்திருந்தேன்; அவரோ நான் உடம்பட மாட்டேன் என்று சொல்லாது சோர்ந்திருந்தார். இருவரிடத்துமுள்ள இருவகை ஆண்மைகளால் விளைந்த மாறுபாட்டினால் என்னெஞ்சு நல்லராக் கவ்வித் தீண்டியதனால் வருத்தமுறுதல் போல் மிக்க கலக்கத்தை இப்பொழுது பெற்றுள்ளது' எனப் பிரிவிடை மெலிந்த கிழத்தி கூறினாள் *[குறு.43:4]*.

இரையை நாடுகின்ற ஆண்கரடி, புற்றினை பெயர்த்து, அதன்கண் உறைகின்ற நல்லரா நடுங்குமாறு முழங்கும் *[நற்.125:3]*.

**நல்லவர்** - 1. பெண்டிர். நல்லவர்க்கு - பெண்டிர்க்கு - ஆற்றுதற்கரிய வருத்தமாகிய மார்பினையுடையவன் சேரமான் செல்வக்கடுங்கோ வாழியாதன் *[புற.14:16]*.

நல்லவர் (நல்ல மகளிர்) உடைய கூத்துக் கண்டார்க்கு விருப்பஞ் செய்யுமாறு போல, விருப்பம் வந்த கொம்பால், இளவேனில் நயந்தார்க்கு நன்றாக விளங்கியது *[கலி.32:10]*.. தினைப்புனத்தில், முகத்திற்குப் பொருந்தின கண்ணினையும், மகிழ்ச்சியைத் தரும் மொழியினையுமுடைய நல்லவர் நாணி இறைஞ்சும் நிலை போலக் கதிர்கள் முற்றித் தாழ்ந்தன *[கலி.40:2]*. 'குழையினையுடைய நல்லவருடைய புணர்ச்சியாற் குலைந்து வீழ்ந்த கதுப்பாகிய அணையிலே துஞ்சு கையினாலே தெய்வம் போல மணக்கும் நின் மார்பைக் காண்டற்கு, நினக்கு நற்குணங்கள் உளவாகக் கொண்டாடுந் தோழன் வாரானோ' எனக் காமக்கிழத்தி ஊடல் தீர்கின்ற நிலையில் கூறினாள் *[கலி.71:19]*. நிரை தொடியினையுடைய நல்லவர் (பரத்தையர்) துணங்கையாடுதலில் முதற்கை கொடுத்துக் கிழிந்த ஆடை உனது உட்பகையாக இல்லாதவழி எம்மை உணர்தல் நன்று என்றாள் தலைவி *[கலி.73:16]*. ஏறுதழுவினார்க்குக் கொடுத்தற்கு நல்லவர் திரண்டு நிற்ப ஆயர் தொழுவிலே பாய்ந்தனர் *[கலி.101:12]*. பொதுவர் ஏற்றைத் தழுவுதலைக் காண வேண்டி முல்லையும், முகையும், பீலிமுருந்தும் நிரைத்தாலொத்த பல்லினையுடையராய்ப் பெரிய குளிர்ச்சியையுடைத்தாகிய கண்ணினையுடையராய் மடப்பம் பொருந்தின சொல்லினையுடையராய், விளங்கும் பொன்னாற் செய்த மகரக்குழையையணிந்த காதினராய் நல்லவர் வந்து பரணைக் கைக்கொண்டார் *[கலி.103:9]*.

தலைவன் பாண் சாதி போலப் பலவகையாற்பாடத் தன் காதலியைப் பாடுகிறான் என்பதறியாது, ஒருத்தி அவனோடு கூடுதற்கு வருத்தமுற, (வகுப்புப் பொருந்திய) நீராட்டின் கண் வந்த நல்லவர் நாணத் தலைவி வெகுண்டாள் *[பரி.7:71]*.

**2. நன்மையுடையர்.** 'நிலனே! நீ நாடோயாக; காடேயாக; பள்ளமேயாக; மேடேயாக; எவ்வாறாயினும் எவ்விடத்து நல்லவர்- நன்மையுடையர் - ஆண்மக்கள், அவ்விடத்து நீயும் நல்லை; என, ஔவையார் பாடுவர் *[புற.187:3]*.



**நல்லவள்** - (நல்ல) பெண். 'சிவந்த பிண்டி மலரைக் காதிற் செருகிப் பூங்கொடிபோல அசைந்து அடிமேலடி ஒதுங்கித் தன் தொடி முன்கையாலே தன் கூந்தலிற் கண்ணியை அழகுடைத்தாகத் திருத்தினாள். இவள் செய்த இக்குறிப்புத் தொழிலால், இவன் இந்நல்லவள் தொழுநனாயிருந்தான்; இதனைக் காண்மின், என வையையில் நீராடுவோர் சிலர் கூறினர் *[பரி.12:92]*.

**நல்லவை** - 1. நல்லன. மறக்குடித் தலைவன் ஒருவனின் மனைவி புதியவாய் வந்த நல்லவையாகிய - நல்லனவாகிய- உணவுப் பொருள்களைப் பாணருக்கும் மற்றையோருக்கும் வழங்கி மகிழ்ந்தாள் (ஈண்டு நல்ல உணவுப் பொருள்களைக் குறித்தது) *[புற.326:11]*.

பரத்தை நல்லவையாகிய இனிய சொற்களை நாணமின்றிப் பல அவையிடத்தும் கூறிக் கூத்தாடுமியல்புடையவள் (ஈண்டு நல்ல இனிய சொற்களைக் குறித்தது) *[பரி.20:74]*. குளவாய் என்னும் திருப்பதியிலே எழுந்தருளியுள்ள ஆதிசேடனாரை வணங்கியவர்களுக்குத் துன்பங்கள் யாவும் நீங்கி, அறம், பொருள், இன்பமாகிய நல்லவை வந்து அடையும் (ஈண்டு நல்ல அறம், பொருள், இன்பங்களைக் குறித்தது) *[பரி.தி.1:63]*.

**2. நல்ல கூட்டம்.** மூங்கிலின் துளையொலி முழவொலியாகவும், அருவிநீரின் ஓசை முழவோசையாவும், கலைமான்களின் குரலொலி பெருவங்கியத்தின் இசையாகவும், வண்டுகளின் ஒலியாழிசையாகவுங்கொண்டு மந்தியாகிய நல்லவை- நல்ல கூட்டம் - வியப்புற்றுக் கேட்டு மகிழ்ந்தது *[அக.82:8]*. சோழர்க்குரிய உறையூரில் அறம் பொருந்திய அறிஞர் பெருமக்களின் நல்லவை இருந்தது *[அக.93:5]*.

பிரிந்து சென்ற காதலன் வரக் காதலியின் நுதலினுடைய பசப்பானது, அறநெறியாளனைத் தீயோர் உண்டாக்கிச் சொன்ன தீயமொழிகளெல்லாம் நன்மக்களின் நல்லவையில் ஆராய்ச்சிப்பட அவை கெட்டாற்போல, இல்லையாகிவிட்டது *[கலி.144:72]*.

**நல்லழிசியார்** - ஓர் புலவர். இவர் பெயர் நல்லழுசியார் என்றும் காணப்படுகின்றது. பரிபாடலில் வையை பற்றிய 16-ஆம் பாடலையும், செவ்வேள் பற்றிய 17-ஆம் பாடலையும் இவர் பாடியுள்ளார். காதற் பரத்தையுடன் புனலாடி வந்த தலைமகன் தலைமகளிடத்துச் செல்லுதற்கு வாயில் வேண்டிய நிலையில், தோழி, அவன் புனலாடிய செய்தியைக் கூறி வாயில் மறுத்த முறையில் இவர் வையையைப் புனைவர். வையையில் கரை, துறை, வயல், சோலை ஆகிய பகுதிகளின் புனைவுகளையும், புனலாட்டு நிகழ்ச்சிகளையும் இவர் பாடலில் சிறக்கக் காணலாம். செவ்வேள் பாடலில் திருப்பரங்குன்றத்தில் கடம்பின்கீழ் அக்கடவுள் எழுந்தருளியிருத்தலையும், அங்கே அடியவர் உவந்து உறைதலையும், அக்குன்றத்திற்கும்

மதுரைக்கும் இடைவழிச் செய்திகளையும், நிகழ்ச்சிகளையும் இவர் விரித்துப் பாடியுள்ளார். பரங்குன்றின் ஒரு பக்கத்தே பாணருடைய யாழிசையெழ அதனெதிர் மறுபக்கத்தே வண்டின் இன்னிசை எழும் என்பதுபோல் அங்கு நிகழும் மாறுமாறான நிகழ்ச்சிகளை இவர் அழகுற அடுக்கிப் பாடுவர்.

**நல்லழுசியார்** - ஓர் புலவர். நல்லழிசியார் பெயர் ஏடுகளில் இவ்வாறு வேறுபட்டுக் காணப்படுகிறது *[பரி.16,17]*. 'நல்லழிசியார்' காண்க.

**நல்லள்** - 1. அழகிற்சிறந்தவள். பரத்தையிற் பிரிந்துவந்த தலைவனை 'நல்லள் - அழகில் சிறந்தவள் - ஆகிய நினது பரத்தையிடமே செல்' என்று கூறித் தோழி வாயின் மறுத்தாள் *[அக.326:3]*

**2. நன்மை தருபவள்.** அல்லகுறிப்பட்டு மீளும் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுவானாய், 'நெஞ்சே, பொருளில்லாத வறிஞன் இன்பத்தை விரும்பினாற்போலப் பெறுதற்கரியதை நீ விரும்பினை; நம் காதலி நல்லள் - நன்மை தருபவள்- நீ அறிந்தது போல ஆதலை அவள் பெறற்கு அரியவள் என்பதனையும் அறிந்தாயல்லை' என்று கூறினான். *[குறு.120:3]*.

**3. (குறிப்புமொழியால்)-பொல்லாதவள்**-வரையாது வந்தொழுகும் தலைமகள் சிறைப்புத்தானாகத், தலைவி தோழிக்குக் கூறுவானாய்த் 'தோழியே, அயலாராகிய மகளிரெல்லாம் என்னை நோக்கி இவள் நல்லள், நல்லள் - பொல்லாதவள், பொல்லாதவள் -என்று கூறுகின்றனர்; இருந்தும் தலைவர் வரைய எண்ணுகின்றிலரே' என வருந்திக் கூறினாள். *[ஐங்.204:4(2)]*.

**நல்லறிவு** - சிறந்த அறிவு. காமமானது நாணத்தை அழிப்பதோடு நல்லறிவையும் -சிறந்த அறிவையும்-இழக்கச் செய்யும் *[குறு.231:5]*.

**நல்லறிவுடையோர்** - சிறந்த அறிவுடையோர். சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன் பரிசில் நீட்டித்தானைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் இடித்துக் கூறுவாராய்ப் புலவர்களாகிய யாம் மிகப் பெரிய துன்பமுறினும், அறிவில்லாதோர் செல்வம் படைத்த வேந்தராயினும் மதியோம்; நல்லறிவுடையோர் -சிறந்த அறிவுடையோர்-வறுமையாளராயினும் அவரையே மதிப்போம்' என்று கூறினார் *[புற.197:17]*.

**நல்லன்**-நல்லியல்புடையோன். சோழன் கரிகாற் பெருவளத்தானை நோக்கி வெண்ணிக்குயத்தியார் என்ற பெண்பாற்புலவர் 'கரிகால் வளவனே, நின்னால் வெல்லப்பட்டவன் புறப்புண்ணிற்கு நாணி, வடக்கிருந்ததனால், நின்னினும் நல்லன்- நல்லியல்புடையோன்-அல்லவா?' என்றார் *[புற.66:5]*.

பரத்தமைத் தலைவனின் பாங்கனிடம் தலைவி, 'பாங்கனே, ஊரார் தலைவனை இகழ்வரே என்பதற்காக நாம் நல்லன் என்றே புகழ்ந்தாலும், என்னுடைய வாடிய மெல்லிய தோள்களோ, அவனை அல்லன் என்றேகூறி உண்மையை வெளிப்படுத்துகின்றனவே, நாம் என் செய்வது' என்று கூறி வாயின் மறுத்தாள். *[ஐங்.11:3]*. தன்னைத் தெருட்டும் தோழியைத் தலைவி, 'தோழியே, தலைவன் நல்லன் என்று நீ கூறுவது மெய்யானால், என்னுடைய கண்கள் பசத்தற்குக் காரணம் என்', என்றாள் *[ஐங்.170:3]*.

**நல்லாசிரியர்** - நன்மைகளைக் கற்பிக்கும் ஆசிரியர். பாண்டியன் தலையாலங்காலத்துச் செருவென்ற நெடுஞ்செழியனிடம் புலவர் மாங்குடிமருதனார், நினது முன்னோருள் ஒருவனாகிய நிலந்தரு திருவிற்பாண்டியன் என்பான் நல்லாசிரியர் - நன்மைகளைக் கற்பிக்கும் ஆசிரியர் வழி நடந்து சிறப்பெய்தியமைபோல நீயும் அவர்களின் வழி நடந்து சிறப்பெய்துவாயாக', என்றார் *[மது.761]*.

காவிரிப்பூம்பட்டினத்தில் பலவாகிய கேள்வியறிவோடே நூற்றுறை முற்றக்கற்ற பழைய ஆணையை உடைய நல்லாசிரியர் வழக்குக்கழைக்கும் கொடிகளும் பறந்து கொண்டிருந்தன. *[பட்.170]*.

**நல்லாய்** - நல்லவளே (விளி). தலைவி தோழியை நல்லாய்- நல்லவளே - என விளித்து, நம் தலைவர் வந்து நம்மை வரையும் வரையிலும், நம் சுற்றத்தார் நாணைத் தாங்கிக் கொண்டிருப்பதற்கு என்ன நல்வினையைச் செய்தனரோ? என்று கூறினாள் *[கலி.39:30]*. தலைவன் காமஞ்சாலா இளையாள் ஒருத்தியை, நல்லாய் எனத்தடுத்து, மடப்பத்தினையுடைய நல்லாய்; நினது அன்னம்போன்ற நடையும், மயில்போன்ற சாயலும், புறாவைப் போன்ற மடப்பமும், கண்ட ஆடவரை மயக்குறுத்தும் என்பதை நீ அறிவாயா? என்றும், வெள்ளிய எயிற்றினையுடைய நல்லாய்! மூங்கிலையும், காமக்கடலைக் கடப்பதற்குதவும் தெப்பத்தையும் போன்ற நினது மென்மையான தோள்கள், கண்ட ஆடவரை அணங்காக்கும் என்பதை அறிவாயா? என்றும், மடப்பம் பொருந்திய நல்லாய்! கோங்கின் அரும்புபோன்றும், தென்னங்குரும்பை போன்றும், மழைநீரில் உண்டாகும் மொக்குள் போன்றுமுள்ள நினது இளமுலைகள் கண்ட ஆடவரின் உயிரைக் கொள்ளை கொள்ளுமென்பதை அறிவாயோ? அறியாயோ? என்றும் கூறினான் *[கலி.56:14,17,21,25]*. ''அடி பரந்த முலையினையும் ஆராய்ந்தணிந்த இழையினையுமுடைய நல்லாய்! பெரிய, அமர்த்த, மையுண்ட கண்களையுடைய நின்தோழி உறுத்திய காமநோய் என் உயிரை வாங்குகின்றது; இந்நோய் தீரும் மருந்தினையருளாய்,'' எனத் தலைவன், தோழியிடம் வேண்டினான் *[கலி.60:15]*. நல்லாய்! எனது மார்பில், நினது

முலைகளைத் கொண்டு உழுது இன்பம் ஊட்டியதால் அல்லவா, யான் நினது தோள்களில் கரும்பின் உருவைத் தீட்டினேன், என்றும், நல்லாய்! கேள், அரசனின் செல்வத்தை நுகர்ந்த ஒருவன், அவ்வரசனுக்கு வெற்றியுண்டாக்கிய வழி, அவ்வெற்றியாலாய முழுப் பயனையும் அரசனே அடைவதுபோல நின்னழகு யாவையும், யானே அனுபவிக்கப்போகிறேன் என்றும், தலைவியிடம், தலைவன் கூறினான் *[கலி.64:12,23]*. இனிய நகையினையுடைய நல்லாய்! மலர்க்கொடிபோன்ற மங்கையர் தம்மைப்போன்ற பூங்கொடியில் மலர்பறிக்கும் போது, பாண்டியன் பொருத போர்க்களத்தில், பகைவர் படை உடைந்து ஓடுவதுபோல், அக்கொடிகளிலுள்ள வண்டுகளின் கூட்டம், கலைந்து ஓடுவது போலக் கனாக்கண்டேன், என்று, தலைவன், தலைவியை விளித்துக் (அழைத்து) கூறினான் *[கலி.92:24]*. குறளனாகிய காதலன், கூனியாகிய காதலியை, நல்லாய்! என விளித்து, நின்னை மார்போடு தழுவினால் நினது கூன் எனது மார்பினைக் குத்தும்; முதுகிலே தழுவுவேனாயின், அக்குளுக்காட்டும்; ஆகவே, பக்கவாட்டில் தழுவ அருள்புரிக! என்று கூறினான் *[கலி.94:17]*. பரத்தைமைத் தலைவனொருவன் தன் தலைவியை நல்லாய்! என அழைத்துத் தவறுகளை என் தலைமேலேற்றி, என் பொய்யுரைகளையெல்லாம் உடைத்து என்னைக் கையோடு பிடித்துவிட்டாய்! நானே பிழை செய்தவனாவேன்; மன்னித்து அருள்செய், என்று கூறினான் *[கலி.95:27]*. தனது பரத்தைமையைக் கண்டு சினங்கொண்ட தலைவியைத், தலைவன், தெரிகோதை நல்லாய்! என விளித்து, 'வையையின் புதுவெள்ளத்தில் ஆடுவதற்குத் தங்கிவிட்டேன்; அதனையறியாது யான் செய்யாதவற்றைக் கூறுவதால், பயன்யாது? என்று கூறினான் *[கலி.98:9]*. சூழ்ந்த அணிகலன்களையும், அழகினையும், மடப்பத்தினையுமுடைய நல்லாய்! நீ விளையாடும் மணல்வீட்டை நன்கு அழகுபடுத்திக் கட்டித்தரவோ? என்று, ஒரு தலைவியை அழைத்துத் தலைவன் கூறினான் *[கலி.111:8]*. அழகு மிகப்பெற்று, ஆராக் காதலூட்டும், தோளும், மருளும் விழியுமுடைய நல்லாய்! நின்னால் அளிக்கப்பட்ட உணர்வு தடுமாறும் எனது காதல் நோய்க்கு, யான் உய்யும் வழிஒன்று கூறிவிட்டுச் செல்வாயாக! என்று, தலைவியை அழைத்துத், தலைவன் கூறினான். *[கலி.113:2]*.

தலைவி, விறலியை நல்லாய் என விளித்து, 'வல்லவர் ஊடல் உணர்த்த இருவரும் களிப்பர், குளிப்பர், காமம் களிப்ப அளிப்பர், துளிப்பர், ஆடுவர்' என்றாள் *[பரி.6:102]*. ஏதிலர், தலைவியை நல்லாய், என விளித்துப், 'பரத்தையரிடத்தே மயங்கிப் பொருந்திய மைந்தரோடு அளவளாவேம் என்றல், மங்கையர்க்கு முடிவு போவதன்று,' என்றனர் *[கலி.20:90]*.

**நல்லார்** - 1. நன்மக்கள். வாயில் நேர்ந்த தோழி தலைவியிடம், தலைவனைப் பற்றிக் கூறும் பொழுது, 'தோழியே, மெய்ப்பொருள் கூறும் நூல்களைக் கூறவல்லவர்களை வழிபட்டு நின்று அப்பொருளை அறிந்தான் போலே நல்லாரை- நன்மக்களைக் - கண்டாற்றோன்றும் மன அடக்கம் உடையவனாய் உள்ளான்' என்று கூறினாள் *[கலி.47:4]*. தம் ஏற்றினைத் தழுவி வருத்திய இளைஞன் மீது சினந்தெழுந்த நல்லாராகிய ஆயரைச் சிலர் அவனுடைய வீரத்திற்கு மகிழ்வதன்றி பகையாதல் கூடுமோ', என்று கூறி அமைதிப்படுத்தினர் *[கலி.102:29]*.

**2. மகளிர்.** தலைவனொருவன் தான் காதல் கொள்ளுமவள் வருவதைக் கண்டு 'இவ்விடத்தே வருவாளாகிய இவள் யார், அயனாலே நல்லாரின் - (நல்ல) மகளிரின் உறுப்புகளெல்லாவற்றையும் ஒருங்கு கொண்டு ஒரு வடிவாகப் பண்ணப்பட்டாளொருத்தியோ', என்று வியந்தான் *[கலி.56:7]*. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் புதல்வனைத் தழுவ, அதனைக் கண்ட தலைவி, தலைவனிடம், புதல்வனைத் தழுவாதே; தழுவினால் உமது மார்பில் உள்ள முத்துமாலையை அறுத்துவிடுவான்; அதைக் கண்டு உன் அணிகளின் சிதைவால், மாட்சிமைப்பட்ட இழையினையும், மடப்பத்தினையும் உடைய நல்லார் நின்னை முயங்கியுள்ளனர் என்று நின் பரத்தை ஊடிச் சினப்பாளே', என்று சினந்து கூறினாள் *[கலி.79:13]*. பரத்தையிற் பிரிந்துவந்த தலைவன் தலைவியின் சினத்தைப் போக்க, 'இமயமலையின் ஒரு பக்கத்திலே அன்னங்கள் தங்கியிருப்பதுபோல மணற் குன்றிலே நல்லார் குழுமிருப்பது போலவும், அம்மகளிர் ஒரு பூங்கொடியை வளைத்துப் பூப்பறிப்பதால் வெருண்டு உடைந்த வண்டுகள் அந்நல்லாரை மொய்ப்பது போலவும் ஒரு கனவு கண்டேன்', என்று படைத்து மொழிந்தான் *[கலி.92:19,31]*. இவ்வேற்றைத் தழுவினவன் இன்னவளை மணக்கலாம் என ஆயர் முரசறைந்து அறிவித்துவிட்டுத் தம்தம் நல்லாரை விண்மீன்களோடு வரும் வெண்மதிபோல ஆயத்தோடு கொண்டு வந்து பரண்மீது அமர்த்தினர் *[கலி.104:26]*. ஆய இளைஞரால் தழுவப்பட்ட ஏறுகளை நிலத்தில் மேயவிடுத்து அழகிய ஆயர்குல நல்லாரும், ஆடவரும் குரவையாடி மகிழ்வர் *[கலி.104:61]*. ஒரு தலைவி தலைவனிடம், 'காவல் மிக்க குறும்பிடத்தேயுள்ள ஆட்டிடையருடைய குடிதோறுமுள்ள நல்லார் எல்லாரையும் விரும்புகின்றாயே', என்று கேட்டாள் *[கலி.110:2]*. ஒருவன் தன் காதலி பிறவினைமேற் போவாளைத் தடுத்து நிறுத்திய பொழுது, 'அவள் அவனிடம் நினது உறவினர், நல்லாரைக் கண்டால் அவரைத் தடுத்து, அவரின் கண்ணையும், தோளையும் புகழ்ந்துபாடும்படியான நல்லதொரு தொழிலை நினக்குக் கற்பித்துள்ளனரோ; அவர் எம் உறவினருடன் மணம்பேசவல்லவரோ', என்று கேட்டாள் *[கலி.112:8]*.

இளம் நல்லார் வையையின் மணலில் எழுதிய பாவையை வையையின் புதுவெள்ளம் சிதைத்ததைக் கண்டு அழுதனர் *[பரி.[illegible];25]*. கற்பிற்போலத், தலைவர் நீங்குதல் அறியாத களவுப் புணர்ச்சியையுடைய, அழகிய அணியுடைய நல்லார் தம்

கணவரோடு மாறுகொண்டு ஊடுகின்ற குற்றம் இலராவர் *[பரி.9:23]*. வையையில் நீராடற்கு ஆடவர் ஏறிச்செல்லும் களிற்றுயானை புலிமுக மாடத்தினருகில் நின்றது; அதன்மேல் காதல் கொண்ட பிடியானை மாடப்புலியை உண்மைப்புலிதான் தன் காதலனாகிய களிற்றினைத் தாக்க வருவதாக எண்ணிப் பாகருக்கடங்காமல் அதன் மேலிருந்த மடப்பமுடைய நல்லார் நடுங்கும்படி செல்லக், களிற்றினைப் புலிமாடத்தருகிலிருந்து செலுத்திக் கொண்டுவந்து பிடியினருகில் நிறுத்தியவுடன், அப்பிடியும் தணிந்தது *[கலி.10:47]*. வையையின் புதுவெள்ளத்தில் மாலையை வீசியும், மூங்கிற் குழாயில் நீரை வாங்கிச் செலுத்தியும், அரக்கு நீர் அடக்கிய வட்டாலே எறிந்தும், கொம்பின் கண் அடக்கப்பட்ட மணநீரினை வீசியும் இவ்வாறாக ஆராய்ந்தணிந்த மாலையினையுடைய நல்லார் தம் காதலரோடு நீராடி மகிழ்வர் *[பரி.11:58]*. வையையின் புதுநீரில், பூமாலைகளை மேலும் மணம்பெறச் செய்யக்கருதி, நறுமணப் புகையை ஊட்டி அணிந்த நல்லார், தம் காதலரோடு வந்து நீராடினர் *[பரி.20:27]*. சிறந்த அழகினையுடைய நல்லாரும், அவர்தம் காதலரும் வையை நீரில் பலவாறாக ஆடிக் களித்தலால் அந்நீர் சேறுஉண்டாகுமாறு கலங்கியது *[பரி.தி.2:81]*.

3. பரத்தையர். பரத்தையிற் பிரிந்த தலைவன் வந்தால் ஊடி அவனை விரட்டவேண்டுமென்று எண்ணியிருந்த தலைவி, தோழியிடம், 'தோழியே, தலைவர் வந்தால், எழிலையுடைய மையுண்ட கண்ணினராகிய நல்லார் - பரத்தையர்-தம்கோதையாலே அடித்துள்ள அழகினையும், அவரின் நகம் எயிறு முதலியவற்றால் ஆகிய புண்களையும் காட்டி, என்மீது அன்பில்லை என்று கூறி ஊடுவேன் என்றிருப்பேன்; ஆனால் அவரைக் கண்டவுடன் செயலற்ற என்நெஞ்சம் அவரோடு கூடுவதற்குச் சென்று விடுகின்றதே என்செய்வேன்', என்றாள் *[கலி.67:14]*. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் தோழியை வாயில் வேண்ட அப்பொழுது தோழி தலைவனிடம், 'நீ தலைவியைப் பிரிந்ததால் துயில் துறந்து அழுகை அறாத அவளுடைய கண்கள் மைந்தனைத் தீண்டுவதால் சிறிது உறங்கவும் கூடும், ஆனால் நினது செவ்விக்கொத்த நல்லார் தம் மனையிலே உன்னோடு மகிழ்ந்து பாடும் துணங்கைக் கூத்தின் ஆரவாரம் வந்து அத்துயிலைப் போக்கித் துன்புறுத்துகின்றதே', என்று அவனுடைய கொடுமை கூறினாள் *[கலி.70:13]*. பரத்தையிற் பிரிந்து வந்து வாயில் வேண்டிய தலைவனிடம் தோழி, 'நீ வராததால், நீர் சொரியும் மலர் போன்ற நீர் வற்றாத தலைவியின் கண் சிறிது உறங்கவும் கூடும், ஆனால் ஒத்த இழையினையுடைய நல்லாரை நினது மனைக்கண் கொண்டுவரும் தேரின் மணியொலி வந்து அவளின் உறக்கத்தைப் போக்கிவிடுகின்றதே என்று கூறினாள் *[கலி.70:17]*. தோழியோடு சென்ற தன் புதல்வனுக்கு அழகிய இனிய சொல்லையுடைய நல்லார் சூட்டியனுப்பிய அணிகலங்களைக் கண்டு கொதித்துத் திட்டிக் கொண்டிருக்கும் தலைவிக்கு, அப்பரத்தையர் உண்டாக்கிய வடுக்களோடு தலைவனும் வந்து நிற்பது, வெந்ததொரு புண்ணிலே வேல் நுழைந்த தன்மைத்தாயிருந்தது *[கலி.83:28]*. பரத்தையர்ப் பிரிந்து வந்த தலைவனிடம் தலைவி, 'பூங்கொடி போன்ற நல்லாரின் முடியிலிருந்து உதிர்ந்த பூந்தாதுகள் நினது தோளிலே கிடக்க இங்கு வந்து என்னைத் தீண்ட எனக்கு நீ என்ன உறவு? ஒழுக்கங்கெடவல்ல பெரியவர்க்கு, அது கெடாத சிறியோர் அடிமையாவரோ', என்று சினந்து கூறினாள் *[கலி.88:1]*. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் யாதொரு தவறும் செய்திலேன் என்றானாக அதற்குத் தலைவி, நண்டு ஊர்ந்து சென்றதால் உண்டான வடுப்போன்று நல்லாரின் நகம் செய்தவடுவும், அவரின் எயிற்றாலாய வடுக்களும், வாடிய மலர் மாலையும், அவர் சினந்து அடிக்கச் சிவந்த மார்பும் நீ பிழைபட்டவன் என்பதற்குப் போதாவோ, என்று கேட்டாள் *[கலி.88:13]*. யான் தவறிலேன் என்பதைச் சூளுரைத்துத் தெளிவாக்குகிறேன் என்ற தலைவனிடம், தலைவி, 'நின்னுடன் தேரேறிவந்த தெரிந்த கோதையையுடைய அழகிய நல்லாருடையமாலையை நினது மாலை என மயங்கி அணிந்து வந்த தவற்றிற்காக என் ஊடலுக்கு அஞ்சி நீ பொய்ச் சூளுரைத்தால் அது என்னையல்லவா வருத்தும், ஆகவே நீ சூளுரைக்க வேண்டாம்' என்று கூறினாள் *[கலி.88:18]*. தவறிலேன், சூளுரைத்துத் தெளிவிப்பேன் என்ற தலைவனிடம் தலைவி, 'நல்லாரின் தொடியழுந்தின வடுவும், குறித்த இடத்தில் நின்னைக் காணாமையால் சினங்கொண்ட அவளின் உகிரால் புண்ணுண்ட மார்பும், குழைந்த மாலையும், சேரிப்பரத்தையர் தணியா வேட்கையால் தழுவியதால் கலைந்த சந்தனமுமுடைய பண்பு கெட்ட நினது வடிவைக் கண்டு யான் ஊடுதலை விட்டுவிட்டேன்', என்றாள் *[கலி.91:9]*. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன், தலைவியிடம், 'பூங்கொடி போன்றவளே, மனம் விரும்பும் நல்லாரை மார்பொடு தழுவி, அவ்வின்பத்தால் அறிவு மயங்கி, மேலும் மேலும் அவர்களையே சுற்றிவரும் இன்ப வாழ்க்கையைக் கனவில்தான் கண்டேன்', என்று கூறினான் *[கலி.92:3]*.

**நல்லாவூர்கிழார் - ஓர் புலவர்.** நல்லாவூர் என்னும் ஊரினர்; வேளாள மரபினர். இவரது இயற்பெயர் தெரிந்திலது. இவர் பாடியனவாக அகநானூற்றில் ஒன்றும் *[86]*, நற்றிணையில் ஒன்றும் *[154]* ஆக இருபாடல்கள் உள்ளன. வாயில் மறுத்த தோழியிடத்தே தலைவன் கூறுவதாக அமைந்த அகப்பாடலில், திருமணம் நிகழ்ந்த அன்றிரவு தலைவி தன்முன் ஒடுங்கிக்கிடந்த நிலையையும், அஞ்சி உயிர்த்த மென்மையையும், பின்னர் அகமலி உவகையளாய் நாணிய அழகையும் அவன் கூற்றில் இவர் சொல்லோ வியப்படுத்தியுள்ளார். தீய கோள்களின் தொடர்பு நீங்கப் பெற்ற திங்களைக் குற்றமற்ற சிறந்த புகழையுடைய நாள் (உரோகணி) கூடியதாக, விடியற்காலத்தே, உச்சியில் குடத்தினையுடையரும், புதிய மண்டையென்னும்

கலத்தினையுடையருமாய முதுசெம்பெண்டிர் தர வேண்டியவற்றை முன்னும், பின்னும் முறையே தரப் புதல்வனைப் பெற்ற தூய அணிகளணிந்த மகளிர் நால்வர் கூடிநின்று வாழ்த்தி, நீரோடு கூட்டிப் பூக்களையும், நெல்லையும் தலையில் தூவி, வதுவை நற்மணம் நிகழ்த்தி வைக்கும் பண்டைய மரபினை இவர் பாடலில் காணலாம். இரவுக்குறியில் தலைவன் சிறைப்புறத்தே நிற்கையில், தோழி, தலைவியிடம், அவன் வரும் வழியின் ஏதப்பாடுகளைக் கூறுவாளாய் அவனை வரைவு கடாவும் துறையில் இவர் நற்றிணைப் பாடலை அமைத்துப் பாடியுள்ளார்.

**நல்லாள்** - நல்லவள். தன் தலைவனுடன் சென்றுவிட்ட பெண்மான் போலும் பார்வையையுடைய மடப்பம் வாய்ந்த நல்லாளாகிய - நல்லவளாகிய - என் மகளை யான் ஈன்ற நட்பிற்கு அவள் தலைவன் அருளானாயினும், யான் அவளுக்கு நலம் புனைந்த உதவிகளை நினைவானாயின் நன்று, என மகட்போக்கிய நற்றாய் இரங்கினாள் *[அக.195:6]*.

குரால் நிறத்தவாகிய கண்ணினையுடைய கொலைத் தொழிலதாகிய இவ்வேற்றைத் தழுவுகின்றவன், வெருவுதலையுடைய பிணையாகிய மானின் நோக்கோடு இரண்டாகிய கண்களையுடைய இந்த நல்லாளைக் கூடும் என ஆயர் அறிவித்தனர் *[கலி.104:22]*.

காம நுகர்ச்சியறியாத இளமையையுடைய நல்லாளாகிய ஒருத்தி குளக்கரையினின்றபொழுது தன் அறியாமையாலே குளத்தில் பாய்ந்து அழுந்தி, அலையினால் மூழ்கடிக்கப் பட்டுத்தானே எழுந்து அயலேயிருந்த என்மீது விழுந்து நான் எடுக்குமுன் தானே எழுந்து சென்றுவிட்டாள், எனத் தலைவன், ஊடிய தலைவியிடம் கூறினான் *[பரி.6:87]*. வையையாற்றில் தலைவனால் விடப்பட்ட தார் அயலாரிடம் சேராமல் அவனால் விரும்பப்படுகின்ற நல்லாளாகிய இற்பரத்தையிடமே சேர்ந்தது *[பரி.2:42]*.

**நல்லாறு** - நன்னெறி. வென்றியையும் புகழையுமுடைய அரசன், நல்லாற்றாலே-நன்னெறியாலே - பல்லுயிர்களையும் பாதுகாத்துத் தீவினையால் உளதான நடுக்கம் மனத்திலில்லையாம்படி தான் செய்த பழவினையின் பயனை நுகர்தற்குத் துறக்கத்தை விரும்பிப் போனாற்போல, ஞாயிறு இருளைக் கெடுத்து உலகத்திற்குப் பகற்பொழுதை முறைமையாற் செலுத்தி மலையிலே சென்று மறைந்தது *[கலி.118:2]*.

**நல்லான் - நல்லஆன் (பசு).** தொண்டைமான் இளந்திரையன் நாட்டு ஆயர் மகளிர், தாம் விற்ற நெய்யின் விலைக்கு மாறாக நல்லானை - நல்லஆனை (பசுவை) - வாங்கி வருவர் *[பெரு.165]*. கரிகாற் சோழனின் நாட்டில் வாழும் வேளாண் மாந்தர் நல்லானைப் பாதுகாப்பர் *[பட்.201]*.

அறுகம்புல்லாய உணவினை அருந்திய வலிய நடையினையுடைய நல்லான் இனங்கள், தம் பருத்த மடி, பாலைச்சொரியக் கன்றை நினைந்து அழைக்கும் குரலினவாய் மாலைவேளையில் மன்றுகளில் புகுந்தன *[அக.14:9]*.

உதியன் என்பானுக்குரிய குழுமூரின்கண் உள்ள பல்லான் குன்று என்னும் மலையில் பொருந்திய நிழலில் நல்லான் நிரைகள் பரந்து நிற்கும் *[அக.168:5]*. புல்லி என்பானுக்குரிய மலையில் வரகுச் சோற்றைக் கொழுத்த நல்லானின் பாலோடு இடையர் பகுத்துண்பர் *[அக.393:17]*.

'நல்லானின் இனிய பால் அதன் கன்றினாலும் உண்ணப்படாமல், கறக்கும் கலத்திலும் விழாமல் தரையில் சிந்தி வீணானது போல, என்னுடைய மாமையாகிய பேரழகு எனக்கும் அழகு பயவாமல், என் தலைவனுக்கும் இன்பம் பயவாமல் வீணே பசலையால் உண்ணப்படும்', என்று பிரிந்த தலைவி கூறினாள் *[குறு.27:2]*.

'பக்கத்தில் மேயச் சென்றிருக்கின்ற மிக்க சுரப்பையுடைய நல்லானின் நடுங்கும் தலையுடைய கன்று அத்தாயைக் காணும் விருப்பத்தோடு இருப்பதுபோல், என் தலைவி என்னைக் காணும் விருப்பத்தையுடைய பார்வையள்' என்று தலைவன் பாங்கனிடம் கூறினான் *[குறு.132:4]*. காட்டிற்குக் காளைகளோடு மேயச் சென்று புல்லை உண்ட நல்லான் கழுத்தில் பூண்ட மணியோசை ஒலிக்க மாலையில் திரும்பியது *[குறு.275:4]*.

மாலைக் காலத்தில் செம்மாப்பையுடைய நல்லானின் குற்றமற்ற மணியின் தெளிந்த ஓசை ஆயர்தம் குழலோசையோடு சேர்ந்து மெல்லிதாக வந்து ஒலிக்கும் *[நற்.69:7]*.

2. நல்ல மாடு. பெண்யானை குழியில் அகப்பட்டதாக, அதைக்கண்டு ஆண்யானை கூப்பீடு செய்த ஆரவாரத்திற்கு அஞ்சி, விரைந்தெழுந்த அதன் கன்று அருகிலுள்ள மூதூருக்கு வந்து எருமையாய நல்லானினது- நல்ல மாட்டினது - முலைப்பாலை உண்ணும் *[அக.165:5]*.

**நல்லியக்கோடன்** - ஓர் குறுநில மன்னன். 'பெரிய மாவிலங்கையென்னும் ஊர்க்குத் தலைவனும், சீறியாழையுடைய வறியோர் தொடுக்கும் புகழ்மாலை சூடுவோனுமாகிய நல்லியக்கோடனை நீ துணையாக உடைமையால், என்னைப் பொருந்திய விதியே, நீ ஒரு குறையும் உடையையல்லை; வாழ்வாயாக', என்று புறத்திணை நன்னாகனார் தம் விதியை மகிழ்ந்து உரைத்தார் *[புற.176:7]*.

பேகனும், பாரியும், காரியும், ஆயும், அதிகனும், நள்ளியும், ஓரியும் ஆகிய எழுவரும் மேற்கொண்டிருந்த ஈகைப் பாரத்தை உலகமெல்லாம் விளங்கும்படி தானொருவனே தாங்கிய அறிவமைந்த வலிய முயற்சியுடையோன்; நல்ல மாவிலங்கையை யாண்ட மன்னர் பலருள்ளும் குற்றமின்றி

விளங்கிய, புலிபோலும் துப்பினையுடைய ஓவியர் பெருமகன்; களிற்றினை செலுத்துதலால் உண்டாகிய தழும்பிருந்ததும், வீரக்கழல் கிடந்து அசையப் பெறுவதுமான பிறக்கிடாத அடியினையும், பிடியானைத் திரள்களைப் பலர்க்கும் வழங்குவதும் மழை போன்றதுமாகிய கையினையும், உடையவன்; பல இயங்களையும் இசைக்கும் கூத்தரைப் புரப்பவன்; அன்னோனாகிய பெரும் புகழைமைந்த நல்லியக் கோடனைக் காண விரும்பிய கோட்பாட்டுடனே அவனையும், அவன் தந்தை வழி வந்த மலைவளத்தையும் பாடி முன்னாள் சென்ற யாம் இந்நாள் பசிவருத்தம் ஒழிய யானையொடு தேரினையும் பரிசிலாகப் பெற்று வருகின்றோம்', என்று சிறுபாணன் கூறினான் *[சிறு.126]*. குறிஞ்சிக் கோமானும், தளிர்மாலையணிந்தவனும், புகழ் நிலைத்து நிற்றற்குரிய பண்புகளுடையோனுமாகிய நல்லியக்கோடனை நயந்து செல்வீராயின், அவன் தேரோடே பிற பரிசில்களையும் வழங்கி, அன்றே விடை தருவான்', என்று சிறுபாணன் ஏனைச் சிறுபாணரை ஆற்றுப்படுத்தினான்.*[சிறு.269]*. 'ஓய்மான் நல்லியக் கோடன்' -காண்க.

**நல்லிறையனார்** - ஓர் புலவர். இவர் வரலாறொன்றும் விளங்கவில்லை. பாடாண்திணைக் கடைநிலைத் துறையில் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை இவர் பாடிய பாடலொன்று புறநானூற்றில் *[393]* அமைந்துள்ளது. வறுமையுற்ற பரிசிலனொருவன் வள்ளியோரைத் தேடித் திரிந்து பின் வளவனைக் கண்டு பரிசில் வேண்டுவதாக இவர் அப்பாடலைப் பாடியுள்ளார். பருத்திப் பொதிகளைப் போன்ற வெள்ளிய கொழுப்புத் துண்டங்கள் எனவும், ஈன்ற அரவின் நாவுருவை ஒத்துப் பிதிர்ந்த கந்தையுடை எனவும், மலர்ந்த பகன்றையின் புதுமலர் போன்ற கலிங்கம் (புத்தாடை) எனவும், அழகிய உவமைகளை இவர் தம் பாடலில் அமைத்துள்ளார். கோடையிலும் வளங்கொழிக்கும் காவிரியின் சிறப்பு இவரால் குறிக்கப்பெற்றுள்ளது.

**நல்லினம்** - நல்லான் இனம் (பசுவினம்). பாண்டியனுடைய பழைய குடியோடு ஒக்கத் தோன்றினவர், நல்லினத்து -நல்லான் இனத்து (பசுவினத்து) - ஆயர் *[கலி.104:6]*. புல்லினத்து (ஆட்டினத்து) ஆயரின் மகன் என்று தலைவன் தன்னைக் கூறவே, தலைவி த ானைக் குடம்பால் கறக்கும் நல்லினத்து ஆயரின் மகள் என்ற ன் *[கலி.113:10]*.

**நல்லினி** - சேரன்மாதேவி. வெளியன் வேள் என்பான் மகளான இவள் உதியஞ்சேரனுக்குப் பெருந்தேவியாவாள். அவனுக்கும், இவளுக்கும் பிறந்த மகனே இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் *[பதிப.2:3]*.

**நல்லுருத்திரனார்** - ஓர் புலவர். 'சோழன்நல்லுருத்திரன்' காண்க.

**நல்லுரை** - நன்மொழி. 'நெஞ்சே! நீ நல்லுரையிலிருந்து - நன்மொழியிலிருந்து - நீங்கி, புன்மொழியை மேற்கொண்டு அரியளாய தலைவியை வரையாது துன்புற்றனையே', என்று தலைவன் தன்னெஞ்சிற்குக் கூறினான் *[குறு.29:1]*.

**நல்லூர்** - ஓரூர். 'எம் தலைவனான பேகன், எம்போல் ஒருத்தியின் அழகினை நயந்து, முல்லை வேலியையுடைய நல்லூரின்கண், எந்நாளும் தேரோடு சென்று வருவானென்று கண்டோர் பலரும் கூறுவர்' எனப், பேகன் மனைவி, கண்ணகியின், கூற்றாகப், பாடுவர், பரணர் *[புற.144:14]*.

**நல்லூர்ச் சிறுமேதாவியார்** - ஓர் புலவர். நல்லூர் இவரது ஊர்; சிறுமேதாவி என்பது ஒருகால் அக்காலத்து வழங்கிய இயற்பெயராகலாம். நண்பலூர்ச்சிறுமேதாவியார் என்ற புலவர் பெயரும் இவர் பெயரோடே ஒத்து நோக்கத்தகும். நல்லூர்ச் சிறுமேதாவியார் பெயரே நண்பலூர்ச் சிறுமேதாவியார் எனவும் வழங்கியதாக பி.நா.கருதுவர் (நற்.பாடினோர் வரலாறு). ஆயினும் ஊர்ப்பெயர்கள் தெளிவுற வேறுபட்டிருத்தலால் போலும் வையாபுரிப் பிள்ளையின் சங்க இலக்கியப் பதிப்பு இரு புலவரையும் வேறுபடுத்தியே காட்டும். சிறைப்புறமாகத் தோழி தலைவனுக்குச் செறிப்பறிவுறுத்தி அவனை வரைவு கடாவும் துறையில் இவர் பாடியதொரு பாடல் நற்றிணையில் (282) அமைந்துள்ளது.

**நல்லெழுநியார்** - ஓர் புலவர். இவர் பரிபாடலில் பதின்மூன்றாவதாய் அமைந்த திருமால் பாடலைப் பாடியவர். திருமாலின் பல நிலைகளையும், பல தத்துவங்களையும் இவர் விரித்துப் பாடியுள்ளார். திருமாலின், ஆழிப்படையையும், சங்கை ஏந்திய திருக்கைகளையும், திருமார்பையும் தொழுவோர்க்குத் துறக்கமும் உரியதாம் எனப் பயனை முன்மொழிந்து இவர் பாடலைத் தொடங்குவார். 'ஐம்புலன்களும், இவற்றையறியும் பொறிகளும் ஐம்பெரும்பூதங்களும் நீயே', எனவும், 'மூலப்பகுதியும், அறமும், காலமும், ஐம்பெரும் பூதங்களும் கூடிய மூவேழுலகத்தும் வாழும் உயிர்கள் எல்லாம் நின்னிடத்தனவேயாம்', எனவும் இவர் திருமாலின் தத்துவ நிலைகளை விளக்குகின்றார். திருப்பாற் கடலிலே அறிதுயில் கொண்டோனும் (திருமாலும்), நாஞ்சிற்படை ஏந்தியோனும் (பலதேவனும்), நிலத்தை நீரினின்றும் எடுத்த களிறும் (ஆதிவராகமும்) ஆகிப் பின்னும் முத்தொழிலையும் புரியும் முப்பெருங்கடவுளராய்ப் பிரிந்தவனும் ஆகிய ஒருவனாய் இவர் திருமாலின் கடவுள் தத்துவத்தைக் குறிக்கின்றார். இன்னும் பலவாறு திருமாலின் உருவத்தைப் புனைந்து பாடும் இவர், முற்பிறப்புக்களில் செய்த தவப்பயனால் இப்பிறப்பில் அவர் திருவடிகளைத் தொழுதிறைஞ்சி வாழ்த்தும் பேறு பெற்றதாக மொழிந்து, தாம் மேன்மேலும் விரும்பும் பொருளும் அத்திருவடிகளைத் தொழுது வாழ்த்துவதே என முடிக்கின்றார்.

**நல்லேர் முதியன்**-ஓர் குறுநில மன்னன். வேங்கடநாட்டை ஆண்ட இவனது இயற்பெயர் முதியன் என்பதாம். ஏர் என்பது அழகு குறித்த சொல்லாதலின் ஆடவர்க்குரிய பெருமையும், உரனுமாகிய நல்லழகு பற்றி இவன் நல்லேர் முதியன் என வழங்கப்பெற்றனன் என்பர் ஔவைதுரைசாமியார். இவனிடத்துப் பரிசில் வேண்டிக் கள்ளில் ஆத்திரையனார் பாடியதொரு பாடல் புறநானூற்றில் *[393]* அமைந்துள்ளது. அதில் நல்லேர் முதியன் ஆதனுங்கன் என்று இரு பெயர்கள் தொடர்ந்து வருதல் கொண்டு முதியன் ஆதனுங்கன் என்பதை ஒருவன் பெயராகக் கொள்வர் உ.வே.சாவும். *[புறம். பாடினோர் வரலாறு]* வை.பி.யும் *[சு.இ.]*. ஆயினும், நல்லேர் முதியன் ஆதனுங்கன் போல நீயும் நல்குமதி, எனவரும் அப்பாடலின் பொருளமைதியை நோக்கும்போது நீ எனக்குறித்த முன்னிலைப் பெயர்க்குரியவராகப் பாடலில் வேறு யாரையும் கருதுதற்கில்லை. எனவே, 'நல்லேர் முதியன்' என்ற பெயரை இயல்பு விளியாகக் கொண்டு, 'ஆதனுங்கன் போல நீயும் நல்குமதி', எனப் பாடலைப் பிரித்துப் பொருள் காண்பது பொருந்துமெனத் தோன்றுகிறது. ஔவை.து.வும். நல்லேர் முதியனை வேறுபடுத்தியே கொள்வது கொண்டு, இம்முதியனை ஆதனுங்கனின் வழித்தோன்றலாக உரைப்பர். இவன் தன்னிடத்தே பரிசில் வேண்டிய கள்ளில் ஆத்திரையனாரால் நன்கு வாழ்த்தவும் பெற்றுள்ளான்.

**நல்லேறு** - ஆனேறு (காளைமாடு). மண்ணைக் குத்திக் கொள்ளுவதால் வரிவரியாகக் கீறப்பட்ட மிக்க கூரிய கோட்டினையுடைய பெருமை பொருந்திய நல்லேறு-ஆனேறு- இரண்டினைப் போர் செய்ய விடுத்து, அவற்றில் வெற்றி பெற்ற ஏற்றின் மயிர் சீவாத தோலினால் போர்த்துப் போர் முரசம் இயற்றப்படும் *[புற.288:2]*.

நிரையினின்றும் பெயர்ந்த அசையும் குட்டேற்றினை (கொண்டையை)யுடைய நல்லேறும், மலையிலிருந்து வந்த மரையாவின் ஏறும் ஆகிய இரு நல்லேறுகளும் புறங்கொடாத வலியுடனே புண்ணுண்டாம்படி முட்டி, கோவலரும், குறவரும் ஆரவாரிக்கும்படியாகக், குளவியும் குறிஞ்சியும் வாடும்படியாகப், போருடற்றும் ஆரவாரம் மலை வழியில் ஒலிக்கும் *[மலை.330:335]*.

ஆயரின் கூப்பிட்டொலியைக் கேட்டு ஆனினத்தைத் தம்மிடத்து அணைத்துக் கொண்டுவரும் அசையும் முசுப்பினையுடைய (கொண்டை) நல்லேறுகளின் சருச்சரை கொண்ட கழுத்தில், ஆயர் மூங்கில் குழாயுள் நிறைந்த உணவினைப் பெய்து தொங்கவிட்டிருப்பர் *[அக.253:13]*. புலியோடு போரிட்டுப் புறங்கொடாது வென்ற நல்லேற்றின் தோலினால் போர்த்து வெற்றிமுரசம் கட்டப்படும் *[புற.344:1]*. அறுகம்புல்லை மேய்ந்த அசைகின்ற திமிலையுடைய நல்லேறுகள் ஆனோடு சென்று வாய்க்கால்களில் உள்ள நீரை அருந்திக் காஞ்சி மரத்தின் பொன்போற் பூந்தாதுக்கள் தம்மேல் துளிக்கும்படி அதன் நிழலில் உள்ள மணல் மேட்டில் உறங்கும் *[அக.341:7]*

பாதி இரவின்கண் பல்லான் தொழுவத்தில் நல்லேறு செல்லுந்தோறும் ஒலிக்கின்ற மணியினோசை பிரிந்திருக்கின்ற தலைவிக்குத், தலைவனை நினைப்புறுத்தும் *[குறு.190:6]* தன் துணையைப் பிரிந்த கொம்பையுடைய, தலைமைபொருந்திய மலையின் நல்லேறானது, அறுகம்புல்லைத் தின்னும் மலையாவைப் பார்த்துப் பெருமூச்சு விட்டு, உகாய் மரத்தின் புள்ளிகளையுடைய நிழலின்கண்ணே தங்கும் *[குறு.363:1]*

பாசறைக்கண் இருக்கும் தலைவனது நெஞ்சம், நல்லேறுகளைத் தொடர்ந்து இளமையுடைய ஆக்கள் செல்லுகின்ற கார்ப்பருவத்தைக் கண்டு, தலைவியை நினைத்து வருந்தியது *[ஐங்.445:3]*

ஆயர், பொருகின்ற புகற்சியையுடைய இந்த நல்லேற்றைத் தழுவும் ஆடவனின் மெய்யையே இப்பெண் சேருவாள் என்று, சாற்றிச் சாற்றி, எல்லோருக்கும் தெரிவிப்பர் *[கலி.102:9]* நெருங்கின கழுத்தையெல்லாம் மறைத்தலையுடைய அசைகின்ற குட்டேற்றினையுடைய நல்லேற்றை வெற்றி கொண்ட பழைமையான குடியினனாகிய பொதுவனின் முகத்தை நோக்கி, ஆயர் சாதியின் மகளுடைய கண்கள் இமைத்தலையிழக்கும் *[கலி.105:51]* உருமினுடைய குரல்போல் அதிரும், பொருகின்ற மாறுபாட்டினையுடைய நல்லேறு, இளமையான ஆனுடன் கூடி நின்றதுபோல நாமும் கூடிச்சேரப் போதற்குக், கூட்டத்திற்கு உடன்படுவாயாக என்று, தலைவன், தலைவியிடம் கூறினான் *[கலி.113:28]*

**நல்லோர்** - 1. நல்லவர். தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவிக்கு ஆறுதல் கூறும் முதுமகளிர், தாம் கேட்ட விரிச்சியினைக் (நற்சொல்லினைக்) கூறியதோடமையாது, 'நின் தலைவன் பகைவர் மேற்செல்லுங்கால், நல்லோர் - நல்லவர் - கேட்ட வாய்ப்புள்ளும் (நற்சொல்லும்) நல்லனவேயாதலான், தலைவர் பகைவரை வெற்றி கொண்டு திறைப்பொருளோடு இப்பொழுதே வருவது உறுதி. ஆகவே, உன் வருத்தத்தை அகற்றுவாய்', என்று கூறினர் *[முல்.18]* நன்னன் வேண்மானின் நல்லவைக்கண், நல்லோர் (நல்லறிஞர்) குழுமி இருந்தனர் *[மலை.77]*

தலைவனும், தலைவியும் உடன் போகக் கண்டோர், 'வில்லேந்திய காளையும், சிலம்பணிந்த கன்னியுமாகிய இந்நல்லோர், யாவரோ? என, இரக்கத்தோடு கூறினர் *[குறு.7:2]* தோழியோடு, தலைவி, ஊரினர் மேற்கொண்ட விழாவிற்குப் புறப்படும்பொழுது, நல்லோரால் (நிமித்திகரால்) கூறப்பட்ட நிமித்தங்கள் பல தோன்றியதனால், விழாவில் தலைவனை அடைந்ததாகவும், தாயால் பாதுகாக்கப்பட்ட அவளுடைய பெண்மை நலத்தை, அவன் கொள்ளை கொண்டதாகவும் தலைவி, பிரிவுத்துன்பத்தால், தோழியிடம் கூறினாள் *[குறு.223:3]*

மகட்போக்கிய செவிலித்தாய், அவளைத் தேடிச் செல்லும் பொழுது தன்னெதிரில் வரும் நல்லோரை (நற்பண்புடையோரை)

நாடி, அவர்பால் சென்று கை கூப்பி வணங்கி, என் மகளொருத்தியை நீவிர் வரும் வழியில் கண்டீரோ என வினவினாள் *[ஐங்.390:1]*

**2. மகளிர்.** பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம், 'நீவிர் நும் நல்லோர்க்குப் - மகளிர்க்கு (பரத்தையர்க்குப்) - பொருந்தியவர் ஆவீர்; யாம், இச்செல்வனுக்குப் (மகனுக்கு) பொருந்தியவர் ஆவோம்', என்று, தலைவி ஊடிக் கூறினாள் *[அக.26:19]*

பிரிந்து வந்த தலைவனிடம் தலைவி, 'மத்தி என்னும் மன்னனுக்குரிய கழாஅர் என்னும் மூதூரையொத்த நலங்கெழுமிய நல்லோர் நல்லோரையே (புதிய புதிய பரத்தையரையே) நாடி நுகர விரும்பும் நீ, அப்பரத்தையர் சேரிக்கே செல்', என்று கூறி ஊடினாள் *[ஐங்.61:4(2)]*. பரத்தையிற் பிரிந்து வந்து தன்னை மயக்கிய தலைவனிடம், தலைவி, 'நின்னினும், நின் பாண்மகன் நல்லோரின் நலம் சிதைவதற்குப் பெரிதும் காரணமாயிருக்கிறான்' என்று கூறினாள் *[ஐங்.139:3]*.

நல்லோள் - நல்லவள். பறம்பு நாட்டிற்குரியவனும், பெருவீரனுமாகிய பாரியினுடைய துணைவி ஓவியத்தில் எழுதியது போன்ற வேலைப்பாடமைந்த நல்ல மனையின் கண்ணே இருக்கும் பாவையைப் போன்ற நல்ல அழகும் நலமுமுடைய நல்லோள் - நல்லவள் - ஆவாள் *[பதி.61:4]*

பெண் யானையை இழந்த வருத்தத்தால் உண்ணாது மெலிந்த ஆண் யானையைப் போல மெலிந்த தலைவன் தோழியிடம் இரந்து, 'பெரிதும் பொன்னாற் செய்த பாவை போன்ற அழகுடையவளும், காதலுடையவளும், மெல்லிய தன்மையுடையவளும், மடப்பம் உடையவளும் ஆகிய நல்லோள் (தலைவி) இடத்தே நீ தீதின்றிப் புணையாகச் சென்று எனக்கு நன்மை உண்டாகச் செய்வாய்', என்றான் *[அக.392:7]*

தோழியால் குறை மறுக்கப்பட்ட தலைவன், 'அமுதத்தின் இனிமை நிரம்பிய செவ்விய நாவானது அஞ்சும்படி, முளைத்த நேராகி விளங்குகின்ற, கூர்மையாகிய பற்களையும், சிலவாகிய சொற்களையுமுடைய நல்லோளாகிய தலைவியை, நான் வீதியில் மடலூர்ந்து அடையும்பொழுது, 'இவளுடைய கணவன் இவன்', என்று ஊரார் கூறும் சொற்களைக் கேட்டு நாணமுறுவேன்', என்றான் *[குறு.14:5]* காந்தள் மலரையும், அரும்பிலிருந்து உண்டாகிய செவ்வி மலர்களாகிய முல்லைப் பூக்களையும், மலர்கின்ற இதழ்களையுடைய குவளை மலர்களோடு இடையிடையே கலந்து அழகிதாகத் தொடுத்தல் மாட்சிமைப்பட்ட மாலையைப்போல, நறு நாற்றத்தையுடைய நல்லோள் (தலைவி) மேனி தளிரைக் காட்டிலும் மென்மையும், நிறமும் பொருந்தியது; தழுவுதற்கும் இனியது' என்று தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறினான் *[குறு.62:4]* 'நல்லோளின் (தலைவியின்) ஊர் அருவியையுடைய மலையின் உச்சியிலே இருக்கிறது; அங்குள்ள தலைவியை வாடைக் காற்றே வருத்தாதே', என்று வாடைக்குக் கூறுவான் போலே தலைவன் பாகற்குக் கூறினான் *[குறு.235:5]*

வினைவயின் பிரியும் தலைவன் தன்நெஞ்சொடு கூறுவானாய், 'நெஞ்சே! கானத்துப் புகுந்து, நெடுந்தூரம் அகன்று போதலைக் கருதிய நீ, மெல்லியவாய்க் கமழ்கின்ற, பிடரியிலே தாழ்ந்த கரிய கூந்தலையும் அகன்ற மென்மையாகிய பருத்த தோளையும், மடப்பத்தையுமுடைய நல்லோளைப் (தலைவியைப்) பிரிந்து போக எண்ணினை; அவ்வாறாயின், இவளைவிட அரிய பொருளை அடைந்துவிட்டனையோ, நீ அப்பொருளோடு வாழ்வாயாக; நான் இவளொழிய வாரேன்', என்றான் *[நற்.137:2]* தலைவனுக்கு இரவுக்குறி கூறுகின்ற தோழி, 'நின்பால் மயக்கமுற்ற நட்பினால் மாட்சிமையுடைய இனிய நலத்தையும் ஒழியவிட்டு, நின்னுடைய உறவைக் கொண்ட, வளையணிந்த முன்னங்கையுடைய நின் நல்லோளுக்குத் தந்தையினுடைய சிறுகுடிப் பாக்கமானது, ஓங்கித் தோன்றுகின்ற பனைகளின் நடுவில் உள்ளது; மடப்பம் பொருந்திய தோழியர் கூட்டமும், யானும் ஒருவரையொருவர் அறியாதபடி அவ்விடத்திலேயே இருப்போம்; அங்கு இரவு வருக', என்றாள் *[நற்.323:6]*

வரையாதொழுகும் தலைமகன் கேட்குமாறு தோழி, 'மெல்லிய கடற்கரையையுடைய தலைவனைத் தெளிந்தமையாலே பெண்மை நலமுழுதுமமைந்த நல்லோளின் (தலைவியின்) கண்கள் பெரிதும் அழகிழந்து புற்கென்றன', என்று அவனது இயலைப்பழித்துக் கூறினாள் *[ஐங்.166:4]*

**நல்வயல்-நன்செய்.** 'தலைவரைப் பிரிந்துறையும் மகளிரைத் துன்புறுத்தும் மாலையே! நல்வயல்-நன்செய்-ஊரன் என்னைப் பிரிந்தமையறிந்து, துணிவோடு, எப்பொழுதும் வருவதுபோல மற்றையோர்க்குக் காட்டி, இந்நண்பகற் பொழுதிலேயே வந்து விடுகின்றாய், இனிக் காலை நேரத்திலேயே வந்தாலும் வருவாய்; இவ்வாறு முறைபிறழவரும் நின்னைத் தடுத்து நிறுத்த யாரே உளர், நீ மிகவும் கொடியை!, என்று தலைவி மாலைக் காலத்தை விளித்துக் கூறினாள் *[ஐங்.183:2]*

**நல்வழுதியார்** - ஓர் புலவர். பரிபாடலில் வையையைப் பற்றிய 12-ஆம் பாடலைப் பாடியுள்ள இவரைப் பெயர் கொண்டு பாண்டியர் தோன்றலென உணரலாம். கார்ப்பருவத்து வையை நீர்விழவணியின் பல்வேறு வகைப்பட்ட இன்பங்களையும் தலைவியிடம் கூறி, இவ்வகை இன்பம் துய்த்தற்குத் துணையாகும் நின்னையும் நினைத்திலரே, எனத், தோழி தலைமகன் கேட்குமளவில் அவனை இயற்பழித்ததாக, இவர் அப்பாடலை இயற்றியுள்ளார். வையை வெள்ளம் கரையோர மரங்களின் மலர்களையெல்லாம் அடித்துக் கொண்டு வரும் அழகினை இவர் தம் பாடலின் முதலிலும், முடிவிலும் அடுக்கிப் புனைவர். வையை விழவிற்குப் புறப்படும் மதுரை நகர மைந்தரும் மகளிருமாய மாந்தர் செயல்களை இவர் நேரிற் கண்டாங்கே புனைகிறார். நீர் விழவின் நிகழ்ச்சிகளைக் கண்டார் கூற்றுக்களில் வைத்து இவர் பாடுகின்றார்.

**நல்விளக்கனார்** - ஓர் புலவர். நல் விளக்கு என்பதை ஊரின் பெயரென்றும், அவ்வூர் பற்றி இப்புலவர்க்கு இப்பெயர் வந்ததென்றும் கூறுவர் பி.நா. (நற்பாடினோர் வரலாறு). இவர் பாடியதாக நற்றிணையில் மட்டும் ஒரு பாடல் *[85]* காணப்படுகின்றது. இரவுக்குறியில் தலைவன் வரவறிந்த தோழி, அவன் கேட்டு விரைவில் வரைந்து கொள்ளுமாறு, தலைவியை நோக்கி, 'நீ வருந்துவதறிந்த ஊரார் அலர் தூற்றினாலும், மலைநாடன், நின்பாலுள்ள விருப்பினால் இரவில் இக்கொடிய வழியில் வருதல் ஏதமுடையதாதலின் வாராதொழிவானாக', என்று கூறுவதாய் இவர் அப்பாடலை அமைத்துப் பாடியுள்ளார். இவர் பாடலில் உள்ளுறை உவமையும், இறைச்சிப் பொருளும் அமைந்துள்ளன.

**நல்வினை** - **1.** நல்லறம். மலையமான் திருமுடிக்காரி, இவ்வுலகத்தைச் செய்யப்பட்ட நல்வினையின் - நல்லறத்தின் பயனை அவ்வுலகமாகிய தெய்வலோகத்துப்போய் நுகர வேண்டிப் பெயர்ந்தனன் *[புற.174:19]* உள்ளத்தில் தெளிவில்லாதார் தாம் நல்வினையைச் செய்யலாமோ, வேண்டாமோ, என ஐயுறுவர் *[புற.214:1]* 'யான் முடிவாகத் தெரிந்துகொண்டது; வாழ்தற்கேதுவாகிய நல்வினையைச் செய்ய வேண்டும்; இறக்கும்போது உயிர்க்குத் துணையாக வருவது அது ஒன்றேயாகும்' என்று ஔவையார் கூறினார் *[புற.367:10]*

'வருந்தி வந்தோர்க்கு ஈதல், விருந்து புறந்தருதல் போன்ற நல்வினைகளையே செய்து வந்த எம் இல்லத்தோர் அழும்படியாக, என்மகளைத் தலைவனுடன் போகச் செய்த பால் (விதி) காட்டுத்தீயின் இடையே அகப்பட்டு வெந்தொழிக'. என்று தலைவியின் நற்றாய் வருந்திக் கூறினாள் *[ஐங்.376:5]*

**2. நல்லூழ்.** முற்பிறப்பில் பல நன்மைகளும் புரிந்து பொருந்துதலுற்ற நல்வினையால் - நல்லூழால் - தலைவர் நம் களவொழுக்கம் நீங்கும்படி வரைய வந்தபோது நம்மூர் அலர் ஆரவாரமொழிந்து புதுமையுடையதாய் மாறியது', எனத் தோழி தலைவியிடம் கூறினாள் *[அக.400:4]*

'பிரிந்து சென்ற காதலரை வழிபட்டு அவருடனே தானும் சென்றுவிட்ட என் நெஞ்சே நல்வினையின்பாற்பட்டது; அவரையின்றி இங்கே தனித்திருந்து பழிச்சொற்களைச் சூடிய யானே தீவினையின்பாற்பாட்டேன்', என்று தலைவி இரங்கி மொழிந்தாள் *[நற்.107:8]*

**3. தொழிற்றிறம்.** வினைமுற்றித் தலைவியிடம் விரைந்து மீளும் தலைவன், 'பாகனே, நினது நல்வினை-தொழிற்றிறம்-பொருந்திய நீண்ட தேர் மிக விரைந்து செல்வதாக', என்று கூறினான் *[அக.204:9]*

தலைவன், கமழும் நெருங்கிய குழல் முடியாகிய கொண்டை விளங்க, நல்வினை (சித்திரத் தொழிற்றிறம்) அமைந்து, இயக்கும் இயந்திரம் அற்றொழிந்த பாவையொன்று அவன்மேல் விழுந்தாற்போல், கலங்கி விழுந்தது கண்டு, வருந்திச் செலவழுங்கினான் *[நற்.308:6]*

**நல்வெள்ளியார்** - ஓர் புலவர். இவர் பெயர் மதுரை நல்வெள்ளி *[குறு.365]* எனவும், காணப்படுதலால் இவரூர் மதுரை என்பது புலனாகின்றது. நல்வெள்ளியார் என்ற பெயர்க்கும் நல்லொளியார் எனப் பாடவேறுபாடு காணப்படுகின்றதாயினும் அதனை ஏடெழுதுவோர் மிகையென ஒதுக்குவர் பி.நா.(நற்.பாடினோர் வரலாறு). இவர் பாடியனவாக அகநானூற்றில் ஒன்றும் *[32]* குறுந்தொகையில் ஒன்றும் *[365]* நற்றிணையில் இரண்டும் *[7,47]* ஆக நான்கு பாடல்கள் உள்ளன. குறிஞ்சித்திணையையும் பாலைத் திணையையும் இவர் சிறப்பித்துப் பாடியுள்ளார். இரந்து பின்னின்ற தலைமகனுக்குக் குறை நேர்ந்த தோழி தலைமகளிடத்தே குறை நயப்பக் கூறுவதாக அமைந்த இவரது அகப்பாடல் நயம் மிக்கது. இவர் பாடல்களில் *[குறு.365;நற்.7]* அருவிப்புனைவு நன்கு அமைந்துள்ளது.

**நல்வேட்டனார்** - ஓர் புலவர். இவர் பெயர் மிளைகிழான் நல்வேட்டனார் என்றும் காணப்படுகின்றது *[குறு.341;நற்.210:349]* மிளையென்பதை ஓரூர் என்பர் பி.நா. (நற்பாடினோர் வரலாறு). கிழான் என்பதனால் இவர் வேளாண்மரபினர் என்பது விளங்கும். குறுந்தொகையில் ஒன்றும் *[341]* நற்றிணையில் நான்கும் *[53,210,292.349]* ஆக ஐந்து பாடல்கள் இவரால் பாடப்பெற்றுள்ளன. குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகிய மூன்று திணைகளில் இவர் தம் பாடல்களை அமைத்துப் பாடியுள்ளார். பிரிந்து பருவ வரவின் கண்ணும் மீளாத தலைவனையெண்ணித் தலைவி வன்கண்மையோடு வாழ்ந்திருப்பதை அவள் கூற்றிலே இவர் பாடுவர் *[குறு.34]* பெருமலையிலே பெய்த மழையால் சருகுகளையும், இளந்தளிர்களையும் அடித்துக் கொண்டு வரும் புதுநீர் உடலுக்கு மருந்தாகும் தன்மையை இவர் பாடலால் *[நற்.53]* உணரலாம். நெடுமொழி செல்வமன்று; அவை அவர்தம் செய்வினைப் பயன்களாம்; தம்மைச் சார்ந்தோரது துன்பத்திற்குத் தாம் அஞ்சி, அதனைப் போக்கி அவரைக் கைவிடாது ஆளுகின்ற பண்புடனே இனிய தன்மையனாயிருக்கும் செல்வமே சான்றோரால் செல்வமெனப்படுவதாம்' *[நற்.210]* என்பது போன்ற அறக்கருத்துக்களை இவர் பாடலிற் காணலாம். மதியுடம்பாட்டின்கண் தலைவன் தோழியை இரந்து பின்னின்று ஒழுகுதற்குப், போரின்கண் பட்ட மறவரை அவரது உயிர்போமளவும் பேய் அருகிருந்து காத்து வழிபடுவதாகிய பேய்க்காஞ்சியை இவர் உவமித்துள்ள நுட்பம் உணரத்தக்கதாகும் *[நற்.349]*.

**நலங்கிள்ளி** - ஓர் சோழவேந்தன். "கடலிற் படை கொண்டு சென்று பகைவரை வென்று கொள்ளை கொண்ட பெரும்பொருள் பெருகிய, வலிய தாளையுடைய, சோழநாட்டுத் தலைவனாகிய குதிரைகளையுடைய நலங்கிள்ளியின் விருப்பத்திற்குரிய பொருநராகிய யாம், அவன் தாள் வாழியவென அவனைப் பாடுவேமன்றிப் பிறரைப் பாடிப் பிரிசில் பெறுதலை வேண்டேம்'', என்று பொருநன் கூற்றில் கோவூர்கிழார் பாடியுள்ளார் *[புற.382:5]* **சோழன் நலங்கிள்ளி** -காண்க.

**நலத்தர்** - வனப்புடையர். கரிய கடலின் வெள்ளிய சங்கைப் போன்ற, பின்னே முடிந்துப்போகட்ட பெரிய வெள்ளிய நரைத்த கூந்தலையுடைய நல்ல நலத்தராகிய -வனப்புடையாராகிய - முதிய பெண்டிர், மதுரை நகரின் மனைகள்தோறும் சென்று தின்பண்டங்களை விற்பர் *[மது.409]*

**நலத்தள்** - நலத்தையுடையவள். வினைமுற்றி மீளும் தலைவன், பாகனிடம், 'தலைவி என் மீது நலத்தளாய்- (அன்பாகிய) நலத்தையுடையவளாய் - நான் வருவதையறியாதிருந்தும், என் புதல்வனுக்கு வேறொன்றினைக் காட்டி, நான் வருவதாகக் கூறி, மகிழ்வாள் என்று கூறினான். *[நற்.161:10]*

**நலத்தார்** - நலத்தையுடையார். கண்ணுக்குத் நிறைந்த நலத்தாரை-நலத்தையுடையாரை (மகளிரை)-கண்டார்க்கு உள்நின்ற காமநோய் மிகும் *[கலி.60:5]*

**நலத்தோன்** - நலத்தையுடையோன். பரத்தை, நலத்தோன் நலத்தையுடையோன்-ஆகிய தலைவனை சால்பினால், தலைவி மாட்டுச்செல்ல விடுத்தாளாகப் பரத்தை கூறியது *[நற்.176:2]*

**நலம்** - 1. அழகு. பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியின் தூசிப் படையினர், இரும்பால் செய்யப்பட்ட ஆணியும், பட்டமும் அறைந்த நலம் - அழகு- மிக்க கிடுகுப் படையினையுடையராய் இருந்தனர் *[புற.15:12]* எயினன் என்பானுக்குரிய வாகை என்னும் நகரத்தைப் போன்ற தலைவியின் பெண்மைநலத்தை இவளுடைய தந்தை மணஞ்செய்து தாரானாயின் மகள் கேட்டு வந்த வேந்தர் வறிதே பெயராது ஊரினை அழிப்பார்- (அழகினைப் பெண்மை நலம் என்றுங் கூறுவர்) *[புற.351:7]* தன்மீது ஆட்சி செலுத்திய விறல் வேந்தர் விண்ணுலகு செல்வதைக் கண்டும் அவர்களுடன் செல்லாது, நம் நலத்தைப் பிறருக்கு விற்கும் விலை மகளிர்போலப் பலர் புகழ்ந்து கூறவும் யான் இன்னும் இருக்கிறேனே என்று நிலமகளும் அழுவள் என மார்க்கண்டேயனார் என்ற புலவர் நிலையாமை குறித்துப் பாடினார் *[புற.365:8]*

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் மென்மையான இயல்பினையுடைய விறலியர்க்குப் பூக்கள் மலர்ந்த வேங்கை மரத்தைப்போல, விளங்குகின்ற இழைகளை (அணிகலன்) அணிவித்து உயர்ந்த நலம் விளங்கும்படி செய்வான் *[பதி.40:23]* பாடினி நாணம் வருத்தலால் பிறரை நோக்காது கவிழ்ந்த நலம் விளங்குகின்ற கழுத்தினையுடையவள் *[பொரு.31]* தலைவியை நோக்கி வந்த யானையை விரட்டிய தலைவன், அவளிடம், 'அஞ்சாதே; நான் உன் சிறந்த நலத்தை நுகர்வனே', என்று கூறினான் *[குறி.181]* இரவுக் குறிக்கண் வரும் தலைவனைக் குறித்துத் தலைவி, 'இவ்விரவுக் குறிக்கண் வருகை நன்றன்று; வரைந்தெய்தலே நன்று', என்று எண்ணி வலையின்கண் அகப்பட்ட மயில்போலத் தன் நலம் அழிந்தாள் *[குறி.250]*
தலைவர் குறித்த பருவம் வந்தது; நெருங்கிய காந்தளம்போது விரிந்த மலரென நாறும் நினது சிறந்த நலத்தை நினைந்து அவர் இப்போதே வருவர், என்று தோழி தலைவியை வற்புறுத்தியிருந்தாள் *[அக.4:17]* பொருள்வயின் பிரியக் கருதிய தலைவனிடம் தலைவி மிக்க வருத்தம் தோய்ந்த உள்ளத்தோடு, மென்மெலச் செல்லும் இயல்பினவாய நலம் மிக்க சிவந்த அடியால் நிலத்தில் சுவடு தோன்ற அருகில் வந்து, புதல்வனுடன் நின்று, தான் உடன்படாமையைக் கூறுவாள் போலே பெருமூச்செறிந்து நின்றாள் *[அக.5:3]* 'தலைவியின் மாண்புறும் நலம் கெடும்படியாக அவளைப் பிரிந்து சேய்மையில் உள்ள நாட்டிற்குச் செல்லாதே என்று யான் கூறவும் நெஞ்சே, நீ பொருந்தாயாய் உள்ளாய்;, என்று தலைவன் பொருள்வயிற் பிரியக் கருதிய நெஞ்சோடு கூறினான் *[அக.21:5]* வினைமுற்றி மீளும் தலைவன் தன் தேர்ப்பாகனிடம், 'பைங்கிளியைக் கையில் ஏந்திக் கொண்டு, யாரும் அறியாமல் தலைவர் இன்று வருவார் என்ற மழலையாகிய இனிய சொற்களைப் பயில்வித்திருக்கும் நாணமிக்க நம் தலைவியினுடைய மாண்புற்ற நலத்தினை அடைய விரைந்து தேரைச் செலுத்துக', என்று கூறினான் *[அக.34:18]* பொருள் முற்றி மீண்டு வந்துள்ள தலைவனிடம் தலைவி, 'எம்மை நினைத்தும் அறிந்தீரோ', என்றாட்குத் தலைவன் 'ஆராயப்படும் நின் நலத்தினை மறப்பனோ; கனவிலும் உன்னையே கண்டு கொண்டிருந்தேன்', என்று கூறினான் *[அக.39:5]* பொருள்வயின் பிரிந்த தலைவன் தலைவியை நினைந்து, 'இதுவரை நம்மைப் பிரிந்தறியாத இயற்கை அழகோடு சிறப்புற்றிருந்த தலைவியின் தோள்கள் இப்பொழுது நமது பிரிவால் அவ்வியற்கை நலங்கெட, மிகவும் மெலிந்து வருந்தினளோ', என்று கவன்றான் *[அக.41:10]* பொருள்வயிற் பிரிந்து நீட்டித்த தலைவனைக் குறித்து வருந்திய தலைவிக்குத், தோழி, 'ஆராயும் நலத்தினை இழந்த மேனியளாய் வருந்தாதே; ஈதல் கருதிப்பிரிந்த தலைவர் உன்னைவிட்டு நீண்ட நாள் அங்கே இரார்; விரைவில் வருவர்', என்றாள் *[அக.69:1]* பிரிவிடை மெலிந்த தலைவியிடம், தோழி, 'அரிய பொருள் விருப்பினால் பிரிந்து சென்ற தலைவர்,

உன்மீது பேரன்பினராகையாலே, மிக்க வளமான குடநாட்டினையே பெறுவராயினும் நினது மாண்புற்ற நலத்தினை மறந்து அங்குத் தங்குவாரல்லர்; இன்னேவருவர்', என்றாள் *[அக.91:18]* பிரிவிடை வற்புறுக்கும் தோழிக்குத், தலைவி, 'சேரிப்பெண்டிர் அலர் தூற்றினும் தூற்றுக; எருமை என்பானது குட நாட்டினை யொத்த என் சிறந்த நலம் தொலையினும் தொலைக; பொருள் முற்றாமையின் சேய்நாட்டில் காலம் நீட்டிப்போராகிய நம் தலைவர் என்றும் நோயின்றி இனிதிருப்பாராக', என்று கூறினாள் *[அக.115:6]* பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம், தோழி, 'நுண்ணிய சிறந்த நலத்தையுடைய பரத்தையோடு நீ நீராடினை என்ற செய்தி, மறப்போர்ச்செழியன் கூடற் பறந்தலையிடத்தே ஒருங்கு வந்த சேர சோழரை வென்று புறங்கண்டபோது எழுந்த ஆர்ப்பினும் பெரிதாய் அலராகியது', என்று கூறி வாயில் மறுத்தாள் *[அகம்.116:9]* மிக்க நாணத்தைக் கொண்ட சிறிய மெல்லிய சாயலையுடைய தலைவி, பிரிவுத்துயர் தாங்காது தலைவனை நினைந்து தனது மாண்புற்ற நலங்கெட ஏக்கமுற்று அழத் தொடங்கினாள் *[அக.120:8]* வாயில் வேண்டிய பாணனிடம், தலைவி, 'பரத்தையர் சேரியில் பல நாட்கள் தங்கியிருக்கும் தலைவனின் பொய்ம்மொழியை நம்பிக் கண்கள் நீரினைச் சொரிய, ஆயத்தாரும் அயலாரும் மயங்கத் தன் தாயார் பாதுகாத்து வளர்த்த சிறந்த நலத்தினை வேண்டாது இழப்பாள் யார்கொல், அவள் இரங்கத்தக்காள்', எனக் கூறி வாயில் மறுத்தாள் *[அக.146:13]* இரவுக்குறிக்கண் தலைவியை முயங்கி மீளும் தலைவன், தன் நெஞ்சிற்குக் கூறுவானாய், அழகிய கூந்தலினையும், கண்ணினையும், பற்களையும், நலம் (இன்பம் பயத்தலால் நன்மையுமாம்) பொருந்திய பவளம் போன்ற வாயினையும் உடைய தலைவி, அழகிய கைகளை வீசித் தளிரென நுடங்கிவந்து, நமது நோயாகிய வருத்தம் நீங்க அமையாது (இடைவிடாது) முயங்கினள் எனக் கூறினான் *[அக.162:13]* வினை முடிவுறாது பாசறைக்கண் இருந்த தலைவன், தன் நெஞ்சிற்குக் கூறுவானாய்ப், போருக்குச் சென்ற தலைவரின் நிலை என்னவாயிற்றோ என மயங்கி, நீரினைச் சிந்தும் கண்களுடன், மனையின்கண் வருந்தியிருக்கும் நம் தலைவி நம்மோடு கூடித் தன் பழைய நலத்தினை அடையும் நற்பருவம் இக்கார்ப்பருவமே, காண்பாயாக', என்று வருந்திக் கூறினான் *[அக.164:10]* வரைவில் ஆர்வமின்றிக் குறிக்கண் வந்தொழுகும் தலைவனிடம், தோழி, 'நீ அன்பிலாய் ஆதலை யான் முன்பு அறிந்திலேன்; அதனை யான் முன்பே அறிவேனாயின், இளையளாய என் தலைவியின் நீலமணிபோலும் சிறந்த நலம் கெடப் பொன்னையொத்த பசலை பெரிதும் பரத்தல் இல்லையாகும்' எனக்கூறி வரைவுகடாயினாள் *[அக.172:17]* பிரிவிடை வருந்தும் தலைவியை ஆற்றுவிக்கும் தோழி, 'உன்னுடைய கூந்தலில் மலரைச் சூட்டுதற்கும், உனது அழகிய முலையில் தொய்யில் எழுதுதற்கும் விரைந்து தலைவர் வருவார்; ஆகவே, நீ உன் பழைய நலம் சிதையும்படியாக வருந்தி நாள்தோறும் இன்னும் தலைவர் வரவில்லையே என்று புலம்பாதே என ஆற்றுவித்தாள் *[அக.177:1]* பிரிவிடை வருந்தும் தலைவியிடம், தோழி, 'அழகினை இழந்த கண்களுடனும், மெலிந்து போன தோள்களுடனும் ஆயம் விரும்பி ஆராயும் பழைய நலத்தினை இழந்து சிறிதும் வருந்தாதே; தலைவர் நீட்டித்திரார், விரைவில் வருவார்', என்று ஆற்றுவித்தாள் *[அக.197:4]* மகட்போக்கிய தாய், 'என் மகள் பந்து சிறிது எறியினும், அவளை வா என்று அழைத்துக் கிண்ணத்திலுள்ள பாற்சோற்றில் என் பங்கு உண்டாய், உன் தந்தை பங்கையும் உண்ணுவாயாக என்று உண்பித்து, அவள் பிறந்தநாள் தொட்டுப் பல சிறப்புக்களைச் செய்த நான், நலம் புனைந்து வளர்த்த என் சிறிய மகள் நீர் இல்லாத நீண்ட நெறியில் செல்லுவதை நினைந்து வருந்துகிறேன்', என்று கூறினாள் *[அக.219:9]* [illegible]லைவனால் உண்டான நோயால் தலைவியி[illegible]டைய மேனியி[illegible] ஆய்ந்த நலம் அழிந்தது *[அக.2[illegible]* கார்ப்பருவத்தில் காடு, வெம்மை நீங்கிக், கான்[illegible]கினிய புது நலத்தினைப் பெறும் *[அக.224:10]* பிரிவின்கண் வேறுபட்ட தலைவி, ஆற்றாமை மீதூரத், தோழியிடம், 'நம் துணைவி, நுதற்கண்ணே தங்குதல் கொண்ட, அயலாரால் அறியப்படும் பசலையுடன், பழைய மேனி நலங்கெட மெலிந்து, என்ன ஆயினளோ என்று உசாவியறியார் ஆதலின், பொருள் தேடும் விருப்பில் நம்மை மறந்துவிட்டாரோ', என்றாள் *[அக.235:18]* பிரிவின்கண் வேறுபட்ட தலைவியிடம், தோழி, 'வேனிற்காலத்து இரவு [illegible]றி இன்னாதாய்க் கழியுமென்று நினைந்து நினது நல்ல மாமை நிறத்தை உடைய மேனியின் சிறந்த நலம் அழியுமாறு வருந்தாதே, நினது அழகு பொருந்திய எயிற்றின்கண் ஊறிய நீரினை உண்ணாது தலைவர் தவிர்வாரல்லர்', என்று கூறினாள் *[அக.237:7]* 'நமக்கு வந்திருக்கின்ற நோய், தலைவனால் வந்ததென்று நமது அன்னை அறியாளாகி, நுண்ணிய நிறம் பொருந்திய தளிரையொத்த எழுச்சி பொருந்திய நலத்தினையுடைய என் மகளது நோய் யாதென வேலனிடம் கேட்குமுன்பே, தலைவனுடன் கூடிப் பண்டைய அழகைப் பெறவேண்டும்', என்று தலைவிக்குக் கூறுவாள் போலே, தோழி தலைவனுக்கு அறிவுறுத்தினாள் *[அக.242:8]* தலைவி, தோழியிடம், 'மலையைக் கடந்து, நம்மைப் பிரிந்து சென்ற தலைவர், முசுண்டை என்பானுக்குரிய, வேம்பி என்னும் ஊரைப்போன்ற, எனது நல்ல அழகிய இளமை நலம் தொலைந்த வழியும், வந்து அருள் செய்கின்றிலரே, ஊரார் மட்டும் அம்பல் கூறுவது ஏனோ', என்றாள் *[அக.249:10]* வினைமுற்றி மீளும் தலைவன், பாகனிடம், 'வேந்தனுக்கு உற்றுழியுதவி, வினையை முடித்துவிட்டோம்; இனிப், பொன்னாற் செய்யப்பெற்ற சதங்கையையணிந்த நலம் பொருந்திய சிவந்த அடியால் மண்வடுக்கொள ஆயத்தோடு விளையாடும் என் தலைவி, என் நினைவால் துன்புறும் துன்பத்தை நீக்க இப்பொழுது விரைந்து தேரைச் செலுத்துக', என்றாள் *[அக.254:3]* சிறப்பு

வாய்ந்த கள்ளூரின் அழகிய நெற்றியினையுடைய இளையாளொருத்தியின் சிறந்த நலத்தினைக் கவர்ந்துண்டு. பின் அவளை அறியேன் என்ற தீவினையாளன் ஒருவனுக்கு, அவையோர், நீறுதலைப்பெய்து, தண்டம் வழங்கிய பொழுது அவ்வூரில் பேராரவாரம் எழுந்தது [அக.256:16] களவுக் காலத்தலைவனிடம், தோழி, 'நின்னை இரவில் பிரியும் பொழுதெல்லாம் தலைவி தோள் மெலிந்து, குட்டுவனது கழுமலத்தையொத்த அழகிய மாமை நிறம் வாய்ந்த மேனியின் பழைய நலம் கெடக், கண்துயிலாளாகி மனங்கலங்குகிறாள்', என்று கூறி வரைவு கடாயினாள் [அக.270:10] பிரிவின்கண், தலைவனைக் குறித்துத், தலைவி, புதிதாக வந்த பனிக்காலத்தே, நமது நலத்தினைக் கவர்ந்த பசலை, நம்மை வருத்தவும், அதனால் நாம் எய்தும் துயரினை அறிந்திலரோ, சான்றிப் பெண்டிராகிய நம் மனத்தின் மென்மைத் தன்மை அவர்க்கிலையோ! யான் என்னென உணர்வேன் என வருந்தினாள் [அக.273:5] தலைவன் சிறைப்புறமாகத், தலைவிக்குத், தோழி, 'மணியையொக்கும் மேனியின் சிறந்த நலம் கெடும்படித், துயரைச் செய்தவனுடைய மலையிலேவரும் நீரின்கண் நள்ளிரவில் வெறுக்கும் நமது துன்பம் நீங்க மூழ்குவேமோ' என்று கூறினாள் [அக.278:13] தலைவி, பொன் பூக்கள் நெருங்கியிருந்தாற்போன்ற, செருந்திப் பூக்களைச் சூடிய, நலம் பொருந்திய கூந்தலையுடையவள் [அக.280:2] 'நம் தலைவன், கழியைச் சார்ந்த சோலையில், அன்பு நீங்காத நெஞ்சமுடன், தனியனாகி வந்து, நம்மைக் கலத்தற்கு முன்னும், என் கண்கள் நெய்தற் பூவின் நீலமணியையொத்த மாண்புற்ற நலத்தினை நீங்கிப், பொன் போன்ற நிறத்தைக் கொண்டன. இஃதென்னையோ', என்று தலைவி தோழிக்குரைப்பாளாய்த் தலைவன் கேட்பக் கூறினாள் [அக.290:15] பிரிவிடை வேறுபட்ட தலைவியிடம், தோழி, 'நம் தலைவர் வேற்றுமொழி வழங்கும் தேயத்தைக் கடந்து சென்றுள்ளாராயினும், நினது அழகு நிலைபெற்ற தோளின் குற்றமற்ற சிறந்த நலத்தினை விரைந்து வந்து தந்தருள்வார்', என்று கூறினாள் [அக.295:18] பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம், தோழி, அட்டவாயில் என்னும் ஊரினுடைய பெரிய கதிர்களையுடைய வயல்களின் பெரிய அழகுபோன்ற நின் இளைய பரத்தையது பயன்மிகுந்த நலத்தினை நீ பாராட்டி அவளோடு கூடிச் செல்வதை நாங்களும் விரும்புகின்றோம். ஆகவே, பெருமானே சென்று வருக என்று கூறி, வாயின்மறுத்தாள் [அக.326:7] பகற்குறி வந்திருந்த தலைவன் இரவில் திரும்பிச் செல்லும் நெறியின் ஏதமஞ்சித் தோழி, அவனிடம், திரையனுக்குரிய பவத்திரி என்னும் ஊர் போன்ற என் தலைவியின் சிறந்த அழகையும், இமையையுமுடைய பெண்மை நலம் அழியும்படி நீ செல்லும் நெறியில் ஓதமும் பெருகிற்று, நச்சுப் பாம்புகளும் உள; ஆதலால் இரவிலும் இங்கேயே தங்கிச் செல்க', என்று கூறினாள் [அக.340:8] தலைவியின் பெண்மை நலத்தைப், பசலை, அருளின்றிக் கவர்ந்து வருத்த தலைவன் அவளைப் பிரிந்தான் [அக.347:2] மயில்கள், தமக்கியன்ற குரலை விடுத்துக், கேட்டற்கினிய குரலைப் பெற்றனவாகி, ஓரிடத்தே குழுமி ஆடுகின்ற தன்மையால் தோன்றும் சிறந்த நலத்தையொக்கும்படி தோழியரோடு சேர்ந்து சுனையாடாளாய்த் தலைவி தலைவனது பிரிவின்கண் வருந்தினாள் [அக.358:4] தலைவியிடம், தோழி, 'வானவரம்பன் என்பானுக்குரிய வெளியம் என்னும் ஊரையொத்த நம்முடைய மாண்புமிக்க பெண்மை நலத்தைத் தாம் போம் போழ்து நம்மொடு கைக்கொண்டு சென்றுவிட்ட தலைவரை நினைந்து கையறுதல் அறியாமை' என்றாள் [அக.359:7] எவ்வி என்பானுக்குரிய நீழல் என்னும் ஊரையொத்த நலம் பெற்ற பருத்த தோளையும், அழகிய நெற்றியையுடைய ஒரு பரத்தையொடு தலைவன் சென்றுவிட்டதையறிந்த தலைவி அழுத கண்ணளாயிருந்தாள் [அக.366:13] இற்பரத்தை, பரத்தையிற்பிரியும் தலைவனிடம், 'குட்டுவனுக்குரிய மாந்தை போன்ற என்னுடைய நலத்தை என்னிடம் கொடுத்துவிட்டு நீவிர் செல்வீராக' என்றாள் [அக.376:18] பொதியிலின்கண் துன்பமிக்க ஒரு பக்கத்திலே தங்கியிருந்து, உறக்கமின்றி, நம் காதலியின் இனிய புன்முறுவலையும், மென்மையாகிய சாயலையும், பெரிய பெண்மை நலங்களையும் இரவெல்லாம் நினைந்திருந்து, விடிந்தவுடன் அவளுக்கு அயலார் போலச் செல்லாநின்றாய்', எனத், தலைவன் பொருள்வயிற் பிரிவிடையே, தன்னெஞ்சொடு கூறினான் [அக.377:10] 'நம்மையே பெரிதும் விரும்பி உயிர்வாழ்ந்திருக்கின்ற நம் காதலியின் பழைய பெண்மைநலம் அழியும்படியாகப் பொருள் தேடும் முயற்சியை மேற்கொண்ட நெஞ்சே, என்று தலைவன் தன் நெஞ்சை விளித்தான் [அக.379:1]. காதற்பரத்தை, தலைவனிடம், 'ஆட்டனத்தியைக் காவிரியானது விரும்பி ஒளித்து வைத்துக் கொண்டதைப்போல, நினது மனைவி நின்னைவரவிடாமல் தடுப்பள்; ஆகவே, வஞ்சி நகரம் போன்ற என்னுடைய நலத்தை என்னிடமே கொடுத்துவிட்டுப் பின்னர் யாண்டேனும் செல்க', என்றாள் [அக.396:19]

தோழி, தலைவியிடம், 'தலைவனை நினைந்து நாம் மெலிதலை அறியானாகி, வேனிலின் வெம்மையை ஆற்றாத ஆனேறு போல, அவன் நமது மாட்சிமைப்பட்ட நலத்தை விரும்பி மெலிந்தான்', என்றாள் [குறு.74:5] பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனுக்காக வற்புறுத்தும் தோழியிடம், தலைவி, 'நம்முடைய பெண்மை நலம் கெட, மேனி நலம் மிகவும் மெலிய, நமது இனிய உயிர் நீங்கினாலும், அவரிடத்தில் பரிவு கூர்ந்த சொற்களைக் கூறாதே, அவர் நமக்குத் தந்தையும் தாயும் போன்றவரேயொழியக் காதலர் அல்லர்', என்று கூறி மறுத்தாள் [குறு.93:1(2)] தலைவன் வரையாமல் நீட்டித்தவழித் தலைவி, தோழியிடம், 'தலைவர் எனது பெண்மை நலத்தைப் புதிதுண்டமையால் உண்டாய தனிமை வருத்தத்தோடு எனது வலி அழிந்தும், தினைக் கதிரைக்

கிளியுண்டமையால் கூழையாகிய தினைப்பயிர் மழை பெய்தமையால் மீண்டும் தளிர்த்தாற்போல, என் வாழ்வும் தளிர்க்கும் என்ற நம்பிக்கையால் இன்னும் உயிரோடிருக்கிறேன்', என்றாள் *[குறு.133:5]* தலைவன் குறித்துச் சென்ற கார்ப்பருவத்தைக் கண்ட தலைவி, தோழியிடம், 'முல்லை மலரோடு, முல்லை நிலம் அழகைப்பெறும் கார் காலம் வந்தது. மாலை நேரமும் வந்துவிட்டது; எனது மாட்சிமைப்பட்ட நலம் கெடுதலை எண்ணி என்னைப் பிரிந்த தலைவர் மட்டும் இன்னும் வரவில்லை என்றாள் *[குறு.188:4]* 'ஊர் விழாவில் தழையாடை முதலியவற்றைக் கொடுத்துப் புனைந்துரைகளைக் கூறி, நம்முடைய தாய் பாதுகாத்த சிறந்த நம் பெண்மை நலத்தைத் தலைவர் கொள்ளை கொண்டார்', என்று தலைவி, தோழியிடம் கூறினாள் *[குறு.223:6]*. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன், பரத்தையை அறியேன் எனச் சூளுற்றானிடம், தோழி, 'தொண்டி என்னும் பட்டினத்தைப் போன்ற தலைவியின் பெண்மை நலத்தைத் தந்துவிட்டு, நினது சூளைப் பெற்றுச் செல்வாயாக' என்று கூறினாள் *[குறு.238:4]*. பிரிவினை ஆற்றுவாயோ எனக் கவன்ற தோழியிடம், தலைவி, 'தலைவன் எனக்குச் செய்த கொடுமை பலர் அறியும்வண்ணம் பரவி வெளிப்பட்டால், கடற்கரைச் சோலையிலே, விளையாடும் மகளிர் பாராட்டிய எனது பெண்மை நலத்தை நான் இழந்ததைக் காட்டிலும், மிகவும் இன்னாமையைத் தருவதாகும்' என்று கூறினாள் *[குறு.245:2]*. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம், தோழி, 'அழிசி என்பானது ஆர்க்காடென்னும் நகரத்தைப் போன்ற, தலைவியின் குற்றம் தீர்ந்த மாட்சிமைப்பட்ட நலமானது அழிவதைக் கண்டு அலராகின்றது. எமது ஊரின்கண் வருதலை, நினது மாலையைத் தருதலையொழிக; என்றுகூறி வாயின் மறுத்தாள் *[குறு.258:8]*. மிக்க நலத்தினை யுடையவளாகிய தலைவி வந்ததும், ஓரானுடைய நின் சீரில் வாழ்க்கை, பெருவளம் பெற்றது. அதனால் நீ பரத்தையாடி வருகின்றாய், என்றாள் தோழி *[குறு.295:5]*. தலைவன் கூடினால் தலைவியின் தோள்கள் மாட்சிமைப்பட்ட நலத்தினைப் பெற்றும், பிரிந்தால் மெலிந்தும் இருக்கும் *[குறு.299:7]* கார்காலம் வந்தும், தலைவன் வராததனால், தலைவியின் மேனியிலுள்ள நல்ல நலம் சிதைந்தது *[குறு.319:6]*. நலம் பொருந்திய தலைவியது தனிமைகெடத் தலைவன் தேர் வந்தது, என்றாள் தோழி *[குறு.338:8]*. தலைவி, தோழியிடம், 'தலைவனை வளைத்து நாம் இழந்த பெண்மை நலத்தைப் பெறலாம் என்கின்றாய். ஆயினும் நாம் உற்ற வறுமைத் துன்பத்திற்கு அஞ்சி, இரப்பவர் விரும்பி இரந்தவற்றைக் கொடுத்துப் பிறகு, கொடுத்த அவற்றைத் தருக, என்று சொல்வதைக் காட்டிலும், நமது இனிய உயிரை இழத்தல் துன்பந்தருவது அன்று', என்று கூறினாள் *[குறு.349:3]* தலைவனோடு தலைவி கொண்ட நட்பினால், கண்களின் மாட்சிமைப்பட்ட நலம் நீங்கத் தோள்கள் நெகிழ்ந்தன *[குறு.377:1]* 'தலைவனோடு சிரித்து மகிழ்ந்ததனால் உண்டான பயன், பழைய அழகு அழிந்து, தோளினது நலம் கெடத், துன்பத்தையுடைய நெஞ்சோடு, இரவுதோறும் தூங்காமல், பசலை உண்டாக, நாம் அழிவதுவோ', என்று, தோழி, தலைவியிடம் கூறினாள் *[குறு.381:1]*

தலைவனால் தழுவப்பட்ட தலைவியின் மெத்தென்ற தோள், நலனைப் பெற்றது. *[நற்.9:4]* 'தினையைத் தின்னும் கிளிகளை ஓட்ட நீ எழவில்லை; அங்ஙனம் எழாதிருப்பினும், நினது சிறந்த நலமெல்லாம் கெடும்படியாக அயலாரிருக்கும் இவ்விடத்து அழாதிருத்தலையேனும் செய்வாயாக', என்று, தலைவியின் இயற்கைப் புணர்ச்சியை யறிந்த தோழி, அறியாதாள் போன்று, தலைவியிடம் சொல்லாடினாள் *[நற்.13:1]* 'தலைவன் பிரிவால் தோள் நலம் கெடினும், நல்குவன், எனத், தோழித் தலைவியிடம் கூறினாள் *[நற்.14:1]*. பூப்போன்ற தலைவியின் நலத்தைப் புதுவதாக நுகர்ந்து உணர்ந்தாயல்லை; கற்புடைய பெண் குழவியைப் பேய் வாங்கக் கைவிட்டாற் போல, யாம் எம் நாணம் துறந்தேம்; என்று தலைவனிடம் தோழி கூறினாள்' *[நற்.15:4]* தலைவியின் பழைய நலம் கெடக் கண் நீரைவிடுதலன்றிக் காமத்தையும் காக்க அரிதாயின, எனத் தோழி வரைவுகடாயினாள் *[நற்.23:4]* மாந்தையன்ன தலைவி நலம் பண்டும் இத்தகைத்தே, என, மணமனைபுக்க தோழி கூறினாள் *[நற்.35:7]* தலைவன் முயங்கும் காலத்தில் சிறிதளவு கை நெகிழ்ந்தாலும் தலைவியின் நலம் கெடும் *[நற்.35:10]* தோழி, தலைவனிடம், தினை கொய்பதம் வந்துள்ளது; தலைவி மனையகம் புகுவாள்; அங்கு நீ வருதற்கு இயலாமையின், தலைவியின் மாட்சிமைப்பட்ட நலம் கெட்டழியும், என்று, கூறினாள் *[நற்.57:10]* தலைவனுடன் சென்றுவிட்ட தன் இளமகளைக் குறித்து, நற்றாய், 'சூடிய மாலை சிக்குண்டாலும், குறியவளை கையினின்றும் நழுவினாலும், காஞ்சியணிந்த அல்குலின் மேல் தொங்குகின்ற பொற்காசு முறை பிறழ்ந்து கிடந்தாலும், அவற்றைத் திருத்துதற்குத் தெரிந்திலளாய்த் தனது மாட்சிமைப்பட்ட நலமானது அழிந்தொழியுமாறு கலுழா நிற்கும், என் இளம் புதல்வியின் கண்கள், வெய்ய சுரத்திற் செல்லும் கடுமையாலே சிவந்து, ஒளி மழுங்கிக், கலக்கமடைந்தனவோ, என்றே வருந்துகிறேன்', என்றாள் *[நற்.66:10]* 'நோக்கினோராலே கெடாத நலத்தினையுடையாய்! திரையணங்கோ? தரைமகளோ? யார்? என்று தலைவியைத், தலைவன் வினாவினான் *[நற்.155:5]* தலைவனின் பரத்தையிற் பிரிவினால், தலைவி, முன்பு தலைவனால் நுகரப்பட்ட தனது மாட்சிமையுடைய நலனை இழந்தாள் *[நற்.167:9]* பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனின் வேண்டுகோளை ஏற்காமல், அவனது நலத்தை விரும்பாமல் தலைவி சினத்தோடிருந்தாள் *[நற்.180:5]* ஆர்க்காடன்ன் குறுமகள் (தலைவி), காதலனுக்கு விருப்பம் வருகின்ற பருத்த தோளின் நலத்தோடு, மானின் கண் போன்ற மருட்சியையுடைய கண்களையுடையவள் *[நற்.190:7]* இரவுக் குறிக்கண், தலைவன் வரும் நெறியினுடைய ஏதம்

அஞ்சிக் கலுழும் தலைவியிடம், தலைவன, கொல்லியம்பாவையானது, விரிந்த ஞாயிற்றின் இளவெயிலிலே தோன்றி நின்றாலொத்த, நினது சிறந்த நலத்தைக் கருதி யான் வருங்காலத்து, நினது மேனியொளியே எங்கும் பரவி இருளைப் போக்குவதாகத் தோன்றுதலானே, இம்மலையடியிலுள்ள நெறியானது எமக்குக் காவலையுடையதாகும்; எனவே, நீ அழுதுறைவதை விட்டொழிப்பாயாக, என்றான் [நற்.192:11] தலைவனுடைய பிரிவால், தலைவிக்குக் கண், தோள், கூந்தல் முதலியவற்றோடு பழைய நலமும் கெட்டன. [நற்.219:2] தலைவி, புலவராலே பாடுதற்கமைந்த, குற்றமற்ற அழகிய சிறிய அடிகளுடனே, பல்கிய பெரிய நலம் அமைந்த அடர்த்த கண்களையுடையவள் [நற்.256:2] பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம், தலைவி, 'விராஅன் என்பானுக்குரிய புனல் வாயிலை அடுத்த இருப்பையூர் போன்ற என்னை விட்டுப் பிரிந்து, எனது கூந்தல் நலம் பெற அணியப்பெற்ற பூமாலை வாடுமாறு செய்த மிக்க பகைவனல்லையோ நீ', என்றாள் [நற்.260:8] கலங்கள் ஓங்கித் தோன்றும் பெரிய துறையின்கண் வைத்துள்ள, உண்ணுதலால் செருக்கு மிகுகின்ற கள்ளின் சாடிபோன்ற, தலைவியினுடைய இளமையும், நலமும் தலைவனுடைய பிரிவினால் அழிதல் [நற்.295:8] அரசரின் போர்த்தொழிலில் வல்ல யானையின் புள்ளிகளையுடைய முகத்திலணிந்த பொன்னாற் செய்த நெற்றிப் பட்டத்தின் நலம் பொருந்திய தோற்றம் போல, சரக்கொன்றையின் கிளைகளில் அழகிய கொடிபோன்ற பூங்கொத்துக்கள் மலையின் மிகவுயர்ந்த இடத்தில் மலரும் [நற்.296:5] 'தலைவன் என்னைப் புணர்ந்த பொழுதெல்லாம் அழகு மிகும் தலைவன் பிரிந்த பொழுதெல்லாம் நீல மணியிடைப்பட்ட பொன்போல எனது மெய்யின்கண் நலத்தைப் பசலை கெடுக்கும் என்று தலைவி கூறினாள் [நற்.304:7] தலைவன், தலைவியின் மிக்க அழகுடன் பொலிந்து விளங்குகின்ற துத்தி படர்ந்த அல்குலின் நலனைப் பாராட்டினான் [நற்.307:4] தலைவனிடம் தோழி, 'நின்பால் மயக்கமுற்ற நட்பினால் மாட்சிமையுடைய இனிய நலத்தையும் ஒழியவிட்டு, நின்னுடைய உறவைக் கொண்ட, நினது காதலியின் தந்தையினுடைய சிறுகுடிகள் நிறைந்த பாக்கமானது, உயர்ந்த இனிய கள் வடிகின்ற பனைகளின் நடுவே உள்ளது; அங்கு வருக; யாங்களும் வருவோம்', என்று கூறினாள் [நற்.323:4] தலைவன் பிரிவதையறிந்து தலைவியினுடைய நீலமலர் போன்ற மையுண்ட கண்களின் புதிய நலம் சிதைந்து மிக்க நீர் வடிந்தது [நற்.325:7] பெதும்பைப் பருவத்தின் நல்ல நலனைப் பெற்றுக், கூந்தலையுடைய மின்னலைப் போல் விளங்கும் தலைவி, தலைவனைக் கூடியதனால் உண்டாகிய வேறுபாட்டினைச், சுனையில் நீராடியதனால் தோன்றியதாகத், தோழி தாயிடம் மாற்றிக் கூறினாள் [நற்.339:8] பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம், தோழி, 'திருவிழாவொழிந்த களத்துக் கூத்தி, வேறு திருவிழாக் களத்தை நாடிப்போவது போல, நேற்றுவந்து நின்னை முயங்கிய பரத்தையருடைய புதிய நலனையெல்லாம் கொள்ளை கொண்டு, இன்று பாணனால் கொணர்ந்து தரப்படுகின்ற பரத்தையருடையமெல்லிய தோளை அணையும்வண்ணம், விரைந்து செல்வாயாக', என்று கூறி, வாயின் மறுத்தாள் [நற்.360:3] எளிதில் கிட்டாத தலைவியைக் குறித்துத், தலைவன் 'பனை மடலாலே செய்த குதிரையேறி, நாடுகள், ஊர்கள் தோறும் சென்று ஒள்ளிய நெற்றியையுடைய அவளது நலனைச் சிறப்பித்துக் கூறி, மடலேறுவதைக் காட்டிலும், இறந்து போதல் நலமன்றோ', என்று கூறினான் [நற்.377:3] தலைவியிடம், தோழி, 'தலைவர் குறித்துச் சென்ற பருவம் வந்தது; அவர் விரைவில் வருவார்; அங்ஙனம் அவர் வருவதற்குள் வருத்தமுற்று, நெறித்த கரிய கூந்தலிலும், நெடிய தோளிலும் பழைமையாயுள்ள நலம் எல்லாவற்றையும் கெடுத்துக் கொள்ளாதே' என்றாள் [நற்.387:2] வரைவு நீட்டித்த தலைவனிடம், தோழி, 'நீ எம்மிடம் நடந்து கொள்ளும் இயல்பை ஆராய்ந்தால், நட்புடையனாய்த் தோன்றவில்லை; கடற்கரைக்கண் விளங்கிய மாந்தை நகர் போன்ற தலைவியை விரும்புகின்றாயல்லை; ஆதலால் நின்னாலிழந்த தலைவியின் நலனைக் கொடுத்துச் செல்', என்றாள் [நற்.395:10]

பரத்தையிற் பிரிந்த தலைவனைக் குறித்துத், தோழி, தலைவியிடம், 'தாய் இறக்கும்படி பிறக்கும் நண்டுகளையும், தன் பிள்ளையையே தின்னும் முதலையையும் உடைய ஊரன் ஆகையினாலே, தன்னால் தழுவப்பட்ட மகளிருடைய நலத்தையெல்லாம் நுகர்ந்த பின்னர்த் துறந்து விடுகிறான் போலும்', என்று கூறி வாயின் மறுத்தாள் [ஐங்.24:5] பரத்தையிற் பிரிந்து, பாணனொடு வந்த தலைவனிடம், தலைவி, 'இனிமேல் உன்னுடையபாணன், யாருடைய நலம்கெடும்படி பொய்கூறுவானோ, யான் அறிகிலேன்' என்றாள் [ஐங்.49:4] தன்னிடம் பரத்தைமை இன்றெனப் பொய் கூறிய தலைவனிடம், தோழி, 'பகல் போன்ற ஒளி கொண்ட விளக்குகள் உண்மையால் இராக் காலத்தை அறியாத சோழர்களது ஆமூரையொத்த, தலைவியின், நலம் பெற்ற ஒளியையுடைய நுதல், இன்று, அழகிழந்து ஒளிமழுங்குதலானே, இப்பொழுது நீ தெளிவுறுத்துக் கூறிய இம்மொழிகள், பயனில் பொய்மொழிகளேயாம்', என்றாள் [ஐங்.56:3] 'வேள்வித் தீயினையும், கழனிகளையும் உடைய தேனூரன்ன இத்தலைவியின் பெண்மை நலம் தனித்தொழியும்படி, நீ, பிரிந்து செல்லும் அளவிற்கு, நின்னுடைய பரத்தை, சிறந்த பெண்மை நலம் வாய்ந்தவளோ', என்று தலைவனிடம், தோழி வினவினாள் [ஐங்.57:3,4] 'எம்முடைய பெண்மை நலம் கெட்டொழிவதாயினும் பெருமானே, பிறரை முயங்கிய நும்தோளை யாம் முயங்கேம்', என்று பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம், தலைவி புலந்து கூறினாள் [ஐங்.63:3] தலைவியினும், பெண்மை நலத்தில், தானே சிறந்தவள் என்று காமக்கிழத்தி தருக்கினாள் [ஐங்.67:3] 'பெருமானே, பஞ்சாய்க்கோரை போன்ற கூந்தலையும்,

வேங்கைப்பூப் போன்ற பொன்னிறத் தேமலையும் உடைய, இளையாள் ஒருத்தி, உன்னோடு நீர் விளையாட்டயர்ந்த மகிழ்ச்சியாலே, வானவர் மகளிர்க்கும் இறைவி என்னுமாறு, தன்னுடைய பெண்மை நலம் சிறந்து மேம்பாடு எய்தினள் என்று கண்டோர் கூறுவர்' எனத் தலைவி, தலைவனின் பரத்தைமையைக் கழறி வாயின் மறுத்தாள் *[ஐங்.76:2]* 'மழை முதன் முதலாகப் பெய்த சிவந்த நீரில் நலத்தினாலே தகுதியுடைய மகளிர்க்குத் தோள் துணையாகி நீராடிக் கண்சிவந்தனர். யாம் புலப்பேமல்லேம்; பொய்யாது உரை', என்று தலைவி, தலைவனிடம் வினவினாள் *[ஐங்.80:2]* செவிலிக்குத், தோழி, 'அன்னை வாழ்க; பண்டு நமது ஊரார் உறங்கும் சமயத்தில் தனது நலம் மிகவும் மழுங்கி வந்தவனுடைய மகனின் ஊர் அழகெல்லாம் உடையது', என்றாள் *[ஐங்.104:2]* 'பிரிவில் மெலிந்திருந்த தோள்கள் இழந்த அந்நலம் தலைவன் வரைய வந்தமையால் பண்டையினும் சிறப்புப் பொலிகின்றது', என்று தலைவி தோழியிடம் கூறினாள் *[ஐங்.120:1]* 'பாணனே, நும் தலைவனை விரும்பிய மகளிரும் தம்முடைய பழைய நலத்தை மீண்டும் பெறுவரோ', என்று தலைவி பாணனை வினவினாள் *[நற்.137:3]* 'பெருமானே, எமது அழகினைச் சிதைத்துப் பின்னர் என்னிடம் அமைந்துள்ள மாட்சிமைப்பட்ட நலத்தினைப் பாராட்டும் முகமாய், எம்மை மயக்குகின்ற நின்னினும், நினது பாண்மகன், மகளிரின் நலத்தினை மிகுதியாகச் சிதைப்பான்', என்று தலைவி, தலைவனிடம் கூறினாள் *[ஐங்.139:2,3]* இற்செறிப்புற்று உறங்கும் தலைவியை உடன்போக்கிற்குச் செலுத்தும் தோழி, அவளிடம், 'நின்னுடைய ஒளி மழுங்கிய நுதல் மீண்டும் தனக்குரிய அழகு பொருந்தும்படியாகத் தலைவன் வந்துற்றனன்; கண்களைத் திற; நினது நலத்தைக் கவர்ந்து கொண்ட பசலை நோயை நாம் எள்ளி நகைத்திடுவோம்', என்று கூறினாள் *[ஐங்.200:4]* 'பேதையராகிய யாம் நின்னை நயந்தனம்; எம்மைப் பெண்டிர் என இரங்கி, நீ, அருள் செய்தாய். பலரும் ஆராய்தலுடைய பெறற்கரிய தலைவியின் பெண்மை நலம் இவ்வாறு வாடியழியுமோ' என்று தோழி தலைவனிடம் கூறினாள் *[ஐங்.275:5]* தலைவி, தோழியிடம், 'தலைவன் தன்னைக் கேண்மை கொண்ட நமக்கு என்றென்றும் மறத்தற்கியலாத துன்பத்தை வழங்கி, ஒருமுறை கண்டமையாது, மேலும் மேலும் காண்டற்குக் காரணமான நம் பெண்மை நலம் முழுவதையும் கவர்ந்து கொண்டனன்' என்றாள் *[ஐங்.278:5]*. தலைவி, தன் நலம் பொருந்திய கையால் தலைவனின் கண்களை மறைய வந்து பொத்தி விளையாடினாள் *[ஐங்.293:2]* தலைவன் பன்முறையும் ஆராய்ந்து இவை நல்லன என்று கூறுதற்குக் காரணமான தலைவியின் பெருநலம் அவன் பிரிந்தமையால் பசலையுள் மூழ்கியழிந்தது *[ஐங்.318:1]* தலைவன் பொருள்வயிற் பிரிந்தபொழுது, அழுத கண்ணளாயும், தலைவனால் பலகாலும் பாராட்டப்பெற்ற பெண்மைப் பெருநலம் சிதைந்தழி பவளாயும் உள்ள தலைவியை நினைந்து வருந்தி, அவன் இடைச்சுரத்தின்கண் செலவினைத் தவிர்ந்தான் *[ஐங்.330:3]*. பொருள்வயின் பிரிந்த தலைவன், தலைவியின் பெண்மை நலத்தை நுகர்தற்கு எண்ணி, பெரும்பொருள் ஈட்டும் எண்ணத்தைவிட்டொழித்து இடையிலேயே திரும்பினான் *[ஐங்.355:1]*. 'பெண்மை நலத்தால் மாட்சிமையுற்ற என் காதலியாகிய எயிற்றியைப் போலக் கண்டோர் பெரிதும் நயக்கக் காரணமான நன்னலம் உடையையாய் இருத்தற்கு மாந்தளிரே, நீ என்ன நோன்பு நோற்றனையோ', என்று தலைவன் மாந்தளிரை நோக்கிப் பேசினான் *[ஐங்.365:3]*. உடன்போக்குச் சென்ற தலைவியின் தாய், அவள் வளர்த்த கிளியைப் பார்த்து, 'இது, சுழலும் விழிகளையும், நலம் மிகுந்த ஒளி நுதலையும் உடைய, பச்சைக் கிளியை ஒத்த என் மகள், விரும்பித் தன் கையிலேந்திய பச்சைக் கிளியாகும்', என்று மனங்கலங்கியழுதாள் *[ஐங்.375;தி.8:2]*. உடன்போக்குப் போகும் தலைவி, பாலை நெறிக்கண், தமக்கெதிரே வரும் அந்தணரிடம், 'அந்தணீர், நீர் போகும் வழியிலுள்ள, எம்மூரிலுள்ள, என் தோழியரிடம், தாய் விரும்பி வளர்த்த, பலரானும் ஆராயப்படும், என்னுடைய நலம் மேலும் புதுமையுற்றுப் பொலியும் வண்ணம் தலைவனோடு சென்றுவிட்டேன் என்பதைக் கூறிச் செல்லுங்கள்', என்று கூறினாள் *[ஐங்.384:3]*. பொருள்வயின் பிரிந்த தலைவன், 'முல்லை நிலமே! நீ கொன்றை மலரோடும், காயா மலரோடும், தோன்றிப் பூவோடும் பெருநலம் பொருந்தித் திகழுகின்றாய்; என்னைப் பிரிந்ததால் தேய்ந்து மெலியும் நலத்தினையுடைய என் காதலியை நினைந்து நின்னைக் கண்டு மகிழ விரைந்து வருகின்றேன்', என்று முல்லையிடம் கூறினான் *[ஐங்.420:3,5]*. பொருளின் காரணமாக, அடிக்கடிப் பிரிந்து செல்லும் தலைவனின் பிரிவைத், தலைவியின் நலம் கிளர்ந்து விளங்கும் தோள்கள், தடுத்தன *[ஐங்.421:4]*. வினைவயின் பிரிந்த தலைவன், கார்ப்பருவத்திலும் வாராமையால், தலைவியின் தோள்கள், ஒளிமழுங்கிப், பசலை பாய்ந்து, மின்னுகின்ற அணிகலன்கள் நெகிழ்ந்துருகும்படி மெலிந்து, தமது பழைய பெருநலத்தினை இழந்தன *[ஐங்.455:5]*. பெருமழையில் அடிபட்டுச் சிந்திக் கிடக்கும், கொன்றையின் மலர்கள், பிரிந்த தலைவியின், மாட்சிமையுடைய பெருநலனை இழந்து பசலையுள் மூழ்கிய கண்களைப் போன்று, நிறங்கெட்டிருந்தன *[ஐங்.458:4]*. வினைவயின் பிரிந்த தலைவன், குறித்த பருவத்தில் வாராமைகண்டு வருந்திய தலைவியிடம், தோழி, 'நம் தலைவர், நம்மால் வென்றடக்கப்பட்ட பகைவருடைய நாட்டின்கண் உருவாகின்ற அணிகலன்களை, ஈட்டிக் கொணர்ந்து, நமக்கு வழங்கும்பொருட்டே, காலம் நீட்டித்துள்ளார்; ஆயினும், நின்னுடைய இயற்கை நலம்மிக்க கூந்தல், மேலும் அழகு பெறும்படி, மலர்களை மாலையாகத் தொடுத்துச் சூட்டுதற்கு விரைந்து வருவார்; கவலைப்படாதே', என்று கூறினாள் *[ஐங்.463:2]*. வினைமுற்றி, வேந்தனால் விடுக்கப்பட்ட தலைவன்,

பாகனிடம், 'பாகனே! நல்ல நுதலையுடைய என்னாருயிர்க்காதலி, தனது பழைய பெருநலத்தினை மீண்டும் பெறும் பொருட்டுத், தேரினை விரைந்து செலுத்துக', என்றான் *[ஐங்.483:4]*. 'பாகனே, நினைவாலுண்டாகும் விலக்குதற்கரிய துன்பத்தினின்றும் என் காதலி நீங்கவும், யானும் அவளுடைய தோள்களின் நலம் மீண்டும் வந்தெய்தும்படி அவற்றைத் தழுவிக் கொள்ளவும், தேரினை விரைந்து செலுத்துக', என்றான் *[ஐங்.485:2]*. பிரிந்திருந்த தலைவியிடம், தலைவன் 'பாவையே, நின்னுடைய பின்னுதலுற்ற கரிய கூந்தலின் இயற்கைப் பெருநலத்தினை மேலும் அழகுறுத்தக், கார்ப்பருவமானது, வரும் வழியில், மலர்களை நிறைத்திருந்தன', என்றான் *[ஐங்.495:3]*. தலைவனைப் பிரிந்து வருந்துகின்ற தலைவியிடம், தோழி, 'பிடவும், முல்லை முதலியன மலர்ந்த இக்கார்ப்பருவத்தினைக் கண்டால், நம் காதலி, வருந்துவள் என்று கருதித், தலைவர், போர்த்தொழிலுக்கு 'மேலுஞ்செல்லாது நினது அழிந்தொழிந்த நலத்தினை மீளக் கொணர வந்துவிட்டார்; வருந்தாதே', என்று கூறினாள். *[ஐங்.499:5]*.

பிரியப்போகும் தலைவனிடம், தோழி, 'நீ பிரியப் போவதை அறிந்தே, துன்புறுந் தலைவி, நீ பிரிந்தாயானால், நலம் கெட்டு இறந்துபடுவள்; நீ கொண்டு வரும் பொருள் இவள் உயிரை மீட்டுத் தருமோ', என்று, செலவழுங்கக் கூறினாள் *[கலி.7:19]*. தாம் செல்லும் காட்டில் வெம்மையின் கொடுமையால் களிறு பிடிக்கு நீரூட்டுதலும், புறவு தன் பெண் புறவிற்குத் தன் சிறகால் நிழல் செய்தலும், கலைமான், பிணைக்குத் தன் நிழலைத் தருதலும் ஆகிய இத்தகைய நன்மைகளைக் காணும் தலைவர், தலைவியின் புனைந்த நலம் கெடும்படியாக நீட்டித்து இரார்; விரைந்து வருவர்', என்று, தோழி, தலைவியைத் தேற்றினாள் *[கலி.11:20]*. நலத்தைப் பெறுகின்ற ஒளியமைந்த நுதலினையுடையவளே! செய்விலங்குக் காலையுடைய கட்டிலில் துயிலும் நீ, எம்மொடு உடன் வரின், மெய்ம்மான் குரல் கேட்பின் அஞ்சுவை', எனத், தலைவன் தலைவியிடம் கூறினான் *[கலி.13:14]*. தலைவியின் இயற்கை நலம் கெட்டு வருத்தத்திலே அழுந்துமாறு, தலைவன் பொருள் வயிற் பிரிந்தான் *[கலி.16:5]*. தன்னையும் அழைத்துச் செல்லாது பிரியக்கருதும் தலைவனிடம், தலைவி, தோளின் நலத்தை நுகர்ந்து கணவரால் கைவிடப்பட்ட மகளிர், நீர் வேட்கையாலே, கோலித் தண்ணீர் குடிக்கப்பட்ட எச்சிலாற்பயன்படாத குடையோலையையொப்பர்', என்று, தனது நிலையைக் கூறி வருந்தினாள் *[கலி.23:8]*. 'அயலாரைக் காப்பாற்றி, அயல் நாட்டிலே வாழ்பவராகிய தலைவர், குற்றமற்ற என் நலம் கெடாமல் அருளுதலைச் செய்வாரோ?', என்று, தலைவி கூறினாள் *[கலி.26:14]*. ஆரவாரிக்கும் குயில்கள் இகழும்படியாக, நலம் பொலிவுபெற்ற, நமது நிறம் கெடும்படியாகத், தலைவர் நம்மை மறந்துவிட்டனர்; நம் சாயல் கெட்டமை கண்டு மலைமேலே மயில் ஆராவரித்து ஆடும்படியாக, ஊரிலுள்ளார் அலர் தூற்றும்படியாக நம்முடைய இயற்கை நலம் கெடும்படியாக அவர் தாம் விரும்பாத நம்மை மறந்துவிட்டார்', என்று, தலைவி வருந்தினாள் *[கலி.27:10,14]*. கருக்கொண்டு அழகு வாடிக்கிடந்த ஒரு பெண், பின்பு, மகவீன்று, சுற்றத்தார் மகிழ்வுறப் புத்தழகு பெற்றுப் புதல்வனாலே குடியைக் காத்தாற்போலே, உழவரால் பயிரை உண்டாக்கின நிலத்திற்கு இடையில் வந்த பசுமை தீர்ந்த நோயின் வருத்தம் நீங்கும்படி நிலமானது புதிய நலம் பெற்று விளங்கும்படியாக இளவேனிற்காலம் வந்தது *[கலி.29:4]*. பிரிந்திருப்பாரை அகத்திடாது, புறத்தே தள்ளி இகழ்ந்து, அலர் தூற்றும் கொடுமையைச் செய்தது இளவேனில்; அது கண்டு, எனது இனிய நலத்தைப் பசப்பு மறைத்துக் காப்பது போல ஊர்ந்து நின்றது', என்று தலைவி கூறினாள் *[கலி.33:14]*. 'தாதையுண்ணும் வண்டு அப்பூவைத் துறக்குமாறு போல, பெண்டிருடைய நலத்தை நுகர்ந்து அவரைத் துறக்கின்றவன்', என்று தலைவி தலைவனை இயற்பழித்தாள் *[கலி.40:24]*. புலியை வீழ்த்திய யானை, அயர்ந்த உறக்கத்தின் கண், கனவில் புலியைக் கண்டு வெருவி எழுந்து, புதிய பூக்களோடு அருகில் நின்ற வேங்கையைப் புலியெனக் கருதி, அதன் சிறந்த நலம் கெடும்படி அழித்துச் சினம் தணிந்து, தான் அழித்தது புலியன்று; வேங்கை மரமென்பதையறிந்து அதைப் பார்க்கவும் நாணித் தலை கவிழ்ந்து சென்றது *[கலி.49:6]*. தலைவனைப் பிரிந்த, தலைவியின் நலம் வாடும்படியாக, நனவிலே வந்த கொடுந்துயரம், கனவிலேயும் வந்து அவட்குத் துன்பத்தையளித்தது *[கலி.53:18]*. காதலன், காதலியின் நரந்தம்பூ நாறும் கரிய கூந்தலின் முடியை ஒழியாமல் மிகப் பிடித்து, அதிலே, நலம் பெறும்படிகட்டமைந்த ஒரு மாலையை, விரலாலே முறையாகச் சுற்றி, அதனைக் கூந்தலோடு முகர்ந்து பார்த்தனன் *[கலி.54:7]*. காதல் பித்தேறிய காதலனொருவன், தான் காதல் கொண்டவளிடம், 'அன்னம் போன்ற நடையையும், மயிலைப் போன்ற சாயலையும், புறவைப் போன்ற மடப்பத்தையுமுடைய நின்னுடைய இந்நலம் நின்னைக் கண்டவர்களை மயக்கமுறுத்துமென்பதை நீ அறிவையோ, அறியாயோ', என்றான் *[கலி.56:16]*. ஊடிய மகளிரின் ஊடலைத் தீர்க்க முயங்காமல், அவரை நலம் கெடும்படி செய்து சேரிப்பரத்தையருடைய வேட்கையைத் தீர்ப்பவன், என்று தலைவனைக் குறித்து ஊரில் பழிமொழி எழுந்தது *[கலி.68:12]*. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம், தலைவி, 'எம்நலம் அழியும்படியாக எம்மைத் துறந்து விட்டாய்; அதனால் நாளும் துயிலாத கண்கள் சிறிது பொழுது துயிலப் புகும் வேளையில் நீ பரத்தையர் இல்லில் நடத்தும் விழாவின் ஒலிவந்து அச்சிறு உறக்கத்தையும் கெடுக்கின்றதே', என்று கூறினாள் *[கலி.70:7]*. முயக்கத்தின்போது, பூப்போலும் கண்களையுடைய மகளிரின் புனைந்து செய்யப்பட்ட நலம் கெடும் *[கலி.75:31]*. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம், தலைவி, 'குளிர்ந்த தளிரிடத்தே வீழ்ந்து அழகு பொலிவு பெற்ற தாது போலும் நலம் பொருந்திய

மாமையையும், சுணங்கையும் எம்மிடத்தினின்றும் போக்கினாய்; என் கண்களின் உயர்ந்த நலம் தொலையப், பழைய நலம் இழந்துவிட்ட என் கண்கள் துயில் பெறுதலைத் தருமாறு நான் உன்னிடம் வேண்டவில்லை', என்று அவனது கொடுமையைக் கூறினாள் *[கலி.77:8,12,13]*. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம், தலைவி, 'நீ பரத்தையிடமிருந்து இங்கு வருதல், இவளுடைய நலம், நாம் பிரியும்பொழுது நிறம் கெட்டுப், புணருங்காலத்துப் பொலிவுபெறும் என்பதோ கதிரவனைக் கண்டு அலர்ந்த தாமரைப்பூ அவன் மறையுமளவில் குவிந்தாற்போல, எனது தொடர்பு நீங்கின், இவளின் நலம் வறிதுபட்டிருக்கும் என்னும் தகைமைப்பாடோ?' என்று வினவினாள் *[கலி.78:2,16]*. தலைவனின் புதல்வனைக் கண்ட அவனுடைய பரத்தையர், 'எம் நலத்தின் புதுமையை நுகர்ந்த பின்னர் எம்மை நினையாத நுந்தையால் உண்டான துயரமெல்லாம் போக்குவோம்', என்று கூறி அக்குழந்தையுடன் விளையாடி மகிழ்வர் *[கலி.83:21]*. தலைவனுடைய பரத்தையருள் தன் நலத்தை மிகுத்துப் புகழும் ஒருத்தி, அவனின் புதல்வனைக் கண்டபோது அப்புதல்வனை அழைத்துப்போய் அணிகலன்களை அணிவித்து அனுப்பினாள் *[கலி.84:34]*. குழந்தையின் கழுத்தில், அதன் வாயின் நீர் ஒழுகி நனைக்கும்படியாகப், பொன்னாற் செய்த மழுவோடே, வாளையும் அணிதலைச்செய்யும் நலத்தோடு கூடிய பூணினைத் தாயார் அணிவிப்பர் *[கலி.86:4]*. பூங்கொடியைப் போன்ற பெண்டிர், பூங்கொடியிலுள்ள பூக்களைக் கொய்ய, அப்பூக்களிலுள்ள வண்டுகள் அம்மகளிரின் நலத்தை நுகர்வன போலக் கூட்டமாய் அவரை மொய்த்தன *[கலி.92:31]*. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன், யானையைக் கண்டுவந்தேன் என்று தலைவியிடம் கூற, அவனிடம், தலைவி, 'ஆம்; நீ கண்ட யானை தனது நலத்தைக் காட்டி அவ்வழகாலே ஒருவரும் போகாதவாறு, காலைத் தடுத்து வீழ்க்கும்; தன்னைக் கண்டாருடைய நலமாகிய கவளத்தை, முத்தையொக்கும் நகையினையுடைய வெண்பற்களைத் திறந்து விழுங்கும்', என்று கூறித் தலைவனின் பொய்ம்மையை நகையாடினாள் *[கலி.97:17,20]*. தலைவியைப் பிரிந்த வேந்தனாகிய தலைவனிடம், தோழி 'உன்னுடைய முரசம் இவ்வுலகத்தையே காக்கின்றது; அக்காவலுக்கு இவளும் உட்பட்டவளே; மூங்கில் தன் நலம் இழத்தற்குக் காரணமான தோள் பழைய அழகு கெடுமாறு வருந்துகின்ற இவளுக்கு அருள்வாயாக', என்று கூறினாள் *[கலி.99:16]*. எத்தன்மையோர் வருத்தமும் களைகின்ற நீ, புணரும் துணையென்று கருதிப் புணர்ந்தவள் தனது இயற்கை நலத்தையும் இழந்தாள்; இது நினக்குக் கொடிதென்று நின்னையான் கோபித்தல் வேண்டுமோ? நீயே இவளுக்கு அருள் செய்வாயாக', என்று தோழி தலைவனிடம் வேண்டினாள் *[கலி.100:20]*. தலைவன், தலைவியிடம், 'மத்தைச் சுற்றிய கயிறு போல, நின்னுடைய நலத்தைச் சூழ்ந்து சுழன்று திரிகின்றது என்னுடைய நெஞ்சு' என்றான் *[கலி.110:10]*. 'நலம் மிகப் பெருகிய, விருப்பம் வருகின்ற பெருமையையுடைய மெல்லிய தோளினையுடையவளே! நீ தந்த நோயினின்றும் உய்யும் நெறியை உரைத்துச்செல்' என்றான் ஒருவன் *[கலி.113:1]*. தலைவனைப் பிரிந்த தலைவி, 'மாலைப் பொழுதை விளித்துக், காதலரைக் கூடியிருக்கின்ற மகளிருடைய அழகைக் கடியாத நீ, கயங்கள் பூத்த போது போல, நின்னைக் கண்டு மனங்குவிந்த என்னுடைய உயர்ந்த நலத்தை மட்டும் இகழுகின்றாயே; மகளிர் நனவில் புணர்ச்சியில் பெற்ற புதிய நலத்தைக் கடியவில்லையே நீ', என்று கூறினாள் *[கலி.118:10,16]*. காதலனைப் பிரிந்து காதலியின் நலம் அழிந்த முகத்திற்கு, ஞாயிற்றினது மிக்க ஒளியாலே தன் ஒளி குன்றுகின்ற உச்சிக்காலத்து மதி உவமையாதல் *[கலி.121:18]*. தோழியரின் தோள்களுள்ளும் அழகு பெற்ற தலைவியின் தோள்கள், தலைவன் பிரிதலால் தம் தொன்னலத்தையும் (இயற்கையழகையும்) அணிகளால் பெற்ற செயற்கையழகையும் இழந்தன *[கலி.124:11]*. தலைவியின் இளமைப் பருவத்து எழுச்சியின் நலம், மேன்மேல் வளர்ந்து செல்லும்படி தலைவனது தொடர்பு அவளுக்கு அமைந்தது *[கலி.125:13]*. 'என் தலைவியினுடைய மதி போன்ற முகம் ஒளியினைப் பெறப், புதிய நலம் அவளுக்கு எழுதலைச் செய்ய, நினது தேர், குதிரையைப் பூணுவதாக', என்று தோழி தலைவனிடம் வரைவு கடாயினாள் *[கலி.126:22]*. தலைவனின் பிரிவிலே, தன் அறிவு வருத்தத்தே அழுந்தி அழுதலால், தலைவியின் ஆராய்ந்த நலம் குறைய வளைகள், கழன்று விழுந்தன *[கலி.127:12]*. மூங்கில் தன் நலம் இழத்தற்குக் காரணமான தோள்களையுடையவள் தலைவி *[கலி.127:16]*. 'உன்னைப் பிரிந்து உயிர் வாழேன்', என்று கூறிய தலைவனிடம், 'நீ கொண்ட என் நலத்தை இனித் தாராய்', என்று அவனை வளைத்துக் கொள்வாள் போலத் தலைவி, மாவின் தளிரை யொக்கும் மாட்சிமையுடைய நலத்தையிழந்து பரந்த பசலைநிறத்தாலே பகற்பொழுதில் எடுத்த விளக்கைப் போல் ஒளியிழந்தாள் *[கலி.132:11]*. புன்னை மரத்தின் கீழ்த் தலைவனைப் புணர்ந்து பிரிந்தமையால் தலைவி சிறந்த நலத்தையும், திருவின் அழகு போன்ற தனது நலத்தையும் இழந்தாள் *[கலி.135:9,12]* நீ வரைந்து கொண்டால் இவளது அழிந்துபோன நலம் உழைப்பாளியிடத்துத் சேரும் பெரும்பொருளினும் பெருகும்; அதற்குத் தேரேறி வருவாயாக என்று தோழி தலைவனிடம் கூறி வரைவு கடாவினாள் *[கலி.136:21]* மின் விளங்கும் நுடக்கமும், கனவின் தோற்றமும் போல் தன் வடிவைக் காட்டித் தலைவி தலைவனது நெஞ்சை அவனிடத்தே நில்லாமல் கவர்ந்து கொண்டு தன் நலத்தை அவன் காணாதவாறு மறைத்தாள் *[கலி.138:7]* காதல் கைகூடாதவன் தன் காதலியின் சிறந்த நலத்தைப் பாடிக் கொண்டு மடலேறி வருவான் *[கலி.141:6]* 'முன்னர் என்னை விரும்பிப், பின்னர், என் நலத்தைச் சிதைத்தானை எதிர்ப்பட்டால் கூடாமல் என்செய்வேன்' என்று

தலைவி உரைத்தாள் [கலி.142:46] பிரிந்தவள் தலைவனைச் சேர்ந்தவுடன், கலங்கிய நீர், தேற்றாவின் விதையினால் தெளியுமாறு போலத் தன் சிதைவு தெளிந்து பழைய நலத்தைப் பெற்றாள் [கலி.142:65] மாலைக் காலத்தில் மகளிர் தளிர்சூடி ஆடவரோடு மகிழ்ந்துலாவி நலம் பெறுவர் [கலி.143:28] 'தன் தோள் நலத்தை உண்ட கணவனைக் காணப் பெறாமல் இவள் தெருவிலே வந்து எங்கும் திரிகின்றாள்' என்று கூறுகின்ற ஊர்ப்பெண்டிரே; கேளும்; வண்டு நுகர்ந்த பூவின் புதுநலம் கெட்ட நிலைமைத்து என் நிலைமை காணுங்கோள் என்று தலைவி தலைவனைப் பிரிந்து கலங்கி மொழிந்தாள் [கலி.147:7] 'மாலைக்காலமே; மகளிரின் நலத்தைக் கைக்கொண்டு, பின்பு அவர்க்குக் கொடாத ஆடவராலே, தம் அழகு போன தனிமையிடத்தே நின்று அலந்த மகளிர்க்குத் துணையாகாது வருந்துதல், நினக்குத் தக்கதன்றே', என்று பிரிந்த தலைவி கூறினாள் [கலி.148:14]

முருகவேளின் மனைவியாகிய தேவசேனை, முருகனிடம், 'நீ தவறுடையை அல்லை; நின்னியல்பு அறியாமல் நின் மயலிற்பட்ட மகளிரே தவறுடையர்; ஆதலால் யான் நினது மாட்சிமையுடைய நலத்தை நுகரக் கடவனோ', என்று அவனுடைய வழிமுறைக்கிழத்தியாகிய வள்ளியின் காரணமாக ஊடிச்சென்றாள் [பரி.9:31] தனக்குச் சிறந்தவனாகிய கணவன் நன்மையல்லாத பரத்தையரது இல்லத்திற்குச் சென்று அவரது தோளினுடைய நலத்தை நுகரும் பொருட்டுத் தன்னை நீத்துப் போயினன் என்று அவனோடு ஊடியிருந்தவள் வையையில் புதுவெள்ளத்தைக் கண்டவுடன் ஊடலைவிட்டுக் கணவனுடன் சேர்ந்து நீராடச் சென்றாள் [பரி.12:46] வையையாற்றில் வெள்ளம் வந்தமையால் மலர்ந்த பூக்களைச் சுமந்து பொலிந்த வையையின் நீர்புக்கு நிறைந்த கழனிகள், இசைக் கருவிகளுடன் ஆடல்மகளிர் கூத்தாடுகின்ற கூத்தாட்டரங்கினது ஒப்பனை செய்யப்பட்ட நலத்தினை ஒக்கும் [பரி.16:13] நறுமணமுடைய பூம்பொழில்களினும், குளங்களினும், வையையாற்றிடைக் குறைகளிடத்தும் வண்டுகள் மதுவுண்டு களித்து இசைபாடும்பாடி பூக்களாலே ஆகிய நலம் திசைகள் எங்கும் பொலிந்து நின்றது [பரி.16:18]

நயன் - 1 காண்க.

**2.** நன்மை. முருகவேளின் திருவடியிற் செல்லுதற்குரிய தலைமை பெற்ற உள்ளத்தோடு நலத்தையே-நன்மையையே-செய்யும் மேற்கோளுடனே நெறியில் சென்றாயானால் வீடுபேறடைவாய், என்று முருகனின் அருள் பெற்றான், பெறாதானிடம் கூறினான் [முரு.63]

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பொருநர்க்கு நலத்தைத் தரும் பேரணிகலன்களைக் கொடுத்தான் [மது.104] வேறுபட்ட பல பெயர்களையுடையவாகிய அழித்தற்கரிய பகைவரின் அரண்களைத் தண்டத் தலைவர், பாண்டியன் நெடுஞ்செழியனின் ஏவலாற் சென்று கைக்கொள்ளும் பொழுதெல்லாம், அவர்கள் அவ்வெற்றி குறித்து நாடோறும் உயர்த்திய நலம் பொருந்திய வெற்றிக்கொடிகள் எங்கும் பறந்தன [மது.368] மதுரையிலுள்ள வரைவின்மகளிர், பலருடன் புணர்ந்த புணர்ச்சியால் குலைந்த ஒப்பனைகளைப் பின்னும் அழகு மிகுகின்ற நலத்தைத் தரும்படியாகச் அணி செய்தனர் [மது.565] தலைவன், தனது நலத்தையுடைய தலையிலே பல்வேறு மலர்களாலாய மாலையினைச் சூட்டி வில்லேந்திக், கச்சை கட்டிக், கழல் தயங்க வந்தான் [குறி.116]

பொருள் முற்றி மீளலுறும் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுவானாய், 'நெஞ்சே! உறையூரையொத்த பெரும்பொருளை முற்றினம் ஆயின், நம் தலைவியின் மார்பகத்துப் பூண்கள் நலத்தைத் தருகின்ற நம் மார்பிலே வடுக்களைச் செய்ய, ஆன்பொருநை என்னும் ஆற்றின் மணலினும் பலமுறை முயங்குகம் வா', என்று கூறினான் [அகம்.93:15] சோழவேந்தரால் புரக்கப்படும் ஆலமுற்றம் என்னும் ஊர், நலம் பொருந்திய நற்புகழை உடைய நான் மறையாய பழைய நூலை அருளிய முக்கட் செல்வனுக்குரியது [அக.181:15] உடன்போகின்ற மகளின் காதலனைக் குறித்து, நற்றாய், 'யான் அவனுடைய காதலியைப் பலநாளும் கூந்தலை வாரி முடித்து மருங்கிலே ஏற்றிப் பாதுகாத்து நலம் பொருந்திய உதவியைச் செய்தவளாவேன் என்பதனை அவன் அறிவனோ' என்றாள் [அக.195:10] 'நலம் மிக்க சிறந்த பொருளும் அணிகலமும் நிறையக் கொடுப்பினும் பெறுதற்கு அரியள்' என்று தலைவியின் பெருமையைத் தலைவன் நினைந்தான் [அக.280:5] தன்னைப் பிரிந்து போகும் தலைவனைக் கண்ட தலைவி, புதிய அழகினை இழந்த நலம் பொருந்திய முகத்தினைக் கவிழ்த்து, கால் விரலால் நிலத்தைக் கீறிக்கொண்டு, கண்கள் நீரினைச் சொரிய அழுது, 'நம் செலவு மாட்சியுற்றுச் சிறப்பதாக', என்று நாக்குழறக் கலங்கி மொழிந்தாள் [அக.299:13]

தலைவன், தலைவியிடம், யான் தொழிலில் நலம் உண்டாகப் பெற்று மீண்டு வருவேன் என்று தன் பிரிவினைக் கூறுவதற்கு முன்பே அவள் துயருற்று அழுதாள் [குறு.256:4] பகன்றையினது கூம்பு மலர்ந்த வெள்ளிய மலர், நலத்தையும், அழகையும் உடைய வண்ணாத்தி, கஞ்சியிலே தோய்த்து எடுத்துத் துவைத்து முறுக்கிய ஆடையை ஒத்திருந்தது [குறு.330:1]

கூத்தர், நலத்தை விரும்பி முழக்குகின்ற மத்தளத்தின் மார்ச்சனை வைத்த பக்கம் அதிர்ந்தது [நற்.100:10] காடுகள் தீப்பற்றி, நிழலும் அழகும் நீங்கித் தனிமை நிலைமை பெற்று நலன்களெல்லாம் ஒருங்கே அழிந்தன [நற்.256:4]

தலைவன் மறுமணஞ்செய்து கொண்டு அவனோடு இல்லத்திற்கு வந்தபொழுது, 'கோமானே, நம் இல்லறம் நலம்

பெற்றுச் சிறப்புறும்படி வந்த அவளை உன்னைவிட நேசிக்கின்றேன்', என்று தலைவி கூறினாள் *[ஐங்.292:5]*

தலைவர் சென்ற காட்டில் அருள் பொருந்திய நிகழ்ச்சிகள் நிகழ்தலின் தாம் வருந்துதற்குக் காரணமான நலங்களையுடைய அக்காட்டைக் கடந்து போன அவர் நமது புனைந்த அழகைக் கெடுக்கமாட்டார்; விரைந்து வருவர், என்று, தோழி, தலைவியிடம் கூறினாள் *[கலி.11:19]* தலைவி தன் புதல்வனின் நலம் பெறுகின்ற, கமழும் தலையில், பல அணிகலன்களை அணிவித்திருந்தாள் *[கலி.81:4]*

திருமாலே, நலம் முழுதும் பொருந்திய, குற்றமற்ற மெய்யுணர்வினை அளிக்கும் மறையுமாவார் *[பரி.1:45]* மறை தனக்கு நலம் உண்டாதலை விரும்பித் திருமாலின் பெருமை இத்தகையது என்று உரைத்தது *[பரி.15:63]* உயர்ந்தோருடைய நலம் நிறைந்து புகழப்படும் செந்நாவில், முருகப்பெருமான் வீற்றிருக்கிறார் *[பரி.21:12]*

நலன் - 2 காண்க.

**3. இன்பம்.** வேனிற்காலம், மாண்புற்ற நலத்தினை - இன்பத்தினை - துய்க்கும் துணையினைப் பிரியாது கூடியிருப்போர்க்கு அழகியது *[அக.37:18 / 341:13]* தலைவன் தலைவியின் நலத்தைக் கைவிட்டுப் பிரிந்து சென்ற நெறியில்பேய்த்தேரோடு, பரலிமைக்கும் *[அக.67:18]* வினைமுற்றி மீளும் தலைவன், 'நம் காதலியின் அழகிய முலையின் நலம் பாராட்டி, அழகிய தோளினையும் அணைந்து இனி மகிழ்க; என்று, தன் நெஞ்சிற்குக் கூறினான் *[அக.87:14]* நலமெல்லாம் தரவல்லவள் நம் காதலி, என்று, தலைவன் மகிழ்ந்துரைத்தான் *[அக.109:3]* 'நினது நலத்திற்கு தக்கவளாய பரத்தையைத் தழுவிய மார்பினை, யாம் தீண்டேம்; எம் அருகில் வாரற்க', என்று, பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம், தலைவி கூறினாள் *[அக.196:13]*

தலைவன் புதுப்புனல் நலத்தைப் பரத்தையரோடு ஆடியதைக் கண்டோர் பலர் எனத், தலைவி மொழிந்தனள் *[ஐங்.64:2]* தலைவி, தனது நலம் கெழுமிய மார்பினைத் தலைவனுக்கு வழங்கினாள் *[ஐங்.197:4]*

நலன் - 3 காண்க.

**4. நிறம்.** முருகனின் ஒரு கை நலம் - (செம்மை) நிறம்- பெற்ற ஆடையை உடைத்தாகிய தொடையின் மேலே கிடந்தது *[முரு.109]*

தலைவியின் பக்கம் உயர்ந்த அல்குலிடத்தே நலம் வாய்ந்த, சிறந்த பூங்கொத்துக்கள் தழையுடன் கூடி அசைந்தன *[அக.269:16]*

நலமமைந்த அசோகினது தளிரையொக்கும் தலைவியின் அழகிய நலம் தலைவனின் பிரிவால், பசலையால் உண்ணப்படும் *[கலி.15:12(2)]*

**5. கற்பு.** ஆதிசேடனின் கோவிலின்கண் - நலத்தோடு - கற்போடு பொருந்திய, நாணத்தினை அணிகலனாக உடைய மகளிர் தொழுது வணங்கினர் *[பரி.தி.1:39]*

நலன் - 4 காண்க.

**6. மதிப்பு.** குட்டுவனுடைய முசிறி நகர், போன்ற நலம்- மதிப்பு - சான்ற விழுப்பொருளைப் பணிந்து கொடுப்பினும், ஒவ்வாதவர்க்கு இவள் மணஞ்செய்து கொடுக்கப்பெறாள் என்று, தந்தையொருவன் மகட்கொடை மறுத்தான் *[புற.343:11]*

நலம் பெறும் அழகிய மணிகள் சேர்ந்த தோள், சுருண்ட கூந்தல், ஒள்ளிய நெற்றியுடையவள், சேரன்மாதேவி *[பதி.74:16]*

**7. வடிவு.** முருகப்பெருமான் தனது மணங்கமழ்கின்ற, தெய்வத்தன்மை பொருந்திய இளைய நலத்தைக்-வடிவைக்- காட்டியருள்வர் *[முரு.290]*

**8. அன்பு.** வேந்தன் (நெடுஞ்செழியன்) மீது நலம்-அன்பு- மிகுகின்ற பாண்டிமாதேவி, பிரிவினால் தனிமைத் துயரோடு வாடையால் வருந்தினாள் *[நெடு.166]*

**நலன் - 1. அழகு**-பேகனின் மனைவி, பரணரிடம், 'எம் கணவராகிய பேகன் நல்லூரின்கண் உள்ள எம்மைப் போன்றவளொருத்தியின் நலனை - அழகைக் - காதலித்து ஒழுகி வருகிறார்', என்று, வருந்திக் கூறினாள் *[புற.144:11]* பெருந்தோட் குறுமகளது திருநயத்தக்க பண்பின் நலன், பொருநர்க்கல்லது, பிறர்க்காகாது, *[புற.342:5]* 'மகட்கொடை கேட்டு வந்தோர்க்கு அவளுடைய தமையன், தந்தை முதலியோர் மறுத்தலால், ஊரும் பாழாகப் போகின்றது; இவளுடைய நலனும் விரும்புவோர்க்கு இல்லாது அழியப் போகின்றது' என்று, புலவர் அண்டர்மகன் குறுவழுதியார் பாடினார் *[புற.346:7]*

இமையவரம்பனுடைய மனைவியின் நலனைக் கண்டு விண்ணுலக மகளிரும் இகல் கொள்ளுவர் *[பதி.14:13]*

மதுரை நகரின்கண் உள்ள வரைவின் மகளிர் தம் நலனை விரும்பி வரும் செல்வரின் செல்வத்தைக் கவர்ந்து கொண்டு, பின் அவரைத் துறந்து விடுவர் *[மது.571]*

'நீ தலைவியைப் பிரியாமல் தொண்டியைப் போன்ற இவளுடைய நலன் இவட்கே உரித்தாகுமாறு இவளை நின்னூர்க்கு வரைந்து கொண்டு போவாயாக', என்று, தோழி, தலைவனிடம் கூறினாள் *[அக.10:13]* மகட்போக்கிய நற்றாய், 'வீட்டையும் துறந்து, பெற்றுப் பாதுகாத்த எம்மையும் நின்னயாளாய்ச் சென்ற என் மகளை, உடன் கொண்டு சென்ற அவள் துணைவன், அன்புமிக்க உள்ளத்தோடு, அவளைப் பலகாலும் அணிவித்து, அவளது சிறந்த நலனைத் துய்த்துத், தனது மார்பு பற்றுக்கோடாகத் துயில்விப்பானாக', என்று, வேண்டினாள் *[அக.35:12]* பொருள்வயிற்பிரிந்த தலைவன்

தலைவியை நினைந்து, 'இதுவரை நம்மைப் பிரிந்தறியாத இயற்கை நலனுடன் சிறப்புற்றிருந்த தலைவியின் தோள்கள், இப்பொழுது நமது பிரிவினால் அவ்வியற்கையழகு கெட மிகவும் மெலிந்து வருந்தினளோ', என வருந்தினான் *[அக.41:11]* பொருள்வயிற் பிரிந்த தலைவனைக் குறித்துத் தலைவி, தோழியிடம்; பிரிந்து சென்றுள்ள நம் தலைவர் நம்மிடமிருந்து அவருடன் போய்விட்ட நம் நலனையேனும் நமக்குத் துணையாக நல்காரோ, என்று கூறினாள் *[அக.103:14]* பிரிவிடை வேறுபட்ட தலைவியிடம் தோழி, 'பலரும் புகழும் கொல்லிப் பாவையையொத்த நினது நலனைத் தலைவரால் நினையாமல் இருக்க முடியாது; அதனால் விரைவில் வந்து விடுவர்', என்றாள் *[அக.209:17]* பிரிவுணர்த்திய தோழிக்குத், தலைவி, தலைவர் நமது நலத்தினை நுகர்ந்து கைவிட்ட பாழ்பட்ட என்மேனியைக் கண்டு நோய்வருத்த, வலிமையற்று உடையும் நெஞ்சத்துடன் யான் புணர்தலை விரும்பிக், கடிய பனியால் வருந்திப், பற்களைத் தீயுண்டாகக் கடித்து நடுங்குவேன், என்றாள் *[அக.217:16]* ஆட்டனத்தியின் நலனை விரும்பிக் காவிரி அவனைக் கவர்ந்து செல்லுவதைக் கண்ட அவனுடைய காதலி ஆதிமந்தி காவிரியின் கரையோடு அவன் பின்னே தேடிச் சென்றாள் *[அக.222:7]* 'தலைவன் பரத்தையர் சேரிக்கு வரும்பொழுது அவனுடைய பெண்டிரெல்லாம், காணுமாறு, அவனுடைய, மாலையையும், ஆடையையும் பிடித்துக்கொண்டு கூந்தலாற் கட்டி, அவன் மார்பினைச் சிறைசெய்யேனாயின், பொருளை விரும்பி இரந்தவர்களுக்கு ஈயாமல் சேர்த்தவன் பொருளைப்போல, என் தாய் பாதுகாத்து வளர்த்த என் நலன் வெளிப்பட்டுப் பரவாததாகி வருந்தி ஒழிவதாக', என்று ஒரு பரத்தை சூள் மொழிந்தாள் *[அக.276:15]* தன்னை ஏசிய பழைய பரத்தையின் பாங்காயினர் கேட்குமாறு புதிய பரத்தை அவளை ஏசுவாளாய், என் நலனைப் பழிக்கின்றனர் என்று அறிந்தேன்; பாகன் உயிரோடிருப்பது யானை கொல்லாதிருப்பதனாலேயாகும்; அதுபோல, அவர்கள் தலைவனுடன் இருப்பது யான் அங்குச் செல்லாமையாலேயாகும்; சென்றேனாயின் சூரியனை நோக்கியே திரும்பும் நெருஞ்சிப்பூப் போல, எல்லோரையும் என் பக்கமே பிணிப்பேன்; அவ்வாறு செய்யேனாயின் என்னுடைய முன்கையில் செறிந்தவளையல்கள் உடைந்து சிதறுவனவாக', என்று சூளுரைத்தாள் *[அக.336:12]* 'தலைவனை ஏற்றுக்கொள்; அவன் உன்னைப் பிரியான்; பிரியினும் கவலைப்படாதே; நன்னன் போருடற்றித் தன் நாட்டை மறுபடியும் மீட்டதைப்போல நான் பெரிதும் முயன்று நீ இழந்த நலனை எல்லாவற்றானும் மீட்டுத் தருவேன்' என்றாள் தோழி *[அக.392:28]*

தலைவி, தோழியிடம், 'யான் இவ்விடத்துள்ளேன்; என்னிடமிருந்து என் பெண்மை நலன் தலைவனோடு பழகும்போது அவ்விடத்தே ஒழிந்துவிட்டது; என்றாள் *[குறு.54:1]* தலைவியோடு அளவளாவி விட்டுப் பிரியும் தலைவனிடம், தோழி, 'உன் சொல்லினை நம்ப, நான் கூறியவற்றை ஏற்றுக் கொண்டு, இதுகாறும் புதிதாக இருந்த தன் பெண்மை நலனை உன்னிடம் இழந்து, தலைவி தனிமையை உடையள் ஆயினள்; அதோ தெரியும் எமது ஊருக்கு வந்து அவளை மறவாதிரு', என்றாள் *[குறு.81:3]* அலரால் தூற்றப்படும் தலைவி, தலைவன் வரைவினை மேற்கொள்ளவில்லையே என்ற வருத்தத்தில், தோழியிடம், 'நான் இவ்விடத்தில் தனியே உள்ளேன்; எனது பெண்மை நலன் என்னின் நீங்கி அமையாத வருத்தத்தோடு கடற்கரைச் சோலையிடத்தேயுள்ளது; தலைவரோ தம் ஊரிடத்துள்ளார்; எம் நட்பைப்பற்றிய செய்தியோ அலராகிப் பொதுவிடத்தின்கண் பரவியுள்ளது', என்று கூறினாள் *[குறு.97:1]* வரைவு நீட்டித்தவழி ஊராரின் அலருக்கஞ்சிக் காமத்தை மிகுதியாக வெளிப்படுத்தாமல் உள்ளேன் என்ற கருத்தில் தலைவி, தோழியிடம், 'பிறர் கூறும் பழிக்கு அஞ்சினால் காமம் மெலிவடையும்; காமத்தைவிடின் என்னிடம் இருப்பது நாணம் மட்டுமேயாகும்; தலைவர் உண்ட எனது பெண்மை நலன், களிறு, உண்ணுவதற்காக வளைக்க வளைந்து நிலத்திற்படாத, ஒடிந்த கிளையைப் போன்றுள்ளது', என்றாள் *[குறு.112:5]* தலைவன் வரைவு நீட்டித்தவழித், தலைவி, தோழியிடம், 'மகளிர் யாவருள்ளும் விழாவைப்போலச் சிறப்பெய்திய எனது பெண்மை நலன் தலைவனோடு சென்றுவிட்டது; அங்ஙனமாகவும் யான் மட்டும் வளைகள் நெகிழும்படி மெலிந்து இன்னும் உயிருடன் இருக்கின்றேன்', என்றாள் *[குறு.125:4]*. பிரிவுணர்த்திய தலைவனிடம், தோழி, 'தலைவியை நீ பிரியின், நீ உண்ட தலைவியின் பெண்மை நலனைத் தந்து விட்டுச் செல்வாயாக', என்று கூறினாள் *[குறு.236:6]*. 'பரத்தையரது பெண்மை நலனை நுகர்ந்து துறந்து ஈண்டு வருவாயாயின், நீ அவரிடத்திற் செய்த சூள் மிக நன்றாக இருந்தது', என்று தோழி கூறித் தலைவனுக்கு வாயின் மறுத்தாள் *[குறு.384:3]*.

'நின்னிற் பிரியேன், என்று நீ கூறிய பொய்ம்மொழியை மெய்யெனத் தெளிந்து எம் தலைவி தன் நலனை இழந்து இந்த நடுயாமத்துக்கண்ணும் துயிலாதொழிந்தனள்' என்று தோழி தலைவனிடம் கூறினாள் *[நற்.36:5]*. நீயோ, மன்னனுடைய செல்வமகன்; மீன்பிடிக்கும் பரதவரின் மகளாகிய தலைவிக்கு நினது சிறந்த நலன் யாது வேண்டிக் கிடந்தது', என்று தலைவனிடம் தோழி கூறி அவனைச் சேட்படுத்தாள் *[நற்.45:7]*. 'பிரிந்து போன தலைவனுடன் சென்றுவிட்ட என் நெஞ்சம், தலைவர் அருளார் ஆகலின் மீண்டு வந்து, எனது முன்னைய நலனை இழந்து விட்டதனாலாகிய எனது பொன்னிறமான பசலையை நோக்கி, 'இவள் வேறொருத்தி ஆவள்', அவளைக் காண்கிலேனே என்றெண்ணி, நோய் மிகக் கொண்டு, என்னைத் தேடிச் சென்றொழிந்ததோ; அறிகிலேன்', என்று தோழியிடம், தலைவி கூறினாள் *[நற்.56:8]*. 'ஆனிரையைக் கவர்ந்து வரும் திருமுடிக்காரியிடம் ஆனிரைக்குரியோர் போரிட்டு அழிந்தாற்போன்று, அழிந்துபோன தலைவியின் நலனைப் பற்றி நீ தலைவனிடம் எடுத்துக் கூறவில்லையே;

அப்படியிருந்தால், தலைவன் வந்து கூடித் தலைவியை மகிழ்வுறுத்தியிருப்பானே', என்று பரத்தைமைத் தலைவனிடமிருந்து தூதாக வந்த பாணனிடம், தோழி கூறினாள் *[நற்.291:9]*. தோழி, அன்னையிடம், 'தலைவியின் வேறுபாட்டைக் கண்டு, முருகனையழைத்து, வெறியாட்டயராதே; மீண்டும் தினைப்புனங்காவலுக்குத் தலைவியை அனுப்பினால், அவள் தன் நலனைப் பெறுவாள்', என்று கூறிக், குறிப்பினால் தலைவனொடு அமைந்த தலைவியின் களவொழுக்கத்தை உணர்த்தினாள் *[நற்.351:9]*.

தலைவி, தோழியிடம், 'தலைவனுடைய தண்ணளியைப் பெற்றுப், பின்னர் மறவாதிருக்கும் நல்லோருடைய நலன் இங்ஙனம் சிதைதல் மிகவும் கொடுமையுடையது', என்றாள் *[ஐங்.117:1]*. 'தலைவ, நின்னை,யான் இரந்து கேட்பது வேறு பொருளையன்று; தலைவியிடமிருந்து நீ கவர்ந்து கொண்ட அவளுடைய பெண்மை நலனையேயாகும்; அதனை வழங்கிவிட்டுப் போவாயாக', என்று பரத்தமைத் தலைவனிடம், தோழி கூறினாள் *[ஐங்.159:5]*. கடற்றுறை ஊராகிய தொண்டியையொத்த தலைவியின் பெண்மை நலனை மிகக் குறுகிய காலத்தினூடேயே பல்லோரறிய மணம் புரிந்து நுகர்ந்து கொள்க', என்று தோழி, தலைவனிடம் கூறினாள் *[ஐங்.180:4]*. பெருமானே! தலைவியின் நலன் நீ இவ்விடத்தினின்றும் போகும்பொழுது தானும் போய்விடுகின்றது; என்று தோழி, தலைவனிடம் கூறினாள் *[ஐங்.238:5]*. தலைவி, தோழியிடம், தலைவன் வரையும் பொருட்டு வந்தவுடன், என்னைப் பிரிந்து சென்ற என் நலனும் தலைவனோடு என்னிடம் வந்தது', என்று கூறினாள் *[ஐங்.263:4]*. தலைவியின் மெலிந்து போன தோள்களையும், மாவடுவின் பிளவு போன்ற தம் நலன் இழந்து புற்கென்ற கண்களையும், பிரிந்திருக்கின்ற தலைவனின், பாணன், கண்டு வருந்துவதைத் தலைவி பாராட்டினாள் *[ஐங்.475:2]*.

தலைவியின் வளைகழன்று, கண்கள் நீர் சிந்தி, நுதல் பொலிவழிந்து, அம்பலுக்குக் கூசித், தலைவன் செல்லும் நெறியின் வற்கடத்தை நினைந்து வருந்தி, வெற்றியைத் தருகின்ற நலனை அவள் இழந்து நின்ற பொழுதும், தலைவன் பிரிந்து செல்லத் துணிந்தான் *[கலி.3:5]*. 'நீ பிரிந்தால், முழுமதி சிறிது சிறிதாகத் தேயுமாறு போலத், தலைவியும் நாடோறும் தன்னிலை குலைந்து, நலன் கெட்டு அழிவாள் என்று, பிரியக் கருதிய தலைவனிடம், தோழி கூறிச் செலவழுங்குவித்தாள் *[கலி.17:8]*. தாதைத் தேடியுண்ணும் வண்டு போல, நீ தலைவியை இரந்து, அவளுடைய நலனை நுகர்ந்து, அழியவிட்டு, இப்பொழுது பொருள்வயிற் பிரிதல் தகுமோ', என்று கூறித் தோழி, தலைவனைச் செலவழுங்குவித்தாள் *[கலி.22:6]*. தன்னையும் அழைத்துச் செல்லாது பிரியக் கருதும் தலைவனிடம், தலைவி, 'மனம் விரும்பியருளிய கணவரால் நலனை நுகர்ந்து துறக்கப்பெற்ற மகளிர், குடியிருப்பார் போகிய பாழுரையொப்பர்', என்று தன் நிலையைக் கூறி வருந்தினாள் *[கலி.23:10]*. தலைவனைப் பிரிந்த தலைவியின் கண்கள் அலர் தூற்றுகையாலே, ஆய்ந்த தம் நலனை இழந்து, கயல் காலுகின்ற நீரைப் போல, நீரைச் சொரிந்தன *[கலி.53:10]*. தலைவி, புதல்வனிடம், 'ஐயனே, விருப்பம் மருவுகின்ற அழகினையுடையையாய், 'அத்தா அத்தா' என்று கூறும் நினது இனிய மொழியைக் கேட்டு மகிழ்ந்திருத்தல் இனிது; ஆனால், நுந்தை, மகளிரின் நலனைச் சாய்த்ததனாலுற்ற எவ்வத்தைத் தரும் நோயை யான் காணுமிடத்து அக்காட்சி இன்னாது', என்று தலைவனின் கொடுமை கூறினாள் *[கலி.80:16]*. தலைவன் பிரிந்ததால், தலைவியின் பூவினது அழகையுடைய கண்கள் ஆயமும், தாயும் அறியுமாறு நலனை இழந்தன *[கலி.122:2]*. தலைவியின் நெடும் பெரும் கண்கள் தலைவனின் பிரிவால் வேல் முனையையொக்கும் வெற்றியமைந்த நலனையிழந்து இடையறாது நீருகுத்து அழுதன *[கலி.124:15]*. பெண்ணின் நலனை நுகர்ந்து, பின் அவளைத் துறத்தல், இனிய பாலையுண்டு விட்டு, அதனைக் கொண்டிருக்கும் கலத்தைக் கவிழ்த்துவிடுதலையொக்கும் *[கலி.133:16]*. தலைவனால் நலன் இழந்து, தான் வருந்தியதைக் கண்டு, மணற்குன்று கரைவது போலவும், தன் நலனை உண்டு போனவர் வராததால், தான் உருகுவதைக் கண்டு, மரமும் வருந்தி இலைகள் கூம்புவது போலவும் தலைவி உரைத்தாள் *[கலி.134:17,19]*. தலைவனைப் பிரிந்து புலம்பிக் கொண்டிருந்தவள், அவன் வந்து தழுவியவுடனே, அவனால் இழந்த நலனைப் பெற்று மகிழ்ந்தாள் *[கலி.143:60]*. தலைவனைப் பிரிந்து பித்தேறிய தலைவியொருத்தி, 'காற்றாகிய தெய்வமே, எனது இயற்கை நலனையுண்டுவிட்டு இம்மண்ணகத்தே ஒளித்தவனைக் கொண்டு வந்து காட்டுவாயாக; காட்டாயாயில், என் கண்ணீரைத் தெளித்து அதன்கண் எழுகின்ற அழலாலே நின் மேனியையெல்லாம் மண்ணகத்தோடு சுடுவேன் என்று கூறினாள் *[கலி.144:42]*. பிரிவுத் துயரால் வாடும் தலைவியொருத்தி, ஊராரிடம், 'இவள் சிரித்து நலனை யிழந்தாள் என்று கூறும் தக்கோரே,' என்னுடைய நாணத்தையும், நலனையும், உள்ளத்தையும் நான் இழந்துவிடவில்லை; அவை எனது தலைவனின் கூடவே சென்றிருக்கின்றன என்று கூறினாள் *[கலி.146:20]*.

**நலம் - 1.** காண்க.

**2. நன்மை.** 'நல்வினையினது நலனும் - நன்மையும் - தீவினையினது தீமையும் இல்லை என்று கூறும் அறிவிலாரோடு சேராதே', என்று புலவர் உறையூர் முதுகண்ணன் சாத்தனார் சோழன் நலங்கிள்ளிக்கு அறிவுரை கூறினார் *[புற.29:11]*.

உயிர்கட்கு நலனெல்லாம் மிகும்படியாக வையையில் வெள்ளம் வந்தது *[பரி.7:9]*.

நலம் - 2 காண்க

**3. இன்பம்.** ஆண்நாரையால் நலன்- இன்பம் - நுகரப்பெற்ற பெண்நாரை செயலற்றிருந்தது *[நற்.178:3]*. வேனிற்காலத்து, நுணல், மணலுள் மறைந்து கிடப்பது போலத், தலைவனின் பிரிவுக் காலத்தே, தலைவியின் உடம்பினுள் பொதிந்து கரைந்துறையும் அவளுடைய நலன், அவளை ஒறுத்துக் கொல்லுதலைப் போன்ற துன்பத்தைத் தரும் *[நற்.347:11]*.

நலம் - 3 காண்க.

**4. கற்பு.** தலைவியின் வேறுபாடு கண்டு வெறியாட்டெடுக்கும் போது, தோழி, செவிலியிடம், இப்பெருமகளிடம் (தலைவியிடம்) நிலை நின்ற நலன் - கற்புடைமை - வேலனின் கழங்குகளாலே அறிந்து கூறப்படுமானால் நல்லதே', என்று அறத்தொடு நின்றாள் *[ஐங்.248:4]*.

நலம் - 5 காண்க.

**5. தூய்மை.** வையையின் வெள்ளமானது மரவேர் முதலிய பொருள்களையும், கீழ் மக்கள் உண்டெஞ்சிய கள்ளினையும் கொண்டு வருவதால் இப்புதுநீரின் வருகை நலன் - தூய்மை - கெட்டு மாறுபட்டது என்று அந்தணர் முதலிய சான்றோர் நீராடாது விலகினர் *[பரி.6:49]*.

**நவ்வி - மான்.** அரைமலையின்கண் சிறிய தலையையுடைய, மறிகளையுடையவாகிய, பெரிய கண்ணையுடைய நவ்வி - மான் - பிணைகள், அந்தணர் ஆவுதியைப் பண்ணும் முத்தீவிளக்கின்கண்ணே துயிலும் *[புற.2:21]*.

இனிய முழக்கங்களைக் கொண்ட ஆண்மானாகிய இனத்தினையுடைய உயிர்ப்புத் தோன்றும் நவ்வி! (இளைய மானே!) என் மகள் ஓர் விடலையொடு இவ்வழிச் சென்றனளோ என, மகட்போக்கிய செவிலித்தாய், சுரத்திடை மான்பிணாவினை முன்னிலைப்படுத்தி வினவினாள் *[அக.7:10]*.

பிரிந்து சென்ற தலைவன், அரிய வழியில், பரந்து கண்படும் பாயற்கண்ணே, நவ்வியினைக் கண்டாலொத்த, தலைவியைக் கனவிற் கண்டான் *[அக.39:16]*.

கொல்லையிடத்தே வரகினது இலையை, நவ்வியின் இளங்கன்று கவ்விப், பசியைப் போக்கிக் கொள்ளும் *[குறு.282:3]*.

நவ்வியின் வலிய குளம்பினால் மிதிபட்டமுந்துகையினாலே, மணல் மேட்டில் உதிர்ந்து கிடந்த ஈங்கையின் அரும்பு, புனமல்லிகை மலர்களிலிருந்து நீர், வெள்ளி உருக்குப் போலக் குமிழியாக வடியும் *[நற்.124:6]*.

**நவநாடு - நவகண்டம்.** என்னைக் கைவிட்டவளை, நவநாடு- நவகண்டம் - எனக் கூறுபடுத்தின உலகத்தின் கண்ணே ஆராய்ந்து, நீர், பிடித்து எனக்குத் தரின், யானும் பிற மகளிரைப் போல, அறுதியாக நிறை என்னும் குணமுடையேனாவேன்', எனத், தலைவி கண்டாரிடம் கூறினாள் *[கலி.143:13]*.

**நவி - கோடரி.** வடித்த, பெரிய நவியால் - கோடரியால் - வெட்டப்பட்டுக் கவிழ்ந்த மரம் போல, மறவனொருவன் வீழ்ந்து கிடந்தான் *[புற.270:12]*.

நவியம் காண்க.

**நவியம் - கோடரி.** வடித்தல் பயின்ற நவியம்-கோடரி வெட்டுதலான் ஊர்தோறும் காவல் மரங்கள் நிலை கலங்கின *[புற.23:8]*. ஆன்பொருநையின் வெளிய மணல் சிதறக், கொல்லன் அரத்தாற் கூர்மை செய்யப்பட்ட, அழகிய வாயினையுடைய நெடிய கையையுடைய நவியம் - வெட்டுதலான், நின்ற நிலை கலங்கி விழும் கொம்புகள் தனிப்பச், சோலைகள்தோறும் காவன் மரங்களை வெட்டும் ஓசை, காவலையுடைய கோயிற்கண் சென்றொலித்தது *[புற.36:7]*.

நவி காண்க.

**நவிரம் - ஓர் மலை.** அஞ்சுதல் தோன்றும் கடிய வலியையுடைய, பெரிய புகழினையுடைய நவிர மலையை, நஞ்சை ஊணாகவுடைய இறைவன் பொருந்தியிருந்தான் *[மலை.82]*. வாய்த்த வளப்பம் முற்றுப்பெற்று, மூங்கில் வளர்ந்த, நவிரம் என்னும் பெயருடைய மலையின் உச்சியில், கடுக மழை சொரிந்தது *[மலை.579]*.

**நவின்றோர் - பயின்றோர்.** செவ்வேள் குன்றிடத்தே, ஆடல் நவின்றோரை-பயின்றோரை-அவ்வாடல் பயின்றார் வென்றனர்; பாடல் பயின்றோரைப் பாணர் வென்றனர் *[பரி.9:72]*.

**நவை - 1 துன்பம்.** அன்னி, குறுக்கைப் பறந்தலையில் திதியன் என்பானது அடியுடன் துணித்திட்ட புன்னை மரம்போலப், பெரிய நவை - துன்பத்தை அடைவனவாக, மகளைத் துன்புறுத்திய என் கைகள்', என, மகட் போக்கிய செவிலித்தாய் உரைத்தாள் *[அக.145:14]*.

'ஊரனுடன் தங்கிய இனிய துயிலை எழுப்பிய சேவலே! நீ, நள்ளிருளில், எலிகளை உண்ணும்பொருட்டுப் பார்த்திருக்கும் காட்டுப்பூனையின் குட்டிக்கு இட்டு வைத்து உண்பதற்குரிய உணவாகிக், கடுநவைப் படிஇயரோ?' எனக்,கிழத்தி, காமம் மிக்க கழிபடர் கிளவியால் கூறினாள் *[குறு.107:5]*.

கடுநவையுண்டாக வருத்துகின்ற வெகுளியும் அருளும், கொடுமையும் செம்மையும் ஆகிய இவற்றை மறமும் அறமும் உடையாரிடத்து முறையே உடையவனாகவும் இல்லாரிடத்து இல்லாதவனாகவும் உள்ளவன் திருமால் *[பரி.4:49]*.

**2. குற்றம்.** 'நீ பிரிந்து செல்கின்றது எமக்கு நவை - குற்றத்தைச்-செய்யும்; எனத், தோழி, தலைவன் செலவழுங்கக் கூறினாள் *[கலி.7:18]*

வேடர் வில்லாலே கொல்லப்பட்டவருடைய, உடலம் மறையவிட்ட, இலைக்குவை நிரைத்துக் கிடக்கின்ற, கடு நவை நிறைந்தது வழி *[கலி.12:3]* எறிபடையருத்து மலையிவா நவையினில் துணிபடல் (இப்பகுதிக்கு உரைவிளக்கம் கிடைக்கவில்லை) *[பரி.1:19]*

3. **கொல்லுதல்.** சூர் நவை முருகன் சுற்றம் போன்றவர் அம்புடைய மறவர், *[புற.23:4]*

**நள்ளாதார்** - பகைவர். நள்ளாதார் - பகைவர் - வலி தொலைத்த வலிய ஆண்மைஉடையன் தேர்வண் மலையன் *[புற.125:5]*

**நள்ளி** - ஏழு வள்ளல்களுள் ஒருவன். தோட்டி மலையைத் தன்னகத்தே கொண்ட கண்டீரம் என்னும் நாட்டிற்குத் தலைவனாதலால் இந்நள்ளி, கண்டீரக்கோப்பெருநள்ளி என வழங்கப் பெறுவான். இவன், வன்பரணர், பெருஞ்சித்திரனார், இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார், பரணர், கபிலர், காக்கை பாடினியார் நச்செள்ளையார், ஆகிய புலவர்களால் பாடப்பெற்றுள்ளான். இவன், தன்னைப் பாடுவோர்க்கு நாள்தோறும் நன்கலங்களைக் களிறுகளோடே ஈதலால் அவற்றைக் கொண்டு வளமுற்ற தாம், ஈயும் பெருமையில்லாத வேற்றரசரை வீணே புகழ்தலை அறியாதொழிந்ததாக வன்பரணர் இவனது வண்மையைப் பாடுவர் *[புற.148]*. தம்முடன் வரும் பாணரும் இவன் வண்மைமிகையினால் பாடும் முறைமையை மறந்தனர் என மொழிவர் *[புற.149]*. வேட்டை மேற்சென்ற காட்டுவழியிலும் இவன் பரிசில் வாழ்நரின் பசியைத் தணித்துத், தன் மார்பிற் பூண்டிருந்த முத்தாரத்தையும், கைகளில் அணிந்திருந்த கடகங்களையும் ஆரவாரமின்றி அவர்க்கு அளித்து, தன் நாட்டையும், பெயரையும் இன்னவென்றும் விளம்பாது சென்ற இவனது ஈகைச் சிறப்பும் அவராலேயே அப்பரிசிலர் கூற்றில் வைத்துப், பாடப்பெற்றுள்ளது *[புற.150]*. வள்ளல் எழுவரையும் வரிசையுறப் பாடும் பெருஞ்சித்திரனார், இவனைக் குறித்துக் கூறுகையில், 'தன்னை நினைந்து வருவோருடைய வறுமை நீங்கத் தவிராது கொடுக்கும் வண்மையுடையவனென்றும், பகைவரைத் துரத்தியவனென்றும் குறிப்பர் *[புற.158]*. அவ்வாறே, நட்புற்றோர் உவக்குமாறு அவர் இல்லறம் நடத்துதற்கு வேண்டும் பொருள்களை நாள்தோறும் கொடுத்தவன் எனவும், போர்முனையிலே மேம்பட்டு விளங்கும் தடக்கைகளையும், செறிந்த மலைநாட்டையும் உடையவன் எனவும் இவனைச் சிறப்பிப்பர், நத்தத்தனார் *[சிறு.104:107]*. வலிய வில்லினையுடைய இளையர் பெருமகன் என்று பரணரும் *[அக.152]* இரப்போர்க்கு இழையணி நெடுந்தேர்களைக் களிறுகளுடனே மழைபோல் நாளும் வழங்கும் ஈகையையும், மிக்க மகிழ்ச்சியையும், கழல இடப்பட்ட தொடியணிந்த தடக்கைகளையும், செருக்குற்ற குதிரைகளையும் உடையவன் என்று கபிலரும் *[அக.238]* இவனைக் குறிப்பிடுவர். சோலைகள் நிறைந்த இவனது மலையடுக்கத்தே மலர்ந்திருந்த காந்தள் மலர்களின் சிறப்பு அவ்விரு புலவராலும் எடுத்தியம்பப் பெற்றுள்ளது. திண்ணிய தேரினையுடைய இந்நள்ளியின் கானத்திலே இடையர் பல ஆக்களைப் புரந்திருந்த குறிப்புக் காக்கை பாடினியார் நச்செள்ளையாரால் சுட்டப்பெற்றுள்ளது *[குறு.210]*.

**நள்ளிருணாறி** - இருவாட்சிப்பூ. மகளிர் நாரத்தம்பூ, நாகப்பூ, நள்ளிருணாறி -இருவாட்சிப்பூ - இவற்றைப் பறித்துப் பாறையில் குவித்தனர் *[குறி.94]*

**நளிப்பு** - செறிவு. 'மலைக்கண் பழங்கள் தொங்குகின்ற நளிப்பில் - (மரச்) செறிவினுள்-காந்தளினுடைய புதரிடத்துப் பகல் நீ வரினும், புணர்குவை எனத், தோழி இரவு வருவானைப், பகல் வரக் கூறினாள் *[அக.18:15]*

**நளிர்ப்பு** - குளிர்ச்சி. மலையினிடத்து, நீண்ட சோலையில், துளிகள் சித்றும் நளிர்ப்பு - குளிர்ச்சி - உடையவாய், வெள்ளிய அருவி விளங்கியது *[அக.362:13]*

**நளிர்** - குளிர். பெரிய மலையின் நளிர் - குளிர் - உடைய உச்சியினை, முகில், இடியேற்றுடன் சூழ்ந்தது. *[அக.218:5]*

மலை, தேன் கூடுகள் நிரம்பிய நளிர் குகையினையுடையது *[அக.218:18]*

முகில் ஓங்கிச் சென்று பெய்யத் தொடங்கிய நளிர் மிக்க மலையின் குவட்டில் அருவி இலங்கும் *[நற்.257:2]*

மாடத்தில் பனி நீருடன் எழும், நறும் புகை, நளிர் மலையில் பனிமிக்க ஆவியைப்போல் தோன்றும் *[பரி.10:122]*

**நளினம்** - தாமரை. செவ்வேள், நளினத்தின்கண் தாமரையின்கண்-பிறந்த பிறப்பை உடையவன் *[பரி.5:12]*.

**நற்சேந்தனார்** - ஓர் புலவர். இவர் பாடியதாக நற்றிணையில் ஒரு பாடல் *[128]* காணப்படுகின்றது. மற்று, அகநானூற்றில் 179, 232-ஆகிய எண்களில் அமைந்த இரு பாடல்களைப் பாடிய கொடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனாரும், இவரும் ஒருவரே என்பர் பி.நா. (நற். பாடினோர் வரலாறு). ஆயினும், வையாபுரிப்பிள்ளையின் சங்க இலக்கியப் பதிப்பு இரு பெயர்களுக்கும் உரிய புலவரை வேறுபடுத்தியே கொண்டுள்ளது. இந்நற்சேந்தனார் குறிஞ்சித்திணையில் தலைவனுக்குக் குறைநேர்ந்த தோழி தலைவியிடம் குறை நயப்பக் கூறியதாகத் தம் பாடலை அமைத்துப் பாடியுள்ளார். தலைவனது தொடர்பினால் தலைவியின் மேனி வாடவும், நெற்றியொளி மறையவும் அவற்றை அவள் தோழிக்கு உரையாளாய் மறைத்து வருந்தும் நிலையில், அத்தோழி தலைவியை நோக்கி அவள் வருத்தத்தைத் தன்மேல் ஏற்றிக் கூறுவதுபோல் அவள் கருத்தை அறியப் புகுவதை இவர்

மிக நுண்ணிதின் பாடலாக்கியுள்ளார். மேனிவாட்டத்திற்குப் பகலில் எரியும் விளக்கின் மங்கிய ஒளியையும், நெற்றியின் ஒளிமறைவிற்குப் பாம்பினால் பற்றப்பட்ட திங்களின் பசந்த ஒளியையும் இவர் உவமை கூறுவர்.

நற்பால் - நல்வினை. தோழி வாயிலாய்த் தலைவியை எய்தப் பெறாத் தலைவன், நாவற்கனியைக் கவர்ந்து கொண்டுபோய் வளையிலிருந்த தன் பெண் நண்டிற்கு வழங்கும் ஆண் நண்டைக்கண்டு, இது நற்பால்-நல்வினை-உடையது என நினைந்தான் [அக.380:7].

நற்பாலோர் - நல்வினையை உடையவர். நள்ளிரவில் தலைவன் வந்து சென்றான் என்று கேள்வியுற்று என் அன்னை என்னை அலைக்கின்றாள்; மின்னுகின்ற நகையணிந்த மகளிருள் இளைமையுடையோரும், மடப்பமுடையோருமாகிய பிறரும் இருக்கின்றனர்; அலையாத்தாயரோடு இருக்கும் அவர் நற்பாலோர் -நல்வினையையுடையவர்- என்று தலைவி கூறினாள் [குறு.246:8]

நற்றங்கொற்றனார் - ஓர் புலவர். இவர் பாடியதாக நற்றிணையில் 136-ஆம் பாடலொன்றே உள்ளது. களவினை நீட்டித்தொழுகும் தலைவன் சிறைப்புறத்தானாகும் நிலையில், அவன் பிரிவால் தன்னுடல் இளைப்பினைத் தலைவி தோழிக்குரைப்பது போல் நுட்பமாக அவனுக்கு உணர்த்துவதை இவர் தம் பாடலில் பொருத்தியுள்ளார். தந்தையிடம் கைவளைவேண்டிய தனக்குத் தலைவனின் பிரிவினால் நேரவிருக்கும் இளைப்பை அறிவான் போல் அவ்விளைப்பிலும் கழலாத சிறிய வளைகளைச் செய்து தந்தை அணிவித்தான் என்று கூறி, அரும்பிணியுறுவோர்க்கு விரும்பியதைக் கொடுக்காமல் மருந்தாராய்ந்து கொடுக்கும் அறவோன் போல என அத்தந்தைக்கு உவமம் கூறும் தலைவியின் நுண்ணறிவை இவர் பாடலில் காணலாம்.

நற்றமனார் - ஓர் புலவர். இவர் பாடல் நற்றிணையில் 133-ஆம் எண்ணில் அமைந்துள்ளது. தலைவன் வரைவிடை வைத்துப் பிரிந்த நிலையில் தலைவியின் வருத்தம் கண்டு வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை தூற்றுகையில் தோழி தலைவர் வருவரென ஆற்றுவிப்பது, இரும்பினைக் காய்ச்சிய உலையில் கொல்லன் தெளித்த நீர்போல அவள் நெஞ்சின் நோயைத் தணித்ததென்று அத்தலைவி கூற்றில் இவர் பாடியுள்ளார்.

நறவம் - 1. கள். வேந்தனின் பொருட்டு மண்டையில் எடுத்துக் கொடுத்த தீவிய குளிர்ந்த நறவத்தை - கள்ளினை - வீரனொருவன் தனக்கு முறைப்படி வழங்கவில்லை என மறுத்துச் சினந்தான் [புற.292:1]

வையையின் வெள்ளத்தில் கீழ்மக்கள் உண்டெஞ்சிய பன்னாடையால் வடிக்கப்பட்ட நறவம் கலந்து வந்தது [பரி.6:49]

2. நறவம்பூ. தலைவியும் தோழியும் பறித்துக் குவித்த மலர்களில் நறவமும் - நறவம் பூக்களும் - இருந்தன [குறி.91]

வையையாற்றின் இரு மருங்கின் கரைகளிலும் நறவம் முதலிய பலபூக்கள் மணங்கமழும் [பரி.12:80] முருகவேளின் திருப்பரங்குன்றத்தின்கண் ஊழ்த்த பூங்கொத்துக் களையுடைய நறவமும் நிறைந்திருந்தது [பரி.19:78]

நறவு - 2 காண்க.

நறவு - கள். அதியமான் நெடுமானஞ்சி மிக்க ஆரவாரத்தைச் செய்யும் நறவினை - கள்ளினை - உடையவன் [91:3] வேள்பாரியினுடைய முன்றிலில், யானையால் மென்று போடப்பட்ட கோதுபோல நறவினைப் பிழிந்திட்ட கோதிலிருந்து கள், சேறுபோல் ஒழுகும் [புற.114:4]. வேந்தர், மிக்க நறவினையுடையனாகிய வேள்பாரியது அருமையறியாது போரெதிர்ந்து வந்தனர் [புற.116:16]. உழுத எருதுகள் வைக்கோலை உண்ணுவதுபோல், மலையமான் திருமுடிக்காரி பொருள்களையெல்லாம் பரிசிலர்க்கு வழங்கி விட்டுத் தான் நறவை மட்டும் உண்பான் [புற.125:8]. பரிசிலர்க்கு வண்டுபடு நறவினை மண்டையுடனே அளிக்கும் வீரனொருவன் ஆனிரையை மீட்கும் போரில் இறந்தானாக, அவனுடைய பெரிய இல்லம் நீரற்றயாற்றில் கிடக்கும் ஓடத்தைப்போலப் பொலிவற்றிருந்தது [புற.261:2]. பகைவர் நாட்டு ஆனிரையைக் கவர்ந்து வரும் வீரர்க்கு, ஊரவர் ஆரவாரத்தோடு வரவேற்பு நல்கி நறவினை அளிப்பர் [புற.262:1]. போரில் மேம்பட்ட மறவர், நாரால் அரிக்கப்பட்டதும், பூக்களால் ஆக்கியதும், முற்றியதும், காடியில் உள்ளதுமான நறவினை வாழ்த்தி மருதநிலத் தூர்களைப் பரிசிலாகப் பெறுவர் [புற.297:6] வெண்ணெல் வயல்களையுடைய மாவண் தித்தனுக்குரிய உறையூரில் நறவு விலைக்கு விற்கப்பட்டது [புற.352:8] ஆட்டின் ஊனோடு நறவினை அருந்துதல் மரபு [புற.364:6]. மண்நாணப் புகழ்வேட்டு, நீர்நாண நெய் வழங்கும் நீர்மையுடைய கரும்பனூர் கிழான் நறவினையும் மிகுதியாகவுடையவன் [புற.384:12] எழினியாதனுக்குரிய வாட்டாறு என்னும் ஊரிலுள்ள கோசர் நறவினையுண்டு குரவையாடுவர் [புற.396:8] சோழன் நலங்கிள்ளி, பரிசிலர்க்குப் பொன்னணிகலன்களை வாரி வழங்குவதோடு, நறவினையும் கொடுத்து மகிழ்விப்பான் [புற.400:14]

இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் நாரால் வடிக்கப்பட்ட நறவினையுடையவன் [பதி.11:15] களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் இரவலர்க்கு நறவினையளித்து அவர்களுடன் தானும் உண்டு மகிழ்வான் [பதி.40:19] சேரனது நாண்மகிழ் இருக்கை குடப்படாத நறவினையுடையது [பதி.85:8] தொண்டிக்கு உரியவனாகிய குடக்கோ இளஞ்சேரலிரும் பொறை நாரால் வடிக்கப்பட்ட நறவினையுடையவன் [பதி.88:19]

கரிகாலனின் சோழநாட்டில், தேனையும், கிழங்கையும் கொடுத்து, அவற்றிற்கு மாறாக மீன் நெய்யையும், நறவையும்

கொண்டு சென்றனர் *[பொரு.215]*. பகைப்புலம் சென்று கவர்ந்து வந்த ஆனினை நறவுக்கு விலையாகக் கொடுப்பர் *[பெரு..141]*. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் நகர் கொடுக்கக்கொடுக்கக் குறையாத நறவினையுடையது *[மது.213]* மாணிழை மகளிர் நறவினை உண்டு கணவரோடு புலந்தனர் *[மது.679]* காவிரிப்பூம்பட்டினத்தில் நறவு விற்பதற்கு அடையாளமாக எடுக்கப்பட்ட கொடிகளோடு பிற கொடிகளும் பறந்து நிழல் செய்தன *[பட்.180]*. கானவர் விருந்தினர்க்கு நறவினை ஊற்றிக்கொடுப்பர் *[மலை.172]*. குறவர் விடியலிலேயே நறவினைக் குடித்துத் தம் பெண்டிரொடு குரவையாடினர் *[மலை.320]*

எருமையூரன் பன்னாடையால் அரிக்கப்பெற்ற நறவினையுண்பவன் *[அக.36:17]* வேங்கடத்தையுடைய புல்லி என்பானின் வீரர்கள் நறவினை நெல்லுக்கு விலையாகக் கொடுப்பர் *[அக.61:10]* சேரனின் படைத்தலைவனாகிய பிட்டன் அமையாத நறவினை அருந்தி மகிழ்ச்சியடைவான் *[அக.77:16]* குறவர் இல்லில் இனிமையுறப் பிழிந்த நறவு நிறைந்திருக்கும் *[அக.78:7]* வேங்கடத்தையுடைய புல்லி என்பானுக்குரிய வேடர்கள் பிடியானையிடமிருந்து கன்றைப் பிரித்துக் கொண்டுவந்து, நறவு விற்கும் இல்லின் முற்றத்தே கட்டுவர் *[அக.83.8]* நறவு இருந்த கலத்தினைக் கழுவிய நீரையுண்ட இறாமீன், பூட்டிய நாண் அற்ற வில் தெறிப்பது போல, நெற்கூடுகளின் அடியில் துள்ளிவிழும் *[அக.96:1]* நன்னன் வேண்மான் நறவுண்டு மகிழ்வான் *[அக.97:12]* எவ்வி என்பானுக்குரிய ஊர்களின் தெருக்களில் நீண்ட கொடிகள் அசைய நறவு மிகுதியாக விற்கப்படும் *[அக.126:10]* இனிய களிப்புத்தரும் நறவினையுடைய நன்னன் மலையிடத்து மூங்கில் வெடித்து முத்துக்கள் குழியில் வீழும் *[அக.173:16]* பரதவர் வாழும் பாக்கத்தின்கண் நீண்ட கொடிகள் அசைய நறவு நிறைந்திருக்கும் *[அக.196:1]* வேங்கடத்திற்கு அப்பாலுள்ள வடுகர், பகைவரை வென்று, கொண்டுவந்த ஆனிரைக்காக முதிர்ந்த நறவினை நாட்பலி கொடுப்பர் *[அக.213:7]* பன்னாடையால் அரிக்கப்பெற்ற நறவினையுண்டு களித்திருந்த தன் தந்தைக்குப் பாண்மகள் தூண்டிலால் தான் கொண்டு வந்த வரால் மீனைச் சுட்டு உண்பிப்பாள் *[அக.216:3]* அரும்பினின்றும் உண்டாகிய நறவினை அருந்தி இல்லில் மணல் பரப்பித் தலைவியின் தமர் அவளுக்கு வதுவை அயர்ந்தனர் *[அக.221:1]* கரிகாலன் பகைவரைத் தோற்கடித்த வெண்ணிவாயில் மிகுதியான ஆரவாரமிக்க நறவினையுடையது *[அக.246:9]* பேகன் வண்டுகள் மொய்க்கும் நறவினை அருந்தி மகிழ்வான் *[அக.262:16]* பாண்டியன் நெடுஞ்செழியனுக்குரிய கொற்கையில் மீன் பிடிப்போர், அவற்றோடு சேரக் கொண்டுவந்த முத்துச் சிப்பிகளைப், பன்னாடையால் அரிக்கப்பெறும் நறவினுக்கு விலையாகக் கொடுப்பர் *[அக.296:9]* கள்ளினை உண்டு அறிவழிந்ததன் பின்பும் நறவினை அருந்துபவர் போலத் தோழியால் குறை மறுக்கப்பட்டும் தலைவன் மறுபடியும் தோழியிடம் இறைஞ்சி வேண்டினான் *[குறு.165:1]* நறவு நிறைந்துள்ள மலைப்பக்கத்தூரிலுள்ள சிறாருடன் யானைக்கன்று விளையாடும் *[குறு.394:2]*

பொறையாறு என்னும் ஊருக்குத் தலைவனாகிய பெரியன், நறவினை உண்டு மகிழ்ந்திருப்பான் *[நற்.131:7]* தோழி, தலைவனைத், தம் இல்லிற்கு வந்து வளைந்த மூங்கிற்குழாயில் நிரப்பி முற்றவைத்த நறவை உண்டு செல்லுமாறு அழைத்தாள் *[நற்.276:9]*

தேவர்கள் நறவினைவிலக்கினர்; அசுரர் நறவினை உண்டனர் *[கலி.99:1]* நறவு உண்டவர் அறவழியைவிட்டு விலகுவதோடு, தீய சொற்களையே பேசுவர் *[கலி.147:2]* தலைவன் தலைவிக்குத் தந்த காமநோய், மடா நறவை உண்டாரைப்போல, அவளை மயக்குவித்துத் துன்புறுத்தியது *[கலி.147:54]*

வையையில் நீராடிய மகளிரில் சிலர், வள்ளத்தில் வெப்பம் மிக்க நறவினைப் பெய்து வாயில் வைத்துப் பருகினர் *[பரி.10:75]* வையையில் நீராடும் மகளிருள் சிலர், வையை உண்ணும் பொருட்டு, நறவினை, ஆற்றில் ஊற்றுவர் *[பரி.10:94]*

வையையில் நீராடச் சென்ற மகளிர் பல பண்டங்களோடு, நறவினையும் கொண்டு சென்றனர் *[பரி.22:19]* திருமால் குடிகொண்டுள்ள இருந்தையூரில், நகர் (ஆதிசேடனார்) கோயிலில், ஆடிப், பாடும் விறலியரும், கூத்தரும் சூடும் நறவைச் சூடியும், சூடா நறவினை உண்டும், காமம் மிகூர்ந்து விளங்குவர் *[பரி.தி.1:55,56]*

**2. நறவம்பூ.** ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் வந்து தங்கிய பனஞ்சோலையில், இடப்பட்டிருந்த பந்தரில், தேன் பொருந்திய நறவு - நறவம்பூ - நெய்தலோடு மணம் வீசியது *[பதி.51:18]*

நறவினது இதழைப் பெயர்த்தமைத்தாற் போன்ற, நல்லெழில் மழைக்கண்களையுடையவர், மகளிர் *[பெரு.386]*

முன் குவளையிதழொக்கும் தலைவியின் இமை, பிரிவால் நறவின் சிவந்த இதழைப் போல இருக்கும் *[அக.19:9]*

அழகிய வளையின் முதுகில் அரக்கைத் தீற்றினாற் போன்ற செவ்வரி பொருந்திய இதழையுடைய, நெடுந்தொலை மணங்கமழும் நறவினது தாதினை அளைந்த வண்டு, பொன்னை உரைக்குங் கட்டளைக்கல்லைப் போலத், தோன்றும் *[நற்.25:2]*

தலைவன், நறவோடே பல பூக்களையும் சேர்த்துக்கட்டிய மாலையை அணிந்திருந்தான் *[கலி.91:2]* காளையின் கொம்புகளில் கட்டியுள்ள குருதி படிந்த மணிகளின் காட்சி, நறவின் மொட்டு மலரும் காலத்தை நோக்கி அதைச் சுற்றித்திரியும் தும்பிகளைப் போன்றிருக்கும் *[கலி.105:41]*

தலைவியின் மதர்த்த மையுண்ட கண், நறவின் இதழினை ஒத்திருக்கும் *[பரி.8:75]*

**3. தேன்.** நுணா மரத்தின் பூக்களில் நறவு - தேன் - நிறைந்திருக்கும் *[சிறு.51]* நறவினை உருப்பெயர்த்து (வடிவு செய்து) அமைத்தாலொத்த நன்றாகிய அழகும், குளிர்ச்சியுமுடைய கண்களையுடையவர், மகளிர் *[பெரு.386]*

மகளிரின் கைகளைப் போன்ற காந்தளம்பூவில் நறவு நிறைந்திருக்கும் *[கலி.40:12]*

முருகன் காரணமாக நேர்ந்த பூசலில், வள்ளியின் தோழியர்க்கு ஆற்றாத, தேவசேனையின் தோழியர், நறவினையுண்ணும் வண்டுகளாக மாறி, யாழ் நரம்பு இசைப்பது போல, இசைத்தனர் *[பரி.9:63]*

**4. ஊர்ப்பெயர்.** கடற்காற்றால் குளிர் மிக்கு நடுங்கும் நறவு-நறவென்னும் ஊர்-ஆடு கோட்பாட்டுச் சேரலாதனுக்கு உரியதாகும் *[பதி.60:12]*

**நறா-1.** கள். தொண்டைமான் இளந்திரையனுக்குரிய நீர்ப்பெயல் என்னும் பட்டினத்திற்குச் செல்வோர் ஆண் பன்றியின் இறைச்சியோடு, களிப்புமிக்க நறாவையும்-கள்ளையும்- பெறுவர் *[பெரு.345]*

பரத்தமைத் தலைவன், பொய்யாக, யானையைக் காணச் சென்று வந்தேன் என்று கூறியதைக் கேட்ட தலைவி, 'ஆம்', நீ கண்ட யானை, சுண்ணமாகிய நீற்றையணிந்து, நறுமணமிக்க நறாவை உண்டு கண்டார், நலமாகிய கவளத்தைக் கொண்டது என்று புலந்து கூறினாள் *[கலி.97:10]*

வையையில் நீராடும் தலைவியொருத்தி, தன் ஈர உடல் வெப்பமாகும் பொருட்டு, வண்டுகள் சூழ்ந்து ஆரவாரித்தற்குக் காரணமான கடுப்புடைய நறாவை ஏந்தினாள்; அப்போது நெய்தல் மலரைப் போல் கருமையாயிருந்த அவள் கண்கள், கூர்த்த களிப்பையுடைய அந்நறாவைப் பருகிய பின்னர்ச் சிவந்து கண்டார்க்குப் பெரிய மகிழ்ச்சியையுண்டாக்கும் பெரிய நறவம்பூக்களை ஒத்திருந்தன *[பரி.7:62,64]* தலைவியின் தோழி, பரத்தையை, 'வனப்பாகிய வயலிலே, முதிராத நறிய நறவாகிய நீரைப் பாய்ச்சி, ஆடவரை வயப்படுத்தும் நீர்த்துறையைப் போன்ற பொதுமையையானவளே! என்று ஏசினாள் *[பரி.20:52]* முருகவேளின் திருப்பரங்குன்றில் சமைத்த நறாவினது களிப்புத் தன்னைத் தடுக்கவும், ஒரு விறலி கூத்தாடினாள் *[பரி.21:20]* பார்ப்பனர், இவ்வையைப் புதுநீர் ஈக்கள் மொய்ப்பதற்குக் காரணமான சமைக்கப்பட்ட நறாவை தன்பால் கொண்டு தூய்மையையிழந்தது என்று கருதி, அதன்கண் நீராடுதலை ஒழிந்தனர் *[பரி.தி.2:58]*

**நறவம், நறா - 1** காண்க.

**2. நறவம்பூ.** ஒரு பரத்தை தன் தலைவனின் புதல்வனுடைய நறாவைக் - நறவம் பூவைக் - கண்டாற் போன்ற சிவந்த விரலுக்குச் சுறா ஏறு போன்று செய்திருந்த மோதிரத்தை அணிவித்தாள் *[கலி.84:22]*

நெய்தல் மலர் போன்ற தலைவியின் கருங்கண்கள், கள்ளை உண்டபின் சிவந்து கண்டார்க்கு மகிழ்வூட்டும் பெரிய நறாவை ஒத்தன *[பரி.7:63]*

**நறாஅ** - நறவம்பூ. 'தலைவன், - நறாஅ - நறவம்பூ அலர்ந்தாற்போன்ற என்னுடைய மெல்லிய விரலையுடைய கையைத் தாங்கி, அவன் முகத்தில் வைத்துக் கொண்டு பெருமூச்சு விட்டான்', என்று தோழியிடம் தலைவி கூறி அறத்தொடு நின்றாள் *[கலி.54:9]*

**நறியர்** - நறுமணங்கமழுவோர். பரத்தையிடம் சென்று வந்த தலைவனிடம், 'யாம் மகப் பெற்றுள்ளோம்; ஆதலின், நின் காட்சிக்குப் பேய் போன்று காணப்படுகின்றேம், நின்னுடைய பரத்தையரோ, தூயரும், நறியரும்-நறுமணங்கமழுவோரும் - ஆவர்; ஆகவே, இங்கு வாராதே, அங்குப் போ', என்று ஊடினாள் *[ஐங்.70:4]*

**நறியோள்** - நறுமணங்கமழுவோள். பரத்தையிடம் சென்று வந்த தலைவன், இல்லையென்று பொய்யாக மறுத்த பொழுது, தோழி, 'உன் மார்பில், வண்டுகள் மொய்க்குபடியாக நறியோள் - நறுமணங்கமழுவோள் - ஆகிய பரத்தையினது கூந்தல் மணம் கமழ்கின்றது; ஆகவே, பரத்தையிடமே செல்', என, வாயில் மறுத்தாள் *[ஐங்.240:3]*.

**நறுங்கல்-சாந்தம்மி**குற்றேவேல்வினைஞர், கருங்கொள்ளின் நிறத்தையொத்த நறுங்கல்லிலே-சாந்தம்மியிலே-கத்தூரி முதலியவற்றை அரைத்துக் கொடுக்கப், பெண்கள் பூசிக் கொள்வர் *[நெடு.50]*.

**நறுநுதல்**-நறிய நெற்றியையுடைய பெண் (அன்மொழித்தொகை). 'தண்ணிதாகக் கமழும் புதிய மலர் போல நாறும் நறுநுதலை - நறிய நெற்றியையுடையாளை- நீ பிரியின், அவள் இறவாமல் காத்தற்குரிய மருந்தினை உடையையோ? எனத் தோழி, தலைவனிடம் கேட்டாள் *[அக.238:18]*

சிறிதுபொழுது கூடுதலாகக் தலைவன் துயின்றெழினும், ஒன்றுடைத்தென்று அஞ்சும் நறுநுதலை விட்டுத் தலைவன் பொருள் தேடப்போயினான் *[கலி.12:9]* நறுநுதல் (தலைவி) அருள் செய்யாவிடில், தலைவன் மடன் மா ஏறுதலுமுண்டு *[கலி.61:23]*

**நறுநுதால் - நறிய நெற்றியையுடையவளே** (விளி) - தோழி தலைவியை நறுநுதால் - நறிய நெற்றியை உடையவளே! -என விளித்துத் தலைவனைத் தான் செலவு விலக்கியமை கூறி ஆற்றுவித்தாள் *[கலி.17:4]* தோழி தலைவியை நறுநுதால் என அழைத்துத் தலைவன் தலைவியை விரும்புவதைத் தன் மேலிட்டுக் கூறுவள் *[கலி.37:12]* தோழி, தலைவியை, 'நறுநுதால்' என விளித்துத், தலைவனின்

குறையை அவள் நேருமாறு பேசுதல் *[கலி.47:11,18]* தலைவன், தலைவியை, நறுநுதால் என விளித்துத் தான் பூங்காவினுள் செல்வதுபோல் கண்ட கனவைக் கூறிப் பூங்காவிற்கு அவளையும் அழைத்தான் *[கலி.92:10,60]* தோழி, தலைவியை, நறுநுதால் என அழைத்து, 'என் கூந்தலிலே வெண்ணெய் நாற்றம் போய், முல்லையில் மணம் வந்ததற்கே, நமது உறவினர், கொல்லேற்றின் சினம்போல் சினந்தனரே', என்று கூறினாள் *[கலி.105:53]*

**நறும்புகை**-மணப்புகை, அகில், சந்தனம் போன்றவற்றின்-புகை. தண்ணென்று அகில் கட்டையினின்றெழுந்த, நறும்புகை - மணப்புகை - மெல்லச் சென்று படிந்த நெடிய மனையினுள் மகட்கொடைக்குரியவளைச் செறித்தனர் *[புற.337:10]*

முருகவேளை வேண்டி அன்பர்கள் நறும்புகை எடுத்துக், குறிஞ்சிப் பண்ணைப் பாடினர் *[முரு.239]* காவிரிப்பூம்பட்டினத்தில், தவம் செய்வோர் உறையும் இடங்களையுடைய பொழில்களில், துறவிகள், வேள்வித்தீயின்கண் எழுப்பும் நறும் புகையின்கண் வெறுப்பேற்படின் குயில்கள் தம்பெடையோடு, புறாக்களுடன் பூதங்காக்கும் கடிநகரில் தங்கும் *[பட்.55]* உயர்ந்த மலையில் மரங்களின் உச்சியில் பரணின் மீது இருக்கும் குறவன், கொளுத்தி வைத்துள்ள நறும்புகையையுடைய கொள்ளி, வானத்து மீன்களைப் போல் இமைக்கும் *[குறு.150:1]* மணத்தையுடைய அகிலின் நறும்புகை புனத்திலிருந்து சென்று துளிகளற்ற வெண் முகில் போல மலைச்சாரலிலுள்ள குறவர் தம் ஊரில் இறங்கும் *[குறு.339:1]*

குன்றத்தின்கண் வாழ்கின்ற குறவன் சந்தனமரத்தைத் தடிந்து சுடுதலான் எழுந்த நறும்புகை மலை முழுதும் பரவி மணத்தலைச் செய்யும் *[ஐங்.253:1]* குன்றக்குறவன் சந்தனமரத்தை அறுத்துச் சுட்ட நறும்புகை, ஆங்கு இயல்பாகவே கமழும் காந்தள் மலர் மணத்தோடு விரவி மலை முழுதும் மணக்கும் *[ஐங்.254:2]*

கார்காலத்து வெண்மேகம் கிளர்ந்தெழுந்தாற்போன்ற நறிய அகில் முதலியவற்றானே புகைக்கப்பட்ட நறும் புகையைச் செவ்வேள் மிகவும் விரும்புவார் *[பரி.14:20]*

**நறை - 1.** நறைக்கொடி. (ஒருவகை மணக்கொடி). குதிரை மலைக்குத் தலைவனாகிய பிட்டங்கொற்றனுடைய மறவர் நறையின்-நறைக்கொடியின்-நாரால் தொடுக்கப்பட்ட வேங்கைப்பூமாலையினை அணிவர் *[புற.168:15]*.

ஞாயிறு கதிர்களைப் பரப்பி மழையில்லையாகச் செய்த பெரிய வற்கடம் உண்டாகிய காலத்தும், காவிரி நறை, சந்தனம் முதலியவற்றை அடித்துக் கொண்டு வந்து கரிகாலனின் சோழ நாட்டை வளப்படுத்தும் *[பொரு.238]*.

மலைநாட்டுத் தலைவன் நறையின் நாரினால் வேங்கை மலரைத் தொடுத்துக் கண்ணியாக அணிந்தான் *[அக.282:9]*

கொல்லையில் குறவர் வெட்டியழித்தலால் குறைபட்ட நறைப்பவர் மழை பெய்ததால் மீண்டும் தளிர்த்துக் கொடியாகிச் சந்தனமரத்தினைச் சுற்றியது *[நற்.5:3]*.

**2. தேன்.** நீர்த்துறையின்கண் இருக்கும் நறை - தேன் - நிறைந்த பகன்றையின் பெரியமலர் மக்களால் சூடப்படாது வீணே கழிந்தாற்போல, வறியவர்க்கு வழங்காது வீணே மாய்ந்து போகும் வேந்தரும் பலர் *[அக.235:18]*

வேனிற் காலத்தில் நறை நிறைந்துள்ள பாதிரியின் சிறந்த பூக்கள் வாடத் தொடங்கி, வாடல் மணம் வீசும் *[அக.257:2]*

முருகவேள் வீற்றிருக்கும் திருப்பரங்குன்றத்திலிருந்து மதுரைக்குச் செல்லும் வழியில் நன்றாக மலர்ந்த பன்மலர்களும், நறை துளித்து நாறும் நாற்றங்களுடன் தென்றலும் தவழும் *[பரி.8:26]*.

**3. தேன்கூடு.** தலைவனுடைய பெரிய மலை, நறை -தேன்கூடு - நிரம்பிய குளிர்ந்த குகைகளையுடைய பக்கமலைகளையுடையது *[அக.242:18]*

**4. நறும்புகை.** இல்லிலேயே தமக்கு வேண்டிய கள்ளை வடித்துக் கொள்ளும் சீறூரினர், நடுகல்லுக்கு நன்னீராட்டிப், பலியூட்டி, நெய்ந்நறை-நறும்புகை-ஊட்டுவதால் உண்டாகும் நறுமணப்புகை, முகில் போலெழுந்து தெருவெல்லாம் மணக்கும் *[புற.329:3]*

**5. அகில் முதலிய மணப்பொருள்கள்.** போரில் புண்பட்டு இல்லின்கண் இருக்கும் மறவனின் புண்ணையாற்றும் இல்லுறை மகளிர் வேப்பிலை முதலியவற்றை மனையிறைப்பில் செருகிப், பல இயங்களையும் இயக்குவதோடு, மனையின்கண் நறுமணங்கமழும் நறையைப் - அகில் முதலிய மணப் பொருள்களைப் - புகைத்து அவனைக் காப்பர் *[புற.281:6]*.

இறைவனைப் பன்னிற மலர்களைத் தூவியும், நறைப் புகையைச் செலுத்தியும் தொழுது வணங்குவர் *[குறி.7]*

முருகவேள், கார் காலத்து வெண்மேகம் கிளர்ந்தெழுந்தாற் போன்ற நறையின் நறுமணப்புகையை மிக விரும்புவார் *[பரி.14:20]* திருப்பரங்குன்றத்தின்கண் உள்ள முருகவேளை இசைக்கருவிகளாலும், நறையின் புகைகளாலும் வணங்குவர் *[பரி.17:6]*.

**6. மணம்.** புனத்தின்கண் எழுந்த நறையை-மணத்தை-உடைய அகிலினது நறும்புகை வெண்முகிலைப் போலச் சென்று மலைச்சாலிலுள்ள குறவர் தம் ஊரில் இழிதரும் *[குறு.339:1]*

**நறைக்காய்** - நறுநாற்றமுடைய காய் (சாதிக்காய்) - முருகவேளின் படிமத்தானாகிய வேலன், பச்சிலைக் கொடியாலே நறைக்காயை-நறுநாற்றத்தையுடைய காயை

(சாதிக்காயை)-நடுவே இட்டு, தக்கோலக் காயையும் கலந்து, காட்டுமல்லிகையுடனே, வெண்டாளியையும் கட்டின கண்ணியை உடையவன் *[முரு.190]*

**நறைக்கொடி**-ஒருவகை மணமுள்ள கொடி. ஆண்குரங்கு கற்பாறையில் படியும் சூல்கொள்ளாத இளமையான முகிலைத் தண்ணிதாகிய, நறுமணங்கமழ்கின்ற நறைக்கொடியை- ஒருவகை மணமுள்ள கொடியைக் - கொண்டு புடைக்கும் *[ஐங்.276:2]*

**நன்பகல்** - நண்பகல் (உச்சிப்பொழுது). பல்யானைச் செல்கெழு குட்டுவன் சினங்கொண்ட பகைவரின் மருதநிலங்களில், ஞாயிறு ஒரு பக்கமும் சாயாமல் நிற்கும் உச்சிப்போதாகிய நன்பகல் - நண்பகல் - காலத்தே பசியால் வருந்திய குறுநரிகள் முழவொலி போலே முழங்கும் *[பதி.22:34]*

திருவாவினன்குடியில், முருகப்பெருமானை வணங்குவதற்கு, எப்பொருளும் நுகர்தற்கு நன்றாகிய நன்பகல் பலவும் சேரக் கழிந்த உணவினையுடைய (பலபகல் உண்ணாதிருந்து ஒருபகல் உண்ணும்) முனிவர் பலர் முன்னே சென்றனர் *[முரு.130]*. அரக்கு உருக்கினாற் போன்ற சிவந்த நிலத்தே, பாடினி நடக்கையாலே, பரல்கள் வருத்த, மரலினது பழம் போன்ற கொப்புளங்களையுடைய அவளது சிற்றடிகள், நன்பகலில் நடத்தலைத் தவிர்ந்தன *[பொரு.46]*. மாலை நேரம் வந்ததாக, ஒள்ளிய கதிர்களின் வெப்பமும், ஒளியும் மழுங்கச், சுடுசினம் அகன்ற ஞாயிறு, மேற்றிசை மலையின்கண் நன்பகலையும் கொண்டு சென்று மறைந்தது *[மது.546]*. கரிகாற் சோழனால் பாழ்படுத்தப்பட்ட பகைவரின் நகரத்தில் இருந்த நெற்கூடுகளை எல்லாம் வேடர்கள் கொள்ளை கொண்டமையால் உணவின்றி வறிதே கிடக்கும் அவற்றின் உள்ளிடத்தே இருந்து கூகைகள் நன்பகற் பொழுதிலும் குழறிக்கொண்டிருக்கும் *[பட்.268]*

சோழன் கரிகாற் பெருளத்தானிடம், வாகைப் பறந்தலையில் தோற்று, ஒன்பது பகைமன்னர், தமது வெண்கொற்றக் குடைகளை நன்பகற்பொழுதிலே விட்டு ஓடினர் *[அக.125:20]* இன்பமும், இடும்பையும், புணர்வும், பிரிவும் ஆகிய இவை நன்பகலும், இரவும் போலத் தம்முள் வேறுவேறு தன்மையவாய், ஒன்றற்கொன்று முரண்பட்ட பண்புகளாய் இருக்கின்றன *[அக.327:2]*

முற்பகலிலே ஒரு பரத்தையிடம் கூடியிருந்து, அவளைப்பிரிந்து, நன்பகற்பொழுதில் வேறொருத்தியிடம் சென்று, அவளை விட்டு, மாலைக் காலத்தில் மற்றொருத்தியை நினைக்கும் நின் நெஞ்சமும் பித்தேறியது, என்று தலைவி, பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனைச் சினந்தாள் *[கலி.74:10]* பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் புதுப்புனல் ஆடிவந்தேன் என்று கூறினானாக, அதற்குத் தலைவி, 'ஓஒ' நீ, அறலை, நீண்ட மயிராகவும், கயல்களைக், கண்களாகவும் கொண்ட புதுப்புனலை (பரத்தையை), மணம் நிறைந்த சோலையில், நாணாகிய அணையை முறித்துப், பாணன் வாயிலாக ஊடலைத் தீர்த்து, நன்பகலில் ஆடினாய்', என்று சினந்து கூறினாள் *[கலி.98:17]* மோர் விற்றுவிட்டு ஊருக்குத் திரும்பும் தலைவியைத், தலைவன் எதிர்ப்பட்டு, உன்னைக்கண்ட கண்கள் வேறொரு வடிவையுங் காணமாட்டாத அழகினையுடையோளே, கடைந்த மோரில் வெண்ணெயை அலைக்கும் ஓசை கேட்கும் அவ்வளவு அணிமையில் நும் ஊர் உள்ளது; பொழுதோ வெயில் காய்கின்ற நன்பகற் பொழுதாயுள்ளது; குளிர்ந்த சோலையில் என்னுடன் தங்கியிருந்து பொழுது குளிர்ந்த பிறகு செல்', என்று கூறினான் *[கலி.108:36]*

**நன்பலூர்ச் சிறுமேதாவியார்** - ஓர் புலவர். நன்பலூர் இவரது ஊர்; சிறு மேதாவி என்பது ஒருகால் அக்காலத்து வழங்கிய இயற்பெயராக இருக்கலாம். நல்லூரார்ச் சிறுமேதாவியார் என்ற புலவர் பெயரும் இவர் பெயரோடே ஒத்து நோக்கத்தகும். நண்பலூர்ச் சிறுமேதாவியார் பெயரே நல்லூர்ச் சிறுமேதாவியார் எனவும் வழங்கியதாகப் பி.நா. கருதுவர் (நற். பாடினோர் வரலாறு). ஆயினும், ஊர்ப்பெயர்கள் தெளிவுற வேறுபட்டிருத்தலால் போலும் வையாபுரிப்பிள்ளையின் சங்கஇலக்கியப் பதிப்பு இரு புலவரையும் வேறுபடுத்தியே காட்டும். அகநானூற்றில் அமைந்த முல்லைத்திணைப் பாடல்கள் இரண்டும் *[94,394]* இவருடையன. இருபாடல்களிலும் முல்லையின் முதல், கரு, உரிப்பொருள்களை இவர் நன்கு புனைந்துள்ளார். ஆடு மேய்க்கும் ஆயனின் உருவும், செயலும் இவர் பாடல்கள் இரண்டிலுமே புனைவு பெற்றுள்ளன. வினைமுற்றி மீளும் தலைவன் தேர்ப்பாகனுக்குச் சொல்லியதாகவும், இரவுக்குறிக்குப் பின் தலைமகளை மனையிடத்திலே விடுத்து வந்த தோழி, தலைமகனைத், தம்மில்லத்திற்கு அழைப்பாள் போல வரைவுகடாவியதாகவும் இவர் தம்பாடல்களை இயற்றியுள்ளார்.

**நன்பு**-விருப்பம். 'அன்னச் சேவலே, நீ கோப்பெருஞ் சோழனிடம் சென்று, பிசிராந்தையாரின் அடியவன் யான் என்று கூறினாயாயின், நினது பேடை பூணத், தனது நன்பு - விருப்பம் - உறும் நல்ல அணிகலத்தை அளிப்பன், எனப் பிசிராந்தையார் பாடினார். *[புற. 67:14]*

**நன்மணம்** - திருமணம். தலைவன், தலைவியிடம், 'நுமது முன் கையைப் பிடித்து, நும்முடைய உறவினர் எமக்குத்தர, நாட்டில் உள்ளாரெல்லாம் அறியும் நன்மணத்தினை - திருமணத்தினை - நாம் செய்து கொள்ளும் சிலநாள் வரையிலும் கலங்கல் ஓம்புமின்', என்று கூறினான் *[குறி.232]*

பந்தலில் மணலைப் பரப்பி, விளக்கேற்றி வைத்து, மாலைகளைத் தொங்கவிட்டு, (திங்களை உரோகிணி

கூடுகின்ற) நல்ல நாளின் விடியற்காலையில், மங்கல மகளிரும், புதல்வர்களைப் பெற்ற நான்கு மகளிரும், 'கற்பினின்றும் வழாது கொண்டானைப் பேணி, நன் மகவீன்று, நற்பேறு பெறுக', என வாழ்த்திப் பூக்களை நெல்லோடு கூட்டித் தலைவியின் தலையில் தூவி, நன் மணத்தை நிகழ்த்தினர் *[அக.86:17]*

'என் மகள், இங்கு எல்லோருமறிய நன்மணம் புரிந்து கொள்வதைவிடத் தலைவனுடன், உடன்போக்குச் செல்வது இன்பந்தருவதாகுமோ,' என்று நற்றாய் வருந்தினாள் *[ஐங்.379:1]* தலைவன் தலைவியை அழைத்துச் சென்று, தன்னூரில் சிலம்பு கழிஇச், சடங்கு முதலியன செய்து மணந்து கொண்டான் என்றறிந்து, நற்றாய், சிலம்புகழீஇச் சடங்கினை அவன் மனையில் செய்து கொண்டாலும், நன்மணத்தையாவது எம் மனையில் புரிய வருமாறு அழைத்து வருக', என வந்தவரிடம் வேண்டினாள் *[ஐங்.399:2]*

**நன்மணன்** - காண்க.

**நன்மணன்** - திருமணம் - நீ விரும்பும் தலைவனுக்கே, உன்னை நம் உறவினர் நன்மணம் - திருமணம் -புணர்த்துவர் ஐயுறேல்', என்று தோழி தலைவியைத் தேற்றினாள் *[ஐங்.230:5]*

**நன்மணம்** - காண்க.

**நன்மாந்தர்** - நல்ல மாந்தர் (அமைச்சர்). பாண்டிய மன்னர், வழிவழியாகத் தம்வாயில் பொய் கூறாராய், மெய்ம்மொழியே பேசுதலால் புகழ்நிறைந்த நன்மாந்தரைப்-நல்ல மாந்தைரைப் (அமைச்சரை) - பெற்றிருந்தனர் *[மது.20]*

**நன்மை** - சிறப்பு. பாணன், கேட்டார் நெஞ்சில் விருப்பம் எழுவிக்கும் சிறிய யாழை இசைக்கும் நன்மை-சிறப்பு-நிறைந்தவன் *[புற.308:3]*

**நன்றா** - ஒரு குன்று. தன் மீது பத்துப்பாடல்களைப் பாடிய கபிலருக்குச் செல்வக்கடுங்கோவாழியாதன், 'சிறுபுறமென நூறாயிரங் காணங் கொடுத்து நன்றா என்னும் குன்றேறி நின்று தன் கண்ணிற் கண்ட நாடெல்லாம் காட்டிப் பரிசிலாகக் கொடுத்தான்' *[பதி.ப.7]*

**நன்றி** -1. செய்ந்நன்றி. பொருள்வயிற் பிரியும் தலைவனிடம், தோழி 'யாம் செய்த நன்றியை - செய்ந்நன்றியை-மறவாது விரைவில் வந்து வரைந்து கொள்க', என்றாள் *[குறு.225:5]*

2. **நன்மை** - 'பரத்தையர் நன்றி - நன்மை - அமைந்த கற்போடு விளங்குதல் அரிது' என்று தலைவனிடம், தோழி கூறினாள் *[நற்.330:10]*

நன்று-1. காண்க.

**நன்று** - 1. நன்மை, நல்லது. 'உன்னுடைய புகழைப் பாடுவது எம்மனோர்க்கு அரிது; பல பொருளையும் அடங்கிய செய்யுளைச் செய்யும் செவ்விய நாவினையும், மிக்க கேள்வியையும், விளங்கிய புகழையுமுடைய கபிலன் இன்று உளனாகப் பெறின் நன்று-நல்லது-என்று பொருந்தி லிளங்கீரனார் என்ற புலவர் சேரமான் மாந்தரஞ்சேரலிரும் பொறையிடம் கூறினார் *[புற.53:13]* பெருஞ்சித்திரனார் வெளிமானிடம் பரிசில் பெறச் சென்றபொழுது அவன் இறந்தானாக, அப்பொழுது, அவர், 'கோடைக்காலத்துக் கொழுநிழலாகிப், பொய்த்தல் அறியாத அறிவுடையோனின் செவிகளிலே நல்லோர் விதைத்த கேள்வியாகிய பயிர் நன்றாக விளையும் என எண்ணிச் சென்ற என் எண்ணம் கெட்டது', என்று கூறி வருந்தினர் *[புற.237:5]* 'வெளிமான் சுடுகோட்டை அடைந்தனன்; என் சுற்றத்தார் என்ன துயரப்படுவரோ; மழையிரவில், புயலில் சிக்கிக், கடலில் மரக்கலங்கவிழ, அதிலுள்ள குருடும், ஊமனுமான ஒருவன் கரை சேர வழியறியாது, கூச்சலிடவும் முடியாமல், அமிழ்ந்து சாவது போலத், துன்பத்திலே சுழன்று வாடுவதைவிடச் சாவதே நன்று', என்று பெருஞ்சித்திரனார், வெளிமான் இறந்தபொழுது வருந்திப் பாடினார் *[புற.238:19]* 'பகைவரையழித்துக் கொணர்ந்த பொருளால் பரிசிலரைப் புரக்கும் நினது சேவடி விளங்குக, என்று யான் இசைப்பின் மிகவும் நன்று என்று, கூறிப், பலவாறாகிய பரிசில்களை நல்குவான்', என்று சேரமான் சிக்கற் பள்ளித் துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதனைக் குன்றுகட்பாலியாதனார் பாடினார் *[புற.387:15]*

வேள்வி செய்து பெரிய துறக்கத்து ஏறப்போகும் சான்றோர் போல, நன்றையும், தீதையும் தம் அறிவாலே ஆராய்ந்து தெளிந்து, தம் நெஞ்சத்தைத் தீதின்பாற் செல்லாது அடக்கும், காவிதிப் பட்டம் பெற்ற வேளாளராகிய அமைச்சர் வாழும் தெருவும் மதுரையில் இருந்தது *[மது.496]*

பொருள்வயின் பிரிந்த தலைமகன் இடைச்சுரத்தின்கண் தன்நெஞ்சிற்குக் கூறுவானாய், 'நெஞ்சே, இவ்வளவு தொலை வந்தபிறகு தலைவியை உள்ளிப் பிரியக் கருதினை; முன்பே பிரியாதிருந்திருப்பாயாயின் நன்று ஆகும்; அதைச் செய்திலையே', என்று கூறினான் *[அக.33:17]*

பொருள்வயின் பிரியக் கருதிய நெஞ்சிற்குத், தலைவன், 'தலைவியைப் பிரிந்து பொருள் ஈட்டுதற்குக் காட்டு நெறியில் செல்லுதல் நன்று என நீ எண்ணுகின்ற எண்ணம் மிகவும் கொடியதாகும்', என்று கூறிச் செலவழுங்கினான் *[அக.77:2]* வெறுக்கத்தக்க செயல் நாம் ஒன்றும் செய்யாதிருக்கவும், தலைவர், நடுக்கமுண்டாக்கும் பல மலைகளையும் கடந்து சென்று விட்டாரே; இதைக் கருதின், இம்மையில் நன்று செய்தால் தீமை வருவதில்லை என்று கூறப்படும் பழமொழி பொய்யாகியதோ', என்று தலைவி தோழியிடம் கூறினாள் *[அக.101:2]* தலைவன் சிறைப்புறத்தானாக, வரைவு கடாவும் நோக்கில், தலைவி, தோழியிடம், 'தோழியே, தலைவர் இரவுக்குறிக்கு வரும் வழியின் ஏதத்தினை அஞ்சி

அழுதனளாக, அதைக்கண்டுவிட்ட தாய், வேறொன்றாகக் கருத, வேலன், வெறியாட்டெடுத்துப், பனந்தோட்டினையும், கடப்ப மாலையையும் கையில் அணிந்து இரவெல்லாம் ஆடுதல் நன்றாகுமோ', என்று கூறினாள் *[அக.138:13]* உடன் போகின்ற மகளின் காதலனைக் குறித்து, நற்றாய், 'யான் அவனுடைய காதலியைப் பலநாளும் கூந்தலைவாரி முடித்து, மருங்கிலே ஏற்றிப், பாதுகாத்து, நன்மை பொருந்திய உதவியைச் செய்தவளாவேன் என்பதனை அவன் அறியின் நன்றாம்', என்றாள் *[அக.195:11]*

'நெஞ்சே, நீ அயலாரைப்போலப் பொருளாசையால் தலைவியைப் பிரிந்து போதல் நன்றாகும் என்று எண்ணிவிட்டாய், நானோ, களங்காய்கண்ணி நார் முடிச்சேரல், நன்னனின் நாட்டினைக் கைக்கொண்டதைப் போன்ற, பெருஞ்செல்வத்தைப் பெறுவதாயினும், வாரேன்', என்று பொருள் கடைக்கட்டிய நெஞ்சிற்குத் தலைவன் கூறினான் *[அக.199:14]* 'காதலரைப் பிரிந்து உறையும் வல்லமையுள்ளோர்க்கு (மகளிர்க்கு) விரைந்து வெற்றி உண்டாக என்று கூறிவிடுத்தலும் நன்றாகும். ஆயின், நும் தலைவி, அங்ஙனம் பிரிந்துறையும் ஆற்றலற்றவளாயிற்றே, என்று கூறித் தோழி, தலைவனைச் செலவழுங்குவித்தாள் *[அக.215:6]* தலைவன் சிறைப்புறத்தானாக, வரைவிற்கு உந்தும் முகத்தான், தோழி, தலைவியிடம் கூறுவாளாய்த் 'தலைவர் பகற்பொழுதை இனிதாக நம்முடன் கழித்துத், தம்மூர்க்கு இரவினிற் செல்வாராயினும் மிக நன்றாகும்', என்று கூறினாள் *[அக.228:7]* பிரிவின்கண் வற்புறுக்கும் தோழியிடம், தலைவி வருந்திக் கூறும்பொழுது, 'என்னை நலிவுறுத்தும் இரக்கமற்ற வாடை தலைவரிடம் விரைந்து சென்று, நீ வந்து நெடுங்காலம் தாழ்த்தனை என்று கூறி, அவரின் வருகையை விரைவுபடுத்துமாயின், மிகவும் நன்றாகும்', என்று கூறினாள் *[அக.243:12]* 'நன்றினை விரும்பிய அறிவினையுடைய நம் தலைவர், எனது உயிரினும் பொருளைச் சிறந்ததாகக் கருதிச் சென்றனர், என்று, மனையின்கண் உறையும் மதுகை இலள் ஆதலை அறிந்தும், நெஞ்சே, நீ இவளைப் பிரிந்து செல்ல விரும்பின், செல்வாயாக; நான் நின்னுடன் வாரேன்', என்று பொருள் கடைக்கூட்டிய நெஞ்சினைக் கழறித், தலைவன் கூறினான் *[அக.245:2]* மழை பெய்தமையால் வெப்பம் நீங்கி, மரங்கள் தளிர்களை ஈன்று, தேன் சொரியும் படியாகப், பொழில்கள் மலர்களை மலர்வித்தன, காடு மிகவும் நன்று ஆகியது *[அக.259:8]* 'மலை நாட்டையுடைய தலைவனொடு குற்றமற்ற அன்பு கலந்த கூட்டம் உளதாயின் அது மிக நன்றாகும்', என்று தோழி, தலைவியிடம் கூறினாள் *[அக.268:7]* 'தோழியே, தலைவர் சேணிடைச் சென்றுள்ளாராயினும், பொருள் முற்றாவிடினும், தாழார்; தாம் கூறிச் சென்றுள்ள கால எல்லைக்குள் வந்துவிடுவர், என்று எனக்குப் பயன்படும் சொற்களால் கூறும் நினது வாய்மொழிப்படியே உண்மையாக அவர் வரின் நன்றே', என்று பிரிவிடை வற்புறுக்கும் தோழியிடம் தலைவி கூறினாள் *[அக.333:17]* 'உமணப் பெண்ணிடம் என் நெஞ்சு சென்று விட்டது; ஆதலின், உப்பினைக் கொண்டுபோய்ச் சேண்புலங்களில் விற்பதற்குச் செல்லும் உமணக் கூட்டத்துடன் சேர்ந்து வாழும் வாழ்க்கைதான் நன்று போலும்', என்று தலைவன், பாங்கனிடம் கூறினான் *[அக.390:4]* 'மழைக்காலத்துக் குவளை மலரில் நீர் நிறைந்திருப்பது போன்று, நீர் நிறைந்துள்ள எனது கண்ணீரின் துன்பம் ஒழியப் பிரிந்து சென்ற காதலர் இப்பொழுது வருவாராயின் நன்றாகும்; ஆனால் வந்திலரே', எனத் தலைவி, தோழியிடம் வருந்திக் கூறினாள் *[அக.395:5]*

காதலனுடைய பிரிவை நினைந்து வருந்தாமல் பொறுத்துக் கொள்ளும் ஆற்றலுடையவர்க்கே அப்பிரிவு நன்றாகும்; என்னால் முடியவில்லையே', என்ற வற்புறுக்குந் தோழிக்குத் தலைவி கூறினாள் *[குறு.38:4]* 'பாறையின் வெயிலில் உருகும் வெண்ணையைக் கையில்லாத ஊமையால் காக்க முடியாததைப்போல, எனது காம நோயையும் என்னால் போக்குதற்கு அரிதாகும்; இடித்துரைக்கும் நண்பரே, உமது சொற்படி எனது காமநோயை நிறுத்த முடிந்தால் மிக நன்றே', என்று தலைவன் பாங்கனிடம் கூறினான் *[குறு.58:2]* 'காமமானது தன்னை இது நன்று என உணரும் அறிவில்லாதவரிடத்தும் சென்று தங்கும் பெரிய அறிவின்மையுடையது; ஆகவே, அது வெறுக்கத்தக்கது', என்று தலைவனது காமத்தைப் பாங்கன் கழறினான் *[குறு.78:5]* மழைக்காலத்தில் மலரும் பீர்க்கின் மலர்கள் சிலவற்றைக் கொண்டுபோய்த் தலைவரிடம் காட்டி, நினது காதலி இவ்வலரைப் போன்ற பசலையை அடைந்தாள்; என்று யான் பசலையுற்ற நிலையையும், குறித்துச் சென்ற பருவம் வந்துவிட்டதையும் அறிவுறுத்தினால் மிகவும் நன்றாகும் என்று தலைவி தோழியிடம் கூறினாள் *[குறு.98:3]* 'பெரிய நன்று ஒன்றைச் செய்தவரை யாவரும் போற்றுவர்; அது சிறப்பன்று; அதுபோலப், பெரிதளவு இன்பந்தருகின்ற தலைவியின் இளமைக் காலத்தில் அவளை நீ போற்றுவது சிறப்பன்று; சிறிதளவு நன்றுடைய அவளின் முதுமைக் காலத்தில் அவளை நீ போற்றுவதே சிறப்பு', என்று தோழி தலைவனிடம் கூறினாள் *[குறு.115:2]* 'தலைவன் பிரியாமல் இருப்பின் அவனது நட்பு நன்று; பிரிவுண்மையின் வருத்தம் உண்டாகின்றது', என்று தலைவி தோழியிடம் கூறினாள் *[குறு.134:2]* மணம் பேச வந்த தலைவனுடைய தமர் நன்று நன்று என்று கூறும் தன்மையராய் இருந்தனர் *[குறு.146:4]* தலைவனோடு இருக்கும்பொழுது மாந்தையாகிய ஊர் மிக நன்றாய் இருக்கின்றது; தலைவனைப் பிரிந்திருக்கும்பொழுது வருத்தத்தைத் தருகின்றது', என்று தோழி, தலைவியிடம் கூறினாள் *[குறு.166:3]* தான் அறத்தொடு நின்றதைத் தலைவனிடம் கூறியதாகத் தோழி, தலைவியிடம் கூறும்பொழுது, 'உண்மையைப் போலப் பொய்யினால் எவ்வகைப் பயனுமில்லை; நின் மாட்டுத் தலைவனது நெஞ்சு நன்று', என்று கூறினாள் *[குறு.259:8]* 'எந்தையும் கடலிற்கு மீன் பிடிக்கச் சென்று விட்டர்; யாயும்

உப்பை விலை கூறச் சென்று விட்டாள்; தலைவன் என்னோடு அளவளாவுதற்கேற்ற செவ்வி இது என்று தலைவரிடம் கூறுநரைப் பெறின் நன்று', என்று தோழியிடம், தலைவி கூறினாள் *[குறு.269:2]* வரையரது நெடுநாள் வந்தொழுகும் தலைவன் சிறைப்புறத்தானாக, ஆற்றைக் கூறுவாள் போலே, தலைவி, 'என்னைப் போன்ற மென்மையையுடைய வாழையைப் பெயர்த்துக் கொண்டு வந்த தீய ஆறே, தான் தண்ணளி செய்தால் மட்டுமே வாழும் இயல்புடையாரிடத்து அன்பு காட்டுதல் நன்று என்று நினையாத தலைவரைக் காட்டிலும் நீ மிகவும் கொடியை', என்று கூறினாள் *[குறு.327:2]* 'நெஞ்சே, காட்டுவழியில் தலைவியும் நம்முடன் வந்து முயங்குதலைச் செய்வாளாயின் பொருள் செய்தற்கு விரும்பிய நினது துணிவு நன்றே', என்று தலைவன் பொருள் வலிக்கும் நெஞ்சிற்குக் கூறிச் செலவழுங்கினான் *[குறு.347:6]* தலைவியின் களவொழுக்கம் குறித்துத் தோழி அறத்தொடு நின்றாளாகத் தலைவியின் தாய், தந்தையர் நன்று (மணநன்மை) செய்யும் எண்ணங்கொண்டனர் *[குறு.374:4]* வரைவு கடாவும் பொருட்டு, இரவுக்குறிக்கண், தலைவன் சிறைப்புறத்தானாகத், தோழி, தலைவியிடம், 'நடு இரவிலும் பறையை முழக்கிக்கொண்டு காவலர் தூங்காமையினால் இன்று நம் தலைவர் வாராராயின் நன்று', என்று கூறினாள் *[குறு.375:2]* பரத்தையரது பெண்மை அழகை நுகர்ந்து, துறந்து ஈண்டு வருவாயாயின் நீ அவரிடத்திற் செய்த சூள் மிக நன்று', என்று தோழி கூறித் தலைவனுக்கு வாயின் மறுத்தாள் *[குறு.384:4]* வரைவிற்கு வருவதைத் தலைவனின் குற்றேவல் மகனால், அறிந்த தோழி, தலைவியிடம், 'தோழியே, தலைவனின் குற்றேவல் மகனை வரைவு குறித்து, நன்றோ எனக் கேட்டேன்; அவனும் நன்றே என்று உரைத்தான்', என்று கூறினாள் *[குறு.389:4,5]* நாம் தேரினை விரைந்து செலுத்தோமாயின் தலைவியின் துயரினைப் போக்க முடியாதென நன்றினை விரும்பி நினைத்துக் கரம்பையில் புதுவழியுண்டாக்கி விரைந்து வந்த பாகனே, நீ இன்று தேரை மட்டும் கொண்டு வரவில்லை; தலைவியின் உயிரையும் கொண்டு வந்தவனாவாய்', என்று வினைமுற்றி வந்த தலைவன் தேர்ப்பாகனைப் பாராட்டினான் *[குறு.400:3]*

தலைவனின் பொருட்பிரிவிற்கு உடன்பட்ட தோழியைத், தலைவி, 'ஆடவர் பொருட்குப் பிரிதல் அவருடைய பண்பாகும்; நமது தலைவர் பொருட்குப் பிரிகிறேன் என்று கூறலும், மறுக்காமல், அது நன்று என்று கூறினை; அவ்வாறு கூறியதனால் நீ ஒரு நன்றையே செய்தனை, என்று உவந்து கூறினாள் *[நற்.24:7(2)]* பிரிந்து செல்லும் தலைவனிடம், தோழி, நீ பொருட்காகப் போகும் பொழுது தலைவியையும் அழைத்துச் செல்லின் நன்று; நீ மட்டும் பிரிந்து செல்லின் கார்ப்பருவத்தில் கலைமானைப் பிரிந்த பெண்மான்போல இவள் படும் துயரம் என்னால் தாங்குதற்கரிது', என்று கூறினாள் *[நற்.37:4]* 'தோழியே, ஒலியடங்கிய, புலிகள் முழங்கித் திரிகின்ற, காட்டினூடே தலைவர் இரவுக்குறிக்கு வரும் ஏதம் அஞ்சித் துயர் உறுகின்ற எனது நெஞ்சின் துயரைத் தணிக்கத் தீயைத் தணிக்கும் மாரி போல, இன்று அவர் வாராராயின் நன்று', என்று தோழி, தலைவியிடம் கூறினாள் *[நற்.154:10]* 'தோழியே, தலைவர் பொருள்வயின் பிரிந்தபொழுது, நன்று செய்தனர் என யான் தெளிவித்த காலத்தும், நீ, தெளியாமல் அவர் செல்லும் நெறியில் ஆறலை கள்வரால் உண்டாகும் ஏதம் அஞ்சி வருந்தியிருந்தனை; அவரும் உனது துயர் துடைக்க வந்துவிட்டார்', என்று தோழி, தலைவியிடம் கூறினாள் *[நற்.164:4]* 'நம்மவரே, நமது மகளின் முலைவிலையாகச் (பரியத் தொகை) சோழனின் உறையூரையும், சேரனின் வஞ்சியையும் கொடுப்பினும் ஈடாகா; ஆகவே, தலைவனால் அனுப்பப்பட்ட சான்றோர் நடந்து வந்த வருத்தத்தையும் நமது குடியின் சிறப்பினையும் கருதி, அவர் கொடுக்கும் முலைவிலையை ஏற்றுக் கொண்டு அந்நம்பிக்கே மணம் செய்து கொடுப்பது நன்றாகும்', என நற்றாய் தன் கணவன் முதலியோர்க்கு அறத்தொடு நின்றாள் *[நற்.234:4]* தலைவன் வரைதல் வேண்டித், தலைவி, தோழியிடம், அவன் சிறைப்புத்தானாகத், 'தோழியே, நமது தோள் மெலிந்து நாம் வருந்தினம்; பேய்கள் திரியும்; புலிகள் முழங்கும்; அரவு வருந்தி உழலுமாறு இடி இடிக்கும்; காவலர் துஞ்சார், இக்கொடு நெறியில் நம் தலைவர் வாராதிருத்தலே நன்றாகும்', என்று கூறினாள் *[நற்.255:7]* தலைவன் சிறைப்புறத்தானாக, இச்செறிப்பறிவுறீஇ வரைவு கடாவுதல் வேண்டித், தோழி, தலைவியிடம், 'வளைகள் கழலல், அல்குல் வரிவாடுதல், நுதலில் பசலை பாய்தல் முதலிய நுமது நோய் நும் காதலனால் வந்ததென்றறியாது, நம் அன்னை முருகணங்கு என்று கருதி எடுக்கும் வேலனின் வெறியாட்டினால் தணியின் நன்றேயாகும்; என்று கூறினாள் *[நற்.282:6]* 'பாம்புகள் இரைதேடி அலையும் நெறியில் இரவில் வருதலன்றி, அயலார் கூறும் பழிச்சொல்லிற்கும் அகலானாய்ப் பகலிலும் தலைவன் வருகின்றான்; அவனுடைய நட்பு நமக்கு நன்றன்று' என்று தோழி, தலைவியிடம் கூறினாள் *[நற்.285:9]* 'நெய்தல் நிலத்தலைவனே, நீ தலைவியை நேசிப்பது மெய்யாயின் அவள் மகிழுமாறு எம்மூர்க்கு வந்து மணஞ்செய்து கொள்ளலே நன்று', என்று தலைவனிடம், தோழி கூறினாள் *[நற்.375:6]*. 'நம் தலைவர் பகற்குறிக்குச் சென்று வருந்துவதைவிட, நமது ஊரின்கண் உள்ள நமது மனையையறிந்து இரவுக்குறிக்கண் வரின் நன்றாம்', என்று தோழி, தலைவியிடம் கூறினாள் *[நற்.392:7]*

தலைவி, ஆதனும், அவனின் வழித்தோன்றலாகிய ஆதனவினி என்னும் செங்கோல் வேந்தனும் பல்லாண்டு வாழ்கவென்றும், நாட்டிற்கு நன்று அனைத்தும் உண்டாகுக, தீது தருவனவெல்லாம் ஒழிக, வென்றும் வாழ்த்தினாள் *[ஐங்.9:2]* 'நெய்தனிலத்துப் பாக்கத்தே தலைவனைப் பற்றிய பழிமொழி (பரத்தமை) பிறவாதாயின் அவனுடைய நட்பு நன்றாகும்', என்று வாயில் மறுத்துப் பாணனிடம், தோழி கூறினாள் *[ஐங்.131:1]* தலைவியின் வேறுபாடு கண்டு வெறியாட் டெடுக்கும்போது,

தோழி, செவிலியிடம், 'இப்பெருமகனிடத்துத் தலைவியது நிலைக்கின்ற கற்புடைமை வேலனின் கழங்குகளாலே அறிந்து கூறப்படுமானால் நன்றே', என்று அறத்தொடு நின்றாள் *[ஐங்.248:4]* 'நம் நங்கையை மலைநாட்டு நம்பி மணக்க விரும்புவானானால், நாமும் இயைந்து மணம் செய்து கொடுத்தல் நன்றாகும்', நாம் அவளை வழங்காது மறுப்போமாயின் அவளுடைய துயர் மேலும் மிகும்' என்று தோழி, செவிலியிடம் அறத்தொடு நின்றாள் *[ஐங்.258:4]* தலைவியைத் தினைப்புனங்காவலுக்கு வருவித்த கிளிகளைப் பற்றித், தலைவன், 'இக்கிளிகள் நம் திறத்து ஒப்பற்ற நன்றினைச் செய்துள்ளன; இந்நன்றுக்கு என்ன கைம்மாறு செய்யவல்லேம்', என்று மகிழ்ந்து கூறினான் *[ஐங்.288:1(2)]* 'நீ தேடப்போகும் பொருள் எளிதில் கிடைப்பதரிது; அப்படியே கிடைத்தாலும், நீ தலைவியால் தடுக்கப்படுதலும் உரியன்; ஆகவே, அவள் அழஅழப் பிரிந்து செல்லுவது நன்று அன்று', என்று பொருள்வயின் பிரியும் தலைவனிடம், தோழி, கூறினாள் *[ஐங்.302:3]* பொருள்வயின் பிரியும் தலைவனிடம், தோழி, 'நீ விரும்பும் பொருள் அருளுடையோர் விரும்பும் நன்றினை உடையது அன்று, பாவை போன்ற பேரழகியைப் (தலைவியைப்) பிரிந்து அவ்விழிந்த பொருளையோ பெறப்போகிறாய்', என்று இடித்துக் கூறினாள் *[ஐங்.307:3]* பிரிவல் என்ற தலைவனுக்கு, நீ பிரியாதிருப்பின் நன்று; நீ பிரிவதாயின் இம்மலையை முருகன் பிரியும்பொழுது நீ பிரிவாயாக', என்று தோழி கூறினாள் *[ஐங்.308:2]* நம் தலைவர் நம்மைப் பிரிந்து சென்ற நெறியில் உள்ள மலையின் உச்சியில் மயில்கள் நிறைந்துள்ளதால், அவருக்குக் காட்சி இன்பம் நல்கி நன்றேயாய்த் திகழும்', என்று தோழி, தலைவியிடம் கூறினாள் *[ஐங்.431:1]* தலைவன் சென்ற ஆறு, கொன்றை மலரைச் சூடிக் கொண்டு காட்சியின்பம் நல்கி நன்றேயாகும் *[ஐங்.432:1]* தலைவன் செல்லுகின்ற வழியில் கார்ப்பருவ மழைபெய்தலால் நீரும், நிழலும், கனியும் பிறவும் பெற்று அவனுக்கு நன்றேயாகும் *[ஐங்.433:1]* தலைவன் சென்ற வழி ஆண்மானும், பெண்மானும் களித்து விளையாடுதலாலும் மழை பெய்து குளிர்ந்து இருப்பதாலும் அவனுக்கு நன்றேயாகும் *[ஐங்.434:1]* தலைவன் செல்லுகின்ற நெறியில் நெய்தல், கொன்றை முதலிய மலர்களும், பிடவஞ்செடியும் மகிழ்வுறுத்துவதால் அது நன்றேயாகும் *[ஐங்.435:1]* தலைவன் சென்ற வழியில் கொன்றை, குருந்தம் முதலிய மரங்கள் நிறைந்திருப்பதால் அவ்வழிப்போக்கு அவனுக்கு நன்றேயாகும் *[ஐங்.436:1]* தலைவன் செல்லும் வழி மழை பெய்தலால், முல்லையும் உடைத்தாதலால் நன்றேயாகும் *[ஐங்.437:1]* தலைவன் சென்ற வழி பசிய புதல்களிடத்தே பல்வேறு வண்ணம் பொருந்திய மணமுள்ள மலர்கள் மலர்ந்திருத்தலின் காட்சியன்பம் மிக்கு அவனுக்கு நன்றேயாகும் *[ஐங்.438:1]* தலைவன் சென்ற வழியில் குருந்த மலர் மாலையைச் சூடிய கோவலரின் குடியிருப்புக்கள் உள்ளன; அவன் இளைப்பாறிச் செல்லுவதற்கு அவ்வழி நன்றேயாகும் *[ஐங்.439:1]* தலைவன் செல்லும் நெறியில் கார்ப்பருவ மழை பொழிதலால் தோன்றிமலரும், செம்முல்லை மலரும் நிறைந்திருப்பதால் அவனுடைய வழிச்செலவு நன்றேயாகும் நீ கவலற்க', என்று தோழி, தலைவியிடம் கூறினாள் *[ஐங்.440:1]* 'தூதுவரே கேண்மின்; வினை நீட்டிப்பின் காரணமாக, யான் குறித்து வந்த கார்ப்பருவத்தே என் காதலியிடம் செல்ல முடியாத வருத்தத்தோடு, என் காதலி கூறியனுப்பிய சொற்களும் சேர்ந்து எமக்கு மிகு நோய் செய்தன; என் காதலியை நினைந்து நான் படுகின்ற எல்லையற்ற துன்பத்தை அவள் அறியின் நன்றே', என்று வினையின் பிரிந்த தலைவன், பாசறைக் கண் வந்த தலைவியின் தூதுவனிடம் கூறினான் *[ஐங்.441:4]* 'ஆயத்தீரே, கேண்மின்; எனது நுதல் பண்டுபோல் விளங்குவதற்காகப், போர்மேல் சென்ற பாசறைக்கண் உள்ள நம் தலைவரை விரைந்து சென்று இப்பொழுதே அழைத்து வருகிறேன் என்று கூறும் பாணனது பண்பு நன்றேயாகும்', என்று தலைவி, பாணனுக்குக் கேட்கும்படியாகக் கூறினாள் *[ஐங்.474:5]*

ஊஞ்சலாடும் தோழி, தலைவன் வருவதைக் கண்டு, எனது ஊஞ்சலை ஆட்டிவிடு, என்று கூறலும், நன்று என்று அவன் ஆட்டும்பொழுது அவள் பொய்யாகக் கை நழுவியது போல் அவன் மேல் விழ, அவன் உண்மை என்று நம்பி விரைந்து எடுத்து அணைத்துக் கொண்டானாக அவள் படைத்து மொழிந்தாள் *[கலி.37:16]* 'நாம், தலைவனின் கொடுமை கூறிப்பாடிய வள்ளைப்பாட்டைக் கேட்டுத் தலைவனும் வரைவு வேண்டிவந்தனன்; நின் தந்தையும் மணஞ்செய்தலை ஏற்றுக்கொண்டனன்; ஆகவே, நினக்கு நன்று உண்டாயிற்று', என்று தலைவியிடம், தோழி கூறினாள் *[கலி.41:40]*. எனக்கும், தலைவனுக்கும் உள்ள உறவை யாய்க்குக் கூறி, எனக்கும், என் காதலனுக்கும் மணம் முடித்து எனது கற்பைக் காப்பது நன்றென்று நினக்குக் கூறுவதோடு அச்செயல் பழுதின்றி நிறைவேறின் நிலையில்லா இவ்வுலகில் நிலையான புகழை அடைவோம்', எனத் தலைவி, தோழியிடம் அறத்தொடு நின்றாள் *[கலி.54:17]*. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனின் தலைவி, பரத்தையர் ஊடிச் சினந்ததால் நிறங்கெட்டமையின் தன் தலைவனுடைய ஒப்பனை, நேற்றைக் காட்டிலும் இன்று நன்றாயிருந்தது என்று நகையாடிக் கூறினாள் *[கலி.91:5]* தான் பிரிந்தமைக் காரணம் கூறும் முகத்தான் குதிரையேறி வந்தேன் என்று கூறும் பரத்தமைத் தலைவனிடம், தலைவி, 'இன்று நீ ஏறிய குதிரை மிகவும் நன்றாயிருந்தது; நீ ஊர்ந்த குதிரை எது என்பதையானறிந்தேன்; அது நீ முறையாக மணந்த காமக்கிழத்தியன்று; பாணன் தூதுபோய்வந்த பரத்தையென்னும் குதிரையாகும்', என்று நகையாடிக் கூறினாள் *[கலி.96:32]* பிரிவினால் பேதுற்ற தலைவியொருத்தி, அன்றிலை நோக்கி, 'அன்றிலே, எனக்குரிய நன்று எல்லாம் அழித்துவிட்ட என் தலைவருக்காக யான் வருந்துவதைக்

கண்டு நீயும் வருந்திக் கூவுகின்றாயா? என்னைப் போல் பிரியும் தலைவனை நீயும் பெற்றுள்ளாயா?' என்று கூறி வருந்தினாள் *[கலி.129:13]*. 'பனையின் உச்சியில் மாந்தளிர் போன்ற நிறமுள்ள வெயிலே, எனது தோளை மெலிவித்த தலைவனுடைய வடிவழகைக் காண்பதல்லது அவனிடமுள்ள நன்று, தீது என்பவைகளை ஆராய்ந்து அறியேன்; தம் காதலரின் நன்று, தீது ஆயவற்றை ஆராயும் மகளிரும் உளரோ', என்று பிரிவினால் பேதுற்ற தலைவியொருத்தி, வெயிலைப் பார்த்துக் கேட்டாள் *[கலி.142:50]*

முருகவேள் உறையும் திருப்பரங்குன்றத்திலிருந்து மதுரைக்குச் செல்லும் வழியில், பலவகையான மலர்களும் நன்றாக மலர்ந்து, தேன் துளிர்த்து, மணத்தைப் பரப்பின *[பரி.8:26]*

2. பெரிது (மிகுதி). 'சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதனின் கைகள், போர் முதலியவற்றினை உடற்றுவதால் வலியவாயும், அவனால் புரக்கப்படும் பரிசிலரது கைகள், அவனால் அளிக்கப்படும் ஊன் உணவை உண்ணுதல் ஒழிய வேறு தொழில் செய்யா ஆகலின் நன்றும்- பெரிதும் (மிகவும்) - மெல்லியனவாயும் உள்ளன', என்று, கபிலர் பாடினார் *[புற.14:15]* தாயமுறையில் அரசுரிமையை ஏற்போன், குடிகளிடம் வரி வேண்டியிரக்கும் சிறுமையுடையனாயின், அரசு அவனுக்குப் பெரிய பாரமாக இருக்கும்; போராற்றலும், சால்பும் உடையவனுக்கு, வெளிய கிடேச்சினது (நெட்டி) காய்ந்த சுள்ளியைப் போல நன்றும் நொய்மையாக இருக்கும்', என்று, சோழன் நலங்கிள்ளி கூறினான் *[புற.75:9]* மலையமான் திருமுடிக்காரி, முரசை முழக்கி, யானைப் படையையுடைய நன்றும் பொருந்தாத பகைவரின் பூசலைச் சிதற, வெட்டி அழிக்கும் ஆற்றலையுடையவன் *[புற.126:21]* இளங்கண்டீரக்கோவும், இளவிச்சிக்கோவும் ஒருங்கிருந்த வழிப், பெருந்தலைச் சாத்தனார், இளங்கண்டீரக்கோவை மட்டும் தழுவியதற்குக் காரணங் கூறுவாராய்க், 'கணவர் இல்லாத பொழுது, மகளிரும், பரிசிலர்க்குப் பிடிகளை வழங்கும் வள்ளிய புகழையுடையவனாகலின், அவனை நன்றும் தழுவினேன்; பரிசிலர்க்குக், கதவடைக்கும் மரபில் வந்தவனாகலின், நின்னைத் தழுவவில்லை', என, இளவிச்சிக்கோவிடம் கூறினார் *[புற.151:6]* ஆதன் ஒரியது மழைபோலும் வள்ளிய கொடையைக் காண்பதற்குக், கூத்தச் சுற்றம், நன்றும் சென்றது *[புற.153:5]* நன்று ஆராயப்பட்ட மிக்க நீண்ட சடையினை உடையவர், சிவபெருமான் *[புற.166:1]* பெரிய கடல் நீரினும், அக்கடல் கொழித்திடப்பட்ட மணலினும், மழையின் துளியினும், நன்றும், நின் மைந்தர் பெறும் பிள்ளைகளைக் காணுந்தோறும், நீயும், விரும்பிய செல்வத்துடனே புகழும் இனிதாக, விளங்கி, நெடுங்காலம் வாழ்க, பெருந்தகாய்! எனப் பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறனை, வடமவண்ணக்கன் பேரிசாத்தனார் பாடினார் *[புற.198:20]* தன் மைந்தரின் மேல் போருக்கெழுந்த கோப்பெருஞ்சோழனிடம், புல்லாற்றூர் எயிற்றியனார், 'நன்றும் இன்னமும் கேட்பாயாக; போரில் நின் புதல்வர் தோற்பின், நினது செல்வத்தை யாருக்குக் கொடுப்பாய்' என்று கூறித், தந்தை, மக்கட்போரை நிறுத்தினார் *[புற.213:12]* மற்றைய வேந்தர் வெற்றி குறித்து ஊதும் சங்கினை ஊதினால் நன்றும் நலங்கிள்ளி கேட்பான் என அஞ்சித் தூக்கணங் குருவியின் கூடுபோல வீட்டின் ஒரு புறத்தில் அதனைக் கட்டித் தொங்கவிட்டிருந்தனர் *[புற.225:8]* அழும்பில் என்னும் ஊர்க்குரிய மறவனொருவன் பகைவர் எறிந்த வேல்தைத்துத் தங்கிய மார்புடனே, வண்டியின் ஆழிக்குடம் தன்பால் செருகிய ஆர்க்காலொடு நின்றாற் போல, உயிரிழக்கும் நிலையை அடைந்த அவனை மெல்லிய தோளையுடைய பெண்கள் நன்றும் பேணிப் பாதுகாத்தனர் *[புற.283:11]* வீரனொருவன், தன் வேந்தனைப்பற்றி, 'எம் வேந்தன் முன்பு எமக்குக் கலங்கிய கள்ளினைக் கொடுத்தான்; தான் தேறலையுண்ணும் அன்புடையனா யிருந்தான்; இன்று, போரில் எம்மை முந்திப் போகச் சொல்லாது நன்றும் அன்பிலனானான்', என்று கூறினான் *[புற.298:2]* விளைந்த வரகையும், தினையையும் பரிசிலர்க்கு வழங்கிவிட்ட சீறூர் மன்னனொருவன், தம்மிடம் வரும் பாணர்க்கு, நன்றும் உறையிட்டதயிரும், தொடரிப் பழமும், புளித்த கள்ளும் தசைத் துண்டத்தோடு கூடிய வெண்சோறும் தருவான் *[புற.328:6]* ஒரு மறவனின் மனைவி வீட்டில் ஒன்றும் இல்லை என்றாலும், விதைக்கிருக்கின்ற தினையையாவது குற்றி உணவாக்கியளிப்பாளேயல்லாமல், யாரும் வறிதேகுமாறு விடாள்; ஆகவே, அங்கு நன்றும் தங்கிச் செல்லுங்கள் என்று புலவர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் *[புற.333:7]* பெரும்புகழை நிலை நிறுத்திய தலைவனொருவன் தாயினும் நன்றும் அன்புடையனாய், இரவலர் பலர்க்கும் வேண்டுவன நல்குவான் *[புற.361:6]* தலைவன் ஒருவன் பரிசிலர்க்குச் சிறப்பமைந்த நல்ல அணிகலன்களை நன்றும் வழங்கினான் *[புற.362:15]* ஒய்மான் நல்லியாதன், பொருநனுக்குப் பாம்பு சீறினாற்போன்ற நன்றும் களிப்புற்ற கட்டெளிவுடனே, சூட்டிறைச்சியையும் தந்து, அவனது துன்பந்தரும் வறுமையைப் போக்கினான் *[புற.376:13]*

'செம்மலே, குடிகளைத் திருத்தி நிலை நிறுத்திய வெற்றியையும், பகைவருடைய மதில்களை எறிந்து, அவற்றில் வாழும் மறவரைப் பிடித்துக் கொண்டு வந்து, நின்னிழலில் வாழும் மறவர்க்குக், கொடுமை அறும்படி வைத்த கொள்கையையும் நன்று பெரிதுடையை', எனக் களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார் பாடுவர் *[பதி.37:12]*

தலைவனிடம், தோழி, 'தலைவியினுடைய கண்கள் வருந்தியழ இவளைப் பிரிந்து செல்ல எண்ணினையாயின் நன்றும் அரிய செயலை மேற்கொண்டனை என்று கூறினாள் *[அக.10:6]* 'தலைவியின் நெற்றி பசலையடைய நீ பொருள் ஈட்டுதற்குப் பிரிய எண்ணினையாயின் நன்று இன்னா ஆய்ந்து

கொண்டனையாவாய்', என்று பிரியக் கருதிய நெஞ்சிற்குத் தலைவன் கூறிச் செலவழுங்குவித்தான் *[அக.77:3]* 'முருக்கமலர், கோங்கமலர், பாதிரி மலர் முதலியன வெண்கடப்ப மலர்களோடு கலந்து பரவிப் பரவுக்கடன் பூண்ட தெய்வமுடைய கோயிலின்கண் கிடக்கும் பூக்களைப் போலக் காட்சியளித்தலின் இக்காடு நன்று விரும்பத்தக்கதாகின்றது காண்பாயாக', என்று உடன் போக்கில், தலைவியிடம், தலைவன் கூறினான் *[அக.39:10]* பகைவர், களிறு, அணிகலன்கள் முதலியவற்றைக் கொண்டு வந்து, திறையாகச் செலுத்திப், பணிந்து, சென்றுஅருள்க என்பாராயின், நம் வேந்தனும் தனது பெருஞ்சேனையுடன், தன் ஊர்க்கேகல் இன்றே நன்றும் உண்மையாகும்', என்று பாசறையில் உள்ள தலைவன் தேர்ப்பாகனிடம் கூறினான் *[அக.124:5]* 'நெஞ்சே, நம் காதலி, பலரும் கூறும் அலருக்கு அஞ்சி, இடையாமத்தில் மெல்ல மெல்ல வந்து, தொடிக்கண் வடுவுண்டாகத் தழுவினாள்; மாந்தரம்பொறையன் கடுங்கோ என்னும் சேரமன்னைப் பாடிச் சென்ற வறியோரது கொள்கலம் போல நீ இனி நன்றும் நிறைவுற்று மகிழ்வாயாக', என்று இரவுக்குறிக்கண் வந்து செல்லும் தலைவன், தன் நெஞ்சிற்குக், கூறினான் *[அக.142:6]* 'தோழியே, தலைவன் பிரியும் வருத்தத்தால், உண்ணாது மெலிந்து, எனது தோளின் அழகு கெடவும், மருந்து பிறிதில்லா நோயினால் செயலற்றவளாயினேன்; ஆதலின், நீண்ட காட்டுவழியில் தன் காதலனைத் தேடிச் சென்ற வெள்ளிவீதியைப் போல, யானும் தேடிச்செல்லுதலை நன்றும் விரும்பியுள்ளேன்', என்று பிரிதலில் வருந்தும் தலைவி, தோழியிடம் கூறினாள் *[அக.147:9]* 'நெஞ்சே, சுரத்தின் நீண்ட வழியே சென்று, நன்றும் அரிதாக ஈட்டும் பொருளை, எளிதாகப் பெறுவதாயினும், என் காதலியின் கண்கள் நீரினைக் கொள்ள வாரேன்', என்று தன் நெஞ்சிற்குக் கூறித், தலைவன் செலவழுங்கினான் *[அக.149:5]* 'தோழியே, என் கண்கள் அழவும், அல்குலின் அழகிய வரிகள் வாடவும் பிரிந்து சென்ற தலைவர் சேய்மைக்கண் உள்ளார் ஆயினும் நன்றும் தாழ்க்காது வருவர் என்கிறாய்; ஆயின் தலைவர் குறித்துச் சென்ற கார்ப்பருவத்தைக் கண்டு யான் வருந்துதற்குரியேன் ஆவேன்', என்று தலைவி, தோழியிடம் கூறினாள் *[அக.183:4]* 'நெஞ்சே, சுரங்கடந்து அரிதாக ஈட்டும் பொருளை விரும்பி நம் காதலியைப் பிரிந்து உறையும் வன்மையுடையயாய்ப் பிரிய எண்ணுதியாயின், அவளுக்குத் தெளிவுறுத்த வல்லையோ, வல்லையாயின், அவளிடத்தே சென்று நன்றும் கூறி அவளைத் தேற்றுவாயாக', என்று பொருள் வலித்த நெஞ்சிற்குத், தலைவன் கூறினான் *[அக.191:12]* 'தோழியே, நம் தலைவரின் காமத்தின் (பரத்தமையின்) பெருமையினை அறியாதேனாகிய யான், தலைவரின் பணிமொழியை நம்பிக், கடல் கொண்ட ஆட்டனத்தியை நாடுகள் தோறும், ஊர்கள் தோறும் தேடி மயங்கிய ஆதிமந்தியைப் போல, மயங்குதலினின்றும் நன்றும் தப்பினேன் என்று பரத்தமைத் தலைவனைப் பற்றித், தலைவி, தோழியிடம் கூறினாள் *[அக.236:9]* 'நெஞ்சே, கார்ப்பருவத்தைக் கண்ட நம் தலைவி, அரசனுடைய பாசறைக் கண் அரசன் ஏவலினால், வேற்று நாட்டில் தங்கி, நமக்கு அருள் செய்யாத நம் தலைவர், நன்றும், அறத்தினையுடையர் அல்லர், என்று, அவளைக் கருதி நாம் அடையும் நோயினை அறியாளாய், எம்மை நொந்து வெறுப்பளோ' என்று பாசறைக்கண் தலைவன், தன் நெஞ்சிற்குக், கூறினான் *[அக.304:8]* தோழி, பரத்தமைத் தலைவனிடம், 'பெருமானே, நீ யான் தீதிலேன் என்று கூறுவது எனக்கு நன்றும் நகைப்பைத் தருகின்றது; என்று கூறி வாயின்மறுத்தாள் *[அக.346:1]* 'தன் தலைவன் நன்றும் ஊக்கமுறுத்த, ஊக்கங்கொண்டு வழிவருத்தம் எண்ணாது, அவனுடன் சென்று, அறியப்படாத தேயத்திலே, என் மகள், சிலம்பு கழித்து, வதுவை செய்திருத்தல், இன்னாமையுடையது, என, மகட்போக்கிய செவிலித்தாய் வருந்திக் கூறினாள் *[அகம்.385:14]* தலைவி, நன்றும் பொன்னாற் செய்த பாவை போன்ற கட்டழகினையும், விரும்பப்படும் மென்மைத் தன்மையினையும் உடையவள் *[அகம்.392:5]* 'களவொழுக்கத்தில் அலர் ஆரவாரமிக்க நமது ஊர், மணமானவுடன் நன்றும் புதியதாகி வாயடங்கிவிட்டது; இச்செயல் நமக்கு நன்றும் நகைப்பைத் தருகின்றது', என்று தோழி தலைவியிடம் கூறினாள் *[அக.400:1,23]*

'நெஞ்சே, நமது எண்ணத்தை நிறைவேற்றுவாரைப் பெறுவாயாயின் இரவுக்குறியை விரும்பும் நினது போராட்டம் நன்றும் பெருமையுடையது', என்று இரவுக்குறி மறுக்கப்பட்ட தலைவன், தன் நெஞ்சிற்குக் கூறினான் *[குறு.29:4]* தலைவி, நன்றும் பிரிதலில்லாத தன் ஆயத்தாருடன் காவிமலர்களைப் பறித்துக் கடலிலுள்ள அலையின்கண் விளையாடுவாள் *[குறு.144:2]*. தோழியே!, யான் தலைவரோடு நகுவதற்கு முன்பு என் கண்ணும், தோளும், நுதலும், நன்றும் நல்லனவாக இருந்தன; அந்நிலை இப்பொழுது கழிந்துவிட்டது', என்று பிரிவிடைத் தலைவி, தோழியிடம் கூறினாள் *[குறு.226:3]* 'பாகனே, எனது நெஞ்சமானது என் காதலியைத் தழுவும் பொருட்டு என்னிடமிருந்து பிரிந்து சென்றுவிட்டது; ஆயின், என் கைகள் என் காதலியைத் தழுவாததால் நெஞ்சிற்கு யாது பயன்? தலைவிக்கும், எனக்குமுள்ள தொலை நன்றும் சேய்மையை' உடையது', என்று பொருள் முற்றி மீளும் தலைவன் தேர்ப்பாகனுக்குரைப்பானாய் விரைந்து செலுத்துக என்பதைக் குறிப்பால் புலப்படுத்தினான் *[குறு.237:3]* 'தன்னிடம் காதல் கொண்டோர் பால் அன்பு இல்லாமல் நடந்து கொள்ளும் தலைவரைவிடத் தலைவரின் மலையில் வளர்ந்த வாழை மரத்தைப் பெயர்த்துக் கொணர்ந்த பொல்லாத, யாறே நீ, நன்றும் கொடியை', என்று, தலைவன் சிறைப்புறத்தே நிற்பத் தலைவி கூறினாள் *[குறு.327:3]*

'தலைவருடைய கொடுமையை (பரத்தைமை), யாம், அஃது எத்துணைப் பெரியதாயினும், மறந்து நன்றும் பொறுத்திருப்பேம்; ஆனால் தோள்கள் மட்டும் நம் வசப்படாமல் மெலிகின்றன',' என்று தலைவனின் பரத்தமை குறித்துத் தன்னுள்ளே தலைவி கூறினாள் *[ஐங்.12:2]* 'தோழியே நம் தலைவர் நமது இன்னா நிலையை நன்றும் நன்கு உணராதார், ஆகையினாலே, உறுதியாக நம்மீது அன்பிலரேயாவர்', என்று வரைவினை நீட்டிக்கும் தலைவன் சிறைப்புறத்தானாகத், தலைவி, தோழியிடம் கூறினாள் *[ஐங்.119:1]* தினை உலர்ந்துவிட்டது; அதனால் காவல் தொழில் இருக்காது; ஆகவே, தலைவனைக் காண இயலாது எனக் கவன்ற தலைவிக்குத், தோழி, தோழியே, நினது தினைப்பயிர் நன்றும் உலர்ந்துவிடவில்லை; மேலும் மழையும் பொழியப் போகின்றது; ஆகவே வருந்தாதே' என்று கூறினாள் *[ஐங்.207:2]* பொருள்வயின் பிரியக்கருதிய தலைவனிடம், தோழி, 'நீ தலைவியைப் பிரிந்து ஈட்டிவரும் பொருள் நின் காதலியின் தலைச்சூலின்கண் உருவாகின்ற நின் மகனுடைய இளம் முறுவலைவிட நன்றும் இனிமையை உடையதோமோ', என்று குழந்தை உருவாகியிருப்பதைக் கூறிச் செலவழுங்குவித்தாள் *[ஐங்.309:2]* தலைவனும், தலைவியும் ஒழுகும் இல்லற மாண்பினைக் கண்டு வந்த செவிலி, நற்றாய்க்குக் கூறுவாளாய், தன் குட்டியை நடுவிலே கிடத்தி, இருமருங்கும் படுத்திருக்கும் கலைமானும், பிணைமானும் போல, தம் புதல்வனை நடுவிலே படுக்கவைத்து, இருமருங்கும் நம் மகளும், அந்நம்பியும் படுத்திருக்கும் காட்சி தேற்றமாக நன்றும் காண்டற்கினிய காட்சியாகும்', என்று கூறினாள் *[ஐங்.401:2]* 'நம் மகள் தன் மகனுக்கு முலைப்பாலூட்டிக் கொண்டிருக்கும்பொழுது, அங்கு வந்த அவளின் காதலன், அவளுடைய முதுகுப்புறத்தை நன்றும் தழுவிக்கொண்டான்; அவர்தம் காதல் வாழ்க்கை அத்தகைத்து', என்று அவர்களின் மனையறத்தைக் கண்டு வந்த செவிலித்தாய், நற்றாயிடம் கூறினாள் *[ஐங்.404:2]*

தான் பிரிந்தமைக்குக் காரணம் கூறும் முகத்தான், குதிரையேறி வந்தேன் என்று கூறும் பரத்தமைத் தலைவனிடம், தலைவி, 'இன்று நீ ஏறிவந்த குதிரை கூரிய குளம்பினையுடையத்தாய், நன்றும் கொடிது போலும்; நின் மேனியில் வடுப்படுத்தற்கு உரித்தல்லாத இடத்தே வடுப்படுத்திய இக்குதிரை நன்றும் வியப்பிற்குரியதுதான்', என்று நகையாடிக் கூறினாள் *[கலி.96:25,30]*

நன்றும் விரும்பின எம்முடைய சுற்றத்தாரோடு, நினது திருவடியைத் தொழுது, நினது திருவடி நிழலிலே தங்குதல் இன்றுபோல என்றும் இயைக என்று வேண்டுகின்றோம் என்று நல்லச்சுதனார், முருகவேளைப் பரவினார் *[பரி.21:68]*

**3. அறம்.** அந்துவன் கீரன் என்னும் வள்ளலிடம், புலவர் காவட்டனார், பெருநில வேந்தரும் முடிவிலே இடுகாட்டையே அடைந்தனர்; நீயும் அவ்வாறு செல்வது உறுதி; இவ்வுலகில் ஒருவன் செய்த பழியும் நிலைபெறும்; புகழும் நிலைபெறும்; அதனால், நீ பழி நீக்கிப் புகழ் நிறுவியும், நடைகொள்ளாது நடுவுரையாகிய நன்று - அறம் - கூறியும், இரவலர்க்குக் களிறு முதலிய பரிசில்களை நல்கியும், மேலுலகம் சென்ற பின்பும் இவ்வுலகில் நிலைத்து நிற்கும் புகழைச் செய்வாயாக', என்று கூறினார் *[புற.359:12]*

சேரன் பல்யானைச் செல்கெழுகுட்டுவன், 'தம் நாட்டில் தீது விளைப்பனவற்றை இல்லையாக்கி, நன்றையே மிகுதியும் செய்த பேரரசர் வழி வந்தவனாவான் *[பதி.22:5]* 'பார்ப்பார்க்குப் பணிதல், நட்டோர்க்கு அஞ்சுதல், உரிமை மகளிர்க்கல்லது மார்பைக் காட்டாமை, சொற்றிறம்பாமை முதலிய இயல்புகளை உடைய 'நீ, இவ்வுலகில் வாழும் நன்மக்கள் செய்த நன்று நிலைபெறுவதென்றால், ஆம்பலென்னும் எண்ணும், வெள்ளமென்னும் எண்ணும் ஆகிய ஊழிகள் வாழ்வாயாக' என்று சேரன் செல்வக் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் வாழ்த்தினார் *[பதி.63:18]*

தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை என்ற சேரவரசன், தன் குடிமுன்னோர்க்குப் பாதுகாப்பாயிருந்து, மகக்ள் கூட்டத்தைப் புரத்தற்கு வேண்டும்; நெறிமுறைகளை அறிவுறுத்தும், நன்றே காணும் உள்ளத்தையுடைய அமைச்சர் போன்ற, சூழ்ச்சி வன்மை படைத்தவனாவான் *[பதி.72:6]*

தலைவியொருத்தி, காமம் மிக்க கழிபடர் கிளவியால், யாற்றினைப் பார்த்து, 'யாறே, என்னுடைய வளையல் முதலியன கழலவும், தோள் மெலிந்து பசலைபாயவும், என் கண்ணீரைக் கண்டும், அருள் செய்யாமல் நன்றினைக் கைவிட்டு நீங்கும் நும் தலைவன் செய்த கொடுமைக்கு நாணமடைந்த நீ, இன்று என் தந்தையது காட்டில் தங்கிச் செல்லக் கூடாதோ', என்று வினவினாள் *[அக.398:9]*

**4. நல்வினை.** சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப், புலவர் ஆலத்தூர்கிழார், 'இவ்வுலகின்கண் நற்குணங்களால் அமைந்தோர் செய்த நன்று - நல்வினை - உண்டாயின் நீ மழைத்துளியினும் பலகாலம் வாழ்வாயாக', என்று வாழ்த்தினார் *[புற.34:20]* தன் மக்களின் மீது போருக்கெழுந்த கோப்பெருஞ்சோழனைத் தடுத்துப், புல்லாற்றூர் எயிற்றியனார் 'நீ வீடுபேறு அடைதற்குரிய நன்றினைச் செய்தல் வேண்டும்', என்று கூறினார் *[புற.213:22]*

**5. ஆக்கம்.** 'எமக்கு எல்லாம் ஊர்; எல்லாரும் உறவினர்; கேடும் நன்றும் - ஆக்கமும் - தாமே வரினல்லது பிறர் தர வாரா; நோதலும் அது தீர்தலும் அவற்றையொப்பத் தாமே வருவன', என்று புலவர் கணியன் பூங்குன்றனார் பாடினார் *[புற.192:2]*

நன்னன் வேண்மானிடம் பரிசில் பெற்றுவரும் கூத்தர், தாம் ஆற்றுப்படுத்தும் கூத்தரிடம், 'நன்னன் வேண்மான் தனது

அறிவின் ஆக்கத்திினுக்கு மாறாகிய கேட்டை நினையாது நன்றினையே உணரும் நினைவினை எப்பொழுதும் உடையன்', என்று கூறினர் [மலை.62]

நட்டார் நன்று இன்றிக் கேடுற்ற பொழுதும் நட்டார்பால் மாறுபாடில்லாத அறிவினையுடையவன் அஃதை [அக.113:1]

6. அழகிது - 'எவ்வளவாயினும் ஈத்தல் நன்று - அழகிது - என்று கருதும் பேகன் ஈகை மறுபிறப்பை நோக்கியதன்று, பிறருடைய வறுமையை நோக்கியது', எனப் பாணாற்றுப்படையாக அவனைப் பாடுவர் பரணர் [புற.141:13]

கற்ற மகனையே தாயும் விரும்புவாள்; ஆகையினாலே, ஆசிரியர்க்கு உற்றுழி யுதவியும், மிகுதியான பொருளைக் கொடுத்தும், அவரை வழிபட்டும் கற்றுக் கொள்வது நன்றாகும்', எனப் பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் பாடினான் [புற.183:2]. தீப்பரக்கக் காற்றைப் பிளந்து கொண்டு விண்ணினின்றும் ஒரு மீன் வீழ்ந்தது; இத் தீநிமித்தத்தைக் கண்டு, வேந்தன் நோயிலனாயின் நன்றென அஞ்சியிருந்தோம்; யாம் அஞ்சியவாறே ஏழாம் நாளில் அவன் தேவருலகம் சென்றுவிட்டனனே', எனக் கோச்சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலைக் குறித்துப், புலவர் கூடலூர்கிழார் வருந்திக் கூறினார் [புற.229:15]

7. இன்பம். மறப்போர் புரிந்த வயவர், தாம் தண்ணடை (மருதநில ஊர்) பெறுவதை விரும்பாது, போரிலே இறந்து புகும் விண்ணுலகத்தில் விண்ணுலக மகளிரை மணந்து, நன்று - இன்பம் - நுகர்வதையே விரும்புவர் [புற.287:11]

'புல்லுதற்கு இனிதாயிருந்தது, ஆகவே புல்லினேன்', என்று தலைவன் கூறக்கேட்ட தலைவி, 'தலைவனே, தமக்கு இனிதாயிருக்குமென்று கருதிப் பிறர்க்கு இன்னாதனவற்றை வலிதிற் செய்வது நன்றாமோ', என்றாள் [கலி.62:8]

8. பெருமை. தலைவியின் ஊர், மழைபெய்யுங்காலத்தில் மான் கூட்டங்கள் செறியப் பெற்றும், நெல் மிகுதியாக விளைந்தும் காணப்பெறுவது. மழைபெய்யாத வறண்ட காலத்தில் உப்பை மிகுதியாக விளைவிக்கும் நன்றினையும்-பெருமையினையும் - உடையதாகும் [நற்.311]

9. துறக்கம். பிரிவுத் துன்பம் தாங்காது துயருற்ற தலைவியைக் கண்டார், தலைவனிடம் சென்று, 'தான் கூறிய சூளுறவினைப் பொய்த்தவனின் தீவினை, மறுமையிலும், நன்று - துறக்கம்-பெற்றானாயினும், நுகர்வியாமற் போகாது காண்', என்று கூறினர் [கலி.149:11]

10. தக்கது. நம் தலைவர் வரைந்து கோடல் நன்று - தக்கது- என்னாது பிரிந்தாலும், நம்முடையநெற்றியும், தோளும், தேமலையுடைய அல்குலும், நிறமும், அழகும், வாட வருந்துவாள் இவள் என்று எண்ணி, நம்மையும் அழைத்துச் செல்வரோ' என்று தலைவி, தோழியிடம் கூறினாள் [அக.119:4]

11. நல்லொழுக்கம். முருகவேளுக்குரிய திருப்பரங்குன்றில் வாழும் மகளிர், பிரிந்து சென்ற தலைவர் விரைவில் மீண்டு வருதற்பொருட்டுத், தெய்வத்திற்கு விழா எடுத்தலும், விருந்தோம்பலும் முதலிய நன்றினை - நல்லொழுக்கத்தினை - உடையவராவர் [பரி.17:46].

நன்னடை - நல்லொழுக்கம். மகனைப் பெற்று வளர்த்து விடுதல் என்னுடைய கடமையாகும்; அவனுக்கு நன்னடையைத் - நல்லொழுக்கத்தைக் - கற்பிப்பது நாடாளும் வேந்தனது கடமையாகும்', என்று புலவர் பொன்முடியார் பாடுவர் [புற.312:4].

தலைவன், தலைவியை, 'யான் கொண்ட காமநோயும், அதனாலாய மெய்யின் தளர்ச்சியும் ஒழியுமாறு, முயங்கிக் கிடந்த, சிறப்புற்ற மூங்கில் போலும் அழகமைந்த தோளையுடைய, நன்னடைக் கொடிச்சியே! என அழைத்தான் [நற்.82:3]

நன்னர் - 1. நன்மை. 'முருகப்பெருமானுடைய சேவடியைச் சேருவதற்கு நீ விரும்பிவிட்டாயாயின், கழிந்த பற்பல பிறப்புக்களினும் தொடர்ந்து முதிர்ந்தமையாலே, நன்னர்- நன்மை - அமைந்த நெஞ்சத்திற்கிடந்த இனிதாகிய வீடு பேற்றின்கண் விருப்பம் நிறைவுறும்படி, நீ கருதிய வினையின் பயனை இப்பொழுதே பெறுவாய்', என்று அன்பன், முருகன்பால், ஆற்றுப்படுக்கப்பட்டான் [முரு.65]

பொருள் ஈட்டும் பொருட்டுப் பிரிந்தும், பொருள் முற்றாமையின், தலைவன் காலம் நீட்டித்தவழித் தலைவியின் நன்னர் அழகு கெடும் [அக.115:16] தலைவனின் கூட்டம் பெறாத, தலைவியின் நன்னர் நெஞ்சமான அவளிடம் உசாவியுணராது கைகடந்து, தலைவனின் தளிரடியைத் தாங்கச் சென்றுவிடும் [அக.128:6] அன்னியென்பான் குறுக்கைப் பறந்தலையில் திதியனின் நன்னர் பொருந்திய மெல்லிய பூங்கொத்துக்களையுடைய புன்னை மரத்தை வெட்டி வீழ்த்தினான் [அக.145:13] பிரிவுத்தலைவி, நன்னர் பொருந்திய ஆயமக்கள் ஆராயும்படியாகத் தனது குவளை மலர் போன்ற கண்ணழகு, அணை போன்ற தோளழகு முதலியவற்றை இழந்தாள் [அக.197:3] வயலிடத்தேயுள்ள கரும்பின் செறும்பினையுடைய புறத்தே ஊர்ந்து சென்ற பழன, யாமையானது, இளவெயில் காயும் நெற்களையுடைய தெருக்கள் பொருந்திய நன்னர் ஊரனாவான், தலைவன் [அக.306:8].

'ஒரு நாள், இருநாளல்ல; பலநாட்கள் வந்து பணிமொழி கூறி எனது நன்னர் நெஞ்சத்தை நெகிழ்வித்த தலைவன் எங்குள்ளானோ; மழைநீர் கலங்கி வருவதுபோல என்நெஞ்சம் கலங்குகின்றது' என்று, தோழி, தலைவியிடம், வலிதாகக் கூறிக் குறை நயப்பித்தாள் [குறு.176:3] 'தலைவன் நன்னர் நெஞ்சத்தான்; வரைபொருட்குப் பிரிந்துளான்; ஆதலின் வருந்தாதே' எனத், தோழி, தலைவியை ஆற்றுவித்தாள் [குறு.265:6]

களவுக் காலத்துத் தலைவன், தலைவியின் நன்னருடைய நறுநுதலைநீவி 'நின்னைப்பிரியேன் அஞ்சாதே' என்று நன்னர் பொருந்திய மொழியையுங் கூறுவான் [கலி.21:6,8] பொய்யைக் கெடுத்து உண்மையையே கூறியும், நன்னர் பொருந்திய நடுவுநிலையோடும் அரசோச்சிய அரசன், குடிமக்கள் வருந்தும்படியாக மறைவது போல, ஒளி பொருந்திய ஞாயிற்றையுடைய பகற்காலம் மறைந்து, பிரிவுத் தலைவிக்கு இரவு வந்து வருத்தியது [கலி.130:1]

2. நன்கு. உடன்போயின தலைவியை நினைந்த செவிலித்தாய், 'என்னுடைய மகள் ஆகத்தே, வியர்வுண்டாகப் பன்முறை நன்னர்-நன்கு-தழுவிக் கொள்வாள்; அது கழிந்ததே', என வருந்தினள் [அக.49:8]

3. அன்பு. 'நம்பால் உண்டான-நன்னர்-அன்பு அமைந்த நெஞ்சுடைமையால், அன்னை எனது மெலிவினைக் கண்டு, மயக்கமெய்தி, இந்நோய் தீர்தற்கு வேலனையழைத்தாள்', எனத் தலைவி, தோழியிடம் கூறினாள் [அக.388:18]

நன்னராட்டி - நன்மையுடையாள் (தலைவி). நாடு கடந்து சென்ற நன்னராட்டி - நன்மையுடையாள் - பொருட்டு, ஆயமும் (தோழிமார் கூட்டமும்) பொலிவிழந்து வருந்துகின்றது; தாயும் அழுகின்றாள்', என்று மகட்போக்கிய தாய் நிலைமையைக் கண்டோர் கூறினர் [அக.165:6] வினைவயிற்பிரிந்து வந்து சேர்ந்த தலைவனைத், தோழி, 'நினது வருகை, தெய்வக் கற்புடன், குடிக்குவிளக்கமாகிய மகனைப் பெற்ற, புகழ்மிக்க சிறப்பினையுடைய நன்னராட்டிக்கே (தலைவிக்கே) அல்லாமலும். எனக்கும் இனிமையைத் தருகின்றது, நின் ஆயுள் சிறக்க', என வாழ்த்தினாள் [அக.184:3].

நன்னராளர் - நன்மையையுடையவர். நன்னராளரது - நன்மையையுடையவரது (பாணரது) - ஒன்றுகூடி ஒலிக்கும் வாச்சியங்கள் தேர் ஓடும் பெருந்தெருக்களில் அறாது ஒலிக்கும் [அக.189:13].

நன்னராளன் - நன்மையையுடையவன் (தலைவன்). தலைவனை, 'நடுக்கத்தைத் தரும் நமது துயரினை வந்து போக்கிய நன்னராளனாகிய - நன்மையையுடைவனாகிய- நம் தலைவன்', என்று தோழி, தலைவியிடம் கூறுதல் [அக.88:7] நன்னராளனாகிய தலைவன், தலைவி மீது கொண்ட விருப்பால் கொடுங்காடு என்றும் பாராமல் இரவில் வேலொன்றே துணையாக வந்தான் [அக.362:8].

'நன்னராளனாகிய தலைவன், என் வளையலைப் பறிக்கும்போது, இதை உன் மனைவியிடம் கூறுவேன் என்றலும், மத்தளத்தின் மார்ச்சனை வைத்த பக்கம் அதிர்வது போல அச்சமடைந்தான்; அது எனக்கு உள்ளுந்தோறும் நகையாய் இருக்கின்றது', என்று பரத்தை, விறலியிடம் கூறினாள் [நற்.100:12].

நன்னன் - ஓர்குறுநில மன்னன். 1. கொண்கான நன்னன். இவன் கொண்கான நாட்டிற்குத் தலைவன் [நற்.391]. ஏழிற்குன்றம் இவனது மலை [அக.152,349,நற்.391]; பாழி இவனது மலையரண் [அக.15,142,152,208,258,396]; பாரம் இவனது நகரம் [அக.152]. இவனுடைய ஏழிற்குன்றம் நெடியது; வானளாவியது [அக.152:173]. பொன்விளையும் பக்கங்களையுடையது [அக.173 நற்.391]; இவனுடைய பாழியரண் அரிய காவலமைந்தது [அக.15:258]; அதன்கண் வேளிர் பொன்னினை அருமையாக ஓம்பி வைத்திருந்தனர் [அக.258]. அது யாழிசையொலிக்கும் தெருக்களையுடையது [அக.396]. அதனைச் சார்ந்த பக்கமலையில் வாழும் களிமயில்கள் கலாவச் சிறப்புடையன [அக.152]. இந்நன்னன் இயலும் தேரினையுடையவன் [அகம்.173]; பட்டமணிந்த யானையினையுடையவன் [அக.15]; பொற்பூண்களை யணிந்தவன் [அக.15:356]; இவன் முறையின் வழாத அரசாட்சியமைந்தவன் [அக.142]; துலாக்கோலை ஒத்த, குற்றம் தீர்ந்த நடுவுநிலையமைந்த செம்மொழியாளன் [அக.349]; ஈகைப்பண்புடையவன், களிறுகளை வழங்கும் வண்மையன் [அக.152]; பகை நாடுகளை வென்று கொண்ட பெருங்கலன்களைப் பாடுவோர்க்கு ஆராயாது கொடுப்பவன் [அக.349]; இவன், தன் நண்பனான மிஞிலியோடு கூடிப் புன்னாட்டின்மீது படையெடுத்தபோது, அந்நாட்டு மன்னனை அஞ்சலென்று அமர்த்திய ஆஅய் எயினன் பாழிப் பறந்தலையிலே [அக.396]. நண்பகற்பொழுதில் [அக.208]. மிஞிலியை எதிர்த்துப் பொருது, அப்போரில் மிஞிலியால் கொல்லப்பட்டு வீழ்ந்தான் [அக.142,208.396] அவ்வாறு வீழ்ந்த அவ்வெயினனது உடலின்மேல் வெயில்படாதவாறு, அவனால் முன்னர்க் காக்கப்பட்ட பறவைகளெல்லாம் கூடித் தம் இறகுகளைக் கோலி நிழல் செய்து வருந்திய அந்நிலையில் பகை மறந்து அவனை அருளிக் காணவேண்டிய இந்நன்னன், அவனிடத்து வைத்த பகையும் சினமும் மாறாதவனாய், அவனைக் காணேன் என்று அருளாது மறைந்திருந்தான் [அக.208]. மற்றொருபோது, இவன், பிண்டன் என்பானுடன் பொருதபோரில் அவனைத் தோற்று ஓடச் செய்து வென்றான் [அக.152]. இவன் தன் எயிலைக் கவர்ந்து கொண்ட வேந்தனிடமிருந்து அதனை ஆற்றலொடு மீட்ட செய்தியொன்றும் [அக.392], குதிரைப்படையுடைய வேந்தரைத் தோற்றோடச் செய்து அவருரிமை மகளிரின் கூந்தலைக் கொண்டு திரித்த கயிற்றினால் அவருடைய யானைகளைப் பிணித்து ஓட்டிய செய்தியொன்றும் [நற்.270] அறிய வருகின்றன. இவன் பெயரில் திருநாள் ஒன்று மிக்க ஆரவாரத்தொடு நிகழ்ந்ததையும் அறியலாம் [மது.618,619]. நன்னன் உதியன் என்று குறிக்கப்பெறுதலால் [அக.258] சேரர்க்குப் படைத்துணையாளனாய்க் கருதப்பெறும் இந்நன்னனே, சேரர் படைத் தலைவராய்த் தன்னையொத்த ஏற்றை முதலிய ஏனை ஐவருடனும் கூடிச் சோழன் பெரும்பூட் சென்னியின் படைத்தலைவனான பழையனொடு போரிட்டு

மாண்டவனாகலாம் *[அக.44]*. குடவாயிற்கீரத்தனார் *[அக.44]*, பரணர் *[அக.142,152,208, 258,356,396;நற்.270]*, பாலை பாடிய பெருங்கடுங்கோ *[நற்.391]*, மாங்குடி மருதனார் *[மது.618,619]*, மாமூலனார் *[அக.15,349]*, முள்ளியூர்ப்பூதியார் *[அக.173]*, மோசிகீரனார் *[அக.392]* ஆகியோர் இவனைக் குறித்துப் பாடியுள்ளனர். 'நன்னன் உதியன்' காண்க.

**2. கடம்பின் பெருவாயில் நன்னன்.** இவனுடைய ஊர் கடம்பின் பெருவாயில் என்பது போலும் *[பதி.ப.4]*. இவன் காவல் மரம் வாகை *[பதி.40,பதி.ப.4,பதி.88]*. அவ்வாகை மரம் இருந்த பகுதி வாகைப் பெருந்துறை என்று குறிக்கப் பெறும். அது நார்முடிச்சேரல் நாட்டிற்கு மேற்கின்கண்ணது *[அக.199]*. பொன்னங் கண்ணியையும், பொற்றேரையுமுடைய இந்நன்னன் அந்நார்முடிச் சேரலின் பகைவன். ஒருகால் அவனது நாட்டினைக் கவர்ந்து தன்னடிப்படுத்திக் கொண்ட இவன், அவனொடு நாள்தோறும் போருடற்றி வந்தான். பின்னர் அவன் வலியனாய் இவன்மேற் படையெடுத்து வந்து, இவனது வாகைப் பெருந்துறையிடத்தே போரிட்டு, இவனது நிலைத்த போராற்றலையறுத்து, அக்களத்திலேயே இவனை மடியுமாறு வென்று, இவனது வாகை மரத்தையும் அடியோடு வெட்டி, முன்பு இவனிடத்தே தான் இழந்திருந்த நாட்டையும் மீட்டுக் கொண்டான் *[பதி.40,பதி.ப.4, பதி.88,அக.199]*. கல்லாடனார் *[அக.199]*, காப்பியாற்றுக் காப்பியனார் *[பதி.40,பதி.ப.4]*, பெருங்குன்றூர் கிழார் *[பதி.88]* ஆகிய மூவரும் இவனைக் குறித்துப் பாடியோராவர். 'நன்னன் வேண்மான்' காண்க.

**3. செங்கண்மாத்துவேள் நன்னன்சேய் நன்னன்.** இவன் தொண்டை நாட்டின் பல்குன்றக் கோட்டத்துச் செங்கண்மா என்னும் ஊரின் தலைவனாகிய வேள் நன்னன் என்பானின் மகனாகிய நன்னனாவான். தந்தை பெயரே மகனுக்கும் அமையும் அக்கால மரபுவழி, இவன் தந்தை பெயரே இவனுக்கும் அமைந்தது. இவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு கூத்தரை இவனிடத்தே ஆற்றுப்படுத்தி, இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் மலைபடுகடாம் என்னும் கூத்தராற்றுப்படையைப் பாடினார். அதன்கண், 'வண்டு படியுமாறு மணம் கமழும் தேன் சொரிந்த கண்ணியையும், திண்ணிய தேரையுமுடைய நன்னனுக்கும் உணவாதலமையும் என்று கண்டோர் மருளும்படி, முள்ளைக் கழித்து ஆக்கிய கொழுப்பினால் வெண்ணிறமுடைய, ஊன் துண்டங்களையிட்ட வெண்சோற்றை அவனாட்டிலே நும் சுற்றத்துடனே உண்டு செல்வீர்' என்று கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெறுவர் *[மலை.465-470]*. 'யானைமேல் வருவோனான செங்கோலேந்திய நன்னனுக்கு உரிமை மகளிரான நறுநுதலார் அவனைக் கூடப்பெறாமையால் தம் மாமை நிறமிழந்து அடைந்த பசலைநிறம், விசும்பிலே புகை போர்த்தது போலுமோ, பகலவனைப் பாம்பு மறைத்தது போலுமோ', என்று மலைபடுகடாத்தின் வெண்பா அமைந்துள்ளது. 'பல்குன்றக் கோட்டத்துச் செங்கண்மாத்துவேள் நன்னன் சேய் நன்னன்' காண்க.

**4. பெண்கொலை நன்னன்.** இவன் கோசரது ஆட்சிப் பகுதியை *[துளு நாட்டினை-அக.15]* அடுத்த குறுநிலத்தை ஆண்டிருந்தவன் போலும். மாமரம் இவனது காவல்மரம். யாது காரணத்தாலோ இவனிடத்துப் பகைமையுற்ற கோசர், தாம் கூறிய ஒன்று மொழியாகிய வஞ்சினத்திற்கேற்ற வன்கட் சூழ்ச்சி புரிந்து, இவனது மாமரத்தை வெட்டி, இவனாட்டையும் கைப்பற்றி அதனுட்புகுந்தனர் என்று பரணர் பாடலொன்றால் *[குறு.73]* அறியலாம். ஆற்றிலே நீராடச் சென்ற பெண்ணொருத்தி, அந்நீரிலே அடித்துவரப்பட்ட மாங்காயொன்றை எடுத்துத் தின்ற தவற்றிற்காக, அவள் தந்தை எண்பத்தொரு களிற்றியானைகளுடனே அவள் நிறையளவு பொன்னால் செய்த பாவையொன்றையும் கொடுப்பவும் கொள்ளானாய், அப்பெண்ணைக் கொலைபுரிந்த நன்னன், கோசரால் வெல்லப்பட்ட இவனே போலும். ஒருகால் இக்கொலை காரணமாகவே கோசர் இவனது மாமரத்தை வெட்டி இவனாட்டையும் கைப்பற்றினர் என்று கருதவும் வாய்ப்பாகிறது. இவன் பெண் கொலைபுரிந்த இச்செய்தியையும் பரணரே பாடியுள்ளார் *[குறு.292]*. மற்று, அவரால் பலபடப் பாராட்டிக் குறிக்கப்பெற்ற பாரத்துத் தலைவனாகிய கொண்கான நன்னனும், நரகிற் புகுவோனாய் அவரால் பழிக்கப்பெறும் இப்பெண்கொலை நன்னனும் தம்முள் வேறானவராதல் வேண்டும். இனி இளங்கண்டீரக்கோவும், இளவிச்சிக்கோவும் ஒருங்கிருந்தவழிச் சென்ற பெருந்தலைச்சாத்தனார், கண்டீரக்கோவைத் தழுவி, விச்சிக்கோவைத் தழுவாது விட்டுப், பின், அதற்குக் காரணம் கூறுகையில் அவனைப் பொற்றேரினையுடைய நன்னன் மரபினனாகச் சுட்டி, அதனையும் ஒரு காரணம் போல் குறிப்பிடுவர் *[புற.151]*. பெண்கொலை புரிந்த நன்னன்', என்பதே இங்குக் கருதுகோளாகின்றது. ஆகவே, இப்பெண்கொலை நன்னனை விச்சிக்கோவின் முன்னோன் என விளங்கிக் கொள்ள இயலும்.

**நன்னன் உதியன் - ஓர் குறுநில மன்னன்.** நன்னன் என்பதே இவன் பெயர். உதியன் என்பது சேரமன்னர் சார்பினால் இவனுக்கு எய்திய சிறப்புப் பெயர் *[பார்வை:வே.வி.]*. இவன் சேரனுக்குப் படைத் தலைவனாய்த் தன்னையொத்த ஏற்றை முதலிய ஏனைய படைத்தலைவர் ஐவருடன் கூடிச் சோழன் பெரும்பூட் சென்னியின் படைத் தலைவனான பழையனை யெதிர்த்துப் போரிட்டதைக் குடவாயிற் கீரத்தனார் பாடலொன்றினால் *[அக.44]* தெளியலாம். இவனுடைய அரிய காவலமைந்த பாழியென்னும் மலையரணிலே வேளிர் பொன்னினை ஓம்பி வைத்திருந்தனர் *[அக.258]*. இவனே பாரத்துத் தலைவனாகிய ஏழில் நெடுவரைக்குரிய கொண்கான நன்னன். 'நன்னன்-1 காண்க.

**நன்னன் சேய் நன்னன்** - ஓர் குறுநில மன்னன். இவன் தொண்டை நாட்டுப் பல்குன்றக் கோட்டத்துச் செங்கண்மா என்னும் ஊரின் தலைவனாகிய வேள் நன்னன் என்பானின் மகன். தந்தைபெயரே மகனுக்கும் அமையும் மரபுவழி இவன் தந்தை பெயரே இவனுக்கும் அமைந்தது. 'நன்னன் சேய் நன்னனை நினைந்த கோட்பாட்டுடனே நீவிர் அவன் தரும் பரிசில்களைக் கருதிச் செல்வீராயின்' *[மலை.64,65]* என்று தொடங்கிக் கூத்தரை இவனிடத்தே ஆற்றுப்படுத்துவாராய், இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் மலைபடுகடாத்தைப் பாடியுள்ளார். 'நன்னன்-3' காண்க.

**நன்னன் வேண்மான்** - ஓர் குறுநில மன்னன்; வேள். வயலைக்கொடிபடர்ந்த வேலியையுடைய வியலூர்க்குரிய இந்நன்னன் வேண்மான், அகவன் மகளிரொடு, அகவுநரைப் புரந்த அன்பினன்; கழல இடப்பட்ட தொடியினன்; கள்ளருந்தி மகிழும் இருக்கையன் *[அக.97]*. எனவே, அவ்வூர் சேரர்க்குப் பகைவரூர் என்பது புலனாம். ஆதலால், நார்முடிச் சேரலின் பகைவனாய் அவனால் வாகைப் பெருந்துறைப் போரிலே கொல்லப்பட்ட கடம்பின் பெருவாயில் நன்னனே வியலூர்க்குமுரிய இந்நன்னன் வேண்மான் என்று கருதலாம். 'நன்னன்-2' காண்க.

**நன்னாகனார்** - ஓர் புலவர். இவர் பெயர் புறத்திணை நன்னாகனார் என்றும் காணப்படுகின்றது. புறத்திணையைச் சிறப்பித்துப் பாடியதனால் இவர்க்கு அப்பெயர் அமைந்தது போலும். ஓய்மான் நல்லியக்கோடனையும் *[புற.176]*, ஓய்மான் வில்லியாதனையும் *[புற.376,379]*, வேங்கடநாடன் கரும்பனூர்கிழானையும் *[புற.381,384]* பாடியுள்ளமையால் இவர் ஒருகால் தமிழகத்தின் வட பகுதியைச் சேர்ந்தவராகலாம். நல்லியக்கோடனைத் தலைவனாகக் கொண்டு அவன் மேல் அமைந்த சிறுபாணாற்றுப்படையை நினைப்பிக்குமாறு இவர் அவனைச் சீறியாழ்ப்பாணராகிய வறியோர் தொடுக்கும் புகழ்மாலை சூடும் நல்லியக்கோடன்', என்பர். அவனைத் துணையாக உடைமையால் ஒரு குறையுமின்றி வாழலாமென இவர் தம் விதியை வாழ்த்துவர். கிணைப்பொருநன் கூற்றிலே இயன்மொழி, மற்றும், பரிசில் துறை ஆகிய துறைகளில் அமைத்து ஓய்மான் வில்லியாதனின் வண்மையைச் சிறப்பித்துள்ள இவர் கரும்பனூர் கிழானின் ஈகைச் சிறப்பினையும் இயன்மொழி, கடைநிலைத் துறைகளில் பாடியுள்ளார். பரிபாடலில் இரண்டாம் பாடல் மற்றும் பன்னிரண்டாம் பாடல் ஆகிய இரண்டிற்கும் இசையமைத்துள்ளமையால் இவரது இசையறிவும் புலனாம்.

**நன்னாகையார்** - ஓர் புலவர். இவர் பெண்பாலார். குறுந்தொகையில் நன்னாகையார் பெயருடன் இரு பாடல்களும் *[118,325]*, கச்சிப்பேட்டு நன்னாகையார் என்று மற்றொரு பெயருடன் ஆறு பாடல்களும் *[30,172,180,192,197,287]* காணப்படுகின்றன. இரு பெயர்களுக்கும் உரிய புலவரை வேறுபடுத்தித் தனித்தனியே வரலாறு குறித்துள்ளார் உ.வே.சா. ஆயினும், வையாபுரிப்பிள்ளையின் சங்க இலக்கியப் பதிப்பு, இவ்வெட்டுப் பாடல்களையும் நன்னாகையார் என்ற ஒருவர் பெயரின் கீழேயே அடக்கியுள்ளது. அது கொண்டு, கச்சிப்பேட்டு நன்னாகையார் பெயரே, ஊர்ப்பெயரின்றி, நன்னாகையார் என அமைந்ததாய் அறியலாம். கச்சிப்பேடு என்பது காஞ்சிபுரத்தைச் சார்ந்த ஓரூர் என்பர் உ.வே.சா. *[குறு.பாடினோர் வரலாறு]*. இப்புலவர் பாலை, முல்லை, நெய்தல் ஆகிய மூன்று திணைகளிலும் பாடியுள்ளார். எல்லாப் பாடல்களையும் இலக்கிய நயமுறவே இவர் இயற்றியுள்ளமை குறிப்பிடத்தகும். மெய்போல் தோன்றிப் பொய்யாகும் கனவை, வாய்த்தகைப் பொய்க்கனா என்று தலைவி கூற்றில் குறிப்பிட்டு, அத்தகைய கனவில் தலைவனை உடனிருப்பதுபோல் கண்டு, துயிலுணர்ந்து, அவனைக் காணாது, படுக்கையைத் தடவிப் பார்க்கும் அவள் நிலையை இவர் நன்கு புனைந்துள்ளார் *[குறு.30]*. இரவிலே இல்லத்து வாயிலையடைக்குமுன், 'விருந்தினர் யாரும் வருவீர் உள்ளீரோ' என்று வினவிப், பின் அடைக்கும் மரபினை இவர் புலப்படுத்துவர் *[குறு.118]*. தலைவர் பிரிந்தமையால் தனித்திருக்கும் எனது நெஞ்சம், ஏழூர்ப்பொதுவினைக்கு ஒரூரின்கண் அமைக்கப்பட்ட உலைக்களத்தே வலித்து ஊதப்பெறும் மிதிதோல் (துருத்தி) போல நெடுமூச்செறிந்து வருந்தும் *[குறு.172]* எனவும், காதலரைப் பிரிந்திருக்கும் என்னைக் குறித்துக் கூற்றமானது கூதிர் காலத்து வடிவில் வருகின்றதே *[குறு.197]* எனவும், 'எனக்குப் பற்றான காதலன் இப்போது எங்குள்ளானோ? அவனை நினைந்து அழுவதனால் கண்ணீர் வரப்பெற்று நிறையும் என் முலையிடைப்பகுதி பெருங்குளமாயிற்று' *[குறு.325]* எனவும் தலைவி கூற்றுக்களில் இவர் பாடியுள்ள பாடல்கள் நயமானவை. 'கச்சிப்பேட்டு நன்னாகையார்' காண்க.

**நன்னுதாஅல்** - நன்றாகிய நெற்றியையுடையவளே (பெண்) (விளி) - அன்மொழித் தொகையாகப் பெண்ணைக் குறித்தது. 'நன்னுதாஅல் - நன்றாகிய நெற்றியை உடையவளே'-இவளொருத்தி நாணினைக் கைவிட்டு ஒன்றை நினைந்து நெட்டுயிர்ப்புக் கொண்டாள்' என்றனர் *[கலி.144:1]*

**நன்னுதால்** - நல்ல நெற்றியினையுடையவளே (பெண் விளி) 'தலைவன் என்னையே குறித்த பார்வையோடு நன்னுதால்!-நல்ல நெற்றியையுடையவளே!-யான் செல்லவோ? என, என் நெஞ்சழியக் கூறினான்', என்றாள் தலைவி *[அக.110:21]* நன்னுதால், ஒருவன் வந்து, என்னை நில்லென நிறுத்திப், பல பாராட்டிச் சென்றான்; எனத், தோழிக்குத், தலைவி கூறினாள் *[கலி.55:5]*. 'புன்னை மரத்து நிழலிலே நீ தலைவியுடன் கூடியிருக்கும்பொழுது 'நன்னுதால், உன்னை பிரியேன்', என்று கூறியதை நம்பியதாலோ, அவளைப் பிரிந்து, அவளுடைய

மாந்தளிர் மேனி பசப்பூர்ந்து, அழகு கெட வைத்தாய்' என்று, தோழி, தலைவனை வினவினாள் *[கலி.132:9]*

**நன்னெடுங்கூந்தல் - நல்ல நீண்ட கூந்தலையுடையவள்** (பெண்-அன்மொழித் தொகை) தோழி, தலைமகனின் பாங்காயினார் கேட்கும்படி, பரத்தையிடம் சென்று வந்த தலைவனை, எம் நன்னெடுங்கூந்தல்-நல்ல நீண்ட கூந்தலையுடையவள் (தலைவி) - ஏற்றுக் கொள்வாளோ', என்று கூறி, வாயில் மறுத்தாள் *[ஐங்.153:5]*

## நா

நா - நாக்கு. பரிசில் வாழ்க்கையாவது வடியா நாவினால் - நாக்கினால் - வல்லபடிப் பாடி, ஆண்டுப் பெற்ற பரிசிலால் மகிழ்வது', எனக், கோவூர்கிழார் குறிப்பர் *[புற.47:3]*. யாவரிலும் முன்னே நினைக்கப்படுமவனைப் பின்னே நினைத்தேன், யான்; அவ்வாறு நினைந்த குற்றத்தால், எனதுள்ளம் அமிழ்ந்திப் போவதாக; அவனையன்றிப் பிறரைப் புகழ்ந்த நாவும், கருவியாற் பிளக்கப்படுவதாக!' என, ஆயை, ஏணிச்சேரிமுடமோசியார் புகழ்வர் *[புற.132:2]*. பெருமையில்லாத அரசர் புகழ்ச்சியை விரும்பி அவர் செய்யாதவற்றைக் கூறிப் புகழ்தலை எம் சிறிய செவ்விய நா அறியாது, என, வன்பரணர் பாடினார் *[புற.148:7]* பொய்யாத நாவினையுடைய கபிலனாற் பாடப்பட்டது மலையிடத்து முள்ளூர் *[புற.174:10]*. இவரே, முல்லைக் கொடி, நாத் தழும்பேறப் பாடாதாயினும், நெடிய தேரைக் கொள்க, என்று, அதற்குக் கொடுத்த, பாரிக்கு மகளிர், எனப், பாரிமகளிரை விச்சிக் கோனுக்காகக் கொண்டு சென்ற கபிலர் பாடுவர் *[புற.200:10]*.

பெருங்குன்றூர்கிழாரின் நுணங்கிய செவ்விய நா வருந்தப்புகழ்ந்து நாளும்பாடப், பின்னரும் பாடவேண்டும் புகழையுடையவன், குடக்கோச்சேரல் இரும்பொறை *[புற.211:14]*. அழகிய சொல்லை ஆராயும் நுண்ணிய ஆராய்ச்சியை உடைய புலவர் நாவின் கண்ணே போய் வீழ்ந்தது, அதியமானது மார்பகத்தின் கண்ணே தைத்த வேல்', என, ஔவையார் பாடுவர் *[புற.235:13]*. தன் புகழை நிலைநிறுத்தித், தம் நாவால் நவிலும் புலவர், வாயுளான்', என வயவன் ஒருவன் சிறப்பிக்கப்படுவன் *[புற.282:11]*. நறிய கள்ளையுண்பவன், அதற்குத் துணையாகச் சில பொருள்களை அதன்கண் இட்டுண்கையில், பற்களின் இடையே ஒட்டிக்கொண்ட அவற்றை, நாவை அதனிடையே செலுத்தித் தள்ளுதலின் அது சிவப்பேறியது *[புற.347:2]*. நா அஞ்சுவதற்கு ஏதுவாகிய முட்போன்ற பற்களையுடையவர் மகளிர் *[புற.361:16]*. அட்ட கொழுவிய ஊனுணவைக் கள்ளுண்ணும் சிவந்த வாயிலிட்டு, நாவானது இருமருங்கும் புரட்டிக்கொடுக்க, உண்டனர் *[புற.364:6]*. என் நாவினால் புகழ்தலை அவனே பெறுக; என, ஒய்மான் வில்லியாதனைப் புறத்திணை நன்னாகனார் பாடுவர் *[புற.379:2]*. எழுச்சியையுடைய மணியையும், கண்ணிற் பொருந்திய செவியையும், கவைத்த நாவையுமுடையது அரா *[புற.382:13]*. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், ஈன்ற பாம்பினது நாவின் வடிவைப் போன்ற பழைமையுற்றுக் கிழிந்த உடையை நீக்கிப், பகன்றைப் பூப்போன்ற ஆடை கொடுத் தமையினைப் புகழ்ந்து நல்லிறையனார் பாடுவர் *[புற.393:15]*.

கள்ளை உண்டமையால், தடுமாறிய சொல்லைப் பேசும் நாவையும். மெல்லிய சொல்லையுமுடைய பாணர் முதலியோர், இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனை வாழ்த்தினர் *[பதி.15:25]*. அறத்தையே கூறி, விளங்கிய நாவினையுடையவர் அந்தணர் *[பதி.64:3]*. விளங்கிய, பொய் கூறாத நாவினையுடையவன், பெருஞ் சேரலிரும்பொறை *[பதி.79:5]*.

திருவேரகத்தை வழிபடுவோர், ஆறெழுத்தைத் தன்னிடத்தே அடக்கியிருக்கின்ற கேட்டற்கரிய மறையை மொழியும் மந்திரத்தை, நா புடைபெயருமளவிலே பயில ஒலித்தனர் *[முரு.187]*. ஓடியிளைத்த, நாயினது நாப்போன்ற, சீறடியினையுடையவள் பாடினி *[பொரு.42]*. ஓடியிளைத்து வருந்துகினற் நாயினது நாவின் நல்ல அழகை வருத்தி, வறுமையாலே விளங்குகின்ற, பொலிவழிந்த அடியினையுடையவர் விறலியர் *[சிறு.17]*. மேல்நோக்கி எழுகின்ற, நெருப்புச் சாய்ந்தாலொத்த நாவினையுடையவள் பேய்மகள் *[சிறு.196]*. அரிய மறையை உடைத்தாகிய நாவினையுடையவர் அந்தணர் *[சிறு.204]*. நெடிய நாவினையுடைய, ஒள்ளிய மணி, நடுயாமத்து ஒலித்தது *[முல்.50]*. சொல்லைச் சொல்லாத நாவினையுடைய, மிலேச்சர் கையாலும், முகத்தாலும் எடுத்துச் சொல்லும் இயல்பினர் *[முல்.65]*. கள்ளையுண்டு, களிப்பினைத் தம்மிடத்தே தடுத்துக் கொண்ட, மழலைச் சொல்லையுடைய நாவினையுடையவர் பழஞ்செருக்காளர் *[மது.668]*. அசைகின்ற இயல்பினான், இளைத்த வலிகெட்ட நாயினது நாவினையொத்த, கல்லுப்பொருகின்ற சிறிய அடியினையுடையவர் விறலியர் *[மலை.42]*.

பூத்த சோலையில், யாழின் நரம்பு ஒலித்தாலொத்த, ஒலியினையுடைய, தேனையுண்ணும் வண்டுகள், மயங்குமென அஞ்சித் தேரினையுடைய தலைவன், மணியின் நாவை ஒலியாமற் கட்டினான் *[அக.4:12]*. நாவாற் பயின்று பேசப்படாத, கேட்டார்க்கு மகிழ்ச்சியைத் தரும், இனிய குதலைச் சொற்களையுடையவன் புதல்வன் *[அக.16:4]*. யானையின் நீண்ட நாவினையுடைய, ஒளி பொருந்திய, மணியின் ஓசை, நள்ளிரவில் முரசொலியுடன் சேர்ந்தொலித்தது *[அக.24:13]*. கரிய குயில், ஒலிக்கும் தனது நாவின் கூவுதலால், நடுநிலைமேவி, நாள்தோறும் சில கூறுவனபோல முறைகொண்டு கூவும் *[அக.25:7]*. நுணுகிய சிவந்த நாவினையும், பலவாய புள்ளிகளையும் உடைய குறும்பூழ்ச்சேவல், எழாலுக்கஞ்சிப், பாழூரில் தங்கியது *[அக.103:2]*. இலவமலர் போன்ற சிவந்த நாவின் புலமையால் உயர்த்திக் கூறப்பெறும் வள்ளல்,

மாந்தரம்பொறையன் கடுங்கோ [அக.142:1]. வழிச் செல்வார்க்கு உண்டாகும் நிகழ்ச்சிகளைக் கூறும், சிறிய செவ்விய நாவினது, மணிஒலி கேட்டாற் போன்ற, தெளிந்த குரலைக் கொண்டது பல்லி [அக.151:13]. குற்றமற்ற நாவினையுடைய கூத்தரது மத்தளக் கண்ணில், விரலூன்றிய வடுப்போன்று, மலையில் மரல்வாடிக் கிடக்கும் [அக.155:13]. நாவானது நடுக்கமுறத் திருந்தாத சொற்களால், தலைவி, தலைவன் பிரிவுக்குடன்பட்டாள் [அக.299:17]. பெரிய வாய்க்கால்களில் தங்கிய நீரினை, அறுகம்புல்லாய் உணவினைத் தின்ற ஏறுகள், வலிமையையுடைய நாவினால், தளர்ச்சி நீங்கக் குடித்தன [அக.341:8]. ஒலிக்கும் நாவினையுடைய தெளிந்த மணி ஒலிக்கத், தேரினை விரைந்து செலுத்துமாறு, வினைமுற்றி மீளும் தலைவன் கூறினான் [அக.344:8]. தோழி, தலைவனை, உயர்குடிப் பிறப்புடையவன், நாவால் கெடுமொழிகளைக் கூறுவானல்லன், எனக், கூறிக் கூட்டி வைத்தாள் [அக.352:9]. அரக்கொடு சேர்த்து இயற்றிய சாணைக்கல்லினைப் போலும் வன்மையமைந்த நாவினேன் ஆகி, (களவு நிகழ்ச்சியை) நம் தாய்க்குக் கூறினேனல்லேன், எனத், தோழி, தலைமகளைக் குறை நயப்பக் கூறினாள் [அக.356:10].

கொடியோராகிய அலர் தூற்றும் மகளிருடைய நாக்கள், ஆண்யானையின் காலால் உழக்கப்பெற்ற ஒற்றைப்பழம் குழைவது போலக், குழைந்து, யான் வருந்தும்படி அலர் கூறிக், கல்லென்ற ஆரவாரத்துடன் முழங்கின', எனப், பருவங்கண்டு ஆற்றாளாகிய கிழத்தி கூறினாள் [குறு.24:5]. கூதிர்ப்பருவத்தின் நள்ளிரவிலே, எருது, ஈ. ஒலிக்கும் போதெல்லாம், அலைக்கும் நாவினால், முழங்குகின்ற கொடிய மணியின், நலிந்த ஓசையைக், கேட்பவராகிய பிறபெண்களும் உளரோ? என, ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக், கிழத்தி கூறினாள் [குறு.86:6]. நீ பிரிந்ததனால், தனித்திருக்கும் தலைவி, சிறிய நாவையுடைய ஒள்ளிய மணிகள், விளரிப் பண்ணைப் போல முழக்கஞ் செய்ய, நைந்து வருந்தினள், 'எனத், தலைமகன் இரவுக்குறி நயந்தானைத் தோழி சொல்லி மறுத்தாள் [குறு.336:3].

காவலையுடைய மாளிகையிடத்து, நெடிய நாவையுடைய ஒள்ளிய மணி ஒலித்தது [நற்.40:1]. மழை பெய்ததனாலாய புதிய நீர் நிரம்பிய பள்ளங்கள்தோறும், நாவினால் ஒலிக்கின்ற பலவாய கூட்டத்தையுடைய தவளைகள் ஒலித்தன [நற்.42:4]. காப்புடை வாயில்களைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள், என்னும், யாமங்காவலரின், நெடிய நா அமைந்த ஒள்ளிய மணி, ஒன்றுகின்ற தாளத்தில் மோதி எழுப்பும் ஒலிபோல, இரட்டும் [நற்.132:9]. விரைந்த செலவும், சினமுமுடைய நாயினது, நல்ல நாவினை ஒத்த, சிறிய அடிகளையுடையவள் தலைவி [நற்.252:11]. விறலி, மெய்ம்மையே கல்லாதொழிந்த நாவினால் நிலை குலைந்த, தாழ்மையுடைய சொல்லினால், தலைவனைப், பரத்தையோடு புணர்ப்பித்தமையினைத், தலைவி வெகுண்டு கூறினாள் [நற்.310:6]. மடந்தை ஒருத்தி, அருவியாடலில் வெறுப்படையின், சிவந்த புள்ளிகளையுடைய அரக்கினாலாக்கிய வட்டைச் சாடியின் நாவினால், காய்ச்சி வடிக்கப்படுகின்ற கள்ளின் தெளிவைப், பருகுவள் [நற்.341:2]. மழை பொழிந்த காட்டில், நெடிய நாவையுடைய ஒள்ளிய மணியோசை மிக்கொலித்தது [நற்.361:5]. மறை நவின்ற நாவினையுடைவர் அந்தணர் [ஐங்.387:1]. மறவர், வழிப்போவார் மேல் அம்புவிடுகையினாலே, அவர் உடலஞ்சுருங்கி, உள்ளுண்டாகிய நீர் வற்றுகையினாலே உலர்ச்சியாலே வாடுகின்ற நாவிற்குத், தண்ணீர் பெறாத வருத்தத்தை, அவர் கண்ணீர் நனைத்துப் போக்கும் கடுமையுடையது பாலைவழி [கலி.6:4]. நிலத்திலுள்ளார் நாவிலே வழங்கும் நீண்ட மாடங்களையுடைய மதுரையிலுள்ளார் அறிவினையுடைய சான்றோர் நாவிற் பிறந்த கவிகளின் புதுமையைக் கொண்டாடுவர் [கலி.35:17,18]. மதுரை மக்கள் அறிவினையுடைய நாவாகிய ஏராலே உழுதுண்ணும் புலவருடைய புதிய கவிகளின் நயந்துய்ப்பர் [கலி.68:4]. 'உள்ளே அழுந்து நாவுடனே, தலைசாய்த்து, நீ கூறும் கூற்றோ பொய்', எனக் காவற் பாங்கின் தலைவனைப் பார்த்துத், தலைவி கூறினாள் [கலி.93:14]. 'சான்றீர்! வழுவின சொற்களைச் சொல்லாதபடிச் தெள்ளிய நாவினாலே சொல்ல வல்லார் முன்னே, சொல்லுதல் வல்லேனாகிய என்னை, ஒன்றையும் கல்லாத தன்மையனாகக், காட்டியவள்', என்பது மடலேறிய தலைவன் கூற்று [கலி.141:18].

புகழப்படும் அறிவினையுடைய நாவால் புலவர் நல்ல கவிதை பாடுவர் [பரி.6:8]. கவைத்த நாவோடு விளங்கும், ஆயிரம் தலையுடைய பாம்புப் படுக்கை திருமாலுக்குரியது [பரி.13:28]. ஏத்திய நாவோடும், பரந்த உவகையோடும், நாடும், நகரும் தன்னை அடைய வந்து, பாண்டியன், செவ்வேளை வணங்கினான் [பரி.19:26]. செவ்வேள் அமர்ந்திருப்பது, மேலோர் நாவினால் புகழ் நலம் முற்றிய, பரங்குன்றம் [பரி.21:12]. தாமரைப் பூவினகத்தே தோன்றியவன் (பிரமதேவன்) நாவிலே, நான்மறை தோன்றின [பரி.தி.7:8].

நாகம் - 1.பாம்பு. நஞ்சுடைத்தாகிய, வெளிய பல்லினையுடைய, ஐந்துபடம் பொருந்திய தலையைச் சுமந்த, சினம் பொருந்திய, வெய்யதிறலையுடைய நாகம்- பாம்பு - புக்கென, பெரிய மலை முழையின்கண்ணே இடியேறு எறிந்தாற்போலச் சினம் பொருந்திய, படையையுடைய செம்பியன் மரபிலுள்ளாய்! எனச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை, நப்பசலையார் பாடுவர் [புற.37:2].

நாகம் ஈன்று கொடுத்த, ஒளி விளங்கும் நீல நிற உடையினை, ஆய், ஆலின்கீழ் இருந்த இறைவனுக்கு நெஞ்சு பொருந்தக் கொடுத்தான் [சிறு.96].

மிக்க இருளிலே தனது அழகிய முடிமணியை உமிழ்ந்த நாகம், காந்தளது தாதை ஊதும் வண்டின் நல்ல நிறத்தினைக் கண்டு, தன் மணியென மயங்கும் [அக.138:17].

நாகத்தினது அரிய தலை துணிந்து விழும்படி சினந்து இடியேறு முழங்கியது *[நற்.37:8].*

ஈசன் முப்புரத்தை, நாகம் நாணாகவும் மலைவில்லாகவும் கொண்டு எய்தான் *[பரி.5:24].*

**2. தேவருலகம்.** நாகத்தை - தேவருலகத்தை - ஒத்தது வளவிய பகுதிகளையுடைய நிலவட்டம் *[புற.367:1].*

**3. சுரபுன்னை.** மலையுச்சியில் உள்ள நாகம்- சுரபுன்னையின்- நறுமலர்கள் அருவியில் உதிர்ந்தன *[முரு.302].* மலர்ந்த நாகத்தினையுடைய குடியிருப்புக் கொண்டது பாக்கம் *[பொரு.209].* சுரும்புண்ணும்படி நறிய பூத்தேனைத் துளிக்கும் நாகம் வளரப்பெற்றது நெடுவழி *[சிறு.86].* செறிந்த கொம்புகளிடத்தே நறிய பூக்கள் நெருங்கின, இளமையையுடைய, நாகத்தையுடையது நாடு *[சிறு.108].* நறிய பூக்களையுடைய நாகத்தைப் புனலாடு மகளிருடைய தோள்களுக்குத் தெப்பமாகக், கரையைக் குத்துகின்ற நீர் தரும் *[சிறு.116].*

காத்தள், நாகம் முதலிய அனைத்தும் துவன்றியது நெடுவாயில் *[மலை.520].*

நீராடுந் தலைவி அந்நீரோடே செல்லத், தலைவன் அருளினாலே, நீண்ட நாக நறுந்தண்டார் அசையும்படி, அந்நீரிலே குதித்து, அவளைக் கரை சேர்த்தான் *[கலி.39:3].*

**4. நாகமரம்** (நாகம் போன்ற பூவினையுடைய மரம்). நரந்தப்பூ, நாகப்பூ - நாகமரத்தின் பூ - உள்ளிட்ட பல மலர்களையும், தலைவியும், தோழியும் பறித்துக் குவித்தனர் *[குறி.94].*

உயர்ந்த நாக மரங்களையுடையது செல்லுதற்கரிய வழி *[நற்.82:6].* நல்ல பூங்கொத்துக்களையுடைய நாகம், சுரபுன்னை எல்லாம் வையையின் இரு கரைகளிலும் கமழ்ந்தன *[பரி.12:80].* நாக மரங்கள் ஓங்கி வளர்ந்த மணி நிறங்கொண்ட மலையின் மலர்பல கொண்டு வையை விரைந்து சென்றது. *[பரி.தி.2:3].*

**5. யானை.** இருண்ட நிறத்தினையுடைய நாகம் - யானை - சோரும் செவ்வியை வயமான் பார்த்திருக்கும் *[அக.73:12].*

**நாகம்போத்தனார்** - ஒரு புலவர். நாகன் என்பார்க்கு மகனாராகிய போத்தனார் என்று இவர் பெயருக்கு விளக்கம் கூறுவர் உ.வே.சா (குறு. பாடினோர் வரலாறு). இப்புலவர் பாடியதாகக் குறுந்தொகையில் மட்டும் ஒரு பாடல் *[282]* உள்ளது. தலைவன் கார்ப்பருவத் தொடக்கத்தே மீள்வதாகக் குறிப்பிட்டுப், பிரிந்து, மீளாத நிலையில், அப்பருவ வரவு கண்டு வருந்தும் தலைவியை ஆற்றுவாளாய்த், தோழி கூறும் கூற்றில், இவர் அப்பாடலை இயற்றியுள்ளார். செம்மண்ணாகிய மேட்டுநிலத்தில் தழைத்துப் பருவம் வாய்ந்த வரகு நாற்றின் ஒரிலையை, நாட்காலையில் மான்குட்டி மேய்ந்து, உண்ணும் கடனைக் கழிக்கும் கார்காலம் என்று, இவர் அப்பருவ நிகழ்ச்சியைப் புனைவர். பிரிவால் உடல் மெலிந்து மகளிரின் கைகளிலிருந்து வளைகள் கழன்று வீழ்தற்கு, வெண்கூதாள மலர்கள், காம்புகளிலிருந்து கழன்று உதிர்தலை, இவர் உவமை கூறியுள்ளார்.

**நாகர்** - தேவர். நல்ல செல்வத்தைத் தருகின்ற அறவினையைச் செய்த நாகர் - தேவர் - போன்று. விருப்பம் மிக, இடைவிடாது இறுகப் புணர்தற்குப், பாடல் இன்பத்தாலே செவியை நிறைத்துக் கொண்டு நீராடுவோர், அழகிய மதுவைப் பருகுவர் *[பரி.11:67].*

**நாகர் நகர்** - ஆதிசேடனார் திருக்கோவில். ஒப்பனை செய்யப்பட்ட அணிகலன்களையும், நிலமகளையும் திருமுடியில் கொண்டுள்ள நாகர்நகரில் - ஆதிசேடனார் கோவிலில் - வண்டும் தும்பியும் யாழினோடு ஒத்து இசை முரல, யானை முகில் முழக்கத்தோடே முழங்க, மத்தளம் அருவி முழக்கத்தோடே ஒன்றுபட்டு ஒலிக்க, விறலியரும் கூத்தரும் பாட்டினையும் கூத்தினையும் தோற்றுவியக்க மகளிரும் மைந்தரும் கள்ளினோடு, காம இன்பத்தை விரும்ப இவையெல்லாம் தம்முள் பொருந்தாநிற்கும் *[பரி.தி.1:59].*

**நாகரிகர்** - கண்ணோட்டமுடையார். எதிரே இருந்து 'இதனை நீர் உண்பீராக' என நட்டோர் நஞ்சைக் கொடுப்பின் மிக்க நாகரிகர்- கண்ணோட்டமுடையார்- அதனையும் உண்பர் *[நற்.355:7].*

**நாகன்**-ஓர் குறுநில மன்னன். 'உலகில் வண்மையுடையோர் மாய்ந்தாராகப் பிறர்பால் ஏற்காமல், கவிழ்ந்த என் உண்கலத்தை மீண்டும் மலர்த்த வல்லவர் யாரென்று யான் வினவியதற்குப், பலரும் ஆண்மைக் கூறுபாடு பொருந்திய ஊக்கத்தினையும், தோலாத நல்ல புகழையும் உடைய நாலை கிழவனாகிய, நற்போர் செய்யும், திருந்திய வேலையுடைய, நாகனையே கூறினர்', என்று நாலைகிழவன் நாகனைப் பாடுவர் வடநெடுந்தத்தனார் *[புற.179:12].* 'நாலைகிழவன் நாகன்' காண்க.

**நாகனார்** - ஓர் புலவர். ஆசிரியர் நல்லந்துவனார் பாடிய 11-ஆம் பரிபாடலுக்குப் பாலையாழ்ப் பண்ணமைத்து இசைவகுத்தவர் இவர். இரவது வேறுவரலாறு ஏதும் விளங்கவில்லை.

**நாகு** - **1. இளமை.** ஞாயிறு [illegible]கின்ற காலத்தில், இனத்தினின்றும் தலைமயங்கிச் சென்று தான் சேரும் சேர்க்கையைக் காணாத காட்டின்கண் [illegible]மானினது கலை, மடப்பத்தையுடைய நாகு - இளமை - உடைய பிணையை அழைத்தது *[புற.157:11].* நந்தின் ஏற்றை நாகு இளவளையோடு பகலில் மணம் கூடியது *[புற.266:5].* நாகு பொருந்திய பெட்டைக் கோழி இரவுவெருகுக்கு அஞ்சி அரற்றியது *[புற.326:2].* நாகு பொருந்திய வேங்கையின் மலர் போன்ற சுணங்கினள் *[புற.352:6].*

-த்தனைப் பூக்கள் தம்மிடத்தினின்றும் துளிக்கும் நாகு முதிர்ந்த நுணா மரத்தின் கட்டையைக் கடைந்த சாதிலிங்கம் தோய்ந்த சிவப்பைப் பூசிய மந்தி உமணர் ஒழுகையோடு சென்றது *[சிறு.51]*. செறிந்த கொம்புகளிடத்தே நறிய பூக்கள் நாகு முதிர்ந்த சுரபுன்னையில் நெருங்கியிருந்தன *[சிறு.108]*.

நல்ல நாளிலே பூத்த நாகு கொண்ட வேங்கையின் நறுமலரைக் கோதி மயில் தன்துணையை அகவும் *[அக.85:10]*. மழவர், நாகு ஆவினைக் கொன்று அதன் ஊனைத் தின்பர் *[அக.249:13]*.

**2. இளைய ஆ.** நாகு-இளைய ஆவின்-முலையன்ன நறும்பூங்கரந்தையினை மரபிற்சூடி, நிரை தந்து, விடலை நடுகல்லாயினன் *[புற.261:13]*.

தலைமை மேவிய ஏறு, எக்காலத்தும் தன்னோடு உடனிற்றலை விரும்பிய, தனது இளைய நாகினைத் தழுவிக் கொள்ளும் *[அக.64:12]*.

நல்லேற்றினைத் தழுவி நாகு பெயர்ந்தது *[ஐங்.445:3]*. ஆன்திரளில் ஏனையவற்றிற்கு ஒப்புச் சொல்லப்படும் நாகு, போர்த்தொழிலமையாத ஏற்றினுக்கு ஈன்ற எருத்து வண்டியை ஊரச் செம்மாந்தது *[கலி.109:4]*. தொழுவினுள்ளே கட்டி வைத்த கன்றிற்காகப் பொழுது விடிந்த காலத்திலும் மேயப் போகாது, நாகு சூழ்ந்து திரியும் *[கலி.110:4]*. உருமினுடைய குரல்போல அதிரும் நல்ல ஏறு, நாகுடனே கூடி நின்றது *[கலி.113:28]*. தன்னைத் தீண்டுதற்குச் செல்லுபவர்களை இடையே விலக்கிக் கடிய வலியினையுடைய நாகு எதிர்செல்லும் *[கலி.116:6]*.

**4. எருமைக்கன்று.** ஆய்மகள் மோர்விற்றுச் சுற்றம் பேணி நெய்விற்ற பொருள்கொண்டு பொன் கொள்ளாது எருமையின் கரு நாகு-எருமைக்கன்று-வாங்குவாள் *[பெரு.165]*.

எருமைக்கடா, எருமையின் மாண்புற்ற நாகினைத் தழுவித் தோட்டத்தில் மேயும் *[அக.146:3]*.

**5. பெண்வாளை.** வாளை மீனின் மடப்பம் மிக்க நாகு - பெண்வாளை -தேமாவினது உதிர்ந்த பழத்தை உண்ணும் *[குறு.164:1]*.

**நாஞ்சில்-கலப்பை.** யானையினது துளையையுடைய பெருங்கை, துணிந்து வீழ்ந்து நாஞ்சில் - கலப்பை - ஒப்ப, நிலத்தில் புரளப் பகைவர் அதனை வெட்டி வீழ்த்தினர் *[புற.19:11]*. 'நின் நிழல் வாழ்வோர் நாஞ்சில் அல்லது படையுமறியார்', எனச், சேரமான் யானைகட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையைக், குறுங்கோழியூர் கிழார் பாடினார் *[புற.20:11]*. கொலையை விரும்பும் நாஞ்சிலையும், பனைக் கொடியையும் உடையோன், பலதேன் *[புற.56:4]*.

நீ வாழ்வு கொடாத பகைவர் நாடு, உழுவாரின்றி, நாஞ்சில் வெறுக்கப்பட்டு, அதனால் நிலம் வளப்பமின்றிப் பொலிவழிந்தது', என, இமையவரம்பன் நெடுஞ் சேரலாதனைக், குமட்டூர்க் கண்ணனார் பாடினார் *[பதி.19:17]*. குட்டுவனின் படையிலுள்ள குதிரைகள் சென்ற பகைவருடைய வயல்களில் நாஞ்சில்கள் உழா; அவை உழுதமாத்திரையானே புழுதியாகிப், பின்பு நாஞ்சில்கள் உழா எனப், பல்யானைச் செல்கெழுகுட்டுவனைப், பாலைக் கௌதமனார் பாடுவர் *[பதி.26:2]*. புன்புலத்தில் வித்துக்களை விதைக்கின்ற வலிய கையையுடைய தொழில் செய்வோர், பலகடாக்களை நுகத்தின்கண்ணே பூட்டி, நாஞ்சில் உழுத கொழுவினது படைச்சாலின் பக்கத்தே, அழகிய மணியைப் பெறுவதற்கு இடமான, ஊர்களையுடைய நாட்டுக்குத் தலைவன், ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் *[பதி.58:7]*.

எருதுகளை, வாயிலிலே நுகத்தைப் பூட்டிக்கொண்டு சென்று, பிடியினது வாயையொத்த, வளைந்த வாயையுடைய நாஞ்சிலின் உடும்பினது முகத்தையொத்த, பெருங்கொழு மறைய, அமுக்கி உழுது, விதைத்தனர் *[பெரு.299]*.

கோடைக்காலத்தே நாடு வறங்கூர, நாஞ்சில் தொழிலற்றுக் கிடந்தது *[அக.42:5]*. மழை பெயல் ஒழிந்து, நாஞ்சில் துஞ்சி, உலகின்கண் உழுதொழில் முடிந்துவிட்டது *[அக.141:5]*.

யானைகள், ஈரமற்ற நிலத்தை உழுகின்ற நாஞ்சில் போலக், கொம்புகளையூன்றிக் கையை நிமிர்த்து, நிலத்தே கிடந்தன *[கலி.8:5]*.

கூர்மை செய்யப்பட்ட, வளைந்த, நாஞ்சில் படையுடையவன் பலதேவன் *[பரி.1:5]*. உயர் கொடியினுள் ஒன்று நாஞ்சில் கொடி எனத் திருமாலைப் புகழ்வர் *[பரி.4:39]*. 'கூர்மையணிந்த வளைந்த நாஞ்சிலை உடையவன் திருமால் *[பரி.15:57]*. முதிராத கள்ளாகிய நீரைப் பாய்ச்சிக் காமவெறியாகிய நாஞ்சிலைக் கட்டிக் காரிகையாகிய வயலிலே எமது எருது சோம்பிக்கிடவாமல் உழுகின்ற, பழைய படைச்சாலே! எனக் கூறி ஆயத்தார் பரத்தையை இகழ்ந்தனர் *[பரி.20:53]*.

**நாஞ்சில் வள்ளுவன்.** ஓர் குறுநில மன்னன். நாஞ்சில் என்னும் பெயரையுடைய மலைக்குத் தலைவன். வள்ளுவன் என்பது இவனுக்கு அரசியல் தொடர்பினால் அமைந்த சிறப்புப்பெயர் என்றும், இடைக்காலத்தே 'இராய சேகரராயின வள்ளுவர்' எனக் கல்வெட்டினில் காணப்படுவதால் இக்கருத்து வலிவு பெறும் என்றும் கூறுவர் ஔவை. து. *[புற.380-விளக்கவுரை]*. அதற்கேற்பவே இவன், 'தென்னவர் வயமறவன்' *[புற.380:5]* எனக் குறிக்கப் பெறுகின்றான்; 'நின் வேந்தன் நினக்கு வேண்டியன தருதலையொழியான்; நீ அவ்வேந்தன் பொருட்டுச் சாதலை அஞ்சாய்' *[புற.139]*. எனப் பாடவும் பெறுகின்றான். 'தென்னவர் வயமறவன்' என்பதனால் இவனைப் பாண்டியர் படைமறவனாய்க் கருதலாம். ஆயினும், பின்னதன் உரையிலே, 'வேந்து என்றது சேரனை' எனப் பழைய உரைகாரர் குறிப்பிடுவதனால் இவனைச் சேரர் படைமறவனாகவும்

கருதவேண்டியுள்ளது. எனவே, அவ்வக் காலங்களில் தென்னவர், சேரர் என்ற இருவர்க்குமே இவன் படைத்துணையாயினன் என்பது புலனாம். இவனது இயற்பெயர் வல்வேற் கந்தன் என்பதுபோல் ஒரு பாடலால் விளங்கும் [புற.380:12]. இவன் சிறந்த வன்மையாளன். ஒருசிறைப்பெரியனார் [புற.137], மருதனிளநாகனார் [புற.138,139], ஔவையார் [புற.140], கருவூர்க்கதப்பிள்ளை [புற.380] ஆகியோர் இவனையும், இவனது வண்மையையும் சிறப்பித்துப் பாடியுள்ளனர். இவனைப் பாடிப் பரிசில் பெற்றபின் மூவேந்தரைப் பரிசில் வேண்டிப் பாடும் அவாவையே அறியாதொழிந்ததாய்க் குறிப்பர், ஒரு சிறைப்பெரியனார். [புற.137]. 'கிளிகள்' மருவிய பெரிய புனத்தின்கண் மரப்பொதும்பிலே வைக்கப்பட்ட பெருங்கதிரை ஒப்பவன்', என்று, இவனைப் பாடுவர், மருதனிளநாகனார் [புற.138]. கீரைக்கறிக்கு மேலிடாக யாம் சிறிது அரிசி வேண்டியதற்குத் தான் வரிசையறிதலில், தன் மேம்பாட்டையும் கருதிப், பெரிய யானையைப் பரிசிலாகக் கொடுத்தானாதலால், நாஞ்சிற் பொருநன், நிச்சயமாக மடவன்', என்று, இவனது கொடை மடத்தைக் கூறிப் பழிப்பவர் போலப் புகழ்வர், ஔவையார் [புற.140]. வலிமை கொண்டு எதிர்ந்தோர்க்கு நினைக்கவும் எட்டாத தொலைவினன்; நட்புக்கொண்டு எதிர்ந்தோர்க்கு உள்ளங்கையிற் போல் அணுமையன்', என்று வண்மை, வன்மை இரண்டினாலும் இவனது மேம்பாட்டைப் பாடுவர், கருவூர்க்கதப்பிள்ளை.

**நாஞ்சிலான்-கலப்பைப் படையேந்தியவன் (பலதேவன்)** கொடிய வலிமையுடைய நாஞ்சிலான்-கலப்பைப் படையேந்தியவன் (பல தேவன்) - தோளில் அணிந்த துழாய் மாலை போல், வெண்கடப்ப மரத்தின் கிளைகளில் மயில்கள் தங்கி இருந்தன [கலி.36:1].

**நாஞ்சிலோன்-கலப்பைப் படையேந்தியோன் (பல தேவன்)** மிக்க ஒலியினையுடைய, மறமிக்க, மாற்றாரைக் கொல்லும் தானையுடனே, ஒழுக்கமுடைமையைக் கடந்துவரும் பகைவருயிரை அகற்றும், வெற்றிமிக்க வலியும், ஒலியும் பொலிந்து புழுதியை அகலுமாறு போல அப்பகைவர் மார்பை உழுகின்ற நாஞ்சிலோன்-கலப்பைப் படையேந்தியோன் (பலதேவன்) எனத் திருவுருவம் தரித்தவரும் திருமாலே [பரி.13:33].

**நாஞ்சிலான்** காண்க.

**நாஞ்சிற்பொருநன் - ஓர் குறுநில மன்னன்.** நாஞ்சில் வள்ளுவனே புலவர்களால் நாஞ்சிற்பொருநன் என்று குறிக்கப்பெறுகின்றான் [புற.137,139,140,380] செய்யுளில் நாஞ்சிற்பொருநன், அடிக்குறிப்பில் நாஞ்சில் வள்ளுவன் எனச்சுட்டப்படுகின்றான் - 'நாஞ்சில் வள்ளுவன்' காண்க.

**நாட்கொடி** - நாடோறும் பெற்ற வெற்றியின் சின்னமாக எடுத்த கொடி-நல்லநாளில் கட்டிய கொடி. அரைத்த மண்ணால் அமைக்கப்பட்ட மதிலிடத்தே நாட்கொடி நாள்தோறும் பெற்ற வெற்றியின் சின்னமாக எடுத்த கொடி அசைந்தது [புற.34:5].

**நாட்சோறு** - காலையுணவு. ஓய்மான் வில்லியாதன், பன்றியின் கொழுவிய ஊன் துண்டங்களான நல்ல வெள்ளிய ஊனை, நறிய நெய்யை உருக்கி, அதன்கண் பெய்து, பொரித்து, நாட்சோறு-காலையுணவு-கொடுத்துப் பரிசிலர் பசி போக்கவல்லவன் [புற.379:9].

**நாட்டம் - 1. ஆராய்ச்சி.** அறக்கடவுள் மேவி ஆராய்ந்தாற்போன்ற, செங்கோல் நாட்டம்-ஆராய்ச்சி-உடைய, நீதியைக் கேட்க வேண்டுங்காலத்துச், செவ்வி எளியோர், துளிவேண்டுகாலத்து மழைபெற்றோராவர், எனச், சோழன் குளமுற்றத்து துஞ்சிய கிள்ளிவளவனுக்கு, வெள்ளைக்குடி நாகனார் அறிவுரை கூறினார் [புற.35:14]. நாற்ற நாட்டத்தையுடைய் வண்டு சிறிய, வெள்ளிய ஆம்பலை ஊதும், பண்ணன் சிறுகுடி. [புற.70:11]. ஏழிலாஞ்சனையுடண நாட்டம் உடைய, ஒருநாளும் நீங்காத, அரசுரிமையைக் குறைவின்றிப் பெற்றும், அதியமான் செருவேட்டெழுந்தான் [புற.99:7].

நின்னைக் கழற வேண்டாமையை நன்றாக அறிந்தேனாயினும், நின்னோடு யான் கொண்ட, நலம் பாடில்லாத நாட்டத்தால், நீ அன்புடையை அல்லை என்று நின்னைக் கழறுவேன்', என, வரைவு நீட, ஆற்றாத தலைவி நிலைமை, தலைவற்குத், தோழி கூறி, அவனை நெருங்கி வரைவு கடாவினாள் [கலி.125:6].

**2. கண்.** இமையாத நாட்டம் - கண் - உடையவர், தேவர் [புற.62:16].

மழுவாள் நெடியோனைத் (சிவபெருமானைத்) தலைவனாகக் கொண்ட மாசற விளங்கிய யாக்கையராகிய இமையா நாட்டத்துப் பெரியோர்க்குப் (தேவர்க்குப்) பலி கொடுத்தற்காக, மதுரை நகரக் கோயில்களில், அந்திக்கால விழாக்களில், வாச்சியங்கள் ஒலிக்கும் [மது.457]. மானோடு மாறுபட்டுப் பொருந்தின செவ்வரியையுடைய நாட்டத்தையுடையவர் விறலியர் [மலை.45].

இறைவன் நெற்றியின்கண்ணது, இமையா நாட்டம் [அக.க.வா..4].

தம் உந்தியில் தோன்றிய தாமரை போலும் நாட்டத்தை உடையவர் திருமால் [பரி.4:61]. நெற்றியில் இமையா நாட்டத்தை உடையவர் (சிபெருமான்) [பரி.5:30].

**3. சோதிடம்.** சொல்லிலக்கணம், பொருளிலக்கணம், நாட்டம்-சோதிடம் - வேதம், தூய நெஞ்சம் இவற்றால் அரசன் சிறப்பெய்துவன் [பதி.21:1].

**நாட்டவர்** - நாட்டையுடையவர். சாரல் மேலிடத்துள்ள நல்ல

யானுயிர்வாழ்தல் கூடும், எனத் தோழியிடம், தலைவி கூறினாள் *[ஐங்.213:4].*

**நாட்டார்** - நாட்டிடத்தார். தலைவர் நம்மைப் பிரிந்து மிகத் தொலைவிலுள்ள நாட்டார் - நாட்டிடத்தார் - ஆயினும், நம் நெஞ்சிற்கு மிக அணியராயுள்ளார்', என, நன்கு ஆற்றினாய் என்ற தோழிக்குக், கிழத்தி உரைத்தாள் *[குறு.228:5].*

**நாட்டோர்**-நாட்டிடத்தோர். கற்பக காவையுடைய நல்ல நாட்டோரும்- நாட்டிடத்தோரும் (விண்ணுலகத்தோரும்) நல்வினையாலுள்ள இன்பத்தின் பக்கத்தைப் பொருந்துவதல்லது, ஈதலும், இரத்தலும் இன்மையின், அது செயலறவுடையத்தென்று கருதி, அவ்விடத்து நுகரும் நுகர்ச்சி இவ்விடத்தும் கூடுதலின், நின்னாடு உள்ளுவர், எனச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை, ஆவூர் மூலங்கிழார் பாடுவர் *[புற.38:12].*

நம் பிரிவுத் துன்பத்தை அறிந்தும் சேய் நாட்டோராகிய தலைவர் இன்னும் நெடுந்தொலையிலேயே உள்ளார்', எனத் தலைவி உரைத்தாள் *[குறு.64:5].*

**நாட்பத வேனில்** - இளவேனில். பெருமழை பெய்துவிட்ட பிற்றை நாட்காலையிலே, பாம்பு ஒடும்போது அதன் முதுகு நெளியுமாறு போல, ஆற்றுநீர் நுணுகி ஒடாநின்ற, செவ்வியமைந்த நாட்பதவேனிற்கண்- இளவேனிற்கண் - மாமரத்தின்கண்ணவாகிய குயில் கூவும் பொழுதெல்லாம், தலைவி தலைவனை நினைத்து வருந்தினாள் *[நற்.157:4].*

**நாட்பலி** - விடியற்காலத்துப்பலி. இல்லங்களில் அடப்படும் கள்ளினையுடைய சிலவாகிய குடிகள் வாழும் சீறூர்ப் பக்கத்தே நடப்பட்ட நடுகல்லுக்கு நாட்பலி-விடியற்காலத்துப் பலியைப்-படைத்தனர் *[புற.329:2].*

சீறூரிலுள்ள நாட்பலி மறந்தமையால் வெளிதாகிய (பொலிவற்ற) இடத்தினையுடையது பலிபீடம் *[அக.287:6].* கணையால் வீழ்ந்திறந்த, புதியர்களின் உடலை மூடிய, உயர்ந்த கற்குவியல்களில், ஏறிப்படர்ந்த காட்டு மல்லிகையின் பூக்கள், உயர்ந்த நிலையினையுடைய நடுகல்லின் நாட்பலிக்குக் கூட்டப் பெறும் *[அக.289:3].*

**நாட்பு** - போர்க்களம். நிலையாமை எப்பொழுதும் நெஞ்சில் தங்குதலால் உரத்தில் சிறந்தோராகிய படைஞர், நாட்பில்- போர்க்களத்தில் - நிறைந்திருந்தனர் *[பதி.45:5].*

**நாட** - நாட்டினையுடையாய் (விளி). தெய்வத்தைப் போற்றிப் குறமாக்கள், மழை பெய்து மாறிய உவகையராய், மலைச்சாரற்கண் புனத்தினையை உண்ணும் நாட- நாட்டினையுடையாய் - என்று பேகனைக் கபிலர் விளித்தல் *[புற.143:5].* முக்கலை கிழித்த பலாப்பழம் குறவர்க்குச் சில நாளைக்கு உணவாகும் மலைகெழு நாட! எனக் கபிலர் பாரியை விளித்தார் *[புற.236:3].*

வாழையின் குலையிலுள்ள முதிர்ச்சியுற்ற கனியாலும், பலாவின் சுளையாலும் விளைந்த பாறையிடத்துள்ள சுனையிலிருந்த தேனைத் தேனென்றறியாதுண்ட ஆண்குரங்கு, அயலிலுள்ள சந்தனமரத்தில் ஏறமாட்டாது, நறிய பூக்களாலாகிய படுக்கையில் களிப்புற்றுறங்கும் இன்பத்தை நினது மலையிலுள்ள பல்வேறு விலங்குகளும் எளிதில் எய்தும் நாட! நீ குறித்து முயலும் இன்பங்கள் நினக்கு எவ்வாறு அரியதாகும் எனக் கூறித், தோழி வரைவு கடாவினாள் *[அக.2:9].* பெரிய கிளைகளில் பலாமரத்தின் பழத்தினைக் கொள்ளுதற்குக், குறவர்கள் நாட்டிய குடிசை மறைய, வேங்கைப் பூக்கள் பரந்த தோற்றத்தைப் புலியென்று அஞ்சிய யானை, பக்கமலையில் மூங்கில்கள் முறிபடப் பெயர்ந்து செல்லும் நல்ல மலைபொருந்திய நாட! நீ இரவுக்குறிவரின் தலைவி உயிர்வாழ்ந்திராள்', எனக் கூறித் தோழி வரைவு கடாவினாள் *[அக.12:13].* கூதிர்க்காலத்துப் பாதியிரவில், குறத்தியர் தந்தைமார், காட்டில் விலங்குகளை ஆராயும் வேட்டையில், துயிலும் இடம் பெறாமல் புலித்தோலை விரித்துள்ள படுக்கையில் இல்லிலே வந்து தங்கியிருக்கும் குன்ற நாட! என்று தலைவனைத் தலைவி விளித்தாள் *[அக.58:6].* ஓங்கு மலைநாட! எம்மைப் பிரிந்த நாளில், தேன் மணக்கும் இவளது நெற்றியினைச் சிறிதளவேனும் நினைத்தறிந்தீரோ?' எனக் களவுக் காலத்துப் பிரிந்துவந்த தலைமகற்குத் தோழி வினவினாள் *[அக.78:14].* யானை பக்க மலையிலுள்ள மரம்வீழ ஒடித்துத் தள்ளிப் புலியினைக் கதறுமாறு குத்திச், சிறிய தினை விளைந்த பெரிய புனத்தினைக் கவர்ந்து கொள்ளும் நாட! தலைவிக்குப் பகற்குறிக்கண் செல்லாத துன்பம் பெரிதாயிற்று', எனப் பகல்வருவானை இரவு வருக எனத் தோழி வேண்டினாள் *[அக.148:6].* மலைச்சாரலிலுள்ள வேட்டுவன், வெண்கடம்பினைச் சார்ந்து நின்று, அம்பினை ஆய்ந்து கொண்டு, களிற்றின் மார்பிற் செலுத்தி, அதன் வெள்ளிய கொம்பினைக் கொண்டு வந்து, தம் குடிசையில் ஊன்றிப் பலாக்கனியினின்று பிழிந்தெடுத்த மதுவினை உண்ட களிப்பினனாகிச், சுற்றத்துடன் ஆரவாரமிக்குச், சாந்த விறகாலாய தீயில், ஊனுடன் கூடிய சோற்றை அட்டுண்ணும் குன்ற நாட! நீ அன்பிலையாகுதல் அறியேன்; அறியின் தலைவியின் அழகு கெடப் பசலை பரத்தல் இல்லையாகும்', எனத் தோழி, தலைமகளை இடத்துய்த்து வந்து தலைமகனை வரைவு கடாவினள் *[அக.172:14].* வேங்கையின் பூங்கொத்துக்களைச் சூடி, வில்லைத் தோளில் இருத்திப் பலவின் தேறலை ஏவல் இளையருடன் மாந்தி, வலிய நாய் பின்னே வர, வேட்டைக்குச் சென்ற குறவன் காட்டிலுள்ள மல்லிகைப் புதர் உதிரத்தோடு அசைந்திட முள்ளம் பன்றியைக் கொன்று வீழ்த்தும் குன்றநாட! நீ இரவில் தனியே வருதலை நினைந்து இவள்

கண் கலுழா நிற்கும்', எனத், தோழி, இரவு வருவானைப் பகல்வரக் கூறினாள் *[அக.182:8]*. வலிய மழையுடன் இடி தங்கும் உயர்ந்த உச்சியையுடைய பெரிய மலை நாட! கிளி, தினை சிதையும்படிக் கொய்து சுமக்கலாற்றாது போகட்ட பெரிய கதிரினைக் கானங்கோழி இனத்துடன் கவர்ந்துண்ணுமாறு தினையும் கதிர்களை ஈன்றன (ஆதலின் தலைவி இற்செறிக்கப்படுவாள்). பாம்பு உமிழ்ந்த மணியால் இரவும் விளக்கமாகவுள்ளது', எனத் தோழி, செறிப்பறிவுறுத்தி, இரவுக்குறி மறுத்தாள் *[அக.192:15]*.

சாரற்கண்ணே, பிடி இனத்துடன் இன்பமடையப், புலிப்பகையை வென்ற புண்மிக்க ஆண்யானை, கையை உயர்த்திப் பெருமூச்செறிதலால் வேங்கைப் பூக்கள், கொல்லன் துருத்தியை மிதித்து ஊதும் உலையிற் பிதிர்ந்தெழும் தீப்பொறி போலப், பொங்கியெழுந்து மின்மினிப் பூச்சிகளைப் போல, நீலமணியை ஒத்த புதரில் பரவி விழும் நாட! யாமேயன்றி நின்வயின் துன்பமுறுவோர் பிறரும் உளரோ?' என இரவுக்குறிக்கண் வந்து நீங்கும் தலைமகற்குத், தோழி சொல்லி, வரைவு கடாவினாள் *[அக.202:8]*. காட்டின்கண் பெண்புலி பசியுற்றதாக, இளைய மானாகிய உணவைக் கொணர்ந்துதரக், குகைகளை உடைய பக்க மலையில் இரை கொள்ளுதலை விரும்பிப் புறப்பட்ட ஆண்புலி ஆமான் சேய்மைக்கண்நின்று அலற, அதன் ஏற்றினைக் கொன்று பாறைகள் குருதியால் சிவந்திட இழுத்தேகும் பெருங்கல் நாட! நீ இவளைப் பிரிந்து செல்வையாயின் இவளை இறவாது காத்தற்கு மருந்தும் உடையையோ? என இரவுக்குறி வந்த தலைமகற்குத், தோழி கூறினாள் *[அக.238:10]*. ஞாயிறு, தொழில்களை இவ்வுலகிற்குத் தருமாறு பெரிய கடலில் தோன்றினாற்போல, மாலைக் காலத்தே, வேங்கை மரத்தின் தளிர்கள் விளங்கும் கிளையிலுள்ள தண்ணிய நுனிகளை அசைந்து வரும் காற்று மெல்லெனத் தடவி வரும் நாட! அரைநாள் இரவு நீ வந்ததனினும், தலைவர் நீடலராகி வருவர் எனக் கூறி, உயவுத் துணையாகத், துயிலாது என்னுடன் கூடியிருந்த தோழி மகிழ்ந்தது இனிதாகவுள்ளது', என, இரவுக்குறிக்கண் தலைமகற்குத், தலைமகள் கூறினாள் *[அக.298:6]*. மலை மறையுமாறு முகில் சூழ்ந்து மட்கலம் சுடும் சூளைபோன்று தோன்றும் நாட! புலியொடு பொருதுழந்த களிற்றின் மத்தகப் புண்ணைக் கழுவி, இரவில் முகில்கள் ஆலங்கட்டியுடன் கூடிய பெயலைப் பொழிந்தமையால், வைகறையில் அருவியின் நீர்ப் பெருக்குப் பெருகிவருதலின் இத்தகைய இரவில் நீ வருதல் என்னையோ?' என்று கூறித் தோழி இரவு வருவானைப், பகல் வருக என்றாள் *[அக.308:6]*. மலையினின்று விழும்அருவி ஒலியுடன், வண்டின் ஒலி கூடித் தண்ணுமை ஒலியுடன் கூடிய யாழ்நரம்பின் ஒலிபோல, இம்மென்று ஒலிக்கும் பழமையான வெற்றியினையும், அகன்ற இடத்தினையுமுடைய பயன் பொருந்திய மலை நாட! நீ மன்றல் வேண்டினும் பெறுகுவை', என இரவுக்குறி வந்த தலைமகனை, வரவு விலக்கித் தோழி வரைவு கடாவினாள் *[அக.318:7]*.

பலாமரங்கள் செறிந்த சாரலையுடைய நாட! இவள் உயிர் சிறிது; காமம் பெரிது; எனவே வரைந்து கொள்ளும் செவ்வியை உடையையாக', எனக் கூறித், தோழி வரைவு கடாவினாள் *[குறு.18:2]*. மழை பெய்தலினால் நீர் பெருகிப் பாயும் அருவியாறு மலை முழைஞ்சுகளில் ஒலிக்கும் நாட! காம இன்பம் ஒரோவழி நீங்கினும் உள்ளத்தில் கொண்ட நட்பும் அழியுமோ? என இரவுக்குறி வேண்டிய கிழவற்குத், தோழி நேர்ந்த வாய்பாட்டான் மறுத்தாள் *[குறு.42:3]*. ஆண் குரங்கு இறந்துபட அதன் பிரிவால் கைம்மைத் துன்பத்திற்கு ஆற்றாத பெண்குரங்கு, தன் குட்டியைச் சுற்றத்தினிடத்துச் சேர்ப்பித்து மலைப்பக்கத்தில் பாய்ந்து உயிர் விடும் சாரல் நாட! நீ நள்ளிரவில் வருதலை ஒழிவாயாக; நினக்குத் தீங்கு நேருமோ என யாம் வருந்துவோம்', எனத் தோழி இரவுக்குறி மறுத்துக் கூறினாள் *[குறு.69:5]*. 'நல்ல மலை நாட! தலைவி நின்னையன்றி வேறுபற்றுக்கோடு இலள்', எனத் தோழி உரைத்தாள் *[குறு.115:6]*. சாரல்நாட! அன்னை, கிளிகளை தினையினிடத்துப் படாமற் கடிதற்குச் செல்க', என்றாள்; நீயோ மிக்க இருளையுடைய நடுநாள் வருகின்றாய்; அவ்வாறு வராதே என இரவுக்குறி ஏதம் அஞ்சித், தலைவனுக்குக் கூறுமாறு தோழிக்குத், தலைமகள் கூறினாள் *[குறு.141:8]*.

யானைக்கன்று பிடியின் முலைப்பாலைக் குடித்து நிற்ப, வீட்டின் முன்னிடத்துள்ள தினைப்பயிரைப் பிடி உண்ணுதற்கிடமாய பெருங்கல் நாட! நீ, யாம் செய்த நன்றியை நினைந்து வரைந்து கொள்வையாயின் இவள் கூந்தற் பகுதிகள் நினக்கே உரிமையுடையன', என, வரைவிடை வைத்துப் பிரிவாற்குத், தோழி கூறினாள் *[குறு.225:2]*. ஆண்குரங்கு தன்கையால் தோண்டிய பலாப்பழத்தைக் காத்தலை மறந்த வேடன், அதன்பின், பழத்தால் மணமுடைய மரந்தோறும் குரங்குகள் படுதற்குரிய வலையை மாட்டி வைக்கும் குன்றநாட! தலைவி வருந்தல் நின் பண்பிற்குத் தகுமோ? எனத், தலைமகளைத், தோழி நெருங்கிச் சொல்லி வரைவு கடாவினாள் *[குறு.342:4]*. மலைப்பக்கத்தே அருவி முரசைப் போல ஒலிக்கப், பக்கத்தே பலாமரங்களையுடைய பெருங்கல் நாட! தினை கொய்யும் பதம் வந்துள்ளது. தலைவியின் நலம் கெட்டொழியும்', எனத் தோழி, செறிப்பறிவுறீஇ வரைவு கடாவினாள் *[குறு.365:6]*.

ஓங்குமலை நாட! 'நீ கூறும் வாய்மைகளெல்லாம் இவ்வாறே பொய்த்து ஒழிவனவாகுக' என வரைவிடை மெலிவாற்றுவிக்கும் தோழி, தலைவற்குக் கூறினாள் *[நற்.55:1]*. மலையின்கண் உள்ள வேங்கை மரத்தின் கீழ் ஆமான் கூட்டம் கன்றோடு தங்கியுள்ளதாக, அவை துயில்வதனைக் கண்ட மந்தி, தன் சுற்றத்தை ஒலியாவாறு தன் கையால் அமர்த்திவிட்டு, அருகிலே சென்று, ஆமானின் மடியைப் பற்றியீர்த்துப், பாலைக் கறந்து குட்டியின் கையில் பிழியாநிற்கும் பெரிய மலை நாட!

தினை கொய்யும் பதம் வந்துள்ளது. தலைவியின் நலம் கெட்டொழியும்', எனத் தோழி, செறிப்பறிவுறீஇ வரைவு கடாவினாள் *[நற்.57:7].* கிளைகள் தோறும் தேனிறால் தூங்காநிற்பப், பெரிய பழங்கள் குலைகுலையாகப் பழுக்க, அருவி மாலைபோல் இழிந்துவரக், கொல்லைகளில் கூலங்கள் விதைக்கப் பட்டுப் பொலிய, இவ்வெற்பு வளமுடையதென்று இதனை விட்டுப் பிரிந்து செல்பவர் இரங்காநிற்கும் பெரிய மலை நாட! யாம் செல்கின்றோம்; நீ எழுந்து செல்க. நீடுவாழ்க', எனக் கூறித் தோழி வரைவு கடாவினள் *[நற்.93:5].*

தினைக்கதிரைத் தின்னக் கருதி வந்த களிற்றை நோக்கிய குறவர், குடியிருப்பின் புறமெல்லாம் சென்று ஆரவாரித்துச் சூழும் மலை நாட! பழகிய பகையாயினும் பிரிவு இன்னாது; தலைவியின் நெற்றியிலே பசலை படருமாறு அவள் தொடர்பை எவ்வாறு கைவிட்டனை? எனத் தோழி, தலைமகள் ஆற்றாமை கூறி, வரைவு கடாவினள் *[நற்.108:5].* பெருங்கல் நாட! இரவில் காவலையும் கடந்து வந்து கூடிப் பேரன்பினை உடைமை; யாமே தினைப்புனம் காவற்குச் செல்கின்றோம்; அதனால் பகற்பொழுதிலே வருக', எனத் தோழி தலைவனிடம் உரைத்தாள்.. *[நற்.156:3].* வண்டுகள் உண்ணுமாறு மலர்ந்த வேங்கையின் பெரிய கிளையில் தொடுத்த தேனடையில் தேனீக்கள் மொய்த்தலாலே, குழிகளில் வடிந்த இனிய தேன், குறக்குறுமாக்கள் வழித்துண்டெஞ்சியதை, மந்தியின் வலிய குட்டிகள் சென்றுண்ணும் நல்ல மாலைநாட! தலைவியின் உயிர்படும் துன்பத்தைக் கருதாமல் ஈங்கு நீ வரல் தகுதிப் பாடுடையதாமோ?' எனத், தோழி, இரவுக்குறி மறுத்துக் கூறினாள் *[நற்.168:6].*

களிறும், பிடியும் மலைப்பச்சையைச் சுற்றிலுமுடைய நீர்ச்சுனையிலே மெய்துவளப் புணர்ந்து, சோலையிலுள்ள மலைவாழையைத் தின்பதை வெறுத்துச், சிறிய குடியிலுள்ளார் அஞ்சி அலறும்படிப் பலாவின் இனிய பழத்தைத் தின்னும் கரிய மலை நாட! நீ வாழ்க; நீ இங்குத் தங்கிச் செல்வதாயின் அதற்கு அடையாளமாக நினது மாலையைக் கொடுப்பாயாக', என்று, பகல் வருவானை இரவு வருக எனத் தோழி கூறினாள் *[நற்.232:4].* புலியைக் கொன்ற யானையின் கொம்பினைக் கழுவும்படி மழை பெய்த முகில் வில்லால் எறியப்பட்ட பஞ்சு போலாகி, வைகறையில் உயர்ந்த நெடிய மலையில் இயங்கா நிற்கும் நாட! நீ, அருளினும் அருளாயாயினும் நின் வழிப்பட்டொழுகும் தலைவியின் பசலைக்கு நீயே மருந்தென்பதை அறிந்து செல்வாயாக', எனத் தலைவனிடம் நீட்டியாமை வரைக, எனத், தோழி கூறினாள் *[நற்.247:5].* இடியிடித்து முகில் ஓங்கிச் சென்று பெய்யத் தொடங்கிய மலையிலே, மூங்கில் பரந்துள்ள நெடிய சிமையத்தின்கண்ணே, அருவியையுடைய மலைப்பக்கத்தில், அரும்புகள் மலர்ந்த வேங்கை மரத்தின் மலர் பாறையில் உதிர்ந்து பரவாநிற்கும் நல்ல மழை நாட! என்பால் அருளின்றிச் சிறுநெறிக்கண் கடிய விலங்குகள் இயங்குவதை அறிந்து வைத்தும் நடுயாமத்தில் நீ வாராநின்றனை; எனத் தோழி, தலைமகனை, ஏதஞ்சொல்லி வரைவு கடாவினாள் *[நற்.257:7].* மலைப்பக்கத்தில் பலா காய்த்துப் பருத்தலாலே தாங்கமாட்டாது வளைந்த அதன் கிளையிலே தங்கிய கொக்குமீனைக் கொணர்ந்து குடைந்து தின்னுதலால் உண்டாகிய புலவு நாற்றம் பொறுக்கவியலாது மந்தி தும்மும் நாட! இவள் கண்ணில் பசலை உண்டாகா நிற்கும், எனத் தலைமகனைத். தோழி வரைவு கடாவினாள் *[நற்.326:4].* ஆண்பன்றி, வற்றிய முலையையுடைய பெண்பன்றியுடன் சென்று தினைக்கதிரை அளவின்றித் தின்றழித்ததனாலே, கானவன் புழையருகே பதுங்கியிருந்து வில்லினால் எய்துகொன்று தந்த அவ்வாண்பன்றியை அவன் மனைவி தன் சுற்றம் இருக்குமிடந்தோறும் சென்று பகுத்துக் கொடுக்கும் நெடுமலை நாட! இரவின் வருதல் அஞ்சுவேன்', எனத் தோழி ஆறுபார்த்துற்றுக் கூறினாள் *[நற்.386:6].* காந்தளின் பூங்கொத்தோடு பொருந்திய வாழைப்பூவின், மடலுட்பட்ட (அருவிபோலப் பெருகிவரும்) இனிய நீரைப் பெண்குரங்கு பருகும் நாட! இவள் நின்னையன்றி வேறுகளைகண் உடையளல்லள் எனத் தோழி அருகடுத்துக் கூறினாள் (தோழி தலைமகளது ஆற்றாமைகண்டு வரைவு கடாயதூஉமாம்) *[நற்.355:5].* உயர்ந்த வரைநாட! புலி களிற்றையட்டு இடிபோல் முழங்கும் நடுயாமத்திலே, இருளான் மூடப்பட்ட நெறியின்கண்ணே, இடியிடிக்கும்போது நீ வருதலான் அருளுடைமையல்லை; எனத் தோழி ஆறு பார்த்துற்றுக் கூறினாள் *[நற்.383:9].*

குன்றத்திடத்தே குறவன் உழவு முதலாகிய வினைக்கு ஆர்ப்பின், அதற்கு வேண்டிய நீரை மழைபொழியும் நாட! நும்மூரிடத்தே கடுகி வருகின்ற அருவியைக் காணினும் தலைவி அழுவாள்', என, வரையாது வந்தொழுகும் தலைமகற்கு, வரைவு வேட்ட தோழி, கூறினாள் *[ஐங்.251:2].* ஆண்பன்றியோடு புலி போர் செய்யும் நாட! மிக்க நாணத்தை உடையேமாயிருக்கின்றோம். நீ நயந்தோள்கண் நீர்த்துளியைச் சிந்தின' என, நொதுமலர் வரைவு பிறந்துழித், தலைமகட்குளதாகிய வேறுபாடு, தோழி கூறித், தலைமகனை வரைவு கடாவினள் *[ஐங்.266:2].* அசோகினது ஒள்ளிய தளிரை மந்தியின் பார்ப்பு உண்ணும் நல்ல மலைநாட! நீ பிரிந்து சென்றால் நின்னை விரும்பியுறையும் தலைவி என்னைவிடவும் கலங்கும் எனத் தோழி கூறினாள்- *[ஐங்.273:3].* குரங்கின் தலைவனாகிய கடுவன், சூரற்கோலைக் கொண்டு, மாரி மொக்களைப் புடைத்தழிக்கும் நாட! யாம் நின்னை விரும்பினோமாயினும், நீ அருளுவாயானால், எம் நலம் வாடுமோ, என வரையாது வந்தொழுகும் தலைமகன், இடையிட்டு வருதலால், எதிர்ப்பாடு பெறாத தோழி, குறியிடத்து எதிர்ப்பட்டு, அவன் கொடுமை கூறி, நெருங்கியுரைத்தாள் *[ஐங்.275:3].*

மந்தியின் காதலனாகிய, தளிரை மேயும் கடுவன், நறைக்கொடியினைக் கொண்டு, மழையினைப் புடைக்கும் நாட! கல்முகையிடத்தே, வேங்கை மலரும் நல்ல மலைநாடன், எனக்கொண்டு, நீ நயவாய் ஆயினும், வரைந்து செல்க, என, வரையாது வந்தொழுகும் தலைமகனைத் தோழி நெருங்கிக் கூறினாள் *[ஐங்.276:3].* நாட! இவள் கண் பசப்பெய்த என்றும் நீத்தல் எதனால்?' குறவர் முன்றிலில், மாதீண்டு துறுகற்கண்ணே, மந்தி கடுவனொடு துள்ளும் குன்ற என, வரையாது வந்தொழுகும் தலைமகன் புணர்ந்து நீங்குழி, எதிர்ப்பட்ட தோழி, வரைவு கடாவினாள் *[ஐங்.277:3].* மலையிடத்துள்ள இத்திமரத்தில் படர்வனவாகிய மலைமல்லிகைத் தளிரை, ஏறிமேய்ந்த மந்தி, துணையோடு மலைமீது துள்ளி விளையாடும் நாட! எம், ஊர், மலைகளின் நடுவகத்தது; அலரைக் கூறும் சேரியையுடையது', என, இரவுக்குறி வேண்டும் தலைமகனைத், தோழி வரலருமை கூறி மறுத்தாள் *[ஐங்.279:3].* குரங்கின்குட்டி, பெரிய மூங்கிலின் கழையில் ஏறிச், சிறிய கோலால், மதியைப் புடைப்பது போல் தோன்றும் நாட! நீ, வரைந்தனை எனக் கேட்டு, யான், யாய்க்கு உரைத்தனென் அல்லனோ எனப், புணர்ந்துடன் போகிய தலைமகன், தலைமகளைக் கரணவகையான் வரைந்தானாக, எதிர்சென்ற தோழிக்கு, இனி, யான் இவளை வரைந்தமை நுமர்க்கு உணர்த்த வேண்டும் என்றானாக, அவள் கூறினாள் *[ஐங்.280:3].* சாரலிடத்துத் தினையினைக் கொடிச்சி கடியவும், சோலையிடத்துள்ள சிறுகிளி மீண்டும் வருதலை நினைக்கின்ற நாட! யானை வழங்கும் காட்டு நெறியில், இருள் பெருகின; அவ்வழி வாரல்', என, இரவுக்குறி நேர்ந்த தோழி, தலைமகன் வந்து புணர்ந்து நீங்குழி, அவனை எதிர்ப்பட்டுக் கூறினாள் *[ஐங்.282:3].* 'கானவன் மடமகள், தினையினின்றும் கிளியை ஒப்பும் நாட! நின்குறை பலவும் கூறி, நீப்பினும், நின் பொய்வலையில் படும் பெண்டிர் மிகப்பலர்; அவருள் இவளும் ஒருத்தி, எனத், தோழி வாயில் மறுக்கவும், தலைமகன் ஆற்றாமை கண்டு, தலைமகள் வாயில்நேர, அவன் பள்ளியிடத்தனாய் இருந்துழிப், புக்க தோழி கூறினாள் *[ஐங்.283:3].* குறமகள் தட்டையினால் ஐவனத்து விழும் சிறுகிளியைக் கடியும் நாட! இவள் வளை நெகிழப்பிரிதல் யாங்கு வல்லுநையோ?' என, ஒருவழித் தணந்து வந்த தலைமகற்குத், தோழி கூறினாள் *[ஐங்.285:3].* நெடுவரைக் கண்ணுள்ள வருடைமானைக் கண்டு கொய்கின்ற கிள்ளை அஞ்சும் நாட! நீ பொய்த்தல் வல்லை. அன்றியும் அல்லது செய்தலில் வல்லாய்' என, இன்ன நாளில் வரைவல் எனக்கூறி அந்நாளில் வரையாது தலைமகற்குத், தோழி கூறினாள் *[ஐங்.287:2].* பெரிய வரைநாட! தினைப்புனங்காவலையும், கடியுநர் போல்வர்; எனவே, வரைந்து கொள்வாயாக', என்பது, இற்செறித்த பின்னர், தோழி வரைவுகடாவுழிச் சொல்லியது *[ஐங்.289:4].* மயில்கள் ஆடப், பெரிய வண்டுகள் ஒலிக்க, மழை பெய்யும் பெரிய மலை நாட! நீ, மணத்தைச் செய்ய, யாம் இப்போது பெற்றோள், எமக்கு, நின்னினும் சிறந்தனள்', என்பது, பின்முறையாக்கிய பெரும்பொருள் வதுவை முடித்தவளை, இல்லத்துக் கொண்டு புகுந்துழித், தலைமகள் உவந்து கூறியது *[ஐங்.292:2].* வேங்கை மரத்தே இருந்த மயில், இழையணிந்த மடந்தைபோல் தோன்றும் நாட! இவள் கூந்தற்கண் மலரணிந்தாய்; இனிது செய்தனை; நுந்தைவாழியர்', என்பது, வதுவை செல்லாநின்றுழித் தலைமகற்குத், தோழி கூறியது *[ஐங்.294:2].* கொடிச்சி காக்கின்ற ஏனலை, மலைப்பக்கத்தே மஞ்ஞை கவரும் நாட! நடுயாமத்தும் வருகின்றாய், யானை தாக்கின் அதனால் விளைவன அறியேன், என்பது, இரவுக்குறி வருகின்ற தலைமகற்குத், தோழி ஆற்றாமை கூறிமறுத்தது. *[ஐங்.296:2].* வேங்கையின் கிளையிலிருக்கும் மயில், பூக்கொய்கின்ற மகளிர் போன்று தோன்றும் நாட! நின்னோடு பொருந்திய தலைவியின் நட்புப், பிரியினும் பிரிவதன்று', என்பது, ஒருவழித் தணந்து, வரைய வேண்டும் என்ற தலைமகற்குத், தோழி கூறியது *[ஐங்.297:2].* மைவரை நாட! நீ அருஞ்சுரம் இறக்குவையாயின் இவள் பெரிது வருந்துவள் என்பது பிரிவுணர்த்தப்பட்ட தோழி, தலைமகற்குச் சொல்லியது *[ஐங்.301:4].* பெரிய வரைநாட! நீ, பிரிந்து செய்யும் பொருள், நின் தலைவி ஈன்ற சிறுவன் முறுவல் காண்டலின் இனிதோ? என்பது, பொருள்வயிற் பிரிவன் என்ற தலைமகற்குத், தோழி கூறியது *[ஐங்.309:5].*

புலியினது வடிவையொப்பப் பூத்த வேங்கை மரத்தைப் புலியெனக் கறுவுதல் கொண்டு, அதன் அடியில் குத்திய மதயானை, முழைஞ்சிடமெல்லாம் ஒலிக்கும்படி கூவித்,தன் கொம்பை வாங்க மாட்டாதே வருந்தும் நாட! கேள்', என்று, தோழி, தலைவனை விளித்து வரைவு கடாவினாள் *[கலி.38:9].* தான் நுகர்கின்ற பூத்தனித்து நிற்கத், தான் விரும்பிய பூவின் மேற்சென்ற தும்பி, யானையோடு புலிவந்து போர் செய்த காலத்தே, வேங்கையின் பூங்கொம்பென்று கருதிப் புலியைச் சூழ்ந்தும், வேங்கையின் சினையென்று கருதி, யானை முகத்தை அணுகியும், திரியும் மலைகளையுடைய நன்னாட என விளித்துத், தோழி, தலைவி ஆற்றாமை கூறி, வரைவு கடாவினள் *[கலி.46:9].* பக்க மலையிடத்தனவும், ஆற்றிடைக் குறையிடத்தனவுமாகிய பெரிய யானைத் திரள்களோடே, பெரிய புலி, மாறுபாட்டாலே போர் செய்தலுற்ற மலையினையுடைய நன்னாட! என விளித்துத், தலைவி ஆற்றாமை கூறித், தோழி வரைவு கடாவினாள் *[கலி.48:7].* புலிவந்து போர் செய்கையினாலே, அதனை வென்ற, வருத்தத்தோடே துயில் கொள்ளும் யானை, அந்நிகழ்ச்சி மனத்தே கிடக்கையாலே, அதனைக் கனவிற்கண்டு, கடுக வெருவி எழுந்திருந்து, புதிதாக மலர்ந்து நின்ற வேங்கை மரத்தைப், புலியென்றுணர்ந்து, அம்மரத்தின் நலத்தைக் கெடுத்து, நாணித் தலை கவிழும் நன்றாகிய மலையையுடைய நல்ல நாட! என விளித்துத், தோழி, பகல் வருவானை இரவு

வரக் கூறினாள் *[கலி.49:9]*. செவி மறைப்பிடமாக, வந்து பாய்ந்து, மாறுபாடு செய்த புலியைத் தன் கோட்டின் முனையாலே குத்தி, அதன் மருமத்தைத் திறந்து மாறுபாடு தீர்ந்த யானை, சாரலில் தன் சுற்றத்திற்கு நடுவே கூடித் திரியும் நாட! கேள்' என விளித்து, ஏதம் கூறித், தோழி வரைவு கடாவினாள் *[கலி 52:6]*.

**நாடகம்** - கூத்து. துணைப்புணர்ந்த மடமங்கையர், பாட்டைக் கேட்டும், நாடகங்களை - கூத்துக்களை - விரும்பிக் கண்டும் நிலவின் பயன் துய்த்தனர் *[பட்.113]*.

**நாடக மகளிர்** - நாடகம் ஆடும் மகளிர். நாடக மகளிர்-நாடகமாடும் மகளிர்-கூத்தியர், விறலியர்-ஆடுங்களத்தே, வாரால் பிணித்தல் இறுகின இனிய முழவைக் கொண்டு வந்தனர் *[பெரு.55]*.

**நாடன்**-நாட்டினையுடையவன். குறிஞ்சி நிலமுடைமையால், நாடன் - நாட்டினையுடையவன் - என்று சொல்லுவேனோ? மருதநிலமுடைமையால், ஊரன் என்று சொல்லுவேனோ? நெய்தல் நிலமுடைமையால் சேர்ப்பன் என்று சொல்லுவனோ எனச் சேரமான் கோக்கோதை மார்பனைப் பொய்கையார் பாடுவர் *[புற.49:1]*. பரிசிலரைக் காணின் கன்றொடு யானை வழங்கும் மலை கெழுநாடன் என்று, ஆயை, உறையூர் ஏணிச் சேரி முடமோசியார் பாடுவர் *[புற.135:13]*. தோட்டியென்னும், பெயருடைய மலையையுடைய நாடன், நள்ளி *[புற.150:28]*. கலைமான் பிணையை அழைப்பின் முழையில் புலியேறு செவி தாழ்த்துக் கேட்கும் பெருங்கல் நாடன் ஏறைக்கோன் *[புற.157:13]*. கடவுள் காக்கும் பெருங்கல் நாடன், பேகன் *[புற.158:12]*. புலிதுஞ்சத், துடி, பேராந்தையோடு ஒலிக்கும் மலைகெழுநாடன், பிட்டன் *[புற.170:8]*. ஐவனங்காப்பார் விளக்கவிய, மணி இருளகற்றும் வன்புலநாடன், பிட்டன் *[புற.172:8]*. எம் தலைவன், வேங்கட நாடன், கரும்பானூர்கிழானுக்கு அன்புடைய மகன், எனக், கரும்பனூர் கிழானைப் புறத்திணை நன்னாகனார் குறிப்பிடுவர் *[புற.381:22]*. கான்கெழு நாடனாகிய கடுந்தேர் அவியன், என, ஒருவனை உடையேன்', என்று, மாறோக் கத்து நப்பசலையார் குறிப்பிடுவர் *[புற.383:21]*. நீர் கொள்ளும் துறைக் கண், மலையிடத்துப் பூத்த பூக்களைக் கொணர்ந்து ஒதுக்கும், தலைநீரால் வளம் பொருந்திய நாடன், அதியமான் நெடுமானஞ்சி என ஔவையார் குறிப்பிடுவர் *[புற.390:24]*. வயலிடையே பூத்த சிவந்த இதழ்களையுடைய தாமரை, அந்தணர்கள் அறத்தை விரும்பி வளர்த்த தீப்போல, விளங்கும் நாடன்', எனச், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை, எருக்காட்டூர் தாயங்கண்ணனார் குறிப்பிடுவர் *[புற.397:21]*.

கரிகாலன் அரிகான்மேல் தேன் தொடுக்கும் புனல் நாடன் *[பொரு.வெ.3:3]*. அருள் மிகுதியால் மயிலுக்குப் போர்வை ஈந்த பெருங்கல்நாடன், பேகன் *[சிறு.87]*. மழைப்பருவம் பொய்யாது பெய்யும் உயர்ச்சியாற் காற்றுத் தங்கும் நெடிய சிமையங்களையுடைய செறிந்த மலைநாடன், நள்ளி *[சிறு.107]*. ஒய்மானாட்டு நல்லியக்கோடன், எயிற்பட்டினத்தையுடைய நாடன் *[சிறு.வெ.1:3]*. செவ்விய வரைகள் சூழ்ந்த நாடன், வீரக்கழல் அணிந்த காலினையுடைய தொண்டைமானிளந்திரையன் *[பெரு.103]*. கூத்தருடைய சுற்றம் சேர வாழ்த்தும் குளிர்ந்த கடல் சேர்ந்த நாடன், சேரன் *[மது.524]*.

காந்தள்வீழ்ந்து உயர்ந்து கச்சு விரிகளம் போல் பொலிவு பெற்ற மலை பொருந்தின நாடன், குறிஞ்சித்தலைவன் *[குறி.199]*. பொன்னை அருவி கொழிக்கும் அணிமலை நாடன், தீயதிலன் *[குறி.வெ.1:3]*.

அரிவையே! குறிய மலைகளையுடைய நாடன், தேரினை உடையனாய் உவ்விடத்தே தோன்றும், எனக் கூறித், தோழி தலைமகளை வற்புறுத்தினாள் *[அக.4:13]*. தெய்வமுடைய நீண்ட மலையுச்சியினின்று விழும் கூட்டமாய அருவிகளையுடைய காடு பொருந்திய நாடன் மார்பு அணங்கிய, தலைவியின் வருத்தத்தை, இதுவென அறியாது, முதுவாய்ப் பெண்டிர், நெடுவேளைப் பேணக் கூறினர் *[அக.22:2]*. பக்க மலையிடத்துச் செழித்தெழுந்த வேங்கை மரத்தினது மிகவுயர்ந்த கிளையிலுள்ள பொன்னையாத்த புதிய மலரைப் பறிக்க விரும்பிய குறமகள் ‘புலி, புலி' என்னும் ஆரவாரத்தினை அடுத்தடுத்து எழுப்பலின், ஆனினைக் கவரும் புலியைக் குறித்த ஒலியாகும் அஃதென்று, வில்லை இடக்கையில் கொண்ட கானவர், கல்லென்னும் ஒலியுடன் போதரும் நாடன் மார்பைக் காரணமாகவுடையது, கண்ணிற் படர்ந்த பசலைநோய். ‘தோழி, உயிர் பிரியினும், அன்னைக்கு இது காமநோய், என்று கூறாதே, எனத், தலைமகள் தோழியிடம் உரைத்தாள். *[அக.52:8]*. மூங்கில் வளரும் பக்கமலையில், உலாவி ஆடும் மயில்கள், களத்தில் புகுந்தாடும் விறலி போல் தோன்றும் நாடன், வில்லை ஏந்தியவனாய், அம்பு தெரிந்து, யானை சென்ற நெறிவினவித், தினைப்புனத்தே நின்றவனைப், பலர் கண்டும், அவருள் நீர்வார் கண்ணோடு, நெகிழ்ந்த தோளை உடையவளாக, யான் ஒருத்தியுமே ஆயது, என்னையோ? எனத், தோழிக்குத், தலைவி அறத்தொடு நின்றாள் *[அக.82:10]*. நம் தலைவர் உறுவித்த அல்லலைத் தெரிந்தருளதலின், நெடுவேள், நம் முன்னை அழகினைத் தந்தருள்வன் எனில், இவள் உற்ற துன்பம் பிறிதொன்றானாயது என்று, கான்கெழு நாடன் கருதுவனாயின், யான் உயிர்வாழேன்', எனத், தலைமகன் சிறைப்புறத்தானாகத், தோழி தலைமகட்குச் சொலலுவாளாய்க் கூறினாள் (தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்) *[அக.98:29]*.

கானவன் பரணிடத்தே கள்ளுண்டு களித்திருப்ப, அவன் மனைவி தன் கூந்தலைக் கையாற் கோதிக்கொண்டு

குறிஞ்சிப்பண்ணைப் பாடக் களிறு கண்ணுறங்கும் நாடன், சந்தனம் பூசிய தன் மார்பின்கண் வண்டுகள் ஒலிப்ப, வேல்பொருந்திய வலக்கையுடையனாகக், காவலர் அறியாது வந்து, தலைவியைத் தோள்மணந்து பெயர்ந்தமை, அம்பலாகிவிட்டமையினை, இராக்குறிக்கண், சிறைப் புறமாகத், தோழிக்குச் சொல்லுவாளாய்த், தலைமகள் கூறினாள் *[அக.102:9].* வேங்கையின் இலை விராவிய மாலையினை அணிந்து, நல்வரை நாடனாகிய தலைவன் பாராட்டி வர, வேனிற்கண் பலவாகிய நெறிகளில் தலைவி செல்லுதலை யாங்கு வல்லுநள் கொல்? என, மகட்போக்கிய தாய் கூறினாள் *[அக.105:3].* தோழி! நமது நெஞ்சம், கான நாடனாகிய தலைவன், வரும் சிறுநெறிக்கண், அவன் தளரும் அடியினைத் தாங்கச் சென்றுவிட்டது', எனத், தலைவி கூறினாள் *[அக.128:10].* 'நெடுநாளாக, நின்னோடு, வரைந்து கொள்வல் எனத் தெளிவித்து வந்த நல்லமலை நாடனாகிய தலைவன், வரும் இன்னாத வழியை நினைந்து என்மனம் கவலும்', எனத், தோழிக்குத், தலைமகள் கூறினாள் *[அக.138:14].* பன்றி, சுனை நீரைக் குடித்துச் சேம்பின் கிழங்கினை நிறையத் தின்று கல்லின்மீது இறங்கிவந்து, புதரிலுள்ள கூதாளஞ்செடியின் மலரினைப் பொருந்தி, அதன் தாதுமேலே உதிர்தலால், பொன்னுரைக்கும் கட்டளைக் கல்லினை ஒப்ப அழகுபெறத் தோன்றித், தினையின் கதிரினை மேய்ந்து, இனிது கண்ணுறங்கும் நல்ல மலை நாடனொடு நீயும் சேர்ந்து வாழ்ந்து, என்றும் கெடாத மறுமையுலகத்துத் தங்கி வாழ்க', எனத், தோழி, வரைவு மலிந்து கூறினாள் *[அக.178:13].* தோழி! வானில் மிக உயர்ந்த நீலநிறம் பொருந்திய, பெருமலையினை அடுத்துள்ள கானநாடன் அடைவித்த நோயான், நின்மேனியின் அழகு ஒழிந்துள்ளது எனத், தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி, தலைமகட்குக் கூறினாள் *[அக.222:2].* நடுஇரவில் முகில் முழங்கும் இடியொலியினைக் கேட்ட, மூங்கிலைத் தின்னும் பெரிய யானை, புலியின் ஒலி எனக் கருதி, அஞ்சிப் பெரிய மலையின் விடரகம் எதிரொலிக்கக் கதறிப் பெயர்ந்திடும், பெருங்கல் நாடன் கேண்மை, அன்னை வேலனை அழைக்கும் பருவமாக, நமக்கு விளைந்தது என்றாள் தோழி *[அக.232:5].* 'தோழி! கானவன், தறுகட்பன்றியை நோக்கி, 'எம் வல்லாளனைப்போலும் இது' எனப் பகழி எய்யாது பெயரும் குன்ற நாடன், இல்வந்து நிற்க, அன்னை கண்டு, என் முகம் நோக்கி நீ மிகவும் நல்லவள், என்று கூறி, நகைத்துப் பெயர்ந்தாள்', எனத், தோழி உரைத்தாள் *[அக.248:10].* யானையுடன் புலிபொருதலால் குருதியால் குழைவுற்ற சிவந்த களம், புலால் நாற்றம் நீங்க, வேங்கை மலர் நாற்றம் காட்டுமல்லிகை மலர் நாற்றத்தோடு கூடி மாற்றும், பெரிய மலைநாடனொடு, குற்றமில்லையாகத் தோன்றிய அன்பு கலந்த கூட்டம் உளதாயின், அதுமிக நன்றாகும்', எனக், குறைவேண்டிப் பின்னின்ற தலைமகனுக்குக், குறை நேர்ந்த தோழி, தலைமகட்குக் குறைநயப்பக் கூறினாள் *[அக.268:5].* வேங்கையின் கிளை பொலிவுற நீலமணியை ஒத்த மயில் ஆடும், அழகிய மலை நாடனொடு பொருந்திய நட்பு, அன்னை முருகனைப் பரவுதலின் விளைவாக, என்ன நிலையினை அடையுமோ? என, இரவுக்குறிவந்த தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த், தோழி கூறினாள் *[அக.272:19].* 'தோழி! யானையின் வெண்கோடு கொண்டு, மலையில், பொன்னை அகழ்ந்து எடுப்போன்', அணிகள் பொன்னுடன் மிப்போந்து விளங்க, அவற்றை முத்துக்களுடன் கூட்டிச், சந்தன மரம் காவு மரமாக ஒருசேரக் காவிக்கொண்டு, வேங்கைக் கண்ணியை உடையனாய், அம்மலையினின்றும் இறங்கி வரும் நாடனுக்கு, எந்தையும் கொடை எதிர்ந்தனன்'; அம்பலூரும் அவனொடு மொழியும்; யாயும் நினக்கு உரியன் அவனே என்னும்; நாமும் மனையுறை தெய்வத்திற்குப் பலிசெலுத்துவோமாக', என, இரவுக்குறிக்கண், தலைமகன் சிறைப்புறமாகத், தோழி, தலைமகட்குச் சொல்லுவாளாய்க் கூறினாள் (தலைமகன் பிரிவின்கண், தோழிக்குத், தலைமகள் சொல்லியதூஉமாம்) *[அக.282:10].* வேற்றுப்புலம் சென்று, இரவில் மேயும் யானையின் நடையைக் கூர்த்தறிந்து, நள்ளிரவில், பரண்மீதுள்ள வேட்டுவன், கவணால் எறிந்த சிறுகல் அம்பென விரைந்து சென்று பக்கமலையிலுள்ள வேங்கையின் பூங்கொத்துக்களைச் சிதறச் செய்து, தேனையழித்துப், பலாப்பழத்தினுள் தங்கும்மலைகெழு நாடன் நம்மை மணந்து கொள்ளாதவழி, நாம் செய்வதனைக் கூறுவாயாக', என, வெறியச்சுறீஇத், தலைமகள், தோழிக்குக் கூறினாள் *[அக.292:15].*

'தோழி! மலையில் நீண்டு வளர்ந்த செவ்வாழை இலைகள், காற்று மோதுந்தோறும், துயில்கொள்ளும் யானையின் பரிய உடம்பினைத் தடவும், நல்ல மலைநாடனொடு, அருவியாடிச், சுனைக்குற்று, வேங்கை மலரில் வண்டார்க்கும் சோலையிடத்தே விரும்பி விளையாடலும் அரியதுபோலும்; அறனில்லாத அன்னை பல்காலும் நோக்கும்', எனப், பகலே சிறைப்புறமாகத், தோழி, தலைமகட்குச் சொல்லுவாளாய்க், கூறினாள் *[அக.3024].* பெருமலை நாடன் வரையக் கருதுமாயின், மழையினால் ஆய அருவியில், மார்பு புணையாக விளையாடுவோம்; வருவாயாக', எனத் தலைமகன் சிறைப்புறமாகத், தோழி கூறினாள் (தலைமகள் சொல்லியதூஉமாம்) *[அக.312:7].* முகில் தவழும் பக்க மலையில், இளைய பிடி, சூலினை ஈன்று, மூங்கிலைத் தின்னும் தன் உடம்பினைக் களிறு தடவிக்கொண்டிருக்க, வாழைகளையுடைய அப்பக்க மலையில் துயிலும், சாரல் நாடனது மென்மையுடைய மார்பினை, அவர் முயங்குந்தோறும், நாம் நம் மார்பின்கண்ணே அடக்கியிருப்பேம்; அது கழிந்ததே', என, இரவுக்குறிச், சிறைப்புறமாகத், தோழி சொல்லெடுப்பத், தலைமகள் கூறினாள் *[அக.328:15].* யானை, தன்னைத் தாக்கற்குப் பதுங்கிய புலியைப்பொருது கொன்று, குருதி தோய்ந்த கொம்பினை, மழையால் கழுவிக்கொண்டு, பக்க

மலையில் மெல்லமெல்லச் சென்று, பகையைத் தொலைத்த செருக்குடன், யாழ்போன்ற இசையுடன் வண்டுகள் ஒலிக்குமாறு சென்று, தன்பிடியினைக் கூடி, வாழைமரங்களையுடைய மலையில் துயிலும் நாடன், நினது உயர்வுக்கு ஏற்ற மென்மைத் தன்மையன், எனக், கூறிய இன்சொற்கள் வாய்மையாய் முடிந்தன', என, இரவுக்குறிச் சிறைப்புறமாகத், தோழிக்குத், தலைமகள் இயற்பட மொழிந்தாள் *[அக.332:9]*. முன்றிலிக்கண், தேன் எனத்தகும் சுவையினவாகிய மாங்கனிகளுடன், பலவின் சுளைகளையிட்டுத், தேனுடன் கூட்டியாக்கிய, அரியலாகிய, மூங்கிற்குழாயில் நெடிதிருந்து முதிர்தலின், பாம்பினது வெகுட்சியை ஒத்த, கள்ளினைத், தெய்வம் உறையும் மலைக்குப் படைத்துப், பின் மகளிர் உண்பிக்கக், குறவர் அதனையுண்டு தினைப்புனங்காவலை மறந்துவிடத்து, யானைத்திரள் தினைப்புனத்தைக் கவர்ந்துண்டனவாக, அதனைப்பொறாது இளையரும், முதியரும் வில்லை ஆராய்ந்து கொண்டு திரியும் நாடன், கூறிய உறுதியில்லாத இனிய சொல்லை மெய்யெனத் தேறிய நெஞ்சமே! இனி நமக்கு என்ன தீங்கு உறுமோ?' எனத், தலைமகன், சிறைப்புறத்தானாகத், தோழி சொல்லெடுப்பத், தலைமகள் கூறினாள் *[அக.348:13]*.

பெரிய பலாப்பழத்தினை, ஆண்குரங்கு தழுவிக்கொண்டு, பெண் குரங்கினை அழைக்கும் குன்றநாடன், உயர் குடிப்பிறப்புடையன், கூடுகின்றவர்களைப் பிரியலன்; நாவால் கெடுமொழிகளைக் கூறுவானல்லன்; அன்பினன் என்று நீ அவன் சிறப்புக்களைக் கூறிக் கூட்டிவைத்தனை; ஆதலின் நல்லை. அவன் எமக்கினியன்; என, வரைந்தெய்திய பின்றை, மணமனைக்கண் சென்ற தோழிக்குத், தலைமகள் கூறினாள் (வரைவு மலிந்து சொல்லிய தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்) *[அக.352:7]*. வேடன் சுட்டெரித்த கொல்லையில், மழை ஈரத்தில், வளர்ந்த பசிய தினையின் நீண்ட கதிர்களைக் காத்திருக்கும் மகளிர், தமக்கு ஊசலாகக் கொண்டு, ஆடும் கிளைகளைப் போக்கிய, பூங்கொத்துக்கள் நெருங்கிய வேங்கை, மலையின் உச்சியிலுள்ள குடுமிபோல தோன்றும் நாடன், எம்மொடு நீராடியமை அலராகாநின்றது, எனச் சிறைப்புறமாகத், தலைமகட்குச் சொல்லுவாளாய்த், தோழி கூறினாள் *[அக.368:7]*. வேங்கை மரத்தின் தாது உதிர்தலால், சிறந்த தோகையையுடைய மயில், வருடை கடாக்களின் ஒலியைக், கேட்டு அஞ்சி இரிய, ஆடும் களத்தே ஒலிக்கும் கொம்பு போல, இனியனவாக ஒலித்துப், பறந்து சென்று மூங்கிலின்கண் விளங்கத் தங்கியிருக்கும் பெருங்கல் நாடன் பிரிந்த புலம்பு நலியவும், அவர் குன்றத்து வான்தோய் சிமையம் தோன்றலால் உள்ளேன்', என, இரவுக்குறிச், சிறைப்புறமாகத், தோழி சொல்லெடுப்பத், தலைமகள் கூறினாள் *[அக.378:11]*. 'தோழி! அருவியின் கண் பாய்ந்த பெண்குரங்கு, பலாவின் பழத்தினைத் தெப்பமாகக் கொண்டு, பக்க மலையிலுள்ள பெரிய ஊரின்கண் துறை முன்பு வந்திறங்கும், வறட்சி உறுதலை அறியாத சோலையையுடைய, வெற்றி பொருந்திய மலைநாடன் சொல்லை விரும்பி ஏற்றனை; தலைவனைக் காணுமிடத்து, நீ அவனுக்கு உணரக் கூறுதல் வேண்டும், என இரவுக்குறிச் சிறைப்புறமாகத், தோழி தலைமகட்குக் கூறினாள் *[அக.382:13]*. கரையைப் பொருதுவரும் யாறே! எமது தலைவரது உயர்ந்த மலை நாட்டினின்றும் வருவோய்! எம் கண்ணீர் பெருகவும், அறத்தினைக் கைவிட்டு நீங்குதல், நின் குன்று பொருந்திய நாடற்கு, யாதெனப் படுமோ? எனக் காமம் மிக்க கழிபடர் கிளவியால், தலைமகள், தலைமகன் வரையின் நின்றும் போந்த ஆற்றோடு புலந்து கூறினாள் *[அக.398:10]*.

மலைச்சாரலிடத்தே, பெரிய காம்புகளைக் கொண்டுள்ள குறிஞ்சி மலர்களைக் கொண்டு, பெரிய அளவாகத் தேனைச் சேர்த்தற்கு இடமான நாடனொடு, விளைந்த நட்புப் பெரிது; உயர்ந்தது; அளத்தற்கரிய ஆழமுடையது', எனத், தோழி இயற்பழித்த வழித், தலைமகள் இயற்பட மொழிந்தாள் *[குறு.3:4]*. மாசறக் கழுவப் பெற்றத் யானை போலப் பெருமழையால் கழுவப்பெற்றுத் தூய்மையடைந்த பாறையில், இளைய ஆண்மான் தங்குகின்ற நாடன், என்னைவிட்டு நீங்கத் தலைப்பட்டான். அதனால் குவளை போன்ற கண்கள் பசலை நிறத்தைப் பெற்றுவிட்டன', எனத், தலைவன் பிரிய, வேறுபட்ட கிழத்தி, தோழிக்குரைத்தாள் *[குறு.13:3]*. வேங்கையின் கிளையிலிருந்த மயில்கள், பூப்பறிக்கின்ற மகளிர் போலத் தோன்றும் நாடன், இவளுக்குத் தகுதியற்றவன்போலக், கட்டுவிச்சி, தெய்வத்தான் வந்ததென்று கூறினும், மலைகளிலே, ஓடியாடி விளையாடும் ஆண்குரங்கும், அத்தலைவன் நட்பினை அறியும்', எனக்கூறித், தோழி அறத்தொடு நின்றாள் *[குறு.26:3]*. 'தோழி! பொற்றைக் கல்லின் பக்கத்தே உள்ளதாகிய மாணை என்னும் பெரிய கொடி, அக்கல்லில் படராது, அருகே தூங்குகின்ற களிற்றின் மேல் படரும் குன்ற நாடன், என் தோள் மணந்தபோது, 'பிரியேன்', என உறுதி மொழி சொன்னது, நின் வருத்தத்திற்குக் காரணமாகுமோ? எனக் கூறி, வரைவிடை வைத்துப் பிரிய, ஆற்றாள் எனக் கவன்று வேறுபட்ட தோழியைத், தலைமகள் ஆற்றுவித்தாள் *[குறு.36:2]*. காட்டிடத்துள்ள மயில், பாறையில் இட்ட முட்டைகள், வெயிலில் விளையாடும் கருங்குரங்கின் குட்டி, உருட்டும் குன்றநாடன் கேண்மை, பிரிவைப் பொறுத்துக்கொள்வோர்க்கு நன்று', என, வரைவு நீட்டித்தவழித், தலைமகள் தனது ஆற்றாமை தோன்றத், தோழிக்குக் கூறினாள் *[குறு.38:3]*.

யான் இவ்விடத்துள்ளேன்; என்நலன், யான் கானக நாடனொடு பழகிய அவ்விடத்தே ஒழிந்தது, எனத், தலைமகள், தோழிக்குக் கூறினாள் *[குறு.54:5]*. வளைத்துவிட்ட நிலையில், வானத்தைத் தோயும்படி, நிமிர்ந்த மூங்கிலை உடைய குன்ற

நாடன், யாம் மெலிவுறுதலை அறியாதவனாய், தானும் மெலிவான் ஆயினன்', எனத், தோழி, தலைமகன் குறைமறாதவாற்றால் கூறினாள் *[குறு.74:2]*. உயர்ந்த மலைகள் உள்ள நாடனை, வரைதற்கு வருவான் எனக் கூறிய அன்னை துறக்கத்தைப் பெறுவாளாக', எனச், செவிலியைத், தோழி வாழ்த்தினாள் *[குறு.83:5]*. உயர்ந்த மலைகளுள்ள நாடன், நடுஇரவில் வருதலையும் செய்வான்; அதனால் நமக்குண்டாகும் பழிக்கு நாணேம்', எனத், தோழி, தலைமகட்குரைத்தாள் *[குறு.88:1]*. மிளகு வளர்கின்ற மலைப்பக்கத்தில், இராப்பொழுதில், பெரிய மழை பெய்ததாக, மலையினின்றும் இறங்கிவரும் அருவி, ஆண்குரங்கு தொட்டதனால் வீழ்ந்த பலாக்கனியை, மக்கள் நீருண்ணும் துறையினிடத்துக் கொண்டு வந்து தரும், குன்றநாடன் கேண்மை, நின்தோளை மெலியச் செய்யும் அமைதியைத் தந்தது; இஃது எத்தன்மைத்தோ? என, வரைவு நீட்டித்தவழி, ஆற்றாளாகிய தலைமகட்குத், தலைமகன் சிறைப்புறமாகத், தோழி கூறினாள் *[குறு.90:6]*. அருவியை அடுத்துள்ள வேங்கை மரங்களையுடைய பெரிய மலை நாடற்கு, யான் என் செய்வேன் என்று, இயற்பழித்தாய்; நான் அதனை நகைமொழியாகக் கொள்ளாதிருப்பின், நீ என்ன பாடுபடுவாய்? எனத், தலைமகனை இயற்பழித்துத் தெருட்டும் தோழிக்குத், தலைமகள், இயற்பட மொழிந்தாள் *[குறு.96:1]*.

குறவன் தோட்டத்தில் விளைந்த சிறுதினையில், புதியதையுண்ணும் தெய்வத்துக்குப் பலியாக விட்ட, வளவிய கதிரை, அறியாதுண்ட மயில், தேவராட்டி வெறியாடுகின்ற அழகைப்போல, வெம்மையுற்று நடுங்குதற்கிடமாகிய, தெய்வங்கள் உறையும் மலைநாடன், கேண்மை, நீர்மிக்க கண்களோடு துன்புறுதற்குக் காரணமாகியது', என, வரைவு நீட்டித்தடவித்துத், தலைமகள் தோழிக்குக் கூறினாள் *[குறு.105:5]*. புல்லிய விழுதையுடைய இற்றி மரத்தினது, மலையிலுள்ள கற்களில் படர்கின்ற வெள்ளிய வேர், வரையிலிருந்து வீழ்கின்ற அருவி போலத் தோன்றும், நாடன், குற்றமற்ற நெஞ்சினால் கூறிய மொழிகளை உரைக்கும் தூது வந்தது; நாமும் ஏற்றுக்கொண்டு தூது விடுவோம்', எனத், தலைமகன் தூதுகண்டு, கிழத்தி, தோழிக்குக் கூறினாள் *[குறு.106:2]*. கரிய நிறத்தினையுடைய துறுகல் பொருந்திய மலைநாடன், நம்வீட்டிலுள்ளாரது நகைக்கிடமான செய்கையைக் காணும் பொருட்டு விரைந்து வருக', என, வெறியெடுக்கக் கருதியமையைத் தோழி கூறினாள் *[குறு.111:5]*. நாடன் குறிப்பை, வாய்ப்பச் செய்யாத தவற்றின் பொருட்டு, என் தோள்கள் பசலை அடைந்தன', எனத், தோழிக்குத், தலைமகள் கூறினாள் *[குறு.121:4]*. வேங்கை மரத்தின் கிளைகள், மலர்கள் நீங்கித் தவிக்கும்படி, அடித்துக், கற்களை அலைத்து, ஒலிக்கும், விரைந்து விழும் அருவியானது, பாம்பைபோல இறங்குதற்கிடமாகிய, மலைநாடனொடு கலந்த நட்பு நம்மோடு பிரிவில்லையாயின் நன்று', என்று, வரைவிடை ஆற்றாளாகிய தலைமகள், ஆற்றுவிக்கும் தோழிக்குக் கூறினாள் *[குறு.134:7]*. பயனையுடைய மலை நாடன், இரங்குதலை மிகவுடையன்; பழியும் அஞ்சுபவன்; எனவே, நின் பசப்பு தங்குதற்குரியதன்று', எனத், தோழி கூறினாள் *[குறு.143:2]*. குறவன் கொளுத்திய கொள்ளி, விண்மீன் போன்று, ஒளிவீசும், மலை நாடன் மார்பை நினைந்தால் காமநோய் பெருகும்; புல்லின் அஃதில்லையாதலால் வியப்பாகவுள்ளது', எனத், தலைவி, தோழிக்கு மொழிந்தாள் *[குறு.150:4]*.

அருவியால் தரப்பட்ட, காலத்தில் விளைந்த, கொத்தையுடைய கொறுக்கந்தட்டையை, ஆழமான நீர்நிலையை ஆராயும் யானை, கவளமாக உண்ணும், மலைகெழுநாடன் கேண்மை, கெடாமையை அறிந்தேன், என, வரைவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குத், தலைமகள் கூறினாள் *[குறு.170:4]*. கீழ்க்காற்றால் வீழ்த்தப்பட்ட செங்காந்தள் மலர், பாறையின் மேல் கவிந்து கிடக்கும் நாடற்கு, என் மேனியின், துயரையுடைய நிலையை, உம்மால் ஆகியதென விளங்கச் சொன்னால், என்ன குற்றம் உளதாகும்?' எனத், தலைமகன் இரவுக்குறிக்கு வந்து ஒழுகாநின்ற காலத்து, வேறுபட்ட தலைமகளை, வேறுபட்டாயால்', என்ற தோழிக்குக் கிழத்தி கூறினாள் *[குறு.185:7]*. 'தோழி! இடியேற்றோடு, மழை பெய்து கலந்த முல்லை நிலத்துள்ள முல்லைக்கொடிகள், பற்களைப்போல் அரும்பும் நாடற்கு, என் கண்கள் துயில் துறந்தன எனப், பருவ வரவின்கண் ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக், கிழத்தி கூறினாள் *[குறு.188:3]*. மலைப்பக்கத்தில் தங்குதலையுடைய வருடை மானின்குட்டி, தன் தாயின் பாலை நிறையவுண்டு, மலைப்பக்கத்து நீழலில் துள்ளும் நாடன், கல்லினும் வலியன்; ஆயின் என்னெஞ்சு அவன் திறத்து மெலிவை அடையும்; எனத், தலைமகனை இயற்பழித்த தோழிக்குத், தலைமகள் இயற்பட மொழிந்தாள் *[குறு.187:3]*. சுனையின்கண் உள்ளனவாகிய பிளந்த வாயையுடைய தேரைகள், கிளிகடி கருவியாகிய தட்டைப் பறையைப் போல ஒலிக்கும் நாடன், களவுக் காலத்து நெடுவெண்ணிலவின்கண் உன் தோளை மணந்தான்; இன்றும், அவன் மேனியின் முல்லை மலர் மணத்தை என் தோள்கள் வீசாநிற்கும்', எனத், தோழி கடிநகர்ப் புக்கு, நலம் தொலையாமே நன்கு ஆற்றினாய்', என்றாட்குக், கிழத்தி கூறினாள் *[குறு.193:3]*.

பாலைக் கலந்தாற்போன்ற தேமாம்பழத்தைத் தின்று, தெவிட்டினமையின், நெல்லியினது புளித்த காயையுண்டு, மூங்கிலின்கண் தொங்குகின்ற வாவல்களையுடைய, மூங்கிற்கோல்கள் உயர்ந்து வளர்ந்த சோலைகளையுடைய மலைகெழுநாடனை, நம் அயன்மனைக்கிழத்தி வரும் என்றாள்; அவள் அமிழ்தம் உண்க, என வேறுபடாது நன்கு ஆற்றினாய்', என்ற தோழிக்குக், கிழத்தி உரைத்தாள் *[குறு.201:7]*. குன்றினிடத்துப் பொருத களிறுகளால் மிதிக்கப்பட்ட வேங்கைமரம், குறமகளிர் கூந்தலின்கண்ணே அணிய, நின்றபடியே மலர்களைக் கொய்யும்படி மலரும்,

நாடனொடு, நொதுமலர் வரைவொடு புகுவதொரு காரணத்தினால், பொருந்தேன்', என, வரைவிடை ஆற்றல்வேண்டுமென்ற தோழிக்குக், கிழத்தி கூறினாள் *[குறு.208:4]*. தாய் கிளிகடியக் கூறின், பகற்காலத்தும் அளவளாவலாம். இரவுவரின், வரும் ஏதத்திற்கு அஞ்சுவேன். எம் காமநோயைப் போக்க எவ்வாறு பரிகாரம் செய்வது? என யான் கூறியதற்கு, ஓங்குமலைநாடன், பிறிதொன்றை நினைந்து நெட்டுயிர்த்தான்', என, உடன்போக்கு நயப்பத், தோழி, தலைமகட்குக் கூறினாள் *[குறு.217:5]*. கன்றினைச் செலுத்திய சிறுவர்கள், மன்றத்தின்கண் உள்ள வேங்கை மரம் மலரும் செவ்வியைப் பார்த்து, அம்மரத்தின்மேல் ஏறாமல் செய்த, இன்பத்தைத் தரும் ஆரவாரம், வானத்தை அளாவிய மலை முழையின்கண் எதிரொலியையுண்டாக்கும் குன்றநாடனைக் கண்ட எம் கண்கள், தலைவர் பிரிந்தமை கருதி, அழுதன, எனப், பிரிவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக், கிழத்தி கூறினாள் *[குறு.241:7]*. வேங்கை மரத்தினது கிளையிலிருந்து மலர்கள் உதிர, அவ்விடத்து, யானை துயில் செய்வதனால், உயிர்ப்பின், ஒலியுண்டாகும் நாடன் மார்பைப் பெற்ற நட்பானது, மிக அழகுடையது', எனத் தோழி கூறினாள் *[குறு.247:6]*.

தோள்களிலுள்ள வளையை நெகிழச் செய்த கொடுமையையுடையனாகிய குன்றுகெழுநாடன், பரத்தையர் இல்லிலிருந்து வருங்காலத்தில், இனிய முகம் வேறுபடாமல் கற்பினால் வரவேற்றமையினைத் தோழி கூறியபோது, சான்றோர் புகழும் முன்னர் நாணுவர்; பழிச்சொல்லை யாம் கூற எங்ஙனம் பொறுப்பர்?' எனக், கிழத்தி கூறினாள் *[குறு.252:2]*. பெரிய மலையிடத்து மழை விளையாடும் நாடனைப் பிழையேம் ஆகிய நாம் இக்களவொழுக்கத்திலே ஒழுகாநிற்ப, இவள் பேயாற் கொள்ளப்பட்டாள் எனக் கூறப்படுவது, வருந்துதற்குரியதாகும்', எனத் தோழி, தலைமகட்குத், தலைமகன் சிறைப்புறமாகக், கூறினாள் *[குறு.263:7]*. மழை பொருந்திய காட்டாற்றினது தாழ்ந்த கரையிடத்துத், தழைத்த நெடிய தோகை அசைய நடந்து ஆடுகின்ற மயில்கள் கூவும் நாடன், நம்மோடு விரும்பிக்கொண்ட நட்பானது, நாம் பசலையை அடைந்தாலும், அப்பசலையோடு பொருந்தாது', என ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குத், தலைமகள் ஆற்றுவல் என்று கூறினாள் *[குறு.264:3]*. அருவியை ஒத்த பரிய துளிகளைச் சிதறி ஆறு, வெள்ளத்தைக்கொண்டு ஒலிக்கும் நாடனைத் தெளிந்து, அவனோடு பொருந்திய காலம் ஒரு நாளே; அது பலநாட்கள் தோளோடு கலந்து, அழகைக் கொள்ளை கொள்ளும் தன்மையினையுடைய நோயாகின்றது', எனத் தலைமகற்கு வாயில் நேர்ந்து புக்க தோழிக்குத், தலைமகள் கூறினாள் *[குறு.271:2]*. யானையின் முகத்தை ஒப்ப மன்றத்தின்கண் உள்ள பொற்றைக் கல்லின்மேல் செங்காந்தள் மலர்கின்ற நாடன், அறவன் ஆயினும், அல்லன் ஆயினும், சிறுகுடியோர் நம்மை ஏசுவரோ? அவர் தமக்கென்று, அறிவில்லாதவரோ? என, வரைவிடைத், தோழி, கிழத்திக்குரைப்பாளாகக் கூறினாள் *[குறு.284:3]*. 'தோழி! மிளகுக்கொடி வளர்கின்ற மலைப்பக்கத்தே, தளிரை உண்கின்ற குரங்குகள் ஒன்றாகத் திரண்டிருக்கும் பெருங்கல்நாடன், பரத்தையிற் பிரிந்தானாயினும், நம்மாட்டு இனியன்', எனத், தலைமகனது வரவு உணர்ந்து, நமக்கன்பிலன் என்ற தோழிக்குக், கிழத்தி கூறினாள் *[குறு.288:3]*.

தோழி! நன்மலைநாடன், என் நெஞ்சின்கண் வருதலையன்றி நேரிலே வருதலையறியான்', என, வரைவிடைக்கவன்ற தோழிக்குத், கிழத்தி கூறினாள் *[குறு.302:4]*. சோலையின்கண் உள்ள வாழையின் குருத்துத் தன் மத்தகத்தைத் தடவுதலினால், வலிகெட்டுக் கலங்கிய களிறு, மடப்பத்தையுடைய பிடி தன் முதுகைத் தடவ, மலைப்பக்கத்தில் கண்படுக்கும் பெரிய மலைநாடன் கேண்மை, மெய்யுறுபுணர்ச்சியைத் தருகின்றதொரு செயலிலே தங்கியது, என, வரைவிடைக் கிழத்தியை, வன்சொற்சொல்லி வற்புறுத்தினாள் தோழி *[குறு.308:6]*. ஓடிவருகின்ற வெள்ளிய அருவியையுடைய உயர்ந்த மலைநாடன், ஞாயிறு அனையன்; என் தோள்கள் நெருஞ்சி மலர்களைப் போன்றன, என, வரைவிடையாற்றகிற்றியோ, என்ற தோழிக்குக், கிழத்தி கூறினாள் *[குறு.315:2]*. மரையானினது ஆண், நெல்லிக்காயைத் தின்று, அருகிலுள்ள அழகிய மலர்கள் நடுங்கும்படி வெய்துயிர்த்து, மலையிலுள்ள சுனை நீரைப் பருகும் நாடன், பனி நாளிலே நம்மைப் பிரிந்து அமைவானோ?' எனப், பிரிவிடைக் கிழத்தியைத், தோழி வற்புறுத்தினாள் *[குறு.317:4]*. தாம் தண்ணளி செய்தால் வாழ்கின்ற வறியோர்பால், அன்பு இல்லாராதல் நல்லது என்று, குன்றநாடன் உணர்ந்ததாகத், தோழி, கிழவன் கேட்கும் அண்மையனாகக் கூறினாள் *[குறு.327:3]*. யானை, மகளிர் ஓட்டும் கிளிகளோடு, குறிய பொற்றைக் கல்லிடத்துச் செல்ல, மேல்நோக்கும் குன்ற நாடன், வினை குறையாக நிற்றலினால், நாம் மறையினைத் தாய்க்குத் தெரிவித்தால் என்ன', எனத், தோழி அறத்தொடு நிற்க விரும்புவதைக் கூறினாள் *[குறு.333:4]*. புனத்தின்கண் எழுந்த அகிலின் நறும்புகை, வெண்முகில் போல் சென்று மலைச்சாரலில் உள்ள குறவர்கள் ஊரில் இழிதரும் நாடன் மார்பு முயங்கல், கண்கள் அழும்படி பசலை உண்டாவதன் முன்பு, மிக இனிதாயிற்று, என, வரைவிடை வேறுபட்ட கிழத்தியைத், தோழி கடுஞ்சொற் சொல்லி வற்புறுத்தினாள் *[குறு.339:3]*. ஆண்புலி, யானையின் முகத்தே பாய்ந்ததாக, அதன் வெள்ளிய கொம்பு தனது குருதியால் செவ்விய கறையைக் கொள்ள, மேல்காற்று வீழ்த்திய வேங்கை மரத்தினது வாடிய பூவையுடைய கிளையைப் போல இறந்துகிடக்கும், உயர்ந்த வரைநாடனொடு போகும் திறத்தை, நீ நினைவாயாக', எனத், தோழி, கிழத்தியை உடன்போக்கு நயப்பக் கூறினாள் *[குறு.343:7]*. இளம்பிடியை விரும்பிய களிறு,

மலையிடத்தே குறவர் முழங்கியதனால் ஊரிடத்தே மன்றத்தைப் போழ்ந்து செல்லும் நாடன், காலைப்பொழுதில் குவளை மாலையை நினக்குத் தந்தும், நின்னோடு கிளி ஒப்பியும், மாலைக்காலத்தில், ஒன்றை விரும்பி வெளிப்படச் சொல்லாது குறையுற்றான்', எனத், தோழி, கிழத்தியை, இரவுக்குறி நயப்பக் கூறினாள் *[குறு.346:3]*. சாரலிடத்தே கொடிச்சி தினை காக்கக், கிளியோட்டுங் கருவி, சிலம்பைப்போல் ஒலிக்கின்ற சோலைகள் விளங்கும் மலைநாடன், இராக்காலத்தில் நாம் துயருழப்பினும் வாராதொழிக' எனத், தலைவி கூறினாள் *[குறு.360:8]*. முகில் பொருந்துகின்ற மலைப்பக்கத்தில், மலை நெல்லை விதைத்து, அருவியினாலே விளைக்கின்ற நாடனொடு- (நாடனால்) - வளைநெகிழ்தலும், பசப்பூர்தலும் பெறேன், ஆயினும், அக்காமம் பெரிது', என, வரைவிடை வற்புறுத்தும் தோழிக்குத், தலைமகள் கூறினாள் *[குறு.371:3]*. ஆண் கருங்குரங்கு, பக்கத்தே தோண்டியதனால் உடைந்து, பலவின் பழம், காந்தளையுடைய சிறுகுடியிடத்தே கமழும் மலைநாடனொடு பொருந்திய நமது நட்புப் பழிச்சொல்லை அஞ்சிக்கெடுதல் எவ்வாறு உடையதாகும்? என, அலர் மிக்கவழித், தலைமகட்குத், தோழி கூறினாள் *[குறு.373:8]*. 'தோழி, தன் இயல்பு முற்றும் அறிதற்குப் பொருந்தாத நாடனொடு, நாம் செய்து கொண்ட நட்பு, தோள் நெகிழ்ந்ததன்மேலும், அதன்மாற்றாகவும் ஆகின்றது, அதுகருதியான் ஆற்றாநிற்பவும் நீ ஆற்றினாயல்லை', என, வரைவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக், கிழத்தி அழிந்து கூறினாள் *[குறு.377:4]*. குன்றினிடத்தே, பழைய குழியைத் தோண்டிய வேட்டுவன், கிழங்கினொடு, தூய மணியைப் பெறும் நாடன், எம் கூந்தலைத் தடவிய அத்தலைவன், இன்று எவ்விடத்தில் உள்ளானோ? என, நொதுமலர் வரைவுழித், தோழி அறத்தொடு நின்றாள் *[குறு.379:3]*. நீ உடன் போக இயைந்தமையால், நான் கூறக், குன்றநாடன் குறியிடத்தே வந்து நின்றான்', என, உடன்போக வருந்தும் தலைவியிடம், தோழி கூறினாள் *[குறு.383:2]*. 'தோழி! பெருங்கல்நாடன் வரைவுக்குரிய முயற்சிகளை மேற்கொண்டானாக, அவனுக்கு முன், குற்றேவல் மகனே, நலமா? என்று கேட்டேன்; நன்றே என்றுரைத்தான்; அவன் உண்ணும் உணவைப் பெறுவானாக', எனத் தலைமகன் குற்றேவன்மகனால் வரைவு மலிந்த தோழி, தலைமகட்குக் கூறினாள் *[குறு.389:3]*.

தினைப்பயிரில் முற்றிய பெருங்கதிர்களைக் கொய்து கொண்ட மந்தி, கடுவனொடு நல்ல வரைமீதேறிக் கவுள் நிறையவுண்டு, மாரி பெய்தலாலே நனைந்த புறத்தனவாய்த், தோன்றும் மலைநாடன், வந்தனன்; நீ வதுவையயர்ந்து நெடுங்காலம் வாழ்க' என, வரைவு மலிந்த தோழி, தலைமகட்குக் கூறினாள் *[நற்.22:7]*. மணம் கமழும் நறவம்பூவின் நறிய தாதையுண்ட வண்டு, பொன்னையுரைக்கும் கட்டளைக்கற்போல நல்ல நிறத்தைப் பெறும் வளமிக்க மலைநாடன், நேற்று நம்மோடு கிளிகடிந்து தங்கியிருந்தும், தன்குறைகூறாது பெயர்ந்து போயினான்', எனத், தலைமகளைத், தோழி குறைநயப்பக் கூறினாள் *[நற்.25:5]*. கடவுள் தன்மை பொருந்திய மலையிலுள்ள சுனையில், குவளை மலரைப் பறித்து, அவற்றோடு காந்தள் மலர்களைக் கட்டிச் சூடி, மலையின் பக்கங்களெல்லாம் பொலிவுபெற, அருவியின் ஒலியை இன்னியமாகக் கொண்டு, சூர்மகள் ஆடாநிற்கும் நாடன் மார்பு தருதலால் வந்த இக்காமநோய், நின்னால் வந்ததன்றாயினும், வெறிக்களத்துப் பலிபெறவந்த முருகே! நீ மடவை', எனத், தோழி, தெய்வத்துக்கு உரைப்பாளாய், வெறிவிலக்கினாள் *[நற்.34:5]*. நெஞ்சே! தினையின் கொழுவிய கதிர்களைக் கொய்து கொண்டு போதலைக் கருதிக் குறவர்தம் சிறார் கூடி, மழை முகிலினியக்கத்தை அறியாநிற்கும் நல்ல மலைநாடன் காதல் மகள், தோழியர் கூட்டத்துடன் அருவியில் நீராடி, கண்களின் குறிக்கப்படாத பார்வையையும், புன்னகையையும் நமக்குத் தந்து, தனது மனையில் சென்றுவிட்ட பிற்பாடு, கருதிவந்த நின்னாலோ அவள் அறியத்தக்காள்? என, இற்செறிப்பிற் பிற்றைஞான்று, தலைமகன் குறியிடத்து வந்து, கூறினான் *[நற்.44:12]*. புலி, களிற்றைக் கொன்றமைக்கு வருந்திய பிடி, தன் கன்றினை அணைத்துக் கொண்டு, புண்ணுற்றாரைப் போல், வருத்தமுறும் கானக நாடற்கு, நீ தலையளி செய்யாமையின், இப்பசலை தோன்றிற்று, கண்டாய், என்று கூறின், ஏதேனும் குற்றப்பாடுளதாமோ?' எனச், சிறைப்புறமாகத் தோழி, தலைமகளுக்குரைப்பானாய்க், கூறினாள் *[நற்.47:6]*.

மிக்க மழை பொழிந்த கற்பாறையருகிலே பூத்த முல்லையும், பரல்கள் நிரம்பிய பள்ளங்களும் உடைய காடு சூழ்ந்த நாடனைக் கருதி இருப்போர்க்குக் கண்ணுறக்கமும் வாரா நிற்குமோ? எனத், தலைவன் வரவுணர்ந்து, தலைவிக்குச் சொல்லுவாளாய்த், தோழி கூறினாள் *[நற்.61:9]*. கான்யாற்றின்கண்ணே கலங்கும் பாசியை நீர் அலைத்தலானே அவை யாண்டும் கலப்ப, அருவியினது துறையின்கண்ணே பாய்ந்து, புலியுடனே போர்செய்த யானையின் தந்தத்தை விரும்பிய வேடர், வில்லினின்று விடும் அம்புபட்டதனாலாகிய அச்சத்தைத் தரும் பிளிற்றலின் பேரொலி, இடி முழக்கத்தைப் போல ஒலிக்கும் பெருமலை நாடனை, 'வரும்', என நன்னிமித்தமாகக் கூறிய அயல்வீட்டுப் பெண் அமுதம் உண்க', என, விரிச்சி பெற்றுப் புகன்ற தோழி, தலைமகட்குக் கூறினாள் *[நற்.65:9]*. மலைச்சாரலில் கானவன் எய்து கொணர்ந்த முட்பன்றியின் தசைத்துண்டத்தைக் கொடிச்சி மகிழ்ந்தேற்றுக்கொண்டு, சிறுகுடியிலுள்ளார்க்குப் பகுத்துக் கொடுக்கும் ஒங்கு மலைநாடன், நின்பாலுள்ள விருப்பத்தாலே, அஞ்சத்தக்க சிறுநெறிக்கண் வாரற்க', எனத், தலைவன் வரவுணர்ந்த தோழி, தலைவிக்குரைத்தாள் *[நற்.85:11]*. பன்றி, தினைக்கொல்லையிலே சென்று மேயப் புழைவழியிலே புகும்

பொழுது, பல்லியடித்தலும், அதனால் ஊறுநிகழும் என்றஞ்சிப் பின்னே மீண்டு வந்து கல்முழையிலுள்ள பள்ளியிடத்தே தங்கும் நாடன், இரவின்கண் முயங்கிச் செல்ல, வரும் நெறியின் ஏதத்தைக் கருதுவதால், துயிலப் பெறாது, என் கண்ணும் கொடியவாயிருந்தன; அன்பற்ற என்னெஞ்சமும் கொடிதாயிருந்தது, என, இரவுக்குறி வந்தொழுகும் தலைவனைத், தோழி வரைவு கடாவினள் *[நற்.98:7]*.

மலைச்சாரலில் அரும்பு முழுதும் மலர்ந்த வேங்கையின் கண்ணே, கரும்பு முரல்கின்ற பக்கமலை புலம்பக், களிற்றைக் கொன்று அரிமா இயங்கும் பெரிய மலைநாடன், வரவறிந்து வந்த மழைக்கு, யான் யாது கைம்மாறு செய்வேன்?' எனப் பருவ வரவின்கண் ஆற்றாளாய தலைவியைத், தோழி வற்புறுத்தினாள் *[நற்.112:5]*. நள்ளிரவிலே குன்றநாடன் வந்தனன்காண்; அவன் இரவுக்குறி வருதல் இரங்குதற்குரியதாயிருந்தது, என, ஆறுபார்த்துற்ற அச்சத்தால், தோழி, தலைவிக்குரைப்பாளாய்ச், சிறைப்புறமாகக் கூறினாள் *[நற்.114:6]*. சூல் முதிர்ந்த பிடி, அறியாமையால் தன் சூல் அழிந்து புறம்போந்து விழுமாறு, பெரிய மூங்கிலிலே முளைத்தெழுந்த முளையை விடியலிலே சென்று தின்னும், மலை பொருந்திய நாடன் கேண்மை, தொடர்ச்சியுற, முன்னே சென்றொழிந்தது; ஆயின், பெண்டிர் இன்னும் பழிகூறலை ஒழிந்தாரிலர், என, வரைவு நீட்டிப்ப ஆற்றாளாய தலைவி, தோழிக்கு, வன்பொறை எதிரழிந்து கூறினாள் *[நற்.116:6]*. தினைப்புனத்து மேயும் பன்றி பட்டொழியுமாறு, புனவன், சிறிய பொறியாக அமைத்து வைத்த பெரிய கல்லின் கீழ், புலி, புகுந்துபடுகின்ற நாடன், யாரால் தரப்பட்டு வரினும், தலைவியின் முயக்கத்தை அடைபவனல்லன்', எனச், சிறைப்புறமாகத், தோழி செறிப்பறிவுறுத்தினாள் *[நற்.119:3]*. பெரிய மலைப்பக்கத்தில் தினைக்கதிரெல்லாம் கொய்யப்பட்டன; மலைசூழ்ந்த இடத்திலிருக்கின்ற கானத்தே மல்லிகையும் அரும்பின; இடி முழங்குகின்ற நடுயாமத்து இருளில் மலை சூழ்ந்த நாடன் வரும் என்பது உண்மையோ? இல்லையோ; அன்னையும் அமராத முகத்தினளாயிருக்கின்றாள், எனச் சிறைப்புறமாகத், தோழி, தலைவிக்குரைப்பாளாய்த் தலைவன் கேட்பக் கூறினாள் *[நற்.112:6]*. பலராலும் புகழப்படுகின்ற மலைபொருந்திய நாடனொடு, இடையிடைவிட்டுப் பிரிதலை அறிவான்போல, என் தந்தை, கழற்றினாலும் கழலாது தங்கி என் தோட்பழியை மறைக்கின்ற தோள்வளை செய்து தந்து, செறிக்கச் செய்தனன்; அவன் வாழ்க', எனச் சிறைப்புறமாகத், தலைவி, தோழிக்குரைத்தாள் *[நற்.136:5]*. அன்னை, தினைப்புனம் காவாது எங்குச் சென்றனை எனவினவ, நான் அருவி ஒலிக்கும் பெரிய வரை நாடனை, அறியலும் அறியேன்; காண்டலும் இலனே', சுனை வாய்ந்து ஆடிற்றுமிலன் 'எனப் பொய் சொல்லாமல் உண்மை உரைத்துவிட்டனையே', எனச் சிறைப்புறமாகத், தோழி, தலைவிக்குக் கூறினாள் *[நற்.147:6]*. மிளகுக்கொடி படர்ந்த மலைப்பக்கத்தில், களவுப் புணர்ச்சியில், கடுவனால் முயங்கப்பட்ட பெண்குரங்கு, தனது வேறுபாட்டைத் தன் சுற்றம் அறியுமென்றஞ்சி, வேங்கை மரத்தின் கிளைமீது சென்று, சுனை நீரை நோக்கித் தலைகவிழ்ந்திருந்து, குலைந்த முச்சிமயிரைத் திருத்தும் மலைநாடன், நன்னுதல் பசந்தாலும், தோள் நெகிழ்ந்தாலும் இரவில் வாராதொழிவானாக', என, இரவுக்குறிச் சிறைப்புறமாகத், தோழி கூறினாள் *[நற்.151:12]*. மலையின்கண் உள்ள முழையிலே பதுங்கியிருந்த புலி, யானை வருந்தும்படி மோதி, அதன் குருதியைப் பருகிய வாயை, வேங்கையின் அடிமரத்தில் துடைக்கின்ற மலைநாடன், வருகின்ற நெறியை யான் கண்டதில்லை; ஆயினும் அவன் வரும் காடும், இரவுப்பொழுதும் என்னை வருத்தும், என, ஆறுபார்த்துற்ற அச்சத்தால், சிறைப்புறமாகத், தோழி கூறினாள் *[நற்.158:8]*. ஆமானின் நெஞ்சிலே தங்காது குறிதவறிப்போன அம்பின் போக்கைக் கருதிக், கானவன், இம்மலையில் தெய்வம் வெளிப்போந்து நின்றது; மழை பெய்தால் அதன் வீறு தணியும்; ஆதலின், மழை வந்து சூழ்க, என்று, அக்கடவுளை மலையில் சென்று வழிபடும் பொருட்டுப் பலியிட்டு, எஞ்சியதை உண்டு மகிழும் குன்றநாடன், இங்கு வருந்தோறும், நினதருமையை அவனுக்குரைத்தலால், நின்பால் அன்புடைமையின், வரையுமாறு வாராநிற்பன், என, நொதுமலர்வரையும் பருவத்துத், தோழி, தலைவிக்குக் கூறினாள் *[நற்.165:5]*. நீருண்ணும் நசையை மேற்கொண்ட பெண்யானை, வெவ்விய மலைப்பக்கத்தேயுள்ள நிலத்தின் கண்ணே செல்லுதலும், அதனுடன் செல்லாத யானைக்கன்று, சேரியிலுள்ள மாதர் துண்ணெனும்படி, ஊரிலுள்ள ஆவின் கன்றோடு புகும் நாடன், சுரநெறியிலே பிரிந்து செல்லின், கண்கள் எவ்வாறு துயிலல் வல்லனவாகும்? எனப், பிரிவுணர்த்தப்பட்ட தோழி, தலைமகட்குக் கூறினாள் *[நற்.171:5]*.

அன்னையும் இனி வேங்கையும் மலர்க என்று கூறி, என் முகத்தைக் குறிப்பாக நோக்கினள்; கல்கெழு நாடன் கேண்மை அறிந்தனள் கொல்? எனத், தலைமகன் சிறைப்புறத்தானாகத், தோழி கூறினாள் *[நற்.206:10]*. தோழி! களிற்றியானையின் எதிர்நிற்க இயலாது புலி வெருவியோடுதலாலே அயலிலுள்ள வேங்கைமரம் சிதைவுபடுமாறு முறித்துத் தள்ளித், தனது சினம் தணியும் குன்றநாடன், மிகப் பெரிதும் இனியனாயினும், அவனது புலவியுணர்த்தும் வண்மையால், வருத்தம் மிகவுடையேன்போல ஊடலுறுவேன் எனத் தலைமகள் வாயில் மறுத்துக் கூறினாள் *[நற்.217:5]*. குருதி படிந்த யானையின் கொம்பு போல, வாழையின் கொழுத்த முகை, மகளிரது கூந்தலை முடித்துவிட்டாற்போன்ற அதன் பூவொடு அசையும் மால்வரைநாடனை நயந்தோர்க்கு உதவாத, அன்பற்ற அவனது மார்பை, நம்மில் இரந்து கேட்டவர் உளரோ?' எனத், தலைவி வன்புறை எதிரழிந்து கூறினாள் *[நற்.225:5]*. கடுவன் நடுங்குமாறு, கருமுகமந்தி, தன் பிள்ளையோடு, உயர்ந்த

மலைப்பக்கத்து இயங்கும் முகில் தனக்கு மறைவிடமாகக் கொண்டு ஒளிக்கின்ற, பெருங்கல் நாடனை, அருளினையாயின், அவன், மேலவர் செல்லும் நெறியிலே சென்று வாழாத, சால்பு இலனாதலை, அறிந்து தேர்ந்து கொள்வாய்', எனச், சிறைப்புறமாகத், தலைமகட்குத், தோழி கூறினாள் *[நற்.233:4]*. மழை பெய்த பெரிய தண்ணிய சாரலின்கண்ணே, அழகிய வண்டின் ஓசையை அசுணமா செவிகொடுத்துக் கேட்கும் உயர்ந்த மலை நாடற்கு, எனது பசலையைக் கண்டு வைத்தும், உரையாத நீ கொடியை, என, அறத்தொடுநிலை வலித்த தோழியைத், தலைவி, முகம் புக்குக் கூறினாள் *[நற்.244:5]*.

'தினையே! அருவியின் ஒலிமிக்க இடத்தில், வாழையின் கொழுத்த கனியை மந்தி கவரும் நல்ல மலைநாடனை விரும்பி, அவன் அன்பினால் உன் கதிர்களைப் பேணியதையும் நீ கண்டிருக்கின்றாயன்றே! என் பழைய அழகுகெட அன்னை முருகனை வழிபட்டு வெறியெடுக்குங்காலை, காப்பாரின்மையின் கிளி கவருமாதலால் நெடுநாள் கழித்துக் கதிரீன்று விளைவாயாக', எனச், சிறைப்புறமாகத், தோழி செறிப்பறிவுறுத்தினாள் *[நற்.251:4]*. வேங்கை மரங்கள் உயர்ந்த சாரற்கண், பெருங்கல் நாடனொடு, தினைப்புனத்தில் கிளிகடிந்து, அருவியாடி, இயைந்த கேண்மை, தினைக்கதிர் முற்றியதனால், மிகச் சிறுகி, அதுதானும் இல்லையாகும்போல யான் காண்பேன், ஆதலால், நாம் என்ன செய்ய மாட்டுவம்', எனத், தோழி, தலைமகளைச் செறிப்பறிவுறீஇ வரைவுகடாவினாள் *[நற்.259:3]*. சுனையில் நீர் நிறையும்படியாக, மழை பெய்துவிட்ட குன்றத்தின் கண்ணே, குறிஞ்சியின் பூ வரித்த வேட்டுவர் இல்லங்களிலே, இழைக்கப்பட்ட தேனடைக்கு வேண்டிய அளவு தேனூறுகின்ற, நாடற்குக், காதல் செய்தும் காதலிக்கப்படும் தன்மையில்லாதிருத்தல் எக்காரணத்தினால் என, வேலன்பாற் கேட்போமாக', எனத், தோழி, தலைமகட்குக் கூறினாள் *[நற்.268:5]*. யானை நீர் முகந்து கொள்கின்ற சுனையின்கண்ணே, நீலமலர் தண்ணியவாய் மணமிகும் குன்ற நாட்னை நினைக்குந்தொறும், அவன் பண்பு தந்த நெஞ்சை, நடுங்கச் செய்யும் துயர் அறியாது, வேலன், அன்னைக்கு, வெறியால் அகலும் என உரைக்கும், எனத் தோழி, தலைமகனது வரவுணர்ந்து, தலைமகட்குரைப் பாளாய்க் கூறினாள் *[நற்.273:10]*. 'தோழி, மிளகுக்கொடி பின்னியிருப்பதன்கண்ணே துஞ்சும் நாடன் மெல்ல வந்து நின் மார்பை அடையப் பெற்றதனால் ஆகிய குறிகளை நோக்கிய அன்னை, மையலுற்று, நின்னைக் கூவுகின்றனள்; எனத், தோழி, தலைமகளுக்குரைப்பாளாய்த், தலைமகன் கேட்பக் கூறினாள் (தோழி, தலைமகளை அறத்தொடு நிலை வலிப்பித்ததூஉமாம்) *[நற்.297:8]*.

கிளிகள் தினைக்கதிரைத் தின்று, கொம்பு வாச்சியம்போல் ஒலி எழுப்பும் பக்கமலைகளையுடைய நல்ல மலைநாடன் புணரின் அழகு உண்டாகும்; பிரியின் அழகினைப் பசலை கெடுக்கும்', எனத் தலைமகள் உரைத்தாள் *[நற்.304:4]*. வாழை இலையிலே காற்றிலுள்ள இனிய நீர் தங்கியிருக்கும் பெரிய மலை நாடன் கேண்மையினை நன்றாகத் தெளிந்திருக் கின்றேனாதலால், ஆற்றியிருப்பேன்; நீ அழாதே', என, வரைவு நீட ஆற்றாளாகிய தோழியைத், தலைவி ஆற்றுவித்தாள் *[நற்.309:6]*. பெண்புலியின் பசியைப் போக்க வேண்டி ஆள் வழங்கும் சிறுவழியை அடுத்து ஆண்புலிபதுங்கியிருக்கும் நாடன் மார்பு பெறாது வருந்திய நோய், வேலன் பலிக்குத் தணிகுவதாயின், அதனிற் கொடியது பிறிதில்லை, எனத், தோழி, சிறைப்புறமாகக், கூறினாள் (தலைமகள் பாங்கிக்குரைத்ததூஉமாம்) *[நற்.322:7]*. கிழங்குகள் கீழிறங்கத், தேனடைகள் மிகுதியாக மேலே வைக்கப்பட்டுத் தினைகளை விதைத்து, அவை பலவாக விளைதலும், கிளிகொய்யாது பாதுகாக்கப்படும் பெருங்கல் நாடன் பிறப்பு உயர்வுடையதன்றி, நம்மோடு ஒத்த தன்மையதன்று என்பதை அறிந்தோம் (ஆதலின் மொழி பிறழான்) எனக் கூறித் தோழி, வரைவிடையாற்றாளாகிய தலைமகளை, வற்புறுத்தினாள் *[நற்.328:3]*. முசுக்கலைச் சுற்றமாகவுடைய மந்தி, மலைப்பக்கத்து அருவியிலே ஆடி, மூங்கிலாகிய ஊசல் ஆடி, வேங்கையின் மலர் சுனையில் உதிர்ந்து விழும்படி, அதன் கிளையில் கடுவனொடு திளைக்கும் வரையக நாடன், மழை பெய்கின்ற நள்ளிரவில் வேலேந்தி வரும் எனில், நம் உயிர் எவ்வாறு நிலைத்திருக்குமோ? எனத், தோழி, இரவுக்குறி, முகம் புக்குக் கூறினாள் *[நற்.334:5]*. மழை பெய்தொழிந்தபொழுது, புலையன் தண்ணுமையின் ஒலி போன்ற ஓசையுடனே, அருவிநீர் கீழறங்கியோடும், பெருவரை நாடன், பேரன்பினன், என்று, அவனுடைய மாண்புகளெல்லாம் கூறும் பரிசிலருடைய சிறந்த மொழிகளை, நான் கேட்டுக் களிக்குமளவு, என் நலன், என்னை உயிரோடு விடுமோ?' எனத், தலைமகள், வற்புறுத்தும் தோழிக்குக், கூறினாள் *[நற்.347:5]*. மலையின் பக்கத்தில், மழையில் நனைந்து, மயில் உலாவிவரும் சோலை சூழ்ந்த கற்பாறையில், சுனையிடத்துள்ள குவளை மலர்களைக் கொய்து ஆக்கிய மாலையையுடைய சாரல் நாடனுடன், அருவியாடிய நாளை நினைந்து, நெஞ்சைப்புண்படுத்திக் கொண்டு, கெட்டொழிய அறியாததாயிரா நின்றது என் கருத்து, எனத், தலைமகள், வரைவு நீடிய விடத்து, ஆற்றுவல் என்பதுபடத், தலைவி கூறினாள் (மனை மருண்டு வேறுபாடாயினாய் என்ற தோழிக்குத், தலைமகள் சொல்லியதூஉமாம்) *[நற்.357:10]*. மந்தி முன்றிலிடத்துள்ள பலவின் பழத்தை உண்டு, அதிலுள்ள வித்தினைக் கீழே உதிர்ப்பக், கொடிச்சி, தன் தந்தையின் மலைவளம்பாடி ஐவனநெல்லைக் குத்துகின்ற நாடனொடு அருவியாடித், தினை கடியவும் கூடுவதோ?' எனத், தோழி செறிப்பறிவுறுத்தினாள் *[நற்.373:4]*. ஆண்பன்றிகள், கானவர், உழுதுவினைத்த தினைக் கதிரைத் தின்று, மலைப்பிளப்பினைத் தங்குமிடமாக உடைய

புலிக்கு அஞ்சாது, மூங்கில் வளர்ந்த மலைச் சாரலில் உறங்கும் மலைநாடன் இன்ன நாளில் வந்து வரைந்து கொள்வேன், என்றலும், நின்னை ஒத்தோர் சூள்புகலார்; நீ சூளுறத்துணிந்தனை, என, நீ கூற, அத்தலைவர் வதுவை அயர்தும் என்று வந்த நாளில் நான் வியந்தனன் தோழி', எனக் கூறி, அத்தகைய மெய்ம்மையுடையார், நின் முன்றிலில் நிற்கின்றார், எனத், தலைமகற்கு, வாயில் வேண்டி நின்றாள் [நற்.386:5]. கோழி, தன் சேவலுடனே கிளைக்கின்ற புழுதியிடை நல்ல பொன் ஒளி வீசும் நாடனொடு, அன்புமிக்க காமமே தலைக்கீடாக யாம் தொடர்ச்சியுடையேம் ஆயினேம்; அன்னை, தினைப்புனம், உன்னால் காவல் செய்யப்படுவதாக, என்றாள் (கொய்யுங்காலம் நெருங்கியமையான் தொடர்பு யாதாய் முடியுமோ?) எனப், பகற்குறி வந்தொழுகும் காலத்துத், தலைமகன் கேட்பத் தோழி கூறினாள் [நற்.389:10]. மூங்கிலுயர்ந்த மலையில், பிடி கன்றையீன்று ஈன்றணிமையினாலுண்டான பசியைத் தீர்க்கக், களிற்றியானை, தினைக்கதிரைக் கொய்து கொண்டு போதலாலே கானவன் எறிந்த எரிகொள்ளி, மலைப்பக்கமெங்கும் விளங்கும்படி மின்னி, மின்னலைப் போல் தோன்றும் நாடன், வரைய வந்தமைக்கு ஏற்ப, நம் சுற்றத்தார் மகட்கொடைக்கு உடன்படுவர் போலும், எனத் தோழி வரைவு மலிந்து கூறினாள் [நற்.393:7]. மழையைப் பெய்தொழிந்து முகில் மலையின்கண்ணே சென்று தங்கத் தேனிறால் தூங்கும் வெற்பிலிருந்து அருவி வீழ வேங்கையின் பூக்களைக் கிளையிலிருந்து அளாவி அதன் மகரந்தத்தை அளைந்த மயில், கற்பாறையின் உச்சியில் தன் கூட்டத்தோடு இளவெயிலைத் துய்க்கின்ற நாடன்! நின் மார்பு அணங்கிய வருத்தத்தை யாரிடம் நொந்துரைப்பேன்?' எனத், தோழி, தலைமகனை வரைவகடாவினாள் [நற்.396:7]. அருவி ஒலிக்கின்ற சாரலில், காந்தளம்பூ வண்டுகள் உண்ணும்படி மலரச் சிலம்பின்கண்ணே, பன்றி பறித்தலானே வெளிப்போந்து விளங்கும் மணிகளின் விளக்கத்தில், களிற்றியானை அயலிலே காத்து நிற்பக், கன்றொடு பிடிதங்கும் மாமலை நாடன், தானே விரும்பினனாகி வருகின்ற பெருமையுடையள் என்பதை, நின் நுதற்கவின் தருமோ? எனத், தலைமகன் சிறைப்புறத்தானாகத், தோழி கூறினாள் [நற்.399:8].

கூட்டமான அருவிகளையுடைய கான்கெழுநாடன், குறும்பொறை நாடன் நல்வயலூரன், தண்கடற்சேர்ப்பன் பிரிந்தானாக, மாலையே நீ பகல் வருகின்றாய்; காலைப்பொழுது வரினும் விலக்குவோர் இல்லை', என, வரைவிடை வைத்துப் பிரிந்துழி, ஆற்றாளாகிய தலைமகள் மாலைக்குக் கூறினாள் [ஐங்.183:12]. அன்னாய்! வாழ்க, நெடுமலை நாடன் ஊர்ந்த மா, குடுமித்தலைய எனத், தலைமகன் வரைதல் வேண்டித் தானே வருகின்றமை கண்ட தோழி, உவந்த உள்ளத்தளாய்த், தலைமகட்குக் காட்டிக் கூறினாள் [ஐங்.202:4]. அன்னாய் வாழ்க; என் தோழி, ஒலிக்கின்ற வெள்ளிய அருவியையுடைய உயர்ந்த மலைநாடன் மார்பிடத்தே துஞ்சுதல் விருப்பமுடையள்', எனத் தோழி, செவிலிக்கு அறத்தொடு நின்றாள் [ஐங்.205:3]. சந்தன மரத்தின் இடைநிலத்து உளதாகிய அகில் சுடுபுகை, சந்தனப் பூ நாற்றத்தோடு கமழும் நாடற்கு, நாம் அகல்வது எவனோ? என, வரைவெதிர்கொள்ளாது தமர் மறுத்தவழித், தோழி, செவிலிக்கு அறத்தொடு நின்றாள் [ஐங்.212:2]. மலைச்சாரலின்கண் உள்ள பலாவின் கொழுவிய கொத்தாகவுள்ள நறும்பழம், கல்லளையில் வீழ, அவ்வெற்பிலுள்ள தேனிறாலினைச் சிதைக்கும் நாடன், நம் கண் கலுழத் தன் நன்னாட்டுக்குச் செல்லும்', எனத், தலைமகன் ஒருவழித் தணப்பல் என்று கூறியவதனை, அவன் சிறைப்புறத்தானாகத், தலைமகட்குத், தோழி கூறினாள் [ஐங்.214:3]. ஆண்புலி, கானத்துப் பிடி ஈன்ற குழவியினைக் கொள்வதற்காகப் பலவின் பழம் தூங்கும் நிழலில் மறைந்திருக்கும் நாடற்கு, நின் மெய்பிறிதாதல் எதனால் என, வரைவு நீட, ஆற்றாளாகிய தலைமகட்குத், தலைமகன் சிறைப்புறத்தானாகத், தோழி கூறினாள் [ஐங்.216:4]. பெருமலையிடத்து, வேங்கையின் நறுமலரை, மான் கூட்டம் மேய்கின்ற கானக நாடன் வரவும், இவள் மேனிபசப்பது எதனால்? என, வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன், மீட்சியுணர்ந்த தோழி, ஆற்றாளாகிய தலைமகட்குக் கூறினாள் [ஐங்.217:13]. களிற்றைக் கொல்வது பிழைத்ததால், கதம் மிக்கு எழும்புலி, முகிலைப்போல் ஒலிக்கும் பெருங்கல்நாடன் வருங்கொல்; இடக்கண்ணும் துடிக்கும்; வளையும் செறியா நிற்கும், எனத் தோழி, தனக்கு நற்குறி தோன்றக் கண்டு, கடிதின் வந்து வரைவான் எனக் கூறினாள் [ஐங்.218:5]. அன்னாய்! வேங்கையின் ஒள்ளிய மலர், பெரிய பாறையிடத்தே கோலஞ் செய்யப் பரக்கும் நல்ல மழைநாடன் பிரிந்தானாக நுதல் பசலை நிறங்கொள்வது எதனால்? என வரைவிடை வைத்துப் பிரிந்த அணுமைக் கண்ணே ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி கூறினாள் [ஐங்.219:3]. 'அன்னாய்! மழை பொழிதலால், அருவி, மூங்கிலசையும் பக்கமலையில் இழிதருகின்ற, நாடன் மார்பு முயங்காது கழிந்த நாள், இவள் கண் கலங்கும்', எனக் கூறி, நொதுமலர் வரைவின்கண், தோழி, செவிலிக்கு அறத்தொடு நின்றாள் [ஐங்.220:2].

இடையறாது வீழ்ந்து விளங்குகின்ற அருவியினையுடைய நெடிய மலைநாடன், இரந்து குறையுறாது பெயரின், நம் இன்னுயிர் நிலை என்னாவதுகொல்? எனத் தலைவன் வரைவு வேண்டி விடத், தமர் மறுத்துழி, அவர் கேட்குமாற்றால், தலைமகட்குச் சொல்லுவாளாய்த், தோழி அறத்தொடு நின்று கூறினாள் [ஐங்.228:2]. நம்மொடு தினைப்புனத்தில் காவல் காப்பவனாகித், தோள் நெகிழவும், நுதல் பசப்பவும் நம் கவின் தொலைத்த குன்ற நாடற்கு, மணன் அயர்வார்', எனத், தலைமகன் வரைவு வேண்டித் தமரை விடுத்துழி மறுப்பர் கொல்லோ, என்று, அச்சமுறுகின்ற தலைவிக்குத், தோழி

கூறினாள் *[ஐங்.230:5]*. அன்னை தந்த வேலன், மணம் கமழும் நாடன் கேண்மையினை, அறிவானோ, எனத், தோழி, செவிலி கேட்பக் கூறினாள் *[ஐங்.241:3]*. கண் பசப்பச், சேய்மலை நாடன் செய்த நோயினை, அறியாமையினால், அன்னை வெறியென மயங்கித் துயருழந்தனள்', எனத், தலைமகள் அறத்தொடுநிலை நயப்ப வேண்டித், தோழி கூறினாள் *[ஐங்.242:5]*. மிளகுக் கொடிகளையுடைய, மலைக் குகையிலுள்ள புலி, கழற்சிக் காயைக் கண்ணாக வைத்துப், பொய்ம்மைவகையாற் பண்ணி வைத்த பெண்பாற்புலியைப் புணர்ந்து, படப்பை நடுவே துயர்தீரும் குன்ற நாடன் தந்த நோய்க்கு, வேலன் வெறி செறித்தனன், என, வரையாது வந்தொழுகும் தலைமகன் சிறைப்புறத்தனாய் நின்றுழி, அவன் கேட்குமாற்றால், வெறி நிகழாநின்றமை, தோழி, தலைமகட்குக் கூறினாள் *[ஐங்.246:6]*. வெறியாட்டாளன், முருகனால் ஏற்பட்டது இந்நோய் எனக் கூறின் அது, அருவரை நாடன் பெயர் கொலோ? என வெறிவிலக்கலுறுந் தோழி, தமர் கேட்பத், தலைமகளை வினவுவாளாய்க் கூறினாள் *[ஐங்.247:4]*. வேலன், அன்னைக்கு, இந்நோய் முருகனால் விளைந்தது என்பான்; அவன் அச்சம் தரும் மலை நாடனை அறியான்', என, வேலன் கூறிய மாற்றத்தை மெய்யெனக் கொண்ட தாய் கேட்பத், தலைமகட்குத், தோழி கூறினாள் *[ஐங்.249:4]*.

குறவன் புல் வேய்ந்த குரம்பையினை, இளமழை மறைக்கும் நாடன், கூதிர் காலத்து வாடைக்கும் முற்பட வந்தனன்; புரையோனாகிய அவன் வாழ்க', எனத், தலைமகன், குறித்த பருவத்திற்கு முன்னே வந்தானாக, உவந்த தோழி, தலைமகட்குக் கூறினாள் *[ஐங்.252:2]*. குறவனது சாந்த நறும்புகை, தேன் நாறுகின்ற மலைக்கண்ணே கமழும் கானக நாடன், வரைந்து கொள்ளின், யாய் மகிழ்வளோ? என, வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன், வரைவொடு புகுதராநின்றான், என்பது, தோழி கூறக்கேட்ட தலைமகள், அவட்குக் கூறினாள் *[ஐங்.253:3]*. கொடிச்சியைப், பெரிய, வரைநாடன் வரையுமானால், நாம்கொடுத்தல் நன்று! எனத், தோழி கூறினாள் *[ஐங்.258:3]*. தினைக்கதிரை மேய்ந்த பன்றி பக்கமலையில் துஞ்சும் நாடன் வாராமை, எந்தை அறிதல் அஞ்சிகொல்? என, அல்லகுறிப்பட்டுத் தலைமகன் நீங்கினமை அறியாதாள் போன்று, தோழி, பிற்றை ஞான்று அவன் சிறைப்புறத்தானாய் நிற்பத், தலைமகட்குக் கூறினாள் *[ஐங்.261:2]*. தினைக்கதிரை மேய்ந்த பன்றி, பக்கமலையில் துணையொடுவதியும், விளங்குகின்ற மலைநாடன் வருவான்; அவன் விருப்பு, மருந்தும் அறியுங்கொல்? என, வரைந்து கொள்ள நினைக்கிலன் என்று வேறுபட்ட தலைமகள், அவன் நின்மேல் விருப்பமுடையன், நீ, நோகின்றதென்ன? என்ற தோழிக்குக், கூறினாள் *[ஐங்.262:3]*. ஏனலைக் கேழல் உண்ணும் குன்று கெழு நாடன் தானும் வந்தனன்; என் நலனும் வந்தது, என, வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன் மீண்டமை யறிந்த தலைமகள், தோழிக்குக் கூறினாள் *[ஐங்.236:3]*. புலியால் கொல்லப்பட்ட பெண் பன்றியின் குட்டியை ஆண்பன்றி புரக்கும் குன்றுகெழு நாடன், புதல்வனோடு என்னையும் பிரிந்தவன், மறந்தனன் எனப், பரத்தையிடத்தானாக ஒழுகுகின்ற தலைமகன் விடுத்த வாயில் மாக்கட்குத், தலைமகள் கூறினாள் *[ஐங்.265:3]*. ஆண்பன்றி, வில்லையுடைய வேடர்களை விலக்கியோட்டி ஐவன நெல்லைக் கவரும் குன்றநாடன் வரைவை தலைவி, மெய்யாகக் கொள்ளும் என்று கருதித் தலைவியைப் பேணித் தோழி, அவன் சிறைப்புறத்தானாகக், கூறினாள் *[ஐங்.267:3]*. தாயை இழந்த குட்டிகளோடு தினையினை யுண்டு, வரையுச்சியில் ஆண்பன்றி உறங்கும் நல்ல மலைநாடன், நம்மைவிட்டுத் துறந்து பிரிதல் என் பயக்குமோ? என, அவன் குறிப்பிருந்தவாற்றால், நம்மைப் பிரிந்து வந்தல்லது வரைய மாட்டான் போன்றிருந்தது, எனத், தலைமகள் கூறக்கேட்ட தோழி, அவட்குத், தலைமகன் சிறைப்புறத்தானாகக், கூறினாள் *[ஐங்.268:4]*. ஆண்பன்றி (முகத்தால்) உழுததாக, பைஞ்சாய்க்கோரை, நெல்விளைந்த வயலைப் போலத் தோன்றும் நாடன், நீ அழ; வாராது, அவன் உறைதலை நீடித்தால், என் மடமையான், நீ எனக்குத் துணையாதலை இழப்பேன்' எனத், தோழி அவன் இடையிட்டு வந்து சிறைப்புறத்து நின்றுழித், தலைமகட்குச் சொல்லுவாளாய்க், கூறினாள் *[ஐங்.269:2]*. அவரையை நிறையத் தின்ற மந்தி, பண்ட வணிகர் பைபோலத் தோன்றும் நாடன், தான் நினைத்தவழிப் பெண்டிர் பலரையும் பெறுகுவன்; பழைய நட்பையுடையனாகலின், இவட்கு நல்கும் எனக்கூறித், தலைமகன் வரைவு வேண்டிவிடத், தமர் மறுத்துழிச், செவிலிக்குத், தோழி அறத்தோடு நின்றாள் *[ஐங்.271:2]*. மந்தியின் குட்டி, மாலையிடத்தே தேனிறாலைக் கிளர்த்தி எழுப்பிப், பக்கத்திலுள்ள மையத்திலே பாயும் நாடன், தோழி! இரவில் வருதலறியான்; யாய் வரும், என்பள் என, அல்ல குறிப்பட்டு நீங்கும் தலைமகன் சிறைப்புறத்தானாக, முன்னை நாள் நிகழ்ந்ததனைத் தோழிக்குச் சொல்லுவாள் போன்று, தலைமகள் கூறினாள் *[ஐங்.272:3]*. மந்திக்கணவனாகிய கடுவன், புலி முழக்கிற்கு அஞ்சி வரையகத்துப் பாயும் நாடன், என் கவினையும், துயிலையும் கொண்டு சென்றனன், என, வரைவிடை வைத்துப் பிரிந்துழி, ஆற்றுவிக்கும் தோழிக்குத், தலைமகள் கூறினாள் *[ஐங்.274:3]*.

மந்தியின் காதலனாகிய, தளிரை மேயும் கடுவன் நறைக்கொடியைக் கொண்டு, மழையைப் புடைக்கும் நாட, கல் முகையிடத்தே வேங்கை மலரும் நல்ல மலைநாடன் எனக் கொண்டு, நீ நயவாயாயினும் வரைந்து செல்க' என, வரையாது வந்தொழுகும் தலைமகனைத் தோழி நெருங்கிக் கூறினாள் *[ஐங்.276:6]*. 'சிலம்பிடத்துள்ள மூங்கிற்கிளையில், குரங்கின் குட்டி பாய்ந்ததாக அம்மூங்கிற்கோல் மீனெறி தூண்டில் போல் ஒங்கும் நாடன், நோய் தந்து நலங்கொண்டான்', என வரையாது வந்தொழுகும் தலைமகன் சிறைப்புறத்தானாகத், தலைமகள், தோழிக்குக் கூறினாள் *[ஐங்.278:3]*.

தினையரிகாற்கண் விளைந்த அவரையில் படியும் கிளியைக் கடியும் யாணர்த்து ஆகிய நல்ல மலை நாடன், என் மாமைக் கவினைக் கவரும்; என்னைக் குற்றமின்றி விரும்பினன் போலும், என, உடன்போக்குத் துணிந்த தலைமகன், அஃதொழிந்து, தானே வரைவிடை வைத்துப் பிரிய நினைந்ததனைக் குறிப்பினாலுணர்ந்த தலைமகள், தோழிக்குக் கூறினாள் (தலைமகன் வரைவிடை வைத்துப் பிரிவல் என்ற வழித், தலைமகள், தோழிக்குச் சொல்லியதூஉமாம்) *[ஐங்.286:3]*. புனவர் கொள்ளிக்கு அஞ்சித் தன் புகலிலே செல்லும் மயில் புனம் கொய்த பின்பு அரிதாளிலேயிருந்த குருவி எழுவது விழுவதாய் வருந்துறச், சிறகை விரித்து ஆடிச் செல்லும் குன்றுகெழு நாடனோடு சென்ற என்நெஞ்சு, வருவது கொல்லோ? வாராதமைவது கொல்லோ? என்பது, தலைமகன் வரைவிடை வைத்துப் பிரிந்து நீட்டித்துழி, உடன் சென்ற நெஞ்சினைத், தலைமகள் நினைந்து கூறியது *[ஐங்.295:6]*. குன்ற நாடனது (முருகனது) குன்றத்துப் பக்கமலையில் சுனையிடத்துப் பூத்த குவளையும், கொடிச்சியின் கண்போல் மலர்தலரிது; இவள் போல் சாயல், மஞ்ஞைக்குமரிது, என்பது, இயற்கைப்புணர்ச்சி புணர்ந்து நீங்கிய நிலைமைக்கண், தலைமகள் ஆயவெள்ளத்தோடு நிற்கக் கண்ட தலைமகன், மகிழ்ந்த உள்ளத்தனாய்த் தன்னுள்ளே சொல்லியது *[ஐங்.299:1]*.

'தோழி! வனப்பிழந்த தோளையும், கவின் தொலைந்த நுதலையும் நோக்கி வருந்தாதே; வருந்தின், நல்ல வரை நாடனொடு வந்தமை, எல்லையில்லாத இடும்பையைத் தரும்', என்பது, உடன்போய் மீண்டு வந்த தலைமகள், வழிவரல் வருத்தங்கண்டு ஆற்றாளாகிய தோழிக்குச், சொல்லியது *[ஐங்.392:5]*.

மிக்க பெயலால் பூக்கள் பல அழகு செய்த இடங்களையுடைய புறவு அணி செய்யும் நாடனது புதல்வன்தாய், மனைக்கு விளக்காயினள், என்பது, கடிமனை சென்று வந்து, செவிலி, உவந்த உள்ளத்தளாய், நற்றாய்க்குச் சொல்லியது *[ஐங்.405:4]*. மாலைக்காலத்துத், தடியைக் காவலர் வீசப், புறவிடத்தே ஒடுங்கிய முயல் கெட்டோடும், புன்புல நாடன் செலவை, இளைய மகளின் தோள் தடுத்தன, என்பது, உணர்ந்தோர் சொல்லியது *[ஐங்.421:3]*. புறவணிந்த நாடனுடைய மடமகளின் நுதல் பசப்ப, நீ பிரிந்து சென்றால், நின் புதல்வன் முலைக்கு (பாலுக்கு) அழும் (தலைவி இறந்து படுவாள் என்பது குறிப்பு) என்பது, கார்ப்பருவத்தே பிரியக் கருதிய தலைமகற்குத், தோழி தலைமகளது ஆற்றாமை கூறிச் செலவழுங்குவித்தது *[ஐங்.424:1]*.

நெடிய மலையின் மேலுள்ள கொன்றை, பொன்னாலாகிய தகடு என்னும்படி, ஒளியுடைய இதழைத்தரும், கான்கெழுநாடன் மகளே! நீ அழுதலைத் தவிர்க; யான் செலவினைத் தவிர்வேன், என்பது, பிரியுங்கொல் என்று ஆற்றாளாகிய தலைமகட்குத், தலைமகன் பருவ வரவு கூறிப் பிரியேன் என்று சொல்லியது *[ஐங்.430:3]*. தினையுணங்கலைச் செம்பூழ்ப்பறவை கவரும் வன்புல நாடனைத் தருவதற்காக, வானம் பெயல் தொடங்கின்று; காண்குவம் வா', என்பது, பிரிவு நீ-, ஆற்றாளாகிய தலைமகட்குத், தோழி, அவரை நமக்குத் தருதற்கு வந்தது காண் இப்பருவம் எனக் காட்டி, வற்புறிஇயது *[ஐங்.469:2]*. தேரைச் செலுத்தி வரையக நாடன் வந்தமையின், தோள்கவின் எய்தின; கண் வனப்புற்றன, என்பது, குறித்த பருவத்தின்கண் தலைமகன் வந்துழித், தோழி தலைமகட்குச் சொல்லியது *[ஐங்.498:5]*.

தோழி, நின் வருத்தங்களை யான் கூறக்கேட்டு நன்மலை நாடனாகிய காதலன் வரைந்து கொள்ள வருகின்றான்', எனத், தோழி, தலைவிக்கு வரைவு மலிந்து கூறினாள் *[கலி.38:24]*. தலைவன், தினைப்புனத்திலிட்ட பரணிடத்து எரிந்த அகிலின் புகையால் உண்ணப்பட்டு, ஒளி மழுங்கித் திரியும் மதியம், வானிடத்தே சென்று, அம்மலைத் தலையில் தங்கிற்றாயின், அதனைத் தேனினது இறால் என்று கருதி, அழித்தற்குக் கண்ணேணி முதலியன சமைத்திருக்கும், காடு அகன்ற நாடன் மகன் *[கலி.39:10]*. விசும்பைத் தீண்டுகின்ற கல்நாடனும், நீயும் வதுவையிடத்தே பண்டு கண்டறியாதீர்போல நடப்பீரோ? என்பது, அறத்தொடு நின்று, தெய்வத்திற்குக் குரவையாடத், தலைவன் வரைய வருகின்றமையறிந்து தோழி, தலைவிக்குரைத்தது *[கலி.39:37]*. குன்றகல் நன்னாடன் பொய்த்தற்குரியனல்லன்; அவன் வாய்மையிடத்தே பொய் தோன்றின், திங்களில் தீத்தோன்றின தன்மைத்து; மலைநாடன் வாராது அமைகுவானல்லன்; அவன் அன்பிடத்தே இத்தகைய கொடியவை தோன்றின், நிழலையுடைய குளத்துள், நீரினிற் குவளை வெந்த தன்மைத்து', என, வள்ளைப்பாட்டிடமாகத், தலைவன் சிறப்பினைத், தோழி கூறினாள் *[கலி.41:23,29]*. புலியினது முரணைத் தொலைத்த யானை தனக்கு முன் நின்ற குளகைத் தின்று, அருவி ஒலுறுத்தலால் துயில் கொள்ளும் பெரிய சோலையினையுடைய மலைநாடன், நாம் வருந்த நம்மை மறந்தான், எனத், தலைவனை இயற்பழித்துத், தோழி, வள்ளைப்பாட்டுப்பாடத் தலைவியை அழைத்தாள் *[கலி.42:4]*. 'முருகனைப் புகழ்வேம்போல, அழகுபெற்ற முகில்பரக்கும் தலைமையினையுடைய மலைநாடனைத், தையலாய்! நாம் பாடுவோம்', எனக் கூறித் தலைவனைப் பாடியபின் தோழி, 'பாறையிலிருந்த கருங்குரங்கை வெருண்டு பார்த்து, பக்கமலையிலே ஏறி இறங்கியாடும் வருடை மானின் குழவிகளையுடைய, வளப்பத்தையுடைய மலை நாடனை, நீ ஒன்று பாடுவாய்', என்று, தலைவியை வேண்டியதற்கு, அவள் பாடியபின், 'பிடியோடு கூடிய, தழையைத் தின்ற, இணைந்த கொம்புகள் அழகு கொண்ட, மலை நடந்தாற்போன்ற செலவினால் விளங்குகின்ற, யானைகளையுடைய மலைநாடனை, மணம் நாறுகின்ற கதுப்பினையுடையாய், இயற்பட மொழிந்ததனை மறுத்து, இயற்பழித்து ஒன்று பாடுவாயாக', என்றாள் *[கலி.43:6,14,22]*.

நாடு - நிலப்பகுதி. நினது கடற்கண் தோன்றிய ஞாயிறு, நினது மேல்கடற்கண்ணே மூழ்கும், புதுவருவாய் மிக்க ஊர்களையுடைய நல்ல நாட்டிற்கு - நிலப்பகுதிக்கு- வேந்தே! எனச், சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதனை, முரஞ்சியூர் முடிநாகராயர் பாடுவர் *[புற.2:11]*. நின்னைச் சிறப்பித்தவர் நாடு - (நாட்டில் வாழ்வோர்) தாயில்லாத, உண்ணாத குழவிபோல, ஒழியாது கூப்பிடும்', எனச், சோழன் உருவப்பஃறேரிளஞ் சேட்சென்னியைப், பரணர் பாடுவர் *[புற.4:19]*. நினது கண்ணி, நினது பகைவரது நாடு சுடு கமழ்புகை உறைத்தலான் வாடுக' எனப், பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதியைக், காரிகிழார் வாழ்த்தினார் *[புற.6:22]*. 'வளவ! நீ, பகைவர் ஊரைச்சுடும் கொள்ளையை விரும்புதலுடையை; அதனால், குளிர்ந்த நீர் பரந்த, ஓசையையுடைய உடைப்புக்களை, மண் மறுத்தலான், மீனாலடைக்கும் புதுவருவாயினையுடைய, பயன் விளங்கும் ஊர்களையுடைய, மாற்றாரது அகன்ற இடத்தையுடைய நாடுகள் நல்ல பொருள்கள் இல்லையாகுவ' எனக் கரிகாலனை நோக்கிக் கருங்குழலாதனார் பாடினார் *[புற.7:13]*. வயலிடத்து, மயிலுதிர்த்த பீலியை, ஆண்டுள்ள உழவர், நெற் சூட்டுடனே திரட்டும், கொழுவிய மீனையும், விளைந்த கள்ளையுமுடைய, மிக்க நீராகிய வேலியையுடைய நாடு கிழவோன்; சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி, *[புற.13:13]*. வள்ளையையும், ஆம்பலையும், பகன்றையையும், பாகலையும் உடைத்தாகிய, கரும்பல்லது பிறிது காடறியாத, பெரிய மருதம் பாழாகக், காவலையுடைய நல்ல நாட்டினை எரியூட்டினை எனச், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியைப், பாண்டரங்கண்ணனார் பாடுவர் *[புற.16:17]*. தென்திசைக்கண் குமரியும் (கன்னியும்) வடதிசைக் கண் இமயமும், கீழும் மேலும் கடல்களும், எல்லையாக, நடுவுபட்ட நிலத்தில் குன்றும், மலையும், காடும், நாடும் என இவற்றையுடையோர் ஒன்றுபட்டு வழிபாடுகூற, நிலம் முழுதையும் ஆண்டோரது மரபைக் காத்தவனே! எனச், சேரமான் யானைக்கண் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையைக், குறுங்கோழியூர் கிழார் பாடுவார் *[புற.20:13]*. எங்கோ மாந்தஞ்சேரல் இரும்பொறை பாதுகாத்த நாடு, தேவருலகத்தை ஒக்கும், என்று, பிறர் சொல்லக் கேட்டு வந்து, கட்கினிதாகக் கண்டேன்', எனச், சேரமான் யானைக்கேட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையைக், குறுங்கோழியூர் கிழார் பாடுவர் *[புற.22:34]*.

நெல்விளைந்த வயலில், புள்ளை ஓட்டுவார், கழிக்கண் மீனைச் சுட்டு, அதனுடனே, வெய்ய மதுவையுண்டு தொலைத்தும் அமையாராய்த், தெங்கினது, இளநீரை, உதிர்க்கும் செல்வமிக்க நல்ல நாட்டைப் பெற்றுச், சோழன் நலங்கிள்ளியின் படைவீரர் மகிழ்ந்தனர் *[புற.29:16]*. சோழன் நலங்கிள்ளி, கூம்புடனே மேற்பூரிக்கப்பட்ட பாயை மாற்றாமல், அதன் மேற்பாரத்தையும் பறியாமல், ஆற்றுமுகத்துப் புகுந்த பெரிய மரக்கலத்தைப், பரதவரும், அளவருமுதலாகிய தகுதியில்லாதோர், தம் புலத்திற் கிடையாகிய பெருவழிக்கண்ணே சொரியும், கடலால் வரும் பல பண்டத்தையுடைய, நாடு கிழவோன் *[புற.30:15]*. 'போர், என்று கேட்பின், விரும்பும், நின் கழலணிந்த மறவர், காடு இடையே கிடந்த நாடு சேயவாதலால், போவோமல்லேம் என்று கருதார்', எனச், சோழன் நலங்கிள்ளியைக், கோவூர்கிழார் பாடுவர் *[புற.31:10]*. பழைய நிலவுரிமையைக் குறிப்பின், நல்ல அறிவையுடைய குயக்குலத்திளையோர் கலம் வனைதற்குத் திகிரிக் கண்ணே வைத்த பச்சை மண்ணாகிய கனத்த திரள்போல், சோழன் நலங்கிள்ளி கருத்திற்கொண்ட முடிபையுடைத்து, இக்குளிர்ந்த மருத நிலத்தையுடைய நாடு, என, நலங்கிள்ளியைக், கோவூர்கிழார் பாடுவர் *[புற.32:10]*. வேட்டுவன், மான்திசை சொரிந்த வட்டியும், ஆய்மகள் தயிர்கொண்டு வந்த மிடாவும் நிறைய, ஏரால் உழுதுண்டு வாழ்வாரது பெரிய மனையின்கண், மகளிர், வெண்ணெல்லை முகந்துகொடுப்ப, உவந்து மீளும், தென்றிசைக்கண், பொதியின் மலையையுடைய பாண்டியனது நல்ல நாட்டுள்ளும், அரணின் கதவத்தை அழித்து, நின்புலிப்பொறியைப் பொறிக்கும் ஆற்றலை, எனச், சோழன் நலங்கிள்ளியைக், கோவூர்கிழார் பாடுவர் *[புற.33:7]*. ஞாயிறு, நான்கு திக்கினும் தோன்றினும், வெள்ளி மீன், தென் திசைக்கண் செல்லினும், காவிரி, பலகாலாய் ஓடி, ஊட்டத்தொகுதி கொண்ட, வேலினது காட்சியை ஒப்ப அசைந்த கண்ணினையுடைய கரும்பினது வெண்பூ அசையும், நாடு எனப்படுவது, நினதே. அத்தகைய நாடு கெழுசெல்வத்துப் பீடுகெழு வேந்தே! 'எனச், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை, வெள்ளைக்குடி நாகனார் பாடினார் *[புற.35:11,12]*. விண்ணுலக வாழ்வு, செயலறவு உடைத்தெனக் கருதி, அவ்விடத்து நுகரும் நுகர்ச்சி இவ்விடத்தும் கூடுதலான், ஒன்னார் தேயத்திருந்தும், நின் நாடு உள்ளுவர், பரிசிலர்; அது நின்னையுடைத்தாதலால்', எனச், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை, ஆவூர் மூலங்கிழார் பாடுவர் *[புற.38:17]*. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், ஒருபிடி கிடக்கும் சிறிய இடம் ஏழு களிற்றியானையைப் பாதுகாக்கும், நாடு கிழவோன் *[புற.40:11]*. 'வளவ! நின்னைச் சினப்பித்தவருடைய நாடு, நின்மேற் செலவின் திறன் நோக்கித் தம்பிள்ளைகளுடைய பூப்போலும் கண்ணை முத்தம் கொண்டு, தன் மனைவியர்க்குத், தம் வருத்தம் தோன்றாமல் மறைக்கும் ஆடவரோடு, மிக்க கலக்கமுற்றது எனச், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைக், கோவூர் கிழார் பாடினார் *[புற.41:18]*. நெல்லறுப்பார் பிடித்த வாளையும், உழுவார் படைவாளால் மறிக்கப்பட்ட ஆமையும், கரும்பறுப்பார் கரும்பினின்றும் வாங்கப்பட்ட தேனும், மகளிர் பறித்த செங்கழுநீரும் என இவற்றை, வன்புலத்தினின்றும் வந்த சுற்றத்தார்க்கு விருந்தாக விரும்பிக் கொடுக்கும், மென்புலத் தூர்களையுடைய நன்னாட்டுப் பொருநன் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் *[புற.42:18]*.

வடநாட்டு வேந்தர் வாட, அவரைக் கொல்லுதலைக் கருதிப் போர் செய்யும் வழுதி! நீ கருதியது இப்போராயின், காடாகி விளியும் நாடு உடையார் தாம், யாரோ, அளிக்கத் தக்கார்; எனப், பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதியை, மருதனிளநாகனார் பாடினார் *[புற.52:17]*. சேரமான் குட்டுவன் கோதையது வலியோடு மாறுபட்டெழுந்திருந்த வேந்தர்க்கு, அவனுடைய நாடு, இடையர், ஆட்டினத்தோடு அணுகல் செல்லாத, புலிதங்கும் அகன்ற நிலத்தை ஒக்கும், எனக், கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் பாடுவர் *[புற.54:14]*. மாற! நீ பிறர் நாடு கொள்ளுங்காலை, அவர் நாட்டின்கண், வளைந்த கதிரையுடைய வயலை, நின்னுடைய வீரரும் கொள்ளை கொள்க; ஆயின், காவல் மரத்தை வெட்டுதலைக் கைவிடுக, எனப், பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறனை, மதுரை மருதனிளநாகனார் பாடினார் *[புற.57:5]*. புலிவடிவாகச் செய்யப்பட்ட இலாஞ்சனையைக், கயலுடனே பொறித்த சிமையங்களை உடையவாகுக, பிறருடைய குன்றுகெழு நாடு (கள்) எனச், சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனும், பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கிருந்தாரைக், காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் பாடினார் *[புற.58:32]*. கடற்கரையிடத்து விளைந்த உப்பை முகந்துகொண்டு, சகடம் மலைநாட்டை நோக்கிச் செல்லும் *[புற.60:7]*. கடைசியர், நெய்தலை, ஆம்பலுடனே களையும், மலங்கு பிறழ்கின்ற செய்யின்கண்ணே, பொய்கையிடத்து வளையினது தடியைப் புதிய **நெல்லினது** சோற்றிற்கு மேலீடாகக் கொண்டு, விலாப்புடை விம்மவுண்டு, கழனியிடத்தே, சூட்டை இடுமிடம் அறியாது தடுமாறும், உழவர் சிறுவர், தெங்குதரும் பழத்தை வெறுப்பின், நெடிய போரின் கண்ணே ஏறிப் பனையினது **பழத்தைத் தொடுதற்கு** முயலும், நாள்தோறும் **புதுவருவாயையுடைய, நல்ல** நாட்டிற்குத் தலைவன், சென்னி எனச், **சோழன் இலவந்திகைப்**பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி **சேட்சென்னியைக், கோனாட்டு** எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் **குறிப்பர் *[புற.61:12]*. நால்வகைப்** படையோடு, வேந்தரும், பொருது **களத்தொழிந்தனர்**; இனி, என்ன வருத்தம் உறுவதோ **தான்? கழனிக்கண்** ஆம்பல் தண்டாற்செய்த வளையணிந்த மகளிர், **செவ்வி** அவலை வாய்நிறையக் கொண்டு, குளிர்ந்த புனற்**கண்ணே** பாயும், புதுவருவாயறாத ஊர்களையுடைய அவரது **அகன்ற** இடத்தையுடைய நாடு, எனச், சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும், சோழன் வேற்பல் தடக்கை பெருவிறற் கிள்ளியும் பொருது வீழ்ந்தாரைப், போர்க்களத்தில், பரணர் பாடினார் *[புற.63:15]*. அடுபோரண்ணல் (கோப்பெருஞ்சோழன்)- நாடு தலையளிக்கும் விளங்கிய முகம்போல, மதியத்தின் அரும்பு நிலாவிளங்கியது *[புற.67:3]*. அன்னச் சேவல்! வடமலைப்பெயரும் போது, இடையேயுள்ள சோழ நன்னாட்டிலே சென்று பொருந்தின், உறையூரில், கோயிற்கண் புக்கு, ஆந்தையுடைய 'அடிக்கீழ்', என்று சொல்லின், நினக்கு நல்ல **அணிகலத்தை அளிப்பன்**', எனக் கோப்பெருஞ்சோழனைப், பிசிராந்தையார் பாடுவர் *[புற.67:8]*. சோழன் நலங்கிள்ளி, நீர்மிக்க காவிரியினது, மரத்தைச் சாய்க்கும் மிக்க **வெள்ளம்**, **உலகத்து** உயிர்ப்பன்மையைப் பாதுகாக்கும், **நல்ல சோழநாட்டுக்கு** வேந்தனாவான் *[புற.68:10]*. தை **மாதத்தின்கண் குளிர்ந்த** பொய்கையைப் போலக், கொளக்கொளக் குறைவுபடாத சோற்றையுடைய, அகன்ற நகரிடத்து, அடுநெருப்பல்லது அடுநெருப்பறியாத நல்ல நாட்டுக்கு வேந்தன், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் *[புற.70:9]*. இவன் நாடு மீக்கூறுநர் சிரிக்கத் தக்கார், எனக்கூறிய, சினமிக்க வேந்தரை, அழிக்கப் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் வஞ்சினம் கூறினான் *[புற.72:1]*.

பசும்பூட்செழியன் (தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்) நாடு பொருந்திய செல்வத்தை உடையன். எழுவர்வலம் அடங்க ஒருதானாகி அடுதலை முன்கேட்டறியேம் என அரசவாகையாகக் கூறியது *[புற.76:9]*. என்னுடை தலைவனுக்கு ஊர் இஃதல்லாமையானும், நாடு இஃது அல்லாமையானும், அவனுக்கு இயல்பாய வென்றியைச், சிலர் வெற்றி என்றனர்; சிலர் வெற்றி அன்று என்றனர்; என் வளையும், கலையும் தோற்கும் ஆண்மையுடைமையின், அவனது வெற்றியாதலை யான் கண்டேன், எனச், சோழன் போர்வைக் கோப்பெரு நற்கிள்ளியைப், பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார் பாடினார் *[புற.85:2]*. 'விறலி! என்னொடு பொருவாருமுளரோ, நின் பெரிய இடத்தினையுடைய நாட்டின்கண், என, வினவலமையாத, செருச்செய்யும் தானையையுடைய வேந்தே', அரவின்அன்ன வயவரும் உளர்; முழவினது காற்றெறிந்த ஒலியைக் கேட்பினும், போர்ப்பறை என்று மகிழும் தலைவனும், உளன், என, அதியமான் நெடுமானஞ்சியை, ஔவையார் பாடுவர் *[புற.89:3]*. உன் வேல்கள், குறும்பர் சேர்ந்த அரண்களை வென்று, அப்பகைவருடைய நறிய மதுவையுடைய நாடு அழித்தலால், ஆணி கலங்கி, நிலை கெட்டன, என, அதியமான் நெடுமானஞ்சியை, ஔவையார் பாடுவர் *[புற.97:5]*. வரம்பைச் சேர்ந்து வளையும், நெற்கதிர் சுழலும் கழனியொடு, மிக்க நீர்ப்பக்கத்தையுடைய, பகைவரது அகன்ற இடத்தையுடைய நாடு நீதான் உயிரைக் கொள்ளும் கூற்றத்தை ஒப்பையாதலால் இரங்கக் கெடுவது கொல்லோ?' என, அதியமான் நெடுமான் அஞ்சியின் மறத்தை ஔவையார் சிறப்பிப்பர் *[புற.98:20]*.

சீறியாழ் பண்ணி, நும் விறலியர் பின்வர, ஆடிப்பாடிச் செல்லின், அவன் நாடும் குன்றும் ஒருங்கே தருவன், என வேள்பாரியைக், கபிலர் பாடுவர் *[புற.109:18]*. மூவேந்தரும் ஒருங்கு கூடிப் போரிடினும் பறம்பு கொளற்கரிது; பறம்பு நன்னாடு முந்நூறு ஊர்த்து. அம்முந்நூறு ஊரும் பரிசில் பெற்றனர்; என,

மூவேந்தரும் பறம்பு முற்றியிருந்தாரைக், கபிலர் பாடினார் *[புற.110:3]*. இளைய வெருகினது கூரிய பல்லையொப்பப், பசிய இலையையுடைய முல்லை முகைக்கும், வளையினையணிந்த மகளிருடைய தந்தை நாடு, கோல் செவ்விதாகலின் சான்றோர் பலராக மழை பிழைப்பறியாத புல்லிய நிலத்தின்கண்ணது', எனப் பாரி நிலத்தைக் கபிலர் பாடினார் *[புற.117:10]*. தேர்வண்மையைச் செய்யும் பாரியது குளிர்ந்த பறம்பு நாடு, தன்னகத்தே கொண்டுள்ள தெளிந்த நீரையுடைய சிறிய குளம் பாதுகாப்பார் இன்மையின் உடைவது போலும், எனப், பறம்பு நாடு குறித்துக் கபிலர் இரங்கிப் பாடினார் *[புற.118:5]*. நிழலில்லாத நெடிய வழிக்கண் நின்ற தனிமரத்தையொப்ப, முரசையுடைய அரசரின் மிகுத்தும் இரவலர்க்கு வழங்கும் வண்மையையுடையவனது நாடு, செம்புற்றின் கண் ஈயலை மோரோடு கூட்டி அடப்பட்ட புளிக்கறியையுடைத்து; திணையாகிய புதுவருவாயை உடையது', எனப் பாரியின் பறம்புநாட்டைக் கபிலர் பாடுவர் *[புற.119:7]*. போரை விரும்பிய, சேயையொக்கும், பெரிய வென்றியையுடையவனது நாடு, வருந்த வேண்டாத புதிய வருவாயையுடைத்து முன்பு; இனி, அது கெடும்போலும், 'எனப் பாரியைக், கபிலர் பாடினார் *[புற.120:21]*. காரியின் நாடு, கடலாற்கொள்ளப்படாது; பகைவரால் மேற்கொள்ளப் படாது, எனக் கபிலர் பாடினார் *[புற.122:2]*.

யானையுடனே அரசு போர்க்களத்தின்கண்படப், பூசலைச் சிதற வெட்டிப் பகைவரைத் தடுக்கும், பெண்ணையாற்றுப் பக்கத்தையுடைய நாடு கிழவோய்! யாம் எம் வறுமை செலுத்த, நின்புகழ் கொடுவர, வந்து, நினது வண்மையிலே சில தொடுத்தனம்', என, மலையமான் திருமுடிக் காரியை, மாறோக்கத்து நப்பசலையார் பாடினார் *[புற.126:23]*. 'ஆஅய்! நின்னாட்டு இளம்பிடி, ஒரு சூலில், பத்துக்கன்றுகளைப் பெறுமோதான்?' என, அவன துயானைக் கொடைகண்டு ஏணிச்சேரி முடமோசியார் வியந்து பாடுவர் *[புற.130:1]*. பகைவரது மிக்க மாறுபாட்டை வென்ற, வலியையுடைய யாவரும் ஒப்பப் புகழும், நாடு கிழவோயே! பரிசிலர், தம்முடைய பொருள் என, வளைத்துக் கொள்வராயின், அதனை, எம்முடையதென்று, அவர்பால் நின்றும் மீண்டு கைக்கொள்ளுதலைத் தெளியாத, பயன்பொருந்திய உரிமையோடு கூடி, மற்றும் அத்தன்மையவாக, நின்னுடைய வாழ்நாட்கள்', என, ஆயை, உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடுவர் *[புற.135:22]*. பேக! நின் வலிய நிலமாகிய நல்ல மலைநாட்டைப் பாட, என்னைக் காதலித்துப் பரிசில் தருகுவையாயின், நின் அரிவையின் கூந்தற்கண்ணே மாலையைச் சூடத், தேரை நின் குதிரைகள் பூண்பனவாக', எனப், பேகனைக், கண்ணகி காரணமாக, அரிசில்கிழார் பாடினார் *[புற.146:4]*. பசி போக்கிப், பிறிதொன்றில்லை, காட்டு நாட்டேம், எனக் கூறிப் பரிசில் நல்கிய வல்வில் வேட்டுவனை நோக்கி எந்நாடோ? என வினவத், தன் நாடும் சொல்லான்; யாரீரோ? என வினவப், பேரும் சொல்லான்; தோட்டி மலையைக் காக்கும் பக்க மலையினையும், இனிய நீரையுமுடைய நளி மலை நாடன், ஆகிய அவன் பெயர் நள்ளி எனப் பிறர் கூறக் கேட்டேன், எனக் கண்டீரக் கோப்பெருநள்ளியை, வன்பரணர் பாடினார் *[புற.150:19,22(2)]*.

பெருமை பெற்ற பரிசிலன் வாடினனாகப் பெயர்தல், எனது நாடு இழந்ததைவிடவும் மிக இன்னாது, என நினைந்து, தனது தலையை எனக்குத் தருவதற்காக, வாளைத் தந்தான்' எனத், தம்பியால் நாடு கொள்ளப்பட்டுக் காடு பற்றியிருந்த குமணனைக் கண்டு, அவன் தன்வாள் கொடுப்பக் கொண்டுவந்து, இளங்குமணற்குக் காட்டிப், பெருந்தலைச் சாத்தனார் பாடினார் *[புற.165:11, அடிக்குறிப்பு]*. காதலிமார், தத்தமக்குப் பொருந்திய ஏவல் தொழிலைக் கேட்டுச் செய்யக் காடென்றும், நாடென்றும் சொல்லப்பட்ட அவ்விடத்தின்கண், காட்டுள் எழுவகைப்பட்ட ஆனினானும், ஊருள் எழுவகைப்பட்ட ஆனினானும் நெய் வழங்கிய வேள்விகள் செய்து, புகழ் பரப்பியவன்', எனச், சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணத்தாயனை, ஆவூர் மூலங்கிழார் பாடினார் *[புற.166:19]*. பகைவேந்தரோடு பொருது உடைந்து போதலால், தம் வேந்தனை இழந்துழலும் இன்னாமையையுடைய பொழுதின் கண், முரசு முழங்கும் முற்றத்தோடு கூடிய கோயிலுடனே, கரையைப் பொருது முழங்கும் காவிரியையுடைய வளவிய நல்ல நாட்டு அல்லல் தீரச் சோழனது வெண்குடையைத் தோற்றுவித்து, அக்குடையைப் புதுமையுண்டாக நிலைபெறுவித்தான் மலையமான் *[புற.174:9]*.

அறிவுடைய அரசன் இறை கொள்ளும் நெறியை அறிந்து கொள்ளின், அவன் நாடு, கோடிப் பொருளினை ஈட்டிக் கொடுத்துத் தானும் மிகவுந்தழைக்கும், எனப், பாண்டியன் அறிவுடை நம்பியுழைச் சென்ற பிசிராந்தையார் அறிவுரை கூறினார் *[புற.184:6]*. நிலனே, நீ ஒன்றில் நாடேயாக; காடேயாக; ஒன்றில் பள்ளமேயாக, மேடேயாக; எவ்விடத்து நல்லவர் ஆண் மக்கள், அவ்விடத்து நீயும் நல்லை', என, ஔவையார் பாடுவர் *[புற.187:1]*. பெருந்தகாய்! யானும், உறவில்லாத நாட்டின்கண், துளியை நச்சுதலையுடைய வானம்பாடி போல, நின் வண்மை நசையான் இரங்கி, நின் அடிநிழற்கண் பழகிய அடியில் வாழ்வேன்; மாறனே! நீ செய்த செயலை மறவாதொழிவாயாக', நீ நீடுவாழ்க' (என்பது குறிப்புமொழி) எனப், பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை, வடமவண்ணக்கன் பேரிசாத்தனார் பாடினார் *[புற.198:24]*. பகைவேந்தரையடக்கும், மடங்காத மிக்க விளையுளையுடைய நாடு கிழவோயே! நினக்கு யான் இவரைக் (பாரி மகளிரைக்) கொடுப்பக் கொள்வாயாக', எனப், பாரி மகளிரை, விச்சிக்கோனுழைக் கொண்டு சென்ற கபிலர் பாடினார் *[புற.200:17]*.

புலிகடிமாஅல்! பெருங்கடல் சூழ்ந்த இவ்வுலகத்தின்கண், வலியையுடைய பொன்னுண்டாகும் பெரிய மலைக்குத் தலைவ! வெற்றி வேலையுடைய, பகைவரஞ்சும் படையையுடைய, கேடில்லாத நாடுகிழவோயே! யான்தர இவரைக் கொண்மதி' எனப், பாரிமகளிரை, இருங்கோவேளிடம் கொண்டுசென்ற கபிலர் பாடினார் *[புற.201:20]*. வேங்கையினது பூப்பரந்த பொற்றைக்கல், புலியின் புறத்தை ஒக்கும், பெரிய மலையிடத்து ஊர்களையுடைய நாடுகிழவோயே! எனது தெளியாத புன்சொல்லைப் பொறுப்பாயாக' நின்வேல் வெல்வதாக (குறிப்புமொழி) என, இருங்கோவேள், பாரிமகளிரைக் கொள்ளானாக, கபிலர் பாடினார் *[புற.202:21]*. பொய்கைக்கண் மேய்ந்த நாரை, போரின்கண்ணேயுறங்கும் வயற்கண், நெல்லையறுக்கும் உழவர், மதுவையுண்டு, கடல்திரையின் தாளத்திற்கேற்ப ஆடும், மென்புலத் தூர்களையுடைய நன்னாட்டுக்கு வேந்தே! நீ ஈயாயாயினும், இரங்குவேனல்லேன்; நோயிலையாகுமதி, என, மூவன், பரிசில் நீட்டித்தானைப், பெருந்தலைச் சாத்தனார் பாடினார் *[புற.209:6]*. நீங்கா விழவினையுடைய, புதுவருவாயுளதாகிய நாட்டுள்ளும், எம்கோ, உறையூரிடத்தான், எனக், கோப்பெருஞ்சோழனைப், பிசிராந்தையார் குறிப்பர் *[புற.212:6]*. வரகினது சோற்றையும், வேளையினது வெள்ளிய பூவைத் தயிரின்கண் பெய்து, இடைமகள் அட்ட புளிங்கூழையும், அவரை கொய்வார் நிறையவுண்ணும், பாண்டியன் நன்னாட்டுள்ளும், 'பிசிர்' என்னும் ஊரிடத்தான், எம்முயிரைப் பாதுகாப்போன்; செல்வக்காலை வாராது நிற்பினும், அல்லற்காலை ஆண்டு நில்லான்', என்பது, கோப்பெருஞ்சோழன், பிசிராந்தையார் வாரார் என்ற சான்றோர்க்கு அவர் வருவார், என்று சொல்லியது *[புற.215:6]*. வேற்றுவேந்தனது நாட்டின்கண் விளக்கம் அமைந்த சான்றோன், புகழ் மேம்பாடாக, நட்பே பற்றுக்கோடாக இன்னாமையுடைய இக்காலத்து வருதல், கருதுங்காலத்து, வியக்குந் தன்மையையுடைத்து, எனக் கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்தானுழைச் சென்ற பிசிராந்தையாரைக் கண்டு பொத்தியார் பாடினார் *[புற.217:3]*.

பறையொலி போலும் ஒலிமிக்க அருவியையுடைய நல்ல மலைநாட்டுக்கு வேந்தன், கோச்சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை *[புற.229:14]*. சிமையமோங்கிய உயர்ந்த மலை பொருந்திய நாடு முழுவதும் கொடுப்பவும் கொள்ளாதவன் நடுகல்லில் பீலிசூட்டித்தேறலைச் சிறுகலத்தில் கொடுப்பவும் கொள்வானோ என நெடுமானஞ்சியை, ஔவையார் பாடுவர் *[புற.232:6]*. அழியாத புதுவருவாயையுடைய நாடும், ஊர்களும் பாடுபவர்க்குக் குறைவறக் கொடுப்பவன், ஆஅய்அண்டிரன் *[புற.240:2]*. அண்டிரன் இறந்தானாகப் புலவர், வாடிய பசியராகிப் பிறருடைய நாடுபடு - நாட்டின்கண் தலைப்படும் - செலவினராயினர்', என, அவனைக் குட்டுவன்கீரனார் பாடுவர் *[புற.240:14]*. சாத்தன் இறந்துபட்ட பின்பு, முல்லையாய நீயும் பூக்கக் கடவையோ அவனது ஒல்லையூர் நாட்டின்கண்; நின்னை, இளைய வயவர்சூடார்; நல்ல மகளிரும் பறியார்', என, ஒல்லையூர்கிழான் பெருஞ்சாத்தனைக், குடவாயிற் கீரத்தனார் பாடினார் *[புற.242:6]*. ஆரன்மீன் சேற்றின்கீழே ஒளிப்ப, வாளைமீன் நீர்மேல் பிறழ, நிறத்தால் எரிபோலும் பூவையுடைய பொய்கைகளை நெருக்கி, வலைஞர், யாமை பிறழ, வராலோடு, மாறுபடும் கயலை முகந்துகொள்ளும் அகன்ற நாட்டையுடைய அண்ணல்', எனத் தும்பி சொகினனார், தலைவன் ஒருவனைப் புகழ்வர் *[புற.249:7]*.

கோடைக்காலமாயினும், ஆம்பலது இலை நிழற்கண், நத்தையின் ஏற்றை, நாகாகிய சங்குடனே, பகற்காலத்தே மணம் கூடும், நீர் விளங்கும் வயலையுடைத்தாகிய நாடு பொருந்திய பெருவிறல், சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னி *[புற.266:6]*.

யான் விருந்தினர் எதிர்வரப் பெறுவேனாக; என் தலைவன், வேந்தனோடு நாடு தரும் விழுப்பகையை எய்துக', என, மூதின்முல்லைத்துறையில், அள்ளூர் நன்முல்லையார் பாடுவர் *[புற.306:7]*. வழிகள் பல பொருந்திய நாடு கெழுபெருவிறல், கைப்பொருள் யாதொன்றுமிலன்; ஆயின், களிற்றொடு, தேர் வேண்டினும் ஈயும்கடனுடையன், என, ஒருவனை, மாங்குடிகிழார், பாடுவர் *[புற.313:1]*. நாடு கொண்ட முடிவேந்தரும் சுடுகாட்டைச் சென்றடைந்தனர் என, அந்துவன்கீரனைப் பாடும்போது, காவட்டனார் குறிப்பிடுவர் *[புற.359:8]*. வயவர், பரிசிலர்க்கு நன்கலம் வீசி, இல்லினின்றும் பெயரக்கருதி நிலவுலகு சிறிதாதலால் இனிதாக இயங்குதற்கு இயலாமைக்கு அஞ்சி, மறத்தால் சிறந்த உயர்ந்தோர் நாட்டே - நாட்டிற்குத் - தம்முடம்போடே செல்லும் பொருட்டுப் பொருவர்', எனச், சிறுவெண்டேரையர் பாடுவர் *[புற.362:22]*. வேந்தர் பலர் சுடுகாட்டைத் தமக்கு முடிவிடமாகக் கொண்டு தத்தம் நாடு பிறர் கொளச் சென்று மாய்ந்தனர், என ஐயாதி சிறுவெண் டேரையார் நிலையாமையினைச் சுட்டுவர் *[புற.363:6]*. தேன் கூடுகள் தொங்குகின்ற, நீங்காத புதுவருவாயையுடைய, மலை சார்ந்த தோட்டங்களையுடைய நன்னாட்டுப் பொருநன் ஆய் அண்டிரன் *[புற.375:10]*.

புரவலரை நாடிச் சேய் நாடு (தொலைவிலுள்ள நாடுகட்குச்) செல்லும் கிணைப் பொருநனே! நீ, எம்மாற் புரக்கப்படுதலையுடையை, எனக் கூறிச், சோழன் இராச சூயம்வேட்ட பெருநற்கிள்ளி நல்கியதை, உலோச்சனார் குறிப்பிட்டு, 'நாடு' எனச் சிறப்பித்துக் கூறத்தக்கது அவன் நாடு, எனப் புகழ்ந்து பாடினார் *[புற.377:14,21(2)]*. கரும்பனூர் கிழான்பால் பலநாள் விருந்துண்ட பின்னர், பெருமானே! எம் விழவுடைய நாட்டிற்குச் செல்ல வேண்டினேம், விடையருளுக' என்னவும் அவன் பிரிவுக்கு அஞ்சியமையினைப், புறத்திணை

நன்னாகனார் குறிப்பிடுவர் *[புற.381:5]*. கடலிற் படைகொண்டு சென்று பகைவரை அடுதலாற் கொள்ளலாகும் பெரும் பொருள் நெருங்கிப் பெருகிய (மறம் பொருந்திய) வலியதாளையுடைய தண்ணிய சோழ நாட்டுப் பொருநன், சோழன் நலங்கிள்ளி *[புற.382:3]*. கழி சார்ந்த பகுதி உப்பின் விலையைச் சொல்லிப், பெரிய மலைகள் பொருந்திய நல்ல நாடுகட்குக் கொண்டு சென்று விற்கும் உமணர் குடி தழைத்திருக்கும் அத்தகைய நன்னாட்டுப் பொருநம் யாம்', எனச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை (அவன் நிலப்பகுதியை), கோவூர்கிழார் பாடுவர் *[புற.386:17,18]*. கோடைக்காலம் வந்தபோதும், தப்பாது ஒழுகுதலையுடைய காவிரியாறு பாயும் நல்நாட்டுப் பொருந! புரவுக்கடனை அறிந்தாளும் செல்வர் பிற நாட்டின்மையின், கேடின்றிப் பரிசில் நல்குமதி, எனச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை, நல்லிறையனார் வேண்டுவர் *[புற.393:5]*. தான் முதலில் தந்த யானை சிறிது, என நாணிப், பிறிதும் ஓர் பெருங்களிறு நல்கினான்; அதனால், சுற்றத்தார் வறுமையால் பெருந்துன்பம் எய்தினராயினும் குன்றுகள் பொருந்திய அவன் நாட்டுக்கு, நெருங்குதற்கரிய பரிசிலை நல்குவான் என்று கருதி எப்போதும் செல்வேனல்லேன்', எனச், சோழியவேனாதி திருக்குட்டுவனைக், கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் பாடினார் *[புற.394:18]*.

சுற்றுவனாலே கொல்லப்படும் யாக்கை ஒருகாலைக்கு ஒருகால் அழகு அழியுமாறு போலப் பகைவர் நாடு அழியும்படி இமையவரம்பன் நெடுஞ்சேரலான் அச்சத்தைத் தோற்றுவித்தான் *[பதி.13:10]*. காடு, கடவுளான் மேவப்பட்டன; புறவுகள், மன்னரான் மேவப்பட்டன; ஆறும் அவ்வனைத்தாயிற்று; கூலம் பகர்வோரைப் பாதுகாத்துக், குடிபுறந்தருவோரையும் பேணி, நீ காத்த நாடு, மழை வேண்டிய புலத்து மாரி நிற்ப, நோயோடு பசி நீங்கப் பொலிவு பெற்றது', என, இமையரம்பன் நெடுஞ் சேரலாதனைக், குமட்டூர்க் கண்ணார் சிறப்பிப்பர் *[பதி.13:28]*. நின் படைகள், பழைய உருவம் கெடும்படி கெடுத்தலால், தொல்கவின் அழிந்த வைப்பும், வேளையொடு சுரைக்கொடி தழைத்து வளரப், பீர்க்கங்கொடி ஏறிப் படர்ந்த, நீரற்ற நீர்ச் சாலினிடத்தில், காந்தட்கிழங்கு சிதைய, மூதில்லையுடைய வில்லேந்தி வழிப்பறி செய்வோர் வழங்கும் புல்லிலைவைப்பில், குறும்பிடத்தே, தன் அறியாமையான் உன் வலியோடு மாறுபட்டுநின்ற பகைவர் நாடும் கண்டு வந்தேன்; கடலிடத்தே பெறும் முத்து, பவளம் போன்ற பொருள்களும், மணி முதலிய குறிஞ்சி நிலத்துப் பொருள்களும், முல்லையிலும் மருதத்திலும் உள்ள பொருள்களும் ஆகிய பலவளங்களும் நிறைந்த அகன்ற இடத்தையுடைய நன்னாட்டு வேந்தே! நீ புறந்தருலின் துன்பமின்றிப் புதுவருவாயோடு திகழும் நன்னாடும் கண்டு வியந்தனன்' என இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனைக், குமட்டூர் கண்ணார் பாடுவர் *[பதி.15:15,17,34]*. வயலும், குளமும் உளவாகச் சமைத்து வைத்தமையால், கண்டார்க்கு நாடு கண்டாற்போன்று, அம்புக்கட்டுக்கள் தங்கும், மலைபோன்ற இடை மதில் இருந்தது *[பதி.16:2]*.

குந்தாலியால் பாறையின் செறிவை உடைத்தமையால் சிதறின போன்று சிலவாக ஊறிய நீரைத் தன் இடத்தே பெற்ற குழியில், (பறியாகிய) கயிற்றை வாங்கும் பாத்திரத்தைச் சுற்றி, நீருண்ணும் பொருட்டு மொய்க்கின்ற ஆக்கள் பொருந்திய கொங்கர் நாடு கைகொண்ட தலைவனே! முழக்கத்தைத் தன்னிடத்தே பெற்ற நீர் விழவின்கண், மிகுதியாகவுள்ள புதுவருவாயையுடைய நாடு கெழுதண் பணையிடன (மருதநிலம்) சீறினையாதலில், அது பாழாகும்', எனப், பல்யானைச் செல்கெழு குட்டுவனைப், பாலைக் கௌதமனார் பாடுவர் *[பதி.22:15,31]*. குட்டுவனோடு போரை ஏற்றுக்கொண்ட வேந்தர், தூசிப்படை கெட்டொழிய நீங்குதலால், மருதுமலி பெருந்துறையிடத்தே, சிதைந்த காஞ்சியொடு, முள்ளுமுருங்கையின் பூக்கள் நீரிலே தங்குதலால் அழகுபெற்ற நெருப்பையொத்த நீரடைகரையில், நந்து, நாரையொடு செவ்வரியுகளும் படப்பையிடத்தே, தாமரை, ஆம்பல் அழகு செய்யும் குறையாத புதுவருவாயையுடைய பகைவர்தம் அகன்ற இடத்தையுடைய நாடு, காடாயின *[பதி.23:25]*. நீ, அந்தணர் வழிமொழிந்தொழுக, ஞாலத்திலுள்ளார் நின்வழி ஒழுகப் புலவர் புகழும் பாடல்கள் அமைந்து, நாடு முழுவதும் விளங்கிய ஆராயப்படாத நல்லபுகழையுடைய, திருந்திழை கணவ! எனப், பல்யானைச் செல்கெழுகுட்டுவனைப், பாலைக் கௌதமனார் பாடுவர் *[பதி.24:10]*. நீ, தேரோட்டிச் சென்ற பிறர் அகன்ற இடத்தையுடைய நாடு, வயல்களில் கலப்பைகள் உழா; வயல்கள் வளம் பரவுதலை அறியா; எயில்களில் காவல் வைக்கப்படா; ஆறலைப்பவர் போர் செய்யும் பெரிய பாழ்வெளிகளாக நிலை பெற்றன', எனப், பல்யானைச் செல்கெழுகுட்டுவனைப், பாலைக் கௌதமனார் பாடுவர் *[பதி.25:13]*. குட்டுவனின் வயவர் சீறிய நாடு, தன்னகங்கொண்ட விளைபுலங்களில் ஏர் பரவா; நாஞ்சில் ஆடா; வீடுகளில் இன்னியங்கள் ஒலியா *[பதி.26:14]*. வயலில் சக்கரம் சேற்றிலே புதையச் சேற்றினின்றும் நீக்குகின்ற துன்பத்தையுடைய வண்டி ஓட்டுவோரது முழக்கமன்றிப், பிற பூசலறியாத நன்னாட்டின், புதுவருவாய் நீங்காத, விருப்பம் பொருந்திய அழகு, நீ சிவந்து நோக்கலின் சிதைந்தது', எனப், பல்யானைச் செல்கெழு குட்டுவனைப், பாலைக் கௌதமனார் பாடுவர் *[பதி.27:15]*. குட்டுவனது அகன்ற இடத்தையுடைய நாடு, சிவந்த நீரினாலுண்டாகும் ஆரவாரம் அல்லாமல், பகைவரால் உண்டாகும் கொடுமையில்லாதது *[பதி.28:14]*. அவலை இடித்த உலக்கையை அருகிலுள்ள வாழை மரத்தில் சார்த்திவிட்டு, மகளிர், நெற்கதிர் விளையும் வயல்களிடத்தில் பரவியுள்ள நாரை இரியுமாறு, ஒப்பும், அழியாத விழவினையும், சுருதி இறங்காத யாழையுமுடைய, அகன்ற இடத்தையுடைய ஊர்களையுடைய பகைவர் நாடுகள் குட்டுவன் தானை சென்றபின், இரங்கத்தக் கனவாய் அழிந்தன *[பதி.29:10]*.

யானையொடு, புலங்கெட இறுத்து, நாரை படிந்து இரை கவரும் வளைந்த கதிர்களையுடைய நெல்லின்தாள் செறிந்த வயல்களையுடைய தப்பாத விளைச்சலையுடைய நாடுகளைக், களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் அகப்படுத்தினான் *[பதி.32:14]*. நாட்டிலுள்ளாரெல்லாம் காணத்தக்க, தொழிலை விரும்பிய யானைகள் பலவற்றைப் பரிசிலர்க்குக், களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் அளிப்பன் *[பதி.40:29]*.

இமையத்திற்கும், குமரிக்கும் இடைப்பட்ட அரசர் நாடு எல்லாவற்றையும், அவற்றின் பழைய கவின் அழிய அழித்தவன், கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன், *[பதி.43:10]*. நாடுகெழு தாயமுடைய அரண்களில் கதவம் காக்கும் கணையமரம் போன்ற, கையை, வீசியவாறு, மறவர் துணங்கைக் கூத்தாடினர் *[பதி.45:9]*. கரும்பு தழைத்து நெருங்கிய வயல்களையுடைய நாடு, வளம் மிகுமாறு நேர்கிழக்கே காவிரி ஓடும் *[பதி.50:3]*.

போரின்கண்ணே வஞ்சியாது எதிர்நின்று போர் செய்து, சீறிய வயவர் மிக்க இடங்களையுடைய நாடுகளைத் தன்னுடையனவாகக், கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் அகப்படுத்தினான் *[பதி.50:14]*.

நெய்தல் தேன் பொருந்திய நறவம், நாடுமுழுதும் நறுமணம் வீச, விறலியர் பாடலில் நீடி, மெல்லியனாகிச் செருவில் கடியனாயினவன், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், *[பதி.51:18]*. பகையரசர், எம்மைக் காப்பாயாக, என்று கூறிக் குறையாத புதுவருவாயையுடைய தம் நாட்டைத் திறையாகக் கொடுப்ப, அவர்களுக்கு, ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் அருள் செய்தான் *[பதி.53:2]*. இனிய ஓசையையுடைய அலைகள் ஒலிக்கும் கடலிலே வந்த நல்ல அணிகளாகிய செல்வம் தங்கும் பண்டசாலைகளையும், மணம் வீசுகின்ற தாழைகளையுடைய கடற்கரைச் சோலைகள் பொருந்திய அழகிய பெரிய துறைகளையும் உடைய குளிர்ந்த கடற்பக்கத்தையுடைய நன்னாட்டுப் பொருந! உயர்ந்த மலைகளில் அடுக்குகளையுடைய நாடுகளைக் கைப்பற்றிக் கொண்டு, அதனால் சினம் தணிந்த குருசில்! என, ஆடுகோட்டுபாட்டுச் சேரலாதனைக், காக்கைபாடினியார் நச்செள்ளையார் பாடுவர் *[பதி.55:8,18]*. 'காட்டிடத்தே ஒலிக்கின்ற ஓசையையுடைய சிள்வீடு, பொரிந்த அடி மரத்தின்கண்ணே பொருந்திய வேலமரம், பெருகத் தோன்றும் புன்புலத்தில், வித்துக்களை விதைக்கின்ற தொழில் செய்வோர், கடாக்களை அகத்தில் பூட்டி உழுதலால், அழகிய மணியைப் பெறுவதற்கிடமான அகன்ற இடத்தையுடைய ஊர்களையுடைய நாடு கிழவோனை வானவரம்பன் என்பர்' என, ஆடுகோட்பாட்டுச்சேரலாதனைக் காக்கை பாடினியார் நச்செள்ளையார் பாடுவர் *[பதி.58:19]*. புகழ்ச்சி மிக்க நல்ல அணிகலன்களைத் தருகின்ற நாடுகளை நின் பெருத்த தோள்களில் வைத்துப் பாதுகாத்தல், நின்கடனாகும், என, ஆடு கோட்பாட்டுச் சேரலாதனிடம், காக்கை பாடினியார் நச்செள்ளையார் கூறினார் *[பதி.59:19]*. பார்ப்பார்க்குக் கபிலையொடு குடநாட்டின்கண்உள்ள ஓர் ஊர் ஈந்தவன், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் *[பதி.ப.6:5]*.

பலாப்பழத்திலிருந்து அரித்து விழுகின்ற தேனைக் காற்று வீசுகின்ற நாடு பொருந்திய பெருவிறலுடையவன், செல்வக் கடுங்கோவாழியாதன் *[பதி.61:2]*. முல்லை நிலத்தில் பல ஆக்களைப் பரவச் செய்து, வயல்களில் பயிர்களின்றும் உதிர்ந்த பொலியைக் காஞ்சி மரத்தின் நிழலிலே தொகுத்துக் கள்ளை உண்ணுதலையுடைய உழவர், ஆம்பற்பூவைத் தலையின்கண் சூடியவராய், அதில் மொய்த்தற்கு வரும் வண்டுகளை ஓட்டுதற்கிடமான, பகைவருடைய அகன்ற இடத்தையுடைய நாடு அப்பகைவரால் பணிந்து நினக்குத் திறையாகத் தரப்படுமாயின் பாடல் மிக்கனவாய் அமையும்', எனச், செல்வக்கடுங்கோ வாழியாதனைக், கபிலர் பாடுவர் *[பதி.62:19]*. பூத்த முல்லைக் கொடியினது புதலைச் சூழ்ந்த வண்டாகிய பறவை, காட்டினிடத்தே பிடாமரத்தின் பூக்குலையிலே தங்குதற்கிடமான, உயர்ந்த, பளிங்கு கலந்த சிவந்த பருக்கைக் கற்களையுடைய மேட்டு நிலத்தில் விளங்குகின்ற கதிர்களையுடைய அழகிய மணியை அவ்விடத்தே வாழ்வார் பெறும் அகன்ற இடத்தையுடைய ஊர்களையுடைய நாடு கிழவோன், செல்வக் கடுங்கோ வாழ்யாதன் *[பதி.66:20]*. தலைவெட்டப்பட, உடல் மட்டும் எஞ்சிய ஆண்மை மிக்க கவந்தத்தோடு, பேய்மகள் கண்டார்க்கு வருத்தத்தைச் செய்யும் படி, நாடுமுழுவதும் நடுங்கும் பல போர்களிலே பகைவர்களைக் கொன்றவன், செல்வக் கடுங்கோ வாழியாதன் *[பதி.67:12]*. நாடுகளில் ஊர்களை உண்டாக்கிப் பகைவரை ஓடச்செய்தவன், செல்வக் கடுங்கோவாழியாதன் *[பதி.ப.7:4]*.

தம்முட்கூடியும், நின்னொடு பகைகொண்டோர், சிறுநேரமும் தம் தம் நாட்டைக் காத்துக் கொள்ளுதலை மாட்டாராயினர்', எனப், பெருஞ்சேரல் இரும்பொறையை, அரிசில் கிழார் பாடுவர் *[பதி.72:3]*. 'பொறையனே, வேந்தரும், வேளிரும், பிறரும் நின்னடிக்கீழ்ப் பணிந்து நின்வழியொழுகாராயின், தத்தம் பாடல் சான்ற ஊர்களையுடைய நாடுகளை ஒருங்காளுதல் அவர்க்கு எங்கேயுள்ளது', எனப் பெருஞ்சேரலிரும்பொறையைப், பாடுவர் அரிசில் கிழார் *[பதி.75:14]*. தம்மோடு எதிர்த்தார் ஓட, மிக்க மாறுபாடு அழியும்படி படையெடுத்துச் சென்று கொடியபோரிலே கெடுத்த, தம்முடைய நாட்டில், குதிரைகளோடு, யானைகளையுடையோர் குன்று, மலையில் நின்று அருவிவிழும் உவ்வெல்லையிடத்தேயுள்ளது, எனப், பெருஞ்சேரல் இரும்பொறையை, அரிசில்கிழார் பாடுவர் *[பதி.78:12]*.

பகைவரது நாட்டினை அடிப்படுத்தினமையால், முன்பு நிகழ்ந்த கொள்ளையை மாற்றி, ஒளிவிடுகின்ற பொற்கட்டிகளுள்

இன்னதனை இன்னவர் பெறுவார், என்று, அவரவர் தரங்களை நிச்சயிக்க, நினது தானையிலுள்ள வயவர்க்கு உதவி, வேற்றுப்புலத்துச் சென்று தங்கிய, வெல்லும் போரைச் செய்யும் தலைவனே! 'என, இளஞ்சேரல் இரும்பொறையைப், பெருங்குன்றூர்கிழார் பாடுவர் *[பதி.81:15]*. பலபடியாக நாடு அழியும்படி நல்ல அணிகலன்களைக் கொண்டு தருவது, நினது, போரில் அரிய சினம், என, இளஞ்சேரல் இரும்பொறையினைப் புகழ்வர் பெருங்குன்றூர் கிழார் *[பதி.83:7]*. நல்ல மரங்கள் நிறைந்த நாடு பலவற்றை எமக்குக் கொடை தந்து, பொற்பூண் அணிந்த எம்மொடு பொருந்தாத மேற்கோளையுடைய சோழர் தலைவனை என்முன்னே தாருங்கள், என்று, இளஞ்சேரல் இரும்பொறை, தம் வயவருக்குக் கூறினான் *[பதி.85:1]*. தன்மீதேறி நாடு முழுவதும் காணக் கூடிய உயர்ச்சியைப் பெற்றது, நன்றா என்னும் மலை *[பதி.85:7]*. மிக்க காற்று எழுப்பிய, ஓங்கிவரும் அலை, நுண்ணிய மணலையுடைய கரையிடத்தே வந்து உடைகின்ற, குளிர்ந்த கடற்பக்கத்தையுடைய நாடுகிழவோய்', என, இளஞ்சேரல் இரும்பொறையைப், பெருங்குன்றூர்கிழார் விளிப்பர் *[பதி.88:42]*. 'இரும்பொறை! நின் செங்கோற் சிறப்பால் நாள்தோறும் நாடு (நாட்டிலுள்ளார்) நின்னைக் கையில் தொழுது, நாவால் ஏத்தத், தேவர் புகழ, நீ அரசியல் பிழையாது போரில் மேம்பட்டுத் தோன்றி நோயில்லை ஆகுக' என இளஞ்சேரல் இரும்பொறையைப் பெருங்குன்றூர்கிழார் வாழ்த்துவர் *[பதி.89:10]*. உழவர் தண்ணுமை வாசித்தால், மயில், முகிலின் ஓசையென்று ஆடக், குளிர்ந்த நீரில் ஆடுவோரது முழக்கத்தோடு கலந்து, வயவரது தடாரிப் பறை ஒலிப்பச், சோற்றையுடைய நல்ல வீடுகளில், ஏறுகள் ஒன்றோடொன்று மாறாக முழங்கச், செழுமையான வயல்களையுடைய காவிரிப் பக்கத்தையுடைய நன்னாடு (சோழநாடு) அன்ன, ஒண்டொடி கணவ! 'என, இளஞ்சேரல் இரும்பொறையைப் புலவர் விளித்தார் *[பதி.90:47]*.

இளஞாயிறு கடலின் மீதே பகற்பொழுதைச் செய்யும் கதிர்களைப் பரப்பிப் பின்னர், விசும்பிலே மெத்தெனச் சென்றாற் போலக், கரிகாலன், தவழ்தலைக் கற்ற நாள் தொடங்கிச் சிறந்த நல்ல நாட்டைத் தோளிற்கொண்டு நாள்தோறும் வளர்ந்தான் *[பொரு.138]*. கரிகாலன், மருதநிலஞ்சூழ்ந்த, அசையாத குடியிருப்பினையுடைய, நன்றான பல ஊர்களையுடைய நாடுகளுடனே பலயானைகளைத் தருதலில் தாழ்த்தல் இலன் *[பொரு.170]*. குளிர்ந்த வைப்புக்களையுடைய நான்கு கூறாகிய நாடு திரண்டு, வரம்பு கட்டின வேலி நிலம், ஆயிரக்கலமாகிய செந்நெல்லின் விளையுட்டாகக் காவிரி புரக்கும் நாடு, தனக்கே உரித்தாம் தன்மையுடையோன், கரிகாலன் *[பொரு.226,248]*. பிறர்நாட்டு வளன் எல்லாம், ஆராயின், கரிகாலன் காவிரி சூழ் நாட்டிலுள்ள, அரிகாலின் கீழ் உதிர்கின்ற நெல் அளவையே பொருந்தும் *[பொரு.வெ.1:4]*. நறிய பூக்கள் நெருங்கின இளமையையுடைய முதிர்ந்த சுரபுன்னையையும், குறிய மலைகளையுமுடைய நன்றாகிய நாடு, ஓரியால் கூத்தாடுவோர்க்குக் கொடுக்கப்பெற்றது *[சிறு.109]*. வள்ளிக் கூத்தின் வளப்பம் பலவற்றையும் தருதற்குக் காரணமாகிய புற நாடு பலவற்றையும், பாணன் கடந்து சென்றான் *[பொரு.371]*. பொன் மிகுதற்குக் காரணமாகிய விழுப்பண்டங்கள், நாடு (நாட்டிலுள்ளார்) நுகரும்படியாகக், கரையைச் சேர, வாணிகம் வாய்த்து வந்து இழிந்தன *[மது.82]*. பகைவர் நாடுகெடும்படி தலையாலங்கானத்தில் பாண்டியன் பொருதான் *[மது.126]*. பாண்டியன் நெடுஞ்செழியன் காடுகளைக் கடந்து பகைவர் உள்நாடு புகுந்து அவர் அரண்களைக் கைக்கொண்டான் *[மது.149]*. பாண்டியன் நெடுஞ்செழியன், பகைவரின் மருத நிலங்கள் நெருப்புண்ண, நாடென்னும் பெயர் காடென்னும் பெயர் பெறப், பொருதான் *[மது.156]*. பகைவர் நாடுகள் அழியும்படியாக அவர் எயிலை, நெடுஞ்செழியன் வௌவினான் *[மது.187]*. வளம் பயின்று, ஐந்து கூற்றினையுடைய நிலங்களும் அழகு பெற்று, முழவு முழங்கும் திருநாள் நிலை பெற்று, அகன்ற தெருவினையும், துணங்கைக் கூத்தினையும், குரவைக் கூத்தினையும், பரத்தையர் சேரியினையும், புதுவருவாயினையுமுடைய பல குடித்திரள் நெருங்கிப், புலவரால் பாடுதல் முற்றுப்பெற்ற நல்ல நாடு பாண்டியனுடையது *[மது.331]*. வேந்தர், மானவிறல்வேள் என்னும் குறுநில மன்னனுடைய 'அழும்பில்' என்னும் ஊரையொத்த நாடு இழந்தனர் *[மது.345]*. தீவினையைக் கழுவுதற்குக் காரணமான நல்ல நீரைத் தன்னிடத்தே கொண்ட வெற்றி நெருங்கும் திருநாளினைக் கொண்டாடும் நாடு ஆரவாரம் எழுப்பியது *[மது.428]*. நிரைகாத்திருந்த மறவரை மாளவெட்டி, வேல்கோலாக அடித்துக் கொண்டு வந்த ஆத்திரளும், தமக்குச் செல்வமிகும்படியாகத் தொழுது வாழ்த்தித் திறையாகக் கொண்டு வந்த சீரிய கலங்களும் குவிந்தன *[மது.693]*.

நும் சுற்றத்தார், நுமது முன்கையினைப் பிடித்து எமக்குத் தர, நாடு (நாட்டிலுள்ளார்) அறியும் திருமணத்தைப் பின்பு நிகழ்த்துவோம்; சிறிது நாள் கலங்குதலைப் பாதுகாப்பீர்', எனத், தலைவன் வேட்கை உரைத்தான் *[குறி.232]*. கரிகாற்பெருவளத்தான், சோழ மண்டலத்தின் காடாகிய இடங்களை வெட்டி, நாடு ஆக்கினான் *[பட்.283]*. பிறவிடத்தில்லாத செல்வத்தை மாறாமல் கொடுக்கும் வேளின் நாடு விளைவிக்கின்ற உணவுகளும், பிறவும் சொல்லிப், பரிசுபெற்ற கூத்தன் பரிசுபெறாத கூத்தனைப் பல்குன்றக் கோட்டத்துச் செங்கண் மாத்துவேள் நன்னன் சேய் நன்னனிடம் ஆற்றுப்படுத்தினான் *[மலை.68]*. நன்னனுடைய மலையினது உச்சியில் அமைந்த நாடு மிகவும் சிறப்புடையது *[மலை.188]*. தெய்வம் விருமபுதலிற், கடியவாகிய பூக்களைக் கிட்டினும், வரையர மகளிருடைய இருப்பைக் காணினும், உயிர் போம்படி வெதும்பி நடுங்குதலும் உரியிராகையினாலே, பலநாள்

நில்லாது நில நாடு படர்மின்', எனக், கூத்தரை ஆற்றுப்படுத்தல் [மலை.192]. நாடுகளையெல்லாம் காணலாயிருக்கின்ற அகன்ற இடத்தையுடைய மலையை மெல்ல மெல்லப் போவீர்! என்று கூத்தரை ஆற்றுப்படுத்துவர் [மலை.270]. நன்னனின் குளிர்ந்த மருத நிலத்தை உடைய நாடு, நன்றாகிய பல பொருள்களை உடைத்து [மது.453]. மலையிற் நின்றும் விழுகின்ற அருவிகள், வென்றுயர்கின்ற கொடிகள் போலத் தோன்றும் மலைகள் சூழ்ந்த நாடு கிழவோன் நன்னன் [மலை.583].

தலைவியின் தோள்மெலியுமாறு சேய்மைக்கண் உள்ள நாட்டில் செல்வங்களை ஈட்டத் தலைவர் பிரிந்தார் [அக.1:8]. நீரறாக்குழியில் அகப்பட்ட களிற்றின் வருத்தத்தினை நீக்குதற்கு, அதன் பெண்யானை, களிறு ஏறுதற்குப், படியாகப், பெரிய மரத்தினை முறித்திட்ட ஓசை, வானையளாவிய மலைமுழையின்கண் சென்றொலிக்கும் தலைவர் நாட்டில் 'மென்மெல இயங்கிச் செல்லல் நமக்கு அரியதன்று, எனத், தலைமகன் சிறைப்புறத்தானாகத், தோழிக்குச் சொல்லுவாளாய்த், தலைமகள் கூறினாள் [அக.8:12]. நம் தலைவியின் மாண்புறும் அழகுகெடச் சேய்மைக்கண்ணதாகிய நாட்டிற்குச் செல்லாதே, என்று சொல்லவும், அதற்குப் பொருந்தாது வினையை விரும்பிப் போந்தாய்', எனத், தலைமகன், இடைச்சுரத்து நின்று மீளலுற்ற நெஞ்சினைக் கழறினான் [அக.21:5]. கோடைக்காலத்து மழை பெய்யாமையால், நாடு வறங்கூரக், கலப்பைத் தொழில் ஒழிந்தது [அக.42:5]. தோள் நெகிழச் சேய் நாட்டில் சென்று பொருளீட்டலை நினைந்து, தலைவியைப் பிரிந்து உறைகின்றவர் போனவழியின்கண், களிறு, பெண்யானை உண்ணற்கு, யாமரத்தினை வளைத்துத் தந்து, கன்னத்தில் படியும் வண்டுகளை ஒட்டும் [அக.59:16]. தலைவ! சோழர், குடவாயிற்கண் போற்றிவைத்ததாகிய, பகைவர் நாடு திறையாகக் கொடுத்த, நிதியைக் காட்டினும், மிகவும் அரிய காவற்படுத்திவிடுவள், அறங்கருதாத யாய்', எனத், தலைமகற்குத், தோழி செறிப்பறிவுறீஇ, வரைவு கடாவினாள் [அக.60:1]. தன் நாட்டைப், பிறர் மண் கொண்டு விரிவாக்கியவன், உதியஞ் சேரலாதன் [அக.65:5]. புல்லியின் விரிந்த இடத்தினையுடைய நல்ல நாட்டின்கண் உள்ளது வேங்கடம் [அக.83:10].

கோசரது புதிய கள் கமழும் நெய்தலஞ்செறு எனும் வளம் பொருந்திய நல்நாடு அன்ன, தலைவியின் தோளினைத், தலைவன் கூடிச் சென்றான் [அக.113:7]. பகைவர், ஆவினைப் பாதுகாத்துறையும், உணவு மிக்க அரண்களிற் சென்று, விடைகளுடன் கூடிய பகைப்புலத்து ஆக்களைக் கவர்ந்து செலுத்தும், நீண்ட வேலினையும், விழாச் செய்தாலொத்த செழுமையாகிய பல உணவுகளையும், உடைய, பகைவர்க்குப் புறக்கிடாத பாணன் என்பானது, நல்ல நாட்டிற்கு அப்பாற்பட்ட இடத்திற்குத், தலைவன் பிரிந்து சென்றான் [அக.113:17]. நுண்ணிய தொழிற்பாடமைந்த பூணினையுடைய எருமை என்பானது, குட நாடு போன்றது தலைவியின் அழகிய நலம் [அக.115:5]. தலைவியின் நன்றாகிய அழகு தொலையத் தலைவன் பிரிந்து, சேய் நாட்டுறைந்தான் [அக.115:16]. அஞ்சத்தக்க கவர்த்த வழிகளில், பருந்து, ஓமை மரத்தின் மீதேறி, இரக்கம் உண்டாகப் பெடையினை அழைக்கும், பாழ்நாட்டாங்கண், உடன் சென்றுவிட்ட தலைவிக்குத் தாய் வருந்தினாள் [அக.117:7]. தோட்டங்களில் அன்றில் தன் துணையை அழைக்கும் அவ்விடத்தே, சிறிய பூங்கொத்தினையுடைய நெய்தல் பொருந்திய, எம் பெருங்கழி நாட்டின்கண், நீ தங்கிச் செல்லின், கெடுவதொன்றுளதோ? எனத், தோழி, பகற்குறிக்கண், தலைமகளை இடத்துய்த்து வந்து, தலைமகனை எதிர்ப்பட்டு நின்று கூறினாள் [அக.120:16]. குற்றமற்ற நம் காதலர், சென்ற நாட்டில், பிற்றை ஞான்று, தங்காது வருவர், எனப், பிரிவிடை ஆற்றாளாகிய தலைமகளைத், தோழி, வற்புறுத்தினாள் [அக.127:18]. இளைய பெண்யானை, குழியில் அகப்பட்டதாகக், களிற்றியானை கூப்பீடு செய்த ஆரவாரத்திற்கஞ்சி, விரைந்தெழுந்த அதன் கன்று, தெருக்களையுடைய பழைய ஊராகிய அவ்விடத்து, எருமையின் முலைப்பாலை உண்ணும் இடமாய, நாடு பல கடந்து, தலைவி, தலைவனுடன் சென்றாள் [அக.165:6]. வினையின்றியிருத்தற்கு நாணுதலுடைமையானே நீங்கிச் சேய் நாட்டிலே அரிய பொருளை ஈட்டத் துணிந்த நெஞ்சத்துடனே தலைவன்பிரிந்தான் [அக.187:3]. காடு காய்ந்திடக் காட்டரணிலுள்ளார் குடியெழுந்தோடிய பாழ் நாட்டின் அரிய இடத்தே, யானை பனங்குருத்தை உண்டது [அக.187:17]. தங்கள் முழவுகளை எடுத்துக் கொண்டு, வேற்று நாட்டு நிகழும் விழாவினை நினைத்துச் செல்லும் மள்ளர்களைப் போல, வெப்பம் மிகப், பெருமூச்சுத் தோன்றும் இளைய பிடியைத் தழுவிக் களிறுகள் சென்றன [அக.189:4]. ஆஅய் அண்டிரனது நல்ல நாட்டு மலையில், சுனையிடத்தே, சூர்மகள் உறைவள் [அக.198:14]. களஞ்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் வாகைப் பெருந்துறை என்னுமிடத்து, நிகழ்ந்த போரில், நன்னன் என்பவன் போர் செய்து களத்தில் மடியத், தான் முன் இழந்த நாடு பெற்றான் [அக.199:23].

தலைவர், சோழ மன்னரது வெண்ணெய் விளையும் ஊர்களையுடைய நல்நாடு பெறினும், அங்கே மனமுவந்து தங்கிவிடுவாரல்லர், எனப்பிரிவிடை வேறுபட்ட தலைமகட்குத், தோழி கூறினாள் [அக.201:13]. யானை இனங்களை அகப்படுத்தும் பூசற்கண்ணே, எழினி வாராதொழிய அதனால் சினம் கொண்ட, சோழ வேந்தன் ஏவலாற்சென்று, மத்தி என்பான், சேய்மைக்கண்ணதாகிய நாட்டில், முதற்படையில் அகப்பட்டுக் கொண்ட, எழினியின் பல்லைப் பறித்துக், கதவில் பதித்தான் [அக.211:12]. ஆட்டனத்தியை இழந்த ஆதிமந்தி,

நாட்டின் நாட்டின், ஊரின் ஊரின் சென்று ஆட்டனத்தியை இழந்த ஆதிமந்தி, நாட்டின் நாட்டின், ஊரின் ஊரின் சென்று ஆட்டனத்தியாய என் தலைவனைக் கண்டீரல்லீரோ, எனக், கேட்டு மயங்கினாள் *[அக.236:16,17(2)]*. பசும்பூண்பாண்டியன், கொங்கரை ஓட்டி, நாடுபல தந்தவன் *[அக.253:5]*. எருமை என்பானது நல்ல நாட்டின்கண் உள்ளது, அயிரியாறு *[அக.253:19]*. தலைவியின் தொடி நெகிழ்ந்தால், தலைவன் பிரிந்து தங்கியிருக்கும் நாட்டில், அதனை மாற்றும் மருந்தும் உளதாமோ? எனச், செலவுணர்த்திய தோழி, தலைமகளது குறிப்பறிந்து, தலைமகனைச் செலவழுங்கக் கூறினாள் *[அக.271:17]*.

இரவின்கண் தினைப்புனத்தை மேய்ந்த யானை, பெரிய தூற்றினை அஞ்சும், குன்றுகள் குறுக்கிடும், நெறிகளையுடைய, நம் தலைவர் சென்ற நாட்டின் கண், நாம் சென்றால் என்னையோ? எனத், தலைமகளது வேறுபாடு கண்டு, வேறுபட்ட தோழிக்குக், கிழத்தி கூறினாள் *[அக.309:17]*. புதிய வழிப்போக்கர் வருங்கால், கோவலர், இனிய புளிச்சோற்றை, அப்புதியரின் காதடைப்பு நீங்கத் தேக்கிலையில் பகுத்தளிக்கும், புல்லி என்பானது நன்னாட்டு உம்பர், தலைவர், சுரம் கடந்து சென்றார் *[அக.311:12]*. வென்றி யொழுக்கத்தால் மேம்பட்ட விருப்பத்தினால், அன்னன் என்பானை, அதியன் நாட்டினைக் கொள்ளுமாறு பணித்தான் *[அக.325:7]*. வடக்கின்கண், நல்ல வேலையுடைய பாணர் நல்நாட்டு உள்ளதாய நீண்ட சுரத்தில், தலைவர் பிரிந்து சென்றார் *[அக.325:17]*. இருப்பையின் பூக்களில், கரடிகள் உண்டு எஞ்சியவற்றை, எயினர் மகளிர் மூங்கிற் குழாயில் திரட்டிச், சீறூரில் தெருக்கள்தோறும் விற்றுத் திரியும் ஊர்களையுடைய பல நாடுகள் பின்னே கழியத், தலைவன் பிரிந்து சென்றான் *[அக.331:8]*. பாகனே! வெற்றி முரசம் ஒலிக்கப் பகைவர் நாட்டினைத் திறையாகக் கொண்டோம், ஆகலின் தேரைச் செலுத்துவாயாக', என, வினைமுற்றிய தலைமகன், தேர்ப்பாகர்க்குக் கூறினான் *[அக.334:3]*. மலைகள் உயர்ந்த இவ்வுலகில், சிறப்பித்துக் கூறும் நாட்டினையுடைய மற மிக்க படைகளையுடைய பேரரசர்களுள்ளும், அறத்தினைக்கைக் கொண்ட செங்கோலாட்சியுடன், வெற்றி மிக்க தோளினையுடையவன், பசும்பூண்பாண்டியன் *[அக.338:1]*. நாடு நிறைதற்கேதுவாய வெள்ளத்தினையுடைய காவிரியின் நீர் குறையைப், புல்லை மேய்ந்த ஏறுகள் அதனைக் குடித்துக் காஞ்சி மர நிழலில் துயிலும் *[அக.341:4]*. தெற்கின் கண்ணேயுள்ளதாகிய போர்வெல்லும் பாண்டியரது நல்ல நாட்டில் உள்ள வரையர மகளிர் போல அரியள் என, அல்ல குறிப்பட்ட தலைமகன் தன்னெஞ்சிற்குக் கூறியது *[அக.342:4]*. நன்னன் என்பானது நன்னாட்டு உள்ளது ஏழிற் குன்றம் *[அக.349:8]*. தலைவன், வேற்று நாட்டு உறையுளைக் குறிக்கொண்டு பொருள் ஈட்டச் சென்றான் *[அக.351:1]*.

தேன்கூடுகளையும், நாட்டின் எல்லையினைக் காண்டற்குரிய உயர்ச்சியினையும், அகன்ற இடத்தினையும் உடையது அச்சம் பொருந்திய பக்கமலை *[அக.372:2]*. வயலைக் கொடியே! வளர்த்தெடுத்த என்னையும் நினையாது, அலர்மிகக் காடுஞ், சோலையும், அத்தலைவனோடு போகத்துணிந்து, நாடும் தேயமும் பலவற்றைக் கடந்த வன்கண்மையுடையாட்கு, நீ வாடினை', என அக்கொடி நோக்கி மகட்போக்கிய தாய் கூறினாள் *[அக.383:4]*. வானவரம்பனது, நல்நாட்டுக்கு உம்பர் உள்ள காட்டினைக் கடந்து தலைவன், பொருளீட்டச் சென்றான் *[அக.389:16]*. புல்லியினது, தேனிறால் தூங்கும் உயர்ந்த மலைகளையுடைய நல்நாட்டு உம்பர் உள்ள வேங்கடமலையைத் தலைவர் கடந்து சென்றார் *[அக.393:19]*. புலி தாக்கிய புண் மிகுந்து, பெண்யானையால் தழுவப்படும் வலி குன்றிய களிற்றியானை, மூங்கிலாற்செய்த தூம்புபோல், ஒலிக்கும், எம் தலைவரது உயர்ந்த மலைநாட்டினின்றும் வருவோய்! இவ்விடத்து, இற்றைப்பொழுது, சேர்ந்திருந்து செல்லின், ஏதேனும் கெடுவதுண்டோ? எனக், காமம் மிக்க கழிபடர் கிளவியால், தலைமகள், தலைமகன் வரையினின்றும் போந்த ஆற்றோடு, புலந்து கூறினாள் *[அக.398:25]*.

கட்டி என்பவனுடைய நல்நாட்டு உம்பர், மொழிவேறுபட்ட தேயத்தராயினும், தலைவருடைய நாட்டினிடத்துச் செல்லுதலை எண்ணினேன்', எனத், தலைமகள், தன்னெஞ்சிற்குச் சொல்லுவாளாய்த், தோழி கேட்பக் கூறினாள் *[குறு.11:6,8]*. தலைவர் பிரிந்து சென்ற நாட்டின்கண், பிரிந்தார்க்குத் துன்பம் தரும் மாலைக்காலமும், தனிமையும் இல்லையோ, எனப், பிரிவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக், கிழத்தி கூறினாள் *[குறு.46:7]*. நன்னனது காவல் மரமாகிய நறிய மாமரத்தை வெட்டி அவனது நாட்டிற்போகிய வஞ்சினத்தையுடையவர் கோசர் *[குறு.73:3]*. தோழி! தலைவர் காந்தளை வேலியாகவுடைய உயர்ந்த மலைபொருந்திய நல்ல நாட்டிடத்து என்னைப் பிரிந்து போவார் என்று கூறுகின்றனர், எனப், பிரிவுணர்த்தச் சென்ற தோழிக்கு அவர் பிரிவு முன்னர் உணர்ந்த தலைமகள் கூறினாள் *[குறு.76:1]*.

தலைவியினது தோளோடு தோள் மாறுபடத் தழுவும் இன்பத்தோடு ஒருங்கு வைத்து ஆராய்ந்தால் கடல்சூழ்ந்த இவ்வுலக இன்பமும் பெறுதற்கரிய தலைமையையுடைய புத்தேள்நாடும் (தேவருலக இன்பமும்) அவ்வைகலின் பத்தின் கனத்திற்கு ஒவ்வாது, எனத், தலைவன், தலைமகட்குப் பாங்காயினார் கேட்பக், கூறினான் (வலித்த நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியதூஉமாம்) *[குறு.101:2]*. 'தோழி! நம் தலைவர், நிலத்தைத் தொட்டு உள்ளேபுகார்; வானம் ஏறார்; கடலில் காலினால் நடந்து செல்லார்; நாட்டின் நாட்டின், ஊரின் ஊரின், குடிகள் தோறும் ஆராய்ந்தால், அகப்படாமல் தப்பார், எனப், பிரிவிடை அழிந்த தலைமகளைத், தோழி வற்புறுத்தினாள் (தோழி தூது விடுவாளாகத், தலைமகள்

தனது ஆற்றாமை யாற்கூறியதூஉமாம்) *[குறு.130:3(2)]*. முகில்கள் தவழ்கின்ற உச்சியையுடைய, வானத்தளவும் உயர்ந்த விளக்கத்தையுடைய, குறுக்கிடும் மலைகளையுடைய, நாட்டில், தன் அடியின் அழகைச் சிதைக்கும் வண்ணம், தலைவி சென்றனள், என, மகட்போக்கிய செவிலித்தாய் கூறினாள் *[குறு.144:7]*. என் நெஞ்சு நெகிழ்த்த தலைவன் எங்கே இருக்கின்றானோ? வேற்றுப்புலங்களையுடைய நல்ல நாட்டில் பெய்த இடியேற்றையுடைய மழைநீர் கலங்கிவருவதுபோல, என்னெஞ்சம் கலங்கும், எனத், தோழி, கிழத்தியைக் குறைநயப்பக் கூறினாள் *[குறு.176:6]*. பிரிந்து சென்ற தலைவர், பாலை நிலத்தைக் கடந்து, வன்னெஞ்சினராகத், தாம் சென்ற நாட்டினிடத்துப், பொருளை அடைந்தாரோ? இல்லையோ? எனப், பிரிவிடை வேறுபட்டாளைத் தோழி வற்புறத்திக் கூறினாள் *[குறு.180:7]*. எம்மைப் பிரிந்து சென்ற நாட்டிடத்துள்ளனவாகிய கொன்றையின் அழகிய செவ்வி மலர்கள், நம்மைப்போலப் பசலைநிறத்தை அடையும் கார்ப்பருவத்தில், பெண் மானிடத்தினின்றும் நீங்கிய ஆண்மானையும், நம் தலைவர் காண்பரோ? 'எனப், பருவ வரவின்கண் ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக், கிழத்தி கூறினாள் *[குறு.183:1]*.

'தோழி! தலைவர் நம்மைப் பிரிந்து, மிக்க சேய்மையிலுள்ள நாட்டிலிருப்பவர் ஆயினும், நெஞ்சிற்கு அணியர்; அவர் தண்கடல் நாட்டுத் திரை, எம் சிறுகுடிமுன்றிலிடத்தே வந்து மீண்டு செல்லும், எனக், கடிநகர் வேறுபடாது நன்கு ஆற்றினாய் என்ற தோழிக்குக், கிழத்தி உரைத்தாள் *[குறு.228:6]*. மழை பொழிந்த மலைச்சாரலையுடைய தலைவரது நாட்டுக் குன்றம் நோக்கினேன். தோழி! பசப்பூர்ந்த என் நெற்றி பழைய தன்மை உடையதாயிற்றோ? பார்ப்பாயாக', என, வரைவிடைவைப்ப ஆற்றகிற்றியோ, என்ற தோழிக்குக், கிழத்தி கூறினாள் *[குறு.249:3]*. சேய்மைக்கண் உள்ள நாட்டில், உயர்ந்த மலையடிவாரத்திலுள்ள, கரும்பை நட்ட பாத்தியைப் போன்று, ஆண்யானையின் அடிச்சுவட்டின்கண் நீர் தங்கியிருக்கும் *[குறு.262:5]*.

புன்கண் மாலையும், தனிமையும் தலைவர் பிரிந்து சென்ற நாட்டின்கண் இல்லையோ, எனப், பிரிவிடை கிழத்தி, தோழிக்குக் கூறினாள் *[குறு.330:7]*. பெரிய மழை பெய்யத் தொடங்குதலினால், அத்தலைவருடைய நாட்டிலுள்ள ஆரவாரத்தையுடைய மகளிர் திரள், நீராடும்பொருட்டுப் புகுகின்ற அருவியினால் கழுவப்பட்ட நீலமணியைப் போல தோன்றுகின்ற, தண்ணிய நறிய குண்டுக்கற்கள் உயர்ந்த மலையைத், தலைவர் நல்காராயினும், தோள்கள் கவின் பெற அங்கே வந்து பார்ப்பாயாக', என, வரைவுணர்த்திய தோழி, தலைமகட்கு உணர்த்தினாள் (வரைவு நீட்டித்தவிடத்து, ஆற்றாளாகிய தலைமகளைத், தோழி ஆற்றும் வகையால் ஆற்றுவித்ததூஉமாம்) *[குறு.367:4]*. தும்பி! நல்லமொழிகளை ஒருவர்பால் கூறும் திறத்தில் அச்சம் இல்லை. தலைவர் நாட்டிலுள்ள தலைமையையுடைய உயர்ந்த மலைக்குச் செல்வாயாயின், தலைவி, தன் சுற்றத்தாரிடத்து நின்றும் நீங்காளாயினாள், என்று, கூறுவாயாக', என வரைவிடைக், கிழத்தியது நிலைமை, தும்பிக்குச் சொல்லுவாளாய்ச், சிறைப்புறமாகத், தோழி கூறினாள் *[குறு.392:2]*. வேறுவேறாகிய பல நாடுகளில் நின்றும் கலங்களைக் காற்றுச் செலுத்தலானே, வந்திறுத்த பலவகைப் பண்டங்கள் இறக்கியிட்ட, கடற்கரைக்குரியவன் தலைவன் *[நற்.31:8]*. செந்நாய், மரையாவைக் கொன்று தின்றொழிந்த மிச்சில், சேய் நாட்டு அருஞ்சுரம் செல்வார்க்கு உண்ணும் உணவாகும் *[நற்.43:4]*. அருளில்லாத அம்மாலைப் பொழுதானது, பொருளீட்டும் முயற்சியால் நம்மைக் கைவிட்டு அகன்ற தலைவர் சென்ற நாட்டிலும் இத்தகைமைத்தாகத் தோன்றுமாயின், தான், ஏறட்டுக் கொண்ட செயலின்கண்ணே உறுதிகொண்டு தங்கியிருப்பாரல்லர், என, வினைவயிற் பிரிதலாற்றாளாய தலைவி கூறினாள் *[நற்.69:10]*. தலைவரது நாட்டின்கண் உள்ள புன்னையின் அரும்புகள் மலர்ந்து, கடலின் துறையிடத்து மேய்கின்ற இப்பியின் புறத்து விழுந்தன *[நற்.87:5]*.

பைங்கிளி! நீ பலாமரங்கள் மிக்க சாரலையுடைய அவர் நாட்டின்கண் உள்ள நின் சுற்றத்திடத்தும் செல்வையாயின், அம்மலை கிழவோர்க்குக் குறவர் மடமகள் ஏனல்காவலுக்கு அமைந்தாள் என உரைத்து, என்குறை முடிப்பாயாக', எனத், தலைவி, காமம் மிக்க கழிபடர் கிளவியால் கூறினாள் *[நற்.102:5]*. நடுநாள் வருதலை யாம் அஞ்சுகின்றேம்', எனக் கூறி, வரைந்தெய்தலை இரந்து கேட்போமாயின், மணம் புரிந்து கொண்டு, வேங்கை மலர்மாலை சூடுகின்ற குறவர், பசிய கற்பாறையிலே தினையைத் துவைத்து அதன் தாளை நெடிய போராக விடும் பொருட்டு வைகறையில், களிறுகளை எழுப்பும், தம் பெருங்கல் நாட்டகத்தே மெல்ல நம்மொடு செல்வர்', என, வரைவு நீட்டிப்ப ஆற்றாளாய தலைவியைத், தோழி வற்புறுத்தினாள் *[நற்.125:12]*. ஈத்த மரங்கள் மிக்க களர் நிலத்திலே, களிற்றியானை, நெறியிலே செல்பவரைக் கொல்லுதற்குச் சுரத்தின்கண்ணே குறுக்கிட்டுச் சென்று, அயலார் யாரையும் காணாத நிலையில், தான் கொண்டிருந்த சினத்தைப் பனைமரத்தில் மோதி அடங்குகின்ற, பாழ் நாட்டினையுடைய பாலை நிலத்தில், பிரிந்து சென்று ஈட்டப்படும் பொருள்தரும் இன்பம், இளமையில் நுகரும் காம இன்பத்திலும் இனிதாமோ? எனப், பொருள்வலித்த நெஞ்சினைத், தலைவன் நெருங்கிச் செலவழுங்கினான் *[நற்.126:6]*. அவர் நன்மலை நாட்டின்கண்ணே, தவழாநிற்கும் அம்மழை, நின் கூந்தல் போலிருத்தலானே, அதனைக் காண்டலும், நின்னைக் கருதி, இன்னே வருகுவர் காண்', என, வரைவு நீட ஆற்றாளாகிய தலைமகளைத், தோழி ஆற்றுவித்தாள் *[நற்.197:12]*.

ஓமைமரத்தின் கிளைகளுள் மறைந்து தங்கிச் சிள்வீடு ஒலிக்கும் சேய்நாட்டு அத்தம் கடந்து பொருள்தேடினலல்லது,

மடிந்திருந்தோர்க்குப் பொருளின் சேர்க்கை இல்லை, எனத், தலைவன், பொருள்தேடச் சென்றான் *[நற்.252:2]*. தலைவி, தலைவன் கூறும் பொய்ம்மொழியிலே மயங்கி, அவன் சேய் நாட்டை அடைய, வழியில் நெல்லின் காயைத் தின்று, சுனைநீரைப் பருகிச் சென்றமையை, மனை மருண்டு கூறல் *[நற்.271:4]*. சாரலின்கண்ணே அகில்சுடு கானவன், சருகில் தீயிடுதலானே நறுமணம் வீசுகின்ற புகை, மழை போல மறைக்கும் நாடுகெழு வெற்பனோடு அமைந்த நம் தொடர்பு, கழிந்து விட்டது போலும்', எனச், சிறைப்புறமாகத், தோழி, செறிப்பு அறிவுறீஇ வரைவு கடாவினாள் *[நற்.282:9]*. வேறாகிய பலப்பல நாடுகளில் நின்றும், காற்றுச் செலுத்துதலால் வந்த, பலவாய தொழிலின் பொலிவு பெற்ற கலங்கள் பெருகித், துறைக்கண் தோன்றும் *[நற்.295:5]*.

சேய் நாட்டிலே களிறுகாலால் உதைத்தெழுந்த புழுதி, வேல மரங்கள் நெருங்கிய, செல்வோருக்குத் துன்பம் செய்யும் நெறியை மறைக்கச் செல்லும் தலைவர், மழையை நோக்கிமலர்ந்த தெறுழ்மலர், வெண்மை நிறம் பொருந்தியிருத்தலை அறியாரோ? அறியின், பருவம் கழிகின்றதே என்று வருந்துவர், எனப், பருவம் கழிந்தது கண்டு தலைமகள் கூறினாள் *[நற்.302:6]*. பிரிந்துறையும் காதலர் சென்ற நாட்டில் துன்பம் தரும் மாலை இல்லைகொல்? எனத், தலைமகள், பிரிவிடையாற்றாளாய்க் கூறினாள் *[நற்.343:10]*. சேர்ப்ப! அலவன் ஆட்டும் என் தோழியின் சிலம்பு உடைபட்டதனாலே, கடல் நாட்டுச் செல்வன், யான், என நெறிகொண்டு போயினையாயின், சிலம்பினைக் கட்டுதற்குத், துறையிலுள்ள மணலைக் கொண்டு வந்து தந்து செல்வாயாக', எனத், தோழி கூறினாள் (கையுறை நேர்ந்ததோழி' தலைமகட்குக் கையுறையுரைத்தூஉமாம்) *[நற்.363:2]*. தலைவன் மடல்மா ஊர்ந்து, இடமகன்றவைப் புக்களையுடைய நாடும், ஊரும் சென்று, தலைவியின் நலம் பாராட்டினான் *[நற்.377:8]*. மரங்களில் படர்ந்த கொடியை மேய்ந்த எருமை, தின்றொழிந்த மலைப்பச்சையின் இலைகள், மகளிர் கலன்களுக்குப் பயன்படுமாறு கூட்டாநிற்கும், கொண்கானத்தின்கண் உள்ள நன்னது நன்னாட்டு, ஏழிற்குன்றத்தைப் பெறினும், யாரோ. பொருள் வயிற்பிரிவர்? எனப், பிரிவுணர்த்தப்பட்டு ஆற்றாளாய தலைமகளைத், தோழி வற்புறுத்தினாள் (வரைவுணர்த்தியதூஉமாம்) *[நற்.391:6]*. கெண்டை பாய்தலால், பிணியவிழ்ந்த, வண்டு மொய்க்கும், ஆம்பல் மலரையுடைய நாடுகிழவோன் ஆகிய மகிழ்நன், யாம் அழப்பிரிந்து, காதற்பரத்தையரிடம் தங்கினன், எனப், பரத்தையர் கூறினர் *[ஐங்.40:5]*. தென்னவன் நன்னாட்டு உள்ள தேனூர் அன்னவள் தலைவி *[ஐங்.54:1]*.

அன்னை! தலைவர் நாட்டில், அன்னம் தன் துணையெனக் கருதி மிதிக்கும் வளையைக் காட்டிலும் இலங்கும் இவள் ஆகத்தை நினைந்து காண்பாயாக என அறத்தொடு நின்ற தோழி, அது வற்புறுப்பான் வேண்டிச். செவிலிக்குக் கூறினாள் *[ஐங்.106:1]*. கடலிடத்தே, நாரை ஒலிக்கும், பனைமரங்கள் வளர்ந்துள்ள, தலைவன் நாட்டிற்குக், கொண்கனை எதிர்ப்படேமாயினும், செல்வேங்கொல்லோ? என, இடைவிட்டொழுகும் தலைமகன் வந்து சிறைப்புறத்தான் ஆனமையறிந்த தலைமகள், அவன் கேட்குமாற்றால், தோழிக்குக் கூறினாள் *[ஐங்.114:4]*. துறைவன் தழைவிலையென நாடு நல்கினன்', எனச், சுற்றத்தார் வேண்டிய கொடுத்துத், தலைமகன் வரைவு மாட்சிமைப்படுத்தமையறிந்த தோழி, உவந்த உள்ளத்தளாய்த், தலைமகட்குக் கூறினாள் *[ஐங்.147:3]*. 'தோழி! வளை நெகிழ்த்தோன், திரையெறிகின்ற கடல் சூழ்ந்த நாட்டை, மணற்குன்றிலேறிக் காண்கம் வா', எனத், தலைமகன் ஒருவழித் தணந்துழி, ஆற்றாளாகிய தலைமகளை, ஆற்றுவிக்கும் தோழி கூறினாள் *[ஐங்.199:4]*.

தலைவர் நாட்டில், தழையையுடைய கிணற்றின் அடியிலுள்ள, விலங்குகள் உண்டெஞ்சிய கலங்கல் நீர், நம் படப்பைக்கண் உள்ள தேன் கலந்த பாலினும் இனிய', என, உடன் போய் மீண்ட தலைமகள், தோழிக்குக் கூறினாள் *[ஐங்.203:2]*. கானவர், கிழங்கு அகழ்ந்த நெடிய குழி நிறைய, வேங்கைப்பூப் பரந்து கிடக்கும், அவர் நாட்டு மலை, மறையுந்தோறும், இவள்கண்கள் பனி ஆர்ந்தன', எனச், செவிலிக்கு, அறத்தொடு நின்றாள் தோழி *[ஐங்.208:3]*. நம் படப்பையிலுள்ள துறுகல் ஏறி அவர் நாட்டுக் குன்றம் நோக்கி நின்றால், இவள் இழை நெகிழாமல் நிலைபெற, இவள் உற்ற நோய் தணிதற்கும் உரித்து எனக்கூறித் தோழி, செவிலிக்கு அறத்தொடு நின்றாள் *[ஐங்.210:2]*. தலைவன், தலைவியின் கண் கலுழத் தன் சீருடைய நல்ல நாட்டுக்குச் செல்லும், எனத், தலைவன் ஒருவழித்தணப்பல் என்று கூறியவதனை, அவன் சிறைப்புறத்தானாகத், தலைமகட்குத், தோழி கூறினாள் *[ஐங்.214:5]*. நம் மேனி பசப்பத், தலைவர் தம் மலைகெழுநாடு செல்வர் என, ஒருவழித்தணந்து, வரைதற்கு வேண்டுவன முடித்து வருவல்', என்று, தலைமகன் கூறக்கேட்ட. தலைமகள், அவன் சிறைப்புறத்தானாய்க், கேட்பத், தோழிக்குக் கூறினாள் *[ஐங்.221:4]*.

வேழம், பெரிய சருச்சரையினையுடைய துறுகல்லைப் பிடி எனக் கருதித் தழுவும் குன்று பொருந்திய நன்னாட்டுக்குச் சென்ற பின், தோள் நெகிழ, வாராயாயின் யாம் வாழேம்', என, வரைவிடை வைத்துப் பிரிவல், என்ற, தலைமகற்குத், தோழி கூறினாள் *[ஐங்.239:3]*. பல மலர்கள் மலர்ந்துள்ள நறிய தண்ணிய சோலையையுடைய நாடு கெழுநெடுந்தகையின் குன்றம் பாடானாயின், வேலற்கு, அவ்வெறி என்ன பயனைச் செய்யுமோ? என, வெறி விலக்கலுறுந் தோழி, செவிலி கேட்குமாற்றால், தலைமகட்குக் கூறினாள் *[ஐங்.244:2]*. குறுமகளது கண் கலுழ நீ பிரியும் நாடு, சேயது. என, வரைவிடை வைத்துப் பிரிவல் என்ற தலைமகற்குத், தோழி கூறினாள் *[ஐங்.257:4]*.

நம் நெஞ்சம் கலங்க, நாடு இடை விலங்கிய (இருவர் நாட்டையும் தடுத்துப் பிரித்து) இடத்தையுடைய காடு இறந்தனள்', எனத் தலைமகள் புணர்ந்துடன்போகிய வழிச் செவிலியாற்றாமை கண்ட, நற்றாய் அவட்குக் கூறினாள் *[ஐங்.313:4]*. தலைவன் சென்ற மலையுடைய நன்னாட்டிலுள்ள புள்ளினங்கள்', 'யாம் துணைபுணர்ந்து தங்குகின்றோம். நீ எவ்வாறு பிரிந்துறைகின்றாய்', என்னாவாதலின், வல்லமையில்லாதனவோ?' எனப், புட்களை நொந்து, தலைவி கூறினாள் *[ஐங்.333:3]*. காதலர் சென்ற நாட்டின்கண் மாலையும் இன்று கொல்? என, மாலைப்பொழுது கண்டு ஆற்றாத தலைவி, தோழிக்குக் கூறினாள் *[ஐங்.339:4]*. மலர்களோடு, ஒலிக்கின்ற அருவிவீழ்கின்ற, செறிந்த பெரிய சோலையுடைய நம் மலை பொருந்திய நாட்டிற்கு, ஏகுமதி, எனத் (உடன்போய் மீள்கின்ற) தலைமகன், தலைமகட்குக் கூறினான் *[ஐங்.395:6]*.

அரிவை, மகனுக்குப் பாலூட்ட, முல்லை நிலம் சூழ்ந்த குறிய பல குவடுகளையுடைய நாடு கிழவோனாகிய தலைவன், அவள் சிறுபுறம் (புறங்கழுத்து) கவையினன் *[ஐங்.404:4]*. தாது நிறைந்த, வண்டுகள் ஊதும் மலர் நிறைந்த, முல்லைநிலம் சூழ்ந்த நாடு கிழவோன், மகன் விளையாடக், காதலியைத் தழுவியவாறிருந்தான் *[ஐங்.406:4]*. மென்மையான புலங்களையுடைய நாடு கிழவோன், இன்புறு புணர்ச்சி நுகர்ந்தான் *[ஐங்.407:4]*. வேந்தன் பகை தணிந்து தன் நாட்டிற்குச் செல்லுதலைப் பெறின் மடவரலைக் காண்குவெம்', என, வேந்தற்கு உற்றுழிப்பிரிந்த தலைமகன், வினைமுடியாமையிற், பாசறைக்கண் இருந்த பருவரவின்கண் கூறினான் *[ஐங்.444:5]*. மாயோயே! பாசறைக்கண் உதவி, நம் அன்பு பொருந்திய நல்ல நாட்டின்கண் போகும்பொழுது, கூந்தல் மணம் கமழ, நல்ல காண்குவம்', எனப், பாசறைக்கண் இருந்த தலைமகன், பருவரைவின் கண், உருவு வெளிப்பாடு கண்டு கூறினான் *[ஐங்.446:4]*. வேந்தன் பகை தணிந்து நாடு முன்னியர்; (நினைப்பானாக) என்கண், தலைவியின் இளமுலைப்படீஇயர், என, வேந்தற்குற்றுழிப்பிரிந்த தலைமகன், வினைமுற்றாமையிற், பாசறைக்கண் இருந்து, தன் மனக் கருத்துரைத்தான் *[ஐங்.450:2]*. முல்லைநிலம் சூழ்ந்த நாடு கடந்து சென்ற தலைவர், எழிலை வாட்டுநர் அல்லர்', எனத், தோழி தலைவியை வற்புறுத்தினாள் *[ஐங்.462:5]*. தலைவர், பகைவரின் நாட்டின்கண் உள்ள நல்ல அணிகளைத் தருதல் வேண்டி நீடினர்; வாராதமைதல் இலர், எனத், தோழி வற்புறுத்தினாள் *[ஐங்.463:4]*. பாண! அன்பில்லாத தலைவர் சென்ற நாடு, அன்பில்லாத மாலைக்காலத்தையும் உடையதோ? எனத், தலைமகள் வினவினாள் *[ஐங்.476:5]*. பாண! பல நாடுகளை இடையிட்டுப் பிரிந்த எம்மிடம், வாடைக்காற்றுத் தனிமையை இகழும் காலத்தில், தலைவி கூறியதை எமக்குக் கூறுவாயாக; அவை சொல்லுந்தோறும் இனிமையாகவுள்ளன, எனத், தலைவி விடத், தூதாய்ச் சென்ற பாணனிடம், தலைவன்கூறினான் *[ஐங்.479:2]*.

ஆள்பவர் கல்க்கமுற அலைத்தலைப் பெற்ற நாடு போல், பிரிவினால் அழகு கெட்ட முகத்தோடே வருத்தத்தைக் கொண்டு, தலைவி ஆற்றியிருப்பாள் ஒருத்தியோ? (பிரிந்தவன்றே இறந்துபடுவள்) எனத் தோழி கூறினாள் *[கலி.5:12]*. நின் பிரிவால் இவள் கண்கள் அழுது நீரைத் துளிக்குங்கால், பிணித்த வேட்கையாகிய சங்கிலியை அறுத்துப் பிறர் நாட்டிடத்தே போய், நிலை பெற்ற மெய்ப் பொருள்களைக் கூடிய கூட்டத்தாலே (இவள் நலத்தை) மீட்டல் பொருந்துமோ? எனப், பிரிவுணர்த்திய தலைமகற்குத், தோழி கூறினாள் *[கலி.15:18]*. தன்னை நிழலாக அடைந்த குடிமக்களுக்கு, நெஞ்சுவருந்தாதபடி பகைவரைப் பேணிக்காத்து, வென்ற புகழை உலகத்தார் புகழப், புதுமையையுடைய நாட்டிலே இருக்கின்றவர், இளவேனிற் காலத்தே, கூட நினைப்பார்; நச்சுதல் கொண்டு தம்மை நிழலாக வந்தடைந்த குடிமக்களைத் தமக்குக் கடனென்று பொறுத்து, உலகத்தார் புகழத் தமக்கயலாகிய நாட்டுறைபவர், திருமருதம்துறை முன்னே அருளுதலைச் செய்வார்; முன்னைய அரசர் செய்த வருத்தத்திற்கஞ்சி, நிழலாக வந்தடைந்தார்க்கு, நெஞ்சு வருந்தாதபடி பகைவரைப் பேணிக்காத்து, நெறியன்றி, அவ்வரசர், பொருளை விரும்புகையினாலே, அவரை நீங்கின நாட்டு உறைபவர், நாம் அழகிழப்பதற்கு அருளுதலைச் செய்வார்', எனக் கூறித் தோழி, தலைவியை ஆற்றுவித்தாள் *[கலி.26:12,16,20]*. அறிவில்லாத அமைச்சர் செயலைப் புலப்படுத்தப், படைவலியில்லாத அரசன் நாட்டிலே, பகையரசன் படைவந்து விடுமாறுபோல, இளவேனில் தங்கியது *[கலி.27:7]*. சேய் நாட்டிலே பொருட்பிணியாலே போய், நின், தேன்போலும் மொழியை நினைந்து, தலைவர், நம் அருந்துயரைக் களைவாராக வந்தார்', எனத், தோழி, அவன் வரவுணர்ந்து கழியுவகையாற் கூறினாள் *[கலி.29:23]*. நம்மையருளாத நாணற்றவன் நாட்டு மலை, ஒளியையுடைய நிறத்தைக் கொண்ட அருவியையுடைதாயிரா நின்றது. இதன் காரணத்தை மனத்தால் ஆராய்வோம் வா, எனக் கூறித், தோழி இயற்பழித்தாள் *[கலி.42:12]*. 'நம்மருளாதவன் நாட்டு மலை, பொன்னணி,யானை போல் தோன்றும்', எனக் கூறித், தோழி இயற்பழித்தாள் *[கலி.42:18]*.

நல்ல நாட்டிற்குப், பகை தம்மிடத்தே வந்ததாக, அவ்விருப்பைக் கைவிட்டுத், தம் இடத்தைக் காக்கின்றவனுடைய குடைநிழலின் ஊர்களை இருப்பாக நினைத்துக், குடி மக்கள் தங்கினர் *[கலி.78:4]*.

தன் மண்ணைக் கடல் வெளவலின், தன் நாடு இடமுண்டாம்படி பகைவர் மேலே சென்று அவர் புலிப்பொறியையும், விற்பொறியையும் போக்கிக் கயலைப் பொறித்தவன் பாண்டியன் *[கலி.104:2]*. பாண்டியன் பிற நாடு (களைக்) கொண்டு, இமயத்திற்கு வடதிசையிலேயும் மன்னி விளங்குக, என்று, பாம்பணைமேல் பள்ளி கொண்டோனை வாழ்த்தல் *[கலி.105:72]*.

நாடு அணிமிக, நிலம், வளம் பெருக வையைப் புனல் வந்தது [பரி.7:9]. வழுதி நாடும் (நாட்டிலுள்ளாரும்) நகரும் அடைய வந்து, குன்றேறிச் செவ்வேளை வணங்கின [பரி.19:27]. கவர்ச்சியையுடைய மானே! மறுத்தலை ஒழி. நும்மை நச்சின காமுகர், நுமக்குத் தரும் பொருள்கள், நாடு (நாட்டிலுள்ளார்) அறிய நும்மனவே, எனத் தலைவியைச் சார்ந்த மகளிர் பரத்தையை வெகுளி தணிவித்தல் [பரி.20:85]. புனலாடுவார், கொண்டையில் புனல் தந்ததாகப், புனல் நடுவே நாடறியப் பூமாலை அப்பி நினைவாரை நெஞ்சிடுக்கண் செய்வார் [பரி.தி.2:53].

நாண்- நாணம் (வெட்கம்). நாணல்லது - நாணமல்லது-வேறில்லாத கற்பினையும், மெல்லிய இயலினையும் உடைய குறுமகளை நினைந்து செல்வல்; நோயிலராக நின்புதல்வர்', எனப் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் பரிசில் நீட்டித்தானை, ஆவூர் மூலங்கிழார் பாடுவர் [புற.196:13]. போர்க்களத்தின்கண் மாற்றார் எறிந்த நெடிய வேல் வந்து பாய்ந்ததனால், நாணுடைய நெஞ்சுட்னே வீழ்ந்து கிடந்த மறவன் மார்பினைத் தழுவுதற்கும் இடமின்றிப் பருந்துகள் மொய்த்தன [புற.288:6]. வள்ளுவன் குறும்பர்க்கு எறியும் தண்ணுமை ஒலி கேட்ட துணையானே புறப்படாத நாணமில்லாத மறவர் விரையச் சென்று போர்ப்பூவைப்பெற ஒலித்தது [புற.293:3]. இடையன் கொளுத்திய சிறிய சுடரையுடைய விளக்கொளியில் பாணரொடு இருந்த நாணுடை நெடுந்தகை, வேந்தர்க்குக் கேடு வந்துழி, உடன்கெடும் உயிரித்துணையாவான் [புற.324:12].

நாண் வருத்தலால், பிறரை நோக்காது, கவிழ்ந்த, நன்மை விளங்குகின்ற கழுத்தினையுடையவள் பாடினி [பொரு.31]. தலைவன் நெடுநாள் களவொழுக்கம் நிகழ வேண்டுமென்று தலைவியின் முகத்தைப் பார்த்து நகைத்தான். அந்நிலையில் தலைவிக்கு இயல்பாகிய நாணும், அச்சமும் வந்து தோன்றுகையினாலே, அவளை நீங்கவும் விடானாய் முயங்கினன் [குறி.184]. பகைவர் முதுகிட்ட அளவிலே தமது வெற்றி தோன்ற ஆரவாரித்தாராக, அது பொறாமல், இவ்விடம் உயிர்கொடுத்ததற்கு நல்ல காலம் என்று மீண்டு, நாணுடை மறவர் உயிர் கொடுத்தனர் [மலை.387].

தலைவி நாணொடு செறிந்த கற்பினையும், ஒள்ளிய நெற்றியினையும் உடையவள் [அக.9:24]. நாண் மிக்க நம் தலைவியது மாண்புற்ற நலத்தினை அடையப், பாகனே! நம் தேர் விரைந்து செல்வதாக', என, வினைமுற்றிய தலைமகன், தேர்ப்பாகற்குக் கூறினான் [அக.34:18]. வெட்சியாருடன் நிகழ்ந்த நல்ல போரினை வென்றுபட்ட நாண் மிக்க மறவர்கள் நடுகல்லில் பெயரும், பீடும் எழுதப் பெற்றனர் [அக.67:8]. வெற்ப! இவளை வரைந்து கொள்ளின் என்ன குறை? யாம் அயலேமாகிய புதியேம் போலத் தலைவியின் புதிய நாணாலாகிய ஒடுக்கத்தினையும் காண்பேமன்றோ? எனத், தோழி வரைவு கடாவினாள் [அக.112:19]. ஊரனே! உறுதியாக நீ பெரிதும் நாணில்லாதவனாவாய்', எனக் கூறித், தோழி வாயில் மறுத்தாள் [அக.116:5]. மிக்க நாண் கொண்ட சிறிய மெல்லிய சாயலினையுடைய தலைவி அழகுகெட, அமையாது, அழுதலைத் தொடங்கியுள்ளாள், எனத், தோழி பகற்குறிக்கண், தலைமகளை இடத்துய்த்து வந்து, தலைமகனை எதிர்ப்பட்டு நின்று கூறினாள் [அக.120:7]. பல நாள் நீட்டித்த களவுப்புணர்ச்சியை, வினையின்றியிருத்தற்கு நாண் உடைமையின் நீங்கித், தலைவன் பொருள்வயிற் சென்றான் [அக.187:3].

ஊரனே! நின் வஞ்சனை பொதிந்த சொற்களைக் கூறாதே; நீ உறுதியாக நாண் உடையையல்லை', எனத், தலைமகற்குத், தோழி வாயில் மறுத்தாள் [அக.226:2]. தம் பகைவர் செருக்கினை ஒழித்தலும், தம்மைச் சேர்ந்தோருக்கு உற்றவிடத்து உதவும் ஆண்மையும் இல்லின்கண் வாளாமடிந்திருப்போர்க்கு இல்லை என்றெண்ணி, நல்ல புகழைக் கருதிய நாண் உடைய மனத்தராய்த், தலைவர், வெஞ்சுரம் கடந்து சென்றார் [அக.231:4]. மகிழ்ந! காமம் அளவு கடந்து மிகுதலினாலே, நாண் இழந்து, நீ, பரத்தையருடன் நீர் விளையாட்டு நிகழ்த்தினை, எனப், பலரும் கூறுவர்', எனப், பரத்தையிற் பிரிந்து வந்து கூடிய தலைமகற்குத், தலைமகள் கூறினாள் [அக.266:8]. இவ்வுலகத்தின்கண்ணே நாணும்; நட்பும் இலராயினாரை ஆராயின் என்னையொழிய யாருமிலராவார்' எனக் குறைவேண்டிப் பின்னின்ற தலைமகனுக்குக், குறை நேர்ந்த தோழி, தலைமகட்குக் குறை நயப்பக் கூறினாள் [அக.268:8]. வாடைக்காற்றோடு, இளமுலையின்கண்ணே தோன்றியவேட்கையாகிய இளமுளை, நெஞ்சிடத்தே வருத்தமாகிய திரண்ட அடியாய் நீண்டு, அம்பலாகி, அழகிய கிளைகளைக் கொண்டு, காதல் என்னும் தளிர்களைப் பரப்பிப் புலவர் புகழ்ந்த நாண் இல்லாத பெரிய மரமாகி, நிலத்தின் எல்லையெல்லாம் கவிந்து, அலராகிய மலர்களைச் சொரியவும், வாராத தலைவர், நமது பெண்டிர் உலகத்து இயல்பினை நினைந்திலரோ? எனப், பிரிவின்கண் தலைமகள் அறிவு மயங்கிக் கூறினாள் (நாணில் பெருமரம் என்பதற்கு நாரில் பெருமரம் எனவும் பாடமுண்டு) [அக.273:15]. ஊரனால் நமக்கு ஆம்,பழி ஆவதாக; இனி நமக்கு நாண் என்பதும் உளதாகுமோ? எனத், தலைமகட்குப் பாங்காயினார் கேட்பப், பரத்தை கூறினாள் [அக.276:6]. 'நம் நெஞ்சம், தலைவனைச் சார்ந்த பின்னரும், காமத்தினைக் கூற நாணியதோ', எனத், தோழி கூறினாள் [அக.330:10]. விற்படை நெருங்கிய அரிய போரினை அழியக் கொன்று, நல்ல புகழை நிலை நாட்டிய, நாண் (மானம்) உடைய மறவர் நடுகல்லாயினர் [அக.387:14].

தலைவர் பிரிந்த நாளில் உடம்பட்டுக் கூதிர்க்காலத்துப் பிரிந்துறையும், பொருட்டு அழுதலால், எம் கண்கள், உறுதியாக நாணில்லாதன', எனப், பிரிவிடை மெலிந்த கிழத்தி,

தோழிக்குக் கூறினாள் *[குறு.35:1].* பிறர் கூறும் பழமொழியை அஞ்சினால், காமம் மெலிவடையும்; பிறர் இழித்தலும் அறும்படி, அக்காமத்தை விட்டுவிடின், என்பால் இருப்பது நாண் ஒன்றே, என, வரைவு நீட்டித்த வழித், தலைமகள், தோழிக்குக் கூறினாள் *[குறு.112:2].* தோழி! நாண், நம்மோடு நெடுங்காலம் உடனிருந்து வருந்தியது; இனிக் காமம் மேன்மேலும் நெருக்க, என்பால் நில்லாது போய்விடும்; அஃது இரங்கத்தக்கது, என, உடன் போக்கு உணர்த்திய தோழிக்குத், தலைவி கூறினாள் *[குறு.149:1].* குதிரையை ஊர்ந்து, நாணத்தைத் தொலைத்துக், காமநோய் மிகுதியாக, இக்காமநோய், இன்னாளால் உண்டாக்கப்பட்டது என்று, யான் கூற, இவ்வூர், அவள் பழி நுவலும் எனக், குறைமறுக்கப்பட்ட தலைமகன், தோழிக்குக் கூறினான் *[குறு.173:3].* நெஞ்சே! தலைவி நம்மாட்டு நெஞ்சம் நெகிழ்ந்திலள்; நாம், அத்தலைவியிடத்தே விடுதற்கமைந்த தூது, பிறர் எள்ளுமாறு, மடல்மாவின் மேல் தோன்றி, ஒருநாளில், பெரிய நாண் நீக்கித், தெருவின்கண் செல்லவும் தருவதோ?', எனத், தோழியால் குறை மறுக்கப்பட்ட தலைவன், தன்னெஞ்சிற்குக் கூறினான் *[குறு.182:4].* 'நுண்வலை உடைய பரதவர் மடமகளின்,கண்வலையில், செல்வோர் அகப்படுகின்ற கானலிடத்தே, என் நாண் தகுதியமைந்த நெஞ்சம், ஆராயாது சென்று, அக்கண் வலையின்கண்ணே பட்டு, அங்கேயே தங்கி விட்டது', என்று, தலைவன், தன் பாங்கனிடம் கூறினான் *[குறு.184:4].* நாண் அழித்து நல்லறிவு இழந்த காமமானது நெடுந்தொலை போய் அழியும்படி, தலைவர், நம்மைக்கண்டும் (காணார் போன்று) வேறொன்றும் புரியாமல் செல்லுவார் *[குறு.231:4].* 'தோழி! தொடி நெகிழ்ந்தன; தோள் சாய்ந்தன; இனிவிடுதற்குரிய நாண் உண்டோ? அது முன்னரே ஒழிந்தது', எனச் சிறைப்புறமாகத், தலைவி கூறினாள் *[குறு.239:2].* நல்ல நாணத்தைவிடச் செய்த, குற்றமற்ற,மாமையை, நம் வலிய இயல்பினால் பொறுத்திருத்தல், அல்லது சொல்லுதற்கு ஆற்றல் இல்லாத மெல்லியலோய்! என, வரைவு மலிந்த தோழிக்குக், கிழத்தி உரைத்தாள் *[குறு.368:2].* தலைவர் தங்குமிடத்திற்கு நாம் நீங்கச் சென்றால் நம் நாண் இரங்கத்தக்கதாக அழியும்', என, வரைவிடை வைத்துப் பிரிய ஆற்றாளாகிய கிழத்தி, நாம் ஆண்டுச் சேறுமெனத், தோழிக்கு உரைத்தாள் *[குறு.395:7].*

'சேர்ப்பனே! முன்னாள் முதற்கொண்டு எம்முடன் வளர்ந்து வந்த நாணும் விட்டேம்; இனி, இவ்வூர் அலர் எழுவதாக! 'என, வரைவு நீட்டித்தவழித் தோழி, தலைமகற்குச் சொல்லி வரைவு கடாவினாள் *[நற்.15:10].* 'தோழி! அன்னை மெல்லிய இனிய மொழிகளைக் கூறலின், யான், விரைந்து உயிரினும் சிறந்த நாணும் மிகவும் மறந்து, தலைவனது மார்பைப் பிரிந்தமையால் வந்த வருத்தத்திற்கு, அழாநின்றேன், என்று, கூறத் தொடங்கி, அப்பால் நினைவு வரத், தவிர்ந்தேன், என முன்னிலைப் புறமொழியாகத், தலைமகள், தோழிக்குக் கூறினாள் *[நற்.17:8].* பரத்தையோடு குரவையாடி, மகளிர் வடிவம் கொண்டு நின்ற தலைவனை, எதிர்ப்பட்ட தோழி, எலுவ! நீ நாணுடையை அல்லை' எனக் கூறினாள் *[நற்.50:8].* ஆயத்தோடு, தகுதியுடைய நாண், தன்னை வளைக்கப்பட்டு, என்னைப் பெறுமாறு, தைத்திங்களிலே நீராடுகின்ற, அவ்விளமகளே, யானுற்ற நோய்க்கு மருந்தாவாள்', எனச், சேட்படுக்கப்பட்டு ஆற்றானாய தலைமகன், தன்னெஞ்சிற்குக் கூறினான் *[நற்.80:6].* குறுமகளுடைய பூண் தாழ்ந்த ஆகம் நாண் துன்புறுத்தலாலே வருததமுற்றுப் பசலையையும் உடையது; ஆதலால், நின் மணமுரசொலி கேட்பின் நம்மைக் காதலன் வரைய வருகின்றனன் போலும் என்று கருதும் எனக் கூறித், தோழி வரைவு கடாவினாள் *[நற்.93:9].* மறையாது ஊர் அலர் தூற்றும் பழிச்சொல்லையும் சொல்லவேண்டிய நம் காதலனுக்கு நாம் நாண் மேலீட்டினால், சொல்லது ஒழிந்தோம், எனச் சிறைப்புறமாக தோழி தலைமகனை வரைவு கடாவினாள் *[நற்.263:3].* 'நெஞ்சே! நீ வாழ்க; நாண் விட்டு அருந்துயர் உழந்த காலைக் காமநோய்க்கு மருந்து எனப்படும் மடவோள், அன்னப்பறவை நடப்பது போல நடக்க, நாம் நேரே கண்டு மகிழ்ந்தேம்', என, உடன்போகாநின்றான், மலிந்து தன்னெஞ்சிற்குக் கூறினான் *[நற்.384:9].* தலைவர், இரவில் வருதலாகிய துன்பத்தினின்று நாம் பிழைக்க வேண்டி, அவர் புதியராய் வரும் வருகையும், நின், வதுவைக்காக நாணால் ஒடுங்கும் ஒடுக்கமும் கண்டக்கால், வரைய வருவதற்கேற்ப, நமர் உடன்படுவரோ? உடன்படி, காதலரோடு மகிழ்ந்து பேசுவரோ? எனத், தோழி, வரைவு மலிந்து கூறினாள் *[நற்.393:13].*

நாணுடை நெஞ்சே! சேர்ப்பனை நாம் மறந்தோம்; அவன் வரக்காண்குவம் (அவன் மறவான்) என்பது, களவுநீடு வழி, வரையலன் கொல், என்று, அஞ்சிய தோழிக்குத், தலைமகள் சொல்லியது *[ஐங்.112:4].* 'பாண! உறுதியாக நீ நாண் அற்றவன்', எனத் தலைமகள் கூறினாள் *[ஐங்.136:1].* அன்னை! என் தோழி மிக்க நாண் உடையள்; நின்னையும் அஞ்சுவள்; நாடன் மார்பில் துஞ்ச விருப்பமுடையள்; யான் நோகுவேன், எனத், தோழி, செவிலிக்கு அறத்தொடு நின்றாள் *[ஐங்.205:2].* நாட! நீ நயந்தோள் கண்கள் நீர்த் துளியைச் சொரிந்தன; மிக்க நாண் உடையராயிருக்கின்றேம்', எனக் கூறித், தோழி, தலைமகனை வரைவு கடாவினாள் *[ஐங்.266:3].*

தோள் நெகிழ்ந்த துயரால் துணிந்த ஓர் நாணின்மை (நாணற்ற செயலை) செய்தேன். தினைப்புனத்தில் ஊசலாடும்போது வந்த ஒருவனை, ஊசல் ஆட்டக் கூறினேன்; ஊசலாட்டும் போது அவன் மார்பிற் பொய்யாக வீழ்ந்தேன்', எனத், தலைவியின் உள்ளக்கிடை அறிதற்குத், தோழி படைத்து மொழிந்தாள் *[கலி.37:12].* நல்லாய்! நம்மை வரைந்து கொள்ளும் நல்ல நாள் நம்மிடத்தே வருமளவில், நம் சுற்றத்தார் தம் மலையிடத்து, நாண் தாங்குவார், என்ன நல்வினையைச் செய்தார் கொல்லோ? எனத், தோழி கூறினாள் *[கலி.39:32].* நம்மை நாண் வருத்துகையினாலே, அவனைப் போக்குதல், அவன் இறந்துபடுகின்ற நிலைமைக்கண் பொருந்தாது; அவன்

இறந்து படுகின்றவனைப் பேணினார், என்று, நன்மக்கள் புகழ்ந்து கூறப்படுதல், பெண்மையுமன்று', எனத் தோழி உரைத்தாள் *[கலி.47:20].*

நீ விடியற் காலத்திலே வந்து வரைந்து கொள்ளுதலை விரும்பாநின்றேன்; அப்பொழுது, நீ புதியாய் போல வரும் நின் வரவையும் மணத்தின்போது தோன்றிய நாணால் இவள் ஒடுங்கியிருக்கும் ஒடுக்கத்தையும் யான் காண்பேன்', எனக், கூறித், தோழி வரைவு கடாவினாள் *[கலி.52:25].* இவ்வூரில் அம்பல் அலர்வதாக, என்று கருதி, நாணும், நிறையும் விரும்புதலில்லாத, குடிப்பிறப்புக்குரிய ஒழுக்க நெஞ்சில்லாதவன் நின் முயக்கத்தைக் கருதித் துயில் கொள்ளானாய், நம் கேண்மையை விருப்புற்றவனை, நாண் அடுகையினாலே நீக்குதல், நயப்பாக வருதலின்று; அதற்குத் தக்கது அறிவாய் என்றாள் *[கலி.60:29,32].* ஒண்டொடீ! இவன் அறுதியாக நாண் இலன்', எனத், தோழி கூறித், தலைமகளைக் குறை நயப்பித்தாள் *[கலி.61:20].* 'ஏஎ! இவன் ஒருத்தன், தன்னொடு புணர்ச்சிக் குறிப்பின்றி நிற்பாரையும், தான் புணர்ச்சிக் குறிப்புடையனாய்க், கையாலே வலிதிற் பிடித்துக் கொள்ளும், ஆதலால், நாண் இலானாயிருந்தான்', என்பது, தலைவி கூறிக், கூடக் கருதும் பெருந்திணை *[கலி.62:1].* பரத்தையருடைய எயிறுகள் அழுந்துகையினாலே, சிவந்த வடுக்களைக் காட்டி, நாணின்றி வரின், துனிப்பேன் என்பேன்; ஆயின், அவனைக் காணில், என் நெஞ்சு, அவனிடத்தே தாழும்', எனத், தலைவி, தோழிக்குக் கூறினாள் *[கலி.67:15].* மான்போலும் நோக்கினையுடையாய்! நீ அழும்படி நின்னைக் கைவிட்டவன் நாண் இலன் ஆயின், அவனிடத்தே ஊடுகின்ற தன்மை என்ன பயனைத் தரும்?' எனத், தோழி உரைத்தாள் *[கலி.87:11].*

தலைவன் பேணி என்னைச் சிறிது அளித்தக்கால், என் நாண் இல்லாத நெஞ்சம் நெகிழ்தலையும் காண்பேன்', எனத், தலைவி கூறினாள். *[கலி.122:11].* தோழி! நம்முடைய நாணை நம்மிடத்தே நிறுத்துதலைச் செய்வோம் என்றுணர்ந்திருத்தல் அரிது; அதற்குக் காரணம், வேட்கை பெரியதாயிரா நின்றது, எனத் தலைவி வன்புறை எதிரெழிந்து கூறினாள் *[அக.137:1].* வேழம் மதத்தாலே பாகனுக்குச் செய்யும் தொழிலைத் தவிர்ந்து, தோட்டியையும் கை கடந்தாற்போலத், தன் மேற்சென்ற வேட்கையினாலே, வேண்டியவாறொழுகாதபடி தனக்குக் காவலாகிய அறிவும் அறிவாலே ஆராய்ந்த அடக்கமும், இயல்பாகத் தோன்றிய நாணுடனே வறுவிதாக, அவற்றைக் கைகடக்கும்படி, என்னெஞ்சைக் கைக்கொண்டு, தன் நலத்தை யான் காணாமல் மறைத்தாள்', என, மடலூர்ந்து தலைவியை எய்திய தலைவன், தன் பாங்காயினார்க்குக் கூறினான் *[கலி.138:3].* தனக்குச் சிறந்த தன் நாணையும், மற்றுமுள்ள நன்மைக் குணங்களையும் நினையாது காமம் ஒன்றையே நினைந்து அலமந்தாள், என்று (பெருந்திணைத்) தலைவியை இகழ்ந்து கூறல் *[கலி.145:10].* நாணும் நிறையும் உணர்கல்லாள் பெருந்திணைத் தலைவி *[கலி.145:6].* தலைவன் அன்பிலனாதலை அறியாதே, அவனோடே புணர்ந்து, தன் அழகினையும், நாணினையும், உள்ளத்தினையும் தலைவி இழந்தாள் *[கலி.146:20].* தலைவி, தோள் நலம் உண்டானை இகழ்ந்தாள் போல், தெருவில் வந்து ஊண் யாதும் இலளாகி, உயிரினும் சிறந்த நாண் யாதும் இலளாகி நகைத்தாள் *[கலி.147:9].*

நலத்தோடு அளவிய நாண் அணிந்தோரும், நடையில் மடம் பொருந்திய நாண் அணிந்தோரும் ஆகிய மகளிர், இருந்தையூர் வரைகெழு செல்வன் (ஆதிசேடன்) கோயிலில் சென்று வழிபட்டனர் *[பரி.தி.1:39,41].* தலைவிக்கு நாணே பழைமையான அணி *[பரி.தி.5:3].*

நாணு காண்க.

**2. வில் - நாண்.** மலையை வில்லாகவும், பாம்பை நாணாகவும் -வில் நாணாகவும் - கொண்டு, இறைவன் மூவெயிலை அழித்தான் *[புற.55:1].* வலிய வில்லில் கட்டப் பெற்ற, நாண் உகைத்த அம்பாகிய, மழைத்துளி பொழிந்தது *[புற.369:8].*

தலையிலே முடிந்த, நாண் உடைய வில்லைச், சார்த்தி வைத்த, அம்பு தங்கும் அகற்சியையுடைய, வீடுகள் *[பெரு.120].*

வலிய வில்லினது முறுக்குதலையுடைய நாணில் எழுந்த, அரிமா இடித்தாற்போன்ற, ஒலியாலே, பகைவரைப் புறங்கண்டனர் *[கலி.15:2].*

நாகத்தை நாணாக, மலையை வில்லாகக், கொண்டு, இறைவன் மூவெயில் அழித்தார் *[பரி.5:24].* 'இறைவன் முப்புரத்தை எரித்தபோது இமயமாகிய வில்லுக்கு நாணாக இருந்தவர் திருமால்', என, அவர் புகழப் பெறுவர் *[பரி.தி.1:77].*

**3. யாழ்-நரம்பு** யாழினது நாண் - நரம்பு - (குரல்) கொம்மென ஒலிப்ப, அதற்கேற்ப, முரசொலியை எழுப்பினார் *[பரி.19:44].*

**4. கயிறு.** மூங்கிற்கோலைத், தலையிலே வரித்துக் கட்டின நாணிடத்தே - கயிற்றிடத்தே - தூண்டிலைக் கொளுத்தினர் *[பெரு.285].*

ஓரிடத்து நிலைபெற்றோர் இட்ட, நெடிய நாண் உடைய, தூண்டில் *[மலை.456].*

நாணைக் கொண்ட நுண்ணிய தூண்டிற்கோலால் பாண்மகள் மீனைப் பிடித்தாள் *[அக.216:1].*

பொன்னணியில் புதுநாண் (புதிய நூலை) நுழைத்தனர் *[குறு.67:3].*

பாணன் தூண்டில் நாணில் இரையைப் பொருந்தச் செய்து மீன் பிடித்தான் *[ஐங்.111:2].*

வையையில் புனலாடும் ஒருத்தி, தன் கண்களைக் கையால் மூடிக்கொண்டாள்; உடனே அவள்மேல் நீர் வீசிய பெண், தன் பொன்-நாணால் அவளது தோளைக் கட்டிச் சிறையாகப் பிடித்தாள் [பரி.7:55]. தேவரும், அசுரரும் நாகத்தை நாணாகக் கொண்டு கடல்கடைந்தனர் [பரி.தி.1:68].

**நாண்மகிழ்** - நாளோலக்க மகிழ்ச்சி. காலையில் மதுவையுண்டு நாண்மகிழ்-நாளோலக்க மகிழ்ச்சி-கொள்ளின் தேர் வழங்குதல் யாவர்க்கும் எளிது', என, மலைமான் திருமுடிக்காரியைப் பாடும்போது, கபிலர் குறிப்பிடுவர் [புற.123:1]. சோழன் நலங்கிள்ளி நாரால் அரிக்கப்பெற்ற நறவினையுண்டு நாண்மகிழால் ஆடினான் [புற.400:14].

கட்டவர் கோமான் புல்லி, யானைக்கொம்புடன் கள்ளினை விற்றுக்கொண்ட நெல்லால், நாண்மகிழ் (நாளோலக்கச் சிறப்புச்) செய்தான் [அக.61:10].

**நாண்மகிழ் இருக்கை**-நாட்காலத்து மகிழ்ந்திருக்கும் ஓலக்கம், நாளோலக்க இருக்கை. நினது நாண்மகிழ் இருக்கையைப்-நாட்காலத்து மகிழ்ந்திருக்கும் ஓலக்கத்தைப்-பாண்சுற்றம் சூழ்வதாக', எனச், சோழன் நலங்கிள்ளியை, முதுகண்ணன் சாத்தனார் பாடுவர் [புற.29:5].

பூணி அணிந்து விளங்கிய மார்பை உடையவனே! நினது நாண்மகிழ் இருக்கையினை இனிதாகக் கண்டோம்', எனச், செல்வக்கடுங்கோ வாழியாதனைக், கபிலர் பாடினார் [பதி.65:13]. சோழன் படையாளர் தோற்றுப் போகட்ட வேல்கள், செல்வக்கடுங்கோ வாழியாதனின் நறவினையுடைய நாண்மகிழ் இருக்கையின் கண்ணே, தன் குலத்து முன்னோர்களைப் போல, அரசவைகள் பணியும்படி அறத்தையே விரும்பி, மேற்கொண்ட, மறத்தை விரும்பிய கொள்கையைப், பாடிய கபிலன் பெற்ற ஊரினும் பல என, இளஞ்சேரல் இரும்பொறையைப், பெருங்குன்றூர் கிழார் பாடுவர் [பதி.85:8]. வளப்பம் பொருந்திய செல்வர், நாண்மகிழ் இருக்கைக் கண்ணே மழைபோல் வரையாமல் கொடுக்கும் வளவிய, கையினையுடையராயிருந்தனர் [மது.443]. தன்னைப் புகழுநர்க்குத், தான் புறங்கண்ட, பகைவர் அரசை முற்றும் கொடுப்பினும், அமைதி பிறவாத அறிவுடனே, மழைபோல் மாறாமற் சொரியும், பல்குன்றக் கோட்டத்துச் செங்கண்மாத்து வேள் நன்னன் சேய் நன்னனின் நாண்மகிழிருக்கை [மலை.75].

அஃதை என்பானது, யானைகளையும், நல்ல அணிகலையும் பரிசிலர்க்கு வழங்கும் நாண் மகிழ் இருக்கையையுடைய அவையில், பொருநர், பறை ஒழியாது ஒலிக்கும் [அக.75:4].

**நாண்மலர்**-புதியமலர். சுரும்புகள், வேங்கையினது நாண்மலரை-புதிய மலரை-விரும்பிப் பாடி ஆரவாரித்தன [சிறு.23]

படுத்திருக்கும் பன்றியின் முதுகு நிறைய முல்லையின் நாண் மலர் உதிர்ந்தன [அக.84:8]. நரந்த நாண்மலர் உதிர முக்கலை வேங்கடமலையிற் பாயும் [அக.141:26]. குவளையின் நாண்மலர் புரையும் உண்கண் உடைய தலைவி புலம்பப் பிரிதல் தகுமோ. எனத், தோழி தலைவனை வினவினாள் [அக.179:12].

குவளையின் நாண்மலர் மணக்கின்ற கூந்தல் உடையாளது பாயற்கண்ணே உள்ளேமோதலின், மழையே! இனி நன்கு, பெய்க' என, வினைமுற்றி மீண்ட தலைமகன் கூறினான் [குறு.270:7]. கடல் அலைகள், சோலைகளிலுள்ள நாண்மலர்களைக் கலக்கித் துறையை உடைக்கும் [குறு.381:5]. தலைவி, குறிஞ்சியின் நாண்மலர் போன்ற மேனியை உடையள் [நற்.301:2].

கொன்றையின் நாண்மலர்கள் பொன்னாலாகிய மாலைகளைப் போன்றிருந்தன [பரி.14:10].

**நாண்மழை.** பருவமழை / விடியற்காலமுகில். நாண்மழை பருவமழை-குழுமியுள்ள சிமையத்தை ஒத்த தோற்றமுடைய பரிசைப் படையின் மேல், ஒளிபரவி விளங்குகின்ற வேல் தோன்றும் [பதி.66:11].

**நாண்மீன்**-நாளாகிய மீன். நின் நாண்மீன்-நாளாகிய மீன்-நின்று நிலைப்பதாக' எனத் தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை, மாங்குடி கிழார் பாடுவர் [புற.24:24]. தாளிப்புச் சேர்ப்பட்ட கொழுவிய துவையோடு கூடிய நெய்யுடைய அடிசிலைத் திங்களைச் சேர்ந்த நாண்மீன் ஒப்பப், பொற்கலங்களைச் சூழவைத்துக், குமணன், பரிசிலர்க்கு ஊட்டினான் [புற.160:8]. பங்குனி மாதத்தினது முதற் பதினைந்தின்கண், உச்சமாகிய நாண்மீன் (உத்தரம்) அவ்வுச்சியினின்றும் சாய, அதற்கெட்டாவதாகிய நாண்மீன் (மூலம்) அதற்கு எதிரே எழ, அவ்வுத்திரத்திற்கு முன் செல்லப்பட்ட எட்டாம் நாண்மீன் (மிருகசீரிடம்) துறையிடத்தே தாழ, ஒருமீன் வானத்தினின்றும் வீழ்ந்தது [புற.229:6,7,8]. அகலத்தையுடைய நாண்மீன்(கள்) தாம் நடக்கும் நெறியின்கண்ணே நடந்தன [மது.6]. விசும்பிடத்தே வலமாக எழுந்து திரியும் நாண்மீன்(களோடு) கலந்த கோள்களாகிய மீன்கள் போல, மன்றிலே மேழகக் கிடாயோடே, சிவலையும் (ஒருவகைப் பறவை) கொண்டு பொருவித்து விளையாடப் பலரும் சேரத் திரண்டனர் [பட்.68].

நல்லாயர், தமக்குரிய முறைமையாலே சுற்றுவனவாகிய நாண்மீன் சூழப்பட்ட மதிபோல, அவ்விடத்திலிட்ட பரண்களின்மேலே தத்தம் மகளிரைத் (ஆயத்தோடு) திரளாக ஒப்பித்து நிறுத்தினார் [கலி.104:27].

**நாண்முதிர் மதியம்**-நிறைமதி. ஞாயிறு பகற்பொழுதைச் சேரக்கொண்டு மேற்றிசையிடத்துக் குன்றத்தைச் சென்றடைய, கீழ்த்திசையிடத்து நாண்முதிர் மதியம்-நிறைமதி-தோன்றி நிலாப் பரக்கையினாலே, இராக்காலம் பகலின் வடிவையொத்தது [மது.548]

**நாணல்-1.** கோரை. கிளைத்த தூறாகிய நாணற்-கோரைக்-கிழங்கு, மணலிடத்தே ஈன்ற முளையை ஒத்த, கூரிய பற்களையுடையவள் தலைவி *[அக.212:4].*

**2. நாணுதல்.** (வெட்கமடைதல்) பாணனே! தாம் கூறிய பொய்யோடு பட்ட கிளவிக்கு நாணலும்-வெட்கமடைதலும்-அறியாராகுதலின், யான் நோவேனோ?' எனக், குறித்த பருவம் வரவும், தலைமகன் வாரானாகியவழித், தூதாய் வந்த பாணற்குத், தோழி கூறினாள் *[ஐங்.472:4].*

**நாணாதோன்-நாணமுறாதோன்.** பகையென்று கூறிற் கூற்றுவன் எதிர்வரினும் கெடானாய்த், தன்னை உறவு கொண்டார்க்குத் தோற்றலை நாணாதோன்-நாணமுறாதோன்-மலையில் தும்பி, காந்தள் முகையின்மேலே அஃது அலரும் காலம் பார்த்திருக்கும் *[கலி.43:11].*

**நாணிலி-நாணில்லாதவன்.** நமக்கு அருளாத நாணிலி-நாணில்லாதவன்-நாட்டு மலை, ஒளி கொண்ட அருவியை உடைத்தாயிராநின்றது', எனத், தோழி தலைவனை இயற்பழித்தாள் *[கலி.42:12].* 'தலைவா! எங்கள் நலத்தின் புதுமையை நுகர்ந்து பின்னர் எம்மை நினையாத நாணிலி தந்த தனிமையைப் போக்குவோம், என்று புதல்வனிடத்தே, வேற்றுத்தாயர் கூறி எதிர் கொள்ள, அதனை மாற்றாத இக்கள்வனாலே ஆண்டுத்தாழ்க்க நின்றதன்றி, யான் வேறோர் தீதுடையேனல்லேன்', எனச், சேடி தலைவியிடம், புதல்வன் குறித்துக் கூறினாள் *[கலி.83:21].* நெஞ்சே! நம்மை மறந்து, ஒருகாலமும் நாம் மாட்சிமைப்பட்டிருக்க நினையாத நாணிலிக்கு, இவ்வூடற்போரைத் தோற்று, அதனால் உள்ள பயனைக் காண்பாய், என்று கூறித், தலைவி ஊடல் தீர்ந்தாள் *[கலி.89:12].* நாணிலி! நீ, கறவைக் கலத்தோடே யாஞ்செல்லும், ஆ மேய்கின்ற இடத்தையும் நாடி, என்தமையன்மார் நிற்கும் புலத்திலும் வருவையாயிருந்தாய்; ஆண்டுக் கூடுதும், என, வினைவலபாங்கிற்றலைவி குறியிடம் கூறினாள் *[கலி.116:17].*

**நாணு-1.** நாணம். இரவிற் சிறிது துயின்றாலும் கனவு கண்டு வருந்தும் பெருஞ்சால்பினால் ஒடுங்கிய நாணு-நாணம்-மிகுந்த யாக்கையையுடைய அரிவை, இமையவரம்பன் பெருந்தேவி *[பதி.19:14].*

புணர்ச்சி நீங்கியபின் மகளிர் தமக்குச் சிறந்த நாணு, மீண்டுவர, அதனைத் தடுத்துக் கொள்வர் *[மது.558].* யானை விரைந்து மேல் வருகையினாலே, உய்விடமறியாது, நடுக்க முற்று நாணு காத்தலை மறந்து, விரைந்து சென்று, தலைவி, தலைவனைச் சேர்ந்தாள் *[குறி.167].*

'உப்பினாலாகிய அணையில் தடைப்பட்டு நில்லாத வெள்ளம் போல, நாணு வரை நில்லாக் காமம் பொருந்தப் பெற்று வந்து, நம் துன்பினை நீக்கி அருள் செய்தனள்', எனப், புணர்ந்து நீங்கும் தலைமகன், தன்னெஞ்சிற்குக் கூறினான் *[அக.208:20].* உதோ, பார் அவனது தேர் தோன்றாநிற்கும்; நாம் அவனை எதிர்கொண்டு ஏற்காவிட்டால், நாணுமிகவுடையன் ஆகலான், தான், அதனை அன்பின்மையெனத் துணிவான் போலும்', எனத், தலைமகற்குக் குறை நேர்ந்த தோழி, தலைமகட்குக், குறை நயப்பக் கூறினாள் *[அக.380:11].* 'யாறே! யான் புலத்தலையஞ்சித் தலைவர் மலையிலுள்ள பல மலர்களையும் போர்த்துக் கொண்டு, நாணு மிக, ஒடுங்கி, மறைந்து, நீங்கும் நின்னைக் கொணர்ந்து, நொதுமலாளராகிய அவர் நீதியின்றிக் கைவிடுதற்கு வல்லியோராவர்', எனக், காமமிக்க கழிபடர் கிளவியால், தலைமகள், தலைமகன் வரையினின்றும் போந்த ஆற்றொடு புலந்து கூறினாள் *[அக.398:13].*

தோழி, பேணவேண்டுவனவற்றில் பெரியோர் அவ்வாறொழுகார் என்பதை நோக்குங்கால், அது நாணுக் கொளத்தக்க தாயுள்ளது', எனத், தோழி, தலைவன் சிறப்புறத்தானாகத், தலைவிக்குக் கூறினாள் *[நற்.72:2].* 'நயனும், நண்பும், நாணு நன்குடைமையும், தலைவியைக் காண்பதற்கு முன், நும்மினும் மிக உடையனாயிருந்தேன்', எனத், தலைவன் கழற்றெதிர் மறையாகப் பாங்கனுக்குரைத்தான் *[நற்.160:1].*

'நீ, நாணுஆகிய அணையை முறித்துப், பலரும் காணும்படிப் பரத்தையாகிய புதுப்புனலைப், பாணன் வாயிலாக ஆடினாய், எனத், தலைவி, புதுப்புனல் ஆடியமையின், காலம் தாழ்த்தி வந்தேன், எனக் கூறிய தலைவனை, நெருங்கிக் கூறினாள் *[கலி.98:17].* தலைவி பிரிவாற்றாது நாணுக் கைவிட்டுத் தன்னிலை இழந்து வருந்தினாள் *[கலி.144:3].* தலைவன் பிரிதலின், நாணு மறந்தாள், எனக் கூறித், தலைவியை நோக்கி, என்னுற்றனை எனப், பிறர் வினவினர் *[கலி.146:11].* தலைவன் மீண்டு வரக்கண்டு, தலைவி துயர் ஒழிந்து, நாணுத் தன்மெய்யிடத்தே நிற்ப, இறைஞ்சித் தலைவன் மார்பகத்தே சேர்ந்தாள் *[கலி.147:69].*

ஒருத்தி, நாணுக்குறையில்லாத குலமகளாயிருந்தும் தனக்குச் சிறந்தவன் பரத்தையிற் பிரிந்தான், எனப் புலந்தவள், புனல் வெள்ளத்தில் அவனோடு யானைமேல் ஏறினாள் *[பரி.12:49].*

**நாண்.**1.காண்க.

**2. மானம்.** பிறர் இகழ்தலைப் பொறாது பொருளீட்டிவரும் விருப்புடன், நாணு-மானம்-தளையாகக் கட்டுண்டிருந்து உடம்பு சென்றதன்றி நெஞ்சம் நின்னிடத்தே, எனத் தலைமகன், தலைமகட்குக் கூறினான் *[அக.29:21].*

**நாணுத்தகவு-நாணும் தன்மை.** 'கோடரி வெட்டுதலால் நிலை கலங்கி வீழும் பூங்கொம்புகள் புலம்பச், சோலைகள் தோறுமுற்ற, காவல் மரங்களை, நின் படைஞர் வெட்டுகின்ற ஓசை, தன்னுடைய கடிமனையின்கண் சென்றொலிக்கவும்,

போர்க்கும் புறப்படாது, அவ்விடத்தே மானமின்றி இனிதிருந்த வேந்தனுடன், இவ்விடத்தே நினது முரசொலிப்பப் பொருதனையென்பது, கேட்டார்க்கு நாணுத்தகவு-நாணும் தன்மை-உடையது; என்று, சோழன் குளமற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனது, கரூவூர் முற்றுகையை விலக்கப் பாடுவர், ஆலத்தூர் கிழார் *[புற.36:13]*. 'அறத்தையும், மறத்தையும் உடையையல்லையாய்த், திறவாது அடைக்கப்பட்ட திண்ணிலையமைந்த கதவினையுடைய நீண்ட மதிலினுள், ஒருபக்கத்தே ஒடுங்கியிருத்தலை, ஆராயுங்கால், இது நாணுத்தகவுடைத்து', என்று, சோழன் நலங்கிள்ளியின் முற்றுகைக்கு எதிரே, போர்க்குப் புறப்படாது, ஆவூரை அடைத்து, உள்ளேயிருந்த நெடுங்கிள்ளியைக் கண்டித்துப் பாடினார், கோவூர் கிழார் *[புற.44:16]*.

**நாதர் - உருத்திரர்.** ஆதிரை முதல்வன் (சிவன்) பெயரால் சொல்லப்பட்ட நாதர்-உருத்திரர்-பதினொருவர் *[பரி.8:7]*.

**நாநவில் பாடல்-மிடற்றுப்பாடல்.** குழல் ஒலியும், நாநவில்பாடலும்-மிடற்றுப்பாடலும்-குயிலினத்தின் கூவலையும், அதன் எதிரொலியையும் ஒத்தன *[பரி.15:43]*.

**நாமம்-1. அச்சம்.** பெரிய மருதம் பாழாக, நல்ல நாட்டை எரியூட்டி நீ நாமம்-அச்சம்-மிக்க நல்ல போரைச் செய்ய, நின்னுடைய களிறுகள் நின் கருத்திற்கேற்ப ஒரு பெற்றிப்படப் பொருதன', எனச் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியைப், பாண்டரங்கண்ணனார் பாடுவர் *[புற.16:18]*.

நாடு,கவின் அழியுமாறு நாமம் தோற்றுவித்து, இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் சினந்து பகைப்புலம் தாக்கினன் *[பதி.13:10]*. தண்டினை வலப்பக்கத்தில் ஏந்தியவராய்ப் பகைவர்க்கு நாமம் செய்யும் பொருட்டு, எழுகின்ற பகைவரது யானைப்படையைக் கண்டால் நில்லாமல், அதன்மேல்செல்லும் தானையை யுடையவன், ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் *[பதி.54:14]*. நின்தாள் நிழல் வாழ்வோர், பகையரசர் யானையின் வெண்கோட்டைப், பெறதற்கரிய கள்ளிற்கு விலையாகக் கொடுத்து, உண்ட மகிழ்ச்சிமிக்கு, 'நாமம்' அறியாத, இன்பமேயான வாழ்வையுடைய, உத்தரகுருவில் வாழ்வாரைப்போல, இனிய இன்பத்தோடு, பலநாள் உறைதலைப் பெறுவார்களோ? (பலநாள்பாசறையுறைதலால்) எனச் செல்வக்கடுங்கோ வாழியாதனைக், கபிலர் பாடுவர் *[பதி.68:12]*. இளஞ்சேரல் இரும்பொறை, நாம மன்னர் உடல் துண்டாம்படி அழித்தான் *[பதி.88:8]*.

'தலைவ! அச்சம் தோற்றுவிக்கும் வெள்ளத்தினை, அஞ்சாமையையுடைய பன்றியைப் போலக் கடந்து ஏறி, நாமம் தரும் அரிய துறையினைத் தாண்டி, நள்ளிரவில் இத்தகைய இடத்தும் மக்கள் வருவாருளரோ', எனத் தோழி, இரவு வருவானைப், பகல்வரக் கூறினாள். *[அக.18:7]*. நாமம் தரும் நல்ல பாம்பு மேய்தற்குச் செல்ல, மணியினை ஒளியுண்டாக உமிழ்ந்தது *[அக.72:14]*. வெட்சிமறவர், விடியற்காலையில் ஆக்களைக் கவர்ந்து கொண்டு நாம வெஞ்சுரம் கடந்தனர் *[அக.131:7]*. மிக்க கடிய சினத்தினால் நாமம் தோற்றுவித்துப் பனி தங்கிய நற்பண்பில்லாத வாடைக்காற்றுப், பிரிவின்கண் தலைமகளை வருத்தியது *[அக.235:14]*.

அன்பற்ற வேடரின் வில்லினின்று விடும் அம்பு பட்டதனாலாகிய சுழன்ற நாமப்பூசல் (அச்சத்தைத் தரும் பேரொலி) இடி முழக்கம் போன்றது *[நற்.65:7]*. மின்னொலியுடன் கூடிய, இடி முழங்குகின்ற, நாம நள்ளிருட்கண் வருவான் என்பது உண்மையோ, இல்லையோ', எனத் தோழி, தலைவன் சிறைப்புறத்தானாகக், கூறினள் *[நற்.122:5]*. சேர்ப்பன், நாமம் செய்கின்ற முதலையின் நடுக்கமுறுத்தும் பகைக்கு அஞ்சாது; இரவில் வந்தான் *[நற்.287:6]*.

மீளாத காமநோயாலே வருந்தும் தலைவி, நின் கழலடியைப் பணிந்து சேராத நாமம் பொருந்திய பகைவரைப்போலப் பெரிதும் நடுங்கினள், எனப், பாணன், பாசறைக்கண், தலைவனைக் கண்டு கூறினான் *[கலி.30:21]*. நாம வாய்மொழியாகிய மறை, மாலவன் பெருமையை உரைக்கும் *[பரி.15:63]*.

**2. நிறைவு.** நிலம் தோன்றாத முதற் காலத்தே நாமம்-நிறைவு-பொருந்திய வெள்ளத்தின் நடுவில், நான்முகனோடு, உந்திக்கண் தோன்றிய, தாமரையையுடையவனாகிய, நினது, சக்கரமோ, உலகிற்கு நிழலாவது; அருள்புரிவாயாக', எனத், திருமாலைப் பரவினர் *[பரி.3:92]*.

**3. பெயர்.** திருமாலிருஞ்சோலைமலை என்னும் நாமத்தின்-பெயரின்-பெருந்தன்மை நிலத்தின்கண் பரந்தது *[பரி.15:25]*.

**நாமலார் மகன் இளங்கண்ணன் - ஒரு புலவர்.** இவர் பாடல் ஒன்று குறுந்தொகையில் (250) அமைந்துள்ளது. வினைமுற்றி மீளும் தலைவன், மாலைப் பொழுது வருமுன், தலைவியிடம் சென்று, அவளது துன்பத்தைப் போக்குதற்குப், பாகனை விரைவுபடுத்துவதாக, இவர் அப்பாடலை இயற்றியுள்ளார். பருக்கைக் கற்களையுடைய பள்ளத்திலே தங்கிய நீரையுண்டு, இரலைமான், தன் காதல் துணையோடு, காட்டுவழிகளில் துள்ளித்திரிதலை, இவர் மாலைக்காலத்தொடு பொருத்திப்புனைந்துள்ளார்.

**நாய்-ஞமலி.** சினம் பொருந்திய நாயை-ஞமலியை-உடையவன் வேட்டுவன் *[புற.33:1]*. மானினது திரட்சியைத் தொலைத்த, கடிய செலவையுடைய, சினமிக்க நாயையும், வலிய, வில்லையுமுடையவன் வேட்டுவன் *[புற.205:8]*.

ஓடி இளைத்த நாயினது நாப்போலச், சிறிய அடியினை யுடையவள் பாடினி *[பெரு.42]*. ஓடி இளைத்து வருந்துகின்ற நாயினது நாக்கினுடைய நல்ல அழகை வருத்தி, வறுமையாலே விளங்குகின்ற, சிலம்பு முதலியனவின்றிப், பொலிவழிந்த,

அடியினையுடைவள் விறலி [சிறு.17]. ஈன்றணிமையையுடைய நாய் பொலிவழிந்த அட்டிலில் குரைக்கும் [சிறு.132]. வடு சங்கிலிகளாலே நாய்களைக் கட்டிவைத்த கிட்டுதற்கரிய காவலையுடையது [பெரு.125]. தான் குறித்த விலங்கின் மேலே செல்கின்ற நாய், அதனைத் தப்பாமற் கொள்ளும் [பெரு.139]. இரவுக்குறியிலே வருதலை இயல்பாகவுடைய தலைவன், காவலர் கடுகினும், நாய் குரைப்பினும் தலைவியின் தோளிற் பெறும் இனிய துயிலைப் பெறாதுபோயினும் முனியான் [குறி.240]. பெண் நாய், ஒடிக்கடித்த உடும்பின் தடிகளோடே, பிற உணவினையும், நன்னன் மலையிடத்துச் செல்வோர், பெறுவர் [மலை.177].

விரைந்தோடும் நாயுடன், வேட்டுவன் பலமலைகளையும், கடந்து செல்வான் [அக.28:7]. கல்வியில்லாத மொழியினையும், சினம்மிக்க நாயினையும் உடையவர், வடுகர் [அக.107:11]. சிறுகுடிப்பாக்கத்தின்கண்ணே, வலிய நாய் பின்னேவரத் தலைவன் பகற்கண் வருவான் [அக.118:5]. புலிக்கூட்டத்தை ஒத்த நாய்கள் தொடர்தல் நீங்கினவாயினும், எம் தந்தை இல்லிடத்தானாகத், தலைவி படப்பை சென்று வருதல் அஞ்சுவள்', எனத், தோழி, செவிலித்தாய்க்குச் சொல்லுவாளாய்த், தலைமகன் கேட்பக் கூறினாள் [அக.158:15]. சிற்றிலில் ஈன்றணிமையுடைய நாய் தங்கியருந்தது [அக.167:17]. விலங்குகளைத் துரத்திப் பற்றும் இயல்பு தப்புதலில்லாத வலிய நாய் பின்னேவரக், குறவன் வேட்டம் சென்றான் [அக.182:5]. வலியவேட்டமாகும் நாயைக்கடிந்து விலக்கி, வேட்டுவர் நெருங்குதலைத் தடுத்துப், பன்றி, கிளையுடன் பெயர்ந்தது [அக.248:2]. ஊதுகொம்பு வேட்டுவர்களோடு, நாய்களை அழைக்கும் [அக.318:15]. கன்றின் தோலாலாய கூட்டினையும், சினம் பொருந்திய நாயினையும் உடையவர், வடுகர் [அக.381:7].

'அறிவ! குற்றமற்ற தெருவினிடத்தே, நாயில்லாத அகன்ற வாயிலில், சோற்றையும், நீரையும் பெறுவீராக; தலைவர் வருவர் என்ற காலம் எக்காலம்? என்று, தோழி அறிவரை வினவினாள் [குறு.277:1].

ஆண் பன்றி பிளப்பில் விழுந்துபட்டதாக, வாரை அழித்து மொய்த்தனவாய்க், கொன்று, நாய்கள் பற்றிக்கொண்ட, மிகுதிப்பட்ட தசைகளை, அவை கொண்டு போகாதபடி, கானவர் அவற்றை விலக்கிக் கொணர்ந்தனர் [நற்.82:10]. கடிய குரலமைந்த பம்பையையும், சினமிக்க நாயினையுமுடையவர், வடுகர் [நற்.212:5]. முயலைப் பிடிக்க எழுந்த, விரைந்த செலவும், சினமுமுடைய நாயினது நல்ல நாவினையொத்த, சிறிய அடிகளையுடையவள் தலைவி [நற்.252:10]. 'கொம்பை ஊதக் கௌவிக் கொல்லும் நாயோடு சென்று காட்டின் கண்ணே விருப்பமுற்ற வலிய மானை வேட்டையாற் கொள்ளும், வேட்டுவ மகளிரேம் அல்லேம்; யாம் குறமகளிரேம்', எனப், பகற்குறி வந்து பெயரும் தலைவனிடம், தோழி, உலகியல் கூறினாள் [நற்.276:1].

கொலைத் தொழிலிடத்துக் கடிய கோட்பாட்டோடே, நாய், அமையாமற் சென்று, தனக்குரித்தென்று மடமானை அகப்படுத்திக் கொள்ள அஃது அதற்குரித்தாகாது, வலைவர்க்கு அமர்ந்துவிட்டது [கலி.23:16]. 'முயலே! என் கேள்வன் இருக்கின்ற இடத்தைக் காட்டுவாய்; காட்டாயாயின், நினக்குப் பகையாகிய சினத்தையுடைய நாயை நின்னிடத்தே செலுத்துவேன்', எனப், பிரிவினால் வருந்திய தலைவி, நாணுவகையிறந்து கூறினாள் [கலி.144:20].

**2. நீர்நாய்.** நாய்-நீர் நாய்-உடைய பழைய நீரில் தாமரை தழைத்திருந்தது [அக.16:1].

**3. சூதாடும்கருவி.** முதியோர் நாயை-சூதாடுகருவியை-இடுதலாற் குழிந்த வல்லமைந்த நல்ல மனை நிறையக் காட்டுக்கோழி முட்டையிட்டது [புற.52:14].

**நார்:1. இழை.** பாணன், சேரமான்பாலை பாடிய பெருங் கடுங்கோவிடம், வெள்ளி நாரால்-இழையால்-தொடுத்த பொற்றாமரைப்பூவைப் பெற்றான் [புற.11:17]. நாராற் பயிலத்தொடுக்கப்பட்ட ஆத்திக்கண்ணியையுடையவன், சோழன் போர்வைக்கோப்பெருநற்கிள்ளி [புற.81:3]. வெள்ளிநாரால் தொடுக்கப்பட்ட பொன்னரிமாலையினையும், பிற அணிகலன்களையும் யானைகளுடனே, வல்வில் ஓரியிடம் பரிசிலர்பெற்றனர் [புற.153:8]. கூரியவேலையும், நறைக்கொடியின் நாரால் தொடுக்கப்பெற்ற வேங்கைப் பூமாலையினையும் உடைய வில்லாட்டுகளுக்குத் தலைவன் பிட்டங்கொற்றன் [புற.168:15]. வள்ளன்மையுடைய பெருமக்களைக் காணப்பெறாமையின், உய்யும் வகையை எண்ணிப், பனைமடற்கண் பெறப்படும் நாரும், பனங்குருத்தும் உண்டு, உணவின்மையால் வருந்தியது பரிசிலர்சுற்றம் [புற.370:2]. பரிசிலர், அரும்புமலர்ந்த பூக்களை, நாரால் மாலையாகத் தொடுத்துத், தலைமயிரிற் சூடிக்கொண்டனர் [புற.371:3]. பரிசிலர், பனைமடலினின்றும் எடுத்த நாரையும், பனங்குருத்தையும் கிணையொடு சேர்த்துக்கட்டி, உழுதுண்டுவாழ்வோர் மனைக்கண் சென்று, இரந்துண்டனர் [புற.375:5].

முள்ளியின் கிழித்து முடித்த நாராற் கட்டின மாலையைத் தலை நிறையச் சூடுவர் [பெரு.218]. உலர்ந்த மரல் நாரிலே, தளிர்களோடே நெருங்கக்கட்டின கண்ணியைச், சூடிக்கொள்வர் [மலை.431].

அசையும் கிளையினையுடைய நாரில்லாத முருங்கையின் பூக்கள் காற்று வீச உதிர்ந்து கிடத்தலின் கடல் போல் தோன்றும் காடு [அக.1:16]. வெண்கடம்பின் கொம்பினைப் பிளந்து, பெரிதாக உரித்த நாரால், யானைக்கன்றினைக் கட்டுவர் [அக.83:6]. யாமரத்தின் நாரினையுடைய அடிமரத்தில் நீர்வரும்படி பட்டையை யானை உரிக்கும் [அக.257:15].

அம்பினால் அறுத்தெடுத்த ஆத்தியின் நாரினால், இரந்தைப் பூவைத் தொடுத்தியற்றிய கண்ணியை இளையர் சூடுவர் [அக.269:10].

நாரில் பெருமரம் அலராகிய மலர்களைச் சொரியவும் வாராதோர்', எனத், தலைமகனைப் பிரிவின்கண், தலைமகள் கூறினாள் *[அக.273:15]*.-(பா,வே.) நறைக் கொடியாய நாரினால் வேங்கைமலரைத்தொடுத்த கண்ணியையுடையனாய், மலையினின்றும் வரும், நாட்டையுடைய, தலைவனுக்குத் தந்தையும் மகட்கொடை நேர்ந்தனன், எனத், தோழி கூறினாள் *[அக.282:9]*.

மரல்பட்டையின் நாராலே பின்னிய உடையினையுடையவர் மறவர் *[நற்.64:4]*.

நெய்தற்பூவைநெடிய நாரிலே தொடுத்து யாழிற் கட்டினர் *[கலி.131:8]*.

**2. பட்டை.** தலைவர் நுகர்ந்த என் பெண்மைநலம், களிறுவளைக்க, நிலத்திற்படாத நார்-பட்டை-உடைய ஒடிந்த கிளையைப் போன்றது, எனத், தலைவி உரைத்தாள் *[குறு.112:4]*. பார்ப்பனமகன், புரசமரத்தினது நல்ல நார் களைந்த அதன் தண்டோடு, ஏந்திய கமண்டலத்தை உடையவன் *[குறு.156:2]*. ஆறலைகள்வர், நீர் வேட்கையை, நாரை மென்று தணித்தனர் *[குறு.274:5]*. ஆண்யானை, பிடியின் வருத்தத்தைப் பொறாமல், யாமரம் அழியும்படி குத்தி, அதன் வெள்ளிய (பசையற்ற) நாரைக் கைக்கொண்டு, வறுங்கையைச் சுவைத்தது *[குறு.307:7]*.

ஆம்பலின் திரண்ட தண்டை, நார் (தோல்) உரித்தாற்போன்ற, அழகு, குறைந்த மாமையையுடையவள் தலைவி *[நற்.6:2]*. பிடியானை தின்னும்பொருட்டு, மேலுள்ள தோலைப் பறித்துக் கொண்டதனால், நாரில்லாத கிளைகளையுடையவாயின வெட்பாலை *[நற்.107:2]*.

ஆம்பலின் நாரை (தோலை) உரித்த மெல்லியதண்டு போன்ற நிறனுடையதாயிருந்தது முன், என்மாமைக்கவின், என்றாள், தலைவி *[ஐங்.35:2]*.

**3. பன்னாடை.** நாரால்-பன்னாடையால்-பிழிந்து கொள்ளப்பட்ட விரும்பத்தக்க, கள்தெளிவு பாணர்க்கு வழங்கப்பெற்றது *[புற.170:12]*.

வயவர்க்குச் சீறூர்களைப் புரவாகக் கொள்வதை இவ்விடத்து வேண்டேம்; நாரால்வடிக்கப்பட்டுப், பூக்களையிட்டு முதிர்வித்த, சாடியிலுள்ள கள்ளை வாழ்த்தி, மருதநிலத்தூர்களைப் பெற்றால், பெறுவது உரியதாம், என, உண்டாட்டின்போது, மறவன் கூறினான் *[புற.297:5]*.

பசிய இழையணிந்த மகளிர், பொன் வள்ளங்களில் நாரால் வடிக்கப்பட்ட கள் தெளிவை எடுத்துக் கொடுக்க அரசர் அருந்தினர் *[புற.367:7]*. சோழன் நலங்கிள்ளி, நாரால் வடிக்கப்பட்ட கள்ளையுண்டு, மகிழ்ச்சியில் திளைப்பான் *[புற.400:14]*.

சேரன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், நாரால் வடிக்கப்பட்ட கள்ளினை அருந்துவான் *[பதி.11:15]*. கொங்குநாட்டவர்க்குத் தலைவனாகிய குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை, நாரால் வடிக்கப்பட்ட கள்ளை அருந்துவான் *[பதி.88:19]*.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனால் வெல்லப்பட்ட எருமையூரன், நாரால் அரிக்கப்பெற்ற கள்ளினை அருந்துபவனாவான் *[அக.36:17]*. வரால் மீனைச் சுட்டுத்,தன் மகள் கொடுக்க உண்ணும் பாணன், நாரால் அரிக்கப் பெற்ற கள்ளினை உண்டு களித்திருப்பான் *[அக.216:3]*. நாரால் அரிக்கப் பெறும் கள்ளிற்குக், கடலில் மீன்பிடிப்போர் தாம் கொண்டுவந்த முத்துச் சிப்பிகளை விலையாகக் கொடுப்பர் *[அக.296:9]*.

சூடிக்கழித்த மாலை, தார், கோதை, மரங்களின் வேர், தூர், காய், கிழங்கு முதலியவற்றோடு, கீழ்மக்கள் உண்டுவிட்டு உகுத்த நாரால் வடித்த கள்ளும், வையையின் வெள்ளத்தில் கலத்தலால், அந்தணரேயன்றி, மற்ற மக்களும் நீராடுதலைத் தவிர்த்தனர். *[பரி.6:49]*.

**4. அன்பு.** பறவைகளும் விலங்கினங்களும் தனிமையோடு தங்க நள்ளென்னும் ஓசைபட வந்த, நார்-அன்பு-இல்லாத மாலைக்காலத்தில் காதலர் வாராமைக்குத், தலைவி வருந்தினள் *[குறு.118:1]*. தோழி! பசலை என்மேனியின் கண்ணது; காதல், தலைவரது நார் அற்ற நெஞ்சமாகிய செல்லுதற்கரிய இடத்தின் கண்ணது,எனத், தலைவி, தோழிக்குக் கூறினாள் *[குறு.219:2]*.

நாடனே! நின்பாற் சென்று மீளாத, என்பால் நார் இல்லாத என்நெஞ்சமும், கொடிதாயிரா நின்றது, எனக் கூறித் தோழி வரைவு கடாவினாள் *[நற்.98:12]*.

நாடன்பாற் சென்று, விரும்பின எமக்கு உதவாத, நாரில்லாத அவனது மார்பை, நம்மில் இரந்து கேட்டவர் உளரோ? (அவனே வந்து தலையளிசெய்து இப்பொழுது கைவிட்டொழிந்தனன் கண்டாய்) எனத் தலைவி, வன்புறை எதிரழிந்து கூறினாள். (பரத்தை தலைமகட்குப் பாங்காயின வாயில் கேட்பச் சொல்லியதுஉமாம்) *[நற்.225:9]*. தலைவன், தன் நார்உடையநெஞ்சத்து அருள்பொருந்தி, மேலவர் செல்லும் நெறியிலே சென்று வாழாத, சால்பு இலன் ஆதலை, நீ, நன்கு அறிந்து தெளிவாயாக, எனத், தலைவன் சிறைப்புறமாகத், தோழி, தலைமகட்குக் கூறினாள் *[நற்.233:7]*.

**நார்முடிச்சேரல்- சேரவேந்தன்.** விளிம்பிலே மணிகளையழுத்திய பொற்றகட்டாலான கூட்டின்மேல், சிலந்தி வலைபோல் நாரால் பின்னி, அதன்மேல், நூலிற் கோத்த முத்துவடங்களைத் தொடுத்து, அமைக்கப்பட்ட , நார் முடிச்சேரலே' என்று விளித்துப்பாடுவர், காப்பியாற்றுக் காப்பியனார் *[பதி.39:17]*. பகைவர் அழியுமாறு வென்று

வெற்றிக்கூத்தாடிய மேலுயர்த்திய கையினையும், ஏழரசரின் முடிப்பொன்னால் செய்த மாலை பொருந்திய திருமகள் தங்கியுள்ள மார்பினையும், நன்னது வாகை மரத்தின் காவல்மிக்க அடியை வெட்டியதும் பகைவரது முன்னணிப்படையில் மிக்குச் செல்வதுமான வலியினையும், உடைய நார்முடிச்சேரல், நேரிமலையின்கண் இருக்கின்றான் 'என்றுகூறி, விறலியை, அவனிடத்தே ஆற்றுப்படுத்துவர் புலவர் *[பதி.40:16]*.

'களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் - காண்க.

நாரரி - (நாரால் அரிக்கப்பட்ட) தேறல். நாரரியினை- (நாரால் அரிக்கப்பட்ட) தேறலை-சிறியகலத்து உகுப்பவும் அதனைக்கொள்வானோ? நாடுமுழுவதும் கொடுப்பவும் கொள்ளாதவன், என, நடுகல்லாகிவிட்ட அதியமானஞ்சியை, ஔவையார் பாடுவர் *[புற.232:3]*. நடுக்கத்தைச் செய்யும் குளிரைப்போக்குதற்காக நாரரியினைப் பருகுதல் *[புற.304:2]*.- (பா.வே.நாளரி)

நாரிகை-பெண். ஒருவன், காரிகை பூண்ட முத்தாரத்தினது அழகைநோக்கி, இதற்கேற்றன இவை, என, நெருங்கிய முலைகளைப் பார்த்தான். அதற்கு அந்நாரிகை-பெண்-நாணுகின்றிலள், என, வையையில் நீராடுவோர் கூறினர் *[பரி.12:56]*.

நாரை-கொக்குவகை. வயலிடத்துக் கயல்மீனை மேயும் நாரை-கொக்கு வகை - போரின்கண்ணே உறங்கும் *[புற.24:20]*. பொய்கைக்கண் மேய்ந்தநாரை போரின்கண்ணே உறங்கும் *[புற.209:1]*. பொய்கைக்கண்மேய்ந்த செவ்வரிகளையுடைய நாரை, மருதமரத்தின் கிளையை வெறுப்பின், காஞ்சிமரத்திடத்தே துஞ்சும் *[புற.351:9]*. பொய்கையிடத்தே கயல்மீனை உண்ணுகின்ற நாரையினை உகைத்த வாளைமீனைப் புனலாடு மகளிர் தம்மனை கொண்டுசெல்வர் *[புற.354:5]*. மருதநிலத்தின்கண், தன் இனத்துடனே மேய்ந்துண்டு, வஞ்சிமரக்கிளையில் தங்கியுறங்கும் நாரை, கரும்பின் பூவினை அருந்தும் *[புற.384:2]*.

நீரடைகரையில், நந்து(வளை) சிவந்த வரிகளையுடைய நாரையொடு உகளும் *[பதி.23:21]*. நெல்வயலிற்பரந்த, வளைந்த தாளினையுடைய நாரை இரியுமாறு, மகளிர் குருகினை ஒப்புவர் *[பதி.29:4]*. கழனியில் தடந்தாள் நாரை இரைகவரும் *[பதி.32:12]*. பள்ளங்களில், இரையின் பொருட்டுத் துழாவிய, வளைந்த காலையுடைய நாரை, ஞாழல் மரத்தின் கிளையில் தங்கும் *[பதி.51:4]*. செய்களில், பயிரை அழிக்கின்ற நாரையை மகளிர் துரத்துவர் *[பதி.73:5]*.

கடலின்கண் இறாலைத்,தின்ற திரண்ட நாரைகள், புன்னைக்கோட்டிலே தங்கின், திரையின் ஆரவாரத்திற் கஞ்சி, மருதநிலப் பனையினது மடலிலே சென்று தங்கும் *[பொரு.204]*. மழைசிறிதுவிட்ட அளவிலே, கொக்கினது திரள், சிவந்த, வரியினையுடைய நாரைகளோடே ஈரவெண் மணலிடத்தே கயலைத்தின்னும் *[நெடு.17]*.

பறையொலியினைக் கேட்டஞ்சிய நீண்ட கால்களையுடைய நாரை, கொம்புபோல ஒலித்துப் பனைமரத்தின் மடலகத்தே தங்கும் *[அக.40:14]*. பறையாற்றின் கடற்றுறையின்கண் உள்ள, புதிய நாரையின் கூட்டம் ஒலித்தாற்போன்று, அலர் எழுந்தது *[அக.100:14]*. புன்னை மரத்தின் கிளையைச் சேர்ந்திருந்த புதிய நாரை ஒழிந்திடப், பொங்குதலுடன் வரும் வட காற்றுடன், அலைகள் அலைத்தன *[அக.190:8]*. புலிநகக் கொன்றையின் கிளையில், தனியே இருக்கும் தன் பார்ப்பினை நினைந்த, தணியப் பறத்தலையுடைய நாரை, கழியினின்றும் மேலெழுந்து பறந்திடக், கடற்கரைச் சோலை தனிமையுற்றது *[அக.240:2]*. பொய்கையில், வாளைப்போத்தினை உண்ணும் பொருட்டு, நாரை, தன் அடியின் ஒலியை, அம்மீன் உணர்ந்து கொள்ளலை அஞ்சி, மெல்ல மெல்லக், காவல்பொருந்திய வீட்டிற் புகும் கள்வனைப்போலத், தளர்ந்து நடக்கும் *[அக.360:16]*.

சேற்றினிடத்து, மீனாகிய உணவைத்தேர்கின்ற, முள்ளுமுருங்கை மலரின் இதழைப் போன்ற, மெல்லிய இறகையும், செம்மையாகிய அலகையுமுடைய நாரைக்குத் துன்பமுண்டாகுமாறு, கூதிர்க்காலத்து நீர்த்துளிகளோடு கூடிய வாடைக்காற்று வந்தது *[குறு.103:3]*. கொண்கனே, ஆரல்மீனை அருந்தி நிறைந்த வயிற்றையுடையவனவாகிய நாரைகள், நான் கிடத்திவந்த பாவையின் நெற்றியை மிதிக்கும். ஆதலின், அவளைப் போகும்படி, நீயே ஏவுவாயாக. என, இடத்துய்த்து நீங்கும் தோழி, தலைமகற்குக் கூறினாள் *[குறு.114:5]*. பழைய விறலையுடைய சிறகின்வன்மை தவறியதனால் உண்டாகிய துன்பத்தையுடைய நாரை, அலைகள் தோயப்பெற்ற மரக்கிளையில் தங்கியிருக்கும் *[குறு.125:5]*. 'நெஞ்சே, கீழ்கடல் அலைக்கு அருகில் உள்ளதாகிய, முதுமையால் சிறகுகள் நீங்கப்பெற்ற நாரை, மேல்கடற்கரையிலமைந்த, தொண்டியின் கடற்றுறையின் முன்னுள்ள, அயிரை மீனாகிய உணவைப்பெறும் பொருட்டுத், தலையை மேலே எடுத்தாற்போல, நெடுந்தொலைவிலுள்ள தலைவியை நினைந்தாய்; அதனால், துன்பத்துக்குக் காரணமான ஊழ்வினையை உடையை, 'என, அல்லகுறிப்பட்டு மீளும் தலைமகன் கூறினான் (உணர்ப்புவயின் வாரா ஊடற்கண், தலைமகன் கூறியதுமாம்) *[குறு.128:1]*. அலைகள் மீன்களைப் பெயரச் செய்வதனால், வெள்ளிய சிறகுகளையுடைய நாரையின் வரிசை, அயிரை மீனை உண்ணும் *[குறு.166:2]*. கடற்கரையிலே, புன்னை மரக்கிளையில், புதிய நாரை,தங்கும் *[குறு.236:5]*. புன்னையின் கிளையிடத்திருந்த, அழகிய சிறகையுடைய நாரை, கழியிடத்துள்ள, சிறுமீனை வெறுப்பின் வயலிலுள்ள நெய்தற்பூவை, நெற்கதிரோடு விரும்பும் *[குறு.296:2]*. அடும்பின் கொடியிடத்துள்ள அழகிய மலரைச் சிதைத்து மீனை உண்ணுகின்ற, வளைந்த காலையுடைய நாரை, மணல்மேட்டில் தங்கும் *[குறு.349:2]*.

நாவலின்கனியை இனமென்று கருதிமொய்த்த வண்டுகளைக், கனியெனக்கருதி, ஞெண்டு கைக்கொள்ள, ஆங்கு இரையைத் தேடுகின்ற நாரை வரக்கண்டு, அஞ்ஞெண்டை விலக்கும் வலியற்ற, ஒலித்துப் பெரும் பூசலிடும் வண்டுகளை விட்டு, அஞ்நெண்டு அகன்றது *[நற்.35:6].* கடலின்கண்ணே துழாவித்,தன்பெடையோடு ஒருசேரச் சென்று இரையைத் தேடுகின்ற நீண்ட காலையுடைய நாரை, சிறுமீன்களைப், பிடித்து, மேலோங்கிய கிளையின் கூட்டின்கணிருந்து தாயைக்கூவியழைக்கின்ற, பிள்ளையின் வாயில் அவற்றைச் செறித்தது *[நற்.91:4].* கரிய கழியிலே இரைதேடித் துழாவிய, ஈரிய புறத்தையுடைய, நாரை, தன் சிறகை உதறுகின்ற திவலையாலே குளிர்ந்து பாக்கம் நடுங்கும் *[நற்.127:1].* மூங்கில் உரியை மடித்து மெல்லியதாகப் பிசைந்துவைத்தாலொத்த, தொகுதியமைந்த சிறகுகளையும், நீண்ட கால்களையுமுடைய நாரையினால் இன்பம் நுகரப்பெற்ற செயலற்றபேடை, கழிக்கரையில், பெயருமிடங்களில் பெயர்ந்து சென்று, சிறிய மீனையும் உண்ணாது, தாழையின் கிளையில் வருத்தத்தோடு உறையும் *[நற்.178:2].* பலாமரத்தில், முயிறுகள் முட்டையிட்டு நெருங்கியுறைகின்ற கூடுகளைக், கழனியின்கண்ணே இரையுண்ணுமாறு போந்த நாரை உரிஞ்சுதலானே, நெல்லோடு கலந்த அரிசிபோல, முயிறுகளும், முட்டைகளும் உதிர்ந்தன *[நற்.180:2].* எருமைக்கடா, இளநடையையுடைய பலவாகிய நாரையின் கூட்டம் எல்லாம் இரிந்தோடும்படியாகப், பொய்கையிலே' பாய்ந்தது *[நற்.330:2].*

கயலை உண்கின்ற நாரை நெற்போரிடத்தே தங்கும் *[ஐங்.9:4].* பழனத்திடத்தே பலமீன்களையும் அருந்த, நாரை, மருதமரத்தின் உச்சியில் தங்கும் *[ஐங்.70:1].* பனையில் தங்கிக் கடல்ஒலிபோல், நாரை ஒலிக்கும் *[ஐங்.114:3].* வெள்ளாங்குருகின் பிள்ளை இறக்க, அதனைக் காண்டற்குச் சென்ற மடநடையினையுடைய நாரை மிதித்தலாலே, நெய்தல் மலர்ந்தது *[ஐங்.151:2].* வெள்ளாங்குருகின் பிள்ளை இறக்க, அதனைக் காண்டற்குச்சென்ற மடநடையினையுடைய நாரை துயரினாலே அரற்றும் *[ஐங்.152:2].* வெள்ளைக் கொக்கினது பார்ப்பு இறக்க, அதனைக் காணச்சென்ற மட நடையினையுடைய நாரை, தனது சிறகைக் கோதலால் மணற்குன்றில், அச்சிறகுகள் பரவிக்கிடந்தன *[ஐங்.153:2].* வெள்ளாங்குருகின் பிள்ளை செத்ததைக் காணச்சென்ற மடநடை நாரை அக்கடற் கானலிடத்தேயே தங்கியது *[ஐங்.154:2].* வெள்ளைக் கொக்கின் பார்ப்பு இறக்க, அதனைக் காணச் சென்ற மெல்லிய நடையினையுடைய நாரை மனம் பதைத்துத் துடித்ததால் சிதறுண்ட நெய்தல்மலர் கழியின் அலைகளோடு மிதந்து சென்றது *[ஐங்.155:2].* வெள்ளாங்குருகின் பார்ப்பு இறக்க, அதனைக் காணச்சென்ற மடநடை நாரை துயரால் துடிக்கையினாலே அதன் இறகுகள் கழன்று கழியிடத்தே யாண்டும் பரவின *[ஐங்.156:2].* வெள்ளைக்கொக்கின் பிள்ளை செத்ததைக் காணச் சென்ற மட நடையினையுடைய நாரை காலை முதல் மாலை வரை அக்கொக்கோடு இருந்ததுமன்றி, இரவும் அங்கேயே தங்கியது *[ஐங்.157:2].* வெள்ளாங்குருகின் பார்ப்பு இறக்க அதனைக் காணற்குச் சென்ற மெல்லிய நடையையுடைய நாரையானது மீண்டுவந்து தம் துணையோடு கானலையுடைய கடற்றுறையின்கண் சுற்றித்திரியும் *[ஐங்.158:2].* வெள்ளைக் கொக்கின் பிள்ளை செத்ததற்குச் சென்ற மடநடை நாரை பசிதன்னை நலியவும் அதனைப் பொருட்படுத்தாது அங்கேயே தங்கியிருக்கும் *[ஐங்.159:2].* வெள்ளாங் குருகின் இறந்த பிள்ளையைக் காணச்சென்ற மடநடையினையுடைய நாரை அப்பிள்ளை இறந்ததற்கு வருந்துவதோடு, மேலும் மிக்க துயரத்தை அடையும் *[ஐங்.160:2].* நாரையின் திரள் தம் சிறகினைக் கோதுதல் போன்று பெண்கள் நீரொழுகும் தமது கூந்தலைக் கோதி, ஈரத்தைப் புலர்த்துவர் *[ஐங்.186:1].*

அந்திக் காலத்தே, முக்கோலைக் கையிலே கொண்ட அந்தணர், முதிய மொழியை நினைக்கின்றவரைப் போல, இனமான நாரைகள், ஆரவாரத்தைக் கைவிட்டு, இடுமணல் மேலே தங்கின *[கலி.126:3].* வாடைக்காற்று அசைக்கையினாலே, வளைந்த தாழையின் அசைகின்ற கொம்பிலேயிருந்த அசைந்த நடையினையுடைய நாரை, நமக்கு அருளாதவரைப்போலக், கங்குலிடத்து, நம் மேல் அளித்தல் இன்றாய்த், தனக்குக் காமநோயாலே வருத்தமின்றாய், மாறாமற் கூப்பிடும், எனத், தலைவி கூறினாள் *[கலி.128:3].*

நாஅல்வேதநெறி-நால்வகைப்பட்ட வேதங்களில் கூறப்பட்ட நெறி / வைதிக ஒழுக்கம். நாஅல்வேதநெறி-வைதிக ஒழுக்கம்-திரியினும் நடுக்கின்றி நிற்பாயாக', எனச், சேரலாதன் வாழ்த்தப் பெற்றான் *[புற.2:18].*

நால்கு-நான்கு. தேரிலே குதிரை நால்கு-நான்கு-பூட்டப்பெற்றன *[பொரு.165].* தொண்டைமான் இளந்திரையன் குதிரைநூல் வல்லாரால் நல்லன எனப்பட்ட, திருப்பாற் கடலின் சங்கைப்போன்ற வெள்ளிய பிடரி மயிரையுடைய, இனத்தோடு ஒத்துத் தொழில் செய்வனவுமாகிய குதிரைகள் நால்கினைப் பூட்டிய பொன்னாலாகிய தேரினைப் பரிசிலர்க்களித்தும் மனநிறைவடையான் *[பெரு.489].*

தம்மேல் தாற்றுக்கோல் தீண்டின், தம் விரைவிற்கு இவ்வுலகப் பரப்பே போதாத, மிக்க வேகமுடைய நல்ல நால்கு குதிரைகள் பூட்டப்பட்ட தேரில், போர் வினை முற்றிய தலைவன், விரைந்து தலைவியிடம் வந்தான் *[அக.104:6].* வினைமுற்றி மீளும் தலைவன், பாகனிடம், தலைவியை உடனே காண்பதற்கு, வானத்தில் அன்னக்கூட்டம் பறத்தலையொத்து விரைந்து

செல்லும் நமது நால்கு குதிரைகள் பூட்டப்பட்ட தேரினை தளராது விரைந்து செலுத்துக', என்று கூறினான் *[அக.334:11]*.

**நால்வகை யூழி**-நால்வகை யுகங்கள். திருமால் நால்வகை யூழிகளிலும்-நால்வகையுகங்களிலும்-எண்களால் நவிலப்படும் சிறப்பினை உடையன் *[பரி.3:80]*.

**நால்வயின்**-நான்குதிக்கு. கதிரவன் நால்வயின்-நான்குதிக்கினும்-தோன்றினும், நாடென்று சொல்லப் படுவது நின்னுடைய நாடே, 'எனக், குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனிடம் வெள்ளைக்குடி நாகனார் கூறினர் *[புற.35:6]*.

**நால்வர்**-நான்குபேர். மணிமிடற்றோனும், பனைக் கொடியோனும், புட்கொடியோனும், செய்யோனுமாகியவர், உலகங்காக்கும் முடிவுகாலத்தைச் செய்யும் வலியினையும், தோல்வியில்லாத நல்ல புகழினையுமுடைய நால்வர்-நான்குபேர்-ஆவர் *[புற.56:10]*.

புதல்வரைப் பயந்த வாலிழை மகளிர் நால்வர் கூடி, மணமக்களைக் கற்பினின்றும் வழுவாது, பலபேறுகளையும் தந்து, கணவனை விரும்பிப் பேணும் விருப்பத்தை உடையை ஆக' என, வாழ்த்தினர் *[அக.86:12]*.

**நால்வேதம்**-நால்வகைப்பட்ட வேதம். நால் வேதத்தில்-நால்வகைப்பட்ட வேதத்தில்-கெடாத தலைமையையுடைய, வேள்வி முறைமை சொல்லப்பட்டுள்ளது *[புற.15:17]*.

**நால்வேறியற்கைப் பதினொருமூவர்**-(நான்காகிய வேறுபட்ட இயல்பினையுடைய முப்பத்து மூவர்) (இம்முப்பத்து மூவரையும், ஆதித்தர் பன்னிருவர், உருத்திரர் பதினொருவர், வசுக்கள் எண்மர், மருத்துவர் இருவர் என நான்காகப் பாகுபடுத்துவர்) நால்வேறியற்கைப் பதினொருமூவர்-முப்பத்து மூவர்-காணச், செவ்வேள் ஆவினன் குடியில் உறைவர் *[முரு.167]*.

**நால்வேறுதெரு**-நான்காய் வேறுபட்ட தெருவுகள். நால்வேறுதெருவிலும்-நான்காய்வேறுபட்ட தெருவுகளிலும் - நெய்தல் தொழிலைச் செய்வார் திரண்டுநின்று, மடிப்புடவைகளை விற்றனர்.

கோயிலைச் சூழ்ந்த ஆடவர் தெரு நான்காதலின் நால்வேறுதெரு என்றார். (அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் தெருவுமாம்) இனிப் பொன்னும், மணியும், புடவைகளும், கருஞ்சரக்கும் (கூலங்கள்) விற்கும் நால்வகைப்பட்ட வணிகத்தெருவென்றுமாம்'. *[மது.522]*.

**நால்வேறு நனந்தலை**-நான்காகிய வேறுபட்ட அகன்ற இடங்கள் (திசைகள்). திருமாலிடம் அன்பர் கைகளைத் தலைமேல் ஏந்தித், தம் குறையை எடுத்துக்கூறி வேண்டிக் கொள்ளும் ஆரவாரம், திசைகளின் நால்வேறு நனந்தலையிடத்து-நான்காகிய வேறுபட்ட அகன்ற இடங்களில் - ஒலித்தது *[பதி.31:4]*. நால்வேறு நனந்தலையில் வாழ்வோரும் ஒன்றுபோலப் பகையின்றி விளங்கச் செல்வக்கடுங்கோ வாழியாதன் முன்னோர் ஆண்டதைக் கபிலர் குறிப்பிடுவர் *[பதி.65:16]*.

**நாலூர்க்கோசர்**-நாலூரிலுள்ள கோசர். 'தோழி! வெள்ளிய வேலேந்திய அவ்விடலையோடு, நம்மகள் கொண்ட நட்பு, முரசு முழங்கவும், சங்கொலிக்கவும் மணிவிழாக்கண்டதால், மிகப்பழைய ஆலமரத்தினடியில் கூடித் தோன்றிய நாலூர்க்கோசரது நன்மொழி போல, உண்மையாகியது' என்று, தலைவி, தலைவனுடன் போய் மணம்பெற்ற செய்தியைச் செவிலி, நற்றாய்க்குக் கூறினாள் (நான்கு ஊரிலுள்ள கோசர் என்றுமாம்) *[குறு.15:3]*.

**நாலைகிழவன் நாகன்** - ஒரு குறுநில மன்னன். நாலையென்னும் ஊர்க்குத் தலைவன். நாகனென்பது இவன் இயற்பெயர். பாண்டியன் மறவன் எனவும் குறிக்கப்பெறுகின்ற இவன், அவனுக்குப் படைவேண்டியவழிப் படைத்துணையும், அரசியல் சூழ்ச்சி வேண்டியவழி அதற்கேற்ற அறிவுத்துணையுமாகிய வேண்டுவனவற்றையெல்லாம் உதவி மேம்பட்டுச் சிறந்திருந்தான். இவனுடைய இச்சிறப்புக் களையும், ஈதற்புகழையும் வடநெடுந்தத்தனார், ஒரு பாடலில் *[புற.179]*. குறிப்பிட்டுப் பாடியுள்ளார். 'உலகில் வண்மையுடையோர் மாய்ந்தாராகப், பிறர்பால் ஏற்காமல் கவிழ்ந்த என் உண்கலத்தை மீண்டும் மலர்த்த வல்லவர் யாரென்று யான் வினவியதற்குப், பலரும், ஆண்மைக்கூறுபாடு பொருந்திய ஊக்கத்தினையும், தோலாத நல்ல புகழையும் உடைய நாலைகிழவனாகிய, நற்போர் செய்யும் திருந்திய வேலையுடைய நாகனையே கூறினர்; என்று, இவனது ஈகைப்புகழ், அவரால் எடுத்துரைக்கப்படுகிறது. 'பருந்தினது பசியைத் தீர்க்கும், நல்ல போரைச்செய்யும், திருந்திய வேலையுடைய நாகன்' என்பதனால், இவனது போராற்றலும் புலனாம்.

**நாவல்**-மர வகை. விடாய்மிக்குப் புளிச்சுவையை விரும்பிய ஆடவர், இனிய புளிப்பையுடைய களாப்பழத்துடனே, துடரிப்பழத்தைத் தின்று வெறுப்பின், மணற்குன்றின் கண்ணே ஏறிக்,கரிய நாவற் பழத்தைப் பறித்து உண்பர் *[புற.177:11]*.

நாவலோடு அடுத்துப்பெயர் பெற்ற (சம்பூநதம்) பொன்னால் பூண்செய்யப்பெற்றது *[முரு.18]*. காற்றாலே நாவலின் கரியபழம் பாறையிலே உதிர்ந்தது *[மலை.135]*.

அகன்ற இலையினையுடைய நாவல் மரம் நீருண்ணும் துறைக்கண்ணே சொரிந்த கனியினை, அதன் அழகுகெட இழுத்துக்கொண்டு சென்று, ஆண்ஞெண்டு, பெண்ஞெண்டிற்குத் தரும் *[அக.380:4]*.

கடற்கரையின்கண்ணே உதிர்ந்த புல்லிய காம்பையுடைய நாவலின் கரிய கனியைத், தம்மினமென்று கருதி, வண்டுகள் மொய்த்தன *[நற்.35:2]*.

**நாவலந்தண்பொழில்-நாவலந்தீவு.** தொண்டைமான் இளந்திரையன், நாவலந்தண்பொழில்-நாவலந்தீவு-கேடின்றாக விளங்கப் பரிசில்களைத்தருவன் *[பெரு.465].*

நாவலந்தன்பொழிலினுள், வடகூற்றிற் கிரவுஞ்சமென்னும் மால்வரையைத் துளைத்து அதனை வழிப்படுத்தின ஆறுமென்றலையினை உடையாய்', எனச், செவ்வேளைப் பரவுவர் *[பரி.5:8].*

**நாவாய்-மரக்கலம்.** சோழன் முடித்தலைக் கோப்பெரு நற்கிள்ளி கருவூரிடத்தே ஏறிச் சென்ற களிறு, கடலின் கண் இயங்கும் நாவாய்-மரக்கலம்-போற்சென்றது *[புற.13:5].* நீர்செறிந்த பெரிய கடலின்கண்ணே நாவாயினை ஓட்டிப், போர் செய்தற்கு, வளிச்செல்வனை அழைத்து ஏவல்கொண்ட, வலியோன்மரபினுள்ளானே! எனச், சோழன் கரிகாற்பெருவளத்தானை, வெண்ணிக்குயத்தியார் பாடுவர் *[புற.66:1].* கபிலன், இரந்துசெல்லும் புலவர்க்கு, இனிப் புகழ்தற்கு இடனில்லையாகப், பரந்து புகழ்நிறப் பாடினான். அதனைக் கொண்டு, சேரன், மேல்கடலின் கண், பொன்னைத் தரும் நாவாய் செலுத்திய அவ்விடத்து, வேறு மரக்கலம் போகமாட்டாத அத்தன்மையை உடையேமாயினும், எம்வறுமை,துரத்த, நின்புகழ் கொடுவர வந்து, நின்வண்மையில் சிலவற்றைத் தொடுத்தனம்' என, மலையமான் திருமுடிக்காரியை, மாறோக்கத்து நப்பசலையார் பாடுவர் *[புற.126:15].*

மேற்றிசைக்கண் உளவாகிய குதிரைகளுடனே, வடதிசைக்கண் உளவாகிய நுகரப்படும் பொருள்களைக் கொண்டுவந்து தரும், நாவாய் சூழ்ந்து கிடக்கப்பட்டது கடற்பக்கம் *[பெரு.321].* கடலிடத்துக், கடிய காற்றாலே பாய்விரிக்கப்பட்டு, முரசம் முழங்கச் சீரிய சரக்குகளை, நாட்டிலுள்ளார் நுகரும் படியாகக், கரையைச்சேர வந்து இழிதலைச்செய்யும், நெடியகொடிபாய்மரத்தின் மேலே ஆடும் இயல்பினை யுடைய, பெரிய நாவாய், கருமுகில் சூழ்ந்த மலைபோலக், கடல்சூழ நின்றது *[மது.83].* தீம்புளியினையும், உப்பினையும், கருவாட்டினையும் ஏற்றிய விழுமிய நாவாய், இவ்விடத் துண்டாகிய பேரணிகலன்களை ஆண்டுச் செலுத்துதற்கு யவனம்முதலிய நாடுகளினின்று கொண்டுவந்த குதிரைகளோடே வழிவழிச் சிறந்தது *[மது.321].* கடலிடத்தே, பாய் கட்டின கயிற்றையறுத்துப் பாயையும் பீறிப், பாய்மரம் அடியிலே முறியும்படி அடித்துக் கடியகாற்று நாற்றிசையினும் சேரச்சினந்து எடுக்கையினாலே நங்கூரங்கள் கயிற்றுடனே நின்று பொருது உலாவ, நெடிய சுழியில் அகப்பட்டுச், சுழலும் நாவாய்போல, மதம் பட்ட யானை நின்றது *[மது.379].* புகாரிடத்துத் திரையினையுடைய துறையின் முன்னே, அசைகின்ற நாவாயின் பாய் மரத்தின்மேல் கொடிகள் எடுக்கப்பெற்றன *[பட்.174].*

நீண்ட கொடிகள் அசையும் நாவாய்கள் தோன்றுவனவற்றைக் காணாமோ? எனக்கூறியவாறு, தலைவன், தலைவி சிற்றிலைச் சிதைத்தான் *[அக.110:18].*

வேறாகிய பலபல தேயங்களினின்றும் காற்றுச் செலுத்துதலால் வந்த பலவாய் தொழிலின் பொலிவுபெற்ற நாவாய் துறையில் தோன்றும் *[நற்.295:6].*

தாம் நினைத்த பட்டினத்தைச் சேர்ந்து, ஏற்றிவிட்ட பண்டங்களைக் கொடுத்து, ஆண்டுள்ளன கொண்டு, இடையூறின்றிவந்து, கரையைச்சேரும் நாவாயின் வரவை எதிர்கொள்ளுதல்போல, வையைப்புனலைக் கூடல் மக்கள் எதிர்கொள்ளுவர் *[பரி.10:39].*

**நாழி1.** - ஒரு முகத்தல் அளவை. வேந்தனுக்கும், கல்லாத ஒருவனுக்கும் உண்ணப்படும் உணவுப் பொருள் நாழி அளவினதே, என்பர், மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரர் *[புற.189:5].*

பழைய ஊர்ப்பக்கத்துப் பாக்கத்தே, நற்சொற் கோடற்குரியோர் போய், முல்லையின் அவிழ்ந்த பூவை, நாழியிடத்தே, நெல்லுடனே தூவித், தெய்வத்தை வணங்கி, நற்சொற் கேட்பர் *[முல்.9].*

மூங்கில் உழக்காலும், நாழியாலும், சேதிகை என்னும் பெயரையுடைய தொழில்களாக, வண்ணங்களைத் தோய்த்துக், குதிரையுடலிற் குத்துதல் வழக்கம் *[கலி.96:27].*

**2. அம்புத்தூணி.** அழகு ஒழுகும் கூர்த்தமலர் நிறைந்த சோலையும், சுனையும் அம்பு நிறைந்த மன்மதனின் நாழி-(அம்புத்) தூணி-ஒக்கும் *[பரி.18:30].*

**3. நாழிகை.** கண்ணால் பார்க்கும் தன்மையில்லாத குறளாய்ப் பிறத்தற்கு ஏதுவாகிய நாழிக்கண்ணே-நாழிகையில்-ஆண்டலைப் புள்ளுக்குத் தன்பெடை ஈன்ற, பறழாய மகனே! எனக், குறளாகவுள்ளதலைவனைப் பார்த்துக், கூனாகவுள்ள தலைவி கூறினாள் *[கலி.94:5].*

**நாழிகை-கால அளவு.** நாழிகை-காலவளவு-சொல்வோர் நாழிகை கூறக், காலை முரசியம்பச், சேவல் விடியலறிந்து கூவியது *[மது.671].*

**நாள்-1. வைகல்.** பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், நண்ணார் நாண, நாள்-வைகல் - தொறும் அவரிடத்துச் சென்று பல அழிவுகளையும் செய்வன் *[புற.23:12].* மகளிர் தேறலைப் பொற்கலத்தேந்தி, நாளும் ஊட்ட, மகிழ்ச்சிமிக்கு, இனிதாக நடப்பாயாக, எனப்,பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனை, மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடுவர் *[புற.56:19].* உலாவந்து கூடிய பெரிய நாளாகிய பொழுதின்கண்,

ஞாயிறும், திங்களுமாகிய இருசுடரும், தம்முள் எதிர்நின்று பார்க்க, அவற்றுள் ஒரு சுடர், புல்லியமாலைப் பொழுதின்கண் மலையுள்ளே ஒளித்தது *[புற.65:6]*. சேரமான் பெருஞ்சேரலாதன் வடக்கிருந்தானாக, அவனையின்றித் தனித்து உயிர்வாழும் பகல், எமக்கு, முன்புகழிந்த நாள் போலக்கழியா, எனக், கழாத்தலையார் பாடுவர் *[புற.65:12]*.

யாம் ஒரு நாள் செல்லேம், இரண்டு நாட்செல்லேம், பல நாள் பயின்று பலரோடு கூடச் செல்லினும், அதியமான், முதல் நாள் போன்ற விருப்பினன், என, ஔவையார் பாடுவர் *[புற.101:1(2), 2,3]*. நாள்தோறும் வேங்கையின் பொன்போலும் பூவைச் சுமந்து, மணிபோலும் நீர் கடற்கண்செல்லும், செவ்விய மலைப்பக்கத்தையுடைய நாஞ்சில் என்னும் மலைக்குரிய பொருநன், நாஞ்சில்வள்ளுவன் *[புற.137:9]*. வேந்தன்பொருட்டு, நீ, சாதல் அஞ்சாய்; ஒரு நாள், அரிய பூசல் வருவதாயின், எனது பசித்துன்பத்தையுடைய சுற்றம் வருந்தலும் உண்டு' என, நாஞ்சில் வள்ளுவனை, மருதனிளநாகனார் பாடுவர் *[புற.139:13]*. நள்ளி! நின் செல்வத்தை வாழ்த்த, நாடோறும் நல்ல அணிகலத்தைக், களிற்றோடே பரிசிலர்க்கு அளித்துவிடுத்தலால், பெருமையில்லாத பிறர் குணங்களைக் கூறுதலை, எம் நா அறியாது எனக், கண்டீரக்கோப் பெருநள்ளியை, வன்பரணர் பாடுவர் *[புற.148:3]*.

ஆதன்ஒரி, நாளும், யானையை, இரப்போர்க்கு அளித்தான் *[புற.153:1]*. இன்னும் எனதுயிர் போகின்றதில்லையே என்று சொல்லிக்கொண்டு, வாழும் நாளோடு பலவாகவெறுத்து, இரவலன் தாய் துன்புற்றாள் *[புற.159:1]*. அருஞ்சுரத்தின் கண்ணே பிரிந்தவர்க்கு, இற்றை நாளோடும் கூடி,யாண்டு கழிக' எனக்கூறி, இரவலன் மனைவி துன்புற்றனள் *[புற.161:12]*. காந்தளின் கிழங்கு பிறழக் கிளறிக், கேழல் உழுத புழுதிக்கண்ணே, நல்ல நாள்வந்த செவ்வியைப் பார்த்துக், குறவர் உழாதே தினைவிதைத்தனர் *[புற.168:5]*. கொடாத வேந்தர் நாணக், கெடாதுபரந்த பிட்டங் கொற்றனது வசையில்லாத புகழை, நாளும் பரிசிலர் பாடுவர் *[புற.168:20]*. யான் உயிர்வாழும் நாளையும் பண்ணன் பெற்று வாழ்வானாக', எனச், சிறுகுடி கிழான்பண்ணனைச், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் பாடினான் *[புற.173:1]*. ஆதித்த மண்டிலத்தையொப்ப, நாளும் பலரையும் காத்தலை ஏற்றுக் கொண்டு, ஒருபெற்றியே விளங்கிய, அறத்துறை, ஆதனுங்கன், என்பர், கள்ளில் ஆத்திரையனார் *[புற.175:9]*. வேந்தர் கோயிற்கண்ணே கண்ணொளிகெடப் பலநாள் நின்றுலர்ந்து, பாடிப் பெற்ற பொன்னணியானை, மல்லிகிழான் காரியாதியின் விடியற்காலத்துச் சீருக்கு ஒவ்வாது' என, ஆவூர்மூலங்கிழார் கூறுவர் *[புற.177:2]*.

காய்த்த நெலலையறுத்து யானை கவளமாகக் கொள்ளின், மாவிற்குறைந்த நிலத்தின்கதிரும், பல நாளைக்காகும்' *[புற.184:2]*. புதல்வரை இல்லாதார்க்குத், தாம் உயிர்வாழும் நாளின்கண், பயனாகிய முடிக்கப்படும் பொருள் இல்லை *[புற.188:7]*. யாண்டும், நாளும் பெருகி, நின்புதல்வர் பிள்ளைகளைக் காணுந்தோறும், நீயும், பெருந்தகாய்! நெடுங்காலம் வாழ்க; நானும் தொலைநாட்டின் கண்ணே, நாள்தோறும் துளியை நச்சுதலையுடைய வானம்பாடிபோல, நின்னுடைய வண்மை நசையான், நின் அடியில்வாழ்வேன், எனப், பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை, வடம வண்ணக்கன்பேரிசாத்தனார் பாடுவர் *[புற.198:18,24]*.

நாளும் மகளிர் முயங்குதற்குக் காலம் பார்க்கும், மலைபோலும் மார்பினையுடைய, போரைவிரும்பும் சேயை ஒப்பாய்', என, மூவனைப், பெருந்தலைச் சாத்தனார் பாடுவர் *[புற.:'09:15]*. முன்னை நாள், பரிசில் கையிலே புகுந்தது போலக் காட்டிப், பிற்றைநாள், பொய்யைப் பெற்றுநின்ற, நினது புறநிலைமைக்கு, நீ நாணாய்' எனச், சேரமான் குடக்கோச்சேரல் இரும்பொறை, பரிசில் நீட்டித்தானைப், பெருங்குன்றூர்கிழார் பாடுவர் *[புற.211:10,11]*. கூற்றமே' வயவரும், யானையும், குதிரையும் போர்க்களத்தின்கண் மாய, நாளும் நின்பசிதீர்த்த இவனை, நீ கொண்டாயாயின், இனி, நின்பசியைக் கெடுப்போர்யார்? எனச், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை, ஆடுதுறை மாசத்தனார் பாடுவர் *[புற.227:6]*. வானத்தினின்றும் ஒருமீன் விழுந்தது; அதனைக்கண்டு, வேந்தனுக்குத்தீங்கு நேருமோ, என அஞ்சினம்; அஞ்சினபடியே, ஏழாம் நாள்வந்தது', எனக் கோச்சேரமான் யானைக்காசேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை, துஞ்சியவிடத்துக், கூடலூர்கிழார் குறிப்பிட்டு பாடுவர் *[புற.229:17]*. அதியமானையின்றி, யான் உயிர்வாழுநாளும், எனக்குப் பயன்படாமையின், அவையல்லவாக', என, ஔவையார் பாடுவர் *[புற.232:2]*. வெளிமானுழைச் சென்று, பாடிநின்ற பசி நாட்கண்ணே தசை பழுதானமையினைப், பெருஞ்சித்திரனார் குறிப்பிடுவர் *[புற.237:2]*. என்னுடைய மகனது செல்வமும், தலைமையும் எமக்கென்று நாளும் புகழும், நின் அன்னை எவ்வாறு ஆவள்', எனப்,பட்டுவீழ்ந்தமகன் ஒருவனைக், கயமனார் பாடுவர் *[புற.254:9]*. வெட்சிமறவன், நாட்காலத்து, உறைதெறிப்பக்கடையும் மத்தின் ஒலியைக் கேளாதபடி, ஆனிரையைப் பிறர்க்கு நேராகக் கொடுத்தல் வல்லன்' *[புற.257:13]*. மேல் முன் நாளில் உண்டாகிய போரின்கண், இவளுடைய தந்தை, யானையைக் கொன்று, தானும் வீழ்ந்து மாண்டான்; என, மறக்குடி மகள் ஒருத்தியின் இயல்பைம்பு24 சுட்டும்போது, ஒக்கூர் மாசாத்தியார் பாடுவர் *[புற.279:3]*. நீர்நாய், நாட்காலையில் வாளைமீனை இரையாகக் கொள்ளும் *[புற.283:2]*.

பாசறையிலுள்ள பலசான்றீரே, எத்தனை நாள் நும்முடையபோர் இங்கே நிகழும்; அத்தனை நாளும், தன்மேற்படையெறிந்து, போர் தொடுக்காதவரைத்,தான் எறிவது யாங்குளது? எனத், தானை மறத்துறையில், ஆவூர் மூலங்கிழார் பாடுவர் *[புற.30ɛ7(2)]*.

முன்னை நாளில் பொருது வீழ்ந்த உரவோர் மகன், இப்பொழுது களிற்றை அட்டும் அமையானாய்ப், போர்களத்துநின்றனன் [புற.310:5]. கூவலைத் தோண்டி, நாளும் வண்ணாத்தி, ஆடையினைத் துவைத்து, வெளுத்தாள் [புற.311:1]. தலைவன், நாடோறும், வேந்தராகிய புரவலர்க்குண்டான துன்பத்தைப் பாராமல், இரவலர்க்கு ஈந்தான் [புற.329:6]. அரைத்த மண்ணாலாகிய இஞ்சியிடத்தே, நாட்கொடி - (நாள்தோறும் பெற்ற வெற்றிக்கடையாளமான கொடி) அசைந்தது [புற.341:5]. நாட்காலையில் கடாவிட்டடித்துக்குவித்த நெல்லை மறவர்களுக்கு அளிக்கும் மன்னனின்மகளை, முன்னாளில் மகட்கொடைவேண்டிவந்த வேந்தர்க்கு, இவள் தமையன்மார், அஞ்சுதகவுடையர், என, மகட்பாற்காஞ்சித்துறையில், காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் பாடுவர் [புற.353:9,11]. இந்நிலவுலகம் இன்பநிலையமாமாறு ஆண்டவேந்தர் சிலரே; நாளும், அதனை அறியாதார் பலர்', எனத், தந்துமாறனைச், சங்க வருணர் என்னும் நாகரையர்பாடும்போது குறிப்பிடுவர் [புற.360:9]. ஒய்மான் நல்லியக்கோடன் என், வறுமையைப்போக்கி, வேண்டுவன கொடுத்தான், அதனால், ஒருநாளும் இரவலர்க்கு இல்லையென்னாத பிறவள்ளியோர் பால், ஒன்றுபெறுதற்கு, என் கிணைப்பறையின் ஓசை தோன்றல் செல்லாது', எனப், புறத்திணை நன்னாகனார் பாடுவர் [புற.376:23]. தேவர்கள் புறம்காப்ப, அறநெஞ்சத்தோனாகிய வேந்தன் பன்னாள் வாழ்வானாக, என்று வாழ்த்தி வந்தவர்களைச், சோழன் இராய சூயம்வேட்ட பெருநற்கிள்ளி வரவேற்றான் [புற.377:6]. 'முன்னாள், நீ, பரிசில்தந்துவிட்ட, தொன்முறையறிந்த சிறுவரும், யானும், வறுமையின் நீங்கிப், பிறர்க்கும் யாம் வழங்குதலும் அமைய, வேண்டுவனதந்து விடைதருவாயாக' என நலங்கிள்ளியைக் கோவூர்கிழார் பாடினார் [புற.382:11]. பண்ணனது உழவு வினைக்குரிய எருதுகளையும், ஏற்றத்தையும் யாழிலிட்டிசைத்துக் கிணைப்பறையைக் கொட்டி நாள்தோறும் பாடாதொழிவேனாயின், அவன், என் பெரிய சுற்றத்தாரைப் புரத்தற்கு வேண்டும் அருளைச் செய்யாதொழிவானாக, எனச், சிறுகுடி கிழான்பண்ணனை, மதுரை அளக்கர் ஞாழலார் மகனார் மள்ளனார் பாடுவர் [புற.388:12]. தடாரிப்பறை அறைந்து பன்னாள் பாடி நின்றதில்லையாகவும் பொருநனுக்கு அதியமான் அருள் செய்தான் [புற.390:9]. கிணைப்பொருநன், பொகுட்டெழினியைப் பாடிநிற்க, அவன் தேட்கடுப்பன்ன நாட்படுதேறல் நல்கினான் [புற.392:16]. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், பசிநீங்க ஊன் துண்டங்களைக் கொடுத்து, ஈனுதற்குரிய நாள் உற,முட்டை ஈன்ற பாம்பினது நாவின் வடிவைப்போலக் கிழிந்து பிளவுபட்ட பீறிய உடையை நீக்கி, இரவலர்க்கு அகல,மடிக்கப்பட்ட ஆடைகொடுத்தான் [புற.393:14]. முன்னாள் நண்பகலில், சுரத்திடத்தே வருந்தி, இருள்பரவிய மாலைப்போதில், தடாரியினை இசைத்தவாறு, கிணைப்பொருநன், சோழநாட்டுப்பிடவூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன் முற்றத்தே, வந்து நின்றான் [புற.395:22]. அவன்புகழை நாளும் யாமும் பிறரும் வாழ்த்த, களிற்றுநிரைகளோடு, நல்ல கலன்களை வழங்கி, அவன், செல்வம், புகழுண்டாக மேம்படுக என, வாட்டாற்றெழினியாதனை, மாங்குடிகிழார்பாடுவர் [புற.400:14].

மறவரது நிறம்படுகுருதி, மழை பெய்யும் நாளில் செங்கலங்கல் நீரைப்போலப் பள்ளங்களில்பாய்ந்தது [பதி.49:12]. கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன், பகைவர்கொடுமையினால் பலநாள் பாசறையிடத்தே தங்கி இருந்தான் [பதி.50:22]. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், இரவலர் துன்பம் நீங்கும்படி, நாள்தோறும், புகழ்ச்சியமைந்த நல்ல கலன்களை, வரையாது கொடுத்தான் [பதி.54:7]. சித்திரத்தை ஒத்த அழகையுடைய உயர்ந்த சுவரில் தலைவன் பிரிந்து சென்ற நாள்பலவற்றையும் தலைவி கோடிட்டெழுதினாள் [பதி.68:17]. அயிரை மலைபோல நீ வாழுநாள் தொலையாதாக' எனச், செல்வக் கடுங்கோவாழியாதனைக், கபிலர்வாழ்த்தினார் [பதி.70:27]. பொறைய, நின்வளனும், ஆண்மையும், கைவண்மையும் மக்களின் அளவைக்கடந்தன. யான்,பல நாள் சென்று நின்பகைவரிடத்துச் சொல்லவும் அவர் அதனைத் தெளியமாட்டாராயினார், எனப், பெருஞ்சேரல் இரும்பொறையை, அரிசில்கிழார் பாடுவர் [பதி.73:13]. போர் மறவர் நாள்தோறும் போர்விரைவில் முடிதலில் விருப்பம் உடையராய்த் தம்மேம்பாடுகளைக் கூறி, அகன்ற பாசறையிலே சுழன்று திரிந்தனர் [பதி.81:11]. நின்தேவி காணும்படி ஒருநாள் நின்குதிரைகள் தேரைப் பூண்பனவாகுக', எனப், பெருஞ்சேரல் இரும்பொறையிடம், பெருங்குன்றூர்கிழார் கூறினார் [பதி.81:31]. குளிரின் மிகுதியால் காட்டிலுள்ள மரங்களையெல்லாம் விறகாக எரித்துத் தீக்காய்ந்த, நீண்ட நாட்களாக இருத்தலையுடைய இப்படிப்பட்ட பாசறை நாட்கள், பலவாதலால், பெருமானே! நின்னைப் பாடிக்காண்பேன் வந்தேன்' எனப், பெருஞ்சேரல் இரும்பொறையைப், பெருங்குன்றூர்கிழார் பாடுவர் [பதி.82:9,10]. பெரிய வானத்தில் உயர்ந்து செல்லும் ஞாயிறுபோலப் பல நாள் விளங்குவாயாக; யான், நின்னைக் காண்பேனாக வந்தேன்! எனப், பெருஞ்சேரல் இரும்பொறையிடம் பெருங்குன்றூர் கிழார் கூறினார் [பதி.88:38]. இரும்பொறையின் செங்கோல் சிறப்பால், நாளின்நாளின் நாட்டிலுள்ளார், கையால் தொழுது, நாவால் புகழ்ந்தனர் [பதி.89:10(2)]. வாழ்நாளை அறிந்து கொள்ளுதற்குக் காரணமாக, ஒளியை நோக்குதலையுடைய, அருந்ததியோடு ஒத்த கற்பினையுடையவள், பெருஞ்சேரல் இரும்பொறையின் தேவி [பதி.89:18].

அருட்கற்பினையுடைய தெய்வயானையாருடன், முருகன் ஆவினன் குடி என்னும் ஊரிலே சிலநாள் இருத்தலும் உரியன் [முரு.175]. நாடொறும், யானை உலாவரும் வழியையுடைய காட்டிடத்தே, பொருநர் தங்கிச் சென்றனர் [பொரு.48]. மகிழ்ச்சியையுடைய கள்ளுண்டலிலே பலநாள் போக்கி,

ஒருநாள் சோறாகிய உணவையும் கொள்வாயாக', எனப், பொருநனைக், கரிகாற் பெருவளத்தான் வேண்டிக்கொண்டான் [பொரு.111:(2)]. 'ஒருநாள், செல்வ! எம் பதியிடத்தே செல்வேம்! எனப், பொருநர், கரிகாலனிடம் கூறினர் [பொரு.119]. கரிகாலன், தவழ்தலைக் கற்றதுமுதலாக நன்னாட்டைத் தோளிலே வைத்துக் கொண்டு நாடோறும் வளர்த்தான் [பொரு.138]. கரிகாலன் நாடு நாள்தோறும் கடாவிட்டு மேரு என்னும்படி திரட்டின, நெற்பொலியுடையது [பொரு.243]. பன்றியின் வரவைப் பார்த்திருக்கும் நடுநாளிலே (நடுயாமத்திலே) வேட்டை ஒழிந்தால், கரையில் அடுத்த பகல் நாளிலே முயல்களை வலையில் வளைத்துக் கொள்ளக் கானவர் முயல்வர் [பெரு.111(2)]. பலநாள் குழியிலே நிறுத்தி குறிய காலையுடைய ஆண்பன்றியைக் காத்தனர் [பெரு.343]. கள்ளையுண்டு, நாளும் பெரிய மகிழ்ச்சியையுடைய இருப்பை மருவிச் செல்லுமாறு, பாணன் ஆற்றுப்படுத்தப்பட்டான் [பெரு.382]. அழித்தற்கரிய அரண்களைத், தண்டத்தலைவர், அரசன் ஏவலாற்சென்று கைக்கொள்ளக் கைக்கொள்ள, அவர்கள் அவ்வெற்றிக்கு, நாள்தோறும், நன்மையமையப் பெற்ற வெற்றிக்கொடி எடுத்தனர் [மது.368]. வெற்றிநெருங்கும் திருநாளினைத் தன்னிடத்தேயுடைய ஏழாநாள் அந்தியில், அவ்விழாவிற்குத் திரண்ட நாட்டிலுள்ளார் (நன்னீராடற்கு) ஆரவாரம் செய்தனர் [மது.427]. நன்னன் கொண்டாடுகின்ற பிறந்த நாளிடத்துச் சேரிகளிலே உள்ளார் கொண்டாடுகின்ற விழாவிலே ஆரவாரமெழுந்தது [மது.618]. தேரோடும் தெருவின்கண்ணே நீர்திரண்டொழுகும்படி மழைமிகப் பெய்த அரை நாளாகிய பொழுதிலும் காவலர் உலாவினர் [மது.649]. நாள்தோறும் தமக்குச் செல்வம் மிகும்படி கையால் தொழுது வாழ்த்திக், காலையில் திறையாகக் கொண்டுவர வந்த சீரிய கலன்களை அளந்து முடிவறியாதது மதுரை [மது.694]. மகளிர் நாளும் மணம்கமழும்தேறலை மடுப்ப, மகிழ்சிறந்து, பெரும! இனிதாக இருப்பாயாக! எனத்தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை மாங்குடி மருதனார் வாழ்த்தினார் [மது.780]. சித்திரைத் திங்களின் நடுவில், பத்தினின்ற யாதோர் நாளில், பதினைந்தாம் நாழிகையிலே, திருமுளைச்சார்த்துப் பண்ணி, நூலறி புலவர் கயிறிட்டு மனைவகுத்தனர் [நெடு.75]. நாட்டிலுள்ளார் எல்லாம் அறியும் நல்ல மணத்தைப் பின்னால் நிகழ்த்துவோம்; சில நாள் நெஞ்சுகலங்கலைப் பாதுகாப்பீராக', எனக்கூறிப் பெயர்ந்தனன், என்ற கூறித் தோழி அறத்தொடு நின்றாள் [குறி.232]. தலைவர் வரும் மலை இடும்பையை யுடையவாயிருக்கும் என்று தலைவி நினைக்குந்தோறும் கண்ணில் அரித்து வீழ்கின்ற நீர், நாளும் மார்பிலே துனிப்பக் கலங்குவாள் [குறி.249]. தெய்வம் விரும்புதலிற், கடியவாகிய பூக்களைக் கிட்டினும், வரையர மகளிருடைய இருப்பைக் காணினும் நடுங்குதலுமுரியீர், ஆகையால், பல நாள் நில்லாது நிலநாடு படர்மின் எனக் கூத்தரை ஆற்றுப்படுத்தல் [மலை.192]. நன்னுடைய நாடு ஒரு நாள் தங்கிப் போகினும் நீவிர் நுகர்தற்குப்பல பொருள்களை உடைத்து என, ஆற்றுப்படுத்தப்பட்டனர் [மலை.452]. நமக்குத் தெய்வம் இத்துணைக்காலம் இருவென எல்லையிட்டுவிட்ட நாள், புகழோடே கழிந்து போவதாக, எனக், கொடுத்தல் தொழிலிலே விரிந்த உள்ளத்துடன், வானத்தை ஒத்த பெரிய உள்ளமுடையவன், நன்னன் [மலை.557]. நன்னனிடம், நும்நெஞ்சிற்குச் சிறப்பெய்திப் பலநாள் நின்றீராயினும் தசைகளோடே, அரிசியும் முட்டுப்படாமல், முதல்நாள் போன்ற விருப்பத்தோடே பெறுகுவீர்', எனக், கூத்தரிடம் கூறினர் [மலை.565,566].

வாடைக்காற்று கரும்பின் தண்டின்மீதிருந்த வெண்குருகு ஒலிக்கும்படி தண்ணிய பலவாகிய துளிகளைக் கொண்ட பனிநாளில் வீசும் [அக.13:24]. 'ஒரு நாள் நீ துன்பமுறினும் வழிநாள் தலைவி உயிர்வாழ்வாளல்லள், எனத், தலைவனிடம் கூறித், தோழி, இரவவருவானைப் பகல்வருக என்றாள் [அக.18:9(2)]. 'துறைவ! ... கடற்கரைச் சோலையில் வந்து நுங்கள் மே... ...ம் எத்தகையதோ, என்று வினாவிச் செல்லின், நின் பெருமை கெட்டுப்போமோ?' எனப் பகற்குறிவந்த தலைமகற்குத், தோழி கூறினாள் [அக.30:12]. மேல்நாள் என்தோழிமாரோடு பூக்கொய்யச் சென்றவிடத்துப் புலிபுலி' என்னும் பூசல் தோன்றக், கணை தெரிந்துகொண்டு ஒரு தலைவன் தோன்றி, அப்புலி சென்ற வழியாதோ? என வினவி நின்றனன். நாங்கள் ஒருவர் பின் ஒருவராக நாணமுற்று நின்றோம். நுமது வாயிற் பொய்ச்சொற்களும் உளவாமோ? எனக் கூறியவாறு, நின்மகள் கண்களை நோக்கிச் சென்றான். அவள் பசலைக்குக் காரணம் அதுவே' எனக்கூறித், தோழி, செவிலித்தாய்க்கு அறத்தொடு நின்றாள் [அக.48:4]. கிளி, பந்து, கழங்கு இவற்றை விரும்பிக் கைவிடாத என்மகள், அருள், அன்பு, சாயல், இயல்பு, இவற்றால் முன்னாள் போலாள்; இஃது என்னோ? என, உடன்போயின தலைமகளை நினைந்து, செவிலித்தாய், மனையின்கண் வருந்தினாள் [அக.49:3]. நெஞ்சமே! தலைவியை நீங்குதல் மறந்து, பல முறையும் தழுவி, நாளும் தலைவியானவள் இல்வாழ்க்கைத் தொழிலோடும், மகிழும்படி நினைவாயாக', எனப், பிரிவுகடைக்கூட்டிய நெஞ்சிற்குத், தலைவன் கூறினான் [அக.51:12]. வதுவை நாளில் செய்யும் ஒப்பனையுடைய பரத்தையரை, ஊரன் மார்பில் புணர்க்க பாணன் வருவான் [அக.56:9]. வாவற்பேடை, வெம்மையொடு பறந்து வந்து, கனிகள் பெறாமல், பெறும் நாளின் வளனை நினைந்து துன்புற்றது [அக.57:4]. தலைவன் பிரிந்த நாளை நெடுஞ்சுவரில் தலைவி குறித்துவைத்தாள் [அக.61:4]. வாடைக்காற்று வீசும் முன்பனிக் காலத்தில் எம்மைவிட்டகன்றிருந்த சில நாட்களுள்ளே, பிரிந்து தனித் திருக்கும் இரங்கற்குரிய இவர், என்னிலையடைவரோ' எனக் கருதிய தோழி தலைவனைச் சிறிதளவேனும் நினைத்தறிந்தீரோ, என வினவினாள் [அக.78:13]. ஈன்று

அணித்தாய நாள் பிடிக்குக் கழிந்தமையால், பிடிக்கும், கன்றுக்கும் முற்றாத மூங்கிலைக் களிறு, கொணர்ந்தது *[அக.85:6]*. தாய், தலைவியை இவ்விடத்தே செறித்தமையினை அறியானாகிப், பலநாளும் தலைவன் வருந்தினான் *[அக.90:5]*.

முகில்கள் கொள்ளி போல் மின்னி மழையைச் சொரிந்த நடுநாளாகிய இரவில், கொல்லும் விலங்குகள் திரியும் இருளிடையே, தலைவன் இரவுக்குறி வந்தான் *[அக.108:8]*. கரடிக்கூட்டம் புற்றாஞ்சோறாய இரையினைவிரும்பிச் சூழ்ந்து கொண்டிருக்கும் அரை நாட்கங்குலில், வயவுப் பிணவாகிய பெண்புலியின் பசிபோக்க, ஆண்புலி, களிற்றினை அட்டு முழங்கியது *[அக.112:4]*. நீ,வாராது ஒருநாள் இடையீடு உறினும், என்தோழி உயிர்வாழாள், எனத், தலைவனிடம், தோழி கூறினாள் *[அக.112:9]*. பலநாளும் பகற்குறியாகக் கொண்ட தினைப்புனத்திலே கிளியை ஓப்பும் பாடலையும் ஒழிந்தனள். இனி என்னாகுவளோ? எனக் கூறித், தோழி வரைவு கடாவினாள் *[அக.118:9]*. கூகை, கோழி போன்றன குரல் எழுப்பாது எல்லாம் மடிந்தகாலை, ஒரு நாள், நிலைபெறாத நெஞ்சினையுடைய நம் தலைவர் வருதலிலர், எனத், தலைவி, தோழிக்குக் கூறினாள் *[அக.122:17]*. நிலம் தின்னும்படி விட்டொழித்த நிதியம் போன்ற பொருளை ஒருநாள் ஒரு பகற்பொழுதிலே பெற்றாலும், நம் காதலர் வழிவரும் நாளில் தங்காதுவருவர் எனத் தோழி உரைத்தாள் *[அக.127:11(2)]*. வன்னிலத்தின் புழுதியில், நல்ல நாளை (மணநாளை) அறிவிக்கும், வேங்கைப் பூக்கள் உதிர்ந்து கிடந்தன *[அக.133:4]*. தலைவன் இரவுக்குறிவரும் அரை நாள் இருளில் (நடுஇரவு) நாகம் மணி உமிழ்ந்தது *[அக.138:15]*. கார்காலத்தின் மழைபெய்த இறுதிநாளில் நாள் கழிந்த, வெண்முகில் உயர்ந்த மலையில் உலாவும் *[அக.139:5,6]*. தலைவர் தாம் வருவேம் என்று கூறிய நாட்களும் பொய்யாயின, எனத், தலைவி கூறுவாள்' எனத் தலைவன், பாகற்குக் கூறினான் *[அக.144:1]*. ஊரன் நெடுந்தேர், பரத்தையர் சேரியின்கண் பலநாளும் இயங்குதல் அமையாதாயிற்று', எனக் கூறிப், பாணற்குத், தலைமகள் வாயில் மறுத்தாள் *[அக.146:6]*. உயிர்மெலிந்து ஒழுகிக்கெடவும் தோளும்பழைய அழகுகெடவும் நாளும் பிரிந்தோர் பெயர்வுக்கிரங்கித் தலைவி வருந்தினாள் *[அக.147:12]*. அறநெறியில் நீங்காது இல்லறம் நடத்தலும், சுற்றத்தார் துன்பங்களைத் தாங்கலும், நாளும் மெய்வருந்தாமைக்கு ஏதுவாய உள்ளமோடு இருந்தோர்க்கில்லை; வினையை விரும்பிய நெஞ்சினராய நம் தலைவர், துன்பத்தால் வருந்துதலைச் சிலநாள் பொறுத்துக்கொள்ளல் வேண்டும்', எனக், கூறியதனைச் சுட்டித், தலைமகளைத், தோழி வற்புறுத்தினாள் *[அக.173:2,6]*. பலநாள் நீட்டித்த களவுப்புணர்ச்சியினை நாணுடைமையில் நீங்கிப் பொருள் தேடும் உள்ளமோடு நம்முயர்வுள்ளினர்; எனத், தலைவி கூறினாள் *[அக.187:2]*. கூட்டமாகிய முகிலே! மின்னின் தெருகுதியை உடையையாகி, நாளும் பயனின்றி, ஆரவாரம் செய்து ஒழிதியோ? தினையிடத்து மழையைப் பொழிதியோ? என, இரவில், சிறைப்புறமாகத், தோழி கூறினாள் *[அக.188:7]*. அன்னையே! வடகாற்றுடன் அலைகள் அலைத்துக் கொண்டிருக்கவும், முன்பு ஒருநாள், தலைவன், கடலோரத்தே தேரில் வருதற்கும் உரியன் ஆயினான்', எனக்கூறித், தோழி அறத்தோடு நின்றாள் *[அக.190:8]*. ஆறலைப்போர் நன்னாள் வேட்டத்தில், ஆறுசெல்வார் பொருகளத்து ஒழிந்தனர் *[அக.193:3]*. தலைவன், ஈன்ற நட்பிற்கு அருளான் ஆயினும், தலைவியைப் பல நாளும் கூந்தலை வாரி முடித்து, மருங்கிலே ஏற்றிப்பாதுகாத்த நன்மைபொருந்திய உதவியும் உடையேனாவேன், என்பதனை அறியின் நன்று', என, மகட்போக்கிய நற்றாய் கூறினாள் *[அக.195:8]*. தலைவன் கூறிய மொழியை நம்பித் தலைவி அரைநாள் யாமத்தில் குறிவந்து அவனை முயங்கிச் சென்றாள் *[அக.198:4]*. புலால்நாறும் பதியாகிய எம்சேரி, பொலிவற்ற உறையுளையுடையதாயினும், இன்பம் தருமாற்றால் ஒருநாள் தங்கியிருந்தார்க்கும், பிற்றைநாள் தம் பதியினையே மறக்கச் செய்யவல்லது; எனத், தோழி, தலைவனுக்குக் குறைநயப்பக்கூறினாள் *[அக.200:5(2)]*.

அம்பல் பெண்டிர், நின்மகள் இன்னதன்மையள், என்று பலநாளும் என்பால்வந்து கூறவும், நாணுவள் என்றெண்ணி, அவளுக்கு உரைத்தல் செய்யேன்; என, மகட்போக்கிய தாய் வருந்தியுரைத்தாள் *[அக.203:4]*. (மண) நாளைக்காட்டும் வேங்கையின்மலர்கள் உதிர்ந்தன *[அக.205:20]*. தோளும்,கவின்இழந்தன; நாளும், அன்னையும் அருந்துயருற்றனள்; எனப், பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத், தோழி வற்புறுத்தினாள். *[அக.209:1]*. மிக்க இருள்கொண்ட நடுநாளில்(இரவில்) முகில் இடியேற்றுடன் பரக்கவும் தலைவியின் தோள் சேர்ந்தல்லது அமையேன் என்கின்றாய், எனத்,தலைமகனிடம் தோழி கூறினாள் *[அக.218:6]*. நின்மார்பினை ஒரு நாள் பொருந்தத் தழுவேமானால் யாங்களும் மேம்பட்ட அணி நெகிழ்ந்துவிழ மெலிவேம்; அதனால், பகலில் வருவீராக எனப், பகற்குறி நேர்ந்த வாய்பாட்டால், தலைமகனைத், தோழி வரைவு கடாவினாள் *[அக.218:15]*. பலநாள், வலிய இடியேற்றுடன் கூடி, இரவெல்லாம் மழைபொழிதலின், ஈரமிக்க சேற்று நெறியில் தலைமகனைத்தேடிச் செல்வோமாக, எனத், தலைமகன், சிறைப்புறத்தானாகத், தோழி, தலைமகட்குக் கூறினாள் *[அக.222:13]*. உன்னால் விரும்பப்பெற்ற பரத்தையோடு நீ முன்னாள் விளையாடியதால் எழுந்த அலர், இந்நாள் பெரிதாயிற்று, எனத் தோழி கூறினாள் *[அக.226:12(2)]*. வேங்கை, மணநாளாகிய காலத்தே பூத்தது *[அக.232:7]*. குரவையாடும் ஆரவாரமிக்க விழாக்களத்தை ஒப்ப, அன்னை, நாள்தோறும் வேலனை அழைக்கும் பருவமாக நமக்கு விளைந்தது', எனத், தோழி உரைத்தாள் *[அக.232:11]*. தோழி! பலநாளாக இவ்வூரார் செய்யும் அம்பல் என்னையோ? எனத், தோழிக்குத், தலைமகள் கூறினாள் *[அக.249:1]*. முசுண்டை என்பான், பாணர் இரப்பின்

நாடொறும் களிற்றினைத்தேரோடு கொடுப்பான் [அக.249:4]. ஊர்க்கண் எழும் அலர் மிக்கதாகின்றது. இங்கு யான் இனிச் சிலநாளும் உயிர்த்தரித்திரேன் போலும், என்று,பலவும் எண்ணித்துயரில் அழுந்தாதே, தலைவர், மறதியற்று என்றும் நினைவர்; எனத், தலைமகட்குத், தோழி கூறினாள் [அக.253:8]. இயங்குதற்கரிய நடுநாளில் (நள்ளிரவில்) வடுகர் பகைப்புலத்தை அழித்து அழகிய ஆனிரைகளைக் கவர்ந்து வருவர் [அக.253:10]. பொருளீட்டும் முயற்சிபற்றி நம்மைப் பிரிந்து சென்ற தலைவர் நமது துன்பம் நீங்கப் பலநாள் தாழ்க்காது விரைந்து வருவர் எனத், தலைமகள் ஆற்றாமை மீதூரத், தோழிக்குரைத்தாள் [அக.255:7]. பாதிரியின் வாடல் நாறுகின்ற வேனில் நாளில், சுரம் கடந்து சீறடி சிவக்கும் படியாகத் தலைவி தலைவனுடன் சென்றாள் [அக.257:2].

நாளும் தலைவியைத் தன் நல்ல அகத்தில் விரும்பி, அச்சம் தோன்றும் ஒடுங்கியநெறியில் தலைவன் சென்றான் [அக.258:8]. பேராந்தை குழறி ஒலிப்பதும், பேய் இயங்குவதுமாகிய அரைநாளில், (பாதியிரவில்) மனம் உருகும் துன்பினைச் செய்த அன்பில்லாதவனது அறிவுடை மொழியை மெய்ம்மையாக விரும்பினேன்'என்று, தலைவி கூறினாள் [அக.260:13]. சுரம்,பல இறந்து சென்ற தலைவர் பழியுடையரல்லர்; நாளும், தம்மை விரும்பி வந்தோரைப் பற்றிக் கொள்ளுதலை அறியாவாய நம் தோள்களே தவறுடைய, எனத், தோழிக்குத், தலைமகள் கூறினாள் [அக.267:14]. கவலையாகிய மிக்க தீயினை, முயற்சியாகிய மழையால் அவித்து, நாளும், இக்காட்டில் வருந்தி, நாம் இங்கே பிரிந்திருப்பேமாக, எனத் தலைமகன், தன்னெஞ்சிற்குக் கூறினான் [அக.279:8]. நாம் மணத்திற்கு வரைந்த நாள், வல்லேவருக, என்று, மனையுறை தெய்வத்திற்குப் பலி செலுத்துவோமாக, எனத், தோழி கூறினாள் (தலைமகள் கூற்றுமாம்) [அக.282:16]. தலைவன் சேய்மைக்கண் உறையும் தனிமையால், திண்ணிய சுவரில், நாள்தோறும் தலைவி முறையாகக் கோடிட்டாள் [அக.289:9]. வண்டுகள் கிளைகளில் அசையும் முன்பனிக்காலத்து, அரைநாளில் (நள்ளிரவில்)-தலைவர் வேந்தன் பாசறையிடத்திருந்தார் [அக.294:11]. வேலைக் கையிற் கொண்டு, பூமாலைக்கண் ஊதும் வண்டினை ஒட்டி, அரை நாளில், (இரவில்) நீ வந்த வருகையினும், என் தோழி வருந்தாதே எனக்கூறி, எனக்கு உசாத்துணையாக இருந்தமை, எனக்கு இனிதாகவுள்ளது, என, இரவுக் குறிக்கண், தலைமகள், தலைமகற்குக் கூறினாள் [அக.298:13].

நீயும் மனச்சிதைவை மேற்கொண்டு பலநாளும் வந்து, பணிந்த மொழிகளைப் பல்காற் கூறலின், இவளும், கண்கலங்க, நின்மாட்டுப் பெரிய மயக்கத்தினை எய்தியுள்ளாள், எனத், தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி கூறினாள் [அக.310:4]. பேய் வழங்கும் அரைநாளில் (இரவில்), தலைவன், தலைவியைப் புணர்ந்து, பலநாள் பொலிவுபெற்றுக் கூந்தலைத் தடவி அளிசெய்தகாதலோடு பிரிந்து சென்றான் [அக.311:4,6]. காதலர் வந்து நின்றாராகப், பலநாளாக நம் அன்னையும் அறிந்திட, நம்மை வருத்தி, நம் நெற்றியில் பரவிய பசலைநோய், நம்மைப் பிரிந்து எவ்விடத்துச் சென்றதோ? எனத், தலைமகன் வரவுணர்ந்த தோழி, தலைமகட்குக் கூறினாள் [அக.317:22]. குளிர்ந்த மழை ஒருநாள் பெய்வதாக, அரிவையே! பின் நின்னுடன் செல்வேம், சில நாள் அமைந்திருப்பாயாக' என்று பல நாள் தளர்தலில்லாத ஊக்கத்து. ன் கொண்டுதலைக் கழிதலாகிய வினையைத் தலைவன் வற்புறுத்தினான் [அக.325:12, 14(2)]. தலைவர் மலையைக் கடந்து சேய்மைக்கண் சென்றனராயினும், தாம் கூறிய கால எல்லைபெயர்ந்திட, நாட்கள் இடைபடாமல் வருவர், எனத் தலைமகள் கூறினாள் [அக.333:14].

நாள் (பருவம்) உற வெளிப்பட்ட அழகினையுடைய கமுகம் பூக்கள் தோன்றின [அக.335:17]. பலநாளும், தலைவன் வருத்தம் தீரப், பகற்பொழுதிலே வந்து, இனிய நிழலில், தலைவியுடன் பொழுதைக் கழித்து, மாலைப்பொழுது வரத், தேரேறிச் சென்றான் [அக.340:1]. நாம் பலமுறையும் உடன்செல்ல வேண்டினேமாக, சிலநாட்கள் கழிவதாக, என்று, தலைவர், முன்னாள் நம்மொடு பொய்த்தனர் ஆயினும், தலைவர் நிழலின்கண் தங்கினர் ஆகிச் செல்லுதற்குக், காடு கவின்பெறுக', எனத், தோழிக்குத், தலைமகள் கூறினாள் [அக.345:10(2)]. தலைவன், மகிழ்ச்சியுற்ற துணையாகிய சுற்றத்துடன், கள்ளுண்டு, தலைவி மனைக்கண் செல்லாது, முன்நாளில், பரத்தை இல்லின்கண் சேர்ந்திருந்தான் [அக.346:16]. தலைமகன் பிரிவால் தலைவியின் தோளும் பழைய அழகுகெட, நாளும் பசலை வருத்தியது [அக.347:1]. தலைவன் வதுவை செய்த நாளினும் எமக்கு இனியனாக உள்ளான் எனத், தலைவி கூறினாள் [அக.352:17]. நாளும் கனவிலே பொருள்கள் தோன்றிமறைதல்போல, நனவில் நாளது செலவும், காமத்தின் தன்மையும் அறிந்திலாயாயினும், சுரன் இறந்து தலைவியின் குணங்களை உள்ளுவையல்லையோ? எனத், தலைவன், மீண்டும் பொருள் கடாவிய நெஞ்சிற்குக் கூறினான் [அக.353:2]. நீர்ஒழுகும் கண்களும், பசலையுற்ற தோள்களும் பிறர் அறியும்படி வாடுதலுற, நாளும், அவற்றை மறைத்து வதியும் நம் இயல்பினைத், தலைவர் அறியாராய், வாராது மிகத் தாழ்த்தனர், எனக் கூறித் தலைவி செயலற்றாள் [அக.359:2]. சுனைநீரில், பிடியுடன் கூடிய களிறுபோல, நம்முடன் பல நாளும் ஆடி, நம்மைப்பிரிந்து, வேறிடம் சென்று, சிலநாள் கழிதற்கு முன்பே, அந்நிகழ்ச்சி, பலர் வாயிலும் பேசப்பட்டு, அலராகின்றது எவன்! எனச், சிறைப்புறமாகத், தலைமகட்குச் சொல்லுவாளாய்த், தோழி கூறினாள் [அக.368:12(2)]. தலைவன், தனது தேரினைச் சேய்மையில் நிறுத்தித் தனியனாய் வந்து நும் ஊர் யாது? என்று (தலைவியை) வினவிக் குறுகக் குறுக நடந்து முன்னாளில் சென்றமையினைத், தோழி, தலைவிக்குக்கூறினாள் [அக.380:3]. வயலை, நாள்தோறும், கொம்புகள் பாரந்தாங்காது சுழல, மலர்ந்திருந்தது [அக.383:6].

தலைவர் சென்றபின், இன்றொடு, சிலநாட்களே கழிந்தனவாயினும், எம் கண்கள், மிகவும் துயிலாதனவாகும், எனத், தலைமகள் கூறினாள் *[அக.391:9]*. நின் மனைவி விருந்தயரப் பால்பெய்த உணவினை உண்ணுதற்கு, ஒருநாள் வந்துசெல்வாயாக' எனத், தலைமகளை, இடத்துய்த்துவந்த தோழி, தலைமகனை வரைவு கடாவினள் *[அக.394:11]*.

தலைவனைப் பிரிந்த தலைவி வளைநெகிழ, நாள்தோறும் கலுழும் கண்ணோடு வருந்தி உறைந்தாள் *[குறு.11:1]*. தலைவர் பிரிந்த நாளில் உடம்பட்டுக், கூதிர்க்காலத்தும் பிரிந்துறையும் தலைவர் பொருட்டு அழுதலால், கண்கள், நாணமில்லாதன, எனத், தலைவி கூறினாள் *[குறு.35:1]*. தலைவனுக்குரிய மனைவியாய் நீ இருப்பின், நின் உள்ளத்தில் துன்பம் பலவாகுக, நீ துஞ்சும் நாள் சிலவாகுக, எனத், தலைவி, தன்னெஞ்சிற்குரைத்தாள் -*[குறு.91:8]*.

தாளியறுகின் கொடியை நாளில் (விடியலில்) ஆக்கள் மேயும் பனிவீழ்கின்ற நாளிலே என்னைக் காதலர் பிரிந்து சென்றார். அங்ஙனம் பிரிந்து சென்றுறையும் நாளும் பலவாகின்றன; எனத், தலைவி கூறினாள் *[குறு.104:3,4,5]*. நாளில், உரிய காலத்தில் விளைந்த எருவையை யானை கவளங்கொள்ளும் *[குறு.170:2]*. தலைவன், ஒருநாள் வந்தானல்லன், இருநாள் வந்தானல்லன், பல நாட்கள் வந்து பணிமொழி பயிற்றி சென்றனன்', எனத், தோழி கூறினாள் *[குறு.176:1(2),2]*. நாம் தலைவியிடத்து விடுதற்கமைந்த தூது, ஒரு நாளில் பெரிய நாணத்தை விட்டுத் தெருவின்கண் செல்லவும் (மடலேறுதல்) தகுவதோ? எனத், தலைவன் உரைத்தான் *[குறு.182:4]*.

தலைவன் சிலநாட்களாகச் சுறா வழங்கும்வழியில் முன்னர் வந்து கொண்டிருந்த அத்தகைய வரவு அறியான், எனத், தோழி உரைத்தாள் *[குறு.230:6]*. தலைவ! இவளை நீ கைவிட்டாய் என விடுக்கும்நாள் வருவதாக; அவ்வாறாயின், எம், நலன்தருக, எனப்பிரிந்து செல்ல எண்ணிய தலைவனுக்குத், தோழி கூறினாள் *[குறு.236:1]*. தலைவன் மார்பை அடைக, என்று, வரையறுத்தநாள் அணிமையாக வந்தும், நின்பால் ஆற்றாமை உண்டாகின்றது, என்கொல்? எனத், தோழி, தலைவியை நோக்கிக் கூறினாள் *[குறு.248:2]*. நினது நாள் துயர் நீங்குமாறு தலைவர் காலம் தாழ்க்காது வருவர், எனத், தலைவியிடம், தோழி உரைத்தாள் *[குறு.253:4]*. சிறிய மழையையுடைய கார்ப்பருவத்தின் கடைநாளிலே, அச்சம் உண்டாகின்ற காலத்திலும், என், கண்கள் தூங்காவாயின, எனத், தலைவி மொழிந்தாள் *[குறு.261:2]*. நெஞ்சே! நாளும் கூற்றுவனது கண்ணோட்டமில்லாத கொலைத்தொழிலை நன்கு அறிந்தோர், தலைவியைப் பிரிந்து செல்லார், எனத்,தலைவன் உரைத்தான் *[குறு.267:6]*. நாடனைத் தெளிந்து, அவனோடு பொருந்திய காலம் ஒரு நாளே; அங்ஙனம் பொருந்தியது, மிகப்பல நாட்கள், தோளோடு கலந்து, அழகைக் கொள்ளை கொள்ளும் தன்மை யினையுடைய நோயாக ஆகின்றது, எனத், தலைவி கூறினாள் *[குறு.271:3,4]*. நாளும் என்னெஞ்சைப் பிணித்துக்கொண்ட தலைவியது மேனியை, ஒருநாள், ஐம்புலனும் இயையும்படி அளவளாவுவேனாயின், யான், அதன்பின், அரைநாளேனும் வாழ்தலை விரும்பேன், எனத், தலைமகன் கூறினான் *[குறு.280:1,4,5]*. ஒருநாள், தலைவன், நகைமுக விருந்தினனாகி வந்தானாகத், தாய், போர்க்களத்தின்கண் உள்ள ஊரினரைப் போலத், துயிலை மறந்துள்ளாள் எனத், தோழி கூறினாள் *[குறு.292:7]*.

வாடைக்கு அழிந்த முகில் தென்திசையை நோக்கிச் செல்லும் தண்ணிய பனி நாளில், நம்மைப் பிரிந்து பொருந்துவானோ? பொருந்தான்; எனத், தோழி கூறினாள் *[குறு.317:7]*. என் தோள்களை அணைத்த அந்நாளிலே, நம்மிடத்துப் பிழையாமையைப் புலப்படுத்தும் வஞ்சினம் செய்தவனும் இத்தலைவனே' எனத், தலைவி கூறினாள் *[குறு.318:6]*. தலைவனோடு ஒருநாளேனும் மகிழ்ந்து விளையாடிய பழியும் இல்லேம்; அங்ஙனமாகவும், இவ்வூரார், வீணே அலர்தூற்றுவர், எனத் தலைமகள் கூறினாள் *[குறு.320:4]*. தலைவியின் இரண்டு தோள்களிலே துயின்று கழிந்த நாள், இவ்வுலகில் வாழும் நாளாகும், என்பது, தலைவன் கூற்று *[குறு.323:7(2)]*. தலைவன் ஒருநாள் நம்மைப்பிரிந்தால், அது, பல நாள் வருகின்ற துன்பத்தையுடையது', எனத், தலைவி கூறினாள் *[குறு.326:4,5]*. துறைவன் தண்ணளிசெய்த நாள் மிகச் சில; ஆயின், அலரோ, பெரிது, எனத், தோழி உரைத்தாள் *[குறு.328:4]*. மகளிர்க்குரிய துணங்கைக் கூத்தாடும் நாளும் வந்தன?. என, இற்பரத்தை மொழிந்தாள் *[குறு.364:6]*. நாட! நீ நயந்தோள் கண், வளைகள் நெகழ, நாளும், கலங்கி, நீர்த்துளியை நீங்கா' எனத், தோழி கூறினாள் *[குறு.365:1]*. மெல்லிய இயல்பை உடையாய்! நல்ல நாளிலே நம்மை நீங்கிய குற்றமற்ற மாமையின் இயல்பைச் சொல்லுதற்கு ஆற்றல் இல்லேம், ஒரு நாளேனும் இடையீடுபடாத வெள்ளத்தினது திண்ணிய கரையிலேயுள்ள பெரிய மரத்தைப்போலத் தீங்கில்லாத நிலையிலிருந்து தலைவரைத் தழுவுவேமாக', எனத், தலைவி உணர்ந்தாள் *[குறு.368:2,6]*. தலைவர் மிகச் சேயதாகிய நாட்டில் உள்ளார்; இனிமேல், தோன்றுதற்குரிய பனிக்கடுநாளில் என்ன செய்வோம், எனத், தோழி மொழிந்தாள் *[குறு.380:7]*. நின்மாலை குழையும்படி தலைவன் முயங்கியநாள் மிக்கசில; அலரோ பெரிது, எனத், தோழி கூறினாள் *[குறு.393:2]*. யானைக்கன்று, குறத்திபெற்ற புதல்வரோடு சுற்றி ஓடி, முன்னாள் இனியதாகிப் பின்னாள், தினையை மேய்ந்தாற் போலத், தலைவர் நம்மோடு முன்பு நகைத்து விளையாடியது, இப்போது பகையையுடையதாகின்றது, என்பது தோழி கூற்று *[குறு.394:4(2)]*. தலைவனோடு ஒருநாள் நகைத்து விளையாடுதலையும், அவனது மெய்யைத் தோய்ந்த நட்பு நீக்கியது; இது வியத்தற்குரியது; எனத் தலைவி கூறினாள் *[குறு.401:4]*.

தலைவனே, நீ வருவாய்' என்று குறிப்பிட்ட சிலநாள் அளவும் இவள் வாழாள் ஆதலை, நன்றாக அறிந்து கொண்டு செல்வாயாக; எனக்கூறித், தலைவனைத், தோழி வரைவுகடாவினாள் [நற்.19:8]. பலநாளாக வறட்சியுற்ற உயிர்கள், மகிழ்ச்சியோடு, தத்தம் தொழிலைச் செய்ய மழைபெய்தது [நற்.42:1]. நீ, முயற்சி மேம்பட எண்ணி, நாளும் இவளைப் பிரிந்துறைகின்ற வாழ்வினை விரும்பிச் சிறிதுபொழுதும் ஒய்கின்றனை இல்லை' என, நெஞ்சிற்குக் கூறித், தலைவன் செலவழுங்கினான் [நற்.52:6]. தேனிறால் தூங்கப், பழங்கள் குலைகுலையாகப் பழுக்க, அருவி, மாலைபோல் இழிந்துவரக், கொல்லைகள்தோறும் பல்வகைக் கூலமும் பொலிய நாளும் இவ்வெற்பு வளமுடையது [நற்.93:3].

தலைவர் என்னை நினையாராகி அகன்றொழிந்தால் பன்னாள் உயிரோடு வாழ்ந்திரேன்', என்பது, தலைவி கூற்று [நற்.117:8]. தலைவரை வரைந்து எய்தும்படி இரப்பேமாயின், நல்ல நாளிலே நம்மை மணம் புரிந்துகொண்டு தமது பெரிய நாட்டகத்தே நம்மொடு செல்வார் காண், எனத், தோழி கூறினாள் [நற்.125:7]. தோழி! காதலர் ஒரு நாள் நின்னைப் பிரியினும், உன் உயிரின்தன்மை வேறுபடும். அவ்வாறாக, நம்மை இங்கு நீங்குமாறு கைவிட்டுச் செல்வர்', எனக், கூறுவர்' எனப், பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைவியிடம் மொழிந்தாள் [நற்.129:2]. தலைவருக்கு உடன்பட்ட நெஞ்சும், நெகிழ்ச்சியுற்ற தோளும், வாடிய நிறமும் பார்த்து, இப்பெரிய துன்பம் உற்றவள் என்ன செயல் செய்து கொண்டனளோ', என ஒருநாள் கூறினாருமிலர், எனத், தலைவி கூறினாள் [நற்.130:10]. 'யாவராலும் இரங்கத் தகுந்த, யான் இறந்தொழியும் நாள் இன்று தானோ? எனக், காப்பு மிகுதிக்கண், தோழி, தலைவியின் உணர்ச்சியைப் புலப்படுத்தினாள் [நற்.132:11]. தலைமகன், முன்னாள் நெய்தல் மலருடன் தொடுத்த மாலையை நினக்குச் சூட்ட, அதனைக் கண்ணால் அறியக்கிடந்ததொன்றன்றி, இவ்வூர் பிறிதொன்றனையும் அறிந்ததில்லை; அங்ஙனமாக, நீ வருந்துகின்ற தென்னை? எனத், தலைவன் சிறைப்புறமாகத், தோழி, தலைவிக்குக் கூறினாள் [நற்.138:5]. அலர்வாய்ப் பெண்டிரின் கொடிய இனிய உரைகேட்ட சிலநாளளவும் யாதொன்றையும் அறியாதேன் போல, மூச்சுவிட்டேனுமல்லேன்; என் மகளை நோக்கி, நின்கூந்தல், புதுமணம் கமழ்கின்றதே', என்றேன், என நற்றாய், மனை மருண்டு கூறினாள் [நற்.143:8]. "நாட! 'யாம் நின்னையும், நின் மலையையும்பாடிப், பின்னாள் தினைப்புனத்தைக் காக்கச்செல்வோம்' அதனால், பகற்பொழுதிலே அங்கு வருவாயாக', எனத், தோழி கூறினாள் [நற்.156:4]. யான் வருந்தி வருந்திக், கண்ணிலே கண்ணீர் வடிய, அவ்வெள்ளத்தின்கண் விழுந்து நீந்தியுழலும் நாள் இன்னே வந்து இறுத்தது போலும்; இனி, எவ்வாறு ஆற்றுகிற்பேன், எனத், தலைவி, தோழிக்குரைத்தாள் [நற்.177:10]. முன்னாள் சென்ற என்மகள் போல, இவள் என்கண் எதிரே படுதலால், என்கண் நீர்நிரம்பப் பெருகியது எனச், செவிலி, இடைச்சுரத்துக் கண்டார்க்குக் கூறினாள் [நற்.198:3].

கானலிடத்துப் பொருந்திய நம் கேண்மை, ஒருநாள் பிரிந்தாலும், உயிருய்தல் அரிது, என்று கருதாது, அலரால், தலைவர் தேரைத் தடுத்ததன்றியும், இவ்வூர், தேர்வரும் காரணத்தை ஆராய்ந்து வருத்தமும் அடைகின்றது, எனத் தலைமகன் சிறைப்புறத்தானாகத், தோழி, மொழிந்தாள் [நற்.203:8]. அன்னையும், இனி நல்ல நாளை அறிவுறுத்தும் வேங்கையும் மலர்க, எனக்கூறி என்முகம் நோக்கினள்' எனத், தலைமகன் சிறைப்புறத்தானாகத், தோழி கூறினாள் [நற்.206:7]. முதிர்ந்தோர், இளமை அடைவதுமில்லை; தம் வாழ்நாளின் வகையளவை அறிபவருமில்லை', எனத், தலைமகள், பிரிவின்கண் வருந்தியுரைத்தாள் [நற்.314:2]. தோழி! நீரிலிறங்கி நின்று குவளைமலர் கொய்பவர், தாம், நீர் வேட்கையால் வெய்துற்றாற்போல, நின்னுடைய தோள்கள், காதலன் தோள்களை நாளும் முயங்கி வைகிய வழியும், நின் வளைகள் கழலுகின்றன', எனத், தோழி தலைவனிடம் கூறினாள் [நற்.332:3(2)]. தலைநாள், இயற்கைப் புணர்ச்சிக்காலத்து இருந்தாற் போன்ற, விருப்ப மிகுதியுடையனாய்ப் பலநாளும் இயங்குதற்கரிய இருளில் தலைவன் வருதலைக் காண்கின்ற எனக்கு, வளைசெறிப்பது எவ்வண்ணமாகும்; என்றாள் தலைவி [நற்.332:8(2)]. சாரல் நாடனுடன் அருவியில் ஆடிய நாளை நினைந்து, என் உள்ளம் எக்காலத்தும் நெஞ்சைப் புண்படுத்திக் கொண்டு, கெட்டொழிய அறியாததாயிரா நின்றது, எனத், தலைவி கூறினாள் [நற்.357:10]. வாடைக்காற்றுடனே, பனியும் என்மீது தங்க, இவ்வாறு சிலநாள் கழியுமாயினும், மாரிக்காலத்தோடு, மாலையும் ஒருங்குவரின், பல்நாள் உயிர்வாழேன்', எனத், தலைமகள், வரைவிடைமெலிந்து கூறினாள் [நற்.364:5(2)]. பலநாள் மழைபெய்யாது ஒழிந்தாலும் நீர் விளங்கும் பக்க மலைகளையுடைய மலைநாடன், தலைவன் [நற்.365:5]. உடன்சென்ற வயவர் எல்லோரும் பூமாலையைச் சூடிவந்தனர், இப்பனி மிக்க நாளில், நம் காதலரும், ஆண்டுத் தங்கிவருந்தாது வருவர்; எனத், தோழி, வரவு மலிந்து கூறினாள் [நற்.367:12]. பிரிந்துசென்ற காதலர் விரைவில் வருவர்; அவர் வருதற்குள்ளாக, நீ வருத்தமுற்றுக், கரிய கூந்தலினும், நெடிய தோளினும் நாள்தோறும், பழமையாயுள்ள அழகெல்லாவற்றையும் கெடுத்துக் கொள்ளாதே, எனத், தோழி, தலைமகளைப் பருவம்காட்டி, வற்புறுத்தினாள் [நற்.387:2]. வாளை மீன்கள், வாள்போல் பிறழ, அவற்றை இரையாக உண்ணக்கருதாது, நாளும் நீர்நாய் துயிலும் [நற்.390:1]. வாடிய ஞெமை மரத்திலிருந்து ஆந்தை ஒலிக்கத் தேரின் உருள், மேட்டு நிலத்தின்கண் அதிர்ந்து செல்லத் தலைவன், பனிமிக்க நாளிலே பிரிந்து சென்றனன்', எனத், தோழி கூறினாள் [நற்.394:6]. நாடனே! நின்மார்பு அணங்கிய வருத்தத்தை யான் யார்க்குச் சொல்வேன்; நீ வந்து புணரும்

பலநாளும், இனிய சொற்களா நான் விரும்புமாறு சொல்லி, இங்ஙனம் கூறியவழி நடத்தல் இவட்குக் காப்புடைத்தாகும் என்று, அருளாது, மயக்கமுற்றனை', எனக் கூறித், தலைமகனைத், தோழி வரைவு கடாவினாள் *[நற்.396:9]*. 'தலைவன் வருவதாகக் கூறிய நாளும் சென்றொழிந்தது; தோளும் வாட்டமடையும்', எனத், தலைவி உரைத்தாள் *[நற்.397:1]*. தோழி! தலைவன் ஒருநாள் நம்இல் வந்ததற்கு அவன் பெண்டிர் (பரத்தையர்) எழுநாள் அழுவர்', எனக்கூறுவர்', எனத், தலைவி, தோழிக்குக் கூறினாள் *[ஐங்.32:2(2)]*. ஒளிவிளக்கால் சோழருடைய ஆமூர் இரானாள்(பா.வே) அறியாது *[ஐங்.56:1]*. தலைவன், எம் தோளைத் துறந்து சென்றகாலத்து, அவன் தலையளிசெய்த பொழுதே, பன்னாள் ஆதல்எவன்? எனத் தோழி கூறினாள் *[ஐங்.109:4]*. நாடன் மார்பு முயங்காது கழிந்தநாள், தலைவி கண்கலங்கும் எனத் தோழி கூறினாள் *[ஐங்.220:4]*. நாளும் நுதல் பசப்பவும், தோள் நெகிழவும் நாம் பொறுக்க மாட்டோம் எனக்கூறிய தலைவர் பிரிந்துசென்றார் என்று தோழி கூறினாள் *[ஐங்.227:1]*. பன்னாள் நாம் அழப்பிரிந்த அறனிலாளனாகிய தலைவன் இரவில் வந்தனனோ? எனத், தோழி, தலைமகளை வினவினாள் *[ஐங்.229:2]*. தலைவன் பிரிவால் தலைவி நாள்தோறும் கலங்கினாள் *[ஐங்.376:1]*. பிரிந்துசென்றபோது, தலைவனுக்கு, மழைக்காலத்து இடியோடு, தலைவியின் தூது மொழியும், நோய் செய்தது *[ஐங்.441:2]*. தலைவன் குறித்துச்சென்ற நாளின் அகத்திலேயே மீண்டுவருதலை நான் தெளிந்திருக்கின்றேன்; ஆதலின் நீ வருந்தாதே' எனத், தோழி, தலைவிக்குக் கூறினாள் *[ஐங்.466:3]*. பனிவிரவிய வாடைக்காற்று, நாள்தொறும், தலைவனது தனிமையை இகழ்ந்து வருத்தியது *[ஐங்.479:2]*. வேந்தனொடு ஒருநாள் இவ்விடைச்சுரத்தே தங்கினும், அது, ஓர் ஊழிக்காலத்தளவு நெடிதாய்த் தோன்றுமாதலின், பாகனே! தேரை விரைந்து செலுத்து,' எனத், தலைவன் கூறினான் *[ஐங்.482:4]*.

நின் தலையளி, ஒருபிரிவை உடைத்தென்று உட்கொண்டு, தலைவி கலங்கிய வருத்தத்தை உடையள்; இத்தன்மையள், ஒருநாள், ஒருபொழுது, கூட்டம் இடையீடுபட நீர்பிரிவீராயின், அவள், உயிர் கொண்டிருப்பாளோ? இராள்! எனத், தோழி, தலைவனுக்குக் கூறினாள் *[கலி.4:23]*. நெடுந்தகாய்! நீ தலைவியைப் புறந்தருதலைக் கைவிட்டுச் செல்வது எந்நாளோ, அந்நாள், இவளுடைய பெறுதற்கரிய உயிர்போம்' எனத் தோழி கூறித், தலைவனைச் செலவு அழுங்குவித்தாள் *[கலி.5:18,19]*. உயிர் எப்போது போகும் என்றறிந்தவர்கள் உலகத்தில்லை; எனவே, முயங்கும் முறைமையினையுடைய நாள்கள், அப்பயனின்றிப் போதலுறாமையை நெஞ்சாலே காண்பாய், எனப், பொருள்வேட்கையால் பிரியும் தலைவனுக்குத், தோழி கூறினாள் *[கலி.12:14]*. தலைவ! நீ பகைவர்தந்த நாட்டை விளக்குதலை மிகவும் துணிவை! திங்களின் நிறைவு, பின்னர் ஒழுகத் தேயுமாறு போல, நாள்தோறும், தன் நிலை குலைந்துகெடும் அழகு இவளுடன் நிலைபெறுமோ? இத்துணைக் காலம் இருவென விதித்த காலம், குறைபட்டு வருதற்குக் காரணமான வாழ்நாளும் இவளுடன் நிலைபெறுமோ எனத், தோழி கூறினாள் *[கலி.17:8,12]*. தமக்குக் கற்பித்த நாள் எல்லாம் பிரியாதிருப்பவர்களுடைய வாழ்க்கையே வாழ்க்கை; கழிந்த இளமை மீண்டு தருதற்கரிது, எனத், தோழி, தலைவனுக்குக் அறிவுறுத்தினாள் *[கலி.18:8]*.

நின்னடிக்கு எளிதன்று காடு', எனக் கூறிப்பிரிந்து செல்வீர்! நும் ஆகத்திடத்து முயக்கத்தை வாழும் நாளாக உடையேன் யான், எனத், தலைவிகூறினாள் *[கலி.20:9]*. நின்னுடைய உறவானவர், பலநாளும் புதியதொன்றான் என்னைப்பாராட்ட, யானும் இப்பாராட்டுதல் ஒரு பிரிவையுடைத்து என்று கருதி, அப்பிரிவை ஆராய்கின்றேன்' எனத், தலைவி, தோழியிடம் கூறினாள் *[கலி.24:4]*. நீர், அளிக்குங்கால், இறையிலே சிறந்து காட்டி, ஒருநாள் பிரியுங்காலத்துக் கழன்றுபோம் வளை; எனவும், ஒரு பகை உண்டன்றோ? ஒருநாள் நீர் அளிசெய்யுங் காலத்து நும் அளிக்குத்தானும் கூடினாற்போன்று ஒளிமிக்கு, ஒருநாள் நீர், அளியாக்காலத்து நும்முடைய குணத்தைப் பிறர்க்கு அறிவித்துப் பசந்து காட்டும் நுதல் எனவும், ஒருபகை உண்டன்றோ' எனத்தோழி தலைவியது ஆற்றாமை கூறிச்செலவழுங்குவித்தாள் *[கலி.25:17,21(2)]*.

பொய்யன்றித், தாம் நாள் வரையறுத்துச் சொல்லிய எல்லைக்கு முன்னரேயே தலைவர் புகுதந்தார்; எனத், தோழி கூறினாள் *[கலி.31:23]*. பிரிந்து சென்ற தலைவர் தாம் கூறியவாறே, பொய்மையின்றிக் குறித்த நாளில் திண்ணிய தேரை விரைந்து செலுத்தி நம் துன்பம் தீர, வந்து சேர்ந்தார், என்று தோழி தலைவியிடம் கூறினாள் *[கலி.33:29]*. நாம் வருவர் என்று கருதியிருந்த நாள் எல்லை கடவாமல், காதலர் வந்தார்' எனத், தோழி கூறினாள் *[கலி.34:22]*. என் நெஞ்சு, தலைவர் குறித்த நாள்வந்து நின் அழகைக்கெடுத்தலும் உண்டென்று கருதி நெட்டுயிர்ப்புக் கொள்ளும்,.எனத், தோழி, தலைவியிடம் கூறினாள் *[கலி.36:24]*. ஒருவன், பன்னாளும் வந்து, தன் காதல் உணர்வைக் குறிப்பினால் காட்டுதல் அல்லது தன் துன்பத்தை உரைக்காது பெயர்வன்; இவ்வாறு வருவோன், இறந்துபடுதலும் உண்டென்று, ஒருநாள் துணிந்து, ஒரு நாணமில்லாமையைச் செய்தேன்; எனத், தோழி தலைமகள் குறிப்பறிய, ஒரு நிகழ்ச்சியைப் படைத்துமொழிந்தாள் *[கலி.37:5,10]*. நல்லாய்! நம்மை வரைந்துகொள்ளும் நல்லநாள் நம்மிடத்தே வருமளவில், நம்சுற்றத்தார், தம்மலையிடத்து, நாணைத் தாங்குவார்தாம், என்ன நல்வினையைச் செய்தார்கொல்', எனத், தலைவிகூறினாள் *[கலி.39:31]*

களவொழுக்கத்திலே வேட்கை நீங்கி, நாம் தலைவரைப்பேணி, அவரிடத்தே தங்குதலை, அவர்விரும்பின நாளிலே, நம் சுற்றத்தாரும் அவர்க்கே கொடுப்பதாக அறுதியிட்டு விட்டார்',

எனத், தலைவிக்குத், தோழி கூறினாள் *[கலி.45:24]*. தாய் முன்னே, இவளுடைய வளை உகுவனவாயிராநின்றன; இங்ஙனமாதற்கு, மழையையுடைய இராக்காலத்து நின்னுடைய குறியால் அழைக்கின்ற அழைப்பினைச் செவிகருவியாக ஓர்த்ததனால் உண்டான மனவொடுக்கத்தாலே உயிர்வாழ்கின்ற நாள்மிக்கவளுடைய தோளிடத்து, நினக்குச் செய்த தப்பு உண்டோ? பலநாளும் நினைவு வருத்துகையினாலே, பசலையால் நுகரப்பட்டவளுடைய, பசலைபரந்த மாமை நிறத்தின்கண், அது செய்த பழிகளுண்டோ? எனக்கூறித் தோழி வரைவுகடாவினாள் *[கலி.48:9,16]*.

சிற்றிலைக்காலாற் சிதைத்து நோவத்தக்க தொழில்களைச் செய்யும் சிறுபட்டி, மேலோர்நாள், அன்னையும் யானும் இருந்தபோது, நீர் வேட்டேன் எனச் சொல்லி வர, அன்னையின் கூற்றுப்படி, யானும் தன்னை அறியாது நீர் கொண்டு செல்ல, அவன் என்கைபற்றி, நலியச் செய்து கடைக்கண்ணால் நோக்கி நகைக்கூட்டம் செய்தான்; எனத், தலைவி, தோழிக்குக் கூறினாள் *[கலி.51:4]*. உயர்ந்த முகையினையுடைய நறிய காந்தள் நாள் தோறும் புதுமையை உண்டாக்கும் *[கலி.53:5]*. அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி என்னும் ஒழுக்கந்தேய்ந்து, மறத்தலை எனக்கு உறுத்தி, நாள்தோறும் என்னை நலிதற்குக் காரணமான நீ செய்த நோயை, நினது மடப்பத்தாலே அறியாமல் போகின்றவளே! எனக், கைக்கிளைத் தலைவியைப் பார்த்துத், தலைவன் கூறினான் *[கலி.58:11]*. காதலித்தலைக் கொள்கின்ற வதுவைநாளிலே மடந்தை தன் துணையாக மறையுடைய அந்தணன் அங்கியங்கடவுளை வலஞ்செய்தான் *[கலி.69:3]*. நீ எம்மை அருளாது கைவிடுகையினாலே பலநாளும் துயிலாத கண்கள் இமைபொருந்துதலும் கூடும்; (ஆயின்) நீ (பரத்தையரை) மணம் செய்யும் மனைக்கண் முழங்கும் முழவோசை வந்து அதனைப் போக்கும்; எனத், தோழி கூறினாள் *[கலி.70:8]*. நின் முயக்கத்தை என்றும் பெறுகின்ற பரத்தையரை வெறுப்பார் யார்? நீ ஓர்யாண்டிடத்து ஒரு கால் வருகின்றவரவு, மழைக்கு அவாவுற்ற நெல்லிற்கு அப்பருவத்தில் நிறையப் பெய்யாது சிறு துவலையைப் பெய்த தன்மைபோல, மிக்க வருத்தத்தைத் தரும்; ஆதலால், நீ வருநாள்போல யாம் ஆற்றியிருப்பேம், நீ அவர் மனைக்கட்செல்க' எனக், காமக்கிழத்தி கூறினாள் *[கலி.71:23]*. நம்மைப் பேணுகின்றிலன், என்று சினந்தவர் உகிராற்செய்த வடுவோடு மேனாள் நின் தோளைச் சேர்ந்த பரத்தையருடைய எயிறழுந்தின இதழைப், பாணன் எனக்குக் காட்டு, என்று சொன்னானோ! எனக் காமக்கிழத்தி கூறினாள் *[கலி.72:12]*. கடல்போலும் நின் அமையாத பரத்தமை மேலிடுகையினாலே, நாள்தோறும் நின்னொடு புலக்கும் தகுதியையுடைய பெண்டிரைத் தெளிவிப்பாய்; யாமாயின் நின் பொய்யை மெய்யாக நினைந்து நினக்குத் தோலாதிருப்போமோ? எனத், தலைவியுரைத்தாள் *[கலி.73:20]*. புதிய பரத்தையரை மணஞ்செய்தலை எக்காலமும் விரும்புவனாயின், அதற்கேற்ப, வைகலும் வதுவைக்குரிய நாளாயிருக்குமாயின், அவ்வொழுக்கத்திற்கு வருந்துவேன், எனத், தோழிக்குத் தலைவி கூறினாள் *[கலி.75:11]*.

பார்வையாலே பிணித்தலைக் கொள்ளும் கண்ணோடு, நீ, மேனாள், பூவைப் பலியாகப் போகவிட்ட கடவுளரைக் கண்டாயோ? நிறையாத செறிந்த காமவேட்கையாலே, திருப்பரங்குன்றினிடத்தே, நின்னோடு, மாரிக்காலத்தே, பல நாளும் தங்கின கடவுளைக் கண்டாயோ? என்பது, கடவுளைக்கண்டு தங்கினேன் என்ற தலைவற்கு, நீ கண்ட கடவுளர் இவர் (பரத்தையர்) எனத் தலைவி கூறிப், புலந்தது *[கலி.93:23,26]*. காமநோய் இறந்துபாட்டைச் சேர்த்துகையினாலே, தான் உயிர்வாழும் நாளை வெறுத்த இவளை, இவ்விடத்தே அருளிப்பாராய்' எனத், தலைவனுக்குச், சான்றோர் கூறினர் *[கலி.99:13]*.

நம்முடைய ஆவின் திரளிலே நின்று, தனது தாளண்மையைக் கூறும் தலைவன், பின்பு ஒரு நாள், ஏறுதழுவி, நம்மைத் தனக்குக் கேளாக ஆளும் தன்மையையுடையனாகாமை இல்லை', எனத், தோழி கூறினாள் *[கலி.101:44]*. தம்மைத் தழுவுவாரைக் கோட்டிடத்தே சாப்படிகுத்திப், பின்பு சென்று தழுவுவாரைப் பெறாமல் நின்ற ஏறு, உயிர்குறைகின்ற நாளிடத்தே பின்னே சென்று உயிரையுண்ணும் கூற்றுவனைப்போலும், இதனைப்பாராய், எனத், தோழி கூறினாள் *[கலி.105:37]*. நீ, எவ்விடத்தும் போய் மோர் முதலியனவிற்றுத் திரியும் நின்சுற்றத்தாருடனே போவாயாக, என்று கூறித், தம்முடைய கணவரைக் காத்துக்கொண்டு முழுநாளும் பெண்டிர் வாயிலடைப்ப வாராநிற்கும் இவள், நோய்செய்து போதலன்றி நோய்தீர்க்கும் மருந்தல்லள்', எனக் கைக்கிளைத் தலைவன், சொல்லெதிர் பெறாது சொல்லியின்புற்றான் *[கலி.109:25]*. மேயப்போகாது சூழ்ந்து திரியும் நாகுபோல், நின்னைக்கண்டு என்னெஞ்சு நாள்தோறும் நடுங்குகின்றவருத்தத்தை உற்றதுகாண்', என வினைவலபாங்கன் தலைவியைக் கண்டு கூறினான் *[கலி.110:14]*.

செறிந்தவளை, தோளினின்றும் கழன்றுவிழும்படி, நீ, இவளைத் துறந்தது, கடற்கரையிடத்தே நின்னுடைய தேர் இன்ன காலத்தே வரும் என்னும் குறிப்பின்றிப் பல நாளும் வருங்காலத்தை மனத்தாலே நோக்கி எதிர் கொண்டாள் என்பதோ? எனத், தோழி, தலைவி நிலைமை கூறி, வரைவு கடாவினாள் *[கலி.127:10]*. எயிலைக் குத்தும் களிறேபோல், இடுமணலினது நெடிய குவியலைக், காற்றுப் பாகனாக, வலம்புரிகள் கொம்புகளாக, நடுவாகிய நல்ல நாளின்கண் திரையானது குத்தி, யானை போல முழங்கும் *[கலி.135:5]*. ஞாயிறே' நீ எங்காதலரை விரையக்கொண்டு கடன்மேலே வந்து நாட்காலையில் இவ்வுலகிலே போதுவாயாயின்,

என்னெஞ்சினைப் பாதுகாத்து அவனைக் காண்பேன், எனத், தலைவி, நாணுவரையிறந்து கூறினாள் *[கலி.145:32].*

குமர! யாம் நின்னை வணங்கி வாழ்த்தி வேண்டிக் கொள்கின்றோம். அன்பாற்சிறந்த நின் அடிக்கணுறைவு நாள்தோறும் பொலிந்து பயன்தருதலோடு சிறக்க; என அன்பர் செவ்வேளைப் பரவினர் *[பரி.9:85].* மைந்தர் எஃகானும், வாளானும் மாறுபட்டு உழக்கக், களிறுகள் தம்மில் பொருதலுற்ற களம் போறலான், நாளும் இனிய நீர்மையையுடைய (வையை) புனல் தெளிவின்றாயிற்று *[பரி.10:110].* வையையின் அஞ்சத்தக்க தோற்றத்தை உரைக்குங்கால் நாளும் பொருகளம் போலும் தகைத்து *[பரி.11:59].* வயல், மலர்சுமந்து சீர்நிறைநலின், இயங்களின் கண்ணொலியையும், பாட்டினை... பயின்ற மகளிர் ஆடுகின்ற மகிழ்தற்குரிய நாளிலே இயற்றிய அரங்கினை ஒக்கும் *[கலி.16:13].*

'வையாய்! மைந்தரும் மகளிரும் தானம்பண்ணி அதன் பயனாகிய இன்பத்தை நுகரவேண்டி நாள்நாள் (நாள்தோறும்) ஆடுதலான் அவர் கையுறை முதலியன இடையறாமல், மழை, மறாதொழிக என மதுரை மக்கள் வேண்டினர் *[கலி.16:52(2)].* நாளும் வழிமயக்குற்று மருளுதல், நெடியான் நெடுமாடக் கடற்கு இயல்பு *[பரி.தி.13:4].*

2. காலை. நாள் ஆகிய காலைப் பொழுதிலேயே கள்ளுண்டனர் *[புற.123:1].* நாள்-நாட்காலையே-முரசுமுழங்கும் இடனுடைத்தாய எல்லையின்கண், நினது தாள் நிழற்கண் வாழ்வோர் நன்கலம் மிகுப்ப, நினது படையையும், நினது சீர்மிக்க செல்வத்தையும் பலபடப்புகழ்வேம், எனக், குமணனைப், பெருஞ்சித்திரனார் பாடுவர் *[புற.161:29].* நாள் காலத்தே உண்ட கள்மயக்கத்தால் தலைவன் உறங்குவான் *[புற.316:3].* நெற்போர்களை, நாள் காலத்துக் கடாவிடப்பட்ட இடத்தே, நெல் குவிந்துகிடந்தது *[புற.353:9].* பன்றியின் ஊனை நறிய நெய்யின்கண் பொரித்து நாள் காலத்துச் சோற்றுணவோடு கொடுத்து எம்முடைய பசியைப்போக்க வல்லவன், என, ஓய்மான் வில்லியாதனைப், புறத்திணை நன்னாகனார் பாடுவர் *[புற.379:9].*

நாள் காலத்தே மாலை கட்டினாற்போல இடையறாமல் தொடுத்த நறிய பூக்களையுடைய, சிறிய கொம்புகளையுடையது காஞ்சிமரம் *[சிறு.178].* தாமரையின் அரும்புமலர்ந்த நாள் போதின் தேனை வண்டொழுங்கு நுகர்ந்தது *[சிறு.183].* பகைவர் நிலத்தே சென்று நாள் காலத்தே ஆக்களை அடித்துக் கொண்டு போந்து அவற்றைக் கள்ளுக்கு விலையாக மறவர் கொடுத்தனர் *[பெரு.141].* நாள்மோர் விற்று ஆய்மகள் சுற்றங்காப்பாள் *[பெரு.160].* பொய்கையிலே பறிப்பார் நுங்களுக்கிட்ட பூக்களைப் பெரிதாகிய நாளில் சூடிப்போமின், எனப், பாணர்க்குக் கூறினர் *[பெரு.296].* நாளில், ஈண்டிய அரசர், விரும்பப்பட்ட சூதர்க்குத், தேருடனே, குதிரைகளையும் பலவாகக் கொடுத்தனர் *[மது.223].* நாள் காலத்தே திறையாகக் கொண்டுவரச் சீரியகலன்கள் வந்தன *[மது.695].*

வரால், தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது நாட்கயம் கலக்கியது *[அக.36:8].* நாள்காலத்தே, தன் இரையைக் கொள்ளுதல் வல்ல கரடி எழுந்து உலாவும் *[அக.81:1].* வேங்கடமலையில் நல்ல நாளில் வேங்கை பூத்தது *[அக.85:10].* வெட்சிமறவர் நாள் காலத்தே ஆக்களை உய்த்துச் சென்றனர் *[அக.131:7].* நாளில், மீன்வேட்டைக்குப் பரதவர் எழுந்தனர் *[அக.187:22].* பாக்கத்தில் நாள் வேட்டத்துத் துறைக்கண் வரால் அகப்பட்டது *[அக.196:2].* ஆனிரைக்காக, கள்ளாகிய நறவினை நாள்பலியாகச் செலுத்தினர் *[அக.213:7].* சீறூரின்ளார் நாள்பலியினை மறந்தமையின் இட்டிககை (பலிபீடம்) பாழ்பட்டது *[அக.287:6].* காட்டு மல்லிகையின் பூக்கள் நடுகல்லின் நாள்பலிக்குக் கூட்டப்பெற்றன *[அக.289:3].* சிறுவர் செய்யின்கண், நாள் வேட்டத்திற்குச் சென்றனர் *[அக.290:2].* மீன்பிடித்தல் வல்ல பரதவர் நாள்வலை முகந்த மீனை மணலில் உணங்கச் செய்வர் *[அக.300:1].* பெண் நாயின் பசிவருத்தத்தை நீக்க, நீர்நாய், நாள் இரையினைக் கொணர்தற்கு எழுந்தது *[அக.336:4].* நீர்நாய் வாளைமீனை நாளிரையாகத் தேர்ந்தது *[அக.386:2].* வரகின் ஓர் இலையை நவ்வியின்மறி நாள் காலத்தே கவ்விக் கடனைத் தீர்த்துக் கொள்ளும் *[குறு.282:3].* நீர்நாய் வாளை மீனை நாள் இரையாகக் கொள்ளும் *[குறு.364:2].*

நெடிய மலையில் நாள் மழை பெய்ய அருவி நீர் காட்டில் பரந்து செல்லும் *[நற்.17:1].* கானங்கோழி, மழைபெய்த ஈரமணலைப்பறித்து நாள் இரையினைக் கவர்ந்தது *[நற்.21:11].* சூல் முற்றிய பிடியானை, தன் சூல், புறம் போந்து விழுமாறு நாளில் கொழுவிய மூங்கில் முளையைச் சென்று தின்றது *[நற்.116:5].* சோலை நிரம்ப, யாட்டு மந்தை போலக்கரடிகள், நாளில் மேய்ந்தன *[நற்.192:4].* வேங்கையின் நாள் காலையில் உற்ற புதியபூ, பொற்கொல்லன் கைவினைபோல், அழகு பொருந்தியிருந்தது *[நற்.313:1].* எருமைக்கடா தன் நாள் (காலையில் உழுத) தொழிலின் வருத்தம் நீங்கத் தண்கயத்தே பாய்ந்து கிடந்தது *[நற்.330:4].* இறவின் முடங்கலைக், காக்கை, நாளிரையாகப் பெறும் *[நற்.358:9].* வேங்கையின் பொன்போன்ற புதிய பூக்கள் நல்ல நாளில் மலர்ந்தன *[நற்.384:7].* நல்ல நாளில் வேங்கையின் பொன்போன்ற பூக்கள் அளாவி, மயில், பாறை மீது இளவெயிலை நுகரும், *[நற்.396:3].*

நீர்நாய், வாளையை, நாள் இரையாகப் பெறும் *[ஐங்.63:2].* எருமை, கயிற்றை அறுத்துச் சென்று நெல்லினை நாளில் மேயும் *[ஐங்.95:2].* நாளில் மராமத்தின் சினை மலர்ந்து விளங்கும் *[ஐங்.383:1].* மணமிக்க கூந்தலாற் மயிர்க்கு நாள் (காலத்து) அணியும் அணிக்கு ஒப்பப் பூப்பலியைக் கைவிட்டே கடவுளாகாக் கண்டாயோ என் தலைவனிடம் தலைவி புலந்து கூறினாள் *[கலி.93:22].*

புதிதாகக் தோள், நுகரப்பட்ட பரத்தை, இல்லின்கண்ணே, தலைவி நாள் காலையில் ஒருத்தியைச் செவ்வணி அணிந்துவிட்டுத்தன் பூப்பு அறிவித்தாள் *[பரி.9:20].*

**3. மதிநாள் (திதி).** நீ, நின் நிழல், வாழ்வோர்க்குத் திங்களாகிய, நாள்-மதிநாள் (திதி)-நிறைந்த மதியத்தை ஒப்பை, எனவே, அவர்கட்குத் துன்பமாகிய இருள் எவ்விடத்து? எனப் பொகுட்டெழினியை, ஔவையார் பாடுவர் *[புற.102:7].* எட்டாம் நாள் பிறைபோலும் வளைந்த கரையையுடையது சிறிய குளம் *[புற.118:2].*

எண்ணாள்பிறை வடிவிற்றாக, உண்ணாக்கில்லாத, பொருந்துதல் வந்த, வறிய வாயினையுடையது, யாழ் *[பொரு.11].*

நாள் நிரம்பிய மதித்திங்கள் ஒன்று எம்முடையதும் உண்டு', எனத், தலைவன், தலைவியின் முகத்தைப் பாராட்டினான் *[நற்.62:7].* தெளிந்த நீராலும், தூய மதியையுடைய நாளாலும், மாந்தளிராலும் கிளையாலும், புதலாலும் இளவேனில் அழகுபெற்றது *[கலி.32:6].*

பிறை தோன்றிய நாள்தொடங்கி (நாள்தோறும்) ஒரு கலை வளர்கின்ற முற்பக்கம் போல், நாளின்நாளின் (நாளுக்கு நாள்) பெருகி அதன் நிலவு எங்கும் பரந்தாற்போல, நிலத்தின்கண் வையை நீரைப்பரப்பியது *[பரி.11:31, 32 (2)].* இருள் உவாவினைப்போல, நீர், நேராகக் குறை படுதலையுடைய நாளை வையையில் யாரும் காண்டல் இல்லை *[பரி.11:38].* வையாய்! நீ பெருகின பொழுதின் யாணரேயன்றி, வற்றின நாளின் யாணைரையும் பெற இந்நீர் மிகுதியைத் தணிந்து ஏகு எனக்கூறினர் *[பரி.11:40].*

**4. நாள்மீன் (நட்சத்திரம்).** நாள்-நாள்மீன் (நட்சத்திரம்) கோள் திங்கள், ஞாயிறு, அழல், இவ்வைந்தும் ஒருங்கு புணர்ந்த விளக்கத்தை உடையை என, இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் பாராட்டப்பெற்றான் *[பதி.14:3].*

அவுணரை வென்ற மாயோன் பிறந்த ஓணநன்னாளில், ஊரிலுள்ளார் விழாவெடுத்தனர் *[மது.591].* உத்தரம் என்னும் நாளின் பெயர்பெற்ற உத்தரக் கற்கவியிலே நெடுநிலை செருகுதல் பொருந்தியது *[நெடு.82].*

திங்களைக், கேடில்லாத சிறந்த புகழினையுடைய உரோகிணி என்னும் நாள் அடைந்தது *[அக.86:7].*

நீர், பிரியின், நும்மை, நாளும் (மீனும்) மனத்தாற் கறித்துக்கொள்ளப்படும் புள்ளும் தகைக்கும், எனத், தலைவனிடம், தோழி கூறினாள் *[கலி.5:9].*

**5. வாழ்நாள்.** என் குறுமகளை நினைந்துசெல்வேன்; நின் நாள்-வாழ்நாள்-சிறக்க, எனப், பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன், பரிசில் நீட்டித்தானை, ஆவூர்மூலங்கிழார் பாடுவர் *[புற.196:15].* நும்மில் நாள் முறை முடிந்தவர், எம்மொடு பொருதற்கு இவண் வருக, என்று சொல்லி, வந்தவர் அனைவரையும் ஒருவன் வென்று நின்றான் *[புற.294:6].* வேந்தர்களே, வான்மீனினும், மழைத்துளியினும் மிக்கு மேம்பட்டு நும் நாள் பொலிக, எனச், சேரமான் மாவண்கோவும், பாண்டியன் கானப்பேர்தந்த உக்கிரப் பெருவழுதியும், சோழன் இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளியும் ஒருங்கிருந்தாரை, ஔவையார் பாடுவர் *[புற.367:18].*

குருசில், நின் நாள், மழையைப் பெய்து, உலகத்தைக் காப்பாற்றிப், பின்பு பன்னின பஞ்சைப்போலப் பொங்கியெழுதலைச் செய்து, மலையைச் சேர்ந்த வெளுத்த மேகத்தைப்போலச் செல்லாதொழிவதாக என, ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக், காக்கை பாடினியார் நச்செள்ளையார் பாடுவர் *[பதி.55:21].* ஒண்டொடிகணவ! நின்நாள், திங்கள் போன்றன ஆகுக, எனப், பெருஞ்சேரல் இரும்பொறை, வாழ்த்தப் பெற்றான் *[பதி.90:51].*

**6. நன்னாள்.** நாள்-நன்னாள்-அன்றாகப் போகிப் புள்நிமித்தம் இடையே தடுப்பச், செவ்வியன்றாகச் சென்று, முனியும் மொழிகளைக் கூறினும், மலையமான் திருமுடிக்காரிபால் சென்றோர், வறிதாக மீள்வாரல்லர் *[புற.124:1].* முற்பட்ட விளைந்த புதுவருவாயாகிய தினைக்கதிரை நாளிலே புதிதுண்ணவேண்டிச், சந்தன விறகால் சமைப்பர் *[புற.168:7].*

**நாளங்காடி-பகல்கடை.** மதுரையிலுள்ள நாளங்காடியில்-பகல் கடையில்-பல்வேறு பண்டங்களைத் தம்மிடத்தே சேர்த்துக் கொண்டு விற்பாராய் மாடங்களிடத்துக் குளிர்ந்த நிழலிலே (வணிகர்) இருந்தனர் *[மது.430].*

தலைவி, பாண்டியனது கூடலிடத்துள்ள நாளங்காடி என மணக்கும் நறுநுதலையும், கரிய கூந்தலையும் உடையவள் *[அக.935:11].*

**நாளணி-நாட்காலத்து அணியும் அணி.** நறிய குளிர்ந்த மயிர்ச்சாந்தமும், புனுகும் நாறும் அறல்பட்ட கற்றை உடைத்தாகிய மயிர்க்கு நாளணிக்கு-நாட்காலத்தணியும் அணிக்குப்-பொருந்தப் பூவைப் பலியாகப் போகவிட்ட கடவுளரைக் (பரத்தையரைக்) கண்டாயோ? எனத், தலைவி கூறினாள் *[கலி.93:22].*

வையைவரவு, மகளிர் ஆராதனைப் பொருளாகிய பலவும் ஏந்தித் தம் மகிழ்ச்சி பொருந்திய காதலரை நாளணியோடு கூடப் பண்ணும் வகைமிக்கது *[பரி.6:12].* வையையில் நீராடுவோர் மாலைக்கண் நாளணிகளை நீக்கி நகுதலையுடைய பூக்களை வேய்ந்தனர் *[பரி.10:114].*

**நாளவை-நாளோலக்கம்.** காலம்பாராதே அணுகித், தலைமையையுடைய சேரமான் குட்டுவன்கோதையின் நாளவைக்கண்-நாளோலக்கத்தின் கண்-தலையெடுத்துச்

செம்மாந்து சென்று புகுதல், எம்மைப்போலும் இரப்போர்க்கு எளிது, எனக், கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் பாடுவர் *[புற.54:3]*.

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல், பாணரையுடைய நாளவையினை உடையவன் *[பதி.38:9]*.

தித்தன் வெளியன் என்பானது நாளவையின்கண் எழுந்த கிணையினது ஒலியைக் கேட்டஞ்சிக், கட்டிஎன்பான் பொராது ஓடியபோது உண்டாய ஆரவாரத்தினும் அலர்பெரிது, எனத், தோழி கூறினாள் *[அக.226:14]*. பாணர்கள் ஆரவாரம் செய்யப், பல அணிகலன்களை அளித்துத் திதியன், நாளவைக்கண் இருந்தான் *[அக.331:12]*.

ஆயினது நாளவைக்கண் இரவலர் பரிசிலாகப் பெற்ற தேர்ஒலிபோல, நாரை ஒலித்தது *[நற்.167:3]*.

**நாளிருக்கை-நாளோலக்க இருக்கை.** பாடிவருநர்க்கு வரையாத பெரிய நாளிருக்கை-நாளோலக்க இருக்கை-உடையவன் தழும்பன் *[அக.227:15]*.

**நாளை-மறுநாள்.** நேற்று என் தமையனைக் கொன்றவனோடும், அவன் தம்பியோடும் நாளை-மறுநாள்-பொருதழிப்பேன் என வஞ்சினம்கூறி, வயிற்றுப் பசிதீரச் சிறிதும் உண்ணானாய்த், தானைத் தலைவன், குதிரைகளை ஆராய்ந்தான் *[புற.304:6]*.

'இழைகளால் பொலிந்த மணமாகாத மெல்லிய இயல்பினையும், சுணங்கு பரந்த அழகிய முலையினையும் உடைய தலைவியை மணம் புரிந்து கொள்ளும் நாள், நாளையாவது ஒன்று; புண்ணுற்று வடுப்பட்ட உடம்போடே மேலுலகம் புகுவது ஒன்று; இரண்டனுள் யாதானும் ஒன்று ஆகுக; எனக், குருசில், வஞ்சினம் கூறிப் படை ஏந்தினான்' *[புற.341:11]*.

இடியை ஒத்த மறவரது கொல்லுகின்ற படையைக் கொணரும் பொருட்டு இன்றைக்கு இனிதாக நுகர்ந்தோமானால், நாளைக்கு மதிலைக் கடந்தல்லாமல் உணவை உண்ணமாட்டேம், என, மறவர் வஞ்சினம்கூறினர் *[பதி.58:5]*.

யானும், தலைவியும் தினைப்புனம் காத்தலைக் கருதியுள்ளோம்; நாளை, மரங்கள் செறிந்தகாட்டில், பாம்பினது மணியாகிய விளக்கிலே இவள் கூந்தலகத்து இன்பமுறும், துயிலை நீ அடைவாய்' எனத், தலைமகனிடம், வரைவு கடாவும் தோழி கூறினாள் *[அக.92:7]*. தலைவியுடன் இன்றைப்பொழுது இனிதாகக் கழிந்தது; நாளை, அம்பலத்தின் கண், தனிமை வந்தடையத் துயிலாத கண்களை உடையேமாய்த் தங்கியிருப்பேமோ? (அஃது இயலாதன்றே) எனத், தலைவன் கூறினான் *[அக.167:5]*. 'நெஞ்சே! தலைவியுடன் ஒரு பெற்றியே தழுவி இன்று இவ்விடத்தேமாகி நாளை சீறூரிடத்தே காதலியின் அறிவு கலங்கிய பார்வையினையும், புலவியினையும் நினைந்து தனித்துத் தங்கியிருப்பேமோ? எனத் தலைவன் கூறினான் *[அக.225:4]*. கீழ்கடலின் நீரை முகந்தமுகில் பெரிய மலையின் உச்சியில் சூழ்ந்தன ஆதலின், நாளை, அருவி, பரந்து நம் ஊரின் நீர்த்துறைக்கு வரும் (வந்தால் மூழ்குவோமோ) எனத், தலைவன் சிறைப்புறமாகத், தோழி உரைத்தாள் *[அக.278:7]*. நம் தலைவன் வரைந்து கொள்ளலை எண்ணுமாகலின், நாம் நாளை மிகவும் மகிழ்ந்து விளையாடுவோம், வருவாயாக, எனச், சிறைப்புறமாகத், தோழி கூறினாள் *[அக.312:6]*.

பாக! இன்றைக்கே வினையின்பொருட்டுப் புறப்பட்டுப்போய் நாளை மீண்டு வருவேமாக; எனத், தலைவன் கூறினான் *[குறு.189:1]*.

இவ்வூர் முழுதும் அலர்எழுந்ததாக, அன்னை, பலருள்ளும், என்னையே குறிப்பாக நோக்கினாள்; நாளை கழிக்கரையிலுள்ள முள்ளி மலரைக் கொய்யேனாயின், என் அழகு உளதாவது அரிது, எனத், தோழி தலைமகள் செறிப்பு அறிவுறுத்தினாள் *[நற்.191:8]*. ஊரற்கு, இனிவருகின்ற நாளைக்கும் ஒரு பரத்தையைக் கொணர்ந்து கொடுத்தற்கு நேர்ந்த அறியாமையையுடைய விறலியே; என, விறலியைத், தோழி விளித்தாள் *[நற்.310:4]*. தலைவியின் தோற்றம் பொலிவு வேறுபாட்டிற்கு என்னோடு சுனையாடியதை நான் காரணமாகக்கூற, அன்னை, நாளை சுனை ஆடின், மகளின் மேனியின் நிறம் இன்னும் எப்படியாமோ? எனத், தோழி, தலைவன் சிறைப்புறமாகக் கூறினாள் *[நற்.339:9]*. நாடனொடு அருவியாடிப், பரண் ஏறிச் சிறுதினை கடிய, நாளையும் நமக்குப் பொருந்துவதாமோ? எனக் கூறித், தலைவனுக்குத் தோழி செறிப்பறிவுறுத்தினாள் *[நற்.373:9]*.

இவ்விடத்து நின்றால் எம்முடைய சுற்றத்தார் காண்பர்; இனி, இன்றேயன்றி, நாளையும் புலத்திலே கன்று மேய்த்தற்குப் போவேம்; ஆண்டு வந்து உற்றனவற்றைச் சொல்வாய்; இனி, ஈண்டு நில்லாமற்போ' எனத், தலைவி, வினை வலபாங்கிற்றலைவனுக்குக் கூறினாள் *[கலி.110:22]*.

**நாற்காற்பந்தர்-நான்குகாலையுடைய பந்தர் / சிறுமனை.** செல்வமிக்க நல்ல நாட்டைப் பெற்று மகிழும் நின்னுடைய படைக்கலம் பிடித்த மாந்தர், நின்பகைவரைப்போல, கூவையிலையால் வேயப்பட்ட நாற்காற்பந்தர்-நான்கு காலையுடைய பந்தர் (சிறுமனை)-ஆகிய சிறிய இல்லின்கண் வாழும் வாழ்க்கையினின்றும் நீங்கி, நின்பால்வருவார்க்கு உதவிசெய்யும் நட்போடு கூடிய, குணத்தையுடைய முறையை உடைத்தாக நின்செய்கை எனச், சோழன் நலங்கிள்ளியை, உறையூர் முதுகண்ணன் சாத்தனார் பாடுவர் *[புற.29:19]*.

**நாற்கையண்ணல்-(நான்கு கைகளையுடைய) திருமால்;** நாற்கையண்ணல்' ஆகிய திருமாலே! நீ எல்லையறியப்படாத வடிவினையுடையாய்; என ஏத்தினர் *[பரி.3:36]*.

**நாற்பத்தொன்பது வழிமுறை**-நாற்பத்தொன்பது தலைமுறை. இருங்கோவேளைப் பாடும் கபிலர், நீ, வடபக்கத்து முனிவனுடைய ஓமகுண்டத்தில் தோன்றி, நெடிய மதிலையுடைய துவாரபதி என்னும் படைவீட்டை ஆண்டு, வெறுப்பில்லாத கொடையினையுடையராய், நாற்பத்தொன்பது வழிமுறை தொன்றுபட்டு வந்த, வேளிருள் வைத்து வேளாயுள்ளாய்! எனக், குறிப்பிடுவர் *[புற.201:11].*

**நாற்பால்**-நான்கு குலம். வேற்றுமை தெரியப்பட்ட நாற்பாலுள்ளும்-நாற்குலத்துள்ளும்-கீழ்க்குலத்துள் ஒருவன் கற்பின் மேற்குலத்துள் ஒருவனும் அவனிடத்தே சென்று வழிபடுவன்; என்பது, பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் கூற்று *[புற.183:8].*

**நாற்பெருங்குழு**-நால்வகைப்பட்ட பெரிய திரள், பழையன் என்னும் குறுநில மன்னனுடைய மோகூரிடத்து, நன்மக்கள் திரளிடத்தே, நான்கு வகையாகிய கோசர், வஞ்சின மொழியாலே விளங்கினாற்போன்று, தமது மொழியால் தாம்மேலாய் நாற்பெருங்குழு-நால்வகைப்பட்ட பெரிய திரள்-விளங்கியது.(இத்தொடர் ஐம்பெருங்குழுவில் அமைச்சர் ஒழிந்த, புரோகிதர், சேனாபதியர், தூதர், ஒற்றர் என்னும் நால்வரையும் சுட்டியதாகக் கொள்வர்) *[மது.510].*

**நாற்பெருந்தெய்வம் - நான்காகிய பெரியதெய்வம்.** நாற்பெருந்தெய்வம்-நான்காகிய பெரிய தெய்வம்-ஆகிய இந்திரன், யமன், வருணன், சோமன் என்பாரை உடைய, நன்றாகிய ஊர்கள் உலகில் நிலைபெற்றிருந்தன *[முரு.160].*

**நாற்ற உணவினோர் - அவிஉணவினோர் (தேவர்).** வாடாத கற்பகத்தின் தாரினையும், இமையாத கண்ணினையும் பெற்ற நாற்றஉணவினோரும்-அவி உணவினோரும் (தேவர்களும்)-பெறுதற்கரிய உலகத்தைப், போர்க்களத்திற் பட்டவர்கள் பெற்றனர். *[புற.62:17].*

**நாற்றஉணவு**-அவியாகிய உணவு. தெய்வத்தன்மையாற் சூழ்ந்த ஒளியினையுடைய வாடாத பூக்களையும், இதழ் குவியாத கண்ணினையும், நாற்ற உணவினையும்-அவியாகிய உணவினையும்-உடைய, அச்சம் பொருந்திய மாயோன், முருகன் முதலிய தெய்வங்கட்கு உயர்ந்த பலிகளைக் கொடுத்தனர் *[மது.458].*

**நாற்றம்-1. மணம்.** நின்னைப்பாடுவாருடைய கைகள், புலால் நாற்றத்தை-மணத்தை-உடையவாகிய செவ்விய தடியைப், பூநாற்றத்தவாகிய புகையைக் கொளுத்தி அமைத்த ஊனையும், துவையையும், கறியையும், சோற்றையும் உண்டு வருந்தும் தொழில் அல்லது வேறு செயலறியா', என்பது சேரமான் செல்வக்கடுங்கோவாழியாதன், கபிலர் கைப்பற்றி மெல்லியவாமால் நுங்கை என்றபோது கபிலர் கூறியதாகும் *[புற.14:12,13].* நாற்றத்தை ஆராயும் வண்டு சிறிய வெள்ளிய ஆம்பலின்மீதிருந்து ஊதும் *[புற.70:11].* முள்ளம்பன்றியைக் கொன்ற ஆடவர், அறுத்தெடுத்த உடும்பின் தசையைச் சிறிய மனைமுற்றத்தில் பகுத்தளித்தற்பொருட்டு, நெருப்பில் வேகவைத்த கொழுவிய நிணத்தின் நாற்றம் தெருவெல்லாம் கமழ்ந்தது *[புற.325:9].* அகிழ்கட்டையினின்றெழுந்த நறிய புகை மெல்லமெல்லச் சென்று படிய, கபில நிறம் பெற்ற, நெடிய மனை முழுதும் நாற்றம், கமழ்ந்தது *[புற.337:11].*

கடவுளைப் பேணுதற்காக எடுத்த வேள்வியினின்றும் எழுந்த புகை, வருநர், விருந்தினர் பொருட்டுச் சமைத்த அடுநெய்யாகிய புகை, இவ்விரண்டுடன் கமழும் நாற்றத்தான், கடவுளரும் இவ்வாறு செய்தலை விரும்புமாறு, இவற்றைப், பல்யானைச் செல்கெழுகட்டுவன் பேணினான் *[பதி.21:14].*

(கோயில்களிற்சேவிக்கும்) மகளிரது புழுகு முதலிய நாற்றம் தெருவுகளெல்லாம் கமழ்ந்தது *[மது.447].* பலாப்பழத்தின் சுளை, தேனும், நாற்றமும் உடையது *[மது.527].*

காஞ்சிமரத்தின் பூக்கள் உதிர்ந்துள்ள மணல்மேடுகள், புதிய வதுவை (மண) நாற்றம் மிக்கிருந்தன *[அக.25:5].* நெய்தற்பூவின் இதழ் நாற்றத்தினை விரும்பிச் சென்று வண்டு அதன் தாதினை உண்ணும் *[அக.170:5].*

மாலைப்பொழுதில் பிடாவின் அரும்பு அலர்தற்குரியதனை, வண்டு வாய் திறத்தலால், எழும் நாற்றம், வாடைக்காற்றால் தூற்றப்படும் *[அகம்.183:12].* வேங்கை மலர்களின் நாற்றம், காட்டுமல்லிகை மலரின் மணத்தோடு சேர்ந்து புலால் மணத்தைப் போக்கியது *[அக.268:4].* காட்டு மல்லிகை மலருடன், கூதளமலரையும் சேரத்தொடுத்த கண்ணியின் விட்டு நீங்காத நாற்றத்தைக், காற்று வெளிப்படுத்தத் தலைவன் நம் மனையிடத்து உவகையனாகப் புகும் நிலையைக் கண்டு, அன்னை, முருகன் என எண்ணி, நெடுவேளைப் பரவினாள், எனத் தலைமகன் சிறைப்புறத்தானாகத், தோழி கூறினாள் *[அக.272:9].* மலர் எனப் புலமெலாம் கமழும் நாற்றத்தினையுடைய கரிய பலவாய கூந்தலினையுடையவள் தலைவி *[அக.291:23].* கலப்புற்ற பல மலர்களை வண்டு மொய்க்கும்படி சூடிப், பிடரியின் மீது தங்கிய நிலையினின்றும் அசைந்த பெரிய கூந்தலின் பலவாய நாற்றத்தை வேண்டுமிடத்துப் பெற்று மகிழக், கைகளால் விரும்பிக்கொள்ளும் முயக்கத்தினும் மேம்பட்ட பொருளையான் கண்டதில்லை, எனத், தலைவன், தன்னெஞ்சிற்குக் கூறினான் *[அக.379:12].*

தண்ணிய துளியை எதிர்கொண்ட பசிய கொடியாகிய முல்லையின் அரும்பு மலர்ந்த நாற்றம், மலர் மிக்க செம்முல்லையோடு, தேன் மணக்கும் வண்ணம் செறிய மழை காலமல்லா காலத்தும் பெய்யும், இது வம்பேயன்றிக் கார்பருவமன்று, எனப் பருவ வரவில் வேறுபட்ட தலைமகட்குத், தோழி கூறினாள் *[குறு.382:2].*

நெஞ்சமே! காட்டுமல்லிகைப் பூவுடனே பாதிரி மலரையும் தொடுத்துக் கட்டிய மாலையைச் சூடிய கூந்தலிற் கமழும் நாற்றத்தைப் பெற்றுத், தலைவியின் ஆகத்தை முயங்குவதிலிருந்து நீங்கமாட்டேம், எனத், தலைவன், தன்னெஞ்சிற்குக் கூறிச் செலவழுங்கினான் *[நற்.52:3]*. குராமரத்தின் நறிய மலரில் வண்டு விழுதலான் எழுந்த நாற்றம், தென்றற்காற்றோடு கலந்துவீசக், கண்கள் அவற்றை நோக்கி மகிழும் அழகமைந்த நேரத்தில், வளை நெகிழ்ந்தோளாகக் கருதித்துன்புறுதலான், என் நெஞ்சம் அவர்பாற் சென்றது; எனத், தோழிக்குத், தலைவி கூறினாள் *[நற்.56:2]*. தாழைப்புதலினால் கட்டப்பட்ட எமது சிறிய வீட்டின்கண்ணே, சோலையிலுள்ள புன்னை முதலியவற்றின் மலரை முடித்தலால், வண்டுகள் மொய்க்கின்ற நாற்றத்தையுடைய கூந்தலில், துகள்படிய, நிலத்தில் புரண்டு சாய்ந்தாற்போலத் தலைவி, தோழியிடம் வருந்தி, அழகழிந்தாள் *[நற்.270:2]*. 'தும்பி! தேனோடு, தழைந்த குலையுடைய பீர்க்கம் பூவிலே சென்று தேனைப் பருகி, அதற்கு மாறாக, நறுநாற்றமின்மையின், என்பசலையிடத்து முரன்றாயல்லை; எனப், பிரிவாற்றாளாகிய தலைவி, தும்பியை முன்னிலைப்படுத்திக் கூறினாள் *[நற்.277:8]*. பலாவின் கிளையில் வந்து தங்கிய கொக்கானது, மீனைக் கொணர்ந்து குடைந்து தின்னுதலால் உண்டாகிய (புலவு) நாற்றம் பொறுக்கவியலாது, மந்தி தும்மா நிற்றல் *[நற்.326:3]*.

தாழை அரும்பு மலரா நிற்கக், காற்றுப் புகுந்து வீசுகின்ற நாற்றமொடு, அன்றிற் பறவையும் என்பக்கத்தே வந்து, ஒலியாநிற்கும்; யான் கொண்ட காமத்தைப் போக்குவாரில்லை', எனக், காமமிக்க கழிபடர் கிளவியால், தலைமகள் கூறினாள் *[நற்.335:6]*. காட்டு மல்லிகை மலரையும், பாதிரியின் மலரையும், செங்கருங்காலி மலரையும் கொய்து, ஒரு சேர உள்ளே செறித்திருந்த செப்பைத் திறந்து வைத்தாற்போன்ற, நாற்றம் அமையப்பெற்ற கூந்தல் *[நற்.337:6]*. கூந்தலில் நறுமணம் கமழ்தலைக் கொண்ட நாற்றத்தையும், பசலை பரவிய சிறிய நெற்றியையும் நோக்கிச், சிதைந்த உள்ளத்தையுடையளாய், அன்னை வெய்துயிர்த்தனள்; அதனால், இல்வயிற்செறிக்கப்பட்டுப், பிறரால் ,இரங்கத்தக்க தன்மையேமாய் அஞ்சாநின்றோம்', எனத், தோழி, தலைமகற்குக் கூறினாள் *[நற்.368:6]*.

காமநோய் அடுகையினாலே இவள் அழகு கெடும்படிப் பிரிந்து, பகைவர் தந்த நாட்டைக் காத்துப், பொருள் பெறுதற்கு முயல்வை; அங்ஙனம் முயலுமளவில், நாற்றம் அமைந்த பெருமையையுடைய பொய்கையிடத்துத் தாமரை முகைக்குக் கூற்றமாகிய அலர்ச்சி, அதன் குறைவிற்குக் காரணமாயினாற்போல, இத்துணைக்காலம் இருவென விதித்த காலங்குறைபட்டு வருதற்குக் காரணமான வாழ்நாள்களும், இவளுடன் நிலை பெறுமோ? எனக்கூறிக் தோழி, தலைவனைச் செலவழுங்குவித்தாள் *[கலி.17:11]*. என் தொடியை நெகிழப் பண்ணினாரிடத்தே தோயும் என்னுயிரை, அவரிடம் சென்று செறியாமல் காக்கத் துணிவேன். அதனாற்பெற்றதென்? வண்டு உண்ணும்படி நிரைத்த மலர்கள் கமழும் நாற்றம், நெடிய நிலாவையுடைய இராக்காலத்தே வந்து வருத்தத்தைத் தரும்' எனத், தலைவி, வன்புறை எதிரழிந்து கூறினாள் *[கலி.29:21]*. தலைவி செய்த இரவுக்குறியிடத்தே நீ வருவையாயின் நாற்றத்தை உடையவாய மலைக்கண்னே, நின்று பலியைக் கொள்ளும் அணங்குகளிலே ஓர் அணங்கென்று கருதிச், சிறுகுடியிலுள்ளோர் அஞ்சுவர், எனத், தோழி, இரவுக்குறி ஏதம் கூறித், தலைவனை வரைவு கடாவினாள் *[கலி.52:9]* யானையின் நாற்றத்தையுடைய மதத்தில் முன்படிந்திருந்த வண்டுகள் விருந்து செய்ய, பின் வந்த வண்டுகள், பகற்பொழுதெல்லாம் அங்குத் தங்கியிருந்தன *[கலி.66:3]*. ஆரவாரத்தாற் பொலிவுபெற்றுப், பரத்தையரைக் கொள்கின்ற மணத்திலுண்டான நின் அழகினையுடைய நாற்றத்தை, விடியற்காலத்தே யாங்கள் பெற்றது, யாம் தோள் மெலியும்படியாகப், பரத்தையரைக் கூடி மணமனையிடத்தாய், என்று, பிறர்சொல்ல, நினக்கு உண்டான வளப்பத்திலும் மாட்சிமையுடைய தொன்றன்றோ? எனத், தலைமகனுடன் ஊடல் தீரும் தலைவி கூறினாள் *[கலி.66:12]*. பரத்தையரின் மயிர் நாற்றத்து (புழுகு முதலியவற்றிலே) அளைந்த பூந்தாது (தலைவ!) நின்தோளில் கிடக்க என்னை நீ தொடுவதற்குயார்', என்றாள் தலைவி *[கலி.88:1]*. நீரைவிட்டு மேலாய் உயர்ந்து நெருங்கின் பூ அலர்ந்து மணம் கமழும் போது, அதனை, நின்மார்பிற்கிடந்த மாலையினது நாற்றம் என்று இவள் துணியும்', எனத், தோழி, தலைவியது ஆற்றாமை கூறினாள் *[கலி.126:11]*.

தீயினுள் தெறல் நீ, பூவினுள், நாற்றம் நீ, எனத் திருமாலைப் பரவுவர் *[பரி.3:63]*. நின் நாற்றமும், ஒளியும் காயாம் பூவின்கண், உள்ளன', எனத், திருமாலைப் பாடினர் *[பரி.4:29]*. நறியனபல கூடிய நாற்றத்தை உள்ளேயுள்ளேயடக்கி, மேலே புதியவான நாற்றத்தைச் செய்கின்றது, வையைப்புனல் *[பரி.7:21(2)]*. மலருண்கண்ணாய்! இந்நாற்றம், பரங்குன்றத்துக் கனியினும், மலரினும் பயின்ற காற்றுச், சீத்து அடித்து வந்தது; ஆதலால், மிகவும் துனியல், எனத் தலைவியிடம் தலைமகன் கூறினான் *[பரி.8:53]*. சுவை, இசை, தோற்றம், நாற்றம், ஊறு என்னும் ஐம்புலன்களும் நீயே! எனக்கூறித், திருமாலைப் பரவினர் *[பரி.13:14]*. தன் குரும்பை முலைக்கட்பட்ட அரக்குநீரைத் தானையினால் ஒற்றிநிற்ப, அவள்பால் வரும் தலைவனைநோக்கித், தோழியர், இவள் பூத்தனள், பொருந்தாது நீங்கு என்று கூற, அவன், செஞ்சாந்தின் நாற்றத்தால் பூப்பின்மையை அறிந்து ஆண்டு நின்றும் நகையொடும் போந்தான் *[பரி.16:26]*. கங்குற்கண் மழைபெய்தலான், மரங்கள் தரும் மலர் நாற்றமும், தேன்தந்த மலர்நாற்றமும், செறுவெயிலையும், மிக்க காற்றையும்

உடையவாகிய காடுகள் தரும் வெங்கார் நாற்றமும், மரக்கோடுகள் உதிர்த்த கனிகளது நாற்றமும் ஆகிய இந்நாற்றங்களை உடன் கலந்து, வையை, பிறர்க்கு நல்கியது. கரையில் தடம் பொழில்தான் தன் நாற்றத்தின் மேலே யாற்றினது வெம்மையால் தோற்றுதலையுடைய வேசனை நாற்றத்தைக் கொள்ள ஊர்தோறும் பறைஒலித்தல் கொண்டது *[பரி.20:8,9,10(2),14,12].*

2. படைப்பு. வேதமும், நான்முகனும், அவன் நாற்றமும்-படைப்பும்- நீ, எனத், திருமாலைப் புகழ்வர். இதற்குப் புலனும், பூவினுள் நாற்றமும் நீ என்றும், பாடவேறுபாடு உண்டு *[பரி.1:46].*

**நாற்றிசை** - நான்குதிசை. ஒருதிசைக்கண், வள்ளியோனாகிய ஒருவனை நினைந்து, நாற்றிசையிலும்-நான்கு திசையிலும்- உள்ள பரிசின் மாக்கள் பலரும்வருவர்', என, மலையமான் திருமுடிக்காரியைக், கபிலர் பாடுவர் *[புற.121:1].*

**நாற்று** - இளம்பயிர். செம்மண் மேட்டின்மேல், தழைத்த, பருவம் வாய்த்த, வரகினது, காற்றால் ஒலித்தலையுடைய, நாற்றின்-இளம்பயிரின்-இலையை, மான்குட்டி தின்னும் *[குறு.282:2].*

**நாற்றுதல்**- தோற்றுதல். வையைக் கரையிலுள்ள பொழிவினது நாற்றத்தின் மேலே, அவ்வையையினது வெம்மையாலே நாற்றுதல்-தோற்றுதல்-உடைய வெங்கார் மணம் எழுந்தது *[பரி.20:13].*

**நான்கு**-ஓர் எண்ணுப்பெயர். இரு நான்கு-எண்-திசைகளிலும் எரிகொள்ளி எரிந்து விழவும், பெரிய மரத்தின்கண்ணே இலையில்லாத நெடிய கோடாகிய வற்றல் பற்றவும், கனாவினும், மெய்ம்மையினும் பொறுத்தற்கரிய வற்றைக் கண்டு போர்செய்யும் வலியையுடையோய்', எனச், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைக், கோவூர்கிழார் பாடுவர் *[புற.41:4].* மாறனே! கொல்களிறும், கலிமாவும், தேரும், மறவரும் என நான்கு படையுங்கூட மாட்சிமைப்பட்டதாயினும், வேந்தரது வெற்றி, அறநெறியை முதலாகவுடைத்து', எனப், பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனுக்கு, மதுரை மருதன் இளநாகனார் கூறினார் *[புற.55:9].* பாரியது பறம்பு, உழவரால் உழுது விளைக்கப்படாதன நான்கு விளையுளை உடைத்து; ஒன்று, மூங்கில்நெல், இரண்டு, பலாவின்பழம்; மூன்று, வள்ளிக்கிழங்கு, நான்கு, தேன் *[புற.109:7].*

நிலம் நீர் வளி, விசும்பு என்ற நான்கினையும் போல் அளப்பரியன், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் *[பதி.14:1].*

நான்கு தசம் எய்திய-(நாற்பதிற்றியாண்டு) சென்ற முரசென்று மருளும் வலியகால்களையும், உயர்ந்த அழகினையும், புகர் நிறைந்த மத்தகத்தினையுமுடைய யானையின் மருப்பு கட்டிலுக்குப் பயன்பட்டது *[நெடு.115].*

நன்றாகிய நான்கு குதிரைகளை நுகத்தில் பொருத்திப், பல வடங்கள் ஒலிக்கும்படி பூட்டி, வலவன் தேரினைச் செலுத்தினான் *[அக.400:9].*

நால்வகையூழிகளிலும், ஒன்று, இரண்டு மூன்று, நான்கு (நீரின் சிறப்புப் பண்பாகிய சுவை) ஐந்து என்பனபோன்ற எண்களால் எண்ணப்படும் சிறப்பினை உடையை, எனத், திருமாலை வாழ்த்துவர் *[பரி.3:78].* நான்கினுள்-மைத்திரி, கருணை, முதிதை, இகழ்ச்சி-என்னும் நான்கினாலும் சித்தத்தின் மாசறுத்தனர் *[பரி.4:1].* செவ்வேள் ஆறுமுகத்தோடும், முந்நான்கு தோளோடும் விளங்கினார் *[பரி.5:11].* குழைக்காதினையுடைய கோலச் செவிக்கண் குவளையை இவள் செருகி, நான்கு விழிபடைத்தாள் என்று கூறும்படி கொற்றவை கோலங்கொண்டு ஒரு பெண், இட்டதிலகம், செம்மையால், நெருப்பாகிய நெற்றி விழியாயிற்று *[பரி.11:98].* நான்கினுள்-ஓசை, ஊறு, ஒளி, சுவை என்பவற்றால் உணரப்படும் பூதங்களும் திருமாலே *[பரி.13:21].*

**நான்மறைக்கேள்வி-நால்வேதம்.** நான்முகன் நாவினுட் பிறந்த நான்மறைக் கேள்வி-நால்வேதம்-குரலெடுப்ப, மதுரை துயில்எழுதல் அல்லது வஞ்சியும், உறையூரும் போலக் கோழியினால் துயில்எழாது *[பரி.தி.7:8].*

**நான்மறைமுதல்வர்-அந்தணர்.** செழிய, அமைந்த கேள்வியையும், ஐம்புலனை அடக்கிய விரதங்களையும் உடைய நான்மறை முதல்வர்-அந்தணர்-சுற்றமாக, வேந்தர் அதற்கேற்ப ஏவல்செய்ய, நிலைபெற்ற வேள்வியைச் செய்துமுடித்த, வயவாள் வேந்தன், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் *[புற.26:13].* நோயின்பக்கத்தே வீழ்ந்து இறந்த உடம்பை, வாளாற்படாத குற்றம் அவரிடத்தினின்றும் நீங்க வேண்டி, அறத்தை விரும்பிய கோட்பாட்டையுடைய நான்மறை முதல்வர், பசிய தருப்பைப் புல்லைப் பரப்பினராய்க் கிடத்தி, தமது ஆண்மையே பற்றுக்கோடாக, நல்ல பூசலிலே பட்ட வேந்தர் செல்லும் உலகத்திற்குச் செல்க', என்று, வாளோக்கியடக்கும் இழிதகவும் பிழைத்தார்கள், பெருந்தகையே! நீ சீரிய புண்பட்ட படியால்', என, அதியமான பொருது புண்பட்டு நின்றோனை, ஔவையார் பாடுவர் *[புற.93:7].*

**நான்மறை முதுநூல் முக்கட்செல்வன்-நான்கு வேதங்களையும் படைத்த பரமன்.** செல்வமிக்க சோழவேந்தரால் புரக்கப்படும், உலகமெல்லாம் பரவும், நன்மைபொருந்திய நற்புகழையுடைய, நான்மறை முதுநூல் முக்கட்செல்வன்-நான்கு வேதங்களையும் படைத்த பரமன்-ஆலமுற்றத்திற்கு உரியவன் *[அக.181:16].*

**நான்மறை முனிவர்-அந்தணர்.** பெரும, நினது முடி, நான்மறைமுனிவர்-அந்தணர்-நின்னை நீடுவாழ்க; என்றெடுத்த கையின் முன்னே வணங்குக; எனப், பாண்டியன்

பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியிடம், காரிகிழார் கூறினார் [புற. 5:20].

**நான்மறையோர் - அந்தணர்.** நான்மறையோர்-அந்தணர்-புகழ்பரப்பி, அருளுடனே வாழ்வர் [பட்.202].

**நான்மாடக்கூடல்-மதுரை.** இளவேனிற்பொழுதில் காமற்கு விருந்திடுதலை மேற்கொண்டு, நான்மாடக்கூடலில்-மதுரையில்-மகளிரும், அவர்தம் கணவரும் காவிலே கூடியிருந்து விளையாட, அணிகளை அணிவர் [கலி.92:65].

மழைவளம் பெருக, நீர்மலையிருந்து இழிந்துவருதலை, நான்மாடக்கூடல் எதிர்கொண்டது [பரி.தி.1:3]. உலகம் ஒரு தட்டிலும், நான்மாடக்கூடல் ஒரு தட்டிலும் வைக்கப்பெற்றுப் புலக்கோலால் தூக்க உலகனைத்தும் வாடினும், நான்மாடக்கூடல் வாடாது [பரி.தி.6:4].

**நான்முகவொருவன்.** நான்முகன் (பிரமன்). திருமாலின் திருவுந்தித்தாமரையால் பெறப்பட்டவனும், ஊழிகள் தோறும் தன்படைத்தல்தொழிலில் வருத்தமில்லாதவனும், முருகனின் சினத்திற்கு ஆட்பட்டு மண்ணிடத்தே தோன்றி மயக்கமுறுவோனுமான, நான்முகவொருவனைக்-நான்முகனைக்-குறித்து, வானவரெல்லாரும், முனிவரை முன்னிட்டுக் கொண்டு, அம்முருகனைக் காண, ஆவினன் குடிக்கு வந்தனர் [முரு.165]. நீலநிற வடிவமைந்த நெடியோனது (திருமாலது) திருவுந்தியாகிய பல்லிதழ்த் தாமரை, நான்முகவொருவனைப் பயந்தது [பெரு.403].

**நானம்-புழுகு.** குளிர்ந்த மயிர்ச்சாந்தமும், நானமும்-புழுகும்-கூந்தலிடத்தே மணம் எழுப்பின [கலி.93:21].

**நானாடு-நான்கு கூறாகிய நாடு, நானிலம்.** குளிர்ந்த வைப்புக்களையுடைய நானாடு-நான்கு கூறாகிய நாடுகள்-(முல்லை, மருதம், குறிஞ்சி, நெய்தல்) மீக்கூற கரிகாலன் ஒரு குடையால் ஆண்டான் [பொரு.226].

**நானிலம்-(நான்குகூறுபட்ட) மண்ணுலகம்.** திருமால் நானிலத்து (நான்கு கூறுபட்ட) மண்ணுலகத்து வாழும் உயிர்களின் நடுக்கம் தீரும்பொருட்டு, அதனை நீரில் நின்று மேலே எடுத்தற்குப், பன்றியாகத் திருவுருக் கொண்டார் [பரி.13:34].

**நானிலவர்-நான்கு நிலத்துவாழ்வார்.** புகழ் நிறைந்த குடிமக்கள் பொருந்தின நானிலவரொடு-(நான்கு நிலத்து வாழ்வாருடனே)-பழமைகூறிநின்று ஏவலைக் கேட்கும்படி ஆண்டவன், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டின் நெடுஞ்செழியன் [மது.123].

# நி

**நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனார் - ஒரு புலவர்.** நிகண்டன் என்பதை இவர் பெயர்க்கமைந்த அடைமொழி யென்றும், அது தமிழில் நிகண்டொன்று செய்த காரணத்தினால் இவர்க்குப் பொருந்தியதென்றும், அந்நிகண்டே கலைக்கோட்டுத் தண்டு எனப்படுவதென்றும் விளக்குவர் பி.நா.(நற்.பாடினோர் வரலாறு). மற்றும், மான் கொம்பை நிமிர்த்திக் கைக்கோலாகக் கொண்டமையால் இப்புலவர் கலைக்கோட்டுத் தண்டன் எனப்பட்டார் என்றும், இவரது இயற்பெயர் புலப்படவில்லை என்றும் கூறுவர் அவர். இவர் பாடலொன்று நற்றிணையில் (382) உள்ளது. களவுக் காலத்தே, தலைமகன் ஒருவழித் தணந்த நிலையில், ஆற்றாளாகிய தலைவி, அயலார் கூறும் பழிக்கஞ்சி ஆற்றியிருத்தல் வேண்டுமென்பதைத் தானே தோழிக்குரைப்பதாக, இவர் அப்பாடலை இயற்றியுள்ளார். கானலிடத்துக் கழிநீர் பெருகவும், நெய்தல் மலர்கள் கூம்பவும், கடல்மீன்களையுண்டு புள்ளினம் கூடுகளைச் சேரவும் மாலைக்காலம் வருவதை இவர் புனைந்துள்ளார்.

**நிகர் - ஒளி.** தலைவியின் கண்கள், நிகர்- ஒளி-பொருந்திய மலர்களைப் போன்றன [அக.11:12]. தலைவி, நெய்தலின் நிகர் மலர் போன்ற மழைக்கண்களையுடையவள் [அக.83:13]. சுனையிலுள்ள நிகர் பொருந்திய மலரைப் போலும் என்று வண்டுகள் விருப்புறும் மலர் நிறைந்த கூந்தலையுடையவள், தலைவி [அக.371:12].

ஆயத்தார் புன்னையின் மகரந்தம் சேர்ந்த நிகர் பொருந்திய மலர்களைப் பறித்தனர் [குறு.311:6]. நீரிடத்துள்ள நிகர் பொருந்திய மலர்களையொக்கும் மழைக்கண்களை உடையவள் தலைவி [குறு.329:6].

குவளையின் நீர் வடிகின்ற, நிகர் பொருந்திய மலர் போன்ற, கண்களில், நீர் வடியும்படி, அழாதே, என்று, தோழி, தலைவியை ஆற்றுவித்தாள் [நற்.391:9].

**நிகழ்ச்சி - நிலைமை.** ஊடலையுடைய மகளிரும், மைந்தரும் ஊடல் நீங்கியும், ஒருவரையொருவர் முற்படுவதற்கு நாணியது, மாறுபாடுடைய மன்னர் தம்முடைய சேனைகளால் பொருது நொந்து, பின்பு, சந்து செய்து கொள்ளும் விழைவு உடையவர்களாயிருந்தும், முற்படச் சந்து செய்து கொள்ளுதலை நாணுகின்ற நிகழ்ச்சியை - நிலைமையை - ஒக்கும் [பரி.10:62]. வையை நீர், பிற துறைகளிடத்தே, பரத்தையரோடு தலைவர் நீராடும் நிகழ்ச்சியை விளைவித்து, அத்தலைவர், தத்தம் தலைவியரோடு ஆடுதற்குரிய இப்பெருந்துறையில், வாளாபெருகிக் கிடக்கும்', என்று, தோழி கூறினாள் [பரி.தி.2:31].

**நிச்சம்-நித்தம்.** பலர்க்கும் பயன்களைச் செய்து இந்நிலவுலகம் இன்பம் அடைய ஆண்டோர் சிலரேயாவார்; அவ்வாறு வாழாதோர், பலராவார்; அவர் செல்வமும் நிலைத்து நில்லா; செல்வத்தின் நிலையாப்பண்பு இப்பொழுதும் அவ்வாறேயாம்; ஆதலால் நிச்சமும் - நித்தமும் - நினக்குரிய ஒழுக்கத்தில் குன்றாதொழிக', என்று, தந்துமாறனிடம், சங்கவருணர் என்னும் நாகரியர் கூறினார் *[புற.360:13].*

நின் நலத்தையே சுற்றிச் சுழலும் என்நெஞ்சு, அச்சத்தான் மாறி, அசைவாலே புறப்பட்டு, நிச்சமும் தடுமாறுகின்றது;, என்று, தலைவன், தலைவியிடம் கூறினான் *[கலி.110:9].*

**நிணம்-கொழுப்பு.** ஒருபோதும் ஒழியாமல் உண்ணப்படுதலான் ஈரம் புலராத மண்டையில் கொழுத்த நிணம்-கொழுப்பு-மிகுமாறு, அதியமான் உலகம் வறுமையுறும் காலத்திலும் காத்தல் வல்லவன் *[புற.103:10].* பருத்திப் பெண்டினது, பஞ்சு போன்ற, நெருப்பின் வெம்மை ஆறுதற்கு ஏதுவாகிய, நிணமசைந்த கொழுந்தடிகளைப், பாணர், கள்ளோடு சேர்த்து உண்டனர் *[புற.125:2].* வல்வில் வேட்டுவனாகிய நள்ளி, நெய்யிழுது போன்ற வெள்ளிய நிணத்தையுடைய கொழுந்தடியைத் தீயிற் சுட்டு இரவலர்க்கு வழங்கினான் *[புற.150:9].*வல்விலோரி, தான் கொன்ற மானினது நிணத்தையுடைய தசையினது புழுக்குடன், மதுவையும் இரவலர்க்கு நல்கினான் *[புற.152:26].* நிணத்தை வெட்டிச் செருக்கிய, நெருப்புப்போலும் உச்சியையுடைய நெடு வேலையுடையவன், விச்சிக்கோ *[புற.200:6].* காளையாகிய மறவன், ஆனிரையைக் கள் விலைக்கு நேராகக் கொடுத்து, ஊனைத்தின்று, செவ்வி நிணமிக்க எச்சிலாகிய கையை வில்லின் புறத்தே திமிர்ந்து, வேற்று நாட்டின்கண்ணே புகுந்தான் *[புற.258:4].* மறவன், மாற்றார் எறிந்த நெடுவேல், மார்பை ஊடுருவ, நிணம் பொதிந்த கழலுடனே நிலத்தில் வீழ்ந்தான் *[புற.285:12].* மறவர், அறுத்தெடுத்த உடும்பின் தசையைப் பகுத்தளித்தற் பொருட்டுச் சிறுமனை முற்றத்தில், நெருப்பில் வேகவைத்தலின், கொழுவிய நிணத்தின்மணம் தெருவெங்கும் கமழ்ந்தது *[புற.325:9].* மறக்குடி மறவனின் மனைவி, உடும்பினது விழுக்காகிய நிணம் பெய்து சமைக்கப்பட்ட, தயிரோடு கூடிய, கூழைப், பாணர்க்கு அளித்தாள் *[புற.326:10].* பிணங்களைத் தின்னும் குறுநரி, நிணம் ஒட்டிய பற்களையுடையவாயத் தின்று கொண்டிருக்கப், பேய்மகளிர் பிணங்களைத் தழுவிக் கூத்தாடினர் *[புற.359:3].* பேய்மகளிர், தசையோடு விரவிய வெள்ளிய நிணத்தைத் தின்று, சுவை காண்பாராய்க், குடர்களைத் தலையிற் சூடிக் கூத்தயர்ந்தனர் *[புற.371:23].* 'நிணம் கலந்த கொழுஞ்சோற்றுணவில், நீரினும் மிகுதியாக, நெய்யினைப் பெய்து, எம்மை விரைந்தேற்று ஆதரிப்பவன்', என்று, கரும்பனூர் கிழானைப், புறத்திணை நன்னாகனார் புகழ்வர் *[புற.384:15].* நிணமும், குருதியும் தோய்ந்த பெருக்கால் உண்டாகிய ஈரம் பொருந்தியது, போர்க்களம் *[புற.392:7].* சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் இரவலரது பசி வருத்தம் கெடுமாறு, கொழுவிய நிணம் கிழிப்பப், பருத்திப் பஞ்சினைத் திணித்த மூடைப்பண்டம் நிறைந்தாற்போன்ற, வெள்ளிய நிணத் துண்டங்களைத் கொடுத்து, உண்பித்தான் *[புற.393:11,14].* குறுமுயலின் நிணம் விரவித்தந்த நறுநெய்யுடைய சோற்றினை, இரவலர் பெற்றுண்ணுவர் *[புற.396:17].*

இரவலர், தம் தொல்பசி நீங்குமாறு, அரிவாளால் பிளந்து அறுத்த, வெள்ளிய நிணத்தோடு கூடிய கொழுங்குறையாகிய ஆட்டின் ஊனைப் பெய்த வெண்சோற்றினைக், கள்ளோடு பெற்றுண்டனர் *[பதி.12:16].* விருந்தினர் உண்ணவேண்டி, ஆட்டுவாணிகரால் வெட்டித் துண்டிக்கப்பட்ட, நல்ல நிணம் பொருந்திய இறைச்சியைத் தாளிதம் செய்யுந்தோறும், அது கடலொலி போல் ஒலித்தது *[பதி.21:9-10]* நிணத்தைச் சுடுதலால் புகை எழுந்தது *[பதி.43:32].* விளங்குகின்ற நிணத்தையுடைய போர்க் களத்தில் பருந்துகள் குருதியை உண்டன *[பதி.67:8].*

பேய்மகள், நிணத்தைத் தின்ற வாயினையுடையளாய்த் துணங்கையாடினாள் *[முரு.56].* பேய்மகள், நிணத்தைத் தின்று சிரித்தது *[சிறு.198].* ஆண்பன்றியின் கொழுவிய நிணத்தையுடைய தசையோடு கள்ளையும் பெறுகுவீர்', எனப், பாணர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் *[பெரு.345].* களிற்றுத் திரளின் நிணத்தைத், தின்ற பேய்மகளிர், துணங்கையாடினர் *[மது.25].* நிணத்தையுடைய தசைகள் சுட்டனர் *[மது.755].* பசுத்த நிணம் ஒழுகிய நெய்மிக்க அடிசிலை விருந்தினர் உண்டனர் *[குறி.204].*

எய்ப்பன்றியின் பசுத்த நிணத்தையுடைய தசைகளைக் கூத்தர் உண்டனர் *[மலை.176].* கானவனது அம்பு தைக்கப்பெற்ற பன்றி, நெய்விழுதையொத்த, வெள்ளிய நிணம் நெருக்குற்றுப், புண்மிக்கதாய், வீழ்ந்து கிடந்தது *[மலை.244].* 'பெண்நாய் கடித்துக் கொண்டுவந்த பசிய நிணத்தையுடைய தசைகளோடே, வெண்ணெல் அரிசியையும் முட்டுப்படாமல் பெறுவீர்', எனக், கூத்தர், ஆற்றுப்படுத்தப்பெற்றனர் *[மலை.563].*

இருப்பைப் பூக்கள், பவளம் போன்ற சிவந்த மேட்டுவழிகளில், குருதி மேலுள்ள நிணம் போல, உதிர்ந்து கிடந்தன *[அக.9:9].* மறவர் அம்பெய்தலால் வழிச் செல்வோர், செவ்வலரி மாலை இடப்பட்டதுபோல் நிண ஒழுங்கும், குருதியும் தம்மைச் சூழ, இறந்து கிடந்தனர் *[அக.31:8].* சுரத்தினைக் கடந்து செல்வோர், வெள்ளிய நிணத்தினை உருகச் செய்த வெண்சோற்றினைத், தேக்கிலையில் வைத்து உண்ணுவர் *[அக.107:9].* கானவர் வெள்ளிய நிணத்துடன் கூடிய உணவினையுடையவர் *[அக.132:5].* வெள்ளிய நிணச் சோற்றினையுடைவர், வடுகர் *[அக.213:8]* செந்தீயில் சுட்ட வளம் பொருந்திய நிணத்தையுடைய கொழுங்குறையைத், தினைச் சோற்றிலே கலந்து, பாணர்க்குப் பகுத்துக் கொடுத்தனர் *[அக.237:9].* மறவர் எருதினைக் கொன்று, உயர்ச்சியுடைய நிணம் பொதிந்த தசையினை,

நெருப்பில் சுட்டுத் தின்றனர் *[அக.265:13]*. பசிய நிணத்தினையுடைய, வரால்மீன் சிதைய நீரைக் கலக்கி, எருமைக்கடா ஊர் புகும் *[அக.316:5]*. காக்கைகள் பசிய நிணத்தினைக் கவர்ந்துண்ணும் பிணங்கள் கவர்த்த நெறிகளில் கிடந்தன *[அக.327:16]*. கவர்த்த நெறிகளில், எருவைச் சேவல், நரியினத்தோடு கூடி நிணத்தினையுண்ணும் *[அக.375:6]*.

நிணத்தையுடைய சுறாமீன் உணங்கலைக் காக்கை கவராது காக்கும் புலால் நாற்றமுடையேம் எனத் தலைவி கூறினாள் *[நற்.45:6]*. பரதவர், படகிலேறிக் கடலிற் சென்று, சுறாமீன்களோடு, பிற மீன்களையும் பிடித்து, அவற்றைத் துண்டித்து, நிணத்தை நிரப்பிய தோணியராய் மீண்டு வந்தனர் *[நற்.111:8]*. மீன் நிணத்தைச் சேர்த்து உருக்கிய ஊனாகிய நெய்யினால், விளக்கு ஏற்றினர் *[நற்.215:5]*. நிணம் தின்னுதலில் விருப்பம் மிக்கது முதுநரி *[நற்.352:5]*.

மழை சூழப்பெற்ற மணிநெடுங்குன்றம், நிணம் பொதியப் பெற்ற ஊன் போலத் தோன்றும் *[ஐங்.207:3]*. மான்களைக் கொன்று, தமையன்மார் கொண்டுவந்த, நிணம் மிக்க ஊனாகிய உணவின்கண் வீழும், பறவைகளைத், தலைவி ஒப்பினள் *[ஐங்.365:2]*. 'என்மகள், தலைவனோடு இங்கு வரக் கரைவாயாயின், தசை பெய்த செவ்விய நிணமாகிய உணவினைப் பொற்கலத்திலிட்டுத் தருவேன்', எனத், தாய், காக்கையிடம் கூறினாள் *[ஐங்.391:3]*. நிணன் - காண்க.

**நிணன்** - கொழுப்பு. நிணனை - கொழுப்பை-அருந்திய கழுகுகளும், பிறவும் கூடிக், கண்டார்க்கு அச்சந்தரும் தன்மையையுடையது, போர்க்களம் *[புற.373:37]*. நிணம்- காண்க.

**நித்தம்** - நிருத்தம். வங்கியத்தின் இசையெழ, முழவு முதலியவற்றின் ஓசையையுடைய தாளத்தை அளந்து, நித்தத்தின்கண் - நிருத்தத்தின்கண் - ஒக்கத்திகழும் அரிவையர்,' தம் நேரிறைமுன்கையினால், அத்தாளத்தைத் தூக்கி அளந்தனர் *[பரி.12:43]*.

**நித்திலம்** - முத்து. புன்னைமரம் நித்திலம் - முத்து-போல அரும்புகளை ஈன்றன *[சிறு.149]*.

நெடிய, அழகிய நித்திலத்தால் செய்யப்பெற்றது, நித்திலமதாணி என்னும் அணி *[பரி.2:29]*. வையையில் புனலாடிய மக்கள், மாலைப் பொழுதில், கடலை நோக்கி, மீள நாளணிகளை நீக்கி, நித்திலம் (முத்துவடம்) முதலியவற்றை அணிந்தனர் *[பரி.10:115]*. நீராடும் துறைதோறும் வையைப் புனல் வலஞ்சுழித்துப் பாய்ந்து, அங்கு நீராடுவாரது முத்துவடம், தலைக்கோல நித்திலம் முதலியவற்றைக் கைக்கொண்டு செல்லும் *[பரி.16:5]*. உள்ளிடும் நித்திலத்தினையுடையது, சிலம்பு *[பரி.22:49]*.

நிதி-பொருட்டிரள். 'தென்புல மருங்கில் உள்ள மலைகளெல்லாம் நிறையும்படி, வாணன் வைத்த விழுமிய நிதியைப் - பொருட்டிரளைப் - பெறுவதாயினும் பழியை விரும்புவாயல்லை; விழுமிய நிதியை ஈயும் உள்ளத்தோடு புகழையே விரும்புவை', எனத், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை, மாங்குடி மருதனார் போற்றுவர் *[மது.203,204]*.

தலைவியின் ஒண்டொடியைத் தழும்புறும்படி அமுக்கற்க; அதனை, யாய் காணின், கொற்றச் சோழர், குடந்தையில் வைத்ததும், பகைவர் நாடு திறையாகத் தந்ததுமாகிய நிதியைக் காட்டிலும், அருங்காவற்படுத்துவள்', எனத், தோழி, தலைவனிடம் கூறினாள் *[அக.60:14]*. 'சுரத்தைக் கடந்து சென்ற நம் தலைவர் இல்லத்தில் நல்விருந்தாற்றுதற்கு விழுமிய நிதியை எளிதினில் அடைவாராக', எனத், தலைவி, தோழியிடம் கூறினாள் *[அக.205:14]*. விழுமிய நிதி நிலைபெற்றிருக்கும் பெருமை கொண்ட அழகிய நகர், மருங்கூர்ப்பட்டினமாகும் *[அக.227:19]*. 'உறந்தை போன்ற நிதியுடைய நன்மனையில், தமர் மணம் செய்து வைக்கவும் மனம் பொருந்தாளாகிச் சென்றனளே', என்று, மகட்போக்கிய செவிலி வருந்தினாள் *[அக.369:15]*. நிதியம்- கண்க.

**நிதிக்கிழவன்** - நிதிக்கு உரிமையுடையவன் (குபேரன்)- பரத்தை ஒருத்தியோடு வதுவை வேண்டித், தேரில் செல்லும் தலைவன், தெருவில், தன் புதல்வனைக் கண்டு, மார்பகம் பொருந்தக் தழுவி, 'இவன், மாநிதிக்கிழவனாம் - பெரிய நிதிக்கு உரிமையுடையனும், (குபேரனும்) - ஆவான்; என்று கூறித், தலைவியின் இல்லிற் புகுந்தான் *[அக.66:17]*.

**நிதியம்** - நிதி. ஒய்மானாட்டு நல்லியக்கோடன், தன் படைத்தலைவர் மிக்கனவாய்க் கொண்டுவந்து தந்த, நன்றாகிய நிறத்தினையுடைய, நிதியத்தினைச்-நிதியினைப்- பாணர் முதலியவர்க்கு வழங்கினான் *[சிறு.249]*. நிதியம் தங்கும் பழைய வெற்றியையுடையது மூதூர் *[மலை.478]*. மண் தின்னும்படிப் பழையதாய்க் கிடந்த நிதியத்தினை, நன்னன், இரவலர்க்குக் கொடுத்தான் *[மலை.575]*.

சேரலாதன், மாந்தை என்னும் நகர் முற்றத்தே, பகைவர் தந்த பொருள்களை, ஆம்பல் என்னும் எண்ணளவு குவித்து, நிலம் தின்னும்படி விட்டொழித்த, நிதியம் போன்ற பொருளைப், பெறினும் தலைவர் தங்காது மீள்வர்' எனத், தோழி, தலைவியிடம் கூறினாள் *[அக.127:10]*. 'அருஞ்சுரம் இறந்த நம் தலைவர், நம்மினும் உறுதியாகத் துணிந்த பொருள், நந்தர் பாடலிபுரத்தில் குழுமியிருந்து, கங்கை நீரடியில் மறைய வைத்த நிதியமோ', என்று, தலைவி, தோழியை வினவினாள் *[அக.265:6]*. மிக்க நிதியத்தினைச் சொரிந்து விட்ட,

உள்ளீடில்லாத துணிப்பை போலப், பாம்பு உடல் வாடிக் கிடந்தது [அக.313:11] நிதியம் தங்கும், உயர்ந்தோங்கும் மனையகத்தே மணம் நிகழ்ந்தது [அக.378:1]. நிதி - காண்க.

**நிமிரல் - சோறு.** 'உலகம் மழையின்றி வாழ வறுமையுறினும், கொக்கின் நகம் போலும் நிமிரலை - சோற்றைப் -பொரிக்கறி முதலியவற்றோடு உண்டு, சான்றோர் வாழ்த்த, வரையாது கொடுக்கும் அவன் தாளாண்மை வாழ்க;, என்று பெருஞ்சாத்தனை, மதுரை நக்கீரனார் வாழ்த்துவர் [புற.395:36]. மானிறைச்சியாசிய பொரிக்கறியையும், கொக்கின் நகம் போன்ற முரியாத நிமிரலையும் பாண் சுற்றம் உண்டது [புற.398:25].

பொற்றொடி மகளிர் முற்றத்தில் பலியாக இட்ட, கொக்கினது நகம் போன்ற, நிமிரலைக், காக்கை மாந்தியது [நற்.258:5].

**நியமம்-1.-கடைத்தெரு.** அகன்ற நாட்டிலுள்ள மூதூர்களில், பலவகைக் கொடிகளின் நிழலிலேயிருக்கும் பொன்னையுடைய நியமத்தில்-கடைத்தெருவில் - வெற்றியும், கொடையும் தெரிவிக்கும் முரசு முழங்கும் [பதி.15:19]. வேடர், காட்டாவின் இறைச்சியோடு, யானைக் கோட்டினையும் செல்வத்தையுடைய நியமத்தின்கண், தாம் பெறும் கள்ளுக்கு விலையாகக் கொடுப்பர் [பதி.30:12]. அரும்பறை முழங்கப் போர்த்தொழில் செய்வோர், போரிலே பகைவரை வென்று, பெற்ற பொருள்களைக், கள்ளையுடைய நியமத்தின்கண், சிறந்த விலையின் பொருட்டுக் கொடுப்பர் [பதி.75:10].

திருமகள் வருத்தமின்றி வீற்றிருந்த, குற்றம் தீர்த்த நியமத்தினையுடையது, கடல் நகர் [முரு.70] சித்திரத்தைக் கண்டாற் போன்ற, கண்ணுக்கு இனிமையுடைய (நாளங்காடி, அல்லங்காடி என்னும்) இரண்டாகிய பெரிய நியமத்தில், விழா நடத்தும் பொருட்டுக், கட்டின கொடிகளும், பிறவற்றிற்காகக் கட்டப்பட்ட கொடிகளும் மலையிலிருந்து இழியும் அருவிபோல, அசைந்தன [மது.365]. விழாநாள் என்னும்படியாக மக்கள் கூடிக், கடலெனக், காரென ஒலிக்கும் ஆரவாரத்தோடு திரிதற்கு, அகன்ற இடம் பெறாத, சீரிய, பெரிய நியமத்தினையுடையது, நன்னனது மூதூர் [மலை.480].

களிற்றுக் கன்றினைக் கொண்ட மறவர், அதனை, நெடுங்கொடிகள் அசையும் நியமத்தினையுடைய மூதூரில், கள்விற்கும் இல்லத்தின்கண், வாயிலிடத்தே பிணித்தனர் [அக.83:7].

நெடிய கொடிகள் அசையும் நியமத்தினையுடையது மூதூர் [நற்.45:4].

**2. கோசரது ஊர்.** 'தலைவியின் பசிய அணிக்கு விலையாகச் செல்லூரின் கீழ்ப்பால் உள்ளதும், பெருங்கடல் போன்ற ஆரவாரத்தினையுடையதும், கோசர் வாழ்வதுமாகிய, புதுவருவாயினையுடைய, நியமம்-கோசரது ஊர்-கொடுப்பினும், அவள் தமர், அமையும் எனக் கொள்வாரல்லர், எனத், தோழி, தலைவனிடம் கூறினாள் [அக.90:12].

**நிரப்பம் - ஒப்புமை.** 'எம்முடைய கூனால் நிரப்பம் - ஒப்புமை இல்லாத யாக்கையை முயங்கி, எம்மைப் பாதுகாப்பேம் என்று, கூறுவார், பலராவார்', எனக், கூனி, தன்னெஞ்சுள்ளே கூறினாள் [கலி.94:24].

**நிரப்பு-வறுமை.** 'என் தலைவன், நிரப்பாகிய-வறுமையாகிய-கடலைக் கடக்கும் புணையாக இருத்தலால், இனிமேல், பிறர்பால் சென்று இரத்தலை நினையேனாயினேன்;, என்று, ஓய்மான் நல்லியக்கோடனைப், புறத்திணை நன்னாகனார் பாடுவர் [புற.376:18].

**நிரம்பாநோக்கு - இடுக்கிப் பார்க்கும் பார்வை.** மறவர், அம்பினையும், நிரம்பா நோக்கினையும் - இடுக்கிப் பார்க்கும் பார்வையினையும் - உடையராய், ஆனிரையை மீட்க வேண்டிப் போர் புரிந்தனர். [அக.67:6].

**நிரயம் - நரகம்.** 'அருளையும், அன்பையும் நீக்கிப்பாவஞ் செய்தாரை நீங்காத, நிரயத்தைத் - நரகத்தை -தமக்கிடமாகக் கொள்பவரோடு பொருந்தாது, குழந்தையை வளர்ப்பார் போலத், தேயத்தைக் காப்பாயாக', எனச், சேரமான் கருவூரேறிய ஒள்வாட்கோப்பெருஞ் சேரலிரும்பொறையிடம், நரிவெரூஉத்தலையார் அறிவுரை கூறினார் [புற.5:6]. 'தேறலோடு, பிறவும் தந்து, நிரயத்தைப் போன்ற துன்பத்தைத் தரும் வறுமையைக் களைந்தான்', என ஓய்மான் நல்லியாதனைப், புறத்திணை நன்னாகனார் போற்றுவர் [புற.376:15]. நிரையம் காண்க.

**நிரல் - 1. ஒப்புமை.** நிரல் -ஒப்புமை-இல்லோர்க்குத் தருதல் இல்லை என்று கூறித், தலைவியின் தமையன்மார், மகண்மறுத்துப், போரை விரும்பினர் [புற.345:14].

இடைமுரியாத அரிசி, விரல் எனும்படி நிமிர்ந்த, நிரல் அமைந்த சோற்றைப், பொருநர் பெற்றுண்டனர் [பொரு.114] 'குடியின் நிரல் உடைமை முதலியவற்றைப் பாராது, தமியேமாய் யாங்கள் துணிந்த மணத்தை (ஏமஞ்சால் அருவினையை) நிகழ்ந்த வண்ணம் உரைப்பேன்', என்று, தோழி, செவிலியிடம், களவு மணத்தைப் பற்றிக் கூறினாள். [குறி.30].

**2. வரிசை.** நிரல் - வரிசை - பொருந்தி, ஒருபெற்றியே செல்லும் செலவினையுடையன குதிரைகள் [அக.400:8].

**நிரை - 1. கூட்டம்.** மனையிடத்தே குழவியை யீன்ற மேவிய கண்ணையுடைய ஆமாவினது நெடிய நிரை - கூட்டம் - புல்லினை மேய்ந்தது [புற.117:5]. மடமானாகிய பெரிய நிரை வைகிய உறக்கத்தை மந்தி எழுப்பும் [புற.247:3]. பகைவருடைய கையினின்றும் பிழைத்த, கன்றுகளுடனே பல்லான் நிரையைக்

கொண்டு வந்த மறவன், தேவர் உலகம் போயினான் *[புற.260:19]*. மறவன், பல ஆக்களாகிய திரண்ட நிரையை மீட்டுத் தந்து, புனற்சிறைபோலப் பகைவரை எதிர்த்து, நடுகல்லாயினான் *[புற.263:5]*. மறவன், போரின்கண் பகைவரது பல்லான் இனநிரையைக் கவர்ந்து வந்தான் *[புற.269:10]*.

அரிமா உலாவும் மலைச்சரிவிலே, பிற விலங்குகளின் இனமாகிய தொகுதி கொண்டிருக்கும் நிரை, நெஞ்சு நடுக்குற்று ஒடுங்கியுறையும் *[பதி.12:6]*. கரும்பின் பாத்தியில் பூத்த நெய்தல், எருமையின் நிரையை மேற்செல்லாதவாறு தடுக்கும் *[பதி.13:4]*. பகைவரது மதில் மரத்தை அழித்து களிறுகள் நிரையாகச் சென்றன *[பதி.15:4]*. இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன், மணியொலிக்கும் மதத்தையுடைய யானைகளின் மிக்க நிரை அலறுமாறு, பகைவர் நாட்டை வென்றான் *[பதி.20:12]*. பல்யானைச் செல்கெழுகுட்டுவன், களிற்றுயானைகள் பொருந்திய நிரையை, நீளமாக்கினான் *[பதி.ப.3:6]*. கூளிக்கூட்டம், நெடிய பிணநிரையைச் சுமந்துகொண்டு மகிழ்ந்தாடியது *[பதி.36:11]*.புறாக்களின் மிக்க நிரை அலறும்படி, வேல மரத்தில் கட்டப்பட்ட சிலந்திவலை அசைந்தது *[பதி.39:11]*. களிறாகிய இனத்தில் நிரை, போரை விரும்பித், தன் இடத்தைவிட்டுத் திரிந்தது *[பதி.67:7]*. 'பலவாகிய ஆக்களின் நல்ல நிரை, புல்லை மேய்ந்து களிப்பால் துள்ளியது *[பதி.89:5]*. 'காட்டிடத்தே கடல்போல் ஒலிக்கும் பல யாட்டினங்களையுடைய நிரையிலே, இராக்காலத்தில் செல்வீராயின், பாலும், சோறும் பெறுகுவிர்', என்று, கூத்தர், ஆற்றுப்படுத்தப் பெற்றனர் *[மலை.416]*.

வலிய கையினையுடைய கரடிகளின் வலிய நிரைகள், இருப்பைப் பூக்களைத் தின்றனவாய், நிலத்தில் புழுதி பரக்கச் சென்று, கொன்றைப் பழத்தைக் கொழுதின *[அக.15:16]*. நீர் ஊறாமையின் தழையிட்டு மூடிய கிணறுகளைக் கண்ட பெரிய களிற்றினமாகிய நிரை, அவற்றைக், கானவர் தம்மை அகப்படுத்த ஆழ்ந்து மறைத்த குழிகளாகக் கருதித், தூர்க்கும் *[அக.21:26]*. கானத்திலுள்ள இளைய மரைமானின் மிக்க நிரை, நெல்லிக்காயினைத் தின்னும் *[அக.69:8]*. மறவர், பாரம் மிக்க கழுதைகளின் நீண்ட நிரைகளைப் பின்பற்றி வரும் வயவர்களை வாட்டி, அவர்தம் தலைகளைத் துணித்தனர் *[அக.89:12]*. தினைப்புனங்காப்போர், சிறிய கண்ணினையுடைய பன்றியின் பெரிய நிரையை ஓட்டுதற்குக், கொம்பினை ஊதி ஒசையெழுப்புவர் *[அக.94:9]*. கொடுவில் ஆடவர், வில்லினை வளைத்துப் பல ஆக்களையுடைய நீண்ட நிரையினைக் கவர்ந்து வருவர் *[அக.159:7]*. செந்நாய் தாக்குதலின், காற்றின் முன் பூளைப்பூவென, விரைந்து அலறியோடிய, காணாதொழிந்த, தன் இனமாகிய மானின் நிரையைக் கூட்டுதற்குக், கலைமான், தன் ஆண்குரல் தோன்ற அழைக்கும் *[அக.199:11]*. பள்ளத்தில் அகப்படுத்திய கன்றுகளையும், பிடிகளையுமுடைய பெரிய யானையின் நிரையை அகப்படுத்தற்கு வாராதொழிந்த எழினியை, மத்தி வென்றான் *[அக.211:9]*. முகில் பெரிய களிற்றினத்தின் நிரை குளிர்ந்திடப் பெரும்பெயலைப் பொழிந்தது *[அக.214:3]*. ஆண்மானுடன் கூடிய இனமாகிய மானின் நிரை, மேல்காற்றின் ஒலியினைப் புலியின் ஒலியெனக் கருதிக், கவர்த்த நெறிகளில் வருந்தி அலறி ஓடியது *[அக.249:18]*. வாடைக்காற்றுப், பாகற் கொடிகளைத் கூதாளிக் கொடியின் நிரைமீது கிடந்து அசையும்படி வீசியது *[அக.255:14]*. கோவலர், பகற்பொழுதில் மழையால் வருந்திய ஆக்களின் நிரையோடு ஊரிடத்தே மீண்டு வருவர் *[அக.264:5]*. வேனிற்காலத்தில் யானையின் பெருநிரை, முகிலை நோக்கிக் கதறும் *[அக.333:12]*. பெரிய களிற்றினமாகிய நிரை, பலவின் பழத்தைக் கைகளால் தோண்டித் தின்னும் *[அக.357:8]*. 'உமணர் போகும் நீண்ட நெறிகளில், அக்கணமாகிய நிரையுடன் சேர்ந்து வாழும் வாழ்க்கை, நன்று கொல்', எனத், தலைவன், பாங்கனிடம் கூறினான் *[அக.390:4]*.

'யாம் தலைவனோடு புனல் விளையாட்டிற்குச் செல்வோம்; தலைவி அவனோடு புனல் விளையாடுதற்கு அஞ்சுவாளாயின், எழினியின் போர் முனையிடத்தேயுள்ள ஆக்களில் பெரிய நிரைபோலத், தன் கொழுநன் மார்பைப் பாங்காயினாரோடும் தலைவி காப்பாளாக', என்று, பரத்தை கூறினாள் *[குறு.80:6]*. கடலலைகள் மீன்களைப் பெயரச் செய்வதனால், வெள்ளிய சிறகுகளையுடைய நாரையின் நிரை, சிறிது பெயர்ந்து, மீண்டும் வந்து, அயிரைமீனை உண்ணும் *[குறு.166:2]*. கரும்புகள், பெரிய களிற்றின் நிரையின் தலைவன் வந்து கைக்கொள்ளுதலின், அழிந்து, பாத்தியின்கண் வீழ்ந்தன *[குறு.180:2]*. களிற்றியானை, யாமரத்தின் அடியைக் குத்தி, வருந்திய நடையையும், சிறிய கண்களையுமுடைய பெரிய நிரையின் மிக்க பசியைத் தீர்க்கும் *[குறு.255:4]*.

ஆமானின் ஒய்ந்த பெரிய நிரை, குன்றத்தின்கண் உள்ள வேங்கைமரநிழலில் கன்றுகளோடு தங்கி, அந்த ஆமானின் துயிலும் பதம் பெற்ற மந்தி, ஆரவாரமிக்க சுற்றத்தைக் கையமர்த்திச் சென்று, அதன்பருத்த மடியமுங்குமாறு பற்றி, இனிய பாலைத், தன் குட்டியின் கை நிறையப் பிழியும் *[நற்.57:1]*.மலையன், ஊர்முனையிலுள்ள பல நெடிய ஆக்களின் நிரையை, விற்போரால் வென்று செலுத்திக் கொண்டு வந்தான் *[நற்.100:8]*. கோடை தெறுதலால், பட்டுப்போன காட்டில், சிறிது பூவணிந்த கூந்தலையுடைய ஆயர் மகளிர், கூடுகின்ற நிரைபோலப், பிடவுகள் மலர்ந்தன *[நற்.238:2]*. ஆவின் கூட்டத்தைக் காக்க வேண்டி, ஆயர் தோண்டிய சிறுகுழியிலுள்ள நீரை, யானையினத்தின் நிரை கவர்ந்துண்ணும் *[நற்.240:9]*. மலையமான் திருமுடிக்காரி, இராப்பொழுதில் கொணர்ந்த பலவாய ஆக்களின் இன நிரைக்கு உரியவர், அவனோடு எதிர்ந்து போர்முனையில் அழிந்தனர் *[நற்.291:8]*.

சூரரமகளிர் போல, ஆயத்தாரது நிரை கூடி, நாம் செல்லுமிடந்தோறும் தவிராது, என்னை நோக்கி, நல்லள் நல்லள் என்று கூறுகின்றனர்', எனத், தலைவி, தோழியிடம் கூறினாள் *[ஐங்.204:2]*.

யானைத்திரளோடு, ஒழிந்த விலங்கின் நிரையும், மறவரும் மயங்குகையினாலே, தூறுகளெல்லாம் வழிப்பட்டுப், பழைய வழிகள் மயங்கின *[கலி.5:1]*. நீரற்ற சுனையில் நீருண்டலை விரும்பிய யானைகள், தாம் சேரப்பதிந்து, அவ்விடத்தில் கைகள் சுடப்பட்டு, ஒழுங்குபட்ட நிரைகள் வேறுவேறாகும்படி, மலைச்சாரல்தோறும் ஓடின *[கலி.12:6]*. ஏறுகள் ஒன்றோடொன்று குத்துகையினால் மெய்யினினின்றும் வடிகின்ற குருதியையுடையனவாய் நாட்காலையில் பெய்யும் முகில் நிரையையொத்தன *[கலி.106:14]*. ஆனினத்தில் நிரையுள்ளே ஏறு நாகு கூடி நின்றாற்போல, நாமும் கூடிப்போதற்கு உடம்படுவாயாக', எனத், தலைவன், தலைவியிடம் கூறினான் *[கலி.113:29]*.

தென்னவர் கொள்ளக் கருதிய நாட்டை உறவேண்டிச்செல்லும் அவர் தானையின் நெடுநிரைபோல, வெள்ளம் விரைந்தது *[பரி.7:7]*. வண்டுகள் ஒலித்தற்குக் காரணமான சண்பக நிரை முதலியவற்றை அருவி கொண்டு வந்து சொரிந்தது *[பரி.11:18]* உண்கண்ணராகிய மகளிரது நிரையை, மறையும் காடாகக் கொண்டு பரத்தை ஓடி ஒளிந்தாள் *[பரி.20:38]*. 'பெண்கள் நிறைந்த நிரைக்கண்ணே நீயிர் என்னைத் தொடர்தற்குக் காரணம் யாது, எனப் பரத்தை, தலைவியையும், ஆயத்தையும் வினவினாள் *[பரி.20:44]*. தென்னவனுடைய குதிரையின் நிரைபோன்று, வெள்ளம் பரந்தது *[பரி.தி.4:2]*.'

2. வரிசை / ஒழுங்கு. நூறாகிய இதழையுடைய தாமரையின் நிரையை - வரிசையை - கண்டாற்போன்ற சிறந்த குடியிற் பிறந்த புகழும், பாட்டும் உடைய வேந்தர் சிலரேயாவர் *[புற.27:2]*

நெடிய மதிலிடத்து நிரைப்பட அமைத்த பதணத்தை (மேடையை) உடையது, அகப்பா என்னும் அரண் *[பதி.22:25]*. நெய்தற் பூக்களையும், நிரையாக உள்ள வண்டுகளையும் உடையது, வயல் *[பதி.27:10]*. நிரையாக அமைந்த கேடக வரைப்பில் கொடியசையும் பாசறை *[பதி.88:16]*. நிரையாகிய ஞாயிலையுடையது, அரண் *[பதி.தி.2:11]*.

நிரையாக அமைந்த ஞாயிலையுடையது, அருப்பம் *[மது.66]*. நீரினை முகந்து இறைக்கின்ற, நிரையாக நின்று தொழில் செய்வோர், பாடுதலின் ஓசையெழுந்தது *[மது.89]*. நிரையாக, மீன்படகாலே வேட்டையாடுவோர், கரையைச் சேர்ந்தனர் *[மது.116]*. நிரையுடைய (ஒழுங்கு) நிலைமையினையுடைய மாடங்களில், நிலாமுற்றத்தில் மகளிர் நின்றனர் *[மது.451]*. பெருஞ்செய் ஆடவர், உயர்ந்த யானைத் திரளின் நிரையைக் (ஒழுங்குகளைக்) கவர்ந்தனர் *[மது.744]*. நிரையாகச் செல்லுதலையுடைய மழை, மலை மீது பெய்தது *[குறி.50]*.

வழிச்செல்வார் விரல் முனையைச் சிதைக்கும் கல் நிரை (ஒழுங்கு) பட்ட நிலைமையையுடையது வழி *[அக.5:14]*. மன்னர்களது கழியாற் பிணிக்கப்பட்ட பரிசையின் நிரையினைக் கண்டாற்போன்று, இறந்தவர்களைத் தழையிட்டு மூடிய பதுக்கைகள் தோன்றின *[அக.67:13]*. நிரையாகிய கால்களையுடைய பந்தரில் மணல் பரப்பி, மாலை நாற்றி, மனை விளக்கேற்றி, மணம் நிகழ்த்தினர் *[அக.86:2]*. கொக்கினம் ஞாயிறு மறைய நிரையாகப் பறந்தது *[அக.120:3]*. நிரையாக நிற்கும் ஞாயிலையுடையது, மதில் *[அக.124:16]*. நிரையாக வரும் காற்று மோதுதலின் வெண்கடம்பின் மலர்கள் பாறையில் உதிர்ந்தன *[அக.199:2]*. பரதவரது உளியால் தாக்கப்பட்ட பெருமீன், வலிகுன்றி, நிரையாக உள்ள படகின் பக்கலில் வந்து சேர்ந்தது *[அக.210:6]*. நிரையாகப் பறத்தலையுடைய அன்னப்பறவை போன்று பரி விரைந்தது *[அக.234:3]*. நிரையாகப் பறத்தலையுடைய குருவியினம் காலை சென்று, இரையுடன் மாலை மீளும் *[அக.303:11]*. தேருருள் பிளந்து சென்ற சுவட்டிக்கண், நீர், நிரையாகச் செல்லும் பாம்புபோல விரைந்து சென்றது *[அக.324:13]*. வானத்தின்கண் அன்னத்தின் நிரை பறந்து செல்லும் *[அக.334:10]*. நிரையாகச் செல்லும் குதிரைகளைச் செலுத்தித் தலைவர் சுரங்கடந்தார் *[அக.363:1]*. கானத்தின் நடுகற்கள் நிரையாக நல்லிசை நிறுத்த நாணுடை மறவர் மாறினர் *[அக.387:15]*. நிரையாகப் பொருந்தி ஒருபெற்றியே செல்லும் செலவினையுடையன குதிரைகள் *[அக.399:8]*.

தலைவியின், செறிந்த நிரையாகிய வெண்பற்கள், முதன்முறை விழ்ந்து முளைத்து நிரம்பின *[குறு.337:3]*. 'நிரையாகிய இமைகள் பொருந்தாத விழிகளோடு, நாம் துயிலுதல் இன்னாமையையுடையது,' என்று, தோழி, தலைவன் சிறைப்புறத்தானாகக், கூறினாள் *[குறு.353:4]*. அரசரின் நிரையாகச் செல்லும் கேடகங்களைப் போல், தேனடைகள் மலையில் தொங்கின *[குறு.392:7]*.

நிரையாகப் பறக்கும் குருகின் தொகுதியையுடையது படப்பை *[நற்.123:2]*. உமணர், உப்பினை ஏற்றிய வண்டிகள் நிரையாகச் செல்லுமாறு, உரப்பி ஓட்டுவர் *[நற்.354:9]*.

பொன்னால் இயன்ற பாண்டிற் காசு நிரையல்குலை உடையவள் தலைவி *[ஐங்.310:1]*. முளைபோன்ற நிரையாகிய பற்களையுடையவள், பரத்தை *[ஐங்.369:2]*.

தலைவி, நிரை வெண்பல்லினள் *[கலி.14:3]*. முளையையொத்த நிரையினையுடையவர் (வரிசையாகிய பல்லினை யுடையவர்) ஆயத்தார் *[கலி.15:25]*. நிரையாகிய வெண்பற்கள் தோன்ற நகை செய்து, கண்கலங்கத் தலைவி அழுதாள் *[கலி.142:9]*.

நிரைநிரையாகப் பிடிகள் செல்ல இளையரும், இனியரும் வையைக்குச் சென்றனர் *[பரி.6:26]*. அவிழ்ந்த காந்தளின் இதழ் நிரை தோறும், தோன்றியின் செம்பூப் பரந்தன *[பரி.14:14]*. ஏழு ஏழாக நிரையாக அடுக்கப்பட்ட இலைகளையுடையது

(ஏழிலைப்) பாலைமரம் *[பரி.21:13]*. கடலில் நிரையாக வரும் அலைத்திரை போன்ற கருநரையினை உடையவர் சிலர் *[பரி.தி.1:42]*. வையை நீர், நிரைநிரையாக நுரைகளைச் சுமந்து வரும் *[பரி.2:66]* மகளிரும், மைந்தரும் நீராட நிரைநிரையாக வந்து குழுமினர். *[பரி.தி.2:70]*.

**3. ஆன் திரள் (எருது, கழுதைத் திரளுமாம்).** கோவலர் வேனிற் காலத்தில் பசித்த ஆயமாகிய பயன்படும் நிரையைக்-ஆன்திரளைக்-காக்க வேண்டி, வேங்கையின் கிளைகளிலுள்ள இலைகளைப் பூக்களுடனே கழித்து உண்ணச் செய்வர் *[புற.224:14]*. மறவன், பொருந்தாரது இனமாகிய நிரை போகின்ற இடத்தைப் பார்த்துத், தன் கையாற் குறித்து, எண்ணிக், கரந்தையார் பூசலை மாற்றி, அவற்றைக் கொணர்வன் *[புற.257:8]*. 'காளையாகிய தலைவன், பெரிய நிரையை ஊர்ப்புறமெல்லாம் நிற்குமாறு கொண்டு வந்து தருவன்; அவன் உண்ணும் பொருட்டுக் கட்சாடியைப் பாதுகாத்து வைப்பாயாக', என்று, கள்விலையாட்டியிடம், புலவர் கூறுவர் *[புற.258:7]*. மறவர், ஏற்றையுடைய பெரிய நிரை முன்னே போக, அதனோடு போகாது, அதனை மீட்க வருவாரைக் குறித்துக், காட்டின் கண் தலைகரந்திருந்தனர் *[புற.259:1]*. ஊர் முன்னாகச் செய்யப்பட்ட பூசலின்கண் தோன்றிய மறவர், மிக்க நிரையை கவர்ந்து செல்வர் *[புற.360:13]*. அறிவுடையோர் கரந்தைக் கண்ணியைச் சூட்டும் முறைமையிலே சூட்டத், தலைவன், நிரையை ஊரின் கண் மீட்டுத் தந்து நடுகல்லானான் *[புற.261:15]*. தலைவன், பகைவரது தூசிப்படையை முறித்துத் தன் படைக்குப் பின்னே நின்று நிரையைக் கொணர்ந்தான் *[புற.262:5]*. 'நேற்று நடந்த போரின்கண் இவள் கணவன் பெரிய நிரைகளைப் பகைவர் கவர்ந்து செல்லாதவாறு குறுக்கிட்டு நின்று மாண்டான்', என்று, மறக்குடியின் மறம் போற்றப் பெறும் *[புற.279:6]*. 'மன்றிடம் நிறைந்த நிரைகளும், பிறவும் கனவென மருளுமாறு, நனவின்கண்ணே நல்கினான்', என்று, குன்று கட்பாலியாதனார், சேரமான் சிக்கற்பள்ளித் துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதனின் கொடையைப் புகழ்வர் *[புற.387:24]*. தாமான் தோன்றிக்கோன், வானத்தே விண்மீன்கள் பூத்தாற்போன்ற, அழகிய நிறத்தையுடைய பலவாகிய நிரைகளை, ஊர்திகளோடு இரவலர்க்கு நல்கினான் *[புற.399:31]*.

இடையன், கன்றுகள் பொருந்திய நிரையோடு காட்டில் தங்கினான் *[பெரு.176]*. கோவலர், கூதிர்க்காலத்தில் ஏற்றையுடைய இனங்களையும், நிரைகளையும் மேட்டு நிலமாகிய முல்லை நிலத்தில் மேயவிட்டனர் *[நெடு.4]*. நன்னன், மணிகள் ஆரவாரிக்கும் ஏறுகளையுடைய பெரிய நிரைகளை இரவலர்க்குக் கொடுத்தான் *[மலை.573]*.

மணியொலிக்கும் கழுத்தினையுடைய பயனுடைய நிரை, கோவலர் குழலிசைப்பவராய்ப் பின்னேவரக், கன்றுகள் உண்டு பெருத்தமடி கரைய வேண்டிக், கனைக்கின்ற குரலவாய், விரைந்து, மனைகடோறும் செல்லும் *[அக.54:9]*. கொலைவில் ஆடவர், காட்டரண்களிலுள்ளார் அலற, அவர்களைக் கொன்று, தாம் கொண்ட நிரைகளைப் பகுத்துக் கொண்டு கற்பாறையின் முடுக்கிலே (மான்) தசையினை அறுத்துத் தின்பர் *[அக.97:4]*. மழவர், அம்பினை வில்லோடு பற்றி, வெண்ணெய் கடையும் மத்தினைக் கவர்ந்து கொண்டு, நிரைகள் உள்ளவிடத்தே சென்று, கன்றுகளுடன் கூடிய கொள்ளையையுடையராய் மீண்டனர் *[அக.101:8]*. பயம்நிரை (கறவைக்கூட்டம்) சேர்ந்துள்ள பாழ்நாட்டில் அவை நீர் உண்ணக் கோவலர் கிணற்றினைத் தோண்டினர் *[அக.155:7]*. வடுகர், பகைவரது போர்முனையில் வென்று கொண்ட ஏறுகளையுடைய பெரிய நிரைக்காக, நறவினை விடியற்காலத்தே பலியாகக் கொடுப்பர் *[அக.213:6]*. மூங்கிலின் துளைவழியே மேல்காற்றுப் புகுதலின் எழும் ஒலி, நீர்பருகச் செல்லும் கூட்டமாகிய நரைக்குப் பின்னேவரும் கோவலரது குழலிசையென, அழகிதாக வந்தொலிக்கும் *[அக.225:7]* வடுகர், கோவலரது தொழுவாகிய அறைகளைக் கவர்ந்து, கன்றுகளையுடைய பெரிய நிரையை, மன்றுகள் நிறையுமாறு கொணர்வர் *[அக.253:17]*. ஏறுகளுடன் கூடிய இனமாகிய நிரைகள் மீளவும், மீளாது, மழவரைப்பொருதுபட்ட, கரந்தை மறவரது புகழை நிலை நிறுத்தக், கல் நடுவர் *[அக.269:3]*. சீள்வீடு என்னும் வண்டுகள், உமணரது கூட்டமாய நிரைகளின் மணியொலி போல ஒலித்தன *[அக.303:18]*. மழவர், வாளால் எறிந்து, அம்பினை விடுத்துப், பாலினையுடைய நிரையைக் கவர்ந்து வந்தனர் *[அக.309:2]*. கோவலர், பெரிய மடியினையும், ஒலிக்கும் மணியினையுமுடைய கூட்டமாய நிரைகள் பருகத், தரிசு நிலத்தில் கற்களை உடைத்துக், கிணற்றினைத் தோண்டினர் *[அக.321:7]*. உமணரது கூட்டமாகச் செல்லும் நிரை (கழுதைக் கூட்டம்) போன்ற பாறைகளின் வழியே, பார்ப்பான் தூது சென்றான் *[அக.337:6]*. மறவர், பல்முறை புகுந்து பால் தரும் நிரைகளைக் கவர்ந்தமையின், ஊரின் குடிகள் பெயர்ந்து, மன்றம் பாழ்பட்டது *[அக.377:5]*. புல்லி, நிரை பல உடையவன் *[அக.393:18]*.

பயிரை மேய்ந்த ஆன், பருத்த காம்பையுடையனவாய்ப், பாலை ஒழுகவிட்டுத், தம் கன்றுகளை நினைந்து, ஒருங்குமேயும் நிரைகளை நீங்கி, ஊரிடத்தே மீளும் *[குறு.344:5]*.

உமணர், கூட்டமாகிய நிரையை எழுப்புகின்ற நெடுநெறியிற் செலுத்தும் சகடம், மணலில் மடுத்து முழங்கும் ஓசை, நாரைகளை வெருவச் செய்யும் *[நற்.4:9]*. பயனைத் தருகின்ற நிரை உண்ணுமாறு, கிணற்றினின்று எடுத்து வைத்த நீர்ப்பத்தரின் விற்பொறியைக், களிறு, தன்பிடி உண்ண வேண்டி முறிக்கும் *[நற்.92:6]*.

கோவலர், தத்தம் இனமாகிய நிரையோடு, கார்கால மழையாலே நனைந்த நிலத்திடத்தில் தங்கினர் *[கலி.106:4]*. ஆயன், மேய்கின்ற நிரைகளுக்கு முன்னே ஒரு கோலையூன்றி நின்றான் *[கலி.108:11]*.

**4. உயர்நிலைவாயில் (கோபுரம்)-ஆகுபெயர்.** உயர்ந்து வளர்ந்த நிரை-உயர்நிலை வாயிலையும் - ஞாயிலையும், மதிலையும் உடையது, அரண் *[மது.65].*

**5. அணிமை.** பருந்து, சுரத்தில் கொலையுண்ட பிணங்களின் முடைநாற்றத்தால், பறித்துத் தின்ன இயலாது, ஈன்ற நிரையால்-அணிமையாய் - நெருங்காது வெறுத்தது *[நற்.329:4].*

**நிரைதொடி-நிரைத்த தொடியணிந்த பெண்** (அன்மொழித்தொகை) 'நிரைதொடி,-நிரைதொடியாள்-வையையாற்றில் வந்த புதுப்புனலை ஆடுதற்குத் தங்கியதை வாய்மொழியால் தெளிவித்துப், பின்னர்த் தெய்வத்தால் தெளிவிப்பேன்', எனத், தலைவன், தலைவியிடம் கூறினான் *[கலி.98:30].* நடுக்கடலில் மரக்கலம் கெட்டு அழுந்துகின்றவன் ஒரு தெப்பத்தைப் பெற்றுப் பிழைத்தாற் போலக், காதலன் விரைந்து வர, நிரைதொடியின் துயர் நீங்கியது *[கலி.134:27].*

**நிரையம்-1.** நரகம். பகைவர்க்கு நிரையமாகிய-நரகமாகிய -துன்பத்தைச் செய்யும் படைவெள்ளம், நாற்றிசையும் பரந்து, பகைத்தானையைக் கெடுக்கும் *[பதி.15:4].* நிரையம் எய்தாவகையில் நல்வினை செய்து சேரவேந்தன் நாட்டில் உறையும் விருப்பினையுடையவர் மேலோர் *[பதி.15:31].*

நிரையப் பெண்டிர் (நரகம் போலும் துன்பத்தைத் தரும் பெண்டிர்) பல சுரங்களையும் கடந்து சென்ற தலைவன் பொருட்டு இரங்காராய், அலர் தூற்றினர் (நிரையம் என்பதற்கு, இழிந்த இயல்பு, எனப்பொருள் கொள்ளும் வே.வி.) *[அக.95:12].*

பகைவர்க்கு நிரையம் போன்ற துன்பத்தைத் தரும் ஒள்வாளினையுடைய இளையர் தலைவன், அழிசியாவான் *[குறு.258:6].* தலைவன் ஒருநாள் வந்ததன் பொருட்டுப், பலநாளும் துயில் கொள்ளாத அன்னை, பெண்கொலை புரிந்த நன்னன் போல, நீக்குதல் இல்லாத நிரையத்தின்கண் சென்று துன்புறுவாளாக', எனத், தோழி தலைவியிடம் கூறினாள் *[குறு.292:6].*

நிரையம் போன்ற கொடிய நெஞ்சத்தையுடைய அன்னையிடம், தலைவன் நெடுவரையைச் சூழ்ந்த காற்றானது இவள் மேனியிற்படுமாயின் நோய் நீங்கும், என்று, உரைப்பாயாக', என்று, தலைவி, தோழியிடம் கூறினாள் *[நற்.236:5].* தலைவன், நிரையம் போன்ற தீய நெறிகள்ளக் கைக்கொள்ளாது ஒழுகும் தன்மையன் *[நற்.329:1].*

**2. ஆவின் கூட்டம்.** மறவர், அம்பினையும் இடுக்கிக் குறிபார்க்கும் பார்வையினையுமுடையவராய், நிரையம்-ஆவின் கூட்டம்-கொள்ள வேண்டிப், போரினை வென்று பட்டனர் (நிரை-அம்; அம் - அசை நிலையென உரைக்கும் வே.வி; இவ்விடத்தில் நிரையம் என்பதற்கு நரகம் என்று பொருள் கொள்ளும் ப.மு.) *[அக.67:6].*

**நிரைவளை-நிரைத்த வளையணிந்த பெண்.** (அன்மொழித் தொகை),-'முருகனது திருவுள்ளம் வேறுபடுதற்கு முன்பே நிரைவளை-நிரைத்த வளையணிந்தவள் (தலைவி)-மணியடித்து, முருகவேளை வணங்கி, நின் பொய்ச்சூளால் வரும் துன்பத்தை ஆற்றுவாள்', என்று, தோழி, தலைவனிடம் கூறினாள் *[பரி.8:89].*

**நில்லாமை-நிலையாமை.** நில்லாமையே-நிலையாமையே-இவ்வுலகத்தில் நிலைபெற்றதாதலின், நிலைபெறும் நல்லிசையை விரும்பிய, நீதியுடைய நெஞ்சத்தினன், கடப்பாட்டாளன் *[அக.143:3].*

**நிலக்கிழமை-நிலவுரிமை.** 'சோழன் நலங்கிள்ளியின் பழைய நிலக்கிழமையைக்-நிலவுரிமையைக்-குறிப்பின், குயத்திளையோர் கலம் வனைதற்குத் திகிரியில் வைத்த பசுமண் போல, அவன் கருத்திற்கொண்ட முடிபை உடையது. இத்தண்பணை நாடு' எனக், கோவூர்கிழார் பாடுவர் *[புற.32:7].*

**நிலத்தோர்-நிலத்தில் வாழும் மக்கள்.** செவ்வேள், தேவலோகத்தில் எழுந்தருளியது போலவே, இப்பூவுலகத்தும் எழுந்தருளும் விருப்பத்தையுடையராய்த், தேவர்கள் அடையும் இன்பத்தைப், பெரிய நிலத்தோரும்- நிலத்தில் வாழும் மக்களும்-அடைக, என்று, திருப்பரங்குன்றின் கண்ணே எழுந்தருளினார் *[பரி.19:4].*

**நிலந்தந்த பேருதவி நெடியோன்-பாண்டியன் நிலந்தரு திருவின் நெடியோன். (வடிம்பலம்ப நின்ற பாண்டியன்).**

உயர்ந்தோங்கிய விழுச்சிறப்பினையுடைய நிலந்தந்த பேருதவி நெடியோன்-வேற்றரசர் நிலங்களையெல்லாம் வென்று தந்த பெரிய உதவியையுடைய நெடியோன் - பொன் மாலையணிந்த மார்பினன்; அவன் வழித் தோன்றியவன், பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் *[மது.59-60].*

**நிலந்தரு திருவின் நெடியோய்-**வேற்றரசர் நிலங்களை வென்று தரும் வெற்றித் திருவினையுடைய நெடியோனே (விளி)

நிலந்தருதிருவின் நெடியோய்-வேற்றரசர் நிலங்களை வென்று தரும் வெற்றித் திருவினையுடைய நெடியோனே-என்று பெருங்குன்றூர்கிழார், இளஞ்சேரலிரும்பொறையை விளிப்பர் *[பதி.82:16].*

**நிலந்தரு திருவின் நெடியோன்-வேற்றரசர் நிலங்களை வென்று தரும் வெற்றித் திருவினையுடைய நெடியோன் (வடிபலம்ப நின்ற பாண்டியன்).** 'பழையதாய் வருகின்ற ஆணையையுடைய, நல்லாசிரியர் தம்மிற் கூடியிருந்து நுகரும் புலமையின்பத்தை அவரருளால் தானும் நுகர்ந்தவனாகிய,

புகழ்சால் சிறப்பமைந்த, நிலந்தருதிருவின் நெடியோன்-வேற்றரசர் நிலங்களை வென்று தரும் வெற்றித்திருவினையுடைய நெடியோன்-போல, வியப்பும், சால்பும், செம்மையும் நிறைந்த சான்றோர் பலரிடத்தும் உள்ள சிறப்புக்களைக் கேட்டுணர்ந்து சிறப்பாயாக', என்று, மாங்குடி மருதனார், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை வாழ்த்தினார் *[மது.763].*

நிலம்-நிலவுலகு (உலகம், நாடு, வயல், தரை முதலியன) நிலத்தைக்-நிலவுலகைத்-தம்மிடத்தே கொண்ட, பொற்பூந்தும்பையையுடையவர், ஈரைம்பதின்மர் (நூற்றுவர்) *[புற.2:14].* 'நிலம் பிறழினும், நினது ஆணையாகிய சொல்பிறழாதொழிதல் வேண்டும்', எனப், பாண்டியன் கருங்கையொள்வாட்பெரும்பெயர் வழுதியிடம், இரும்பிடர்த் தலையார் கூறினார் *[புற.3:14].* 'தண்கதிர் மதியம் போலவும், ஒண்கதிர் ஞாயிறு போலவும் இந்நிலத்தின்மீது நிலைபெறுவாயாக', என்று, பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக், காரிகிழார் வாழ்த்துவர் *[புற.6:29].* பெரியநிலம் போன்ற வலிமையினையுடையவன், செல்வக்கடுங்கோ வாழியாதன் *[புற.14:18].* 'உணவென்று சொல்லப்படுவது நிலத்தோடு கூடிய நீரே *[பதி.18:21].* போர்க்களத்தின்கண்ணே யானையின் தடக்கை நிலமிசை வீழ்ந்து புரளுமாறு மைந்தர் வெட்டினர் *[புற.19:11].* நில எல்லையைக் கடந்த, ஆழ்ந்த இடத்தையுடையது அகழி *[புற.21:2]..*

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், ஞாயிறு, திங்களுடன் நிலத்தைப் பொருந்தினாற்போல, இருபெரு வேந்தரைப் பொருது கொன்று, அவர் முரசைக் கைக்கொண்டான் *[புற.25:4].* நிலம், கீழ்மேலாகும் காலமாயினும், ஒருவன் செய்த நன்றியைச்சிதைத்தோர்க்கு நரகம் நீங்குதல் இல்லையென அறநூல் கூறும் *[புற.34:5].* தீக் குறிகளுள், பல்லு, நிலத்தின்கண்ணே வீழ்தலும் ஒன்றாகும் *[புற.41:8].* யாறு, மலையினின்று இழிந்து, பெருங்கடலை நோக்கி, நிலவெல்லையினின்று இழியும் *[புற.42:20].* முனிவர், நிலமிசைவாழ்வாரது அலமரல் நீங்க, ஞாயிற்றின் வெம்மையைத் தாமே பொறுப்பர் *[புற.43:1].* யானை, நிலமிசைப் புரளும் கையையுடையதாய், உருமேறுபோல, முழங்கும் *[புற.44:4]* 'நீ கருதியது போராயின், பெரிய நிலத்தின்கண், காடாய்க் கெடும் நாடுடையோர், யாரோ? அவர், அளிக்கத்தக்கார்தாம்', என்று, பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதியை, மருதனிளநாகனார் பாடுவர் *[புற.52:7].* 'நீவிர் இருவீரும் கூடி நிற்கின்ற நிலையில், வேறுபடாது இருப்பீராயின், கடல் சூழ்ந்த பயன்பொருந்திய பெரிய நிலம், கையகத்தே 'அகப்படுதல் பொய்யாகாது', எனச் சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனும், பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கிருந்தாரைக் கண்ட காரிக் கண்ணனார் பாடினார் *[புற.58:22].* 'சிறுசொல் சொல்லிய வேந்தரை வெல்லேனாயின், புலவர், எனது நிலவெல்லையைப் பாடாது நீங்குக', எனப், பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் வஞ்சினமுரைத்தான் *[புற.72:16]* 'மெல்ல வந்து என் நல்லடி பொருந்தி இரப்பாராயின், இந்நிலத்தின்கண் இன்னுயிரேயாயினும் கொடுப்பேன்', எனச் சோழன் நலங்கிள்ளி கூறினான் *[புற.73:4].* தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், பகைவரைப் பிடித்து விண்ணில் ஆர்ப்பெழக், கவிழ்ந்து, உடல் நிலத்தின்கண்ணே பொருந்தக் கொன்றான் *[புற.77:12].* 'நீ போர்க்களத்திற் புகில், பெரிய நிலத்தின்கண், நினது மண்ணைக் கொண்டு ஆர்க்கும் வயவரும் உளரோ', என, ஔவையார், அதியமானைப் பாடுவார் *[புற.90:12].* நிலத்தின் அகலத்தைக் தன்னுள்ளே அடக்கும் கடல் போன்ற தானையையுடையவன், அதியமான் *[புற.97:14].*

இரவலர், நிலத்தின்கண் புதைக்கப்பட்டு முற்றிய தேறலை, மனைகள்தோறும் பெறுவர் *[புற.120:12].* நிலத்தை (போர்க்களத்தை) கைக்கொள்ள வேண்டிக், கழலடியால் விரைந்து வந்து, போரைத் தாங்கிய மலையன் அல்லனாயின், போரினை வெல்லுதல் தனக்கு எளிதாய் அமைந்திருக்கும், என்று, தோல்வியுற்ற வேந்தன் கூறினான் *[புற.125:12].* நிலத்தின் மேலுள்ள மாந்தரெல்லாரினும், அறிவின்கண் மாசற்ற அந்தாணாளனாகிய கபிலன், சேரனைப் புகழ்ந்து பாடினன் *[புற.126:10].* 'பெரிய நிலம் பிறழ்ந்தாற்போல, ஒருநாள் பொறுத்தற்கரிய சமம் வருதாயின், எம் சுற்றம் வருந்தலும் உண்டு', என, மருதனிளநாகனார், நாஞ்சில் வள்ளுவனைப் பாடிப் பரிசில் வேண்டினார் *[புற.139:13].* குளத்தின்கண்ணும், வயலின்கண்ணும், உவர் நிலத்தின்கண்ணும் எவ்விடத்தும், வரையாது பெய்யும் மரபினையுடையது மழை *[புற.142:2].* 'திரையையுடைய நீராற் சூழப்பட்ட நிலவெல்லையில் ஓங்க, நினது புகழைப் பலவாக வாழ்த்துவேம்', என்று, குமணனைப், பெருஞ்சித்திரனார் பாடினார் *[புற.160:29].* 'இமயமலை போல, இந்நிலத்தில் மேல் நிலை பெறுவாயாக', எனச், சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயனை, ஆவூர் மூலங்கிழார் வாழ்த்துவர் *[புற.166:34].* கோடை நீடிய பசுமையற்ற காலத்துப் பெரிய நிலம் குழியும்படி மழை பொழிந்தது *[புற.174:27].*

முன்பு பெய்தேனெனக் கருதி மழை பெய்யாது, மாறினும், முற்காலத்து விளைந்தேனெனக் கருதி நிலம் விளைவை ஒழியினும், எல்லாவுயிர்கட்கும் வாழ்க்கையில்லை *[புற.203:2].* நிலவெல்லையின்கண் பரப்பிய மிக்க பெரிய தானையினையுடைய செம்பியர் மரபினன், சோழன் குளமுற்றத்துத் துஞ்சியகிள்ளிவளவன் *[புற.228:6].* 'கிள்ளிவளவன் தேவருலகமெய்தினான்; அவனைக் கவிக்கும் தாழி வனைதல் விரும்பினாயாயின், பெரிய நிலத்தைத் திகிரியாகப், பெருமலையை மண்ணாகக் கொண்டு வனைய

இயலுமோ', என்று, ஐயூர் முடவனார், குயவனை வினாவினர் [புற.228:14]. நிலத்தின்கண் நெடிது செலுத்திய ஆணையாகிய ஆழியையுடையவர், வேந்தர் [புற.270:3]. நீர் அறுதலையறியாத நிலத்தின்கண் நொச்சி நிற்கும் [புற.271:1]. மறவன், பகைவர் எறிந்த வேல் நெஞ்சிற்பாய்ந்துருவிச் செல்லப், பெரிய நிலத்தின்கண் இருந்து ஆற்றுதற்கரிய கடமையினை ஆற்றிய மிக்க செய்கையையுடையவன் [புற.282:1]. மறவன், பகைவர் எறிந்த வேல் மார்பை ஊடுருவிச்செல்ல, நிணம் படிந்த கழலுடனே நிலத்தில் வீழ்ந்தான் [புற.285:12].

நிலம் பின்னிடுவது போலக் காற்குளம்பை ஊன்றிச் செல்லும் விரைந்த செலவினையுடையது குதிரை [புற.303:1]. பன்றிகளால் புழுதியாக்கப்பட்ட விடுநிலத்தின் கண் (ஆ முதலியவற்றிற்காக விடப்பட்ட மேய்ச்சல் நிலத்தில்) புதுமழை பொழிதலின், அங்குள்ள பள்ளங்களில் தங்கிய நீரை ஆ உண்ணும் [புற.325:1]. ஞாயிற்றால் வலமாகச் சுற்றப்படும் பயன் பொருந்திய பெரிய நிலம், ஒருநாளில் எழுவரைத் தலைவராகக் கொள்ளும் தன்மைத்து [புற.358:1]. பலர்க்கும் பயனுண்டாகத் தக்க செயல்களைச் செய்து நிலத்தில் இன்பம் நிலையுமாறு ஆண்ட வேந்தர் சிலரேயாவர் [புற.360:8]. கடல் சூழ்ந்த பெரிய இடத்தையுடைய பெரிய நிலத்தை உடைவேல மரத்தின் இலையளவு இடமும் பிறர்க்கு இல்லையாகும்படி தாமே முழுதும் ஆண்ட வேந்தர், கடல் மணலினும் பலராவார் [புற.363:1]. இழிசினனாகிய புலையன், உப்பில்லாத சோற்றினைத் தர, நிலத்தையே உண்கலமாகக் கொண்டு, அதனைப் பெற்றுண்ணும் இன்னாவைகல் வருதற்கு முன்னர், நல்வினையும் செய்வீராக', என்று, ஐயாதிச் சிறுவெண்டேரையார் அறமுரைப்பர் [புற.363:15]. நிலம் பிளவுபடக் கீழே சென்ற வேர்களையுடையது, முதுமரம் [புற.364:10]. போர்க்களத்தே குதிரைகள், நொடித்துத், தளர்ந்து, வலியழிந்து நிலத்தே சிதறி வீழ்ந்தன [புற.368:6]. போர்க்களத்தில் குருதி வெள்ளம் நிலத்தின்மேல் பரவிச்சென்றது [புற.370:13]. இடியேற்றால் தாக்குண்டு வீழும் மலைபோலக், களிறு கோடொடிந்து நிலத்தே வீழுமாறு, மறவன் அதனைக் கொன்றான் [புற.373:21]. 'புலவர்க்குப் புகலிடமாய் இந்நிலவெல்லையில் நிலைபெற்று வாழ்வாயாக', என்று, ஆய் அண்டிரனை, ஏணிச்சேரி முடமோசியார் வாழ்த்தினர் [புற.375:15]. சீதையை அரக்கன் கவர்ந்து சென்றபோது அவன் கழற்றியெறிய நிலத்தே வீழ்ந்த அணிகளைக் குரங்குகள் முறைமாறியணிந்து மகிழ்ந்தன [புற.378:20]. 'இந்நிலம் வறுமையுற்ற காலத்தும், என் சுற்றம் வருந்தாதாயிற்று', என்று, நாஞ்சில் வள்ளுவனிடம் பரிசில் பெற்ற கருவூர்க்கதப்பிள்ளை பாடுவர் [புற.380:14]. கோடையில் பெரிய நிலம் கூலமின்றிக் கெட்டது [புற.381:17].

இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் நிலம், நீர், காற்று, விசும்பு என்ற நான்கினையும் போல, அளந்து காண்டற்கு அரியன் [பதி.14:1]. இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனின் பகைவர் நாட்டு உழவர்கள், நாஞ்சில் முதலியவற்றை விட்டொழிந்தமையின் நிலங்கள் கெட்டன [பதி.19:17]. இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன், பகைவரது அகன்ற பெரிய பரப்பினையுடைய பெரிய நிலத்தை வென்று கடந்தான் [பதி.20:13]. பெரிய வற்கடம் மிகுதலால் நிலம் பசுமையற்று, வயல்கள் கெட்ட காலத்தும், பரிசிலர் உண்டு மகிழ்வர், எனச், சேரனது வளம் சுட்டப்பெறும் [பதி.23:3]. 'நிலம், நீர், தீ, வளி, விசும்பு ஆகிய ஐந்தனையும் அளந்து முடிவு காணினும் அளந்து எல்லைகாண்பதற்கரியை', எனப், பல்யானைச் செல்கெழுகுட்டுவனைப், பாலைக்கௌதமனர் புகழ்வர் [பதி.24:15]. விலங்கினங்கள் புல் மேய்தல் வேண்டி,விடப்பட்ட கரம்பு, நிலத்தில் உண்டாகிய வெடிப்புக்களில் நீர் நிறைந்து தேங்குமாறு, வெள்ளம் வந்தது [பதி.28:7]. பகைமறவர், பெரிய நிலம் வரையில் தொங்குகின்ற, ஆடையினையுடையவர் [பதி.34:3]. யானையின் கழுத்தின் மீதிருந்தும், நிலைபெற்ற நிலத்திடத்திருந்தும் பொருந்தியப் போருடற்றுதற்கண், நீ, நின் தானையைக் காப்பதனால், பகைவர் நின்னை அஞ்சி நீங்குவர்' என்று, களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலைக், காப்பியாற்றுக் காப்பியனார் பாடுவர் [பதி.34:8]. நிலம் பாரத்தால் தாழ்வதற்குக் காரணமான, உயர்ச்சினையுடைய நீண்ட பிணவரிசைகளைச் சுமந்து, பேய்மகள் ஆடும் [பதி.36:11]. கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன், நிலத்தைக் புடைப்பது போன்ற முழக்கத்தோடு, அமர் கடந்தான் [பதி.44:1]. அரசர், பகைவர் நிலத்தைப் பெறுவதற்குக் காரணமான திணிந்த கையையுடையவர் [பதி.45:11]. மறவரது மார்புக்குருதி நிலத்தின் மேல் படர்ந்தோடி மழைநீரைப் போலப் பள்ளங்களில் பரவிநிற்குமாறு, சேரன் செங்குட்டுவன் மோகூர்ப்போரினை வென்றான் [பதி.49:11]. உயர் நிலையையுடைய தேவருலகத்துச் செல்லாமல், பெரிய நிலத்திலே நிலைபெற்று, நீண்டகாலம் வாழ்வாயாக; என்று, சேரன் வாழ்த்தப் பெற்றான் [பதி.54:11]. நிலத்தின் அகலம் குறைபட, இடப்பட்ட, எல்லையையுடையது பாசறை [பதி.54:12]. செல்வக்கடுங்கோவாழியாதன், நிலம் தன் கூறுபாடு எல்லாம் நீங்கும் ஊழிக்காலத்தாயினும் தான் சொன்ன சொல் பொய்த்தலை அறியான் [பதி.63:6]. நிலம், பயனைப் பொழிந்தாற் போல, மிக விளைந்தது [பதி.69:13]. எல்லாவுயிர்களும் இறக்கும் ஊழிமுடிவில், நிலத்தின் பாரம் நீங்க, நீர் பரந்து வந்தது [பதி.72:9]. யானைகள், மேலே பறக்கும் பருந்தின் நிலத்தில் வீழும் நிழலைச் சினந்தன [பதி.77:9]. சேரனோடு இசையாது, தன் நிலத்திலே தங்கியிருந்து போரின் வெற்றியைக் கண்டும், தன் செங்கோலின் கீழ் வாராத பகைவரது முரசினை அச்சேரன் கிழிப்பான் [பதி.79:9]. பெருஞ்சேரலிரும்பொறை, நிலவெல்லையில் நிறுத்திய நல்லிசையையுடைவன் [பதி.80:16]. போர்க்களத்தில் களிறுகள், இடி வீழ்த்திய மலையைப் போல, நிலத்தில் வீழ்ந்தன [பதி.84:18]. மலையிலுள்ளனவும், நிலத்தில் உள்ளனவுமாகிய

அரண்களைக் கைப்பற்றிய வலியோருடைய வழித்தோன்றலே', என, இளஞ்சேரலிரும்பொறை விளிக்கப் பெற்றான் [பதி.90:22]. நிலத்தைத் தன்னுள் அடக்கியதைப் போன்ற மிகுதியான தானையுடையவன் சேரன் [பதி.தி.1:10]. குஞ்சரம் தன் கையால் நிலத்தைப் புடைத்தெழுந்தது [பதி.தி.2:2].

பரிசிலர், சாதிலிங்கத்தை உருக்கின தன்மையை யொத்த சிவந்த நிலத்தே நடந்து சென்றனர் [பொரு.43]. நிலத்தளவு தாழ்ந்த கையையுடையது, பிடியானை [சிறு.19]. பெரிய நிலத்தை அளந்த திருப்பொருந்திய மார்பினையுடையவர் திருமால் [பெரு.29]. எயிற்றியர், கருநிலமாகிய கரம்பையிலுள்ள புழுதியை அளைந்து, புல்லரிசியை வாரியெடுப்பர் [பெரு.93]. காடு தழைத்த சிவந்த நிலத்துப் பெருவழியின்கண், இரலையோடு மடமான் துள்ளும் [முல்.97].

வடிம்பலம்ப நின்ற பாண்டியன், நாட்டிலிருக்கின்ற அரசர் நிலங்களைக் கைக்கொண்டான் [மது.60]. நிலத்தின் கண்ணுள்ளாரை எல்லாம் போக்கும் வாயிலின் கண் பெண்டிர் நின்றநாடு பாழாகிப்பது [மது.165]. நால்வகை நிலங்கள் அமர்ந்தது உலகம் [மது.470]. மதுரை நகர அங்காடியில் மலையிடத்தனவும் நிலத்திடத்தனவும் பிற இடத்தனவுமாகிய பண்டங்களை விற்போர் குழுமியிருந்தனர் [மது.504]. பரிக்காரர், யானையைப் பிடித்துக்கொள்ளும் காலத்து, மேல்வாராமல் அஞ்சி மீளுதற்குப், புடவைகளில் வைத்துச் சிந்தின கப்பணம் நிலத்திடத்தே கிடந்து, கால்களைத் துளைத்தது [மது.598]. பொன்னை உருக்குகின்ற நெருப்புச்சிந்தின நிலம் போல, மாணிக்கம் முதலியன சிந்திக் கிடந்தது முற்றம் [மது.682]. ஆய்தொடிமகளிர், நிலத்தையெல்லாம் விளக்கமுறுத்தும்படி கற்பு மேம்படப் பொலிவு பெற்றவர் [மது.705]. நீண்டுதிரண்ட தடக்கைகள் நிலமிசைப் புரளுமாறு, களிறுகளைக் களத்திலே வெட்டிவீழ்த்தி விழுப்புண்பட்ட மறவரைப் பாசறையிலே, பாண்டியன் சுற்றிப் பார்த்தான் [நெடு.170].

நிலத்திடத்தும், பிறவிடத்தும் பூத்த மலர்களால் தொடுக்கப்பெற்ற மாலையினையுடையவன், தலைவன் [குறி.113]. களிற்றியானை, கையைச் சுருட்டி, நிலத்தே எறிந்து, கூற்றுவனைப் போலத், தலைவி, தோழியர்மேல் எதிர்ந்தது [குறி.163].

புகாரின் துறைமுகத்தே, நீரினின்றும், கலத்தில் வந்த பண்டங்களை நிலத்தில் இறக்கி நிலத்தினின்றும் பண்டங்களைக் கடலிலுள்ள கலங்களில் ஏற்றினர் [பட்.129,130]. கலத்தில் வந்த குதிரை முதலியன, புகாரின் நடுவிடத்தும், நிலத்திடத்தும் அழிவின்றி இனிதாகத் தங்கின [பட்.194].

மலைமேலுள்ள நாட்டில் பல நாட்கள் தாழ்த்து நில்லாமல், நிலத்திலுள்ள நாட்டுவழியே சென்மின்', எனக், கூத்தர் ஆற்றுப்படுத்தப்பெற்றனர் [மலை.192]. அரக்கைப் பரப்பினாற்போன்ற செந்நிலத்தில் வாழும் உடும்பேற்றினை, நன்னனுக்குக், கையுறையாகக் கொடுத்தனர் [மலை.507].

நிலம் பிளக்குமாறு ஞாயிறு காய்ந்தது [அக.1:9]. தலைவி, தன் சேவடியால் நிலத்தில் சுவடு தோன்ற வந்தாள் [அக.5:3]. செவ்வரக்கினையொத்த சிவந்த நிலத்திற் செல்லும் பெருவழியில் காயா மலர்கள் பரந்து கிடந்தன [அக.14:1]. கரடிகளின் கூட்டம் நிலத்தில் புழுதி பரக்கச் சென்றது [அக.15:14]. தலைவியின் புதல்வனைத் தெருவில் கண்டு உவந்தெடுத்த பரத்தை அந்நிலையில் தலைவியின் மொழி கேட்டு நிலத்தைக் கால்விரலால் கீறி நாணி நின்றாள் [அக.16:15].

மண் மேடாகிய வன்னிலத்தை உடைத்துக் கிணறு தோண்டப் பெற்றது [அக.21:21]. நிலம் குறைவுற்று நிலைபெயரும் காலம் அன்றோ, என்று கூறும்படி, உயிர்கள் மடிதற்கு ஏதுவாகிய மழைமாறியகாலம் இருந்தது [அக.31:3]. பொருள்வயிற் பிரிந்த தலைவன் இடைச்சுரத்தே தலைவியின் நினைவோடு துயிலும் போது, அவளை, நிலம் கிளைத்து நிற்கும் நினைவினளாய்க், கனவிலே கண்டனன் [அக.39:18]. இந்திர கோபத்தையுடைய செந்நிலத்தில் தேரினை விரைந்து செலுத்துவாயாக', என்று, தலைவன், பாகனிடம் கூறினான் [அக.54:4]. மழைநீர் வரிவரியாக இழைத்த, செம்மண் நிலப்பக்கத்தே, தேர்விடும் நெறியிலுள்ள ஈரமணலைக், கானங்கோழி கிளறும் [அக.64:8]. பாழிடத்தே நிலத்தைப் பொருந்திய, மின்மனி போலப் பரற்கற்கள் பலவும் ஒளிவிடும் [அக.67:16]. எழிலி திசையெல்லாம் மறையப் பெய்தலின், பெரிய நிலம் கவின் பெற்றது [அக.84:5].

நிலத்தினை வருத்தும் திரண்ட தானையுடன் வேந்தன் விரைவில் வருவான் [அக.124:4]. காயாமலர்களின் இடையிடையே இந்திரகோபப் பூச்சி பரத்தலோடு, முல்லையும் உதிர்ந்து, வல்லோன் செய்த ஓவியம் போல், செந்நிலமாகிய முல்லைப்புறவு காட்சியளித்தது [அக.134:6]. முகில் நிலத்தின் நெஞ்சு துணுக்குற, ஒழியாது இடித்தது [அக.139:4]. பிடவ மலர்கள், செந்நில மருங்கிலுள்ள மணலில் உதிர்ந்து கோலஞ்செய்தது [அக.154:5]. ஞாயிறு பசுமையறக் காய்தலின், நீர் இல்லையாகி, பிளத்தல் பொருந்திய, மிக்க இடம் வாய்ந்த, பெரிய நிலத்திலே, காடு கவின்பெற மழை பொழிந்தது [அக.164:3]. நிலத்தில் வளம்குன்றும்படி ஞாயிறு காய்ந்தது [அக.169:1]. நிலம் பிளக்குமாறு இறங்கிய வேரில் முதிர்ந்த கிழங்கினையுடையது தாமரை [அக.176:2].

கிள்ளி, கோசரின் படையினை அழித்து அவர் நிலத்தைக் கைக்கொள்ள விரும்பினான் [அக.205:10]. இருப்பையின் பூங்கொத்துக்கள் செந்நிலத்தில் உதிர்ந்தன [அக.225:12]. களிறு, செந்நிலத்தில் பொருந்திய புழுதியை அளைந்து முழங்கியது [அக.227:10]. நெருப்புக் கவர்ந்துண்ட, கரிந்த இடங்களையுடைய, பெரிய நிலத்தை மழை துறந்ததென, யானை வருந்தும் [அக.233:3]. முகில், பயன் தரும் நிலங்கள் நெகிழுமாறு, பெய்தது [அக.235:4]. இடைநிலம் ஆகிய களத்தில் நெற்சூட்டில் மாம்பூ உதிர்ந்தது (இடையில்- பா.வே) [அக.236:5]. களிறு தன்

வாயினின்றும் தப்பிய புலியைப் பெரிய நிலம் குழியுமாறு குத்திக் கொன்றது [அக.251:17]. தலைவி, மணல் பரந்த முற்றத்தே நிலம் வடுக்கொள்ளுமாறு விளையாடினாள் [அக.254:4]. நிலத்தில் நீர் ஒழிந்ததாலாய வெப்பம் நீங்க மழை பெய்தது [அக.259:3]. ஞாயிற்று மண்டிலம், குளங்களின் நீர் வற்றிடப் பரந்து, நல்ல நிலங்களின் வளம் கெடுமாறு முரணியது [அக.263:3]. புலவராற் புகழப்பெற்ற நாணமில்லாத காதலாகிய பெருமரம், நிலத்தின் எல்லையெல்லாம் கவிந்து, அலராகிய அரும்புகளைச் சொரிந்தது [அக.273:16]. தம்பலப்பூச்சிகள், குளிர்ந்த நிலத்தில், அழகு செய்தன [அக.283:15]. நிலங்கள் நீர் இல்லையாகிச் சுனைகள் வறள, ஞாயிறு காய்ந்தது [அக.295:1]. தலைவன் தன் பொருள்வயிற் பிரிவினை உணர்த்திய போது, தலைவி திருமுகம் இறைஞ்சிக், காலால் நிலம் கிளைத்துக்,கண் கலங்கி நின்றனள் [அக.299:13]. செவ்வண்ணம் தீட்டி வைத்தாற் போன்ற சிவந்த நிலத்திடத்தே, தெளிந்த அறல்பட்ட நீரை மான் குடித்தது [அக.304:6]. நிலம் தட்பமுற்றுக் காடு தழைத்திட, மழை பெய்தது [அக.314:3]. நெல்லிக் காய்கள், கோடைக்காற்று உதிர்த்தலின், வறிய நிலத்தில் வீழ்ந்து கிடந்தன [அக.315:13]. கோவலர், ஆனிரை உண்ண வேண்டித், தரிசு நிலத்தின் கற்களை உடைத்துக் கிணற்றினைத் தோண்டினர் [அக.321:8]. குளிர்ந்த நிலத்தின்கண் தேருருள் பிளந்து சென்ற சுவட்டில், நீர் விரைந்து ஓடியது [அக.324:12]. 'உருளைகள் ஈரமாய நிலத்தினைக் கிழித்துச் செல்லத், தேரினைச் செலுத்துவாயாக; என்று, தலைவன், பாகனிடம் கூறினான் [அக.334:14]. வருத்தம் குடிகொண்டுள்ள, நிலம் பிளந்த, வெஞ்சுரங்கள் தலைவனுக்கு அரிய அல்ல [அக.333:8]. திங்களின் அழகிய கதிர்கள், அருவி போல, நிலத்தில் பரவின [அக.362:15].

தலைவனோடு கொண்ட நட்பு, நிலத்தினும் பெரிது, எனத், தலைவி, தோழியிடம் கூறினாள் [குறு.3:1]. 'ஆவின் தீம்பால், கன்றும் உண்ணாது, கலத்தினும் படாது, நிலத்தில் வீழ்ந்து சிந்துதல் போல, என் மாமையழகு, எனக்கும் ஆகாது, என் தலைவனுக்கும் உதவாது, பசலையால் உண்ணப்படுகின்றது', என்று, தலைவி, பிரிவாற்றாது இரங்கினாள் [குறு.27:2]. நிலம் கரிந்து, கள்ளியையுடையது, பாலை நிலம் [குறு.67:5]. 'தலைவர் நுகர்ந்த என் பெண்மை நலன், பெருங்களிறு உண்ணும் பொருட்டு, வளைக்க முரிந்து, நிலத்திற்படாத, நாருடைய, ஒடிந்த கிளையைப் போன்றது, என்று, தலைவி, தோழியிடம் கூறினாள் [குறு.112:3]. நம்முடைய தலைவர் நிலத்தைத் தோண்டி உள்ளே புகார்; வானத்தில் ஏறார்; ஆதலின், அவரை ஊர்தோறும் நாடுதோறும் தேடினால் அகப்படுவர், என்று, தோழி, தலைவியிடம் கூறினாள் [குறு.130:1]. நிலத்தைத் தனக்கு இடமாக ஊர்ந்து செல்லும் பாம்பு போல, அருவி இழிந்தது [குறு.134:6]. நிலத்தைத் தோய்ந்து தாழ்ந்த புன்னைக் கிளையில், நாரையினம் தங்கும் [குறு.236:4]. தலைவன் நிலம் பெயர்ந்துறையும் நோக்கமுடையான், எனத், தோழி, மடன்மாவைக் கருதிக் கூறினாள் (இங்கு நிறம் எனவும் பாடம்) [குறு.298:3]. உழவரால் அறுக்கப்பட்ட நெய்தல், 'இவர் கொடியர்; இவர் நிலத்தை நீங்கித் தங்குவேம்', என்றெண்ணாமல், மீண்டும் அவ்விடத்திலேயே மலரும் [குறு.309:4]. நிலத்தளவும் தொங்குகின்ற அலை தாடியையுடையன, ஆக்கள் [குறு.344:4]. மழைநீர் எங்கும் பரந்து ஓடுதலினால் நிலம் தோன்றாதொழிந்தது [குறு.355:2]. 'நிலம், இடம் மாறுதல் முதலியன தோன்றினாலும், நாடெனொடு கொண்ட நட்பு, எவ்வாறு கெடுவதாகும்', என்று, தலைவியிடம், தோழி வினவினாள் [குறு.373:1]. தலைவன் பிரிந்த காலத்தில், தலைவிக்கு, மாலைப்பொழுது, நிலம் பரந்தது போன்ற பெரிய துன்பத்தோடு தனிமையைத் தரும் [குறு.386:5].

திருமால் பெரிய நிலத்தைத் தன் சேவடியாக உடையவர் [நற்.க.வா.1]. மிக்க மழை பெய்தலால், நிலம் நீரால் நிரம்பப்பெற்று நிறைந்தது [நற்.5:1]. குதிரைகள், பெரிய நிலம் குழியும்படி தம் காலாலே கொட்டி விரைந்தோடின [நற்.81:1]. செந்நாய், தன்வயிற்றை நிலத்தின்கண் பொருந்திப், பசிவருத்த வருந்தி, முடங்கிக் கிடந்தது [நற்.103:5]. நிலத்தைச் செப்பம் செய்தாற்போன்ற கற்பாறையில் மென்தினையைத் துவைத்துப் போராக்க அங்குத் துயிலும் களிற்றை எழுப்பினர் [நற்.125:10]. 'நிலையில்லாத என்னெஞ்சமானது, நினையுந்தோறும், தலைவன் வரும் நிலத்தின்கண்ணுள்ள நெறியில் பரந்து செல்லும்', என்று, தோழி, தலைவியிடம் கூறினாள் [நற்.154:12]. பிடியானை, மலைப்பக்கத்திலுள்ள நிலத்தின்கண்ணே செல்லும்போது, அதனோடு செல்லாத யானைக்கன்று, ஆன்கன்றோடு ஊரில் புகுந்தது [நற்.171:3]. தலைவி, மனையகத்து வளர்ந்த வயலைக் கொடியை ஆ தின்றதனால், பந்தினை நிலத்தே எறிந்து அழுதாள் [நற்.179:2]. ஞாயிறு குன்றினையடைந்து மறைதலின், நிலம் வெம்மை தணிந்தது [நற்.187:2]. கொல்லி மலையிலுள்ள பாவை, நிலம் வேறுபடுதல் முதலிய ஊறுபல தோன்றினாலும், தன் நல்வடிவம் கெடாத இயல்பினையுடையது [நற்.201:10]. தலைவன், நிலம் புடைபெயர்வதாயினும், தான் கூறிய சொல்லைப் பெயர்த்துக் கூறான் [நற்.289:2]. செந்நிலத்தையுடையது காடு [நற்.321:1]. மழை பெய்ய, நிலத்தின் வெப்பம் தணிந்தது [நற்.346:2]. நிலத்தின்கண்ணே ஆழ்ந்த இடத்தினையுடையது கடல் [நற்.356:1]. பன்றி பறித்தலால் நிலத்திற் கிடந்த மணிகள் வெளிப்பட்டு ஒளிவிட்டன [நற்.399:5].

இலவ மலர்கள், காற்று வீசுதலின், இடியில் தோன்றிய தீயைப்போலப், பெரிய நிலத்தின்கண் உதிர்ந்தன [ஐங்.320:3]. பேடைப் பருந்து, ஓமைக்கிளையேறித் தனிமை கொள நிலம் காய்ந்த தன்மையுடைய, கானத்தில் விளிக்கும் [ஐங்.321:3]. சுரத்தின்கண் செல்லும் யானை, தன் துதிக்கை வேதலை அஞ்சி, நிலத்தைத் தொட்டுத் தோயச் செல்லா [ஐங்.327:2]. பெரிய நிலம் குளிருமாறு அற்சிரக்காலை பனி மிகும் [ஐங்.470].

செந்நில மருங்கில் பல மலர்களும் பரந்து புறவு இனியதாயிற்று *[ஐங்.495:1].*

யானை ஈரமற்ற வயலை உழுகின்ற கலப்பை போலக், கொம்புகளை ஊன்றிக், கைகளை நிலத்தில் கிடத்தும் *[கலி.8:5].* பல உணவுகளையும் விளைவித்துக்கொடுத்து எல்லோரையும் நுகர்விக்கும் பயனையுடைய நிலம், ஈரம் அறும்படி, ஞாயிறு காய்ந்தது *[கலி.20:1].* நிலம் பொலிவு பெறுதற்கு ஏதுவாகிய மரங்களின் மேலேயிருந்து குயில்கள் கூவின *[கலி.27:9].* 'யான் பலவற்றையும் கூறக்கேட்டுக், கவிழ்ந்து, நிலத்தை நோக்கி, நெடிதொன்றுநினைப்பாள் போலச் சென்றனள்', எனக், கைக்கிளைத் தலைவன், தலைவிபற்றிக் கூறி வருந்தினான் *[கலி.57:21].* தோழி, தலைவனது குறையைச் சொல்லி நயப்பித்தவழித், தலைவி, காலால் நிலம் கிளைத்து நாணி நின்றாள் *[கலி.63:15].* பெரு நிலத்திற்கு இட்ட பூமாலை போல, வையை மதுரையைச் சூழ்ந்து ஓடியது *[கலி.67:2].* கடல் சூழ்ந்த பழைய நிலத்தையாளும் உரிமையுடையவன், பாண்டியன் *[கலி.103:77]* ஏறுகள், நீற்றை எழுப்புவனவாய், நிலத்தைச் சாடுவனவாய்ப் போர்க்குச் செல்லும் வயவரின் அழகையொத்தன *[கலி.106:7].* நான்முகன், பெரிய நிலத்தைப் படைத்தற்கு, அதனைச் சூழ்ந்து மூடிக் கிடக்கும் கடலைப் போக்கினான் *[கலி.106:18].* தலைவி, நிலத்தளவு தாழ்ந்த நீல ஆடையைக் கையாலே சிறிதேறத் தழுவிக் கொண்டு நடந்தாள் *[கலி.115:13].* பெருங்கடல் ஒலித்து எழுந்து உலகஉயிர்களெல்லாம் ஒருசேர நடுங்கும்படி தான் தோற்றுவித்த பெரிய நிலத்தை, மீண்டும் தன்னிடத்தே ஒடுக்கிக்கொண்டது *[கலி.134:10].*

வானத்தினது முதல் ஊழிக்காலம் முதலாக, நான்கு பூதங்களின் உள்ளீடாகக் கிடந்த, பெரிய நிலத்தினது ஊழி ஈறாகக் கூறப்பட்ட, இவ்வூழிகள் தோன்றி, நெய்தல் முதலிய காலங்களின் ஈட்டங்களைக் கடந்த பின்னர், திருமால் கேழற்கோலம் கொண்டு நிலவுலகை எடுத்தார் *[பரி.2:12].* திருமாலின் ஆழிப்படை, அவுணர்களின் தலைகள், குருதிச் சேற்றைச் சொரிந்து, நிலத்தின்கண் சோர்ந்து கிடக்கும்படி, அவரது இன்னுயிரைச் செகுத்தது *[பரி.2:47].* திருமாலின் சிறந்த பொறுமையை ஆராயின் பெரிய நிலத்தை ஒக்கும்', *[பரி.2:55].* ஊழிக்காலத்தின் கடலில் மூழ்கிய, பெரிய நிலத்தைக், கேழலாகிக் கொம்பாலே எடுத்து வந்தவர் திருமால் *[பரி.3:23].* திருமால், மண் செறிந்த நிலத்தை அளந்தபோது, அவுணர், அஞ்சியோடிக் கடலில் புக்கனர் *[பரி.3:54].* ஆதி ஊழியின்கண், நீரினூடே, பெரிய நிலம் தோன்றாத காலத்தே, அவ்வெள்ளத்தில் தோன்றிய உந்தித் தாமரையை உடையவர் திருமால் *[பரி.3:91].* முகில்கள் மழைபொழிய, அதனால் மிக்க நீர், ஊழி காலத்தில், நிலத்தை மறைக்கப் பெருகுமாறுபோலப் பெருகும் *[பரி.6:3].* வையைப் புனல், தெருக்களில் ஓடிக், காதலரது இன்றுயிலைக் கூடலிலுள்ளவர்க்குப் புலப்படும்படி செய்து, வைகறைப் பொழுதிலே தெருக்கள் வறுநிலமாகுமாறு பரந்தது *[பரி.6:58].* தலைவன், தன் சந்தனச் சேறாடிய மேனியை நிலத்துய்த்து வணங்க, ஊடற்றலைவி, அவன் தலையை மிதித்து மேலும் ஊடினாள் *[பரி.7:74].* பெரிய நிலம், அசையாமல் நிலைத்து நிற்கும்படியாக, வடதிசைக்கண்ணே உயர்ந்தது இமயமலை *[பரி.9:1].* மலையிடத்தே பெய்த மழையாலே வையையில் பெருகிய புனல், நில எல்லையின்கண், பசி முதலிய துன்பங்கள் சுருங்க, விரைந்தது *[பரி.10:3].* வையைப்புனல், நிலமெங்கும் நீரைப்பரப்பி, உலகிற்குப் பயனைக் கொடுத்தது *[பரி.11:33].* கன்னி மகளிர், அகன்ற நிலவெல்லை, ஞாயிற்றின் தெறலாலே, வெப்பமுடைத்தாகாமல், மழையாலே குளிர்வதாக என்று, வாழ்த்தி, அம்பா ஆடலை மேற்கொண்டனர் *[பரி.11:80].* புல்லாது ஊடிப் புலந்து நின்ற தலைவியின் உடலைத் தணிக்கத், தலைவன், நிலத்தின்கண் வீழ்ந்து வணங்கினான் *[பரி.12:71].* நிலவெல்லையைத் தாங்கிய, நிலைமை நீங்காத, கெடாத, சக்கரவாளம் முதலிய குன்றுகள் பல *[பரி.15:2].* நீரைப், பரந்து, ஏற்ற, நிலத்தால் தாங்கப்படும் கடற்பரப்பினுள் நின்று, சூரபன்மாவை அழித்தவர், செவ்வேள் *[பரி.18:3].* செவ்வேள், வானவர் உலகிலே உறைதற்குக் கொண்டுள்ள விருப்பமே, கடல் சூழ்ந்த இந்நில எல்லையில் உறைதற்கும் கொண்டு திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளினார் *[பரி.19:1].* பரங்குன்றிற்கும், மதுரைக்கும், இடையிலுள்ள வழியில், மக்களின் மாலையுடைய தலைகள் செறிந்து நிறைந்தமையால், அவ்வழி, பூக்களை வைத்துக் கட்டிப், பெரிய நிலத்திற்கு இட்ட, மாலைபோல், தோன்றியது *[பரி.19:16].* திருப்பரங்குன்றத்தின் கீழேயுள்ள இடைநிலம், யானைகளைக் கட்டலானும், குதிரைகளை வாங்குதலானும், தேர்களை நிறுத்தலானும் பாண்டியனுடைய பாசறையொத்தது *[பரி.19:37].* முகில் மழைபொழிய, நீர் பெருகி நிலமெங்கும் உள்ள கழனிகளிலே புகுந்தது *[பரி.22:11].* முகில் மிக்க மழையைப் பொழிந்து, பெரிய நிலம் தோன்றாமல் மறையும்படி, நீரினை வீழ்த்தியது *[பரி.தி.2:1].*

நிலன் - 1. காண்க

**2. மண்.** என் அரையில் யான் உடுத்தியிருந்த நிலம்-மண்-தின்னும்படி பழையதாய்க் கிழிந்திருந்த உடையை நீக்கிப், பசித்துன்பத்தையும் போக்கினான்', என்று, அம்பர் கிழான் அருவந்தையைக், கல்லாடனார் பாடுவர் (பா.வே) *[புற.385:6].*

இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் இரவலரின், நிலம் தின்னும் கந்தையாகிய உடையைக் களைந்து, புதுப்பட்டாடையை நல்கினான் *[பதி.12:20].*

கிழங்குகளை அகழ்ந்து தின்கையினாலே, நிலம் தின்று தேய்ந்த கொம்பினையுடையது, பன்றி *[மலை.245].* நன்னன், நிலம் தின்னும்படி பழையதாய்க் கிடந்த பொருள்திரளோடு, பிறவற்றையும், இரவலர்க்கு நல்கினான் *[மலை.575].*

ஆனிரை, வன்புலம் துணிபடச் சென்று கிளப்பிய செந்நிலமாகிய புழுதி, வானின்கண், மிக்குத் தோன்றும்

[அக.79:7]. சேரலாதன், மாந்தை நகர் முற்றத்தே, நிலம் தின்னும்படி விட்டொழிந்த நிதியம் போன்ற பொருளைப் பெறுவதாயினும், தலைவர் தங்கார்', எனத், தோழி, தலைவியிடம் கூறினாள் [அக.127:10].

3. இடம். நிலம்- இடம்- அகன்ற உலகத்தை வலமுறையாகச் சூழ்ந்து, மன்னரின் வலிகெடுத்த வேலையுடையது தானை [புற.225:4].

**நிலமகள்-பூதேவி.** ஆழியைப் போரின்முன்னே நின்று செலுத்திப், பகைவரையழித்த முன்னோர், விண்ணுலகு செல்லக் கண்டுவைத்தும், உடன் செல்லாது, விலைமகளிர் போலப், பலரும் என் நலத்தைப் பாராட்ட, யான் இப்பொழுது நிலையாகப் இருக்கின்றேன்' என்று பலவகையானும் மாண்புற்ற நிலமகள் -பூதேவி -அழுத காஞ்சியும் உண்டென்று, அறிவுடையோர் கூறுவர் [புற.365:10].

**நிலமடந்தை-நிலமகள்.** மூங்கிலாகிய தோளையுடைய, பெருமையினையுடைய, நிலமடந்தையின்-நிலமகளின்-முலையிற் கிடந்தசையும், முத்துவடம் போலக், யாறு மலையினின்று இழியும் [சிறு.1].

**நிலவு-1. மதியொளி.** நிலவு-மதியொளி-போன்ற மணலையுடையது கடற்கரை [புற.17:11]. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், ஞாயிறு, நிலவுத் திகழும் திங்களுடன் நிலத்தைப் பொருந்தினாற்போல, இருபெரு வேந்தரைக் கொன்று வென்றான் [புற.25:4]. 'செஞ்ஞாயிற்றின் கண்ணே நிலவு உண்டாக வேண்டினும், வெண்டிங்களுள் வெயில் உண்டாக வேண்டினும் வேண்டிய பொருளை உண்டாக்கும் வலியையுடையயை', எனச், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை, ஆவூர் மூலங்கிழார் புகழ்வர்[புற.38:7]. 'அற்றைத் திங்களின் அவ்வெண்ணிலவின்கண், யாம் எம் தந்தையையும் உடையேம்; எம்குன்றையும் பிறர் கொள்ளார்; இற்றைத் திங்களின், இவ்வெண்ணிலவிலே, வேந்தர் எம்முடைய மலையையும் கொண்டார். யாமும், எம் தந்தையையும் இழந்தேம்', எனப், பாரி மகளிர், பாரி இறந்த போது, கையற்றுப் பாடினர் [புற.112:1,3]. நிலவு போலும் நிறத்தினையுடைய கொம்பினையுடையது, களிறு [புற.359:13]. நிலவு போல் ஒளிதிகழும், ஆரம் உடையவன் நெடுஞ்செழியன் [புற.372:13].

விறலி, நிலவு போன்ற வெள்ளிய வேலினைப் பாடினாள் [பதி.61:16].

மயில்கள், நிலவு போலும் இடுமணலே ஆடின [பொரு.213]. நிலவு போலும் மணலையுடையது, கானல் [மது.114]. அரசர் முதலியோர் முற்றத்தின்கண் நிலவின் பயனைக் கொள்வர் [நெடு.95]. மங்கையர், வெள்ளிய நிலவின் பயனைத் துய்த்தனர் [பட்.114].

பெருந்துறையின் நிலவு போலும் மணற் பரப்பிலே, ஒரு தேர் வந்து திரியும், எனத், தலைவன் வரவு குறித்துத், தலைவியின் ஊர்ப்பெண்டிர் அலர் கூறினர் [அக.20:16]. மதியம், பகலின் ஒளியினையொத்த நிலவினைத் தந்து வானின்கண் விளங்கிப் பரவியது [அக.122:10]. நிலவு போல் கூரிய இலை விளங்கும் நெய்மிக்க நெடு வேலினை உடையவர் சோழர் [அக.123:8]. 'தலைவர், பகலில், நெடுஞ்சுனையில் நம்மோடாடி, இரவில், வானிடத்தே விரிந்த பகலையொத்த நிலவில், தம்மூர்க்குச் செல்லின், நன்றாகும்', எனத், தோழி, தலைவியிடம் கூறினாள் [அக.228:8]. பாலெனப் பரவிய நிலாவினைக் கொண்டது, மாலைபொழுது [அக.259:9]. வெம்மைமிக்க காட்டிலே வாடிய யானை, நிலவு நிற மருப்பிலே, கை சேர்த்தியிருந்தது [அக.295:4]. நிலவு என்னுமாறு, அரும்புகள் விரிந்த, பிடாமரத்தின்கண்ணே, மயிற் கூட்டங்கள் மெல்லென இயலும் [அக.344:2].

நிலவும், அதனோடு நின்ற இருளும் போலக், கடலும், அதன் கரையில் நின்ற கானலும் தோன்றும் [குறு.81:5]. நிலவைத் தொகுத்தாற் போன்ற தோற்றத்தையுடையது, வெண்மணற்பரப்பு [குறு.123:2]. தலைவன் பழைய திங்களில் நெடுவெண்ணிலவின்கண் என் தோள்களைத் தழுவினான்; அதனால், இன்றும் அவன் மேனியின் முல்லை மணம் என்தோள் மீது வீசும்' என்று, தலைவி, தோழியிடம் கூறினாள் [குறு.193:4]. பரதவர் உலர்த்திய மீன் உணங்கல், இறாமீன் வாடலுடன் கூடி, நிலவு நிற வெண்மணலில், புலவு மணம் வீசும் [குறு.320:3]. மாலையில் விரிந்த இளைய வெள்ளிய நிலவில், படுக்கையின்கண், தலைவன், புதல்வனைத் தழுவினான்; தலைவி, தலைவன் புறத்தைத் தழுவினாள் [குறு.359:2].

நண்டுகளைக் காத்துப், பாகன் தேரைச் செலுத்துமாறு, கானலிடத்து நிலவு விரிந்தது [நற்.11:9]. தலைவனது கடற்கரையின் நிலவு போன்ற வெண்மணலில், பலநாடுகளிலிருந்து, மரக்கலங்களில் வந்த பண்டங்கள் இறங்கும் [நற்.31:9]. தந்தையின் நெடியதேர் ஓடுகின்ற, நிலவு போலும் மணல் முற்றத்தே, தலைவி பந்தாடிப் பெயர்வாள் [நற்.140:6]. நிலவினைக்குவித்து வைத்தாற் போன்ற, மணல்மேடு கொண்டது பெருந்துறை [நற்.159:3]. வரைவுடன்பட்டமையால் நிலவு, பாந்தாற்போன்ற மணற் குன்றில், தலைவன் பரிகள், இனி வந்து செல்ல வேண்டுவதில்லை. [நற்.163:5]. உமணர் உப்பு வண்டிகளை ஓட்டிக் கொண்டு, நெடுநெறியிலே, நிலவு போற் பரந்த மணலைக் கடந்து செல்வர் [நற்.183:3]. பல கூறுகள் ஒன்றாகச் செறிந்தாற் போன்ற, பலவாய கதிர்களின் இடையிடையே, பாலை முகந்து வைத்தாற்போன்ற, குளிர்ச்சியையுடைய, வெளிய நிலவினையுடையது, மதியம் [நற்.196:2]. நற்றாய், உடன்போக்கினை மேற்கொண்ட தன் மகளை, மாலைப் பொழுதின்கண், விரிந்த நிலவிலே சென்று தேடினாள் [நற்.271:10].

முல்லை, நிலவு போன்ற அழகிய அரும்புகளை ஈன்றது *[ஐங்.454:2].*

தன் நிலவாலே இருளை ஓட்டிப் புறங்காண்பாரைப்போல, மதியம் தோன்றியது *[கலி.119:4].* நிலவை உமிழும் திங்காள்! என்னை நீங்கியானிடம் சென்று, என் குறை முடித்தருள்க, எனத், திங்களைத், தலைவி வேண்டினாள் *[கலி.145:47].*

நிலவு எங்கும் பரந்தது போல, வையையாறு எங்கும் நீரைப் பரப்பி உலகிற்குப் பயன்பட்டது *[பரி.11:33].*

நிலா 1. காண்க

**2. மதியம்.** கிணைஞன், இளைய நிலவு - மதியம் - திகழும், பனி சொரியும் விடியற்காலத்தே, பொகுட்டெழினியின் நெடுங்கடையில் நின்று, கிணையையறைந்து, பரிசில் வேண்டினான் *[புற.392:3].*

இரவுக்குறிக்கண், தலைவன் வரும்போது, நிலவு வெளிப்படின், தலைவியைக் கூடப்பெறாது பெயர்வான் *[குறி.241].* நிலவு நடுவே சேர்ந்த இருளைப்போல, வலைகிடந்து உலரும் மணலை உடைத்தாகிய முன்றிலினையுடையது, மனை *[பட்.82].*

நெடுநேரம் எறிக்கும் வெண்ணிலவே, காட்டிடையே, இரவின்கண் வரும் தலைவரது களவொழுக்கத்திற்கு நீ நன்மை தருவாய் அல்லை; என்று, தோழி கூறினாள் *[குறு.47:4].*

'நிலவும் மறைந்தொழிந்தது; இருளும் வந்து பொருந்தியது; குறிவயின் நின்ற தலைவன் மார்பை முயங்கி வருதற்குச் செல்வேமோ, எனத், தோழி, தலைவியை அழைத்தாள் *[நற்.182:1].* நிலவு, நீலநிறமுடைய வானத்தில் கதிர்களைப் பரப்பிப் பால் நிரம்பிய கடல்போலப், பரந்துபட்ட தன்மையையுடையதாயிற்று, *[நற்.348:1].*

விளங்குகின்ற நிலவின் இளம்பிறைபோன்று, கவின்பெறு சுடர்நுதலையுடையவள், தலைவி *[ஐங்.443:2].*

நிலா 2. காண்க

**3.நிலைத்தல்.** நிலவு - நிலைத்தில் - பெற்ற கடலெல்லைக்கண் அமைந்த மண்ணகத்தைப் பாண்டியனது வெண் கொற்றக்குடை, நிழல் செய்தது *[புற.3:2].*

கடல் ஒலித்தாற் போன்ற நிலவு பெறுதலையுடைய வேற்படையோடே சென்று, பாண்டியன், பகைவரை வென்றான் *[மது.369].*

புகழ்ச்சி நிலவு பெறும் வேலினையிடையவன், தலைவன் *[கலி.10:23].*

**நிலவுரல்** - நிலத்தில் தோண்டப்பெற்ற உரல். எயிற்றியர், முற்றத்திடத்துத் தோண்டின நிலவுரலிலே - நிலத்தில் தோண்டப்பெற்ற உரலிலே- புல்லரிசியைச் சொரிந்து, உலக்கையால் குத்தி, உவர்நீர் முகந்து, சோறாக்குவர் *[பெரு.96].*

**நிலவுலகம்** - மண்ணுலகம். மாயோளே, யான் விரும்புதற்கு உரியராய் நின்னைக் காட்டிலும் சிறந்த மகளிர் நிலவுலகத்தில் - மண்ணுலகத்தில் - இல்லாமையை நீ தெளிவாய்', என்று, தலைவன், தலைவியிடம் கூறினான் *[கலி.108:54].*

**நிலன்** - மண்ணுலகு (உலகம், நாடு, வயல், தரை முதலியன) அணுச் செறிந்த நிலன், - மண்ணுலகு - போலப் பகைவரைப் பொறுத்தலும் அந்நிலன் மேல் ஓங்கிய விசும்பு போலப், பகைவரையழித்தற்கு வேண்டிய சூழ்ச்சியகலமும் அமைந்தவன், பெருஞ்சோற்றுதியஞ்சேரலாதன் *[புற.2:1,2].* நீரும், நிலனும் ஒருவழிக் கூட்டினவர்கள், இவ்வுலகத்தில், உடம்பையும், உயிரையம் படைத்தவராவார்; நிலன் குழிந்தவிடத்தே நீர்நிலை, மிகும்படி தளைத்தோர், தம்பெயரை இவ்வுலகத்தோடு தளைத்தோராவார்', என்று, பாண்டியன் நெடுஞ்செழியனிடம், குடபுலவியனார் உரைத்தார் *[புற.18:22,28].* நிலனே, நீ நாடாயினும், காடாயினும், மேடாயினும், பள்ளமாயினும் எவ்விடத்து ஆடவர் நல்லவரோ, அவ்விடத்து, நீயும் நல்லையல்லது, நினக்கென ஒரு நலமுடையையல்லை; என்று, உலகியற்கையைப் பாடுவர், ஔவையார் *[புற.187:4].* குதிரை, நிலத்தைத் தாவடியிட்டளப்பது போலக், குறு நெறியில் விரைந்து பாய்ந்தோடியது *[புற.301:12].* புதிய வேந்தர் படையொடுவரச் சுமை மிகுவதால், நிலன் நெளியுமாறு வந்து, மகட்கொடை வேண்டினர் *[புற.345:6].*

நிலனை அதிகரிக்கும் இடிபோலும் குரலுடன் முரசு முழங்கியது *[பதி.30:42].* வேலன், நிலனைப் பொருந்திய தாழ்ந்த உடையினை உடையவன் *[முரு.214].* நிலனும், மரனும் பயன் கொடுத்தலை மேற்கொண்டு தழைத்தன *[மது.12].* நிலன் சுமக்கமாட்டாத பலவாகிய பொருட்டிரள்களை உடையது, மதுரைநகர் *[மது.215].* நிலனையும் வளனையும் கொண்டு அமையாத பெரும் செல்வத்தினையுடையது, அழும்பிலென்னும் ஊர் *[மது.343].* நீரும், நிலனும், தீயும், காற்றும், விசும்பும் என்ற ஐந்தினையும் சேரப் படைத்தவன், மழுவாள் நெடியோன் (சிவன்) *[மது.453].* ஆன்றடங்கு அறிஞர், வானின் செய்திகளையும், நிலனின் செய்திகளையும் தம் நெஞ்சாலே முழுதும் உணரும் தன்மையர் *[மது.479].* கள்வர், நிலனை அகழும் உளியை உடையவர் *[மது.641].*

தலைவியின் தந்தை, அவள் சீறடி சிவப்ப, நிலனுறப் பொறாதவனாய், "குறுமகளே, என் செயச் செல்கின்றாய்', என்று, வினவுவான் *[அக.12:2].* நிலமும், விசும்பும் நீர் இயைந்து ஒன்றிட, மழைபெய்தது *[அக.43:5].* களிறு, தன் துதிக்கையினால், நிலனையெறிந்தவாறே நெருங்கி வந்து ஆட்களைக் கொன்றது *[அக.93:18].* பெரிய நிலன் அஞ்சி உயிர்த்தற்கேதுவாகிய, இன்னாமையையுடையது, காடு *[அக.275:14].* 'நம் தலைவர் வருவர், என்பது, உண்மையாதலை, நின் சீறடிகள் நிலன் உறுதலை அஞ்சி, மெல்லென நடந்து வந்து, காண்பாயாக', என்று, தோழி, தலைவியிடம், கூறினாள் *[அக.323:5].*

நிலன் அளவு தாழ்ந்த துதிக்கையினையுடையது, யானை [நற்.194:4].

நிலன் அணிந்த நெய்தல் மலர்ந்து, கொன்றையும், பிடவமும் கொண்டது, காதலர் சென்ற வழி [ஐங்.435:2].

தலைவி, நாணால் பிறரெதிர் முகம் நோக்காது நிலனை நோக்கினாள் [கலி.143:7]. பெருந்திணைத் தலைவி, பிரிவுத் துயரால், நெட்டுயிர்ப்புக் கொண்டு, கண்ணீரைத் துடைத்துப், பிறரை நோக்காது, நிலனைக் கவிழ்ந்து நோக்கினாள் [கலி.144:4]. தலைவியின் நெஞ்சு, வெண்ணிலாப் பரக்கும் பொழுதில், விசும்பையும் நிலனையும், திசைகளையும் தலைவனைத் தேடித் துழாவும் [கலி.145:43].

'முகிலும், வானமும், நிலனும், இமயமும், நீ; எனத், திருமாலைப், புலவர் போற்றுவர் [பரி.1:48]. 'திருமகள் சேர்ந்த நின் மார்பு, களிறு (வராகம்) மணஞ்செய்தலாலே, ஒரு புள்ளி அளவிற்றாய நிலனும், வெள்ளத்தால் வருந்தியதில்லை, என்று, கூறுவோருடைய கூற்றோடு பொருந்திற்று நின்செயல் எனத் திருமாலை வாழ்த்துவர் [பரி.2:34]. நெருப்பு, காற்று, வானம், நிலன், நீர் முதலிய ஐம்பெரும் பூதங்களும், பிறவுமாக விரிந்தவர் திருமால் [பரி.3:4]. தென்னவர் கைப்பற்றிக் கொள்ளக் கருதிய நிலனையுற்று, அவர் தானை நிமிர்ந்து செல்லும் [பரி.7:7]. ஓசையும், ஊறும், ஒளியும், சுவையும், நாற்றமும் ஆகிய ஐம்புலனாலும் உணரப்படுவதாகிய நிலனும் நீயே', எனத், திருமால் போற்றப்பெறுவர் [பரி.13:22].

நிலம் 1. காண்க.

**2. நிலத்தவர்** (ஆகுபெயர்). 'நினது முரசு நிலன் - நிலத்தவர்- கேட்டு வறிதே மனம் நடுங்க முழங்காது, வெற்றி மிகுதியைக் குறித்தெழுந்து முழங்கும் என்று களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரலைக், காப்பியாற்றுக் காப்பியனார் பாடுவர் [பதி.31:29].

நிலனின் நாவிலே வழங்கும் நீண்ட மாடங்களையுடையது, கூடல் [கலி.35:17].

**நிலா - 1.** மதியொளி. மதியம் முகிழ்க்கும் நிலா - மதியொளி- மாலைப் பொழுதில் விளங்கும் [புற.67:4]. வெண்குடை போலும் முழுத்திங்கள் வானத்தின் மேனின்று நிலாவைப் பொழிந்து விளங்கியது [புற.294:1]. கிணைஞன், இருட்போதும், நிலாப்போதும் கழிந்த விடியற்காலத்தில் தோன்றிச் சோழிய ஏனாதித் திருக்குட்டுவனைப் பாடிப், பரிசில் வேண்டினான். [புற.394:6]. வைகறைக் காலத்தில், திங்கள் நிலா மறைந்தது [புற.398:1].

மதியம், நீலமணியின் நிறத்தைப்போன்ற காரிருள் நீங்கும்படி நிலாவைப் பரப்பியது [பதி.31:11].

கீழ்த்திசையிடத்தே நிறைமதியெழுந்து நிலாவைப் பரப்பியது [மது.548].

அரும்பும் நிலாவினால் இளையமதி திகழும் [அக.54:17]. மதி குளிர்ந்த நிலா விரிந்த பலகதிர்களையுடையது [அக.57:11]. நிலாவைப் போல் விளங்கும் மணல் மிக்கது, தெரு [அக.200:1].

அரவினால் சிறிது விழுங்கிக் குறைபடுக்கப்பட்ட பசிய கதிர்களையுடைய திங்களில் விரிந்த நிலாவைப்போல, ஒளிவீசும் சிறுநுதலையுடையவள், தலைவி [நற்.377:7].

தலைவரைப் பிரிந்துறைவோர்க்கு மலர்கள் கமழும் நாற்றம், நெடிய நிலாவையுடைய இராக்காலத்தே வந்து, வருத்தத்தைத் தரும் [கலி.29:20]. ஞாயிறு மறையத், தண்ணிய கதிரையுடைய மதியத்தின் அழகையுடைய நிலா, எங்கும் பரவியது [கலி.121:3]. தலைவி, தலைவனோடு கூடின காலத்து, இருள்நீங்க, விளங்கின அழகுடைய நிலாவையுடைய மதியம்போல், விளக்கம், அமைந்து, அவன் பிரிந்த காலத்தில், பகற்பொழுது மதியம்போல், ஒளி கெட்டாள் [கலி.143:1]. வெண்ணிலாப் பரக்கும் மாலைப் பொழுது வர என்னெஞ்சம் தலைவனைத் தேடித் துழாவும் என்றாள், தலைவி [கலி.145:40].

'வானத்தின்கண் அழகிய நிலாவோடு விளங்கும் திங்களும் தெறுகின்ற சுடரினையுடைய ஞாயிறும், நீயே', என, அடியார், திருமாலைப் போற்றுவர் [பரி.1:41].

நிலவு 1. காண்க

**2. மதியம்.** ஒளியையுடைய நிலாவை - மதியத்தை - ஒக்கும் விளங்குகின்ற ஒளியையுடையது இடுமணல் [கலி.131:17].

நிலவு 2. காண்க

**3. ஒளி.** படைக்கலன்கள் நிலா - ஒளி - விளங்கும் கடலையொத்த தானையினையுடையவன் குட்டுவன் [அக.212:15].

**நிலாமுற்றம்** - நிலவின்பயன் கொள்ளுதற்கு உரித்தாய் மேலே வேயாத மேல்தளம். குதிரை ஏறிவந்தேன் என்று கூறிய பரத்தமைத் தலைவனிடம், தலைவி, 'நீ காதலித்து ஊர்ந்த காமக் குதிரைக்குச், சுதைமாடத்தின் அழகினையுடைய, நிலாமுற்றத்தே - வேயாமேல் தளத்தே - ஆதியென்னும் நெடுஞ்செலவை அதற்குக் கொளுத்தி, இளைத்தாயாதலை, அறிந்தேன்', என்று, கூறினாள் [கலி.96:19].

**நிலை-1.** நிலைத்தல். பெருமலை விடரகத்து அரிய உச்சிக்கண் கொண்ட நெல்லியின் இனிய பழத்தைப் பெறுதற்கரிதெனக் கருதாது, அதனாற் பெறும் பெரிய பேற்றினையும் எமக்குக் கூறாது, நின்னுள்ளே அடக்கிச் சாதலொழிய, எமக்கு அளித்தாயாதலால் நீ, நீலமணி போலும் கரிய திருமிடற்றையுடைய ஒருவனைப் போல நிலை- நிலைத்தல்- பெறுவாயாக, என்று, தமக்கு நெல்லிக்கனி கொடுத்த அதியமானை ஔவையார் வாழ்த்தினார் [புற.91:7]. உரிமையுடைய பழைய நட்புடையோரிடத்தே சென்றால் அவர்

உயிர்நீத்து நிலைபெற நடப்பட்ட கல்லான போதும் உறுதியாக இடங்கொடுத்தளிப்பர், என்று, நடுகல்லாகியும் தமக்கு இடங்கொடுத்த கோப்பெருஞ்சோழனைக் குறித்துப், பொத்தியார் கூறினார் *[புற.223:3]*.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், பகைவரது நிலைபெற்ற மதில் உச்சியையுடைய அழித்தற்கரிய மதிலை உள்ளே புகுந்தழித்தான் *[பதி.20:18]*. வானத்தே நிலைபெறுகின்ற கடவுளரும், இவ்வாறு நாம் அறம் செய்யப்பெறின், அழகிதென்று விரும்புமாறு, பல்யானைச் செல்கெழுகுட்டுவன், வேள்வியும், விருந்தும் இயற்றினான் *[பதி.21:15]*. பனங்குருத்தைச் சேர்த்துக் கட்டிய குவளை மாலையை அணிந்து, வலிமை மிக்கு, மிக்க சினத்தையுடைய, பகையரசரது நிலையான நல்ல போரை வென்று, அவரது மறத்தைக் கெடுத்துத் தலைமையையும் அழித்தவன், செல்வக் கடுங்கோ வாழியாதன் *[பதி.70:9]*. புனலாடு மகளிர் பாய்தலால் காதினின்றும் கழன்ற பொற்குழை, ஓடக்கோல் நிலை பெறாத ஆழமான இடத்திலே கிடப்பினும், மேலே விளங்கித்தோன்றும் தெளிவுடையது, வானியாறு *[பதி.86:9]*.

தமிழ் நிலைபெற்ற அரிய மரபினை உடையது மதுரை *[சிறு.66]*. திருமகள் நிலைபெற்றதும், தீது தீர்ந்ததுமான சிறப்பினை'உடையது, பாண்டி மாதேவியின் கோயில் *[நெடு.89]*. நிலைப்படும் துறையைக் தவறி, நீர்க்குள் அமிழும் மாக்கள், பூசலிட்டனர் *[மலை.280]*. உயர்ந்த மலையிலே நிலைபேறுண்டாக அமைக்கப்பட்ட கண்ணேணி வழியே ஏறிச்சென்று குறவர் தேனழிப்பர் *[மலை.316]*.

'ஓடக்கோல் நிலைபெறாத ஆழத்தையுடையது காவிரிவெள்ளம் *[அக.6:6]*. காவிரியாற்றின் மடுவிலே நிற்போர்க்கு நிலை கொள்ளாத நீர் கலங்குமாறு சென்று பாண்மகளின் தமையன்மார், வாளை மீனைப் பிடித்து வந்தனர் *[அக.126:6]*. தலைவியது காமநோயினால் ஆன மெய்வேறுபாட்டினைத் தெய்வத்தாலாயதெனக் கருதிய அன்னை, நிலையாகத், துறையிடத்தே தங்கியுறையும் கடவுளுக்குக் கையுறையாக நிலையாய் நிமிர்ந்துநிற்கும் கொம்பினையுடைய வெள்ளாட்டுக் கிடாயை விட்டனள் *[அக.156:14,15]*. குறி தப்பாது வாய்த்த சிவந்த அம்பினையுடைய வில்லைக் கொண்ட மறவருடைய நல்ல வெற்றித் தன்மையைப் பொறித்த நடுகற்கள் பாலை வழிகளில் நிலைபெற்றிருக்கும் *[அக.179:8]*. கொல்லி மலையிலே நிலைபெற்ற கடவுளால் (தெய்வத்தச்சனால்) பலரும் புகழும் பாவை இயற்றப்பெற்றது *[அக.209:16]*. தலைவன், தலைவியைப் பிரிந்து போனதால், அவளது வளையின் நிலையை நெகிழ்த்தான் *[அக.251:20]* அழகு (தெய்வம்) நிலைபெற்ற பெரிய, மெல்லிய தோள்களை உடையவள் தலைவி *[அக.295:22]*. பிரிவின்கண் தலைவி, தன் அழகினை இழந்து, கால்விரலால் நிலத்தைக் கிளைத்து, கால் நிலை செல்லாது, மிக்க துன்பத்தால் கலக்கமுற்றாள் *[அக.299:16]*. தலைவன் மணந்து கூடாமையால் அணிகள் நிலையினின்றும் நெகிழ்தற்கேதுவாகிய துன்பம் மிக, நினைவுமிக்க வருத்தத்துடன் தலைவி பலவற்றையும் வெறுத்துக் கூறியிருந்தாள் *[அக.398:1]*.

நில்லாமையே, இவ்வுலகத்தில் நிலையாயது *[குறு.143:3]*. யானையின் பெரிய நிலை உடைய கொம்புபோல், ஒன்றாக விளங்கும் அருவியையுடையது மலை *[நற்.18:9]*. 'யாழி! நின் பொன்போல் மேனியும், மணிபோல் கூந்தலும், மலர்போல் கண்ணும், மூங்கில்போல் தோளும் ஆகிய இவற்றைக் காணுந்தொறும் உள்ளம் மகிழ்ந்து யான் அறத்தின்கண் நிலைபெற்றோர் அடையும் பயன்பெற்றேன்', என்றான், கிழவன் *[நற்.166:6]*. 'தோழி! மலையடுக்கத்தில் மழையிருளில் மின்னுவிளக்கில் வேலேந்தி, நாடன், தனித்து வருதலைக் கருத, நம் இனிய உயிர்நிலை என்னாகுமோ?' என்றாள், தலைமகள் *[நற்.334:9]*. 'வேழம், தினைக்கதிர் கவரக், கானவன் வீசிய கொள்ளி, நிலையில்லாது செல்லும் மின்னலைப்போலத், தோன்றும் *[நற்.393:7]*.

'அன்னாய்! நம் படப்பையிலுள்ள குண்டுக்கல்லேறி நின்று, அவர் நாட்டுக் குன்றம் நோக்க, அவளது வளை நிலைபெற நோய் தணிதலுமாகும்', எனத், தோழி, அறத்தொடு நின்றாள் *[ஐங்.210:4]*. 'தோழி! நெடுமலைநாடன் இரந்து குறை நீங்கப் பெறாது மீளின், நம்முயிரது நிலை என்னாகுமோ?' என்று, தோழி அறத்தொடு நின்றாள் *[ஐங்.228:4]*. 'விடலை! இவளது இழையினது நிலை நெகிழ்ச்சியடையப் பிரிதல்வல்லையாயின், இவளது நுதலழகினை மீண்டும் பெறலரிதாகும்' எனத், தோழி சொல்லித் தலைவனைச் செலவழுங்குவித்தாள் *[ஐங்.310:2]*. 'தொடியினது நிலை நீங்கத், தோள்வாடக், கண்ணழகழிய, நோக்கிப், பாணன் கலங்கினன், இவன் தலைவனைப் போலன்றிப் பேரன்பினன்', எனத், தலைமகள் சொன்னாள் *[ஐங்.475:1]*. 'வேந்தன், பாசறைத் தொழில் நீங்க, நாடன் வந்ததால், தலைவியின் தோள்கவின் பெறத், தொடிநிலை நிற்கக், கண் வனப்புற்றன', எனத், தோழி கூறினாள் *[ஐங்.498:1]*.

பொருள்மேல் பிரியும் தலைவனிடம் தோழி, 'கோமானே! கேட்பவர்க்கு இன்பத்தைத் தரும் விரலால் எழுப்பும் யாழின் ஏழ் நரம்புகளுள்ளே இடைநின்ற நரம்பொன்று இனிய இசை கெடுமாறு திடுமென அறுந்துபோவதைக் காட்டிலும், விரைந்து அழிந்துபோகும் நிலையில்லாத செல்வத்தைச் சிறந்தோர் விரும்புவாரோ? என்று கூறினாள் *[கலி.8:11]*. ஒருவர் விரும்பித் தேடிய பொருள், பிரியுங்கால், எல்லோரும் எள்ளுமாறு, அவர் புகழையும், அழித்து விரைந்து பிரியும் நிலையிலாத செல்வத்தைச் சிறந்தோர் விரும்புவரோ? என்று, தோழி, தலைவனிடம், கூறினாள் *[கலி.8:14]*. தம்மை வாழ்வித்த அமைச்சர்களையே கொன்று உயிரைப்போக்கும் கொடிய அரசவாழ்வைக் காட்டிலும், விரைந்து அழியும் நிலையில்லாத செல்வத்தைச் சிறந்தார் விரும்புவாரோ' என்று, தோழி, பொருள்வயின் பிரியும் தலைவனிடங் கூறினாள் *[கலி.8:17]*.

பலராமன், ஞாயிறு, காமன், சாமன், சிவன் முதலிய ஐவரின் நிறம்போல, மலர்ந்த மலர்கள் நிறைந்த, மரங்கள் நிலைபெற்ற ஆற்றங்கரை அழகோடு விளங்கியது *[கலி.26:6]*. பிரிவுத் துயரை ஆற்றியிரு, என்ற தோழியிடம், தலைவி, 'தோழியே! எனது தொடியைத் தன் நிலையிலிருந்து கழலச் செய்தாரிடத்துச் செறியாமற் செய்யவே முயலுகிறேன்; ஆனால், மலர்களின் மணம் நிலவொளியில் வந்து வீசி வருத்துகின்றதே, என் செய்வேன்' என்று, கூறினாள் *[கலி.29:18]*. தொழுவத்திலிருக்கும் ஏறுகளின் மேலே நிலைபெற்று, அவற்றை வென்றடக்கும் கருத்தோடு, ஆயர் இளைஞர், பரண்விட்டு இறங்கி, ஏறுகளின் மேல் பாய்ந்தனர் *[கலி.104:33]*. காமம் கைமிக்குப் புலம்புகின்ற தலைவி, சான்றோரிடம் 'சான்றோரே! நான் இழைத்த கூடலில் இளம்பிறைத்திங்களைக் கண்டேன்; அதனை எனது ஆடையில் மூடிக் கைப்பற்றக் கருதிய யான், தன் தலைமுடியில் சூடிக்கொள்ளக் காணாமல் சிவபெருமான் அலைவனோ? என்று எண்ணி, அதை நிலைபெறுத்தும் வகையில் அப்பிறைத்திங்களை அச்சிவனுக்கு அளித்தேன்', என்று கூறினாள் *[கலி.142:29]*. மக்களால் விரும்பப்படும் தலைமைபோல் தோன்றும் காம இன்பமானது, இரவில் தோன்றிப், பகலில் பயன்தராது, வேறுபடும் கனவைக் காட்டிலும், நிலைபெறுதல் இன்றாகும் *[கலி.145:3]*.

முருகப்பெருமான், திருப்பரங்குன்றத்தில், கடம்ப மரத்தின்கண் விரும்பி நிலைபெற்று உறைவராயினர் *[பரி.19:104]*.

**2.** நிற்றல். தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், படையெடுத்துச் சென்று தங்கிய பகைப்புலங்களில் அவனுடைய போர்யானைகள் கூடத்தே நிற்கின்ற நிலையை - நிற்றலை - வெறுத்துச்சென்று படிந்து நீருண்டலால் துறைகள் கலக்கமுற்றன *[புற.23:1]*. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், தனக்கெதிராக வஞ்சினங் கூறிய மாற்றிருவேந்தரைப் போர்க்களத்தே மாயப்பொருது அவருடைய முரசங்களைக் கொண்ட காலத்துத் தான் நின்ற நிலையிலே நின்று, தன்னைச் சூழ்ந்து கொண்ட மறவரைப் புரிந்தெறியப் புகுந்த அளவிலே, அவர்தம் மனைவியர் கூந்தல் களைதலைக், கண்டு இரக்கமுற்று, எறிதலைத் தவிர்ந்தான் *[புற.25:8]*. குன்றுபோலும் நிலையுடைய பல நெற்கதிர்ப் போர்களை நாட்காலையே கடாவிட்டழித்துக் குவிந்த, அகன்ற நெற்குவியலும், உணவுக்குப் பற்றாத, இளையர் பலரையுடைய தொல்குடி மன்னன் மகளை, வேந்தன் விரும்பினான் *[புற.353:8]*.

செல்வக்கடுங்கோவாழியாதன், தன்னிடத்தே அந்தணர் அருங்கலங்களை ஏற்கையில், தான் அவர் கைகளிலே சொரிந்து கொடுக்கும் நீர்படுதலால் கரிய சேறுண்டான, மணல் மிக்க முற்றத்திலே, களிறு நிலை கொள்ளுதலை வெறுக்கும் *[பதி.64:7]*.

சிச்சிலிப் பறவை காஞ்சிமரக் கிளையில் அமர்ந்து, ஒரு காலங்கருதி, நெடும்பொழுது காத்திருந்து நிலையரியக் குட்டத்துக் கயல்மீனை எடுத்தது *[சிறு.180]*. பந்தியிலே நிலைப்பட்ட புரவிகள் புல்லுணவைக் குதட்ட இராக்காலம் கழிந்தது *[மது.660]*. பந்தியிலே நிற்கும் நிலையை வெறுத்த புரவிகள் புல்லுணவைக் குதட்டுகின்ற குரலோடே, பிற ஒலிகளும் சேர்ந்து, பாண்டிமாதேவியின் கோயிலில் எதிரொலிக்கும் *[நெடு.93]*. வெள்ளுப்பின் விலை கூறி, விற்ற நெல்லைக்கொண்டு வந்த படகினைப், பந்தியிலே நிலையையுடைய புரவியை பிணிக்குமாறு போல், தறிகளிலே பிணிக்கும் கழி சூழ்ந்த பக்கத்தினையுடையது, காவிரிப்பூம்பட்டினம் *[பட்.31]*. குறவர் உயர்ந்த நிலையையுடைய பரண்மேல் ஏறியிருந்து தினைப்புனங்காப்பர் *[மலை.204]*. மலைச்சாரலிலே வீழ்ந்தோரை மூழ்கடிக்கும் ஆழத்தையுடைய, குளங்களுக்கருகே இடம் மறைதற்குக் காரணமாகிய, பாசி தன் மேல் நடப்போரது அடியின் நிலையைத் தளர்த்தி வழுக்கச் செய்யும் *[மலை.222]*. காட்டிலே நிற்கும் நிலையுடைய எருமையது தோய்த்த தயிர், மூங்கிற் குழாயில் இருந்தது *[மலை.523]*.

தலைவி, தன் புதல்வனைத் தெருவிலே எடுத்தணைத்து நின்ற பரத்தையைக் கண்டு, தாம் நிற்கும் நிலையினின்றும், மீண்டு செல்லாமல் அவளை அணுகி, அன்புறப் பேசியபோது, தலைகவிழ்ந்து, நிலங்கிளைத்து நாணி நின்றோளாகிய அப்பரத்தையின் நிலைகண்டு, அவளை விரும்பி நோக்கினாள் *[அக.16:11,16]*. நிலையுயர்ந்த யாமரம் மழையொழிந்த காலத்தே இலைகள் இல்லாமல் ஓங்கி நின்றது *[அக.31:5]*. அன்னியென்பான் குறுக்கைப் பறந்தலையில் நிகழ்ந்த போரில், திதியனது காவல் மரமாகிய தொன்மை நிலையுடைய புன்னையின் அடியை வெட்டித் துண்டித்தான் *[அக.45:10]*. சேற்றிலே நிற்கும் நிலையை வெறுத்த எருமை இராப்பொழுதிலே வலிய கட்டினை அறுத்துக்கொண்டு, வேலியைக் கொம்பினால் அகற்றிவிட்டுச் சென்று, நீர் வயலில், மீன்கள் இரிந்தோட, வள்ளைக்கொடியை மயக்கித், தாமரை மலரை மேய்ந்தது. *[அக.46:1]*. கரந்தை மறவரின் பெயரையும், சிறப்பையும் பொறித்து, மயிலின் தோகைகளையும், சூட்டிய விளக்கமுடைய, நிலையமைந்த நடுகற்கள் பாலைநில வழிகள்தோறும் காணப்படும் *[அக.67:10]*. தினைப்புனம் காக்கும் கானவன், கள்ளுண்டு களித்திருந்தானாகக், கொடிச்சி தன் கூந்தலைக் கோதியவாறே பாடிய குறிஞ்சிப் பண்ணைக் கேட்டு, மறமேம்பாடுடைய இளங்களிறு, தினைக்கதிர்களையும் மேயாமல், தான் நின்றிருந்த நிலையினின்றும் பெயராமல், முன்பு துயிலாத கண்கள் துயில்கொள்ளும் *[அக.102:7]*. செங்குத்தான நிலையுடையது புற்று *[அக.112:2]*. வரிசையாக நிற்கும் நிலையமைந்த சூட்டுக்களை உடையது, மதில் *[அக.124:16]*. வளைகள் தலைவியின் தோள்களில் அணியப்பட்டு நிற்கும் நிலைதளர, அவளைப் பிரிந்து சென்றான் தலைவன்

[அக.125:1]. வெட்சி மறவர், விடியலில், ஆனிரையைக் கவர்ந்து கொண்டு போன கொடிய சுரநெறியில், நடை ஓய்ந்த கன்றுகளின் கடைக்கண் நீரைத் துடைத்துப், போரிலே மாண்ட கரந்தை மறவரது பெயரும், பீடும் எழுதிப், பீலி சூட்டிய, விளக்கம் மிக்க, நிலையினை உடைய நடுகல்லின் முன், ஊன்றிய வேலும், சாத்திய கேடகமும், போர் முனை போல் தோன்றும் [அக.131:11]. அன்னி என்பவன், குறுக்கைப் பறந்தலையில், நடந்தபோரில், திதியனுக்குரிய காவல் மரமாகிய புன்னையின் தொன்மை நிலையுடைய அடிமரத்தை வெட்டினான் [அக.145:12]. நிலையுயர்ந்த, பக்கங்களையுடைய, மலையைக் கடந்து தலைவன் சென்றான். [அக.185:13]. வேனில் வெப்பம் மிக்க மலையையடுத்த காடு காய்ந்தமையால், குடியெழுந்தோடிய பாழ்நாட்டிலே பனைக்குருத்தைத் தின்னும் யானை, காலைப் பொழுதிலே, துயிலுமிடத்தே, செயல் ஒடுங்கி அசைந்து நிற்கும் நிலை, கடலிடத்தே நாட்காலையில் நிற்கும் பரதவரது தோணி போலத்தோன்றும் [அக.187:20]. போர்த்தொழிலில் பயின்ற குதிரை, பந்தியிலே நிற்கும் நிலையை வெறுத்தது [அக.254:12]. முகில் முழங்கி, மழை பொழிந்து, கார்ப்பருவத்தைச் செய்த பாதியிரவிலே, செம்மறியாட்டின் தொகுதி காவல் உறும்படி, இடையன், தீக்கடைக் கோலினின்றெழுந்த தீயை வளர்த்து, மழைத்துளி நனைக்கக், கோலினைக் காலுடன் சார்த்தி, ஊன்றிய தனித்த நிலையுடையோனாய் நின்றிருந்தான் [அக.274:8]. ஓங்கிய நிலையுடைய தாழியில் வயலைக்கொடியை வளர்த்தனர் [அக.275:1]. கரிய அடிபொருந்திய கந்து, மரைமானேறு உராய்ந்தமையால், அசையும் நிலையுடையதாயிற்று [அக.287:3]. நெடிய நிலையுடைய நடுகல்லுக்குக் காட்டுமல்லிகையின் பூக்கள் பலியாக இடப்பெறும் [அக.289:3]. விற்படைகள் நெருங்கிய போரினை அழியக்கொன்று நற்புகழை நிறுத்தி மாண்ட மானமிக்க மறவரின் நடுகற்கள், பாலை வழியிலே, வரிசைப்பட நிற்கும் நிலையினவாய் இருந்தன [அக.387:15].

சிறு மழையையுடைய கார்ப்பருவக் கடை நாட்களில் சேற்றிலே நிற்கும் நிலையை வெறுத்த எருமை, நடு இரவிலே ஐயென்று கரையும் [குறு.261:3].

'பாக! காட்டுக்கோழி, மழைநீர் வடிந்து சென்ற ஈரமான மணலைக் கெண்டி, நாட்காலத்து இரையைக் கவர்ந்து, அதனை உண்பிக்கத்,தன் பேடையை நோக்கி நிற்கும் பெருமையுடைய நிலையினைக் காண்பாயாக', என்றான் வினைமுற்றி மீள்வான் [நற்.21:12]. 'பெரும! மலையையொத்த, அடுக்கிய நிலையினையுடைய நெற்கூட்டின், பெருகியநெல்லையுடைய தாய்வீட்டைக் கைவிட்டுக், கதிர் காயக், காய்வாடி, முடம்பட்ட பலாவினையுடைய காட்டுவழியே, நும் துணையாக வந்தமையாலோ, நீ பிரிவேன் என்ன, வளைகழன்றன', என்றாள் தோழி [நற்.26:3]. குறுகிய நிலையையுடைய குராமலரை வண்டு மொய்க்க, அதன் நாற்றத்தினை காற்று அளைந்து வீசியது [நற்.56:1]. மலையைப் போன்று நிலை பொருந்திய, உயர்ச்சியையுடைய, பல நெற்கூடுகளையுடையவர் எருமையுழவர் [நற்.60:1]. 'பாக! குறுமகட்கு, வினைவயிற் செல்ல வேண்டிக்கவற்சியைக் கூறிய அளவில், மறுமொழி கூறாது ஞாழலது, பூங்கொத்தையும், தளிரையும் பிசைந்துதிர்த்த கையாளாகி, அறிவு மயங்கி நின்ற நிலையினை (தன்மையினையுமாம்) நீ அறிவாயோ?' எனத், தலைமகன் தேர்ப்பாகற்குக், கூறினான் [நற்.106:9]. 'நெஞ்சே! பந்தொடு செல்வாள், நமக்கு அருளினும், அருளாது போயினும், நீ பெரிதும் வழிபடும் நிலையினை வெறாதே. உன் நோய்க்கு மருந்து அவளன்றிப் பிறிதில்லை' எனக்,குறையுறும் தலைமகன் கூறினான் [நற்.140:9]. மழைத்துளி நனைப்பக், கோலையூன்றி, அதன்மேல் ஒரு காலை வைத்த, ஒடுங்கிய நிலையோடு நின்று, இடையன் வீளை எழுப்ப, யாட்டின் தொகுதி, பிறபுலம் செல்லாது புறவில் தங்கும் [நற்.142:6]. 'நலமுடையாய்! நீ, நீரர மகளோ? கழியருகு நிலை கொண்ட மாதோ? யாரோ? என்னச், சிறிது நகைக்கக் கண்ணில் நீர் பரந்தது', என்றான், கிழவன் [நற்.155:7]. 'பிறர்க்கெனப் பொருள் தேடும் நெஞ்சுடனே, காதலர் சென்ற நெறி, ஓதி முதுபோத்து பாணர் யாழ்வாசிக்கக் கேட்டு, வருத்தந் தீர்ந்து, நீண்ட நிலையினையுடைய யாமரத்தின் மீதேறும் இயல்பினையுடையது, என்றாள், தலைவி [நற்.186:7]. 'தனித்த நிலையினையுடைய பரண், யாருமின்றி வறிதாகும்படி போய், வெற்பனோடு விளையாடத், தினையினைக் கவராது சென்ற யானைக்கும், கிளிக்கும் என்ன கைம்மாறு செய்வேம்', என்றாள், தோழி [நற்.194:6]. 'தோழி! அழகிழந்த நுதலும், கழன்று வீழும் வளையும், ஊரவரும் குறித்து நாம் அவர்க்கு நாணத்தால் கூறமாட்டேம் ஆயினும், கண்டபோது நிலை கொள்ளாத கண்ணீர், மறைக்க முயன்றும், எடுத்துரைத்து விடுகின்றதே', என்றாள், தோழி [நற்.263:8]. கானவர் தினை கொய்யலாயினர், ஆதலினால், இனி, கட்டுப் பரணில் நாம் நிற்கும் நிலையினை நம் தலைவர் காண இயலுமோ? என்றாள், தோழி [நற்.306:4]. 'நாம் பல பணி செய்து, புணர்ந்த வரைப்போல உணர்ந்து, போரில் புண்பட்டுக்கிடந்தோரைக் காக்கும் பேய் போலத், தோழியின் பின்னிலையினை வெறுக்காத நம்மாட்டு, இப்பரதவர் மகள், என்ன நினையுமோ?' என்றான், தலைமகன் [நற்.349:9]. 'பாண! நின் தலைவனைக் கொண்டு, பரத்தைபாற் செல்க; இவண் நின்று, தொழுது, பாடல் கூடாது. தலைவன் தேரில் பூட்டிய இவண் நீடு நிலையுடைய குதிரைகளும், பூணொடு கூடிய நிலையினை வெறுக்கின்றன' எனத், தோழி வாயில் மறுத்தாள் [நற்.380:10,11].

'தொல் நிலை மருதத்துறையில், தண்புனலில், நின்னொடு பரத்தை ஆடினள் என்பது, ஊரில் அலராகியது', எனத், தோழி கூறினாள் [ஐங்.75:3]. இலையில்லாது மலர்ந்த உயர்ந்த நிலையினையுடைய இலவமரம், மலையில் பற்றிய தீப்போலச் சுரத்தில் தோன்றும் [ஐங்.338:2]. திண்ணிய நிலையினையுடைய

கோங்கமரத்தின் மொட்டு மலரும், காலம் வந்தது, ஆயின், அவரோ வாரார், 'எனத், தலைவி கூறினாள் *[ஐங்.343:2]*. 'வேந்தன் வினைமுடியின், பணை நிலையை வெறுத்த பரியைத் தேரில் பூட்டி ஒளி நுதலாளைக் காணலாகும்' என்றான் தலைமகன் *[ஐங்.449:2]*.

குலமகளிர் நாணி இறைஞ்சும் நிலைபோலத், தினைக்கதிர் முற்றித் தாழ்ந்திருக்கும் *[கலி.40:2]*. வளகென்னும் தழையை உண்ணுகின்ற மலை நடந்ததனை ஒக்கும் பிடியொடு கூடி நிலையினையுடைய யானைகள் நிறைந்த மலைக்குரியவன், தலைவன் *[கலி.43:20]*.

திருமால் ஏந்தியுள்ள சங்கு (பஞ்சசன்யம்), அவுணர்களுடைய கொடிகள் அற்று வீழும்படியாகவும், அவர்களுடைய காதுகள் செவிடுபடும்படியாகவும், அவரின் முடிகள் அதிரும்படியாகவும், அவர்கள் நிலத்தின்கண் நிற்கும் நிலைதளர்ந்து நடுங்கும்படியாகவும் முழுங்கியது *[பரி.2:39]*. திருமால் ஏந்திய ஆழிப்படை அவுணர் நின்ற நிலையைக் கெடுத்துப் பனங்குலைகள் உதிர்வனபோல், அவர்தம் தலைகளை நிலத்தில் உருட்டித்தள்ளி, உயிரினைச் செகுக்கும் *[பரி.2:42]*. காற்றின் செலவு தடையுறுதற்குக் காரணமான உயர்ந்த நிலையினையுடைய குன்றுகளில் திருமால் தெய்வமாக உறைகின்றார் *[பரி.4:68]*. திருப்பரங்குன்றத்தின்கண், சிலர் சுடர் நிலையை ஓவியம் வரைந்து நிற்றலையுடைய மாடத்தின் பக்கம் காணச் சென்றனர் *[பரி.19:47]*. திருப்பரங்குன்றத்தின், ஓவிய மண்டபத்தில் உள்ள, அகலிகை, இந்திரன், கௌதம முனிவர் முதலிய நிலையுடைய ஓவியங்களின் வரலாற்றினைக் காதலியர் வினவக், காதலர் விளக்கங் கூறினர் *[பரி.19:53]*. நீர்விழுகின்ற சுனையில் நீராடும் தலைவியொருத்தி, சுனையின் ஆழத்தில் சிக்கியவளாய்க், கரையிலுள்ள தன் காதலனிடம், புணையாக, மூங்கிலைக் கேட்பவும், அதனை அவன் கொடாது அரக்கு வட்டிலை எறியவும், ஆழமான நீரின் நிலையில் அவள் படும் அல்லலைக் கண்டு, அவன் நீரில் குதித்து, அவளைத் தழுவிக்கொண்டான் *[பரி.21:43]*.

3. நிலைமை / இருப்பு / சூழல் / அமைப்பு. போர்க்களத்தே தைத்த அம்புகளால் துளைதோன்றும் பரிசைகள், நிலையில்- நிலைமையில் - தப்பாத இலக்கத்தை (இலக்கினை) ஒத்தன *[புற.4:6]*. நெடுங்குழியின்கண் அகப்பட்ட மிக்க வலிமையுடைய கொம்பு முற்றிய கொல்களிறு அக்குழியின் நிலை சரிய அதனைத் தூர்த்துத் தன் இனத்தொடு சேர்ந்தது *[புற.17:18]*. கொல்லன் அரத்தாற் கூர்மை செய்த அழகிய வாயினையுடைய கோடரி வெட்டுதலால், நின்ற நிலை கலங்கி வீழும் பூங்கொம்புகள் தனித்தொழியுமாறு, சோழன் கிள்ளிவளவன், சேரனது கருவூரிடத்துச் சோலைதோறும் காவல் மரங்களை வெட்டினான் *[புற.36:7]*. இவ்வுலகத்துப் புகழுடையோர்க்கல்லது மற்றவர்க்கு அவ்விடத்தாகிய உயர்ந்த நிலையையுடைய உலகத்தின்கண் (விண்ணுலகில்) உறைதல் கைகூடாது *[புற.50:15]*. 'போர் செய்யும் படையையுடைய கிள்ளிவளவன் உறையூரிடத்தே இருந்தானாயினும், அவன் போரிடுவோர் பொருட்டு எடுக்கப்பட்ட வேலையுடையனாய், ஒருநிலையில் பகைவர் நாட்டின்கண் போதலுமுரியன்', என்று, சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைக் குறித்துப், பாணனுக்குக் கூறி, ஆற்றுப்படுத்துவர், ஆலத்தூர்கிழார் *[புற.69:12]*. 'தம்மில் ஒப்பக்கூடி வந்து என்னொடு பொருவதாகச் சொல்லும் பகைவேந்தரைப் பொறுத்தற்கரிய போரின்கண்ணே அலறுமாறு பொருது தேருடனே அவர் தோற்றோடும் புறக்கொடையைக் கண்டிலேனாயின், அறம் நிலை திரியாத அன்பினையுடைய அவைக்களத்தே, அறத்தின் திறப்பாடில்லாத ஒருவனை வைத்து, முறைதிரிந்து, கொடுங்கோல் செய்தேனாகுக', என்று, ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் வஞ்சினங் கூறினான் *[புற.71:7]*. 'ஆமூரிடத்தே தன்னை எதிர்த்துப் பொருத மல்லனது வலிமையைக் கெடுத்துத் தன் ஒருகாலை மண்டியாக மடித்து, அவனது மார்பிலே வைத்து, மற்றொரு காலை அவன் செய்கின்ற எதிர் செய்கையை விலக்கி, முதுகின்கண் வளைத்துத், தலையும், காலுமாகிய இரண்டிடமும் முறியும்படி மோதி, அம்மல்லனை இவன் எதிர்த்து நின்று கொன்ற நிலையைக் கண்டால், உவப்பினும், உவவானாயினும் இவனுடைய தந்தையாகிய தித்தன் காண்பானாக', என்று, சோழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளியின் மற்போர் வெற்றியைப் பாடுவர், சாத்தந்தையார் *[புற.80:9]*. அதியமான் நெடுமானஞ்சியின் வேல்கள், குறும்பர் சேர்ந்த அரண்களை வென்று, அப்பகைவரது நாட்டையழித்தலால், சுரையோடு பொருந்திய கரிய காம்புடனே ஆணி கலங்கி நிலை கெட்டன *[புற.97:7]*. அமரரைப் போற்றி வழிபட்டும், அவர்க்கு வேள்வியிலே ஆவுதியை அருத்தியும், பெறுதற்கரிய முறைமையுடைய கரும்பை இவ்வுலகத்தின்கண் கொண்டு வந்து தந்தும் கடலுக்குட்பட்ட நிலத்தின்கண் ஆணைசெலுத்திய பழைய நிலை பொருந்திய மரபினையுடையவர், அதியமான் நெடுமானஞ்சியின் முன்னோர் *[புற.99:4]*. 'எனது பசியுற்ற வறுமைத்தன்மையை அறியாராய், 'நின் கைப்பொருளைத்தா', என்றுசொல்லி, என்நிலை தளரும்படி. குரங்கு போல் பறித்துக்கொள்ளும் ஆறலைகள்வர் அலைக்கும் பகையை மட்டும் ஒரு பகை என்பேனோ', எனத், துறையூர் ஓடைகிழார், தம் வறுமைப் பகைகளை, ஆய் அண்டிரனிடம் அடுக்கிக் கூறினார் *[புற.136:11]*. 'குமணனே, எனது வறுமைநிலையை நீ அறிந்தாயாயின், இவ்வாறு வறுமையுற்று நின்ற நிலையில் யான் நின்னை வளைத்தாயினும் பரிசில் கொள்ளாது விடேன், என்று, பெருந்தலைச்சாத்தனார், குமணனிடம் கூறினார் *[புற.164:9(2)]*. 'கொடுமையை நீக்கிய பெறுதற்கரிய கற்பினையும், சிறு நெற்றியையும், பெரிய அகன்ற அல்குலையும், சிலவாகிய மென்சொற்களையும், பலவாகிய கூந்தலையுமுடைய, நின் நிலைக்கு,மனமொத்த துணைவியராகிய காதலிமார், அறநூல் புகழ்ந்த சாலகத்தை (வேள்வித்தலைவியர் அணியும்

சிறப்பணியை) அணிந்து, தத்தமக்குப் பொருந்திய ஏவற்றொழிலைக் கேட்டுச் செய்ய, நீ எண்ணிறப்பப் பல வேள்விகளை வேட்டும், மண் பொறாத அளவு புகழ் பரப்பியும், விளக்கமுற்ற வேள்வி முடிபாகிய பெரிய காலத்தே, விருந்தினரைப் பொருந்திய, நினது திருந்திய மேம்பட்ட நிலையை யாம் எந்நாளும் காண்போமாக', என்று, சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயனை, ஆவூர் மூலங்கிழார் பாடுவர் *[புற.166:17,25]*. 'புலிகடிமாலே, நெடிய மலைப்பக்கத்தே வெற்றியோடு சிறந்த புகழ் பொருந்திச் சிற்றரையம், பேரரையம் என இரு கூற்றாற் பெயர் பெற்ற, பழைய ஊரின்கண், பலகோடிப் பொன்னை நுமக்குதவிய, நீடிய நிலையையுடைய அரையத்தின், கேட்டையும் இனிக் கேட்பாயாக. அது கெடுதற்குக் காரணம், நும் குடியுள், நும் போலும் அறிவையுடைய ஒருவன், புகழமைந்த செய்யுளையுடைய கழாத்தலையாரென்னும் புலவரை, இகழ்ந்ததன் பயனேகாண்', எனக், கபிலர், தம்மை இகழ்ந்த இருங்கோவேளிடம் கூறினார் *[புற.202:8]*. "புகழமைந்த தலைவ, நீ வள்ளியையாதலால், 'எமக்குப் பரிசில் நல்குவன் இவன்' என்று, நின்னை நினைத்து வந்த உயர்ந்த நிலையையுடைய பரிசிலேனாகிய யான், என்னை எதிரேற்றுக் கொள்ளாத மாந்தரது கொடுமையை, நினக்குச் சொல்லவும், நீயும் நின்னுடைய நினைவே செய்தாய்', என்று, பெருங்குன்றூர்கிழார், தமக்குப் பரிசில் நீட்டித்த குடக்கோச்சேரலிரும்பொறையிடம் வருந்திக் கூறினார் *[புற.211:7]*. கோச்சேரமான் யானைக்கூட சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையின் இறப்புக் குறித்த தீநிமித்தமாக ஒரு விண்மீன் விழுந்த இரவில் உச்சத்தேயிருந்த நாண்மீன் நிலை திரிந்து நின்றது *[புற.229:6]*. அடங்கிய கற்பினையும், சிறிய நுதலினையுமுடைய மடந்தை தன் கணவன் உயர்ந்த நிலையையுடைய விண்ணுலகத்தே சென்று புகுந்தானாக, அவனுக்கு உணவு கொடுத்தல் வேண்டிச் சிறிய இடத்தைத் தனது கண்ணீராலே, சாணாகத்தைக் கொண்டு, மெழுகினாள் *[புற.249:11]*. ஓவியம் போலும் அழகமைந்த இல்லின்கண், பாவை போன்ற வடிவமைந்த குறுந்தொடி மகளிருடைய அணிகலன்களை, அவை நிற்கும் நிலையினின்றும் கழலும்படி, அன்புசெய்த மள்ளன் மூங்கில் வளர்ந்த மலையிடத்தே அருவியாடிக், காட்டியானை கொணர்ந்த தந்த விறகினால் செந்தீயை வேட்டு, முதுகின்கண்ணே தாழ்ந்த சடையைப் புலர்த்து வோனாயினான் *[புற.251:3]*. 'பாணனே! நமது செல்வம் பட்ட நிலையைக் கேட்பாயாக', என்று, தலைவனொருவனின் வீழ்ச்சிக்குப்பின், வடமோதங்கிழார் வருந்திப் பாடினார் *[புற.260:8]*. போர்க்களத்தே பகைவர் சினங்கொண்டு சூழ்ந்த படையின் செறிந்த நிலை கெடுமாறு, மறவனொருவன் வேலேந்தி அதனைப் பிளந்து, முன்னேறினான் *[புற.275:4]*. புறங்காட்டி ஓடாத பீடுடையாளர் போர்க்களத்தே மடிந்தால் உயர்ந்தநிலையையுடைய உலகத்தே வானமங்கையரின் மணத்தைப் பெறுவர் *[புற.287:12]*. முன்றிலின்கண் யானை வேட்டுவன் துயில் கொண்டபோது, பார்வைமானாகிய பிணையைத் தழுவிப், பிறிதொரு கலைமான் திளைத்து விளையாட, அவற்றின் இன்புறு புணர்நிலையைக் கண்ட மனையோள், கணவனெழுதற்கும், அக்கலைமான் பிணையைவிடுத்துப் போதற்கும் அஞ்சி, இல்லத்தே நடமாடாதிருந்தாள் *[புற.320:6]*. கிணைப் பொருநன், தன்னைப் புரப்போரைக் காணாதபோது, தன் கலன்களைச் சுருக்கிக் கொண்டு, நிலை தளர்ந்து பாழ்பட்ட அசைந்த நிலையையுடைய, பலகால்களமைந்த, மன்றத்தின் ஒருபக்கத்தே தங்கியிருந்தான் *[புற.375:2(2)]*. 'அவியனென்றொருவனைப் புரவலனாக உடையேனாதலால், யான் வெள்ளியின் நிலை குறித்துச் சிறிதும் வருந்தேன்', என்பர், மாறோக்கத்து நப்பசலையார் *[புற.383:23]*. கிணைஞ்ன் சென்று தன் வறுமை நிலையை அறிவித்தானாக, அப்பொழுதே அவனது வறுமை அகன்றொழிய, அவனுக்குக் கொடுத்தளித்தான், சிறுகுடிகிழான் பண்ணன் *[புற.388:5]*. 'நின்னை நினைந்து வருவோரது கொள்கலத்தை நிறைப்போனே, நீ எம்மிடத்து நீங்காத அன்பமைந்த நிலையுடையையாகுக', என்று, தடாரிப் பொருநன், சேரமான் வஞ்சனிடம் வேண்டினான் *[புற.398:15]*. போரினின்றும் மாறுபடாத வலிமையுடைய பகைமறவர், எதிர்த்து நிற்கும் நிலையழியும்படி, அவரைக் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் வென்றான் *[பதி.34:9]*. களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலின் ஆட்சியில் வாழ்வோர் பழைய நிலையமைந்த சிறப்பினையுடையவர் *[பதி.37:10]*. 'தொலையாத கல்வியுடையோனே, நின் ஆரவார மிக்க மகிழ்ச்சிக் காலத்தே, நினது செல்வத்துப் பெருமை நிலையை யாம் கண்டேம்' என்று, கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனைப் பாடுவர் பரணர் *[பதி.43:31]*. களிறுகள் பரந்து செல்லவும், விரைந்த செலவினையுடைய குதிரைகளை மேலாட்கள் அடக்கிச் செலுத்தவும், விளங்குகின்ற கொடிகளசையும்படி தேர்கள் மறிந்து சுழலவும், இவற்றோடு, கூடிய முன்னணிப் படைகளையும், வெல்போரினையுமுடைய வேந்தரும், வேளிரும் வஞ்சினங்கூறித், துணைவர, அத்துணைவலியின் மிகுதியால் செருக்குற்றுக் கூடிவந்த மோகூர் மன்னான பழையனது வெற்றியுண்டாதற்குக் காரணமான கூட்டத்தின் நிலை நடுங்குமாறு, தாக்கியழித்தான், கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் *[பதி.49:9]*. பகைமறவர் பலர், உயர்ந்த நிலையுடைய உலகத்தை எய்தினராய்க், களத்தே மடியுமாறு, நல்ல போர்களை வென்றான், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் *[பதி.52:9]*. 'என்போலும் இரவலரின் ஆக்கத்தின் பொருட்டு நீ சிறிது காலமும் உயர்ந்த நிலையுடைய உலகத்திற் செல்லாமல், இவ்வுலகத்தே நெடுங்காலம் வாழ்வாயாக', என்று, ஆடுகோட்பாட்டச் சேரலாதனை, வாழ்த்துவர் காக்கைபாடினியார் நச்செள்ளையார் *[பதி.54:10]*. இடியேறு, குன்றையும் நிலை தளரச் செய்யும் *[பதி.63:10]*.

மறைமொழிந்தமையால், உயர்ந்த நிலையையுடைய உலகத்திலுள்ள முனிவரை இன்புறுத்தினான், செல்வக் கடுங்கோ வாழியாதன் *[பதி.70:19]*. வெல்லுதற்கரிய போரிலே, தாங்குதற்கரிய நிலையைத் தாங்கி நின்ற, பெருங்களிற்றியானையொடு, அருங்கலன்களைத், திறையாகத் தராத பகையரசர், பெருஞ்சேரலிரும்பொறையின் படையெடுப்புக்கண்டு நடுங்கினர் *[பதி.71:20]*. பெருஞ்சேரலிரும் பொறை, பகையரசர் தம்மில் ஒன்று கூடி வந்த நிலையை,யழித்தான் *[பதி.76:2]*. சேரமான் படையெடுத்து வரக்கண்ட பகையரசர், அரிய அரண்களோடு, காவலமைந்த தேயத்தாராயினும், நெஞ்சுறுதி கெட்டு நிலை தளர்ந்து நடுங்கினர் *[பதி.தி.2:14]*. போரில் நின் நும் மாறுபடாத வலிமையுடைய பகைமறா எதிர்த்து நிற்கும் நிலையழியும்படி, அவரைச் சேரவேந்தன் வென்றனன் *[பதி.தி.4:7]*.

சோழன் கரிகாற்பெருவளத்தானையடைந்து, அவனால் பேணப்பட்ட பொருநன், அவனைக் காண்பதற்கு முன்னைய மாலைப் பொழுதில் தன்னிடத்தில் நின்ற வறுமையையும், கண்டபின் விடிந்த காலைப்பொழுதில் தன்னைக் காண்போர் 'இவன் நேற்று வந்த வறிய பொருநனல்லன்', என்று, மருளுதற்குக் காரணமாக வண்டுகள் இடையறாது மொய்க்கின்ற மணமிக்க நிலையையும், தானே கண்டு மயங்கி இது கனவாயிருக்குமென்று கலங்கிப், பின் நனவென்று தெளிந்தான் *[பொரு.97]*. ஊகம்புல்லால் வேயப்பட்ட உயர்ந்த நிலையுடைய மதில்களையும், செங்குத்தான நிலையுடைய நெடிய முனையமைந்த வலிய கழுக்கள் நிரைத்த ஊர் வாயிலையும், உடையது, எயினர் வாழும் இருக்கை *[பெரு.122,127]*. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், தொன்றுதொட்டு வந்த பகைவர் நாட்டில் புகுந்து, அவர்தம் காவலையுடைய பொழில்களின் நிலையைக் கெடுத்தழித்தான் *[மது.153]*. உயர்ந்த நிலையையுடைய விண்ணுலகத்தை, அமிழ்தத்தோடே, பெற்றாலும் அவற்றைத் தருகின்ற, பொய் நீங்க, மெய்யுடனே நட்புச் செய்தலையுடையவன், பாண்டியன் நெடுஞ்செழியன் *[மது.197]*. சிறந்த மறைகளைப் பொருள் விளங்கப் பாடி, விழுமிய தலைமை பொருந்திய வேள்விகள் முதலிய தொழில்களோடே பொருந்தி, இவ்வுலகத்திலிருந்தே உயர்ந்த நிலையுடைய விண்ணுலகத்தை எய்துவர், அந்தணர் *[மது.471]*. நன்னன் சேய் நன்னனுடைய காட்டாரண்கள் அவனோடு போரிட வருகின்ற பகையரசரின் நிலையைத் தளர்ச்சியடையச் செய்யும் *[மலை.378]*.

பொருள்வயிற் பிரியக் கருதிய தலைமகன், மிகுதியும் அளி செய்யும் நிலையைப் பொறாது, ஐயுற்ற தலைமகள், மாறுபட்ட முகத்தினளாய், அவன் அழைக்கும் நிலையையும் கேளாமலே, நாணம் முதலியவற்றை மறந்து, அவனிடம் அணுகி வந்து நின்றாள் *[அக.5:1,2]*. மலைப்பக்கத்தே கூரிய கற்கள் விரல் நுனியைச் சிதைக்கின்ற, வரிசைப்பட்ட நிலையை உடைய வழிகள் அமைந்த, காட்டுநெறியிலே தலைவன் பொருள் வயிற்பிரிந்து செல்லக் கருதினான் *[அக.5:14]*. தனக்கென ஒன்றையும் வரைந்து காக்கும் நிலையின்றி எல்லாவற்றையும் இரவலர்க்கு ஈயும் வண்மையமைந்தவன், கோடைப் பொருநனாகிய பண்ணி *[அக.13:9]*. உயர்ந்த நிலையையுடைய பெரிய மனையின்கண் இருந்து புறாச் சேவல் தான் விரும்பும் பெடையை அழைக்கும் *[அக.47:12]*. 'பாகனே, ஒருக்கணித்து நோக்கும் அமர்த்த கண்களையுடையளாய், மகனோடே பாலுண்ணுதற்குத் திங்களை விளித்து, விரலாலே அழைக்கின்ற எம் காதலியாகிய, பூங்கொடி போல்வாள், தன் புதல்வனைப் பொய்த்து நிற்கும் நிலையைக் காண்குவம்; தேரை விரைந்து செலுத்துக', என்று, வினைமுற்றி மீளும் தலைவன், தேர்ப்பாகனிடம் கூறினான் *[அக.54:22]*. புல்லூற்றின் எற்றுதலினின்றும் தப்பிய குறும்பூழ்ச்சேவல், சிறுகுடிக்கண்ணே குடியிருந்தோர் விட்டுப்போன ஓங்கிய நிலையையுடைய பெரிய மனையினது இறை நிழலிலே தங்கி அயா உயிர்க்கும் *[அக.103:8]*. 'பாகனே, நமது விரைந்த குதிரை பூண்ட தேரோலி கேட்டால், மானேற்றுடன் பிணையினது விருப்பமிக்க சேர்க்கை நிலையாகிய நள்ளிரவுக் கூட்டம் நிகழ்தல் கூடுமோ? கூடாதாகலின், குதிரைகள் மெல்ல நடக்கும்படி, அவற்றைத், தாற்றுக் கோலால் குத்துதலை மறந்து செலுத்துவாயாக', என்று, வினைமுற்றி மீளும் தலைவன், தேர்ப்பாகனுக்குரைத்தான் *[அக.134:12]*. பிரிந்து சென்ற காதலர் மீண்டு வருவதாகக் கூறிய கார்காலம் இதுவேயாகவும், இன்னும் இவர் வந்திலராயின் அவரது நிலையாதோ, எனத் தலைவி, தலைவனது பிரிவிடையே வருந்தித் தோழிக்குரைத்தாள் *[அக.139:17]*. 'காடு கவினெய்துமாறு மழைபொழிதலின், கானம், மலர்களின் மணம் பெற்றது; இன்னும் மீளாத காதலரின் நிலை என்னோ', என்று, தலைவி, பிரிந்த தலைவனையெண்ணி வருந்துவாள் *[அக.164:8]*. 'நெஞ்சே, நீ என்னோடு காட்டுவழியிலே வருதலைத் துணிதலாற்றாமல், காதலியிடத்தே மீளக் கருதினையாயின், அவளிடம், என் நிலையை உரைப்பாயாக', என்று பிரிந்து செல்லும் தலைவன், இடைச்சுரத்தே மீளக் கருதியநெஞ்சிற்குக் கூறினான் *[அக.181:3]*. 'தோழி, தலைவரைப் பிரிந்திருக்கும் நம்மிடத்தே வந்து தங்கிய வாடை, அவரிடத்தே விரைந்து சென்று, துணையில்லாத வாழ்க்கையையுடைய நம் தன்மையைக் கூறி, அவர் நிலையை அறிந்து வருமாயின் நன்று', என்று, தலைவி, பிரிவிடை வற்புறுத்தும் தோழிக்குரைத்தாள் *[அக.243:11]*. நெருங்கிய, துளிகள் மிக்க, அலைகளால் வருந்திய, புன்னைமரம், அசையும் நிலையுடையதாயிருந்தது *[அக.250:2]*. 'இக்கூதிர்க் காலத்தே, நம்மைப் பிரிந்து, வேந்தனது பாசறையிலே தங்கியுள்ள காதலர், நம் துன்பநிலையை அறியாராயினும், தம்மையின்றியமையாத நம் நிலையையேனும் அறிந்தனரோ', என்று, தலைவி, தோழியிடம் வினவினாள் *[அக.264:11(2)]*.

தலைவன் தான் ஏந்திய வேலே செல்லுதற்குரிய நெறியை விளக்கிக் காட்டத், தனியனாய்த், தனது தலைக்கண்ணியின் மணத்தைக் காற்று வெளிப்படுத்த, மெய்ம்மலியுவகையனாய், இரவுக்குறிக்கண் வந்து, தலைவியின் மனையிலே புகும் அந்நிலை கண்டு முருகனென வுணர்ந்த செவிலி, முகமன் கூறிச், செந்தினையை, நீரொடு தூவி, அந்நெடுவேளைப் பரவினாள் *[அக.272:12]*. 'தோழி, இப்பனிக் காலத்து நள்ளிரவிலே நம் பிரிவுத் துன்பத்தையறியாமல் வேந்தனது பாசறையிடத்தே நீடித்திருக்கும் அறனிலாளராகிய காதலர் நம்முடைய இத்துன்பநிலையைக் களைய வருவரோ, என்றெண்ணி, வாடைக்காற்றினால் என் தன்மையைப் பொறுக்க மாட்டேனாகின்றேன்', என்று, பிரிவிடையாற்றாத தலைமகள், பருவவரவு கண்டு, தோழிக்குக் கூறினாள் *[அக.294:14]*. வலிய வில்லிலே தொடுத்தலமைந்த அம்புகளின் செறிந்த நிலையையுடையவர், வடுகர் *[அக.295:13]*. 'வினைவயிற் பிரிந்த உள்ளமே, நம் பிரிவைத் தனக்குணர்த்திய அளவிலே, விடியும் பொழுதிலேயுள்ள மதிபோல் அழகினையிழந்த திருமுகம் குனிந்து, நிலங்கிளைத்துக், கண்ணீர் மார்பிலே வீழக்கால் ஓரிடத்தே நிலைத்தலில்லாமல் கலங்கி, வருத்தத்தால் அழிந்த காதலியினின் பேதுற்ற நிலையாகிய அதனை மறந்துறைதல் அரிதாகின்றது காண்', என்று, தலைவியைப் பிரிந்து போகும் தலைவன், இடைச்சுரத்தே, தன்னெஞ்சிற்கு, உரைத்தான் *[அக.299:21]*. 'பாணனே, இனிய நரம்புத் தொடையினையுடைய நல்ல யாழிலே, பிரிந்த காதலர்க்கு வருத்தத்தைத் தருகின்ற செவ்வழிப்பண் தோன்றும் மாலைப்பொழுதாகிய இக்காலத்திலும் நம் காதலர் மீண்டுவாராராயின், நம் நிலை என்னோ? சிறிது கூறுவாயாக', என்று, பருவங்கண்டு ஆற்றாத தலைவி, பாணனை வேண்டினாள் *[அக.314:13]*. மலையைக் கடந்து நெடுந்தொலைவு சென்றனராயினும், நம் காதலர் தாம் கூறிய வாய்மையாகிய நிலை தவறி நாள்கள் இடைப்படாமல், விரைந்து வருவர், என்று, தோழி, தலைவியைப் பிரிவிடை ஆற்றுவித்தாள் *[அக.333:13]*. பசும்பூட் பாண்டியனுடைய பொதியமலை, தெய்வத்தையுடைய உயர்நிலை அமைந்தது *[அக.338:6]*. 'நெஞ்சே, அருஞ்சுரம் நீந்திவந்த வருத்தமொடு, செயலற்றுப், பொதியிலினிடத்தே அமர்ந்து, முழங்கால்களைக் கைகளாற் பூட்டிய தனிமைத் தன்மையமைந்த இருப்புடனே, காதலியின் நிலையினையே எண்ணியிருக்கும் நம் நிலையை அவள் அறியாதவளாய்த் துயிலொழிந்தனளோ', என்று, இடைச்சுரத்தே, தலைவன், தன்னெஞ்சை, வினவினான் *[அக.373:9(2)]*. 'பிடர்மீது தங்கிய நிலையினின்றும் அசைந்த பெரிய கூந்தலையுடையவள், தலைவி *[அக.379:11]*. விற்படைகள் நெருங்கிய போரினை அழியக் கொன்று, நற்புகழை நிறுத்தி மாண்ட, மானமிக்க மறவரின் நடுகற்கள், பாலைவழியிலே, வரிசைப்பட நிற்கும், நிலையினவாய் இருந்தன *[அக.387:15]*.

'தோழி, தலைவனிடம் சென்று எனது நல்ல மாமையுடைய மேனியது மிக்க துயர்நிலையைக் குறித்து, 'இது நும்மாலாகியது', என்று, விளங்கக் கூறினால் என்ன' என்று, தலைவி, தோழியை வினவினாள் *[குறு.185:8]*. 'தோழி நினது நிலையை யான் தனக்குரைத்தேனாகத், தலைவன், இக் களவொழுக்கம் நீட்டித்து நிகழாதவாறு நாணினன்', என்று, தோழி, தலைவிக்குரைத்தாள் *[குறு.265:6]*. 'துறைவனே, என்தோழி, பழைய செறிவு நிலையினின்றும் நெகிழ்ந்த வளைகளையுடையளாய், மிகவும் பசலையுற்றாள்', என்று, தலைவியின் மெலிவு குறித்துத், தலைவனிடம், கூறினாள், தோழி *[குறு.303:4]*. 'தோழி, பறவைகளும் ஒலித்தன; பூக்களும் கூம்பின; கானலும் தனிமையுடையதாயிற்று; வானமும் நம்மையே போன்ற மயக்கமுடையதாய்ப் பகல் கழியப் பொலிவழிந்தது; இந்நிலையில், என் நோயினைக், காதலர்க்குச் சென்று கூறுவோரைப் பெற்றால், யான் இனிமேலும் உயிரோடு இருப்பேன்', என்று, வரைவிடை ஆற்றாத தலைவி, மாலைகண்டு தோழிக்குரைத்தாள் *[குறு.310:5]*. 'தோழி, கார்காலத்திற்குரிய பெருமழை, மாலைக்காலத்தே வந்தது; பொன்னையொத்த என் மேனியின் நன்னலத்தைச் சிதைத்தோராகிய காதலர் இன்னும் வாராராயின் நம் இன்னுயிர் நிலை என்னாகும்', எனத், தலைவி, பருவவரவின்கண் வேறுபட்டுத், தோழியை வினவினாள் *[குறு.319:8]*. 'தோழி, தலைவருடைய மலையிலே, நேற்று மாலை பெய்த மழையாலுண்டாகிய ஆற்றுடன், காலை, இங்கே வந்த காந்தளின் இலைகுழைய, அதனைத் தழுவுதலையும், அதன்கிழங்கினை வீட்டிற்கொணர்ந்து நடுதலையும், விலக்காதவளாகிய அன்னைக்கு உயர்ந்த நிலையுடைய விண்ணுலகமே கைம்மாறாகக் கருதுமிடத்துச் சிறியதாகும்', என்று, தலைவி, தோழியிடம் கூறினாள் *[குறு.361:2]*.

'மகிழ்ந! கடலில் மரக்கலங்கவிழ்ந்ததாகக், கலங்கி வீழ்ந்தோர், மிதந்து வந்த பலகையை விரைந்து பற்றிக்கொள்வதுபோல, உன்னைப், பரத்தையர் பலர் பற்றிக்கொண்ட நிலையைக் கண்டனென். கண்டு என் செய?' எனத், தோழி தலைவனிடம் கூறினாள் *[நற்.30:10]*. 'என், கை பற்றியமையை நின் மனையோட்குரைப்பேன் என்றவழி, மலையமான் திருவோலக்கத்தின் முன்பு, வேற்றுநாட்டுக் கூத்தர் முழக்குகின்ற மத்தளத்தின் அதிர்ச்சி போலும், நன்னராளன் நடுங்கிய நிலையினை, நினைக்குந்தோறும், நகையாகின்றது', என்றாள், பரத்தை *[நற்.100:12]*. 'காதலர் பிரியக் கலங்கிய நிலையாதோ என வினவும் தோழி! வாடையில், இருளில், தொளியுடைய தொழுவில், உச்சியில் தூக்கிக் கட்டிய ஆனின் நிலையாகக், கழிவேன்', எனத், தலைமகள் உரைத்தாள் *[நற்.109:3,9]*. மராமரத்தின், பக்கம் பொருந்தி, வில்லையுடைய மறவர் மிக்கிருக்கும் நிலைக்கு அஞ்சாது, ஈன்ற பெண்புலியின் பசிதீர, ஆண்புலி, களிற்றின் மேல் பாயும் *[நற்.148:6]*. 'கீழும் மேலும் காப்போர் இல்லாது தனித்துச் செல்லும் யானைபோலத், தனித்து வந்து, பனியலைக்க வருந்தியவன் நிலையினைக் கண்டு, அவன் மார்பினை முயங்கி வருவோமா?'

எனச், சிறைப்புறமாகத், தோழி சொன்னாள் *[நற்.182:10]*. 'பருவஞ்செய்த மழை, அவர்நிலையினை இப்போது நன்கறிக, என வருதல், சான்றோர்க்குப் பொருந்துவதன்று', என்று தலைமகள், பருவங்கண்டழிந்து கூறினாள் *[நற்.238:6]*. இளமடந்தையினது வனமுலையினை முயங்குதலை நினைந்து, மீன் துயிலும் இராப்பொழுதும், யான் துஞ்சேன். என் நிலையாதாகுமோ?' என்றான், தலைமகன் *[நற்.319:11]*. 'அன்புடைய சான்றோராகிய அவரை நம்புதல் பழியெனின், அழும் கண்ணோடு சாதல் இனிது. அந்நிலையன்றாயின், அவர் மார்பைத் தடையின்றிப் பெறும் தன்மை வேண்டும்', என, வன்பொறை எதிரழிந்தாள், தலைமகள் *[நற்.327:4]*. 'தோழி! கதிரும் மறைந்தது; அவர் தேரொலி இரவுந்தோன்றாது, குருகு பனைமடலிலிருந்து தன் பேடை தன்னொடு சேருமாறு உயிர் போகுமளவில் பயிரும்; இவ்வியல்பில் நின் நிலையை மறைத்தல் வேண்டும் என்கின்றாய், இந்நோய், என்னுயிரை நிலைத்திருக்க விடுமோ?' என்றாள், தலைமகள் *[நற்.338:4]*. தினைக்கதிர், பிடியின் கை போல் வளைந்து கவிழும் புனத்தில் காவலை மேற்கொண்டோமாயின், நம்நிலை தெரியானாகித் தன் இனிய ஊர்க்குச் செல்வான் கொல்லோ?' என்றாள், தோழி *[நற்.344:5]*.

'பாண! கொண்கன் பிரிந்தனனாகக், கைவளை நீங்கிய நிலையை (தன்மையுமாம்) நீ அவன் மாட்டுச் சென்றுரைத்தற்குரியை', எனத், தலைமகள் பாணனிடம் கூறினாள் *[ஐங்.140:3]*. 'கொண்க! மடவரலது நுதல் புதிய நாற்றம் பெற்று மயக்கத்தைக் கொடுத்தமையால் அன்னை ஐயுற்றனள்; அவளது நிலை இது', என்று தோழி தலைவனிடம் உரைத்தாள் *[ஐங்.194:4]*. பலாவின் வெயில் காய்ந்த சிறுகாயைச் சுரஞ்செல்வோர் உண்டு நீங்கும் காடு பிற்படத் தலைவர் வந்தார். எனவே, மடந்தை! நின் அல்குல் வாடிய நிலைநீங்குவதாக!, எனத், தோழி தலைவிக்குரைத்தாள் *[ஐங்.351:5]*. 'விடலை எயிற்றிக்கு இந்நிலையினை விளங்கக் கூறினேன். ஆகவே, விரையாதே' எனத், தோழி, தலைமகளுக்கு உடன்போக்கு உணர்த்தியமை கூறினாள் *[ஐங்.364:2]*.

மதுரையின்கண் அழகிய நிலைகளை உடைய மாடங்கள் இருந்தன *[கலி.10:41]*. தனக்குத் திருமணத்தை நடத்துவித்துத் தன்நிலையை உயரச்செய்ய வேண்டுமென்று தலைவி தெய்வங்களைப் பரவினாள் *[கலி.46:16]*. காமம் கைம்மிக்கு மடலேறும் தலைவன், சான்றோரிடம், சான்றோரே, 'என் துயரினை அறிந்த நீங்கள் தவம்செய்து உயர்நிலை உலகம் அடைய வேண்டிய ஓரரசன், அதைத்தவற விட்டபோது, ஆன்றோர் அவனுக்கு அறிவூட்டி அத்தவத்தைச் செய்வித்து உயரச் செய்ததுபோல், எனது துயர்நிலையைக் களைவீராக என்ற கூறினான் *[கலி.139:36,37]*.

**4.பொழுது.** 'இறைவனே, குற்றந்தீர்ந்த கற்பினையுடையளாய எம்மை விரும்பிய காதலி இறந்துபடாது இன்னும் உயிர்வாழ்வுடையளாயின், அவள் எம்மை நினையாதிருத்தல் அரிதாகலின், என்னைக் குறித்துச் சொல்லும் வருத்தமுடையளாய்ப் பலபட வெறுத்துறையும் அம்மனைவியது துன்பந்தீர்க்க வேண்டி யான் இந்நிலையே- இப்பொழுதே - விடை கொண்டேன்', என்று, பெருங்குன்றூர்கிழார், தமக்குப் பரிசில் நீட்டித்த சேரமான் குடக்கோச் சேரலிரும்பொறையிடம் கூறினார் *[புற.210:11]*. கிணைஞன் சென்று தன் வறுமைத்தன்மையை அறிவித்தானாக அந்நிலையே அவனது வறுமை அகன்றொழிய அவனுக்குக் கொடுத்தளித்தான், சிறுகுடி கிழான் பண்ணன் *[புற.388:5]*.

'தொண்டைமானிளந்திரையனிடத்தே சென்று நீ அவனை ஏத்தி நின் பேரியாழை வாசித்துப் பாடும்போது நின் கலையின் கூறுகளெல்லாம் தெரியும்முன்னே, நீ நின்ற அந்நிலையிலேயே, அவன் நில்லாவுலகத்தின் நிலைமையாகிய புகழைப் பெறுதல் நன்றென்று, ஆராய்ந்து, அவ்விடத்திலேயே நின்னை அருகிலழைத்து அருளுவான்', என்று, பெரும்பாணன், ஆற்றுப்படுத்தப்பெறுகின்றான் *[பெரு.464]*. தலைவியை அணைந்து அவளது நெற்றியை நீவிய தலைவன், தோழியின் முகத்தை நோக்கிச் சிரித்த அந்நிலையிலேயே நாணமும், அச்சமும் வந்து தோன்றுதலால் அவ்விடத்தினின்றும் தலைவி விடுபட முயன்றாள் *[குறி.83]*.

தலைவனின் பிரிவை உணர்ந்த அளவிலே விடியும் நிலையில் உள்ள மதிபோல் தலைவியின் முகம் அழகினை இழந்தது *[அக.299:11]*. பாணனே! யாழினிலே, பிரிந்த காதலர்க்கு வருத்தத்தைத் தருகின்ற, செவ்வழிப்பண் தோன்றும் மாலைப் பொழுதாகிய இந்நிலையிலும், நம் காதலர் மீண்டு வாராராயின், நம் நிலைமை என்னோ? சிறிது கூறுவாயாக, என்று, பருவங்கண்டு ஆற்றாத தலைவி, பாணனை வேண்டினாள் *[அக.314:13]*. 'நெஞ்சே நாள்தோறும் கனவிலே பொருள்கள் தோன்றி மறையும் தன்மையவாய், நனவின்கண், நாள் கழிதலும், மூப்பு வருதலும், அரிதாகப் பெறுகின்ற சிறப்பினையுடைய காமத்தின் இயற்கையும் ஆகிய இவற்றை, இந்நிலையில் அறியாயாயினும், சுரநெறியைக் கடந்து சென்றபின், காதலியின் பண்புகளை நினைந்து மயங்குவாயல்லையோ', என்று, தலைவன், பொருள்வயிற்பிரியக் கருதிய தன்னெஞ்சிற்கு, உரைத்தான் *[அக.353:6]*.

'பாக! இளையர் என்முன் சென்று, என் வரவை அறிவித்தனராக, நீராடாத கூந்தலை நீராடிக் கழுவிச் சில மலரைப் பலவாகிய கூந்தலில் பெய்த அந்நிலையில், யான், புக, அரிவை மகிழ்ந்த தன்மை மறத்தற்கரிது', என்றான், வினைமுற்றி மீண்ட தலைமகன் *[நற்.42:10]*. 'தினையே! என்மேனியின் பழைய அழகழியக் கடவுட் பேணி, வெறியாடத்

தொடங்குநிலையில், கிளி கவர்ந்து செல்லாதவாறு சிறிது நீட்டித்து விளைவாயாக', எனச், சிறைப்புறமாகத் தோழி தலைவனைச் செறிப்பறி வுறுத்தினாள் *[நற்.251:9]*.

'பரத்தைமைத் தலைவர் வந்தால், புலப்பேன் என்று யான் இருந்தேன்; ஆனால், அவரைக் கண்ட அந்நிலையிலேயே, என் நெஞ்சும் அவரொடு கலப்பேன் என்னும், தலைவர்வரின் ஊடுவேன் என்று யான் இருந்தேன்; ஆனால், அவரைக் கண்ட அந்நிலையிலேயே என் நெஞ்சம் அவரொடு கூடுவேன் என்னும். தலைவர்வரின் துனிப்பன் என்று யான் இருந்தேன்; ஆனால், அவரைக்கண்ட அந்நிலையிலேயே என்நெஞ்சம் தனித்தே அவரிடத்துதாழும்' என்று, தலைவி, தோழியிடம் கூறினாள் *[கலி.67:8,12,16]*.

**5. தன்மை.** இனிய நிலை - தன்மை - அமைந்த பொற்பூக்கள் பொருந்திய கற்பகக் காவினையுடையது, விண்ணுலகம் *[புற.38:11]*. அன்னச்சேவலே! குமரியாற்றின் அயிரை மீனை மேய்ந்து, வடதிசையில் உள்ள இமயமலைக்கண்ணே போகும் நீ, இடைப்பட்ட சோழநாட்டின்கண் சேர்குவையாயின், உயர்ந்த நிலையினை உடைய மாடத்தின்மேல், நின் பெடையோடே தங்கி, வாயிற் காவலர்க்கு உணர்த்தி விடாமல், தடையின்றிக், கோயிலுள் புகுந்து, என்பெருங் கோவாகிய கிள்ளி கேட்குமாறு, பிசிரென்னும் ஊரிலே, ஆந்தை என்பானின் அடிக்கீழ், என்று, உன்னைக் குறித்துச் சொல்லுவையாகில், நின்பேடை பூணுமாறு, தனது விருப்பமுறும், நல்ல அணிகலன்களை அவன் நினக்கு அளிப்பான், என்று கோப்பெருஞ்சோழனைக் குறித்துப் பாடுவார் பிசிராந்தையார் *[புற.67:9]*. போர் செய்யும் படையையுடையவன் உயர்ந்த நிலையமைந்த மாடத்தையுடைய உறையூரிடத்தே இருக்கின்றான், என்று, கூறிச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனிடம், பாணனை ஆற்றுப்படுத்துவர், ஆலத்தூர்கிழார் *[புற.69:12]*. பெரிய நிலையினையுடைய பலாமரங்கள் நிறைந்தது, நாஞ்சில் மலை *[புற.140:1]*. ஓங்கிய நிலையுடைய வேங்கை மரத்தின் பூவைப் பனைநாரில் கட்டி, நடுகற்குச் சூட்டுவர் *[புற.262:2]*.

ஒளிறுகின்ற நிலையினையுடைய உயர்ந்த கொம்புகளை ஏந்தியது, களிறு *கலி.42:18*. நல்லிலக்கணம் பொருந்திய புள்ளிமானின் தோலினானறும், ஊனையுதிர்த்து, மற்றுமுள்ள குற்றங் களைந்து, வட்டமாக அறுத்து, ஒளி வீசுமாறு பாடம்செய்து, அதன் விளிம்பிலே கொடுமணம் என்னும் ஊரிற் செய்யப்பட்ட தொழில் மாட்சிமையுடைய அரிய அணிகலன்களையும், பந்தர் என்னும் ஊரிற் பெற்ற பலர் புகழ் முத்துக்களையும், ஒன்றற்கொன்று இனமாகச் சேர்த்துக் கட்டிக், கூரிய இரும்பினால் அத்தோலினகத்தே செய்தற்குரிய தொழில்களையெல்லாம், செய்தமைத்த பின், வேள்வி செய்விக்க வல்லவன், அதனை, வேள்வித் தலைவியாகிய சேரமாதேவியின் தோளிலே அணிவதற்குரிய நிலையினைச் செய்து கொடுத்தான் *பதி.74:14*.

நீவிர், பல வேற்படைகளையுடைய திரையனைக் கருதிச் செல்வீராயின், அவன் நிலையைக் கேள், என்று, பெரும்பாணனுக்குத், தொண்டைமான் இளந்திரையனின் நிலைமைகள் கூறப்படுகின்றன *[பெரு.38]*. கொழுவிய வட்டையிலே செருகப்பட்ட திருந்திய நிலையமைந்த ஆரத்தையுடையது சகடவுருளை *[பெரு.46]*. பெரிய நிலையமைந்த பலாமரத்தின் அடியிலிருந்து பழத்தைப் பெறுவர் *[பெரு.77]*. மருதநிலத்து ஊர்களில் பலவாகத் திரண்ட நிலையையுடைய நெற்கதிப்போர்களைப் பரப்பிக் கடாவிட்டனர் *[பெரு.237]*. உயர்ந்த நிலையையுடைய வானளாவிய மாடத்தின்கண், மகளிர் தம் கால்களில் அணிந்த பொற்சிலம்பொலிப்பப் பந்தாடுவர் *[பெரு.332]*. தொண்டைமான் இளந்திரையனிடத்தே சென்று, நீ, அவனை ஏத்தி, நின் பேரியாழை வாசித்துப் பாடும்போது, நின் கலையின் நிலையெல்லாம் தெரியுமுன்னே, நீ நின்ற அப்பொழுதிலேயே, அவன் நில்லா உலகத்து நிலைமையாகிய புகழைப்பெறுதல் நன்றெனத் தெரிந்து, நினக்கு அருளுவான் என்று பெரும்பாணன், ஆற்றுப்படுத்தப் பெறுகின்றான் *[பெரு.464]*. ஓங்கிய நிலையுடைய கரும்புடனே நெற்கதிரையும் யானைக்கு ஊட்டுவர் *[முல்.32]*. ஓங்கிய நிலையுடைய, களிறு மேம்படுவதற்குக் காரணமாகியவன் செழியன் *[மது.15]*. ஓங்கிய நிலையுடையது, மதில் *[நெடு.79]*. பாண்டிமாதேவியின் கட்டிலைச் சார்ந்த மேற்கட்டியின் திரண்ட கால்கள் வலிய நிலையுடையன *[நெடு.157]*. திண்ணிய நிலையமைந்த மருப்பினையுடையது, ஆடு *[நெடு.160]*. தத்தம் சால்பும், மேம்பாடும், ஒழுக்கமும் குன்றுமாயின் அதனாலாகிய அழுக்கைப் போகும்படி கழுவி, விளக்கமுடைய பழைய புகழை முன்போல் அந்நிலையே நிறுத்துதல், குற்றமற்ற, அறிவையுடைய, மேலோர்க்கும் எளிய செயலென்று, அறிஞர் கூறமாட்டார் *[குறி.17]*. திண்ணிய நிலையுடைய கடம்ப மரத்தை மாலையால் வளைத்தனர் *[குறி.176]*. தலைவன் வளமையுடையனாயினும், எந்நாளும் தன்னுடைய நற்பண்புகளாகிய நிலையினின்றும் நீங்கினானல்லன் *[குறி.245]*. பருத்த நிலையினையுடையது, நெடியதூண் *[பட்.250]*. தினைப்புனங் காக்கும் குறவர் உயர்ந்த நிலையமைந்த பரண் மேலேறி நின்று, வீசுகின்ற கவண்கற்கள் புனத்தைத் தின்றழிக்க வருகின்ற யானைகளின் பகைநிலையை தளர்ச்சியுறச் செய்யும் *[மலை.204,206]*. உயர்ந்த நிலையினையுடையது போர்த்தொழில் பயின்ற யானை *[மலை.225]*.

முடம்பட்டு முதிர்ந்த பெரிய நிலையையுடைய புன்னை மரத்தின் கரிய கிளைகளில் பறவைகள் தங்கும் *[அக.10:3]*. கோடையில் தளிரின்றிச், செங்குத்தான நிலையுடையது, யாமரம் *[அக.33:3]*. நெடிய நிலையமைந்த யாமரத்தைக் குத்தி மதம் படியும் வண்டுகளை யானை, ஒட்டும் *[அக.59:8]*. வளைந்த

நொச்சிமரம், வரி நிறைந்த நிலையினையுடையது [அக.165:10]. குறி தப்பாது வாய்த்த சிவந்த அம்பினையுடைய வில்லைக் கொண்ட மறவருடைய நல்ல வெற்றி நிலையைப் பொறித்த நடுகற்கள், பாலை வழிகளில் நிலைத்தலைப் பெற்றிருக்கும் [அக.179:8]. திண்ணிய நிலையமைந்த பற்களையுடையது செந்நாய் [அக.199:9]. களிற்றின் மருப்பு, திண்ணிய நிலையுடையது [அக.211:4]. நீடிய நிலையுடைய யாமரம் நிறைந்தது சுரன் [அக.263:8]. சுரன் அசையும் நிலையுடைய யாமரத்தின் வரிநிழலுடையது [அக.278:11]. இரவுக்காலத்தே தலைவியைக் காணவந்த தலைவன், அவள் மனையின், திண்ணிய நிலையமைந்த கதவைத் திறந்து, அவளைப் புணர்ந்து பாராட்டிச்சென்றான் [அக.311:3]. பெரிய நிலையையுடைய புன்னையின் தாதணிந்தது துறை [அக.320:10]. நீண்ட நிலையாகிய அடியை உடைய இருப்பைப் பூவைக் கரடி தின்னும் [அக.331:1]. ஆடுகின்ற காற்றுக்கு அசைகின்ற நிலையையுடையது, இற்றிமரம் [அக.345:19]. செங்குத்தான நிலையுடைய மூங்கில் ஆடும்படிகோடை (மேலைக்காற்று) வீசும் [அக.353:6]. அசையும் நிலையினையுடைய கொன்றை மரத்தடியிலிருந்து கோவலர் குழலூதுவர் [அக.399:10].

பருத்த நிலையுடைய தாழை நிறைந்தது கானல் [குறு.219:6] பருத்த நிலையமைந்த பனைமரத்தில் அன்றிற் கூடுகட்டியது [குறு.301:1]. சுரத்தில் நிலையுயர்ந்த யாமரத்தைக் குத்தியது யானை [குறு.307:6]. ''பொல்லாங்கையுடைய ஆறே', நாம் செல்லும் மனையிடத்துள்ள தலைவி, இது போன்ற மெல்லிய சாயலையுடைவள்', என்று, கருதாமல் மலைவாழையைப் பெயர்த்துக் கொணர்ந்தனையாதலின், அருள்பெற வேண்டிய வறியோரிடத்து அன்பிலராதல் நன்றெனவுணர்ந்த தலைவனது தன்மையைக் காட்டிலும், நின் நிலை மிகவும் கொடியது காண்' என்று, தலைவி, தலைவன் கேட்குமாறு, அவனது மலையினின்று இழியும் ஆற்றிற்குரைத்தாள் [குறு.327:4].

'பாக' என்வரவை இளையர் சொல்ல அறிந்து, நீராடிச், சிலமலரைத் தன் பலவாய கூந்தலில் பெய்த அப்போது, யான் செல்ல மகிழ்ந்து, அரிவை நின்ற நிலை மறத்தற்கரியது', என்றான், வினைமுற்றிமீளுந் தலைவன் [நற்.42:12]. 'கானவர் தினை கொய்யத் தொடங்கினராதலினால், இனி நம் தலைவர் கொல்லையழிந்த நிலையைக் காண வருதல் இயையுமோ?' என்றாள், தோழி [நற்.306:8]. 'தோழி! அவரை நம்புதல் பழியெனின், சாதல் நன்று. அதுவல்லையாயின், சான்றோர் தம் கடப்பாட்டு நிலையில் குறையாராக, உலகங்கூறுவது கொண்டு, அவர் மார்பினைத் தடையிலாது உரிமையாகப் பெறுதல் நன்று', எனத் தோழியிடம் தலைவி வன்பொறை எதிரழிந்து கூறினாள் [நற்.327:5]. 'மாந்தரீர்! எமக்கு விருந்து செய்யும் விருப்பினளாய்க், கண்ணீர் தன் ஆகத்தை நனைப்பச் சமைத்து அருந்தும் மடந்தை நிலையை, இதன்முன் பெற்றுளையோ? எனக், கண்டார்க்கு, வினைமுற்றி மீளும் தலைமகன், கூறியது [நற்.374:9].

'காலமன்றிப் பெய்தமழையைக் காரென மயங்கிப், பேதைக் கொன்றை மலர்ந்த மாலைபோலும் நிலையை நோக்கி, மடந்தையே' நீ கலங்குவது ஏனோ?' என்று தலைவியைத் தோழி வினவினாள் [ஐங்.462:2].

'நீ, பொருள் தேடப்பிரியின், தலைவியின் உயிரும் பிரிந்துவிடும்', என்று, யான் தலைவரிடம் நினது நிலையை எடுத்து விளக்கவும், அவர், தம் போக்கினைக் கைவிட்டார்; இனி நின் வளை கழலாதிருப்பனவாக' என்று, தோழி, தலைவனிடம் கூறினாள் [கலி.10:22]. சிறந்த அணிகளை யுடையவளே! நம் ஊரார் எள்ளி நகைக்கும்படியான ஒரு நிகழ்ச்சி நேற்று இரவு நடந்த நிலையினைக் கேட்பாயாக என்று, தோழி, தலைவயிடம் கூறினாள் [கலி.65:2]. அலர் கூறுதலையே தொழிலாகவுடைய இவ்வூர் மகளிரைப்போல, நீயும் அந்நிலையையே கூறுகின்றாயே; என் கை சிவக்குமென்று தடுத்துக் கோரையைக் கிழித்துப் பாவை செய்து கொடுத்தானே; அதற்காகவா இவ்வாறு கூறுகின்றாய்; என்று, தலைவி, தோழியிடம் கேட்டாள் [கலி.76:9]. தன் புதல்வனுக்குத், தலைவனின் பரத்தையர் செய்தனுப்பிய ஒப்பனை கண்டு சினந்து, தலைவி, அவனைத்திட்டிக் கொண்டிருக்கும் போது பரத்தையரிடம் சென்ற குறிகளோடு வந்திருக்கும் தலைவனின் நிலை, அவளுக்கு வெந்த புண்ணில் வேல் நுழைந்ததுபோல் ஆயிற்று [கலி.83:31]. தன் பரத்தைமைத் தலைவனைக் குறித்துத் தன் புதல்வனிடம், தலைவி, இளம் யானை போன்றவனே! இங்கே 'வருக! அறத்திலும், மறத்திலும் நினது தந்தையின் நிலையினை ஒத்திருப்பாயாக! மகளிருடன்கூடி அவரைப்பிரிந்து துன்புறுத்தும் பரத்தைமைத் தலைவனிடம், ஏடா! உன்மீது தவறுண்டோ? கண் இமைத்தால் அக்கண்ணிமைக் குள்ளாகவே மறைந்து விடுவாயே, அத்தகைய நின் நிலையை அறிந்து நின்னை நொந்து சினப்பவரே தவறுடையர், என்று, கூறினாள் [கலி.87:7]. அரும்பு ஈன்று செந்தழலைப் போல அலரும் செங்காந்தள், கள்ளுண்டவன் நிலைபோல, அசைந்து வளைந்து ஆடும் [கலி.101:3]. சிலைக்கின்ற நிலையினையுடைய சினம் பொருந்திய ஆயர், துகள்கண்களை மறைத்து வான் முழுதும் பரவும்படியாக ஆரவாரித்து, ஏறுகளுள்ள தொழுவினுள்ளே பாய்ந்தனர் [கலி.105:27]. உயர்ந்த இமிலைக் கொண்ட கொல்லேற்றைத் தழுவியடக்கிய தன் காதலனாகிய வெற்றிப்புகழ் உயர்கின்ற நிலையையுடைய, பழங்குடிப் பெருமையையுடைய ஆயனைக் கண்ட தலைவியின் கண்கள், இமைத்தலை ஒழிந்திருந்தன [கலி.105:50]. தலைவனைப் பிரிந்திருக்கின்ற தலைவி, தன் முலைமேல் கிடந்து துயிலுதலை மறந்தனையோ? என்று கூறிப், பழைய நிலை கெட்ட நெஞ்சத்தையுடையளாகிய அவள் அழுவதைப் போலவும், அதுகண்டு, அவன் வலையில் அகப்பட்ட மயில் போல மிகவும் வருந்தினாய், என்று கூறி, அவள் அடிகளில் வீழ்ந்து வணங்குவான் போலவும், தலைவி, கனவு கண்டாள்

*[கலி.128:15].* ஞாயிறு மறையவும், வண்டுகளின்றிக் கயத்தின் மலர்களெல்லாம் கூம்பிக்கிடக்கும் மாலைக்காலம், பிரிவுத்தலைவிக்கு உலகமனைத்தும் ஒரே நிலையில் நடுங்கி அஞ்சுவதற்குக் காரணமான ஊழிக்காலம் போல் தோன்றும் *[கலி.134:9].* முற்பிறப்பில் அறத்தைச் செய்யாதவர்கள் இப்பிறவியில் செய்யும் தொழில்களுள் அழகிய நிலையினையுடைய மடலூர்தலும் ஒன்றென்று அறநூல்கள் கூறுகின்றன. ஆகவே, யானும் மடலூர்ந்து தலைவியைப் பெறுவேன் என்று மடலூரும் தலைவன், சான்றோரிடம் கூறினான் *[கலி.141:5].* தலைவனின் பிரிவால், தலைவியின் மேனியைவிட்டுப் போன ஒளியைப் போலப், பகற்காலத்தின் ஒளி ஒரே நிலையில் மறைந்தது *[கலி.143:38].* செய்ந்நன்றி மறந்தவனும், பொய்ச்சூளை உரைப்போனும் அழிவது உறுதி; இவற்றின் நிலை இதுவாகும். ஆகவே, பெருமானே' இதை நீ அறிவாயாக' என்று, தோழி, தலைவனிடம் கூறினாள் *[கலி.149:13].*

திருமால் இளையர் ஆகுவதும், முதியர் ஆகுவதும் அன்றி, உயிர்கட்கெல்லாம் உள்ளுயிராய் இருத்தலும் ஆகிய நிலையைத் தேரின், அந்நிலை அவரிடத்திலேயே தோன்றும் பழைய நிலைச் சிறப்பேயாகும் *[பரி.2:26(2),27].* படிப்படியாக உயரும் நிலையையுடைய வேள்வியுள், வேள்வி ஆனினைப் பற்றிக்கொளலும் திருமாலின் வெளிப்பாடேயாகும் *[பரி.2:62].* முருகனுக்குரிய திருப்பரங்குன்றத்தில் உள்ள சுனை, முருகனை ஈன்று வற்றாமல் என்றும் ஒரே நிலையில் இருக்கும் சரவணப் பொய்கையை ஒக்கும் *[பரி.8:15].* இம்மண்ணுலகம் அசையாமல் நிற்கும்படியாக, வடதிசையில் மிகவும் உயர்ந்து ஏறுதற்கரிய நிலையினை உடையதாய் இமயமலை விளங்குகிறது *[பரி.9:2].* தாமரை இறையாலே (பிரமனாலே) வீழ்த்தப்பட்ட வான கங்கையை, மலரைத் தாங்குவதுபோல, எளிதாகத், தம் விரிந்த சடையில் தாங்கியருளிய ஒப்பற்ற நிலையினையுடைய 'சலதாரி' என்னும் பெயரையுடையவர், சிவபெருமான் *[பரி.9:6].* தேவசேனையின் தோழியர், போர் மேற்கொண்டதைக் கண்ட, வள்ளியின் தோழியர், வாட்படையினையுடைய போர் மறவரின் நிலை, தம்பால் தோன்றும்படி சீறினர் *[பரி.9:54].* வையையில் நீராட வந்த மைந்தரும், மகளிரும் தம் கண்ணில் தோன்றும் காமக்களிப்பை, ஊராரின் அலருக்கு அஞ்சி, மறைப்பவருடைய நிலை, கள்ளுண்டதனால் உண்டாகிய களிப்பை மறைப்பரவர்நிலை ஒக்கும் *[பரி.10:64].* உலகில் உள்ள பல மலைகளுள்ளும் பல்வளம் நிரம்பிய, நீண்ட நிலையினையுடைய, உயர்ந்த திருமாலிருஞ்சோலை மலையில், பொன்னாடை புனைந்த திருமால் பலதேவனோடு கூடி நிற்கின்ற நிலைமையினை (திருக்கோலத்தை) மாந்தர்களே, எல்லோரும் நினைமின்! என்று, புலவர் பாடினார் *[பரி.15:28].* தலைவியின் வளையலைத் தலைவன் தரப், பரத்தை அணிந்திருத்தலைக் கண்ட தலைவியின் தோழியர், பரத்தையைச் சினந்து பேசவும், பரத்தை சினமும், நாணமும் உடையவளாய், மகளிர் கூட்டத்தில் மறையவும், அத்தோழியர் பரத்தையின் நிலையைக் காணுங்கள், என்று, கூறினர் *[பரி.20:39].* முருகவேளின் திருப்பரங்குன்றத்தின்கண், சிலம்பினையணிந்து, துடியின் இசைக்கேற்பக் கூத்தாடுகின்ற விறலியின் அழகு காரணமாகத், தன் கணவனைச் சினந்து நோக்கி, அவனோடு ஊடுவாளொரு தலைவியின் மெய்ப்பாட்டின் நிலையினையும் அங்குக் காணலாம் *[பரி.21:22].* பாண்டியன் மதுரை மக்களோடு வையையில் நீராடியதற்கு உவமையாக, இவ்வுலகத்தில் ஒரு நிலையும் உவமையாக மாட்டாது; இந்திரன் தேவர்களோடு வான கங்கையில் நீராடலே ஒக்கும் *[பரி.தி.2:94].*

**6. இடம்.** தன்மேல் அன்புடையார் ஏத்துதலால் தன் மணம் பொருந்தும் நிலையிலும் - இடத்திலும் - ஆதீண்டு குற்றியையுடைய நிலையிலும் செவ்வேள் உறைதலுமுரியன் *[முரு.221, 226].* தொண்டைமான் இளந்திரையனிடத்தே சென்று, நீ அவனை ஏத்தி, நின் பேரியாழை வாசித்துப் பாடும்போது, நின் கலையின் கூறுகளெல்லாம் தெரியுமுன்னே, நீ, நின்ற அப்பொழுதிலேயே, அவன் நில்லா உலகத்தின் நிலைமையாகிய புகழைப் பெறுதல் நன்றென்று ஆராய்ந்து அந்நிலையிலேயே நின்னை அருகில் அழைத்து அருளுவான் என்று பெரும்பாணன் ஆற்றுப்படுத்தப் பெறுகிறான் *[பெரு.467].* வானளாவ உயர்ந்த மேல், நிலைகளை உடைய மாடங்களிலே, வேனிற்காலத்துத் துயிலும் படுக்கைக்குத் தென்றல் காற்றைத் தருகின்ற சாலேகத்தில் நின்று உலவாமல், திண்ணிய வாயிற்காலையுடைய இரண்டு கதவும், பொருந்தித் தாழிட்டுக் கிடக்குமாறு, கூதிர்காலம் நின்றது *[நெடு.60].*

பாலை நிலத்தே மூங்கில்கள் உராய்தலால் உண்டாகிய தீ, நெடிய நிலையிலேயுள்ள காய்ந்த ஊகம்புல்லின் மேல் காற்றுச் சுழன்றடித்தலால் பரவியது *[அக.39:7].* குளத்திலே ஆம்பலிலைகள் கிழியுமாறு குவளைமலர்களை மேய்ந்த எருமைகள், கரையிலுள்ள காஞ்சி மலர்களின் தாதுக்கள் தம் மேல் உதிர்ந்து படிய அசையிடும் தாழ்வாயினவாகத், தாம் தங்குதற்குரிய நிலையிலே புகும் *[அக.56:7].* வெப்பமிக்க காட்டுவழியிலே செல்லும் புதியோர் வேறுவேறாய்ப் பிரிந்து அலறுமாறு, பெரிய களிற்றியானை கொலைத்தொழில் விருப்பத்தினால் தான் தங்குதற்குரிய நிலையினின்றும் வெளிப்பட்டுத் திரிந்தது *[அக.389:19].*

கிளைகளையுடைய ஓமைமரத்தின் முடங்கிய நிலையில் ஒடுங்கியிருந்து சிள்வீடு பாலைவழியில் ஒலிக்கும் *[நற்.252:1].* 'தோழி! நீர்ப்பரப்பில் குவளை கொய்வோர் நீர் வேட்கையடைவதுபோல, நாளும் காதலன் தோள்தோய நின்றும், நின் கைவளை பழைய நிலையிலிருந்து கழல்வது என், என, வினவுகின்றாய்; இயங்குதற்குரிய இருளில் அவர் நாளும் வருதல் காணும் எனக்கு, வளை கழலாது காப்பது எவ்வண்ணம் இயலும்?' என்றாள், தலைவி *[நற்.332:4].*

வேந்தனது பாசறைத்தொழில் முடியின் உயர்நிலை யுலகத்திலுள்ள அருந்ததி போன்ற கற்பினையுடைய மடந்தை நாம் செல்ல நல்விருந்து பெறுதலுமுரியள் எனத், தலைமகன் கூறினான் *[ஐங்.442:3].*

'இளமை ஆகும் இயல்பும், முதுமை ஆகும் இயல்பும் முதலியன, நின்னிலையில் தோன்றும், நினது பழைய தன்மை போல, நினக்கே உள்ள சிறப்புக்களாம்', என்று புலவர், திருமாலைக் குறித்துக் கூறினார் *[பரி.2:27].*

**7. வாயிற்கால்.** 'அறமும் மறமும் உடைமையல்லையாகத், திறவாது அடைக்கப்பட்ட திண்ணிய நிலை - வாயிற்கால் - அமைந்த கதவினையுடைய நீண்ட மதிலினுள் ஒரு பக்கத்தே நீ ஒதுங்குதலை ஆராயுங்காலத்து, இது, மிக நாணுந்தன்மையுடையது', என்று, சோழன் நலங்கிள்ளிக்குப், போருணர்ச்சியூட்டினார், கோவூர்கிழார் *[புற.44:14].* வேந்தனுக்கு மகட்கொடை மறுத்த சீறூர் மன்னன், கணைய மரத்தைக் குறுக்கிட்டமைத்த திண்ணிய நிலையையுடைய கதவமைந்த மதிலையுடையவன் *[புற.341:4].* முரசுடைவேந்தர் காலைப் பொழுதே வந்து மகட்கொடை வேண்டிச் சீறூர் மன்னனின் நெடுநிலை வாயில்முன் சுற்றித் திரிந்தனர் *[புற.350:6].*

உயர்ந்த நிலையினையுடைய வாயிலில், விற்பொறியோடு ஐயவித்துலாமும் மாட்டப்பெற்றருந்தன *[பதி.22:22].* சேரர்க்கு நட்பரசராய், அவரால் காக்கப் பெறுவோரின் அரண்கள், கணைய மரங்களால் வலியமைக்கப்பட்டு, இரும்பினால் பிணித்தலையுடைய, பலகைகளாலான பலநிலையமைந்த வாயில்களையுடையன *[பதி.53:16].*

பழையதாகிய வலிமை நிலைத்த தெய்வத்தையுடைய நெடுநிலையமைந்த வாயிலையுடையது, மதுரை *[மது.353].* வானுற ஓங்கிய மேல்மாடத்தே யமைந்த வேனிற் காலத்துப் பள்ளியறைக்குத் தென்றலைத் தருகின்ற சாலேகத்தின் திண்ணிய நிலையையுடைய, பொருத்தம் வாய்ந்த கதவுகள், தாழிட்டுக் கிடக்கத், கூதிர் காலம் நின்றது *[நெடு.62].* பாண்டிமாதேவியின் கோயிலது வாயில், வெண் சிறுகடுகினை அப்பி வைக்கப்பெற்ற நெய்யணிந்த நெடுநிலையையுடையது *[நெடு.86].*

**8. அடுக்கு.** இடமெல்லாம் பொன்னாலும், மணியாலும் சிறப்புற்று உயர்ந்த ஏழு நிலைகளையுடைய மாடத்திலே, தலைவி, தலைவனைப் பிரிந்து தனிமைப்பட்டுக் கிடந்தாள் *[முல்.86].* மதுரை வீதிகளில் ஒழுங்குபட்ட நிலையினையுடைய மாடங்களின் நிலாமுற்றங்கள்தோறும் அசையும் கொடிகளுக்கிடையே மகளிர் முகங்கள் மஞ்சிலே மறையும் திங்களைப்போல் ஒருகால் தோன்றி, ஒருகால் மறைந்தன *[மது.451].* பெரிய நிலையையுடைய மாடம் அமைந்த உறந்தையாகிய தன்னூரைப் **பெரிதாக்கினான், திருமாவளவன்** *[பட்.285]*

**9.உயர்நிலைவாயில் (கோபுரம்)** (ஆகுபெயர்). பாண்டி மாதேவியின் கோயிலது ஓங்கிய நிலை- உயர்நிலைவாயில் (கோபுரம்)-வெற்றிக்கொடிகளோடே யானை புகும்படி குன்றை நடுவே வெளியாகத் திறந்தாற்போன்ற வாயிலையுடையது *[நெடு.88].*

**நிலைச்செரு-இடையறாத போர்.** நார்முடிச்சேரல் நிலைச்செருவில்-இடையறாத போரில்-பூழி நாட்டிற்குரிய நன்னனின் ஆற்றலை அழித்து, அவனுடைய காவல் மரமாகிய வாகையை வெட்டி வீழ்த்தி, வெற்றி கொண்டான் *[பதி.ப.4:8].* கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் நிலைச் செருவில் சோழர்குடிக்குரிய ஒன்பதின்மரை, நேரிவாயில் என்னுமிடத்தில் அழித்து, வாகை சூடினான் *[பதி.ப.5:20].*

**நிலைமை-தன்மை.** மதிலுக்கு அதன் உறுப்பாகிய ஞாயில் இல்லை; அகழியும், நீரின்றிக் கன்றுகள் மேய்ந்து திரிந்து காப்பின்றி இருந்தது. ஊரின் நிலைமை - தன்மை - இது ஆகும் *[புற.355:3].*

கரிகால் பெருவளத்தான் புணர்ந்தவர் பிரிவர் என்னும் உலகத்து நிலைமையை ஆராயாதவனாய்த், தன்னிடம் வந்த புலவரைப் பிரிய மனமின்றி, விரைந்து விடைதராத பண்பினனாவான் *[பொரு.176].* செல்வம் முதலியன நிலையில்லாத இவ்வுலகத்தே, புகழ் ஒன்றுதான் நிலைத்து நிற்பது என்னும் இவ்வுலகத்து நிலைமையை நன்று அறிந்தவனாதலின், தொண்டைமான் இளந்திரையன், தன்னிடம் வரும் பரிசிலர்க்கு வாரி வழங்கினான் *[பெரு.466].*

வரைதலின் முயற்சியைக் கேள்வியுற்ற தலைவி, 'பிரிவில் துயருற்ற, யான் இடைவிடாது நீர் நிறைந்தோடும் திண்ணிய கரையிலுள்ள மரம் போலத் தீங்கில்லாத நிலைமையிலிருந்து பலமுறை தலைவரைத் தழுவுவேன்', என்று கூறினாள் *[குறு.368:8].* பிரிவுத் தலைவி, தோழியிடம், தலைவன் பிரிந்ததால் தனக்குண்டான துயரங்களைக் கூறி, மகளிரைத் துன்புறுத்துவதே எக்காலத்தும் ஆடவரின் நிலைமை என்று கூறினாள் *[நற்.226:8].*

பிரிந்து செல்லத் கருதும் தலைவனிடம், தோழி, 'கொடுமையாகிய சுரத்தைக் கடந்து நீ போவாயாயின் தலைவி அடையும் நிலைமையைக் கூறுகிறேன் கேட்பாயாக', என்று கூறினாள் *[கலி.25:12].* சக்கரவாள மலை அறிவினது எல்லையாலே அறியப்படாத புகழுடனே விளங்கி, நிலத்தினது எல்லையைத் தாங்கி நிற்கும் நிலைமையையுடையதாகும் *[பரி.15:2].*

**நிலையர் - தன்மையர்.** வையை வெள்ளத்தில் நீராடுவோரின் நெருக்க மிகுதியினால் புறச்சேரியில் இளையர் செல்லுதற்கரிய நிலையர் - தன்மையர் - ஆயினர் *[பரி.6:38].*

**நிலையள்** - தன்மையள். தலைவனிடம், தோழி, 'பெருமானே! புன்னை மரத்தடியில் நின்னைப் புணர்ந்ததனால், தன்னழகையிழந்து நினது வாய்மைக்கு இழுக்கு நேராதோ?' என்று கூறினாள் *[கலி.135:10]*.

**நிலையன்** - தன்மையன். ஆற்றியிரு என்று கூறிய தோழிக்குத், தலைவி, 'என்னுடம்பின் கண்ணுளதாகிய நலமானது, பரிசிலர், தலைவன்பால் சென்று வந்து, அவன் இன்ன நிலையன் - தன்மையன் - பெரிய அன்புடையன், என்று கூறும் சிறந்த மொழிகளை என்னைக் கேட்கவும் விடுமோ?' என்று கூறினாள் *[நற்.347:8]*.

**நிலையாமை** - அழியுந்தன்மை. 'அருமையான உயிர்களைக் கவர்ந்து செல்லத் துடிக்கும் கூற்றமே! எம் தலைவன் நினக்கு அஞ்சான்; அவன் நிலையாமையை - அழியும் தன்மையை - நன்குணர்ந்தவன்; அவனுக்கு நீ கூற வேண்டுவதில்லை', என்று, ஒரு புலவர், ஒரு வள்ளலைப் பற்றிக் கூறியுள்ளார் *[புற.361:20]*

**நிலையோர்-(ஓரிடத்தில்) நிலையாக நிற்போர்.** நன்னன் வேண்மான் நாட்டில் உள்ள கள்விற்கும் வலையருடைய மகளிர் நிலையோர்-(ஓரிடத்தில்) நிலையாக நிற்போர்- ஆகிய தூண்டிலாளர் கொண்டு வந்த, பிடியின் கையைப் போன்ற வரால் மீனின், துடியின் கண்ணைப் போன்ற துண்டோடு, கள்ளையும் பரிசிலர்க்கு வழங்குவர் *[மலை.456]*.

**நிவப்பு - ஓங்குதல் / உயர்ச்சி / வளர்ச்சி.** இமயத்தின் வடக்கும், குமரியின் தெற்கும், தொடுகடலின் கிழக்கும் பழங்கடலின் மேற்கும், நிலம், வான், விண் எனும் மூன்றன் அடைவில், நீர்னிலைக்கண் நிவப்பு - ஓங்கல் - ஆகிய நிலத்தின் கீழும், மேலது, ஆனிலை உலகத்தினும், அமையாது, அச்சமும், புகழுமாக அமைந்த பொருளை ஆயும் சமன்கோல் போல, ஒருபுறம் கோடாதொழிக என முதுகுடுமிப் பெருவழுதியிடம் காரிகிழார் கூறினார் *[புற.6:6]*. 'நீர்ப்பரப்பின் ஆழமாகிய நிவப்பு - உயர்ச்சி - கருதித் தடுக்கக், குதிரையை வேண்டுமளவில் பிடிக்கவும், அம்பைச் செலுத்தவும், பரிசிலர்க்கு அணிகலம் வழங்கவுமாக, வாழியாதனின் கைகள் வலியவாயின', என்று பலர் கூறுவர் *[புற.14:6]*.

நிலம் குழியும்படியாக நிவப்பினையுடைய பிணவரிசை பலவாகப், பேய்கள் உண்டு மகிழச், செம்புனல் ஒழுகப் போர் பல செய்குவன் கிள்ளிவளவன் *[பதி.36:11]*.

'நீ பல ஏத்த, வானைத் தோயும் நிவப்பினை - வளர்ச்சியினை- உடையதான் வந்து, தெய்வ இளநலம் காட்டி, அஞ்சாதே, நின் வரவறிவேன், என, அன்பு மொழிந்து உலகத்து நீ ஒருவனாகித், தோன்றப், பெறவரும்பரிசில் நல்குவன், என, அன்பரை ஆற்றுப்படுத்தினர் *[முரு.288]*. இடியோடு நிரைத்துச் செல்லும் நிவப்பினையுடைய முகில், முருகனது வேல்போல் மின்னிப் பொழிய, அருவி துகில் போல் வீழும் *[குறி.50]*. படுத்து வைத்தது போலும் பாறையில், எடுத்து நிறுத்தினாற்போலும் சிறு நெறியில், இடித்தாக்கிய நிவப்பினையுடைய வழியைக் கண்டு நடக்க', எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் *[மலை.20]*. பூக்கள் நிறைந்த, கரையை மோதும் நிவப்பினையுடைய மலையுச்சியினின்றும் இழிந்த யாறு, கடலை நோக்கிச் சென்றாற் போல, யாம் அவனை நோக்கிச் சென்று பரிசில் பெற்று வருகின்றேம்', எனப் பரிசிலர் பெற்ற பெருவளம் கூறினர் *[மலை.51]*. திரைபடக் குழிந்த கிடங்கினையும், மலை போலும் நிவப்பினையுடைய வானைத் தோயும் மதிலினையும் உடையது புகழமைந்த மூதூர் *[மலை.92]*. வேற்படை கெட்ட்து போன்று, காற்று வீசக் கவிழ்ந்தது, குறையற்ற நிவப்புடன் கூடியதாய், ஆலைக்குச் செல்ல அசையா நிற்கும் கரும்பு *[மலை.118]*.

குறிய காலினையுடைய இற்றி மரத்தின் நீண்ட விழுது, உருண்டைக்கல்லைத் தீண்டிக் காற்று வீசத் துதிக்கையையுடைய யானை நிவப்புப்போல் தோன்றும் *[அக.57:8]*.

மலைபோன்ற நிவப்பினையுடைய பல நெற்குதிர்களையுடையவன் எருமையுழவன் *[நற்.60:1]*. 'குன்றநாடன், மழை பெய்தமையால் கரையை மோதுகின்ற நிவப்பினையுடைய, அவலையுடைய, காட்டாற்றினைக் கடந்து வருதலை அஞ்சினேன்', எனச், சிறைப்புறமாகத், தோழி கூறினாள் *[நற்.114:8]*. 'கலையினைப் பிரிந்து செல்லும் பெண்மான் போல வேறுபட்டு, மூங்கில் நிவப்பினையுடைய சிறுகுடிக்குச் செல்லுங் கொடிச்சியது சிறுபுறம் பார்த்து விடுத்த நெஞ்சமே! அவனைவிடலாகா தன்றோ?' என்றான், தலைமகன் *[நற்.204:10]*.

தென்னவர் கொள்ளக் கருதிய நாட்டை அடையச் செல்லும் அவர் தானையது அணி, நிவப்பன்னவாகிப், பெயலால் மிக்குப் புனல் பெருக, வளம் பெருக, வயல் வளர, வந்தது, வையைப் புனல் *[பரி.7:7]*.

**நிழல்** - 1. ஒளி, விளக்கம். 'நிழல் - ஒளி - உண்டாகின்ற நீண்ட வேலையேந்திப் பகைவர் பாண்டியனது தூசிப்படையின் வலியினைக் கெடுத்தல் வேண்டி அவாவோடு வந்து அவ்வாசைகெட வசைபடவாழ்ந்தனர் *[புற.15:13]*. கராம் செருக்கிய அகழியினையும், ஊர்காப்பாளரது விளக்கு நிழலைக் கவரும் முதலையையுடைய மடுவினையும், செம்பையொத்த மதிலினையும் உடையது மூதூர் *[புற.37:9]*.

தீயிலிட்டு உருக்கியமையால் நிழல் விடுகின்ற பொற்கட்டியை இவரிவர் பெறுவாராக, என, வகுத்துத் தானைக்குதவி, வேறு புலங்களில் போர் கருதித் தங்கினான் இளஞ்சேரல் இரும்பொறை *[பதி.81:16]*.

நாகம் வழங்கிய நிழலை வீசும் நீலக் கலிங்கத்தை ஆலமர் செல்வனாகிய அரனுக்கு அளித்தவன் ஆய் *[சிறு.95]*.

பகைவர் நாடு சேணிகந்தனவாயினும் ஆங்குச் சென்று வென்று, யானை நிரையில் புகுந்து, வென்றவேற்போரில் நிழல் - விளக்கம் - பெற்றோர்க்கு நாடும், ஊரும் கொடுத்தவன் நண்பன் *[மலை.88]*.

'வலவ! இருள்படும் முன்னே மணியொலிக்க, நிழலின் தழைத்தலையொத்த நிமிர்ந்த செலவினையுடைய குதிரைகளை, விரையச் செலுத்துக', என்றான், வினை முற்றிய தலைமகன் *[அக.344:9]*.

'மாயோள் இருந்த,தேஎம் நோக்கி மழை பெய்யத் தொடங்கியது. நிழல் திகழும் தொடி நெகிழுமாறு தலைவி ஏங்கி அழத் தொடங்கினள். அதன் மாறாக, இருளில் கோவலர் குழல் தொடங்கினர்', என, வினைமுற்றி மீளும் தலைமகன் கூறினான் *[நற்.371:6]*.

**2. சாயை.** 'சோற்றையாக்கும் நெருப்புடனே, ஞாயிற்றது வெம்மையல்லது வேறு வெம்மையறியார் மாந்தரஞ் சேரலின் நிழலில் - சாயையில் - வாழ்பவர் என்று குறுங்கோழியூர் கிழார் குறிப்பிடுவர் *[புற.20:9]*. 'பெரும! மடியாயாதலான், களிறுகள் கம்பத்தைப் பொருந்தி யசைய, நின் வெண்குடை நிழற்கண்ணே வாளில்லாதோர் அதுவே காவலாக உறங்குவோராயினர்', என, மாந்தரஞ்சேரலைப் பற்றிப் பாடுவர் குறுங்கோழியூர் கிழார் *[புற.22:12]*. 'நீ வெகுண்டு நோக்க எரிதவழும். நயந்து நோக்கப் பொன்பூக்கும். செஞ்ஞாயிற்றில் நிலவு வேண்டினும், வெண்திங்களில் வெயில் வேண்டினும் வேண்டியது விளைக்கும் ஆற்றலை ஆகலின் நின்குடை நிழலில், பிறந்து அதன்கண் வளர்ந்த எனது நினைவெல்லையைச் சொல்ல வேண்டுமா?' எனக், கிள்ளி வளவனை ஆவூர்மூலங்கிழார் பாராட்டினார்*[புற.38:10]*. அடிமாய்ந்த ஆலின் கொழுவிய நிழலையுடைய கொம்பை வீழ்பொறுத்தாற் போன்று, முன்னோர் மாய்ந்தாராகத், தன் குடியைத் தளராது நிறுத்தியவன்', பெருவழுதியாவான் *[புற.58:3]*. 'சிறுசொல் சொல்லிய பகை வேந்தரை முரசுடனே கைக் கொள்ளேனாயின் என் குடை நிழலில் வாழ்வோர் சென்றடையும் நிழலைக் காணாது, கொடியன் எம் வேந்தன் எனக் கண்ணீர் பரப்பிக் குடி பழிதூற்றும் கொடுங்கோலனாகுக', என்று நெடுஞ்செழியன் வஞ்சினங் கூறினான் *[புற.72:10(2)]*. நெடியோய்! நீ நிறைமதியனையையாக நின்னிழல் வாழ்வோர்க்குத் துன்பவிருள் எவ்விடத்துள்ளது?' என பொகுட்டெழினியை ஔவையார் பாடினார் *[புற.102:6]*. நிழலில்லாத நெடுவெளியில் நின்ற தனிமரம் போல, வேந்தரை மிகுத்தும் இரவலர்க்கீந்த வள்ளியோன் பாரி *[புற.119:5]*. நரந்தத்தையும், நறும்புல்லையும் மேய்ந்த கவரிமா, குவளை மலருடைய சுனை நீரைப் பருகி, அயலதாகிய தகரமரநிழலில் தன் பெடையொடு தங்கும் *[புற.132:6]*. 'பெரும! நின்தாள் நிழற்கண் வாழ்வோர் நல்லணியைமிகுப்ப, நின்படையையும் நின் செல்வத்தையும் பலபடப்புகழ்வேம்', எனக், குமணனைப் பெருஞ்சித்திரனார் பாடினார் *[புற.161:30]*. 'நெடுந்தகை! மழைத்துளியை நாடுதலையுடைய வானம்பாடியைப் போல, நின் வண்மை நசையால் நின் அடி நிழற்கண் பழகிய அடியுறை. மறவாதீக', என்று நன்மாறனைப் பேரிசாத்தனார் பாடினார் *[புற.198:26]*. 'விண்ணோர்க்கு விருந்தாகுமாறு உள்ளம் உடைந்தோர்க்கு, அரணாகும் நின் அடிநிழல், நல்வினையை மயங்காமல் செய்தல் வேண்டும்', என்று கோப்பெருஞ்சோழனிடம் புல்லாற்றூர் எயிற்றியனார் கூறினார் *[புற.213:21]*. 'நின் நிழலினும் பிரியாத நீ விரும்பத்தக்க மனைவி, புதல்வனைப் பெற்றபின், வாவெனச் சொல்லி என்னைப் போக்கிய உறவில்லாதவனே! நீ எனக்குக் குறித்த இடம் யாது?' என்று கோப்பெருஞ்சோழனிடம் பொத்தியார் வினவினார் *[புற.222:2]*. 'பலர்க்கும் நிழலாகிச், சிறிய இடத்தில் நடுகல்லாகியக்கண்ணும் நட்புடையோர் தம்மிடம் செலின் இடங்கொடுத்தளிப்பர்', என்பது, கோப்பெருஞ்சோழனைக் குறித்த பொத்தியார் கூற்று. *[புற.223:1]*. கோடைக் காலத்தில் கொழுவிய நிழலாகி அமைந்த வெளிமானது செவியில் விதைத்த, கேள்விப் பயிர் நன்கு விளைந்ததெனப், பரிசிலை விரும்பியிருந்த அவ்விருப்பம் பயனில்லையாக அறனில்லாத கூற்றம் என்னைப்போல் நடுக்கமடைவதாகுக. என், வளைக்கை பற்றிச் சிறிது நடக்க நாம் மலைநிழல் செல்வேமாக', என்று, முதுபாலைத்துறையில் வன்பரணர் பாடியுள்ளார் *[புற.255:6]*. 'நின்தாள் நிழல் வாழ்வாகிய பரிசிலரது செல்வமும், வேந்தரையடையும் வென்றியும் நின்னொடு செல்லக் கல்லாயினையே! எனப் பரவலன் இறந்தமை குறித்துச் சிறுகருந்தும்பியார் இரங்கிப்பாடுவர் *[புற.265:6]*. அகன்ற புலத்தில் படர்ந்த பல ஆவும், ஏறும் நிழலில் இளைப்பாறக், கோவலர் முல்லையின் பூவைப் பறிப்பர் *[புற.339:2]*. 'தாய், இவனைப்பெறாதிருப்பின் நிழல் தோறும் தேர் நிற்ப, இடந்தோறும் யானை பிணிப்படைய, இவ்விடத்து மரங்கள் வருத்தமடைந்திரா', என, மகட்பாற்காஞ்சித் துறையில் பரணர் பாடியுள்ளார் *[புற.348:8]*. 'கணவனைப் போரிலிழந்த மகளிர், வாயிலைக் கடந்து, புகலிடங்காணாது வளவனின் நிழல் அடைந்தனர் *[புற.373:15]*. 'யான் அவன் தாள் நிழல் வாழ்வினைப் பெறுவேனாக. அவன், என் நாவிசையைப் பெறுவானாக' என்று ஒய்மான்வில்லியாதனிடம் புறத்திணை நன்னாகனார் கூறினார் *[புற.379:1]*. 'கடல் ஊழிக்காலம் அடையினும், கதிரவன் தென்திசைச் செல்லினும் அவனது தாள் நிழலில் யாமிருப்பதனால், அஞ்சேம், யாம்', எனக் கிள்ளிவளவனிடம் தாயங்கண்ணனார் கூறினார் *[புற.397:27]*. 'உணவு பெறாமையால் அழலை வெளிப்படுத்துவது போன்ற, பெறுவதற்கரிய உண்கலம் நிறைய, நிழலைக் காணுமாறு, தெளிந்த தேறலை வார்த்தளித்தவன் சேரமான் வஞ்சன் *[புற.398:22]*.

கடல், மலை, யாறு என்னும் இவற்றில் படுபொருட்களாகிய, வளம் பல பெருகிய நல்ல நாட்டின்கண்ணுள்ள, விழவறுதலையறியாத மூதூரின், கொடி நிழல் படுகின்ற

வளமுடையது கடைத்தெரு [பதி.15:19]. 'காப்பைக் காணாது திசையெல்லாம் சென்று வந்த மக்கட்டொகுதி இந்நிழலில் ..ருக எனச் சேரனின் குடைச்சிறப்பை, வயவர் எடுத்தியம்பினர் [பதி.17:9]. 'பனந்தோட்டு மாலையினையும், கழலினையும் புனைந்து, பகை மதிலையழித்துப், பகைவரைச் சிறைப்படுத்தித் தன்னிழல் வாழ்வோர்க்குக், கொடுமையறும்படியாக, நெகிழாத கொள்கையினையுடையவன் நார்முடிச்சேரல் [பதி.37:10]. 'நார்முடிச்சேரல்! நின்போர் நிழலில் உறைதலை விரும்பிய குழாத்தர், நீ பிறர்க்கென வாழ்தியாதலின், எமக்கு இல்லையென்னார்', என்று அவனைக் காப்பியாற்றுக் காப்பியனார் பாடியுள்ளார் [பதி.39:17]. 'கட்டுத்தறியைக் கொள்ளாது குத்துக்கோல் பலவற்றை முறித்து, மேலே பறக்கும் பருந்தினது நிலத்தேவீழும் நிழலை வெகுண்டுதிரியும், கொங்கர் ஆ பரந்தது போன்ற, யானை பலவற்றையுடையது பெருஞ்சேரல் இரும்பொறையது தானை, [பதி.77:9].

'களிறு வழங்கும் கானத்தில் பரிசிலர் தங்கி, இலையில்லாத மரத்தின், வலையை மேலே கட்டினாற் போன்று அதன் கீழ் வீழும் நிழலில், காடுறைகடவுளுக்குச் செய்யும் கடனைக் கழித்தனர் [பொரு.51]. செஞ்சோற்றுப்பலியை நிரம்பவுண்ட கருங்காக்கை கடற்கரையில் அதனை வெறுப்பின், மனைநொச்சிமரநிழலில் உள்ள ஈன்ற யாமையது குஞ்சினைத் தின்னும் [பொரு.185]. வேனில் நிலைபெற்ற பாலைத் தன்மையுடைய சுரவழியில் கடம்பினது வரியாக அமைந்த செறியாத நிழலில் தங்கி விறலியர் இளைப்பாறுவர் [சிறு.12]. பாண்மகனது தூண்டிலிற் பொதிந்த இரையைக் கவ்விச் சென்ற வாளை, குளநீரருகேயுள்ள பிரம்பின் அசைகின்ற நிழலைக் கண்டஞ்சும் [பெரு.288]. பரிசிலர் நிழல் தன் உருவிழந்தவேனிற் காலக் குன்றத்தின்கண் பாலைத் தன்மை சார்ந்த சுரத்தைச் சேர்ந்தனர் [மது.313]. பலவாய் வேறுபட்ட பண்டங்களைத் தம்மிடத்தே கொண்டு திரிகின்ற வலைஞர், மலைபோலும் மாடங்களிலுள்ள குளிர்ந்த நிழலில் தங்கினர் [மது.406]. 'அரைக்குத் தழையுடுத்துப், பல்வேறுவகை, வண்ணமலராலாகிய கோதையினைத் தலைக்கணிந்து, அசோகினது குளிர்ந்த நிழலில், இருந்தனம், என்று அறத்தொடு நிலையில் தோழி கூறினாள் [குறி.106]. காய்த்த செந்நெற் கதிரைத் தின்ற எருமைக்கன்றுகள் ஊரிலுள்ள நெற்கூடுகளின் நிழலில் துயில் கொள்ளும் [பட்.15]. விறலியர் சூழ்ந்திருப்பக் குளத்தில் புகுந்தாலொத்த பயனைத் தரும் குளிர்ந்த நிழலில், கவலையொழிய இருந்தான் கூத்தர் தலைவன் [மலை.47]. பெரிய நிழலுண்டான மரஞ்செறிந்த குறுங் காட்டில் ஞாயிற்றால் தெறப்படாத குன்றம் இருந்தது [மலை.271]. 'நோக்கினும் தலை நடுங்கும் பக்க மலையிடத்துக், குறிய, நெடிய குவடுகளைக் கடந்து, கூத்தர் மலர் பரந்த பலவரிகளையுடைய நிழலில் இளைப்பாறத் தங்கினர் [மலை.290].

புலியின் தோலையுடுத்த, நீலமணி போலும் மிடற்றினையுடைய சிவபெருமானது தாள் நிழலில் உலகு தங்கிற்று [அக.க.வா.16]. வெங்கதிர் பசுமை நீங்கக் காய்தலால் நிழல் சுருங்குமாறு உலர்ந்த மரத்தினையுடைய, சுரத்திடையில் பாறைகாய்ந்து, சுனையில் நீரறப்புலர்தலால் அங்கு உகும்நெல் பொரியும் [அக.1:11]. கடற்கரை மணல் மேட்டிலுள்ள புன்னை நிழலில் இளைப்பாறி, மீன் உணங்கலில் படும் பறவைகளை ஓட்டி, நண்டினைப் பிடித்து விளையாடித், தாழை வீழில் ஊசலாடிக் கானலில் தாம் தங்கி வருதல் அலராகியது' எனத், தோழி கூறினாள் [அக.20:3]. அழகினை நுகரும் துணையையுடையோர்க்கு, உழவர் மருதமரநிழலில், எருதோடு தங்கும், அழகிய வேனில் இதுவாகும்' எனத், தலைமகள் வன்புறை எதிரழிந்து சொன்னாள் [அக.37:16]. 'மானினம் வற்றிய மரச்செடியினைச் சுவைக்கும் காட்டில், தலைவன் இவளைப் பாராட்டி உலர்ந்த நிழலில் தங்கி, உடன் கொண்டு செல்லுதலை அறியின், அவள் உடம்பின் நிழலைப் போல, விளையாடும் இடந்தோறும் அகலாதிருந்திருப்பேனே', எனச், செவிலி வருந்தியுரைத்தாள் [அக.49:11,15]. மறவர் அம்பு விட வீழ்ந்தோரது (பெயரும், பீடும் எழுதிய) எழுத்துக்களையுடைய நடுகல்லின் நிழலில், செந்நாய் தன்துணையொடு தங்கும் [அக.53:11]. காட்டு வாழ்வுடைய, புலி போலும் வலிமையையும், கழலையும் உடைய மறவர் மலையில் தம் சீறூர் மன்ற நிழலில் கண்படுப்பர் [அக.75:7]. குடநாட்டில் எருமை தாமரையைத் தின்று வெறுப்பின் பலாமரத்தின் கொழுவிய நிழலில் தங்கும் [அக.91:16]. நிழலற்ற பாலையில் எழாலினது தாக்குதலைக் கருதிக் குறும்பூழ்ச்சேவல், சிறுகுடியில், உறைவோர் போகிய மனையில், இறப்பு நிழலின் ஒருபக்கத்தே, தங்கியிருக்கும் [அக.103:1,9]. 'மணி பதித்த பொற்கலத்தில், தேன்கலந்த பாலைச் செவிலித்தாய் ஊட்டவும் உண்ணாள். நிழலின் கண்ணுள்ள, குளம் போன்ற மனையில், எம் செல்வத்தினையும் கருதாள். நாடன் பாராட்டப், பொய்யில் மருண்டு வேனிலில் செல்ல, எவ்வாறு வல்லுநளோ?' என்று, மகட்போக்கிய தாய் இரங்கினாள் [அக.105:7]. 'நெஞ்சே! முசுக்களையுடைய காட்டு வழியில், மராமரத்தின் வரிநிழலில் இளைப்பாறி, நம்மொடு தலைவி வரும், என்பதால், நாம் நகையுடையேமாயினம்', எனத், தலைமகன் உரைத்தான் [அக.121:9]. 'அறுகம்புல்லை மேயும் ஆண்மான், மணலில், பிடவின் கொழுநிழலில், தன் துணையுடன் தங்கும் [அக.139:11]. 'நெல்லுக்கு நேர் உப்பு என விலை கூறிச் செல்ல, நாய் குரைக்க, அஞ்சிய தலைவியின் கண்கள், மரஞ்சுடும் புகை நிழல் (நிறனுமாம்) போன்ற கரிய சேற்றில் அழுந்திய சாகாட்டின் தடை தீர, இழுக்கும் பகடுபோல், வருந்தி வெய்துயிர்க்கும் நோயாக்கின', என்றான், தலைமகன் [அக.140:11]. 'தாய், என் உயிர் கெடுவதாக எனக் கூறி, மணலில் கிடந்த பாவையை எடுத்து, நொச்சியின் வரி நிழலில் கிடத்திக், குவளை சூட்டி, என் அருமகளே, என, முயங்கி அழும்', என, மகட்போக்கிய தாயது நிலையைக், கண்டோர்

கூறினர் [அக.165:10]. குன்றிற்படும் நிழலில் சேர்ந்த, நல்ல ஆனிரைப் பரப்பினையுடையது குழுமூர் [அக.168:4]. மயில், அழகிய தோகையினை விரித்துக் கொல்லையுழவர் கூழுண்ண, நிழலாக விட்டுவைத்த குருந்த மரக்கிளையிலிருந்து, கிளியோட்டும் மகளிரைப் போலக் கார்காலத்தில் அகவும் [அக.194:13]. சிலம்பியது நூல்,பின்னப்பெற்ற, வற்றியசையும் மரநிழலில் தங்கி வாடிய மரலைக் கவ்வியச் செயலற்றது மான்கூட்டம் [அக.189:6]. மூங்கில் வளர்ந்த, நிழல் பொருந்திய பக்கமலையில், களிற்றின் கவுள் மதம் ஒப்ப நீரொழுகப், புலித் தோலையொப்ப, வேங்கை மலர் உதிர, ஆண் குரங்குகள் தம் இனத்தைக் கூப்பிட்டுக் குதிக்கும். [அக.205:16]. வெளியன் வேண்மான் ஆஅய் எயினன், பாழிப்பறந்தலையில், மிஞிலியொடு செய்த போரில் புண்பட்டு வீழ, ஞாயிற்றின் கதிர் தாக்காதிருக்கப், பறவைகள் சிறகரால் நிழல் செய்தன [அக.208:12]. 'வேங்கடத்தின் அப்பால், வடுகரது நாட்டிலுள்ள அருஞ்சுரம் நிழல் தன் அழகையிழக்க, நீரில்லாத, அழல் விளங்கும் தன்மையைதாயிற்று [அக.213:9]. நீரில் நீள்சுரம் நிழலற்ற ஓமை மரத்தினையுடையது [அக.223:8]. நிழலுண்டாக அழகு பெற்ற நீண்ட இலவமரத்தின் கிளையில், எரிதளிர்த்தாற்போலும் பூக்களில், வண்டுகள் ஒலிக்கும் [அக.245:14]. மயிலின் தோகையை மாலையாக்கியணிந்த மழவர் பல் பூக்களையுடைய காட்டில், சுருங்கிய நிழலில் தங்கி, இளைய ஆவினைக் கொன்று, அதன் ஊனைத் தின்றனர் [அக.249:11]. 'நிழற்கண் அறல் போலும் குழன்ற கூந்தலையும், குழல் போலும் குரலையும் உடைய பாவை இரங்க வளைநெகிழக், கண்பனிசிந்த, மெலிந்து யாமிவணிருக்க, நம்மைத் தலைவர் பிரிந்தார்', எனத், தோழி கூறினாள் [அக.265:8]. 'பிணையினை, அதன்கலை, முதுகிடத்தே நக்க, யாமரத்தின் வரிநிழலில் இருந்து நாம் நோக்க, வந்து வருத்தும் மாலையில், தொலையாத நீண்ட நெறியில் தனித்து வருந்துகின்றேம்', எனத், தலைவன் தன் நெஞ்சிற்குரைத்தான் [அக.287:12]. மறியினைத் தழுவிய மடப்பிணை,தன் கலைமானோடு குருந்த மரத்தின் நிழலில் தங்கும் [அக.304:10]. 'புலம்ப! பலநாளும் நின் வருத்தம் நீங்கப், பகல் வந்து, புன்னையஞ்சோலையில், இனிய நிழலில், பொழுதைக் கழித்து, மாலைப்பொழுதை மயக்கந்தோன்றப் பார்த்து நின் வலவன் தேரைச் செலுத்த, நீயும் செல்ல விரும்புதலை ஒழிக', எனத், தோழி கூறினாள் [அக.340:2]. மரனும் நிழலற்ற பாலையில் வருந்திய நடையினையுடைய பிணையை உடன் கொண்ட கலைமான், நீர் வேட்கைத் துன்பத்தால் தழையுண்டலைக் கைவிட்டுக், குளம் நோக்கிச் சென்று, நீரின்மையால் மெலிந்து, தளர்ந்தது [அக.353:15]. 'அழல் ஓங்கிய வேள்வித் தீயின்கண் இடப் பெற்ற,யாமை,தான் முன்பிருந்த நிழல் பொருந்திய பெரிய பொய்கையின்கண் போதலை விரும்பியது [அக.361:12]. முகில் பெய்யாதொழிய சுரத்திடை எரியினைக் கக்கிச் செல்லும் ஞாயிறு, நிழலினை அகழ்ந்துண்ட, செலலத், தொலையாத வழியில் வடுகர் சென்றனர் [அக.381:6]. ஞாயிற்றின் கதிர் ஈரத்தினைத் தொலைத்தமையால், நீரற்றுத், தீக்கவர்ந்துண்டமையால் மரங்களின் நிழலுற்றுச் சுரநெறிகொடியதாயிற்று [அக.395:7]. 'அழல் போலும் பூக்களையுடைய வேங்கை நிழலின்கண் தங்கி, ஆரியரது இமயம் புரையும் பல பூக்களையுடைய கானத்தில் சேர்ந்து செல்லின், குறையுண்டோ?' எனக், கிழத்தி காமம் மிக்க கழிபடர்கிளவியால் கூறினாள் [அக.398:17]. கொன்றையின் குறைநிழலில் தங்குவித்த பல ஆனிரையுடைய கோவலர் கல்லாதே ஊதும் குழலிசையை, நெல்லியின் பசிய காயைத் தின்னும் மரைமான் கூர்ந்து கேட்கும் [அக.399:10].

குருகுகள் உறங்கும் இனிய நிழலையுடைய புன்னை, உடைகின்ற கடல் அலைகளால் வீசப்படும் துளியால் அரும்பும் [குறு.5:2]. கானத்தே, வெவ்விய அருவழியில் இறந்த வழிப்போக்கரது உடலை மறைத்துச், செயற்கையாக இட்ட தழைக்குவியல், உயர்ந்த யானைக்கு நிழலாகும் [குறு.77:4]. நிலவைத் தொகுத்தாற் போன்ற மணற்பரப்பில், இருள் செறித்தாற் போன்ற ஈரமும், குளிர்ச்சியுமுடைய, கொழுவிய நிழலையுடைய, புன்னைமரம் அடர்ந்தது சோலை [குறு.123:1]. 'கலைமான், பசிப்பிணி நீக்கக், காலால் ஒற்றிய மரப்பட்டையைக், குட்டி தின்ற, மிஞ்சின் உண்டு, அதற்கு நிழலாகி நின்று, வெயிலை மறைக்கும், என்பர், நம்மைப் பிரிந்தோர் சென்றவழி', எனத், தோழி உரைத்தாள் [குறு.213:5]. மரலுணவையுண்ட இரலைமான், யானை ஒடித்து, உண்டு, எஞ்சிய, யாமரத்தின் வரி நிழலில் தூங்கும் [குறு.232:5]. 'பூங்கொத்துக்களையுடைய புன்னையின் அழகிய நிழலில் அலவனை அலைத்து விளையாடிய போதே தலைவி நெகிழ்ந்த வளையினையுடையளாகிப் பசந்தாள் [குறு.303:6]. ஆண்மான், மென்மையும், மடப்பமும் உடைய பெண்மானோடு நிழலிடத்தே தங்கித், தூற்றுக்கிடையே தூங்கிப், பயிற்றைக் கறிக்கும் [குறு.338:2]. நிழல் அடங்கி அற்றுப்போன, நீரில்லாத கடத்தற்கரியது பாலை [குறு.356:1]. மலையெருது, அறுகின் கொத்தைக் கடித்துத் தின்னும் மலையாவைப் பார்த்து, வெய்துற்று, உகாஅய் வரி நிழலில் தங்கும் [குறு.363:4]. 'அரிவை போகிய சுரன், ஞாயிறு காயாது, மரநிழல் பட்டு, மணல்மிக, மழையும் பெய்வதாகுக', என, மகட்போக்கிய செவிலி கூறினாள் [குறு.378:1].

கானலிடத்துச் சிறுகுடியிலுள்ள பரதவர், புன்னை நிழலில் இளைப்பாறிக், கடலில் செல்வதற்குரிய காலம் பார்த்து, அவ்விடத்திலேயே சிக்கல் நீக்கிய வலையை உணர்த்துவர் [நற்.4:2]. 'புன்கினது ஒள்ளிய தளிரை, முலை மீது கொண்டு, நிழலைக்காணுந்தொறும் நெடுங்காலம் தங்கி, மணல் காணுந்தொறும் விளையாடி, வருந்தாது செல்வாயாக', எனத் தலைவியிடம் உடன் போகும் தலைமகன் கூறினான் [நற்.9:7]. வேனிலில், காய்ந்த, காந்தளையுடைய அழல் வீசும் கடத்தில்,

நிற்க, நிழலும் பெறாது குட்டிகளை ஈன்ற பெண்புலியின் பசி தீர்க்க, மாலையில் செல்பவரைக் கொல்ல ஆண்புலி நோக்கியிருக்கும் *[நற்.29:2]*. வில்லினின்றும் எய்யப்படும் அம்பு செல்லும் நிழல், எவ்வண்ணம் விரைவில் சென்றழியுமோ, அவ்வண்ணம், நாள்தோறும், இன்பமும், இளமையும் கழியாநிற்கும் *[நற்.46:2]*. பூத்த புன்னையின் இனிய நிழலையுடைய துறையைச் சார்ந்த கடலைத், தன் பெடையோடு துழாவிய நாரை, சிறுமீனைக், கிளையின் உயர்ந்த கூட்டிலிருக்கும்பிள்ளையின் வாயில் சொரியும் *[நற்.91:2]*. மஞ்சளது பசும் புறத்தையொக்கும், இறவின் குவியலைப் பரதவர், புன்னையின் கொழுவிய நிழலின் முன் பரப்பி உலர்த்துவர் *[நற்.101:4]*. யானை, கன்றுடன் வருந்தக், கடுங்காற்று நீரற்ற, நிழலுமில்லாத நீள்சுரத்தே வீசும் *[நற்.105:5]*. இளம்பெண்யானையின் பசியை நீக்கப், பெரிய களிறு முறித்துத் தள்ளிய, வளைந்த அடியையுடைய, ஓமை மரம், வழிச்செல்வோர்க்குத் தங்கும் நிழலாகும் *[நற்.137:8]*. 'விற்கப் படாத எருக்கு, பூளை இவற்றினாலாகிய கண்ணியைச் சூடிப், பித்தேறிப், பலவூரில் திரியும் மடல்மாவேறியோய்! கடனறிந்த மன்னரது குடைநிழல் போலக், குளிர்ந்த மரநிழலில், சிறிது இருந்து செல்க', எனத், தலைவன் நெஞ்சினை நோக்கிக் கூறினான் *[நற்.146:4,5]*. நெய்தல் குவிய, நிழல் கிழக்கே சாய, ஞாயிறு மேலமலையிற் சார, நிலந்தண்மையையடையப் பல்பூங்கானலும் பொலிவிழந்தது *[நற்.187:1]*. காடுகள் தீப்பற்றிய மரங்களையுடையனவாதலின், நிழலும் நீங்கி, யொழிந்தது. அதனால், தனிமை நிலை பெற்று, நன்மையும் சிதைந்தது *[நற்.256:3]*. மருங்கூர் பட்டினத்தே வீட்டில், விருந்தயர்ந்த பின், மகளிர் புறக்கடையில் உகுத்த சோற்றையுண்ட காக்கை பிற்பகல் அசையும் நிழலில், குவித்த பசிய இறாமீனைக் கவர்ந்து, அசையும் பாய்மரக் கூம்பில், சென்றடையும் *[நற்.258:7]*. யாண்டுபல செல்லக், கடல் நீர் அலைத்தலாலே மோதப்பட்டு, முதிர்ந்து, தொழில் செய்ய உதவாத தோணியை, துறையில் ஞாழலொடு சேர்ந்தோங்கிய, புன்னையின் கொழுவிய நிழலில், குடமுழாப்போலும் மரத்தின் வேரடியில், பிணித்து வைப்பர் *[நற்.315:7]*. 'ஓமைச்சினையின் புள்ளிட்ட நிழலில் இருந்தேமாக, நடுக்கஞ் செய்யாது வந்து, ஒடித்துண்டயானை, வேறொன்றறியப் பிளிற, அதன் மடப்பிடி மலையகம் சிலம்பப், புலம்பிய குரலை நினைத்தீரோ?' என்று தலைவனைத் தோழி வினவினாள் *[நற்.318:3]*. எருமைக்கடா, நாரையின் கூட்டம் இரிந்தோடத், தன் உழுதொழில் வருத்தம் நீங்கக், குளிர்ந்த குளத்தில் பாய்ந்து, பின், மருத மரத்தின் இனிய நிழலில் தங்கும், *[நற்.330:5]*. வழிச்செல்வோரது பிணத்தைத் தின்னும் கழுகின் சேவலை வெருட்டித் தின்ற முதுநரி பாலைவழியில் தன்னிழலொடு மகிழ்ந்து, குதித்துப், பேய்த்தேரை நீரென்று கருதி ஓடும் *[நற்.352:5]*. பரதவர் நடுஇரவில் மீன் வேட்டம் சென்று, வைகறையில் மீனைக் கானலில் குவித்துப் புன்னையின் வரியையுடைய நிழலில் இருந்து, தேறலைச் சுற்றத்துடன் உண்டு மகிழ்வர் *[நற்.388:7]*. மூங்கில் வளர்ந்த, நிழல் மிக்க மலையில், கன்றினை ஈன்று, பிடி பசியால் வருந்தக், களிறு, தினைக் கதிரைக் கவரக், கானவன் எறிந்த தீக்கொள்ளி, மலையடுக்கம் விளங்க, மின்போல் பாய்ந்து, மறையும் *[நற்.393:1]*.

இருதாள் நிழற்கீழ், உலகம் மூன்றும் முகிழ்த்தன *[ஐங்.க.வா.2]*. பூவினைப் போன்ற புல்லிய தலையினையுடைய பேடை ஊரில் வரிகளையுடைய நிழலில் நின்றகவும் *[ஐங்.62:2]*. மள்ளர்களைப் போன்ற பெரிய கொம்பினையுடைய எருமைக்கடாக்கள், மகளிரைப் போன்ற தத்தம் துணையொடு தங்கும், நிழன்மிக்க பொய்கையையுடையது வயல் *[ஐங்.94:3]*. புலியேறு, கானத்தில் பிடியீன்ற குழவியைக் கொள்ள வேண்டிப், பலாமரத்தின் கொழுநிழலில் பதுங்கியிருக்கும் *[ஐங்.216:4]*. சுரநெறியில் அழல் மிகுந்து, நிழல் பெறாது, பெண்மான், தன் மறியொடு வாடும் *[ஐங்.326:1]*. வேனிற்காலத்தே இலவம்பூவின் காம்பூழ்த்துக் கழிந்த பலமலர், புன்க மரத்தின் புள்ளி நிழலில், சிதறிப் பரக்கும், *[ஐங்.368:2]*. நெல்லியின் பசுங்காயைத், தின்று, வெண்கடம்ப மரத்தின் வரிகளையுடைய நிழலிலிருந்தோர், மகன்றில் போன்ற உடன்புணர்ந்த காதலோர்', என, இடைச்சுரத்துக், கண்டோர் கூறினர் *[ஐங்.381:2]*. 'விடலையொடு மடந்தை, ஞாயிற்றின் வெப்பந்தணிய, யாமரத்தின் வரியையுடைய நிழலில் இருந்து, அடைந்த சுரத்தை, இச்சிறுமலை கழியக் காண்பாய்', எனச், செவிலிக்குக் கண்டோர் கூறினர் *[ஐங்.388:2]*.

வறியவன் இளமைபோல் வாடிய சினைகொண்டு, கொடுத்தற்குச் சிறிய மனம்படைத்தவன் செல்வம்போல், சேர்ந்தார்க்கு நிழலின்றி, ஒழுக்கங்கெட்டு, புகழும் கெட்டானது முடிவுபோல் மரம் வெம்ப, முறையின்றிப் பொருள் விரும்பிக், கோல்கோடியவனது குடைநிழலுலகு போல், வெஞ்சுரம் உலறியது *[கலி.10:2,6]*. இனிய நிழலில்லாததால் வருந்திய தன் மடப்பிணைக்குக், கலைமான், தான் நின்று தன் நிழலைக் கொடுத்துக் காக்கும் *[கலி.11:16,17]*. நீ வெஞ்சுரத்தேவரின், மரங்கள், நின் இளைப்பை மாற்றும் நிழலுடையவல்ல, என்று கூறுவீர். நீ நீங்கின், என்னலம், நிழலில் நின்றதளிர் போல, வெளுத்தலையறியுமாதலால், நும் திருவடியருளைக் கைவிடுவேனல்லேன்', என்று தலைவி தலைவனிடம் கூறினாள் *[கலி.20:16,17]*. 'தள்ர்ந்து தம் நிழல் சேர்ந்தார்க்கு, அவர் வருந்ததாதவாறு காத்து, அவரை முன் வருத்திய வேந்தரை வென்று, அவர் நாட்டில் உறைபவர், நம்மை நினையாரோ?' எனத், தலைமகள் கூறினாள் *[கலி.26:11]*. 'தம் நிழல் சேர்ந்தாரைக் காத்து, நெறியல்லாது பொருள் விரும்பிய மன்னரை வென்று, ஆண்டுறைபவர் நம்மை நினையாரோ' எனத் தலைமகள் வருந்தினாள் *[கலி.26:19]*. கண்களை விழித்தன போலக் குளங்கள் நீர் நிறைந்து, பூக்களால் அழகு பெறக் கண்ணாடிக்குள் பவழம் அழுத்தப் பெற்றவை போலக், குளங்களில் முருக்க மலர் வீழக், குள நிழலில், வண்டுகள்

ஆர்க்க, மரங்கள் பல மணிகளைச் சூடினாற்போலப், பூக்களைக் கொள்ளக், கூடினவர் கை நெகிழாவகை வந்தது, வேனில் *[கலி.33:5]*. 'மலை நாடன் வாராதமைவானல்லன், அவனது அன்பில் அது தோன்றின், நிழலுடைய குளத்து நீரில் நிற்கும் குவளை வெந்தது போலும்', எனத் தோழி கூறினாள் *[கலி.41:30]*. 'ஊர்ப் பொதும்பரில், நீரோடுகின்ற காலிடத்து நின்ற, கொழுவிய நிழலையுடைய, ஞாழலின் பூங்கொத்தைத் தலையில் சூடி, முழுமதி ஒளிவிட்டது போல, முகமலர்ந்து, ஈங்கேவருவாள்யாரோ?' என்பது, தலைவனின் கைக்கிளைக்குறிப்பு *[கலி.56:2]*. 'எல்லா! குறிப்பினால் ஒன்றைக் கொண்டு நிழல் போல் என்னைத் தொடர்ந்து திரிகின்றாய்! உன் குறை யாது?' என்று தலைவனை வினவினாள் தோழி *[கலி.61:8]*. மலர்ப்பொய்கையில் மகிழ்ந்துவிளையாடும் அன்னப்பேடை, தன் சேவலை அகன்ற இலை மறைக்கக், காணாது கலங்கி, மதிநிழலை, நீருட் கண்டு, தன் சேவலென உவந்தோடத், தன்னெதிர் வரும் சேவலைக் கண்டு, நாணிப், பலமலரிடை ஒளிக்கும் *[கலி.70:4]*. நீருள்ளே தாமரை இலையால் கவிக்கப்பெற்ற அதன்போது போல், குடை நிழலில் மகன் தோன்றுவான் *[கலி.84:11]*. நீருள், கரையில் நிற்கும் ஒன்றன் நிழல் போல் நுடங்கிய மெல்லிய இயல்புடையவள் கூனி *[கலி.94:2]*. மன்ன! நின் அழகிய குடையினது நிழல், அறத்தைச் செய்யும் என்று கொண்டாய். இவள், அக்குடைநிழலின் புறத்தாளோ? நுதல் பசப்பூரப் பட்ட இவளை அருள்வாயாக', எனச், சான்றோர் அரசனாகிய தலைவனிடம் கூறினர் *[கலி.99:8,9]*. இருளைக்கெடுக்கும் ஞாயிறுபோல், பகைவர்க்கும் குளிர்ந்த கதிரைச் சொரியும் மதிபோலக், குடை நிழல் சேர்ந்தோர்க்கும், தோன்றுவான், பலர் வணங்கும் முரசினையுடையவன் *[கலி.100:3]*. மழைபெய்த வியன்புலத்துப் புல் மாந்திக் குடம்பால் கறக்கும் ஆனிரை நீர் நிறைந்த நிழலவாயின *[கலி.109:3]*. வெல்லும் புகழையுடைய மன்னவன் உயிர் காத்து மறையக், குடைநிழலாலாண்ட, அவனுக்கும், அவனைத் தொடர்ந்து ஆளவரும் அரசனுக்கும் இடைப்பட்ட காலம் போல், ஞாயிறு மறையத், திங்கள் தோன்ற, அவற்றிடைப்பட்ட, மாலைக்காலம் வந்தது *[கலி.118:7]*. 'காமமாகிய பொறுத்தற்கரிய நோய், அறுதியாக நெருப்பு ஆயின், தலைவி அதற்குத் தந்த இம்மடன்மா, அறுதியாக, அதற்கொரு நிழல்', என்றான், தலைமகன் *[கலி.139:30]*. 'மடன்மாவேறி, மன்றின்கண் என்னைச் செல்ல வைத்தவள், ஒருகால், என் மனத்துள்ளேயிருந்து, பின் நீருள் தோன்றிய நிறைமதியின் நிழல், வாங்கிக் கொள்ள அரிதாயது போலப், பெற்றுக்கொள்ள அரியளாயினாள்', என்றான் தலைவன் *[கலி.141:8]*.

'திருமால் பொன்னையொத்த, உடையோடு தன்னையொத்த புகழாகிய நிழலையுடையவன் *[பரி.1:55]*. 'திருமாஅல்! எம் சுற்றமொடு, என்றும் நின் திருவடிக்கண் பொருந்தி விளங்க, நின் திருவடி நிழலைத் தொழுது வணங்குகின்றேம், என அன்பர் பரவினர் *[பரி.1:65]*. அருளைக் குடையாகவும், அறத்தை அதன் கோலாகவும் கொண்டு, மூவேழுலகையும், நிழல் இரண்டுபடாமை, ஒரு நிழலின்கண் காக்கும் காப்பையுடையவன் திருமால் *[பரி.3:75,76]*. 'திருமாலே! வெள்ளத்தின் நடுவில் மண் தோன்றும் முன் நான்முகனைக் கொண்டு, உந்திக்கண் மலர்ந்த தாமரைப் பொகுட்டினையுடைய நினது நேமியே உலக நிழல்! எனத் திருமால் புகழ் பாடினர் *[பரி.3:94]*. அழல் புரைகுழையையும், நிழல் தரும் கிளையையும் உடைய ஆலும், கடம்பும், யாற்றிடைக் குறையும், குன்றும் பிறவுமாகிய இடங்களைப் பொருந்திய பல கடவுளராக வகுத்துச் சொல்லப்படும் பெயரையுடையோய்! எனத் திருமாலைச் சிறப்பித்தனர் *[பரி.4:66]*. சினனுடையயோரும், அறஞ்சாராரும், அழிதவத்தோரும், மறுபிறப்பில் லென்போரும், செவ்வேளின் தாள் நிழல் சேரார் *[பரி.5:77]*. எமக்கு அருள் செய்தல் வேண்டி, முருகவேள் மேல் ஆணையிடின், அவனைச் சார்ந்த அருளில்லாத அணங்கும், அவரது வேலும் உன்னை வருத்தும். அறவோர் அடி தொட்டுச் சூளுறினும், அம்முருகனது மயிலையும், அவனது வேல் நிழலையும் நோக்கிச் சூளாறதே! எனத், தலைவனிடம் தோழி உரைத்தாள் *[பரி.8:67]*. எல்லா மலர்களும் மணக்கின்ற இருகரையிடையே சென்று, மாலையில் தெளிந்து தேங்கி நின்று வையை விண்ணிழலைத் தன் நீரில் காட்டும் *[பரி.12:84]*. தோன்றியதும், தோன்றுகின்றதும், தோன்றுவதுமாகிய காலக் கூறுபாடுகளைக் கடந்து அக்காலங்கள் தாமே பொருந்திய தாள் நிழலையுடையவன் திருமால் *[பரி.13:47]*.

**3. அருள்.** 'இவர் தாம், அறிவான் உழுதுண்ணும் கற்றோரது வறுமையை அஞ்சித் தம்முடைய பொருளைப் பகுத்துண்ணும் தண்ணிய நிழல் - அருள் - உடையோராய் வாழ்பவராவர்', என மலையமான் மக்களைச் சுட்டிக் கோவூர் கிழார் பாடினார் *[புற.46:4]*.

'கரிகால் வளவனது நிழல் மருங்கில் சென்று வணங்கி நிற்பின், நும் கலையைக் கேட்பதற்கு முன்னே கன்றீன்ற ஆவினைப் போல, வந்து நுமக்களிப்பன்' எனக் கூறிப் பரிசிலரை ஆற்றுப்படுத்தினர் *[பொரு.149]*. 'பல பண்டங்களைக் கொடுத்தும், உணவினைக் கொடுத்தும் நல்வினையிற் குறையாத தண்ணிழல் வாழ்வினையுடையவர் உழவர் *[பட்.204]*.

நீர் நீங்கின் நீழல் பட்ட தளிர் போல வெருப்படை வேனாதலினால், நும் தாள் நிழல் கைவிட்டு நீங்குதலை நினைப்பேனோ?' என்று தலைவனிடம் கிழத்தி உரைத்தாள் *[கலி.20:18]*.

**4. குளிர்ச்சி.** நீர் அளவின் மிகின் தடையுமில்லை. தீமிகின், உயிர்க்குக் கொடுக்கும் நிழல்- குளிர்ச்சி- (குளிர் பொருள்)- எதுவுமில்லை *[புற.51:2]*.

பண்ணனது காவிரியின் வடபாலுள்ள, நிழற் கயத்தையடுத்துள்ள, மாமரத்தின் தளிரையொத்தது ஆகம் *[அக.177:17]*.

அழகிய நிழல், ஒளி, கொண்டு பிறையாகி, வளரும் நிறைமதி அமுதை, உணவாகக் கொள்ளும், தேவர்க்கு முதல்வன், திருமால் *[பரி.3:51].*

**5. புகலிடம்.** மகளிர் புலம்பி வாயிலைக் கடந்து செல்லத்தக்க நிழல் - புகலிடம் - இல்லாமையால் வளவனின் தாளினைச் சேர்ந்தனர் *[புற.373:15].*

வளவிய ஊர்களிடத்துக் குடிகளெல்லாம் வருந்திப், பிற நாட்டிலிருக்கும் சுற்றத்தார் தமக்கு நிழலாகச் சென்று சேரப் பாண்டியனது பகைவர் நாடுகள் பாழாயின *[மது.168].*

**6. ஆக்கம்.** 'போர் நிழல்-ஆக்கம்-விரும்பிய படைச் சுற்றத்தோடு நீ ஊரின்கண் தங்காதொழிக. புண் தோளினர் போர்முகத்திருக்கத் தானை, வயலில் வந்து தங்கியது களையுநர் யார் என நார்முடிச்சேரலை வியந்து பாராட்டினார் 'காப்பியாற்றுக் காப்பியனார் *[பதி.40:1].*

**7. நிறம்.** நூல் சூழ்ந்து கிடக்கின்ற வட்டமாகிய அப்பம், பாலில் கிடந்தது போல, நிழல்-நிறம்-கிளரும் மணலிடத்துக், குழிகளில் நின்ற நீரிடத்துக், குருக்கத்தியின் மலர்கள் வீழ்ந்து கிடந்தன *[பொரு.379].*

**8. உருவம்.** 'நிழல்- உருவம்- காணும் கண்ணாடியில் ஊதிய ஆவி,முன் பரந்து பின் சுருங்கினாற்போல, மதுகை, சிறிது சிறிதாகக் குறைந்து வந்து மாயும்', எனப், பிரிவிடைத் தோழி கூறினாள் *[அக.71:13].* நிழலைக் காணும் கண்ணாடியை நோக்கி, அழல் போல் ஒளிவிடும் அணிகலன்களைத் திருத்துவாள், ஒருத்தி *[பரி.21:23].*

**நிழலோர்** - சாயையில் வாழ்வோர். 'நின் தாள் நிழலோர்- சாயையில் வாழ்வோர் - ஆகிய வயவர் பகைவர் நாடுபெறினலல்து இன்பம் மேவிய நாளைப் பெறுவரோ' எனச், சிறப்பிக்கப் பெறுவர் *[பதி.68:20].*

**நிறத்தன்** - வண்ணத்தன். எரியை இகழ்வது போலும் நிறத்தன் - வண்ணத்தன் - கொன்றையந்தார் மார்பினன், (சிவன்) *[பதி.க.வா.1].*

**நிறப்படை** - குத்துக்கோல். நிறப்படையைக்- குத்துக்கோலைக்-காயும் யானை மேலிருப்போனாகிய வள்ளுவன், வயவரைப் போர் செய்ய ஏவத் தண்ணுமைப்பறை முழக்குவன் *[புற.293:1].*

**நிறம்** - 1. தோல். கோப்பெருநற்கிள்ளி, புலியின் நிறத்தால்- தோலால் - செய்யப்பட்ட மெய்க்கவசத்தின் கொளுத்துக்கள் சிதைய, எய்த அம்புகளால் போழப்பட்ட, கூற்றம் போன்ற களிற்றின் மேலிருந்தான் *[புற.13:2].*

**2. வண்ணம்/உரு.** 'பால் போலும் நிறம் - வண்ணம் - உடைய பனைக்கொடியோனும், நீலநிறம் உடைய நேமியோனும் எனும் இருபெருந்தெய்வமும் உடன் நின்றமைபோல வேந்தர் இருவீர் உடனிருந்தனர் *[புற.58:14,15].* பொருதுபட்ட வீரரது புண்ணைத் தோண்டி உதிரந்தோய்ந்த செய்யகையால் தமது மயிரைக் கோதி, நிறமிக்க வடிவையுடைய பேய்மகளிர் ஆடப், பருந்து ஊனைத் தின்ன, மன்னர் இருவரும் படையுடன் பட்டனர்' *[புற.62:4].* 'மூங்கில் நெல், பலவின் பழம், வள்ளிக்கிழங்கு, அழகிய நிறமுடைய ஓரி பாயச் சொரியும் தேன் ஆகிய உழவருழாதன, நான்கு பயனுடைத்து, பாரியது பறம்பு' *[புற.109:7].* அருவியை ஏற்று நிறம் மாறிய தில்லையின் தளிரைப் போன்ற சடையோடு இலையையுடைய தாளியைப் பறிப்போன், முன்பு மகளிரைப் பிணிக்கும் சொல்வலை வேட்டுவனாயிருந்தான் *[புற.252:1].* கிணைஞனின் வறுமை நீங்கல் வேண்டி அரையின் நீல நிறமுடைய கந்தையை நீக்கி, வெளியதுடுத்திப் பசியையும் களைந்தான், அம்பர் கிழவோன் நல்லருவந்தை *[புற.385:6].*

வேல்பாய மார்பின் புண்ணினின்றெழும் குருதி, நீலமணிபோலும் நிறமுடைய கழிநீரின் நிறம் மாற்றிக் குங்குமக் கலவை போலாக்கியது *[பதி.11:9(2)].* நீலமணிபோலும் நிறமுடைய கரிய இருள் அகலுமாறு, நிலாவிரிந்து பிறைமதி, முழுமதியாயிற்று *[பதி.31:11].* கள்பொங்க அசையும் பானையின், இனிய சுவையோடு, நீலமணிபோலும் நிறமுடைய கள்ளையும், பிறவற்றையும் வயவர்க்கு வழங்கி மகிழ்பவன் செங்குட்டுவன் *[பதி.42:12].* நிறம் (மார்புமாம்) தோன்றிய குருதி நிலத்தில் பரந்து, மழைநீர் போலப் பள்ளங்களில் ஓடிப் படுபிணம் பிறங்கப் போர் செய்தான் குட்டுவன் *[பதி.49:11].* படைஞர் புனைந்த பனந்தோடு, பகைவர் குருதி படிந்து, நிறம் பெயர, ஊனென்று கருதிப் பருந்து அதனை கவர்ந்து சென்றது *[பதி.51:22].* மகளிர் நிறந்திகழும், பசும்பொன்னிழையை அணிந்தனர் *[பதி.73:5].* தன்னிறம் மறைதற்குக் காரணமான வண்டுபடும் கூந்தலையுடையள்அரிவை *[நற்.81:27].*

வருத்தமில்லாத குறிக்கோளோடு, தவத்தொழிலை முடிப்பாருடைய மனத்திலே பொருந்தித் தோன்றும், ஒளியும், நிறமும் உடையவன் முருகன் *[முரு.90].* 'நீ நயந்து செல்லின், இருண்ட நிறத்தையுடைய கடல் சூழ்ந்த உலகத்திடத்தே, நீ ஒருவனுமே வீடுபெறும் உரிமையுடையையாய்த் தோன்ற முருகன் பெறற்கரும்பரிசில் நல்குவன் *[முரு.293].* பொன்னும், மணியும் நிறம் விளங்குமாறு, பொன்னைக் கொழித்து இழிதரும் அருவியையுடையது பழமுதிர் சோலைமலை *[முரு.306].*

பரதவர் குறிஞ்சிபாடக், குறவர் நெய்தற் கண்ணி சூடக், கானவர் மருதம் பாட, மருதநிலத்தார் நீலநிறமுடைய முல்லைத்திணை பாட, நாடு நானிலமும் செறிந்திருந்தது *[பொரு.221].* கானத்துக் குமிழமரத்தின் பழத்தினது நிறத்தை யொப்பத், துவரூட்டின கைத்தொழிலால் பொலிவு பெற்ற, போர்வையோடு, முறுக்கடங்கின நரம்பினையுடைய பாடுந்துறை முற்றிய இசை கூடியதுயாழ் *[சிறு.225].* பாணன் சில கூறிய

அளவில், பல்வேறு அடிசிலை, ஒளி பொருந்திய நிறமுடைய வானத்து மீனும், ஞாயிறும் போன்ற பொற்கலத்தில், குறையாத விருப்போடு அவனுக்குத் தானே நின்றூட்டுவன், நல்லியக்கோடன் *[சிறு.242].* யானை தாக்கினும், அரவு மேலே ஊர்ந்து செல்லினும், நீலநிறமுடைய வானத்தில் இடிமுழங்கினும், சூல் கொண்டமகள் அஞ்சாத மறம் பூண்ட வாழ்க்கையினள் *[பெரு.135].* நீலநிறத்தையுடைய நெடியோனது கொப்பூழில் தோன்றிய தாமரைப்பொகுட்டு நான்முகனைப் பெற்றது *[பெரு.402].* நீல நிறத்தையுடைய வானத்தில், நெஞ்சமர்ந்து விளையாடும் தெய்வ மகளிர் போலக், கண்டோர் நெஞ்சம் நடுங்குவதற்குக் காரணமாகியவர் பரத்தை மகளிர் *[மது.581].* பலநிறங்களைத் தன்னுள் அடக்கிய நீலக்கச்சினராய், மெல்லிய நூலேணியைச் சுற்றினராய், அணிகலன்களைக் கொள்ளும் வேட்கையினராய்த் திரிபவர் கண்ணிலிருந்து விரைவில் மறையும், கள்வர் *[மது.639].* நீலநிறத்தினையுடைய விசும்பில், மின்னல் பாய்வது போன்ற மகளிர், புலந்து சிந்திய ஆரத்தின் முத்தும், பிறவும் ஆகிய பொருளைப் பூவாடலோடு பெருக்கியொதுக்கினர் *[மது.678].* பிரிந்து, இணைவுற்ற, மூட்டுவாயற்ற, பழைய நிறம் கெட்ட, கவசத்தோடு, ஊனும் கெட்ட, சகடத்தின் வலிய குறடு போலும் மார்பினையுடையவர் வயவர் *[மது.740].* நீண்ட மயிரினையும் தூய நிறத்தினையும் உடைய கவரியேறு, குறுகிய காலினையுடைய அன்னத்தோடு தாவித்திரியும் *[நெடு.91].* பூநிரைத்துத், துணையொடு புணர்ந்த அன்னத்தின் தூய நிறத்தினையுடைய தூவியாலாகிய, இணைந்த, அணையைப் பரப்பிக், காடியிட்டுக்கலக்கிக் கழுவிய கலிங்கத்தின் தூய மடிப்பை மேலீடாக படுக்கையில் விரித்தனர் *[நெடு.132].* நீலமணியின் நிறம் கொண்ட கரிய தலைமயிரில் மலையிடத்தனவும், நிலத்திடத்தனவும், சினையிடத்தனவும், சுனையிடத்தனவுமாகிய பல வண்ணமலர்களைத் தொடுத்த கண்ணியன் தலைவன் *[குறி.112].* நீல நிறத்தையுடைய விசும்பில் திரியும் நாள்மீனும், கோள்மீனும் போல, மன்றத்துப் பலருடன் கூடிக் கையினும், கலத்தினும் தீண்டி விளையாடினார் *[பட்.67].* செல்வத்தை ஆக்கும் மழைபெய்யும் இருளின் நிறங்கொண்ட வானத்தில், முழங்கும் ஓசையைப் போலப், பண்கள் அமைக்கப்பட்ட மத்தளம் முழங்கியது *[மலை.1].* நீல நிறம் பொருந்திய ஒளி, தேனிற் பரத்தலால் நெடுவரையில் கண்களையுடைய தேனிறால் ஒழுகும் *[மலை.524].*

நீரின் நிறம் மறையும்படியாக மலர் நிறைந்து, முதலை தங்கும், கல்லோடு, கழியும் கொண்டு, மதங்கொண்ட யானையின் செருக்கற வெள்ளம் இழுக்கும் *[அக.18:1].* யாற்றின் பொழிலில், காஞ்சிப்பூக்கள் உதிர்ந்த மணல் மேடுகள், புது மணங்கொள்ள, நீலமணி போலும் நிறமுடைய குயில் கூவ, இலவம்பூக்களில், கோங்கின் தாதுக்கள் சிந்த, இளவேனில், வந்தது *[அக.25:6].* கானலில், கழிப்பூக்கள் கூம்ப, நீலநிறமுடைய பெருங்கடல் ஒலிப்ப, மீனுண்ட குருகினம் புன்னையில் கூட்டில் சேர, வண்டாரவாரிக்க மாலை வந்தது *[அக.40:2].* இருளில் மணியை உமிழ்ந்த நாகம், காந்தட் பூவினை ஊதும் தும்பியின் நல்நிறம் கண்டு, தன் மணியோ என மருளும் *[அக.138:19].* 'அரக்கின் நிறமுடைய தம்பலப் பூச்சிகள் எங்கும் பரவியிருந்தன *[அக.139:13].* 'உலகத் தொழில் கெட, ஏர்த் தொழில் மடிய, மழைமாறிய வானில், மறுவின் நிறம் கிளர, மதி நிறைய, அறுமீனாகிய கார்த்திகை மீன் சேரும் நடுநாளில், தெருவிளக்குறுத்தி, மாலை நாற்றிப், பலர் கூடும் விழவயரத் தலைவர் வருவாராக', எனத், தலைமகள் வேண்டினாள் *[அக.141:7].* 'எம் அன்னை, துறைக்கடவுட்குக் கள்ளும், கண்ணியும், ஆட்டுக்கிடாயும் செலுத்தியும், தன்மகளது நோய் தணியுமாறு அறியாளாய், அழத் தலைவியது நீலமணிபோலும் மேனி, பொன்னிறங் கொளல், நின்னுடன் நகையாடியதாலாயதோ?' எனத் தலைவனைத் தோழி வினவினாள் *[அக.156:17].* கள்விற்கும் மகளிர், இடையிற் சுமந்து வந்த பானையின் முனை வாய் சொரிந்த, அரிக்கப் பெற்ற நிறமுடைய கள்ளை, மாந்திப் போரை விரும்பி செங்கண் ஆடவர் ஆர்ப்பரித்தனர் *[அக.157:3].* வேலினது இலை, தன் நிறம் மாறிச், சிவப்படையுமாறு உயர்த்திப், பகைவரது யானைப்படையைப், போரின்கண் அழித்தவன் பண்ணன் *[அக.177:14].* மழையினை வேண்டாது, ஆறலைக்கும் கவர்த்த வழிகளை வேண்டும், வில்லேருழவர், ஒழித்த உடலினது தசையைக் குருதிச் செவ்வாயினையும், வெண்ணிறக் கழுத்தினையும், உடைய கழுகு, யாமரத்துக் குஞ்சிற்கு உண்பிக்க, அதுவழுவி, முது நரிக்கிரையாகியது *[அக.193:5].* சாரற்கண், கன்றுகளோடு பிடியினம் இன்பமடையப், புலிப்பகை கொன்ற யானை, கையெடுத்து உயிர்க்க, வேங்கை மலர், ஊதும் உலையில் தெறிக்கும் தீப்பொறிபோல், பொங்கி, மின்மினி போல, நீலமணிபோலும் நிறமுடைய புதலில் பரவியது *[அக.202:8].* கரும்பின் பூவசையப், பச்சிலைப் புதலில், பகன்றை, நீலம் ஊட்டப் பெற்ற தோலின் நிறம் மறையப் பதித்த கண்ணாடி போல, மலர, அவரை அவிழத், தோன்றிவிரியக், குருகினம் ஒலிக்கப், பிரிந்த மகளிர் நடுங்கப், பனிப்பருவம் வந்தது *[அக.217:7].* வாள்போலும் நிறமுடன் மின்னித், துளி சிதறி, இடித்து இரவில் முகில் முழங்கும் *[அக.218:3].* 'வானுற உயர்ந்த நீல நிறம் பொருந்திய மலையுடைய கானக நாடன் உறுவித்த நோய் நீங்க, மழைபொழிந்த சேற்றுவழியில், நாம் (அவனைத் தேடிச்) செல்வேமோ?' என்றாள், தோழி *[அக.222:1].* இலஞ்சியில் கொண்ட பெருமீனினது நிறமுடைய கொழுவிய துண்டினையுண்டு, நெல்லரிநர், பல நெற்சூட்டினையிட்ட களத்தில், மழைத்துளிபோல, மாவின் புதுப்பூச் சிதறும், *[அக.236:3].* பாதிரியின் நிறமுடைய மலர், அதிரல் மலரொடு, அறல்பட்ட மணலில் கோலஞ்செய்யப், பாம்பின் பற்போன்ற அரும்புடைய குரவின் சினையைத், தென்றல் ஊடறுத்துச் செல்லக், குயில் கூவும் *[அக.237:1].* கழிமலர் குவியப், புன்னை நறுமலர் பொன்னிறங் கொண்டு விரிய, ஞாயிறு வெம்மை

குறைய இரவு வந்தது [அக.260:9]. 'முருகென உணர்ந்து, புகழ்ந்து, செந்தினை நீரொடு தூவி அன்னை பரவுகின்றாள். வேங்கையின் கிளைபொலிய மணி நிறமுடைய மயில் அகவும் மலைநாடனோடுள்ள தொடர்பு இனி என்னாகுமோ?' எனத், தோழி கூறினாள் [அக.272:18]. குயிலின் கண்ணைப் போன்ற காய் முற்றி, மணிக்காசு போன்ற நிறமுடைய இருங்கனி, உகாவின் கிளைகளிலிருந்து உதிரும் [அக.293:7]. நிலம் நீரறச், சுனைவறப்ப, மலை வெம்பக், கடுங்கதிர் காய, மூங்கில் தெறிக்கும் அகலிடத்தில், நிலவு போன்ற வெண்ணிறமுடைய கொம்பின் மேல், துதிக்கையைச் சேர்த்திய, மதந் தேம்பிய, யானை வேங்கையினை வென்றது [அக.295:4]. வானிடத்து மழைமாற, இருளினைப் பகலினும் பரப்பிப், புகையின் நிறம் போலும் உருவினையுடைய பனிக்காலம் நீங்க, வேனிலில் மானினம், மகிழும், [அக.317:3]. கருமணி போலும் வாயினையுடைய காக்கையின் கருநிறமுடைய சுற்றம், ஆலமரத்தின் கிளையிலிருந்து, கொடுவில்லையுடைய எயினரது அம்புபடப் பட்டோரது பிணங்களைக் கவர்ந்துண்ணும், [அக.319:1]. கருநிற உருவுடைய மணி போலும் கண்ணுடைய காக்கை, பிணங்களின் கொழுப்பினைக் கவரும் [அக.327:15]. மூங்கிலைக், கிளையொடு மேய்ந்த யானை, நீர் வேட்ட துறையருகே, அதன் நிறம் - உரு - பார்த்துப் பதுங்கிய புலியைக் கொன்று, கோட்டுக்குருதியை மழைத்துளியில் கழுவி, வாழை மரமுடைய மலையில் துயிலும் [அக.332:3]. 'வெண்ணிற ஆலங்கட்டியின் தகுதிப் பாட்டினையுடைய பூவொடு வளர்ந்த, முற்றாத கமுகின் பசுங்காய் நீரினும் இனியவாகி, அமிழ்தம் ஊறும் செவ்வாய்க் குறுமகளையும் கொண்டு செலின், நெஞ்சே! சுரம் செல்லற்கரியதன்று', என்று தன் நெஞ்சிற்குக் கூறினான் தலைமகன் [அக.335:21]. மழை பொழிந்த வெண்ணிறக் களர் நிலத்தில், காற்று வீச, நிலவென்னுமாறு, விரிந்த பிடவினையுடைய கானத்தே மயிலினம் பயிலும் [அக.344:1]. 'நீலமணியை யொத்த நிறம் விளங்கும் கழுத்தினையும், அழகிய தோகையினையுமுடைய மயில்கள் ஆடுந்தகையினையொப்பக், கூந்தல் பரக்கச், சுனையில் ஆயத்துடன் தலைவி ஆடவில்லை [அக.358:1]. வரிபொருந்திய, நிறமுடைய, கறையான் அரித்தமையால் அச்சமிக்க பொதியில் பெருநலம் சிதைந்தது [அக.377:9].

'தந்தையும் நீல நிறமுடைய கடலில் சென்றனன். யாயும் உப்பை விற்று நெல்லைத்தரச் சென்றனள். சேர்ப்பனுக்கு இனி வரல் எளிது', என்றாள் தலைமகள் [குறு.269:4]. 'முறுக்கிய கொம்பையும், இருள் நிறத்தையுமுடைய எருமையின் கழுத்தில் கட்டப் பெற்ற மணி அசையுந்தோறும் ஒலிக்கும் இக்காலம், வருதற்குத் தகுதியாகவும், தலைவர் வாராராயினர்', என்றாள் தலைமகள் [குறு.279:1]. பரதவர் கொண்ட மீனினது உணங்கல், இறவின் வாடலொடு, நிலவின் நிறம் போன்ற துறையின் வெண்மணலில் கிடந்து, புலால் மணம் கமழும் [குறு.320:3]. பொய்கையில் உள்ள ஆம்பலது அழகிய நிறத்தையுடைய கொழுவிய அரும்பை, வண்டு திறக்கும் [குறு.370:1].

கடற்கரைச் சோலையிலுள்ள சிறுகுடிப் பரதவர், நீலநிறமுடைய புன்னையின் கொழுநிழலில் தங்கிக், கடற்பரப்பில் செல்லும் காலம் பார்த்து, வலையை உணக்குவர் [நற்.4:2]. 'அன்னை, என்னை நோக்கி, ஏன் அழுகின்றனை, என்ன, யான், நாண் மறந்து, சாரலில் காந்தள் மலரை, நீலமணிபோலும் நிறமுடைய தும்பி ஊதி, யாழ் நரம்பு போல் ஒலிக்கும் வெற்பன் மார்பைப் பிரிந்தமையால், எனக் கூறத் தொடங்கித் தவிர்ந்தேன்' என்றாள், தலைமகள் [நற்.17:10]. அழகிய வளையின் புறத்தே அரக்கைக் கொண்டு வரைந்தாற் போன்ற, வரைகளையுடைய இதழைக் கொண்ட நறவம்பூவின் நறும்பூம்பொடியை அளவளாவிய தும்பி, பொன்னையுரைக்கும் கட்டளைக் கற்போல, நல்ல நிறம் பெறும் [நற்.25:4]. 'பெரும! இவளே, கடற்கரைச்சோலையில் பொருந்திய சிறுகுடிக்கண் இருக்கின்ற, நீல நிறமுடைய, கடல் கலங்கச் சென்று, மீனைப் பிடிக்கின்ற, பரதவர் மகள். நீயே, கொடியசையும், கடைத்தெருவுடைய மூதூரில் கடுந்தேர்ச்செல்வன் மகன். எம், சிறுவாழ்க்கை, நும்மொடு ஒப்பாவதோ?' என்று தலைவனைக் கேட்டாள் தோழி [நற்.45:2]. 'அவர்மாட்டுப் பிரிந்த என் நெஞ்சம், அவர்க்கு உசாத்துணையா யிருந்துவிட்டதோ? மீண்டு வந்து, என் முன்னை நலனிழந்த பொன்னிறப்பசலையை நோக்கி, இவள் வேற்றவள் என்று, நோய் மிக்கு, என்னைத் தேடிச் சென்றதோ?' என்று தலைவி கூறினாள் [நற்.56:8]. 'நீர்த்துறையில், கழுவப் பெற்ற வெள்ளாடை போன்று, நிறம் விளங்கும் சிறகுடைய வெள்ளாங்குருகே! எம்மூர்த் துறையில், கெளிற்று மீனையுண்டு, அவரூர் பெயர்தி. அவரிடம், எம் அணி, கழன்ற துன்பத்தைச் செப்பாதது, பெருமறதியோ', என்று, காமம் மிக்க கழிபடர் கிளவியில் தலைவி உரைத்தாள் [நற்.70:3]. 'குறுமகளே! மழையில்லையாகிய வெண்ணிறமுடைய வானத்தையுடைய உலர்ந்த காட்டில், ஆலமரத்து நிழலில் இளைப்பாறி, அஞ்சுமிடத்தும் அஞ்சாது, வேண்டிடத்துத் தங்கி, வருந்தாது செல்க', எனப், புணர்ந்துடன்போகிய தலைமகன் தலைவியிடம் கூறினான் [நற்.76:1]. 'தலைமகன் வரவறிந்து, கடல் முகந்து, மணி நிறம் போல் மலையருவி பாய, நிலம் மறைய, மலை இமைப்பது போல் மின்னி, இடியுடன் வந்த மழைக்கு, என்ன விருந்தாகிய கைம்மாற்றினைச் செய்வேனோ?' என்றாள் தோழி [நற்.112:6]. பெருங்கடற்கரையில், நீலநிறப் புன்னையருகிலுள்ள கைதை, ஞாயிற்றின் சாய்கின்ற கதிர் வனப்புப்போல், தோன்றும் [நற்.163:8]. தன்னிறத்தை வேறுபடுத்தும் முதிய ஒதிப்போத்து, பாணர் யாழ்வாசிப்பக் கேட்டுப் பக்கத்தில் நீண்டுயர்ந்த யாமரத்தில் ஏறும் [நற்.186:5]. பரதவருடைய நெடுந்திமிலின் விளக்குச் சுடர், காற்று மோத நீலநிறமுடைய விசும்பில், மீன்போலத் துறையில் மெல்ல இமைக்கும் [நற்.199:9]. 'நெஞ்சே! ஈங்கையின் தளிர்மீது மழை பெய்து மாறிய போது, உண்டாகும் அதன் அழகிய நிறத்தைத் தலைவியின் மாமையழகு, நிகர்க்கும் [நற்.205:11]. 'நீலநிறமுடைய கடற்பரப்பின்

கரையிடத்திருந்த பாக்கத்தில், இன்று தங்கின், எவனோ?' என்று தலைவனைத் தோழி வினவினாள் [நற்.215:6]. நீலமணிபோன்ற நிறமுடைய கருவிளை, தோன்றிப் பூவோடு அணி செய்யப், பொன்போன்று கொன்றையின் அலர், கோடுதோறும் தூங்க, நறுநாற்றத்தைப் பரப்பி வைத்தாற் போன்று, செம்புலப்புறவு தோன்றும் [நற்.221:1]. 'நீலமணி போன்ற நிறமுடைய விசும்பில், வணங்கத்தக்க மரபினையுடைய எழுமீனது தோற்றம் போலக், கடற்பரப்பில், சிறுவெண்காக்கை பல ஒருங்கே ஆடும் [நற்.231:1]. 'புறந்தாழ்ந்த கரிய கூந்தலையுடைய, மலரின் நிறம் பெற்ற ஈர இதழுடைய கண்ணையும் கொண்டு, மனத்தைப் பிணித்துக் கொண்டவளது, நெஞ்சத்தின் துன்பந்துடைக்கச் செல்வோம் எனின், செய்வினை முடியாது செல்லல், அறியாமையினும் இழிவுதரும், என்றும் அறிவு கூறும்' என்று, தலைமகன் உரைத்தான் [நற்.284:2]. 'மழையை நோக்கி மலர்ந்த நீலமணி போலும் நிறமுடைய கரிய புதல், மழை நீங்க, நரை போலும் நிறம் பெறுதலைத், தலைவர் அறியாரோ?' என்றாள், தலைமகள் [நற்.302:4,5]. 'முல்லை, நின் பல்லையொத்து அரும்பையீனும் காலத்து வருவேம், எனச் சென்றார். எனவே, அவர் வாராமுன், நீலமணிபோலும் நிறங்கொண்டு வந்த முகில் மடவது காண்', என்றாள் தோழி [நற்.316:1]. அழகிய நிறங்கொண்ட நீலமணியையொத்த கூந்தலின் பயனைக் கொள்ளாது, பொருள் படைக்கப் பிரிந்தோர், உலகம் படைத்த காலந்தொடங்கி வரும்' அறநெறியை மறந்தாரோ?' என்பது தோழி கூற்று [நற்.337:7]. 'நிலவோ, நீல நிற விசும்பில் கதிர் பரப்பிப், பாற்கடல் போலாக்கியது. ஊரோ, விழவயரும். கானோ, வண்டு மொய்க்கும். யானோ, இழை நெகிழக் கண்ணுறக்கமில்லேன்', என்பது, தலைவியின் ஆற்றாமை மீதூர்ந்த கிளவி [நற்.348:1]. கடற்கரையில் இரவு போன்ற இருள் நிறமுடைய புன்னையின் அடிமரத்தில், பிணிக்கப்படுதலானே அசையும் தோணியில் நீர்த்திவலை தெறிக்கும் [நற்.354:5]. மாலைக்காலத்தில் கழியிடத்து நீர் பெருக, நீல நிறம் பொருந்திய நெய்தல் குவிய. அலைவீசும் கடலில், மீனையுண்டு, புள்ளினம் கூடு சேரும் [நற்.382:2].

ஆம்பல் மலரின் நார் உரிக்கப்பட்ட தண்டினது நிறம் போன்றது தலைவியின் மாமை அழகு [ஐங்.35:3]. தலைவன் ஊரின்கண் ஓடும் யாற்றின் நீர், கூதிர்காலத்தில் கலங்கியும் வேனிற் காலத்தில் நீலமணி போன்ற நிறங்கொண்டு தெளிந்தும் இருக்கும் [ஐங்.45:2]. கழனிகளின் சேற்றில், நீலமணி போன்ற நிறமமைந்த நெய்தல் மலர், ஆம்பல் மலர்களோடு தழைத்திருக்கின்ற கழனிகளையுடைய ஊர்த் தலைவனின் மகள், தலைவி [ஐங்.96:2]. நீலநிறமுடைய பெரிய கடலின்கண் வாழும் கடற்பறவைகளின் ஒலிபோன்று, தலைவன் வரும் தேரின் ஒலி, இசைக்கும் [ஐங்.102:2]. தலைவன் நாட்டின்கண் உள்ள மலை, நீலமணிபோலும் நிறமுடையது [ஐங்.208:4]. பொன்னுரைக்கும் கட்டளைக்கல் போன்ற தும்பி இடையிடையே பொற்கோடு பொருந்தி, நீலமணி போன்ற நிறமுடையதாயிருக்கும் [ஐங்.215:1]. தலைவனும் தலைவியும் நீலமணி போலும் நிறமுடைய மலையின் அருவியில் நீராடுவர் [ஐங்.224:2]. நிலவுலகம் முழுதையும் உள்ளடக்கிக் கொண்டிருக்கின்ற அகன்ற வானவெளி, நீலநிறமுடையதாய் விளங்கியது [ஐங்.401:4]. அழகிய நிறமமைந்த பெரிய மலைகளின் உச்சியிலே, நீலமணி போன்ற நிற எழிலையுடைய தோகை மாமயில்கள், உள்ளன [ஐங்.431:2,3].

கொடிய வழியில் சென்றுள்ள தலைவனுக்கு ஊறு நேராவண்ணம் கடவுளை வேண்டுவோமா? என்ற தலைவியிடம், தோழி, 'அதற்குத் தேவையில்லை; உலகில் மழையின்றிப் பஞ்சம் வருமாயின் இவ்வுலகிற்கு மழையைக் கொண்டு தரும் கற்புடையாள், வருந்தித் தன் நிறங்கெட்டுப் போவாளோ? என்று, உனது ஆற்றல் கண்டு, அறக்கடவுள், தலைவரின் முயற்சிக்குத் துணை புரிந்து, அவரை விரைவில் கொண்டு வந்துவிட்டது; கவலையுறாதே', என்று, கூறினாள் [கலி.16:21]. 'கூடவே வருவேன், என்ற, எனக்கு, நாம் போகும் வழியில், நிழலைத் தரும் மரங்கள் இல்லையே, என்ற, எனக்கு, நாம் போகும் வழியில், நிழலைத் தரும் மரங்கள் இல்லையே, என்று, தடுக்கின்றவரே! நீர் பிரிந்தால், நீண்ட நிழலடியில் துளிர்த்த தளிர் நிறம் கெட்டு, வெளுத்துப் போவதைப்போல, பசலை படர்ந்து, பாழாகிவிடுவேன், என்பதை அறிந்துள்ள யான், நின்னைப்பிரிந்திருக்க ஒப்புவேனோ', என்று, தலைவி, தலைவனிடம் கூறினாள் [கலி.20:17]. இளவேனிற் பருவத்தில், புலிநகக் கொன்றை (ஞாழல்) மலர்கள் காமனின் தம்பியாகிய சாமனின் நிறம் போல், மலர்ந்தன [கலி.26::4]. தலைவன் பிரிந்துவிடும்பொழுது, தலைவியின் பொன்னிறங்கெட்டுப் பசலை பாய்ந்துவிடும் [கலி.27:10]. போர்மீது பிரிந்து சென்ற தலைவர், வெற்றி பெற்றுக் குதிரை மீதமர்ந்து, வெற்றி உலாவரும் காட்சியைக், கரும்பின் வெள்ளிய பூவின் நிறத்தைக் கெடுத்து விடும்படி செய்யும் இவ்வாடையானது, காணவிடாது, என்னைக் கொன்றுவிடும்போல் இருக்கிறதே', என்று, தலைவி, தோழியிடம் கூறினாள் [கலி.31:15]. தலைவியிடம், தோழி, 'நமக்கு அருள் செய்யாத தலைவனுடைய மலையாயிருந்தும் வெள்ளிய ஒளியையுடைய நிறத்தைக் கொண்ட அருவியை உடையதாயிருக்கின்றதே என்று, தலைவனைப் பழிப்பது போலக் கூறினாள் [கலி.42::11]. கொடியிலும், கொம்பிலும் மலரும் மலர்களின் உருவினதாக, நீரின்றி நிறம் மட்டுமுள்ள பொன்மலர்மாலையைத், தலைவி அணிந்திருந்தாள் [கலி.54:1]. பொய்கையில் பலமணிகள் போன்ற நிறங்களையுடைய மலர்கள் மலர்ந்திருந்தன [கலி.70:1]. தலைவன் பிரியும் காலத்தில், தலைவியினுடைய மேனியின் நிறம் கெட்டும், அவன் புணரும் காலத்தில் அம்மேனி பொலிவு பெற்றும் இருக்கும் [கலி.78:11]. தலைவி, தன் புதல்வனுக்கு, வாள் போலவும், மழுப்போலவும் செய்த அணிகளின் நடுவில், தம்பலப்பூச்சியின் மேனி போன்ற செந்நிறப் பவழத்தால்,

ஆனேறு போல் செய்து தொங்கவிட்ட, பொன்மாலையைக், கழுத்தில் அணிவித்து மகிழ்ந்தாள் *[கலி.85:10]*. பட்டுப்பூச்சியின் நிறத்தையொத்த காளை, தன். மேல் பாய்ந்த இடையன் சாவும்படி குத்திக், கொம்பிலே எடுத்துக், குலைக்கும் தோற்றம், துரோபதையின் கூந்தலைத் தொட்ட, துச்சாதனனின் நெஞ்சைப் பிளந்து, தன் வஞ்சத்தைத் தீர்த்துக் கொண்ட, வீமசேனனைப் போல் விளங்கியது *[கலி.101:15]*. ஆயர், கடலின் உள்ளே சென்று, மாமரத்தை வெட்டின வேலையேந்திய முருகனது நிறம் போன்ற, சிவந்த ஏற்றையும், தொழுவில் விட்டனர் *[கலி.104:14]*. வேல்முனை போன்ற கூரிய கொம்பிற்கும் அஞ்சானாய்ப்,பால் நிறம் போன்ற வெள்ளிய காளையின் கழுத்தில் பாய்ந்த, கருமேனி ஆயனைப் பொறாது, கரிய எருது, அவனைத் தாக்கும் தோற்றம், வெண்திங்களை விழுங்கும் அரவினை அழித்து அகற்றும், கரிய திருமாலைப் போல் தோன்றும் *[கலி.104:35]*. ஒளியூட்டும் கதிர்களையே தனக்கு வாயாகக் கொண்டு, காலையில் கக்கிய பகற்காலத்தை, மாலையில் விழுங்கிக் கொண்டதுபோல், ஞாயிறு மறையவும், திருமாலின் கருநிறம் போன்ற, இருள், உலகில், பரவியது *[கலி.119:3]*. வேல் தைத்திருக்கின்ற கதவையுடைய கோட்டை மதிலைக் குத்தியழிக்கும் யானைப்படையைப் போல், வீசுங்காற்றுப் பாகனாக, துணையைக் கூடி எழுகின்ற தூய நிறத்தையுடைய வலம்புரிச்சங்குகளே கோடுகளாகக், கொண்டு, கடலலைகள், கரைக்கண் நிற்கும் மணல் மலையாகிய கோட்டையைத், தாக்கியழிக்கும் *[கலி.135:1]*. பிரிவால் வருந்தும் தலைவியிடம், தோழி, 'ஆயிழையே! பொருளுக்காகப் பிரிந்த தலைவர், சிவபெருமானின் மேனி போன்ற நினது பொன்னிறம் ஒளியிழந்து, இவ்வாறாகக் கண்டும், மறந்தும் விடுவரோ? என்று, ஆறுதல் கூறினாள் *[கலி.150:9]*.

திருமாலின் ஆழிப்படை, தன்னகத்தே இட்டுச் சுடுகின்ற பொன்னோடே, எழுந்து விளங்குகின்ற, நெருப்பினது கொழுந்தின் நிறத்தை ஒக்கும் *[பரி.2:51]*. முருகப் பெருமான், ஆறு தலைகளுடனும், பன்னிரண்டு தோள்களுடனும், ஞாயிற்றின் தோற்றத்தின்கண் உண்டாகும் நிறம் போன்ற அழகுடனும், சரவணப் பொய்கையில், தாமரைப்பூவிலே, தோன்றினார் *[பரி.5:12]*. வையையாற்றின், புது வெள்ளத்தில் நீராடுவதற்காக, மதுரையின்கண் உள்ள மகளிர், குருதியினது நிறம் போன்ற சிவந்த அரக்கு நீரினை எக்குதற்குரிய கருவிகள் எல்லாவற்றையும், எடுத்துச் சென்றனர் *[பரி.10:12]*. வையையில் நீராடுவாருள் சிலர், கார்ப்பருவத்து நீர் போலன்றித், தைந்நீரே, நீ யாம் ஆடும் அளவினையுடையாய், நிறமும் தெளிந்துள்ளனை; நீ தக்காய்; என்று பாராட்டினர் *[பரி.11:115]*. வையையில் நீராடுவோருள் சிலர், வழிமிசைப் போகின்ற ஏதிலான் ஒருவன் பின்னே, தனது நெஞ்சையிழந்து, ஒருத்தி, தன் மேனியின் நிறங்கெட்டுப் பசலை பூப்ப, நின்றாள்', என்று, பேசிக்கொண்டனர் *[பரி.12:52]*. திருமால், பலவாகிய நிறமமைந்த விரிந்த சிறகினையுடைய கருடப் பறவையினைக் கொடியாகக் கொண்டவர் *[பரி.13:38]*. முருகப் பெருமான், நீலமணி போன்ற நிறமுடைய மயிலினை ஊர்தியாக உடையவர் *[பரி.17:48]*. முருகவேளின் திருப்பரங் குன்றத்தின்கண், முருகனுக்குரிய கோழிச்சேவல் எழுதப்பட்ட கொடியை, ஏற்றுதற்குரிய, அவருடைய யானையினது மத்தகத்தின் நிறத்தினைக், குங்குமத்தாலே கோலஞ்செய்வர் *[பரி.19:85]*. முருகப் பெருமானின் வண்ணம் போலவே அவருடைய வேற்படையும், பகைவரின் குருதிதோயப் பெற்றுப், பவளக்கொடியின் நிறம் போன்ற சிவப்புடையதாய் இருக்கும் *[பரி.19:98]*. திருமாலுக்குரிய இருந்தையூர் மலையில், வேங்கை, வெண்கடம்பு, அசோகு முதலிய மரங்கள், ஒன்று கூடி, உயர்ந்து நிற்பதனாலே, நீல மணியின் நிறமுடையதாய் அம்மலைதோன்றும் *[பரி.திர.1:9]*. வையையில் வெள்ளம் வருவதைக் கேள்விப்பட்ட மதுரையின் மாந்தர், ஒப்பனை செய்து கொண்டு, நன்னிறம் பொருந்திய பல்வேறு வகைப்பட்ட நீராட்டிற்குரிய நெட்டி முதலியவற்றாற் செய்த அழகுப் பொருள்கள் கொண்ட நீரங்காடியினும் சென்று மேலும் அழகு செய்து கொண்டனர் *[பரி.திர.2:8]*. வையையாற்றில் நீராடும் ஆடவர், மகளிருடைய சந்தனமும், மணங்கமழ் மாலையும், நறுமணப்பொடிகளும், அவரின் கூந்தலிலிருந்து நழுவிய மலர்கள் முதலியவற்றின் வண்ணங்களும் தெரியுமே தவிர, வையை நீரின் நிறம் வெளியே தெரியாது *[பரி.திர.2:86]*.

நிறன்-காண்க.

3. மார்பு / உடம்பு / மெய் / உயிர்நிலை / மேனி / நெஞ்சு.

அஞ்சியது அரிய நிறத்தின்கண் - மார்பின்கண் - தைத்த வேல், பாணரது உண்கலனைத் துளைத்து, இரப்பவர் கையை தைத்துருவிப், புரக்கப்படுவோரது கண்பாவை சிதையப், புலவர் நாவில் சென்று வீழ்ந்தது', என ஔவையார் கூறுவர் *[புற.235:15]*. 'ஆர்க்கால் சூழத் தைக்கப் பெற்ற, குறடு போல, வேல்நிறத்தில் தங்க, உயிர் புறப்படுமுன், மகளிர் நன்கு காப்பப், பூந்தும்பையை அணிந்து கிடந்தான் ஒருமறவன் *[புற.283:8]*. உரனுடையோர் மகன், முன்னே, பால் கொண்டு ஊட்டவும் உண்ணாது, சிறு கோலுக்கு அஞ்சி ஒடுபவன், இப்போது, புள்ளிகளை நிறத்திற்கொண்ட களிற்றினைக் கொன்றும் அமையாதவனாயினான் *[புற.310:4]*.

சிவந்த வாயினையுடைய வேல் பாய, அரிய நிறம், பிளவுபடவாகிய புண்ணினின்றும் உமிழும் குருதி, நீலமணிபோலும் வண்ணமுடைய கழி நீரைக், குங்குமக் கலவை போலாக்கியது *[பதி.11:8]*. நிறம்படு குருதி, பலியில் பட்டன்றிப், பலியுணவை ஏற்றுக் கொள்ளாதவள் அயிரை மலைக்கொற்றவை *[பதி.79:16]*.

பரண்மேலிருந்தோன் எய்த அம்பொடு சென்ற, பன்றி நிறத்தின் புண் மிகுந்து, மண்பட்ட கொம்புடன், இருள்கிடந்தாலொத்து, வழிமறித்துக்கிடக்கும் *[மலை.245]*.

அரியநிறத்தில் அழுத்திய அம்பினர் பலருடன் புல்லி என்பான் யானையின் கொம்புகொண்டு, விலையாகக், கள்ளும், நெல்லும், பெற்று, நாட்காலத்தே மகிழ்வான் *[அக.61:8]*. மிக்க துன்பமுற்றவரது அரிய நிறம் குறித்து வேலை எறியத், துன்புறுநர் போன்று, காதலரைப் பிரிந்த தனிமையால் தலைவி வருந்தினாள் *[அக.7:11]*. கானவன், வெண்கடம்பினைச் சார்ந்து நின்று, யானையின் அரு நிறத்தில் அம்பினைச் செலுத்தி, அதன் கொம்பினைக் கொண்டு, தன் புல்வேய்ந்த குடில் முன் நட்டுப்; பலவின் பிழியுண்டு, பின், சந்தன விறகில் ஊன்சோற்றை அட்டுண்பான் *[அக.172:8]*. 'நெஞ்சே! குட்டுவன் சினமிக்குக், கடலை வளைத்துப் பகை வென்ற வேல், நின் நிறத்துச் செல்ல, நின் செருக்கு அழிய பெறுவதாகுக', என, அல்லகுறிப்பட்ட தலைவன், தன் நெஞ்சிற்குக் கூறினான் *[அக.212:20]*. 'செல்லூர் மன்னன் ஆதன் எழினி, தன் வேலை, அரிய நிறத்தில் அழுத்த, அதனையுற்ற பெருங்களிறு துன்புற்றது *[அக.216:14]*. 'பாக! மிக்க துன்பத்தால் வருந்திய, நீர் வாரும் கண்ணும், பசலை பரந்த நிறமும், மேனியும் உடைய, தலைவியின் கூந்தலின் பிணிப்புவிட, விரைந்து செல்வாயாக', என்றான் தலைவன் *[அக.234:17]*. 'தெய்வ வடிவுடைய கண்ணையும், மெலிந்த இடையினையும், நுண்ணிய மாமையினையும், வேங்கை மலர் புரையும் தேமலையும், நன்னிறத்தெழுந்த முலையினையும், வண்டு மொய்க்கும் கூந்தலையும், பெருந்தோளினையும் உடையவள் தலைவி *[அக.319:9]*. 'தோழி! வருந்திய மனத்தையுடையையாகித் தனிமை கொண்டு இவ்வாறாகிய நின்னிறம் நோக்கி அன்னை வினவின் யான் என் உரைப்பேன்?' என்று தலைவியிடம் தோழி கூறினாள் *[அக.358:9]*. கொலைவிரும்பும் கொடுந்தொழிலுடைய மறவர், வழிச்செல்வோரது அருநிறத்து எறிந்த வேலால் பட்டாரது ஊனை உண்ணப், பருந்தின் சேவல், தன் கிளையைத் தெளிந்த குரலால் அழைக்கும் *[அக.353:11]*. 'நெஞ்சே! இலையற்ற காட்டில், மான்புறத்துப் புள்ளி போன்ற மரநிழலில், இளைப்பாற, அவளது மறப்பருங்குணம் நிறத்து - நெஞ்சத்து - வர, வேறுபட்டு நெஞ்சுரமழிய, யானையின் அடிச் சுவட்டினையுடைய சுரத்தில் தங்கி, நீ வருந்துவாயல்லையோ? என்று தலைமகன் நெஞ்சிற்குக் கூறினான் *[அக.379:22]*. மானினது நிறத்தழுத்திக் குருதியொடு பறித்த சிவந்த அம்பின் நுனி போன்றன கண்கள் *[குறு.272:5]*.

ஆமானின் அரிய நிறத்தில் பாய்ந்து தங்காது அம்பு தவறியதை கண்டு, கானவன், தெய்வந் தோன்ற நின்ற மலையில் மழை பெய்க, என விரும்பி, உயர்ந்த மலைக்கடவுளை வழிபடச், சுற்றமுடன் சென்றான் *[நற்.165:1]*. 'வினைவயிற் சேறும் என்றலின், புலந்து, செல்வீராக எனக் கூற, அஞ்சுகின்றனம். செல்லாதீர், எனக்கூறின், நிறத்தெறியும் அம்பு போன்ற புன்சொல்லுக்கு அஞ்சுகின்றோம்', என்று தலைவனிடம் தோழி உரைத்தாள் *[நற்.229:4]*.

மலையின்கண் தன் முறம் போன்ற காதின் மறைவில் வந்து பாய்ந்த புலியைத் நூற்றுவர் தலைவனைத் (துரியோதனனை) குறங்கறுத்திடுவான் (தொடையை முறித்து அழித்த வீமசேனன்) போல், யானை தன் கொம்புகளால் குத்திப் புலியின் நிறத்தினைப் - மார்பினைப் - பிளந்து கொன்றது *[கலி.52:4]*. ஒரு காதலன் காமஞ்சாலா இளையோளிடம், 'பொன்னாற் செய்த குழையினையுடையாய்! மாவினது தளிரையொத்த மேனியால் என்னை வருத்துவது போதாதென்று பாண்டியன் தன் பகைவரின் நிறத்திலே பாய்ச்சிய அம்பைக் காட்டிலும் துன்பத்தைச் செய்வது தகுமோ?' என்று கூறினான் *[கலி.57:14]*. பிரிவால் துயருறும் தலைவி, 'மாலைப் பொழுதே! நீ, என் கணவர் துணையில்லாத இக்காலத்தில், வெள்ளத்தில் அகப்பட்டுக் கரையேற இயலாமல் தவிக்கும் மானின் நிறத்தில் அம்பினைத் தொடுக்கும் கொடியவன் போல், அல்லல்படும் என்னை மேலும் அல்லற்படுத்த வந்தாயோ?' என்று புலம்பினாள் *[கலி.120:11]*.

நிலத்தின் புழுதியை உழுமாறு போலப் பகைவருடைய நிறத்தினை உழுகின்ற வளைந்த வாயினையுடைய கலப்பைப் படையை உடையவன் பலதேவன் *[பரி.13:33]*.

**4.** ஒளி. மலை நிறம் - ஒளி - பெற, வண்டு மலரூத, நாரை யொலிக்க, நண்டு வளை செறிய, திரையொலி யடங்கத், திமில் தொழில் நீங்க, அன்றில் பனைமடல் சேரக், கழிமலர் குவியப், புன்னை பொன்போல் விரிய, ஞாயிறு கல் சேர இரவு வந்தது *[அக.260:1]*.

'தோழி! நம் சேரிக்கு மெல்ல வந்து, இனிய கூறி, நிறம் மாறித் தங்கும் அத்தலைவனது துன்பப் பார்வையை நினைந்து காண்பாயாக', எனத் தலைவியிடம் தோழி கூறினாள் *[குறு.298:3]*.

நிறன் - வண்ணம். தோன்றல்! கண்ணடுத்த செவியினையும், கவைத்த நாவினையும் கொண்டு நிறன் - வண்ணம் - உற்ற அராப்போலும் வறன் நீங்க வழங்கி விடுக', என நலங்கிள்ளியைக் கிணைஞன் வேண்டினான் *[புற.382:14]*. 'தளர்ந்த தோளும், வாடிய வரியும், தளிரினது அழகையிழந்த என் நிறனும் நோக்கி, இவள் துயர் என்னால் வந்ததென, அன்பினால் அழாஅல் தோழி', எனத், தலைவி கூறினாள் *[நற்.309:2]*.

நிறம் 2 - காண்க

நிறை - 1. நிறைவு. பாணனுடைய கையில் இலக்கண முறைமை நிறை - நிறைவு - உற்ற யாழ் உள்ளது *[புற.69:1]*. பொருட்டெழினி, அறிவு, அருள் முதலிய குணங்களால் நாள் நிறையுற்ற மதியத்தை (முழுநிலவை) யொப்பவன் *[புற.102:7]*. இளம் பெண்ணின் அல்குலிடத்தே படர்ந்துள்ள அழகிய

வரிகள், தந்தை மகட்கொடை நேர்ந்தால் நிறையுற்ற விழுப்பொருளைத் தரும்; தந்தை மகட்கொடை மறுத்தால், ஊர்தீக்கு இரையாக அழிவினைத் தரும் *[புற.344:4]*. ஓய்மான் நல்லியக்கோடன், ஈந்த பரிசிலால், நன்னாகனார் நீர் நிறையுற்ற குளத்தின் வாய்த்தலைபோல, உள்நிறைந்தும் மகிழ்ச்சியுடையவரானார் *[புற.376:20]*. மிக்க நீர் நிறையுற்ற நீர் நிலையின்கண் வீழ்கின்ற மழைத்துளிபோல, இறைச்சித் துண்டங்களை வறுக்கும் நெய்யின் துளிகள் துள்ளும் *[புற.386:1]*. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், இரவலரைத் தூய்மை செய்த பருத்தியின் பஞ்சினை நிறையுறத் திணித்த மூடையைப் போன்று, வயிறு முட்ட, வெள்ளிய ஊன் துண்டங்களை உண்பிப்பான் *[புற.393:12]*.

இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனின் படைகள் பகைவரின் ஊர்களைச் சுட்டெரித்தலால், நீர் அற்றுப் புலர்ந்தமையின், வளர்ச்சி நிறையுற்ற காந்தளின் அடிமுதல் வாடிச் சிவந்தது *[பதி.15:10]*. இமயவரம்பன் தம்பி, பல்யானைச் செல்கெழு குட்டுவனின் படைகள் அழித்த பகைநாட்டினர், கண்ணில் நீர் நிறை உற்றுக். கையைப் புடைத்து வருத்தமெய்தினர் *[பதி.26:8]*. பல்யானைச் செல்கெழுகுட்டுவனின் நாட்டில், சினமுற்று வருவதுபோல, ஒலமிட்டு நிறைவுற்றுவரும் பேரியாற்றின் வெள்ளத்தின் ஆரவாரமல்லது, வேறு போர்ப்பூசலில்லை *[பதி.28:12]*. பல்யானைச் செல்கெழுகுட்டுவனின் பகைவர் நடுங்கும்படியாக முழங்கும் முரசிற்கு இட்ட குருதி தூவிய நிறையுற்ற கள்ளோடு கூடிய பலியினைப் பேயும், எறும்பும் தீண்டா; காக்கையும், பருந்தும் களிப்புடன் உண்ணும் *[பதி.30:37]*. நிலவுலகைப் புரந்து நேர்கிழக்காக ஓடும் காவிரி கலங்கலாகிய நிறையுற்ற வெள்ளத்தையுடையதாகும் *[பதி.50:6]*. நிறையுற்று எரிந்தாற்போன்ற சீற்றத்தையுடைய படையையுடையவன், சேரன் *[பதி.இருங்கண்.7]*.

செவ்விய சாலாக உழுகின்ற உழவுத் தொழிலையும், நிறை உணவையுமுடைய உழவர் குடியிருப்புக்களில் தங்கினர் *[பெரு.197]*. மதுரை நகரில் கச்சுக்களைத் தம் தொழில் நிறை பெற முடிவாரும் வாழ்ந்தனர் *[மது.514]*. நீரால் நிறையுற்ற கரிய கடல் குறைந்துபோகும்படி, முகில் முகந்து கொண்டு சென்று மழைபொழியும் *[குறி.47]*. ஞாயிறு மறைந்து மாலைப் பொழுது வந்துற்ற பொழுது ஆன்கள் தம் கன்றை அழைத்தனவாய் மன்றங்களிலே வந்து நிறை தரும் *[குறி.218]*. மழைத்துளிகள் அருவியாகப் பாய்ந்து, காட்டிடத்தேயுள்ள சுனைகள் நீர்ச்சால் போல், நீர் நிறையும் *[மலை.104]*.

பிரிவுத் தலைவி, கண்ணில் நிறை நீரினைக் கொண்டு தனது ஆற்றாமையைப் பிறரறியாமை மறைக்கும் *[அக.50:13]*. வெட்சி மறவர் பகைவரின் ஆனிரைகளைக் கன்றுகளிடமிருந்து பிரித்து மன்றில் நிறைசெய்தனர் *[அக.63:11]*. மாலைக்காலத்தில் ஆனிரைகள் ஏறுகளைத் தழுவிக் கொண்டு ஊருக்குத் திரும்பிவரும் பொழுது தம் கன்றுகளை அழைக்கும் குரலினவாய் மன்றுகளில் வந்து நிறைதரும் *[அக.64:14]*. நிறையுற்ற சூலுடை யாமை, அடும்பங்கொடியை அறுத்துக் கொண்டுபோய், மணல் மேட்டில் வைத்து, அதன்கண், யானைக் கொம்பினாற் செய்த வட்டின் வடிவமுடைய புலால் நாறும் முட்டைகளை இடும் *[அக.160:5]*. பன்றி பறையின் கண்ணினையொத்த நிறையுற்ற சுனை நீரைக் குடித்துச் சேம்பின் கிழங்கினை உண்ணும் *[அக.178:3]*. ஆய் என்பானது தெய்வத் தன்மை பொருந்திய மலையில், மெல்லிய மலர்களையுடைய நீர் நிறையுற்ற சுனையில், சூர் உறையும் *[அக.198:16]*. எருமை என்பானுடைய வடுக வயவர் கோவலரின் தொழுவினின்றும் கன்றுகளையுடைய ஆனிரையைக் கவர்ந்து கொண்டு வந்து தம் மன்றுகள் நிறையுறச் செய்வர் *[அக.253:17]*. ஆய்ந்த தொடியிலன அணிந்த தலைவி, நன்மை மிக்க சிறந்த பொருளும், அணிகலமும் நிறைபெறக் கொடுப்பினும் பெறுதற்கரியவள், என்று, தலைவன் கூறினான் *[அக.280:5]*. காட்டில் பறையினது கண் போன்றிருக்கும் சுனையின்கண் நீர் நிறை பெற்றது *[அக.324:6]*. சுரத்தில், பண்டவணிகர், யாமரத்தின் நிழலில், ஆண்கழுதையின் புறத்தே நிறை பெற்றுள்ள பண்டங்களைத் தளர்த்தித், தளர்வினைப் போக்குவர் *[அக.343:13]*. தலைவி, வயலைக் கொடிக்கு நிறை நீரினைச் சாலில் கொண்டு வந்து ஊற்றி வளர்த்தாள் *[அக.383:10]*. பாணன் என்ற மல்லனோடு பொருத ஆரியப் பொருநன் வலிமை நிறை கொண்ட, திரண்ட, முழவு போன்ற தோள்கள் வேறுவேறாகக் கிடந்தன *[அக.386:6]*. மண்ணில் ஊன்றிய கொம்பினை அசைத்து எடுக்கும் தெம்பினை இழந்த களிறு, தன் வாயில் நிறைபெறுமாறு புகுத்திய பெரிய கை, மலை முழஞ்சினுள் நுழையும் பாம்பு போலத் தோன்றும் *[அக.391:12]*. பெண்கள் வரகினைப் பாறையில் குவித்துத் திரிகையினால் தேய்த்துச் சுளகினால் கொழிக்கப்பட்ட அரிசியை உலக்கையால் உரலிற் பெய்து திட்டி, உரலின் குழிநிறையுறுமாறு பெய்வர் *[அக.393:12]*.

சுரத்தில், ஆறலைகள்வர், மாலைச்சாரலில், அச்சமிக்கிருக்கும் பொலிவழிந்த பொதியிலில், கல்லையுடைய குழிகளிலுள்ள கலங்கனீரை உண்டு நிறை பெறாது, மழையை அறியாத, குறைந்த உணவையுடைய இரவிலே, வழியை நோக்கியிருப்பர் *[நற்.33:5]*. ஒழுங்குற அமைந்து, நிறையுற்று நிரம்பிய சூலையுடைய கரிய முகில் கார்ப்பருவத்தில் மலையின் உச்சியிலிருந்து மழையைப் பொழியும் *[நற்.89:3]*. தேன் துளியுடன் கலந்து வந்த வாடைக்காற்றில், புதுவதாகப் பெய்த மழைநீர் நிறையுற்றுக் கலந்து, அக்காற்று வீசும் *[நற்.193:3]*. கடற்பரப்பிலுள்ள துறையில் சுறாமீனினம் நிறையுற்றுத் திரிந்தது *[நற்.223:7]*. கோடு முற்றிய யானைகள் தலைவியின் தந்தைக்குரிய காட்டில் நிறையுற்று விளங்கின *[நற்.324:4]*. சிறகு நிறையுற்று விளங்கும் நாரையினம் வானத்தில் நெருங்கிச் செல்லும் *[நற்.369:2]*.

மிடியாலே, பொருளின்மையைச் சொன்னார்க்கு, அப்பொருளை அவர்க்கு நிறைசெய்தலை ஆற்றாத பொழுது, தன் மெய்யைத்

துறக்கும் பண்பாளன் தலைவன் *[கலி.43:26]*. பகைவனால் பிடிக்கப்பட்ட ஊர் மக்கள், ஓடிப்போய்த், தன்னரசன் மீட்ட பொழுது மீண்டும் வந்து குடியேறினாற் போல, நீருண்ணுந் துறையில் உள்ள தாமரையை மிகுதியான நீர் வந்து சாய்த்துவிடவே, அதிலிருந்த வண்டு ஓடிப்போய், நிறையுற்ற வெள்ளமானது வற்றியவுடன், மீண்டும் தன் பூவிற்கே வந்தடைந்தது *[கலி.78:9]*. குறளனாகிய காதலன், கூனியாகிய காதலியிடம், மாட்சிமைப்பட்ட கலப்பையில் தைக்கும் படைவாள் போலே, ஓரிடங் கூனாயும், ஓரிடம் முன்னேவளைத்தும், முறிந்துவிட்டாற் போன்ற நிறையற்ற அழகாலே எனக்குப் பொறுக்கமுடியாத காமநோயைச் செய்தாய்', என்று கூறினான் *[கலி.94:10]*. கறவைகள் வீட்டில் விட்டு வந்த கன்றுகளைக் காணும் விருப்பத்தால் மாலையில் தொழுவத்தில் வந்து நிறைதரும் *[கலி.119:10]*. காதல் மீக்கூர்ந்த தலைவி யொருத்தி, 'செறிந்த இருளையுடைய முகிலே! நிறைவுற்ற என் கைவளையல்களைக் கழலப் பண்ணினவன் செய்த கொடுமையால் எனக்குச் மயிர்க்கால்தோறும் காமநோய் மூண்டது', என்று கூறினாள் *[கலி.145:57]*. காதலனின் பிரிவால் ஒரு காதலி தோள் மெலிந்து கண்களில் நீர் நிறையுற்று, அவளுடைய குவிந்த முலைமேலே வடிந்தது *[கலி.146:7]*.

திருமாலின் அருள் சிலரை வரைந்து பெய்யாது, எல்லோருக்கும் கைம்மாறு கருதாமல் பொதுவில் பெய்யும் நீரால் நிறையுற்ற முகிலை ஒக்கும் *[பரி.2:56]*. திருமால் சிறந்த நிறையுற்ற கடவுட் பண்பையுடையவர் *[பரி.4:63]*. முகில் நீரால் நிறையுற்ற கடலின்கண் நீரைமுகந்து கொண்டு, வானத்தில் பரவி, மழையைப் பொழிந்தது *[பரி.6:1]*. வையை வெள்ளம் பிறை நாளுக்கு நாள் வளர்வதுபோல், நிறையுற்றும், தேய்பிறை போல நாளுக்கு நாள் வெள்ளம், குறைந்தாலும் எட்டாம் நாள் திங்களின் அளவு நிறையுற்றிருக்குமே தவிர இருள் உவா (அமாவாசை) போல முற்றும் வெள்ளம் அழிதலில்லை *[பரி.11:31,37]*. பிறைமதி வளர்வதன் கூடவே, அதன் மறுவும் வளர்ந்து நிறையுறும் *[பரி.11:77]*. வையையில் நீராடும் மகளிருள் ஒருத்தி கொற்றவை போல விளங்க வேண்டுமென்று கருதிய மற்றொருத்தி, அவளுக்கு, நெற்றிக்கண் போலத், தோன்றும்படி, அவள் நெற்றியில் நிறை திலகமிட்டாள் *[பரி.11:99]*. வையையின்கண் நீராடும் துறையின்முன் நிறையுற்று அணிஅணியாக நின்ற மாந்தர் பலவாறாகப் பேசிக் கொண்டனர் *[பரி.12:36]*. முகில் மழையைப் பொழிந்ததால் நீர் நிறையுற்ற சுனையில் மலர்கள் மலர்ந்தன *[பரி.14:2]*. உலகிலுள்ள மலைகள் பலவற்றினும், மக்களுடைய பசி வெப்பத்தை ஆற்றி, மேலும் பொன்,மணி, மரம் முதலிய நிறை பயன்கள் எல்லாவற்றையும் தரும் மலைகள் சிலவேயாகும் *[பரி.15:6]*. திருப்பரங்குன்றத்தில் உள்ள சோலைகளும், சுனைகளும் பூக்கள் பூத்திருக்கின்ற செறிவினாலே, அழகிய கூர்த்த மலர் அம்பு நிறையுற்ற மன்மதனின் ஆவநாழிகையை (அம்புத்தூணி) ஒக்கும் *[பரி.18:30]*. மதுரையின் ஆடவரும், மகளிரும் திருப்பரங் குன்றத்திற்கும், மதுரைக்குமுள்ள இடைவழியெல்லாம் செறிந்து, யாத்திரை செல்லும் பொழுது, அவர்களின் மலர்மாலையணிந்த தலைகள் இடைவெளியின்றி நிறைதருதலால், திருப்பரங்குன்றிலிருந்து நோக்குவார்க்கு, ஒத்த பூக்களை, நிறை பெற வைத்துக் கட்டிய பெரிய, நிலமகளுக்குச் சூட்டப்பட்டதொரு மாலைபோன்று தோன்றும் *[பரி.19:16,17]*. வையையாற்றில் நீராடச் சென்ற மதுரையின் ஆடவரும், மகளிரும் தம் பழைய ஒப்பனையோடு, நன்னிறம் பொருந்திய பல்வேறு வகைப்பட்ட நீராட்டிற்குரிய நெட்டி முதலியவற்றால் செய்த அழகுப் பொருள்களின் நிறைபெற்றுள்ள நீரங்காடியினும் சென்று அழகு செய்து கொண்டனர் *[பரி.தி.2:9]*.

**2. மனவடக்கம்.** தலைவனின் பிரிவால் தலைவி துன்பமுற்று அவன்மீது தன்நெஞ்சைப் போக்கி நிறை - **மனவடக்கம்** - கெட்டுத் தனிமையில் வருந்தினாள் *[முல்.81]*.

வரைவுவேண்டித் தலைவனின் தேர் பகலிலே வருவது கண்டு தனது நிறை இல்லாத நெஞ்சம் நடுங்குவதாகத் தோழி, தலைவியிடம் கூறினாள் *[அக.160:2]*. தலைவனைப் போகாதே என்று தடுத்தற்குச் சென்ற நிறை இல்லாத என்னுடைய நெஞ்சம் அவரைத் தடுத்ததோ? காமத்தைச் செப்ப நாணியதோ? என்று, தலைவி உரைத்தாள் *[பதி.330:8]*.

'தலைவரோ அருளைப் பொருளென்று கருதாமல் பிரிந்து போயினார். என் நெஞ்சமோ, நிறை ஒல்லாது; எனத் தலைவி கூறினாள் *[குறு.395:1]*.

இரவுக்குறிக்குத் தலைவன் வரும் வழியின் ஏதத்திற்கு அஞ்சி, என் நிறை இல்லாத நெஞ்சம் அவன் வரும் வழியின்மீது பரந்து சென்றுவிட்டது', என்று, தோழி, தலைவியிடம் கூறினாள் *[நற்.154:12]*. பிரிவுத் தலைவி, 'மாலைப் பொழுதில் வரும் எனது நிறையை அழித்துப் பெருகுகின்ற காம வெள்ளத்தை நீந்துமாறு கற்றிலேனே', என்று கூறினாள் *[நற்.369:11]*.

கடற்கரைச் சோலையில் காணப்பட்ட அந்நங்கை என்னுடைய நிறையை அழித்து, நெஞ்சத்தையும் கவர்ந்து கொண்டு போய்விட்டாள்', என்று, தலைவன், பாங்கனிடம் கூறினான் *[ஐங்.191:5]*.

'நிறையெனும் குணம் தளராத தலைவருடைய கொடுமையை யான் மறைக்கவே முயலுகின்றேன்; ஆனால், ஆளும் முறை தவறிய அரசன் கீழ் வாழும் மக்கள் துன்புற்றுத் துடிப்பது போல், என் கண்கள் கலங்கி, நீர் சொரிகின்றனவே என் செய்வேன்', என்று, தலைவி, தோழியிடம் கூறினாள் *[கலி.34:13]*. தலைவனைக் குறித்துத், தலைவி, தோழியிடம், 'நாணையும், நிறையையும் விரும்பாதவன், குடிப்பிறப்பிற்குரிய ஒழுக்க நெஞ்சில்லாதவன்', என்று கூறினாள் *[கலி.60:29]*. 'பரத்தையை அழைத்துவரப், பாகனைத் தேரோடு அனுப்பி வைத்துவிட்டு,

அவளுக்காகக் காத்திருக்கும் நீ, 'பரத்தையை நிறை இல்லாதவள்', என்று பழிப்பது போலக் கூறி, என்னை வஞ்சிக்கலாமா?' என்று, பரத்தைமைத் தலைவனைத், தலைவி இடித்துரைத்தாள் *[கலி.69:14]*. பரத்தைமைத் தலைவனிடம் ஊடல் கொண்டிருந்த தலைவி, 'நிறை இல்லாத நெஞ்சை உடையவளாகிய யான் நின்னுடன் ஊடுதல் முடியுமோ?' என்று கூறி, ஊடல் தீர்ந்தாள் *[கலி.77:22]*. பரத்தைமைத் தலைவனிடம் ஊடிய தலைவி, 'நிறையில்லாத நெஞ்சையுடைய யான், உன் தீமைகளைக் கண்டு சினக்கும் ஆற்றலைப் பெற்றிலேனே! 'என்று கூறி, ஊடல் தீர்ந்து கூடினாள் *[கலி.90:29]*. 'நிறை என்று சொல்லப்படுவது, மறைத்துக் காக்க வேண்டிய ஒன்றைப் பிறர் அறியாதபடி காத்தல்', என்று, தோழி, தலைவனிடம் கூறினாள் *[கலி.133:12]*. தலைவிக்காக மடலேறும் தலைவன், 'என் உயிர் என் கட்டுக்குள் நில்லாது இப்பூநுதலாள் தந்த காமநோயால், எனது நிறையென்னும் குணம் அழிந்து, உப்புப்பாத்தியிலே கிடந்த உப்பால் இயன்ற பாவை மழையில் கரைந்து உருவிழத்தல் போல ஆயிற்று', என்று கூறினான் *[கலி.138:15]*. காதலனைப் பிரிந்து புலம்பும் தலைவி, 'யாழ்வாசித்து, அருகழைத்துப், பின் பறையறைந்து, வஞ்சத்தால் அசுணத்தைக் கொல்லுவதைப்போல, எனக்கு இன்பத்தையளித்து, ஏமாற்றிவிட்டு, என் உயிர்போம் படிப்பிரிந்து போன எனது காதலனைக் கண்டுபிடித்துக் கொணர்வீரேல் யானும் நிறையுடையேன் ஆவேன்', என்று புலம்பினாள் *[கலி.143:14]*. காதலனைப் பிரிந்த காதலியொருத்தி, அணிகளையிழந்து, நாணையும், நிறையையும் மறந்து, தோள் மெலிந்து, கண்கள் நீர் நிறைந்து மார்பில் வடிய, அவனைக் காணும் அவாவில் கலங்கி நின்றாள் *[கலி.146:6]*.

மகளிரின் முலைகளிடத்தும், மைந்தரின் மார்புகளிடத்தும் கிடக்கும் அணிகலன்கள் தழுவும்பொழுது, ஒன்று கலந்து, அவரின் நிறை உடைபடுவது போல, வையையின் வெள்ளம் மலைபோன்ற அணைகளை உடைத்தழித்தது *[பரி.6:21]*. முன்னர் எவ்வாற்றாலும் அறியப்படாத புதுவோன்பால் காதல் கொண்டு நிறையழிந்த ஒருத்தியை, வையையில் நீராடும் மகளிர் கண்டு, 'யாம் அவ்வாறு செய்யோம்', என்று கூறினார் *[பரி.12:53]*.

**3. வெள்ளம்.** நன்னன் வேண்மான் பரிசிலரைப் புரப்பதில் ஏருழவர்க்குப் புது நிறையைப் - வெள்ளத்தைப்- போன்றவனாவான் *[மலை.61]*. காவிரியில் கரையுச்சியினைத் தோய்ந்து புதிதாக வரும் நிறையில், தலைவன், பரத்தையோடு நீராடினான் *[அக.166:15]*. நாடுகள் செழித்தற் கேதுவாகிய காவிரியில் ஓடக்கோல் மறையும்படியாகக் கரையைப் பொருந்தி மிக்க நிறையாகிச் சென்றது, நீர்*[அக.*[illegible]

உயர்ந்த மரத்தின் கிளையைத் தொட்டுப் போகும் பெரும் நிறையானது பின், கையால் இறைக்கும்படி வற்றிவிடுவது போலக் காமநோயும் வெள்ளம் போல் பெருகிப் பிறகு சிறுகச் சிறுக வற்றிப்போகும் *[குறு.99:4]*. அருவியை யொத்த பெரியதுளிகளைச் சிதறி, யாறானது நிறையைக் கொண்டு ஒலிக்கும் நாட்டிற்குரியவன், தலைவன் *[குறு.271:2]*.

எக்கரிடுகின்ற மிக்க நிறையின்கண் தழையையுடுத்த மகளிர் நீராடினர் *[ஐங்.15:1]*. விரும்பும் பரத்தையரெல்லாம் தழுவும் தலைவனின் மார்பு, விரும்புவோரெல்லாம் இறங்கி நீராடும் காவிரியின் நிறையைப் போன்றது *[ஐங்.42:3]*. மலர்களை அடித்துக் கொண்டு மிக்க நிறைவரும் யாற்றில், தலைவன் தலைவியொடு நீராடினான் *[ஐங்.72:4]*.

'வையையே! கன்னித் தன்மை முதிராத கைக்கிளைக் காமத்தைத் தருகின்ற நின்னிடத்து முற்பிறப்பின் தவத்தாலே இத்தைந்நீராடலை இப்பிறப்பில் பெற்றேம்', அதனை, நின் நீரின் நிறையின்கண் மறுபிறப்பினும் பெறுவேமாக! 'என்று, தோழி கூறினாள் *[பரி.11:140]*.

**4. நிறுத்தல், நிலைபெறுத்தல்.** கொண்கானமென்னும் மலை நிறைக்கு - நிறுத்தற்கு - அரிய படையையுடைய பகைவேந்தரை வென்று திறையைத் தரும் தன்மையதாகும் *[புற.156:5]*. ஒருவன், தன் வேந்தன் போரில் துன்பமுறுங் காலத்தில் கொடியையுயர்த்தி, நிறைக் கடங்காது முந்துற்று வரும் பகைவர் படைக்குத், தடுத்து நிறுத்தும் அணையாய் விளங்கினான் *[புற.314:6]*. மாந்தரம் பொறையன் கடுங்கோ என்னும் சேரமன்னன் நிறைக் கரிய தானையையுடையவன் *[அக.142:4]*.

பிரிவிடை வருந்திய தலைவனிடம், தோழி, 'கொல்லிப் பாவையையொத்த நினது அழகைத் தனது நெஞ்சில் நிறை செய்து, விரைவில் வருவர்', என்று தேற்றினாள் *[அக.209:10]*.

பிரிவுத் தலைவியை ஆற்றியிரு என்ற தோழியிடம், தலைவி, நீ கூறுகின்றவாறே எனது நெஞ்சை அடக்கியும், நிறை கைகடக்கும் படியாக வாடை வீசுகின்றதே, என் செய்வேன்', என்று, கூறினாள் *[கலி.29:11]*. பிரிவுத் தலைவனிடம், தோழி, 'கோமானே! நீ பிரிந்து நின்னூரிலே தங்கியதால் துளியோடே தங்கிய பூப்போலே, நிறையளவில் நில்லாமல், விரையவிழும் நீரிலே கிடந்து நீந்துகின்ற கண்ணையுடையவளானாள் தலைவி,' என்று கூறினாள் *[கலி.121:10]*. தோழி, தலைவனிடம், 'நெடிய மனையில் தன் மனத்தை நிறையினைச் செய்யாமல் உன் நினைவாலே சிறுதுயிலில் நீ அவளின் தோள்மீது கிடப்பதைக் கண்டு தழுவ, நின்னைக் காணாளாய்க் கலங்கும்', என்று கூறினாள் *[கலி.126:14]*.

**5. நிறுக்கப்படுதல்** (துலாக் கோலால்) / அளவு. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், புறாவின் அல்லலைத் தீர்க்கத் தானே, கோலாலே நிறை - நிறுக்கப்படுதலைச் - செய்யும் துலாவின்கண்ணேறிய சிபியின் வழிவந்தவனாவான் *[புற.39:3]*.

மதுரை நகரில் நிறை செய்த செம்பினை வாங்கிக் கொள்வாரும் வாழ்ந்தனர் *[மது.514]*. நீராடற்குச் சென்ற

பெண்ணொருத்தி நீரில் வந்த பசுங்காயைத் தின்றதைக் குற்றமாகக் கொண்டு எண்பத்தொரு ஆண்யானைகளோடு அவளது நிறை - அளவு - உடைய பொன்னாற் செய்த பாவையைக் கொடுப்பவும் கொள்ளானாய் நன்னன் என்பவன் அவளைக் கொன்றனன் *[குறு.292:3].*

6. கற்பு. சிவபெருமானின் சிதைந்த கருவை இந்திரனிடமிருந்து பெற்றுக்கொண்ட முனிவர் தம் மனைவியரின் வயிற்றில் தங்கவிடின் நிறை - கற்பு - உடையராகார் என்று கருதி, வேள்வி செய்து, அவ்வேள்வித் தீயிலிட்டனர்; தீயில் வெந்த அக்கருவினையுண்டால் நிறை கெடாது என்று கருதி, அருந்ததி தவிர மற்ற முனி பத்தினியர் உண்டு முருகனைப் பயந்தனர் *[பரி.5:39,47].*

7. பொருள் / விலை. சோழன் நலங்கிள்ளியிடம் சென்ற பரிசிலர்க்கு நிறையாகப் - (பரிசுப்) பொருளாக (விலையாக)- வஞ்சியையே (சேரனின் தலைநகரத்தையே) தருகுவன் *[புற.32:1].*

8. ஊறின் சாரம். உழவர், மாங்காயோடு புளிக்கும் பதனைச் சேர்த்தாக்கிய புதுக் குடங்களில் பெய்த நிறைகளைப் - சாரங்களைப் - பருகினர் *[அக.37:9].*

9. (நீர்ச்) சால். குறிய முயல்கள் வரகின் குருத்தினைத் தின்று, கொடிகளுட் புகுந்து உறங்கி எழுந்து வீட்டு முற்றத்தில் உள்ள சிறிய நிறைகளிலுள்ள - சால்களிலுள்ள- நீரைப் பருகும் *[அக.284:6].*

10. (நிறைந்த) கருப்பம். மகளிர் பன்னிரண்டு மாதம் நிறையினை - (நிறைந்து) கருப்பத்தைத் - தாங்கியிருப்பர் *[குறு.287:3].*

11. அறிவு. காதல் உணர்வு பெறாதாளிடம் ஏதேதோ கூறியும் ஒன்றும் மாற்றம் கூறாது செல்வதைக் கண்ட காதலன், 'உன்மீதும், உனது பெற்றோர் மீதும் குற்றமில்லை; நிறை - அறிவு - அழிந்து மதம்பட்ட யானையை நீராட்டற்குக் கொண்டு செல்லும் பொழுது பறையறைவதுபோல, உன்னையும் பறையறைந்து வெளிவிடாத அரசனே குற்றமுடையன்', என்று அவளிடம் கூறினான் *[கலி.56:32].*

13. ஆளத்தியின் (ஆலாபனத்தின்) பாகுபாடு (இரண்டுதாக்குடையது) திருப்பரங்குன்றத்தின் ஒருபால். பாடினி பாடும் பாலைப் பண்ணினது நிறை-ஆளத்தியின் பாகுபாடு (இரண்டுதாக்குடையது)-தோன்றி ஒலிக்கும் *[பரி.17:18].*

12. திண்மை / வலிமை. தோழியிடம் தலைவி, 'தோழியே! எனக்காக விடப்பட்ட நெற்றிச் சுட்டுடைய காளையின் நிறையைத் - திண்மையைக் - கெடுத்தவனுடைய மார்பினை, யான் தழுவாதிரேன்', என்று கூறினாள் *[கலி.104:65].*

நிறைப்போய் - வழங்குபவனே! சேரமான் வஞ்சனைத், திருத்தாமனார் என்ற புலவர், கிணைப் பொருநன் கூற்றில், 'நின்னை நினைந்து வரும் பரிசிலருடைய கொள்கலம் நிரம்ப அரிய பொருள்களை நிறைப்போய் - வழங்குபவனே' என்று அழைத்தார் *[புற.398:14].*

நிறைப்போன் - நிரப்புவோன். இன்று சென்றாலும், சிலநாள் கழித்துச் சென்றாலும், நாள்தோறும், சென்றாலும் 'முன்னே தந்தேன் என்னாது" பொய்யானாகி யாம் வேண்டினபடியே எம்முடைய வறிய கலத்தை நிறைப்போன் - நிரப்புவோன் - பிட்டங் கொற்றன்', என்று, புலவர் வடமவண்ணக்கன் தாமோதரனார் கூறினார் *[புற.171:5].*

நினைவ - நினைவிலுள்ளவனே! 'திருமாலை, அன்பரது விடாது நினைவ - நினைவிலுள்ளவனே! - என்று விளித்தனம் *[பரி.3:84].*

நினைவு-எண்ணம். தலைவன் பொருள்வயின் பிரியப்போவதை அறிந்த தலைவி, மிக்க துயரடைந்து தலைவன் பிரிதலை உடன்படாத நினைவுடன் - எண்ணத்துடன் - தன்புதல்வனைத் தழுவிக்கொண்டு பெருமூச்செறிந்து கண்ணீர் விடுவதைக் கண்டு தலைவன் பிரிதலைத் தவிர்ந்தான் *[அக.5:7].* தலைவன் பிரியப் போகின்றான் என்பதையறிந்த தலைவி, கழலும் வளையலைச் செறித்துத் தாழ்ந்த நோக்குடன் நிலத்தைக் காலால் கீறிக்கொண்டு துன்புறும் நினைவினளாய் நின்றாள் *[அக.39:18].* தலைவனுடன் சென்றுவிட்ட தலைவியைக் குறித்துச் செவிலித்தாய், 'இவள் இவ்வாறு செய்வள் என்று ஒரு சிறிதும் நினைவு இலேன்', என்று கூறினாள் *[அக.369:9].*

பிரிந்துள்ள தலைவனைக் குறித்துத் தலைவி தோழியிடம், 'தோழியே! நம் காதலர் எவ்வளவு சிறப்புடையராயினும் அவர்பால் தூதுவிட நினைவதனை இனி நீ விட்டுவிடு', என்று வருத்தமிகுதியால் கூறினாள் *[நற்.64:1].* 'தினையைக் காவாது எங்குச் சென்றனை? என்ற நற்றாய்க்கு, அச்சத்தின் காரணமாக நினைவிழந்து நான் மலைநாடனுடன் சுனையில் நீராடவில்லை என்று உண்மையைக் கூறிவிட்டாயே, இனி என்னாகுமோ?' என்று, தோழி, தலைவியிடம் தலைவன் சிறைப்புறத்தனாகப் படைத்துக் கூறினாள் *[நற்.147:9].* பரத்தைமைத் தலைவனுடன் பேசக்கூடாது, நெருங்கக் கூடாது என்று தலைவி இருக்கவும், அவளுடைய தோள்கள் தலைவனைத் தழுவ எண்ணுவதால் மாறுபட்ட நினைவோடு அவள் நெஞ்சினுள் துயருற்றாள் *[கலி.68:11].*

நீகான்-மரக்கலம் செலுத்துவோன் (மீகான்). கடல் நீரைப் பிளந்து கொண்டு செல்லும் மரக்கலத்தைச் (நாவாயை) செலுத்தும் நீகான்-மரக்கலத்தைச் செலுத்துவோன்-கரை

உயர்ந்த அகன்ற துறைக்கண் உள்ள மாடத்தின்மீதுள்ள விளக்கின் ஒளியினால் இடமறிந்து செலுத்துவான் *[அக.255:5]*.

மதுரையின் அழகிய மாடத்தில் செய்து வைக்கப்பட்டிருந்த புலியின் உருவத்தை, மெய்யானபுலி என்று கருதிப், பிடியானை பாகருக்கு அடங்காது சிதைய, அதன்மேல் காதல் கொண்ட களிற்றினை அதன் அருகில் கொண்டு போய் நிறுத்தி, அப்பிடியினை அடக்கி, அதன் மேலிருந்த மகளிரைக் காத்த பாகரின் செயல் பாயும் கயிறும் பாய்மரமும் கெட்டொழியக், காற்றால் அலைப்புண்டு ஓடும் மரக்கலத்தைப் பயினாலே (சுக்கான்) சீர்திருத்தி அதன் அகத்திருப்போரின் நடுக்கத்தைப் போக்கிய நீகானின் செயலை ஒத்திருந்தது *[பரி.10:55]*.

**நீடியோர்-(காலம்) நீட்டிப்போர்.** 'எனது அழகு தொலையும்படியாக, நெடுந்தொலைவிலுள்ள வேற்று நாட்டில், பொருளீட்டும் வினை முற்றுப்பெறாமையால், நீடியோர்-(காலம்) நீட்டிப்போர்-ஆகிய நம் தலைவர், என்றும் நோயின்றி இனிதிருப்பாராக' என்று தலைவி, தோழியிடம் கூறினாள் *[அக.115:18]*.

**நீடினோர்-நீட்டிப்போர்.** சினம் நீடினோர்-நீட்டிப்போர் (உடையவர்)-முருகவேளின் தாள் நிழலை அடையார் *[பரி.5:73]*.

**நீடுநர்-(காலம்) நீட்டிப்போர்.** தலைவி தோழியிடம், 'பிரிந்து சென்றுள்ள தலைவருக்காக வருந்தாதே, அவர் நீடுநர்-(காலம்) நீட்டிப்பவர்-அல்லர்; விரைவில் மீள்வர் என்று என்னை ஆற்றுவிக்கின்றாய்', ஆனால், யாவருக்கும் அச்சம் தரும்படியான பாலையைக் கடந்து சென்றுள்ள நம் காதலர் துன்பமின்றி வந்துவிடுவார் என்பதனை யான் ஐயமின்றி அறியின் அழேன் என்றாள் *[அக.375:1]*.

**நீடூர் - ஓர் ஊர்.** பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம், 'நீடூரின்-ஓர் ஊரின்-தலைவனான எவ்வி, தன் பகைவரை, அரிமணவாயில் உறத்தூரிடத்தே வென்று, அங்கு கள்ளுடன் பெருஞ்சோற்றைத் தன் படைவீரர்களுக்கு அளித்த போது எழுந்த ஆரவாரத்தைப் போல, நீ நேற்று பரத்தையருடன் நீராடியதன் அலர் எழுந்தது; என்று தலைவனிடம் தலைவி கூறினாள் *[அக.266:10]*.

**நீடூர் கிழவோன் - நீடூர்க்குத் தலைவன்.** நீடூர் கிழவோன்-நீடூர்க்குத் தலைவன்-எவ்வியென்பான்தன் பகைவர் மிடல் சாய்த்தான் *[அக.266:10]*.

எவ்வி காண்க.

**நீண்மொழி-1. வாய்மை.** கூத்தர் நன்னனிடம் செல்லும் பொழுது, 'நிண்மொழியில்-வாய்மையில்-குன்றாத நல்ல புகழையுடைய வழியிலே சென்றோருடைய வழியில் வந்தவனே; என்று வாழ்த்திப்பாடுவர் *[மலை.539]*.

**2. சூளுரை.** கல்வியில்லாத வடுகர் கரத்தின் போர்முனையில் நீண்மொழி-சூளுரை-கூறுவர் *[அக.107:11]*.

**நீத்தம் - 1. வெள்ளம்.** வெளிமான் காலமானபொழுது, பெருஞ்சித்திரனார், 'மழைபெய்யும் இரவில் கலங்கவிழ்ந்த கண்ணில்லாத ஊமன் கடலில் அழுந்தினாற்போல, எல்லையளந்தறியப்படாத திரை அரிதாகிய (துன்ப) நீத்தத்தின்கண்-வெள்ளத்தின்கண்-அழுந்துவதைவிட இறந்துபோதலே மேல்', என்று வருந்திக் கூறினார் *[புற.238:17]*.

தன்னூருக்குரிய ஆனிரையைக் கவர்ந்து சென்ற மறவர் விடும் அம்பின் நீத்தத்தைத் தடுத்துத் துடியையே புணையாகக்கொண்டு, பகைவரைவென்று, ஆனிரையை மீட்டுக் கொணர்ந்த மறவனொருவன், பகைவரம்பினால் புண்பட்டுத் தோலுரித்த பாம்பு போலத் துறக்கம் சென்றான் *[புற.260:14]*.

வளமான நாட்டினையும், சிறந்த சான்றோரையும், நல்லமைச்சரையும் உடையராயிருந்தும் பரிசிலர்க்கு வழங்கிப் புகழைப் பெறாது தம்முடைய பெயரைத் தம்முடனேயே கொண்டு சென்ற அறிவிலராகிய அரசர், நீத்தம் நிறைந்த சேயாற்றின் மணலினும் பலராவர் *[மலை.550-556]*.

காவிரியாறு, ஓடக்கோலும் நிலைத்தலில்லாத நீத்தத்தையிடையது *[அக.6:6]*. நீர் மறையுமாறு மலர்கள் உதிரப்பெற்றுக் கடுகிவருவதும், யானையையும் முட்டிமோதி இழுத்துச் செல்லுவதுமாகிய நீத்தத்தையுடைய காட்டாற்றினை நீந்திக் கடந்தும் இரவுக் குறிக்குத் தலைவன், தலைவியிடம் வருதலுமுண்டு *[அக.18:5]*. ஞாயிற்றின் வெம்மையால் வருந்திய பெண்யானை, ஆண்யானையுடன் மேலே தூக்கியிருக்கும் கை மறையும்படியான நீத்தத்தில் விளையாடக் கார்காலத்தில் மழை பெய்தது *[அக.43:4]*. ஊரார் அலர் கூறுதலால், தலைவன் முன்போல் தன்னிடம் அடிக்கடி வருவது அருமை என்று கருதிய தலைவி, காவிரியாற்றின் கழிகளையுடைய நீத்தத்தில் குளிக்கும்போது குளிருமாறு நீராடுவது போலத், தலைவனைக் குளிருமாறு முயங்கினாள் *[அக.62:10]*. பெய்த பெருமழையால் பெருகிவரும் வெள்ளம் யானைக் கன்றுகளை இழுத்துச் செல்லுவதால், பிடிகளும் களிறுகளும் புலம்பிக்கொண்டு கன்றுகளைத் தேடித் துழாவும் காட்டாற்றினையுடைய நீத்தத்தைக் கடந்து தலைவன் தலைவியிடம் இரவுக்குறிக்கண் வந்தான் *[அக.68:17]*. ஓடக்கோல் மறைவதும், கருதுவோரை நடுங்கச் செய்யும் முதலைகளையுடையதுமாகிய காட்டாற்றின் நீத்தத்தைக் கடந்து தலைவன் இரவுக்குறிக்கண் வந்தான் *[அக.72:9]*. மலையுச்சியின்றும் வீழ்ந்து மிக்குவரும் நீத்தத்தினையுடைய காவிரியாற்றின் நிலை கொள்ளாத (ஆழமான) மடுவில் இரவில் சென்று பரதவ இளையோர் வாளைமீன்களைப் பிடித்தனர் *[அக.126:3]*. மழைக் காலத்தில் இரவிலும், பகலிலும் விடாது மழை பொழிவதால் எங்கும்

நீத்தம் நிறைந்திருந்தது *[அக.305:2]*. களவுக்காலத்தில் அருவி நீரின் நீத்தத்தில் தலைவனுடன் தலைவி நீராடினாள் *[அக.312:4]*. நாட்டிலுள்ள உயிரினங்களெல்லாம் அருந்துதற்குக் காரணமான காவிரியினது கரையின் விளிம்பு வரையில் வந்து மூங்கிலாலாகிய ஓடக்கோலை மறைக்கின்ற நீத்தம் குறைந்து (வடிந்து) போயிற்று *[அக.341:5]*. தலைவனின் மலை நாட்டிலிருந்து கரையை மோதி அலைத்து வருகின்ற நீத்தத்தையுடைய யாறு தலைவன், தலைவிக்குச் செய்த கொடுமையைக்கண்டு, மலர்களால் தன் முகத்தை மறைத்துக்கொண்டு, நாணத்தினால் கரைக்குள் அடங்கித், தன் மலைநாட்டிற்கு வருவதாகத், தலைவி, காமம் மிக்க கழிபடர்கிளவியால் யாற்றினிடம் கூறினாள் *[அக.398:1]*.

வரைவின் முயற்சிகளைத் தோழியால் அறிந்த தலைவி, 'ஒருநாளேனும் இடையீடுபடாத செறிந்த நீரையுடைய நீத்தத்தினது கரையிலே உள்ள மரத்தைப்போல, இடையீடு இல்லாமல் பலமுறை தலைவனை முயங்குவேன்', என்று தோழியிடம் கூறினாள் *[குறு.368:6]*.

வாடிய சந்தனமரம் தழைக்கவும், அருவி பெருகி ஆரவாரிக்கவும், சுனையில் நீர்நிறையவும், கற்களைப்புரட்டிக்கொண்டு ஓடிவரும் கான்யாறு, மூங்கிலும் முழுகுமாறு, நீத்தம் பெருக, அலை மோதும்படியாக மழை பொழியத்தொடங்கியது *[நற்.7:4]*.

மகளிரும், ஆடவரும் குதிரைகளிலும், யானைகளிலும் ஊர்ந்து வையையின் நீத்தத்தில் அவற்றைச் செலுத்திக் கலக்குதலால் வையையாற்றின் உள்ளிடம் போர்க்களம் போல விளங்கியது *[பரி.11:53]*. தன்னைக் காணவந்த மக்களின் காதல் நீத்தத்தையும் கவர்ந்துகொண்டு பெருகுவது போல, வையையாற்றில் நீத்தம் பெருகியது *[பரி.12:34(2)]*. பரத்தையிற் பிரிந்த தலைவனிடம், ஊடியிருந்த தலைவியொருத்தி வையையாற்றின் புதுவருவாயினையுடைய நீத்தத்தைக் கண்டவுடன், அவ்வூடலையும் மறந்து, தலைவனுடன் நீராடுவதற்குப் பிடியின் மேல் ஏறினாள் *[பரி.12:47]*. 'வையையே, மகளிரும் மைந்தரும் பொருள்களை வழங்கி நுகர வேண்டி உன்னிடம் நீராடும் பொழுது, அவர் தரும் பொன்மீன், சந்தனகுழம்பு, அகில், உண்டி முதலியன நிறைதற்பொருட்டுத் தவறாது மழை நிரம்பப் பெய்வதாகுக, நினக்கு அம்மழையினாலே உண்டான நீத்தம் பெருகி என்றும் வற்றாது நிறைவதாக' என்று தோழி வையையிடம் கூறித், தலைவனுக்கு வாயில் மறுத்தாள் *[பரி.16:54]*. கூடிநின்ற அழகிய ஆடவரும், மகளிரும் இயற்கையழகினை உடைய இவ்வையையாற்றிற்கு அழகினைத் தந்தாரோ, அல்லது, இவ்வையையின் நீத்தம் இவர்க்கு அழகைத் தந்ததோ, என்று ஆராயின், யாராலும் அறிய இயலாது *[பரி.22:33]*.

**2. வானப்பெருக்கம்-விண்ணுலகப் பெருக்கம்.** விசும்பை முகமாகவும், இருசுடர்களைக் கண்களாகவுமுடைய காற்று இயங்காத எவ்வுயிரும் செல்லுதற்கரிய நீத்தத்தை - வானப் பெருக்கத்தை - முன்னோர் அடையவும் யான் அடையவில்லையே என்று நிலமகள் அழுதாள் *[புற.365:3]*. விசும்பாகிய நீத்தத்தைக் கடந்து சென்ற ஞாயிறு, மாலையில், தன் பசிய ஒளி குறைந்து செந்நிறங்கொண்டு மேற்றிசையில் தோன்றியது *[புற.376:1]*.

**நீத்தவர்-கைவிட்டவர்.** 'காதலரைக் கூடி மகிழும் காதலியர் தாம் அவரை அணைத்த கைகளை நெகிழவிடாமல் பின்னிக்கிடக்கும் இளவேனிலும் வந்தது; ஆனால் நம்மை நீத்தவர்-கைவிட்டவர் (தலைவர்) - மட்டும் இன்னும் வரவில்லையே; என்று தலைவி, தோழியிடம் கூறினாள் *[கலி.33:9]*.

**நீத்தவன்-கைவிட்டவன்.** 'உன்னை நீத்தவனே-கைவிட்டவனே-நாணமில்லாமல் உன்னிடம் வந்து இரப்பானாயின் அவனுக்கு நலிதலைக் கொடுத்து ஊடுகின்றதால் என்ன பயன்', என்று தோழி, தலைவனிடம் கூறினாள் *[கலி.87:11]*.

**நீத்தான்-கைவிட்டவன்.** பிரிவுத்துயரால் வருந்தும் தலைவியிடம், தோழி, 'நினது தடமென்தோளை நீத்தவனுடைய-கைவிட்டவனுடைய (தலைவனுடைய)-கொடுமையினது கூறுகளைச் சொல்லிப் பாடி, நீ ஏறியுள்ள ஊசலை, யான் உயரச் செலுத்தித், தாழ்த்து ஆட்ட, நெடும்பொழுது ஆடுவாயாக', என்று கூறினாள் *[கலி.131:14]*.

**நீத்து-வெள்ளம்.** 'நீருக்கு அணித்தாய் நின்ற பிரம்பினது காற்றாலசையும் நிழலை நீரில் கண்டு வாளைமீன் அஞ்சும்படியான நீத்துடைய-வெள்ளத்தையுடைய-குளத்தின்கண், நெருப்பினைப் போன்று பூத்திருக்கும் கடவுளுக்கு விருப்பமான தாமரைப்பூவைப் பறித்துச்சூடாதீர்' என்று, பாணன் ஆற்றுப்படுத்தப்பட்டான் *[பெரு.289]*.
பெரிய கடற்கரையில் உள்ள சிறுவெண் காக்கை நீத்தாகிய நீரின் கழியிடத்து மீனை உண்டு சோலையில் போய்த் தங்கும் *[குறு.313:2]*.

**நீத்தம்** - காண்க.

**நீத்தோர்-பிரிந்தோர்.** பிரிந்து சென்ற தலைவர் இடைச்சுரத்தில் விலங்கு, பறவை முதலியவற்றின் அன்பினைக்கண்டு மீண்டு வந்துவிடுவரோ, என்று ஐயுற்ற தலைவிக்குத், தோழி, 'உனது வளையல் நெகிழ்வதைக் கண்டும் நீத்தோராகிய-பிரிந்தோராகிய-தலைவர் மீளார்; அவர் வலிய நெஞ்சினர்' என்று கூறினாள் *[குறு.211:2]*.

**நீப்பார்-ஒழிப்பார்.** உலகத்தில் ஒரு காரியக்கூற்றால் உடன்பட்டு மனத்தால் நீப்பார்-ஒழிப்பார்-கூற்றுச்செவிக்கு மெத்தென்றிருக்கும் *[கலி.113:15]*.

**நீர்-1.** தண்ணீர். செய்தற்கரிய தவத்தையுடையோராகிய சிவபெருமான் நீர்-தண்ணீர்-தொலைவு அறியாக் குண்டிகையையும், (கமண்டலம்), தாழ்ந்த திருச்சடையையும் உடையவர் *[புற.1:12]*. நிலம், விசும்பு, வளி, தீ, நீர் என்ற ஐம்பெரும் பூதங்களுள் தீயோடு மாறுபட்டது நீராகும் *[புற.2:5]*. பாண்டியன் கருங்கையொள்வாள் பெரும்பெயர் வழுதியிடம் பரிசில் பெற விரும்பி வருவோர், நீர் இல்லாத கொடிய சுரத்தைக்கடந்து வருவர் *[புற.3:18]*. பாண்டியன் பல்யாகசாலை முதுகுமிப்பெருவழுதியை, நெட்டிமையார், 'நல்ல நீரையுடைய பஃறுளி என்னும் ஆற்றின் மணலினும் பலகாலம் வாழ்வானாக' என்று வாழ்த்தினார் *[புற.9:11]*. சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளியை, உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், 'வயலில் மயில் உதிர்த்த பீலியை உழவர் நெற்சூட்டுடனே திரட்டும். கொழுவிய மீனையும், விளைந்த கள்ளையுமுடைய மிக்க நீராகிய வேலி பொருந்திய நாட்டையுடையோன் நோயின்றிப் பெயர்வானாக, என வாழ்த்தினார் *[புற.13:11]*.

சேரமான் செல்வக்கடுங்கோவாழியாதன், ஆழமாகிய கிடங்கின்கண் உள்ள நீர்ப்பரப்பின்கண் செல்லாமல் விரைந்து செல்லும் குதிரையைவிலக்கிச் செலுத்தும் வலிய கையையுடையவன் *[புற.14:6]*. சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி பகைவருடைய காவல் பொய்கைகளின் நீரிலே களிற்றைப்படிவித்துப் பாழாக்கினான் *[புற.16:6]*. சேரன் யானைக்கண் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையின் படைகள் கடல்போன்று இருத்தலால் முகில் கடலெனக் கருதி நீரினை முகக்கும் முயற்சியினை மேற்கொள்ளும் *[புற.17:37]*. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், நீரின் கண்ணேயுறத் தாழ்ந்த குறிய காஞ்சியின் பூவைக்கவரும் வாளை, ஆரல், வரால், கெடிறு முதலிய மீன்களையுடைய ஆழமான கிடங்கினையும், வானமஞ்சும் திருந்திய நெடிய மதிலையுமுடைய வளவிய பழைய ஊரினையுடையவன் *[புற.18:7]*. 'உடம்பிற்கெல்லாம் நீர் இன்றியமையாததாகும்; உணவைக் கொடுத்தவர் உயிரைக் கொடுத்தவராவர்; உணவென்று சொல்லப்படுவது நிலத்தொடு கூடிய நீராகும்; அந்நீரையும், நிலத்தையும் ஒருவழிக் கூட்டினவர் இவ்வுலகத்து உடம்பையும், உயிரையும் படைத்தவராவர் என்று குடபுலவியனார் பாண்டியன் நெடுஞ்செழியனிடம் கூறினார் *[புற.18:18,21,22]*. மிக்க வலிய அரண்களையுடைய கானப்பேரெயில் என்னும் ஊரைக் உக்கிரப்பெருவழுதி கைப்பற்றியபொழுது, அவ்வரணுக்குரிய வேங்கைமார்பன், வலிய கையையுடைய கொல்லனால் செந்தீயின் கண்ணே மாட்டப்பட்ட இரும்பு உண்ட நீரினும் மீட்டற்கரிதென வருந்தினான் *[புற.21:8]*. வளையை யணிந்த மகளிர், பெரிய பனையினது நுங்கின் நீரும், கரும்பின் சாறும், தெங்கினது இனிய இளநீருமாகிய மூன்று நீரையும் அருந்திக் கடலில் ஆடும் வளமிக்க ஊர்களையுடையது எவ்வி என்பானுக்குரிய மிழலைக் கூற்றம் *[புற.24:12,15,16]*. நெல்விளைந்த வயலில் உள்ள புள்ளையோட்டுவோர் பனங்கருக்காகிய விறகில் மீனைச்சுட்டு உண்டும், அதனுடனே மதுவையுண்டும் அமையராய்த் தெங்கினது இளநீரையும் அருந்தும் வளமிக்க நாடுகளை நலங்கிள்ளியின்மறவர் பெற்று மகிழ்ந்தனர் *[புற.29:16]*. கராம் செருக்கிய ஆழமான அகழியினையும், இடைய ஈமத்து ஊர்காப்பாருடைய விளக்கு நிழலைக் கவரும் முதலைகளையுடைய நீர்மிக்க மடுவினையுமுடைய பகைவரின் பழைய ஊரினைச் சோழன் குளமுற்றத்து துஞ்சிய கிள்ளிவளவன் அழித்தான் *[புற.37:10]*. குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனின் நாடு, நெல்லுறுப்பார் வாளை மீனையும், உழுவோர் யாமையையும், கரும்பறுப்பார் தேனையும், பெரிய துறைக்கண் நீரைமுகந்து கொள்ளும் பெண்டிர் பறித்த செங்கழுநீர்ப் பூவையுமென இவற்றை வரும் சுற்றத்தினருக்கு விருந்திடும் வளத்தையுடையதாகும் *[புற.42:16]*. தவறிழைத்த தாமப்பல்கண்ணனாரை அருளிய சோழன் மாவளத்தானை நோக்கிப் பெருகிவரும் இனிய நீரையுடைய காவிரியாறு கொழித்திடப்பட்ட மணலினும் பலவாக நின்வாழ்நாள் சிறப்பதாக', என்று தாமப்பல்கண்ணனார் வாழ்த்தினார் *[புற.43:22]*. நலங்கிள்ளி ஆவூரை முற்றியிருந்தபொழுது நல்ல மனையிடத்துள்ளார் குடிக்கும் நீர் இல்லாது வருந்தினர் *[புற.44:7]*. சேரமான் கோக்கோதை மார்பனது நாடு, வனங்காப்போர் கிளிகடி கருவியைப் புடைப்பின், அப்புனத்திற் கயலதாகிய நெற்கதிர்களையுடைய வயலின் கண்ணும், மிக்க நீரை உடைய கடற்கரையின் கண்ணும் உளவாகிய புட்கள் ஒரு சேர எழுகின்ற நால்வகை நிலவளனும் உடையது *[புற.49:6]*.

நீர் மிகுமாயின் அதனைத் தாங்கும் அரண் இவ்வுலகில் இல்லாதது போல, பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன்வழுதி சினந்து போருக்கெழுந்தால், அவனைத் தடுப்பார் ஒருவருமில்லை *[புற.51:1]*. பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனைத், 'தாழ்ந்த நீரையுடைய கடல் அலைகள் மோதும் திருச்செந்தூரிடத்து முருகவேள் நிலைபெற்ற அழகிய அகன்ற துறைக்கண் குவிந்திருக்கின்ற எக்கர் மணலினும் பலகாலம் வாழ்வாயாக' என மதுரை மருதனிளநாகனார் வாழ்த்தினார் *[புற.55:17]*. பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி, நெல்லும் நீரும் யாவருக்கும் எளிய எனக் கருதி, யாவர்க்கும் அரிய பொதியமலைச் சந்தனத்தையும், கடலிடத்துள்ள முத்துக்களையும் உடையவனாயிருந்தான் *[புற.58:10]*. சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனும், பாண்டியன் வெள்ளி அம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கிருந்தாரைக் கண்ட காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார், 'உங்களுடைய புலி இலாஞ்சனையையும், பெரிய நீரின்கண் வாழும் கயல்மீன் இலாஞ்சனையையும் பிறருடைய (பகைவரின்) குன்றுகளில் பொறிப்பீராக என வாழ்த்தினார் *[புற.58:31]*. சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும், சோழன்

வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும் போர்செய்து போர்க்களத்தில் ஒருங்கே மாய்ந்தபொழுது, அவர்தம் மனைவியர் பச்சையிலை உண்ணாராய்க், குளிர்ந்த நீரின்கண் மூழ்காராய், அவர் மார்பகத்தைக் கூடி அக்களத்தின்கண்ணே உயிர் துறந்தனர் *[புற.62:14]*. பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதியிடம் சென்று மிக்க நீரான் அடப்பட்ட புற்கையுணவைக் கைவிட்டு, நல்லுணவைப் பெற்று வருதற்குச் செல்வோம், விறலியே' என்று, நெடும்பல்லியத்தனார் கூறினார் *[புற.64:7]*. சோழன் நலங்கிள்ளிக்குரிய காவிரியாறு, ஈன்றணிமை பொருந்தி அதுதீர்ந்த குழவிக்குச் சுரக்கும் முலைபோலத், தண்ணீர் சுரந்து கரை மரத்தைச் சாய்க்கும் மிக்க வெள்ளமாகிய நீரையுடையது *[புற.68:9]*. 'வழிவழியாக வரும் அரசுரிமையை அடைபவன், குடிமக்களைத் துன்புறுத்தி இறையினைப்பெறும் ஆண்மையிலாளனாக இருந்தால், அது அவனுக்குப் பரிக்கவொண்ணாத பாரமுடையது ஆகும். அத்தாயத்தை வலிய முயற்சியையுடைய சீரியோன் பெற்றால், தாழ்ந்த நீரையுடைய வற்றிய கயத்திடத்துச் சிறிய தண்டாகிய வெளிய கிடேச்சினது (நெட்டி) கோடைக்கண் உலர்ந்த கள்ளியைப் போலப் பெரிதும் நொய்தாகும்' என்று சோழன் நலங்கிள்ளி கூறினான் *[புற.75:7]*. பொகுட்டெழினிக்கு இரண்டு பகைகள் உள்ளன; ஒன்று மகளிர், இன்பநாட்டாத்தால் துனிகொள்ளுதல். மற்றொன்று, அவன் படைஎடுத்துச் சென்றிருக்கும் ஊராரின் யாறும், குளனும் முதலாயவற்றின் துறைநீரை. அவன் யானை முகந்துண்ணுமெனக் கருதி, அவர் அவ்வூர்களில் வாழ்தலை வெறுக்கும் மறம் மிகுநாட்டம்' என்று ஔவையார் பொகுட்டெழினியிடம் கூறினார் *[புற.96:7]*.

ஊரின்கண் இளம்புதல்வர் ஆடக் கலங்குகின்ற காலளவான அளவிற்பட்ட நீருள்ளே யானையைக் கொன்று வீழ்க்கும் இழுத்தலையுடைய முதலையைச் சிறியனாயினும், அதியமான் நெடுமானஞ்சி ஒப்பான்' என்று ஔவையார் அவனுடைய பகைவர்க்கு அறிவுறுத்தினார் *[புற.104:3]*. மழைபெய்யினும், பெய்யாதொழியினும் அருவி வாய்க்காலாக ஓட நெடிய மலையினது சிமையந்தோறும் இழிதரும் நீரினும் மிக இனிய மென்மையுடையவன், வேள்பாரி *[புற.105:7]*. பெரிய புகழையுடைய பறம்பே, பாரியின் மகளிரை மணஞ்செய்தற் குரியாரை நினைந்து பாரி இறந்தானாகக், கலங்கிச் செயலற்று நீர்வார் கண்ணையுடையேமாய்த் தொழுது நின்னை வாழ்த்திச் செல்லுகிறேன்; என்று கபிலர் வருந்திக் கூறினார் *[புற.113:6]*. பாரியின் பறம்புமலையில் வாழும் இனிய நீரையுடைய பெரிய ஆழ்ந்த சுனைக்கண் பூத்த செங்கழுநீரினது முகையவீழ்ந்த புறவிதழ் ஒடித்த முழுப்பூவாற்செய்யப்பட்ட தழையசையும் அல்குலையும், மிக்க அழகையுடைய குளிர்ந்த கண்ணினையும், இனிய முறுவலையுமுடைய மகளிர், முன்பு பாரியுடன் பொருதற்கு வந்த பகைவரின் குதிரைகளை எண்ணுவர்; பாரி இறந்தபிறகு உப்புச்சகடத்தை எண்ணுவர்' என்று கபிலர் வருந்திக் கூறினார் *[புற.116:1]*. பாரியின் நாடு, பாரி இறந்தபிறகு, 'எட்டாம் பக்கத்துப் பிறைபோலும் வளைந்த கரைகளை யுடைத்தாகிய தெளிந்த நீரையுடைய சிறிய குளம், பாதுகாப்பார் இன்மையின் உடைந்து அழிந்தது போல, அழிந்தது' என்று கபிலர் வருந்தினார் *[புற.118:3]*. ஓடைகிழாரின் சுற்றம், உண்ணாமையின், பசி நோயால் வருந்தி, உடம்பு புலர்ந்து, கண் தெளிந்த நீரால் நிறைந்து, வியர்ப்புற்றது *[புற.136:7]*. வேங்கையின் பொன் போன்ற பூவைச்சுமந்து கொண்டு மணிபோன்ற நீர் கடற்கண் செல்லும் செவ்விய நாஞ்சில் என்னும் மலைக்குரியவன் நாஞ்சில் வள்ளுவன் *[புற.137:11]*. நள்ளிக்குரிய தோட்டிமலை, பளிங்கை வகுத்தாற்போன்ற வெளிய நிறத்தையுடைய இனிய நீரை உடையது *[புற.150:27]*.

கொல்லிமலைக்குத் தலைவனாகிய வல்வில் ஓரி, கூத்தர்க்குக், குளிர்ந்த நீரின்கண் பூவாத மணி மிடைந்த பொன்னாலாகிய குவளைப்பூக்கள் தொடுக்கப்பட்ட பொன்னரிமாலை முதலியவற்றை வாரி வழங்கினான் *[புற.153:7]*. 'கடலின் கரைமேலே சென்றாலும், எதிர்ப்படுவாரைக் கண்டால் தாகத்தைத் தணிக்கும் சிறிய நீரை வினவுவர் மக்கள்; *[புற.154:3]*. பெருஞ்சித்ரனார், வறுமையில் தன் மனைவியின் நிலையைப், 'பசப்புற்ற மேனியுடனே, மருங்கிலே எடுத்த பல சிறு பிள்ளைகள் பிசைந்து மெல்லுதலால் உலர்ந்த முலையினையுடையளாய்க் குப்பையிடைகண் கீரையினது முன்பு கொய்யப்பட்ட கண்ணிலே கிளைத்த முதிராத இளைய தளிரைப் பறித்து, உப்பின்றியே நீரை உலையாக ஏற்றிக், காய்ச்சி, மோரின்றி, அவிழாகிய உணவை மறந்து, பசிய இலையைத்தின்று, மாசோடு கூடித் துணிபட்ட உடையினளாய், அறக்கடவுளைப்பழித்து உண்ணாளாகியவள்', என்று குமணனிடம் கூறுகின்றார் *[புற.159:11]*. 'எனது வறுமை நீங்குமாறு பரிசிலளித்து என்னை அனுப்புவீராக; ஒலிக்கும் திரையையுடைய நீரால் சூழப்பட்ட நிலவெல்லையிலே ஓங்க நினது சீர்மைபொருந்திய சிறந்த புகழைப் பலவாக வாழ்த்துவேம்', என்று பெருஞ்சித்திரனார், குமணனிடம் கூறினார் *[புற.160:29]*. மழையில்லாத கோடைக்காலத்து உயிர்ப்பன்மைகளெல்லாம் சென்று உண்பதற்குக் கங்கையினது கரையைப் பொரும் பெரும்வெள்ளமாகிய நீர் நிறைந்து தோன்றியவாறு போலப் பரிசிலர்க்குக், குமணன் விளங்கினான் *[புற.161:7]*. அடுதலை மிகவும் மறந்து, அடுப்பின்கண் காளான் பூப்ப, உடம்புமெலியும் பசியான் வருந்திப், பாலின்மையால் தோலாந்தன்மையுடனே திரங்கித், துளை தூர்ந்த, பொல்லாத வறிய முலையை வறிதே சுவைக்குந்தோறும் அழுகின்ற தனது பிள்ளையது முகத்தைப்பார்த்து, நீரால் நிரம்பிய ஈரிய இமையையுடைய குளிர்ந்த கண்ணளாய என் மனைவியது வருத்தந்தீர உன்னிடம் வந்துள்ளேன்' என்று பெருந்தலைச் சாத்தனார், குமணனிடம் கூறினார் *[புற.164:6]*. சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன், தான் செய்த

வேள்வியில் நீர் நாணும்ப.. பரிசு நெய்யை வழங்கினான் [புற.166:21]. மேற்றிசைக்கண் பொன்படுகின்ற நெடிய குடகுமலையில் மழைபெய்தால், பூப்பரந்த பூது நீரையுடைய காவிரி உலகத்தைப் பாதுகாக்கும் [புற.168:28].

பாரியின் பறம்பின்கண் குளிர்ச்சியையுடைய சுனையிடத்துத் தெளிந்த நீர், போய்த் தேடிக் கொள்ள வேண்டாமல் ஒரூரின்கண்ணேயுண்டாதலின் அதனையாம் வேண்டிய பொழுது உண்கின்றோமென்று நெகிழ்ந்திருப்பாரையொப்ப, ஓய்மான் நல்லியக் கோடனைக் காணாதொழிந்த நாட்கள் எனக்கு நாட்களாய்க் கழிந்தனவல்ல', என்று புறத்திணை நன்னாகனார் கூறினார் [புற.176:9]. 'இவ்வுலகத்திற்கு நெல்லும் உயிர் அன்று; நீரும் உயிர் அன்று; அரசனே உயிர் என்பதை ஒவ்வொரு அரசனும் அறிதல் கடமை' என்று மோசிகீரனார் கூறினார் [புற.186:1]. 'மின்னுடனே மழை குளிர்ந்த துளியைப் பெய்தலான் அமையாது கல்லையலைத்து ஒலிக்கும் வளவிய பேர்யாற்று நீரின் வழியே போம் மிதவை போல, அரியஉயிர் ஊழின் வழியே செல்லும் [புற.192:9]. பரிசில் நீட்டித்த பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறனிடம், திரையையுடைய பெரிய கடல் நீரினும், அக்கடல் ...ழித்திடப்பட்ட மணலினும், நீண்டுயர்ந்த மழையிற்றுளியினும், பெரிதும், இவர் பெறும் பிள்ளைகளைக் காணுந்தோறும், விரும்பிய செல்வத்துடனே, புகழும் இனிதாக, விளங்கி நெடுங்காலம் வாழ்க' என்று, வடமவண்ணக்கன் பேரிசாத்தனார்' வாழ்த்துவதுபோல, வசை கூறினார் [புற.198:19].

தண்ணீர் வேட்கையுடையோர், தெளிந்த நீர்ப் பரப்பான் ஒலிக்கும் திரையையுடைய பெரிய கடல்நீரை உண்ணமாட்டார்; ஆவும், மாவும் சென்று கலக்கிய, சேற்றோடு கூடிய, சிறுமைத்தாயினும் உண்ணும் நீரையே விரும்புவர்' [புற.204:5]. பரிசில் நீட்டித்த கடியநெடு வேட்டுவனிடம் 'மழையைத் தரவேண்டிக் கால்வீழ்த்துக் கடலிடத்தே திரண்ட முகில் நீரின்றி மீளாதவாறு போலத் தேருடன் விளங்கிய கோடுயர்ந்த தலைமையையுடைய களிற்றையின்றிப் பரிசிலரது சுற்றம் மீளாது' என்று பெருந்தலைச்சாத்தனார் கூறினார் [புற.205:12]. பரந்த இடத்தையுடைய இவ்வுலகமானது கிளர்ந்த நீரையுடைய கடலால் சூழப்பட்டுள்ளது [புற.213:3]. தொடித்தலை விழுத்தண்டினார், உயர்ந்த கோடுகளையுடைய மருதினது துறையிலே வந்து, உறத்தாழ்ந்து, நீர்க்கு அணித்தாகப்படிந்த கொம்பிலே ஏறி, அழகுமிகக், கரையிடத்து நிற்போர் வியப்பத், திரையிடத்துத் திவலையெழும் ஆழத்தால் நெடிய நீரையுடைய மடுவின்கண் துடுமென்று ஒலிப்பக் குதித்து, மூழ்கி மணலை முகந்து காட்டிய கல்வியில்லாத இளமை கழிந்ததே', என இரங்கிக் கூறினார் [புற.243:7,9]. பூதபாண்டியனோடு உயிர்விடத்துணியும், அவனுடைய தேவி பெருங்கோப்பெண்டு நீர் வடிந்த மயிர், புறத்தை (முதுகை) நனைப்பப் பெரிய துன்பமேவிய கண்ணையுடையளாய்ப் புறங்காட்டை அடைந்தாள் [புற.247:5]. வாளைமீன் நீர்மேல் பிறழும் வளமான நாட்டிற்குத் தலைவன் காலமானபிறகு, அவனுடைய மனைவி, அவனுக்கு உணவு கொடுத்தல் வேண்டிச் சுளகு போன்ற சிறிய இடத்தைத் துடைத்து அழுதலமையாத கண்ணையுடையளாய்த் தன் கண் கலுழ்கின்ற நீராலே சாணகத்தைக் கொண்டு மெழுகினாள் [புற.249:2,14].

மழைபெய்யாது வறண்ட கோடைக்காலமாயினும் நத்தையின் ஏறு, இளம்சங்குடன் பகற்காலத்தே புணரும் நீர் விளங்கும் வளம்நிறைந்த நாட்டையுடையவன், சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி [புற.266:6]. நிலமானது நீர் தொலைவறியாத முதற்பொருளாகும் [புற.271:1]. போரில் பெரும்புண்பட்டு இறக்கும் நிலைமியிலிருக்கும் மறவனின் மனைவி, 'நெல்லும் நீரும் சொரிந்த விரிச்சிகேட்கும் முதுபெண்டின் சொல்லும் குறையுடையவாயுள்ளன; யானும் கழுவுகின்ற மொட்டையான தலையினின்றும் தெளிந்த நீர் ஒழுக, ஆம்பலரிசியுண்டு, கழிகலமகளிரைப் போல உயிர்வாழேன்; இனி உங்கள் நிலை என்னாகுமோ' என்று பாணர், விறலியர் முதலியோரிடம் கூறினாள் [புற.280:6,11]. ஆழ்ந்த நீரையுடைய பொய்கைக்கண் கிளர்ந்தெழுந்த வாளைமீன், நெடுமனையின் புறத்தே நிறுத்தப்பட்ட நெற்கூட்டிடத்து வீழ்ந்து புரளும் [புற.287:8]. மிக்கநீரின்கண் இருத்தலை விரும்பும், மருத நிலத்தூர்களில் வாழும், எருமையினது கொம்பைப்போலப், பசிய பயற்றின் நெற்று இருக்கும் [புற.297:1].

உப்பு வாணிகர், முடம்பட்ட எருதினை யாரும் இல்லாத ஓரிடத்தில், நீரையும் புல்லையும் கொடாமல் விரட்டிவிடுவர் [புற.307:7]. சிறிய வீட்டின் முற்றத்தில், முதிய வாயையுடைய சாடியில், செம்மண்நிலத்து மடுவினைத் தோண்டியதனால் உண்டாகிய சிறிதாக ஊறிய நீரை முகந்து வைப்பர் [புற.319:2]. வேட்டுவர், பன்றிகளால் புழுதியாக்கப்பட்ட விடுநிலத்தின்கண் மழை பெய்ததால், பள்ளங்களில் தங்கிய சிறிதாகிய நீரை ஆக்கள் உண்டுவிட்டதால், சேற்றை நீக்கித் தோண்டிய கலங்கல் தண்ணீரை ஒருவர் பின்ஒருவராகச் சென்று முகந்துண்ணுவர் [புற.325:3]. ஒரு தலைவனின் சிற்றூரின் பக்கத்தே நடப்பட்டுள்ள நடுகல்லினை நல்லநீரால் தூய்மைசெய்து, விடியற்காலத்துப்பலியைப் படைத்து, நெய்விளக்கேற்றி வைப்பர் [புற.329:3]. ஒருமறத் தலைவனின் வேல், மாலையணியப்பெற்று, மங்கலமகளிர் யாழோடு இசைபாடிவரத் தெளிந்த நீரையுடைய மடுக்களில் தூய்மை செய்யப்பெற்றுத், தெருக்களில் உலாவரும் [புற.332:7]. நீர்க்குள் வீழ்ந்த மழையினுடைய பெரிய தாரையாலுண்டாகிய குமிழி போன்ற கண்ணையுடையது, முயல் [புற.333:1]. நெடுவேள் ஆதன் என்பவனுக்குரிய போந்தை என்னும் ஊர், நீர்நிறைந்து நிற்கும் கழனிகளையுடையது [புற.338:1].

தெளிந்த நீரையுடைய பொய்கையின் மீனை மேய்ந்த செவ்வரி நாரைகள், மருத மரத்தில் தங்குதலை வெறுப்பின், காஞ்சிமரத்தில் உறங்கும் [புற.351:8]. ஒரு தலைவன் போருக்குப்

போவதற்கு முன்பு, நிரைத்த காம்பணிந்த வேலை நீரில் கழுவித் தூய்மை செய்தான் [புற.354:2]. ஊரின் அகழியில் நீர் இல்லாமையால் கன்றுகள் மேய்ந்து திரியும் [புற.355:2]. ஒரு தலைவன், நல்ல பல நூல்களைக் கேட்டு, அறிவு நிரம்பிய வேள்வி செய்தலையுடைய அந்தணர்க்குப், பெறற்கரிய பொற்கலங்களை, நீர்வார்த்துக் கொடுத்தான் [புற.361:5]. ஒரு தலைவன், பார்ப்பார்க்கு, மருதநிலத்தூர்களைக் கொடுக்கும்பொழுது, அவர் கையில் பெய்த நீர் கடலளவும் பரந்து செல்லுமாறு இருந்தது [புற.362:12]. நீர்நிலையிடத்தே பெருகியுள்ள மணல் பரந்த கரையின்கண் நிற்கும் சோலைகள்தோறும், அமைக்கப்பட்ட வெறியாட்டங்களில், தொகுக்கப்பட்ட ஆடுகள் மடிவது, எவ்வளவு உண்மையோ, அவ்வளவு உண்மையாகும், எல்லோரும் இறப்பது [புற.366:21]. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், போர்க்கள வேள்வி செய்து, திருமணவிழாவில் நிகழ்த்துவது போல, விருந்தினர்க்குப் புதுநீரினை எல்லோர்மீதும் தெளித்துப் பரிசில் வழங்கிச், சிறப்பெய்தினான் [புற.372:11]. மேலே விசும்பிலிருந்து மழையாகப் பெய்த நீர், கடலுள் சென்று முத்தாகும் [புற.380:6]. கரும்பனூர்கிழான், பரிசிலர்க்கு நிணம் கலந்த கொழுவிய சோற்றுணவில், நீர் நாணும்படியாக, நெய்யை மிகுதியாகப் பெய்து வழங்குவான். [புற.384:17]. குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், பரிசிலர்க்கு மிக்கநீர் நிறைந்த கயத்தின்கண் வீழ்கின்ற மழைத்துளிகள் துள்ளுவதுபோல, நெய்யில் வறுக்கும்பொழுது துள்ளுகின்ற வறுவல் துண்டங்களை முகந்து, உண்ணக்கொடுப்பான் [புற.386:1]. கயம் வற்றிப் பிளவுற்றுக்கிடக்கும் கோடைக்காலத்தில், நீர்நிறைந்து மென்மையாயுள்ள பனைநுங்கு, வற்றிக், கற்போல் வலிதாகிவிடும் [புற.389:1]. வாட்டாற்று எழினியாதன், நீரின்கீழே மீன்களையும், நீரின் மேலே மகளிர்கண் போல மலரும் குவளை முதலிய மலர்களையும், நீர்மிக்க கடற்கரைக் கண், குவியும் மணலையள்ளித்தூவும் குளிர்காற்றினால் நீங்கிச் செல்லும் மெல்லிய சிறகுகளோடு கூடிய புள்ளினங்களையும், உடைய, நீர்வளஞ்செறிந்த வாட்டாறு என்னும் ஊருக்குத் தலைவனாவான் [புற.396:1,2,5,13]. கிள்ளிவளவனுக்குரிய காவிரிபாயும் சோழநாடு முழங்குகின்ற நீர் நலஞ்சான்ற தோட்டங்களை உடையது [புற.399:11].

இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனின் வாட்படை, பகைவரின் மார்புகளைப் பிளத்தலால், உண்டாகிய புண்ணினின் றொழுகும் குருதியால், நீலமணி போன்றுள்ள பகைவரின் பெரிய கழியின் நீர், நிறம்மாறிக் குங்குமக்குழம்பினை நிகர்த்தது [பதி.11:9]. இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் பரிசிலருடைய, மழைநீரால் நனைந்த, பருந்தினுடைய ஈரமான சிறகையொப்பக் கிழிந்த, மண்படிந்து மாசேறிய, கந்தையாகிய உடையை நீக்கிப் பட்டுடையை அரையில் உடுப்பித்தான் [பதி.12:19]. கூற்றுவனால் அடப்படும் யாக்கை புல்லெனத் தோன்றிப் பொலிவழிவதுபோல, நீரால் அழிக்கப்படுவதல்லது பகைவரால் அழிக்க இயலாத பகைவரின் பேரூர்களை, இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன், விரிந்த பூவையுடைய கரும்பு விளையுங்கழனிகள் புல்லென்று தோன்றும்படியாக, அழித்தான் [பதி.13:12]. இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன், நிலமும், நீரும் காற்றும், விசும்பும் என்ற நான்கினையும் போலப் பெருமையை அளந்துகாண்டற்கு அரியவனாவான் [பதி.14:1]. இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனால், பகைவரின் ஊர்கள் அழிந்து மக்களின்றிப் பாழ்பட்டுப் போனமையின், நீர் அற்ற உழுகால்களில், வேரோடு காய்ந்த சிவந்த காந்தள் நிறைந்திருந்தன [பதி.15:10]. பல்யானைச் செல்கெழுகுட்டுவனின் நாட்டில், நீரிற், செல்லாத, கொக்கின் பார்வைக்கு அஞ்சாத அயிரை என்னும் மலை பகைவர் எளிதில் புகாவாறு குறுக்கிட்டுக்கிடந்தது [பதி.21:26]. பல்யானைச் செல்கெழுகுட்டுவனின் மனைவியினுடைய தோள், நீர் யாற்றின் கரையிடத்தே நின்ற, மூங்கிலை ஒத்திருந்தது [பதி.21:36]. இரும்பினால் செய்த குந்தாலியால் பாறையைத் தோண்டியதால், சிதறுண்டு சிறிதே ஊறிய நீர் பொருந்திய கிணறுகளில், பறியாகிய கயிற்றை வாங்கும் முகவைகளைச் சுற்றிப் பருவகுவதற்கு மொய்க்கின்ற ஆக்கள் பொருந்திய, கொங்கரின் நாட்டினைப் பல்யானைச் செல்கெழுகுட்டுவன் கைக்கொண்டான் [பதி.22:13]. நீர் விளையாட்டின்கண் எழும் ஆரவாரமானது, அம்பும், வில்லும் கொண்டு பயிற்சி செய்வாரது ஆரவாரத்தை அடக்கும் பகைவரின் நாட்டினைப் பல்யானைச் செல்கெழுகுட்டுவன் வென்றான் [பதி.22:29]. நிலம், நீர், தீ, வளி, விசும்பு ஆகிய இவ்வைந்தினையும் அளந்து முடிவு காணினும், பல்யானைச் செல்கெழுகுட்டுவனின் பெருமையை யாராலும் அளவிட இயலாது [பதி.24:25]. பல்யானைச் செல்கெழுகுட்டுவனின் நாட்டில் பேரியாற்று நீரின் ஆரவாரம் அல்லாது போர் ஆரவாரம் இல்லை [பதி.28:13]. களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல், அருவிநீர் ஒலிக்கின்ற நேரிமலைக்கு உரியவன் [பதி.40:20]. கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன், கடலின் நீரிலே சென்று பகைவரை வென்று, அக்கடல் நீர்ப்பரப்பிலே பகைவரிடமிருந்து கொண்டுவந்த அரிய பொருள்களைப் பரிசிலர்க்கு வழங்கினான் [பதி.48:3]. அசைகின்ற நீர் நிரம்பிய கடலானது, கலங்கும்படி காற்று மோதுவதால் பெரிய அலைகள் எழுந்து இடிபோல முழங்கும் [பதி.51:1]. பிற நாடுகளிலுள்ள அரிய பொருள்களைக் கொண்டு வருதற்காகக் கடல்நீரில் செல்லும் கப்பல் திசைகளிலே திரிந்தாற்போல, ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் பகைவரின் மேல் படையெடுத்துச் செல்லுங்கால், அவனுடைய கொடிகள் அசையும் போர் யானைகளும், தேர்களும் செறிந்து எங்கும் திரிந்தன [பதி.52:3]. செல்வக் கடுங்கோவாழியாதனின் அரண்மனை முற்றத்தில் அந்தணர்க்கு அரிய கலன்களை அவன் கொடுக்கும்பொழுது வார்த்த நீரொழுகிச் சேறானதால் அங்கு நிற்பதை யானைகள் வெறுத்தன [பதி.64:5]. தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறையின் ஆற்றலை யறியாத பகைவர்க்கு அவன் உலகத்தையழிக்கும் ஊழிக்காலத்தில், நீர் பரந்து

பெருகிய பெருவெள்ளத்தை வற்றச் செய்யும் வடவைத் தீயைப் போன்றவன் *[பதி.72:9]*. குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறை ஓடக்கோல் நிலைபெறாத ஆழமுடையதாயினும், புனலாட்டயரும் மகளிரின் கழன்று வீழ்ந்த காதணி மேலே நன்றாகத் தெரியும்படியான, சந்தனமரங்கள் மிதந்துவரும் வானியாற்றின் நீரைக் காட்டிலும் இனிய தண்ணிய மென்மையையுடைய தண்ணிய அன்புடையனாதலால், நீரை ஒத்தவன் *[பதி.90:14]*. பல்யானைச் செல்கெழுகுட்டுவன், மேல்கடல், கீழ்கடல் ஆகிய இருகடல்களின் நீரையும் கொண்டு வந்து ஒரு பகல் நாளில் புனலாடினான் *[பதிப.3:7]*. தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை, கொல்லிமலையைச் சூழ்ந்த நீர்மிக்க மலையின் உச்சியில், அதியமான் அஞ்சியையும், சோழ, பாண்டியரையும் வென்றான் *[பதிப.8:3]*. சேரன், கடலுக்குள் விரைந்து செல்லும் நீரைப் போன்று, விரைந்து செல்லும் படையையுடையவன் *[பதிப.1:9]*.

நீரிடத்துப் பெயர்தலையுடைய சுழிபோல இலக்கணங்கள் நிறைந்த கொப்பூழினையுடையவள் பாடினி *[பொரு.37]*. சாதிலிங்கத்தை உருக்கின தன்மையை யொத்த செய்ய நிலத்தே நடப்பதாலும், சுக்கான் கல்லாலே துளைக்கப்பட்டதாலும் பாடினியின் அடிகளில் மரல் பழுத்தாற்போன்ற துளும்பு நீரையுடைய கொப்புளங்கள் உண்டாயின *[பொரு.45]*. சோழ நாட்டில், நறிய நீரையுடைய பொய்கையினது அடைகரையில், செறிந்த கடம்ப மரங்கள் நின்று வளர்ந்தன *[சிறு.68]*. அலையும் நீரையுடைய கடற்கரையினின்ற தாழை, அன்னத்தைப் போலப் பூத்தது *[சிறு.146]*. ஓய்மா நாட்டு நல்லியக்கோடனுக்குரிய எயிற்பட்டினம் குளிர்ந்த நீரையுடைய குளங்களையுடையது *[சிறு.153]*. ஆனேறுகள் தம்முள்பொருது சேறுண்டாக்கிய வயலை உழாமலேயே ஒக்க மிதிக்க உழவர், நெடிய நீரையுடைய அவ்வயலில் முடியாகவீசிய நாற்றை நடுவர் *[பெரு.212]*. தூண்டிலிருந்து தப்பிய வாளைமீன் நீர்க்கு அணித்தாய் நின்ற பிரம்பினது காற்றாலசையும் நிழலைப்புனலில் கண்டு தூண்டிலென அஞ்சும். *[பெரு.288]*. முதிய நீரினையுடைய அகன்ற பொய்கைகளில் சாதிலங்கம் போன்ற இதழையுடைய குவளையோடு, நீலப் பூவும், பன்னிறம் பொருந்திய வேறுபல பூக்களும் பூத்திருத்தல், வானிடத்து இந்திரவில்லை ஒத்திருந்தது *[பெரு.294]*. கள்ளினைச் சமைத்திடும் மகளிர், வட்டிலைக் கழுவின, வடிந்து சிந்தும் சிலநீர், பலகால் வடிதலின், நிறைந்து வழிந்த சேற்றின்கண், பல குட்டிகளை உடைய பெண் பன்றிகள் அளையும் *[பெரு.340]*. கடற்றுறைக்கண் விண்ணைத்தீண்டும்படி உயர்ந்துள்ள மாடத்திடத்தே, பெருநீர்ப் பரப்பாகிய கடலிலே செல்லும் மரக்கலங்கள் திசைதப்பிப்போகாவாறு, இரவின் கண், விளக்கேற்றி வைப்பர் *[பெரு.350]*. தொண்டைமான் இளந்திரையனின் நாட்டில் வாழும் தண்டலை உழவர், விருந்தினர்க்கு விழுதில்லாத தாழையாகிய தெங்கினது இளைதாய இனிய நீரைக் கொடுப்பர் *[பெரு.357]*. பாம்பனையிலே பள்ளி கொண்டோனுடைய திருவெஃகாவின் கண் உள்ள சோலையில், குருக்கத்தியின் பூக்கள், நிழல் நிறைந்த மணற்குழிகளின் நீரில் விழுந்து கிடப்பவை, அப்பவாணிகர் பாகுடனே வேண்டுவன கூட்டிச் செய்த அப்பம் (இடியாப்பம்) பாலிலே கிடப்பவை போல் தோன்றின *[பெரு.379]*. பகைவர்க்கு அஞ்சிக் கங்கையின் பெரிய நீரைக்கடந்து கெட்டோடும் மக்கள் தோணிக்காகக் கங்கையின் கரையில் காத்துக்கிடப்பதைப் போலத், தொண்டைமான் இளந்திரையனின் அரண்மனை முற்றத்தில் வேந்தர் திறையைச் செலுத்துவதற்காகக் காத்துக் கிடப்பர் *[பெரு.432]*. குறளுருக்கொண்டு சென்ற திருமால், மாவலி வார்த்த நீர், தன்கையிலே சென்றவுடனே நெட்டுருக்கொண்டு உயர்ந்ததைப்போல, மேகமானது, கடலைக்குடித்துக் கடிய செலவினையுடையதாய் உலகத்தை வளைத்து மேலெழுந்தது *[முல்.3]*. ஒரு தலைவன், காட்டாறு சூழ்ந்த பகைவருடைய, நெடியகாட்டில், சேய்மைக்கண்ணும் மணக்கின்ற பிடவம் முதலிய தூறுகளை அழித்துப் பகைவரின் அரண்களையும் கெடுத்து இடுமுள் வேலியாகிய மதிலினை அமைத்து, நீரினால் நிறைந்த கடல் போன்று, பாசறையை அமைத்தான் *[முல்.28]*. நாழிகையை அளந்து இத்துணை என்று அறிவிக்கும் நாழிகைக் கணக்கர், வேந்தனிடம், 'பகைவரை வெல்லச் செல்கின்ற வேந்தனே', குறிய நீரையுடைய நாழிகை வட்டிலிலே சென்ற நாழிகை இத்துணை என்று அறிவித்தனர் *[முல்.58]*.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் நாட்டில் நீரினை முகந்து இறைக்கின்ற நிரல்படி நின்று தொழில் செய்வோர் பாடுவதால், ஒலிக்கும் இசையின் ஓசை, பரதவ மகளிர் ஆடும் குரவைக்கூத்தின் இசையோடு கலந்து ஆரவாரிக்கும் *[மது.89]*. முதுவெள்ளிலை என்னும் ஊரில், சுறாமீன்கள் திரிகின்ற, புலால்நாற்றத்தையுடைய, நீர் நிறைந்த கடலிடத்து, எழுந்த துவலைகள், நிலாப்போலும் மணலையுடைய கரையில், தாழையை வேலியாகவுடைய இளமரக்காவில், வந்து மோதி ஓசை எழுப்பும் *[மது.113]*. முகில் கீழ்க்கடலின் கண் தண்ணீரை முகந்து சென்று, மேலைக்கடலருகேயுள்ள மலைகளை வளைத்துக்கொண்டு, இரவிது, பகலிது என்ற அறியாதபடி இருளைச் செய்து, மேடு, பள்ளம் எங்கும் நீர் திரண்டு பெருகும்படியாக மழையை பெய்தது *[மது.240]*. பாண்டியனுடைய மதுரைமாநகர், பகைவர் நெருங்குவதற்கரியதாய், அவரை ஓடச் செய்கையாலே, அவருடைய முதுகைக்கண்ட, மண்ணுள்ள அளவும் ஆழ்ந்த நீலமணி போலும் நீரையுடைய அகழியையுடையதாயிருந்தது *[மது.351]*. மதுரை நகரத் தெருக்களிலே, உடலுக்கு அழகைத்தரும் இனிய நீரினையுடைய பசியபாக்குடனே, வெற்றிலையையும் விற்போர் மலைபோன்ற மாடங்களின் குளிர்ந்த நிழலிலே தங்கியிருப்பர் *[மது.400]*. மழுவாள் நெடியோனாகிய சிவபெருமான் நீரும், நிலனும், நெருப்பும், காற்றும் விசும்புமாகிய ஐம்பூதங்களையும் படைத்தார் *[மது.453]*.

மதுரை மாநகரில், மலையிடத்தும், நிலத்திடத்தும், நீரிடத்தும் உண்டான பலவாய் வேறுபட்ட அழகுடையனவாகிய மணி, முத்து, பொன் முதலியவற்றைப் பண்டமாற்றாக வாங்கிக்கொண்டு, சிறந்த தேயத்தினின்றும் வந்த பண்டங்களை விற்கும் வணிகர்தெருவும் இருந்தது *[மது.504]*. மதுரையிலுள்ள வரைவின் மகளிர், அகன்ற விண்ணிலே சென்று மணக்கும்படி, நீர் திரண்டாற்போன்ற வெள்ளிய பூக்களால் புனைந்த மாலைகளைக் கொண்டையிலே முடித்திருந்தனர் *[மது.562]*. மதுரை நகரிலுள்ள வரைவின் மகளிர், ஆழ்ந்த நீரினையுடைய குளிர்ந்த துறையிடத்துக் குவிந்த மணலிலே ஆடி, அவ்விடத்தை வெறுத்துழி, மெல்லிய தளிர்களைக், கொழுவிய கொம்புகளினின்றும் கொய்து, நீர்க்கீழ் அரும்புகளோடே பொருந்துதல்வரக் கட்டின நெடிய தொடரை வடிம்பிலே விழும்படி உடுத்து, மணம் நாறுகின்ற இல்லங்களிலே சென்று பொருள் தருதற்குரிய இளையரோடு விளையாடுதலைச் செய்வர் *[மது.585,587]*. மதுரை நகரில் உள்ள கணவர் மகிழும்படியாகப் புதல்வரை ஈன்ற வளமனைக் குலமகளிர், மகிழ்ச்சியால் பொலிவுற்ற சுற்றத்தாருடனே, முலையில் பால் சுரக்கும்படி குளத்தின்கண் நீராடுவர் *[மது.603]*. மதுரை நகரின் காப்பாளர், தேர் ஓடும் தெருவின்கண்ணே, நீர்திரண்டு ஒழுகும்படி மழை மிகப்பெய்த நடு இரவின்கண்ணும், மடிந்திலராய், உலாவி நகரைக் காப்பர் *[மது.647,648]*. பாண்டியன் நெடுஞ்செழியன், சோறு தன்னிடத்தே பொருந்துதலுள்ள நீருடைய துகிலை (கஞ்சி இட்ட துகில்) உடுத்தியிருந்தான் *[மது.721]*.

மழைபெய்தமையால், கோவலர், காந்தள் மலரினது நீண்ட இதழ்களால் கட்டின கண்ணி நீர் அலைத்தலால் கலக்கமெய்தக் குளிரினால் வருந்திப் பலரும் ஒன்று கூடிக் கையிடத்தே நெருப்பினையுடையராய்த் தம் பற்கள் பறைகொட்ட நடுங்கினர் *[நெடு.6]*. மழையாலே, கமுகினது கழுத்திலுள்ள கொழுவிய மடலிடத்துப் பாளை விரிந்த தாறுகளில், தெளிந்த நீரை உள்ளேயுடைய பசியகாயின் நுண்ணிய நீர் திரளும்படியாக, வீங்கிப் பக்கந்திரண்டு, இனிமை கொள்ளும்படி முற்றியது *[நெடு.25,26]*. 'தலைவனுடைய மலைச்சிமையத்தினின்றும் குதிக்கின்ற தெளிந்த நீரையுடைய வெள்ளிய துகிலையொக்கும் அருவியிலே நீக்குதலில்லாத விருப்பையுடையேமாய் நீராடினோம்', என்று தோழி, செவிலியிடம் அறத்தொடு நிற்கும்பொழுது கூறினாள் *[குறி.54]*. மாங்கனியாலும், தேனாலும் பலவின் பழத்தினாலும் உண்டான தேறலை நீரென்று கருதி உண்ட மயில், விழாக்களுடைய ஊர்களில் இனிய வாச்சியங்களொலிப்பக் கழாய்க் கயிற்றிலே ஏறி ஆடுகின்றவள், தாளத்தினால் தான் ஆற்றாது தளருமாறு போலத் தளரும் *[குறி.191]*. 'தலைவன் முருகனை வாழ்த்தி வணங்கி, அவன் முன்னே, இவள் மயக்கமுறுதற்குக் காரணமான சூளுறவினை, உண்மையால், தெளிவித்து, அம்மலையில் அழகிய இனிய தெள்ளிய அருவிநீரை அவன் குடித்தமையினாலே, இவள் நெஞ்சம் அச்சூளுறவில் பொருந்திக் களிறுதருபுணர்ச்சியைப் பூ மிக்க சோலையிலே அன்றைப் பகற்பொழுதிலே போக்கினோம்', என்று தோழி, செவிலியிடம் அறத்தொடு நின்றாள் *[குறி.211]*. 'தலைவன் இரவுக்குறிக்கண் வருகின்ற ஏதத்திற்கு அஞ்சி, வரைந்து கொண்டு இல்லறம் நிகழ்த்துதலே நன்றென்று கருதி, அதுகூடாமையினாலே, தலைவியின் கண்கள், மழைநீரின் பெரிய துளியாலே தாக்கப்பட்டு அழகழிந்த மலர்போல, இமை சோர்ந்து ஈரத்தினையுடையவாய்க் கலங்கும்; என்று தோழி, செவிலியிடம் அறத்தொடு நின்றாள் *[குறி.247]*. திருமாவளவனின் சோழநாடு, கரும்பின் பாகை அடுகின்ற கொட்டிலின் நெருப்பினுடைய புகை சுடுவதால், நீரையுடைத்தாகிய வயலில் நின்ற நீண்ட நெய்தற்பூ, அழகுகெட்டு வாடும், வயல்கள் நிறைந்த பல ஊர்களை உடையதாகும் *[பட்.11]*. ஓதத்தினால் ஒலிமலிந்த புகார் முகத்தே கரிய மலையைச் சேர்ந்த செக்கர் முகில் போலவும் தாயுடைய முலையைத் தழுவிய பிள்ளையைப் போலவும், தெளிந்த நீரையுடைய கடல்திரையோடு காவிரியாறு கலக்கும் *[பட்.97]*. புகாரின் கடற்கரைக்கண் உள்ள பண்டகசாலையில், முகில் தான் முகந்த நீரை மலையிடத்தே சொரிதல் போலக் கடல் நீரினின்றும் நிலத்தில் ஏற்றப்படுவதற்காகவும், மலையிற் பொழிந்த நீர் மீண்டும் கடலிலே பரவுவது போல, நிலத்தினின்றும் கடல் நீரிலுள்ள கலங்களில் ஏற்றப்படுவதற்காகவும் பல பண்டங்கள் வந்து குவிந்தன *[பட்.126]*. புகார்ப்பட்டினத்தில் உள்ள வலைஞர் கொல்லாமையையுடையர். ஆகையினாலே, மீன்கள் கடல் நீரிலே அச்சமின்றித் தூங்குவதோடு, அவரின் முற்றத்தேயும் பாய்ந்தன *[பட்.194]*. திருமாவளவன் போர் செய்த பகைவரின் வளமான மருதநிலம் நீர் அற்று வயல், குளம், என்ற வேறுபாடற்றுப் பிணைமான் கலைமானோடு விளையாடும் படியான பாழ்நிலமாய் விட்டது *[பட்.244]*. நன்னன் வேண்மானின் நாட்டில், உண்டார்வாயின் கண், நீர் ஊறும் இயல்புடைய உயவைக்கொடி தண்ணீரொடு மாறுபாடு கொள்ளும்படி படர்ந்தன *[மலை.136]*. நன்னன் வேண்மான், பரிசிலர்க்கு, நீரின் செலவினை யொத்த நிரல்படச் செல்கின்ற நெடிய தேர்களை வழங்குவான் *[மலை.571]*.

தலைவன் கடந்து செல்லும் சுரத்தில் உள்ள நீர் அற்ற பசிய சுனைகளெல்லாம் ஈரம் இல்லாதவாறு காய்ந்து அங்குச் சொரியும் நெல்லும் பொரியும் வெம்மையை உடையனவாயின *[அக.1:12]*. தலைவன் பொருள்வயின் பிரியப்போவதை யறிந்த தலைவி, தனது கண்ணின் பாவையை மறைத்து நிற்கும் நடுக்கத்தைச் செய்யும் நீரையுடைய பார்வையுடன், தனது மார்பில் அடக்கிய புதல்வனது தலையிலுள்ள தூய நீர் தந்த இணைப் பூக்களால் தொடுக்கப்பட்ட செங்கழுநீர் மாலையை மோந்து பெருமூச்சுவிட்டபொழுது அச்சிறந்த மலர் பவளம் போலும் உருவினையிழந்த பொலிவற்ற காட்சியைக் கண்டு.

தலைவன் பொருள்வயின் பிரிதலைத் தவிர்த்தான் *[அக.5:21,23]*. மத்தி என்பானுக்குரிய கழாஅர் என்னும் ஊரில், தீப்போலும் தாமரைப்பூக்களுடைய நீர்மிக்க வயலில், வள்ளையினது கொடிகளை உழக்கி வாளை மீன்களை உண்ட கூரிய பற்களையுடைய நீர்நாயானது, பிரம்பினது பழைய தூறுகளில் தங்கியிருக்கும் *[அக.6:16,18]*. தலைவன் பொருள்வயின் பிரிந்ததனால், தலைவியின் குற்றமற்ற கண்கள், நீர் சொரியும் ஒளி பொருந்திய மலரையொப்ப, ஒழிதலின்றித் தண்ணீரற்ற குளத்தினைப் பெருக்கும் மடைபோல நாளும் அழுதலைப்பெற்றன *[அக.11:12]*. குழந்தையினுடைய அகங்கை, நீரில் தழைத்த தாமரைமலரின் பூந்தாதாகிய அல்லியின் அடுத்த இதழினை ஒத்திருக்கும் *[அக.16:1]*. நீர் அற்ற காட்டினிடத்தே செல்லும் உப்புவாணிகர் கடாக்களை உரப்பியோட்டும் தெள்ளிய ஒலிகள் மலையில் எதிரொலிக்கும் *[அக.17:12]*. காட்டாற்றின் வெள்ளத்தினைக், கரைகளிலுள்ள மரங்களிலிருந்து உதிரிந்த மலர்கள், நீரின் நிறம் மறையுமாறு மூடிவிடும் *[அக.18:1]*.

தலைவனின் பிரிவை உணர்ந்து வருந்திய தலைவியிடம், தோழி, 'தேன் உண்டாகத் தெளிந்த நீரினையேற்ற திரண்ட தண்டினையுடைய குவளைப்பூவின் அழகினைவென்று கெடுத்தும் அமையாமல், போரில் குருதிதோய்ந்த வேல் பிறழ்வது போன்ற நினது செவ்வரி பொருந்திய மையுண்ட கண்களின் மாறுபட்ட பார்வை, தலைவனைத் தடுத்துவிடும்; வருந்தாதே' என்று கூறினாள் *[அக.27:13]*. வெப்பம் குறையாத எரிபரந்த சுரத்தில், வலிமையழிந்த வழிச்செல்லும் யானை, நீருள்ள இடம் அறியாமல், பேய்த்தேர் தோன்றும் இடமெல்லாம் ஓடி, நீர் அற்ற ஆற்றில் கிடக்கும் ஓடம்போல வழியிடத்து வருந்திக்கிடக்கும் *[அக.29:17,18]*. கார்காலம், நிலத்திலும், வானினும் நீர்பொருந்திக் குறிய நீரையுடைய நாழிகை வட்டிலால் நாழிகையளந்து கூறுவார் கூறலன்றி, ஞாயிறு உள்ள இடம் இதுவென அறியப்படாமையின், உலகம் அஞ்சும்படியாக எங்கும் பரந்த மழையுடன் பொருந்தியிருந்தது *[அக.43:5,6]*. தலைவன் நீர் இல்லாத அரிய சுரநெறியில், களிற்றினைக் கொன்று, மக்கள் இயங்காத, புலி திரிவதாகிய காட்டினைக் கடந்து சென்றான் *[அக.45:4]*. சேற்றில் நிற்றலை வெறுத்த எருமைக்கடா ஊரார் துயின்ற இரவில் தனது கட்டினை அறுத்துக் கொண்டு, கூரிய முள்வேலியைத் தனது கொம்பினால் அகற்றிவிட்டு, நீர்மிக்க வயலில் மீன்கள் ஓடும்படி வள்ளைக்கொடியை மயக்கித் தாமரையின் குளிர்ந்த மலரைத்தின்னும் *[அக.46:4]*. மிக்க நீரினையுடைய பெரிய கழியில் சுறாமீன்கள் செருக்கித் திரியினும் குளிர்ந்த நீரினையுடைய சேர்ப்பன் பகலிலும் தலைவியைக் காண வருவான் *[அக.50:2,6]*. தலைவனைப் பிரிந்த தலைவி, இரவில், மனையைச் சார்ந்துள்ள பனைமரத்தில் துணைசிறிது பிரிந்தாலும் அன்றில்கள் துயிலாவாதலைக்காண், நெஞ்சே, என்று கூறிக் கண்ணில் நிறையும் நீரைத் தனது ஆற்றாமையைப் பிறரறியாமல் இருத்தற்காக மறைப்பாள் *[அக.50:13]*.

பாலையின் ஞாயிற்றின் கடியகதிர் எறித்ததலாகிய பிளப்பிடம் நிறையும்படி முருங்கையின் வெள்ளியபூக்கள் பரக்க, நீர் அற்றுப்போயதால், வறட்சியுற்றதும், செல்லத்தொலை யாததுமாகிய நீண்ட இடத்தினைக் கடந்து தலைவன் பிரிந்துள்ளான் *[அக.53:5]*. 'தனக்கென வாழாமல் பிறருக்காகவே வாழ்ந்துவரும் பண்ணன் என்பவனுடைய சிறுகுடியைச் சார்ந்த தோட்டத்தில் உள்ள நெல்லிக்காயைத் தின்றவர் நீர்குடித்தபொழுது எழும்சுவை போன்ற பாலை உனக்கும் தருவேன்; இளமதியே என்மகனுடன் விளையாட வா' என்று தலைவி, நிலவை அழைத்தாள் *[அக.54:16]*. தலைவன், தலைவியை, யானைப்படையினையுடைய சேரனது தொல்லிமலையில் விளங்கும் அருவி நீரினையுடைய பக்க மலையின் அகன்ற இடம் அழகுறத் தெய்வமாக அமைத்த கொல்லிப் பாவையினைப் போன்ற மடப்பத்தால் சிறப்புற்றவள்', என்று புகழ்ந்தான் *[அக.62:14]* மழையினுடைய கடுகிய நீர் வரிவரியாக இழைத்த செம்மண் நிலத்தின் ஈர *[அக.62:14]*. மணலைக் கானங்கோழி கிளறியது *[அக.64:8]*. வயல்களின் கரிய நீரின் பசிய இலைகளையுடைய தழைத்த திரண்ட தண்டினையுடைய நெய்தற் பூக்களை விழாவிற்கு ஒப்பனை செய்யும் மகளிர் தங்களின் தழையுடைக்கு அணி செயச் சேர்ப்பர் *[அக.70:10]*.

கிணற்றிற்கு அருகில் உள்ள குழிகளில் உள்ள தண்ணீரினை அருந்த வேண்டி, நீர் பருகக் கலித்துச்செல்லும் கொங்கரது மணிபூண்ட ஆக்கள், வன்னிலங்கள் துணிபடச்சென்று கிளப்பிய செம்மண்ணாகிய புழுதி, அகன்ற பெரியவானின்கண் மிக்குத் தோன்றும் *[அக.79:6]*. தலைவனுடைய மலையில், அருவியின் குளிர்ந்த நீரின் இனிய ஓசை, முழவின் இசையைப் போல, முழங்கும் *[அக.82:3]*. தலைவி, தோழியிடம், 'தன்னால் அம்பு எய்யப்பெற்ற யானை சென்ற நெறியினை வினவி, நமது தினைப்புனத்தின் வாயிலின் ஒரு பக்கத்தே நின்ற தலைவனைக் கண்டோர் பலராவர்; அவருள், இரவில் அணையில் பொருந்திய நீர் சொரியும் கண்ணினொடு மெலிந்த தோளையுடையேனாக யான் ஒருத்தி மட்டுமே ஆயது ஏன்' என்று கூறி அறத்தொடு நின்றாள் *[அக.82:18]*. வானவில்லையுடைய முகில் தண்ணீரைக் கடலில் முகந்துகொண்டு, உலகத்தை வலமாக வளைத்துக் கொண்டு, இறங்கிப் பெய்யும் மிக்க மழைநீரினைத் திசையெலாம் மறையப் பொழிதலால், நிலம் அழகிய காட்சியைப் பெற்று இன்பம் எய்தியது *[அக.84:3]*. வதுவை விழாவில், புதல்வரைப் பெற்ற மகளிர் நால்வர் கூடி, நின் கணவனை விரும்பிப்பேணுக, என்று வாழ்த்தி, நீரோடு கூட்டிப் பெய்த குளிர்ந்த இதழ்களை உடைய பூக்கள், தலைவியின் மிக்க கரிய கூந்தலில் நெற்களுடன், விளங்கும் *[அக.86:15]*. ஞாயிறு, வளம் வாய்ந்த

மலையின் பயன்கெட்டொழியக் காய்தலின், அருவியில்லையான பக்கமலையிடத்தே, சுனையைத் துழாவி, நீராகிய பயனைக்காணாது, பாசியினைத்தின்ற ஆண்யானை, அயர்வினைத் தரும் பசியினையுடைய பெண்யானையுடன் ஒரு பக்கத்தே ஒடுங்கிக் கிடக்கும் *[அக.91:4]*. தோழி, தலைவனிடம், 'நாளைப்பகலில், மந்திகளும் ஏறியறியாத மரஞ்செறிந்த காட்டில், செங்காந்தள் பூக்கள் மலர்ந்துள்ள அவ்விடத்தே, தண்ணிய நீர் அருவிகள் விழும் சுனையின் ஒரு பக்கத்தில், இடி சினந்து தாக்கலின் வலியழிந்த பாம்பினது அழகியதலைமணியாகிய விளக்கிலே, இருண்ட மெல்லிய கூந்தலகத்து இன்பம் உறும் துயிலை நீ அடைவாயாக', என்றுகூறிப் பகற்குறிக்கு இடங்குறித்தாள் *[அக.92:10]*. வினைமுற்றி மீளும் தலைவன், 'சேரனுடைய கருவூரின் துறைமுன், தெளிந்த நீரினையுடைய ஆன்பொருநை என்னும் ஆற்றின், உயர்ந்த கரைக்கண் குவிந்துள்ள மணலினும் பலவாக, நாம் தலைவியை முயங்குவோம் வருவாயாக', என்று நெஞ்சிற்குக் கூறினான் *[அக.93:22]*. ஆட்டுக்குட்டிகளைச் சேரத்தொகுத்து, ஓலைப்பாயை முதுகினில் கொண்ட இடையன், கமழும் முல்லைப்பூவினைத் தோன்றிப் பூவுடன் இணைத்து, வண்டுகள் மொய்க்கத் தொகுத்த, நீர் ஒழுகுகின்ற கண்ணியைச் சூடி, இரவில் கொள்ளியின் தீயில் அகங்கை காய்ந்திட, மிக்க இருளில், குறுநரிகளை நீண்ட ஒலியால் அலைத்தோட்டுவான் *[அக.94:6]*.

யானையின் முகத்தில் மோதி வீழ்ந்த புதிய நீரையுடைய ஆலங்கட்டி, பளிங்கினைச் சொரிவதுபோல், பாறையில் வீழ்ந்து கிடக்கும் கோலம், மலைத்தலையில் முத்துக்கள் சிதறியவை போல் விளங்கும் *[அக.108:4]*. 'பாணன் என்பானது நல்ல நாட்டிற்கு அப்பாலுள்ள வழியில் போகும் புதியவர்களைக் கொன்ற ஆறலைப்போர், தாங்கள் எறிந்த படைக்கலத்தைக் கழுவிய சிவந்த நிறமுடைய அரித்தோடும் சின்னீரையுடைய, மக்கள் இயங்காத துறையாகிய, நுண்மணல் பொருந்திய கரையினைத் தாண்டித், தலைவன் சென்றுள்ளான்', என்று, தலைவி, தோழியிடம் கூறினாள் *[அக.113:19]*. உடன் போய்விட்ட தலைவியைக் குறித்துத், 'தலைவன் மணங்கமழும் பலவித மலர்களை வைத்துத் தலைவியின் கூந்தலைப் பின்னிவிட, அக்கூந்தல், வாணனது சிறுகுடி என்னும் ஊருக்கு வடக்கின்கண் உள்ள இனிய நீரினையுடைய, காட்டாற்றின் விளங்கும் அறல் போன்று, பிடர் மறையச் செறிந்து தொங்குகின்றனவோ, என்று, செவிலித்தாய் கூறினாள் *[அக.117:19]*. உப்பங்கழியிலுள்ள சுறாமீன் எறிதலாலுற்ற புண்பொருந்திய தாளையுடைய கோவேறு கழுதை, நீண்ட நீரினையுடைய கரிய கழியில் செல்லுவதற்கு அஞ்சும் *[அக.120:11]*. கோடையால் காய்ந்த சுரநெறியில், குளிக்கும் நீர் கொள்ளும் சிறுகுளத்தில், தோண்டப்பெற்ற குழியின்கண் தோன்றிய உண்ணற்காகாத கலங்கலால் கன்றினையுடைய பிடியின் தலையை முதலிற் கழுவிப், பின் எஞ்சிய சேற்றினைக் கொண்டு ஆண்யானை நிறம்வேறுபட அளையும் *[அக.121:3]*. யானையின் முதுகிலுள்ள கயிற்றுத் தழும்பையொத்த மலைமீதுள்ள சிறிய வழியில், மழை பெய்தலால் நீர் ஒழுகாநிற்கச் செல்லுதற்கரிய சிறிய இடங்களிலுள்ள படுகுழிகளைக் கொண்ட நெறியில், இருளின்கண் மிதிக்குமிடத்தைப்பார்த்து தலைவனின் தளருகின்ற அடிகளைத் தாங்கும் பொருட்டு, என் நெஞ்சு, சென்று விட்டது என்று தலைவி, தோழியிடம் கூறினாள் *[அக.128:12]*. வெட்சி மறவர், விடியற்காலையில் ஆக்களைக் கவர்ந்து கொண்டு போன அச்சந்தரும் கொடிய சுரநெறியிலே, நெடுந்தொலை கடந்து வருதலின், நடைஓய்ந்துநின்று விட்ட கன்றினது கடைக்கண்ணினின்றும் ஒழுகும் நீரைத் துடைத்த, போரில்பட்ட, கரந்தை வீரரது பெயரும், சிறப்பும் பொறித்த, மயில் தோகையினைச் சூட்டி விளங்கும் நடுகற்கள் நடப்படும் *[அக.131:9]*. கார்காலத்தில் குளத்தின் நீரைப்பருகி, அறுகம்புல்லை மேய்ம், திரிந்த கொம்பினையுடைய ஆண்மான், மணலின்கண், மலர் விரிந்த பிடவினது கொழுவிய நிழலிலே அழகிய தன் பிணையுடன் இன்பம் பொருந்தத் தங்கும்; செவ்வரக்கு அனைய நிறத்தையும், அழகினையுமுடைய தம்பலப்பூச்சிகள், பரப்பிவைத்தாற் போலப், பலவும் ஒருங்கே பரந்து, நீர் ஒழுகிய ஈரமுடைய இடத்தில் அழகுடன் விளங்கும் *[அக.139:9,15]*. தலைவி, நீரின் திரட்சியையொக்கும், குற்றமற்ற வெள்ளியினாலாய, வளைவு பொருந்திய திரண்ட வளையல்களையணிந்த முன்கையை யுடையவள் *[அக.142:16]*. குறித்த பருவத்தில் வராத தலைவனைக் குறித்துத், தலைவி, 'முல்லையின் அரும்புகள் மலர்ந்தன; என்னுடைய அழகினை இழந்த கூந்தலையும் அவர் நினையார்; அறத்திற்கும் அஞ்சுகின்றிலர்' என்று பலவாறாகப்புலம்பிச் செவ்வரிபரந்த அழகிய மையுண்ட கண்களினின்றும் நீரைப் பெருக்கி வருந்தினாள் *[அக.144:2]*.

மிகுதியான மழை சொரிந்தமையால் முல்லை நிலத்தில் உள்ள ஆழமாகிய நீரினையுடைய பள்ளங்களில், தேரைகள், நீண்ட வழியெல்லாம், சிறிய பலவாகிய வாச்சியங்களைப் போல, ஒலிக்கும் *[அக.154:2]*. பாணன் நாட்டிலுள்ள கோவலர், ஆனிரைகள் தண்ணீர் பருகுவதற்காகக், கிணறு தோண்டி அதிலிருந்து பத்தலால் தண்ணீர் பருகுவதற்காகக், கிணறு தோண்டி அதிலிருந்து பத்தலால் தண்ணீர் முகந்து, குழிகளில் நிரப்புவர்; வெம்மையால் கிணற்றில் நீர் வற்றிப்போக, குழிகளும் வறண்டுவிட, அவற்றில் தண்ணீர் அருந்த வந்த யானைகள் தண்ணீரில்லாததால் வருத்தத்தோடு அவற்றை மிதித்துச் சென்றன *[அக.155:10]*. தலைவனுடைய தேர்க்குதிரைகள் மெல்லத் தாவிச் சென்று செழுமைவாய்ந்த நீரினையுடைய கழியினைக் கடக்கும் பொழுது, அத்தேர் உருளையின் கூரிய முனையால் அறுக்கப்பெற்ற நெய்தல், பாம்பின் மேலே தூக்கிய தலையைப் போல வாடி மேலெழும் *[அக.160:12]*. வெம்மைமிக்க பாலை நிலத்தில் புலி கொன்று தின்று எஞ்சிய யானையின்

ஊனில், ஆறலைப்போர் தம் கோலில் கோத்துக்கொண்டு சென்றது போக எஞ்சியதை, உப்புவாணிகர் தீக்கடைக் கோலாலாக்கிய தீயில் வதக்கிச், சுனையில் கொண்ட இனிய நீராலான சோற்றின் உலையில் கூட்டி ஆக்குவர் *[அக.169:7]*. தலைவனைப் பிரிந்த தலைவி, மாலைப் பொழுதில் பசலை பரவிய மேனியோடு, நீளநினைந்து, நெற்றியில் விரலை ஊன்றித் தோள் மெலிந்து, கயல்மீன் உமிழும் நீர்போலக் கண்களில் கண்ணீர் ஒழுகத் துன்புற்றாள் *[அக.169:12]*. முல்லைக்கொடி தளிர்க்கும்படியாகக் கீழ்த்திசையில், வானத்தெழுந்த முகில் நீர் சொரிந்து முழங்குந்தோறும், நம்மைவெறுத்துச், செயலற்று ஒடுங்கித், துன்பினை எய்திய, பசலை பாய்ந்த மேனியளாய், என்னைப்பிரிந்த தலைவி வருந்துவாள்', என்று தலைவன் வருந்தினான் *[அக.174:6]*.

வேம்பின் அரும்பினையொத்த நீண்ட கண்ணினையுடைய நீர் நண்டு, நாரைக்கு அஞ்சி, அயலிலுள்ள சேற்றுப்பிழம்பில், தேமல் போல வரியுண்டாக ஓடிச் சென்று, விரைந்து, தன் ஈரம் மிக்க மண்வளையுள் பதுங்கும் *[அக.176:8]*. பன்றி சுனையின் தண்ணீரைக்குடித்துச் சேம்பின் கிழங்கினைத் தின்று, யாற்றினை அடுத்திருப்பது போன்ற, நீர் ஊறும் இடத்திலுள்ள, சிறுதூறாகிய பசிய புதரிலுள்ள கிளைகளில் வெண்ணாரை இருந்தாலொத்த, வெள்ளிய கூதளஞ்செடியின் கொத்திலுள்ள மலரினைப் பொருந்தி, அதன்பூம்பொடி மேலே உதிர்தலால், பொன் உரைத்து மாற்று அறியும் கட்டளைக்கல்லினையொப்ப, அழகு பெறத் தோன்றித் தினையின் கதிரினை மேய்ந்து, இனிது கண்ணுறங்கும் *[அக.178:7]*. பூக்கள் விரிந்த அகன்ற துறையினையுடைய காவிரியாகிய பெரிய ஆற்றின், மிக்கவிசையுடன் கடுகிவரும் நீர், நுண்மணலைக் கொண்டு மேடாக்கிய வெள்ளிய மணல் குவிலையும், புது வருவாயினையுமுடைய ஊர்களையுமுடையது, சோழநாடு *[அக.181:11]*. கார்கால முகில், பெரிய கடலிலே சென்று மிகுதியான நீரினையுண்டு, மேற்கே எழுந்து, சூலுற்ற பெண்யானைக் கூட்டம் போல, ஒலியுடன், இடந்தோறும் தோன்றி, மழையைப் பொழியும் *[அக.183:6]*. மீன்முதிர் இலஞ்சியில் தழைத்த தாமரையின், நீர் மீது உயர்ந்த நெடிய காம்பினையுடைய அகன்ற இலை, காற்றடிக்குந்தோறும் களிற்றின் செவியைப் போல அசையும் *[அக.186:4]*. தலைமகளின் குறிப்பறிந்த தோழி, தலைவனிடம், 'நிலாவைப் போல விளங்கும் மணல்மிக்க தெருவிலுள்ள புல்லால் வேயப்பட்ட குடிசைகளையுடைய புலால்நாறும் சேரியாதிய, எம்ஊர், ஓர் ஊர் என்று உணரலாகாத சிறுமையின்தாய், நீரால் சூழப்பெற்றுப் பொலிவற்ற உறையுளையுடையதாயினும், இன்பம்தருவதில், ஒருநாள் தங்கியிருந்தார்க்கும் மறுநாள் தம் ஊரையே மறந்திடச்செய்யும் பண்பினையுடைமையால், எமது ஊருக்கு வந்து செல்வாயாக' என்று கூறினாள் *[அக.200:3]*.

களவுத்தலைவியைக் குறித்து, அவ்வூர்ப் பெண்டிர் கூறும் அலர், குளிர்ந்த துறைமுகத்தில் நீர் மோதி ஒலிப்பதைப் போன்றிருந்தது *[அக.211:16]*. அல்ல குறிப்பட்டு நீங்குந்தலைவன். தன் நெஞ்சிற்குத் தலைவிமேல் வேட்கையுற்றுக் களிற்றியானைக்கூட்டம் படிந்து கலக்கிய நீரைப்போல, நீ கலக்கமுற்ற போது, இவள் பெறுதற்கு அரியள் என்று எண்ணாமல் நாள்தோறும் அரிய சுரநெறியைக் கடந்து நீ என்னைத் துன்பத்தின்கண் செலுத்தினை', என்று கூறினான் *[அக.212:9]*. 'வேங்கட மலைக்கு அப்பாலுள்ள, பகைவரின் ஆனிரையைக் கவர்ந்து வந்தவர்க்குக், கள்ளையும் ஊன்சோற்றினையும் அளிக்கும் வடுகரது, நிழலின் அழகையிழந்த, நீர் இல்லாத நீண்ட இடத்தினையுடைய, தீயின் வெப்பம் பொருந்திய, அரிய காடுகள், கொடியன என்று கருதாமல் தலைவர் பிரிந்து போதலைக் கருதியுள்ளார்', என்று தோழி, தலைவியிடம் கூறினாள் *[அக.213:9]*. சோழரது விளங்கும் நீரினையுடைய காவிரியினது வடிந்த நீர் வரிவரியாகச் செய்திட்ட கருமணல் போன்ற, வளைந்த கூந்தலையுடையவள், தலைவி *[அக.213:22]*. 'கூரிய பற்களையுடைய செந்நாய்க்கு அஞ்சிய கலைமான், விளாங்கனியின் புல்லிய ஓட்டில் தோன்றிய துளையில், மேல்காற்று; நுழைந்து இசைத்தலின், அவ்விசையைக் கோவலரது குழலோசை என்று கருதி அங்கே செல்லும் நீர் இல்லாத நீண்ட நெறியில், தனது மடப்பத்தையுடைய அழகுகெடத் தன் மகள் மெலிந்து நடப்பளோ, என்றே, நோகின்றேன்' என்று மகட்போக்கியதாய் கூறினாள் *[அக.219:16]*. முருக்க மரத்தின் செந்நிறப் பூக்களால் சூழப்பெற்ற பெரிய கல், காட்டிலே அழலால் சூழப்பெற்ற யானையைப் போலத் தோன்றும், நிழலற்ற ஓமை மரத்தினையுடைய, நீர் இல்லாத நீண்ட சுரத்தைத் தலைவர் கடந்து சென்றுள்ளாராயினும், நினது கூந்தலிற் துயிலும் துயிலை மறந்து நீட்டித்திரார், என்று பிரிவிடை வருந்திய தலைவிக்குத் தோழி கூறினாள் *[அக.223:8]*. மூங்கிலில் வண்டு துளைத்த குறுகிய துளைவழியே மேல்காற்றுப் புகுந்து வருதலால் எழும் ஒலி, நீர்பருகச் செல்லும் ஆனிரைக்குப் பின்னேவரும் நீண்ட கோலினையுடைய ஆயர்தம் குழலின் இசையைப் போல, ஒலிக்கும் *[அக.225:7]*.

'மத்தி என்பானது கிழார் என்னும் ஊரின் துறையின் முற்றத்தே, மருதமரத்தையும், வஞ்சி மரத்தையும் சாய்த்து நாட்காலையில் வந்த மிக்க நீரான் ஆய வெள்ளத்தையுடைய காவிரியில், பரத்தையோடு தலைவன் புனலாடியதாலெழுந்த அலர், பாணனும், கட்டியும் ஒன்று கூடித் தித்தன் வெளியன் என்பானுடன் போர்புரிய வந்து, அவனுடைய உறையூரின் நாளோலக்கத்தின்கண் எழுந்த கிணைப்பறையின் ஒலியைக்கேட்ட அளவில் அஞ்சி அவர்கள் ஓடியபொழுது உண்டான ஆரவாரத்தினும் பெரிதாயிருந்தது' *[அக.226:10]*. 'நெற்றி பசந்துள்ளது; தோள்கள் மெலிந்துவிட்டன; தேமல் பரந்த அல்குலின் வரிகளும் வாடிப்போயின; இனி இவள்

எந்நிலையையடைவாளோ என்று பலபடியாக நீர்நிறைந்த கண்ணோடு நீடுநினைந்து வருந்தாதே', என்று பிரிவிடைத் தலைவி, தோழியிடம் கூறினாள் *[அக.227:4].* நீர் இல்லையாக வறந்திட்ட நீண்ட நெறியில் கன்றினையுடைய இளைய யானையானது, கன்று உண்ண வேண்டிக் தான் தழை உணவை உண்ணாததால், வாடிய உடம்பின் உறுப்புக்கள் பலவற்றுடன், பாழ்பட்ட ஊரிலுள்ள கூரை சிதைந்த குடிசைகள் போலத் தோன்றும் *[அக.229:3].* தலைவனைப் பிரிந்த தலைவி வருத்தமிக்கு உதிர்ந்த நுண்ணிதாக வரும் சிறிதளவாய கண்ணீர் பலவாய இதழ்களையுடைய தாமரை மலர் போன்ற குளிர்ந்த கண்ணில் உள்ள கருமணியை மறைக்கும் *[அக.229:11].* தலைவனுடைய தேரில் பூட்டியுள்ள விரைந்து செல்லும் குதிரைகள், முகில் மழையைப் பொழிந்ததாலாய, வெள்ளமாகிய நீர் நிறைந்த, நுண்ணிய மணல் பரவிய, குளிர்ந்த குளத்திடத்தே, வரிசையாகப் பறத்தலையுடைய அன்னப்பறவைகளை ஒத்தன *[அக.234:1].* நெல்லறுப்போர், முள்ளி நிறைந்த தெளிந்த நீரினையுடைய, மடுவிற்கவர்ந்த, பெரிய மீனின் வளவிய துண்டினைக், கௌவி உண்பர் *[அக.236:2].* பிரிவின்கண் வேறுபட்ட தலைவியிடம், தோழி, 'நினது மேனியின் அழகுகெடும்படி வருந்தாதே; உறையூரையே அடைவதாயிருந்தாலும், நினது அழகு பொருந்திய கூரிய வெள்ளிய எயிற்றின்கண் ஊறிய நீரினைப் பொருளீட்டும் வினைகாரணமாக உண்ணாது தவிர்ந்திருப்பாரல்லர்; (ஆகவே விரைவில் வருவர்)' என்று கூறினாள் *[அக.237:7].* வாடைக்காற்று, அவரையின் மலர் உதிரவும், பவளம் போல இண்டைபூக்கவும், பகன்றை நுண்ணிய மழைத்துளியால் ஊரின் அருகே அழகுபெற மலரவும், மழையாகிய நீர், புதுவதாக வருதல் ஒழியவும், கல் என்ற ஒலியுடன் வீசும் *[அக.243:1].* தலைவன், ஆண்சங்கு, ஆரல்மீன்கரி (சாட்சி) கூறுவோனாக், ஆழ்ந்த நீரையுடைய பொய்கையில், பெண்சங்கினோடு மணம் புணரும் நீர்நிறைந்த வயல்களையுடைய புதுவருவாய் மிக்க ஊரினையுடையவன் *[அக.246:3,4].*

உலகுபுடை பெயர்ந்ததாலொத்த அச்சம் தோன்றும் நாவாய், பெரிய கடலின் நீரைப்பிளந்து செல்ல, இரவும், பகலும் ஒரிடத்தும் தங்குதலின்றி விரைந்து செல்லும் காற்று அசைத்துச் செலுத்த, நாவாய் ஓட்டுவோன், அகன்ற துறைக்கண் மாடத்தின் மீதுள்ள விளக்கினால் இடம் அறிந்து செலுத்தத், தலைவன் பிரிந்து சென்றான் *[அக.255:2].* சுரநெறியில் யாமரத்தின் நாரினையுடைய அடிமரத்தில் நீர்வரும்படி உரித்துக் களிற்றுயானை சுவைத்துப் போட்ட சக்கை அவ்வழியே செல்லும் உப்புவாணிகர்க்குத் தீமூட்டுந் துரும்பு ஆகும் *[அக.257:15].* அல்லகுறிப்பட்டுப் பதிப்பெயர்ந்த தலைமகன், தலைவி மீது வேட்கையுற்றுத் துன்பத்தினை உறுவித்த நெஞ்சிற்குக் கூறுவானாய், முகில் தவழும், அருவி நீரினையுடைய, அகன்ற இடத்தினையுடைய, கடிய காற்றுச் சுழலும் பெரிய குன்றின்கண்ணே மயக்கத்தினைத் தரும் இருளுடைய குகையில் ஒளியின்றி மறையும் மணிகள் போல, நீ ஒளியிழந்து ஒழிவாயாக' என்று கூறினான் *[அக.258:5].* தலைவனுடன், தலைவி உடன்போக்குப் போவதற்கு, நிலமானது நீர் ஒழிந்ததாலாகிய வெப்பம்நீங்க, மழைநீர் பொருந்துதலின், மரங்கள் கிளைகளிலுள்ள முதிர் இலைகளை உதிர்த்துக், குறிய தளிர்களை ஈனும்படியான, நல்ல செவ்விதான பருவம் இது', என்று தோழி கூறினாள் *[அக.259:3,4].* முகில் இல்லாத வானத்தில் மீன்கள் விளங்கினாற்போலத் தழைநிறைந்த முசுண்டையின் பூக்கள், வெள்ளியவாக மலரவும், வெண்காந்தளின் சிறந்த பூக்களை மிகுதியாகச் சூடிக்கொண்ட ஆயர், பகற்பொழுதில் மழையால் வருந்திய ஆத்திரளோடு, நீர் விளங்கும் மாலையராய் ஊருக்குள் மீண்டும் வரவும், சேணிடைப் பரந்த முகில்கள் மழைபொழிதலால் விரைந்த நீர் தெருக்கள்தோறும் ஓடும்படியாகக் கூதிர்க்காலம் விளங்கியது *[அக.264:6,8].* பொருள்வயின் பிரிந்த தலைவனைக் குறித்துத், தலைவி, 'நம்மைவிடச் சிறந்ததாகத் தலைவன் கருதிய அப்பொருள், போரில் சிறந்த நந்தர் என்பாரது கங்கையின் நீர் அடியில் மறைவுற்ற செல்வமோ' என்று தோழியிடம் கூறினாள் *[அக.265:6].* பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம், தலைவி, 'நேற்று நீ பரத்தையரோடு நீரின்கண் பெயர்ந்து ஆடியதின் அலர், நீடூரின் தலைவனான எவ்வி என்பான், தன்பகைவரை அரிமணவாயில் உறத்தூரிடத்தே அழித்தபொழுது, அவனுடைய படைமறவர் கள்ளுடன் பெருஞ்சோறுண்ணுங்கால் எழுந்த ஆரவாரத்திலும், பெரிதாயிருந்தது', என்று கூறினாள் *[அக.266:5,6].* 'பணி அலைத்தலுக்கு வெறானாய்த் தனியனாக, அருவிநீர் ஒழுகும் பக்கத்தினையுடைய அரிய இடத்தே, நிறைந்த காட்டு மல்லிகை மலருடன்,, கூதள மலரையும் சேர தொடுத்த கண்ணியின் மணத்தை உடையனாய், நம் குடிசைக்கு இரவுக்குறிக்கண் தலைவன் வருவதை, முருகனே, என எண்ணி, நம் அன்னை, புகழுரை கூறிச் செந்தினையை நீரோடு தூவிப் பரவினாள்' என்று தோழி, தலைமகட்குக் கூறினாள் *[அக.272:7,14].* பெரியசாடியில், பனங்குடையால் முகந்த நீரினை நிறைத்து, எடுத்துவந்து சொரிந்து, பந்தரில் படர்ந்துள்ள வயலைக்கொடியைத் தலைவி வளர்ப்பாள் *[அக.275:2].*

தலைவன் சிறைப்புறமாகத், தலைவிக்குத், தோழி, 'மணியை ஒக்கும் நினது மேனியின் அழகுகெடும்படியான துயரத்தினைச் செய்த தலைவனுடைய நீண்ட மலையிலிருந்து வருகின்ற நீரின்கண் நம் கண்கள் சிவக்கும்படியாக மூழ்கிப் புனலாடுவோமா', என்று கூறினாள் *[அக.278:15].* மலையில் வேட்டைக்குச் சென்ற கானவன், தன்னால் கொல்லப்பட்ட யானையின் வெள்ளிய தொம்பினால், நீர் விளங்கும் மலையில், சிறந்த பொன்னை அகழ்ந்து எடுப்பான் *[அக.282:4].* முல்லைநிலத்து ஊர்களில், நெல்லியின் காயைப்போன்ற, குறியவிழி பொருந்திய கண்களையுடைய சிறிய முயல்கள்,

வரகின் குருத்தினைத்தின்று, காய்களைக் கொண்ட கொடிகளுள் புகுந்து உறங்கி, எழுந்து, தம்துணையோடு சென்று வீட்டின் முற்றத்தில் சிறிய சால்களிலுள்ள நீரைக்கண்டு பருகும் [அக.284:6]. மழைபெய்தபிறகு, புகையைப் போன்ற பனித்துளிகள் பூக்களின் உள்ளே நிறைந்தும், காதலரைப் பிரிந்துள்ள மகளிரது நீர் ஒழுகும் கண்களைப்போலக், காக்கணம் பூ மலர்ந்தும், பஞ்சு போன்ற பூவினையுடைய ஈங்கையின், நெய்யில் தோய்த்தெடுத்தாற் போன்ற நீரால் நனைந்த அழகிய தளிர்கள், ஈரடுடையனவாய் அசைந்தும், எங்கும் அவரைப் பூக்கள் நிறைந்தும், வயலில் காய்த்த நெல், கண்ணிற்கு இனிமையாகத் தலைவளைந்தும் தோன்ற முன்பனிக்காலம் திகழ்ந்தது [அக.294:5,7]. நிலங்கள் நீரற்றுச் சுனைகள் வறளவும், மலையிலே மரக்கிளைகள் எரியவும், ஞாயிற்றின் கதிர் தெறுதலால் வெம்மைமிக்கு மூங்கில்கள் தெறிக்கும் அகன்ற இடத்தில், வேங்கைப்புலியை வென்ற மலை போன்ற யானை, மதம் வாடிக் கொம்பிலே கையை அணைத்துக்கொண்டு, மரங்களையுடைய ஒரு பக்கத்தில் தன் பிடியோடு தங்கிக்கிடக்கும் கற்கள் பொருந்திய, வழிகளையுடைய காட்டினைக்கடந்து கடல் நீரால் விளைந்த உப்புவாணிகரது கூட்டம் செல்லும் [அக.295:1,9]. தலைவன் பரத்தையோடு வையையின்கண் நீர்ப்பெருக்கில் விளையாடியதால் உண்டாகிய அலர், பகைவரை வென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் மதுரையின்கண் வெற்றிக்களிப்பால் ஆடிய ஆட்டத்தில் எழுந்த ஆரவாரத்தைப்போல, எழுந்தது' [அக.296:5]. இடைச்சுரத்தில் தலைமகன், தன் நெஞ்சிற்குக் கூறுவானாய், 'நெஞ்சே, பொருள் ஈட்டும் வினைக்கண் செல்லுதலை அவளுக்கு உரைத்தபொழுது, இரவுபுலருங்காலத்து மதியினைப் போலத், தனிமைத் துன்பத்தோடு புதிய அழகினை இழந்த முகத்தினைக் கவிழ்த்துக், கால்விரலால் நிலத்தைக்கீறிக் கொண்டு, நீருடன் கூடிய ஈரம் வாய்ந்த இதழினையுடைய குளிர்ந்த கண் சொரிகின்ற தெளிந்த கண்ணீர் மார்பின் கண் துளித்துவிழக், கால் ஓரிடத்தில் நில்லாமல், கூந்தலில் மறைந்து, நடுக்கமுற்ற சொற்களால் நினது செலவு வெற்றியுறுக, என்று கூறிப் பெருமூச்சுவிட்டுத் துன்புற்ற நிலையை, மறந்து தங்குதல் இயலாது', என்று கூறினாள் [அக.299:14].

கூத்தர், நீரில் வாழுகின்ற முதலை, கொட்டாவி விட்டாற்போன்று, பாயால் வேயப்பெற்ற, அறுத்தமைத்த வாயையுடைய சகடத்தின்கண் ஏறி, ஒவ்வொரு ஊராகச்செல்வர் [அக.310:6]. கூத்தர், கார்காலத்து முகில் முழங்கும்போது நீரின் மேல் ஒலிக்கின்ற தேரைகளின் ஒலியைப்போலத், தாளம் அமைத்துக்கொண்டு சிலவாகிய அரித்தெழுகின்ற ஓசையையுடைய சிறிய வேறுபல இசைக்கருவிகளோடு பல ஊர்களுக்குஞ்சென்று கூத்தாடுவர் [அக.301:18]. தலைவனைப் பிரிந்த தலைவி, நெஞ்சிற்குக் கூறுவாளாய், 'நெஞ்சே, வற்றியமரங்களிலே இருக்கின்ற சிள்வீடு என்னும் வண்டுகள், உப்புவணிகருடைய எருதுகளின் கூட்டத்தே மணிகள் ஒலிப்பது போல, ஒலிக்கின்ற பாலைநிலத்தைக்கடந்து, அவர் சென்ற வழியின்மேல், நீர் வற்றும்போது அதிலுள்ள மீன் நீருள்ள இடத்திற்கு மீண்டும் செல்வது போலச், செல்லத் துணிந்துள்ளேன்; என்று கூறினாள் [அக.303:19]. கரிய முகில் நீர் நிறைந்த பனைநுங்கின் கண்கள் சிதறிவிழுந்ததைப் போலத், தெய்வம் நடுக்கஞ்செய்தல் போன்ற குளிர்ச்சியையுடைய பனிக்கட்டிகளை, எங்கும் சிதறியது [அக.304:2]. தலைவனுடைய ஊர், ஈங்கையின் பஞ்சு போன்ற பூவும், மாவின் இளந்தளிரும் தன்னைத்தடவுதலின், மீனையுண்ட நாரை, துயிலும் நீர் சூழ்ந்த வளமான வயலில் உள்ள கரும்பிடத்தே ஊர்ந்து சென்று, யாமை இளவெயிற்காயும், நெற்களை உடைய தெருக்கள் நிறைந்தது [அக:306:5]. கார்காலத்தில் முகில், நீலமணியையொத்த நீர் பொதிந்த சூலினைக்கொண்டு, பெய்த நீரினால் நிலம் தட்பமுறும்; காடுதழைக்கும்: உழவரின் குரல் ஒலிக்கும்; ஆண்மான், பெண்மானைத் தழுவிக்கொண்டு காட்டில் பசிய பயிரில் துள்ளித்திரியும் [அக.314:1]. துறையின்கண், மீன்கள் இயங்கும் நீர் நிறைந்த பொய்கைக் கண், ஆம்பல் மலரைமேய்ந்த முதிய எருமைக்கடா, சேற்றிலே இரவெல்லாம் துயின்று விடிந்தவுடன், வரால்மீன்கள் மிதிபட்டு அழியும்படி வெளியேறி, வெள்ளிய பூக்களையுடைய பகன்றைக் கொடியினைச் சூடிக்கொண்டு, போரில் வென்ற வயவர் வருமாறு, ஊரில் புகும், வளமான ஊரினையுடையவன், தலைவன் [அக.316:1]. தலைவனுடைய தேருருள், நிலத்திடத்தே பிளந்து சென்ற சுவட்டில், ஒன்றன்பின் ஒன்றாக வரிசையாகச் செல்லும் பாம்புகள் போல, விரைந்து நீர்முடுகிச்செல்லும் [அக.324:13].

தலைவன் கடந்த பாலைநிலம், ஞாயிற்றின் வெம்மையின் ஆவியாகிய அலைகளை (பேய்த்தேர்) நீர் என்று விரும்பி விலங்குகள் ஓடி அலையும் பரப்பையும், செங்குத்தாய மலையினின்றும் கொழித்துவரும் அருவிநீர் போலப் பாம்பினது அழகிய வரிகளையுடைய உரிக்கப்பெற்ற தோல்கள் தொங்கும் பாறை இடங்களையும் உடையதாகும் [அக.327:9,12]. 'தலைவியினுடைய சிவந்த வாயிலுள்ள கூரிய பற்களிடத்தே ஊறும் அமிழ்தம், கமுகின் முற்றாத இளங்காயின் நீரைக்காட்டிலும் இனிமையைத் தரும்', என்று, தலைவன், தன் நெஞ்சிற்குக் கூறினான் [அக.335:24]. 'பாண்டியனுடைய தோண்டப்படாத அருவிநீர் வீழும், பொய்கையினையுடைய, மலையின் குகையில் மறைந்த வரையரமகளிர் போல, அரியவள்' என்று, தலைவியைக் குறித்துத், தலைவன் கூறினான் [அக.342:11]. உழவர், தங்களின் வயல்களில் தண்ணீரைத் தேக்கும்பொருட்டுக், காஞ்சி மரத்தின் துண்டுகளை நட்டுக், கரும்பின் தண்டுகளைக் குறுக்கே வைத்துக்கட்டி, வருந்திச் செய்த வலிய அணையின் மேலே

தேங்கி வடியும் கடிய நீரில், ஏறிவரும் கயல் மீனைச், கொக்கு எதிர்பார்த்திருக்கும் வளமான ஊருக்கு உரியவனாவான், தலைவன் *[அக.346:10]*. பெரிய நீரையுடைய கடற்கரையை உடையவனே, இவளைக்குறித்து, இன்றிரவு, எம்மூரில் தங்கிச் செல்வாயாகா' எனத், தோழி, தலைவனுக்குக் கூறினாள் *[அக.350:9]*.

கொடிய வெயில் முறுகிய வேனிற்காலத்து, வெவ்விய காட்டில், அழகிய கலைமான் பெண்மானோடு நீர் வேட்ட துயரால் தழைஉண்டலைத் துறந்து, தண்ணீர் அற்ற குளத்தினை நோக்கிச் சென்று ஆங்கு உண்ணுவதற்கு நீர் இன்மையின் மெலிந்து தளர, மரங்கள் நிழல் அற்றனவாயுள்ள நெறியினையுடையது பாலை நிலம் *[அக.353:13,14]*. பிரிவிடை வருந்திய தலைவியிடம், தோழி, 'மிக்க மழை பெய்தமையால் பெருகிய இனிய நீரினையுடைய பொய்கையின்கண் மலர்ந்துள்ள நீலப்பூ காற்றில் அசைவதைப்போன்ற நினது அழகிய இதழ் பொருந்திய குளிர்ந்த கண்களின் அழகை நினைந்து விரைவில் வருவர்', என்று கூறினாள் *[அக.357:13]*. சிறைப்புறமாக உள்ள தலைவன், கேட்குமாறு, தலைவியிடம், தோழி, 'தோழியே, அழகிய பீலியையுடைய மயில் ஆடுவதைப்போலக், குவளைமலர் மாலையையணிந்த கூந்தல் பரக்கும்படியாக ஆழ்ந்த நீரினையுடைய நீண்ட சுனையில் நினது தோழியருடன் கூடிப் புனலாடாமல் தனிமைகொண்டு தலைவனை நினைந்து வருந்தியதால் அழகிழந்த நினது மேனியைக் கண்டு அன்னை காரணம் கேட்டால் என்ன சொல்வேன்', என்று கூறி, வரைவு கடாயினாள் *[அக.358:7]*. நீரினையுடைய கடற்கரையையுடைய தலைவனே, நீ இரவில் குறியிடத்துவருக எனக் கூறினாள் தோழி *[அக.360:15]*. பாம்புகளையுடைய மலையின் விடர்களினின்று வரும் குளிர்ந்த நீர் ஒடுங்கிய துறைகளின்வழியாகத் தேனுடன் கூடி ஒழுகி, யாற்றினை நிறைக்கும் *[அக.362:1]*. கள் உண்டு வந்த உழவர் மருதமர நிழலில் நீர் சூழ்ந்த அகன்ற நெற்களத்தில் நெல்லினைத் தூற்றியதால் பறந்துபோன துரும்புகள் உப்பளப் பாத்திகளில் விழுந்து எங்கும் மறைக்கப் பெரிய நீரையுடைய கடற்றுறையில் வாழும் நுளையர் சினந்து உழவரோடு கைகலந்து போர் செய்தலைக்கண்டு உழவரில் முதியோர் அப்போரினைவிலக்கிக் கள்ளின் தெளிவை நுளையர்க்கு அளித்தனர் *[அக.366:2,6]*. மறவர், தன் பெண்மானைக் கொன்றுவிட்டதால், தன் பெண்மானை நினைந்து வருந்திக் குட்டிகள் தன்பக்கலில் விளையாட, ஆண்மான் மேய்தலைத் துறந்து சிறிய சுழியில் உள்ள நீரையும் பருகாது அம்பு தைக்கப்பெற்ற மக்களைப் போல வருந்திக் கண்ணயர்ந்து கிடக்கும் *[அக.371:7]*. தலைவியினுடைய கண்களைத் தெளிந்த நீரினையுடைய அழகிய சுனையிலுள்ள ஒளிபொருந்திய மலர்கள் என்று கருதி பூக்களை ஆராயும் வண்டுகள் விரும்பும் *[அக.371:11]*.

தலைவன், இடைச்சுரத்தில் நெஞ்சுக்குக் கூறுவானாய், 'நெஞ்சே, சேரனால் அழிக்கப்பெற்ற பகைவரது மதில்போலப், பாழ்பட்ட மேனியளாகி, ஆழமான நீரில் பூத்துள்ள இரண்டு குவளை மலரைப்போன்ற தலைவியின் கண்கள் கண்ணீர் சிந்தப் பெருமூச்செறிந்து, கொடிய சுரத்தினைக் கடந்த என்னைக்காட்டிலும், அவள், வருந்துவளோ', என்று கூறினான் *[அக.381:19]*. மகட்போக்கியதாய், வயலைக்கொடியை நோக்கி, 'வயலையே. என்மகள், அவளது தழையுடைக்குத் தளிர்தரல் வேண்டி, வளையலும், சிலம்பும் ஒலிக்கும்படியாக மூங்கிற் குழாயின் வழியாக வந்துவிழும் நீரினை எடுத்து வந்து ஊற்றித் தாயைப்போல உன்முகம் நோக்கிப் பெய்வாளன்றோ? இனிநின்னை, நிறைய நீரினை உண்பித்துப் புரப்பவர் யார்; என்று கூறி வருந்தினாள் *[அக.383:9,13]*. புல்லி என்பானது நாட்டில் வாழும் கோவலர், வெள்ளிய வரகரிசியைக் சுனையின் நீரோடு முகந்த மண்பானையை, அடுப்பில் ஏற்றி அட்ட, கொன்றையின் பூந்தாது போன்ற, சோற்றை, நல்ல பசும்பாலுடன் கூட்டிவிருந்தினரின் மிக்கபசியைப்போக்குவர் *[அக.393:13]*. தலைவன் பிரிவுழித், தோழியிடம், தலைவி, 'மழைக் காலத்தில் மலர்ந்த குவளைப்பூப்போன்று, நீரால் நிறைந்த என் கண்களினின்று கண்ணீரொழுகும் துன்பம் தீரத் தலைவர் இப்பொழுதுவரின் நன்றாகும்; ஆனால் வந்திலரே', என வருந்திக் கூறினாள் *[அக.395:3]*. ஞாயிற்றின் வெம்மையால், நீர் அற்ற இடத்திலுள்ள மரங்களின் நிழலும் அற்ற நெறியில், கலைமான், தண்ணீரென்று பேய்த்தேரை நம்பி ஓடிக்களைத்துக் கலங்கிய உள்ளத்துடன் தன் பெண்மானை அழைக்கும் குரலை, ஆளின்குரலென்று, நெறியிற்செல்வோர் ஆராயும்படியான மலைக்காட்டினைக் கடந்து தலைவன் சென்றான் *[அக.395:6]*. காதற்பரத்தை, தலைவனிடம், 'ஆதிமந்தி அழுதுபுலம்ப, அவளின் காதலனாகிய ஆட்டனத்தியின் ஆடும் அழகினை விரும்பி நீர்ப்பெருக்கினையுடைய காவிரியாறு அவனைக்கொண்டு மறைத்தாற் போல, நின் மனையாள் நின்னைப்பற்றிக் கொள்வாளென்று அஞ்சுகின்றேன்; ஆகவே நீ செல்லாதே' என்றாள் *[அக.396:14]*. தலைவன், தலைவியை வரைந்தெய்திய பிறகு, தலைவியிடம், தோழி, 'இருண்ட நீரினையுடைய குறுகிய கழியைக்கடந்து தேரில்வந்த நம் தலைவர் வரைந்து கொண்ட அன்று, கழியில் இலைகளோடு அசையும் ஆழமான நீரையுடைய கடல் தந்த நெய்தற்பூவினைப் பிற பூக்களுடன் சூடிவருதலைக் கண்டு (மணமகனாய் வருதலைக் கண்டு) முன்பு அலர் தூற்றிய நம் ஊர், மிகவும் அடங்கிப் புதிய தன்மையின உடையதாயிற்று, என்று கூறினாள் *[அக.400:18,21]*.

அலைகள் வீசும் கண்ணுக்கு இனிதாகிய நீர்ப்பரப்பையுடைய கடற்கரையையுடையவன் பிரிந்தானாகக் கண் துயிலா. அதுவோ காம நோய்? என்றாள் தலைவி *[குறு.5:3]*. 'நீ துயரத்தினால் நீர் சொரியும் கண்ணையுடையையாகி, இங்கே தனியாகத் தங்கத் தலைவர் பிரியார்', எனத், தோழி, தலைவியிடம் கூறினாள் *[குறு.22:1]*. 'தலைவர் என்னை மணந்ததைக் கூறச், சான்றாவார், அவரைத் தவிர வேறு

யாருமிலர்; ஓடுகின்ற நீர்ல் உண்ணுவதற்காக ஆரல் மீனின்வரவைப் பார்த்துக் கொண்டிருந்த நாரையும் இருந்தது', என்று தலைவி, தோழியிடம் கூறினாள் *[குறு.25:4]*. பெய்தலை உடைய மழையின் நீரை ஏற்றுக்கொண்ட (தாங்கமாட்டாத) சுடப்படாத பசு மண்ணாலாகிய பாண்டத்தைப்போலத், தலைவியைக் கூட வேண்டுமென்ற தலைவனின் வேட்கை வெள்ளமும் தாங்கமுடியாததாயிற்று *[குறு.29:2]*. 'பொறுத்துக் கொள்ளும் வன்கூ!மயுடையார்க்குத், தலைவனின் பிரிவு நன்றாகும்; மைதீட்டப்பெற்ற கண்ணினின்று பெருகும் நீரையுடைய நமக்கு, அப்பிரிவு நன்றாகாது; என்று, தலைவி, தோழியிடம் கூறினாள் *[குறு.38:5]*. தலைவனின் உள்ளமும், தலைவியின் உள்ளமும் செம்மண் நிலத்தில் பெய்த மழைநீர் அம்மண்ணோடு கலந்து அதன் தன்மையையடைதல் போல, ஒன்றுபட்டுக் கலந்தன *[குறு.40:4]*. நீல மணியினது நிறத்தை யொத்த கரிய நீரையுடைய, கடற்கரையுடையவனே!, இம்மை மாறி மறுமை வரினும், நீயாகியர், என் கணவன்; யானாகுக, நின் நெஞ்சில் பொருந்தியவள்; என்றாள், தலைவி. *[குறு.49:2]*.

யானைகள் மிதித்தமையால் உண்டாகிய பள்ளத்தில், நீர் தங்கியது *[குறு.56:1]*. 'வேட்டையை மேற்கொண்ட செந்நாய் தோண்டியுண்டு எஞ்சிய, காட்டு மல்லிகைப்பூ மூடிய, அழுகல் நாற்றத்தையுடைய சிலவாகிய நீரை உடன்போக்கின்கண், தலைவியால் உண்ண முடியுமோ', எனத், தலைவன் இரங்கிக் கூறினான் *[குறு.56:2]*. காப்புமிகுதிக்கண் ஆற்றாளாய தலைவி, 'பூவானது இடைப்பட்டாலும், ஆண்டுக்கணக்காய்ப் பிரிந்ததைப்போன்ற உணர்ச்சியை உடைய, நீரின்கண் உறைகின்ற, மகன்றிற் பறவைகளின் புணர்ச்சியைப் போலத், தலைவனைப் பிரியாத காமமோடு, அவரோடு ஒருங்கே என் உயிர்போவதை விரும்புகிறேன்' என்று, தலைவி, தோழியிடம் கூறினாள் *[குறு.57:2]*. ஒன்றோடொன்று பிணங்குதலையுடைய பிரப்பங்கொடியின் விளைந்த பழத்தை, ஆழமாகிய நீரையுடைய குளத்திலுள்ள கெண்டைமீன் கவ்வுதற்கிடமான தண்ணிய துறைக்குரியவனாவான், தலைவன் *[குறு.91:2]*. தலைவியினுடைய நீரைப் போன்ற மென்மை, தீயை ஒத்த தலைவனின் வலிமையைக் கெடச் செய்தது *[குறு.95:4]*. தலைவனைப் பிரிந்த தலைவி, தோழியிடம், 'தோழியே, நம் தோட்டத்திலுள்ள நீர் ஒழுகின்ற பசிய புதலினிடத்தே, தழைத்துப் படர்ந்த, மழைக்காலத்தில் மலரும் பீர்க்கம்பூச், சிலவற்றைக் கொண்டு சென்று, தலைவரிடம் இம்மலரைப்போன்ற பசலையை அடைந்தாள், உன் காதலி, என்று, சொல்லுவாரைப் பெற்றோமானால், மிக்க உதவியாக இருக்கும்' என்று, கூறினாள் *[குறு.98:4]*.

தலைவனைப் பிரிந்த தலைவி, தோழியிடம், தலைவரின் நட்பானது, நீர்மிக்க கண்களோடு நாம் நினைத்துத் துன்புறுதற்குக் காரணமாகின்றது; என்று, கூறினாள் *[குறு.105:6]*. ஆழமாகிய நீரினால் உண்டாகும் புதுவருவாயையுடைய ஊருக்குத் தலைவன் ஆவானுடன் கூடிய, என் இன்பத்துயிலினின்றும், எழுப்பிய சேவலே! நீ, காட்டுப்பூனைக் குட்டிக்கு இரையாகுக' எனத், தலைவி கூறினாள் *[குறு.107:5]*. நீரிலுள்ள அரும்பை மலரச் செய்து நிறத்தையும், துய்யையும் உடைய மலர்களை உதிரும்படி செய்து, வீசுகின்ற வாடைக்காற்று, பிரிந்த தலைவிக்கு, இன்னாமையைத் தரும் *[குறு.110:2]*. மாலைக் காலத்தில் கொக்கினது புறத்தைப் போன்று, ஆழமாகிய நீர்நிலையில் வளர்ந்த ஆம்பலின் மலர் குவியும் *[குறு.122:2]*. முகிலாலே காக்கப்பெற்ற, நீர்வளம் மிக்க, அகன்ற முல்லைநிலத்தில், மாலைக் காலத்தில், முல்லைப்பூ மலர்தல், பிரிந்தாரை நகுவது போல் தோன்றியது *[குறு.162:1]*. நீர் ஒழுகும் கொழுவிய பிச்சி அரும்புகளைப், பனங்குடையில் பொதித்து, காலையில் மலர வைத்தனர் *[குறு.168:1]*. கரிய நீரையுடைய கடற்கரையையுடையவனைக் குறித்து இரங்கேன்; ஊரலர் செய்வது என், என்றாள் தலைவி. *[குறு.175:4]*. கடல்பாடவிந்து கானல் மயங்கி நீரை உடைய, கரிய கழிப்பூக்கள், கூம்பியதனால், துறை பொலிவழிந்திருந்தது *[குறு.177:2]*. பொய்கையில் ஆம்பல் மலரைப் பறிப்போர் நீர் வேட்கையை அடைந்தாற்போலத், தலைவன், தலைவியின் முலையிடைக்கிடந்தும், வேட்கைமிக்குடையனாயிருந்தான் *[குறு.178:3]*. வாயில் வேண்டிய தலைவனிடம், தோழி, 'முன்பு எம் தலைவி வேப்பங்காயைத் தந்தாலும், வெல்லக்கட்டி என்று பாராட்டினீர்; இப்பொழுதோ, அவள், பாரியின் பறம்பு மலையில் உள்ள தை மாதக் குளிர்ச்சியையுடைய சுனையிலுள்ள தெளிந்த நீரைத் தந்தாலும், வெப்பத்தையும், உவர்ப்புச்சுவையையும் தருகிறது என்றனிர்', என்று கூறினாள் *[குறு.196:3]*. பிரிதலை ஆற்றுவாயாக என்ற தோழிக்குத், தலைவி, 'காதலரைப் பிரிந்த என்னைக், கொல்லும் பொருட்டு, நீரை ஏற்றுக் கொண்ட மழையையும், ஊதைக்காற்றின் குளிர்ச்சியையுங் கொண்டு, கூதிர்க்காலமென்னும் உருவத்தையுடைய கூற்றமானது வருகின்றது, என் செய்வேன்; என்று கூறினாள் *[குறு.197:2]*.

உயர்ந்த மலையில் நீரில்லாத, வறிய குளத்தைத் துழாவிய ஆண்யானைகள், குறிய, குண்டுக் கற்களுக்கு அருகில், தம் பிடிகளைத்தழுவிப், புலியின் தாக்குதலினின்றும் பாதுகாத்தன *[குறு.215:3]*. தலைவி, மழைக்காலத்தில் மலரும் பிச்சியினது நீர் ஒழுகும் வளவிய அரும்பினது சிவந்த புறத்தையொத்த, கொழுவிய கடையையும் குளிர்ச்சியையுமுடைய கண்களை உடையவள் *[குறு.225:5]*. தாழையின் வெள்ளிய பூவானது நாரையைப்போல மலர்தற்கு இடமான, பெரிய துறைகளையுடைய, அகன்ற நீர்ப்பரப்பையுடைய கடற்கரையையுடையவன், தலைவன் *[குறு.226:7]*. வலிமையையுடைய சுறாமீன் திரிகின்ற நீரையுடைய வழியில், தலைவியைத் தேடித், தலைவன் வந்தான் *[குறு.230:5]*. தலைவியின் தந்தை, பெரியவர்களுக்கு நீரோடு வழங்கி, எஞ்சிய பொருளையும் யாவர்க்கும் தடைசெய்தலறியாத

சோற்றையும், உடையவன் *[குறு.233:5]*. முல்லை நிலத்தில், காட்டுக் கோழியின் சேவலினது ஒள்ளிய புள்ளிகளையுடைய கழுத்தில், தண்ணீர்த்துளி துளிக்கும்படி புதலின்கண்நீர் ஒழுகும் *[குறு.242:3]*. ஆண்மான், பெண்மானோடு பருக்கைக்கற்களையுடைய பள்ளத்திலே தங்கிய நீரை உண்ணும் *[குறு.250:1]*. தலைவி, ஆழ்ந்த நீரிலுள்ள, ஒன்றையொன்று எதிர்ந்த, இரண்டு கயல் மீன்களை யொத்த மையுண்ட கண்களையுடையவள் *[குறு.250:4]*.

தோழியே, 'சென்ற கார் காலத்தில் பெய்யாது எஞ்சியிருந்த பழைய நீரை, இனிப் புதிய நீரைக்கொள்ளும் பொருட்டுச், சொரிகின்ற முகிலின் ஓசையைக்கேட்டு, மயில்கள் ஆடுகின்றன; பிடாவும் மலர்ந்தன; அவை அறியாமையை உடையன; இது கார் காலமன்று; நீ கவலையுறாதே', என்று தோழி, தலைவிக்குரைத்தாள் *[குறு.251:5,6]*. 'நான் உன்னைப் பிரிந்து பொருள் ஈட்டி வருமளவும் உன்னால் பொறுத்தல் இயலுமோ', என்று தலைவன் கூறிய அளவில், தலைவியின் கண்கள், பழைய நிலையில் நில்லாமல் கலங்கி, நீரால் மாறுபடுதலையுடைய அழுகை அமையாவாகித் தலைவனின் தேரைத்தடுத்தன *[குறு.256:7]*. தலைவனுடன் உடன்போக்குச் சென்ற தலைவி, மலையின் அடிவாரத்திலுள்ள கரும்பை நட்ட பாத்தியைப்போன்ற, பெரிய ஆண்யானையினது அடிச்சுவட்டின் கண், தங்கிய நீரை, நெல்லிக்காயைத் தின்று அவனுடன் அருந்தினாள் *[குறு.262:8]*. பெரிய செல்வமே கிடைப்பதாயிருந்தாலும், வாழ்நாளின் சிறுமையைக் கருதி, அடிப்பாகக் கரும்பினையுண்டாற்போன்ற சுவையையுடைய, வெள்ளிய பல்லினிடத்தே ஊறிய குற்றமற்ற இனிய நீரையுடைய, தலைவியைத் தலைவன் பிரியாதிருந்தான் *[குறு.267:4]*. தோழி, அறிவரை நோக்கி, 'மழைக்குரிய வாடைக்காலம் எப்பொழுதுவரும் என்று கூறுகிறீர்களோ, அப்பொழுது தலைவியைப் பிரிந்து சென்றுள்ள தலைவர் வருவார்; நீவிர், ஒரில்லில் பிச்சையைப், பெற்று உண்டு, முன்பனிக்காலத்திற்குரிய விரும்பத்தக்க வெப்பமுடைய நீரைச் சேமித்து வைக்கும் செப்பில், பெறுவீராக' என்று கூறினாள் *[குறு.277:4]*. 'கார்காலத்தில் நீர் விளங்கும் மலைப்பக்கத்தில் மலர்ந்துள்ள வெள்ளிய கூதாளமலர், காம்பில் கழன்று உதிர்தலைப் போல, நின் கை வளையல்கள் கழல்வதை எண்ணி அவர் விரைவில் வருவார்', என்று தோழி, தலைவியிடம் கூறினாள் *[குறு.282:5]*. தலைவன் பொருள்வயின் பிரிந்து சென்ற நெறி, கொலைத் தொழிலைச் செய்யும் மறவர், வழிப்போவாரைக் கொன்றதனால் உண்டான புலாலைப், பருந்துகள் எதிர்நோக்கித் தங்கியிருக்கின்ற, நீர் இல்லாத பாலையாகும் *[குறு.283:8]*. நீர்ப், பொறையைத் தாங்கிக் கொண்டு வளமிக்க மலைகளை நோக்கிச் செல்லும் கார்ப்பருவத்து முகில், பன்னிரண்டு மாதங்கள் நிறைந்து நடக்க மாட்டாத முதற்சூலையுடைய மகளிரைப் போல விளங்கும் *[குறு.287:5]*. தலைவன் பிரிந்துழித் தலைவி, செறிந்த துயர்மிக்க நெஞ்சத்தோடு, மிக்க நீரையுடைய வெள்ளத்தின், பாறையின் மேல் மோதும் சிறிய நுரையைப் போல, மெல்லமெல்ல அழிந்தாள் *[குறு.290:4]*. கிளிகடி கருவியின் ஓசையைத் தலைவியின் பாட்டென்று மயங்கிச் செல்லாத கிளிகளைக் கண்டு அழுத அவளுடைய கண்கள், ஆழமாகிய நீரையுடைய சுனையினிடத்தே பூத்த குவளையின் பல இதழ்கள் கலைந்து தண்ணிய மழைத்துளியை ஏற்றுக்கொண்ட மலர்களைப் போன்றிருந்தன *[குறு.291:6]*. தலைவி, ஆழமாகிய நீரில் வளர்ந்த தாமரைப் பூந்தாதைப் போன்ற நுண்ணிய பல தேமற் புள்ளிகளையுடையவளே அஞ்சற்க; உன்னைக் கைவிடேன்; என்றான் தலைமகன் *[குறு.300:3]*.

பரதவர் மூங்கிலின் காம்பினால் பிணிக்கப்பெற்ற எறியுளியை, நீர்ப்பரப்பில் சுறாமீனின் மேல் எறியும் ஒலிக்கு அஞ்சிக் கரையிலிருக்கும் அன்னக்கூட்டம் ஓடும் *[குறு.304:3]*. கடற்கரையில் உள்ள வெண்மையையுடைய காக்கை நீரையுடைய கரிய கழியிடத்து மீனைஇரையாக உண்டு மலர் மணம் வீசும் சோலையிடத்துத் தங்கும் *[குறு.313:2]*. 'வானத்தின்கண், நீர்மிக்க கருப்பத்தையுடைய முகில் மின்னலிட்டு மழை பெய்யும் கார்ப்பருவத்தின் மாலையிலும் தலைவன் வரவில்லையே', என்று பிரிந்துள்ள தலைவி வருந்தினாள் *[குறு.314:1]*. தலைவன் பிரிவுழி, ஆற்றியிரு என்ற தோழிக்கு, 'நான் ஆற்றினும், நடு இரவில், துயிலின்றித் தெள்ளிய நீரிடத்திலுள்ள மலரையொக்கும், குளிர்ச்சியையுடைய என் கண்கள், கண்ணீரைச் சொரிகின்றன; நான் என் செய்வேன்' என்று கூறினாள் *[குறு.329:6]*. பகன்றையினது கூம்பு மலர்ந்த வெள்ளிய மலர், வண்ணாத்தி, கஞ்சியிலே தோய்த்து எடுத்து முதல் தப்பலைத் தப்பிவிட்டு நீர் நிலையிலே இடப், பிரியாத, பருத்த, ஆடையின் முறுக்கினை ஒத்திருக்கும் *[குறு.330:3]*. தலைவன் கடந்து சென்ற காடு, நெடிய மூங்கில் உலர்ந்த, நீர் இல்லாத, அரிய இடத்தில், 'வழிப்போக்கர் அழியும்படி, எதிராக நின்று, வளைந்த வில்லையுடைய மறவர், காட்டைக்கொள்ளையிடும் தன்மையதாகும் *[குறு.331:1]*. வீசுகின்ற அலைகளின் நீர்த்துளிகள் வெண்காக்கையது ஈரமாகிய புறத்தை நனைப்ப, அக்குளிரை வெறுத்து அது மலர்கள் மலர்ந்துள்ள, சோலையில் தங்கியது *[குறு.334:4]*.

ஆழமாகிய நீரின்கண் வளர்ந்த ஆம்பலினது இலையின் புறத்தைப் போன்று வளைந்த மெல்லிய சிறகை உடையனவாய் வௌவால்கள் விளங்கும் *[குறு.352:1]*. நீரின்கண் நெடுநேரம் விளையாடினால் கண்களும் செந்நிறத்தையுடையும்; பலமுறை உண்டால் தேனும் புளிக்கும்; அவைபோல் உனக்கு எம் தலைவி மீது வெறுப்பிருந்தால், அவள் தந்தையின் வீட்டிற்கு அனுப்புவாயாக' என்று தோழி, தலைவனிடம் கூறினாள் *[குறு.354:1]*. தலைவனிடம், தோழி, மழை இடத்தை மறைப்பதால் வானத்தை உன்னால் காண இயலாது;

அம்மழையின் நீர் எங்கும் பரந்து ஓடுவதால் நிலத்தை உன்னால் காண முடியாது; கதிரவனின் மறைவால் மிக்க இருளாகவும் உள்ளது; இந்நிலையில், எம்குடிலுக்கு எவ்வாறு வந்தாய், என்று கூறி வருந்தினாள் *[குறு.355:2]*. உடன்போக்குச் சென்ற மகளைக் குறித்துச், செவிலித்தாய், 'நிழல் அற்றுப்போன நீர் இல்லாத கடத்தற்கரிய பாலைநிலத்திடத்தே தலைவனுடன் விரைந்து சென்று, தண்ணீரற்ற சுனையின், மிக்க வெப்பமான கலங்கலைக் குடிக்க எவ்வாறு வலியளானாள்' என்று வருந்தினாள் *[குறு.356:1]*. வரைவுக்குரிய முயற்சிகளைத் தோழியாலறிந்த தலைவி, 'மெல்லிய இயல்பினையுடைய தோழியே, ஒரு நாளேனும் இடையீடுபடாத செறிந்த நீரையுடைய வெள்ளத்தினது திண்ணிய கரையிலேயேயுள்ள பெரிய மரத்தைப்போலத் தீங்கில்லாத நிலையிலிருந்து, பலமுறை தலைவரைத் தழுவுவேன்', என்று தோழியிடம் கூறினாள் *[குறு.368:6]*. அலரைக்கண்டு அஞ்சிய தலைவியிடம், தோழி, 'தலைவனோடு நினது நட்பு, உலகம் இடம் மாறினாலும், நீரும், தீயும் தம் இயற்கையினின்றும் மாறினாலும், அலைகளையுடைய பெரிய கடலுக்கு எல்லை தோன்றினாலும், யாராலும் அழிக்க முடியாதது என்று கூறினாள் *[குறு.373:1]*. தலைவியின் மென்மையின் காரணமாகத் தலைவன் உடன்போக்கிற்கு உடன்படானாக, அப்பொழுது தோழி, தலைவனிடம், 'நீரைத் தன்னுடைய அடியிலே பெற்ற வரிசையாகிய இதழ்களையுடைய குவளைமலர் மேல்காற்று வீசினாலும் வாடாததாகும்; தலைவி உன்னோடு பாலை நிலவழிவரினும் அவளுக்கு மிகவும் இனிமையைத்தரும்' என்று கூறி வற்புறுத்தினாள் *[குறு.388:1]*. தலைவனைப் பிரிந்த மகளிர்க்கு, மழைபொழியும் துன்பம் தரும் மாலைக்காலத்தில், பாய்கின்ற நீரையுடைய அகன்ற இடம் தனிமையுற்று வருந்த, மயில்கள் கூவுவது, துன்பந்தரும் *[குறு.391:8]*. அரும்புகள் முதிர்ந்த ஞாழலின், முட்டையைப் போன்ற திரண்ட மலர்களை, நெய்தலது கரிய மலரிலே பெய்வதைப்போலக், குளிர்காற்றுத் துளியைத் தூவுகின்ற வலியநீரையுடைய கடற்கரை தலைவனுக்குரியது *[குறு.397:3]*. அடும்பினது அழகிய மலரைக் கொய்து கலந்து செய்த நெய்தலாகிய நெடிய மாலையை அணிந்த நீர் ஒழுகிய கூந்தலையுடையவர் மகளிர் *[குறு.401:2]*.

குற்றந்தீர விளங்கிய திகிரியையுடைய திருமாலுக்குத் தூயநீரையுடைய சங்குகள் ஒலிக்கின்ற கடல், ஆடையாகும் *[நற்.க.வா.1]*. தலைவனின் பிரிவு உணர்த்திய தோழிக்குத், தலைவரின் நட்பு, தாமரையின் தண்ணிய தாதினை ஊதிச் சந்தன மரத்தில் வைத்த இனிய தேன்போலத் திண்ணமாக மேதக்கது ஆதலின், நீரையின்றியமையாத உலகியல்போல, அவர் தம்மை இன்றியமையாத நம்மைப், பிரியமாட்டார் என்று தலைவி கூறினாள் *[நற்.1:6]*. 'தலைவனின் பிரிவிற்கஞ்சி நீ சிந்திய கண்ணீர் தூதாகச் சென்று, நிலம் நீரால் நிறையும் படியாக முகில் பெருமழையைப் பொழிந்து மாறிய முன்பனிக்காலத்தும் தலைவர் பிரியாதவாறு தடுத்துவிட்டது; இனி நீ மகிழ்வோடு முயங்கியிருப்பாயாக', என்று தோழி, தலைவியிடம் கூறினாள் *[நற்.5:1]*. பொருள்வயின் பிரிவு ஆற்றாளாய தலைவிக்குத், தோழி, 'அச்சத்தையுடைய இடமகன்ற சுனையில் நீர் நிறையும்படியாக முகில் மழையைப் பொழிய மின்னுகின்றது; இதனைக் கண்ட தலைவர் விரைந்து வருவர்; வருந்தாதே' என்று கூறினாள் *[நற்.7:1]*. முழங்குகின்ற அலை கொணர்ந்து கொழித்த பெரிய எக்கர் மணல், துகிலின் நுடக்கத்தைப் போல, மிகுதிப்படக், காற்றுத் தூற்றாநிற்கும், நீர்மிக்க வலிய கடற்கரையை உடையவன், தலைவன் *[நற்.15:3]*. தலைவன் ஒரோவழித் தணந்தபொழுது, முதன்முதலில் தலைவனுடன் கூடிய இடத்தைக் கண்டவுடன், தலைவி அடக்கவும் அடங்காமல், குளிர்ந்த கண்கள், நீரைப்பெருக்கி அழுதன *[நற்.17:4]*. இறாமீனின் புறம் போன்ற சருச்சரையையும், சுறாமீனின் கொம்பு போன்ற இலையையும் உடைய தாழை, பெரிய களிற்றியானையின் மருப்புப் போன்ற அரும்பு முதிர்ந்து பெண்மான் தலைசாய்த்து நிற்றல் போல, வேறாகத் தோன்றி, விழாவெடுக்கும் களமெல்லாம் கமழும் *[நற்.19:5]*. கானங்கோழி, மழைபெய்த நீர் வடிந்த அகன்ற நெடிய காட்டிலே, சுவறாத ஈரமணலை நன்றாகக் கிளறி, நாங்கூழ்ப்புழுவை இரையாகத் தன் பெடைக்குக் கொண்டு செல்லும் *[நற்.21:9]*. 'நெருங்கிய நீர் மிக்க, முத்துக்கள் விளைகின்ற, கடற்பரப்பினையுடைய, கொற்கை நகரத்து முன்புள்ள துறையிலிருக்கும் நெய்தலின், தெளிந்த நீரிலுள்ள, மலர் போன்ற, தலைவியின் கண்கள், அழகு குலைந்தன' *[நற்.23:5,8]*.

உலாவுதலை உடைய அலையோசையையும், வலிய நீர்ப்பரப்பினையுமுடைய கடற்கரைக்கு உரியவனாவான், நம்மை மணவாமுன், இத்துறை இனியதாயிருந்தது, என்றாள், தலைவி *[நற்.31:12]*. ஆண்புலி, பிடியானை புலம்புமாறு, நீர் அற்ற அகன்ற காட்டினிடத்துப் பெரிய களிற்று யானையைத் தாக்கிக் கொல்லும் *[நற்.36:3]*. தலைவன் பிரியின், கலைமானைப்பிரிந்த பெண்மானைப் போல், தலைவி கலக்கமுற்றுக், குவளையின் நீர் நிரம்பிய கரியமலர் போன்ற கண்களில், நீர் வடியும் *[நற்.37:3]*. காண்டவாயில் என்னும் ஊர், கலங்கிய நீரையுடைய கடற்கழி சூழ்ந்த, தோட்டங்கள் நிறைந்த, வளமுடையது *[நற்.38:6]*. வினைமுற்றி மீளும் தலைவன் தேரின் மணியோசையைத், தலைவி கேட்கமுடியாமல், கோடையில் பல நாட்களாக வறட்சியுற்ற உயிர்கள், மகிழ்ச்சியோடு தத்தம் தொழிலை மேற்கொண்டு நிகழ்த்துமாறு, தொன்றுதொட்டுப் பெய்யும் வழக்குப்போல, மழை பெய்ததனாலாகிய புதிய நீர் நிரம்பிய பள்ளங்கள் தோறும், நாவினால் தவளைகள் கூட்டமாய் ஒலிக்கின்ற ஒலி, அடக்கிவிடும் *[நற்.42:3]*. மகளிர் அருவியில் ஆடும் பொழுது, அவர், கண்கள் நீரினால் அலைக்கப்படுதலால், சிவந்து தோன்றும் *[நற்.44:2]*. பரதவ மகளிரின் வாழ்க்கை, கடல் நீரை விளைவயலாகக் கொள்ளுவதாகும் *[நற்.45:9]*.

புதிதாகப் பெய்த மழையால், காட்டின்கண் ஓடும், யாற்றிலே, காய்ந்த சருகுகளோடு, கழிந்தனவாகிய முகிழ்த்த பூங்கொத்துக்களையும் அடித்துக்கொண்டு வருகின்ற புதிய இனிய நீரில் நீராடுதல், தலைவியின் நோயினைப்போக்கும் மருந்தாகும் [நற்.53:8]. நாரை தன் கிளையோடு, வளைந்த நீர்ப்பரப்பிலுள்ள இரையை அருந்தித் தாவிப்பறந்து வரும் [நற்.54:1]. ஓங்கியெழுகின்ற அலைகளையுடைய நீண்ட நீர்வடிவாகிய கடலின் குளிர்ந்த துறைக்குரியவன் தலைவன் [நற்.58:10]. உழவர், உழத்தியரோடு, வைகறையில், வரால் மீனின் துண்டத்தோடு, சோற்றையுண்டு, நீர் மிக்க சேற்றிலே நாற்று முடிகளை நடுவர் [நற்.60:7]. விட்டுவிட்டுக் கரைத்துச் செல்லுதலையுடைய கான்யாற்றின்கண், கலங்கும் பாசியை, நீர் அலைத்தலால், அப்பாசி எங்கும் கலந்தன [நற்.65:3]. இற்செறிப்பிலிருந்து தலைவியை விடுவிப்பாரைப் பெறுவேமாயின், தலைவரின் மலையில் பெய்த பெருமழையால், குறிய நுரைகளைச் சுமந்துகொண்டு, நறிய மலர்களுடன், யாற்றில் பொங்கி வருகின்ற புதுநீரில், யாங்கள் உள்ளம் மகிழ ஆடுவோம்', என்று, தோழி, சிறைப்புறத்துத் தலைவனிடம், கூறுவாள் போன்று இற்செறித்தலை உணர்த்தினாள் [நற்.68:5]. பரவிய கடல் நீர்த்துறைக்கு உரியவனது தேர்மணிக்குரலைக் கேட்பாயாக; இனி, நாம் மாலைத் துன்பத்திலிருந்து உய்குவம், எனத், தோழி, தலைவியிடம் கூறினாள் [நற்.78:11]. பாலைநிலத்தில், பெரிய நீர்ப்பரப்பையொத்த வெளிய பேய்த்தேரை, மரங்களற்ற நீண்டவிடத்தில், மான்கூட்டம் தண்ணீரென விரும்பிச் செல்லும் [நற்.84:4]. நீண்ட நீரையுடைய கடற்கரைக்கு உரிய தலைவன், பகற்பொழுதில் தேரில் வந்ததனை, நீ உணர்ந்தனையோ, எனத், தோழி, தலைவிக்குக் கூறினாள் [நற்.91:12]. தலைவன், அலராமல் குவிந்த பூங்கொத்துக்களை உடைய புன்னையின்கண், புலவு நாற்றத்தையுடைய நீர் செறித்தலால் மலர்ந்த கடற்கரைக்கு உரியவன்வான் [நற்.94:6]. தலைவனைப் பிரிந்த தலைவிக்கு, நன்றாகத் தெளிந்தநீர் கெழுவி வருகின்ற,யாறு (யாறு பெருகி வருவது கார்காலமாதலின்) காமத்தை மிகுவிக்கும் [நற்.97:4]. நீர் முற்றும் இல்லாத, சென்று கடக்க முடியாத, நீண்ட நெறியில், வெளிய ஆடையை விரித்தாற்போன்ற, வெயில் வீசுகின்ற காட்டினைக்கடந்து, தலைவன் சென்றான் [நற்.99:1]. தலைவன், கார் காலத்து, உலாவும் கொக்கினது, கூரிய மூக்குப் போன்ற, ஆழ்ந்த நீரில் முளைத்த, ஆம்பற் பூவையுடைய, தண்ணிய துறையையுடைய, ஊருக்கு உரியவனாவான் [நற்.100:3].

தலைவன், கடந்து செல்லக்கூடாதவாறு குறுக்கிட்டோடும் பெருவெள்ள நீரையும் கடந்து இரவுக்குறிக்கு வருவான்' [நற்.104:10]. பொருள்வயின் பிரிந்த தலைவன், பிடிகள் கன்றுகளுடனே வருந்த, நெடிய நெறி முழுதும் நீர் இல்ல தொழிந்த, நிழலற்ற செல்லுதற்கரிய சுரத்தின்கண் உள்ள சேர்ந்த நெறிகளைக் கடந்து செல்லுவான் [நற்.105:5]. தலைவி, தலைவனது இல்லில், தந்தையின் செல்வமிக்க உணவை நினையாளாகி, ஓடுகின்ற நீரிலே இடையீடுற்றுக் கிடக்கும் நுண்ணிய மணல் போல, ஒரு பொழுதின்றி ஒரு பொழுதுண்டும், வன்மையளாயினாள் [நற்.110:12]. கரியகடலின்கண் சென்று முகந்து, மணிபோலும் நிறத்தினையுடைய அருவியினிழிகின்ற நீரையுடைய அகன்ற மலை இடமெல்லாம் மறைபடுமாறு பரவி, மலையானது கண்விழித்து இமைத்தாற் போல, மின்னி ஒலிக்கின்ற வலிய இடியேற்றுடனே கலந்து முகில் வரும் [நற்.112:7 ]. முகில், இனிய நீரையுடைய பெரிய கடலின்நீர் சில என்னும் படியாக, வாயினாலுண்டு,- நொச்சியும், முல்லையும் அரும்பவிழ்ந்து மலருமாறு, கார்ப்பருவத்தைத் தோற்றுவித்தது [நற்.115:3,4]. தலைவியடைந்த பிரிவுத்துன்பம், விரிந்த கடல்நீர், சூழ்ந்த நிலத்தின் எல்லையளவையுங்கடந்தது [நற்.130:10]. பிரிந்திருக்கின்ற தலைவியின் துன்பத்தைப் போக்கித் தோழிகூறும் ஆறுதல், இரும்பு வேலை செய்கின்ற கொல்லன், வெய்ய உலையிலே தெளித்த சிலவாய நீர் அவ்வுலையின் நெருப்பைச் சிறிது அவிக்குமாறு போலத், தலைவியின் நோயைச் சிறிது ஆற்றுவித்தது [நற்.133:10]. செவ்விய மலையருவியின்கண் நீர் இல்லாது அமைந்த நீண்ட நெறியைக் கடந்து தலைவன் பிரிந்தான் [நற்.137:5]. தலைவியின் உடன்போக்கின் கண் நற்றாய் நீர் வடிகின்ற கண்களையுடையளாகி அமுதாள் [நற்.143:4]. பொருள்வயின் பிரியும் தலைவன், நெடிய பொய்கையின்கண் நீர் இல்லாத நீண்ட வழியில் சென்றான் [நற்.148:4]. களவுப்புணர்ச்சியில் ஈடுபட்ட செம்முகமந்தி, புணர்ச்சியினால் கலைந்த தலைமயிரினைச், சுற்றத்திற்கு அஞ்சி, வேங்கை மரத்தின் கிளைமீது சென்று, ஆழமாகிய சுனைநீரைத் தலைகுனிந்து பார்த்துக், கலையாதவாறு திருத்தும் [நற்.151:10]. இரவுக்குறியை மறுக்க நினைக்கும் தோழி, தலைவியிடம், 'தலைவர் வரும் வழியின் கொடிய நிலையினால், என் உள்ளத்தில் பெரிய துன்பம் மோதுவதால், நீர்பெய்த நெருப்புப்போல என் உள்ளத்தில் பெரிய துன்பம் மோதுவதால், நீர்பெய்த நெருப்புப்போல என் உள்ளக்கொதிப்புத் தணியும்படி இன்று அவர்வாராராயின் நன்று', என்று கூறினாள் [நற்.154:9]. 'நாட்பட்ட நீர்பொருந்திய பொய்கையிலே மலர்ந்த குவளைமலரை, ஒன்றோடொன்று எதிர் எதிர் வைத்துத் தொடுத்தாற்போன்ற, செவ்வரிபரந்த, மதர்த்த, குளிர்ச்சியையுடைய தலைவியின் கண்களைத் தலைவன் காண்பதன்முன், நயன், நண்பு, நாண், பயன், பண்பு முதலியன உடையனாயிருந்தான்' [நற்.160:8].

தலைவனிடம், தோழி, 'நீ பிரியின், மீன்இனத்தை மிகத்தின்ற, வெளிய நாரை, மிதித்த நீர்வற்றிய குளத்து நெய்தல் மலர் போலத் தலைவி ஒரு நொடிப்பொழுதும் வாழ்ந்திராள்', என்று கூறினாள் [நற்.183:10]. காடுமுற்றும் வெப்பமடைந்த வறட்சிமிக்க கற்சுரத்திலே, கல்லிலே ஊறுகின்ற ஊற்றிற் சேர்தலையுடைய நீரை, நீண்ட,துதிக்கையை நீட்டி அவ்வூற்றுக்குழி அறவாங்கி

முகந்து கொண்டு, களிற்றியானை, தன்பிடி யானையின் எதிரே ஓடும் *[நற்.186:2]*. ஒள்ளிய கலனையுடைய, மாதர்களின் வளையோடு பிணிப்புற்ற, மெல்லிய விரலில் அணிந்த விரல் அணி போல, ஆழ்ந்த சுனை நீரையுடைய மலைப்பக்கத்தில், முளைத்த வாழையின், வளைந்த மடலினின்று போந்த கூரிய நுனியையுடைய குவிந்த முகை, செங்காந்தளின் வளவிய இதழிலே தோய்ந்து நிற்கும் *[நற்.188:1]*. புதுவதாக மழை பெய்து, நிறைந்த நீர் ததும்பும் புலங்களுள் புகுந்து, அவற்றை அளைந்துவரும் குளிர்ச்சியுடைய வாடைக்காற்றுப் பிரிந்திருக்கின்ற தலைவிக்குக் காமத்தை மிகுவிக்கும் *[நற்.193:3]*. தொண்டியில் உள்ள வயலிலே, நெற்கதிரையறுக்கும் உழவரின் கூரிய அரிவாளால் அறுபட்டதால், பல இதழ்களையுடைய குவியாத நெய்தல் மலர் நீரில் முழுகி அலையும் தோற்றத்தைப்போலப், பிரிந்த தலைவியின் கண்கள் ஈரியவாய்க், கலுழும் *[நற்.195:8]*. மகட்போக்கிய செவிலித்தாய், எதிரே சுரத்தில்வரும் வேறொரு தலைவியைத், தன்மகள் போலுமென்று கருதிக், கண்களில் நீரொழுக அழுதாள் *[நற்.198:4]*. பரதவர், படகில் சென்று, சூழ்ந்த கடல் நீரில் விரைந்து செல்லும் சுறாமீனை, வலைவீசிப் பிடிப்பர் *[நற்.199:5]*. வினைவயின் பிரிந்த,தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுவானாய், நெஞ்சே, கொல்லையிலுள்ள முள்ளையுடைய இண்டின் அழகிய தளிரின் மீது நீர்மிக்க விரைவையுடைய மழை பெய்த பொழுதுண்டான அழகிய நிறம் போன்ற, இவளது மாமையினழகு, நீ பிரிந்தாயாயின், இன்றோடு போய்விடும்', என்று கூறிச், செலவழுங்கினான் *[நற்.205:10]*. வினைமுற்றி மீளுந்தலைவன், பாகனிடம், 'பாகனே, என் காதலி, என் புதல்வனை, எந்தாய்வருக', என்று, அழைக்கின்ற இனிய சொல்லைக் கேட்பதற்கு, நீர் அமையப்பெற்ற பெரிய வழியின், நீண்ட இடமெங்கும், சுவடுவிளையத் தேரை விரைந்து செலுத்துக', என்றான் *[நற்.221:6]*. 'நெடிய நீரையுடைய நெய்தல் நிலத்திற்கு உரியவன் வரைய வருமாற்றைக்,குன்றேறிக் காண்போம் வா! என்று தோழி, தலைவியை அழைத்தாள் *[நற்.235:10]*. வளப்பத்தையுடைய கரிய கழி பொருந்திய நிரம்பிய கடல் நீரையுடைய நெய்தல் நிலத்திற்கு உரியவனோடு, களவில் ஈடுபடின், ஊரலர் மேலும் என்னாமோ? என்றாள், தலைவி *[நற்.239:8]*. நீர் வற்றிய இடங்களில் வளைந்த சிறகையுடைய பறவைகளின் உள்ளங்காற் சுவடு பொருந்த, வாடை வரக் கண் கலுழும் என்றாள், தலைவி *[நற்.241:3]*. நெய்தல் நில மகளிர் தம் தோழியரோடு தெளிந்த நீரையுடைய கடலிலே சென்று நீராடுவார் *[நற்.245:4]*. கடற்கரையில், நேர்மையான இடத்தையுடைய உப்புப்பாத்தியிலே, கடலின் நீரைக் கொணர்ந்து பாய்ச்சி, உப்பு விளைவித்து, மழையை விரும்பாத வேளாண்மையைச் செய்வர் *[நற்.254:10]*. ஊரார் அலர் தூற்றுவதை நாம் நாண மேலிட்டினால் தலைவருக்கு உரையோமாயினும் மையுண்ட நம்முடைய கண்களின் நீரே வெளிவந்து உரைத்துவிட்டன' என்று தோழி, தலைவியிடம் கூறினாள் *[நற்.263:10]*. தலைவனுடன் உடன்போக்குச் செல்லும் தலைவி, இளமரங்கள் செறிந்த நெல்லியஞ்சோலையில் உதிர்ந்த திரண்ட காயை ஒரு சேரத்தின்று, வறந்த சுனையிலுள்ள மிகச்சிலவாகிய நீரைப் பருகினாள் *[நற்.271:7]*. நெடிய சுனையில் நிறம்மிக்க பெரிய யானை நீர் முகந்து சென்றது *[நற்.273:7]*. கொக்கு வந்து உட்கார்ந்ததால், கிளை அசைதலின், உதிர்ந்த இனிய மாங்கனி, கொக்கினது குவிந்திருந்த நிலைபோன்ற அரும்புகளையுடைய ஆம்பல் மிக்க, நிறைந்த ஆழமுள்ள, நீரில், 'துடும்' என விழும் *[நற்.280:3]*. தலைவன், வளைந்த கழியின் கண், பசிய இலைகளையுடைய நெய்தல் நிறைந்த, குளிர்ந்த நீரையுடைய கடற்கரைக்கு உரியவன் *[நற்.287:5]*. தலைவி, தலைவன் மீது கொண்ட புலவியைத் தணிப்பாளாய்க், காமக்கிழத்தி, 'தலைவனை நெடிய நீரையுடைய பொய்கையில், நடுயாமத்திலே, தண்ணிதாய் நறுமணங்கமழும் புதிய மலரிலே சென்று தேனுண்ணும் வண்டு, எனச் சொல்லுவரலாமல், மகன் என்னார்; ஆதலின் அவனைப் புலவாதேகொள்', என்று கூறினாள் *[நற்.290:7]*. நீர் ஓடி வற்றிய சேற்றில் உள்ள கொழுத்த மீனை அருந்த வேண்டி நாரையினம், குவிந்த மணல் மேட்டில் ஏறியிருந்து, அரசரது ஒள்ளிய காலாட்படையின் கூட்டம் போல, விளங்கித் தோன்றும் தண்ணிய பெரிய கடல் நீர்த்துறைக்குத் தலைவன் உரியவன் *[நற்.291:1]*.

நீண்ட நீர்த்துறையையுடைய கடற்கரைக்கு உரியவன் தன்நெஞ்சத்தால், தலைவி நம்வயின் வருந்துவள்; என்று நினைப்பானோ என்றாள் தலைவி *[நற்.303:12]*. பொருள்வயின் பிரியும் தலைவன், தலைவியின் ஆற்றாமையைக் கண்டு, 'ஈரிய மண்ணால் செய்யப்பட்டு, ஈரங்காயாத பசுமட்கலத்தில், பெரிய மழைநீரை நிரப்பினால் அது கரைந்து அழிவதுபோலப் பொருள்வயின்பிரியக்கருதிய என் உள்ளமும், அவளோடு கரைந்துவிட்டது' என்று கூறிச் செலவழுங்கினான் *[நற்.308:9]*. தாமரையினது இலை அலைபடத் தண்ணீர் பருகும் துறையின்கண் இறங்கிய மாதர்கள், அஞ்சி ஓடும்படியாக ஆழமாகிய நீர் மிக்க பொய்கையில் வாளைமீன் துள்ளிபாயும் *[நற்.310:3]*. நெய்தல் நிலமானது, மழைபெய்தால் நெல்விளையும், மழைபெய்யாது வறந்தாலோ, பெரிய கழிநீரிடத்து, முள்ளிச்செடியின் மலருதிர்ந்து, சேறெல்லாம் காய்ந்து, வெள்ளையாகிய உப்பு விளையும் அறாத வளத்தையுடையதாகும் *[நற்.311:3]*. பொருள்வயின் பிரியும் தலைவனிடம், தோழி, 'பெரும, தலைவியினுடைய நீலமலர் போன்ற மையுண்ட கண்களின் புதிய அழகு சிதையுமாறு மிக்க நீர்வடிதலைக் கண்டும் பிரியலாமோ' எனக்கூறிச் செலவழுங்குவித்தாள் *[நற்.325:8]*. கரிய எருமைக்கடா நாரையின் கூட்டம் இரிந்தோடும்படி, நெடிய நீர் நிரம்பிய பொய்கையிலே, தான் காலையில் உழுத தொழிலின் வருத்தம் நீங்குமாறு பாய்ந்து, கிடந்து, தன்னுடம்பின் அயர்ச்சி நீங்கியபின்னர், மருத மரத்தின் நிழலில் வதியும் *[நற்.330:3]*. பரதவ மகளிர், உப்பின் குவியலில் ஏறிநின்று, அதோ வருவது

நுந்தைபடகு; இதோவருவது எந்தைபடகு, என்று வளைந்த கடல் நீரில் வேட்டை மேற்சென்ற சுற்றத்தாருடைய படகுகளை எண்ணுவர் *[நற்.331:7]*. நீரில் இறங்கி நின்று குவளை மலர் கொய்பவர், தண்ணீர் வேட்கையால் வெய்துற்றாற்போல, நாள்தோறும் தலைவனை முயங்கியும் தலைவி மெலிவுற்றாள் *[நற்.332:2]*. மழையின்மையால், மூங்கில் எல்லாம் வாடி அழகழிந்த மலையின் சிறு வழியிலே, பருக்கைக்கற்கள் நிரம்பிய பள்ளத்தில், ஊறுகின்ற மிகக்குறைந்த சிறிய நீரினை, யானையோடு போரிட்ட புலி உண்ணும் *[நற்.333:3]*. தலைவன் சிறைப்புறத்தானாகத், தோழி, தலைவியிடம், 'தோழியே, உன்மேனியின் வேறுபாட்டிற்குக்காரணம் யாது என அன்னை வினவினாள்; இன்று என்னோடு சுனையாடினள் என்றேன்; நீர்மோதி அலைத்தலானே குலைந்து போன என் மகள், நாளைக்கும் தெளிந்த நீரையுடைய சுனையில் ஆடினால் என்னாவாளோ எனக்கூறினாள்' என்று, தலைவன் வரையவேண்டிப் படைத்துக் கூறினாள் *[நற்.339:7,11]*. வினைமேல் சென்றுள்ள தலைவன், பாசறையில், 'மழை பெய்தலினால் நீர்மிக்க ஈரியகான்யாற்றங்கரையில், வாடையில் துன்புற்று, அதைப்போக்கவல்ல துணையின்றி உள்ளேன்', என்று புலம்பினான் *[நற்.341:8]*.

சுரநெறியில், ஊனைத் தின்னுதலில் விருப்பமிக்க முதியநரி, பசிய ஊனை நிரம்பத் தின்று, வாய் வறந்து நீர் பருகவிரும்பிப், பேய்த்தேரினைத் தண்ணீரென்று கருதி அலைந்து வருந்தியது *[நற்.352:7]*. புதல்வனைப் பெற்ற மடந்தை தன் கொங்கையைக் கையாலே பிடித்துத் தன் புதல்வனின் வாயில் வைப்ப, அப்புதல்வன் பாலைப்பருகுவதுபோலக் காந்தளின் பூங்கொத்தோடு பொருந்திய வாழைப்பூவிலிருந்து அருவிபோல வடியும் இனிய நீரைப் பெண் குரங்கு பருகும் *[நற்.355:4]*. மகளிர் சுனையில் ஆடும்பொழுது அந்நீர் அலைத்தலால் மாலைகுலைந்தது *[நற்.357:9]*. நிரம்பிய கடல் நீர் பரவிய நெய்தல் நிலத்தலைவனே! என்தோழி நின்னோடாடியதால் அவள் சிலம்பு உடைந்தது எனத் தோழி தலைவனுக்குரைத்தாள் *[நற்.363:6]*. இடிமுழக்கத்தையுடைய முகில் நீர்நிறையப் பெற்று இயங்குவது, தலைவிக்குக் கார்ப்பருவத்தை நினைவூட்டிக் காமத்தை மிகுவிக்கும் *[நற்.364:3]*. தலைவனைப் பிரிந்ததால், கொங்கை நனையும்படியாகக் கண்ணீர்வடிக்கும் தலைவி, வினைமுடித்துத் தலைவன் வருவதையறிந்து, விருந்து செய்யும் விருப்பினளாய், அட்டிலில் புக்கு உணவு சமைத்தாள் *[நற்.374:7]*. தலைவனைத், தோழி, 'புன்னையின் நறிய மகரந்தம் உதிரும்படி அதன் கிளைகளிலிருந்து நாரையின் கூட்டம் இரைவேண்டிப் பெயர்ந்து உலவும் பலவாகிய மலர்களையுடைய கடற்கரைச் சோலையையும், மிக்க உவர் நீரையுமுடையவன் நெய்தல் நிலத்தலைவன் *[நற்.375:3]*.

ஒலிக்கும், குளிர்ச்சி பொருந்திய நீரையுடைய கடற்கரைக்கு உரியவன் நட்புப், பேரலரை ஆக்கியது, என்றாள், தோழி *[நற்.378:11]*. மாலைப் பொழுதில், கடற்கரைச்சோலை சூழ்ந்த கழியிடத்து, நீர் வெள்ளமாகிப் பெருகுதல், தலைவிக்குக், காமத்தை மிகுவிக்கும் *[நற்.382:1]*. பரவுதல் கொண்ட கடல் நீரின் தண்ணிய துறைக்கு உரியவன் பிரிய, உயிர்கழியினும், அலரஞ்சித் துன்பம் பொறுத்தல் வேண்டும், என்றாள், தலைவி *[நற்.382:7]*. மாலை நேரத்தில், புலால் நாற்றம் வீசும் நீரையுடைய அடைகரையில், நண்டுகள் தம் பார்ப்போடு வளையுள் செறியும் *[நற்.385:2]*. பொருள் வயிற் பிரிவினையறிந்து வருந்தும் தலைவியிடம், தோழி, 'மடந்தையே, நீர் வடிகின்ற, ஒளி பொருந்திய, குவளையின் மலர் போன்ற, நினது பெரிய கண்களிலே தெளிந்த தண்ணீர் வடியும்படி நீ அழாதே; அழுதால், தலைவர் செல்லுதலைத் தவிர்வார்; என்று, கூறினாள் *[நற்.391:9]*. நீர் விளையாட்டு விளையாடிய மகளிர், நீர் அலைத்தலால் கலைந்த கூந்தலைப் பிழிந்து, வடித்துத் துவட்சியுற, அழகிய வயிற்றில் அறைந்து கொண்டு (நீர் கூந்தலை நனைத்ததால்) ஒரு சேரக்கூடித் தம்மூர், புகுந்தனர் *[நற்.398:3]*.

முள்ளிச்செடி வளர்ந்துள்ள பழையதாகிய நீர்நிலையின் கரையில் வாழும் நண்டு ஆம்பற் தண்டினை அறுக்கும் *[ஐங்.21:1]*. நீரின்கண் வாழும் நீலநிறமுடைய சம்பங்கோழியைப், பேடை விரும்பும் *[ஐங்.51:1]*. மத்தி என்பானுக்குரிய, கழார் என்னும் ஊரிலுள்ள, மாமரத்தின் முதிர்ந்து விழுகின்ற இனிய கனி, நெடிய நீர்நிலையாகிய பொய்கையில், ஒலி உண்டாக, விழும் *[ஐங்.61:2]*. தலைவனைத், தலைவி மிக்க நீரையுடைய பொய்கை பொருந்திய புதுவருவாய் மிக்க ஊரனே, நின்பெண்டிர் தூயர்; சேய், பயந்தமையால், யாம் பேய் அனையம், என்றாள், தலைவி *[ஐங்.70:3]*. தலைவன் புனலாடற்குள் காமக் கிழத்தியை அழைத்த பொழுது, அவள், நீ தலைவியோடு புனலாடற்குக் செல்லாயாயின், இப்பெரிய ஊரின்கண் எங்கும் அலர் உண்டாகுமாறு நின்னோடு,யாம், நீர், அலையினாலே கலங்கும்படி, புனலாடுவோம்' என்றாள் *[ஐங்.77:2]*. நீரோடும் மதகுவழியின்கண், நெய்தல் மலர்கள் பொருந்தி, அதனை மறைக்கின்ற புனல்துறைக்குரியவன் தலைவன் *[ஐங்.109:2]*. வளமிக்க கரிய கழியினது நீர், கரு மணலைப் \பரப்புதற்கிடனானது நெய்தல் நிலம் *[ஐங்.120:3]*. குளிர்ந்த நீரையுடைய நெய்தல் நிலத்தலைவனே, நீ கொண்ட இவள் நலனைத் தந்து செல்க', எனத், தோழி, தலைவனை வேண்டினாள் *[ஐங்.159:3]*. கடற்கரையின்கண் வாழும் வெண்காக்கை, தனக்கு நிலைகொடாத நீரையுடைய கரிய கழியின்கண், இரையைத் தின்ற பின்னர்ச் சோலையின்கண் கவலையின்றித் தங்கும் *[ஐங்.162:2]*. 'குளிர்ந்த நீரையுடைய கடற்கரைக்குத் தலைவனே, நின்னலதில்லா இவள் நுதல், தொண்டியற்று, என்று தோழி தலைவனுக்கு அறிவித்தாள் *[ஐங்.179:1]*. மகளிர் தம் நீர்துளிக்கும் நனைந்த கூந்தலை, நாரையாகிய நல்லதிரள் தம்முடைய சிறகினைப் பன்முறையும் கோதுதல் போன்று, கோதினர் *[ஐங்.186:2]*. 'தலைவர் நாட்டிலுள்ள

தழையுதிர்ந்து மூடப்பட்ட கிணறுகளின் அடிப்பகுதியிலே உள்ள, விலங்கினங்களால் உண்ணப்பட்டு எஞ்சிக்கிடந்த கலங்கல் சின்னீர், நமது இல்லில் தேன்கலந்த பாலினும் இனிதாயிருந்தது என்று உடன்போக்குச்சென்று மீண்டுவந்த தலைவி, தோழியிடம் கூறினாள் *[ஐங்.203:4]*. தோழியே, 'மலையிடத்தும், பக்கமலையிடத்தும் அருவிநீரில் நம்மோடு புனலாடுவது தலைவருக்கு எளிதாயிருந்தது; இற்செறித்தலால் இனி அரியவாகும்' என்று தலைவன் சிறைப்புறத்தானாகத், தோழியிடம், தலைவி கூறினாள் *[ஐங்.224:3]*. கோவலர், ஆன்களுக்காக அரிதின் முயன்று தோண்டிய பள்ளத்தின்கண் ஊறிய நீரை யானைகள் பருகும் *[ஐங்.304:2]*. சுரமானது, முன்பு எப்பொழுதோ மழைபெய்தமையால் ஓடிய நீர், பக்கங்களை வரன்றி (அறுத்து) விட்டமையால், தேய்ந்தொழிந்த சிறிய வழியினையுடைதாகும் *[ஐங்.326:3]*. சுரத்தில் நீர் வேட்கையின் பொருட்டு மனவெழுச்சி கொண்ட யானை, அது பெறாமல் நெடுவங்கியம் என்னும் துளைக்கருவி போலத், தன் துதிக்கையை மேலே உயர்த்துக் கொண்டு பிளிறும் *[ஐங்.377:1]*. தலைவி, தலைவனுடன் உடன்போக்குப் போனபொழுது, 'நம்மூர் மக்கள், தலைவிபோகும் சுரவழியில் பறவைகள் கண்டிராத புதுமையான நறுங்கனிகள் மிகுக என்றும், மானினமும் கண்டிராத பல பெரிய நீர்நிலைகள் நிலைபெறுக என்றும், இறைவனை வழிபட்டு வருந்தி என்னைவிட அழுதனர்' என்று தோழி, தலைவியிடம், கூறினாள் *[ஐங்.398:2]*.

கார்ப்பருவத்தில் பிரியக்கருதிய தலைவனிடம், தோழி, 'கரிய முகில் இடித்து முழங்கி மழையைப் பொழிந்து கார்ப்பருவத்தைக் காட்டுகின்றது; தலைவியினுடைய அழகிய கருங்குவளை மலர் போன்ற மையுண்ட கண்கள் நீரால் நிறைந்தன' என்று கூறிச் செலவழுங்குவித்தாள் *[ஐங்.423:4]*. பிரியக்கருதிய தலைவனிடம், தோழி, 'நீ பிரிந்தாயானால் தெளிந்த நீர்நிலைக்கண்ணே நின்று, இதழ்விரிகின்ற தாமரையினது நாள்மலர் போன்ற நின்னுடைய அன்பிற்கிடமான அழகிய மகன், இனிமேல் தாயின் முலைப்பாலுக்கு ஏக்குற்று அழுவான் (தலைவி இறந்துபடுவள் ஆதலின்)' என்று கூறிச் செலவழுங்குவித்தாள் *[ஐங்.424:2]*. பிரிந்துபோகும் தலைவன் செல்லும் சுரவழியின் கொடுமையை நினைந்து வருந்தும் தலைவியிடம், 'குளங்களிலும், யாறுகளிலும் நீர்நிரம்பும்படி முகில்கள் மழையைச் சொரிகின்றன; அவர் செல்லும் நெறியில் புனலும், நிழலும் நிறைந்திருக்கும்; என்று தோழி கூறினாள் *[ஐங்.433:2]*. 'கார்ப்பருவம் வந்தும் நம் தலைவரின் தேர்வரவில்லை; அதனால் என்னுடைய நீண்ட விழிகள் நீரைச் சொரிகின்றன' என்று பிரிவின்கண் வருந்திய தலைவி, தோழியிடங் கூறினாள் *[ஐங்.453:4]*. தலைவன், நீர்வீழ்ச்சி போன்று, விரைந்து செல்லும் நெடிய தேரினை உடையவன் *[ஐங்.465:1]*. மகட்போக்கியதாய், 'விளங்குகின்ற ஒளியையுடைய ஞாயிறு தெறுதலின், நீர்அற்றுப்போன நிலைகளைக்கடந்து என்மகள் செல்லும் சுரநெறி, இன்னாதாயினும், இனிய ஆகுக' என்று வாழ்த்தினாள் *[ஐங்.தி.7:1]*.

சிவபெருமான் தெளிந்த நீரையுடைய கங்கையைச் சடையிலே அடக்கியவர் *[கலி.1:2]*. பிரியும் தலைவனிடம், 'யாங்கள் எவ்வளவு கூறியும் கேட்காமற் செல்லுகின்றாய்; ஆனால் நீ செல்லும் சுரநெறியில் உள்ள நீர் அற்று வறண்ட சுனையில் இலைகளோடு கூடி வாடிய அழகிய மலர்கள், உன்னைத்தடுத்துவிடும்' என்று தோழி கூறினாள் *[கலி.3:8]*. முள்ளைப் போன்று கூரிய, நாணல் முளை போன்ற தலைவியின் எயிற்றிடையே ஊறிய அமிழ்துபோலும் இனிய நீரைப்பருகிக், கள்ளைவிட இனிதாய் இருக்கின்றது என்று தலைவர் கூறினார் *[கலி.4:13]*. நீர் நிரம்பிய பொய்கையிலிருந்து நீக்கப்பட்ட தாமரை மலர், ஓர் இரவு முழுவதும் வாடாமல் இருக்கும்; ஆனால் நீ பிரிந்தாயாயின் தலைவி அப்பொழுதே இறந்துவிடுவாள்' என்று பிரியக்கருதிய தலைவனிடம், தோழி கூறினாள் *[கலி.5:15]*. மழை வறந்த சுரநெறியில் போகும் வழிப்போக்கரை, ஆறலைகள்வர், ஏவிய அம்பு தைக்க, உடல் தளர்ந்து உள்ளுண்டாகிய நீர் வற்றி உலர்ந்து போன நாவிற்குத் தண்ணீர் வேண்டின் கிடைக்காமையினால் அவரின் கண்ணீர் வீழ்ந்து அவ்வறண்ட நாவினை நனைக்கும் *[கலி.6:4]*. முதுவேனிலின் வெம்மையால் வருந்தி உடல் தளர்ந்து ஒய்ந்த களிறுகள், மழை அற்ற அப்பாலை நிலத்தில் தண்ணீருண்டற்கு ஊரப்படாத பேய்த்தேரை நீர் என்று அவாவும் *[கலி.7:2]*. பிரியக்கருதும் தலைவனிடம், 'நீ காட்டைக் கடப்பதற்கு வேண்டிய சிறந்த அம்பினை ஆராயும்பொழுது, சுனையிடத்து மாட்சிமைப்பட்ட நீலமலர், மழையை ஏற்றுப் புனல் சொரிவது போலத் தலைவியினுடைய மையுண்ட கண் நீரைச்சொரிகின்றன என்று, தோழி கூறினாள் *[கலி.7:12]*. நெருப்புப் போன்ற வெம்மையாலே, அடி பொறுக்க முடியாத சுரத்திலே, யானைக்கன்று கலக்கிய சிறிய நீரைக், களிறானது முதலில் பிடிக்கு ஊட்டிப்,பின்பு தான் உண்ணும் *[கலி.11:8]*. கொடும் சுரநெறியில் நீர் அறுங்கடுஞ்சுனையைச் சூழ்ந்து, தண்ணீருண்டலை விரும்பிய யானைகள், ஒரு சேர உண்ணும் பொருட்டு நீட்டிய துதிக்கைகளை வெப்பத்தால் கொதிக்கும் அப்புனல் சுடுகையினால் கலங்கி, யானைத்திரள் சிதறி ஓடும் *[கலி.12:4]*. வெப்பமிக்க சுரத்தில் உடம்பு வருந்தின யானைகள், ஊறுகின்ற நீர் ஊற்று அடங்கலின், தண்ணீர் உண்டற்கு வேறு ஓர் நிலை காணாமையின், சேற்றின் ஈரத்தை நுகர்ந்து போகின்ற உயிரைக்காக்கும் *[கலி.13:7]*. 'தன்னிடத்து ஊறுகின்ற நீர் அமிழ்தத்தை ஒத்தற்குக் காரணமான எயிற்றாய், என்னுடன் வெஞ்சுரத்தில்வரின் உண்ணும் நீரில்லை என அறங்கூறும் தலைவரே, கழிந்த யாற்று நீரைப் போன்றது, இளமை, என்று யானும் நீவிர் உரைத்த சூளின் தன்மையையே எண்ணியுள்ளேன்' என்று தலைவி, தலைவனிடம் கூறினாள் *[கலி.20:11,12,13]*.

தெளிந்த நீரையும், தூயமதியையுடைய நாளையும் கொண்ட இளவேனில் பருவம், பிரிந்தார்க்குத் துன்பத்தையும், இணைந்தார்க்கு இன்பத்தையும் தரும் *[கலி.32:6]*. அகன்றயாறுகள் உலகத்தில் உள்ள உயிர்களெல்லாம் வாழும்படி பலவாகிய நீரைப் பலகால்வாய் வழி ஊட்டிப் பாதுகாத்து, அப்புனல் வற்றிய பிறகு, சிலவாகிய நீரோடு, கால்வாய்களாலே அறல் ஒழுக, அழகுபெறும்படியாகத் தமக்கு முன்னேயொரு உதவி செய்தவர் கெட்டுப்போக, அவருக்கு உதவுவாரைப் போல, ஆற்றங்கரை மரங்களும், தமக்குப் புனலூட்டி உதவிய யாற்று மணலில் பூக்களை உதிர்த்து அழகுறுத்தும்படியாக இளவேனில் வந்தது *[கலி.34:2,3]*. இளவேனில் பருவத்தில், பூஞ்சோலைக்கருகில், பளிங்கு போலும் நீரினையுடையவாகிய குளங்கள், வற்றாமல் நிற்கும் *[கலி.35:5]*. தலைவனை பிரியும்பொழுது, தலைவி நிறுத்த முயன்றும் நிற்காமல் கணநீர் மல்கத், தலைவனை முயங்கி விடையளிப்பள் *[கலி.35:11]*. இரவுக்குறிக்கண் தலைவன் வராதபொழுது நீரற்ற நிலத்தின் பயிர்போல, வாடி, வந்தபொழுது மழை பெய்யப் பெற்ற நிலத்தின் பயிர்போலத் தலைவி வனப்புறுவாள் *[கலி.38:11]*. தலைவன், தன் சூளுரையைப் பொய்த்ததாகக் கருதும் தலைவியிடம், 'நம் தலைவனின் அருள் உள்ளத்தில் கொடிய எண்ணம் தோன்றாது; தோன்றுமாயின், நிழலையுடைய குளத்துள் நீரில் நின்ற குவளை வெந்த தன்மைத்தாகும்' என்று தோழி கூறினாள் *[கலி.41:31]*. வரையாமல் காலம் நீட்டிக்கும் தலைவனைப் பழிக்கும் தோழியிடம், 'பரிசிலர்க்குத் தேரைக் கொடுக்கும் வளவிய கையினராகிய தலைவர், நம்மிடத்துத் தன் மலையின் நீரினும் மென்மையுடையராதலால் வரையாமல் விடுவாரோ' என்று தலைவி புகழ்ந்தாள் *[கலி.42:20]*. எதிர் எதிரே நிற்கும் இரு மலைகளிலிருந்து வரும் அருவி, அழகிய கிளைகள் மீது விழ, முதிர்ந்த பூங்கொத்துக்களைச் கொண்ட வேங்கை மரத்தின் தோற்றம், அழகிய இருயானைகள் பூவோடு கூடிய நீரைச் சொரிய முறுக்கு நெகிழ்ந்த தாமரை மலரில் திருமகள் வீற்றிருப்பதனை ஒக்கும் *[கலி.44:5]*. மலையில் மணம் வீசும் சுனையில் வளர்ந்துள்ள அழகிய காந்தளினது குலையினைப், பெரிய பாம்பு நீரை உண்ணுவதாகக் கருதி, அதை அழிப்பதற்காக இடியேறு முழங்கும் முழக்கத்தினைக்கேட்டுக் கானவர் துயில் நீப்பர் *[கலி.45:3]*. மலையின்கண் மூங்கிலின் கோலை, நெல்லுடனே வளைத்துத் தின்கின்ற பிடியானை, வாழை செறிந்த இடத்தில் புகுந்து வருடை மானினது குட்டிகள் பரந்து திரிகின்ற அவ்விடத்தில், விடியலில் துயில் கொள்ளும் சோலையினையும், விளங்குகின்ற நீர் பொருந்திய மலையையு முடையவன், தலைவன் *[கலி.50:5]*.

தலைவி, தோழியிடம், 'வளையணிந்தவளே கேள், ஒரு நாள் அன்னையும், யானும் இல்லில் இருக்கும்பொழுது சிறுவயதில் நமது விளையாட்டுகளில் குறும்புத்தனம் செய்த ஒருவன் வந்து, இல்லிரே, உண்ணும் நீர் வேட்டேன் என்றான். அன்னையும் உண்ணும் நீர் ஊட்டிவா என்றாள்; யானும் கொண்டு சென்றபோது, அவன் எனது முன் கையைப்பிடித்து இழுத்து வருத்தினான், திகைப்படைந்த நான் அன்னையே இவன் என்ன செய்தான் என்று அலறினேன்; அன்னையும் விரைந்து ஓடிவரவும் உண்ணும் நீர் விக்கினான் என்று கூறினேன்; அன்னையும் அவனுடைய முதுகைத்தடவிக் கொடுத்தாள்; அப்பொழுது கடைக்கண்ணால் என்னைப்பார்த்துக் காதலில் என்னை அக்கள்வன் வயப்படுத்தினான்' என்று தன் காதலனின் குறும்பினைக் கூறினாள் *[கலி.51:6,8,13]*. கயல் உமிழ்கின்ற நீர்போலப், பிரிந்திருக்கின்ற தலைவியின் கண்கள் கண்ணீரைச் சொரிந்தன *[கலி.53:11]*. தலைவி, நீரில் பூவாத பொன்னால் செய்யப்பட்ட பூவினால் அமைந்த கோதையை உடையவள் *[கலி.54:1]*. தலைவியின் மெல்லிய தோள்கள், காமக்கடலின் நீரைக் கடப்பதற்கு வேழக்கோலால் செய்த தெப்பத்தைப் போன்றிருந்தது *[கலி.56:20]*. 'நீராடற்குக் கொண்டு செல்லும் யானையைப் பறையறைந்து கொண்டு செல்லுவது போல, உன்னைப் பறையறைந்து உலவவிடாத வேந்தனே தவறுடையான்' என்று தன்னால் காதலிக்கப்பட்டாளைக் குறித்து, ஒரு தலைவன் கூறினான் *[கலி.56:32]*. மணமாகாத மகளிர் தைத்திங்களில் நீராடி நோன்பிருப்பர் *[கலி.59:13]*. தலைவியிடம், தோழி, தலைவர் என்னிடம் நின் தலைவி எனக்கு உள்நிறை காமநோய் மிகும்படி கடுக உயிர்போகும் படியான துயரைச் செய்தல், பெண் தன்மைக்கு அழகன்று, என்று கூறிக், கண்ணீர் கலங்க நின்று நடுங்கினான்' என்று, தலைவனின் குறையைக் கூறினாள் *[கலி.60:8]*. உனக்கு இன்பமென்று பிறருக்குத் துன்பம் தரலாமா என்று கேட்ட தலைவியிடம், 'நீர் உண்பவர் தமக்கு இனிதென்று உண்பாரேயன்றி, நீருக்கு இனிதாயிருக்குமா என்று கருதி உண்பரோ', என்ற தலைவன் கூறினான் *[கலி.62:10,11]*. மலர் விற்போர் பறித்துக் கொண்டு சென்று விற்கும் கருங்குவளை மலர், பெரிய நீருள்ள நிலைகளில் மலரும் *[கலி.66:1]*. புலவர் பாடும் பெருமையையுடைய வையையாற்றின் நீர் சூழ்ந்து மதிலைப்பொரும் பகையன்றிப் பகைவர் போரால் வளைத்தலைச் சிறிதும் அறியாதது மதுரை *[கலி.67:4]*. நூல் வல்லோரால் நல்ல சொற்களையே கேட்டுப் பழகிய காதுகள், விளைநிலமாகவும், முன்னுள்ள சான்றோர் கூறியுள்ள செய்யுட்கள், அந்நிலத்தை வளர்க்கும் நீராகவும், அறிவு அமைந்த நாவாகிய ஏரால் உழுது உண்ணும் புலவர்கள் பாடியளிக்கும் புதுப்பாக்களைக் கேட்டு மகிழ்வதற்கு இடமாயது மதுரை *[கலி.68:4]*. பொய்கையிலுள்ள அன்னங்களில் ஆண் அன்னத்தைத் தாமரையிலை மறைத்ததாக, அதை அறியாத பெண் அன்னம் தன் சேவலைக் காணாது கலங்கி நீருக்குள்ளே திங்களின் நிழலைக்கண்டு, சேவலென்று கருதி நெருங்க, எதிரே வருகின்ற ஆண் அன்னத்தைக் கண்டு நாணிப் பல் பூக்களின் செறிவுக்குள் மறையும்படியான வள

வயல் சூழ்ந்த ஊருக்கு உரியவனாவான் தலைவன் [கலி.70:4]. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம், தோழி, 'நீ தலைவியைத் தேடி வராததால் வருந்திய அவளுடைய நீர் சொரியும் மலர் போன்ற கண்கள் சிறிது உறங்கவும் கூடும்; ஆனால் பரத்தையரை உனது மாளிகைக்குக் கொண்டு வரும் உனது தேரின் மணியோசை அவள் உறக்கத்தைக் கெடுக்கின்றதே' என்று வருந்திக் கூறினாள் [கலி.70:16]. தலைவனின் பிரிவால், பெருக்கு மாறாது வீழ்கின்ற தலைவியின் கண்களுடைய நீர், காமத்தீயால் வறண்டு, துளியாக விழுந்தது [கலி.71:4]. குளத்திடத்து நின்ற, புதிய நீரிடத்தனவாகிய, பசிய தூறுகளின் மேலே, இடைவிடாது வருகின்ற திரைகள் மோதும் [கலி.72:5]. 'யாற்றினின்று மிக்குச் சென்று வீழ்கின்ற நீராலும் நிறையாத கடல் போன்ற, அவா அடங்காத பரத்தைமையையுடையவன், தலைவன்' என்று, தலைவி கூறினாள் [கலி.73:19]. விளையாட்டு மகளிர், நீர் நிறைந்த வயலில் மலர்ந்த நெய்தற் பூவையும், ஆம்பற் பூவையும் பறிக்க ஓடும்போது, அவரின் சிலம்பொலிக்கு அஞ்சிப் பறவைக்கூட்டம் ஓடும் [கலி.75:1].

இயல்பாகவே சிவந்திருக்கும் உன் கைவிரல்கள், மேலும் சிவக்கும்படி, இக்கோரையை நெடும் பொழுது நின்று வாங்குகின்றனையே, என்று சொல்லித், தலைவன், கடல் நீர் வந்து ஏறின் கழியிடத்துத் தண்டான் கோரையைப் பறித்துக் கிழித்துப் பாவையாக்கித் தலைவிக்குத் தந்தான் [கலி.76:7]. தன்னால் விரும்பப்பட்டவனுக்காக அழும் ஒரு பெண்ணின் கண்களின்றும் சொரியும் நீர், அவளுடைய கொங்கைகளின் மீது தெறித்து விழுவது போல, ஒத்ததன்மையவான இரு அரும்புகளுக்கு நடுவே, தனித்து மலர்ந்த தாமரை மலர், பறவைகளின் தாக்குதலினால், அந்த அரும்புகளின் மீது தன் உள்ளிருந்த புனலைச் சொரிதல் தோன்றியது [கலி.77:4]. நீரிடத்தே இலையின் கீழே, மறைந்து நின்ற அழகிய இதழையுடைய தாமரைப்பூப்போலப், பச்சைக்குடையின் நிழலிலே தலைவியின் இளங்குமரன் இருந்தான் [கலி.84:10]. அழகிய நீரில் அல்லியையுடைய நீலப்பூ, அனிச்சப்பூ, முறுக்கு நெகிழ்ந்த முல்லைப்பூ முதலியன மலரும் [கலி.91:1]. கரையின் நின்றதொன்றின் நிழல் நீருக்குள்ளே நுடங்கினாற் போன்ற, நுடக்கத்தையும், கூனையும் உடையவள் கூனி [கலி.94:2]. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன், புதிய யானையைக் காணுவதற்காகத் தங்கினேன், என்று கூறுவதைக் கேட்ட தலைவி, ஆம், 'நீ கண்டு வந்த யானை நறிய கள்ளாகிய நீரை உண்ணும்' என்று எள்ளிப் பேசினாள் [கலி.97:10]. புதிய யானையை ஏறிக் காணத் தங்கினேன், என்ற பரத்தமைத் தலைவனிடம், சிறிய களிப்பையுடைய மக்களழகை உண்டற்குக் காரணமான கண்களை உடைய யானையை (பரத்தையை) நீர்க்குவிட்டு (நீராடிவிட்டு) ஏறினாய்', என்று தலைவி இகழ்ந்து கூறினாள் [கலி.97:27].

குடம்பால் கறக்கும் ஆன் திரள், மழை மிகுதியாகப் பெய்த காட்டிடத்தே சென்று, அவ்விடத்தில் நின்ற பெரிய அறுகம்புல்லை நிறையத் தின்று, நீர் நிறைந்த நிழலில் தங்கும் [கலி.109:3]. தலைவன், தலைவிக்கு நீரிலே அசைகின்ற பொலிவையுடைய தாமரைப்பூவைத்தந்தான் [கலி.112:1]. தலைவன் பிரிந்தமையால் தலைவி, துளியோடு தங்கின பூப்போல, நிற்காது விரைந்து விழும் நீரிலே கிடந்த நீந்துகின்ற கண்ணன் ஆனாள் [கலி.121:10]. வெண்திரையினையுடைய கடல், வெண்மையையுடைய இடுமணலிடத்தே வந்து சூழ்ந்து விளங்குகின்ற, நீரையுடைய தண்ணிய சேர்ப்பன், தலைவன் [கலி.124:4]. தலைவி தன் காமநோயைத் தோழிக்கும் தெரியாமல் மறைத்தும், வென்ற வேலினது முனையையொக்கும் அவளுடைய கண்கள், தன் அழகையிழந்து, நீர் நின்று உகும்படியாக அழுது வெளிப்படுத்திவிடும் [கலி.124:16]. இலங்குகின்ற நீரையுடைய சேர்ப்பனே! தலைவிபுலந்தழப் புல்லாது விடுகின்றாய்; கொடியை, எனத், தோழி தலைவனிடம் கூறினாள் [கலி.125:15].

கழியில் நீருக்கும் மேலே வந்து மலர்ந்து மணம் வீசும் மலரின் மணத்தினைத் தலைவனின் மார்பினுடைய மாலையின் மணம், என்று, தலைவி மயங்கினாள் [கலி.126:10]. விளங்குகின்ற 'நீரையுடைய சேர்ப்பனே, என்றும், வலியினையுடைத்தாகிய நீரையுடைய சேர்ப்பனே, என்றும், தலைவனைத், தோழி விளித்து, அருள்செய்து வரைக', என்றாள் [கலி.127:5,22]. பாய்கின்ற அலையோசை அடங்காத பரந்த நீரைக் கொண்ட பனிக்கடலே, தலைவரைப் பிரிந்து வருந்தும் மகளிர்க்காக நீயும் வருந்தி முழங்குகின்றாயா' நீயும் எம்போல் காதலனைப் பிரிந்து வருந்தி முழங்குகின்றாயா' என்று, தலைவி, காமமிக்க கழிபடர் கிளவியால், கடலினைப் பார்த்துக் கேட்டாள் [கலி.129:8]. தலைவன், நீரையுடையதாகிய பெரிய கடல் தெய்வத்தைக் காட்டி, நின்னிற் பிரியேன், என்று, சூளுரைத்து மறந்ததையறிந்து, தலைவி வருந்தினாள் [கலி.131:1]. நீடிய வெண்மையையுடைய நீர்க்கிடக்கை விளங்குகின்ற, நீர்மையையுடைய கடற்கரைக்குத் தலைவன் முன்போல் இப்போது அருள்செய்து வரைவான்', எனத், தோழி கூறினாள் [கலி.131:43]. புகழ்மிக்க சிறப்பினோன் (தக்கணாமூர்த்தி தேவர்)' தாம் இருந்த கல்லால மரத்தில் தொங்கவிட்ட நீர்நிறைந்த குண்டிகை போலப், பழந்தூங்கும், தாழம்பூ அலர்ந்தவை போலத் துறையில் குருகினம் தங்கும் [கலி.133:4]. மாயவன் (திருமால்), தன் பகைவருடைய யானையினது மத்தகத்திலே அழுத்தின சக்கரம் போல, ஞாயிறு, தான் பரப்பிய கதிர்களைத் தன்னிடத்தே குவித்துக் கொண்டு மலையைச் சேர்ந்து மறையும், மாலைப் பொழுதிலே, பெரிதாகிய கடலில் ஏறுகின்ற நீர்மிக்குக் கரையைச் சேர்ந்தது [கலி.134:6]. அலைகள் கரையில் வந்து மோதி அலைக்கும்பொழுது ஊறுகின்ற நீரையுடைய மணலினுள், வளையிலிருந்து வெளிப்பட்டு விளையாடித் திரியும் நண்டுகள், சூதாடுகளத்தில் உருட்டப்படும்

கவற்றினை (சூதாடும் கருவிகள்) ஒக்கும் *[கலி.136:2]*. தலைவி, தலைவனின் உள்ளத்தில் ஒருகால் தோன்றி, மறுசமயம் நீருள் தோன்றிய நிறைமதியினுடைய நிழல்போல் தலைவனால் பற்றுதற்கு அரியவளாயினாள் *[கலி.141:8]*. காமம் மீக்கூர்ந்த தலைவி, 'மறுவில்லாத ஞாயிறே, நீ மேலைமலையில் மறையப் போகின்றாய் ஆதலின், நீ சில கதிர்களைத் தந்துவிட்டுப் போ; நீ நாளை வந்து கடல் நீரினிடத்தே தோன்றிப் பகலைத் தருகின்ற வரையில் என்காதலனை நான் தேடிப்பார்க்கிறேன்', என்று ஞாயிற்றினிடம் கூறினாள் *[கலி.142:42]*. பிரிந்த தலைவனுக்காக வருந்தி அழுத தலைவியைத், தலைவன் வந்து தழுவினான்; அவளும் தேற்றாவினுடைய விதையைக் கொண்டு தேய்க்கும்பொழுது கலங்கிய நீர் தெளிவது போலச், சிதைவு நீங்கிப் பழைய நலத்தைப் பெற்றாள் *[கலி.142:65]*. தலைவனைப் பிரிந்த தலைவியொருத்தி, மிகுகின்ற நீரையுடைய உலகத்துள் கணவரை இழந்த மகளிர், தம்காதலர் மேல்கொண்ட அன்பினால் தாமும் இறந்து துறக்கத்தே சென்று பெறவேண்டியவற்றைப் பெறுவர் என்று நூல்கள் கூறும். யானும் அவ்வாறே உயிரைவிட்டு அந்நிலையை அடைவேன் என்றாள் *[கலி.143:44]*. நீரில் மலர்ந்த நீலமலரோ எனத் தலைவனை வருத்திய தலைவியின் கண்கள், இப்பொழுது பிரிவினால் பீர்க்கமலர் போலப் பசந்து ஒளியிழந்தன *[கலி.143:50]*. தலைவனைப்பிரிந்த தலைவி, 'ஊரெல்லாம் சுற்றி எரியும் நெருப்பினை நீர் சொரியின் சினம் மாறும் (அவியும்); ஆனால் தலைவனால் தரப்பட்ட எனது காமநெருப்போ நீருள் புகுந்தாலும் சுடுகின்றதே' என்று வருந்தினாள் *[கலி.144:60,62]*. தலைவன் பிரிதலால் தலைவியின் பெரிய அமர்த்த உண்கண், நீர் நிறைந்து ஒழுகி அவளுடைய கொங்கைகளில் வழிந்து ஓட, அவனைத் தேடி மனஞ்சுழலுவாள் *[கலி.146:7]*. தலைவனைப் பிரிந்த தலைவி ஒருத்தி, 'எனது மெய்க்கண் நின்று எரியும் காமநோய், மழையெல்லாம் என்னிடத்தே நின்று பெய்யினும் ஆறாது; இது தணியும்படி உலகத்துள்ள நீரையெல்லாம் என்னிடத்தில் அடைத்து வைத்து என் உயிரைக் காப்பாற்றுங்கள்' என்று சான்றோரிடம் கூறினாள் *[கலி.146:43]*. தலைவன் பிரிவினால் காதல் மீக்கூர்ந்த தலைவியொருத்தி, ஞாயிற்றிடம், 'ஞாயிறே, இருளைப்போக்கும் மதி, தோன்றுமாறு போல நீ நீருள்ளே தோன்றுகின்றாய்; அங்குள்ள தேரையால் தின்னப்படுவதினின்றும் காப்பாற்றிக் கொள், என்று கூறினாள் *[கலி.147:31]*. தீவினையைப் போக்குகின்றவனுடைய அருளைக் கொண்ட முகம் போலத், திங்கள் வளப்பமான நீரையுடைய கடலின் திரைமேலே தோன்றி மயக்கத்தைத் தரும் இருளைப் போக்கும் *[கலி.148:5]*. 'வரிசையான மீன் படகுகள் களிறுகளாகவும் அலையோசையே பறையாகவும், கரையைச் சேர்ந்த புட்கள் காலாட் படையாகவும் பாண்டியன் பகைவர்மேல் படையெடுத்துச் சென்றாலொத்த செலவினையுடைய வலிமையினையுடைய நீர் நிறைந்த கடற்கரைக்குத் தலைவனே' எனத், தோழி, தலைவனை விளித்தாள் *[கலி.149:3]*. தலைவ்னைப் பிரிந்த தலைவியிடம், நீரைத் தன் சடையிலே மறைத்து வைத்துள்ள சிவபெருமானின் பொன்னிறம் போன்ற நினது மேனியின் அழகு கெட்டு ஒளியிழக்குமாறு, தலைவர் விடுவாரோ', என்று, தோழி கூறினாள் *[கலி.150:9]*. நெருப்பும், காற்றும், வானமும், நிலமும், நீருமாகிய ஐம்பூதங்களும் திருமாலிடத்துத் தோன்றியவையாகும் *[பரி.3:4]*. திருமாலின் வெளிப்பாடும், பெருமையும் நீரின்கண் உள்ளன *[பரி.4:30]*.

முகில் நீர் நிறைந்து துளும்புவதால் தமது பாரம் தீர்ந்து இளைப்பாறுதற் பொருட்டுப் பெய்வது போல, மழையைப் பொழிந்தது *[பரி.6:1]*. மலைச்சாரலில், மானினம் கலங்கவும், மயில்கள், களித்து அகவவும், மலைகளில் படிந்துள்ள மாசுகள் நீங்கவும் மழையின் மிக்க நீர் அருவியாய் வீழ்ந்தது *[பரி.6:6]*. வையையாற்றில் வெள்ளம் வந்ததைக் கொண்டாடும் நீராட்டுவிழாவின் பொருட்டு வகுக்கப்பட்ட அணியின்கண், வரிசையாகப் பிடியானைகள் சென்றன *[பரி.6:26]*. வையை வெள்ளத்தில் விளையாடலை விரும்பி ஆடவரும், மகளிரும் மணமிக்க பனி நீர் நிரப்பப்பட்ட கொம்புகளையும் கொண்டு சென்றனர் *[பரி.6:34]*. தலைவன் கொடுத்த தளிர் துவண்டு இருத்தலைக் கண்ட காதற்பரத்தை, இது வேறொருத்திக்காகக் கொய்து, அவள் மறுத்துக் காலந்தாழ்ந்ததால் துவண்டுள்ளது, என்று கூறி, ஊடினாளாகத், தலைவன், வையையில் வெள்ளப் பெருக்கின் மிகுதியால் புணையேறி வருவதற்குக் காலந்தாழ்த்தமையின், வையை நீர் காரணமாக இது துவண்டது என்று கூறினான் *[பரி.6:19]*. 'அச்சந்தரும் ஆழ்ந்த நீரினையுடைய வையையே, நின்பயனைப் பாடிப் பின்னால் என்றும் இப்பயன்பெற்று, விடிவுற்று, இன்படைக', என்று அன்பர் வையையை வேண்டினர் *[பரி.7:84]*. திருப்பரங்குன்றம், இம்மண்ணுலகில் மழை வறந்து போயினும், ஒழுகும் அருவிநீர் இடையறாது ஒழுகும் பெரிய செல்வம் வாய்த்து என்றென்றும் நிலை பெறுவதாக, என்று, புலவர் நல்லந்துவனார் பாடினார் *[பரி.8:128]*. வையையில், ஆடவரும், மகளிரும் புனலாடும் பொருட்டு, அரக்கு நீரை எங்கும் தெளிக்கும் துருத்தி முதலிய கருவிகளையும், முத்துப்போன்ற பனி நீரோடு அளவிய சந்தனத்துடனே, மூயின்கண் (மூடியையுடைய பெட்டி) கொண்டு சென்றனர் *[பரி.10:12,13]*. மதுரையின் மக்களில் சிலர் வையையாற்றின்கண் பெருகியோடும் புதுநீரின் அழகினைக்கண்டு நின்றனர் *[பரி.10:27]*. வையை வெள்ளத்தில் புனலாடும் மகளிருட் சிலர், அப்புதுவெள்ளம் ஒப்பனைபெறும் பொருட்டு, மலர் மாலைகளையும், சந்தனம் முதலியவற்றின் குழம்புகளையும் கத்தூரியினையும், அணிகலன்களையும் அந்நீரின்கண் இடுவர் *[பரி.10:93]*. வையையில் புனலாடிவிட்டு மதுரைக்குள் திரும்பும் மக்களின் மீது, அழகிய மேனிலை மாடங்களில் அகத்திருந்து மகளிர் மணமுடைய பனிநீரினைத் தூவுவர் *[பரி.10:124]*.

பாய்கின்ற புனல் பலவிதமான பொருள்களைத் தள்ளிக்கொண்டு வந்து அகன்ற திருமருதந்துறை என்னும் நீராடுதற்குரிய அழகிய துறையின்கண் சேர்த்தது [பரி.11:30]. பிறை தோன்றி வளர்ந்து அதன் நிலவொளி எங்கும் பரவுதல் போல, வையையில் நீர் சிறிது சிறிதாகப் பெருகி எங்கும் பரவியது [பரி.11:33]. தலைவன், தலைவியை அழைத்துக் கொண்டு இடைச்சுரத்தில் செல்லும்போது, அஃதறிந்த தலைவியின் தமர், இடைச்சுரத்தில் அவனை மறித்துப் போர் செய்தாற் போல, வையையாறு மதுரையிலுள்ளோர் இடையே தடைசெய்து நீராடுதற்கு ஏற்றதாகும் [பரி.11:49]. வையையில் மகளிரும், மைந்தரும் வெள்ளமாகப் பெருகிய அந்நீரின்கண், நீந்தற்குரிய ஆழியவிடத்தே குதிரைகளைச் செலுத்திக் கலக்கியும், மூங்கிற் குழாயாலே புனலை வாங்கித் தம்மேல் செலுத்துகின்றவர்களை அரக்கு நீர் அடக்கிய வட்டாலே எறிந்தும், யானைக்கொம்பில் அடக்கப்பட்ட மணநீரினை வீசியும் விளையாடினர் [பரி.11:53,55,57]. மகளிர் நீராடுதற்கேற்ற அணியினை உடையராய்க் காதலரோடு கள்ளுண்டு களித்தனர் [பரி.11:62]. பாய்கின்ற நீரையுடைய வையையில் ஒருவன் வாழைத் தண்டினைத் தழுவி ஆடினான் [பரி.11:106]. வையையாற்றில் ஒருவன், ஒருத்தியின் அழகில் ஈடுபட்டுக், கண் அசையாது நிற்ப, நீரோ அவளிடம் அவனைக் கொண்டு செல்லாது, வேறொரு பக்கத்தில் இழுத்துச் சென்றது [பரி.11:109]. கார்ப்பருவத்துச் சிவந்த நிறமுடைய வையை நீரானது பெருவெள்ளமாய்க் கரையினை மோதி வந்தது; தைந்நீர், புனலாடற்கேற்ற அளவினதாய், நிறம் தெளிந்து, புனலாடுவோர் பாராட்டும்படி வந்தது [பரி.11:14,115]. மதுரைமக்கள் நறிய நீரினையுடைய வையை, இத்தைந்நீராடலையாம் மறுபிறப்பிலும் பெறுவேமாக', என்றனர் [பரி.11:140]. முகில் இடையறாது மழையைப் பொழிவதால், வையையாற்றில் இனிய நீர் வரவு, கடல் கிளர்ந்து வருவதனை ஒக்கும் [பரி.12:7]. வையை நீர், புனலாடும் இடங்கள் சிறக்கும்படியும், மதுரை வாழ்மக்கள் புகழும்படியும், வந்தது [பரி.12:32]. ஊடிய தலைவியொருத்தி, பூவினது மணத்தையும், அழகையுமுடைய அரக்கு நீரால் நிறைக்கப்பட்ட வட்டினைத், தன் காதலன் மார்பில் எறிந்தாள் [பரி.12:68]. வையையாறு, மலர் மணங்கமழ வந்து, இரு கரையையும் மோதிக், கலங்கிப், பின்னர் பாறையிலே தேங்கி நின்று, மாலைப் பொழுதிலே தெளிந்து, வானுலகத்தே நிகழும் தொழிலைத் தனது நீர் நிழலிலே காட்டும் [பரி.12:84]. துகிலின் கண் சேர்ந்த பூத்தொழில் போல, நீரின்கண், மணிகள் நிறைந்திருந்தன [பரி.12:93]. திருமால், ஓசை, ஊறு, ஒளி, சுவை ஆகிய நாற்புலனானும் உணரப்படுவதாகிய நீராக உள்ளார் [பரி.13:21]. முகில் மிகுதியான மழையைப் பெய்ததால் சுனைகளில் நீர்மிக்கு மலர்கள் மலர்ந்தன [பரி.14:2]. திருப்பரங்குன்றத்தில், கார் காலத்தில், நீர் நிலையின் பக்கத்தே, காந்தளின் நெடிய பூங்கொத்துக்கள் மலர்ந்தன [பரி.14:13]. திருப்பரங்குன்றத்தில், நெடிய சிமையங்களினின்றும் வீழும் அருவி நீர் ஆரவாரிக்கும் [பரி.17:14]. முருகவேள், பரந்த நீரைப் பெற்றுள்ள கடலினுள், சூரினை (சூரபன்மாவை) அழித்தார் [பரி.18:3]. திருப்பரங்குன்றத்தில் முகில் துளித்த நீர் நிறைந்துள்ள சுனைகள் மலர்கள் செறிந்துள்ளதால் காமவேளின் அம்பறாத் தூணியையொக்கும் [பரி.18:32]. முருகவேளின் திருப்பரங் குன்றத்தில், உள்ள கோவில் யானையின் மத்தகத்தின் மேல், குங்குமத்தால் கோலஞ்செய்து, மலரொடு நீரையும் இனிதாக ஊட்டி, ஒப்பனை செய்து, அதன் பிடரியில் கோழிச்சேவலின் கொடி உயர்த்திக், கோவிலை வலம் வந்து பூசனை செய்வர் [பரி.19:86]. சூல் முற்றிய முகில், கடல் வற்றும்படி முகந்து கொணர்ந்த நீரை மலையில் பெய்து, புலியைக் கொன்ற யானையின் மருப்பில் உள்ள குருதிக் கறையைக் கழுவியது [பரி.20:1]. வையையில் வந்த புது வெள்ளத்தின் நீர், மதுரையின் மதிலிடத்துள்ள சுருங்கையில் ஓடும் ஒலியைக்கேட்டு, மதுரை மக்கள் புனலாடற்குப் புறப்பட்டனர் [பரி.20:15]. வையையாறு, சுனைகளினின்றும் கழிந்து கீழே விழுகின்ற நீர்ப்பூக்களையும் தள்ளிக்கொண்டு வந்தது [பரி.20:101]. வையை மதிலின்கண் உள்ள பெரிய சுருங்கையினூடே (பெரிய குழாய்) வந்து பெருந்தன்மை மிக்க நீரைச் சொரியும் பொழுது, அப்புனல் களிற்றுயானை தன் கையை உயரத்தூக்கிச் சொரிகின்ற நீரை ஒக்கும் [பரி.20:105,106].

திருப்பரங்குன்றம் யானை போலவும், அழகிய அருவிநீர் முகபடாத்தினைப் போலவும் விளங்கும் [பரி.21:14]. முருகவேளின் திரப்பரங்குன்றத்தில் அருவிநீரின் ஒலி,தாளத்தையுடைய மத்தளத்தின் முழக்கம் போன்றிருக்கும் [பரி.21:36]. திருப்பரங்குன்றத்தில், அருவி நீர் விழுகின்ற சுனையின் நடுவே, புனலாடிய ஒருத்தி, நீரினுள் முழுகி எழுந்தாள்; அவ்விடம் ஆழமாக இருந்ததால் கரையினில் நிற்கும் தன் கணவனைப் பார்த்து நீரிலே அழுந்துகின்ற தனது கையின்கண் புணையாக மூங்கிலைத் தருவாயாக என்றாள்; அவன் புணைகொடாது அரக்கு நீர் வட்டியை அவளிடம் எறிந்தான்; புணைபெறாமையாலே அந்நீரிடை அவள்படும் அல்லலைக்கண்டு, அவளின் காதலன் மகிழ்ந்து செவ்வியறிந்து அச்சுனையில் பாய்ந்து அவளைத் தழுவினான் [பரி.21:39,43(5)]. வானத்தில் முகில்கள்கூடிப் பாண்டியனுடைய வள்ளன்மையைப் போன்று நீரைச் சொரிந்தன [பரி.22:8]. வையையில் புனலாடும் மைந்தரும் மகளிரும் இவ்வையைக்கு அழகினைக் கொடுத்தாரோ, இவ்வையையினது நீரானே அழகுற்ற வெள்ளம் இவர்க்கு அழகைத் தந்ததோ என்று ஆராய்வோர் எவ்வளவு முயன்றாலும் கூறமுடியாததாய் இருந்தது [பரி.22:33].

முகில்கள் சைய மலையில் பெய்த, இன்றியமையாத ஆருயிர் மருந்தாகிய, இனிய மழைநீர் பெருகி வரும் வையையின் துறையிடத்தே பொருந்திய இருந்தையூரில் திருமால் எழுந்தருளியிருக்கின்றார் [பரி.தி.1:4]. முகில் இப் பெரிய நிலம்

மறையும்படி உலகிற்குப் பாதுகாவலாகிய நீரினைச் சொரிந்தது *[பரி.தி.2:2]*. புதுநீர் வருகையாலே வையையாறு பொலிவுறும் *[பரி.தி.2:2]*. நீராட்டிற்குரிய மணம் பொருந்திய அழகுப் பொருள்கள் விற்கும் கடைத்தெருவிற்குச் சென்று மைந்தரும், மகளிரும் அழகு செய்து கொண்டனர் *[பரி.தி.2:9]*. வையையில் புனலாட்டயருங்கால், தலைவன், காதற்பரத்தைக்குத் தெரியாமல், இற்பரத்தையை அடையுமாறு மலர்மாலையைப் புனலிலே போகவிட்டான்; அதனை அறிந்துகொண்ட காதற்பரத்தை, தலைவனிடம், 'இம்மாலையைப் பெறுவதற்கு அவளுடைய இளங்கொங்கைகளும், இப்புது நீரும் அவளுக்குத் துணைசெய்கின்றன. நீயும், செவ்வியறிந்து, நீரில் மாலையைவிட்டு அவளுக்குத் துணை நின்றனை, எனக் கூறி, ஊடினாள் *[பரி.தி.2:44(2)]*. வையையாற்றில், நீர் வரிசைவரிசையாக, நுரைகளைக் கொணரும் *[பரி.2:66]*. வையையாறு, மகளிருடைய மணப்பொருள்களாலும், மைந்தருடைய மணப்பொருள்களாலும் நிரம்பப் பெற்று, நீரின் நிறம் சிறிது கூடத் தோன்றாததாகிவிட்டது *[பரி.தி.2:86]*. மழைநீர் அற்று வற்றிக்கிடக்கும் குளத்தின் புனல், கலங்கிக் கிடப்பதைப் போன்று, வையை கலங்கிய நீரையல்லது, சிறந்த நல்ல நீரை உடைத்தன்று *[பரி.தி.2:87,89(2)]*.

**2. நீர்மை (தன்மை)** சிவந்த நீரை- நீர்மையை- உடைய பசிய பொன் கூத்தர்க்கு வழங்கப்பெற்றது *[புற.9:9]*. தாமப்பல் கண்ணனார், சோழன் மாவளத்தானைப், பார்ப்பார் வெறுக்கத்தகுவன செய்தல் நினக்கு நீர்த்தோ, எனக் கேட்டார் *[புற.43:15]*. கூரிய வாட்படைகள், தம்முடைய நீரின்படி, மேலும் கீழுமாகச் சுழலப்பாசறையில் முரசுமுழங்கும் *[புற.371:10]*. அருவந்தை என்பானுக்குரிய அம்பர் என்னும் ஊர், காவிரியாறு பாயும், தாழ்ந்த நில, நீரினையுடைய தோட்டங்களை உடையதாகும் *[புற.385:8]*.

பாடினி, சீரையுடைய தேவபாணிகளை, நீரொடு பரக்கப் பாடினாள் *[பொரு.24]*. கொற்கையின்கண், உமட்டியருடைய புதல்வரொடு மகளிர் எயிற்றையொத்த, செறிந்த நீர் முத்தைக், கிளிஞ்சிலின் வயிற்றில் அடைத்து மந்தி கிலுகிலுப்பை விளையாடும் *[சிறு.57]*. நெருங்குகின்ற நீரினையுடைய (தன்மையையுடைய) கடம்பின் இணைதல் நிறைந்த மாலை, இந்திர கோபத்தையொத்த தாதினையுதிர்க்கும் *[சிறு.69]*. மதுரை நகரில், சிவந்த நீரினையுடைய கிளிச்சிறை என்னும் பொன்னாற்செய்த பாவை, வீழ்கின்ற கதிர்களிடத்துத் தோன்றினாற் போன்ற, சிவந்த நிறத்தினையுடையராய்ப் பண்ணியம் விற்கும் மகளிர் விளங்கினர் *[மது.410]*. யாழ் முழவோடு 'மெல்லிய நீரினையுடைய சிறுபறையொலிப்பக், கடுஞ்சூல்மகளிர், கை தொழுதனர் *[மது.606]*. பேரியாழானது, நுண்ணிய அரத்தாலே அராவின, நுண்ணிய நீரினையுடைய, கரிய தண்டினையுடையதாயிருந்தது *[மலை.35]*.

நெடிய நீரினையுடைய வானினை, வாவற்பேடை பறந்துகடந்தது *[அக.57:2]*. யானை முழங்கும், நீர் வாய்ந்த பக்க மலையில், தேனுடன் அருவி விழுவது, மத்தளஓசை போலிருந்தது *[அக.172:1]*. அல்லகுறிப்பட்டு நீங்கும் தலைவன், நெஞ்சிற்குக் கூறுவானாய், 'நெஞ்சே, தலைவிமேல் வேட்கை வைத்து என்னைத் துன்பத்தின்கண் செலுத்தினையாகலின் குட்டுவனுடைய மாண்புற்ற நீரினையுடைய வேல் நின் மார்பிலே அழுந்திச் செருக்கு அழியப்பெறுவாயாக' என்று கூறினான் *[அக.212:20]*. தாய், 'மனைக்கிழத்தியாகற்குரிய பருவம் எய்திய நீ, இளமைத் தன்மையையுடையையாய்ப் பந்தினை விளையாடிப் புறத்தே திரியும் நீரினையாய் உள்ளாய், ஆதலின், நினது பெண்மை நீறாக' என்று மகளைக் கடிந்தாள் *[அக.275:5]*. யானை கொம்பு ஒடிதலால் அதிலிருந்து உதிர்ந்த முத்து ஆலங்கட்டியை ஒத்திருக்கும் *[அக.282:7]*.

பொருள்வயின் பிரிந்த தலைவனைக் குறித்துத், தலைவி, தோழியிடம், 'தேரில் விடியற்காலையில் புறப்பட்டுச் சென்ற செம்மையாகிய நீரினையும், பொதுவாகிய செயலையும் உடைய நம் காதலருக்கு, இல்லின் கண்ணிருந்து செய்கின்ற இல்வாழ்க்கையைவிட வேறு சிறந்த பொருளுண்டோ', என்று கூறினாள் *[அக.130:4]*. இடியின் குரல் வலிய முழங்கும் நீரினாலே (தன்மையினாலே), பாம்புகளின் படம் மழுங்கியடங்குமாறு செய்யும் *[நற்.238:8]*. தலைவன், நெடிதாம் நீரினையுடைய (நீர்மையையுடைய) அருவி ஒலிக்கும் அவ்விடத்தில் வாழையின் கொழுத்த கனியை மந்திகள் கவர்ந்து உண்ணும் மலைநாட்டிற்கு உரியவனாவான் *[நற்.251:1]*. பிரிவின்கண் தலைவி உடன்வருதலை மறுத்த தலைவனிடம், தலைவி, 'நீயிர்பிரியின் எனது நீரினை (நீர்மையினை- அதாவது இறந்துபடுதலை) அறியாதீர் போலப் பேசுவதால் என்ன பயன்; நீவிர் மறுப்பது நினக்கு உரிய நன்றாகிய நீரினை உடையதன்று', என்று கூறினாள் *[கலி.6:7,8]*. பொருள்வயின் பிரியும் தலைவனிடம், தோழி, நீவிர் பிரியின், தலைவியினுடைய பண்டைய நீர் போனபிறகு, நீவிர் தேடிவரும் பொருளால் அதனை மீட்க முடியுமோ', என்று கூறினாள் *[கலி.15:13]*. பரத்தையிற்பிரிந்து வந்த தலைவன், தலைவியின் ஊடலைப் போக்குவதற்காகக், காதலால் கனவென்று சொல்லப்பட்டது ஓர் அழகினையுடைத்தாகிய நீர்த்தாய் இருந்தது', என்று கூறினான் *[கலி.92:2]*. பரத்தையிற்பிரிந்து வந்த தலைவன், காலந்தாழ்ந்து வந்தமைக்குப், புனலாடி வந்தேன், என்று, தலைவியிடங்கூற, அதற்குத் தலைவி, நீ ஆடிய புனலுக்கு (பரத்தைக்கு) ஒழுகும் அறல்போன்ற நீண்ட நீரினையுடைய (தன்மையையுடைய) நெறித்த மயிர் உண்டல்லவா; புருவமாகிய திரையைவிட்டு நல்ல நீரினையுடைய நின் ஒழுக்கத்தைத் தடுத்துச், சிலம்பொலியாலே ஆரவாரித்து நின்னை அப்புதுப்புனல் இழுத்துச் செல்லுவதைக் கண்டவரும் உளரே', என்றும் கூறி, நினது நீரினை (நீர்மையையுடைய)யுடைய நெஞ்சைக் கவர்ந்து கொண்ட. அப்புதுப்புனலினின்றும்

கரையேறுதற்கு இயலாமல் இருக்கிறாயல்லவா' என்று எள்ளலாக கூறினாள் [கலி.98:14,24,27]. திருமாலின் தமையனாகிய பலதேவனின் நீலத்தினது நீரினையுடைய ஆடையைக் கடல் ஒத்திருந்தது [கலி.124:3].

தலைவியின் சிவந்த கண்களைப் பாராட்டி, அக்கண்களின் அழகிய நீரினையுடைய நோக்கங்களை இசைப்பாட்டால் தலைவன் பாடினான் [பரி.7:65]. திருப்பரங்குன்றத்தின் சுனையில் புனலாடும் பாவையரின் கண், முகம், தாள் முதலிய தாமரைகள், அவர்களின் வாயாகிய அரக்காம்பலோடு கூடியியங்கும் நீரினையுடையனவாய் இருந்தன [பரி.8:116]. வையையாறானது, கார் காலத்திலே கலங்கியும், வேனிற்காலத்திலே தெளிந்தும் ஒரே நீரினை (நீர்மையினை)யுடையதாய் இருப்பதில்லை [கலி.11:73]. வையையில் புனலாடும் ஒரு பெண், அசோகினது சிவந்த புது மலரைத் தீயிலிட்டுச் சுட்ட ஒளிமிக்க நீரினையுடைய குழை போலத், தொங்கும்படியாகத், தனது செவியிலே செருகிக் கொண்டாள் [கலி.12:87]. திருப்பரங்குன்றத்தின் கீழே இடைநிலப்பரப்பில், யானைகளையும், குதிரைகளையும், தேர்களையும் நிரப்பியிருத்தலால், அப்பரப்பு பாண்டியனின் போர்ப்பாசறையினது நீர்த்தாயிற்று [பரி.19:35]. தலைவியின் தோழி, பரத்தையைக், காரிகை நீரினையுடைய (நீர்மையினையுடைய) வனப்பாகிய வயலிலே, கள்ளாகிய புனலைப்பாய்ச்சிக், காமவெறியாகிய கலப்பையைக் கட்டி, ஆடவராகிய எருதுகள் சோம்பிக்கிடவாமல் உழுகின்ற பழைய படைச்சாலே' என்று திட்டினாள் [கலி.20:53].

3. கடல். சேரமான் யானைக் கண்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையின் வயவர் வெறியாடும் குரவைக் கூத்தொலி, ஓதத்தையுடைய நீரின்- கடலின்- ஒலிபோலக் கிளர்ந்து பொங்கியது [புற.22:23].

இமயவரம்பன் தம்பி பல்யானைச் செல்கெழுகுட்டுவன், விளங்குகின்ற நீர் முத்துடனே, நீண்டபவளக் கொடிகளை, அங்கு வாழ்வோர் எடுத்துக் கொள்ளும், குளிர்ந்த கடற்பாங்கான நெய்தல் நிலத்திற்கு உரியவன் [பதி.30:7]. கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனின் நோயில்லாத யாக்கையை, அரசர்கள் பலரைவென்று, அடைகின்ற நீர் (கடல்) சூழ்ந்த இப்பரந்த உலகத்தை ஆண்டு, வாழ்நாளைக் கழித்து, இறந்துபோன மன்னரையிட்டுப் புதைக்கும் சுடுகாட்டின்கண் உள்ள மட்குடமானது, காணாதொழிவதாக', என்று புலவர் பரணர் பாடினார் [பதி.44:21].

சோழன் குடியில் பிறந்தோனாகிய தொண்டைமான் இளந்திரையன், நீரின் திரை கொண்டு வந்து கரையில் சேர்த்த மரபால், திரையன் என்னும் தம்பெயரைப் பெற்றான்' [பெரு.31]. தொண்டைமான் இளந்திரையனுக்குரிய பட்டினம், பால் போன்ற வெள்ளிய நிறத்தையுடைய மேற்றிசையிலிருந்து வந்த குதிரைகளுடனே, வடதிசைக்கண்ணுளவாகிய நுகரப்படும் பொருள்களையும் கொண்டு வந்து தரும், மரக்கலங்கள் சூழ்ந்து கிடக்கப்பட்ட பொருள்களையும் கொண்டு வந்து தரும், மரக்கலங்கள் சூழ்ந்து கிடக்கப்பட்ட பெருமையினையுடைய, நீர்ப் பக்கத்தினையும் உடையதாகும் [பெரு.321]. திரை எறிகின்ற நீர் சூழ்ந்த உலகத்தே பகைவரை வெல்லுதற்குச் செல்கின்றவன் வேந்தன் [முல்.57]. நீரொலி போன்ற முழக்கம் உடைய வேற்படையோடே, பாண்டியன் நெடுஞ்செழியன் பகைவரை வென்ற வெற்றிக்கொடியும் மதுரையின் கண் பறந்தது [மது.369]. காவிரிப்பூம்பட்டினத்திற்கு நீரின் வழியாக அயல்நாடுகளிலிருந்து குதிரைகள் வந்தன [பட்.185]. நீர் சூழ்ந்த இந்த உலகு நடுங்கும்படியானவரும், நஞ்சை உணவாகவுடையவருமாகிய, சிவபெருமான் நவிரமென்னும் மலையில் பொருந்தியிருக்கிறார் [மலை.81].

பெருநீரிலிருந்து பரதவர் பிடித்து வந்து காயப்போடும் மீன்களை (வற்றலை) பரதவருடைய மகளிர் காவல் காப்பர் [அக.20:1]. பாண்டியன் பழமையான நீரின் துறைமுகமாகிய முசிறியை வளைத்துப் போர் செய்தான் [அக.57:15]. தலைவியை அடைவது குறித்துத் தலைவன் எண்ணும்போது, 'தலைவியின் தந்தையிடம் சென்று, பெரிய நீர்க்கரையினையடுத்த உப்புச்செறுவில் உப்புப்பொதியுடன் திரிந்து வருந்தியும், பெரிய நீரின் ஆழத்தில் புனையின்கண் சென்றும், அவன் வயமாகிப் பணிந்தும், சார்ந்தும் இருப்பின் அறமாதலை உணர்ந்து, அவளைத் தந்தாலும் தரலாம்', என்று, எண்ணினான் [அக.280:8,9]. தலைவியின் ஊர் அலை ஒலித்து எழுந்து சிதறிவிழும் நீரினை எல்லையாக உடையது. அன்றியும், பனை மரத்திலிருந்து கூப்பிடும் தொலைவிலுள்ளது [அக.310:17].

தலைவனுடன் தான் கொண்ட நட்பானது 'நீரைக் காட்டிலும் அளத்தற்கரிய ஆழமுடையது: என்று தலைவி, தோழியிடம் கூறினாள் [குறு.299:1]. பகற்குறிக்கண் வந்து கொண்டிருக்கும் தலைவனிடம் தோழி, 'பெரிய நீரினை வேலியாகவுடைய எமது சிற்றூரின்கண் இரவுக்குறிக்கண் வருக, என்று, கூறினாள் [குறு.345:7].

பொருள்வயின் பிரியக் கருதும் தலைவன் நெஞ்சிற்குக் கூறுவானாய், நெஞ்சே, பெரிய நீரால் சூழப்பட்ட அகன்ற இந்நிலவுலகத்தையே மரக்காலாகக் கொண்டு, ஏழு மரக்கால் அளவு பொருள் பெறுவதாயினும், எனது காதலியின் கண்ணால் கட்டுண்ட யான் பிரியேன் என்று கூறினான் [நற்.16:7].

நீலமணி போன்ற நிறமுடைய நீரினை உடையவனை மறவற்க', எனத், தலைவி கூறுதல் [ஐங்.117:4]. தொண்டிப்பட்டினத்தின் கடற்றுறையில் வலைவாணர் பெரிய நீரிலிருந்து பிடித்துக் கொணர்ந்த மீனினைக் கவர்ந்துண்ணப், பறத்தற்கியலாத கிழக்கொக்கு, செவ்வியைப் பார்த்திருக்கும் [ஐங்.180:1].

திருப்பரங்குன்றத்தில் உள்ள முருகவேள் பகைவரை மாயஞ்செய்து கொல்லாது பரக்கும் நீரிடத்து மாமரமாய் நின்ற சூரபன்மனை வென்று கொன்றார் *[கலி.27:15]*. ஞாயிறு நீரின் மேலே தோன்றி இருளைக் கெடுக்கும். அதுபோல, வேண்டாதார் நெஞ்சுட்கும் வெம்மை செய்பவன் தலைவன் *[கலி.100:1]*. பரந்த திரை விரிகின்ற நீரினை ஆடையாகவுடைய உலகத்தைப் பெற்றாலும் அரிய கற்பினையுடைய ஆயர் மகளிர் இருமணம் புரிய ஒவ்வார் *[கலி.114:19]*. நீலமணி போன்ற நிறமுடைய பெரிய கழி துயில் கொண்ட தன்மையை யொக்கும் நீரினையுடைய குளிர்ந்த சேர்ப்பனே என்று தலைவனைத், தலைவி விளித்தாள் *[கலி.121:6]*. தலைவனைப் பிரிந்து வருந்துகின்ற கண்ணளாய தலைவிக்கு அசைகின்ற நீரிலே எழுந்து முழங்குகின்ற திரைதான் துணையாகி நின்று (அவளை இறந்துபடுத்தாது) ஆரவாரிக்கும் *[கலி.121:8]*. ஆழமான நீரில் பிறந்த முத்தினது அழகை ஒக்கும் முறுவலினையுடையவள் தலைவி *[கலி.131:22]*. வலிமையையுடைய நீரினது திரைவந்து பொரும் உயர்ந்த இடுமணலின் மேல் புள்ளினங்கள் தம் துணையோடே தங்கும் *[கலி.132:1]*.

**4.ஒளி.** தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பிரிந்ததால், அவ்வேந்தனின் மனைவி பெரிய நீர்- ஒளி-பொருந்திய மகரக்குழையை அகற்றிவிட்டுத் தாளுருவி அணிந்த காதினையுடையவளாயிருந்தாள் *[நெடு.139]*.

தலைவி தெளிந்த நீரினை உடைய முத்துக்களை உள்ளே பரலாகப் போடப்பட்ட சிலம்பினை அணிந்திருந்தாள் *[நற்.110:4]*.

தலைவனைப் பிரிந்து அல்லலுற்ற தலைவி, தலைவன் வரக்கண்டதும், அவனைத் தழுவித் துயர் நீங்கியதைக் கண்டோர், 'மணியும் அதனுள் பிறந்த நீரும் போலத் தலைவனும், தலைவியும் ஒன்றாகக் கலந்துவிட்டனர்' என்று கூறி மகிழ்ந்தனர் *[கலி.142:63]*.

**5. அருவிகள்.** மலையினின்றும் விழுகின்ற நீர்-அருவிகள்-, வென்று உயர்கின்ற கொடிகள் போலத் தோன்றும் *[மலை.581]*.

**நீர்க்கால்**-வாய்க்கால். இளமரக்காவினுள் நீர்க்கால்-வாய்க்கால்- ஒடுகின்ற இடத்தே நின்ற ஞாழலினது முதிர்ந்த கொத்துக்களைப் பறித்துத் தலைவி தலையில் சூடிக் கொள்ளுவாள் *[கலி.56:1]*.

**நீர்க்கோழி** - நீரினுள் வாழும் ஒரு வகைக்கோழி. விளைநிலங்கள் நிறைந்துள்ள உறையூருக்கு உரியவனாகிய தித்தன் என்பானுக்குரிய நாட்டில், மனையிடத்துக் கோழியின் பசிய அழைப்பினைக்கேட்டுக், காட்டுக்கோழி தன் கவர்த்த குரலினோடு நீர்க்கோழி- நீரினுள் வாழும் ஒரு வகைக்கோழி-தன்குரலெடுத்துக் கூவும் *[புற.395:11]*.

**நீர்ச்சடைக்கரந்தான்**-நீரைச் சடையிலே மறைத்தவன் (சிவன்). விளங்குகின்ற நீர்ச்சடைக்கரந்தானை-நீரைச் சடையிலே மறைத்தவனை (சிவனை)-ஒத்த பொருளாக்கம் கருதித், தலைவன், தலைவியைப் பிரிந்து வெஞ்சுரங் கடந்து சென்றான் *[கலி.150:9]*.

**நீர்நாடன்**-நீர்வளம் பொருந்திய நாட்டினையுடையவன் (ஊரன்) அதியமான் நெடுமானஞ்சி, நெற்போரோடு துறைக்கண், மலையிடத்துப் பூத்த பூக்களைக் கொணர்ந்தொதுக்கும் தலைநீரால் வளம் பொருந்திய நீர்நாடன்- நீர்வளம் பொருந்திய நாட்டினையுடைவன் (ஊரன்)- ஆவான் *[புற.390:24]*.

கரிகாற்சோழன், கழனியில் விளைந்த நெல்லின் அரிகால் மேல் தேனீக்கள் தேனடை கட்டும்படியான வளம் பொருந்திய நீர்நாடனாவான் *[பொரு.வெ.3:3]*.

**நீர்நாய்**-நீரில் வாழும் நாய். அழும்பில் என்னும் ஊரானது தண்ணிய புனல் நிலைகலங்கும்படி நீர்நாய்- நீரில் வாழும் நாய்-தன் காலை உணவாக, வாளைமீனை உண்டு, அங்கு வாழும் பாம்புகளை, வரால்மீன் என மயங்கி, முதலைகளோடு மாறுபட்டுப் போரிடும்படியான வளமுடையது *[புற.283:2]*.

கிழார் என்னும் ஊர், வயலில் வள்ளைக் கொடியை உழக்கி வாளை மீன்களைத் தின்ற கூரிய பற்களையுடைய நீர் நாய், பிரம்பினுடைய பழைய தூறுகளில் தங்கியிருக்கும்படியான, வளமுடையதாகும் *[அக.6:18]*. சேம்பினது அகன்ற இலையுடன் கூடிய பாசியினையுடைய புனற்பரப்பில், குட்டியுடன் இருக்கும் பெண்நாயின் பசியைப் போக்குவதற்குக் காலையிலே இரையினைக் கொணர்தற்கு எழுந்த நீர்நாய், வாளைமீனைப் பற்றிப் போர் செய்தலின், நீர்த்துறை கலங்கியது *[அக.336:4]*. பொய்கைக் கண்ணுள்ள, புலால் நாறும் பெரிய ஆண் நீர்நாய், நாட்காலையில், வாளைமீனாகிய இரையினை ஆராயும் *[அக.386:1]*.

தலைவன், பிணத்கையுடைய (பின்னிக்கொண்டிருக்கும்) கொடிப் பிரம்புகளைப் போன்று, கோடுகள் பொருந்திய புறத்தினை (முதுகினை) யுடைய நீர் நாயானது, நாட்காலையில் வாளைமீனை உணவாகப் பெறுகின்ற ஊரினையுடையவனாவான் *[குறு.364:1]*.

கரிய கழியின் கண்ணுள்ள நீர்நாயின் குருளை, கொழுவிய மீன்களைப் பிடித்துத் தின்று தில்லை மரப்பொந்துகளிலே பள்ளிகொள்ளும் *[நற்.195:2]*. கிள்ளிவளவனின் வெண்ணி என்னும் ஊர் வாளை மீன்கள் வாள்போலப் பிறழ, அவற்றை இரையாக உண்ணக் கருதாத நீர்நாய், நாள்தோறும் உறங்கும்படியான வளமுடையதாகும் *[நற்.390:2]*.

நீர்நிலையைத் துயிலிடமாகக் கொண்ட புலால் நாறும் இயல்புடைய நீர்நாய் நாட்காலைதோறும் வாளைமீனை இரையாகப் பெறும் *[ஐங்.63:1]*.

**நீர்நிலை- நீர்த்தேக்கம் (கடல்).** பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி நிலம், வானம், துறக்கம் என்ற அடுக்காகிய மூன்றில் முதலதாகிய, நீர்நிலை-கடல், நிறைந்துள்ள, இந்நிலவுலகம் முழுவதும் பரவிய புகழையுடையவன் *[புற.6:6]*. பாண்டியன் நெடுஞ்செழியனுக்குக், குடபுலவியனார், 'வேந்தே, உணவைக் கொடுத்தோர் உயிரைக் கொடுத்தோராவார்; உணவோ, நீரினாலும் நிலத்தினாலும் உண்டாவது; ஆகவே நிலங்குழிந்தவிடத்தே நீர்நிலைமிகும்படி செய்தோர் இவ்வுலகத்தில் நிலைத்த புகழைச் செய்தோராவர்' என்று அறிவுறுத்தினார் *[புற.18:28]*. கோதமனார் என்ற புலவர், வேந்தனிடம், 'வேந்தே, நீர்நிலைகளின் கரைகளில் உள்ள சோலைகளின் வெறியாட்டுக்களங்களில் நிறைத்துள்ள ஆட்டுக்கடாக்கள் வெட்டப்படுதல் எவ்வளவு உறுதியோ, அவ்வளவு உறுதி, நாம் இறத்தல்; ஆகவே, பரிசிலரின் பசியைத் தணித்துப் புகழைத் தேடுக', என அறிவுறுத்தினார் *[புற.366:20]*.

**நீர்ப்பந்தல்- நீரினைநிறைத்து வைக்கும் மிடா. (தொட்டி)** வறட்சியுற்ற குன்றின் பக்கத்தில் உள்ள வேட்டுவச் சேரியின் அருகிலுள்ள கிணற்றினின்றும் ஆனிரை அருந்துமாறு நீர்ப்பந்தரில்-நீரினைநிறைத்து வைக்கும் மிடாவில் (தொட்டியில்)-வில்லினாலாகிய மூடியைத் திறந்து, களிறு, தன்பிடியானைக்கும், கன்றுக்கும் நீரினை ஊட்டும்படியான சுரத்தினைக் கடந்து தலைவன் சென்றான் *[நற்.92:6]*.

**நீர்ப்பரப்பு-1. கடல்.** சோழன் நலங்கிள்ளி, ஓடங்களைத், தெளிந்த நீர்ப்பரப்பிற்குச்-கடலிற்குச்-செல்லும் மணல் மேடிட்ட யாற்றின்வழிகளைச் செம்மை செய்து, செலுத்தித் துறைதோறும் பிணித்து நிறுத்தும் நல்ல ஊர்களை உடையவன் *[புற.400:21]*.

குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை, ஒலிக்கின்ற நீர்ப்பரப்பின் கரையிடத்தேயுள்ள மரந்தை என்னும் நகரிலுள்ளார்க்குத் தலைவனாவான் *[பதி.90:28]*.

தொண்டைமான் இளந்திரையன், விளங்குகின்ற நீர்ப்பரப்பினிடத்துப் பிறந்த வளைகளிலேயே மிகச்சிறந்த வலம்புரியை ஒத்த குற்றமற்ற தலைமையினையுடைய சோழர் மரபில் தோன்றியவனாவான் *[பெரு.34]*.

ஒலிக்கும் நீர்ப்பரப்பினையுடைய கானலம் பெருந்துறை என்னும் பட்டினம் தித்தன்வெளியின் என்பானுக்குரியதாகும் *[அக.152:6]*.

விளங்கிய நீர்ப்பரப்பினிடத்து அடைந்தாரை எறிகின்ற சுறாமீன்கள் மிக்கிருக்கும் *[குறு.318:1]*.

**2. யாறு, குளம் முதலியன.** கோலால் எறியப்பட்ட குறுமுயல், ஆழ்ந்த நீர்ப்பரப்பின்- யாறு, குளம் முதலியவற்றின்-வாளை மீன்களோடு ஒப்பத் துள்ளித்தாவும் சிறப்பினையுடையது- அம்மகளது ஊர் *[புற.339:5]*.

**நீர்ப்பாசி-தண்ணீரில் மிதக்கும் ஒருவகைப்பாசி (பசுங்கொடி).** அதியமான் நெடுமானஞ்சி கிணைப்பொருநனுடைய இடையிலிருந்த பழமையான நீர்ப்பாசி-நீரில் மிதக்கும் பாசி-போல் சிதர்ந்திருந்த ஆடையை நீக்கி, அழகிய பகன்றைமலர் போன்ற புத்தாடையை அணிவித்துக் கள்ளோடு, ஊன் சோற்றையும் உண்பித்தான் *[புற.390:14]*.

நன்னனைக் காணப்போகும் வழி, 'வீழ்ந்தோரை மறைக்கும் ஆழத்தையுடைய குளங்களுக்கு அருகில் படர்ந்துள்ள நுண்ணிய நீர்ப்பாசியின் வழவழப்பினால் அடி ஊன்றமுடியாமல் நடந்து செல்லுதற்கு இயலாவாயிருக்கும்; அதற்குப்பரிகாரமாக மூங்கில்கோலைப் பற்றுக்கோடாகப் பிடித்துப் போவிர்', என்று கூத்தன், கூத்தனை ஆற்றுப்படுத்தினான் *[மலை.221]*.

**நீர்ப்பெயற்று- ஓர் ஊர் (மகாபலிபுரம்).** தொண்டைமான் இளந்திரையனின் நாட்டிலுள்ள நீர்ப்பெயற்றில்-ஊரில் (மகாபலிபுரத்தில்)-உள்ள துறையிலே நீராடும் மகளிர் போட்டுச் சென்ற பொன்னாலாய மகரக்குழையினைச் சிச்சிலிப் பறவை தனக்குரிய இரையெனக் கருதியெடுத்து வேள்விச்சாலையில் நட்ட வேள்வித்தூணில் போய் தங்க, அம்மகரக்குழை, யவனர் கூம்பின் மேலிட்ட அன்ன விளக்குப் போலவும், வானத்தே வைகறையில் தோன்றும் வெள்ளி மீன் போலவும் விளங்கும் *[பெரு.319]*.

**நீர்மை - 1. தன்மை.** தலைவன், தலைவியை, 'கண் வேறொரு வடிவை நோக்குதலைத் தவிர்க்கும் அழகைப் பெற்றிருக்கின்ற பெண் நீர்மையினையும்-தன்மையினையும்- மயிலினுடைய கழுத்தினது நிறத்தையுமுடைய மாயோளே' என அழைத்தான் *[கலி.108:37]*.

பரத்தையிற் பிரிந்து வந்த பொய்ச்சூள் கூறுகின்ற தலைவன், தோழியிடம், 'தலைவியும், யானும் இருதலைப் புள்ளின் ஓர் உயிர் போல்வேம், ஆகலின், பிரிவும், வரவும், வினாவும், செப்பும் எங்களிடை எவ்வாறு நிகழும்; இதையறியாமல் நீ, யான் கூறும் சூள், நன்னீர்மையில்லாத பொய்ச்சூள், என்று கூறி, என்னை இகழுகின்றாயே', என்றான் *[பரி.8:73]*. தலைவியின் தோழி, பரத்தையிடம், தனக்குரிய தலைவனின் மார்பினை, நினக்குத் தண்டமாகத் தரும், முத்துமாலையை உடைய எம் தலைவியின் மார்பும், அம்முத்து மாலையைக் களவு கொண்டணிந்துள்ள பொதுமகளாகிய நின்னுடைய மார்பும், தம்முள் ஒத்த நீர்மையினை உடையவாகுமோ' என்று கூறினாள் *[பரி.20:65]*.

**2. கோலம்.** சோழன் நலங்கிள்ளியை நோக்கி, உறையூர் முதுகண்ணன் சாத்தனார் 'விழவின்கண் ஆடும் கூத்தரது வேறுபட்ட நீர்மை-கோலம்-போல, நிலையாமையையுடைய இவ்வுலகத்தில், நின்கிளையை மகிழ்ச்சியிடத்ததாக வைத்துக்கொண்டு நீ தேடிய பொருளால் புகழைத் தேடிக் கொள்வாயாக' என்று அறிவுறுத்தினார் *[புற.29:23]*.

3. குணம். தோழி, தலைவனிடம், விரைந்து செல்லும் தேரினை ஏவலாளருடன் சேய்மைக்கண் நிறுத்தி இங்கு வந்து நிற்கும் நீ, பெருந்தன்மையாகிய இனிய நீர்மையினை-குணத்தினை-உடையை ஆகின்றாய்' என்றாள் [அக.310:2].

**நீர்வழிக்கரும்பு-கருப்பந்தெப்பம்.** 'அலையுடன் கூடிய புதுப்புனல் பெருகிய யாற்றில் நீர்வழிக்கரும்பினும் கருப்பந்தெப்பத்தினும் குடக்கோ இளஞ்சேரலிரும் பொறை, நின்னை அளித்தலில் வல்லவனாவான்; விறலியே விரைந்து அவனிடத்துச் செல்வாயாக' என்று புலவர், விறலியை ஆற்றுப்படுத்தினார் [பதி.87:4].

**நீர்விழவு-நீராடுவிழா.** கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனுக்குரிய மலையிலேயே தோன்றி அவனுக்குரிய கடலிலேயே கலக்கும் நீர் நிறைந்த காஞ்சி என்னும் யாற்றில் அவ்வேந்தன் சுற்றத்தாருடன் இனிய நீர் விழாவை-நீராடும் விழாவை-நிகழ்த்துவான் [பதி.48:14].

**நீர்வைப்பு-நீர் சூழ்ந்த ஊர்.** நெய்தல் அல்லது மருத நில ஊர் ஒய்மானாட்டு நல்லியக்கோடனின் எயிற்பட்டினம் நீலமணி போன்ற நீர்வைப்பினை-நீர் சூழ்ந்த ஊர்களை-உடையதாகும் [சிறு.152].

**நீரகம்-கடல் சூழ்ந்த உலகம்.** நீரகம்-கடல்சூழ்ந்த உலகம்-நடுங்கும்படியான அச்சந்தரும் கடிய வலிமையையுடைய நஞ்சினையுண்ட சிவபெருமான் நவிரம் என்னும் மலையில் வீற்றிருக்கிறார் [மலை.81].

**நீரகவிருக்கை-(கடலுக்குட்பட்ட) நிலவுலகம்.** அதியமான் நெடுமானஞ்சி நீரகவிருக்கையின்கண்-(கடலுக்குட்பட்ட) நிலவுலகின்கண்-சக்கரத்தைச் செலுத்தி ஆட்சிபுரிந்த வேந்தரின் பழைய மரபில் வந்தவனாவான் [புற.99:3].

**நீரல்லீரம்-சிறு நீர் ஈரம்.** சுரத்தில் களிற்று யானை நின்று கழித்தகன்ற நீரல்லீரத்துப்-சிறுநீர்ஈரத்துப்-பெண் நாய் நரிய தன்வயிற்றைப் பொருத்தி முடங்கிக் கிடந்தது [நற்.103:4].

**நீல்நிறப்பரப்பு-கடல்.** தலைவனிடம், தோழி, 'நீலநிறப்பரப்பில் கடலில்-விளங்கும் அலை மோதும் கரையிடத்துள்ள தலைவியின் பாக்கத்தில் தங்கிச் செல்வாயாக' என்றாள் [நற்.215:6].

**நீல்நிறவியலகம்-நீலநிறமுடைய அகன்ற வானவெளி,** தலைவனுடன், தலைவி நடத்தும் இல்லற மாண்பினைக் கண்டுவந்த செவிலித்தாய், நற்றாயிடம், 'குட்டியை நடுவிலே கிடத்திக்கொண்டு இருபுறமும் படுத்திருக்கும் ஆண்மானும், பெண்மானும் போலத் தலைவனும், தலைவியும் புதல்வன் நடுவிலே கிடத்திக்கொண்டு இருபுறமும் படுத்திருக்கும் காட்சி, நீல்நிறவியலகத்தினால்-நீலநிறமுடைய அகன்ற வானவெளியால்-தழுவப்பட்டுள்ள இந்நிலவுலகத்தும், மேனிலையுலகத்தும் நம்மனோர் காணற்கரிய காட்சியாகும்; என்று கூறினாள் [ஐங்.401:4].

**நீலம்-1. கருங்குவளை மலர்-** (ஆகுபெயர்) 'பாரியின் பறம்புமலை வேந்தர் அடைதற்கு அரிது; நீலத்தினது-கருங்குவளை மலரினது-இணைந்த மலரையொக்கும் கண்களையும், கிணையையுமுடைய விறலி பாடினளாய், வரின் அவட்கு அடைதல் எளிது' என்று, கபிலர் கூறினார் [புற.111:3].

தொண்டைமான் இளந்திரையனிடம் செல்லும் கூத்தனிடம், ஆற்றுப்படுத்தும் கூத்தன், சுனையில் இந்திரவில்லைப் போன்று மலர்ந்துள்ள செங்குவளைப்பூவோடு, நீலம் முதலிய பல்நிறப் பூக்களைப் பறிப்போர் அவற்றை நுங்கட்குத் தருவர்; அவற்றைச் சூடிக்கொண்டு செல்லுமின்', என்று கூறினான் [பெரு.293]. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் பாண்டியநாடு, கழனிகளிடத்தும் மடுக்களிடத்தும், பொய்கைகளிடத்தும் தாமரைப்பூக்கள், நெய்தற்பூக்கள், நீலப்பூக்கள் முதலிய மலர்ந்துள்ள வளமுடையதாகும் [மது.251].

தலைவி ஆயத்துடன் நீராடாததால், கலங்குதல் இன்றித் தெளிந்து, கண் என மலர்ந்த நீலத்தினையுடைய சுனையைக் கண்டு, தலைவன், புனங்காத்தலின்றித் தலைவி இல்லிற்குச் சென்று விட்டாள் என்பதை அறிவான் [அக.38:10]. தலைவன் பிரிவான் என்பதனையறிந்து, தலைவி, பிட்டன் என்பானின் குதிரைமலையில் உள்ள சுனையில் மழைத்துளியால் மலர்ந்த குளிர்ந்த மணங்கமழ்கின்ற நீலம், நீர் ஒழுகுவது போலத், தனது கண்களினின்றும் நீரைச் சொரிந்தாள் [அக.143:15]. பொருள்வயின் பிரிகின்ற தலைவன், தன் நெஞ்சிற்குக் கூறுவானாய், 'நெஞ்சே, முருகவேளின் திருப்பரங்குன்றத்தே சுனையில் பூத்த நீலத்தின் புதிய மலரின் இரண்டின் சேர்க்கை போன்ற தலைவியின் கண்கள் நீரினைச் சொரிதலால், நான் வாரேன்' என்று கூறிச் செலவழுங்கினான் [அக.149:17]. பாக்கத்தில் வாழும் பரதவர், உப்பங்கழியில் மலர்ந்த வளம்வாய்ந்த இதழ்களையுடைய நீலத்தைப் புலிநகக் கொன்றைப் பூக்களுடன் சூடுவர் [அக.270:1].'நமது தாய் நம்மீது ஐயப்படுதலால், தோழியே, தலைவரோடு அருவியாடுதல், சுனையிலுள்ள பல இதழ்களையுடைய நீலத்தைப் பறித்தல், சோலையில் விளையாடல் முதலியன அரியனவாகும்' என்று தலைவன் சிறைப்புறத்தானாகத், தலைவிக்குத், தோழி கூறினாள் [அக.302:5]. பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத், தோழி, 'பொய்கையின்கண் இலைகட்கும் மேலேவிரிந்து மலர்ந்த தண்ணிய கமழ்கின்ற நீலம் காற்றினால் அசைந்தாலொத்த நினது அழகிய குளிர்ந்த கண்களின் அமரிய பார்வையினைத் தலைவர் நினைத்து விரைவில் வருவர்', என்று கூறி ஆற்றுவித்தாள் [அக.357:14].

வாடைக்காற்று, நீரிலுள்ள நீலத்தின் மலருஞ்செவ்வியையுடைய பேரரும்பை மலரச் செய்யும் [குறு.110:3]. தலைவியின் வேறுபாடு கண்டு வினவிய செவிலிக்குத், தோழி, சுனையிடத்தே பல கட்டு அவிழ்ந்த வளவிய இதழையுடைய நீலத்தைப்பார்த்து நெஞ்சு வருந்தி அழுத கண்ணளாய் உள்ளாள் (நீலத்தைத் தந்து தலைவன் நட்புச் செய்தானாகலின்)' என்று கூறி அறத்தொடு நின்றாள் [குறு.366:5].

மலையிலுள்ள சுனைகள்தோறும் மாதரின் கண்கள் போல், நீலம் மலர்ந்தது [நற்.161:2]. குன்றநாடனுடைய, பெரிய யானை நீர் முகந்து கொள்கின்ற சுனையில், மகளிரின்கண் போல்கின்ற நீலம், தண்ணியவாய் மணம் மிகும் [நற்.273:8]. தலைவனுடன் தலைவி சுனையில் நீராடும் போது மையுண்ட கண்ணையொத்த நீலத்தாலாகிய மாலை நீரில் அலைப்புண்டு குலைந்தது [நற்.357:8]. குரங்குக்குட்டி மறைந்திருந்து, தலைவி வைத்திருந்த, தேன் கலந்த பால்கிண்ணத்தைக் கவர்ந்து சென்றதனால், அழுத அவளுடைய கண்கள், குடவாயில் என்னும் ஊரிலுள்ள அகழியிலே தண்ணியவாய் மலர்ந்து பெய்யும் மழை நீரினை ஏற்ற நீலத்தைப் போன்றிருந்தன [நற்.379:9].

தலைவன் பலவாகிய இதழ்களையுடைய நீலத்தோடு (கருங்குவளை) நெய்தற் பூ ஒப்பாக விளங்கும் குளிர்ந்த நீர்த்துறையையுடையவன் [ஐங்.2:4]. 'நாமழ, நீலம் கூம்ப மாலை வந்தது' என்று தலைவி தோழிக்குரைத்தாள் [ஐங்.116:2].

தலைமகனால் பிரிவுணர்த்தப்பட்ட தோழி, தலைவனிடம், 'சுனையிடத்துள்ள மாட்சிமைப்பட்ட நீலம் மழையை ஏற்று நீர் சொரியுமாறு போலத், தலைவயினுடைய கண்கள் நீரைச் சொரியும்' எனச் செலவழுங்கக்கூறினாள் [கலி.7:11]. தலைவன், தலைவியை, எழுச்சியை உடைய நீலத்தினது உயர்ந்த அழகினையுடைய இரண்டாகிய மலர்போலும் அகன்ற மையுண் கண்ணையுடையவள் என்று பாராட்டினான் [கலி.14:2]. தலைவன் பிரியின், தலைவியினுடைய முறுக்கு அவிழ்ந்த நறிய நீலத்தையொக்கும் மையுண்கண்கள் அமையாவாய், அழுது, எரிகின்ற திரிகான்ற நெய்போலச் சுடும்படி தெள்ளிதாகிய நீரைத் துளிக்கும் [கலி.15:20]. இரவுக்குறிக்குத், தலைவன் வரும் நெறியின் அருமைக்கு அஞ்சித் தலைவியின் கண்கள், சுனையிடத்துச் செறிந்த மழையை ஏற்ற நீலம் போல நீரைச் சொரிந்தன [கலி.48:15]. ஒரு தலைவன் காமஞ்சாலா இளையோளிடம், 'மதுரையிடத்துத், தேன்பரக்கும்படி மலர்ந்த நீலத்தினது அலரை வென்ற, போரையுடைய நின் கண், பாண்டியனுடைய வேல் பகைவரை வருத்துவது போல, வருத்துகின்றதே; இது நினது இளமைக்குத் தக்கதோ' என்று கூறினான் [கலி.57:9]. பூ விற்போர் வயலிடத்துப் பெருகுகின்ற நீரிலவிழ்ந்த நீலத்தினைப் பறித்துப், பூக்கூடையிலிட்டுத், தலையில் ஊருக்குச் சுமந்து செல்லும்போது, அக்கருங்குவளைப் பூக்களுடன் (நீலம்) அவற்றிலிருந்த வண்டுகளும் சென்றன [கலி.66:1]. சாளரங்களிலே ஒதுங்கிப் பார்க்கும் பரத்தையரின் கண்கள், நீலத்தினது முறுக்கு நெகிழ்ந்து நிரைத்த பூக்கள், காற்றுக்கு அசைவன போல அசைந்தன [கலி.83:12]. ஒரு தலைவி, தன் புதல்வனுக்கு, முத்தும், பல மணிகளும் இணைத்துச் செய்யப்பட்ட மூன்று வடமாலையையும், அதன் மேலே நீலத்தினது ஆய்ந்த மலர்கள் நாணும்படியாக நீலமணியால் ஆன மாலையையும் அணிவித்தாள் [ஐங்.85:15]. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம், தலைவி, 'நறவம்பூவோடே, அழகிய நீரில் அலர்ந்த அல்லியையுடைய நீலம், அனிச்சப்பூ, முல்லைப்பூப் பொருந்தின நினது மார்பின் மாலையும், நறிய மலரால் தொடுத்த கண்ணியும் நினது பரத்தையர் சினந்து ஊடிப் பற்றியதால், அவை அழகிழந்து, ஒப்பனை நேற்றையின் இன்று நன்றாயிருந்தது', என்று பழித்துக் கூறினாள் [கலி.91:1]. உயர்ந்து, தன்னில் இணையொத்த நீலத்தினைத் தொடுத்தாலொத்த கண்ணினை உடையாய், என்று, தலைவன் தலைவியைப் பாராட்டினான் [கலி.96:5]. நீரில் அலர்ந்த நீலம் என்று தலைவனால் புகழப்பட்ட தலைவியின் கண்கள், அவனுடைய பிரிவினால் இப்பொழுது பீரலர் போலப் பெரியவாகப் பசந்தன [கலி.143:50].

சிவபெருமானின் கருவையுண்ட முனிவர்களின் மனைவியராகிய கார்த்திகைப் பெண்கள், இமயமலையில் உள்ள, நீலத்தையுடைய சரவணப் பொய்கையில், தாமரைப் பூவாகிய பாயலிலே, ஒருங்கே முருகனை ஈன்றனர் [பரி.5:48]. காற்றானே அலர்த்தப்பட்ட நெகிழ்ந்த இதழ்களையுடைய நீலம் முதலிய மலர்களை, மலையருவி சாரலிலுள்ள சோலையிற் கொணர்ந்து குவிக்க, அவற்றை நீர் கொணர்ந்து வையையாற்றின் திருமருதந் துறையில் குவித்ததனால், அத்துறை, மலர் பறிப்போர் மலரைக் கொணர்ந்து குவிக்கும் மண்டபம் போன்று விளங்கியது [பரி.11:22]. வையையில் தை நீராடும் இளங்கன்னியரில் ஒருத்தி தன் இரு காதுகளிலும் நீலத்தைச் செருகிக் கொள்ள, அத்தோற்றத்தைக் கண்ட மற்றொருத்தி, இவள் இப்பொழுது நான்கு விழிகளை உடையவள் ஆயினாள் என்று பாராட்டினாள் [பரி.11:96]. திருமால் வீற்றிருக்கும் திருமாலிருஞ் சோலை மலையின்கண் உள்ள சுனையில் நறுமணங்கமழும் அழகிய நீலம் எங்கும் மலர்ந்திருந்தன [பரி.15:30].

**2. நீலநிறம்**-மறவனொருவன் நீலக்-நீலநிறமுடைய-கச்சையை அணிந்து மேல் வரும்களிற்றின் மீது வேலை வீசினன் [புற.274:1].

வேள் ஆய் அண்டிரன் ஆலின் கீழிருந்த சிவபெருமானுக்கு நெஞ்சு பொருந்தித், தனக்குப் பாம்பு ஈன்ற கொடுத்த, ஒளி விளங்கும் நீல உடையினைக் கொடுத்தான் [சிறு.96]. நீலத்தினையும், சிவந்த கண்ணினையுமுடைய தேனை நுகர்கின்ற வண்டொழுங்கு, வெண்டாமரைப் பூவை அடையும்

தோற்றம், நீண்ட கரும்பாம்பு திங்களைக் கவ்வுவது போன்றிருந்தது *[சிறு.184]*. மதுரை நகரத்தின் இரவுக் காவலர், மிக்க கருமையினையுடைமையால், நுணுகிய தொழில் திறமையாலே, நுண்ணிய கருமணலின்கண் நிறத்தை வாங்கி இயற்றினாற் போன்ற நிறம் அமைந்த நீலக்கச்சினை உடையவராய் இருந்தனர் *[மது.639]*.

புன்னை மரத்தின் நீலம் போன்ற இலைநடுவே வெள்ளி போன்ற மலர்கள் பொன் போன்ற பூம்பொடியைச் சிதறின *[நற்.249:2]*.

நீரில் வாழும் சம்பங்கோழியாகிய நீலமுடைய சேவலைப், பேடை விரும்பும் *[ஐங்.51:1]*. அறல்பட்ட (பலவரியாக இருத்தல்) கொம்பினையுடைய எருமையின் ஒரு வகைச்சாதி, நீலமுடையதாய் இருக்கும் *[ஐங்.91:1]*. நீல மாலையில் கழியிடத்துக் குவளை குவியும் *[ஐங்.116:2]*.

தாய் தந்த பூத்தொழிலினையும், கரையினையுமுடைய நீல ஆடையை ஆயர் மகளிர் உடுத்தியிருந்தனர் *[ஐங்.111:3]*. தலைவி, நிலத்தே தாழ்ந்த பூத்தொழில் பொருந்திய கரையினையுடைய நீல ஆடையை, அணிந்திருந்தாள் *[கலி.115:14]*. பலராமன் அழகு பெற உடுத்த நீல ஆடையைக், கடல் நிறம் ஒத்திருந்தது *[கலி.124:3]*. செவ்வேளின், திருப்பரங்குன்றத்தின் மேல் விளையாடும் மகளிர் அணிந்திருந்த அணிகலன்களிலிருந்து விழ்ந்த நீலமணிகளை அம்மலையின் அருவிகள் இழுத்துக் கொண்டு வந்து கீழேயுள்ள உழவரின் வயல்களைச் சிதைத்தன *[பரி.17:41]*.

3. **நீலமணி (ஆகுபெயர்).** நிலத்தை-நீலநிறமுடைய மணியை-ஒத்த பசிய பயிர்களிடந்தோறும் முறுக்குண்ட அரும்புகளையுடைய முசுண்டையும், முல்லையும் உதிர்ந்து பரவி, வேலனின் வெறியாடுங்களம் போல் தோன்றும் *[மது.279]*. எள்ளின் தோடுகள் நீலத்தைப் போன்றாகி ஒரு பிடியில் ஏழ்காயாக வளர்ந்தன *[மலை.102]*.

4. **தருப்பை (ஆகுபெயர்).** இமயமலையின் உச்சியிலுள்ள சரவணப் பொய்கையில் நீலம்-தருப்பைப்புல்-வளர்ந்திருந்தது *[முரு.253]*.

5. **பச்சைநிறம்.** 'கமுக மரத்தினுடைய சூல் கொண்டவயிற்றைப் போல, நீல-பச்சைநிற-குப்பிகளிலுள்ள கள்ளினை உண்டு செல்லுங்கள்' என்று பாணன், பாணனை ஆற்றுப்படுத்தினான் *[பெரு.382]*.

6. **கருமை.** கூரிய நகங்களையுடைய வௌவால் நீலமும்-கருமையும்-மென்மையுமுள்ள சிறகையுடையது *[குறு.201:3]*.

7. **பட்டு. (ஆகுபெயர்).** மென்மையான படுக்கையை, உயர்ந்த நீலத்தால்-நீலநிறப்பட்டினால்-அமைத்தனர் *[கலி.72:1]*.

**நீலமணிக்கடிகை**-குதிரையின் கழுத்திலிடும் ஒருவகையணி. நீலமணிக்கடிகை-நீலமணியைத் தோலிலே வைத்துத் தைத்துச் செய்யும் கட்டுவடமாகிய-கழுத்திற் கட்டுதலையுடைய வல்லிகை என்பது, குதிரையின் கழுத்தணியாகும் *[கலி.96:10]*.

**நீலமணிமிடற்றொருவன்** - நீலமணி போலும் கரிய திருமிடற்றினையுடையவன் (சிவன்). 'பால்போலும் பிறைநுதல் போலப் பொலிந்த திருமுடி அமைந்த நீலமணிமிடற்றொருவன்- (நீலமணி போலும் கரிய திருமிடற்றினையுடைய ஒருவன்) - நெல்லிப்பழம் தந்த அதியமானை வாழ்த்தினார் *[புற.91:6]*.

**நீலமலர்** - (நீலநிறமுடைய மலர்) கருங்குவளை. தலைவனைப் பிரிந்த தலைவிக்கு நீலமலரைப் (நீலநிறமுடைய மலரைப்) கருங்குவளை - போன்ற மையுண்ட கண்களும், மற்ற உறுப்புகளும் பசலையுற்றன *[கலி.64:20]*.

**நீலமேனி வாலிழை பாகத்து ஒருவன்** - சிவபெருமான்.- நீலநிறமுடைய திருமேனியையும் தூய அணிகலன் களையுமுடைய உமையம்மையாரைத் தன் ஒரு பாகத்திலே உடைய ஒப்பற்றவனின் (சிவபெருமானின்) இருதாளின் நிழலின்கீழ் மூவுலகமும் தோன்றின *[ஐங்.க.வா.1:2]*.

**நீவியோர்** - தடவியவர். தீய நெறியில் செல்லாத வாழ்க்கையும், பிறன்மனைவாயிலில் (இரக்கும் பொருட்டு) சென்று நில்லாத மேம்பாடும், பொருளினால்தான் ஆகும் என்று கூறி, நம் கூந்தலை நீவியோராகிய- தடவியவராகிய-காதலர், அப்பொருளைத் தேடுதற்கு மலைநெறியைக் கடந்து சென்றார், என்று, தலைவி, தோழியிடம் கூறினாள் *[அக.155:4]*.

**நீவியோன்** - தடவியவன். செறிந்த வளையல்களை அணிந்தவளே, நினது அறிவு முதிர்கின்ற பருவத்தில், நீ எம்முடைய இல்லிற்கு இல்லறம் நடத்த வருவாய் என்று கூறி உன்னுடைய கூந்தலை நீவியோன்-தடவியவன்-இன்று எங்குள்ளானோ, என்று, நொதுமலர் வரைய வந்துழித் தோழி, தலைவியிடம் கூறினாள் *[குறு.379:6]*.

**நிழல்-1.** நிழல். சேரமான் யானைக்கண்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறையின் திங்கள் போலும் முத்தமாலையை உடைய வெண்கொற்றக்குடையின் நீழற்கண்-(அரசாட்சியாகிய) நிழலின்கண்-அவனுடைய வாளில்லாத வயவர் அக்குடையே காவலாக உறங்கினர் *[புற.22:12]*. 'யாற்றிடைக்குறையுள் புள்ளிபட்ட மர நீழலின்கண் இருந்து உடம்பாகிய முழுத்தசையை வாட்டும் வயவனே என்று, வடக்கிருந்த கோப்பெருஞ்சோழனைக், கருவூர்ப் பெருஞ் சதுக்கத்துப் பூதநாதனார் பாடினார் *[புற.219:1]*. வள்ளல் ஒருவனிடம் பரிசில் பெறச் செல்லும் பாணனொருவன், தீ நிமித்தங்களைக் கண்டு, வள்ளலுக்கு ஏதாயிற்றோ என்று கவன்று, களர் நிலத்துள்ள கள்ளி மரத்தின் நீழலிலுள்ள

கடவுளை வேண்டினான் [புற.260:5]. ஆண் நத்தையினைப் பெண் சங்கு ஆம்பலினது அகன்ற இலையின் நீழற்கண், பகற்காலத்தே, வயலில், மணம் புணரும் [புற.266:3]. முன்னைக் கொடியும் முசுண்டைக் கொடியும் செறிந்திருத்தலால் வேறு பந்தல் வேண்டாது தாமே பந்தலாய்ப், பலவின் கனி தொங்கும் நீழலில், யானை வேட்டையாடும் வேட்டுவன் உறங்கினான் [புற.320:2]. மன்றத்தில் நிற்கும் உலர்ந்த தலையையுடைய இரத்தி மரத்தின் அசைகின்ற நீழலில், சிறுவர் அம்பெய்து விளையாடுவர் [புற.325:11]. நீழலுயர்ந்த கிளைகளோடு கூடிய மாமரத்தின் தீவிய கனிகளைப் பிசைந்து, நறிய புளிக்குழம்பு செய்வர் [புற.393:3].

செங்கழுநீர் மலரை மேய்த்த எருமை, மஞ்சள் இலை தனது முதுகைத் தடவப் பலாமரத்தின் நீழலில் துயிலும் [சிறு.43]. எயிற்றியர் தாம் கொணர்ந்த புல்லரிசியைப் பார்வைமான் கட்டியிருக்கின்ற, தேய்ந்த தாளினையுடைய விளவினது நீழலின் முற்றத்தில், தோண்டிய நிலவுரலிலே போட்டு, வயிரம் பாய்ந்த உலக்கையால் குத்துவர் [பெரு.96]. தொண்டைமான் இளந்திரையனின் நாட்டிலுள்ள மருத நிலவுழவர், மருத மரத்தின் நீழலிடத்தே, களங்கள் நிறையுமாறு, வைக்கோல் போர்களைக், கடாவிட்டு, நெல்லைக் குவித்திருக்கின்ற குவியல், பொன்மாலையினும் சிறந்து தோன்றும் [பெரு.232]. ஒளியினையுடைத்தாகிய பூக்களையுடைய கொன்றை பரந்த நீழலிடத்தே, பரப்பினாலொத்த பாறை, அழகு பெற்று விளங்கியது [மது.277]. பலவாய் வேறுபட்ட வடிவினையுடைய பெருங்கொடிகள், நறவு நொடைக் கொடியோடே விரவுகையினாலே, புகாரின் நகரின் கொடிகளின் நீழலில், ஞாயிற்றின் கதிர்கள் நுழையமுடியவில்லை [பட்.182].

சுரத்தின்கண் கற்களையுடைய கவர்த்த நெறியில் சீறூர்களின் பாங்கர்ப், புல்லிய அடியினையுடைய இத்திமரத்தின் புள்ளிபட்ட நீழலிலே, பெருங்காற்று அலைத்தது [அக.77:13]. பாலையில் பதுக்கையினையுடைத்தாய குறைந்த நீழலையுடைய கள்ளியின் முட்பொருந்திய அடியில் தங்கியுள்ள பல்லி, நெறியில் போவோருக்கு நன்மை தீமை கூறும் [அக.151:11]. சுரத்தின்கண் பொந்தினையுடைய மரங்களின் புள்ளிபட்ட நீழலில் நெறியில் செல்லும் புதியர் தளர்ந்தனராகித் தங்கியிருப்பர் [அக.277:10]. மீனின் முட்டை போன்ற வெள்ளிய மணலைக் குவித்துக் காஞ்சி மரத்தின் நீழலில் இளம் பெண்கள் குற்றி விளையாடுவர் [அக.286:4]. மகளிர் விரிந்த பூங்கொத்துக்களையுடைய காஞ்சி மரத்தின் நீழலில் தம் கணவரது நற்பண்பில்லாத பரத்தமைகளைப் பாடிக் குரவையாடுவர் [அக.336:9]. மழை பெய்யாதொழிந்த வெப்பமிக்க சுரநெறியில், ஆறலைகள்வர் கொன்ற பார்ப்பனனின் குடரைத் தின்ற ஆண் நரி, கள்ளியின் நீழற்கண்ணே ஊளையிட்டுத் தங்கியிருக்கும் [அக.337:17]. சுரத்திலே செல்லும் படை வாணிகர்கள் யா மரத்தின் நீழலில், தம் இல்லில் தங்கியிருப்பது போலத், தங்கிச் செல்வர் [அக.343:11]. இற்றி மரத்தின் நீண்ட விழுது, மலையின் இடத்தினைத் துடைக்கும் சுரநெறியில், வெயில் தாளாமல், தலைவன் நீழலின் கண் தங்கிச் செல்லுவான் [அக.345:21]. தலைவி, பகலில் அகன்ற இலைகளையுடைய புன்னைமரத்தின் புள்ளியில்லாத நீழலில் ஆயத்துடன் விளையாடுவாள் [அக.370:3,4]. சுரத்தின் தீயினால் இலைகளற்ற காட்டில் மானின் புறத்துள்ள புள்ளி போன்ற புள்ளிகளையுடைய மர நீழலில், தலைவன் தங்கிப்போவான் [அக.379:20].

மலையின்கண் வாழும் எண்கால் வருடையினது குட்டி தாயிடத்துள்ள இனிய பாலை வயிறு நிறையவுண்டு பெரிய மலைப்பக்கத்துள்ள நீழலில் துள்ளி விளையாடும் [குறு.187:3]. கடலின் அலை மோதுகின்ற கடற்கரைச் சோலையிலுள்ள பூங்கொத்துக்கள் மலர்ந்த, புன்னை மரங்கள் வளர்ந்த, மேட்டிலுள்ள நீழலில், தலைவனும் தலைவியும் கூடிப்புணர்வர் [குறு.299:3].

நெடிய கிளைகளையும், பொரிந்த அடியையுமுடைய வேப்பமரத்தினது புள்ளிபோன்ற நிழலில், கட்டளைக்கல் போன்ற அரங்கை வட்டினாலே கீறிச் சிறுவர் நெல்லியங்காயை வட்டாகக் கொண்டு பாண்டியாடுவர் [நற்.3:2]. தலைவியை உடன்கொண்டு செல்லும் தலைவன், தலைவியிடம், 'மழை பெய்யாத இக்காட்டில் கற்கள் உன் மெல்லிய அடியை வருத்தாதிருக்கும் பொருட்டு, ஆல மரத்தின் நீழலிலே தங்கி இளைப்பாறிச் செல்வோம்', என்றான் [நற்.76:3]. கானயாற்றில் மேலுள்ள கரையின்கண் மூங்கில் புதர் நீழலில் பெரிய கலைமான் மலை ஆட்டினத்துடனே தாவித் துள்ளிக் குதித்து விளையாடும் [நற்.119:8]. பகற்குறி வந்த தலைவனிடம், தோழி, இப்புன்னைமரம் தலைவியால் வளர்க்கப்பட்டதும், தாயினால் இப்புன்னை நினது தங்கை என்று கூறப்பட்டதுமாகும். அதனால், இதனிடம் உன்னுடன் கூடுவதற்குத் தலைவி நாணுகின்றாளாகலின், வேறு மர நீழல்கள் இங்கு உள்ளன', என்று கூறி வரைவி கடாயினாள்[நற்.172:10]. ஆறலைகள்வர் கொன்ற பிணங்களை மிகுதியாகத் தின்ற முதிய நரி, நீர் பருக விரும்பிப் பேய்த்தேரை நீரென்று ஓடி அலைந்து நீர் கிடைக்காமையாலே வருந்திக் கற்குவியலின் நீழலிலே வெயிலுக்கு ஒதுங்கியிருக்கவும் இடம் பெறாது அலையும் அஞ்சத்தக்க வழிகளையுடையது பாலைநிலம் [நற்.352:8].

இடைச்சுரத்தின்கண் செவிலி கண்ட அந்தணர், கமண்டலத்தையும், முக்கோலையும் கொண்டு, ஞாயிற்றின் கதிர்களைத் தாங்கும் பொருட்டுக் குடையின் நீழலையுடையராய் இருந்தனர் [கலி.9:1]. நம்மை நீழலாக வந்தடைந்த குடி மக்களைப் பொறுத்து வேந்தர் தாங்குவர்[கலி.26:15]. வண்டு வீற்றிருந்த தாமரையை மிக்க புதிய நீர் வந்து சாயப்பண்ணுகையாலே, அவ்வண்டு வேறொரு பொய்கையின் தாமரைக்குச் சென்று, அப்புதிய நீர்

வற்றியவுடனே, தனது பழைய இருப்பாகிய தாமரைக்கு வந்து சேர்ந்ததைத்போலத், தம் நல்ல நாட்டினைப் பகைவன் வந்து அலைத்தமையாலே, தங்களைக் காக்கின்றவனுடைய நிழலிலே தங்கிய குடிமக்கள் தம்மிறைவன் பகையைக் கெடுத்த அளவில், தம் நாட்டிற்கு மீண்டும் சென்று தங்கினர் *[கலி.78:5]*.

**2.ஊர்.** எவ்வி என்பானுக்குரிய நீழல் என்னும் ஊர்போன்றவள் பரத்தை *[அக.366:12]*.

**நீள்குடி** - அரசர் குலம் (உயர்ந்தகுடி). 'தன்மீது படை எடுத்து வந்த பகைவரைப், போர்க்களத்தில் புறமுதுகிட்டோடச் செய்யேனாயின் பலவுயிரையும் பாதுகாக்கும் நீள்குடியில்-அரசர் குலத்தில்-சிறந்த பாண்டியனது நாட்டைக் காக்கும் காவலின் நீங்கித் தாழ்ந்த குலத்தில் பிறப்பேனாகுக' என்று பூதப்பாண்டியன் சூளுரைத்தான் *[புற.71:17]*.

**நீறு** - **1.** புழுதி. 'ஒரு வள்ளல், பரிசிலரோடு விருந்துண்ணும் பெரிய இடமானது, அவன் மேலுலகம் சென்ற பின், அவனுடைய மனைவி அவனுக்கு உணவு படைப்பதற்காகக், கண்ணீரோடு சாணத்தைக் கொண்டு மெழுகும், நீறு-புழுதி-படிந்த-களகு அளவாகிய சிறிய இடமாயிற்று' என்று, புலவர் தும்பிசொகினனார் வருந்திக் கூறினார் *[புற.249:12]*. ஊரவரின் பொது நிலத்தைப் பன்றிகள் நீறாக்கின *[புற.325:1]*. ஊரில் மறவனது வேல் நீறு படிந்து (போரில்லாக்காலத்து) வீட்டின் கூரையில் செருகப்பட்டுக் கிடக்கும்; அவ்வேலே, போர்வந்துற்றபொழுது பகைவேந்தர் மார்பிலும், பகைவரின் யானைகளின் முகத்தினும் சென்று தைக்கும் *[புற.332:3]*. சேரமான் சிக்கற்பள்ளித்துஞ்சிய செல்வக் கடுங்கோவாழியாதனின் பகைவரின் களிறுகள் பகைவரின் மதில்களைத் தகர்த்து நீறு படிந்த நறிய தலையினை உடையவாய் இருந்தன *[புற.387:6]*.

வளப்பம் பொருந்திய நாட்டினையுடைய பகைவரின் ஊர் மன்றங்களெல்லாம், இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் வெகுண்டு முற்றுகையிட்டதனால், நெருஞ்சிமுள் மிகுந்து, நீறு படிந்து, மக்களும், மாவும் செய்யும் ஆரவாரம் இல்லையாகிப் பாழ்பட்டன *[பதி.13:16]*.

நல்லியக்கோடனுடைய பழைய ஊர், களிற்று யானைகளின் மதவருவி, எழுந்த துகளை அவிக்கையினாலே, நீறு அடங்கின தெருவினையுடையதாய் இருந்தது *[சிறு.201]*. எயிற்றியர், உளிபோலும் வாளையுடைய பாரைகளாலே (கடப்பாரை) கரம்பை நிலத்தைக் கட்டிகள் கீழ் மேலாகப் புரளும்படி குத்தி நீற்றினை அளைந்து மெல்லிய புல்லரிசியை எடுப்பர் *[பெரு.93]*. காவிரிப்பூம்பட்டினத்திலுள்ள அட்டில்களில் சோறுவடித்தொழுகிய கஞ்சி, தெருக்களில் யாறு போல ஓடி, அவ்விடத்தே காளைகள் பொருதலால், சேறாகிப் பல தேர்கள் ஓடுவதால், துகளாய்ப்பரவி நீற்றினை மேலே பூசிக் கொண்ட களிறு போல ஆண்டுள்ள வெள்ளிய அரண்மனைகளை அழுக்கூட்டும் *[பட்.48]*.

சுரத்தில், களிறு, பொன்னிறப் பூங்கொத்துக்களை உடைய வேங்கை மரத்தைப்புலி என்று கருதி, அம்மரத்தின் அடிமரத்தில் மோதி, செம்மண் நிலத்திற் பொருந்திய நீற்றினை அளைந்து, போர்க்களத்தில் வெற்றி கொண்ட மறவர் போல் முழங்கும் *[அக.227:10]*. கொடிய வெயில் முறுகிய வேனிற்காலத்து, வெவ்விய காட்டில் (சுரத்தில்), வெப்பம் பொருந்திய கோடைக்காற்று, நீண்ட வெள்ளிய களர் நிலத்துள்ள நீற்றினை முகந்து கொண்டு சுழலும் *[அக.353:9]*.

பன்றி, சேற்றில் உழலுதலால் அச்சேறு பூசப்பெற்ற கரிய முதுகில், நீறு படிந்திருக்கும் *[நற்.82:8]*. களிற்றுயானை, வெளிய புறத்தினையுடைய களர்நிலத்திலேயுள்ள நீறு படிந்து காணப்படும் *[நற்.126:3]*. களிறு காலால் உதைத்திட்ட மேல் கீழாகப் படிந்த நீறு, வேல மரங்கள் நெருங்கிச் செல்லுவோருக்குத் துன்பஞ் செய்தலையுடைய முதிர்ந்த வழியை, மறைக்கும் (மூடும்) *[நற்.302:9]*. ஆயர் காட்டிற்கு ஆனிரையோடு மேய்ச்சலுக்கு ஓட்டிச்செல்லும் நல்ல ஏற்றினங்கள், தரையைக் காலாலே வெட்டி, நீற்றினை எழுப்பும் *[கலி.106:7]*.

**2.சாம்பல்.** மனம் விரும்பும் காதலர் அழுதலால் ஒழுகும் கண்ணீர், எலும்பு கிடக்கும் சுடலைக்கண்ணுள்ள நீற்றினை-சாம்பலை-அவிக்கும்படியான சுடுகாடு, யாவரையும் புறங்காணுமேயொழிய, அதனைப்புறங்காணுதல் யாராலும் இயலாது *[புற.356:6]*.

சிவபெருமான் முப்புரங்களைவென்று அவ்வலியாலே அவர்கள் வெந்து வீழ்ந்த நீற்றை அணிந்து பாண்டரங்கமென்னும் கூத்தினை ஆடினார் *[கலி.1:8]*.

**3.பொடி.** புதிய யானை ஒன்று வந்தது; அதனை ஏறிக் காண்பதற்காகத் தங்கினேன், என்று கூறிய பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம், தலைவி, 'ஆம், நீ கண்ட யானை (பரத்தை) சுண்ண நீறாடி-பொடியைப் பூசிக்கொண்டு-வந்ததல்லவா' என்று எள்ளிப் புலந்தாள் *[கலி.97:10]*.

**4.சுண்ணாம்புநீறு.** இளம்பெண்ணின் நலனைக் கவர்ந்துண்டு பின் அவளை அறியேன் என்று பொய் கூறிய அறனிலாத ஒருவனின் தலையில் அவையத்தார் நீற்றினைப்-சுண்ணாம்பு நீற்றினைப் - பெய்து தண்டனையளித்தனர் *[அக.256:20]*.

**5. அழிதல்.** (நீறு - தொழிற்பெயராக வருதல்). வயது வந்த தலைவி ஒருத்தி, வயலைக்கொடிப் பந்தரில் பந்தாடுதலைக் கண்ட அவளுடைய தாய் இன்னும் இளையையாயே இருக்கின்றாயே; நினது பெண்மை நீறு-அழிதல்-ஆக என்று கடிந்து கூறினாள் *[அக.275:5]*.

**நீனிறவண்ணன்** - (நீலநிறம் போலும் நிறத்தையுடையவன்) திருமால்-ஏறுகோடல் நிகழ்ச்சியில் பால்நிறம் போலும் வெள்ளையேற்றினது கழுத்திலே பாய்ந்த பொதுவனைப் பொருது, மேற்சென்று குத்தும், இளைய காரேற்றினது தோற்றம், பால்போலும் மதியைச் சேர்ந்து மறைத்த பாம்பினை விடுவிக்கும் நீனிற வண்ணனை-(நீலநிறம் போலும் நிறத்தையுடையவனை) திருமாலை-ஒத்திருந்தது *[கலி.104:36]*.

**நுகம்**-1. எருத்துப் பூட்டுக்கோல். எருதுகள் இளைய; நுகம்-எருத்துப் பூட்டுக்கோல்-பூண்டவை அறியா: ஆதலால், சகடம் பள்ளத்தே இழியினும், மேட்டிலே ஏறினும் இடையூறு வரும் என அஞ்சி உப்பு வாணிகர் அச்சுமரத்தின்கண்ணே சேம வச்சிலனக் கட்டினர். *[புற.102:1]*. தான் பூண்ட நுகம், ஒருபாற்கோடித் தளராமற், செலுத்தும் பகடுபோல, ஆண்மையினும், சூழ்ச்சியினும் தளராத, ஆண்மைக் கூறுபாடு பொருந்திய, ஊக்கத்தினையும், தோலாத நல்ல புகழையும் உடையவன் நாளை கிழவன் *[புற.179:9]*. நிரம்பிய மெய்வலியினையுடைய மாக்கள், சிறிய துளையினையுடைய கொடிய நுகத்தின்கண்ணே பெரிய கயிற்றாலே எருதுகளை நிரைத்துக்கட்டினர் *[பெரு.52]*. வளைந்த மேழியால் உழவுத்தொழிலை நச்சுதலையுடைய உழவரது நெடிய நுகத்தில் (நுகத்தடியில்) தைத்த பகலாணிபோல, நடுநிலை என்னும் குணம் நிலைபெற்றோர் வணிகர் *[பட்.207]*. காவிக்கொண்டு வந்த நூறைக் கிழங்கு 'நுகம்' என்று மருளு மாறிருந்தது *[மலை.515]*.

கல் உப்பினது விலையைக் கூறிவிற்ற உப்பு வாணிகர், வளைந்த நுகத்தையுடைய வண்டிகளின் பூட்டிய எருதுகள் பலவற்றையும் மேயும்படி அவிழ்த்துவிட்டு இளைப்பாறினர் *[அக.159:2]*. வளைத்த நுகத்திடத்தே குதிரைகள் கட்டப்பெற்றன *[அக.224:4]*. சிற்றூரின்கண் மணி ஒலிக்க, உமணர் வளைந்த நுகத்திலே பகடுகளைச் செவ்விய கயிற்றினால் பிணித்தனர் *[அக.329:6]*. வளைந்த நுகத்திற் பூட்டப் புக்க திரண்ட காலினையுடைய கோவேறு கழுதையைத் தேரிற் பூணும்படி பாகற்கு ஏவாது, இவள் குறித்து இன்றிரவு இவ்வூரில் தங்கிச் செல்வாயாக, எனத், தலைமகற்குத், தோழி கூறினாள் *[அக.350:6]*.

நன்றாகிய நான்கு குதிரைகளைத் தாங்கும் நுகத்தினைப் பொருத்திப், பருத்த கழுத்தில் நெருங்கப் பலவடங்கள் ஒலிக்குமாறு பூட்டித், தேரினைப்பாகன் செலுத்தினான் *[அக.400:10]*.

சேர்ப்பனது ஓடுகின்ற தேரின் நுண்ணிய நுகத்திற் பூட்டப்பட்டுச் செல்கின்ற குதிரைகள், கோல் கொண்டடிக்க, அதனால் துன்பப்படுவனவாக, எனத், தோழி, பகற்குறி வந்து நீங்கும் தலைவன் போக்கினை நீக்கக், கூறினாள் *[நற்.58:11]*.

2. **வன்மை.** செல்வக் கடுங்கோ தன் குலத்தாருக்குரிய நுகம் -வன்மை - கொண்டு பலபோர்களை வென்றான் *[பதி.63:15]*.

பகைவர் நாடு சேணிகந்தனவாயினும், ஆண்டுச் சென்று, தூசிப்படையைக் கொன்று குவித்து, 'நுகம்' (வலி) உண்டாக, என்று, யானையின் அணியிலே சென்று பொருத அறிவுடையோர்க்கு, நாடும், ஊரும் நன்னன் சேய் நன்னன் குடியிலுள்ளோர் கொடுத்தனர் *[மலை.87]*.

3. **பாரம்.** பேகன், பார், காரி, ஆய், அதிகன், நள்ளி, காரி என்னும் எழுவரும் மேற்கொண்ட கொடையாகிய செவ்விய நுகத்தை-பாரத்தை-உலமெல்லாம் விளங்கும்படி, நல்லியக் கோடன் தானே பொறுத்தான் *[சிறு.113]*.

4. **கணையமரம்.** உட்கதவில் கொடிய நுகம்- கணையமரம்-ஏறட்டுள்ளது *[பெரு.127]*.

5. **நடுநிலை.** வெவ்விய போரில் பகைவரை நுகம்-நடுநிலை-உண்டாகும்படி, வஞ்சியாது எதிர்நின்று, பல்வேல் எழினி கொன்றான் *[குறு.80:5]*.

**நுகர்ச்சி**- துய்ப்பு. விண்ணுலகத்து நுகரும் நுகர்ச்சி-துய்ப்பு-இவ்விடத்தும் கூடுதலான், பரிசிலர் நின்னாடு உள்ளுவர், எனச், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை, மாறோக்கத்து நப்பசலையார் பாடுவர் *[புற.38:16]*. உயர்ந்தோர்க்குத், தாம் செய்த நல்வினைக் கூற்றிலே அதனை அனுபவித்தல் உண்டாயின், அதனை, இருவினையும் செய்யப்படாத உம்பர் உலகத்தின்கண், நுகர்ச்சியும்-(இன்பம்) அனுபவித்தலும்-கூடும். அவ்வுலகத்தின்கண் நுகர்ச்சி இல்லையாயின், மாறிப் பிறத்தலிலே கூடும் பிறப்பின்கண், இன்மை எய்தலும் கூடும், எனக், கோப்பெருஞ்சோழன் கூறினான்' *[புற.214:8,9]*. வட்ட வடிவினதாகிய, பலபடையாகச் செய்யப்பட்ட, மதிலால் சூழப்பட்ட, வேள்விச் சாலையுள், எருவை நுகர்ச்சி-பருந்து விழுங்குவதாகச்-செய்யப்பட்ட யூபமாகிய நெடியகம்பம் நாட்டப்பெற்றது *[புற.224:8]*.

நம் தலைவியின் முயக்கத்தினை ஒரு நூல் இடையே தடுப்பினும் அதனை வெறுத்துறையும் காதலோடு இன்பம் துய்க்கும் நுகர்ச்சியைக் காட்டினும் சிறந்ததொன்றில்லை, எனப், பொருள்வயின் பிரிந்து போகா நின்ற தலைமகன், தன்னெஞ்சிற்குக் கூறினான் *[அக.361:7]*.

பெரும, இளவேனில் இன்ப நுகர்ச்சியினை எம்மொடு கொள்வீராக, எனத், தலைமகற்குத், தோழி கூறினாள் *[ஐங்.368:3]*. சுற்றத்தாரோடு நல்ல மணநுகர்ச்சியினும்- மணத்தை அனுபவித்தலினும்-விளங்குதலுற்ற வேலவனைப் புணர்ந்து செல்லும் செலவு இனிதாங்கொல்லோ! எனத், தோழி, அறத்தொடு நிற்பக் கேட்ட, நற்றாய் கூறினாள் *[ஐங்.379:1]*.

இளவேனிற் காலமோ வந்துள்ளது; தாம் விரும்பாத நம்மையோ மறப்பாராக; பரத்தையர் திரளோடே மனம் பொருந்தி விளையாடும் வையையாற்றிடத்து, நீண்டுயர்ந்த இடுமணலிடத்து நுகர்ச்சியையும் நினையாரோ? நினைக்கில், வருவரன்றோ? எனச்சொல்லித், தலைவி ஆற்றாளாயினாள் *[கலி.27:20]*. செய்தற்கரிய தவங்களைச் செய்தவரும் குறைவற நுகரும் நுகர்ச்சிபோல, இளவேனிற்கண்ணே மரங்கள் மலர்ந்து, வண்டோடு தும்பிகளும், வருத்தந்தீர்ந்து, எவ்விடமும் தங்குதல் கொள்ளும்படி, அவற்றை எதிர்கொண்டன *[கலி.30:1]*. முயன்று பெற்ற செல்வத்தைத் தான் வருந்தாமற்படிபெற்று உண்பாரது நுகர்ச்சிபோல, மரங்களிற் பலகொம்புகளில் தேனையுண்டு, மிஞிறுகள், ஆரவாரித்தன் *[கலி.35:2]*.

மகளிரது ஆராக்காம இன்பத்தைப், பொழிற் பாயற்கண், தலைவரொடு கூட்டும் களவில் நுகர்ச்சியையும், மைந்தர் அகலத்தை அகலாத நுகர்ச்சியையும் மறவாது, தண்பரங்குன்று, அம்மகளிர் மனமெனத் தருஞ்சிறப்பிற்று, *[பரி.8:41,42]*. முருகவேளே! பெறுதற்கரிய இறைமையானமர்ந்த தேவர் எய்தும் நுகர்ச்சியை, மக்களும் எய்துக, என்று, திருவருள் புரியும் திருப்பரங்குன்றத்தின்கண்ணே, நீ வள்ளி நாச்சியாரை மணம்புரிந்தருளியது, வானுலகத்தில், தேவயானையை மணந்ததற்கு மாறாக, இவ்வுலகத்தில் புரிந்த செயல்போலும்! எனச், செவ்வேளைப் பரவினர் *[பரி.19:3]*. செவ்வேற்கோ திருப்பரங்குன்றம் நுகர்தல் இனிது *[பரி.தி.13:2]*.

**நுகர்வார்-துய்ப்பார்.** பனங்கள் நுகர்வார்-துய்ப்பார்-சிந்திய ஒழுக்கினை உண்ட களிப்புடன் யாமை செல்லும் *[அக.256:5]*.

**நுகர்வோர்-துய்ப்போர்.** தம் ஆகத்தைத் தழுவுவோரைத் தழுவுதல் செய்யாது, யாமத்து, ஊடற் குறையாகிய இனிய கலவிநகையைத் தரும் தேனை நுகர்வோர்- துய்ப்போர்- காமக் கணிச்சி உடைத்தலால், ஊடலைக் கழற்றி எறிந்துவிட்டு, அமளி சேர்வாராக *[பரி.10:32]*.

**நுகும்பு- குருத்து.** பனையினது நுகும்பை- குருத்தை-ஒத்தது சினை முற்றிய வரால் *[புற.249:5]*. புற்கள் நுகும்பு விட்ட நல்ல நீண்ட காடு *[அக.283:13]*.

சோலையின்கண் உள்ள வாழையினது சுருண்ட நுகும்பு, தான் வருந்தும்படி, மத்தகத்தைத் தடவுதலினால், யானை வலிகெட்டது *[குறு.308:1]*.

வழலை (ஒரு வகைப்பாம்பு) முதுவேனிற் காலத்தில் மரலின் நுகும்பு போல் (இளமடல்) வாட்டமுற்றது *[நற்.92:3]*.

**நுங்கு-பனங்காய்.** சோழன் நலங்கிள்ளியின் படையில், முன்செல்லும் தூசிப்படையோர் நுங்கின்- பனங்காயின் தீஞ்சேற்றினை மிசைந்தனர் *[புற.225:1]*. கோடைக்காலத்தில் நீர் நிறைந்து மெல்லியதாயுள்ள பனை நுங்கு, வற்றிக் கற்போலாயிற்று *[புற.389:1]*.

பரிசிலர், பனையினது நுங்கோடே, வேறு இனிய பல பண்டங்களையும் வெறுக்கின், வள்ளி முதலிய கிழங்குகளைத் தின்பர் *[பெரு.360]*.

யாமை, அகன்ற நீர்த்துறைக்கண்ணே, பிளந்த வாய் நிறைந்திட நுங்கின் சிந்திய ஒழுக்கினை உண்ட களிப்புடன் செல்லும் *[அக.256:4]*. நீர் நிறைந்த நுங்கின் கண் சிதறி விழுந்தவை போலக் குளிர்ச்சி பொருந்திய பனிக்கட்டியோடு முகில் துளிகளைச் சொரிந்தது *[அக.304:2]*.

கள்ளைக் குடிக்கும் விருப்பத்தை உடையவர்களது பயணம், ஊரினகத்துள்ள, பாளையினால் ஈனப்பட்ட, நாரையுடைய குறிய காய்களைக் கொண்ட, பனையினது நுங்கைக் கைக்கொண்டு மீள்வதற்கு இடமாகியது ஆதி அருமனுக்குரிய பழைய ஊர் *[குறு.293:3]*.

சிறுவர், முயற்சியாலே கிடைத்த இனிய கண்ணையுடைய பனை நுங்காகிய கொங்கையின் பயனைப் பெற்று மகிழ்வர் *[நற்.392:4]*.

பிடி துஞ்சுவனவற்றை ஒத்த, பாறையிடத்தனவாகிய, சுனை, நுங்கின் வெட்டின கண்ணை ஒத்திருக்கும் *[கலி.108:40]*.

**நுங்கை- (உம்) தங்கை.** பரத்தை, முகமன்கூறி, யானும் நின் சேரியில் உள்ளவளே; அயன் மனைக்கு உரியேன்; நினக்கு நுங்கை- தங்கை-ஆகுவென், எனக்கூறி, நெற்றியினையும், கூந்தலையும் தடவிப் பகற்போதில் வந்து மீண்டமையைக் கூறித் தோழி, வாயில் மறுத்தாள் *[அக.386:12]*.

**நுசுப்பினாய்-இடையை உடையவளே!** கொடியை ஒத்த நுசுப்பினாய்-இடையை உடையவளே- என்னுயிரைக் கொண்டு போகின்றவளே! யான் கூறுவது கேள்! எனத், தலைவன் கூறினான் *[கலி.58:4]*.

**நுசுப்பினாள்- இடையை உடையவள்.** எண்கையாய், நீ கொடுகொட்டி என்னுங் கூத்தை ஆடுங்கால் கொடியை யொத்த நுசுப்பினாளோ-இடையினையுடையாளோ- தாளமுடிந்துவிடுங் காலத்தினைத் தன்னிடத்தே கொண்ட சீரைத் தருவாள் ஆண்டுப் பிறரில்லையே, எனக், கூத்தப்பெருமானைப் பாடுவர் *[கலி.க.வா.1:7]*.

**நுசுப்பு-இடை.** நுண்ணிய பூண்களை அணிந்து மின்னுப்போல் மின்னி வளைந்த நுசுப்பினையும்-இடையினையும்-அழகுறச் சுழிந்த கொப்பூழினையும், கற்பையும் உடைய மடந்தை எனத், தன்னைப் புரந்த புரவலன் மனைவியை, மாறோக்கத்து நப்பசலையார் குறிப்பிடுவர் *[புற.383:13]*.

வளைந்து நுடங்கிய நுசுப்பினையுடையர் சூரரமகளிர் *[முரு.14]*. கொடி போன்ற நுசுப்பினையுடைய மடவரல், வள்ளி *[முரு.101]*. உமட்டியரது நுசுப்பினையுடைய நல்கூர்ந்த புறத்தைக் கூந்தல்

மறைத்தது *[சிறு.60].* வளையையும், நுசுப்பினையும், மெத்தென்ற தன்மையினையும் உடையவர் சேடியர் *[நெடு.150].*

வளைந்து நடங்கிய நுசுப்பினையுடையவள் குறுமகள் (தலைவி) *[அக.75:18].* தலைவியை ஈன்றவள் என்னும் அன்பு பற்றி என்பால் (தலைவன்) அருள் செய்யானாயினும், பலநாளும் கூந்தலை வாரிமுடித்து, நுசுப்பிலே ஏற்றிப் பாதுகாத்த, நன்மை பொருந்திய உதவியும், பெரிதும், உடையேன், என, மகட்போக்கிய தாய் கூறினாள் *[அக.195:9].* தலைவர் அயிரியாறு கடந்து சென்றனராயினும் நுசுப்பினை வருத்தித் தழைத்த தாழ்ந்த கரிய கூந்தலையுடைய (தலைவியின்) திங்கள் அன்ன திருமுகத்தில் காதணியாகிய குழையோடு பொருத பார்வையினை அவர் என்றும் நினையாநிற்பர், எனத், தலைமகட்குத், தோழி கூறினாள் *[அக.253:23].* தலைவி அழகிதாக மெலிந்த நுசுப்பினையுடையவள் *[அக.319:7].* பெரிய தோளினையும், நுண்ணிய நுசுப்பினையுமுடையவள் தலைவி *[அக.374:17].*

நுணுகிய நுசுப்பினையும் பெருந்தோளினையுமுடையவள் கானவர் குறுமகள் *[குறு.71:4].* தழையை அணிந்த அல்குலைப் பொறுத்தலாற்றாத நுணுகிய சிறிய நுசுப்பிற்குத் துன்பமுண்டாம்படி, அழகிய மெல்லிய மார்பகம் நிறையப் பருத்து நகில்கள் செப்போடு எதிரின *[குறு.159:2].*

பக்கங்கள் மறையப் பூண்ட, திருந்திய கலன்களையுடைய, பருத்த தோளையும், நுணுகிய நுசுப்பினையும், மெல்லிய சாயலையும் உடையவள் தலைவி *[நற்.93:8].* அகன்ற அல்குலையும், மெல்லியதாயமைந்த நுசுப்பினையும் உடைய மடமகள்- (தலைவி) *[நற்.101:7].* நேர்மையுடைய நுணுகிய நுசுப்பினையும், அகன்ற அல்குலையும் உடையவளே, நீ யார்? எனத், தலைவன், தலைவியை வினவினான் *[நற்.245:5].*

பானாளிரவில், தோளும், முலையும், கூந்தலும், குழையும், ஏனையனிகலன்களும் தனக்குச் சுமையாக, முறிவதொரு வஞ்சிக் கொம்பு போலும் நுசுப்பைத் தாங்கிக்கொண்டு பரத்தை ஒருத்தி வந்ததையறிந்து, காமக்கிழத்தி ஊடினாள் *[கலி.90:9].* அல்குல், தோள், கண் என மூன்றும் பெருகி, நுதல், அடி, நுசுப்பு, என்னும் மூன்றும் சிறுத்து அழகோடு மோர்விற்கும் ஓர் பெண்ணிடத்தே, தலைவன் ஒருவன் காதல் கொண்டான் *[கலி.108:3].* ஒரு கையால் நெல்லையுடைய வட்டியை அணைத்து, மற்றைத் தோளை வீசி, மகரக்குழை ஆடச்செல்லும் அழகையுடையாளது நுசுப்பு நுண்ணிதாய்த் தோன்றும் என, வினைவல பாங்கிற்றலைவியை, வினைவலபாங்கிற்றலைவன், இடும்பை எய்திக் கூறினான் *[கலி.109:16].* தன்மென்மையால் அணிகளைப் பொறுக்கலாற்றாத நுசுப்பாலே, அணிகலன்கள் அணியாமற், பூமாறின கொடியை ஒத்தவள் தலைவி *[கலி.132:18].* தலைவனோடே கலந்த கண், புருவம், தோள், நுசுப்பு, கூந்தல் என்கின்றவற்றின் அழகைப் பெறும் விலையின் வளப்பத்தை அறிந்து கொடுத்தவனிடத்து, உள்ளவற்றைக் கொள்ளுதல் அறியாதே, ஒருவன் கூறிய பொய்யாகிய வலையிலே, என்னெஞ்சு அகப்பட்டுவிட்டது, எனத், தலைவி கூறினாள் *[கலி.147:18].*

**நுட்பம்** - அறிவு. அரச உரிமையினையும், அமைச்சர் முதலியோரையும் அகன்ற நாட்டினையும் அஃகிய நுட்பத்தினையும்-அறிவினையும்-உடையோராய், இரந்தவர்க்கு இல்லையென்று மறித்த கையினையுடையராய்த், தம் பெயரை உலகில் நிறுத்தாமல் மாய்ந்த அரசர் பலர் *[மலை.551].*

**நுடக்கம்** - அசைவு / கூத்து. உலவினளாய், அசைந்தனளாய் ஆடுகின்ற மடமகளது தெய்வம் ஏறியதனால் அசைகின்ற நுடக்கம்- அசைவு-போலத் தோன்றி, இடந்தோறும் குறுக்கிட்டுக் கிடந்து விளங்கும் அரிய மணிகளையுடைய பாம்புகள், பெரிய மலையிடத்து ஆடின *[பதி.51:11].*

அலைகொணர்ந்து கொழித்த எக்கர் மணலை, நுணங்கிய துகிலின் நுடக்கம் போலக் காற்றுத் தூற்றும் *[நற்.15:2].*

நல்லோர் அஞ்சுதற்குக் காரணமான நுடக்கத்தினையும் (நடை), குறிய வளையினையும் உடையவள் காதலி *[ஐங்.71:1].*

நல்ல மகளிருடைய நுடக்கம் (கூத்து) கண்டார்க்கு விருப்பம் செய்யுமாறு போல, விருப்பம் வந்த கொம்பால் பொழில்கள் அழகுபெற இளவேனிற்காலம் வந்தது *[கலி.32:10].*

மின் விளங்குகின்ற நுடக்கமும், கனவினது தோற்றமும் போலே, தன் வடிவைக்காட்டி, என்னுடனே முற்படக்கூடிப், பின்னர்ப் பிறர் என்னை இகழ்ந்து சிரிப்பனவற்றையும் எனக்குக் காட்டிப் பின் தன்னலத்தை யான் காணாமல் மறைத்தவள் தலைவி, என, மடலூர்ந்து தலைவியை எய்திய தலைமகன், தன்பாங்காயினார்க்குக் கூறினான் *[கலி.138:5].*

**நுடக்கு**:காண்க.

**நுடக்கல்** - கழுவப்படுதல். கள்ளுண்ட கலம் நுடக்கலின்-கழுவப்படுதலின்-அந்நீரையுண்ட இறாமீன் செருக்கிப் பூட்டிய நாணற்ற வில் தெறிப்பது போல, நெற்கூடுகளின் அடியில் துள்ளி விழும் *[அக.96:1].*

**நுடக்கு**-அசைவு. ஆழிப்படையின் நிறம், சுடுகின்ற பொன்னோடு எழுந்து விளங்குகின்ற அழல் நுடக்கினை- அசைவினை- ஒக்கும் *[பரி.2:51].*

**நுடக்கம்** - காண்க.

**நுண்கேள்வி**- நுண்ணியவாய்க் கேட்டல். நீண்ட நுண்கேள்வியை - நுண்ணியவாய்க் கேட்டலை - உடையவன் அந்துவன் *[பதி.ப.7:2].*

**நுண்கோல்**- மென்கோல். பாண! யாமையை நாராசத்தின்கண்ணே கோத்தாற்போன்ற. நுண்கோலாற்-

மென்கோலால்-பிணிக்கப்பட்ட, தெளிந்த கண்ணையுடைய உடுக்கையோசை, இனிய காண்க, எனச், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடும்போது, கோவூர்கிழார் குறிப்பிடுவர் *[புற.70:3]*. சேவற்கோழி துயிலெடுப்ப, ஏற்றெழுந்து பனி துளிக்கும் புலராத விடியற்காலத்தே, நுண்கோல் கட்டப்பட்ட தடாரிப் பறையைக் கொட்டிக் கிளைஞன் மனைமுற்றத்தே நின்று, உழவெருதுகளை வாழ்த்தித், தலைவன் புகழை ஏத்தினான் *[புற.383:3]*.

நுண்கோல் கொண்டு போர்க்களத்தை வாழ்த்தும் பாணன் குதிரைகளைப் பெறுக, எனக், கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனைப், பரணர் பாடினார் *[பதி.43:27]*.

வழி முழுதும் பின்னி வளர்ந்த நுண்கோல்களையுடைய சிறு மூங்கிலோடே, வேழத்தினது மெல்லிய கோல்களையும் பற்றுக் கோடாகப் பிடித்துப் போவீர், எனக், கூத்தரை ஆற்றுப்படுத்தினர் *[மலை.223]*.

கயிற்றினைக் கொண்ட நுண்கோலால், பாணரது மகள், மீன் பிடித்தாள் *[அக.216:1]*. பொன்னானியன்ற கன்னத்தட்டு பொலிந்திட, வெள்ளியின் நுண்கோல் (மெல்லியகம்பி) அறுத்தலால் குறைந்து உதிர்வனவற்றைப் போல, வண்டின் கூட்டம் ஊதுந்தோறும், கோங்கின் பூவகத்தே, குரவமரத்தின் நறிய மலர்கள் குறைந்து உதிர்ந்தன *[அக.317:9]*. தலைவியின் நுண்கோல் திரட்சியுடைய விளங்கும் வளை, முயங்குந்தோறும், தலைவனின் முதுகைச் சுற்றிக்கொள்ளும் *[அக.338:9]*.

**நுண்கோல் அகவுநர்** - நுண்ணிய கோலையுடைய பாணர். தித்தன் வெளியன், நுண்கோல் அகவுநரை-நுண்ணியகோலையுடைய பாணரைப்- புரந்தான் *[அக.152:4]*. நுண்கோல் அகவுநர் விரும்பின், வெளியன் வேண்மான், யானையை வழங்குவான் *[அக.208:3]*.

**நுண்ணுணர்வு**- நுண்ணறிவு. நுண்ணுர்வோடு-நுண்ணறிவோடு-பெருங்கொடை வழங்குபவராக, இந்நிலவுலகம் இன்ப நிலையமாமாறு ஆண்ட வேந்தர் சிலர், *[புற.360:3]*.

**நுணக்கம்-மென்னுரை**. குதிரைகளின் பால்கடையுங்கால் எழும் வெண்மையின் பெரிய மிதப்பினையொத்த, வெள்ளிய வாயின்தெவிட்டலாய, பின்னே வழிந்திடும் நுணக்கம்-மென்னுரை-சிலம்பியின் நூல்போல் நுணுகுவனவாய்ச் சிதறின *[அக.224:7]*.

**நுணங்கு நுண்பனுவற்புலவன்**-மிக நுண்ணிய செய்யுட்களைப் பாடும் புலவன். கொற்றவை அருளப் பல படையினையுமுடைய புரவிகளைப் பெற்ற பழமையான புகழமைந்த நுணங்கு நுண்பனுவற் புலவன்-மிக நுண்ணிய செய்யுட்களைப் பாடும் புலவன்-பாடிய சிறப்புமிக்கது, ஏழிற் குன்றம் (இப்புலவன் யாரென்பது விளங்கவில்லை) *[அக.345:6]*.

**நுணல் - தவளை**. பள்ளங்கள் தோறும், ஆடுங்களத்தே ஒலிக்கும் பறைபோல, வரிகளையுடைய நுணல்-தவளை-ஒலித்தது *[அக.364:3]*. வேட்டுவன் உடும்பை ஈட்டியாலே குத்தி, வரிகளையுடைய நுணலை மண்வெட்டியாலே பறித்தெடுத்தான் *[அக.59:1]*.

கார்காலம், வரிகளையுடைய நுணல் கறங்கவும், தேரை ஒலிக்கவும் தொடங்கியது *[ஐங்.468:1]*.

**நுணவம்-நுணாமரம்**. தேனைப் பூக்கள் தம்மிடத்தினின்று துளிக்கும் இளமை முதிர்ந்த நுணவத்து - நுணாரமரத்தினது-வெட்டின வாயையுடைய குறிய குறடு உளிகளினால் கடையப் பெற்றது *[சிறு.52]*.

சுரும்புகள் களித்து ஆரவாரஞ் செய்யும் பெரிய கிளைகளோடு கரிய அடிமரத்தையுடைய நுணவம் கமழும் (இளவேனில்) காலத்தும் பிரிந்து சென்ற தலைவர் வாரார் எனத், தலைமகள் கூறினாள் *[ஐங்.342:3]*. நுணவு காண்க

**நுணவு-நுணாமரம்**. மழை பெய்து நீங்கிய பின்பு, அருவிகளின் நீர்த்துளியால் மலர்ந்த கரிய அடியினையுடைய நுணவின்-நுணாமரததின்-பெரிய கிளைகளிற் பூத்த வெள்ளிய பூக்கள், சிவந்த மணலையுடைய சிறிய வழிகளிலே கம்மென்று மணக்குமாறு உதிர்ந்து அவற்றை அழகுசெய்தன *[அக.345:16]*. நுணவம் காண்க.

**நுதல்-நெற்றி/சென்னி**. சிவன் அணிந்துள்ள பிறை, நுதலிற்கு-நெற்றிற்கு-அழகாயது *[புற.க.வா.1:9]*. பொன்னான் இயன்ற பட்டத்தையுடைய புகரணிந்த நுதல-மத்தகத்தை-யுடையது யானை *[புற.3:7]*. பட்டம் பொலிந்த நுதலை-மத்தகத்தை -யுடையது யானை *[புற.12:2]*. யானை பிறைவடிவமாக இடப்பட்ட நுதலோடு-மத்தகத்தோடு-சினம் பொருந்திய பார்வையையுடையன *[புற.22:3]*. ஒள்ளிய நுதலையுடைய மகளிர் கைம்மை கூரக் கூந்தல் கொய்யப்பட்டது *[புற.25:12]*. ஒள்ளிய நுதலையுடையமகளிர், பூவிற்கு விலையாகப் பெறுக என மாடமதுரையையுந் தருவன், நலங்கிள்ளி *[புற.32:4]*. இறைவனது அழகிய திருமுடிப்பக்கத்து அணிந்த பிறைசேர்ந்த நுதற்கண்ணே விளங்கும் ஒரு கண்போல வேந்தர் மூவருள்ளும் மேம்பட்டு விளங்கியவன், பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் *[புற.55:5]*. ஒள்ளிய நுதலையுடைய விறலியோடு நீ செல்வையாயின், செல்வையாகுவை, எனப், பாணனை ஆற்றுப்படுத்தினர் *[புற.70:14]*. நெடுஞ்செழியன் குடுமிகளைந்த நுதல் இடத்தே வேம்பின் ஒள்ளிய தளிரை, உழிஞைக் கொடியோடு சூடினான் *[புற.77:2]*. 'மணி இழைத்த அணி பொருந்திய அல்குலையும், ஒளிதங்கிய நுதலையும் உடையவள், விறலி *[புற.89:2]*. சிவன், பால்போன்ற பிறை நுதலிடத்தே பொலிந்த சென்னியை யுடையன் *[புற.91:5]*. 'ஒளி தங்கிய நுதலையுடைய விறலி! நீ

பாரியைப் பாடிச் செலின், இழை பெறுகுவை, 'என அவனை ஆற்றுப்படுத்தினர் *[புற.105:1]*. புகர் நுதலையுடையது, யானை *[புற.165:6]*. சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன் துணைவியர், சிறுநுதலையுடையர் *[புற.166:15]*. கற்பினோடு ஒளியையுடைத்தாகிய நுதலினையுடையள், பரிசிலன் மனைவியாகிய குறுமகள் *[புற.196:13]*. ஒளி பொருந்திய நுதலையுடையாள் ஆகிய பரிசிலன் மனைவி, பால் இன்மையின் முலைமறந்த புதல்வனோடு மனையிடத்துத் தங்கியிருந்தாள் *[புற.211:22]*. மறவன், தும்பைப் பூவால் தொடுக்கப்பட்ட கண்ணியைத் தன்னுதலில் கட்டினான் *[புற.283:13]*. ஒள்ளிய நுதலையுடைய அரிவை, நடுகல்லைப் பரவும் *[புற.306:3]*. *[புற.337:12]*. இவளை, இவள்தாய் ஈனாளாயின் சிவந்த நுதலையுடைய யானைகள் கட்டப்பெற்று, மரங்கள் வருந்துதல் அடையா, என, மகட்பாற் காஞ்சித் துறை கூறும் *[புற.348:9]*. வேந்தன், வேலின் கூரிய இலையால், தன் நுதலிடத்துள்ள வியர்வையைத் துடைத்தான் *[புற.349:1]*. பொன்னின் நிறம் பொருந்திய, நெடிய உச்சியையுடைய, இமயத்தைப்போலப் பட்டம் அணிந்த நுதலையுடையது யானை *[புற.369:25]*.

காலக்கடவுள், இளம்பிறை சேர்ந்த நுதலை உடையவன் *[பதி.க.வா.9]*. 'நீ பாசறையில் நீடினையாயின், சுடர் நுதலையுடைய தளர்ந்த நடையுடையாள் படுக்கைத் துன்பினின்றும் பிழைப்பாளோ என' இமையவரம்பனைக் குமட்டூர்க்கண்ணனார் பாடியுள்ளார் *[பதி.16:13]*. காட்டில் நுதலையுடைய மகளிர் கழல் விளையாடுவர் *[பதி.30:28]*. காதணிக்கு விளக்கம் அளிக்கும் ஒள்ளிய, நுதல் *[பதி.31:25]*. காதணிக்கு நெற்றிப்பட்டம் விளங்கும், அச்சம் பொருந்திய புள்ளியோடு கூடிய, நுதலையுடைய, பொன்னாற் செய்த இழைகளையணிந்தது யானை *[பதி.34:6]*. நல்ல நுதலினையுடைய விறலியர் தொன்னகரில் ஆடினர் *[பதி.47:7]*. ஒள்ளிய நுதலினையுடைய விறலியர்க்கு ஆரம்பூட்டியவன், குட்டுவன் *[பதி.48:2]*. சுடர் நுதலினையுடைய விறலியர் பாடல் கேட்டு நீடுதலினால், மெல்லியன் போலும் என, நினையினும், செருவில் கடியன், என, ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் சிறப்பிக்கப் பெறுவன் *[பதி.51:19]*. நிறத்தால் வேங்கை மலரை வென்ற, புள்ளிகள் விளங்கித் தோன்றுகின்ற, நுதலையுடையது களிறு *[பதி.53:18]*. ஒள்ளிய நுதலையுடைய மகளிர் துனித்த கண்ணினும் இரவலர் புன்கண் அஞ்சும் பண்பினன், ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் *[பதி.57:13]*. நெடுந்தொலை மணம் கமழ்கின்ற நறிய நுதலையுடைய சேயிழைக்குக் கணவ! எனச் செல்வக் கடுங்கோ வாழியாதனை விளிப்பர் *[பதி.65:10]*. கற்போடு, ஒளிவிடுகின்ற நுதலையுடைய உயர்ந்தோளுடைய கணவன் செல்வக் கடுங்கோவாழியாதன் *[பதி.70:15]*. புள்ளிகள் பொருந்திய நுதலையுடையன, யானைகள் *[பதி.71:20]*. பெருஞ்சேரல் இரும்பொறையின் தேவி ஒள்ளிய நுதலையுடையள் (அன்மொழித்தொகை) *[பதி.74:17]*. இளஞ்சேரல் இரும்பொறையின் தேவி ஒள்ளிய நுதல் உடையாள் *[பதி.81:28]*. போர் செய்து பழகிய யானைகள், கார் காலத்து, முகில்முழக்கத்தைச் செய்தாலும், கட்டுத்தறியினிடத்தே கட்டியிருத்தலையறுத்து, நுதலை மேலே தூக்கி எழும் *[பதி.84:4]*. ஒளிபொருந்திய நுதலையுடைய. அரிவையொடு பொலிந்து, நீ, நோய் இலை ஆகியர், என, இளஞ்சேரல் இரும்பொறையைப், பெருங்குன்றூர்கிழார் வாழ்த்துவர் *[பதி.89:20]*.

சூரரமகளிர், திலகமிட்ட, மணம் நாறுகின்ற, அழகினையுடைய நுதற்கண்ணே சுறாவினது அங்காந்தவாயாகப் பண்ணின தலைக்கோலம் அணியை அணிந்தனர் *[முரு.24]*. கூர்மையுடைத்தாகிய தோட்டி வெட்டின, வடுவழுத்தின புகரையுடைய, யானையின் நுதலில் - மத்தகத்தே - பொன்னரிமாலை, பட்டத்தோடே கிடந்தசைந்தது *[முரு.78]*. பிறைபோல அழகுகொண்ட நுதலினையுடையவள் பாடினி *[பொரு.25]*. ஒள்ளிய நுதலினையுடைய விறலியர், தாளத்திற்கொப்ப ஆடினர் *[பொரு.110]*. வாள் நுதல் விறலியரது நடந்துதளர்ந்த அடியை இளையர் தடவினர் *[சிறு.31]*. நறிய நுதலினையுடைய பாரப்பனி சமைத்த சோற்றை மாவடு ஊறுகாயோடு பெறுவிர், எனப் பாணர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் *[பெரு.303]*. மகர வாயாகிய தலைக்கோலத்தைச் சேர்த்தின, சுரும்புகள் சூழும் ஒளி நுதலினையுடையவர் மகளிர் *[பெரு.335]*. யானை, கரும்புகளோடு இனிய அதிமதுரத் தழையையும் தின்னாமல், அவற்றாலே, தம்முடைய நுதலைத் துடைத்தது *[முல்.33]*. உயர்ந்த அழகினையும், புகர் நிறைந்த நுதலினையுமுடையது யானை *[நெடு.116]*. அரசனாகிய துணை பிரிகையினாலே, தலைவிக்கு நுதலிடத்தே கைசெய்யாமல் மயிர் உலறிக் கிடந்தது *[நெடு.138]*.

ஒள்ளிய நுதலையுடைய தலைவியின் கடுநோயின் காரணம் வினவப்பட்டது *[குறி.1]*. புள்ளியினையும் புகரினையுமுடைய நுதல் அழகழியும்படி அம்பு பட்டு உருவின புண்களாலே உமிழப்படும் குருதி யானையின் முகத்தே பரந்தது *[குறி.172]*. தலைவன் தலைவியின் அணிநலத்தை நுகர்வேன் எனக்கூறி அவளது மாசற்ற சுடர் நுதலைத் துடைத்தான் *[குறி.182]*. சுடர் நுதலையுடைய நேரிழை உணவினை கவரும் கோழியைப் பொற்குழையால் எறிந்தோட்டினாள் *[பட்.21]*.

இறைவன் நுதலின் கண்ணது, இமைத்தல் இல்லாத நாட்டம் *[அக.க.வா.4]*. தலைவி நாண், கற்போடு வாள் நுதலையுடைய குறுமகள் *[அக.9:24]*. செறியும் வியர்வு அரும்பிய நுதலளாகி முன்பு குளிரத் தழுவி அமர்வள். அதுகழித்தே, என, மகட்போக்கிய செவிலி கூறினாள் *[அக.17:4]*. 'நின்னைக் கனவிற்கண்டு யாம் வருந்தி யிருக்கவும், எம்மிடத்து நீ ஊடல் செய்தல், எங்ஙனம் வந்தது, எனச் சொல்லி, நினது பக்கம் உயர்ந்த புருவத்துடன் சிறுகிய நுதலைத் துடைத்து, நினது கூந்தலைக் கோதிய நல்லபொழுதிலே, அப்பொய்க்கனாவிடத்தே, ஏக்கற்ற வருத்தத்தினை, நீ

அறிவிற்கொள்ளாயாகலின் புலக்கின்றாய்; எனத் தலைவியிடம் தலைவன் கூறினான் [அக.39:21]. தழைத்த முல்லை, காற்றால் மயங்குதலின், காடு நாறுவதுபோன்று நாறும், நறிய நுதலினையுடையவள் தலைவி [அக.43:10]. ஐவகைப்பட்ட கூந்தலோடு அழகிய நுதலினையுடையவர் மடவார் [அக.48:17]. கன்றுடனே மரத்திடத்தே கட்டப்பெற்ற ஆவைப்போலத், தலைவியின் முதுகினைப் பார்த்து, அண்மையில் வந்து, செவிலித்தாய் அவள், நுதலினைத் தடவினாள் [அக.49:6]. அன்றிலதுணை பிரியத் துஞ்சாதெனக் கூறிக் கண்ணீர் கரக்கும் ஒள்ளிய நுதலையுடைய அரிவை [அக.50:14]. 'யாம் பிரிந்து தனித்திருப்ப, ஒழியாது அழுதிருக்கும் நம் தலைவியின் அழகிய சிறு நுதல், மதியைப் போலும் அழகு நீங்கப் பீர்க்கினது பூவினை ஒத்த நிறம் கொண்டதோ?' எனப் பிரிந்த தலைவன், கிழத்தியை நினைத்துக் கூறினான் [அக.57:19]. நல்ல நுதலினையுடைய மகளிர் கணவன் பிரியக் கவின் வாடக் கலங்குவர் [அக.75:9]. தலைவியின் நல்ல நுதல் பசப்பத் தலைவன் பிரியச் சூழ்ந்தான் [அக.77:1]. புள்ளிகள் பொருந்திய நுதலால் பொலிவுற்றது ஆண்யானைகளின் தலைவன் [அக.78:4]. பாரியின் இனிய சுனைக்கட் பூத்த தேன் மணக்கும் புதிய மல்ரெனத் தலைவியின் நுதல் மணக்கும் [அக.78:24]. தலைவியின் நல்ல நுதல் பசக்குமாறு தலைவன் பிரிந்தான் [அக.85:1]. நறிய நுதலையுடைய அரிவை விலையாகக் கோசரது நியமம் என்னும் ஊரைக் கொடுப்பினும் அவள் தந்தையர் கொள்வார் அல்லர் [அக.90:14]. மதுரையின் நாளங்காடி என மணக்கும் நறிய நுதலினையுடையவள் தலைவி [அக.93:10]. யானை வரிபொருந்திய நுதலினையுடையது [அக.93:16]. தலைவன் பிரியத் தலைவியின் நுதலும் மெல்லமெல்லப் பசந்தது [அக.95:1].

தலைவன் இன்று ஒருநாள் வந்து அருள் செய்யாமையின், கரிய கூந்தலாற் சூழப்பட்ட ஒள்ளிய நுதலின் பசப்பினை நாம் கண்டது, என்னையோ? எனத், தலைவன் சிறைப்புறமாகத் தோழி கூறினாள் [அக.102:19]. ஒளிபொருந்திய நுதலையுடைய ஒருத்தி (பரத்தை) யோடு தலைவன் புனலாடினான் [அக.116:6]. தலைவியின் நுதலும் தோளும் வாடத் தலைவன் அகன்றான் [அக.119:1]. தலைவியின் நுதலும், காமநோய் மிக்கமையால், ஒள்ளிய அழகு தொலையப்பெற்றது, எனத், தோழி கூறி வரைவு கடாவினாள் [அக.132:2]. 'முதல் நாளிரவில் தன் உயிர்க்கு உடம்பாக அடுத்ததலைவி கசங்காத புத்துடையால் உடல் முழுவதும் போர்த்தியதால், மிக்க புழுக்கத்தை எய்திய பிறைபோன்ற நுதலில் அரும்பிய வியர்வையைக் காற்றுப் போக்கிட நீ சிறிது திறவாய்' எனக் கூறித், தலைவன், தலைவியின் போர்வையைக் கவர்ந்தான் [அக.136:21]. தேமலுடன் கூடிய எனது மாமை நிறமும், தளிர்போலும் அழகும் கெட்டொழியப், புதல்களிற் படர்ந்த பீர்க்கினது புதிய மலரையொக்கப் பசலை பரந்த நுதலேன் ஆகித் துன்பம் பெருகி மயங்கியுள்ளேன் எனப், பிரிவின்கண், தலைமகள், தோழிக்குக் கூறினாள் [அக.135:3]. பங்குனி விழாக் கழிந்த பிற்றை நாளில், மரங்கள் அடர்ந்த சிறுகாட்டில், அடுதல் இன்மையின், தீ இல்லையாகிய, வெற்றடுப்புக் களையுடைய, விழாக்களம் போல, நினக்கு, நுதல் பெரிதும் பொலிவற்ற நிலையினைக் கொண்டது, எனப், பிரியும் எனக் கருதி வேறுபட்ட தலைமகட்குத், தோழி கூறினாள் [அக.137:12]. தாய் கொணர்ந்து பரப்பிய மணலில் கிடந்த மணாது பாவையை எடுத்துக், கண்ணும், நுதலும் நீவி, எனது அரிய மகளே! நினது இனிய தோளைத் தருவாயாக என்று கூறி, மகட்போக்கிய தாய், அழாநிற்பள் [அக.165:9]. தலைவி தனிமை கொண்ட மாலையில் மெல்லிய விரல்கள் சேர்த்திய நுதலளாகி வருந்துவள்! எனத், தலைவன் இடைச்சுரத்து, தன்னெஞ்சிற்குக் கூறினான் [அக.169:11]. நுதலும் நுண்ணிய பசலை பரக்கப் பெறும்; நாள்தோறும் அவர் அருட் பண்பினை யான் நினைவேன், எனக்கூறி வருந்தாதே! எனத், தோழி, தலைவிக்குக் கூறினாள் [அக.171:1]. வரி பொருந்திய நுதலினையுடையது யானை - (பா.வே. அணிநுதல் யானை) [அக.172:8]. நறிய நுதலினையும், கரிய பெரிய கூந்தலையும் உடையவள் தலைவி [அக.173:4]. மதியினை யொத்த ஒளி பொருந்திய நுதல் உடைய தலைவி வருந்தப் பதியை நீங்கிப் போய்த் தங்குதல் பொருந்துவதாமோ? எனத், தோழி செலவழுங்கக் கூறினாள் [அக.179:13]. தலைவன் கூட்டத்தை இழந்தமையின் இளைய மதியினை ஒத்த தலைவியின் குற்றமற்ற ஒள்ளிய நுதல், பொன்னையொத்த நிறத்தினைக் கொண்டது [அக.192:1]. துன்பமிக்க வருத்தத்தால் தலைவியின் நுதலில் பசலைபரக்கத் தலைவர் பிரிந்து சென்றனர். [அக.205:6]. தெளிந்த உவரையுடையதாகிய குறைக்குடமாக முசக்கப்பட்ட நீரை, வெப்பத்துடன் மூச்செறிந்து, பிறைமதிபோன்ற நுதல் வியர்த்திடப், பருகினளோ என, மகட்போக்கிய தாய் கூறினாள் [அக.207:13]. தலைமகன் பிரிவின்கண், தலைமகள நுதல் பசந்துள்ளது, இனி இவள் எந்நிலை அடைவாளோ? எனத், தோழி கூறினாள் [அக.227:1]. ஒளி பொருந்திய நுதலையுடைய குறுமகள் இல்லறக்கிழமை என்னொடு கூடுமாயின் தீதுண்டோ, என்றான், தலைவன் [அக.230:5]. வாடைக்காற்று மாலைப்பொழுதுடன் கூடி இரக்கமின்றி நலிந்திட நுதற்கண்ணே தங்குதல் கொண்ட, அயலோரால் அறியப்படும் பசலையுடன், மேனி மெலிந்து என்னாயினள் கொல்? என, உசாவியறியாராதலின், உசாவுதலை மறந்து விட்டனரோ? எனத், தலைமகள், ஆற்றாமை மீதூரத், தோழிக்குக் கூறினாள் [அக.235:17]. நீ, தலைவியது அழகிய நுதலைத் தடவி, மார்பகத்தே இனிய துயிலை விரும்பினாயாயின், புன்னை மரங்களையுடைய, சோலைக்கண், வருவாயாக' எனத், தலைமகற்குத் தோழி, பகற்குறி நேர்ந்தாள் [அக.240:10]. தோழி வாழி; நாம் தலைவர்பாற் செலுத்திய தூதர் சென்றுள்ளார்; இனி அங்குத் தங்கியிரார், நம் தலைவர்; நாம், தோளும் வளை செறியப் பெறுவோம்; நம் கூந்தல் சூழ்ந்த ஒளி தங்கிய நுதற்கண் உள்ள பசலையும்

மறைந்தொழியும், எனத் தோழி கூறினாள் [அக.251:2]. சோலையில் யாளி தாக்கி, உயர்ந்த நுதலையுடைய யானையது கொம்பை' புய்க்கும் [அக.252:3]. நல்ல நுதலையுடைய அரிவை, விளையாட்டாயம் காண, நம்மை நினையும், எனத், தலைவன் கூறினான் [அக.254:8]. அழகிய நுதலையுடைய குறுமகள் நலம் வவ்விய அறனிலாளன், அறியேன் என்றமையின், நீறுதலைப்பெய்து ஒறுக்கப் பெற்றான் [அக.256:16]. அழகிய நுதலால் பொலிந்த தலைவி மார்பில், துயிலைக் கூட்டி வைத்திருப்பேனே! அது கழிந்ததே, என மகட்போக்கிய செவிலித்தாய் கூறினாள் [அக.263:14]. சிவந்த நுதலையுடைய யானையுடையது வேங்கடம் [அக.265:21]. புள்ளிகளையும், வரிகளையுமுடைய பொலிவுற்ற நுதலினையுமுடையது யானை [அக.268:2]. வாணன் சிறுகுடியில் திரு நுதல் மகளிர் குரவை அயர்வர் [அக.269:20]. யானையின் புலால் நாறும் புள்ளி பொருந்திய நுதலைக் கமுவ (இரவில்) மலை, அருவியைத் தந்தது [அக.272:2]. திங்கள் மண்டிலம் பகலில் ஒளிகுன்றி மறையும் செயல்போல, மெல்லெனத் தலைவியின் நுதல் ஒளி மாழ்கவும், தலைவன் பொருள் ஈட்டச் சென்றனன் [அக.277:3]. மாட்சிமையுற்ற திங்களையொத்த நுதலினையுடைய ஒருத்தி (பரத்தை) வெகுண்டு தலைவனது மாலையினை அறுத்தனள் [அக.306:10].

சிறிய நுதல் பசப்புற்றுத் தலைவி துயருழக்கும் என்றெண்ணாது, தலைவன் பிரிந்து சென்றான் [அக.307:1]. அராநுங்கிய திங்கள் என, நுதல் ஒளியினை இழந்திடத், தலைவர் பொருளை விரும்பிச் சென்றனர் [அக.313:7]. நம் காதலர் வந்து நின்றார், பல நாளாக நம் அன்னையும் அறிந்திட, நம்மை வருத்திய, நம் நல்ல நுதலிடத்தே பரவிய பசலைநோய் நம்மைப் பிரிந்து எவ்விடத்துச் சென்றதோ, எனத், தலைமகன் வரவுணர்ந்த தோழி, தலைமகட்குக் கூறினாள் [அக.317:23]. ஒளி பொருந்திய நுதலினையுடையவள் அரிவை! [அக.325:12]. சிறிய நுதலையுடைய குறுமகள் (பரத்தை) மிக்க அழகினையுடையாள், எனக் கூறித், தோழி வாயில் மறுத்தாள் [அக.326:2]. என் கண்ணும், நுதலும் பசப்ப, நோய் கூர்ந்து யான் வருந்தவும் தலைவர் பிரிதலைத் துணிந்தார் எனத், தலைமகள் தோழிக்குக் கூறினாள் [அக.329:2]. பக்க மலையிலுள்ள கிளைத்த ஒளி பொருந்திய காந்தட் பூப்போல, மணக்கும் நறு நுதலையுடையவள் தலைவி [அக.338:7]. ஒள்ளிய நுதலையுடைய மகளிர் கடுப்ப, மயிலினம் ஆடும் [அக.344:4]. களிறு, தன் வரிகள் தங்கிய நுதலிடத்தே வைத்த வலிமை குன்றிய பெரியகை, குன்றத்தே ஏறும் பாம்புபோல் தோன்றும் [அக.349:12]. தலைவ, வெற்றிகொண்ட உவகையுடன் நின் மனையிற் புகுதலை நீ விரும்பினமையான் தலைவியின் திருநுதலிடத்தேயுள்ள பசப்பு இனி எங்குத் தங்கும் என, வினைமுற்றிய தலைமகற்கு, உழையர் கூறினார் [அக.354:14]. நல்ல நுதலையுடைய அரிவை (பரத்தை) யோடு பொழில் விளையாடியமை அறிந்து தலைவி அழுத கண்ணள் ஆயினள் [அக.366:13]. நும்பால் யாம் வெறுத்தல் இல்லேம்; அங்ஙனமாகவும், எம்மிடத்து நுதல் பசலையுற்றது காண், எனக், காதற்பரத்தை புலந்து கூறினாள் [அக.376:13]. 'தோழி, இனிமையுற மணக்கின்ற அழகிய நுதலில் திலகம் அணிந்து, என்னைப் பாதுகாத்தும், நின்னைப் பாராட்டிப் பேசியும், பள்ளியில் பகற்போதும் நீங்காராயிருப்பவர் நம் தலைவர், எனத், தலைமகள் தோழியிடம் கூறினாள் [அக.389:3]. கொன்றையின் நன்கு மலர்ந்த பூக்களைப் போலப், பாழ்பட நிறைந்த பசலையுற்ற மேனியைப் பார்த்து, நுதல் பசந்து இன்ன நிலையினேம் ஆகிய எம்மை இங்கு அருளுதல் செய்யானாய்க், கண்ணீர் பெருகவும், அறத்தினைக் கைவிட்டு நீங்குதல், நின் குன்றுகெழு நாடற்கு என் எனப்படுமோ? எனக், காமமிக்க கழிபடர் கிளவியால், தலைமகள், தலைமகன் வரையினின்றும் போந்த ஆற்றோடு புலந்து கூறினாள் [அக.398 ' நல்ல நுதலையுடைய அரிவை, நின் இன்பந்தரும் ஆகத்தைக் காதல் உள்ளமோடு முயங்கலின்றி ஆண்டு நீடார்; எனத், தோழி தலைவியை வற்புறுத்தினாள் [அக.399:3]. 'குட்டுவனுக்குரிய மரந்தை (மாந்தை) என்னும் நகரைப் போன்ற எமது பனிச்சை விளங்குகின்ற அழகிய நுதற்கு உரிமையுடையோனும், வரைவொடுவரும் அத்தலைவனே யாவான், எனத், தலைவன் வரைவொடு வந்தமையைத், தோழி, தலைவிக்குக் கூறினாள் [குறு.34:7]. அரலைக் குன்றத்தின்கண் உள்ள சுனையின்கண் அலர்ந்த குவளை மலர்களோடு சேர்த்துக் கட்டிய காட்டு மல்லிகையின் மணம் வீசும் நுதலைத், தலைவர் மறப்பாரோ? நீ வருந்துதல் ஒழிக, எனப், பிரிவாற்றாத தலைவிக்குத், தோழி கூறினாள். [குறு.59:4]. ஒள்ளிய நுதலையுடைய குறுமகள் தண்மையையும், வருத்ததையும் தருபவள் [குறு.70:1]. என் நுதல் அவரை நான் விரும்பியதனால் பசலை பெற்றது; அத்தலைவர், கொடியரல்லர், எனத், தலைவி கூறினாள் [குறு.87:4]. தலைவன் அளவளாவ இருந்தபொழுதும், நினது நல்ல நுதற்கவின், பிறர் அலர் கூறும் குறைபாட்டை யுடையதாயிற்று, எனத், தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி கூறினாள் [குறு.109:4]. 'தலைவ! நாரைகள் என் மகளாகிய பாவையின் நுதலை மிதிக்கும்; ஆதலின் யாம் போகின்றோம்;' என, இடத்துய்த்து நீங்கும் தோழி, தலைமகற்குக் கூறினாள் [குறு.114:5]. கடல் நடுவண், எட்டாம் நாளுக்குரிய இளைய வெள்ளிய திங்கள் தோன்றியதைப் போல, ஒரு மகளின் கூந்தலுக்கு அயலில் விளங்குகின்ற சிறிய நுதல், புதிதாகப் பிடிக்கப்பட்ட யானையைப் போல, எம்மைப் பிணித்தது; எனத், தலைவன் கூறினான் [குறு.129:5]. ஒளி பொருந்திய நுதலையுடைய மகளிர்க்கு ஆடவருயிர் [குறு.135:1]. தான் சமைத்த உணவினைக் கணவன், 'இனிது' எனக்கூறி உண்டலின், ஒண்ணுதல் ஆகிய தலைவியின் முகன், மகிழ்ந்தது [குறு.167:6]. நுதல் பசலை பரந்து, தலைவி வேறுபாடு அடைந்தது, நும்மாலாகியது, எனத், தலைவனிடம், சொன்னால் என்ன? எனத், தலைவி, தோழிக்குக் கூறினாள்

*[குறு.185:1]*. தலைவன் என்னைப் பிரிந்து சென்றான்; இதனைப் பசப்பு எப்படி அறிந்தது? எனது மணம் கமழ்கின்ற அழகிய நுதலிடத்து அது பரவாநிற்கின்றது, எனத், தோழிக்குக், கிழத்தி கூறினாள் *[குறு.205:7]*. கண்ணும், தோளும், பிறையென்று கருதும்படி அறிவை மயங்கச் செய்யும் நுதலும், சேர்ப்பனொடு நகுவதற்கு முன்பு மிகவும் நல்லனவாக இருந்தன; எனத், தோழிக்குக், கிழத்தி கூறினாள் *[குறு.226:3]*. 'தோழி! தலைவரது நாட்டிலுள்ள குன்றத்தைப் பார்த்தேன்; அதனால், என் நுதல் பழைய தன்மையுடையதாயிற்றோ? (பசப்பூர்ந்து விட்டது). பார்ப்பாயாக; எனத், தோழிக்குத் கிழத்தி கூறினாள் *[குறு.249:5]*. காந்தள் அரும்புகள் விரிந்து அமையாதனவாய், மணம் வீசுகின்ற, நறுநுதலையுடைய, மாமை நிறம் பொருந்தியவள் தலைவி *[குறு.259:3]*. ஒள்ளிய நுதலையுடைய அரிவை, புனல் தருபசுங்காய் தின்ற தப்பற்குப் பெண் கொலை புரிந்தான் நன்னன் *[குறு.292:1]*. முல்லையினது பசிய அரும்பினது தாதின் மணம் போன்ற வீசுகின்ற நல்ல நுதலையுடையவள் அரிவை *[குறு.323:5]*. சில சோற்றையுடைய பலியோடு, சிறிய ஆட்டுக்குட்டியைக் கொன்று, வேலன், தலைவியின் நுதலைத் தடவி, முருகக் கடவுளை வணங்கிப், பலியாகக் கொடுத்தான் *[குறு.362:4]*.

தம்மையின்றியமையாத நம்பால், முன்பு விருப்பம் மிக வைத்தருளிப், பின்பு பிரிதலால், நம் நறியநுதல் பசலையூர்தற்கு அஞ்சித், செய்வதறியாராய்த், தலைவர், தடுமாற்றமடைவாரோ? எனப், பிரிவுணர்த்திய தோழிக்குத், தலைவி கூறினாள் *[நற்.1:8]*. வரி பொருந்திய நுதலையுடைய யானை நெல்லருந்திச் சிலம்பில் தூங்கும் *[நற்.7:7]*. நம் தலைவன் தன் கைகளால் நல்ல நுதலைத், தைவந்தும். கள்வரைப் போலக் கொடியனாயிராநின்றான்', எனத், தலைவிக்குத், தோழி கூறினாள் *[நற்.28:2]*. பொலிவு பெற்ற நுதலையுடைய பெரிய பிடி புலம்பக்,களிற்றைத் புலி தாக்கும் *[நற்.36:2]*. நறிய நுதலையுடைய அரிவை! தலைமகன், பகைவரும் விரும்பும் பான்மையோன், என, அறியாது, என் சிறுமையால் நீ, நாணிலை, என்று கூறி வந்தேன்; எனத்தோழி தலைவிக்குரைத்தாள் *[நற்.50:10]*. கரிய சேற்றை அப்பிய நுதலையுடையது கொல் களிறு *[நற்.51:9]*. மலையிடத்துச் செல்லும் திங்களை நோக்கி நின்று, சிறிது கருதி முட்போன்ற பற்களையும், திலகமிட்ட மணம் கமழ்கின்ற அழகிய நுதலையுமுடைய நாள் நிரம்பிய மதித்திங்கள் என்பதொன்று எம்முடையதும் உண்டு, எனத், தலைவியை மனத்திற்கொண்டு, தலைவன் பாராட்டிக் கூறினான் *[நற்.62:6]*. புறவின் சேவல் தான் விரும்பிய பெண் புறாவைக் காமத்தால் செயலறவு கொண்டு அழைக்கும் குரலோசையை, நும்மைப் பிரிந்து தனிமையாயிருந்து கேட்குந்தோறும், தலைவி, நடுங்கி வருந்துமாறு, அவளுக்கு முன்பு நின்று நீயிர் அவளுடைய கண்ணையும், நுதலையும் தைவந்து பிரிந்து போதற்கு, வன்மையுடையீரோ? எனக்கூறித். தோழி, தலைவனைச் செலவழுங்குவித்தாள் *[நற்.71:5]*. பொலிவுபெற்ற, விளங்கிய கொல்லைகளையுடைய, திருச்சாய்க்காட்டைப் போன்ற, எனது நுதலின் அழகை பசலையைக் [illegible] நாம் செல்ப, என, உழையர் கூறாநிற்பர். என [illegible]வுக் குறிப்பறிந்து வேறுபட்ட தலைவி கூறினாள் *[நற். [illegible]]*; நாட! மடந்தையினது சுடர் போன்ற ஒளியையுடைய அழகிய நுதலிலே பசலையூருமாறு அவளது தொடர்பினை எவ்வண்ணம் கைவிட்டனை? எனத், தலைமகளது ஆற்றாமை கூறித், தோழி வரைவு கடாவினாள் *[நற்.108:8]*.

தலைவி, அழகுபெறப், பிறைபோன்ற நுதலினுண்டாகிய வியர்வை நீரை அழகிய முன்றானையின் நுனியாலே துடைத்துக்கொண்டு, நம்மீது புலவிமிக்கு, அடிசிற் சாலையிடத்திருக்கின்றாள்; என, விருந்து வாயிலாகப் புக்க தலைவன் கூறினான் *[நற்.120:7]*. இராகுவினாலே கவர்ந்துகொள்ளப்பட்ட திங்களின் ஒளி கெடுதல் போல, நுதல் ஒளி மறைபடும் காரணத்தை நீ எனக்கு உரைத்தாயல்லை; எனத், தோழி, தலைவி குறைநயப்பக் கூறினாள் *[நற்.128:2]*. மாயோட்கு நுதலும் பசலை பாய்ந்தது, என்று, அயலார் தூற்றினார் *[நற்.133:3]*. அழகிய நுதலையுடைய குறுமகள் (தலைவி)! தினையினைக் கிளி கவர எங்குச் சென்றாய் என அன்னை கழறினள் *[நற்.147:1]* நல் நுதல் பசப்பினும் சாரலிடத்தே வாரற்க', என, இரவுக்குறிச் சிறைப்புறமாகத், தோழி கூறினாள் *[நற்.151:1]*. ஐம்பால் [illegible] சிவந்து விளங்கிய நுதலிடத்தே, பொலிவுபெற்ற [illegible] உடையள், தலைவி *[நற்.160:7]*.

தூதாக வந்த பாணனே! நின் வாயினாலே கூறப்படுகின்ற மெல்லிய பொய்ம்மொழிகள், இளமை மாறாத மடந்தையினது பிறைபோன்ற அழகிய நுதலிடத்துப் பரந்துள்ள பசலையை நீக்குவன வல்ல காண்', எனத், தோழி, பாணனுக்கு வாயில் மறுத்துக் கூறினாள் *[நற்.167:11]*. தலைவரது தேர் வந்திறுத்தது; இனி, இவளது நுதலிடத்துள்ள கவின் உயர்ந்ததாகும்' எனத், தலைவன் வினைமுற்றிப் புகுந்தது [illegible] தோழி மகிழ்ந்து கூறினாள் *[நற்.181:13]*. தோழி, நுதல் [illegible]ந்த பீர்க்க மலர் போலப் பசலை பரந்தது', என்று, அழாதே எனக் கூறித், தலைமகளைத், தோழி ஆற்றுவித்தாள் *[நற்.197:1]*.

ஒளிவிடுகின்ற நுதலையுடைய குறுமகளே, ஏன் வாடுகின்றாய்? தலைவர் செல்வார் அல்லர், எனத், தோழி தலைவியை ஆற்றுவித்தாள் *[நற்.208:4]*. ஒள்ளிய நுதலையுடைய குறுமகளே நம், தலைவர் கொடிய பாலைவழிச் சென்றார்; அத்தகைய உலகைப் படைத்த கொடியோனும் அவ்வழிச் சென்று துன்புறுக; என்று தோழியிடம் தலைவி உரைத்தாள் *[நற்.240:2]*. சோலையில் நாம் நின்றபோது, நறுமணத்தால் வண்டுகள் வந்து சூழ்ந்தொலிக்கின்ற ஒளியையுடைய நமது

நுதலைப் பார்த்துச் சேர்ப்பன் கைகூப்பி வணங்கி நின்றதைக் கருதுந்தோறும் நுதல் பசலையுடையதாயிரா நின்றது, என்றாள் தோழி [நற்.245:1]. நீ, நல்காய் ஆயினும், என் தோழி, நின்வழி நடப்பவள்; அவள் நல்ல நுதலில் இருந்து பசலை மிகுதலைக் கொண்ட பசலை நோய்க்கு நீயன்றி வேறு மருந்தில்லை; இதனை நன்கு அறிந்தனையாகில், பின்பு பிரிந்து செல்வாயாக, எனத், தோழி, தலைமகனுக்குக் கூறினாள் [நற்.247:7]. பிறைத் திங்களைப் போன்ற அழகு, பொருந்திய, மாசற்ற, சிறப்புடைய நுதலையுடையவள் தலைவி [நற்.250:7]. தோழி, பிறை போன்ற அழகெல்லாம் இழநத நினது நுதலை, நம் காதலனுக்கு, நாம் நாணமேலீட்டினால் சொல்லாதொழிந்தோம்', எனச், சிறைப்புறமாகத், தலைவனைத் தோழி வரைவு கடவினாள் [நற்.263:1]. நல்ல நுதலின்கண்ணே பசலைபாயக், கவலை மிக்க, நீங்குதலரிய, நோயானது. நம் காதலனால் தரப்பட்டது, என்பதை அறியாத அன்னை, வெறியெடுத்தலால் தணியுமாயின் நன்று', எனத், தலைவன் சிறைப்புறமாகத், தோழி செறிப்பறிவுறுத்தி, வரைவு கடாவினள் [நற்.282:3]. ஒள்ளிய நுதலையுடைய, மகளிர் கண்ணைபொத்தது, நெய்தல் மலர் [நற்.283:1]. மலைநாடன் பிரிதலினாலே, தலைவியின் நல்ல நுதலிலே பரந்த பசலையைப் பார்த்து அன்னை குறிகேட்டாள் [நற்.288:5]. நாடனது மார்பினை உரிமையாகப் பெறாமையால் உண்டாகிய நல்ல நுதலிலே பசப்பெய்திய, நீங்குதற்கரிய இந்நோய் முருகவேள் அணங்கியதால் ஏற்பட்டது, என, வேலன், அன்னை அறியும்படி, கூறிக் கொடுக்கும் பலிக்காகத், தணியின் இதனினும் கொடிது பிறிதில்லை; எனத், தோழி சிறைப்புறமாகக் கூறினாள் [நற்.322:9]. பொலிவு பெற்ற நுதலையுடைய யானையொடு புலிபொருது உண்ணும் நீரினையுடையது சுரம் [நற்.333:4].

ஒள்ளிய நுதலையுடைய பெதும்பையோடு மகளிர் மணிச்சுனை யாடின் பண்பு மேலும் விளங்குமன்றோ என்றாள் ஐயுற்ற அன்னை [நற்.339:8]. தலைவியின் பசலை பரவிய சிறு நுதலை நோக்கி அன்னை வெய்யவாகப், பெருமூச்செறிந்து வெகுளாநின்றனள்; அதனால், இல்வயிற்செறிக்கப்பட்டுப், பிறரால் இரங்கத்தக்க தன்மையேமாய் அஞ்சாநின்றேம், எனத், தோழி, தலைமகற்குச் செறிப்பறிவுறுத்தினாள் [நற்.368:7]. ஒள்ளிய நுதலையுடையவள் அரிவை [நற்.377:3]. துறைவன் எம் நெஞ்சத்து அகல்வு அறியான்; அங்ஙனம் அவன் உறைதலானே எமது நல்ல நுதலின்கண்ணே பசலை எவ்வாறு உண்டாகும் எனத், தோழிக்குத், தலைமகள் கூறினாள்[நற்.388:1]. தோழி, நின் திருநுதற்கண் அமைந்த அழகு, மலைநாடன், தானே விரும்பினனாகி வருகின்ற பெருமையுடையள். என்பதைத் தரா நிற்குமன்றோ? அங்ஙனமாதலின், விலரய வரையுங் காண்', எனத், தோழி, தலைமகன் சிறைப்புறமாகத், தலைவிக்குக் கூறினாள் [நற்.399:10].

தலைவன் துறத்தலின் பல்லோரறியத் தலைவியின் நுதல் பசந்தது', எனத், தோழி கூறினாள் [ஐங்.55:4]. தலைவியின் சுடர் நுதல் அழகுகெட, நீ தேற்றியமொழி என்ன பயனை அளிக்கும்? எனத், தோழி தலைவனிடம் கூறினாள் [ஐங்.56:3]. பரத்தையின் கூந்தலையுடைய ஒள்ளிய நுதலைப் பசப்பித்தார் விரிந்த மலரிடத்தே தாதுண்ணும் வண்டினும் பலராவார்', எனத், தலைமகன் வந்துழிப் பரத்தை திறத்தராய் நின்றொழுகும் வாயில்கள் கேட்பத் தலைவி கூறினாள் [ஐங்.67:5]. ஒள்ளிய நுதலையுடைய அரிவையாடக் குவளை நாறிப் புனல் குளிர்ச்சியடைந்தது [ஐங்.73:2]. கம்பங் கோழியுள் வெள்ளை நிறம் அமைந்த நுதலையுடைய பேடைக் கோழி தன் சுற்றத்தோடு கூவும் [ஐங்.85:1]. அழகுடைய ஒளி மிக்க நுதலையுடைய தலைவியின் தந்தை ஊர், பழனத்தது. [ஐங்.94:5]. துறைவன் வரத் தலைவியின் நுதல் பொன்னினும் சிவந்தது காண்பாயாக, எனச், செவிலிக்குத், தோழி கூறினாள் [ஐங்.105:4]. என் தோழி, சுடர் நுதல் பசப்ப வருந்திக், கடல் அலையின் ஒலி கேட்குந்தோறும் துஞ்சாள் ஆதலின், யான் நோவேன்', எனத், தோழி, செவிலிக்கு அறத்தொடு நின்றாள் [ஐங்.107:2]. ஒள்ளிய நுதலையுடைய ஆயம் (பாங்கியர்) ஆர்ப்ப, ஒருத்தி திரை பாய்ந்தாடினாள் [ஐங்.123:2]. துறைவன் பொருட்டு நுதல் பசந்து அழிய, அவனை விரும்பிய நெஞ்சமோ இடையறாத துன்பத்தின்கண் வீழ்வதாயிற்று', எனத், தோழிக்குத், தலைமகள் ஆற்றாளாய்க் கூறினாள் [ஐங்.161:3].

தலைவன் தலையளி செய்யின் ஒள்ளிய நுதலையுடைய அரிவை பால் அருந்துவள் [ஐங்.168:4]. நல்ல நுதலை யுடைய (தோழி) அரிவையோடு வருக எனத் தலைமகன் தலைவிக்குக் கூறினான் [ஐங்.175:2]. (பா.வே.ஒண்ணுதலரிவை) சேர்ப்ப! இவள் சிறுநுதல் தொண்டி ஒப்பதாகும்; இவளுக்கு அருள் செய்வாளாக; எனத், தலைமகனைத், தோழி வரைவு கடாவினாள் [ஐங்.179:4]. தலைவியின் நல்லநுதல் புதிய நறுநாற்றத்தால் மயக்கத்தைச் செய்ய அன்னை ஐயமுற்றனள்', எனத், தோழி செறிப்பறிவுறுத்தி வரைவு கடாவினள் [ஐங்.193:4]. ஒளி மழுங்கிய நுதல் அழகுபெறக் கொண்கன் வந்தனன், எனத்தோழி, தலைவிக்குக் கூறினாள் [ஐங்.200:1]. மலைநாடன் பிரிந்தானாக நின்னுடைய ஒளியையுடைய நுதல் பசலைகொள்வது என்னையோ? எனத், தலைமகட்குத், தோழி கூறினாள் [ஐங்.219:4]. என்னுடைய சிலவாகிய நிரைத்த கூந்தலையுடைய நுதல் பசப்பது நம் தலைவன் வாராமையாலேதான்; எனத், தோழிக்குத், தலைமகள் கூறினாள் [ஐங்.222:4]. மணம் கமழும் கூந்தலின்கீழ் அமைந்து மென்மைப் பண்பும், பேரெழிலும் திகழும் நின்னுடைய ஒள்ளிய நுதல் பசந்து ஒளி மழுங்குதலைக் கருதிப் பாரார் என்றோ நீ நினைத்துக் கலங்குகின்றாய்? என, ஆற்றாளாகிய தலைமகட்குத், தோழி கூறினாள் [ஐங்.225:4]. நன்னுதல் பசப்ப யாம் பொறுக்க மாட்டோம், என, யாம் மதிக்குமாறு கூறி நம்மைப் பிரிந்து சென்றோர் கூறிய குளுரையை

மறந்துவிட்டாயோ? எனத், தலைவன் சிறைப்புறத்தானாகத், தலைமகட்குத், தோழி கூறினாள் *[ஐங்.227:2]*. தோழி! நீ நீடுவாழ்க; நின் நுதல் பொன் போன்று கவின் கொள்ளும்; அறனிலாளனாகிய நம் தலைவன் (வரைவொடு) வந்தனனோ? எனத், தோழி, அறியாள் போன்று, தலைவியை வினவினாள் *[ஐங்.229:4]*. திருநுதல் பசப்பப், பொன்போன்ற விறற்கவின் தொலைத்த குன்ற நாடனுக்கு, நம்சுற்றத்தார் மணன் அயர்வர், எனத், தலைவிக்குத், தோழி கூறினாள் *[ஐங்.234:2]*. விழிப்பு நிலையில் தலைவனின் மார்பினைக் காணப்பெறாத அவல நிலைதான் தலைவியின் நல்ல நுதல் பசலை பூத்தற்குக் காரணம், எனத் தோழி கூறினாள் *[ஐங்.234:2]*. வண்டுகள் ஒலிக்கின்ற சுடர்நுதலையுடைய குறுமகளை (தலைவியை) உடன்கொண்டு செல்லக் கருதினர், தலைவர் எனத் தோழி தலைமகளுக்கு கூறினாள் *[ஐங்.254:3]*. நல்ல நுதலையுடைய குறமகள் தினை மாவினை யுண்டு கிளிகளை ஒப்பும் விடலை! தலைவியின் தோள் நெகிழ, நீ பிரிதல் வல்லாய் ஆயின், இவள் ஆய்நுதற்கவின் காண்டலரிது', எனக்கூறித், தோழி தலைவனைச் செலவழுங்குவித்தாள் *[ஐங்.310:4]*. ஒள்ளிய நுதலையுடைய அரிவையை நினையுந்தொறும், சுரநெறி தண்ணியவாயின,' எனத், தலைவன் கூறினான் *[ஐங்.322:4]*. பிறைபோன்ற நுதலையுடைய குறமகள் போகிய சுரன், மழைபெய்து இனியவாகுக, என, மகட்போக்கிய செவிலித்தாய் கூறினாள் *[ஐங்.371:5]*. சுழலும் விழிகளையும், அழகு மிகுந்த ஒளி நுதலையும் உடைய பச்சைக்கிளியை ஒத்த என் மகள் வளர்த்த பைங்கிளி இஃது என்று கூறி, மனம் கலங்கியழும்படி அதனைக் கைவிட்டுச் சென்றாளோ? எனத், தலைமகளின் தாய்கூறினாள் *[ஐங்.375:2]*. வெயில் தெறுதலால் ஆய்ந்த கவினை இழந்த நுதலை நோக்கி வருந்தாதே', என, உடன்போய் மீண்டுவந்த தலைமகள், தோழிக்குக் கூறினாள் *[ஐங்.392:2]*. சிறிய நுதலையுடைய குறுமகளைச் சுற்றத்தார்க்குக் காட்ட வருக, என, உடன் போய் மீண்டு வந்தது கண்டு, தாய் கூறினாள் *[ஐங்.394:5]*. ஒளி பொருந்திய நுதலையுடையவள் அரிவை *[ஐங்.404:1]*. ஒளி பொருந்திய நுதலையுடைய அரிவை கற்பிற்கு அடையாளமாக முல்லைப்பூவைச் சூடுவள் *[ஐங்.408:2]*. தலைவியின் நுதல் போன்று பல்வேறு மணமும் விரவி முல்லை கமழும் *[ஐங்.413:1]*. கார் காலத்தில் கொன்றை, காயா, தோன்றி, முதலியன மலர்ந்து அழகோடு விளங்கும் முல்லை நிலத்தைப் பார்த்துப், பிரிவுத் தலைவன், ஒளி பொருந்திய நுதலையுடைய எம் காதலியோடு நின்னைக் காண வருவேன்' என்று கூறினான் *[ஐங்.420:5]*. கரிய முகில்கள் இடித்து முழங்கி மழை பெய்யும் இப்பருவத்தில், பெருமானே, நீ தலைவியின் ஒளியுடைய நுதல் பசப்பச் செல்லுதலைக் கருதினைத்', எனத், தோழி கூறித், தலைவனைச் செலவழுங்குவித்தாள் *[ஐங்.423:2]*. தலைவியின் ஒள்ளிய நுதல் பசப்ப நீ பிரிந்து செல்லின், நின் காதலம்புதல்வன் தாயின் முலைப்பாலுக்கு அழுவான்; (தலைவி இறந்துபடுவாள் என்பது கருத்து) எனக் கூறித், தோழி தலைவனைச் செலவழுங்குவித்தாள் *[ஐங்.424:2]*. நம் வேந்தன் தான் மேற்கொண்ட போர்த்தொழிலைக் கைவிடுவானாயின், தேரேறிச், சென்று, இளம்பிறை போன்று அழகுபெற்ற எம் காதலியினது ஒளியுடைய நுதலை ஒருதலைபாகக் கண்டு மகிழ்வேம்', என, வேந்தற்குற்றுழிப் பிரிந்த தலைமகன் கூறினான் *[ஐங்.443:3]*. மன்னவன், தான் மேற்கொண்டுள்ள போர்த்தொழிலின் பிணிப்பினின்றும் வீடு பெறுவானாக; பெற்றுழி, யாம் நங்காதலியின் ஒளியுடைய நுதலை அப்பொழுதே சென்று கண்டு மகிழ்வோம்', என, வேந்தற்குற்றுழிப் பிரிந்த தலைமகன், தலைமகளை நினைந்து கூறினான் *[ஐங்.447:4]*. நங்கை அழகிய ஒளி நுதலையுடைவள் *[ஐங்.466:4]*. 'குற்றமற்ற எனது ஒளிநுதல் பண்டுபோலத் திகழும்படி, நம்பெருமானை இப்பொழுதே சென்று அழைத்து வருவேன், எனக் கூறும் பாணனது அறிவுமிகவும் நன்று, எனத் தலைமகள் கூறினாள் *[ஐங்.474:1]*. காதலி வாடிய நுதலளாகிச் சொல்லியதை எனக்குச் சொல்வாயாக', எனத் தலைவன், தூதாய் வந்த பாணனிடம் கேட்டான் *[ஐங்.478:2]*. நல்ல நுதலையுடைய அரிவை நலம் பெறப் பாக, தேரை விரையச் செலுத்துக என்றான், தலைவன் *[ஐங்.483:4]*. நல்ல நுதலையுடைய நங்கையே! நினது சாயலைப் போன்ற மயிலையும், நினது நல்ல நுதலைப் போன்று மணக்கும் முல்லை மலரையும், நினது மருட்சியைப் போன்ற மானின் மருட்சியையும் கண்டு முகிலினும் விரைந்து வந்தேன்', எனப், பிரிந்து மீண்டு தலைவன், தலைவியிடம் கூறினான் *[ஐங்.492:2.5]*.

பொறுக்கும் அளவில் நில்லாத காமநோயாலே பொலிவழிந்த நுதலினையுடையவள் தலைவி *[கலி.3:4]*. காதலர் என் மார்பத்தை இமையாமற் பார்த்தும் வேட்கை தணியாராய், என் ஒள்ளிய நுதலிடத்தே புணர்ச்சியால் அரும்பிய வியரைத் துடைப்பர்; எனத் தலைவன் செலவுக் குறிப்பறிந்ததைத், தலைவி, தோழிக்குக் கூறினாள் *[கலி.4:19]*. நறுநுதலையுடையாளை நீத்துத் தலைவன் பொருளுக்குப் பிரிந்தான் *[கலி.12:9]* மணம்நாறும் நறிய நுதலை யுடைய செய்யோள் எனப் பல பாராட்டுதல் தலைவனது பிரிவுக் குறிப்புணர்த்துவதாகும் எனத் தோழி கூறல் *[கலி.14:4]*. எம்மை விரும்பி நன்மையையுடைய நறிய நுதலை நீவி, நின்னிடத்தினின்றும் பிரியேன்; நீ அஞ்சுதலைத் தவிர்வாய்' என்று சொல்லும் நன்மையையுடைய சொல்லையும் நீ சொன்னாய்' எனத், தோழி, தலைவனிடம் கூறினாள் *[கலி.21:6]*. இருவர் மனமும் பொருந்திய நட்பாலே அவன் கூறிய மறைப்பொருளையறிந்து, அம்மறைப்பொருளை, அவன் நீங்கினால், பிறர்க்கிருந்து சொல்லும் பெருமையில்லாதார் உறவுபோல, ஒருநாள் தலைவன் அளிசெய்யுங்காலத்து அவன் அளிக்குத், தானும் கூடினாற் போன்று, ஒளிமிக்கு, ஒருநாள் அவன் அளியாக்காலத்து, அவனது குணத்தைப் பிறர்க்கு அறிவித்து நுதல் பசந்துகாட்டும் *[கலி.25:22]*. எம்முடைய அழகினையுடைய நுதலும்

பசந்து, நாமும் அழகிழப்பதற்கு வருந்தித் தலைவர் இளவேனிற் காலத்தே அருளுதலைச் செய்வார் *[கலி.26:17]*. நம் தலைவன் நம்மைப் பிரிந்து நினையாராயின், பசப்பு, ஒரு பற்றில்லாத நெஞ்சுடனே, தானும், வலியளல்லள் என்று கருதாதே, நுதலிடத்தே பரக்குமாயின், அசைகின்ற இறையினையுடையாய்! நம்மாட்டு அவர் செய்யும் அளி என்ன பயன்தரும்? எனத், தலைவி தோழியிடம் ஆற்றாது கூறினாள் *[கலி.28:15]*. கணவரைப் பிரிந்த மகளிர் நுதல்போல பீர்க்கம்பூ பூத்தது *[கலி.31:4]*. காதலர் வாராமையின் தலைவியின் நுதல் பசப்பொழுகப் பரந்து வந்து பின்னர் முழுக்கப் பசந்தேவிட்டது *[கலி.36:12]*. அழகிய நுதலினையுடைய பூமணம் நாறும் சதுப்பினையுடையாய்! எனத், தலைவியைத் தோழி விளித்தாள் *[கலி.40:8]*. யானைகள் புகரினையுடைய நுதலினையும், அழகினையுமுடையன *[கலி.44:5]*. பிறையினை யொத்த நுதல்! (நுதலினையுடையாய்) நாம் அவரிடத்தே தங்குதலை விரும்ப, நம் சுற்றத்தாரும் அதற்குடன்பட்டனர், என்று தோழி தலைவிக்கு உரைத்தாள் *[கலி.45:23]*. பிடியைத் தன்னிடத்தேயுடைய யானையொன்று, தனக்கு மாறாகிய யானையைத் தன் வலியினாலே, அதன் புகரையுடைய நுதலைப் புண்ணாக்கியது *[கலி.53:4]*. ஊரிலுள்ளார் அலர்தூற்றுகையினாலே நறியநெற்றி ஒளி கெட்டுப், பீர்க்கம் பூவினது அழகைத் தான் கொண்டு, பிறையினது அழகை இழவாத காலத்து, இயற்கைப் புணர்ச்சியிடத்தும், தெளிவகப்படுத்து, இட்டுப் பிரிதலையுஞ்செய்து, பின்னர் இன்னாதாய்படி, நீ அருமை செய்து, அயர்த்தபின்னர், இவள் வருத்தம் தெய்வத்தால் வந்ததோர் நடுக்கமென்று தெய்வத்திற்குப் பரவுக்கடன் பூணாமையும் பொருந்தும்; அதனாற் பெறறதென்? அந்நறுநுதல் அதற்கு இயைகின்றதில்லையே', எனத், தோழி, தலைவியின் ஆற்றாமை கூறினாள் *[கலி.53:14]*. மலையிடத்து முளைத்த சிறுதினை மழையைப்பெற, அழகு பெற்றாற்போலத், தலைவியின் ஆய்நுதற்கவின் தலைவன் அளியைப் பெற, அழகுபெறும்' *[கலி.53:24]*. தோழி' நினக்கு ஒன்று கூறுவேன்; என்று என்னை நிறுத்தினான்; நிறுத்தி, நுதலையும், முகத்தையும் பார்த்து, நெற்றி வியப்பையுடைத்தாய்த் தேய்ந்தது; ஆயினும் பிறையுமன்று, எனத் தலைவன் கூறியதைத், தோழிக்குத் தலைவி கூறினாள் *[கலி.55:5,7]*. அழகு பெறுகின்ற நுதலினையுடையவளே; ஆருயிரை வௌவிக் கொண்டு செல்வாய், இதனைக் கேள்; என்றான், தலைமகன் *[கலி.58:3]*. பிறையின் தன்மையைக் கொண்ட நறுநுதலினையுடையவளே! கண்டோர்க்கு உயிர்போம், பெண்மையன்று என்றான் தலைமகன் *[கலி.60:1]*. தாமரையிதழையுறும்படி வளர்ந்து, அப்பூவிலே கிடந்து, விளங்கின ஒரு கதிர், அவையிலுள்ளார் புகழும் அரங்கின் மேலே ஆடுகின்றவளுடைய தலைக்கோலத்தினின்று, நுதலிலே தாழும்படி, ஒரு வடமாகச் செருகி வைத்த, வயந்தகம் என்னும் அணிபோலத் தோன்றும் *[கலி.79:4]*. புதல்வனைக் கண்ணாலும், நுதலாலும், கதுப்பாலும் தாயர் (தலைவன் பரத்தையர்) தழுவினர் *[கலி.83:17]*. நம் வலையிலே அகப்பட்டு வந்ததொரு புத்தியானை, ஈண்டு வந்தது, என்று, தலைவன் கூறக்கேட்ட தலைவி, அந்தப் புத்தியானை, ஒள்ளிய நுதலிலே நிலைபெறுத்தின, திலகமாகிய, விளங்கிய பட்டத்தினையுடையது', எனப், பரத்தையரைத் தலைவி யானையாகக் கூறிப் புலந்தாள் *[கலி.97:11]*. தலைவ, அறத்தைச் செய்யுமென்றெடுத்த நின்குடை நிழலின் புறத்தே இவளகப்பட்டாளோ? பிறைபோலும் நுதல் பசப்புப் பரப்ப, நடுக்கமுற்ற இவளை, அருளிப்பாராய்' என, அரசனாகிய தலைவனை நோக்கிச், சான்றோர் கூறினர் *[கலி.99:10]*. பிறைநுதலையுடைய முக்கண்ணான் நிறம் போல் முரண்மிகு குரால் (ஏறு) நிறம் பெற்றுத் திகழ்ந்தது *[கலி.104:11]*. மோர் விற்போள் நுதல், அடி, இடை என்ற மூன்றிடமும் சிறுத்து அழகாக விளங்கும் *[கலி.108:3]*. அழகிய நுதலினையுடைய ஆயத்தார் சிற்றில் இழைத்து விளையாடினர் *[கலி.114:16]*. தன் அழகு கெடும்படி மனங்கலங்குதலாலே, பீர்க்கம் பூவினது அழகைத் தன்னிடத்தே கொண்ட பிறைபோலும் நுதலல்லாத விடத்து, ஊரிலுள்ளார் அலரெடுத்தரற்ற நீ இவளைக் கைவிடுகையினாலே என்னையும் உட்பட மறைத்தாளாவள் (அதனாற் பெற்றதென்; நெற்றி புலப்படுத்துகின்றதே) எனத், தோழி, தலைவி ஆற்றாமை கூறி, வரைவுகடாவினாள் *[கலி.124:8]*. பெரும! இவளை வரைந்து, தோள் மணந்துவிடின், இவட்கு இனிப் பிறையை ஒக்குந் திருநுதலிற் றோன்றிய பசலை ஒரு காலமும் வாராமற் போகும், எனக்கூறித் தலைவனிடம் தோழி வரைவு கடாவினாள் *[கலி.125:23]*. தோள் மெலிந்து, வாள் நுதல் பசப்பூர, இவளைநீ துறந்தது, பனித்துறையிலே, கடுயாமத்தே, நீ வந்துசெய்த நின்வரவுணர்த்திய குறியிலே, இவள் தப்பாமல் வந்தாள் என்பதாலோ? எனத், தோழி, தலைவியது ஆற்றாமை கூறித், தலைவனை வரைவு கடாவினாள் *[கலி.127:17]*. என் தோழியது நன்னுதலின் நலத்தை நுகர்ந்து, அவளைத் துறத்தல், பாலையுண்ணுமவர்கள், பாலையுண்டு, அதனைக் கொண்டிருக்குங்கலத்தைக் கவிழ்த்துவிடுதல் போல்வ தொன்று, எனக்கூறித் தோழி, தலைவனை வரைவு கடாவினாள் *[கலி.133:16]*. மாயவன், தன்பகைவரை ஒடும்படி செய்து, அவர் ஏறின யானையினது அழகினையுடைய நுதலில், சக்கரத்தை அழுத்தினான் *[கலி.134:3]*. ஒள்ளிய நுதலையுடைய ஆயத்தார் திளைப்பினும் தலைவி தன் உள்ளந்தோன்றாமை அடக்கி அழுவாள் *[கலி.142:6]*. தலைவனோடு இன்புற்ற காலத்து, இராக்காலத்து இருள்நீங்க விளங்கின அணிநிலாவையுடைய மதியம்போல், விளக்கம் அமைந்து, அவன் நீங்கின பின்பு, பகற்பொழுதில், ஒளி பாற்பட்ட மதிபோல, ஒளி கெட்டு, நன்றாகிய நுதலினின்றும் போன திலகத்தையுடையள் தலைவி *[கலி.143:3]*. காதலர் விரைந்துவரக் காமநோய் நீங்கித் தலைவியின் அழகிய நுதலிற் பசப்பு, இல்லையாகியது என்ன வியப்போ, எனக், கண்டார் கூறினர் *[கலி.144:73]*.

ஒளிபொருந்திய நுதலையும் வெண்பல்லையும் உடையள் கூறிய குற்றம் நனவுமன்று; கனவும் அன்று என்றான் தலைவன் [பரி.8:75]. கன்னி மின்னிழையையும், நறுநுதலையும் உடையவள் [பரி.11:135]. பூநுதலையுடைய அழகிய யானையின் புலியைப் பொருத கொம்பின் கறையை மழை கழுவியது [பரி.20:4].

**நுதலவர்** - நுதலையுடையவர். சிறிய குழமகனைப் பேணி வளர்த்து அவனுக்கு வேறொருத்தியுடைய பெண்மகளைக் கோடற்குச், சிறுசோற்றைச் சமைத்து ஆயத்திற்கிட்டு, நீ, நறிய நுதலவரோடு- நுதலையுடைய மகளிரோடு-மகிழ்ந்த நோன்பின் பயன் நினக்கு வந்து பொருந்துமோ? பொருந்தாது, எனத், தலைவன், தலைவியை நோக்கி, வருந்துவையாயின், நீ செய், தவம்இன்றாம், எனக் கூறினான் [கலி.59:21].

**நுதலார்** - நுதலையுடையார். தலைவன், பொலிவுபெற்ற நுதலாரோடு-நுதலையுடையாரோடு (பரத்தையரோடு)-கூடுதலால் உண்டான வடுவினைக் கண்டு தலைவி ஊடினாள் [கலி.66:19]. விளங்குகின்ற ஒளியினையுடைய நுதலார் ஊர்கின்ற களிற்றை ஒத்த செம்மலோர், திருமால் நகரிடத்தே இருந்தனர் [பரி.தி.1:34].

**நுதலியர்**- நுதலையுடைய மகளிர். தலைக்கோலம், அழகு விளங்கும் நுதலியர்- நுதலையுடைய மகளிர்-சிலர், மதியது காலையை உண்கின்ற தெய்வமகள் போல், ஆம்பலை வாய்மடுத்தனர் [பரி.10:77]. பிறையை ஒத்த நுதலியர் அறியாதவராக, மயக்கி, அப்பரத்தையர் நீர்விளையாட்டைத் தலைவனுடன் நிகழ்த்தினர் [பரி.தி.2:30].

**நுதலோய்**- நுதலையுடையவளே (விளி). இரவில் தாதையுடைய அரும்பு விளங்கப், பெருங்காட்டில் தடவிவருகின்ற அசைகின்ற காற்றைப்போலத், தண்ணியவாகிக் கமழ்கின்ற ஒள்ளிய நுதலோய்- நுதலை உடையவளே- எனத், தலைவி விளிக்கப்பெற்றாள் [குறு.273:3].

**நுதலோர்**- நுதலையுடையோர். இழை அசையும் ஒளிமிக்க நுதலோரும்- நுதலையுடையோரும்- பிறரும் ஈண்டித், திருமால் நகரிடத்து, வினையின் விழுப்பயன் துய்த்தனர் [பரி.தி.1:37]. மதுவினை உண்டு மகிழும், உண்கண்ணினையுடைய ஒளிமிக்க நுதலோர் கடாக் களிற்றண்ணலவரோடு (கணவன்மாரோடு) குளவாய் என்னும் நகரிடத்தேயுள்ள திருக்கோயிலுக்கு வந்து இறைஞ்சினர் [பரி.தி.1:61].

**நுதால்**- நுதலையுடையவளே (விளி). பிறையை ஒத்த அழகிய நுதால்-நுதலை உடையவளே- தமக்கு வலியாகாதே அவனிடத்தே, கீழ் அற்றுச் செல்லும் நெஞ்சினையுடைய மகளிர்க்குத், தாம் நினைத்தவையெல்லாம் முடிவுபோதல் பொருந்துமோ? எனத், தலைவி, தோழியை நோக்கிக் கூறினாள் [கலி.67:19].

**நுதி**-நுனை. களிறுகள் கதவை முறித்து வெகுண்டு உலாவி நுதி-நுனை-தேய்ந்த வெளிய கோட்டை உடையன [புற.4:11].

கோட்டினது நுதி முகம் தேய மடுத்துப், பகைவரது காவலையுடைய மதிலைக் குத்தும், நின்னுடைய யானைகள் அடங்கா, எனச், சோழன் நலங்கிள்ளியைக், கோவூர்கிழார் பாடுவர் [புற.31:7]. அதியமானுடைய கூரிய நுதிகளை உடைய வேல்கள் தாம் பகைவரைக் குத்துதலான் கோடு நுதிசிதைந்து, கொல்லனது பனிக்களரியாகிய கொட்டிலிடத்தன, என, ஔவையார் தொண்டைமானுக்குக் கூறுவர் [புற.95:4,9]. போர்முனைக்கண் பகைவரது மாறுபாடு அடங்கப்பொருதலால் தேய்ந்து குறைந்த நுதியுடைத்தாகிய கோட்டையுடையது, யானை [புற.98:2]. தலைமை மிக்க யானையின் விளங்குகின்ற வெள்ளிய மருப்பின் நுதி மடுத்து ஊன்றினாலும், புறக்கிட்டு ஓடார், பீடுடையாளர் [புற.287:6]. மண்ணைக் குத்திக் கொள்வதால் வரிவரியாகக் கீறப்பட்ட, கூரிய நுதியுடைய, மருப்பினைக் கொண்ட, பெருமை பொருந்திய, நல்ல ஆனேறு இரண்டினைப் போர்செய்யவிடுத்தனர் [புற.288:1]. கூரிய நுதியையுடையது நெடிய வேல் [புற.297:8]. வேலின் நுதிகொண்டு தன் நெற்றிவியர்வையைத் துடைத்து, வேந்தனும், கேட்டார் அஞ்சத்தக்க மொழிகளைக் கூறினான் [புற.349:1].

கூரிய நுதியையுடைய தோட்டி (ஆகுபெயர்) வெட்டின, வடுவழுத்தின, புகரையுடையது, யானையின் மத்தகம் [முருகு.78]. நுதியுடைத்தாகிய வேல்போலும் பார்வையினை யுடையவள் நுளைமகள் [சிறு.158]. முருகன், கையிலிருக்கும் வலியினையுடைய வேலின் நுதிபோலே கேணி பூக்கப்பட்ட, வெற்றியையுடைய வேலாலே, வென்றியை எய்தியது வேலூர் [சிறு.172]. வேலின் முனையை யொத்த, கூர்மையினையுடைய, நுதியுடைய, ஈந்தின் இலையாலே குடில் வேயப்பெற்றது [பெரு.87]. புலால் நாறும் வாயையுடைய, கூர்மைமிக்க நுதி மழுங்கிய வேலோடு பலகை நிரைத்து வியல் நகரில் வில்லொடு சார்த்திய கணை வைக்கப்பட்டிருந்தது [பெரு.119]. செவ்விய நிலையினையும், நெடிய நுதியினையுமுடைய, வலியையுடைய கழுக்கள், ஊர்வாசலில் நிரைத்திருந்தன [பெரு.128].

பக்கமலைகளில், பகுத்துவைத்தாலொத்த தலையினையுடைய கூரிய கற்கள், கூர்முனையைத் தோற்றுவித்து, வழிச்செல்வார் விரலின் நுதியைச் சிதைக்கும் வழிகளைக் கொண்டது, காடு [அக.5:14]. தோடுகளை ஈன்ற, வயல்நெல்லின் பலவாகக் கிளைத்த, முதலிலிருந்து தோன்றிய, நெற்கதிர், தீயின் நுதியினை ஒத்திருந்தது [அக.13:18]. காவலையுடைய மதிற்கதவைப் பாய்தலினால், தொடி பிளக்கப்பட்டு, யானையின் கோடு நுதியாகிய முகம் மழுங்கிற்று [அக.24:12]. கோட்டை மழவர், ஒப்பற்ற மணி மாறிமாறி ஒலிக்கும், கடையாணி யிட்ட காம்பினையும், கூரிய நுதியையும் உடைய, நெடிய வேலை

உடையவர் *[அக.35:4]*. அரத்தினால் அராவப்பட்ட நுதியையுடைய பற்களையுடையது அம்பு *[அக.67:5]*. கழியினைக் கடக்குங்கால், தேர் உருளையின் கூரிய நுதி முகத்தால் அறுக்கப்பெற்ற, பொதிந்த அரும்புகளையுடைய, நெய்தல், பாம்பு, மேலே தூக்கிய தலையைப் போல, வாடி மேலெழும் *[அக.160:13]*. அரத்தால் அராவப்பட்ட, ஊசியின் திரண்ட நுதியை ஒத்த, உறுதி பொருந்திய, பற்களையுடையது, செந்நாய் *[அக.199:8]*. எருவைச்சேவல் (ஆண்பருந்துகள்) கூரிய நுதி (அலகு)யுடைய, சிவந்த வாயுடையன *[அக.215:12]*. கூரிய நுதியை யுடைய வெள்ளிய யானைக்கொம்பு ஒடிதலால், ஆலங்கட்டியை ஒக்கும் முத்துக்கள் உதிரும் *[அக.282:6]*.

ஆறலை கள்வர், செப்பம் செய்யும் பொருட்டு, இரும்பினாற் செய்யப்பட்ட தம் அம்பை, உகிர்நுதியிலே புரட்டுதலால் உண்டாகிய ஒலியைப்போல, ஆண்பல்லி குரலெழுப்பிப் பெண்பல்லியை அழைக்கும் *[குறு.16:3]*. கிளியின் அலகினிடத்தே கொண்ட வேம்பினது ஒள்ளிய பழம், புதிய பொற்கம்பியை ஊடுசெலுத்தும் பொற்கொல்லனது, நுதிமாட்சிமைப் பட்ட கூரிய கைந்நகத்திற்கொண்ட, பொன்னணிக்குரிய ஒரு காசை ஒக்கும் *[குறு.67:3]*.

யானை கூரிய நுதியையுடைய வெள்ளிய கோட்டினையுடையது *[நற்.205:3]*. கூரிய நுதியை யுடைய களாவின் மலர் ஒருங்கே மலர்ந்து மணங்கமழாநின்றன *[நற்.256:5]*.

மதிலரணத்தைப் பாய்ந்ததாக, யானையின் தொடிபிளந்து, பெரிய கோட்டின் கூரிய நுதி மழுங்கலாயிற்று *[ஐங்.444:3]*.

முகைபோலும் வெள்ளிய பல்லின் நுதி தம்மிற் பொரும்படி கடிய பனி முதிர்ந்திருந்தது *[கலி.31:20]*. யானை ஒன்று தன் நீண்ட கோட்டினுடைய கூரிய நுதியாலே குத்திப் புலியினது மருமத்தைத் திறந்து மாறுபாடு தீர்ந்தது *[கலி.52:3]*. ஆயர் நேர்ந்துவிட்ட வெள்ளை எருத்தினது சினத்தை அஞ்சானாய், அதன்மேலே பாய்ந்த பொதுவனை, நுதியையுடைய கோட்டால் எடுத்துக் குலைப்பதனுடைய தோற்றம் காணாய்', எனத், தோழி கூறினாள் *[கலி.101:29]*. வேலினது நுதியை ஒக்கும், நுதியினையுடைய கொம்பினது விறலாகிய திறத்தினையுடைய மாறுபாட்டிற்கு அஞ்சானாய்ப் பொதுவன் ஏற்றின் கழுத்திலே பாய்ந்தான் *[கலி.104:34(2)]* 'நீ ஊழி முடிவாகிய காலத்திலே, கூற்றுவன், விளக்கம் அமைந்த செக்கர் வானிடத்துத் தோன்றின நுதியையுடைய பிறை தனக்கு எயிறாகக் கொண்டு பல்லுயிரையுஞ் சேரக் கோடற்கு, நக்காற்போலும், உட்குதலையுடைய கடிய மாலையாயிருந்தாய், எனத், தலைவி, மாலைப்பொழுதுகண்டு ஆற்றாது கூறினாள் *[கலி.120:7]*. வென்ற வேலினது நுதி ஒக்கும் வெற்றியினையுடைய நலத்தை இழந்து, நெடிய பெரிய கண்கள் நீருகக் கலுழ்ந்தன *[கலி.124:15]*. எரியின் நுதி (கொழுந்து) போல் கொடிய இராக்காலம் வந்தது *[கலி.146:33]*. வேல்நுதி செய்யும் கொடுமையை யுறும்படி, எதிரே நோக்காதே, விலங்குதல் உண்டாக தலைவி நோக்கினாள் *[கலி.147:6]*.

எரிவயிர நுதி நுதி எறிபடை (உரைவிளக்கம் தெரியவில்லை) *[பரி.தி.18(2)]*.

வேல்நுதியன்ன கண்ணார் துணையாகப் பரங்குன்றாடலோ, வையை யாடலோ, இனிதியாது எனக் கூடல் மயங்கும் *[பரி.தி.13:3]*.

**நுனை** - காண்க.

**நுந்தை**- நும் தந்தை. புதல்வன், பலபடியும் பாலில்லாத முலையைச் சுவைத்தும் பால் பெறானாய், உள்ளொன்றில்லாத வறிய அடுகலத்தைத் திறந்து அங்கு ஒன்றும் காணாது அழக் தணிக்க அருமையின் வருந்தினளாய், நுந்தையை— நும் தந்தையை— நினைந்து வெறுத்த நின் செவ்வியைக் காட்டு என, நனவின்கண்ணும் துயரமுறுவோள் வளப்பம் மிகப், பரிசில்தந்து விடுதலை விரும்புவேன்', எனக், குமணனைப் பெருஞ்சித்திரனார் பாடினார் *[புற.160:25]*. நினது முயற்சியால் தரப்பட்ட பொருளையன்றி, நுந்தையது உரிமைச் செல்வத்தை நிறையப்பெற்ற புலிகடிமால், என்று இருங்கோவேளைக் கபிலர் விளிப்பர் *[புற.202:9]*. குருசில்! நுந்தையின் தந்தைக்கு இவன் தந்தையின் தந்தை போரில் மாய்ந்தனன், என, ஔவையார் மறவன் ஒருவனின் குடிநிலை கூறுவர் *[புற.290:3]*.

நுந்தை போர்க்களத்துப் பாய்ந்து போர்செய்தலால், பூண்சிதைந்த கோட்டினையுடையவும், பிடிகள் குழப்பெற்றனவுமாய களிறுகளைப் போலத் தோன்றும் குன்றங்களையும் உடையதாகின்றது, இக்கானம், என, உடன்போகிய தலைமகளைத், தலைமகன் மருட்டிக் கூறினான் *[அக.99:11]*. பால்பெய்யப்பெற்ற கிண்ணம் நிறைந்ததனைப் பற்றிக்கொண்டு, என்பகுதிக்கு இதனை உண்டாயானால், ஒருமுறை, நுந்தையின் பகுதிக்கும் உண்பாயாக', என்றுகூறி, உண்பித்ததனை, மகட்போக்கியதாய் நினைந்து கூறினாள் *[அக.219:7]*. தோழி! 'பகற்பொழுதிலே எங்களுடன் விளையாடி, இராப்பொழுதில் நமது இல்லின்கண் வருத்தத்தொடு பொருந்தியிருப் பாயாயின், நுந்தையின் அரிய காவலில் படுவேன், என்கின்றனை, 'எனப் பகலே சிறைப்புறமாகத், தலைமகட்குச் சொல்லுவாளாய்த், தோழி கூறினாள் *[அக.370:6]*.

யாயும், ஞாயும் யாராகியரோ? எந்தையும், நுந்தையும் எம்முறைக் கேளிர்? என, இயற்கைப்புணர்ச்சிக்குப் பின்னர்த், தலைமகன் தலைமகளிடம் கூறினான் *[குறு.40:2]*.

தோழி, நுந்தை என்னைக் கூவி, அழகிய மாந்தளிர் போன்ற மேனியையும், நிரைத்த வளையையும் உடைய இளமடந்தாய். (தினைகடிதற்குச்) செல்லாயோ? நின் முள்ளெயிற்றை முத்தம்கொள்வல், என, இனிய கூறினர், எனத், தோழி கூறினாள் *[நற்.134:6]*. பல பூக்கள் நிரம்பிய கோங்கங்கள் அழகுசெய்த நுந்தைக்குரிய இக்காட்டினைக் காண்பாயாக,

என, உடன்போய தலைமகன், தலைமகட்குக் கூறினான் *[நற்.202:8]*. மடந்தாய்! தளிர் சேர்ந்த மெல்லிய தழையை உடுத்து, நுந்தையினுடைய தினைப்புனத்தின்கண்ணே பொழுதுபோதலும் வருவேனோ? எனப், பின்னின்ற தலைமகன் ஆற்றானாய்த், தோழி கேட்பத், தன் நெஞ்சிற்குக் கூறினான் *[நற்.204:1]*. உப்புக்குவட்டில் பரதவர்மகளிர் ஏறிநின்று, இது, எந்தை, திமில்; அது, நுந்தை திமில், எனச்சுட்டிக் கூறினர் *[நற்.331:6]*. 'காதலியே, கொல்லிப்பாவை போல இயங்கி நுந்தையின் மனை எல்லையைக் கடந்து, யான் கூறுகின்ற சொற்களை மேற்கொண்டு, என்னோடு போந்தனை', என, உடன்போகாநின்ற தலைமகன், தலைமகட்குக் கூறினான் *[நற்.362:1]*.

நின்னை யாம்பெறின் (வரைவு மாட்சிமைப்படின்) நுந்தையின், நும்மூரிடத்தே யாம் வருவேம்', எனத், தலைவன், தலைமகட்குக் கூறினான் *[ஐங்.92:3]*. நின்னிடத்துக் குற்றமுளதாகிய விடத்துக் கழறுங்கால், இவளினும் கடியரோ, நுந்தையும், ஞாயும்', எனத், தோழி கூறினாள் *[ஐங்.98:4]*. நாட! நன்மனையிடத்து வதுவை அயர்ந்தமையின் இனிது செய்தனை; நுந்தை வாழியர்', என வதுவை செல்லா நின்றுழித், தலைமகற்குத், தோழி கூறினாள் *[ஐங்.294:3]*.

தோழி! நம் வள்ளைப் பாட்டிடத்தே நாம், பொருந்திப் பாட' நம் மென்றோட்கு உரிமையுடையவனும் மறைந்து நின்று கேட்டு வரைவு வேண்டி வந்தனன், நுந்தையும் மணத்தையுடைய வேங்கைக் கீழேயிருந்து அம்மலை கிழவோனுக்கு மணஞ்செய்தலை விரும்பிக் கூறினான்; எனத், தோழி, தலைவிக்குக் கூறினாள் *[கலி.41:42]*. நின்னுடைய இளமைப் பருவத்தாலே, செல்வம் அமைந்த உயர்ந்த தலைமையினையுடைய நுந்தையுடைய பழமையுடைத்தாகிய அகன்ற மனையினின்றும் அடிக்கின்ற பந்தோடே, தளர்ந்து, ஒதுங்கிப், புறப்படுதலைச் செய்தவளே' எனக், காமஞ்சாலா இளமையோளிடம், தலைவன் கூறி இன்புற்றான் *[கலி.57:6]*. ஐயனே! விளங்கின மணிகள் ஆரவாரிப்ப அசைந்து நடக்கும் தளர்நடையைக் கண்டு மகிழ்ந்திருத்தல் எமக்கு இனிது; அஃதொழிந்து, நுந்தையிடத்து, எங்கள் உள்ளம், என்றுகூறி, வளை நெகிழ வருத்தத்திலே தங்கும் மகளிரைக் காணுமிடத்து அக்காட்சி இன்னாது. அத்தா அத்தா என்று கூறும் நினது இனிய மொழியைக் கேட்டு மகிழ்ந்திருத்தல் இனிது; அஃதொழிந்து, நுந்தை, மகளிர் நலம் சாய்தற்கு, அவர் நலத்தை உண்கையினாலே, எவ்வத்தைத் தரும் நோயைக்காண்டல் இன்னாது. அம்புலிக்கு யான் நின்னைக்காட்டி மகிழ்தல் இனிது; நுந்தை அருளாத மகளிருடைய பசப்பொழுங்கைக் காண்டல் இன்னாது. யாம் வறுங்கூந்தல் கொள்வது நுந்தை மார்பில் கோதையை அறுத்து நீ விளையாடுதற்கு', எனத், தலைவன் சிறைப்புறத் தானாகத், தலைவி, மகனுக்குக் கூறினாள் *[கலி.80:12,16,20,24]*. ஏடா! யான் வருந்தி நோய்மிக நுந்தையைத், தான் குறித்ததொன்றை நினைவறப் பருந்தெடுத்துக் கொண்ட தன்மைத்தாக, நினைவறக் கைக்கொண்டுபோம்; கைக்கொண்ட அப்பொழுதே தொடியும், உகிரும், அவைபோல்வன பிறவும் தனக்குப் படைக்கலமாகக் கொண்டு நுந்தையுடைய மார்பின் கண்ணும், ஒழிந்த சிறிய இடங்களிலும் தான் குறித்த படியிலே வடுக்களையும் அஞ்சாதே நிகழ்த்தும்', எனப் புதல்வனை, மாயப்பரத்தை உள்ளியவழித் தலைமகன் சிறைப்புறத்தானாகத், தலைமகள் கூறினாள் *[கலி.82:26,28]*. ஏடா! நின்கையில் இத்தொடியையிட்ட பரத்தையும் தவறுடையளல்லள்; வேனிற்காலத்துப் புதுப்புனல்போல, எல்லார்க்கும் பயன்படுகின்ற நுந்தையை ஈண்டு நோவாரில்லை, எனத், தந்தைதொடி,மகன் கைக்கண்டு, புலந்து, தலைவி தன்னுள்ளே கூறினாள் *[கலி.84:38]*. தான் விரும்பின் பரத்தையருடைய நெஞ்சம் தன் வசமாக்குதல் தனக்குத் தொழிலாகக் கொண்டு திரியும் நுந்தைக்குட்பட்ட சில கூற்றை உண்பாய்; நுந்தை வாயிற் பொய்ச்சூளை மெய்ச்சூளாகத் தெளிந்து கண்துயிலாத நின் தாய்மார்க்குப் பட்ட சில கூற்றை உண்பாய் என மகனுக்குப் பாலூட்டும்போது, வந்த தலைவன் சிறைப்புறமாகத், தலைவி கூறினாள் *[கலி.85:25,26]*.

செம்மால், நுந்தையை அழகெல்லாம் ஒத்திருப்பினும், நுந்தை நிற்கின்ற நிலைகளின்கூற்றால் உனக்கொத்த குணங்களை யான் கூறக்கேட்டு ஒப்பாய்; ஒன்றினேம் யாம் என்று உணர்ந்தாரைநுந்தைபோல் தோள்மெலியும்படி விடுதலாகிய பரத்தைமையை ஒவ்வாதே; அமைதிக் குணத்தாலே இவன் நம்மைத் தப்பான் என்று ஆராய்ந்த மகளிரை நுந்தை கைவிடுமாறு போலச் சாயவிடுதலாகிய பரத்தைமையை ஒவ்வாதே; காதலையுடைய மகளிரை நுந்தைநோய் கூடுமாறு கைவிடுதலாகிய பரத்தைமையை ஒவ்வாதே என, மகன் வாயிலாக, ஊடல் தீரும் தலைவி, தன்னுள்ளே கூறினாள் *[கலி.86:11(2),15,19,23]*.

**நும்மனோர்-நும்போல்வார்.** எம்போல்வார் இரப்பின், அவர்க்கு முன்னும்பரிசில் கொண்டீர், என்று, நும்மனோர்-நும்போல்வார்-மறுத்தல் இன்னாது! எனச், சேரமான் பாமுளூரெறிந்த நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னியை, ஊன்பொதி பசுங்குடையார் பாடுவர் *[புற.203:5]*. மன்பதை காக்கும் நினது உயர்ச்சியைப் பாராது அன்பு கண்மாறிய அறமில்லாத பார்வையுடனே நும்மனோரும் அருள்மாறுவாராயின், எம்போல்வார் இவ்வுலகத்துப் பிறவாதொழியக் கடவர்; எனச், சேரமான் குடக்கோச்சேரல் இரும்பொறை, பரிசில் நீட்டித்தானைப்,பெருங்குன்றூர் கிழார் பாடுவர் *[புற.210:3]*.

**நும்முன்-(நும்முன்னாகிய)தந்தை.** புலி பொறித்த கோட்டையையும், விளங்குதலையுடைய அணிகலத்தையும், வண்டார்க்கும் கண்ணியையும், பெரிய புகழினையு முடைய

நும்முன் - (நும்முன்னாகிய) தந்தை-இவ்வுலகத்துச் செய்யப்பட்ட நல்ல அறத்தின் பயனைத் தெய்வலோகத்துப் போய் நுகரவேண்டிப் போனான்'என, மலையமான் சோழியவேனாதி திருக்கண்ணனை, மாறோக்கத்து நப்பசலையார் பாடுவர் *[புற.174:18]*.

**நும்மோர்-(நும்மவர்).** தமக்குச் சிறந்தோர் தம்மைப் பிழைப்பின் அதுபொறுத்தலும், பிறர் மிடிமைக்குத் தான் நாணுதலும், படையிடத்துப் பிறர் பழிக்கப்படாத வலியையுடைமையும் அரசவைக்கண் மேம்பட்டு நடத்தலும் நும்மோர்க்கு-நும்மவர்க்கு-தகுவனவல்ல; பெரிய மலைநாடனாகிய எம் ஏறைக்கோனுக்குப் பொருந்தும், என, ஏறைக்கோனைக், குறமகள் இளவெயினி பாடுவள் *[புற.157:5]*.

**நுமர்-நும்மவர்.** பலகோடியாக அடுக்கப்பட்ட பொன்னை, நுங்களுக்கு உதவிய, நீடிய நிலையை யுடைய, அரையத்தினது கேட்டையும் கேட்பாயாக; அது கெடுதற்குக் காரணம், நும்மையொக்கும் அறிவினையுடைய நுமருள்-நும்மவருள் (நும்குடியினருள்)-அவமதித்ததனால் உண்டான பயன், என, இருங்கோவேள், பாரி மகளிரைக் கொள்ளானாகக், கபிலர் பாடினார் *[புற.202:11]*. போர்க்களத்தில், நுங்கள் வேந்தனையும், புகழையும் தோற்றுவித்து, நுமருள் (நும்மில்) வாழ்நாள் முறை முடிந்தவர் வருக, எனச்சொல்லி,மறவன் ஒருவன், போர்மழவர் பலரையும் வென்று நின்றான் *[புற.294:5]*.

நேரில் இறையினையுடைய முன்கை பற்றி நுமர் தரப் பலரும் அறிய மணம்புரிவேம்; சிலநாள் கலங்காதுவாழ்வீர், எனக் களவுக்காதலன், கூறிப்பெயர்ந்தனன் *[குறி.231:3]*.

நாள்தோறும் நம்புனத்து அயல் வந்து, நம்மை விரும்பிவருந்தாநின்றான். என்றுகூறுகின்ற, என் வாய்மொழியைத் தெளிந்தாயல்லை; நீயும், அவனை நோக்கி, நின்மாட்டு அன்புடைய நுமரொடும் (தோழியரொடும்) ஆராய்ந்து, அறிவினால் அறிந்து. பின்பு அளவளாவுதல் வேண்டும்' எனத், தோழி, தலைவிக்குக் குறைநயப்பு கூறினாள் *[நற்.32:5]*. ஆறலை கள்வர் முதலாயினோர் சூழ்ந்து போர்செய்யவரின், அஞ்சாது போர்புரிந்து, அவர் ஓடுமாறு பெயர்க்குவேன்; நுமர் (நும் சுற்றத்தார்) வரின் மறைந்துகொள்வேன் என, உடன்போகிய தலைமகன், தலைமகட்குக் கூறினான் *[நற்.362:10]*.

பாண! நுமர் (தலைவன்) குறித்த பருவம் வந்துநின்றது, எனத், தூதாய்வந்த பாணற்குத், தோழி கூறினாள் *[ஐங்.472:1]*.

யான் ஒறுப்பது, புறத்துப்போதவிட்ட நுமரை-நும் சுற்றத்தாரை-எனக், கைக்கிளைத் தலைவன், தருக்கிக் கூறினான் *[கலி.58:20]*. நல்லமகளிரைக் கண்டாயாயிற், போகாமல் தடுத்து, அவர்கண்ணையும், தோளையும் பாடும்படியாக நல்லதொரு [illegible] கற்பித்தார்; நுமர் பெரிதும் வல்லராயிருந்தார், என, வினைவல பாங்கிற் தலைவி, தலைவனிடம் கூறினாள் *[கலி.112:10]*.

**நுரை-1.குமிழ்த்திரள்.** எண்ணெயினது நுரையை-குமிழ்த்திரளை-முகந்தாற் போன்றது மெல்லிய பூஞ்சேக்கை (கட்டில்) *[புற.50:7]*. மரையாவைக் கறந்த நுரை கொண்ட இனிய பால் *[புற.168:8]*.

நுரையைத் தலையிலே யுடைய, ஆரவாரத்தையுடைய, நீர் நீர்நிலைகளில் புகுந்தோறும், நீராடுமகளிர் குடைந்து விளையாடினர் *[பொரு.240]*. யாற்றின் நுரையையுடைய பெருக்கிலே குதித்து விளையாடினர் *[குறி.178]*.

நுரையை முகந்து வைத்தாற்போன்ற மெல்லிய பூக்களாலாயது படுக்கை *[அக.93:13]*. சுள்ளியம்பேரியாற்றினது வெள்ளிய நுரை சிதற யவனர்கள் மரக்கலம் கொண்டுவந்தனர் *[அக.149:8]*. இறாமீன் கலக்கிய நுரையுடன் கூடிய திவலை பொருந்திய அலைகள் புன்னையின் சினையைத் தோயும் *[அக.270:5]*.

யாம் எம் காதலரைக் காணேமாகில், மிக்கவெள்ளத்தில், பாறையின்மேல் மோதும் சிறிய நுரையைப் போல உயிர் மெல்லமெல்ல இல்லையாவேம், எனத், தலைவி கூறினாள் *[குறு.290:5]*.

புதுநீர், குறிய நுரைகளைச் சுமந்து, நறியமலர்களுடனே, ஆற்றிலே பொங்கிவரும் *[நற்.68:4]*.

இளவேனிற் காலத்தே நுரைகளையுடைய இனிய சின்னீர்வந்து ஆரவாரித்தது *[கலி.48:18]*.

நுரை பல சுமந்து, பூவான் மூடப்பட்டு, வையை வரும் *[பரி.7:41]*. கண்டல்தாதை, வையைத் திரையினும், நுரையிலும் தூவுவர் மக்கள் *[பரி.10:101]*. திரையையும், நுரையையும், குமிழியையும், சந்தனத்தையுமுடையது வையை *[பரி.11:27]*. தயிர்போலும் நுரையோடும், பிறவற்றோடும் வையை நீர் பெருகியது *[பரி.16:3]*. விரை நுரை கரை கடந்துமறியுமாறு, வையைப்புனல் செல்லும் *[பரி.தி..2:64]*. வரை, கரை, கடல்வரை வையையின் நீர் தரும் நுரை வந்துசேரும் *[பரி.தி.2:65]*. வையைப்புனல் நுரையுடன் மதகுதோறும் இழிதரும் *[பரி.தி.2:66]*.

**2.** வெண்ணெய். விடியலில் தயிரைக் கடைந்து நுரை-வெண்ணெய் - எடுத்து, மோரைத் தலைச்சுமட்டில் சுமந்து விற்பாள் ஆய்மகள் *[பெரு.158]*.

மழவர், நுரையினை வெளிப்படுத்தும் மத்தினைக் கவர்ந்து, கன்றுடன் ஆனிரையைக் கொள்ளை கொண்டு சென்றனர் *[அக.101:8]*. பால், கடையுங்கால் எழும் நுரையின் மிதப்பினை ஒத்தது பரியின் தெவிட்டல் *[அக.224:6]*.

**நுவ்வை-நும் தங்கை.** 'அன்னை, நீயிர் வளர்த்துவரும் புன்னை, நும்மினும் சிறந்ததன்றோ? அது நுவ்வை-நும்

தங்கை-ஆம் தகுதி உடையது. எனப். புன்னையது சிறப்பைக் கூறினாள். ஆதலி அதனருகில். நும்மோடு நகைத்து விளையாடுதற்கு நாணுகின்றோம், எனத், தோழி, தலைவனிடம் கூறினாள் *[நற்.172:4]*.

**நுவணை**-மாவு. புன்புலங்களில் வாழ்வோர் மெல்லிய தினை நுவணையை-மாவை-விருந்தினர்க்குப் பகுத்தளித்து உண்டனர் *[பதி.30:24]*.

கருப்புக்கட்டியைக் கொழித்த பொடியை ஒத்த, தன்னை உண்போரைப் பிறிதொன்றை உண்ணாமல் தடுத்த, இடித்தலால் நுண்ணிதாகிய நுவணையைப் பெறுகுவீர்; எனக், கூத்தரை ஆற்றுப்படுத்தும்போது உரைத்தனர் *[மலை.445]*.

குறுமகள் மெல்லிய தினை நுவணையை யுண்டு, தட்டையினால் கிளி கடிந்தாள் *[ஐங்.285:2]*.

**நுவல்வீர்**-கூறுகின்றவர்களே (விளி). பிரிந்த தலைவன் திரும்பிவந்த காலத்தன்றே நீ நாண்முதலியவற்றைப் பெறுவது, என்று, நுவல்வீர்;-கூறுகின்றவர்களே! -நான் ஞாயிற்றை நோக்கி, அவனைக் கொண்டுவா, என்று கூறிவிட்டேன் எனத், தலைவி, நாணுவரையிறந்து கூறினாள் *[கலி.146:26]*.

**நுவலுநர்**-சொல்லுநர். நீ அவன்பாற் செல்வையாயின், நினக்கு மிகவும் தருவன், என, நினது பலபுகழையும் நுவலுநர்-சொல்லுநர்-சொல்லக்கேட்டுக் கடிதாக விரைந்துவந்தேன்', எனக் குமணனைப், பெருஞ்சித்திரனார் பாடுவர் *[கலி.160:15]*.

**நுழைப்பான்**-நுழைப்பவன் (ஊடுசெலுத்துவோன்). கிளியின் அலகிடத்துக் கொண்ட வேம்பினதுபழம் புதியபொற்கம்பியை நுழைப்பானாகிய-நுழைப்பவனாகிய-(ஊடுசெலுத்துவோனாகிய) பொற்கொல்லனது கூரிய கைந்நகத்திற்கொண்ட பொற்காசை ஒக்கும் *[குறு.67:3]*.

மாலையே, வெந்த புண்ணில் வேலைக்கொண்டு நுழைப்பான்போல, மெய்வெதும்புதற்குக் காரணமான, காமநோயாலே அழுந்துகின்ற என்னைக், கலங்குவிக்க வந்தாயோ, என, மாலைப்பொழுது கண்டு, தலைவி ஆற்றாது கூறினாள் *[கலி.120:17]*.

**நுழைபவர்** - புகுபவர். கோவலர் கோட்டிடையே சென்று நுழைபவரோடும்-புகுபவரோடும்-பிறரோடும் சென்று ஏறு தழுவினர் *[கலி.104:56]*.

**நுளம்பு**-ஈ. நள்ளிரவில், எருதானது, நுளம்பு-ஈ-ஒலிக்குந்தோறும், அலைக்கும் மணியின் குரல் ஒலித்தது *[குறு.86:3]*

**நுளைமகள்**-நுளைச்சாதியில் பிறந்த மகள். பெரியதோளினையும், மதியை வென்ற முகத்தினையும், வேல்போலும் பார்வையினையுமுடைய, நுளைமகள்-நுளைச்சாதியிற்பிறந்தமகள்- அரித்த கட்டெளிவைப் பரதவர் பருகினர் *[சிறு.158]*.

**நுளையர்**-பரதவர். நரைத்த முதியோராகிய பருந்துநிலமக்கள், போர்செய்யும் கைப்பிணிப்பினை விடுத்து விலக்கிக், கள் தெளிவை நுளையர்க்கு-பரதவர்க்கு-ஈயும் எவ்வியின் நீழல் என்னும்ஊர் *[அக.366:11]*.

**நுனை**-நுதி. கூர் நுனை-நுதி-வேல் மின்போல் விளங்கும் *[புற.42:3]*.

பன்றியின் கொம்பைப்போலாகிய நுனை முரிந்த கொம்பிடத்தே யானையின் மதம் ஒழுகியது [...]

புலால்நாறும் நுனையினையுடைய அம்பு, வில் போன்று கயலோடு இறாமீன் உடைய குளத்தில் பிறழும் *[பெரு.269]*. யானைதன் கூர்மையை யுடைய நுனையையுடைய கொம்பில் துதிக்கையைத் தொங்க விடும் *[முல்.34]*. கூரிய நுனையுடையது பகழி *[முல்.73]*. குறங்கிடைத் தெரியாமற் கிடக்கும்படி கூரியநுனையினையுடைய சிலசொட்டை இருந்தன (ஒருவகை வளைவுக்கத்தி) *[மது.637]*.

பகுத்த வைத்தால் ஒத்த தலையினையுடைய கூரியகற்கள் தீட்டப்பட்டனபோலத், தேய்ந்த நுனையினைத் தோற்றுவித்து, வழிச்செல்வார் விரல்நுதியைச் சிதைக்கும் *[அக.5:12]*. குப்பி நுனையை ஒப்ப இருப்பை அரும்பும் *[அக.9:3]*. நிணம் தோய்தலால் அம்பு வெள்ளிய நுனையினை யுடையதாயிருந்தது (பா.வே. வெந்நுனை அம்பு) *[அக.109:7]*. ஊரனே! நின்பரத்தை வெகுண்டனளாய்த், திருகிக் கடித்தலான், கூரிய நுனை மழுங்கிய எயிற்றையுடையளாய், ஊர் எங்கும் நின்னைக் காண்டற்கு தேடிச் செல்வாள், எனத், தோழி கூறி, வாயில்மறுத்தாள் *[அக.176:25]*. மனையில் நொச்சி நுனை தளிர்க்கப்பெற்று அசையும் *[அக.203:17]*. குவிந்த அரும்புகளையுடைய முருக்க மரத்தினது கூரிய நுனையினையுடைய முற்றாத இதழ்கள் உதிருமாறு வண்டுகள் பாய்ந்தன *[அக.317:4]*. யானையின், கூரிய நுனையில் குருதிதோய்ந்த, செங்கோட்டை மழை கழுவியது *[அக.332:4]*.

ஏறொன்று பொதுவனை, நுதியைத்துகைத்து, நுனையினையுடைய கோட்டால் எடுத்துக் குலைத்தது *[கலி.101:29]*. ஆயத்தார் எல்லாரும் ஓராங்குக்கூடி விளையாடுமளவினும், தன் பல்லின் நுனை தோன்றாமல் முறுவலித்தலை உள்ளடக்கி அக்குறிப்புப் பிறரறியாமல் கண்ணாலும், முகத்தாலும் நகுபவள் தலைவி *[கலி.142:7]*.

நுனை இலங்குகின்ற வேல்போன்ற சிவந்த நோக்கோடு ஒருத்தி கேள்வனைத் துனித்தாள் *[பரி.21:21]*.

**(2) அரும்பு (ஆகுபெயர்).** முல்லையினது கூரிய நுனை-(நுனியையுடைய) அரும்புகள்-தோன்றக் கார் கவின் செய்தது *[அக.4:1]*.

**நுதி**-காண்க.

**நூபுரப்புட்டில்: சதங்கை.** பொன்னாற்செய்த நூபுரப்புட்டில்-சதங்கை-கிண்கிணி இவற்றை அடியோடுயாத்த காமக்குதிரையர் எனப் பரத்தையர் சுட்டப்பெறுவர் *[கலி.96:16]*.

**நூபுரம்-சிலம்பு.** தலைவியால் விளையாட்டிக் கொண்டுவரற்குப் போக்கிய மகனைப் பார்த்துப் பரத்தை, திருந்தின அடியில் நூபுரம்- சிலம்பு-ஆர்ப்ப அணுகினாள் *[கலி.83:16]*.

**நூல் - இழை.** எரியால் ஆக்கப்பட்ட, தகடாகச் செய்த, தாமரைப் பூவைக் கம்பியாகச் செய்த நூலில்-இழையின்-கண்ணேயிட்டு அழகுறுத்திய பொன்னான் இயன்றது மாலை *[புற.29:2]*. நூலை விரித்தாற் போலும் மயிரையுடையவளாய்க், கண் மறைந்து, முற்றத்திடத்துப் புறப்படமாட்டாத மூப்பையுடையவள், பரிசிலன் தாய் *[புற.159:4]*. வருக என வேந்தனது தூது இசைத்தலால், மறக்குடியில் பிறந்த மகன் நூலை அரிந்து கட்டிய மாலையினை யணிந்து தமியனாக வந்தான் *[புற.284:3]*. பாசியினது வேர்போற் கிழிந்த உடையைக் களைந்து விட்டு, நேரிய கரையையுடைய நுண்ணிய நூலானியன்ற உடையைத் தந்து உடுப்பித்து, விருந்தாய் எம்மை இருத்தி உண்பித்தான்', என, அதியமான் மகன், பொகுட்டெழினியை, ஔவையார் பாடுவர் *[புற.392:15]*.

நுண்ணூல் இரட்டும் விரலன், சூலச் சுடர்ப்படைக் காலக்கடவுள் *[பதி.க.வா.6]*. பெரிய நிலத்தே தோய்கின்ற விரிந்த நூலாலாகிய அறுவையை, அரசர் அணிந்திருந்தனர் *[பதி.34:3]*. நூலால் இழைக்கப்படாத, நுண்ணிய மயிரைப் போன்ற இழையினையிடையது போர்வை *[பதி.39:9]*.

நூலாற் கட்டப்படாதது பொன்னரி மாலை *[பொரு.161]*. சிலந்தியினது வெள்ளிய நூல் சூழ்ந்த பக்கத்தினையுடைய சுவு (நெற்) போர் *[பெரு.236]*. பாலாவியை ஒத்து விளங்குகின்ற நூலால் துகில்கள் செய்யப் பெற்றன *[பெரு.469]*. மெல்லிய நூலாற் செய்த கலிங்கம் அகிற்புகையூட்டப்பெற்றது *[மது.554]*.

அறுகினது பாவைபோலும் கிழங்கிடத்துள்ள, தண்ணிய நறிய அரும்புடன் (சேரக்கட்டிய) வெள்ளிய நூலைத் தமர்மணமகளுக்குச் சூட்டித், தூய உடையால் அவளைப் பொலியச் செய்தனர் *[அக.136:14]*. தலைவி, தூய தொழிற்பாடமைந்த நுண்ணிய நூலாகிய ஆடை தன் உடம்பின்கண் பொருந்தப் பெற்றவளாயிருந்தாள் *[அக.198:6]*. குதிரையின் வாயில் வழிந்திடும் நுரை சிலம்பியின் நூல்போல நுணுகிச் சிதறியது *[அக.224:8]*. தலைவன் உடனுறையப் பெறாமையை நினைந்து வருந்திய தலைவியின் கண்ணீர், நூலற்று வீழும் முத்துக்களைப் போல முலைமீது தெறித்து வீழ்ந்தன *[அக.289:11]*.

மேல்காற்று உதிர்த்திட்ட குவிந்த கண்ணினையுடைய நெல்லிக் காய்கள், நூலற்று உதிர்ந்த துளையினையுடைய பளிங்குக் காசுகளையொப்ப வறிய நிலத்து உதிர்ந்து கிடக்கும் *[அக.315:12]*. தலைவியின் வாரணிந்த முலைப் பரப்பின் முயக்கத்தினை, ஒரு நூல் இடையே தடுப்பினும், அதனை, வெறுத்துறையும் பெரிய காதலோடு துய்க்கும் நுகர்□சியைக் காட்டினும் இன்பம் இல்லை; எனப், பிரிந்து போகாநின்ற தலைமகன், தன்னெஞ்சிற்குக் கூறினான் *[அக.361:5]*.

கழிமுள்ளியினது கரியமலர், நூலற்று வீழ்ந்த முத்துக்களைப் போலத் காற்றாற் சிதறிப் பரந்து கிடந்தன *[குறு.51:2]*.

புதுநாண் நுழைப்பான். பா.வே.புதுநூல் நுழைப்பான் பொற்காசினை உகிரிடைக் கொள்வது போன்று வேம்பின்பழத்தைக் கிளி வாய்க் கொண்டது *[குறு.67:3]*. நூலற்ற முத்து வடத்தினின்றும் தனித்து உதிர்கின்ற முத்துக்களைப் போலக் குளிர்ந்த பனித்துளிகள் துளித்தன *[குறு.104:2]*. மடல்மா பலவாகிய நூல்களையுடைய மாலைகளையணிந்திருந்தது *[குறு.173:2]*. நம்மை மறந்து தாம் சென்றவிடத்தே தங்குதல் வல்ல தலைவர் திறத்தில், (நோன்பிற்கு அடையாளமாக) கையிற்காப்பு நூலைக்கட்டோம்' கொற்றவைக்குப் பலிக்கடன் பூணேம்; எனத், தலைவி கூறினாள் *[குறு.218:2]*. தலைவர் நினது துயரைக் கேட்பின், சிறந்தபொருள் நீங்குவதாயினும், நெகிழ்ந்த நூலாற் கட்டிய மலர்மாலைகள் சேர்ந்த படுக்கையிடத்திருந்து வருந்திக் கவின் தொலைந்த நின், துயர்கெட, நீடாது வருவர்', எனத், தோழி தலைவனிடம் கூறினாள் *[குறு.253:2]*.

தன் வாயில் உண்டாகும் நூலாலே கட்டிய சிலம்பியின்கோட்டையைக் கண்டு ஆண் புறா அஞ்சும் *[நற்.189:8]*.

பின்னின மயிர்க்கண்ணே கிடந்து அலர்ந்த, நுண்ணிய நூலாற்கட்டின, தேனால் ஈரமான இதழையுடைய பூக்கள், பின்னுக் கொப்பாகிய கரும்பாம்பிடத்தே கிடந்து, அதன் கரிய நிறத்தோடே மாறுபடுகின்ற, கார்த்திகை என்னும் மீனின் அழகை ஒத்திருந்தது *[கலி.64:3]*. மூன்றுவடத்தின் மேலே கிடக்கும் நூலாற்சூழ்ந்த, சுரும்புகள் ஆரும் கண்ணியைப் புதல்வன் அணிந்திருந்தான் *[கலி.85:14]*. நூலாற் செய்யப்பட்ட உத்தரியமாகிய, திண்ணிய குசை (கடிவாளம்) யினையுடைய காமக்குதிரை எனப் பரத்தையைக் கூறுவர் *[கலி.96:13]*.

கொம்புகளோடே சுற்றிக் குடர்கள் பிணித்த ஏற்றின்முன்னே நின்று ஆடி, அக்குடரை இரண்டு கையாலும் வாங்கி வயிற்றிலே இடுகின்றவன், சிவந்த நூற்கழியை ஒருவன்

இரண்டு கையிலும் கோத்துப் பிடித்திருக்க, அந்நூலை மூன்று நூலாகக் கொள்பவனையும் ஒக்கும்' எனத், தோழி, தலைவிக்குக் கூறினாள் *[கலி.103:30(2),(31)]*. நூலாலே பீலியையும், பூளைப் பூவையும், ஆவிரம் பூவையும், எருக்கம் பூவோடே தொடுத்து மடன் மாவிலே கட்டுவர் *[கலி.138:8]*. மணியைக் கழுத்திலே கட்டிக் கையாற் பிடித்தலமைந்த நூலோடு (வாய்க் கயிற்றோடே) யான் கையிற் கொண்டது, மடன் மா வன்று, மாவே, என, மடலேறுவேன் என்ற தலைவன், கண்டார்க்குக் கூறினான் *[கலி.140:6]*.

புரிநூல்-பூணூல்-அணிந்த அந்தணர் பொலங்கலத்துப் பிச்சை ஏற்றனர். *[பரி.11:79]*.

**2. அறிவுநூல்.** சிவனது வாய் மொழியை விட்டு நீங்காது, அறம் ஒன்றையே மேவிய, நான்கு கூற்றையுடைத்தாய், ஆறு உறுப்பாலும் உணரப்பட்ட ஒரு முதுநூல், - மறை அறிவு நூல்- அதற்கு மாறுபட்டவர்களது மிகுதியைச் சாய்க்க வேண்டி, அவரது மெய்போன்ற பொய்யை அறிந்து, அதனை மெய்யென்று கருதாமல், உண்மைப்பொருளை அவர்களுக்கு ஏற்பச் சொல்லி, இருபத்தொரு வேள்வித்துறையையும் குறைவின்றாகச் செய்து முடித்த புகழமைந்த தலைமையையுடைய, அறிவுடையோர் மரபில் வந்தவன், கௌணியன் விண்ணந்தாயன் *[புற.166:4]*.

எல்லா நூல்களையும் அறியும் புலவ! என முருகனை விளித்துப் பரவினர் *[முரு.261]*. நுண்மை செறிந்த நூலின் வழியைத் தப்பாத, நுண்ணிய ஆராய்ச்சி யுடையவர் ஊர்க்காப்பாளர் *[மது.646]*. (பரி) நூல் வல்ல பாகனே! விரையச் செலுத்துவாயாக' என, வினை முற்றி மீளும் தலைவன், தேர்ப்பாகற்குக் கூறினான் *[அக.114:8]*. நான்கு மறைகளாய முதுநூலை அருளிச் செய்தவன் முக்கண்ணையுடையவன் (பரமன்) *[அக.181:16]*. நூல்நெறிப்படி இயன்றதும், விரைவால் கண்ணின் பார்வையினைத் தவிர்ப்பதும், பண்ணுதல் அமைந்ததுமாயது நெடியதேர் *[அக.234:7]*. புரவிநூல் கூறும் முறைப்படி, நுண்ணிதின் அமைந்து, வேகத்தாற் காற்றெனக்கடிது செல்வது குதிரை *[அக.314:8]*.புரவிநூல் கூறும் இலக்கணம் அமைந்த பிறப்பினையுடையது குதிரை *[அக.400:5]*.

கள்ளை உண்ணல் ஆகாதென நீக்கின தேவர்க்கும், அதனையுண்டலை நீக்காத அசுரர்க்கும் வரைதலையும், வரையாமையுமாகிய அவ்விரண்டனையும் கைக்கொண்டு, அறத்தொழிலாக, இன்பமுறுத்தும் வியாழமும், வெள்ளியுமாகிய இருவரும் செய்த வழிவேறாகிய தொழில்களையுடைய அரசியலைக் கூறும் நூல்வழியைத் தப்பாமல், நினது நடுவு நிலைமையாலே உலகத்திற்குத் தரும்படியாக வாய்த்த, இனமணி யானையாய், என, அரசனை (தலைவனை) நோக்கிச், சான்றோர் கூறினர். *[கலி.99:3]*.

திருந்திய நூலினையுடைய வசுக்கள் எண்மர் *[பரி.8:5]*. மதுரை மக்கள் வையைப்புனலாடுவதற்கு நுண்ணூல் சரணத்தராகச் சென்றனர் *[பரி.10:10]*.

வரிநூல் அந்தணர், மார்கழியில், திருவாதிரைக்குத் தெய்வமாகிய இறைவனுக்கு விழாத் தொடங்கினர் *[பரி.11:78]*.

**நூலாக்கலிங்கம்- பட்டாடை.** இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன், பரிசிலர் உடுத்திருந்த, மண்ணால் அரிக்கப்பட்ட கந்தையுடையினை அகற்றி, அவர்களுக்கு, நூலாக்கலிங்கம்- பட்டாடையினை - உடுப்பித்தான் *[பதி.12:21]*.

**நூலேணி- நூலாற்செய்த ஏணி.** வயவர், மெல்லிய நூலேணி - நூலாற் செய்த ஏணியை- அரையில் பலவாய் மாட்சிமைப்படச் சுற்றிய சுற்றினையுடையராய் இருந்தனர் *[மது.640]*.

**நூலோர்- (குதிரை நூல்) கற்றோர்.** நூலோர் - (குதிரை நூல்) கற்றோர்-புகழ்ந்த அழகினையுடையவாய்த், தனித்துத் தொழில் செய்யாமல், இனங்களோடே கூடும் தொழிலையுடையவாய, வெள்ளிய கழுத்தின் மயிரையுடைய குதிரைகள் நான்கைத், தேரில் சேரப்பூட்டித், தொண்டைமான், பரிசிலர்க்களித்தான் *[பெரு.487]*.

**நூழில்-1. கொடிப்பிணக்கு.** தலைவருடைய கிளையையுடைத்தாகிய மலையின் முழைஞ்சிட மாகிய அவர் வரும்வழி, நூழில்- கொடிப் பிணக்கு- உடையது எனத் தலைவி கலங்கும் *[குறி.258]*. மகளிர், கோதையையும் வரிப்பந்தையும் கொண்டெறிவாராய்த், தம் பேதைமையுடைய மெல்லிய நோக்கம் வெகுளியான் வேறுபட, ஊதநுடங்கும் நுசுப்பினராயிருந்தே, நூழில் போரில் தலைக்கொண்டனர் *[பரி.9:49]*.

**நூழிலாட்டு - கொன்று குவித்தல்.** கொறுக்கைச்சியை யுடைய மருத நிலத்து மீன்பிடிப்பார் நூழிலாட்டு - (மீனைக்) கொன்று குவித்தலாற்-பிறந்த ஓசையும், (பிற ஓசைகளும்) வானிடைச் சென்று முழங்கி ஆண்டுவாழ்வார்க்கு இனிதாக ஒலித்தன *[மது.257]*.

பகைவர் தேயம் சேணிகந்தனவாயினும், ஆண்டுச்சென்று, நூழிலாட்டி, வலியுண்டாகப் பொருது, அறிவுடையோர்க்குக் கொடுத்தற்குரியவற்றைக் கொடுத்தனர் நன்னன் சேய் நன்னனின் குடியிலுள்ளோர் *[மலை.87]*.

**நூழை-புழைவழி.** பன்றி, தினைக்கொல்லையிலே சென்று மேயும் பொருட்டுப் பெரிய பொறியமைந்த நூழை-புழைவழி- சென்று புகும்பொழுது பல்லியடித்தலால், மீண்டு வந்து தன் கல்முழையிலுள்ள பள்ளிடத்தே தங்கியது *[நற்.98:4]*.

**நூற்றிதழ் அலர்** - (நூறாகிய இதழையுடைய) தாமரை மலர். சேற்றின்கண்ணே வளரும், ஒன்றிய நிறத்தையுடைத்தாகிய, நூற்றிதழ் அலரின்-(நூறாகிய இதழையுடைய) தாமரை மலரின்-நிரையைக் கண்டாற் போன்ற, ஏற்றத் தாழ்வில்லாத சிறந்த குடியின்கண் பிறந்து வீற்றிருந்தவர் வேந்தர் *[புற.27:2]*.

**நூற்றினர்-சுண்ணாம்பையுடையவர்.** படைகள் வந்து மீளுதலின், வெற்றிலையினை உடையாரும், சங்கு சுடுதலால் உண்டான நூற்றினர்-சுண்ணாம்பையுடையவரும்-அஞ்சியிருந்து, அவை நீங்கிய பின்னர் வருத்தத்தைப் போக்கிக் கொண்டனர் *[மது.401]*.

**நூற்றுவர்-நூறுபேர் (துரியோதனன் முதலிய கவுரவர்)** ஆயர் ஏறு தழுவிய தொழு, போரை விரும்பி மேற்சென்ற நூற்றுவர்-நூறுபேர் (துரியோதனன் முதலிய கவுரவர்) - வீழ்ந்துபடும்படி, வரிபுனை வல்வில்லையுடைய ஐவர் (தருமன் முதலிய பாண்டவர்) கொன்ற போர்க்களத்தை ஒத்தது *[கலி.104:57]*.

**நூற்றுவர் தலைவன்** - நூறு பேருள் முதல்வன். (கவுரவர் நூறுபேருள் முதல்வனான துரியோதனன்). அழகிய களிற்றியானை, முறம்போலும் தனது செவி மறைப்பிடமாக வந்து பாய்ந்து, மாறுபாடு செய்த, புலியை வெகுண்டு மறத்தைக் கொண்ட நூற்றுவர் தலைவனை-நூறுபேருள் முதல்வனை (துரியோதனனை)-தொடையிலே அடித்து உயிரைப் போக்குவோன் (வீமசேனன்) போல், தனது கொம்பின் கூர்முனையினால் குத்தி, அப்புலியின் மார்பைப் பிளந்து, மாறுபாடு தீர்ந்தது *[கலி.52:2]*.

**நூறாயிரம்** - இலட்சம். தன்னைப் பாடிய காப்பியாற்றுக் காப்பியனார்க்கு, நாற்பது நூறாயிரம்-இலட்சம்-பொன் கொடுத்துத், தான் ஆள்வதிற்பாகங் கொடுத்தான், களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் *[பதிப.4]*. தன்னைப் பாடிய, காக்கை பாடினியார் நச்செள்ளையார்க்குக் கலனணிக என்று, ஒன்பது காப்பொன்னும், நூறாயிரம் காணமும் கொடுத்துத் தன்பக்கத்துக்கொண்டான், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் *[பதிப.6]*. தன்னைப் பாடிய கபிலர்க்குச், சிறுபுறமென, நூறாயிரம் காணம் கொடுத்து, நன்றா வென்னும் குன்றேறி நின்று, தன்கண்ணிற் கண்ட நாடெல்லாம் காட்டிக் கொடுத்தான், செல்வக் கடுங்கோ வாழியாதன் *[பதி.ப.7]*. தன்னைப் பாடிய மறுவில் வாய்மொழி யரிசில்கிழார்க்குத், தானும், கோயிலாளும் புறம்போந்து நின்று, கோயிலுள்ள வெல்லாம் கொண்மின், என்று, காணம் ஒன்பது நூறாயிரத்தோடு, அரசு கட்டிற் கொடுத்தான், பெருஞ்சேரல் இரும்பொறை *[பதி.ப.8]*. தன்னைப் பாடிய பெருங்குன்றூர்கிழார்க்கு, மருளில்லார்க்கு மருளக் கொடுக்க வென்று, உவகையின், முப்பத்திராயிரம் காணம் கொடுத்து, அவர் அறியாமை, ஊரும், மனையும் வளம்மிகப் படைத்து, ஏரும், இன்பமும் இயல் வரப் பரப்பி, எண்ணற்காகா அருங்கல வெறுக்கையோடு, பன்னூறாயிரம் பாற்படவகுத்துக், காப்புமறம், தான் விட்டான், இளஞ்சேரல் இரும்பொறை. *[பதிப.9]*.

திருமால் நூறாயிரம் கையோடு. அறநெறியறிந்த கடவுளாக வுள்ளார் *[பரி.3:43]*.

**நூறு - 1.ஓர் எண்.** பல நூறு எண்ணாகி அடுக்கப்பட்ட படைத்தொகுதி உறைய இடமில்லையாக வமைந்தது பாசறை *[புற.62:10]*. பாரியின் பறம்பு நாடு முந்நூறு ஊர்களையுடையது; அம்முந்நூறு ஊர்களும் பரிசிலர் பெற்றனர் *[புற.110:3,4]*.

நெல்லையறுத்துக் கவளமாகக் கொடுத்தால் மாவிற்குறைந்த நிலத்திற்கதிரும் பல நாளைக்காகும்; நூறு செய்யாயினும், யானை தனித்துப்புக்கு உண்ணுமாயின், அதன் வாயின்கண் புகுந்த நெல்லினும், கால் மிகவும் கெடுக்கும் எனப், பாண்டியன் அறிவுடை நம்பியுழைச் சென்ற பிசிராந்தையார் கூறினார் *[புற.184:3]*.

'நூறு' என்னும் எண்ணாகிய பல வேள்விகளை முடித்தவன். நூற்றைப் பத்தாக அடுக்கிய நாட்டத்தையுடைய இந்திரன் *[முரு.155:(2)]*.

தலைவன் குறைகளைப் பல நூறாக அடுக்கிக் கூறினை, எனத், தலைவியிடம் தோழி கூறினாள் *[கலி.122:5]*.

திருமால், நூற்றுக்கை ஆற்றலுடையவன் *[பரி.3:40]*. செவ்வேள், வள்ளியை மணந்தபோது ஐயிரு நூற்று நயனத்தவன் (ஆயிரங் கண்ணோனாகிய இந்திரன்) மகள் கண்ணீர் வடித்தாள் *[பரி.9:9]*.

**2. நீறு.** வழியில், கூவைக் கிழங்கு நூறொடு-நீறு-ஆகிய தன்மையோடு, முற்றித் திரண்டன *[மலை.137]*.

மையாகிய கரிய நூறு அணிந்த கண்ணையுடைய மான்மகள், வள்ளி நாச்சியார் *[பரி.9:8]*.

**நூறை-நூறைக்கிழங்கு.** (மலங்கு (ஒருவகை மீன்) என்பாருமுளர்) ஆற்றுப்படுத்தப்படும் கூத்தர் வழியில் பெறத்தக்க ஒன்றாகக், காவிக் கொண்டு வந்த நுகமென்று மருளும், நூறைக்கிழங்கினைக் கூறுவர் *[மலை.515]*.

**நெஞ்சம் - 1.** உள்ளம்-கிழக்கடல் பின்னதாக, மேல் கடலினது திரை நினது குதிரையினது குளம்பை யலைப்ப வலமாக முறையே வருதலுமுண்டென்று சுழன்று நெஞ்சம்-உள்ளம்-நடுங்கும் அவலம் பரப்பத் துயிலாத கண்ணையுடையவாயின வடநாட்டுள்ள அரசுகள் என, நலங்கிள்ளியைக், கோவூர்கிழார் பாடினார் *[புற.31:16.பா.வே.]*. 'பொறைய! விரித்துச் சொல்லிற் பரக்கும். தொகுத்துச் சொல்லிற் பொருள் ஒழிவுபடும். ஆதலால் மயக்கம் பொருந்திய நெஞ்சமுடைய எங்களுக்கு எந்நாளும் ஒரு தலையாக முடியா நினது புகழ்', என மாந்தரஞ் சேரலிரும்பொறையிடம் பொருந்திலிளங்கீரனார் கூறினார்

*[புற.53:7].* 'யானையினது காலின்கண் அகப்பட்ட மூங்கிலது முளையையொப்ப வருந்தும்படி பொருதிலேனாயின், தீதில்லாத நெஞ்சத்தாற், காதல் கொள்ளாத பொதுப்பெண்டிரது பொருந்தாத புணர்ச்சியிடை, என்மாலை துவள்வதாக: என வஞ்சினங் கூறினான், சோழன் நலங்கிள்ளி (நல்லுருத்திரன்-பா.வே.) *[புற.73:12].* 'பரிசில், நீட்டிப்பினும், நீட்டியாதொழியினும் யானையது கொம்பிடை வைத்த கவளம் போன்று நம் கையத்தது. அது தப்பாது; உண்ண அவாக் கொண்ட நெஞ்சமே வருந்த வேண்டா' எனப்பரிசில் கடாநிலையாக, அதியமானை, ஔவையார் பாடினார் *[புற.101:9].* 'கண்மறைந்து முற்றத்திடத்துப் புறப்படமாட்டாத தாயும், அறக்கடவுளைப் பழித்து உண்ணாளாகிய என்னை விரும்பியோளுமாகிய, இருவர் நெஞ்சமும் காதலிப்பப், பசிதினலால் ஈண்டிய எனது சுற்றமும் மகிழ, யான் இன்புற, விரையத் தந்து விடுவையாயின் குன்றியளவுடைய பொருளாயினும் கொள்வேன்', எனப்பரிசில் கடாநிலையாகக் குமணனைப், பெருஞ்சித்திரனார் வேண்டினார் *[புற.159:15].* 'நும்முன்னாகிய தந்தை தெய்வலோகத்துப் போய் நுகர வேண்டிப் போனானாதலின், கவலையுற்ற நெஞ்சத்தின்கண் வருத்தங்கெட, நீ வந்து தோன்றினாய்' என மலையமான் சோழியவேனாதிதிருக் கண்ணனை (பா.வே.திருக்கிள்ளியை), மாறோக்கத்து நப்பசலையார் பாடினார் *[புற.174:22].* 'யான் ஒன்றைச் சொல்ல நினைப்பின் நினது புகழல்லது சொல்லாமையான், எனது நெஞ்சத்தை வெளிப்படுத்திக் காணலுறுவோர் ஆங்கு நின்னைக் காணாநிற்பர்', என ஆதனுங்கனைக் கள்ளில் ஆத்திரையனார் பாடினார் *[புற.175:2].* 'மாவிலங்கையென்னும் ஊர்க்குத்தலைவன் நல்லியக் கோடனைக் காணாதொழிந்த நாட்கள் எனக்கு நாட்களாய்க் கழிந்தனவல்ல வென்று உட்கொண்டு அவனோடு தொடர்ந்த நட்பு இன்றேபோல இடையறாது செல்ல வேண்டுமென்று பின்வரு நாளைக்கு இரங்கா நின்றது, என்னுடைய நெஞ்சம்', என இயன்மொழியாக, நல்லியக்கோடனைப், புறத்திணை நன்னாகனார் இயம்பினார் *[புற.176:12].* 'உன்னுடைய மடவோள் பெற்ற புதல்வர் பொலிகவென்று வாழ்த்தி, நின்னைப் புகழ்ந்து, பரிசின் மேல் அன்பு பெரிதாகலின், கனவின் கண்ணும் நின்புகழையே கூறும், எனது விருப்பத்தையுடைய நெஞ்சம் இன்புற்று மகிழ, நின்னுடைய செல்வத்தையெல்லாம் கண்டேன்! எனப் பரிசில் கடாநிலையாகப், பாண்டியன் இலவந்திகை பள்ளித் துஞ்சிய நன்மாறனை, வடமவண்ணக்கன் பேரிசாத்தனார் (பா.வே. பெரியசாத்தன்) பாடினார் *[புற.198:8].* 'எழுந்திருப்பாயாக, இனி எம்முடைய நெஞ்சமே! யாம் போவோமாக. முகமாறித் தரப்பட்ட பரிசிலைப், பிறிதோரிடத்துச் செல்ல முயலும் முயற்சியில்லாதோர் விரும்பாரல்லர் என வெளிமான் துஞ்சியபின், அவன் தம்பி இளவெளிமானைப், பரிசில் கொடுவென, அவன் சிறிது கொடுப்பக் கொள்ளாது, பெருஞ்சித்திரனார் பாடியது *[புற.207:1].* நின்னை வெகுண்டாரது அஞ்சுதற்கரிய முனையிடத்து அரணைப் போலப், பெரிய செயலற்ற எனது வறுமையை முன்போகவிட்டு, இன்னாமையையுடைய நெஞ்சத்துடனே போவேன், எனச் சேரமான் குடக்கோச்சேரலிரும்பொறை, பரிசில் நீட்டித்தபோது, பெருங்குன்றூர்கிழார் பாடினார் *[புற.210:13].* 'அறவினை செய்வேமோ, அல்லேமோ வென்று கருதி ஐயப்பாடு நீங்கார், அழுக்குச்செறிந்த காட்சி நீங்காத நெஞ்சத்தினையுடைய தெளிவில்லாதோர் என்று, கோப்பெருஞ்சோழன் கூறினார் *[புற.214:3].* 'ஒரு மீன் விழுந்தது, வானத்தினின்றும்; அதனைப்பார்த்து யாமும், பிறருமாகிய பல்வேறு வகைப்பட்ட இரவலர், நல்ல மலைநாட்டுக்கு வேந்தனாகியவன் நோயையுடை யனல்லனாகப் பெறின் அழகிதென இரங்கிய நெஞ்சத்துடனே அஞ்சினேம்' எனக், கோச்சேரமான் யானைக்கட்சேஎய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை இன்ன நாளில் துஞ்சுமெல: அஞ்சி அவன் துஞ்சியவிடத்துக், கூடலூர்கிழார் பாடினார் *[புற.229:16].* 'எழினி பொருது போர்க்களத்தின்கண்ணே வீழப், பெற்ற தாயால் கைவிடப்பட்ட, உண்ணாத குழவியை யொப்பத், தன்னை மேவிய கிளை இடந்தொறும், இடந்தொறும் வருந்த, மிக்க பசி வருத்திய, கலக்கமுற்ற துன்பம்மிக்க நெஞ்சமோடு, அவனை இழந்து வருத்தமுற்றுக் கிடந்த உலகினும் மிகப்பெரிதாகக் கூற்றமே நீ, உழவன் விதையை உண்டாற்போல், இழந்தாய், எனக் கையறுநிலையாக, அதியமான் தகடூர் பொருது வீழ்ந்த எழினியை, அரிசில்கிழார் பாடினார் *[புற.230:9].* மழையையுடைய இரவின்கண், மரக்கலம் கவிழ்ந்த காலத்துப் பொறுத்தற்கரிய துன்பமுற்ற நெஞ்சத்துடனே, கண்ணில்லாத ஊமன், கடலின்கண் அழுந்தினாற்போல, வெள்ளத்தின்கண் துன்பமாகிய மறு சுழியின்கட்பட்டுச் சுழலுமதனின், இறந்துபடுதலே நன்று' என்ற கையறுநிலையாக, வெளிமான்துஞ்சியபின் பெருஞ்சித்திரனார் பாடினார் *[புற.238:15].* 'ஓசை மிக வேண்டுமென்று எறியினும், ஓசையை உள்வாங்கி, வேறுபட்டு, இரங்கற்பண்ணாகிய விளரியைச் சென்றுறுகின்ற, இனிய நரப்புத் தொடையினது தீங்கை நினைந்து, நடுங்கும் நெஞ்சத்தைத் தலைப்பட்டுப், புறப்பட்ட வளவின் நிமித்த வழியாக, ஒரு மனைவி, விரித்து வருகின்ற மயிரைப்பார்த்துக், களர்நிலத்துள்ள கள்ளிமரத்தின் நிழற்கண் உண்டாகிய தெய்வத்தை ஏத்தி, இரங்கிக் கையாற்றொழுது, நம்குருசிலைக் காணமாட்டேன்கொல்லோ என்று, எதிர்வருவாரைப் பார்த்துக் கேட்டு வருகின்ற பாண! என்று கரந்தைக், கையறுநிலையாக, வட மோதங்கிழார் பாடினார் *[புற.260:3].* 'போரில், வென்ற நல்லேற்றின் தோலைச் சீவாது போர்த்த முரசம் இரங்க, மயங்கப்பொருத களத்தில், நெடுவேல் பாய்ந்ததால், நாணுடைய நெஞ்சத்துக், குருதிபடிந்த மார்பின் முயக்கிற்கு (மனைவியது) இடங்கொடாது, மொய்த்தன பருந்து, எனத் தும்பைத்திணையில், மூதின்முல்லையாகக், கழாத்தலையார் பாடினார் *[புற.288:6].* பெரும்போர் நிகழ்வதையும்

விரும்பியவளாகிப், பெருவேந்தரது (மணம் வேண்டி) மறங்கொண்ட நெஞ்சங்களைக் கவர்ந்து கொண்டொளித்தாள், என, மகட்பாற் காஞ்சி பாடப்பட்டது *[புற.339:14]*. அறம்புரியும் நெஞ்சமுடைய ஆயரும், மறம்புரியும் நெஞ்சமுடைய மறவரும் மலர்கமழும் முற்றத்தில் கூடுவர் *[புற.390:1,2]*.

சொல்லிலக்கணம், பொருளிலக்கணம், சோதிட நூல், வேதம், தூய நெஞ்சம் (இந்திரியங்களின் வழியோடாது அடங்கிய) என்னும் ஐந்தும் ஒருங்கு போற்றி, அவை துணையாகக் கடவுளை பேணும் பொருட்டு வேள்வி செய்தனர் *[பதி.21:1]*.

'நுகர்தற்கினிய பல பொருள்களைப் பெற்றவழி அவற்றைத் தனித் தனியாக நுகர்வோம்; எம்பால் கொணர்க', என்று விரும்பாத, கெடாத நெஞ்சத்தால், பிறர்க்குப் பகுத்துண்ணும் உணவைத் தொகுத்தளித்த ஆண்மையுடையவன் நார்முடிச் சேரல் *[பதி.38:14]*. போரில் வஞ்சியாது எதிர் நின்று வென்று, பெற்ற பொருள்களைக், கிடைத்தற்கு அரியன வென்று கருதாமலும், அவற்றைத் தனக்கென்று பாதுகாவாமலும், பிறருக்குக் கொடுத்துத், தான் அணிந்த அணிகலன்களை இரவலர்க்கு மிகக் கொடுத்தலல்லாமல், கனவினிடத்தாயினும், என்னுடைய துன்பத்தை நீக்குக என்று கூறுதலையறியாத குற்றமில்லாத நெஞ்சத்தையும், வெற்றியைத் தோற்றுவிக்கும் நடையையும் உடையவன் சேர மன்னன் செங்குட்டுவன் *[பதி.44:6]*. சேரனிடத்தே ஒடுங்கிய நெஞ்சம் என்றும் குற்றப்படுதலை அறியாது *[பதி.89:14]*.

நற்குணங்கள் பலவுஞ்சேர நின்றமையாலாகிய நன்றாகிய நெஞ்சத்தில் உண்டாகிய இனிய விருப்பம் வாய்க்குமாறு, நீ கருதிய வீடுபேற்றை, இப்போதே பெறுவை என அன்பனை ஆற்றுப்படுத்தினர் *[முரு.65]*. முருகனின் ஒருமுகம் பகைவரை அழித்து, நிகழும் போரைக் கெடுத்துச் சினங்கொண்ட நெஞ்சமுடன், போர்க்கள வேள்வியை வேட்டது *[முரு.100]*. நல்லியக்கோடானது மலைச்சந்தனம் நெஞ்சங் குளிர்விப்ப அவனது, தலை மாலை மாதரைச் சுடும் (நெஞ்சம் உடம்பின் பகுதியைக் குறித்தவாறுமாம்) *[சிறு.வெ.2:1]*. கூத்தரைத், திசை மயக்கத்தாற் கலங்கி அறிவழிந்த நெஞ்சத்தின் கேடு போம்படி கானவர் கடுகவந்து சேர்ந்து முற்படப் போகையினாலே, மனம் மகிழ்வீர் என ஆற்றுப்படுத்தினர் *[மலை.285]*.

'நிறுத்தவும் நில்லாது ஓடும் நெஞ்சத்தினளாய் நின்னிடத்தே இத்தகைய காதலுடையளாயின் இரவில் வருவதற்கும் உரியை', எனத் தோழி தலைவனை வரைவு கடாயினாள் *[அக.2:12]*. அணிகலன்களை ஈட்டி வரும் எண்ணத்தாலே சுரம் கடந்து செல்வதாகக் காட்டி எம்மைப் பின்னின்று தூண்டும் நெஞ்சமே!' எனத் தன் நெஞ்சிற்குச், தலைமகன் கூறிச் செலவழுங்கினான் *[அக.3:13]*. தாம் மீண்டு வருங்காலமாக உறுதியாகக் குறித்தல் செய்தார், என்று கூறித், தலைவர் வாராமையால், வெறுத்த நெஞ்சமுடன், வருந்தற்க' எனத் தலைமகளைத், தோழி வற்புறுத்தினாள் *[அக.25:15]*. 'பொருள் ஈட்டி வரும் விருப்பத்துடன் மாண்புற்ற வினையின் பொருட்டு என் உடம்பு ஆண்டுப் பிரிந்து நின்றதல்லது என் நெஞ்சம் நின் கண்ணதேயாகும்', என்று தலைமகன் தலைமகட்குரைத்தான் *[அக.29:23]*. 'அறுகினது கொத்துக்களைப் பெண்மானை அருந்தச் செய்து, துயிலும் இடத்தைக் காவல் செய்திருக்கும் பெருந்தன்மையினைக் கண்டு, அவை போலத் தலையளி செய்திலமே, என்று, தளர்ந்த நெஞ்சம் இன்பம் அடையத், தலைவியது நலத்தினை அடையத், தேர் விரைந்து செல்வதாக', எனத் தலைமகன், தேர்ப்பாகற்குக் கூறினான் *[அக.34:9]*. 'அறிவார் பிறர் இல்லாத நாட்டிலே, அவளைச் செலுத்திப்போம் துணைவன், அன்புமிக்க நெஞ்சத்தோடு, அவளைப் பலகாலும் அணிவித்து, அவளது அழகிய நலனைத் துய்த்துத், தனது மார்பு பற்றுக்கோடாகத் துயில்விப்பானாக' என மகட்போக்கிய நற்றாய் தெய்வத்திற்குப் பராஅயினாள் *[அக.35:12]*. பெண்களுக்குத் துயர் புரியலாகாது, என்று, முன்னோர் ஒழித்த கொள்கையைப் பழித்த நெஞ்சமோடு, நெடுவழிச் சென்று, எம்மை நினைத்தும் அறிதிரோ எனத், தலைமகள் கேட்க, மறப்பனோ எனத், தலைமகன் சொல்லினான் *[அக.39:1]*. 'மிக்க துன்பங்கொண்ட அழகிய நெஞ்சம் செயலற்று வருந்த, நமக்குப் பிரிதல் துன்பினைச் செய்து மீண்டும் வந்து நம்மை அருளாராயினும், அவரது நட்பு நமக்கு ஒழியாதிருப்பதாக', எனத் தலைவன், பொருள்வயிற்பிரியக், தலைவி, தோழிக்குக் கூறினாள் *[அக.40:8]*. 'நம் தலைவியிடத்தினின்றும் பிரிந்து செல்வதானே, பொருட்பிணி வந்து புணர்வதாயின், தலைவி இல்வாழ்க்கைத் தொழிலோடும் மகிழும்படி, நினைவாயாக', எனப் பொருள்வயிற் பிரிவு கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் உரைத்தான் *[அக.51:14]*. 'எந்நாளும் வறியார்க்கு இல்லையென்று கூறி, இயைவதைக் கரத்தல் மாட்டாத நெஞ்சம் வற்புறுத்தலின், நம் காதலர் காதலித்தது, நம்மினுங்காட்டிற், பொருளேயாகும் என, வற்புறுக்கும் தோழிக்குத், தலைமகள் கூறினாள் *[அக.53:14]*. 'காட்டில், காளையுடன் என் மகள் உடன் போயதற்கு வருந்தினேன் அல்லேன். ஆயின், அவளைப் பிரிந்து, உலைக்கண் ஊதும் துருத்திபோல, வெய்துயிர்த்து, உள் மெலிந்து தீயில் வேவது போலும் வெவ்விய நெஞ்சமொடு, துயிலேனாய்ப், புலம்ப, இவ்வுலகத்து வாழ்வை விரும்பி என்னை விட்டுப் பிரிந்து போதலைச் செய்யாத, என் உயிரொடு புலந்தேன்', எனப் புணர்ந்துடன் போன, தலைமகட்கு இரங்கிய,தாய் தெருட்டும் அயலிலாட்டியர்க்கு உரைத்தாள் *[அக.55:8]*. செல்வம் நிறைந்தோரை ஆராய்ந்தடையும் நெஞ்சத்தால், செல்வம் குறைந்தோரால் பயனடைதல் இன்மையின், அவர்பாலிருந்த பற்றினையொழித்து நீங்கும், நடுநிலையில்லா மக்களைப் போல, வண்டின் கூட்டங்கள் சுனைப்பூக்களை ஒழித்துச், சினைப்பூக்களையடைந்தன *[அக.71:1]*. 'கடக்க எண்ணுநர் அஞ்சும் கற்செறிவை உடைய இட்டிய நெறியில், நம்மேல் அருள் வைத்த நெஞ்சமொடு,

வேல் துணையாகக் கொண்டு வந்த தலைவனும், கொடியன் அல்லன் எனத் தலைமகன் இரவுக்குறிக்கண், சிறைப்புறத்தானாகத், தலைமகள், தோழிக்கு உரைத்தாள் *[அக.72:8].* வதுவைமணம் கழிந்தபின், நின் நெஞ்சம் நினைந்ததனை மறையாது உரை, என்று, யான் முன்பு வினவலின், உள்ளம் நிறைந்த மகிழ்ச்சியினளாகி, முகத்தினைத் தாழ்த்துத் தலைவணங்கினள், என வாயில் மறுத்த தோழிக்குத் தலைமகன் உரைத்தான் *[அக.86:25].* 'வன்கண்மையுடைய மறவரது காட்டரண்களில் எழுந்த தண்ணுமைப் பறையின் ஒலி, அரிய சுர நெறி செல்வோர் நெஞ்சம் நடுக்குற ஒலிக்கும் *[அக.87:9].*

'தலைவ! நீ உடன்கொண்டு செல்லுதலை விரும்ப, அவ்விருப்பினைக் கேட்குந்தொறும், அன்பினையுடைய நெஞ்சத்துப் (முன்பு நிகழ்ந்த) பலவற்றினையும் எண்ணி, என் துன்பினை நீக்கும் பொருட்டுக், காட்டில் நின்னுடன் வாரா நிற்பள்', எனத் தலைமகள் குறிப்பறிந்து வந்து, தோழி, தலைமகற்குரைத்தாள் *[அக.107:2].* 'வானைத்தோயும் மலையினைக் கடந்து பொருளீட்டச் சென்றோராய நம் தலைவர், தமக்குப் பொருள் உள்ள அளவிற்கு மகிழ்தலிலராய்ப், பகைவர் இகழும் நெஞ்சத்துடன் கூறும் சொல்லிற்கு நாணினராய்ச் சென்றவர் விரைய வருவர்', எனத் தலைமகன் பிரிவின்கண், தோழி, தலைமகளை ஆற்றுவித்தாள் *[அக.111:2].* என் தோளினை மணந்து, ஊர் அலரினை மிகுத்துக் கூற, அருளாது விட்டேகிய நம் காதலர், சேய்மைக்கண் உள்ளார் என்று பலருங் கூறலின், நோயுற்ற என் செயலற்ற நெஞ்சத்துத் துன்பம் ஒழிய, என் மெய் இங்குத் தனித்தொழிய, என் உயிர் பிரிந்து புறப்பட்டு அவர் வினைசெய்யும் இடத்திற் செல்வதாக, அதனான், நாம் அழாதேமாய் உறைதற்கு உரியம் ஆவேம் எனத், தலைமகன் பிரிவின்கண், தலைமகள், தோழிக்குக் கூறினாள் *[அக.113:22].* 'ஊர், அன்னை, காவலர், நாய், மதியம், கூகை, சேவல் என்னும் இவை எல்லாம் ஒழிந்த காலத்தும், நிலை பெறாத நெஞ்சத்தினையுடைய நம் தலைவர் வருதலிலர். அதனால், நம் களவு, தித்தன் உறையூரைச் சூழ்ந்த, காவற்காடு போன்ற, பல தடைகளை உடையதாகின்றது', எனத் தலைமகன் சிறைப்புறத்தானாகத், தோழிக்குச் சொல்லுவாளாய்த், தலைமகள் மொழிந்தாள் *[அக.122:18].* 'மன்று ஒலியடங்க, மனைகளும் துயின்றன. யாமம் பொருந்தக், காமம் கரைகடந்து செல்லும். யாம், இந்நிலையினம் ஆகவும், நமது நல்ல நெஞ்சம் மயங்கலுற்று. என்னையும், நின்னையும் உசாவியுணராது, கைகடந்து, நம் தலைவன் வருகின்ற மலை மீதுள்ள நெறியில், மிதிக்குமிடத்துத் தளரா நின்ற அவரது அடியைத் தாங்கும் பொருட்டுச், சென்றுவிட்டது', என்று இரவுக்குறி வந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத், தலைமகள், தோழிக்குக் கூறினாள் *[அக.128:6].* இத்தலைவியினும் நமக்கு ஈதலே சிறந்தது என்று, அச்சம் வரும் இயல்பினவாய காட்டில், எம்மொடு வருக என்பையாயின், யான் வருவேனல்லேன், நெஞ்சமே! மேற்கொண்ட வினை வாய்ப்பதாக என்று பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் உரைத்தான் *[அக.131:15].* சுற்றத்தார் நமக்குத்தந்த முதல் நாளிரவில், என் உயிர்க்கு உடம்பாக அடுத்தவள், புத்துடையால் உடல் முழுவதும் போர்த்தியதால் அரும்பிய வியர்வை, காற்றுப்போக்கிடச் சிறிது திறவாய், என்று கூறி, அன்புமிக்க நெஞ்சமொடு போர்வையைக் கவர்தலின், உறை நீங்கிய வாளைப்போலே உருவம் விளங்கக் கூந்தலின் இருளால் மறைத்தற்குரிய உறுப்புக்களை மறைத்து, நாணி, விருப்புற்று இறைஞ்சினாள் (அன்று) என, உணர்ப்புவயின் வாரா ஊடற்கண், தலைமகன், தன் நெஞ்சிற்குக் கூறினான் *[அக.136:23].* 'தம்மை விரும்பியிருப்போரைப் புரந்து, நட்டாரொடு இன்பம் மிக இயைந்து, மகிழ்ந்திருத்தலை மாட்டாராவர், வறுமையுற்றோர், என்று கூறி, மிக்க பொருளை ஈட்ட நினையும் நெஞ்சத்தால், நம்பால் மிகவும் அருளுடையவர் அல்லர் ஆவர், எனத் தலைமகன் பிரிவின்கண், வேறுபட்ட தலைமகள் உரைத்தாள் *[அக.151:4].* 'தேர் இதுகாறும் இராக்காலங்களில் வந்து கொண்டிருந்தது. (இன்று) அத்தேர் மறையாமல், அலராகிய ஒலியைச் செய்யும் ஊர்ப்பெண்டிர் காணப் பகலிலேயே வந்தது. அதனால் எனது நிறையில்லாத நெஞ்சம் நடுங்கியது.' எனத், தோழி, வரைவு மலிந்து கூறினாள் *[அக.160:2].* 'தோழி! கார் காலம் காலையே வந்தது. மாலையில் பிடாவினது அரும்பு அலர்தற்குரிய மணத்தினை வாடை தூற்றப் பனி அலைத்தலால், கலங்கிய நெஞ்சமுடன், பிரிந்து சென்ற தலைவரின் பொருட்டு, நாம் வருந்துதற்குரியேம் அல்லேமோ', எனப்பருவ வரவு கண்டு, தலைமகள், தோழிக்குக் கூறினாள் *[அக.183:14].* பெருமலையினைத் தாண்டிச் சென்றோராகிய நம் தலைவர், நமது தோள்வளை நெகிழ அழகுகெடப், பெரிய செயலற்ற நெஞ்சமொடு இருக்கும் நம்மைக் கைவிட்டு, இரும்பினால் இயன்ற உயிரையுடையார் போல, வலித்திருக்கிற வன்மையுடையோராயினர்,' எனப் பிரிவிடை வேறுபட்ட தலைமகள், தோழிக்குக் கூறினாள் *[அக.185:3].* 'வினையின்றியிருத்தற்கு நாணுதல் உடைமையானே நீங்கிச் சேய்மைக்கண்ணுள்ள நாட்டிலே, அரிய பொருளை ஈட்டத் துணிந்த நெஞ்சத்துடன், பாலையின்கண்ணே சென்று, நமது உயிர்ச்சியைக் கருதினர். அதனால், மனைமுற்றம் தனிமையுறுமோ," எனப் பிரிவின்கண், தோழிக்குத் தலைமகள் உரைத்தாள் *[அக.187:4].* 'பொருளீட்டும் வினையை வறுபுறுக்கும் நெஞ்சத்தால், நினது வளைநெகிழ, அருளிலராகி, நம்மைப் பிரிந்து சென்றதலைவர், முதுகுன்றத்தைக் கடந்துளராயினும், நீட்டித்திராது வல்லே வந்துறுவார். கண்ணும், தோளும் நலத்தினை இழந்ததினாலாய துயரத்துடன் வருந்தாதே', எனப் பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத், தோழி வற்புறுத்தினாள் *[அக.197:17].*

'நம் தலைவர், உயிருடன் கலந்து பொருந்திய, பலபிறவிகளிலும் தொடர்ந்து வரும், நட்பினால், குற்றமற்ற நெஞ்சத்தாற் கலந்தோர்போல, நின்னிடத்து நின்றும் யாம் என்றும் பிரியேம் என்று, பொய்மிக்க உள்ளத்தால், யாம் விரும்புமாறு கூறி, உறுதியில்லாத கொள்கையினராகிப், பிரிந்து சென்றாராயினும், நம் இல்லில் நல்ல விருந்தாற்றுதற்குச், சிறந்த பொருளை எளிதினில் அடைவாராக', எனத் தலைமகன் பிரிவின்கண், வேறுபட்ட தலைவி, வற்புறுக்குந்தோழிக்குச் சொல்லினாள் *[அக.205:2]*. 'மலைக்கப்பாலுள்ள, வேறுபட்ட மொழி வழங்கும் தேயத்தைக் கொள்ளக் கருதிப், போர்த்தொழிலை விரும்பிச் செலுத்தும், துணிவுமிக்க நெஞ்சத்துடன், வேலை ஏந்திச் செல்லும் நும்மிடத்தே, அவ்வாறு பிரிந்து சென்றார்க்கு இரங்கும் நெஞ்சத்துடன், அவர் தம்மைப் பிரிந்து இங்கே தங்குதல் வல்லார்க்கு, வெற்றிமேவுக, என்று கூறிவிடுத்தலும் நன்றாகும், 'எனத் தோழி, தலைமகள் குறிப்பறிந்து, தலைமகனைச் செலவழுங்குவித்தாள் *[அக.215:3,16]*. 'எத்துணைச் சிறந்த பொருளைப் பெறினும் பிரியாதீர் என்று தலைவர்க்குச் சொல்லவும், அருள் செய்யாத காதலர், பிரிந்து செல்வரேல், நமது நலத்தினை நுகர்ந்து, கைவிட்ட, பாழ்பட்ட மேனியை நோக்கி, மதுகை, இற்று உடையும் நெஞ்சத்துடன், அவர் புணர்தலைவிரும்பிப், பனியால் வருந்தி நடுங்குவேம்', எனப், பிரிவுணர்த்திய தோழிக்குத், தலைமகள் ஆற்றாமை மீதூரக் கூறினாள் *[அக.217:18]*. 'நான் நலம்பாராட்டி வளர்த்த சிறிய மகள், அறநெறியில்லாதவனோடு கடந்து சென்றாள் என்று சிறிதும் மறந்திருத்தலில்லாத நெஞ்சத்தால் வருந்துவேன் அல்லேன். (ஆயின்) நீரில்லாத நீண்ட நெறியில் தனது அழகு கெட மெலிந்து நடப்பளோ என நோகின்றேன்', என்று கூறி மகட்போக்கிய தாய் வருந்தினாள் *[அக.219:11]*. 'நன்மையினை விரும்பிய அறிவினையுடையராகிய தலைவர், உயிரைக் காட்டிலும் சிறந்த பொருளைத் தருதல் வேண்டிச் சென்றனர், என்று, துணிந்து மனையின்கண் தங்கியிருக்கும் வலியுடையள் ஆதலை நீ நன்றாக அறிந்துள்ளாயாயின், நம் தலைவி தனித்திருக்கக், காட்டினைக் கடந்து நீ செல்வாயாக, நெஞ்சமே! யான் வாரேன்' எனப் பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குக் கூறித், தலைமகன் செலவழுங்கினான் *[அக.245:21]*.

'வாடைக் காற்றோடு கூடி முலையின்கண்ணே தோன்றிய வேட்கை நோயாகிய இளையமுளை, தளர்ச்சியையுடைய நெஞ்சத்திடத்தே, வருத்தமாகிய அடியாய் நீண்டு, ஊரார் எழுப்பிய அம்பலாகிய கிளைகளைக் கொண்டு, அமையாத காதல் என்னும் தளிர்களைப் பரப்பிப், புலவரால் புகழ்பெற்ற நாணமில்லாத பெரிய மரமாகி, நிலத்தின் எல்லையெல்லாம் கவிந்து, அலராகிய மலர்களைச் சொரியவும், வாராராயினர்', எனப் பிரிவின்கண், தலைமகள் அறிவு மயங்கியுரைத்தாள் *[அக.273:12]*. 'நாம்பிரிந்திருக்கப் பொருளீட்டச் செல்வார், என்று, நாம் மிக வருந்தும், ஆற்றாமையையுடைய நெஞ்சத்தின் துன்பம் நீங்கிச், சேய்மைக்கண் ஒழியுமாறு, காட்டுநெறிகளில் இவளும் நம்முடன் வாரா நிற்பள், என்று கூறினர்', என்று உடன்போக்கு உடன்படுவித்ததோழி, தலைமகட்குரைத்தாள் *[அக.285:2]*. 'மழையற்ற இடத்தே, தொலையாத நீண்ட நெறியில், வருத்தும் மாலையில், யாம் தனித்து வருந்துகின்றேம். (நம் தலைவி) முன்கைவிரலைக் குவித்து, நம்மைக் காணலாம் விரதங்கொண்ட நெஞ்சத்துடன், பகல்நேரமே துணையாக, வருந்தியிருப்பளோ? இரங்கத்தக்காள்! எனத் தலைமகன், இடைச்சுரத்து நின்று தன்னெஞ்சிற்குச் உரைத்தான் *[அக.287:2]*. 'சோலையில், அன்பு நீங்காத நெஞ்சமுடன், தனியனாகி வந்து, நம்மைக் கலத்தற்கு முன்னும், என்கண்கள், நெய்தற்பூவின் நீலமணிபோலும் நிறத்தினை நீங்கிப், பொன்போலும், நிறத்தினைக் கொண்டன. இஃதென்னையோ?' என இரவுக்குறிக்கண், தலைமகன் சிறைப்புறத்தானாகத், தோழிக்குத், தலைமகள் சொல்லினாள் *[அக.290:10]*. மனையின்கண், எம் தாய் அறிந்திடலை அஞ்சி, நடு இரவில் மறைத்தல் பொருந்திய நெஞ்சத்தினோடு எமது காமத்தினைச் செப்பாது, நீ வந்திலை யென்னும் கொடுமையினை மெல்லக்கூற, ஆங்கு என் கருத்தினை யுணர்ந்து, வருந்தாதே; நம்மைத் துறந்தவர் விரைந்து வருவர்', எனக் கூறித், தோழி மகிழ்ந்தது எனக்கு நின் வரவினும் இனியதாகவுள்ளது', என இரவுக்குறிக்கண், தலைமகற்குத், தலைமகள் உரைத்தாள் *[அக.298:18]*.

'காமம் அலராகி வெளிப்படப், பிரிந்து சென்ற நம் தலைவர், மீண்டு வருவர் என்று எண்ணிய, அறியாமை பொருந்திய நெஞ்சமே! ஐயம் நீங்கித் தெளிவுறுவாயாக; யான் அவர் சென்றவழியே செல்லுதலைத் துணிந்துள்ளேன்', எனத் தலைமகன் பிரிவின்கண், வேட்கை மீதூர்ந்த தலைமகள், தன் நெஞ்சிற்கு உரைத்தாள் *[அக.303:15]*. 'நம் தலைவர் பொருளீட்டும் வினைக்குச் செல்லத், துன்பத்தைச் சுமந்த வருத்தமுற்ற நெஞ்சமுடையேனாகிய யான், அன்றிலின் குரலால் கொதிக்கின்ற உள்ளத்திடத்தே, தீயுண்டாக ஊதும் குழல் கேட்டு, எங்ஙனம் ஆற்றியிருப்பேன்', எனத், தலைமகன் பிரிவின்கண், தோழிக்குத், தலைமகள் (தோழி தலைமகட்குமாம்) கூறினாள் *[அக.305:10]*. 'அழகு விளங்கத்தழுவி, நம் நெஞ்சம் கவர்ந்தோராகிய நம் தலைவர், சென்ற சுரநெறியை நினைந்து, நெற்றி ஒளியினை இழந்திடத், தம்மையல்லாது வேறுகளைகண் இல்லாத நாம், இங்கிருக்கப், பொருள் விரும்பிச் செல்லினும், அருள் செய்து வருவர்' எனப், பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத், தோழி வற்புறுத்தினாள் *[அக.313:2]*. இவள் பெண் எனும் இயல்பினை அமைந்தனள் என்று, என்கண்களே துணையாகப், பலமுறை பார்த்து, எனது நெஞ்சம் நேற்றும் மிகவும் ஐயுற்றது. அதன்பின்னும், எனது அறியாமையால் என்மகளை இற்செறியாதொழிந்தேன்', என மகட்போக்கிய, தாய் கூறினாள் *[அக.315:5]*. குற்றமில்லாத நமது

துயரை அறியாமல் சோர்ந்த நெஞ்சமுடன், தனது துயரம் வெளிப்பட்டுத் தோன்றச் செல்லா நிற்பன். செல்கின்றவன் போகிய திசையில், முன்னின்று செல்லற்க, எனத் தடை செயச் சென்றதாகிய எனது உறுதியற்ற நெஞ்சம் அத்தலைவனைச் சென்று சார்ந்ததின்றோ? சார்ந்தும் நம் காமம் கூற நாணியதோ' எனத் தோழி தலைமகட்குக் குறை நயப்பக் கூறினாள் *[அக.330:5,8]*. 'வறுமையால் மயக்கங்கொண்ட நெஞ்சத்தின் வருத்தத்தைப் போக்குகின்ற அருளினை மிக வுடையராயினும், கைப்பொருள் இல்லோர்க்கு ஈதலாகிய அச்சிறப்பு இயலாததாதலை யானும் அறிவேன். அதனாற் பெற்றதென்? தலைவியை உடன் கொண்டு செல்லின், சுரங்களும் நமக்குச் செல்லற்கு அரியனவல்ல', எனத், தலைமகன், பொருள் கடைக்கூட்டிய நெஞ்சினைக் கழறிச், செலவழுங்கினான் *[அக.335:1]*. 'நெஞ்சே! தலைவியை முயங்குதல் நமக்குக் கிட்டாதாயினும், எஞ்ஞான்றும் வேட்கையுற்ற நெஞ்சத்திற்கு ஓர் உசாத்துணையாக (அவள்) நட்புக் கெடாது நிலை பெறுவதாக. அவளிடத்து விடும் தூது ஒழியாது செல்வதாக' என அல்லகுறிப்பட்ட தலைமகன், தன்நெஞ்சிற்குச் சொன்னான் *[அக.338:11]*. 'தாளாண்மை பற்றி எழுந்த தளர்தலில்லாத உள்ளத்தின் கண்ணுள்ள ஆண்மை முன்னே இழுக்கவும், காமம் பின்னே இழுக்கவும், அவற்றால் இருபாற்பட்ட நெஞ்சமே, நாம் இருதலைக்கொள்ளியின் உள்ளிடை நின்று வருந்தும் எறும்பினை ஒத்துள்ளோம்', எனப் போகாநின்ற தலைமகன், தன் நெஞ்சிற்குக் கூறினான் *[அக.339:8]*.

'வேற்று நாட்டுள் சென்று பொருளை ஈட்டிய, விருப்புமிக்க நெஞ்சமுடன், வினைமுடித்தமையால் ஆகிய இனியசெலவினை, நிமித்தத்தைப் பரவியிருக்கும் தலைவியது செவியகத்துத், தன்னொலியால் பல்லி அறிவுறுத்துமோ', எனப் பொருள்முற்றி, மறுத்தராநின்ற தலைமகன், தன்நெஞ்சிற்குச் சொல்லினான் *[அக.351:3]*. 'நெஞ்சே! மாலையில், தனிமை வந்தடைய, உள்ளம் மீண்டு செல்லுதலை வற்புறுத்தத், தனித்த தனது நிலையினையே எண்ணி, நமது இயல்பினை அறியாளாகி, அணையில் கிடந்து கொதிப்புற்று, வெறுக்கும் நெஞ்சத்துடன், உயிர்த்துக், கண்ணீரைத் தெறித்துத், துயில் ஒழிந்துள்ளாளோ, (அவள்) இரங்கத்தக்காள்', எனத் தலைமகன், இடைச்சுரத்துத், தன்நெஞ்சிற்குக் கூறினான் *[அக.373:12]*. 'கனியினை இழுத்துக் கொண்டு சென்று, அன்பு பொருந்திய பெண்ஞெண்டிற்குத் தரும், ஓர் ஆண்ஞெண்டினைக் காட்டி, இது நல்லபான்மையுடையது என்று கூறி, நெடிது சிந்தித்த நெஞ்சமுடன் மீண்டு சென்றான். இன்றும் அவன்தேர் தோன்றாநிற்கும்', எனத் தோழி, தலைமகட்குக், குறை நயப்பக் கூறினாள் *[அக.380:8]*. 'தலைவனது மார்பினையும், அழகினையும் மிக விரும்பி நாம் வருந்தும் துன்பினை உணராளாய், நம் அன்னை, நன்றாகிய தன் நெஞ்சத்தில் பிறழவுணர்ந்து, வெறியாடல் வேண்டுமென, வேலனை அழைத்து வந்தாள்', என, இரவுக்குறிச் சிறைப்புறமாகத், தலைமகள், தோழிக்குக் கூறினாள் (தோழி தலைமகட்குச் சொல்லியதுமாம்) *[அக.388:18]*. 'அன்புமிக்க நெஞ்சம் மேன்மேலும் மகிழ்ந்து சிறக்க, நின்மார்பினைத் தாராயாய், ஏதிலன் ஆயினையே. இனியான் நின்னை விடுவிப்பேன் அல்லேன்; என் அழகினைத் தந்து செல்வாயாக', எனக் காதற்பரத்தை, தலைமகனைக் கேட்டாள் *[அக.396:9]*.

'செம்மண் நிலத்துப் பெய்த மழை நீரின் கலப்புப்போல, அன்புடைய நம் நெஞ்சம் தாமாகவே ஒன்றுபட்டன', என இயற்கைப்புணர்ச்சியின் பின், பிரிவஞ்சிய தலைமகள் குறிப்பு வேறுபாடு கண்டு, தலைமகன் கூறினான் *[குறு.40:5]*. 'இருபாலாரிடமும் உள்ள இரண்டு பெரிய ஆண்மை செய்த போரினால், நல்ல பாம்பு கவ்வியது போன்று, எனது துன்பத்தையுடைய நெஞ்சம் கலக்கமடையாநின்றது'', எனப் பிரிவிடை மெலிந்த கிழத்தி சொல்லினாள் *[குறு.43:5]*. 'தலைவனது, குற்றமற்ற நெஞ்சத்தால், நினைந்து கூறிய சொற்களை, உரைக்குந் தூதுவந்தது. அதனை, ஏற்று, மணந்த காலத்தைய அன்பினேம் என்று கூறித், தூது விடுவேம்', எனத் தலைமகன் தூது கண்டு, கிழத்தி, தோழிக்குக் கூறினாள் *[குறு.106:3]*. 'கூகை குழறினும், குரங்கு குதிப்பினும் முன்பு அஞ்சும் என் நெஞ்சம், இப்போது, இரவில், மலை நெடுவழியில் அவரிடத்தே செல்லுதலை நீங்காது. எனவே, அது இரங்குதற்குரியது' என வரையாத தலைவர் வரவு, ஆற்றாமையாகும் எனத் தலைமகள், தோழிக்குக் கூறினாள் *[குறு.153:3]*. கோழி கூவக், காதலரைப் பிரிக்கும் வாள்போலும் விடியல் வந்ததனால், என் மாசற்ற நெஞ்சம், அச்சத்தையடைந்த தென்று தலைவியுரைத்தாள் *[குறு.157:2]*. 'தலைவி, என்ன துன்பத்தையுடையவளாவளோ, என்றெண்ணும் கவலையையுடைய நெஞ்சத்தோடு, ஏனென்று கேளாத கவலையையுடைய மக்களையுடையது இவ்வூர், எனத் செறிப்பறிவுறுத்தினாள் *[குறு.159:6]*. 'தலைமகன், பலநாள் வந்து, பணிந்த மொழிகளைக் கூறி எனது நன்மையையுடைய நெஞ்சத்தை இரங்கச் செய்த பிறகு, (பிறர்க்குப் பயனின்றி) மலையில் வடிந்து கழியும் தேனிறால்போலப் போயினமையால், பெய்த மழை நீரின் கலக்கம் போன்று, என்நெஞ்சு கலங்கும்', எனத் தோழி, குறை நயப்பக் கூறினாள் *[குறு.176:3]*. பரதவர் மகளது கண்வலையின்கண், ஆண்டுச் செல்வார் அகப்படும் கானலின்கண், இதற்கு இது, ஏற்ற மாட்சிமையுடையது என்னாது, எனது மாட்சிமைப்பட்ட தகுதியையுடைய நெஞ்சம் சென்று தங்கியது. எனவே, ஆண்டுச் செல்லுதலைப் பரிகரிமின்' எனப் பாங்கற்குக், கிழவன் உரைத்தான் *[குறு.184:4]*. 'மின்னி, எழுந்து மழை முழங்கும். அதனெதிராகக் காட்டில் மயில் ஆரவாரிக்கும். இரண்டாலும், எனது பேதைமையையுடைய நெஞ்சம் பெருங்கலக்கத்தையடையும், எனப் பருவவரவைத், தோழிக்குக், கிழத்தி உரைத்தாள் *[குறு.194:5]*. 'பசலை, என்மேனியின் கண்ணது. காதல், அவரது அன்பற்ற

நெஞ்சமாகிய செல்லுதற்கரிய இடத்தின் கண்ணது', எனச் சிறைப்புறமாகத், தலைவி சொல்லினாள் *[குறு.219:2]*. நினது உயர்வை நீயே அளந்தறியும் ஆற்றலுடையை. மெய்போலும் பொய்ம்மொழி கூறுதலால் பயன் யாது? நின்திறத்துத் தலைவனது நெஞ்சம் நலமுடையது' என அறத்தொடு நின்றபின் தோழி தலைவிக்குரைத்தாள் *[குறு.259:8]*. 'சான்றோரைக் கண்டு எதிர்கொள்ளுங் கடமையை யறிந்த மக்களைப் போன்று (வண்டுகண்டு), இதழ் விரியும் மலருடைய மலைநாடன், நின்னை வரைந்து கொள்ள வேண்டும் என்னும் நல்ல நெஞ்சத்தையுடையவன்; நின் நிலைகூறக், களவு நீட்சிக்கு நாணினன்', எனத் தோழி, தலைமகட்குக் கூறினாள் *[குறு.265:6]*. 'யாம், எம் தலைவரைக் காணேமானால், செறிந்த துயர் மிக்க நெஞ்சத்தோடு, வெள்ளத்தில் பாறையின் மேல் மோதும் சிறிய நுரையைப் போல, மெல்ல மெல்ல இல்லையாவோம், எனத், தோழிக்குத், தலைமகள் உரைத்தாள் *[குறு.290:4]*. தலைவன், அலர் மொழிக்கு அஞ்சினனோ? ஊரார் ஒருங்கே துயிலும் இரவிலும் (நினைப்பால்) என் நெஞ்சத்தின் கண் வருதலையன்றி, நேரிலே வருதலையறியான்; அவ்வாறிருத்தல் உயர்வுடையதோ? எனத் தோழிக்குக் கிழத்தி உரைத்தாள் *[குறு.302:8]*. 'ஆண்யானை, யாமரம் அழியும்படி கொம்பாற்குத்தி, அதன் பட்டையைச் சுவைத்து, மேல்நோக்கித் தன் பிடியின் வருத்தம் போக்க இயலாமையை நினைந்து, வருந்துதலையுடைய நெஞ்சமொடு, பிளிறுகின்ற இடத்து, நாம் அழப் பிரிந்து சென்ற நம் தலைவர், நம்மை மறந்தனரோ?' எனத் தோழிக்குக், கிழத்தி கூறினாள் *[குறு.307:8]*. 'தலைவன், நீ, நினது அன்புடைமையால் வருகின்றாய். இத்தலைவி, தன் அறியாமையினால் வருந்துவாள். யான், என் நெஞ்சத்தினுள்ளே, இரட்டைப் பிள்ளைகள் நஞ்சுண்டால், ஒரு தாய் வருந்துவது போன்று, அஞ்சுவேன்', எனத், தோழி வரைவு கடாயினாள் *[குறு.324:7]*. 'தலைவர் நம்மை விரும்பிப் பாதுகாவாராயினும், பெரியோர் தம் நெஞ்சத்திலே நினைத்த மேற்கோள் (முடிக்கப்படாது) செலுத்தப்படுவதன்றென்றெண்ணி முன்னர்த் துணியாத என்நெஞ்சம், பின்னர்த் துணிந்தமையால், எனது தறுகண்மையால் உயிரோடு வாழ்வேன்', எனத், தோழிக்குக், கிழத்தி உரைத்தாள் *[குறு.341:4,6]*. 'நெஞ்சமே! காட்டுவழியில் இத்தலைவி தானும் நம்மொடு வந்து பொருந்தும் முயக்கத்தைச் செய்வாளெனின், பொருள்செய விரும்பிய நின் துணிவு நன்மையுடையதேயாகும் எனத், தலைமகன், தன்நெஞ்சிற்குத் சொல்லிச் செலவழுங்கினான் *[குறு.347:6]*. 'துறைவனோடு சிரித்து மகிழ்ந்ததனால் உண்டாகிய பயன், பழைய அழகழியத், தோளினது நலம் மெலியத் துன்பத்தையுடைய நெஞ்சத்தோடு, இரவுதொறும் தூங்காமல் பசலையுண்டாக நாம் அறிவதுவோ?' எனத், தோழி, தலைமகளை ஆற்றுவிப்பாள், தலைமகனை இயற்பழித்தாள் *[குறு.381:2]*.

அவர் செய்த குறி தவறுதலாலே, சூடாது கிடந்த பூமாலை போல, நின் மெய்வாடினை; அயலார் பழிச்சொல் கருதி, அவர் நம்பால் வருவாரல்லர் என்னும் புலவியை உட்கொள்ளாது, நின் நெஞ்சத்து அதனை ஒழிப்பாயாக', எனத், தலைமகன் சிறைப்புறத்தானாகத், தலைமகட்குத், தோழி கூறினாள் *[நற்.11:5]*. 'சேர்ப்ப! பூப்போலும் எமது தலைவியின் நலத்தைப் புதுவதாக நுகர்ந்தும், நீ அறிந்திலையாகலின், யாம் நினக்கு உடம்படுதலையுடைய எம் நெஞ்சத்தில் வருத்தமுற, அதனையேற்று, முன்தொட்டு எம்மோடு வளர்ந்துவந்த நாணத்தையும் விட்டேம். இனி இவ்வூரில் அலர் எழுவதாக', எனத், தோழி வரைவு கடாயினாள் *[நற்.15:6]*. குன்றிறந்தோர், வருத்தமுற்ற நெஞ்சத்தோடு கொண்ட, பலவாகிய கவலையும் நீங்க, வருவர், எனப், பிரிவிடை ஆற்றாளாய தலைவியைத், தோழி வற்புறுத்தினாள் *[நற்.18:1]*. மூவனைப் போரில் வென்று, அவனது பற்களைப் பிடுங்கி வைத்திழைத்த, வாயிற் கதவினையுடைய, தொண்டி நகரின் தலைவனாகிய சேரன் கணைக்காலிரும்பொறையது, பாசறையின்கண்ணேயுள்ள, நெஞ்சம் நடுங்குகையாலே கண்ணுறங்காத வயவர் யாவரும், அலை ஒய்ந்த கடல்போல, இனிதாகக் கண்ணுறங்குமாறு, மதநீரொழிந்த யானை சினந்தணிந்தது *[நற்.18:6]*. 'இனிதேயிருந்த நீர்த்துறையும், கலந்து கைவிட்ட பின்பு, வெறுப்புடைத்தாயிற்று. ஆதலால், பெரிய வருத்தமுற்ற நெஞ்சத்தில் அவன் பிரிந்ததனாலாகிய துன்பம் பலவற்றையும் நினைந்து, இத்தன்மையேனாயினென் காண்', எனத், தலைவி, வன்புறை எதிரழிந்தாள் *[நற்.31:6]*. 'வெளிய நாராய்! சிறிய புல்லிய மாலைப்பொழுதானது எனக்குப் பெரிய வருத்தஞ்செய்கின்றது. அதனை நீ அறியின், என்மாட்டுப் பெரிதும் அன்புடையாதலால், வேறுபட்ட நெஞ்சங்கொள்ளாமல், சேர்ப்பனிடம் என் குறை உணருமாறு, உரைப்பாயாக' எனத், தலைவி காமம் மிக்க கழிபடர்கிளவியாகக் கூறினாள் *[நற்.54:7]*. 'வளையை நெகிழ்வித்தோரைக் கருதித் துன்பமுறுதலின், அவர்பாற் சென்ற என் நெஞ்சம், ஆண்டு அவர் செய்யும் வினைக்குச் சூழ்ச்சி சொல்லுந், துணையாயிருந்து, முற்றுவித்து, அவருடன் ஒரு சேர,வருதற்கு விருப்பமுற்று, வருந்தியிருக்கின்றதோ? அவர் அருள் செய்யாமையால், கலங்கி இங்கு வந்து, முன்னிருந்த நலன் இழந்துவிட்டமையால், இவள் அயலாட்டியாகும்; என்னை விடுத்தவளைக் காண்கிலேன், என, என்னைத் தேடிச் சென்றொழிந்ததோ? அறிகிலேன்' என மெலிவாற்றுந் தோழிக்குத், தலைவி கூறினாள் *[நற்.56:5]*. 'அன்புமிகுதலாலே உள்ளங் கலந்து, நம்பால் விரும்பிய கொள்கையுடனே, என்றுந்தன்நெஞ்சத்திலே எம்மை நினைத்துறையும் காதலியின் ஊர், முல்லையின் அரும்பு மலர்ந்த காட்டுநாட்டது; (அவள்) இனி, நனிவருந்தாநிற்கும்', எனவே தேரை விரைந்து செலுத்துவாயாக என வினை முற்றி மீள்வான், தேர்ப்பாகற்குக் கூறினான் *[நற்.59:7]*. இக்களவொழுக்கம், கானலின்கண்

விளைபாட்டயர்கின்ற தோழியர் கூட்டம் அறிவதாயினும், அடங்காமல் எங்கே வெளிப்படுமோ? அவனது நட்பு இல்லையாய் விடுமோ? என்று என்னெஞ்சத்தில் அஞ்சா நிற்பேன்', எனத் தோழி, சிறைப்புறமாக உரைத்தாள் *[நற்.72:11]*. 'தோழி! தலைவியின் பொருந்தாப் பார்வையுற்ற எனது வருந்திய நெஞ்சம் உய்யும் வண்ணம், நகை செய்யாது உரைப்பாயாக; எனச் சேட்படுக்கப்பெற்று, ஆற்றானாகிய தலைமகன், உரைத்தான் *[நற்.75:10]*.

'இளமையைக் காட்டிலும், காமவின்பத்திற்குரிய சிறந்த வளமை, பிறிதில்லையாகும். அவ்வாறாக, அதனைப் பொருள் தேடலில் கழித்தபின்; தேடிய பொருள்வளம் காமவின்பத்தைத் தருதலும் இல்லையாகும். அதனால், நிலைநில்லாப் பொருள் நின்னைப் பிணித்தலானே செல்கின்றனை. நெஞ்சமே! நின்செயல், நினக்கு விரைந்த வாய்ப்புடையதாகுக,' எனப், பொருள்வலித்த நெஞ்சிற்குக் கூறிச் செலவழுங்கினான் *[நற்.126:12]*. ஒருவன் வந்துற்று, உள்ளங்குளிர, என் முதுகையணைத்துப், புல்லினனாக, அது முதற்கொண்டு அதனையே கருதிய நெஞ்சத்துடன், யானுற்ற இந்நோய் இத்தகையதாய் இருந்தது எனத் தோழி கூறினாள் *[நற்.128:10]*. சேர்ப்ப! யாம் நும்மையன்றி, வேறு விளையாட்டயர்தற்குத் தொழிலையும், தங்கியிருப்பதற்குச் சோலையையும், நும்மை நினைக்கலாகாத வருந்துகின்ற நெஞ்சத்தினையும், நும்பால் ஊடலையும் உடையமோ?' எனத் தலைமகற்குத், தோழி உரைத்தாள் *[நற்.131:2]*. நம் காதலர் வரும் நெறியின்கண் புலி, களிற்றியானையினைக் கொல்லுதலால் அதனை அறிந்த பெண்யானை பிளிற்றுகின்ற வகையைக் கேட்டு நடுங்கிக் கண்கள் நீரை வடிய விடவும், யாதுமில்லாத பேதைமையையுடைய என்னெஞ்சம் கவலையால் வருந்தவும், என்னிலைமை இவ்வண்ணமாயிரா நின்றது என ஆற்றது ஏதங்கண்டு, தலைவி உரைத்தாள் *[நற்.144:4]*. அழகினையுடையவளால் வருத்தம் ஏறட்டுக் கொண்ட மயக்கத்தையுடைய நெஞ்சமே! பனைமடலால் கட்டிய குதிரையையுடையாய்; குதிரையினின்றிழிந்து மரநிழலின்கண்ணே சிறிது தங்கிச் செல்வாயாக', எனத் தலைவன், தோழி கேட்பக் கூறினாள் *[நற்.146:11]*. 'சேரியின்கண் வந்து, தாருங் கண்ணியுங் காட்டி, ஒருமைப்பாட்டையுடைய எமது நெஞ்சத்தைக் கவர்ந்து கொண்டமை, இனிவிடுவதமையுமோ', எனப் பரத்தை, பாணற்குரைத்தாள் *[நற்.150:9]*. 'படை அலைத்தலாலே குடியோடிய பாழ் நகரத்தைக் காவல் செய்யும் தனிமகன்போல, உண்ணுதலாலே என்னுடம்பு காக்கப்படுந்தன்மையதாயிரா நின்றது. (ஆயின்) என்னெஞ்சம் இங்கு வைகுவதொழிந்து அவரிடம் சென்றது', என்று பிரிவிடை மெலிந்த தலைவி, உரைத்தாள் *[நற்.153:6]*. 'பெரிய துன்பம் வந்து மோதுதலானே, குற்றப்பட்ட நெஞ்சத்தின் கொதிப்பானது, நீர் பெய்த நெருப்புப்போலத் தணியும்படி, இன்று அவர் வாராது விட்டாலோ நல்லதாகும். (அவர்வரும்) மலை நெறியை நினையுந்தோறும் நிலையில்லாத என்னெஞ்சானது அந்நிலத்தின்கண் பரந்து செல்லாநிற்கும்' எனத், தோழி கூறி, வரைவுகடாயினாள் *[நற்.154:8]*. பெருமழை பெய்துவிட்ட இளவேனிற் பருவத்தில் பெடையோடு புணர்கின்ற குயில் கூவும் பொழுதெல்லாம், மாமை நிறத்தையுடையோள் நம்பால் நினைந்து விடுத்த நெஞ்சத்துடனே, காமம் தன் வரம்பு கடந்து மிக, அதனாலே பெரிதும் அழுது துன்பமுழக்கும், எனத் தலைமகன் பருவமுணர்ந்த தன் நெஞ்சிற்குக் கூறினான் *[நற்.157:6]*. 'துறைவன் குதிரைகள், பகலும், இரவும் மணற்குன்றுகளில் ஏறிச் சென்றுவர, முன்பு மிகவும் வருந்தி, இன்று எனது நெஞ்சம் போன்று களைப்பாறுவனவாக, எனத், தோழி வரைவு மலிந்து கூறினாள் *[நற்.163:6]*. 'நீருண்ணும் நசையை மேற்கொண்ட பிடியானை, மலை நிலத்தே செல்ல, அதனுடன் செல்ல மாட்டாத யானைக் கன்று, சேரியிலுள்ள மாதர்தம் நெஞ்சத்தே துண்ணெனும்படி, அச்சேரியின்கண் புகும் மலைநாடன், சுரநெறியிலே செல்லின், நடுயாமத்தில், ஆர்வத்தோடு நெஞ்சம் கலந்து அவனுடைய மார்பின்மேல் நெருங்கப்படுத்தலைப் பொருந்திய கண்கள், இனி எவ்வாறு துயிலவல்லனவாகும்' எனப், பிரிவுணர்த்தப்பட்டுத், தோழி, தலைமகட்குரைத்தாள் *[நற்.171:4,10]*. 'தன் வாழ்நாளும், பொருளும், இன்னோரன்ன வெல்லாம் பிறர் பொருட்டே யென்று, முயன்று முடிக்கும் பெரிய அருள்மிக்க நெஞ்சத்துடனே, அழகிய பொருள் பிணித்தலால், எம் காதலர் சென்ற நெறி, நீர் கொண்டு யானை பிடியெதிர் ஓடும் இயல்பினது', எனத் தோழி (பிரிவிடை), தலைவிக்குக் கூறினாள் *[நற்.186:8]*. 'பல ஊறுபாடுகள் தோன்றினாலும், இவ்வுலகமே சினங்கொண்டு எதிர்த்தாலும், தன் அழகிய நல்ல வடிவம் கெடாத இயல்பினையுடைய கொல்லிப்பாவை போல, என்னெஞ்சத்தினின்றும் நீங்கி ஒழிபவள் அல்லாளாயிரா நின்றாள்;' எனப் பாங்கற்குத், தலைமகன் உரைத்தான் *[நற்.201:12]*. 'இனிய மொழியை விரும்புதலால், அம்மொழியைப் பெறாமல் வருந்துகின்ற என் நெஞ்சு மகிழும்படி இப்பொழுது ஒருமொழி கூறிக் காணெனக் கூறலின், வந்து, பெயர்ந்து, செல்லும் கொடிச்சி, செல்கின்ற பின்புறம் நோக்கி, அவளைக் கைவிட்டு ஏமாந்திருந்த நெஞ்சம், அவளை விட்டு நீங்கப் பொருந்தாது' எனத் தலைமகன், தோழி கேட்ப கூறினான் *[நற்.204:12]*. 'மலைநாடன், வரையாது நாளும் வர அருளினை. அவன்தன் அன்புடைய நெஞ்சத்து அருள் பொருந்தி, ஆராய்ந்து, மேலவர் செல்லும் நெறியிலே சென்றுவாழாத, சால்பிலன், ஆதலின். நீ, நன்றாக அறிந்தனையாகித் தேர்ந்து கொள்வாய்', எனச் சிறைப்புறமாகத், தலைமகட்குத், தோழி உரைத்தாள் *[நற்.233:7]*. 'நோயும் பெரிது; மெய்யும் வெய்தாகியது. என்வளையினை நெகிழச்செய்தோனது மலையில் பரவிக், குளிர்ச்சியுறும்படி அளவிய காற்று, எனது மேனியில் சிறிதுபட, முன்றிலிலே இவளைச் சிறிதுபோது கிடத்தினால், பெரிதும் நோய் நீங்கப் பெறுவள், என்று நரகம் போன்ற

நெஞ்சத்தையுடைய அன்னைக்கு உரைப்பாயாக; எனச் சிறைப்புறமாகத், தோழிக்குத், தலைமகள் உரைத்தாள் [நற்.236:5]. 'மாமழை! (இப்போது) நீ வருதல், சான்றோர் செய்கையை, ஒத்ததாகமாட்டாது. நின் இடிக்குரல், பாம்பு படம் அடங்குமாறு செய்வதல்லாமல், தலைவரது நெஞ்சம் கனியும்படி செய்யவல்லன அல்லவாதலால், எனக்கு இனிமை செய்வனவல்ல', எனத் தலைமகள், பருவங் கண்டழிந்தாள் [நற்.238:10]. 'கார், பெய்யுந்தொழிலைத் தொடங்கியது. பிணைமான் குட்டியோடு கூட்டத்தினின்று இரிந்தோடுதலும், அதன் பால் விருப்பமுற்ற நெஞ்சத்தோடு சென்று தேடா நின்ற ஆண்மானைப் பாராய்! ஆகலின், தேர்விரைந்து செல்வதாக,' எனத் தலைமகன், கார் கண்டு, பாகற்குச் கூறினான் [நற்.242:9]. 'புதல்வனோடு, விருப்பம் வரும் எம் நெஞ்சம் எம்மைச் செலுத்தக், காதலியை முயங்க வேண்டும்விருப்பத்தோடு, அவளையடையப் பிணைமான்போல் நீங்கிச் சென்று, என்னருகில் வர நீ யார் என்றாள்,' எனத் தலைமகன், ஆற்றானாய்ப், பாணற்குரைத்தான் [நற்.250:5]. வேற்று நாட்டின்கண்ணே, கோட்பாட்டினோடு சென்றிருந்து, பொருள் சேர்த்தாலல்லாமல், வீட்டின்கண்ணே கவலையுடன் உள்ளம் மடிந்திருந்தோர்க்கு, அரிய பொருளின் சேர்க்கை, ஒரு பொழுதும் சேர்வதில்லையென்று, இதுவரையிலும் உடன்பட்டெழாத நெஞ்சம் ஒருப்படுதலால், இவளுடைய குணங்கள், தலைவர் செயலின்கண்குறுக்கிட்டு, தடுத்திலபோலும்', எனப் பிரியுமெனக் கவன்ற தலைமகள் குறித்துத் தோழி கூறினாள் [நற்.252:5]. 'என் உள்ளத்தைப் பிணித்துப் பற்றிக் கொண்டவளிடத்து யாம் செல்வோம். அவளது இன்னாமையைத் தீர்ப்போம் என்று கூறாநிற்கும், என்நெஞ்சம். எடுத்த செயலை முடிவுறப்போக்காமல் இடையில் இகழ்ந்துவிடுதலானது அறியாமையுடன், இகழ்ச்சியையும் தருமென அறிவுகூறும்', எனப் பொருள் முடியாநின்ற தலைமகன், ஆற்றானாகிக் கூறினான் [நற்.284:3]. 'கொண்கன், முதலையின் பகைமைக்கும் அஞ்சானாகிக், காமமிகுதியால் இங்குவந்தபொழுது, பகையரசன் முற்றுகையிட உள்ளேவிடாதபடி மதிலை உள்ளிருந்து காக்கும் மறவன்போலக், கெடாத வன்கண்மையையுடைய என்நெஞ்சமானது, இப்பொழுது, பறவையொலிகேட்குந்தோறும், நம் தலைவன் தேர்மணியொலியோ என்று துயில் மறந்துளதாயிராநின்றது', எனக் காமமிகுதிக்கண் ஆற்றாளாய தலைமகள், உரைத்தாள் [நற்.287:8].

'விருப்பம்வரும் நெஞ்சத்துடனே பல படியாகப் புகழ்ந்து கூறித், தாய் சிறிதும் மறவாத மடந்தையாயிரா நின்றாள்' தலைமகள். ஆதலால், ஆற்றாமை தீரக் கூட்டுவிப்பதற்கஞ்சுகின்றேன்', எனத் தோழி உரைத்தாள் [நற்.301:7]. தன்பெடையைப் புணர்கின்ற மகன்றிலின் வருத்தந்தரும் குரலினைக் கேட்குந்தொறும், கண்ணுறங்காது, காமநோய் வருத்துதலானே வருத்தமடையா நிற்பள் (தலைமகள்) என்பது, சேர்ப்பனது நெஞ்சத்திலும் உண்டாகுமோ என்று, தோழிக்குத், தலைமகள் கூறினாள் [நற்.303:12]. 'நாம் பொருள் வயிற்பிரிந்து செல்லுதலின் அரவம் கேட்டுப் பொறியழிந்த பாவை போன்று கலக்கமடைந்து, எம்முடம்பின்மீது சாய்ந்து வீழப், பெருமழைபெற்ற பசு மட்கலம் போன்று, பொருள் வயிற்பிரியக் கருதிய எம்நெஞ்சம், அவளுடன் ஒன்றுபட்டுக் கரைந்து அடங்கிற்று', எனத் தலைமகன் தலைமகளையெய்தி ஆற்றானாய்ச் செலவழுங்கினான் [நற்.308:11]. பருந்து தன் சிறகை யடிக்க உதிர்ந்த இறகை, அம்பிலே கட்டிய மறவர், தாம் வெற்றி கொள்ளும் நெஞ்சத்துடனே, நெறியைப் பார்த்துறைவர் [நற்.329:7]. 'சுரநெறியிலே சென்று ஈட்டப்படும் பொருள் நமக்கு அடைவதற்கு அரியவாம் என்று நினையாமல், நல்லறிவிழந்து, வன்மைமிக்க நெஞ்சத்துடனே, தாம் வண்மை மிக்குடையராயிருத்தலை விரும்பிப் பொருள் காரணமாக அகன்ற நம் காதலர், இன்று வந்து கூடுவார்போலத் தோன்றாநின்றது', என ஆற்றாளாகிய தலைமகளைத், தோழி வற்புறுத்தினாள் [நற்.333:6]. இக்களவொழுக்கம், அலர் தூற்றும் தன்மைய்யை எய்துமன்றோ? என்று பெரிதும் வாட்டமுற்று, நம் நெஞ்சத்துடனே புதியனவாய்ச் சிலவற்றைக் கூறி, நாம் இருவரும் துன்பவெள்ளத்து நீந்துகின்றதனை, அன்னை அறிந்துகொண்டனள் போலும்', எனச் சிறைப்புறமாகத், தலைவன் கேட்பத் தோழி சொல்லினாள் [நற்.339:3]. 'செம்மையுடையோரும், தம்மையடைந்தாரைப் பாதுகாப்பேம் என்று அரிய சூள்வைத்து, அவர் தெளியாத நெஞ்சமுடன் செயலழிந்து வாடும்படி, நெடுநாள் காறும் விரும்பாதிருப் பாராயின், அங்ஙனம் தஞ்சமென்று புகுந்தார் தாம் உயிர் வாழ்வது எவ்வாறோ?' எனத் தோழி, தெளிவிடைவிலக்கினாள் [நற்.345:8]. 'பலவாறாக ஏவல் செய்து, நாம் காதலியை முயங்கினோம் போலக்கருதிய நெஞ்சத்துடனே, நாள்தோறும் இத்தன்மையேமாய் இராநிற்கவும், நம் காதல் மகள் எவ்வண்ணம் மாறுபாடாகக் கருதியிருக்கின்றனளோ', எனத் தலைமகன், தோழி கேட்பத், தன்னுள்ளே கூறினான் [நற்.349:4]. 'அன்னை! மாளிகையுள் காவலுட்படுத்தினையாயினும், இவள் பசப்படைந்தனள் என்பதனை உணர்ந்தனையல்லையாய்ப், பல நாளும் துன்பம் பொருந்திய நெஞ்சத்துடன், முருகவேளை விரும்பி வெறியெடுத்து வருந்தாதே', எனத், தோழி கூறினாள் [நற்.351:4]. 'அவர் அருளாராயினும், மோதியோடுகின்ற கானியாற்றின் இடிகரையின், வேர்கிளர்ந்த மாமரத்தின் தளிர்போல, நடுங்குதல் நீங்காத நெஞ்சத்துடனே இத்துன்பத்தை எவ்வாறு தாங்கவல்லேன்', எனப், பிரிவிடையாற்றாத் தலைமகள் உரைத்தாள் [நற்.381:5]. அஞ்சியென்பான், குளிர்ந்த நெஞ்சத்தால், ஆராய்ந்து, நீண்ட காலம் தன் பெயர் விளங்கிநிற்குமாறு, இரவலர்க்குத் தேர்களைப் பரிசுகொடுக்க இருக்கின்ற நாளோலக்கம்போல, மழைபெய்யா நின்றது [நற்.381:8]. 'தலைமகன், எமது சிறிய நெஞ்சத்தினின்று நீங்குதல் கற்றறிந்திலன் ஆகலின், எமது

நுதலின்கண்ணே பசலை எவ்வாறு உண்டாகாநிற்கும்', எனத்தோழிக்குத், தலைமகள் கூறினாள் *[நற்.388:10]*. 'அவர் தாம் செம்மாப்புற்ற நெஞ்சத்துடனே முன்பு வந்து நின்னை முயங்கி அகன்ற கடற்கரைச் சோலையிடத்துள்ள குறியைக் கண்டு அழிகின்றனர் போலும், 'எனத் தோழி இரவுக் குறியைக் குறிப்பாகக் கூறினாள் *[நற்,392:8]*. சோழரது உறையூர்க்கண், அவைக்களத்து, அறம் கெடவறியாது நின்று நிலைபெற்றாற் போன்று, நீதான், சிறந்த நட்புடனே அவாவி, என்னெஞ்சத்தினின்று நீங்குந்தன்மையைக் கற்றறிந்தாயல்லை', எனப், பரத்தை, தலைவனைப் புகழ்ந்தாள் *[நற்.400:10]*.

'நின்னை நெஞ்சத்திற் பெற்ற இவளும் அழும். (எனவே) நீ அருள்வாயாக', எனப் பரத்தையிடத்துப் பிரிந்துவந்த தலைமகற்குத், தோழி கூறினாள் *[ஐங்.50:4]*. 'துறைவனுக்காக (முன்) நெகிழ்ந்த நெஞ்சம் இன்று பரத்தையிற் பிரிவால், உடன்பட்ச் செய்யேன்' எனத் தோழிக்குத், தலைமகள் வாயில் மறுப்பாள் உரைத்தாள் *[ஐங்.150:5]*. துறைவனை விரும்பிய நெஞ்சம் (இன்று) நோயின்பாலதாயிற்று' எனத், தலைமகள், ஆற்றாளாய்த், தோழிக்குச், கூறினாள் *[ஐங்'.161:4]*. 'துறைவன் நெஞ்சத்தின்கண் உள்ளதை அறிந்து வைத்தும், என்கண்கள் பசக்கும்', எனத், தோழிக்குத், தலைமகள் உரைத்தாள் *[ஐங்.169:4]*. 'தெய்வ மங்கையரினும் அடைவதற்கு அரியள், நிறுத்த அரிய என் நெஞ்சத்தை கவர்ந்து மறைந்தாள்; எனப் பாங்கற்குத், தலைமகன் கூறினான் *[ஐங்.191:5]*. மிக்க துயரத்தால் உயிர்போய்விடுமளவிற்குத் தேய்ந்து வறிதாகிவிட்ட நம்முடைய நெஞ்சம், தலைவி நினைவாலுண்டாகிய நோய் வருத்தக், கலங்குமாறு, காடு கடந்து சென்றாள்', எனத், தலைமகள் புணர்ந்துடன் போகியவழிச், செவிலி ஆற்றாமைகண்ட, நற்றாய், கூறினாள் *[ஐங்.313:3]*. கடத்தற்கரிய சுரநெறியைக் கடந்து சென்றோரிடத்துச் சென்ற என்னெஞ்சம், வாராது காலந்தாழ்த்த காரணத்தை ஆராய்வோம் தோழி, என நெஞ்சினைத் தூதுவிட்ட தலைமகள், தோழிக்குக் கூறினாள் *[ஐங்.317:4]*. நெஞ்சமே! நீ விரும்பிய தலைவியின் பண்புகள், வெய்ய சுரத்தின் கண்ணுள்ள கவர்த்த வழிகளையும் கடந்து ஈண்டும் வந்தன, என இடைச்சுரத்துத் தலைமகன் தன் நெஞ்சிற்குக் கூறினான் *[ஐங்.323:4]*. 'கண்களது ஆற்றாமையினால் என் நெஞ்சம் தம்மைப் பின் தொடர்ந்து போகா நிற்பக், கல் காயும் இடத்தின்கண் நம்மைப் பிரிந்து சென்றோர் கல்லினும் வலிய நெஞ்சத்தினர் காண், என ஆற்றாளாகிய தலைமகள், தோழிக்குச் கூறினாள் *[ஐங்.334:3]*. 'நின்பால் வேட்கை மிக்க எம் நெஞ்சம், நினது முயக்கத்தைப் பெரிதும் விரும்புதலாலே, நின்னை நினைந்து வரப் 'பாலைநிலத்து நெடிய வழிகள் கடத்தற்கரியனவாயினும், சுருங்கி எளிமையுடையனவாயின', என வினைமுற்றிவந்த தலைமகன், தலைமகட்கு உரைத்தான் *[ஐங்.360:3]*. 'பாலை நிலத்துக் கவர்பட்ட வழிகளில், யானைகளது பெரும்பகையினைக் கருதாது, இருள் தடையாக நின்ற இவ்விரவில், எம்பால் அருள்செய்யும் நின் நெஞ்சம் நின்னைச் செலுத்த, எவ்வாறு, வந்து சேர்ந்தனையோ', எனப் பிரிந்த தலைமகன், தங்காது வந்துழித், தோழி கூறினாள் *[ஐங்.362:4]*. 'பாசறைக்கண்ணே யிருந்தும், ஆனேற்றினைத் தழுவி, ஆன்கள் செல்லாநிற்கும் கார்காலத்தை நினையுந்தொறுங், கலங்கும் நெஞ்சமே! நம் காதலி வருந்தப் பிரிந்து, எம்மையும் உன்னோடு தொடர்ந்து வரச்செய்தனையே, எனப், பருவவரவின்கண் தலைவன் நெஞ்சொடு புலந்து கூறினான் *[ஐங்.445:4]*. 'அரிவை! நின் கூந்தலினை அழகுறுத்த நினையுந்தோறும் கலங்கும் நெஞ்சத்துடன் யான்வந்தமையால், இனியவாகியது, புறவு', என வினைமுற்றிப் புகுந்த தலைமகன், தலைவிக்குக் கூறினான் *[ஐங்.495:4]*.

'அரி, அயன் அரன் என்னும் மூவரையும் ஒருவனாகவல்லது வெவ்வேறாக நினையாத நெஞ்சத்தாலே, ஐம்பொறியும் ஏவல் செய்தலை இயல்பாகவுடைய கோட்பாட்டையும், தமக்குரிய ஒழுக்கத்தையுமுடையவர் அந்தணர் *[கலி.9:3]*. 'கூடலையும் நினையாரோ? திருப்பரங்குன்றின்மேல் விளையாட்டையும் விரும்பாரோ? பிரிந்த அவர்க்காக நோய் மிக்க நெஞ்சத்தோடே வருந்தாதே கொள்', எனத், தோழி, தலைவிக்குக் கூறினாள் *[கலி.27:22]*. 'குயில்கள் கூவாநிற்கவும், பிரிந்துறைதற்கு அஞ்சாதவருடைய கொடுமையை யான் மறையாநிற்பேன்; மறைப்பினும், சான்று பொய்த்தவன் வந்து தன் கீழே இருக்கப்பட்ட மரம் போல, யான் அழகு கெடும்படி, என்னெஞ்சம் காமத்தீக்கொளுத்தி என்னைச் சுடுமாயின், யான் அதற்கு என் செய்வேன்?' என ஆற்றாளாய தலைவிக்குத், தோழி கூறினாள் *[கலி.34:11]*. 'பிரிந்திருந்தாரை மிக இகழும் குயிலைப்பார்த்து, வருந்திக்கெடுகின்ற நெஞ்சத்தோடே அவர் நம்மைத் துறந்து, இனிநினையாரென்று கருதி, வெறுப்புக் கொள்ளாதே' எனத் தோழி, தலைவியை ஆற்றுவித்தாள் *[கலி.35:7]*. 'ஒரு கூற்றிற்சாயாத நேர் நிற்கும் துலாக்கோல் போல, ஒர்தலுற்று அறத்தையே விரும்பின நெஞ்சத்தையுடையவன், தன்னான், நுகரப்பட்டார் நெஞ்சத்தை அழியும்படி விடுவனோ?' எனப், பிரிந்தவழிக் கலங்கித், தலைவி கூறினாள் *[கலி.42:13,15]*. 'ஏடீ, அவன் கொடுமையைக் கூறாதே கொள். என்னெஞ்சத்தைத் தன் அன்பாற் பிணித்தல் கொண்டவன், பிறரஞ்சுங் கொடுந்தொழிற்கு அஞ்சாத அறனில்லாதவன் அல்லன்' எனத் தலைவி, இயற்பட மொழிந்தாள் *[கலி.42:27]*. 'எந்தோள்களுடனே மாறுபட்டுப், பின்னை முயங்கக் கருதின, நினைவு கெடுகின்ற நெஞ்சத்தினையுடைய யாங்கள், பரத்தையரை நோவோமோ?' எனக் காமக்கிழத்தி கூறினாள் *[கலி.68:11]*. 'பரத்தை வரக் காணாமையினாலே, நின்னெஞ்சத்திடத்தன வேறு சிலவாயிருக்க, இவள் நிறையென்கின்ற குணமுடையளல்லள் என்று கருதிப், பொய் வன்மையாலே, இவ்விடத்தே வந்து,

உன் ஊராண்மையாலே அலைக்கக்கட்வையோ?' எனக் காமக்கிழத்தி, தலைமகனிடங் கூறினாள் *[கலி.69:14]*. 'முன்பு எம்மை நீ செறிகையினாலே யாமும் நின்னோடு செறிதலையுற்றோம். இக்காலத்து, நீ செய்யுங்குறைகளை அறியலுற்று, அதனானே அழிந்து கெடுகின்ற நெஞ்சத்தினையுடையேம்' எனக் காமக் கிழத்தி கூறினாள் *[கலி.72:23]*. நாட்காலமெல்லாம் ஒருத்தியிடத்தே கூடியிருந்து, உச்சிக்காலமெல்லாம் அவளைக் கைவிட்டுப், பலரிடத்தே சென்று, அந்திக் காலத்திற் கூடுதற்கு வேறு சிலரை ஆராயும் நின்னெஞ்சமும் பித்தேறப் பெற்றாய்' எனக் காமக்கிழத்தி, தலைவனிடம் கூறினாள் *[கலி.74:11]*. 'பாணனைத் தூண்டிலாகப் போகட்டுப், பரத்தையரை அகப்படுத்தித், தான் விரும்பின் பரத்தையருடைய நெஞ்சம் தன் வசமாக்குதல், தனக்குத் தொழிலாகக் கொண்டு திரியும் நுந்தை', எனத் தலைவி, புலவியோடு தலைவனைக் கண்டு, தன் மகனைப் பாராட்டினாள் *[கலி.85:24]*. 'கொட்டுகின்றவன் தன் உள்ளத்தில் ஓர்த்த ஓசையைத் தானும் ஒலிக்கும் பறை போல, நின்னுடைய நெஞ்சத்து விரும்பின இன்பத்தையே கனவாகக் கண்டாய்' என ஊடல் தீர்வது பயனாகக் கூறிய தலைவனிடம், தலைவி எதிர் மொழிந்தாள் *[கலி.92:21]*.

'அவன் உன்னை விரும்பியிருப்பானாயின், நீ அவனை விரும்பியிருப்பையாயின், மிகவும் நோவத்தக்கதொரு செயல் இல்லை காண்' எனத், தோழி கூற, அதுகேட்ட தலைவி, அன்னையுடைய நெஞ்சு நின்னுடைய நெஞ்சமாகப் பெறின் நோவத்தக்கதோ இல்லையென்றாள் *[கலி.107:21]*. 'அந்நாளிலே, மோர் விற்று மீள்கின்ற நீ, கண்ணாலே எனக்குரியதாகிய என் நெஞ்சத்தை நினக்கு இருப்பிடமாக வாங்கிக் கொண்டு, அடிமைத்தொழில் கொண்டாய்; ஒரு கள்வியை அல்லையோ?' எனத் தலைமகன் ஓர் மகளிடம் கேட்டதும், அவள், நின் நெஞ்சத்தை அவ்வாறு கொள்ளுதல் எனக்கு எங்ஙனம் எளிதாயிருக்கும் என்றாள், *[கலி.108:28,30]*. 'என்னுடைய மொழியைக் கேட்டு என்னெஞ்சம் எனக்கு ஏவலைச் செய்யுமாயின், உலகத்தில் ஒரு செயற் கூற்றால் உடன்பட்டு, மனத்தால் உடன்படாதார் கூற்றுச், செவிக்கு மெத்தென்றிருத்தலை அறிந்திருந்தேனாயினும், மெல்லிய இயல்பினையுடையாய்! நின்னுடைய வஞ்சமானமொழியை, உண்மையாகக் கொண்டு, யானோ போக விடுவேன்?' என்றான் வினைவலபாங்கின் தலைவியைக் கண்ட, தலைமகன் *[கலி.113:18]*. 'கோவலருடைய குழலோசையைக் கேட்டுக், குறைந்த நெஞ்சத்தையுடையேம் பக்கத்தே நின்று, உயிரைக் கொள்ளாதே பாராட்டுகின்றாய்,' எனத் தலைவி, மாலைப்பொழுது கண்டு புலந்தாள் *[கலி.118:14]*. 'நம்மைப் பிரிந்து, உள்ளில்லாத உள்ளத்தாலே நம்மை நினையாமல் அமைந்திருந்தோரை, உள்ளே உவந்து உள்ளும் நம்முடைய நெஞ்சமும், இம்மாலையையும், ஊரார் கூறும் அலரையும் பொறாதே, நம்மை விட்டுப் போகா நின்றது', எனத் தலைவி, மாலைப் பொழுது கண்டு புலந்தாள் *[கலி.118:23]*. 'அருள் ஒருகாலத்தும் இல்லையான அறிவாலே, அறஞ்செய்தல் பயன்தரும் என்று கருதானாய், பண்புஞ்செய்யானாய் எல்லாரும் வெருவுதலுறும்படி, தனக்குள்ள நாளைப், பயன்படாமற் செலுத்தினவனுடைய நெஞ்சத்தின் மருட்சி போல, இருளாலே உலகம் நிறைந்து, மிடியாலே, இரத்தற்கஞ்சினவன், வலியின் தகைமை கெட்டுச் சென்று, ஒருவனை வேண்டுகின்றவனுடைய நெஞ்சம் போலே, மரமெல்லாம் பொலிவிழந்து, இரப்பாரைக் கண்டு, இருந்தவிடத்தினின்றும் எழுந்திருந்து போய் மறைகின்றவன் நெஞ்சம் கண்ணோடாது கவியுமாறு போல, இலைகளெல்லாங் குவிய மாலை வந்தது *[கலி.120:2,5,6]*. 'தோழி! நம்மைத் துறந்தாரிடத்தே அலமருதலையுடையை யாயிருந்தாயென்று, சொல்லா நின்றாய்; அழகினையும், காதலையுமுடைய மனைவியரோடே அவன் பொருந்தி, நம் வருத்தத்தைப் பார்க்குங் குணமிலானா யிருத்தலை, மிக்வும் அறிவேன். அறிந்திருப்பினும், அவன் வந்து, என்னைப் பேணிச், சிறிதாக அளிக்க, நாணமில்லாத நெஞ்சம் என்வயத்ததன்றி, அவனிடத்தே நெகிழ்ந்து செல்லுதலையுங் கண்டிருப்பேன், ஒருகால் அருள் பண்ணிச் சிறிதாக அளிக்க, என்னுடைய மருளியாகிய நெஞ்சம் மகிழ்தலையுங் கண்டிருப்பேன். அவன் சிறிதாகப் புல்லியளிக்க, என்னுடைய வருத்தத்தையுடைய நெஞ்சம், வருத்தம் மீளுதலையுங் கண்டிருப்பேன். ஆகையினாலே, காமநோயாலே மிக்க நெஞ்சந்தான், யாமத்தில், நாம் கொள்ளுந்துயிலை வாங்கிக் கொண்டு ஒளித்தவர் பகுதியிலேபட்டுவிட்டதாயின், இனி நாமிருந்து உயிர் வாழ்தலோ, பிறர் சிரித்தலையுடைத்து', என்று ஆற்றாமையால், தலைவி கூறினாள் *[கலி.122:11,15,19,22]*. 'தாம் நெஞ்சறியவே செய்த கொடிய தீவினைகளைப் பிறர் அறியாமல் மறைத்தார்களாயினும், தாம் செய்தமையை அறிந்திருக் கின்றவர்கள் தம்முடைய நேஞ்சத்திற்காட்டில், அணுகிய சான்று வேறில்லையாகும் *[கலி.125:4]*. 'நின்னை நுகர்ந்தோருடைய நெஞ்சம் அழிந்து கெட்டுப் போம்படியாக அவரைக் கைவிடுவையாயின், அது, வருந்திய வருத்தத்தைப் போக்கும் மருந்தின் திறத்தை அறிந்த ஒருவன், அம்மருந்தை அறியேன் என்று வஞ்சித்து, அம்மருந்தின் செயலைக் கெடுக்குமதிலும், கொடிது காண்', எனத் தோழி, தலைவற்குக் கூறினாள் *[கலி.129:2]*. 'ஒன்றையுங் கல்லாமல் மூத்தவனுடைய அறிவுக் கண்ணில்லாத நெஞ்சம் போலே, புற்கென்ற இருள் உலகிலே பரத்தரா நிற்கும், இம்மாலைக்கண்ணே, தவமுனிவர் அழலை ஆவுதி பண்ணியெழுப்ப, என் செயலறுநெஞ்சம் தானுங், கொதித்து எனக்குக் காமத்தீயைக் கொளுத்தும். கழிகளில் மலர்கள் குவிய, என்னெஞ்சம், அவனை உள்ளுதலால், அழிதலோடே, தான் நினைவின்றிக் குவியும் எனத், தலைவியது ஆற்றாமை கூறினாள் *[கலி.130:6,10,13]*.

'வேழம், மதத்தாலே, செய்யுந் தொழில் தவிர்ந்து, தோட்டியையும் கைகடந்தாற் போலே, தன் மேற்சென்ற வேட்கையினாலே, என் ஏவலைச் செய்தலைத் தவிர்ந்து, தனக்குக் காவலாகிய அறிவும், அறிவாலே ஆராய்ந்த அடக்கமும், இயல்பாகத் தோன்றிய நாணுடனே வறியவாக, அவற்றைக் கைகடக்கும்படி, என் நெஞ்சத்தை என்னொடு நில்லாதவாறு கைக்கொண்டு மறைத்தவளைக் கூடும்வழி, எவ்வழிதான்?' என்று, தலைவன் கூறினான் *[கலி.138:6]*. 'காமன், என் தலைமையை அழித்தலை விரும்பிக், கொடுக்கப்பட்டுத் தோன்றிய வனப்பால், என் நெஞ்சமாகிய அரண் இடிந்துபோம்படி, என்னைக் கைக்கொள்ளும் சாயலுடையவள்', எனத் தலைமகன், தலைவிபற்றிக் கண்டார்க்குக் கூறினான் *[கலி.140:9]*. 'திங்களைப் பாம்பு சென்று மறைக்குங்கால், சான்றோர் அதன் வருத்தத்தைத் தீர்க்க மாட்டாராயினும், அதன்மேல் தமக்குள்ள காதலைக் காட்டித் துன்புறுவர்; அதுபோல, ஒண்டொடியது நோய் செய்யும் நோக்கிலே அகப்பட்ட என்னுடைய நெஞ்சத்திடத்துக், காமநோயைக் கண்ணால் கண்டு வைத்தும், இவ்வூரிலுள்ளார் அதனைத் தீர்க்கமாட்டாராயினும், கண்ணோட்டமாயினும் செய்தலிலர்', எனத் தலைமகன், கண்டோர்க்குக் கூறினான் *[கலி.140:19]*. 'ஞாயிறே! நீ, மறையும் மலையை அடைகின்றாயாயின், அவரைத் தேடிப் பிடித்து என்கையிலே தருவையாயின், உயிர்திரியாக, என்னெஞ்சமாகிய அகலிலே, கொளுத்திய காமத்தீ அவியும்', எனத், தலைவி, பிரிவாற்றாது கூறினாள் *[கலி.142:39]*. 'தன்னெஞ்சம் இன்பத்தைத் தரும் பொருள்களோடே வெருவி, அவ்வின்பங்கழிந்தபடியை நினைத்து, நாணாற் பிறரெதிர் முகம் நோக்காது, நிலம் நோக்கி, அழுது, தன்குறை கூறி, இவளொருத்தி என்ன வருத்தமுற்றாள் கொல்லோ என்பீர்! யான் பொன் செய்தேன்', எனத் தலைவி, யாற்றாமையாற் கூறினாள் *[கலி.143:7]*. 'ஞாயிறே! உலகியல் அறியாதாரிடத்துக் கழியச் சீறுதற்கு விரைந்து செல்வையென்று கூறக்கேட்டு, நின்னை வழிபட்டு, இவரை மிகச் சீறாதபடி இரந்துகொள் வேனாகவந்தேன். என்னெஞ்சங் கெடும்படி, என்னைக் கைவிட்டவனைச் சீறுமிடத்து என்னையும் நீங்கவிடாதே கொள்', எனத் தலைவி ஆற்றாமையால் கூறினாள் *[கலி.143:24]*. 'அவனை நினையும் என் உள்ளம் குவியுமாறு, கழயின்மலர்குவிய, இரங்கும் என் நெஞ்சம்போல் குழலோசை தோன்ற, அலைவு பெற்ற என்மொழிகள் போல், யாழிசையடங்கக், கெட்டுப்போன என் அழகு போலப் பகலொளி மழுங்கக், காலனைப் போலே என்மேலே மாலைக் காலமும் வந்தது', என்றாள் தலைவி *[கலி.143:37]*. 'அறனில்லாதவன், தெளிய என் கண்ணுள்ளே வந்து தோன்றுகையினாலே, கூடிய இமையை விழித்துப் பிடித்துக் கொள்வேன் என்று கருதி,யான் விழிக்கப், பின்னையும் ஒடிப்போய் என்னெஞ்சத்துள்ளே மறைந்து நின்று, யான் துயிலாத காமநோயைத் தூராநிற்கும்', என, ஆற்றாமையால், தலைவி கூறினாள் *[கலி.144:57]*. 'மழையெல்லாம் என்னிடத்தே நின்று பெய்யினும் காமநோய் ஆறுவது போல இருக்கின்றதில்லை. அவன், என்னெஞ்சிடத்தே விடாமலிருப்பினும், அதனால் அமையாது, தான் காந்தாநிற்கும். அவன் ஒருகாற் போயின், தான் அதற்கு வருத்தமுறாநிற்கும்', என ஆற்றாமையால், தலைமகள் உரைத்தாள் *[கலி.146:46]*. 'சினந்த அரசன் எயிற்புறத்தானாக, உழிஞையானுக்கு வந்த வருத்தம் போலே, வரைவு கடிதின் முடிதற்கு விரைதல் வரும் நெஞ்சத்தாலே பெரிதும் வருந்தினாள்; அது நீங்கும்படி, கடிதின் வரைவாயாக' என்றாள், தோழி *[கலி.149:16]*.

உயிர்களைச் செறுகின்ற தீய நெஞ்சத்துச் சினத்தையுடையோரும், அறத்தின் கட்சேராத புகழில்லோரும், கூடாவொழுக்கத்தால் அழிந்த தவவிரதத்தை உடையோரும், இப்பிறப்பின் நுகர்ச்சியேயுள்ளது; மறுபிறப்பு இல்லையென்னும் மடவோருமாகிய இவர், செவ்வேளின் தாள் நிழலை அடையார் *[பரி.5:73]*. 'இரவெல்லாம் அவளோடு தங்கினை, அவ்வைகைக்கண் உடைந்த மடையை அடைத்த விடத்தும் பின்னும் ஒழுகும் ஊற்றுநீர்போல, முன் அனற்றிய துன்பங்கெட, நீ சேர்ந்த விடத்தும், பல்கிப் பனிவாருங்கண்ணினையுடைய மகளிர் நெஞ்சத்தை இன்னுங் கனற்றா நின்று வருதலையொழி', எனக், காதற்பரத்தை தலைவனிடம் கூறினாள் *[பரி.6:85]*. 'துனியின்கண், மிகுவையாயின் காமவின்பங்கெடும், மகளே! இவன் நெஞ்சத்தின்கண் அல்லாப்பை இறுகப்பூட்டிக் காய்ந்து இருளில் இவனை நீங்கற்பாலையல்லை. நீங்கின், இடனறிந்து ஊடி, இனிதின் உணரும் ஒழுக்கத்திற்குப் பிழையாம்', என, முதுபெண்டிர் தலைவியிடம் கூறினர் *[பரி.6:99]*. 'மதுவால் களிப்பர்; வையைக்கண், குளிப்பர்; காமமிகுதியாற் கலப்பர்; இன்பமுண்டாகப் புலப்பர். இடந்தொறும் ஆடுப. "வையாய்! நின்கட், புனலாடுவார் நெஞ்சத்து மிக்குப் பொருந்திய இக்காமத்தையுண்டாக்கும் தன்மை நினக்கு எஞ்ஞான்றும் குறையாதொழிக', எனத், தலைமகள் வையை நோக்கி உரைத்தாள் *[பரி.6:105]*. 'வையையுள் வாழைத்தண்டைத் தழுவி ஆடாநிற்க, ஒருத்தியைத் தலைவன் கண்டான்; கண்டபொழுதில், அவனது நெஞ்சத்தை அவள் கவர, (நெஞ்சமழிய) புனல் கையை வலிக்கப், புணை (அவனை) நெடுந்தொலை, வலிக்க, அவள் மாட்டு அவன் கண்ணிற்ப, நீர் அவன் விரும்பின அவளிடத்துக் கொண்டு செல்லாது, தான் வேண்டுமாறு செலுத்த அதுகண்டு, அவனை, அவள் பின்தொடர்ந்தாள் *[பரி.11:108]*. 'இவள், நெறிசெல்வான் ஒருவன்பின் நெஞ்சத்தைப் போக்கினாள்; பெண்டிராதலானே, அன்புமிக்கால், நிறையழிவிற்கஞ்சி, அம்மிகுதியைக் கழிக்கக் கடவேமல்லமோ', என்பர் மகளிர் *[பரி.12:53]*. 'முருகவேளே! இரண்டு பிறப்பினையும், அப்பிறப்பான் வந்த இரண்டு பெயரினையும், ஈர நெஞ்சத்தினையும், ஒப்பில்லாத புகழினையுமுடைய, அந்தணரது அறத்தைப் பொருந்தியோய்! அருள்க', என அன்பர் வேண்டினர் *[பரி.14:27]*.

நெஞ்சு -1 காண்க

**2. மார்பு.** ஆழ்ந்த பெரிய புண்ணின் வாய் நிணங்காயாத, துன்பத்தையுடைய நெஞ்சத்தில்-மார்பினிடத்தில்-வேற்படையைப் பாய்ச்சினாற்போல, வருந்திக் கூவும் குயிலினும், நீர்வருகின்றயாறு மிகக் கொடிதாயிராநின்றது. அதனினும், கொடியாளாயினாள், குருக்கத்தியொடு, பித்திகை மலர் கொள்ளீரோ, எனக் கூறித் திரிபவள்', எனப் பருவங்கண்டு ஆற்றாளாய தலைவி கூறினாள் *[நற்.92:2].*

அசையிலது (துரோபதையது) கூந்தலிலே கையை நீட்டியவனது (துச்சாதனனுடைய) நெஞ்சத்தைப் பிளந்து போகட்டுப், பகைவர் நடுவே தான் சொன்ன வஞ்சினத்தை வாய்க்கச் செய்தவனை (வீமசேனனை) எருத்து ஒத்தது *[கலி.101:19].* 'ஏறாகிய எருமையை ஏறுகின்ற கூற்றுவனுடைய நெஞ்சத்தை, வடிம்பாலே பிளந்து போகட்டுச், சினத்தோடே அரிய உயிரை வாங்கின, அஞ்ஞான்றை, இறைவன் இத்தன்மையுடையவன் கொல் என்று கூறும்படியாகக், காரியை வலியடங்கத் தழுவி, அதன்மேலே தோன்றி நின்ற பொதுவனது அழகைப் பாராய். அதனைக் கண்டு என் நெஞ்சு உட்கிற்று, எனத் தலைவிக்குத் தோழி கூறினாள் *[கலி.103:43].* காமநோயையுடைய நெஞ்சத்திலே அடித்துக் கொண்டு வருந்தி, அழுது, நீங்கள் எல்லாருந் தேடிச், சென்றும், எங்கணவரைக் காணப் பெற்றிலீரோ, என்று, கூறுகின்றவளுக்கு உற்ற வருத்தம் தன்னை நினையாதவரைத் தன்னிடத்தே வரக் கண்டு சேர, ஞாயிற்றின் முன் இருள் கெடுமாறுபோலக், கெட்டது', எனத், தலைவியது ஆற்றாமையைக் கண்டோர் கூறினர் *[கலி.145:60].*

நெஞ்சு -3 காண்க

**நெஞ்சிலார் - உரனிலார்.** ஆயர் மகள் தோள், அஞ்சாராய், உயிரைத் துறந்து, கொலைத்தொழிலையுடைய ஏற்றைக் கொள்பவர் செறியுமவையல்லது, வருந்துதல் வந்து தழுவுதற்கு நெஞ்சிலார் - உரனிலார் -செறிதற்கரிய *[கலி.103:66].*

**நெஞ்சினம் - மனத்தேம்.** 'பிரிந்துறை மகளிர் செயலுறும்படி வந்த மாலைப்பொழுதிலே, மெய்சோர்ந்து வருந்திய நெஞ்சினம்-மனத்தேம்-ஆகிப் போகும் வண்ணம், சேர்ப்பன் தேர்ப்பரிகள் செல்வன, துன்பப்படுவனவாக' எனத், தோழி கூறினாள் *[நற்.58:9].*

நெஞ்சம்-1. காண்க

**நெஞ்சினர்-உள்ளத்தினர்.** கண்களில் பனிக்கின்ற நீரைத் தாங்கிக், கைகளைப்புடைத்து, மெலிந்த நெஞ்சினர்-உள்ளத்தினர்-துன்பம் மிக அடைய, வயவர் சீறிய நாடு, நெருஞ்சிக், காடுறு கடுநெறியாயின *[பதி.26:9].* காண்க-நெஞ்சம்-1.

அறநெறியினின்று நீங்காது இல்வாழ்க்கை நடத்தலும், சுற்றத்தாரது துன்பம் பல தாங்கலும், மெய்வருந்தாமைக்கு ஏதுவாகிய, ஊக்கமில்லாத உள்ளமோடிருந்தார்க்கு இல்லையாகும், என்று பொருளீட்டும் வினையை விரும்பிய நெஞ்சினர் தலைவர் *[அக.173:4].*

**நெஞ்சினள்-உள்ளத்தினள்.** 'வெற்பன் மார்புறுவ தொன்றானே தணிவதாதலை அறியாதவளாகி, நம் தாய், வளை, நெகிழ்ந்த நிலையினைப் பார்த்துச், செயலற்ற நெஞ்சினளாய்-உள்ளத்தினளாய்-வினவலின், பெண்டிர், முருகன் அணங்கு என்றனர்', எனத், தோழி சொல்லினாள் *[அக.98:8].* 'நெஞ்சே! நாம், முயற்சியால் இக்காட்டில் வருந்திப் பிரிந்திருப்பேம். நம்மையே தன் வலியாகக் கொண்ட, செயலற்ற நெஞ்சினளாகிய, நம் தலைவி, துன்பத்தால் வருந்தி எத்தன்மையளாவளோ?' எனப், பிரிவிடைத் தலைமகன் கூறினான் *[அக.279:16].*

'கூந்தலின் நாற்றத்தையும், பசலை பரவிய நெற்றியையும் நோக்கிப், பயனின்றிச் சிதைந்த நெஞ்சினள்- உள்ளத்தினள்-ஆகி-எம் அன்னை வெகுளாநின்றாள்; எனத், தோழி செறிப்பறிவுறீஇயினாள் *[நற்.368:8].*

**நெஞ்சினன் - உள்ளத்தினன்.** பரிசின் மாக்கள் எவ்விதக் கலையிலும் வன்மையில்லாராயினும், கொடுத்தலாகிய கடமையை விரும்பிய, ஒரு பால் கோடாத நெஞ்சினன்-உள்ளத்தினன்-தன்னைச் சார்ந்தவர்க்கு நிறையக் கொடுப்பான் *[பதி.20:23].*

**காண்க-நெஞ்சம்-1.**

பிருங்கலாதன், தன் தாதையாதலின், அவ்விகழப்படுவோனை இகழாத நெஞ்சினனாக, உள்ளத்தினனாக நீ, அவனை இகழ்ந்து, வகிர்தல் வாய்த்த உகிரினை எனத் திருமாலைப் பாடுவர் *[பதி.4:15].*

**நெஞ்சினார்-உள்ளத்தினார்.** உயிராவது, ஒரு காற்றாக உணராதே, அதனைக் காவல் கொண்டு, அதனுடனே ஒரு செறிவாய், ஏற்றின் மருப்பினை அஞ்சும், நெஞ்சினார்-உள்ளத்தினார்-செறிதற்கு, ஆயமகளிர் தோள் எளியவாயிருக்குமோ', என்றாள், தோழி *[கலி.103:69].* காண்க-நெஞ்சம்-1.

**நெஞ்சினேம் - உள்ளத்தினேம்.** தோழி! இறந்துபடுவேமோ, ஆற்றிருப்பேமோ வென்று, பலவற்றினையும் ஆராயும் நெஞ்சினேமாய் - உள்ளத்தினேமாய் - வருந்திவிடுக்க, அவர் நமக்கு வருவேம் என்றுரைத்த காலம், நிலத்திலுள்ளோர் நாவிலே வழங்கும் மதுரையிலுள்ளார், அறிவினையுடைய சான்றோர் நாவிற் பிறந்த கவிகளின் புகழ்மையைக் கொண்டாடும், இவ்விளவேனிற் காலமல்லவோ', என்றாள் தலைவி *[கலி.35:19].*

எம்மறிவு கொடும்பாடு அறியற்க; மெய்யுணர்வுஅடைக. என, நின்னடியைத் துளக்கமில் நெஞ்சினோமாய், வணங்கிவேண்டிக் கொள்வோம் என அன்பர் திருமாலிடம் உரைத்தனர் *[பரி.2:74]*.

**நெஞ்சினேன்-உள்ளத்தினேன்.** எனக்குக் கேடில்லாத காமநோயைச் செய்தவரைக் கண்ணாற் காணாமல் என்னெஞ்சு நினைக்கையினாலே, பனிக்காலம் அறிவைத் தின்றுவிடப், பல நினைவு கொண்ட நெஞ்சினேன் - உள்ளத்தினேன் - கலக்கத்தையடையக், கடல் அதனை நோக்கி, என்னுடைய இந்த அவலத்தைத் தன்மெய்யிலே கொண்டது போலக் கூப்பிடா நின்றதற்குக் காரணம் என்னோதான்?' என்றாள். தலைவி *[கலி.134:12]*. என்னலத்தை உண்டவர், ஈண்டு வாராதபடியாலே, என்னெஞ்சு அவரை நினைக்கையினாலே, பனிக்காலம் வருத்த, மயக்கத்தாலே செயலற்ற நெஞ்சினேனாய்க் கலக்கத்திலே அழுந்த மரம் அதனை நோக்கி வருத்தத்தாற் செய்தவைபோலே, இலைகள் குவிதற்குக் காரணம் என்னேதான்? என்றாள், தலைவி *[கலி.134:20]*. காண்க. நெஞ்சம்-1.

**நெஞ்சினை - உள்ளத்தினை.** 'யாவரும் காணுதல் இயலாத அழகினையுடைய, எம்தலைவியின் மார்பினை, நினையுந்தொறும் நடுங்கும் நெஞ்சினை-உள்ளத் தினையாகி - வருந்தினை. மகன்றிலைப் போல, நீங்காத புணர்ச்சியினாலே, அழகு கெடாமைக்கு ஏதுவாகிய பாதுகாவலைக் கூறுவாயாக', எனத், தோழி தலைவனிடம் கூறினாள் *[அக.220:10]*. காண்க. நெஞ்சம்- 1.

**நெஞ்சினோர் - உள்ளத்தினோர்.** உழவரது நுகத்தில் தைத்த பகலாணிபோல, நடுவுநிலையென்னுங் குணம் நிலை பெற்ற, நன்றாகிய நெஞ்சினோர் - உள்ளத்தினோர் - ஆகிய காவிரிப்பூம்பட்டினத்து வணிகர், பழிக்கு அஞ்சிக், கொடுப்பதைக் குறைபடாமலும், கொள்வதை, மிகை கொளாமலும், மறைவின்றி வணிகம் புரிந்தனர் *[பட்.207]*. காண்க - நெஞ்சம்-1.

**நெஞ்சினோன் - உள்ளத்தினோன்.** 'பாணன், ஆ பாய்ந்தமையால் எம்மில்லில் புகுந்தான். எதிர்சென்று, உம்மனை இதுவன்று; அது (பரத்தைமனை) வாகும், என்று, கூறிய என்னையும், தன்னையும் பார்த்து, மயங்கிய நெஞ்சினோனாய் - உள்ளத்தினோனாய் - என்னைத் தொழுது நின்ற நிலை, நகையாகியது, தோழி! எனத், தலைமகள் தோழியிடம் கூறினாள் *[அக.56:16]*. காண்க-நெஞ்சம்-1.

**நெஞ்சு - 1. உள்ளம் (மனம்).** வெண்கொற்றக்குடை நிழல் செய்யக், காவல் முரசம் முழங்கச், சக்கரத்தைச் செலுத்திய, ஈரமுடைய நெஞ்சினையும் - உள்ளத்தினையும் - ஒழியாத, வண்மையினையுமுடைய பாண்டியர் மரபினன் கருங்கை ஒள்வாட் பெரும்பெயர் வழுதி *[புற.3:4]*. நின்னால் அழிக்கப்பட்டுப், பின்பு, தம்மரசு வெளவாது, நின் வரவு பார்த்திருந்த அரசரது அடிப்பட்டுப் போந்த நிலமும், அணிகலமும் கிடைத்தலுண்டாம், (இவனது) நெஞ்சு நமக்கு உரித்தாகப் பெறின்,' எனப் புலவரால் போற்றப்பட்டான், இரும்பொறை *[புற.17:26]*. 'கீழ்க்கடல் பின்னதாக, மேற்கடலினது திரை நின் குதிரையின் குளம்பையலைப்ப சுழன்று, வருதலுமுண்டென்று நெஞ்சு நடுங்கும் அவலம் பரப்பத், துயிலாத கண்ணையுடையவாயின, வடநாட்டுள்ள அரசுகள் என, நலங்கிள்ளி பாடப்பெற்றான் *[புற.31:16]*. 'அன்பு பொருந்திய நெஞ்சையுடைய, நும்மிடையே புகுந்து, நும்மைப் பிரிப்பதற்கு அலமரும், அயலோருடைய சிறப்பில்லாத மொழியைக் கேளாது, இன்று போல்க, நுமது கூட்டம்', எனப் பெருந்திருமாவளவனும், பெருவழுதியும் ஒருங்கிருந்தாரை உடனிலையாகப் பாடினார் காரிக்கண்ணார் *[புற.58:26]*. 'தன்செங்கோல் செல்லாத தேயத்துறையும், சான்றோன் நெஞ்சைத், தன்னிடத்தே உரித்தாகப் பெற்ற, புகழையுடைய, பெரியோனை இழந்த இவ்வுலகம், என்ன இடும்பையுறுங் கொல்லோ? இதுதான் இரங்கத்தக்கது', எனக் கோப்பெருஞ்சோழன் வடக்கிருக்க, வந்த பிசிராந்தையாரைக் கண்டு, பொத்தியார், கையறு நிலையாகப் பாடினார் *[புற.217:11]*. 'மலையிடத்துப், புலிபார்த்துத் தாக்கிய களிறாகிய இரை தப்பின், எலியைப் பார்த்து வீழ்த்தாதாகும். கடலின்கண் மண்டிய ஆற்றுநீர்போல, விரையப் போய், மிகுதியையுடைத்தாகிய பரிசிலைக் கொடுவருவேமாக; எழுந்திராய், நெஞ்சே!' எனப், பெருஞ்சித்திரனார் பாடினார் *[புற.237:20]*. பாணர் சூழ்ந்திருக்க, அவரிடையே இருந்த, நாணமென்னும் நற்பண்புடைய, பெருந்தகுதிப்பாட்டினை யுடையவன், வேந்தனுக்குக் கேடுவரத், தானுங் கெடும், நெஞ்சறிந்த உயிர்த் துணைவனாவான், என, ஒரு மறவன் வல்லாண்முல்லைத் துறையில் பாராட்டப் பெற்றான் *[புற.324:14]*. நெஞ்சு பொருந்திய காதலர் அழுத கண்ணீர், சுடலையின் சாம்பலை அவிப்ப, எல்லோரையும் தான் முதுகு கண்டு, உலகமக்கட்கெல்லாம் தானே முடிவிடமாய்த், தன்னைப் புறங்காண வல்லாரைக் கண்டறியாதது முதுகாடு *[புற.356:5]*. 'நின் நெடுமனையில், நெஞ்சு பொருந்திய காதலையுடைய நின்னால் விரும்பப்பட்ட மனைவியுடன், இனிய உறக்கம் பெறுவாயாக; செவ்வியறிந்து மழைபொழிய, நின் வயல்கள் வேலி ஆயிரமாக விளைக', எனப் பொறையாற்றுக் கிழானைக் கல்லாடனார் வாழ்த்தினார் *[புற.391:18]*.

அரிமான் திரிதரும் மலைச்சாரலில், பிறயானை முதலிய தொகுதி கொண்ட விலங்குகளின் நெஞ்சு நடுங்குவது போன்று, பிற அரசர்கள் தூங்காமைக்குக் காரணமாகிய, திசை நடுங்கவல்ல, மறம் மிக்கவன் இமயவரம்பன் *[பதி.12:6]*. பரிசின் மாக்கள், கண்டாரால் மதிக்கப்படும் தோற்றமிலராயினும், ஒரு கல்வி மாட்டாராயினும், கொடுத்தலாகிய கடமையை விரும்பிய, ஒருபால் கோடாத நெஞ்சையுடையோன் இமயவரம்பன் *[பதி.20:23]*. கூத்தர், பாணர்

முதலியோரது கடும்பசி நீங்கப், பொன்னிழையொலிப்ப, அவர் நெஞ்சு மிகும் உவகையராய்க், கள்ளையுண்டு களிப்புடன் ஆட, அள்ளி வழங்குபவன் குட்டுவன் [பதி.23:8]. துளவமாலையை அணிந்த திருமாலினது திருவடிகளைப் புகழ்ந்து வணங்கி, நெஞ்சு நிறைந்த உவகையினை யுடையராகித், தாம்தாம் தங்குகின்ற ஊர்களுக்கு மீண்டும் செல்லக், குடிதிருத்தி, தம்கீழ் வாழ்வார்க்குச் செய்து முடிக்கும் கடமைகளைச் செய்துமுடித்தவன் நார்முடிச்சேரல் [பதி.31:10]. ‘விறலி, இழையணிந்து அழகு மிக, பாணர் பொற்பூ மலைய, இளையர் நெஞ்சில் மிக்க, உவகையையுடையவராய்ப் போர்க்களத்தை வாழ்த்த, யானை பலநல்குவன்; நார்முடிச்சேரல் [பதி.40:26]. பொன்னால் செய்த தும்பைப்பூவினையும், புற்றின் அரவு போன்று தூணியின்கண் அம்பினையும், வளைதலையுடைய வில்லினையும், ஒடுங்காத நெஞ்சினையும், யானையைக்குத்தி வளைந்த, வடுவுடைய வேலினையும் உடையவர் படைஞர் [பதி.45:3]. பாசறையிடத்து முரசம் அதிரப், பகைவரது எயிலை எறிந்து, அவர் உறைவிடத்தைத் தாம் பெற்றல்லாமல், பொழுதுகள் பல நீங்காநிற்ப, உண்ணுதலைச் செய்யாத, நெஞ்சுவிரும்பிய ஊக்கத்தையுடையவர் மறவர் [பதி.68:7]. ‘பகையரசர்களைப் போர்க்களத்தினின்றும் புறங்கொடுத்து ஓடச் செய்து, குழந்தையைப் பாதுகாப்பாரைப் போலக், குடிகளைக் காப்பாற்றி, அறத்தையே ஆராய்தல் அமைந்த அன்புடைய நெஞ்சினையுடையவன், ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் [பதி.தி..6:10]. இளஞ்சேரலிரும் பொறையின் பகைவர் தோற்று இட்ட வேல்கள், விளங்குகின்ற செவ்விய நாவினாலும், இழிவு, கவலைஇல்லாத நெஞ்சினாலும், பாடிய கபிலன் பெற்ற, ஊரினும் பலவாம் [பதி.85:11]. உலகத்தில், பொருளில்லாதவருடைய துன்பம் நீங்கும்படி, பொருளைக் கொடுக்கும், அறத்தையே ஆராய்தல் மிக்க, அன்புடைய நெஞ்சினால், பாடுவோரைப் புரத்தலில் வல்லவன் இளஞ்சேரலிரும்பொறை [பதி.86:7]. அரணது சிறப்பால், பாதுகாவலைப் பெற்ற நாட்டின் பகைமன்னர், தம் நெஞ்சு நசையழிந்து, நிலை தளர்ந்து நடுங்க, மேற்கொண்ட படைச்செலவு நன்றாகியது [பதி.தி.2:14].

எஃகுச் செவியாலே சுருதியையளந்து, யாழின் இசையிலே பயின்ற, ஈரமுடைய நெஞ்சாலே, எக்காலமும் மெல்லிய சொல்லைச் சொல்லுதலைப் பொருந்தியவர் (கந்தர்வர்) மெல்லிய நரம்பை வாசிப்பர் [முரு.141]. முருகா! என்று நெஞ்சில் ஒருமுறை நினைப்பார்க்கு அவனது இருகாலும் (காப்பாக) ஆண்டுத் தோன்றும் [முரு.வெ.6:2]. திருப்பரங்குன்றத்தில், திருமுருகன் திருவடியைக் கண்குளிரும்படி கண்டு, நெஞ்சே! எழுச்சி குறையாது, நசையோடு திருமுருகாற்றுப்படையையே பூசைப் பொருளாகக் கொண்டு சொல்வாயாக எனப் பாடியுள்ளனர் [முரு.வெ.9:3]. மனக்கவற்சி சிறிதுமின்றித் துயிலுணர்ந்து, மாலைக்காலம் போலும் கழிந்தகால மிடியும், காலைக் காலம் போலும் அது நீங்கிய கால நிலையும், கண்டு, இதுகனவோ என மயங்கிய என்னெஞ்சு மகிழ, அயின்று இனிதிருப்ப, இன்மை தீர வழங்கினன், கரிகாலன், என்பது பொருநன்கூற்று [பொரு.98]. பகையரசிருந்து நடுங்குதற்குக் காரணமாகிய பாசறையிடத்துத், துயிலில் தங்கியோனைத், தன்னிடத்துக் காணாளாய்த் துன்புற்றுத், தன் நெஞ்சினை அவனிடத்து வழிப்படுத்தித், தன் நிறையழிதற்குக் காரணமாகிய தனிமையுடன் இருந்தாள் தலைவி [முல்.81]. சிறந்த மறை மொழிகளைப் பொருள் விளங்கச் சொல்லி, உயர்ந்த ஒழுக்கத்தோடு, இவ்வையத்து ஒப்புயர்வற்றவராய், விண்ணக வாழ்வை இம்மண்ணகத்தில் பெறும் அறவழியினின்றும் நீங்காத, அன்பு கெழுமிய நெஞ்சுடையவர் பெரியோர் [மது.472]. உண்டு, வறிய பூக்களை விட்டு நீங்கும் வண்டினம் போன்று, தம்மைக் கூடியோர் நெஞ்சு கலக்கமுறும்படி, அவரிடத்து இனிய, துயிலைக் கைவிட்டுப், பழந்தேரும் பறவைபோல் பரத்தையர் வாழ்வர் [மது.575]. தெய்வ மகளிர் வருத்துமாறுபோலத் தம்மைக் கண்டோருடைய நெஞ்சு நடுங்க வருத்தமுறுவித்து அன்பின்றிப் பொருள் வாங்குதலையுடையவர் பரத்தையர் [மது.583]. மலையுச்சியில் உறைகின்ற முருகக் கடவுளைக் கையால் தொழுது, வஞ்சினத்தை உண்மையால் தெளிவித்து, அருவி நீரைத் தலைவன் குடிக்கையினாலே, தலைவி நெஞ்சு ஆறுதலோடு பொருந்தச், சோலையிலே, களிறுதரு புணர்ச்சியைப், பகற்பொழுதெல்லாம் நுகர்ந்து போக்கி, மாலையில் மூதூர் வாயிலில், நீர்த்துறையில் அவளை நிறுத்தி அவன் பெயர்ந்தனன் [குறி.211]. குறைவுபடாத தலைமையினையுடைய பட்டினத்தை எனக்கு உரித்தாகப் பெறுவேனாயினும், கருங்கூந்தலையும், விளங்கும் இழையினையுமுடையாள் ஈண்டுப் பிரிந்திருப்ப, யான் நின்னொடு வாரேன், நெஞ்சே நீ தனியே சென்று வாழ்வாயாக, என்று தலைவன் நெஞ்சை நோக்கிக் கூறினான் [பட்.220].

ஞாயிறு மறையினும், ஊர் சேய்மையிடத்தது என்று கூறியொழியாது, பரியை முடுக்கும் எம்மிலும், அவள் தோளை, அடைய விரும்பிய எம் நெஞ்சு, விரைந்து சென்று அவளது கையைத் தழுவியது கொல்லோ', என, வினைமுற்றி மீண்ட தலைமகன் கூறினான் [அக.9:26]. ‘சிறிது பந்தாடினும், கழங்காடினும் தளர்ந்து என்னைத் தழுவி அமர்வள் (முன்பு); இன்று, ஆயத்தையும், எம்மையும் நினையாது, தந்தையது காவலைக் கடந்து, சுரநெறியில் செல்ல, ஏதிலாளனது நெஞ்சைத் தனக்கே உரித்தாகப் பெற்ற சிறிய மூதறிவுடையவளது அடிகள் வல்லுநவோ?' என, மகட்போக்கிய செவிலித்தாய் கூறினாள் [அக.17:8]. ‘என் நெஞ்சே! வாழ்வாயாக; புறப்படும் அன்று வாரேன் எனக் கூறி நம்மனையில் தங்கிவிட்டாயுமல்லை; இத்துணையும் வந்து வருந்தினாய். இக்குன்றத்தை எம்மொடு கடத்தலும் செய்யாய்; என்னை யொழியக் கருதின், நம் காதலியின் வருந்தி மெலிந்த பிடரியினைத் தழுவியபின் எம்மை மறவற்க', எனப் பிரிந்த

தலைமகன் தன் நெஞ்சினைக் கழறினான் *[அக.19:2]*. 'நம் தலைவியின் அழகு கெடச், சேய்மையின்கண்ணதாகிய நாட்டிற்குச் செல்லாதே, என்று, யான் கூறவும் அதற்குப் பொருந்தாய்; வினையை விரும்பிப் போந்தாயாகலின், தலைவி மகிழப், பல்வேறு வகையினவாகிய செல்வங்களை ஈட்டித் தருவேம். நெஞ்சே! காட்டிற் சேறற்கு, இப்பொழுதே எழுந்து வருவாயாக', எனப், பிரிந்த தலைமகன் தன் நெஞ்சிற்குக் கூறினான் *[அக.21:9]*. 'எனது முதுகினை அணைத்துக் கொண்டனராக, மிக்க மழையை ஏற்றுக் கொண்ட, பன்முறை உழுதிட்ட, வயல் மண் போல, நெகிழ்ந்து கலங்கி, என் நெஞ்சு, அவர் பால் என்னை வஞ்சித்துச் சென்ற அறிவினேனுக்கு, அவரைப் புலத்தல் இயலுவதாமோ?' எனத் தலைவி, தோழியிடம் சொல்லினாள் *[அக.26:26]*. மாலையில் வந்த கீழ்காற்றினால் என்னெஞ்சம் செயலற்று வருந்தப், பிரிதல் துன்பினைச் செய்து, நம்மை அருளாராயினும், அவரது நட்பு நமக்கு ஒழியாதிருப்பதாக, இனிய துயிலுக்குரிய மார்பின் பொருட்டுச் சென்ற என் நெஞ்சு அங்கே தங்குதலை வெறுத்து, இங்கு வாராதிருப்பதாக, எனப், பிரிவின்கண் கிழத்தி, தோழிக்குக் கூறினாள் *[அக.40:17]*. 'சோர்தலில்லாத நம் உள்ளம் மேலும் மேலும் சிறப்ப இவ்விடத்தே வினையைச் செய்து முடித்தேமாயின், புறவின்சேவல் பெடையை அழைக்கும் மாலையில், நம் தலைவர் எங்குள்ளாரோ என்று கலங்கியழும் தலைவியது வருத்தம் தீர, முயங்க, நெஞ்சே! மிக விரைந்து எழுவாயாக', என இடைச்சுரத்துத், தலைமகன், தன் உள்ளத்திற்குக் கூறினான் *[அக.47:3]*.

நமது நெஞ்சை இடமாகக் கொண்ட தலைவனது மார்பினைக், காரணமாக உடையது, என, நம் தாய்க்கு அறிவிப்பேம் கொல், அறிவியேம் கொல், எனும், இருவகைப்பட்ட ஆராய்ச்சி ஒரு முடிபிற்கு வந்துள்ளது. உயிர் பிரிவதாயினும், பசலை, காமநோயால் உண்டாயது என உரையாதே! எனத், தோழிக்குத், தலைவி உரைத்தாள் *[அக.52:9]*. 'நின்தோழி (தலைவி), தலைவனுடன் மலையைத் தாண்டி உடன்போயது பற்றி வருந்துகின்றேனல்லேன். மறவரது சீறூரில், இரவில் தங்கித், துயிலாதவளாகி, ஏறுகொள்வதற்கு அடிக்கும் பறையின் ஒலியினைக் கேட்டு, அழுவாளோ என, நினைந்தழும் என்னெஞ்சு', எனத் தலைவி புணர்ந்துடன் சென்ற பின், செவிலி, தன் மகளுக்குக் கூறினாள் *[அக.63:19]*. நெஞ்சே! தலைவியின் நெற்றி பசந்திடவும், பொருள் ஈட்டுதற்குச் செல்லுதல் நன்றென எண்ணுதியாயின், மிகவும் கொடியவற்றை ஆய்ந்து கொண்டனையாவாய்; பிட்டன் போரில் எடுத்த வேல் போல, நம் தலைவியது நீரொழுகும் கண்கள் துயரினைத் தருமாதலால்', எனப், பிரியக் கருதிய உள்ளத்திற்குத், தலைமகன் உரைத்தான் *[அக.77:4]*. 'என் நெஞ்சே! நிலையில்லாத பொருளின் மேலுள்ள பற்றினால் பிரிதலுற்ற நீ, காட்டில் நம்மொடு துணையாகச் செல்வேம் என்னாது வருந்துகின்றனை', என, இடைச்சுரத்துத், தலைமகன் தன் உள்ளத்திற்குரைத்தான் *[அக.79:11]*. 'நெஞ்சே! காட்டில் நீ மிகவும் வருந்தினை; இனி, நம் மாளிகையின்கண், மகிழ்வாயாக', என வினைமுற்றி மீளும் தலைமகன், தன் உள்ளத்திற்குக் கூறினான் *[அக.87:12]*. 'நெஞ்சே! உறவினரைத் தாங்கவும், கிளைஞர் உண்ணவும், நொதுமலாளர் நண்பராகவும் வேண்டிப், பொருளீட்டும் ஊக்கங் கொண்டு, உறந்தையன்ன செல்வம் ஈட்டிச், செய்வினை முடித்தனமாதலின், மனையின்கண்ணே, தலைவியை, ஆன்பொருநையின் மணலினும் பலவாக, முயங்குவோமாக', எனத், தலைமகன், தன் உள்ளத்திற்கு உரைத்தான் *[அக.83:16]*. நெஞ்சே! நம் தலைவி, காட்டின்கண், வரிநிழலில் தங்கி, நம்முடனே வரும், என்பர்; ஆகலின், நாம் நகையுடையேமாயிராநின்றேம்;' எனத் தலைமகன், தன் உள்ளத்திற்குச் சொல்லினான் *[அக.121:1]*. 'நெஞ்சே! குன்றத்தினைக் கடந்து பொருளீட்டி வருதலுஞ்செய்திலை; நம் தலைவியின் ஆகத்தில் பொருந்தி, மனையில் தங்கிவிடினும், வறுமையை அஞ்சாநின்றாய். கடல் நீர்போல, அலைந்து உறுதி கொண்டிலை. நீ வருந்துதலை யுடையையாவாய்', எனத், தலைமகன், இடைச்சுரத்துத் தன் உள்ளத்திற்குக் கூறினான் *[அக.123:8]*. 'இளைய தலைவியின் பின்னே தாழ்ந்து நிற்றலை விடாத அறியாமை மிக்க நெஞ்சே! பலவும் எண்ணி வருந்துதல் அன்றியும், எவ்வி யென்பான் தணிக்கவும் தணியானாகித், திதியன் என்பானோடு போரிட்டிறந்த அன்னி என்பானைப் போல, இறந்துபடுவை போலும்', என ஊடற்கண், தலைமகன் தன் உள்ளத்திற்குரைத்தான் *[அக.126:22]*. 'நம் காதலர் காடுகடந்து சென்றனர், ஆதலின், அவரைப் பிரியார் எனத் தெளிவுற்றிருந்த என் நெஞ்சு, ஈரேழு வேளிரால் தாக்கப்பெற்ற, கழுவுள் என்பானது காமூர்போலக், கலங்காநின்றது. யான், ஆதிமந்தி போல, அறிவுதிரிந்து மயங்கினேன்', எனப் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் சொல்லினாள் *[அக.135:14]*. 'தோழி! நம் தலைவன் இரவுக்குறி வரும், இன்னாத நெடிய வழியை, என்னெஞ்சு நினைந்து கவலும்; (அதனால்) யான் சிறிது வருந்திய துன்பத்தினைக் கண்டு, நம் அன்னை, வாச்சியம் ஒலிக்கக், கை தொழுது முருகனை மனைக்கண் வருவித்து, ஆடுதல் நன்றாகுமோ' எனத், தலைமகள் கூறினாள் *[அக.138:20]*. உறங்குவது போல இருண்டு, கண்ணிமைப்பதுபோல மின்னி, நீரைக் கொண்டு ஏறுவது போல உயர்ந்து, நிலமகள் (மக்கள்) நெஞ்சு துணுக்குற ஒழியாது இடித்து, நீரைச் சொரிந்தது கார் காலம் *[அக.139:4]*. 'தோழி! இரவுதோறும் கனவும் மிக இனியவாகின்றன. நனவிலும், மனையில் புள்நிமித்தங்கள் நல்லனவாகின்றன. என் நெஞ்சும், மிகவும் விருப்பம் மேவி அமைதியுற்றிருக்கும். (எனவே) மதி, கார்த்திகையைச் சேரும் நடு இரவில், தெருக்களில் விளக்கேற்றி, மாலைகளைத் தொங்கவிட்டு, விழவினை நம்முடன் கொண்டாட, வருவாராக', எனத் தோழியிடம் கிழத்தியுரைத்தாள் *[அக.141:4]*. 'நெஞ்சே! நம்

தலைவி இனிய மொழிந்து, வடுவுண்டாகத் தழுவினாள். எனவே, மாந்தரம் பொறையன் கடுங்கோ என்னும் சேரமன்னனைப் பாடிச் சென்ற வறியோரது பிச்சை ஏற்கும் கலம்போல, இனிப் பெரிதும் நிறைவுற்று மகிழ்வாயாக', எனத் தன்நெஞ்சிடம் இரவுக்குறிவந்து நீங்குத் தலைமகன் கூறினான் *[அக.142::7]*. 'அவரிடத்தினின்றும் அருள் மாறினும் மாறுக, எனச், சிறியவாகச் சொல்லிப், பெரியவாக வருத்தமுறுவளாயினும், போரின் வென்ற செல்வத்தை, உரைக்கக், கேட்கும்போது நம்முடன் கூட்டம் பெற்றவளைப்போல மகிழ்வள் அன்றோ, நெஞ்சே!' என வினைமுற்றிய தலைமகன் உரைத்தான் *[அக.144:11]*. 'சுரத்தின் நீண்ட வழியே சென்று, அரிதாக ஈட்டும், சிறந்த பொருளை, எளிதாகப் பெறுவதாயினும், இவளது கண்கள் நீரினைக் கொள்ள, வாரேன், வாழிய நெஞ்சே!' எனத் தலைமகன் சொல்லிச் செலவழுங்கினான் *[அக.149:7]*.

'நம் நெஞ்சு நடுங்குதற்குக் காரணமான, பிறிதொன்றால் தீர்தற்கரிய துன்பந், தீரவந்து கூடித், தனது சிறிய ஊர்க்குச் செல்ல மீள்வோள் தோள்கள், செய்மைக்கண் உள்ளனவாயினும், நாம் நடுங்கத் துயரினைத்தரும்' என இரவுக்குறி வந்து நீங்குந்தலைமகன் தன் உள்ளத்திற்குக் கூறினான் *[அக.152:1]*. 'அச்சம் வருகின்ற சுரநெறியில், தமியராகச் செல்லுந் தலைவர், போர் நிகழ்ச்சியால் குடிகள் பெயரப், பொலிவழிந்த மன்றிலில், மழையால் நனைந்து, வெயிலால் காய்ந்து, வேலைப்பாடழிந்த பாவைபோலத், தனித்திருக்க வல்லார்க்கு, அவர் தம் நெஞ்சு விரும்பி ஏற்றுக்கொள்ளும்படி, தம் செலவைச் சொல்லுவர்; யான் அவ்வாறு தனித்திருத்தலை மாட்டுகிலேன்', எனத் தோழிக்குத், தலைமகள் சொல்லினாள் *[அக.157:10]*. 'இவள் விளக்கின்றித் தனியளாக இருத்தற்கும் நடுங்குவள். கூகை குழறினாலும் நெஞ்சு நடுங்கிப் பாதுகாப்பான இடத்திற்கு வந்து விடுவாள்', எனத் தலைமகன் சிறைப்புறத்தானாகத், தோழி, செவிலிக்குரைத்தாள் *[அக.158:14]*. 'வாடைக்காற்றே! இவள் அளிக்கத்தக்காள், என்று நினையாது, நீ என்பாலே, நலிய வந்தனை போல்கின்றாய். நீரோடுங், காலில், மணல்மேடு கரைவது போல, நெஞ்சு கரைந்து இளகக் கொடியராய தலைவர் சென்ற திசையில் செல்வாயாக', எனத், தலைமகள், ஆற்றாமை மீதூரக் கூறினாள் *[அக.163:11]*. 'நெஞ்சே! தலைவியுடன் பள்ளியின்கண் தங்குதலாலே, இன்றைப் போழ்து இனிதாகக் கழிந்தது. நாளை (சுரநெறியில்) கூரைமடிந்த அம்பலத்தில் தனிமை வந்தடையத், துயிலாத கண்களையுடையேமாய்த் தங்கியிருப்பேமோ? எனத், தலைமகன், பொருள் கடைக் கூட்டிய உள்ளத்திற்குச் சொல்லிச் செலவழுங்கினான் *[அக.167:7]*. 'குழுமூரிடத்தே, ஈகைக்கடனை ஏற்றுக்கொண்ட, கோட்டமில்லாத நெஞ்சினையுடைய, உதியன் என்பானது அடுக்களை போல, ஒலிக்கும் அருவியையுடைய, மலைச்சிறுநெறியில், நீ வருதலை, இனி ஒழிதல் வேண்டும்' எனத், தோழி இரவுக்குறி விலக்கி, வரைவு கடாயினாள் *[அக.168:6]*. 'கொடிய சுரநெறியைக் கடந்து சென்ற நம் காதலர், நம் நெஞ்சு உணருமாறு, கடிய சூளுரைத்தும், என் முன்கைபற்றித் தலையளி செய்தும், மழை பெய்யுங் காலத்து வினையை முடித்துக் கொண்டு மீண்டு வருவேம் என்றாரன்றோ? (அங்ஙனம் வந்திலரே) எனத் தலைமகள், தோழிக்குக் கூறினாள் *[அக.175:6]*. 'நம் தலைவி இருந்த மணற்குன்று, புகாரையுடைய சோழநாட்டின் கண்ணதாகும். (நீ) காட்டைக் கடக்கவும் துணிவுறல் செய்யாய். பின்னே நின்று மீண்டிடக் கருதினையாயின், நெஞ்சே! எனது இந்நிலையினை ஆண்டுச்சென்று, அவட்கு உரைப்பாயாக', எனத், தலைமகன், இடைச்சுரத்துத், தன் உள்ளத்திற்குக் கூறினான் *[அக.181:3]*. 'நெஞ்சே! அரிது ஈட்டும் பொருளை விரும்பித் தலைவியைப் பிரிந்துறையும் வன்மையுடையையாய், வினையை எண்ணுவையாயின், அவளிடம் சென்று பெரிதும் கூறித் தேற்றுவாயாக, அவள் தெளிந்திருப்பாள் என்று பிரிவுணர்த்தும் வலிய சொற்களைக் கூறவும் வன்மையுடையையோ', எனத், தலைமகன் நெஞ்சிற்குக் கூறினான் *[அக.191:13]*. 'நெஞ்சே! நம் இனிய மொழியை விரும்பிப், பாதியிரவில், நம்மைத் தழுவி மீள்வோள், பெண்ணோ அல்லள்; சூரரமகளேயாவள், என்பேம்', எனப் புணர்ந்து நீங்கிய தலைமகளது போக்கு நோக்கிய தலைமகன், தன் உள்ளத்திற்குரைத்தான் *[அக.191:17]*. 'நெஞ்சே! காடு பிற்பட, நம் தலைவியைப் பிரிந்து போவேமாயின், எம்போக்கு, நன்றாகும் என்றெண்ணும் பொருட்பிணியுற்ற உள்ளம் செலுத்த நீ செல்லுதற்கு உரியை;யானோ, நன்னன் போரில் மடியக், களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் பெற்றாலொத்த செல்வத்தைப் பெறினும், நம் தலைவி இவண் தனித்தொழிய, வாரேன்', எனத், தலைமகன், தன் உள்ளத்திற்குக் கூறினான் *[அக.199:16]*.

'நெஞ்சே! தெய்வத்தின் இயல்புடைய மகளை விரும்பிப், பெறுதற்கு அரியள் என்னாது, என்னைத் துன்பத்துக்கண்படுத்த, நீ, குட்டுவனது வேல், நின் மார்பில் தைத்து அழுந்திட, நினது மிக்க செருக்கு அழியப் பெறுவாயாக', என அல்ல குறிப்பட்ட தலைமகன், தன் உள்ளத்திற்கு உரைத்தான் *[அக.212:21]*. 'ஒன்றனையொன்று பிரிந்திருத்தலைப் பொறாத மகன்றிலைப்போல, ஒருவர் நெஞ்சிலே ஒருவர் பொருந்தி நீங்காத புணர்ச்சியினாலே, இவள் தோள்கள் அழகுகெடாமைக்கு ஏதுவாய, பாதுகாவலைக் கூறுவாயாக', என, இரவுக்குறிவந்து நீங்குந்தலைமகனிடம், தோழி சொன்னாள் *[அக.220:14]*. 'நெஞ்சே! தலைவியோடு, ஒன்று பட்டுத் தழுவி, இன்று இவ்விடத்தேம் ஆகி, நாளை, பாலைவழியிலுள்ள, சிறிய ஊரின்கண், நம் காதலியின் அறிவு கலங்கிய பார்வையினையும், புலவியினையும் நினைந்து (தனித்துத்) தங்கியிருப்போமோ?' எனப், பொருள்கடைக் கூட்டிய உள்ளத்திற்குத், தலைமகன் உரைத்தான் *[அக.225:14]*.

'பகைவர் செருக்கறுத்தலும், சேர்ந்தார்க்கு உதவி செய்தலும், மடியால், இல்லத்திருப்பார்க்கு இல்லையாகும், எனும், நாணுடைய மனத்தர், சுரத்தைக் கடந்தனராயினும், நினைந்து, தம் நெஞ்சு உருகுதலால் விரைந்து வருவர்', எனத், தலைமகட்குத், தோழி கூறினாள் *[அக.231:9]*. 'தோழி! நம் தலைவனது காமம், பெருமை இவற்றினை அறியாதேன், நாணியிருந்த இருக்கையினைக் கண்டு, மடமையால் உருகப்பெற்ற நெஞ்சினேன் ஆயினமையின், அவனை ஏற்று, ஆட்டன் அத்தியாகிய கணவனையிழந்த ஆதிமந்தி போல, மயங்குதலினின்றும் தப்பினேன்! எனத், தலைமகள் தோழியிடம் கூறினாள் *[அக.236:13]*.

'நெஞ்சே! நன்னன் உதியனது பாழிச் சிலம்பில், வேளிர் பாதுகாவல் செய்து வைத்த பொன்னைக் காட்டிலும் அரியளாதலை அறிந்தும், காமம் கைம்மிக, அரிய துன்பினைத் தந்தாய். ஆதலால் இருளுடைய குகையில், ஒளியின்றி மறையும் மணிபோல, ஒளியிழந்தொழிவாயாக', என, அல்லகுறிப்பிட்ட தலைவன் சொல்லினான் *[அக.258:8]*. 'என் நெஞ்சு விரும்பும் தகுதியையுடையோய்! இளவேனிலில், மாலை தூதாக வந்தது; கலங்கா மனத்தையாகி, என்சொல் கொள்வாயாக; உடன் போக்கினைத் துணிவாயாக; எனத், தோழி, தலைமட்குரைத்தாள் *[அக.259:12]*. பாதியிரவில், நெஞ்சு உருகுந் துன்பினைச் செய்த, அன்பில்லாதவனது, அறிவுடை மொழியை மெய்யென விரும்பினேன்', எனத், தலைவி கூறினாள் *[அக.260:14]*. 'நம் நெஞ்சு நெகிழத் தக்கனவற்றைக் கூறி, அன்பினால் உள்ளங்கலந்து, பிரியாமைக்குரிய சூளுறவு செய்த, நம் தலைவர், பொருள் விரும்பி வேறாயது என்னையென்று வருந்துதல் ஒழிவாயாக. அவர் பழியுடையோரல்லர். விரும்பிவந்தாரைவிடாது பற்றிக் கொள்ளுதலை யறியாவாய, நம் தோளே தவறுடையன', எனத் தலைமகள் கூறினாள் *[அக.267:1]*. 'நெஞ்சே! நம் காதலியின், தோளின் மாண்புற்ற அழகினை, அரிய சுரநெறியைக் கடந்து வந்து நினைத்தனை', என, இடைச் சுரத்துத் தலைமகன் நெஞ்சிற்குக் கூறினான் *[அக.291:22]*. 'நம் காதலர் வெஞ்சுரத்தில் தனித்துச் செல்வார், என்பர். (அதனால்) தாயைப் பிரித்துக் கட்டிய, நெஞ்சு விரும்பிய கன்று போல, யாம் மிகநொந்து இன்னாதவற்றை மொழிகின்றேம்' என்றுங்கூறுவர்', எனத் தலைமகள், தோழிக்குச் சொன்னாள் *[அக.293:12]*. 'அச்சம் வரும் காட்டிற்கு நம்முடன் வருவேன் என்று, கூறி இரவிலும், மாலையிலும் வருத்தத்துடன் கலங்க, நம்மை நீத்தலாலாகும் துன்பம், நம் தலைவிக்கு அளவு கடத்தலின், நெஞ்சே! நம் பால் என்ன தீங்கு நிகழுமோ?' எனப், பொருள்வயிற் போகாநின்ற தலைமகன் கூறினான் *[அக.297:4]*.

'இருவர் நெஞ்சும் ஒன்றுபடுதலின் (வரைந்து கோடலாகி) ஒன்றனையே விரும்பி, இரவில் வரும் துன்பம் அகல, வரைந்து கொள்ளலை எண்ணுமாகலின், ஊர் அலரைப் போற்றாது, அருவிநீரில் நம் தலைவன் மார்பே தெப்பமாக மகிழ்ந்து விளையாடுவேம்', என்று தலைவன் சிறைப்புறமாகத் தோழி கூறினாள் *[அக.312:1]*. கார்ப்பருவ மாலைக் காலத்தில் வாராராயின், அவர்தம் நிலை யாதாகுமோ, எனத் தலைவி கூறச், செயலற்ற மயக்கம் பொருந்திய நெஞ்சில் வெறுப்புத்தரும் துன்பம் அகலத், தலைவ! நீ வந்துற்றனை, எனத், தோழி கூறினாள் *[அக.314:16]*. பொதியில் மலையினைப் போலப், பெறுதற்கு அருமையாயவள், நம் தலைவி (அதனையுணராது); நடு இரவில், காமம் அலைத்திட, மலையுச்சியினின்றும் வீழ்ந்திறப்பார் போல, நடுங்கித் தமித்திருந்து வாடுவையோ! நெஞ்சே!" என, அல்ல குறிப்பட்ட தலைமகன் உரைத்தான் *[அக.322:6]*. 'உறுதியற்ற நெஞ்சே! இன்பம், இடும்பை, புணர்வு, பிரிவு என்பன வேறுவேறாகி எதிர்நிற்பன என நீ உணர்ந்தனையாயின், இவளை நீங்கிக், கொடிய சுரநெறியில், பொருள் வேட்கை செலுத்த, நீ சென்று சேர்தலும் தருவதாமோ, எனப், பொருள் கடைக்கூட்டிய உள்ளத்தினை தலைவன் கழறினான் *[அக.327:6]*. 'தலைவியை அணையாக்கால், (வருந்த) வன்சொற்கூறி ஒறுக்கவும், ஒழிவாய் அல்லை; இன்சொற்கூறி நிறுத்தவும், நிற்பாயல்லை; நெஞ்சே! உனக்கு யான் உறவினன் அல்லனோ? உள்ளம் ஒன்றிய நண்பரைப்போல யான் கூறுவதனைப் போற்றுவாயாக. மலையில் குகையில் மறைந்த, வரையர மகளிர் போல, அரியள் (அவள்), என, அல்ல குறிப்பட்டுத் தலைமகன் கூறினான் *[அக.342:3]*. 'நெஞ்சே! நம் தலைவியைப் பிரிந்து வந்த, நீ, மிக்க முயற்சியினை விரும்பி நின்றனை, (ஆயின் இப்போது) தலைவியின் அழகிய ஆகந்தழுவுதலை விரும்பி, இம்முயற்சியினைக் கைவிட நினைத்தாய்,' எனத், தலைமகன், இடைச்சுரத்துத், தன் உள்ளத்தைக் கழறினான் *[அக.343:16]*. 'நம் தலைவனது உறுதியில்லாத இனிய சொல்லை மெய்யெனத் தெளிந்த நெஞ்சே! இனி நமக்கு என்ன தீங்கு உறுமோ?' எனத் தலைமகன் சிறைப்புறத்தானாகத், தலைமகள் சொல்லினாள் *[அக.348:14]*.

'நெஞ்சே! கேட்பாயாக. பொருள் முயற்சியால் நாம் இனிப், பிரிதலும் கூடுமோ? நாளின் கழிதலும், மூப்பின் வருகையும், காமத்தின் தன்மையும், நீ இப்பொழுது அறிந்திலையாயினும் பாலையைக் கடந்து நம் தலைவியின் குணங்களை நினைந்து, மயங்குவாய் அல்லையோ, எனத், தலைமகன் மீண்டும் பொருள் கடாவின தன் உள்ளத்திற்குக் கூறினான் *[அக.353:2]*. 'மிக்க காம நுகர்ச்சியினும், மேம்பட்டதோர் இன்பம் இல்லை, எனக் கூறிய என் மொழியினைக் கொள்ளாது, பொருளை விரும்பி வந்த மயக்கத்தினையுடைய நெஞ்சே!. இப்போது, நம் தலைவியின் தோளினை நினைத்தலை ஒழிவாயாக', எனத், தலைமகன் கூறினான் *[அக.361:9]*. 'நெஞ்சே! கொடிய சுரநெறியில் என்னை அழைத்து வந்த நீ, ஆற்றாயாகி, மீண்டு கழுவுள் என்பானது காமூரின் கண்ணுள்ள வேங்கையின்

புதுமலர்போல், நாறும் கூந்தலையுடைய நம் தலைவியின் குணத்தினை நினைப்பாயாயினை, எனத், தலைவன் நெஞ்சிற்குரைத்தான் *[அக.365:11]*. 'நெஞ்சே! நம் தலைவியது பண்பு நினைந்து, மணியினை இழந்த பாம்பைப்போல, நீ மிகவும் வாடுதலுற்றனை. நம் காதலி, பகைவர் தனிதற்கேதுவாகிய மதில்போலக், காவல் மிகுந்து, அடைவதற்கு அருமையையுடையவளன்றோ?' என, அல்லகுறிப்பட்ட தலைமகன் கூறினான் *[அக.372:14]*. முயலுதற்கு முற்பட்ட வலியநெஞ்சே! யான் கூறுவனவற்றைக் கேட்பாயாக; செல்வம் கனவில் தோன்றி மறையும் தன்மையது. தலைவியை முயங்கும் முயக்கத்தினும் மேம்பட்ட பொருளைக் கண்டதில்லேன்' எனப், பின்னும் பொருள்கடைக் கூட்டிய உள்ளத்திற்குத் தலைவன் கூறினான் *[அக.379:4]*. 'நெல்லும், உப்பும் விலை ஒப்பாகும்; கொள்ளீரோ எனச் சேரிதோறும் விற்கும் நின் உப்பின் (உடலின்பத்தின்) விலையறியேம் என, நகையுடையளாய்ச் சென்ற மாண்புற்ற பேதையின் பொருட்டு, என் நெஞ்சு வலியிழந்து சென்றது' எனத், தலைவன், பாங்கற்குக் கூறினான் *[அக.390:17]*.

என்னெஞ்சு வருந்தா நிற்கும்; என்னெஞ்சு வருந்தாநிற்கும்; இமையைத் தீயச் செய்யும் கண்ணீரைத் துடைத்து, அளவளாவுதற்கு அமைந்த நம் தலைவர், இப்பொழுது மனம் பொருந்தாராய்ப் பிரிந்திருத்தலால், என்நெஞ்சு வருந்தாநிற்கும்', எனக் கிழத்தியுரைத்தாள் *[குறு.4:1(2)4]*. 'நாளும் இமை பொருந்துதல் இல்லாதனவாகிக், கலங்கியழும் கண்ணோடு, தனித்து வருந்தி இங்கே தங்குதலினின்று தப்புவேமாக. அவருடைய நாட்டினிடத்துச் செல்லுதலை எண்ணினேன். நெஞ்சே! இப்பொழுதே எழுவாயாக', எனத் தன் நெஞ்சிற்குத் தலைவி கூறினாள் *[குறு.11:4]*. 'நெஞ்சே! இவள் நமக்கு எத்தகைய உறவினை உடையவளோ? ஏதிலாள் போலும். எவ்வியென்னும் வள்ளலையிழந்த யாழ்ப்பாணரது பொற்பூவில்லாத வறிய தலை போன்று, பொலிவிழந்து வருந்துவாயாக', என, ஊடிய தலைமகன் கூறினான் *[குறு.19:3]*. 'நெஞ்சே! மழை நீரை ஏற்றுக்கொண்ட பசுமட்பாண்டத்தைப் போல, உள்ளத்தால் பொறுக்க முடியாத வேட்கை வெள்ளத்தில் நீந்தி, அரியது பெற அவாவுற்றனை', எனக், குறி மறுக்கப்பட்ட தலைமகன் கூறினான் *[குறு.29:4]*. 'நின் நெஞ்சு இடமாக இருந்து, பிரியேன் யான்', என்று, என் தோளை அணைந்தபொழுது தலைவன் வஞ்சினம் கூறியது, நின் திறத்தில் நோயாகுமோ', எனக் கூறித் தோழியைத், தலைவி ஆற்றுவித்தாள் *[குறு.36:3]*. 'தலைவ! இப்பிறப்புமாறி, வேறு பிறப்பு உண்டாயினும், என் கணவன் நீயே யாகுக. நின் நெஞ்சிற்கொத்தவள் யானே ஆகுக', என்பது தலைமகள் கூற்று *[குறு.49:5]*. 'வேட்டைச் செந்நாய் உண்டு எஞ்சிய அழுகல் நாற்றமுடைய நீரை, வளைக்கை கொண்டு, எம்மொடு சேர்ந்து உண்ணுதற்கு இப்பாலைவழி வருக. என் நெஞ்சில் விரும்பிப் பொருந்திய என்தலைவி மிக இரங்கத்தக்காள்', என, இடைச்சுரத்தின் பொல்லாங்கு கண்டு, தலைவன் உரைத்தான் *[குறு.56:5]*. 'வேண்டியார்க்கு ஈதலும், இன்பங்களை நுகர்தலும் பொருளிலார்க்கு இல்லையாகும் எனக் கருதிப், பொருள் செய்தற்குரிய செயல்களை மிக எண்ணாநின்றாய். அதற்குத், தலைவியும் வருவாளோ? நெஞ்சே! உரைப்பாயாக', எனப்பொருள் கடைக்கூட்டிய உள்ளத்திற்குத் தலைவன் கூறினான் *[குறு.63:4]*. 'நெஞ்சே! நம் தலைவனுக்குரிய மனைவியாக இருப்பின் நின் உள்ளத்தில் துன்பம் பலவாகுக. அஞ்சியான் போர்க்களத்தில், இரவில் ஊரிலுள்ளார் போல, நீ துயிலும் நாள் நிலவாகுக', எனப், பரத்தையர்ப் பிரிந்து வந்த தலைமகன்மாட்டு, நெகிழ்ந்த நெஞ்சம் நோக்கித், தலைவி கூறினாள் *[குறு.91:4]*. 'நெஞ்சே! பொருளில்லாதவன் இன்பத்தை விரும்பினாற் போலப், பெறுதற்கரியதை விரும்பினாய்; நம் தலைவி, நமக்கு நன்மை தருபவள் ஆதலை அறிந்தது போலப், பெறற்கரியவளாதலை அறியாயாயினை', என, அல்லகுறிப்பட்டுத், தலைமகன் கூறினான் *[குறு.120:2]*. 'கீழ்கடற்கண்ணதாகிய சிறகு நீங்கிய நாரை, மேல் கடற் கண்ணதாகிய, பொறையனது தொண்டியெனும் கடல் துறையில், அயிரை மீனை அவாவுற்றதுபோலச், சேய்மைக்கண்ணுள்ளவளும், பெறற்கரியவளுமாகிய தலைவியைப் பெற நினைந்தாய். நெஞ்சே! நீ வருத்தத்தையுடையாய்' எனத் தலைமகன் நெஞ்சிற்கு உரைத்தான் *[குறு.128:4]*. 'தலைவி இருந்த ஊர், நெடுந்தொலைவில், அடைவதற்கரிய இடத்திலுள்ளது. எனவே என் நெஞ்சு, ஈரம்பட்ட நிலத்தை உழக் கருதும் ஒரே ஏரையுடைய உழவன்போல, பெருவிரைவை அடைந்தது', என்பது வினைமுற்றிய தலைமகன் கூற்று *[குறு.131:3]*. 'நிலையாமையே இவ்வுலகில் நிலை பெறப், புகழை விரும்பும், நடுநிலைமை நெஞ்சுடைய ஒப்புரவாளன் செல்வம்போல், நின் பசலை தங்குவதற்குரியமையுடையதன்று', எனத் தலைமகட்குத், தோழி கூறினாள் *[குறு.143:4]*. 'மாலையில் யாம் தமியேமாகப், பிரிந்த தலைவர், தாம், தமியராக இருக்க, இனியராவரோ? ஏழு ஊரிலுள்ளார்க்குப், பொதுச்செயலுக்கு, ஒரூரின்கண்ணுள்ள உலைத்துருத்தி போல, எல்லையறியாது என் நெஞ்சு வருந்தும்' எனத் தலைமகள் கூறினாள் *[குறு.172:7]*. 'நமக்குப் பற்றுக்கோடாகிய தலைவன் எங்கிருக்கின்றானோ? மழைநீர் கலங்கி வருவதுபோல, என் நெஞ்சு கலங்கும்', எனத், தோழி குறைநயப்பக் கூறினாள் *[குறு.176:7]*. 'தலைவன் கல்லைக் காட்டிலும் வன்மையுடையவன். அவ்வாறு கருதாது அவன் திறத்து மெலிவை அடையும், என் நெஞ்சு', எனத், தலைவி கூறினாள் *[குறு.187:5]*. 'நெஞ்சே! தலைவியை இப்பிறவியின்கண் பெறுவது நமக்குக் கூடாது, ஆயினும், இன்று போன்ற நட்போடு, இக்காமநோய், அழிவென்பதொன்றுமின்றி, மறுமையில் அடையும் பயனொன்று உண்டு', எனச் செறிப்பறிவுறுப்பக்,கிழவன் கூறினான் *[குறு.199:2]*. 'தோழி! என்னெஞ்சு வருந்தும்; என்னெஞ்சு வருந்தும்;

நெருஞ்சியினது இனிய புதுமலர் முள்ளைத் தந்தாற்போல, முன்பு நமக்கு இனிய செய்த நம் தலைவர், இப்போது, இன்னாதன செய்தொழுகுதலால், என்நெஞ்சு வருந்தும்' எனத் தலைவி உரைத்தாள் *[குறு.202:(2)4]*. நம்மோடாகும் இனிய துயிலை வெறுத்துப் பிரிந்த நம் காதலர் சென்ற வழியில் குற்றமில்லாத நெஞ்சினோடு, துள்ளி நடக்கும் இயல்பினையுடைய குட்டிக்கு நிழலாகி நின்று ஆண்மான் வெயில் நீக்கும் என்பர், என்பது தோழி கூற்று *[குறு.213:4]*. 'தோழி! நம்மைப் பிரிந்து சேய்மையிலுள்ள நாட்டில் இருப்பவராயினும், நெஞ்சிற்கு அணிமையிடத்துள்ளார்', எனத், தலைவி கூறினாள் *[குறு.228:6]*. அஞ்சுதலை அறியாமல், நம் தலைவியைத் தழுவும் பொருட்டு, என் நெஞ்சு நம்மைப் பிரிந்து சென்றது. கையால் தழுவுதல் நெகிழுமாயின் நெஞ்சு தழுவியதனால் பயன்யாது?' எனத், தலைமகன், தேர்ப்பாகனுக்குக் கூறினான் *[குறு.237:2]*. 'நாழிகைக்கணக்கர் இரவில் காலக் கணக்கை ஆராயும் திறத்தைப் போல, ஆய்ந்து வருந்தி, நெஞ்சு புண்பட்ட துன்பங்காரணமாக, இரவில் அச்சம் உண்டாகின்ற காலத்திலும், என் கண்கள் தூங்காவாயின', எனத், தலைவன் சிறைப்புறமாகத், தலைவி சொல்லினாள் *[குறு.261:8]*. 'என்னுடைய நெஞ்சினைத் தன்னிடத்திலே பிணித்துக்கொண்ட தலைவியினது ஆகத்தை, ஒருநாள், ஐம்புலனும் பொருந்தப் புணரின், பின், அரை நாளேனும் வாழ்தலை விரும்பேன்', எனத் தலைமகன், பாங்கனுக்குரைத் தான் *[குறு.280:2]*. 'என் நெஞ்சே! மெல்லிய, இனிய, விரும்பத்தக்க சொற்களை மொழியேம் எனச் சொல்லினும், நம், தலைவனைக் கண்டபின், நான் கூறியவற்றை மறந்து விடுகின்றாயோ?' எனக், கிழத்தி நெஞ்சிடம் கூறினாள் *[குறு.306:3]*. 'தலைவர் இருந்த என்நெஞ்சு, காமம் மிக்கதாயினும், தலைவரை நினைந்து சென்று, அவர் திறத்து வருந்தினேமாயின், நம்முடன் இருப்பதாகி, அவ்விரண்டினிடையிலும் சென்று வருந்தும்', எனத், தலைவி கூறினாள் *[குறு.340:7]*. 'என்நெஞ்சு நிறுத்தலைச், செய்ய இயலாது. தலைவர் என்பால் அன்பின்மையால் அருளைப் பொருளென்று கருதாராயினர். அவர் தங்குமிடத்திற்கு நாம் சென்றால் அருளைப் பொருளென்று கருதாராயினர். அவர் தங்குமிடத்திற்கு நாம் சென்றால் நம் நாணம் இரங்கத்தக்கதாக அழியும் என்பது தலைமகள் கூற்று *[குறு.395:1]*.

தலைவியைப் புணரத்தங்கின், பொருள் வந்து கூடுவதன்று. பொருள்வயிற்பிரியின், இவளைப் புணரும் புணர்ச்சி அடையப் பெறுவதொன்றன்று, இவற்றுள் நல்லதொன்றைச் செய்தற்கு உரியை. நிலன் மரக்காலாக, ஏழு மரக்கால் பொருள் பெறினும், வாரேன்! வாழிய நெஞ்சே எனத் தலைவன் கூறினான் *[நற்.16:4]*. நெஞ்சே! அருவிநீராடிக், குறிக்கப்படாத பார்வையையும், புன்னகையையும் நமக்குத் தந்து, தனது மனையிடத்துச் சென்று விட்டபிற்பாடு கருதிவந்த நினக்கோ அறியத் தக்காள்?' எனத், தலைமகன் நெஞ்சிற்கு உரைத்தான். *[நற்.44:5]*. 'யாம், இவள் முயக்கத்தினின்றும் நீங்க மாட்டுகிலோம். நீ தானும், முயற்சியை மேம்படக் கருதி இவளைப் பிரிந்துறையும் வாழ்வை விரும்பிய மயக்கத்திலுள்ளாய். ஆதலின், நீ என்மாட்டு அன்பினை யுடையயை யல்லை; வாழ்க, எம் நெஞ்சே!' எனத், தலைமகன் செலவழுங்கினான் *[நற்.52:8]*. 'இரவில் வேட்கை துன்புறுத்தலால் வருந்தினேனாக, அன்னை, தூங்குவாயல்லையோ என்றலும், வெளியிலே தெரியாதபடி மெல்ல என்நெஞ்சினுள்ளே, தலைமகனைக் கருதியிருப்போர்க்குக் கண்ணுறக்கமும் வாராநிற்குமோ என்றேன்', எனத், தோழி கூறினாள் *[நற்.61:6]*. 'இளையமங்கையர் தோழியர் கூட்டத்தோடு விளையாடாமல் இற்செறிக்கப்பட்டிருத்தல் அறநெறியுமன்று; ஆக்கமும் தேயும். எனவே பொங்கி வருகின்ற புதுநீரை நெஞ்சு மகிழ ஆடாநிற்பேம்; எனத், தோழி கூறினாள் *[நற்.68:5]*. 'நெஞ்சே! யானை மீதேறித், துடியொலிக்க, வேற்று நாட்டிற்குள் புகுந்து, அவர் அரணை அழித்து, அயாவுயிர்த்தாற்போல, நம் தலைவியது பார்வை தோழிபால் நம்மைச் செலுத்தாநின்றது', எனத், தலைமகன் கூறினான் *[நற்.77:4]*. 'என்னாற் காதலிக்கப்பட்ட கொடிச்சி அச்சீறூரின்கண் இருப்பவள். அவள் இரங்கி விடுத்தாலன்றிப் பிறரால் விடுவித்தற்கும் இயலாததாய்ப் பிணிப்புற்ற என்னெஞ்சு அக்கொடிச்சியின் கையகத்தேயுள்ளது; எனத், தலைமகன், பாங்குற்குரைத்தான் *[நற்.95:10]*. 'நீ வரும் நெறியின் ஏதத்தைக் கருதுவதனாலே, துயிலப்பெறாது, என் கண்ணும் கொடியவாயிராநின்றது. அன்றியும், நின்பாற் சென்று, வாராத, என்பால் அன்பற்ற என் நெஞ்சும் கொடிதா யிராநின்றது', எனத், தலைவனைத் தோழி, வரைவுகடாயினாள் *[நற்.98:12]*.

'செந்நாயேற்றை தன்பிணவைக் கருதி வருந்தும் காட்டின்கண் வந்து வருந்துகின்றோம். பொருள் செயச் செல்வோ மென்றாலும், மீண்டு ஊர் புகுவோம் என்றாலும், நெஞ்சே! நீ துணிந்து ஒன்றனை ஆராய்ந்துரைப்பாயாக!' எனத், தலைவன் கூறினான் *[நற்.103:1]*. நெஞ்சே! நம் காதலி துன்பத்தாலே வருந்தக், கவர்த்த நெறிகளையுடைய சுரமென்று எண்ணாயாய் நெடுந்தொலை வந்துற்றனை', எனத் தலைமகன் கூறினான் *[நற்.105:7]*. 'தோழி! சுரநெறியில் சென்ற நம் காதலர்பால் அவரை வழிபட்டுப்பின்னே சென்றொழிந்த என் நெஞ்சு, நல்வினைப்பட்டு நுகராநின்றது. இங்கே தங்கி, ஊர்ப்பழிச்சொல்லைப் பெற்ற யான், தீவினைப்பாற்பட்டுத் துன்பத்தை அடையாநின்றேன். இதனை நினைக்குந்தோறும் நகுவேன்', எனத், தலைமகள் கூறினாள் *[நற்.107:8]*. 'இளவேனிற் காலத்தும், பிரிந்தகன்ற,காதலர், நம்மை மறந்தனர், என, வருத்தமுறுவதன்மேலும், பாதிரி மலரைத் தெருத்தோறும் விலை கூறிச், செல்லும் பூவிலை மடந்தையை நோக்குந்தோறும் என்நெஞ்சு நோவாநின்றது, எனத், தலைவி கூறினாள் *[நற்.118:11]*. 'ஊரின்கண்ணே செய்யும்

இல்வாழ்க்கையினும், இனியதொரு பொருளும் உண்டோ? எவ்வளவு விருப்புடையராயினும், எம்மை நினையாதவரானார். அன்றியும், அவர்க்கு உடன்பட்ட நெஞ்சும், நெகிழ்வுற்ற தோளும், வாடிய வண்ணமும் பார்த்துத், துன்புற்றவள், என்ன செய்தனளோ, என்று ஒருநாளேனும் கூறினாரிலர்', எனத், தலைவி கூறினாள் *[நற்.130:7]*. 'தோழி! நம்காதலர் நமக்குத் துன்பஞ்செய்பவரல்லர், விரைய வருவர்; என்னும் உன் அன்பு மிக்க சொல், இரும்புவேலை செய்கின்ற உலையில், தெளித்த, சிலவாய நீர் அவ்வுலை நெருப்பைச் சிறிதவிக்குமாறு போலக், காமநோய் மிக்க என் நெஞ்சிற்குச் சிறிய பாதுகாவலாயிருக்கின்றது", என்றாள், தலைமகள் *[நற்.133:11]*. 'நம் காதலியைப் பிரிதற்கு எண்ணாநின்றனை. அதனை ஆராயுமிடத்து, இதுகாறும் அடைதற்கரியதும், இவளினுஞ் சிறந்ததுமாகிய ஒரு பொருளினை அடைந்தனையாவாய். நெஞ்சே! வாழ்வாயாக', எனத், தலைவன் கூறினான் *[நற்.137:4]*. 'நெஞ்சே! நம்பால் அன்பில்லாத இளமகள், அருள் செய்யினும், அருள் செய்யாது போயினும், பெரிதும் மனமகிழ்ந்து இரந்து வழிபட்டு நிற்றலை வெறாதே கொள். யான் அடைந்துள்ள காமநோயோடு கூடிய துன்பத்தைத் தீர்க்கும் மருந்து, அவளன்றிப் பிறிதில்லையாகும்', எனத் தலைமகன், மொழிந்தான் *[நற்.140:9]*. 'பெருந்துன்பம் வந்து மோதுதலானே குற்றப்பட்ட நெஞ்சத்தின் கொதிப்பானது, நீர் பெய்த நெருப்புப் போலத் தணியும்படி, இன்று அவர் வாராது விட்டாலோ, நல்லதாகும். மலைவழியை நினையுந்தோறும், நிலையில்லாத என் நெஞ்சு, அந்நிலத்தின்கண் பரந்து செல்லும் என்றாள், தோழி *[நற்.154:12]*. 'நம் காதலன் தேர், முன்பு, நம் கண்ணால் காணப் பொருந்தியிருந்தது. இப்பொழுது அது கழிந்தது. அலரால் நாணி நடு இரவிலும் துயில் கொள்ளேன். மணியொலியை மிகத் தெளிந்திருந்த என் நெஞ்சு, பறவையொலியை மணியொலியாகக் கருதி, ஒர்ந்து கேட்குமாறு, அழிவு பொருந்தியதாயிற்று', எனத், தோழி கூறினாள் *[நற்.178:10]*. குருவிச்சேவல் வேற்றுப்புலப் பேடையோடு புணர்ந்து வர, உரியபேடை, தன் பிள்ளையொடு, அதனைக் குடம்பை புகாதபடி தடுக்க, மழையால் நனைந்த சேவலை நினைந்து, அருள் கூர்ந்து, இரக்கமுற்ற நெஞ்சோடு, வருமாறு அழைப்பச், சேவல் செயலற்று அம்மாலைப் பொழுதில் வரும் *[நற்.181:8]*. 'சேந்தன் தந்தை, அழிசியது, ஆர்க்காடு போன்ற, அழகிய தோளையுடைய தலைவியது நகைக்கு மகிழ்ந்ததனால், நெஞ்சே! இப்போது துன்புறுவாய் காண்', எனத், தலைமகன் மொழிந்தான் *[நற்.190:1]*. 'தினைப் புனத்தின்கண்ணே பொழுது போதலும் வருவேனோ? சாரலில் விளையாடுதற்கு வருவேனோ? நின் இனிய மொழியை விரும்புதலால் வருந்துகின்ற என்னெஞ்சு, கொண்டு மகிழும்படி கூறுவாயாக', எனத், தலைமகன் கூறினான் *[நற்.204:5]*. 'புகழ், இன்பம், ஈதல் மூன்றும் இல்லின்கண் செயலற்றிருப்போர்க்கு இல்லையாகும் எனக் கருதிச், சுரும்புண்ணும் மலரை, நின் கூந்தலுக்கணிய, விரைய வருவேம், என, என்னெஞ்சு கொள்ளுமாறு, வஞ்சினம் கூறிப் பிரிந்த நம் காதலர் இக்கார்காலத்து இடி முழக்கத்தைக் கேளாரோ?' எனத், தலைமகள் உரைத்தாள் *[நற்.214:6]*. 'தலைவியைக் கைவிட்டும் பொருளின் முயற்சி இழுத்தலால், என்னெஞ்சு, யான் இவளைப்பிரிகிற்பேன்', என்று, கூறாநிற்கும்; வறுமையால் வரும் இளிவரவு திண்ணமாக மிகக் கொடியதே காண்' எனத், தலைமகன் கூறினான் *[நற்.262:9]*. 'மலைநாடனை நினையுந்தொறும், அவன் இயல்புதரும் கவலையானது, என் நெஞ்சை நடுங்கச் செய்யும்' எனத், தோழி தலைமகட்குரைத்தாள் *[நற்.273:10]*. 'நின்பேடு விரும்புதலும், நீ விரைவாக ஓடிச்சென்று அதன் நெஞ்சு நெகிழப் புணர்ந்து, தலையளி செய்ததன் பயனாகவோ, என்னிடத்து அன்பிலராகிச் சுரத்திற் சென்ற தலைவர்பால் சென்று கூறுவயாக என்று தலைவி, தும்பிக்குக் கூறினாள் *[நற்.277:10]*. 'நெஞ்சே! பொருள் தேடும் விருப்பினாலே செல்லும் குன்றுகளை நினைந்தும், இவளுடைய தோளைப் பலமுறை நோக்கியும், நீ ஒரு நெறியினைக் கடைப்பிடித்து ஒழுகுவாயல்லை', எனத், தலைமகன் சொன்னான் *[நற்.298:8]*. பொருளீட்டுமாறு, நின்னொடு வந்திலேன் என்று, நொந்து கொள்கின்ற என் நெஞ்சே! அவளருகில் யாமிருந்தேமாகவும், கோடையிலும் நடுங்குவள் (யான்பிரிய), தமியளாகி, வாடையில், என்ன பாடுபடுவளோ என்று, யான் நோவாநின்றேன்', எனத், தலைவன் உரைத்தான் *[நற்.312:1]*. 'நிலவு பரந்துபட்டது, ஊர், விழவு மேற்கொள்ளும். கான், பூச்செறியத் துணையுடன் வண்டு ஒலிசெய்யும். யானே, கவலையுடன், கங்குலும் கண்ணுறங்கேன். அதனால், உலகம் என்னொடு போர் செய்யுமோ? துன்புற்ற என்னெஞ்சு, தன்னைச் சூழ்ந்த உலகமொடு போர் செய்யுமோ?' எனத், தலைவி கூறினாள் *[நற்.348:10]*. 'எதிரேயிருந்த நண்பர் கொடுப்பின், நஞ்சினையும், அறிந்தும் உண்டு, அளவளாவுவர், மிக்க நாகரிகமுடையோர். (துன்பத்தையே எம்மால் அடைந்தும்) கண்ணோட்டமுடையையாய், என் தோழியின் தோளில் துயிலுவதை நின் நெஞ்சில் இன்பமாகக் கொண்டாயல்லை. இனி, அதனைப் பெற்றுத் தலையளி செய்வாயாக', எனத் தலைவனிடம் தோழி கூறினாள் *[நற்.355:9]*. 'சாரல் நாடனுடன் ஆடிய நாளினை நினைந்து, எக்காலத்தும் நெஞ்சைப் புண்படுத்திக் கொண்டு, கெட்டொழிய அறியாததாயிராநின்றது, என்குறிப்பு, தோழி! நின் கருத்துயாதோ? (அறியேன்)', எனத் தலைமகள் கூறினாள் *[நற்.357:3]*. 'நெஞ்சே! நெறியில், வேங்கையின் புதுப்பூப்பரக்க, அதன்மீது, நாம் (காமத்தால்) துன்புற்ற காலை, மருந்தாகத் தோன்றியது மடவோள், நடக்கக் கண்டனம்' நீ காண்பாயாக!; என, உடன்போகாநின்ற தலைமகன் நெஞ்சிற்குக் கூறினான் *[நற்.384:9]*.

'தலைவன் வம்பப் பரத்தையரை விரும்புதலையுடையானாதலின், என் மடப்பம் பொருந்திய நெஞ்சு, பெருமையிழந்து

மெலிகின்றது; என்று, தலைமகள் உரைத்தாள் *[ஐங்.17:4]*. 'தலைவ! களவுக் காலத்து நின் மயக்கம் பொருந்திய நெஞ்சுக்குத் துன்பந் தீர மருந்தாகியிருந்த யான், இப்பொழுது, என்தோழியாகிய இவள் (தலைவி), துள்பத்திற்கு மருந்தாகாமைக்கு வருந்தும், என் நெஞ்சு' எனப், புறத்தொழுக்கங்கண்டு, தோழி, தலைமகனுக்கு கூறினாள் *[ஐங்.59:2,4]*. 'நாணத்தையுடைய நெஞ்சே! தலைவன், நம்மை வரைய வர, அதனை, விரைவில் காண்போம்; அதனை நாம் மறந்தோம் (ஆயின் அவன் மறவான்), எனத், தலைமகள் கூறினாள் *[ஐங்.112:4]*. 'தொண்டியென்னும் துறைபோலும், தோளையுடைய' தலைமகளே, என்னெஞ்சைக் கவர்ந்து கொண்டவள், எனத், தலைமகன் கூறினான் *[ஐங்.171:4]*. தலைமகள், என்னெஞ்சைக் கவர்ந்து கொண்டாள் (எனவே), தொண்டியென்னும் துறையின் நீர்த்திரைபோல, இரவிலும் துயில் கொள்ளேன்', என்பது, தலைமகன் கூற்று *[ஐங்.172:1]*. கொடிச்சி, காவலை மேற்கொள்ளுமாறு, புனத்தில் பரந்து, நமக்கு உதவியது கிளி. நெஞ்சே! அதனுக்கு யாம் என்ன கைம்மாறு செய்குவம்', எனத், தலைவன் கூறினான் *[ஐங்.288:2]*. 'கையால் என் கண்ணை மறைத்தாயே! என்னெஞ்சு பொருந்தியோர் நீயல்லாது வேறுயாருளர் எனத் தலைவிக்குத், தலைமகன் உரைத்தான் *[ஐங்.293:5]*. 'குன்ற நாடனோடு சென்ற என்னெஞ்சு, மீண்டு ஈண்டு வருவதாகுமோ? ஆண்டுத் தங்கியமையுமோ?' எனத் தலைவி கூறினாள் *[ஐங்.295:6]*. 'காதலர் பொருளுக்காகக்' காடு கடந்து சென்றனர். மீண்டுவரக் காலந்தாழ்ப்பரோ' என, என்னெஞ்சு நினையும் என்பது தலைவி கூற்று *[ஐங்.311:4]*. 'பிரிந்திருக்கும் தலைமகள், '(தன் அன்பால்) கவர்ந்து கொண்ட என் வலிமை பொருந்திய நெஞ்சு, சுரத்தினைக் கடந்து வந்து அங்குமிங்கும் சுழலுவதாகுமோ?' எனத், தலைமகன் கூறினான் *[ஐங்.329:5]*. 'நின் மார்பில் படர்ந்ததனைச் சுணங்கென நினைக்கின்றாய், நீ. (ஆயின்) என் துன்புறும் நெஞ்சு, அதனை அணங்கு எனக்குத் தரும் துன்பம் என நினைக்கின்றது' எனத், தலைமகன், தலைவியது நலம் பாராட்டினான் *[ஐங்.363:4]*. 'தன் நெஞ்சு ஏற்றுத் தெளிவடைய, வஞ்சினம் கூறிய தலைமகனோடு, ஊரில் அலரெழ, மலை கடந்த என் மகள், என்னையும் நினைத்தாளோ?' என, உடன் போக்கில், நற்றாய் கூறினாள் *[ஐங்.372:2]*. 'உடன்போகிய அவளுக்காக (தலைவி) நோவேனல்லேன். (ஆயின்) துணையிழந்து கலங்கும் நெஞ்சுடைய இவளுக்காக (தோழி) நோவேன்', என, நற்றாய் கூறினாள் *[ஐங்.378:4]*. 'நீர் நிறைந்த கண்ணினாய்! நின் துன்பம் நிறைந்த நெஞ்சிற்குப் பாதுகாப்பாகத் தலைமகன் முந்துற, நின்மகள் வந்தனள்', என, அயலோர், தாய்க்குக் கூறினர் *[ஐங்.393:3]*. 'காதலர் நம்மைத் துறந்து அமையார். என் மடநெஞ்சு, அவரை மறந்து அமையாது', எனத், தலைமகள் சொல்லினாள் *[ஐங்.457:4]*. 'தலைவியது செயலற்ற நெஞ்சிற்கு உசாவுந் துணையாகச், சிறிது பொழுது தங்கின், பாண! எம்தேர் வரவு காண்பாய்!' எனப், பாணனைத் தூதுவிடுத்த தலைமகன் கூறினான் *[ஐங்.489:3]*.

'படுக்கையிடத்து அவள் முயங்கிய கையைவிட்டுச் சிறிது நீங்குவாயாயினும், தனிமையால் வருந்துமவள், பொருளினிடத்தே போவையென்று கூறக் கேட்பின், நெஞ்சழிந்து கெட ஒளியிழப்பாளோ? இறந்துபடுவாளோ?' எனத், தோழி கூறினாள் *[கலி.10:9]*. 'உடன்வந்து, காடு கழிய, உண்ணு நீர் வேண்டின், இல்லையாகும், என அறங்கருதிக் கூறுவீர். நும் நெஞ்சென்னும் தெளிவு நீரை, யாற்றுநீர் கழிந்தாற்போலும், இளமையாகவுடையேன், இவ்விடத்துச் சுழன்று மனமழிவேனோ? இறந்துபடுவேனோ, எனத், தலைவி கூறினாள் *[கலி.20:13]*. யான் அகப்படுப்பவும், என்னாங்கு வாராமல் நின்னிடத்து வரும், என்னெஞ்சினை, என்னிடம் வாராதவாறு பாதுகாத்துக்கொள்க என, உடன்போக, உடன்படாத தலைமகனிடம் தலைவி கூறினாள் *[கலி.23:18]*. நெஞ்சு நடுக்கமுறும்படிப், பலகாலும் கேட்டும், அதனை உண்டோ, இல்லையோ வென்று ஐயுற்றுத், தாம் அஞ்சியிருந்த பொருள், தாம் கேட்டபடியிலே, மெய்யாய், வருத்தமாம், என்னும் மொழி, அறுதியாக உண்மை', எனத் தலைவி, தோழிக்குரைத்தாள் *[கலி.24:1]*. ஒரு பற்றில்லாத நெஞ்சுடனே, தானும் வலியளல்லள், என்னாது, பசப்பு நுதலிடத்தே பரக்குமாயின், நம்மாட்டு அவர் செய்யும் அளி, என்னபயன் தரும்?' எனத், தலைவி, தோழிக்குக் கூறினாள் *[கலி.28:14]*. 'சேணிடைப் பிரிந்தோரிடத்துச் சென்ற என்னெஞ்சினை, நீ கூறும் அளவில், மிகவும் ஆற்றிநிறுப்பேன். அதனாற் பெற்றதென்? அதனைக் கைகடக்கும்படியாக, வாடைக்காற்று வந்து, வருத்தத்தைத் தருமே!'' எனத், தலைவி, தோழிக்குரைத்தாள் *[கலி.29:10]*. 'என் கண்போல் நீரொழுகும் இளவேனிற்காலத்தும், தலைவர் வாரார். கொம்புகளில் மலர்கள், பிரிந்த மகளிரை நகுவனபோல், மலிந்தன. அதனைக் கண்டு என்னெஞ்சு வருந்தித், தலைவரை நினைந்து, அழிவதுபோல இருக்கும் எனத், தலைவி, தோழிக்குரைத்தாள் *[கலி.33:17]*. 'மலையிடத்தே சென்றவருடைய வரவை, என்னெஞ்சு விரும்புவதாலே தோன்றிய காமத்தீயாலே, என்னுடைய முலையிடமெல்லாம் காந்தாநிற்கும்', எனத், தலைவி கூறினாள் *[கலி.36:17]*. 'தலைவன் முயங்கும் அளவைத் தன் உள்ளத்தாலே கைக்கொண்டுவிட்டான். (எனவே) குறியிடத்து வாவென்று கூறுவதுபோல, அவனுக்கு ஓர் பொய்க்குறியைக் காட்டி, அவன் மேவின வழியிலே நெஞ்சே! நீ மேவுவாயாக' என்றாள் தோழி *[கலி.47:24]*. 'அஞ்சாதே என்று, தெளிவித்துப், பிரிதலைச் செய்து, பின்னர் அருளாதுவிட, இவள் நெஞ்சழிதற்குக் காரணமாகிய வருத்தம், இறந்து பாடெய்துவிக்கவும், உயிரைப் போகாமல் நிறுத்தவும் பொருந்தும்', எனத் தோழி, தலைவியாற்றாமை கூறினாள் *[கலி.53:17]*. 'முற்பிறப்பில் யானும், அவனும் வேறல்லமென்பதொன்று, அவனிடத் துண்டாயிருக்குமாயின், நெஞ்சே! அவனோடு நமக்கு

மாறுபாடுண்டோ', என்றாள், தலைமகள். [கலி.62:19]. 'என்னிடத்து அன்பின்றி வருவானாயின், யான் புலப்பேன், என்றிருப்பேன். இச்செயலற்ற நெஞ்சு அவனைக் காணில், யான் கூடுவேன் என்று கூறும் என்றாள் தலைவி [கலி.67:9]. ஊடியிருப்பேன் என்று கூறுவேன்; இக்கொள்கையில்லாத நெஞ்சு, அவனைக் காணில்கூடுவேன் என்னும்' என்பது தலைவி கூற்று [கலி.67:13]. 'துனித்திருப்பேன் என்பேன்; அவனைக்காணில், தன்னைத்தனக்கு உரித்தாக்குதலில்லாத நெஞ்சு, என்னை நீக்கி, அவனிடத்தே தாழும்' என்று, 'தலைவி கூறினாள் [கலி.67:17]. தமக்கு வலியாகாதே, தலைவனிடத்துக் கீழ்ற்றுச் செல்லும் நெஞ்சினையுடைய மகளிர்க்குத், தாம் நினைத்தவையெல்லாம் முடிவுபோதல் பொருந்தாது [கலி.67:21]. நின்னைக் காணின், என்னை உன்னிடத்தே செலுத்தித்,தானும் நின்னிடத்தே தங்கும், நெஞ்சென்னும் உட்பகையுடையார்க்கு, நின் மார்பைக் கூடக் கடவேம் அல்லேம், என்னும், நிறையினைப் பெறுதல், எளிதோ?' என்றாள், தலைவி [கலி.77:23]. தலைவன் பரத்தையிற்பிரிதலால் கசப்பு நீங்காத என்நெஞ்சிற்கு, அமிழ்தம் உண்பதுபோலச் சில கூறுக', எனத், தலைமகள் தன் மகவு நோக்கிக் கூறினாள் [கலி.81:14]. 'நெஞ்சே! கண், நீர் நீங்கித், துயில்கொள்ளுமாறு, இனிமேல் கூறும் கூற்றிலேம், என்னும் தகுதிப் பாட்டினைக், காண்பாயாக', என்று ஊடல் தீர்வாள் கூறினாள் [கலி.87:15]. 'நெஞ்சே! இவனைப் பொய்சொல்ல, விடேம் என்று, மாறுபடின், நம் அடிசேர்தலும் ஆகும்; ஆதலால், நாணமில்லாதவனுக்கு, ஊடற்போரில் தோற்று, அதன் பயனைக் காண்பாயாக', என்றாள் தலைவி [கலி.89:13]. 'எம் வயத்ததாக நிறுத்தமாட்டாதே நெஞ்சினையுடைய யாம், நின் தீமையைப் பொறுக்கமாட்டேம், என்பதாகுமோ?' என்றாள், கிழத்தி [கலி.90:29]. 'நின்னைக் காணின், நின்னிடத்தே நெகிழ்ந்துவரும், என்னெஞ்சாக, அதனை உட்கொள்ளாது, யான் விரும்பும் செயல்களைச் செய்வது எற்றுக்கு', என்றாள், கிழத்தி [கலி.91:23]. 'இருளை நீக்கும் ஞாயிறுபோலப், பகைவர் நெஞ்சு அஞ்சும்படியான செயலையுடையோய்!' எனச் சான்றோர் தலைவனைக் கூறினர் [கலி.100:2].

'ஏற்றைக், களத்தே தழுவிவருத்தி, அதன்மேலே தோன்றி நின்ற, பொதுவன்செயல்கண்டு, கூற்றுவனுடைய நெஞ்சத்தைப் பிளந்து, உயிரை வாங்கிய, இறைவன், இத்தன்மையனோ, என்று அஞ்சும், என்னெஞ்சு', என்றாள், தோழி [கலி.103:45]. 'தன்மேலே வந்த ஏற்றின் கொம்புகளைப் பற்றித் தழுவும் பொதுவன் செயல்கண்டு, பகைவர் விட்ட பரியைக் கையால் பற்றி அடித்த, கண்ணன், இத்தகையன் கொல், என்று, அஞ்சும், என்னெஞ்சு' என்றாள், தோழி [கலி.103:55]. 'தன்மேலே வந்த ஏற்றின் கோட்டிடையே தலைவன் செல்ல, என்நெஞ்சும் உடன் சென்றது என்றாள், தலைவி [கலி.105:69]. 'தோழி! அன்னை நெஞ்சு நின்நெஞ்சமாகப் பெறின், எம்விழைவு அன்னை நோவத் தக்கதன்று', என்றாள், தலைவி [நற்.107:22]. 'மத்தைச் சுற்றிய கயிறு போல, நின்னலத்தைச் சூழ்ந்து சுழன்று திரிகின்றது என் நெஞ்சு' என்றான், தலைமகன் [கலி.110:11] - 'கன்றிற்காகச்', சுற்றிவரும் நாகுபோல், நின்னைக் கண்டு, நாள்தோறும் துன்புற்றது, என்னெஞ்சு', என்றாள், தலைவி [கலி.110:15]. 'காமம் கலக்குற, நெஞ்சு ஏவல் செய்யாது, எனச் சொல்லி நின்ற உனக்கு, ஏதிலார் கூறிய பொய்ச்சொல்லைத் தெளியுந்தன்மை எவ்வாறுண்டாயிற்று; என்றாள், கைக்கிளைத் தலைவி [கலி.113:19]. 'அறியாமையுடைய நெஞ்சே! கங்குலில் காமநோயைச் செய்தவனிடத்தே போனாய். அவனைக் கண்டாயோ? கானாயோ? அறியாமையுடைய நெஞ்சே! அவனை நீ புல்லப் பெற்றாயோ? அல்லையோ? அறியாமையுடைய நெஞ்சே! அவனை நீ அறியவும் பெற்றாயோ? அல்லையோ? இரக்கத்திற்குரிய அறியாமை பொருந்திய நெஞ்சே! அவனைப் பெறுதலை விரும்பி, அலைநீர் போலத் தடுமாறி வருந்தினாய், 'எனத் தலைவி தன் உள்ளத்திற்குக் கூறினாள் [கலி.123:8,11,14,18]. நெஞ்சறிந்த தீச்செயலை மறைப்பினும், அதனை அறிபவர் நெஞ்சத்திலும் அணுகிய சான்று பிறிதில்லை [கலி.125:3]. 'பலவற்றையும் நினைந்து வருந்தும் நோயையுடைய நெஞ்சாலே, காமத்தில் அழுந்தும் என் தோழியது முகம் விளங்க நின் தேர், பரியினைப் பூண்க, எனத் தோழி, தலைவனிடம் வரைவு கடாயினாள் [கலி.126:19]. 'கவலை கொண்ட நெஞ்சினேனாய்க், கலங்கியழக் கண்டு, கடல் என்துன்பத்தைத் தன்மேல் கொண்டதுபோலும்' என்பது தலைவி கூற்று [கலி.134:13]. என் நலனுண்டவர் வாராமையால், அவரை நினைத்துச் செயலற்ற நெஞ்சினாய், யான் கலக்கத்திலே அழுந்த, அதனை நோக்கி, வருத்தத்தால் செய்தவைபோல், மயக்கங்கொண்ட நெஞ்சோடே, மர இலைகள் குவிதற்குக் காரணமென்ன? என்று, தலைவி, பிரிவிடை, மாலைப்பொழுது கண்டு வருந்தினாள் [கலி.134:20,21]. 'மெல்லிய நெஞ்சுவருத்தம் மிகும்படி, தலைவர் தெளிவித்த சொல்லினால் பிறந்த நோய், வில்லுனுங் கடிதாயிராநின்றது', என்றாள், தலைவி [கலி.137:8]. 'ஒருத்தி, தன் ஒளியுருக்காட்டி, என்னெஞ்சினைத் தன் பின் தொடரக் கொண்டாள்', என்றான், தலைமகன் [கலி.139:7]. மாதரது அழகால் பற்றிக் கொண்ட என் நெஞ்சு கடும்' என்றான். தலைமகன் [கலி.139:29]. வருத்தும் பிறையை ஆடையால் அகப்படுத்தக் கருதிக், கொன்றையவன் சூடக் காணாது திரியுமெனக், கைவிட்டு, வள்ளன்மை யுடையாகுவை, எனத், தன் நெஞ்சை வலியுறுத்தினாள், தலைவி [நற்.142:30]. 'என் தோளை மெலிவித்தவனை, என்னெஞ்சு பொருந்திச் சென்று, சேய்மை இடத்தாயிற்று', என்றாள், தலைமகள் [கலி.143:16]. 'எனக்கு மருவுதலை உறுத்தி, அவன் மாறிப்போன காலந்தொடங்கி, என்னெஞ்சு மருவிப்போன இடத்தே அகப்பட்டு, நின்றுவிட்டது', என்றாள், தலைமகள் [கலி.144:15]. 'எனக்குத் துன்பந் தந்தவனைத் தேடித் துன்புற்ற என்னெஞ்சு, விசும்பையும், நிலத்தையும், திசைகளையும் துழாவும் என்றாள்,

தலைவி *[கலி.145:44]*. 'கண், புருவம், தோள், நுசுப்பு, கூந்தல் எனுமிவற்றை விலைமாற அறியாது, ஒருவனது பொய் வலையிலகப்பட்டது, என்னெஞ்சு', என்றாள், தலைவி *[கலி.147:21]*. 'காமா! நின் அம்பால் ஒருத்தி, தன்னெஞ்சினை, ஒருவனுக்காக வருத்துவித்தல், எல்லார்க்குமாகுமோ?' என்றாள், தலைமகள் *[கலி.147:46]*. கற்பித்த ஆசிரியன் நெஞ்சு வருந்த, உதவாதவனுடைய கல்விப் பொருள், தேயுமாறுபோல, உதவியவனுக்கு உதவாதவன் தேயாநிற்பன் *[கலி.149:4]*. 'சுற்றத்தார் நெஞ்சுவருந்தும்படி சேர்ந்த செல்வம், முயற்சி இல்லாதவனுடைய குடியேபோல், தானே தேய்ந்து கெடும் *[கலி.149:48]*.

'எம்முடைய அறிவு கொடும்பாடு, அறியற்கவெனத், துளக்கமில்லாத நெஞ்சினேமாய் ஏத்தி, வாழ்த்தி, வேண்டிக் கொள்வோம்' என்று புலவர் பாடுவர். பிருங்கலாதன் திருமாலைப் புகழ, இரணியன் சினத்தீயாற் புகைந்த நெஞ்சோடும், புலர்ந்த சாந்தோடும், அவன் பலபல பிணிபடப் பிணித்தான் *[பரி.4:11]*. தான் விரும்பிய பூவை நெரித்த ஒருத்தியைத் தும்பி மாறுபாடு பொருந்திய சினநெஞ்சுடனே, முன்தாக்கிப், பின்னும் தாக்கவந்தது *[பரி.11:131]*. நாடறியப் பூமாலையைச் சூடி ஒருத்தி வையையாற்று நீர்வழியே, தன்னை நினைப்பாரை, நெஞ்சுக்குத் துன்பஞ்செய்து செல்வாள் *[பரி.தி.2:54]*. காரிகையைக் கண்டோர்க்குத், தம் வயத்தாய் நிற்குமோ, நெஞ்சு *[பரி.தி.4:3]*.

நெஞ்சம்-1. காண்க.

2. உரன். கொல்களிறும், மனஞ்செருக்கிய, விரையும் குதிரையும், உயர்ந்த தேரும், நெஞ்சு-உரன்-உடைய போரை விரும்பும் மறவருமென, நான்கு படையுங்கூட மாட்சிமைப்பட்டதாயினும், மாட்சிமைப்பட்ட அறநெறியை முதலாக வுடைத்து, வேந்தரது வெற்றி *[புற.55:8]* காண்க-நெஞ்சிலார்.

**3. மார்பு** வெவ்விய ஆற்றலை மிகுத்துக் காட்டும் கூரிய வேல் நெஞ்சில்-மார்பில்-வடுவை உண்டு பண்ணத், தன்னை இகழ்வாரை அழிக்கும், காளை போல்வான், பரிமேல் வருவான் *[புற.303:4]*.

வளைந்த வடிவுடையாய்! நின்னை யான் மார்புறப் புல்லின் என்னெஞ்சில் ஊன்றும்; முதுகில் புல்லின், கூனால், அதுவும் ஆற்றேன்', என்று குறள், கூனை நோக்கிக் கூறியது *[கலி.94:19]*. 'எருது, பொதுவனைக் குடர் சரியக் குத்திக், கோட்டிடைக் கொண்டு குலைப்பது, கடவுள் (முக்கணான்), கூற்றுவனுடைய நெஞ்சைப் பிளந்து, அவன் குடரைக் கூளிக்கிடுவதுபோல், தோன்றியது *[கலி.101:25]*.

நெஞ்சம்-2.காண்க.

4. நசை. யானையினையுடைய வேந்தனும், இப்போர்க்களத்து ஒழிதலிற் சிறந்தது வேறொன்றில்லையாகுமென்று, அதனால் வரும் புகழ் கருதி, வாழவேண்டுமென்னும் நெஞ்சு-நசை-ஒழிய, வீழ்ந்துபட்டு உயர்ச்சிபெற்றான் *[புற.307:4]*.

5. உட்கோள். (கருத்து) கண்ணின் முன்னர் உவப்பை வெளிப்படுத்தி, நெஞ்சு-உட்கோளை-வெளிப்படுத்துதலை யறியாத, பகைவர் நாட்டிலும், பொய் கூறுதலையறியான் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் *[பதி.20:8]*.

'தோழி! நம் தலைவர் சுரநெறி இவளுடன் செல்ல, அருமையுடையன் வல்லவென, நமக்குத், தமது நெஞ்சை-கருத்தை-வாய்விட்டு மொழிந்தனர். ஆதலின், நின்னை மறந்து,வேற்று நாட்டில் தங்குதல் எங்ஙனம் கூடும்', எனத் தலைமகட்குத், தோழி கூறினாள் *[அக.129:17]*. 'யாவரும் இயங்காத நெறியில், நம்பாலுள்ள காதலால் வந்த, நம் தலைவன், தன் நெஞ்சு பயனிலதாக நம்மைக் கூடாது மீளின், இன்று, இவ்விரவும் யான் உயிர் தரித்திரேன்; நாம் செய்வது என்னையோ?' எனத் தலைவன் சிறைப்புறமாகத், தோழி உரைத்தாள் *[அக.362:9]*.

6. நடுவிடம். கிரவுஞ்ச மலையினது, நெஞ்சு-நடுவிடம்-பிளக்கும்படி வீசிய, அழகிய ஒளியையுடைய, நெடிய வேற்படையையுடைய, முருகக்கடவுள், காத்தருளுதலால் உலக உயிர்கள், இன்பமாகிய நாட்களை அடையாநின்றன *[குறு.க.வா.4]*.

7. நெஞ்சம்-நெஞ்சகம். தலைவர் குறித்த நாள் வந்து, நின்னழகைக் கெடுத்தலுமுண்டென்று கருதி. என்னெஞ்சு-நெஞ்சகம்-நெட்டுயிர்ப்புக் கொள்ளாநிற்கும்', எனத் தோழி, தலைவிக்குரைத்தாள் *[கலி.36:26]*.

நெட்டிமையார்-ஓர் புலவர். இவர்க்கு இப்பெயர் உறுப்பால் வந்தது என்பர் உ.வே.சா. (புறம்.பா.வர.). எனவே, நெடிய இமையையுடையவர் என்ற காரணத்தைக் கொண்டு இவர் நெட்டிமையார் என்னும் பெயர் பெற்றார் என்பது விளங்கும். இவர் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதியை மட்டும் மூன்று பாடல்களால் *[புற. 9,12.15]*. சிறப்பித்துப் பாடியுள்ளார். ஆவும், ஆனின் இயல்பையுடைய அந்தணரும், மகளிரும், நோயுடையோரும், பிள்ளைகளைப் பெறாதோரும் ஆகிய இவர்களை அரணாகிய இடங்களுக்குப் போகச் சொல்லிப் பின்னரே போர் தொடுக்கும் அறநெறிக் கோட்பாட்டினையும், அதற்கேற்ற மறமாண்பினையும் உடையவனாக, இவர், அவனைப் பாராட்டுவதும் *[புற.9]*. அவன் பகைநாடுகளை அழித்த மறச் செயல்களைப் புனைவதும் *[புற.15]*. இவரது புலமையினை உணர்தற்குப் போதிய சான்றுகள். 'குடுமியே, நீ துன்புறுத்திப், பிறர் நாடுகளைக் கவர்ந்து, நின் ஆர்வலரை இன்புறுத்தும் இது நினக்கு அறனோ?' என்று அவனைப் பழிப்பதுபோலப் புகழ்வதும் *[புற.12]*. இவர் பாடல்களில் நயமானதோர் பகுதியாகும்.

**நெட்டிருங்கூந்தற் கடவுளர். நெடிய, கரிய கூந்தலையுடைய பரத்தையர்.** நெடிய கரிய சடைமுடியுடைய முனிவர்-கூந்தற் கடவுளர் என்பது ஈண்டுச் சூழ்நிலையால் கூந்தலையுடைய பரத்தையரைக் குறித்தது. அது, சடைமுடியுடைய முனிவர்க்குமாம்.

தலைமகன் காலமல்லாக் காலத்து வர, ஐயுற்று வினவிய தலைவிக்குத், தலைமகன், கடவுளர்கண் தங்கினேன் என்றமையால், மான்பிணையன்னர், கடவுள் தன்மை கொண்டொழுகுவார் பலர். அவருள் எக்கடவுள், மற்றக் கடவுள், எனத் தலைமகள் வினாவ இப்பொருள் பயந்ததென்க.

'இனி அவர்பாற் செல்லாது ஒழிவையாயின் நெட்டிருங்கூந்தற் கடவுளர்-நெடிய கரிய கூந்தலையுடைய பரத்தையர்-எல்லார்க்கும் முட்டுப்பாடு உண்டாதலுமாகும்', என்றாள் தலைவி *[கலி.93:35]*.

**நெட்டுருட்டுச்சீர்-திரள்தாளம்.** 'முருகனது மலைக்கண் போரில் மிகும் ஆர்ப்புப்போல, நெட்டுருட்டுச் சீரோடு திரள்தாளத்தோடு - இயங்கள் ஆர்ப்ப, முகில் தொகுதியும் ஆவ்வார்ப்போடு நின்றன *[பரி.18:42,43]*.

**நெடிது-1. நெடும்பொழுது.** பல முட்டுக்களையும் சுமந்த இளையோரும், அடிவருந்த நெடிது-நெடும்பொழுது-(மலைக்கண்) ஏறிய விறலியரும் வாழப் பரிசிலன் பொய் கூறான் *[புற.139:3]*. பிட்டன் வேலும், அவன்தலைவனாகிய கோதையும், அவன் பகை மன்னரும் நெடிது நெடுங்காலம்-வாழ்க. *[புற.172:11]*. கடல் போலும் ஒலி கொண்ட தானையினையுடைய வெற்றியை விரும்பும் குருசில் நெடிது வாழ்க *[புற.377:30]*. செல்வக் கடுங்வாழியாதனின் பகைவர் தம் உயர்ந்த குடையினை நெடிது தாழ்த்திவிடுவர் *[புற.387:32]*.

(உண்பார்க்கு வார்த்தலால்) கட்பானையில் கள் நிறைந்து நெடிதிராது *[பதி.43:34]*.

காஞ்சிமரத்தின் கொம்பரில் ஏறி, ஆழமாகிய நீர்நிலையினை நோக்கி நெடிதிருந்து, கயல் மீனைக் கவர்ந்தது சிச்சிலிப்பறவை *[சிறு.180]*. 'பெரும! அமையாத கொடையினை உடைய நினது பெரிய பெயருட்சிலவற்றைக் கூறிப் புகழ்ந்து வந்தேன். நீ வாழிய நெடிது' என, இளந்திரையனைப் புலவர் வாழ்த்துவர் *[பெரு.461]*. மன்னன் தன் ஒருகையைப் படுக்கையின்மேல் வைத்து, ஒரு கையை முடியொடு சேர வைத்து (நாளைபடை எவ்வாறு பொரும் என்று) நெடிது நினைந்து பகை நடுங்கும் பாசறையில் தங்கியிருந்தான் *[முல்.76]*.

பாகன் நெடிது உயிருடன் வாழ்தல், களிறு அவனைக் கொல்லாது அருள் செய்தலாலாகும் *[அக.336:13]*. 'நாவல் கனியினை இழுத்துக் கொண்டு சென்று, வளையிலுள்ள பெண்ஞெண்டிற்குத் தரும், ஒரு ஆண் ஞெண்டினைக் காட்டி, இது நல்ல பான்மையுடையது என்று கூறி, நெடிது சிந்தித்த நெஞ்சுடனே, மீண்டான்', எனத் தோழி கூறினாள் *[அக.380:8]*. கஞ்சிப் பசை கொண்ட, விரலையுடைய வண்ணாத்தி, நெடிதுபிசைந்த கஞ்சியூட்டிய, அழகியது ஆடை *[அக.387:6]*.

'பாக! அரிவைக்கு விருந்தாக விரைக. நாள் இடைதங்கின், அது ஊழிக் காலத்தினும் நெடிதாகும்', எனத், தலைமகன் கூறினான் *[ஐங்.482:4]*.

'இத்தன்மையனவற்றையான் கூற, நிலத்தைப் பார்த்து நெடிது ஒன்றனை நினைப்பவள்போல், தன்மனையிடத்து மீண்டு சென்றாள். எனக், கைக்கிளைத் தலைமகன் கூறினான் *[கலி.57:22]*.

**2. அகலிடம்(ஈண்டு).** நெடிதாகிய-அகலிடமாகிய-தொலைவிடத்து நீங்கின பொருட்களைக் காணினும், தான் தன்னிடத்தே, உற்றவடுவைப் பிறர் காட்டவும், காணாத தன்மைத்தாக தலைமகளது தொடி கழலக் கைவிட்ட கொடுமையைத் தலைவன் கடிதென்று உணராதிருத்தல், சான்றோரால் கடியப்பட்டவற்றுள் ஒன்றன்று *[கலி.99:18]*.

**3. நெடுங்காலந்தாழ்த்தல்.** (எல்லோரும் வர) எல்லா மனையும் ஆரவாரமுற்றன. நெடுந்தகை வேந்து பொருமோ? அவனது தேர் நெடிது-நெடுங்காலந்தாழ்த்தி-வந்தது. *[புற.296:5]*.

'வாடை தலைவரிடம் சென்று, வெறுத்துறையும் துணைவரில்லாத நம் வாழ்வைக் கூறி, நீ நெடிது வந்தனை (வந்து, நெடுங்காலம் தாழ்த்தினை) என்று அவர்க்குணர்த்தி அவர்தம் நிலையினை அறிந்து வருமாயின், நன்றாகும்', என்றாள் தலைவி. *[அக.243:9]*.

**4. இடையிடாமை.** (காமக்குறிப்பு நிகழும்படி) என் தோழியை நோக்கிக், கிளிகடிதலை மறப்பித்து, நின் வயத்தளாக்கினை இனி, நீ நெடிது-இடையிடாமை-நினைத்தலை அவள் விரும்பும்', எனத், தோழி சொல்லினாள் *[கலி.50:11]*.

**நெடிய-1. நீட்டிசியுடையவை.** வண்மையுடையோரை நினைத்துப், பழுமரந்தேரும் பறவை போலப் போகி, நெடிய-நீட்டிசியுடையவை-என்று கருதாது, சுரம்பலவற்றையும் கடக்கும் இயல்பினது, பரிசில் வாழ்க்கை *[புற.47:2]*. போர்க்கள வயலில் தேரை ஏராகக் கொண்டு உழுது, நெடிய-நீட்சியுடையனவற்றை - (வேல் முதலியவற்றை) எறிந்து, வீழ்த்தி, வாள் முதலியவற்றால் கீழ்மேலாக்கியது படைச்சால் *[புற.369:11]*.

நெய்தல் தொழில் செய்வோர், குறியவும் நெடியவுமாகிய மடிப்புடவைகளை விரித்து, நான்கு தெருவிலும் நெருங்க நிற்பர் *[மது.520]*.

புதிய மாந்தர் காணின் தலை நடுங்கும் பக்க மலையிடத்துக், குறியவும், நெடியவுமாகிய குவடுகளைக் கடப்பின், பலவகை ஓசைகள் கேட்கும் *[மலை.288]*.

'காடுகள் நெடிய என்று கருதாது, மென்மையான அடிவருந்தச் செல்லுதற்குத் தலைவி வன்மையுடையவள் ஆவளோ?' என்றாள், செவிலி *[அக.89:17]*. 'காடுகள் நெடிய என்றெண்ணாது தலைவியைப் பிரிந்து போதலைத் துணிந்தனர், தலைவர்', *[அக.213:10]*. 'குறியவும், நெடியவுமாகிய குன்றுகள் கூடிய சுரத்தினைத் தலைவர் கடந்து சென்றார். *[அக.233:11]*. 'காடுகள் மிக நெடிய என்று எண்ணாராய் நம் தலைவர் சென்ற நாட்டின்கண், நாம் சென்றால் என்னையோ?' எனத், தலைமகள் கூறினாள் *[அக.309:9]*.

'நெடியவாகிய தன் தோள்களின் வளையினை நெகிழச்செய்த கொடியன், குன்றுகெழுநாடன்', எனக், கிழத்தி கூறினாள் *[குறு.252:1]*.

'பொருள் வேட்கையுடையேமாய், நின்னைப் பிரிந்து அகன்ற காலைச், சுரநெறி மிக நெடியவாயின', எனத், தலைமகன் கூறினான் *[ஐங்.359:3]*.

**2. மீக்கூற்றம் (மேம்பாட்டுரை).** வேந்தனும் வேல் கொண்டு கடிய சொற்களைக் கூறும். அரிவை தந்தையும் நெடிய-மீக்கூற்றம்-அல்லாது பணிமொழி கூறுவானல்லன். (எனவே) இவள் பிறந்த ஊர்க்கு அச்சந்தருபவளாயினாள், என, மகட்பாற் காஞ்சித் துறையில் கூறப்பட்டுள்ளது *[புற.349:3]*.

வயவர், நாள்தோறும் போர் விரைவில் முடிதலில் விருப்பமுடையராய்த், தம் நெடிய கூறி, நற்புகழைத் தம்குடி பெறப் பாசறையில் சுழன்று திரிவர். நெடிய மொழிதல், மாராயம் பெற்றநெடுமொழிஆதலின் அரசனால் வயவர் எட்டி, காவிதி முதலிய பட்டயங்களும், நாடும், ஊரும் பெறுவர் *[பதி.81:12]*.

நெடிய மொழிதலும் (அரசராலே மாராயம் பெறப்படுதலும்), விரைந்த செலவினையுடையவற்றை ஊர்ந்து செல்லுதலும், செல்வம் அல்ல. தம்மைச் சேர்ந்தோர் துன்பத்திற்கு அஞ்சிப் போக்கும் அருட் செல்வமே சிறந்த செல்வமென்பர், ஆன்றோர் *[நற்.210:5]*.

**3. மெய்ம்மொழி.** செவிலியர், குறியவும் (பொருளோடு புணராப் பொய்ம்மொழியும்) நெடியவும்-மெய்ம்மொழியும் ஆகிய உரைகள் பலவற்றைச் சொல்வர் *[நெடு.154]*.

**4. நெடும்பொழுது-நெடுங்காலம்.** 'நிழலைக்காணும் தோறும் நெடிய-நெடும்பொழுது-தங்கி, மணலைக் காணுந்தோறும் விளையாடி வருந்தாது செல்க', எனத் தலைமகன், தலைமகட்குச் சொன்னான் *[நற்.9:7]*. 'யாமமும், நெடியவாகிக் கழியாநிற்கும். காமமும், கண்ணுறங்கவொட்டாது பெருகாநிற்கும்', எனத் தோழி சிறைப்புறமாகக் கூறினாள் *[நற்.378:1]*.

'தலைவியை மறந்து நெடிய தாழ்ந்தனம். மழைபெயக் காடு கவின் பெற்றது. பாக! விரையச் செலுத்துக', என்றான், தலைமகன் *[ஐங்.484:4]*.

**நெடியன்**-நெடுவடிவுடையன். உயர்ந்தோன்-பெரியோன். (முருகன்). முருகன் மயில் ஊர்தியன், சேவற் கொடியினன், நெடியன்-நெடுவடிவுடையன்-*[முரு.211]*.

**நெடியாய்**-நெடுவடிவுடையாய். (முருகா!) நெடியாய். 'நெடுவடிவுடையாய் (முருகா!)-வழுதி, மகளிரோடும். அமைச்சரோடும், நாடும், நகரும் கூட வந்து நின் குன்றின் நகர்வலம் வருதல், மதி, மீனொடு மேருவலம் வருதலொக்கும் *[பரி.19:28]*. நெடியாய்! நின் திருப்பரங்குன்றத்து விரவிப் பூத்தமலர்ப் பரப்பானது, விடியற்காலத்திலே பல நிறமுடைய நெடுவானம்போல விளங்கும் *[பரி.19:84]*.

**நெடியோய்!**-நெடுவடிவுடையோய். 'நெய்தலங்கானல் என்னும் ஊரையுடைய நெடியோய்!-நெடுவடிவுடையோய்-நின்னை அணுகவந்தேம். நின்,பல குணங்களையும் புகழ்வேமாக! என்று சோழனை ஊன்பொதிபசுங்குடையார் பாடுவர் *[புற.10:12]*. 'புகழ் விளங்கிய, இடக்கவிந்த கையையுடைய நெடியோய்! நீ நிறைமதியை ஒப்பாய்! எனவே, நின்னிழல் வாழ்வோர்க்குத் துன்ப இருள் எவ்விடத்துள்ளது?' எனப், பொகுட்டெழினியை, ஔவையார் பாடினார் *[புற.102:6]*.

'பகைவரது நிலத்தைக் காணவந்தேன்', என, இளஞ்சேரலிரும்பொறையைப் பெருங்குன்றூர்கிழார் பாடினார் *[பதி.82:16]*.

**நெடியோன்**-நெடுவடிவுடையோன். 'கடற்றெய்வத்திற்கு எடுத்த விழாவினையுடைய நெடியோனால்-உளதாக்கப்பட்ட நல்ல நீரையுடைய பஃறுளியென்னும் ஆற்றின் மணலினும் பல காலம் வாழ்வானாக', என, முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடினர் *[புற.9:10]*. 'தேர் வழங்கும் நெடியோனது (பாரி) குன்று, ஈண்டு நின்றார்க்கும், சிறிது சென்று நின்றோர்க்கும் தோன்றும், எனக், கபிலர் பாடினார் *[புற.114:6]*. இரவலர்க்கு ஈத்த ஆய் அண்டிரன் வருகிறானென, வச்சிரத்தையுடைய நெடியோன் (இந்திரன்) கோயிலில் முரசம் முழங்கியது *[புற.241:3]*.

'நெடியோன் (திருமால்) போன்ற, நல்லபுகழ் அழியாத, வன்மையுடையவன் இமயவரம்பன் *[பதி.15:39]*.

நீலநிற உருவினோனாகிய நெடியோனது (திருமாலது) கொப்பூழில் தோன்றிய நான்முகனைப் படைத்த தாமரையது பொகுட்டைப் போன்றது நகர் *[பெரு.402]*.

நிலத்தைத் தந்து காத்த நெடியோன் (வடிவலம்ப நின்ற பாண்டியன்) வழிவந்தோய்! என, நெடுஞ்செழியன் அழைக்கப்பட்டான் *[மது.61]*. பூதம் ஐந்தினையும் சேரப் படைத்த, மழுவாகிய வாளையுடைய, நெடியோன் (பெரியோன் ஏறூர்ந்தான்) *[மது.455]*. எல்லா நிலங்களையும் தன்னிடத்தே கொண்டு காக்கும் திருவுடையவன் நெடியோன் (மாயோன்) *[மது.763]*.

மன்னர் வழியை அழித்த, மழுவாளையுடைய வேள்வி செய்தான் நெடியோன் (பரசுராமன்) *[அக.220:5].*

**நெடியோன் குன்றம்-திருப்பரங்குன்றம்.** கூடலின் மேல்பாலுள்ள, மயிற்கொடி உயர நின்ற, இடையறாத விழவினைக் கொண்டது நெடியோன் குன்றம் (முருகனது, திருப்பரங்குன்றம்) *[அக.149:16].*

**நெடியோன் மகன்-திருமால் மகன் (காமன்) நெடியோன் மகன்**-திருமால் மகன் (காமன்)-விரும்பித் தந்தது போன்ற அழகோடு, என்னெஞ்சம் அழியவரும் சாயலுடையாள்; எனத், தலைமகன் தலைவிபற்றிக் கூறினான் *[கலி.140:8].*

**நெடுங்கழுத்துப் பரணர்**-ஓர் புலவர். பரணரென்பது இவரது இயற்பெயர். அப்பெயரில் மற்றொரு புலவர் புகழுடன் திகழ்ந்தமையால் அவரினின்றும் வேறுபடுத்தியுணர்தற்குச் சான்றோர் இவரை நெடுங்கழுத்துப் பரணர் என்று அடைமொழியுடன் குறித்து வழங்கினராதல் வேண்டும். எனவே, உறுப்புக் குறித்த இவ்வடைமொழி கொண்டு நெடிய கழுத்தினையுடையவராக இவரைக் கருதுவதில் இழுக் கொன்றுமில்லையாகும். இவ்வாறு உறுப்பாற்குறித்து வழங்கப்பெற்ற சான்றோர் பெயர்கள் பலவற்றைச் சங்கப் புலவர் வரிசையில் காணலாம் (எ-டு. குண்டுகட் பாலியாதனார், நரைமுடி நெட்டையார், பரூஉ மோவாய்ப் பதுமனார், பெருந்தோட் குறுஞ்சாத்தன்). மற்று, நெடுங்களத்துப் பரணர் என்ற ஊரொடு தொடர்ந்த பெயரே பிழையாக நெடுங்கழுத்துப் பரணரெனத் திரிந்தது என்பர் ஔவை து. எனினும், அவ்வாறு கொள்ளுதற்குத் தக்க சான்றில்லை. உ.வே.சா. (புற-பாடினோர் வரலாறு) மற்றும் வையாபுரிப்பிள்ளை (சங்க இலக்கியப் புலவர்களின் பெயர் வகை) இருவருமே இவர் பெயரை நெடுங்கழுத்துப் பரணர் என்றே கொண்டு உறுப்பினால் இவர்க்கு இப்பெயர் அமைந்ததாகவே உரைப்பர். இப்பரணர் கரந்தைத் திணையில், வேத்தியல் துறையில் அமைத்துப் பாடியதொரு பாடல் புறநானூற்றில் (291) இடம் பெற்றுள்ளது. போரில் மடிதலையே விரும்பும் மறவனொருவனுக்கு வேந்தன் தான் அணிந்திருந்த மணிமாலையைச் சூட்டி அவன் அணிந்திருந்த ஒற்றைவட மாலையையெடுத்துத் தான் சூட்டிக்கொண்டு சிறப்பித்ததனால் ஆர்வமுற்ற அம்மறவன் முனைந்து போரிட்டு மாண்ட நிலையில் அவன் மனைவியின் துன்ப நிலையை இவர் நன்கு புனைந்துள்ளார். போர்க்களத்தே அவன் மடிந்து கிடக்கையில் அவனுடலைத் தின்பதற்குச் சூழ்ந்து பறக்கும் பறவைத் திரளின் ஆரவாரத்தைப் போக்குமாறு அங்குள்ள சிறுவரையும், துடியரையும், பாண்மக்களையும் ஏவிவிட்டு, ஊளையிட்டுச் சூழும் வெண்ணரிகளைத் தானே கடிந்தோட்ட முனையும் அம்மறக்குடி மகளின் செயலை அவள் கூற்றிலேயே வைத்து இவர் பாடியுள்ளார். 'கணவன் மாண்டமையால் மனஞ்சுழலும் என்போலும் பெருவிதுப்பினை, இவன் மாளுதற்கு ஏதுவாக இவனைச் சிறப்பித்துப் போர்க்குத் தூண்டிய வேந்தனும் எய்துவானாக', என்று அவள் துன்பக் கூற்றினை இவர் பாடலாக்கியுள்ளார்.

**நெடுங்கிள்ளி-சோழவேந்தன்.** இவன், சோழன் நலங்கிள்ளியின் தாயப்பகைஞன். இவன், ஆவூரில் இருந்த காலத்து நலங்கிள்ளி அவ்வூரை முற்றுகையிட்டானாக, அவனை யெதிர்க்கும் திறனிலாது இவன், அறமும், மறமுமின்றிக் கோயிலையடைத்து உள்ளேயிருந்ததனால், அது நாணுத்தகவுடைத்து எனக் கோவூர்கிழாரால் அறிவுறுத்த வேண்டியவனானான். பின்னர், இவன் ஆவூரிலிருந்து தப்பிச் சென்று உறையூரிலிருந்தானாக அங்கும் சென்று நலங்கிள்ளி முற்றுகையிட, அப்போதும் இவன் அடைபட்டுக்கிடந்தது கண்டு, கோவூர்கிழாரே இருவரையும் அணுகிச் சந்து செய்வாராயினர். 'காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி' காண்க.

**நெடுங்கை வேண்மான்**-ஒருவேளின் பெயர். 'நெடுங்கை வேண்மானுக்குரிய அருங்காவல் அமைந்த பிடவூரில், அக்கிழான் மகனாய், அறப்புகழோடு விளங்கும், சாத்தன் சுற்றத்தினர் யாம்', என, நக்கீரர் கிணைஞன் கூற்றில் பாடியுள்ளர் *[புற.395:20].*

**நெடுஞ்சேரலாதன்-ஓர் சேரவேந்தன்.** 'நம் கோ யாரென வினவுவீராயின் எம் கோ, பெரிய கடல் நடுவேயுள்ள தீவினுள் வாழும் பகைவரைக் கொன்று அவரது காவல் மரமாகிய கடம்பினை அடியோடு வெட்டிய கடுஞ்சினத்தையும், பெருவலியினையுமுடைய நெடுஞ்சேரலாதனாவான். அவன் தலைமாலை வாழ்வதாக' என்று இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர்க்கண்ணனார் வாழ்த்திப் பாடுவர் *[பதி.20:5].*-'இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன்', குடக்கோ நெடுஞ்சேரலாதன்', குடவர்கோமான் நெடுஞ்சேரலாதன், சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன்- காண்க.

**நெடுந்தேர்ச் செழியன்**-பாண்டிய வேந்தன் ஒருவன் பெயர் (நெடுஞ்செழியன்). பெரிய புகழினையுடைய கொற்கைப் பொருநனாகிய, வெற்றி தரும் வேலினையும், கடும்பகட்டு யானையினையுமுடைய நெடுந்தேர்ச்செழியன் கூடலின்கண் எதிர்த்து வந்த ஏனையவேந்தரை வென்று அவ்வெற்றிக் களிப்பினால் ஆடியபோது நிறைந்த ஆரவாரமெழுந்தது *[அக.296:11].* 'தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்' காண்க.

**நெடும்பல்லியத்தனார்**-ஓர் புலவர். நெடிய பல வாச்சியங்களைக் கொண்டு பாடியதனால் இவர் இக்காரணப் பெயரைப் பெற்றார் போலும். (நோக்கு. உ.வே.சா.-புறம். குறு.பாடினோர் வரலாறு). நல்ல யாழையும், சிறு பறையையும்

ஒருதலைமாக்கிணையுடனே கட்டிக்கொண்டு போய்ப் பகைப்புலப் பாசறையிலே தங்கியுள்ள குடுமிக்கோமானைக் கண்டு அவனது வெற்றிச்சிறப்புக்களைப் பாடி வளம்பல பெற்று வறியவுணவை நீத்துவருதற்கு விறலியை அழைப்பதாய் அமைந்த இவரது புறப்பாடல் *[64]* இப்பெயர்க்கேற்ப இயன்றுள்ளது. இப்பாடலில் யாழ், ஆகுளி, பதலை எனப் பல இசைக் கருவிகளைக் குறிப்பிடுவதனால் இவர் நெடும்பல்லியத்தனார் என அழைக்கப்பெற்றாரோ என்று மாறிக் கருதுவர் மொ.அ.து. (ச.கா.சி.பெ.பக்.101). பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைச் சிறப்பித்த இப்பாடலொன்றும், வாயில் வேண்டி வந்த தோழிக்குத் தலைவி மறுத்துக் கூறியதாக அமைந்த குறுந்தொகைப் பாடலொன்றும் *[203]* ஆக, இரு பாடல்கள் இவருடையனவாய் உள்ளன. தலைவன் பரத்தைமை யொழுக்கத்தாலாகிய தூய்மையின்மை காரணமாக ஒரூரிலேயே இருந்தும், தூய்மையுடைய தலைவியைக் காண அஞ்சி நீங்கியொழுகுதற்கு, முனிவரைக் கண்டோர் தம் தூய்மையின்மையைக் கருதி விலகியொழுகு தலை, இவர் உவமை கூறியுள்ளார்.

**நெடும்பல்லியத்தை-**ஓர் புலவர். பெண்பாலார். நெடிய பல வாச்சியங்களைக் கொண்டு பாடியதனால் நெடும் பல்லியத்தனாரைப்போலவே இவரும் இக்காரணப் பெயரைப் பெற்றிருக்கலாம். இவர் பாடியது குறுந்தொகையில் 178-ஆம் எண்ணில் அமைந்ததொரு பாடலே. மற்று, குறுந்தொகையில் 203-ஆம் பாடலையும் இவருடையதாகவே வையாபுரிப் பிள்ளையின் சங்க இலக்கியப் பதிப்பு அடக்கிக் காட்டுகின்றது. ஆயினும் அப்பாடலின் புலவர் பெயரை நெடும்பல்லியத்தனார் என்று காட்டி நெடும்பல்லியத்தை என்ற பெயரைப் பாட வேறுபாடாக மட்டுமே கொண்டுள்ளார் உ.வே.சா. (குறு.). பாடினோர் வரலாறு எழுதுகையிலும் நெடும் பல்லியத்தையின் பாடலாக இவ்வொன்றையே அவர் குறிப்பிடுவர். தலைவனும், தலைவியும் வாழும் மனைக்குச் சென்ற தோழி, தலைவியிடத்து அளவளாவுதலில் தலைவனுக்குள்ள விரைவைக் கண்டு, 'இக்காலத்தில் இப்படியிருக்கும் நீவிர், களவுக் காலத்தில் தலைவியோடு அளவளாவும் விரைவினை வெளிப்படுத்தாது வருந்தினீர்போலும்', என்று கூறி இரங்குவதாக இப்புலவர் பாடியுள்ளார். நீர் வயலில் ஆம்பல் பறிப்போர், நீர் வேட்கை அடைவதுபோலத் தலைவியின் முலையிடையிலே நாளும் துயிலும் தலைவன், அவளைத் துய்த்தலில் வேட்கை தணியாது நடுங்குவதாகவும், தொழுது காணும் பிறைபோலக்களவுக் காலத்திலே தலைவி தலைவனுக்கு அரியவளாயிருந்ததாகவும் இவர் உவமை கூறியுள்ளார்.

**நெடும்பாரதாயனார்-**ஓர் மறையவர் (புரோகிதர்) பெயர். இவர் பல்யானைச் செல்கெழு குட்டுவனது அரசவை மறையவர். ஒடுங்காத நல்ல புகழையும், உயர்ந்த கேள்வியறிவையுமுடைய இந்நெடும்பாரதாயனார் முன்னே துறந்து காடுபோக, அதுகண்டு தானும் துறவுள்ளம் கொண்டு துறந்து காட்டிற்குப் போனான் பல்யானைச் செல்கெழுகுட்டுவன் *[பதி.ப..3:10].*

**நெடுமானஞ்சி-**ஓர் குறுநில மன்னன் (அதியமான் நெடுமானஞ்சி). பகைவருடைய காவல் மதிலமைந்த அரண்கள் பலவற்றையும் வென்ற நெடுமானஞ்சி, பிள்ளைகளுடைய இளஞ்சொல் யாழோசைபோல இசையால் இன்பமும் செய்யா; காலத்தோடும் பொருந்தி இரா; பொருளும் அறிய வாரா; ஆயினும், அவை தந்தையர்க்கு அருள் வந்தன. நீ அருளுதலால், என் வாய்ச்சொல்லும் அத்தன்மையனகாண்', என்று அதியமான் நெடுமானஞ்சியிடம் ஔவையார் கூறினார் *[புற.92:6].* 'வாயிலோயே, விரைந்த குதிரையையுடைய தலைவனாகிய நெடுமானஞ்சி தான் தன் தரமறியான் கொல்லோ?' என்று, ஔவையார் தமக்கு அவன் பரிசில் நீட்டித்த நிலையில் வாயிலோனை வினவிப் பாடினார் *[புற.206:6].* உரிமைச் சுற்றத்தார்க்கும் மேம்பட்டுத் தன்னிடம் இரப்போர்க்கு ஈவோனும் மடவோரேயெனினும் தன்னைப் பாடிவருவோர்க்கு மகிழ்துணையாவோனும் ஆகிய நெடுமானஞ்சி, செல்வமுடையனாயின் பிறரோடு சேர்ந்து தானுண்ணவும் வல்லன்; வீட்டின் இறப்பிலே செருகி வைக்கப்பட்ட தீக்கடைக் கோலைப் போலத் தன் வலிமை வெளிப்பட வேண்டாத காலத்தில் அடங்கியிருக்கவும் வல்லன்; கடையுங்கால் அக்கோலினால் வெளிப்படுத்தப்படும் காட்டுத் தீயைப்போலத்,தான் வெளிப்பட வேண்டுங்காலத்துத் தவறாது வெளிப்படவும் வல்லன்', என்று அவனியல்புகளைப் பாடுவர் ஔவையார் *[புற.315:3].* தலை நிமிர்ந்து நடக்கும் உயர்ந்த விரைந்த நடையையுடைய களிற்றியானைப் படையையுடைய நெடுமானஞ்சி அருளுள்ளத்தால் ஆராய்ந்து, நெடுங்காலம் தன் பெயர் விளங்கி நிற்குமாறு இரவலர்க்குத் தேர்களை வழங்கும் நாளோலக்கம் போல முகில் மழையைப் பெய்தது *[நற்.381:7].*

**நெடுமிடல்-**ஒரு குறுநில மன்னன். நெடுமிடல் என்பது அதியமான் நெடுமானஞ்சியின் இயற்பெயர். இந்நெடுமிடல் சாயவும், இவனது கொடிய வலிமையால் செய்யப்படும் போர் அழியவும் பெரிய மலைபோன்ற யானைப்படையோடும் வந்து இவனுடைய நாடு கெடும்படி தங்கி, நெற்கழனிகளையுடைய பிழையா விளையுளமைந்த இவனாட்டினைக் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் கையகப்படுத்திக் கொண்டான் *[பதி.32:10].*

**நெடுமொழி-1.**வஞ்சினம். நெடுமொழி-வஞ்சினம்-கூறிய மன்னர்க்குக், கருதுங்காலத்து, இடையன் ஆட்டினத்தோடு அணுகல் செல்லாத, புலி தங்கும் நிலத்தையொக்கும், குட்டுவன்கோதையது நாடு *[புற.54:9].*

**2.** மேம்பாட்டுரை. தம் 'நெடுமொழி-மேம்பாட்டுரை-மறந்த சிறு பேராண்மையர் போரில் அஞ்சிப் புறங்கொடுக்குங்காலை

அவர்க்கு அரணாகத் தான் முந்துற்றுநிற்பன்' பாண்டியன் கீரஞ்சாத்தன் *[புற.178:9]*. 'எந்தை (எனக்கு) ஈந்தான்; அன்று முதல், வள்ளியோர் வாயிலில் சென்று, நெடுமொழி கூறியறியாது, என் குரல்' என, நல்லியாதனை, நன்னாகனார் பாடியுள்ளார் *[புற.376:22]*.

'மோகூர்ப்பழையனின் நெடுமொழியைக் குறைத்துக்,காவல் வேம்பின் அடிமரத்தை முறித்து, முரசுசெயத் துணித்துக், களிறுகளால், கொண்டு வந்தான் சேரன் *[பதி.44:15]*. 'நெடுமொழியையுடைய சுற்றத்தோடு பாணர் சேரமானைப் பாடிச் செல்லின் கொடுமணம் என்னும் ஊரின் அணிகலனைப், பந்தர் என்னும் ஊரின் முத்தமொடு பெறுகுவர்' *[பதி.67:1]*.

'இப்பொழுது, ஆயத்தாரையும், என்னையும் நினையாளாய் நெடுமொழித் (புகழ்) தந்தையது காவலைக்கடந்து, சுரநெறியில் செல்லத் தலைவியின் சீறடி வல்லுந கொல்', எனச் செவிலித்தாய் கூறினாள் *[அக.17:7]*.

'நெடுமொழி (மிக்கபுகழ்)யையுடைய புல்லி என்பானது நாடுகட்கு அப்பாற்பட்ட வேங்கடமலையைக் கடந்து சென்றனராயினும், நின்னுடனாகிய இனிய துயில் மறந்துதலைவர் நீட்டித்திரார்', என்று தலைவியிடம், தோழி கூறினாள் *[அக.393:18]*.

'பண்பினன், அன்பினன் என்று பரிசிலர் தலைவனைப்பற்றிக் கூறும் நெடுமொழிகளை,யான் கேட்டுக் களிக்குமளவு என்னை உயிரோடு விடுமோ?' என்றாள், தலைவி *[நற்.347:9]*.

**நெடுவெண்ணிலவினார்**-ஒரு புலவர். களவொழுக்கத்தில், இரவுக்குறிக்கண் வரும் தலைவனுக்கு, வேங்கைப்பூ உதிர்ந்த துறுகல்லைப் புலியெனத் தோற்றி அச்சுறுத்தவும், அவனை ஊரார்க்குக் காட்டிக், களவினை வெளிப்படுத்தவும் வாய்ப்பாகி விளங்கும் நிலவினை, அவனது களவொழுக்கத்திற்கு நன்றாகாமையால் வெறுப்பாள் போலவும், உரிய பொழுதில் மட்டுமே எறிக்கும் அதனை நெடும்பொழுது எறிப்பதாகப் பழிப்பாள் போலவும், நெடுவெண்ணிலவே, என அதனை விளித்துப் பாடிய சிறப்பினால் *[குறு.47]*. இப்புலவர் நெடுவெண்ணிலவினார் எனப் பெயர் பெற்றார். அப்பெயர் வழக்கத்திற்குப் பின், இவரது இயற்பெயரே வழக்கொழிந்து மறைந்தது. நெடு வெண்ணிலவிலே களவொழுக்கம் நன்றன்று; வரைந்து கொள்வதே நன்று என்பதைத் தலைவனுக்கு நேர்படக் கூறமாட்டாத தோழி, அவன் முன்னிலையிலேயே அந்நெடுவெண்ணிலவை விளித்து, 'இவர் களவிற்கு நீ நல்லையல்லை' என மாற்றிக் கூறும் நுட்பமும் இரவது பாடலிற்காணும் நயமாகும். இக்கூற்றினை முன்னின்று கேட்கும் தலைவன், நன்றல்லாத இந்நெடுவெண்ணிலவிலே நாம் களவொழுக்கம் நீட்டித்தல் கூடாது', என்பதையுணர்ந்து விரைவில் வரைந்து கொள்வானென்ற தோழியின் எதிர்பார்ப்பும் இப்பாடலின் உட்கிடக்கையாம். ஆகவே, தலைவனை வரைவு முடுக்குதற்கு வாய்ப்பளித்த நிலவைத், தோழி நெடுவெண்ணிலவே, என விளித்தது, உண்மையில் உவகை விளியே என்பதும் உணரப்படும். இப்பாடல் ஒன்றைத் தவிர இப்புலவர் பாடியதாக வேறேதும் காணப்படவில்லை.

**நெடுவேள்**-நெடியவேளே. (விளி) 'இரந்துவந்தோரை வேண்டுவன கொடுத்துக் காக்கும், அச்சம் பொருந்திய நெடுவேஎள்-நெடியவேளே-என்று முருகனைப் போற்றிக் கூறுமாறு அன்பன் ஆற்றுப்படுத்தப்பெறுகின்றான் *[முரு.273]*.

**நெடுவேளாதன்**-ஒருவேளின் பெயர். பெருஞ்சீரும், அருங்காவலும் அமைந்த போந்தை யென்னும் ஊர், இந்நெடுவேளாதனுக்குரியது *[புற.338:4]*.

**நெடுவேளாவி**-ஒருவேளின் பெயர். வண்டுகள் மொய்க்கும்படி மலர்ந்த பூக்களாலாய கண்ணியையும், ஒள்ளிய வீரக்கழலையும் அணிந்தவனும், அஞ்சத்தக்க, குதிரைகளையுடைய மழவரை வென்றோட்டியவனும், முருகனையொத்த நற்போர்த்திறம் வாய்ந்தவனுமான நெடுவேளாவிக்குரியது பொதினிமலை *[அக.1:3]*. முழவினையொத்துத் திரண்ட திண்ணிய தோள்களையுடைய நெடுவேளாவிக்குரியது, பொதினி *[அக.61:15]*.

**நெடுவேள்-1.**முருகவேள். தாழ்ந்த நீரையுடைய கடலின்கண், வெளிய தலையையுடைய திரையலைக்கும் செந்திலிடத்து, அழகிய அகன்ற துறைக்கண் நெடுவேள்-முருகவேள்-நிலைபெற்றிருக்கின்றார் *[புற.55:19]*.

தொண்டைமான் இளந்திரையனது நாட்டிற்குச் செல்லும் வழியில், கடம்பின் கண் அமர்ந்த நெடுவேளையொத்த, மீளிமையுடைய வழிப்போக்கர் இயங்குவர் *[பெரு.75]*. மதுரையின் ஒருபக்கத்தே, வேலன், தன்னிடத்தே வந்து தம்மகளிர்க்குற்ற இடுக்கண் குறித்துக் கேட்டோர்க்கு, இவ்விடுக்கண் முருகனால் வந்ததெனக் கூறி, வாச்சியங்கள் பலவும் ஒலிக்கக், குறிஞ்சிப் பூக்களைச் சூடிக் கொண்டவனாய்க், கடம்பின் மாலை அணிதலால் அழகு மிகும் நெடுவேளைச் செவ்விதாகத் தன்மெய்யின் கண் நிறுத்தி, வழிபட, மகளிர் தம்முள் தழுவிக் கைகோத்து மன்றுகள் தோறும் குரவைக் கூத்தாடுவர் *[மது.614]*. தலைவனால் அம்பெய்யப்பட்ட யானையின் முகத்தினின்றும் குருதி சிந்திய நிலம், அணங்குற்ற மகளிர் நெடுவேளுக்கு மறியறுத்து வெறியாட்டயர்ந்த களம்போல் தோன்றியது *[குறி.174]*.

தலைவனது மணங்கமழும் அகன்ற மார்பு வருத்திய தலைவியின் வருத்தத்தை, எதனாலுண்டாயதென்று அறியாதே, கலக்கமுற்ற அன்னை, பகைவரைத் தேய்த்தொழித்த, பல்வகைப் புகழ்களைக் கொண்ட, பெரிய கையினையுடைய, நெடுவேளைப் போற்றினால் இவள் துயர்

தணியப்பெறுவாள்', என்று முதுவாய்ப்பெண்டிர் கூறக்கேட்டு, வெறியாடும் களத்தை நன்கமைத்து, வேலிற்குக் கண்ணி சூட்டிக் கோயிலில் ஒலியுண்டாகப் பாடுவித்துப், பலி கொடுத்துத், தினையைக் குருதியுடன் கலந்து தூவி, முருகனை வரவழைத்தாள் [அக.22:6]. "தலைவர் உறுவித்த இவ்வல்லலைத் தெரிந்தருளுதலின், மணங்கமழும் நெடுவேள், நம் முன்னையழகினைத் தந்தருள்வான் எனில், இவளுற்ற துன்பமும் பிறிதொன்றானெய்தியது', என அத்தலைவர் கேட்டறியின், யான் உயிர்வாழ்தல் அரிது", என்று தலைவியிடம், தோழி கூறினாள் [அக.98:27]. கொக்கினம், செவ்வானில் பொருந்தி, நெடுவேள் மார்பின் முத்தாரம்போல் வரிசையுறப் பறக்குமாறு, ஞாயிறு மேற்றிசையிலே மறைந்தது [அக.120:1]. தலைவியை இரவில் களவிற் கூடுதற்கு, அவளது மனையிற்புகுந்த தலைவனைக் கண்டு, முருகனென உணர்ந்த அன்னை, புகழுரை கூறிச் செந்தினையை நீரொடு தூவி நெடுவேளைப் பரவினாள் [அக.272:15]. தலைவியின் காமநோயினைப் பிறிதெனவுணர்ந்த அவள்தமர், கடம்பின்கண் கொடியினைக் கட்டி, மாலை சூட்டி, இனிய வாச்சியங்களைக் கொண்டு, காட்டிற் பொருந்திய நெடுவேளைப் பாடும் பாட்டிற்குப் பொருந்த, வெறியாடுகளம் சிறப்புற, மெல்ல ஆடுதலை விரும்பினர் [அக.382:5].

நம் நோயை வெறியென உணர்ந்த அன்னைக்குக், கண்ணினும், கனவினும் காட்டி', இவளது இந்நோய் என்னால் வந்ததன்று; அம்மலைக்கிழவோனான தலைவன் இதனைச் செய்தனன்', என்று கூறுவானாயின், வண்டுகள் ஆரவாரிக்கும் மார்பினையுடைய நெடுவேளுக்கு அதனால் ஒரு குற்றமுண்டாகுமோ, என்று, தோழி, தலைவிக்குரைப்பாள் போலத், தலைவன் கேட்பக் கூறினாள் [நற்.173:9].

'பசிய பூண்களையணிந்த சேயே, உருள்போலும் பூங்கொத்துக்களையுடைய கடம்பின்கண் மேவிய நெடுவேளாகிய நினக்குப் பூசைக்கு ஏந்திய கமழ்புகையூடு நுழைந்த காற்றையும், பிற மணக்காற்றுக்களையும் நின் திருப்பரங்குன்றம் மிகவுடையது', என்று நல்லச்சுதனார், முருகனைப் பாடுவர் [பரி.21:50].

**2. நெடிய வேளே** (திருமாலைக் குறித்த விளி). 'ஆறுகைகளையுடைய நெடுவேள்-நெடியவேளே-'என்று திருமாலை விளித்துப் போற்றுவர் கடுவனிளவெயினனார் (இவ்விளி, திருமால் தத்தாத்திரேயரை நினைந்து கூறியதுபோலும்: நோக்கு: உ.வே.சா. குறிப்புரை) [பரி.3:37].

**நெதி-செல்வம்.** 'நிலனே மரக்காலாக, ஏழு மரக்கால் நெதியைப்-செல்வத்தைப்-பெறினும், அரிவையது நோக்கத்தால் செறிக்கப்பட்டேனாதலின், நெஞ்சே! நின்னொடு வாரேன்' என்பது தலைவன் கூற்று [நற்.16:8].

**நெய்-1.** ஆனெய். 'நின் படையை எதிர்த்து வலியிழந்து வசையுடன் வாழ்ந்தோர் பலரோ? நெய்-ஆனெய்-மிக்க புகைமேலெழச் செய்த வேள்வி பலவோ?' என முதுகுடுமிப் பெருவழுதியை நோக்கிய புலவர் பாடினார் [புற.15:19]. பெண்யானையோடு கயத்தில் படியா; நெற்கவளத்தோடு, நெய்ம்மிதிக் கவளமும் பெறா; சாய்ந்து, உயிர்த்துச் சுழலும் களிறு [புற.44:2]. நறிய நெய்யிலே கடலை துள்ள, அதனோடு சோற்றையட்டு, ஊட்டுதற்கு மனையாள் கலம் பூசுதலைப் பொருந்த, வருந்தாத வருவாயையுடைத்து காடு [புற.120:14]. துவையோடு கூடிய நெய்யுடைய அடிசிலைத், திங்களைச் சேர்ந்த நாள்மீனையொப்பப், பொற்கலங்களை வைத்து ஊட்டிப், பரிசிலர்க்கு அணிகலங்களை வழங்கினான் குமணன் [புற.160:7]. 'நீர் நாணுமாறு நெய் வழங்கி, எண் நாணுமாறு வேள்விவேட்டு, மண் நாணுமாறு புகழ் பரப்பி மேம்பட்ட நின் நிலையை எந்நாளும் காண்போமாக', என, விண்ணந்தாயனைப் ஆவூர் மூலங்கிழார் பாடினார் [புற.166:21]. மிக்க செல்வமுடையோராயினும் குறுக நடந்து, சிறுகை நீட்டி, இட்டு, தொட்டு, கவ்வி, துழந்து நெய்யையுடைய சோற்றை உடம்பிற்படச் சிதறி இன்பத்தான் மயக்கும் மக்களை இல்லோர்க்கு வாழ்வில் பயனில்லை [புற.188:5].

'நெய் தீண்டாமல், இலை இடையே பயின்ற, கையாற் பிழிந்து கொள்ளப்பட்ட, நீர்ச்சோற்றுத்திரளுடனே, எள்ளரைத்த விழுதோடு, புளி கூட்டிய வேளையிலை, வெந்த வேவையுமாகிய இவை உணவாகக் கொண்டு, பாயின்றிப் பருக்கைக்கற் படுக்கையின்கண் கிடக்கும் கைம்மைப் பெண்டிருள்ளேம் அல்லேம்', எனப் பெருங்கோப்பெண்டு, தீப்பாய்வாள் உரைத்தாள் [புற.246:5]. 'நெய்யுலையின்கண் சொரியப்பட்ட, ஆட்டிறைச்சிப் பொரியலைப், புதுமாந்தர் மகிழ நல்கினான் ஒருபுரவலன் [புற.261:8]. 'புண்பட்டோரைப் பேய்கள் அணுகாதிருத்தற்பொருட்டு, வேப்பந்தழையை வீட்டுமுன் இறப்பிற்செருகிக், காஞ்சிப்பண்ணைப் பாடி, நெய்யுடைக், கையோடு, வெண்சிறுகடுகைப் புகைக்க எல்லோர் மனையும் ஆரவாரமுற்றன [புற.296:2]. மன்னனது உழுந்தின் சக்கையுண்ட புரவி, படைமுகத்தைப் போழ்ந்து செல்ல, நெய்யொடு பிசைந்த உணவையுண்ட பகைமன்னர் புரவி, முருகன்கோயிலை அணுக அஞ்சும், கலந்தொடாத மகளிரைப்போல, அஞ்சிநின்றன [புற.299:4]. ஊன் குறையை, அரிசியொடு, நெய்யில் பெய்து சமைத்த களி கொள்வெண்சோறு உண்டினிதிருந்தபின் சீறூர் மன்னன் பலவும் தருகுவன் [புற.328:10]. சீறூரில், நடுகல்லை நீராட்டி, நெய்பூசிப், பலியூட்டி, நறும்புகை எடுப்ப,மணம் கமழும். (நெய்யுருகும் நறும்புகையெனினுமாம்) [புற.329:3]. நறிய நெய்யை உருக்கிநாட்காலையில் சோறீந்து, பசிதீர்த்தல் வல்லன், வில்லியாதன் [புற.379:9]. 'நெய்யால் தாளிக்கப்பெற்ற, ஊன் நிறைந்த பலசோற்றோடு, இனிய சுவையுடையன பலவழங்கி, வறுமையொழிய விடுக', என, நலங்கிள்ளியைக், கோவூர்கிழார் கடைநிலைத்துறையில் பாடியுள்ளார் [புற.382:8]. மண் நாணுமாறு

புகழை விரும்பி, நிணம் பெருத்த ஊன் சோற்றிடை, நீரும் நாணுமாறு, நெய்யை ஊற்றிப் புரந்தான்', கரும்பனூர் கிழான் *[புற.384:17]*. கொதிக்கும் நெய்யில் துள்ளிய வறுவலையும், சுட்ட வாடிய ஊனையும் உண்ட வியர்ப்பல்லது செய்தொழிலான் வியர்ப்பறியாமை ஈந்தோன், எனக், கிள்ளி வளவனைக் கோவூர்கிழார் பாடினார் *[புற.386:3]*. சூட்டிறைச்சி, மட்டு, முயலின் ஊன் பெய்த நறுநெய்யுடைய சோறு முதலிய உணவுபல ஈந்தோன், வாட்டாற்று எழினியாதன் *[புற.396:18]*. நெய்யில் பொரித்த சூட்டிறைச்சி, தேறல், பாம்பின் உரிபோன்ற பூங்கலிங்கம், அருங்கலம் முதலியவற்றை வேனில் போன்ற வறுமை நீங்க இரவலர்க்குக் கிள்ளி வளவன் வழங்கினான் *[புற.397:13]*.

கடவுளைப் பேணும் பொருட்டுக் கொண்ட ஆவுதியும், விருந்தினரைப் பேணும் பொருட்டுக் கொண்ட ஊனை அடும் நெய் யாவுதியும் ஆகிய இரண்டனையும் கொள்ளும் மார்ப, எனப் பாலைக் கௌதமனார் குட்டுவனைப் பாடினார் *[பதி.21:13]*.

கோழிக்கொடியோடு அமைவரப்பண்ணி, நெய்யோடு வெண்சிறுகடுகையும் அப்பி, வழிபட்டு, முருகனை, ஆண்டுவர, வழிப்படுத்தினர் *[முரு.228]*. ஆய்ச்சி நெய்யை விற்கின்ற விலைக்குக், கட்டியாகப் பொன்னை வாங்காளாய்ப், பால் எருமையையும், நல்லானையும், எருமை நாகினையும் பெறுவாள் *[பெரு.164]*. சூலுடைய மந்தி, பரிக்கோலையுடையோர் நெகிழ்ந்த செவ்விபார்த்து, யானைக்கிட வேண்டிய நெய்யை வார்த்துத் திரட்டிய கவளங்களைக், கவரும் *[பெரு.394]*. நெய்யிடுதலாற் கருகிய கதவினையும், நீரோடும் வையை போன்று, இடையறாது மாந்தர் வழங்கும் வாயிலினை யுமுடையது மாட மதுரை *[மது.354]*. களந்தோறும் கள்ளரிப்ப, மரந்தோறும் காராடு வீழ்த்தி, நெய் நிறைந்து, பொரிக் கறி, ஆரவாரிக்கும் வீடுகளையுடையது மதுரை *[மது.756]*. (கடவுளுறைதலால்) வெண்சிறுகடுகோடு, நெய்யணிந்த நிலையினையும், வெற்றிக் கொடியோடு வேழம்புகும் வாயிலையும், உடையது கோயில் *[நெடு.86]*. நெய்மிக்க உணவினை, விருந்தினர் உண்டு எஞ்சியதை, நீயிட, நான் உண்பதும் உயர்ந்ததென்று, மலைக்கடவுளை வாழ்த்தித், தெண்ணீர் குடித்துத் தலைவன் வஞ்சினத்தால் தலைவியைத் தெளிவித்தான் *[குறி.204]*. நெய்யிடத்தே, தசை கிடந்து வெந்த பொரியலோடே, தினைச் சோற்றைப் கூத்தர் பெறுகுவர் *[மலை.168]*.

இறைச்சியுடன் கூட்டி ஆக்கிய நெய்மிக்க வெண்சோற்றைச், சுற்றம் முதலாயினார் வதுவை நாளில் உண்பர் *[அக.136:1]*. ஈங்கையது, நெய்யில் தோய்த்தெடுத்தாற்போன்ற, நீரால் நனைந்த அழகிய தளிர்கள், இருபிளவாகிய ஈரல் போல, முன்பனிக்காலத்தில் அசையும் *[அக.294:7]*. நெய்பெய்து மிகுத்தியற்றிய கவளத்தை கொழுவிய சோற்றையுண்ட புரவி வெறுத்தது *[அக.400:7]*.

'தூதுவாயிலாக வந்த குற்றமில் மொழியை, நெய்பெய்தீப்போல், ஏற்று, அவனை மணந்த காலத்துப் போன்றுள்ளேம், எனத், தூதுவிடுவேமாக', என்றாள், தலைமகள் *[குறு.106:5]*. நள்ளியின் முல்லை நிலத்து ஆன்கள் பயந்த, நெய் முழுதுடன் கலந்த, தொண்டிமுழுமையும் விளைந்த, வெண்ணெற்சோறு முழுமையும், எழுகலத்தேந்தி, தலைவர் வரவுணர்த்தி கரைந்த காக்கைக்குப் பலியாக இடினும், சிறிதாகும் என்றாள் தோழி *[குறு.210:2]*. தலைவர் நலம் கூறிய குற்றேவல் மகன், நெய்யில் அடப்பட்ட குறும்பூழ்க் குழம்போடு, உணவினைப் பெறுவானாக', எனத், தோழி உரைத்தாள் *[குறு.389:1]*.

உருக்குறு நறு நெய்யில் பாலைச் சிதறினாற் போன்ற, கடைகின்ற குரலுடைய,மிடற்றுடன், பல புள்ளிகளமைந்தது கானங்கோழி *[நற்.21:6]*. 'இரவில் வந்தவிருந்து உண்ண வேண்டி, நெய்யை அளாவவிட்டு, ஊனைச் சமைத்ததனால், நுதலில், வியர்வை தோன்ற, நின் கூட்டத்தை விரும்பினார், அன்று', எனத், தோழி கூறினாள் *[நற்.41:7]*. 'கூகையே! ஊனோடு நெய்கலந்த சோற்றினை, எலியின் சூட்டிறைச்சியோடு, நிரம்ப வழங்குவோம். காதலர் வருதலை விரும்பிக், கவன்று துயிலாத காலத்து, அச்சந் தோன்றக் கடியகுரலை எழுப்பாதிருப்பாயாக', என்றாள், தோழி *[நற்.83:5]*. 'என் தோழி, மண்ணில் ஊன்றி மறைந்த புன்னை விதை முளைகொள, நெய் கலந்த பாலை நீராக வார்த்து வளர்க்கப், புன்னையாகிய தங்கை, நும்மினும் சிறந்தொன் றென்றமையால் (அன்னை) அதனருகே நும் கூட்டத்திற்கு நாணுகின்றோம்', என்றாள், தோழி *[நற்.172:3]*. நெய்வடிந்தாலொத்த, பிசிர் அடங்கிய நரம்புபூட்டிய, யாழ் வல்ல பாணர் தலைவனே! தழும்பன் என்பானது ஊணூரின் கண், ஊணுக்கு வந்த, யானையின் நிலை போன்ற, எம் அட்டிற் சாலையின் கூரையைத் தொட்டு (நீயும்) நிற்பாயாக'. என்றாள், காமக்கிழத்தியது விறலி *[நற்.300:8]*. குடிக்கு மகப் பெற்றுதவி, நெய்யோடு கலந்த வெண்கடுகு விளங்கும் வீட்டில், தலைவிபாயலில் கிடந்தாள் *[நற்.370:3]*. 'நெய்யும் தாளித நறும்புகையும், மகவுக்குத்தீட்டும் மையும் பட்டு மாசுபடிந்துள்ளது, ஆடை. பால்சுரப்ப, மகவினைப் புல்லி, முடைநாறுவது, தோள். எனவே பரத்தையிற் பிரிந்த தலைமகற்குத், தலைமகளாகத் தக்கவளல்லள்', எனத்,தோழி சொன்னாள் *[நற்.380:1]*. நெய்யோடு கலந்த உழுத்தமாவினை, நூற்றாற் போன்றது வயலைக் கொடி *[நற்.411:1]*.

வையையின் அலை, மிளகு கொடி, சந்தனமரம், நெய், குடை, தயிர் போலும் நுரை முதலியவற்றைக், கரைமீது, மேலும் மேலும் வீசியெறியும் *[பரி.16:3]*.

**2. எண்ணெய்.** தொண்டைமானுடைய படைக்கலன்கள் பீலியணியப்பட்டு, மாலை சூட்டப்பெற்று. நெய்-எண்ணெய்-இடப்பட்டுக் காவலையுடைய கோயிலிடத்தன *[புற.95:2]*.

'ஆவியர் கோவே! நெய்யால் தூறக்கப்பட்ட அரிவையது கூந்தல், கழுவப் பெற்று, மலர் செறியுமாறு, நீ, வருவையாயின், அதுவாகும், எம்பரிசில்', எனப், பேகனிடம் பெருங்குன்றூர் கிழார் கூறினார் *[புற.147:6]*.

யவனரைப் பிணித்து, நெய்யைத் தலையிலே ஊற்றிக், கையைப் பின்னே கட்டி, அவரது நன்கலத்தைப் பரிசிலர்க்கீந்தவன் இமயவரம்பன் *[பதி.ப..2:9]*. நெய்வடியப், பாண்டில் விளக்கில், சுடர் ஒளிவிட, விறலியர், நகரில் ஆடினர் *[பதி.47:5]*.

நெய்யிலே முற்றுப்பெற்று, இருண்ட கூந்தலையுடையாள், விறலி *[சிறு.14]*. பாசறைநடுவண், மன்னன இருக்கையில், வாளொடு கச்சணிந்த மங்கையர், யாமத்தில் நெய்யைக் காலுகின்ற திரிக்குழாயையுடையராய்த் திரியையிட்டு, விளக்கு அவியுந்தோறும், நெகவிளக்கால் எரிகொளுவினர் *[முல்.48]*. பாவை, ன் கையேந்திய தகளி நிறைய, நெய்விட்டுத், திரியிட்டு, எண்ணெய் அல்லது) எரி அறுங்காலும் அமையப் பண்ணி, இருள் நீக்கினர் மகளிர் *[நெடு.102]*. ஒருபிடியிலே ஏழ்காயாக, நெய், உள்ளே கொள்ளும்படியாக வளர்ந்தன, எள். *[மலை.106]*.

இலவம்பூக்கள், நெய்விளக்கினின்றும் தெறிக்கும் சுடர்போலக், காற்று மோத வீழ்ந்து, எஞ்சியன, விடியுங்காலத்து மீன் போலத் தோன்றும் *[அக.17:20]*. அழகிதாக விளங்கும் அகன்ற இலையினையும், நெய்கனியப் பெற்ற வலிய தண்டினையும் உடையதுவேல் *[அக.64:5]*. பின்னுதலளவில் முடித்திட்ட, வேறு, ஒப்பனை செய்யாத, நெய் தடவப்பெற்ற, தாழும் குழலினைச் சேரக் கட்டியவள் தலைவி *[அக.73:2]*. நிலவுபோல் கூரிய இலைவிளங்கும், நெய்மிக்கது நெடிய வேல் *[அக.123:9]*. பெண்யானையின் கையினையொப்பச், சேரக்கட்டிவிட்ட, நெய்பூசப்பெற்ற மணமுடைய கூந்தற்கண்ணே, நறமலரைப் பெய்தனர் *[அக.177:4]*. பசை பொருந்திய தோலை நெய்யில் தோய்த்தாற் போன்ற, கரிய சிறகினையுடையது வாவல் *[அக.244:1]*.

மகளிர் நெய்வார்த்துக் கொளுத்திய விளக்கு மாலைக்காலத்தில் துன்பத்தை எழுப்பும் *[குறு.398:4]*.

மெல்லணைமீது, செவிலியுடன் ஈன்றணுமையுடைய புதல்வன் தூங்க, வெண்சிறு கடுகை அப்பி, நெய் தேய்த்து, நீராடிய, நெய்பூசிய, உடம்பினையுடைய மனைவியும் (புதல்வன்தாய்) உறங்காநின்றாள் *[நற்.40:7,8]*. துறையில் புன்னையினது கொம்புதோறும் நெய் (புன்னைக்காய் நெய்)-மிக்க பசிய காய் தூங்கும் *[நற்.278:5]*. பனியில் உழந்த வாவல், தாவும் கிளைதோறும், நெய்தோய்ந்த திரியினின்றும் சுடர் வீழுதல் போலப், பனித்துளிவீழும், *[நற்.279:4]*. நெய் பூசினாலொத்த காம்பின் வேலையுடைய, செல்வத்தந்தையது மலையிடத்து, பந்துருட்டுநள் போலத் தலைவியின் மெல்லடி நடைபயிலும் *[நற்.324:5]*. 'முதன் மழைபெய்ய, வந்து வரைவேன் என்றமையான், புனத்தில் பெருமழை பெய்க: பெய்யின், வரையப்பட்டுத், தலைமகனூர் செல்வதோடு, இதுவரையும் இரவுக்குறிக்குத் தடையாயிருந்த, விறலியின் ஆட்டத்தோடு, அதுகாண வேண்டும் விளக்கொளிக்காக, எள்ளைப் பிழிந்த நெய்யோடு, பந்தத்திற்கு வெண்டுணியினையும் வேண்டாது இவ்வூர்', என்றாள், தோழி *[நு..328:8]*.

திரி உமிழ்கின்ற நெய்ப்பாலக், கண்கலங்கி நீரை வடிய விடப், பிறர் நாட்டுக்குப் பிரிந்து சென்று, மீண்டுவரும் கூட்டத்தால், கண்ணின் மலரழகை மீட்டுத் தரல் இயல்வதோ?' எனத், தலைவனிடம் தோழி கூறினாள் *[கலி.15:21]*.

பத்துத் துவர் முதலாயின ஊறின நீரும், சந்தனம் முதலியவற்றது குழம்பும், வாசநெய்யும், சூடிய மலரும் நாற வையைநின்றது *[பரி.6:41]*. வையை நீராடச், சிலர் வாசனை கூடிய நெய்யைப் பூசிக், கண்ணாடியை விளக்கித், தம்மழகினை நோக்கி, நறுமணப்பாக்கினை வாய்க்கொள் வாராயினர் *[பரி.12:19]*. சிலர் நெய்யணிந்த கூந்தலராய், யானை மசையராய், விரைய, வையை நீராடச் சென்றனர் *[பரி.தி.2:13]*.

2. தேன். தேன் நெய்-தேனாகிய நெய்-யோடே, கிழங்கையும் விற்றவர்கள், மீனின கொழுப்போடே, நறவையும் கொண்டு சென்றனர் *[பொரு.214]*. நீலநிறம் (ஓரி) அல்லது முசுக்கலை, ஆய இறாலின் நெய் (நெய்யினால்) வரையிடத்தே கழியும் *[மலை.525]*.

நகை நெகிழப் பிரிந்து வருத்தமுறுத்தினோன் குன்றாயிருந்தும், நெய்யை இடத்தேயுடைய இறால், மழையில் நுழையும் மதிபோல் தோன்றுவது, என்', என்றாள், தோழி *[கலி.42:22]*.

நீலநிறத்தையுடைய நெய் (தேனெய்) தங்கிய கோதையையுடைய மகளிர் விலக்க நில்லாது அக்கோதையின் பூவை ஊதும் வண்டினம், யாழைப் போன்று இசைக்கும் *[பரி.11:124]*.

4. கொழுப்பு (கொழுப்புருக்கு) தேனொடு கிழங்கை, மீனின் நெய்யோடு-கொழுப்புருக்கு-நறவுக்கு மாற்றிக்கொள்வர் *[பொரு.215]*. காண்க-தேன்-3 *[பொரு.214]*.

பரதவர், கடலிலிருந்து கொண்டுவந்த மீனை மணலில் குவித்து, மீனின் நெய் வார்த்துக், கிளிஞ்சிலில் ஏற்றிய விளக்கொளியில், துறையில் துயில்வர் *[நற்.175:3]*.

மாலையில் மீன்கொழுப்பைத் தொகுத்து உருக்கிய, ஊன் நாறும் நெய்யை, வார்த்து, ஏற்றிய விளக்கொளியையுடைய, பாக்கத்தில், எம்மொடு தங்கின், குறையாகுமோ?' எனத் தலைவனைத் தோழி கேட்டாள் *[நற்.215:5]*. நெய் (கொழுப்பு) மிக்க தலையையுடைய மீனை அருந்தவேண்டிப்

படைத்தொகுதி போன்று, துறையில் நாரையினம் குவிமணலில் கூடியிருக்கும் *[நற்.291:2]*.

'என் உயிர், காமநோயில், மூழ்கி, நெருப்புப் பரந்த, நெய் (கொழுப்பு)யை உள்ளே கொண்ட மெழுகு உருகித்தேயுமாறுபோலத், தேயா நின்றது', என்றான் தலைமகன் *[கலி.138:22]*.

**5. வெண்ணெய்.** தாழியில் மத்திட்டு நெய்-வெண்ணெய்-தோன்றக் கடைதலால் முழக்கமுடையது விடியல் *[நற்.12:3]*.

'தயிர் கடைந்து வெள்ளிய நெய் (வெண்ணெய்) எடுக்கும் ஒலி கேட்கும் அண்மைத்து நின்னூர்; பொழுது, நண்பகல், ஆகியிருக்கச் சோலையில் எம்மொடு தங்கி மாலையில் செல்வாய்', என அகப்புறத் தலைவன் தலைவியிடம் கூறினான் (வெண்ணெய்த் தெழி என்பதற்குக் 'கடைந்தமோரைக்' கையால் அலைக்கும் ஓசை, என்றார் நச்சினார்க்கினியர், தம்முரையில்) *[கலி.108:35]*. மோரை வேண்டினார்க்குச் சிறிது மோரை வார்த்து எளியளானவள், வெள்ளிய நெய்யை (வெண்ணெய்) வேண்டினார்க்கு அதனைஇட்டு எளியளாயிருப்பள் எனக் கொண்டாய்', என, வினைவல பாங்கி தலைவி கூறினாள் *[கலி.110:6]*. 'நெய் கடைந்துவிட்ட பால் போன்று, கைதோய இடங்கொடுத்ததன்றிப் பிறிதியாதும் பயனின்று', என்றான் வினைவல பாங்கின் தலைமகன் *[கலி.110:17]*.

**6. புழுகு.** 'ஐய, நெய்-புழுகு-பூசப்பட்டு ஐவகையாகப் பகுக்கப்பட்ட இளமைக்கால கூந்தலைப் பாராட்டினாய். ஆயின், அதன் பின்னையகாலத்துக் கூந்தலில் செய்யும் புனைவினையைப் பாராட்டினாயோ?' எனத், தோழி தலைவனிடம் கூறி பிரிவுமறுத்தாள் *[கலி.22:12]*.

நெய்யிட்ட துருத்தியையும், பனிநீர் ஊற்றிவைத்த கொம்பையும், பிறவற்றையுங் கொண்டு மாந்தர் வையை நீராடச் சென்றனர் *[பரி.6:34]*.

**நெய்த்தோர்-குருதி.** முரசுறை கடவுளுக்கு நெய்த்தோரோடு-குருதியோடு-கள்ளையுடைய பெரும்பலியைப் படைக்கப், பேய்மகளும், எறும்பும் தீண்டாதிருக்கக், காக்கையும், பருந்தும் உண்டன *[பதி.30:37]*. பகைவர், உடலிற் பதிந்த படைக்கலங்களைப் பறிக்க, எழுந்த நெய்த்தோரை அளைதலால் மறவர் சிவந்த கையையுடையராயினர் *[பதி.49:10]*.

இருப்பையின் பூக்கள் காற்றாற் சிதறிச் சிவந்த வழிகளில் வீழ்ந்துகிடப்பன, நெய்த்தோரில் கிடக்கும் கொழுப்பு போன்று, காணப்படும் *[அக.9:9]*. அம்பு தொடுக்கும் சிறப்புக் காணவேண்டிய கல்லா இளைஞர், வருவோரைக் கொன்று வீழ்த்த, அந்நெய்த்தோரில் படிந்த விரலுடைய பருந்து தங்கியிருந்த, சிவந்த நுனியையுடைய, வெள்ளிய யாஅங்கொம்பு, பகைவரைக் குத்திய யானையது கொம்பு போலத் தோன்றும் *[அக.375:7]*.

வழிச்செல்வாரைக் கொன்ற சிவந்த தலையையும், நெய்த்தோர் வாயையுமுடைய புலிக்குட்டிகள் சுரத்திடைப் பதுங்கும் இடம் பார்க்கும் *[நற்.2:4]*.

நெய்த்தோர் போன்ற, நிறத்தினையுடைய அரக்கு நீரை, எக்கும் கருவி, பனிநீர்கலந்த சந்தனம் செறிந்த மூடிப்பெட்டி, முதலியவற்றை ஏந்தியவராய் மதுரை மக்கள் வையையில் நீராடச் சென்றனர் *[பரி.10:12]*.

**நெய்தல்-1.** நெய்தற்செடி. கோதையினது மார்பிலணிந்த கோதையானும், அவனைக் கூடிய மகளிர் சூடிய கோதையானும், கழியின்கண் மலர்ந்த நெய்தலானும்-நெய்தற்பூவானும்-தேனாறும் கானலையுடையது, தொண்டி *[புற.48:3]*.

கடைசியர் நெய்தலை வயலில் ஆம்பலுடனே களைவர் *[புற.61:2]*. நீலநறுநெய்தல் (பூ) போன்றமையுண்ட கண்கள் கலங்க, வீழ்ந்த துளிகள், மார்பை நனைப்பக் கண்ணகி பெரிதும் வருந்தினாள் *[புற.144:4]*. நெய்தலையுடைய வயலில், நெல்லரி உழவர், ஆம்பலினது இலையால் மதுவை உண்டு, கடல்திரையின் தாளவோசைக்கேற்ப ஆடுவர் *[புற.209:2]*. மகளிர் கடலில் ஆடிக் கயத்திற் பாய்ந்து, உப்பங்கழி நெய்தற்பூவைப் பறிப்பர் *[புற.339:8]*.

கரும்புப் பாத்தியில் பூத்த நெய்தல் கரும்பு முதலிய பிறவற்றில் செல்லாது, தன்னையே உண்ணுமாறு, எருமையது கூட்டத்தைத் தடுக்கும் *[பதி.13:3]*. தாமரை, ஆம்பலொடு மலா, நெல்வயலில், நெய்தல் பூப்ப, நெல்லரியும் வாள், தாள்வன்மையால், வாய் மடங்கக், கரும்பு பிழி எந்திரத்தின் சாறு வடியும் வாய், தேயும் *[பதி.19:21]*. மகளிர் ஒலிசெய, இசையென்று மயிலாடப், புனல் மோத வழிவழியாக வளரும் நெய்தலையுடையது வயல் *[பதி.27:10]*. நீலமணிக்கலம் போன்ற கரிய இதழையுடைய நெய்தலது பசிய இலையை இரைக்காகத் துழாவிப் புன்னையது சினையில் நாரை தங்கும் *[பதி.30:2]*. ஆரிய அண்ணலை வீட்டிக், கடவுட்பத்தினிக் கல்லைக், கங்கையில் நீர்ப்படை செய்து, வயவர் மடிய, இடும்பிற்புறத்துத் தங்கிச், சிறிய கொத்தாகிய நெய்தலையுடைய வியலூரையழித்துக், கொடுகூர் எறிந்து, பழையன் வேம்பு முதல் தடிந்து, நேரிவாயிலில் சோழர் ஒன்பதின்மரை குட்டுவன் வென்றான் *[பதி.ப.5:11]*. கண்போல் நெய்தல், தேன் பொருந்திய நறவம்பூவோடு நாடு முழுவதும் நறுமணம் வீசும் *[பதி.51:17]*. கழியில் மலர்ந்த கரிய நிறத்தினையுடைய நெய்தற்பூவினது இதழின் அழகையொத்த தோற்றத்தோடு, உயர்ந்த மழையைவிடப் பெரும்பயனை இரவலர்க்குப் பொழிதலையுடையவன் சேரன் *[பதி.64:16]*. நீராம்பலை, நெய்தலோடு பறித்து, வயலில்,

தொழில் செய்யும் மகளிர் விளையாடுவர் *[பதி.71:2]*. மருதநில அண்மையானே, மகளிர் தாமரையை, நெய்தலோடு (பூ) அரிந்து, கிளிகடியுந்தொழிலைப், பொருந்தப், பல்பயங்களும் நிலைபெற்றது முல்லை நிலம் *[பதி.78:4]*.

இரவில் தாமரையில் துயில் கொண்டு, வைகறையில் தேன் நாறும் நெய்தல் (பூ) ஊதி, ஞாயிறு தோன்றிய காலத்தே, சுனைப் பூக்களில், வண்டின் கூட்டம் ஆரவாரிக்கும் *[முரு.74]*. குறிஞ்சிப் பண்ணைப் பரதவர் பாட, நெய்தற் பூவாற்செய்த கண்ணியைக் குறவர் சூட, முல்லை நிலத்தார் மருதப் பண்ணைப்பாட, மருத நிலத்தார் முல்லை நிலவளம் பேச, நாடு மயங்கிய வளமுடையது *[பொரு.218]*. களைபறிப்பார் அறுத்திட்ட நெய்தற்பூவை வெறுப்பின், முள்ளிமலரைப் பஞ்சாய்க் கோரை நாரில் கட்டிக் கண்ணியாகச் சூடிக், கண்பின் காயினது சுண்ணத்தைப் புடைத்த, பொன்னுரைகல் போன்ற, மார்பினையுடையவர் சிறார் *[பெரு.213]*. பொய்கையில் தாமரை, தேன் நாறும் நெய்தல் (பூ), நீலம், ஆம்பலோடு வண்டு தங்கும் *[மது.250]*. பசிய பயிர் மீது, வெள்ளி போன்று முசுண்டையும், முல்லையும் பரந்து, நீலமணி போலும் நெய்தல் (பூ) அவற்றுடன் மாறுபட்டுத் தோன்ற, வெறிக்களம் போன்று தோன்றியது முல்லைநிலம் *[மது.282]*. வாழை, வள்ளி, நீண்ட நறிய நெய்தல், நீலமணிபோலும் கொத்துடைய தேன் நாறும் நெய்தல் முதலிய மலர்களைப் பறித்ததாகத் தோழி கூறினாள் (நீலமணி போலும் நெய்தலைக் கருங்குவளை என்றார், நச்சினார்க்கினியர்,) *[குறி.79,84]*. கரும்பின் பாகை அடும்,புகை கடுகையினால், வயலின்கண் நின்ற நீண்ட நெய்தற்பூ வாடும் *[பட்.11]*. கரும்பொடு, செந்நெல்லும் வளர்ந்து குவளையோடு, நெய்தலும் மயங்கிக்கிடந்தன *[பட்.241]*. வயலில், நீண்ட நறிய நெய்தல் (பூ), கருமை வடிவு கொண்டது போன்று, விரிந்தன *[மலை.124]*.

'பெரும! நெய்தலை (பூ) ஒத்த மையுண்டகண்கள் வருந்தினவாய் அழ, இவளைப் பிரிந்து செல்லுதலை நினைத்தாயின், பெரிதும் அரியதனை மேற்கொள் வாயாயினை', எனத் தலைவனிடம் தோழி கூறினாள் *[அக.10:5]*. வயல் நிரில், பசிய இலைகளிடையே வளர்ந்த, திரண்ட காலினையுடைய நெய்தலை (பூ), விழாவிற்கு ஒப்பனை செய்யும் மகளிர்,தம் தழையுடைக்கு அணிசெயச் சேர்த்தனர் *[அக.70:11]*. தலைவியைப் பிரிந்து, புல்லி என்பானது வேங்கடத்தைக் கழியினும், சேய்மையிலுள்ளார் என்னாது, அன்பு செலுத்தி, நெய்தல் மலர் போன்ற கண்ணையுடைய காதலியது குணன், நம்மை அணுக வந்தன', என்றான் தலைவன் *[அக.83:12]*. விடியலில், எருமை, நெய்தலினது மலரைத் தின்னும், தாழை வேலியையுடைய ஊரின்கண், பெரியன் என்பானது புறந்தையென்னும் துறையின் கண், நாரைக் கூட்டம் ஒலித்தாற்போன்று, அலர் எழுந்தன *[அக.100:17]*. 'நெய்தற்பூப்போலும் உருவினையுடைய, அழகிதாக விளங்கும் இலையினையும், மயில் தோகையால் விளக்கமுற்ற காம்பினையும், சுரையினையும் உடைய, வேலே துணையாகச் செல்லும் போர்க்களத்திற்குத், தம் துணையாக, நாமும் செல்லத் துணிவாரோ?; என்றாள் தலைவி *[அக.119:11]*. பனை வளர்ந்த பட்ப்பையில், அன்றில் தன் துணையை அழைக்கும் இடத்துச், சிறிய பூங்கொத்தினையுடைய நெய்தல் பொருந்திய நாட்டின்கண் தங்கிச் செல்லின், கெடுவதொன்றுளதோ, பெரும!' எனத், தோழி உரைத்தாள் *[அக.120:16]*. 'பாண்டியனது கொற்கைத் துறைக்கண்ணுள்ள, கழிநெய்தற்பூப் புறங்கொடுத்த, மையுண்ட கண்களது, செருக்கிய பார்வையினைக் கண்டீராயின், கழறிக் கூறீர்' என்று பாங்கற்குத் தலைவன் கூறினான் *[அக..130:12]*. 'நெய்தலது, கண்போலும் மலர், மாலையில் குவியக், காலையில் செருந்தி, குவளையுடன் மலரும், கழியும், கானலும் காணுந்தொறும், பலவாக வெறுத்துத், தலைவர் வாராரோ', எனத் தலைவி வருந்துவள் எனத், தோழி உரைத்தாள் *[அக.150:8]*. உருளையின் நுதிமுகத்தால் அறுக்கப்பெற்றுப், பொதிந்த அரும்புடையநெய்தல், பாம்பின் மேலே தூக்கிய தலையைப்போல, வாடி மேலேழத், தேர், இரவில் வந்தது; இன்று அலரெழும் ஊர் காணப் பகல் வந்தது', என்றாள் தோழி *[அக.160:13]*. கழியில்மலர்ந்த கண்போலும் நெய்தலது இதழ் நாற்றம், அமிழ்தம் போலும், என விரும்பிச் சென்று, தாதினையுண்ட வண்டினம், களிப்பு மிகுந்து பறத்தற்கு இயலாது தளரும் *[அக.170:4]*. 'உப்பங்கழியில், கண்போல் மலர்ந்த சிறிய கரிய நெய்தலது மலருடன் கூடிய தழையுடையுடைய குறுமகள், தன் தலையைச் சிறிய அளவில் கவிழ்க்க, யாம் பெரிய அளவில் துன்பம் அடைந்தேம்', என்றான் தலைமகன் *[அக.230:2]*. தனியேயிருக்கும் தன்குஞ்சினை நினைத்த நாரை, நீலமணிபோலும் நெய்தற் பூக்களையுடைய கழியினின்றும் மேலே எழுந்து பறந்திடக், கானலும் தனிமையுற்றது *[அக.240:3]*. 'நம் தலைவன், அன்பு மாறாத நெஞ்சமுடன், நம்மைக் கூடுவதன்முன், குட்டுவனது தொண்டியில், வண்டு தேனையுண்ண மலர்ந்த பெரிய நெய்தற் பூவின், நீலமணி போன்ற நிறத்தினை நீங்கிப், பொன் போலும் நிறங்கொண்டது, என்னையோ', என்றாள் தலைவி *[அக.290:14]*. கழி, சிறிய கொத்தினையுடைய நெய்தற்பூவொடு, குவ்ளைப்பூவும் குவியக், கடல் வீசும் திரையைத் தருதல் அமையாது *[அக.350:1]*. பருதி,மாமலை மறையக், கழிச்சேற்றில் வளர்ந்த திரண்ட காம்பினையுடைய நெய்தலில் (பூ), நுண்ணிய தாதினையுண்டு, வண்டினம் நீங்கச், செஞ்சடைக் கடவுளும், மாலும் கலந்த தோற்றம் போலச் செவ்வானம் கருங்கடல் அணுகமாலை வந்தது *[அக.360:4]*. புலி நகக் கொன்றையது கண்ணியுடன், நெய்தலின் பசிய மலர்மாலை அசைய, அந்தியில்- கடல் தெய்வம் கரை நிற்பது போல, நீ இக்கடற்கரைச் சோலையில் தனித்து நிற்க, வெறியாட்டம் பொருந்திய பாவை போன்று பொலிந்த, எனது அழகினைத் துறந்து, ஆடுமகள் போன்று

நீங்குதல் ஆற்றேன்', என்று சிறைப்புறமாகத் தலைவிக்குத் தோழி கூறினாள் [அக.370:10]. கழியிடத்தே, இலைகளோடு அடையும் நெய்தலின், இளங்கள் நாறுந்தண்மலர், பிற பலவற்றோடு சூடி நம் தலைவன் வரைய வந்தபொழுது, அலர் மிக்க நம்மூர் புதிய தன்மைத்தாகியது', என்றாள் தோழி [அக.400:21].

பசிய இலைக்கு மேல் உயர்ந்து தோன்றும், திரண்ட காம்பினையுடைய நெய்தல் (பூ), கழியில், நீர் மிகுந்தோறும், குளத்தில் மூழ்கும் மகளிர் கண்ணை ஒக்கும் [குறு.9:4]. 'தேரோன் வந்து மீண்ட கடற்கரைச் சோலை, தேர் உருளையின் வாள் முகத்தாற் துணிக்கப்பட்ட, இதழ் குறைந்த, குறையாகிய நெய்தற் பூக்களையும், உடையது', என்று, அல்ல குறிப்பட்டமை, தோழி கூறினாள் [குறு.227:3]. புன்னைக்கிளையிலிருந்த நாரை, கழியிடத்துச் சிறு மீனுணவை வெறுப்பின், வயலில் தேன் நாறும் நெய்தலை, நெற்கதிரோடு விரும்பும் [குறு.296:4]. 'பெரும, நீ எமக்கு இன்னாதன செய்யினும், நின்னையன்றி அமைதல் இல்லேமாதலின், உழவர், வயலிலிருந்து அரிந்து வரம்பில் வாடவிடினும், கொடியராகிய அவர் நிலத்தைவிட்டு நீங்கி வளர்வேமென்னாது, மீண்டும் அவ்வயலிலேயே பூக்கும், நெய்தல் (செடி) அனையேமாயினேம் என்று தலைவனிடம் தோழி உரைத்தாள் [குறு.309:6]. 'பகைவர் மகிழ, யாம் துன்புற, நீ பிரிந்த தலைவி, நின்தேரின் மணி, விளரிப்பண் போல ஒலிக்க, உருளை சிதைத்தமையால் கழியிடத்து, நெய்தல் மலர்போல வருத்தமுற்றாள்', எனத், தலைவனிடம் தோழி கூறினாள் [குறு.336:5]. ஞாழலினது திரண்ட மலர்களை, நெய்தலது கரிய மலர் மீது பெய்வதைப் போன்று, ஊதை தூற்றும் [குறு.397:2]. அம்பினது மலரைக் கலந்து, நெய்தலாலாகிய நெடிய மாலையை அணிந்த, கூந்தலையுடையவர் விளையாட்டு மகளிர் [குறு.401:1].

வயலில் மள்ளரால் அரியப் பெற்றுச் சூட்டை எடுப்போரால் கொண்டு வரப்பெற்ற, சேறு பரந்த தண்டினையுடைய நெய்தல், நெற்போரில், கண்போல் பூக்கும், பொறையனது தொண்டி நகர் போன்ற, சிறப்பினை, இவளை யீன்ற தாய் பெறுவாளாக', என்றான் தலைவன் [நற்.8:8]. 'கொற்கைத் துறையிலுள்ள சிறிய, பசிய இலைகளையுடைய செம்மை பரந்த (கரிய) நெய்தல் மலர் போன்ற, (தலைவியது) கண்களே, அழகு குலைந்தனவாய்க், காமத்தைக் கரத்தல், அரியவாயிருந்தன', என்றாள் தோழி [நற்.23:7]. 'கழியிடத்துத் திரண்டுயர்ந்த காம்பினையும், சிறிய பசிய இலையினையும் உடைய நெய்தல், நம் கண்போல் பூத்தமை கண்டும், அவற்றைப் பறித்துச் சூடிக் கொண்மின், என, அன்னை கூறினாளல்லள்; என் நினைந்தனள் போலும்', எனத் தோழி செறிப்பறிவுறீ இயினாள் [நற்.27:11]. புலியால் களிறுபட, நெய்தலின் பசிய இலை போலும் செவியுடைய கன்றினை அணைத்துக் கொண்டு, துன்பத்தோடு, இயங்கமாட்டாத பிடி, கானகத்தில் வருந்தியுறையும் [நற்.47:3]. 'உழவ! வயலில் நாற்று முடிகளை நடுவதற்கு, உழத்தியரோடு செல்லின், வயலின் கோரையையும், நெய்தலையும் களையாது காப்பாயாக, அவை, என் தோழிக்கு வளையும், தழையுமாகும்;' எனத், தோழி செறிப்பறிவுறீஇயினாள் [நற்.60:9]. 'கழியிடத்து மணிபோலும் நெய்தலது கரிய மலர் நிறையப், புன்னையின் பொன்போலும் தாது பரக்கும், தாழை மலர் கமழும் சோலையில், மாலையில், காமத்தால் வருந்துன்பத்தினின்றும் உய்ந்தோமாவோம். வரைய வரும் தேரின் மணிக் குரல் கேட்பாயாக', எனத், தோழி தலைவிக்குரைத்தாள் [நற்.78:2]. 'தலைவனோடு முதலில் கூடிய பொழிலிது; ஆடிய துறை இது; நீண்ட காம்புடைய நெய்தலின் தழையை உடுப்பித்துத், தமியராய்ச் சென்றுவிட்ட கானல் இது; என உள்ளுதொறும் பசந்தனை', எனத், தோழி கூறி வரைவுகடாயினாள் [நற்.96:7]. 'யாம் பொருட்பிணியால் செல்கின்றேம் என்ற அளவில், நெய்தல் மலர் போலும் கண்கள், வருத்தம் மிகக், கூந்தலில் மறைத்து, உதியன் போரில், இயவர் ஊதும் ஆம்பலங்குழல் போல், அழுபவளது நோக்கு, யாம் காடு கடந்தும், எம்முன் வந்தனவே', எனத் தலைவன் உரைத்தான் [நற்.113:7]. 'கடல் முழங்கக், கானல் மலர, கடல் நீர் மனையெல்லையைக் கடக்கப், பெரிய இதழையுடைய நெய்தல் குவிய, பறவைகள் தத்தம் கூடுகளில் சென்று தங்கச் சுடர் மழுங்கி மறையத், துன்பங்கள் எல்லாவற்றையும் யானடைந்து நடுங்க, மாலைவந்தது எனத், தலைவி சொல்லினாள் [நற்.117:3]. 'துறைவன், முன்னாள் பசிய இலையிடையே வளர்ந்துயர்ந்த திரண்ட காம்பினையுடைய நெய்தற் பூவுடன், மாலையை நினக்குச் சூட்ட, நின் கண் அறிந்ததன்றி, இவ்வூர் அறிந்ததில்லையே', என்று தலைவிக்குத் தோழி உரைத்தாள் [நற்.138:6]. 'ஆய மகளிரோடு விளையாடவும் செய்யாய். பெரிய இதழையுடைய நெய்தன் மலர் மாலையினையும் புனையாய். சோலையில் நின்றமாதே! நீரரமகளோ? கழிக் கரைமாதோ? எனத் தலைவியை எதிர்ப்பட்டுத், தலைமகன் வினவினாள் [நற்.155:2]. கொண்க! நீ இல்லாது, ஊதையும், மாலையும் வருத்தும். வற்றிய குளத்து மீனைத் தின்ற, நாரை மிதித்த நெய்தல் போல, வாழாள் ஆகுவதை நினையாத நீ, அறியாமையையுடையாய்', என்று தலைவனிடம் தோழி கூறினான் [நற்.183:10]. 'நெய்தன்மலர் குவியக், கதிர் மறையக், கானலும் பொலிவிழந்தது. காமந்தணியும் வகைபெறாது, நாம் கைதொழ, அவன் தேரும் மறைந்தது', என்றாள் தலைவி [நற்.187:1]. 'சேந்தன் தந்தை, அழிசியினது, நெல்லிடை, வண்டு மொய்க்கும், நெய்தல் மலரும், ஆர்க்காடு அன்ன தோளழகுடைய, தலைவியின் நகைக்கு மகிழ்ந்த, நெஞ்சே! இனித் துன்படைவாயாக! என்று நெஞ்சுநோக்கித் தலைவன் கூறினான் [நற்.190:5]. 'தொண்டித்துறை வயலில், நெல்லரிவாள்பட்ட, பலவிதழோடு கூடிய குவியாத நெய்தல், நீரில் அலையும் தோற்றம்போல, நீ விரும்பியவள் கண்கலுழாநிற்கும். (எனவே) அருளாதிருப்பது கொடிது', என்றாள் தோழி [நற்.195:7].

மாலையில், மகிழ்ந்த பரதவர், பெற்றமீனை விற்றுச், சிறுகுடிக்குச் செல்லும் நெறியில், நீல மணிக்குவியலை விரித்தாற் போன்ற, நெய்தன் மலரை, மிதித்துச் செல்வர் *[நற்.239:6]*. நெல்லரியும் வாள்படக், கதிரொடு கலந்து, அரிக்கிடையிலே கிடந்து, தானுற்ற துன்பத்தையறியாது, கதிரவனைக் காண்டலும், இனியதுயிலிடத்துப், பசிய வாயைத் திறக்கும் பேதை நெய்தல் *[நற்.275:6]*. மகளிர், கழியில் பறித்துவந்த, கண்ணையொத்த நறிய நெய்தல் மலர், கோலஞ்செய்யப்பெற்ற சிறிய மனைக்கு, அழகு செய்யும் *[நற்.283:2]*. 'கழியின்கண்ணே, பசிய இலையோடு வளர்ந்த நெய்தலையுடைய சேர்ப்பன், முதலைக்கஞ்சாது வரக், கெடாத என் வன்கண்மை, இன்று பறவையொலி கேட்பத், தேர்மணியொலியோ, என, ஊர் உறங்கும் இரவிலும், துயில் மறந்துளது', என்றாள் தலைவி *[நற்.287:5]*. 'தேர்ஏறியும், நடந்தும் எந்து, அடும்பு, கைதை, நெய்தல் பறித்துத், தலைமகளை முயங்கியது போன்ற உணர்வோடு, வேண்டுவ பல செய்து, தோழியின் பின்னிற்றலையும் வெறாத, நம்வயின், தலைமகள் என்னை நினையுமோ?' என்றான் தலைவன் *[நற்.349:3]*. கழிக்கானலிலுள்ள பனம்பழம், மூக்கிற்றுப், பெரிய இதழையுடைய நெய்தல் வருந்தச், சேற்றில் விழ, நாரையினம் பறந்து செல்லும் *[நற்.372:3]*. 'கானலில், கழிநீர் பெருக, நீல நிறமுடைய் நெய்தலின் இதழ்குவியக், கடல் மீனையுண்டு, பறவைக் கூட்டம் கூட்டையடைய மாலைக்காலம் வந்தது *[நற்.382:2]*.

'ஆதன் வாழ்க; வயல் விளைக; இரவலர் வருக என அன்னை விரும்பினாள்; நிலத்தோடு (கருங்குவளை), நெய்தல் நிகர்க்கும், ஊரன் நட்புச், சிறக்கவென, யாம் விரும்பினோம்', என்றாள் தோழி *[ஐங்.2:4]*. நீலமணி போன்ற நிறமுடைய நெய்தல், ஆம்பலொடு மிக வளரும், ஊரனுடைய மகளாகிய தலைவி பழனஊரன் படுக்கைக்கு, இனிய துணையாயினாள், என்றனர், வாயில்கள் *[ஐங்.96:2]*. 'அன்னையே! நின்மகளது மருவிய நோய்க்கு மருந்தாகிய கொண்கன்தேர், அடப்பங்கொடியோடு, நெய்தலையும் சிதைத்து வந்தது', என வரைய வந்தமையை தோழி உரைத்தாள் *[ஐங்.101:3]*. 'அன்னை! நெய்தலது, உள்துளையுடைய காம்பின் பூ நிறைந்த துறைவன் தோளைத் துறந்து, பல நாளாயிற்று என்பதென்னை? அவன் குறித்த பொழுதில் வரும்; என்றாள் தோழி *[ஐங்.109:1]*. 'பாண! நெய்தல் போன்ற கண்ணினையுடையாளை (பரத்தை) உடம்படப் பெறின், யாம் துன்படைபவராகேம்', எனத், தலைமகனது பரத்தை யொழுக்கங்குறித்தாள், தலைவி *[ஐங்.135:3]*.

'நாரை மிதிப்ப, மலர்ந்த கண்போலும் நெய்தல் மலரது, தேன் நாறுந் துறைவனுக்கு, நெஞ்சம் நேரேன்', எனத், தலைமகள், வாயின் மறுப்பக் கூறினாள் *[ஐங்.151:3]*: 'நாரை மிதிப்பக் கழிந்த நெய்தல், நீரொடு செல்லும் துறைவற்குப் (களவின்கண்), பஞ்சாய்க்கோரைப் பாவையை மகவாக ஈன்றேன்', என, மகப்பேற்றிற்குரிய காலத்தும், வாயில் நேராது தலைவி உரைத்தாள் *[ஐங்.155:3]*. கடற்காக்கை கழிநெய்தலைச் சிதைக்குந் துறைவன், நல்லன் என்பாயாயின், கண்பசத்தல் பெறுவானேன்', என்றாள் தலைவி *[ஐங்.170:2]*. 'தொண்டியிலுள்ள நெய்தல்போல், நாறும் கூந்தலால் நோயுற்றோர், இரவிலும் துயில் கொள்ளாது பாம்பு தீண்டினாற் போன்ற, துன்பமடைவர்' எனப், பாங்கன் சொன்னான் *[ஐங்.173:3]*. 'நெய்தல் போன்ற கண்ணையுடைய மகளிர், மணற் குவியலில் குரவையாடும் துறைவன் அருள்செய்யின், அலர் செய்யும் இவ்வூரில் தங்குதல் இனிது', என்றாள் தலைவி *[ஐங்.181:1]*. 'இவள் நலம் குலைத்தோன், நெய்தல் மலரைச், செருந்தியோடு கலந்தணிந்த தார்மார்பன்', கடவுளல்லன்', என்று, தோழி அறத்தொடு நின்றாள் *[ஐங்.182:1]*. 'மாலையே! தலைவன் பிரிந்தானெனப், பண்டு வருங்காலத்திலேயே வந்தாற்போலத் தோன்றக், கடும்பகலிலும் வருகின்றாய்', எனத், தலைமகள் உரைத்தாள் *[ஐங்.183:5]*. 'நெய்தல் நிலத்துக் கழிநெய்தன் மலரை நீக்கி மீனையுண்ணும் நாரை தங்கும், அவரது கானலூர், கடலை அடுத்துள்ளது. அக்கடலினும் பெரிது எமக்கவர் நட்பு', எனத் தலைமகள் சொல்லினாள்- காண்க-நெய்தல்.3 *[ஐங்.184:1]*. 'நெய்தலையுடைய கொற்கைத் துறையின். முத்துப் போன்ற, எயிறுடையள், பவளவாயினள், இனிய பேச்சினள் என் அகத்தள்', என்று தலைவிபற்றித் தலைவன் மொழிந்தான் *[ஐங்.185:1]*. 'கழிநெய்தல் உதிர, இத்துறையில் பன்முறைதேர்வரும்; செல்லாதீர்', என்றனள், யாய்! எனக், கூறித் தோழி வரைவு கடாயினாள் *[ஐங்.186:3]*. 'அயலார் இந்நெய்தலந்தழையினைக் கொள்ளார்; எம் மகளிரும் பாவை புனையார்; தொடலை தொடுப்போரும், சில பூவினரேயாவார்', எனக் கூறித் தோழி கையுறை மறுத்தாள் *[ஐங்.187:3]*. கொற்கைத் துறையில், வைகறையில் மலரும் நெய்தல் போன்று, காதலியின் கண் அழகு மிகவுடையன எனத், தலைமகன் உரைத்தான் *[ஐங்.188:3]*. 'புன்னையின் தாது உதிரப் பெற்ற நெய்தல், பொன்பட்ட மணிபோல் தோன்றும் துறைவன், வந்தானென, என் கண் நல்லவாயின', என, வரைவுணர்ந்து தோழி கூறினாள் *[ஐங்.189:1]*. 'நெய்தலினது கட்டவிழ்ந்த பெரிய பூவை மாற்றினராய் நெல்லையரியும் துறைவனே, எம் கண்ணில் நீருறச் செய்தோன்', எனத், தோழி அறத்தொடு நின்றாள் *[ஐங்.190:1]*. காயா, கொன்றை, நெய்தல், முல்லை, தளவம், பிடவு முதலிய அலர்ந்து, புறவு பூக்கோலம் கொண்டது *[ஐங்.412:1]*. நிலத்துக்கணியாக நெய்தல் மலரக், கொன்றையும், பிடவமும் உடைமையால் காதலர் சென்ற வழி நன்று', எனத், தோழி கூறினாள் *[ஐங்.435:2]*.

வெற்பனது மணவணி காணாத கண்களும்கண்களோ, என்ன (அவ்வாறாயின்), 'நின்கண்ணால் யான் மணங் காண்பேன்', எனத், தலைவி கூறத், தோழி 'நெய்தல் இதழ்போலும் மையுண்ட நின்கண் என் கண்ணாக', என்றாள் *[கலி.39:44]*. பொய்கைப் பூவின் தேனையுண்ட வண்டு, கழிப்பூத்த

நெய்தல் பூவின் தாதை நுகர்ந்து, தாமரைக் கொட்டையாகிய பதியிடத்து மீண்டு வரும் *[கலி.74:2]*. வயலில், நெய்தலோடு, ஆம்பலது இதழ் பறிக்கவந்த மகளிரது ஆரவாரத்திற்கு அஞ்சி, மீனுண்ணும் பறவைத்திரள், மரத்தில் சென்று தங்கி, மகளிர் செய்த செயலைச், சுற்றத்தார்க்கு எடுத்துரைப் பதுபோல், குரலெழுப்பும் *[கலி.75:1]*. சுறாவினது கொம்பில் கோத்து ஒழுங்கு செய்யப்பெற்ற நெ ய்தலது நாரைப் பிணித்துக், கையால் வாசிக்கும் யாழிசை கொண்ட வண்டு தாழையில் ஆர்ப்பரிக்கும் *[கலி.131:8]*. "என்னைச் சிதைத்தவன் இவன், நிகழ்ந்ததிது,' என எடுத்துக் கூறும் உரன் உள்ளத்துண்டாயின், என் நெய்தல் மலர் போன்ற கண் கலங்கியழியுமோ?' என்றாள் தலைமகள் *[கலி.142:3]*. 'என் தோளைத் தொழில் கொள்பவன், நெய்தலைப் பறித்துச் சூடவும் வல்லன். தோளில் கரும்பெழுதவும்வல்லன்; மார்பில் தொய்யில் எழுதவும் வல்லன். காமன்போலும் அவன் பல வல்லன்', என்றாள் தலைவி *[கலி.143:31]*. 'கடல் பொலிவழியக், கானல் தனிமையுறக் கழிநெய்தல் இதழ்குவிய, வெண்ணிலா வீசும் பொழுதில், என்னால் விரும்பப்பட்டவன் பிரிந்து, எனக்குத் துன்பந்தந்தவன்பாற்பட்ட என்னெஞ்சு, மீண்டு, வானும், நிலனும், திசையும் துழாவித்தேடும்', என்றாள் தலைவி *[கலி.145:39]*.

'விரும்பிய புனலாட்டணியையுடைய மெய் ஈரந்தீர்ந்து வெய்தாக, நுகர்தற்கு நறாவை ஏந்தினபொழுது, தலைவியின்கண் நெய்தற்பூவையொத்தன. அதனை ஆர்ந்த பொழுது, நறவம்பூவையொத்தன *[பரி.7:62]*. நெய்தற்பூவையும், நறவம்பூவினது இதழையும் ஒத்த கண்ணையும், ஒளிபொருந்திய நுதலையும், முல்லையை வென்று முத்தையொக்கும் பல்லையும் உடைய தலைவி என்மேல் ஏற்றிக் கூறிய குற்றம் கனவுமன்று, நனவுமன்று; பொய்யே', என்றான் தலைவன் *[பரி.8:74]*. 'செங்கழுநீர்ப்பூவாற் கண்ணிதொடுத்த ஒருத்தியை நில்லென்று சொல்லுபவளைப் போல, வேறொருத்தி, மல்லிகையோடு, நெய்தற்பூவை விரவித் தொடுத்தாள் *[பரி.11:104]*.

**2. சாப்பறை.** ஒருமனையில் நெய்தல்-சாப்பறை-ஒலிப்ப, ஒருமனையில் மணமுழவொலிப்பப், புணர்ந்தோர் மகிழப், பிரிந்தோர் கவலப் படைத்தான் பண்பிலாளன். ஆதலின், இன்னாத இவ்வுலகில் இனிய செய்து வாழ்க என்பர் பக்குடுக்கை நன்கணியார் *[புற.194:1]*. நின் மகளிர் தம்மனைவாயிலில், நெய்தற்பறையோசையைக் கேளாராக என்று, கள்ளிலாத்திரையனார், ஆதனுங்கனை வாழ்த்தினார் *[புற.389:17]*.

**3. நெய்தல் நிலம்.** (கடலும், கடல் சார்ந்த இடமும்) தாழை, அன்னம்போல் பூப்பச், செருந்தி, பொன்போல் பூப்பக், கழிமுள்ளி, நீலமணிபோல் பூப்பப், புன்னை, முத்துப் போல் பூப்பப் புகழைமைந்தது நெய்தல்-நெய்தல் நிலம்-(கடல் சார்ந்த இடம்) *[சிறு.151]*. முத்தம், வளை, பரதர் தந்த கூலம், உப்பு, மீன் நீர்வழிவந்த புரவி முதலியன சிறப்ப அமைந்தது நெய்தல் சார்ந்த வளம் *[மது.325]*.

'நெய்தல் பரப்பில் என்பாவையை விட்டு, நீ இருக்குமிடத்து வந்தேம். செல்கின்றேம் செல விடுக', என்று தலைவனிடம் தோழி கூறினாள் *[குறு.114:1]*.

நெய்தலிலுள்ள கழிநெய்தன் மலரை நீக்கி, மீனையுண்ணுங் குருகு, இளங்கானலில் தங்கும் *[ஐங்.184:1]*.

**4. களர் நிலம்.** அம்புபட்டிறந்த தன் பிணையை நினைந்து, குட்டிகள் தன் பக்கலில் விளையாட, இரலை, மேய்தலை வெறுத்த துன்புடன், நெய்தலின்-களர்நிலத்தின்-சிறுகுழியில் நீரைப் பருகாது, அம்பு தைக்கப் பெற்றவரைப் போல, வருந்திக் கண்ணயர்ந்து கிடக்கும் (முல்லை நிலத்தும், நெய்தல் மலர், திணைமயக்கமாகச், சில பாடல் சுட்டப்படுவதால் *[ஐங்.412:435]*. முல்லையும் குறிஞ்சியும் திரிந்தது பாலையாதலின், திணைமயக்கமாகக் கொள்ளின், ஈண்டு நெய்தல் என்பது களர் நிலம் எனும் பொருள் தாராது, நெய்தல் செடியுடைய சிறுகுழியெனப் பொருள்படும்). *[அக.371:7]*.

**5. ஓர்பேரெண்.** நெய்தலும்-குவளையும், ஆம்பலும், சங்கமும், கமலமும், வெள்ளமும் என எண்குறித்திட்ட பெயர்களது அளவிற்றாகிய கால வீட்டம் கழிந்தபின், உயிர்கள் உளவாதற் பொருட்டு, அந்நிலத்தினை எடுத்திட்ட, கேழற்கோலத்தால் திகழப் பெற்ற, ஆதிமுதல்வ! எனத் திருமால் விளிக்கப்பெறுவர் *[பரி.2:13]*.

**6. திணை.** அகவொழுக்க ஏழுபெருந் திணைகளுள், கைக்கிளை, பெருந்திணையொழிந்த அன்பின் ஐந்திணையுள், ஒன்று, நெய்தல். இது கடலும், கடல் சார்ந்த இடத்தையும், எற்படுகாலையாகிய சிறுபொழுதினையும், அறுவகைப் பெரும்பொழுதினையும் முதற்பொருளாகக் கொள்ளும். வருணன், சேர்ப்பன், புலம்பன், பரதர், பரத்தியர், நுளையர், நுளைச்சியர், அளவர், அளத்தியர், கடற்காக்கை, சுறவம், உமண்பகடு, பாக்கம், பட்டினம், உவர்நீர்க்கேணி, கவர்நீர், நெய்தல், கைதை, முண்டகம், அடம்பு, கண்டல், புன்னை, ஞாழல், மீன், உப்பு, மீன் கோட்பறை, நாவாய்ப்பம்பை, விளரியாழ், செவ்வழி, மீன், உப்புப்படுத்தல் இன்னோரன்னவற்றைக் கருப்பொருளாகக் கொள்ளும்.

இவ்விரண்டனையும் பின்புலமாகக் கொண்டு இரங்கலும், இரங்கல் நிமித்தமுமாகிய உரிப்பொருளைக் கொள்ளும், அகவிலக்கியம்.

இதனால் நெய்தல் என்பதற்கு, இரங்கற்பொருள், என்பதுமாம் *[தொல்.பொரு.1,2,10,16, நம்.அக.1,6,9,17,24]*.

**நெய்தலங்கானல்-ஓர் ஊர்.** 'செய்தபின் வருந்தாத செயலையும், சென்று பரந்த புகழையுமுடைய நெய்தலங்கானல் என்னும் ஊரையுடைய நெடியோய்! நின்னைப் பலவாக வாழ்த்துவேம்', என, இளஞ் சேட்சென்னியை, ஊன்பொதி பசுங்குடையார் பாடியுள்ளார் *[புற.10:12,203.அ.கு.பா.வே.நெய்தலங்கானல்].*

**நெய்தவை-தொடுத்தவை** (தொடுத்த மாலைகள்) தெற்றின மாலைகளைப் போல, மலர் நிறைந்தும், கோத்த மாலைகளைப் போல, நிறம் மாறுபட்டும், நெய்தவை-தொடுத்த மாலைகளைப்போல-, இடையிட்டும், தூக்கிக் கட்டின மாலைகளைப் போல, நெருங்கியும், திருப்பரங்குன்றத்துக், குவடெங்கும் பூத்தன, *[பரி.19:80].*

**நெய்தற்கார்க்கியர்-ஓர் புலவர்.** இவர் பெயர் நெய்தற்கார்க்கியன், நெய்தற் கார்க்கியார் என்று வேறு பாடங்களோடும், காணப்படுகின்றது. கார்க்கியர் என்பதொரு முனிவர் பெயரென்றும், அதுவே இவர்க்கு இயற்பெயரானதென்றும் கூறுவர் உ.வே.சா. *[குறு.பாடினோர் வரலாறு].* இப்புலவர் பாடல்கள் இரண்டு குறுந்தொகையில் *[55,212].* உள்ளன. இரண்டையும் நெய்தல் திணையில் அமைத்துப் பாடியுள்ள இவர், அத்திணையைப் பாடும் சிறப்பினால், நெய்தற்கார்க்கியர் என்று அழைக்கப்பெற்றார் போலும். தலைவன் விரைந்து வரைய வாரானேல், இத்தலைவி இறந்து படுவாளென்பதைச், சிறைப்புறத்தே, நிற்கும் அவன் கேட்குமாறு கூறும் தோழி, 'கரிய கழியினிடத்தேயுள்ள நீலமணிபோன்ற பூக்கள் குவியும்படி, தூய அலையிடத்துப் பொங்கிய பிசிராகிய துளியோடு, முகிலையும் பொருந்திப் பிரிந்தோர் செயலற்று வருந்தும்படி வந்த வாடைக்காற்றோடு, துன்பத்தைத்தரும் இச்சிறுநல்லூர், இனிச் சில நாட்களே இவள் உயிர்வாழ்தற்குரியது' *[குறு.55].* என்று, தலைவனுக்கு உணர்த்துவதாக இவர் நெய்தல் திணையின் முதல், கரு, உரிப்பொருள்களை அமைத்துப் பாடியுள்ள சிறப்பினைக் காணலாம். 'தலைவன் தேரினைச் செலுத்தியவாறு, நாம் காணும்படி வந்து, பின் நாணும்படி மீண்டு செல்கின்றான்; நம்மேல் வைத்த அவனது காமம், இரங்கத்தக்கது; அஃது, இனி உறுதியாக அழியக் கடவதே' *[குறு.212].* என்று தலைவி குறைநயக்குமாறு, தலைவனுக்குக் குறை நேர்ந்த தோழியின் கூற்றினை இவர் பாடியுள்ளார்.

**நெய்தற் கார்க்கியன்-ஓர் புலவர்.** நெய்தற் கார்க்கியர் எனும் பெயரின் பாடவேற்றுமையே இப்பெயர்-'நெய்தற் கார்க்கியர்', காண்க.

**நெய்தற் கார்க்கியார்-ஓர் புலவர்.** நெய்தற்கார்க்கியர் எனும் பெயரின் பாடவேற்றுமையே இப்பெயர்.-'நெய்தற் கார்க்கியர்; காண்க.

**நெய்தற் சாய்த்துய்த்த ஆவூர்கிழார்-ஓர் புலவர்.** ஆவூர் என்ற ஊரினர்; வேளாண்மரபினர்; இவரது இயற்பெயர் விளங்கவில்லை. 'நெய்தற்சாய்த்துய்த்த; என்ற அடைமொழியின் பொருள் விளக்கமும் தோன்றவில்லை. இவர் பாடலொன்று, அகநானூற்றில் *[112].* இடம் பெற்றுள்ளது. குறிஞ்சித் திணையில், இரவுக்குறி வந்த தலைவனை எதிர்ப்பட்டுத், தோழி, அவனை வரைவு கடாவியதாக, இவர் தம் பாடலை இயற்றியுள்ளார். கரடிக் கூட்டம் கறையான் புற்றின் உச்சியை உடைத்துப், புற்றாம்பழஞ்சோறாகிய இரைக்காக விரும்பித் தோண்டுகின்ற, இரவின் இருளிலே, ஈன்றணிமையுடைய பிணவு பசித்ததாக, அதற்கு இரைதேடிப் புறப்பட்ட மறப்புலி, ஒளி வீசுகின்ற, ஏந்து கோட்டுக் களிற்றினைக் கொன்று முழங்குகின்ற, கரிய சோலையிடத்தே, நீ நின் தனிமையை நினையாமல் வருதலின், தீங்கு செய்தனையே', என்று தலைவன் ஆற்றூறஞ்சாது வருதலைக் கண்டித்தும், 'நீ வாராது ஒருநாள் இடையீடுபடினும் என்தோழி உயிர்வாழாள் காண்', என்று தலைவியது ஆற்றாமையைக் கூறியும், 'அவள் தோளிடைத் தழுவலை நீயும் விரும்புகின்றாய்', என்று தலைவனது வேட்கையை விளம்பியும், 'சான்றோர் மிக்க காதலராயினும் பழியொடு வருகின்ற இன்பத்தை விரும்பார்', என்று உலகின் மேலிட்டுத் தலைவனுக்கு அறிவு கொளுத்தியும், 'நீ அவளை வரைந்து கொண்டால் வரும் குற்றமென்னோ', என்று தலைவனை வரைவு கடாவியும் தோழி பேசும் பேச்சுக்களை அடுக்கி இவர் நயமுறப் பாடியுள்ளார். மேலும், நீவிர் இருவீரும் களவிற் கூடியதையறியாத எம் சுற்றத்தார், மரபு முறையே நுமக்கு மணம் நிகழ்த்த, நீ அவளை மணந்து கொள்ளும் நிகழ்ச்சியைக் கண்ணாரக் கண்டு, புதியவர்போல யாமும் அவளது புதுநாண் ஒடுக்கத்தைக் காண்பேம், என்ற, தோழியின் விருப்பமொழியினையும் அமைத்து இவர் பாடியுள்ள இப்பாடல், வரைவு கடாவலுக்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும்.

**நெய்தற்றத்தனார்-ஓர் புலவர்.** தத்தனார் என்பதே இவரது இயற்பெயர். நெய்தல் திணையைச் சிறப்புறப் பாடியுள்ள இத்தத்தனார் ஏனைத் தத்தனார் பலரினின்றும் பிரித்தறியப் பெறுதற்காக நெய்தற்றத்தனார் என்று குறிக்கப்பெற்றார் (நோக்கு:பி.நா.-நற். பாடினோர் வரலாறு). நெய்தல் திணையில் இருபாடல்களைப் *[நற்.49,130]* பாடியுள்ள இவர் பாலைத் திணையிலும் ஒரு பாடலைப் *[அக.243].* பாடியுள்ளார். தலைவனைப் பிரிந்து தனித்திருக்கும் தலைவி, தன்னை ஆற்றுவிக்கும் தோழியிடத்து, வாடையின் கொடுமையைக் கூறித் தன் ஆற்றாமையை வெளிப்படுத்துவதாக இவர் பாலைத் திணைப் பாடலை இயற்றியுள்ளார். 'அவரையின் மலர் உதிரவும், இண்டை பூக்கவும் ஞாயிறு தாழும் பொழுது விரிந்த பகன்றை, வாடையுடன் வரும் நுண்மழைத் துளியினால்

ஊரருகே மலர்ந்து அழகுபெறவும், மழைநீரின் புதுவரவு தீரவும், கிளைத்துக் கருவிரிந்து எழுந்து வளைந்த கதிர்களையுடைய நெல் வயலகளைத் துழாவிக் கல்லென்ற ஒலியுடன் விரைந்து வந்து தங்கிய இரக்கமில்லாத வாடை என்று வாடைக்காற்றின் வரவையும், செயலையும் அப்பாடலில் இவர் அழகுறப் புனைவர். 'தோழியருடன் விளையாடுதற் கிடமான துறையும் அவரையின்றித் தனிமையுற்றது; பகலும் கழிந்தது; மீன் வேட்டத்திற்குச் சென்று வந்த உவகையராய் எமரும் மனையிடத்தே தங்கினர்; இந்நிலையில், யாம் மயக்கமுடையேமாய் இருக்கின்றேம்', என்று தலைவர் வாழும் சிறுநல்லூர்க்குச் சென்று அவரிடம் கூறி அவர் கருத்தை அறிவோமாயின் அதனால் வரும் குற்றமென்னோ'?' எனத் தோழி தலைவியை இரவுக்குறி நயக்குமாறு கூறுவதை இவரது நற்றிணைப் பாடலொன்று *[49]*. நயமுறக் காட்டும். புன்னைமலர் தாழை மடலோடு சேர்ந்து மணங்கமழும் கடற்கரையினையுடைய தலைவன் என்று குறிப்பிடுவதன் மூலம், 'நீ அத்தலைவனுடன் கூடி இன்புறுவாயாக', என்று தோழி, தலைவிக்கு உள்ளுறுத்திக் கூறும் கருத்தையும் இவர் அப்பாடலில் அமைத்துள்ளார். பிரிவிடை மெலிந்த தலைவி வன்பொறை எதிரழிந்து சொல்லியதாக இவர் மற்றைய பாடலை *[நற்.130]*. பாடியுள்ளார். அகநானூற்றுப் பாடலின் கீழ் இவர் பெயர், 'கொடியூர்கிழார் மகனார் நெய்தற்றத்தனார்' என்று காணப்படுதலால் இவரது ஊர் கொடியூரென்பதும், குடி, வேளாளர் குடியென்பதும், தந்தையார் தாமும் புலவரென்பதும் விளங்கும்.

**நெரிஞ்சி**-பா.வே. காண்க-நெருஞ்சி. *[குறு.202:2]*.

**நெருஞ்சி**-ஒருவகைக் கொடி. பாழூரிலுள்ள நெருஞ்சியினது-கொடியினது-பொன் போன்ற பூ, ஞாயிற்றை நோக்குவது போன்று, வறுமையுற்றோரது ஏற்கும் மண்டை, கொண்கானங்கிழானது மார்பை நோக்கினது *[புற.155:5]*.

இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் வெகுண்டு சென்ற பாக்கம், கூற்றுவனால் அடப்படும் யாக்கை போலப், பரந்த நெருஞ்சியோடு, நீறு படிந்த பறந்தலையாகப் பாழாயினது *[பதி.13:16]*. பல்யானைச் செல்கெழுகுட்டுவனது வயவர் சீறிய நாடு, முருகன் கறுத்த மூதூர் போன்று, பீர்க்குப் பரந்து, நெருஞ்சிக் காடாயின *[பதி.26:10]*. மன்றத்தில், சிறிய பூவையுடைய நெருஞ்சியோடு, அறுகம்புல்லும் பரவ, நரிகள் முழங்கப் பகைவர் ஊர் அழகழியவும் கரிகாலன் செற்றம் மாறான் *[பட்.256]*.

'ஞாயிறு நோக்கித் திரியும் நெருஞ்சிப் பூப்போல, யான் வர, என்னொடு திரியச் செய்யேனாயின், சோழரது, வல்லத்துக் காவற் காட்டில் வந்த ஆரியர் படைபோல என்கை வளைஉடைக, என, நயப்புப் பரத்தை, இற்பரத்தையின் பாங்காயினார் கேட்பக் கூறினாள் *[அக.336:18]*.

'சிறிய இலைகளையுடைய நெருஞ்சியினது மலர், முள்ளைப் பயந்தாற்போல, இனிய செய்த,நந்தலைவர் இன்னாத செய்தலால் நோம் என்னெஞ்சு', என்றாள் தலைவி பா.வே. நெரிஞ்சி *[குறு.202:2]*. 'மலை நாடன் ஞாயிறு போன்றவன் என்தோள் நெருஞ்சி மலர் போன்றன,' என்றாள் தலைவி *[குறு.315:4]*.

**நெருநல்**-நேற்று. 'நெருநல்-நேற்று-ஊரில், நின் வாயிலில் வந்து, நின்னையும், நின்மலையையும் யான் பாடக், கண்ணீர் வடிய, அழுது நின்றாள்(கண்ணகி)' எனப் பேகனைக், கபிலர் பாடினார் *[புற.143:7]*. 'ஆவியர் கோவே! அரிவை (கண்ணகி) நெருநல் தனிமையுற்று உறையும்; அவளது நெய் நீங்கப் பெற்ற கூந்தல், நீராடப் பெற்று, மலர் செறியுமாறு செல்லின், அதுவே, எமக்களிக்கும் பரிசிலாகும்' எனப், பெருங்குன்றூர் கிழார் பாடினார். *[புற.147:4]*. கடவுள் உறையும் ஆலமரத்தின் பழத்தை நெருநல் உண்டேமென்று, பின்னும், அவ்விடம் செல்லாமலிரா, புள்ளினம்; அத்தகையோரே இரப்போர் *[புற.199:2]*. 'மேனாட்போரில் இவள் தமையன் யானை எறிந்து வீழ்ந்தான். நெருநல் இவள் கணவன் பெரும்படையைத் தடுத்துப்பட்டான். இன்றும் செருப்பறை கேட்டு, விருப்புற்று, வேல்கைக் கொடுத்து, வெளிதுடுத்தி, குடுமி எண்ணெய் நீவித், தன் ஒரேமகனைச் செருமுகம் நோக்கிச் செல்ல விடுத்தாள்', என, ஒருத்தியின் மறம் பாராட்டப்படுகிறது *[புற.279:5]*. 'நெருநல் உன்னால் கொல்லப்பட்டவன் தம்பி கழலுங் கண்ணனாய் நின்னைத் தேடுகின்றான். குன்றுக்கல்லில் மறையினும் தப்பாய் போலும்', என்று ஒருவன் மறம் சிறப்பிக்கப்பட்டது *[புற.300:3]*.

நின்னால் விரும்பப்பட்ட பரத்தையோடு நெருநல் புனலாடினை இன்று வந்து புதல்வன் தாயே என்று எம் முதுமையினை இகழாதே', எனக், கிழத்தி தலைவனிடம் சொல்லினாள் *[அக.6:11]*. 'நெருநல் தினைப்புனம் வந்து, இரப்பார் போன்று, பணிந்த மொழிகளைக் கூறி, எம்மை வருத்திய நீ,யாரோ; நின்னை நுகர்வேன்; எனத் தழுவ, விலகிநின்றேன். அவனை நகைத்துப் பழிப்பேமாக', எனத், தோழி கிழத்தியிடம் கூறினாள் *[அக.32:1]*. 'நெருநல், ஊரனோடு பரத்தையரைப் புணர்க்க வந்த பாணன், தெருவில் கன்றீன்ற ஆ, தன்னைப் பாய, யாழை எறிந்து, நம்மனை புக, உன்மனை இதுவன்று; அது என்ன, அவன் கைதொழுதது, நகையாகியது', என்றாள் கிழத்தி *[அக.56:1]*. 'பேயும் அறியாது நிகழ்ந்த மறைபுணர்ச்சி, துடியிசை போல, அலர் ஆயிற்று, என்பதனாற் போலும், காவிரியில் குளிப்பவள் போல, நெருநல் துயர் தீரத் தழுவி, ஆகம் அடைந்தாள்', எனத், தலைமகன் சொன்னான் *[அக.62:11]*. 'சிறுவர் பயந்தோர், இருமையும் எய்துப என்பது, உண்மை. நெருநெல் ஒருத்தியொடு வதுவையயரச் செல்வோன், தளர்ந்து வந்த புதல்வன் அழ, எடுத்துப் புல்லிச், செலவுதவிர்ந்தனன்', என்றாள் தலைவி *[அக.66:7]*. 'ஒருத்தியோடு புனலாடினேனாயின், தெய்வம் என்னை ஒறுப்பதாக, எனத்,

தன் கிழத்தியைத் தெளிவிப்பானாயின், நெருநல் நம்மொடு புனலாடியோர் யாரோ?' எனப், பரத்தை கூறினாள் [அக.166:11]. 'மாலையில் யாம் இவணிருக்கப், பொருள்வயின் செலின், காலம் தாழ்ப்பீர் அல்லீரோ', எனக் கூறி, நெருநலும் நம்முடன் இனிய பல மொழிந்த நம் தலைவியது ஊரானது, மன்றும் தோன்றாது, மரனும் மறையும். அது இரங்கத் தக்கது', என்றான் தலைமகன் [அக.239:14]. பா.வே.நெருநையும்-

நாடன் நம்மொடு நெருநல் கிளிகடிந்து, சொல்ல, வாயாது சென்றனன். அதனால், என் கழலுந்தொடியினை, மீட்டும் செறித்த என் பண்பில் செயலைக் கருதாநின்றது என்னுள்ளம்', என்றாள் தோழி [நற்.25:5]. 'நெருநல், நீயும், நானும் வண்டினம் ஒப்பிக், கானல் ஆடியதன்றி மறைவாக நாம் செய்ததொன்றில்லை. அவ்வாறு பிறரறிந்ததுமில்லை. என்னினைந்தோ, அன்னை நெய்தல் மலர் பறித்துச் சூடிக்கொள்', என்று சொல்லவில்லை', எனத் தோழி உரைத்தாள் [நற்.27:1]. 'இரந்தோர் இன்மையை, மாற்றமுடியாத இல்வாழ்வை, நடத்தமாட்டாராய், நெருநல் பல பாராட்டி இங்கிருந்தார். இன்று, அருஞ்சுரம் செல்வர்', எனத், தலைவி உரைத்தாள் [நற்.84:3]. 'வயலைக் கொடியை ஆ தின்றதாக, அழுது புலம்பி, நெருநலும் தேனொடு, பாலுமுண்ணாத இயல்பினள், இன்று, காளையொருவன் பொய்யைப் புகலாகக் கொண்டு சுரங்கடந்தாள், என, நற்றாய் மனை மருண்டு கூறினாள் [நற்.179:7]. ஒரு மகளுடையேன், அவளும், காளையொடு அருஞ்சுரம் நெருநல் சென்றனள். அதனால், அவளாடும் நொச்சி மரமும், அதன் கீழ்த் திண்ணையுங் கண்டு, உள்ளின் உள்ளம் வேம்', எனத் தாய் மனை மருண்டு கூறினாள் [நற்.184:3].

'நெருநல் ஒருத்தியொடு பொழிலகம் தங்கினாய். அதன் அலர், வேனிலில், குரவ மரத்துக் குயிலினது ஆரவாரத்தினும், பெரிதாகியது', எனத், தலைவி கூறினாள் [ஐங்.369:2].

'நெருநல், ஏற்றினை அடக்கி, அதன் கழுத்தில் தங்கியவரைக் கண்டு வைத்தும், இன்றும் ஏற்றைத் தழுவச் சாற்றுவார், அறிவிலாரேயாவார்', என்றார், சுற்றத்தார் [கலி.102:30].

## நெருநை-நேற்று, நெருநை. (நென்னல் - காண்க.)

'குருசிலது உணவு நெருநை-நேற்று-நாளால், பலருடன் பகுத்த இடங்கருதி ஒருவழிப்பட்டது. இன்று, அவன் விண்ணகஞ் செல்ல, அவனுக்கு உணவு கொடுத்தல் வேண்டி, அவன் மடந்தை தன் கண்கலுழ்நீராலே, சுளகு போன்ற சிறிய இடத்தைச், சாணாகங்கொண்டு மெழுகுமளவில், பட்டது [புற.249:7]. நெருநை, பகைவர் உள்ளத்தைக் கெடுக்கும் பரிமேல், இகழ்நரைக் கொல்லுங் காளை, நெஞ்சு வடு விளைப்ப, வேல் திரித்து வரும் [புற.303:5]. நெருநை, எம் தமையனைக் கொன்றோன் தம்பியோடு, நாளைப், போர் செய்குவன் எனப், பரி செலுத்தும். அவன் கூறியது, இரண்டாகாது எனப், பாசறை நடுங்கும் [புற.304:4]. '**துஞ்சுவோன், எம்**மிறைவன். நெருநை வந்த விருந்திற்காகத், தன் பழவாள் பணையம் வைத்தனன். இன்று, சீறியாழ் பணையம் என்றனன். அதனால் ஈவதிலாளன் என்னாது, யாம் மகிழ்வடையச் சென்று மேல் வருக', என, வல்லாண் முல்லைத் துறையில் அவன் பாடப்பட்டான் [புற.316:5]. நெருநைச், சீறூர் மன்னன், வேந்துவிடு தொழிலில் சென்றனன்; மீண்டுவந்து, பாடினி அணியப் பொற்றாமரையைச் சூட்டுவன், என, வல்லாண் முல்லையில் அவன் புகழப் பெற்றான் [புற.319:12].

'நெருநை, நீ ஒருத்தியொடு புனலாட்டமர்ந்தனையென்ப; அது பொய்யென யான் மறைப்பவும், கூடற்போரில், செழியன் சேர, சோழரைப் புறங்கண்ட ஞான்று தோன்றிய, ஆர்ப்பினும் பெரிய அலராகியது', என்று, தோழி தலைவனிடம் கூறினாள் [அக.116:9]. 'நெருநை, நின்னால் விரும்பப்பட்ட ஒருத்தியோடு நீராடினையென்ப, அதனாலாகிய அலர், வெண்ணிவாயிற் போரில், கரிகாலன், பதினொரு வேளிரோடு இருபெருவேந்தரும் சாய வென்ற காலத்து, அழுந்தூர்க்கண் தோன்றிய, ஆரவாரத்தினும் பெரிது', என்று தலைவனுக்குத் தோழி கூறினாள் [அக.246:7]. 'நெருநை, மடந்தையொடு வையையில் தலைவன் ஆடியதனாலாகிய அலர், கள்ளூரில், இளையாள் ஒருத்தியின் நலங்கவர்ந்து, அறியேன் என்ற அறனிலாளன் சூளினைச் சான்றால் தெளிந்து, அவனை மரக்கிளையில் பிணித்து, நீற்றினை அவன் தலையில் பெய்த காலத்துத் தோன்றிய, ஆர்ப்பினும் பெரிது', என்றாள், தோழி. [அக.256:9]. 'நெருநை, இளமகளிரொடு தலைவன் நீராடினான். அது, நீர் கிழவோன் எவ்வியது, ஏவல் கேளாரைக் கெடுத்த அவன் வயவர், அரிமணவாயில் உறத்தூரில், கள்ளொடு பெருஞ்சோறுண்ட ஆர்ப்பினும், பெரிய அலராகியது. [அக.266:2]. 'பெருஞ்சோறுடைய இல்லத்திராது', அயலானது காதலை நம்பி, நெருநைப் போகிய என்மகளது விரல்வரைந்த வண்டலைக் கண்டீரோ?' என, மகட்போக்கிய தாய் இரங்கினாள் [அக.275:15]. 'நெருநை, தலைவன் மாயோளோடு பொழிலில் துஞ்சி, வையை ஆடி,வந்து நின்றது கொற்கைச் செழியன், கூடலில், வெற்றிக் களிப்பால் ஆடிய, ஆரவாரத்தினும் பெரிய அலராகியது' என்றாள் தோழி [அக.296:4]. 'இவள் பெண்ணியல் அடைந்தாள், என நெருநையும் என்னெஞ்சம் ஐயுற்றது. எம்மனையில், சிலம்புகழி நோன்பும் செய்யப் பெறாளாய், ஒருவன் கூறிய பொய்யை நம்பிச் சென்றவள், நீரில்லாத காட்டுச் சீறூரின் கண் தங்கியிருப்பாளோ?' என, மகட்போக்கிய தாய் வருந்தினாள் [அக.315:4]. 'எவ்வியது நீழல் என்னும் ஊர் போன்ற, அழகுடையாளோடு, நெருநை தங்கித், தன்னைப் பிழைத்தமையறிந்து, தலைவி கலுழ்ந்த கண்ணள் ஆயினாள்', எனத், தோழி உரைத்தாள் [அக.366:14]. 'துறைவன் நெருநை உதிர்ந்த நாவற் கனியைப் பற்றித்,தாழை வேர்வளையிலிருக்கும், தன்பெண்ஞெண்டிற்குத் தரும் ஆண்ஞெண்டினைக் காட்டி, நல்லியல்புடைய இதுவெனக்

கூறிச் சென்றான்', எனத், தோழி தலைவிக்கு உரைத்தாள் [அக.380:3].

நெருநைப் புணர்ந்தோருடைய புதிய அழகினை நுகர்ந்து, இன்று வரும் மகளிரைக் கூடுமாறு, செல்வாயாக'; நின் பரத்தை மேம்படுக', எனத், தோழி தலைவனிடம் சொல்லினாள் [நற்.360:3]. 'சேர்ப்ப! நெருநை மாலை, தழைசிதையக், கோதை வாட, வளைகழல, நின்னொடு விளையாட்டயர்ந்தோளது சிலம்பு சிதைந்தன; அதற்கு வேண்டுவது செய்க', எனத், தோழி தலைவனிடம் மொழிந்தாள் [நற்.363:8].

'நின் காதலி ஒருத்தியைத் தழுவி, நெருநைப் புனலாடினையென்ப. அதனாலாகிய அலர், ஞாயிற்றொளிபோன்று, மறைக்க முடியாதாயிற்று', எனத், தலைமகள் தலைவனுக்குரைத்தாள் [ஐங்.71:2].

'நீலம், அல்லி, அனிச்சம், முல்லை, நறவு முதலியவற்றாலாகிய, தாரும், கண்ணியும் நயந்த பரத்தையர் ஊட நிறங்கெட்ட தலைவனுடைய ஒப்பனை, நெருநையின் இன்று நன்று', என்றாள் காமக்கிழத்தி [கலி.91:4]. நெருநல் நென்னல், காண்க.

**நெருப்பு-தீ.** பருத்தியது சுகிர்த்த பஞ்சு போன்ற நெருப்புத்-தீத்-தன் வெம்மை நீங்கிய, நிணம் நிறைந்தது ஊன்தடி [புற.125:2]. நிணத்தைத் தின்று களித்த, நெருப்புப் போலும் தலையையுடைய, நெடிய வேலினையும், களத்தைத் தனதாக்கும் தறுகண்மையுடைய யானையினையும், உடையவன், விச்சிக்கோ [புற.200:6]. 'பாண! துயிலும் கணவனெழுதலுக்கும், விளையாடும் கலை தன் பிணையொடொடும் புணர்நிலை தீர்தலுக்கும், அஞ்சி, யாவதும் செய்யாமையால், உணங்கும் தினையுணவைக் கோழியும், இதலும் கவரச், சந்தன நெருப்பில் கிடந்து ஆரல்மீன் நாற, ஊன் துண்டைச், சுற்றத்தோடுண்டு, வள்ளியோன் ஊரில் தங்கிச் செல்க', எனப் பாணனிடம் கூறப்பட்டது [புற.320:12].

விளையாட்டு மகளிர் தளிரும், முறியும், தாதும், பூவும் முதலிய பறித்தலால், சிதைந்த காஞ்சியோடு, முள்ளுமுருங்கையின் பூக்கள் வீழ்ந்து, நெருப்பை ஒத்துக் கரை காணப்பெற்றது [பதி.23:20].

வயல்தோறும், அரிகாலில் தோன்றிய பூவில், தேனைச் சேர்க்கும், நீர் நாடன், கரிகாலன் கால் நெருப்புற்றமையால், மூவுலகும் அளப்பதற்கு நீட்டியகால், இவ்வுலகையே அளந்தது [பொரு.வெ.3:4]. (பட்.வெண்பாவுமாம்)

பொன்னைச் சுடுநெருப்பு, நிலத்தில் சிந்துவதுபோல, மகளிர், புலந்து அறுத்த ஆரத்தின் முத்தும், குரும்பையும், காயும், பிறவும் முற்றத்துப் பரந்து, கிடந்தன [மது.682]. கூந்தலிடத்தே மங்கலமாகச் சில மலரிட்டு முடித்தலை வேண்டி (கூந்தலுக்கூட்ட) மயிர்ச்சந்தன விறகிலே, நெருப்பை உண்டாக்கி, அகிலோடு, கண்ட சருக்கரையையும் புகைப்பர் [நெடு.55]. வாடைக்காற்றுத், துவலை தூவுதலால், யாவரும் குவிந்த வாயுடைய கலத்துக், குளிர்ந்த நீர் குடியாராய்ப், பகுந்த,வாயினையுடைய தடவின் நெருப்பினை நுகர்வர் [நெடு.66]. தீப்போன்ற வண்ணமுடைய காந்தள் முகையைத், தசையாகக் கருதியெடுத்த பருந்து, ஊனன்மையுணர்ந்து சிதற, அப்பாறை நெருப்புப் போல், இதழ் பரந்து, வெறியாடும் களம்போல் தோன்றும் [மலை.149].

வானத்தின் ஊர்ந்து செல்லும் ஞாயிறு, நெருப்பு எனச், சினந்து எரித்ததால் காடு வெப்பம் மிகுந்தது [அக.11:2]. நெருப்பெனச் சிவந்தெழுந்த ஞாயிற்று மண்டிலம், விளைநிலத்துப் பயிர்கள் தீய்ந்தொழியக் காய்தலின், இன்று, இந்நிலவுலகு சுருங்கிப் புடைபெயர்வதன்றோ என்று சொல்லும்படி, வாழும் உயிர் மடியும், மழை நீங்கிய காலம் தோன்றியது [அக.84:6]. வளைந்த வில்லையும், கொடிய பார்வையினையும் உடைய ஆடவர், எருதினைக் கொன்று, தசையினை நெருப்பில் வைத்துச் சுட்டுத், தின்றதனாலாகிய நீர்வேட்கை தணியத், தோப்பிக் கள்ளைக் குடித்துப், புலால் நீங்காத கையராய்க், கழுவாத வாயினாய்க், கூத்தாடி மகிழ்ந்தனர் [அக.265:13].

நெருப்பைப்போன்ற, சிவந்த தலையினையுடைய அன்றிற் சேவல், இறாமீனைப் போன்ற வளைந்த வாயினையுடைய பேடை அன்றிலோடு, தடாமரத்துச் சேக்கையிலிருந்து, பிரிந்தோர் செயலற்று வருந்த கூதிர்க்காலத்தில் ஒலிக்கும் [குறு.160:1].

'பெரும் துன்பத்தோடு, பொருது புண்பட்ட என்னெஞ்சம், நீர் பெய்த நெருப்புப்போல் தணிய, இன்று தலைவர் வாராதிருப்பின் நன்று, என்று அவர் வரும் மலை வழியை நினைந்து, என் நெஞ்சு பரந்து செல்லாநிற்கும்', என்று தோழி, தலைவன் சிறைப்புறமாக வரைவு கடாயினாள் [நற்.154:9].

'நெருப்பைச் சிதறும் ஞாயிற்றது வெம்மை தணிய, யாமர நிழலில் இருந்து, சிறிது தொலை கடந்து செல்லின், மடந்தையொடு விடலை சென்ற சுரத்தைக் காண்பாய்', எனக், கண்டோர் செவிலியிடம் கூறினார். [ஐங்.388:1].

'நம் தலையிலிருந்து, அன்னை முன்வீழ்ந்தபூவை, அது வந்தவாறு என்னென்று கேளாது, சினவாது, நெருப்பைத் தீண்டினவர் கையைப் பிதிர்க்குமாறு, கை பிதிர்த்துப், புறம் போக, யானும், என் கூந்தல் முடித்து, நிலத்து வீழ்ந்த, நீல ஆடையைக் கைப்பற்றிக், கானத்தொளித்தேன்' எனத், தலைவி கூறினாள் [கலி.115:11].

**நெல்-முதன்மையான உணவுப்பயிர்.** செந்நெற்-உணவு தானியப்பயிர்க் கதிரால்-வேயப்பட்ட, கரும்பாற் கட்டப்பட்ட கூரை, விழாக் கொள்ளப்பட்ட இடம்போல், வேறு வேறாகத், தோன்றத், தும்பையுடனே பனந்தோட்டை அதன்கண் செருகி,

வயவர் வெறியாடும் குரவையயர்ந்தனர் *[புற.22:4]*. நெல்லையரியும் உழவர், ஞாயிற்றின் வெயிலை வெறுப்பின், கடல் திரையில் பாய்வர். பரதவர், மட்டினையுண்டு, குரவைக் கூத்திற்கு ஏற்ற தாளத்தைக் கொள்ளுவர். மைந்தர், மகளிர்க்குத் தலைக்கை கொடுப்பர் *[புற.24:1]*. வேளாகிய எவ்வியது மிழலைக் கூற்றத்துடனே, திரண்ட நெல்லினையுடைய முத்தூற்றுக் கூற்றத்தைக் கொண்டவன் செழியன் *[புற.24:22]*. நெல் வயலில், படியும் பறவைகளை ஒட்டுவார், பனைமடலை விறகாகக் கொண்டு, கழிமீனைச் சுட்டு, அதனுடன் மதுவை உண்டும், அமையாராய்த், தெங்கினது இளநீரை உதிர்ப்பர் *[புற.29:13]*. வேட்டுவன், மான் தசையைச் சொரிந்த கடகமும், ஆய்மகள், தயிர் கொண்டு வந்த மிடாவும், நிறைய, உழவர் மகளிர், குளத்துக்கீழ்விளைந்த வெண்ணெல்லைக் கொடுப்பர் *[புற.33:5]*. (அரணகப் பட்டமையால்), களிறு பிடிக் கூட்டத்தோடு, கயத்தின்கண் படியாது, நெற்கவளத்துடன், நெய்யால் மிதித்துத் திரட்டப்பட்ட கவளமும் பெறாது, கம்பம் வருந்த, நிலத்தில் புரளும் கையொடு, வெய்தாக உயிர்த்துச் சுழலும் *[புற.44:2]*. நெல்லும், நீரும் எல்லோர்க்கும் பெறுதற்கு எளியவென, அரிய மலைச்சாந்தமும், கடல் முத்தும், முரசம் மூன்றுடன் பெற்று, ஆள்பவன், தமிழ் செறிந்த கூடல் வேந்தன் *[புற.58:10]*. வயலின்கண்ணே, தளம்பு துணித்து இடப்பட்ட பொய்கை வாளைமீனின் துண்டை, நெல்லின் வெண்சோற்றுக்கு மேலீடாகக் கொண்டு உழவர் உண்டு, கதிர்ச்சூட்டை, இடுமிடந்தெரியாது தடுமாறுவர் *[புற.61:5]*. 'நெல்லினையுடைய பழைய ஊர், தமக்கு உரித்தாகல் வேண்டின், பகைவர் போய், அதிகமானுக்கு திறை கொடுத்தல் வேண்டும். கொடாவிடின் அவர் தம் உரிமை மகளிரது தோளைப் பிரிந்துறைதல் வியப்பன்று', என, அதியமானை ஔவையார் சிறப்பித்துப் பாடுவர் *[புற.97:18]*. சேக்களைத் தொழுவோடே வேண்டினும், நெற்குவையை வேண்டினும், அணிகலங்களைக், களிற்றுடனே வேண்டினும், அத்தகைய அறஞ்செய்யுங்கூறுடையான்', பிட்டங்கொற்றன் *[புற.171:9]*. காய்த்த நெல்லை,யறுத்துக், கவளமாகக் கொடுப்பின், ஒரு மாவிற்குக் குறைந்த நிலக்கதிரும், பல நாளைக்காகும்; நூறு வயலாயினும், யானை புகுந்துண்ணின், வாய் புகுவதைக் காட்டிலும், கால் கெடுப்பது, மிகுதியாகும். நெறியறிந்து இறை கொள்ளாது, அன்பு கெடக் கொள்ளின், யானை புகுந்த, புலம் போலாகும் *[புற.184:1]*. இவ்வுலகுக்கு, நெல்லும் உயிரன்று; நீரும் உயிரன்று; வேந்தனாகிய உயிரையுடையது என்றறிதல், வேந்தன் கடனாகும் *[புற.186:1]*.

வயற்கண் நெல்லையறுக்கும் உழவர், ஆம்பலது இலையால் மதுவுண்டு கடல் திரையின் தாளத்துக்கேற்ப ஆடுவர் *[புற.209:2]*. '(நீ இறந்துபட நான் இறவாது) நெல் எழாத, பசிய மூங்கில், பட்டையொழித்தாற்போன்ற, வளையில்லாத வறிய கையைத் தலை மேலே ஏற்றிக் கொண்டு, நின் சுற்றத்திடத்தே, செல்வேனோ', என, இறந்துபட்ட கணவனை, மனைவி கேட்பதாக, முதுபாலைத்துறையில் பாடுவர் *[புற.253:3]*. 'என்னிறைவன் மார்பிற் புண்ணும் கொடியன. நெல்லும், நீரும் எறிந்து, நற்சொல்லைக் கேட்க முயலும் முதுபெண்டின் சொல்லும் நிறைவற்றன. மழித்தலையோடு, ஆம்பலது அல்லியுண்ணும், கழிகல மகளிர் போல இருத்தலும் அரிது', என ஒருத்தியின் அவலநிலை பாடப்பட்டுள்ளது *[புற.280:6]*. 'பொய்கையில் பிறழும் வாளை, நெல்லையுடைய பெருமனையில், நெற்கூடுகளின் அடியிற் புரளும், *[புற.287:9]*. வயல்களின் நெல்லரிசியைத் தின்று இழைத்த கூட்டில், பெடையோடு, குருவிச் சேவல் தங்கும் *[புற.318:7]*. முல்லையைச் சார்ந்த புன்செய்யில், நெல் விளையாது; வரகு, தினையெல்லாம் இரவலர்க்கீயத் தொலைந்தன; சீறூர் மன்னன் அன்னனாயினும், அரிசியொடு நெய்பெய்து சமைத்த வெண் சோற்றினை உண்டபின் இரவலர்க்குப் பல தருகுவன் *[புற.328:2]*. ஒருவீரன் பகைவரை முன்னின்று விலக்கிக், களிற்றினையும் எறிந்து, வீழ்ந்தனனாக அவனுக்கு நட்டகல்லைப் பரவுதலல்லது, நெல்லைப் படைத்துப் பரவும் கடவுளும் இல்லை *[புற.335:12]*. 'தமையர், போர் வென்ற வேலேந்திய குருதி படிந்த தலையர். இவர், மறன் இற்றாகக், காயும் நெல்லைக் கவளமாகக் கொடுத்துக், காக்கள் தோறும் யானைகளைக் காப்பனரேயன்றிப், படைகொண்டு வருதலில் அமையார், பகைவேந்தர்', எனக், கபிலர், குறிப்பிடுவர் *[புற.337:14]*. ஏர்பரந்து, நீர் பரந்த வயலும், நெல் மிகுந்த மனையும், பொன் மிகுந்த தெருவும், மலர் மிகுந்த காவும், கொண்டது, நெடுவேளாதனது போந்தையென்னும் ஊர் *[புற.338:2]*. குட்டுவனது முசிறியில் மீனைவிற்று, நெல்லைக் குவித்துத், தோணி, மனைக்கு மறுகிச் செல்லும் *[புற.343:1]*. செந்நெல்லுண்ட மயில், மகளிர் ஒட்டப் பறந்து சென்று மருதத்துத் தங்கும் *[புற.344:1]*. வெண்ணெல்லை அரிவோரது முழவொலி கேட்டுத், தேனீ பறக்க, வண்டு மொய்க்கும் அரிவாளால், மீன் சீவும் சேரியையுடையது தழும்பனது ஊணூர் *[புற.348:1]*.

'தித்தனது உறந்தை வெண்ணெல் வேலியையுடையது *[புற.352:9]*. நெல்லை அரிகின்ற உழவரது கூரிய வாள் மழுங்கின், கல்லெனக் கருதிச், சேற்றிலுள்ள யாமையின் முதுகில் உராவிக் கூராக்கும், நெல் செறிந்த வயலையுடையது இலங்கை (மாவிலங்கை) *[புற.379:3]*. நெல்லென்றும், பொன்னென்றும், கள்ளென்றும், மனையென்றும் பலவற்றைக் குறையாது வழங்கினான் கரும்பனூர்கிழான் *[புற.384:11]*. தன் வாயிலின்றிப் பிற வாயிலில் பறை கேட்டு, கிணைஞன் வறுமை நீங்க வேண்டிப், பசிகளைந்தோன், நெல் விளையும் கழனியுடைய அம்பர்கிழான் அருவந்தை; அவன் வேங்கடமலைப் பட்ட, மழைத்துளியினும் பலவாக, வாழ்க', எனக் கல்லடானார் வாழ்த்துவர் *[புற.385:9]*. வயல், நெல்லின் வேலியாக வமைந்த நீண்ட கரும்பின் மலர்களால் நிறைந்து

காணப்பட்டது [புற.386:10]. 'வஞ்சி நகரத்தின் புற மதிலில், அலை வீசும் பொருநையாற்று மணலினும், ஊர்க்கழனிகள் யாவற்றினும், விளையும் நெல்லினும் பலவாகச், செல்வக் கடுங்கோவாழியாதன் வாழ்க', எனக் குண்டுகட் பாலியாதனார் வாழ்த்தினார் [புற.387:36]. கிணைஞனது குடும்பத்தின் பெருங்கவலையொழியப், புதியதுடுத்தி, மட்டோடு, ஊனுணவை, வெள்ளிக்கலத்துள் வைத்து ஊட்டிச் செந்நெல்லை, வைப்போரோடு நல்கிப், பிறவும் பல பெறுக' என்றவன், நெடுமானஞ்சி [புற.390:22]. துளியொழிய இடியொலிக்கும், மலை முகடுற நெற்குவியல் உயர்ந்திருந்தது [புற.391:3]. 'என்னைத் தன் மடந்தைக்குச் காட்டி, எள்ளைப்போல் போற்றுக என்றமையால், நெல்லின், கொக்குகிர் போன்ற சோற்றைப், பொரியல், சூட்டிறைச்சியோடு உண்டு, உள்ளதும், இல்லதும் அறியாதாகியது', எனப், பெருஞ்சாத்தனை மதுரை நக்கீரர் பாடினார் [புற.395:36]. வெண்ணெல்லின், பருமையாகக் குற்றிய அரிசியை, உலையில் பெய்து, மாவின் நறும்புளியில், வரால், சுறா இவற்றின் துண்டையிட்டு, விரவியமைத்துப் புழுக்கலோடுண்பர், [புற.399:1].

பெரிய சுற்றத்தின் பசித்துன்பம் கெட ஊன் பெய்த வெண்ணெல் வெண்சோற்றைக், கள்ளின் தேறலொடு உண்டு, நீர்பட்ட பருந்தின் கருஞ்சிறகு போன்ற, ஆடையை நீக்கிப், பட்டாடையுடுக்க, மகளிர் இழையணிய, நுகர்தற்கினிது நின் கொடை மகிழ்வு,' என, இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர்க் கண்ணனார் பாடினார் [பதி.12:17]. நெல் வயலில், தாமரை, ஆம்பலொடு, நெய்தல் பூப்ப, நெல்லரியுநரது அரிவாள் வாய் மடங்கும் [பதி.19:21]. அவலிடித்த உலக்கையை வாழையில் சேர்த்து, மகளிர் வள்ளையைக் கொய்யும், வயல் விளைந்து வளைந்த நெற்கதிரையுடையது [பதி.29:3]. நாரை படிந்து இரைகவரும், வளைந்த நெல்லின் தாள், தன்பருமனால், மூங்கிற் தழைபோல் வயலில் செறிந்து தோன்றும், [பதி.32:13]. 'இரவலன் ஆதனை நினைந்து செல்வானாயின், போர்க்களத்துத் திறையாகப் பெற்ற களிற்றொடு, அளவு செய்ய முடியாத நெல்லின் அரிசியுணவை செல்வக்கடுங்கோ வழங்குவன் [பதி.66:7]. கோத்திர (ஒத்திர) நெல்விளைவையுடைய ஒகந்தூரைக் கொடையாகக் கொடுத்து அகத்தழுக்கற விளங்கியவன் செல்வக் கடுங்கோ வாழியாதன் (-கோத்திர (ஒத்திர) நெல்லென்பது ஆகுதி பண்ணுவதற்குரிய இராசான்னமென்னும் நெல்) [பதி.ப.7:9]. நெல்மிக்கு வளரக், கரும்பினது இனிய பாகாகிய இடையறாத வருவாயை, வருவோர்க்கு வரையாது வழங்கும், வளம் மிக்க குடியிருக்கையுடையது வளநாடு [பதி.75:5].

இடந்தொறும் நெல்லொடு, தாழ்ந்த தெங்கினையுடைய, குளிர் சோலையில் நெற்கூடுகள் பொருந்திய குடியிருக்கை உண்டு [பொரு.180]. பாகலோடு, செஞ்சுளையினையுடைய பலாக்கனிகளை வயிறாரவுண்டு, கரும்பையறுக்கும், நெல்லையரியும் உழவர் ஓசை சோணாட்டில் பெருகித் தோன்றும் [பொரு.193]. 'காவிரி காக்கும் நாட்டின் தலைவ! புனல், யாறு குளத்தில் வர, மகளிர் குடைந்தாட, அரிவாளால் நெல்லரிந்து, கதிர்ச்சூட்டை மலைபோல் குவிக்க, நாளும் குன்று போற் குவித்த மூடைகளால், இடமின்றிக் கிடக்கும் நெல்வேலி, ஆயிரமடங்காக விளைக', எனக் கரிகாலனைப் புலவர் வாழ்த்துவர் [பொரு.242,246]. 'எயினர் அரண்களில் சென்றடையின், ஈந்தின் விதை போன்ற, மேட்டுநிலத்து விளைந்த நெல்லின் செஞ்சோற்றினை, நாய் தந்த உடும்பின் வறுவலோடு, பெறுவீர்', எனப் பாணரை ஆற்றுப்படுத்தினர் [பெரு.131]. 'பசியறியாத, அசையாத இருக்கையினையுடைய பேரூரில் தங்கின், உழவர் தந்த நெல்லரிசிச் சோற்றினை, வீட்டில் வளர்த்த கோழியின் பொரியலோடு பாணர் பெறுவர் [பெரு.255]. நாவாய் சூழ்ந்த, மணல் மலிந்த, பரதர் மலிந்த தெருவில், நெல்லுக்கு உமும் எருத்தோடு, கறக்கும் ஆக்கள் நெருங்காது, ஆட்டுக்கிடாயோடு நாய் சுழன்று திரியும் [பெரு.325]. 'பட்டினத்தில் தங்கின், கள்ளாக்கும் மகளிர் வட்டில் கழுவிய நீர் வடிந்த சேற்றில் புரண்ட குட்டிகளையுடைய பெண்பன்றியோடு, வேட்கைக் குறிப்பில் செல்லாத, நெல்லின் மாவாலாகிய உணவை உண்பித்துக் குழியில் நிறுத்தி வளர்த்த ஆண்பன்றியின் கொழுப்புடைய இறைச்சியோடு, களிப்பு மிக்க கள்ளைப் பாணர் பெறுவர் [பெரு.343]. மலைநாட்டு மன்னனின் ஈகைப் பெயர் ஏத்தி வந்தனென், என்னும் அளவையில் அவன் நிலையாமை நினைந்து, பாசியன்ன உடை நீக்கி, ஆவியன்ன கலிங்கம், தந்து, ஊன் குறையோடு, நெல்லரிசிப் புழுக்கலை, வெள்ளிக்கலம் பரப்பி, உண்ணவைத்துப், பொற்றாமரை சூட்டிப் பொன்மாலை விறலியர் அணியத் தந்து, பரியொடு, தேரும் வழங்கிப் பரிசிலரை அனுப்புவான் [பெரு.473]. மாலையில், மூதூரில், ஓர்பக்கத்து, நாழி கொண்ட நெல்லொடு, முல்லை மலரைத் தூவிக் கையால் தொழுது பெருமுதுபெண்டிர் விரிச்சி நிற்க, இன்னே, வருவர் தாயர், என்ற, நன்மொழி கேட்டனர் [முல்.8]. மலை காயும் கடிய வேனிலோடு, வானத்தில் மழையோடு நாளும், கோளும் மாறினும், வெள்ளம் மாறாது செழியன் நாட்டில் விளையுள் பெருக, நெற்கதிரோசையோடு அரிநர் ஓசையும், பறவையொலியும் என்றும் இசைக்கும் [மது.110]. வயலில் நெல்லின் கதிர் பாரத்தால் வளைய, கமுகின் பெருங்குலையில் பசுங்காய் முற்ற, மலர்க்காவில், சினையில், துளிதூங்க மூதூரில் மாடங்கள் ஓங்கும் [நெடு.22]. மகளிர், விளக்கில், ஈரத்திரியைக் கொளுத்தி, நெல்லும், மலரும் தூவிக் கையால் தொழுது மாலைக் காலத்தைக் கொண்டாடுவர் [நெடு.43]. காய்ந்த செவ்விய நெற்கதிரைத் தின்ற எருமைக் கன்றுகள் (நெல்) கூடுகளின் நிழலில் துயிலும் [பட்.13]. உப்பின் விலை சொல்லிவிற்று நெல்லைக் கொண்டுவந்த படகைக் கழிக்கானலில் பந்தியில், பரிகளைப் பிணிப்பது போன்று, தறிகளிலே பிணிப்பர் [பட்.30]. பொய்கையில் கரும்பொடு,

செவ்விய நெல் வளர்ந்து, கரிய இதழையுடைய குவளையொடு, நெய்தலும் கலந்து, முதலைகள் செருக்கித் திரியும் *[பட்.240]*. 'பலவகையாகிய நெல்லொடு விரவிய அரிசிபோன்று, செம்மறியும், வெள்ளாடும் விரவிய, கடல் போலும் ஆரவாரமுடைய, யாட்டினக் காட்டில், இரவில் செல்லின், பாலும், பாற்சோறும் பெறுகுவீர்', எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் *[மலை.413]*. மூங்கிலரிசி, மேட்டு நிலத்தில் விளைந்த நெல்லின் அரிசி, அவரைவிதை இவற்றாலாகிய புளியங்கூழைப், புல்வேய்ந்த குடில்தோறும் பெறுகுவீர்! எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் *[மலை.436]*. நெல்லையறுப்போரது பறையொலிக்கஞ்சி, எருமையினத்தைப் பிரிந்த கடாவின், விரைவைத், துன்பம் வாராது காத்து, வனைகலத்திகிரிபோலும் சுழலுடைய சேயாற்றின் கரைவழிச் செல்வீராக', எனக், கூத்தரை ஆற்றுப்படுத்தினர் *[மலை.471]*. 'நாய்தந்த ஊனை, வெள்ளிய நெல்லரிசிச் சோற்றுடன், பல நாள் நிற்பினும், தலை நாட்போன்று, தடையின்றிப் பெறுவீர்', எனக், கூத்தரை ஆற்றுப்படுத்தினர் *[மலை.564]*.

தீப்போன்ற வெப்பம் மிக்க, ஞாயிற்றின் கதிர் காய்தலால், பாறைகள் கொதிக்க அதன்கட் சொரியும் நெல்லும் பொரியும். *[அக.1:13]*. ஐயை தந்தையாகிய, மழைபோல் வளத்தை வழங்கும் தித்தனது உறந்தை குவிந்த நெல்லையுடையது *[அக.6:5]*. தீயின் கொழுந்து போன்ற தோடுகளையுடைய நெல்லின் கதிர்கள், வரம்பை அணையாகக் கொண்டு அலையுமாறு வந்து வாடைவீசும் *[அக.13:19]*. வெள்ளிய நெல்லை அரிவோரது பறையொலி கேட்டஞ்சிய நாரை, பனைமடலில் சென்று தங்கும், *[அக.40:13]*. விடியலில், தீப்போலும் மலருடைய முருக்கின் கிளைகளில் வண்டார்ப்ப, நெல் விதைக்க, வயலில், ஏரைச் செலுத்தி உழ, எழும் ஓசை இடந்தொறும் பரக்கும் *[அக.41:4]*. பழங்காலந்தொட்டு வரும் பலவாகிய நெல்லினையுடைய பலவகைக் குடிப்பரப்பையும், யானை படியும் நீர்நிலையினையும், காவற் காட்டினையும் உடைய குடவாயில் என்னும் ஊர் போன்ற சிறப்பினையுடையவள் தலைவி *[அக.44:16]*. 'செழியனது நெற்பொலி மிக்க அள்ளூர் போன்றவள் தலைவி *[அக.46:14]*. கடலில், படகிலிருந்து வலையால் மீன் பிடிக்கும் தொழிலிலிருக்குந் தந்தைக்கு, இளைய மகள், உப்பு விற்ற நெல்லரிசிச் சோற்றை, அயிலை மீனிட்ட புளிக்குழம்பூற்றிக் கொழுமீன் துணியலோடு கொடுப்பாள் *[அக.60:4]*. 'அம்பேந்திய இளையர் பலர், யானைக் கோட்டுடன், கள்ளையும், விற்றுப் பெற்ற நெல்லால், நாளோலக்கத் சிறப்பு கொள்ளும் மழவரை வணக்கிய புல்லியென்பானது வேங்கடத்தைப் பெறினும், வேளாவியது பொதினி போன்ற, தலைவியின் ஆகம் மறந்து தலைவர் ஆங்குத் தங்குதல் இல்லையாகும்', என்பது, தோழி கூற்று *[அக.61:10]*. 'பலரும் புகழும் கபிலன், ஆய்வினை செய்யத், தொலையிடத்திருந்து நெல்லின் கதிர் கொண்டு, ஆம்பல் மலரொடு கூட்டியுண்டு, யாண்டு பலவாகப் போர் செய்து, வேந்தரை யோட்டிய பாரியது, சுனைப்புதுமலர் நாறும் இவள் நுதல், நினைத்தீரோ?' எனத், தோழி தலைவனை வினவினாள் *[அக.78:17]*. புதல்வனைப் பெற்ற மகளிர் நால்வர் கூடிக் கற்பினின்றும் வழுவாது உதவிப், பெற்ற கணவன் விரும்பும் காரிகையாகுக, என, நீரொடு சொரிந்த மலர், கூந்தலில், நெல்லொடு விளங்க வதுவைமணம் கழிந்த பின், சுற்றம் தலைவியைப் பேரில் கிழத்தியாகுக என வாழ்த்தியது *[அக.86:16]*. 'ஊர! நீவிர், ஓர் குறுமகளை நயந்து கொண்டனை என்ப. அது, அஃதை என்பாளது தந்தையாகிய சோழரது நெல் வயல்களையுடைய பருவூர்ப் பறந்தலையில், பெருவேந்தர் இருவரும் களத்தொழிய வென்ற காலத்துப், பகைவரது, களிறு கவரும் அலராகியது', எனத், தோழி தலைவனிடம் கூறினாள் *[அக.96:14]*. தாமரையினிடையே, நெல்லை அரிந்து குவித்த வினைஞர்க்குக் கள்ளைக் கொண்டு வரும் வண்டி, சேற்றில் பதியாதிருக்கக் கரும்பையடுக்குவர் *[அக.116:2]*. 'உமணர் மகள், நெல்லுக்கு நேர்விலை உப்பு, என, விலை கூறிச் சேரி செல்ல, நாய் குரைப்ப, அஞ்சிய கண், அவளது தந்தையது வண்டி சேற்றில் அழுந்த, வருந்தி முயலும் பகட்டினைப் போன்று, வெய்தாக உயிர்க்கும் நோயாகியது எமக்கு, என்றான் தலைமகன் *[அக.140:7]*. மகளிர், பல புடைகளையுடைய அடுப்பில் பாலை உலையாக வைத்து, வயலின் விளைந்த நெற்கதிரை முறித்துப், பசிய அவலாக இடிக்கும் உலக்கையொலி கேட்டு, அஞ்சி, நிறை சூலுடைய குருகு, வாழை மடலில் இராது, மாமரத்திற்குப் பறந்து செல்லும் *[அக.141:17]*. புரவியின் கவரியது நிமிர்வு போன்ற, வயல் நெல்லின் இளங்கதிரை, ஆன்தின்றலையஞ்சிக், காவலர், பாகல், பகன்றை, கரும்பு முதலியவற்றை உண்பித்துக், காஞ்சி மரத்தடியில் கட்டி வைப்பர் *[அக.156:3]*. மழைத்துளிபோலத், தேனைத் தெருவெல்லாம் துளிக்கும், பழங்காலந் தொட்டுவரும் பல வகையாகிய நெல்லையுடையது வேளூர் *[அக.166:4]*. 'நின் காதலி எம்மைப் போலக் குடுமியையுடைய புதல்வனைப் பெற்று, நெல்லையுடைய பெருமனையில், நின்னைப் பிரிந்து தங்க, என்ன கடப்பாடு உடையவளோ?' எனத், தோழி தலைவனை வாயில் மறுத்தாள் *[அக.176:20]*.

'ஆண் கரடி, குட்டிகளுடன், பெண் கரடியுடன் மகிழும் பாலையைக் கடந்து சென்ற காதலர், சோழரது வெள்ளிய நெல் விளையும் ஊர்களையுடைய நாட்டையே பெறினும், ஆங்கே மனமுவந்து தங்குவாரல்லர்', என்று தலைவியிடம் தோழி உரைத்தாள் *[அக.201:13]*. 'நெல்லை அரிவோரது கிணைப்பறையொலி, மலர்ப்பொய்கையிலுள்ள பறவைகளை ஒட்டும் விளைந்த நெற்பயிருடைய, வாணனது சிறுகுடியிலுள்ள, சோலைமணம் வீசும் கூந்தலையுடைய மடந்தையின் தோள் நலம் பெறச், செல்க, பாக!' எனத், தலைமகன் கூறினான் *[அக.204:10,12]*. 'களிறு உரிஞ்சு தொறும், சுண்ணாம்பு பரந்தாற்போன்ற வெண்கடம்பின் பூக்கள்,

மழையோடு வீழும் பனிக்கட்டி போல, வீழ்ந்து பரவி வெள்ளிய நெல் விதை போன்று, பாறை மீது காய்ந்து கிடக்கும் *[அக.211:6]*. 'பழைய நெல்லையுடைய ஊணூரிடத்துப், பிரியப் பொறாத மகன்றிலைப்போல, ஒருவர் நெஞ்சிலே ஒருவர் பொருந்தி, நீங்காத புணர்ச்சியாலே, தோன்றும் இவள் தோள் அழகு, கெடாமைக்கு ஏதுவாகிய பாதுகாவலைத், தெளியக் கூறுவாயாக', எனத், தோழி, தலைமகனிடம் கூறினாள் *[அக.220:13]*. 'நெல்லை அரிநர் சுமந்திடும் கதிர்ச் சூடு தாக்க, மாமரத்தின் அசையும் சினைப்பூ, மழைத் தூவலைப் போன்று ஊரிற் பரந்து கிடக்கும் *[அக.236:4]*. உறையூரிலுள்ளார் தீயால் சுட்ட கொழுப்புடைய ஊன் குறையைத், தினைச்சோற்றுடன், கரும்பின் சாற்றைப் பாலில் பெய்த நெல் அவலுடன் பகுத்து வழங்குவர் *[அக.237:13]*. 'கழனியில், நெல்லொலி செய்யும் பசிய பள்ளங்களைத் துழாவிக், கல்லென வரும் வாடைசென்று, தலைவனிடம் நீ வந்து நெடுங்காலம் தாழ்த்தனையெனப், பலவற்றையும் வெறுத்துறையும் துணையில்லாத வாழ்க்கையைக் கூறி, அவன் நிலையை அறிந்து வருமாயின், நல்லது', எனத், தலைமகள் உரைத்தாள் *[அக.243:7]*. 'வாணன் என்பானது சிறு குடியிலுள்ள, நெற்கதிரையுடைய வயலின் செங்கழுநீர்மலர் போன்று, நின் கண்ணின் நீரைத் துடைக்கத் தலைவர் விரைந்து வந்தனர். இனித், துன்பந்தீர்ந்து, தொடி தோளில் ஏறக் கூந்தல் மாலை கொள்க', என்று தலைவியிடம் தோழி கூறினாள் *[அக.269:22]*. 'வயலில் நெற்கதிர்கள் தலை வளைந்திட, வண்டுகள் கிளைகளில் ஆடும் முன் பனிக்காலத்து நள்ளிரவில், பாசறையில் நெடுதுதங்கி, நம் துன்பினையறியாத அறனிலாத தலைவர், துயர் நீக்க வருவரோ, என எண்ணி, வாடையால் தனிமையைப் பொறேனாயினேன்', என்றாள் தலைவி *[அக.294:10]*. 'பாரியது பறம்பில், குருவியின் கூட்டம், வளைந்த நெற்கதிர்களைத் தருவதற்குக், காலையில் புறம் போய், மாலையில் மீள்வது போன்று, வருவர் என்று கருதிய நெஞ்சமே! நீர் வற்ற, மீன், நீருள்ள இடத்திற்குச் செல்வது போல, அவர் சென்ற வழியில் செல்லத் துணிந்தேன்', எனத், தலைமகள் கூறினாள் *[அக.303:12]*. நன்செய்க் கரும்பின், சாய்ந்த புறத்தே சென்று, பொய்கையாமை வெயிலைக் கொள்ளும், நெல்லையுடைய ஊரன் தலைவன் *[அக.306:8]*. 'புலம்ப! எமது ஊரின்கண் இன்று தங்கிச் செல்லின், வரும் குறையாது? மீனை விற்று மாற்றிய நெல்லின் மாவினைத் தயிரிட்டு பிசைந்த கூழினை, நின் தேரின் மா உண்பனவாக. நினக்குப், பொதியிற் சந்தனத்தால் கூட்டியாக்கிய நறுஞ்சாந்தினை அணிவிப்பேம்', எனத், தோழி தலைவனிடம் மொழிந்தாள் *[அக.340:14]*. உழவர், நெல் வயலில் நீரைத் தேக்கக், காஞ்சி மரத்துண்டை நட்டுக், கருப்பங் கழிகளைக் குறுக்கே கட்டிவைத்த அணையின் மீது, தேங்கி வழியும் நீரினைக், கொக்குக் கயல்குறித்துப் பார்க்கும் *[அக.346:8]*. சோழர் வழிவந்தோனாகிய நீண்ட நெற்கதிகளையுடைய வல்லத்தின் தலைவன் நல்லவனாகவும் பகைவர் பற்ற முயல்வர் *[அக.356:13]*. 'வள்ளைக் கொடியைப் பின்னுவித்து, வளம் பொருந்திய தோடுடைய நெல்லினது வளைந்த கதிர் விரிய, இறா மீன் பாயும், குட்டுவனது மரந்தையென்னும் ஊர் போன்ற, என் நலத்தைத் தந்து செல்க', எனப், பரத்தை தலைவனிடம் வினவினாள் *[அக.376:15]*. 'நெல்லும் உப்பும் விலை ஒப்பாகும்; கொள்வீராக, என்று சேரிதோறும் கூறி விற்பள் மூங்கில் போலும் தோளுடையாள் *[அக.390:8]*

வெறியாட்டிடந்தொறும் நெல்லினது வெள்ளிய பொரி சிதறினாற் போன்ற தோற்றத்தைத் தரும், புன்கமலர்கள், உதிர்ந்து பரந்த மணற் பரப்பு *[குறு.53:4]*. நள்ளியது காட்டகத்துப், பல ஆக்கள் தந்த நெய்யுடனாகிய, தொண்டி முழுவதும் விளைந்த, நெல்லின் வெஞ்சோறு, (தலைவன்) விருந்துவரக் கரைந்த காக்கையது பலிக்குச், சிறிது. *[குறு.210:3]*. பசிய அவலை இடித்த உலக்கையை, நெற்கதிரையுடைய, வயலினது வரம்பாகிய அணையிலே கிடக்க வைத்து, மகளிர், விளையாட்டை மேற்கொண்டனர் *[குறு.238:2]*. 'எந்தையும் பெருங்கடலில் மீன் பிடிக்கச் சென்றனன். என்தாயும், உப்பை மாறி நெல்லைப் பெற்றுக் கொள்ளும் பொருட்டு, உப்பளத்திற்குச் சென்றனள். அதனால், சேர்ப்பனுக்கு, இனிவரின் எளியள் எனச் சொல்லின் நன்று', என்றாள் தலைவி *[குறு.269:5]*. 'அறிவ! வாடைவருவது எப்போது எனச் சொல்க. (அதற்கு ஈடாகத்) தெருவில், நாயில்லாத வாயிலில், நெற்சோற்றுருண்டையும், நெய்யும், வெப்பமுடைய நீரொடு பெறுக, என்று அறிவரிடம் தோழி உரைத்தாள் *[குறு.277:2]*.

உலகக் குளங்கள் எல்லாம் நீர் வற்றிய ஈரமற்றகாலத்துச், சூலொடு வாடிய நெற்பயிருக்கு, நடுயாமத்து மழைபெய்தாற்போன்று, தலைமகன் தலைவியை வரைய வந்தனன் *[நற்.22:10]*. 'மலை போன்ற அடுக்கிய நிலையமைந்த, நெடிய நெற்கூட்டில் நிரம்பக் கொட்டிய நெல்லையுடைய, தன் தாய் வீட்டைக் கைவிட்டுக், கதிரவன் வெயிலை வீசச், செழுங்காய்கள் சுருங்க, வாடி முடம்பட்ட, முதிர்ந்த பலா நிரம்பிய காட்டில், நுமக்குத் துணையாகத் தலைவி வந்தது தவறோ?' என்றாள் தோழி *[நற்.26:4]*. மலையைப் போன்ற நிலையும், உயர்ச்சியும் கொண்ட பல நெற் கூடுகளையுடையவன், எருமையால் உழும் உழவன் *[நற்.60:2]*. வயலருகிலுள்ள பலாமரத்தில் முயிறுகள் இலைகளைச் சேர்த்தாக்கிய (முட்டைகளையுடைய) கூடுகளை, வயலில் இரைக்குச் சென்ற நாரைகள், மரத்திலிருந்து உரிஞ்சுதலான், முயிறும், முட்டையும் நெல்லோடு விரவிய வெள்ளரிசி போல, உதிர்ந்து பரவின *[நற்.180:2]*. தமது மருதநிலப்பகுதி நெல்லைக் கொடுத்து, அதன் விலையாகப், பிற நெய்தல் நிலப்பகுதி உப்பைக் கொண்டு, விலை கூறி, ஊரில் உறைதலை வெறுத்த சுற்றத்துடன், இடம் பெயர்ந்து, உமணர் செல்லுதலும், அவ்வூர்க்கு இன்னாததாகும் *[நற்.183:1]*. சேந்தன் தந்தையாகிய, அழிசியது, வயல் நெற் கதிரிடையே, நெய்தல் மலரும், ஆர்க்காடு போன்றவள் குறுமகள் *[நற்.190:5]*. சோலை சூழ்ந்த தொண்டியில் வயலில், நெற்கதிரையறுக்கும் உழவரது

அரிவாளால் அறுபட்டதனால், நெய்தன்மலர், நீரில் மூழ்கி அலையுந்தோற்றம் போல, காதலியின் கண்கள் ஈரியவாய்க்,கலுழாநிற்கும் *[நற்.195:6].* 'தலைவ! கடற்கரைச் சோலை சூழ்ந்த எமது சிறுகுடியின் கண்ணே, இரவில் தங்கிச் செல்வையாயின், உமணர் உப்பு விலையால் கொண்டு வந்த, நெல்லின் அரிசியுணவை, நின் பரியுண்ண, நீ நின் மார்புக்குத் துணையின்றித் தனியே தங்குவாயல்லை', எனத், தோழி தலைவனிடம் மொழிந்தாள் *[நற்.254:6].* தலைவியின் பசலையைப் பார்த்து, அன்னை முதுமையையுடைய கட்டுவிச்சியைக் கொண்டு, முறத்தில் நெல்லைப் பரப்பிக், கட்டு வைத்துக், குறி கேட்குமாயின், தினைப்புனத்தில் கிளியோட்டச் சென்றிருந்தும், அதனையறியாது, முருகவேள் அணங்கியதால் வந்ததென்று கூறாநிற்குமோ, என்றாள், தோழி *[நற்.288:6].* மழைபெய்யின், ஊர் உழைமான் கூட்டம் தோன்றப், பெரிய கதிர்களையுடைய நெல்லின் வருவாயுடையது; மழை பெய்யாது வறப்பின், முள்ளியின் மலருதிரக், கழிகாய்ந்து, வெள்ளுப்பு விளையும் இயல்பினது *[நற்.311:2].* நெல்லை அரிவோரது தண்ணுமை ஒலிக்கஞ்சி, வயலின் பறவைகள் சேர்தலால், மருத மரத்துப் பூங்கொத்துக்கள் உதிராநிற்கும் *[நற்.350:1].* கள்ளியின் தலையிலமைத்த, குடம்பையின் கண்ணே, ஈன்று வருந்திய பேடைப்புறவு உண்ணும் பொருட்டு, முதிர்ந்த பாழ் நிலத்தில், தானே விளைந்துகும் நெல்லைச், சேவல் கவர்ந்து கொடுக்கும் *[நற்.384:5].* வாழையினது தாற்றின் நுனியில் தூங்கும் பூவை, அசையச் செய்யும் நெற்கதிரை, அறுத்திட்ட அரிச்சூட்டின் பக்கத்தில், பெரியவாளை மீன் பிறழாநிற்கும் *[நற்.400:2].*

காவல் பொருட்டு அரசன் வாழ்க; விருந்தாற்றுதற்பொருட்டு நெற்பல பொலிக; இரவலர்க்கு ஈதற்பொருட்டுப் பொன்மிக உண்டாகுக', என, இல்லறத்திற்கு வேண்டுவன விரும்பிக் கூறினர் *[ஐங்.1:2].* விதைத்த உழவர், முன்பு விதைத்து விளைந்த நெல்லோடு, வீடு திரும்புவர் *[ஐங்.3:4].* 'பூத்தும், காயாய்ப் பயன்படாத கரும்பினையும், பயன்படும் காய்த்த நெல்லினையுமுடைய, வயலையுடைய, ஊர்க்குத் தலைவர் மார்பு, பலர்க்கும் பொதுவிடமாக ஆகற்க;' எனத், தோழி கூறினாள் *[ஐங்.4:4].* நெல்லின் கதிரைக் கொண்டு, நண்டு தன் வளையுள் செல்லும் *[ஐங்.27:1].* நண்டின் வளை நிறைய நெல்லின் பூச்சிந்தும், *[ஐங்.30:2].* பாணன் மடமகளது, வரால் மீனைச் சொரிந்த வட்டியுள், மனைமகள் பழைய நெல்லை நிறைப்பாள் *[ஐங்.48:3].* பாண்மகள், சில மீனைச் சொரிந்து, பல நெல்லை விலையாகப் பெறுவள் *[ஐங்.49:2].* மலை போன்ற நெற்கதிர்ச் சூட்டினையுடைய, வள்ளண்மையால் மேம்பட்ட, விராஅன் என்பானது, இருப்பையென்னும் ஊர் போன்ற, நலமுடையவள் தலைவி *[ஐங்.58:1].* எருமை, கட்டிய கயிற்றை அறுத்துச் சென்று, நீண்ட கதிரையுடைய நெல்லை, நாட்காலத்து மேயும் *[ஐங்.95:2].* ஊரினர் நறுமணம் பொருந்திய மலர்ந்த பெரிய நெய்தற் பூவினை நீக்கி, வெண்நெல்லை அறுப்பர் *[ஐங்.190:2].* வெள்ளைப்புழுங்கல் நெல்லின், பொரி வீழ்ந்தது போன்ற, புற்றியல் கோல்பிடி குருடர் போலத் தோன்றும் *[ஐங்.திரட்டு.4:2].*

தோன்றின் கதிர் உலரும் நெல்லிற்கு, அப்பருவத்தே, நிறையப் பெய்யாதே, ஆராத சிறு துவலையைப் பெய்த தன்மை போல, நீ, ஒரியாண்டு, ஒருகால், வருகின்ற வரவு மிக்க வருத்தந்தரும்', எனக், காமக்கிழத்தி தலைவனிடம் கூறினாள் *[கலி.71:24].* வயலிடத்து நெற் கதிரொன்று, அதினிடைப் பூத்த தாமரையிதழையுற, அது, அரங்கில் ஆடுவாளது நுதலில், தலைக்கோலத்தினின்றும் சரிந்து வீழும், வயந்தகம் போலத் தோன்றியது *[கலி.79:1].*

ஒருசார், வயலுக்குள்ளேயிருந்த இளநெல்லின்கண்ணும், அரிந்து வைத்த சூடுகளுக்கிடையிலும் ஒருங்கே புனல் பரந்ததென்று துடியை முழக்கினர் *[பரி.7:27].*

2. (அடையால்) மூங்கில் நெல். பாரியது பறம்பு, உழவர் உழாதன நான்கு பயனுடைத்து. ஒன்று, வெதிரின் நெல்-மூங்கில் நெல்-விளையும்; இரண்டு, பலவின் பழமூழ்க்கும்; மூன்று, வள்ளிக்கிழங்கு வீழ்க்கும். நான்கு, குன்றம், தேன் சொரியும் *[புற.109:4].*

நெல்லைத் தன்னிடத்திலே கொண்ட, மூங்கிலைத், தின்ன வருந்திய யானை, தன் கொம்பில் நால விட்ட துதிக்கைபோன்று, தலைவளைந்த பெருங்கதிர்களையுடைய சிறுதினை தோன்றியது *[குறி.35].* நன்னன், மலைச்சாரலில், தேன் தேறலையும், நறவினையும் உண்டு மகிழ்ந்தபின், புளிப்பாகுகலந்த, மோரில் பலாக்கொட்டை, உடும்பு, மான், பன்றி, இவற்றின் இறைச்சி, மூங்கிலின் நெல்லரிசி, எனும் இவற்றையிட்டுக் குறமகளாக்கிய உணவைப் பெறுவீர்", எனக், கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் *[மலை.180].*

புலி தின்று நீக்கிய மானின் உணங்கலை, வழிச்செல்வோர், மூங்கில் நெல்லரிசியோடு, தயிரையும் பெய்து, ஆக்கிய கொழுப்புருகும் வெண்சோற்றினைத் தேக்கிலையில் வைத்துண்ணுவர் *[அக.107:7].* புல்லை மறந்து, மூங்கிலிருந்து உதிரும் நெல்லை உண்ணக், கலைமான் தன் பிணையினை விளிக்கும் *[அக.129:4].* 'வாடிய கழையையும், நெல்லையும் உடைய நீண்ட மூங்கில், மறவரது அம்பால் பிளக்கும் *[அக.185:6].* ஆண்குரங்கு பாய்தலால், மூங்கிலின் நெல் பாறையில் வீழ்ந்து, பொரியும், சுரம் கடந்தோர் பழியுடையவரல்லர். நயந்தாரைப் பிணித்தலறியாத என் தோளே தவறுடையன்', எனத், தலைமகள் தோழிக்குக் கூறினாள் *[அக.267:11].* காட்டில் கோடைக்காற்றால் அலையும், புல்லிய இலைகளையுடைய, மூங்கிலின் நெல்விளையும் *[அக.397:16].*

மூங்கிலின் வெளிய நெல்லைத் தின்ற யானை மலைப் பக்கத்தில் துஞ்சாநிற்கும் *[நற்.7:7].*

மலைவாழ்நர் 'மூங்கிலது நெல்லைப், பாறை உரலில் பெய்து, யானைக் கொம்பை உலக்கையாகக் கொண்டு குற்றிச், சேம்பினது இலை சுளகாகப் புடைத்தனர் *[கலி.41:3].* 'நமக்குத் தலைவன் சிறந்தபடியை மீளவும் அறிந்தேம். எனவே, கொன்ற யானையின் கொம்பாலே, மூங்கில் நெல்லைக் குற்றுதற்கு, அவன் செய்த கொடுமையின் கூற்றை, வள்ளைப் பாட்டாகப் பாடுவேம்', என்றாள் தோழி *[கலி.42:7].* மூங்கிலின் கோலை, நெல்லுடனே வளைத்துத் தின்ற பிடி, வாழை செறிந்த இடத்தே புகுந்து, வருடைமறி பரக்கும் விடியற்காலத்துத், துயில் கொள்ளும், *[கலி.50:1].*

**3.** மலைநெல் (அடையால்) தோரை, ஐயவி,-ஐவன நெல்-மலைநெல்-இஞ்சி, மஞ்சள், மிளகு இவை, பிறவற்றோடு, மலையகத்துக் குவிந்து கிடக்கும் *[மது.288].*

புல்லிய தலையையுடைய மந்தி, முற்றத்திலுள்ள பலாவின் சுளைகளைத் தின்றுவித்தினை யுதிர்க்கக், கொடிச்சி, தன் தந்தையது மலைவளம் பாடி, ஐவனமாகிய நெல்லைக் குற்றுவள் *[நற்.373:4].*

'ஐவன நெல்லைப், பாறையுரலிற் பெய்து, புலியைக் கொன்ற யானையது கொம்பாலும், சந்தன மரத்தாலும் இயன்ற உலக்கைகளால், முருகனைப் புகழ்வது போல, மலைநாடனைப் பாடுவேமாக', என்றாள் தோழி *[கலி.43:4].*

**நெல்லி**-ஒரு வகை மரம். சிறிய இலையினையுடைய நெல்லி மரத்தின்-இனிய பழத்தினைப் பெறுதற்கரியதென்று கருதாது, அதனாற் பெறும் பெரும் பேற்றின்ன, எமக்குக் கூறாது, நின்னுள்ளே அடக்கிச், சாதல் ஒழிய, எமக்கு அளித்தாய்', என, அதியமான் நெடுமான் அஞ்சியை, ஒளவையார் பாடினார் *[புற.91:9].*

பெருமலையில், பூஞ்சாரலில், அழகுடன் தோன்றிய, நெல்லியினது அமிழ்தின் தன்மை தன்னிடத்தே உண்டான, இனிய பழத்தைத், தான் நுகர்ந்து உடம்பு பெறாதே ஒளவைக்குக் கொடுத்தான் அதிகன் *[சிறு.100].* மரையாவால் பிரித்துண்ணப்பட்ட, நெல்லி மரமாகிய வேலியையுடைத்தாய், அதனது விதையாகிய பரலுடைத்தாகிய, முற்றத்தினையுடைய குடியுடையதுஊர் *[புற.170:1].* மனைக்கு விளக்காகிய மங்கையின் கணவன், போர்முனைக்கு ஓர் வரம்பாக நிற்கும், வேலேந்திய நெடுந்தகை, நடுகல் விளங்கும் பாழிடத்தினையும், புல்லிய கொட்டையுடைய நெல்லியையுடைய வன்னிலத்தினையும் உடைய சீறூரின், குடி மக்களுள், ஒருவன் *[புற.314:4].*

காட்டில் நெல்லியினது பளிங்கு போன்ற காய்கள், பாறைகளில், சிறார் விளையாடற்கு ஈட்டி வைத்திருக்கும் வட்டுக்களைப்போல, உதிர்ந்து கிடக்கும் *[அக.5:9].* தனக்கென்றே வாழாத, பிறர்க்குரியாளனாகிய, பண்ணனது சிறுகுடியைச் சார்ந்த, தோட்டத்தில் உள்ள, சிறிய இலையினையும், புல்லிய வித்தினையுமுடைய, நெல்லியின், செவ்விய காய்களைத் தின்றவர், நீர் குடித்த காலையில் எழும் சுவை போல, இனிய மொழிகளைக் கூறுபவள் தலைவி *[அக.54:15].* நெல்லி மரங்களையுடைய நீண்ட இடங்களில், இருளிலே சென்று, தம் நிரையை மீட்க வேண்டி, வெட்சியாளருடன் நிகழ்ந்த போரினை வென்று, பட்ட மறவரது பெயரினையும், சிறப்பினையும் எழுதிப், பீலி சூட்டி, நெறிதொறும் வைத்த, நடுகல் விளங்கித் தோன்றும் *[அக.67:7].* சிறிய இலையினையும், பரிய அடியினையும் உடைய நெல்லியின், இனிய புளிப்பினையுடைய திரண்டகாயினை, இளைய மரைமானின் கூட்டம் தின்னும் *[அக.69:7].* பாலை வழியிலுள்ள நெல்லியின், இனிய சுவை பொருந்திய திரண்ட காய்களாகிய வட்டக் கழங்கு கொண்டு, மந்தி, தாவி விளையாடும் *[அக.241:13].* நெடுந்தொலைவந்த, நீர் வேட்கை மிக்க, புதியவரின், போகும் உயிரைப், போகாது நிறுத்தியது சுவையுடைய காய்களைக் கொண்ட, நெல்லி மரம் *[அக.271:7].* சிறிய இலைகளையுடைய. நெல்லியின் காயையொத்த, குறிய விழிபொருந்திய கண்களை உடையது முயல் *[அக.284:1].* சிறிய இலையினையுடைய நெல்லியின், இனிய சுவை பொருந்திய திரண்ட காய்கள், உதிர்ந்து, பரந்து, கிடக்க, அவற்றைப் பிணைமான் உண்ண வேண்டி, ஆண்மான் அழைக்கும் *[அக.291:16].* புறா துளைத்து உண்டமையின், புல்லிய காய்களையுடைய நெல்லியின். கோடை உதிர்ந்த பசிய காய்கள், நூலற்று உதிர்ந்த துளையினையுடைய பளிங்குக் காசுகளை ஒப்ப,வறிய நிலத்தே உதிர்ந்து கிடக்கும் *[அக.315:10].* திரண்ட அரையினையும், சிறிய இலையினையும் உடைய நெல்லியின், வடுவற்ற பசிய காய்கள். காட்டில் கற்களையுடைய நெறிகளிடத்தே, கடிய காற்று உதிர்த்தலின், பொன்னாற் செய்த காசுகளைப் போல், அழகுபெறப், பரவிக் கிடக்கும் *[அக.363:6].* மூங்கிலுடன், நெல்லி மரம் உயர்ந்த, கற்பாறைகளையுடையது பக்கமலை *[அக.385:8]* பளிங்கினைப் போன்ற தோற்றத்தையுடைய, பலவாகக் காய்த்த, நெல்லியின் பசிய காய்களை, உண்டு காட்டில் அசையிடுகின்ற இளைய மரைமான், கூர்ந்து ஒலி கேட்கும் *[அக.388:14].*

வாவல், தேமாம்பழத்தைத் தின்று, பின் நெல்லியினது புளித்த காயை உண்டு, மூங்கிலின்கண்ணே தொங்கும் *[குறு.201:4].* வழிச் செல்வாரது உயிரைத் தாங்குதற்குரிய அறத்தைச் செய்யும், நெல்லியது பசிய காய்கள், புலிக்குட்டிகள் கொள்ளற்குரிய இடத்தில், உதிர்ந்து, உருளும் *[குறு.209:1].* நெல்லிக்காயை, மரையின் திரள் உண்ணுகின்ற, முற்றத்தையுடைய, புல்லால் வேயப்பட்ட குடிசைகளையுடையது தலைவியது ஊர் *[குறு.235:3].* நெடுந்தொலையிலுள்ள நாட்டில், வானந்தொடும் மலையடியில், கரும்பு நடுபாத்தி போன்ற, ஆண்யானையது அடிச்சுவட்டில், தங்கிய நீரை, நெல்லிக்காயைத் தின்ற பற்கள் விளங்கும்படி, தலைவரோடு உண்ணலை நினைத்தேன்', எனத், தோழி கூறினாள்

[குறு.262:4]. ஆண்மான் இனிய புளிப்பையுடைய நெல்லிக் காயைத் தின்று, அருகிலுள்ள மலர்கள் நடுங்க, மூச்சு விட்டுப், பசிய சுனை நீரைப் பருகும் [குறு.317:2].

வேம்பின் நிழலில், கட்டளைக்கல் போன்ற அரங்கைக் கீறி, நெல்லிக்காயை வட்டாகக் கொண்டு, சிறுவர்கள் பாண்டில் விளையாடுவர் [நற்.3:4]. 'ஊர் மாமரத்தில் தூங்கும் வாவல், சோழர் குடிப்பிறந்த, அழிசி என்பானது, காட்டின்கண்ணுள்ள நெல்லியினது, புளிச் சுவையைத்,தான் பெற்றதாகக் கனவு கண்டாற்போல, யானும், அவரோடு முயங்கியதாகக் கனவு காண, விழித்ததும், அது நீங்கியது, என்றாள் தலைவி [நற்.87:4]. தலைவனின் பொய்ம்மொழியைக் கேட்டு மயங்கி, அவனது தொலையிலுள்ள நாட்டையுடைய விரும்பி, நெல்லியது திரண்ட காயைத் தின்று, வறட்சியையுடைய சுனை நீரைப் பருகித் தலைவி சென்றாள் [நற்.271:5].

'சிறிய இலையினையுடைய நெல்லிமரம் உயர்ந்து வளர்ந்த, காய்ந்த, கற்சுரநெறியில், என் அறிவில் நெஞ்சம் பின் தொடரச் சென்றோர், கல்லினும் வலிய நெஞ்சினர்', என்றாள் தலைவி [ஐங்.334:2]. நெல்லியின் பசிய காயைத் தின்று, வெண்கடம்பு மரநிழலில், மகன்றில் போன்ற காதலோடு, இருந்தோர் யாரோ; அவர் இரங்கத்தக்கார்', எனக், கண்டோர் கூறினர் [ஐங்.381:1].

**நெற்றம்-காய்ந்துலர்ந்தகாய்.** வாகை மரத்தின் நெற்றம்-காய்ந்துலர்ந்தகாய்-ஆடும் கூத்தியது கோலாலடிக்கும் பறையொலி போல, வியப்புண்டாக ஒலிக்கும் [அக.151:9].

பற்றுக்குறடு போன்ற காய்களையுடைய, வெளிய பூங்கொத்துடைய, வெட்பாலையினுடைய நெற்றம், அருவியைப் போல ஒலிக்கும் [நற்.107:4].

**நெற்றி-1. கொண்டை (தலைமுகப்பு, முன்தலை).** இருளில், காட்டுப்பூனையின் பகைக்கஞ்சிய பெட்டைக் கோழி, நடுங்கியரற்றிப், பருத்திப் பெண்டின் விளக்கொளியில், முள்ளு முருங்கைப் பூப்போன்ற நெற்றியை-கொண்டையை-உடைய சேவலைக் கண்டு, ஆறுதலடையும் [புற.326:6]. ஆண்மானின் நெற்றி மயிர் போலச் சிதறிக் கிடக்கும் கிணைஞனின் தலைமயிர், அடங்கிப் படியுமாறு விடியலில் பனி விழும் [புற.374:2].

நீண்டுயர்ந்த மரத்திலுள்ள, குடுமி நெற்றியையுடைய, சேவலின், முதற்குரலெழுந்த விடியலில் தலைவன் புறப்பட்டான் [அக.87:5]. வரகின் கதிரையுண்ட, குடுமி பொருந்திய நெற்றியினையுடைய, மயில், அழகிய தோகையினை விரித்துக் குருந்த மரத்தின் கிளையிலிருந்து, கிளியோட்டும் மகளிரைப்போல, அகவும் [அக.194:11]. காட்டுப்பூனையின் ஆண், பெண் பூனையின் பசியினை நீக்கத், தளிரையொத்த கன்னத்தினையும், செறிந்த மயிரினையுடைய கழுத்தினையும், நிமிர்ந்த தலையின்கண் முருக்கம் பூவினையொத்த நெற்றியினையும் உடைய கோழிச் சேவலைப் பற்றச் சமயம் பார்க்கும் [அக.367:12]

குவிந்த கொத்துக்களையுடைய தோன்றியினது ஒள்ளிய பூவைப் போன்ற, தொகுந்த, சிவந்த நெற்றியையுடையது சேவல் [குறு.107:2]

**2. நுதல் (மேல்முகம்).** மறம் கொண்ட சேரியின் கண், ஒருவர்க்கொருவர் மாறுபட்டுச் செய்யும் போரில், நின்றநிலை மாறாமையால், வடுப்பட்ட நெற்றியினையும் நுதலினையும் (மேல் முகத்தினையும்) தலைமாலையினையும், உடையவர் மறவர் [மது.595].

இரவு வந்த நல்விருந்தினர்க்குத் தலைவி உணவு வேண்டி, நெய்யில் ஊனைப் பெய்து சமைக்கத், தோன்றிய புகை படிந்த, நெற்றியின்கண் சிறிய, நுண்ணிய, பலவாய வியர்வைநீர் தோன்றியது [நற்.41:8]

மதிவிரிந்தாற் போன்ற, சுட்டியை நெற்றியிலேயுடைய, கரிய எருது, பொதுவனைக் குடர் சரியும்படி குத்திக், கோட்டிடைக் கொண்டு, குலைப்பது, உருத்திரன், கூற்றுவனைப் பிளந்து, அவன் குடரைக், கூளிக்கிடுவதுபோலும் [கலி.101:21] 'நெற்றியிலே சிவந்த சுட்டியினையுடைய, ஏற்றினது, நிறையை, அழித்தவனது மார்பில், அலர் கூறுவார் பார்வையொழியுமாறு, சேர்வேன். கூறும் அலருக்கும் வருத்தமுறேன்', என்றாள் தலைவி [கலி.104:65] நேமிப்படையவன் ஊதிய வளையைப் போலத், தெள்ளிதாக விளங்கும் சுட்டியையுடைத்தாகிய, நெற்றியையுடைய, கரியஏற்றையும், பிறவற்றையும் ஆயர் புகுதவிட்டனர் [கலி.105:10].

நெற்றிக்கண் இமையா நாட்டத்தையுடையவன் (ஈசன்), உமையொடு புணர்ந்து, காமத்தை நுகர்ந்தான் [பரி.5:29] இவள் தன் காதுகளில் நீல மலரைச் செருகி, நான்கு விழியுடைத்தாள் என்று சொல்லிக் கொற்றவையின் திருக்கோலத்துக்கு ஒப்பாகும்படி, நெற்றியிலுள்ள கனல் விழியைப் போலத், தோன்றும் வண்ணம் திலகமொன்றை இட்டாள் ஒருத்தி [பரி.11:99]

**3. உச்சி.** மகரக் கொடியினை நெற்றியில்-உச்சியில் கொண்ட, வானைத்தோயும் மதிலினையும், முடியறியப்படாதவாறு மிகவுயர்ந்த மாடங்களையுமுடையது புகார் [அக.181:20]

**நெற்றி இமையா நாட்டம்-நெற்றிக்கண் இமையாத கண்ணையுடைய சிவன்.** நெற்றி இமையாத நாட்டத்தையுடைய-நெற்றிக்கண் இமையாத கண்ணையுடைய சிவன்-பக்கலில் ஒருவரத்தை இந்திரன் கொண்டான். காண்க-நெற்றி [பரி.29:30]

**நெற்று-காய்ந்துலர்ந்த காய்.** எருமையது கரிய மருப்பினைப் போன்ற நீண்ட நெற்றியின்-காய்ந்துலர்ந்த காய்ப்பொதி-

உவ்ரீடாகிய பசிய பயற்றினை உதிர்த்த சக்கையைப், படுக்கையாகக் கொண்டு, கன்றினையுடைய மரையாத் தூங்கும், *[புற.297:2]*

வற்றிய வாகையின் முதிர்ந்த நெற்றுக்களைக் கொண்ட கொத்துக், கூத்த ஆடுங்களப்பறை போன்று அரித்தொலித்தது *[அக.45:1]*. சிறிய இலையினையுடைய வேலமரத்தின் முற்றிவிளைந்த நெற்று உதிரச், சிள்வீடென்னும் வண்டு ஒலிக்கும் *[அக.89:7]* ஒளி பொருந்திய பூங்கொத்துக்களையுடைய கொன்றையினது, முற்றி விளைந்த நெற்றுக்கள், பாறைமீது பரந்து கிடக்கும் *[அக.115:11]*

ஆரியக் கூத்தர் கழையிற்கட்டிய கயிற்றின்மேல் நின்று ஆடும்பொழுது கொட்டப்படும் பறையைப்போலப், பாலைநிலத்தில் காற்றுத் தாக்குதலால் கலங்கி, வாகை மரத்தினது வெள்ளிய நெற்றுக்கள் ஒலிக்கும் *[குறு.7:5]* சுரத்தில் வெம்மையான, விரைந்த காற்று வீச, வாகையினது நெற்றுமுற்றிய வற்றல் ஆரவாரிக்கும், *[குறு.39:2]* வாகை மரத்தின், ஒலி செய்யும் வெள்ளிய நெற்றுக்களின் விதை, உள்ளீடு பரலையுடைய சிலம்பைப்போல, ஆரவாரிப்பக், கோடைக்காற்று, அலைக்கும் *[குறு.369:1]*.

**நெறி-1. ஒழுக்கம்.** பால், தன் இனிமை மொழிந்து புளிப்பினும், ஞாயிறு, தன் விளக்கமொழிந்து இருளினும், நான்மறையினது நெறி ஒழுக்கம் வேறுபடினும், வேறுபாடில்லாத சூழ்ச்சியையுடைய அமைச்சுச் சுற்றத்தொடு விளங்கித் துளக்கமின்றி நிற்பாயாக', எனச் சேரமான் உதியஞ்சேரலாதனை முடிநாகராயர் பாடினார் *[புற.2:18]* கொல்களிறும், கலிமாவும், நிமிர்தேரும், நெஞ்சுடைய மறவரும் என நான்கு படையுங் கூடமாட்சிமைப்பட்ட தாயினும், மாண்புடைய அறத்தின் நெறியை முதலாகவுடையது வேந்தரது வெற்றி *[புற.55:10]* 'நல்லன, நடுநிலையன, பழையோரொழுகிய நெறியன, போலேயிருக்கவும், அன்பு பொருந்திய நெஞ்சையுடைய நும் இடையே புகுந்து, நும்மைப் பிரித்தற்கு அலமரும், அயலோருடைய சிறப்பில்லாத மொழியைக் கேளாது, இன்றே போல்க நும் கூட்டம்', எனச் சோழனும் வழுதியும் உடனிருக்க கண்டு காரிக்கண்ணனார் பாடினார் *[புற.58:25]* அறத்தைத் தெளியவுணர்ந்த, நெறியால் மாட்சிமைப்பட்டது அவைக்களம் *[புற.224:4]*.

நூல்களிற் கூறிய அரசிலக்கணத்தில் தப்பாமல், அறத்தின்நெறி இருக்கும்படி இதுவென்று விளக்கி, நின்குலப் பெரியோர் நடந்த அடிப்பாட்டின் வழியைத் தப்பாமல், பிறைமதி போன்று, நின் வெற்றி, வழிவழியாக மிகுவதாக என நெடுஞ்செழியனை மாங்குடி மருதனார் பாடினார் *[மது.191]*. இவ்வுலகத்தேயே, விண்ணுலகத்தைப் பெறும் நெறி (வழியுமாம்) ஒருகாலமும் தப்பாத, பல்லுயிர்கட்கும் அன்புடை நெஞ்சாலே, இனிதாக ஒழுகுபவர் அந்தணர் *[மது.472]*

இல்லறத்திற்குக் கூறிய நெறி (வழியுமாம்)யைத் தப்பாமல், அதனை நடத்தும் குன்றுகளைக் கண்டாற் போன்ற, பருந்து இளைப்பாற இருந்து உயரப்பறக்கும், தொழில் மாட்சிமைப்பட்ட, இல்லங்கள் மதுரையில் இருந்தன *[மது.500]*

'கொண்மூவே! வானில் எழுந்து முழங்கி, முறைசெய்து அறத்தின் நெறிபிழையாத, திறனறிந்த மன்னரது போரில், வயவர் உறைகழித்து வீசும் வாள் போல் மின்னி, நாளும் துளி பொழியாது ஒழிதியோ, எம் தினையிடத்து மழையும் பொழிதியோ?' எனத், தோழி முகிலைக் கேட்டாள் *[அக.188:4]* தோழி! நாடனை நீ அருளினை; ஆயின், (வரைய முயலான் ஆதலின்) அன்புடைய நெஞ்சத்து அருள் பொருந்தி, ஆராய்ந்து, ஆன்றோர் செல்லும் நெறியில் (வழியில்) சென்று வாழாத சால்பிலன் ஆதலை, நன்கு அறிந்து தெளிக எனச் சிறைப்புறமாகத் தோழி கூறினாள் *[நற்.233:8]*.

'அறத்தின் நெறி (வழியுமாம்) இது வென்று தெளிந்த என்மகள் சென்ற சுரன் மழை பெய்து இனியவாகுக', என்பது மகட்போக்கிய தாய் கூற்று *[ஐங்.371:4]*.

கடலை உடுக்கையாகவுடைய உலகத்தைப் பெறினும் அரிய நெறியையுடைய ஆயர் மகளிர்க்கு இருமணம் உண்டாதல் இற்பிறப்பிற்கு இயல்பன்று *[கலி.114:20]* 'துறையிடத்து எறிதிரை கொண்டு வந்து இட்டமீனை மீள்கின்ற அத்திரை வருந்தாத படி கைக்கொண்டு போனது போன்று நீ நடத்திய நெறி தாழ்கையினாலே வருந்தியவளது வருத்தந்தீர வரைவோடே வந்து களைவது நல்லது', என்று தலைவனிடம் தோழி உரைத்தாள் *[கலி.121:21]* முடிவு காலத்தில் படைத்த உயிர்களைப் படைத்தான் தன்மாட்டுத் தடுக்கிக் கொள்வதுபோல, ஞாயிறு விரித்த கதிரைத் தன்னுட்கொண்டு மறைய, அறத்தின் நெறியில் நிறுத்தி உலகாண்ட மன்னன் போயபின் அறத்தின் நெறியை நிறுத்தமாட்டாத மன்னன் காலம் போல மாலையில் இருள் பரவியது *[கலி.129:4,5]*

கற்புப் பொருந்திய நெறியையுடைய தேவியரது, அன்பு பொருந்திய, ஊடலுரிமையை விரும்புகின்ற, பண்பையுடையவன் குமரன் *[பரி.9:81]*

**2. ஒடித்தல்-புறவிதழ் ஒடித்தப்பூ.** மகளிர் ஆழ்ந்த சுனைக்கண் பூத்த குவளையது, முகையவிழ்ந்த முழு நெறி-புறவிதழ் ஒடித்த பூக்-கொண்டு செய்யப்பட்ட, தழையாடையை அல்குலில் அணிந்தனர் *[புற.116:2]*.

இடையறாது தொடர்ந்து வரும் குவளையது தூய நெறியைக் கூந்தலிற் செருகி, ஆம்பற்பூவின் அகவிதழால் அமைத்த தழையை, உழவர் மகளிர், அணிந்தனர் *[பதி.27:2]*

'கூந்தலின்கண், ஆம்பலினது முழுநெறியைச் செருகிப், புனல் விளையாட்டை வரும்பிப், பரத்தையர் சென்றனர் *[குறு.80:1]*

மணத்தையுடைய, நெறியால் கட்டின மாலையையுடைய, மகளிர், நிரை நிரையாக நிற்கப் பொதுவர் ஆர்த்துத், தொழுவினுள்ளே பாய்ந்தார் *[கலி.105:26]* மகளிர் சுறாவினது கொம்பைக் கோத்து, நெறி செய்த நெய்தல் பூவை, நெடிய நாரிலே தொடுத்துக் கட்டி, தாழை விழுதூசல் அமைத்தனர் *[கலி.131:7]*

நெறி செறிய, மணம் வீசச், செய்யப்பட்டது மார்பின் மாலை *[பரி.1:16]*

**3. ஒழுங்கு.** 'நெறி-ஒழுங்கு-பட ஓசை நிறைந்து, ஒலிக்கும் அருவியையுடைய மலையையுடையோனைப் பாடினார் பாடியவர், வறிதாக மீள்வாரல்லர் என மலையமான் காரியைக் கபிலர் பாடினார் *[புற.124:3]*

கோடைவெம்மையால் நிலத்தே உதிர்ந்த சிறிய புல்லரிசியை, எறும்புகள் நெறி (வழியுமாம்) பட, அங்குமிங்கும் சென்று, வளையில் தொகுத்து வைத்த உணவினைக் மறவர் கொள்வர் *[அக.377:3]*

நெறிப்பட, வேலின் இலையையும் மாசுபோகத் துடைப்பர். கிடுகினையும், மயிற் பீலி சூட்டி, மணியணிவர். என்னையும், பண்டினும் பல பாராட்டுவர். கண்ணில் தோன்றும் வெள்ளத்தை நீந்தும் நாள், வந்தது போலும்', என்றாள் தலைவி *[நற்.177:4]* குருவிச் சேவல், பிற புலத்துணையொடு வதிந்து வந்ததனை நோக்கி, அதன் பேடை, நெறியாகத் தோன்றிய ஈங்கைப் பூப்போன்ற, தன் சிறிய, பலவாகிய, பிள்ளையோடு, குடம்பைக்குள் வாராதவாறு தடுக்க, அது மழை நீரில் நனைந்தது கண்டிரங்கிப்பின், உள் அழைத்தது *[நற்.181:4]* மீனை விற்றுக்கட்குடித்த பரதவர், மாலையில், தம் சிறுகுடிக்கு மீளுங்கால் செல்லும் நெறியில், நீலமணி, பொதி அவிழ்ந்தது போன்ற நெய்தல் மலரை மிதித்துச் செல்வர் *[நற்.239:5]*

பாண்டியர், தம்மொடு மாறுபட்டோருடைய மாறுபாடு கெடும்படி, களிறுகளை, நெறியாகக் கம்பத்தோடு கட்டிய, இருக்கைபோல, விரவிய பல வடிவுடைய புள்ளினங்கள், தம் பேடுகள் துணையாக, இடுமணல் மீது தங்கும் *[கலி.132:5]*

ஒருத்தி, பரந்த மின்னலைப் போலப், பொன்னால் நெறி பெற, இடையிடை இழைத்துச் செய்த கோதை, கூந்தலில் அசையக், கள்ளைக் குடித்துத் தளர்ந்து, துகில் நெகிழக், கண் சிவப்பப், பூங்கொடி போல அசைந்தாள் *[பரி.21:55]*

**4. வழி (பாதை).** அறவிலை வணிகன் ஆய் அல்லன்; சான்றோர் போய நெறி வழி என்று உலகத்தார் கருத, அந்நற் செய்கையிலே பட்டது, அவனது கைவண்மை *[புற.134:3]* புலி இயங்கும் மலையில் ஏறுதற்கரிய பிளப்பின்கண், சிறு நெறியை ஏறுதலான் உடல் வளைவைக் கொண்ட, மெல்லிய நடையினையுடைய, வளைக்கைவிறலி வருந்தினாள் *[புற.135:2]* அறிவுடைய அரசன் இறை கொள்ளும் நெறியை அறிந்து கொள்ளின் அவன் நாடு, கோடிப் பொருளினை ஈட்டிக் கொடுத்துத், தானும் மிகவுந்தழைக்கும் *[புற.184:5]* நல்வினையைச் செய்ய மாட்டீராயினும், தீவினையைச் செய்தலைப் பரிகரிமின்; அதுதான், யாவரும் உவப்பதல்லாமலும், நல்வழிப்படுத்தும் நெறியுமாகும் என்பர் நரிவெரூஉத்தலையார் *[புற.195:9]* நிலத்தை அளப்பது போன்று, குறுகிய நெறியிலும், நில்லாது செல்லும் நடையுடைய, புரவியினது பண்புகளைப் பாராட்டி, இரவு சென்றோன், வேந்தனது யானைக்கல்லது, தன் வேலை ஏந்தான் போலும் *[புற.301:12]*

வழிப்பறித்த பொருள்களை, உணவாகவுடைய, செலவை விரும்பின கால்களையுடைய மறவர், துறுகற்களையுடைய நீண்ட நெறியை அகழ்ந்து, அருவழியை வரையறுப்பர் *[பதி.19:2]* மாறுபட்ட பகையரசரது எயில்களில், மக்களின்மையின், காவல்கள், வைக்கப்படா. மிகுதியான காற்றடித்தலால், தீப்பெருகிச், சிவந்து வழங்கிய இடங்கள், ஆண்டலைப்புள் வழங்கும் காயாய்த், தீந்து போன, கடிய நெறிகளையும், உடையவாயின *[பதி.25:8]* கூற்றத்தையொத்த வயவர் சீறிய நாடு, முருகன், மாறுபட்டுச் சினந்த, ஆரவாரம் அழிந்த, மூதூரைப் போன்று, பீர்க்கங் கொடி பரந்த, பாழ்மனையுடைய, நெருஞ்சிக் காட்டில் பொருந்திய, கடியநெறியாயின *[பதி.26:11]* வழியறியாமையினாலே வழியைத் தப்பி வேறோரு நெறியிற் போகாதே இவ்வழியிலே என்னைக் காண்டலும் நீ செய்த நல்வினைப் பயனாகும்', எனப் பொருநனுக்கு ஆற்றுப்படுத்தோன் கூறினான் *[பொரு.58]* உப்பின் விலை சொல்லிச் சகடத்திற்குப் பூட்டுதற்குப் பல எருத்தையும் அடித்துக் கொண்டு போகும் உப்பு வாணிகர் ஊர்கள் தோறும் செல்லும் நெடிய நெறி இரவில் வழிச் செல்வார்க்கு ஏமமாகும் *[பெரு.65]* கடல் எல்லையாக, மலை தோன்றிய மண்ணுலகில் வானில் காற்றுச் சுழல நாண்மீன் தாம் நடக்கும் நெறியின்கண் நடக்க, ஞாயிறும், திங்களும் விளங்க, மழை உதவ, விதைப்பில் ஆயிரம் விளையும் *[மது.6]* படுத்துவைத்தாற்போன்ற கற்பாறையின் பக்கத்தில் எடுத்து நிறுத்தி வைத்தாற்போன்றது இடுகிய, அரிய, சிறிய நெறி *[மலை.16]* 'நிலப்பிளப்பில் பாம்பு மறைந்து கிடக்கும் பள்ளங்களும் உள. அவற்றைக் குறிக்கொண்டு, உள்ளுறைவு காணா மரங்களையும் கொட்டிப்பார்த்து, வழுக்கற்ற வறிய நெறிகளை நீக்கி வலப்பக்க வழியாகச் செல்க' எனக் கூத்தரை ஆற்றுப்படுத்தினார் *[மலை.202]* 'வீழ்ந்தோரை மறைக்கும் ஆழமுடைய குளங்களின் அருகே குற்றவிடங்களை மறைக்கும் பாசி, நடக்கும் அடியை வழுகிச் செல்லச் செய்யும் அருமையையுடையது வழி. எனவே, நெறிமுழுதும் பின்னி வளர்ந்த சிறு மூங்கிலோடு, வேழத்தின் கோலைப், பற்றுக் கோடாகக் கொண்டு செல்வீர்' எனக் கூத்தரை

ஆற்றுப்படுத்தினர் *[மலை.223]* 'பீலிமயில் ஆடித் தளர்ந்து நிற்பினும், மூங்கில் கொம்பில் கடுவன் குதிப்பினும், பக்க மலையில் தேனிறாலைக் காணினும், நெறிமாறுபடுவீராதலினால் கடுக நோக்கற்க' எனக் கூத்தர்க்குக் கூறினர் *[மலை.241]* பரண்மேல் பார்வைக் கிருந்தோன் எய்த அம்போடு, மருமத்தில் புண் மிகுந்த, மண் குத்தித் தேய்ந்த கொம்பினையுடைய ஏனம் இருள் அற்றுக் கிடந்தாற்போன்று, நெறிவிலகிக் கிடந்தது *[மலை.246]* இரவில், வழியில், இல்லில் புகுந்தாலொத்த கல் முழைகளில் தங்குவீர். அவ்வாறு தங்கி, இளைப்பாறி வானில் கதிர் விரியும் விடியலில் எழுந்து காட்டில் கிடந்த செவ்விய நெறியைப் போவீராக', எனக் கூத்தரை ஆற்றுப்படுத்தினர் *[மலை.258]* முசுக்கலை ஏறமுடியாது செயலறவு கொள்ள, உயர்ந்த மலைமீது நிலையாகச் சார்த்தி வைக்கப்பட்ட கண்ணேணியே, நெறியாகச் சென்று, தேனீத் திரட்டி வைத்த தேனைக் குறவர் அழித்துக் கொண்டனர் *[மலை.316]*.

நெறி செல்லமுடியாதபடி பின்னிக் கிடக்கும் இச்சுரத்தினை, நீவிர், முன்பு அறிதலும் செய்வீரோ, என்று, பரிவுற்று வினவுவாரைப் பெறின், அது (கடக்க) நமக்கு அரியதன்று', எனத் தலைவி கூறினாள் *[அக.8:17]* வெப்பங்குறையாத பாழிடத்தே, பெருமையொழிந்த யானை, நீருள்ள இடம் அறியாது, பேய்த்தேர் தோன்றும் இடமெல்லாம் ஓடி, நீரற்ற ஆற்றிற் கிடக்கும் ஓடம் போல, நெறியில் வருந்திக் கிடக்கும் *[அக.29:18]* மழை நீரையுடைய செம்மண் நிலத்தே, தேர்விடும் நெறியிலுள்ள ஈரமணலைக், கானங்கோழி கிளறப், பாம்புப் புற்றின் ஈர மேற்புறத்தைக் குத்திய மண் கொண்ட கொம்புடைய ஏறு தன்ஆவினைத் தழுவி, ஊரின்கண் மாலையில் மீண்டு வரும், *[அக.64:18]* பட்டினியால் வருந்திய யானையின் முதுகில் நடப்பது போலப், பாறையில் ஏறியும், இறங்கியும் செல்லும், மூங்கில் சாய்ந்த சிறிய நெறிகளையுடைய காடு, மேம்படுவற்குக் காரணமாகிய களிறு, வழிகளைக் காவல் கொள்ளும் சுரம் *[அக.65:15]* மலையில், கருவுற்றிருக்கும் பெண்புலியின் பசியை நீக்க, ஆண்பன்றியினைக் கொன்ற ஆண்புலி, பாம்பு மணிவிளக்கில் ஈர்த்துச் செல்லக், கூர்ங்கற்களை உடைமையால், வாளில் நடப்பதையொக்கும், செலவு அரிய எண்ண அச்சந்தரும், கற்செறிவுடைய நெறியில் தலைவன் செல்வான் *[அக.72:17]*. காட்டு வாழ்க்கையோடு, புலிபோலும் வலிமையையும், கழலையும் உடைய மறவர்கள் தம் சீறூர் மன்றத்து நிழலில், கண்படுக்கும் நெடுமலையிலுள்ள, நீரறக் காய்ந்த கல் மிக்க நெறியில் தலைவன் செல்வான் *[அக.75:9]*. கண்களைப் பார்க்கவொண்ணாதவாறு ஞாயிறு காய்தலால், நெறியின் அயலதாகிய வெண்கடம்ப மரத்தின் காய்ந்த கிளைகளில் ஏறிப், பருந்து தனிமை கொளவருந்தும் *[அக.81:8]*. மலர்தார் மார்பன் வில்லினைக் கையிற்பற்றி, அம்பு தெரிந்து, தன்னால் எய்யப்பெற்ற யானை சென்ற நெறியினை வினவித் தினைப் புனவாயிலின் ஒருபுறம் நின்றான் *[அக.82:12]*. காட்டில், பாம்பு இறந்துபட, வளைந்த விரலினையுடைய கரடி தோண்டும், வடுக்கள் பொருந்திய, புற்றுக்களையுடையது வழங்குதற்கரிய நெறி *[அக.88:15]*.

புலி தின்று துறந்த மான் தசையை, நெறிசெல்லும் புதியோர், மகிழ்ந்தெடுத்துத் தயிரோடு கூட்டிச் சமைத்த, மூங்கில் அரிசிச் சோற்றினைத் தேக்கிலையில் வைத்துண்ணுவர் *[அக.107:6]*. நெறியில் செல்லும் புதியவர்களைக் கொன்ற ஆறலைப்போர், தாம் எறிந்த படைக் கலத்தைக் கழுவியதால் சிவந்த நிறமுடையது சின்னீரையுடைய துறை *[அக.113:18]*. வழிச் செல்வோர் அறுத்த பிரண்டைக் கொடி இடியால் தாக்கப்பெற்ற பாம்பின் துண்டு போலக் காட்டு நெறியில் வதங்கிக் கிடக்கும் *[அக.119:7]*. 'வறட்சியுடைய சிறுகுளத்தில், தோண்டப் பெற்ற கலங்கிய நீரில், கன்றினையுடைய பிடியின் தலையினைக் கழுவி, எஞ்சிய சேற்று நீரில் ஆடிய களிறு, வெள்ளிய பூங்கொத்துதிரத், தன் தினவு தீர, உரசும் நெறியயல் நிற்கும், வெண்கடம்ப மரத்தின், வரி நிழலில் தங்கித், தலைவி நம்மொடு வரும் என்பர்; இதனால் நாம் நகையுடையேம்', எனத் தலைமகன் கூறினான் *[அக.121:8]*. உண்ணாமையால், வாடிய உடம்பினோடு, நீராடாத நோன்புடைய தவத்தினர் போல, மலையில் பொருந்திய சிறிய நெறிகளில், வரிசையாகச் செல்லும் காட்டு யானையுடைய குன்றம் அழ கழியும் *[அக.123:3]*. 'யானையின் கயிற்றுப் புறம் போன்று காணும் மலைப்புறத்துச் சிறு நெறியில், மழைநீர் ஒழுகாநிற்கப், படுகுழியுடைய தடத்தில், இருளில், மிதித்து வரும் நம் தலைவன், தளரடியைத் தாங்கும் பொருட்டுச், சென்றது, என்நெஞ்சம்', என்றாள் தலைவி *[அக.128:11]*. தலைவன் இரவுக்குறி வரும் நள்ளிரவில், குன்றத்து உச்சியில், நெறி தவறச் செறிந்த ஆரிருளில், தன் மணியை உமிழ்ந்த நாகம், காந்தள் மலரூதும் வண்டினைக் கண்டு, தன் மணியென மருளும் *[அக.138:16]*. குட்டிகள் மூன்றினை ஒரு சேரப் பெற்ற பிணவுக்குப் பசி மிக்கதாக, ஆண்புலி, ஆண்மானினது குரலை உற்றுக்கேட்கும், கவர்த்த நெறிகளையுடையது செல்லத் தொலையாத காடு *[அக.147:8]*. நீண்ட நெறியில் மிக்க மழை பொழிந்தமையால், பயன் மிக்க முல்லை நிலத்தில் நீர்ப்பள்ளங்களிலுள்ள தேரைகள், சிறிய பலவாச்சியங்களைப் போல ஒலிக்கும் *[அக.154:3]*. 'கள்ளைக் குடித்துப், போரை விரும்பும் ஆடவர், வில்லால் எய்ய வீழ்ந்தோரது கற்குவியலது அயலதாகிய கோங்கின்மீது படர்ந்த, அதிரற் கொடியை, அரும்புடன் இழுத்து, விடியலில் கவளங்கொள்ளும், காட்டு யானையுடைய நெறி அஞ்சுதற்குரியது *[அக.157:9]*. 'வெற்ப! மலையில், களிறு, ஈன்றணிமையுடைய பிடி தழுவிக், குழவி துயிலும் இடத்தைக் காக்கப், புலி, தங்கிய முழையினின்று புறம் போகி முழங்க, வேட்டுவர் துயிலும் நள்ளிரவில், விலங்கு செல்லும் சிறு நெறியில், நீ வருதலை ஒழிதல் வேண்டும்' எனத், தோழி தலைவனிடம் உரைத்தாள் *[அக.168:14]*.

மூங்கில் செறிந்த, பக்க மலையிலுள்ள, சுரபுன்னையின் தலைவாடும்படி, ஞாயிற்றின் கதிர் சினத்தைப் பயின்ற, பெருகிய, கற்கள் பொருந்திய, நெறியில் மயில் அகவும் [அக.177:8].

'இடி முழங்கும் இடத்தே, ஊக்கங்குறையாத உள்ளமுடன், வேலே துணையாகச், செறிந்த இருள் பரவிய, கற்களையுடைய அரிய நெறியில் ஏதம் பாராது வரும் நின்னால் ஆகிய துன்ப நினைவினை நீந்துவோர் எம்மையன்றிப் பிறரும் உளரோ? என்று தலைவனிடம் தோழி உரைத்தாள் [அக.202:13]. 'விலங்குகள் செல்லும் வழிகள் பின்னிக் கிடக்கும் மலையடியில், சிறிய நெறிகளில், அவர்களுக்கு முன்னே சென்று சேர்ந்து, சிறிய ஊரில், விருந்தாக அவர்களை ஏற்று, உண்பித்திருக்கச் செய்ய, அம்மனைகெழு பெண்டாக யான் ஆவேனாக', என மகட்போக்கிய தாய் கூறினாள் [அக.203:13]. வேங்கையின் கிளையிலேறி, ஆண் குரங்குகள், தம் இனங்களைக் கூப்பிட்டுத், தாவும் குன்றிடையே, சிறிய நெறி செல்லும் [அக.205:22]. ஆறலைகள்வருடைய, பகைமிக்க, கவர்த்த வழிகளில், வம்பலர் செல்லும் நெறியினைக் காணும் பொருட்டு, மாமரத்தில் ஏணி சார்த்தப் பெற்றிருக்கும் [அக.257:13]. 'தலைவியை நின் அகத்தில் விரும்பிப், பாம்பு இரைதேரும் அச்சம் பொருந்திய சிறிய நெறியில், இரவில் சென்றும், பெறாயாகி, யாவர்க்கும் இகழ்ச்சி தோன்றக், காமத்தால் அரிய துன்பினை, என்பால் தந்தாய்', எனத், தலைமகன், தன்னெஞ்சிற்குரைத்தான் [அக.258:10]. 'புலியைக் கொன்ற யானை, தன்புலால் நாறும் நுதலைக் கழுவ, இரவில், அருவியை வழங்கும் அச்சமுடைய மலையில், தன்விளங்கும்வேல், தான் செல்லும் நெறியினைக் காட்டத், தனியனாகப், பனிவருத்தம் ஏவறாது, நம்மனையில் தலைவன் புகுந்தான் எனத், தோழி உரைத்தாள் [அக.272:5]. 'காட்டிலுள்ள வழியில், யானைகளும் இயங்கும்; வானத்தில் இடியும் முழங்கும்; பாம்பும், புலியும் யாவரும் அஞ்சுமாறு உலவும். இத்தகைய நெறியில், இரவில், நீ தனியே வருகின்றனை. வரைவு விரும்பினும் பெறுவை' எனத் தோழி தலைவனுக்கு வரைவு கடாவினாள் [அக.318:4]. 'நம் தலைவர், நிழலில் தங்கிச் செல்லக், குன்றுகளிடத்தவாய, அருவி நீர்த் துளியால் மலர்ந்த நுணா மரத்தின் வெள்ளிய பூக்கள், செம்மணலையுடைய சிறிய நெறியில், கம்மென்று மணக்குமாறு, உதிர்ந்து அழகு செய்யக், காடு கவினடைக', என்றாள் தலைமகள் [அக.345:17]. சூல் வேட்கையுடைய உண்ணாத பெண்புலியின் வருத்தத்தை நீக்கக், கோட்டினையுடைய யானையை வலப்பக்கத்தே விழக் கொன்று, இழுத்து வந்து, மூரி நிமிர்ந்து, புலால் நாறும் புலி, புண்டதால் சிறிய நெறியில் புல் சாய்ந்து கிடக்கும் [அக.357:6]. கிளையில் கட்டப்பெற்ற, பலரும் ஏறி இறங்கி ஆடும் ஊசற்கயிறு போலச், செல்ல, வர, வருந்த நீண்ட நெறியினையுடைய குதிரை மலையின் தலைவன் அஞ்சி [அக.372:9]. உப்பு மணலில் விளைந்த உப்பினது விலை கூறிச், சேய் நிலத்துக் கோல்களைக் கொண்டு உமணர் நெடிய நெறியின்கண், கூட்டத்துடன் செல்வர் [அக.390:5].

'பல ஆக்கள் நெடிய நெறியின்கண் அசைந்து செல்வனவாக, மாலையில் மன்றத்தைப் பார்த்துக், கன்றுகள் தலையெடுத்துப் பார்த்து வருந்தினாற் போலச், சேய்நாட்டோராகிய நம் தலைவரை நோக்கிய துன்பத்தையுடையேம் எனக், கிழத்தி கூறினாள் [குறு.64:1]. வானத்தில் பறப்பவை, தாம் தங்கும் நெறியயல், கடம்பின் கூட்டிலிருக்கும் குஞ்சுகளின் வாயுள செருகும் பொருட்டு, இரையை அலகில் கொண்டமையால், விரைந்து செல்லும் [குறு.92:3]. ஆண்வங்காப் பறவை நீங்கப் பெற்றமையால், கனிந்த பெண் பறவை, புல்லூறு எனும் பறவை இரையாகக் கொள்ள வீழக், கணவனைக் காணாது, குன்றின் சிறிய நெறியில் குழல் போன்று ஒலிக்கும் [குறு.151:1]. தன் இனத்தினின்றும் பிரிந்து வந்து, பாலை நிலத்து, ஓமை மரக்கிளையிலிருந்து ஒலிக்கும் பருந்தினது தனிமை ஒலி, பழைய சிறிய நெறியிற் செல்லும் மனிதர்க்கு, உசாத் துணையாக அமையும் [குறு.207:5]. 'மலைகளைக் கடந்து சென்ற யாம் பிற பலவற்றை நினைந்தேமல்லேம். நெறியிடத்தே தழைத்த, வெட்சியினது போது கமழும், கருங்கூந்தலையுடைய தலைவியின், நட்பையே, நினைந்தேம்', என்றான் தலைமகன் [குறு.209:4]. பரற் கற்களையுடைய பள்ளத்தில் தங்கிய நீரையுண்டு, ஆண்மான், தன் துணையோடு நெறியிடத்தில் துள்ளும் [குறு.250:2]. இருப்பை மரத்தினது, வேனிற் கால வெண்பூக்கள், காற்றால் உதிர்க்கப்பட்டுக், களிறு வழங்கும் சிறிய நெறி மறையப் பரக்கும் [குறு.329:3]. விரைதலையுடைய, வளைந்த தாளையுடைய, நண்டு, தன் கூரிய நகத்தினால், கீறிய, ஈரமணலுடைய நெறி சிதைய, அலைகள் மோதும் [குறு.351:3]. 'நம்மைப் பிரிந்து தலைவனோடு மடந்தை செல்லும் மலையிடத்துச் சிறிய நெறி, வெயில் காயாது, மரநிழல் பொருந்தி, மணல் பரவப் பெற்று, மழையும் பெய்வதாகுக', என்றாள், மகட்போக்கிய செவிலி [குறு.378:2].

உப்பு வணிகர், வெளிய கல்லுப்பின் விலை கூறக், கூட்டமாகிய ஆனிரையை எழுப்பும் நீண்ட நெறியிற் செல்லும் வண்டிகள், மணலில் மடுக்கும் ஓசை கேட்டு, வயல் நாரை வெருவும் [நற்.4:9]. அழல் வீசும் நீண்ட கடத்தில், நிற்க நிழலிடமும் இல்லாது, குட்டிகளை ஈன்று காவல் செய்திருக்கும் பெண்புலி, மிகவும் பசியுடையதாக, அது தீர்க்கக் கருதிய ஆண்புலி, மயங்கிய மாலைப் பொழுதில், செல்வாரைச் செகுக்கும் பொருட்டு புல்லிய சிறிய நெறியில் வாய்ப்பு நோக்கும் [நற்.29:5]. மலைச் சாரலில், வன்னிலத்துக் கல்லுடைய சிறுகுழிக் கலங்கல்நீரைக் கொணர்ந்து, நிறைமழையை அறியாமையால், குறையுணவையுண்ணும், சிவந்த ஆடையையும், செவ்விய அம்புத் தொடையையுமுடைய கள்வர், மாலையில் அச்சந்தரும் நெறியில் நோக்கியிருப்பர் [நற்.33:7]. நாடன் மூங்கில் நிறைந்த

கற்செறிந்த சிறிய நெறியில், வேங்கை முதலிய பகைமைப் பொருட்படுத்தாது, வந்து தலைவியை முயங்கிச் சென்றான் *[நற்.55:2]*. புலிக்கு அஞ்சித், தன் தளர் நடையையுடைய கன்றைப், பெண்யானை இருள் மிக்க அச்சந்தரும் சிறிய நெறியிற் காக்கும் *[நற்.85:6]*. 'பாம்புறையும் பிளப்புக்களையுடைய மலைபுரளுமாறு, இடி முழங்கும் பொழுதோடு, மழை வெள்ளம், செல்லக் கூடாதவாறு தடுக்கும், நோக்கரிய சிறிய நெறியை நினைவோர், நம்மினும் பிறர் யாவரேனும் உளரோ', என்றாள் தலைவி *[நற்.104:12]*. 'யாம் பொருளீட்டச் செல்வோம் என்ற அளவில், அழுதவளுடைய கண்கள், இலந்தையின் காய்கள், கற்கள் நிறைந்த சிறிய நெறியில் உதிர்ந்து பரவும் பெரிய காட்டைக் கடந்தும் எம் முன் வந்தனவே', என்றான் தலைமகன் *[நற்.113:3]*. 'நாட! பாம்புடைய மயக்கந்தரும் சிறிய நெறியில், நள்ளிரவில், வேலே துணையாகச் சந்தனங்கமழ, உன்னை விரும்பியுறையும் இவள் உயிர்த்துன்பம் உணராது, இச்சிறுகுடிக்கு வருதல், நின்பண்பெனப்படுமோ?' என்று தலைவனிடம் கூறினாள் *[நற்.168:9]*. தம் நாட்டு நெல் தந்து பிற நாட்டு உப்பினைப் பெற்று விலை கூறி, நீண்ட நெறியூடு, மணலைக் கடந்து சுற்றத்துடன் தம்புலம் பெயர்ந்து, உமணர் சென்றனர் *[நற்.183:3]*. பாணர், பரிசிலாகப் பெற்ற புரவியின் குளம்புடவமைந்த மலைநெறியில், மெலியாமல் இரவலர் பொறையனது கொல்லிமலை ஏறுவர் *[நற்.185:5]*.

'குளங்களில் நீர் வற்றச், செவ்வியழிந்து காய்ந்த, பல நெறியையுடைய அருஞ்சுரம் கடக்க நினைத்தோர்க்கு, யான் யாது சொல்லக் கடவேன்', எனத், தலைமகள் கூறினாள் *[நற்.224:9]*. 'மலைப்பக்கத்தில், வழிப்போவார் யாருமில்லாத, நீர் விளங்கிய சிறிய நெறியிலே, கொடிய விலங்குகள் இயங்குவதனை அறிந்து வைத்தும், நடுயாமத்தில் வாரா நின்றனை. இதற்கு, யான் நோகா நின்றேன்', எனத், தோழி தலைவனிடம் உரைத்தாள் *[நற்.257:8]*. 'மழைபெய்த நடுயாமத்தில், களிற்றினைப் பற்றிச் சுற்றிக்கொண்ட பெரும்பாம்பு, மரத்துடனே பிணித்துப் பிரட்டும், சந்தன மரத்துடன், எருவை நாறும், பூமலர்ந்த பெருமலைச் சிறிய நெறிவருதலான், நம் தலைவர் நம்பால் அருளிலர்', என்றாள் தோழி *[நற்.261:10]*. களிறு காலால் உதைத்தொழிந்த புழுதி, வேல மரங்கள் செறிந்த, முதிர்ந்த நெறியை மறைக்கும் *[நற்.302:9]*. மலைப்பிளப்பிடத்தே, குட்டிகளை ஈன்ற பெண்புலியின் பசி நீக்க வேண்டிப் பெருங்கொலைத் தொழிலை மேற்கொண்ட ஆண்புலி, தாழ்வரைச் சிறிய நெறியில் பதுங்கியிருக்கும் *[நற்.332:7]*. மழை, தன்பெய்தல் தொழிலைச் செய்யாது, வானத்தில் வறிதாக சென்றதனால், மூங்கில் வாடி, கற்கள் நிறைந்த, சிறிய நெறி அழகழிந்தது *[அக.333:2]*. 'பாம்புறையும், ஈர நயப்புடைய, உள்துளையுடைய புற்றைக், கார் முற்றியதுபோலச் சூழ்ந்து, இரை தேரும் கரடிக் கூட்டம், பறித்தெடுக்கும் வரையடுத்த சிறிய நெறியில் வாராதொழிக! எனத் தலைவனிடம் தோழி கூறினாள் *[நற்.336:11]*. முல்லைமலர் பரந்த, கற்கள் நிறைந்த, சிறிய நெறியைச்சாராதமைந்தது குடியிருப்பு *[நற்.343:1]*. 'யாமத்தில் புலியைக் கொன்ற யானை, சினத்துடன் இடிபோல முழங்கும் அஞ்சத்தக்க சிறிய நெறியில் வருதலன், நீ சால்புடையை அல்லை', எனத், தோழி தலைவனிடம் கூறினாள் *[நற்.353:11]*. 'கடுவெயிலில், கல்லாக விளைந்த உப்பினை ஏற்றி, நீண்ட நெறியிலே செல்லும் வண்டிகளை வரிசையாகச் செல்லப்பார்க்கும் உப்புவணிகர், அளம் நீங்கும் ஆரவாரம்போல, தலைவன் நட்பு அலராகியது', என்றாள் தோழி *[நற்.354:9]*.

இருள் பரந்த யானை வழங்கும் காட்டு நெறியில் வாராதே!, எனத் தோழி தலைவற்குக் கூறினாள் *[ஐங்.282:5]*. சிறிய கண்ணினையுடைய யானை திரியும் நெறியுடையது கானம் *[ஐங்.355:5]*.

முள்வேலிபோல, வேடரால் கொல்லப்பட்டவரது உடலம் மறைய விட்ட, இலைக்குவை நிரைத்துக் கிடக்கும் வழியில், நீரற்ற சுனையில், பதித்து வைத்த கைகள் சுடப்பட்ட யானைத்திரள், மலைச்சாரல் தோறும் ஓடுகையால், நெறி மயங்கின *[கலி.12:7]* கோடையில் போதற்கரிய நெறியென்னாது தலைவர் ஒண்பொருளைத் தேடச் சென்றார் *[கலி.150:16]*.

நெறி செல்பவன் பின் இவள் தன் நெஞ்சைப் போக்கினாள். பெண்டிர் தம் அன்பு மிகுந்தால் நிறையழியும். அதனால், அன்பு மிகுதியை நீக்குவேமல்லமோ என்றார் சிலர் *[பரி.12:53]*. பேதையொருத்தி, தமரின் நீங்கிக், கற்களின் இடையிடைப் புக்குத் திகைத்து, வந்த நெறியும் மறந்தேன், என்று, கூறியழைக்க, அது எதிரொலிக்கச் சென்று, தம் தமரைக் காணாது மயங்கும் மடமைத்து பரங்குன்றியல்பு *[பரி.19:60]*

**5. முடக்கம் (வளைவு).** பசியால் தின்னப்பட்டு உலர்ந்த, வேர்ப்புடைய உடம்பு, சோறு, புகுவது அறியாதாகலின், வாட்டமுற்ற நெறி-முடக்கம்-கொண்ட, பலவரியையுடையது குடர் *[புற.160:6]*.

நெறி-வளைவு-பட்ட கொம்பினையும், பெரிய கண்ணினையும் உடைய எருத்தொடு வளைந்த தலையையுடைய விலங்குகளின் இறைச்சியை வெட்டும் அரிவாளால் வெட்டுப்பட்ட, ஊன் அல்லது மரக்கட்டை போன்று, படைக் கருவி, பட வயவர் மெய் சிதைந்தனர் *[பதி.67:15]* திருக்கோவலூர்த் தலைவன், காரியின், கொடுங்காலென்னும் ஊரின், முன் துறையிலுள்ள வெண்ணையாற்றுக் கருமணல் ஒழுங்கினையொக்கும் நெறிபட்ட கருங்கூந்தலை யுடையவளுக்கு (தலைவிக்கு), முன்பின் அறியாத நாட்டில் துணையாவான், தலைவன் *[அக.35:17]*

பெருமழை பெய்து மாறிய நள்ளிரவில், இவள், மின்னல் போன்று குழை ஒளிவிடப் பின்னல் நெகிழ்ந்தமையின், நெறியுடன் கவர்த்த அகன்ற கூந்தலையுடையாளாய்,

மலையில் இறங்கும் மயில் போலத் தளர்ந்து, மேலிருந்து இறங்கி வரக் கண்டேன், என்று, கூறி வருத்தாதே', எனத் தோழி, செவிலிக்குக் கூறினாள் *[அக.158:4]* தலைவியை நோக்கி நம் தலைவர் நின் கண்ணீர் துடைக்க விரைந்து வந்தனர். எனவே, தோளில் நின் தொடி ஏறுக; நின் துன்பமும் தீர்க; நெறியுடைய கரிய கூந்தலில் மாலையையும் புனைக' என்றாள், தோழி *[அக.269:2]*. 'தலைமயிரும், குறுகிய அளவில் நெறி கொண்டு வளர்ந்தது. முலையும், வடிவு கொண்டு, மென்முகத்தால், செப்புடன் எதிர்கொண்டன. இவள் பெண்தன்மையடைந்தனள் எனக், கண்துணையாகப் பார்த்து, நேற்றும் ஐயுற்றும் இற்செறியாமற் போனேன்', என்றாள், மகட் போக்கிய தாய் *[அக.315:1]*. பொய்கைக்கண் ஆம்பல் மலரை மேய்ந்த நெறி கொண்ட கொம்பினையுடைய முதிய எருமைக்கடா, சேற்றில் துயின்று, ஞாயிறு தோன்ற வரால் மீன் மிதிபடப் புறம் போந்து, பகன்றைக் கொடி சூடி, வென்றி எய்திய வயவர் போல, ஊருட் புகும் *[அக.316:2]*. 'மயிர்ச்சாந்தணிந்த நெறி பொருந்திய கற்றையாகிய கூந்தலை ஆற்றி, மலரை அணிந்தும், நெற்றியில் பொட்டிட்டும், இதழோடு பூம்பொடியை மார்பில் அப்பியும், தோளில் தொய்யில் எழுதியும், அடியில் செம்பஞ்சிக் குழம்பூட்டியும் இவ்வாறெல்லாம் என்னைப் பாதுகாத்து, மனைவயினிருப்பார், இன்று மலை கடந்தார்' எனத், தலைவி சொல்லினாள் *[அக.389:1]*

"நெஞ்சே! என்னால் விரும்பப் பெற்ற தலைவியது கூந்தல், சோழரது உறந்தை நீர்த்துறையிலுள்ள நுண்ணிய கருமணல் ஒழுக்கு நீண்டு படிந்தாற்போன்ற நல்நெறியன, நறுந்தன்மையுடையன', என்றான், தலைமகன் *[குறு.116:4]* 'தோழி! எம்மைப் பிரிந்து சென்று தங்கிய நாட்டில், கொன்றை மலர் நம்போல் பசலை நிறங்கொள்ளும் கார் காலத்தில், பெண்மானை நீங்கிய நெறி அமைந்த கொம்புடைய ஆண்மானைக் காண்பர்கொல், நம் தலைவர்', என்று, தலைமகள் தோழியிடம் வினாவினாள் *[குறு.183:3]* 'நெறி கொண்ட கரிய கூந்தலோடு, பெருந்தோளைத் தடவிப் பின் வளை நெகிழும்படி, தாம் ஈட்டும் பொருள் குறித்து, தலைவியைப் பிரிந்து சென்றார் தலைவர் *[குறு.190:1]* கைவண்மையுடைய ஓரியினது கானத்தைத் தீண்டி வீசுகின்ற காற்றைப் போன்ற, கமழுகின்ற நெறிபடு கூந்தலையுடைய மாமை நிறமுடையாள் தலைவி *[குறு.199:4]*

'வேங்கைச் சினையில் கட்டப்பெற்ற, கையால் புனைந்த, சிறிய நெறியை (முடக்கம், முடங்கிய கயிற்றூசல்) இழுத்து, அவரது குன்றத்தை நீ கண்டு, கவலை தணியுமாறு உயர்த்தி விடுவேனோ?' எனத், தோழி தலைவியிடம் உரைத்தாள் *[நற்.222:3]* நெறிபட்ட கருங்கூந்தலின் நாற்றமும், பசலை படர்ந்த நுதலும் நோக்கி வருந்திய நெஞ்சினளாய், வேறொன்றைச் சுட்டி வெம்மை தோன்ற உயிர்த்தனள், யாய், என்றனள், தோழி *[நற்.368:5]*

கிள்ளியது மதிலைக் குத்தும் யானையைப் போல, விரைந்து, நெறியுடன் வந்து, கரையை யழிக்கும் புதுப்புனலில், புணையினைப் பற்றி ஆடுவேம்' என்றாள், காமக்கிழத்தி *[ஐங்.78:2]* நெறிபட்ட கொம்பினையுடைய கரிய எருமைப் போத்து, பொய்கைக்கண்ணுள்ள ஆம்பலைக் கெடுக்கும் *[ஐங்.91:1]*

'மையுண்கண்ணாய்! தாம் வரும் நாளைத் தம் நெஞ்சிலே நிறுத்தித், தம் கூற்றுப் பொய்யல்லவாகத், தம் தேரை விரைந்து செலுத்தி, நம் நெறியமைந்த கூந்தலின் பின்னல் விடும்படி வந்தார், எனத், தோழி தலைவியிடம் கூறினாள் *[கலி.33:28]* மின்னல் இடையே பிளந்தோடும் முகில் போல், பொன் வகிரை, வகைபெற்ற நெறியில் (நெறிவுடைய கூந்தலில்) விளங்கவிட்ட, பூமாலையோடு, இனிய நகை, இலங்கெயிறு, இன்மொழி, சிவந்தவாய், நல் நுதல் ஆகியவை உடையவள் தலைவி *[கலி.55:2]* 'ஒழுகும் அறல், நீண்ட நெறிபட்ட கூந்தலாகப், பிறழுங்கயல் கண்ணாகப், புதுப்புனலாடினாய்' எனத், தலைவி தலைவனுடன் புலந்தாள் *[கலி.98:14]*

மண்வருந்த வானம், வறந்ததாயினும், தண்பரங்குன்றமே! நினக்கு, நெறிநீர்மையுடைய அருவியது நீர்மிகும் செல்வம் நிலைபெற்றிருப்பதாக என வாழ்த்தினர் *[பரி.8:128]* அந்தணர் வளர்த்த நெறிபட்டு, நிமிர்ந்து, வளைந்த அழலைப் பேணிய சிறப்புடனே, மகளிர், தம் ஈர அணியைப் புலர்த்தாநிற்பர் *[பரி.11:85]*. வையை, கடலை மடுத்தாற்போல, மகளிர் திரளுக்குள்ளே புக்குத் தப்பப்போகின்ற பரத்தையைக் கண்டு, இவள் மாற்றாள் என்று தெளிந்து, ஆயத்தார் நெறியமைந்த மணற்கண்ணே தேடினர் *[பரி.20:43]* மகளிர் நீலமணி போன்ற தகை, வகை, நெறியினையுடைய, அவிழ்ந்து, நிமிர்ந்த கூந்தல் உடையவர் *[பரி.தி.1:60]*

**6.** முறைமை - விதி. பாணன் யாழை, இசைநூல் நெறியால் முறைமையால் - குரல் குரலாகச், செம்பாலைப் பண்ணை வாசித்துப் புகழ் கூறினான் *[சிறு.230]*. ஊன் சோற்றை, இடுநெறியறிந்த பேய்மடையன், பின்பெயராத மறவர்க்கு, வழங்கினான் *[மது.36]*. பேரியாழைத் தனக்கு நூல் கூறிய நெறி (வழியுமாம்) தப்பாது பொருந்துதல் வரச் சமைத்து, இசையை எக்காலமும் கேட்கும் செல்வத்தினையுடைய அரசர் அவைக்களத்தே, அவர்கள் ஏற்கும் வகையில், இசைக்கலைத் துறை பல கற்று முடித்தவர் பாணர் *[மலை.38]*

(புரவி) நூல் கூறும் நெறியால், நுண்ணிதின் அமைந்த கால்நடையால், காற்றெனச் செல்லும் புரவியது மணியொலிக்க, வல்லமையுடைய பாகனால், தேர் செலுத்தப் பெற்றது *[அக.314:8]* உறியிலே தங்கின கமண்டலத்தையும், முக்கோலையும் நெறி படத் தோளிலே நாலவிட்டுக், குடைநிழலில், தீது நினையாத நெஞ்சுடன், மனக் குறிப்புத் தன் ஏவலைச் செய்யும் இயல்புடன், ஒழுக்கத்துடன் நடப்பவர் அந்தணர் *[கலி.9:3]*. 'நூல் நெறியறிந்த அறிவனை முன்னிட்டுச், சான்றோர் இனமாகப்

பசலையும், பழியும், களவுக் கூட்டமும் நீங்க, வெற்பனும் வந்தனன். கண்ணும் பொலிவடைக' என்றாள் தோழி *[கலி.39:46]* கள்ளைநீக்கின தேவர்க்கும், அதனை நீக்காத அசுரர்க்கும் அறத்தொழிலாக முறையே வியாழமும், வெள்ளியுமாகிய இருவரும் கூறிய நூல் நெறியைத் (வழியுமாம்) தப்பாது, குழவிக்குத் தாய் போல, மழைதன் தொழில் செய்தலில் தப்பாதாகத், தன் செம்மையால் வேந்தன் ஆள்வான் *[கலி.99:3]* 'தாழை முடுக்கருள் நீ அளி செய்தபோது, தாயம் இடவேண்டிய அளவில், அது தங்கக் கண்டவன் மனம்போன்று, ஆக்கம் பெருகினாள். இப்போது, பொருள்வயின் பிரியின், நெறியல்லாத வழியிலே தாயம் விளையாடி, வருந்தினவனைப் போன்று துயரில் அழுந்துவாள்', என்று தலைவி பற்றித் தோழி உரைத்தாள் *[கலி.136:11]*.

**7. அறல்-வடிநீர்க்கருமணல், கருமணல் ஒழுங்கு.** விடியலில் தயிரைக் கடைந்து, வெண்ணையை எடுத்து, மோர்ப்பானையைப் பூஞ்சுமட்டின் மேல் தலையில் வைத்துக் காலையில், மாமேனியையும், குழைக்காதினையும், பணைத்தோளினையும், குறுகிய நெறியைத்-அறலைத் தன்னிடத்தே கொண்ட கூந்தலினையும் உடைய ஆயமகள் மோர் விற்பாள் *[பெரு.162]*

'சார்ந்த சார்ந்த இடங்களிலுள்ள, நெறி தங்கின, கரிய கூந்தலையுடைய நின்பெண்டிர் எல்லாரும், நின்னை வெகுளாதபடி என்னில் வந்தாய். அதற்கு, அப்புதிய யானை, நின்னைக் கைகடந்து மதம்படும். அதனை விடாதே பாதுகாப்பாய், எனத், தலைவி தலைவனிடம் புலந்துரைத்தாள் *[கலி.97:28]*.

**8. நடப்பு-நடைமுறை.** 'ஞாயிறும், திங்களும் போல விளங்கி, மாறன் முதலாக இளம்பல் கோசரும், ஐம்பெருங்கேளிரும், குறுநில மன்னரும், பிறரும் நடக்கின்ற நெறி-நடப்பு-முறைமையினாலே, நின்வாய்மொழிகேட்டு அவையத்தார் நின் அறத்தைப் புகழ, இனிது வாழ்க', என நெடுஞ்செழியனை, மாங்குடி மருதனார் பாடினார் *[மது.774]*.

**9. பூ-**இத்தலைவியின் மேனி பசலையடைதல், இவளும், யானும் கழுநீர், ஆம்பல் இவற்றின் முழு (இதழொடியாத) நெறியுடன்-பூவுடன் கூடிய, பசிய தழையுடை ஆகத்தின்கண் அசையக், காலையில் விளையாடி, நின்னுடன் நகையாடிய குற்றத்தாலாயதொன்றோ', என்று தோழி தலைவனிடம் கூறினாள் *[அக.156:9]*.

'வெள்ளாம்பலினது மாறுபட்ட நெறித்தழையுடைய குறங்கின்மேல் மாறிமாறி அசையப், பரத்தை, அவ்விடத்தே கொழுநனைக் காணும் பொருட்டு வருவாள். யான் இரங்கத்தக்கேன்', என்றாள் தலைமகள் *[குறு.293:5]*

'புதுவதாக, இயற்கைப் புணர்ச்சியால் புணர்ந்த பொழில் இது. திரையாடி ஐம்பாலைத் துவர்த்திய துறை உது. நெடுங்காலோடு உயர்ந்த நெய்தலது ஒன்றோடொன்று மாறுபடத்தொடுத்த நெறித்தழையை அழுகுற உடுத்தித் தமியராய்ச் சென்றகானல் அது, எனக் கூறி நினையுந்தோறும் பசந்தனை', எனத், தோழி சிறைப்புறமாகத் தலைவிக்குரைத்தாள் *[நற்.96:8]*.

**10. சுரம்.** தலைவியைக் கைக்கொண்டு படையொடும் சென்ற தலைவனை, அத்தலைவியின் சுற்றத்தார் இடைநெறி-சுரத்தில்-சென்று மறித்துப் பொருதாற் போல, மதுரையிலுள்ள மக்கள், இடையே, தடைசெய்து புகுந்து, நீராடுவதற்குரியதாயிற்று, வையை *[பரி.11:48]*.

**11. போக்கு (செலவு).** நெறி-செலவு-மாட்சிமைப்பட்ட, குளிர்ந்தவரவினையுடைய வையை; எமக்கு நின் கேண்மை இம்மையில் மட்டுமின்றி மறுமையிலும் வந்தமைக என மக்கள் வேண்டினர் *[பரி.தி.3:3]*.

**நென்னல்-நேற்று.** 'நென்னல்-நேற்று-ஊரார் என்னைத் துறைவனுக்குப் பெண்டு, என, அலர் எடுத்துரைத்தனர். அதுகேட்டு, அன்னை, நீ அத்தன்மையுடையையோ, என்றாள் எனத், தலைமகள் தோழியிடம் உரைத்தாள் *[ஐங்.113:1]*.

**நெருநல், நெருநை காண்க.**

**நேஎ-ஈரம் (அன்பு).** (நேஎம் என்றும் பிரிக்கலாம் அதற்கும் ஈரம்(அன்பு) என்பது பொருள்) பாண்டியன். கருங்கையொள்வாள் பெரும்பெயர் வழுதிநேஎ-ஈரம்-உடைய, நெஞ்சினையுடைய, பாண்டியர் மரபில் வந்தவன் *[புற.3:4]*.

**நேமி 1. உருளை (சக்கரம்).** நல்லியக் கோடன், பரிசிலர்க்கு, வானிடத்தே ஊரும் திங்களைப் போன்ற, நேமியை-உருளையை-உடைய, தேர்களைப் பரிசளித்தான் *[சிறு.253]*. மலையில் உள்ள தேனிறால் நேமியைப் போன்றிருக்கும் *[மலை.238]*. மலையில் ஒரி (நீலம்) நிறம் பரக்கும் தேனடையானது, நேமியைப். போல இருக்கும் *[மலை.525]*.

விரைந்து வரும், தலைவனின் தேரினுடைய நேமி கற்களில் மோதி ஒலிக்கும் ஒலி, கார்காலத்து மழையின் இடிமுழக்கினை ஒக்கும் *[அக.141:9]*. தங்களுக்குப் பணியாத மோகூரைப் பணிய வைப்பதற்காக, மோரியர் தேரின் நேமி தடையின்றிச் செல்லும்பொருட்டு, மலையை உடைத்து வழியுண்டாக்கினர் *[அக.251:13]*. வினைமுற்றி மீளும் தலைவனின் தேரின் நேமி வண்டுகள் தேன் உண்ணும் நறிய பூக்களை அறுத்து ஓடும் *[அக.324:11]*.

வினைமேல் செல்லுகின்ற தலைவன், பாகனிடம், "இன்றுபோய் வினையை முடித்துவிட்டு, நாளை மாலைக்குள், இளம்பிறையைப் போன்ற ஒளியையுடைய நம் தேரின் நேமி, வானத்தினின்றும் வீழ்கின்ற கொள்ளியைப் போலப், பசிய

பயிர்களைத் துணிக்குமாறு, காற்றைப் போன்று விரைவில், தலைவியிடம் திரும்ப வேண்டும்; என்று, கூறினான் *[குறு.189:3]*. தலைவனுடைய தேரின், பூணைப் பதித்தாற் போன்ற பொன்னாலாகிய விளிம்பினையுடைய நேமியின், வாளைப் போன்ற வாய் துணித்ததால், இதழ்கள் ஒடிக்கப்பட்டு, நெய்தற் பூ, கூழையாயிற்று *[குறு.227:1]*. தலைவனுடைய தேரின், விளரிப்பண்ணைப் போல, முழங்கும் நேமியானது ஏறிப்போனமையால், நலிந்த நெய்தல் மலரைப் போலத், தலைவி, பிரிவினால் வருந்தினாள் *[குறு.336:4]*.

தலைவனுடைய தேரின் நேமி, சுரத்திலுள்ள மேட்டு நிலத்தின்கண் அதிர்ந்து செல்லும் *[நற்.394:5]*.

2. ஆழிப்படை. நேமியை-ஆழிப்படையை-உடைய கையில் மாவலி வார்த்த நீர் சென்றதாக, உயர்ந்த திருமாலைப்போல, எழிலியானது கடலின் நீரைக்குடித்து, உலகத்தை வளைத்து, மேலே எழுந்தது *[முல்.1]*.

ஆயர் ஒன்று கூடிப், போர் புரிதலில் வல்ல, பொன்னாலாகிய, புகழ் பொருந்திய நேமிப்படையையுடைய, திருமாலைப் போன்ற, கரிய ஏறுகளைத், தொழுவில் அடைத்தனர் *[கலி.104:9]*.

பொன்னின் அழகினைக் கொண்ட நேமிப்படையினை வலக்கையிலே கொண்டுள்ள திருமால், ஒப்பாரும், மிக்காரும் இன்றி, அவருக்கு அவரே உவமையானவர் *[பரி.1:55]*. திருமால், இகழ்பவராகிய பகைவரை வென்று கொன்ற மாறுபாட்டினையுடைய நேமியை உடையவர் *[பரி.1:58]*. திருமாலின் கையிலுள்ள நேமியே உலகத்திற்கு நிழலாகும் *[பரி.3:94]*. அசுரரை வருத்துதலையுடைய நேமியைக் கையிலே கொண்ட திருமால், உலகத்தைக் காத்தல் தொழிலையுடையவராவார் *[பரி.13:6]*. கார்ப்பருவ முகிலின் இருமருங்கும் ஞாயிறும், திங்களும் இருந்ததைப்போலத், திருமாலின் இருமருங்கு கைகளிலும் நேமியும், சங்கும் விளங்கின *[பரி.13:9]*.

3. ஆணைச்சக்கரம் (அரசாட்சி). பாண்டியன் கருங்கையொள்வாள் பெரும்பெயர் வழுதி நேமியைச்,- ஆணைச்சக்கரத்தைச்-செலுத்திய பாண்டியர் மரபில் வந்தவன் *[புற.3:4]*. யானைக்கண்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை, நேமியால் உலகமுழுதாண்ட வேந்தரது மரபினைக் காத்தவன் *[புற.17:7]*.

4. கடல். ஆழமான நீரையுடைய நேமி-கடல்-தந்த கரிய கழியிடத்தே, இலைகளோடு அசையும் நெய்தலின் தண்ணிய மலர்களையணிந்து, தலைவன், மணமனைக்கு வந்தான் *[அக.400:21]*.

5. **சக்கரவாளமலை.** அறிவினது எல்லையாலே அறியப்படாத புகழுடனே விளங்கி, நிலத்தினது எல்லையைத் தாங்கி நின்ற, கெடாத நேமி-சக்கரவாளமலை-முதலாக, நல்லிசைப் புலவர்கள் ஆராய்ந்து கூறியுள்ள, பல மலைகள் உள்ளன *[பரி.15:3]*.

6. (நாண்மீன், தாரகை உடைய) சுடர்ச்சக்கரம். முருகவேளின் திருப்பரங்குன்றத்துத், தெளிந்த ஓவியம் வரைந்து நிற்றலையுடைய மாடத்தின் பக்கம் சென்ற மக்களுள் சிலர், நாண்மீன்களையும், தாரகைகளையும் உடைய நேமியை-சுடர்ச்சக்கரத்தைப்-பொருத்தி, ஞாயிறு முதலாக வரும் கோள்களின் நிலைமையை விளக்கி, ஆண்டுத் தீட்டப்பட்டிருக்கின்ற ஓவியத்தைக், கண்டு உணர்ந்து நின்றனர் *[பரி.19:46]*.

**நேமியஞ் செல்வன்** - திருமால். நிரம்பிய கதிர்களின் ஒழுங்கினைக் கொண்ட நேமியஞ் செல்வனின்-ஆழியையுடைய திருமாலின்-மார்பினிடத்தே தங்கிய மாலைபோல, எழிலி, பன்னிறம் பொருந்திய அழகிய வில்லினை விசும்பினிடத்தே வளைத்து, நிலம் பயனைத் தரப் பரவி, தண்ணிய மழையைப் பெய்தது *[அக.175:14]*.

**நேமியவை-சக்கரப்படையினை உடையை** (திருமால்). திருமாலினை, வலம்புரிச் சங்கினோடு, வெற்றிமிக்க நேமியவை-சக்கரப் படையினையுடையை-என வேதம் உரைக்கும் *[பரி.15:59]*.

**நேமியான்-(ஆழிப்படையையுடைய) திருமால்.** வள்ளிய உருண்ட நேமியான்-ஆழிப்படையையுடைய திருமால்-வாயில் வைத்து ஊதிய சங்குபோலத், தெள்ளிதாக விளங்கும் சுட்டியை (சுழியை) நெற்றியிலேயுடைய, கரிய ஏறுகளை, ஆயர் தொழுவில் அடைத்தனர் *[கலி.105:9]*. தன் காதலன் கொல்லேற்றினை வெற்றி கொண்டதைக் கண்ட தலைவியின் தோழி, 'நின் இல்லறம் சிறக்கவும், பாண்டியனின் ஆட்சி இமயத்தின் அப்பாலும் சிறக்கவும், கடலிடத்துப் பாம்பணையிலே பள்ளி கொண்ட வெற்றியைத் தருகின்ற நேமியானைப் பரவுவோம்', என்று, தலைவியிடம் கூறினாள் *[கலி.105:72]*. போரின்கண் மிகுகின்ற நேமியானின் நிறம்போல, மாலைக் காலத்தில் இருள் பரவியது *[கலி.119:3]*. போரின்கண் மிகுகின்ற நேமியானின் திருத்தோளிற் சேர்ந்த மாலைபோலக், கடற்கரையின் மணிலிலே, ஞாழற்பூவும், புன்னைப்பூவும், தாழம்பூவும், செருந்திப் பூவும் உதிர்ந்துகிடந்தன *[கலி.127:4]*.

**நேமியை-ஆழிப்படையை உடையை (திருமால்).** பகைவருடைய உயிரோடு மாறுபட்ட நேமியை-ஆழிப்படையை உடையை- என்று, திருமாலைப், புலவர் கூறினார் *[பரி.4:9]*.

**நேமியோர்-(ஆணைச்சக்கரத்தையுடைய) அரசர்.** ஒரு மறவன் போரில் வெட்டுண்டு கிடக்கும் நிலையைக் கண்டு, நேமியோரும்-(ஆணைச்சக்கரத்தையுடைய) அரசரும்-கண்ணீர் சிந்தினர் *[புற.270:3]*.

**நேமியோன்-ஆழிப்படையையுடைய திருமால்.** குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன் என்ற சோழனும், பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும்

ஒருங்கிருந்த பொழுது, நீவிர், பால் போலும் நிறத்தையுடைய பனைக்கொடியை உடையோனும், நீலநிறம் போலும் திருமேனி பொருந்திய நேமியோனும்-ஆழிப்படையையுடைய திருமாலும்-என்று சொல்லப்படும், இரண்டு பெரிய தெய்வங்களும், ஒருங்கு நின்றாற் போல, இருக்கின்ற காட்சியை விட, வேறு சிறந்த காட்சி உளதோ, என்று, புலவர் காரிக்கண்ணனார் பாடினார் *[புற.58:15]*.

**நேர்-1. செவ்வை (நேர்மை).** நன்னனிடம் செல்லும் கூத்தனை, நேரினைத்-செவ்வையைத்-தன்னிடத்தே கொண்ட நெடிய, மலையின், தெய்வம் விரும்பின பக்க மலையிலே உள்ள, தேனடையைக் காணினும், காணாதது போல் செல்லுங்கள்', என்று, கூத்தன் ஆற்றுப்படுத்தினான் *[மலை.238]*.

**2. அழகு.** 'நெடுந்தெரு' என்னும் ஊர் போன்ற நேர்-அழகு-பொருந்திய நெடிய வழியில், தலைவனின் வயவர் தங்கிச் செல்வர் *[நற்.161:5]*.

**3. ஒப்பு.** பரத்தமைத் தலைவனிடம், தலைவி, என்னையும் பரத்தையரோடு நேர்-ஒப்பு-ஆகிவிடும்படி செய்தநும்முடன் ஊடிக் கிடப்பதல்லது அப்பரத்தையரை நோவேமோ', என்றாள் *[கலி.68:7]*.

**நேர்கோல்-துலாக்கோல்.** நேர்கோல்-துலாக்கோல்-போலத் தலைவன் அறத்தையே விரும்பின நெஞ்சத்தையுடையவன், என்று, தலைவி, தலைவனைப் பாராட்டினாள் *[கலி.42:14]*.

**நேர்பவள்-ஒத்தவள்.** தலைவி, தலைவனிடம், 'மறுபிறவியிலும், நீயே, என் கணவன்; நின்னுடைய மனத்திற்கு நேர்பவள்-ஒத்தவள்-(ஒத்த காதலி)-யானே ஆவேனாக' என்று கூறினாள் *[குறு.49:5]*.

**நேர்வாய்க் கட்டளை-பலகணி.** மதுரையிலுள்ளார், கூதிர்ப்பருவத்தில், நேர்வாய்க்கட்டளையில்-பலகணியில்-நின்று உலவமாட்டார் *[நெடு.62]*.

**நேராதார்-பகைவர்.** மதுரை மாநகரம், வையையாற்றினது நீர் சூழ்ந்து மதிலைப் பொரும் பகையின்றி, நேராதார்-பகைவர்-போரால் வளைத்தலைச் சிறிதும் அறியாத புரிசையை உடையது *[கலி.67:4]*.

**நேரார்-பகைவர்.** மாவளத்தான் என்பவன், நேராரை-பகைவரை-வென்ற, மாறுபாட்டான் மிக்க, செல்வத்தையுடைய, தேர்வண் கிள்ளிக்குத் (நலங்கிள்ளி) தம்பியாவான் *[புற.43:9]*. போரில் அதியமான எழினி இறந்த பொழுது, கூற்றுவனை நொந்து, அறமில்லாத கூற்றமே, நீ பேரிழப்பினைப் பெற்றனை; உழவன் விதையை உண்டதைப்போல, நீ இவனைக் கொன்றனை; இவன் ஒருவனுடைய உயிரைக் கொல்லாமலிருந்தால், நேரருடைய பல உயிரையும் பருக உனக்கு அளிப்பன்', என, அரிசில் கிழார் பாடினார் *[புற.230:15]*. நேராருடைய அரணை வெல்லுதற்குத் தன்னை முன்னால் செல்கென வேந்தன் செலுத்தவில்லையே, என, மறவன் ஒருவன், ஆற்றாமையால் கூறினான் *[புற.298:4]*. மலையமான் திருமுடிக்காரி, வல்வில் ஓரியைக் கொன்று, அவனுடைய பெரிய தெருவிலே சென்ற பொழுது, அக்காரியின் நேரார்ாகிய ஓரியைச் சேர்ந்த யாவரும், கல்லென்று பேரொலி எழுப்பினர் *[நற்.320:6]*.

பருவம் வந்தும் வாராத தலைவனுக்காக வருந்தும் தலைவியிடம், தோழி, 'நம் தலைவர் தம்மால் வென்றடக்கப்பட்ட நேராருடைய நாட்டின்கண், உருவாகின்ற அணிகலன்களை ஈட்டிக் கொணர்ந்து, நமக்கு வழங்கவே காலம் நீட்டிக்கின்றார்', என்று, ஆற்றுவித்தாள் *[ஐங்.463:3]*. செந்நிறக் காளையொன்று, தன்மேல் பாய்ந்த ஆயனைக் கொன்று, கொம்பிடத்தே எடுத்து, அவ்வாயனின் குடரைக் குலைக்கின்ற தோற்றம் (துரோபதையினுடைய) துய்ய கூந்தலிலே கையை நீட்டியவனுடைய (துச்சாதனனுடைய) நெஞ்சைப் பிளந்து, நேராரின் நடுவே, தான் சொன்ன வஞ்சினத்தை நிறைவு செய்தானை (வீமசேனனைப்) போன்றிருந்தது *[கலி.101:19]*.

**நேரிப்பொருநன்-நேரிமலைக்குரிய அரசன்.** செல்வக் கடுங்கோ வாழியாதன், காந்தள் பூவில் தாதுண்ட தும்பி, பறத்தலை இழக்கும், தெய்வத்தன்மை வாய்ந்ததும், பெருமையமைந்துமாகிய, கற்களால் உயர்ந்த நேரிப் பொருநன்-நேரிமலைக்குரிய அரசன்-ஆவான் *[பதி.67:22]*.

**நேரியோன்-நேரிமலையிடத்துள்ளான்.** களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல், அருவி நீர், வீழ்தலால் ஒலிக்கின்ற மலையாகிய நேரியோன்-நேரிமலையிடத்துள்ளான்-ஆகவே, விறலியே, அவனிடம் சென்றாயானால், யானைகளைப் பரிசிலாகப் பெறலாம், என்று, புலவர் கூறினார் *[பதி.40:20]*.

**நேரிழாய்-ஒத்த இழையினையுடையாய் (விளி).** நேரிழாய்-ஒத்த இழையினையுடையாய்-காரியின் கதன் அஞ்சாது பாய்ந்த பொதுவனுக்கே கொடை நேர்ந்தார், எமர்' என்று, தோழி, தலைவிக்குக் கூறினாள் *[கலி.104:73]*. தலைவன், தோழியை நேரிழாய் என விளித்து, யார் பிரிய, யார்வர, யார் வினவ, யாரது செப்பு உண்டாகின்றது', என்றான் *[பரி.8:73]*.

## நை

**நைவளம்-நட்டபாடை (என்னும் பண்.)** சிறிய யாழினை இடப்பக்கத்தே தழுவிய, சீறியாழ்ப்பாணன், நைவளம்-நட்டபாடை (என்னும் பண்)-முற்றுப் பெற்ற. இனிமை தெரிகின்ற, பாலை யாழினை வாசிக்கும் முறைமையறிந்து வாசிப்பான் *[சிறு.36]*. நைவளம் முற்றுப் பெற்ற பாலை யாழை

வாசிக்க வல்லவன், தன் கையாலே வாசித்த நரம்பின் இனிய ஒலிபோல, வண்டுக்கூட்டம், இம்மென்னும் ஓசைபட ஒலிக்கும் *[குறி.146]*.

பரத்தமைத் தலைவனுக்காகத், தூதுவந்த பாணனிடம், தலைவி, 'நின்னுடைய நைவளம் என்னும் பண்ணைத் தருகின்ற, யாழ்நரம்பிற்கு இயைந்த தாளத்தையுடைய பாட்டு, நின்னையல்லது, பரத்தமையான் அல்லன் தலைவன், என்னும் பொருளோடு புணர்தலானே, பொய்ம்மிகுதியை உணர்த்திற்று', என்று, கூறினாள் *[பரி.18:20]*.

## நொ

**நொச்சி-1.** ஒருவகை மரம். நீர் தொலைவறியாத நிலத்தோடு ஒன்றி நிற்கும், கரிய கொத்துக்களையுடைய நொச்சிமரத்தினது, கண்ணுக்கு நிறைந்த அழகிய நிறமுடைய தழை, இள மகளிருடைய தழையுடையாக முன்பு கண்டோம்; இப்போது, மறத்தை விரும்பும் இளையோன் அணிந்திருந்ததனால், அச்சம் தருகின்ற குருதியிற் கலந்து, உருமாறித், துணிபட்டுக் கிடந்த அதன் மாலையை, ஊன் என்று கருதிப் பருந்து கவர்ந்து செல்லவும் கண்டேம்', என, வெறிபாடிய காமக்கண்ணியார் பாடுவர் *[புற.271:2]*. மணிகள் கொத்துக் கொத்தாய் அமர்ந்தாற்போன்ற கரிய கொத்துக்களையுடைய நொச்சியே! பூக்கள் மலர்ந்த பல மரங்களுள் வைத்து அன்பு செய்தற்குரிய மரம் நீயாவாய்; இளமகளிர் தம் அல்குலிடத்தே தழையாகவும் கிடப்பாய்; நகர்ப்புறத்தைக் காக்கும் நெடுந்தகையின், பெருமை பொருந்திய தலையில் அணியப்படும் பெருமையும் நின்னுடையதே, என, மோசிசாத்தனார் பாடுவர் *[புற.272:1]*.

காக்கை, மனையைச் சூழ்ந்த நொச்சியின் நிழலிடத்துக் கிடந்த யாமையின் பார்ப்பைப், பின்பு தின்பதற்குப் பாதுகாத்து வைத்தது *[பொரு.185]*.

மனைப் படப்பையிலுள்ள நொச்சியில், முல்லைக்கொடி படர்ந்துள்ளது *[அக.21:1]*. மனையிடத்துள்ள, முல்லை சூழ்ந்து மலரும் இடமாகிய, குறிய நொச்சியது, கரிய சினையைக் காட்டித், தாம் பொருளீட்டும் காலத்தெல்லை, அம்முல்லை பூக்கும் காலத்தெல்லையே, எனக்கூறித், தலைவர் பிரிந்து சென்றனர் *[அக.23:11]*. கரிய கொத்தினையுடைய நொச்சி, முல்லைப்பூவோடு மலர்ந்தது *[அக.117:1]*. தாய் என் உயிர் கெடுக' எனக்கூறி, மணலில் கிடந்த மகளது பாவையை எடுத்துக், கண்ணையும், நெற்றியையும் தடவி, வளைந்த நிலையினையுடைய நொச்சியின் வரிவரியாகவுள்ள நிழலில் கிடத்தி, முயங்கினளாகி, அழாநிற்பள்' என, மகட்போக்கிய தாயது நிலைமையைக் கண்டார் கூறினர் *[அக.165:10]*. தலைவன் முன்னே ஏகப் பலமலைகளையுடைய அரிய நாட்டினைக் கடந்து சென்ற என் மகளுக்கு, மலையைச் சார்ந்த தனிமை கொண்ட சிறிய ஊரில், விருந்தினர்களை உண்பித்துத், தங்குமிடத்தில் இருக்கச் செய்யத், தளிர்க்கப்பெற்று, அசைந்திடும் நொச்சி சூழ்ந்த மனைக்குரிய பெண்டாக, யான் ஆவேனாக', என, மகட்போக்கிய தாய் கூறினாள் *[அக.203:17]*. என் உள்ளம் விரும்பும் தகுதியையுடையாய்! நிலாவினைக் கொண்ட மாலைப்போது தூதாக வந்தது; நொச்சியின் மெல்லிய கிளைகளிலுள்ள வளைந்த கதிர்கள் வாடிக் கவிழ்ந்தாலும், நின்னை விடவும் மடப்பத்தை உடையளாகி, அன்னை எய்தும் துன்பத்தை உளத்தில் தாங்கி உடன்போக்கினைத் துணிவாயாக; எனத், தோழி தலைவியிடம் கூறினாள் *[அக.259:14]*. என்மகள், அல்குலிடத்தே தழையாகிய அணிக்குக் கொய்யும் குறிய நொச்சியின் கீழதாய, அவளது சிறுவிரலால் இயற்றப்பெற்ற வண்டலையும், நீவிர் கண்டிரோ, எனப் பிறரை மகட்போக்கிய தாய் வினவிளாள் *[அக.275:17]*. ஞாயிறு, கதிர்கள் வெம்மை குறையப்பெற்று, மேற்கு மலையினை அடையும்பொழுதில், மனையைச் சூழ்ந்து வளரும் நொச்சியின்கண், மான்கள் சேர்ந்து தங்கியிருந்தன *[அக.367:4]*.

எம் வீட்டின் அயலதாகிய எழிற்குன்றத்தின்மேலுள்ள, மயிலின் அடியைப் போன்ற இலையையுடைய, கரிய பூங்கொத்தையுடைய, நொச்சியினது, அழகுமிக்க மெல்லிய கொம்புகள் உதிர்த்த, நீலமணி போன்ற மலர்களின் ஓசையைக் கேட்டு, ஊரிலுள்ளோர் துயின்றாலும், யாம் துஞ்சேம், எனத், தோழி கூறினாள் *[குறு.138:3]*.

மயிலின் அடிபோன்ற கரிய கதிராகிய பூந்துணரையுடைய நொச்சி வேலியின்மீது, இல்லின் நடு முற்றத்தில், முளை கொண்டெழுந்த முல்லை, கூரை மேலாலே சென்று படர்ந்து, அவ்விரண்டும் அரும்பவிழ்ந்து மலருமாறு, கார்ப்பருவம் செயலாகியது *[நற்.115:5]*. தலைவி உடன் சென்றுவிட்ட நிலையில், ஓரையாடுகின்ற தோழியர் கூட்டத்தையும், ஆடிடமாகிய நொச்சி (வேலியையும்) காணுந்தோறும் அன்னை அழுதாள் *[நற்.143:3]*. தன் இளமகள் விளையாடிய நீலமணி போன்ற பூவையுடைய நொச்சியையும், திண்ணையையும் நோக்கி நினைந்து, அவள் தலைவனுடன் அருஞ்சுரம் சென்றுவிட்ட நிலையில், தாய் உள்ளம் வருந்தினாள் *[நற்.184:9]*. அரும்பு கட்டிய கதிர்போன்ற ஒள்ளிய பூங்கொத்தினையுடைய நொச்சி மாலையைச் சூடிக் குயவன் ஊரிலுள்ளார்க்குத் திருவிழா நிகழ்ச்சியை அறிவித்தான் *[நற்.200:2]*. மனையகத்துள்ள பெரிய நொச்சி (வேலி)யின் உயர்ந்த மாமரத்தின் கிளையிலிருந்து கரிய குயில் கூவும் *[நற்.246:3]*. ஞெண்டின் கண், நொச்சியின் கரிய அரும்பு போன்றது *[நற்.267:1]*. நீலமணி போலும் பூங்கொத்தினையுடைய நொச்சி மாலையைச் சூடிக் குயவன், பலி உண்ணுதற்கு அணங்குகளையும் காக்கைகளையும் அழைப்பான் *[நற்.293:1]*. மகள் சிற்றில் கோலி விளையாடிய, மயில் போன்ற இலையையும், கரிய பூங்கொத்தையும் உடைய நொச்சி, காவலையுடைய அகன்ற மாளிகையிடத்து எதிரே

காணும்படி தோன்ற மகட்போக்கிய நற்றாய் வருந்தினாள் *[நற்.305:2]*.

இரவுக் குறியேற்றுக் கோடற்கு நின்ற தலைவி, கொத்தினையுடைய நொச்சிப்பூ விழுகின்ற ஓசையைத் தலைவன் செய்த குறியோ என்று கருதினாள் *[கலி.46:12]*.

**2. மதில்** (ஆகுபெயர்). தகடூரை அழித்து அதன் நொச்சியை-மதிலைக்-கைக்கொண்டவன், பெருஞ்சேரல் இரும்பொறை *[பதிப.8:9]*. நொச்சியாகிய வேலியையுடையது உறையூர் *[அக.122:21]*.

**3. திணை.** மதிலை வளைத்தல் உழிஞை. இதன் மறுதலையாகிய மதில்காத்தல் நொச்சி. இதற்கு நொச்சிமலரைச் சூடிப் போர் செய்தல் மரபு. இது மகண் மறுத்தல், செருவிடை வீழ்தல், குதிரை மறம், பாசி, ஊர்ச் செரு முதலிய துறைகளையுடையது. *[புற.109,110,111,271,272,299]*.

**நொச்சி நியமங்கிழார்**-ஒரு புலவர். நொச்சி நியமம் என்ற ஊர்ப்பெயரும், கிழார் என்ற குடிப்பெயரும் சேர்ந்து இதுவே நிலைபெற்றமையால் இவருடைய இயற்பெயர் வழக்கொழிந்தது போலும். இவரூராகிய நொச்சி நியமம் இக்காலத்து நொச்சியம் என்று குறுகி வழங்கப்படுகிறது (உ.வே.சா.- புறம். பாடினோர் வரலாறு). இது திருச்சிராப்பள்ளியிலிருந்து முசிறிக்குச் செல்லும் வழியில் உத்தமர்கோயிலுக்கு அண்மையில் உள்ளது (ஔவை.து. -புறம் 293 முன்னுரை). புறத்தில் ஒன்றும் *[293]*, அகத்தில் ஒன்றும் *[52]*. நற்றிணையில் மூன்றும் *[17,208,209]*. ஆக ஐந்து பாடல்கள் இவருடையன. புறநானூற்றில் பிறர் யாரும் பாடாத பூக்கோட் காஞ்சியை இவர் அருமையாகப் பாடியுள்ளார். யானை மேலோனான வள்ளுவனின் ஏவல் தண்ணுமை, போர்க்குரிய பூக்கோள் குறித்து மறவர்க்கு அறிவிக்குமளவில், அவர்மனைவியரால் விலைக்கு வாங்கப்படாத பூவினை விற்கும் பெண், தன் பூ விலை போகாமையால் பொலிவிழந்து மறவர் மனைகளை யொழிந்த பிறர் மனைகளில் புகுந்து விற்பாளோ என்று அவள் நிலைக்கு இரங்குவதாக மறக்குடி மகளொருத்தியின் கூற்றில் இவர் அப்பாடலை இயற்றியுள்ளார். 'தோழீ, என் கண்ணில் படர்ந்த பசலை தலைவனது மார்பினைக் காரணமாக உடையதென அன்னைக்கு அறிவிப்பேமோ, அறிவியேமோ, என்று, ஐயுற்ற கருத்தினில் தெளிந்தேன்; என் இன்னுயிர் கழிவதாயினும் இதனைக் காமநோய் என வெளிப்படச் செப்பாதே', என்று, தலைவி, தோழிக்குரைக்கும் முறையில் அவளைக் குறிப்பினால் செவிலிக்கு அறத்தொடு நிற்குமாறு வேண்டுவதை இவர் அகப்பாடலில் அமைத்துள்ளார். மலைச்சாரலில் வேங்கைமரத்தின் உயர்ந்த கிளையிலுள்ள பூவைக் கொய்தற்கு, அக்கிளை தாழ்ந்து கொடுக்கும் என்ற கருத்தில், புலி புலியெனக் குறமகளொருத்தி குரலெழுப்பியது கேட்டுச், சீறூர்க் குறவரெல்லாம் சிலையேந்தி வருவதனை இவர் அப்பாடலில் புனைவர். தலைவனைக் காணாது அழுத தன்னை நெருங்கி அன்னை காரணங் கேட்டபோது, அவன் மார்பினால் வந்த வருத்தமென்பதைச் சொல்லத் தொடங்கிச், சொல்லாது தப்பித்ததைச், சிறைப்புறத்தானாகும் தலைவன் கேட்குமாறு, தலைவி, முன்னிலைப் புறமொழியாய்த், தோழியிடம் கூறுவதை நற்றிணைப் பாடலொன்றில் *[17]* இவர் நயமுற அமைத்துள்ளார். பிரியும் தலைவனது அன்பினை மொழிந்து, தோழி, தலைவியைத் தேற்றுவதனையும் *[நற்.208]*. குறை மறுக்கப்பட்ட தலைமகன் ஆற்றானாய்த் தலைமகளை இன்றித் தன்னுயிர் நிலையாமையைக் கூறி நோவதனையும் *[நற்.209]*. இவர் பாடியுள்ளார்.

**நொசிப்பு - சமாதி.** இந்திரனுக்குக் கொடுத்த வரத்தின்படிச் சேதித்தலாற் கழிந்த, சேயாக்கையாதற்குரிய கருவை, இஃது அமரர் சேனைக்குத் தலைவனாம், என, முனிவர்கள் நொசிப்பின்-சமாதியான்-உணர்ந்தனர் *[பரி.5:37]*.

**நொசிவு** - வளைவு (துவளுதல்).நொசிவு-வளைவு-உடைய வில்லினோடு, நொசியா நெஞ்சினோடு சிறந்த, வயவர் செறிந்த களத்திற் சேர்ந்தனர் *[பதி.45:3]*.

**நொடி - 1** ஒலி. மூங்கிலின் கணுக்கள் வெடித்தால் எழும் நொடி- ஒலி-கலைமான்களைத் துரத்திற்று *[அக.47:7]*.

பாலை நிலத்தில், கவைத்த முள்ளையுடைய கள்ளியினது காய், வெடிக்கும் பொழுது விடும் நொடி புறாக்களை இரிந்தோடச் செய்யும் *[குறு.174:2]*.

**2. சொல்.** மடந்தை தன் காதலனாகிய குறமகனோடு நொடி-சொல்-பயிற்றுகின்ற-நல்ல துணையுடையளாயிராநின்றாள் *[நற்.341:5]*.

**3. மாத்திரை.** நொடி-மாத்திரையைச்-சொல்லும் தாளத்தையுடையது ஒரு கண் மாக்கிணை *[மலை.11]*.

**நொடை** - விலை. நொடைப்-விலைப்-பொருட்டாகிய நறவினையுடையது பெரிய வண்மையையுடைய தித்தன் உறந்தை *[புற.352:8]*.

ஆமானின் ஊனையும், யானையின் வெள்ளிய கோட்டையும் கள்ளுக்கு நொடையாகக் கொடுத்தனர் *[பதி.30:12]*.

விடியற் காலையில் பகைவர் ஆக்களை அடித்துக் கொண்டு போந்து அவற்றைக் கள்ளுக்கு நொடையாகக் கொடுத்தனர் *[பெரு.141]*. வளைகள் ஆரவாரமொழிந்து அடங்கிக் கிடக்கச் சட்டக்காலை வாங்கிப், பண்டங்களுக்கு நொடை கூறும் நெடியக் கடையை அடைத்து, மகளிர் துயின்றனர் *[மது.622]*. கள்ளை விற்போர் களிப்பினையுடைய கள்ளிற்கு நொடை கூறினர் *[மது.662]*. பட்டினத்தில், கள்ளுண்பார் பலரும் செல்லும் மனைகளில் நறவின் நொடைக்குக் கட்டின கொடியோடு, பிறகொடிகளும் நெருக்கமுற்றிருந்தன *[பட்.180]*.

உப்புக்கு நொடையாகக் நெல் பெற்றனர் *[அக.60:4]*. நறவுக்கு நொடையாகக் நெல் கொண்டனர் *[அக.61:10]*. நறவுக்கு நொடை கொள்ளும் நல்ல இல்லின் வாயிலில் கல்லா இளையர் யானைக் கன்றினைப் பிணித்தனர் *[அக.83:8]*. மீன்களைப் பிடிப்போர் அவற்றுடன் சேரக்கொண்ட சிப்பிகளைக் கள்ளின் நொடையாகச் சேர்த்தனர் *[அக.296:9]*.

இடையன், பால் நொடை கூறிச் செல்லுவன் *[நற்.142:4]*. உப்பு வாணிகர் உப்பின் நொடைக்குக் கொண்ட நெல்லினைக் குற்றி உண்பர். *[நற்.254:6]*.

**நொடைமை-விலை.** மறவர் யானையினது வெண்கோட்டைக் கள்ளிற்கு நொடைமையாகக்-விலையாகக்-கொடுத்து உண்டனர் *[பதி.68:11]*.

**நொதுமல்-அயன்மை.** வண்டுபடியும் கூந்தலையுடையவளே! நெடுவழிச் சென்று எம்மை நினைத்தும் அறிந்தீரோ', என்று, நின் பவளம் போன்ற வாயின் நகை அழிய, நோயைத் தோற்றுவித்து, நொதுமல்-அயன்மை-மொழியாதே! எனப், பொருள் முற்றிய தலைமகன், தலைமகளைக் கண்டு கூறினான் *[அக.39:4]*. நீர் கூடிய களவொழுக்கத்தினை அறியாத எமர், முறைப்படி வதுவை நிகழ்த்திட, அதனைக் கண்ணார நோக்கி யாம் நொதுமல் (விருந்தினம்) போலத் தலைவியின் புதிய நாணாலாகிய ஒடுக்கத்தினையும் காண்பேம், எனக் கூறித், தோழி வரைவு கடாவினாள் *[அக.112:18]*.

தலைவர் சென்ற நெறி, பாறை மீதேறிச் கொடிய வில்லையுடைய எயினர் அம்புகளைத் தீட்டுதற்கிடமாகிய கவர்த்த வழிகளையுடையது என்பர். இவ்வூரார், அதற்காகத் துன்பம் கொள்ளாது நொதுமல் (அயன்மை) உடைய சொற்களைக் கழறுவர், எனத், தலைவி கூறினாள் *[குறு.12:4]*. பழைய நீரைப், புதிய நீரைக் கொள்ளும் பொருட்டுச் சொரிகின்ற நொதுமல் வானத்து ஒலிக்கின்ற ஓசையைக் கேட்டு, மயில், பருவமழை பெய்ததென்று தவறாக எண்ணி ஆடின *[குறு.251:7]*.

நொதுமலிடத்தே எழுந்த பழிச்சொல்லைக் கருதிப் புலவி உட்கொள்ளாதே', எனத், தலைமகட்குத், தோழி கூறினாள் *[நற்.11:3]*. குருகே, மாலைப்பொழுது எனக்குப் பெரிய வருத்தஞ் செய்தது. அதனை நீ அறியின், என்மாட்டுப் பெரிதும் அன்புடையையாதலால், நொதுமல் நெஞ்சம் கொள்ளாது, கிழவோற்கு உரைப்பாயாக, எனத், தலைவி, காமம் மிக்க கழிபடர் கிளவியால் கூறினாள். *[நற்.54:7]*.

**நொதுமலர்-ஏதிலர்.** பெருமானே! தலைவி மிகவும் அழுது வருந்துகின்றாளாதலின், அதனை எண்ணாது, நொதுமலர்-ஏதிலர்-போலப் பிரியின், விரைந்து இவள் வேறு தீங்கு அடையினும் அடைவள் என்றஞ்சுகின்றேன், எனப், பகற்குறி வந்து நீங்கும் தலைமகற்குத், தோழி கூறினாள் *[அக.300:11]*.

தோழி! மீனுக்குரிய வலையின்கண் விலங்கு அகப்பட்டாற் போல, நொதுமலரிடத்து வரைவுக்குரிய முயற்சி என்ன பயனையுடைத்து' என, அயலார் வரைவு கண்டு கவன்ற தோழிக்குத், தலைவி கூறினாள் *[குறு.171:4]*. கடலினிடத்து நீர்விளையாட்டுப் புரிந்தும், கடற்கரைச் சோலையினிடத்துத் தங்கியும், மகளிர் கூட்டத்தோடு குரவை ஆடியும் நொதுமலர் போல விரைவாக வந்து தலைவன் தழுவிச் செல்லுதலின் அலருண்டாயிற்று; அஃது இப்பொழுது கழிந்தது', எனத், தலைமகன் பகற்குறிக்கண் வந்தவிடத்துத், தோழி செறிப்பறிவுறுத்தினாள் *[குறு.294:3]*.

நல்ல பெருந்தோளை உடையாய்! நீ கிளி கடிதற்கு எழாதிருப்பினும் நின் அழகிய நலமெல்லாம் கெடும்படியாக நொதுமலர் இருக்கும் இடத்தே அழாதிருத்தலையேனும் செய்வாயாக', எனத், தோழி, தலைவிக்குக் கூறினாள் *[நற்.13:2]*.

'ஆராய்ந்திட்ட தொடியினையுடையாய், இவன் மனத்தில் உண்டாகிய நோய் யாதென்று கேட்கும் நோய் இவட்கில்லை' என்று, யான் நின்னைக் கூற, அது கேட்டு, நொதுமலர் நின்னைப் பழிக்குமளவில், சிறிய குழுமகனைப் பேணி வளர்த்து, அவனுக்கு வேறொருத்தியின் பெண்மகளைக் கோடற்குச், சிறுசோற்றைச் சமைத்து மேற்கொண்ட நோன்பின் பயன் நினக்கு வந்து பொருந்துமோ' எனத், தலைவன். தலைவியிடம் கூறினான் *[கலி.59:19]*.

**நொதுமலாட்டி-ஏதிலாட்டி.** பாதிரியின் மலர்களை வண்டுபட ஏந்தித் தெருவுதொறும் விலை கூறிச் செல்லா நின்ற நொதுமலாட்டி-ஏதிலாட்டி-ஆகிய பூவிலை மடந்தையை நோக்குந்தோறும் என்னெஞ்சு நோவாநின்றது', எனப், பருவம் கண்டாற்றாளாகிய தலைவி கூறினாள் *[நற்.118:11]*.

**நொதுமலாளர்-அயலார்.** நீ நொதுமலாளர்-அயலார் (ஈண்டு குறளை கூறுவார்)-தம் உறுதியில்லாத மொழியை உட்கொள்ளாது, ஏரைப் பாதுகாப்பாரது குடியைப் பாதுகாத்து, அக்காவலாலே ஏனைக் குடிகளையும் பாதுகாப்பாயாயின், நின்பகைவர் நின் அடியைப் போற்றுவர்', எனக் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனிடம் வெள்ளைக்குடி நாகனார் கூறினார் *[புற.35:31]*.

யாறே, அறத்தினைக் கைவிட்டு நீங்குதல், குன்று பொருந்திய நாட்டினையுடைய நின் தலைவனுக்கு யாதெனப்படுமோ? உரைப்பாயாக, என்று கூறி, நின்னோடு யாம் வெறுத்தலை அஞ்சி, அவர் மலையிலுள்ள பல மலர்களையும் போர்த்துக் கொண்டு, நாணத்தால் மிகவும் ஒடுங்கி, மறைந்து நீங்கும் நின்னைத் தந்து செலுத்தி, நொதுமலாளராகிய அவர் நீதியின்றிக் கை விடுதற்கு வன்மையுடையோராவர்' எனக், காமமிக்க கழிபடர் கிளவியால், தலைமகள் கூறினாள் *[அக.398:16]*.

நொதுமலாளர் (பிறர்) நெய்தல் தழைகளைக் கொள்ளார் எனத், தோழி கையுறை மறுத்துக் கூறினாள் *[ஐங்.187:1]*.

**நொதுமலாளன்-அயலான்.** தந்தையினது அரிய காவலைக் கடந்து சுரநெறியில் செல்லுதற்கு நொதுமலாளனது-அயலானது (தலைவன்) - நெஞ்சு தனக்கேயுரித்தாகப் பெற்ற, எனது சிறிய மூதறிவுடைய மகளது சிலம்பு பொருந்திய சிறிய அடிகள், வல்லுநவோ? என, மகட்போக்கிய செவிலித்தாய் கூறினாள் *[அக.17:8]*.

'தலைவி, நின்னை அஞ்சி விழாக்களத்து அவன் துணங்கையாடுதலை யாங்கள் கையகப்படுப்பேமாகிச் செல்லாநிற்கையில், நொதுமலாளனாகிய அவன் வேறொரு வழியே வந்து எதிர்ப்பட்டான்', எனத், தோழி பாணர்க்கு வாயில் மறுத்தாள் *[நற்.50:5]*. 'நண்பனே, நீ எமக்கு யாராம் தன்மையையுடையை; நொதுமலாளனாயினை என்று, தோழி வேற்றுவரைவு சுட்டித், தலைவனை வரைவு கடாவினள் *[நற்.395:2]*.

**நொவ்வல்-துன்பம்.** வெறியாடுங் களத்துக் கூடிய மயக்கம் பொருந்திய பெண்டிர்க்கு நொவ்வல்-துன்பம்-உண்டாக, வேலன் ஆடிய பின்னும், எம் வாடிய மேனி பண்டையிற் சிறவாதாயின், இக்களவொழுக்கம் அலராகாதிருத்தல் அரிது, எனத், தோழி, தலைமகன் சிறைப்புறத்தானாகத், தலைமகட்குக் கூறுவது போன்று கூறினாள் *[அக.98:22]*.

**நொவ்வு-விரைவு.** மயில் தோகையை வில்லில் வைத்துக் கட்டி, வில்லின் நாணின் விளிம்பிற்குப் பொருந்திய நொவ்வுத்-விரைவுத்-தன்மையுடைய, செலவு பொருந்திய அம்புகளையுடையர், வடுகர் *[அக.281:6]*. நொவ்வு இயல் பகழி பாயப்,புண்,மிக்குத் துன்புடன் வந்தது களிறு *[அக.388:11]*.

**நொள்ளை-(சிறு) நத்தை.** வாகை மரத்தினை, உள்ளிருக்கும் ஊன் வாடப்பெற்ற கரிந்த மூக்கினையுடைய நொள்ளை-(சிறு) நத்தைகள்-பொரியரையுடையது போலாக, மூடிக் கொண்டிருந்தன *[அக.53:8]*.

## நோ

**நோ-1.** துன்பம். பிரிவின்கண் தலைவி, தோழியிடம், 'இக்கூதிர்க் காலமென்னும் கூற்றமானது, தலைவரைப் பிரிந்திருக்கும் நான் நோ-துன்பம்-அடையும் படியாகவும், என்னைக் கொல்லுதல் குறித்தும் வருகின்றது' என்று கூறினாள் *[குறு.197:1]*. தலைவன் சிறைப்புறத்தானாக, வெறியாட்டெடுக்கக் கருதிய தாயைக் குறித்துத், தோழி, தலைவியிடம், 'தலைவனுடன் கூடிய நமது களவொழுக்கத்தை யறியாமல், தாய், இவள் பேயால் கொள்ளப்பட்டாள், என்று கருதி, வெறியாட்டெடுத்தல் நோதக்கதாகும்', என்று, கூறினாள் *[குறு.263:6]*.

**2. நோவு** (காமநோய்). பகைமேற் சென்ற தலைவனின் பிரிவின்கண், தலைவி, தோழியிடம், 'பிரிந்தார்க்கு நோ-நோவு-உண்டாக இளவேனிற் பருவம் வந்துற்றது' என்று கூறினாள் *[கலி.26:8]*.

**3. வெறுத்தல்.** ஒரு தலைவியின்பால் காதல் கொண்டு வருந்திய தலைவனிடம், பாங்கன், 'காமம், இது நன்மையென உணரும் அறிவில்லாரிடத்தும் சென்று தங்குகின்ற பெரிய அறிவின்மையையுடையது, ஆதலின், அது நோ-வெறுத்தல்-தக்கது', என்று கூறினான் *[குறு.78:4]*.

**நோக்கம்-1.** பார்வை. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் துணங்கை மகளிரொடு விளையாடிச் செறிந்து வருதலைக் கண்ட அவனுடைய மனைவி, ஊடி, அவன் மேல் எறிவதற்காக ஓச்சிய சிறிய செங்குவளை மலரை, அவன் இரப்பவும், அவள் சினம் ஆறாது, நீ யாரோ, என்று கூறி, அப்பூவினைத் தாராது மறுத்தபொழுதும், அவன் கதுமென வெகுண்ட நோக்கத்தை-பார்வையை-உடையவன் அல்லனாய் மென்மையனாகவே விளங்கினான் *[பதி.52:25]*. மணமகளிர் பார்த்துத் தம் வாழ்நாளைக் குறையறவறிவதற்குக் காரணமான ஒளி நோக்கமுடைய அருந்ததி போன்ற கற்புடையவள் சேரமாதேவி *[பதி.89:18]*.

சோழன் கரிகாற்பெருவளத்தான் தன் வாயிலில் பொருநனைக் கண்டவுடனே முன்பே பழகிய நண்பனைப்போல, அருகழைத்து, முகமன் கூறி, அப்பொருநனைக் கண்ணாற் பருகும் இனிய நோக்கத்தாலே அப்பொருநனின் என்பு நெகிழ்ந்து குளிரும்படி செய்வான் *[பொரு.77]*. சோழன் கரிகாற் பெருவளத்தானிடம் தங்கியிருந்த பொருநன், யாங்கள் எங்கள் ஊருக்குச் செல்வேம் என்று கூறியவுடனே, எம்மைவிட்டுப் பிரிகின்றீரோ, என்று, வெகுண்டவனைப் போன்ற நோக்கத்தோடு, யானைகளையும், பொன் முதலியவற்றையும், அவர்கட்கு வேண்டுவன நல்கி விடுத்தான் *[பொரு.124]*. கண்ணபெருமான், அசுரனாகிய கன்றினை வீசி, விளங்காயை உதிர்த்துக் குன்றினைக் குடையாகப் பிடித்து நின்ற நிலையை, ஆயர் மகளிர், தம் கண்களால் நோக்கும் நோக்கத்தை இனி எப்பொழுது பெறுவார்களோ *[முல்.வெ.1:2]*. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், பகைவர் நாடுகளையழித்துச், சான்றோரிருந்த அம்பலங்களிலே, கவையடியினையும், கடிய நோக்கத்தினையுமுடைய பேயாகிய மகளிர் உலாவி வரும்படி செய்தான் *[மது.162]*. ஆற்றுந்தன்மைத்தல்லாத நோயினையுடைய தலைவி மான் நோக்கமமர்ந்த நோக்கமின்றி, மைனோக்கங் கொண்டு வினையொழிந்து அயர்ந்து மெலிந்தாள் *[குறி.25]*.

பொருள்மேற் பிரிந்த தலைவன், தன் காதலியினுடைய வளைந்த குழையோடு மாறுபட்ட நோக்கமானது, இடைச்சுரத்தில் தன் செலவினைத் தடுத்ததாகக் கூறினான் *[அக.3:17]*. பொருள்வயின் பிரியக் கருதிய தலைவன், தன்

தலைவியின் கண்ணின் பாவையை மறைத்து நிற்கும் நடுக்கத்தைச் செய்யும் நீரையுடைய நோக்கத்தைக் கண்டு செலவழுங்கினான் *[அக.5:21]*. தலைவன், இடைச்சுரத்தில் தன் நெஞ்சிற்குக் கூறுவானாய், நெஞ்சே, 'இவ்வளவு தொலை வந்த பிறகு, மலர் தன் பெருமை இழத்தற்குக் காரணமான காதலியின் கண்ணினுடைய மயங்கிய நோக்கத்தினை நினைத்து, நீ என்னை விட்டுப் பிரியக் கருதின் பிறர் சிரிக்கத்தக்க இகழ்ச்சியை அடைவாய்' என்று கூறினான் *[அக.33:10]*. பொருள்வயின் பிரிந்த தலைவன், பெரிய காட்டில், இரவில், தான் பிரியுங்காலத்தில், தலைவி தாழ்ந்த நோக்கத்தளாய், நிலத்தைக் காலால் கீறும் வருத்தமுடையளாய் நின்ற நிலையினைக் கனவில் கண்டான் *[அக.39:17]*. பிரிவிடை வருந்திய தலைவியிடம், தோழி, 'முல்லை நிலத்தில், அழகிய இளைய பெண் மானின் மருட்சியுற்ற நோக்கத்தினைத் தலைவர் காணுந்தொறும் நின்னை நினைந்து விரைவில் வருவர்' என்று கூறினாள் *[அக.74:107]*. தோழி, செவிலித்தாய்க்கு அறத்தோடு நிற்கும்பொழுது, 'தலைவி ஆயத்தோடு, கடற்கரைச் சோலையில், சிறு வீடு கட்டியும், சிறு சோறு அட்டும் வருந்திய வருத்தம் தீர இளைப்பாறும்போது, ஒரு தலைவன், தலைவியைக் குறித்து நோக்கிய நோக்கத்தோடு அணுகவந்து, நல்ல நெற்றியையுடையாளே, யான் செல்லுகிறேன் என்று கூறவும் தலைவி நெஞ்சம் அழிந்திட்டாள்' என்று கூறினாள் *[அக.110:21]*. பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குத், தலைவன் கூறுவானாய், 'நெஞ்சே, நம் காதலியின் அறிவு கலங்கிய நோக்கத்தினையும், புலவியினையும் நினைந்து நாம் செலவினைத் தவிர்த்து விடுவோமோ (மாட்டோம்)' என்று கூறினான் *[அக.225:17]*. உடன் போக்கில் தலைவன், தலைவியிடம், நின்னுடைய அழகு மாண்புற்ற, முதுகினை,யாம் காணும்பொருட்டுச் சிறிதளவு முன்னே செல்க எனக் கூற, அதற்குத் தலைவி, நாணி, மானை ஒத்த நோக்கத்தோடு தலைகுனிந்து நின்றாள் *[அக.261:9]*. பிரிந்திருந்த தலைவன் வந்தவுடன், தலைவியின் கரிய அழகிய இணையொத்த மலர்களைப் போன்ற மையுண்ட கண்களின் பெண் மானையொத்த நோக்கம் மிக்க அழகினையுற்றது *[அக.363:19]*. பிரிந்திருக்கின்ற தலைவி, தோழியிடம், 'தலைவரைப் பிரிந்த தனிமைத் துன்பமும், மாலைப் பொழுதும், மாறுபட்ட அன்னையின் பொருந்தாத நோக்கமும் என்னைத் துன்புறுத்துகின்றன என்றாலும், தலைவரின் மலையினைப்பார்த்தே ஆறுதலடைகிறேன்' என்று கூறினாள் *[அக.378:12]*.

மடலேற எண்ணும் தலைவனைப் பற்றித், தலைவியிடம், தோழி, 'நம்முடைய தெருவில் மெல்ல வந்து இனியவற்றைக்கூறித் தன் எண்ணம் கைகூடாமையாமல் ஒளியிழந்து துன்பத்தைப் புலப்படுத்தும் அவனது நோக்கத்தைக் காண்பாயாக' என்று கூறினாள் *[குறு.298:4]*.

பொருள் வயின் பிரியக்கருதிய தலைவன், தன் நெஞ்சிற்குக் கூறுவானாய், 'நெஞ்சே, தலைவியின் செவ்வரிபரந்த குளிர்ச்சியையுடைய கண்கள், பொருந்தி, இனிதாக நோக்கும் நோக்கத்தால் பிணிப்புண்டேன் ஆகலின், இந்நிலவுலகத்தை மரக்காலாகக் கொண்டு, ஏழு மரக்கால் அளவு அளக்கும் செல்வத்தைப் பெற்றாலும், நான் தலைவியைப் பிரியேன்' என்று கூறினான் *[நற்.16:10]*. ஆயத்துடன் சுனையில் நீராடிச்சிவந்த, தலைவியின் கண்களின், குறிக்கப்படாத நோக்கமானது தலைவனைப் பிணித்தன *[நற்.44:3]*. தலைவனைத் தலைவியிடமிருந்து சேட்படுக்கும் தோழியிடம், தலைவன், இளமகளே! வாழி, சிவந்த அம்பைப் போலச், செவ்வரி பரந்த குளிர்ந்த தலைவியின் கண்களுடைய நோக்கத்தால் வருந்திய எனது நெஞ்சம் உய்யும் வண்ணம் நகையாடாது உதவுக' என்றான் *[நற்.75:9]*. ஒரு தலைவியின்பால் காதல் கொண்ட தலைவனொருவன், தோழியிடம், 'மீன் பிடிக்கின்ற பரதவர்தம் இளமகளின் மான் போலும், ஒன்றொடொன்று மாறுபட்ட நோக்கத்தைக் காணுவதற்கு முன்பு, எனக்கு இத்துறையும், இப்பாக்கமும் இனிதாயிருந்தன' என்றான் *[நற்.101:9]*. உடன் போக்குச் சென்றுவிட்ட தலைவியைக் குறித்து, 'மானின் பொருந்திய பார்வை போன்ற மையலைச் செய்யும் நோக்கத்தையுடைய என் இளமகள் சுரங் கடந்து சென்றனளே' என நற்றாய் கூறினாள் *[நற்.179:4]*. தலைவன் சிறைப்புறத்தானாகப், புணர்ச்சியால் புத்தழகு உற்ற தலைவியிடம், தோழி, 'நீ, மகிழா நோக்கம், கொண்டு கட்குடியால் மயங்கினாற்போல் ஆயினை; ஆதலின் தாய் ஐயுறுவள்' என்று கூறினாள் *[நற்.297:4]*. பிரியும் தலைவனிடம், தலைவி, நீயின்றி யான் ஈண்டுப் பொருந்தியிருப்பேனாயின், இங்கு இனிமையைத் தராத நோக்கத்தோடு எனக்கு என்ன பிழைப்புண்டு? (யாதுமில்லை) என்று கூறினாள் *[நற்.400:6]*.

அகத்தில் அன்புடைமையால் தோன்றிய தலைவனின் அருள் நோக்கம், இடையே, அற்றுப்போன நிலையில்லாமல், வேண்டுமென்றே விளையாட்டுக்காகச் சிறிது தலைவனின் நோக்கம் அழியினும் தலைவி வருந்தி நெஞ்சு அழிவாள் *[கலி.10:18,19]*.

வள்ளியின் காரணமாக, முருகவேளின் மீது ஊடிய தேவசேனை, நீ தவறுடையை அல்லை; நின்னியல்பு அறியாமல் நின்னுடைய மயலிற்பட்ட மகளிரே தவறுடையர் ஆவர்; நான் நினது நலத்தை நுகரமாட்டேன் என்று வெகுண்ட நோக்கத்தால் முருகனைச்சுட்டிக் கூறவும், முருகவேள் அவளுடைய பாதங்களில் வணங்கினான் *[பரி.9:35]*. தேவசேனையின் தோழியர், தமது பேதைமையை யுடைய மெல்லிய நோக்கம் சினத்தாலே மாறுபட்ட, வள்ளியின் தோழியரோடு சண்டையிட்டனர் *[பரி.9:48]*. ஓர் ஆடவனை ஒரு பெண் அமிழ்தத்தையொத்த இனிய நோக்கத்தாலே கூர்ந்து பார்த்தாள் *[பரி.12:57]*. வையையின் நீராடலில் ஊடிய தலைவியொருத்தி, தலைவன் மார்பின் மீது அரக்கு வட்டினை

எறிய, அவ்வரக்கு நீர் அவளுடைய அழகிய கண் நோக்கமாகிய எறிகின்ற வேல்பட்ட புண்ணினின்றும் குருதி சொரிவது போன்று சொரிந்தது *[பரி.12:69]*. முருகவேளின் திருப்பரங்குன்றின்கண் கூத்தாடுகின்ற விறலியினது அழகு காரணமாக, ஒரு தலைவி, தன் காதலனை, விளங்குகின்ற நுனையினையுடைய வேல் போலச் சிவந்த நோக்கத்தோடே பார்த்து ஊடினாள் *[பரி.21:21]*.

**2. அறிவு.** நன்னன் சேய் நன்னன் தன்னைப் புகழும் சூதர் முதலியோருக்குத் தான் வெற்றி கொண்ட பகைவரின் அரசை முற்றுங்கொடுப்பினும் அமைதி பிறவாத நோக்கமொடு-அறிவுடனே-மழைபொழியும் பருவம் தவறாத முகில் பின்னரும் சொரியுமாறுபோல, மாறாமல் சொரிவான் *[மலை.74]*.

பொருள்வயிற் பிரிவு உணர்த்திய தலைவனிடம், தோழி, பொருளல்லது நன்கு மதிக்கும் பொருள் வேறு இல்லை என்று மயக்கங்கொண்ட அறியாமையையுடைய நின் நோக்கம் மயங்கியதால், நீ, தலைவியின்பால் கொண்ட அன்பை மறந்தாயோ' என்று கூறினாள் *[கலி.14:11]*.

**3. அழகு.** பிரிவுணர்த்திய தலைவனிடம், தோழி, 'நான் தலைவியிடம் நினது பிரிவை உணர்த்தினால் கண்டார் மருளும் அவளுடைய நோக்கம்-அழகு-கெட்டு மிகவும் மயக்கமடைந்து இறந்துபடுவாளோ? என்று கூறினாள் *[கலி.10:17]*.

**4. கண்.** முருகவேளின் திருப்பரங்குன்றத்தின்கண் ஒரு பெண் ஆடை, அணிகளால் மின்னற்கொடி போல் விளங்கிக், கள்ளினை யுண்டு, களிப்புமிக்குப், பசிய தனது ஆடை கட்டவிழ நோக்கம்-கண்-சிவக்கவும், பூங்கொடிபோல அசைந்து ஆடினாள் *[பரி.21:58]*.

**நோக்கலை-பார்வையினையுடையை.** 'நெடுந்தகையே, நீ உனது பகைவரின் உயிரைக் கவருவதில், கூற்றுவன் உயிர்களைக் கவரும் தன் பார்வையாகிய வலையை விரித்தாற் போன்ற, நோக்கலை-பார்வையினையுடையை-என, ஆடுகோட்பாட்டுச்சேரலாதனைப் பாடுவர், காக்கை பாடினியார் நச்செள்ளையார் *[பதி.51:36]*.

**நோக்கியோர்-பார்க்கப் பெற்றோர்.** பழையன் என்பான், பகைவர் மீது செலுத்திய வேல் தப்பாதது போலப், பரத்தையால் நோக்கியோர்-பார்க்கப் பெற்றோர்-ஆகிய ஆடவரும் அவள் கண் தைத்தலிலிருந்து தப்பார்', என்று, தோழி, தலைவனிடம் கூறினாள் *[அக.326:13]*.

**நோக்கினர்-பார்வையையுடையவர்.** தலைமகனொருவன், தன்னைப் பகைத்த நோக்கினரை-பார்வையையுடையவரைக் (பகைவரை)-கொல்லும் காளை போன்றவனாய் விளங்கினான் *[புற.302:8]*.

மதுரையில் பண்ணியம் (பலகாரம்) விற்கும் மகளிர், ஆடவர்க்கு வருத்தத்தைச் செய்த நோக்கினராய் இருந்தனர் *[மது.412]*.

**நோக்கினவர்-பார்வையையுடையவர்.** (பரத்தையர்). 'இளவேனிற் காலம் வந்துவிட்டதே; பிரிந்து சென்ற தலைவர் வரவில்லையே; அவர் எனக்காக வாராமற்போனாலும், மானினது நோக்கம் போலும் நோக்கினவருடன்-பார்வையையுடையவருடன் (பரத்தையருடன்)-கூடி மகிழ்வதற்காவது வரவில்லையே', எனத், தலைவி வருந்தினாள் *[கலி.30:10]*.

**நோக்கினள்-பார்வையையுடையவள்.** பேரறிவுடைய நீ, ஒரு மகள் திறத்து உள்ளமுடைதல் அழகோவென, இடித்துரைத்த பாங்கனிடம், ஆவினைக்காண விரும்பும் கன்றைப்போல, விருப்பத்தை வெளிப்படுத்தும் மெலிந்த நோக்கினளாய்-பார்வையையுடையவளாய்-இருக்கும் தலைவியை எவ்வாறு மறப்பேன்' என்று, தலைவன் கூறினான். *[குறு.132:6]*.

**நோக்கினை-அழகினையுடையை.** பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் சிறைப்புறத்தானாகத், தலைவி, மகனுக்குரைப்பாளாய், 'ஐயனே, நீ விருப்பம் மருவுகின்ற நோக்கினையாய்-அழகினையுடையையாய்-அத்தா அத்தாவென்று அழைக்கும் மழலைமொழி எனக்கு இனிக்கிறது; ஆனால், நுந்தையால் நுகரப்பட்டு, அழகினை இழந்து வாடும் மகளிரின் துயரமோ இன்னாததாகிறது' என்று கூறினாள் *[கலி.80:14]*.

**நோக்கு-1. பார்வை.** சுரநெறியில் சேய்மைக்கண்ணே வரும் வம்பலரைக் (புதியவரை) கொல்வதற்கு, ஆறலைகள்வர், கையால் கவிக்கப்பட்ட கண்ணால் குறித்துப்பார்க்கும் நோக்கினை-பார்வையினை-உடையராயிருப்பர் *[புற.3:19]*. பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி, அசைந்த தன்மையோடு பெரிய கழுத்தினையும், பரந்த அடியோடு வெருட்சி பொருந்திய நோக்கினையுமுடைய யானைகளைக் கொண்டு பகைவரின் வாவிகளைப் பாழாக்கினான் *[புற.15:8]*. சேரமான் யானைக்கட்சேய்மாந்தரஞ் சேரலிரும்பொறை, யானையினது பார்வையைப் போன்ற நோக்கினையுடைய வெற்றியை விரும்பும் சேய் போன்றவனாவான் *[புற.22:29]*. மலையமான் திருமுடிக்காரியிடம், கபிலர், 'வள்ளலை நாடிப் பரிசிலர் பலரும் வருவர்; அவர்களின் தகுதியறிதல் அரிது; எல்லோர்க்கும் கொடுத்தல் எளிது; அறிவுடையோரின் தகுதியைப் பாராது எல்லோரையும் ஒரே நோக்கில் பாராதே' என்று அறிவுறுத்தினார் *[புற.121:16]*. வேட்டுவர் ஆண் காட்டுப் பூனையைப் போன்ற வெருண்ட நோக்கினை உடையவர் *[புற.324:1]*. கண்டார்க்குப் பேதுறவு விளைக்கும் நோக்கினை உடைய ஒரு பெண்ணை மணக்க விரும்பி வேந்தர் பலர் வந்தனர் *[புற.345:11]*. பிணைமான் போலும் மருண்ட மடவிய நோக்கினையுடைய ஒரு மடந்தையின் காரணமாக, அவளுடைய வளவிய ஊர், மகள் வேண்டிவரும் வேந்தரால் அழிவுறும் *[புற.354:10]*. எம் தலைவன், கற்பிற் சிறந்த மான்

போன்ற நோக்கினையுடைய தன் மனைவியர் கள்ளினைப் பொன்வள்ளத்தில் ஏந்தி உண்பிக்க உண்ணுமவன் நிலையாமையையும் நன்கு உணர்ந்தவனாகலின், கூற்றமே! உன்னைக்கண்டு அவன் அஞ்ச மாட்டான்' என்று புலவர் கூறினார் *[புற.361:14].*

ஆடுகோட்பாட்டுச்சேரலாதனிடம் வந்துபாடும் விறலியர், மடப்பம் பொருந்திய நோக்கினைடையராய் இருந்தனர் *[பதி.51:19].* தகடுரெறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையின் பகைமறவர், கண்டார்க்கு அச்சத்தை உண்டுபண்ணும், பிறழ்ந்து நோக்கும் நோக்கினையுடையவர் *[பதி.78:10].* குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறையின் மனைவி வளைந்த குழையோடுபொருத நோக்கினை உடையவள் *[பதி.81:21].*

கண்டார்க்கு அச்சத்தைத் தருகின்ற பேய்மகள் கொடிய நோக்கினையுயைடவளாய் இருந்தாள் *[முரு.48].* சோழன் கரிகாற் பெருவளத்தான் தன்னைப்பாடி வந்த கூத்தனுக்கு, அவனுடைய ஈரும்,பேனும் நிறைந்திருந்த கந்தையாடையை நீக்கிவிட்டு, கண்ணின் நோக்கானது, இஃது இழைபோனவழியென்று குறித்துப்பார்க்க இயலாத நுண்மையையுடையவாய்ப், பூத்தொழில் முற்றுப்பெற்ற, மென்மையால் பாம்பினது தோலையொத்த, ஆடையை நல்கினான் *[பொரு.82].* ஒய்மா நாட்டு நல்லியக்கோடனிடம் பரிசில் பெற வந்த விறலியர், மான் போன்ற நோக்கினையுடையவர் *[சிறு.31].* ஓய்மா நாட்டு நல்லியக் கோடனுக்குரிய எயிற்பட்டினத்திலுள்ள கள்ளினைக் காய்ச்சும் நுளையர் (பரதவர்) பெண்கள், முனையினையுடைய வேல்போலும் நோக்கினையுடையராய் இருந்தனர் *[சிறு.158].* மதுரை நகரின்கண் வாழும் மனைக்கிழத்தியர், மான்பிணை போன்ற நோக்கினை யுடையவர் *[மது.555].* தினையரிந்த தாளால் வேயப்பட்ட, குறிய கால்களையுடைய குடிலின்கண் வாழும் கானவனின் மனைவி, மான்பிணையின் அழகிய நோக்கினை ஒத்த, பார்வையையுடையவள் *[குறி.154].* காவிரிப் பூம்பட்டினத்திலுள்ள, செல்வமனைகளின் முற்றத்தில், காயும் நெல்லை உண்ணவரும் கோழியைத் தம்மகரக்குழையை எறிந்து விரட்டும் செல்வமகளிர், மடப்பம் பொருந்திய நோக்கினையுடையராய் இருந்தனர் *[பட்.21].* காவிரிப் பூம்பட்டினத்திலுள்ள விழவுஅறாத அங்காடித்தெருவில் உள்ள மேன்மாடங்களில் வாழும் மகளிர், மான்போலும் நோக்கினர் *[பட்.149].*

பிரிவிற்கு வருந்திய தலைவியிடம், தோழி, 'குவளைப் பூவை வென்றும் அமையாமல், போரில் வெற்றி பொருந்திய வேலானது இரத்தம் தோய்ந்து பிறழ்வது போன்றுள்ள, நினது செவ்வரி பொருந்திய மையுண்ட கண்ணின் மாறுபட்ட நோக்கு அவரைப் பிரியவிடாது' என்று கூறினாள் *[அக.27:17].* வினைமுற்றி மீண்டுவந்த தலைவனிடம், தலைவி, 'மாவடுப் போன்ற, காணுந்தோறும் களிப்பு மேவுதல் குறையாத நோக்கினையுடைய நினது மையுண்ட கண்களைப் பிரிந்து உயிர்வாழேன் என்று கூறினீரே; இப்பொழுது மறந்துவிட்டீரே' என்று கூற, அதற்குத் தலைவன், என் உடல்தான் அங்கிருந்தது; உள்ளம் உன்னிடத்திலேயே இருந்தது என்று கூறினான் *[அக.29:8].* ஆனிரையைக் கவர்ந்து சென்ற வெட்சிவீரருடன் போரிடக், கூர்மையான அம்பினைக் கொண்ட கரந்தை மறவர் இடுக்கிக் குறிபார்க்கும் நோக்கினையுடையராய்ச் சென்றனர் *[அக.67:6].* தலைமகனின் பிரிவின்கண், அழிந்த தலைவியிடம், தோழி, 'சென்ற நம் தலைவர், முல்லைநிலத்தில் அழகிய இளைய பெண்மானின் மருட்சியுற்ற நோக்கினைக் காணுந்தொறும் நின்னை நினைந்து விரைந்து வருவர்' என்று கூறினாள் *[அக.74:10].* தலைவன், தலைவிக்கு, வதுவை முடிந்த அன்று, ஓர் அறையில், புணர்ச்சிக்குரிய இரவில், அவளை அணையும் விருப்புடன், நாணத்தால் முகத்தை மூடியிருந்த ஆடையை விலக்கித், தலைவன், நினது உள்ளம் நினைந்ததனை மறையாது உரை, என்று கூற, மானின் மடத்தினைக் கொண்டதும், செருக்கினையுடையதுமான நோக்கினையுடைய தலைவி, நாணத்தால் தலையைத் தாழ்த்தினாள் *[அக.86:30].* ஒருதலைவியின் மேல் காதல் கொண்ட தலைவனைக் கழறிய பாங்கனுக்குத், தலைவன், 'நெய்தற்பூவினை வென்ற, அழகிய ஒளி பொருந்திய முகத்தின்கண்ணுள்ள, மையுண்ட கண்களது செருக்கிய நோக்கினை நீ கண்டால், இவ்வாறு கழறமாட்டாய்' என்று கூறினான் *[அக.130:14].* மகட் போக்கிய நற்றாய், 'பெண்மான் போன்ற நோக்கினையுடைய என் மகளை ஈன்றவள் என்று அருளான் ஆயினும் அவளை வாரிமுடித்துப் பாதுகாத்தவள் என்பதற்காகவாவது இங்கு அழைத்து வாரானோ, என்று தலைவனைக் குறித்துக் கூறினாள் *[அக.195:6].* வினைமுற்றிய தலைவன், தேர்ப்பாகனிடம், என் தலைவியின் துயரினைக் களைய, நூல்நெறிப்படி இயன்றதும் விரைவால் நோக்கினைத் தவிர்ப்பதுமாகிய நமது தேரினைக் காற்றெனக் கடுகச் செலுத்துக' என்றான் *[அக.253:26].* வேங்கட மலையைச் சூழ்ந்துள்ள மறவர், வளைந்த வலிய வில்லையும், கொடிய நோக்கினையும் உடையவர் *[அக.265:17].* பொருள்வயின் பிரியும் தலைவன், தன் நெஞ்சிற்குக் கூறுவானாய், நம் காதலியின் மகிழ்ச்சியைத்தரும் மடப்பம் வாய்ந்த நோக்கு, இரவிலும், மாலையிலும் மிக்க துயருற நம்வயின் என்ன ஆகுமோ' என்று வருந்தினான் *[அக.297:19].* பிரிவிடை வருந்திய தலைவியிடம், தோழி, 'பொய்கையின்கண் உள்ள நீலப்பூ காற்றினால் அசைந்தாலொத்த நினது அழகிய இதழ் பொருந்திய குளிர்ந்த கண்களின் அமரிய நோக்கினை நினையாது இரார் என்று கூறினாள் *[அக.357:16].* பாலையில் உள்ள மறவர் வலிய வில்லினையும், குருதியாற் சிவந்த அம்பினையும், சினம் தங்கிய நோக்கினையுமுடையராய் இருந்தனர் *[அக.371:2].*

தலைவியின் புன்னகையோடு, செருக்கின நோக்குமே தன்னைப்பிணித்தனவாகத் தலைவன் கூறினான் *[குறு.286:5].*

தலைவன் வரைவிடை வைத்துப் பொருள்வயின் பிரிந்த காலத்தில் எழுந்த அலர் விச்சியர்களின் தலைவன் வேந்தரோடு பொருதபொழுது, பாணர்களது, புலியினது நோக்கினையொத்த நிலையினாற் காணப்பட்ட குறும்பூரினிடத்துள்ளார் செய்த முழக்கத்தினும் பெரிதாயிருந்தது *[குறு.328:7]*.

'மலையமான் மாஊர்ந்து சென்று பகைவரின் அரணையழித்து இளைத்தாற்போல, நம் காதலியின் மகிழ்ச்சியையுடைய இளம் நோக்கானது நம்மை இளைப்புறுத்தித் தோழியின்மாட்டு இரக்கும்படி செய்கின்றது; தோழி உடன்பட்டுக்கூறும்வரையிலும் நெஞ்சே, நீ பொறுத்துக் கொள்வாயாக' என்று தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறினான் *[நற்.77:12]*. 'புலியானது யானையுடன் பொரும், பாம்புகள் உறையும், இடிமுழங்கி மழைபொழியப் பெருவெள்ளம் குறுக்கிட்டோடுகின்ற சாரலின்கண், நோக்குக்கரிய சிறிய நெறியில் இரவுக்குறிக்காகத் தலைவன் வருவதை நினைந்து வருந்துவதற்கு என்னைத்தவிர வேறு யாரோனும் உளரோ, எனத்தலைவி, தோழியிடம் கூறினாள் *[நற்.104:12]*. பொருள்வயின் பிரிந்துவந்த தலைவன், இடைச்சுரத்தில், உதியனுடைய போர்க்களத்தில் ஊதுகின்ற ஆம்பல் என்னும் பண்ணை இசைக்கின்ற புல்லாங்குழலின் ஓசை போல, அழுது புலம்பி வருந்தியவளுடைய துன்பங்கொண்ட நோக்குகள், இங்கு எனக்கு முன்னே வந்துள்ளனவே; இது என்ன வியப்பு என்று கூறினான் *[நற்.113:12]*. பாலை நிலத்தில் அயல்நாட்டு மக்கள் வருகின்றதைப் பார்த்து, அவரைக் கொள்ளையிடும் பொருட்டுச் சிவந்த அம்பைச் செலுத்தும் ஆறலைகள்வர், சினம் பொருந்திய நோக்கினை உடையராய் இருப்பர் *[நற்.298:2]*. தோழியால் பொருள்வயிற் பிரிந்த தலைவன், தன் நெஞ்சிற்குக் கூறுவானாய், 'நெஞ்சே, தோழியின் உரையைக் கேட்டு நாம் காடுமலை கடந்து பொருளீட்டி வந்தபிறகு மணம்வீசும் கூந்தலையுடைய தலைவியின் நோக்கு நமக்குக்கிட்டுமோ' என்றான் *[நற்.298:12]*. தலைவியின் ஆயத்தினர் மடப்பம் பொருந்திய நோக்கினையுடையராய் இருந்தனர் *[நற்.331:5]*.

முறுக்கிக் கட்டிய வில்லையும், கடைகுழன்ற மயிரையும், வலிய உடலையும், புலி போன்ற நோக்கினையுமுடைய மறவர் (ஆறலைகள்வர்), வம்பலராய் (புதியராய்) வழியில் வருவோரிடம் பொருள் இல்லையாயினும், அவர் அம்பு பாய்ந்து துடிதுடித்துச் சாவதைக்கண்டு மகிழும் கொடிய இயல்பினராவர் *[கலி.4:1]*. தலைவன் பிரியப்போவதை அறிந்துகொண்ட தலைவிபடும் துயரினைத் தோழி, தலைவனிடம், 'நீ தொழில் மாட்சிமைப்பட்ட கச்சையை இடையில் இறுக்க கட்டிக்கொண்டு, சிறந்த அம்புகளைத்தேர்வு செய்கின்றாய்; அதைக்கண்டு, நினது மனைவி, சுனையிடத்து மலர்ந்த கருநீலப்பூ மழையை ஏற்று நீர்சொரிவது போல, வருந்தும் நோக்கினையுடையளாய்க் கண்களிலிருந்து நீரைச்சொரியும்' என்று கூறினாள் *[கலி.7:12]*. வில்லிலே அம்பினைத் தொகுத்தலுக்கு நாணி, அரிமாவின் முழக்கத்தையொத்த, வில்லின் நாணின் ஒலியாலேயே பகைவேந்தரைப் புறமுதுகிட்டோடச்செய்யும் மறவர், வலியினையுடைய நோக்குப் பொருந்திக், கலைமானினது கொம்புபோல, நேர்போகாமல் திருகி முறுக்குண்டு தாழ்ந்த தாடியினையுடையவராயிருந்தனர் *[கலி.15:5]*. கேட்டோர் மயக்கம் உறுதற்குக் காரணமான மடமொழியினையும், மான்பிணையினது அழகையுடைய பார்வையைப் போன்ற நோக்கினையுமுடைய மகளிரின் பற்களைப் போல், மணம் வீசும் முல்லை அரும்புகள் மலரும்படியாக இளவேனில் பருவம் வந்தது *[கலி.27:3]*. ஒரு தலைவியின் மீது காதல் கொண்ட தலைவனொருவன், கண்டவர் காதல்கொள்ளுதற்குக் காரணமாகிய மான் போலும் நோக்கினையுடைய நல்லாளே, அன்னம் போன்ற உன் நடையும், மயில் போன்ற உன் சாயலும், புறவினைப்போன்ற உன் மடப்பமும் நின்னைக் கண்டவர்களை மயக்கமுறுத்தும் என்பதை நீ அறிவாயோ', என்று அவளிடம் கேட்டான் *[கலி.56:17]*. ஒரு தலைவி, மூங்கில் போன்ற திரண்ட தோளையும், பின்னப்பட்ட கூந்தலையும், மயில்போன்ற சாயலையும் பெற்று விளங்குவதோடு, மானின் பார்வையை வென்ற நோக்கினையுமுடையவளாயிருந்தாள் *[கலி.57:2]*. ஓர் இளந்தலைவி, வாரிவிடப்பட்ட சுருள் கூந்தலையும், வளைந்த முன்கையையுடைய மெல்லிய தோளிணைகளையும், மலர்போன்ற கண்களையும், மாந்தளிர் போன்ற மேனியையும், ஒளி வீசும் நெற்றியையும், முல்லை அரும்பு போன்ற வெள்ளிய பற்களையும், மலர்க்கொடி போன்ற இடையையும் உடையவளாய் இருப்பதோடு, மான்பிணையினது அழகினையுடைய வெருவிய பார்வையைப் போன்ற நோக்கினையுடையவளாயும் இருந்தாள் *[கலி.58:2]*. தலைவன், தலைவியை விரும்புகிறான் என்பதை அறியாதாள் போன்று, தோழி, தலைவனிடம், இவளின் தந்தை கொடைக்குணம் மிக்கவன்; உனக்கு என்ன வேண்டும்; வேண்டிய பொருளைக்கேள் என்று கூறவும், அதற்குத் தலைவன், இரந்துபொருள் பெறும் இழிநிலையில் யான் இல்லை; மருண்டு பார்க்கும் மடப்பம் மிக்க நோக்கினையுடைய நினது தலைவியின் காதலே எனக்கு வேண்டும் என்று கூறினான் *[கலி.61:16]*. திருமணநாளன்று மான் போன்ற நோக்கினையுடைய மணமகள், நாணத்தால் மண ஆடைக்குள்ளே முகத்தை மறைத்துக்கொண்டு மணமகனுடன் வேள்வித்தீயை வலஞ்செய்வதைப்போல, அன்னச்சேவலானது தன் பெட்டையுடன் பொய்கையில் தாமரைப்பூவினை வலம்வரும் *[கலி.69:4]*. ஒரு தலைவி, இளைய களிற்றினது நெற்றிப்பட்டத்திலிருந்து தொங்கும் மூவடம்போல், தன் புதல்வனின் தலையிலிருந்து மூவடம் தொங்குவதையும், மழுவும், வாளும் அமைக்கப்பெற்ற ஐம்படைத்தாலியைக், குழந்தையின் வாயிலிருந்து வரும் நீர் நனைப்பதையும் கண்களின் நோக்கினால் கண்டு களிப்பெய்தினாள் *[கலி.86:5]*. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் கேட்குமாறு,

தலைவியொருத்தி, தன் புதல்வனிடம் கூறுவாள் போலப், பொருளை விரும்புகின்றவர்களுக்கு விரும்பியவாறே கொடுக்கும் ஈகைப்பண்பில் உன் தந்தையைப் பின்பற்றுவாயாக; மெல்லிய நோக்கினையுடைய, மகளிர் காதல் நோயுற்று வருந்துமாறு செய்யும் பரத்தைமையை நீ பின்பற்றாதே என்று கூறினாள் *[கலி.86:23]*. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன், காலங்கடந்து வந்தமைக்குக் காரணங்கூறுவானாய்க், கடவுளை வணங்கி வந்தேன் என்றான்; அதற்குத்தலைவி 'நோக்காலேயே நின்னைப் பிணித்துவிடும் கண்களையுடையதும், நறிய குளிர்ந்த மயிர்ச்சாந்தும், புழுகும் நாறும் (மணக்கும்) அறல் போன்ற கூந்தலுக்கு நீ முதல் நாள் பூவைப்பலியாகக் கொடுத்ததுமாகிய கடவுளைக் (பரத்தையை) கண்டாயோ' என்று, இடித்துரைத்தாள் *[கலி.93:23]*. ஆயனொருவன், கொல்லேற்றின் கண்களின் நோக்கிற்கஞ்சானாய் அதன்மேல் பாய்ந்தவனைக் கொம்பினால் சாவக்குத்தி அக்கொம்பினாலேயே அவனுடலை அலைப்பது அசையியலாளின் (துரோபதையின்) கூந்தலைத் தீண்டியவனின் (துச்சாதனனின்) நெஞ்சைப்பிளந்து வஞ்சினத்தை முடித்தவனைப் (பீமனைப்) போன்றிருந்தது *[கலி.101:16]*. ஆயர் கொல்லேறுகளைத் தொழுவில் அடைத்து, இன்னின்ன ஏறுகளை அடக்குவோர் இவளிவளைப்பெறுவர், என்று, அறிவிக்கும்பொழுது, 'குரால் நிறத்தையுடைய இக்கொல்லேற்றை,வெற்றி கொள்பவன், வெருவுதலையுடைய பிணைமானின் பார்வையைப் போன்ற நோக்கினையுடைய இந்நல்லாளைப் பெறுவன்' என அறிவித்தனர் *[கலி.104:22]*. ஒரு காதலன், தன் காதலியைக் கண் வேறொரு வடிவை நோக்கும் நோக்கினைத் தவிர்க்கும் அழகைப் பெற்ற பெண் தன்மையினையும், மயிலின் கழுத்தினுடைய நிறத்தினையும் பொருந்திய மாயோளே" என்று விளித்தான் *[கலி.108:37]*. தலைவியைத் தோழி 'நோக்குங்காலத்து, அந்நோக்காலேயே பிறரைவருத்தும், மதர்த்த நோக்கினது அழகையுடைய கண்களையும், முத்துக்களது அழகையொக்கும் முறுவலினையுமுடையாய், என்று, விளித்தான் *[கலி.131:5,21]*. ஒரு தலைவியின் மீது காதல் கொண்ட காளையொருவன், ஊராரைக் குறித்துத், திங்களைப் பாம்பு சென்று மறைக்கும் பொழுது, அதன் வருத்தத்தைத் தீர்க்க மாட்டாராயினும், அத்திங்களின்மீது அன்பு காட்டி வருந்துவர்; தலைவியின் நோய் செய்யும் நோக்கிலே அகப்பட்ட என் காமநோயைக் கண்டும், அச்சான்றோர் போல, இவர் கண்ணோட்டம் ஒன்றும் செய்திலரே', என்று வருந்தினான் *[கலி.140:19]*.

ஒரு காதலன், தன் காதலியின் கண்களின் அழகிய நோக்கினை, இசைப்பாட்டின்கண் இயைத்துப் பற்பல பாடல்களைப் பாடினான் *[பரி.7:65]*.

**2. கண்.** இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் போரில் நீட்டிக்க, ஊடினும் இனிய கூறும் மனைவி, அமர்த்த நோக்கின் -கண்ணின்- அருந்ததியை வென்ற கற்போடு, படுக்கையிலிருந்து பிழைப்பாளோ' எனப் புலவர் பாடியுள்ளார் *[பதி.16:12]*. செல்வக்கடுங்கோவாழியாதனின் மனைவி, அகன்ற நோக்கினையுடையவள் *[பதி.65:7]*.

பரத்தையிற்பிரிந்து வந்த தலைவனிடம், தோழி, மாவடுப்போன்ற நோக்கினையுடைய பரத்தையோடு நீ நேற்றுப்புனலில் விளையாட்டயர்ந்தனை என்பர்! என்று கூறி, வாயின் மறுத்தாள் *[அக.116:8]*. செலவுணர்த்திய தலைவனிடம், தோழி, தெய்வம் என்னுமாறு வடிவு கொண்ட நோக்கினைக் கொண்ட தலைவியை நீ பிரியின் அவள் ஆற்றாள் என்று கூறிச் செலவழுங்குவித்தாள் *[அக.319:6]*.

உடன் போக்குச் சென்றுவிட்ட தன் மகளைக் குறித்து, நற்றாய், அவள் வளர்த்த கிளியைக் காட்டி, இக்கிளி, என்னுடைய சுழலும் நோக்கினையுடைய என் மகளாகிய கிளியால் வளர்க்கப்பட்டது, என்று கூறி, வருந்தினாள் *[ஐங்.375:2]*.

**3. அழகு.** மக்கட்குப் பசியும், பிணியும் நீங்கி நோக்கு-அழகு-விளங்கும்படி நாட்டினையாண்ட உயர்ந்த செங்கோல் மன்னரின மரபில் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் தோன்றினான் *[மது.13]*.

**4. அறிவு.** பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் ஆட்சிக் காலத்தில் மதுரையில் பலவகைப் பட்ட தொழில்களையும் ஒப்புக்காட்டும் கூரிய நோக்கினை அறிவினை-உடைய ஓவியத்தொழிலாளர் நிறைந்திருந்தனர் *[மது.517]*.

**நோக்குவோன்-பார்ப்போன்.** கூட்டத்தின்கண் நின்றே பூங்கொம்பு ஒப்பாளொருத்தியின் குவிந்த முலைகளைக் கூர்ந்து நோக்குவோன்-பார்ப்போன்-இளநெஞ்சத்தையுடைய திண்மையில்லாதவன் என்று சிலர் அவனை இகழ்ந்தனர் *[பரி.12:50]*.

**நோய்-1. காமநோய்.** ஓய்மாநாட்டு நல்லியக்கோடனின் தோள் மகளிரை வருத்தும் நோயாகவும்-காமநோயாகவும்-அவ்வருத்தத்தைத் தணிக்கும் மருந்தாகவும் விளங்கியது *[சிறு.வெ.1:1]*. மாலைக்காலம், மகளிர்க்குத்,தம் காதற் கொழுநரோடு கூடவேண்டுமென்ற நோயை உண்டாக்கிவிட்டு இரவின் வருகைக்கு இடமளித்து மறைந்தது *[மது.55:7]*. என் தலைவியின் இழை நெகிழ்த்த நோய் எது என அறியாத காரணத்தால் நீ கடவுளை வணங்கித் துயருறுகின்றாய்' என்று தோழி, செவிலிக்கு அறத்தொடு நின்றாள் *[குறி.3]*.

களிற்றை இரையாகக் கொள்ளுதற்கு மறைந்து வரும் புலியைப் போலத் தலைவன் இரவில் காவலர் அறியாமல் மறைந்து வந்து தலைவியின் நோய் தணியும்பொருட்டு முயங்கினான் *[அக.22:20]*. தலைவன், தன் நெஞ்சிற்குக் கூறுவானாய், 'நெஞ்சே, நாம் வந்த வினையை முடித்த பிறகு, நமது

தலைவியின் தோளில் பரவியுள்ள நோயின் வருத்தம் நீங்கப் பலமுறையும் முயங்குவோம்; ஆகவே, இப்பொழுது வினைக்கு எழுக' என்றான் *[அக.47:19]*. தலைவி, தோழியிடம், 'நமக்கு வந்துள்ள துயரால் நமது உயிரே அழிவதானாலும் இது காமநோய் என்று தாய்க்கு விளங்க உரையாதே; குறிப்பினாற்கூறுக' என்றாள் *[அக.52:15]*. குறித்த பருவத்தில் வாராத தலைவனுக்காக வருந்தும் தலைவியிடம், தோழி, 'நோயினால் நீ,படும் வருத்தமும், அதனால் எனக்குண்டான வருத்தத்திற்காக நீ வருந்தும் வருத்தமும் தீரத்தலைவர் வந்துவிட்டார்' என்று கூறினாள் *[அக.73:6]*. பொருள்வயிற் பிரிவரென வேறுபட்ட தலைவியிடம், தலைவன், 'நினது அமையாத நோயினைக் கண்டும், யான் நின்னைப் பிரிவனோ, பிரியேன்' என்றான் *[அக.75:21]*. வரையாது வந்தொழுகும் தலைவனிடம், தோழி, 'தலைவியின் நெற்றியும் நோய் மிக்கமையால் அழகு தொலைபப் பெற்றது; அதனைக்கண்டு, ஊராரும் அலர் கூறுகின்றனர்; அதனால் அவளை விரைவில் வரைந்து கொண்டு நும்மூர்க்குச் செல்' என்று கூறினாள் *[அக.132:1]*. தலைவனின் பிரிவினால் வருந்தும் தலைவி, தோழியிடம், 'தோழியே, தலைவன் காடு கடந்து சென்றமையால், கழுவுள் என்பானுக்குரியதும், பதினான்கு வேளிர் ஒருங்குகூடித் தாக்கியதுமாகிய காமூரைப் போல, என் உள்ளமானது கலங்கி, நோய் பெருகி, ஆதிமந்திபோல, அறிவு திரிந்து மயங்கியுள்ளேன்' என்று கூறினாள் *[அக.135:4]*. தலைவியின் மீது உள்ளமிழந்த தலைவன், பாங்கனிடம், 'நாயின் குரைப்பிற்கு அஞ்சிய, மதர்த்த கயல் இரண்டு எதிர்த்துப் பொருவது போன்ற, அவளுடைய கண்கண், சேற்றிலே அழுந்திய பண்டியை வருந்தி இழுக்கும் பகடுபோல, வெய்யவாக உயிர்த்தலைச் செய்யும் நோயை எனக்குத்தந்தன' என்று கூறினான் *[அக.140:15]*. பொருள்வயிற் பிரிந்த தலைவனைக் குறித்துத்தலைவி, தோழியிடம், 'அவரது பிரிவால் நாம் நோயுழப்போம் ஆயினும் அவர் தமது பொருள் ஈட்டும் வினையினை முடித்து வருவாராக' என்று கூறினாள் *[அக.155:5]*. இரவுக் குறிக்கண் தலைவியைக் கூடிக்களித்த தலைவன், தன் நெஞ்சிற்குக் கூறுவானாய், 'அச்சம்தரும் தெய்வப் பெண்களைப் போலப் பெறுதற்கு அரியளாகிய நம்தலைவி, காற்று வீசப்பெற்ற தளிரென நுடங்கி வந்து, நமது நோயாகிய வருத்தம் நீங்க அமையாது முயங்கினள்' என்று கூறினான் *[அக.162:16]*.

பிரிவின் கண் வற்புறுத்தும் தோழிக்குத், தலைவி, 'நோய்மிக்க வருத்தத்தால் நமது நெற்றியில் பசலை பரக்கவும், நாம் அழும்படியாகவும் பிரிந்து சென்றாராயினும், நம் இல்லிலிருந்து விருந்தாற்றுதற்கு இன்பம் உண்டாகச் சிறந்த பொருளைத் தலைவர் எளிதினில் அடைவாராக' என்று கூறினாள் *[அக.205:6]*. பிரிவுணர்த்திய தோழிக்குத், தலைவி, 'பனிப்பருவம் வந்துவிட்டது; இப்பருவம் தலைவியைப் பிரிதற்கு ஏற்றதன்று என்று தலைவருக்குக்கூறு; அவர் பிரிந்தால், நோயானது வருத்த, அவர் புணர்தலை விரும்பிக் கூடிய பனியால் வருந்திப், பற்களைத் தீயுண்டாகக் கடித்து நடுங்குவேன்' என்று கூறினாள் *[அக.217:17]*. தலைவன் சிறைப்புறத்தானாகத், தோழி, தலைவனிடம் கூறுவாள் போலத், தலைவர் அடைவித்த நோயால் நினது மேனியின் ஆய்ந்த அழகு அழிதலின், ஆதிமந்திக்கு அவளின் காதலனைக்காட்டித், கடலில் மறைந்து புகழெய்திய மருதியைப்போல, நாமும் இரவெல்லாம் மழை சொரிதலின், ஈரமிக்க சேற்று நெறியில், தலைவரைத் தேடிச்செல்வோமா' என்று கூறி வரைவு கடாயினாள் *[அக.222:2]*. தலைவன் சிறைப்புறத்தானாகத், தலைவி, தோழிக்குக் கூறுவாள்போல, 'ஆளியானது யானையைக் கொல்லும் மலைச்சாரலில், வேல் ஒன்றினையே துணையாகக் கொண்டு, தலைவர் வரும் நெறியின் ஏதத்திற்கு அஞ்சி, நோயால் வருந்தி யானும் ஆற்றுகிலேன்; யாயும் உறங்குதலை மறந்துவிட்டாள்; யாம் என் செய்வோம்' என்று கூறினாள் *[அக.252:7]*. பிரிவின்கண் தலைமகள், காதல் கைமிக்கு, 'இப்பனிப்பருவத்தில் வாடையுடன் கூடி எனது வேட்கை நோயானது என் முலையில் முளையாய் அரும்பி, நெஞ்சிலே திரண்ட அடியாய் நீண்டு, ஊராரின் அம்பலாகிய அழகிய கிளைகளாகி, அமையாத காதல் தளிர்களைப் பரப்பிப் புலவர் புகழும் நாணமின்மையாகிய மரமாகி, அலராகிய மலர்களைச் சொரிந்தும் தலைவர் வந்திலரே' என் வருந்திக் கூறினாள் *[அக.273:11]*. பருவ வரவின்கண் வற்புறுக்குந் தோழிக்குத், தலைவி, 'முன்பனிக்காலத்து நள்ளிரவில், வேந்தனது பாசறையிலுள்ள, நமது நோயினை அறியாத, அறன் இல்லாத தலைவர், எனது துயரினைக் களையவருவரோ, என்று எண்ணி, வாடைக்காற்றால் எனது தனிமையை யான் பொறேனாகின்றேன்' என்று கூறினாள் *[அக.294:13]*. பொருள்வயிற்போகும் தலைவன், தன் நெஞ்சிற்குக் கூறுவானாய்க், 'காட்டிற்கு நம்முடன் வருவேன் என்று கூறிய தலைவியின் மகிழ்ச்சியைத் தரும் பார்வை அமையாத நோயினை நமக்கு உண்டாக்கி, நமது துன்பம் அளவு கடத்தலின், நம் நிலை யாதாகுமோ' என்று கூறினான் *[அக.297:2]*.

பாசறைக்கண் தலைவன், தன் நெஞ்சிற்கு, 'நெஞ்சமே, கார் காலத்தில், நமது காதலி, பாசறைக்கண்ணே அரசனின் ஏவலினால் வேற்றுநாட்டில் தங்கி, நமக்கு அருள் செய்யாத நமது தலைவர் அறத்தினையுடையவர் அல்லர் என்று, அவளைக் கருதி நாம் அடையும் நோயினை அறியாளாய், எம்மை நொந்து வெறுப்பளோ' என்று கூறினான் *[அக.304:20]*. தலைவனிடம், தோழி, 'நினது பரத்தையொருத்தி, நின்னை இகழ்ந்து பேசிக் குளிர்ந்த கண்களால் நோய் (வருத்தமுமாம்) உண்டாகப் பார்த்து நினது மணம் நாறும் மாலையை அறுத்து, நும்மோடு ஊடி எமது தெருவழியே சென்றனளே? இதுதான் உண்டாகப் பார்த்து நினது தலைமைக்கு அழகோ' எனக்கேட்டு வாயின் மறுத்தாள் *[அக.306:12]*. தலைவனின் வரவுணர்ந்த

தோழி, தலைவிக்குத், 'தலைவர் வருகிறேன் என்ற இளவேனிற்பருவம், தலைவர் சென்றுள்ள நாட்டில் இல்லைபோலும், என்று, நாம் எண்ணிக் கொண்டிருக்கும் போதே, திண்மையுடையோர் எண்ணியாங்கு நிறைவுறுதல் போல, நம் காதலர் வந்து நின்றார்; நம் நெற்றியில் பரவியிருந்த பசலை நோய் நம்மைப்பிரிந்து எவ்விடத்துச் சென்றதோ' என்று கூறினாள் *[அக.317:23]*. தலைவி, தோழியிடம், 'தலைவர், காட்டு நெறியில் மாலைக்காலத்தே நம்மைப்பிரிந்து சென்றார். ஆகையினாலே, நோயினைச் செய்யும் பகுதியால், யாது பழி உண்டாகுமோ' என்று கூறினாள் *[அக.325:22]*. பிரிவிடை வேறுபட்ட தலைவி, தோழிக்கு, 'நம் காதலர், அழகிய கண்ணும், நெற்றியும் பசலையுற, நோய்மிக்கு யான் இங்கே வருந்தவும், நம்மைப் பிரிதலைத் துணிந்து, பல மலைகளையும் கடந்து அவர் போவரோ' என்று கூறினாள் *[அக.329:1]*. தலைவன் சிறைப்புறமாகத், தோழி, தலைவியிடம், 'நினது மேனியின் வேறுபாட்டைக் கண்டு, நம் அன்னை அதன் காரணத்தைக் கேட்டனளாயின், தலைவனால் அளிக்கப்பட்ட இந்நோயினை, எதனால் வந்ததென்று கூறுவேன்' என்று கூறினாள் *[அக.358:15]*. தலைவி, தோழியிடம், 'இல்லின் கண், இரவில், நோயொடு பொருந்தியிருப்பேனாயின் எனது தந்தையின் காவலின்கண் படுவேன்' என்று கூறினாள் *[அக.370:6]*. பிரிந்துபோகும் தலைவன், இடைச்சுரத்துத், தன் நெஞ்சிற்குக் கூறுவானாய், 'நெஞ்சே, பகைவரால் அழிந்து பட்ட அம்பலத்தில், சுரத்தைக்கடந்து வந்த வருத்தத்தால், முழந்தாள்களைக் கையால் பூட்டிய தனித்த இருப்புடன் நமது நிலையினை எண்ணியிருக்கும் நமது வருத்தத்தை அறியாளாகி நம் தலைவி நோய்மிக்கு அழுது ஒழுகும் நீரினை, மெல்லிய நகத்தால் தெறித்துப் பலரால் ஒரு மதிலில் சுற்றி வளைக்கப்பட்ட அரசனைப்போலத், துயிலைத் துறந்தனளோ' என்று வருந்தினன் *[அக.373:13]*.

தலைவன் பிரிந்ததனால் என் கண்கள் உறங்குதலைச் செய்யாவாயின; காமநோய் என்பது அத்தன்மைத்தோ' எனத் தலைவி, தோழியிடம் கூறினாள் *[குறு.5:1]*. 'தலைவன் எனக்கு நோயைத் தந்தான்; அதனால், குவளைமலர் போன்ற என்னுடைய கண்கள் இப்பொழுது பசலைநிறம் அடைந்தன' எனத், தலைவி, தோழியிடம் கூறினாள் *[குறு.13:4]*. பிரிவுத்துயர் தாங்காத தலைவி, தோழியிடம், 'எனது நோயை அறியாது, கவலையின்றி உறங்கும் இவ்வூரினை, யான் முட்டுவேனோ, தாக்குவேனோ, ஒருதலைக்கீட்டை மேற்கொண்டு ஆவென்றும், ஒவென்றும் ஒலியுண்டாகக் கூப்பிடுவேனோ, இன்னது செய்வதென்பதை அறியேன்', என்று கூறினாள் *[குறு.28:5]*. இடித்துரைத்த பாங்கனிடம், தலைவன் 'இடித்துரைக்கும் பாங்கனே, உன்பொருட்டு என் பிணியைப் பொறுக்கமுடிந்தால் நல்லதே; ஆனால், வெயிலெறிக்கும் பாறையில் கையில்லாத ஊமன், தன் கண்களாலே பாதுகாக்க முயலுகின்ற உருகிய வெண்ணெயைப் போல, என்பாலுள்ள நோய் பொறுத்துக் கொள்ள அரிதாயிருக்கின்றது' என்று கூறினான் *[குறு.58:6]*. 'பிரிந்து சென்ற ஆக்கள் மாலைக்காலத்தில் மீண்டு வருதலை அவற்றின் கன்றுகள் எதிர்பார்த்திருத்தலைப் போலத், தலைவனின் வருகையை நோக்கிய நோயேம் ஆகுதலையறிந்தும் சேய்மை நாட்டிலேயே இன்னும் உள்ளாரே, விரைந்து வரவில்லையே', என்று தலைவி, தோழியிடம் கூறி வருந்தினாள் *[குறு.64:4]*. வேறுபாடு என் என்ற பாங்கனுக்குத், தலைவன், 'தினைப்புனத்தில் குருவிகளை ஒட்டுகின்றவளது குளிர்ச்சியுடைய கண்கள் பூவினை அழகால் ஒத்துச்சுழலும் தன்மையவாயினும், கொடிய தொழிலால் அம்பினையொத்து, எனக்கு நோய் செய்தன' என்று கூறினான் *[குறு.72:2]*. 'வாடைவீசும் கூதிரின் யாமத்தில், ஆனின் மணியோசையை, நீர்சொரிகின்ற கண்களோடும் பொறுத்தற்கரிய நோயோடும், தனிமையாற் கலங்கி கேட்டு வருந்துவோர், என்னையன்றிப் பிற மகளிரும் உளரோ', எனத் தலைவி, தோழியிடம் கூறினாள் *[குறு.86:2]*. 'தலைவனின் மார்பினை நினைந்தால் நோய் மிகுகின்றது; அம்மார்பினைப் புல்லினால் அப்பிணி இல்லையாதல் என்ன வியப்பு, என்று தலைவி, தோழியிடம் கூறினாள் *[குறு.150:4]*. தோழியால் குறை மறுக்கப்பட்ட தலைவன், 'ஊரிலுள்ளார் யாவரும் தலைவியைப் பழிகூறும்படியாக, எனக்குற்ற நோய், இவளால் உற்றதெனக் கூறி மடலேறுவேன்', எனத் தோழிக்குரைத்தான் *[குறு.173:4]*. தலைவி, தோழியிடம், 'நோயால் வருந்தும் தோழியே, வருந்தற்க; விரைவில் தலைவர் வந்து விடுவார், என்று ஆற்றுவிக்கும் தோழியே! அதனால், யாது பயன்? இளவேனிற்பருவத்தும் வந்திலரே! எவ்வாறு என்னால் பொறுக்க முடியும், என்று கூறினாள் *[குறு.192:2]*. தலைவன், தன் நெஞ்சிற்குக் கூறுவானாய், 'நெஞ்சே, தலைவியின் மீது கொண்ட என் நோய், என்றும் நிலைபேறுடையதாகும்; மறுமை உலகத்தும் மன்னுதல் பெறும்; இப்பிறவியில் இவளை,யான் அடைந்தாலும், அடையாவிட்டாலும் மறுமையில் அடைவது உறுதி', என்று, கூறினான் *[குறு.199:6]*. தலைவனுடன் உடன்போக்கிற்கு உடன்படுத்தும் தோழி, தலைவியிடம், 'கானம், காவலின்மையின், பகற்குறி யில்லை; வரும் நெறியின் ஏதத்திற்கு அஞ்சினோமாகலின், இரவுக்குறியு மில்லை; ஆகவே, தலைவியின் நோய்க்கு என் செய்வோம் என்று தலைவரிடம் கூறினேனாக, அவர் உடன்போக்கினைக் குறிப்பால் உணர்த்தினார், அதுவே நன்று', என்று, கூறினாள் *[குறு.217:3]*. பிரிந்து சென்ற தலைவனின் கொடுமையை நினைந்து, தலைவி, உறக்கமில்லாது நோயைப் பெற்றிருந்தாள் *[குறு.224:3]*. தலைவன் சிறைப்புறத்தானாகத், தலைவிக்குக் கூறுவாள் போலத், தோழி, 'தோழியே, நமக்கு வந்துள்ள நோய் தலைவரால் அருளப்பட்டது என்பதையறியாமல், அன்னை வெறியாட்டெடுத்து, இவள் பேய்பிடிக்கப்பட்டாள் என்று கருதுவது, வருந்துதற்கு உரியதாகும்', என்று கூறி,

வரைவுக்கடாயினாள் *[குறு.263:3].* தலைவி, தோழியிடம் 'தலைவராடு நாம் பொருந்தியதோ, ஒரு நாளேயாகும்; அது பலநாள் நமக்கு நோயாகின்றது', என்று கூறினாள் *[குறு.271:5].* பிரிவினால் வேறுபட்ட தலைவிக்காகக் கவலைப்பட்ட தோழியிடம், தலைவி, 'தோழியே, தலைவனைப் பிரிந்த யான், மேலும்மேலும் பெருகும் நோயினால் கசங்கிய தளிரைப் போலத், துன்புறுவதற்கு யான் வருந்தவில்லை; இவ்வூரார், தலைவரைப் பழிப்பதற்கே வருந்துகிறேன்', என்று கூறினாள் *[குறு.289:2].* தலைவனால் ஏற்பட்ட காமத்தால் வருந்தும் தலைவி, தோழி அறத்தொடு நிற்கும்பொருட்டுத், தன்னுள்ளே கூறுவாளாய்த் 'தலைவரால் யான் கொண்ட நோயினைப் பரிகரிக்க யாருமிலர்; குப்பைக் கோழிகளின் தனிமையையுடைய சண்டையைப் போல், தானே அழியும் நிலைதான் உள்ளது போலும்', என்று கூறினாள் *[குறு.305:8].* தலைவர் சொல்லோ வேறுபாடுடையனவாயின; வளைகள் கழலும்படியான எனது நோயின் வருத்தத்தை அன்னை அறியின், நான் உயிரோடு வாழேன்', என்று, தலைவி, தோழியிடம் கூறினாள் *[குறு.316:2].* வரையாது வந்தொழுகும். கிழவனுக்குக் கேட்கும்படியாகக், கிழத்திக்குக் கூறுவாளாய்த், தோழி; 'வாடையும், பெயலுமுள்ள நடுயாமத்தில் நீ,படும் நோயின் துன்பம் தீரும் வண்ணம், நீயே தலைவரிடம் கூறினால் என்ன', என்று கூறினாள் *[குறு.332:2].* 'அன்னை வெறியாட்டெடுத்தும் எனக்குற்ற நோய் தீராமையின், அன்னைக்கு ஆராய்ச்சி தோன்றும்; ஆதலின் தலைவர் இரவுக்குறிக்கண் வாராதிருத்தல் நல்லது' என்று தலைவன் சிறைப்புறத்தானாகத், தோழிக்குத், தலைவி கூறினாள் *[குறு.360:1].* வினைமுற்றிய தலைவனைத், தலைவியிடம் விரைந்து கொணர்ந்த தேர்ப்பாகனிடம், தலைவன், நோயினால் வருந்தி வாமும் தலைவி இறந்துபடாமல் இருத்தற்குக் காரணமானமையின் நீ தேரைமட்டும் தரவில்லை; தலைவியின் உயிரையே தந்துள்ளாய்' என்று பாராட்டிக் கூறினான் *[குறு.400:7].*

அன்னை வெறியாட்டெடுக்கும் முருகனுக்குத், தோழி கூறுவாளாய்த், 'தலைவிக்கு வந்துள்ள நோய் தலைவனுடைய மார்பினால் வந்ததென்று அறிந்திருந்தும், வெறிக்களத்தில் பலி பெற வந்துள்ள நீ திண்ணமாக அறியாமையுடையை ஆவாய்' என்று கூறி அறத்தொடு நின்றாள் *[நற்.34:6].* பிரிவிடைத் தலைவிக்காக வருந்திய தோழியிடம், தலைவி, 'தோழியே, குறவரால் பட்டை உரிக்கப்பெற்ற சந்தனமரம் உள்நீர் வடிந்து காய்ந்து போனதைப் போல, என் அறிவும், உள்ளமும் அவர்பால் சென்றுவிட்டதால் என் யாக்கை உள்ளீடு இல்லையாயிற்று; அவர் இங்கு வந்தாலும் என் நோய்க்கு மருந்தாகார்; ஆதலால், காதலர், ஆங்கே உறைவாராகுக; இங்கு நோய் நம்மை வருத்துதலாலே அத்துயரினை நம் உறவினர் காணாதொழிவாராக' என்று கூறி வருந்தினாள் *[நற்.64:10,13].* பிரிவிடைவருந்திய தலைவியிடம், தோழி, தலைவர் வந்துவிட்டார்; மாலைப்பொழுதில் நின்னைவருத்தும் நோயின் வருத்தத்தினின்றும் உய்ந்து வாழ்வாயாக' என்று கூறினாள் *[நற்.78:6].* சேட்படுக்கப்பட்டு ஆற்றானாய தலைவன், தோழிகேட்கும்படியாகத், தன் நெஞ்சிற்குக் கூறுவானாய்;, 'என் காதலியால் உண்டான எனது நோய்க்கு மருந்து அவளைத் தவிர வேறு இல்லை' என்று கூறினான் *[நற்.80:9].* தலைவன் கொண்ட நோயும் அதனாலாய அவனுடைய மெய்யின் தளர்ச்சியும் தலைவியை முயங்கியதால் ஒழிந்தன *[நற்.82:1].* தலைவன் சிறைப்புறமாகத், தலைவி, தோழிக்குரைப்பாளாய்த், 'தோழியே, நோய் அலைத்துத் துன்புறுத்தும்போது அன்போடு வந்து அருகிருந்து நயமொழி கூறி ஆற்றுவித்தல் ஆண்மகனுக்குரியது; அதைத் தலைவர் செய்யவில்லை என்று கூறினாள் *[நற்.94:1]* தலைவன் சிறைப்புறத்தானாகத், தோழி, தலைவிக்குச், 'சிற்றில் விளையாடுதலையும், நண்டுகளைக் கண்டு விளையாடும் விளையாட்டு முதலியவற்றையும் மறந்து வருந்தும்படி உனக்குற்ற நோயைக் கூறுவாயாக' என்று கூறினாள் *[நற்.123:12].* தலைவி, தோழியிடம், 'கழல் அணிந்து கண்ணி சூடிய ஒருவன் வந்து என் முதுகை அணைத்துப் புல்லினானாக, அது முதற்கொண்டு அதனையே எண்ணி நோயினேன் ஆனேன்' என்று கூறினாள் *[நற்.128:11].* பொருள் வயிற்பிரிவிடைவேறுபட்ட தலைவி, தோழியிடம், தலைவருக்கு என்னுடன் இருந்து இல்வாழ்க்கை வாழ்வதிலும் வேறுசிறந்த பொருளுண்டோ? பொருளுக்காகப் பிரிந்தவர் என்னை நினைத்தலுமிலர்; யானடைந்த நோயோ கடலால் சூழப்பட்ட இவ்வுலகின் எல்லையையும் கடந்து விட்டது', என்று கூறினாள் *[நற்.130:12].* பிரிவிடை ஆற்றும் தோழியை நோக்கித், தலைவி, 'அவர் விரைந்து வந்துவிடுவார் என்று என்னைத் தேற்றி நீ கூறுகின்ற அன்புச் சொல்லானது, கொல்லனது உலைக்களத்தில் கொல்லன் தெளித்த நீரானது அவ்வுலை நெருப்பினைச் சிறிது தணிக்குமாறுபோல, நோய் மிக்க என் நெஞ்சின் வருத்தத்தைச் சிறிது தணித்தது' என்று கூறினாள் *[நற்.133:11].* தோழியால் குறைமறுக்கப்பட்ட தலைவன், தன் நெஞ்சிற்குக் கூறுவானாய்த், 'தலைவி நமக்கு அருள் செய்தாலும், செய்யாவிட்டாலும், நெஞ்சே, நீ அவளை இரந்து பின்னிற்றலை வெறாதே; யான் அடைந்துள்ள நோய்க்கு மருந்து அவளன்றி வேறொன்றுமில்லை', என்று கூறினான் *[நற்.140:11].* தலைவன் சிறைப்புறமாகத், தோழி, தலைவிக்குரைப்பாளாய், 'வெறியாட்டெடுக்கும் நம் அன்னையின் கனவில் முருகவேள் தோன்றித், தலைவிக்குற்ற நோய், என் போன்றதெய்வங்களால் வந்ததன்று; ஒரு மலைகிழவோனால் வந்தது என்று கூறின், அம்முருகற்கு ஏதம் உண்டாகுமோ' என்று கூறினாள் *[நற்.173:5].* கழிறிய பாங்கனிடம், தலைவன், 'கொல்லிமலையிலே தெய்வத்தால் செய்யப்பட்ட பாவை போன்றவளாகிய தலைவி, என்னைக் கொல்லக் கருதி, அமையாத நோயினை எனக்கருளியதால், நான் துன்புறுவதைக் கண்டும், எனக்கு உதவி செய்யாமல்

நீ இருப்பதைக் கண்டு யான் உன்னை நோகேன் ஊழ்வினையையே நோவேன்' கூறினான் [நற்.185:1].

பிரிவிடை வருந்தும் தலைவிக்குத், தோழி, ஆறுதல் கூறுவாளாய்த், 'தோழியே, நீ ஏன் அழுது துயருறுகின்றாய்? நின் காதலர் பிரியார்; பிரிந்தாலும் நோயைப் பொறுப்பாரல்லர்; நின்மீது பெரிதும் அன்புடையர்; தான் சென்ற பொருள் முற்றுப்பெறாவிடினும் நீட்டியாது உடனே வருவர்; என்று கூறினாள் [நற்.208:6]. தோழியின் வன்புறைக்குத், தலைவி, எதிர்மொழிதலாக, 'இரவும் வந்துவிட்டது; வாவலும் பறக்கும்; ஆந்தையின் சேவலும் தன் பெடையை அழைக்கும்; தலைவர் குறித்த பருவமும் கழிந்தது; இத்தகைய இரவிலே தமியளாகிய என்னை நோயோ வருத்துகின்றது; அன்றிலின் குரலும் கேட்கின்றது; நான் எவ்வாறு ஆற்றுவேன்' என்றாள் [நற்.218:9]. தலைவன் சிறைப்புறமாகத், தலைவி, தோழிக்குக் கூறுவாளாய்த், தோழியே! எனக்குண்டாகிய நோயும் அளவுகடந்து உள்ளது; என்னுடம்பும் தீயைப்போன்று வெப்பமுடைத்தாயிற்று; அதனால், தலைவரது மலையிலிருந்து வரும் காற்றில், இவளது உடலைத் தீண்டுபடி செய்தால், இவள் நோய் நீங்குவள், என்று நரகம் போன்ற நெஞ்சத்தையுடைய என் அன்னைக்கு உரைப்பாயாக' என்று கூறினாள் [நற்.236:1]. தோழிக்குத், தலைவி அறத்தொடு நிற்பாளாய்த், தோழியே, அசோகந்தளிர் போன்ற எனது மேனி பசலை பாய்ந்து அழகு கெட்டதைக் கண்டும், தலைவருக்கோ எனது துயரத்தை அறியாத அன்னைக்கோ, இவள் நோய் நீங்குவள், என்று துயரத்தை அறியாத அன்னைக்கோ இவள் நோய் தணியும்வழி இதுதான் என்பதை உரையாத நீ மிகவும் கொடியை' என்று கூறினாள் [நற்.244:6]. வரையாது வந்தொழுகும் தலைவன் கேட்பத், தலைவி ஆற்றாளாய்த், தோழியிடம், தலைவர் எனக்கு அருளாமையின் என்னழகு கெட்டதால், ஊரார் தூற்றும் அலர்மொழி நான் கொண்டிருக்கின்ற நோயைக் காட்டிலும் துன்பத்தைத் தந்தது', என்று கூறினாள் [நற்.272:10]. பிரிவிடை வேறுபட்ட தலைவி, தோழியிடம், 'தலைவருக்காக யான் படுகின்ற நோயினையுங்கடந்து அவருக்காக இரங்கவும் மாட்டேன்; அவரை வெறுக்கவும் மாட்டேன்; அவர் மீண்டும் வந்து எனக்கு அருள் புரிவராயின் அதனை ஏற்றுக் கொள்வேன்' என்று கூறினாள் [நற்.275:7]. தலைவன் வரையாது பொருள்வயிற் பிரிந்ததனால் பேதுற்ற தலைவி, வண்டிற்குக் கூறுவாளாய், 'வண்டே, அறநெறியிலே செல்லாத நீ மிகவும் கொடியை; நீ நினது பெடையுடன் கூடிக் களிக்கின்றாய், சுரங்கடந்து சென்றுள்ள எனது தலைவரிடம் சென்று எனது நிலையையுரைத்து விரைவில் வருமாறு செய்தாயல்லை; நினது மெய்யைப் போலவே நினது அறிவும் கரிய நிறமுடையதோ? யான் நோயினாலே அழிவுற்று இறப்பேனாக, நீ நீடுவாழ்க' என்று கூறினாள் [நற்.277:1]. தலைவன் சிறைப்புறத்தானாகத், தோழி, தலைவியிடம், 'நினக்கேற்பட்டுளள் அரிய நோயானது தலைவனால் வந்ததென்றறியாது, அன்னை வெறியாட்டெடுக்க முருகவேளால் இத்துன்பம் தீரினும் நல்லதுதான்; வெறியாட்டெடுக்காமல் அன்னை இற்செறித்தலால் தலைவனுடன் உள்ள நம்தொடர்பு கழிந்துவிட்டது போலும்', என்று கூறினாள் [நற்.282:3]. தலைவன் கொண்டு சென்று, மணம்புரிந்து, இல்லில் வாழும் தலைவியின் கவினைக் கண்டு, தோழி, 'தீயையும், வளியையும் விசும்பு பயந்ததைப் போலத், தலைவனுடைய மார்பு, நினக்குக் களவில் நோயையும், கற்பில் இன்பத்தையும் தருகின்றது', என்று கூறினாள் [நற்.294:2]. தலைவன் சிறைப்புறத்தானாகத், தோழி வரைவு கடாவுவாளாய்த், தலைவியிடம், 'தலைவனுடைய மார்பினை உரிமையாகப் பெறாத காரணத்தால் நினக்கேற்பட்டிருக்கின்ற அரியநோய், அன்னை வெறியாட்டெடுத்து முருகவேளின் பலியால் தணிவதாயின், இதைவிடக் கொடியது வேறில்லை; என்று கூறினான் [நற்.322:9]. சேட்படுக்கப்பட்டு ஆற்றானாய தலைவன், தோழி கேட்கும் படியாகத் தன்நெஞ்சிற்குக் கூறுவானாய், 'நெஞ்சே, தலைவியின் உருவெளித்தோற்றம் என் நினைவில் தோன்றி என் நோயை மிகுதியாக்குகின்றது. அத்துன்பம் தீருவதற்கு மடலேறுவதைக் காட்டிலும், அத்துன்பமிகுதியால் இறந்து போதல் நல்லதல்லவா' என்று கூறினாள் [நற்.377:9]. வரைவு கடாவுவாளாய்த், தோழி, தலைவனிடம், 'நினது மார்பினால் வருந்தப்பெற்ற தலைவியது நோயை, யான் யாரிடத்து நொந்து கூறுவேன்; யான் பலமுறை கூறியும் நீ அருளாய்' என்று கூறினாள் [நற்.396:8]. பிரிவிடை ஆற்றும் தோழிக்குத், தலைவி, 'தலைவர் குறித்துச் சென்ற பருவமும் கடந்துவிட்டது; தோள் வாடியது; வழியைப் பார்த்துப் பார்த்துக் கண்ணொளியும் மங்கியது; எனதறிவும் மயங்கியது; எனது நோயும் காடேறிச்சென்றது; மாலைப்பொழுதும் வந்துவிட்டது; சாவதற்கஞ்சேன்; ஆனால் மறுபிறவியில் வேறுபிறவியாக (விலங்கு முதலிய) ஆய்விட்டால் என் காதலனை மறக்க நேருமே என்றுதான் அஞ்சுகிறேன்', என்று கூறினாள் [நற்.397:5].

தலைவியின் வேறுபாடு கண்டு வெறியெடுப்புழித், தோழி, செவிலியிடம் அறத்தொடு நிற்பாளாய்', அன்னையே, இவளுடைய நோய் தெய்வத்தால் ஆயதெனின், காதலனுக்காக இவளுடைய வளைகழன்று, தோள் மெலிவது எதற்காக! என்று கூறினாள் [ஐங்.28:1]. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனைத், தோழி வாயில் மறுப்பாளாய், 'நின்னுடைய விரிந்த மார்பு இவளுடைய வேட்கை யாலுண்டாகும் நோய்க்குப், புளிங்காயை நினைய வாய் நீருறுமாறு போல், இவளுக்கு நினையும் பொழுதெல்லாம் பயன்தருவதாக இருந்தது' என்று கூறினாள் [ஐங்.51:4]. பரத்தைமைத் தலைவனுக்கு வாயில் மறுத்த தலைவி, 'தலைவன் பகற்பொழுதிலும் நினைவுமிகுதற்குக் காரணமான தீர்வரிய நோயைச் செய்தனர், என்று வாயில் வேண்டியோரிடம் கூறினாள் [ஐங்.95:4]. ஒரு காதலன், தன் காதலியைக் குறித்து, அவளால் எனக்குத் தரப்பட்ட நோய்க்கு,

அவளுடைய தோள்களே எனக்கு மருந்தாயின', என்றாள் *[ஐங்.99:4]*. வரைவிற்கு வரும் தலைவனின் தேரினைக் காட்டித், தோழி, செவிலிக்குக் கூறுவாளாய், 'அன்னையே, தலைவியின் நோய்க்கு மருந்தாகிய தலைவனின் தேர் இதோ வந்துவிட்டது' என்று கூறினாள் *[ஐங்.101:5]*. ஆற்றுவிக்கும் தோழிக்குத், தலைவி, 'தோழியே, தலைவரின் பொருட்டு எனது நெற்றி பசலை பாய்ந்து, ஒளி மழுங்க, அவரை விரும்பிய நெஞ்சம் இடையறாத நோய்க்கண் வீழ்ந்தது', என்று கூறினாள் *[ஐங்.161:4]*. தலைவியின் மெலிவு நோக்கி அன்னை வெறியாட்டு எடுத்துழித், தோழி அறத்தொடு நிற்பாளாய், 'அன்னையே, தலைவிக்கு வந்திருக்கின்ற நோய் வெறியாடலில் தணிதல் கூடுமாயினும், அதைவிடத் தலைவி, தலைவரின் குன்றத்தை நோக்கித் தணிதற்கும் உரித்து', என்று கூறினாள் *[ஐங்.210:5]*. தோழி, அறத்தொடு நிற்க வேண்டுமென்று தலைவிக்குக் கூறுவாளாய்த், 'தோழியே, அன்னையும் நினது துயரைக்கண்டு அறியாமல் மயக்கமெய்தினள்; ஆதலால், தலைவரால் தரப்பட்ட நினது நோயினை நம் தாய் அறியாமல் மறைத்தல் நமக்குத் தீமையை விளைக்கும்' என்று கூறினாள் *[ஐங்.242:5]*. தலைவியின் பொருட்டுச், செவிலித்தாயிடம், தோழி அறத்தொடு நிற்பாளாய், 'அன்னையே, தலைவி அடைந்த நோயினை அறியாயாய் வேலனை வினவுகின்றனை; வேலனும் தெய்வக்குறையென்றே கூறி வெறியாட்டெடுப்பன்; நீயும் அறியாமையினால் அதனையே மெய்யென நம்புவை' என்று கூறினாள் *[ஐங்.243:4]*. வரையாதொழுகும் தலைவன் சிறைப்புறத்தானாகத், தோழி, தலைவிக்குரைப்பாளாய்த், 'தோழியே, நம் தலைவர் தந்த நோய் காரணமாக அன்னையின் தூண்டுதலால் வேலன் வெறியாடற்குரிய பொருள்களைக் களத்தில் நிரப்பினன்; இனி நாம் யாது செய்வோம்' என்று கூறினாள் *[ஐங்.246:6]*. வரையும்பொருட்டு வந்த தலைவனைக் குறித்துத், தோழி, தலைவியிடம், 'தலைவருடன் கூடிக்களித்த பக்க மலையினைக் காணுந்தொறும் நீ அடையும் நோயினைக் கருதி நமது தலைவர் வரைய வந்துள்ளதைக் காண்பாயாக', என்று கூறினாள் *[ஐங்.270:4]*. தலைவன் சிறைப்புறத்தானாகத், தோழி, தலைவிக்குரைப்பாளாய், 'நம் தலைவர் நாம் மறத்தற்கியலாத நோயை நமக்கு வழங்கிக், கண்டோர் மேலும்மேலும் காணும்படியான நமது பெண்மை நலத்தைக் கவர்ந்து கொண்டனர்', என்று கூறினாள் *[ஐங்.278:4]*. வினைமுற்றி மீண்டும் வரும் தலைவன், தேர்ப்பாகற்குக் கூறுவானாய், 'வலவனே, தேரை இன்னும் விரைவாகச் செலுத்துவாயானால் என் காதலியின் ஒழித்தற்கரிய நோயினை அகற்றுதல் எனக்கு எளிது', என்று கூறினான் *[ஐங்.425:4]*. பாசறைக்கண் தலைவன், தன் நெஞ்சிற்குக் கூறுவானாய், 'வேந்தன் போர் தணிந்து நாட்டிற்கு மீள்வானாக; நான் நெட்டுயிர்ப்புக் கொள்ளும்படியான என் நோய்கெடும்படி, என் காதலியின் இளமுலை மேல் என் கண்கள் துயில்வனவாக என்று கூறினான் *[ஐங்.450:3]*. பிரிந்துறையும் தலைவன், தலைவி விடுத்த தூதனாகிய பாணனிடம், 'பாணனே, எனது காதலி யான் காலம் நீட்டித்தால் என்மீது கொடுமை தூற்றி வாடி, என்னை மாறுபடவுணர்ந்து, நோய் மிகுதலானே மெய்சுருங்கி நின்னிடத்தில் கூறி விடுத்த செய்தியை விரைந்து கூறுக' என்று கேட்டான் *[ஐங்.478:3]*. வினைமுற்றி மீளும் தலைவன், தேர்ப்பாகற்குக் கூறுவானாய்ப், 'எம் காதலியை இன்றே போய் உயக்கோடல் வேண்டும்; மேலும், எம் நோய் அகலவும் குதிரைகளை விரைந்து செலுத்துவாயாக' என்று கூறினான் *[ஐங்.481:2]*.

பொருள்வயிற் பிரியும் தலைவனைத் தடுக்கும் பொருட்டுத், தோழி கூறுவாளாய், நினது பிரிவை யான் கூறிய அளவிலே, பொறுக்கும் அளவில் நில்லாத நோயினாலே தனது நுதலினது அழகை நினது காதலியிழந்தாள்', என்று கூறினாள் *[கலி.3:4]*. வினைவயிற் பிரியும் தலைவனிடம், தோழி, நீ பகைவர் தந்த நாட்டைக் காக்கப்பிரியின், இவளை, வலிமையான நோய் அடுகையினாலே அழகுகெட இறந்து போவாளே' என்று கூறித், தடுத்தாள் *[கலி.17:9]*.

பருவம் வந்தும் காதலன் வரவில்லையே என்று கவன்ற தலைவிக்குத் தோழி, 'தோழியே, இளவேனில் பருவம் வந்துவிட்டதே; காதலர் வரவில்லையே என்று நோய் மிக்க நெஞ்சோடே வருந்தாதே; தேரில் தலைவர் வந்து விட்டார்', என்று கூறினாள் *[கலி.27:22]*. பிரிந்திருக்கின்ற தலைவனைக் குறித்துத், தோழியிடம், தலைவி, 'தோழியே, தலைவர் நம்மை நினையாராக இவ்விளவேனிற்காலம் பித்தேறச் செய்யக் காதல் நோயைப் பொறுக்கமுடியாமல் இவள் இறந்துவிடுவாளே, என்று நீ எண்ணும்படியாக, இக்காதல் நோய் பெருகியும் இன்னும் அவர் வரவில்லையே, அவர் நம்மிடத்தில் காட்டும் அன்புதான் என்ன பயனைத் தரும்' என்று கூறினாள் *[கலி.28:10,11]*. 'பூவினது அழகையிழந்த கண்கள், உறக்கத்தைக் கொண்டு ஆற்றியிராதவாறு, தனிமையால் உண்டான நோய் மிகுமாயின் தோழியே, அவர் நம்மாட்டுச் செய்யும் அளி என்ன பயனைத்தரும்', என்று பிரிந்திருக்கின்ற காதலனைக் குறித்துத், தலைவி, தோழியிடம் கூறினாள் *[கலி.28:19]*. மகளிருக்குக் கருப்பம் தங்கிய காலத்துப் பிறக்கும் வேட்கையாகிய நோய் இளமைக்காலத்து அழகைக் கெடுத்தது *[கலி.29:1]*. தோழியிடம், தலைவி, 'தோழியே, பிரிவுத்துயரைப் பொறுத்துக் கொள் என்று கூறுகின்றாய்; வாடைக்காற்று, மலர்களை அளைந்து வந்து பிரிந்தோர்க்கு நோய் செய்தற்குக் காரணமான இளவேனில் நாளின்கண்ணே, வருத்தத்தைத் தருகின்றதே; என் செய்வேன்' என்றாள் *[கலி.29:13]*. பாணன், பாசறைக்கண் உள்ள தலைவனிடம் சென்று, 'இளவேனில் வருகையினாலே மீளாத நோயிலே அழுந்திய நின் காதலி, நின் அடிகளைப் பகைவர் நடுங்குவதைப் போன்ற நடுக்கமெய்தினள்; அவள் அழகு பெறுமாறு நினது தேரைப்பூட்டுவாயாக' என்றான் *[கலி.30:18]*.

இளவேனிலை நொந்து கொள்ளும் தலைவியைத், தோழி, 'தோழியே, இவ்வேனிலானது பிரிந்தவருடைய நோயைப்போக்கும் மருந்தாகவும். நின் காதலனின் தூதாகவும் வந்துள்ளது; அதனை வாழ்த்தி வரவேற்போம் வா', என்று தோழியிடம் கூறினாள் *[கலி.32:14]*. பருவங்கண்டுழித் தலைவி, இளவேனிற் பருவத்தும் தலைவர் வந்திலர்; ஆதலார் என் நோய் இனி, மேலும் மேலும் பெருகும்' என்று தோழியிடம் கூறினாள் *[கலி.33:21]*. பிரிவிடை வேறுபட்ட தலைவியிடம், தோழி, 'தோழியே, நினது நெஞ்சினுடைய நோய் கூறி வருந்தாதே; கண் உறுகின்ற வருத்தத்தைக் கைகள் நீக்கினாற்போலத் தான் கூறிச்சென்ற பருவம் தவறாமல் தலைவர் குதிரையில் வந்துவிட்டார்' என்றாள் *[கலி.34:21]*. பிரிவிடை வருந்தும் தலைவியிடம், தோழி, 'தலைவரை நினைக்கும் போதெல்லாம் நெஞ்சழியும் நினது காதல் நோய் தீரத், திண்ணிய தேரையும், பொதியிலையுமுடைய பாண்டியனது தப்பாத மொழியைப் போல, நின் காதலரும் குறித்த நாளிலே வந்துவிட்டார், என்று கூறினாள் *[கலி.35:22]*. பிரிவிடை வருந்தும் தலைவி, தோழியிடம், 'என்நெஞ்சு, மலையிடத்தே போன தலைவருடைய வருகையை நச்சுகையினாலே, தோன்றிய நோயாகிய தீயால், என்னுடைய முலையெல்லாம் காந்தும்' என்று கூறினாள் *[கலி.36:16]*. தலைவியின் களவொழுக்கத்தை யறிவதற்காகத், தலைவியிடம், தோழி, 'தோழியே, ஒப்பில்லாத ஆடவன் ஒருவன் கண்ணியையுடையனாயும், வில்லினையுடையனாயும் யானை முதலியவற்றின் அடியைத் தேர்வான் போலே வந்து, என்னைப்பார்த்துத், தனக்குற்ற நோயைக் கூறாமல், குறிப்பாலே யான் உணரச் செல்வான்; யானும் காதலால் துயருறுகின்றேன்' என்று படைத்து மொழிந்தாள் *[கலி.37:5]*. பிரிந்த தலைவனுடைய மலையை வாழ்த்தி, உலக்கைப்பாட்டில், 'மருந்தில்லாத நோயைச் செய்தவனுடைய பயன் தருகின்ற மலையை வாழ்த்திப்பாடுவோம் வா', என்று தலைவி தோழியிடம் கூறினாள் *[கலி.40:6]*. 'தளிரை யொத்த மேனியின் அழகுகெடும்படி நினக்கு நோயைச் செய்தவனுடைய ஏறுதற்கரிய மலையைப் பழித்துப்பாடுவோம் வா', என்று, தோழி, தலைவியை அழைத்தாள் *[கலி.40:20]*. உலக்கைப்பாட்டில், தலைவனைப் பழித்துப்பாடும் தோழியை நோக்கித், தலைவி, 'பரிசிலர்க்குத் தேரையளிக்கும் வள்ளலாகிய நம் தலைவர், தம் மலையின் சுனைநீரினும் மென்மையர் ஆதலின், நம்மை, வரையாமல் நமக்கு மிகுகின்ற நோயைத் தருவரோ' என்று உயர்த்திப் பாடினாள் *[கலி.42:19]*. வரையாது வந்தொழுகும் தலைவனிடம், தோழி, தலைவியின் பண்பினைக் கூறுவாளாய், நீ, அருளில்லாமையால் தலைவிக்களித்த நோயின் துயரைச் சேரியர் அறிந்தால் தூற்றுவரே என்று அவர்களுக்கு மறைத்தும், நோய் வருத்துகையினாலே துன்புற்றுங்கூட, என் தோழி, நின் அருளற்ற செயலை ஆயத்தார் பண்பில்லாதவன் என்று தூற்றுவரே என்பதற்காக ஆயத்தார்க்கு மறைத்தும் ஒழுகுகிறாள், என்று கூறினாள் *[கலி.44:11,14]*. தலைவனிடம் நெருங்கி வரைவு கடாவும் தோழி, தலைவனை இடித்துரைப்பாளாய், 'என் தோழிக்கு உயிர்போகும்படியான நோயைக் கொடுத்து அதனால் அவளுடைய தோளின் அழகு கெடும்படி செய்தது, நினது மலையின் மூங்கிலை ஒத்திருக்கின்றதே என்ற பொறாமையினாலா', என்று கேட்டாள் *[கலி.45:14]*. அல்லகுறிப்பட்டுத் தலைவன் மீள, அதனைத், தலைவி, தன் பிழையாகத் தலைவன் கருதுவன் என நோய் மிக்குப் புலம்பத், தோழி, தலைவனிடம் சென்று, அதை என் பிழையாக்கித் தலைவியை ஆற்றுவித்தாயானால், அவளிடம் உள்ள நோய் நீங்கும் எனத் தோழி, தலைவனிடம் கூறினாள் *[கலி.46:23,27]*.

பிரிவுத்துயரால் வாடும் தலைவி நினது அன்பைப்பெற்றால், மழையில்லாமல் வாடிய தினைப்பயிர், மழை பெற்றதும் தளிர் ஈன்று அழகு பெறுவது போல், கெடாத நோயாலே வருந்துகின்ற என் தோழியின் வருத்தம் நீங்கும், எனத், தோழி, தலைவனிடம் கூறினாள் *[கலி.53:21]*. தான் காதல்கொண்ட கன்னியிடம் ஒரு காதலன், 'குழையினையுடையாய், மாந்தளிரையொத்த நிறத்தினை யுடையையாய் வருத்துவதோடு, பாண்டியன் பகைவரின் மார்பில் தைத்த அம்பைவிட நோயைச் செய்தல் கொடுமையினும் கொடுமையல்லவா', என்றான் *[கலி.57:15]*. ஒரு இளங்கன்னியின் அழகில் கட்டுண்ட தலைவனொருவன், 'வருத்தத்தைத் தரும் நோயைக் கொடுத்து என் உயிரைவாங்கிக் கொண்டு போகின்றவளே, உன்னிடத்துத் தவறில்லையாயினும். பிறருக்கு நோயைத்தரும் உன்னழகை யறிந்தும், செல்வச்செருக்கால் மேலும் ஒப்பனை செய்து வெளியே போகவிட்ட உன் சுற்றத்தார் தவறுடையர் அல்லரோ' என்று அவளிடம் கூறினான் *[கலி.58:7,9]*. ஒழுக்கங்களை மறக்கும்படியான நோயாகிய மயக்கத்தை எனக்களித்து, அதனை இளமையால் அறியாமற் போகின்றவளே, உன்னிடத்தில் தவறில்லையாயினும், நிற்கமாட்டாது இளைக்கும் நுண்மையான நினது இடையின் அழகை அறிந்திருந்தும், மேலும் நினக்கு ஒப்பனைகள் செய்து வெளியே போகவிட்ட நின் சுற்றத்தினர் தவறுடையர் ஆகாரோ' என்று தலைவியிடம் தலைவன் கூறினான் *[கலி.58:11]*. நான் வாய் திறந்து என் நோயைக் கூறியும் அறியாது போகின்றவளே, நின்னிடத்தில் தவறில்லையாயினும், ஒழுக உயிரை வாங்காது, விரைய உயிரைவாங்கும் நின் வடிவை அறிந்திருந்தும், அதற்கும் மேலே, நின்னை அழகுறுத்திப் போகவிட்ட நின் சுற்றத்தினரே தவறுடையர்' என்று தலைவன் தலைவியிடம் கூறினான் *[கலி.58:15]*. 'குழையினையுடையாய், நான் ஒறுப்பது நின்னையன்று; நின் சுற்றத்தாரை; என் நோய் பொறுக்கமுடியாமற் போனால் மடலேறி என் மீது பழியுண்டாக்குவேன்', என்று தலைவன் தலைவியிடம் கூறினான் *[கலி.58:20]*. காதலை யறியத கன்னியிடம், காதல் கொண்ட ஒருவன், 'தலைப்பாளை என்னும் அணியைத் தலையில் அணிந்தவளே, ஒளிகெடும்படியான இவனுடைய

நோய்தான் யாதென்று கேட்கும் அருள் இல்லாதவளென்று அயலார் நின்னைப் பழிக்குங்கால், நேன்புநோற்றுப் பிற மனைக்கண்ணே ஐயமேற்றுப் பாடிப் பெற்றவற்றைப் பிறர்க்குக் கொடுத்தலாலுண்டாகும் பயனைப் பெறுவையோ' என்று கேட்டான் *[கலி.59:14].* 'தொடியினையுடையாய், நான்படும் நோயைக்கண்டு, பெருமூச்சுவிட்டு இவனுக்குற்றது தான் யாதோ என்று கேட்காத அருளிலாளிவள்" என அயலார் பழிக்கும்போது, பாவைமணம் செய்விக்கும் நோன்பினைச் செய்து, நீ நிலாச்சோறு ஆயத்திற்கிட்டுக் கொண்டாடும் அந்நோன்பினால் பயனுறுமோ' என்று தலைவியைத் தலைவன் கேட்டான் *[கலி.59:18].* தலைவனுக்குக்குறைநேர்ந்த தோழி, தலைமகளோடு பேசி அவனது குறை நயப்பக் கூறுவாளாய்க், 'தோழியே! களிற்றை யொத்த ஒருவன் மனமுடைந்து, நின்னை நோக்கித்தொழும்; தொழுதபிறகு என்னிடம் வந்து, உலகத்தில் கண்ணுக்கு நிறைந்த அழகினையுடைய மகளிர் கண்டவர்க்கு நோய்மிகும்படி செய்து உயிரைப்பறித்தல் போன்ற துயரைச் செய்தல் பெண்டன்மையன்று, எனக்கூறிக், கண்ணும் உருக நின்று நடுங்கினான்', என்று கூறினாள் *[கலி.60:6].* 'நல்லாய், மையுண்ட கண்ணினையுடைய உன்தோழி, எனக்களித்த இந்நோய் என் உயிரைவாங்குகிறது; அதற்க மருந்து உன் முக அருள்தான் என்று கூறுகிறான்' என்று தலைவனுக்குக் குறை நேர்ந்த தோழி, தலைவியிடம் குறை நயப்பக் கூறினாள் *[கலி.60:18].* தலைவனுடைய குறை நேர்ந்த தோழி, தலைவியைக் குறை நயப்பிக்கக் கூறுவாளாய்ப் 'பூங்குழையினையுடையாய், யான் தொய்யில் குழம்பு வேண்டுவது போல அவனிடம் செல்கின்றேன்; நீயும் அங்கு வந்து, இவ்விடமே இருப்பிடமாகக் கொண்டாயோ என்று என்னைத்தேடி வந்தாய் போலக் குறியிடமே செல்; அப்பொழுது நீ அவனுடைய நோய் தீர்க்கும் மருந்தாவாய்' என்று தோழி தலைவியிடம் கூறினாள் *[கலி.63:10].* பரத்தையிடமிருந்து வந்த தலைவனிடம், தலைவி ஊடி 'என்மேனி கனலுதற்குக் காரணமான என் நோய்க்கு மேலேயும், நீ பரத்தையரோடு நீராடுகிறாய் என்ற பழிச்சொல்லைவிட, விடியல் மயக்கத்தினால் பரத்தையின் மாலையையும் அணிந்து வந்து நிற்கிறாயே! அது மேலும் பெரியபழியாயிற்று! என்று கூறினாள் *[கலி.66:13].* பரத்தையிற் பிரிந்து வந்து தலைவனிடம், தலைவி ஊடிச் சினந்து 'நினது பரத்தமையைப் பொறுத்துக் கொண்டு நெஞ்சழிந்து நின்னுடன் வாழ்வதைவிட, என்னை வாட்டும் நோயிலே கிடந்து உழலுதல் எனக்கு மிகவும் எளிது' என்று கூறினாள் *[கலி.72:26].*

பரத்தையிற்பிரிந்து வந்த தலைவனிடம், தலைவி சினந்து 'நின்னை ஊரார் பழிப்பரே என்பதற்காக நான் மறைத்து வைக்கும், என் நோய், என்னால் அடைத்து வைக்க முடியாதபடி மிகப், பரத்தையின் கூந்தலின் மணம் நாறுகின்ற மார்போடு என் இல்லத்திற்கு நீ வருவது, ஞாயிறு வர மலர்ந்து, அது மறைய வாய்மூடும் தாமரை மலரைப் போல, இவள் நலம், இவளோடு நான் தொடர்பு கொண்டால் மலர்ந்து, தொடர்புவிட்டால் கூம்பிவிடும், என்று, எண்ணும் உன் தருக்கின்விளைவோ' என்று கூறினாள் *[கலி.78:17].* பரத்தையிற்பிரிந்து வந்த தலைவன் கேட்கும்படியாக, ஊடல் கொண்ட தலைவி, தன் புதல்வனிடம் கண்டவர் காமுறும் காட்சி அழகினையுடையையாய், நீ அத்தா அத்தா என்று கூறும் நிலவு மழலைமொழி இனிக்கிறது; ஆனால், நுந்தையால் தம் பெண்மை நலத்தை இழந்த மகளிர் துன்பத்தைத் தரும் நோயைக் காண்பது இன்னாது', என்று கூறினாள் *[கலி.80:17].* பரத்தமைத் தலைவனிடம் ஊடிய தலைவி, தன் புதல்வனைக் குறித்துத், தோழியிடம், நம்முடைய நோயைத் தணிக்கும் மருந்தென எண்ணி நம் புதல்வனை எவ்வளவு பாராட்டினாலும் அவன் என் தோள் மீதிருந்து கொண்டே அத்தாஅத்தா என்றே தன் தந்தையை அழைக்கின்றானே; நாம் என் செய்வது' என்று கூறினாள் *[கலி.81:18].* தன் புதல்வனைக் கோவிலுக்குத் தோழியுடன் அனுப்பி வைத்த தலைவி, காலம் நீட்டித்து வந்த தோழியைக் காரணங்கேட்க, அதற்குத் தோழி காரணங் கூறுவாளாய்த், தோழியே, இவனுக்குத் தாயாம் தகுதி பெற்றாளொருத்தி, இவனைக் கண்டு, வாரி எடுத்து, அணைத்து, முத்தமிட்டுத் தன் நோயைத் தாங்கிக் கொண்டு, இவன் வனப்புற அணிகலன்களை அணிவித்து, மகனே, மகளிர் கண்கள் பசப்புற அவர்களுக்கு நோயைக் கொடுத்து வருத்தமுறச் செய்யும் என் தந்தையைப் போல், பரத்தனாய் ஆகாதே என்று கூறிவிடுத்தாள்' என்று கூறினாள் *[கலி.82:16,20].* நின்னினும் சிறந்தாளாகக் கருதப்படும் புதியவளொருத்தியின் இல்லிற்குப் புதல்வன் சென்றான் என்று, தோழி கூறியவுடனே, தலைவி, தன் புதல்வனை அச்சுறுத்தி, வருந்தி யான் நோய் மிகப் பருந்து, ஒன்றனைக் கவர்வது போல, உன் தந்தையைக் கவர்ந்து கொண்ட, இவளைப் போன்ற பரத்தையரில்லிற்குச் செல்லாதே' என்று கூறினாள் *[கலி.82:26].* தன் புதல்வனுக்குப் பரத்தையர் அணிகளை அணிவித்துவிட, அதைக்கண்ட தலைவியொருத்தி, நீயும் தவறிலை; நினக்குப் போட்டனுப்பிய பரத்தையும் தவறிலள்; பிரிவின் நோயில் உழல்வேனாகிய யானே தவறுடையேன்' என்று அழிந்து கூறினாள் *[கலி.84:40].* பரத்தைமையிற் பிரிந்த தலைவனின் தலைவி யொருத்தி, அவ் வருத்தம் நீங்கத், தன் புதல்வனுக்குப் பாலூட்டும்பொழுது 'உன் தந்தையின் பொய்ச்சூளை நம்பிய, மையுண்ட கண்களில், நீரொழுகும்படியாக மயங்குகின்ற நோய் மிகுதலாலே, துயிலாத நின் தாய்மார்களின் பங்குப்பால் இஃது உண்ணுவாயாக' என்றாள் *[கலி.85:26].* ஒரு தலைவி, தன் புதல்வனுக்கு அறிவூட்டுவாளாய், 'மகனே, பரிசிலர்க்கு விரும்பினவற்றை அளித்தலில் உன் தந்தையை ஒப்பாயாக; மகளிர்க்குக் காதல் நோயையளித்துத் துன்புறுத்தும் பரத்தமைக் குணத்தில் ஒவ்வாதே' என்று கூறினாள் *[கலி.86:24].* நான் யாதும் தவறு செய்திலேன், என்று கூறும் பரத்தமைத்

தலைவனிடம், தலைவி, 'பரத்தையொருத்தி தன் காதல் நோயையும், வடிவையும் மறைத்துக் கொண்டு, விடாது மழைபெய்யும் நள்ளிரவில் வந்து, உன் கதவைத் தட்டினாளே; அதனை நான் கண்டேனே, அது ஒன்று போதாதா, நீ செய்த தவற்றினுக்கு', என்று கூறினாள் *[கலி.90:5]*. குறளன் கூனியிடம், 'கலப்பையில் தைக்கும் படைவாள் போலே, முடங்கியும், மடங்கியும் தோன்றும் நினது கூனுருவம் பெற்ற அழகால், என்னால் பொறுக்க முடியாத நோய் செய்தவளே! நீ அருளினால் என்னுயிர் நிற்கும்; என்று கூறினான் *[கலி.94:11]*. காடைப்போர் கண்டு வந்தேன், என்று கூறிய பரத்தமைத் தலைவனிடம், தலைவி, நினக்கு அருள் செய்ய, நான் யார்; நினது நடிப்பிலே அகப்பட்டு நின்னால் கைவிடப்பட்ட நின் காடைகளெல்லாம் (பரத்தையரெல்லாம்) நோயில் அகப்பட்டு வருந்தும்; அக்காளை வருந்தாதபடி அங்கே செல்வாயாக' என்று கூறி ஊடினாள் *[கலி.95:32]*. பிரிந்திருந்த வேந்தனிடம், சான்றோர் சென்று, அவனுடைய மனைவிபடும் வேதனையைக் கூறுவாராய், 'வேந்தே, நினது ஆட்சியின் நடுவுநிலைமையை உலகமே புகழ்கிறது; ஆனால், உன் மனைவிக்கு மட்டும் அவ்வருளாட்சி கிடையாதோ? இவளைக் காமநோய் வருத்துகையினாலே, தான் உயிர்வாழும் நாளை வெறுக்கும் அவளுக்கு அருளுவாயாக' என்று கூறினர் *[கலி.99:13]*.

ஆயர் மகனையும் காதலிக்கின்றாய்; தாய்க்கும் மிகவும் அஞ்சுகின்றாய்; அவ்வாறாயின் நீ உற்ற நோய்க்கு மருந்து அரிதென்று' தோழி, தலைவியிடம் கூறினாள் *[கலி.107:26]*. காமஞ்சாலா இளமையோள்வயின் காதல் கொண்ட தலைவனொருவன், 'இவள்தான் நான் வருந்தும்படியாக எனக்கு நோயை அளித்துச் செல்வதல்லது, அதனைப் போக்கும் மருந்தாக,இராள்', என்று கூறினான் *[கலி.109:21]*. தோழியைத், தலைவி அறத்தொடு நிற்குமாறு கூறுவாளாய்; 'தோழியே, தலைவனிடம் சென்று ஆயர்முறையாகிய கொல்லேற்றைத் தழுவுமாறு கூறிவிட்டு, எந்தைக்கும் யாய்க்கும் என் காதலைக் கூறி எனது நோயைக் களைவதற்கு ஏற்பாடுகளைச் செய், என்று கூறினாள் *[கலி.111:24]*. 'என் சுற்றத்தார் உன்னுடன் சொல்லாடக்கூடாது, என்று கூறியுள்ளனர் என்ற தலைவிக்குத், தலைவன் கூறுவானாய்க், 'காதல் வேட்கையைத் தரும் கண்களால் நோயைச் செய்யும் மகளிரைக் கண்டால் விடாதே; அவரால் ஆகிய வருத்தத்தை அவரைக் கொண்டே போக்கிக் கொள், என்று என் சுற்றத்தினர் கூறியுள்ளனர்; ஆகவே, உன்னை போகவிடேன்' என்றான் *[கலி.112:5]*. ஒரு தலைவியிடம், தலைவன் 'மென்மையான தோளினையும், சுழலுதலையுடைய கண்ணினையும் அழகினையுமுடைய நல்லாளே, நீயளித்தமையால் யான் வருந்தும் நோய்க்கு உய்யும் வழியைக் கூறிப், பின் போ' எனத் தடுத்தான் *[கலி.113:3]*. பிரிந்துறையும் தலைவி, மாலைக்காலத்தை நோக்கி, 'எனக்குப் பற்றுக்கோடாய என் தலைவர் என் வருத்தத்தைப் போக்காத காலத்தே, முன்பே, வெந்ததொரு புண்ணிலே, பின்பு, ஒரு வேலைக்கொண்டு செருகுவாரைப்போல, மெய்வெதும்புதற்குக் காரணமான நோயிலே அழுந்தியிருக்கின்ற என்னையுள்ளி, உள்ள அறிவையும் கலக்க, வந்தாயோ' என்று கேட்டாள் *[கலி.120:18]*. காப்புமிகுதிக் கண் ஆற்றாத தலைவி, தலைவன்பால் சென்ற நெஞ்சினை நோக்கி, 'மடநெஞ்சே, கங்குலில் ஒரு மருந்தாலும் போக்கமுடியாத நோயைச் செய்தவனிடத்தே போனாய்; போன நீ அவனைக் கண்டாயோ, காணாதிருந்தாயோ, என்றும், மாலைக்காலத்தே வருத்தத்தையுடைய நோயைச் செய்தவனிடத்தே போனாய்; போன நீ, அவனைப் புல்லினாயோ, புல்லாதிருந்தாயோ' கூறு என்றாள் *[கலி.123:7,10]*. மடநெஞ்சே, பொறுத்தற்கரிய வருத்தத்தையுடைய நோயைச் செய்தவனைப் பெற விரும்பி இரவிலும், பகலிலும் துயிலைக் கைவிட்டுக் கரிய கழியில் ஓதமானது போவதும், வருவதுமாய்த் தடுமாறும் தன்மைபோல, நீயும் வருந்தினை; நீ மிகவும் இரக்கத்திற்குரியை', என்று தலைவி, நெஞ்சிடம் அழிந்து கூறினாள் *[கலி.123:17]*. தலைவியது ஆற்றாமையைக் கூறித், தோழி, தலைவனை வரைவு கடாவுவாளாய், 'தலைவரே, பலப்பல நினைந்து வருந்தும் நெஞ்சாலே சுழலுதலையுடைய நோயிலே அழுந்தும் என் தோழியினுடைய மதிபோன்ற முகம் விளங்கும்படி, நின் தேர் குதிரையைப் பூண்பதாக', என்று கூறினாள் *[கலி.126:20]*. தலைவியது ஆற்றாமை கூறித், தலைவனிடம், தோழி வரைவு கடாவுவாளாய், 'என் தோழியின் கண்கள் அழும்படி வருத்தத்தைக் கொடுத்து, அவளை நீ துறந்தது, உன்மனம் நடுங்குதற்குக் காரணமாய நினது நோயைத் தீர்ப்பதற்காக, நீ குறித்திருந்த மணல்மேட்டிற்குத் தவறாமல் வந்தாளே, அதற்காகவா' என்று கேட்டாள் *[கலி.127:7]*. தலைவனை வரைவு கடாவுந் தோழி, 'சேர்ப்பனே, ஞாயிறு சுடுமென்று கருதி, ஓங்குகின்ற திரை, தன் கரையில் உள்ள அடும்பை ஒடிவந்து காப்பது போல, வளைகள் கழலும்படியான இவளுடைய வருத்தத்தையுடைய நோய் தீரும்படியாக விரைந்து வந்து வரைந்து கொள்' என்றாள் *[கலி.127:19]*. தலைவன் பிரிந்ததால், தலைவி மதிமயங்கிப் புலம்பும் நிலையைத், தலைவனிடம், தோழி கூறுவாளாய், என் தோழி, கடலைப்பார்த்து, என் தலைவன் என்னைத் துறக்க அதனால் நோய் என்னைச் சுட, என் வருத்தத்தைக் கண்டு, நீயும் வருந்தி முழங்குகின்றாயோ? அல்லது நீயும் காதலித்துத் துறந்தவனுக்காக வருந்துகின்றாயோ என்று புலம்புகிறாள்' என்றாள் *[கலி.129:10]*. பிரிந்திருந்த தலைவன் வரவும், தலைவியின் துயர் நீங்கின நிலையை வாயில்கள் தம்முள் கூறுவாராய், 'மாலைக்காலத்திலே வருத்தத்தையுடைய நோயிலே அழுந்தியிருந்த தலைவியைப், பாண்டியனுடைய படை செல்லச்செல்லப் பகைவர் படை ஒடுவது போலத் தலைவன் வந்து தொடத்தொட அவளுடைய பசலை ஒடியது' என்று

கூறினர் *[கலி.130:17]*. பிரிவினால் வருந்தும் தலைவியிடம், தோழி, 'முத்தையொக்கும் முறுவலாய், மாயாத நோயைச் செய்த தலைவனுடைய கொடுமையின் கூற்றினைச் சொல்லி நாம் பாடும் உயர்ந்த ஊசற்பாட்டை நீ ஒன்று பாடுவாயாக' என்றாள் *[கலி.131:23]*. பிரிவினால் வருந்தும் தலைவியின் துயரநிலையினைத், தலைவனிடம், தோழி கூறி வரைவுகடாவுவாளாய், 'தண்சேர்ப்பனே, மலருதிர்ந்த கொடி போல் தோன்றும் என் தோழி, நினது களவொழுக்கத்தை மறைத்து, மருந்தால் மாட்சிமைப்படாத நோயிலே அழுந்திக் கிடப்பது, அடும்பங்கொடி படர்ந்த மணல் மேட்டிலே அவளோடு நீ களித்திருக்குங்கால் நான் பிரியேன் என்று நீ கூறியதை அவள் நம்பியதன் பயனோ' என்றாள் *[கலி.132:19]*. பிரிவுத்துயர் தாங்காத ஒரு தலைவி, கடல் தன் துயருக்கு வருந்துவது போலக் கூறுவாளாய், எனக்குக் கேடில்லாத நோயைத் தந்தவரை நான் காணாமல் வருந்துவதோடு, பனிக்காலமும் சேர்ந்து என் அறிவை அழித்து வருத்த, அதைக்கண்ட கடல் என் அவலத்தை மெய்யிலே கொண்டது போலக் கூப்பிடுவதற்குக் காரணமென்ன' என்று கூறினாள் *[கலி.134:11]*. தலைவி, 'நான் நடுங்கும்படியான நோயைத் தந்து போனவர் எனக்கு அருளாததால், நான் துயருறப், பனிக்காலமும் சேர்ந்து வருத்த, அதைக்கண்டு நடுங்குகின்ற நோயிலே ஆழ்ந்து துன்புறுகின்ற என் நோய்க்காக மணற்குன்று தான் கரைந்து தாழ்வது போல இருப்பதற்குக் காரணமென்ன' என்றாள் *[கலி.134:15,17,18]*. வரையாது வந்தொழுகும் தலைவனிடம், தோழி வரைவு கடாவுவாளாய்ப், புன்னை மரத்தடியில் உன்னைப் புணர்ந்தவளை, நோய் மிகுமாறு கைவிடுவதால் வாய்மையையுடைய உன் வாழ்க்கை, பொய்யாய்ப் போகாதோ' என்றாள் *[கலி.135:10]*. தலைவனின் பிரிவினால் வருந்துந் தலைவி, தோழியிடம், 'தோழியே பிரியேன் என்ற அவருடைய சொல்லால், வருத்தும் நோய், அவருடைய வில்லினுங் கொடியதாயிருந்தது என்றும், அவருடைய பகைமையால் வருத்துவதைவிட நட்பில் எழுந்த அவருடைய தகுதிப்பாட்டால் வருத்தும் நோயல்லவா கொடியதாயிருந்தது என்றும், அவர் அன்பால் என்னை வயப்படுத்தி, எனது நோயைத் தன்மென்மையால் சுடுதலைத் தவிர தீயினால் சுடுவதில்லை; ஆனால், எனது நோயைத் தீயினால் சுடுவதைவிட மென்மையால் சுடுவது மிகவும் கொடிதாய் இருந்தது என்றும், அவர் இவ்வாறே நம்மை வருத்துவாரானால், அவரால் நமக்களிக்கப்பட்ட அந்நோயானது நம்மைக்கொன்றுவிடும்; நம் உயிரைக்காக்கும் மருத்துவராய் அவர் இருப்பது எப்பொழுதோ' என்றும் கூறினாள் *[கலி.137:12,17,20,22,28]*. தலைவி ஒருத்தியின்பால் காதல் வயப்பட்ட தலைவன் ஒருவன், தன் பாங்காயினார்க்குக் கூறுவானாய், அவள் தந்த நிறையழி காமநோயை நீந்தி, என்னுயிர் உப்புப்பாத்தியிலே கிடந்த உப்புப்பாவை, மழைத்துளியால் கரைந்து அழிவதுபோல, அழிந்துவிடும் என்றும், என்னுடைய உயிர் ஒள்ளிழையாள் தந்த நோயினால் நெருப்புப்பரந்த நெய்யுள்ளே கிடந்தமெழுகு உருகி அழிவது போல, அழிந்துவிடும் என்றும் கூறினான் *[கலி.138:15,21]*. மடலேறுகின்ற தலைவன், சான்றோர்க்குக் கூறுவானாய்ச், 'சான்றீர், மின்னல் கொடியைப் போல் தோன்றிய ஒருத்தி, எனது நெஞ்சைப்பிணித்து, எனக்களித்த நோயைத் தாங்க மாட்டாமல், மடலேறி அவள் செய்த கொடுமையைப் பாடுகிறேன் கேளுங்கள்' என்றும், என்னை மயக்கியவள் தந்த இம்மடன்மா, காமக்கடும்பகைக்கு,ஏமம்; காம நோய் தீரும் மருந்து; காமநோயாகிய நெருப்பினைத் தணிக்கும் நிழல், என்றும் கூறினான் *[கலி.139:10,18,30]*. மடலேறுவேனென்ற தலைவன், கண்டார்க்குக் கூறுவானாய், 'அரவு திங்களைத் தீண்டுவதைக் கண்ட சான்றோர், அத்துயரினைத் தீர்க்கமாட்டாராயினும், அதற்காக வருந்துவர்; ஆனால் இவ்வூாரோ, ஒருத்தியின் நோய் செய்யும் கண் வலையில் சிக்கி, அந்நோயினால் வருந்தும் எனக்கு, அதனைத் தீர்க்கமாட்டாராயினும், கண்ணோட்டமும் செய்திலர்; என் நோய் நீங்கும்படி, தலைவியை அருளச் செய்வீராயின், நுங்கட்குப் பேரறமாம்', என்று கூறினான் *[கலி.140:19(2),32]*. மடலேறுவோன், சான்றோரிடம், 'என் காதலி எனது கண்களிலிருந்தும் மறைந்தவுடனே பொறுக்க முடியாத நோயைக் கொடுக்கின்றாள்; அவளுடைய குணம் எக்காலமும் இத்தன்மைத்தோ கூறுங்கள்', என்றான் *[கலி.141:15]*. தலைவனின் பிரிவினால் காதல் மீக்கூர்ந்த தலைவியொருத்தி, சான்றோரை நோக்கிச் 'சான்றீர், தலைவன் அளித்த நோய் என்னை நெருப்பாகச் சுட்டாலும், வெளித்தோன்றாமல் மறைத்துக் கொள்வேன்; அதுபோலவே, நோயினால் கொதிக்கும் கண்ணீரையும் வெளியே விடாது அடக்கிக் கொள்வேன்; அதற்குக் காரணம், கொதிக்கும் என் கண்ணீர்பட்டால் உலகம் அழிந்துவிடும் என்பதே', என்று கூறினாள் *[கலி.142:51.53]*. தலைவனைப் பிரிந்த தலைவியொருத்தி, காதல் மீக்கூர்ந்து, பலவாறாகப் பிதற்றித், தலைவன் தந்த நோயினாலே துன்புறுகின்றவளிடத்துத், அவன் வந்து அளி செய்தவுடன் பாண்டியனை நட்பாக்கிக் கொண்டவர் நாடு நலமடைவது போல, அவளும் இழந்த நலத்தைப்பெற்றாள் *[கலி.143:57]*. தலைவன் பிரிவினால் காதல் மீக்கூர்ந்த தலைவியொருத்தி, காற்றை நோக்கிக், காற்றே,கெடாத நோயைத் தந்து, என்னைக் கைவிட்டுப் போனவனை, ஞாயிற்றின் ஒளியாயும் இடமெல்லாஞ் சென்று தேடிப்பிடித்து எனக்குக்காட்டு; காட்டாயாகில், கொதிக்கும் என் கண்ணீரைத் தெளித்து, மண் மீதுள்ள என் மேனியெல்லாம் சுடுவேன், என்று கூறியும், கடலே, என்னைக் கைவிட்டுப் போனவனைத் தேடித் தருவையாயின் அதற்குக் கைம்மாறாக என்நோயைச் சொல்லி நினக்கு ஒரு பாட்டினைப் பாடுவேன் என்றும், மேலும், கடலே அவ்வறனில்லாதவன் என் கண்களுக்குள்ளே தோன்றக் கண்டதும் அவனைக் கைப்பற்ற அக்கண்களைத் திறந்ததும் ஓடிச்சென்று என் நெஞ்சில்புகுந்து கொண்டு எனக்கு

உறங்காத நோயைத் தருவான், என்றும், எண்ணித் துணிவும் அறிவிலாள் இவள் என்று இந்நோயுற்றறியாதார் என்னை இகழ்ந்து சிரிக்க, அவனைக் காதலித்த அன்று, பின்னால் இப்படியொரு துயர் வருமென்றறியின் அவனை முயங்கியிரேன், என்றும், கூறினாள் *[கலி.144:38,50,57,63]*. காதல் கைமிக்க தலைவியொருத்தி, 'ஊரிலுள்ளீர், இந்நண்பகற்காலம், என்னை நினையாது சென்ற காதலன் தந்த நோயால் வரும் குளிரை வேது கொள்வது போல் உள்ளது; உமக்கு எவ்வாறுள்ளது, கூறுமின், என்றும், நிலவைக் கான்ற திங்களே, என் காதலன் தந்த மனக்கலக்கம் உறுகின்ற நோய்க்கு நின்னைத் தவிர வேறுயாரும் மருந்தினைத் தரமுடியாது; ஊராரெல்லாம் நகைக்கும்படி என் உயிர் பிரியாதிருக்க நீ விரைந்து அவன்பாற் சென்று என் குறையை முடிப்பாயாக, என்றும், ஊரீர். நீவிர் என்னை இகழினும், என் தலைவன் என்னை இகழான்; அவன் என் நெஞ்சில்தோன்றுவதைவிடக் கண்ணில் தோன்றுவான்; நீவிர் கடமையாக ஏற்றுக் கொண்டு என் நோயைப் போக்க உதவுங்கள்', என்றும் கூறி நோயுடைய நெஞ்சிலே அடித்து அழுதாள் *[கலி.145:25,49,51,60]*. தலைவன் பிரிகையாலே காதல் மீக்கூர்ந்த தலைவியொருத்தி, ஊரீரே, என் காதலன் என்னைக் கைவிடுகையாலே பெருகி வந்த என்மேல் நிலைபெற்ற இந்நோய், வெப்பம் உலகைச் சுடும்படியாக மழை வறண்ட முகில் போலவும், பெருகி என்னுயிரைப் போக்குவதோர் நீர் வெள்ளம் வருத்துவதைப் போலவும், வருத்துகின்றது, என்றும், என்னைப்போல எல்லைகாண முடியாத நோயினால் வருந்தாத என் காதலனின் புகழ்கெடும்படியாக இகழாதீர்கள் என்றும், யான்,மிக்க நோயாலே மயங்கும்படியாக மாலைக்காலமும் வந்தது; அதனோடு எரியும் கொழுந்துபோல் கொடிய இராக்காலமும் வந்ததாயின், அதனிடத்தே யான்பட்ட நோயின் வருத்தத்தை, என்போன்று துன்புறும் மகளிரோடு சென்று கூறுவேன் என்றும், என்னை வளைத்துத் துன்புறுத்தும் முழுமதியும் தான் வந்து வளைத்துக் கொண்டதால் எனக்கு வந்த வெவ்விய நோயை அதற்குக்கூறின் தன் கதிர்கள் மழுங்கி நடுங்குவதுபோலே ஓடி மிகவும் சுழன்றுதிரியும் என்றும், யான் உறுகின்ற துயரைக் காணாது பெருந்துயில் கொள்ளும் பெரியீரே, முகிலெல்லாம் ஒன்று திரண்டு பெய்தாலும் எனக்குற்ற நோயின் தீ தணியாது; என் துயர் தீரும்படி உலகத்துள்ள நீரையெல்லாம் கொணர்ந்து என்னிடத்தே அடைத்து வைத்து என் உயிரைப்பாதுகாப்பீராக', என்றும் கூறினாள் *[கலி.146:17,25,32,39,45]*. ஒரு தலைவி, 'மாலைக்காலமே உனக்குத் தலைவரைப் பிரிந்தவர்க்கு நோயையும், புணர்ந்தவர்கட்கு இன்பத்தையும் தந்து இங்ஙனம் நன்மையல்லாத செயல்களைச் செய்வதல்லது, வேறு நல்ல செயல் செய்யத் தெரியாதோ' என்று, அக்காலத்தை நோக்கிக் கூறினாள் *-[கலி.148:18]*.

**2. துன்பம் (வருத்தம்).** ஈர்ந்தூர்கிழான்மாறன் தன் வேந்தனுக்குப் போரான் வந்த இடும்பைகளைப் பொறுத்து, அப்போரில் படைக்கலங்கள் சுவைக்கொண்ட சிறந்த புண்ணாலாகிய நோய்-துன்பம்-தீர்ந்து, மருந்து வாங்கிக் கொள்ளப்பட்ட மரம் போல, வாளுற்ற வடுக்களோடு, வசையில்லாத அழகோடு விளங்கினான்', என்று கூறினார் *[புற.180:4]*. தொண்டைமான் இளந்திரையன், உலகாளு முறையைக் கூறுதலையுட்கொண்டு, 'சகடஞ் செலுத்துவோன் மாட்சிமைப்படின் ஊறுபாடில்லையாய் வழியை இனிதாகச் செல்லும்; செலுத்துவோன் அறியானாயின் சேற்றிலே அழுந்தி மிகப்பல நோயை உண்டாக்கும்' என்று கூறினான் *[புற.185:6]*. பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறன் பரிசில் நீட்டித்தானை, ஆவூர் மூலங்கிழார், 'இயன்றதைக் கொடுத்தலும், இயலாததை இல்லையென்றலும் முயற்சியுடையாரின் நற்கூறுகளாம்; இயலாததை இயலுமென்றலும், இயலுவதனை இல்லை என்றலும் ஈவோரின்புகழ் குன்றுதற்கு வழியாம்; நீ இப்பொழுது எம்மளவில் அதையே செய்தனையாகலின் நின் மக்கள் நோயின்றியிருப்பாராக', என்று கூறினார் *[புற.196:10]*. கடியநெடுவேட்டுவன் பரிசில் நீட்டித்தானைப், பெருந்தலைச் சாத்தனார், நிறைந்த செல்வமுடைய மூவேந்தராயினும் எம்மை மதியாமற்கொடுக்கும் கொடையை விரும்பேம்; கோடை மலைக்குத்தலைவனே, நோயின்றி இருப்பாயாக; கடலில் காலூன்றி முகில் நீரின்றி மீளாவாறு போலப், பரிசிலராகிய யாங்கள், களிற்றையின்றி மீளோம்' என்று கூறினார் *[புற.205:9]*. மூவன் பரிசில் நீட்டித்தானைப், பெருந்தலைச் சாத்தனார், மென்புலத்தூர்களையுடைய நல்லநாட்டுக்கு வேந்தே, பல பழங்களையும் விரும்பி, உயரப்பறந்து, நன்கு பழுத்துத் தீர்ந்துபோன பெரிய மரத்தைப் பார்த்து வருந்திப், பழம் பெறாதே மீளும் புள்ளினமொப்ப, நின்னை விரும்பி வந்த யான் வறியேனாய் மீளக்கடவேனோ? நீ ஒன்றினையும் ஈயவில்லை என்பதற்காக வருந்துவேனல்லேன்; நீ நோயின்றி இருப்பாயாக', என்று கூறினார் *[புற.209:14]*. அதியமான் எழினி தகடூரின்கண் பொருது வீழ்ந்தபோது, அரிசில்கிழார், கூற்றமே, அறியாமை நிறைந்த உழவன், விதையை உண்டாற்போல, போரில் பலரையும் நினக்கு உண்ணக்கொடுக்கும் அவனை உண்ட நீ அவனுடைய நாடு படும் நோயினும் பெரிய துயரினை அடைந்தாய்', என்று கூறினார் *[புற.230:10]*. சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை, தன் பெருங்கோப்பெண்டு துஞ்சியகாலை, 'என் காதலியோடு என்னுயிரையும் போக்கும் வலியில்லாமையால், எவ்வளவு பெரிதாயினும் யான் கொண்ட நோய் சிறிதளவேயாகும்', என்ற வருந்திக் கூறினான் *[புற.245:1]*.

பல்யானைச் செல்கெழுகுட்டுவனின் நாட்டு மக்கள், முகில்பொய்த்தலின்றி யாண்டுதோறும் மழை பெய்து பயன்விளைத்தலால் நோயின்றி வாழ்ந்தனர் *[பதி.21:31]*.

சோழன் கரிகாற்பெருவளத்தானிடம், பரிசில் பெறப் பொருநனுடன் சென்ற பாடினி, சாதிலிங்கத்தை உருக்கின தன்மையையொத்த செய்ய நிலத்தே நடக்கையினாலே சுக்கான்கல் அடிகளில் அழுந்தும் நோயுடன் சென்றாள் *[பொரு.44]*. கள்ளையுண்ட களிப்புமிகுதியால் கானவன் தினையைக் காத்தலை மறக்க, அவ்வழி யானைபுகுந்து தினையை அழித்தற்கு இளைஞர் நோயுற்றுச், சினம் மிகுந்து, கணையை விட்டும், சீழ்க்கையடித்தும், திட்டை முதலியன புடைத்தும் பேரொலியுடன் யானையை விரட்டுவர் *[குறி.158]*.

பொருண்முற்றிய தலைவன், தலைவியிடம், 'வண்டுபடியும் கூந்தலையுடையுவளே, பெண்கட்குத்துயர் புரியலாகாது என்ற பெரியோர்களின் கொள்கையைக் கைவிட்டு, நெடுவழிச் சென்று எம்மையும் நினைத்தீரோ, என்று, முறுவல் அழிய நோயைத் தோற்றுவித்து, உண்மைக்கு மாறானவற்றைப் பேசாதே; உன்னை மறப்பேனோ' என்றான் *[அக.39:4]*. வற்புறுக்குந் தோழிக்குத், தலைவி வானவரம்பனால் கைக்கொள்ளப்பட்ட பகைநாட்டு அரணிலுள்ளாரைப்போல, அச்சம் பொருந்திய நோயினால் துயிலேனாகி, ஆதிமந்தியைப் போலக், காதலனைக் காணாமையால் நோய்மிக்குத் துன்புற்று விரிந்த காதலரைத் தேடித் திரிவனோ என்றாள் *[அக.45:13,19]*. தலைமகன் பொருள் வயிற் பிரிய, வேறுபட்ட தலைமகட்குத், தோழி, தலைவர் பிரிந்த நாளைக் குறித்துவைத்த நீண்ட சுவரில் உள்ள கோடுகளை எண்ணி எண்ணி நோயுள் ஆழ்ந்துவிடாதே', அவர் உனது மார்பினைத் தழுவுதலை மறந்து இரார்; விரைவில் வருவர்', என்றாள் *[அக.61:4]*. பட்டத்துயானை மீது கொண்ட துகிற்கொடிபோல, ஒடை என்னும் குன்றத்திலுள்ள, காய்ந்த தலையையுடைய ஞெமை மரத்தின் மீது பின்னிய, சிலம்பியின் கூடானது மேல் காற்றில் அசைய, அதனை முகில் என மயங்கிய, இளைத்த களிறுகள் தூக்கிய நோயுடைய கைகள் பலவும், கூத்தருடைய தூம்பினைப் போல ஒலிக்கும் *[அக.111:8]*. இரவுக்குறி வந்த தலைவனை, இரவுக்குறி விலக்கித், தோழி வரைவுகடாவுவாளாய், 'வெற்பனே, இராப்பொழுதை நும்முடன் கூடிக்கழித்துப், பின்பு இரவுக்குறியின் ஏதம் அஞ்சி நோய் மிகுதலால், நீர் ஒழுகும் கண்ணேமாய் உள்ளேம்; ஆதலின் சிறுநெறியில் நீ வருதலை ஒழிதல் வேண்டும்', என்றாள் *[அக.168:1]*. தலைவனின் பிரிவினால், தலைவி நோய் மிக்கு உதிர்த்த சிறிதளவாய கண்ணீர் கண்ணில் உள்ள கருமணியை (பாவையை) மறைத்தது *[அக.229:11]*. பகற்குறிக்கண் தோழி செறிப்பறிவுறீஇ வரைவுகடாவுவாளாய்த், 'தலைவ, குட்டியின் பசியைப் போக்குவதற்காகக் கடுவன் பலாச் சுளையினைத் தோண்டினும் தெய்வத்தினால் மிக்க நோய் வந்து சேரும் மலையில் உள்ள மாங்காடு என்னும் பதியைப் போன்ற, கடிய காவலையுடையது, தலைவி இருக்கும் இடம்' என்று கூறினாள் *[அக.288:14]*. மகட்போக்கிய செவிலித்தாய், தன் மகளிடம் கூறுவாளாய், 'மகளே, தலைவி, தலைவனுடன் சென்று விட்டதால், கிளிகள் பால் அருந்தாமை, ஆயத்தினர் விளையாடாமை, தாழிகளும் மலர்களை மலர்வித்து அழகு செய்யாமை முதலியவற்றைக் கண்டு, நோய் பெரிதும் வருத்துதலாலே, தலைவியின் நினைவாகவே உள்ளேன்; ஆகவே, இவ்வுலகத்தில் ஒருவரோடு நெருங்கிப்பழகி அன்பு செலுத்துவதால் யாதுபயன்', என்று கூறினாள் *[அக.369:8]*. பாலைநில மறவர்களின் அம்பால் அடிபட்டு இறந்துபோன தன் பெண்மானை நினைந்து, பிரிவாற்றாமல் உணவையும் நீரையும் வெறுத்து, நோய் மிக்குத் தன்னைச் சுற்றி விளையாடிக் கொண்டிருக்கும் குட்டிகளின் அறியாமைக்கிரங்கி, வேலேறுண்ட மக்களைப்போல, ஆண்மான் தன்னை மறந்து மயங்கிக் கிடக்கும் *[அக.371:6]*. தலைவன் சிறைப்புறத்தானாகத், தலைவி, தோழியிடம், 'அன்னையால் வெறியாட்டயரும் வேலன், எம் முருகனால் உம்மகளுக்கு இந்நோய் வந்தது; இதைத்தணிக்கும்முறை அறிவேன், என்று, கூறினால், வேலனே, உம்முருகன் அம்புடன் வேட்டையாடச் செல்லுமோ, என்று நாம் கேட்டால் என்ன, என்று கூறித், தலைவனுக்கு வெறியச்சுறுத்தி வரைவு கடாயினாள் *[அக.388:20]*.

'தலைவனின் பிரிவை நானே பொறுத்துக் கொண்டபோது, உன்னிடத்தில் நோய் உண்டாவானேன்' என்று தலைவி, தனக்காக வருந்தும் தோழியிடம் கூறினாள் *[குறு.36:6]*. தலைவன் வரைவு நீட்டித்தவழித், தலைவி, தோழிக்குக் கூறுவாளாய்த், 'தோழியே! நான் இங்கே தனியே இருக்கிறேன்; என்னுடைய பெண்மைநலம் என்னின் நீங்கி அமையாத நோயோடு கடற்கரைச் சோலையில் உள்ளது; தலைவர் தம்மூரில் இருக்கிறார்; எங்களைப் பற்றிய அலரோ பொதுவிடமெங்கும் பரவியுள்ளது', என்று கூறினாள் *[குறு.97:2]*. சிறையில்லாத கிழட்டு நாரைக்கு உணவு அரியதாதல்போல, 'நெஞ்சே, பெறற்கு அரிய தலைவியால் நீ நோயையடைந்தாய்; நீ நோயிற்குக் காரணமான ஊழ்வினையை உடையை', என்று அல்ல குறிப்பட்டு மீளுந்தலைவன், தன் நெஞ்சிற்குக் கூறினான் *[குறு.128:5(2)]*. தலைவன் பிரிவினால் வருந்தும் தலைவிக்காகத் துயருறும் தோழியைக் குறித்துத், தலைவி யான், அடைந்த காமத்துயரை, 'கிணற்றில் விழுந்த ஆவின் துன்பத்தை இரவில் கண்ட ஊமை வெளியிடமுடியாமல் துன்புறுவதுபோலத், தோழி எனக்காக அடையும் நோய்க்காக நான் நோய்உறுகின்றேன் என்றாள் *[குறு.224:3,6]*. தலைவனின் பதிலுக்காக ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக், கிழத்தி, 'வாடை என்னை வதைப்பதற்கு மேலும், நோய் என்னை அலைக்கும் வண்ணம், தலைவனின் மலை, மாலைக்காலத்தில், கடல் ஆழ் கலத்தைப் போலத், தோன்றி மறையும்; நான் என் செய்வேன்' என்றாள் *[குறு.240:4]*.

ஆற்றுவிக்கும் தோழிக்குத், தலைவி 'தோழியே, தலைவனோடு சென்றுவிட்ட என் நெஞ்சு, அவர் வினையாற்றும் அளவும் அவரோடு தங்கியிருக்கின்றதோ, அவர் அருளாமையின்

திரும்பவந்து என்னுடைய நலனழிந்த மெய்யைக் கண்டு இவள் அயலாள் எனக்கருதி நோய் மிக்கு என்னைத்தேடிச் சென்றறொழிந்ததோ, அறிகிலேன்' என்றாள் *[நற்.56:10]*. மகட்போக்கிய நற்றாய், தோழியிடம், 'மகளே, நின்தோழியால் கைவிடப்பட்ட பந்து, வயலைக்கொடி, சோலை முதலியவற்றைக் காணுந்தோறும் வருந்துவதோடு, நின்தோழிபோகும் வழியில் புறாவின் கூவுதலோசையைக் கேட்டுத், தலைவனை அவள் வருத்துவளோ என்றே நோய் உறுகின்றேன்' என்றாள் *[நற்.305:5]*.

முன்பு பரத்தையோடு நீராடிய துறைக்கண், தலைவியோடு, தலைவன் நீராடும்பொழுது, தலைவியின் முகவாட்டத்தைக் கண்டு வினவியபோது, அதற்குத் தோழி, மறுமொழி கூறுவாளாய், 'ஊரனே, தலைவியை நீர்த்துறை துன்புறுத்தவில்லை; தலைவியின் நோய்க்குக் காரணம், நீ, செய்த சூளைத் தப்பியொழுகியதேயாகும்' என்றாள் *[ஐங்.53:1]*. தலைவன், வெள்ளைக் கொக்கின் பார்ப்பு இறந்ததாக, அதனை அறியச் சென்ற நாரை, இறந்த பார்ப்பிற்காக வருந்துவதோடு, அக்கொக்கின் துயர்கண்டு பெரிதும் நோய்மிகும் துறையை யுடையவனாவான் *[ஐங்.160:3]*. தலைவன் பிரிந்துழிச், சுரத்து வெம்மை நினைந்து, தலைமகள், தோழியிடம், 'தோழியே, நம் தலைவர் இலவமரத்தினது மலர்கள் வெங்காற்று மோதி உதிர்வது, தீப்பொறிகள் நிலத்தில் உதிர்வது போல், தோன்றும், அருஞ்சுரங்கடந்து சென்றுள்ளார், ஆதலின், அழிவில்லாத உய்தற்கரிய பெருநோயினை அடைந்துள்ளேன்', என்றாள் *[ஐங்.320:5]*. வினைமேற் பிரிந்த தலைவன், தலைவியிடமிருந்து வந்த தூதுவரிடம், 'நான் குறித்த பருவத்தில் வாராததால் தலைவிபடும் துன்பத்தை நினைவுறுத்திய துயரச்சொற்கள், இக்கார்ப்பருவத்தோடும், அதனோடு கூடிய இடியோடும் சேர்ந்து எமக்குப் பெரிதும் நோய் செய்தன', என்று கூறினான் *[ஐங்.441:3]*.

விளையாடும் மகளிர் எழுப்பிய ஆரவாரத்திற்கு அஞ்சிய மீனுண்ணும் பறவைகள், உயர்ந்த மரத்திலே போய் அமர்ந்துகொண்டு, அம்மகளிர் அலைத்த அந்நோயினை, அவரின் உறவினர்க்குரைப்பனபோல், பல குரலாலே பலகாலும் சொல்லும் *[கலி.75:7]*. தலைவி, தோழியிடம், 'அலர் தூற்றுதலில்லாத பொழுது, நோயுற்றிருந்த மகளிர், இது,தகாதென்று ஆராயாதே ஐயுற்றுக்கூறிய சொல் இவளுக்குப் பொருந்தாவென்று அறியாயாய் நீயும் அவர் கூற்றினையே கூறுகின்றாயே', என்று கூறினாள் *[கலி.76:8]*. தலைவனுக்குரிய பரத்தையர், என்புதல்வனுக்குச் சூட்டிவிட்ட கண்ணியைக் கண்டு, எனக்கேற்பட்ட நோயைவிடப், பெரிதாகப் பரத்தையரால் உண்டாக்கப்பட்ட வடுக்களோடே தலைவன் வந்து நிற்பது, வெந்த புண்ணிலே வேலைப் பாய்ச்சியதைப் போன்றிருக்கிறது' என்று புதல்வனிடம், தலைவி கூறினாள் *[கலி.83:29]*. தலைவனிடம், தோழி தனக்கு வலியைத் தரும் என்று கருதித் தான்வழிபட்ட தெய்வம், தன் அன்பர்களையே கொடுநோயில் தள்ளிக் கொடுமை செய்தது போல், உன் அடி அடைந்த என் தோழியை, நீ செய்த பழி, எங்கும் பரந்து, அலர் தூற்றுகையினாலே, அவளைப் பெருந்துன்பம் வருத்த, நீ பிரிதல் கொடிது' என்று கூறினாள் *[கலி.132:22]*. பிறருடைய நோயைத் தம்முடைய நோயைப் போல எந்நாளும் பேணி, அதனாற் பெறும் அறனை அறிந்து ஒழுகுதல், உலகத்திலுள்ள சான்றோர்களின் முறைமையாகும் *[கலி.139:2(2)]*.

இரணியன் தன் மகனாகிய பிருங்கலாதனைப் பற்பல பிணிகள் படும்படிப் பிணித்தபொழுது, அப்பிணிப்பாலே நோய் மிக்கூர்ந்து நடுக்கமடைந்த பிருங்கலாதன், இகழ்வோன் தன் தந்தையாகலின், தான் இகழாதவனாய் நின்றான் *[பரி.4:13]*. முருகவேள், தன் வேற்படையாலே, நெருப்பின் கொழுந்து ஒலிக்கும்படி திரித்துவிட்டெறிந்து, பிறருக்கு நோயினைச் செய்யும் இயல்புடைய சூர்முதல் (சூரபன்மனாகிய மாமரத்தினது வேரைத்) தடிந்தான் *[பரி.5:4]*. தலைவியை இழித்துப் பேசிய பரத்தையை, முதுமகளிர் சிலர், கற்புக்கரசியை நீ ஏசியதால் தீவினை செய்தனை; அது தீர, அவளை நீ வணங்கு என்றனர்; பரத்தை, தனக்குள்ளே, இது என்றும் நிலைபெறுவதொரு நோயாக முடிந்ததே எனக் கூறிக்கொண்டு, அன்னையே, பகைவரைப் பகைவர் வணங்குதல் இழிவாகும்; அதைப் போலவே மாற்றாளை மாற்றாள் வழிபடலும் பெருமையில்லாச் செயலேயாகும் என்றாள் *[பரி.20:70]*.

**3. உடல்நோய்.** அதியமான் நெடுமான் அஞ்சி, பொருது புண்பட்டு நின்றோனை, ஔவையார், 'அஞ்சியே, போரிலே இறவாமல் நோய்-உடல்நோய்-வாய்ப்பட்டு இறக்கும் வேந்தரைப் பசும்புல்லில் (தருப்பையில்) கிடத்தி, வாளால் பிளந்து, வயவர் செல்லும் உலகத்திற்குச் செல்க, என்று, அடக்கம் செய்யும் இழிதகவிலிருந்து, நின்னால் போர்க்களத்தில் கொல்லப்பட்ட வேந்தர், பிழைத்தனர்', என்று கூறினார் *[புற.93:5]*.

இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் காத்தோம்புதலால், அவனுடைய நாட்டினர், நோய் சிறிதுமின்றி வாழ்ந்தனர் *[பதி.13:27]*. கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனைப், பரணர், 'நின்னைப்பாடும் பாடினி, வயவர் பலரும் புகழ்தற்குப் பொருளாயமைந்த, மிக்கவலிமைபொருந்திய, நோயில்லாத நின் யாக்கையைக் காண்பாளாக; இடுகாட்டின் கண்ணுள்ள மட்குடமானது நினது தோய்தபு நோன்தொடையினைக் காணாதொழிக', என்று பாடினார் *[பதி.44:9]*. குடக்கோ இளஞ்சேரலிரும்பொறையைப், பெருங்குன்றூர் கிழார், 'அருந்ததி போன்ற கற்பினையுடைய நின் மனைவியுடன் அழகுற விளங்கி நீ நோயின்றி வாழ்வாயாக', என்று வாழ்த்தினார் *[பதி.89:13]*.

திருவாவினன் குடிக்கு முருகனைத் தொழுவதற்கு எழுந்தருளிய கந்தருவ மகளிர் மக்கட்குரிய நோய்

இல்லையாக இயன்ற உடம்பினையுடையராய் இருந்தனர் *[முரு.143]*. பாண்டியன் தலையாலங்கானத்துச்செருவென்ற நெடுஞ்செழியன், மக்கள் நோயின்றி அழகோடு விளங்குமாறு ஆட்சிபுரிந்த வேந்தர்களின் மரபில் வந்தவன்ஆவான் *[மது.13]*.

மறப்புலியுடன் பொருது உழந்தமையால், துண்டமாகப் பிளவுப்பட்ட சென்னியையுடைய யானை, உற்ற நோயாலே வருந்தியது *[அக.119:17]*.

**4. தீமை.** சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி, கருவூரிடஞ் செல்வானைக் கண்டு, சேரமானந்துவஞ் சேரலிரும்பொறையொடு வேண்மாடத்து மேலிருந்து, உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், 'நீர் நாடனாகிய இச்சோழன் மதம்பட்ட யானையினின்றும் நோய்-தீமை-இன்றிப் பெயர்வானாக' என்று வாழ்த்தினார் *[புற.13:9]*. பெருஞ்சித்திரனார், வெளிமானுழைச்சென்ற பொழுது, அவன் துஞ்ச, அப்பொழுது அவர், புலவர்கட்கு வரையாதீயும் வெளிமானுழை யாங்கள் பரிசில் வேண்டிச் சென்றபொழுது, அடப்பட்ட பானையினின்றும் சோறின்றி எரி புறப்பட்டாற்போல, அறமல்லாத கூற்றம் அவனுயிரைக் கொள்ளை கொண்டது; அக்கூற்றம் நோய் இன்றி இருப்பதாக', என்று வருந்திக் கூறினார் *[புற.237:15]*.

இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் காத்தோம்புதலால் நோய் சிறிதும் இல்லாமல் புதுவருவாயினையுடைய நல்ல நாடாகச் சேரநாடு விளங்கியது *[பதி.15:33]*.

தலைவனைப் பிரிந்துள்ள தலைவி, தோழியிடம், 'சேரிப்பெண்டிர் அலர் கூறி என்னை இகழ்ந்தாலும் இகழட்டும்; எனது அழகிய நலம் தொலையினும் தொலைக; சுரநெறியைக் கடந்து பொருளீட்டச் சென்றுள்ள நம்காதலர் என்றும் நோயின்றியிருப்பாராக', என்று கூறினாள் *[அக.115:7]*. தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவி, தோழியிடம், 'என்பொருட்டு வருந்தாதே; நம் காதலர் சுரநெறிகள் பலவற்றைக் கடந்து சென்றுள்ளாராயினும் நோய் இல்லாதவராகி நிலைபெற்று வாழ்வாராக', என்று கூறி வருந்தினாள் *[அக.227:13]*. போக்கராய் இருந்தாலும் அவர்களையும் கொன்று கழுகு முதலியவற்றிற்கு விருந்தூட்டுகின்ற கொடிய ஆறலைகள்வர் வாழும் சுரநெறியைக் கடந்து சென்றுள்ள நம் காதலர் நோயிலராய் மீண்டும் வரும் வரையில் நான் அழாமல் எவ்வாறிருப்பேன் என்று கூறினாள் *[அக.375:17]*.

**5. இறத்தல்.** கோச்சேரமான் யானைக்கட்சேய்மாந்தரஞ் சேரலிரும்பொறை, இன்னநாளில் துஞ்சுமென அஞ்சி, அவன் துஞ்சியவிடத்துக், கூடலூர் கிழார், 'பல தீய நிமித்தங்களின் காரணமாக, இவன் நோயை-இறத்தலைக்-கண்டு இறத்தலையுடையனல்லனாகப் பெறின் அழகிதென வருந்திய உள்ளத்தேமாய் அஞ்சினேம்; யாம் அஞ்சினபடியே தீ



நிமித்தங்கள் நிகழ்ந்த ஏழாம் நாளில் துஞ்சினான்; என்று வருந்தினார் *[புற.229:15]*. மறக்குடி மகளாகிய முதியவளொருத்தியின் . மகன், ஆயர்மகள் தன் விரலால் தெறித்த துளியளவினதாய, பிரை, குடமுழுதும் உள்ள பால் கலங்கிக் கெடுதற்குக் காரணமானாற்போலப், பகைப்படை முழுதும் நோய் ஆதற்குத், தான் ஒருவனே காரணமாயிருந்தான் *[புற.276:6]*.

குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை, போர்த்தொழிலால், பகைவர்க்கு நோய்த் தொழிலைத், தந்தான் *[பதி.84:16]*.

**6. அச்சம்.** நன்னனிடம் பரிசில் பெறச் செல்லும் கூத்தன், புதியவர் கண்ணால் நோக்கினும் தலைநடுங்கும்படியான நோயைத்-அச்சத்தைக்-தருகின்ற மலைகளைக் கடந்து சென்றான் *[மலை.289]*.

**7. அழிவு.** பொருள்வயிற் பிரியலுற்ற தலைவனைத், தோழி செலவழுங்குவிப்பாளாய், நீர் தேடிவரும் பொருளால் சிறந்த பயன் நிகழுமாயினும், பனியுறையும் கூதிர்க் காலத்தே இவளைப் பிரிவீராயின், நீர் தேடுகின்ற பொருட்கு எந்நோயும்-எவ்வழிவும்-வாராதிருப்பதாக' (தலைவி இறந்துபடுவாளாதலின்) என்று கூறினாள் *[அக.13:15]*.

**8. பொருட்கவலை.** வினைமுற்றி மீளுந் தலைவன், பாகனிடம்,'யான், தலைவியிடம் சென்று என் உள்ளத்திலுள்ள வினைவயிற் செல்ல வேண்டிய நோயைப்-பொருட்கவலையைக்-கூறிய அளவிலே, அவள் மறுமொழி கூற நாவெழாமல், பூங்கொத்துடனே தளிரையும் பிசைந்து உதிர்த்துக் கொண்டு மயக்கமுற்றவளைப் போலவே நின்றாளாகலின், தேரை விரைந்து கடாவுக' என்றான் *[நற்.106:5]*.

**9. தீவினை.** பிரிவின்கண் வருந்தும் தலைவி, தோழியிடம், 'சுரத்தைக் கடந்து சென்ற தலைவரோடு சென்றுவிட்ட என் நெஞ்சு நல்வினையை யுடையது; யானோ, ஊர்மக்கள் அலர் தூற்றும்படியாக நோயின்-தீவினையின்-பயனை நுகருகின்றேன்', என்று கூறினாள் *[நற்.107:10]*.

**10. இரங்கல்.** பரத்தையர் சேரிக்குச் சென்று வந்த தலைவனோடு ஊடிய தலைவி தலைவனிடம், 'எனது கரிய கூந்தல் பூவணிந்து வண்டுகள் ஆரவாரிக்கும் அழகைப் பெறுவதை, யான் விரும்புவதைவிட, நின்னுடைய பாணன் நோய்-இரங்கல்-சேர்ந்த பண்ணைப் (இரங்கற்பண்) பாடிக் கொண்டு நினது பரத்தையர் இருக்கும் இடத்தைக் கேட்டுக் கொண்டு இங்கு வாராதிருத்தலை மிகவும் மகிழ்வேன்' என்றாள் *[கலி.77:18]*.

நோய்பாடியார்-ஓர் புலவர். நோயினைச் சிறப்பாகப் பாடியதனால் இவர் இப்பெயர் பெற்றார்போலும். ஆயின் இவர் பாடியதாகவுள்ள ஒரே பாடலில் *[அக.67]*. பெயர் பெறுமளவிற்கு

நோயினை இவர் பாடிய குறிப்பொன்றுமில்லை: நோய் என்ற சொல்லையே இவர் அப்பாடலில் ஆளவுமில்லை. எனவே இவர்க்குப் பெயர் தந்த பாடல் வேறேதோ என்பதும் விளங்கும். ஆசிரியர் பெயர் காணப்படாதவற்றுள் நற்றிணையின்கண் 185-ஆம் எண்ணிலமைந்த பாடல், நோய் என்ற சொல்லுடன் அமைந்து, அதனை விரிப்பதனால் அப்பாடல் இவருடையதுபோல், இவர்க்குப் பெயர் வரக்காரணமானது போல் தோன்றுகின்றது. என்பர் மெ.அது. (ச.கா.சி.பெ.பக்.182-183). எனினும், அஃது ஆய்வினுக்குரியது. தலைவன் பொருள்வயிற் பிரிந்தவழி வற்புறுத்தும் தோழிக்குத் தலைவி, அவன் சென்ற நெறியின் கொடுமைகளைக் கூறி வருந்துவதாக இவர் தம் பாடலை இயற்றியுள்ளார். இரவிலே நிரைமீட்டற் போரில் வென்றுபட்ட வயவரின் பெயரும், பீடும் எழுதிப் பீலி சூட்டிய நடுகற்கள், ஊன்றிய வேலோடும், சார்த்திய பலகையோடும் சுரநெறிதோறும் நிற்பவை, பகைவருடன் போர்செய்யும் முனைப்புலத்தையொத்துத் தோன்றும் என்று இவர் புனைந்துரைப்பர். வழிச்செல்வோரை, ஆறலைகள்வர் கொன்று வீழ்த்தித், தழைகளையிட்டு மூடிய, பதுக்கைகளையுடைய பாழ்நெறியில் பேய்த்தேரின் தோற்றத்தினிடையே பரற்கற்கள் நிலத்திலே பொருந்தி மின்மினி போல இமைக்கும் என்று தலைவன் சென்ற நெறியருமையைத் தலைவி நினைந்து வருந்துவதை இவர் நன்கு பாடியுள்ளார். வானம்பாடிப் பறவையை, 'வானம் வாழ்த்தி' எனவும் பேய்த்தேரை, 'உருவில்லாத பேயொடு கூடிய ஊராத தேர்' எனவும் இவர் குறிப்பிடும் சொல் நயங்களும் உணர்ந்து பாராட்டற்குரியவை.

**நோவன-வெறுக்கும் செயல்கள்.** சோழன் நலங்கிள்ளியின் தம்பி மாவளத்தானும், தாமப்பல்கண்ணனும் வட்டுப் பொருவுழிக், கைகரப்ப வெகுண்டு, வட்டுக் கொண்டெறிந்தானைத், தாமப்பல்கண்ணனார், புறாவிற்கு உயிர் கொடுத்தருளிய சிபியின் மரபினுள்ளாய்! தேர்வண் கிள்ளிக்குத் தம்பியே! ஆத்திமாலை சூடிய நினது முன்னோர் யாவரும் பார்ப்பார் நோவன-வெறுக்கத்தகுவன-செய்யார்', என்று கூறினார் *[புற.43:14].*

**நோவாதோன்-இரங்காதோன்.** வெளிமான் துஞ்சியபின், அவன்தம்பி இளவெளிமானைப், பரிசில் கொடுவென, அவன் சிறிது கொடுப்பக் கொள்ளாது, பெருஞ்சித்திரனார், 'தம்மைக்கண்டு நோவாதோனிடத்தே-இரங்காதோனிடத்தே-நின்று வருந்தி, உள்ளூறக்கனியாத பழத்தின்பொருட்டு சுழல்வோர்தாம் யார்? நெஞ்சமே எழுந்திருப்பாயாக, என்று நெஞ்சிற்குக் கூறுவாராய் அவனை இகழ்ந்துரைத்தார் *[புற.207:10].*

**நோவார்-நொந்து கொள்ளுகின்றவர்.** தன் புதல்வனுக்குப் பரத்தையர் அணிகளை அணிவித்துவிட, அதைக்கண்ட தலைவியொருத்தி, கடிதலால் அஞ்சிய புதல்வனைக் கண்டு, 'அஞ்சாதே, நீயும் தவறிலை; நினக்குப் பூட்டியனுப்பிய பரத்தையும் தவறிலள்; வேனிற்காலத்துப் புதுப்புனல் போல, எல்லார்க்கும் (பரத்தையர்கட்கு) பயன்படுகின்ற நுந்தையை ஈண்டு நோவார்-நொந்து கொள்ளுகின்றவர்-யாரும் இல்லை' என்று கூறினாள் *[கலி.84:38].*

**நோவு-துன்பம்** (வருத்தம்). உடன்போக்குச் சென்ற தலைவனும், தலைவியும் போகும்வழியில் உள்ள சிற்றூரில் சிறிதுபொழுது தங்கினவிடத்து, அவர்களைக் கண்ட அவ்வூர்ப்பெண்டிர், 'பெண்மக்களைப் பெற்று வளர்க்கும் தாய்மார்க்கெல்லாம் மகிழ்ச்சியோடு கூடவே நோவும்-துன்பமும்-பெரியதாயிற்று' என்று இரங்கினர் *[ஐங்.382:5].*

**நோற்றது** - (நோற்றதனாலாய) நல்வினை. சோழன் கரிகாற்பெருவளத்தானிடம் பரிசில் பெறச்செல்லும் பொருநனிடம், பெற்ற பொருநன், ஆற்றுப்படுப்பானாய்க், கூத்தர்க்கெல்லாம் தலைவனாகிய கூத்தனே, நீ வழியறியாமையானே வேறுவழி பற்றிப் போகாமல் இவ்வழியே வந்து என்னைக் கண்டது, நீ முற்பிறப்பில் நோற்றதின்-(நோற்றதனாலாய) நல்வினையின் - பயனே', என்று கூறினான் *[பொரு.559].*

**நோற்றோர்-தவஞ்செய்தோர்.** பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனிடம், மாங்குடிகிழார், 'செழிய, நின்னுடைய பகைவர் நின்னுடன் போரிட வலியலராயினும், அவர்கள் நின்னால் துறக்கத்தின்கண் புகுவதால், உறுதியாக நோற்றோரே-தவஞ்செய்தோரே-ஆவர்', என்று கூறினர் *[புற.26:16].* மூவேந்தரும் ஒருங்கிருந்தபொழுது, அவரிடம் ஔவையார், 'இவ்வுலகம் வேந்தர்களுக்கே உரியதாயினும், அவருளும் நோற்றோர்க்கே அது உரியதாகும், 'என்று உலகியல் கூறினார் *[புற.367:3].*

தலைவன் பொருள்வயிற் பிரிவதற்குக் காரணங்கூறுவானாய்க், 'கூற்றம் கொள்ள வீணே மடியாமல், பிறர்,தம்பொருளை வாரிக் கொள்ளும்படியாக, ஈத்து மடிந்தோர், நோற்றோர் ஆவர்', என்று தோழியிடங்கூறினான் *[அக.61:1].*

ஆற்றுவிக்கும் தோழிக்குப், பிரிந்து சென்ற காதலன், பனிக்காலமாகியும் வராததால் வருந்திய தலைவி, 'ஆக்கள் கன்றுகளையுள்ளி ஓடிவரும் பனிக்கால மாலையில், பிரிந்து சென்ற காதலரின் வருகையைக் காணும் மகளிர், உறுதியாக நோற்றோரே யாவர்' என்று ஆற்றாமை மீதூரக்கூறினாள் *[குறு.344:1].*

**நோற்றன்-நல்வினைசெய்தவன்.** கூனியாகிய காதலியைக், குறளனாகிய காதலன், 'கரையில் நின்றதொன்றின் நிழல் நீருக்குள்ளே நுடங்கினாற்போலே செல்கின்ற கூனியே, உன்னோடு ஒன்று உசாவுவேன்; அங்ஙனம் என்னுடன் நீ உசாவுதற்கு என் நோற்றனையோ-நல்வினையைச் செய்தனையோ-' என்று கூறினான் *[கலி.94:1].*

**நோன்பியர்-நோன்பிருப்பவர்.** மழையில் நனைந்த மந்தி கடுவனுடன் தினையரிசியைத் தன் கவுள் நிறையப் புடைத்து உண்ணுவது, நோன்பியர்-நோன்பிருப்பவர்-தைத்திங்கட் பிறப்பில் நீராடி விரதம் முற்றியிருந்து உண்ணுவது போலத் தோன்றும் *[நற்.22:6].*

**நோன்மை-1. வலிமை.** சேரமான் செல்வக்கடுங்கோ வாழியாதன், போரிலே, முருகவேளைப் போன்றும், பொரும்பகைவர்க்கு நிலைகலங்காமையின் பெரிய நிலம் போன்றும் நோன்மையை-வலிமையை-உடையவன் *[புற.14:18].*

திருமால் பாற்கடலைக் கடைந்து வரும் அமிழ்தத்தைத் தேவர்களுக்கு வழங்கவேண்டுமென்று நினைத்த அளவிலே, அவ்வமிழ்தத்தின் பயனாகிய முதுமை இன்மையும், ஒழியாத நோன்மையும், இறவாத தன்மையும் அத்தேவர்களைச் சென்றடைந்தன *[பரி.2:70].*

**2. பொறுமை.** திருமால் நோன்மையில்-பொறுமையில்-நிலத்தினை யொப்பர் என்று அந்தணர் அருமறை கூறும் *[பரி.2:55].* திருமால் உலகத்தைத் தாங்கும் தன்மையிலும், நோன்மையிலும் நிலத்தினையொப்பவ ராவார் *[பரி.4:28].*

**நோனார்-பகைவர்.** திருமால் நோனாரை-பகைவரை-அழிக்கும் ஆழிப்படையை யுடையவர் *[பரி.4:9].*

**நோன்றல்-பொறுத்தல்.** ஏறைக்கோன், தனக்குச்சிறந்தோர் தனக்குத்தவறு செய்வாராயின், நோன்றல்-பொறுத்தல்-செய்யும் பண்பினன் *[புற.157:1].*

அறிவு என்று சொல்லப்படுவது, அறியாதார் தன்னைப் பார்த்துச் சொல்லும் சொல்லை (பழியை) நோன்றலாகும் *[கலி.133:10].*

## நௌ

**நௌவி-மான் (மான்வகையில் ஒன்றுமாம்).** முல்லை நிலக் காட்டிடத்தே, மாற்றற்ற பொன் மேலே கிளம்பும்படி, பெரிய அழகைப் பெற்ற, சிறிய தலையினையுடைய நௌவி-மான்-தன் பெண்மானோடு சுழன்று துள்ளித்திரியும் *[மது.275].*

நெய்தல் நிலத்திலே, மணலாலமைந்த திடரில் உதிர்ந்து கிடக்கின்ற ஈங்கையின் அரும்பும், புனமல்லிகை மலரும், நௌவியின் வலிய குளம்பினால் மிதிபடும்போது, வெள்ளியை மூசையிலிட்டு உருக்கிச் சாய்த்தாற் போல, அவற்றினின்று தெளிந்த நீர்க்குமிழியாக வடியும் *[நற்.124:6].*

## ப

**பஃறி-படகு.** பந்தியில் குதிரைகளை வரிசையாகப் பிணிக்குமாறுபோலக் காவிரிப்பூம்பட்டினத்தின் உப்பங்கழிகளில், உப்பைக்கொண்டு சென்று, நெல்லுக்கு விற்று, அந்நெல்லை ஏற்றிக்கொண்டுவந்த பஃறிகள்-படகுகள்-வரிசையாகக் கட்டப்பட்டிருந்தன *[பட்.30].*

**பஃறுளி-பண்டு தென்கடலுள் மறைந்த ஓர் ஆறு..** பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதியை, நெட்டிமையார், 'நல்லநீரையுடைய பஃறுளி-பண்டு தென்கடலுள் மறைந்த ஓர் ஆறு-என்னும் ஆற்றின் மணலினும் பலகாலம் வாழ்வானாக', என்று வாழ்த்தினார் *[புற.9:11].*

**பக்கம்-1.மருங்கு.** தலைவன் தன் தலைவியின் ஒரு, பக்கத்தே-மருங்கே-வெட்சிப் பூவாலாய கண்ணியைச் சூடியிருந்தான் *[அக.48:10].* சூலுற்ற பெண்யாமை அடும்புக்கொடியைச் சிதைத்துக் கொண்டுபோய், மணல் மேட்டின் பக்கத்தே புதைத்து அதில் முட்டைகளை இட்டு மறைத்து வைக்கும் *[அக.160:4].* குறளனாகிய காதலன், கூனியாகிய காதலியிடம், நின்னை மார்புப் புறத்திலும் தழுவ இயலவில்லை; முதுகுப்புறத்திலும் தழுவ இயலவில்லை; பக்கவாட்டில் தழுவுவதற்கு அருள்செய்', என்றான்; அதற்கவள், இப்பரத்தைமையையுடையவன் பக்கவாட்டில் தழுவத்தாராய் என்கின்றானே! இவன் இவ்வாறு கூற நமக்கு என்ன குறை என்று தனக்குள் கூறி, 'குறிய வட்டுப்போல இருக்கின்றவனே, உழுந்தம் பணியாரத்தைக் காட்டிலும் உண்ண இனிக்கும் எனது கூன்பிறப்பு உன்னை விட இழிந்ததோ', என்றாள் *[கலி.94:20,26].*

**2. அருகு.** நள்ளிரவில், இரவுக்குறியில், தலைவியோடு, தலைவனைச் சேர்த்து வைப்பதற்காக, உடலை மூடிக்கொண்டு நிற்கும் தோழியிடம், மொட்டைத் தலையும், கருங்குட்டமும் உடைய பார்ப்பனன் ஒருவன் வைக்கோலைக் கண்ட முதிய எருது போலச் சென்று, சிறியவளே, என் பக்கத்தினின்று-அருகிலிருந்து-போய்விடாதே; இந்தா, தம்பலந்தின்பாயாக' என்றான்', என்று, தோழி தலைவியிடம், தலைவன் கேட்பப் படைத்துக் கூறினாள் *[கலி.65:12].* பிரிவினை யாற்றாத தலைவி, மாலைப்பொழுதைக் கண்டு, 'ஏ மாலையே, ஆயரின் குழலோசையைக் கேட்டுத் துன்புற்றிருக்கும் என்னை என் பக்கத்திலிருந்தே வருத்தும் நீ, கணவருடன் கூடி மகிழும் மகளிரின் புதுநலத்தையும் கடியவில்லையே' என்று கேட்டாள் *[கலி.118:14].*

**3. இடம்.** ஆடு கோட்பாட்டுச் சேரலாதன், தன்னைப் பாடிய காக்கைபாடினியார் நச்செள்ளையார் என்ற பெண்பாற் புலவருக்கு அணிகலனுக்கென்று ஒன்பது துலாம் (கா)

பொன்னும், நூறாயிரம் பொற்காசும் (காணம்) கொடுத்துத், தன் பக்கத்துக்-இடத்துக்-கொண்டான் *[பதி.ப.6].*

4. **பொழுது.** முருகவேளின் திருப்பரங்குன்றத்தில், முழக்கம் உண்டாகிய பக்கத்து-பொழுது-மயில்கள் தம் இரண்டு சிறகுகளையும் ஆலவட்டம் போல் விரித்து ஆடும் *[பரி.21:31].*

5. கூறு (இசை) போருடற்றும் இருபடைகளுக்கும் போரைக் கைவிடும் அவா மிக்கிருந்தும் பழிக்கஞ்சி, யார் முதலில் போரைக் கைவிடுவது என்று நாணித் துன்பத்துடன் போர் நிகழ்த்துவது போல, வையையின் புதுவெள்ளத்தில் நீராட வந்த காதலரும், காதலியரும் யாழின் பக்கத்தினால்-கூற்றால் (இசையால்)-காம உணர்வுமிகுந்தும், ஊடலின் காரணமாக, யார் முதலில் பேசுவது என்பதற்கு நாணி உளம் பதைத்து இருந்தனர் *[பரி.10:56].*

6. **திசை.** தினையை உண்ண விரும்பிய பன்றி, மலையில், தினைக் கொல்லைக்கு இயந்திரமமைந்த புழைவழியே செல்லும் பொழுது, நல்லபக்கத்திலிருந்து-திசையிலிருந்து-பல்லியின் ஒலியைக் கேட்டுத் தனக்கு வரும் கேட்டுக்கஞ்சி மெதுவாகப் பின்வாங்கித் தன்னிருப்பிடம் சென்றது *[நற்.98:5].*

7. பிறை (மதி). மகளிரின் சிறிய நெற்றி எட்டாம் நாளின் பக்கம்-பிறை (மதி)-போன்றிருந்தது *[குறு.129:3].* நாளுக்கு நாள் வளரும் பக்கமானது வளர்ந்து உலகிற்கு ஒளியைப் பரப்பி, உலகைப் பாதுகாக்கும் தேவர்களின் உணவாகிய கலையைக் கொண்டுள்ள பக்கமானது தேய்பக்கமாய் கலை குறைந்து சிலநாள் மறைந்து அமாவாசையாவது போல, வையையின் நீரும் நாளுக்கு நாள் பெருகி நிலம் முழுதும் பரந்து வாழ்வித்து, நீர் முழுதும் வற்றிப்போகாமல், எண்ணாள் திங்கள் அளவு நீர் ஒடிக்கொண்டிருக்கும் தன்மையுடையதாகும் *[பரி.11:31,34,35].*

**பக்கம் போற்றல்**-அருகிலிருந்து காத்தல். தலைவன் தான் செய்தவினையை முற்ற முடித்ததனாலாகிய நிறைவுடைய உள்ளத்தோடு வயவர் பக்கம் போற்றத்-அருகிலிருந்து காக்கத்-தேரில் தன்னூருக்குத் திரும்பினான் *[குறு.275:6].*

**பக்கு-பை.** மந்தி, அவரைக் காயினை வயிறு முட்டத்தின்றதால் பண்ட வணிகருடைய சரக்கிட்ட பக்க-பை-போலத், தோன்றும் *[ஐங்.271:2].*

**பக்குடுக்கை நன்கணியார்**-ஓர் புலவர். நன்கணியார் என்பதே இவரது இயற்பெயர். கணியென்பதனால் இவரைச் சோதிட கணிதம் வல்லவரென்று அறியலாம். உலகை வெறுத்த சான்றோராதலால் இவர் பையை உடையாக அணிந்திருந்தனர் என்றும், அது பற்றியே 'பக்குடுக்கை', என்னும் அடை இவர் பெயர்க்குமுன் அமைந்தது என்றும், தெரிகின்றன என்பர் உ.வே.சா (புறம்.பாடினோர் வரலாறு). இவர் பாடியதாகவுள்ள புறப்பாடல் *[194].* ஒன்றே இவரது உலகியல் அறிவின் தெளிந்த சால்பினை உணர்த்தவல்லது. 'ஒரு மனையின்கண் சாப்பறையாகிய நெய்தல் ஒலிக்க, ஒருமனையின்கண் மணமுழவின் ஓசை மிக ஒலிக்கின்றது; காதலரொடு கூடின மகளிர் பூவணி அணிய, பிரிந்த மகளிரின் வருத்தத்தையுடைய உண்கண்கள் நீர் வார்ந்து துளிக்கின்றன. இவ்வாறு ஒவ்வாமைபட உலகைப் படைத்தான் பண்பில்லாதோனாகிய நான்முகன். இவ்வுலகின் இயற்கை கொடிது; ஆதலால், இதன் தன்மையறிந்தோர் வீட்டின்பத்தைத் தரும் நற்செய்கைகளை நாடிச் செய்க', என்ற பொருளில் இவர்தம் பாடலை இயற்றியுள்ளார். 'இவ்வுலகின் இயற்கை இன்னாதது ஆதலால், இதன் இயல்பினையுணர்ந்தோர் இவ்வின்னாமை தன்னையே இனியவாகக் காண்க', என்ற கருத்தினையும் கொள்ளத் தக்க வகையில் இவர் பாடலை முடித்துள்ளமை காணலாம்.

**பகட்டியானை**-களிற்றுயானை. அக்காலவேந்தர் விரைந்த செலவையுடைய பகட்டியானைகளை-களிற்றுயானைகளை-உடையராயிருந்தனர் *[புற.265:8].*

சேரன் வரி பொருந்திய நெற்றியையும், வாயிற் புகும் மதத்தினையும், கூற்றுவனை யொத்த வலியினையும், ஆட்களைப் பிடித்துக் கொல்லும் அச்சந்தரும் கையினையும் உடைய பகட்டியானைப் படையைப் பெற்றிருந்தான் *[அக.93:20].* பாண்டியன் நெடுஞ்செழியன் கடும்பகட்டினை யானைப் படையையுடையவனாயிருந்தான் *[அக.296:11].* கடிய பகட்டியானைப் படையையுடைய சோழரது வழியில் வந்தவன் வல்லங்கிழவோன் *[அக.356:12].*

அதியமான் அஞ்சி விரைந்த செலவையுடைய பகட்டியானைகளையுடையவன் *[குறு.91:6].*

அஞ்சியென்பான், தலையெடுத்து நடக்கும் உயர்ந்த விரைந்த நடையையுடைய பகட்டியானைப் படையை உடையவன் *[நற்.381:7].* குட்டுவன் கடிய பகட்டியானையையுடையவன் *[நற்.395:4].*

**பகடு-1. எருது.** சோழன் குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவன், உப்புப்பாரம் ஏற்றிய சகடத்தினைக் குழிகளிலும், மேட்டிலும் சளைக்காது இழுத்துச் செல்லும் வலிமையான பகட்டினை-எருதினை-ஒத்தவன் *[புற.60:9].* மலையமான் திருமுடிக்காரி தாளாற்றலால் செய்த பொருளில் நல்லனவெல்லாம் பரிசிலர்க்கு வழங்கி, எஞ்சியதை உண்டலான், விளையுளை மக்களுக்கு வழங்கிவிட்டு, வைக்கோலை மட்டும் உண்ணும், உழுத வலிய பகட்டினை ஒத்தான் *[புற.125:7].* முடம்பட்ட காரணத்தினால், புல்லும், நீரும் கொடாது உமணரால் துறக்கப்பட்ட பெரிய பகடு, தான் இருக்கும் சூழலில் எப்புல் கிடைத்தாலும் உண்டழித்தல்போலப், போர்மறவனொருவன் தன்னைச் சூழ நின்ற பகைவரைக் கொன்றொழித்தான் *[புற.307:9].* தருமபுத்திரன் என்ற வேந்தனிடம், கோதமனார் என்ற புலவர், 'உழுதலைச் செய்து

நீங்கிய பெரிய பகடு வைக்கோலைத் தின்றாற்போல, மகளிர், சிறியவளவு கொடுக்கும் கள்ளை மட்டும் உண்டு, மற்றெல்லாவற்றையும் பரிசிலர்க்கே கொடுத்து வாழ்வாயாக; யாவரும் இறத்தல் ஒருதலை', என்று கூறினார் *[புற.366:13]*. கிணைப்பொருநர் வேந்தரைத் துயிலெழுப்ப வைகறையில் அரண்மனை முன்றிலில் தடாரிப்பறையைக் கொட்டி வாழ்த்திப் பாடுங்கால், பகடுகளையும் வாழ்த்திப் பாடுவர் *[புற.383:4]*. அம்பர் கிழான் அருவந்தை என்னுந், தலைவனைப் பற்றிக் கல்லாடனார் கூறும்போது, 'வைகறையில் தடாரிப் பறையை முழக்கிப், பகடுகளை வாழ்த்தி, அயன் மனையில் பாடினேனாக, அதனைக் கேட்ட அவன், எனது கந்தையாடையைக் களைந்து புத்தாடையை உடுத்தி, எனது பசியையும் போக்கினான்', என்றார் *[புற.385:2]*. சிறுகுடிகிழான் பண்ணனை, மதுரை அளக்கர்ஞாழலார் மகனார் மள்ளனார் 'நான் நாள்தோறும் விடியலில் தடாரிப் பறையைக் கொட்டிப் பண்ணனின் உழவினுக்குரிய பகடுகளை வாழ்த்திப் பாடேனாயின், பாண்டியன் எனது சுற்றத்தினரைப் பாதுகாவாதொழிவானாக', என்று பாடினார் *[புற.388:11]*. அதியமான், தடாரிப்பறையறைந்து தன்னைப் பாடிய கிணைப் பொருநனுக்கும், அவனுடைய சுற்றத்தினருக்கும் பகடுகள் தந்த செந்நெல்லைப், போரோடு அளித்து வறுமையைப் போக்கினான் *[புற.390:22]*. வேங்கடநாட்டில் மலைபோன்று வானளாவிய குவியலாய் நெல்லினைக் குவிக்கும் பகடுகள் நிறைந்திருந்தன *[புற.391:4]*. மருத நிலத்தின் வயல்களில் தொழில்புரியும் உழவர் முல்லை நிலத்தில் தம் பகடுகளை மேயவிடுவர் *[புற.395:2]*. தாமான் தோன்றிக்கோன் என்ற தலைவனைப் பற்றி, ஐயூர் முடவனார் என்ற புலவர், நான்,கிணையைக் கொட்டிப்பாடி, சேற்றில் அழுந்தினால் தளராது இழுக்கக்கூடிய வலிய ஒரு பகட்டினை வேண்டினேனாக, அவன் வானத்தே விண்மீன்கள் பூத்தாற்போல, ஆனிரைகளைப் பல காளைகளோடு நல்கினான்', என்று கூறினார் *[புற.399:27]*.

உப்பு வாணிகர் தம் மனைவி மக்களோடும், மக்களைப் போன்று வளர்க்கும் மந்தியுடனும் செல்லும் சகடங்களை வலிய பகடுகள் இழுத்துச் சென்றன *[சிறு.55]*. ஒய்மாநாட்டு நல்லியக் கோடனின் ஆமூருக்குச் சீறியாழ்ப்பாணர் சென்றால், அவர்களை, அவ்வூரில் வாழும், இழுத்தற்குரிய வலிபொருந்திய கழுத்தினாலே வெற்றியுண்டாக நடக்கும் மெய் வலியினையுடைய பகட்டினையுடைய, உழவரின் தங்கை தம் மக்களால் அவர்களைத் தடுத்து விருந்தினை உண்பிப்பள் *[சி.று.190]*. உமண மகளிர் சகடத்தின் (வண்டியின்) முகப்பிலிருந்து பகடுகளைத் தூண்டி ஒட்டுவர் *[பெரு.58]*. உழவர் உழவுத்தொழிலிலே நன்கு நடந்து பயின்ற பெரிய பகடுகளைப், பிடியினது வாயையொத்த கலப்பையில் பூட்டிக் கொண்டு சென்று, உடும்பினது முகத்தையொத்த பெருங்கொழு மறையும்படி அமுக்கி, முல்லைநிலத்தை உழுவர் *[பெரு.198]*. தொண்டைமான் இளந்திரையனின் நாட்டில் பகடுகளோடு கூடிய ஆன்கள் ஈன்ற வளைந்த காலையுடைய கன்றுகள் கட்டப்பட்ட தாமணியாகிய நெடுந்தாம்புகள் முடியப்பட்ட உழவரின் இல்லங்கள் இருந்தன *[பெரு.243]*. தொண்டைமான் இளந்திரையனின் நீர்ப்பெயற்று என்னும் பட்டினத்தினை நெல்லுக்காக உழும்பகடுகளும், ஆன்களும் நெருங்கா *[பெரு.325]*. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனின் நாட்டின்கண்ணுள்ள ஊர்களில் பல ஓசைகளோடு, பகடுகள் பூண்ட மணிகளின் ஓசையும், பரதவ மகளிர் ஆடும் குரவைக் கூத்தின் ஓசையோடே கலந்து ஒலிக்கும் *[மது.94]*. மருதநிலங்களில், மூத்தலால் வலியற்றுச் சேற்றிலே விழுந்துவிட்ட பகட்டினைத் தூக்கிக் கரைசேர்க்கும் கள்ளுண்ட உழவரின் ஆரவாரம், பல ஆரவாரங்களோடு கலந்து வானையளாவி யொலிக்கும் *[மது.259]*. காவிரிப்பூம்பட்டினத்தில் வாழும் வேளாண் மாந்தர் நல்ல ஆக்களையும், பகடுகளையும் பாதுகாப்பர் *[பட்.201]*.

உப்புவாணிகரின் சகடங்களை இழுக்கும் வலிய பகடுகளைப்போல், பரதவர் ஒன்று கூடி வலையினால் கடலிள்ள மீன்களைச் சுற்றி வளைத்து இழுப்பர் *[அக.30:6]*. முல்லை நிலத்தில் அரிதாளையுடைய நிலத்தைப் பிளந்து உழுத ஆராய்ந்த பகடுகளைக் கொண்ட உழவர்களது ஏரோட்டும் ஓசை எங்கும் ஒலிக்கும் *[அக.41:6]*. ஓடையிலே நீருண்டு அதனின்றும் ஏறமாட்டாத முடம்பட்ட உடல்வலி வாய்ந்த பகட்டினுக்குச் சிறுவர் இருப்பைப் பூவைக் கொண்டுவந்தூட்டுவர் *[அக.107:15]*. 'மதர்த்த கயல் இரண்டு எதிர்த்துப் பொருவது போன்ற தன் காதலியின் கண்கள், புகையின் நிழலைப்போன்ற சேற்றில் அழுந்திய வண்டியை வருந்தி இழுக்கும் பகடுபோல் வருத்த, எனக்கு வெய்யவாக உயிர்த்தலைச் செய்யும் நோய் ஆகின்றது', என்று, ஒரு காதலன் கூறினான் *[அக.140:14]*. சுரத்தில், உப்பு வாணிகர், தம் சகடங்களிற் பூட்டிய வலிமையுள்ள பிடரியினையுடைய பகடுகளை மேயும்படி அவிழ்த்துவிட்டு உண்டு இளைப்பாறுவர் *[அக.159:3]*. உப்பு வாணிகர், தம் சகடங்களைப் பகடுகளின் வலிய பிடரியில் பூட்டி ஓட்டிச் செல்லும் பொழுது ஏற்றமான நெறியினைக் கடக்க உரப்பும் ஓசையைக்கேட்டு அஞ்சி மான்கள் ஓடும் *[அக.173:10]*. உப்பு வாணிகர், ஊரே திரண்டு சென்றாற் போலச் செல்லும் சகடங்களில் பூட்டப்பட்ட தளர்வில்லாத வலிய தாளினையுடைய செவ்விய பகடுகளின் வளைந்த மணிகளின் ஒலியையும், அவ்வுமணர் வாயினை மடித்து எழுப்பும் சீழ்க்கையின் ஒலியையும், அச்சுரத்தில் சென்று கொண்டிருக்கும் புதியவர் கேட்டு ஏமம் கருதி மகிழ்வர் *[அக.191:7]*. பசுங்காட்டில், பகடுகளைக் கொண்டு உழுது விளைந்துள்ள பசிய இலைகள் நிறைந்த பயிற்றினை ஆ, மேய்ந்ததன் பொருட்டுத், தன் தந்தையின் கண்களைப் பிடுங்கிக் கொடுமைப்படுத்திய கோசரை, அன்னி மிஞிலி என்பாள், திதியன் துணையைக் கொண்டு கொன்று பழி தீர்த்துக் கொண்டாள் *[அக.262:2]*. மழை பெய்யாது வறட்சி

மிகுதியான காலத்திலும் உப்பு வாணிகரின் சகடங்களை இழுத்துச் செல்லும் வருந்திய பகடுகள் தங்கி, நீருண்டு காட்டில் இளைப்பாறும் *[அக.295:10]*. உப்பு வாணிகர், வளைந்த நுகத்தடியில், செவ்விய கயிற்றினால் பிணித்த வண்டியிழுக்கும் பகடுகள், வருந்தி இழுக்கும்பொழுது உண்டாகிய துகள் காற்றினால் சுழன்று வீசும் *[அக.329:7]*.

வயலில் மள்ளர் நெற்கதிரோடு அறுத்துப்போட்ட ஆம்பற் பூக்களைக், கன்றினை ஈன்ற ஆன் உண்டு எஞ்சியவற்றை, உழுதுவிட்ட ஒய்ந்த நடையையுடைய பகடு தின்னும் *[நற்.290:3]*. இரவுக்குறிக்கண், தலைவனை அழைத்துச் செல்லுவதற்காக நள்ளிரவில் முக்காட்டோடு நிற்கும் தோழியைக் கருங்குட்டத்தாலே காலும், கையும் குறைந்த முடமாகிய ஒரு முதுபார்ப்பான் பார்த்து, 'வைக்கோலைக் கண்ட முதிய பகட்டினைப்போல் அகலாது அருகில் சென்று', 'தையால், நீயார், தம்பலம் தின்பாய்', என்றான் *[கலி.65:12]*.

2. **எருமைக்கடா.** பாரத்து மிகுதியால் பார் அச்சுமரத்தோடு வந்து தாக்கி உற இருத்தலின்,. நிலத்தின்கண் குளித்த பண்டத்தையுடைய சகடத்தினது ஆழ்ச்சியைப் போக்குதற்குப் புனல் கொழிக்கப்பட்ட மணற் பரக்கவும், கற்பிளக்கவும் நடக்கவல்ல மிக்க மனச் செருக்கினையுடைய பகட்டினுக்குப்-எருமைக் கடாவிற்குப்-போதற்கரிய துறையுமுண்டோ, இல்லையன்றே; அதுபோல, அதியமான், போர்க்களம் புகின், அவனை எதிர்க்கும் வயவரும் உளரோ, இல்லையன்றே' என்று, ஒளவையார், அதியமானைப் பாடினார் *[புற.90:9]*.

ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் புன்செய்யில், உழவர், சிறப்பினையுடைய பலவாகிய பகடுகளைப் பூட்டியுழுது அழகிய மணிகளையுடைய தானியங்களைப் பெறும் ஊர்கள் நிறைந்த நாட்டிற்கு உரியவனாவான் *[பதி.58:16]*. பருத்த பகடுகள் உதிர்த்த நெற்குவியலில் மரக்கால்களைச் செருகி வைத்தது போல இருக்கும் குளவிக் கூட்டினைக் கலைத்த இளைஞர் வெருண்டு ஒடுவதுபோலத், தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறையைப் பொரக் கருதி வந்தோர் அலமந்து வருந்தி ஓடினர் *[பதி.71:4]*.

தொண்டைமான் இளந்திரையனின் நாட்டின் மருத நிலத்தில் உள்ள நெற்களங்களில், திரண்ட பூதங்கள், வெள்ளிய துகிலை உடுத்தியிருப்பதுபோலச், சிலந்தி வலை சூழ்ந்த பெரிய நெற்போர்களைக் கீழே விரித்துப் பகடுகளை விட்டு உதிர்த்துத் தூய்மையாக்கிய நெற்குவியல்கள் மேருமலையைப் போல் தோன்றின *[பெரு.238]*.

கல்லென்னும் ஒலியுடன் ஊரே திரண்டு செல்வதுபோல் செல்லும் உப்பு வணிகர், தடையுறும் பகடுகளை உரப்பி யோட்டும் தெள்ளிய ஒலிகள், நெடிய மலையில் எதிரொலிக்கும் *[அக.17:13]*. விடியற்காலத்தில், நெற்போரைக் கடாவிட்டடித்துத், தம் தொழிற்செருக்கால் வந்த மயக்கம் ஒழிய, உழவர், கிளிபோன்ற உருவமைந்த மாங்காய்களோடு, புளிக்கும் பதனைச் சேர்த்தாக்கிய, புதுக்குடங்களில் நிறைந்துள்ள சாரங்களை, வெயிலினிடத்துப், பின்புறம் தோன்ற வைத்துப், பதத்திலெடுத்த, மிக்க இதழ்களையுடைய பசிய குடைகளால், குளத்தில் மண்டிய பகடுகளைப்போலக், குடிப்பர் *[அக.37:11]*. கள்ளுண்டு வந்த உழவர், மருதமர நிழலில், நெற்போரினைப் பிரித்துவிட்டுப் பகடுகளைக் கொண்டு மிதித்து, நெல்வேறு, வைக்கோல் வேறாக ஆக்குவர் *[அக.366:3]*.

குளத்தின் மடை திறந்து கொண்டதால் புறப்பட்டுக் கால்வாய் வழியே சென்ற வாளை வயலினுள் ஓடிப் பகடு உழுததனால் உண்டான சேற்றுப் புள்ளிகளை புறத்தேயுள்ள உழவரின் கோற்கும் அஞ்சாது செருக்கி, வரம்படியிலே புரளும்படியான, வளமுடையது, வாணனுக்குரிய சிறுகுடி என்னும் ஊர் *[நற்.340:6]*. தலைவி, பகடுபல சிறப்பனவாக, வென்று விரும்பினாள் *[ஐங்.3:2]*.

3. **பெருமை.** சோழன் நலங்கிள்ளி, பூணைத்தாங்கி அழகிய பகட்டினைய-பெருமையை-உடைய, எழில்வற்ற, செம்பொறி பொருந்திய, மார்பினையுடைய, மென்மையான் மகளிர்க்கத் தாழ்ந்து, வன்மையான், வயவரை அகப்படுக்கும், ஆண்மையன் *[புற.68:5]*.

பொன்மாலை கிடந்த அழகிய பகட்டினையுடைய மார்பில் தோன்றிய மூன்று செவ்வரிகள், முருகனுடைய தோள்வரையில் கிடந்தன *[முரு.104]*.

அழகிய பகட்டினையுடைய மார்பினையுடையவன், தலைவன் *[அக.90:6]*. மலையின் சந்தனம் பூசப்பெற்ற, அழகிய பகட்டினையுடைய (உரையாசிரியர், பகட்டிற்கு, விளக்கம் பொருந்திய, என்று உரைகூறுகின்றார்). மார்பினை உடையவன், தலைவன் *[அக.288:2]*.

கல்லெழு கானவர் நல்குறுமகள் அழகிய பகட்டினையுடைய இளைய முலையையுடையவள் *[குறு.71:2]*.

4. **வலிமை.** அதியமான் நெடுமானஞ்சி, சுடர் விடுகின்ற நுண்ணிய தொழிலையுடைய பூணணிந்த அழகிய பகட்டினை-வலிமையை-உடைய மார்பினள் *[புற.88:4]*. அதியமான் நெடுமானஞ்சியின் மகன், பொருட்டெழினி மலர்ந்த பூவையுடைய தும்பைக் கண்ணியை அணிந்த அழகிய பகட்டு மார்பினையுடையவன் *[புற.96:1]*.

5. **பெருமை.** அதியமானின் மகன் பொகுட்டெழினியைக், கிணைப் பொருநன், தன் கிணையை அறைந்து வாழ்த்திப் பாடியவுடனே, கேணியில் படர்ந்த பகட்டு-பரிய-இலையையுடைய பாசியினது வேர்போல், கிழிந்த உடையை உடுப்பித்து, நேரிய கரையையுடைய, நுண்ணிய நூலானியன்ற, உடையை உடுப்பித்து, விருந்தினரைப் பேணும் முறையில், தேளினது கடுப்புப் போன்ற நாள்பட்ப் புளிப்பேறிய கள்ளைப் பொன்வள்ளத்திலிட்டு உண்பித்தான் *[புற.392:13]*.

காவிரிப்பூம்பட்டினத்தில், குளிர்ந்த சிறிய குளங்களை (கேணிகளை) உள்ளே அடக்கிய முன்றிலையுடைய பகட்டெருத்திற்கு வைக்கோலிடும் பலசாலைகளும் இருந்தன *[பட்.52]*.

6. பரப்பு. சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி, புலியினது தோலால் செய்யப்பட்ட, மெய்புகுகருவி பொலிந்த, கொளுத்தற எய்த அம்புகள் போழப்பட்ட, பகட்டு-பரப்புடைய-எழில் மார்பினை யுடையவன் *[புற.13:3]*. வல்வில் ஓரி, சந்தனம் பூசிப் புலர்த்திய அழகிய பகட்டு மார்பினன் *[புற.152:10]*.

7. யானை. குமணனிடம், பெருஞ்சித்திரனார், 'பனையை ஒக்கும் பெருங்கையுடனே முத்துப்படும்படி முதிர்ந்த உயர்ந்த கொம்பேந்திய மலையை யொக்கும் வலிய பகட்டினை-யானையை-ஒளிவிளங்கும் பட்டம் பொலியப், பக்கத்தே யொலிக்கும் மணி ஒன்றற்கொன்று மாறியொலிப்ப, ஏறித், தலைமை தோன்ற இருந்து போதலை விரும்பினேன்; ஆகவே, யானையும், செல்வமும் அருள்க', என்றார் *[புற.161:17]*. சேரமான் சிக்கற்பள்ளித் துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதனுக்கு, அவனிடம் தோற்ற பகைவர், எப்போதும் பகைவருடைய மதில்களைத் தகர்ப்பனவும், நீறு படிந்த நறிய கவுளையுடையனவும், பூவேலை செய்யப்பட்ட பட்டமணிந்த பருத்த கழுத்தையுடையனவும், உயர்ந்த கோடுகளோடு, சருச்சரை பொருந்திய பெரிய கைகளையுடையனவும் ஆகிய திருந்திய தொழில் செய்யவல்ல பலவாகிய பகடுகளைத், திறையாகக் கொடுத்தனர் *[புற.387:11]*.

நீரற்ற சுரத்தில் கடும் பகட்டொருத்தலால் குத்தப்பட்ட ஓமை மரத்தின் பட்டை உரிந்த சிவந்த அடிமரத்தினை, ஊன் என்று கருதி, யா மரத்தில் பருந்து வந்து தங்கும் *[அக.397:10]*.

8. ஏர். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனிடம், வெள்ளைக் குடிநாகனார் 'நீ குறளை கூறுவாரது உறுதியில்லாத கூற்றை உட்கொள்ளாது பகட்டினைப்-ஏரினைப்-பாதுகாப்பாருடைய குடியைப் பாதுகாத்து, அக்காவலாலே, ஏனைக் குடிகளையும் பாதுகாப்பாயாயின், நின் பகைவர், நின் அடியைப் போற்றுவர்', என்று, அறிவுறுத்தினார் *[புற.35:32]*.

பகர்நர்-விற்பவர். இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் நிலத்தில் விளையும் எண்வகைக் கலங்களையும் (தானியங்களையும்) பகர்நரின்-விற்பவரின்-குடியைப் பேணும் இயல்பினன் *[பதி.13:23]*.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செரியனுக்குரிய முதுவெள்ளிலை என்னும் ஊர், நெற்கதிர்கள் உராயும் ஓசையும், அவற்றை அறுப்பார்தம் ஆரவார ஓசையும், பறவைகள் கத்துகின்ற ஓசையும், கடல் அலை மோதுமோசையும், மீன்பிடிப்போர் கரைசேரும் ஆரவாரமான ஓசையும், உப்புவிளையும் அளத்தின்கண் உப்புப் பகர்நரின் ஓசையும் கலந்து, இன்னோரான்ன ஆரவாரம், அறாத புதுவருவாயினை உடையதாகும் *[மது.117]*. மதுரை நகரில் சிறந்த அயல்நாட்டுப் பண்டங்களைப் பகர்நரின் தெருவும் இருந்தது *[மது.506]*. மதுரைநகரின்கண் புடவைகளைப் (ஆடைகளைப்) பகர்நகரும் வாழ்ந்து வந்தனர் *[மது.513]*.

கூட்டமாகிய வண்டுகள் கோங்க மரத்தின் பூக்களிலுள்ள தாதுக்களை, இலவம் பூக்களில் உதிர்த்துள்ள தோற்றம், பொன்னைப் பகர்நர், பவளச் சிமிழில் பொற்பொடியைச் சொரிந்து வைத்ததைப் போன்றிருந்தது *[அக.25:10]*.

பகர்வர்-விற்பவர். வயல் முதலிய நீர்நிலைகளில் மலர்ந்துள்ள கருநீல மலர்கள் போன்றவைகளை, மலர் பகர்பவர்-விற்பவர்-பறித்துக் கொணர்ந்து ஊருள் விற்பர் *[கலி.66:1]*.

பகர்வர்-விற்போர். பெண் குரங்கு, அவரைக்காயினை, வயிறுமுட்டத் தின்றதால், அக்குரங்கின் வயிறு பண்டம் (சரக்குப்) பகர்வருடைய-விற்போருடைய-சரக்கிட்ட பை போலத் தோன்றும் *[ஐங்.271:1]*.

பகல்-1. பகற்பொழுது. கதிரவன், 'பொழுதினைக் கூறுபடுத்துவதாலும், இரவில் திங்களுக்குத் தோற்றுப் போவதாலும், தெற்கிலும், வடக்கிலும் மாறிமாறி வருவதாலும், மாலையில் மலையில் மறைந்து போவதாலும், வானத்தின்கண் பகலில்-பகற்பொழுதில்-மட்டும் விளங்குவதாலும் ஆகிய இக்குறைபாடுகளுண்மையின், சேரமான் கடுங்கோ வாழியதானுக்குச் சமமாகமாட்டான்', என்று, கபிலர் கூறினார் *[புற.8:10]*. நீர், நெருப்பு, காற்றுப் போன்ற வலிமையினையுடைய பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதிக்குப் பணிந்தோர், உயிர் பிழைப்போர், எதிர்த்தோர், புற்றீசல் அழிவதுபோல, ஒரு பகலுக்குள் அழிவர் *[புற.51:11]*. சேரமான் பெருஞ்சேரலாதன், சோழன் கரிகாற்பெருவளத்தானோடு பொருது, புறப்புண்ணுக்கு நாணி, வடக்கிருந்தானைக் கண்ட கழாத்தலையார், எனக்கு இன்றைய பகல், முன்னைய பகலைப் போலக் கழியா, என்று, வருந்திக் கூறினார் *[புற.65:12]*. 'சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், விளங்கிய பகலின்கண், பரிசிலர்க்குத் தேர் வழங்கிக் கொண்டிருப்பதை நீ காணலாம்; அவனை, நீ கண்ட பின்பு பொற்றாமரையைப் பெறுவது உறுதி', என்று, ஆலத்தூர் கிழார் பாணனை ஆற்றுப்படுத்தினார் *[புற.69:17]*. 'பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பகைத்த மறவர் அழிவர்; பகல் சிறிதாதலால் அப்பகைவருட் சிலர் அன்றைப் பொழுதில் பிழைக்கவும் கூடும்', என்று, இடைக்குன்றூர் கிழார் பாடினார் *[புற.79:6]*. சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி, மழைபெய்யாது வறங்கூர்ந்த கோடைக்காலமாயினும், ஆம்பலினது இலையில் நிழலிலே நத்தையின் (ஆண்), பெண் சங்குடனே பகலில் மணங்கூடும் வளவிய நாட்டையுடையவன் *[புற.266:5]*. கள்ளி படர்ந்து, ஈமவிளக்கையும், புகையையும்

கொண்டு, பேய்கள் உலவும், காண்போர்க்கு அச்சத்தைத் தருகின்ற சுடுகாட்டில், பகலில் கூகைகள் கூவும் [புற.356:2]. ஞாயிற்றால் வலம் வரும் இந்நிலவுலகம், ஒரு பகலில் எழுவரைத் தலைவராகக் கொள்ளின், அவரின்கீழ் வாழ்வோர்க்கு இன்பம் இல்லாததுபோன்ற உலகியல் வாழ்க்கையை விடத் தவ வாழ்க்கையே சிறந்தது [புற.358:2]. சிறுசிறு வெள்ளிய எலும்புகள் கிடைக்கும்படியான சுடுகாட்டில், பகலில், காக்கையும், கூகையும் கூவும் [புற.362:18]. சோழிய ஏனாதி திருக்குட்டுவனைக், கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார் பாடியகாலை இருட்போதும், நிலவுப்போதும் கழிந்த, பகலை உண்டாக்குவதற்குத் தோன்றிய விடியலில், தடாரிப்பறையைத் தட்டி, அவனுடைய தந்தையின் வஞ்சிப்பாட்டைப் பாடியதைக் கேட்டவுடனே, இளைஞரது வறுமை நீங்கும்படி அவன் யானைகளைக் கொடுத்தான், என்று கூறுகிறார் [புற.394:6].

பல்யானைச்செல்கெழுகுட்டுவன், பகைவரின் அகப்பா என்னும் அரணையழித்து, அதைப் பகலிலேயே தீயை வைத்துக் கொளுத்தியதோடு, ஒரு பகலுக்குள்ளேயே, கீழ்கடலிலும், மேல்கடலிலும் நீராடினான் [பதி.ப.3:3.7]. ஞாயிறு சுடுகின்ற கதிர்களைக் கொண்டு பகலை உண்டாக்குகின்றது [பதி.52:28]. விலங்குகள் குளிர்மிக்கு வருந்தும் மாசித்திங்களிலே, பகல் குறைந்தும், இரவுப்பொழுது நீண்டும் விளங்கும் [பதி.59:1]. காவிரி பாயும் புகாரில் வாழும் மகளிர் வயல்களில் நாரைகளை ஒப்பியும் இரவிலும், பகலிலும் தாமணிந்துள்ள பொன்னாற்செய்த அணிகலன்களைக் களையாராய்ப், பல இடங்களில் குரவையாடி மகிழ்வர் [பதி.73:6].

முருகனைக் காணத் திருவாவினன்குடிக்குச் செல்லும் முனிவர்கள் எப்பொருளும் நுகர்தற்கு நன்றாகிய பகல் பலவற்றை உண்ணாதுகழிக்கும் நோன்பினையுடையவர் [முரு.130]. அகன்ற வானத்தே பரவியுள்ள இருளை விழுங்கி ஞாயிறு மறைந்த பகலினை உலகத்தே தோற்றுவிக்கும் [பெரு.2]. தொண்டைமான் இளந்திரையனின் நாட்டில் பகைவருடைய ஆனிரையைக் கவர்ந்து வந்து, பழைய கள்ளின் கடனைக் கொடுத்துத் தீர்த்துப், பின்னர் ஏற்றை அறுத்துண்டு, மத்தள ஓசைக்கேற்பப் பகலிலே ஆடிக்களிக்கின்ற மறவரின் குடியிருப்புக்கள் மிக்கிருந்தன [பெரு.146]. கமுகுகளின் தண்டுகள், பகலிலே பெய்த மழையின் கால் விழுந்ததையொத்திருக்கும் [பெரு.362]. தொண்டைமான் இளந்திரையனிடம் செல்வதற்குமுன், தேனை உருப்பெயர்த்துக் கண்வடிவில் அமைத்தாலொத்த, நன்றாகிய அழகும், குளிர்ச்சியுமுடைய கண்களையும், மடப்பத்தையும் உடைய மகளிரோடே பகலில் விளையாடிச் செல்லுங்கள், என்று, பேரியாழ்ப்பாணன் ஆற்றுப்படுத்தப்பட்டான் [பெரு.387]. தொண்டைமான் இளந்திரையன், கீழ்கடலின் நீரின் நடுவே, பகலைச் செய்யும் ஞாயிறு, கதிர்பரப்பித், தோன்றினாற் போன்று, தோன்றியவன் [பெரு.442]. தொண்டைமான் இளந்திரையன், முகில் பகலில் பெய்யும் துளியோடு மின்னல் ஓடினாற்போன்று, விறலியரின் புனையப்பட்ட கூந்தலின் அழகுறும்படி பொன்மாலையைச் சூட்டிப் பரிசளிப்பான் [பெரு.484]. அரசனிருக்கும் பாசறைக்கண், இரவில், அழகிய இளமங்கையர், இரவுப் பொழுதைப் பகலாக்கும் ஒளியையுடைய வாளினைக், கச்சோடு சேரக்கட்டிப் பாவை விளக்குக்களுக்கு நெய்யூற்றி, அவியாமல் பார்த்துக் கொள்வர் [முல்.46]. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் பகலை உண்டாக்கும் கதிரவன், திங்கள் முதலியன, குற்றமற்றுத் தோன்றும்படி ஆட்சிபுரிந்த மரபில் வந்தவன் [மது.7]. கதிர்களின் வெப்பமும், ஒளியும் மழுங்கிச், சினந்தணிந்த ஞாயிறு பகலையும் கொண்டு சென்று மறையவும், கலைகள் நிரம்பிய முழுமதி கீழ்த்திசையில் தோன்றிப் பகல் போன்று நிலாவைப் பரப்பிய இரவு வந்தது [மது.546,549]. பொழுதறிய இயலாக்கூதிர்காலத்தில், மகளிர் பூந்தட்டிலேயிட்டு வைத்த, பிச்சியினுடைய அரும்பினது இதழ்கள் மலர்ந்ததைக் கண்டு, பகல் கழிந்து அந்தி வந்துவிட்டது என்பதையறிந்தனர் [நெடு.34]. கூதிர்க்காலத்தில் இரவென்றும் பகலென்றும் தெரியாமல் மயங்கி, மனைஉறை, புறாச்சேவல் தன் பெடையோடு இரைதேட மன்றிற்குப் போகாமல், தம் இருக்கையிலேயே இருக்கும் [நெடு.47]. மலைக்குரிய முருகனைத் தொழுது, அம்மலையின் அருவி நீரையும் குடித்துத், தலைவன் சூளுறவு செய்ததனைத், தலைவி உடன்கொண்டு, தேவர்களும் விரும்பும் அழகிய சோலையில் அன்றைப் பகல் முழுதும், அவனுடன், உறைந்தாள் [குறி.214]. காவிரிப்பூம்பட்டினத்தின் கடற்றுறையிலும், காவிரித் துறையிலும் கரியமலையைச் சேர்ந்த முகில் போலவும், தாய் முலை தழுவிய குழவி போலவும், யாற்று நீர் கடலைத் தழுவத் தீவினைபோகக் கடலாடியும், உப்புப் போக நன்னீரில் குளித்தும், நண்டினை ஆட்டியும், அலையில் விளையாடியும், பாவை பண்ணியும் மக்கள் பகல் முழுதும் விளையாடுவதால், அத்துறைகள் துறக்கத்தை (சுவர்க்கம்) யொத்தன [பட்.103]. நன்னன் சேய் நன்னன் பரந்த இருள் நீங்கும்படி பகலைச் செய்யும் ஞாயிற்றைப் போன்ற குற்றமில்லாத தலைமைப் பண்புடையவன் [மலை.84]. முற்றிய தினைப்புனத்தைக் காக்கும் குறவர் உயர்ந்த பரணிலிருந்து கவண் கல்லால் பகலில் தினையை உண்ணவரும் யானைகளை விரட்டுவர் [மலை.206]. புகை விசும்பினைப் போர்த்தது போலவும், ஒளி பரந்த பகலைச் செய்பவனாகிய கதிரவன் பாம்பின் வாய்ப்பட்டு (சூரியக்கிரகணம்) ஒளி குன்றியிருப்பது போலவும், நன்னனின் பிரிவினால் அவனுடைய மனைவிமாரின் மேனியில் பசலை படர்ந்தது [மலை.வெ.1:2].

இரவு வரும் தலைவனிடம் தோழி, 'எம் தோட்டத்தினை யடுத்துள்ள தேனிறால் வைக்கப்பட்டுள்ள உச்சிமலைக்கண் பழங்கள் தொங்குகின்ற மரச்செறிவினுள் காந்தளின்

புதரிடத்துப் பகலில் நீ வந்தாலும் தலைவியினுடைய மூங்கில் போன்ற தோளைத் தழுவலாம்', என்றாள் [அக.18:16]. பாண்டியன் நெடுஞ்செழியன் தலையாலங்கானம் என்ற ஊரின் அகன்ற இடமெல்லாம் செந்நிறம் அடைய ஏழு அரசர்களை ஒரு பகலிலேயே வென்றான் [அக.36:20]. செவிலியிடம், தோழி, தலைவியின் களவை வெளிப்படுத்தும் வாயிலாகப் 'புலியை வினவிக் கொண்டு வந்த ஓர் ஆடவன், பகல் மாய்கின்ற கதிரவன் மறையும் அந்திப் பொழுதில், அவன் மறைந்திடும் திசையை நோக்கித் தோழியே, இவன் ஒரு நல்ல ஆண்மகன் அல்லவா', என்றாள்', என எடுத்துக் கூறினாள் [அக.48:23]. களவுக்காலத்தில் தலைவன், தலைவியிடம், கழியில் சுறா மீனென்றும் பாராமல், அயற்பெண்டிர் அலர் தூற்றினும், நீண்ட தேரில் வந்து பகலினும் தலைவியைப் பிரியாதிருந்தான் [அக.50:5]. தலைவன் பிரிந்தபொழுது, தலைவி, பாண்டியன் முசிறியை முற்றிப் பகைப்படைகளை அழித்த பொழுது, விழுப்புண்பட்ட வயவர் போன்று மனம் நொந்து வருந்தி, இரவிலும், பகலிலும் அழுது கொண்டிருந்தாள் [அக.57:18]. பெருமழையின் வெள்ளம் யானைக் கன்றை ஈர்த்துச் செல்ல, அதனைக் கண்ட பெண்யானைகளின் கதறலுடன் ஆண்யானைகள் தடவிக் கொண்டிருக்கும்படியான பகலினும் அச்சத்தை உண்டாக்குகின்ற அவ்வழியில், தலைவன், தலைவியின்பால் இரவுக்குறி வந்தான் [அக.68:21]. இரவுக் குறிக்கு வந்து கொண்டிருக்கும் தலைவனிடம், தோழி, 'கடற்கரையில் படர்ந்துள்ள அடப்பங் கொடியினை நினது தேருருள் அறுக்கும்படியாகத் தேரில் அழகிய புன்னை மரச் சோலைக்குப் பகலில் வருவாயாக', என்றாள் [அக.80:13]. ஞாயிற்றினால் தரப்பட்ட பகல் உலகம் விளங்குதற்குக் காரணமாயிருக்கும் [அக.91:1]. அகன்ற வானமாகிய கடலின்கண் ஓடம்போலப் பகலில் வானிடையே ஞாயிறு தோன்றும் [அக.101:13]. தலைவியின் இல்லத்தாருடைய காப்பு மிகுதியைத் தோழி, தலைவனுக்குக் கூறித், 'தொண்டகப் பறையின் தாளத்திற்கேற்ப ஆடவர், பெண்டிரோடாடும் எங்களுடைய பாக்கத்திற்கு பகலில் வரின் ஊரார் கூறும் பழிக்கு அஞ்சுகிறோம்; புலிகள் உலவும் காட்டில் இரவு வருதலையும் அஞ்சுகிறோம்; ஆகவே, விரைவில் மணந்துகொள்', என்று கூறினாள் [அக.118:6]. இரவுக் குறிக்குத் தலைவன் வருவதற்கு இடையூறாக மதி அகன்ற, வானில் பகலினைப் போன்ற ஒளியை வீசும் [அக.122:10]. பிரிவிடை ஆற்றாளாய தலைவியைத், தோழி ஆற்றுவிக்கும்பொழுது, 'சேரலாதன், மாந்தை என்னும் ஊரிலுள்ள தனது மனையின் முற்றத்தில், பகைவர் பணிந்து திறையாகத் தந்த பெருமை சான்ற அணிகலன்களுடன், பொன்னானியன்ற பாவையினையும், வயிரங்களையும் உள்ளடக்கிய ஆம்பல் என்னும் எண்ணளவு உள்ள நிதியத்தை, அவர் ஒரு பகலில் பெறுவதாயினும், காலம் நீட்டித்திரார்; விரைவில் வருவர்', என்று கூறினாள் [அக.127:11]. எருமைக் கடாக்கள் மலர்ப்பொய்கையில் பகலெல்லாம் உறையும் [அக.146:2]. தோழி, தலைவனிடம், ஆய் எயினன் என்பான், மிஞிலியோடு பொருது போர்க்களத்தில் இறந்த பொழுது ஏனைப் பறவைகளைப் போலப் பகலில் காணமுடியாத கூகை நாணுதலுற்றுக்கூடிய பகலில் இயங்காது இடும்பையுற்றாற்போலத், தலைவியும் குறிக்கு வர இயலாது துன்புறுகிறாள்', என்று கூறினாள் [அக.148:10]. தலைவியை வரைய வேண்டித் தலைவனுடைய மறைந்து மறைந்து இரவில் வந்து கொண்டிருந்த தேர், இன்று மறையாமல், ஒல்லென ஆரவாரம் செய்யும் ஏவல் இளையரோடு, அலரைக் கூறிய ஊர்ப்பெண்டிர் காணுமாறு, பகலிலே வந்தது [அக.160:18]. இரவுக் குறிக்கு வரும் தலைவனிடம், தோழி, 'நீ இரவில் வரும் ஏதம் கருதித் தலைவி அஞ்சுகிறாள், ஆகவே பெரிய மலையை அடுத்துள்ள சாரற்கண்ணே கூடிய பகற்கண்ணே வருதல் வேண்டும்', என்று கூறினாள் [அக.182:13]. பிரிவிடை வேறுபட்ட தலைமகளிடம், தோழி, பகல் நீங்க, ஞாயிறு தனது பல கதிர்களையும் சுருக்கிய, ஒளி மழுங்கும் நேரத்தே நினது பெரிய அழகு சிதைந்திட நீங்கிப்போன தலைவர், தேவரது விண்ணுலகத்தை, ஆண்டுள்ள அமிழ்தத்துடன் பெறுவாராயினும், அவர் தாழ மாட்டார், விரைவில் வந்துவிடுவார் என்றாள் [அக.213:11]. தலைவனிடம், தோழி, 'அன்னை அறிந்தாலும் அறியட்டும், அலர் கூறும் பெண்டிரின் பழிச்சொற்களை எம்மூர் கேட்பினும் கேட்கட்டும், தீயினைப் போன்ற தோன்றிப் பூவுடன் ஒள்ளிய வேங்கைப்பூ நாறும் மலைச்சாரலில் பகலில் வருவீராக' என்றாள் [அக.218:22]. தலைவன் சிறைப்புறத்தானாகத், தலைவிக்குத் தோழி, தலைவர் மலை முழைஞ்சிலுள்ள நெடிய சுனையில் நம்முடன் விளையாடிப் பகலினை இனிதாக நம்முடன் கழித்துப் பெரிய மலையில் உள்ள அழகிய தமது சிறுகுடியாய் ஊருக்கு இரவே செல்வாராயினும் செல்லட்டும்', என்று கூறினாள் [அக.228:6]. வானிடத்தே விரிந்த பகலையொத்த நிலவொளியில் மலையின் மேலுள்ள வேங்கை மரத்தின் ஒளிபொருந்திய மலர்கள், புலியின் உடம்பிலுள்ள புள்ளிகளைப் போலத் தோன்றுவதால் பெண்யானைகள் அஞ்சியோடும் [அக.228:8]. பகலைத் தோற்றுவிக்கும் பல கதிர்களையுடைய ஞாயிறாகிய அழகிய செல்வனது வானின்கண்ணுள்ள ஆணையாய ஆழி, உலகைக் கிழித்துச் சென்றதால் காட்டின் இடமெல்லாம் நீர் அற வறண்டது [அக.229:1]. கார் காலத்தே, பசை பொருந்திய தோலை நெய்யில் தோய்த்தாற்போன்ற, கரிய சிறகினையுடைய வாவல் (வௌவால்) பகலில் தங்கியிருந்த மிக உயர்ந்த கிளைகளையுடைய முதிர்ந்த மரம் தனித்திடப்போய் விடும் [அக.244:3]. பகலில் திங்களின் ஒளிகுன்றி மறையும் செயல்போலத், தலைவனின் பிரிவால், தலைவியின் நெற்றியினுடைய ஒளி மாழ்கும் [அக.277:2]. நண்பர், உறவினர் முதலியோர் வறுமையால் வாடுவதைத் தலைவன் கண்டு, இரவும், பகலும் உள்ளத்திலே தோன்றித், தோன்றி மூண்ட நெஞ்சினைச் சுடுகின்ற கவலையாகிய மிக்க தீயினை, முயற்சியாகிய மழையால் அவிக்கத் தலைவன் எண்ணினான்

[அக.279:6]. தலைவனைப் பிரிந்த தலைவி, கைகளின் விரல்களைக் குவித்துத் தலைவனைக் காணவேண்டுமென்ற படிவ (விரதங்கொண்ட) நெஞ்சத்துடன் பகல்நேரமே தனக்குத் துணையாக வருந்தியிருப்பாள் [அக.287:2]. பகலிலும், இரவிலும் விடாது மழை பெய்தலோடு வாடை வந்தது [அக.305:1]. தலைவனைப் பிரிந்த தலைவி, நெற்றி பசப்புற்றுத் தோள் மெலிந்து, அல்குலின் அழகிய வரிகள் வாடிப்பகலும், இரவும் மயங்குதலுற்று மழை பெய்தலை ஏற்ற மலரைப் போலக், கண்ணில் நீர் பெருகி வழியத் தனித்துத் துயரால் வருந்துவாள் [அக.307:3]. இரவு வரும் தலைவனைத், தோழி ''நீ, பகலில் வரின், தலைவியின் தந்தையால் அமைக்கப்பட்டுள்ள, களிறுமேல் நிமிர்ந்து பற்றலாகாத, மலைக் குகையின் மேலுள்ள பரணில், தினை கொய்ய வரும் கிளிகளைத் தலைவியுடன் ஓட்டியும், குவளைப் பூச்சூடிய அவளின் கூந்தலாகிய மெல்லிய அணையில் துயின்றும், பொழுதைக் கழிக்கலாம்', என்றாள் [அக.308:7]. புகையின் நிறம் போலும் உருவினையுடைய பனிக்காலத்தில், இருள், பகலிலும் பரவியிருக்கும் [அக.317:2]. இன்பமும், துன்பமும் புணர்தலும், பிரிதலும் நல்ல பகலும், இரவும்போல மாறுபட்டு, வேறுவேறு தன்மையினவாகும் [அக.327:2]. பகற்குறிக்கண் வரும் தலைவனிடம், தோழி, 'நீ பலநாளும் பகலிலே வந்து, புன்னை மரச் சோலையிலே, தலைவியுடன் பொழுதைக் கழித்து, மாலைப் பொழுதைக் கண்டு மயங்கி, நினதூருக்குப் போவதையொழித்து, இன்று, எங்களூரில் தங்கினால், என்ன, என்று கூறினாள் [அக.340:1]. குறியிடம் வரும் தலைவனிடம், தோழி, 'பூக்கள் நிறைந்த சோலையில், பகல்முழுதும், தலைவியுடன் கழித்து, ஞாயிறு மேற்கில் மறைய, இரண்டு பெரிய தெய்வங்களாகிய சிவனும், திருமாலும் ஆய இவர்களுடைய செந்நிறமும், கருநிறமும் ஒருங்கு பொருந்திய தோற்றம் போன்ற, அந்திவானத்தையுடைய மாலைப் பொழுதில் நீ நீங்கின், தலைவி துன்புறுவாள்; ஆகவே, இனி இரவில் வருவாயாக', என்றாள் [அக.360:1]. வரிசையாகச் செல்லும் குதிரைகளை விரைவாகச் செலுத்தி, அகன்ற வானில் பகல் கழியச் சென்று, மழுங்கிய ஒளியினையுடைய ஞாயிறு, பெரிய மலையில் மறையும் [அக.363:2]. தலைவனுடன், தலைவி புன்னை மரநிழலில் பகலில் விளையாடி மகிழ்ந்து, இரவில் வருந்தியிருப்பாள் [அக.370:4]. தலைவனின் பரத்தை, தலைவியிடம், பகலில் வந்து நானும் இவ்வூரினளே என்றும், உனக்குத் தங்கையாவேன் என்றும் கூறி, நெற்றியினையும், கூந்தலையும் தடவியது தலைவிக்குப் பெரும் நாணத்தைத் தந்தது [அக.386:15]. தலைவன், தலைவியின் கூந்தலை ஆற்றியும், மலரைச் சூட்டியும், பொட்டிட்டும், தோள் முதலியவற்றில் தொய்யில் எழுதியும், சிறிய அடியில் செம்பஞ்சிக் குழம்பினைத் தடவியும், பள்ளியில் பகலிலும் நீங்காதவனாய் உறைந்தான் [அக.389:9].

தினையிற் படியும் கிளிகளை ஓட்டுவதற்குத் தாயர் முதலியோரால் அனுப்பப்பட்ட தலைவியைத், தலைவன் பகலில் கூடி அளவளாவி மகிழ்வான் [குறு.217:1]. தலைவி, தோழியிடம், அறிவு மயங்கியோர்தாம், ஞாயிறு மறைந்த நேரத்தை மாலைக்காலம், என்று கூறுவர்; தலைவரைப் பிரிந்த எம் போலார்க்குக் காலையும், பகலும் மாலைக் காலமே ஆகும்', என்றாள் [குறு.234:6]. வௌவால் பகல் முழுதும் தான் தங்கியிருந்த மரத்தின் நீங்கி, வேறிடத்திற்கு, மாலைக்காலத்தில் செல்லும் [குறு.352:4]. தலைவிக்குத், தாயால் தழுவப்பட்டு இரவில் படுக்கையில் கிடப்பது இன்னாமையையும், ஓசையினிதாகிய மலையருவியில் தலைவனுடைய மார்பு புணையாகப் பகலில் நீர் விளையாடுவது இனிமையையும், தரும் [குறு.353:2].

சேரலனுடைய கழுமலத்தின் மதில் ஒருங்கழிய, இடித்தொழித்துக், கிள்ளிவளவன் அற்றைப் பகலுக்குள், அவ்வூரைத் தீயின்வாய்ப் பெய்தான் [நற்.14:5]. பரதவ மகளிர் வலையால் முகக்கப்பட்ட இறாமீன்களைக் காயவிட்டு, அவற்றில் வந்து விழுகின்ற காக்கைகளை ஓட்டிப்பகலினைக் கழிப்பர் [நற்.49:4]. பல கதிர்களையுடைய ஆதித்த மண்டிலம் பகலைச் செய்து முடித்து மிகவுயர்ந்த பெரிய அத்தமன (சூரியன் மறையும் இடம்) மலையிற் சென்று மறையும் [நற்.69:1]. பகலின்கண்ணே ஊரின் உள்ளதாய மாமரத்திலிருக்கின்ற முட் போன்ற எயிற்றினையுடைய வௌவால் உயர்ந்த ஒருகிளையிற் சென்று பற்றித் தூங்கும் [நற்.87:9]. களவுத் தலைவன் கடிதாகச் செல்லுகின்ற குதிரைகள் பூட்டிய தேரில் பகலில் பலருங்கான வதுவை கருதித் தலைவியின் இல்லிற்கு வருவான் [நற்.91:12]. பிரிவினாலே தலைவியின் மேனி, பகலில் எரியும் விளக்கு ஒளி மழுங்கிக் காட்டுதல் போல, வாட்டமடைந்தது [நற்.128:1]. இரவுக்குறி வந்தொழுகும் தலைவனிடம், தோழி, 'தினைப்புனத்தைக் காக்கும் பொருட்டு நாளையே செல்லுகின்றோம்; தலைவியினுடைய பல துன்பங்களெல்லாம் நீங்கும்படியாக, நீ, பகலிலே ஆங்குவந்து முயங்குவாயாக', என்றாள் [நற்.156:6]. ஞாயிறு கீழ் கடலினின்றெழுந்து கதிர்களைப் பரப்பிப் பகலினைச் செய்கிறது [நற்.215:2]. தலைவி, காமமிகுதியினாலே, தலைவன் வருவதை விரும்புகின்றாளாகலின், அவன் அவளை அளித்தல் வேண்டிப்பகலின் கண்ணும் குறியிடத்து வருவன் [நற்.223:3]. தோழி, தலைவியிடம், 'அயலார் அலர் கூறும்படியாகத் தலைவன் பகலில் வருவது நமக்கு நல்லதன்று', என்று, தலைவன் சிறைப்புறத்தானாகக் கூறினாள் [நற்.285:11]. தலைவன் சிறைப்புறத்தானாக, தோழி, தலைவியை நோக்கி, 'நம் தலைவர் சான்றாண்மையர் அல்லர், என்பதை, அவரிடம் கூறிவருவதற்குப் பகலிலே பலருங் காண, நாம் மன்றில் சென்று, நம் நாணத்தைவிட்டு, அவர் எவ்வூரினர் என்று அறிந்து வருவோமோ', என்று கூறினாள் [நற்.365:3].

சோழர்க்குரிய ஆமூரில் இரவிலும் பகலைப் போன்ற ஒளியுள்ள விளக்குகள் எரிவதால் இரவென்பது ஆவ்வூரில் இல்லையாகும் *[ஐங்.56:1]*. பரத்தமைத் தலைவனுக்காக வாயிலாய் வந்தாரிடம், தலைவி, எனக்குப் பகலிலும் நினைவு மிகுதற்குக் காரணமான தீர்வரிய துன்பத்தைத் தலைவன் செய்தனன் ஆதலின், நீயிர், வாயில் வேண்டற்க' என்றாள் *[ஐங்.95:3]*.

இரவுக்குறிக்கண் வந்தொழுகும் தலைவனிடம், தோழி, 'நீ தலைவியின் மீது அருள்கூர்ந்து, பேய்கள் உலவுகின்ற, யானைகள் திரிகின்ற காட்டில், இரவில் வந்தாலும், தலைவி நினக்கு யாது நேருமோ, என, அஞ்சுகின்றாளாகலின், நீ பகலில் வந்து அவளின் தோளின்பத்தைப் பெறுக', என்று கூறினாள் *[கலி.49:25]*. மலர் விற்பவர், கொய்து கொணர்ந்த கரு நீலமலர்களை வட்டமிட்டவாறே அம்மலரோடு ஊருள் புகுந்த வண்டு, அவ்வூரில் யானையின் மதநீரை உண்டு வாழும் வண்டுகள், அம்மதநீரை விருந்தளிக்க உண்டு பகல் முழுவதும் அங்கேயே தான் வாழ்ந்த பொய்கையை மறந்து தங்கியிருக்கும் *[கலி.66:4]*. பரத்தைமைத் தலைவனொருவன், தன் தலைவியிடம், பரத்தமையை மறுத்தபொழுது, அவனிடம், தலைவி, 'முற்பகலில் ஒரு பரத்தையிடம் கூடியிருந்து, பிற்பகலில் வேறொருத்தியைத் தேடிப்போகும், பெண் பித்தனல்லவோ நீ', என்று, கடிந்து கூறினாள் *[கலி.74:10(2),11]*. தலைவனின் பரத்தமையைக் கேள்விப்பட்டு, வெறுத்து, ஊடியிருந்த தலைவியொருத்தி, தலைவன் வந்தவுடன், பகல் முழுதும் பரத்தையிடம் இருந்தவனே, என்று பழித்துப் பேசினாளாக, அவன் அதைக் காதில் வாங்காது சென்று, தன் தந்தையின் பெயர் தாங்கிய தன் புதல்வனைத் தழுவிக்கொண்டு பொய்யுறக்கம் கொள்ளவும், அவள் ஊடல் தீர்ந்தாள் *[கலி.75:22]*. பகலைப் போன்று ஒளி வீசுகின்ற கண்ணியையும், புல்லாங்குழலையும், தோள்மீதுள்ள கோல்மீது கையையும் கொண்டிருக்கும், அண்மையில் உள்ள எருதினை அடக்குவோனுக்கு, எம் மகளைத் தருவோம், என்று, ஆயர் அறிவித்துள்ளனர் எனத், தோழி கூறினாள் *[கலி.101:39]*. வெற்றிப்புகழ் மிக்க ஓரரசன் அறநூல் முறைப்படிக் குடிகளைக் காத்துத், தான் செய்த நல்வினையின் பயனை நுகர்தற்பொருட்டுத் துறக்கத்தை அடைந்தாற்போல, ஞாயிறு இருளைக் கெடுத்துப் பகலிலே ஒளியைக் கொடுத்து, மலையிலே சென்று மறைந்தது *[கலி.118:4]*. பரந்த இவ்வுலகத்தைப் பலருங்காண ஒளிவிடும் கதிர்களைத் தன் வாயாகக் கொண்டு கான்ற பகலினை, மீண்டு அவ்வாயாலே விழுங்கினாற் போலக், கதிர்களைச் சுருக்கிக்கொண்டு ஞாயிறு மலையிடையே மறைந்தது *[கலி.119:2]*. நல்லொழுக்கமும், உண்மையும், நடுவுநிலைமை யுமுடைய இவை, இவனோடு போய் விட்டதே, என்று உலகத்தவர் இரங்கும்படியாக, நல்லாட்சி புரிந்த வேந்தனோடே, நல்லூழால் உண்டாகிய செல்வமும் அழிவதுபோல, நிறைந்த கதிர்களைக் கொண்ட ஞாயிறு மறையவே, பகலும் மறைந்தது; *[கலி.130:5]*. தலைவனைப் பிரிந்த தலைவி, பகலில் ஏற்றிய விளக்குப் போன்று, பசலைநோயால், மாந்தளிர் போன்ற மேனியின் ஒளியினை இழந்தாள் *[கலி.132:10]*. தலைவனின் பிரிவால், காமம் மீக்கூர்ந்த தலைவி, ஞாயிற்றை நோக்கி, மறுவில்லாத ஞாயிறே, மலையிடையே சென்று மறைந்து விடுகின்றாயாயின், மீண்டும் நீ கடலிடைத் தோன்றிப் பகலினைத் தருகின்றவரையில் என்னழகைக் கெடுத்தவனைத் தேடும் பொருட்டு நினது கதிர்களில் சிலவற்றைக் கொடுத்துச் செல், என்றாள் *[கலி.142:42]*. தலைவனோடு கூடியிருக்கும்போது, இரவின் முழுமதிபோல் அழகுபெற்ற தலைவி, அவன் பிரிந்ததும் பகலிடத்து ஒளியிழந்த மதிபோல விளங்கினாள் *[கலி.143:2]*. பிரிந்திருக்கும் தலைவியின் மேனி ஒளிபோனது போல், பகலில் ஒளியும் மாலையில் மறைந்தது *[கலி.143:39]*. பிரிவினால் பேதுறலுற்ற ஒரு தலைவி, என் தலைவர் என்னை வந்து கூடுங்காலம் எதுவென்று அறியேன், ஆதலால்; என்னை வருத்தும் பகலினை வெறுத்து இரவே வருக என்பேன்; இரவிலும் வாராததால், இரவையும் வெறுப்பேன், என்று கூறினாள் *[கலி.144:52]*. பிரிவினால் வருந்தும் தலைவியொருத்தி, தலைவன் பிரிந்து சுரங்கடந்து போதலும், பின்னர் வந்து தலைவியைக் கூடலும், இரவும், பகலும் போல மாறி மாறி வருவது, காதலர் வாழ்வில் உலகில் நடைபெறுவது ஒன்றே என்று கூறினாள் *[கலி.145:15]*. பிரிவித் துயராற்றாத தலைவி, என் உறக்கத்தைக் கெடுத்து என்னைப் பிரிந்து சென்ற என் காதலர் தந்த காமநோயால் வந்த கடுங்குளிருக்கு இப்பகல் வேது கொடுப்பது போல் உள்ளது என்றும், ஞாயிறே, நின் கதிர்களைப் பரப்பிய இப்பகலோடு மறையாது நில்; நீ மறைந்தாயானால் மாலைப்பொழுது வந்து என்னைக் கொன்றுவிடும் என்றும் கூறினாள் *[கலி.145:26,27]*. பிரிவுத் துயரால் மனம் மாழ்கிய தலைவியொருத்தி ஞாயிற்றை விளித்து, 'ஞாயிறே, என்னைப் பிரிந்துள்ள என் காதலரைக் கண்டுபிடிக்க வேண்டும்; அதனால் நினது கதிர்களில் பெரும்பகுதியை பகற்காலத்தோடே இங்கே நிறுத்திவிட்டு□, சில கதிர்களை மட்டுமே மறைத்துச் செல்', என்றாள் *[கலி.147:34]*.

பகைவர் நாட்டினைக் கொள்ளப் போகும் பாண்டியரின் படையினது எழுச்சிபோலப், பெருமழையால் வையையில் பெருவெள்ளம் இரவிலும், பகலிலும் வந்தது *[பரி.7:5]*.

**2. நண்பகல்.** விரைந்த செலவையுடைய விலங்குகளை வேட்டையாடிக் கொல்லும் கல்வியறிவில்லாத வேடன், நடு இரவிலும், பகலிலும்-நண்பகலிலும்-உறங்க மாட்டான் *[புற.189:3]*. பகலில் காட்டிடத்தே நடந்து வருந்தி மாலைப்பொழுதில் பிடவூர் கிழான் மகன் பெருஞ்சாத்தனின் மனை முன்றிலில் நின்று தடாரிப் பறையைக் கொட்டும் கிணைப் பொருநனுக்குக் காலந்தாழ்க்காமல் அருங்கலம் முதலியவற்றை அப்பெருஞ்சாத்தன் நல்கினான் *[புற.395:22]*. பல்யானைச் செல்கெழுகுட்டுவனைப் பகைத்தோர் நாடு ஞாயிறு

ஒருபக்கமும் சாயாமல் நிற்கும் உச்சிப்போதாகிய பகலில், குறுநரிகள் ஊளையிட்டக் கோட்டான்களின் குழறுகுரலின் தாளத்திற்கேற்பப் பேய் கூத்தாடும் பெரிய பாழ்நிலமாகிவிடும் *[பதி.22:34]*.

மயில்போலும் சாயலினையுடைய பாடினி, அரக்கு உருக்கினாற் போன்ற சிவந்த நிலத்தில் நடத்தலால், பரல்கள் வருத்த, மரலினது பழம் போன்ற கொப்புளங்கள் வருத்துவதால் பகலில் (உச்சிப்போதில்) நடத்தலைத் தவிர்த்தாள் *[பொரு.46]*. திருமாவளவனின் பகைவரின் வளமிக்க நகரங்களை வளவனின் வேடர்கள் கொள்ளை கொண்டமையால் உணவின்றி வறிதே கிடக்கும் நெற்கூடுகளின் உள்ளிடத்தேயிருந்து கூகைகள் பகற்காலத்திலும் குழறும் *[பட்.268]*.

பிரிந்திருக்கின்ற தலைவியை வருத்தும் வாடை, தலைவன் வரின், கரிகால்வளவனுக்கு ஆற்றாராய் வாகைப் பறந்தலை என்னும் போர்க்களத்தின்கண் பகலில் தமது ஒன்பது குடைகளையும் போட்டுவிட்டு ஓடிய பகைவரைப்போலத், தலைவிக்கு தோற்று ஓடிவிடும்', என்று, தோழி கூறினாள் *[அக.125:20]*. வெளியன் வேண்மான் ஆய் எயினன் என்பான், பாழி என்னும் ஊரின் கண்ணதாகிய போர்க்களத்தில், மிஞிலி என்பானோடு பகலில் செய்த போரில் புண்பட்டு வீழ்ந்தான் *[அக.208:8]*.

காலைப் பொழுதும், பகலும், மாலைப்பொழுதும், இடையிரவும், விடியற்காலமும் என்ற இச்சிறுபொழுதுகள் இடையே தோன்றமாயின் காதலருடைய காமம் உண்மையன்று, என்று, தலைவன், தோழியிடம் கூறினான் *[குறு.32:1]*.

காதலனைப் பிரிந்திருக்கின்ற தலைவி மாலைப்பொழுதிற்குக் கூறுவாளாய்க், 'கொடிய மாலையே, என் காதலர் பிரிந்தமையைத் தெரிந்து மற்றவர்க்கு உரிய காலத்தில் வருவதுபோல் காட்டி, உண்மையாகவே பகலிலேயே வந்துவிட்டனையே; இவ்வாறு முறை பிறழ வரும் உன்னைத் தடுப்பார் யார், 'என, வருந்திக் கூறினாள் *[ஐங்.183:4]*.

மோர் விற்றுவிட்டு ஊருக்குத் திரும்பும் தன் காதலியை இடையில் கண்ட காதலன், 'ஊரோ, மோர் கடையும் ஒசை கேட்கும் அண்மையில் உள்ளது; பொழுதோ, பகலாய் உள்ளது; மாயோளே, வெயில் காயும் இப்போதே ஏன் செல்லவேண்டும்; யானை படுத்திருப்பது போன்ற அப்பாறையிலுள்ள சுனையில் நீராடி, மல்லிகையும், முல்லையும் பறித்து, அச்சோலையில் என்னுடன் தங்கியிருந்துவிட்டுப் பொழுதுசாயப் போவாயாக', என்றான் *[கலி.108:36]*.

**3. ஞாயிறு.** சேரமான் பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதனை, முரஞ்சியூர் முடிநாகராயர் 'பகல்-ஞாயிறு-தன் விளக்க ஒழிந்து இருளினும், நீ இமயமலையும், பொதிய மலையும் போன்று நெடுங்காலம் வாழ்ந்து, துளக்கமின்றி நிற்பாயாக', என்று வாழ்த்தினார் *[புற.2:17]*.

உழவர், வேனிற் காலத்தில், வட்டமாய் உயர்ந்த ஞாயிறு போன்ற அழகிய நெற்குவியலை நெற் கூடாக்கிச் சுற்றிப் பகலின் வெப்பம் அகல மருதமரத்தின் நிழலில் தம் எருதுகளோடு தங்கியிருப்பர் *[அக.37:15]*. பிரிந்தோர்க்குப் பகலைப் போக்கிய மாலைக் காலம் துன்பத்தைத் தரும் *[அக.71:9]*. அகன்ற பெரிய வானிடமெல்லாம் மறையுமாறு பரவிய முகில் பலகதிர்களை உடைய பகலை முழுவதும் மறைத்து மழையைப் பொழிந்தது *[அக.214:2]*. காதலியைப் பிரிந்த காதலனுக்கு வானத்தின்கண் இருளைப் பரப்பிப் பகலைப் போக்கிய மாலைக் காலம் துன்பத்தைச் செய்யும் *[அக.365:2]*.

காதலனைப் பிரிந்த காதலிக்கு ஒலிக்கும் வாடை வீசுகின்ற பகல் மறைகின்ற மாலைக் காலம், இராப்பொழுதில் சேற்றையுடைய தொழுவத்தில் கீழே படுக்க முடியாமல் தலையை மேலே இழுத்துக் கட்டியுள்ள ஆவினைப் போலத் தனிமைத் துன்பத்தைத் தந்தது *[நற்.109:10]*.

தேனூர், பகலைப் (ஞாயிறு) போன்று தோன்றுகின்ற பலவாகிய சுடர்களையுடைய வேள்வித்தீயினை யுடையதாகும் *[ஐங்.57:1]*.

பிரிவுணர்த்திய தலைவனிடம், தலைவி, 'பிரியேன் என்று அன்று நீ கூறிய உரை பொய்யுரை என்பதை அறிவிலியாகிய யான் அப்பொழுது அறியவில்லை; பகல் காயும் கொடிய காட்டுவழியில் என்னைவிட்டுப் போகத் துணிந்த நீ நல்லை அல்லை', என்று கூறினாள் *[கலி.19:5]*. பிரிவுணர்த்திய தலைவனிடம், தலைவி, 'நீ சென்றுள்ள நாட்டிற்கு யாரேனும் இங்கிருந்து வந்தால் என்னைப் பற்றிக் கேளாதே; கேட்பின் யான் இறந்துபட்டதையறிந்து நீ போன செயல் கெட்டுப் பகலைப்போன்ற நினது புகழுக்கு இழுக்கு உண்டாதலும் கூடும்', என்றாள் *[கலி.19:11]*. காதலனைப் பிரிந்து வருந்தும் காதலியின் துயரை, எங்கும் பரந்த இருளைப் பகல் போக்கினாற்போலத் தலைவனும் போரில் வெற்றி பெற்று மீண்டும் வந்து போக்கினான் *[கலி.148:22]*.

**4. பகுத்தல்.** அகன்ற நாட்டிற்குத் தலைவனாகிய ஒருவள்ளலின் இல்லம் அவன் இருக்கும்பொழுது பலரொடும் பகல்-பகுத்தல்-செய்து விருந்துண்ணும் பரந்த இடமாய் இருந்தது; அவன் மேலுலகம் சென்றானாக, இன்று அவனுடைய மனைவி அழுத கண்ணளாய் அவனுக்கு வழிபாடியற்றச் சாணத்தினால் மெழுகும் சிறிய இடமாகக் குறுகிவிட்டது, என்று, தும்பைச் சொகினனார் என்ற புலவர் வருந்திக் கூறினார் *[புற.249:8]*.

ஒருவராகத் தோன்றும் ஆதித்தர் (ஞாயிறு) பகல் செய்து காணும் பொழுது, பன்னிரண்டு ஆதித்தராகத் தோன்றுபவரும் முருகனைக் காணவந்தார் *[முரு.166]*. மதுரை நகரை இரவில் காவல் புரியும் காவலர், முந்தை யாமத்தை அடுத்து வந்த நள்ளியாமத்தையும் பகல் உண்டாகப் போக்கிக் காத்தனர் *[மது.653]*.

காற்றுச் சுழற்றி வீசும் சுரநெறியில், மணியொலிக்கப், பகல் பொருந்தி, உப்பு, வாணிகர், வளைந்த நுகத்திலே செவ்விய கயிற்றினால் பிணித்த வண்டியைப் பகடுகள் வருந்தியிழுக்கும் [அக.329:5].

**5. நடுவுநிலைமை.** 'பகலை-நடுவுநிலைமையைச்-செய்து தடையின்றி உருண்ட ஒளியையுடைய சக்கரத்தால் நிலம் முழுவதையும் ஆண்டோரது மரபைக் காத்தவனே', என்று, யானைக்கண்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறையைக், குறுங்கோழியூர் கிழார் பாடினார் [புற.17:6].

குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை, அகன்ற உலகத்திலே, பகலைப் பொருந்தி, நன்றாக ஆட்சிபுரிந்த விறலையுடைய மாந்தரனென்னும் சேரமானது வழியில் தோன்றியவனாவான் [பதி.90:9].

**6. (நுகத்தடியின்) நடு ஆணி.** காவிரிப் பூம்பட்டினத்தில் நெடிய நுகத்தடியில் தைத்துள்ள பகல்-நடு ஆணி-போன்ற நடுவுநிலை என்னும் குணத்தையும், பழிக்கு அஞ்சி உண்மையே பேசும் பண்பையுமுடைய வணிகர் வாழ்ந்திருந்தனர் [பட்.206].

ஒரு தலைவி தன் புதல்வனிடம், 'நுகத்தடியில் பகல்போல் நடுவுநிலை தவறாது செங்கோற் சிறப்பில் உன் தந்தையைப் போல் இருப்பாயாக; ஆனால், உன்தந்தையின் குணத்தால் கவரப்பட்டு அவனை அடைந்த மகளிரின் அழகு கெடுமாறு அவரைக் கைவிடுவதில் அவனைப் பின்பற்றாதே, என்று, கூறினாள் [கலி.86:17].

**7. ஊழிக்காலம்.** நில மகளின் சுமை நீங்கவரும் எல்லாவுயிர்களும் ஒருங்கு அழிதற்குரிய பகல்-ஊழிக்காலம்-புகுகின்ற பொழுதில் பெருவெள்ளம் பொங்கி,எழும் [பதி.72:8].

**8. பொழுது.** தலைவியின் களவொழுக்கத்தைத் தாய்வாயிலாக அறிந்த தந்தையும், தமையன்மாரும் ஒரு பகல்-ஒரு பொழுது-நெஞ்சழன்று, கண்சிவந்து, கடுஞ்சினத்தாலே வில்லையும், அம்பையும் பார்த்துப், பின்னர் சினமாறி இருவரிடையிலும் குற்றமில்லை என்று தலை வணங்கினர் [கலி.39:23].

**9. இளவெயில்.** வையையில் தைந்நீராடும் மகளிரில் ஒருத்தி, நீலமலரைக் காதில் செருகிக்கொண்டாள்; மற்றொருத்தி, அசோகினது தளிரைத் தன் காதில் செருகிக்கொண்டாள்; இவள் சூடிய அசோகந்தளிரின் செம்மையாலே, அவள் சூடிய நீலமலரில் பகலாகப்-இளவெயிலாகப்-படர்ந்தது [பரி.11:96].

**பகல்நாள்-அரைநாள்.** இரவில் கானவர் பன்றி வேட்டையாடுதலை ஒழிந்தாராயின் எஞ்சிய பகல்நாளில்-அரைநாளில்-முயல் வேட்டையாடி உண்ணுவர் [பெரு.111].

**பகல்மதி-பாதித்திங்கள்.** வெள்ளிய இதழ்களையுடைய பகன்றையினது பெரிய மலர் பகல்மதி-பாதித்திங்களின்-வடிவிற்றாய் இருக்கும் [ஐங்.456:2].

**பகலோன்-ஞாயிறு.** பகலோன்-ஞாயிறு-மறைந்த அந்திப் போழ்திலே பெரிய கடல் நிறைமதி,நாளில் ஆரவாரித் தெழுந்தாற் போலத், தலைவியைப் பற்றிய அலர் எழுந்தது [அக.201:8].

**பகழி-அம்பு.** வல்வில் ஓரியினுடைய ஒரே பகழிய-அம்பு-யானையைக்கொன்று, புலியைவீழ்த்தி, கலைமானைக் கொன்று, பன்றியை வீழ்த்திப், புற்றின்கண் பதுங்கியுள்ள உடும்பின்மேல் சென்று செருகியது [புற.152:1].

இளையரும், முதியவருமாகிய வலைஞர் கூடிப் புலால் நாறும் முனையினையுடைய் பகழியையும், வில்லையும் போன்ற கயல்களையும், இறால்களையும் பெரிய ஆழ்ந்த குளங்களில் பிடிப்பர் [பெரு.269]. பாசறையில் வேந்தன், காவலாயிட்ட தோற்பரிசையினையும் அறுத்துக் கொண்டு, கூரிய நுனியினையுடைய பகழிகள் வந்து அழுந்துகையினாலே, தஞ்செவியைச் சாய்த்துக் கொண்டு புல்லுண்ணாமல் வருந்தும் குதிரைகளை நினைந்து உறக்கங் கொள்ளாதிருந்தான் [முல்.73]. தலைவன் நெடிய கோலையுடைய உடுச்சேர்ந்த பகழியை வலிந்திழுத்துச், செலுத்தி, யானையின் முகத்தில் தைக்குமாறு அழுத்துகையினாலே, புண்ணுமிழ் குருதியோடு அஃது ஒடியது [குறி.170].

தலைவியின் தமையன்மாராகிய கானவர் களிற்றியானையின் மதம் பொருந்திய கன்னத்தையுடைய முகத்தைக் கிழித்த பகழியினையுடையவர் [அக.132:4]. உப்பு வாணிகர் அட்டு ஒழிந்து கிடந்த கல்லாகிய அடுப்பிலே, தம் பகழியினை வடித்துக் கூராக்கிக் கொண்டு மறவர் ஆனிரையைக் கவரச் செல்வர் [அக.159:5]. ஆறலைகள்வராகிய கொடிய மறவர் குதையமைந்த பகழியினை முழுதும் இழுத்துவிடுத்து வழியில் செல்லும் புதியவரைக் கொல்வர் [அக.161:3]. ஆறலைகள்வர் சுரநெறியில் வழிச்செல்லும் வாணிகச் சாத்தினைக் கொன்று அவருடைய பொருளைக் கொள்ளைகொண்டு உண்ணும் வருத்தத்தைச் செய்யும் பகழியினை உடையவர் [அக.167:8]. வேட்டை நாயை விரட்டியும், வேட்டுவரைத் தடுத்தும், தன் குட்டிகளையும், தன் பிணவல் பன்றியையும் பாதுகாத்த பிறகும் வேடுவர் வரும் வழியில் அவரை எதிர்க்க நிற்கும் தறுகண் பன்றியினைக் கண்ட ஒரு கானவன் அதன் மறத்தை வியந்து தன் கூரிய பகழியினை எய்யாது பெயர்ந்து போனான் [அக.248:7]. வலியவில்லில் தொடுத்தல் அமைந்த பகழியின் செறிவினையுடைய வடுகர், கள்ளினை உண்ட மகிழ்ச்சியுடையவராய்ச் செருக்குமிக்கு ஆரவாரிப்பர் [அக.295:15]. வன்கண்மையையுடைய மறவர் சுரநெறியிலுள்ள

நடுகல்லின் ஓரம் தேயும்படியாகப் பகழியினைத் தேய்த்துக் கூராக்குவர் *[அக.297:6]*. தாயின் இறப்பினை அறியாது துள்ளிக்கொண்டிருக்கும் தன் குட்டிகளோடு துன்பமிகுதியால் முடங்கிக் கிடக்கும் கலைமானினுடைய பெண்மானை வீழ்த்திய மறவர் குருதியாற் சிவந்த வாயினையுடைய பகழியினையுடையராயிருந்தனர் *[அக.371:2]*. தினைக் காவல் புரியும் தலைவியிடம், தலைவன், 'மங்கையே, விரையும் இயலுடைய பகழி பாய்ந்ததாகப் புண்மிக்குத் துன்பத்துடன் வந்த களிற்றினைக் கண்டதுண்டோ', என்று வினவினான் *[அக.388:11]*.

வில்லையுடைய எயினர் கொல்லனது உலைக்களத்துள்ள பட்டடைக்கல்லைப் போன்ற வெப்பமான பாறையின் மேல் ஏறித் தம் பகழியினைத் தீட்டுவர் *[குறு.12:3]*. ஆண்பல்லி பெண்பல்லியை அழைக்கும் ஒலி, ஆறலைகள்வர் செப்பஞ் செய்யும் பொருட்டு இரும்பினாற் செய்யப்பட்ட தம் பகழியினை நகத்தின் நுனியிலே புரட்டுகின்ற ஒலிபோல இருக்கும் *[குறு.16:2]*. கானவர் குறிய படையாகிய பகழியினை உடையவர் *[குறு.333:1]*.

தலைவி, தினைப்புனங் காவலையுடைய மழவர், ஆண்டுத் தின்றழிக்க வந்த பன்றி முதலாய விலங்குகளையெய்து கொன்று மீட்டும் அவற்றினின்று பறித்தெடுத்த பகழி போன்ற செவ்வரி பரந்த கண்ணினையுடையவள் *[நற்.13:4]*. தலைவனை வருத்திய தலைவியின் கண்கள் வில்லையுடைய வேட்டுவன் பன்றியையெய்து கொன்று அதன் தசையிற் பாய்ச்சியதனாலே சிவந்த பகழியைப் போலச் செவ்வரிகள் படர்ந்திருந்தன *[நற்.75:7]*. ஆமானின் நெஞ்சிலே பாய்ந்து தங்காது குறி தவறிப்போன தன் பகழியின் போக்கைக்கருதிக் கானவன் இது தெய்வக் குற்றம்; மழைபெய்தால் அதன்வீறு தணியுமென்று சுற்றத்தோடும் சென்று கடவுளை வழிபடுவான் *[நற்.165:2]*. இலைவடிவாகிய மாட்சிமைப்பட்ட பகழியை வில்லிலே செலுத்தும் ஆற்றலில் வல்ல, உயிர்களிடத்து அன்பில்லாத மறவர் கொன்ற புதிய வழிப்போக்கரின் பிணங்கள் சுரநெறிகளில் கிடக்கும் *[நற்.352:1]*.

தலைவன், தலைவியைச், சிலை மரத்தால் செய்யப்பட்ட வில்லையும், அதற்கியைந்த கூரிய பகழியினையும், சிவந்த துவராடையினையும் உடைய கொலைத் தொழிலில் வல்லுநரான எயினருடைய தங்கையே', என்று விளித்தான் *[ஐங்.363:1]*.

வையையில் நீராடும் மகளிரின் முகமும், முலைக்கண்களும் நீரானே புடையுண்டு மிகச் சிவந்தன; இவ்வாறு தங்காதலரோடு நீராடியும் அமையாராய் மீண்டும் அவரோடு நீராடவிரும்பும் அம்மகளிரின் மலர் போன்ற கண்கள், வண்டுகள் மொய்க்கின்ற மணத்தானே மாட்சிமைப்பட்ட ஐந்தாகிய காமமாகிய பகழியினை அரத்தாற் கூர்மை செய்யப்பட்ட வாயையே பெரிதும் ஒப்பனவாயின *[பரி.10:97]*. முருகவேளின் திருப்பரங்குன்றத்தில், முகில் இந்திரவில்லை வளைத்து மரங்களின் மேல் அவ்விந்திரவில் சொரியும் பகழிகள் உளவாயின், அவ்வம்புகள் பரக்குமாறு போல, மரங்கள் மெல்லிய மலர்களை யாண்டும் பரப்பின *[பரி.18:40]*.

பகற்கதிர்-பகல்பொழுதைச்செய்யும் ஒளி. வெம்மையை உடைய ஞாயிறு கடலின்மீது பகற்கதிரை-பகற்பொழுதைச் செய்யும் ஒளியைப்-பரப்பிப், பின்னர் விசும்பிலே மெத்தெனச் சென்றாற்போலக் கரிகாற்பெருவளத்தானும் பிறந்த நாள் தொடங்கிச் சிறந்த நாடுகளைத் தன் தோளில் சுமந்தான் *[பொரு.137]*.

பகற்குறி-களவுக்காதலர் பகலில் கூடுமிடம். தலைவனும் தலைவியும் தாழையின் பூவும், புன்னைமலரும் கலந்து மணம் வீசும்படியான சோலையில் பகற்குறி-களவுக் காதலர் பகலில் கூடுமிடத்தில்-வந்து கூடிமகிழ்வர் *[நற்.235:4]*. தலைவியைத் தாய் இற்செறித்தமையால் தலைவி பகற்குறிக்கு வருதற்கில்லை; இதனை அறிவிக்கவே,யான் இதன்கண் வந்தேன் என்று, தோழி, தலைவனிடம் கூறினாள் *[நற்.258:1]*.

பகன்றை-சிவதை. சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, பகைவரின் குளிர்ச்சியையுடைய பகன்றை-சிவதை-படர்ந்துள்ள மருதநிலம் மிக்குள்ள நாட்டை, ஒள்ளிய தீயை மூட்டிப்பாழாகும்படி செய்தான் *[புற.16:14]*. அதியமான் இறந்த பொழுது வருந்திய ஔவையார், குளிர்ச்சியான நீரையுடைய துறையின்கண் படர்ந்துள்ள பகன்றையினது தேனையுடைய பெரிய மலர் பிறரால் சூடப்படாது வீணே கழிந்தாற் போலப்,பிறர்க்கு ஒரு பொருளையும் கொடுக்காது வீணே மாய்ந்து போகும் உயிர் மிகப்பல', என்று அதியமானின் சிறப்பையும், ஈயாது இறக்கும் மற்றை வேந்தரின் இழிதகைமையினையும் கூறினார் *[புற.235:18]*. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனிடம், நல்லிறையனார் எம்முடைய வறுமைத் துன்பத்தைப் போக்குவதோடு, ஈனுதற்குரிய நாளெய்தியபொழுது முட்டைகளையீன்ற பாம்பினது நாவின் வடிவைப் போலக் கிழிந்து போயுள்ள உடையை நீக்கி, அரும்பு மலர்ந்த பகன்றையின் புதுப்பூப் போன்ற அகலமடிக்கப்பட்ட ஆடை கொடுத்துடுப்பித்து அனுப்புவாயாக', என்று கூறினார் *[புற.393:17]*.

தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை, உழவர் நீர்த்துறையில் மலர்ந்துள்ள பகன்றையின் பூவால் தொடுத்த அழகிய மாலையை வெளுக்கப்பட்ட வெள்ளாடை போலத் தலையிலே சூடிக்கொண்டு உழுகின்ற படைச்சாலில் ஒளிவீசும் அழகிய மணிகளைப் பெறுகின்ற, வளமான ஊர்கள் நிறைந்த, நாட்டிற்குரியவனாவான் *[பதி.76:12]*.

சோழன் கரிகால் பெருவளத்தானின் வளமான சோழநாட்டில் கரும்பு வெட்டும், நெல்லரியும் உழவரின் ஓசைக்கு அஞ்சிய நாரைகள் அவ்விடத்தினின்று அகன்று பகன்றை முதலியன படர்ந்துள்ள இடத்தில் போய்த் தங்கும் *[பொரு.195]*.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் பாண்டிய நாட்டு மருதநிலத்தில் தழைத்த பகன்றையினையுடைய நெல்லுமுற்றிய கழனியில் அந்நெல்லை வலிய கையினாலே அறுக்கும் உழவருடைய அரித்தெழுகின்ற பறையோசை முழங்கும் *[மது.261]*. தலைவியும், தோழியும் பறித்துப் பாறையில் குவித்த மலர்களில் பகன்றைப் பூவும் இருந்தது *[குறி.88]*. கள்விற்கும் பழையருடைய மகளிர் பகன்றைப் பூவாற்செய்த மாலையை உடையவர் *[மலை.459]*.

குளிர்ந்த பெயல் நின்ற தைத்திங்களாகிய முன்பனியின் கடைநாளில் வளையின் தலையைப் போன்ற கட்டுண்ட பிணிப்பு விரியாத சுரிந்த முகத்தினையுடைய பகன்றையின் அரும்புகள், சிதறுகின்ற மழைத்துளிகள் வீசுதலால், மலரும் *[அக.24:3]*. வயலிலுள்ள நெற்கதிரை மேயும் முதிய ஆவினை, வயற்காவலர் பாகற்கொடியோடு, பகன்றைக் கொடியையும் சேர்த்து, அவற்றால் காஞ்சி மரத்தில் கட்டி வைப்பர் *[அக.156:5]*. தாமரை பூத்துள்ள வயலில் உள்ள ஞெண்டு நாரைக்கு அஞ்சி அயலில் பகன்றை படர்ந்துள்ள சேற்றுப்பிழம்பில் தேமல் போல வரியுண்டாக ஒடி அளையுள் பதுங்கும் *[அக.176:10]*. கிடுகினுடைய தோலின் நீலநிறம் மறையும்படி பதித்துள்ள வட்டக்கண்ணாடி போலப், பசிய இலை நெருங்கிய புதல்தோறும் பகன்றை வெள்ளியனவாக பனிக்காலத்தில் மலரும் *[அக.217:6]*. தாய், 'தன் குறுமகள், சிறுபொழுது விளையாடினும் அவளை இங்கு வா என்று அழைத்துப்பெரிய இலையினையுடைய பகன்றையின் வெள்ளிய பூ பனிநீர் நிறையப் பெற்றது போலப், பால் நிறைந்துள்ள கிண்ணத்தைப் பற்றிக் கொண்டு, முன்பு எனக்காக உண்டாய், இப்பொழுது உன் தந்தையின் பங்குக்காக உண்', என்று கூறி, உண்பிப்பள் *[அக.219:4]*. ஞாயிறு மறையும் பொழுது விரிந்த குளிர்ந்த புதலாகிய பகன்றையானது, ஒலிக்கும் வாடையுடன் வரும் நுண்ணிய மழைத்துளியால் ஊரின் அருகே அழகுபெற மலரும் *[அக.243:3]*. கருவிளையின் பூவினொடு மாறுபட்ட குளிர்ந்த பகன்றையின் வெள்ளிய மலர்களின் அகவிதழை வாடை அசைக்கும் *[அக.255:11]*. பொய்கையில் ஆம்பல் மலரை மேய்ந்த முதிய எருமைக்கடா சேற்றிலே இரவெல்லாம் துயின்று, ஞாயிறு தோன்றும் காலையில் வெளிப்பட்டு, வெள்ளிய பூக்களையுடைய பகன்றைக் கொடியினைச் சூடிக்கொண்டு, போரில் வென்றியெய்திய மழவர் வருவது போல ஊருக்குள் புகும் *[அக.316:6]*.

வண்ணாத்தியால் கஞ்சி தோய்த்து எடுத்துத் தூய்மை செய்து நீரிலே போடப்பட்டு, நீரிலே பிரியாத பருத்தி ஆடையின் முறுக்கை யொக்கும் பெரிய இலையையுடைய பகன்றையின்து கூம்பு மலர்ந்த வெள்ளிய மலர், கள்ளைப்போல நறுநாற்றமில்லாதனவாகி, நாறும் *[குறு.330:4]*.

முன்பனிக் காலத்தில் வயவரின் கையிலுள்ள வேற்படை போல விரிந்த மேற்கதுப்பாகிய தோலையுடைய பகன்றை வெள்ளிவட்டிலைப் போல மலரும் *[நற்.86:3]*.

இடையர், பகன்றை மலரால் புனைந்த கண்ணியைச் சூடியிருப்பர் *[ஐங்.87:1]*. எருமையினது கன்றுக்குட்டி தூய பகன்றைமலர் சிக்கியுள்ள தன் தாயினுடைய கொம்பினைக் கண்டு, தனது தாயன்று என்று மருண்டு அஞ்சும் *[ஐங்.97:1]*. கூதிர்க் காலத்திலும் வெள்ளிய இதழ்களையுடைமையால் பாதித் திங்களின் வடிவினையுடைய பகன்றையினுடைய பெரிய மலர்கள் வெண்ணிறக் கொடிகளையுடைய ஈங்கையின் (இண்டங்கொடி) புதன்மிசை மலர்ந்து அழகு செய்யும் *[ஐங்.456:2]*.

ஒளிவீசும் வெள்ளிக்கிண்ணத்திலுள்ள மதுவைக் குடிக்கும் மங்கையின் முகம்போல, அகன்ற நீருண்ணும் துறை அழகு பெறும்படி தூற்றோடு வந்து தாழ்ந்து கிடக்கும் பகன்றையினுடைய வெள்ளிய பூக்கள் மீது வயலிலுள்ள தாமரையினது மொட்டுக்கவிழ்ந்து கிடக்கும் *[கலி.73:2]*.

**பகாஅர்**-விற்போர். பகாஅரது-விற்போரது-பூசாந்து முதலிய நறுமணப் பண்டங்கள் தலைவியினுடைய ஐம்பாலினவாகிய கூந்தலில் மணக்கும் *[அக.181:22]*.

**பகை-1.** மாறுபாடு. சோழன் நலங்கிள்ளியை, உறையூர் முதுகண்ணன் சாத்தனார் பாடும்பொழுது, 'கெடாத வலிமையோடு பகை-மாறுபாடு-கொண்டு நின்னை, எதிர்த்தோர் அருளிலராயும், கொடைத்தன்மை இலராயும் ஆகுக', எனப் பாடினார் *[புற.27:19]*. சோழன் நலங்கிள்ளியைக், கோவூர்கிழார் பாடும்பொழுது, 'வேந்தன், உட்பகையை வெல்லுதற்குப் புட்பகையின் காரணமாக நம்மை ஏவானாகலின் யாம் போருக்குச் சென்று மடியக் கடவேம் என்று தம் தோள்களைத் தட்டும் மறவரைப் படையாகப் பெற்றவன்', என்று பாடுகிறார் *[புற.68:11(2)]*. அதியமான் அஞ்சியின் மகனாகிய பொகுட்டெழினிக்கு இரண்டு பகைகள் உள்ளன; ஒன்று அவன்மீது காதல் கொண்ட மகளிர் ஊடுவது; மற்றொன்று, அவன் செல்லும் அயலூர்களில் வாழ்வோர் தம்மூர் நீர் நிலைகளில் அவனுடைய யானைகள் நீருண்ணுமோ என்றஞ்சி, அவ்வூர்களை வெறுத்தேகுவது, என்று ஔவையார் பாடினார் *[புற.96:3]*. ஆய் அண்டிரனைத் துறையூர் ஓடைகிழார் என்ற புலவர், 'கிழிந்த ஆடையின் தையல்களில் தங்கியுள்ள சீலைப்பேனாகிய பகையும், சுற்றத்தோடு எம்மை வருத்தும் பசிப்பகையும், எம் வறுமை நிலையையும் பாராதவராய் எம் கைப்பொருளைக் கவர்ந்தேகும் ஆறலைக்கள்வராகிய பகையுமாகிய பகைகளைக் களைபவன் நீயே' எனத், தெளிந்து நின்னிடம் வந்தடைந்தேன்', எனக் கூறினார் *[புற.136:5,9,14,15]*. குமணனிடம், பெருஞ்சித்திரனார் நின்னால் உயர்த்திப் பிடிக்கப்பட்ட வேல், புகழ் மேம்பட்ட வண்மையுடனே பகையிடத்து உயர்க', என்று வாழ்த்தினார் *[புற.158:28]*.

வல்லார்கிழான் பண்ணனிடம், சோணாட்டு முகையலூர்ச் சிறுகருந்தும்பியார், பாணனை ஆற்றுப்படுத்துவதுபோலப் பாடும்பொழுது, 'உண்ணப்படாத நினது சுற்றத்துடன் நீ உய்ய வேண்டுமாயின், இப்பொழுதே நீ பண்ணனிடம் சென்று நின் பசிக்குப் பகையாகிய பரிசிலைப் பெற்றுக்கொள்', என்று பாடினார் *[புற.181:9]*. சகடத்தைச் செலுத்துவோன் மாட்சிமைப்படின், ஊறின்றி வழியில் அது இனிதாகச் செல்லும்; செலுத்துவோன் தெளிவில்லாதவனாயின், நாடோறும் அது பகையாகிய சேற்றிலே அழுந்தி, மிகப்பல துன்பத்தை உண்டாக்கும், என்று, உலகாளும், முறைமையை உட்கொண்டு தொண்டைமான் இளந்திரையன் பாடினான் *[புற.185:5]*. உறையூரிலிருந்து ஆட்சிபுரிந்த கோப்பெருஞ்சோழன் பாணருடைய வருத்தமுற்ற சுற்றத்தினது பசிக்குப் பகையாய் விளங்கினான் *[புற.212:7]*. ஆனிரை மேய்கின்ற காடுகள் பிறிதொன்றால் ஏதமின்றி இருக்கவும், சுரத்தில் நடப்போர் வெம்மைக்காற்றாது வேண்டியவிடத்தே தங்கியிருக்கவும், களத்தின் கண் நிறைந்த நெற்பொலி காவலின்றியே கிடப்பவும், எதிரில் நின்று தடுக்கும் பகையை வெல்லும் நிலங்கலங்காத செவ்விய ஆட்சியையுடையவன், அதியமானாவான் *[புற.230:4]*. வள்ளலும், வயவனுமாகிய தன் கணவன் மார்பில் புண்பட்டுக்கிடந்த பொழுது தீ நிமித்தங்களைக் கண்ட ஒரு மறக்குல மங்கை, 'துடி கொட்டுபவனே, பாணனே, விறலியே, நீங்களெல்லாம் என்னாவிரோ; இனி உங்கட்கு இங்கு வாழ்வது அரிதாகும்; நானும் மழித்த தலையுடனும், இளமைக் காலத்தில் உடுத்திய அழகிய பகைத்தழையாயுதவிய சிறிய வெள்ளிய ஆம்பலிடத்துண்டாகும் அல்லியரிசியை உண்ணும் கைம்பெண்டிர் போலக் கணவன் இறந்தபிறகும் வாழ்ந்திருப்பதும் அரிதாகும்', என்று வருந்திக் கூறினாள் *[புற.280:12]*. பெட்டைக் கோழி இரவில் வேலியடியில் தங்கும் காட்டுப்பூனையாகிய பகைக்கு அஞ்சும் *[புற.326:2]*. இளையவளுடைய அல்குலிடத்தே பரந்த அழகிய வரிகள், மருத நில ஊர்களோடு நிறைந்த விழுமிய பொருள்களைக் கொணர்ந்து தருவது ஒன்று', அல்லது, பகைமை மேற்கொண்டு புகையெழும் மிக்க தீயானது ஊரைக் கொளுத்த அருளில்லாத மறச்செயல் செய்வது, மற்றொன்று; இவ்விரண்டனுள் ஒன்று உளதாதல் உறுதி *[புற.344:5]*. சேரமான் சிக்கற்பள்ளித் துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதனைக், குன்றுகட்பாலியாதனார், 'யானைப்படையை உடைய பகைநாட்டு வேந்தர் பணிந்து தந்த திறைப்பொருள்களைக் கொண்டு நினது அறிவினராகிய இரவலர் நண்பர் முதலியோரது வறுமையைப் போக்கி மிகவும் விளங்குக, நினது திருவடி', என்று வாழ்த்திப்பாடினார் *[புற.387:12]*. சோழன் நலங்கிள்ளி, தன்னை வருத்தக் கருதும் பகையைப் போக்குவதோடு, தன்னைச் சேர்ந்தோருடைய பசியாகிய பகையையும் போக்குவதில் வல்லவனாவான் *[புற.400:16,17]*.

குடக்கோ இளஞ்சேரலிரும்பொறையின் பகைமை பெரிதாதலால், அவனுடைய பகைவர், தமக்குப் பாதுகாவலாகத், தெய்வத்தை வழிபடுவர் *[பதி.82:1]*.

மயில் போன்ற சாயலையுடைய பாடினி அரக்குருக்கினாற் போன்ற சிவந்த நிலத்தே நடக்கையினாலே சுக்கான் கல்லாகிய பகை குத்தியதால்ஏற்பட்ட மரலினது பழம்போன்ற கொப்புளங்களின் காரணமாக உச்சிப்போதின்கண் நடத்தலைத் தவிர்த்தாள் *[பொரு.44]*. சோழன் கரிகால் பெருவளத்தானின் அறமன்றத்தில் முறை வேண்டி முதியோர் ஏறியபொழுது அவர்களுக்குள் பகைமை நீங்கி அன்பு உள்ளத்தராவர் *[பொரு.188]*. உழவருடைய அழகிய பிள்ளைகள் பழஞ்சோற்றினை வெறுத்தால், தம் குடிலின் முற்றத்தில் அவலை இடிக்கும், உலக்கையினது ஓசையைக்கேட்டு, அயலில் உள்ள கிளிகள் பகையாகக் கருதி அஞ்சும் *[பெரு.227]*. ஓடை மழகளிற்றானாகிய வேந்தன், எரிபோல் பொங்கிப் பகைமை கொண்ட உள்ளத்தோடு பாசறையில் தங்கியிருக்கும் போது வாடை நலிவதால் அவன் தன் மனைவியின் தோளுக்கு அவாக்கொள்ள மாட்டான் *[நெடு.வெ.1:4]*. கரிகால் பெருவளத்தானின் சோழநாடு, உலரும் நெல்லைத்,தின்னவரும் கோழியை மகளிர் தம் காதணிகொண்டு விரட்டுமவை, சிறார் உருட்டும் சிறிய தேர்களின் வழியைத் தடுக்கும். இப்பகையேயன்றி, அம்மக்கள் கலங்கும் படியான வேறுபகையில்லாத பாக்கங்களையும், சிற்றூர்களையும் கொண்டுள்ளதாகும் *[பட்.26(2)]*. கரிகாலன் பெருவளத்தானின் ஆட்சியில் காவிரிப்பூம்பட்டினத்தில் வாழும் வேளாண்மாந்தர் வலைஞரையும், இறைச்சி விற்பாரையும் கொலைத் தொழிலிலிருந்து நீக்கியதால், மீன்களும், விலங்குகளும் அவர்களைப் பகையாகக் கருதி அஞ்சாமல், அவர்களின் முன்றில் செருக்கித் திரிந்தன *[பட்.196]*. கூத்தருடைய பேரியாழில் பேய்க்குப் பகையாகிய வெண்சிறுகடுகளவு கூட இசையில் தவறில்லாதவாறு, ஓசையைச் செவியால் ஓர்ந்து (அளந்து), பார்த்துக் கட்டின, வடித்து முறுக்கின, நரம்பு, குற்றந்தீர அமைந்திருந்தது *[மலை.22]*.

புதிய அரசர் திறையாக அரிய அணிகலன்களைக் குவித்ததால் வேந்தன் கொடிய பகைமை தணியப் பெற்றான் *[அக.54:2]*. ஆனிரையைக் கவரச் செல்லும் மழவர் வாயினின்றெழும் பகையினை (இருமலை) எழாமல் தீர்க்கும் மருந்தாகிய புற்று மண்ணை வாயில் அடக்கிக்கொள்வர் *[அக.101:6]*. தலைவன் தலைவியின் ஆடையைக் களைய, உறையினின்றும் எடுத்த வாளைப்போல, அவளின் உருவம் வெளிப்படவும், அவள் பார்த்தால் பகையாயிருக்கின்ற ஆம்பல் மலர் மாலையை நீக்கிவிட்டுத் தன் கூந்தலினால் மறைத்தற்குரிய உறுப்புக்களை மறைத்தாள் *[அக.136:27]*. பிண்டன் என்பான், பொன்னைக் கொண்டுவரும் மரக்கலம் சிதையுமாறு தாக்குகின்ற சிறிய வெள்ளிய இறாமீனின் தொகுதி போன்ற, மிக்க பகையைத் தரும் வலிமிக்கவனாவான்

[அக.152:9]. சுர வழியில் செல்லும் வாணிகச் சாத்தினைக் கொன்று அவர் பொருளைக் கொள்ளை கொண்டு உண்ணும் ஆறலைகள்வரது மிக்க பகையை அஞ்சி ஊர் பாழாகக் கிடக்கும்படியாகப் போட்டுவிட்டு மக்கள் வேற்றிடம் சென்றுவிட்டனர் [அக.167:9]. தலைவியின் பாங்காயினார் கேட்கும்படியாக இற்பரத்தை, யாம் தலைவிக்குப் பகையாவேம் அல்லோம், அவளுடைய கணவனே மாறுபாடு மிக்கவனாவான்', என்று கூறினாள் [அக.186:20]. தன் பிடியானை, இனத்துடன் இன்பமடையப், புலியாகிய பகையை ஆண்யானை வெல்லும் [அக.202:3]. அரசன், மிக்க பகையோடு முரண்பட்டுப் பாசறைக் கண்ணே இருந்து பகைஞனை வெல்லுதலால் உண்டாகும் புகழை நினைந்து துயிலாதிருந்தான் [அக.214:5]. பகை கொண்டு போர் செய்தலால் சீறூர் பாழாகிய அவ்விடத்தில் ஆட்களின் வருகையை எதிர்நோக்கிக் கொல்லுதல் வல்ல யானை சுரநெறியில் காத்திருக்கும் [அக.247:7]. கோசர் என்பார்க்கு மோகூர் மன்னாகிய பழையன் பணியாமையின், அவன்மீது பகை கொண்ட கோசருக்கு உதவியாக வந்த மோரியர் என்பார், தம் தேர்களின் நேமி உருளும்படி, மலையையறுத்து, வழி செய்து கொண்டு வந்தனர் [அக.251:11]. எருமை என்பானுடைய வயவராகிய வடுகர் நள்ளிரவில் பகைப்புலத்தைக் கெடுத்துக் கன்றுகளையுடைய ஆனிரையைக் கவர்ந்து கொண்டு வந்து தம்மூர் மன்றுகளுள் நிறைப்பர் [அக.253:11]. சுரத்தில் ஆறலை கள்வர்களுடைய பகை மிக்க கவர்த்த வழிகளில் வம்பலர் தாம் செல்லுதற்குரிய வழியிதுவென அறியும்பொருட்டு யாமரங்களில் ஏணிகளைச் சார்த்தி வைத்திருப்பர் [அக.257:13]. நீர் வேட்டுச் சென்ற துறையின்கண் தன் உருவினைக் கண்டு, தாக்கற்குப் பதுங்கிய புலியைக் கொன்ற களிற்றுயானை மழைத்துளிகளால் குருதி தோய்ந்த தன் கொம்பினைக் கழுவிக்கொண்டு செற்றங் கொண்ட தன் பகையைத் தொலைத்த செருக்குடன் மெல்லச் சென்று தன் பிடியைப் புணர்ந்து மலையில் துயிலும் [அக.332:7].

யானையினது கடிய பகையினால் வருந்திய ஆண்புலி நள்ளிரவில் செந்நாய் அகப்படுகின்ற செவ்வியைப் பார்த்திருக்கும் [குறு.141:4]. தலைவி, தோழியிடம், 'தோழியே, என்னிடத்துள்ள காமமாகிய பகை தலைவன் வரும்தொறும் வெளிப்படும்; அவன் அகன்றாலும் அது அகலாததாகித் துன்புறுத்தும். இஃது என்ன வியப்பு', என்றாள் [குறு.257:6]. பரத்தையிற் பிரிந்த தலைவனுக்காக வாயிலாகப் புக்க தோழிக்குத், தலைவி, 'தலைவன் இங்கு வந்துள்ளதை யறிந்தால், நீரில் வளர்ந்த வெள்ளாம்பலினது அழகிய பகைபட்ட முழு நெறியையுடைய தழையுடை, துடையின்கண் மாறிமாறி அசையும்படி பரத்தையானவள் இங்கு வருவாள்', என்று கூறினாள் [குறு.293:5]. ஆறலைகள்வருடைய பகையினின்றும் தம்மைப் பாதுகாவாராகி எதிரே நின்று இறந்துபட்ட வழிப்போக்கர்களின் உடல்களின்மீது தழையை இட்டுமூடி வைத்த குவியல்கள் ஊரைப்போலத் தோன்றும் [குறு.297:2]. வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிவின்கண் ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குத், தலைவி, 'தலைவனோடு நாம் உறுதியாகப் பகையைத் தருகின்ற ஒரு நட்பைச் செய்தோம்', என்று கூறினாள் [குறு.304:8]. வரைவிடை வைத்துப் பொருள் பிரிவின்கண் ஆற்றாளாய தலைவிக்குத், தோழி, 'குறவன் குழந்தைகளோடு விளையாடி மகிழ்ச்சியை விளைவித்த யானைக்கன்று பின் அவருக்குரிய தினையையுண்டு அவருக்குத் துன்பம் விளைத்ததுபோலத், தலைவர் நின்னோடு முன்பு நகைத்து விளையாடியது, இப்போது பகைமையையுடையதாகின்றது', என்று கூறினாள் [குறு.394:6].

தலைவி, பலவாகிய பூக்களுடனே கூடிய பகைத் தழையுடையை அசையும்படி உடுத்த அல்குலையுடையவள் [நற்.8:2]. தலைவன், மூங்கில்கள் நெருங்கிய கற்பாறைநெறியாகிய சிறிய வழியில் இரைதேடியுழலுகின்ற வேங்கை முதலாய மிக்க பகையைப் பொருட்படுத்தாது இரவிடை வந்து தலைவியினுடைய மார்பினை முயங்கி மகிழ்வான் [நற்.55:3]. வினைமுற்றிய தலைவன் தேர்ப்பாகனிடம், 'நமது அரசன் மிக்க பகையைத் தணித்துவிட்டனன்; நாம் வந்த வேலை முடிந்தது; எனது காதலியைக் கண்டு மகிழ விரைந்து தேரைப்பூட்டுக', என்றான் [நற்.81:10]. தலைவன், தலைவிக்கு, வளைந்த தண்டுயர்ந்த நீண்ட காம்புடைய நெய்தலின் அழகிய பகைநெறிப்பையுடைய தழையுடையை அழகு பெற உடுப்பித்து மகிழ்வான் [நற்.96:8]. கானலிடத்துத்தன் ஆயத்தாரோடு காலையில் சென்று கொய்து கொணர்ந்த நெய்தலின் அழகிய பகை நெறிப்பையுடைய தழையுடையை அழகுபொருந்த தலைவி உடுத்துவாள் [நற்.123:7]. பிரிவிடை மெலிந்த தலைவி, பகைவேந்தனது படை அலைத்தலாலே கலங்கி, மக்களெல்லாம் ஓடிவிட்ட பாழ் நகரத்தைக் காவல் செய்திருந்த ஒரு தனி மனிதன் போன்று, கலங்கிய என்னுடைய நெஞ்சம், தலைவனிடம் சென்றுவிட்டதால் உணவால் என்னுடம்பைக் காத்து வருகிறேன் என்று கூறிக்கொண்டாள் [நற்.153:3]. அச்சம் செய்கின்ற முதலையின் நடுக்கமுறுத்தும் பகைக்கும் அஞ்சானாகிக் காமமிகுதியால் தலைவன் தலைவியை, இரவுக்குறிக்கண் வந்து கூடுவான் [நற்.287:6]. களவுக் காலத்துத் தலைவிக்குப், பவலமாட்சிமைப்பட்ட படுக்கையும் பகையாகத் தோன்றும் [நற்.297:3]. அரசரது பகையால், குடிமக்கள் அழியப், பல ஊர்களும், நெறிகளும் பாழாகி விடும் [நற்.346:3].

தான் வரைவு நீட்டித்த பொழுது தலைவி எவ்வாறிருந்தாள் என்று வினவிய தலைவனிடம், தோழி, 'தலைவி ஆதன் வாழியென்றும் அவினி மன்னன் வாழியென்றும், அவ்வவினி பகை தணிந்து அறவோனாகுக, என்றும், அவ்வேந்தனின்

பகை தணிந்து அறவோனாகுக, என்றும், அவ்வேந்தனின் வாழ்நாள் நீளுக, என்றும் அரசனை வாழ்த்துவாள்போலக் காட்டி, நின்னால் உண்டான துயரத்தை மறைத்தொழுகினாள்', என்று கூறினாள் *[ஐங்.6:2]*. களவுத் தலைவன், தோழியிடம் பரிசாகத் தழையுடையைக் கொடுத்தபொழுது 'ஐயனே, எம் தலைவி இப்பகைத் தழையை உடுத்தினால் அயலார் ஐயுறுவர்; ஆகவே, இதுவேண்டாம் என்று மறுத்தாள் *[ஐங்.187:3]*. தலைவனின் கையுறையை ஏற்றுக்கொள்ளுமாறு, தலைவியிடம், தோழி, 'தலைவன் தரும் அசோகினது பகைத்தழையை வாடிப்போவதற்குள் நீ பெற்றுக்கொள்', என்று கூறினாள் *[ஐங்.211:3]*. பொருள்வயின் பிரிந்த தலைவன் ஊறு அஞ்சாது இரவிலும் விரைந்து வந்தமையை யறிந்து, தோழி, தலைவனிடம், 'பதுக்கைகளை (இறந்தோரின் கற்குவியல்) யுடைய வழியில் யானைகளாகிய பகைகளையும் கருதாமல், செறிந்த இரவிலே, எப்படித்தான் வந்தாயோ என்று கூறினாள் *[ஐங்.362:2]*. பாசறையின்கண் உள்ள தலைவன், தலைவியை நினைந்து, மாற்றானின் அரணை அழித்து வெற்றி கொண்ட படையையுடைய நம் வேந்தன் பகை தணிந்து இப்போதேனும் தன்னாட்டிற்குச் செல்லுதலைக் கருதினால், யாம் தலைவியைக் கூடி மகிழலாம்; அவன் அவ்வாறு நினைந்திலனே, என்று, தனக்குள் வருந்தினான் *[ஐங்.444:4]*. வேந்தர்க்குற்றுழிப் பிரிந்த தலைவன், வினைமுற்றாமையின், பாசறைக்கண் தலைவியை நினைந்து, 'நம் வேந்தன் போர்த்தொழிற்குக் காரணமான பகை தணிந்து, நம் நாட்டிற்கு மீள்வதைக் கருதுவானாகுக; யாமோ, எம் காதலியின் இளமுலைமேற்கிடந்து துயில்வேனாகுக', என்று, தனக்குள் கூறிக்கொண்டான் *[ஐங்.450:1]*. போர்மேற் சென்ற வேந்தன் தன் பகைவர்பால் கொண்டுள்ள பகை தணியும்படி கார்காலம் வந்தது; ஆனால், நம் தலைவரோ வரவில்லை என்று தலைவி ஆற்றாளாய்த், தோழியிடம் கூறினாள் *[ஐங்.455:1]*. பருவங்கண்டு வருந்தும் தலைமகளைத், தோழி, போரினையே விரும்பும் நம் மன்னன், மாற்றார் பணிந்தமையால், பகை தணிந்தனன் எனக் கூறக் கேட்டேன்; தலைவரும், விரைந்து வருவர்', வருந்தாதே', என்ற கூறி ஆற்றுவித்தாள் *[ஐங்.465:5]*.

அறச்சான்றோர்களைப் பாதுகாப்பதும், பெரிய பகைகளை எல்லாம் வென்று அச்செருக்கினால் தம்மை வழிபடாதாரை அழிப்பதும், இருவர் உள்ளமும் கலந்து வாழும் காதலரின் வாழ்வில் புணர்ச்சியைத் தருவதும் பொருளேயாகும் *[கலி.11:2]*. பொருள்வயின் பிரியும் தலைவனிடம், தோழி, காதலின் உயர்வையும், பொருளின் தாழ்வையும் கூறுவானாய், 'அறவழியில் ஈட்டாத பொருள் அவரை நீங்கி இம்மையிலும், மறுமையிலும் பகையாவதை அறியாயோ, என்றாள் *[கலி.14:15]*. இளவேனிற் பருவத்தைக் கண்டு வருந்திய பிரிவுத் தலைவியிடம், தோழி, 'இப்பருவத்தைக் கண்டு வருந்தாதே, பிரிந்த காதலியரின் காதல் நோயைத் தன் பகையாகக் கொண்டு அதனைத் தணிக்கும் மருந்தாகிக் காதலனின் வருகையை அறிவிக்கும் தூதாகும் அது; அதற்கு விருந்தளிப்போம் வா', என்றாள் *[கலி.32:14]*. தோழியிடம், தலைவி, 'தினையைச், சந்தன உரலிலிட்டு, யானையின் முற்றிய கொம்பினால் குற்றியவாறே, பகை (மருந்து இல்லாத காமநோய்) இல்லாத நோயைச் செய்தவனுடைய மலையை வாழ்த்தி அகவல் பாட்டைப் பாடுவோம் வா', என்றாள் *[கலி.40:6]*. பகையாக வந்தால் கூற்றுவனே ஆனாலும் எதிர்த்தழித்தலும், நட்புடையார்க்குத் தோற்றலில் நாணாமையும், தலைவனுடைய பண்புகளாகும் *[கலி.43:9]*. மலர்களை யணிந்து, புகழ்மிக்க புலவர்களால் பாராட்டப்பெற்று, நிலமகளுக்கு மார்பில் மாலை சூட்டியது போன்ற அழகைப்பெற்ற வையையாற்றினது வெள்ளம் மதிலைப் பொரும் பகையல்லது, பகைவர் போர்குறித்து வளைத்தலை, யறியாத மதுரை நகருக்குத் தலைவனானவான், நம் தலைவன், என்று தலைவி கூறினாள் *[கலி.67:4]*. பரத்தையர் சேரிக்குச் சென்று வந்த தலைவனோடு ஊடிக் கூறும் தலைவி, 'நம் கணவன் நமக்கு உறவு உடையவன் அல்லன்; அவனைத் தழுவாதே, என்று, தோளுக்குக் கட்டளையிட்டும், கேளாது தழுவத் துடிக்கும் தோளுக்குப், பகை கொண்ட நெஞ்சத்தளாய் உள்ளேன்', என்று கூறினாள் *[கலி.68:11]*. பரத்தையர் சேரிக்குச் சென்று வந்த தலைவனோடு ஊடின தலைவி, காணாதபொழுது சினந்தும், நின்னைக் கண்ட பொழுது நின்னிடத்தில் என்னைச் செலுத்தியும், தானும் நின்னிடத்திலேயே போய்த் தங்கிக் கொள்ளும் நெஞ்சென்று சொல்லப்படுகின்ற உட்பகையை உடைய எனக்கு நின் மார்பைத் தழுவேம் என்னும் நிறை என்ற பண்பும் எளிதோ', என்று கூறி, ஊடல் தீர்ந்தாள் *[கலி.77:24]*. தலைவியை அடைய வேண்டுமென்ற வேட்கையால் அவளுக்குரிய கொல்லேற்றினை ஏறி அடக்கினான், ஒரு காளை. ஏற்றினுடைய வருத்தத்தைக்கண்டு ஏற்றுக்குரியோர் வெகுண்டெழுந்தனர்; மற்றையோர் அவன் தழுவினவாற்றுக்கு மகிழ்வதன்றிப் பகைப்பதால் என்ன பயன் என்றனர் *[கலி.102:29]*. பித்தம் பிடித்தலைவார் போல் என் முன்னே வந்து தடுத்து நிறுத்தும் ஏடா, நீ யார், உன்னை யான் அறியேன் என்று கூறிய தலைவிக்கு, நான் பகை கண்டு அஞ்சாத ஆட்டையர் குலத்தில் வந்தவன், என்று, தலைவன் கூறினான் *[கலி.113:6]*. தலைவனைப் பிரிந்துள்ள தலைவி, மாலைக் காலத்தைப் பார்த்து, 'ஏ மாலையே, தாழ்ந்த கிளைகளில், ஆணும், பெண்ணுமாகிய பறவைகள் மகிழ்ந்திருப்பதைக் கண்டு, அப்பறவைகளோடு பகைமை கொள்ளும் என் புன்மையைப் பழித்துப், பாராட்டும் நீ, புணர்ச்சியைப் பெற்ற மகளிரின் முறுவலைப் போக்காய்', என்று கூறினாள் *[கலி.118:18]*. படைவலியில்லா அரசன் ஆளும்போது, அவனுக்கும் மேலாய் வந்த கடிய பகையானது, வலிய அரசன் வந்து காத்தபொழுது ஓடினாற்போலப் பிரிந்த தலைவன் வந்த பொழுது தலைவியை வருத்திய அம்மாலைக் காலமும் ஒடி இரவில் மறைந்தது *[கலி.120:22]*. தலைவியை

அடையப்பெறாது மடலேறுகின்ற தலைவன், சான்றோரிடம், 'காமமாகிய கடிய பகை வந்து எனது ஆண்மையை அழித்தலாலே, இப்படிப்பட்ட வடிவு கொண்ட எனக்குத் தலைவியால் தரப்பட்ட இம்மடன்மா ஒரு காப்பாக ஆயிற்று' என்றான் *[கலி.139:24].* காதலனின் பிரிவினால் காதல் மீக்கூர்ந்த தலைவி, 'ஞாயிறே, காலையில் கடல் நீரிலே என் காதலனுடன் நீ வந்தால், உயிரோடிருந்து உங்களைக் காண்பதோடு, இம்மாலைக் காலமாகிய பகையையும் ஒருவாறு தாங்கிக் கொண்டு, காதலன் நல்லவன், கலங்காதே, என்று என் நெஞ்சிற்குங் கூறுவேன்', என்று கூறினாள் *[கலி.145:34].*

தலைவன் பாடியதைக் கேட்ட ஒரு பெண் அவன் மீது காதல் கொள்ள, அவள் மீது தலைவி பகைமை கொண்டு சினந்து தன் மாலையினை அறுத்தெறியத் தலைவன், தலைவியின் கால்களில் வீழ்ந்து வணங்கிடவும், சினந்தணியாது, அவனுடைய தலையை உதைத்து ஊடியிருந்தாள் *[பரி.7:72].* மற்றொருத்தியின் மீது மையல் கொண்டான் தன் காதலன் என்று கருதிய காதலி, அரக்கு நீருள்ள வட்டினை அவன் மார்பில் எறிய அவ்வரக்கு நீர் குருதி சொரிவது போலச் சொரியவும், தலைவன், தலைவிமீது பகைமையிலனாய் நிலத்தின்மீது வீழ்ந்து வணங்கவும், அதனை யறியாத தலைவி வட்டடியால் வீழ்ந்தானாகக் கருதிப், புலவி நீத்து, அவனுடைய மார்பினைத் தழுவிக்கொண்டாள் *[பரி.12:70].* பலநிறமமைந்த விரிந்த சிறகினையுடையதும், பாம்பினது பகையுமாகிய கருடப்பறவையினைத் திருமால் கொடியாகக் கொண்டவர் *[பரி.13:38].* செவ்வேளின்திருப்பரங்குன்றத்திலுள்ள சுனையிலும், அருகிலும், பருவம் பாராமல், எப்பொழுதும் பூக்குமியல்புடைய கோங்கும், அக்கோங்கமலரோடு நிறத்தால் பகைப்பட்ட இலவம் பூக்களும் பூத்திருந்தன *[பரி.19:79].*

**2.மாற்றார்.** பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி பகை-மாற்றாரின்-தேயத்தை வெற்றி கொண்டவன் *[புற.64:5].* சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் பகைத் தேயத்தை வெற்றி கொள்ள வேலினை ஏந்திச் செல்பவன் *[புற.69:14].* 'விறலியே, அஞ்சியின்பாற் போவாயாயின் அவன் சேய்மைக்கண்ணனல்லன்; பகைத் தேயத்திற்குத் தான் போயுள்ளான்' என்று ஔவையார் விறலியை ஆற்றுப்படுத்தினார் *[புற.103:8].* 'உண்ணாது வாடும் நினது சுற்றம் உயிர் பிழைக்க வேண்டுமாயின் வல்லார் கிழான் பண்ணன் பகைத் தேயங்களை நோக்கிப் படை எடுத்துச் செல்லுமுன் விரைந்து செல்' என்று சோணாட்டு முகையலூர்ச் சிறுகருந்தும்பியார், பாணனை ஆற்றுப்படுத்தினார் *[புற.181:9].* வந்த வேந்தனுக்கு மகள் மறுத்தலால் பெரும்போர் நிகழப்போவதையறிந்து வருந்திய பரணர், மகளைப்பெற்று வளர்த்து மகிழ்ந்ததுடன், பகையையும் இத்தாய் கூடவே வளர்த்துள்ளாளே; இவள் பண்பில்லாதவளேயாவள்', என்று கூறினார் *[புற.336:12].*

கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் பல நாள் பாசறையில் பகையின் பால் உண்டாகிய சினமிகுதியால், போருடற்றும் நினைவினால் உறங்காதிருந்தான் *[பதி.50:23].* சேர வேந்தனொருவன் பகையினை வெல்லும் ஊக்கச் சிறப்பினால் மழையென்று பாராமலும், பனியென்று சோம்பாமலும் பாசறையிலிருந்தான் *[பதி.தி.3:5].*

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் முருகன் போருக்குச் செல்லுமாறு போலத், தடையறப் பகைமேல் சென்று அவரின் பெருமை கெடும்படி வென்று அழித்தான் *[மது.181].* மதுரையின்கண் பகை நாட்டிலே சென்று கைக்கொண்டு வந்த விரைந்த செலவினையுடைய குதிரைகள் நிறைந்திருந்தன *[மது.689].* பகைப்புலத்தைப் பாழாக்கும் பல வேலினையுடைய வயவரைப்போலத், தலைவனின் நாய், பரக்கின்ற சினத்தாலே செருக்கி, மூங்கில் முளைபோன்ற பற்களையும், பெரிய உகிரையும் கொண்டு விளங்கியது *[குறி.129].*

எழினி என்பானின் ஏவலினால் அவனுடைய போர்த்திறம் மிக்க மறவர் ஆனிரையைக் கவர வேண்டிப் பகையுடன் பொருதல் கூடிய கொடிய சுர நெறியில் தலைவனுடன், தலைவி செல்லுதற்கு எங்ஙனம் வல்லள் ஆயினளோ, என்று, மகட் போக்கிய தாய் வருந்தினாள் *[அக.105:17].*

தலைவியிடம், தலைவன் வந்து செல்லுவதைக் கண்டுவிட்ட தாய், மாறுபடும் பகைப் போர்க்களத்தின்கண் உள்ள ஊரினரைப்போலப் பலநாளும் துயிலாது காவல் காத்தனள் *[குறு.292:8].*

தோழி, தலைவனிடம், 'பழகியிருந்த பகையும் அருகிலிருந்து பிரிவது இன்னாமையைத் தருமானால், பசலை உண்டாகுமாறு நீ தலைவியைப் பிரிந்து உறைதல் அழகோ? அதற்காக நான் வருந்துகின்றேன்', என்று கூறினாள் *[நற்.108:6].* பாசறையில் இருக்கும் தலைவன், வேறு ஒரு காதலன் காதலியின் விளையாட்டினைக் கண்டு, இவ்வாறு எம் காதலியோடு விளையாடி மகிழ இயலாவாறு, கொடிய பகையின் முன்னிலையில், கூதிரோடு வாடைக்காற்றும் துன்புறுத்தப், பாசறையில் உள்ளேன்', என்று, வருந்திக் கூறினான் *[நற்.341:7].*

வேந்தனின் ஏவலினால் தலைவன் பிரியப் போவதையறிந்து வருந்தும் தலைவியிடம், தலைவன், 'நம் வேந்தனின் பகையைப் பொருது வெல்வதற்கு, அறிவினால் நீ பசலையை விடுவாயின், நான் செல்வேன்; நீ ஆற்றாயாயின் செல்லேன்', என்று, தலைவி ஆற்றியிருக்கும் பொருட்டுக் கூறினான் *[ஐங்.429:4].* கார்ப்பருவம் வந்துவிட்டது; மேலும் மேலும் பகையை வென்று வாகை சூடித் திறைப்பொருள்களைக் கொள்ளும் போர் முயற்சியிலேயே காதலர் உள்ளார்; நானோ, என் தோளின் அழகு கெடும்படியாகப் பீர்க்கம்பூப்போன்ற பொன்னிறமுடைய பசலை பூத்து வருந்துகின்றேன், என்று, பிரிவுத் தலைவி கூறினாள் *[ஐங்.452:3].*

வினைவயின் பிரியும் தலைவனிடம், தோழி, நீ மலைகளைக் கடந்து போய்ப் பகையை அழிக்கும் தொழிலை மேற்கொள்ளத் துணிந்தனை; ஆனால், குளத்தில் உள்ள நீர் குறைந்து கொண்டே வருவது போல், தலைவியின் இளமையும் குறைந்து கொண்டே வருவது நிலைபெற்று நிற்குமோ? நுகர வேண்டிய பருவத்தில் நுகர்ச்சியைத் தவிர்க்கலாமா, என்ற கூறிப் பிரிவினைத் தவிர்த்தாள் *[கலி.17:14]*. பற்களின் நுனி ஒன்றோடொன்று அடித்துக் கொள்ளுமாறு வந்து, வளைத்துக் கொள்ளும் இப், பின்பனி பகையைவென்று, திண்தேர் மேல் நம் வீதியில் வெற்றிஉலா வரும் நம் தலைவரின் அழகைக் காண நம் உயிரை விட்டு வைக்குமோ', என்று, பிரிவுத் தலைவி கூறினாள் *[கலி.31:17]*. ஒரு பண்பட்ட நாட்டில் பகைப்படை புக, அந்நாட்டு மக்கள் வேறொரு நன்னாட்டில் சென்று வாழும்போது, தன்னாட்டு வேந்தன், பகையை விரட்டிவிடவே, மீண்டும் அக்குடிமக்கள் தன்னாட்டிற்கே திரும்பினர் *[கலி.78:4,8]*.

**3. போர்.** மறக்குல மங்கையொருத்தி, 'இடைவிடாது விருந்தினரைப் பெறுவேனாகுக, என்றும், தன் கணவன் பகைவரை வென்று வருக வென்றும், பெரிய பகையும்-போரும்-உண்டாகுக', என்றும் நாளும் தவிராமல் நடுகல்லைத் தொழுது வந்தாள் *[புற.306:7]*.

**4. பகுப்பு.** மத்தி என்பானுக்குரிய, நாட்டிலுள்ள அகன்ற ஊரிடத்தே, அழகிய பகையை-பகுப்பை-உடைய தழை உடையினை அணிந்துள்ள மகளிர், நீர் விளையாட்டை வெறுப்பின், பொய்கையிலுள்ள கோரைகளைக் கோதிக் கழனியிலுள்ள நாரைகளை ஓட்டுவர் *[அக.226:3]*.

**பகைஞர்-பகைவர்.** தன்மீது போருக்கெழுந்த தன் மக்களின் மீது கோப்பெருஞ்சோழனும் போருக்கெழுந்த போது, 'வேந்தே, நின் மீது போருக்கு வந்துள்ளாரைக் கருதின் நினது பகைஞராகிய-பகைவராகிய-சேரபாண்டியரல்லர்; நின் மக்களே என்று கூறிப், புல்லாற்றூர் எயிற்றியனார் என்ற புலவர் தந்தை,தனையர் போரினைத் தவிர்த்தார் *[புற.213:5]*. சோழன் நலங்கிள்ளியைக், கோவூர்கிழார், பெருமகனே, யானும், எம் சுற்றமும் பாம்பு, தன்தோலை யுரித்து நீக்கினாற்போல, வறுமையின் நீங்கி, மற்றோருக்கும் உதவும்படியாகச் செல்வத்தை யளித்து விடைதருவாயாக, தடாரிப்பறையை அடிக்கும்போது அதன்கண் நடுங்குமாறுபோல, நினது, பகைஞர் நின்னைக் கேட்குந்தொறும் நடுங்குமாறு யான் வேத்தவைகளில் நின் வெற்றியைப் புகழ்வேன் என்று கூறினார் *[புற.382:20]*.

**பகைஞன்-பகைவன்.** ஈர்ந்தூர்கிழான் தோயன் மாறன் பாணர்களை வருத்தும் பசிக்கும் பகைஞன்-பகைவன்-ஆவான் *[புற.180:7]*.

**பகைமுனை-போர்க்களம்.** மதுரையின் தெருக்களில் நால்வகைப் படைகளும் இயங்கிக் கொண்டிருப்பதால், பண்ணிகாரம் (பலகாரம்), பூ, பூமாலை, சுண்ணம், வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு முதலியவற்றை விற்போர், இருபக்கத்துப் போர்ப்படைகள் வந்த பகைமுனையைக்-போர்க்களத்தைக்-கண்டு அஞ்சி ஒதுங்குவார் போல, அப்படைகளுக்கு ஒதுங்கி, அவை சென்றவுடன் தம் பொருள்களை விற்றுத் திரிவர் *[மது.402]*.

எருமை என்பானுடைய மழவராகிய வடுகர், இயங்குதற்கரிய நள்ளிரவில், பகைமுனையைக் கெடுத்து, அவர்தம் ஆனிரைகளைக் கவர்ந்து வந்து, தம்மூர் மன்றுகளில் நிறைப்பர் *[அக.253:11]*.

**பகைமை-மாறுபாடு.** பிரிவுத் தலைவி, தோழியிடம், 'தோழியே, நம் தலைவர் நம்மீது கொண்ட நட்பின் தகுதியால், நம்மை வருத்துகின்றோரேயொழியப், பகைமை-மாறுபாடு-காரணமாக வருத்துவாரல்லர்; ஆயினும், அவர் தகுதிப்பாட்டால் (அன்பினால்) வருத்துவது பகைமையால் வருத்து தலைவிடக்கொடிதாய் இருக்கின்றது' என்று கூறினாள் *[கலி.137:16,17]*.

**பகைவர்-மாற்றார்.** கரிகால் பெருவளத்தான் பகலிலும், இரவிலும் பகைவருடைய-மாற்றாருடைய-ஊர்களைத் தீயிட்டுக் கொளுத்திக் கொள்ளையிடுவான் *[புற.7:7]*. சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறையின் மண்ணினைக் (நாட்டினைக்), கருவுற்ற பெண்டிர் உண்ணுதலல்லது, பகைவர் கவருதல் அரிது *[புற.20:15]*. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப், மாங்குடி கிழார், 'நின் நாளாகிய மீன் நின்று நிலைபெறுவதாக; நின் பகைவருடைய நாளாகிய மீன் நில்லாது பட்டுப் போவதாக', என, வாழ்த்திப் பாடினார் *[புற.24:25]*. 'நின் பகைவர் நின்னுடன் போரிட மாட்டாமல் தோற்றுத் துறக்கத்தின்கண் வாழ்வாராதலின், அவர் தவஞ்செய்தோரே யாவார்', என்று, தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் புகழ்ந்து, மாங்குடிகிழார் பாடினார் *[புற.26:16]*. 'புலம் முற்றிய கபிலன் இன்றிருந்தால் நன்று, என்று கூறினாய்; பெருமானே, கபிலன் இல்லை என்றாலும், நீ பகைவரை வென்ற வெற்றியை, நினது வென்றி கொண்ட சிறப்பிற்குப் பொருந்த, என்னால் இயன்றளவு பாடுவேன்', என்று, சேரன் மாந்தரஞ்சேரலிரும் பொறையைப் பொருந்தில் இளங்கீரனார் பாடினார் *[புற.53:15]*. பாண்டியன் சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறன், பகைவரை, ஞாயிற்றைப் போன்று சுடுவித்தும், பரிசிலரைத் திங்களைப் போன்று குளிர்வித்தும், வாழும் தன்மையனாவான் *[புற.59:6]*. 'தொண்டைமானுடைய வேல், பீலியணியப் பெற்று, மாலை சூட்டப்பெற்று, நெய்பூசப் பெற்று அழகுபடக் கோயிலின்கண் உள்ளன; அதியமானின் வேல்களோ, பகைவரைக் குத்துதலால், கங்கும், நுனியும் முரிந்து கொல்லனது பணிக்களரியில்

கிடக்கின்றன', என்று, ஔவையார், அதியமானின் மறத்தைப் புகழ்ந்தார் [புற.95:4]. 'புலவர் பாடும் புகழமையாத பகைவர், புறங்கொடுத்தோடுவதைக் கண்டு நாணமுறும் சேயையொக்கும் பாரியினது பறம்பு நாடு; பாரி இறந்ததால் இனி கெடும்போலும்', என்று, கபிலர் வருந்திப் பாடினார் [புற.120:19]. மலைநாட்டுத் தலைவனான பிட்டங்கொற்றன், இரவலர்க்கு மென்மையுடையனாயும், பகைவர்க்கு கொல்லனது உலைக்களத்திலே விளங்கும் உலைக்கல் போன்ற வல்லாளனாயும் விளங்கினான் [புற.170:14]. கோச்சேரமான் யானைக்கட் சேய் மாந்தரஞ்சேரலிரும் பொறை, பகைவரைப் பிணித்து வெற்றி கொள்ளும் வலிமையையும், நச்சியோர்க்கு அளந்து கொடுத்தலறியாத வண்மையையுமுடையவன் [புற.229:25]. ஒரு தலைவன், தன்னூரின்றும் நிரைகளைக் கவர்ந்து சென்ற பகைவரை வென்று, வெருட்டியோட்டிக் கன்றுகளுடனே, கறவைகளையும் மீட்டுக் கொண்டுவந்து சேர்த்தானாயினும் அப்போரில் பட்ட புண்ணினால் இறந்து பட்டான் [புற.264:5]. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், பகைவரும் புகழ்ந்து பாராட்டும் ஆண்மையையும், நண்பர்கட்குக் குறைவில்லாது உதவும் நற்பண்பையும் உடையவன் [புற.373:35]. சேரமான் வஞ்சனுடைய பெருமை பொருந்திய மூதூருக்கு நண்பர் முதலியோர் செல்ல இயலுமே தவிர, அவ்வூர், பகைவர்க்குப் புலியினம் கிடந்துறங்கும் மலைக்குகை போல, நெருங்கவும் அச்சத்தைத் தருவதாகும் [புற.398:9].

கூற்றுவனையும் ஆற்றல் கொள்ளும் இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன், வஞ்சனையின்றிப் பொருது சிறந்த தும்பைப் பகைவருடைய போரினையும், அவர்தம் பெருமையினையும் அழித்தவன் [பதி.14:8]. இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனின் வலிமையறியாது, அறியாமையால், அவனுடைய பகையைத் தேடிக்கொண்ட பகைவரின் நாடுகள், வேளைக்கொடி, சுரைக்கொடி, பீர்க்கங்கொடி முதலியன தழைத்து வளர்ந்து ஆறலைகள்வர் தங்கும் பாழியிடங்களாயின [பதி.15:15]. பொறுத்தற்கரிய பெரும்பிழை செய்த பகைவராயினும், அப்பிழையினையுணர்ந்து வருந்திப் பணிந்து திறையளிப்பின் அவரைப் பொறுத்தருளும் பண்பினனாவான், இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் [பதி.17:2]. பல்யானைச் செல்கெழுகுட்டுவன், மிக்கவலிமை படைத்த பகைவருடைய யானைப்படையை அழிக்கும் வயவரைப் பெற்றிருந்தான் [பதி.28:1]. களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலின் படை மறவர், நண்பர்கட்குப் பாதுகாப்பாளராகுவர்; பகைவரைத், தீண்டி வருத்தும் தெய்வத்தைப்போல்வர் [பதி.31:34]. 'களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலிடம் உள்ள பல நற்குணங்களுள், ஒரு பொருளாக மதிக்கலாகாத பகைவரிடத்தும் சினங்கொள்ளாது, பொறுமை பூண்டொழுகுவதாகிய குணம், எனக்கு வியப்பைத் தருகிறது', என்று, காப்பியாற்றுக் காப்பியனார் பாடினார் [பதி.32:16]. களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல், பகைவர்க்கு மிகுதியான துன்பத்தைச் செய்தும், பாணர் முதலிய நட்டார்க்கு நற்கலங்களை வழங்கியும், நற்குணங்களால் நிறைந்தும், உயர்ந்தோரிடத்துப் பணிந்தும் விளங்கிய தகையுடைய தலைவனாவான் [பதி.37:3]. கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் பகைவரும் தம் மனத்தெழுந்த வியப்பினைத் தாங்காது புகழ்ந்து பாராட்டும் கெடாத கல்வியறிவு ஒழுக்கங்களை யுடையவன் [பதி.43:29]. நின் பகைவர், வலியறியாது எதிர்த்துத் தோல்வியுற்றுப், பணிந்து திறை தருவராயின் அவர்மீது சென்றநின்சினம் தணிவாயாக' என, ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் வேண்டினார் [பதி.59:12]. 'செல்வக்கடுங்கோ வாழியாதனின் பகைவர் அவனிடம் வந்து பணிமொழி கூறி, அவன்தாள் பணிந்து திறை செலுத்துவராயின், அவருடைய நாடுகளும், போரின்றி வளம் பெருகுதலின், புலவர் பாடும் புகழினைப் பெறுவனவாகும்', என்று, கபிலர் பாடினார் [பதி.62:12]. செல்வக்கடுங்கோ வாழியாதன், பிணங்கள் மலைபோலக் குவியப் பகைவேந்தரைக் கொன்று, அவர்களின் நாடுகளிலுள்ள கெட்ட குடிகளை வாழச்செய்யும் வெற்றி வேந்தனாவான் [பதி.69:9]. செல்வக்கடுங்கோ வாழியாதன், விளையாட்டுக்காயினும் பொய் கூறாத வாய்மையினையும், பகைவர், புறத்தே இகழ்ந்து கூறுதலைப் பொருட்படுத்தாத குற்றம் நீங்கிய அறிவினையுமுடையவன் [பதி.70:12]. 'தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை, போரில் வலியன் ஆதலினாலும், நிலவுலகமுழுதும் நிறை புகழோன் ஆதலினாலும் இந்நிலவுலகத்தில் அவனுடைய பகைவரின் தேர்களில் கொடிகள் பறப்பதில்லை', என்று, அரிசில் கிழார் பாடினார் [பதி.80:12]. 'கடல் போன்ற பெரும்படையையுடைய சேரனே, நினக்கு யானைகளோடு, அருங்கலம் முதலியவற்றைத் திறைப்பொருளாகத் தந்து பணிந்து வணங்காத நின் பகைவரால் எவ்வாறு வாழமுடியும்', என்று, ஒரு சேரனிடம், ஒரு புலவர் கூறினார் [பதி.1:2].

தொண்டைமான் இளந்திரையன், பகைவருடைய மதில்களோடு, அவர்களையும் அழித்து முடிபுனைதலல்லது அப்பகையரசர் சந்து (சமாதானம்) செய்து கொள்ள விரும்பினும் ஏற்றுக்கொள்ளாத தொண்டையர் குடியில் தோன்றியவனாவான் [பெரு.450]. வேந்தன், பகைவரை வாளால் வெட்டி வென்று, வாகை சூடி, மற்றைய மாற்றார் நடுங்கும்படியாக வெற்றி முரசம் முழங்கும் பாசறைக்கண்ணே இனிது துயின்றான் [முல்.77]. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனின் மொழி கேட்டு அடங்கி வாழாத பகைவரின் நாடுகள், எதிரியால் கொளுத்தப்பட்டு, வாழத் தகுதியில்லாமல், கெட்டுப் பாழாகிவிட்டன [மது.176]. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், இவ்வுலக வேந்தரோடு கூடி, வானுலகத்துத் தேவரும் பகைவராய் வரினும், எதிர்த்து வெல்வதற்கு அஞ்சித் தாழ்ந்து ஒழுக மாட்டான் [மது.201].

தலைவன், தேர்ப்பாகனிடம், 'நம் அரசனும் போரில் வெற்றியுண்டாக்கினன்; பகைவரும் திறையைச் செலுத்தி நம் வேந்தனுக்குச் சுற்றமாயினர்; இரு தானைகளும் மாறுபாடு நீங்கி ஒன்றாயின', என்று கூறினான் *[அக.44:1]*. பாணன் என்பான், பகைவர் ஆவினைப் பாதுகாத்து உறையும் அரண்கள் சேய்மைக்கண்ணவாயினும் அவண் சென்று திரண்ட இமிலையுடைய விடைகளுடன், ஆக்களையும் கவர்ந்து வரும் ஆற்றலாளன் *[அக.113:12]*. பகைவருடைய மதிற்கதவினைக் குத்திச் சிதைத்ததால் யானையினுடைய மருப்பின்பூண் சிதைந்தது *[அக.164:11]*.

போரில் தோற்ற பகைவர் உயிருக்கஞ்சிக் காடுகளிலே புகுந்து ஆண்டுக்கிடைக்கும் புல்லிய புல்லரிசியை யுண்டு உயிர் வாழ்ந்திருந்தனர் *[ஐங்.4:2]*.

இருவேறு பண்புடைய அமரர்க்கும், அவுணர்க்கும் திருமாலே தலைவராதலின், அவரின் இயல்பினையறியும் ஞானியர்க்கும் இவர் பகைவர், இவர் நட்டோர் என்னும் வேறுபாடு இல்லையாகும் *[பரி.3:57]*.

**பகைவன்-மாற்றான்.** உன்னமரம் போர் நிமித்தம் காண நிற்கும். வேந்தர்க்கு வெற்றியெய்துவதாயின் தழைத்தும், தோல்வியெய்துவதாயின் கரிந்தும் காட்டும் என்பர்; அது கரிந்து காட்டிய வழியும் அஞ்சாது போருடற்றி வெற்றி எய்துவான் ஆகலின் பாரி உன்னத்துப் பகைவன்-மாற்றான்-ஆவான் *[பதி.61:6]*.

பரத்தையிற்பிரிந்து வந்து மிகவும் அன்புடையான்போல் தன்னைத் தழுவும் தலைவனிடம், தலைவி, 'நீ முன்பு எனது மாலை வாடும்படி என்னைப் பிரிந்த பகைவனல்லையோ; நான் நினது செயலை மறந்திலேன்', என்று கூறி ஊடினாள் *[நற்.260:10]*.

**பங்கம்-சேறு.** வையையில் நீராடிவிட்டுக் கரையேறிய மகளிருட் சிலர் சிவந்த குங்குமக் குழம்பினையும், பங்கம்-சேறு-ஆக்கப்பட்ட அகில் குழம்பினையும், கருப்பூரங்களையும் கலந்து அம்மியிலிட்டு அவை ஒன்றுபடும்படி குழவியாலே வேள்விக்குண்டத்தின் கண் எழும் தீயின் நிறம்பெற அரைப்பர் *[பரி.10:82]*.

**பங்கு-1. சனி என்னும் கோள்.** வியாழக்கோள் பங்குவின்-சனியின்-இரட்டையில்லங்களாகிய மகர கும்பங்களுக்கு மேலே உள்ள மீனராசியைச் சேரும்பொழுது மழை பொழிந்து வையையில் வெள்ளம் வந்தது *[பரி.11:7]*.

**2. கூறு.** திங்களது பல பங்குகள்-கூறுகள்-ஒன்றாகச் செறிந்தாற் போன்ற, பலவாகிய கதிர்களையும், அவற்றின் இடையிடையே பால் முகந்தன்ன குளிர்ந்த வெண்ணிலவையும், உடையது *[நற்.196:1]*.

**பங்குனி-ஒரு மாதம்.** பங்குனியினது - பங்குனி மாதத்தினது- முதல் பதினைந்தின்கண் உச்சமாகிய உத்தரம், அவ்வுச்சியினின்றும் சாய்தல், அந்நாட்டு வேந்தனுக்கு அழிவைத் தருதலாகும் *[புற.229:5]*.

**பங்குனி முயக்கம்-பங்குனி விழா.** பிரிவைக் கருதித் துயருறும் தலைவியிடம், தோழி, 'உறையூரில் பங்குனி முயக்கம்-பங்குனி விழா-கழிந்த மறு நாளில் சோலையில் அடுதல் இன்மையின் தீயில்லையாகிய வெற்றடுப்புக்களை யுடைய விழாக் களம் பொலிவற்றிருத்தல் போல, நினது நெற்றி பெரிதும் பொலிவற்றுள்ளது', என்று கூறினாள் *[அக.137:9]*.

**பங்குனிவிழவு-பங்குனி விழா.** உறையூரில் பங்குனி விழவு-பங்குனித் (திங்களில்) விழா-நடந்தது *[நற்.234:7]*.

**பச்சை-தோல்.** குமணவள்ளல் பலவாக அடுக்கப்பட்ட பண்ணுதலமைந்த நரம்பினையுடைய பச்சையால்-தோலால்-போர்க்கப்பட்ட நல்ல யாழையும், மார்ச்சனை நிறைந்த மத்தளத்தினையுமுடைய கூத்தரது மிடியைக் (வறுமையைக்) கெடுக்கும் குடியின்கண் பிறந்தவனாவான் *[புற.164:11]*. சோணாட்டுப்பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன் வேள்வியியற்றும் பொழுது கலைமானினது பச்சை அவனது தோளிகண் இடப்பட்ட பூணூல் மீது சிறந்து தோன்றியது *[புற.166:11]*. இரண்டு நல் ஏறுகளைப் பொரவிட்டு, அப்போரில் வெற்றி பெற்ற ஏற்றின் பச்சையினை மயிர் சீவாமல் போர் முரசின் மேலே போர்த்துவர் *[புற.288:3]*. முறுக்கேறிய நரம்பினையும், மின்னலைப் போன்ற பச்சையினையும், வண்டின் குரல் போன்ற ஓசையினையுமுடையது, சீறியாழ் *[புற.308:2]*.

சிவந்த நிறமுடையாளின் இளஞ்சூல் பொருந்திய வயிற்றின் நடுவிடத்தேயுள்ள மயிரொழுங்குபோலப், பாலை யாழின் பத்தரின் மேல் போர்க்கப்பட்ட விளக்கினது பிழம்பின் நிறத்தைப் போன்ற பச்சையின் மூட்டுவாய் விளங்கியது *[பொரு.5]*. பாதிரியின் பூவினது கிழிக்கப்பட்ட உட்புறத்தை ஒக்கும் நிறம் ஊட்டுதலுற்ற பச்சையினையுடையது, பேரியாழ் *[பெரு.6]*. பொன்னிறம் போலும் நிறத்தையுடைய பச்சையினைப் புதிதாகப் பேரியாழில் போர்த்தினர் *[மலை.29]*.

பசிய இலை நெருங்கிய புதல்தோறும், பகன்றைப் பூவானது, நீலம் ஊட்டப்பெற்ற பச்சையினது நிறம் மறையும்படி கிடுகிற் பதித்த வட்டக்கண்ணாடி போல, வெள்ளியனவாக மலர்ந்தது *[அக.217:7]*. பசை பொருந்திய பச்சையினை நெய்யில் தோய்த்தாற் போன்ற கரிய சிறகினையுடையது, வாவல் (வௌவால்) *[அக.244:1]*.

**2.(தோலால் ஆகிய) போர்வை.** காட்டிடத்துக் குமிழினுடைய பழத்தினது நிறத்தை ஒப்பப், புகழப்படும் துவருட்டின, கைத்தொழிலாற் பொலிவு பெற்ற, பச்சையை - (தோல்) போர்வையை-உடையது யாழ் *[சிறு.226]*.

**3. காமன் (பிரத்தியும்நன்).** திருமால், சிவந்த உடம்பினையுடைய பச்சையாகவும்-காமனாகவும்-(பிரத்தியும்நனாகவும்) உள்ளார் *[பரி.3:82].*

**4. மரகதமணி.** வையையில் நீராடிய மகளிருள் ஒருத்தி, தன் கையில் பச்சையைப்-மரகதமணியைப்-போன்ற நிறமுடைய குவளைமலரின் பசிய தண்டினை வளையலாகச் செய்து அணிந்து கொண்டாள் *[பரி.11:101].*

**பசத்தல்-பசலையூர்தல்.** தலைவனின் பிரிவையுணர்த்தும் தோழியிடம், தலைவி, 'பிரிதலால் நம் நறிய நுதல் பசத்தலுக்கு-பசலையூர்தலுக்கு-அஞ்சி அவர் பிரியார்', என்று கூறினாள் *[நற்.1:8].*

தலைவனை நல்லவன் என்று பாராட்டும் தோழியிடம், தலைவி, 'தலைவர் நல்லர் என்பாயாயின், மலர் போன்ற என்கண்கள் பசத்தற்குக் காரணமென்ன?' என்று வினவினாள் *[ஐங்.170:4].* பிரிவில் வருந்தும் தலைவியிடம், தோழி, 'நின் காதலர் நின்னிலையை நன்கு உணர்வார்; நினது ஒள்ளிய நுதல் பசத்தலை அறியார் என்றா எண்ணுகின்றாய்', என்று கூறினாள் *[ஐங்.225:4].* தலைவனிடம், தோழி, பெருமானே, நினது பிரிவினால் தலைவி கனவில் நின்னைக் கண்டு, நனவில் நின்னைக் காணாமையின் அவளின் நல்ல நுதல் பசத்தல் ஆகின்றது', என்று கூறினாள் *[ஐங்.234:2].*

**பசந்தவர்-பசலையூர்ந்த மகளிர்.** தலைவர் வருவதற்குள் வந்துவிட்ட இளவேனிலைக் கண்டு துயருற்ற தலைவியிடம், தோழி, 'தோழியே, பிரிவுத்துயரால் பசந்தவருடைய-பசலையூர்ந்த மகளிருடைய-காமநோயைத் தணிவித்து, அவர் உயிரைக் காக்கும் மருந்தாகி, விரைவில் யான் வந்துவிடுவேன், கலங்காதிரு; என்று, தலைவர் விடுத்த தூதாகவும் இவ்விளவேனில் வந்துள்ளது', என்று கூறி, ஆற்றுவித்தாள் *[கலி.32:14].*

**பசப்பித்தோர்-பசலை தந்தோர் (பரத்தையர்).** தலைவனைப் பிரிந்த பரத்தை, தன்னலத்தை இகழ்ந்தாள் என்று கூறக்கேட்ட தலைவி, அப்பரத்தையின் உழையரிடம், 'இவள் என்னை இகழுகின்றாள்; இவள் பசக்கும்படியாக இன்னும் பசப்பித்தோர்-பசலை தந்தோர் (பரத்தையர்) - பலர் உண்டாவர்', என்று கூறினாள் *[ஐங்.67:5].*

**பசப்பு-பசலை.** வானத்தைப் புகை பரவிப்போர்த்ததைப் போலவும் கதிரவன் பாம்பின் வாய்ப்பட்டதைப் போலவும் (சூரியக்கிரகணம்), நன்னனது பிரிவினால் அவனுடைய மனைவியரின் மேனியில் பசப்பு-பசலை-பரவியது *[மலை.1:4].*

களவுத் தலைவி, தோழியிடம், 'நாள்தோறும் வந்து முயங்கிச் செல்லும் தலைவர், இன்று ஒருநாள் வந்து முயங்காமையின் அலர் உண்டாகுமாறு எனது நெற்றியில் பசப்பு உண்டாகிவிட்டதே', என்று கூறினாள் *[அக.102:19].* பிரிந்துள்ள தலைவியிடம், தோழி, 'நெற்றியில் நுண்ணிய பசப்புப்பரக்கப் பெற்றுத் தோள் வாட்டமுற்று, நாள்தோறும் தலைவரின் பண்பையே நினைவேன், என்று கூறி வருந்தாதே; விரைவில் தலைவர் வருவர்', என்று கூறித்தேற்றினாள். *[அக.171:1].* பிரிவின்கண் ஆற்றுவிக்கும் தோழிக்குத், தலைவி, 'தோழியே, நம் தலைவர் பிரியேன் என்று பொய் கூற, நோய்மல் வருத்தத்தால் நம் நெற்றியில் பசப்புப் பரக்க, நாம் அழும்படியாகத் துறந்தாராயினும், நம் இல்லில் விருந்தாற்றுதற்குச் சிறந்த பொருளை எளிதினில் அடைவாராக', என்று கூறினாள் *[அக.205:6].* பிரிவிடை வற்புறுத்துந் தோழிக்குத், தலைவி, யாமரத்தின் தளிரில் அரக்குப் பொடியினைச் சிதறினாற்போன்று நின் உடம்பில் பசப்புப்பரந்து நீ அழிவுறுவதை தலைவர் அறியின் அவரால் அங்குத்தங்கியிருத்தல் இயலுமோ; வினை முடியாமலேயே விரைவில் வருவர்', என்று கூறும் நினது சொற்படி வருவாராயின் மிகவும் நல்லதே', என்று கூறினாள் *[அக.333:2].* வினைமுற்றிய தலைவன், தேர்ப்பாகனிடம், 'பாகனே, பசப்புற்ற துன்பத்தோடு வருந்திய அன்புமிக்க என் காதலியின் நகையுடன் கூடிய முகத்தினைக் காணத் தேரினை விரைந்து செலுத்துக', என்றான் *[அக.344:12].* 'தலைவ, நின் பாகன் தேரினை விரைந்து செலுத்த, நினது மனையின்கண் புகுதற்கு விரைந்து வருகின்றாயாகலின் நின் காதலியின் நெற்றியில் படர்ந்துள்ள பசப்பு இனி எங்குத் தங்கும்?' என வினைமுற்றி மீளும் தலைவனிடம், உழையர் கூறினர் *[அக.354:14].*

பிரிவின்கண் வருந்தும் தலைவியிடம், தோழி, 'தோழியே, நம் தலைவர் இரக்கக் குணம் உடையர்; பழிக்கு அஞ்சுபவர்; ஆதலின் ஒப்புரவாளனுடைய செல்வத்தைப் போல, நினது மேனியில் பரவியுள்ள பசப்புத் தங்குவதற்கு உரியதன்று; நீ வருந்தாதே', என்று கூறினாள் *[குறு.143:7].* 'நின் காதலியின் மேனி துயருற்று வாடுவதையும், நெற்றியில் பசப்பு ஊர்வதையும் கண்டிலையோ? நின்னால்தான் இன்னள் ஆனாள் என்று என் தலைவரிடம் கூறினால் என்ன?' என்று, தலைவி, தோழியிடம் கூறினாள் *[குறு. 185:1].* 'தோழியே, என் காதலர் பிரிந்து சென்றதைப் பசப்பு எவ்வாறு அறிந்தது? எனது நெற்றியில் அது பரந்து ஊர்கின்றதே', என்று தலைவி, தோழியிடம் கூறினாள் *[குறு. 205:7].* 'என் காதலரால் எனது கைவளையல்கள் நெகிழ்வதனையும், மெய்யின்கண் பசப்புப்பரத்தலையும் யான் விரும்பேன் ஆயினும் காமத்தின் செயல் இது', என்று வற்புறுத்தும் தோழிக்குத், தலைவி கூறினாள் *[குறு. 371:1].*

சிறைப்புறத்தானாய தலைவன் கேட்குமாறு, தலைவிக்குரைப்பாளாய்ப் புன்னை மலர் உதிர்ந்து பரவி மணற் பரப்பில் என்னை புணர்ந்த சோலை இதுவென்றும், துறையின்கண் நீராடி என் கூந்தலைத் தலைவன் துவட்டிவிட்ட துறை உதுவே என்றும், எனக்குத் தழையுடையை

உடுத்திவிட்டு என்னைப் பிரிந்த கழிக்கரைச் சோலை அதுவே என்றும், உள்ளம் உருகிப் பசப்பை அடைந்துவிட்டாய்; இனி எவ்வாறு உய்வாய்', என்று, தோழி கூறினாள் *[நற். 96:11]*. தூதாக வந்த பாணனிடம், தோழி, 'பாணனே, நின்னால் கூறப்படுகின்ற பொய்ம்மொழிகள், கடற்கரையிலுள்ள சோலையில் தலைவனால் இன்பம் நுகரப்பட்டு, பின்பு, அழகு அழிந்து, வளைகழன்று, துன்புறும் தலைவியின் நெற்றியிலுள்ள பசப்பினை நீக்குவனவல்ல; இங்கு நில்லாதே', எனக்கூறி வாயின் மறுத்தாள் *[நற். 167:11]*. 'தோழியோ, வளைகள் கழன்றன; நெற்றியில் பீர்க்கமலர் போலப் பசப்புப் பரவியது; ஆதலால், உயிர் தேய்ந்தொழியும் போல் உள்ளது, என்று அழாதே; முகில் தலைவரின் மலையில் தவழும்; அது நினது கூந்தலை நினைவுறுத்தும்; விரைவில் வருவர்', என்று வரைவு நீட ஆற்றாளாய தலைமகளைத், தோழி ஆற்றுவித்தாள் *[நற்.197:2]*. 'இப்பொழுது பிரிந்துறைதலில் வல்லவராகிய, தலைவர், முன்பு பிரிந்த பொழுது, நின் கொங்கைகளில் பசப்புப் பரவியதைக் கண்டு வருந்தித் தெய்வத்தின் மேல், இனிப்பிரியேன் என்று சூளுரைத்தாராகலின், அப்பொய்ச் சூளுக்காகத், தலைவரைத் தெய்வம் ஒறுக்காவண்ணம் தெய்வத்தை வேண்டுவோம் வா! 'என்று, தோழி, தலைவியிடம் கூறினாள் *[நற். 358:2]*. வரைவு நீடும் தலைவன் சிறைப்புறத்தானாகத், தலைவி, தோழியிடம், 'தலைவர் எனது நெஞ்சினுள்ளேயே எப்பொழுதும் பிரியாமல் இருக்கிறார்; அப்படியிருந்தும் எனது நெற்றியில் பசப்பு எப்படி உண்டயிற்று?' என்று கூறினாள் *[நற்.388:2]*.

பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம், தோழி, நினது ஊர், கூதிர்ப் பருவத்தே கலங்கல் நீரைப் பெற்று, வேனில் பருவத்தில் தெளிந்த நீரைப் பெறுகின்றது; ஆனால், தலைவியின் கண்களோ அங்ஙனமின்றி எல்லாப் பருவத்திலும் பசப்பே பூத்திருப்பன ஆயின', என்று கூறினான் *[ஐங்.45:4]*. பிரிவிற்கு வருந்தும் தலைவியிடம், தலைவன், வேந்தருக்காகப் பகைவரையழிக்கப் புறப்பட்ட யான், எனது பிரிவினால் நினக்கு உண்டாகும் பசப்புநோயை நீ அறிவால் ஒழித்துவிடின் யான் செல்வேன்; ஆற்றாயாயின், செல்லேன் என்று கூறினான் *[ஐங்.429:1]*.

பிரிதலுறும் தலைவனிடம், தோழி, 'பெரும, உனது செயலை முடித்தற்குப் பிரியக் கருதி, அதற்குத் துணையாகவுள்ள வில்லின் நாண் உறுதியாக உள்ளதா? என்று அதனைத் தடவிப்பார்க்கும் அவ்வளவிலே, தலைவிக்கு, மறுவற்ற மதியின் மேல் முகில் பரவுவது போல், மாசில்லா முகத்தில் பசப்புப் பரவும்', என்று கூறினாள் *[கலி.7:8]*. பிரியக் கருதும் தலைவனிடம், தோழி, நின் காதலியின் முகம் திங்களைப் போன்றது. நின் பிரிவினால், அம்முகம், பாம்பு சேர்ந்த திங்களைப் போலப் பசப்பும் பரந்து கெடும் என்று கூறினாள் *[கலி.15:17]*. பிரியேன் என்ற சூளுரையைப் பொய்த்த தலைவனுக்காகத் தெய்வத்தை வேண்டுவோமா என்ற தலைவிக்குத், தோழி' மழையைத் தரும் கற்புடையாளின் நிறங்கெட்டுப் பசப்புப் பரத்தலுண்டாம் என்று கருதி, அறக்கடவுள், நின் காதலனின் வினையை முடித்து அழைத்துவந்தது; ஆகவே, தெய்வத்தை வேண்டத் தேவையில்லை', என்று கூறினாள் *[கலி.16:21]*. பிரிவுற்று வருந்தும் தலைவியிடம், தோழி, 'அசையும் இறையினை (முன்கையினை) யுடையாய், நம் காதலி பிரிவுத்துயர் தாங்கும் வலியுடையள் அல்லள்; அவளுடைய நெற்றியில் பசப்புப் பரவுமே என்று என்று நம் தலைவர் எண்ணாராயின் நம் மாட்டு அவர் செய்யும் அளி என்ன பயன் தரும்? ஆதலின், அவர் விரைவில் வருவர்', என்று கூறினாள் *[கலி.28:15]*. பிரிந்திருந்த என் காதலர் என்னையறியாது பின்புறமாக வந்து என்னைத் தழுவிக் கொண்டவுடன் என்னைப் பற்றியிருந்து பசப்பு ஞாயிற்றைக் கண்ட இருள்போலப் பறந்தோடிவிட்டது என்று தலைவி கூறினாள் *[கலி.42:32]*. அறத்தைச் செய்யும் நின் வெண்குடை, நின் காதலியை மட்டும் புறக்கணிப்பது ஏனோ? இவளுடைய நெற்றியில் பசப்பு ஊர இவள் படும் துயரைப் பாராய்', என்று, சான்றோர் வினைவயின் பிரிந்த வேந்தனிடம் கூறினர் *[கலி.99:10]*. 'நினது அருளைவிரும்பி அது கிடைக்கப் பெறாமையால் நின் காதலியின் மாசற்ற முகம் பசப்புப் பரப்பவும் நீ அருளாயாயின், கூற்றுவனைப் போல முறைமை செய்து நல்லாட்சி புரிவன் என்று உலகம் கூறும் நினது புகழ் கெட்டுவிடாதா?' என்று, சான்றோர் வினைவயிற்பிரிந்த வேந்தனிடம் கூறினர் *[கலி.100:18]*. தலைவியின் பிரிவுத் துயரைத் தலைவனிடம் கூறும் தோழி, தலைவியின் தோள் மெலியவும், நெற்றியில் பசப்புப் பரக்கவும் நீ இவளைத் துறந்தது கடற்கரைக்கு இடையாமத்தில் நீ குறித்த இடத்திற்குத் தவறாமல் வந்து கூடினாளே, அதற்காகவா என்று இடித்துக் கூறினாள் *[கலி.127:17]*. நல்லாட்சி புரியும் பாண்டியனுடைய படை செல்லச் செல்லப், பகைவரின் படை ஓடுவது போலத், தன் காதலியைப் பிரிந்திருந்த தலைவன் வந்து மேனியைத் தொடத்தொட, அவளுடைய பசப்பு நீங்கிற்று *[கலி.130:21]*. பிரிவுத்துயர் தாளாது அல்லலுற்ற தன் தலைவியிடம், தலைவன் வந்து சேர்ந்தவுடன், அவளுடைய காமநோய் நீங்கி, நெற்றியில் ஊர்ந்திருந்த பசப்பு அறவழி நிற்கும் நல்லோனை இழிமகன் இட்டுக்கட்டிக் கூறிய தீய மொழிகளெல்லாம் நல்லோரவையின் ஆராய்ச்சியிற் கெட்டாற்போலக்கெட்டது *[கலி.144:73]*.

பசலை காண்க.

**பசலை-1. பசப்பு.**

தலைவனைப் பிரிந்துள்ள தலைவி, தோழியிடம், 'எனது மாமை நிறம் ஐதாய நுண்ணிய பசலை-பசப்புப்-பரத்தலால் பீர்க்கின் அழகிய மலரை ஒப்பதாகும்', என்று கூறினாள் *[அக.45:7]*. களவொழுக்கத் தலைவி, தோழியிடம், 'நீ அன்னையிடம் அறத்தொடு நிற்கும்போது, நின் மகளின் அழகிய கண்ணிற் படர்ந்த பசலைக்குத் தலைவன் மார்பின் சாரணத்தையோ? வேறு காரணத்தையோ? கூறு; ஆனால் உயிர் போவதாயினும்,

காமநோய் என்று மட்டும் கூறாதே', என்று கூறினாள் *[அக.52:14]*. பிரிவின்கண் தலைவி, தோழியிடம், 'நமக்குத் துணையாகப் பசலையை நிறுத்தி விட்டுத் தலைவருடன் சென்றுவிட்ட எனது அழகையேனும் அவர் அருளாரோ?' என்று கூறினாள் *[அக.103:13]*. பிரிவுற்ற தலைவி, தோழியிடம், 'அன்புத்தோழியே, தலைவரது பிரிவினால் எனது அழகு கெட்டொழியப்பீர்க்கின் புதிய மலரை யொப்பப் பசலை பரந்த நெற்றியையுடையேன் ஆகித்,துன்பம் பெருகி, ஆதி மந்தி போல, அறிவு திரிந்து யான் மயங்கியுள்ளேன்', என்று கூறினாள் *[அக.135:3]*. தலைவன் இடைச்சுரத்திக்கண் நெஞ்சிற்குக் கூறுவானாய், 'நெஞ்சே, நம் தலைவி மாலை நேரத்தில் பசலை மிகவும் பரந்த மேனியளாகிப் பெருமூச்சுவிட்டு அழுது வருந்திக் கொண்டிருப்பாள்; இரங்கத்தக்காள்', என்று கூறினான் *[அக.169:9]*. வரைவு கடாவும் தோழி, தலைவனிடம், 'நீ அன்பில்லாதவன் என்பதை யான் முன்பே அறிந்திருப்பேனாயின், என் தலைவியின் அழகுகெடப் பொன்னையொத்த பசலை பெரிதும் பரத்தல் இல்லையாகும்' என்று கூறினாள் *[அக.172:18]*. பாசறைக்கண் தலைவன், நெஞ்சிற்குக் கூறுவானாய்ப், 'போரில் வெற்றி தேடித் தரும் வயவருக்கு அரசன் அளிக்கும் பூக்கோளினையும் ஏலாமல், நாம், தலைவியின்பால் விரைந்து வருதலை அறியாளாய்த், துன்பினை எய்திப் பசலை பாய்ந்த மேனியளாய் எந்நிலையினை அடைவாளோ?' என்று கூறினான் *[அக.174:9]*. பிரிவின்கண் வற்புறுக்கும் தோழிக்குத், தலைவி, 'கண் நீரினை உகுக்கவும், பொன்னை யொத்த பசலை பரந்திடவும், எனது அழகு கெடுவதைப் பார்த்து வருந்தாதே என்கின்றாய்; இளவேனில் வந்தும் அவர் வந்திலரே, என்செய்வேன்', என்று கூறினாள் *[அக.229:13]*. 'அயலாரால் அறியப்படும் பசலையுடன் பழைய மேனி அழகு கெட நம் தலைவி என்ன ஆயினளோ என்று நம் தலைவர் உசாவி யறியாராதலின் பொருள் தேடும் விருப்பில் நம்மை மறந்தனரோ?' வினையின் மிகுதியால் மறந்தனரோ? என்று, பிரிவிடை வேறுபட்ட தலைவி, தோழியிடம் கூறினாள் *[அக.235:17]*. பிரிவின்கண் அழகு கெட்ட தலைவிக்குத், தோழி, 'தோழியே, நாம் அனுப்பிய தூதரும் தலைவர் பால் சென்றுள்ளனர்; அவர்தம் வாயிலாக நினது துயரினை அவர் அறியின் விரைந்து வருவர்; நினது நெற்றியின்கண்ணுள்ள பசலையும் மறைந்தொழியும்', என்று கூறினாள் *[அக.251:2]*. பிரிவின்கண் வேறுபட்ட தலைவிக்குத், தோழி, 'தோழியே, நாள்தோறும் பசலையும் படர்கின்றது; என் உடலும் மெலிந்து இறப்பினை நோக்குகின்றது; அன்னையும் வெறுத்த முகத்தினளாயுள்ளாள்; அலரும் எங்கும் ஒலிக்கின்றது, என்று, வருந்தித்துயரில் அழுந்தாதே; நின் குழையொடு பொரும் பார்வையினை அவர் மறந்து இரார்; விரைவினில் வருவர்', என்று கூறினாள் *[அக.253:1]*. பிரிவின்கண் தலைவி, 'பனிக்காலத்தே நமது அழகினைக் கவர்ந்த பசலை, நம்மை வருத்தும் துயரினை நம் தலைவர் அறிந்திலரோ? அறியினும், மகளிர்க்குள்ள மென்மைக் குணம் இல்லையோ? யான் என்னென உணர்வேன்', என்று கூறினாள் *[அக.273:5]*. தோழி, தலைவியிடம், 'தாம் குறித்துச் சென்ற இளவேனில் பருவத்தில் நம் தலைவர் வந்து நின்றவுடன் நம்மை இதுகாறும் வருத்திய நம் நெற்றியில் பரவியிருந்த பசலைநோய் நம்மைப் பிரிந்து எவ்விடத்துச் சென்றதோ?' என்று கூறினாள் *[அக.317:24]*. பிரிவிடை வற்புறுத்துந் தோழியிடம், தலைவி, தோழியே, குறித்த பருவத்தில் தலைவர் வந்துவிடுவார் என்று நீ கூறும் நன்மொழிப்படியே அவர் வரின் நன்றே; சென்ற வினைமுடித்து மீளும் எண்ணமுடையராயின் அவரிடமிருந்து ஒருதூது வரப்பெறின் இவ்விடத்து நமது பசலை மறைதல் எளிது', என்று கூறினாள் *[அக.333:19]*. தோழியிடம், 'நம் தலைவர் என் தோளின் அழகுகெடவும், ஒவ்வொரு நாளும் அழகினைக் கவர்ந்து கொள்ளும் பசலை வருத்தவும் நம்மைப் பிரிந்து சென்றார் ஆயினும், அவர்க்குச் செய்யும் வினை கை கூடுவதாக', என்று கூறினாள் *[அக.347:2]*. பிரிவுற்ற தலைவியின் மேனியின்மேல் கொன்றையினது மலர்ந்த பூக்களைப் போலப் பாழ்பட நிறைந்த பசலை பரவியது *[அக.398:5]*.

பிரிவுற்ற தலைவி, தோழியிடம், 'தலைவன் தந்த காமநோயினால் குவளை மலரைப் போன்றிருந்த என்னுடைய அழகிய கண்கள் இப்பொழுது பசலைநிறம் நிரம்பப் பெற்றன', என்று கூறினாள் *[குறு.13:5]*. ஆவின் பாலானது அதன் கன்றுக்கும் உதவாமல், கலத்திலும் விழாமல் நிலத்தில் விழுந்து வீணானது போல என்னுடைய அழகு எனக்கும் ஆகாமல், எனது தலைவனுக்கும் பயன்படாமல் பசலை உண்ண விரும்பும்', என்று, தலைவி, தோழியிடம், பிரிவின்கண் கூறினாள் *[குறு.27:4]*. 'தலைவியினுடைய பசலை நீங்கும்படியாக விரைவில் வரைந்து கொள்வேன் என்று ஒரு சொல் தலைவன் கூறமாட்டானோ', என்று, தோழி கூறினாள் *[குறு.48:5]*. 'தலைவன் தழுவினால் இன்புற்ற நீ, அவன் பிரிந்தால் பசலையுண்டாகி வருந்துவது தக்கதன்று', என்று, தோழி, தலைவியிடம் கூறினாள் *[குறு.339:7]*. தோழி, தலைவியிடம், 'தலைவனுடன் சிரித்து மகிழ்ந்ததனால் உண்டான பயன், நினது பழைய அழகு அழிந்து, தோள் மெலிய வருந்தி, இரவு முழுதும் உறங்காமல் பசலை உண்டாக, நாம் அழிவது தானோ?' என்று கூறினாள் *[குறு.381:3]*. தலைவன் என் உடலைத் தொடுந்தோறும் விலகி, வேர் பிரியுந்தோறும் உடலில் பரவுவதால் பசலையானது கிணற்றிலுள்ள பாசியைப் போன்றது', என்று, தலைவி, தோழியிடம் கூறினாள் *[குறு.399:2]*.

'நீ தலைவிக்குத் தலையளி செய்யாமையால் உண்டான பசலையை, அன்னை பிறழவுணர்ந்து, மறியறுத்து, வெறியாட்டெடுத்தும் அது நீங்கவில்லை என்பதைத் தலைவரிடம் நாம் கூறினால் என்ன', என்று தோழி, தலைவியிடம் கூறினாள் *[நற்.47:11]*. தலைவனின் பரத்தைமையை

அறியச் சென்ற தோழியைப், பாணன் அவளைத் தடுக்க வேண்டி குறுகல் வழியில் அவள் மீது மோத, திகைப்புற்ற அவளை, அவன் நினது பசலை அழகாய் இருக்கிறது என்று கூற, அவள் நாணமுற்றுச் சென்ற வினையை மறந்து திரும்பினாள் *[நற்.50:7]*. தலைவன் சிறைப்புறத்தானாகத், தோழி, தலைவியிடம் கூறுவாளாய்த், 'தலைவனுடன் நாம் கொண்ட தொடர்பினை யறிந்து ஊரார் அலர் தூற்றுதலானே நம் அன்னை அரிய காவலிற் படுத்தலானே இங்ஙனம் பசலையாகி நாம் விளிந்தொழியக் கடவது தானோ', என்று கூறினாள் *[நற்.63:7]*. தலைவனின் செலவுக் குறிப்பறிந்து, வருந்திய தலைவி, தோழியிடம், 'தலைவரோடு யான் முயங்கிக் கிடப்பினும், மாலைப் பொழுதில் அஞ்சுகின்ற எனக்கு, எனது நெற்றியின் அழகை அழிக்கும் பசலையையும், அதனாலேற்படும் அலரையும் கொடுத்துப் பிரிவர் என்பதை யறிந்து எப்படி ஆற்றுவேன்', என்று கூறினாள் *[நற்.73:10]*. பிரிவாற்றாளாய தலைவி, வற்புறுத்தும் தோழியிடம், 'அன்புத் தோழியே, இவளுக்குத் தோளும், கண்களும் அழகை இழந்தன; நெற்றியிலும் பசலை பரவியது, என்று அயலார் அலர் தூற்றும்படி விடார்; விரைவில் வருவர், என்று நீ கூறும் அன்புச் சொல் கொல்லன் உலையில் பெய்த சிலவாய நீர், அவ்வுலையின் நெருப்பினைச் சிறிது அவிக்குமாறுபோல், எனக்குச் சிறிது ஆறுதலை அளித்தது', என்று கூறினாள் *[நற்.133:3]*. தலைவனுடன் நீ கொண்ட தொடர்பினை நம் அன்னை அறியாளாயினும், அயற்பெண்டிர் கூறும் அலர் மொழியைக் கேட்டுக், கொதிக்கின்ற பாலில் ஆடை படருவது போல, நினது மேனியில் படரும் பசலையைக் கண்டு சுடுவாள் போல நோக்கும்; இனி இல்வயின் செறிக்கும் போலும்', என்று தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி, தலைவியிடம் கூறினாள் *[நற்.175:9]*. தலைவன் பிரிய, ஆற்றாளாய தலைவி, தோழியிடம், என் கண் முதலியன அழகுகெட்டுப் பசலை பாய்ந்து, என்னுயிர் பிரிவதாயினும் முன்பு எனக்குத் தலையளி செய்த தலைவர்இனியும் அருளுவார் என்னுங்கருத்தால் சிறிதும் அவர்மீது புலவேன்' என்று கூறினாள் *[நற்.219:2]*. தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவி, தோழியிடம், 'தோழியே, காமநோயின் தெறலினால் எனது மேனி கொதிப்பேறி வெப்பமுறா நின்றது; தலைவன் மலையிலுள்ள குளிர்ந்த காற்று என்னுடைய பசலை நோயுற்ற மேனியில் பட வேண்டி முற்றத்தில் கிடத்தினால், இவள் நோய் நீங்கினும் நீங்கலாம்', என்பதை அன்னைக்கு உரைப்பாயாக', என்று கூறினாள் *[நற்.236:10]*. 'தோழியே, எனது அழகைக் கெடுத்த பசலையைக் கண்டும் தலைவனிடமோ? அன்னையிடமோ? கூறுதலைச் செய்யாத நீ மிகவும் கொடியை', என்று தலைவி, தோழியிடம் அறத்தொடு நின்றாள் *[நற்.244:11]*. தோழி, தலைவனிடம், நீ அருள் செய்தாலும், செய்யாவிடிலும் நின்னையே நம்பி வாழும் தலைவியின் நெற்றியில் குடிகொண்ட பசலைநோய்க்கு மருந்து நின்னல்லது இல்லை என்பதையறிந்து செல்வாயாக', என்று கூறினாள் *[நற்.247:8]*. பிரிவிடை ஆற்றாத தலைவி, காமம் மிக்க கழிபடர் கிளவியால் வண்டினைப் பார்த்து, 'வண்டே, பீர்க்கம் பூவிலே சென்று ஊதும் நீ, நாற்றமின்மையின் எனது பசலையில் ஊதமாட்டாய்; நினது பேடையுடன் இன்புறும் நீ, பிரிந்து சென்றுள்ள என் தலைவரிடம் என் நிலையைக் கூறினாயல்லை; நீ மிகக் கொடியை; நீ கரியதாதல் போல நின்னுள்ளமும் கரியதோ', என்று வினவினாள் *[நற்.277:8]*. தலைவன் சிறைப்புறமாகத், தோழி, தலைவியிடம், 'தலைவரின் பிரிவினால் நினது நுதலிலுள்ள பசலையைக் கண்டு, கட்டுவிச்சியிடம் குறி கேட்கும் நம் அன்னைக்கு, அக்கட்டுவிச்சி, நம் தலைவரால் வந்ததென்றறியாது, முருகவேளால் இந்நோய் வந்ததென்று கூறுவளோ?' என்று கூறினாள் *[நற்.288:5]*. 'தலைவர் வந்து புணரும்போது அழகுண்டாகும்; அவர் பிரியும்போது பசலை வந்து எனது அழகைச் சிதைக்கும்; அதனால், அவருடைய மார்பு இசையறி விலங்காகிய அசுணமாவைக் கொல்பவருடைய கையைப் போலப், பெரிதும் இன்பமும், துன்பமும் உடையதாயிற்று', என்று, தலைவி, தோழிக்குக் கூறினாள் *[நற்.304:7]*. களவுத் தலைவனிடம், தோழி, 'பெருமானே, நீ நாடோறும் தலைவியிடம் வந்தும் என்ன காரணத்தாலோ, தலைவியின் அழகிய கண்களில் பீர்க்கின் பூவைப் போன்ற பசலை உண்டாகும்; இவட்கு இத்துன்பம் வராதபடி காப்பாயா?' என்று கூறினாள் *[நற்.326:7]*. களவுத் தலைவனிடம், தோழி, 'பெரும, நின்னுடன் கிளியோப்பியும், ஊசலாடியும், அருவியாடியும் விளையாடுவதைவிட வேறு இனிய செயலில்லை; ஆயின், அன்னை, தலைவியின் நறுநாற்றத்தையும், பசலை பரவிய நெற்றியையும் நோக்கி, அயிர்த்து வெகுண்டு இற்செறித்தாள் என்று கூறி, வரைவு கடாவினாள் *[நற்.368:7]*. தலைவன் சிறைப்புறமாகத், தோழி, தலைவியிடம், 'நடுயாமமும், நெடுநேரம் உளது; காமமும் கண்ணுறங்கவிடாது; ஞாயிறும் தோன்றவில்லை; தல்லவரை ஆராயாது நாம் கொண்ட நட்பு அயல் மகளிர் நினது நெற்றியிலுள்ள பசலையைக் குறித்துப் பாடும்படியாக இழிதகவெய்தப் பண்ணியுள்ளது', என்று கூறினாள் *[நற்.378:7]*.

தலைவனின் தமருக்கு மகட்கொடை மறுப்புழித், தோழி அறத்தொடு நிற்கும் பொழுது, செவிலியிடம், 'அன்னையே, தலைவருடைய மார்பினை மிகவும் தழுவியும் நின் மகளுக்குப்பசலை படர்வது எதற்காக? யானறியேன்', என்று கூறினாள் *[ஐங்.29:5]*. வரைவிற்குச் சான்றோரைத் தலைவன் அனுப்பியதை யறிந்த தோழி, தலைவியிடம், நம் தலைவர் இப்பொழுது நினது பசலை நோயை ஒரு தலையாகத் தீர்த்தருளினார், என்று கூறினாள் *[ஐங்.145:3]*. தலைவனுடன் உடன் போக்கிற்குத் தலைவியை எழுப்பும் தோழி, தலைவியிடம், 'தோழியே, நீ மீண்டும் நின்னழகைப் பெறத் தலைவன் வந்துள்ளான்; ஆகவே உறக்கத்தினின்றும் எழு; நாம் இனி நினது அழகைக் கவர்ந்த அப்பொல்லாத பசலை நோயை

எள்ளி நகைத்திடுவோம்', என்று கூறினாள் *[ஐங்.200:4].* ஒருவழித்தணந்த தலைவனிடம், தோழி, 'பெருமானே, நின் காதலியின் தளிர்த் திருமேனி மழுங்கவும், அவள் மேனியில் பசலை பரவவும் பிரியும் வன்மையை எவ்வாறு பெற்றாயோ?' என்று வினவினாள் *[ஐங்.231:4].* போர் வினை மேற்சென்ற தலைவன் வெற்றி பெற்று வருகிறான் என்பதை யறிந்த தலைவி, தோழியிடம், வேந்தனுக்குத் துணையாகச் சென்ற நம் தலைவனின் மார்பு, நம் தோனில் படர்ந்துள்ள பசலை நோய் தீரும்படி நாம் தழுவிக்கொள்ளவும் கிட்டுமோ', என்று கூறினாள் *[ஐங்.459:1].* குறித்த பருவத்தில் வர இயலாத தலைவன், பாணனிடம், 'பாண்மகனே, நீ இங்கிருந்து விரைந்து சென்று தன் குளிர்ந்த விழிகள் பசலையுள் மூழ்கி வருந்தியிருக்கும் என் காதலியிடம், இங்குள்ள நிலையை எடுத்துக்கூறி, அவளை ஆற்றியிரு; நான் விரைவில் வந்து விடுகிறேன்', என்று கூறினான் *[ஐங்.477:1].*

பொருள்வயிற் பிரியக் கருதும் தலைவனிடம், தோழி, 'பெருமானே, நீ பிரிவதனால், தலைவியின் அழகிய நிறம் பசலையால் உண்ணப்பட்டு அவள் அழகு அழியுமாயின், நீ ஈட்டிக்கொண்டுவரும் அச்செல்வத்தால் அவ்வழகை மீட்டல் முடியுமோ', என்று கேட்டாள் *[கலி.15:13].* பிரிவுத் துயரால் வாடும் தலைவியிடம், தோழி, 'கணியனையும், சான்றோரையும் அழைத்துக் கொண்டு, நினது தோளிற் படர்ந்துள்ள பசலையும், ஊரார் கூறும் அலரும் நீங்கும்படியாக, வதுவை குறித்துத் தலைவரும் வந்தார்; இனி நின் கண்கள் மலர் போன்ற அழகைப் பெறுவனவாக', என்று கூறினாள் *[கலி.39:48].* வரையாது வந்தொழுகும் தலைவனிடம், தோழி, 'நின் காதலியின் தளிர்போன்ற மேனி அழகுகெட்டுப் பசலையால் பாழ்பட்ட இவளுடைய மேனியின் மாமை நிற அழகு செய்த தவறு ஏதேனும் உண்டோ' என்று வினவினாள் *[கலி.48:16].* வரையாது நீட்டித்த தலைவனிடம், தோழி, 'பெருமானே, மிகவும் மென்மையாளாய தலைவியின் தோளை மணந்தனையாயின் அவளுடைய நெற்றியில் தோன்றிய பசலை மறைந்துவிடும்', என்று கூறினாள் *[கலி.125:23].* வரையாது வந்தொழுகும் தலைவனிடம், தோழி, 'பசலை நிறத்தாலே பகற்பொழுது எடுத்த விளக்குப்போல, ஒளி இழந்தவளாகிய தலைவி, தனது ஒளியை இழந்தது பொழிலகத்து நீ அவளைப் புணர்ந்தபோது நின்னிற் பிரியேன் என்று கூறியதை நம்பியதாலா? என்று வினவினாள் *[கலி.132:10].*

பசப்பு-காண்க.

**2. பொன்னிறம்.** பாழூரின்கண் உள்ள நெருஞ்சியினது பசலையையுடைய — பொன்னிறத்தையுடைய - பூவானது கதிரவனை நோக்கி இருத்தல் போல, வறுமையுற்றோரது உண்கலம் கொண்கானம் கிழானது மார்பினை நோக்கியே இருக்கும் *[புற.155:4].*

**3. இளமை.** அதியமான் பொகுட்டெழினியைப் பசலையான- இளமையான - நிலவு விளங்கும் பனி சொரியும் விடியற்காலத்தே ஒரு பொருநன் பாடுவது போல, ஔவையார் பாடியுள்ளார் *[புற.392:3].*

கோவலரின் மனையின் கண் சிறிய தாம்பாலே பசலைக் கன்றுகளைப் பிணித்திருப்பர் *[முல்.12].*

**பசலையள்** - பொன்போன்ற நிறத்தையுடையவள். வினை முற்றிய தலைவன், தேர்ப்பாகனிடம், 'பாகனே, மேனியின்கண் பரந்த பசலையளாய - பொன் போன்ற நிறத்தையுடையளாய - என் காதலியின் கூந்தல் ஒப்பனை செய்து அழகு பெறும்படி தேரினை விரைந்து செலுத்துவாயாக', என்று கூறினான் *[அக.234:17].*

தலைவனின் பிரிவால் தலைவியின் அழகு கெடும்படியாக அவள் மேனி மறையப் பசலையள் ஆனாள் *[கலி.143:6].*

**பசி-1.** உணவு வேட்கை. பாணனும் சுற்றத்தினரும் பசியின்- உணவுவேட்கையின் - மிகுதியால் உரித்த உடும்பின் விலாப்புடையைப் போல் உடல் வற்றியிருந்தனர் *[புற.68:2].* பாணன் ஈத்தளிப்போரின்மையின் உடம்பின் கண் பசியோடுயிருந்தான் *[புற.69:2].* 'ஆய்வேளே, உண்ணாமையின் உடல் மெலிந்து வாடும் எனது சுற்றத்தினது பசிப்பகை முதலிய பகைகளைப் போக்குபவன் நீ ஒருவனே என்று நின்பால் வந்தேன்', என்று ஆய் அண்டிரனிடம், துறையூர் ஓடைகிழார் கூறினார் *[புற.136:9].* வையாவிக் கோப்பெரும்பேகனிடம், ஆற்றுப்படுக்கப்பட்ட பாணன், மிக்க பசியையுடையவனாய் இருந்தான் *[புற.141:6].* கண்டீரக் கோப்பெருநள்ளி தன் மலையில் தங்கியிருந்த புலவர் கூட்டத்தினது சுடுகின்ற பசிதீரும் பொருட்டு மானினது தசையைச் சுட்டு உண்ண கொடுத்தான் *[புற.150:14].* அண்ணலே, பசி தின்னுதலால் மெலிந்த எனது யாய், மனைவி, மக்கள், சுற்றத்தினர் முதலியோர் மகிழ்ச்சியடைய நின்னிடம் வந்தேன். முகம்மாறி யானையைப் பரிசிலாக அளித்தாலும் கொள்ளேன்; குன்றியளவையாயினும் இன்புற்றுக் கொடுத்தாயாயின் கொள்வேன்' என்று குமணனிடம் பெருஞ்சித்திரனார் கூறினார் *[புற.159:2].* பசியால் தினப்பட்டு வற்றி உலர்ந்த குடல் குளிருமாறு நெய்யுடை யுணவைப் பாடிவருவோர் சுற்றத்திற்களிப்பதுடன், பொன்னணிகளையும் வாரி வழங்குபவன், குமணன் *[புற.160:4].* பெருஞ்சித்திரனார் குமணன் கொடுத்த கொடைச் செல்வத்தைத் தம் மனைவியிடம் கொடுத்து, மனைக்குரியோயே, நமது சுற்றத்தினது மிக்க பசி நீங்க நினக்கு நெடுநாட்கள் கொடுத்தவர்களுக்கும், மற்ற எல்லோர்க்கும் என்னிடமும் சூழாது வழங்குவாயாக', என்று கூறினார் *[புற.163:3].* நெடுநாள் அடுதலின்மையின் பசியால் வருந்திப் பாலற்ற வறுமுலையைச் சுவைத்து அழும் குழந்தையைப் பார்த்து அழும் என் மனைவியின் முகத்தைப்பார்த்து, அது தீர்ப்பவன் நீயே என்று கருதி வந்துள்ளேன்', என்று பெருந்தலைச் சாத்தனார், குமண வள்ளலிடம் கூறினார் *[புற.164:2].* சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனால், சிறுகுடிகிழான் பண்ணன்

பசிப்பிணி மருத்துவன் என்று அழைக்கப்பட்டான் [புற.173:11]. பருந்தினது பசியைத் தீர்க்கும் நல்ல போரைச் செய்யும் திருந்திய வேலையுடையவன், நாலைக்கிழவன் நாகன் [புற.179:11]. ஈர்ந்தை என்னும் ஊருக்குத் தலைவனாகிய தோயன் மாறன் என்பவன் பாணரின் பசிக்குப் பகைவனாவான் [புற.180:7]. வல்லாரென்கிற ஊருக்குத் தலைவனாகிய பண்ணன் என்பான் இரவலரது பசிக்குப் பகையாகிய பரிசிலை அளிப்பவனாவான் [புற.181:10].

பாணருடைய வருத்தமுற்ற சுற்றத்தினது பசிக்குப் பகையாய்ச் சோழநாட்டில் உறையூரென்னும் படைவீட்டிடத்திருந்தான், கோப்பெருஞ்சோழன் [புற.212:7]. 'அறிவும் ஈரமும் இல்லாத கூற்றமே, போர்க்களத்தில் பகைவரின் படைகளைக் கொன்று, நினது மெய்வாடுதற்கேதுவாகிய பசியைப் போக்கினவன் அவன்; நீ அவனைக் கொன்றனையே, இனி நினது பசியைக் கெடுப்பவர் யார்', என்று சோழன் குள முற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் இறந்த பொழுது ஆடுதுறை மாசாத்தனார் கூறினார் [புற.227:7,11]. அதியமான் நெடுமானஞ்சி காலமானபொழுது தாயை இழந்த உண்ணாத குழவினை யொப்ப உலக மக்கள் தம் சுற்றத்துடன் பசியால் வருந்திக் கலக்கமெய்தினர் [புற.230:9]. பாடி நின்ற பசியை யுடைய இரவலர்க்குக் கோடைக்காலத்துக் கொழுநிழல் போல, உதவியவன் வெளிமான் [புற.237:2]. பாணர்கள் உவக்கும்படியாக அவர்களின் பசியைத் தீர்த்தவன் நம்பி நெடுஞ்செழியன் [புற.239:17]. இரவலரைக் காக்கும் மறவனொருவன் போரில் வீழ்ந்து நடுகல்லானது அறியாமல் பாணனொருவன் மனையோள் ஒருத்தி மயிர்விரித்து எதிர்வரும் தீ நிமித்தத்தைக் கண்டு மனம் நடுங்கிக் கடவுளை வாழ்த்திக் கொண்டு பசி வருத்தும் வயிற்றையுடையனாய் 'எனது தலைவனைக் காணமாட்டேனோ' என்று எதிர்வருவாரிடம் வினாவிக் கொண்டு வந்தான் [புற.260:6]. வேறு,வள்ளல்களைக் காணப் பெறாமையால் உணவின்றிப் பசி நின்று வருத்திய என்னுடைய சுற்றத்தாருடன் நின்னிடம் வந்தேன்', என்று சோழன் செருப்பாழி யெறிந்த இளஞ்சேட்சென்னியிடம், ஊன்பொதி பசுங்குடையார் கூறினார் [புற.370:3]. கிணைப் பொருநருக்குப் பன்றியூனினை நெய்யிற் பொரித்து நாட்காலையில் சோற்றுணவோடு கொடுத்து அவர்களின் பசியைப் போக்குவதில் வல்லன், ஒய்மான் வில்லியாதன் [புற.379:10]. நெய்யால் தாளிதம் செய்யப்பட்ட ஊன் கலந்த பலவகையான சோற்றுடனே, இனிய சுவையுடைய பிற பொருள்களையும் பொருநருடைய பசித்துன்பம் நீங்குமாறு கொடுப்பவன், சோழன் நலங்கிள்ளி [புற.382:10]. அம்பர் கிழான் அருவந்தை, தடாரிப்பறையை முழங்கும் பொருநனுடைய கிழிந்த ஆடையை நீக்கி வெள்ளுடை உடுக்கச் செய்து, அவனுடைய பசித்துன்பம் போக்கினான் [புற.385:7]. அதியமானஞ்சியை அண்டினவர் வறுமையொழிந்து உய்வர்; அவனை அண்டுவதற்கு அறியாதார் தாம் வருத்துகின்ற பசியைப் போக்குவதற்கு மழை பொழியவில்லையே என வருந்துவர் [புற.390:27]. சோழன் நலங்கிள்ளி போரில் தன் பகைவரை வெல்லுவதோடு, தன்னைச் சேர்ந்தோருடைய பசியாகிய பகையையும் போக்குவதில் வல்லவனாவான் [புற.400:17].

இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் இரவலர்க்கு ஆட்டிறைச்சி பெய்து சமைத்த வெண்ணெல்லின் சோற்றுடனே, கட்டெளிவையுங் கொடுத்து அவர் நெடுநாட்களாகப் பசியால் வருந்திய வருத்தத்தைப் போக்குவான் [பதி.12:15]. இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனின் சேரநாடு நோயும், பசியும் இல்லையாகிப் பல்வளமும் நிரம்பியது [பதி.13:27]. இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் மழை பெய்யாது வறந்த காலத்திலும் தன்னையடைந்தவர்களின் வயிற்றுப்பசி முழுதும் அடங்குமாறு ஈவதில் வல்லவன் [பதி.20:27]. மழை பெய்யாது பசுமையற்று, வயல்கள் உலர்ந்து கெட்ட காலத்திலும், கூத்தரும், பாணருமாகிய பரிசிலரின் மிகுதியான பசி நீங்குமாறு, உண்பனவுண்ணுமாறு அளிப்பவன், பல்யானைச் செல்கெழுகுட்டுவன் [பதி.23:6]. இரவலரின் சுற்றத்தினுடைய பசியைப் போக்கிப் புகழ்பெற்றவன் செல்வக் கடுங்கோ வாழியாதன் [பதி.64:19].

கரிகால் பெருவளத்தானிடம் பரிசில் பெற்ற பொருநன் பரிசில் பெறாத பொருநனிடம், 'அடுகின்ற பசியாலே வருந்திய நின்னுடைய பெரிய சுற்றத்தோடே தொன்றுதொட்டு வந்த பசி நின்னைக் கைவிடுதல் விரும்புவையாயின், கரிகால் வளவனிடம் செல்', என்று கூறினான் [பொரு.61,62]. அடுக்களையில் காளான் பூத்துக் கிடக்கும்படியான நல்குரவுண்மையின், கிணைப்பறை கொட்டுவோனுடைய மனைவி ஒடுங்குதற்குக் காரணமான பசியாலே வருந்தினாள் [சிறு.135]. உப்பில்லாத வேளைக்கீரையைச் சுற்றத்தோடே உண்ட பாணரின் அறிவு முதலியவற்றை அழிக்கும் பசியாலுண்டாகும் வருத்தம் நீங்குமாறு ஒய்மாநாட்டு நல்லியக்கோடன் யானை தேர் முதலியவற்றை அளித்தான் [சிறு.140]. தொண்டைமான் இளந்திரையன் வற்கடம் மிக்க காட்டகத்தே திடீரென முகில் மழையினைப் பொழிந்தாற்போன்று, தொன்று தொட்டுப் பழம்பசியாலே வருந்திய பாணர்க்குப், 'பிறர்க்குக் கொடுத்தாலும் மாளாத யானை, குதிரை முதலிய பெருஞ்செல்வத்தை அளித்தான் [பெரு.25]. வழிச் செல்கின்ற புதியோர் தமது மிக்க பசி தீரும்படி சோற்றையாக்குகின்ற பானை, அடுப்பினின்றும் அசைந்து விழும்படி திரண்ட தெங்கின் காய் அதன்மேலே, விழுந்தது [பெரு.365].

மழையின்மையால் வறண்ட கள்ளிக் காட்டினையுடைய கடத்திலே செந்நாய் பசியால் வருந்தும் தன்பிணவோடு வதிந்தது [அக.53:6]. கருவுற்றிருக்கும் பெண் புலியின் வேட்கை மிக்க பசியினைப் போக்குவதற்காக ஆண்புலி பெரிய ஆன்பன்றியினைக் கொன்று ஈர்த்து வந்தது [அக.72:12].

மலைச்சாரற்கண்ணே அணிமையில் கன்றீன்ற பிடிக்கும், கன்றிற்கும் பசியைப் போக்கற்குக் களிற்றுயானை மூங்கிலின் முற்றாத முளையினைக் கொணர்ந்து உண்பிக்கும் *[அக.85:7]*. ஞாயிறு தெறுதலின், மழைபொழியாது, மலை வறட்சியுற்று, அருவி இல்லையான பொழுது, சுனையில் நீரின்மையால், பாசியைத்தின்று ஆண்யானை, அயர்வினைத் தரும் பசியினையுடைய பெண்யானையினுடன் ஒரு பக்கத்தே ஒடுங்கிக்கிடந்தது *[அக.91:6]*. குடநாடு குட்டுவன் காப்பதனால் பசியென்பதை அறியாத மருதவளம் மிக்க ஊர்களையுடையதாய் இருந்தது *[அக.91:14]*. பாறையின் குகையில் மூன்று குட்டிகளை ஒருசேர ஈன்ற ஒய்ந்த பசிமிக்க பெண்புலிக்கு, உண்பிப்பதற்காக, ஆண்புலி கலைமானின் குரலை உற்றுக்கேட்கும் *[அக.147:5]*. சுரத்தில் ஆறலைப்போரால் கொல்லப்பட்டவர்தம் தசையினைக் கழுகுகள் கொண்டுவந்து யாமரத்தின் கிளைகளிலுள்ள தம் குஞ்சுகளுக்கு ஊட்டும்போது தவறிவிழுந்த ஊன்துண்டு பழைய பசியினையுடைய முதிய நரிக்கு உணவாகும் *[அக.193:10]*. காடுகளின் பாறைகளில் சுள்ளிபோல் காய்ந்து கிடக்கும் வெள்ளிய எலும்புகள், ஒட்டகத்தின் மிக்க பசியினைப் போக்கும் *[அக.245:18]*. ஆண்புலி தனது பெண்புலியின் மிக்க பசியினைப் பொறாது சென்று பன்றி வரும் வழியைப் பார்த்திருக்கும் *[அக.277:6]*. ஊனைவிரும்பும் தன் பெண் நாயின் மிக்க பசியினைப் போக்குதற்கு, ஆண் செந்நாய், பெண்மான் கதற ஆண்மானின் தொடையினைச் சிதைக்கும் *[அக.285:4]*. குட்டியீன்ற மந்தியின் வருத்தும் பசியைப் போக்குதற்கு அக்குட்டியினது தந்தையாகிய கடுவன் பலாப்பழத்தின் சுளையினைத் தோண்டித் தரும் *[அக.288:12]*. மழை பெய்யாததால் காடுகளில் இலை,புல் முதலியன இல்லாமல் காய்ந்து போனதால், ஏறுகளையுடைய ஆனிரைகள் பலவும் ஒருங்கே பசியால் வருந்தின *[அக.291:3]*. காட்டுப் பூனை ஊனை, விரும்பும் தனது பெண் பூனையின் வருத்தும் பசியினை நீக்குதற்கு மாலைக்காலத்தில் கோழிச்சேவலைப் பற்றும் அமயத்தினைப் பார்த்திருக்கும் *[அக.367:9]*. புல்லி என்பானது நாட்டில் வாழும் இடையர் வரகரிசிச் சோற்றோடு நல்ல ஆவின் பாலையும் கொடுத்து வழிச் செல்லும் புதியவரது மிக்க பசியைப் போக்குவர் *[அக.393:3]*.

பெண்யானையின் பசியைப் போக்குவதற்கு ஆண்யானை யாமரத்தின் பட்டையை உரித்து அப்பிடியை உண்ணச் செய்யும் *[குறு.37:2]*. சுரத்தில் ஆண்மான் மரக்கிளையை வீழ்த்திக் குட்டியின் பசிப்பிணித்தீர்த்து, எஞ்சியதைத் தான் உண்டு, குட்டிக்கு நிழலாகி வெயிலை மறைக்கும் *[குறு.213:3]*. ஆண்யானை வயிரம் பாய்ந்த யாமரத்தின் அடியைக் குத்தித் தனது வளைந்த கையினால் வளைத்து, வருந்திய நடையையுடைய பெரிய யானை வரிசையின் மிக்க பசியைப் போக்கும் *[குறு.255:4]*.

மழை பெய்யாத வெயில் அழலைப் போல் வீசுகின்ற காட்டிலே நிழலில்லாத இடத்தில் குட்டிகளை ஈன்று காவல் காக்கும் பசியோடிருக்கின்ற பெண்புலிக்கு, ஆண்புலி மாலைப் பொழுதில் நெறியில் செல்லுபவரைக் கொல்லும் பொருட்டு எதிர் நோக்கியிருக்கும் *[நற்.29:3]*. நுணுகிய பசியையுடைய செந்நாய் வாடிய மரையாவைக் கொன்று தின்றொழிந்த மிச்சில், பாலை நிலத்தில் செல்லுகின்றவர்களுக்கு உணவாகும் *[நற்.43:3]*. யானை கழித்த சிறுநீரின் ஈரத்தில் பால் வற்றிய தோலாகிய முலையையுடைய வயிற்றை நிலத்தில் பொருந்திப் பசி வருத்துதலானே முடங்கிக் கிடந்த பெண் செந்நாய் தனக்காக வேட்டை மேற்சென்ற ஆண் செந்நாயை எண்ணி வருந்தும் *[நற்.103:6]*. நீரில்லாத சுரநெறியில் இளைய பிடியானையின் வருந்திய பசியைப் போக்குதற்கு ஆண்யானை ஓமைமரத்தை முறித்துத் தள்ளும் *[நற்.137:6]*. சுரத்தில் ஆறலைகள்வரால் கொல்லப்பட்ட வழிப்போவாரின் பிணங்களைத் தின்ன வந்த மிக்க பசியையுடைய குறிய நரி அப்பிணங்களின் நாற்றம் பொறாமையால் உண்ணாது விலகிச் செல்லும் *[நற்.164:9]*. புலியுடன் பொருதயானையின் புண்பட்ட காலைப் போலப், பசிமிக்க பெண்யானையால் உண்ண வேண்டிப் பட்டை உரிக்கப்பட்ட ஓமை மரம் தோன்றும் *[நற்.279:7]*. மலையின் பிளப்பிலுள்ள முகையினுள் உள்ள ஊனைத் தின்னுகின்ற பெண்புலிக்கு உற்ற அஞ்சத் தக்க பசியைப் போக்க வேண்டி மக்கள் இயங்குதற்குரிய சிறுவழியை அடுத்து ஆண்புலி பதுங்கியிருக்கும் *[நற்.322:5]*. இடைச்சுரத்தில் செல்வோர் தம்மை வருத்துகின்ற பசியைப் புளியம்பழத்தைத் தின்று தணித்துக்கொள்வர் *[நற்.374:3]*.

'தலைவி, உலகின்கண் உயிர்களை நலியும் பசிப்பிணி என்றென்றும் இல்லையாகுக', என்று விரும்பினாள் *[ஐங்.5:2]*. கரும்பு நடப்பட்டிருக்கின்ற பாத்தியில் தானே தோன்றித் தழைத்த ஆம்பல் வண்டினுடைய பசியைப் போக்கும் *[ஐங்.65:2]*. வெள்ளைக் கொக்கின் குஞ்சு இறந்துபட்டதாக அக்கொக்கினைக் காணச் சென்ற நாரை பசி தன்னை நலியவும், அதனைப் பொருட்படுத்தாமல் அங்கேயே தங்கியிருக்கும் *[ஐங்.159:3]*. நீரும், உணவுமின்றி வாடும் தன் பிடியானையைப் பிரிய மனமில்லாமல், ஆண் யானை பசி தன்னைத் தின்று தீர்ப்பது போல வருத்தியும் தன் பிடியைத் தழுவிக் கொண்டே அங்கேயே தங்கியிருக்கும் *[ஐங்.305:2]*. கார்ப்பருவத்தில் விலங்கினங்கள் பசி வருத்தினாலும் மேயலை மறுத்து முடங்கிக் கிடக்கும் *[ஐங்.497:3]*.

**2. வறுமை.** மற்ற நாடுகளுக்கு இயல்பாகிய பழைய பசியை-வறுமையை-அறிந்திராத அசையாத குடியிருப்பினை உடைய வளம் மிக்க தொண்டைமான் இளந்திரையனுக்குரிய பெரிய ஊரின்கண் தங்குவீராயின் வெள்ளிய நெற்சோற்றோடு பெட்டைக் கோழிக்கறியின் பொரியலையும் பெறுகுவிர், எனப், பாணன் ஆற்றுப்படுக்கப்பட்டான் *[பெரு.253]*.

பசு - ஆ. குலமகளிர் பசு - ஆப் - போன்ற அமைதியான குணமுடையர் *[ஐங்.271:3]*.

**பசும்பிடி-பச்சிலைக்கொடி.** (இக்காலத்தார் இதனை மனோரஞ்சிதம் என்பர்) மகளிர் சோலை சூழ்ந்த கொல்லி மலையில் உண்டாகிய இருவாட்சிப் பூக்களுடன் பசும்பிடியையும் - பச்சிலைப் பூக்களையும் - தொடுத்தணிவர் *[பதி.81:25]*.

குறிஞ்சி நில மகளிர் பல பூக்களுடன் பசும்பிடியையும் பறித்துக் கொணர்ந்து அகன்ற பாறையிலே குவிப்பர் *[குறி.70]*.

செவ்வேளின் திருப்பரங்குன்றின் மிசைப் பசும்பிடி முதலியன பூத்தலால் அம்மலையிடம் வானம் போலப் பொலியும் *[பரி.19:75]*.

**பசும்பூட்செழியன்**-பாண்டிய வேந்தன். (தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்). நாடு பொருந்திய செல்வத்தினையுடைய பசும்பூட் செழியன் - பாண்டிய வேந்தன் - தன் பெருமையையும், உயர்ந்த தலைமையையும் அறியாராய்த் தம்மில் கூடிப் பொருவேமென்று தன்னிடத்து வந்த இருபெருவேந்தரும் ஐம்பெருவேளிருமாகிய ஏழரசருடைய நல்ல வென்றி அடங்குமாறு தானொருவனாய் நின்று போர்ப்பறை ஒலிப்பப் பொருது களத்தின்கண்ணே கொல்லுதலை யொத்த செயலை இன்றையின்முன்னே கேட்டறியேம்', என்று தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனின் வெற்றியை வியப்பர், இடைக்குன்றூர் கிழார் *[புற.76:9]*. 'தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்' காண்க.

**பசும்பூட் பாண்டியன்** - பாண்டியன். வில்லேந்திய சேனையையுடைய பசும்பூட்பாண்டியனின்-பாண்டியனின் களிற்றின்மீது எடுத்த வெல்கொடிகளை யொப்ப, அழகுபெற மிளிர்வனவாய், அதிகனின் மலையிடம் பொலியுமாறு, அருவிகள் இழியும் (இவ்வதிகன் என்பான் பசும்பூட்பாண்டியனின் படைத்தலைவன்; *குறு.393) [அக.162:21]* ) பகைவரின் எதிர்ந்த போரினையழித்த, கெடாத நற்புகழையும் வானளாவ உயர்ந்த வெண்கொற்றக்குடையினையும் உடைய பசும்பூட் பாண்டியனுக்குரியது கூடல்மாநகர் *[அக.231:12]*. கொங்கரைப் புறங்கொடுத்தோடச் செய்து வென்று, அவர்தம் நாடுகள் பலவற்றையும் கைப்பற்றித் தந்த பசும்பூட் பாண்டியன் தனது கடலின்கண் அவ்வெற்றிக் களிப்பினால் ஆடியபோது இன்னிசை ஆரவாரம் பெரிதும் எழுந்தது *[அக.253:5]*. உலகிலே மிகுத்துப் பேசப்படும் மறமிக்க தானையினையுடைய வேந்தருள்ளும் அறத்தைக் கடைப்பிடித்த செங்கோலாட்சியுடன் போர்களிலே பகைவருடைய மறத்தைக் கெடுத்து மேம்பட்ட வெற்றியாலுயர்ந்த திண்ணிய தோள்களையும், பலரும் புகழும் திருவினையும் உடைய பசும்பூட்பாண்டியனுக்குரியது பொதியில் மலை *[அக.338:5]*. வாகைப் பறந்தலையில் பசும்பூட்பாண்டியனின் போர்ப்படையேவலில் வல்ல அதிகன், தன் போர் யானை மாண்டபோது, மாற்றாராகிய கொங்கர், மிக்க வெற்றியாரவாரம் எழுப்பினர் *[குறு.393:4]*.

**பசும்பூட் பொறையன்-ஒரு சேரமன்னன்.** வெல்லும் வேலையும், மறமிகு தானையையும் உடைய பசும்பூட் பொறையனுக்கு-சேரமன்னனுக்கு-உரியது கொல்லிமலை *[அக.303:4]*.

**பசும்பூண் வழுதி**-பாண்டிய வேந்தன். பசும்பூண் வழுதிக்கு-பாண்டிய வேந்தனுக்கு - உரியது மருங்கூர் *[நற்.358:10]*.

**பசுமஞ்சள்** - மஞ்சளில் ஒருவகை. சிறிய பசுமஞ்சளோடு - ஒருவகை மஞ்சளோடு - நறிய சந்தனமுதலியவற்றையும் அரைத்துக் கலந்து தெளித்து முருகவேளை வழிபடுவர் *[முரு.235]*.

**பசை**-பிசின். (கஞ்சிப் பசை) பேரியாழில் ஒலியமைதற்குக் காரணமான பத்தலினைப் போர்த்திய, பசையாலே - பிசினாலே - கூட்டிய புதிதாகிய, பொன்னிறமடைந்தது தோல் *[மலை.26]*.

ஆடைகளைத் தூய்மை செய்யும் வண்ணாத்தி, தன் விரலால், ஆடைகளில் தோய்ந்துள்ள கஞ்சிப் பசையினை நீரில் கரைத்துவிடுவாள் *[அக.34:11]*. வாவல், பசை பொருந்திய தோலை நெய்யில் தோய்த்தாற் போன்ற கரிய சிறகினையுடையது *[அக.244:1]*. ஆடைகளைத் தூய்மை செய்யும் வண்ணாத்தியின் விரல் கஞ்சிப் பசையைக் கொண்டிருக்கும் *[அக.387:6]*.

ஆடைகளைத் தூய்மை செய்யும் வண்ணாத்தி, கஞ்சிப் பசையிலே ஆடைகளைத் தோய்த்து எடுத்துத் துவைப்பாள் *[குறு.330:1]*.

**பஞ்சவர்** - பாண்டியர். (ஐந்துவகை நிலனும் தன்னாட்டில் அமையப்பெற்றவர் என்பது கருத்து). பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி, பஞ்சவர் - பாண்டியர் - குடியுள் ஏறுபோல்பவன் *[புற.58:8]*.

**பஞ்சவன்** - பாண்டியன். பஞ்சவன் - பாண்டியன் - புறமன்னர் தன்னைப் பணிதலன்றித் தான் ஒருவரையும் பணியாத ஆற்றலுடையவன் *[பரி.தி.2:46]*.

**பஞ்சாய்** - தண்டான் கோரை (ஒருவகைக் கோரை). பரத்தையர் பஞ்சாயின்- தண்டான் கோரையின் - நாரினால் தொடுக்கப்பட்ட மலர் மாலையை அணிந்திருந்தனர் *[ஐங்.54:5]*. தலைவியொருத்தி, பஞ்சாயின் நாரினால் புனைந்த மாலையைக் கூந்தலில் அணிந்திருந்தாள் *[ஐங்.76:1]*.

**பஞ்சாய்க்கோரை**-தண்டான் கோரை (ஒருவகைக் கோரை) உழவரின் சிறார் நெய்தல்பூவை வெறுத்தாராயின் முள்ளியின் கரிய பூக்களைப் பறித்து அந்நிலத்திலுண்டாகிய பஞ்சாய்க்கோரையைப் - தண்டான் கோரையைப் - பல்லாலே கிழித்த நாரினால் கண்ணியாகக் கட்டித் தலையில் சூடிக் கொள்வர் *[பெரு.217]*.

**பஞ்சாய்ப் பாவை**-தண்டான் கோரையால் செய்த பொம்மை. தலைவனோடு உடன்போக்குப் போகும் தலைவிக்குத் தலைவன் மலர்களைப் பறிக்கும்பொருட்டு மராமரத்தின் கிளையை வளைத்துக் கொடுக்கப், பறித்த மலர்களைத், தலைவி, இவை தனக்கென்றும், இவை தனது பஞ்சாய்ப் பாவைக் - தண்டான் கோரையால் செய்த பொம்மைக் - கென்றும், பிரித்ததைக் கண்ட தலைவன் மகிழ்ந்தான் *[ஐங்.383:5].*

**பஞ்சி** - 1. பஞ்சு. பாரி இருந்தபொழுது பறம்புமலையை முற்றிய பகைமன்னரின் குதிரைகளை எண்ணிய மகளிர் பாரி இறந்தபிறகு பஞ்சி - பஞ்சு - பரந்துள்ள முற்றத்தையுடைய சிறிய மனையின் அருகிலுள்ள குப்பை மேட்டில் ஏறி நின்று உமணர் வண்டிகளை எண்ணும் நிலையுற்றனர் *[புற.116:5].*

முல்லை நிலத்தில் கார்காலம் கூடும்பொழுது வில்லினால் அடிக்கப்பெற்ற பஞ்சிபோல வெள்ளிய முகில் தவழ்ந்திடும் *[அக.133:6].* மழைபெய்து பின் திசைகளை வெளியாக்கிய, பொங்கிய வெண்முகில் கடையப்பெற்ற பஞ்சி மென்மையுற்றாற் போன்று தோன்றும் *[அக.217:2].* மழை பெய்த பொழுது காட்டில் செந்நிறமுடைய தம்பலப்பூச்சிகள் செந்நிறம் ஊட்டிய பஞ்சின் பிதிர் பரவியது போன்று பரவி அக்காட்டிற்கு அழகு செய்யும் *[அக.283:14].*

மனைகளில் இரவில் விளக்கிற்குப் பஞ்சினால் ஆகிய திரியை இடுவர் *[குறு.353:5].*

கடல் அலைகளில் காற்று மோதுதலால் எழுகின்ற நீரின் பிசிர் வில்லால் அடிபட்ட பஞ்சிபோலப் பரக்கும் *[நற்.299:7].* தலைவியின் பாதங்கள் பஞ்சி போன்றிருக்கும் என்று தலைவன் வியந்தான் *[நற்.324:9].*

**2. செம்பஞ்சிக்குழம்பு.** தலைவன் தலைவியின் அழகிய சிறிய அடியில் பஞ்சி - செம்பஞ்சிக்குழம்பினைத் - தடவியும் மகிழ்வான் *[அக.389:7].* காதலனும், காதலியும் கலக்கும் பொழுது நகத்திலும், கன்னத்திலும் பூசப்பட்ட சிவந்த பஞ்சிக்குழம்பு அழிய, அவர்களுடைய நிறையுடைமை உடைந்தழிவது போல, வையையின் வெள்ளம் அணைகளை உடைத்தது *[பரி.6:17].*

**3. துகில்.** போர்முனையில் வாளினால் ஏற்படும் புண்ணிற்கு மருந்து முதலியன இட்டு அப்புண் ஆறும் வரையிலும் பஞ்சியால் - துகிலால் (சீலையால்) - கட்டி வைப்பர் *[புற.353:16].*

**4. நார்.** பாளையினால் ஈனப்பட்ட நுங்கின் குறிய காய்களின் புறத்தே பஞ்சி - நார் - இருக்கும் *[குறு.293:2].*

**பஞ்சு**-பருத்தியின் துய். மழையைப் பெய்தே முகில் வில்லால் அடித்த பஞ்சு - பருத்தியின் துய் - போல் விளங்கும் *[புற.247:4].*

**பஞ்சுரம்** - பாலைப்பண். குறிஞ்சி நில மகளிர் வேங்கை மரத்திலேறி மலர் கொய்யும்பொழுது விளையாட்டுக்காகப் பஞ்சுரம் - பாலைப்பண் - என்ற, பண்ணைப் பாடக் கேட்டவிடத்தும் வழிச்செல்வோர் அஞ்சுவர் *[ஐங்.311:1].*

**பட்டம்** - நீரோடை பட்டத்தின் - நீரோடையின் - உயரமான ஒரே வழியில் ஏறிய வலிய பகடு முடம்பட்டு வருந்தியது *[அக.107:13].*

**பட்டி**-காவலின்றி வேண்டியவாறு ஒழுகுபவன் (கட்டுக்கடங்காத இளைஞன்). பட்டி - காவலின்றி வேண்டியவாறு ஒழுகுபவன்-மகளிர் கட்டிய மணற்சிறு வீட்டை அழித்தும், அவரின் கூந்தலிலுள்ள மாலையை யறுத்தும், அவரின் பந்தினை எடுத்துக்கொண்டு, ஓடியும் துன்பஞ் செய்தான் *[கலி.51:4].* தலைவனின் பரத்தையணிவித்த மோதிரத்தோடு வந்த தன் சிறுமகனைச் சினத்தால் தலைவி சிறுபட்டி என்று அழைத்தாள் *[கலி.84:20].*

**பட்டினம்** - கடற்கரை நகரம். கரையிடத்துள்ள வெள்ளிய மனற்பரப்பிலே கடல் அலை பரந்து ஏறுதலையுடையதும் மதில் எய்திய எயில் என்னும் பெயரைத் தன்னுடன் சேர்த்துக் கொண்டதுமான எயிற்பட்டினம் - கடற்கரை நகரம் - ஒய்மானாட்டு நல்லியக் கோடனுக்குரியது *[சிறு.153].* நீர்ப்பெயற்று என்னும் கடற்கரைப் பட்டினம் தொண்டைமான் இளந்திரையனுக்குரியதாகும் *[பெரு.336].* அயல் நாட்டினின்றும் வந்த வணிகர் மதுரை நகரின்கண் அணிகலன்களை விலை பேசி வாங்கும் பொழுது உண்டாகும் ஓசை, பல்வேறு பண்டங்கள் கப்பல்களில் வந்திறங்கும் பட்டினத்தின் கண் உண்டாகும் ஓசையை ஒத்திருந்தது *[மது.537].* பிற நாட்டு வணிகர் வந்து தன்னிடத்தில் வாழும் மக்களோடே கலந்து மகிழ்ந்துறைதற்கிடமானதும் குறைவற்ற தலைமையை யுடையதுமாகும், காவிரிப்பூம்பட்டினம் *[பட்.218].*

காவிரிப்பூம்பட்டினம் பூக்கள் விரிந்த நீண்ட கழியின் நடுவே தோட்டங்களையுடையதோடு சோழனுக்குரியதுமாகும் *[அக.205:12].* பொருள்மிக்குடையதும் அழகுடையதுமாகிய மருங்கூர்ப்பட்டினம் கல்லென்னும் ஓசையையுடைய ஒளிவீசும் கடைத்தெருவையுடையது *[அக.227:20].*

தாம் விரும்பும் துறைமுகப்பட்டினத்திற்குச் சென்று மீண்டுவரும் மரக்கலத்தினது வருகையை ஆவலோடு எதிர் பார்க்கும் வணிகரைப் போல மதுரையின் இளமகளிர் தம் கணவருடன் கூடும் பொருட்டு வையையின் வெள்ளத்தை எதிர்ப்பார்த்திருப்பர் *[பரி.10:38].*

**பட்டினி** - பசி. பட்டினியால்-பசியால்-துன்புறும் பரிசிலர்க்கு உணவளித்து அவர்களின் வறுமையைப் போக்குபவன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் என்று புலவர் கல்லாடனார் கூறுவர் *[புற.371:2].*

**பட்டு**-பட்டாடை. காவிரிப்பூம்பட்டினத்திலுள்ள இளம்பெண்கள் தம் கணவருடன் சேர்ந்திருக்கும்பொழுது பட்டை -

பட்டாடையை - நீக்கிவிட்டுப் புணர்ச்சிக்காலத்துக்குரிய நொய்யவாகிய வெள்ளியவற்றை உடுத்துவர் *[பட்.107]*.

பரத்தையர் இல்லிற்குச் செல்லும் தலைவன் சந்தனம் பூசிக்கொண்டும், பட்டாடை உடுத்தியும் செல்லுவான் *[அக.236:11]*.

**பட்டுடை-பட்டாடை.** சோழன் கரிகாற் பெருவளத்தான் தன்னிடம் வந்த பரிசிலரின் கொட்டைப் பாசியின் வேர் போன்று அழுக்கான தையலையுடைய கிழிந்த ஆடையை அகற்றிவிட்டுக் கரையிடத்தே, கொட்டைகள் முடியப்பெற்ற தூய்மையான பட்டுடையைக் - பட்டாடையைக் - கொடுத்து உடுக்கச் செய்வான் *[பொரு.155]*.

**பட்டோர்-அழிந்தவர்.** சோழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளியின் கையினால் பட்டோர் - அழிந்தவர்- யாராயினும் இரங்கத்தக்கவரேயாவர் *[புற.81:5]*.

**பட்டோன் - அழிந்தவன்.** மலை போன்ற களிற்றை எறிந்து அதனோடே பட்டோன் - அழிந்தவன் - அயலான் போலத் தோன்றுகின்றான்; வணிகரால் கைவிடப்பட்ட முடமான எருதுபோல அங்குள்ள பகைவரின் உயிர்களைக் கவர்கின்றான், என்று ஒரு மழவனைப், புலவர் பாடியுள்ளார் *[புற.307:2]*.

**படப்பு - வைக்கோல்போர்.** மன்றத்தின்கண் சிறுவர் விளையாடும் ஆரவாரத்திற்கு அஞ்சி முயல்கள் படப்பில் - வைக்கோற்போரில்-பதுங்கும் *[புற.334:4]*.

**படப்பை - 1. பகுதி.** பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி பகைவரின் தேயத்தின்கண் தனது யானைப்படையை ஏவிப் பசிய விளைநிலப் படப்பையை - பகுதியை - உடைய, அரிய மதிலரண் முதலியவற்றைக் கைக்கொள்வான் *[புற.6:14]*. அதியமான் நெடுமானஞ்சி வெண்சிறுகடுகைப் புகைத்தாலும் தெரியாது உயிரைக் கவர்ந்து செல்லும் கூற்றை ஒப்பவன்; ஆதலால், வரம்பைச் சேர்ந்துவளையும் நெற்கதிர் சுழலும் கழனியொடு மிக்க நீர்ப்படப்பையையுடைய பகைவரின் நாடுகள் எல்லாம் கெடும் *[புற.98:20]*. மலையமான் திருமுடிக்காரி பெண்ணையாற்றுப் படப்பையையுடைய நாட்டையுடையவன் *[புற.126:23]*. நாஞ்சில் வள்ளுவன் வேங்கைப் பூவைச் சுமந்து மணிபோலும் நீர் கடற்கண் செல்லும் செவ்விய மலைப்படப்பையுடைய நாஞ்சில் என்னும் மலைக்குரியவன் *[புற.137:12]*. நாஞ்சில் வள்ளுவன், விறலியர் மனைப்படப்பையின்கண் பறித்த கீரையொடு சேர்த்து உண்ணுவதற்குச் சிறிது அரிசி கேட்க, அதற்கவன் யானையையே பரிசளிக்கும் கொடையாளனாவான் *[புற.140:3]*. சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப்பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயனிடம் பரிசில் பெற்ற ஆவூர் மூலங்கிழார், புது நீரையுடைய காவிரி உலகத்தைப் பாதுகாக்கும் குளிர்ந்த புனல் படப்பையையுடைய எம் ஊரிடத்தின்கண் உண்ணவும் தின்னவும், ஊரவுமாகப் போவேன்', என்று கூறினார் *[புற.166:29]*. வேட்டுவரால் அலைப்புண்ட கடமாவின் ஏறு தனக்குப் புகலிடங்காணாமல் மணிகள் மேலே கிளம்பும்படியாகவும், பொன் சிதறி விளங்கவும் மலைப்படப்பையின்கண் விரைந்து ஓடும் *[புற.202:4]*.

குளிர்ந்த கடல் படப்பையையுடைய நெய்தல் நிலத்து மக்கள், கடல் முத்துக்களுடனே, நீண்ட பவளக் கொடிகளையும் எடுப்பர் *[பதி.30:8]*. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் தண்ணிய கடல் படப்பையையுடைய நல்ல நாட்டிற்குத் தலைவன் *[பதி.55:6]*. குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை காற்றால் எழுப்பப்பட்டு உயர்ந்து வரும் அலைகள், நுண்ணிய மணல் பரந்த கரையினையலைக்கும், குளிர்ந்த கடல் படப்பையையுடைய, நாட்டிற்குரியோனாவான் *[பதி.88:42]*. குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை சிலம்பினையும், அடங்கிய கொள்கையையும், அறக்கற்பினையும், நல்ல புகழையும், வண்டுகள் ஒலிக்கும் கூந்தலையும், தொடியையும், உடையவளாகிய கொழுவிய குளிர்ந்த பலவயல்களையுடைய காவிரிப்படப்பையையுடைய நல்ல சோழநாட்டைப் போன்றவளுடைய, கணவனாவான் *[பதி.90:47]*.

எயினருடைய அரண்கள், முள்ளையுடைய உயர்வேலியினையும், அதனைச் சூழ்ந்த காவற்காட்டினையுடைய படப்பையையும் உடையன *[பெரு.126]*. குதிரைகளையும், வடதிசைக்கண்ணுள்ள நுகர் பொருள்களையும், கொண்டுவந்து சேர்க்கின்ற, நாவாய்கள் சூழ்ந்துள்ள கடற்படப்பையையுடையது, தொண்டைமான் இளந்திரையனுக்குரிய நீர்ப்பெயற்று என்னும் துறை *[பெரு.321]*. தொண்டைமான் இளந்திரையனுக் குரிய காஞ்சி மாநகரின் கோபுர வாயிலிற்கு அருகில் காவற்காடு சூழ்ந்த படப்பையும் இருந்தது *[பெரு.401]*. காவிரிப்பூம்பட்டினத்தில் கழிசூழ்ந்த படப்பையில் உப்புவிற்ற நெல்லினைக் கொண்டுவந்த படகுகளை வரிசையாகக், குதிரைகளைப் பிணிக்குமாறு போலப், பிணித்தனர் *[பட்.32]*.

பெரிய உப்பங்கழிப் படப்பையை உடையது, மருங்கூர்ப்பட்டினம் *[அக.227:20]*. சோழருக்குரிய உறையூர், காவிரியின் படப்பையில் உள்ளது *[அக.385:4]*. வயல் படப்பைகளும், காஞ்சி மரங்களும் நிறைந்துள்ள ஊரையுடையவன், தலைவன் *[குறு.127:3]*.

தலைவனுடைய ஒலிமிக்க பனைமரங்கள் உயர்ந்த பெரிய மணல் மேட்டினையுடைய படப்பை சூழ்ந்திருக்கும் *[நற்.38:10]*. கடற்கரையின் படப்பையின்கண், பொங்குகின்ற பிசிரையும், முழவுபோல ஒலித்தலையுமுடைய அலையெழுந்து மோதி உடையும் *[நற்.67:12]*. கடற்கரையில் மணல் சூழ்ந்த படப்பையில் பனை மரங்கள் உயர்ந்து நிறைந்திருக்கும் *[நற்.123:4]*.

**2. தோட்டம்.** பரிசில் நீட்டித்த சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனிடம், புலவர் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார், 'வேந்தே, நாற்படைகளையுடைய

பேரரசரானாலும் எங்களை மதியாதவரை யாங்களும்' மதிக்க மாட்டோம்; முள் வேலியையுடைய படப்பையில் - தோட்டத்தில்- உண்டான முஞ்ஞையின் கீரையோடு வரகு சோற்றை அளிக்கும் சிறிய வேந்தராயினும் எங்களை மதிப்பாராயின் அவரையே மதிப்போம்', என்று கூறினர் [புற.197:10]. நீங்காத புதுவருவாயையும், மலைசார்ந்த படப்பைகளையும் உடைய நல்ல நாட்டிற்குரியவன், ஆய்அண்டிரன் [புற.375:10]. அம்பர் என்னும் ஊர்க்குரியோனாகிய அம்பர்கிழான் அருவந்தை என்பான், காவிரி பாயும் படப்பைகளையும், நெல்விளையும் வயல்களையும் பெற்றிருந்தான் [புற.385:8]. சோழன் கிள்ளிவளவன் நீர் நலஞ்சான்ற படப்பைகளையுடைய காவிரி பாயும் நாட்டிற்குரியவன் [புற.399:11].

ஒய்மானாட்டு நல்லியக்கோடன், பூக்கள் நிறைந்த படப்பைகளையுடைய கிடங்கில் என்னும் ஊருக்கும் அரசனாவான் [சிறு.160]. குளிர்ந்த சோலையில் குடியிருப்புக்களையுடைய உழவர், மஞ்சளையுடைய முற்றத்தினையும், மணம் கமழ்கின்ற பூம்படப்பைகளையும் உடையராயிருந்தனர் [பெரு.354].

இரவுக்குறிக்கு வரும் தலைவனிடம், தோழி, 'எம்படப்பையை யடுத்துள்ள நீண்ட மலைக்கண் மரச் செறிவினுள் காந்தளின் புதருக்கு வந்து பகலின்கண் தலைவியைக் கூடுவாயாக', என்று கூறினாள் [அக.18:13]. உழவர் எருது பூட்டிய ஏர்களைக் கொண்டு தலைகுவிந்த கட்டிகளையுடைய படப்பையினுள் புகுந்து அரிதாளையுடைய நிலத்தைப் பிளந்து உழுவர் [அக.41:5]. பண்ணனது சிறுகுடியைச் சேர்ந்த படப்பையிலுள்ள நெல்லிக்காயைத் தின்றவர் நீரைக் குடித்தால் இனிய சுவையினைப் பெறுவர் [அக.54:14]. இரவுக் குறிக்கண் வந்த தலைவனிடம், தலைவி செல்லுவதற்காகத், தோழி, 'அன்னையே, நம் படப்பையிலுள்ள பள்ளத்தில் நிறைந்துள்ள கூதளஞ்செடியின் தழைகளில் விழும் அருவியின் ஒலி கேட்கின்றதா? என்றும், நம் படப்பையிலுள்ள அசோகினது கிளையில் கட்டியுள்ள ஊசலின் கயிற்றினைப் பாம்பெனக் கருதி அம்மரத்தின் அடி துணிபட இடி வீழ்ந்ததைக் கேட்டாயோ? என்றும் கூறி, அன்னையின் துயிலை அறிந்தாள் [அக.61:1,4]. தலைவன் வயல்களையும், படப்பைகளையும் உடைய காஞ்சி மரங்கள் நிறைந்த ஊரையுடையவன் [அக.96:8]. தலைவயினுடைய ஊர் தாழைகளை வேலியாகவுடைய அழகிய படப்பைகளையுடையது [அக.100:18]. பனை மரங்கள் ஓங்கிய வெள்ளிய மணல் பரந்த படப்பைகளில் அன்றில் பறவை தன் துணையை அழைக்கும் [அக.120:14]. எருமை படப்பைகளில் மேய்ந்து வயல்களில் தங்கும் [அக.146:4]. பரணிலிருந்து இறங்கியதைக் கண்டேன் என்று கூறித் தலைவியை வருத்தாதே; தெய்வங்களையுடைய மலையையடுத்த நம் படப்பையில் ஒரு தெய்வமானது பூவைச் சூடிக் கொண்டு தான் விரும்பின உருவில் வருதலுமுண்டு; அன்றியும் உண்மையில் நனவில் நடப்பதைப் போலவே துயிலில் கனவு வந்து மயக்கலுமுண்டு, என்று, தோழி, செவிலித்தாயிடம் கூறினாள் [அக.158:7]. படப்பையில் புன்னை, தாழை, கொன்றை முதலிய மரங்களிருந்தன [அக.180:13]. சோழனுக்குரிய காவிரிப்பூம்பட்டினத்தில் பூக்கள் விரிந்த நீண்ட கழியின் நடுவே படப்பைகள் இருந்தன [அக.205:12]. வயல்களும், கரும்பு மிக்க படப்பைகளும், நிறைந்த வளமான ஊர், கள்ளூர் [அக.256:15]. தலைவியின் மனையைச் சூழ்ந்துள்ள பொற்றைக்கல் பொருந்திய படப்பையில் மிளகுக்கொடி படர்ந்திருக்கும் [அக.272:10]. முல்லை நில மறவர்கள் மானை வேட்டையாடிக் கொண்டு வந்து முல்லை நிலத்துப் படப்பையில் அறுத்து உண்ணுவர் [அக.284:10]. சோழ மன்னனனுடைய படைத்தலைவனாகிய பழையன் என்பானுக்குரிய போர் என்னும் ஊர் காவிரியாற்றினையும், அதன் இரு பக்கங்களிலும், படப்பைகளையும் உடையது [அக.326:10]. ஆட்டனத்தியைக் கவர்ந்து சென்ற காவிரியினது நீர்த் துறையாகிய கழாஅர் என்னும் ஊர் மிகுந்த நீரால் தாக்குண்ட மருதமரங்கள் நிறைந்துள்ள படப்பைகளையுடையது [அக.376:3].

படப்பையிலுள்ள பசிய புதலினிடத்தே மழைக்காலத்தில் பீர்க்குத் தழைத்துப் படரும் [குறு.98:3]. மனைப்படப்பையின் கண் வேங்கைமரம் வளர்ந்திருக்கும் [குறு.266:3].

காண்டவாயில் என்னும் ஊர் கலங்கிய நீரையுடைய கடற்கழி சூழ்ந்த படப்பைகளை யுடையது [நற்.38:7]. படப்பையின்கண் குடம் போன்ற காயையுடைய ஆசினிப்பலாமரங்கள் நிறைந்திருந்தன [நற்.44:9]. சாய்க்காடு பூக்கள் நிறைந்து விளங்கும் படைப்பைகளை யுடையது [நற்.73:9]. கடற்கரையிலுள்ள அழகிய படப்பையின்கண் மரத்தின் கிளையிலுள்ள தன் பார்ப்புக்கு நாரை மீனைக் கொண்டுவந்து உணவாக ஊட்டும் [நற்.91:8]. காட்டாற்றின் கரையிலுள்ள படப்பையில் குரங்கு நல்ல உணவை உண்ணும் [நற்.119:4]. பரதவரின் முள்ளிச் செடிகளால் வேய்ந்த குறுகிய கூரையையுடைய குடில்கள் பொருந்திய பாக்கம் கழி சூழ்ந்த தாழை மரங்களாலாகிய வேலியையுடைய படப்பையில் அமைந்திருந்தது [நற்.207:1]. தலைவன், கண்டல் மரங்களை வேலியாகவுடைய புறத்தே கழி சூழ்ந்த படப்பைகளையுடைய கடற்கரை நாட்டிற்குரியவனாவான் [நற்.363:1]. தலைவனுடைய ஊர் அகன்ற வயல்கள் சூழ்ந்த படப்பைகளையுடையது [நற்.365:4]. தலைவியினுடைய ஊர் முழுமதி தோன்றும் இரவில் அலைகள் எழுந்து மோதும் கடற்கரையில் உயர்ந்த மணல் நிரம்பிய, படப்பைகளையுடையது [நற்.375:9].

நற்குலத் தலைவிக்குப் பிறந்தகத்தின் படப்பையின் தேனோடு, பாலையுங்கலந்து உண்ணுவதைவிடக் கணவனின் ஊரிலுள்ள விலங்குகள் உண்டெஞ்சிய கலங்கிய கூவலின் சின்னீர் இனியது [ஐங்.203:1]. தலைவியின் மேனி வேறுபாடு கண்டு வெறியெடுப்புழி 'நம் படப்பையிலுள்ள குண்டுக்கல்லில் ஏறித் தலைவனின் மலையைத் தலைவி காண்பாளேயானால்

தலைவனின் மலையைத் தலைவி காண்பாளேயானால் அவளுடைய நோய் தணியும்', என்று, தோழி, செவிலியிடம் அறத்தொடு நின்றாள் *[ஐங்.210:1]*. தலைவனுடைய ஊர் மலையின்கண் உள்ள படப்பைகள் சூழ்ந்தது *[ஐங்.251:3]*.

**3. வயல்.** கழனிகட்கு வாயிலாகவுள்ள பொய்கையைச் சார்ந்த படப்பைக்கு - வயலுக்கு - அருகிலுள்ள நீர் நிலைகளில் தாமரை, ஆம்பல் முதலியன மலர்ந்திருந்தன *[பதி.23:22]*. வாணன் என்பானுக்குரிய சிறுகுடியைச் சுற்றி விளைந்த நெற்களையுடைய படப்பைகள் நிறைந்திருக்கும் *[அக.204:12]*.

**4. கொல்லை.** தலைவினுடைய மாமையின் அழகு, படப்பையிலுள்ள - கொல்லையிலுள்ள - வளைந்த முன்னையுடைய இண்டினது அழகிய தளிரின்மீது மழை பெய்துவிட்ட பொழுதுண்டான அழகிய நிறம் போன்றிருக்கும் *[நற்.205:8]*.

**5. புழைக்கடை.** (மனையின் பின் புறம்) ஒரு தலைவி, தன் காதலனிடம், 'தன் படப்பையின் - புழைக்கடையின் - அருகிலுள்ள காஞ்சி மரத்தின் அடியில் நின்று ஆம்பல் குழலிசை எழுப்புக', என்று குறியிடம் கூறினாள் *[கலி.108:63]*.

**படம் - 1. ஆடை.** போரில் இறந்த மறவன் ஒருவனுக்குப் படத்தால் - ஆடையால் - செய்த பந்தரின் கீழ் அவனுடைய பெயர் பொறிக்கப்பெற்ற கல்லினை நட்டனர் *[புற.260:28]*.

**2. மெய்ப்பை.** ஆறலை கள்வர் உலவும் வழிகளில் சென்று மாணிக்கம், முத்து, சந்தனம் முதலியவற்றைக் கொண்டு விற்றுத் திரியும் வம்பலர் (புதியவர்) படம் - மெய்ப்பை அணிந்திருந்தனர் *[பெரு.69]*. பாசறையில் அரசன் பள்ளி கொள்ளும் பள்ளியறையில் படம் அணிந்த, வாய் பேசாத, மிலேச்சர் காவல் காத்தனர் *[முல்.66]*.

**3. மேற்கட்டி** (ஆடையால் ஆனது). அரசி பள்ளிகொள்ளும் கட்டிலிற்கு மேலே, சாதிலிங்கம் பூசின கால்களின் மேல் கட்டப்பெற்ற மெழுகு பூசிய ஆடையாகிய படத்தில் - மேற்கட்டியில் திங்களைப் போன்றும், உரோகிணியைப் போன்றும் வரைந்த ஓவியம் இருந்தது *[நெடு.159]*.

**4. வலை.** வேட்டுவச் சிறுவர் சேய்மைக்கண் செல்லாது அருகில் உள்ள நீர் செல்லுவதற்குரிய மடையில் பதுங்கியிருக்கும் உடும்பினைப் படத்தால் - வலையால் - பிடித்துவருவர் *[புற.326:9]*. (மர்ரே பதிப்பில் - படமடை என்பதற்குப் படப்பை (தோட்டம்) என்றுள்ளது. இதுவே சிறப்பாய்த் தோன்றுகிறது).

**படர் - 1. துன்பம்.** வையாவிக்கோப் பெரும் பேகனிடம் பரணர், யான் நின்னிடம் வேண்டும் பரிசில் நீ இப்பொழுது தேரேறிப்போய் உனது மனைவி கண்ணகியின் படரினைத் - துன்பத்தினைக் - களைதலே', என்று கூறினார் *[புற.145:10]*.

என்னுடைய சொல்வன்மையினால், தலைவியின் உள்ளத்தில் மறைந்திருக்கின்ற உயிர் கொண்டு பிழைத்தற்கரிய படரினை அவளே கூறுமாறு செய்தேன்', என்று, தோழி, செவிலியிடம் அறத்தொடு நின்றாள் *[குறி.11]*.

பிரிவிடைத், தலைவி, தோழியிடம், 'மாலைப்பொழுதில் வருத்தத்தைத் தரும் கீழ்காற்றினால் மிக்க படர் கொண்ட என்நெஞ்சம் செயலற்று வருந்தப் பிரிந்து சென்ற தலைவர் வந்து அருளாராயினும் அவருடைய நட்பு நிலைபெறுக', என்று கூறினாள் *[அக.40:7]*. பிரிவுத் தலைவிக்கு மாலைக் காலத்தில் அறிவினைப் போக்கும் செயலற்ற படர் உண்டாகும் *[அக.71:7]*. 'தோழியே, நீயும் தவறுடையை அல்லை; கொடு நெறியில் இரவுக் குறிக்கு வந்து செல்லும் தலைவரும் கொடியரல்லர்; நினக்கு நீங்காத அரிய படரினைக் கொடுத்த யானே தவறுடையேன் என்று, தலைவி, தோழியிடம் கூறினாள் *[அக.72:21]*. தலைவன் பிரிவிடத்துத், தோழி, தலைவியிடம், நம் இருவேமுடைய படரும் நீங்கும்படியாகத் தலைவரும் வந்தார் காண்', என்று கூறினாள் *[அக.73:10]*. தலைவன் இரவுக் குறியில் தாழ்போடாத கதவினை மெல்லத் திறந்து தலைவியை வருத்தும் படர் நீங்கும்படியாகத் தோளினை அணைத்துக் கூடினான் *[அக.102:14]*. தலைவனின் நெஞ்சம் நடுங்குதற்குக் காரணமான, பிறிதொன்றால் தீர்க்க முடியாத படரினைத் தீரும்படியாகத் தலைவி வந்து கூடினாள் *[அக.152:1]*. தோழி', அரிய படரில் வருந்துதலைச் சில நாட்களுக்குப் பொறுத்துக் கொள்க; தலைவர் விரைவில் வருவர்', என்று தோழி, தலைவியை ஆற்றுவித்தாள் *[அக.173:5]*.

தலைவனைப் பிரிந்த தலைவி, மிக்க படரினால், வருந்திய, நீரொழுகிய, கண்களோடு மேனியின்கண் பசலை பரவியவளாக விளங்கினாள் *[அக.234:16]*. உடல் மெலிந்து, வளை கழன்று, நான் படும் வேதனையைத் தலைவரிடம் போய்க் கூறுவாரை நாம் பெற்றோமானால் நமது மிக்க படர் நீங்கும்படியாகத் தலைவர் விரைவில் வருவர்', என்று தோழியிடம், தலைவி கூறினாள் *[அக.255:8]*. 'நெஞ்சே, அரியளாய தலைவியின்பால் காமம் அளவுகடக்க அமையாத, அரிய படரினை என்னிடத்து எய்துவித்தனை; நீ ஒளியிழந்தொழிவாயாக, என்று, தலைவன், நெஞ்சிற்குக் கூறினான் *[அக.258:15]*. தலைவன் சிறைப்புறத்தானாகத், தலைமகட்குத், தோழி, நள்ளிரவில் வெறுக்கும் படர் நீங்கும்படி நம் தலைவரின் மலையிலிருந்து வரும் நீரின்கண் ஆடுவோமா?' என்று கூறினாள் *[அக.278:12]*. தலைவியைப் பிரிந்து செல்லும் தலைவன், இடைச்சுரத்தில் தன் நெஞ்சினிடம், 'நம் தலைவி படரினால் வருந்தி எத்தன்மையள் ஆவளோ?' என்று கூறினான் *[அக.279:9]*. தலைவன், தலைவியின் படரினைக் கருதி அவளைப் பிரிந்து செல்லாமல் உடன் அழைத்துச் சென்றான் *[அக.285:2]*. 'நம்முடன் கூடவே வருவேன் என்ற நம் தலைவி, அமையாத படரினால் வருந்தி நமக்கு என்ன தீங்கினைத் தருவளோ?' என்று,

பொருள்வயிற் பிரியும் தலைவன், தன் நெஞ்சிற்குக் கூறி வருந்தினான் [அக.297:2]. 'பிரிந்து பொருளீட்டச் செல்லப்போவதை நான் உரைத்தவுடன் தலைவியின் முகம் ஒளி மழுங்கிக், கவிழ்ந்த நிலத்தைக் கிளறிக் கொண்டு, அழுது மிக்க படரினால் கலக்கமுற்றுப் பெருமூச்சு விட்டுக் கொண்டு, நாக்குழறி நும் செலவு சிறப்புற நிறைவுறுக, என்று கூறிய அவளுடைய மயக்குற்ற நிலையை மறந்து என்னால் தங்குதல் அரிதாகவுள்ளது', என்று, பொருள்வயிற் பிரிந்த தலைவன் இடைச்சுரத்தில் வருந்தினான் [அக.299:16]. தலைவன் பிரியின் தலைவி அவனையே பலகாலும் நினைந்து படரினால், வற்கடகாலத்தே நீர் வறண்ட விளைபுலம் போல, வாடி வருந்துவாள் [அக.301:2]. தலைவன் பிரிந்துழிப், பேய், தான்கண்ட கனவினைக் கூறாததைப் போன்று, களவை மறைத்து அடக்குதலால் காதல் மீக்கூர்ந்த தலைவி, பாரியின் பறம்பின் கிளிகள் செந்நெல் கதிர்களைத் தேடித் திரிந்து படரினைத் தரும் மாலையில் மீண்டு வந்தாற்போலத் தலைவர் வருவார் என்று எண்ணாதே என்று நெஞ்சிற்குக் கூறித், தலைவன் சென்ற நெறியில் செல்லத் துணிந்தாள் [அக.303:14]. தலைவன் பிரிந்துழி, அவன் சென்ற கொடு நெறியை நினைந்து நாடோறும் நீரில் மூழ்கிப், பொரும் கயல்களைப் போலக், கண்களில் நீர் பெருக வெய்துயிர்த்து, இரவும், பகலும் படரினால் வருந்தி, அரவு விழுங்கிய திங்களைப் போல, நெற்றிஒளியை இழந்து தலைவி வருந்தினாள் [அக.313:6]. தலைவன் பிரிந்துழித் தலைவி, வளைகள் கழன்று படர் பரவி வருத்த வருந்தினாள் [அக.328:9]. வினைமுற்றி மீளும் தலைவன், தேர்ப்பாகனிடம், 'பசலை பொருந்திய படர் வருத்த வருந்திய எனது இனிய காதலியின் நகையோடு கூடிய முகத்தினைக் காணத் தேரினை விரைந்து செலுத்துக', என்றான் [அக.344:12]. தலைவன் பிரிந்துழித், தலைவிக்குத் தனிமையும், தாயின் கொடிய பார்வையும், வாடை வீசும் பனிக்காலமும், ஞாயிறு மேலைக் கடலில் மறையும் படர்மிக்க மாலைப் பொழுதும் வருத்தத்தைத் தருவனவாகும் [அக.378:15]. மழையின்றி வறண்ட சுரத்தில், பேய்த்தேரை நீரென்று ஓடிக் களைத்துத் தனிமையுற்ற கலைமான் தன் பெண்மானை யழைக்கும், மெலிவுற்று ஒழியும் படரினைத் தரும் குரல் மனிதரின் குரல்போல இருக்கும் [அக.395:11].

பரத்தமைத் தலைவனைக் குறித்துத் தலைவி, 'நெஞ்சே, நீ இப்படிப்பட்டவனுக்கு மனைவியாக இருப்பதால், நின் உள்ளத்தில் படர் பலவாக ஆகுக! அதியமான் அஞ்சியின் போர்க்கள இரவு, ஊரிலுள்ளோர் போல, நீ துயிலும் நாட்கள் சிலவேயாகுக! 'என்று வருந்தி நெஞ்சிற்குக் கூறினாள் [குறு.91:4]. தலைவன் வரும் இரவுக்குறியின் ஏதம் அஞ்சி வேறுபட்ட தலைவி, தோழியிடம், மிக்க படரினையுடைய எனது நிலையைத் தலைவரிடம் எடுத்துக் கூறு', என்று கூறினாள் [குறு.185:8]. பிரிவுத் தலைவிக்கு மாலைக்காலம் படரினைத் தரும் [குறு.195:2]. தலைவியின் குணமே இத்தகைய



இன்னாதனவாகிய படர்களைச் செய்யுமாயின், அவளுடைய காமமோ, ஒருங்கு வாழ்தற்கு அரிது', என்று தலைவன், பாங்கனிடம் கூறினான் [குறு.206:3]. பிரிவால் வருந்திய தலைவியிடம், தோழி, 'சுரங்கடந்து சென்ற தலைவர், இன்று வருவர்; அதனால் நினது படரும் மெல்ல மெல்ல நீங்கும்', என்று கூறினாள் [குறு.215:1]. கார்ப்பருவம் வந்தும் தலைவன் வாராததைக் கண்ட தலைவி, தோழியிடம், யான் வளை கழன்று படர் மிக்கேன்; எனக்கிரங்காது என்னுயிரைக் கொள்ளும் பொருட்டு மின்னலும் மின்னுகின்றது' என்று கூறினாள் [குறு.216:4]. பிரிவுத் தலைவி, தோழியிடம் அறிவு மயங்கியோர் தாம் ஞாயிறு மறைந்த பொழுதினைப் படர் மிக்க மாலைப்பொழுது என்று கூறுவர்; துணைவரைப் பிரிந்த எம்மனோர்க்கு எல்லாப் பொழுதுகளும் மாலைப் பொழுதேயாகும்', என்று கூறினாள் [குறு.234:1]. கார்ப்பருவமென்று வருந்திய தலைவியிடம், தோழி, 'முகிலானது சென்ற கார்ப்பருவத்தில் பெய்ய வேண்டிய நீரை இப்பொழுது பெய்தது. இது கார்ப்பவருமன்று; ஆதலின், நினது படரினை விடுவாயாக'? என்று கூறினாள் [குறு.251:4]. தலைவன் சிறைப்புறத்தானாகத், தோழி, தலைவியிடம், 'அழகால் மூங்கிலினை வென்ற நினது தோள்கள், வெறுக்கத்தக்க படரினால் வருந்தி, நின் கண்கள் அழுதலால் இப்பொழுது மெலிவையடைந்தன', எனக் கூறினாள் [குறு.357:1]. 'முல்லை மலர்கள், கோவலரின் கண்ணிகளிலிருந்து கார்ப்பருவம் வந்துவிட்டதை அறிவிக்கின்றன; நினது படர் சேண் நீங்கும்படி, தலைவரும் வந்துவிடுவார்; ஆகவே, நீ அழுது மயங்கற்க', என்று, தோழி, தலையிடம் கூறினாள் [குறு.358:3].

மிக்க படர் உழந்த, செவ்வரி பரந்த, மதர்த்த, குளிர்ச்சி பொருந்திய கண்களையுடையவள்' என்று தலைவன் தலைவியைப் பாராட்டினான் [நற்.8:1]. 'பிரிவிடை வருந்தும் தலைவியிடம், தோழி, மலைநெறியில் பிரிந்து சென்ற தலைவர், நீ வருந்தியவுள்ளத்தோடு கொண்ட பலவாகிய படர் நீங்க, விரைவில் வருவர்', என்று கூறினாள் [நற்.18:1]. பிரிவில் வருந்திய தலைவியிடம், தோழி, 'இதோ, தலைவர் வந்துவிட்டார்; படர் வந்து மேன்மேல் வருத்துகின்ற மாலைப் பொழுதில், காமநோயால் நீ படும் துயரத்திலிருந்து உய்ந்து விடுவாய்', என்று கூறினாள் [நற்.78:5]. இடைச்சுரத்து மீளலுற்ற நெஞ்சினிடம், தலைவன், 'நெஞ்சே, நம் காதலியை நீங்குதற்கரிய படரில் வருந்தவிட்டு நீதான் நெடுந்தொலை வந்துற்றனை; இங்கு வந்தபின் மீளலுற நின்றனையாயின் நின் முயற்சி வாழ்க', என்று இகழ்ந்தான் [நற்.105:10]. 'எனக்குப் படர்களையெல்லாம் ஒருங்கே கொண்டு வந்து ஞாயிறு மறைந்த மாலைப் பொழுதினைக் கருதாமல், தலைவர் பிரிதலின், ஊரார் முருகனால் எனது நோய் வந்ததென்று மற்றொன்றில் பழி சுமத்தலின், நான் உயிர் வாழலேன்', என்று, பிரிவுத் தலைவி, தோழியிடம் கூறினாள் [நற்.117:6]. இரவுக்குறிக்கு வரும் தலைவனிடம், தோழி 'எம் சுற்றத்தினர்

வெகுளி மிக்கவர்; முகிலும் இங்கு வந்து தங்கியுள்ளது; ஆகவே, நீவிர் இரவில் வர வேண்டாம்; தினைப்புனத்தைக் காக்கும் பொருட்டு நாளையே நாங்கள் செல்லுகின்றோம்; அதனால், எங்களுடைய பலவாய படரெல்லாம் தீரும்படியாகப் பகலிலே வந்து தலைவியை முயங்குவாயாக', என்று கூறினாள் *[நற்.156:6]*. பாங்கனிடம், தலைவன், 'கொல்லியம்பாவையைப் போன்ற அவள் என்னைக் கொலை குறித்தனள்; அவளது சூழ்ச்சியிலே பட்டுப்படர் மிக்கு வருந்துகின்றேன்; ஆகவே, அவளுடன் சேர்த்து வைக்கும் முயற்சியைச் செய்வாயாக', என்று கூறினான் *[நற்.185:1]*. பிரிவிடைத் தலைவியின் ஆற்றாமை குறித்துத், தலைவன், 'மழை பொழியும் நடு யாமத்தில் என்னைப் பிரிதலால் அவளுடைய அழகு குலைந்து படரினால் உழக்கும் தலைவியைப் பிரிந்தேகுமாறு பொருள் முயற்சிக்குந் தூண்டும் வறுமை கொடிது', என்று கூறினான் *[நற்.262:5]*. 'தோழியே, உனது நோய்க்கு அன்னை வெறியாட்டெடுக்கும்போது, வேலனும், முருகால் வந்ததென்றே கூறும் என்பர்; அதனால் தலைவரால் தரப்பட்ட படரினை நினைக்குந்தோறும் என்நெஞ்சம் நடுங்குகின்றது', என்று, தோழி, தலைவியிடம் கூறினாள் *[நற்.273:10]*. தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி, தலைவியிடம், 'தலைவனால் தரப்பட்ட உனது படரினைத் தரும் நோயினை முருகு என்று கருதி வெறியாட்டெடுக்காது நம் அன்னை இற்செறிவித்தனள்; இனித் தலைவனுடன் நம் தொடர்பு கழிந்துவிட்டது போலும்', என்று கூறினாள் *[நற்.282:3]*. பிரிவுணர்த்தப்பட்ட தலைவி, தோழியிடம், 'கார்காலத்தில் நம் தலைவர் பிரிந்து செல்லலுற்றார், நாம் படரினால் வருந்தி இங்கேயே தங்கியிருப்பேமாயினேம், இனி நம்நிலை என்னாகுமோ?' என்று கூறினாள் *[நற்.296:9]*. தோழி, தலைவியிடம், 'தோழியே, குறித்த காலம் நீட்டித்து வருதலால் நமக்குத் துன்பத்தினை நல்கிய தலைவருக்குப் புன்னை மரத்தில் சிறிது பொழுது மறைந்திருந்து அவரடையும் அல்லலாகிய படரினை நாமும் காண்போம் வா' என்று கூறினாள் *[நற்.307:10]*. வினைவயின் பிரிந்து சென்ற தலைவன் வரக் கண்டதும், முன்பு கொண்டிருந்த தீர்த்தற்கரிய படரெல்லாம் நீங்கித், தலைவனுக்கு விருந்தளித்து மகிழ்ந்தாள் *[நற்.361:8]*. இரவுக்குறிக்குத் தலைவியை உடன்படுத்தும், தோழி, தலைவியிடம், 'நமது சிற்றூரிலுள்ள நம்மனையைத் தலைவர் அறியின் நன்று; அறியின் நினது அன்புக் காதலர் அங்கு வந்து நடுயாமத்தில் நின்னை வருத்தும் படரினைப் போக்கவும் செய்வர்', என்ற கூறினாள் *[நற்.392:10]*.

பிரிந்து சென்றுள்ள தலைவனிடம் போவதாகக் கூறிய பாணனிடம், தலைவி, பாணனே, தீர்த்தற்கரிய படரினை எனக்குத் தந்து என்னை மறந்துவிட்ட அவரைப் போல அல்லாமல், மறவாமல் என் நிலையினைக் கூறு', என்று கூறினாள் *[ஐங்.473:3]*. வினைவயிற் பிரிந்த தலைவன் குறித்த காலத்தில் வரமுடியாதபொழுது, பாணனிடம், 'நீ சென்று நான் விரைவில் வருவதைக், கண்கள் பசலையுள் மூழ்கப் பொறுத்தற்கரிய படரினுள் ஆழ்ந்துள்ள என் காதலியை ஆற்றுவி', என்று அனுப்பினான் *[ஐங்.477:2]*. வினைமுற்றிய தலைவன், பாகனிடம், 'நினைவாலுண்டாகும் விலக்குதற்கரிய படரினின்றும் எம் காதலி நீங்கத் தேரினை விரைந்து செலுத்துக' என்றான் *[ஐங்.485:1]*. 'பாகனே! மாலைப்பொழுதிலே இடையறாது விலக்கற்கரிய நினைவாலுண்டாகும் படரினை நுகர்வது எத்தனைக் கொடிதாயிருக்கும்; அத்தகைய நிலையிலிருக்கும் எனது காதலியை இப்பொழுதே சென்று அடைவதற்குத் தேரினை இன்னும் விரைந்து செலுத்துக' என்று, வினைமுற்றி மீளும் தலைவன், பாகனிடம் கூறினான் *[ஐங்.486:2]*. 'பாகனே! இக்கார்ப்பருவமானது எம் காதலியை எம்மிடத்தே தருதற்பொருட்டு வந்துள்ளது; ஆகவே, அவளுடைய விலக்கற்கரிய நினைவாலுண்டாகும் படர் தீரும்படி தேரினை விரைந்து செலுத்துக' என்று வினைமுற்றி மீளும் தலைவன், பாகனிடம் கூறினான் *[ஐங்.490:3]*. 'நங்காய்! யான் குறித்துச் சென்றவாறே கார்ப்பருவத்தில் வந்துவிட்டேன்; இனி நீ படர் தீர்ந்து மகிழ்வாயாக, என்று, வினைமுற்றி மீண்ட தலைவன், தலைவியிடம் கூறினான் *[ஐங்.494:4]*.

பொருள்வயிற் பிரிதல் குறித்த தலைவனிடம், தோழி, 'நீ விளையாட்டிற்காகச் சிறிது நேரம் மறையினும் அதற்கே கலங்கி அழும் அவள் நீ பொருளுக்காகப் பிரிகிறாய் என்று கேள்விப்பட்டால் கண்களினின்றும் நீரைப் பெருக்கி, உறக்கத்தை நீத்து உன் நினைவாகவே இருந்து படருறுவாளே! என்று கூறிச் செலவழுங்குவித்தாள் *[கலி.10:13]*. பொருள்வயிற் பிரிதல் குறித்த தலைவனிடம், தோழி, நீ தலைவியை நுகரும் இன்ப வாழ்வில் தீவினை வந்து புகுந்தது போலும்; பொன் தகட்டைப் போன்று சுடர்விடும் தலைவியின் சுணங்கின் அழகு கெடும்படியாக நீ பிரிவையின் எங்களுடைய படரினைக் கூறி நின்னை விலக்கும் நல்வினையைப் பெற்றிலமே', என்ற பணிமொழியால் செலவழுங்குவித்தாள் *[கலி.22:21]*. 'பிரிந்து போயிருக்கின்ற தலைவரிடம், மதுரையில் இளவேனில் வந்துவிட்டது என்பதை யாராவது சென்று கூறினால், நடு யாமத்தில் படர் மிகுந்துழலும் எனக்காக வாராவிட்டாலும், மகளிருடன் விளையாட்டயர்வதற்காகவாவது வருவாரே', என்று, தலைவி கூறினாள் *[கலி.30:9]*. களவினைத் தனக்கும் மறைத்தொழுகும் தலைவியிடம், தோழி, 'தோழியே! ஓர் இளைஞன் விலங்கின் அடிச் சுவடுகளைத் தேர்வான் போலே வந்து என்னைக் கண்டு மயங்கினான்; யானும் அவனைக் கண்டதிலிருந்து துயில் பெறேனாய்ப் படரிலே விழுந்து அழுந்தினேன்' என்று பொய்யுரை கூறித் தலைவியின் களவினை வெளிப்படுத்தினாள் *[கலி.37:6]*. தலைவனிடம், தோழி, 'பெருமானே! களவுக் காலத்தில் தலைவிக்கு இன்பத்தையளித்துப் பின் பிரிவினால் இன்னாமையை நீ யளித்தால் அவளுக்கு உண்டானபடரானது தெய்வத்தால் வந்ததென்று கூறலாமோ?' எனின், அழகினை இழந்த அவளுடைய நெற்றி அதற்குத் துணைபுரியவில்லையே!, என்று கூறினாள் *[கலி.53:13]*. 'அழகைக் காணுமவர்களைக் காதல்

நோயின்கண் வீழ்த்திக், கொடிய படரினைச் செய்யும் கூந்தலையுடையவளே! 'என்று, தலைவன், தலைவியை விளித்தான் *[கலி.64:5]*. புதிய யானையைப் பார்க்கப் போயிருந்தேன் என்று கூறிய பரத்தமைத் தலைவனிடம், தலைவி, 'ஆடவருக்குப் படரினைச் செய்யும் தன் தோளழகாகிய பெரிய கையால் ஆடவரின் நற்பண்புகளாகிய உணவைக் கவளமாகக் கொள்ளும் அந்த யானையைத் தானே பார்க்கப் போயிருந்தாய்', என்று நகையாடிச் சினந்தாள் *[கலி.97:18]*. பலவுயிர்களும் படரினை அடைகின்ற ஊழியின் முடிவில் உருத்திரன் கூற்றுவனின் நெஞ்சைப் பிளந்து அவனுடைய குடரைக் கூளிக்கிடுவது போல, ஓர் ஆயனை நெற்றியிலே வெண்சுழியையுடைய கரிய காளையானது குடர் சரியும்படி குத்திக் கோட்டிடைக் கொண்டு அலைத்தது *[கலி.101:24]*. பிரிந்திருக்கின்ற தலைவி, தன் நெஞ்சினை நோக்கி, 'நெஞ்சே, பொறுக்க வியலாத படரினையுடைய காமநோயைச் செய்த தலைவரிடத்தே கழியில் ஓதம் (நீர்) போவதும், வருவதுமாய்த் தடுமாறும் தன்மைபோல, நீயும், பகலும், இரவும் துயிலைக் கைவிட்டுப் பலமுறைசென்றும், வந்தும் தடுமாறி முடிவில் அவரைப் பெறாது வருந்தினாய்', என்று, தன்துயரை நெஞ்சின் மேலேற்றிக் கூறினாள் *[கலி.123:17]*. தலைவியைப் பெறமுடியாது வருந்திய தலைவன், 'என்னால் காதலிக்கப்பட்டவள் எனக்குத் தந்தவை படரும், வருத்தத்தாலுண்டான பனைமடலாற்செய்த குதிரையுமாகும்', என்று கூறினான் *[கலி.138:12]*. பிரிவுத் துயர் மீக்கூர்ந்த தலைவி, தனது நெஞ்சினைக் குறித்து, 'என் காதலனைத் தேடி விசும்பிலும், நிலத்திலும், திசைகளிலும் துழாவும் என்னுடைய அமையாத படர் மிக்க நெஞ்சம் தான் விரும்புகின்றவனோடு சென்று துயில் கொண்டிருக்குமோ?' என்று கூறினாள் *[கலி.145:44]*.

**2. நினைவு**. வறுமையின் காரணமாகப் பெருஞ்சித்திரனாரின் மனைவி குழந்தைகள் உண்ணுவதற்குப் பாலில்லாத முலையினையுடையவளாய்ப் படர்-நினைவு-வருத்த வருந்தினாள் *[புற.159:6]*. 'சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னி கொடுத்த பெருஞ்செல்வத்தால், எங்களுடைய வறுமையால் பல அரிய படர்களினாலுண்டாகும் வருத்தம் நீங்கி, நீங்காத அரிய மகிழ்ச்சியை யானும், என் குடும்பத்தாரும் அடைந்தோம்', என்று, ஊன்பொதி பசுங்குடையார் பாடினார் *[புற.378:24]*.

அரசியின் பிரிவுத்துயரைத் தாளாத ஒருத்தி கொற்றவையை நோக்கி, 'அரசிக்குத் தீதாயிருக்கின்ற ஆற்றுதற்கரிய படர் தீரும்படி அரசனுக்கு வெற்றியையளித்துப் போரினை இப்பொழுதுதே முடித்திடுக', என்று பரவினாள் *[நெடு.167]*.

உடன்போகிய மகளைச் செவிலித்தாய், எக்காலத்தும் படர் மிக்க துன்பத்தோடு திசையெல்லாம் தேடினாள் *[அக.189:11]*. இரவுக்குறிக்கண் தலைவன் வரும் நெறியின் ஏதத்தினை யஞ்சிப் பொறுத்தற்கரிய துன்பமாகிய அரிய படரினில் தலைவி நீந்தினாள் *[அக.202:15]*. தலைவிக்கு அரிய படரினாலாய துன்பத்தால் தோள்மெலிந்தது *[அக.250:10]*. தலைவனின் பிரிவால் தலைவிக்கு வருத்தத்துடன் படர் மிகும் துயரினால் செறிந்திருந்த அணிகள் நெகிழ்ந்து விழும்படியாக மேனி மெலிந்தது *[அக.251:4]*. தலைவன் பிரிந்துழித் தலைவிக்கு அணிகள் கழன்று, படர் மிக்க வருத்தத்துடன் தோள் மெலிந்து, கொன்றையின் பூக்களைப் போன்று மேனியும், நுதலும் பசலையுறும் *[அக.398:2]*.

தோழியால் குறை மறுக்கப்பட்ட தலைவன், 'யான் நாணத்தைவிட்டு மடலேறி எனக்குண்டான மிக்க படரையுடைய இக்காமநோயை இன்னாள் கொடுத்தது என்று ஊரார் தூற்றும்படியாக அறிவிக்கப் போகிறேன்', என்று கூறினான் *[குறு.173:4]*. 'வேலனாலும் நம் நோய் தீர்க்க மாட்டாமையை நம் அன்னை அறியும் பொருட்டுப், பொறுத்தற்கரிய படரினாலுண்டாகும் துன்பத்தை இன்று நாம் அடைந்தாலும், நம் தலைவர் இரவில் வாராதிருப்பின் நல்லது', என்று தோழியிடம், தலைவி கூறினாள் *[குறு.360:3]*.

'நெஞ்சே, முன்பொருநாள் இடைச்சுரத்தில் வந்த மாலைப்பொழுதைக் கண்டு, என் காதலி மனையில் விளக்கை ஏற்றி அதன்முன் நின்று தலைவர் இன்னும் வரவில்லையே என்று வெறுத்துத் துன்புற்றுப் படர்கின்ற பொழுதாகுமிது, என்று எண்ணி, வருந்தினேனில்லையா? அங்ஙனமாகவும், பின்னும் பொருட்பிரிவிற்குத் தூண்டுகின்றாயே', என்று பொருள் கடைக்கூட்டும் நெஞ்சிற்குத், தலைவன் கூறினான் *[நற்.3:9]*. 'முருகவேளே! தலைவியின் நோய் நின்னால் வந்ததன்று; தலைவனது மார்பைத் தழுவியதன் காரணமாகப் படர்மிக்க, நீங்குதற்கரிய இக்காமநோய் வந்ததென்பதை நீ அறிந்திருந்தும், வேலனின் (படிமத்தான்) வேண்டலுக்கிணங்கி இங்கு வந்துள்ள நீ நிச்சயமாக அறியாமையுடையவனே' என்று, தெய்வத்துக்குரைப்பாளாய்த், தோழி அறத்தொடு நின்றாள் *[நற்.34:6]*. பிரிவு நீட்டித்த தலைவனுக்குத் தூதுவிட எண்ணிய தோழியிடம், சினத்தளாய தலைவி, 'தோழியே, தலைவரை மறந்துவிடு; நம்மைக் கைவிட்டாரே என்று வருந்தாதே; நமக்கு இவ்வளவு துயரைத் தந்தவருடன் நட்பு எதற்கு? குறவரால், அறியாது பட்டை அறுக்கப்பட்ட சந்தனமரம் உள்ளீடு இன்றிக் காய்ந்தாற்போல என்னுள்ளமும் அவரிடத்தில் சென்று விட்டதால் உள்ளீடு இல்லையாய்விட்டது; இங்குக் காமமும், அதனாலுண்டாகிய படரும் நம்மையொறுத்தலாலுளதாகிய நோயினை நம்மவர் காணாதொழிவாராக', என்று கூறினாள் *[நற்.64:12]*. தலைவன் சிறைப்புறத்தானாகத், தலைவியிடம், தோழி, 'தலைவருடைய மார்பைப் பெறாமையால் வந்த படர் மிக்க நீங்குதற்கரிய உனது நோய் நம் அன்னை கொடுக்கும் மறிக்காக முருக வேளினால் தணியுமாயின் மிகக் கொடியதாகும்; அவ்வாறு தணிவது உண்மையா?' என்று கேட்டாள் *[நற்.322:9]*.

பரத்தமைத் தலைவனுக்காக வந்த வாயிலிடம், தலைவி, 'எமக்குப் பகற் பொழுதிலும் படர் மிகுதற்குக் காரணமான தீர்வரிய துன்பத்தைச் செய்த தலைவருக்காக நீயிர் வாயில் வேண்டற்க', என்று கூறினாள் *[ஐங்.95:4]*. செவிலியிடம் தோழி, 'அன்னையே, தலைவியின் நுதல், பசலை பூப்ப, உடல் மெலிந்து படரினால் வருந்திக் கடலின் முழக்கத்தைக் கேட்கும் போதெல்லாம் உறங்காதவளாய் வருந்துகின்றாள்', என்று அறத்தொடு நின்றாள் *[ஐங்.107:2]*. மகட்போக்கிய நற்றாயும், செவிலித்தாயும் உயிர்போம் அளவிற்குத் துன்பப்படரினால் இடையறாது வருந்தி நெஞ்சமும் குழம்புவர் *[நற்.313:3]*. தலைவனின் பிரிவு, தலைவியை, மறத்தற்கியலாத துன்பப் படரினில் இடையறாது ஆழ்த்தும் *[ஐங்.318:1]*. தலைவனின் பிரிவால் தலைவியின் நெஞ்சத்தின் கண்ணதாகிய தனிமைப் படர் அவளுடைய பெண்மைப் பெருநலத்தைச் சிதைத்தழிக்கும் *[ஐங்.330:5]*.

தலைவன் குறித்துச் சென்ற இளவேனில் வந்தும் அவன் வாராததால் வருந்தும் தலைவியிடம், தோழி, 'தோழியே! மலர்கள் அலர்ந்து குயில்கள் கூவும் இவ்விளவேனிற் காலத்தில் நம் காதலி அரி படரினையுடைய அவலத்தைச் செய்யும் காம நோய்க்கு ஆற்றாது அழிந்து படுவளே என்று நினையாராயின் அவர் அன்பு என்னாவது? ஆதலின், விரைவில் வருவர்', என்று கூறி ஆற்றுவித்தாள் *[கலி.28:10]*. வரையாது வந்தொழுகும் தலைவனிடம், தோழி, 'உன்மீதுள்ள படரின் வருத்தத்தினால் பசலையால் உண்ணப்பட்டுப் பாழ்பட்ட தலைவியின் மேனியிலுள்ள அழகிய மாமை நிறம் செய்த தவறேதுமுண்டோ?' என்று கூறி வரைவு கடாயினாள் *[கலி.48:16]*. 'மலர் விற்போர் பறித்துச் சென்ற கருநீல மலர்களோடு சென்ற வண்டுகள், அவ்வூர் வண்டுகள் விருந்திட்ட யானையின் மதத்தையுண்டு, பின் கணவரைக் கூடிய மகளிரின் கூந்தலிலுள்ள முல்லை மலர்த் தேனையுண்டு மயங்கி, வேறுசில பூக்களையும் நுகர வேண்டுமென்னும் படர்தீர்ந்து தாம் முன்பு வாழ்ந்திருந்த, பொய்கையையும் மறந்து திரியும் நீர் வளமிக்க நல்ல ஊரனே! 'என்று பரத்தமைத் தலைவனைத், தலைவி விளித்தாள் *[கலி.66:7]*. 'வினைமேற் சென்றுள்ள வேந்தனிடம், சான்றோர் சென்று, காதலின் படர் வருத்துகையினாலே உனதன்பை வேண்டிக் கலங்கித் தலைவியினுடைய பழித்தலற்ற முகம், பசலை பரந்து, பாழடைவதைக் காணும்போது, உயிரைப் பிரிக்கும் எமனைப்போல, மக்களை அவரவர் நிலையில் நிறுத்திச், செங்கோல் செலுத்துபவன் என்னும் நினது புகழ் கெடாதோ', என்று கூறினர் *[கலி.100:17]*. பிரிவிடையாற்றாத தலைவியின் நெஞ்சம், மாலையில் கழியில் உள்ள மலர்கள் குவிவது போல, அவனையே உள்ளுதலால் அழிந்து வேறு படரின்றிக் குவியும் *[கலி.130:12]*. வரைவு நீட்டிக்கும் தலைவனிடம், தோழி, 'தன்னைக் காக்கும் என்று கருதி வழிபட்ட தெய்வமே துன்பத்தைக் கொடுத்ததைப் போல, நின்னை நம்பி வந்த என் தோழியை நீ செய்த பழியின் அலரானது எங்கும் பரந்து அவளை மிக்க படர் வருத்த நீ பிரிவது கொடிது' என்று கூறினாள் *[கலி.132:24]*.

**3. செலவு.** வேற்றுநாட்டிலிருந்து கிழிந்த ஆடையுடனும், ஒய்ந்த படரான் - செலவான் - உளதாகிய வருத்தத்துடனும், மிடியுடனும் வந்து பலாமரத்தடியில் இருந்த வன்பரணருக்குக், கண்டீரக்கோப்பெருநள்ளி உணவும், பரிசிலுமளித்தான் *[புற.150:4]*. தானை மறவன் ஒருவன், 'பகைப் படைஞரைப் பார்த்து, எம்மரசன் தனக்கு நிகரான நும்மரசனோடு பொருவானே யல்லாமல், நும்மோடு பொரமாட்டான்; நும்மரசன் போருக்கு வாராமையால் எம்மரசன் இரவில் தன் மனையில் தங்குவதற்குப் படரினை மேற்கொண்டுள்ளான்; நாளை நும்மரசனை வரவிடுமின்', என்று கூறினான் *[புற.301:14]*. ஒரு பொருநன் படர்தலுற்ற இரவுப் பொழுதிலேயே, அதியமானஞ்சி, அவனுடைய நீர்ப்பாசி போன்ற கிழிந்த ஆடையை நீக்கிப், புத்தாடை உடுப்பித்து, உணவளித்து, அவனுடைய சுற்றத்தார் வேண்டிய அளவு நெல்லும் கொடுத்தான் *[புற.390:10]*.

மதுரையில் உறையும் வளம் மிக்க செல்வர், சுடர் ஒளி மழுங்கிப்படர் மிக்க ஞாயிற்றினுடைய செக்கர் வானத்தைப் போன்ற (அந்தி வானத்தைப் போன்ற) சிவந்த ஆடைகளை அணிந்திருந்தனர் *[மது.431]*.

தான் மேற்கொண்டுள்ள களவொழுக்கத்தின் காரணமாகத் தாய்க்கஞ்சித் தலைவி, தலைவனுடன், வலையினைக் கண்டு தப்பியோடும் பெண்மானைப் போலப், படரினை மேற்கொண்டாள் *[அக.7:13]*. 'நாங்கள் ஒருநாள் வேங்கைப் பூக்களைப் பறித்துக் கொண்டிருக்கும்போது ஒரு தலைவன் வந்து புலி படர் வழியாது என்று வினவித் தலைவியைப் பன்முறை நோக்கிச் சென்றனன்; அவன் சென்றபின் 'தோழியே, அவன் ஒரு நல்ல ஆடவனே' என்று தலைவி கூறினாள்', என்று தோழி, செவிலியிடம் அறத்தொடு நின்றாள் *[அக.48:13]*. தங்களுடைய முடிவுகளை எடுத்து உயர்த்துக் கொண்டு வேற்றுநாட்டில் நிகழும் விழாவிற்குப் படர்தரும் கூத்தரைப்போலச், சுரத்தில் மழையின்றி வறண்டமையின் களிறுகள் பிடிகளைத் தழுவிக் கொண்டு பலாப்பழத்தைத் தாங்கிச் செல்லும் *[அக.189:5]*. மகட்போக்கிய செவிலித்தாய், 'தலைவன், தன் மகளை மனையின்கண், மணத்தின் வாயிலாகக் கொள்ளாமலும், வெப்பம் இல்லாத பருவத்தில் செல்லாமலும், மேற்காற்று வீசும் காட்டில் உடன் கொண்டு படர்ந்து விட்டானே', என்று வருந்தினாள் *[அக.397:3]*.

நீர் படர்தரும்படியான மதகுகளையுடைய துறையையுடையவன் தலைவன் *[ஐங்.109:2]*. காட்டின்கண் குறவர் மூட்டிய தீயிற்கு அஞ்சிய மயில்கள், தினையரிதாளிலிருந்து குருவிகள் பயந்து கீழும் மேலும் எழும்பும்படியாகச், சிறகுகளை வீசிக் கொண்டு செல்லுதல், பந்தாடும் மகளிர் தம்பந்தோடு கைகளை வீசிப் படருவதைப் போன்றிருந்தது *[ஐங்.295:5]*.

**படர்ந்தோர்** - 1. **சென்றோர்.** பிரிவின்கண் வேறுபட்ட தலைவியிடம், தோழி, 'தலைவர் பிரிவால் வருந்தாதே; வீணே இறவாமல் பிறருக்குப் பொருளை வழங்கி மரித்தோர் தாம் நோற்றோராவர் என்று எண்ணி சேணிலத்தே நம்மைப் பிரிந்து படர்ந்தோர் - சென்றோர் - ஆகிய நம் தலைவர் விரைவில் வருவர்', என்று கூறினாள் *[அக.51:3].*

2. **நினைப்போர்.** 'தலைவரையே எண்ணி உறங்காதிருந்த என்னை, உறங்கலையோ? என் குறுமகளே, என, அன்னை கேட்டாளாகக், காதலனையே படர்ந்தோர்க்கு- நினைப்போர்க்கு- உறக்கமும் வருமோ? என்று என் மனத்திற்குள்ளேயே கூறினேன்', என்று தலைவி, தோழியிடம் கூறினாள் *[நற்.61:9].*

**படர்வித்தவள்** - **நினைக்கும்படிச்செய்தவள்.** தன் காதலியை அடைய இயலாமல் காதல் மீக்கூர்ந்த காதலனொருவன், 'சான்றோரே! குதிரை மீதமர்ந்து போர்க்களத்தில் போரிடும் ஆற்றலுள்ளவனாகிய என்னை, மன்றத்திற்கு மடன்மாவிலே ஊர்ந்துவரும்படி படர்வித்தவள் - நினைக்கும்படி செய்தவள் - ஆகிய என் காதலி என் உள்ளத்தின் உள்ளே இருந்தும் நீருள் தோன்றும் நிறைமதியின் நிழல் போல், பற்றுதற்கு அரியளாகிறாள், என்று சான்றோரிடம் கூறினான் *[கலி.141:10].*

**படருநர்** - **செல்லுகின்றவர்.** தாம் செய்த அறத்தின் பயனை நுகர வேண்டி வானுலகத்திற்குப் படருநர் - செல்கின்றவர்- போல, மதுரையில் வாழும் மகளிரும், மைந்தரும் குதிரைகளிலும், தேர்களிலும் ஊர்ந்து மதுரையிலிருந்து திருப்பரங்குன்றத்திற்கு யாத்திரை சென்றனர் *[பரி.19:11].*

**படலம்**-**கூடு.** சிலந்தியின் வலைபோல விளங்கும் மணிகளை விளிம்பிலேகோத்த பொன் தகட்டாற் செய்த படலத்தின்- கூட்டின்-புறத்தே ஒளிமிக்க முத்து வடங்கள் கோக்கப்பட்ட நாரால் ஆகிய முடியைக் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் அணிந்திருந்தான் *[பதி.39:14].*

**படலை**-1. **தழைவிரவித் தொடுத்த மாலை.** நடுகல்லில் நின்ற மறவன் ஒருவனை, பனையோலையையும், வேங்கைப் பூக்களையும் விரவித் தொடுத்த படலையைக் - தழைவிரவித் தொடுத்த மாலையைக் - கோவலர், அணிந்து கொண்டு வழிபட்டனர் *[புற.265:4].*

உப்பேறின சகடங்களை, ஊர்கள் தோறும் உப்பு விற்பதற்காக ஓட்டிச் செல்லும் உப்பு வாணிகர், வேப்பம் பூங்கொத்துக்களோடு வேப்பிலையையும் இடையிடையே வைத்துத் தொடுக்கப்பட்ட படலையை அணிந்திருந்தனர் *[பெரு.60].* கோட்டுப்பூ, கொடிப்பூ முதலிய பலவகைப் பூக்களையும் விரவித் தொடுத்த கலம்பகமாகிய படலையை இடையன் அணிந்திருந்தான் *[பெரு.174].* யாறு கிடந்தாற் போன்று கிடக்கும் நகரப் பெருந்தெருக்களில் முறுக்கேறிய வலிய உடலினையுடைய கல்லாத ஆடவர் தழைவிரவித் தொடுத்த படலையைத் தலையில் அணிந்து கொண்டு அந்திப்போதில் திரிந்தனர் *[நெடு.31].*

கோங்க மலரால் ஆன படலையைத் தலைவன் பரத்தைக்குச் சூட்டினான் *[ஐங்.370:1].* கார்ப்பருவத்தில் தழைவிரவின படலையை இடையிடையே முல்லைப் பூவையும் வைத்துத் தொடுத்துக் கோவலர் அணிந்து கொள்வர் *[ஐங்.476:3]*

2. **வேலி.** தினையைக் காய வைத்திருக்கும் சிறிய வீட்டின் முற்றத்தில் படலை-வேலி-கட்டப்பட்டிருக்கும் *[புற.319:5].* வேட்டுவர் உடும்பின் தசையைக் கூறுபோடும் சிறிய மனை முற்றம், ஒடு மரத்தில் வலிய கழிகளாற் செய்யப்பட்ட படலையால், சார்த்தப்பட்டிருந்தது *[புற.325:7].*

3. **தழைப்பரப்பு.** படலால் - தழைப்பரப்பால் - ஆகிய பந்தரின் கீழ் உள்ள குடில்களையுடையது சிற்றூர் *[அக.87:3].*

**படாஅகை**-**கொடி.** 'மதம் பொருந்திய யானையைக் காட்டிலும் அஞ்சாமை வாய்ந்த இக்காளையை நீ அடக்கினால், நம் தலைவியின் தோள் வெற்றிப் படாஅகையை - கொடியை - ஏந்தும் (மாலையிடுவாள்) என்று காளையை அடக்க நிற்கும் ஆயனாகிய தலைவனிடம் தோழி கூறினாள் *[கலி.101:37].*

**படாஅம்** - **போர்வை.** பேகன் என்ற வள்ளல், மயில் குளிரால் நடுங்கும் என்று கருதிப் பாடாஅத்தை-போர்வையை-அதற்கு அளித்தான் *[புற.141:11].*

**படாஅர்** - **தூறு (புதர்).** பாசறையில் இருக்கும் வேந்தனுக்கு நள்ளிரவில் புனலி பூத்த அசைகின்ற கொடியினையுடைய சிறு படர்அர் - தூறுகள் - துவலையுடன் வரும் காற்றிற்கு அசைவது போல, மயிர்க்கட்டுக் கட்டிச் சட்டையிட்ட உறக்கத்தையும் பெரிய ஒழுக்கத்தையுமுடைய மெய்க்காப்பாளர் ஆடியசைந்து காவலாகச் சூழ்ந்து திரிவர் *[முல் 51].*

தலைவன் இரவுக்குறிக்கு வரும் சுரநெறி அஞ்சும்படியான அகன்ற வாயினையுயை பாம்புச் செடிகளாலாய படாஅரினை யுடையது *[அக.68:20].* நுண்மணலின்கண்ணுள்ள சிறு படாஅரினிடத்தில் நெருப்பினை யொத்த சிறிய கண்ணினையுடைய பன்றி உறங்கும் *[அக.84:7].* பன்றி சுனை நீரைக் குடித்துச் சேம்பினது கிழங்கினைத் தின்று நீர் ஊறும் இடத்திலுள்ள சிறுபடாஅராலாகிய புதரில்கண் உறங்கும் *[அக.178:1].* குன்றிலிருந்து அருவி இழியும் இடத்தில் உள்ள அச்சந்தோன்றும் சிறு படாஅரில் மந்தியிருந்தது *[அக.288:11].* இரவின்கண் தினைப்புனத்தை மேய்ந்த சினம் கொண்ட யானை குளிர்ந்த பெரிய படாஅரினைக் கண்டு (பாம்புப் படார் என்று கருதி) அஞ்சும் *[அக.309:16].*

**படாகை** - கொடி. முருகவேள் உறையும் திருப்பரங்குன்றத்தில் உள்ள சுனையின் பக்கத்தே பல்துறைக் கல்வியில் வல்லார் வென்றுயர்த்திய வெற்றிப் படாகைகள் - கொடிகள் - நின்றன *[பரி.9:78].*

**படி-1.** நிலம். புலியுடன் பொருது புண்பட்ட களிறு நீர் வேட்கையின் மிகுதியினால் படியில்-நிலத்தில் - முழங்காலை மடித்து ஊன்றிச் சுனையில் உள்ள நீரைப் பருக முயலும் *[அக.119:18].*

திருமாலின் சங்கு, திருமாலோடு போருக்கு வந்த அவுணர்கள் படியின்கண் நிற்கும் நிலை தளர்ந்து நடுங்கும்படியாக முழங்கியது *[பரி.2:39].* திருமருத நீர்த்துறையில் வையையாறு பலவித மரங்களின் மலர்களைக் கொண்டு வந்து தருதலால் அத்துறை கள்ளை வாயிற் கொண்டு பருகும்படித் தேவியின் (நிலமகளின்) மிடறு போன்றிருந்தது *[பரி.11:29].* திருமாலிற்குரிய திருமாலிருஞ்சோலை மலையின் பெயரினது பெருமை நன்றாக இப்படியின்கண் பரவி நின்றது *[பரி.15:25].*

**2. படிக்கட்டு.** படுகுழியில் அகப்பட்டுக் கொண்ட களிற்றின் துயரினைப் போக்குவதற்காகப் பெண்யானை அக்களிறு ஏறுதற்குப் படியாகப்-படிக்கட்டாகப்-பெரிய மரக்கிளைகளை ஒடித்துப்போடும் *[அக.8:11].*

**3. பகை.** திருமால் தன் பத்தனாகிய பிருங்கலாதனின் துயரினைக் களைய அவனுடைய தந்தையாகிய இரணியனின் மலைபோன்ற மார்பில் படி-பகை- வலிமையழியப் பாய்ந்து பிளந்த உகிரினையுடையவர் *[பரி.4:18].* திருமால், படிகளின் வலிமையைக் கெடுத்தவர் ஆவார் *[பரி.4:47].*

**4. முறை.** திருமால் வேள்வியுள் படிப்படியாக-முறைமுறையாக- ஒன்றற்கொன்று உயர்ந்து வேள்வித்தூணாக நிற்பார் *[பரி.2:62].*

**5. உதவி.** ஊக்கமுள்ளவனின் செல்வம் போல, மரங்களில் பூக்கள் மலர்ந்திருந்தன; முயற்சியுடையானின் செல்வத்தை வருந்தாமல் படி - உதவி - பெற்று உண்ணுவானைப் போல, அம்மரங்களின் மலர்களிலுள்ள தேனை வண்டுகள் உண்டு ஆரவாரித்தன *[கலி.35:2].*

**படிக்கால்-ஏணி.** காவிரிப்பூம்பட்டினத்தின் அங்காடித் தெருவின்கண் படிக்கால் - ஏணிகள் - சார்த்தப்பட்ட சுற்றுத் திண்ணைகளையுடைய மேனிலை மாடங்கள் இருந்தன *[பட்.142].*

**படிமகன்-செவ்வாய்க்கோள்.** படிமகன்-செவ்வாய்க்கோள்- மேடராசியைச் சேரும்போது வறட்சி நீங்கி மழை பெய்யும் *[பரி.11:5].*

**படிமம்-பாவை.** போரில் வல்ல செழியன் வளம் பொருந்திய முசிறி என்னும் பட்டினத்தைப் போரில் வென்று அங்கிருந்த பொற் படிமத்தைக் - பாவையினைக் - கவர்ந்து கொண்டான் *[அக.149:12].*

**படிமை-தவவொழுக்கம்.** தகடூரெறிந்த பெருஞ் சேரலிரும்பொறை தனது படிமையால்- தவவொழுக்கத்தால்- அறிவிற் சிறந்த அந்தணனுக்கே அறிவுரை கூறித் துறவறம் பூணுமாறு செய்தான் *[பதி.74:28].*

**படியோர்-பகைவர்.** இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் படியோரை - பகைவரை - அழித்து அவரின் நாடுகளைக் கைக்கொண்டு புலவர் பாடும் புகழ்ச்சிக்குரியவன் ஆனான் *[பதி.20:11].* தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை மெய்ம்மை மொழியால் விளக்கம் பொருந்திய செவ்விய நாவினையும், படியோரை வலியழித்த ஆண்மையினையும் உடையவன் *[பதி.79:6].*

நன்னன் தன் படியோரை அழித்தலில் வல்ல ஆண்மையாளன் *[மலை.423].*

பலவகைப் புகழ்களைக் கொண்ட பெரிய கையினையுடைய நெடுவேள் (முருகன்) படியோரைத் தேய்த்தொழித்தான் *[அக.22:5].*

**படிவம் -1.** கொள்கை, விரதம். மகட்கொடை மறுக்கப்பட்ட வேந்தனும், மகட்கொடையை மறுத்தவனுமாகிய இருவரின் படிவமும் - கொள்கையும் - போர்புரிதலேயாகும் *[புற.349:4].*

தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை அருமறைப் பொருளை அறிவர் உரைப்பக் கேட்டு, அறிவு ஒழுக்கங்களால் உயர்ந்த நன்மக்கள் மனம் மகிழும்படி, அவர் உரைத்த படிவங்களைத் தவிராதொழுகி, வேள்விகளைச் செய்து முடித்தான் *[பதி.74:1].*

தவவொழுக்கத்தினர் உண்ணாமையாகிய படிவத்தினையுடையவர் *[அக.123:2].* தலைவனைப் பிரிந்த தலைவி, அவன் வரும் வரையில், பகல் நேரமே தனக்குத் துணையாகக், கைவிரல்களைக் கவித்துக் கும்பிட்டுக் கொண்டு, அவனைக் காணவேண்டும் என்ற படிவம் கொண்ட உள்ளத்துடன் வருந்தியிருந்தாள் *[அக.287:2].*

மறையறிந்த பார்ப்பனன், புரச மரத்தினது தண்டோடு, தாழப் பிடித்த கமண்டலத்தையும், படிவ (விரத) உணவையும் உடையவன் *[குறு.156:4].*

மகளிர் படிவத்தை மேற்கொள்வர் *[நற்.272:2].*

பிரிவறிவுறுத்திய தலைவனிடம், தோழி, நீ பிரிந்தால் திங்களைப் போன்ற இவளுடைய அழகிய முகம் பாம்பு கவ்விய திங்களைப் போலப் பசப்பூர்ந்து கெடும் அவ்வழகை, நீ சென்று கற்ற கல்வியறிவினால் மனத்திற் கொண்ட மாசற்ற படிவங்களால் மீட்டல் இயலுமோ?' என்று கூறிச் செலவழுங்குவித்தாள் *[கலி.15:15].* கெடாத படிவத்தாலே குதிரை முகமும், மக்களுடம்புங்கொண்ட சூரபன்மாவை, முருகவேள் கொன்றார் *[கலி.93:25].*

முருகவேளின் திருவடி நீழலைக், கூடாவொழுக்கத்தால் அழிந்த தவப்படிவத்தார் அடையார் *[பரி.5:75].*

**2. தவக்கோலம்.** ஆடையைக் காவி நிறம் தோய்த்து உடுத்த படிவத்தையுடைய-தவக்கோலத்தையுடைய - முக்கோலந்தணன், அம்முக்கோலின் மேலே அவ்வுடையினை இட்டு வைத்ததைப் போலப் பாசறையில் வயவர் வில்லினை நட்டு, அதன்மேலே தூணிகளைத் தொங்க விட்டனர் *[முல்.37].*

அன்னி மிஞிலி என்பவள் தன் தந்தையின் கண்களைப் பிடுங்கிய கோசர் என்பாரைப் பழிவாங்கும் வரையிலும் உணவைக் கலத்திலிட்டு உண்ணாமலும், தூய உடையை உடுத்தாமலும் சினத்தினால் படிவம் கொண்டு, திதியன் என்பானால் கோசரைக் கொன்று பழி தீர்த்தாள் *[அக.262:8].*

**3. தெய்வம்** (உருவம்). அந்தணர்களின் இல்லம் கன்றைக் கட்டின சிறிய கால்களையுடைய பந்தரினையும், ஆப்பியான் (சாணம்) மெழுகிய அகத்தோடு படிவங்களையும்-தெய்வங்களையும் - உடையதாய் இருந்தது. *[பெரு.298].*

படிவு-ஆடுதல் (நீராடுதல்) இவ்வையைப் புதுநீர், ஈக்கள் மொய்ப்பதற்குக் காரணமான கள்ளைத் தன்பாற் கொண்டு தூய்தன்றாயிற்று என்று கருதி, அதன்கண் பார்ப்பனர் படிவு-ஆடுதலை-ஒழிந்தார் *[பரி.தி.2:59].*

படிறு-1. வஞ்சனை. பரத்தையிடமிருந்து வந்த தன் கணவனிடம், தலைவி, 'உன்பரத்தையின் கூந்தலிலிருந்து உதிர்ந்த மகரந்தத்தூள் கிடக்கின்ற மேலாடையோடு, புதல்வன் மீது கொண்ட விருப்பினால் வந்துள்ள நடுக்கமில்லாத படிறு - வஞ்சனை - உடையவனே, போய்விடு', என்று கூறினாள் *[கலி.81:29].* ஒழுக்கக்கேடுகள்ள தன்னைத் தடுத்து நிறுத்திய காதலனிடம் சினப்பாள் போலத், தலைவி, 'பொருந்தாத பேச்சுக்களைப் பேசக், குழந்தைப் பருவத்து அறியாமையைக் காட்டுகிறது, என் செயல்; கடன் கொடுத்தவர்கள் வாங்கியவர்களைக் கண்ட போது உசாவுவது போலே, நீயும் என்னைப் படிற்றினால் உசாவித் தடுத்தற்கு, உன்னிடத்தில் வாங்கியது எப்பொருள்?' என்று வினவினாள் *[கலி.108:23].*

**2.கொடுமை.** பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன், தலைவியின் கூந்தலைத் தீண்டியபொழுது, தலைவி, எனது கூந்தலைத் தீண்டுதற்கு நீ யார்? குடிமக்களைப் பாதுகாவாமல் பாதுகாப்பவர் போல் நடித்து உரையாள்வது போன்ற படிற்றினை - கொடுமையை உடையது உன்னுடையசெயல்; இனி, நீ எம்மனையிடத்து வாராதே' என்று கூறினாள் *[கலி.89:2].*

படு-1. குளம். ஒய்மானாட்டு நல்லியக்கோடனுக்குரிய எயிற்பட்டினத்தில் குளிர்ந்த நீர்மிக்க படுக்கள்-குளங்கள்-இருந்தன *[சிறு.153].*

ஆண்மான் குளிர்ந்த நறிய படுவின் நீரை உண்டு, அறுகம்புல்லை மேய்ந்து, மணலின்கண் பிடவினது நிழலில் தன் பெண்மானோடு மகிழ்வுடன் தங்கும் *[அக.139:9].*

**2. மடு (நீர்நிலை).** சிறிய வீட்டின் முற்றத்தின்கண் உள்ள சாடியில் செம்மண் நிலத்துப் படுவில் - மடுவில் - உள்ள சிவந்த இடத்தில் சிறிதாக ஊறிய நீரை முகந்து வைத்தனர் *[புற.319:1].* 'மற்றவருடைய வேலைப் போலலலாது இவ்வூர் மறவனுடைய வேல், குடிலின் கூரையில் செருகப்பட்டு வீணே கிடப்பினும் கிடக்கும்; அல்லது மாலையணியப் பெற்று, மங்கல மகளிர் இசைக்கத்,தெளிந்த நீருண்டாகிய படுக்களிலும், தெருக்களிலும் உலாச் சென்று பகைவரையழிக்கினும் அழிக்கும்', என்று, மறவனின் மறத்தை, விரியூர் நக்கனார் பாடினார் *[புற.332:7].*

**3. கிணறு.** சோற்று முடியைத் தோளிலே தொங்கவிட்ட ஆடவர் தீப்பொறி உண்டாகுமாறு பாறைகளை வெட்டித் தோண்டுதல் செய்து மிக்க உவரையுடைய படுவினை - கிணற்றினை - உண்டாக்கினர் *[அக.79:3].*

**4. சிறு குழி.** சுரத்தில் மறவரால் தன் துணையை இழந்த ஆண் மான், துன்பம் அறியாத குட்டிகள் தன் பக்கலில் விளையாடவும், மேய்வதை நீத்துத், துன்பம் மிக்குக், களர் நிலத்தில் உள்ள படுவில் - சிறு குழியில் - உள்ள சிறிய நீரையும் பருகாது, அம்பு தைக்கப் பெற்ற மக்களைப் போல, வருந்திக், கண்ணயர்ந்து கிடக்கும் *[அக.371:7].*

**5. சுனை.** படு - சுனை - நீரையுடைய மலைப் பக்கத்தே வாழைதழைத்து வளர்ந்திருந்தது *[நற்.188:1].*

படுக்கை-கிடக்கை. மள்ளர் அரிவாளால் அறுத்திட்ட நெற்கதிர்களோடு, நெய்தற்பூவும் அறுபட்டு நெல்லரிக்கிடையிலே படுக்கையாகக் - கிடக்கையாகக் கிடந்தது *[நற்.275:3].*

படுகர்-வழி. கிடக்கையாக மலையை அடுத்திருந்த சிற்றூர்கள், அசைதலால் ஒலிக்கும் மூங்கிற் காட்டில், அரிய படுகரை- வழிகளை - உடையனவாயிருக்கும் *[மலை.161].*

படுநர்-உழைப்பவர். (உழவர்) வைக்கோல்களில் பொழுதெல்லாம் படுநராகிய - உழைப்பவராகிய - உழவர் தாமுண்ட கள்ளால் பிறந்த மயக்கத்தால் மடிந்திருப்பாராயின் விடியலில் பழஞ்சோற்றை உண்ணுவர் *[புற.399:10].*

படுப்பவர்-பூசிக்கொள்பவர். மலையில் பிறந்த சந்தனம் மலைக்குப் பயன்படாது அதனைப் படுப்பவர்கட்குப் - பூசிக் கொள்பவர்கட்குப் - பயன்தருதல் போல, மகளிரும் பிறந்தகத்திற்குப் பயன்தராது, புகுந்தகத்திற்குப் பயன் தருவர் *[கலி.9:12].*

படுமகன்-இறந்தவன். முதிய தாய் ஒருத்தியிடம், உனது மகன் போரில் புறங்கொடுத்து மாண்டான் என்று அறியாதார் கூற, அவள், அவ்வாறாயின் அவன் பாலுண்ட மார்பினை அறுத்தெறிவேன், என்று சினந்து கூறிப், போர்க்களம் சென்று,

பிணங்களைப் புரட்டி, விழுப்புண் பட்டுப் படுமகன்- இறந்தவனைக் - கண்டு, அவனைப் பெற்ற பொழுதைவிடப் பெருமகிழ்வடைந்தாள் *[புற.278:8].*

படுமரத்து மோசிகீரனார்-ஓர் புலவர். கீரனாரென்பதே இவரது பெயர். மோசியென்பது ஊர். எனவே, ஊர்ப்பெயரோடு சேர்த்து மோசிகீரானார் என்று அழைக்கப் பெற்றார். பின்னும், படுமரத்து எனச் சேர்ந்துள்ள அடையின் பொருள் விளங்கவில்லை. இவ்வடை மோசிக் கொற்றனார் பெயர் முன்னும் சேர்ந்து காணப்படுகிறது *[குறு.376].* இதற்கு 'படிமத்து' *[குறு.33,75]* என்றும், 'படுமாற்றூர்' *[குறு.376].* என்றும் வேறு பாடங்களும் உள்ளன. இவ்வடையின்றி மோசி கீரனார் என்று பெயர் பெற்ற புலவர் ஒருவரையும் சங்கப் புலவர் வரிசையில் காணலாம். இவரும், அவரும் ஒருவரே என்று கூறுத் இடமுண்டு என்பர் உ.வே.சா. (குறு. பாடினோர் வரலாறு). பாடல்களிலும் ஒற்றுமை காணப்படுகின்றது. படுமரத்து மோசிகீரனார் பெயருடன் குறுந்தொகையில் மட்டும் மூன்று பாடல்கள் *[33,75,383]* உள்ளன. 'அன்னாய், இரந்து பெறும் உணவினால் முற்றும் வளராத மேனியொடு புதிய ஊரிலே வந்தவிடத்தும் பெருஞ்சொல் வன்மையுடன் பேசும் இவ்விளமாணாக்கன், தன்னூர் மன்றத்திலே எத்தகைய வன்மையுடையனாயிருப்பன்', என்று தலைவி, தன்னிடத்துத் தலைவன் விடுத்த வாயிலாக வந்த பாணனை வியப்பாள் போல், வாயில் நேர்வதை, முதல் பாடலில் இவர் நயமுறப் பாடியுள்ளார். இப்பாடலால் அக்காலத்துப் பாண்குல மாணாக்கர் இரந்து உண்டு நிரம்பா மேனியோடு ஊர் மன்றத்திலிருந்து கற்றமை விளங்கும். பிரிந்த தலைவனது வரவினைப் பாணன் வந்து உணர்த்தக் கேட்டு ஆர்வமுற்ற தலைவி, அவனிடம், 'காதலர் வரவை நீயே கண்டனையோ, அன்றி வேறுயாரும் கண்டோர் கூறக் கேட்டனையோ; அவ்வாறு கேட்டனையாயின் யார் வாய்க் கேட்டனை? உண்மையைத் தெளிய விரும்புகின்றேனாதலின் சொல். சொல்லி, யானைகள் சோணையாற்றிலே படிந்து விளையாடும் பொன் மலிந்த பாடலிபுத்திர நகரைப் (நகர் போலும் செல்வத்தைப்) பெறுவாயாக', என்று வினவி வாழ்த்துவதாக அடுத்த பாடலைப் பாடி, அவளது உணர்வினை இவர் நன்கு வெளிப்படுத்தியுள்ளார். இதனால் சோணையாற்றங் கரையிலுள்ள பாடலிபுத்திர நகரின் செல்வ வளத்தை இவர் அறிந்து கூறியிருப்பதும் விளங்கும். தலைவனுடன் போகத் துணிந்த நிலையில் நாணத்தால் வருந்தும் தலைவியை நாண் நீக்குவதாகத் தோழி கூற்றில் அமைத்து இவர் மற்றப் பாடலைப் பாடியுள்ளார்.

படுமரத்து மோசி கொற்றனார் - ஓர் புலவர். கொற்றனாரென்பதே இவர் பெயர்; மோசியென்பது ஊர். இவரது பெயரடை தொடர்பான பிற விளக்கங்களுக்குப் 'படுமரத்து மோசி கீரனார்', காண்க. இப்புலவர் பாடியதாக *[குறு.376].* ஒரு பாடலே உள்ளது. அதனையடுத்த பாடல் மோசி கொற்றனார் என்ற பெயரோடு காணப்படுகின்றது. இரு பாடல்களும் தொடர்ந்திருத்தலினால் இவ்விரு பெயர்களும் ஒருவரையே குறித்தல் கூடுமோ என்று நினைக்க இடமுண்டு என்பர் உ.வே.சா (குறு.பாடினோர் வரலாறு). 'காதலி, வேனிற் காலத்தே, பொதியின் மலைச் சந்தனம் போல், குளிர்ச்சியையுடையள்; பனிக் காலத்தே, கதிர் மறையும் மலைப் பொழுதில், அழகிதாய் அசையும் வெயிலை உட்பொதிந்து கூம்பிய தாமரை மலரின் உள்ளிடம் போன்ற, சிறு வெம்மையுடையள்', என்று, தலைவியின் இயல்பு நினைந்து, தலைவன் பொருள் வலிக்கும் நெஞ்சிற்குக் கூறிச், செலவழுங்குவதாக, இவர் பாடியுள்ளார்.

படுமலை-பாலைப்பண்களிலொன்று. படுமலை - படுமலைப் பாலை என்ற பண் - நிலைபெற்ற, பயன் பொருந்திய சிறிய யாழை ஒரு மருங்கிலே யணைத்துக் கொண்டு, ஆய் அண்டிரனிடம், பாணன் சென்றான் *[புற.135:7].*

பாணர் படுமலையை வாசித்த இசை, வானத்தின்கண் எழுகின்ற பேரொலியையொப்ப, மழையின் ஒலி இருக்கும் *[குறு.323:2].*

'மழையைப் பொழிந்து குளிர்ச்சியைத் தந்து தலைவியை அணைத்திருக்க வுதவிய முகிலே! நீ நல்லயாழின் நரம்பினின்று படுமலையை வாசித்தாற் போன்ற ஒலியோடு பெய்யும் மழையினை உடையையாகிக் குன்றுகளின் கொடுமுடிகள் தோறும் பொருந்தி உலவுவாயாக', என்று, வினைமுற்றி மீண்டு வந்த தலைவியைக் கூடிய தலைவன் கூறினான் *[நற்.139:4].*

படுவது-இறை (வரி). சேர அரசமரபினர் ஆறிலொன்றாகிய படுவது - இறையை - உண்டு வாழ்ந்தவராவர். *[புற.17:6].*

படை-1.படைக்கலம். பாண்டியன் கருங்கையொள்வாட் பெரும்பெயர் வழுதி, பெரிய கழுத்திடத்தே அமர்ந்து வரும் யானை, தனது கொம்பையே படையாகக் - படைக்கலமாகக் - கொண்டு பகைவர் மதிலின்கண் உள்ள கதவைக் குத்தும் *[புற.3:9].* பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை வெல்ல வேண்டி வேலேந்தி வந்த பகைவர் பலர் அவனுடைய ஒள்ளிய படையையுடைய தூசிப்படைக்கு ஆற்றாது அழிந்தனர் *[புற.15:14].* சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையின் குடிமக்கள் கலப்பையைத் தவிர வேறு படைகளை அறியார் *[புற.20:11].* சோழன் நலங்கிள்ளியிடம், படைகளைக் கையிலேந்திய நின்னுடைய மழவரை இரக்கமுள்ளவராகப் பாசறை வாழ்வைவிட்டு, நின்னிடத்து வருவார்க்கு உதவி செய்யும் நட்போடு கூடிய குணத்தையுடையவராகச் செய்வாயாக', என்று, உறையூர் முதுகண்ணன் சாத்தனார் கூறினார் *[புற.29:17].* சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளனின் பகைவர்,

வெளிதாகிய வலிய படைகள் தாமிருந்த கட்டில் முறிந்து சரியும்படியான தீ நிமித்தம் கண்டு அவ்வளவனின் போர் வரவை உணர்ந்து, கலக்கமுற்றனர் *[புற.41:10]*. சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும், சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும் போரிட்டு இருவரும் மடிந்த பொழுது இருவரின் பல்யானைகளும் படையிடத்து அழிந்தன *[புற.63:2]*. படைகளின் தொழில் அமைந்த மறவரையுடையேம் யாம் என்று கூறிக்கொண்டு பகைவர் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனுடன் போரிட வந்தனர் *[புற.72:5]*. கொண்கானங்கிழான், போரிடத்து எறியும் படைகட்குப் புறமுதுகிடாத ஆண்மையை உடையவன் *[புற.154:10]*. பிட்டங்கொற்றன், தன் தானையைச் செலுத்திக் கொண்டு பகைவர் மேல் போகும்பொழுது, பகைவர் எறியும் வேல் முதலிய படைகளை ஒக்கி யெறிய அவற்றின் முன்னே நிற்பான் *[புற.169:1]*. இளங்கோசர் என்பார் படைகளை எறிந்து கற்குங்காலத்தே பெரிய முருங்க மரத்தால் செய்யப்பட்ட தூணை இலக்காக வைத்துக்கொண்டு பயில்வர் *[புற.169:9]*. வயவர் சிலர் கள்ளுண்ட மயக்கால் மறம் பேசிப் பகைவர் படைகளை எறியும்போது, புறங்கொடுத்து ஓடும் அவர்களைத் தடுத்து, அவர்கட்கு அரணாகத் தன் வலிமையைக் காட்டி, முன்னாகப் பாண்டியன் கீரஞ்சாத்தன் நிற்பன் *[புற.178:7]*. பாண்டியனின் படைத் தலைவனாகிய நாலைக்கிழவன் நாகன், பாண்டியனுக்குப் படை வேண்டியவிடத்து வாட்போரால் உதவுவான் *[புற.179:6]*. கடிய வலிமையினையுடைய கூற்றுவன் மழுப்படையையுடையவன் *[புற.195:4]*. 'கடலைப் போன்ற பெரிய ஒள்ளிய படைகள் பொருந்திய தானையையுடைய பேரரசராயினும் எம்மை மதியாதாரை யாமும் மதியேம்' என்று, சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன் பரிசில் நீட்டித்த பொழுது, புலவர் சோணாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் கூறினார் *[புற.197:3]*. ஒரு மறவன் தன்னைத் தாக்க வரும் மாற்றாரின் படையை எதிரேற்றற்குக் கிளர்ந்தெழும் மார்பையுடையவனாய் இருந்தான் *[புற.282:4]*. போர்மறவர் புதிதாகச் செய்யப்பட்ட வேல் முதலிய படைகளைக் கொண்டு பொருதனர் *[புற.294:3]*. மறவனாகிய சிற்றரசன் ஒருவன் தன் மார்பின் மீது தைத்த, பகை வேந்தன் எறிந்த ஒளிவிளங்கும் படையைப் (வேலை) பிடுங்கிப், பகைவரின் யானைகளின் மீது செலுத்தியபோது அவ்யானைகளெல்லாம் புறங்கொடுத்தோடின *[புற.308:8]*. மகட்கொடை மறுக்கப்பட்ட வேந்தனொருவன் போரில் வென்று நாளையே இவளை மணப்போன்; அல்லது, போரிட்டு விண்ணுலகம் செல்வேன் என்று சூளுரைத்துத் தன் படையைக் கையிலேந்தினான் *[புற.341:16]*. மகட்கொடை மறுத்தவனுடைய பருந்து இளைப்பாறியிருக்கும் இடைமதில் பொருந்திய புரிசையில் படையேந்திய மறவர் நின்று காவல் காத்தனர் *[புற.343:17]*. மகட்கொடை கேட்டு வந்த வேந்தர்கள் படையேந்திய மறவர்களையுடைய கடல் போன்ற தானையோடு வந்தனர் *[புற.351:3]*. சேரமான் கடலோட்டிய வேல்கெழுகுட்டுவன் தன் வேல் முதலிய படைகளால் மாற்றாரின் படைகளைக் கீழ்மேலாகச் செய்து வயலின் படைச்சால் போல் ஆக்கினான் *[புற.369:12]*. பழுத்த மரங்களை நாடிச் செல்லும் வெளவாலைப் போலச் சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னி வில்லும், வாளும், வேலுமாகிய படைகளாகிய மாரியினால் பகைவரின் தலைகளாகிய கனிகளைப் பெய்வித்தான் *[புற.370:12]*. தலையாலங்கானத்துணுச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுடைய தானையின் கூரிய வாயையுடைய பெரிய வாட்படைகள் தம்முடைய நீர்மைப்படி மேலும், கீழுமாகச் சென்று பகைவரை யழிக்கும் *[புற.371:10]*.

காலக்கடவுளாகிய சிவபெருமான், தெளிந்த ஒளியையுடைய சூலத்தோடு, ஒளிவிட்டுத் திகழும் வேறுபல படைகளையும் உடையவர் *[பதி.க.வா.11]*. இயமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் படையினையே ஏராகக் கொண்டு பகைவரின் தானையாகிய புலத்தை உழுகின்ற உழவனாவான் *[பதி.14:17]*. நாளைக்குள், பகைவரின் மதிலை வெற்றி கொண்ட பின்னரே உண்பேம் என்று சூளுரைத்துக் கொல்லுகின்ற படைகளை ஏந்தி வருகின்ற மறத்தானையையுடையவன், ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் *[பதி.58:4]*. செல்வக் கடுங்கோ வாழியாதன் கையிலிருக்கும் கருவிகள் அழிந்தமையின், போரிட வேறுகொல்படைகளைத் தேடும்படியான மறவர்களை யுடையவன் *[பதி.67:5]*.

நெறியை அலைக்கின்ற கள்வரும் தம் கையிலுள்ள கொலைப்படையை எறிந்து விட்டுத் தம் கொலைத் தொழிலை விடும்படியாகப் பண்படுத்தவல்லது, பாலையாழ் *[பொரு.21]*. பாசறை வேந்தன் இரவுமுழுதும் உறங்கானாய் மற்றை நாட் போரிலே பகைவரைக் குறித்துப் போர்ப்படைகளைப் பிடித்த தனது வலிய விரலாலே பகைவரை வென்று வாகை சூடினான் *[முல்.77]*.

பாலை நிலத்தில் வழியிற்போகும் புதியவரைக் கொன்ற ஆறலைப்போர் தாங்கள் எறிந்த படைகளை அரித்தோடும் சின்னீரில் கழுவுவர் *[அக.133:19]*. சுரத்தில் உள்ள சிற்றூரினர் தலையில் கைவைத்து அழும்படியாக அவர்களுடைய கொழுத்த ஆக்களைக் கவர்ந்து சென்று, கூரிய படைகளையுடைய மழவர்கள் கொன்று தின்பர் *[அக.129:12]* தன் கையிலுள்ள படையால் பகைவரின் தானையைத் தோற்றோடச் செய்யும் மழவனுக்கு அவ்வேந்தன் பொற்பூ சூட்டிச் சிறப்புச் செய்வான் *[அக.174:2]*. மேற்குத் திசையில் உள்ள இடங்களுக்குச் சென்று விற்க உப்பு மூட்டை ஏற்றிய கழுதைகளைப் படைகளை தாங்கிய, பெரிய மறச் செயல்களைப் புரியும் ஆடவர் ஓட்டி செல்வர் *[அக.207:4]*. போர் செய்தலில் வல்ல குட்டுவன் படைகளின் ஒளி வீசும் கடலைப் போன்ற தானையையுடையவன் *[அக.212:15]*. வேந்தருடைய பலவாகிய படைகளைத் தாங்கிய தானையின்கண்ணே

நிரைக்கப்பட்ட யானைகளைப் போன்று, கீழ்டலின் நீரை முகந்த முகில் மின்னியும், இடித்தும் சென்றது [அக.278:2]. உண்ணாததால் வற்றிய வயிற்றுடன் சுரநெறியில் தூது செல்லும் பார்ப்பானின் கையிலுள்ள ஓலையைப் பொன்னென்று கருதிக், கையில் படையினையுடைய கொடுமை பொருந்திய மறவர் அவனைப் பயனின்றிக் கொன்று வீழ்த்தி, அவனிடம் ஒன்றுமில்லாததால், ஏமாற்றமடைந்தனர் [அக.337:8]. வளைந்த வில்லையுடைய வேட்டுவன், குறிய படையை (அம்பினை) உடையவன் [குறு.333:1]. கணவனைப் பிரிந்திருக்கும் மனைவிக்கு, மாலைக்காலம் தன்னைக் கொல்லுவதற்குப் படையுடன் வரும் மாலைக்காலமாகத் தோன்றும் [நற்.343:7].

போர்வினைமேல் செல்லும் தலைவன் தன் படைகளைச் செப்பஞ்செய்து அணிந்து கொள்வான் [கலி.17:1]. கள்வர் தம் ஆற்றல் செல்லக்கூடிய இடத்தைத் தேர்ந்தெடுத்து ஆங்குள்ளார் மீது தம் படைகளைச் செலுத்தி அழிப்பர் [கலி.81:22]. தம்மையடைந்த ஆடவரைப் பரத்தையர் தம் வளையல், நகம் முதலிய படைகளால் மார்பு முதலிய இடங்களில் வடுக்களை உண்டாக்குவர் [கலி.82:28]. ஒரு காதலன், காதலியிடம் உன்னைக் கண்டால், காமனும் தன் படையைக் கை நழுவவிட்டுக் கலங்கும் அழகால் காமப் படை கொண்டு என்னுயிரைக் கவரும் கொடியவளே! யான் நினக்கு என்ன பிழை செய்தேன்', என்று கூறினான் [கலி.108:4,5]. அழகி ஒருத்தியைக் கண்டு காதல் கொண்டவொருவன், பேரழகுடைய தேவமாதராகிய ஊர்வசி, திலோத்தமையும் தன் அழகையெல்லாம் இவட்குக் கொடுத்துவிட்டார்களோ? பலிக்காக ஊற்றும் பாலோடு இவன் காமக் கோட்டம் புகின் அக்காமனும் தன் படையைக் கைநழுவ விட்டுக் கலங்குவானே', என்று கூறிக் கொண்டான் [கலி.109:19]. மாட்சிமைப் பட்ட இம்மங்கையின் அழகு என்ற காமனது படை கண்டவர் பழிக்கும்படி எனது ஆண்மையின் மதிலையுடைத்து, உள்ளத்தையும் அழிக்கின்றது', என்று, ஒருகாதலன் தன் காதலியைப் பற்றிக் கூறினான் [கலி.139:23].

திருமால், பகைவர் மீது வீசியழிக்கும் கூரிய படையைக் கையிலே ஏந்தியவர் [பரி.1:18]. திருமாலுடைய ஆழிப்படை பனங் குலைகள் உதிர்வன போலப், பகைவரின் தலைகளை மண்ணில் உருளச் செய்தது [பரி.2:49]. அமரர் தானைகட்குத் தலைவனாம் தகுதியுடையான் என்று கருதித் தீக்கடவுள், இந்திரன் யமன் முதலிய தேவர்கள் கோழி, மயில், மறி முதலியவற்றைப் படைகளாக்கி செவ்வேளிடம் வழங்கினர் [பரி.5:63]. தலைவியைத், தலைவன் படைகளோடு, உடன் கொண்டு செல்லும் போது தலைவியின் சுற்றத்தார் சுரத்தின் இடையில் மறித்துப் பொருதல் போல, மதுரை நகர மக்கள் வையையாற்றை இடைமறித்து நீராடுதற்கு ஏற்ப அமைத்துக் கொண்டனர் [பரி.11:47]. ஆடவர் சிலர் தம் நண்பரிடம், வையையில் நீராடற்குள்ள மகளிருள் ஒருத்தியைக் காட்டி, 'இவளுடைய கண் மதனவேளுடைய கருவூலமும், படைகளுமாகும்', என்று கூறினான் [பரி.11:123]. முருகவேளுடைய வேற்படை, பகைவரின் குருதி தோயப் பெற்றுப் பவளக் கொடியினது நிறம் போன்ற செந்நிறத்தையடைந்தது [பரி.19:98].

**2.தானை.** பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி, தனக்கு மாறுபட்ட மாற்றார் தேயத்தில் தனது கடல் போன்ற படையைச்-தானையைச்-செலுத்தி, அவர்களுடைய மதிலரண் முதலியவற்றைக் கைக்கொண்டு, அவற்றில் கவர்ந்த பொருள்களைப் பரிசிலர்க்கு வழங்கினான் [புற.6:12]. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், உலகம் பொறையாற்றாது நெளியத் திரண்ட பரந்த படையினைக் கொண்டு பகைவரைக் கொன்று, காலன் போல் விளங்கினான் [புற.23:15]. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனிடம், வெள்ளைக்குடி நாகனார் வேந்தே, போர்க்களத்தில் பகைவர் படையைப் புறங்கண்டு ஆரவாரிக்கும் நினது படையின் வெற்றியும், கலப்பையால் வந்தது என்பதை உணர்வாயாக', என்று கூறினார் [புற.35:24,25]. 'நும்முடைய பெரிய நாட்டின்கண் என்னோடு பொருவாருமுளரோ', என்று, ஒளவையிடம் போரினில் வல்ல படையையுடைய ஓரரசன் கேட்டான் [புற.89:4]. வையாவிக்கோப் பெரும்பேகன், கொடை செய்வதில் தராதரமின்றி முகில் போல அறியாமை யுடையவனேயன்றி, மாற்றாரின் படையோடு போரிடுவதில் அறியாமைப்படான் [புற.142:6]. ஏறைக்கோன், மாற்றார் படையுடன் போரிடுவதில் பிறரால் பழிக்கப்படாத வலிமையுடையவனாவான் [புற.157:3]. வாளின் வடுக்களால் கண்ணுக்கு அழகனாய்த் தோன்றாது காதுக்குப் புகழனாய் தோன்றுகின்ற ஏனாதி திருக்கிள்ளி, பகைவரின் படையை அழித்தலில் வல்லவன் [புற.167:2]. பிட்டங்கொற்றன், தனது படை, பகைவர் மேல் போகும்போது அவரது கருவிகளாகிய வேல் முதலியவற்றைத் தாங்கியும் அவர் படை அடர்ந்து வரும்போது தனது படையின் அணியைத் தாங்க வேண்டி அகன்ற ஆற்றின்கண் குறுக்கே தடுத்துக் கிடக்கின்ற மலையையொப்ப அத்தானையைத் தடுத்தும் நிற்பான் [புற.169:1,3(2)]. நம்பி நெடுஞ்செழியன் தனது நாட்டின் மேல் வரும் பகைவர் படையைத் தடுத்து நிறுத்தும் ஆற்றலும், தனக்குப் புறங்கண்டு ஓடும் பகைப்படையை அழிக்காத பண்புமுடையவன் [புற.239:11,12]. மறக்குல முதியவளின் மகனொருவன் ஒரு குடம் பாலை ஒரு துளி மோர் கெடுப்பதைப் போலப் பகைவர் படைக்கு அவனொருவனே நோயாக விளங்கினான் [புற.276:6]. தன் மகன் போரில் பகைவர் படைக்கு அஞ்சிப் புறமுதுகிட்டு ஓடும்போது கொல்லப்பட்டான் என்று அறியாதார் வாய்க் கேள்விப்பட்ட மறக்குல முதிய தாயொருத்தி, அது உண்மையானால் அவன் பாலுண்ட முலைகளை அறுத்தெறிவேன் என்று சினத்தோடு போர்க்களஞ் சென்று, பிணங்களைப்புரட்டிப் பார்த்துத், தன் மகன் விழுப்புண்பட்டு இறந்துகிடப்பதைக் கண்டு பெற்ற பொழுது மகிழ்ந்ததை விடப் பெருமகிழ்வுற்றாள் [புற.278:3]. ஒரு

மறவன் போர்க்களத்தில் பகைவருடன் போரிட என்முறை வரட்டும் என்று இரானாய், விரைந்து சென்று, தனக்கு முன்னே வரும் பகைவரின் பெரும் படையைத் தடுக்கும் ஆற்றலுடையவனாய் இருந்தான் *[புற.292:7]*. கடல் போன்று பகைவர் விரவிய போர்க்களத்தில் பகைவரின் படையைப் பிளந்து சென்று போரிட்டுத் தடுத்து அப்படைத்திரளின் நடுப்பரப்பில் வெட்டுண்டு துண்டு துண்டாய்க் கிடந்த மறவனைக் கண்ட, அவன் முதிய தாயின், வற்றிய முலையில், மகிழ்ச்சியினால் பால்சுரந்தது *[புற.295:4,5]*. சிற்றரசனின் எளிய உணவுண்ட குதிரைகள் கடலைப் பிளந்து செல்லும் தோணி போலப் பகைவரின் படைவரிசைகளைப் பிளந்து கொண்டு சென்று போரிட்டன; பேரரசனின் நெய்யுணவு உண்ட குதிரைகளோ, முருகன் கோவிலில் கலந்தொடாவிலக்குடைய மகளிரைப் போலப் போர்க்கஞ்சிப் பின்னிட்டன *[புற.299:3]*. சோழன் நலங்கிள்ளி கடலில் படை செலுத்திப் பகைவரை வென்று கொண்டு வந்த பொருளைப் பரிசிலர்க்கு வழங்குவான் *[புற.382:1]*.

பல்யானைச் செல்கெழுகுட்டுவன், வெற்றி கொள்ளும் இயல்பினையுடைய பெரிய படைக்குத் தலைவனாவான் *[பதி.24:5]*. களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல், பூழி நாட்டின் மீது படை எடுத்துச் சென்று வெற்றி கொண்டான் *[பதி.ப.4:6]*. படைமறவர்கையில் தண்டேந்திச் சென்று பகைத் தானையின் முன் ஆரவாரித்தாற் போல, வேங்கை மரத்தைப் புலி என்று கருதிய களிறு, மரத்தைத் தாக்கிப் பூக்களுள்ள வேங்கை மரத்தின் கிளையை ஒடித்துத், தலையில் அணிந்து கொண்டு பிளிறியது *[பதி.41:11]*. ஆடுகோட்பாட்டுச் சேரலாதனுடைய படை மறவர், பகைவருடைய யானையின் கொம்பினைத், தம் வாளால், ஒரே ஓச்சிலேயே வெட்டியழிப்பர் *[பதி.51:30]*. செல்வக் கடுங்கோ வாழியாதனின் குதிரை நிரை, பகைவரின் வேல், வாள் முதலியவற்றை யேந்திய படை மறவரைச் செயலறப் பொருதழிக்கும் ஆற்றலுள்ளது *[பதி.62:3]*. செல்வக் கடுங்கோ வாழியாதன், பரிசிலர்க்குப் பகைவரின் படைமறவரை வென்று கொணர்ந்த குதிரைகளை வழங்குவான் *[பதி.64:9]*. தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறையின் பகைவர், பகைமையினால், அறிவழிந்து, வலியறியாது படை எடுத்து வந்து அழிவர் *[பதி.72:1]*.

ஓய்மானாட்டு நல்லியக் கோடன், பகைவர் தானைக்கு உடைந்து அழிந்து ஓடும் தன் படைக்கு முன் நின்று, தான் ஒருவனாகவே, பகைத்தானையை அழிக்கும் ஆற்றலுள்ளவன் *[சிறு.211]*. தொண்டைமான் இளந்திரையனின் காஞ்சி நகரில், பகைப் படையின் முன், ஊறஞ்சிக் கெட்டோடுதலை யறியாத வலிமையும், புகழும் பொருந்திய, மறக்குடிகள் வாழ்ந்து வந்தனர் *[பெரு.398]*. வேந்தன் தங்கியிருக்கும் பாசறையைச் சுற்றிக் குத்துக் கோல்களை நட்டுக் கிடுகுகளை நிரலாகப் பிணைத்து இயற்றப்பட்ட பல்வேறு படைகளின் அரண்கள் இருந்தன *[முல்.43]*.

பாண்டியன், கூடல் போர்க்களத்தில், சோழ, சேரராகிய இரு பெருவேந்தரின் கடல் போன்ற படையைத் தோற்கடித்தான் *[அக.166:16]*. தனது கையிலுள்ள படைக்கலத்தால் பகைவரின் படையைத் தோற்றோடச் செய்யும் மறவனுக்கு அவ்வேந்தன் பொற்பூச்சூட்டிச் சிறப்புக்களைச் செய்வான் *[அக.174:2]*. பெரும் புகழையுடைய செல்வம் மிக்க கோசர்களுடைய விளக்கமுற்ற படையினைச் சோழன் வென்றான் *[அக.205:9]*. துறக்கத்தினை யடைந்த தன் முன்னோர்க்குப் பலியாகப் பெருஞ்சோறுபடைத்துத் தென்புலக் கடன் ஆற்றிய உதியஞ்சேரலாதன் புறக்கிடாத வலிமையையுடைய குதிரைப் படை யுடையவன் *[அக.233:6]*. தன்படை அஞ்சி ஓடுவதைக் கண்டும், தான் மட்டும் இடம் பெயராது நின்று பகைவரைத் தடுத்து நிறுத்தும் ஒருவன் போல, அஞ்சாமையையுடைய ஆண்பன்றி, தன் பெண்பன்றியையும், குட்டிகளையும் வேட்டையாடுபவரிடமிருந்து காத்து நிற்கும் *[அக.248:8]*. நல்லபோர்த்திறம் வாய்ந்த சேரன், பெரிய குதிரைப் படையினை வைத்திருந்தான் *[அக.309:10]*. சோழருக்குரிய சிறந்த அரணையுடைய வல்லம் என்ற ஊரின் புறத்தேயுள்ள காவற்காட்டின்கண் வந்து பொருத ஆரியரது படையைச் சோழன் சிதைத்து அழித்தான் *[அக.336:22]*.

சுரத்தில் கணந்துள் பறவைகள், கொல்லுகின்ற கொடிய தொழிலைச் செய்யும் வேட்டுவர் இருப்பதை, வழிப்போவாராகிய புதியவர்களாய படையினரை எச்சரித்து விலகிப்போகச் செய்யும் *[குறு.350:6]*.

மீனை உண்ணுவதற்காக நாரையினம், குவிந்த வெளிய மணல்மேட்டில், ஏறி நிற்பது, அரசரது ஒள்ளிய காலாட்படையின் கூட்டம்போலத் தோன்றும் *[நற்.291:4]*.

பகையரசர் போருக்கு நால்வகைப் படையுங்கூடி வந்தாலும், ஆறலைக்கள்வர் அரிமாப் போல் முழங்கும் தம்வில்லின் நாணொலியாலேயே அச்சமூட்டி விரட்டுவர்; அவர் மீது அம்பேவ, நாணுவர் *[கலி.15:3]*. அறிவில்லாத அமைச்சன் நாடாளத் தானை வலியில்லாத அரசனது நாட்டிலே பகையரசனின் படை வருவது போல, இளவேனிற் பருவம் வந்தது *[கலி.27:8]*. பாண்டியன் படை எடுத்துச் செல்லும் காலாட் படையைப் போலக், கடற்கரையில் உள்ள பறவைக் கூட்டம் காட்சியளித்தது *[கலி.149:2]*.

**3. கலன்.** பாரியினுடைய மகளிர் அவன் இறப்பதற்கு முன் மலையின் மேலிருந்து பறம்பினை முற்றுகை இட வந்துள்ள பகைவரின் பொன்னாலாகிய படையை - கலன் - அணிந்த குதிரைகளை எண்ணினர்; அவன் இறந்த பிறகோ, ஈத்திலையையுடைய குப்பையின்கண் ஏறிநின்று, உப்புச் சகடங்களை எண்ணுவர்', என்று, கபிலர் வருந்தினர் *[புற.116:19]*. ஆய் அண்டிரனிடம், உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் 'ஆயே, உன்னிடம் நான் வந்தது, விளங்கிய

பொற்படையையுடைய குதிரைகள் பூட்டப்பட்ட தேரைப் பெறுவதற்கு அன்று; நின்னைக் காண மட்டுமே வந்தேன்', என்று கூறினார் *[புற.135:15]*. அந்துவன் கீரனிடம், புலவர் காவட்டனார் 'வேந்தே, பேரரசரும் முடிவில் இடுகாட்டையே அடைந்தனர், நீயும் அவ்வாறு அடைவது உறுதி; அதனால் நினது புகழ் நிலைத்திருக்கும்படியாகப் பரிசிலர்க்கு ஈவாயாக', என்று கூறினார் *[புற.359:14]*.

குடக்கோ இளஞ்சேரலிரும்பொறையின் தானையில் உள்ள குதிரைகள் பொற்படையை அணிந்து போருக்குத் தயாராய் நின்றன *[பதி.82:7]*.

தொண்டைமான் இளந்திரையன் போர்முனையில் பகைவர் தோற்று ஓடும்போது விட்டுப் போன குதிரைகளைப் பசும் படையுடனே பரிசிலர்க்களிப்பான் *[பெரு.492]*. நன்னன் பொன்னாற் செய்த படைகளினால் பொலிவு பெற்ற குதிரைகளைப் பரிசிலர்க்கு நல்குவான் *[மலை.574]*.

வினைமுற்றி மீளும் தலைவன், தேர்ப்பாகனிடம், 'தலைவியை விரைந்து காண வேண்டும்; ஆகவே, பொன்னாலாகிய படையினை அணிந்த குதிரைகள் பூண்ட தேரினை விரைந்து செலுத்துக', என்று கூறினான் *[அக.114:16]*. மின்னல் பரந்து விளங்கினாலொத்த ஒளியினையுடைய பொன்னாலியன்ற படையினைக் குதிரைக்கு அணிவித்தனர் -*[அக.124:9]*. எழிற் குன்றத்தைப் பாடிய சிறந்த புலவன் ஒருவனுக்குக் கான் அமர் கொற்றவை பல படைகளை அணிந்துள்ள குதிரையை அருள் செய்து அளித்தது *[அக.400:5]*. தாழ்ந்த துறையில் நீர் பாய்ந்தாலொத்த தாவிச் செல்லும் குதிரைகள் அழகிய புள்ளிகளையுடைய பல படைகளைப் பூண்டிருந்தன *[அக.400:11]*.

தலைவன், பொன்னாற் செய்தபடைகளால் பொலிவு பெற்ற, யானை மருப்பால் செய்த, வெள்ளிய தேரின்கண் ஏறிச் சென்றான் *[குறு.205:3]*.

கழியின் நீரில் தேர் உருளையின் உள் வாயளவு அமுங்கப் பெறினும் பறவை பறந்து செல்லுதலைப் போன்று பாகன் தாற்றுக் கோலால் தூண்டப்படாமலேயே செல்லும் மனஞ்செருக்கிய குதிரை பொன்னாலாகிய படைகளை உடையதாய் இருந்தது *[நற்.78:9]*. தலைவனுடைய, விசும்பைக் கடந்தாலொத்த தேர்க் குதிரைகள் பொன்னாலாகிய படைகளை அணிந்திருந்தன *[நற்.361:3]*.

பொன்னாலாகிய படையை (நெற்றிப்பட்டம்)யுடைய யானை மேலேறி ஆடவர் வையையின் வெள்ளத்தைக் கலக்கினர் *[பரி.11:52]*.

**4. கலப்பை.** சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனிடம், வெள்ளைக்குடி நாகனார் 'அரசே, போர்முனையில் பகைவரை அழித்து நின் தானையினர் நினக்குத் தேடித் தந்த வெற்றி, உழுகின்ற படையால் - கலப்பையால் - உண்டானதாகும், என்பதை அறிவாயாக', என்று கூறினார் *[புற.35:25]*. உழவர் படையால் கொள்ளப்பட்ட யாமையது ஊனை விருந்தினர்க்கு அளிக்கும் வளநாடன் சோழன் குளமுற்றத்து துஞ்சிய கிள்ளி வளவன் *[புற.42:14]*.

கூனியாகிய காதலி, குறளனாகிய காதலனை வடிவைக் குறித்து நகைமொழி பேச, அதற்கு அக்குறளன், 'படையில் கோத்த வாள் போல் (கொழு) முடங்கியும், மடங்கியும் தோன்றும் நினது கூனுருவ அழகே என்னைக் கொள்ளை கொள்கிறது' என்று கூறினான் *[கலி.94:9]*.

**5. மதிலின் உறுப்பு.** கரிகால் பெருவளத்தான் வட்டமாகிய வடிவினையுடைத்தாகிய பல படையாகச் - மதிலின் உறுப்பாகச் - செய்யப்பட்ட மதிலாற் சூழப்பட்ட வேள்விச் சாலையுள் வேள்வியினைச் செய்து முடித்தான் *[புற.224:7]*.

மதுரை நகரத்தில் தேவருலகிலே செல்லும்படி உயர்ந்த பல கற்படைகளையுடைய மதிலிருந்தது *[மது.352]*.

**6. அடுக்கு.** தலைவி குற்றமற அகன்ற படையாய் - அடுக்காய்- அமைந்த படுக்கையில் துயிலுவாள் *[அக.289:12]*. காதலர் பல படைகளால் ஆகிய மெத்தைகளால் உயர்ந்த வளம் மிக்க படுக்கையின்கண் முயங்கினர் *[அக.305:5]*.

ஞெயன் பெயராலே வெட்டப்பட்ட மாட்சிமையுடைய குளம் படைகளையுடையதாயிருந்தது *[நற்.340:3]*.

படை பொருந்திய படுக்கையில் தலைவனும், தலைவியும் துயின்றனர் *[கலி.10:10]*.

**7. கோட்டை.** நெடிய வேலையுடைய வயவர் குறுகிய படையினுள்-கோட்டையினுள்-இருப்பர் *[அக.35:4]*.

**8. சூட்டுக்கோல்.** கழுவும், சுடுபடையும் - சூட்டுக்கோலும் - இட்டுச்சுருக்கிய தோற்பையையும் சுமந்து கொண்டு ஆயர் ஆனிரையோடு காட்டிற்குச் சென்றனர் *[கலி.106:1]*.

**9. அரிவாள்.** நெற்கதிரினை அறுக்கும்போது சேர்ந்து அறுபட்ட நெய்தற் பூக்கள், படையொடும்-அரிவாளொடும்-கதிரொடும் கலந்து, அரிக்கிடையிலே படுக்கையாகக் கிடந்தன *[நற்.275:3]*.

**படைஞர்-காலாட்படை வயவர்.** பல்யானைச் செல்கெழுகுட்டுவனின் படைஞர் - காலாட் படை வயவர் - நின்று பொருத பகைவருடைய மன்றங்கள் கழுதை ஏர் பூட்டிப் பாழ் செய்யப்பட்டன *[பதி.25:4]*.

**படைத்தான்** - (படைத்தோனாகிய) இறைவன். பழைய ஊழியில் தான் தோற்றுவித்த உலகத்து உயிர்களெல்லாம் முறைமை கெட்டமையாலே அவற்றைப் படைத்தான் - (படைத்தவனாகிய) இறைவன் - அவற்றை மீண்டும் தன்னிடத்திலேயே ஒடுக்கிக் கொள்வது போலக், கதிரவனும்

காலையில் விட்ட ஒளிக்கதிர்களை மாலையில் தன்னிடமே மீட்டுக் கொண்டு மறைந்தான் [கலி.129:2].

**படைத்திசினோர்**-படைத்தவர். நிலத்தையும் நீரையும் ஒன்று சேர்த்து வேளாண்மைக்கு உதவினவர் உலகத்தில் உடம்பையும், உயிரையும் படைத்திசினோர் - படைத்தவர் - ஆவார் [புற.18:23].

**படைத்தோர்** - படைத்தவர். பொருள்வயிற் பிரியக் கருதும் தலைவனிடம், தோழி, 'தலைவியைப் பிரிந்து வாழ்ந்து பொருளைப் படைத்தோர் - படைத்தவர் - தம்மிடம் அடைக்கலமாக அடைந்தவரைப் பாதுகாக்க வேண்டுமென்ற உலக நெறியை மறந்தனரோ', என்று வினவினாள் [நற்.337:10].

**படைத்தோன்** - படைத்தவன், இறைவன். ஒரு மனையில் சாப்பறையும், மற்றொரு மனையில் மணப்பறையும், முழங்க, புணர்ந்த மகளிர் மகிழ, பிரிந்த மகளிரின்கண் நீர் வார, இவ்வாறாக முரண்பட இவ்வுலகைப் படைத்தோன்-(படைத்தவனாகிய) இறைவன்-உறுதியாகப் பண்பில்லா தவனேயாவான் [புற.194:5].

பிரிவால் வருந்தும் தலைவி, தோழியிடம், 'என் தலைவர் பிரிந்து சென்று துன்புறும் பாலை நிலத்தைப் படைத்தோன், அந்நிலத்தின்கண் மெதுவாகச் சென்று துன்புறுவானாக', என்று கூறினாள் [நற்.240:1].

**படைப்பு** - செல்வம். தன்னைப் பாடிய நா, பிறரை ஒரு போதும் பாடாது என்னும்படி, வரையாது வழங்கும் சேரமான் யானைக்கட்சேஎய் மாந்தரஞ்சேரலிரும்பொறையின் படைப்பு-செல்வம் - எல்லையற்றதாகும் [புற.22:30]. பல படைப்புக்களைப் படைத்துப் பலரோடு உண்ணும் பெருஞ்செல்வராயினும் சிறுசிறு செயல்களினால் அறிவை மயக்கும் குழந்தைகளையில்லாதாருடைய வாழ்நாள் பயனில்லாத தேயாகும் [புற.188:1].

**படையன்** - படையை உடையவன். தகடுரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறையின் தேர்களையும், குதிரைகளையும், காலாட்களையும் எண்ண முடியாமையின், அவன் பெரும் படையன் - படையை உடையவன் - ஆவான் [பதி.77:1].

**படையான்** - (மலர் அம்பினை உடையோனாகிய) காமன். வஞ்சனை செய்யும் படையான்-(மலர்க்கணையினை யுடையானாகிய) காமவேள் - இரவின்கண் மகளிர்க்கும், மைந்தர்க்கும் காம உணர்வினை ஊட்டுவான் [பரி.6:57].

**படையோய்**-(வேற்) படையையுடையோய் (முருகனே!) போரின்கண் மிக்குச் சென்று சூரபன்வாகிய மாமரத்தினைக் கிளையோடு அறுத்தருளிய படையோய்-வேற் (படையையுடையோய்! (முருகனே)-என்று தலைவியும், தோழியும் வழிபட்டனர் [பரி.14:18].

**படையோர்** - படைக்கருவிகளைக் கையிலேந்தியவர். போர்ப்பாசறையிலும், பாணர்க்கு ஊனும், சோறும் கலந்த உருண்டைகளை வாரி வழங்கும் நலங்கிள்ளியின் செம்மாந்த பாசறையில் படையோர் - படைக்கருவிகளைக் கையிலேந்தியவர் - செருக்கோடு விளங்கினர் [புற.33:10].

பாண்டியனின் போர்க்களத்தில் பேய்மடையன் (சமையற்காரன்) பிணங்களைக் கொண்டு அட்ட ஊன் சோற்றை அடிபிறக்கிடாத (பேய்ப்) படையோர்க்கு வரிசையறிந்து வழங்கினான் [மது.38].

**பண் - 1.** இசை. சேரமான் பெருஞ்சேரலாதன், சோழன் கரிகால் பெருவளத்தானோடு பொருது புண்பட்ட ஞான்று, புறப்புண் நாணி வடக்கிருக்கும் பொழுது துன்ப மேலிட்டால் யாழ்வாசிப்போரெல்லாம் யாழில் பண்ணை - இசையை - ஒழித்துக் கிடந்தனர் [புற.65:1]. வல்வில் ஓரியைப் புகழ்ந்து பாடுவதற்காக வன்பாணர் விறலியிடம், 'யாழிலே பண்ணை வாசிமின்', என்று கூறினார் [புற.152:14]. பிட்டங்கொற்றன் தன்பால் பரிசில் நச்சி வந்த பண் நிறைந்த நல்ல யாழினையுடைய பாணர்க்குக் கள்ளாகிய தெளிவை நுகர்விப்பான் [புற.170:13].

விழாக்களில் யாழினையுடைய வயிரியர் அவ்யாழைப் பண்ணோடு பொருந்த எழுப்பி மன்றத்தின்கண் இசைத்துறைகளைப் பாடுவர் [பதி.29:8]. இசையெழுப்புகின்ற யாழிற்கு ஏற்ப முழவும் பண்ணோடு பொருந்துமாறு அமைக்கப்படும் [பதி.41:3].

மார்ச்சனை அமைந்த முழவினோடும் பண்ணாலே பொருந்திய சிறிய யாழினோடும் விறல்பட ஆடும் மகளிர் தாளத்திற்கேற்ப ஆடுவர் [பொரு.109]. பண்கள் தன் கண்களிலே உண்டாக்கப்பட்டுத் திண்ணிய வாராலே இறுக வலித்த மத்தளத்தின் ஓசையானது, முகில் அதிர்ந்து முழங்கும் ஓசையைப் போன்றிருக்கும் [மலை.2].

நல்லயாழினை உடைய பாணன் பண்ணின் திறமெல்லாம் அமைந்தவனாக இருந்தான் [அக.346:13]. அதியமானஞ்சியின் பழைய புகழை நிலைபெறச் செய்த பாணனொருவன் தான் செய்த இசை நூலில் பண்ணின் முறைமையினை இயற்றியுள்ளான் [அக.352:15].

தலைவனுக்குப் பாணன் பண்ணினாலே களிப்பினைச் செய்தான் [கலி.72:10]. காளையை வென்றடக்கிய ஆயனையும் அவனுடைய காதலியையும் புகழ்ந்து ஆயர் அவ்வூர் மன்றத்தில் பண்ணமைந்த இனிய தாளத்தோடு குரவைக்கூத்தாடினர் [கலி.102:35]. காதலர் இருவர் கூடிக் களிக்கும்போது புணர்ச்சியின்பம் நிறையுறுவதற்கு முன்பே தலைவன் பிரிந்துவிடுவது, யாழினுள் எழும் பண்ணின் இனிமையைச் செவியால் நுகர்ந்து கொண்டிருக்கும்போதே நரம்பு அறுந்து விடுவதற்கு ஒக்கும் [கலி.142:3].

வையையில் நீர் விளையாட்டயர்ந்த பின்னர் பலர் பாடினர்; அப்பண்ணொலியைக் கேட்டுத், தம்மினமென்று கருதிய ஊரிலிருந்து வந்த வண்டுகள் பாடுபவரின் எதிரே வந்து இசைத்தன *[பரி.10:119]*. வண்டுக்கூட்டம் பண் மட்டும் பெற்றுத் திறம் பெறாத பண்ணைப் (விளரிப் பாலையிற்றோன்றும் யாமயாழின் இசையை) பாடின *[பரி.11:128]*. முருகவேளுக்குரிய திருப்பரங்குன்றத்தில் கடம்பினது மலரில் தாதினை ஊதி முரலும் வண்டுகளின் ஓசை பண்களை ஒத்திருந்தது *[பரி.14:4]*. முருகவேளினது திருப்பரங்குன்றத்தில் பலவிதமான இசைகள் முழங்கவும் மற்றொரு புறம் வண்டுகள் பண்போன்ற இசைத்தன *[பரி.17:12]*.

**2. பண்ணுதல் (ஒப்பனை செய்தல்).** குமணவள்ளலின் குடியினரால் வறுமை போக்கப்பட்ட கூத்தர் பலவாக அடுக்கப்பட்ட பண்-பண்ணுதல்-அமைந்த நரம்பினையுடைய நல்ல யாழை உடையராயிருந்தனர் *[புற.164:11]*.

தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறையின் படையினால் அழிக்கப்பட்ட பகைவரின் தேர்கள் கடுகிச்செல்லுதற்கேற்பப் பண் அமைந்தவனவாய் இருந்தன *[பதி.77:6]*.

வினைமுற்றிய தலைவனைத், தலைவியிடம் சுமந்துவரும் தேர் பண் அமைந்திருந்தது *[அக.234:8]*. சேரன் நெடுஞ்சேரலாதன் பண் அமைந்த முரசினையுடையவன் *[அக.347:5]*.

கடையெழுவள்ளலுள் ஒருவனாகிய ஆய் அண்டிரன் இரவலர்க்குப் பண் அமைந்த நெடிய தேர்களை அளித்தான் *[நற்.167:4]*.

**3. இயல்பு, சீர்.** செல்வக்கடுங்கோ வாழியாதனுக்குரிய நேரிமலையில், தெய்வத்தால் விரும்பப்படுகின்ற காந்தள் பூவில் தாதுண்டதால், விரைந்து பறத்தலையுடைய வண்டானது அப்பறக்கும் பண் - இயல்பு - கெடும் *[பதி.67:21]*.

உவர் நிலத்து உப்பினை மலை நிலத்தில் கொண்டுபோய் விற்கும் உப்பு வாணிகர், முறிந்ததனால் போட்டுவிட்ட பண் அழிந்த வண்டிகளின் பாரில் நாரை முட்டைகளை இடும் *[நற்.138:4]*.

**4. பாட்டு.** போர்முனையில் பகைவரின் யானையைக் கொன்று இறந்தவனைக் கண்ட வேந்தன் போர்முனையில் இறத்தலே புலவரால் பாடப்படும் பண்ணைப்-பாட்டைப்-பெறுதற்குச் சிறந்த வழி என்று கருதிப் போருடற்றி இறந்தான் *[நற்.307:13]*.

**5. பூட்டுதல்.** தேர்ப்பாகன் தேரின் பண்ணினை - பூட்டுதலை- ஆராய்ந்து அத்தேரினைச் செலுத்தினான் *[அக.340:3]*.

**பண்டம்** - பொருள். 'மிகுதியான பண்டங்கள் - பொருள்கள்- நிரப்பப் பெற்றிருந்தாலும் ஆற்றல் மிக்க கடாவினால் அதனைக் கொண்டு செலுத்த இயலாமற் போகுமோ? அதுபோல, நீ போர்க்களம் புகில், நின்னால் வெல்லப்படாதாரும் உளரோ? என ஔவையார் அதிகனிடம் கூறினார் *[புற.90:7]*. பண்டங்கள் மிகுதியாக் இடப்பட்ட வண்டியின் அச்சு முறியுமாயின் அதற்குச் சேம அச்சு உதவினாற் போல, நாட்டைக் காப்பவன் பொகுட்டெழினி *[புற.102:2]*. 'பசியால் வற்றிய எம் வயிற்றைப் பஞ்சாகிய பண்டம் திணிக்கப்பட்ட மூட்டையைப்போலக் கொழுவிய ஊன் துண்டினால் நிரப்புவாயாக', என்று சோழன் குளமுற்றத்துத் துஞ்சியகிள்ளி வளவனிடம், புலவர் நல்லிறையனார் கூறினார் *[புற.393:13]*.

வெளிநாடுகளிலிருந்து கடல் வழியாக நாவாய்களில் பொன் மிகுதற்குக் காரணமான சீரிய பண்டங்கள் (சரக்குகள்) வந்து இறங்கும்படியான நெல்லூரினைப் (சாலியூர்) பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் வென்றான் *[மது.61]*. மதுரை நகரிலுள்ள வணிகரின் இல்லங்களில் பல்வேறு வகையான பண்டங்களோடே, பல உணவுகளும் மிகுதியாயிருந்தன *[மது.503]*. மரக்கலங்களில் கொணர்ந்து பல்வேறு பண்டங்களை இறக்குகின்ற பட்டினத்தின்கண் ஒல்லென முழங்கும் ஓசையைப் போல, மதுரை மாநகரில் அல்லங்காடியின் ஓசை இருந்தது *[மது.537]*. முகில் கடலிலே முகந்த நீரை மலையில் பொழிவதும், மலையில் பொழிந்த மழைநீர் கடலிற்குச் செல்லுவதுமாகிய மழைக்காலம் போலக், காவிரிப்பூம்பட்டினத்தின் கடற்கரையில், கடலிலிருந்து மரக்கலத்தில் வந்த பண்டங்களும், மரக்கலத்தில் ஏற்றி வெளிநாடுகட்கு அனுப்ப வேண்டிய சரக்குகளும், அளவிட இயலா அளவிற்கு வந்து குவிந்து கிடந்தன *[பட்.131]*. காவிரிப் பூம்பட்டினத்தின் கடற்கரையில் மரக்கலத்தில் வந்து இறங்கியனவும் மரக்கலத்தில் ஏற்றுதற்கரியனவுமாகிய பண்டங்களின் மீது இலச்சினை இடுவோனால் சோழனுக்குரிய புலியிலச்சினையிடப்பட்டன *[பட்.136]*. காவிரிப்பூம்பட்டினத்தில் உள்ள வணிகர் உழவரின் நுகத்தடியின் நடுவில் தைத்த ஆணிபோல நடுவுநிலையோடு உண்மையே பேசித் தம் பொருளையும், பிறர் பொருளையும் சமமாகவே கருதிக், கொள்வதை மிகுதியாகக் கொள்ளாமலும், கொடுப்பதைக் குறைவாகக் கொடாமலும் பல்வேறு பண்டங்களையும் வெளிப்படையாகவே உரிய விலையைக் கூறி விற்று வாழ்ந்தனர் *[பட்.211]*.

தலைவி, நறுமணப் பண்டங்கள் நாறும் கூந்தலினையுடையவள் *[அக.181:23]*. உப்பு வணிகர் சுரநெறியில் யா மரத்தின் நிழலில் முதுகில் பண்டங்கள் ஏற்றிய கழுதைகளை நிறுத்தி அவைகளின் பாரத்தாலாய தளர்வினைப் போக்குவர் *[அக.343:13]*.

தன்னைத் தடுத்து நிறுத்தும் காதலனிடம், காதலி, 'கடன் வாங்கியவரைக் கண்டபோது கடன் கொடுத்தவர் தம் பண்டத்தைக் கேட்பது போல, நீ கேட்கும் அளவிற்கு நான் உன்னிடம் வாங்கியதுதான் யாதோ?' என்று கேட்டாள் *[கலி.108:22]*.

**பண்டரங்கம்** (பாண்டரங்கம்)-சிவனாடிய கூத்திலொன்று. சிவபெருமான் பலபோர்களை வென்று அப்போர்களில்

அழிந்தவரின் உடல்களைச் சுட்டெரித்த வெண்சாம்பலைப் பூசிக்கொண்டு பண்டரங்கத்தை - பாண்டரங்க மென்னும் கூத்தினை - ஆடும்பொழுது உமாதேவியார் தாளத்தின் இடைநிலையாகிய தூக்கென்னும் தாள வகையை இயக்கினாள் *[கலி.1:9]*.

**பண்டாரம்** - கருவூலம். வையையில் நீராடும் மகளிருள் ஒருத்தியைக் காட்டி, 'இவளுடைய கண்கள் மதவேளுடைய (காமன்) பண்டாரமும் - கருவூலம் - படைக்கலங்களும் ஆகும்', என்று, ஒராடவன் தன் நண்பனிடம் கூறினான் *[பரி.11:123]*.

**பண்ணன்** - கொடையாளி.1. **சிறுகுடிகிழான் பண்ணன்.** 'இரவலனே, மணத்தை ஆராயும் ஆராய்ச்சியையுடைய வண்டு சிறு வெள்ளாம்பலின் மீதே ஊதுதற்கிடமான கைவள் ஈகையையுடைய பண்ணனது சிறுகுடிக்கண் (சிறுகுடியென்னும் ஊரின்கண்) மலர்ந்த பாதிரி மலர்போல் மணக்கும் கூந்தலையுடைய விறலியுடனே நீ கிள்ளி வளவனது நல்ல புகழை நினைந்து செல்வையாயின் செல்வத்தையுடையவன் ஆகுவை', என்று கோவூர்கிழார், இரவலனை, வளவனிடம் ஆற்றுப்படுத்தற்கிடையே பண்ணனது சிறுகுடியின் பாதிரியைச் சிறப்பிப்பார் *[புற.70:13]*. 'யான் உயிர் வாழும் நாளையும் பெற்றுப் பசிப்பிணி மருத்துவனான பண்ணன் வாழ்வானாக', என்று, சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், பாணன் கூற்றில் இவனை வாழ்த்திப் பாடியுள்ளான் *[புற.173:1]*. 'பண்ணனை நாள்தோறும் பாடேனாயின், என் சுற்றத்தைக் காத்துவரும் வழுதி அவ்வாறு காக்கும் கண்ணோட்டம் ஒழிவானாக', என்று மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார், இவனது கொடை மேம்பாட்டைப் பாடுவர் *[புற.388:10]*. தனக்கென்றே வாழானாய்ப் பிறர்க்கெல்லாம் உரியவனாகிய பண்ணது சிறுகுடியின் தோட்டத்தில் உள்ள நெல்லியின் செவ்விக்காய்களைத் தின்றவர் நீர் குடித்த காலை எழும் சுவை போல, இனிய மொழிகளைப் பேசித், தலைவி புதல்வனுக்குப் பாலூட்டி நிற்கும் நிலையை நினைந்து, வினைமுற்றி மீளும் தலைவன் பாகனை விரைவுப்படுத்தினான் *[அக.54:14]*. 'வென்றி வேலினை அதன் இலைமுனை நிறமாறிச் செம்மையடையுமாறு செலுத்திப் பகைவருடைய மலைபோலும் யானைகளைப் போரிலே அழித்த, அணிந்த கால்களையுடைய பண்ணனது காவிரியின் வடபாலுள்ள, குளிர்ந்த குளத்தினை அடுத்துள்ள மாமரத்தின் தளிரையொத்த ஆகத்தில், அழகுபெற அரும்பிய நின் முலையிற் பரந்த சுணங்கிடைத் தொய்யில் எழுதுதலை நினைந்து, தலைவர் விரைந்து வருவர்', என்று, தோழி, பிரிவுக் காலத்தில், தலைவியை வற்புறுத்தினாள் *[அக.177:6]*.

**2. வல்லார் கிழான் பண்ணன்.** வாய்த்த வாளையுடைய பண்ணன் வலார் என்னும் ஊரிடத்தே உள்ளான்; நினது உண்ணப்பெறாத சுற்றம் உண்டு பிழைத்தல் வேண்டுவையாயின், அவன் வேற்றுப் புலத்திற்குப் போகாமுன் நின் பசிக்குப் பகையாகிய பரிசிலைக் கொள்ளுதற்கு நீ இப்பொழுதே அவனிடம் செல்வாயாக', என்று பாணனை, ஆற்றுப்படுத்துவர், சோணாட்டு முகையலூர்ச் சிறுகருந்தும்பியார் *[புற.181:5]*.

**பண்ணி** - படைத்தலைவன்; கொடையாளி. 'தென்னவன் மறவனும், பயம்பிற் பிடித்த பழகாத யானைகளை, உரிய மொழிகளால் தொழிலை அறிவிக்கும் சிறுபொழுதல்லது, தனக்கெனக் கால வரையறையின்றி, இரவலர்க்கு வழங்குவோனும், கூர்மை வாய்ந்த அம்பினையுடையோனும். கோடை மலைக்குத் தலைவனுமான பண்ணியென்பான் செய்த பயன்மிக்க களவேள்வி போலச், சிறந்த பயன், நீர் தேடி வரும் பொருளால் நிகழுமாயின், நீர் இவளைப் பிரிந்துறையின் அப்பிரிவினையாற்றாது இவள் இறந்து படுவாளாதலின், நும் செய்பொருள் முயற்சிக்கு இடையூறுண்டாகாது செல்க', என்று தோழி, தலைவியைப் பிரியலுறும் தலைவனைச், செலவழுங்குமாறு குறிப்பிற் கூறினாள் *[அக.13:11]*.

**பண்ணியம்** - 1. பொருள். ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் பல்வேறு நாடுகளிலிருந்து வந்தனவும், மலை, காடு முதலியவைகளிலிருந்து வந்தனவுமாகிய செல்வப் பண்ணியங்களை - பொருள்களை - அறம் முதலியவற்றிற்கு வகுத்துச் செய்யும் முறைமையுடையவன் *[பதி.59:15]*. மரத்தில் பழுதுற்றால் பழுதினைப் போக்கி, அம்மரக்கலத்தை வலிமையுறுத்தும், கடல் வாயிலாகப் பண்ணியம் தேடும் கடல் வாணிகர் போலப், போரில் யானைகள் அடைந்த புண்களைப் போக்கி அவற்றின் துயரினைக் களைபவன் தகடுரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறையாவான் *[பதி.76:5]*.

மதுரை மாநகரத் தெருக்களில் வரும் நால்வகைப் படைகளுக்கஞ்சி ஒதுங்கியிருந்து அவை போனபின்னர் பல்வேறுபட்ட பண்ணியங்களை விற்போர் மலை போன்ற மாடங்களின் நிழலில் இளைப்பாறுவர் *[மது.405]*. மதுரை நகரில் அறநெறிப்படி வாழ்ந்து, மலை, நிலம், நீர் முதலியவற்றில் உண்டாகும் மணிகளையும், முத்துக்களையும், பொன்னையும் வாங்கிக் கொண்டு அயல்நாட்டுப் பண்ணியங்களை விற்கும் வணிகர் தெருவும் இருந்தது *[மது.506]*. மதுரை நகரத்தே வைகறைப் போதில் பலவாய் வேறுபட்ட பண்ணியங்களையுடைய கடைகளை அவ்வவற்றிற்குரியோர் மெழுகுதலைச் செய்தனர் *[மது.661]*. காவிரிப்பூம்பட்டினத்தின் வேளாளர், விருந்தினர் நுகர்தற்குரிய பல பண்ணியங்களைக் கொடுத்து வாழ்ந்தனர் *[பட்.203]*.

பல்வேறு நாடுகளிலிருந்து வரும் கலங்களில் வந்த பல்வகைப் பண்ணியங்கள் இறக்கப்பட்ட கடற்கரையையுடையவன், தலைவன் *[நற்.31:9]*. திருமால் உறையும் இருந்தையூர் என்னும் திருப்பதியில் உண்ணுவ, பூசுவ, பூண்பவை உடுப்பவை, மணி, பொன், முதலிய பலவகையான குற்றமற்ற பயன்படு

பண்ணியங்களை விற்கும் வணிகர் தெருவும் இருந்தது *[பரி.தி.1:24].*

**2. நுகர்பொருள்.** மதுரை நகரில் நரைத்த கூந்தலையும், அழகினையுமுடைய முதுமகளிரும், மயில் போன்ற சாயலினையுடைய மகளிரும், மடப்பம் பொருந்திய இளம் மகளிரும் பலவகையான செப்புக்களில் கண்டார் விரும்பும்படியான நுகர்தற்குரிய பண்ணியங்களை- நுகர்பொருள்களை- மனைகள் தோறும் சென்று விற்பர் *[மது.422].*

**3. தின்பண்டம்.** முருகவேளுக்குரிய திருப்பரங்குன்றின்மேல், பாண்டியனோடு ஏறி வலம் வந்தோருட்சிலர், குரங்குகள் உண்ணுவதற்குப் பண்ணியங்களை தின்பண்டங்களை - அளித்தனர் *[பரி.19:38].*

**பண்ணு** - இசை. செல்வங்கடுங்கோ வாழியாதன், தன் நாளோலக்கத்தின்கண் பாலை யாழ் வாசித்தலில் வல்லானொருவன் சுவைக்குரிய உறுப்பினையுடைய பாலைப் பண்ணு - இசை - எல்லாவற்றையும் மாறிமாறி ஒவ்வொன்றாக இசைத்தாற்போலப் பல்வேறு வகையான களிப்பினைத் தருகின்ற கள்வகைகளை மாறிமாறிச் சேற்றையுண்டாக்கும் மழைபோல, எல்லோருக்கும் வழங்கினான் *[பதி.65:15].*

மதுரை நகரக் குலமகளிர், முதல் யாமத்தில், தம் கணவரைக் கூடும் அவாவினால் கோலம் புனைந்து, அவரைக் கண்டவழி நாணமேலீட்டினால் புணர்ச்சி வேண்டாரைப்போலச் சீறியாழினை எடுத்துப் பண்ணுக்களை மாறிமாறி யிசைத்தனர் *[மது.560].* யாழினை மீட்டும்மகளிர் யாழில் இசை கொள்ளும்படி குளிர்ச்சியாலே தன் நிலைகலைந்த இனிய குரலாகிய நரம்பை முலையின் வெப்பத்தில் தடவி யாழில் பண்ணுவை நிற்கும் முறையிலே நிறுத்துவர் *[நெடு.70].* யாழிடத்துப் பல்வேறு பண்ணுக்களை மாறிமாறி இசைக்குமித்து எழும் புதிய இன்பம் போல, நன்னனுடைய மருதநிலப் பொழில்களும், சேரிகளும் இன்பம் நல்கும் *[மலை.51].*

**பண்ணுந-கலனை (சேணம்) முதலிய பொருள்கள், கலன்.** வையையில் புதுநீர் வரக்கண்ட மதுரையின் மக்கள் மகிழ்ச்சியின் மையலால் குதிரைகளை ஒப்பனை செய்தற்குரிய பண்ணுந - கலனை முதலிய பொருள்களைக் - கொண்டு யானைகளுக்கு ஒப்பனை செய்தனர் *[பரி.20:18].*

**பண்ணை-1. கீரை வகைகளுள் ஒன்று** (பண்ணைக்கீரை) திரி மரத்தால் (திரிகை) அரைக்கப்பட்டுச், சுளகினால் கொழிக்கப்பட்ட வரகின் வெள்ளிய அரிசி பண்ணையின் - பண்ணைக் கீரையின்-வெள்ளிய பழத்தின் அரிசியைப் போன்றிருக்கும் *[அக.393:9].*

**2. விளையாட்டு.** தலைவன், தோழியிடம், 'பண்டுயானும், தலைவியும் நீரில் பாய்ந்து பண்ணை - விளையாட்டு - அயரும் போது அந்த நீர்த்துறை முழுதும் குவளை மலரின் மணமே கமழ்ந்து, மிக்க குளிர்ச்சியும் ஆயிற்று', என்று புகழ்ந்து கூறினான் *[ஐங்.73:2].*

தலைவன், தோழியிடம், 'களவுக் காலத்தில் தலைவி நீர்த்துறையருகே நின்ற மருதமரத்தின் மேலேறி நீரில் பண்ணையாகப் பாய்ந்தபொழுது அவளுடைய கூந்தலானது வானத்தினின்றும் கீழே இறங்குகின்ற மயிலினது தோகைபோல அழகாகக் காணப்பட்டது', என்று புகழ்ந்து கூறினான் *[ஐங்.74:4].*

**பண்ப** - குணவானே! தலைவன் வேறொரு பெண்ணோடு களவொழுக்கம் புரிகிறான், என்பதை அறிந்துகொண்ட தலைவி, மறுக்கும் அவனை 'அன்பை முறித்துக்கொண்ட பண்ப - குணவானே -'என்று நகையாடிக் கூறினாள் *[பரி.6:63]*

**பண்பிலாளன் - நற்குணமில்லாதவன்.** 'ஒரு மனையில் சாக்காட்டுப்பறையும், மற்றொரு மனையில் மணமுரசும், ஒலிக்கவும் ஒரு பெண் காதலனோடு கூடிக் களித்திருக்கவும், மற்றொரு பெண் மங்கலநாண் இழப்பவுமாக, முரண்பட்டதாக இவ்வுலகைப் படைத்தவன் அறுதியாகப் பண்பிலாளனே - நற்குணமில்லாதவனே - ஆவான்' என்று, புலவர் பக்குடுக்கை நன்கணியார் பாடினார் *[புற.194:5].*

**பண்பினவ்வை - தன்மையை உடையவை.** ஆயர்கள், பலதேவன் போன்ற வெள்ளை, திருமால் போன்ற காரி, முக்கண்ணானைப் போன்ற குரால் முருகன் போன்ற சிவலை முதலிய பண்பினவ்வை-தன்மையை உடையவையும்-பிற காளைகளையும் விரும்பித் தொழுவிலே புகுதவிட்டார் *[கலி.104:15].*

**பண்பினார் - நற்குணமுடையவர்.** 'பெருமானே! கடல் போன்ற நால்வகைப் படைகளையும், பெருஞ்செல்வத்தையு முடைய பேரரசராயினும் மதியாதாரை யாங்கள் மதியோம்; எங்களால் மதிக்கப்படுவோர், வளம் குறைந்த சிற்றரசராயினும் எங்களிடம் முறைமை அறிந்து நடக்கும் பண்பினார் - நற்குணமுடையவர் - யாரோ?' அவரையே மதிப்போம்', என்று, புலவர் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார், பரிசில் நீட்டித்த, சோழன் குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமா வளவனிடம் கூறினார் *[புற.197:14].*

**பண்பு - 1.** நற்குணம் (குணம்), நினது வளமான நாட்டில் வாழும் நின்னுடைய படை மறவர், நின் பகைவரின் சிறுகுடியைப் போலன்றி, வளமான இல்லங்களைப் பெறுவதோடு, வறுமையுடையோர் பால் இரக்கங்காட்டும் பண்புடையவராகச் - நற்குணமுடையவராகச் - செய்வாயாக', என்று, புலவர் உறையூர் முதுகண்ணன் சாத்தனார், சோழன் நலங்கிள்ளியிடம் கூறினார் *[புற.29:21].* ஒரு வேந்தன், போர்முனையில் எதிர்த்துத் தாக்க வாராமல், பாசறையிலேயே

தங்கியிருக்கும் பகை வேந்தனையும், அவன் படைகளையும் தாக்காமல், மறுநாள் வரும்பொருட்டுத் தம் விரைந்த செலவினையுடைய குதிரையின் போர்ப் பண்புகளைப் புகழ்ந்து கொண்டு தனது இல்லத்திற்குச் சென்றான் *[புற.301:13]*. தந்தையால் மகட்கொடை மறுக்கப்பட்டவரும், பல போர்களுக்குக் காரணமானவளுமாகிய, ஒரு தலைவி, திருமகளும் விரும்பத்தக்க நற்பண்புடைய அழகியாகத் திகழ்ந்தாள் *[புற.342:5]*. ஓர் இளைய தலைவியின் அல்குலிடத்தே பரந்துள்ள அழகிய வரிகள், ஒன்று, நல்ல ஊர்களுடனே விழுமிய பொருள்களைத் தரலாம்; அல்லது, மற்றொன்று, ஊர்களைத் தீயிட்டுக் கொளுத்தும் பண்பு இல்லாத மறச் செயல் செய்வதாகலாம் *[புற.344:6]*. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் பகைவரும் புகழ்ந்து பாராட்டும் ஆண்மையினை நண்பர்க்குக் குறையில்லாதவாறு உதவும் பண்பினையும் உடையவன் *[புற.373:36]*.

இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன், பலரும் புகழும் பண்பினையுடையனாய் இருத்தலால், அவனுடைய பல்வகைப் பண்புகளையும் காண விரும்பியே பகைநாட்டையும், அவன் நாட்டையும் கண்டு வந்ததாகக் குமட்டூர்க் கண்ணனார் கூறினார் *[பதி.15:32.40]*. பல்யானைச் செல்கெழுகுட்டுவனைப் பகைத்தோர் நாடுகள், பயன்பொருந்திய இருளகற்றும் பண்பினையுடைய, ஞாயிறு சாயாமலிருக்கும் ஒரு உச்சிப் பொழுதிற்குள்ளேயே பாழாய்விடும் *[பதி.22:33]*. ஊன் துண்டங்கள், வேறு, சோறு வேறு என்று பிரிக்க முடியாத, ஊன் சோற்றை வயவர்க்களிக்கும் பண்பு படைத்த தானையை உடைய வேந்தருள்ளே கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனுக்கு நிகராவைரொருவருமில்லை *[பதி.45:17]*.

முருகப் பெருமானுக்கு, நன்மக்களாலே புகழப்பட்ட உயர்ந்த சிறந்த புகழினையுடைய அலைவாய் (திருச்செந்தூர்) என்னும் திருப்பதியில் எழுந்தருளுதலும் நிலைபெற்ற பண்பாகும் *[முரு.125]*. ஞாயிறு சுட்டெரிப்பதாலே மரங்கள் முதலியன கருகி, மழையில்லாததால் மலைகளில் அருவியின்றி ஒழியவும், முகில் கடலில் நீரினை முகவாதொழியும்படியான பெரிய வற்கடம் உண்டாகிய பண்பில்லாத காலத்திலும் காவிரி வற்றாது ஓடி வளங்கொழிக்கும் *[பொரு.237]*. பிறரிடத்து நில்லாது செல்லும் இயல்பையுடைய புகழ் தன்னிடத்தே நிலைத்து நிற்றற்குக் காரணமான பண்பினையுடையவன், ஓய் மானாட்டு நல்லியக்கோடன் *[சிறு.268]*. 'தாயே, அன்பினாலே வேலனையழைத்து வெறியெடுக்கும் நீயும் தவறிலை; தலைவியும் பண்புடையளாவாள்' என்று, தோழி, தாயிடம் அறத்தொடு நின்றாள் *[குறி.வெ.1:1]*.

மகட்போக்கிய தாய், 'என் மகள், கணவனுடன் போகும் வழியில், பொருளின்றி வரும் புதியவர்களைப் புரக்கும் நல்ல பண்புனையுடைய துளு நாட்டைப் போன்ற ஊர்களையும், அவ்வூரில் முகமறிந்த மக்களையும் அடைவார்களாக', என்று வேண்டினாள் *[அக.15:7]*. போர்வினை முற்றி மீளும் தலைவன், தேர்ப்பாகனிடம், 'பாகனே, குளிர்ந்த குடவாயில் என்னும் ஊரையொத்த சிறப்பினளாகிய நம் தலைவியது பண்புனையுடைய ஆகத்தின் கண்ணே (மார்பில்) இனிய துயிலைப்பெறுவதற்குத் தேரினை விரைந்து செலுத்துக', என்றான் *[அக.44:19]*. குறித்துச் சென்ற நேரத்தில் வாராமல், காலங்கடந்து வரும் காதலனை நோக்கி, இனிய பண்பில்லாத வாடைக்கு ஆற்றாது, புறத்தேயுள்ள மனைமரத்தின் கிளை முறியுமாறு, தொங்கிக் கொண்டு, நீண்ட நேரம் தலைவி நின்றாள் *[அக.58:11]*. பிரிவினால் வருந்தும் தலைவியிடம், தோழி, 'தோழியே, நெற்றியில் பசலை பரவவும், தோள் வாடவும் நாடோறும் அவரின் பண்பினையே நினைத்துக்கொண்டு வருந்திக் கொண்டிராதே', என்று கூறினாள் *[அக.171:4]*. வரையப் போகும் தலைவனைக் குறித்துத், தலைவியிடம், தோழி, 'தோழியே, பனிக்காலத்தில் இரவில் தனிமை தாங்கற்கரிதென்று கருதி நின்னைக் கனவிலும் தலைவன் பிரியச் கருதான்; மேலும் அவன் தனது இனிய பண்பினால் நின்னைக் கண்ட முதல் நாளைப் போலவே எப்பொழுதும் பாதுகாப்பான்', என்று கூறினாள் *[அக.178:22]*. பிரிந்திருக்கின்ற தலைவியைப், பனியுடன் கூடிய பண்பில்லாத வாடைக் காற்று, மாலைப் பொழுதில் நலிதலால், அவளுடைய நுதலில் பசலை பாய்ந்து, மேனி அழகுகெட்டது *[அக.235:15]*. தலைவிக்கு வந்த நோய் தலைவனுடைய பண்புகளினால் வந்ததென்று அறியாததாய் வெறியாட்டெடுத்து ஆட்டுக்குட்டியினையும் பலியிட எண்ணினாள் *[அக.242:7]*. காலைப் பொழுதில் தெளிந்த கள்ளினை அருந்தி மகளிர் குடத்தில் நீர் எடுத்துச் செல்லுவதற்கு நீர்த்துறைக்கு வந்த பொழுது நீர் கலங்கியிருந்தமையால் குடத்தினை வைத்துவிட்டுத் தம் கணவர் தம் பண்பில்லாத பரத்தமைகளைப் பாடிக் காஞ்சி மரத்தின் நிழலில் குரவையாடுவர் *[அக.336:8]*.

தலைவனின் பொருட்பிரிவிற்கு உடன்பட்ட தோழியிடம், தலைவி, 'தோழியே, கடமையின் காரணமாக ஆடவர் பொருளீட்டுதற்குச் செல்லும்பொழுது மறுத்துக் கூறாமல் உடன்படுவதே சிறந்த பண்பாகும்', என்று கூறினாள் *[நற்.24:9]*. களவுத் தலைவியிடம், தோழி, தோழியே, நேற்று நம்முடன் கிளிகடிந்து விளையாடியும், ஒன்றும் கூறாமற் சென்றுவிட்ட என்னை, விரும்பாத அவனுக்காகக், கழன்ற தொடியைச் செறித்த எனது பண்பில்லாத செய்கையை என்னுள்ளம் நினைக்கின்றது', என்று கூறினாள் *[நற்.25:12]*. வற்புறுக்கும் தோழியிடம், தலைவி, 'தோழியே, மாலைப் பொழுதில் தலைவன் என்னை நினையாராகிப் பிரியவும் எனது காமநோயை முருகனால் வந்ததென்று வேறொன்றன்மேல் அயலார் பழி கூறுதல் பண்பற்றதாகலின் யான் நெடுநாள் உயிரோடிரேன்', என்று கூறினாள் *[நற்.117:11]*. ஒரு பெண்ணுக்காக நினது ஆற்றலை இழக்கலாமா? என்ற, கற்றறி பாங்களிடம்,

தலைவன், 'பாங்கனே! தலைவியின் கண்களைக் காணுவதற்கு முன், யானும் நயன், நட்பு, நாண், பயன் முதலிவற்றோடு தீச்செயல் கண்டவிடத்து அச்செயலில் உள்ளம் செல்லாதவாறு மீட்டு நன்னெறிக்கண்ணே நிறுத்தும் பண்பையும் உடையவனாகவே இருந்தேன்', என்று கூறினான் *[நற்.160:2]*.

பாணனிடம், பரத்தை, 'பாணனே! தலைவியிடம் தலைவன் சென்றிருப்பது, அவளுடைய பண்பிற்காகவே அன்றி அழகுக்காக அன்று, என்று கூறினாள் *[ஐங்.89:4]*. காதல் கொண்ட தலைவன், தோழியிடம், தோழியே, நின் தோழியாகிய தலைவி என்னுடைய பெருமையும், உரனுமாகிய பண்பையும், துயிலையும் கவர்ந்து கொண்டாள் என்று கூறினாள் *[ஐங்.176:1]*. பிரிந்து செல்லும் தலைவன், இடைச்சுரத்தில், தன் நெஞ்சிற்குக் கூறுவானாய், 'நெஞ்சே, அவளோடு இருக்கும்பொழுது நம்மை இன்புறுத்திய தலைவியின் பண்பு, அதோடமையாது, இக்கொடிய சுரத்தின்கண்ணும் வந்து நம்மை இன்புறுத்துகின்றது', என்று கூறினான் *[ஐங்.323:4]*. பொருளீட்டி மீண்டுவந்த தலைவனைத், தோழி, சுரத்தின் வெம்மையை எவ்வாறு ஆற்றினீர், என்றாட்குத், தலைவன், 'என் காதலியின் அமிழ்தன்ன பண்புகளைத் துணையாகப் பெற்றமையானே அவ்வருஞ்சுரம் என்னை நலியவில்லை', என்று கூறினான் *[ஐங்.325:4]*. 'இப்பாலை, நிலமோ துன்பத்தையே தருகின்றது; தலைவியின் பண்புகளோ இன்பத்தையே தருகின்றன; இருவேறு இவ்வுலகத்தியற்கை இருந்தவாறென்னே', என்று பொருள்வயின் பிரிந்து செல்லும் தலைவன் இடைச்சுரத்தில் நொந்து கூறினான் *[ஐங்.326:5]*. யானையானது கை வேதல் அஞ்சி, நிலத்தைத் தொடாத இக்கொடிய பாலையில் என் காதலியின் இனிய பண்புகள் வந்து குளிர்ச்சியை யூட்டிப் பேணுகின்றன', என்று இடைச்சுரத்தின் கண், தலைவன் கூறினான் *[ஐங்.327:5]*. 'தலைவன் பிரிந்து செல்லும் சுரத்தில் துணையோடு வாழும் விலங்கினங்கள் 'நீ நின் துணைவியைப் பிரிதல் அறமாகாது', என்று அவனுக்குக் கூறாமையாலே, அவைகள் பண்புடையன அல்ல, என்று, தலைவி, தோழியிடம் கூறினாள் *[ஐங்.332:3]*. 'நம்மகளோ, அவளுடைய புதல்வனைத் தழுவிக் கொண்டு படுத்திருக்கிறாள். அவளுடைய காதலனோ அவளுடைய புறத்தைத் தழுவிக்கொண்டு படுத்திருக்கிறான்; யாழிசை காதுக்கு இனிமை தருவதுபோல, இக்காட்சி கண்ணுக்கு இனிமை தருவதோடு வாழ்வுப் பண்பிற்கும் ஓர் எடுத்துக்காட்டாகவும் விளங்குகிறது', என்று மகள் வாழ்வினைக் கண்டு உவந்து வந்த செவிலித்தாய், நற்றாயிடம் கூறினாள் *[ஐங்.402:4]*.

நம் தினைப்புனத்தில் ஒருநாள் யான் ஊசலாடிக் கொண்டிருக்கும்பொழுது ஓர் அழகன் அங்கு வந்தான். அவன்மீது காதல் கொண்டுவிட்ட யான், அவனை, அதனை, ஆட்டும்படி கூறினேன்; ஊசலை அவனும் ஆட்டினான்; கை நழுவினவள் போல, அவன் மார்பில் விழுந்தேன்; உடனே எழுந்திருந்தால், 'ஒண்குழாய், யாரும் அறிவதற்கு முன் சென்றுவிடு', என்று அனுப்பிவிடும் உயர் பண்பினன் அவன், ஆகவே, யான் எழாமல் அவன் மார்பிலேயே கிடந்தேன்', என்று, தலைவியின் களவை அறிவதற்காகத், தோழி படைத்து மொழியாகத், தலைவியிடம் கூறினாள் *[கலி.37:21]*. வரையாது வந்தொழுகும் தலைவனிடம், தோழி, 'வெற்பனே, தன் துயரினைத் தோழியர் அறிந்தால் நின்னைப் பண்பில்லாதவன் என்று பழிப்பார்களே என்பதற்காகத் தன் ஆயத்திற்கும் கூறாது விடுத்துத் தனது நற்பண்பினால் நின் தீமைகளை எல்லாம் காத்த தலைவியின் துயரைக் களைய் வருவாயாக', என்று கூறினாள் *[கலி.44:16,19]*. 'பரத்தையிடம் கூடிக் குலாவி பண்புகெட்டுவரும் தலைவனுடன் ஊடித் துரத்துவேன், என்றிருப்பேன்; ஆனால், அவன் வந்தவுடன், என்நெஞ்சம், அவனுடன் சென்று ஒன்றிவிடுகின்றதே, என் செய்வேன்' என்று, தலைவி, தோழியிடம், கூறினாள் *[கலி.67:11]*. பண்புடைய நல்ல நாட்டில், வேற்றுப்படை புகுந்ததைக் கண்ட அந்நாட்டு மக்கள், வேறொரு நல்ல நாட்டில் குடியேறியிருந்து. தம் நாட்டைத் தம்மரசன் மீட்டவுடன், மீண்டும் வந்து குடியேறினாற்போல, வந்த புதுவெள்ளம், தானிருந்த மலரைச் சாய்த்து விடவே, வேறொரு குளத்தில் உள்ள மலரில் போய் வாழ்ந்திருந்து, முன்பு இருந்த குளத்தில் நீர் வற்றி அம்மலர்சீர்பெற்றுவிடவே, பண்டைய மலருக்கே வண்டு சென்றது *[கலி.78:4]*. பிரிந்து போன காதலனைப் பற்றித், தலைவி, தோழியிடம், 'அழகும், காதலுமுடைய மனைவியரோடு சேர்ந்து நம் துயரைக் காணாத பண்பினன் என்பதை அறிவேன்; இருளோடு மாறுபடுகின்ற கரிய கூந்தலையுடைய தொன்முறை மனைவியரோடே பொருந்தி நம் வருத்தத்தை அறியாத பண்பினன் என்பதை அறிவேன்; ஒள்ளிய இழையினையும், காதலையுமுடைய மனைவியரோடு கூடிவாழும் அவன் நம்மை நினைக்கும் பண்பில்லான் என்பதை அறிவேன்; என்றாலும் அவன் முன்பு என்னைப் புல்லி எனக்களித்த அருளை எண்ணி எல்லாவற்றையும் மறந்து போகிறேன்', என்று கூறினாள் *[கலி.122:9,13,17]*. மக்களுக்குப் பண்பு என்று சொல்லப்படுவது உலகவொழுக்கத்தை அறிந்து ஒழுகுதலாகும் *[கலி.133:8]*. 'பரந்த சுணங்கையும், மூங்கில் போன்ற தோளையுமுடைய இவள் எனது கண்ணிலிருந்து மறைந்தவுடனே கொடிய நோயைக் கொடுக்கிறாளே, இவளுடைய பண்பே இதுதானோ', என்று காதல் மீக்கூர்ந்த தலைவன் கூறினான் *[கலி.141:16]*. தலைவன் பிரிந்ததால் காதல் மீக்கூர்ந்து, தலைவிபடும் துயரைக் கண்டவர் இக்கனங் குழையாளின் துயர்நிலை நம்மைத் துன்புறுத்தும் என்று கருதாமல் இவுள் பண்பினை முற்றக் காண்போம் என்று கூறினர் *[கலி.142:14]*. பிரிவினால் காதல் மீக்கூர்ந்த தலைவி, ஊரவரிடம், 'ஊரவரே! இக்கடும் பகற்காலமானது, என் உறக்கத்தைக் கெடுத்து என்னை நினையாது கைவிட்டுச்

சென்ற என் காதலன், தன் பண்பினால் தந்த, இக்காம நோயால் வந்த, கடுங்குளிருக்கு வேது கொடுப்பதுபோல், உள்ளது; உமக்கு எவ்வாறு உள்ளதோ?' என்று கூறினாள் *[கலி.145:25]*.

**2. தன்மை.** புறமுதுகிட்டோடுவதைக் கண்டு, பாரி நாணமுற்றுப் போரிடாத, அவன் பகைவர் புலவர் பாடும் பண்பினைப் - தன்மையைப் - பெற்றிலர் *[புற.120:19]*. சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை, தன் பெருங்கோப்பெண்டு (மனைவி) துஞ்சிய பொழுது, 'அவன் துஞ்சி எரியூட்டி மேலுலகம் சென்றும், எனது துயரம் எவ்வளவு மிகுதியாயினும், என்னுயிரும் நீங்கவில்லையே! இவ்வுலகின் பண்பு இதுதானோ', என்று வருந்திக் கூறினான் *[புற.245:7]*. 'ஈதலும், இன்சொல்லும், பணிவும் இல்லாதாரிடம் செல்வம் நிலைத்து நில்லாது; இப்பொழுதும் அதன் பண்பு அதுவேயாகும்', என்று தந்துமாறனிடம், சங்கவருணர் என்னும் நாகரியர் கூறினார் *[புற.360:12]*. பொறையாற்று கிழானின் பழைமையான ஊருக்கு வந்த பரிசிலர், அவ்வூரைவிட்டு நீங்கும் பண்பினராய் இரார் *[புற.391:9]*.

சிவபெருமான், நிறத்தால் களங்கனி தான் நிகரொவ்வாமையை ஏற்றுக் கொள்ளும் பண்பினால் (கருநிறத்தால்) கறையுள்ள திருக்கழுத்தையுடையவன் *[பதி.க.வா.10]*. பல்யானைச் செல்கெழுகுட்டுவனுடைய வயவரால் அழிக்கப்பட்ட பகைவரின் நாடுகள் ஞாயிறு தெறுதலால் வெம்மையுற்றுப் பாழ்படும் பண்பினவாயின *[பதி.26:7]*. தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறை அமைச்சரைப் போன்ற சூழ்ச்சி வன்மை படைத்த பண்பினை உடையவன் *[பதி.72:7]*.

நன்னன் நாடு மிகுகின்ற செல்வம் முற்றுப்பெற்ற புதுவருவாயையுடைய ஊர்களாலே, புதிதாகிய பொலிவுடன் கூடிய பண்பினையுடையதாகும் *[மலை.96]*. 'நீங்கள் போகின்ற வழியில் நாடுகாக்கும் வேடருடைய கூட்டத்தைக் கண்டீராயின், நன்னனிடம் செல்கிறோம் என்று கூறினீராயின், அவர்கள் நுங்களை நலியாமல், தசைகளையும், கிழங்குகளையும் கொடுத்து, உண்ணச் செய்வர். அதனோடு, அவர் காட்டிய வழியிலேயே செல்லுங்கள்; அக்காட்டின் பண்பு அதுவாகும்', என்று கூத்தன் கூத்தரை ஆற்றுப்படுத்தினான் *[மலை.427]*.

நாடோறும் வரும் தலைவன், களவிற்கு ஒரு நாளைக்கு வாரானாயின், அலர் தூற்றுவார்க்கு மகிழ்ச்சியினை அளிக்கும் பண்பினையுடையதாகித் தலைவியின் நுதலில் பசப்பு ஊர்ந்துவிடும் *[அக.102:18]*. தலைவனிடம், தலைவியின் குறிப்பறிந்த தோழி, 'இறைவனே, எம்மூர் சிற்றூராயினும் இன்பம் தரும் காரணத்தால் ஒருநாள் தங்கியிருந்தார்க்கும் மறுநாள் தம்மூரையே மறந்திடச் செய்யும் பண்பினையுடையமையால் வந்து தங்கிச் செல்க', என்று இரவுக்குறிக்கு அழைத்தாள் *[அக.200:6]*. பிரிவால் வாடும் தலைவியிடம், தோழி, 'தோழியே, நீர் ஒழுகும் கண்களும், பசலை பரந்த தோள்களும், பிறர் அறியும்படி வாடுவதை, நாடோறும் நாம் மறைத்து வாழும் பண்பினை, நம் காதலர் அறியாராய்க் காலம் தாழ்க்கின்றனர் என்று துன்புறாதே', என ஆறுதல் கூறினாள் *[அக.359:3]*. தலைவன் பிரிவைக்கண்டு வருந்திய தலைவிக்குத், தோழி, தலைவர் பிரியார்; ஒரோவழித் தனக்கு உரித்தல்லாத பண்பினால் 'தலைவன் பிரிவாராயின் அவரோடு சேர்த்து வைப்பேன்' என, ஆறுதல் கூறினாள் *[அக.392:20]*.

பிரிவால் வருந்தும் தலைவியிடம், ஆயத்தினர் பூந்தாது முதலியவற்றால் செய்யப்பட்ட பாவை வருந்தும்படியாக, நீ வருந்தாதே, என்று கூறியும் கேளாமல் வருந்தும் பண்பினையுடையவளாகிய தலைவிக்கு விருப்பந்தரும் பண்பினையுடைய ஒரு சொல் (வரைந்து கொள்கிறேன்) தலைவரிடமிருந்து வாராதா' என்று தோழி கூறினாள் *[குறு.48:4,6]*. பொருட்பிரிவின்கண் அங்குத் தலைவியை நினைந்தீரோ? என்ற தோழிக்குத், தலைவன், 'நான் தலைவியை நினைத்துக் கொண்டே இருந்தேன்; உலகப் பண்பினை எண்ணியே இதுகாறும் பொறுத்திருந்தேன்', என்று கூறினான் *[குறு.99:5]*. தனக்கு அறிவுரைகூறிய பார்ப்பனப் பாங்கனிடம் தலைவன், 'பார்ப்பன மகனே! மறைபறிந்த நினது அறிவுரைகளுள் பிரிந்துள்ள தலைவர் தலைவியரைச் சேர்த்து வைக்கும் பண்பினையுடைய மருந்துமுண்டோ என்று வினவினான் *[குறு.156:6]*. பரத்தைமைத் தலைவனைக் குறித்துத் தலைவி, தோழியிடம், 'தலைவனோடு ஒருநாள் கூடியதற்கு மிகப்பல நாட்கள் எனது அழகைக் கொள்ளை கொள்ளும் பண்பினையுடைய நோயாக ஆகின்றது', என்று கூறினாள் *[குறு.27t5]*.

வண்டின் இம் என ஒலிக்கும் ஒலி போல இசைக்கும் பாணன் கையிலுள்ள சீறியாழானது பண்பமைந்து (யாழ் இருக்க வேண்டிய இயல்பின்படி) இருந்தது *[நற்.30:2]*. தலைவனிடம், தோழி, 'பெருமானே, அரசரால் சிறப்புப் பெறுவன போன்றவை சிறந்த செல்வங்களாகா; தன்னிடம் அடைக்கலமாக அடைந்தவர்களைக் காப்பாற்றுகின்ற பண்புதான் சிறந்த செல்வமாகும்', என்று கூறினாள் *[நற்.210:8]*. தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவியிடம் தோழி, 'தோழியே, நம் தலைவர் செறிந்த இருளையுடைய நடு யாமத்தில் பண்பு இல்லாத வழியில் வந்து நினக்கு அருள் செய்யாததன் காரணம் என்னென்று தெரியவில்லையே', என்று கூறினாள் *[நற்.228:4]*. தலைவன், குறித்துச் சென்ற கார்ப்பருவம் வந்து விட்டது என்று வருந்தும் தலைவியை, ஆற்றுவிக்கும் பொருட்டு, முகிலிடம், தோழி கூறுவாளாய், 'முகிலே! இது கார்ப்பருவமன்று, என்றாலும், நீ தலைவியின் மீது அன்பின்றி அவளைத் துன்புறுத்தும் பொருட்டுப் பண்பில்லாமல் நீ முழங்கும் முழக்கத்தை, அறிவில்லாத மயில் கூட்டம் மயங்குவதுபோல, யான் மயங்கேன்', என்று கூறினாள் *[நற்.248:6]*. தலைவனை வரைவுடன்படுத்தற்காகத் தோழி,

தலைவியிடம் 'தோழியே, தலைவனின் பிரிவால் நினது மேனியில் ஏற்பட்ட துயரமாறுபாட்டிற்குக் காரணமறியாத நம் அன்னை வெறியாட்டெடுக்கும் வேலனும், அணங்கியது முருகனே, என்று கூறுவான், என்பள்; தலைவர் பண்பால் தந்த கவலை நடுங்குறச் செய்கின்றது', என்று கூறினாள் *[நற்.273:10]*. தலைவன், சிறைப்புறத்தானாகத், தோழி, தலைவியிடம், 'தோழியே நம் அன்னை, என்னிடம், நின் தோழியது மேனியின் வேறுபாட்டிற்குக் காரணம் என் என்றாள். நாங்கள் சுனையாடினோம், என்றேன்; நாளையும் நீவிர் சுனையாடினால் தலைவியின் பண்பு இன்னும் என்னாகுமோ? என்று கூறினாள்; அன்னை களவொழுக்கத்தினால் நாம் படும் துயரினை அறிந்திருப்பாள் போலும்', என்றாள் *[நற்.339:12]*.

தலைவன், தலைவியைத் தொண்டிப்பட்டினத்தைப் போன்ற பெண்மைப் பண்பு உடையவள் என்று பாராட்டினான் *[ஐங்.175:4]*. பிரிந்து வருந்தும் தலைவியிடம், தோழி 'தோழியே, நினது பண்பே தூதாகச் சென்று தலைவரை அழைத்து வந்துவிட்டது' என்று கூறினாள் *[ஐங்.354:4]*. பிரிந்து செல்லும் தலைவனின் நெறி குறித்து வருந்தும் தலைவியிடம், தோழி, 'தோழியே, தலைவர் செல்லும் வழி பலவகை மலர்கள் மலர்ந்து மணம் வீசுவதால் இன்புறுத்தும் பண்பு உடையதாயுள்ளது; ஆதலால், அவர் இனிதே செல்லுவார்; வருந்தாதே', என்று கூறினாள் *[ஐங்.438:3]*.

ஒரு தலைவி, தனது பண்பை நுகர்ந்துவிட்டுப் பிரிந்து போனவனுக்காக, ஊரிலுள்ளவரைப் பார்த்துப் புலம்பினாள் *[கலி.145:7]*. பிரிவினால் புலம்பத்திரியும் தலைவியது அல்லற் பண்பு நீங்கத், துளி பெறாது வருந்தும் வானம்பாடிக்கு மழை பெய்தது போலத், தலைவன் வந்து முயங்கினான் *[கலி.146:55]*.

வையையில் நீராடும் ஆடவர் ஒருவருக்கொருவர், 'தீண்டி வருத்தும் தெய்வம் போன்றவளைக் காண்மின்! இவள் காமனின் படைக்கலம் காண்மின்', என்றெல்லாம் கூறி நீராடும் பண்பினையுடைத்தாய், வையையின் வெள்ளம் இருந்தது *[பரி.11:134]*. திருப்பரங்குன்றத்திலுள்ள முருகவேளின் கோயிலைப் பாண்டியன் தன் மனைவியரோடும், அமைச்சரோடும், மற்றவரோடும் வலமாகச் சுற்றுகின்ற பண்பு திங்கள் விண்மீன்களோடு மேருமலையைச் சுற்றுதலை ஒக்கும் *[பரி.19:24]*.

**3. அழகு.** களவொழுக்கத்தில் தலைவியின் கூட்டம் தடைப்படும் பொழுது தலைவனின் மேனி, பிடியை இழந்த களிறு உணவு உண்ணாது வாடியிருத்தல் போலப் பண்பு - அழகு - கெட்டு மெலிந்து வாடியது *[அக.392:4]*.

பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் தன் இல்லிற்குச் சென்று படுக்கையில் தன் புதல்வனைத் தழுவினான்; அதனைக் கண்ட ஊடியிருந்த தலைவி மனமிளகித் தலைவனின் முதுகைத் தழுவிக் கொண்டாள்; இச்செயல் காண்பதற்குப் பண்புடைத்தாய் இருந்தது', என்று, தோழி, பாணனிடம் கூறினாள் *[குறு.359:1]*.

**4. உண்மை.** தலைவன் சிறைப்புறத்தானாகத், தோழி, தலைவிக்குக் கூறுவாளாய்த், 'தோழியே, தலைவன் கூறுவதையெல்லாம் மெய்யென்றே நீ நம்புவதால் பண்பு - உண்மை — இல்லாத வஞ்சகமொழிகளை நிரம்பக் கூறுகின்றான்', என்று கூறினாள் *[ஐங்.267:5]*.

தலைமகனுக்குக் குறை நேர்ந்த தோழியிடம், தலைவி, 'தோழியே, உலகமுறைமையிலிருந்து வழுவித் தெருவில் நின்று கொண்டு ஒருவன் வாய் (வாய்க்கு) வந்ததை எல்லாம் கூறவும் நாம் அதைப் பண்பு என்று நம்பமுடியுமா', என்று கூறினாள் *[கலி.60:25]*.

**5. அறம்.** களவு, கற்பு இரண்டில் களவொழுக்கமே சிறந்தது; கற்பொழுக்கம் ஊடி முயங்குதலால் சிறந்ததாகும்; தலைவன் பரத்தையரில்லில் இருக்கும்பொழுது தலைவி தன் தோழிக்கு நாட்காலையிலே செவ்வணி அணிவித்து தன் பூப்பினை அறிவிக்கும்படி செய்வாள்; அப்பொழுது தலைவன் தலைவியுடன் இருப்பது பண்பு - அறம் - ஆகையினாலே தலைவன் தலைவியுடன் கூடியிருப்பான் *[பரி.9:18]*.

**6. அன்பு.** மழை பெய்யாமையால் மூங்கில் வற்றிய நெறியில் வதியும் வலிய வில்லினைக் கொண்ட மறவர் நெறியில் செல்லும் வணிகர்களைக் கொல்லும் பண்பு - அன்பு- இல்லாத வாழ்க்கையுடையவர் *[அக.245:6]*.

**7. இரக்கம்.** ஆனிடமிருந்து அதன் கன்றினைப் பிரித்துக் கட்டுவதாலும், அதன்பாலை அதற்குக் கொடாததாலும் கோவலர் பண்பு - இரக்கம் - இல்லாதவராவர் *[அக.293:11]*.

**8. இன்பம்.** அல்ல குறிப்பட்டு மீளும் தலைவன் நெஞ்சிற்குக் கூறுவானாய், 'நெஞ்சே, பாழிமலையில் பழைய வேள்குடி மக்கள் தமது ஊரின்கண் மறைத்து வைத்த அரிய செல்வத்தைப் போன்று நம்மால் பெறுதற்கரியவளாகிய தலைவியின் பண்பினை - இன்பத்தினை - நினைந்து வருந்தியும் அவளைக் கைவிடவும் நீ ஒப்பினாயல்லை', என்று கூறினான் *[அக.372:5]*.

**9. செயல்.** பிரிவுத் தலைவி, தோழியிடம், 'தோழியே, நம்மைப் பிரிந்து சென்றுள்ள நம் தலைவருக்கு நாம் வெறுக்கத்தக்க பண்பு - செயல் - யாதும் செய்யாதிருக்கவும் வரவினை நீட்டித்து வருத்துகின்றாரே', என்று கூறினாள் *[அக.101:18]*.

**10. செய்தி.** பிரிவுணர்த்தப்பட்ட தலைவி, தலைவனிடம், 'பெருமானே, நீ சென்றே ஆகவேண்டுமென்றால், சென்ற அவ்விடத்தே வினை முடித்தபின்னர் இங்கிருந்து வருவோரிடத்து அழும்படி நான் பிரிந்து வந்த என் துணைவியைப் பற்றிய பண்பு - செய்தி - அறிவீரோ என்று

கேளாதீர். கேட்டால், எனது இறத்தலையறிந்து ஞாயிறு போன்ற நினது புகழ் மழுங்கி, நீ அவலமடையவுங் கூடும்', என்று கூறிச் செலவழுங்குவித்தாள் *[கலி.19:9].*

**11. தகுதிப்பாடு.** இரவுக்குறியை மறுக்கும் தோழி, தலைவனிடம், 'பாம்புகள் இயங்குகின்ற வருதற்கரிய கொடிய வழியில், நடு இரவில், தலைவி அடைகின்ற துயரைக் கருதாமல் இவ்விடத்திற்கு நீ தனியே வருதல் பண்பு - தகுதிப்பாடு - ஆகுமோ' என்று கூறினாள் *[நற்.168:6].*

**பணவை** - பரண். ஞாயிறு இல்லாத இரவுப் பொழுதில் கானவர் வானத்தைத் தீண்டுகின்ற தம் பணவையில் - பரணில் - தீக்கடைகோலாலே நெருப்பினை எரிய விடுவர் -*[குறி.226].* யானைகளுக்கெல்லாம் தலைவனாகிய யானை தனது கூட்டத்திலிருந்து பிரிந்து பணவைமீது உள்ள கானவரின் தினைப்புனத்தில் புகுந்து உண்ணுவதைக் கண்ட கானவர் அதனைப் பிடித்தற்காக வளைக்கும் பொழுது பெரிய ஆரவார ஒலி எழுந்தது *[மலை.298].* மழைபொழியும் நடு இரவில் தன் புன்செய்யிலே தன் பிடியுடன் வந்து உண்ணும் களிற்றின் காலோசையைக் கேட்ட கானவன் உயர்ந்த மலையிலே ஆசினிப் பலாவின் மேலிட்டிருக்கின்ற பணவையில் ஏறிக் கடிய விசையினையுடைய கவண் கல்லால் அவற்றை அடிப்பர் *[கலி.41:9].*

**பணி-1. ஏவல்.** பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனாற் பிணியிருந்த யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை வலிதிற் போய்க் கட்டிலெய்தினானைக், குறுங்கோழியூர்கிழார் 'சேரமரபைக் காத்தவனே! நீ பகைவனால் பிணிப்புண்டிருந்தபோது நின் பகைவர் தம்தம் நாட்டினை மீட்டுக் கொண்டவர், நீ வெற்றியுடன் திரும்பவந்தபின் மீட்டும் நினக்குப் பணி - ஏவல் - செய்தனர்', என்று கூறினார் *[புற.17:31].*

**2. வினை.** பிரிவினால் தலைவியின் துயரைக் கண்ட தோழி, தலைவியிடம், 'தோழியே, நம்மை வரையும் பணி - வினை - குறையாக நிற்றலினால் தலைவனுக்குண்டான வருத்தம் நீங்கும்படி நம்முடைய எண்ணத்தைத் தாய்க்கு உரைத்தால் என்ன?' என்று அறத்தொடு நிற்றலைக் கூறினாள் *[குறு.333:5].*

**3. பணிவு.** திருப்பரங்குன்றத்தில் வழிபடுவோர், செவ்வேளிடம், 'முருகப் பெருமானே! யாமும், எம்முடைய சுற்றமும் மனிதரைப் புகழ்ந்து பாடும் பணி - பணிவு - பொருந்திய மொழிகளை ஒழித்து, இனி எப்பொழுதும் எமது பிறவித்துன்பம் நீங்கி நினது திருப்பரங்குன்றத்தைப் பாடி, நினது புகழையே ஏத்துவோம்', என்று பரவினார் *[பரி.17:50].*

**பணிந்தோர்**-வழிபடுவோர். பிறப்பற முயலாது தம் வாழ்வினை வீணே கழித்த வேந்தர், தம்மைப் பணிந்தோருடைய - வழிபட்டோருடைய — நாடுகள் தம், ஏவல் கேட்பப், பணியார் நாடுகளை வென்று, திறைகளைக் கொண்டு, பயனின்றி மாண்டொழிந்தோர், பலராவார் *[மது.229].*

**பணியம்** - பண்டம். காவிரிப் பூம்பட்டினததில் பறக்கும் தெய்வக் கொடிகளோடே, யாற்றின் இருகரையிலும் நிற்கும் கரும்பினது பூவைப்போலக் சோறுடைய கடைக் கொடிகளும் தாழவிரித்த உடையில் பரப்பிய தண்ணிய பணியங்கட்கும்- பண்டங்கட்கும் - அரிசியாகிய பலியினைத் தூவி வணங்கிய வணக்கக் கொடிகளும் பறந்தன *[பட்.164].*

**பணியார்** - பகைவர். பிறப்பற முயலாது பணியாரின் — பகைவரின் — நாடுகள் வென்று வாழ்நாளை வீணே போக்கிய வேந்தர் உலகத்தில் பலர் *[மது.230].*

**பணிலம்** - சங்கு. மதுரை நகரத்தின் வீதியில் வெறி கொண்ட யானை வருகிறது என்பதைக் குறிக்க அவ்வானையின் முன்னும் பின்னும் பணிலங்களை - சங்குகளை - முழங்கிச் செல்வர் *[மது.380].* மதுரை நகரில் நடுயாமத்தில் பணிலங்களின் ஒலியின் ஆரவாரம் அடங்கிக் கிடந்தது *[மது.621].*

வலம்புரிச் சங்கின் முத்தினை எடுப்பதற்காகக் கடலில் சென்று முத்துக்குளித்து வரும் பரதவரைக் கொற்கைப் பட்டினத்திலுள்ளவர் மகிழ்ச்சியால் பணிலம் முதலியவற்றால் முழக்கி வரவேற்பர் *[அக.350:12].*

செவிலி, நற்றாயிடம், 'நின் மகளை அழைத்துச் சென்ற காளை, பறையொலிக்கப், பணிலம் முழங்க மணம் செய்து கொண்டான்', என்று கூறினாள் *[குறு.15:1].*

**பணிவு - 1.** தாழ்ச்சி, சிறுமை. நன்னன் பணிவு - தாழ்ச்சி - இல்லாத பகைவரை ஆளும் தன்மையுடையவன் *[மலை.423].*

**2. பணிதல்.** முப்புரத்தை அழித்த சிவபெருமான், தான் யாருக்கும் பணிவு - பணிதல் - வேண்டாத பெருநிலையையுடையவனாவான் *[பரி.தி.1:76].* பாண்டியன் வேறு எந்த வேந்தருக்கும் பணிவு வேண்டாத தலைமைத்தன்மை உடையவன் *[பரி.தி.2:46].*

**பணை- 1. மூங்கில்.** சோழன் நலங்கிள்ளியிடம், பணை - மூங்கிலைப் - போன்ற தோள்களையுடைய விறலியர் பூவிற்கு விலை வேண்டினால் அவன் அதற்கு ஈடாக, மாட மதுரையையே தந்துவிடும் ஈகைக்குணமுடையவன் *[புற.32:3].* சோழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளி, முக்காவனாட்டு ஆமூர் மல்லனைப் பசியினால் பணையை வளைத்துத் தின்றற்கு முயலும் யானையையொப்பத், தலையும், காலுமாகிய இரண்டிடமும் முறியும்படி மோதிக் கொன்றான் *[புற.80:7].* மகட்கொடை மறுத்தலின், வளம் மிக்க ஊர் அழிவதற்குக்

காரணமான பெண், பெருத்த பணை போன்ற தோள்களையுடையவளாயிருந்தாள் [புற.354:9].

மழை பெய்யாது வறண்ட காலத்தில் காட்டிலுள்ள பணைகள் வாடி உலர்ந்து விடும் [பதி.43:12].

வானளாவிய மலையிடத்தேயுள்ள சூரர மகளிர் பணைகளைப் போன்ற தோள்களையுடையவராயிருந்தனர் [முரு.14]. நிலமடந்தை பணையைப் போன்ற தோள்களையுடையவள் [சிறு.1]. பாணனிடம் உள்ள யாழின் நெகிழ வேண்டியவழி நெகிழ்ந்தும், இறுக வேண்டியவழி இறுகியும் உள்ள வார்க்கட்டானது பணையை யொத்த தோளினையுடைய பெண்ணின் முன்கையில் அணிந்திருக்கும் வளையலை ஒக்கும் [பெரு.12]. விடியலிலேயே எழுந்து தயிரைக்கடைந்து மோரை விற்கச் செல்லும் ஆயரின் மகள் பணையைப் போன்ற தோள்களையுடையவள் [பெரு.161]. மதுரை நகரின் மனைகள் தோறும் தின்பண்டங்களைக் கொண்டு விற்கும் மகளிர், வளைந்த, பணைபோன்ற தோளினையுடைவர் [மது.414]. மதுரை நகரின் அங்காடித் தெருவில் மாலை நேரத்தில் விளக்கேற்றி, நெல்லும் மலரும் தூவி, இல்லுறை தெய்வத்தை வணங்கும் மகளிர் பணை போன்ற தோளினர் [நெடு.36]. தன் கணவனைப் பிரிந்து துயரில் ஆழ்ந்துள்ள கோப்பெருந்தேவியார்க்குக் கால்வருடும் தோழியர் அழகிய பணை போன்ற மெல்லிய தோளையுடையவர் [நெடு.149].

உறையூர்க்குரிய தித்தன் என்ற வள்ளலின் மகள் ஐயை என்பவள் அணிகலன் அணிந்த பணையைப் போன்ற தோளையுடையவள் [அக.6:3]. பொருள் வலிக்கப்பட்டுப் பிரிந்த தலைவன் இடைச்சுரத்து நின்று மீளலுற்ற நெஞ்சிற்குக் கூறுவானாய், 'நெஞ்சே, பெரிய மென்மை வாய்ந்த பணையைப் போன்ற தோளையுடைய நம் காதலியின் அழகு கெடும்படியாகப் பிரிந்து செல்லாதே, என்று, யான் கூறியும் நீ கேட்டாயல்லை' என்று இடித்துரைத்தான் [அக.2:4]. தலைவன், தலைவியின் பருத்த இறையினையுடைய பணையைப் போன்ற தோள் மெலியும்படி பொருள் ஈட்டுவதற்காகச் சேய்மையிலுள்ள நாட்டிற்குப் பிரிந்தான் [அக.59:16]. அல்லகுறிப்பட்டுழித் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுவானாய், 'நெஞ்சே, இனி நம்மை அடிக்கடிச் சந்திக்க இயலாது என்று கருதிப்போலும் பணையினைப்போன்ற தோளையுடைய நம் காதலி, காவிரியின் வெள்ளத்தில் படிந்து குளிப்பவள் போல, நேற்று உள்ளம் நடுங்கும் துன்பம் போகத் தழுவி, ஆகத்திற், பொருந்திக் கிடந்தனள்', என்று கூறினான் [அக.62:3]. துயருற்ற தலைவிக்குத், தலைவன் உடன்போக்கிற்கு வலித்தமையைத் தோழி, 'பணையைப் போன்ற தோளினையுடைய தலைவி சுரத்தில் செல்லுதல் அரியதாகும் என்று மறுத்த தலைவர், இப்போது நம்மோடு உடன் செல்ல விரும்பினர்', என்று கூறினாள் [அக.65:17]. தலைவனுடன் உடன்போக்குக்கு நீண்ட மெல்லிய பணையைப் போன்ற தோளையுடையவள் வல்லுனளோ' எனச் செவிலி வருந்தினாள் [அக.89:22]. இரவுக்குறிக்கு வரும் தலைவனிடம், தோழி, பெருமானே, மின்னல் மின்னி மழைபொழியும் நடு இரவில், யானையைத் தாக்கிப் புலி முழங்கும் கொடிய வழியில் வாராதே; நீண்ட மெல்லிய பணையை யொத்த தோளினாளாகிய தலைவி தினைப்புனம் காவலுக்குப் போகின்றாள்; இனிப் பகற்குறிக்கு வருக; என்று கூறினாள் [அக.92:6].

தலைவன், தலைவி, தோழியைப் பார்த்துப் பெரிய, மெல்லிய, பணையைப் போலும் தோளினையுடைய மடப்பம் வாய்ந்த நல்லீரே! என்று விளித்தான் [அக.110:10]. அந்தியில், இடையறாது, அழகிய பணை (மூங்கிலின் குழல்)யின் இசைஒலி, நிலா முற்றத்தில் வந்து ஒலிக்கும் [அக.124:14]. 'கொடிய சுரநெறியேயாயினும், பணையைப் போன்ற தோளினையுடைய தலைவியுடன் செல்லுவது, எளிதேயாகும், என்று தலைவர்கூறினார்; அப்படிப்பட்டவர் வேற்று நாட்டில் உன்னை மறந்து தங்கார்; விரைவில் வருவார்', என்று, பிரிவிடை வருந்தும் தலைவியிடம், தோழி கூறினாள் [அக.129:11]. தோழி, தலைவனிடம், 'பூணணிந்த மார்பனே, தலைவிக்கு அருள் செய்தாய் ஆயின், அழகிய பணையை யொத்த மெல்லிய தோளினையுடைய அவளை நின்னூர்க்கு அழைத்துச் சென்று வரைந்து கொள்', என்று கூறினாள் [அக.132:6]. பிரிவால் துயருறும் தலைவியிடம், தோழி, 'தோழியே, தலைவர் விரைவில் வருவர்; ஆதலால் அகன்ற மலையிலுள்ள காட்டில் ஆராய்ந்து கொண்டு அறுத்த பணையின் துண்டையொத்த தோளின் அழகு வாட்டமுறும்படி வருந்தாதே', என்று கூறினாள் [அக.171:3]. தலைவன், தலைவியை வரைய வருதலை அறிந்த தோழி, தலைவியை, 'தோழியே, பணையைப் போன்ற நினது தோளின் அழகு ஒழியாது, நின் தலைவருடன் என்றும் பிரியாது வாழ்ந்து, இறுதியில் என்றுங்கெடாத மறுமையுலகத்துத் தங்கி வாழ்க' என்று வாழ்த்தினாள் [அக.178:15]. தலைவன், தலைவியைப் பணையின் தகுதியையுடையதாய் வளைந்த காண்டற்கு இனிய, மெல்லிய தோளையுடையவள் என்று கூறினான் [அக.181:24]. தலைவனின் பிரிவினால், தலைவியின் நல்ல அழகினையுடைய பணை போன்ற தோள்கள் மெலிந்து அழகு அழிந்தன [அக.185:2]. தலைவியின் பணையையொத்த தோளினை விரும்பித் தலைவன் நடு இரவில் சென்றான் [அக.210:7]. தலைவனிடம், தோழி, 'பெருமானே, அழகிய குளிர்ந்த பணையை ஒக்கும் என்று கடற்கரைச் சோலையில் தோழிமார் ஆய்ந்து பாராட்டிய வளைந்த முன்கையினையுடைய பருத்த இவளுடைய தோள்கள் அழகு கெடாமல் இருப்பதற்குரிய வழியைக் கூறுவாயாக', என்று வேண்டினாள் [அக.220:19]. தலைவியின் வண்டின் கூட்டத்தையொக்கும் கருநிறம் பொருந்திய கூந்தல் புறத்தில் தாழ்ந்து அழகிய பணையைப் போன்ற அவளுடைய தோளில் படியும் [அக.223:11]. 'கொங்கரை வெற்றிகொண்ட பசும்பூண்பாண்டியன் மதுரையில் எடுத்த வெற்றிவிழாவின் ஆரவாரத்தைவிட அலர் ஆகின்றது;

இவ்விடத்தில் யான் இன்னும் சில நாள்கூட உயிர்தரித்திரேன் போலும், என்று, பணையைப் போன்ற தோளையுடைய தலைவி துயரில் அழுந்தினாள் *[அக.253:21]*. சுரத்தில், வெம்மை மிக்க வேனிலில், தலைவன்மீது கொண்ட அன்பினால் உடன்போக்கில், தன் மெல்லிய பணை போன்ற தோள்களை விளக்கமுற வீசித்தலைவி நடந்தாள் *[அக.257:11]*.

தலைவன் வினைமுற்றி மீண்டு வந்த பிறகு பெரிய மென்மை வாய்ந்த பணையைப் போன்ற தோளையுடைய தலைவி விருந்தயர்ந்தாள் *[அக.324:2]*. பிரிவிடை வருத்தும் தலைவியிடம், தோழி, 'தோழியே, தலைவர் பெரிய உம்பற் காட்டைக் கடந்து சென்றுள்ளராயினும் நின் திருந்திய அணிகளையணிந்த பணையைப் போன்ற பெருத்த தோள்கள் வருந்தியிளைக்குமாறு நினது பார்வையை மறந்து நீடித்திரார்', என்று கூறினாள் *[அக.357:11]*. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் வாயில் வேண்டுழித், தோழி, அவனிடம் தலைவ! எவ்வி என்பானது நீழல் என்னும் ஊர் போன்று, அழகு பெற்ற பணையைப் போன்ற தோளையுமுடைய பரத்தையோடு நீ நேற்று சோலையில் தங்கியதறிந்து தலைவி அழுது கொண்டிருக்கிறாள்', என்று கூறினாள் *[அக.366:13]*. சிற்றூரில் வாழ்வோர் அழகிய பணையின் குழாயில் அடைக்கப்பட்ட முற்றிய தேனாகிய கள்ளின் தெளிவை உண்டு மகிழ்வர் *[அக.368:14]*.

தலைவன், பாங்கனிடம், 'பாங்கனே! கொல்லியம் பாவையைப் போன்ற மடப்பமும், பணையைப் போன்ற, பெரிய தோளும் உடைய தலைவி, தழுவுதற்கு அரியவளாவாள்', என்று கூறினான் *[குறு.100:7]*. தலைவி நெடிய மெல்லிய பணையைப் போன்ற தோள்களையுடையவள் *[குறு.268:6]*. தோழியால் சேட்படுத்தப்பட்டவிடத்துத், தலைவன், 'பணையைப் போன்ற தோள்களையுடைய தலைவிக்குப் பாவை செய்து கொடுத்தும், அவளது, நகிலில் தொய்யில் எழுதியும் நான் அவளைக் கூடியதெல்லாம் அவளைக் காப்போர் அறியார்; யான் அரசனது அறங்கூறும் அவையத்தாரிடம் செல்ல வேண்டும் போலும்', என்று கூறினான் *[குறு.276:1]*. பிரிவிடை வற்புறுக்கும் தோழியிடம், தலைவி, 'தோழியே, தலைவர் பெரிய மலைகளைக் கடந்து சென்று, இலக்கணத்தால் திருந்திய பணையைப் போன்ற என் தோள்களை நினையாமல் இருக்கின்றாரே' என்று கூறினாள் *[குறு.279:8]*. தலைவர் வரைவிடை வைத்துப் பிரியுங்காலத்தில் ஆற்றுவையோ? என்ற தோழிக்குத் தலைவி, 'தோழியே, என்னுடைய பெரிய பணையைப் போன்ற தோள்களாகிய நெருஞ்சிமலர்கள், ஞாயிறு போன்றவராகிய தலைவரையே நோக்கி நிற்கும்', என்று கூறினாள் *[குறு.315:4]*. தலைவனது பிரிவினால் தலைவியது பணையைப் போன்ற அழகிய மெல்லிய தோள்கள் இளைத்துப் போயின *[குறு.318:6]*. கடலில் விளையாடும் மகளிர், பணையைப் போன்ற பருத்த தோள்களையுடைராயிருந்தனர் *[குறு.326:1]*. அழகு, இல்லின்கண்ணே அடங்கிய கற்பு முதலியவற்றோடு தலைவி பணையைப் போன்ற தோள்களையும் உடையவளாயிருந்தாள் *[குறு.338:6]*. தலைவன் சிறைப்புறத்தானாகத், தோழி, தலைவியிடம், 'தோழியே, பணையினது அழகை நெகிழ்த்த நின் தோள்கள், தலைவனோடு நட்புக்கொள்ளுவதற்கு முன்பு நல்லனவாய் இருந்தன', என்று கூறினாள் *[குறு.357:2]*. துணங்கைக் கூத்தாடும் மகளிர், வளைந்த பணையைப் போன்ற தோள்களையுடைவர் *[குறு.364:5]*.

தலைவன் பிரிவனோ என்று கவன்ற தலைவியிடம், தலைவன், 'காதலியே, பணையைப் போன்ற நின் தோள்களை விட்டுப் பிரியேன்; வருந்தாதே', என்று கூறினான் *[நற்.166:3]*.

பிரிவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குத், தலைவி, 'தோழியே, நம்முடைய திருத்தமான அணிகலன்கள் பணையையொத்த நம் தோள்களினின்றும் கழலும்படி தலைவர் பிரிந்தாரேனும், யான் ஆற்றுவல்; கவலற்க', என்று கூறினாள் *[ஐங்.39:3]*. ஊர்த்தலைவன் மகளாகிய நம் காதலி, தன்னால் யானடைந்த நோய்க்கு மருந்தாக அமைந்த பணையைப் போன்ற தோள்களையுடையவள்' என்று, ஒரு தலைவன், தன் காதலியைப் பாராட்டினான் *[ஐங்.99:4]*. தலைவனால் விரும்பப்பட்ட பரத்தை, பணையைப் போன்ற தோள்களையுடையவளாயிருந்தாள் *[ஐங்.135:1]*. ஒரு காதலன், தன் காதலியைக் குறித்து, 'என்னுடைய, நெஞ்சு முழுவதையும் கவர்ந்து கொண்ட இவள் பணையைப் போன்ற தோள்களையுடையவள்', என்று மகிழ்ந்து கூறினான் *[ஐங்.171:3]*. தலைவியினுடைய தோழியும், பணையைப் போன்ற தோள்களையுடையவளாயிருந்தாள் *[ஐங்.175:1]*. பணையை யொத்த தோள்களையுடைய பேதைப் பருவத்து மகளிர் காமக் குறிப்பில்லாத விளையாட்டை விளையாடி வெறுப்பின், மணற்பரப்பின்மேல் குரவையாடுவர் *[ஐங்.18t1]*. பிரிந்த தலைவன் காலம் நீட்டிப்பின் தலைவியின் பணையைப் போன்ற தோள்கள் மெலிந்து விடும். *[ஐங்.239:4]*. வரைவிடை வைத்துப் பொருள் தேடச் சென்ற தலைவன் பாங்கனிடம், 'பணையைப் போன்ற தோள்களையுடையவள் என் காதலி' என்று கூறினான் *[ஐங்.291:2]*. பகற்குறியிடத்து மறைய நின்று தலைவனின் கண் புதைத்துழித் தலைவியிடம், தலைவன் 'காந்தளைப் போன்ற அழகிய கைகளால் எனது கண்களைப் பொத்திய நங்கையே! என் மனத்தில் இடையறாது இடம் பெற்றிருப்பது பணையைப் போன்ற தோள்களையுடைய நீயலாது வேறுளரோ' என்று கூறினான் *[ஐங்.293:3]*. அடிக்கடித் தலைவியைப் பிரிந்து வினைமேற் செல்லும் தலைவனை அழகு கிளர்ந்துவிளங்கும் பணையைப் போன்ற நம் தலைவியின் தோள்கள் தடுத்துவிட்டன', என்று வாயில்கள் தம்முள் கூறிக்கொண்டன *[ஐங்.421:4]*. போர்வினைமேல் வேந்தர்க்குற்றுழிப் பிரிந்த தலைவன் வருவதைத் தோழியால் அறிந்த தலைவி, 'தோழியே, நம் பெருமானுடைய நறிய தண்ணிய மார்பு, பணையைப் போன்ற நம் தோள்களில் படர்ந்துள்ள பசலை தீரும்படி தழுவவும் வாய்க்குமோ?' என்று கூறினாள் *[ஐங்.459:1]*. பிரிவுநீட

ஆற்றாளாய தலைவியிடம் தோழி, 'தோழியே, இப்பொழுதுதான் கார்ப்பருவம் தொடங்குகின்றது. 'நம் பெருமான் நின்னுடைய நேரிய கோடுகளமைந்த பணையைப் போன்ற தோள்கட்கு நல்ல விருந்தாகுமாறு இன்று விரைந்து வருவர்; கவலற்க', என்று கூறினாள் *[ஐங்.468:3]*. வினைமுற்றி மீளும் தலைவன், தலைவியைக் காணும் பெருவிருப்பால், தேர்ப்பாகனிடம், 'பாகனே, நுண்ணிய கோடுகளமைந்த பணையைப் போன்ற தோள்களையுடைய எம் காதலியைக் காண்பதற்குத் தாற்றுக் கோலால் குதிரைகளைத் தூண்டித் தேரினை விரைந்து செலுத்துவாயாக', என்று கூறினான் *[ஐங்.481:1]*.

வண்டுஅரற்றும் கூந்தலாளாகிய இறைவி (பார்வதி தேவி) பணையினது அழகையுடைத்தாகிய மெல்லிய தோள்களையுடைவள் *[கலி.1:9]*. படுத்துத் தூங்குவதற்கு இன்பந் தரும் தலையணைபோல் மென்மை உடையனவும் அழகிய பணையைப் போன்ற பெருமையை உடையனவுமான மெல்லிய தோளினையுடையவள் என்று தலைவன், தலைவியைப் பாராட்டினான் *[கலி.14:1]*. தலைவி நடு யாமத்தே வருந்திக் கொண்டிருக்கத், தலைவன், பணையின் அழகையுடைய மெல்லிய தோளையுடைய பரத்தையருடன் கூடி மகிழ்ந்திருந்தான் *[கலி.30:9]*. பிரிவால் வருந்தும் தலைவியிடம், தோழி, 'நீயடைகின்ற துன்பத்தை யான் கூறக்கேட்டு, வேங்கை மலர்ந்து காட்டும் மணநாளை எதிர்நோக்கியிருந்து நம் தலைவர் பெருத்த இறையினையுடைய பணையினைப் போன்ற நின் தோளை மணக்க வருகின்றார்; வருந்தாதே', என்று கூறினாள் *[கலி.38:26]*. சந்தன மரத்தால் செய்த உரலிலே தினையையிட்டு, முத்து நிறைந்த யானைக் கொம்பால் குற்றிக் கொண்டு தலைவியும், தோழியும், தலைவனின் மலையைப் பாடும்போது, தோழி, 'அழகிய பணையைப் போலும் பெருமையினையுடைய மெல்லிய தோளை உடையவளே', என்று தலைவியை அழைத்தாள் *[கலி.40:8]*. தலைவனின் பரத்தையர் சூட்டிவிட்ட கண்ணியோடு வரும் தன் புதல்வனைக் கண்ட தலைவி, 'ஏடா, அழகையுடைய மெத்தென்ற பணைபோலும் தோளையுடைய பரத்தையர் சூட்டிவிட்ட கண்ணியோடு எம் இல்லிற்குள் வருகின்றாயா?' என்று கடிந்து கொண்டாள் *[கலி.83:26]*. தலைவனைப் பழித்துக் கூறிய தலைவியிடம், 'பணையைப் போன்ற தோளையுடைய அழகியாவேன், என்று. நின்னுடைய நலத்தை நீயே பாராட்டிக் கொள்ளும் சொல்லையுடையவளே! நின்னோடு சொல்லாட வல்லார் யார்?' என்று தலைவன் கூறினான் *[கலி.108:16]*. காமம் மீக்கூர்ந்த தலைவன், தலைவி என் கண்ணிலிருந்து மறைந்தவுடனே கொடிய நோயைக் கொடுக்கின்றாள். பணையைப் போன்ற தோளையுடைய இவள் பண்பு இதுதானோ? என்று கூறினான் *[கலி.141:16]*.

திருமாலே, மிக உயர்ந்த பணையின் கோலின் உச்சியிலே கட்டப்பட்ட அழகிய யானைக் கொடியை உயர்த்தியவனாகிய பலதேவனாகவும் இருக்கின்றார் *[பரி.1:4]*. ஊடலைத் தீர்க்கும் தலைவன், தலைவியிடம், 'இத்திருப்பரங்குன்று, நீண்ட மெல்லிய பணையினையொத்த தோளினை உடைய மகளிர் சோலையிலே நுகரும் களவுப் புணர்ச்சியையும், வரைந்து கொண்டு இல்லிலே நுகரும் கற்புப் புணர்ச்சியையும் தரும் சிறப்புடையது', என்று கூறினான் *[பரி.8:39]*.

2. பருமை. பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி அசைந்த தன்மையோடு பணை - பருமை - அமைந்த கழுத்தினையுடைய யானைப் படையைக் கொண்டு பகைவருடைய காவற் குளங்களைப் பாழ்படுத்தினான் *[புற.15:7]*. சேரமான் யானைக்கண் சேஎய் மாந்தரஞ்சேரலிரும்பொறை, பணை அமைந்த கழுத்தினையுடைய களிற்றினையுடையவன் *[புற.22:4]*. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை, 'இளையவனென்றும், யாம் பெரும்படை உடையேம்', என்றும் புல்லிய பலவும் கூறிப் போரிட வந்து அழிந்த பகையரசர்கள் பணை அமைந்த காலினையுடைய யானைப்படையை யுடையராயிருந்தனர் *[புற.72:3]*. மகட்கொடை வேண்டி வந்த வேந்தர் பணை அமைந்த கால்களையுடைய யானைப் படையையுடையராயிருந்தனர் *[புற.351:1]*. சேரமான் சிக்கற்பள்ளித் துஞ்சிய, செல்வக்கடுங்கோ வாழியாதன் பகைவேந்தரை வென்று திறையாகப் பெற்ற யானைகள் பணை அமைந்த கழுத்தையுடையனவாய் இருந்தன *[புற.387:7]*.

பல்யானைச் செல்கெழுகுட்டுவனின் மனைவி மூங்கிலைப் போன்ற பணை கொண்ட தோளையுடைவளாயிருந்தாள் *[பதி.21:37]*. ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் போர் மறத்தைப் புகழ்ந்து பாடிய விறலியர், மூங்கில் போன்ற பணை மிகுந்த தோளையுடையவராயிருந்தனர் *[பதி.54:3]*. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் பணை பொருந்திய தோளையுடையவனா யிருந்தான் *[பதி.59:17]*. செல்வக்கடுங்கோ வாழியாதனின் மனைவி மூங்கிலை ஒத்த அழகிய மூட்டுக்கள் பொருந்திய (தொடியணிந்த) பணை அமைந்த தோளினையுடையவள் *[பதி.65:8]*.

சோழன் கரிகால் பெருவளத்தானிடம் ஆற்றுப்படுத்தப்பட்ட பொருநருடன் சென்ற பாடினி அசைகின்ற மூங்கில் போன்ற பணை கொண்ட தோளினையுடையவள் *[பொரு.32]*.

தலைவன் பிரிவின்கண் தலைவி தனது சிறந்த மூங்கிலை யொத்த பணை அமைந்த தோள் மெலிந்துவிட்டதாகத் தோழியிடம் கூறினாள் *[அக.1:8]*. பகற்குறிக்கு வந்து கொண்டிருக்கும் தலைவனிடம், தோழி, 'மிக்க அழகினையுடைய மூங்கிலையொத்த பணை பொருந்திய தோளினையுடைய தலைவியிடம் இரவுக்குறிக்கு வருவாயாக' என்று கூறினாள் *[அக.2:11]*. தலைவன் குறையைத், தலைவியை ஏற்றுக் கொள்ளும்படி செய்யும் உத்தியாகத், தோழி, படைப்பு மொழியாகத், தலைவியிடம் 'தோழியே, எனது வளைந்த

மூட்டினையுடைய பணை அமைந்த தோளின் உரிமை தமக்கே யாதலை அறியாராய்த் தலைவர் என்னை இரந்து பின்னிற்கின்றார்', என்று கூறினாள் *[அக.32:18]*. இடைச்சுரத்தில் தன் செலவைத் தவிர்க்க முயலும் தன் நெஞ்சினை விளித்துத் தலைவன் 'நெஞ்சே, இவ்வளவு தொலை இடைச்சுரத்தில் பிரிந்து வந்து சிறிய மூங்கிலையொத்த பணை கூடிய தோளினைப் பொருந்திய தலைவியை எண்ணிச் செலவை விலக்குவாயாயின், நீ, பிறர் சிரிக்கத் தக்க இகழ்ச்சியை அடைவாய் அல்லையோ?' என்று கூறினான் *[அக.33:15]*. செலவிடைச் சுரத்தில், தலைவன், நெஞ்சினை நோக்கி, 'நெஞ்சே, நாம் செல்லும் வினையை முடித்தபிறகு நம் தலைவியின் மூங்கிலையொத்த பணை அமைந்த தோளில் பரவியுள்ள வருத்தம் நீங்கும்படியாகப் பலமுறை முயங்கலாம், இப்பொழுது வினைக்கு என்னுடன் விரைந்து எழுவாயாக', என்று கூறினான் *[அக.47:18]*. வினைமுற்றி மீளும் தலைவன், தேர்ப்பாகனிடம், 'பாகனே, மூங்கிலையொத்த பணை பொருந்திய தோளினையுடைய நம் தலைவியின் துயரம் அகலுமாறு அவளை நாம் காண்பதற்கு விரைந்து தேரினைச் செலுத்துவாயாக', என்று கூறினான் *[அக.114:14]*. நன்னனுடைய மலையில், கோடை பரவி, மழையின்மையின், வற்றிய அழகிய பணைகொண்ட நெடிய மூங்கில் வெடித்து முத்துக்களைத் தெறிக்கும் *[அக.173:13]*.

எருமையின் கொம்பு விளங்குதலுறப் பணை அமைந்த முறுக்குண்டதாய் இருந்தன *[அக.206:3]*. பிரிவிடை வருந்தும் தலைவியைத், தோழி ஆற்றுவாளாய், இப்பொழுது தலைவர் பிரிந்து சென்றுள்ளாராயினும், மூங்கிலின் நேரிய பகுதியையொத்த நினது பணை அமைந்த தோளின் அழகு சிதையுமாறு தேவருலகத்தை அமிழ்துடன் அவர் பெறுவதாயிருந்தாலும், நீண்ட நாள் அங்குத்தங்கார், கவலற்க! 'என்று அவளிடம் கூறினாள் *[அக.213:16]*. தலைவனிடம், தோழி, 'தலைவியின் பணை பொருந்திய தோள்களின் அழகு கெடாமல் இருப்பதற்குரிய பாதுகாவலை யாம் தெளிய உணருமாறு கூறுவாயாக', என்று கூறினாள் *[அக.220:19]*. தலைவன் பிரியின், தலைவியின் நேரிய மூட்டினையுடைய பணைஅமைந்த தோள்களின் அழகு கெட்டு, அவனைக் கூடினால் அழகைப் பெற்று விளங்கும் *[அக.245:8]*. கள்விற்கும் மகளிர் வரிவிளங்கும் பணை அமைந்த தோளினைப் பெற்றிருந்தனர் தலைவி, வளர்ந்த மூங்கிலின் இரு கணுக்களின் இடைப்பகுதியையொக்கும் நீண்ட மெல்லிய பணை கூடிய தோளினையுடையவள் *[அக.271:15]*. தலைவன் காட்டுநெறியில் பணை கொண்ட தோளினையுடைய தலைவியை, உடன்போக்கில் அழைத்துச் சென்றான் *[அக.285:12]*. 'நம் காதலியின் மெல்லிய இறையினையுடைய பணை பொருந்திய தோளில் விளங்கும் மாண்புற்ற அழகினை, அருஞ்சுரம் கடந்து நினைக்கின்றாயே', என்று, தலைவன், தன் நெஞ்சிற்குக் கூறினான் *[அக.291:25]*. மழையின்றி, ஞாயிற்றின் கொடிய வெப்பம் எரித்தலின், மூங்கில் வெப்பமாகித் தெறிக்கும் காட்டில், வேங்கைப் புலியினை வென்ற அச்சம் வரும் பணை கொண்ட கையினையுடைய யானை மதம் வாடிவருந்தும் *[அக.295:5]*. தலைவன், இடைச்சுரத்து மீள நினைக்கும் நெஞ்சினை நோக்கி, 'நெஞ்சே, நம் தலைவியைப் பிரிந்து, சுரத்திலே செல்லும் பண்ட வாணிகர்க்கு உசாத்துணையாகிப், பெரிய முயற்சியை மேற்கொண்ட, நீ, இப்பொழுது இடைச்சுரத்தே வளைந்த மூங்கிலை யொக்கும் பணை அமைந்த தோளினையுடைய தலைவியை நினைந்து இம்முயற்சியைக் கைவிட நினைப்பது தகுமா?' என்று கூறினான் *[அக.343:1]*. யானை, பணை கொண்ட கால்களை உடையது *[அக.373:3]*. வரகினைத் திரிகையில் அரைத்துச் சுளகினால் கொழித்து, வரகரிசியாக்கும் தாய்மார், வரிகள் பொருந்திய பணை அமைந்த தோளினையுடையராயிருந்தனர் *[அக.393:8]*.

தலைவி, அசைகின்ற மூங்கிலையொத்த அழகினையும், பணையையும் உடைய தோள்களையுடையவள் *[குறு.131:1]*. 'நெஞ்சே, நம் காதலியின் வளைந்த மூட்டினையுடைய பணை அமைந்த தோள்களைப் பிரியின், உயிர் தரியேன்', என்று, தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறினாள் *[குறு.168:5]*. தலைவி, தன் நெடிய மெல்லிய பணை பொருந்திய தோள்கள் மெலிவதைத், தலைவனிடம் கூறும்படி தோழியிடம் கூறினாள் *[குறு.185:2]*. முள்ளில்லாத அழகிய பணை பொருந்திய மூங்கிலில் பழங்களைத் தின்றுவிட்டு வௌவால் தொங்கும் *[குறு.201:5]* 'தனது மறக்கமுடியாத பணைபொருந்திய தோளைத் தழுவிய தலைவர் மறந்துவிட்டாரே, என்று, தலைவி, தலைவன் மீது கொடுமை கூறினாள் *[குறு.266:4 உ.வே.சா.பதிப்பு]*. உழுத்தங்காயை அடித்தற்கு உரிய, கழுத்துள்ள தடியைப் போல உள்ள, கரும்பெழுதிய தொய்யில் பொருந்திய பணை அமைந்த தோளையுடையவள் பரத்தை *[குறு.384:1]*.

தலைவன், தலைவியிடம், 'வெள்ளிய பற்களையுடையோய்! யான் நின்னையடைதற்கு முயன்றதனாலாய வருத்தமெல்லாம் தீரும்படியாக நின் அழகிய மெத்தென்ற பணைபொருந்திய தோள்களை அடைந்தேன்', என்று கூறினான் *[நற்.9:4]*. தலைவியின் மூங்கிலை யொத்த பணைகொண்ட தோள் மெலிதல், ஊரிலுள்ளார் அலர் கூறுதற்கு ஏதுவாயிற்று *[நற்.85:2]*. இளந்தலைவி பணை பொருந்திய தோள்களை யுடையவளாயிருந்தாள் *[நற்.93:7]*. தலைவன், தலைவியின் மென்மையாய பணைகொண்ட தோளில் துயிலுதலை விரும்புவான் *[நற்.121:12]*. 'நெஞ்சே! அகன்ற மென்மையாகிய, பணை பொருந்திய தோளையுடைய நம் காதலியைத் துறந்து நீ செல்லத் துணிந்தனை, யான் வாரேன்', என்று, தலைவன் நெஞ்சிற்குக் கூறினான் *[நற்.137:2]*. விறலி பணை கூடிய தோளையுடையவளாயிருந்தாள் *[நற்.170:1]*. தேன் முற்றிய பக்கமலையில் முளைத்து வளைந்த அடியையுடைய மூங்கில்

போன்ற பணைபொருந்திய தோளையுடையவள், தலைவி *[நற்.188:9]*. விருப்பம் வருகின்ற பணை அமைந்த தோளினழகையுடைய தலைவி சேந்தனின் தந்தையாகிய அழிசியின் ஆர்க்காட்டைப் போன்றவளாவாள் *[நற்.190:7]*. 'என்னுடைய பணை பொருந்திய தோளிலேற்றிய ஒளியையுடைய, வளை நெகிழும்படியாக, என் காதலரைப் பிரிந்து, உசாத்துணை யாருமின்றியிருக்கும் என்னை, வாடையே, வருத்தாதே' என்று, தலைவி, வாடைக்காற்றிடம் கூறினாள் *[நற்.193:6]*. 'பணை கூடிய தோளையுடைய எனது காதலியைப் பிரியத் தூண்டும் வறுமை, மிகக் கொடிது காண்', என்று, தலைவன் கூறினான் *[நற்.262:6]*. ஒருபுறம் பொருள் ஈட்டுவதற்குச் செல்ல எண்ணுவதும், மறுபுறம் கரும்பு எழுதப்பெற்ற பணைபொருந்திய தோளையுடைய தலைவியைப் பிரியத் தயங்குவதுமாகிய தடுமாற்ற நிலையைத் தலைவன் அடைந்தான் *[நற்.298:7]*. பணை கொண்ட, தோளையுடையவள், தன்மகள், என்று, தாய் உள்ளன்புடன் பாராட்டினாள் *[நற்.301:5]*. 'ஒருவருக்கொருவர் அறிதற்கியலாத இருள் செறிந்த நடுஇரவில், அகன்ற மெல்லிய பணை அமைந்த தோளையுடைய தலைவியது கொங்கையைத் தழுவ நினைத்து, மீன், கண் உறங்கும்பொழுதும் யான் உறங்கலேன்', என்று, தலைவன் கூறினான் *[நற்.319:8]*. பல்லியின் நற்சொல் கேட்பதால், நின்னை முயங்குவதை எதிர்நோக்கித், திருத்தமாகிய கலன்களையணிந்த நின் பணை கொண்ட தோளைப் பிரிந்து சென்ற தலைவர் இன்று வந்து கூடுவார் போல் தோன்றுகின்றது', என்று, தோழி, பிரிவிடை வருந்தும் தலைவியிடம், கூறினாள் *[நற்.333:6]*. சிறுவர், தம் முயற்சியாலே கிடைத்த இனிய கண்ணையுடைய பனை நுங்காகிய பணை அமைந்த விருப்பம் வரும் கொங்கையின் பயனைப் பெற்று மகிழ்வர் *[நற்.392:5]*.

தலைவன் பிரியான் என்று நம்பியிருந்த தலைவி, அவன் பிரிந்து போன பொழுது, பச்சை மூங்கிலோ என்று கண்டோர் மருள்வதற்குக் காரணமான தன் பணை கொண்ட தோளினின்றும் தொடி முதலிய அணிகலன்கள் கழன்று விழும்படி சென்று விட்டானே', என்று வருந்தினாள் *[ஐங்.318:2]*.

பிரிவின் போது தலைவி உடன்வருதலை மறுத்த தலைவனிடம், தலைவி, 'காட்டில் பணைபொருந்திய கழுத்தினையுடைய அழகிய கலைமானைப் பிரியாது கூடவே திரியும் பெண்மானை நீவிர் கண்டதில்லையோ?' என்று கேட்டாள் *[கலி.20:22]*.

**3. மருதநிலம்.** சோழன் பெருநற்கிள்ளியின் யானைப்படை பகைவரின் வள்ளை, ஆம்பல், பகன்றை, பாகல் முதலியவற்றோடு கரும்பல்லது பிறிது காடறியாத பெரிய குளிர்ந்த பணையைப் - மருத நிலத்தைப் - பாழ் செய்தது *[புற.16:16]*. குயவரின் கருத்துப்படியே திகிரியில் வைத்த மண் உருவாவது போலச், சோழன் நலங்கிள்ளியின் கருத்துப்படியே இந்நிலவுலகமாகிய குளிர்ந்த பணையாகிய நாடு இயங்கும் *[புற.32:10]*. ஒரு வெற்றி மறவனை நினைத்தால், கரும்பாட்டும் ஆலையின் ஒலியைக் கேட்டு வாளைமீன் துள்ளிப் பாயும் அழகிய இடத்தையுடைய குளிர்ந்த பணை சூழ்ந்த ஊர்களை ஆளும் வேந்தர், அச்சத்தால், கண்ணுறக்கம் கொள்ளார் *[புற.322:9]*. மகட்கொடை மறுக்கப்பட்டதால் களிறுகள் தம்முட் பொருவதால் கலங்கிச் சேறாகும் குளம்போல நன்செய் பொருந்திய குளிர்ந்த பணையுடைய ஊர் பாழாகும் *[புற.341:19]*. குளிர்ந்த பணை, கொக்கின் குஞ்சு, சேற்றில் உள்ள மீன்களையுண்ட பின், ஆரல்மீன் ஈன்ற ஐயவிக் கடுகுபோன்ற முட்டைகளையும், இறா மீனின் குஞ்சுகளையும் தாய் தர உண்ணும்படியான, வளமுடையதாகும் *[புற.342:11]*. 'மகள் வேண்டி வந்த வேந்தரோ பலர்; மகட்கொடை மறுக்கப்பட்டதால் அவரால் பருத்தி வேலி சூழ்ந்த பணைபொருந்திய தலைவியின் ஊர் என்னாகுமோ?' என்று, அடைநெடுங்கல்வியார் வருந்திப் பாடியுள்ளார் *[புற.345:20]*. காப்பமைந்த சிறப்பினையுடைய பணையின்கண் உள்ள ஊர், மகட்கொடை மறுக்கப்பட்டதால், என்னாகுமோ?' என்று, மதுரைப்படை மங்கமன்னியார் வருந்தினார் *[புற.351:12]*.

புதுவருவாயினை யுடைய பகைவர் நாட்டுக் குளிர்ந்த பணைகளைப், பல்யானைச் செல்கெழுகுட்டுவன், ஒரு பகல் நேரத்திற்குள்ளேயே, நரிகள் ஊளையிடவும், கோட்டான்களின் குழறும் தாளத்திற்கேற்பப் பேய்மகள் கூத்தாடவும் பாழ்நிலமாய்ச் செய்துவிடுவான் *[பதி.22:31]*. செழுமையான பல ஊர்களையுடைய வளமிக்க குளிர்ந்த பணைகளைப் பொருந்திய காவிரியால் படைக்கப்பட்ட நல்ல நாட்டைப் போன்று, குடக்கோ இளஞ்சேரலிரும்பொறையின் மனைவி விளங்கினாள் *[பதி.90:46]*.

சோழன் கரிகால் பெருவளத்தான், பரிசிலர்க்கு நீரை எப்பொழுதும் தன்னிடத்தேயுடைய, தண்ணிய பணை சூழ்ந்த, அசையாத குடியிருப்பினையுடைய, நல்ல பல ஊர்கள் பொருந்திய நாடுகளைப் பரிசிலாக வழங்குவான் *[பொரு.169]*. சோழர் தாமரைப் பொகுட்டின் மேலே தும்பி தன் பெடையைத் தழுவிக்கொண்டு இறகினையசைத்துச் சீகாமரம் என்னும் பண்ணை எழீஇப் பாடுகின்ற பணை சூழ்ந்த கிழக்கின்கண் உள்ள சோழநாட்டினை ஓம்பினர் *[சிறு.78]*. தொண்டைமான் இளந்திரையன், நாட்டில் உள்ள பணையின்கண் குவித்துள்ள நெற்பொலிகள், வடக்கில் உள்ள செம்பொன் மலையினும் உயர்ந்து தோன்றும் நல்லியக்கோடனது ஆமூர், வெண்டாமரையில் தேனை நுகரும் வண்டு, திங்களைக் கவரும் பாம்பு போலத் தோன்றும் பணையையுடையதாகும் *[சிறு.186]*. *[பெரு.242]*. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், பகைவருடைய வளப்பம் குன்றுதலை ஒருகாலத்தும் அறியாத பெரிய பணைகளை நெருப்புண்ணச் செய்து, நாடு என்னும் பெயர்போய்க், காடென்னும் பெயருண்டாகுமாறு செய்தான் *[மது.154]*. பாண்டிய நாட்டில்

ஊடலாகிய உரிப்பொருளமைந்த தண்பணைப் பகுதியும் இருந்தது [மது.270]. சோழன் திருமாவளவன், பகைவர் போர்முனையில் கெட்டோடுமாறு தன் கன்னிப் போரிலேயே வென்று, மேலும் பகைவர் அரணிடத்தே மிக்கு நடந்து, ஆண்டுத் தண் பணையில் வாழும் பகைவரின் குடிமக்களைத் துரத்தினான் [பட்.239] நன்னனுக்குரிய குளிர்ந்த பணை நாட்டில் பரிசிலர் ஒரு நாள் தங்கினும், பல நாள் தங்கினும் அந்நாடு அவர்கட்குச் செய்யும் நன்மைகள் பலவாகும் [மலை.453].

குட்டுவனால் புரக்கப்படும் குடநாடானது பசி என்பதை அறியாத பணை வளம்மிக்க ஊர்களை யுடையதாகும் [அக.91:14]. தலைவியின் ஊர், குளிர்ந்து, பணையாய நீர்மோதும், நாட்டிலுள்ளது [அக.255:9]. வாணன் என்பானுக்குரிய சிறுகுடி, வளைந்த கதிர்களைக் கொண்ட நெல்லினையுடைய அழகிய குளிர்ந்த பணையினை யுடையதாகும் [அக.269:23].

**4. முரசு, பறை.** நிழலில்லாத நெடிய வழிக்கண் நின்ற தனிமரத்தையொத்த பாரி பணையை - முரசை-உடைய அரசரின் மேம்பட்டும், இரவலர்க்கு வழங்கும் வண்மையுடையவனாகவும் இருந்தான் [புற.119:6]. யானையினுடைய நெடிய கால், பணையைப் போன்றிருக்கும் [புற.371:19]. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைப். பெரியோர், 'நின்னுடைய பணை முழங்கும் போர்க்களம் விளங்குக', என்று பாடி, யானையைப் பரிசிலாகப் பெறுவர் [புற.373:27].

இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன், பகைவர் பலர் கூடிக்காத்து வந்த கடப்ப மரத்தினை அடியோடு கடிந்து, போரில் வென்று அறைந்து முழங்குகின்ற பணையை அக்கடப்பமரத்தினால் செய்து கொண்டான் [பதி.11:14]. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் கடலைக் கடந்து சென்று, ஆங்குள்ள குறும்பு செய்து வந்த பகைவரை அழித்து, அவருடைய கடம்ப மரத்தை வெட்டி, வீழ்த்தி, அதனால் தான் செய்து கொண்ட வெற்றியைத் தரும் பெரிய பணைக்கு, அவனுடைய படை மறவர் பலியினை இட்டுப் பரவினர் [பதி.17:5]. பல்யானைச் செல்கெழுகுட்டுவனுடைய பகைவரும், பணையினை உடையராயிருந்தும், குட்டுவனது .முரசின் முழக்கத்தைக் கேட்டு நடுக்கமுடையவராயினர் [பதி.30:30]. களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் தனது பணை போன்ற வலிய தாள்களையுடைய யானைகளைப் பகைவரின் காவல் மரத்தில் பிணித்தான் [பதி.33:2]. களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலின் வயவரை முன்னேறிச் செல்லுமாறு ஏவுதலைச் செய்யும் பெரிய பணையின் முழக்கத்தைக் கேட்டுப் பகைவர் உளங்கலங்கி அலறுவர் [பதி.39:5]. கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனின் போர்ப்பறை முதலியவற்றோடு கலந்து முழங்கும் பணையின் ஒலி கேட்டு அஞ்சிப் புகலுடைந்த அரசர்கட்கு அவனுடைய அச்சம் தரும் தூசிப்படையாகிய வெள்ளம் காப்பாய் அமையும் [பதி.50:10]. குடக்கோ இளஞ்சேரலிரும் பொறையின் பாசறையில் பலவகை இசைக் கருவிகளுடன் கலந்து பணைகள் முழங்கும் [பதி.88:16].

தம்முடைய பகைவரை வென்று வெற்றிப் புகழை எங்ஙனும் பரப்பியும், மனன், உணர்வு இன்மையால், பிறப்பறுக்கும் பெருஞ்செயலைச் செய்யாது வீணே மாண்டொழிந்த வெற்றிப் பணை முழங்கும் பெரிய வலிமையுடைய வேந்தர், கடல் மணலினும் பலராவர் [மது.234]. மதுரை நகரின் அங்காடித் தெருவில், காற்றெடுத்த கடலலையின் ஒலிபோல, முழங்கும் ஓசையையுடைய, நன்றாகிய பணையை முழக்கி விழாவினை நாட்டினர்க்கு அறிவிக்கும் ஒலியும் ஒலித்துக் கொண்டிருந்தது [மது.362]. நாற்பதியாண்டகவை நிரம்பியதும், போர்த் தொழிலிலே புகழப்பட்டதும், புகர் நிறைந்த நெற்றியினையுடையதும், போரின்கண் விழுப்புண் பட்டிறந்ததுமாகிய களிற்றின் கால், பணையைப் போன்றிருந்தது [நெடு.115].

போர்முனையில் தோற்ற வேந்தர் திறை செலுத்தி நண்பராயினர்; பகைமை பூண்டிருந்த இருபடைகளும் ஒரே படையாகப் பணை அறைந்தனர் (முழக்கினர்) [அக.44:4]. வளைந்த அச்சம் தரும் அழகிய வில்லினை (வானவில்) யுடைய முகிலானது பணை போன்று முழங்கும் [அக.84:2]. மண விழாவில் ஒலிக்கும் மணமுழவுடன், பெரிய பணையும் முழங்கியது [அக.136:7]. படைகளையுடைய வேந்தர், பணையையும் உடையராயிருப்பர் [அக.278:2].

முழாக்களும், பெரும் பணைகளும், ஒலிக்க, ஆடலியல்பு, அறியாத அரிவையைப் போல, வையையின் பெருவெள்ளம் மதகு, கால்வாய் முதலியவற்றில் மட்டும் செல்லாது தான் வேண்டிய இடங்களிலெல்லாம் சென்றது [பரி.7:16].

**5. பந்தி (வரிசை).** பாண்டியன் கீரஞ்சாத்தனுடைய அரண்மனை முற்றத்தில் கம்பத்தைவெறுத்து நெட்டுயிர்ப்புக் கொள்ளும் யானையோடு, பணையை - பந்தியை (வரிசையை) - வெறுத்துக், காற்றுப்போலும் இயல்புடைய குதிரைகள் ஆரவாரித்துக் கொண்டிருக்கும் [புற.178:1].

மதுரை நகரில், வைகறைப் பொழுதில், நெடிய தேரிலே பூணும் பணையிலே நிற்றலையுடைய குதிரைகள், புல்லாகிய உணவையுண்டு தெவிட்டின [மது.660]. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் அரண்மனை முன்றிலில், பணையில் நிற்றலை வெறுத்த குதிரைகள், புல்லாகிய உணவைக் குதட்டிக் கொண்டு தம் பெடையை அழைக்கும் குரல் ஒலித்துக் கொண்டிருக்கும் [நெடு.93]. காவிரிப் பூம்பட்டினத்தில், உப்பங்கழி சூழ்ந்த தோட்டங்களில், உப்பை விற்றுவிட்டு, நெல்லைக் கொண்டுவந்த படகுகளைப் பணையிலே நிற்றலையுடைய குதிரைகளைப் பிணிக்குமாறு போல, வரிசையாகத் தறிகளிலே பிணிப்பர் [பட்.31].

வினைமுற்றி மீண்டு வரும் தலைவன், பணையில் நிற்றலை வெறுத்த போர்த்தொழிற் பயின்ற குதிரைபூட்டிய தேரில், வந்தான் *[அக.254:12]*.

போர்வினை மேற்சென்றுள்ள தலைவனின் தேர், கல் நிலமும், இடம் தகர்ந்து சிதையும்படி, உருளும் வன்மையான கால்களையும், பணையிலே நிற்றலை வெறுக்குமியல்புடைய வலிமையமைந்த ஊக்கமுடைய குதிரைகளையும் கொண்டுள்ளது *[ஐங்.449:2]*.

பாண்டியன், பணையிலே நிற்கப் பழகிய பாய்ந்து செல்லும் குதிரைகள் பூண்ட தேரையுடையவன் *[கலி.57:14]*.

**6. கிளை.** கோசர் என்பார் மிக்க தொன்மை வாய்ந்த ஆலமரத்தின் அரிய பணைகளின் - கிளைகளின் - கீழே உள்ள மன்றத்தில், முரசம் முழங்கப் பகைவரை வென்றனர் *[அக.251:8]*. பெரிய பணையில் கட்டப்பெற்ற ஊசலில் பலரும் ஆடுவர் *[அக.372:7]*.

**7. கூடம்.** தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் யானைகள் வெண்மையில்லாத, வலிய வயிரக் கம்பத்தையுடைய பணையில் - கூடத்தில் - நிற்றலை வெறுத்துக், கம்பத்தினை அறுத்துக் கொண்டு, தாமாகவே சென்று, பகைவருடைய காவல் நீர்த்துறைகளைக் கலக்கியழிக்கும் *[புற.23:1]*.

**பணையம்** - ஈடு. ஒரு பாணன் தன் வேந்தனைப் பற்றி மற்றொரு பாணனிடம் கூறுவானாய், 'எம் தலைவன் நேற்றுத் தன்பால் வந்த விருந்தினரை ஓம்புதற்குத் தம் பழைய வாளினை ஈடுவைத்தான்; இன்று சிறிய யாழைப் பணையமாக - ஈடாக - வைக்கின்றேன்', என்று கூறினான் *[புற.316:7]*.

**பத்தர்- 1.** யாழின் உறுப்பு. யாழ்ப்பத்தரினது-புறத்தையொப்பத் தைக்கப்பட்டுள்ள தையலில் ஈரும், பேனும் நிறைந்துள்ள கிழிந்த ஆடையைத் துறையூர் ஓடைகிழார் உடுத்தியிருந்தார் *[புற.136:1]*. நன்னனிடம் புதிய கூத்தரை ஆற்றுப்படுக்கும் கூத்தன், 'நீவிர் போகும் வழியில் நன்னனின் பகைவரை அழிக்கும் காட்டரணில் கொடிகள் பின்னிக் கொண்டிருக்கும்; அக்கொடிகளை விலக்கிக் கொண்டு முன்னால் செல்வோர் விட்ட கோல், இனிய இசையையுடைய யாழின் பத்தரைக் கெடுக்காதபடி பாதுகாத்து மெல்ல மெல்லச் செல்லுங்கள்', என்று கூறினான் *[மலை.381]*. பந்தர் - 1 காண்க

**2. நீர்த்தொட்டி.** மிடா குன்றின் உச்சியிலுள்ள வேட்டுவச் சேரியினர் ஆனிரை அருந்துவதற்குக் கேணியிலிருந்து எடுத்து நீர்ப்பத்தரில் - நீர்த்தொட்டியில் - வைத்து மூடியிருந்த நீரினைக் களிறு தன் பிடிக்கும், கன்றுக்கும் ஊட்டும் *[நற்.92:6]*.

**பத்தல்-1.** யாழின் உறுப்பு. மானினது குளம்பு பதிந்த இடம்போன்று இருபுறமும் தாழ்ந்து நடுவிடம் உயர்ந்த பத்தலினை - யாழின் உறுப்பினை - உடையது பாலையாழ் *[பெரு.4]*. பேரியாழில் ஒலியமைவதற்குக் காரணமாக பத்தல் பிசினோடு கூட்டி இயற்றப்பட்டுள்ளது *[மலை.26]*. பத்தர்-1 காண்க.

**2. சிறுகுழி.** பள்ளம். ஆனிரையைப் பாதுகாக்கும் ஆயர் தோண்டிய பத்தலின் - சிறுகுழியில் - உள்ள நீரை யானைக் கூட்டம் வரிசையாகச் சென்று உண்ணும் *[நற்.240:8]*. இடையர் தங்கள் ஆன்கள் நீர்பருகற் பொருட்டுக் கோல்களாலே அரிதின் முயன்று தோண்டிய பத்தலின் உள்ள நீரைக் காட்டுயானைகள் அவரை வஞ்சித்துப் பருகிவிடும் *[ஐங்.304:2]*.

**3. கிணறு.** கொங்கரது நாட்டில் இரும்பினாற் செய்த கோடரியால் திண்ணிய வன்னிலத்தையுடைத்துத் தோண்டிய, சிதருண்டு சிறிதே ஊறிய, நீர்பொருந்திய பத்தல்களில் - கிணறுகளில் - கயிறு கட்டி நீரிறைக்கும் முகவைகளை, ஆக்கள் மொய்த்துக் கொண்டிருக்கும் *[பதி.22:13]*.

**4. தூம்பு** (எந்திரத்தின்வாய்). கரும்பு வெட்டுவோர் கரும்பினை யாட்டிச் சாறு பிழியும் எந்திரத்தின் கருப்பஞ்சாறு விழும் பத்தல் - தூம்பு (வாய்) - வளையும்படியான வளமான பகைவரின் நாடுகள், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனால் பாழாயின *[பதி.19:23]*.

**5. நீரிறைக்கும் கருவி.** ஆக்கள் நிறைந்த பாணன் நாட்டில் அவற்றுக்கு நீரூட்டும் பொருட்டுக் கோவலர் தாம் தோண்டிய கிணற்றிலிருந்து பத்தலால் - நீரிறைக்கும் கருவியால் - நீரிறைத்துக் குழிகளில் நிரப்புவர் *[அக.155:9]*.

**பத்தினி** - கற்புடைப்பெண். கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன், கடவுள்தன்மை பொருந்திய பத்தினியாகிய-கற்புடைப்பெண்ணாகிய - கண்ணகிக்குக் கல்கொணரச் சென்று வடவரசரை வென்று அக்கல்லினைக் கங்கையில் நீராட்டிக் கொணர்ந்தான் *[பதி.ப.5:4]*.

**பத்து - ஓர் எண்ணுப்பெயர்.** 'ஒன்றைப் பத்து - பத்து என்ற எண் - முறையாக அடுக்கப்பட்டதாகிய கோடி என்னும் எண்ணிக்கைக் கடையெண்ணாக இருத்திய பேரெண்ணினையுடைத்தாக, நினது வாழ்நாள்', என்று புலவர் குடபுலவியனார், பாண்டியன் நெடுஞ்செழியனை வாழ்த்தினார் *[புற.18:5]*. 'பூணாரம் பூண்ட ஆய் அண்டிரனே! நீ இரவலர்க்குக் கொடுத்த யானைத் தொகையை எண்ணினால், நின்னால் தோற்கடிக்கப்பட்ட கொங்கர், ஓடும்போது விட்டுப்போன வேல்களினும் பலவாகுமே; அதனால் நின் நாட்டிலுள்ள பெண்யானை ஒரு கருப்பத்தில் பத்துக் கன்றுகள் ஈனுமோ?' என்று ஆய் அண்டிரனை, உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பராட்டினார் *[புற.130:2]*.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைக், குமட்டூர்க் கண்ணனார் பாடினார் பத்துப்பாட்டு *[பதி.ப.2]*. பல்யானைச் செல்கெழுகுட்டுவனைப், பாலைக் கௌதமனார் பாடினார் பத்துப்பாட்டு *[பதி.ப.3]*.

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார் பாடினார் பத்துப்பாட்டு *[பதி.ப.4]*. கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனைக் கரணமமைந்த காசறு செய்யுள் பரணர் பாடினார் பத்துப் பாட்டு *[பதி.ப.5]*. ஆடுகோட்பாட்டுச் சேரலாதனை, யாத்த செய்யுளடங்கிய கொள்கைக் காக்கைப்பாடினியார் நச்செள்ளையார் பாடினார் பத்துப்பாட்டு *[பதி.ப.6]*. செல்வக் கடுங்கோ வாழியாதனைக், கபிலர் பாடினார் பத்துப்பாட்டு *[பதி.ப.7]*. தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறையை, மறுவில்வாய்மொழி அரிசில்கிழார் பாடினார் பத்துப்பாட்டு *[பதி.ப.8]*. இன்னிசை முரசின் குடக்கோ இளஞ்சேரலிரும் பொறையைப், பெருங்குன்றூர் கிழார் பாடினார் பத்துப்பாட்டு *[பதி.ப.9]*. நான்கு கொம்புகளையுடைய யானையை ஊர்ந்த திருக்கிளர் செல்வன் (தேவேந்திரன்) நூற்றைப் பத்தாக அடுக்கிய (ஆயிரம்) கண்களையுடையவன் *[முரு.155]*.

**பத்துருவம் பெற்றவன்**-சூது போரிலே ஈரைந்து பெற்றவன். மணல்மேட்டிலே தலைவனைக் கூடப்பெற்ற தலைவி, சூது போரிலே முற்படத் தாயமிட்டு மனைகட்ட உரிமையுற்றபின் கவற்றினால் பத்துருவம் பெற்றவன் - ஈரைந்து பெற்றவன் - மனம்போல ஆக்கம் பெருகினாள் *[கலி.136:6]*.

**பதடி** - கருக்காய். தலைவியோடு இன்பம் நுகரும் நாட்களே, இவ்வுலகில் வாழும் நாட்களாகும்; மற்ற நாட்களெல்லாம் உள்ளீடில்லாத பதடியைப் - கருக்காயைப் - போன்ற பயனில்லாத நாட்களேயாகும்', என்று தலைவன், பாகனிடம் கூறினான் *[குறு.323:1]*.

**பதடிவைகலார்**-ஓர் புலவர். இவரது இயற்பெயர் தெரிந்திலது. 'மழைபெய்த கொல்லையின்கண் மலர்ந்த முல்லையரும்பின் தாதுமணம் போல் மணங்கமழும் நல்ல நெற்றியையுடைய காதலியின் தோளிணையிலே துயின்றுசெல்லும் நாட்களே இவ்வுலகில் வாழும் நாட்களாகும்; அவள் தோளின்கண் துயிலாது பிரிந்து கழிக்கும் ஏனைய நாட்கள் எல்லாம் உள்ளீடில்லாத கருக்காயைப் போன்ற நாட்களாம்', என்ற பொருளில் தலைவன் கூற்றில் அந்த நாட்களைப், 'பதடி வைகல்', என்று பாடிய *[குறு.323]*. தொடர்ச்சிறப்பினால் இவர் பதடி வைகலார் என்று குறிக்கப்பெற்றார். அவ்வொரு பாடலே இவருடையதாக உள்ளது. பாணர் படும்மலைப் பாலைப் பண்ணை இசைத்த இசையின் நல்ல உச்சவோசை போன்று ஓசையுடன் மழை பெய்தலை இவர் நுண்ணிதிற் புனைந்துள்ளார்.

**பதணம் - மதிலுள் மேடை** பல்யானைச் செல்கெழுகுட்டுவன் நெடிய மதிலிடத்தே நிரல்படவமைத்த பதணம்-மேடை-உள்ள பகைவருடன் அகப்பா என்னும் அரணை அழித்து வெற்றி கொண்டான் *[பதி.22:25]*.

**பதத்தான்** - காலம் (செவ்வியை) அறிந்து நடத்துபவன். சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னியின் குதிரைப் படையில் பதத்தான்-காலமறிந்து நடத்துபவன்- (குதிரைவீரன்) -இடவாய், வலவாயாகிய இடத்தைக் காட்டும் பொழுது முகக்கருவி உராய்ந்து சிவந்த வாயையுடைய குதிரைகள் உதிரங்குடித்த வாயையுடைய புலிகளை யொத்தன *[புற.4:7]*.

**பதப்பர்-மணற்கோட்டை** மருதமரத்தை அடியோடு சாய்த்துக் கொண்டு வரும் நீர்ப் பெருக்கத்தை தடுத்து அணையிடுவார், வைக்கோல் புரிகளைக் கொண்டு பதப்பர்- மணல்கோட்டை- அமைத்துக் தடுக்க முயலும்போது, அக்கோட்டை கரையவே, மக்கட் கூட்டத்தினர் பேராரவாரத்துடன் முயன்று வெள்ளத்தைத் தடுத்து வெற்றி காண்பர் *[பதி.30:18]*.

**பதம் - 1. செவ்வி.** சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளி வளவனிடம், ஆவூர் மூலங்கிழார், 'எம்போல்வார்க்கு எந்நாளும் நீ இனிய மொழியோடு எளிய பதத்தை - செவ்வியை - உடையவனாக இரு' என்று வேண்டினார் *[புற.40:9]*. 'பாரி இறப்பதற்கு முன்பு அவனது நாடு அவரையினது கொழுவிய கொடியின்கண் வெள்ளைக்காய் அறுக்கும் பதமாக இருந்தது; இனி அவையெல்லாம் அந்நாட்டில் இராபோலும்', என்று, கபிலர் வருந்திப் பாடினார் *[புற.120:11]*. நாஞ்சில் வள்ளுவனிடம், மருதன் இளநாகனார், 'பெருமானே! எனது வறுமை நிலை நின் பதத்தை எதிர்பார்த்துக் காத்திருக்கத் தாங்காததாகும்; நீ திடீரென்று போருக்குப் புறப்பட்டுப் போனாலும் போய்விடுவாய்; நீ வருவதற்குள் என் சுற்றமும், யானும் அழிந்து விடுவோம்; அதனால், விரைந்து உதவியருள்க!' என்று கூறினார் *[புற.139:10]*. பிட்டங்கொற்றனுக்குரிய குதிரை மலையில் பன்றி காந்தளினது கிழங்கு பிறழும்படியாகக் கிளறித் தள்ளிய புழுதியில் உழாதே குறவர் நல்ல நாள் வந்த பதத்தைப் பார்த்து விதைத்து விளைந்த தினையை உண்பர் *[புற.168:5]*. விளைந்த பதத்தையுடைய சிறிய வயலைக் கண்டதும் அதிலுள்ள கதிர்களைக் கொய்து கொண்டுபோய் திருடி வாழும் எலியனையாருடன் நட்புக் கொள்ளேனாகுக', என்று, சோழன் நல்லுருத்திரன் பாடினான் *[புற.190:1]*.

சோலையில் யானைக்கு வைத்திருக்கும் உணவுக் கவளங்களைப், பாகர் நெகிழ்ந்திருக்கும் பதத்தில் முதற் சூலையுடைய மந்தி கவர்ந்து கொண்டுபோய் உண்ணும் *[பெரு.393]*. மதுரை அங்காடித் தெருவிலுள்ள இல்லுறை மகளிர், பிச்சியினுடைய பூக்கள் மலரும் பதத்தைப் பெற்று மணத்தலால் மாலைக்காலமென்பதையறிந்து விளக்கேற்றி இல்லுறை தெய்வத்தை வணங்கினர் *[நெடு.41]*. தம்முள் விளையாட்டின் பொருட்டுப் பொய்யாகப் போர் புரிகின்ற யானைக்கன்றுகளின் ஒன்றோடொன்று சேர்ந்த கைகளையொப்பப் பிணையும் கதிர்களையுடைய தினை, அறுக்கும் பதத்தினை அடைந்தது *[மலை.108]*. அழகிய குலையினையுடைய மூங்கில் நெல், அவலிடிக்கும் பதத்தைக் கொண்டது *[மலை.121]*.

தலைவன் குறித்த பதத்தில் வாராமையினால், தலைவி, மனையின்கண் மரத்தை வலித்துப்பிடித்துக் கொண்டு

எல்லோரும் துயில்கின்ற இரவில் நெடுநேரம் தலைவனின் வருகையை எதிர்ப்பார்த்து நின்றாள் *[அக.58:12]*. வினைமுற்றி மீளும் தலைவன் வரும் காட்டு வழியில் குளிர்ந்த பதத்தைக் கொண்ட செம்முல்லையின் அரும்பு அலர்ந்திருக்கும் *[அக.64:4]*. கொடிகள் பின்னிக் கொண்டிருக்கும் காட்டில் யானை சோர்ந்திருக்கும் பதத்தை வயமான் பார்த்துக் கொண்டிருக்கும் *[அக.73:13]*. முல்லை நிலத்தில், மணலில், பசிய முல்லைக் கொடியின் மெத்தென்ற பதத்தையுடைய புதிய மலர்கள் பரவிக்கிடந்தன *[அக.74:6]*. முன்பனிக் காலம் போய்க், குரவம் மலர்ந்து, மா, தளிரைப் பெற்றக் குயில்கள் கூவும்படியான இளவேனிற்காலம், பிரிந்த மகளிர்க்குத் துயரைத் தரும் அரிய பதத்தினையுடையதாகும் *[அக.97:17]*. மழைபெய்துள்ள முல்லைநில வழியெங்கும், பள்ளங்களில், தவளைகள் வாச்சியங்களைப் போல ஒலிக்கவும், பிடவின் மலர்கள் செம்மண்ணில் பரந்து அழகினைச் செய்யவும், காந்தட்பூ அரவின் படம் போல் மலரவும், ஆண்மான் தனது பெண்மானுடன் இன்பம் நுகரவும் காடு அழகு பெற்றுத் தண்ணிய பதத்தினையுடையதாயிருந்தது *[அக.154:10]*. நடுஇரவில், காத்தற்றொழிலையுடைய காவலர் நெகிழ்ந்திருந்த பதத்தினையறிந்து, இரவுக் குறிக்குத் தலைவன் வந்து, தலைவியை முயங்கினான் *[அக.162:7]*. குளிர்ந்த பதத்தினையுடைய கார்காலத்தில் முல்லை மலர்ந்து, மணமகள் கூந்தலைப் போல மணந்து, வண்டின் கூட்டத்தைச் செல்லவொட்டாது தடுக்கும் *[அக.244:6]*. மழை பெய்து வெப்பம் நீங்கிக் குளிர்ந்த பதமாகிய இப்பருவத்தில் தலைவி தன்னையும் உடன் அழைத்துச் செல்லத் தலைவனிடம் வேண்டினாள் *[அக.345:2]*.

காட்டில் யானையால் தாக்கப்பட்டுத் துன்புற்று வருந்திய ஆண்புலி செந்நாய் அகப்படுகின்ற பதத்தினைப் பார்த்திருக்கும் *[குறு.141:6]*. கன்றுகளை வழியிலே செலுத்திய சிறுவர், மன்றத்தின்கண் உள்ள வேங்கை மரம் மலரும் பதத்தினைப் பார்த்து, அம்மரத்தின் மேல் ஏறாமல், வானத்தை அளாவிய மலை முழையின்கண் எதிரொலியுண்டாகுமாறு, இன்பத்தைத் தரும் ஆரவாரத்தைச் செய்தனர் *[குறு.241:4]*. கடற்கரையில் கடலிலிருந்து வீசிய நீர்த்துளி படிந்த தலைவியின் கூந்தல் உலரும் பதத்தினை அடைவதற்குள், ஊரில், அவள் மீது பழிமொழி எழுந்தது *[குறு.372:6]*.

மீன் பிடிப்பதற்குக் கடலின்மீது செல்லும் பரதவர் கடற்கரையிலுள்ள புன்னை மரத்தின் நிழலிலே தங்கிக், கடலில் இறங்குவதற்கு நல்ல பதத்தினைப் பார்த்திருப்பர் *[நற்.4:3]*. மலையின்கண்ணுள்ள வேங்கை மர நிழலில் தன் கன்றோடு தங்கியுள்ள ஆமான், கன்றோடு துயில்கின்ற பதத்தினையறிந்த மந்தி மெல்லச் சென்று, ஆமானின் மடியிலிருந்து பாலினைக் கறந்து, தன் குட்டிக்குக் கொடுக்கும் *[நற்.57:3]*. பகற்குறிக்கு வந்தொழுகும் தலைவனிடம், தோழி, 'மலை நாடனே! கொல்லையிலுள்ள தினை கதிர் கொய்யும் பதம் வந்துற்றது; இனித் தலைவி மனையகம் சென்று விடுவாள்', என்று கூறினாள் *[நற்.57:9]*. இரவுக் குறிக்குத் தலைவன், தலைவியின் தந்தையினுடைய காவலர் சோர்ந்துறங்கும் பதம் அறிந்து, தலைவியின் மனைக்கு வந்து முயங்கிச் செல்லுவான் *[நற்.98:9]*. மழை பெய்த நீர், பாம்பு ஓடும்போது அதன் முதுகு நெளியுமாறு போல, ஓடுகின்ற பதம் அமைந்த இளவேனிற்பருவத்தில், குயில்கள் கூடிக், குலாவிக் கூவுதல், பிரிந்துள்ள தலைவிக்குக் காமவுணர்வினை எழுப்பித் துன்புறுத்தும் *[நற்.157:4]*. மலையில் உள்ள கொல்லையில் மழை பெய்யும் பதத்தில் குறவர் உழுவர் *[நற்.209:2]*. தினையின் கதிரெல்லாம், பதம் வந்துற்ற பொழுது, இதுவரை அதனைக் காத்து வந்த தலைவியை இல்லிற்குக் கொண்டு போய் இற்செறிப்பர் *[நற்.259:10]*. பரதவர் உழாமல், நெய்தல் நிலத்தில் விளைக்கும் உப்பினை, உப்பு வாணிகர் வாங்கிச் செல்லும் பதம் வரும் வரையில், கழிக்கரைச் சோலையிலே, குவடாகக் குவித்து வைப்பர் *[நற்.331:2]*. கொல்லி மலையில் உள்ள சிறிய பசிய மலைப்பச்சையைச் சூடுதலால் அதன் மணம் நல்ல பதத்தில் கமழ்கின்ற கூந்தலையுடையவள், தலைவி *[நற்.346:10]*.

தீப்போன்ற இலவ மலர்களும், பொரி போன்ற புன்க மலர்களும் மலரும்படியான இளவேனில் பருவம் காதலர்க்குக் குளிர்ந்த பதத்தினையுடையதாகும் *[ஐங்.368:3]*. மரங்களைத் தழுவிக்கொண்டு பூங்கொடிகள் அழகாக அசைவதற்குக் காரணமான இளவேனிற்பருவம் காதலர்களுக்குக் காண்டற்கரிய பதத்தினை உடைய பெரும்பதமுடையதாகும் *[ஐங்.400:3(2)]*.

இரவுக்குறிக்கண் இடையூறு உண்டாகத் தலைவன் நடுயாமத்தினது பதத்தைப் பெறானாய்த் துயருற்று ஏகினான் *[கலி.46:10]*. செங்காரிக் காளையொன்று ஆயனைக் கொம்புகளாலே குத்தி மேனோக்கும் போது கொம்புகளில் உள்ள மணிக்கொத்துக்கள் குருதியால் நனைந்து அசையும் காட்சி, நறாம் பூவின் அரும்பு மலரும் பதத்தினை நோக்கி, அதனைச் சூழ்ந்து திரியும் தும்பி போல் தோன்றும் *[கலி.105:41]*. தலைவனிடம் தோழி, 'கழியில் மலர் மலர்ந்து மணம் வீசுவதைக் கண்டு, தலைவி, நீ வருவதால் உனது மார்பின் மலர் மாலையின் மணம் என்று மகிழ்பவள், அப்பொழுது அப்பூக்கள் மலரும் பதத்தினிடத்தே அவற்றை அசைத்த காற்று தன்மேற்படவும், இது கழியின்மலர்மணம் என்று கண்டு மயங்குவாள்', என்று கூறினாள் *[கலி.126:12]*. தோழி, தலைவனிடம், 'தலைவி அறிவு மயங்கி, அழுது, வளைகள் கழலும்படி, அவளை நீ துறந்தது, கடற்கரையிலே நின் தேர் எப்பொழுது வரும் என்று தெரியாமல் அதுவரும் பதத்தினை நோக்கிக் காத்துக் கொண்டிருந்தாளே அதற்காகவோ?' என்று கேட்டாள் *[கலி.127:10]*.

புலியுருக் கண்டு வெகுண்ட பெண்யானையைக் கண்ட ஆண்யானை, தோட்டிக்கும் அடங்காமல் கடந்து சிதையும்

பதத்தில் அதன் பாகர் அதனை அடக்கி அதன் மேலிருந்தோரைக் காத்தனர் *[பரி.10:50].*

**2. உணவு.** சேரமான் பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதன், பாரதப் போரில் ஐவர் படைக்கும், (துரியோதனன் முதலாகிய) நூற்றுவர் படைக்கும் பெருஞ்சோறாகிய மிக்க பதத்தை - உணவை-வழங்கினான் *[புற.2:16].* பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், படை மறவர் பகைவருடைய பொருள்கள் முடிந்த அளவு முகந்து கொண்டு முடியாத பொருள்களைப் பகைவர்க்குப் பதமாகாப் பொருட்டு நிலங்களில் சிதறியெறிவர் *[புற.23:7].* அதியமான் நெடுமானஞ்சி, மிகுதியாக இருக்குமாயின் பரிசிலர்க்குப் பதங்கொடுத்துச், சிறிதே இருக்குமாயின் எல்லோருடனும் பகுத்துண்ணும் பண்பினன் *[புற.95:6].* அஞ்சியின் மகன் பொகுட்டெழுனி, விழா, இல்லையாகவும் தம் படை மறவருடன், ஆட்டுக்கறியுடன் உண்டாக்கப்பட்ட பதத்தை உண்ணும் இயல்பினன் *[புற.96:6].* பெருஞ்சித்திரனாரின் இல்லில் அடுவதற்கு ஒன்றும் இல்லாததால் அவருடைய மனைவி, குப்பைக் கீரையின் தளிரைப் பறித்துக்கொண்டு வந்து உப்பின்றியே அக்கீரையை அட்டு, மோரின்றி, அவிழாகிய (சோறுமுதலிய) பதம் இன்றியே வெறுங்கீரையைக் குழந்தைகள் முதலியவர்களுக்கு உண்பித்தாள் *[புற.159:12].* பிட்டங்கொற்றனிடம் சென்றுவிட்டால் போதும்; இனிமேல் வரும் பதத்திற்காக எதுவும் செய்ய வேண்டாம்; அவன் வழங்கியதே எப்பொழுதும் போதும்' என்று வடம வண்ணக்கன் தாமோதரனார் கூறினார் *[புற.172:5].* பழமையான குடிகள் நிறைந்த ஊருக்கு வேந்தனாகிய ஒருவன், மலையைப் போன்ற நெற்போர்களிலிருந்து கடாவிட்டுக் குவித்த நெல்லைத் தனது வலிய வில்லாளர்க்கு நாள் பதமாக நல்கும் பண்பினனாக இருந்தான் *[புற.353:10].* 'பெருமானே! வள்ளல்களை யான் எங்கும் காணப்பெறாமையால் ஊண் கிடைக்கப்பெறாத என்னுடைய சுற்றத்திற்கு நிறைந்த பதத்தைப் பெற வேண்டுமென்று கருதி நின்னிடம் வந்தடைந்தேன்', என்று, ஊன்பொதி பசுங்குடையார், சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னியிடம் கூறினார் *[புற.370:4].*

சோழன் கரிகாற் பெருவளத்தான் பொருநருக்குத் தின்பண்டங்களையும், கள் முதலியவற்றையும் உண்பித்தபிறகு ஒரு நாள் சோறாகிய பதத்தையும் உண்ணுங்கள் என்று ஊட்டினான் *[பொரு.112].* தொண்டைமான் இளந்திரையன் பாணர்க்குத், தெய்வங்களுக்கு இடும்பலிபோலத் தேக்கிலையிலே குவித்துப் பதத்தை உண்ணுவிப்பான் *[பொரு.105].* காவிரிப்பூம்பட்டினத்திலுள்ள வேளாளர் அடப்படாத அரிசி முதலிய பசிய பதத்தைப் பிறர்க்குக் கொடுத்து, இல்லறத்தினியல்பு குன்றாத பிறர்க்குக், குளிர்ந்த நிழல் போன்ற வாழ்க்கையினை யுடையராய், வளைந்த மேழித் தொழிலையே விரும்பும் இயல்பினராய் வாழ்ந்தனர் *[பட்.203].* நன்னனது நாட்டில் வாழும் கானவருடைய, சிறுகுடிக்குக் கூத்தர் சென்றால், தம்சுற்றத்தார்க்குத் தேன், கிழங்கு, பன்றியின் தசை முதலிய பதத்தை மிகப் பெறுவர் *[மலை.157].* நன்னனுடைய நாட்டிலுள்ள, மலையைச் சார்ந்த காட்டிடத்தே, வழியில், கூத்தர் செல்வராயின் பரணிலிருந்து கானவன் அடித்து வீழ்த்திய பன்றியைக் கண்டு, மூங்கில் காட்டின் தீயில் மயிர்போக வாட்டிச், சீவித் தின்று சுனை நீரை அருந்தி, முழுதும் உண்ணமுடியாது மிகுந்த தசைப்பதத்தைப் பொருந்திய சுமையினையுடையவராய்ச் செல்வர் *[மலை.252].*

தலைவியின் தந்தையினுடைய காவல் பொருந்திய பெரிய மனையில் மிகுதியான பதம் நிறைந்துள்ளது *[அக.49:14].* முசுண்டை என்னும் வள்ளல், பரிசிலராகிய பாணர்க்கு, நாள்தோறும், பொற்பூவினைக் கொம்பில் கட்டியும், பொன்னரி மாலையைக் கழுத்தில் அணிவித்தும், திமிலில் சந்தனம் பூசியும் ஏற்றினை முன்னர் நிறுத்தி, மிக்க பதத்தினைக் குவித்து நீண்ட தேரினை, யானையுடன் அளிப்பான் *[அக.249:7].* கூத்தர் பல ஊர்களுக்கும் சென்று கூத்தியற்றி, இது எனது ஊர் என்று சொல்லுதற்கியலாத இடையூறு இல்லாத வாழ்கையராய்க், கொடையாளர் எஞ்சாது கொடுத்த பரிசிலாகிய சிறிய பதத்தினை இடையறவின்றிப் பெற்றுப் பாதுகாவாது உண்ணும் வாழ்க்கையராவர் *[அக.30:4].* சுரநெறியில் மறவரின் அம்பினால் அடியுண்டு தன் பெண்மான் இறந்ததைக் கண்ட ஆண்மான், தன் பெண்மானுக்காக வருந்தி மேயும் பதத்தினை வெறுத்த துன்பத்துடன், நீரும் அருந்தாது, அம்புதைக்கப்பெற்ற மக்களைப் போல வருந்திக் கண்ணயர்ந்து கிடக்கும் *[அக.371:6].*

வரைவதற்குரிய முயற்சிகளோடு வந்த தலைவனை ஏற்றுக்கொண்ட செவிலியைத்; தோழி, 'தலைவன் வரும் என்று கூறிய அன்னை, பெறுதற்கரிய அமிழ்தமே உண்ணும் பதமாகவுடைய பெரும்புகழுடைய துறக்கத்தைப் பெறுவாளாக', என்று மகிழ்ச்சியோடு கூறினாள் *[குறு.83:1].* தலைவன் வரைவதற்கு வர இருப்பதைக் குற்றேவல் மகனால் அறிந்த தோழி, தலைவியிடம், 'தோழியே! மகனே நன்றோ? என்றேனாக, நன்றே என்று கூறிய அவன், நெய்மிக, ஊறிய குறும்பூழ்க் குழம்போடு கூடிய கறியாக உண்ணுகின்ற பதத்தைப் பெறுவானாக', என்று கூறினாள் *[குறு.389:2].* பதன்-2 காண்க.

**3. தகுதி.** இளங்கண்டீரக்கோவின் நாட்டிலுள்ள மனைவியர் தம் கணவர் சேய்மையில் சென்றுழி வரும் பரிசிலர்க்குத் தம் பதம் - தகுதி - காரணமாகப் பிடிகளைப் பரிசிலாக அளிப்பர் *[புற.151:5].*

தலைவியைத் தன்னுடன் சேர்த்து வைக்க வேண்டிய தலைவனிடம், தோழி, 'பெருமானே! மன்னவன் மகளாகிய அவளிடம் நான் கூறுமளவிற்கு எம்பதத்து எளியள் அல்லள்.

அவள், எமக்குக் கடவுள் போன்றவள்' என்று கூறி மறுத்தாள் [நற்.தி.1:6].

தலைவி, தலைவனுக்காகக் குறையிரந்த தோழியிடம், 'தோழியே! காரணமின்றியே தெருவில் கலங்குவோர்க் கெல்லாம் பிறர் துயரைத் தம் துயராக் கொள்ளும் வாரணவாசிப் பதம் என்னும் நிலையை நீ மேற்கொள்ளாதே', என்று கூறினாள் [கலி.60:13].

**4. நீர்** (தண்ணீர்). சேரமான் கணைக்காலிரும்பொறை சோழன் செங்கணானின் சிறையிலிருந்த போது, 'குழந்தை யிறந்து பிறந்தாலும், தசைப்பிண்டமாகப் பிறந்தாலும் அவற்றைப் பிளந்தே புதைக்கும் அரசர் குடியில் பிறந்த நான், நாய்போல் தொடரால் பிணிக்கப்பட்டும், சாகாமல் உயிர்வாழ்வதற்காகப் பகைவர் தரும் சிறிய பதத்தை - நீரை - அருந்துதல் அரசர் பிறப்பாகுமோ?' என்று வருந்திக் கூறினான் [புற.74:4].

வறண்டிருந்த காட்டில் முதன்முதல் குளிர்ச்சியான பதத்தை முகில் பொழிந்தவுடன் அக்காடு அழகு பெற்று விளங்கும் [நற்.362:3,4 ச.இ. பதிப்பு].

**5. தன்மை.** குளிர்ந்த பதத்தை - தன்மையை - யுடைய தேற்றாமர மலர்களை வையையின் வெள்ளம் அடித்துக்கொண்டு வந்து மதுரையிலுள்ள திருமருதத் துறையில் சேர்ந்தது [பரி.11:18].

**6. அரிசி.** பரத்தமைத் தலைவனிடம் ஊடுதல் கொண்ட தலைவியிடம், தோழி, 'தோழியே! தலைவனின் பரத்தமைக்காக மனைவி ஊடினால், தம்மிடத்திலிருந்து திருமகள் (செல்வம்) நீங்கச் சிறிய பதத்தைக் - அரிசியைக் - கொழித்துத் தாமே தனித்து உண்ணும் வறுமை நிலை வந்துறும்', என்று கூறினாள் [அக.316:13].

**7. தானியம்.** மாலைக்காலத்தே ஆண்பூனை தனது பெண்பூனையின் பசியினை நீக்குவதற்காக மிக்க வரகாகிய பதம்-தானியம்-நிறைந்த தொகுதியாகவுள்ள கூடுகளின் பக்கத்தே கோழிச்சேவலைப் பற்றுவதற்கு அற்றம் பார்த்திருக்கும் [அக.367:7].

**8. விழா.** இனிய இசையுடன் கஞ்சதாளம் ஒலிக்க அத்தி என்பான் (சேர இளவரசன்-ஆட்டனத்தி) காவிரியில் புனல் பதத்தில்-விழாவில்-நடனம் ஆடினான் [அக.376:6].

**9. கள்.** சோழன் கரிகாற் பெருவளத்தான் தன்னிடம் வந்த பொருநருக்கு ஆட்டிறைச்சி உணவுடன் மகிழ்ச்சியைத் தருகின்ற பதத்தைக்-கள்ளினைப்-பல நாட்களுக்கு வழங்கி மகிழ்ந்தான் [பொரு.111].

**10. உப்பு.** உப்பு வாணிகர் வண்டிகளில் ஊர்கள் தோறும் சென்று சிறிய உணவாகிய பதத்தினை-உப்பினை-விலைகூறி விற்பர் [பெரு.64].

**பதலை**-ஒரு பக்கப்பறை. கூத்தர், விறலியோர் முதலியோர் நல்ல யாழுடனே, சிறுபறையுடனே பதலையையும்-ஒரு பக்கப் பறையையும்-வேந்தரிடம் பரிசில் பெறச் செல்லும்போது எடுத்துச் செல்வர் [புற.64:1]. விறலி தோளிலுள்ள காவினது ஒருபுறத்தே பதலையையும், மறுபுறத்தே துளையை அகத்தேயுடைய சிறிய முழாவையும் கட்டித் தொங்கவிட்டுத் தூக்கிச் செல்லுவாள் [புற.103:1]. வல்வில் ஓரியைப் பாடுதற்கு, வன்பாணர், விறலியிடம், விறலியே! யான் பாடுவேன்; நீவிர் முழா, யாழ், பெருவங்கியம், சிறுபறை, சல்லி முதலியவற்றோடு பதலையின் ஒருமுகத்தை மெல்லென இயக்குமின்!' என்று கூறினார் [புற.152:17].

இசை எழுப்புதற்குரிய நல்லயாழை ஏவல் இளையர் சுமந்துவர, முழவுடன், பதலையையும், மற்றவற்றையும் காவினது ஒருபுறத்திலும், பாடற்றுறைக்கு வேண்டிய கருவிகள் யாவற்றையும் காவினது மறுபுறத்திலும்,இளையர் சுமந்து வருவர் [பதி.41:3].

மத்தளம், சிறுபறை, கஞ்சதாளம், நெடுவங்கியம், தூம்பு, குழல், கரடிகை, சல்லி முதலியவற்றோடு மாத்திரையை அறிவிக்கும் தாளத்தையுடைய ஒருகண் பதலையையும் கூத்தர் உடையராயிருந்தனர் [மலை.11].

அரலைக் குன்றத்தின் கோமானிடம் பரிசில் பெறும் பாணர் தாளத்துடன் பதலையை இயக்குநராய் இருந்தனர் [குறு.59:1].

**பதவப்புல்**-அறுகம்புல். குடம் கறக்கும் ஆன்திரள் மழை நிறையப் பெய்த காட்டிற்குச் சென்று பதவப்புல்லை-அறுகம்புல்லை-நிறைய உண்ணும் [கலி.109:2].

**பதவின்பாவை**-அறுகம்புல்லின் கிழங்கு. தலைமை பொருந்திய ஆண்மான், தான் விரும்பிய பெண்மானொடு வெண்கோடலின் பசிய பயிருடன், பதவின்பாவையையும்-அறுகம்புல்லின் கிழங்கையும்-தின்று வெறுத்தால், குளிர்ந்த நீரைப்பருகி ஓரிடத்தே தங்கும் [அக.23:7].

**பதவு**-அறுகு. முல்லை நிலத்தின் பதவை-அறுகை-அருந்திய நல்ல ஆனினங்கள் மாண்புற்ற பருத்த மடி இனிய பாலைச் சொரியக் கன்றினை நினைத்துக் கொண்டு மன்றுள் புகும் [அக.14:9]. குளிர்ந்த முல்லை நிலத்தில், ஆண்மான்கள், நெருங்கிய இலைகளையுடைய பதவினது சிவந்த தண்டினோடு, மெல்லிய கொத்துக்களை, இளைய பெண்மான்களை அருந்தச் செய்து, நீரையும் உண்ணச்செய்து, மணல் சார்ந்த கரைகளில் அசைபோட்டுக் கொண்டு தூங்கும் அவற்றைக், காவல் காக்கும் [அக.34:5]. திரிந்த கொம்பினையுடைய ஆண்மான், குளத்தின் நீரையுண்டு, பதவினை அருந்தி, நீண்ட மணலில் பிடவினது நிழலிலே, அழகிய தன் பிணையுடன், இன்பம் பொங்கத் தங்கியிருக்கும் [அக.139:9]. ஆண்மான்கள் வாய்க்கால்களில் தங்கியுள்ள நீரினை

நாவால் பருகிப் பதவாகிய உணவினைத் தின்று, காஞ்சி மரத்தின் மெல்லிய பூங்கொத்துக்களிலிருந்து உதிரும் பொன் போன்ற நுண்ணிய பொடிகள் மேலே உதிர மணல் மேட்டிலே உறங்கும் *[அக.341:7]*. தன் துணையைப் பிரிந்த மலை எருது, செவ்விய தண்டுகளையுடைய பதவினது நீண்ட கொத்தைக் கடித்துத் தின்னும் மலையாவைப் பார்த்துப் பெருமூச்சுவிட்டு உகாய் மரத்தின் நிழலிலே தங்கும் *[குறு.363:2]*.

பதன்-1. செவ்வி. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனிடம், வெள்ளைக்குடிநாகனார் 'அரசே! குடிமக்கள் நீதி வேண்டுங்காலத்து பதனில்-செவ்வியில்- எளியோனாக இருப்பின் மழைத்துளி வேண்டியோர் மழையைப் பெற்றவர் போல, மகிழ்வர்', என்று அறிவுறுத்தினார் *[புற.35:15]*. மலையமான் திருமுடிக்காரியிடம், பரிசிலர், பதனின்றாகிய நேரத்திலே சென்றாலும் வறிதே மீளமாட்டார் *[புற.124:2]*. பொறையாற்றுக்கிழான் என்ற வள்ளலை, கல்லாடனார், 'வேந்தே! நினது நாட்டில் நெல்வளம் நிறையும் பதன் அறிந்து மழை பொழிவதாக', என்று வாழ்த்தினர் *[புற.391:20]*.

பகற்குறிக்கு வரும் தலைவனிடம், தோழி, 'பெருமானே'. இனி நீ இவளுடைய் தந்தையின் காவலாளர் சோர்வுற்றிருக்கும் பதனை மறையவுணர்ந்து இரவில் வருதல் வேண்டும்', என்று கூறினாள் *[அக.2:14]*. உழவர் விடியலில் வைக்கோற் போரைக் கடாவிட்டு, அலைத்தெடுத்துத், தொழிலால் வந்த மயக்கம் ஒழிய மாங்காய்களைப் பறித்தெடுத்து அவற்றினைப் புளிக்கும்படியான பதனை உண்டாக்கிப், புதுக்குடங்களில் மிகப்பெய்த சாரங்களைப் பசிய குடைகளால், குளத்தில் மண்டிய கடாக்களைப் போலக் குடிப்பர் *[அக.37:9]*.

மழை மிகுதியாகப் பெய்தால் எள்ளின் காய்கள் பதன் அழிந்து ஒழுகி உள்ளீடில்லாது ஊமைக்காய்களாய் விடும் *[குறு.261:1]*.

தலைவி, தன் தோழியிடம், 'தோழியே! ஓர் ஆணழகன், என்னிடம் வந்து, எனது பலவுறுப்புக்களைப் பலபடப் பாராட்டி, வலையர், விலங்குகள் சோர்ந்திருக்கும் பதனைப் பார்ப்பது போல, எனது உள்ளவுறுதி தளரும் செவ்வியைப் பார்த்துத், தொழுதலையும் செய்தான்', என்று கூறினாள் *[கலி.55:17]*.

பதம்-1 காண்க.

2. உணவு (சோறு). கிணறு வெட்டுவதற்குப் போகும் ஆடவர் தோளிலே பதனை -உணவை -யுடைய மூட்டை தொங்கும்படி செல்வர் *[அக.79:1]*.

பதம்-2 காண்க.

பதாகை-பெருங்கொடி. மதுரை நகரின் அங்காடித் தெருவில் பலவிதமான கொடிகளோடு பதாகைகளும்-பெருங்கொடிகளும்- மலையிடத்து அருவியசையுமாறு அசைந்தாடின *[மது.373]*. காவிரிப் பூம்பட்டினத்தில் பலவிதமான பதாகைகள் செறிந்து பறப்பதால் அவற்றின் நிழலில் ஞாயிற்றின் வெம்மை புகுவதில்லை *[பட்.182]*.

பதி-1. ஊர். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனிடம், நல்லிறையனார், 'வேந்தே! எனது பதியில்- ஊரில்-முதலிலிருந்து பழகியறியாத துன்ப வாழ்க்கையைத் தருகின்ற எனது மதி நுட்பத்தைக் கெடுக்கின்ற வறுமையைப் போக்கியருள்வாயாக', என்று கூறினார் *[புற.393:1]*. நலங்கிள்ளியால் உபசரிக்கப் பெற்ற கோவூர்கிழார், 'வேந்தன் எனக்குப் புத்தாடை அணிவித்துக் கள்ளையும், உணவையும் ஊட்டுவதால் நாடோறும் மகிழ்ந்து அவனது பதியில் இருக்கும்பொழுது நாட்கள் போனதே தெரியவில்லை', என்று கூறினார் *[புற.400:15]*.

தீயவை யறியாது, அறவாழ்க்கையே வாழ்ந்து, தாம் வாழும் பதிக்கு இழுக்கை உண்டாக்காது, வாழும் அறவோர், உறையும் நாட்டினை இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் புரந்தான் *[பதி.15:30]*. உண்ணா நோன்பினராகிய விரதியர் திருமாலின் செவ்விய அடியில் வணங்கி, வாழ்த்தி, நெஞ்சு நிறைந்த மகிழ்ச்சியுடையராய்த் தாம்தாம் இனிதுறையும் பதிகட்குத் திரும்பிச் செல்வர் *[பதி.31:10]*. தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறை பகைவரின் பதிகள் பலவும் பாழாகும்படியாகப் பகைவர் நாடு நோக்கிப் படை எடுத்துச் சென்றான் *[பதி.71:18]*. செல்வக்கடுங்கோ வாழியாதன் பகைவரின் நாடுகளையும், பதிகளையும் அழித்துப் பகைவரைத் தோற்றோடச் செய்தான் *[பதி.ப.7:4]*.

சோழன் கரிகாற் பெருவளத்தானிடம் பரிசில் பெறச் சென்ற பொருநரை, அவன், பல நாள் இருக்கச்செய்து, ஒருநாள் எங்களுடைய பதிகட்குச் செல்கின்றோம் என்று மெதுவாகக் கூறினவளவில், எம்மைவிட்டுப் போகின்றீரோ? என்று கூறி, யானைமுதலிய பரிசில்களை வேண்டிய அளவு நல்கி அனுப்பி வைத்தான் *[பொரு.121]*. உப்பு வணிகர் சகடத்தில் உப்பினையேற்றிக்கொண்டு போய்ப் பதிகள் தோறும் விலை கூறி விற்பர் *[பெரு.65]*. கிளிக்கு மறையோசையைக் கற்பிக்கும் அந்தணர் உறையும் பதி கன்றுகளைக் கட்டிய பந்தரினையும், ஆப்பியான் மெழுகிய நன்றாகிய மனைகளையும் உடையதாய்க் கோழி, நாய் முதலியன உலவாமல் தூய்மையாய் இருக்கும் *[பெரு.301]*. பாண்டியன் தலையாலங்காத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பகைவருடைய வளமான பதியிடத்தவாகிய குடிகளெல்லாம் பசியால் வருந்தி அயல்நாடுகளிலுள்ள தம் சுற்றத்திடம் சென்று சேரும்படியாகப் பாழ் செய்வான் *[மது.167]*. நன்னனின் நாட்டிலுள்ள ஆயர் மகளிர், அங்குச் செல்லும் கூத்தருக்கு, ஆக்களின் இனிய பாலைக் கொண்டு வந்து சொரிவதால் அவர்தம் பதியினின்றும் பிரிந்து வந்த வருத்தம் தீர்வர் *[மலை.411]*. நன்னின் மூதூர், பொருட்திரள் குவிந்துள்ளதால்,பதியினின்றும் பெயர்தலை யறியாத பழைய குடிமக்கள் நிறைந்திருக்கும் தன்மையதாகும் *[மலை.479]*.

நன்னனிடம் தங்கி விருந்துண்ணும் ...ர் எங்கள் பதிக்கு யாங்கள் மீண்டும் செல்ல விரும்புச ...றோம்', என்று கூறிப் புறப்படுவாராயின், அவன் அவர்கட்குத் தேர், யானை, குதிரை, ஆனிரையோடு பொற்கலங்களையும், பொற் குவியலையும் கொடுத்தனுப்புவான் *[மலை.567]*.

செவிலித்தாய், தலைவியை, 'மகளே! நீ குழந்தைப்பல்லை; அதனால் ஆயத்துடன் எங்கும் போகாதே; தொன்மையான நமது பதியில் தாக்கி வருத்தும் தெய்வங்கள் உள்ளன; நீ நமது வாயிலைத் தாண்டிப் போகாதே, என்று இற்செறித்தாள் *[அக.7:4]*. பாலையில் உறையும் மக்கள் மழை பெய்யாது வறண்ட காலத்தில் தத்தம் பதிகளினின்றும் பெயர்ந்து வேற்றிடங்கட்குச் செல்வர் *[அக.77:6]*. பிரிவுணர்த்திய தலைவனுக்குத், தோழி, 'பெருமானே! இனிய நகையும், கூரிய பற்களும், சிவந்த வாயும், குவளை மலர் போன்ற, மையுண்ட கண்களும், மதி போன்ற நெற்றியினையுமுடைய தலைவி வருந்த நின்னால் இப்பதியை நீங்கிப் போய்த் தங்குதல் முடியுமோ', என்று கூறிச் செலவழுங்குவித்தாள் *[அக.179:14]*. தலைவனிடம், தோழி, 'தலைவ, எம்பதி புலால் நாற்றம் நாறும் நீரால் சூழப்பட்ட சிறுமையுடைத்தாயினும் இன்பம் தருமாற்றால் ஒரு நாள் தங்கியிருந்தோர்க்கும் அடுத்தநாள் தம்பதியையே மறந்திடச் செய்யும் பண்பினையுடையதாதலால் வந்து செல்வாயாக', என்று கூறினாள் *[அக.200:6(2)]*. ஆனிரையை மீட்டு வெட்சி மறவரைத் தடுத்து நிறுத்தும் போரில் இறந்துபட்ட கரந்தை மறவரது புகழை நிலைநிறுத்த நடுகல் நாட்டி, நீராட்டி, மஞ்சள் பூசி, மாலையணிவித்து, வழிபாடாற்றிவிட்டு மற்றைய கரந்தை மறவர் தம்பதிக்குப் பெயர்வர் *[அக.269:13]*. இடைச்சுரத்தில், தலைவன் தன் நெஞ்சினை விளித்து 'நெஞ்சே! பண்டு தொட்டுப் பழகிய நம் பதியை மறந்து செல்லுதல் நம்மால் இயலுமாயினும், எனது பிரிவினையறிந்து தலைவி மயக்குற்று நின்ற நிலையை மறந்து செல்லுதல் அரிதாகவுள்ளது', என்று வருந்திக் கூறினான் *[அக.299:3]*.

பிரிவுத் துயரால் வருந்தும் தலைவி, தோழியிடம், 'தோழியே! இந்த நம் சிற்றூர், காதலரைப் பிரிந்து துயருறும் மகளிர்க்கு ஆறுதல் கூறாது துயிலும் அறிவற்ற மக்களையுடையதா கையாலே இது நாம் தங்கி உறைதற்குரிய பதியன்று', என்று கூறினாள் *[குறு.145:1]*.

தாமரைப் பூவில் உறையும் வண்டு, அத்தாமரையை வெள்ளம் சாய்த்து விடவே, வேறொரு குளத்தில் வாழ்ந்திருந்து, முன்னைய குளத்தில் வெள்ளம் வற்றவே மீண்டும் பழைய தாமரையிலேயே குடியேறி வாழ்வது, பண்பட்ட நாட்டில் பகைவரின் படைபுக, வேறொரு வேந்தனின் பதிகளில் குடியேறி வாழ்ந்து, தம் நாட்டிலே பகை நீங்க மீண்டும் தம்பதிகளில் குடியேறி வாழும் மக்களைப் போன்றிருந்தது *[கலி.78:6,8]*. ஆக்கள் மாலைக் காலத்தில் தம் கன்றுகளை நினைத்துக் கொண்டு தாம் தங்கும் பதிகளிடத்தில் உள்ள மன்றுகளில் வந்து புகுதரும் *[கலி.119:9]*.

வையையில் வெள்ளம் வரக் கண்ட மதுரையில் வாழும் இளம்பருவத்து மகளிரும், முதிய பருவத்து மகளிரும், கற்புடைப் பெண்டிரும், பரத்தையரும் ஆகிய மகளிர் பதியின்கண் உள்ள பிற மக்களோடு கூடி வையையாற்றின் கரையையடைந்தனர் *[பரி.10:26]*. திருப்பரங்குன்றத்தின்கண் உள்ள முருகப் பெருமானே! யாங்கள் எம்முடைய பதியின்கண் உரிமையோடு உறைதல் போன்று நினது திருவடி நிழலிலே எஃஞ்றும் பிரியாதுறைதலை விரும்புகின்றோம்; அருள்புரிவாயாக! என்று அன்பர்கள் வேண்டினர் *[பரி.18:55]*. திருமால் எழுந்தருளியுள்ள இருந்தையூரின் ஒருபால் ஒழுக்கம் தவறாத அந்தணர் வாழும் பதி உளது *[பரி.தி.1:21]*.

**2. குடம்பை.** கடல்நீரை முகந்து கொண்டுவந்து முகில் மழைபொழியும் சமயத்தில் பறவைகள் தாம்தாம் விரும்பியுறையும் பதிகளிலே-குடம்பைகளிலே-சென்று அடங்கும் *[குறி.46]*. காதலியைப் பிரிந்துறையும் காதலன், புள்ளினம் தம்தம் பதியின்கண்ணே சென்று இன்புறுவதைக் கண்டால், படுக்கையிலே கிடந்த யானை போல, வெய்ய பெருமூச்சினையுடையவனாய்த் துன்புறுவான் *[நற்.253:1]*.

**3. இடம்.** இவ்வுலகம் முழுவதையும் தாமே ஆட்சிபுரிந்த பெருவேந்தரும் முடிவில் சுடுகாட்டைத் தம் வாழ்பதியாக-வாழிடமாகக்-கொண்டனர் *[புற.363:5]*.

மனைவியைப் பிரியாது ஒரே பதியில் வாழ்பவரால் நட்பினர் இன்மையையும், உறவினரின் துன்பம் களைதல் இன்மையையும், பகைவர் பெருமிதத்துடன் இருத்தலையும் அடைவர் *[அக.279:3]*.

பொய்கைப் பூவில் புதிய தேனையுண்ட வண்டு கழியில் பூத்துள்ள நெய்தல் மலரின் தாதினை உண்டுவிட்டுத்தாமரை மலரின் கொட்டையாகிய தன் வாழ்பதியிடத்தே மீண்டு வரும் *[கலி.74:4]*. மாலைக்காலத்தில் தாழ்ந்த மரக்கிளைகளில் பறவைகள் பேடுஞ்,சேவலுமாகத் தம் பதியில் சேர்ந்து ஆரவாரிக்கும் *[கலி.118:17]*.

'வையையாறு, கார்ப்பருவத்தில் எம்முடைய பதி, நினது இருக்கைக்கு அணித்தாக இருக்கவும், நின்னைப் புணை காரணமாகக் காலந்தாழ்ப்பிக்கும்படி, வெள்ளம் பெருகியோடும்; இளவேனில் பருவத்தில் நீர் வற்றிச் சுருங்கிக் கிடக்கும்; நீயும் அத்தகையை; சிலபோது அன்புபெருக வருவாய், சிலபோது அது சிறுக வரமாட்டாய்', என்று ஊடிய காதலி, தன் காதலனிடம் கூறினாள் *[பரி.6:75]*.

**4. நாடு.** பல்வேறு பதிகட்குச்-நாடுகட்குச்-சென்று பல்வேறு மக்கட் கூட்டங்களோடு பழகிய, அறிவு நிரம்பப் பெற்ற சான்றோர் ஒருநில் கூடினாற்போன்று பல தேயத்தும் சென்று பழகுதல் காரணமாகத் தம் தாய்மொழியோடு பல

மொழிகளையும் கற்ற அயல்நாட்டு வாணிகர் காவிரிப்பூம்பட்டினத்தில் வாழும் மக்களோடு வந்து ஒன்றி வாழ்ந்தனர் *[பட்.213]*.

**பதிவதமாதர்**-கற்புடை மகளிர். வையையில் வெள்ளம் வந்த பொழுது மதுரையிலுள்ள பதிவதமாதரும்-கற்புடைப் பெண்களும்-மற்ற மகளிருடன் சேர்ந்து நீர்விழாக் காணச் சென்றனர் *[பரி.10:23]*.

**பதிற்றுக்கை-மதவலி. பத்துக்கைகளையுடைய பேராற்றல்**. திருமால் பதிற்றுக்கை மதவலி-பத்துக்கைகளை உடைய - பேராற்றல் உடையவர் *[பரி.3:40]*.

**பதின்மர்** - பத்துப்பேர். தன் காதலன் ஒழுக்கங்கெட்டவன் என்பதையறிந்த காதலியொருத்தி, 'ஏடா, நீதான், பல ஆக்களையும் தெவிட்டாமற் கூடும் ஏறுபோல, நாடோறும் பதின்மரை - பத்துப்பேரை - விருப்பமுற்று அவர்மேல் செல்கின்றவன்', என்று கூறி ஊடினாள் *[கலி.108:48]*.

**பதின்மருமிருவரும்-பன்னிரண்டு பேர். (பன்னிரு ஆதித்தர்)**. திருப்பரங்குன்றத்திலுள்ள முருகவேளைக் காண்பதற்காக நான்முகனிடத்தில் தோன்றி, உலகின்கண் நிலவும் இருளைப் போக்கிய ஆதித்தர், பதின்மருமிருவரும்-பன்னிருவரும் - மண்ணுலகத்திற்கு வந்தனர் *[பரி.8:4]*.

**பதினாயிரம்**-பத்தாயிரம். திருமாலின் ஆழி, பனைமரத்தின் உச்சியிலுள்ள பதினாயிரக் - பத்தாயிரக் - கணக்கான குலைகளிலிருந்து பனங்காய்களை உருட்டுவது போலப், பகைவராகிய அவுணர்களின் தலைகளை மண்ணில் குருதி சொரிய உருட்டியது *[பரி.2:44]*. திருமால் பதினாயிரங்கைகளையுடைய மறை முதல்வனாவான் *[பரி.3:42]*.

**பதினாறு**-பத்தும் ஆறும்- (ஓர் எண்ணுப்பெயர்.) குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை பதினாறு -பத்தும், ஆறும் - கூடிய ஆண்டுகள் ஆட்சி புரிந்தான்.

**பதினெண்கணன்** -பதினெட்டுக் கூட்டத்தினர் (தேவர் முதல், போக பூமியோர் முடியவுள்ள பதினெட்டுக் கூட்டத்தினர்) சிவபெருமான் சூடியிருப்பதால், பிறைமதி பதினென்கணனாலும் - பதினெட்டுக் கூட்டத்தினராலும்- புகழவும் படும் *[புற.1:10]*.

**பதினேழ் - (பத்தும் ஏழும்)** - (ஓர் எண்ணுப்பெயர்.) தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை, பதினேழ் - பத்தும், ஏழும் - கூடிய ஆண்டுகள் ஆட்சிபுரிந்தான்.

**பதினொரு கபிலர்** - பதினொரு உருத்திரர். திருமால் பதினொரு கபிலராகவும் - பதினொரு உருத்திரராகவும் - விளங்குகிறார், என்று, அந்தணர் அருமறை கூறுகின்றது *[பரி.3:7]*.

**பதினொரு மூவர்** - முப்பத்து மூவர். கொடுஞ்சிறைப் புள்ளினை (கருடனை) அணிந்த நீள்கொடிச் செல்வனும் (திருமாலும்), மூவெயிலை யெரித்த முரண்மிகு செல்வனும் (சிவபெருமானும்), யானையின் கழுத்தில் ஏறிய திருவிளக்கும் செல்வனும் (விண்ணவர் கோமானும்), பகுத்துக் காணுங்கால், வேறுபடத் தோன்றும் மாறுபாடில்லாத அறிவினையும், நால்வேறு இயல்பினையுமுடைய பதினொரு மூவரும்-முப்பத்து மூவரும்-பதினெண்வகையாகிய உயர்நிலை பெற்றவரும், நான்முகன் காரணமாக விண்மீன்கள் பொலிவு பெற்றாலொத்த தோற்றத்தை யுடையராயும், காற்றினிடையே தீ எழுந்தாலொத்த வலிமையுடையராயும், தீப்பிறக்க இடியேறு இடித்தாற்போன்ற குரலினையுடையராயும், தம் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் தொழில்களை முன்போலப் பெறுமுறைமையைக் குறைவேண்டி நின்று பெறுதற்கு, அந்தரச் சுழற்சியுடையராய்ச் சேர்ந்து வந்து தன்னைக் காணும்படி முருகன் திருவாவினன் குடியிலே மடந்தையொடு (தெய்வயானையொடு) இருத்தலுமுரியன் (நால்வேறு இயல்பினையுடைய பதினொரு மூவர் என்றது ஆதித்தர் பன்னிருவர், உருத்திரர் பதினொருவர், வசு எண்மர், மருத்துவர் இருவர் ஆக முப்பத்து மூவர்) *[முரு.167]*.

**பதினொரு வேளிர்** - வேளிர் பதினொருவர். கரிகால் வளவன், வெண்ணிவாயில் என்னுமிடத்தே, பகைமன்னர் மாறுபட்டெழுந்த போரின்கண் அப்பகைவரின் முரசங்கள் களத்தே ஒழிந்துகிடக்கவும், பதினொரு வேளிரொடு- வேளிர் பதினொருவரோடு- ஏனை இருபெரு வேந்தரும் நிலை கெடவும், அவர்தம் மிகுவலிமையைக் கெடுத்த நாளில் அழுந்தூரின்கண்ணே குறைய ஆரவாரம் எழுந்தது *[அக.246:12]*.

**பதுக்கு** - கற்குவியல். சுரநெறியில் ஆறலைகள்வரின் அம்பினால் இறந்த புதியவர்களின் உடல்களை மூடிய பதுக்குகளில் - கற்குவியல்களில் - காட்டு மல்லிகையின் கொடி ஏறிப்படர்ந்திருக்கும் *[அகம்.289:2]*.

**பதுக்கை** - 1. குவியல். பாண்டியன் கருங்கையொள்வாள் பெரும்பெயர் வழுதியிடம் பரிசில் பெற வரும் பரிசிலர், ஆறலைகள்வரால் கொல்லப்பட்டவரை மூடியுள்ள பதுக்கைகளின் கற்குவியல்களின் வழியே வருவர் *[புறம்.3:21]*. பொருளீட்டுதல் காரணமாகத் தலைவன் இறந்துபோன ஆட்களை இட்டுத் தழைகளைக் கொண்டு மூடிய பதுக்கைகளையுடைய பாழ்நெறியில் போகின்றானே', என்று, தலைவி வருந்துவள் *[அகம்.67:14]*. பரலையுடைய உயர்ந்த பதுக்கையில் ஆண்மான்கள் தங்கின *[அக.91:10]*. சுரநெறியில் ஆறலைகள்வரால் கொல்லப்பட்டவரின் தழைமூடிய பதுக்கைகள் அளவிடற்கரியன *[அக.109:8]*. சுரநெறியிலுள்ள பதுக்கையின் அருகிலுள்ள கள்ளிச் செடியின் அடியில் தங்கிய பல்லி வழிச்செல்வார்க்கு உண்டாகும் நிகழ்ச்சிகளைச் சோதிடங்கூறுவது போல ஒலிக்கும் *[அக.151:11]*. போர் மறவரால்

கொல்லப்பட்டோருடைய உடலை மூடிய பதுக்கைகளின் அயலிலுள்ள கோங்கின்மீது படர்ந்து இரவில் மலர்ந்துள்ள அதிரல் கொடியைச் காட்டுயானைகள் விடியலில் இழுத்து அரும்போடு உண்ணும் *[அக.157:5]*. மறவரால் கொல்லப்பட்ட வழிப்போவோரின் உடலங்களை மூடிய பதுக்கைகளில் கூரிய அலகினையுடைய ஆண்பருந்துகள் இறந்துபட்டவரின் தலைகளில் உள்ள கண்மணிகளைத் தோண்டிப் பெண்பருந்துகட்குச் சொரியும் *[அக.215:11]*. வேடரின் அம்பினால் கொல்லப்பட்டோருடைய மயிர்த்தலைகளையுடைய பதுக்கைகளைக் கொண்ட கள்ளிகள் நிறைந்த சுரநெறி கண்டார்க்கு அச்சத்தை ஊட்டும் *[அகம்.231:6]*.

இறந்த வழிப்போக்கருடைய உடல்களை தழையால் மூடியுள்ள பதுக்கையானது - குவியலானது-யானைக்கு நிழலாகப் பயன்படும் கொடிய பாலைநெறியில் தலைவன் செல்லுவதற்குத் தலைவி அஞ்சுவாள் *[குறு.77:3]*. பாலை நில, மறவர்களால் கொல்லப்பட்ட வழிப்போவோருடைய உடலங்கள் தழையால் மூடப்பட்ட பதுக்கைகள் ஊரைப் போலத் தோன்றும் *[குறு.297:4]*. கடற்கரையில் வீசும் காற்றால் படிந்த ஈரமணற் பதுக்கை ஈரம்புலருவதற்கு முன்பே தலைவி மீது அலர் எழுந்துவிட்டது *[குறு.372:5]*.

ஆறலைகள்வரால் கொல்லப்பட்டோருடைய தசைகளைத் தின்று நாவறண்ட நரி, பேய்த்தேரை நீரென்று கருதி, அலைந்து, கிடைக்காமல் பதுக்கையின்-கற்குவியலின் நிழலிலே - தங்கவும் நிழல் கிடைக்காமல் சுரநெறியில் வருந்தும் *[நற்.352:8]*.

தலைவனிடம், தோழி, 'பெருமானே! நீ தலைவி மீது கொண்ட அன்பினாலே பதுக்கைளையுடைய அஞ்சத்தக்க நெறியில் இரவுப் பொழுதில் எப்படித்தான் வந்து சேர்ந்தனையோ?' என்று கூறினாள் *[ஐங்.362:1]*.

கொடிய சுரநெறியில் ஆறலைகள்வரால் கொல்லப்பட்ட வழிப்போவோருடைய உடலை மறைய வைத்த பதுக்கைகள்-தழைக்குவியல்கள் - முள்ளால் இட்ட நீண்ட வேலிபோல் வழிநெடுக வரிசை வரிசையாகக் காட்சியளிக்கும் *[கலி.12:2]*.

**2.மேடை**. பகைவர் கவர்ந்து சென்ற கன்றோடு, கறவைகளையும் மீட்டுத் தந்த ஒரு வள்ளற்பெருமகன் அப்போரில் இறந்துபட்டான்; அவனுடைய உடலைப், பரற்கற்களாலாகிய பதுக்கைக்கு-மேடைக்கு - அருகில் பீலியும், கண்ணியும் சூட்டிப், பெயரும் பொறித்து, நடுகல் நட்டனர் *[புற.264:1]*. தங்களின் ஆனிரையைக் கவர்ந்து சென்ற வெட்சியாரை வீழ்த்தி ஆனிரையை மீட்ட கரந்தையார் தாங்கள் அமைத்திருக்கின்ற பதுக்கைக்கண் உள்ள கடவுளைப் பீலி சூட்டித் துடியடித்து, கள்ளொடு செம்மறியாட்டுக் குட்டியைப் பலியிட்டு வணங்குவர் *[அகம்.35:7]*.

**பதுமத்துப் பாயல்**-தாமரைப் பூவாகிய படுக்கை. முனிவர் மனைவியராகிய கார்த்திகைப் பெண்டிர் அறுவர் சிவபெருமானுடைய கருவைத் தாங்கிச் சூல் கொண்டு இமயமலையின்கண் சரவணப் பொய்கையிலுள்ள பதுமத்துப் பாயலில் - தாமரைப் பூவாகிய படுக்கையில் - ஒருங்கே முருகப்பெருமானை ஈன்றனர் *[பரி.5:49]*.

**பதுமம்**-தாமரைப்பூ. முருகவேளுக்குரிய திருப்பரங் குன்றத்தின்கண் உள்ள சுனையில் நீராடும் மகளிர் கைகள், தோளாகிய பொற்குளத்திலே மலர்ந்த பதுமத்தைப் - தாமரைப் பூவைப் - போன்றிருந்தன *[பரி.8:115]*.

**பதுமனார்**-ஓர் புலவர். 'பதுமனார் என்னும் பெயர் சைனரைப் குறிக்கும் என்பாருமுளர்', என்ற உ.வே.சா. குறிப்பிலிருந்து (குறு. பாடினோர் வரலாறு) இவரைச் சைனரென்று கருதுதற்கும் இடமுண்டாகிறது. இவர் பாடியதாகக் குறுந்தொகையில் 6-ஆம் பாடலொன்றே உள்ளது. தலைவன் வரைவிடைவைத்துப் பிரிந்த காலத்து அப்பிரிவை யாற்றாத தலைவி இரவில் துயில் பொருந்தாது வருந்தியிருக்கையில், ஊர், உலகமெல்லாம் துயிலத் தோழியும் ஆறுதல் கூறாது துயில்வது கண்டு தனிமையுற்றுப் புலம்புவதாக இவர் அப்பாடலை இயற்றியுள்ளார். யாமம், செறிந்த இருளை உடையதாயிருக்கின்றது; மக்கள் பேச்சு ஒழிந்து இனிதே துயில்கின்றனர்; அகலிடத்தையுடைய உலகின் உயிர்களெல்லாமும் வெறுப்பின்றித் துயிலும்; யானொருத்தியே துயிலேனாயினேன்' என்று அவளுணர்வின் வெளிப்பாட்டினை இவர் சொல்லோவியமாகத் தீட்டியுள்ளார்.

**பந்தர்**- 1. நிழலிற்காக இடும் நாற்கால்கூரை. நலங்கிள்ளியின் படைமறவர் அவனுடைய பகைவர் கூவையிலையால் வேயப்பட்ட நான்கு கால்களையுடைய பந்தராகிய-நிழலிற்காக - இடும் நாற்கால் கூரையாகிய- சிறிய இல்லின்கண் வாழ்வதைப்போல் வாழாமல் நன்னாடு பெற்று உவந்தனர் *[புற.29:19]*. ஒருவள்ளலின் மனை, தன்னால் புரக்கப்படுவோரின் கண்ணீரை மாற்றிய குளிர்ந்த நறிய பந்தரினையுடைத்தாயிருந்தது *[புற.250:3]*. பகைவரின் தூசிப்படையை வென்று அவருடைய ஆனிரை மீட்டு உயிர்விட்ட ஒருவள்ளலின் பெயரைப் பீலி சூட்டிய புடவையால் செய்யப்பட்ட பந்தரின் கீழுள்ள நடுகல்லில் பொறித்து வைத்தனர் *[புற.260:28]*. பகைவரின் தூசிப் படையை வென்று அவருடைய ஆனிரையைக் கவர்ந்து வரும் ஒருதலைவனுக்கு அவ்வூரார் பசிய தழையாலே வேயப்பட்ட புல்லிய கால்களையுடைய பந்தரின் கீழ் ஈரமணலைப் பரப்பி வரவேற்றனர் *[புற.262:2]*. முன்னைக் கொடியும், முசுண்டைக் கொடியும் பலாமரத்தில் படர்ந்து செறிந்திருத்தலால் பந்தர் வேண்டாத அந்நிழலில் யானை வேட்டையாடும் வேட்டுவன் அயர்ந்து உறங்கினான் *[புற.320:2]*. வேந்தனுக்கு உயிர்த்துணைவனான தலைவனொருவன், ஆட்டுப் புழுக்கைகள் சிதறிக்கிடக்கும் வளவிய கால்கள் நிறுத்தப்பட்ட பந்தரின் கீழ், இடையன் ஏற்றிவைத்த விளக்கொளியில்,

பாணருடன் வீற்றிருந்தான் *[புற.324:10]*. சீறூர்த் தலைவனொருவன், தன்பால் உள்ளது மிகவும் சிறிதாக இருப்பினும், பரிசிலர் பலர் உள்ளனரே என்று மயங்காமல், நீண்ட நெடிய பந்தரின்கீழ் இருத்தி உணவை முறைமுறையாகத் தந்து உண்பிக்கும் இல்வாழ்க்கையில் சிறந்த பெண்ணைப் போன்று, அவரவர் வரிசையறிந்து கொடுத்தலில் வல்லவனாயிருந்தான் *[புற.331:8]*.

வடக்கே இமையம், மேற்கு, தெற்கு, கிழக்குக் கடல் ஆகிய இந்நான்கெல்லைக்கு இடைப்பட்ட வேந்தர்கள் வந்து கூடியிருந்த, நெய்தற்பூவும், நறவம்பூவும் விரவித் தொடுத்த மாலைகளால் புனையப்பட்ட பந்தரின் கீழ், ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் விறலியர்க..ரின் பாடலில் திளைத்திருந்தான் *[பதி.51:16]*.

எயினரின் குடியிருப்புக்கள், கடிதாக ஒலிக்கும் துடிகள் தொங்குகின்ற, திரண்ட கால்களையுடைய, பந்தர்களை யுடையவாயிருந்தன *[பொரு.124]*. முல்லைநில மக்களின் குடியிருப்புக்கள், யானையின் காலைப்போன்று, வரகு திரிகை நட்டு நிற்கும், பந்தர்களையுடையவாய் இருந்தன *[பெரு.187]*. வலைஞரின் குடியிருப்புக்கள், வளைந்த காலையுடைய புன்னைகளின் கொம்புகளை வெட்டியிட்ட, பாகல், சுரை முதலிய பசிய காய்கள் தொங்குகின்ற, பரந்த மணலையுடைய, பந்தர்களையுடையவாய் இருந்தன *[பெரு.267]*. மறை காப்போரின் (அந்தணரின்) குடியிருப்புகள் வளவிய கன்றைக் கட்டின சிறிய கால்களைக்கொண்ட பந்தர்களையுடையன *[பெரு.297]*.

வரிசையாகிய கால்களையுடைய குளிர்ந்த பெரிய திருமணப் பந்தரில், மணலைப் பரப்பி, விளக்கினை ஏற்றி வைத்து, மாலைகளைத் தொங்கவிடுவர் *[அக.86:3]*. பந்தரைப் போன்று நிழலை தருகின்ற மரநிழலில், தொங்குகின்ற தயிர்கடைந்த மத்தினைக், கன்று சுவைக்கும் *[அக.87:3]*. செல்வச் செழிப்புள்ள இல்லின்முன் இட்ட பந்தரில் மணலைப் பரப்பியிருந்தனர் *[அக.89:21]*. தலைவிக்குற்ற காதல் நோயை முருகனால் வந்ததென்று பிறழவுணர்ந்த வேலன் ஆடுதற்கேற்ற அழகு செய்த அகன்ற பெரிய பந்தரிலே வெறியாட்டெடுப்பான் *[அக.98:15]*. மணவிழா முகில் முழங்கினாற்போன்ற மணவொலியுடன் பந்தரில் நிகழ்ந்தது *[அக.136:16]*. தலைவி, வயலைக்கொடி படர்ந்த பந்தரில் பந்தடித்து விளையாடினாள் *[அக.275:3]*. தனது இல்லின் முன்னுள்ள விருந்தினர் ஒழியாத குளிர்ந்த பந்தரில் இருந்த தலைவி, பசியால் வருகின்றவர்களுக்கு உணவளித்துப் பாதுகாத்தாள் *[அக.353:17]*. சிறிய இல்லின் முன் முள்ளிட்டுக்கட்டிய வேலியின் அகத்தே வளைந்த கால்களையுடைய பந்தரில் தலைவியால் அளிக்கப்படும் பாற்சோற்றை உண்ணவருமாறு, தலைவனைத் தோழியழைத்தாள் *[அக.394:8]*.

மணி ஒலித்துக் கொண்டிருக்கும் காவலையுடைய பெரிய மாளிகையின் முன், காற்றினால் ஒசையிடும் தென்னங்கீற்றால் மிடைந்து, புனைந்த, மணல் பரப்பிய பந்தர் இருந்தது *[நற்.40:2]*. தலைவி சிறுமியாக இருந்த பொழுது, சோற்றைப் பொற்கிண்ணத்தில், செவிலித்தாய் வளமனையின் முன்னுள்ள பந்தரில் ஊட்டினாள் *[நற்.110:7]*.

**2. சேரநாட்டிலிருந்த ஓரூர்.** 'இசையில் வல்ல பாணனே! நீ சுற்றத்துடன் செல்வக் கடுங்கோ வாழியாதனிடம் சென்றால் பந்தர் என்னும் பெயருடைய பெரிய புகழையுடைய பழைய ஊரிடத்துத் தென்கடல் முத்துக்களைப் பரிசிலாகப் பெறுவாய்', என்று பாணன் ஆற்றுப்படுத்தப்பட்டான் *[பதி.67:2]*. தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறையின் பட்டத்தரசி மான்தோலினால் செய்த தோளிலணிந்த அணியில் பந்தரில் பெற்ற முத்துக்களும் இருந்தன *[பதி.74:6]*.

**3.பண்டசாலை.** ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் கடல்வழியாக வந்த நல்ல கலன்களாகிய செல்வங்கள் தொகுக்கப்பட்டிருக்கும் பந்தர்கள்-பண்டசாலைகள்- உள்ள பெருந்துறைகளையுடைய நாட்டிற்கு வேந்தனாவான் *[பதி.55:4]*.

**பந்து-1.** மகளிர் விளையாடும் கருவி. பொருவார் இல்லாமையாலே எக்காலமும் போர்த்தொழில் இல்லாத மதுரை நகர வாயிலில் போரை விரும்பிக் கட்டின நீண்ட கொடிக்கருகே நூலால் வரிந்து புனையப்பட்ட பந்து-மகளிர் விளையாடும் கருவி - அறுப்பாரின்மையின் தொங்கியே கிடந்தது *[முரு.68]*. தொண்டைமான் இளந்திரையனுக்குரிய நீர்ப்பெயற்றுப்பட்டினத்து மகளிர், மலையிலே மயில்கள் உலாவுவதுபோல, வானத்தைத் தீண்டும் மேனிலை மாடங்களில் பந்தடித்து விளையாடுவர் *[பெரு.333]*.

தலைவனுடன் போகிய தன் மகளைக் குறித்துச், செவிலித்தாய், 'வளம் பொருந்திய மனையின் முற்றத்தில் சிறிது பொழுது தன் தோழியரோடு பந்து விளையாடினும் 'உடம்பு நோகின்றதே', என்று கூறும் அவளுடைய சிறிய அடிகள் கொடிய சுரநெறியைக் கடக்க வல்லனவோ?' என்று வருந்தினாள் *[அக.17:1]*. ஆயத்துடன் பந்தாடி, மகிழும் தலைவி காதல் வயப்பட்டவுடன் அவ்விளையாட்டை வெறுத்தாள் *[அக.49:1]*. எழினி என்பானுக்குரிய குதிரைகள், அடித்த பந்து எழுவதுபோலக் தாவிச் செல்லும் *[அக.105:9]*. மகட்போக்கிய செவிலித்தாய், தலைவியைக் குறித்து, 'என்மகள் தோழியருடன் சிறிதுநேரம் பந்தாடினாலும், பெரிதும் நொந்து வருந்துகின்றவள், தீயைப்போல வெதும்புகின்ற சுரநெறியில், தலைவனுடன் எவ்வாறு சென்றாளோ?' என்று வருந்திக் கூறினாள் *[அக.153:3]*. தலைவி சிறிதுநேரம் பந்தடித்து வந்தாலும், வா என்று தாய் அழைத்துக், கிண்ணத்தில் உள்ள பாலினை ஊட்டுவாள் *[அக.219:2]*. வயலைக்கொடி படர்ந்துள்ள பந்தரில் பந்தடித்து விளையாடும் தன் மகளிடம், தாய், இன்னும் நீ சிறுபெண்ணா?' என்று கடிந்து கொண்டாள் *[அக.275:3]*.

உடன்போக்குச் சென்ற தலைவியைக் குறித்துச், செவிலித்தாய், 'பாலும் உண்ணாமல், பந்தையும் விரும்பாமல், மூங்கில்கள் வற்றிப்போன கொடிய சுரநெறியில், தலைவனுடன் செல்லுவது எளிது, என்று, சென்றுவிட்டாளோ?' எனக் கூறி வருந்தினாள் *[குறு.396:1]*.

தலைவனுடன் போகத் துணிந்த தலைவி, தன் சிலம்பினைச் கழற்றிப் பல மாட்சிமைப்பட்ட, வரிந்து புனைந்த பந்தோடு ஒருசேர வைத்துவிட்டுச் செல்பவள், இவைகளைக் கண்டு என் தோழியர் வருந்துவரே என்று வருந்திச் சென்றாள் *[நற்.12:6]*. பாலைவழியில் கம்பளத்தை விரித்தாலொத்த பசிய பயிரின்கண்ணே, ஆடுதலொழிந்த பந்து விழுந்து கிடப்பது போல, விளம்பழம் பரவிக்கிடக்கும் *[நற்.24:3]*. தலைவி தன் தோழியரோடு தன் தந்தையின் தேர்இயங்குகின்ற நிலவு போன்ற வெளிய மணல் பரவிய முன்றிலின்கண், பந்தடித்து விளையாடுவாள் *[நற்.140:7]*. 'எம்மனையகத்துப் படர்ந்திருந்த வள்ளைக் கொடியை ஆன் தின்றுவிட, அதைக்கண்ட என்மகள், தான் விளையாடிக் கொண்டிருந்த பந்தை வீசியெறிந்துவிட்டு, வயிற்றிலடித்துக்கொண்டு அழும். நேற்றுவரை அவ்வளவு சிறியவளாய அவள் காளையுடன் சென்று மனையறம் ஆற்ற வல்லளோ? என்று, உடன் போக்குச் சென்றுவிட்ட தன் மகளைக் குறித்துத் தாய் வருந்தினாள் *[நற்.179:2]*. புலியைப் போன்ற வரிகளைக் கொண்ட வண்டுகளின் ஒலியைப் புலியின் ஒலியென மருண்டஞ்சிய தலைவனின் தேர்க்குதிரையின் கால்கள் பந்து தாவுவது போலத் தாவிச் சென்றன *[நற்.249:7]*. தலைவி, தலைவனோடு உடன்போக்குச் சென்ற பின்பு, தலைவி விளையாடும் சோலையைக் கண்டும், அவள் விளையாடிய வரிந்து அணிந்த பந்தையும், அவளால் வளர்க்கப்பட் வயலைக்கொடியையும், மற்றவற்றையும் கண்டும் தாய் வருந்துவாள் *[நற்.305:1]*. தலைவியின் பஞ்சுபோன்ற மென்மையான அடிகள், விளையாடுகின்ற பந்தைக் காலால் உருட்டுபவள் போல, நடைபயிலும் *[நற்.324:7]*.

குறவர் காட்டின்கண் இட்ட தீயினுக்கு அஞ்சிய மயில் தன் இருப்பிடத்திற்குப், பந்தாடுகின்ற மகளிர் கைகளை வீசி யோச்சிச் செல்லுதல் போன்று, தாளில் உள்ள குருவிகள் மேலும் கீழும் பறக்கும்படியாகச் சிறகை விரித்து ஆரவாரத்தோடு செல்லும் *[ஐங்.295:5]*. உடன்போக்குச் சென்ற தன்மகளைக் குறித்துத்தாய், 'என்மகள், அவள் விளையாடும் பந்து முதலியவற்றை யாம் பார்க்கும் பொழுதெல்லாம் கனிந்தழும்படியாக, எம்மிடம் விட்டுவிட்டுத், தலைவனுடன் சென்று விட்டாளே' என்று வருந்தினாள் *[ஐங்.377:4]*.

விண்ணைத் தீண்டும் மலையிடத்தே, தெய்வ மகளிர் பந்தடித்த இளைப்புப் போகத் தண்ணிய தாழ்ந்த அருவியிலே ஆடுவர் *[கலி.40:22]*. சிறுமியர் இழைக்கும் மணல் வீட்டை அழித்தல், அவர் வரிப்பந்தை எடுத்துக் கொண்டோடுதல் முதலிய குறும்புச் செயல்களைச் சிறுவர் செய்வர் *[கலி.51:3]*. ஒரு தலைவன், தன் காதலியை, 'வளம் மிக்க புகழ்வாய்ந்த உன் தந்தையின் பெரிய மனையிலிருந்து அடிக்கின்ற பந்தோடே நடை தளர்ந்து ஒதுங்கி ஒதுங்கிப் புறப்பட்டு வருகின்றவளே', என்று விளித்தான் *[கலி.57:7]*.

தேவசேனை (தெய்வயானை)யின் தோழியர், வள்ளியம்மையின் தோழியரோடு சினந்து போர் செய்யும்போது, தம் வரியினையுடைய பந்துகளையும் போர்ப்படையாகக் கொண்டு எறிந்து பொருதனர் *[பரி.9:47]*. வையையில் நீராடும் இளைஞரில் சிலர், மகளிரது பந்து முதலிய பல பொருள்களையும் கவர்ந்து கொண்டு செல்வதை, அம்மகளிர் கண்டு, வாங்குவதற்கு வந்தால், அவரின் கையில் அகப்படாமல் நீரினுள்ளே பாய்ந்து விலகி ஏமாற்றுவர் *[பரி.10:107]*.

**2.பூப்பந்து.** சோழன் நலங்கிள்ளி, பாசறையிலும், பசிய இலையை இடையிட்டுத், தொடுக்கப்பட்ட, மலராத முகையினையுடைய மாலையினது பந்தைக்-பூப்பந்தைக்-கண்டாற் போன்ற, தசையோடு கூடிய பெருஞ்சோற்றுத் திரளையைப் பாண் சுற்றத்திற்கு அளிப்பான் *[புற.33:13]*.

**பம்பை-ஒருவகைப்பறை.** நெடிய பெரிய குன்றத்திற்குரிய வடுகர், கடிய ஒலியையுடைய பம்பையை - ஒருவகைப் பறையை - உடையவர் *[நற்.212:5]*.

**பயக்குறை-பயனாகிய முடிக்கப்படும் பொருள்.** மிகுதியான செல்வம் படைத்தோரானாலும், அறிவை. இன்பத்தால் மயக்குகின்ற மக்களைப் பெறாதவர்களுக்குப், பயக்குறை-பயனாகிய முடிக்கப்படும் பொருள்-தாம் உயிர்வாழும் நாளின்கண் இல்லை *[புற.188:7]*.

**பயந்திசினோர்-பெற்றோர்.** நாஞ்சில் வள்ளுவனை, ஒருசிறைப் பெரியனார் என்ற புலவர், வள்ளற் பெருமானே! நீ வாழ்க! நின்னைப் பயந்திசினோராகிய-பெற்றோராகிய- தாய், தந்தையரும் வாழ்வாராக', என்று வாழ்த்தினார் *[புற.137:15]*.

**பயந்தோள்-பெற்றவள். (தாய்)** தன்னைப் பயந்தோளின் பெற்றவளின் - துன்பத்தைப் போக்கிய கருடனை ஊர்தியாக உடையவர், திருமால் *[பரி.3:16]*. தன்னைப் பயந்தோளாகிய விந்தையின் துன்பத்தைப் போக்கிய புள்ளினைக் (கருடனைக்) கொடியாக உடையவர், திருமால் *[பரி.3:17]*.

**பயப்பு-பசலை.** தலைவனின் பிரிவால், தலைவி, தோழியிடம் - 'பயப்பு-பசலை - எனது மேனியின் கண் உள்ளது', என்று கூறினாள் *[குறு.219:1]*. ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குத், தலைவி, 'தலைவருடைய நட்பு எனக்குப் பயப்பினைக் கொடுத்தாலும் நான் கலங்கேன்; ஆற்றியிருப்பேன்; என்று கூறினாள் *[குறு.264:5]*.

**பசப்பு, பசலை - காண்க.**

**பயம்-1.** பயன். சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளனும், பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கிருந்தாரைக் கண்ட காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார், அவர்களிடம், 'நீங்களிருவீரும் கூடி நிற்கின்ற இந்நிலையின், வேறுபடீராயின் கடல் சூழ்ந்த இப்பயம்-பயன்-பொருந்திய உலகங்கள் உங்களின் கையகத்தே அகப்படுதல் பொய்யாகாது', என்று கூறினார் *[புற.58:22].* விறலி பின்னே வர, உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், படுமலைப்பாலை நிலைபெற்ற பயம் பொருந்திய சிறிய யாழை ஒருமருங்கிலே அணைத்துக்கொண்டு ஆய் அண்டிரனிடம் சென்றார் *[புற.135:7].* ஆய் அண்டிரனின் செல்வத்தைப் புலவர், பாணர் முதலியோர் தாமே எடுத்துக்கொள்வாராயின், அதை எம் செல்வம் என்று மீட்காது பயம் பொருந்திய உரிமையோடு அவர்கட்கே ஆய் அண்டிரன் நல்குவான் *[புற.135:18].* ஓரியின் கொல்லிமலை, அருவிகளையுடைய பயம்படு மலையாகும் *[புற.157:11].* குறவர்க்குத் தலைவனாகிய ஏறைக்கோனுடைய மலை, இயங்குகின்ற முகிலைத் தனது உயரத்தால் தடுக்கும் பயம் பொருந்தியதாம் *[புற.157:7].* சோழன் உருவப் பஃறேர் இளஞ்சேட்சென்னி, பயம் பொருந்திய முகில் பெய்யாது ஒழிதலால், நீர் நிலைகளிலே, களிகள் வெடித்துத் தோன்றும் கோடைக்காலமாயினும், நல்ல நீர்வளமிக்க நாட்டையுடையவன் *[புற.266:1].* ஞாயிற்றால் சுற்றப்படும் இப்பெரிய நிலவுலகம் மிக்க பயம் பொருந்தியதாகும் *[புற.358:1].* முட்கள் கலந்த, கொடிகள் பின்னிக் கிடக்கும், புதரிடையே பழங்கள் குலைகுலையாகப் பழுத்திருந்தாலும், அவை யாருக்கும் பயம்படுதற்கியலாவாகும்; ஈயாத வேந்தரின் செல்வங்களும், அவை போன்றனவேயாம் *[புற.381:9].*

பல்யானைச் செல்கெழுகுட்டுவனின் அயிரைமலை பயம் பொருந்திய உச்சியையும், பல்கைப் பயங்களையும் நல்கும் காடுகளையும் உடையது *[பதி.21:25(2)].* பல்யானைச் செல்கழுகுட்டுவனின் ஆட்சியில் பெய்யாது பொய்த்தலின்றி யாண்டு தோறும் மழை பெய்து பயம் உண்டாவதால், மக்கள் நோயின்றி வாழ்ந்தனர் *[பதி.21:30].* பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பகைத்தோரின் வளமான நாடுகள் பயம் பொருந்திய பண்பினையுடைய ஞாயிறு ஒருபக்கமும் சாயாமல் நிற்கும் உச்சிப்போதாகிய நண்பகற்காலத்திலேயே, நரிகள் ஊளையிடும் பாழிடமாய்விடும் *[பதி.22:33].* வெள்ளியாகிய கோள் பயம் பொருந்தி, ஏனை நாண்மீன்களுடன் மழை பெய்தற்குரிய நல்லநாளாகிய தனக்குரிய நாளில் நின்றால், மழைபொழியும் *[பதி.24:25].* காடுகள் பயம்படும் தன்மை திரிந்து, பல்வகைப் பூக்களும் உதிர்ந்து, வாடிக் கிடக்கும் *[பதி.30:26].* உலகிற்கு நல்ல பயத்தைச் செய்யும் வெள்ளி என்னும் கோள், மழைக்குக் காரணமாகிய ஏனை நாண்மீன்களோடு சென்று நின்றால், மழை பெய்யும் *[பதி.69:14].*

கரிகால் பெருவளத்தானின் அரண்மனையில், பொருநர் கள்ளையுண்டு துயின்று, தவம் செய்வோர் தவம் செய்த தம்முடம்போடே அத்தவத்தின் பயத்தைப் பெற்றதுபோன்று, வழிநடை வருத்தம் நீங்கப் பெற்றனர் *[பொரு.92].* தொண்டைமான் இளந்திரையனின் நாட்டில் செல்லும் புதியர் மலையில் உள்ளனவும், கடலிலுள்ளனவுமாகிய மாட்சிமையுடைய பயத்தைக் கொடுக்கும் பெறுதற்கரிய பொருளை விலைக்குக் கொடுத்துப் பிறரை நுகரப் பண்ணுவர் *[பெரு.67].* குளத்திலே புகுந்தாற்போன்ற பயத்தைத் (குளிர்ச்சி) தருகின்ற நிழலையுடைய காட்டிலே, கூத்தர் தங்கினர் *[மலை.47].* மூங்கிலின் நெல் காய்முற்றிக் குலைகுலையாய்ப் பழுத்துப் பயத்தைக் தரும் வகையில் விளங்கியது *[மலை.132].* கூத்தர் செல்லும் காட்டுநெறியில், தெய்வத்தன்மை பொருந்திய நெடுந்தொலைவு மணம் வீசும் பூக்களும், ஒருகால் உண்டவர் மறத்தற்கியலாத சுவையான பழங்களும் நிறைந்திருந்தும் மக்கள் அணிதலும், உண்ணுதலும் கூடா-ஆகையினாலே, அவை பெரும் பயத்தைக் கொள்ளாது கழிந்தன *[மலை.264].* ஓசையினிதாகிய அருவி, தம் பயத்தைத் தருகின்ற உச்சிமலையிலே, காட்டைக் காத்திருக்கும் கானவர் பலர், வாழ்ந்தனர் *[மலை.278].*

கோடை (கோட்டூர்) என்னும் ஊருக்குத் தலைவனும், வள்ளலுமாகிய பண்ணி என்பான் பயம் பொருந்திய களவேள்வியைச் செய்தான் *[அக.13:11].* பரதவர், மீன் வேட்டை நன்கு வாய்த்ததாகக் கடற்கரையூரில் குறுகிய கண்களையுடைய அழகிய வலையின் பயத்தைப் பாராட்டிக் கூறினர் *[அக.70:3].* ஞாயிறு, வளம் பொருந்திய பெரிய மலையின் பயம் கெட்டொழியும்படி காய்தலின், அருவி இல்லையாகிய, பெரிய மலையில் உள்ள, தெய்வத்தன்மை பொருந்திய சுனையில், நீராகிய பயம் இல்லையாயிற்று *[அகம்.91:2,4].* வேனிற்காலத்தில் ஞாயிறு கொளுத்துகின்ற வெப்பமிக்க காட்டிலே, பெருங்காற்று வீசி மூங்கிலைத் தாக்கலால், எழுகின்ற தீப்பொறிகளால், பசுமையற்றுப் பயமும் ஒழிந்தது *[அக.153:11].* மிக்க மழை சொரிந்தமையால் முல்லை நிலம் பயம் மிக்கதாயிற்று *[அக.154:1].* பரிசிலர்க்குப் பிழைத்தலறியாத அதிகன் என்பானது மலையில் காய்த்தல் இல்லையாதலை அறியாத பயம் பொருந்திய பலாமரங்கள் நிறைந்திருந்தன *[அக.162:19].* மழை பாண்டியனின் வேலைப்போல மின்னி, அவனுடைய முரசைப்போல இடித்துத் திருமாலின் மார்பிலுள்ள மாலைபோல, அழகிய வானவில்லை வளைத்து, நிலமானது பயத்தைத் தரும்படியாகப், பரவலாகப் பொழிந்தது *[அக.175:17].* கடற்கரையோரத்தில் தலைவனுடைய தேரினை இழுத்துவரும் குதிரைகளைச் சுறாமீன் தாக்கியதால், அக்குதிரைகள் எழுச்சியும், பயமும் குன்றிச் செலவை யொழிந்தன *[அக.190:13].* ஓரியினது கொல்லிமலை மிகுதியான பழங்களைத் தரும் பலாமரங்களையுடைய பயம் மிக்கதாகும் *[அக.208:22].* பலகதிர்களையுடைய ஞாயிறு உலகிற்குப் பயம் மிகுந்த திருவினைத் தரும *[அக.298:1].* அருவி ஒலியும், வண்டின் ஒலியும் சேர்ந்து முழவு, ஓசைகளைப் போல ஒலிக்கும்

ஒலிகளை உடைய மலை, மிகுதியான பயத்தைத் தரும் [அக.318:7]. பிரிவிடை வற்புறுக்கும் தோழியிடம், தலைவி, 'தோழியே! அவர் சென்ற பொருள் முற்ற முடியாதாயினும், இன்பப்பயம் கெடுமாறு, அங்கே நீட்டித்திரார்', என்று பயத்தை (பயனை) உண்டாக்கும் நல்ல இனிய மொழிகளைக் கூறும் நினது கூற்றுப்படியே அவர்வரின் நல்லதே', என்று கூறினாள் [அக.333:7,15]. தலைவன் பயம் பொருந்திய ஊரினையுடையவன் [அக.346 :11]. பெரிய ஆனிரை பயம் மிக்கதாகும் [அக.399:8].

தலைவன் பயத்தையுடைய மலைநாட்டிற்குரியவன் [குறு.143:2]. பொருள் வலித்த நெஞ்சிற்குக் கூறுவானாய்த், தலைவன், 'நெஞ்சே! கூற்றுவன் வருவதையறிந்தும், தொக்க பயத்தையுடைய பெரிய செல்வம் ஒருங்கே கிடைப்பதாயிருந்தாலும் கரும்பினுமினிய இதழ் அமிழ்தத்தைத் தரும் காதலியைத் பிரிந்து செல்வரோ?' என்று கூறிச், செலவழுங்கினான் [குறு.267:1].

தொழுவத்திலுள்ள எருமைகளின் பாலாகிய பயத்தை முற்றக் கறந்து கொள்ளுவதற்காக அவற்றின் கன்றுகளைத் தொழுவத்திலேயே நிறுத்திவிட்டுச் சிறுவர் எருமைகளை மேய்த்து வருவதற்காக விடியலில் ஓட்டிச் செல்வர் [நற்.80:2]. கொல்லியம்பாவையையுடைய கொல்லிமலை, பயம் மிக்க பலாமரங்களையுடையது [நற்.192:8]. பொருளிற்காகப் பிரியக் கருதும் தலைவனிடம், தோழி, 'பெருமானே! தலைவியின் கூந்தலினுடைய அருமையாகப் பெறுகின்ற பெரும்பயத்தை நுகராமல், அவளைப் பிரிந்து, தன்னை அடைந்தவரைக் கைவிடலாமா?' என்று கூறிச் செலவழுங்குவித்தாள் [நற்.337:9].

புறத்தொழுக்கம் இல்லை என்ற தலைவனிடம், தோழி, 'தலைவ! நீ முன்பு தேற்றிய உரையைக் கேட்டு நம்பியிருந்த அவளுக்கு, இன்று நீ தேற்றும் உரை என்ன பயத்தைச் செய்யும்?' என்று கூறினாள் [ஐங்.56:4]. செவிலிக்கு அறத்தொடு நிற்குமாற்றானே தோழி, தலைவியிடம் 'தோழியே! நம் தாயின் வேண்டுகோளுக்கிணங்கி, வெறியாடும் வேலன், நம் தலைவனுடைய மலையை ஏத்திப் பாடானாயின், அவனுடைய வெறியாடலால் என்ன பயம் விளையுமோ?' என்று, செவிலி கேட்பக் கூறினாள்[ஐங்.244:4]. உணவு, நீர் முதலியன இன்றியும் தன் பிடியைப் பிரிந்து போகாத களிறு இயங்கும் மலைகளைக் கடந்து, நீ, செல்லும் செலவு என்ன பயத்தைச் செய்யும்', என்று, தோழி, தலைவனிடம் கூறினாள் [ஐங்.305:4]. பிரியக் கருதும் தலைவனிடம், தோழி, 'பெருமானே! நீ இவளுடைய அழகெல்லாம் கெடுமாறு மலையைக் கடந்து பகையறுதற்குக் காரணமான நாடாகிய பயத்தைத்தரும் காவற் பிரிவைத் துணிந்துள்ளாய்; பிரியின் இவளுடைய அழகு நாள்தோறும் குறையுமோ?' என்று கூறிச் செலவைத் தவிர்த்தாள் [கலி.17:14]. பலவிதமான பயத்தைக் கொடுத்துப்பகமை தீர்ந்த நிலம் மீண்டும் புத்தொளி பெற்றுப் பொலிவு பெறும் [கலி.29:3]. தலைவி, தோழியிடம் 'தோழியே! தினைப்புனத்தில் தினைக்கதிர்களை உருவிச் சந்தனவுரலில் இட்டு, யானைக் கொம்பால் குற்றியவாறே, மருந்தில்லாத நோயைச் செய்தவனுடைய பயம் தருகின்ற மலையைப் பாடுவோம் வா' என்று கூறினாள் [கலி.40:6]. தோழி, தலைவியிடம், வேங்கையைக் கொன்ற வேழத்தின் கொம்பாலும், சந்தன மரத்தாலும் ஆன உலக்கைகளால், மூங்கில் நெல்லைப், பாறை உரலிலிட்டு, முருகனைப் பாடுவதுபோல், பயத்தைத் தருகின்ற மலைநாடனைப் பாடுவோம் வா', என்று கூறினாள் [கலி.43:6]. தோழி தலைவியிடம், 'யானைகளையுடைய பயத்தைத் தரும் மலைநாடனைக் குறித்துப் பாடுவோம் வா', என்று கூறினாள் [கலி.43:22]. காந்தள் அரும்புகளை ஈனவும், பள்ளங்கள் நீரால் நிறைபவும், அருவிகள் ஒ என ஒலித்து ஓயாது வீழவும் பயத்தைத் தரும் முகில் வந்து பெய்யும் மலைக்குத் தலைவன் உரியவனாவான் [கலி. 53:7]. காதல் மிக்கூர்ந்த தலைவனொருவன், தலைவியிடம், 'தலைப்பாளை அணிந்தவளே! இவனுடைய நோய்தான் யாதோ என்று கேட்கும் அருளுள்ளம் இவளுக்கில்லையே, என்று, அயலார் நின்னைப் பழிக்கும் பொழுது, நீ நோன்பு நோற்கும் இளம் பிள்ளையாய், அயல் மனைதோறும் ஐயமேற்று இடும் பிச்சையால், ஏதேனும் பயம் உண்டோ?' என்று கூறினான் [கலி.59:17]. தலைவன், தலைவியிடம், 'சேயிழாய்! உன்னை விரும்பினவர் வருந்தும்படி, நீ, செய்த கொடுமை தீர, அவருக்கு நீ ஒரு உதவி செய்யாயாயின், நீ செய்த கொடுமையால் வந்த தீவினைப் பயம் உன்னைப் பற்றாமல் போகாது', என்று கூறினான் [கலி.59:25]. பரத்தமைத் தலைவன், குதிரை பழகிவந்தேன், என்று, தலைவியிடம் பொய் கூறினானாக, அவனிடம், தலைவி, 'சீ கெட்டது, தனக்கொரு பயம் இன்றியும் வடுப்படுதற்கு உரித்தல்லாத இடத்தில் வடுப்படுத்திய இக்குதிரை, பெரிதும் வியப்பே! இக்குதிரையை ஏறின நீ தீங்கின்றி வாழ்வாயாக!' என்று நகையாடினாள் [கலி.96:30]. ஞாயிற்றின் ஒளி இல்லையாயின் உலகிலுள்ள பல்லுயிர்களின் கண்கள் பயம் அற்றும்போகும் [கலி.148:3].

வையை மலைச்சாரல் தொடங்கி, நிலமெங்கும் நீரைப்பரப்பி, உலகத்திற்குப் பயத்தை விளைத்துக் கொடுத்துப் பாதுகாக்கும் தன்மையதாகும் [பரி.11:34]. முற்பிறப்புக்களிலே யாம் செய்த தவப் பயத்தால் இப்பிறப்பின்கண் நின் திருவடியைத் தொழுதிறைஞ்சி, வாழ்த்தும் பேறு பெற்றோம்', என்று, திருமாலைப், பற்றி நல்லெழுநியார் பாடியுள்ளார் [பரி.13:63]. 'முருகப் பெருமானே! அடியேங்கள், நின்னைப் பெரிதும் விரும்பி அடுத்தடுத்து நின்னை வழிபடுவதன் பயம், யாதெனில், மேலும் மேலும் அவ்வழிபாடுகள் நினது புகழைக்காட்டிலும் சாலப் பல ஆவதற்கேயாம்', என்று, கேசவனார் கூறினார் [பரி.14:30]. திருமால் உறையும் இருந்தையூரின் ஒருபக்கத்தில், பல்வேறு குற்றமற்ற பயம் படுபொருள்களை அகநாட்டினின்றும், புறநாட்டினின்றும் கொணர்ந்து தருகின்ற வணிகர் வாழ்கின்ற தெருக்கள் உள்ளன [பரி.தி.1:24].

பயன் - 1. காண்க.

**2. பால்** சோழன்குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், பரிசிலர்க்கு நெய்யில் வறுக்கப்பட்ட ஊன் உணவினையும், ஆவின் பயத்தையும்-பாலையும்-அளித்து உண்பிப்பான் *[புறம்.386:6].*

தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறையின் வயவரிடம் ஆவின் பயத்தைக் கொண்டு வாழ்வினை நடத்தும் இடையர், ஏறுகளுடனும், கன்றுகளுடனும் ஆனிரைகளைத் திறையாக அளித்தலால் அவ்வயவர் தாங்கள் கவர்ந்திருந்த அக்கோவலரின் ஆனிரைகளைத் திரும்ப அவர்களிடமே அளித்தனர் *[பதி.81:17].*

மாலைக் காலத்தில், கோவலர், குழலை இசைத்துக் கொண்டு பின்னே வரப், பயம் நிறைந்த மடியையுடைய ஆனிரைகள் தம் கன்றுகளை நினைத்துக் கொண்டு தொழுவங்கட்கு விரைந்து வரும் *[அக.54:9].* பாணன் நாட்டில் பயம் நிறைந்த மடியையுடைய ஆனிரைகள் நிறைந்திருந்தன *[அக.155:7].* ஆனிரைகட்குரிய கரந்தை மறவரைத் தம் வாட்களாலும், அம்பினாலும் பொருது விரட்டிவிட்டு, வெட்சி மறவர் அப்பயம் நிறைந்த ஆன்கூட்டத்தைக் கவர்ந்து செல்வர் *[அக.309:2].*

மலையிலுள்ள மனையில், முற்றத்தில், காயும் தினையினைப் பெண்யானை உண்டு கொண்டிருக்க, அதன் முலையிலுள்ள பயத்தை அதன் கன்று குடித்துக் கொண்டிருக்கும் *[குறு.225:1].* குன்றின் உச்சியிலுள் வேட்டுவச் சேரியை அடுத்துள்ள கிணற்றில் பயத்தைத் தருகின்ற ஆனிரைகள் உண்ணுமாறு பந்தரில் எடுத்து வைத்த நீரைப் பிடியானை, தன் கன்றுடனே உண்ணும் *[நற்.92:6].*

பயன் 5 - காண்க.

**3.பழம்.** பாரியின் பறம்பு மலை, காலமல்லாக் காலத்திலும் மரங்கள் பயத்தைத் - பழத்தைத் - தரும் வளத்தை உடையது *[புறம்.116:13].*

சிவந்த வேர்களையுடைய பலாமரங்களின் பயங்களை உடையது, கொல்லிமலை *[அக.209:15].*

தலைவியினுடைய மனையின் முன்றிலின்கண் சிவந்த வேர்களையுடைய பலாமரங்களின் கிளைகளில் பயங்கள் நிறைந்து தொங்கும் *[நற்.77:5].* சிவந்த வேர்களையுடைய பலாமரங்களில் பயங்கள் நிறைந்து, தொங்கும் *[நற்.77:5].* சிவந்த வேர்களையுடைய பலாமரங்களின் பயங்கள் நிறைந்தது கொல்லிமலை *[நற்.201:5].* மலைகளில் கொழுத்த கனைகளுள்ள பயங்களையுடைய பலாமரங்கள் நிறைந்திருக்கும் *[நற்.326:1].*

**4. வளம்.** தீட்டப்பட்டன போன்ற கூரிய முனையைக் கொண்ட பரற்கற்களானவை நெறியில் போவோரின் காலின் விரல் முனையைச் சிதைக்கும் காடானது மழையில்லாத காரணத்தால் பயம்-வளம்-அற்று இருக்கும் *[அக.5:15].* ஞாயிறு தீயெனச் சுட்டெரிக்கும் வெப்பமிக்க காடு, குளங்கள் நீரற்றுத் துகள்களாகப் பயம் இன்றி இருக்கும் *[அக.11:6].* பெரிய மலை குளிர் நிறைந்து உயர்ந்த பயம் பொருந்திய பக்க மலைகளையுடையது *[அக.98:1].* எவ்வி என்பான், பாண்மகள், தன் தமையன்மார் கொணர்ந்த வாளைமீனுக்கு விலையாக நெல்லைக் கொள்ளாமல், கழங்கினை ஒத்த பெரிய முத்துக்களையும், சிறந்த அணிகலன்களையும் விலையாகப் பெறும் பயம் மிக்க ஊர்களையுடையவன் *[அக.126:13].* ஞாயிற்றின் வெம்மை விளங்கும் பாலை நிலம் மரங்கள் உச்சி கரிந்து பயம் குன்றி இருக்கும் *[அக.169:1].* குளங்களெல்லாம் நீர் வற்றும்படியாக ஞாயிறு எரிக்கும் வேனிற்காலத்தில் நல்ல நிலங்களெல்லாம் பசுமையற்றுப் பயம் அழியும் *[அக.263:4].*

**5.செல்வம்.** கால்வாய்களையும், பூம்பொய்கைகளையுமுடைய புலவர் பாடும் புகழ் பெற்ற பயம்-செல்வம்-பொருந்திய ஊர்களையுடைய பகைவர் நாடுகள் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனால் பாழ்பட்டன *[பதி.13:9].* செல்வக் கடுங்கோவாழியாதன் பரிசிலர்க்கு மழைமுகிலினும் மிக்க பயத்தை வழங்குவான் *[பதி.64:18].*

**6.பொருள்.** பல்யானைச் செல்கெழுகுட்டுவன் கடலும், காடும் தம்மிடத்தேயுண்டாகும் பயம்-பொருள்-பலவும் உதவ அரசியலை முறையே செலுத்திய பேரரசர் வழியில் வந்தவனாவான் *[பதி.22:6].* செல்வக் கடுங்கோ வாழியாதன், நிலம் தன்பால் விளையும் பயத்தை மிகுதியாக விளைவிக்கும்படியாக நல்லாட்சி புரிந்த முன்னோர் வழியில் வந்தவனாவான் *[பதி.69:13].*

**7.நீர்.** ஞாயிறு தன் கதிரே, கையாக, ஈரத்தினைக் கவர்ந்து, பசுமையறக் காய்வதால், பெரிய இந்நிலத்தில் பயம்-நீர்-இல்லையாகிப், பிளவு தோன்றியது *[அக.164:2].* குளம் குட்டைகளில் அன்னப் பறவைகள் தங்கியிருக்கும்படியாக முகில் பயத்தைப் பொழிந்து, வெள்ளத்தை உண்டாக்கியது *[அக.234:1].* மழை பொழியாது பயம் அற்ற பொழுது திசைகளெல்லாம் கொதிக்கும் *[அகம்.311:8].*

**8.இன்பம்.** வெள்ளத்தில் நீராடிய ஆடவரும், மகளிரும் அச்சந்தரும் ஆழ்ந்த நீரினையுடைய வையையாறே! என்றும் நின்னிடத்தே நீராடி நின்னால் பெறும் பயத்தைப் - இன்பத்தைப்-பாடி விடிவு எய்தி மகிழ்வேமாக', என்று கூறினர் *[பரி.7:85].* வையையில் நீராடிய காதலர் விருப்பம் மிக இடைவிடாது இறுகப் புணர்தற்குத் தாளம் அமைந்த பாடல் பயத்தை தமது கிளர்ச்சியையுடைய செவியில் நிறைத்துக் கொண்டனர் *[பரி.11:69].*

பயன் 2 - காண்க.

**9. விளையுள்** மழை உரிய காலத்திலே தப்பாது பொழிவதால் பெரிய பலவாகிய புதுப்புதுக் கூலங்கள் பெருகிப் பயம்-விளையுள்-கெட அறியாத வளம் பல நிறைந்து, பலவாகிய ஊழிகள், செம்மையில் திறம்பாது நிலைபெற்றொழுகும் *[பதி.89:6].*

10.பீடு. வயவர்க்கு இடும் நடுகல்லில் அவருடைய பெயரும், பயமும்-பீடும்-விரிவாகப் பொறித்து வைப்பர் *[அக.297:8].*

11.பொருள் (கருத்து). பாலை நெறியில் செல்லும் உப்பு வணிகரின் வண்டிகளுடைய உருளைகளின் பூணினால் சிதைந்த நடுகல்லின் எழுத்துக்கள், அவ்வழியிலே செல்லும் வேறு புதியவர்க்கு வேறு பயமாகப்-பொருளாகப் (கருத்தாகப்) பிறழ்ந்து காணப்படும் *[அகம்.343:8].*

12.நல்வினைப்பயன். தலைவி இற்செறிக்கப்பட்டபொழுது தலைவனிடம், தோழி, 'பெருமானே! தலைவி இங்கே துன்புற, நின்னை விரும்பியவரது துன்பத்தைத் தீர்க்கும் பயத்தை-நல்வினைப் பயனை-அடையாத, இயல்புடையையாய் இருப்பது, நினக்குத் தகுமோ?' என்று கூறினாள் *[குறு.342:7].*

13.உணவு. இராப்பொழுதில் பாலையொத்து விளங்கும் மதியின் கதிர்கள் உலகிற்குப் பயத்தை-உணவுகளை-விளைத்தற்குக் காரணமாய் உள்ளன *[கலி.31:11].*

பயம்பு-குழி. களிறு தன்னை அகப்படுக்கும் பயம்பு-குழி-என்று அறியாது அதனுள் விழுந்து பின் தன் கொம்பினால் குத்தி அதனைத் தூர்த்து வெளியேறித் தன் இனத்தோடு சேர்ந்தாற்போலத் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனால் சிறையிடப்பட்டிருந்த யானைக்கண் சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை சிறையிலிருந்து தப்பித்துப் போய்த் தன்னாட்சியை மேற்கொண்டான் *[புற.17:14].*

மழை வறந்த காலத்தே நீர் நிலையில் நீருண்ண வரும் பன்றியைத் தாம் தோண்டி மூடிவைத்துள்ள பயம்பில் வீழச் செய்து, கானவர் இரவில் வேட்டையாடுவர் *[பெரு.108].* குறிஞ்சி நிலத்தின்கண் தினையில் படியும் கிளிகளை ஒட்டும் ஆரவாரம் முதலிய பலவகையான ஓசைகளோடு, குறவன் தன்னால் தோண்டப்பட்ட பயம்பில் பன்றி விழுந்து கொல்லப்பட்ட ஆரவார ஓசையும் கலந்து ஒலித்தது *[மது.294].* நன்னனிடம் பரிசில் பெறப்போகும் கூத்தனிடம் ஆற்றுப்படுத்தும் கூத்தன், நீவிர் போகும் வழியில், நிலத்தில் உள்ள பிளப்புக்களாகிய பயம்பில் பாம்புகள் ஒடுங்கிக் கிடக்கும்; பார்த்துச் செல்லுங்கள்', என்று கூறினான் *[மலை.199].*

மணவிழாப் பந்தலிலே பயம்பில் படர்ந்திருந்த அறுகம்புல்லின் கிழங்கோடு, வாகையில் இலையையும், நூலால் சேர்த்துக் கட்டித் தூய உடையை அணிவித்து, மணமகளை முதல் நாளிரவு ஒப்பனை செய்தனர் *[அக.136:11].* பெண்யானை பயம்பில் விழுந்துவிட்டதைக் கண்ட ஆண்யானை பேரொலியுடன் கூப்பிடும் *[அக.165:1].*

வையையாற்றில் வந்த வெள்ளம் மலைச்சிமையங்களிலுள்ள மரங்களை வேரொடு அகழ்ந்து உருட்டிக் கொணர்ந்து பயம்பிடைப் பரப்பியது *[பரி.7:15].*

பயலை-1. இளம்பருவம். வயலைக்கொடியைப் போன்ற வாடிய இடையையும், வருத்தத்தால் ஊர்ந்து செல்லுவது போன்ற நடையையுமுடைய பயலை - இளம்பருவத்து - அந்தணனொருவன் தூது சென்று இரு வேந்தரிடை நிகழவிருந்த போரினைத் தவிர்த்தான் *[புறம்.305:2].*

2.பசலை. தலைவனை வாயில் மறுக்கும் தோழியிடம், தலைவி, 'தோழியே! தலைவனின் பிரிவால் என் கண்கள் பயலை-பசலை-நோயை அடையாதிருந்தால், என்னாலும் தலைவனை மறுக்க முடியும்', என்று கூறி, வாயில் நேர்ந்தாள் *[ஐங்.36:6].* தலைவனைப் பிரிந்துள்ள தலைவி, தோழியிடம், 'தோழியே! நமது குளிர்ச்சியைத் தருகின்ற கடற்றுறை, குளிர்ந்த துளிகளை என்மேல் வீசி, எனக்குப் பயலை நோயை உண்டாக்கி விட்டது; இல்லையாயின், ஆற்றியிருப்பேன்', என்று கூறினாள் *[ஐங்.141:3].*

பயறு-பாசிப்பயறு. ஒரு போர்மறவன் 'என் மறத்தைப் புகழ்ந்து, வேந்தன் இறையிலியாக (புரவாக) மருத நிலத்தைக் கொடுத்தால் பெறுவேனே யொழிய, எருமையின் மருப்பைப் போன்றிருக்கும் நெற்றுக்களையுடைய பசுமையான பயற்றின்-பாசிப்பயற்றின் - கோதுகளில் மரை ஆன் படுத்திருக்கும் சிறிய ஊர்களைத் தந்தாற் பெறேன்', என்று கூறினான் *[புற.297:3].*

உழவர், கொள்ளும், பயறும், பாலுடன் கலந்து ஆக்கிய, வெள்ளிக் கம்பியை ஓரளவாக நறுக்கி வைத்தாற்போன்ற, வெள்ளிய அவிழ்கஞ்சியை அருந்துவர் *[அக.37:12].* பசிய இலைகளையுடைய பயற்றம் பயிரில் ஆ, மேய்ந்ததற்காகத் தன் தந்தையின் கண்களைப் பிடுங்கிய கோசர் என்பாரைத், திதியன் வாயிலாகக் கொன்று, அன்னி மிஞிலி என்பாள், பழி தீர்த்துக் கொண்டாள் *[அக.262:4].* பனிக்காலத்தில் பயற்றஞ்செடியில் காய்கள் குவிந்து பற்று நீங்கின விரல்கள் போல் முற்றும் *[அக.339:4].*

பயற்றின் கொத்துக்களைப் போன்று காஞ்சி மரத்தின் பூங்கொத்துக்கள் இருக்கும் *[குறு.10:2].* மான்கள் பனிக்கால மாலை நேரத்தில் செழுமையான பயற்றம் பயிரைக் கறித்துத் தின்னும் *[குறு.338:4].*

பாண்மகள் கெடிற்றுமீனை ஒரு கூடை நிறையக் கொடுத்துவிட்டு, அதற்கு விலையாக, உழவனின் மனைவியிடம், நெல்லரிந்த வயலிலே விளைந்த பெரும் பயற்றை அக்கூடை நிறையக் கொண்டு செல்வாள் *[ஐங்.47:3].*

பயன்-1 நுகர்ச்சி, விளைவு. வெள்ள நீர் உடைப்புக்களை மண் மறுத்தலான் மீனாலடைக்கும் புது வருவாயினையுடைய பயன்-நுகர்ச்சி - விளங்கும் ஊர்களையுடைய பகைவரின் நாடுகள், சோழன் கரிகாற் பெருவளத்தானால் பாழாயினமையின், நல்ல பொருள்கள் இல்லையாயின *[புற.7:13].*

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனிடம், வெள்ளைக்குடி நாகனார், 'வேந்தே! களிற்றுப் படை பனந்துண்டங்களைப் போல வெட்டுண்டுக் கிடக்கும் போர்க்களத்தில் பகைவர் படைகளைப் புறமுதுகிட்டோடச் செய்து ஆரவாரிக்கும், நினது படையின் வெற்றியும், உழுகின்ற கலப்பை நிலத்தின்கண்ணே ஊன்று சாலிடத்து, விளைந்த நெல்லின்து பயனே (விளைவே) யாகும்', என்று கூறினார் *[புற.35:26]*. பயன் பொருந்திய முள்ளூர் மலையுச்சியின்கண் உண்டாகிய மழைத்துளிகளிலும் பலவாகிய பொன்னாலாகிய தேர்களை, மலையமான் பரிசிலர்க்கு வழங்கினான் *[புற.123:5]*. பிட்டங்கொற்றன், பரிசிலர்க்கு மெல்லியனாயும், பகைவர்க்கு இரும்பைப் பயன்படுத்துகின்ற வலிய கையையுடைய கொல்லனது உலைக்களத்திலே விளங்கும் உலைக்கல் போன்ற வல்லாளனுமாவான் *[புற.170:15]*. 'செல்வத்தை யாமே நுகர்வேமென்று கருதின் தவறுவன பல; ஆதலால் செல்வத்தாற் பெறும் பயனாவது கொடுத்தலே', என்று நக்கீரனார் கூறினார் *[புற.189:7]*. கயலினது முட்போன்ற நரை முதிர்ந்த, திரைந்த கதுப்பினையும், பயனில்லாத முதுமையையுமுடைய, பல அமைந்த குணங்களையுடையீர்!' என்று, நரிவெரூஉத்தலையார், முதியவர்களை அழைத்தார் *[புற.195:3]*. இருங்கோவேளின் முன்னோருள் ஒருவன், கழாஅத்தலையாரென்னும் புலவரை மதியாமையாலாகிய பயன், சிற்றரையம் பேரரையம் என்னும் ஊர்கள் அழிந்தன *[புற.202:13]*. சோழன் கரிகாற் பெருவளத்தான் காலமான போது, வெம்மை மிக்க கோடைக்காலத்தில், கோவலர், பசித்த ஆயமாகிய பயன்படும் ஆனிரையைப் பாதுகாத்தற்குத் தம் வாளால் பூவும், தழையும் சேர உதிர்த்துவிட்ட வேங்கை மரத்தைப் போல, அவனுடைய உரிமை மகளிர் அணிகள் இழந்து நின்றனர் *[புற.224:14]*. சிறுசினமும், சில சொல்லிப் பல அறிவுடைமையும், கனிந்த கள்ளினைப் பரிசிலர்க்களித்தலும், பணிவும், பணிந்த சொல்லுடைமையும் ஆகிப் பலர்க்கும் பயன்விளைக்கும் செயல்களைச் செய்து நல்லாட்சி புரிந்த வேந்தர் உலகில் சிலரேயாவார் *[புற.360:7]*. வெள்ளியாகிய மீன் தென்திசைக்குச் சென்றால் விளை வயல்களும், நீர் நிலைகளும் நீரற்றுப் பயனில்லாத வற்கடகாலமாய் (பஞ்சகாலமாய்) விடும் *[புற.388:2]*. தகடூர், பல்வகைப் பயன்களும் நிலைபெற்ற காடுகள் பொருந்திய ஊர்களையுடையதாயிருந்தது *[பதி.78:7]*.

சோழன் கரிகால் பெருவளத்தானிடம் பரிசில் பெறச் செல்லும் பொருநனிடம் ஆற்றுப்படுக்கும் பொருநன், 'மூவேந்தரும் ஒருங்கே அரசு வீற்றிருந்தால் தோன்றும் பெருஞ்சிறப்பை ஒத்த சிறப்பினையுடைய பாடலின் பயனைத் தன்பால் கொண்ட யாழினை ஏந்திய பொருநர் தலைவனே! வழிதவறிப் போகாமல் இவ்வழியே வந்து என்னைக் கண்டது நீ முற்பிறப்பில் செய்த நல்வினையின் பயனே', என்று கூறினான் *[பொரு.56,59]*. பாடுந்துறைகளெல்லாம் முற்றப்பாடுதற்குப் பயன் விளங்குகின்ற இசைகளைத் தான் கூடுதல் கொண்ட இனிய யாழினைப் பாணன் வைத்திருந்தான் *[சிறு.228]*. பாண்டியரின் ஆட்சியில் விளைநிலங்களும், மரங்களும் பல்லுயிர்க்கும் பயன் கொடுத்தலை மேற்கொண்டு தழைத்து இருந்தன *[மது.12]*. அரண்மனைகள், யாவரும் உண்டும் குறையாத ஊனினையும், சோற்றையும், கள்ளையும் உடையவாய், நிலம் சுமக்க மாட்டாத பலவாகிய பொருள்களையுடையவாய் எக்காலமும் பயன் கெடுதல் அறியாதவையாய் இருந்தன *[மது.216]*. மலையின் வளத்தால் அகன்ற பாறையின்கண் காலத்தானன்றியும் அங்குள்ள மரங்கள் தாம் பயனைக் கொடுத்தலான் காற்றாலே தம் கரிய கனிகளை நாவல் மரங்கள் உதிர்த்தன *[மலை.134]*. கானவர், நெடிய மலையுச்சியில் கண்ணேணியின் வழியாக ஏறித் தமக்குப் பெரும்பயன் உண்டாகக் கருதித் தேனீக்கள் ஈட்டி வைத்துள்ள தேனை அடைந்த மகிழ்ச்சியாலே ஆரவாரஞ் செய்வர் *[மலை.317]*. உண்டவை போக எஞ்சிய பலாப்பழங்களினின்றும் விதைகளைப் பிரித்து அவைகளின் பயன் கோடற்குக் குறவரின் மகார் கன்றுகளைக் கடாக்களாகப் பிணைத்துக் காந்தள் மடலால் அடித்தோட்டி ஆரவாரிப்பர் *[மலை.338]*.

மலையில், பெரிய கிளைகளில், பெரிய காய்களைக் கொண்ட பலாமரத்தின் பழமாகிய பயனைக் கொள்ளுதற்குக் குறவர் அம்மரங்களினடியில் குடிசைகளைக் கட்டி வைப்பர் *[அக.12:8]*. நற்பண்பில்லாத மக்கள், செல்வம் இல்லாதோரால் பயன் அடைதல் இன்மையின் அவரைவிட்டு, நீங்கிச் செல்வமுள்ளோரைத் தேடிச் செல்வர் *[அக.71:2]*. கரிய முகில் பயன்தரும் நிலங்கள் நெகிழுமாறு மழையைப் பொழிந்தது *[அக.235:4]*. பிரிவின்கண் தலைவி, தோழியிடம் 'தோழியே! வாடை தலைவரிடம் சென்று நீ, நெடுங்காலம் தாழ்த்து விட்டனை, என்று கூறி, நமது துன்புறும் நிலையை விளக்காமல், நம்மையே துன்புறுத்துகின்றது, நமது பழைய தீவினையின் பயன்போலும்', என்று கூறினாள் *[அக.243:15]*.

பிரிவினால் துன்புறும் தலைவியிடம், தோழி, தோழியே! தலைவரிடம் நின் பற்கள் வெளிப்படச் சிரித்து மகிழ்ந்ததனால் உண்டான பயன் நினது பழைய அழகு அழிந்து துன்பத்தையுடைய நெஞ்சோடு, இரவுதோறும் தூங்காமல் அழிவதுதானோ?' என்று கூறினாள் *[குறு.381:7]*.

தலைவி கிடைத்தற்கரியள் என்று நகைத்துக் கூறித் தோழி, தலைவனைச் சேட்படுத்தியபொழுது, தலைவன், தோழியிடம், 'இளம் பெண்ணே! தலைவியால் துன்புறும் உயிர்களைக் கொல்லும் பொருட்டுக் கடித்து வருத்துவதுபோல, நகைத்து இகழாதே' என்று வேண்டினான் *[நற்.75:1]*. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனது பாணன் கேட்பத், தலைவியிடம், தோழி 'தோழியே! பெதும்பைப் பருவத்தாளொருத்தியின் (பரத்தையின்) ஊசலை ஆட்டாமல் அவளை ஊடும்படி செய்த

இவ்வேந்தனின் அவைக் களந்தான் பயனில்லாததாய் இருந்தது', என்று நகைபடக் கூறி, வாயின் மறுத்தாள் [நற்.90:12]. கழறிய கற்றறி பாங்கனிடம், தலைவன், 'பாங்கனே! குவளை மலர் போன்ற செவ்வரி படர்ந்த தலைவியின் கண்களைக் காணுவதற்குமுன், நயன், நட்பு, நாண், பண்பு முதலியவற்றோடு பயனும் உடையனாயிருந்தேன்', என்று கூறினான் [நற்.160:2]. தலைவனுக்குத் தூதாக வந்த பாணனிடம், தோழி, 'தலைவன் நின்னைத் தூதாக விடுத்தலினாலே வந்து தலைவனிடம் பெறும் பயனுக்குத் தக்கவாறு கூறும் சொற்களையுடைய பாணனே! நினது பொய்ம்மொழியை ஏற்கோம்', என்று கூறி, வாயின் மறுத்தாள் [நற்.167:6]. பிரிவின்கண் காதல் மீக்கூர்ந்த தலைவியொருத்தி, வண்டினைப் பார்த்து, 'வண்டே! நின்பேடு விரும்பியவுடனே நீ விரைவாக ஓடிச் சென்று அதன் மனம் மகிழப் புணர்ந்து தலையளி செய்ததன் பயனாக என் தலைவர் பால் சென்று எனது நிலையைக் கூறி அவர் வருமாறு செய்தாயல்லை; நினது உடல்தான் கரியது என்றால், நின்னறிவும் கரியது தானோ?' என்று கூறினாள் [நற்.277].

பொருள் வேட்கையால் பிரியக் கருதும் தலைவனிடம், தோழி, 'பெருமானே! கேட்பவர்க்கு இன்பம் உண்டாகுமாறு இசையைத் தரும் யாழின் நரம்புகள் எழும் இசைப்பயன் கெட்டுப்போமாறு இடைநின்ற நரம்பு ஒன்று திடுமென அறுந்து போவதைக் காட்டிலும் விரைந்து அழிந்துபோகும் செல்வத்தைச் சிறந்தோர் விரும்புவாரோ? தமக்கு உயர்ச்சி மிகும்படி தாம்பெறும் பயனைக் கருதாமல் அரசராக்கத்தையே கருதி உழைத்த அமைச்சரென்றும் பாராது சினக்கும்பொழுது அவரைக் கொன்று உயிர்போக்கும் கொடிய அரசவாழ்வைக் காட்டிலும் விரைந்து அழிந்து போகும் செல்வத்தைச் சிறந்தோர் விரும்புவாரோ' என்று கூறிச் செலவழுங்குவித்தாள் [கலி.8:10,15]. பல உணவுகளையும் விளைத்துக் கொடுத்து எல்லாரையும் நுகர்விக்கும் பயனையுடைய நிலம் ஈரம் அறும்படி ஞாயிறு தன் வெப்பமான கதிர்களைச் சொரிந்து வறட்சியுண்டாக்கியது [கலி.20:1]. பரத்தையிற் பிரிந்துவந்து தலைவனிடம், தலைவி, ஊடிக் கூறும் பொழுது, 'பரத்தையை விரும்பும் நீ, இங்கு வந்த செயல் வேறொன்றாக இருப்பவும், 'என்னை, எனக்கென ஒரு வரையறையற்றவள்' என்று கருதிப் பணிந்து வந்தவன் போல் வந்து பயன் அற்ற சொற்களைச் சொல்லலாமா?' என்று கூறினாள் [கலி.69:11]. ஒரு காதலன், தன் காதலியிடம், 'என்னிடத்து எந்நாளும் காமநோய் மிகுகையினாலே, கடைந்து நெய்யெடுத்துவிட்ட பால் நுகர்வார்க்குச் சிறிதும் பயன்படாது கைதோயும் அளவோடு ஆகிவிடுவது போல், என்னுடைய உயிரும் எச்செயலையும் இழந்து விட்டது', என்று கூறினான் [கலி.110:17]. வெற்றியும், புகழும், நீதிநூல் முறைப்படி அரசாட்சியுமுடைய ஒரு வேந்தன் தான் செய்த நல்வினைப் பயனை நுகரும் பொருட்டு வீட்டுலக வாழ்வை விரும்பிச் சென்றதைப் போல், ஞாயிறு இருளைக் கெடுத்துப், பகற் காலத்தைச் செய்து' பிறகு மலையிடைச் சென்று மறைந்தது [கலி.118:3]. தலைவிபடும் துயரினைத் தோழி, தலைவனிடம் 'ஐயனே! பசலைநோய் படர்ந்து பகலில் ஏற்றிய விளக்கைப் போல் ஒளியிழந்தவள், மாந்தளிர் போன்ற தன்னழகை யிழந்தது, புன்னைமரச் சோலையில் நீ புணர்ந்திருந்தபோது, 'நன்னுதால் நான் பிரியேன், நீ அஞ்சாதே', என்று கூறியதன் பயன் அல்லவோ?' என்று கூறினாள் [கலி.132:9]. தலைவி, தன் துயரினைத் தோழியிடம், 'தோழியே! எனது காம வேட்கையோ பெரிது; அதனால் எனது உயிரோ மிகவும் சிறிதாய் விட்டது; காதலரோடு கூடிக் களித்ததன் பயன் பீலியை இழந்த மயில் போலப் பொலிவழிந்து நடுங்கிப் படுக்கையில் கிடந்து காம நெருப்பிலே உழல்வதுதானோ?' என்று கூறினாள் [கலி.137:7]. காதலர் உள்ளங் கலந்து கூடுகின்ற கூட்டத்தில் உண்டாகும் இன்பம் நிறையாத போதே, ஒருவரைப் பிரித்துவிடுவது, இசையெழுப்பிய யாழினுள் அவ்விசையின்பத்தை ஆர நுகர்வதற்கு முன்பே, அவ்விசையின் இன்பம் கெடும்படி, அறுந்து போகும் நரம்பைக் காட்டிலும், பயன் இன்றாயிருந்தது [கலி.142:5].

இவ்வுலகில் சக்கரவாளம் முதலாக மலைகள் பல உள்ளன; அப்பல மலைகளுள்ளும் இந்நில உலகத்துள்ள மக்களுடைய பசி வெப்பத்தையாற்றி மேலும் பொன், மணி, மரம் முதலிய நிறைந்த பயன்களைத் தருவன சிலவேயாகும் [பரி.15:6]. ஆடவரும், பெண்டிரும் பொருள்களைத் தானம் செய்து அதன் பயனாகிய நுகர்ச்சியை நுகர வேண்டி நாள்தோறும் வையையில் நீராடுவர் [பரி.16:51]. சொற்போரிலும், படைப்போரிலும் சிறந்த மதுரையில் வாழும் ஆடவரும், பெண்டிரும் புணர்ச்சியின்பத்தோடே வைகறையில் விழித்தெழுந்து, பெரிய அறத்தைச் செய்து அதன் பயனை நுகர்வதற்காக வானவர் உலகத்திற்கு மகிழ்ந்து செல்வாரைப்போலக் குதிரைகளிலும், தேர்களிலும் ஊர்ந்து முருகவேள் உறையும் திருப்பரங்குன்றம் நோக்கிச் சென்றனர் [பரி.19:10]. மதுரை வாழ் மைந்தரும், மகளிரும் செய்த தவத்தினது பயன் பெரியதென்று கண்டோர் கூறும்படியாக, இவர்களால் வையையாறு அழகு பெற்றதைப் போலக், கரைகளிலும் வையையிலும் வந்து கூடினர் [பரி.22:28]. திருமாலின் திருப்பதியாகிய இருந்தையூரின்கண் விளைந்து முதிர்ந்த நல்வினையினது சிறந்த பயனை நுகர்தற்கு இடமானது, துறக்கத்தை ஒத்த ஆதிசேடனார் திருக்கோயில் [பரி.தி.1:46].

**2.இன்பம்.** காவிரிப்பூம்பட்டினத்தில் இரவில் ஆடவரும் பெண்டிரும் புணர்ச்சியில் திளைத்து மயங்கியும், வெள்ளிய நிலவால் உண்டாய காட்சியின் பயனை இன்பத்தை நுகர்ந்தும் இரவின் கடையாமத்தில் கண்துயிலலாயினர் [பட்.114]. காமத்தில் சிறந்தது காதலையுடைய களவுக் காமமாகும்; அன்பு ஒவ்வாத கற்பொழுக்கத்தின் புணர்ச்சியின் பயன் களவுப் புணர்ச்சி இன்பம் போல, இயல்பாக உளதாகாது ஊடுதலானே

உண்டாவதாகும்; அவ்வூடலும், தலைவனுடைய பரத்தமையால் நிகழ்வதாகும்; களவு, கற்பென்னும் இரண்டனுள் களவே சிறந்தது என்று கூறும் தமிழ் இலக்கணத்தை அறியாதாரே, குறிஞ்சிப் பயனாகிய களவொழுக்கத்தை மேற்கொள்ளார் *[பரி.9:22,26]*.

**3.விளையுள்.** பாரியினுடைய பறம்பு மலை உழவரால் உழுது விளைவிக்காமலேயே மூங்கில் நெல், பலாப்பழம், வள்ளிக்கிழங்கு, தேன் ஆகிய நான்கு பயனை-விளையுளை உடையதாகும் *[புற.109:3]*.

**4.பொருள்.** காவிரிப்பும்பட்டினத்தின் தெருக்களில் பல இடங்களிலிருந்து வந்த பொருள்களோடு, காவிரியாற்றால் உண்டாகிய பயனும்-பொருளும்-நிலம் நெளியும்படியாக வந்து குவிந்து கிடந்தன *[பட்.190]*.

**5.பால்.** வளமோடு இருந்த ஊரின் குடிகள், மறவர் அடிக்கடி வந்து பயன்-பால்-தரும் ஆன்கூட்டங்களைக் கவர்ந்து சென்றமையின், ஊரினைப் பாழ்படவிட்டுச் சென்று விடுவர் *[அக.377:5]*.

**6.சுவை.** இன்பத்தை நுகர்ந்து திளைக்கும் காதலர்க்கு, இசைவாணர்களால் எழுப்பப்படும் பண்ணினால் உண்டான பாடலின் பயன்-சுவை-மிகுதியான காமஇன்பத்தை நுகர்விக்கும் *[ஐங்.407:2]*.

**பயிர் 1. தானியம் முதலிய பயிர்.** பள்ளங்களிலுள்ள சங்கு உடைந்தாற் போன்ற வெண்கோடலின் பசிய பயிரினை மான்கள் மேய்ந்தன *[அக.23:6]*. விரைந்து வரும் தலைவனின் தேர் உருளையில் அகப்பட்டு வழியிலுள்ள பசிய பயிர்கள் அறுபட்டன *[அக.254:14]*. முகில், மழை பெய்கின்ற கார்ப்பருவத்தில் காட்டில் ஆண்மான் குட்டியினுடைய பெண்மானைத் தழுவிக்கொண்டு, பசிய பயிரிலே துள்ளித் திரிந்தது *[அக.314:6]*. காட்டில் மழையினால் வளர்ந்த பசிய இளம்பயிர், கிளிக்குஞ்சினுடைய சிறிய இறகைப் போன்று இருக்கும் *[அக.324:5]*.

ஈன்றணிமையையுடைய பெண்ணெருமை உழவனால் கட்டப்பட்ட தன் கன்றின் பக்கத்தினின்றும் அகலச் செல்லாமல் பக்கத்திலுள்ள பசிய பயிர்களை மேய்ந்தது *[குறு.181:5]*. தலைவனுடைய தேரினது இளம்பிறையைப் போன்ற சக்கரம் வானத்தினின்றும் வீழ்கின்ற கொள்ளியைப் போலப் பசிய பயிர்களைத் துணித்தது *[குறு.189:4]*. எருதுகளோடு பால் நிறைந்த மடியையுடைய ஆக்களும் மேய்ச்சல் நிலத்தின்கண்ணுள்ள பயிரை மேய்ந்தன *[குறு.344:3]*.

மழை பெய்ததால் குளிர்ந்த சுனையில் நீர் நிறைதலால் அங்கு முளைத்தெழுந்த குளநெல் முதலிய பயிர்கள் நெருங்கி வளர்ந்தன *[நற்.5:2]*. வினைமுற்றி மீண்டு வரும் தலைவனுடைய தேரின் குதிரைகள் மெல்லிய பயிர்களை மிதித்துக் கொண்டு வந்தன *[நற்.181:11]*.

**2. ஓசை** - எழுவகைப் பண்களுள் ஒன்றாகிய இளியென்னும் பண்ணின் பயிரை - ஓசையை - தூம்பென்னும் கருவி எழுப்பியது. *[மலை.7]*. ஒரு காதலி, தன் காதலனிடம் 'நான் குறித்த குறியிடமாகிய எங்கள் தோட்டத்திலுள்ள காஞ்சி மரத்தினடிக்கு ஆம்பல் குழலில் பயிரினையெழுப்பிக்குறி செய்துவா என்றாள். *[கலி.108:62]*.

**பயிர்ப்பு** - பிசின் (கோந்து) பலாமரத்தினது பலாப்பழம் பயிப்பை - பிசினை - உடையதாய் இருக்கும். *[அகம்.348:4]*. தலைவியின் சிறுகுடியில் இருக்கும் பாறையில் பயிர்ப்பினையுடைய பலாப்பழங்கள் வீழ்ந்துகிடக்கும். *[கலி.50:12]*.

**பயிற்றல்** - பலகால்(முறை) கூறல். வேங்கை மரத்தினுடைய மலரைப் பறிக்க விரும்பிய குறமகள் இன்னாமையைத் தரும் ஒலியாகிய புலி புலி என்னும் ஆரவாரத்தினைப் பயிற்றலின் - பலமுறை கூறலின் - ஊரினர் திரளுவர் *[அக.52:4]*. தலைவன் களவுப் புணர்ச்சிக்கு முன் தலைவியிடம் பலநாள் பந்து பணிந்த மொழிகளைப் பயிற்றுவான் *[அக.310:4]*.

**பயின் 1.** அரக்கு. தலைவியைப் பிரியேன் என்று தலைவன் கூறிய சொல், பொதினி மலையில் சிறு தொழிலாளனாய சாணைக்கல் செய்வோன் பயினோடு - அரக்கோடு சேர்த்தியற்றிய சாணைக் கல்லைப்போல உறுதியானது *[அக.1:5]*. தோழியின் நாக்கு, நன்னனுடைய பறம்பு என்னும் ஊரிலுள்ள சாணைக்கல்லைப் போன்ற திண்மையுடையதாகும் *[அக.356:9]*.

**2. சுக்கான்** (மரக்கலத்தைத் திருப்பும்பொறி). புலியுருவைப் புலியென்று மருண்டு பாகர்க்கு அடங்காது சிதைந்த களிறு. பிடியானைகளை அவ்விடத்தினின்றும் அகற்றி, ஒன்றாக நிறுத்தி, அவற்றின் சிதைவை அகற்றிப் பிடியின் மேலிருந்த மகளிரைப் பாகர் காத்த செயல், கயிறு, பாயெல்லாம் காற்றால் சிதைந்த மரக்கலத்தைப் பயினால் - சுக்கானால் - திருத்தி அதனுள்ளிருப்போரைக் காத்த மீகாமனுடைய செயலை ஒக்கும் *[பரி.10:54]*.

**பயின்றோர்** - கற்றோர். திருப்பரங்குன்றத்தின்கண் இசைப்பாடல் பயின்றோரை - கற்றோரை - அவ்விசைப் பாடலில் வல்லார் வென்றனர் *[பரி.9:73]*.

**பயினி** - ஒருவகை மரம். தலைவியும், தோழியும் பறித்துப் பாறையில் குவித்த மலர்களில் பயினியின் மலர்களும் இருந்தன *[குறி.69]*.

**பரங்குன்றம்** - திருப்பரங்குன்றம். சினம் மிக்க முருகனுக்குப் பரங்குன்றம் - திருப்பரங்குன்றம் - உரியதாகும் *[அக.59:11]*.

பரத்தைமைத் தலைவனொருவன், தலைவியிடமும், தோழியிடமும், காதலர்க்கு இருவகைப் புணர்ச்சியையும் தரும் முருகவேளுக்குரிய குளிர்ந்த பரங்குன்றத்தின் அடியைத்

தொட்டு, ஆணையிட்டான் *[பரி.8:62]*. தண்பரங்குன்றமே, எல்லோரும் முருகன் கோயிலை வழிபட்டு நிற்க, இவ்வுலகத்து உயிர்கள் துன்புறும்படி மழை வறந்து போயினும், நின்னுடைய அருவி இடையறாது ஒழுகுவதாகிய பெரிய செல்வம், நினக்கு என்றென்றும் நிலைபெறுவதாக', எனப் புலவர் வாழ்த்தினார் *[பரி.8:130]*. முருகவேள், வானவர் உலகத்தில் விருப்பத்தோடு உறைந்தது போலவே, மண்ணுலகத்திலும் வாழும் விருப்போடு அவ்வானவருக்கு அளித்த இன்பத்தினை மண்ணுலகத்தவருக்கும் அளிக்கும் பொருட்டுப் பரங்குன்றத்தின்கண் எழுந்தருளினார் *[பரி.19:5]*. முருகப்பெருமான் எழுந்தருளியுள்ள பரங்குன்றத்தில் பலவிதமான ஓவியங்கள் தீட்டப்பெற்றுள்ள மாடத்தின் பக்கம் சென்ற மக்கள் ஓவியங்களைக் கண்டு களிப்பாராயினர் *[பரி.19:56]*. உயர்ந்தோர் தம் செந்நாவானே புகழப்பட்ட ஏழிலைப்பாலை என்னும் மரங்கள் அடர்ந்ததும், அருவி இடையறாது ஒழுகுவதும், வானைத் தீண்ட வளர்ந்ததுமாகிய பரங்குன்றத்தின்கண், முருகப்பெருமான் எழுந்தருளியுள்ளார் *[பரி.21:15]*.

பரங்குன்று - காண்க.

**பரங்குன்று - திருப்பரங்குன்றம்.** பன்னிருகைக் கோமானாகிய முருகவேளுக்குரியது பரங்குன்று - திருப்பரங்குன்றம் - ஆகும் *[முரு.வெ.9:1]*. முருகனுக்குரிய பரங்குன்றின்கண் எப்பொழுதும் விழாக்கள் நிகழும் ஆரவாரம் இருக்கும் *[மது.263]*.

தான் பரத்தையோடு நீராடியதாகத் தன் காதலி கூறி ஊடும்பொழுது அக்காதலன் முருகனுக்குரிய பரங்குன்றின் தலையைத் தொட்டு ஆணையிட்டு மறுத்துரைத்தான் *[பரி.6:95]*. திருமால், சிவபெருமான் உள்ளிட்ட தேவர்களும், அசுரரும் முனிவர்களும் முருகனைக் காணும் பொருட்டுப் பரங்குன்றிற்கு வருதலால் அக்குன்றம் இமயக் குன்றத்தை ஒத்திருந்தது *[பரி.8:11]*. காதலன் ஒருவன், தன் காதலியிடம் முருகவேளின் பரங்குன்று, களவினும், கற்பினும் காதலோர்க்கு மறவாது இன்பம் நல்கும் சிறப்புடைத்து, என்று கூறினான் *[பரி.8:46]*. ஒரு தலைவன், தோழியிடமும், இளையரிடமும், நான் இட்டது பொய்யாணையாயின் நாமெல்லோரும் பரங்குன்றத்தே சென்று முருகனடி வணங்கி அவ்விறைவனின் சினத்தை ஆற்றுவோம் வாருங்கள்' என்று கூறினான் *[பரி.8:82]* முருகப் பெருமான், வள்ளிநாயகியைக் களவில் மணந்த அன்று, தேவசேனையின் கண்கள், பரங்குன்றின்கண் கண்ணீராகிய மழையைப் பொழிந்தது *[பரி.9:11]*. தேவசேனையின் தோழியரை, வள்ளியின் தோழிமார் போரில் வாகை சூடுதலால், தண்.

பரங்குன்று முருகவேளுக்குப் பெரிதும் இயைவதாயிற்று *[பரி.9:69]*. மதுரைக்கும், பரங்குன்றிற்கும் இடையே கிடந்த நிலம் மிகவும் அண்மையதேயாயினும், ஆடவரும், மகளிரும் நெருங்கிச் செல்வதால் மிகவும் சேயதாயிருந்தது *[பரி.17:23]*. மகளிரும், அவர்தம் காதலரும் மகிழ்ந்து கூடிப் பாய்ந்து நீராடுவதால் சுனையின்கண் வண்டுகள் போய்த் தாது ஊதாவாயின; பரங்குன்றின் அழகு அத்தகையதாகும் *[பரி.17:39]*. வெள்ளிய அருவியாலே அழகு செய்யப்பெற்ற பரங்குன்றின்கண் தலைவியர் பிரிந்து சென்றுள்ள தம் தலைவர் விரைவில் வரும் பொருட்டுத் தெய்வவிழா எடுப்பர் *[பரி.17:43]*. காதலியொருத்தி, சுனையில் நீராடியவள், ஆழமான நிலையில் அகப்பட்டுக் கரையில் நிற்கும் தன் காதலனை மூங்கிலாகிய புணையைக் கேட்ப, அவன் அரக்கு நீர் நிரப்பிய வட்டிலை எறிந்து அவளுக்குப் புணை கொடாது அவள் ஆழத்தில் துயருறும் நிலை கண்டு, மகிழ்ந்து, பின் அவன் சுனையில் பாய்ந்து அவளைத் தழுவிக்கொள்ளும் இன்பம் நல்கும் இயல்புடையது, பரங்குன்று *[பரி.21:45]*. முருகவேளுக்குரிய பரங்குன்றில் வாழ்பவரே, வாழ்பவராவார்; அவரே வீட்டுலகத்திற்கும் எய்துவர் *[பரி.தி.11:2]*.

பரங்குன்றம் - காண்க

**பரடு - காலின் அடிக்கணு.** ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் மனைவியின் சிறிய அடிகளிலே அணிந்துள்ள கிண்கிணிகள் சிறிய பரட்டின் கண் - காலின் அடிக்கணுவின் கண் - கிடந்து ஒலிக்கும் *[பதி.52:20]*. தலைவன், தலைவியின் சிறிய பரட்டினையுடைய அழகிய சிவந்த சிறிய அடியில் செம்பஞ்சிக்குழம்பினைத் தடவியும் அழகுறுத்தியும் மகிழ்வான் *[அக.389:6]*.

**பரணர்-ஓர் புலவர்.** இவரது இயற்பெயரே பரணர் என்பதாம். சங்கப் புலவருள் சிறப்பும் செம்மலும் வாய்ந்த இவர், கபிலருடன் மிக நெருங்கிய நண்பு பூண்டு, அவருடன் இரட்டையராய்த் திகழ்ந்தமையால், 'கபில பரணர்' என்று சேர்த்தே குறிக்கப்பெற்றவர்; சங்கத்தில் தலைமை பெற்றுத் திகழ்ந்த நக்கீரராலும் மதித்துப் போற்றப் பெற்றவர். இவர் பாடியனவாகப் புறநானூற்றில் பதின்மூன்றும் *[4,63,141,142,144,145,336,341,343,348,352,354,369]* பதிற்றுப்பத்தில் ஐந்தாம் பத்தும் *[41-50]* அகநானூற்றில் முப்பத்து நான்கும் *[6, 62, 76, 116, 122, 125, 135, 142, 148, 152, 162, 178,181,186,196,198, 208, 212, 222, 226, 236, 246. 258, 262, 266,276, 322, 326, 356,367,372,376, 386,396]* குறுந்தொகையில் பதினேழும் *[19, 24, 36, 60,73,89, 120, 128, 165, 199, 258, 259, 292, 298, 328, 393, 399]* நற்றிணையில் பன்னிரண்டும் *[6, 100, 201, 247, 260, 265, 270, 280, 300, 310, 350, 356]* ஆக 86 பாடல்கள் உள்ளன. புறப்பாடல்களுள் சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னியின் போர்த்தோற்றத்தை இவர் மிகச் சிறப்பாகப் புனைந்துள்ளார் *[புற.4]*. சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும், சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும் போர்ப்புறத்தே பொருது படைகளுடன் இருவரும் வீழ்ந்த நிலையில் அக்களத்தே சென்று தொகைநிலைத் துறையில் இவர் இரங்கிப் பாடியது

ஏனோரையும் இரக்கத்தில் ஆழ்த்துவதாய் உள்ளது [புற.63]. வையாவிக் கோப்பெரும் பேகனின் ஈகைச் சிறப்பினைப் பாணாற்றுப் படையாகவும் [புற.141], அவன் கொடைமடம் படுதலல்லது படைமடம் படாமையை இயன்மொழியாகவும் [புற.142] பாடிய இவர், அவன் தன் மனைவி கண்ணகியைத் துறந்து மற்றொருத்தியின் நலன் நயந்து நல்லூரின்கண்ணே இருக்கையில் அக்கண்ணகி பொருட்டு அவனை இருபாடல்களால் பாடி, அவளுடன் இணைக்கவும் முயன்றார் [புற.144,145]. சேரமான் கடலோட்டிய வேல்கெழுகுட்டுவனது போர் வெற்றியை மறக்களவழியாக ஏர்க்கள உருவகமும் அமைய இவர் புனைந்துள்ளார் [புற.369]. மகட்பாற்காஞ்சித்துறையில் இவர் பாடியுள்ள ஏனைய புறப்பாடல்கள் ஆறும் [336, 341, 343, 348, 352, 354] அத்துறையைப் பாடுவதில் அமைந்த இவரது தனியாற்றலை உணர்த்தும். பதிற்றுப்பத்தின் ஐந்தாம் பத்தினால் சேரவேந்தன் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனைப் பாடி உம்பற்காட்டு வருவாயினையும், அவன் மகன் குட்டுவன் சேரலையும் அவன் தர இவர் பரிசிலாகப் பெற்றார் [பதிப.5]. அகத்துறைப் பாடல்களைச் சிறப்புற ஆக்குவதிலும் இவர் வல்லவர். இரவுக்குறியிடையீடுகள் பலவற்றையும் அடுக்கிக் கூறிய தலைவி, அவையெல்லாம் இல்லாது அரிதின் வாய்த்த ஓரிரவில் தலைவன் வாராதொழிந்ததையும் தெரிவித்து, 'அதனால் தோழி, நம் களவொழுக்கம் பல தடைகளையுடையது காண்' என்று தோழியிடம் கூறுவதாகவும் [அக.122], அல்லகுறிப்பட்டு மீளும் தலைவன் தன்னெஞ்சை நோக்கி, 'நம் காதலி நல்லவள் என்பதை மட்டும் அறிந்து, அவள் நம்மால் எய்தற்கரியவள் என்பதை அறியாத என் நெஞ்சே, பொருளில்லாதோன் இன்பத்தைக் காமுற்றவாறு போல நீயும் நினக்கு அரியதொன்றை விரும்பினாய்', என்று கலங்கி மொழிவதாகவும் [குறு.120]. இன்னும் இவ்வாறே இவர் பாடியுள்ள அகப்பாடல்களைக் காணலாம். அவ்வகப் பாடல்களுள் இவர் அக்கால வரலாற்றுக் குறிப்புக்களான புறச்செய்திகளை இடைப்புகுத்தி அமைத்துள்ள பான்மை தனிச்சிறப்பு வாய்ந்ததாம். 'ஊரனாகிய தலைவன் எம் சேரிக்கண் வந்தானாக, அஃதையென்பான் களிறுகளுடனே நன்கலங்களை ஈயும் நாண்மகிழிருக்கையாகிய அவையின்கண் புகும் பொருநர் எறியும் பறைபோல, அவ்வூரன் பெண்டிர் ஓயாது என்னைப் பழிப்பர் என்று பலரும் கூறுகின்றனர்; ஆட்டனத்தியைக் கண்டீரோ, என்று வினவிச் சென்று அவன் காதலியாகிய ஆதிமந்தி பேதுற்று வருந்துமாறு அவனைக் கவர்ந்து கொண்ட காவிரியாறு போல, அவ்வூரனை யானும் கவர்ந்து கொள்ள இனி ஆராய்கின்றேன்', என்று பரத்தை பேசுவதில் [அக.76] அகச் செய்திகளுக்குப் புறச்செய்திகளை இவர் உவமித்து இணைக்கும் நயம் மிகப் பாராட்டத்தகும். அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை ஆகிய மூன்று தொகை நூல்களிலும் அமைந்த இவர்தம் பாடல்கள் அறுபத்து மூன்றனுள் பத்துப் பாடல்கள் ஒழிய ஏனைய ஐம்பத்து மூன்று பாடல்களிலும் இவர் இவ்வாறான குறிப்புக்களைப் பொருத்தியுள்ளார். முடிகெழுவேந்தர், குறுநில மன்னர், வண்மையர், மறவர், தலைவர், பெண்டிர் ஆகியோர் வரலாற்றுச் செய்திகளும், நாடுகள், நகர்சள், மலைகள், ஆறுகள் ஆகியவற்றின் குறிப்புக்களும் இவரால் நேரில் கண்டாங்கே குறிக்கப்பெற்றுள்ளன. சங்கப் புலவருள் பரணரால் குறிக்கப்பெற்ற வரலாற்று மாந்தரும் செய்திகளுமே மிகுதியாம். இவற்றால் இவர்தம் பரந்துபட்ட பயிற்சியும், தொடர்புகளுமே புலனாகின்றன. அடுத்து, ஏனைப்புலவர் எவராலும் பாடுதற்கரிய செய்திகளையும் பாடவல்லவர் பரணர் என்ற சிறப்பும் இவர்க்குண்டு. அதியமானைப் பலபடப் பாராட்டிப் பாடிய ஔவையாரால், ஒரு பாடலில், 'நீ ஏழரசரோடு மாறுபட்டு மேற்சென்று போரிலே வென்று நின்னாற்றலைத் தோற்றுவித்த அன்றும் என்போலும் பாடுநர்க்கு அரியையாயினை; இன்றும் மாறுபாடு மிக்க கோவலூரை அழித்து வென்று ஆழி தாங்கிய நின் தோளைப் பரணனே (தன்பெருமையால்) பாடினான். பிறரால் நீ பாடப்படுதற்கு அரியை', என்று, இவரது புலமை புகழப் பெறுவது காணலாம் [புற.99]. பதிற்றுப்பத்தின் பதிகமும், 'கரணம் அமைந்த காசறு செய்யுட் பரணர்', என்று இவரது செய்யுட் பெருமையைச் செப்பியே இவரைக் குறிப்பிடுகின்றது [பதிப.5].

**பரணன்** - காண்க.

**பரணன்** - ஓர் புலவர் 'நீ ஏழரசரொடு மாறுபட்டு மேற்சென்று போரிலே வென்று நின்னாற்றலைத் தோற்றுவித்த அன்றும் என்போலும் பாடுநர்க்கு அரியையாயினை; இன்றும் மாறுபாடுமிக்க கோவலூரை அழித்து வென்று ஆழி தாங்கிய நின்தோளைப் பரணனே (தன் பெருமையால்) பாடினான்; பிறரால் நீ பாடப்படுதற்கு அரியை', என்று ஔவையார் அதியமானைப் பாராட்டுவதிலேயே வைத்துப் பரணரின் புலமையைப் புகழ்வர் [புற.99:12].

**பரணர்** - காண்க.

**பரத்த** - பரத்தைமையை உடையவனே. (விளி). தலைவி தலைவனைப் பரத்த - பரத்தமையை உடையவனே - என அழைத்தாள் [கலி.75:22].

**பரத்தமை** - புறத்தொழுக்கம். தலைவனுக்காக வாயில் வேண்டிய தோழியிடம், தலைவி, 'தோழியே! தலைவருடைய அமையாத பரத்தமையைக் - புறத்தொழுக்கத்தைக் - கண்டும் நீ புலவாதே கொள், என்று, என்னை ஆற்றுகின்றனையே', என்று கூறினாள் [நற்.280:4].

**பரத்தல்** - பரவுதல். காதலர் தொடும்போதெல்லாம் நீங்கி, அவர் விடும்போதெல்லாம் பரத்தலால் - பரவுதலால் - பசலையானது, கேணியில் நீரைமொள்ளும் போது நீங்கி

மொள்ளாத போது மூடிமறைக்கும் பாசியைப் போன்றது *[குறு.399:4]*.

பரத்தன் - புறத்தொழுக்கமுடையவன். வாயில் வேண்டிய பாணனிடம், தலைவி, 'மாயம் செய்யும் பரத்தனாகிய - புறத்தொழுக்கமுடையவனாகிய - தலைவனுடைய பொய்ம்மொழியை உண்மை என நம்பி நலத்தினை இழந்தவள் எம்போல் வேறுயாருளர்? என்று கூறி, வாயில் மறுத்தாள் *[அக.146:9]*.

பரத்தை - பொதுமகள். பரத்தமைத் தலைவனைத், தோழி, 'பெருமானே! பொய்கூறாதே; நினது வஞ்சனையை அறிவேன்; நேற்று நீ காதன் மடந்தையுடன் வையையில் நீராடியதை அப்பரத்தையின் - பொதுமகளின் - தோழியார் மறைக்கவும் மறையாமல் அலராய் எழுந்தது', என்று கூறி வாயில் மறுத்தாள் *[அக.256:12]*.

பரத்தமைத் தலைவனிடம், தோழி, தலைவியைக் கைவிட்டுச், சிறிதும் நின்னிடத்து சினங்கொள்ளாதிருக்கின்ற பரத்தையைத் தலையளி செய்து ஆண்டுறைவாயாக', என்று கூறி, வாயின் மறுத்தாள் *[நற்.230:6]*. பரத்தமைத் தலைவனைத் தோழி, 'ஐயனே! நீ நின் மனைக்கு வருவதைப் பிறிதொரு சமயம் வைத்துக் கொள்ளலாம்; நேற்று நின்னோடு கூடிய மகளிரின் (பரத்தையின்) புதிய அழகினைப் பருகி இன்றைக்கு நின் பாணனால் கொண்டு வந்து தரப்படும் மகளிரின் அழகைப் பருகுவதற்குச் செல்வாயாக! நின்னொடு நினது பரத்தையும் சிறக்க வாழ்வாளாக', என்று கூறி, வாயில் மறுத்தாள் *[நற்.360:5]*.

பரத்தையின் மனையிலே அவள் செய்த அடையாளங்களோடு இங்கு வராதே; நினது வரவினை, யான் விரும்பவில்லை', என்று த்லைவி, பரத்தமைத் தலைவனிடம் கூறி, வாயின் மறுத்தாள் *[ஐங்.48:4]*. தோழி, தலைவனிடம், 'எம்பெருமானே! நீ பரத்தமை ஒழுக்கமுடையவன் என்று யாரேனும் சொல்லக் கேட்டாலே சினங்கொள்ளும் நம் தலைவி, பரத்தை மகளிர் பலரும் படிந்து உண்ணும், பரத்தமை அடையாளமுடைய, நினது மார்பினைக் கண்டால் எந்நிலை அடைவளோ? திரும்பிச் செல்', என்று கூறி, வாயில் மறுத்தாள் *[ஐங்.84:4]*.

பரத்தைவீடு சென்று வந்த தலைவனிடம், தலைவி, 'ஐயனே! பெருக்கெடுத்தோடும் வெள்ளத்தாலும் நிரம்பாத கடல்போன்று, ஆசை அடங்காத நினது பரத்தமையின் காரணமாக, நின்னோடு ஊடிக்கொள்ளும் நின் பரத்தையரின் ஊடலைச் சென்று தீர்ப்பாயாக! ஊடுவதை யானறியேன்', என்று கூறினாள் *[கலி.73:20]*. என் மகனின் விரலில் மோதிரம், அணிவித்து வரவிட்ட பரத்தையின், கருத்தினை, யான் அறிந்தேன்; 'காமனின் கொடியாகிய சுறாமீன் வடிவை இவனுடைய தந்தை மார்பில் இலச்சினையாக அழுத்தி, அவனை யான் என்றென்றும் அடிமை கொள்வேன் எனக் கூறும் அவளின் சூளுரையை நான் அறியச் செய்யவே இவ்வாறு செய்துள்ளாள் என்று, தலைவி கூறிச் சினந்தாள் *[கலி.84:25]*. வண்டுகள் மொய்க்கும்படியாகப் பூசிய சந்தனத்தோடு, பரத்தையின் அடையாளத்தையுடைய மார்பனே! முன்பெல்லாம் இவ்வாறு நீ நடந்ததில்லை; இரவில் நெடுநேரம் கழித்துவர, நீ ஆங்குக் காணும் காட்சிகள் தாம் எத்தகையனவோ?' என்று, தலைவி, பரத்தமைத் தலைவனிடம் கேட்டாள் *[கலி.93:2]*. காதலனாகிய குறளன், நீ கூனியாயிருப்பதால், என்னைப் பக்கவாட்டில் தழுவ அருள் செய் என்று, கூனியாகிய காதலியிடம் கூறினான்; குறளன் இகழுவதைப் பொறுக்காத கூனி, இப்பரத்தை மகன், பக்கவாட்டில் புல்லுவேன் என்கின்றானே, என்று நினைத்து, உழுந்துப் பணியாரத்தைக் காட்டிலும் உண்ண இனிக்கும் என் கூன் பிறப்பு உனது குறள் பிறப்பைவிடத் தாழ்ந்ததோ?' என்று கூறினாள் *[கலி.94:25]*. காலம் தாழ்த்து வந்த பரத்தமைத்தலைவன் குதிரையேறிப் பழகி வந்தேன், என்றானாக, அதற்குத் தலைவி, நீ ஊர்ந்த குதிரையை, யான் நன்கு அறிவேன்; பாணன் தூதுபோக அதனால் வந்த பரத்தை என்னும் குதிரை அது; உன் உருவை அழிக்கும் அக்குதிரையை ஊராதே; ஊர்ந்து திரியவே விரும்பினால் இப்பொழுதே செல்', என்று புலந்து கூறினாள் *[கலி.96:37]*.

களவு, கற்பு இரண்டனுள் களவே சிறந்தது; கற்பு ஊடுதலால் சிறப்புறும்; ஊடுதலும் பரத்தையின் பொருட்டு உண்டாவதாம்; தலைவன் பரத்தையின் இல்லில் இருக்கும் பொழுது, தலைவி, தன் தோழிக்கு, நாட்காலையிலே சிவந்த அணிகளாலே அணி செய்து ஏவித் தன் பூப்பினை அறிவிப்பத், தலைவன் வந்து உவக்கும் புணர்ச்சியை உடையதாகும் *[பரி.9:18,19]*. நாணுக்குறைவில்லாத குலமகள் ஒருத்தி, தலைவன் தன்னை நீத்துப் பரத்தையை விரும்பிச் சென்றானே என்று ஊடியிருந்தவள் வையை வெள்ளத்தில் நீராடும் அவாவால் கணவனோடு ஊடலை மறந்து பிடியானையின் மேல் ஏறினாள் *[பரி.12:45]*.

பரத்தைமை-புறத்தொழுக்கம். 'தலைவனுடைய பரத்தைமைக்காகக்-புறத்தொழுக்கத்திற்காகக்-கற்புடைப் பெண்ணாகிய நீ ஊடுதல் பொருந்தாது' என்று தலைவியிடம், தோழி, கூறி, வாயில் நேர்வித்தாள் *[அக.316:10]*. தண்ணீர் எடுத்துச் செல்ல வரும் மகளிர் குடங்களைக் கீழே வைத்துவிட்டுக் காஞ்சி மர நிழலில் தம் கணவன்மாரின் நற்பண்பில்லாத பரத்தைமையைப் பற்றிப் பாடிக்கொண்டு குரவையாடுவர் *[அக.336:8]*.

தலைவன் விரும்பும் பெண் நின்னையன்றி வேறில்லை என்று என்னிடம் தேரைத் தொட்டுச் சூளுரைத்த நின் பாகன், இன்று, பரத்தையரால் உண்டான புண்ணினையும் மறைக்காமல் வந்துள்ள உனது பரத்தைமையைக் காண அவன் இல்லையே', என்று பரத்தைமைத் தலைவனிடம், தலைவி சினந்து

கூறினாள் [கலி.71:12]. பரத்தையரைப் பிரிந்து வந்த தலைவனிடம், நீ புலத்தலைச் செய்யவில்லையே என்று கேட்ட தோழியிடம், தலைவி, தோழியே! யான் தலைவனின் வஞ்சனையைக் கண்டு ஊடினால், அவன் தன்புதல்வனைத் தழுவிக்கொண்டு பொய்யுறக்கம் புரிவதைக் கண்டு அவனுடைய பரத்தைமையை மறந்து ஊடலை விட்டு என் நெஞ்சு அவனிடம் சென்றுவிடுகின்றது. என்செய்வேன்?' என்று கூறினாள் [கலி.75:32]. தலைவனால் கைவிடப்பட்ட பரத்தையரில் ஒருத்தி, தலைவனின் புதல்வனைக் கண்டு மகிழ்ந்து அவனுக்கு அணிகலன்களை அணிவித்து 'மகனே! மகளிர் கண்கள் பசந்து பாழாகும்படி விட்டுப்பிரியும் உனது தந்தையின் பரத்தைமைக் குணத்தை நீ கொள்ளாதே', என்று கூறி அனுப்பிவைத்தாள் [கலி.82:21]. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம், ஊடிய தலைவி, என் மனைபுகும் நீ யார்? உனக்கும், எனக்கும் என்ன உறவு? புதுப்புது மலர்களைத் தேடியலையும் வண்டுபோல் நீ பரத்தையரிடம் அலையும் நினது பரத்தைமையைத், தெருவெல்லாம் பேசும்; எனது இல்லில் புகாதே', என்று கூறி ஊடினாள் [கலி.98:6].

பரத்தையர்-பொதுமகளிர் வையையின் புதுப்புனலில் நீராடும் பொருட்டு இளம்பருவத்து மகளிர், முதிய பருவத்து மகளிர், கற்புடைய பெண்டிர் முதலியவர்களோடு பரத்தையரும்-பொதுமகளிரும்-ஆற்றின் கரையை அடைந்தனர் [பரி.10:23].

பரதமாக்கள்-நுளையர். பரதமாக்கள்-நுளையர்-வலையினால் கடலில் உள்ள மீன்களைப் பிடித்துக்கொணர்ந்து தம் சுற்றத்துடன் மகிழ்ந்து இரப்போர்க்கு மிகுதியாகக் கொடுத்து எஞ்சிய மீன்களைப் பலகூறுகளாகச் செய்து விலைகூறி விற்றுக் கடற்கரையில் வாழ்வர் [அக.30:3].

பரதர்-வணிகர். தொண்டைமான் இளந்திரையனுக்குரிய நீர்ப்பெயற்றுப் பட்டினத்தில், மாடங்கள் உயர்ந்த, மணல் மிக்க, பரதர்-வணிகர்-வாழும், பலவாய் வேறுபட்ட தெருக்களும் இருந்தன [பெரு.323]. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனுக்குரிய பாண்டிய நாட்டின் நெய்தல் நிலத்தில் பரதர் கொண்டு வந்த பல்வேறு பண்டங்களும் நிறைந்து இருந்தன [மது.317].

பரதவ-நுளையனே! (விளி). கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனைப், பரணர், அவன் கடலகத்து நுளையர் போல, நீர்ப்பரப்பில் சென்று, கடற்பகைவரோடு போரிட்டு வென்றமையால் அவனைக் குளிர்ந்த துறையினையுடைய பரதவ-(பரதவனே) நுளையனே-என அழைத்தார் [பதி.48:4].

பரதவர்-1. நுளையர் பொருளைத் தனக்கெனக் காவாது வழங்கி வாழும் வள்ளலாகிய எவ்வி என்பானுக்குரிய நீர்வளம் மிக்க மிழலைக் கூற்றத்திலுள்ள கடல் அலை, மேல் பாயும் திண்மையான படகினையுடைய பரதவர்-நுளையர்-வெம்மையான மதுவையுண்டு மகளிரோடு குரவைக் கூத்தாடுவர் [புற.24:4].

சோழன்கரிகாற் பெருவளத்தானின், காவிரி பாயும் சோழநாட்டில், குறிஞ்சிக்குரிய பண்ணை, நெய்தல் நில மக்களாகிய பரதவர் பாடுவர் [பொரு.218].

ஓய்மானாட்டு நல்லியக்கோடனுக்குரிய எயிற்பட்டினத்தில் வாழும் பரதவர் தம் பெண்களால் அரிக்கப்பட்ட கள்ளினைப் பரிசிலர்க்கு அளிப்பர் [சிறு.159].

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் பாண்டிய நாட்டு ஊர்களில், பலவிதமான ஓசைகளோடு, நீலமணி போலும் பூக்களையுடைய, கழி முள்ளிகள் நிறைந்த, மணற்குன்றுகள் மிக்க, கடற்கரையில் வாழும் பரதவர் மகளிர் ஆடும் குரவைக் கூத்தின் ஓசையும் கலந்து ஆரவாரிக்கும் [மது.97]. பரதவர், மாலையினையுடையராய்ச் சினை உடைய சுறாமீன் கொம்பை நட்டு, அதனிடத்தில் தம் மனையுறை தெய்வத்தை எழுந்தருளச் செய்து, பனங்கள்ளைப் பருகிக், தம் பெண்டிரோடு நிறைதிங்கள் நாளில் வேட்டைக்குச் செல்லாமல் விரும்பிய உணவை உண்டு விளையாடுவர் [பட்.90]. கடலிலே வேட்டம் சென்று திரும்பும் பரதவர் கடையாமத்தே காவிரிப்பூம்பட்டினத்து மாடங்களிலே அவிந்தன போக, எஞ்சிய ஒளிவிக்குகளை எண்ணுவர் [பட்.112].

தொண்டியில் உள்ள பரதவர், மணல் மேட்டில் கிடக்கின்ற பழைய படகின் சிதைவு போக்கிப் புதிய வலையால் பிடித்துக் கொண்டு வந்து மணல் மேட்டில் குவித்து வைத்திருக்கின்ற சுறாமீன்களைப், பாக்கத்தின்கண் வாழும் பலர்க்கும் பகுத்துக் கொடுப்பர் [அக.10:10]. மீன்பிடிக்கும் பரதவர்களது வளைந்த படகில் எரியும் விளக்கின் சுடர்கள், வானளாவிய கடலின் அலைமீது காணப்படுவதுபோல், மலைகள் தோறும் காற்றினால் மூங்கில்கள் உரசிக் கொள்வதால் உண்டாகிய தீச்சுடர்கள் தோன்றும் [அக.65:11]. சிறிய குடிகளையுடைய கடற்கரையூரில் வளைந்த படகினையுடைய பரதவர்க்கு மீன்வேட்டை நன்கு கைகூடிற்றாக, எங்கும் பெரிய புலால் நாற்றம் வீசும் [அக.70:1]. பெரிய கடலில் மீன் வேட்டையாடும் சிறுகுடியில் வாழும் பரதவர் உப்பங்கழியாகிய பெரிய வயலில் உழாமலே வெள்ளிய கல்லுப்பினை விளைவிப்பர் [அக.140:1]. மழை வறந்ததால் வெப்பமாய காட்டில் குடியோடிப் பாழாகிய அவ்விடத்தே காலை நேரத்தில் யானை துயிலிலொடுங்கி அசைந்து கொண்டிருக்கும் அந்நிலையானது, மீன் வேட்டைக்குச் சென்ற பரதவரின் படகுகள் கடலில் அசைவது போன்றிருக்கும் [அக.187:22]. கொலைத் தொழிலையுடைய கொடிய பரதவர் கடலில் உளியால் எறிந்து பெரிய மீன்களைக் கொல்வர் [அக.210:1]. கடற்கரையிலுள்ள சிற்றூரில் அழகிய வலைகளையுடைய பரதவர் உறைவர் [அக.250:11]. பரதவர் வலையினால் கடலில் மிகுதியான மீன்களைக் கொண்டு

வந்ததோடமையாது, பின்பு பறியினாலும் மிகுதியான மீன்களைக் கொண்டுவந்து கடற்கரை மணலிடத்தே அவை புலரும்படி காயவைப்பர் *[அக.300:1]*. தலைவனுடைய தேர் மணல்குவியல்களின் மேலும், தாழை மடல்களின் மேலும் ஏறியும், இறங்கியும் சென்று மறைவது, பரதவர் கடலில் செலுத்திய படகு அலைகளினூடே விரைந்து சென்று மறைவது, போன்றிருக்கும் *[அக.330:15]*. திண்ணிய படகில் சென்று மீன் பிடிக்கும் பரதவரின், சுறாமீன்களால் கிழிக்கப்பட்டுப் பயனற்றுப்போன வலைகள், அவர்களின் மனை முன்றிலுள்ள தாழையின்மீது கிடந்து அசைந்து கொண்டிருக்கும் *[அக.340:19]*. பெரிய படகினையுடைய பரதவர் கடலில் மூழ்கி வலம்புரியின் முத்தினைக்கொண்டு, ஊரார் சங்கொலித்து ஆரவாரத்தோடு வரவேற்கும்படியாகக், கரைக்கு வருவர் *[அக.350:11]*. உழவர் நெல்லிலிருந்து தூற்றிய துரும்புகள், உப்புப் பாத்திகளிலுள்ள உப்பு முழுதும் பரவிக் கெடுத்ததைக் கண்டு சினந்து உழவரோடு சண்டையிடும் பரதவரை உழவரில் முதியோர் விலக்கிக் கள்ளினைக் கொடுத்து அமைதிப்படுத்தினர் *[அக.366:6]*.

நுண்ணிய வலையையுடைய பரதவரது இளைய மகளின் கண்வலையில் ஒரு காளை சிக்கினான் *[குறு.184:6]*. மூங்கிலின் காம்பில் பொருத்தப்பட்ட கூர்மையான எறி உளியைக் கடலில் எறிந்து மீனைக்கொன்று மீண்டும் அவ்வுளியைக் கைக்கே கொண்டு வரும் விரைந்து செல்லும் படகையுடைய பரதவர் பின் சுறாமீனை எறியக், கரையிலிருந்த அன்னத்தொகுதி வெருவி ஓடியது *[குறு.304:4]*. பரதவர் கடலில் கொண்ட மீனின் வற்றலுடைய புலால் நாற்றமும், கழியில் அவர்கள் கொண்ட இறாமீனின் வற்றலுடைய புலால் நாற்றமும் வெள்ளிய மணலெங்கும் பரந்து வீசும் *[குறு.320:1]*.

கடற்கரைச் சோலையிலுள்ள சிறுகுடியிலிருந்து கடலின்மேல் செல்லும் பரதவர் புன்னை மரத்தின் நிழலில் தங்கிக், கடலின் மேலே செல்லுவதற்குரிய சரியான சமயத்தைப் பார்த்துக் கொண்டு வலையைச் சீர்திருத்திக் கொண்டிருப்பர் *[நற்.4:1]*. மழை தவறாமல் பெய்வதால், பரதவரும் மீன்வேட்டையில் தவறாமல் மிகுதியாகப் பெற்று, அம்மீன் விற்றவிலைக்குப் பனங்கள்ளைப் பெற்று அருந்துவர் *[நற்.38:2]*. குறை வேண்டிய தலைவனிடம், தோழி, 'ஐயனே! நின் காதலியாகிய இவள், கடற்கரைக்கண்ணுள்ள சிறுகுடியில் வாழ்கின்ற கடலிற் சென்று வலைவீசி மீன் பிடிக்கின்ற பரதவர் மகளாவாள்; நீயோ, அரசனுடைய மகனாவை; ஆகவே, தலைவி உனக்குப் பொருந்தாள்', என்று தலைவனைச் சேட்படுத்தினாள் *[நற்.45:3]*. வலிமையையுடைய கடலில் சென்று பெரிய வலையால் பரதவர் மீன்களைப் பிடித்துக் கொண்டு வந்து மணற் பரப்பில் காயவிடுவர் *[நற்.63:1]*. செம்மையான பெரிய வலைகளைக் கடலிலிட்டு மீன்பிடிப்பதற்காக அவ்வலைகளை மரக்கலத்திலேற்றி, அடக்குதற்கு அரிய களிற்றியானையைப் போலப், பரதவர் செலுத்துவர் *[நற்.74:4]*. சிறுகுடிப் பரதவர் மகிழும்படியாகப் புன்னையின் அரும்புகள் மலர்ந்து கடலின் துறையிடத்து மேய்கின்ற இப்பியின் புறத்தில் உதிரும் *[நற்.87:8]*. மீன் பிடிக்கும் தொழிலை உடைய பரதவர் மகளைக் காணும் முன் துறை, இனிதாயிருந்ததெனத் தலைவன் கூறினான் *[நற்.101:8]*. மரங்களின் மேலேறிக்கொண்டு மானினங்களைத் தகைக்கும் பொருட்டு வேட்டுவச் சிறுவர் எழுந்தாற்போலப், பரதவச் சிறுவர் மீன்பிடிக்கும் படகின் மேலேறிக் கொண்டு இருப்பைப் பூப்போன்ற தலையையுடைய இறால் மீன்களையும், ஈர்வாள் போன்ற சுறாமீன்களையும், மற்றுமுள்ள பெரிய மீன்களையும் பிடித்து அவற்றைத் துண்டித்து மீன் இறைச்சிகளை நிரப்பிய தோணிகளைக் கரைக்குக் கொண்டுவந்து மணற் பரப்பில் இறக்குவர் *[நற்.111:3]*. கடலில் சென்று வலைவீசி மீன்களைப் பிடித்த படகுகளையுடைய பரதவர், தாம் கொண்டு வந்த மீன்களை மணலில் குவித்துவிட்டு, மீன்கொழுப்பாலாகிய நெய்யை வார்த்துக் கிளிஞ்சிலில் ஏற்றிய சிறிய விளக்கொளியில் துயிலுவர் *[நற்.175:1]*. கடலில் படகில் சென்று சுறாமீனைப் பிடிக்கும் பரதவர் தம் படகில் ஏற்றி வைத்த விளக்குகள் அகன்ற வானத்தில் சுடர்விடும் விண்மீன்களைப் போன்று இருக்கும் *[நற்.199:6]*. தம் கூட்டத்தினருடன் இரவில் மீன்பிடிக்கும் பரதவர் சுறாமீன் கிழித்த வலையைச் சுருங்கிய நரம்பினைக் கொண்டு முடிவர் *[நற்.207:9]*. கடலில் சென்று பெரிய மீன்களைப் பிடிக்கும் சிறுகுடில்களிலுள்ள பரதவர் மரக்கலங்களுக்காக இரவில் ஏற்றிவைக்கப்பட்டிருக்கின்ற விளக்கொளிகள், முதிராத இளஞாயிற்றின் எதிரே தோன்றிய ஒளிகட்கு ஒப்பாகும் *[நற்.219:6]*. தாம் எளிதாகப் பிடித்த பெரிய மீனினை விற்று மாலையில் கள்ளினைக் குடித்த பரதவர், அக்குடியின் வெறியால், தம் தம் குடிலுக்குப் போகும் நெறியில், நீலமணியைப் போலப் பரவிக்கிடக்கும் நீலமலர்கள் சிதைந்தழியுமாறு மிதித்துக்கொண்டு செல்வர் *[நற்.239:2]*. கடலிலே வலிய கையையுடைய பரதவர், மீன்பிடித்தற்கு நெடுக இட்ட சிவந்த நிறத்தையும், வரித்துக் கட்டிய முடிச்சுக்களையும் உடைய வலையை, அச்சத்தைச் செய்யும் தன் மருப்பினால் கொல்லவல்ல சுறாமீன் வீறுபடக் கிழித்துச் செல்லும் *[நற்.303:9]*. ஒருதலைவன், தன் காதலியாகிய பரதவர் மகளைச் சேர்த்து வைப்பதற்காகத், தோழிக்குக் குற்றேவல் பலவும் செய்தான் *[நற்.349:10]*. கரிய கழியிடத்து, மீனைத் தேடுகின்ற குளிரால் நடுங்கும் பரதவருடைய திண்ணிய மீன்படகிலிருக்கும் விளக்குகளை மகளிர் எண்ணுவர் *[நற்.372:11]*. வலிய புரிகளால் முறுக்கப்பட்ட கயிற்று நுனியிலே கட்டிய திமிங்கலத்தின் மீது எறிகின்ற எறியுளியையும், திண்ணிய படகினையுமுடைய பரதவர் விளக்குகளைக் கொளுத்திக்கொண்டு, நடுயாமத்தில் வேட்டம்மேல் சென்று, கடலிலே பிடித்த மீன்களை விடியற் காலையிலே கொண்டு வந்து, கருங்கழிச் சோலையில் குவித்து வைத்துவிட்டுத், தம் உறவினருடன் கள்ளினைப் பருகுவர் *[நற்.388:4]*.

பரதவர், சங்கு ஈன்ற நல்ல முத்துக்களைக் கடலிலிருந்து கொண்டு வந்து விலைக்கு விற்பர் *[ஐங்.195:1]*.

எருதுகள் துளைத்த புண்களிலிருந்து வழியும் குருதி வழுக்குதலாலே, மணலை அள்ளிக் கையைப் பிசைந்து கொண்டு பரதவர் படகேறிச் செல்வது போல், ஆயர் எருதுகள் மீது ஏறினர் *[கலி.106:24]*.

**2. தென் திசையில் ஆண்ட குறுநில மன்னர்.** சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னி தென்னாட்டிற் புகுந்து குறும்பு செய்த பரதவருடைய-தென்திசையில் ஆண்ட குறுநில மன்னருடைய-வலியைக் கெடுத்து அழித்தான் *[புற.378:1]*.

தம் பகைவர் அஞ்சும்படியான வலிமையையும், கொழுவிய இறைச்சிச் சோற்றினை உண்ணுவதையும், புலால் நாற்றம் வீசும் விற்படையையும், அடிக்கடிச் சூளுரைத்தலையும், ஆரவாரமான குடியிருப்புகளையும் உடைய பரதவரைத் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் அடக்கி வென்றான் *[மது.144]*. பரதவர், வலிய வில்லைத்தாங்கிய வலிமை பொருந்திய தோளையுடையவர் *[அக.226:7]*.

**பரதவர் கோமான்-பரதவர்க்குத் தலைவன்.** வலிய வில்லினைத் தாங்கிய வலிமை பொருந்திய தோள்களையுடைய, பரதவர் கோமான்-பரதவர்க்குத் தலைவன்-ஆகிய பல்வேல் மத்திக்குரியது கழாஅர் என்னும் ஊர் *[அக.226:7]*.

**பரதவன்-நுளையன்.** பரதவன்-நுளையன்-விரிந்த கடலிலுள்ள திரண்ட வடிவினையுடைய முத்துக்களை வண்டுகள் ஒலிக்கும் கரையிடத்தே பகுத்துக் கொடுப்பான் *[அக.280:14]*.

**பரந்தவை-பரவியவை.** நல்ல கலைமானின் கூட்டம் பரந்தவை-பரவியவை-போல, ஓலைக்குடையைத் தலையிலே உடைய உழவர், கொல்லையில் பரவலாகச் சென்று வரகம் பயிரில் களையைப் பறித்துத் தூய்மை செய்தனர் *[அக.194:6]*.

**பரந்தோர்-பரவலாக இருந்தவர்.** போர்முனையில், இறக்கும் நிலையில் இருந்த ஒரு வள்ளலைப் பரந்தோர்-பரவலாக இருந்தவர் (சான்றோரெல்லாம்)-அவனுடைய செயல்களைக் கூறிப் புகழ்ந்தனராக அவற்றைக் கேட்டு அவன் அந்நிலையிலும் நாணமுற்றான் *[புற.285:13]*.

**பரப்ப-கடற்பரப்பினையுடைய தலைவனே! (விளி)** தோழி, தலைவனிடம் 'பரப்ப-கடற்பரப்பினையுடைய தலைவனே-எங்கள் ஊர் சிறிய ஊரேயானாலும் இன்பம் தருவதில் ஒருநாள் வந்து உறைந்தவர்க்கும் மறுநாள் தம் ஊரினை மறக்கும் பண்பினதாகும்; ஆகவே அங்கு வந்து செல்வாயாக', என்று கூறினாள் *[அக.200:7]*. தலைவனைத், தோழி, 'நின்னூர்க்குப் போவதற்காகச் செல்லுகின்ற, ஒலிக்கின்ற பெரிய பரப்ப என விளித்தாள் *[நற்.254:5]*.

**பரப்பகம்-கடல்.** தோழி, தலைவனிடம், 'ஐயனே! எம் தந்தை பொருந்தும் அலைகளையுடைய பரப்பகத்தே-கடலகத்தே-துழவிக் கொணர்ந்த பலவகையான மீன்களினுடைய வற்றலில் பொருந்தும் புட்களை ஓட்டியிருப்போம்; ஆகவே பகற்குறிக்கு அங்கு வருக', என்று கூறினாள் *[அக.80:5]*.

தலைவியிடம் தோழி, 'தோழியே, நாமும் நம் நாடும் வாழ, பகைநாடுகளை வென்று, முரசு முழக்கும் பாண்டியனின் ஆட்சி இமயத்திற்கு அப்பாலும் சென்று பரவுக, என்று, முறிதலையுடைத்தாகிய முழங்குகின்ற பரப்பகத்துப் பாம்பணையிலே பள்ளி கொண்ட வெற்றி கொண்ட சக்கரத்தினையுடையோனை பரவுவோம் வா' என்று கூறினாள் *[கலி.105:71]*.

**2. கழியிடம்.** கரிய பெரிய நீர் பரந்த பரப்பகம்-கழியிடம்-தெளிதலானே காக்கை அதிலுள்ள இறாமீனைப் பற்றித் தான் விரும்பும் பெண் காக்கைக்குக் கொடுக்கும் *[நற்.31:1]*.

**பரப்பியவை-பரப்பிவைத்தவை.** செவ்வரக்கனைய நிறத்தினையும் அழகினையுமுடைய தம் தம்பலப்பூச்சிகளைப் பரப்பியவை-பரப்பிவைத்தவை-போலப் பலவும் ஒருங்கே பரவிய மழை பெய்த காலத்தும் வாரார் தலைவர், எனத், தலைவி கவன்றாள் *[அக.139:14]*.

**பரப்பு-1. அகற்சி.** சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் பகைவருடன் யானைகளைக் கொன்று குருதிப்பரப்பினையும்-அகற்சியினையும்-புலாலையும் போர்க்களத்தின் கண் உண்டாக்கும் படைகளையுடையவ *[புற.69:10]*. 'நீர் வேட்கையுறறோர் தெளிந்த நீர்ப்பரப் பினையுடை கடல் நீரை அருந்தமாட்டார்; சிறிய அளவினதாய் கலங்கியுமிருந்தாலும், உண்ணுதற்குரிய நீரையே எல்லோருழ விரும்புவர்' *[புற.204:5]*. கோவலர் முல்லைப் பூவைப் பறிக்க எறிந்த குறுங்கோலைக் கண்டு அஞ்சிய குறுமுயல் ஆழ்ந்த நீர்ப்பரப்பில் உள்ள வாளைமீன்களோடு ஒப்பத் துள்ளித்தாவும் *[புற.339:5]*.

முருகவேள் மிக்க பெரிய இடப்பரப்புடைய கடலுக்குள் சென்று சூரவன்மாவாகிய மாமரத்தினை வேருடன் வெட்டியழித்தார் *[பதி.11:3]*. விசும்பானது ஞாயிறு இருளைக் கெடுப்பதற்கு ஊர்ந்து செல்வதற்கும், முகில் கூட்டம் பரந்து செல்வதற்கும், மிக்க காற்று நிலவுவதற்கும் ஏற்ற நல்ல பெரிய பரப்பினையுடையதாகும் *[பதி.17:12]*. இமயவரம்பன் நெடுஞ்சேரலான் அகன்ற பெரிய பரப்பினையுடைய பகைவரது நிலத்தை வென்று புலவர் பாடும் புகழினைப் பெற்றவன் *[பதி.20:13]*. மருத மரங்கள் ஓங்கி உயர்ந்து செறிந்து நிற்கும் பெரிய பரப்பினையுடைய மணல் நிறைந்த பெருந்துறைகளையுடைய பகைவரது நாடுகள் பல்யானைச் செல்கெழுகுட்டுவனின் தூசிப்படையால் அழிக்கப்பட்டுப் பாழாயின *[பதி.23*

பல்யானைக் செல்கெழுகுட்டுவனின் மதஞ்சொரியும் தலையும், கடுத்த பார்வையுமுடைய யானைப்படை பரந்து சென்று பொருதமையால் பகைவருடைய வயல்கள் வளம் பொருந்திய பரப்பினை இழந்து அழிந்தன *[பதி.25:3]*. கடலிடம் கலங்குமாறு வேற்படையைச் செலுத்தி, அலைகளையுடைய நீர்ப்பரப்பாகிய கடலை இடமாகக் கொண்டு போர் செய்து பகைவரை வெற்றி கொண்டவன், கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் *[பதி.46:12]*. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் மேலைக் கடலைச் சார்ந்த கானற் சோலையை நோக்கிச் செல்லலுற்றுத், தண்ணிய கடற்பரப்பினைச் சார்ந்த கரையிலேயுள்ள தூய பெரிய பனஞ்சோலையில் தங்கினான் *[பதி.51:6]*. செல்வக் கடுங்கோ வாழியாதனின் பகைவர் பொருது வீழ்ந்த நிணம் விளங்கும் போர்க்களப் பரப்பிலே கூட்டமாகிய பருந்துகள் பிணங்களின் குருதியை அருந்தின *[பதி.67:8]*. சேர அரசன் ஒருவன் செறிந்த பெரிய நீர்ப்பரப்பினையுடைய கடலைப் போன்ற தானையை யுடையவன் *[பதி.தி.1:8]*.

இவ்வுலகத்திற்கு உயர்ந்தெழும் அலைகளையும், அகன்ற நீர்பரப்பையும், ஒலிகளையும் உடைய கடல் எல்லையாக அமைந்துள்ளது *[மது.1]*.

பெரிய கடற்பரப்பிலிருந்து எழும் அலைகளின் திவலைகள், விண்மீன்களைப் போல மலரும் புன்னை மரத்தினடியில் தவழும் *[அக.10:1]*. பரதவரின் மீன்பிடி வலையைக் கண்டால் பெரிய கடற்பரப்பில் உள்ள சிவந்த இறால்மீன் நடுங்கும் *[அக.60:1]*. பாலைநிலம், வேலமரத்தின் நெற்று உதிரும் ஓசையும், சிள்வீடு என்னும் வண்டொலிகளும் பெற்று ஆரவாரம் பொருந்திய பரப்பினையுடையது *[அக.89:8]*. தோழி, செவிலித்தாயிடம், 'தாயே! தலைவியோடு நாங்கள் விளையாடிவிட்டு இளைப்பாறியிருந்தோம்; அப்பொழுது ஒருவன் எங்களிடம் வந்து பொழுதும் போய்விட்டது; தளர்ச்சியுள்ளவனாக இருக்கிறேன்; அதனால் யானும் மெல்லிய இலைப்பரப்பில் நீயிர் இடும் விருந்தினை உண்டு இந்த உங்களுடைய ஊரில் இன்று தங்கினால் என்ன? என்று கேட்டான்', என்று அறத்தொடு நின்றாள் *[அக.110:12]*. பாண்டியனது கொற்கையின் கழிமுள்ளி நிறைந்த மணலுள்ள கடற்றுறையின்கண் பேய் போன்ற தலையினையுடைய தாழையினது பூ தூயதாக மலர்ந்து, புலால் நாற்றத்தை ஒழித்து அப்பரப்பினை நறுமணம் கமழச் செய்தது *[அக.130:8]*. நீர்ப்பரப்பினையுடைய கானலம் பெருந்துறை என்னும் பட்டினம் புகழையும், சினம் மிகுந்த படையையுமுடைய தித்தன் வெளியன் என்பானுக்குரியதாகும் *[அக.152:6]*. உதியன் என்பானுக்குரிய குழுமூரின்கண் பல்லான் குன்றிலுள்ள நிழலில் நல்ல ஆனிரையின் பரப்புத் தங்கியிருந்தது *[அக.168:5]*. நடுஇரவில், தாழை மரத்தில், தன் பெடையுடன் இருக்கும் சிறுகடற் காக்கையானது, சுறாமீன் இயங்கும், வேட்டையாடுதல் நீங்கிய, நீர்ப்பரப்பிலுள்ள வெள்ளிய இறாமீனைப்பற்றி உண்ணுவதாகக் கனவு காணும் *[அக.170:11]*. மருத நிலத்தில் நீர்ப்பரப்பு கடலைப் போன்று பரந்து இருக்கும் *[அக.176:1]*. யானைகள் உண்ண நீரின்மையால் காட்டை வெறுத்துக் கழிந்து போம் இடம் அகன்ற பரப்பின்கண் (பாலைநிலத்தின்கண்) மறவரது நல்லவெற்றி நிலையை எழுதிய நடுகற்கள் எங்கும் காணப்படும் *[அக.179:6]*. பாலை நிலம் மழை வறந்தமையின் வாடுதலுற்று, நெற்களையுடைய மூங்கில், மறவரது அம்பின் விசையால் பிளந்திடப்பசுமை அறக்காய்ந்த, பருக்கைகள் பொருகின்ற பரப்பினையுடைய தாயிருந்தது *[அக.185:8]*. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம், தலைவி, 'தலைவனே! நேற்று நீ கரையின் உச்சியைப் பொருந்துமாறு உயர்ந்த நீண்ட பெரிய பரப்பினையுடைய புதுநீர்ப்பெருக்கில் பரத்தையரோடு நாணத்தையிழந்து நீராடினை என்று பலருங் கூறுவர்', என்று இடித்துரைத்தாள் *[அக.266:1]*. தலைவி, தோழியிடம், 'தோழியே! தலைவனுடைய மலையில் பெய்த மழை நீர் நாளைக்கு நம் ஊரின் மிக்க பெரிய பரப்பினையுடைய நீர்த்துறைக்கு வரும்பொழுது அந்நீரில் மூழ்கி நம் துயரைப் போக்கிக் கொள்வோமா?' என்று கூறினாள் *[அக.278:10]*. சேரமன்னன் குட்டுவனது தொண்டி என்னும் நீர்த்துறை, தெளிந்த அலைகள் பொருந்திய பரப்பினையுடையதாகும் *[அக.290:13]*. ஞாயிற்றின் கதிரால் உண்டாகும் ஆவியாய அலைகளை நீர் என்று எண்ணி விலங்குகள் ஓடி அலையும், மரற்செடி வாடும் பாலை நிலம் களர் பரந்த இடமகன்ற பரப்பினையுடையதாகும் *[அக.327:11]*. சேம்பினது மடலிலுள்ள அகன்ற இலையுடன் கூடிய பாசியினையுடைய நீர்ப்பரப்பில் பெண்நாய் குட்டியுடன் வதிந்தது *[அக.336:2]*. பகற்குறிக்கண் வரும் தலைவனிடம், தோழி, 'ஐயனே! கடலில் மீன் பிடிப்போருடைய கிழிந்துபோன வலையானது, பரதவரின் முற்றங்களிலுள்ள தாழை மரங்களின் மீது காற்றால் அசையும், தெளிந்த கடற்பரப்பினையுடைய எமது உறைதற்கினிய ஊரின்கண் இன்று இரவு தங்கிச் சென்றால் என்ன?' என்று குறிப்பினால் இரவுக்குறியைக் குறித்தாள் *[அக.340:24]*. குளிர்ந்த துறைகளையுடைய கடல் பெரிய பரப்பினையுடையதாயிருக்கும் *[அக.336:6]*.

ஓரியினுடைய கொல்லிமலையில் அருவிபாயும் பரந்த நிலத்தில் அம்மலை வாழ் மக்கள் மலை நெல்லை விதைப்பர் *[குறு.100:1]*. தலைவன் குளிர்ச்சியையுடைய பெரிய பரப்பாகிய கடற்கரையையுடையவன் *[குறு.269:7]*. சுறாமீன்கள் மிக்குத் திரியும் விளங்கிய கடற்பரப்பு ஞாழற்பூவோடு புன்னை மலரும் பரவி வெறியாடும் இடத்தைப்போன்று தோன்றும் *[குறு.318:1]*.

மீன்பிடித்தற்குக் கடலில் செல்லும் பரதவர், புன்னை மரத்தின் நிழலிலே தங்கித், தண்ணிய பெரிய கடல் பரப்பில் செல்லுதற்கு நல்ல சமயத்தைப் பார்த்திருப்பர் *[நற்.4:3]*. கொற்கை என்ற துறைமுகம் நெருங்கிய நீர்மிக்க முத்துக்கள் விளைகின்ற கடற்பரப்பினையுடையது *[நற்.23:6]*. தலைவன், தலைவியிடம், 'மடந்தாய்! நீ தெளிந்த அலையையுடைய பெரிய கடற்பரப்பின்கண் விரும்பியுறைகின்ற நீரரமகளோ?' என்று

அவளுடைய நலத்தைப் புகழ்ந்தான் *[நற்.155:6]*. கரிய பெரிய கடலின் நீர்ப்பரப்பு நீலமணி போன்றிருக்கும் *[நற்.159:1]*. தோழி, தலைவனிடம், 'ஐயனே! நீல நிறமுடைய பரப்பின்கண் அலைமோதக், கரையிடத்துப் பொருந்தியிருந்த, கல்லென்னும் ஒலியையுடைய எமது பாக்கத்தில் இன்று நீ தங்கிச் சென்றால் என்ன?' என்று பகல் வருவானை இரவுக் குறிக்கு வருமாறு குறிப்பால் உணர்த்தினாள் *[நற்.215:6]*. கடற் பரப்பில் சுறாமீனினம் மிக்கு நிறைந்திருக்கும் *[நற்.237:7]*. பெரிய கடல் பரப்பின்கண் உள்ள கடற்றுறையில் கரிய முதுகு நனையும்படி நீர்க்காக்கைகள் ஒருசேரக் கடல் நீராடும் *[நற்.231:3]*. நாரைகள், அகன்ற, கரிய கழிப்பரப்பின்கண் இரைதேடி அருந்தும் *[நற்.338:7]*. தலைவன் பரப்புக்கொண்ட கடல் நீரின் தண்ணிய துறைக்குத் தலைவனாவான் *[நற்.382:7]*.

கடல், பாயும் அலையோசை அடங்காத பரப்புள்ள நீரைக் கொண்டது *[கலி.129:8]*. எங்கும் பரந்த இருட் பரப்பினை ஞாயிறு போக்கினாற்போலத் தலைவன் போர்வினையை முடித்து வந்து தலைவியின் துயரினைப் போக்கினான் *[கலி.148:22]*.

பாண்டியனுடைய, வையையின் வெள்ளம், இருமருங்கிலுள்ள கரையை மோதிக் கலங்கிப், பின்னர் அகன்ற பாறைக்கல்லைப் போன்ற அசையாத பரப்புள்ள கல்லணையால் தடையுண்டு தேங்கி நின்று, மாலைப்பொழுதில் மிகத் தெளிந்து வானுலகத்தே நிகழும் தொழில்களைத் தனது நீரின் நிழலிலே காட்டும் *[பரி.12:83]*. மதுரையின் மைந்தரும், மகளிரும் வகைவகையான மாலைகளையும், அணிகளையும் அணிந்துகொண்டு வையையாற்றின் விரும்புதற்குக் காரணமான கரைப்பரப்பில் ஏறி நின்றனர் *[பரி.20:31]*.

**2. கடற்பரப்பு.** சோழன் நலங்கிள்ளி, கரிய கழிவழியாக வந்திறங்கும், கடலிற் செல்லுதலையுடைய ஓடங்களைத், தெளிந்த நீர் பரந்த பரப்பிற்குச்-கடற்பரப்பிற்குச்-செல்லும் வழியாகிய யாற்றைச் செம்மை செய்து செலுத்தித், துறைதோறும் பிணித்து நிறுத்தும் நல்ல ஊர்களையுடையவன் *[புற.400:21]*.

கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனுடைய குறுந்தடியால் முழக்கப்படுகின்ற அகன்ற கண்ணையுடைய வெற்றி முரசம், இடையறாத முழக்கமுண்டாகிய கரிய நிறத்தையுடைய பரப்புப் போல முழங்கியது *[பதி.41:22]*. குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை ஒலிக்கின்ற பரப்பின் கரையிடத்தேயுள்ள மரந்தை நகரிலுள்ளார்க்குத் தலைவனாவான் *[பதி.90:28]*. தொண்டைமான் இளந்திரையன், கடல் திரையாலே கரையில் சேர்க்கப்பட்ட சோழனின் மரபினனாய், உலகத்தில் உயிர்களைப் புரக்கும் சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூவரினும், பரப்பிலே பிறந்த சங்குகளினும் வலம்புரிச் சங்கையே உலகம் புகழுமாறு போலப் புகழப்பட்டவனாவான் *[பெரு.34]*. பரப்பிற்சென்று கடிய சூரனைக் கொன்ற முருகனைப் பயந்தவள் இறைவி *[பெரு.457]*.

பனைமீன் வழங்குவதும், சங்குகள் மேய்வதும் பரப்பினிடத்தேயாகும் *[மது.375]*.

பரப்பில் பல மீன்களையும் பிடிப்போர், அவற்றோடு கொண்ட முத்துச் சிப்பிகளை மகிழ்ச்சி தரும் கள்ளிற்கு விலையாகக் கொடுப்பர் *[அக.296:7]*. உயர்ந்த அலைகளையுடைய பரப்பில் வலையால் மீனைப் பிடித்து வந்து தமையன்மார் கொடுத்ததனைத் தங்கைமார் விழாச் செய்யும் தெருக்களில் சென்று விலை கூறி விற்பர் *[அக.320:1]*. விளங்கும் பெரிய பரப்பினின்றும் சுறாமீனைப் பிடிக்காமல் வலம்புரியின் முத்தினை மூழ்கியெடுத்த பரதவர், கொற்கை மக்கள் ஆரவாரத்தோடு வரவேற்கும்படியாகப் படகினின்றும் இறங்குவர் *[அக.350:10]*.

மாலையில் ஒலியடங்கி, மலர்கள் குவிந்து நீலமணியின் நிறம் பெற்ற உப்பங்கழி துயில் கொள்வதுபோல் தோன்றும் பரப்பு நீர்த்துறைவனே! 'எனத், தோழி, தலைவனை விளித்தாள் *[கலி.121:6]*.

**3. நிலம்.** தலைவனிடம், தோழி, 'ஐயனே! நெய்தற் பரப்பில்-நிலத்தில்-எனது பாவையை வளர்த்திவிட்டு, நீ இருக்குமிடத்திற்கு வந்தேன்', என்று கூறினாள் *[குறு.114:1]*.

**4.இடம்.** 'தலைவனோ தன் புதல்வனை அணைத்துக் கிடந்தான்; புதல்வனின் தாயாகிய நம் மகளோ இருவரையும் அணைத்துக்கிடந்தாள்; அக்கிடக்கையின் காட்சி மிகவும் இனியது; அக்கிடக்கையின் இடம் சிறிதேயானாலும், மிக மிகப் பரந்த பரப்பினை-இடத்தை-உடைய இப்பேருலகே ஈடாகாது', என்று செவிலி, தம் மகளின் வாழ்வினைப் பார்த்து வந்து, நற்றாயிடம் கூறினாள் *[ஐங்.409:4]*.

**5. சோலை.** பரத்தைமைத் தலைவன் நீராடி வந்தேன் என்று கூறியபோது, தலைவி, 'ஆம் நீ புதுப்புனலை மலர்கள் உதிர்ந்து மணக்கின்ற பரப்பிடத்தே-சோலையிலே-நாணத்தைவிட்டுப் பகற்பொழுதிலே பாணனைப் புணையாகக் கொண்டு ஆடினாய்! என்று கேள்விப்பட்டேன்', என்று நகையாடிக் கூறினாள் *[கலி.98:16]*.

**பரம்-1.** சுமை (பாரம்) கூம்புடன் மேற்பாயினை நீக்காது மேற்பரத்தையும்-சுமையையும்-இறக்காமல் ஆற்றுமுகத்து வந்துவிட்ட பெரிய மரக்கலத்தைப் பரதவர் பெருவழியில் கொண்டு செல்லும் பொழுது வளத்தினால் அருமையறியாது வழி நெடுகச் சொரிந்து கொண்டே செல்வர் *[புற.30:11]*.

முருகவேளிடம் புலவர், 'என்னைக் காப்பாற்றக் கடமைப்பட்ட நீ காவாதிருந்தாயானால் அது யார்க்குப் பரம் ஆகும்; உனக்குத்தானே', என்று வினவுகின்றார் *[முரு.வெ.8:2]*.

பாலை நில நெறியில், உப்பாகிய அமிழ்தத்தினை மேற்குத் திக்கில் சென்றுவிற்கும் பொருட்டுப்படையுடன் புறப்பட்ட

உமணர் அடுக்கிய உப்புப் பொதியாகிய பரத்தையுடைய கழுதைகளை ஒட்டிச் செல்வர் *[அக.207:5]*.

வரைவிடை வைத்துத், தலைவன், தலைவியைப் பிரியும்பொழுது, தோழி, தலைவனிடம், 'ஐயனே! கார்காலத்தில் மாலைக் காலம் வரும் பொழுது இவள் படுகின்ற துன்பப்பரம் என்னால் தாங்க இயலாது', என்று கூறினாள் *[நற்.37:7]*.

2. மேன்மை. கூத்தர் மற்ற இசைக்கருவிகளோடே இளியென்னும் நரம்பினுடைய ஓசையைத் தான் ஒலிக்கும் குறிய பரம்-மேன்மை-பொருந்திய தூம்பென்னும் இசைக்கருவியையும் வைத்திருந்தனர் *[மலை.7]*.

பரல்-1. பருக்கைக்கல் -(கூர்மையான சிறுகல்) 'பல்சான்றோரே! பரல்-பருக்கைக்கல்-நிறைந்த வெறுந்தரையில் பாயுமின்றிக்கிடக்கும் கைம்மை நோன்பால் வருந்தும் பெண்டிருள்ளே மல்லேம் யாம்', என்று கூறிப் பெருங்கோப்பெண்டு தீயிற் பாய்ந்தாள் *[புற.246:9]*. ஒரு தலைவன் பகைவரை மேற்செல்லாதவாறு துன்பம் செய்து தடுத்தலின், அவன், செருப்பிடையுற்ற சிறு பரலையொத்தவனாயிருந்தான் *[புற.257:1]*. போரில் பட்ட ஒரு மறவனுக்குப் பரல் நிறைந்த இடத்தில் மேடை உண்டாக்கி நடுகல் எடுத்தனர் *[புற.264:1]*.

செல்வக் கடுங்கோ வாழியாதன், உரிய பளிங்குடன் விரவிக் கிடக்கும் சிவந்த பரல்கள் நிறைந்த முரம்பு நிலத்திலே வாழும் மக்கள், அழகிய மணிகளைப் பெறுகின்ற, அகன்ற ஊர்களையுடைய நாட்டிற்குத் தலைவனாவான் *[பதி.66:18]*. சேணிடமெங்கும் பரவலாகக் கிடக்கின்ற பரல்களையுடைய முரம்பு நிலத்திலே கொங்கருடைய ஆனிரைகள் பரவலாகச் செல்வது போன்று, தகடுரெறிந்த பெருஞ் சேரலிரும்பொறையின் படையில் சினம் மிக்க யானைகள் எண்ண முடியாத அளவில் பரலாகச் சென்றன *[பதி.77:10]*.

பொருநருடன் செல்லும் பாடினி அரக்கு உருக்கினாற் போன்ற சிவந்த நிலத்தில் நடப்பதால், அதிலுள்ள கூரிய பரல்கள் குத்துவதால், அவளுடைய அடிகளில் மரலின் பழத்தைப் போன்ற கொப்புளங்கள் உண்டாயின *[பொரு.44]*. சோழன் கரிகாற் பெருவளத்தான், பொருநர்க்கு முல்லையின் முகைபோன்ற சோற்றோடு, பரலைப் போன்ற நன்கு பொரிக்கப்பட்ட பொரிக்கறிகளையும் உண்பித்தான் *[பொரு.115]*. ஒய்மானாட்டு நல்லியக்கோடனிடம் பரிசில் பெறச் செல்லும் பாணர் வெயிலின் வெப்பம் ஏறிய பரல்கள் கால்களைக் கிழிக்கும்படியான பாலையையும் கடந்து வந்தனர் *[சிறு.8]*. மதுரையின்கண், ஓணவிழாவில், யானைப் போரைக் காண வந்தோர், தம்மேல் அவ்யானைகள் வாராவண்ணம் எடுக்கப்பட்டிருக்கின்ற நெடிய கரையின்மேல், கரிய இடமுடைய நிலத்தின்கண் உள்ள பரல்கள் தம்காலை உறுத்தி வருத்துதலையும் அறியாராய்க், கள்ளைப் பருகிக் களிப்பால் மயங்கி எங்கும் திரிந்தனர் *[மது.598]*. நன்னிடம் பரிசில் பெறச் செல்லும் கூத்தரிடம், 'மேட்டு நிலத்தினின்றும் உதிர்ந்த பரல்களையுடைய பள்ள நிலத்தின்கண் உள்ள வெடிப்புக்களில் பாம்புகள் மறைந்திருக்கவும் கூடும்; ஆகவே விழிப்புடன் செல்க! 'என்று ஆற்றுப்படுக்கும் கூத்தன் கூறினான் *[மலை.198]*. நன்னனின் தலைவாயிலிலே நிறைந்திருக்கும் கையுறைப் பொருள்களில், சாதிலிங்கம் (அரக்கு) பரப்பினாலொத்த செந்நிலத்தே, பரல்களில் தவழும் ஆண் உடும்பும் இருந்தது *[மலை.508]*.

காட்டில் பெரிய கொம்பினையுடைய ஆண்மான்கள் பரல்களையுடைய பள்ளங்களிலெல்லாம் துள்ளிக் குதித்தன *[அக.4:4]*. தலைவன் பரல்களையுடைய மேட்டுநிலமாகிய வளனற்ற காட்டினைக் கடந்தும் பொருளீட்டற்குச் செல்லுவான் *[அக.5:15]*. தலைவன், உளியின்வாய் போன்று கூரிய வெவ்விய பரல்கள நிறைந்துள்ள நெறிகளையுடைய குன்றுகள் பலவற்றைக் கடந்தும் பொருளீட்டற்குச் செல்லுவான் *[அக.33:11]*. ஞாயிறு மலை பிளக்கும்படி காய்ந்ததால், உளிபோலும் வாயையுடைய கொடிய பரல்கள் அடியில் பதிந்து வருத்தும்படியான காட்டில், தலைவி, தலைவனுடன் உடன் போக்குச் சென்றாள் *[அக.55:3]*. இறந்த ஆட்களைத் தழைகளைக் கொண்டு மூடிய கற்குவியல்களையுடைய பாழ்நெறியில், உரு இல்லாத ஊர்ந்திடப் பெறாத, பேய்த்தேருடன், நிலத்தே பொருந்திய மின்மினிப் புழுவைப் போல, விளங்கும் பரல்கள் பலவும் ஒருங்கு ஒளிவிடும் நெறியில், தலைவன் பொருளீட்டற்குச் செல்லுவான் *[அக.67:17]*. கரிய நிறமுடைய ஆண்மான்கள், பரல்களால் ஆகிய உயர்ந்த கற்குவியலில் தங்கும் *[அக.91:10]*. ஆண் வெள்ளெலி சிவந்த பரல்கள் மிக்க வன்னிலத்தில், கிளறிப்போட்ட புழுதியில், மணநாளை அறிவிக்கும் இயல்புடைய வேங்கைப் பூக்கள் உதிர்ந்து, சிறந்த வெறியாடுகளம் போல அழகு செய்யும் *[அக.133:3]*. ஆண்புறாவும், பெண்புறாவும் சேய்மையாகிய இடத்திற்குச் சென்று விளங்கும் மணல் நெறியில், பரல்களை ஆராய்ந்து உண்ணும் *[அக.271:3]*. புலியுடன் பொருது, செருக்குடன், வலியயானை நடந்த இடங்களில், பெரிய பரல்கற்கள், சிறிய மின்மினிப் பூச்சிகளைப் போல, ஒளிவிடும் *[அக.291:7]*. ஆறலை கள்வர் கொன்ற பார்ப்பானின் குடலைக் கடித்துண்டு மாலுள்ள நெறியில் செல்லும் ஆண் நரி, வெள்ளிய பரல்கள் மின்னிக் கண்ணொளியைக் கவரும் நெறியிலுள்ள கள்ளி நிழலில் கூக்குரலிட்டுத் தங்கியிருக்கும் *[அக.337:16]*.

வலிய பரல்கற்களிடையேயுள்ள தெளிந்த நீரைக்குடித்த ஆண்மான் தன் பெண்மானுடன் களிப்பினால் துள்ளி விளையாடும்படி கார்பருவம் வந்தது *[குறு.65:1]*. 'தன் தோழிமாருடன் விளையாடும் விளையாட்டை விட்டுப் பாலை நிலத்தில் பரல் கற்கள் தன் அடிகளின் அழகைச் சிதைக்கும் வண்ணம் தலைவனுடன் என் மகள் போய்விட்டாள்', என்று

செவிலித்தாய் கூறினாள் [குறு.144:5]. காட்டில் பரல் கற்களையுடைய பள்ளத்திலே தலைவன் வரும் வழியில் மான் துள்ளிவிளையாடும் [குறு.250:1].

தலைவன், மிக்க மழை பொழிந்த கற்பாறையருகிலே பூத்த சிச்சிலிப் பறவையின் வாய்போன்ற அரும்புகளையுடைய முல்லையும், பரல்கள் நிரம்பிய பள்ளங்களும் உடைய காடு, சூழ்ந்த நாட்டையுடையவன் [நற்.61:8]. பாலைநிலத்தில் பரல்கள் நிறைந்திருக்கும் இடத்தில் வளர்ந்த கள்ளியின் மேல் முல்லை படந்திருக்கும் [நற்.169:4]. வெயிலால் வெப்பமுற்ற பரல் நிறைந்த பள்ளத்தின் ஒரு புறத்திலே குந்தாலியால் குழித்த கிணற்றையடைந்து ஆவின் நிரையைப் பாதுகாக்கும் ஆயர் பறித்த சிறுகுழியிலுள்ள நீரை யானைகள் உண்ணும் [நற்.240:6]. மழை பெய்யாது வறந்ததால் வெப்பமிக்கு மூங்கிலெல்லாம் வாடி அழகழிந்த மலைவழியின் சுரநெறியிலே, பரற்கற்கள் நிரம்பிய பள்ளத்தில் ஊறுகின்ற மிகச் சிறிய நீருக்காக யானையோடு புலி போர் செய்யும் [நற்.333:3]. பூட்டிய மணிகள் ஒலிக்கும் அருங்கலம் விளங்கிய தலைவனின் தேரினுருள், வலிய பரல்கள் நிறைந்த மேட்டு நிலத்தின்கண் அதிர்ந்து செல்லும் [நற்.394:5].

**2. விதை.** சிறிய ஊர் மரையாவால் பிரித்துண்ணப்பட்ட நெல்லியாகிய வேலியையுடைத்தாய் அதனது பரல்கள்-விதைகள்-பரந்துள்ள முற்றத்தினையுடைய அழகிய குடியிருப்புகளையுடையதாய் இருந்தது [புற.170:2]. மலையின் முழைஞ்சினிடத்து ஈன்ற பெண்நாயின் பசியைக் கண்டு ஆண்செந்நாய் ஆண் பன்றியினைத் தாக்க, அதைக் கண்டு அஞ்சியோடும் பெண்பன்றி மோதியதால் பசிய குலைகளையுடைய ஈந்தினின்றும் பரலுடன் கூடிய செங்காய்கள் அறுபட்டு உதிர்ந்தன [அக.21:21].

**3. பாறைக்கல்.** காட்டில், காலைப்பொழுதில் புதிய தேனையுடைய நறிய பூக்கள் பெரிய பரலில்-பாறைக்கல்லில்-உதிர்ந்து மணம் நிகழும் மனைபோன்று கமழும் [அக.107:20].

**பரவை-1.** பரப்பு. குடவாயில் என்னும் ஊர் மிகுதியான நெல்லினையுடைய பலகுடிப் பரவையினை-பரப்பினை-உடையதாகும் [அக.44:16].

கடலிலிருந்து வலையால் பிடிக்கப்பட்டுப் பரவையாகக் காயவிட்டிருக்கின்ற இறால்மீன்களில் வந்து விழுகின்ற காக்கை முதலியவற்றை மகளிர் பகற்பொழுதில் ஓப்பிக் காவல் காப்பர் [நற்.49:3].

2. கடல். நெடுநாள் புண்ணுற்றார் புரண்டு புரண்டு அசைவது போலப் பரவையின்கண்-கடலின்கண்-முழங்குகின்ற அலைகளும் புரண்டு புரண்டு அசைந்து இயங்கும் [நற்.378:4].

**பராயனார்-ஓர் புலவர்.** இவரது பெயர் விளக்கம் தெரியவில்லை. இவர் பாடல் ஒன்றே நற்றிணையுள் [155] உள்ளது. இயற்கைப்புணர்ச்சியில் தலைவியைக் கூடிய தலைவன் அடுத்த இரண்டாம் கூட்டத்தில் அவளை எதிர்ப்பட்டுப் பொய்பாராட்டி முயங்கும் குறிப்புப் பெற்றதாக இவர் அப்பாடலை இயற்றியுள்ளார். 'ஆய மகளிருடன் கூடி விளையாட்டையும் ஆடாமல், மாலையையும் புனையாமல் கானலின் ஒருபால் நின்றவளே, நோக்கினாரால் கெடாத நலத்தினையுடையாய், மடந்தாய், நின்னை வணங்கி வினவுகின்றேம்; நீ பெரிய கடற்பரப்பின்கண் விரும்பியுறையும் நீரர மகளோ? கழியருகிலுள்ள இங்கு நிலைபெற்ற தெய்வமகளோ? வேறு யாவளோ? சொல்வாய்! 'என்று யான் வினவினேனாக, அதனெதிர் அவளது பற்களினின்று முறுவலும் தோன்றின; கண்களினின்றும் பனியும் பரந்தன; ஆதலின் யாம் முன்பு முயங்கிய இவளே இப்பொழுதும் அம்முயக்கக் குறிப்புடையள்காண்', என்று, தலைவன், தன்னெஞ்சொடு உவந்து மொழிந்ததாக அமைந்த இவர் பாடல் அகப்பொருள் இலக்கணங்களுக்கு ஏற்ற எடுத்துக்காட்டுப் பாடலாய்த் திகழ்கின்றது.

**பரி-1.** செலவு. பேகனிடம் அரிசில்கிழார், 'வேந்தனே! எனக்குப் பரிசில் தர விரும்புவையாயின், நீ அருளாததால் துயரில் வாடும் நின் துணைவியின் வாட்டம் நீங்க, வளவிய பரியையுடைய உயர்ந்த தேரை நின் குதிரைகள் பூண்பனவாகுக! இதுவே நின்பால் யான் வேண்டும் பரிசில்'. என்று கூறினார் [புற.146:11]. கடிய நெடுவேட்டுவன், வென்றியான் உளதாகிய சினம் தீர்ந்த விரைந்த பரியையுடைத்தாகிய குதிரையையுடையவன் [புற.205:3]. ஒரு வேந்தன், தன் பகை வேந்தன் போரிட வாராததால், அவன் படையுடன் போரிட நாணி, நிலத்தைத் தாவடியிட்டளப் பதுபோல், மிகக் குறுகிய வழியினும் நில்லாது, விரைந்து பாய்ந்தோடும் வளவிய பரியினையுடைய தன் குதிரையில் ஏறி, இரவில், தன் இல்லிறுத் திரும்பினான் [புற.301:13]. குதிரையின் வளவிய பரியானது காற்றின் கடுமையைத் தனக்கு நிகராகாமையைச் செய்யும் [புற.304:3]. இருபெரு வேந்தரும் பொருத போர்க்களத்தில், தேர்களெல்லாம், கடிய பரியினையுடைய குதிரைகள் வளைத்து ஈர்த்து ஓடியதால், இடந்தோறும் தளர்ந்து கிடந்தன [புற.368:5]. சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியை பரியினையும், கச்சினையும் உடைய குதிரைப்படைத் தலைவர் சூழ்ந்திருந்தனர் [புற.377:24]. சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னி, வேலேந்திய தடக்கையினையும், குதிரையைச் செலுத்தும் பரியினுக்குரிய கால்வடிம்பினையும் உடையவன் [புற.378:4].

பல்யானைச் செல்கெழுகுட்டுவன், தன் பகைவருடைய நாடுகளை, விரைந்த பரியினையுடைய குதிரைகள் மருந்து இழுத்துச் செல்லும் தேர்களைக் கொண்டு, பாழிடங்களாய் ஆக்கினான் [பதி.25:12]. கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் ஊர்ந்த வெள்ளிய தலையாட்டமணிந்த குதிரை, விரைந்த பரியினையுடையது [பதி.41:26]. செல்வக் கடுங்கோ வாழியாதன்

செலுத்திப் பகைவரை வென்ற குதிரை விரைந்த பரியினையுடையது [பதி.65:2]. காற்றுக் கிளர்ந்து சென்றாற் போன்ற, விரைந்த பரியினையுடைய குதிரைகள் பூட்டிய, கடும்பரியினையிடைய, நெடிய பகைவரின் தேர்களின் மீதுள்ள கொடிகள் தோன்றாத வண்ணம் வெற்றி கொண்டவன், தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை [பதி.80:13,14].

போர்மேல் பிரிந்து சென்ற தலைவன், வினைமுற்றித் தம் வயவரோடு விரைந்த பரியுடைய குதிரையை மேலும் தூண்டிச் செலுத்திக்கொண்டு, தலைவியிடம் வந்தான் [முல்.102]. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் மதுரையின் தெருக்களில், விரைந்த பரியினையுடைய வெண்ணிறக் குதிரைகள் இழுத்தோடு தலால், காற்றென விரைந்தோடும் தேர்கள் சென்று வந்தன [மது.387]. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் பாசறையில் பருமம் களையப்படாமல் விரைந்த பரியினையுடைய குதிரைகள் நிறைந்திருந்தன [நெடு.179]. நன்னிடம் கூத்தரை ஆற்றுப்படுத்தும் கூத்தன், 'முகில் நீர்த்துவலைகளைத் தூவுவதனால், அப்பொழுது திசைகளைத் துணிந்து கொள்ளமாட்டாத கூடிய பரியினையுடைய நும் சுற்றத்தோடு, நும்முடைய இசைக் கருவிகள் நனையாதபடி கிணறுகள் போன்ற முழைஞ்சுகளிடத்துப் புகுந்து தங்கியிருந்து செல்லுங்கள்', என்று கூறினான் [மலை.364]. நன்னனின் அரண்மனை முற்றத்தில் உள்ள கையுறைப் பொருள்களில், மேட்டு நிலத்திலும் விரைந்த பரியினையுடைய, வளைந்த கால்களையுடைய, மலையிடத்தே வாழும் வருடையும் (மலையாடு) இருந்தது [மலை.502].

வினைமுற்றி மீளும் தலைவனின் தூண்டுதலால் விரைந்தோடும் குதிரையின் விரைந்த பரியினையுடைய தேர் உருளையின் ஒலி, கார் காலத்து மழையின் இடி ஒலியினை ஒத்திருந்தது [அக.14:18]. மடியில் பால் நிறைந்த ஆக்கள், பெருத்த மடி கரைய வேண்டிக், கனைக்கின்ற குரலவாய், தாம்பில் பிணிபட்டுள்ள தம் கன்றுகளிடத்தில், விரைந்த பரியினையுடையவாய், மாலை நேரத்தில் மனைதோறும் செல்லும் [அக.54:8]. போர்வினையை முற்றி மீளும் தலைவன், விரைந்த பரியினையுடைய, வெற்றி பொருந்திய வேலை ஏந்திய ஏவலருடன் விரைந்து வருவான் [அக.64:6]. கைவண்மையையுடைய பாரியின் குதிரை, விரைந்த பரியினையுடையது [அக.78:22]. வினைமுற்றி மீளும் தலைவன், தாற்றுக்கோல் தீண்டின் இவ்வுலகே ஆதி எனும் செலவிற்குப் போதாத மிக்க பரியினையுடைய நல்ல நான்கு குதிரைகள் பூட்டப் பெற்ற நீண்ட தேரில் தலைவியிடம் விரைந்து வந்தான் [அக.104:6]. அழிவில்லாத வலிமை பொருந்திய எழினி அடித்த பந்து எழுவதொத்துத், துள்ளி எழுந்து சிலவகை (ஆதி, மண்டிலம் முதலிய)ப் பரியினையுடைய குதிரைகளை யுடையவன் [அக.105:10]. உப்பங்கழியிலுள்ள சுறாமீனால் தாக்கப்பட்டுப் புண்ணுற்ற கோவேறு கழுதை அக்கழியில் மெலிந்து நடக்கும் [அக.120:11]. தித்தன் பரல் பெய்துள்ள கெச்சை (சதங்கை) ஒலிக்கப் பரியால் சிறந்து, ஆதியெனும் ஓட்டத்திலே தேர்ந்த பாயும் பரியினையுடைய நல்ல குதிரைகளையுடையவன் [அக.122:19,20]. வினைமுற்றித், தலைவியிடம் மீளும் தலைவன் பொன்னால் செய்யப்பட்ட கலனையும், கொய்யப்பெற்ற பிடரி மயிரினையும், செலுத்தும் கை விரும்பும் விளக்கம் அமைந்த பரியினையும் உடைய குதிரையைப் பாகன் செலுத்த விரைந்து வந்தான் [அக.124:10]. சோழன் கரிகால் வளவன், விரிந்த தலையாட்டத்தாற் சிறந்த விரைந்த பரியினையுடைய குதிரைப்படையை உடையவன் [அக.125:16]. ஆஅய்எயினன் கடிய பரியினையுடைய குதிரையை உடையவன் [அக.148:7]. வினைமுற்றி மீளும் தலைவன், தேர்ப்பாகனிடம், 'பாகனே! ஓடும் பரி குறையாத, கொய்யப்பட்ட பிடரி மயிரினையுடைய, குதிரையின் தாளின் அளவு தாழ்ந்த மாலையிடத்து மணி விளங்கியொலிக்கத் தேரை ஓட்டுவாயாக', என்று கூறினான் [அக.154:11]. தறுகண்மையையுடைய மழவர், கடிய பரியினையுடைய குதிரைகளால் பகைவரை அழித்தனர் [அக.187:6]. போருக்குச் சென்ற தலைவர், கொடுஞ்சி என்னும் உறுப்பினையுடைய தேரில் பூட்டப்பெற்ற விரைந்த பரியினையும், விரிந்த பிடரிமயிரினையும் உடைய நல்ல குதிரையைச் செலுத்திக், கார்காலத்தில் தலைவியிடம் திரும்புவர் [அக.194:17]. கடிய பரியினையுடைய நல்ல குதிரை பூண்ட உயர்ந்த தேரினைச் செலுத்தும் திறமை மிக்க பாகன் மெல்லெனச் செலுத்தினான் [அக.230:11]. தலைவன், பாகனிடம், 'வலவனே! வரிசையாகப் பறத்தலையுடைய அன்னப்பறவையை யொத்த விரைந்த பரியினையுடைய, செருக்கு வாய்ந்த, குதிரைகள், பூட்டிய நெடிய தேரினை விரைந்து செலுத்துவாயாக', என்று கூறினான்[அக.234:3]. குதிரைகளினால் இழுத்துச் செல்லப்படும், வன்மையுடைய பாகனால் அடக்கி விடப்படும், தாவும் பரியினையுடைய நீண்ட தேர் ஈரம் பொருந்திய இடங்களில், தான் செல்லும் வழியினை அறுத்துச் சென்றது [அக.314:10]. வேகத்தால் காற்றெனக் கூறப்பெறுங் குதிரைகள் நான்கும் ஒருசேரப் பூட்டப்பெற்ற நீண்ட தேரின் விரைந்த பரி தளராது, முல்லை நிலத்தில் வலிய வட்டையினையுடைய உருளைகள் ஈரமாய நிலத்தினைக் கிழித்துச் செல்லும்படி, விரைந்து தேரினைச் செலுத்துக', என்று பாகனிடம், தலைவன் கூறினான் [அக.334:12]. வினைமுற்றிய தலைவன், பாகனிடம், 'வலவனே! ஒளியின் தழைத்தலை யொத்த நிமிர்ந்த பரியினையுடைய குதிரைகளைக் கடிவாளத்தினைச் செலுத்தி விளக்கமுறும் கொடிஞ்சி பொலிவுற்றுக் காணத் தேரினைச் செலுத்துவாயாக! 'என்று கூறினான் [அக.344:9]. கிள்ளிவளவனென்ற சோழன், பழையன் மாறன் என்பானைக் கடலில் நடந்த போரில் வென்று கடிய பரியினையுடைய குதிரைகளைப் பற்றிக்கொண்டான் [அக.346:23]. அதியமானஞ்சி,

கடிய பரியினையுடைய குதிரைகள் பூண்ட நீண்ட தேரினையுடையவன் *[அக.352:12]*. நான்கு குதிரைகளைத் தேரின் நுகத்தில் பூட்டி, அறிவுடைய பாகன் செலுத்துதலால், தாழ்ந்த துறையில் நீர் பாய்ந்ததைப் போலத், தாவிச் செல்லும் தேரின், அம்பு பாய்ந்தாற்போன்ற வலியகாலின் விரைந்த பரி, பாலைப் போன்ற வெள்ளியமணலில் சுவடுகளை உண்டாக்கிச் சென்றது *[அக.400:14]*.

உடன்போக்குச் சென்ற தன் மகளையும், தலைவனையும் தேடி நடந்து, நடந்து செவிலித்தாயின் கால்கள் பரி தப்பின *[குறு.44:1]*. தலைவி, தோழியிடம், 'தோழியே! நெடுந்தொலைவிலுள்ள தலைவனிடம், விரைந்த பரியினால் வருந்தாமல் சென்று, 'தந்தை மீன்பிடிக்கக் கடலிற்குச் சென்றுவிட்டார்; தாய் உப்புவிற்கச் சென்றுவிட்டாள்; இப்பொழுது வந்தால் தலைவியை எளிதில் அடையலாம்', என்ற செய்தியைக் கூறுவாரைப் பெறின் நல்லதாகும்' என்று கூறினாள் *[குறு.269:1]*. கடற்கரை மணலில் விளையாடும் மகளிர் அலைக்கும் பொழுது அவர்க்கு அஞ்சி, வருத்தம் மிக்க, விரைந்த பரியினையுடைய நண்டினை, மகளிர் கைப்படாவாறு, உயர்ந்து வருகின்ற அலை கொண்டு செல்லும் *[குறு.316:6]*.

வினைமுற்றி விரைந்து வரும் தலைவன், தேர்ப்பாகனிடம், 'வலவனே! விரைந்த பரியினால் வருந்திய நம் வயவர் இடையிற் செறிந்த கச்சையின் பிணிப்பை நெகிழ்த்து ஆங்காங்குத் தங்கித் தாம்தாம் விரும்பிய வண்ணம் மெதுவாக வரட்டும்; நீ தேரினை விரைந்து செலுத்துக', என்று கூறினான் *[நற்.21:1]*. பாலுணவைப் பொற்கிண்ணத்தில் வைத்துக்கொண்டு ஊட்டும் நரைமுதுசெவிலியர்,பிடிக்க முடியாமல் விரைந்த பரியினால் ஓடி, அவரை அலைத்து உண்ண மறுத்த சிறுவிளையாட்டி இவ்வளவு அறிவும், இல்லறப் பண்பும் எப்படியறிந்தனள், என்று, நற்றாய் வியந்தாள் *[நற்.110:7]*. தலைவியும், தோழியரும் கோலமிட்டும், சிற்றில் புனைந்தும், சிறப்ப விரைந்த பரியினையுடையராய் விளையாடுவர் *[நற்.123:8]*. கடற்கரையின் புதிய மணலுள், கடத்தற்கரியவாய், குறைந்த பரியினையுடையவாய்த், தேருருள், அழுந்திச் செல்லமாட்டாது சுழலும் *[நற்.135:5]*. 'ஊர்ப்பெண்டிர் அலர் தூற்றுவதால், அன்னையின் அச்சுறுத்தலுக்கு அஞ்சிக், குதிரை பூண்ட விரைந்த பரியினதாய், நடுயாமத்தில், தேருடன் வருகின்ற தலைவனுடன், நீ செல்லுவதற்கு, யான் உடன்பட்டுவிட்டேன்; புறப்படுக! 'என்று, தலைவியிடம், தோழி கூறினாள் *[நற்.149:7]*. விரைந்த பரியினையுடைய நல்ல குதிரைப்படைகளையுடைய பகையரசராகிய பிண்டன் முதலாயினோரைப் போரிலே நன்னன் தோற்கடித்தான் *[நற்.270:8]*.

நல்ல பரியினையுடைய குதிரையின் தலையிலே சூட்டப்படும் விரிவமைந்த வெண்கவரியைப் போன்று, நீரடைகரை மேனின்ற வேழம் வெள்ளிய மலரைப் பூக்கும் *[ஐங்.13:1]*. வினைமுற்றி மீளும் தலைவன், தலைவியை விரைந்து காணும் அவாவினால், பாகனிடம், 'வலவனே! வழியிற் படர்ந்துள்ள முல்லை மலர்களும், செம்முல்லை மலர்களும் உதிரும்படியாக, விரைந்த பரியினையுடைய நெடுந்தேரில் பூட்டப்பட்டுள்ள குதிரைகளைத் தூண்டி விரையச் செலுத்துக', என்று கூறினான் *[ஐங்.422:1]*. தலைவனுடைய தேர், நீர்வீழ்ச்சி போன்று விரைந்து செல்லும் பரியினையுடையதாகும் *[ஐங்.465:1]*. வளவிய பரியினையுடைய பயின்ற வலியினையுடைத்தாகிய குதிரையையுடைய செல்வனே!' என்று தோழி, தலைவனை விளித்தாள் *[கலி.125:5]*.

நான்முகனாகிய தேர்ப்பாகன் பரியினை அறியும் முறையால் அறிந்து மறைகளாகிய குதிரைகள் பூட்டப்பட்ட, நிலமாகிய தேரில், சிவபெருமான் ஏறிச் சென்று, வாசுகியை நாணாகவும், இமயத்தை வில்லாகவும் கொண்டு முப்புரங்களை அழித்தார் *[பரி.5:22]*. தேவசேனையின் தோழியர் மீது, வள்ளியம்மையின் தோழியர், வெற்றியை உண்டாக்குதற்குக் காரணமான பரியினையுடைய குதிரைகளின் நடையைப் போன்று போருக்கு வந்தனர் *[பரி.9:51]*. முருகவேளின் திருப்பரங்குன்றத்தின் கீழேகிடந்த இடைநிலைப்பரப்பில், சிலர் தம்மோடு வந்த யானைகளையும், குதிரைகளையும், தேர்களையும் வழியினின்றும் பரவலாக அகற்றுவது, பகைமேல் பரியின்கண் மிக்குச் செல்லும் படையையுடைய பாண்டியனின் பாசறையைப் போன்றிருந்தது *[பரி.19:35]*.

**2. குதிரை.** வையாவிக் கோப்பெரும்பேகன், தன்னிடம் பரிசிலராக வரும் பாணருக்கு விளக்கம் பொருந்திய கடிய பரியைப்-குதிரையைப்-பூண்ட நெடிய தேரினைப் பரிசிலாக அளித்தான் *[புற.141:3]*.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் தாவுகின்ற பரிகள் பூண்ட தேர்ப்படை சூறாவளிபோல் விரைந்து சுழலும் *[மது.51]*. மதுரை நகரின்கண் உள்ள முகிலைப் போன்று வரையாமல் கொடுக்கும் வளப்பம் மிக்க செல்வர், காற்றினுடைய செலவினையொத்து, விரைந்து தேர்ப்பரிகளைச் செலுத்துவர் *[மது.440]*.

வினைமுற்றி மீளும் தலைவன், பாகனிடம், 'வலவனே! விரைந்து செல்லும் பரிகளை மேலும் விரைவாகச் செலுத்தி வருகின்ற எம்மைவிட, எம் நெஞ்சம் விரைந்து தலைவியிடம் சென்றுவிட்டதோ?' என்று வினவினான் *[அக.9:16]*. ஊர்ப்பெண்டிர் கூறும் அலரைக் கேட்டுத் தாய், பெரிய துறையின் மணலில், பாகன் ஆய்ந்து கொண்ட அழகு மிக்க பரிகள் பூட்டப்பெற்ற ஒரு தேர், பகலிலும், இரவிலும் திரிவதைக் கண்டு தலைவியின் மீது ஐயுற்று இல்லின்கண் காவற்படுத்தினள் *[அக.20:15]*. முதன்முதலில் தலைவியைக் கண்ட தலைவன் தேரில் பூண்ட பரிகளின் விரைவை அடக்கி, மெல்லச் செலுத்தி, அவளைப் பலமுறை நோக்கிச் சென்றான் *[அக.48:20]*. வள்ளற் பெருமகனாகிய பெரியன் என்பான், பரிகள் பூண்ட சிறந்த

தேரினையுடையவன் *[அக.100:12]*. களவுப் புணர்ச்சிக்கு இதுவரையில் இரவில் வந்து, கொண்டிருந்த தலைவனுடைய தே், பாயும் பரியின் விரைவால் சிறப்புற்று, மறையாமல், பகலிலேயே, இளைஞரின் ஆரவாரத்தோடு, வதுவையைக் கருதி வந்தது *[அக.160:18]*. தலைவன் விரைந்த பரியினையுடைய வலிய தேரினையுடையவன் *[அக.180:4]*. தலைவன் கானலிடத்தே தலைவியைக் காணச் சிறந்த பரியனாய் வந்தான் *[அக.190:16]*. விரைந்த பரிகள் பூட்டப்பெற்ற நெடிய தேரின் உருளை சென்ற சுவட்டில் ஓடும் நீர், பாம்பு ஓடுவது போல், இருக்கும் *[அக.339:1]*.

அழகு பொருந்த விரிந்த தலையாட்டமைந்த விரைந்த செலவினையும், கனைத்தலையும் உடைய வளவிய பரிமா பூண்ட தேரினையுடையவன், தலைவன் *[நற்.121:9]*. 'ஊர்ப்பெண்டிர் அலர் தூற்றுவதால் அன்னையின் அச்சுறுத்தலுக்கு அஞ்சிப் பரிகள் பூண்ட விரைந்த செலவினதாய், நடுயாமத்தில் தேருடன் வருகின்ற தலைவனுடன் நீ செல்லுவதற்கு, யான் உடன்பட்டுவிட்டேன்; புறப்படுக', என்று தோழி, தலைவியிடம் கூறினாள் (பா.ேவே-நெடுந்தேர்) *[நற்.149:7]*. விரைந்த செலவினையுடைய பரிகள் பூட்டிய தலைவனுடைய தேரினை, ஊர்ப்பெண்டிர் கூறும் அலர் தடுத்து நிறுத்தும் *[நற்.203:9]*. புலியைப் போன்ற புள்ளிகளையுடைய வண்டுகளின் முரற்சியைப்; புலியின் ஓசையாகக் கருதித் தேரில் பூட்டிய பரியினுடைய வயங்கிய கால்கள், பந்து போலத் தாவின *[நற்.249:7]*. செல்லுதலில் விருப்பமுடைய பரிகள் பூட்டிய தலைவனின் தேரில் மணிகள் ஒலித்தன *[நற்.307:1]*.

பாய்ந்தோடும் பரிகளையுடைய தலைவனது நெடிய தேர், கரிய கழியமைந்த நெய்தனிலத்தின்கண்ணும் இயங்கும் *[ஐங்.134:1]*. தலைவன் விரைந்து பாய்கின்ற பரிகள் பூண்ட நெடிய தமது தேரினை வழியில் சுவடு உண்டாகும்படி விரையச் செலுத்திப் போர்மேற் சென்றான் *[ஐங்.474:3]*. வினைமுற்றி மீளும் தலைவன், பாகனிடம், 'வலவனே! குதிரையின் கடிவாளத்திட்ட விசைக்கயிற்றை இழுத்துப் பிடித்து நின் வளவிய பரிகள் பூண்ட தேரினை விரைந்து செலுத்துவாயாக! 'என்று கூறினான் *[ஐங்.489:5]*.

குதிரை ஏறி வந்தேன் என்ற பரத்தைமைத் தலைவனிடம், தலைவி, 'தலைவனே! பரத்தையாகிய பரியின்மேல் ஊர்ந்து திரிய விரும்பினால், தாழ்க்காமல் விரைந்து செல்', என்று கூறினாள் *[கலி.96:38]*. 'பாய்ந்து செல்லும் பரி பூண்ட நினது தேர் வரைதற்கு வெளிப்பட, வந்து தலைவியின் துயரைக் களைவதற்கு இதுவே தக்க காலமாகும்', என்று தோழி, தலைவனிடம் கூறினாள் *[கலி.121:23]*.

விரைகின்ற தேரினையுடைய பாண்டிய மன்னன் பகைவரை வென்று அவருடைய பரிகளைக் கவர்ந்து கொள்ளுவான் *[பரி.11:60]*.

**3. குதிரைமரம் என்ற ஒருவகை மரம்.** மலையின் உச்சியில் பெய்த மழையினால் அருவி பெருகி அழகிய பரியைச்-குதிரைமரங்களைச்-சாய்த்துப்பெரிய ஊர்ப்பரப்பிலுள்ள நீர்த்துறைக்கு வந்து சேர்ந்தது *[அக.278:9]*.

**பரீஇ-பருத்தி.** (பருவி) தினைப்பயிரின் இடையிடையே பரீஇயை-பருத்தியை-விதைத்தல் *[குறு.72:4]*.

**பரிகாரம்-பொருள்.** தன் மனத்தில் தோன்றியவற்றை மறையாமல் கூறித் தன்னோடு நட்பினைச் செய்தவர் மகிழும்படியாக அவர்கள் இல்லறம் நடத்துவதற்கு வேண்டும் பரிகாரத்தை-பொருளை-நாடோறும் நள்ளி என்ற வள்ளற் பெருமகன் கொடுப்பான் *[சிறு.104]*.

**பரிசம்-பொருள்.** முசிறிக்குரியவனாகிய குட்டுவனுடைய நாட்டில் கலங்கள் கொணர்ந்த பொன்னாகிய பரிசம்-பொருள்-கழிகளில் இயங்கும் தோணிகளால் கரையில் இறக்கப்படும் *[புற.343:5]*.

**பரிசில்-வரிசைப்பொருள்.** பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி, பகைவரின் பெரும் படையின் வலிமையழித்து, அவரின் அரண்களைக் கைக்கொண்டு, அவற்றின்கண் கொள்ளப்பட்ட அழகிய அணிகலன்களைப் பரிசிலை-வரிசை பொருளைப்-இரப்போர்க்கு வரிசையின் நல்குவான் *[புற.6:16]*. 'சோழன் நலங்கிள்ளி, இரப்போரும், விறலியரும் கேட்டால் வஞ்சியையும், மதுரையையும் தரும் அருளாளன் அவன்; ஆகவே, பரிசில் மாக்களே! எல்லோரும் வாருங்கள் அவனைப் பாடுவோம்', என்று புலவர் கோவூர் கிழார் கூறினார் *[புற.32:6]*. 'பழுமரம் தேரும் பறவைகளைப் போல, நீண்ட வழிகளைக் கடந்து, வள்ளலை நாடியலைந்து, பரிசில்களைப் பெற்றுச் சுற்றத்துடன் மகிழ்ந்து வாழும் வாழ்க்கையர், புலவோர்; அவர் பிறருக்குத் தீங்கு செய்யும் பண்பினரல்லர்', என்று சோழன் நெடுங்கிள்ளியிடம் கோவூர் கிழார் கூறினார் *[புற.47:6]*. 'யானைதன் கோட்டிடை வைத்த கவளம் தப்பாததைப் போல, அதியமான் அளிக்கும் பரிசில் காலம் நீட்டித்தாலும், நீட்டிக்காவிட்டாலும் பரிசிலர்க்குத் தப்பாது', என்று ஔவையார் கூறினார் *[புற.101:5]*. ஒருவள்ளலை நாடிப் பல திசையிலிருந்தும் பரிசில் மாக்கள் பலர் வருவர்; அவர்கட்குக் கொடுத்தல் மிக எளிது; ஆனால், தகுதியறிந்து கொடுத்தல் அரிது; நீ தகுதியறிந்து கொடுத்தல் வேண்டும்', என்று கபிலர், மலையமான் திருமுடிக்காரியிடம் கூறினார் *[புற.121:2]*. 'எம் பொறுத்தற்கரிய வறுமையினைப் போக்குபவன் நீ ஒருவனே என எண்ணி நின்னிடத்து வந்தோம்; நீ நின்னுடைய தகுதிக்கேற்ற பரிசிலை நல்கி எங்களை அனுப்பி வைத்தால், துறையூரின் துறையிலுள்ள நுண்ணிய மணலினும் பலவாக வாழ்வாயாக! என வாழ்த்தி உண்போம்', என்று துறையூர் ஓடைக்கிழார், ஆய் அண்டிரனிடம் கூறினார் *[புற.136:24]*. 'நாஞ்சில் மலைக்கு வேந்தே! நினது மனம் நெகிழும்

செவ்வி பார்த்துக் காத்திருக்கும் நிலையில் எனது வறுமைநிலை இல்லை; விரைந்து பரிசிலையளிப்பாயாக' என்று, மருதனிளநாகனார், நாஞ்சில் வள்ளுவனிடம் கூறினார் *[புற.139:9]*. 'பசித்து யாம் உன்னிடம் வரவில்லை; சுற்றமும் எனக்கில்லை; யாம் நின்னிடம் வேண்டும் பரிசில், நின்னைப் பிரிந்து துயருறும் நினது மனைவியின் துயரைக் களைவதேயாகும்', என்று பரணர் வையாவிக்கோப் பெரும்பேகனிடம் கூறினார் *[புற.145:8]*. 'பேகனே! நின்னிடம் அணிகலன் முதலியவற்றை யாம் விரும்பவில்லை; யான் நின்னைப் பாடியதற்கு உவந்து எனக்குப் பரிசில் தரவிரும்பினால், நின்னைப் பிரிந்து துயருறும் நின் மனைவியிடம் செல்ல நின் தேர்குதிரைகளைப் பூண்க! 'என்று. அரிசில்கிழார், பேகனிடம் கூறினார் *[புற.146:5]*. 'ஆவியர் கோவே! என்னுடைய செவ்வழிப் பண்ணினைக் கேட்டுக் கார்ப்பெயல் போலக் கண்ணீர்விட்டவளுடைய கூந்தலில் மலரின் மணம் கமழ இன்றே நீ புறப்படுவாயானால், அதுவே யாம் வேண்டிய பரிசில்', எனப், பெருங்குன்றூர்கிழார் பேகனிடம் கூறினார் *[புற.147:9]*. 'உயர்ந்த மலையையுடைய நள்ளியே! நினது வலிய முயற்சியினால் அணிகலன் பலவும் களிற்றுடன் கொணர்ந்து, நின்னிடம் வரும் இரவலர்க்குப் பரிசிலை நீ யளித்துக் கொண்டிருப்பதால், நின்னைப்பாடும் என் நா, இரவலர்க்கீயாத வேந்தரைப் பாடாது', என்று, வன்பரண்ர், கண்டீரக்கோப்பெருநள்ளியிடம் கூறினார் *[புற.148:4]*. தம் கணவர் நெடுந்தொலை சென்றிருக்கும் பொழுது, வந்துபாடுவார்க்குப் பரிசிலாகப் பிடியானைகளை. அவர்தம் மனைவியரும் அளிக்கும், நாடு, கண்டீரக்கோவின் நாடாகும் *[புற.151:4]*. இசை மேம்பட்ட அண்ணலாகிய குமணனே! எனது குடும்ப வறிய நிலையை எண்ணி நின்னிடம் வந்தேன்; நீ முகம் மாறித் தரும் பரிசில் யானையாக இருப்பினும் கொள்ளேன்; மகிழ்ச்சியுடன் குன்றியளவு பொருளைக் கொடுத்தாலும் கொள்வேன்', என்று, பெருஞ்சித்திரனார், குமணனிடங் கூறினார் *[புற.159:23]*. இரப்போரைப் புரப்பவன் நீ அல்லை; இரப்போர்க்குப் புரப்பவர் இல்லாமலும் இல்லை; நின்னுடைய காவல் மரம் வருந்தக் கட்டியுள்ள யானை எனது பரிசில்; சென்று வருகின்றேன்', என்று, பெருஞ்சித்திரனார், இளவெளிமானிடம் கூறினார் *[புற.162:6]*. 'போருக்குச் செல்லும்பொழுது தனது படையின் முன்னே நின்று, பகைப்படை அடர்த்து வரும்பொழுது அணைபோலத் தடுத்து நிறுத்தும் மலைபோன்று விளங்குகின்ற பெருமானே! நின்னைக் காணுவதோ எந்நாளும் அரிது; எனது வறுமையோ பெரிது; நீ, இப்பொழுதே எனக்குப் பரிசில் தந்து அனுப்புவாயாக! 'என்று, காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார், பிட்டங்கொற்றனிடம் கூறினார் *[புற.169:8]*. 'வறுமையால் வாடும் நின் சுற்றம் உயிர் பிழைக்க வேண்டுமாயின் வல்லார் கிழான் பண்ணன் பகைவர் நாட்டை நோக்கிப் படைகொண்டு செல்லுவதற்கு முன், பரிசிலைப் பெறுவதற்கு விரைந்து செல்க! 'என்று, பாணனொருவர் வேறொரு பாணனை ஆற்றுப்படுத்துவது போலப் முகையலூர்ச் சிறுகருந்தும்பியார், கூறினார் *[புற.181:10]*.

வள்ளல்களின் செவிகளிலே சொற்களாகிய விதையை விதைத்துத், தாம் நினைத்ததை விளைவிக்கும் வலிமையான நெஞ்சமும், மேம்பாட்டினைப் பெற வருந்தும் இயல்புமுடைய, பரிசிலைப் பெறும் புலவர்க்கு, வாயிலை என்றும் அடையாதவன், அதியமான் நெடுமான் அஞ்சி *[புற.206:4]*. 'விருப்பமுடன் அழையாது, கண்டும் அறியார் போல் உள்ளத்தில் மகிழ்வின்றித் தரப்பட்ட பரிசிலை, யார்தாம் விரும்புவர்? எனது நெஞ்சமே எழுக? என, இளவெளிமானிடம் சென்ற பெருஞ்சித்திரனார் தனது நெஞ்சிற்குக் கூறினார் *[புற.207:4]*. 'பரிசில் கருதிக் குன்றும், மலையும் கடந்து வந்த என்னைப் பாராமல், என் வரிசையறியாமல் ஈத்த இப்பொருளைப் பெற யான் ஒரு வாணிகப் பரிசிலேன் அல்லேன்', என்று பெருஞ்சித்திரனார், காணாது கொடுத்த பொழுது கூறினார் *[புற.208:2]*. 'புலி தனக்கு இரையாகக் களிற்றை வீழ்த்த முயன்று அது தப்பிவிட்டால் எலியைப் பார்த்துப் பாயாததைப்போல, நெஞ்சமே! துணிவினைக் கொண்டு எழுவாயாக! கடலில் மண்டும் ஆற்றின் புனலைப் போல, விரைந்து போய், நல்ல மிகுந்த பரிசிலைக்கொண்டு வருவோம்', என்று பெருஞ்சித்திரனார், இளவெளிமான் சிறிது கொடுத்த பொழுது கூறினார் *[புற.237:19]*. உணவுப் பொருளெல்லாம் தீர்ந்துபோன பிறகும், இரவலர்க்கு விதையை அட்டு உண்பிப்பானேயல்லாமல், இல்லை என்று யாரையும் அனுப்பாதவளுடைய கணவனாகிய வள்ளல், தன்பால் வரும் இரவலர்க்கு நல்கும் பரிசில், அவன் பகைவரை வென்று கொண்டவை தாம் *[புற.333:19]*. ஒரு வள்ளலின் மனைவியும் இரவலர்க்கு உணவளித்து, உணவளித்துக் கை ஓயாதவளாயிருந்தாள்; அவ்வளளலோ, பகைவரது யானையின் பொற்பட்டங்களை பரிசிலாகப் பரிசிலர்க்கு ஈந்து கையொயாதவனாயிருந்தான் *[புற.334:10]*. சங்க வருணரென்னும் நாகரியர், தந்துமாறனிடம், வேந்தே! நாடோறும் நினக்குரிய ஒழுக்கத்திற் குன்றாதிருப்பாக! நின்னிடத்தில் வரும் இரவலர்க்கு வேண்டும் பரிசில்களை நிரம்பவும் நல்குவாயாக' என்று கூறினார் *[புற.360:13]*. சோழிய ஏனாதி திருக்குட்டுவனைப் பற்றிக், கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார், 'ஒருநாள் விடியலுள் வஞ்சித்துறைப் பாட்டொன்றை அவன்மீது பாடினேனாக, அவன் மகிழ்ந்து, கொல்லும் சினத்தையுடைய களிறொன்றைத் தந்தான்; அதற்கு அஞ்சிய யான் அதனை அவளிடத்திலேயே செல்லவிடுத்தேனாக, அதைக் கண்டு அவன் தான் கொடுத்தது குறைவென்று கருதி, மற்றொரு பெருங்களிற்றையும் நல்கினான்; அதிலிருந்து யான் எனது சுற்றம் எவ்வளவு வறுமையுறினும் அவனிடம் பரிசிலிற்குச் செல்லேன்', என்று வஞ்சப் புகழ்ச்சியாகக் கூறினார் *[புற.394:17]*.

இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் பாணர், கூத்தர், புலவர் முதலிய இரப்பவர் யாவராயினும் பரிசில் பெறுதற்குத் தகுதியில்லாராயினும் எல்லோர்க்கும் கொடுப்பதைக் கடமையாகக் கொண்டவன் *[பதி.20:22]*. இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனைக், குமட்டூர்க்கண்ணார் பாடிப் பெற்ற பரிசில் உம்பற்காட்டு ஐந்நூறூர் பிரமதாயமும், முப்பத்தெட்டியாண்டு தென்னாட்டுள் வருவதனில் பாகமுமாம் *[பதி ப.2]*. இமையவரம்பன் தம்பி பல்யானைச் செல்கெழுகுட்டுவனைப் பாலைக் கௌதமனார் பாடிப்பெற்ற பரிசில் அவரும், அவருடைய மனைவியும் துறக்கம் புக்கது *[பதிப.3]*. களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலைக், காப்பியாற்றுக் காப்பியனார் பாடிப் பெற்ற பரிசில், நாற்பது நூறாயிரம் பொன்னும், அரசன் ஆளுவதில் பாதியுமாம் *[பதிப.4]*. கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனைப், பரணர் பாடிப்பெற்ற பரிசில் உம்பற்காட்டு வாரியும், செங்குட்டுவனின் மகன் குட்டுவன் சேரலுமாம் *[பதிப.5]*. ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக், காக்கை பாடினியார் நச்செள்ளையார் பாடிப் பெற்ற பரிசில், 'கலனணிக' என்று, ஒன்பது காப்பொன்னும், நூறாயிரங்காணமும், அரசன் பக்கமுமாம் *[பதிப.6]*. செல்வக் கடுங்கோவாழியாதனைக் கபிலர் பாடிப்பெற்ற பரிசில், சிறுபுறமென நூறாயிரங் காணமும், நன்றா என்னும் குன்றேறி நின்று அரசன் கண்ணிற்கண்ட நாடெல்லாமும் ஆகும் *[பதி.ப.7]*. தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறையை, அரிசில் கிழார் பாடிப்பெற்ற பரிசில், அரண்மனையிலுள்ள வற்றையெல்லாம் கொண்மின் எனக் காணம் ஒன்பது நூறாயிரத்தோடு, அரசுகட்டிலையும் பெற்றுப் பின் அரசைத் துறந்து கொடுத்து, அமைச்சுப் பூண்டது *[பதி.ப..8]*. குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறை, பெருங்குன்றூர்கிழார் பாடியதற்குப் பரிசிலாக, மருளிலார்க்கு மருளக் கொடுக்க, என்று உவகையின் முப்பத்தீராயிரம் காணம் கொடுத்து, அவர் அறியாமை, ஊரும், மனையும் வளமிக்கப் படைத்து, ஏரும், இன்பமும் இயல்வரப் பரப்பி, எண்ணற்காகா அருங்கல வெறுக்கையொடு பன்னூறாயிரம் பாற்பட வகுத்துக் காப்பு மறம் இட்டான் *[பதி.ப.9]*.

வீடுபேற்றைக் கருதி, முருகவேளிடம் வந்தடைந்த சான்றோனிடம், அம் முருகப்பெருமான், நீ கருதி வந்ததை யானறிவேன், என்று, அன்பு மொழிகளைக் கூறிப், பெறுதற்கரிய பரிசிலை (வீடுபேற்றை) அளித்தான் *[முரு.295]*. பரிசிலரின் சிறப்பிற்கேற்ப வழங்குதலும், தகுதியில்லார்க்கும் வழங்குதலுமாகிய ஓய்மானாட்டு நல்லியக்கோடனின் பண்பினைப், பரிசிலைப் பெற்று வாழும் பரிசிலர் புகழ்ந்து ஏத்துவர் *[சிறு.218]*. ஓய்மானாட்டு நல்லியக்கோடன், இரவலராகிய பாணர்க்குத் தேர், எருது, யானை, குதிரை, அணிகலன்கள் முதலியவற்றைப் பரிசிலாக அளிப்பான் *[சிறு.261]*.

தொண்டைமான் இளந்திரையன், தன்னிடம் வந்த இரவலராகிய பாணர்க்குப் பகைவரைத் தோற்கடித்து அவர்களுடைய சேணத்தோடு கூடிய குதிரைகள் அன்றே பரிசிலாக அளிதது அனுப்புவான் *[பெரு.493]*. நன்னனின் நாட்டுமக்கள் செய்யும் போற்றுதலினால், நன்னனிடம் பரிசில் பெறச் செல்லுவதையும் மறந்து கூத்தர் நீண்டகாலம் அங்கேயே தங்கிவிடுவதுமுண்டு *[மலை.187]*. நன்னன், தன்னிடம் வந்த கூத்தருக்குத் திடீரென மழைபெய்தாற் போல, மிகுதியான செல்வத்தைப் பரிசிலாக வழங்கி முதல்நாளே அனுப்பி வைப்பான் *[மலை.581]*.

மதுரையிலிருந்த வள்ளலாகிய அகுதை என்பான் அகவல் மகளிருக்கு பிடிகளைப் பரிசிலாகஅளிப்பான் *[குறு.298:7]*. ஆய்அண்டிரன் இரவலர்க்குப் பரிசிலாக வழங்கிய தேரின் ஒலிபோலப் புன்னை மரத்திலுள்ள நாரை நரலும் *[நற்.167:3]*. கொல்லி மலைக்குரிய பொறையன், பாணர்க்குப் பரிசிலாகக் குதிரைகளை வழங்குவான் *[நற்.185:4]*. மதுரை நகரில் வாழும் குடிமக்கள் தாமரைப் பூவிலுள்ள மகரந்தத் துகளை ஒப்பார்; அவரை நாடிவருகின்ற பரிசில் பெற்று வாழும் இரவலர், அம்மகரந்தத்தை உண்ணும் வண்டுகளை ஒப்பார் *[பரி.தி.7:6]*.

**பரிசிலர்**-இரவலர். சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன் பரிசிலர்க்குப்-இரவலர்க்குப்-பெறுதற்கரிய அணிகலன்களை வாரி வழங்குவான் *[புற.14:10]*. வறியோர்க்குச் செல்வர் வழங்கலும், செல்வரிடம் வறியோர் சேரலுமாகிய சிறப்பு விண்ணுலகிலில்லை; அச்சிறப்பு சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனின் நாட்டிலே தான் உண்டு என்று கருதிப் பகைநாட்டுப் பரிசிலரும் அவனையே அடைவர் *[புற.38:17]*. பரிசிலர் இரந்தால், 'வாரேன்' என்று கூடச் சொல்லாது, அப்போதே அவரின் உடைமையாகி விடுபவன், பாரி *[புற.108:5]*. வேள்பாரி, தன் முந்நூறு ஊர்களையும் பரிசிலர்க்கு வழங்கியவன் *[புற.110:4]*. வேள்ஆய், மன்றத்தில் பரிசிலரைக் கண்டால், கன்றுடன் பிடியையும் அணிஅணியாக வழங்குவான் *[புற.135:11]*. புலவர், பாணர் முதலிய பரிசிலர் வேள்ஆயின் பொருளைத் தமதெனக் கொள்வாராயின், அதனை மீட்க எண்ணாது மகிழும் பண்பாளனவன் *[புற.135:16]*. கொடாத மன்னர் நாணும்படியாக, என்றும், கெடாது பரந்த பிட்டங்கொற்றனின் தூய பெரும்புகழை இத்தமிழ்நாடு முழுதுங் கேட்கும்படியாகத் தம் செவ்விய பொய்யாத நாவருந்துமாறு பரிசிலர் அவனை வாழ்த்திப்பாடுவர் *[புற.168:20]*. கடிய நெடுவேட்டுவனிடம், பெருந்தலைச்சாத்தனார், 'வேந்தே! கடலைச் சார்ந்த முகில்கள் நீர்முகந்தன்றி மீளாவாறு போலப், பரிசிலரின் சுற்றம், களிறுகளை வழங்கி, நீ போற்றினாலன்றித், திரும்பிச் செல்லாது', என்று கூறினார் *[புற.205:14]*. அதியமான் நெடுமானஞ்சி, பரிசிலர்க்கு அடையாத வாயிலை உடையவன் *[புற.206:5]*. அகுதை என்பான் பரிசிலர்க்கு யானைகளை வழங்குபவன் *[புற.233:2]*. சுற்றத்தோடு கூடிய பரிசிலர் இரங்க, வெளிமான், கள்ளிகள் நிறைந்துள்ள இடுகாட்டிற்குச் சென்று சேர்ந்தான் *[புற.237:12]*. வல்லாருக்குத் தலைவனான பண்ணன்

என்னும் வள்ளல், நடுகல்லான பொழுது, பரிசிலரின் செல்வமும் அவனோடு போய்விட்டது *[புற.265:7]*. வேட்டுவத் தலைவனொருவன், தன் மறச் செயலுக்கு மகிழ்ந்து, வேந்தன் தந்த பெருஞ்செல்வத்தைப் பரிசிலர்க்கு வாரி வழங்குவான் *[புற.320:16]*. புலியால், தாயை இழந்த ஒரு மான் குட்டிக்கு ஆவொன்று பாலூட்டி வளர்ப்பது போல, ஒரு தலைவன் வறுமையால் வாடும் பரிசிலர்க்கு வேண்டியன நல்குவான் *[புற.323:3]*. ஒரு தலைவனின் மனைவி, பாணர்க்கும், பரிசிலர்க்கும் ஓயாது உணவளிப்பதால், பரிசிலர்க்கு ஓயாது வழங்குவதால், ஓயாத கையனானான் *[புற.334:6,10]*. சேரமான் வஞ்சன், விடியற்காலையில் நீங்காத மணம் கமழும் பந்தரின்கண், பரிசிலர்க்கு வரிசையறிந்து வழங்குவான் *[புற.398:7]*.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் பரிசிலர்க்குச் செல்வமாய் உள்ளவன் *[பதி.15:21]*. களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் பரிசிலர் இனிது வாழ்தற்கு வேண்டும் செல்வமாய் இருப்பவன் *[பதி.38:9]*. கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் பகைவரை வென்றுகொண்டே இருந்தான்; பரிசிலரும் அவன் வெல்லும் பொழுதெல்லாம் களிறுகளைப் பெற்றுக்கொண்டே இருந்தனர் *[பதி.47:2]*. வளமான நாட்டுக்குரியவனும், மறமிக்க படைகளையுடையவனும், மெய்யே கூறும் நாவினை உடையவனுமாகிய ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைப் புகழ்ந்து விறலியர்களே, ஆடுங்கள்; பரிசிலர்களே! பாடுங்கள்', என்று புலவர் காக்கை பாடினியார் நச்செள்ளையார் கூறினார் *[பதி.58:1]*. செல்வக்கடுங்கோ வாழியாதான் பரிசிலருக்குச் செல்வமாயிருப்பவன் *[பதி.65:11]*.

முருகப்பெருமான் பரிசிலரைத் தன் மார்பில் தழுவிக்கொண்டு அவர் வேண்டுவன வேண்டியாங்கு நல்கிப் பாதுகாப்பவன் *[முரு.273]*. அறிவிலாா் மாட்டு அறியான் போல் விளங்குவதும் அறிஞரிடத்து அறிவாளன் போல் விளங்குவதும், இரவலரின் தகுதிக்கேற்பப் பரிசில் வழங்குவதும், தகுதியில்லார்க்கும் பரிசில் அளிப்பதுமாகிய நல்லியக்கோடனின் உயர்ந்த பண்புகளைச் சிறந்த பரிசிலர் புகழ்ந்து பாடுவர் *[சிறு.218]*. நன்னனின் நாட்டிலுள்ள ஊர்மன்றங்களில், நன்னனிடம் செல்லும் பரிசிலரைக் கண்ட மக்களெல்லாம், சேய்மையிலிருந்து வந்தவர் என்று கருதுவதோடு, தம் வேந்தனிடம் வந்தவரைத் தம்மிடம் வந்தவராகவே கருதிப் போற்றுவர் *[மலை.492]*.

பகைவரை வென்று தம் நாட்டினை விரிவாக்கிய உதியஞ்சேரலாதனைப் பாடிச் சென்ற பரிசிலர் மகிழ்ச்சியடைவர் *[அக.65:6]*. வள்ளலின் மனைமுன்றில் நின்று பிடிகளைப் பரிசிலாகப் பெறும் பரிசிலரைப்போலத், தலைவன், தலைவியின் மனைமுன்றிலில் நின்று அவளுடைய அன்பைப் பெற்றான் *[அக.311:1]*.

அரலைக் குன்றத்துத் தலைவன், ஒருகண்மாக்கிணையை இயக்கும் பரிசிலரைப் பாதுகாப்பவனாவான் *[குறு.59:1]*.

பரிசில் தரும் தலைவனைப் பரிசிலர் பேரன்பினன் என்று புகழ்ந்தனர் *[நற்.347:9]*.

**பரிசிலன்**-இரவலன். குமண வள்ளல், தன்னைப் பாடிவந்த பரிசிலன்-இரவலன்-பரிசில் பெறாது வாடிச் செல்லுவது, தான் நாடு இழந்ததை விட மிகக் கொடியதாகும் என்று எண்ணினான் *[புற.165:10]*. கபிலர், விச்சிக்கோனிடம், 'யான் அந்தணப் பரிசிலன்; பாரி மகளிரை மணந்துகொள்', என்று கூறினார் *[புற.200:13]*. அதியமான் நெடுமானஞ்சி, பெருஞ்சித்திரனாரைப் பாராமலேயே சிறிது பரிசில் கொடுத்தனுப்பியபோது, 'யான் பொருளை மட்டும் விரும்பும் வாணிகப் பரிசிலன் அல்லேன்' என மொழிந்தார் *[புற.208:7]*. ஒருதலைவன், போரில் பகைவர்களை வென்று, போரில் யானைகள் அணிந்திருக்கின்ற பொன்னாலாகிய பட்டங்களைப் பரிசிலாக வழங்கும் பரிசிலனாய் (பரிசையளிப்பவன்) இருந்தான் *[புற.326:15]*. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், இவன் நம்மை மறவாது நினைத்து வந்திருக்கின்ற பரிசிலன் என்று இறைச்சி, கள், ஆடை முதலியன அளித்ததோடு, பொற்கலன்களையும் வழங்கி அவனுடைய வறுமையைப் போக்குவான் *[புற.397:12]*.

**பரிசிலென்**-இரவலென். (தன்மை வினையாலணையும் பெயர்). பரிசில் நீட்டித்த மூவனிடம், பெருந்தலைச் சாத்தனார், 'பழமரங்களை பரிசில் விரும்பிவந்த பரிசிலென்-இரவலென்-ஆகிய யானும் வறிதே திரும்புகின்றேன்', என்று கூறினார் *[புற.209:11]*. பரிசில் நீட்டித்த சேரமான், குடக்கோச் சேரலிரும்பொறையிடம், பெருங்குன்றூர் கிழார், 'நீ வள்ளல் ஆகையினாலே தாழ்த்தாது பரிசில் நல்குவாய் என்று கருதி வந்த பரிசிலெனாகிய யான் பாடுவதைக் கேட்டுப் பரிசில் தருபவனைப் போலப் பாவனை காட்டி என்னை வருத்திய நீ வாழ்வாயாக', என்று, இகழ்ச்சியாகக் கூறினார் *[புற.211:7]*.

**பரிசு**-இயல்பு. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம், தலைவி, சேரிப்பரத்தையர் தணியா வேட்கையால் தழுவியதால் நினது பரிசு-இயல்பு-அழிந்த வடிவினைக் கண்டு உன்னோடு ஊடுவதை மறந்து விட்டேன்; இனி நீ அப்பரத்தையர் சேரிக்கே சென்று விடு', என்று கூறினாள் *[கலி.91:14]*. தலைவன் ஒருவன், தலைவி மீது கொண்ட காதலால் அவனுடைய பரிசுகள் அழிந்து, நெருப்பிலே பட்ட மெழுகு உருகி உருவிழத்தல்போல், அவனுடைய உயிர் சிறிது சிறிதாகத் தேய்ந்தது *[கலி.138:21]*.

**பரிதல்**-ஓடுதல். அதியமான் குதிரைகள் பகைவரின் உருவம் அழியும்படி மிதித்துப் பரிதலால்-ஓடுதலால்-அவை குருதிக்கறைபடிந்த குளம்புடையவாயின *[புற.97:12]*.

**பரிதி**-ஞாயிறு. பழமுதிர்ச் சோலை மலையின் அருவி, பரிதி-ஞாயிறு-போன்ற தேனீக்களால் கட்டப்பெற்ற விரிந்த தேனடைகள் அழியும்படி இழிந்தது *[முரு.299]*.

ஒற்றை உருளையைப் பூண்ட தேரினையுடைய பரிதியாகிய அழகிய செல்வன், மாலையில் மேற்கில் உள்ள பெரிய மலையில் மறைநதது *[அக.360:2]*. திருமால் மார்பில் அணிந்திருந்த மணிமாலை, பரிதியின் ஒளிபோல், ஒளி வீசியது *[பரி.1:23]*.

**பரிதியஞ்செல்வம்-திகிரி** உருட்டும் அழகிய அரசச் செல்வம். கடலால் சூழப்பட்ட இவ்வுலகம் பிறருக்கு இல்லாமல் பரிதியஞ் செல்வம்-திகிரியை உருட்டும் அழகிய அரசச் செல்வம்-ஆளும் உரிமை, கைகூடியதாயினும் அது கனவில் தோன்றி மறையும் தன்மைத்தாகும் *[அக.379:7]*.

**பரிபாடல்-** ஒருவகை இசைப்பாடல். வெண்பாவின் யாப்பாகவும், கலப்புப்பாவாகவும், கொச்சகம் அராகம் சுரிதகம் எருத்துமாகிய நான்கையும் உறுப்பாகப் பெற்றுக் காமப் பொருள் நுதலியும், சொற்சீரடியும், முடுகியலடியும் எய்தி, நானூறடி உயர்வையும், இருபத்தைந்தடி இழிபையும் பெற்று வரும் இசைப்பாடல்

வையையாறு, இனிய தன்மையில் மேம்பாடுற்ற தேர்ச்சியினையுடைய இசையோடு கூடிய பரிபாடலாலே வாழ்த்தப்படுகின்றது *[பரி.11:137]*.

**பரிமா-**குதிரையாகிய விலங்கு. பலவகை ஆனேறுகள் விடப்பட்ட ஆயரின் தொழுவம் அரிமா, பரிமா-குதிரையாகிய விலங்கு-களிறு, முதலை முதலியன கலந்து போரிடும் மலைச்சாரலைப் போன்றிருந்தது *[கலி.103:18]*.

**பரிவு-1.** அன்பு. வேந்தன் அறியாமையுடையனாயும், அவன் கூறுவதையே கூறும் உழையரை உடையனாயும் இருநது, குடிமக்களின் பரிவு-அன்பு-கெடும்படியாக மிகைப்பொருளை வரியாகப் பெற விரும்பினால், அதனால் அவனுக்கும் அவன் நாட்டுக்கும் கேடுதான் உண்டாகும் *[புற.184:9]*.

குறை மறுக்கப்பட்ட தலைவன், நெஞ்சிற்குக் கூறுவானாய், 'நெஞ்சே! விளையாடுவதற்குப் பந்தோடு செல்லும், நம்மீது பரிவு இல்லாத, தலைவியை முனியாதே; யானுற்றநோய்க்கு அவளே மருந்தாவாள்', என்று கூறினான் *[நற்.140:7]*. தலைவன், தலைவியின் சிற்றிலைச் சிதைத்து விளையாடிப் பரிவு மிகும்படி சூளுரைத்தான் *[நற்.378:10]*.

**2. இரக்கம்.** சோழன் நலங்கிள்ளியிடம், உறையூர் முதுகண்ணன் சாத்தனார், 'வேந்தே! நின் படை மறவர் வளமான நாடுகளைப் பெற்றனர்; இனி, அவர் வறுமையுடையோர்பால் பரிவு-இரக்கம்-கொண்டவராகி, நின் பகைவர் வாழும் பாசறை வாழ்வை நீத்துத், தம்மைத் தேடி வருவோர்பால் உதவி செய்யும் குணத்தராகுக! என்று கூறினார் *[புற.29:18]*

**3. அவா.** தலைவனுக்குப், பரத்தையரைப், பாணன் பரிவோடு-அவாவோடு-சேர்த்துவைப்பான் *[அக.56:10]*.

**பருகுதல்-குடித்தல்.** இளவெளிமான் சிறிது கொடுத்தனுப்பியபோது, பெருஞ்சித்திரனார் அதனைக் கொள்ளாது, நெஞ்சிற்குக் கூறுவாராய், 'நெஞ்சமே! எழுந்திரு; தாம் கண்ணாற் பருகுதல்-குடித்தல்-போன்ற விருப்புடன் பாராது, கண்டும் அறியார் போல், உள்ளத்தில் மகிழ்வின்றித், தரும் பரிசிலை யார் விரும்புவர்', என்று கூறினார் *[புற.207:2]*.

ஈருடம்பிற்கு ஒருயிர் எனத் தகும் காதலர், படுக்கையின்கண், நள்ளிரவில், பருகுதலையொத்த காதலுடன், மாறி ஒருவர்மெய்யில் ஒருவர் மெய்புகுவது போன்று, முயங்கியிருப்பர் *[அக.305:6]*. பிரிவுத் தலைவியிடம், தோழி, 'தோழியே! நினது இனிமை பொருந்திய மார்பினைப் பருகுதல் போலும் காதலுள்ளத்துடன் பின்னித் தழுவும் பொருட்டு விரைவில் தலைவர் வருவர்; வருந்தாதே', என்று கூறினாள் *[அக.399:4]*.

**பருகுநர்-குடிப்பவர்.** சோழன் நலங்கிள்ளிக்குரிய உறையூரின்கண் கள்ளைப்பருகுநருடைய-குடிப்பவருடைய-கைகள் நடுங்குவதால் கீழே ஒழுகிய கள்ளால் தேர்கள் செல்லும் தெரு சேறாகும் *[புற.68:15]*.

**பருத்தி -1.** பஞ்சு. மலையமான் திருமுடிக்காரி, பருத்தி-பஞ்சு-போன்ற மென்மையான ஊனையும், கள்ளையும் இடைவிடாது பருகி மகிழும்படி, இரவலர்க் களிப்பான் *[புற.125:1]*. பருத்தியில் கலந்திருக்கும் சிறையையும், செற்றையையும் நீக்கிப் பின் பருத்தியை நூற்பாள் *[புற.326:5]*. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனிடம் நல்லிறையனார் 'வேந்தே! எம் சுற்றத்தின் பசிவருத்தம் கெடுமாறு, கொழுவிய ஊன் துண்டினால், எம் வயிற்றைப் பருத்தியைத் திணித்த மூட்டையைப்போல, நிறைவித்து அனுப்புவாயாக', என்று கூறினார் *[புற.393:12]*.

**2. பருத்திச்செடி.** ஒரூர், பருத்தியை பருத்திச் செடியை-வேலியாகப் பெற்றிருந்தது *[புற.299:1]*. எலி வேட்டையாடும் வேட்டுவச்சிறுவர், ஊக நுண்கோலிலே வளாரை நாணாகப் பூட்டி, உடைமரத்தின் முள்ளினை அம்பாக வைத்து, பருத்திக் காட்டு வேலிப்புறத்திலே எலிகளை வீழ்த்தக் குறிபார்த்திருப்பர் *[புற.324:7]*. காட்டில், பாறையைச் சேர்ந்து இருந்த சிதைவுற்ற குடிலில், தாழியில், தழைத்த பருத்தியின் பருத்த வயிற்றினையுடைய இளங்காயை, ஆண்பறவைகள், பெண் பறவைகட்கு அருத்தும் *[அக.129:7]*.

**பருதி-1.** ஞாயிறு. பருதியால்-ஞாயிற்றால் (அதன் ஒளியால்)-சூழப்படுவது இப்பயன் பொருந்திய நிலவுலகமாகும். *[புற.358:1]*.

பருதி அகன்ற பெரிய வானில் தோன்றி, உலகில் பரவிய இருளை விழுங்கிப், பகலொளியை உலகில் பரவச் செய்யும் *[பெரு.2]*.

பகலைத் தோற்றுவிக்கும் பலகதிர்களையுடைய பருதியாகிய அழகிய செல்வன், வானின்கண், தன் ஆணையாகிய

ஆழியால் உலகைக் கிழித்துச் சென்று, நீரில்லையாக்கி, வற்கடத்தை உண்டாக்கினான் *[அக.229:1]*. ஒற்றை உருள் பூண்ட தேரினையுடைய பருதியாகிய அழகிய செல்வன் பகல் முழுதும் ஒளியைப் பரப்பி, மேற்கில் உள்ளதாகிய பெரிய மலையில் மறையும் *[அக.360:2]*.

பருதியாகிய அழகிய செல்வனின் நிறம் போலச் செருந்திப்பூ மலர்ந்தது *[கலி.26:2]*.

**2. ஆழி (உருளை).** கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனின் குருதிக்கறை படிந்த தேர்ப்பருதி-ஆழி-தானே செல்லுங்கால், அளவில்லாத பகைவரின் தலைகள் அகப்பட்டு நசுக்கப்படுவதால், வெற்றியையளிக்கும் *[பதி.46:8]*.

சுரத்திலுள்ள நடுகற்கள், உப்பு வாணிகரின் உப்பு வண்டியினுடைய பருதியின் பூண்களைத் தேய்த்து பொலிவழியச் செய்யும் *[அக.343:4]*.

திருமால் பருதிப்படையை வலப்பக்கத்திலே உடையவர் *[பரி.3:89]*.

**3. வட்டம்.** அசுரர் திரள் மறைத்த ஞாயிற்றைக் கண்ணன் மீட்டு வந்து இந்தப் பருதியாகிய-வட்டமாகிய-உலகத்தினுடைய இருளைப்போக்கினான் *[புற.174:3]*. கரிகாற் பெருவளத்தான், மறைவிதிப்படிப் பருதியின் வடிவினதாய்ச் செய்யப்பட்ட வேள்விச்சாலையுள், வேதவேள்வியைச் செய்து முடித்தான் *[புற.224:7]*.

தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை, வேள்வி வேட்கும்பொழுது, அவனுடைய பட்டத்தரசி, மானின் தோலைப்பருதியாக அறுத்துத் தூய்மை செய்து, அதில் பலவிதமான மணிகளைப் பதித்து அணிந்து கொண்டாள் *[பதி.74:12]*.

உழவர், பருதியாகிய நெற்குவியலை, நெற்கூடாக்கிப், புரியால் சுற்றிக் காப்பர் *[அக.37:15]*.

**4. வட்டப்பலகை.** தாய், தன் புதல்வனைக் கண்டு களித்து முத்துக்களை விளிம்பில் அரும்புகளாக வைத்து இழைத்துப், பவழத்தால் செய்த பருதியின்-வட்டப் பலகையின்-மீது யானைப் பொம்மையைச் செதுக்கி வைத்த, அதனை ஈர்த்து வருக என்றாள் *[கலி.80:5]*.

**பருந்து-1.** பாறு. (ஒருவகைக் கழுகினம்). பாண்டியன் கருங்கையொள்வாட் பெரும்பெயர் வழுதியிடம் பரிசில் பெற விரும்பிய பரிசிலர், சுரத்தில் செல்வோர், ஆறலைகள்வரால் கொல்லப்பட்டுக் கற்களால் மூடப்பட்டதால், உணவினை இழந்து வருந்திய பருந்து-பாறு - உன்ன மரத்தில் தங்கியிருக்கும் வழியென்றும் பாராமல் வருவர் *[புற.3:22]*. சோழன் நலங்கிள்ளியின் தம்பி மாவளத்தான், வளைந்த சிறகினையும், கூரிய நகத்தினையுமுடைய பருந்திற்கு அஞ்சித் தன்னிடம் அடைக்கலம் அடைந்த புறாவிற்காகத் துலாக்கோலில் ஏறித் தன்னையே ஈந்த சிபியின் மரபில் வந்தவனாவான் *[புற.42:5]*. சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும், சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும் பருந்து ஊனை உண்ணும்படியாகப், போர்க்களத்தின்கண் பொருது, படையுடன் பட்டனர் *[புற.62:6]*. வன்பரணர், வறுமையினாலே குளிர்காலத்துப் பருந்தின் சிறகைப் போன்ற சிதைந்த ஆடையை உடுத்தியிருந்தார் *[புற.150:1]*. பருந்தினது பசியைத் தீர்க்கும் வேலினை யுடையவன், நாலைக்கிழவன் நாகனாவான் *[புற.179:11]*. போர்க்களத்தில் இறந்த ஒரு மறவனின் கழுத்தில் கிடந்த நொச்சிமாலை துண்டாகிக் குருதியில் படிந்து கிடந்ததனை, ஊனின் துண்டம் எனக் கருதிப் பருந்து உயரத்தில் தூக்கிச் சென்றது *[புற.271:7]*. போர்க்களத்தில் மார்பில் புண்பட்டு இறந்த ஒரு மறவனின் மனைவி, அவனுடைய மார்பைத் தழுவுதற்கு முன்பே, அப்புண்ணில் பருந்துகள் மொய்த்துக் கிடந்தன *[புற.288:9]*. மகட்கொடை மறுத்த தலைவனின் நல்ல ஊர், பருந்து வந்து இளைப்பாறியிருக்கும் இடைமதில் பொருந்திய வரைப்பையுடையதாய் இருந்தது *[புற.343:15]*. சுரத்தின்கண் வாழும் கோட்டான்களின் துடியோசை போன்ற கடிய குரலோசை, உழுஞ்சின் மரத்தின் கவடுகளிலிருந்து பெடையையழைக்கும் சேவற்பருந்தின் குரலோடு கலந்தொலிக்கும் *[புற.370:7]*.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், பரிசில் பெறவந்த மகளிருடைய மழையால் நனைந்த பருந்தினுடைய ஈரிய சிறகையொப்பக், கிழிந்த, மண்படிந்து மாசேறிய கந்தையாகிய உடையை நீக்கிவிட்டுப், பட்டாடையை அணிவித்தான் *[பதி.12:19]*. சோழ, பாண்டியர் நடுங்குமாறு முழங்கும், பல்யானை செல்கெழுகுட்டுவனின் முரசிற்குக், குருதி கலந்த, கள்ளோடு கூடிய பெரிய பலியினைக் காக்கையும், பருந்தும் உண்ணுமாறு இடுவர் *[பதி.30:39]*. ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் படை மறவர் அணிந்துள்ள, பனந்தோட்டாலாகிய, பகைவரின் குருதிபட்டு நிறம் மாறுபட்ட மாலையைப் பருந்துகள் ஊன் துண்டமெனக் கருதிக், கவர்ந்து செல்லுவதற்கு அற்றம் பார்த்திருக்கும் *[பதி.51:32]*. தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறையின் பட்டத்தரசி, வேள்வியின் போது, மானின் தோலினைத் தூய்மை செய்து, வட்டமாக அறுத்து, அதன் விளிம்பிலே பலவிதமான மணிகளை இழைத்த அணியைச் சூடிக் கொண்டாளாக, விசும்பிலே பறக்கும் பருந்து ஊனென்று கருதிக் கவருவதற்கு எண்ணும் *[பதி.74:15]*. தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறையின் யானைப்படை, உயரத்தில் பறக்கும் பருந்தின் நிழலை நிலத்தில் கண்டு சினந்து பாயும் *[பதி.77:9]*.

கொடுவில் எயினர், ஊன் தின்றற்குப் பருந்துகள் வந்து படியுமாறு பகைவரைக் குத்தி அழிப்பர் *[பெரு.117]*. அரசர் பகைவரை வென்று திறை கொள்ளும் பொருட்டுப் பருந்தும்

பறத்தலாற்றாத உயர்ச்சியையுடைய அரண்களை அமைப்பர் *[மது.231]*. மதுரையின் கண் அறமுறைப்படி வாழ்ந்து வந்த வணிகரின் இல்லங்கள், பருந்துகள் இளைப்பாறி இருந்து பின்னர் உயரே பறந்து செல்லும்படியான தன்மையவாய் இருந்தன *[மது.502]*. திருமாவளவன் வானிடத்தே, பருந்து ஊனினை விரும்பித் திரியும்படியாகப், பகைவரை யழித்தான் *[பட்.233]*. பகைவர்களைக் கொன்று பருந்துகட்கு உணவாக்கும் படைகளையுடையவன் நன்னன் *[மலை.489]*.

யாமரங்கள் உயர்ந்த சுரத்தின்கண், பருந்துகள் தங்கி, வழிச்செல்வோர் வருத்தத்தை அடையும்படியான ஓசையைச் செய்யும் *[அக.19:2]*. சுரத்தின்கண் ஓமை மரங்களில் பருந்து ஈன்று காவல் காக்கும் *[அக.21:15]*. அரசர் வேற்படைகளில் குருதி தோயும்படியாகப் போர் செய்யும்பொழுது பருந்துகள் வந்து சூழ்ந்து கொள்ளும் *[அக.27:14]*. சுரநெறியில், யா மரத்தின் உயர்ந்த கிளையிலிருந்த, வலிய, பறத் தலையுடைய, சிள்ளென்று ஒலி செய்யும், இரைகொள்ள வல்ல பருந்தினது சேவல், இளியென்னும் இசைபோன்ற இனிய குரலால், வளைந்த வாயினையுடைய தன் பெடையை அழைக்கும் *[அக.33:5]*. பழையன் என்பான், பாசறையில், நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்றுறை என்போருடன் பருந்து சுற்றும்படி போர்செய்து பட்டான் *[அக.44:11]*. கற்கள் விளங்கும் காட்டில், பெரிய சிறையினையும், வளைந்த வாயினையுமுடைய பருந்தின் பேடை தன் துணையினை நோக்கி நெடுங்கூப்பீடு செய்யும் *[அக.79:12]*. கண்களால் வெயிலைப் பார்க்க இயலாதவாறு ஞாயிறு காயும் வெப்பமிக்க சுரத்தில், வெண்கடம்ப மரத்தின் காய்ந்து போன கிளையில் ஏறி, இரையினைப் பாய்ந்தெடுக்கும் பருந்து, தனிமை கொள வருந்தும் *[அக.81:9]*. சுரநெறிகளில் மானைக் கொன்ற புலி, தின்று விட்டுப் போன, புலால் நாற்றமுடைய தசை கிடக்குமிடத்தில் பருந்துகள் பலவும் வந்து சூழ்ந்து கொள்ளும் *[அக.97:7]*. அஞ்சத்தக்க கவர்த்த நெறிகளில், வெள்ளிய தலையினையுடைய பருந்து, ஓமைமரத்தில் ஏறி, இரக்கம் உண்டாகத், தனது பெடையினை அழைக்கும் *[அக.117:7]*. காற்றினால் வீழும் தேக்கின் இலைகள், நீண்ட கூப்பீட்டினைச் செய்யும் பருந்தின் வட்டம் எழுந்ததைப் போன்று, விசும்பெல்லாம் பரவிக், காட்டின் வழியெல்லாம் மறைக்கும் *[அக.299:6]*. ஆனிரையைக் கவரும் கள்வரின் தலைவனும், பகைவரின் அரண்களை அழித்தவனுமாகிய பாண்டியன், பருந்துகள் வந்து கூடும்படியாகப் பகைவரது பலபோர்களையும், வென்றவனாவான் *[அக.342:8]*. சுரத்தில் ஆறலைகள்வரால் கொல்லப்பட்ட வழிப்போவாரின் ஊனினை உண்ணுவதற்காக, வளைந்த வாயினையும், கூரிய நகத்தினையுமுடைய பருந்தின் சேவல், தன் பிணையினைத், தெளிந்த குரலால் அழைக்கும் *[அக.363:13]*. களிறு, கொம்பினால் குத்திக் கிழித்துப் புண்ணுண்டாக்கிய ஓமையின் அடிமரத்தை ஊன் என்று கருதி, அதன்கண் நெடிது உயர்ந்த யா மரத்தில் உள்ள பருந்து வந்து தங்கும் *[அக.397:13]*.

பாலை நிலத்திலுள்ள ஓமை மரத்தின் அழகிய கிளையின்கண் இருந்த இனத்தினின்றும் பிரிந்து வந்த பருந்தினது தனிமையைப் புலப்படுத்தும் தெளிந்த ஓசை, சுரத்தில் செல்லும் மனிதர்களுக்கு உசாத்துணையாக அமையும் *[குறு.207:3]*. சுற்றுவளைப் போன்ற ஆறலைகள்வர், சுரவழியில் தங்கி, வழிப்போவாரைக் கொன்றதனாலுளதாகிய புலாலுக்காகப், பருந்துகள் எதிர்பார்த்துக் காத்திருக்கும் *[குறு.283:7]*. சுரத்தில், ஞெமை மரத்தின் உச்சியில், இறந்தோரது தசையை விரும்பி, ஒற்றைப் பருந்து காத்திருக்கும் *[குறு.285:7]*.

வானத்தை அளாவும்படியான உயர்ந்த கிளைகளையுடைய வேப்பமரத்தில் குஞ்சுகளை ஈன்ற பருந்து வருந்தியுறையும் *[நற்.3:1]*. கிள்ளிவளவன், பருந்துகள் பிணங்களில் விழுந்து அலைக்குமாறு, பகைவருடைய படைகளைக் கொன்று குவிப்பான் *[நற்.141:7]*.

நெய்ப்பின்றி வறண்ட தலையையும், உளிபோன்ற கூர்மையையும், வலிமையையும், கொண்ட அலகினையுடைய பெண்பருந்து, வற்றிய ஓமை மரத்தின் கிளையின்கண் இருந்து, பிரிந்தோர் தம் தனிமைத் துயரை நினைக்கும் படியாகத் தன்னுடைய சேவலைக் கூவியழைக்கும் *[ஐங்.321:1]*. பருந்து எடுத்தேகும் பசிய தலையையுடைய அரவம் காதற்ற கவணை ஒத்திருக்கும் *[ஐங்.1:2]*.

தலைவி, தன் புதல்வனிடம், 'தான் குறித்ததொன்றை எடுத்துக்கொள்ளும் பருந்தினைப் போல உன் தந்தையைப், பரத்தை கவர்ந்து கொண்டாள்', என்று கூறினாள் *[கலி.82:27]*. ஆனேறுகளால் குத்தப்பட்டுச் சரிந்த ஆயர்களின் குடரை எடுத்தேகும் பருந்தின் வாயிலிருந்து தவறி, ஆலமரக்கிளைகளிலும், கடம்பமரக்கிளைகளிலும் தொங்கும் குடர்கள், அம்மரங்களில் வதியும் தெய்வங்கட்குச் சூட்டிய மாலைகள் தொங்குவதைப் போன்றிருந்தன *[கலி.106:27]*.

**2. வளையல்.** தலைவியினுடைய முன்கையிலே நீங்கு தலின்றாய்க்கிடந்து சுழலும் பறவாத பருந்து-வளையல்-அணிந்த கையைப் பிடித்துத் தெளிவித்துத் தலைவன், தலைவியைக் கூடினான் *[கலி.147:37]*.

**பருமம்-1.** பதினெட்டு வடமுள்ள மேகலை. கந்தருவ மகளிர் கண்ணுக்கினிய ஒளியினையுடைய பருமத்தை-பதினெட்டு வடமுள்ள மேகலையை-அணிந்த, தாழ வேண்டிய இடம் தாழ்ந்து, உயர வேண்டிய இடம் உயர்ந்த, அல்குலையுடையவராயிருந்தனர் *[முரு.146]*.

குதிரையேறி வந்தேன் என்று கூறிய பரத்தைமைத் தலைவனிடம், தலைவி, 'நீ ஏறிய குதிரை நன்றாயிருந்தது; அதனை இப்பொழுதறிந்தேன்; நீ அறமுறைப்படி மணந்து கொண்ட பருமமணிந்த காமக்கிழத்தியாகிய குதிரையோ அன்று; சேரிப்பரத்தையாகிய குதிரை அது', என்று கூறினாள் *[கலி.96:34]*.

**2. பக்கரை, குதிரைச்சேணம்.** பாண்டியன் பாசறையில் பருமம்-பக்கரை-களையப்படாத குதிரைகள், மழைத் துளிகளை அரசன் மேல் சிதறின *[நெடு.179]*.

**3. (யானையின் முதுகிலிடும்) இருக்கை-** பருமத்தை - முதுகிலிடும் இருக்கையை - உடைய யானை தன் அயர்ச்சியாலே பெருமூச்சுவிட்டாற்போல, வாடைக்காற்று வீசியது *[நற்.89:8]*.

யானையேறி வந்தேன் என்று கூறிய பரத்தைமைத் தலைவனிடம், தலைவி, 'நீ கூறிய அந்த யானை, திருவைப் பொறித்து வைத்த, புனைந்த, தலைப்பணியாகிய பருமத்தை உடைய யான்னையென்று (பரத்தை) கேள்விப்பட்டமேன்', என்று, கூறினாள் *[கலி.97:14]*.

பருவம்-காலம். பல்யானைச் செல்கெழுகுட்டுவன் கார்ப்பருவம்-காலம்-மழைபெய்வதை மறந்தபொழுதும் சோற்றினை எல்லோருக்கும் அளிக்கும் புதுவருவாயினையுடைய செல்வத்தையுடையவன் *[பதி.24:29]*.

கூதிர்ப்பருவத்தில் வானிடையில் திங்கள் மிக்க ஒளியோடு விளங்கியது *[சிறு.250]*. வரகு வைக்கோலாலே வேய்ந்த அழகிய குடியிருப்புக்கள், மழைப்பருவத்தில், விசும்பிடத்தே பரவிய முகிலைப் போன்றிருந்தன *[பெரு.190]*. தொண்டைமான் இளந்திரையன், விறலியர்க்குப் பொற்றாமரை மலரைக் கூந்தலில் அணிவித்து, மழைப்பருவத்தில் முகிலினின்றும் பகலில் பெய்யும் துளிகளோடு மின்னல் ஓடினாற்போல, அவரின் கரிய கூந்தலிலே பொன்மாலையைச் சூட்டினான் *[பெரு.483]*. மழைப்பருவத்தில் முகில் தான் கடலில் முகந்த நீரை மலையில் பொழியும்; மலையில் பொழிந்த நீர் கடலிற் சென்று புகும் *[பட்.126]*.

தலைவியின் முலைகளைத் தலைவன் தழுவிப் பாராட்டிய பருவம் போய் இன்று (புதல்வன் பிறந்த பிறகு, தன் மார்பில் தலைவியின் முலைப்பால் படுதற்கு அஞ்சி அவன் ஒதுங்கினான் *[அக.26:11]*. பிரிவிடை வருந்தும் தலைவியிடம், தோழி, 'தோழியே! தலைவர் தாம் திரும்பிவரும் காலம் கார்ப்பருவமே என்று கூறிச் சென்றார்; இதோ, மழை பொழிகின்றது; கார்காலம் வந்துவிட்டது; வருந்தாதே', என்று கூறினாள் *[அக.85:15]*. கார்காலத்தில் வருவதாகக் கூறிச் சென்ற தலைவன் காலம் நீட்டித்த பொழுது, தலைவி, தோழியிடம், 'தோழியே! மழை பொழிந்து கார்காலமும் கழியப் போகின்றதே, தலைவர் கூறிச் சென்றது இக்கார்ப்பருவத்தையல்லவா? இன்னும் வரவில்லையே ' என்று கூறினாள் *[அக.139:19]*. தலைவன் சிறைப்புறத்தானாய பொழுது, தோழி, தலைவியிடம், 'தோழியே! நாம் தலைவனோடு கொண்ட நட்பு அன்னை வேலனைக் கொண்டு வெறியாட்டெடுக்கும் பருவமாய் விளைந்தது', என்று கூறினாள் *[அக.232:15]*. முகில், வான் அதிரும்படியாக முழங்கிப், பாம்பினை வருத்தி, மழையைப் பொழிந்து கார்ப்பருவத்தைச் செய்தது *[அக.274:3]*. தோழி, தலைவியிடம், 'தோழியே! நம் தலைவர் கூறிச் சென்ற இளவேனிற்பருவம் அவரிருக்குமிடத்தில் இல்லையோ? என, நாம் எண்ணிக்கொண்டிருக்கும்போதே அவரும் வந்துவிட்டார்', என்று கூறினாள் *[அக.317:17]*. தலைவனுடன் சென்றுவிட்ட தலைவியைக் குறித்துத் தாய், 'எங்களின் கடமையை யாற்றும் மணத்தின் வாயிலாகச் செல்லாமலும், வெப்பம் தணிந்த பருவத்தில் செல்லாமலும், தலைவன் என்மகளைக் கொண்டு சென்று விட்டானே', என்று வருந்தினாள் *[அக.397:8]*.

தலைவன் குறித்த கார்லத்தில் வாராமையால் வருந்தும் தலைவியிடம், தோழி, 'தோழியே! இப்போது பெய்யும் மழை கார்ப்பருவ மழையன்று; காலமல்லாக் காலத்தில் பெய்த மழையைக் கார்கால மழை எனக் கருதிக்கொன்றை மரங்கள் மலர்ந்தன; கார்காலமென்று வருந்தாதே', என்று கூறினாள் *[குறு.66:3]*. செவ்வியையுடைய பருவத்தில் உண்டான தேனை விரும்பி வண்டுகள் புன்னை மரத்தில் கூடும் *[குறு.175:1]*. 'தலைவர் எங்கே இருக்கின்றாரோ? அவர் கூறிச் சென்ற பருவம் இதுவே', என்று, தலைவி வருந்தினாள் *[குறு.285:4]*. பிரிவிடை வருந்தும் தலைவியிடம், தோழி, 'தோழியே! தலைவர் கூறிச் சென்ற கார்ப்பருவம் இதோ வந்துவிட்டது; அதனை அறிவிக்கும் முல்லைக்கொடிகளும் மலர்ந்தன; இனி அவர் விரைவில் வருவர்; வருந்தாதே', என்று கூறினாள் *[குறு.358:4]*. 'இது கார்ப்பருவமன்று; கார்காலமாயின், தலைவர் வந்திருப்பார்', என்று, தோழி, தலைவியிடம் கூறினாள் *[குறு.382:5]*.

கார்காலத்தின் இறுதியில் முன்பனிப் பருவத்தில் உழுந்தினுடைய இலைகளெல்லாம் சிதையும்படி வாடைக்காற்று வீசும் *[நற்.89:5]*. தலைவன் கூறிச்சென்ற கார்காலத்தைக் கண்டு வருந்தும் தலைவியிடம், தோழி, 'தோழியே! இது தலைவர் கூறிய கார்ப்பருவம் அன்று; அறியாமையாலே கடல் நீரையுண்ட முகில் மழை பெய்வதைக் கண்டு, கார்காலமென்று கருதிப் பிடவுங், கொன்றையுங் காந்தளுமலர்ந்தன; அவற்றை நோக்கி நீ மயங்காதே', என்று கூறினாள் *[நற்.99:4]*. 'தலைவர் கூறிச் சென்ற பருவமும் சென்றுவிட்டது; நள்ளிரவில், காமத்தால், இத்தனை நாளும் வருந்தியிருந்த யான் இன்னமும் வருந்த வேண்டுமோ? பனை மடலிலே இருக்கும் அன்றிலின் குரலைக் கேட்டும் எங்ஙனம் ஆற்றமுடியும்', என்று, தோழியிடம், தலைவி கூறினாள் *[நற்.218:6]*. தலைவனைப் பிரிந்திருக்கின்ற தலைவிக்குக் கார்ப்பருவமானது மிகுதியான காமத்தை உண்டாக்கும் *[நற்.238:5]*. தலைவன் திரும்பி வருவேன் என்று கூறிச் சென்ற கார்ப்பருவத்தில், பொன்போன்று மலரும் கொன்றையும், பிடாவும் மலர்ந்தன *[நற்.246:10]*. பிரிவினால் வருந்தும் தலைவியை ஆற்றுவிக்கும் பொருட்டு, முகிலே! நீ காலமல்லாக் காலத்தில் பொய்யாக இடித்து மழைபொழிவதைத் தலைவர் கூறிய கார்ப்பருவமென்று அறிவில்லாத மயில் ஏமாந்தது போல, நான் ஏமாற மாட்டேன்', என்று தோழி

கூறினாள் *[நற்.248:4]*. தலைவி, தோழியிடம் 'தோழியே! தலைவர் வருவேன் என்று கூறிச் சென்ற கார்ப்பருவம் கழிந்துவிட்டது; இப்படியே பலநாள் செல்லின் யான் உயிர் வாழலேன்', என்று கூறினாள் *[நற்.364:1]*.

தலைவர் பரத்தையோடு கூடிக் குலாவுவதால் உண்டான பழிச்சொல், இளவேனிற்பருவத்தில் மலர்ந்த குராமரத்தினது கிளையில் உள்ள குயில் கூட்டம் செய்யும் ஆரவாரத்தினும் பெரிதாயிருந்தது *[ஐங்.369:5]*. தலைவன்குறித்த கார்ப்பருவத்தில் வரவில்லையே என்பதற்காகத் தலைவி வருந்தவில்லை; அவர் பொய் கூறுவதற்கு நாணவில்லையே என்பதைக் கண்டுதான் தலைவி வருந்தினாள் *[ஐங்.472:2]*. தலைவன் குறித்துச் சென்ற கார்ப்பருவத்தில் முல்லையின் மலர்கள் மலர்ந்தன *[ஐங்.476:2]*.

இனமாகிய வண்டுகள் இளவேனிற் பருவத்தில் புதிதாகிய தேனை நுகர்ந்தன *[கலி.26:9]*. தலைவன், குறித்துச் சென்ற இளவேனிற் பருவத்தில் வாராததால் தலைவியின் காமநோய் முன்னையினும் மிகுந்தது *[கலி.33:20]*. பிரிந்திருக்கின்ற தலைவன் வந்தவுடனே, தலைவியைத் துன்புறுத்திய மாலைக்காலம் ஓர் அரசன் படையாலே மெலிந்த பருவத்தில் இருந்தபொழுது அவனுக்கு மேலாய் வந்த கடிய பகைவன் படைவலிமிக்க நல்ல வேந்தனைக் கண்டதும் அழிந்து ஓடுவதுபோல் ஓடி இருளிலே மறைந்துவிட்டது *[கலி.120:22]*. பல உலகங்களில் உயிர்களைப் படைத்த இறைவன் ஊழிப் பருவத்தில் (முடிவில்) தன்னிடமே அவ்வுயிர்களை அடக்கிக் கொள்வான் *[கலி.129:1]*. நல்லாட்சி புரிந்த வேந்தனுக்குப் பிறகு நீதியல்லாத வேந்தன் ஆளும் பருவம் போலப், பகற்பொழுது கழிந்த மாலைப் பொழுதில் கடலின் அலையோசை பிரிவுத் தலைவியைத் துன்புறுத்தும் *[கலி.129:6]*.

பரத்தைமைத் தலைவனிடம், தோழி, 'நீ முருகப்பெருமான் மீது கூறிய பொய்ச்சூளை ஆற்றுவதற்காக நின் மனைவி வழிபாடாற்றும் காட்சியை, நீ பரத்தையரைப் புணர்கின்ற பருவத்திலும் திருப்பரங்குன்றத்திற்குச் செல்லுதல் உண்மையானே, காண்பாய்', என்று கூறினாள் *[பரி.8:85]*. வையை வெள்ளத்தில் நீராடுவதற்காக மொட்டுப் போன்ற பருவத்தையுடைய இளமகளிரும் வையைக் கரையை அடைந்தனர் *[பரி.10:19]*. பனிப் பருவத்தின்கண் பனி மிகுதலால் குளிர் நடுங்குதலைச் செய்யும்*[பரி.11:75]*. கார்ப்பருவத்தினையுடைய முகிலின் இருபுறங்களிலும் ஞாயிறும், திங்களும் ஒளி வீசுவது போலத் திருமாலின் இருபுறங்களிலும் உள்ள கைகளில் ஆழிப்படையும், சங்கமும் ஒளி வீசின *[பரி.13:7]*. பருவமின்றி எப்பொழுதும் மலரும் கோங்கமலர் திருப்பரங்குன்றத்தின் சுனையில் மலர்ந்திருக்கும் *[பரி.19:79]*.

**2. அகவை.** தாய், தன் மகளிடம், 'நீ பேதையல்லை; பெதும்பைப் பருவத்தை-அகவையை-அடைந்துவிட்டாய்; இனிமேல் நீ வீடுதாண்டிச் செல்லக்கூடாது', என்று கூறினாள் *[அக.7:7]*.

**3. அமயம்.** 'தாய் நன்றாக உறங்குகின்றாள்; தலைவன் இரவுக்குறிக்கு வருவதற்குப் பருவம்-அமயம்-இதுவேயாகும்', என்று, தலைவன் சிறைப்புறத்தானாகத், தோழி, தலைவியிடம் கூறினாள் *[அக.68:11]*.

**4. தன்மை.** தலைவனைக் காணாவிடில் தலைவி உயிர் இழக்கும் பருவத்தை-தன்மையை அடைவாள்; ஆதலின், தலைவி, தலைவனின் ஊருக்குச் செல்ல விரும்புவதாகத் தோழி கூறினாள் *[ஐங்.237:2]*.

**பருவரல்-துன்பம்.** அசுரர் மறைத்த ஞாயிற்றை மீட்டு வந்து உலகத்தின் இருளாகிய பருவரலை-துன்பத்தை-மாயோன் தீர்த்தது போலப், பகைவர் கைப்பட்ட சோழநாட்டைக் காத்தவன், மலையமான் சோழியவேனாதி திருக்கண்ணன் *[புற.174:4]*.

பிரிந்த தலைவன் விரைவில் வருவதற்குரிய நற்சொற்களைச் சொல்லிப், பெருமுதுபெண்டிர் தலைவியின் பருவரலைக் களைய முயன்றும் தலைவி அமையாமல் கலங்கினாள் *[முல்.21]*.

அன்பில்லாதவனுடைய அறிவுடைமொழியை மெய்ம்மை என விரும்பி நடுஇரவில் மனம் உருகும்படியான பருவரலை யடைந்ததாகத் தலைவி கூறினாள் *[அக.260:14]*. தான், தனது பிரிவினை உணர்த்திய போது, பருவரலைத் தரும் வருத்தத்தால் அழிந்த தலைவியின் நிலையையறிந்து தங்குதல் அரிதாக உள்ளது, என்று, தலைவன் இடைச்சுரத்தில் தன்னெஞ்சிற்குக் கூறினான் *[அக.299:4,20]*. 'தலைவியின் மயக்கம் பொருந்திய பருவரல் தீரும்படியாக விரைந்து வந்த காரணத்தால், பெருமானே, நினது கண்ணி வாழ்க!' என்று, தோழி வாழ்த்தினாள் *[அக.314:17]*.

கொக்கினுடைய பார்வையைக் கண்டு அஞ்சிப் பருவரலடைந்த ஞெண்டு வளைக்குள் விரைந்து சென்றது *[குறு.117:2]*.

பிரிந்து சென்ற தலைவர் நீ பருவரல் உள்ளத்தோடு கொண்ட கவலை நீங்க, விரைவில் வருவர், என்று, தோழி, தலைவிக்குரைத்தாள் *[நற்.18:1]*. 'நாரையே! எம்மூரின் குளத்திலுள்ள, கெளிற்று மீனைத்தின்று விட்டுத், தலைவரிடம் சென்று, என் கலன்கள் கழலுகின்ற பருவரலைக் கூறுவையோ, மறப்பையோ, என்று, காமமிக்க கழிபடர் கிளவியால் தலைவி கூறினாள் *[நற்.70:9]*. வரைவிற்குப் பொருள்தேடச் சென்ற தலைவன் வந்துழித் தோழி, தலைவியிடம், 'தோழியே! காமநோய் மிகுதலானாகிய மிக்க பருவரலினின்றும் நாம் இனி இங்கு உய்ந்து வாழ்வோம்' என்று கூறினாள் *[நற்.78:6]*. வினைவயின் பிரியும்பொழுது, 'என்று வருவீர்', என்று கேட்ட தலைவிக்கு, வினை முடிந்தவுடனே வருவேன் என்று கூறியவுடன் உண்டாகிய அவளுடைய பருவரல் எல்லாம் தீரும்படியாக நாம் இன்று வருவதைச் சுவரின்கண் இருக்கின்ற பல்லி அறிகுறியாக அடித்துத் தெரிவித்திருக்குமோ? என்று

தலைவன் கூறினான் *[நற்.169:2]*. பிரிவின்கண், தலைவிக்குத் தொய்யில் குழம்பால் எழுதப்பட்ட வனமுலையின்கண்ணுள்ள வரியின் அழகு கெடுமாறு அவள் பருவரல் அடைந்தாள் *[நற்.225:8]*. தோழி, தலைவியிடம், 'தலைவனது பிரிவால் நாம் பருவரல் வெள்ளத்துள் நீந்துவதை நம் அன்னை அறிந்தனள் போலும்', என்று கூறினாள் *[நற்.339:4]*.

'நம் வரவினை எதிர்ப்பார்த்திருக்கும் இன்றைப் பொழுதிலேயே நம் காதலியின் பருவரல் தீரும்படி விரைந்து தேரினைச் செலுத்துக', என்று வினைமுற்றி மீளும் தலைவன், பாகனிடம் கூறினான் *[ஐங்.488:4]*.

அரணின் அகத்தே அடைபட்டிருக்கும் அரசனுக்கு உண்டான பருவரலைப் போன்ற வருத்தத்தைப் பிரிவுத் தலைவி அடைந்தாள் *[கலி.149:15]*.

**பருவூர்ப்பறந்தலை-பருவூர்ப்போர்க்களம்.** சோழர், வெண்நெல்விளையும் பரூவூர்ப் பறந்தலையில்-பருவூர்ப் போர்க்களத்தில் சேர, பாண்டியராகிய இருபெரு வேந்தரையும் தோற்கடித்தனர் *[அக.96:14]*.

**பரூஉமோவாய்ப் பதுமனார்-ஓர் புலவர்.** பருத்த மோவாயையுடைய பதுமனார் என்று இவர் பெயர்க்கு விளக்கம் கூறுவர் உ.வே.சா. (குறு. பாடினோர் வரலாறு). எனவே, உறுப்புக்குறித்த அடையுடன் இவர் பெயர் பெற்றவராவார். இவரால் பாடப்பெற்றது குறுந்தொகையில் 101-ஆம் பாடலொன்றேயாம். தலைவியோடு இன்புற்று இல்லறம் நடத்தும் தலைவன் அத்தலைவியால் வரும் இன்பம் வேறு எப்பொருளினும் சிறப்புடையதென்று பாங்காயினார் கேட்பக் கூறியதாக இவர் அதனைப் பாடியுள்ளார். 'பெரிய கடல்சூழ்ந்த இவ்வுலக இன்பமும், அரிதாகப் பெறுதற்குரிய சிறப்பமைந்த புத்தேள் நாட்டு இன்பமும் ஆகிய இரண்டினையும் ஒரு தட்டிலும், தாமரைப் பூப்போலும் மையுண்ட கண்களும், பொன்போலும் நிறமும் மாட்சிமைப்பட்ட வரிகளமைந்த அல்குலும் உடைய காதலியாகிய குறுமகளின் தோளோடு தோள் மாறுபடத் தழுவும் இன்பத்தை மறுதட்டிலும் வைத்துத் தூக்கினால் எமக்குக் காதலியின்பத்தோடு அந்த ஈருலக இன்பமும் கனம் ஒவ்வொதொழியும்', என்று, தலைவன் கூற்றினை இவர் உணர்வு நலத்தோடு புனைந்துள்ளார்.

**பல்-எயிறு.** அகுதை என்னும் வேந்தனின் மறவன் கள்ளையும், ஊனையும் உண்ணும் பொழுது, ஊனின் துணுக்குகள் பல்லில்-எயிற்றில்-சிக்கிக் கொண்டவற்றை நாவினால் துழாவி எடுத்தான் *[புற.347:2]*. இடுகாட்டில் பிணத்தைத் தின்னுகின்ற குறுநரிகள் எப்பொழுதும் கொழுப்பு விளங்குகின்ற பல்லையுடையனவாய் இருந்தன *[புற.359:3]*. ஆய் அண்டிரனுடைய மறவர்களின் புதல்வர், புலியின் பல்லைக் கோத்துச் செய்த கழுத்தணியை அணிந்திருந்தனர் *[புற.374:9]*. கரும்பனூர் கிழான், இரவலருக்கு, நெய்யில் செய்த ஊன் உணவினைப் பலநாட்கள் இடுவதால், உண்ட நன்கலத்தை நீர் பெய்து கழுவவும், தின்ற பல்லிடையே சிக்கிய ஊனினைத் தோண்டவுமாகக் கழித்த நாட்கள் அளவிடமுடியாதன', என்று நன்னாகனார் பாடினார் *[புற.384:22]*.

முருகவேளால் கொல்லப்பட்ட சூரவன்மன் முதலிய அசுரர்களின் பிணங்களைத் தின்னும் பெண்பேயின் பற்கள் வரிசையின்றி முறை பிறழ்ந்திருந்தன *[முரு.47]*. கரிகாலன், இரவலராகிய பொருநருக்கு இரவும், பகலும் ஊனுணவை இடுவதால், ஊனினை மென்று மென்று அவர்களுடைய பற்கள் கொல்லை நிலத்தே உழுத கொழுவைப் போன்று முனை மழுங்கிவிட்டன *[பொரு.117]*. கரம்பு நிலத்தைக் குத்திக், கிளறிப், புழுதியை அளைந்து, புல்லரிசியைக் கொண்டுவரும் எயினர் மகளிர் வெள்ளிய பற்களையுடையராயிருந்தனர் *[பெரு.94]*. உழவரின் சிறார், முள்ளியின் மலரைப் பறித்துத் தண்டாங்கோரையைப் பல்லினால் கிழித்து உண்டாக்கிய நாரில் மாலையாகத் தொடுத்துத் தலையில் சூடிக் கொள்வர் *[பெரு.27]*.

கானவன் மகளாகிய தலைவி, பொன்னாலியன்ற புலிப்பல்லோடு கோக்கப்பெற்ற தனிமணித்தாலியினை அணிந்திருந்தாள் *[அக.7:18]*. முல்லையின் வெள்ளிய அரும்புகளில் ஒத்தனவற்றை நிரைத்து வைத்தாலொத்த வெள்ளிய பற்களையுடையவள், தலைவி *[அக.21:2]*. வண்டுகள் விரும்பும் முல்லை அரும்பினை வரிசையாக நிறுத்தினாலொத்த வெண்பற்களையுடைவள் தலைவி *[அக.162:12]*. மத்தி என்பானை ஏவி, எழினி என்பானைத் தோற்கடித்து, அவனுடைய பல்லைப் பிடுங்கிக் கொண்டு வந்து, வெண்மணி என்னும்ஊரின் அரண்மனைக் கதவில் பதித்து வைத்தான், சோழமன்னன் *[அக.211:13]*.

அணிலின் பல்லைப் போன்று கழிமுள்ளிச் செடியின் முள் இருக்கும் *[குறு.49:1]*. தலைவி வரிசையுற்று விளங்கும் வெள்ளிய பற்களையுடையவள் *[குறு.52:4]*. ஒருதாய் தன் புதல்வனுக்குப் புலிப்பல்லைப் பொன்னிலமைத்துக் கழுத்தில் அணிவித்திருந்தாள் *[குறு.161:3]*. பேயின் பற்களைப் போன்ற பருத்த நகங்களைக் கொண்ட காலினையுடையது, களிறு *[குறு.180:1]*. முல்லை மலர், காட்டுப்பூனையின் பல்லைப் போன்ற உருவத்தையுடையது *[குறு.240:3]*. தலைவியினுடைய செறிந்த வரிசையாகிய வெள்ளிய பற்களும், முதன்முறை விழுந்து முற்றும் முளைத்து நிரம்பின *[குறு.337:3]*. ஆண் கருங்குரங்கினுடைய பற்கள், மிகக் கூர்மையாய் இருக்கும் *[குறு.373:5]*. மயிலிறகின் அடியைப் போன்ற பற்களையுடையவள், தலைவி *[நற்.179:10]*. தலைவி, முத்தைப் போன்ற அழகிய வெள்ளிய பற்களையுடையவள் *[ஐங்.380:2]*.

வண்டுகள் விரும்பியடையும் மணம் மிக்க மல்லிகையின் அரும்பு போன்ற கூர்மையும், வரிசையுமான பற்களையுடைவள், தலைவி, என்று, தலைவன் பாராட்டினான் *[கலி.14:3]*. நறுமணம் மிக்க முல்லைக்கொடியில் வரிசையாக நிற்கும் அரும்புகளைப்

போல், வரிசையாக முளைத்த பற்களையுடையவள், தலைவி, என்று தலைவன் பாராட்டினான் *[கலி.22:10]*. அழகிய தேனைப் பொதிதலைச் செய்யாத அரும்பாகிய வெண்பற்களின் நுனி ஒன்றோடு ஒன்று அடித்துக் கொள்ளும்படியாகப் பின்பனிக்காலம் வந்தது *[கலி.31:20]*. விழுந்தெழாத, முல்லையின் அரும்பு போன்ற வெள்ளிய பற்களையுடையவள், தலைவி, என்று, தலைவன் கூறினான் *[கலி.58:4]*. யானை ஊர்ந்து வந்தேன் என்று கூறிய பரத்தைமைத் தலைவனிடம், தலைவி, 'நீ ஊர்ந்து வந்த யானை, தன்னைக் கண்ட ஆடவருடைய நலமாகிய கவளத்தை, முத்தையொக்கும் நகையினையுடைய வெண்பற்களைத் திறந்து கவர்ந்து கொள்ளும் பரத்தைதானே', என்று கூறினாள் *[கலி.97:15]*. 'ஆயத்தாரோடு விளையாடும் பொழுதினும் முள்நுனை போன்ற எயிறு வெளியே தோன்றாதபடிச் சிரிப்பதை அடக்கிக்கொண்டு, கண் நோக்காலும், முகக் குறிப்பாலும் மட்டுமே சிரிக்கும் இவள், பிரிவினால், இப்பொழுது பெண்தன்மையிழந்து, தன்குரல் எல்லோருக்கும் கேட்கும்படியாக நிரைத்த வெள்ளிய பற்கள் வெளியே தெரியுமாறு உரக்கச் சிரிப்பாள்' என்று, தலைவியைப் பற்றிக், கண்டார் கூறினர் *[கலி.142:9]*.

முல்லையின் அரும்புகளை அழகால் வென்ற முத்துக்களை ஒத்த வெள்ளிய பற்களையுடையவள், தலைவி, என்று, தலைவன் கூறினான் *[பரி.8:76]*.

**பல்குன்றக் கோட்டத்துச் செங்கண்மாத்துவேள் நன்னன் சேய் நன்னன்-ஒரு குறுநில மன்னன்.** பல்குன்றக் கோட்டத்தைச் சேர்ந்த செங்கண்மா என்றும் ஊரின் தலைவனான வேள் நன்னன் என்பானின் மகனாகிய நன்னன் என்று இவன் பெயர்க்கு விளக்கம் காணலாம். பல்குன்றக் கோட்டமென்பது தொண்டை நாட்டின் பெரும் பிரிவுகளாகிய 24 கோட்டங்களுள் ஒன்று. பலகுன்றங்களைத் தன்பால் கொண்டிருத்தலின் இக்கோட்டம் இப்பெயர் பெற்றது. 'குன்றுசூழ் இருக்கை நாடுகிழவோனே' *[மலை.583]*. என்ற தொடரும் இதனை வலியுறுத்தும். (பல்குன்றக்கோட்டத்துச் சிலை நாட்டுத் திருவேங்கடம்', என்னும் கல்வெட்டுத் தொடரால் திருவேங்கடமலையும் இக்கோட்டத்தது என்று விளங்கும்). செங்கண்மா என்னும் ஊர் திருவண்ணாமலைக்கு மேற்றிசையில் இக்காலத்துச் செங்கம் எனவும், செங்கமா எனவும், செங்கண்மான் எனவும் வழங்குவதாயுள்ளது. வேள் என்பதனால் இந்நன்னனது குடிமரபு விளங்கும். தந்தை பெயரே மகனுக்கும் அமையும் அக்கால மரபுவழி, இவன் தந்தை பெயரே இவனுக்கும் அமைந்தது. இவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு கூத்தரை இவனிடத்தே ஆற்றுப்படுத்தி, இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் மலைபடுகடாம் என்ற கூத்தராற்றுப்படையைப் பாடியுள்ளார். 'புனைந்த மாலையாற் பொலிவு பெற்ற வண்டுகள் மொய்க்கும் மணமிக்க மார்பினையுடையவன் *[56]*; மங்கையர் கணவன் *[58]*; பகைப்புலங்களைப் பாழ்படுக்கும் கிட்டுதற்கரிய வலிமையுடையவன் *[59]*; பரிசிலர்க்கு மென்மையமைந்தவன் *[60, 61]*; தனது அறிவின் ஆக்கத்திற்கு மாறாகிய கேட்டினை நினையாது ஆக்கத்தினையே உணரும் நினைவினை யுடையவன் *[62]*; விற்றொழிலிலே பயின்ற பெரிய கையினையும், பேரணிகலன்களையும் உடையவன் *[63]*; பகைவரைப் பொறாமல் போரிடுகின்ற போரினையும், வெற்றியுண்டாக்கும் வலிய முயற்சியினையும், மானத்தையும், வெற்றியையும் உடைய வேள் *[163,164]*; போரைச் செய்கின்ற வலியமைந்த தலைவன் *[186]*; திருந்தும் வேலினையுடைய அண்ணல் *[319]*; பலவாய் மாட்சிமைப்பட்ட வஞ்சி முதலிய போர்த்தொழில் மிக்க, நடத்தலால் உலகம் புகழும், திருமகள் நிறைந்த மார்பினன் *[355,356]*; தேன் சொரிகின்ற கண்ணியணிந்தவன்; தேர்களை வழங்கும், கொடுத்துக் கவிந்த கைகளையுடையவன் *[399]*; தனக்கென்று ஒரு பொருளையும் ஓம்பாத வள்ளல் *[400]*; தன்னை வணங்காதாரை அழித்தவன்; தாழ்ச்சியில்லாதவன்; பகைவரையாளும் ஆண்மையன்; கற்பினுக்கு அடையாளமாக உயர்த்திய கொடியினையுடையோள் கணவன்; *[423,424]*; வண்டுகள் படியும்படி மணங்கமழும், தேன்சொரியும் கண்ணியினையும், திண்ணிய தேரினையும் உடையன் *[466,467]*; வெல்லும் போரை வல்ல முருகனைப் போலும் பெரிய வெற்றியமைந்தவன் *[493]*; வஞ்சினங்களில் குறையாத நற்புகழிலே நடந்தோர் வழி வந்தவன் *[539,540]*; தன்பேர் இவ்வுலகம் உள்ளளவும் நிற்கும்படி கொடையாகிய கடனை முடித்த தலைமையுடையோன் *[541,543]*; என்றெல்லாம் அவ்வாற்றுப்படையிலே இவன் பாராட்டுப் பெற்றுள்ளான். இவன் தன் வாழ்நாள் புகழோடே பொருந்திக் கழிவதாக என்று பரந்த உள்ளத்தொடும், தன்னிடம் நயந்து வரும் பரிசிலரினும் தான் பெரிதாய் உவந்த உள்ளத்தொடும், அவரை முகனமர்ந்து, இனிது நோக்கிப், போற்றிப் பரிசளிக்கும் பண்பினன். என்பதும் அப்பாட்டிலே காட்டப் பெற்றுள்ளது. 'நன்னன்-3' காண்க.

**பல்சாலைமுதுகுடுமி-ஒரு பாண்டிய வேந்தன்.** (பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி). 'நீ பல்சாலை முதுகுடுமிபோல நல்வேள்வித் துறைகளிலே முயல்வாயாக', என்று தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு மாங்குடி மருதனார் அறிவுறுத்தினார் *[மது.759,760]*. 'பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி' - காண்க.

**பல்யானைக் குட்டுவன்-ஒரு சேரவேந்தன்.** (பல்யானைச் செல்கெழுகுட்டுவன்) 'போர் முரசம் கடுமையாக ஒலிக்கப் போரை விரும்பி ஏற்றுக் கொள்வதில் தனக்கொப்பாவார் ஒருவருமில்லை என்னும்படி பகைவர் நாட்டின்மேல் படையெடுத்துச் சென்று, அவர்தம் அரிய மதில்களை வென்று கைக்கொள்ளும் பெருமையினையுடைய பல்யானைக்

குட்டுவனது வரம்பிலாத் தானைகள் பரந்து சென்று அழிப்பதற்குமுன் அந்நாடுகள் சிறப்புற்றிருந்தன', என்று, பாலைக் கௌதமனார் பாடுவர் *[பதி.29]* -'பல்யானைச் செல்கெழுகுட்டுவன்' -காண்க

**பல்யானைச் செல்கெழுகுட்டுவன்-ஒரு சேரவேந்தன்.** இவன் உதியஞ்சேரலுக்கு வெளியன் வேள் என்பானின் மகளாகிய நல்லினி (வெளியன்வேண்மான் நல்லினி என்றுமாம்) ஈன்ற மகன்; இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனின் தம்பி. இவனைப் பாலைக் கௌதமனார் பாடிய பத்துப் பாடல்கள் பதிற்றுப்பத்தினுள் மூன்றாம் பத்தாக அமைந்துள்ளன. அவற்றால் அறியவரும் இவன் செய்திகளாவன; இவன் பெயர் பல்யானைக் குட்டுவன் எனவும் குறுகி வழங்கும் *[பதி.29]*. எவ்வுயிர்க்கும் துன்பம் செய்யக் கருதாது விளங்கிய கொள்கையோடும், கதிரவனை யொத்து எப்போதும் தப்பாத சிறப்பமைந்த உண்மையோடும் கடவுளைப் பேணும் பொருட்டுச், சொல் இலக்கண நூல், பொருளிலக்கணநூல், சோதிட நூல், வேதம், நெஞ்சம் என்ற ஐந்தினையும் ஒருங்கே போற்றி, அவற்றின் துணையோடே இவன் பல வேள்விகளைச் செய்தான்; தன் செல்வமனைக்கண் வருவோர் யாரும் வரையாது வாரியுண்டு வேற்றிடம் செல்லாது தன்னிடமே தங்குதலை விரும்பி விருந்து புறந்தருதலையும் ஒரு வேள்வியாகச் செய்தான்; அவ்வாறு செய்த வேள்விப் புகையும், அட்டிற் புகையும் கலந்து கமழும் மணத்தொடு வானத்துக் கடவுளரும் விரும்பச் செல்வவளம் முதிர்ந்த சிறப்பினையுடைய இவன், முரசம் ஒலிக்க ஆரவாரம் மிக்குப் பகைவர் நாட்டின் மேல் படையெடுத்துச் சென்று அங்குள்ள சிறந்த அணிகலன்களைக் கவர்ந்து வருங்கால் பகைநாடுகளின் மண்ணெல்லாம் படும் மார்பனாகச் சிறப்பிக்கப் பெற்றான்; செருப்பு என்னும் பெயர் அமைந்த மலையையுடைய பூழி நாட்டைத் தன்னடிப்படுத்தி ஆண்டமையால் 'பூழியர் கோவே', என்றும், மழவர் என்னும் மரபினரைத் தன் படையில் கொண்டிருந்தமையால், 'மழவர் மெய்ம்மறை' எனவும், அயிரை மலைக்குத் தலைவனாதலால் 'அயிரைப்பொருந' எனவும் குறிக்கப்பெறுவான். நாட்டிலே மழை வளஞ்சிறந்து மாந்தர் யாவரும் நோயின்றி ஊழியளவும் வாழுதற்கு நீ நின் தேவியுடன் ஆயிரவெள்ளம் காலம் வாழிய என்று, நாடு காத்தற் சிறப்பினால் வாழ்த்தவும் பெற்றான் *[பதி.21]*. கொங்கரது நாட்டினை வென்று தன்னடிப் படுத்தியதும், அகப்பா என்னும் அரணத்தை எறிந்ததும் *[பதி.22, பதி.ப.3]*, உம்பற்காட்டைத் தன்னாட்சியில் நிறுத்தியதும் *[பதி.ப.3]* இவன் வெற்றிச் செயல்களாம். மாறுபட்டோரை வென்று இவன் அழித்த அம்மாற்றார் நாடுகள் கவினழிந்து காடுகளாயின *[பதி.22,23,25,26,27,29]*; கோடை நீடக் குன்றம் பொலிவழிய அருவிகளற்ற பெரிய வற்கடக் காலத்தும் இவனாட்சியினால் நாடு திருவொடும் திகழ்ந்தது *[பதி.28]*; நிலம் பசுமையற்று வாடி விளைநிலங்கள் கெட்ட காலத்தும் இவன் பரிசிலர்க்குப் பசி நீங்க உணவளித்துப் பெருங்கலன்களை வழங்கினான் *[பதி. 23]*;ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்ற ஆறினையும் விரும்பியொழுகும் அறம்புரி அந்தணர் மொழிப்படித் தான் பணிந்தொழுகித் தன்வழியில் உலகம் ஒழுகப் புகழுடன் திகழ்ந்தான்; நிலம், நீர், தீ, வளி, வெளி என்ற ஐந்தையும் அளந்து *[பதி.24]*. தன் குலத்தில் தனக்கு முதியராய் உள்ளோரைத் தன் அருட்பண்பினால் தழுவிக்கொண்டு, அவர்க்கும் தன்னாட்டைப் பகுத்தளித்தான்; தன்னாட்டின் மேல்கடலும் தான் வென்று தன்னாடாக்கிய நாட்டினதான கீழ்கடலும் என்ற இருகடல் நீரையும் ஒரு பகலிலே வரும்படி யானைகளை வரிசையாய் நிறுத்தியழைப்பித்து நீராடினான்; தன்னாட்டு அயிரை மலைக்கொற்றவையைத் தன் குலத்து முன்னோர் பராவிய முறைப்படித் தானும் பராவினான்; தன்னைப் பத்துப் பாடல்களால் பாடிய பாலைக் கௌதமனார்க்குப் பரிசிலாக அவர் வேண்டியபடி பார்ப்பாரில் பெரியோரைக் கேட்டறிந்து, ஒன்பது பெருவேள்வி வேட்பித்துப் பத்தாம் பெருவேள்வியில் அவரையும், மனைவியையும், துறக்கம் புகச் செய்தான்; அரசாட்சியில் இருபத்தையாண்டு வீற்றிருந்த இவன், குறையாத நற்புகழையும், உயர்ந்த கேள்வியறிவையுமுடைய தன் மறையோராகிய நெடும்பாரதாயனார் தனக்கு முன்னே துறந்து காடு போகக் கண்டு, தானும் துறவுள்ளம் கொண்டு ஆற்றல் சான்ற நெஞ்சுறுதியோடு துறந்து காடு சென்றான் *[பதி.ப.3]*.

**பல்லர்-எயிற்றினையுடையவர்.** ஆயர்குல இளைஞர் கொல்லேறு தழுவுவதைக் காண்பதற்காக, முல்லையின் அரும்பும், மயிற்பீலி முளையும் போன்ற பல்லராகிய-எயிற்றினையுடையராகிய-ஆயர் குலமகளிர் பரணில் ஏறி இடம் பெற்றனர் *[கலி.103:7]*.

**பல்லவம்-தளிர்.** முருகவேளுக்குரிய திருப்பரங்குன்றத்தின் கண் உள்ள சுனையருகே நின்ற மரங்களின் பல்லவங்களை-தளிர்களை-இளம்பெண்கள் சுனையில் வீழும்படி உதிர்த்து விளையாடினர் *[பரி.19:68]*.

**பல்லாய்-எயிற்றினையுடையாய்.** (விளி) . தலைவன், தலைவியைச் செறிந்து விளங்குகின்ற வெள்ளிய பல்லாய்-எயிற்றினையுடையாய்-என்று விளித்தான் *[கலி.95:5]*.

**பல்லான் குன்று-சேரனுக்குரிய மலையின் பெயர்.** உதியன் என்பானுக்குரிய பல்லான் குன்றின்-சேரனுக்குரிய மலையின்-மரநிழல்களில் நல்ல ஆனிரைகள் குழுமியிருக்கும் *[அக.168:4]*.

**பல்லி-கௌளி.** சுரத்தில் கணவனை இழந்த கற்புக்கரசி ஒருத்தி இறந்தோரைக் கவிழ்க்கும் தாழி வனையும் குயவனை நோக்கிக் 'சகடத்தின் உருளையினுடைய ஆரத்தைப் பற்றி வந்த சிறிய வெளிய பல்லி-கௌளி-போல, என் தலைவனின்

கூடவே வந்த எனக்கும் சேர்த்துப் பெரிய தாழியாக வனைவாயாக', என்று வேண்டினாள் *[புற.256:3].*

தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவி, தனது இல்லில் ஓரிடத்தே நின்று நற்பக்கத்தே பல்லி ஒலிக்குந்தோறும் அதனைப் போற்றினாள் *[அக.9:19].* கொல்லையில் விளைந்த செந்தினையின் கதிரை உண்ணவரும் பன்றி, பிளந்த வாயினையுடைய பல்லியின் நற்பக்கத்து ஒலியினை நன்னிமித்தமாகக் கருதி வரும் *[அக.88:3].* கள்ளியின் முள் பொருந்திய அடியில் தங்கியிருக்கும் சிறிய செவ்விய நாவினையுடைய மணியொலி கேட்டாற்போலும் தெளிந்த குரலைக் கொண்ட சோதிடம் கூறும் வாயையுடைய பல்லி, ஒலித்து வழிச்செல்வோர்க்கு உண்டாகும் நிகழ்ச்சிகளைக் கூறும் *[அக.151:15].* பிரிவுத் தலைவி, தலைவனின் வருகையை நோக்கிப், 'பிளந்த வாயினையுடைய பல்லி ஒலிக்குந்தோறும் தெய்வத்தைத் தொழுது நல்ல மொழியினைக் கூறுவாயாக' என, அதனை வேண்டுவாள் *[அக.289:15].* தனது கவுளில் கையை வைத்துக் கொண்டு படுக்கையில் வருத்தத்தோடு இருக்கும் பிரிவுத் தலைவி, தனது தோளின் வருத்தத்தைப் போக்கும் மருந்தாக, நினைக்கும்தொறும் ஒலிக்கும் பல்லியினது நிமித்தத்தைப் பரவியிருந்தாள் *[அக.351:16].* நடுகற்களில் கண்ணிமையாது உணவை விரும்பிக் கிடந்த முதுமைவாய்ந்த பல்லி சிறிதளவு தடைப்படுத்தும் ஒலியை ஒலித்தாலும் பெரிய யானை மேற்செல்லும் அரசராயினும் மேற்செல்லாது திரும்பி விடுவர் *[அக.387:16].*

செம்மையாகிய காலையுடைய ஆண்பல்லி தன் துணையாகிய பெண் பல்லியை அழைக்கும் ஆறலைகள்வர் செப்பம் செய்யும் பொருட்டு இரும்பாலாகிய தம் அம்பினை நக நுனியிலே புரட்டும் ஓசைபோல இருக்கும் *[குறு.16:4].*

மலையில் தினையை உண்ணும் விருப்பில், குறவர் வைத்திருக்கின்ற பெரிய இயந்திரத்தின் புழைவழியில், அறியாது நுழையப்புகும் பன்றி, தாழாது விரைந்து ஒலிக்கும் பல்லியின் குரலைக்கேட்டு, ஊறஞ்சி அப்புழையில் செல்லாது தன்னிருப்பிடம் சென்று சேரும் *[நற்.98:5].* வினைமுற்றி மீளும் தலைவன், 'நெஞ்சே! துன்பத்தோடிருக்கும் நம் காதலிக்கு நம் வருகையை நமது மாளிகையில் நெடிய சுவரின்கண் இருக்கும் பல்லி அடையாளமாக ஒலித்து அறிவிக்குமோ?' என்று, தன்நெஞ்சிற்குக் கூறினான் *[நற்.169:3].* 'நெடிய சுவரின்கண் உள்ள பல்லியும் நன்னிமித்தங்கூறி நம்மைத் தெளிவிக்கின்றது; ஆகவே கவலற்க, தலைவர் விரைவில் வருவர்', என்று கூறித், தோழி, பிரிவிடை வருந்திய தலைவியை ஆற்றுவித்தாள் *[நற். 246:2];* பிரிவின்கண் ஆற்றாளாய தலைவியிடம், தோழி, 'நமது வீட்டில் இருள்செறிந்த நடுயாமத்தில் நாம் நம் காதலரை நினைக்குந்தொறும் இனிமையான குரலையுடைய பல்லி சுவரிலே பொருந்தி நன்மையான சொற்களைக் குறிப்பால் கூறுகின்றது; தலைவர் விரைவில் வருவர்; நினது அவலம் நீங்குக', என்று கூறினாள் *[நற்.333:11].*

தலைவி, தோழியிடம், 'நம் காதலர் நமது அழகைக் கெடுக்க மாட்டார் என்று யான் எண்ணுவதற்குக் காரணம் நம் மனையிடத்தே பல்லியும் நல்ல இடத்தில் பொருந்திக் கூறுகின்றது', என்று கூறினாள் *[கலி.11:21].*

**பல்லியம்-துந்துபி** (விண்ணவர் இடைக்கருவி). முருகன் அலைவாயிலில் எழுந்தருளும் போது விண்ணவர் பல்லியம் - துந்துபி-முழக்கினர் *[முரு.119].*

**பல்லியாடல்-வயலில் தாளியடித்தல்.** பாரியின் பறம்பு மலையில் மழை பெய்த ஈரத்தில் புழுதி கலக்கப் பல சால்பட உழுது வித்திப் பல்லியாடல்-தாளியடித்தல்-செய்து களைகளைப் பறித்து, வரகினை விளைவிப்பர் *[புற.120:4].*

**பல்வேலிரும்பொறை-ஒரு சேரவேந்தன்** (இளஞ்சேரலிரும் பொறை). 'பல்வேலிரும்பொறை, நின் கோல் செம்மையாலே, வானம் பருவந் தப்பாது மழைபொழியக், கானத்தே தொகுதி கொண்ட மடப்பிணைமான்கள் தத்தம் கலைமான்களுடன் புணர்ந்து செல்லப், பறவைகளும், வண்டுகளும் மரக்கிளைகளில் ஆரவாரிக்கப், பழங்களும், கிழங்குகளும் இடையறாது எப்பொழுதும் உண்ணுதற்கு உரியனவாய்க் காலமல்லாத காலத்திலும் கிடைக்கப், பலவாகிய ஆன்திரள் புல்லை மேய்ந்து களிப்பினால் துள்ளப், புதுவருவாயாகிய தானியங்கள் மிக்கு நெருங்க, நல்ல பல ஊழிகள் நடுவுநிலைமையால் நிலைபெற்று நடப்ப, நாட்டிலுள்ளோர் நாள்தோறும் நின்னைக் கைதொழுது ஏத்த, உயர்நிலையுலகத்து உயர்ந்தோர் (வானோர்) பாராட்ட, அரசியல் பிழையாமல் போரிலே மேம்பட்டுத் தோன்றி, நீ, நின் அரிவையொடு அழகுறப் பொலிந்து நோயில்லையாகுக', என்று, இளஞ்சேரலிரும்பொறையைப், பெருங்குன்றூர்கிழார் வாழ்த்தினார் *[பதி.89].*

**பலகை-1. கேடகம்.** பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை வெல்லும் பொருட்டு இரும்பால் செய்யப்பட்ட, ஆணியும், பட்டமும் அறைந்த, அழகு மிக்க பலகையுடன்-கேடகத்துடன்-போருக்கு வந்த பகைவர் பாண்டியனின் தூசிப்படைக்கு ஆற்றாது அழிந்தனர் *[புற.15:12].* அருந்திறல் கொண்ட மறவனொருவன், பகைவரையழிக்கும் செயலில், அவனது பலகை துணிதுணியாகச் சிதைந்தொழிய, நல்ல புகழை நிலைநாட்டிப், புலவர் பாடும் புகழுக்குரியவனானான் *[புற.282:9].*

தொண்டைமான் இளந்திரையனின் நாட்டில் மணி கட்டின பலகைகள், எயினர் வீடுகளில் நிறைந்திருக்கும் *[பெரு.120].*

சுரநெறிகள் தோறும் பட்ட கரந்தை மறவரின் நடுகற்கள், சார்த்திய பலகையைக் கொண்டு பகைவருடன் பொரும் போர்க்களத்தையொக்கும் *[அக.67:11].*

கரந்தை மறவரின் பெயரும், பீடுமெழுதிய நடுகற்களின்முன் ஊன்றிய வேலும், அதன்கண் சார்த்திய பலகைகளும் செல்லும் சுரவழிதோறும் போர்முனையையொத்து அச்சத்தைத் தரும் *[அக.131:12]*. தலைவியை உடன்கொண்டு போகும் தலைவன், ஓமை மரங்கள் உயர்ந்துள்ள காட்டில் மணிகள் பதித்த பலகை முதலிய கருவிகளைத் தரித்தவனாயும், அஞ்சாமையுடையவனாயும் இருந்தான் *[அக.369:18]*. தலைவனின் செலவுக்குறிப்பினை யறிந்த தலைவி, தோழியிடம், 'நம் தலைவர் பலகையை, மயிற்பீலி சூட்டி, மணியை அணிவிப்பர், அதனால், அவர் பிரியப்போகிறார் என்பதை யறிந்தேன்', என்று கூறினாள் *[நற்.177:5]*.

**2. மரப்பலகை.** வேந்தர்களின் அரண்மனை வாயிற்கதவுகள், கணைய மரத்தால் பின்னே வலி செய்யப்பட்டு, இருப்பாணிகளால் இறுகப் பிணிக்கப்பட்ட பலகைகளால்-மரப்பலகைகளால்-இயற்றப்பட்டிருக்கும் *[பதி.53:15]*.

கடற்புயலில் கவிழ்ந்த கலத்தின் துண்டாகிய பலகையைப் பலர் இழுத்துத், தாம்தாம் தப்பிக்க முயலுநர் போலத், தலைவனால் கைவிடப்பட்ட பரத்தையர் பலர், தலைவனைக் கண்டபொழுது, அவனை இழுத்துத் தாம்தாம் அடைய முயன்றனர் *[நற்.30:9]*. காதலியாகியகூனி, காதலனாகிய குறளனை, 'வல்லுப்பலகையை (தாயப் பலகையை, கட்டையை) எடுத்து நிறுத்தினாற் போன்ற குறளனே! 'என்று கூறி, நகையாடினாள் *[கலி.94:13]*.

**பலகையர்**-கேடகப்படையையுடையர். தமக்கொப்பானவர் இல்லை என்று மகட்கொடை மறுத்த தமையன்மார் கழிகளால் கட்டப்பட்ட பலகையராய்—கேடகப் படையை உடையராய்—போருக்கு எழுந்தனர் *[புற.345:12]*.

**பலம்**-பயன். 'நன்னன் வேண்மானின் நாட்டில், ஆயர் மகளிர், இனிய பாலைத் தருவதால் பலம்-பயன்-பெறுதல் வேண்டும் என்ற அவாவோடு வந்த நுமது வருத்தம் நீங்கி, விருந்தாம் தன்மையடைவீர்', என்று, கூத்தன் ஆற்றுப்படுத்தப்பட்டான் *[மலை.411]*.

**பலவு**-பலாமரம். பாரியினுடைய பறம்பு மலையில் இனிய சுளையையுடைய பலவினது-பலா மரத்தினது-பழங்கள் நிறைந்திருக்கும் *[புற.109:5]*. ஆய் அண்டிரனுடைய பொதியின் மலையில் பலவின் கிளைகளில் பரிசிலர் தொங்க விட்டிருக்கின்ற மத்தளத்தைப் பழமென்று கருதி மந்தி தட்டும் *[புற.128:1]*. ஆய் அண்டிரன், இனிய சுளையையுடைய பலவு நிறைந்திருக்கின்ற பொதியின் மலையை யுடையவன் *[புற.129:4]*. நாஞ்சில் வள்ளுவன், பெரிய நிலைமையையுடைய பலவு நிறைந்துள்ள நாஞ்சில் மலைக்குத் தலைவனாவான் *[புற.140:1]*. வன்பரணர் குளிர் காலத்துப் பருந்தின் சிறகைப் போன்ற சிதைந்த ஆடையுடன், பிற நாடெல்லாம் சுற்றியும் தீராத வருத்தமுடனும், உலைவுடனும் நள்ளிக்குரிய தோட்டி மலையில் பலவினது அடிமரத்தில் களைப்புடன் அமர்ந்திருந்தார் *[புற.150:2]*. குமணவள்ளல், பலவினது பழத்தைப் பெற்ற கடுவன், உண்ணுவதற்காக மந்தியை அழைக்கும்படியான, முதிரமலைக்குத் தலைவனாவான் *[புற.158:22]*. விச்சிக்கோன், மலையின்கண் ஓங்கிய பசிய இலையையுடைய பலவினது கனியை உண்ட கடுவன் தன் மந்தியுடன் மலை முகட்டிலுள்ள மூங்கிலின் உச்சியிலே துயிலும்படியான, மலையையுடையவன் *[புற.200:1]*. ஊர்ப்பொது மன்றத்தின்கண் உள்ள பலவினது அடியில் அமர்ந்து இரவலர் கிணைப்பறையைக் கொட்டி, ஆய அண்டிரனைப் பாடினர் *[புற.374:5]*. நாஞ்சில் வள்ளுவன், இனிய சுளைகளையுடைய பழங்கள் பழுத்துள்ள பலவுகள் நிறைந்த நாஞ்சில் மலைக்குத் தலைவன் *[புற.380:9]*.

சேரநாட்டில் எருமை செங்கழுநீர் மலரை மேய்ந்து, மிளகு கொடி படர்ந்துள்ள பலவினது நிழலில் துயில் கொள்ளும் *[சிறு.43]*. வளைந்து நிற்றலையுடைய பலவின் அடியிலே குலையாக இருமருங்கும் தொங்கும் பழங்களைப் போன்று, கழுதைகளின் இருமருங்கிலும் ஒத்த எடையுள்ள மிளகு மூட்டைகள் தொங்கும் *[பெரு.77]*. தொண்டைமான் இளந்திரையனின் நாட்டிலுள்ள தண்டலையுழவர், தாழ்ந்த குலைகளையுடைய பலவினது, சக்கை சூழாது சுளையே உள்ள, பெரிய பழத்தைப் பாணராகிய இரவலர்க்களித்து உண்பிப்பார் *[பெரு.356]*. மதுரை நகரின்கண், சாற்றாலும், மணத்தாலும் ஒன்றற்கொன்று மாறுபட்ட அழகிய பலவினது சுளைகளைப் பெற்றோர், பலவிடங்களிலும் உண்டனர் *[மது.527]*. மலைச்சாரலில், பலவின் பழங்களிலிருந்து ஒழுகிய தேனினைத், தேன் என்று அறியாது, நீரென்று பருகிய மயில், ஊர் விழாக்களில், கழாய்க்கயிற்றில் ஆடும் ஆடுமகள் போல், தளர்ந்து ஆடும் *[குறி.189]*. கூத்தர், கார்காலத்தே பழுத்தலையுடைய, பலவினது காய்கள் நிறைந்த கொத்துப் போன்று, தம்மில் ஒத்த எடையுடையனவாகக் கட்டிய இசைக் கருவிகளின் முடிச்சுகளைத் தோளில் சுமந்து சென்றனர் *[மலை.12]*. மலையின்கண் வழிப்போகின்ற கூத்தருடைய மத்தளங்கள் தூங்குவனபோல், அசைகின்ற கொம்பினையுடைய பலவுகளின் காய்கள் முற்றித் தூங்கப்பெற்றன *[மலை.144]*. வளவிய குலைகளையுடைய பலவின் சுளைகளில் உள்ள விதைகளைப் பெறுவதற்காகக் கடாவிடும் இளம்பிள்ளைகளின் ஆரவாரம், மலையெங்கும் ஒலித்தது *[மலை.337]*. நன்னனின் அரண்மனைவாயிலில் காணப்பட்ட கையுறைப் பொருட்களில், முழவு போன்ற, காட்டுப் பலவின் பழங்களுமிருந்தன *[மலை.511]*.

தம்மை உண்போரைப் பிறவற்றையுண்ணாமல் தடுத்த பக்க மலையிலுள்ள பலவின் முற்றிய சுளையின் தேறலையுண்ட கடுவன் சந்தனமரத்தில் ஏறமுடியாமல் பூக்களாலாய படுக்கையில் களிப்புற்று உறங்கும் *[அக.2:3]*. மலையில் உள்ள சிறுகுடிகளைச் சுற்றிப் பலவின் சிறந்த சுளைகளை, உண்ணும் முசுக்கலைகளால் உதிர்க்கப்பெற்ற வெள்ளிய பலாவித்துக்கள்

எங்கும் பரவிக்கிடக்கும் *[அக.7:20]*. கிளைகளில் பெரிய காய்களைக் கொண்ட பலவின் பழமாகிய பயனைக் கொள்ளுதற்குக் குறவர் குடிசைகளை நாட்டிவைப்பர் *[அக.12:8]*. குட்டுவன் புரக்கும் குடநாட்டில் எருமையானது தாமரையை வெறுத்தால், வளைவு மிக்க பலவினது கொழுவிய நிழற்கண்ணே தங்கும் *[அக.91:16]*. அதிகனின் மலை, காய்த்தல் இல்லையாதலை அறியாத பயனுடைய பலவினை உடையதாகும் *[அக.162:19]*. வேட்டுவன் குடிசையின் முன்றிலுள்ள உயர்ந்த முழவு போலும் பலவின் பழத்திலிருந்து பிழிந்தெடுத்த மதுவினை உண்டு களித்துச் சுற்றத்துடன் ஆரவாரிப்பான் *[அக.172:11]*. குறவன், வேட்டைக்குச் செல்லும்போது இனிய பலவினது சுனையினின்றும் விளைந்த தேனை, ஏவலிளையருடன், நிறையக் குடித்துவிட்டுச் செல்வான் *[அக.182:3]*. மழைபொழியா தொழிதலின் செவ்வி வாய்ந்த பழத்தினைக் கொண்ட பலவுகளையுடைய காடு வெதும்பியது *[அக.189:1]*. ஓரியின் கொல்லிமலை, பல பழங்களையுடைய பலவுகள் நிறைந்ததாகும் *[அக.208:22]*. காரி என்பான், ஓரியைக் கொன்று, சேரமன்னர்க்கு உரிமையாக்கிய, சிவந்த வேர்ப்பலவின் பழம் மிக்க கொல்லிமலையில், பலரும் புகழும் கொல்லியம்பாவை யுள்ளது *[அக.209:15]*. பலவுக்காய் போலும் புறத்தினையுடையது, பாகலின் பழம் *[அக.255:13]*. தலைவியின் தந்தை, மிக்க இனிமையையுடைய பலவின் மரங்களையுடைய அழகுமிக்க செல்வத்தையுடையவன் *[அக.282:11]*. நள்ளிரவில் மேயவரும் யானையைப் பரணில் இருக்கும் வேட்டுவன், கவணால் விசையாக எறிந்த கல், அம்பு போலச் சென்று, வேங்கை மரத்தின் பூக்களைச் சிதறித், தேனை அழித்துப், பலவின் பழத்தினுள் புகுந்து தங்கும் *[அக.292:14]*. பலவின் மரங்கள் நிறைந்துள்ள பக்க மலையில், யானைக் கூட்டம் செல்லுவது போல, முகில் சென்று கால் இறக்கியது *[அக.323:8]*. மாங்கனியுடன், பிசினையுற்ற பலவினது ஒளிபொருந்திய சுளைகளையும் தேனுடன் கூட்டி யாக்கிய அரியலை, மூங்கில் குழாயிலிட்டு, முதிர வைத்த, பாம்பினது கடுப்பினைக் கொண்ட, கள்ளினைப், புனங்காக்கும் குறவர் அருந்துவர் *[அக.348:4]*. வளைதல் பொருந்திய, பலவினது குடம் போன்ற பழத்தினை வைத்துக்கொண்டு, ஆண்குரங்கு, பாறையில் ஆடும் மயிலின் பின் நிற்பது, ஊர் விழாவில் ஆடும் விறலியின் பின் நிற்கும் முழவன் போன்றிருக்கும் *[அக.352:1]*. யானைகள் தம் கைகளால் தோண்டித் தின்று விட்டுப் போகும் இனிய சுளைகளையுடைய பலவின் மரங்கள் நிறைந்தது, உம்பற் காடு *[அக.357:9]*. மலையில் நெருங்கிய இலைகளையுடைய பலவின் பழத்தினைக் கவர்ந்த பெண்குரங்கு, ஆண் குரங்கினோடு துள்ளித்திரியும் *[அக.378:20]*. அருவியில் பாய்ந்த பெண்குரங்கு வளமுறக் காய்த்தலைக் கொள்ளும் பலவின் பழத்தினைத் தெப்பமாகக் கொண்டு, பக்க மலையிலுள்ள பெரிய ஊரின் துறைமுன்பு வந்திறங்கும் *[அக.382:10]*.

தலைவனுடைய மலையில், மூங்கிலாகிய வாழ்வேலியையுடைய, வேரிலே பழக்குலைகள் பொருந்திய, பல்வின் மரங்கள் நிறைந்துள்ளன *[குறு.18:1]*. தமது வீட்டில், தமது முயற்சியால் ஈட்டிய பொருளினால் உண்டாற் போன்ற, இன்சுவையைத் தரும், இனிய பழங்கள் கொம்புதோறும் தொங்குகின்ற, பலவின் மரங்கள் நிறைந்தது, மலை *[குறு.83:4]*. தலைவனது மலையில், ஆண்குரங்கு தீண்டியதனால் விழுந்த பலவினது பழத்தை, மலைப் பக்கத்தில் வீழும் அருவி நீருண்ணும் துறைக்குக் கொண்டு வரும் *[குறு.90:4]*. முற்றத்திலுள்ள பலவினது பெரிய கிளையினிடத்து ஆண்குரங்கு தாவித் துள்ளினால், தலைவி அஞ்சுவாள் *[குறு.153:2]*. தலைவனுடைய மலையில், வேரிலும், அடிமரத்திலும், கிளையிலும் ஒரு படியாகத் தொடுத்து வைத்தன போலத் தொங்கித் தொடர்ந்து கீழே தாழ்ந்தாற் போன்ற தணிந்த குலைகளையுடைய பலவின் மரங்கள் நிறைந்திருக்கும் *[குறு.257:3]*. வௌவால்கள், அகன்ற இலைகளையுடைய பலவின் மரங்களை நோக்கி மாலைக் காலத்திற் செல்லும் *[குறு.352:3]*. தலைவன், பலவின் மரங்கள் நிறைந்திருக்கும் மலைக்குத் தலைவனாவான் *[குறு.365:5]*. தலைவனுடைய மலையில், குரங்கு பக்கத்திலே தோண்டியதனால், உடைந்து, மலரின் மணத்தை வீசும் பலவினது பழம் சிறிய ஊரிலே மணக்கும் *[குறு.373:6]*. பலவின் பழத்தை உண்ட திரளான குரங்குகள், வேட்டுவனின் அம்பிற்கு அஞ்சிப் போர்க்களத்துக் குதிரையைப் போல, மேலெழுந்து, சாரலிலுள்ள மூங்கில் அசையும்படியாகப் பாயும் *[குறு.385:1]*.

கொடிய காட்டில் கதிரவனின் தன் முழுவெயிலையும் வீசுவதால் முடம்பட்ட முதிர்ந்த பலவின் செழுங்காய்கள் திரங்கிப்போம் *[நற்.26:5]*. தலைவியின் இல்லினுடைய முன்றிலின்கண் சிவந்த வேர்களையுடைய பலவினது கிளைகளில் சுளையினையுடைய பழங்கள் தொங்கிக் கொண்டிருக்கும் *[நற்.77:5]*. தலைவன், பலவாய காய்களைக் காய்க்கின்ற பலவின் மரங்கள் நிறைந்த சாரலையுடைய நாட்டிற்குத் தலைவனாவான் *[நற்.102:5]*. மலையின் பிளப்பினுள் பலவின் கிளையிலிருந்து கனிந்து கீழே விழுகின்ற பழம் பிறர் உண்ணமுடியாதபடி அழிந்தொழியும் *[நற்.116:6]*. புதுநடையைக் கொண்டு இயங்குகின்ற அழகிய பாவையையுடைய கொல்லிமலை பயன் மிக்க பலவின் மரங்களை உடையது *[நற்.192:8]*. தெய்வத்தாலே காக்கப்பட்டு வருகின்ற கொல்லிமலைச் சாரலில் சிவந்த வேரையுடைய பலவினது பழங்கள் நிறைந்திருக்கும் *[நற்.201:5]*. தலைவியின் சிறுகுடியுள்ள மலையில், ஆவினது இளங்கன்றின் காலிலிட்ட, கயிறு பிணித்த, மன்றப் பலவின் வேரிலே, காய்த்துத் தொங்குகின்ற, சுளைகளையுடைய பழத்தை, அக்கன்றின் தாய் தின்று பக்கத்திலுள்ள குளிர்ந்த நீரைப் பருகும் *[நற்.213:2]*. யானைகள், தலைவனுடைய மலையில், மூங்கில் முள்ளால் மிடைந்த வேலியையுடைய சிறிய குடியின்கண்ணுள்ளார்

அஞ்சியலறும்படி சிவந்த அடியையுடைய பலவினது இனிய பழத்தைத் தின்னும் *[நற்.232:5]*. மலைப்பக்கத்தில் கொழுத்த சுளையையுடைய பலவின் பயன் மிக்க, செழுமையாகிய காய்கள், கிளைகள் தாங்கமாட்டாதவாறு காய்த்து நிறைந்திருக்கும் *[நற்.326:1]*. மலையில் முடம்பட்டு முதிர்ந்த பலவினது குடம்போன்ற பெரிய பழத்தின் சுளையைக் குறவரின் இளமகள், மந்தியை விருந்தாக ஏற்று உண்பிப்பாள் *[நற்.353:4]*. மலையில், மந்தி இல்லின் முன்புள்ள பலவினது பழத்தைக் கீண்டு, நிறைந்த சுளைகளை உண்டு, அவற்றின் விதைகளைக் கீழே உதிர்க்கும் *[நற்.373:1]*.

மலைச்சாரலின்கண்ணிற்கும் பலவினது கொழுவிய கொத்தின்கண்ணதாகிய இனிய பழம் மலையின் வெடிப்பின்கண்ணுள்ள முழையில் வீழ்ந்து ஆண்டுள்ள பெரிய தேனடையைச் சிதைக்கும் *[ஐங்.214:1]*. ஆண்புலி புதலடர்ந்த காட்டில் யானைக் கன்றினைப் பற்றி உண்ணுதற் பொருட்டுப் பழங்கள் தொங்குகின்ற பலவினது செறிந்த நிழலின்கண் பதுங்கிக்கிடக்கும் *[ஐங்.216:3]*. சுரநெறியில் செல்வோர், அப்பாலைவழியிலே, வெயில் வெதும்புவதால் வற்றி உலர்ந்து நிற்கும் பலவினது சிறுமை உடைத்தாகிய காய்களைத் தின்று, ஒருவாறு காட்டைக் கடப்பர் *[ஐங்.351:1]*.

நடுயாமத்தில் பிடியுடனே வந்து மேயும் யானையை விரட்டுவதற்குக் கானவன் பரணிலிருந்து கவணையில் விசையாய் எறிந்த கல், வேங்கைப் பூக்களைச் சிதறி, ஆசினிப் பலாவின் பழத்தை உதிர்த்துத், தேனடையைத் துளைத்து, மாவின் கொத்துக்களை உழக்கி, வாழையின் மடலைக் கிழித்து, இறுதியில் பலவினது பழத்துள் தங்கியது *[கலி.41:16]*. பல குலைகளையுடைய பலவினது பிசினையுடைத்தாகிய இனிய பழம் வீழ்ந்து கிடக்கும் பாறையில் சிறுகுடிவாழ்வினராகிய செல்வர் சோற்றினை உறவினருடன் உண்பர் *[கலி.50:12]*.

பலா, பலாஅ, -காண்க.

பலா-பலாமரம். மலையில், பெரிய ஆண் பன்றியினைக் கொன்ற புலியேறு, பலா-பலா மரங்கள்-செறிந்த பக்கமலைகளில் புலால் நாறும்படியாக அதனை இழுத்துச் செல்லும் *[அக.8:7]*.

பலவு, -பலாஅ காண்க

பலாஅ-பலா மரம். பலாஅவில்-பலாமரத்தில்-பழுத்து வெடித்த பழத்தின் வெடிப்பிலிருந்தொழுகும் தேனை வாடைக்காற்று எறியும் *[பதி.61:1]*.

பூவாது காய்க்கும் மரங்களுள் பழத்தின் பெருமையாலும், இனிமையாலும் பலாஅ சிறத்தல் போன்று, பெருமையாலும், இனிமையாலும் மற்ற நகரங்களினும் காஞ்சி சிறந்ததாகும் *[பெரு.408]*.

பலவு, -பலாகாண்க.

பலாசம்-புரசமரம். தோழியும், தலைவியும் திரிந்து பறித்து வந்த பாறையில் குவித்த பூக்களில் பலாசம்பூவும்-புரசம் பூவும்-இருந்தது *[குறி.88]*.

பலி-தெய்வப்படையல். பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சியமாறன் வழுதி, தேரில், அமர்ந்து போருக்கு எழுந்துவிட்டானானால், பகைவரின் தெய்வவழிபாடுகள் நீங்கிப் பலி-தெய்வப்படையல்-இடுவதற்குரிய இடமின்றி அழியும் *[புற.52:13]*. வையாவிக்கோப்பெரும்பேகன், மழையற்றபோது, பெய்ய வைத்தும், வேண்டாத போது மழையை நிறுத்தியும், பலிதூய்த்தெய்வம் போற்றும் குறமக்கள், இவ்வாறு மழை மாறிய மகிழ்வினராய்ப், புனத்து விளைத்த தினையை உண்டு மகிழும் வள நாட்டினையுடையவன் *[புற.143:1]*. இல்லிலே கள்ளினை வடித்துக் கொள்ளும் சிற்றூர் மக்கள், ஊரின் புறத்திலே உள்ள நடுகல்லிற்குப் பலியூட்டி, நீராட்டி, நெய்விளக்கேற்றுவதால் அதன் புகைமுகில் போல எழுந்து தெருவெல்லாம் மணக்கும் *[புற.329:2]*. சிறூர்த்தலைவ னொருவன், இல்லாத பொழுதும், சிறிதுள்ள பொழுதும், இருப்பவர்கட்குப் பகிர்ந்தளித்தும், மிக்க செல்வக் காலத்தில், பேரரசர் தன் அரண்மனையின் புறக்கடையில் எறியும் உயர்ந்த பலியாகிய வெள்ளிய சோற்றைப்போல, வருபவர் யாவருக்கும் வரையாது கொடுக்கவும் வல்லன் *[புற.331:12]*. ஒரூர்த்தலைவன், பலியூட்டப்பெற்ற முரசு பாசறையில் ஒலிக்கும்படியாகப் போருடற்றினான் *[புற.362:3]*. ஐயாதிச்சிறுவெண்டேரையார், ஒரு தலைவனுக்கு, 'இவ்வுலகத்தை ஒரு குடைக்கீழ் ஆண்ட வேந்தரெல்லாம் மாண்டு மடிந்தனர்; இறவாது இருப்பவர் யாருமில்லை; ஆகவே நீ சுடுகாட்டில் நிலத்தையே உண்கலமாகக் கொண்டு வேண்டாத பலியுணவை யேற்கும் இறுதி வருவதற்குமுன் தவமாகிய நல்வினையைச் செய்', என்று நிலையாமையைக் கூறினார் *[புற.363:15]*. சேரமான் கடலோட்டிய வெல்கெழுகுட்டுவன், விளங்குகின்ற குறுந்தடி கொண்டடிக்கப்படுகின்ற குருதிப் பலியூட்டப்பெற்ற முரசினை முழக்கிப் பகைவரை அழித்தான் *[புற.369:5]*.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் படைமறவர் கடல்கடந்து சென்று பகைவரை அழித்து அவருடைய காவல்மரமாகிய கடம்பினால் செய்வித்த முரசிற்கு அரிய பலியினையிட்டுப் பரவி முழக்கினர் *[பதி.17:6]*. பல்யானைச்செல்கெழுகுட்டுவனின் முரசிற்குக் குருதி தூவிய, நிறைந்த கள்ளோடு கூடிய, பெரிய பலியினையிட்டுப் பேய்நெருங்காமல் அஞ்சியோடவும், எறும்பு மொய்க்காமலும், காக்கையும், பருந்தும் உண்ணும்படியாகப் பரவினர் *[பதி.30:37]*. தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை தன்னால் தாக்குண்டார் உயிரைக் கொள்ளாது அவர் இட்ட பலியினைப் பெற்று நீங்கும் பேய்போல, வணங்கிய பகைவரின் உயிரைக் கொள்ளாது, அவர் கொடுத்த திறையினைப் பெற்றுச் சென்றுவிடுவான் *[பதி.71:23]*.

முருகப்பெருமானுக்கு, இரண்டு பட்டாடையையுடுத்திச், சிவந்த நூலால் காப்புக்கட்டி, வெள்ளிய பொரியைச் சிதறி, கொழுவிய கிடாயினது குருதியோடு பிசைந்த தூய வெள்ளரிசியைச் சிறு பலியாக இட்டுப் பரவினர் *[முரு.234]*. சோழன் கரிகாற்பெருவளத்தானின் சோழநாட்டில், தெங்கஞ்சோலையிலுள்ள நெற்கூடு பொருந்தின வளமிக்க குடிமக்கள், குருதி கலந்த சோற்றைப் பலியாகக் காக்கைக்கிட்டுப் பரவுவர் *[பொரு.183]*. மருதமர நீழலில் வைக்கோற்போரும் நெற்குவியலுமுள்ள களத்தில் பலிபெறுந்தெய்வங்கள் உள்ளன *[பெரு.233]*. மதுரை நகரில், சிவபெருமான் தலைவராக உள்ளிட்ட தெய்வங்கட்கு, விலக்குதற்கரிய முறைமையினையுடைய உயர்ந்த பலிகளைக் கொடுத்தற்கு, அந்திப்பொழுதில் நிகழும் விழாவில், இசைக்கருவிகள் முழங்கின *[மது.459]*. காவிரிப் பூம்பட்டினத்தில், வேலையே காலாக நட்டுக் கிடுகுப் படையை வேய்ந்த பந்தரின் கீழ், சோறு நிறைந்த கூடைக்கும், துணியில் பரப்பியுள்ள பண்டங்கட்கும் வெள்ளிய அரிசிப்பலி தூவி உயர்த்திய யாற்றின்கரையில் வளர்ந்த கரும்புகளின் ஒள்ளிய பூப்போன்ற, கொடிகளும் பறந்தன *[பட்.165]*. காவிரிப்பூம்பட்டினத்தில் மீன் தசை, இறைச்சி முதலியவற்றை அறுத்துப் பொரிக்கும் ஆரவாரம் நிறைந்த முற்றத்தையுடைய, மணலைக் குவித்து மலர்களைச் சிதறித் தெய்வத்திற்குக் கொடுக்கும் பலியினையுடைய கதவுகள் பொருந்திய கள் விற்கும் மனையிடத்துக் கள்விற்றலைக் குறித்து உயர்த்திய கொடிகளும் பறந்தன *[பட்.179]*.

தலைவனால் வந்த நோயென்று அறியாத தலைவியின் தாய், முருகனைப் பரவினால் தலைவியின் நோய் தீரும் என்று கூறிய பெண்களின் சொல்லைக்கேட்டு, வெறியாடும் களம் அமைத்து, வேலிற்கு மாலை சூட்டி, முருகன் கோவிலில் ஒலியுண்டாகப் பாடிப் பலி கொடுத்துச் செந்தினையைக் குருதியுடன் கலந்து தூவி, முருகனை வரவழைப்பாள் *[அக.22:9]*. சுரநெறியில் வெட்சியாரை வென்று, ஆனிரையை மீட்ட கரந்தையார் தெய்வம்பரவ நடுகல்லிற்கு மயிற்றோகையைச் சூட்டித், துடி கொட்டி, நெல்லாலாக்கிய கள்ளொடு செம்மறிக்குட்டியைப் பலி கொடுத்து வழிபடுவர் *[அக.35:9]*. பலவகை நெற்கள் விளையும் வேலூரின் வாயிலில், பூமாலையை வண்டுகள் ஊதாது அஞ்சுவதற்குரிய உயர்ந்த பலிகளையே பெறும் அச்சம் தரும் தெய்வம் உள்ளது *[அக.166:7]*. ஆறலைகள்வருக்கு அஞ்சிக் குடிகள் ஓடிப்போனமையின் வளனற்ற, பாழ்பட்ட அம்பலத்திலிருந்த கடவுள் புறத்தே போய்விட்டமையின், இடையறாது நிகழும் பலிமறக்கப் பெற்று அவ்வம்பலம் விளங்கியது *[அக.167:16]*. வேங்கடமலைக்கு அப்பாலுள்ள வடுகர், பகைவரிடமிருந்து வென்று கொண்டு வந்த ஆனிரைக்காக, முதிர்ந்த கள்ளாகிய நறவினை, விடியலில், பலியாகச் செலுத்துவர் *[அக.213:7]*. தலைவனுடன் கொண்ட தலைவி நட்பு, குறவர் மகளிரொடு குரவை ஆடும் விழாக்களத்தையொப்பத் தாயால் பலவகைப் பூக்களாய பலியொடு பொருந்தி அவள், முருகனால் உண்டாயதென்று கருதி, வேலனை அழைக்கும் வினையாக விளைந்தது *[அக.232:12]*. 'மணநாள் விரைந்து வரவேண்டுமென்று நாம் நம் மெல்லிய விரல்களைக் குவித்து மனையுறை தெய்வத்திற்குப் பலி செலுத்துவோம் வா', என்று தோழி, தலைவியிடம் கூறினாள் *[அக.282:18]*. சீறூரிலுள்ளார், அம்பலத்தின்கண், விடியற்காலையில், இடும்பலியை நிறுத்தி விட்டமையால் பலிபீடம் வெளிதாகிய இடமாய் இருந்தது *[அக.287:6]*. ஆறலைகள்வரால் கொல்லப்பட்ட புதிய வழிப்போக்கரின் உடலை மூடிய கற்குவியல்களில் ஏறிப்படர்ந்த காட்டுமல்லிகையின் மலர்கள், உயர்ந்த நிலையினையுடைய நடுகல்லின் காலைப்பலிக்குக் கூட்டப்பெறும் *[அக.289:3]*. தலைவி வீட்டைவிட்டுப் போனபிறகு கிளிகள் பாலை உண்ணவில்லை; தோழியர் விளையாடுவதில்லை;. பூஞ்செடியுடைய தாழிகளும் மலர்வதில்லை; சுவரின் கண்ணுள்ள, அழகிய நிறம் பொருந்திய, முத்துவடம் புனைந்து செய்த, பாவைகளும் பலி எதனையும் கொள்ளவில்லை *[அக.369:8]*.

'தலைவனது வருகையைக் கரைந்து கூறிய காக்கைக்கு நெய்ச்சோற்றினை ஏழு பாத்திரங்களில் ஏந்திக் கொடுத்தாலும் அப்பலியானது சிறு அளவினதேயாகும்', என்று, தோழி, தலைவனிடம் கூறினாள் *[குறு.210:7]*. வெறியாடும் வேலனிடம் தோழி, 'வேலனே! தலைவியைத் துன்புறுத்திய தலைவனின் மார்பு, நீ ஆட்டுக்குட்டியை அறுத்து இடும் பலியை உண்ணுமோ' என்று நகைமொழி கூறி, அறத்தொடு நின்றாள் *[குறு.362:7]*.

வலிய வாயையுடைய பேய் வளமையும், பழமையும் உள்ள ஊரினிடத்தில், தெய்வத்தின்முன் இடப்படும் அருச்சனையுடனாகிய பலியுணவை உண்ண வேண்டித் தான் நிலை பெற்றிருக்கின்ற பாழ்மன்றத்தை மோதி எழும் *[நற்.73:3]*. தலைவனால் தலைவியின் அழகு அழிந்ததை அறியாத அன்னை ஆடு முதலிய பலியைப் பெறுகின்ற முருகவேளை வழிபடுவாள் *[நற்.251:8]*. மரத்திலிருந்து, காக்கை, மக்களிடுகின்ற பலியை உண்ணும் *[நற்.281:1]*. சோழர் வென்ற, கழார் என்னும் பதியிலே இருக்கின்ற காக்கை, தனக்கிடப்படும் மிகுதியான பலியாகிய சோற்றுத்திரளாகிய ஊனொடு கலந்து போடும் உணவிற்காகக் காத்துக்கிடக்கும் *[நற்.281:4]*. விழா நடைபெறும் ஒரு மூதூரில், நொச்சிமாலையைச் சூடிப் பலிகளிடுதற்குரிய கையையுடைய குயவன், தான் இடப்போகின்ற பலியை உண்ணுதற்கு அணங்குகளையும், காக்கைகளையும் மன்றத்திலிருந்து அழைப்பான் *[நற்.293:2]*. தலைவன் சிறைப்புறமாகத், தோழி, தலைவியிடம், 'தோழியே! தலைவனது மார்பைப் பெறாமையால் நமக்குண்டான நோய் முருகனால் வந்ததென்று வேலன் நம் அன்னையிடம் கூறி, அவன் கொடுக்கும் பலிக்காக இந்நோய் தணியுமாயின், இதைவிடக் கொடியது வேறொன்றில்லை', என்று கூறினாள்

*[நற்.322:12].* சீறுரின் கண் உள்ள, ஆலமரத்தினடியில் கடவுளுக்குப் படைத்த பலிச்சோற்றைத் தின்ற காக்கைகள் மாலையில் தம்தம் இருப்பிடம் செல்லும் *[நற்.343:5].* 'தலைவன் சூளுரையைத் தவறிப் பிரிதலின், அவரை வருத்தாதே, கடவுளே, என்று கடவுட்கு உயர்ந்த பலியையிட்டுச் சாந்தி செய்து பரவுவோம் வா', என்று, தோழி, தலைவியிடம் கூறினாள் *[நற்.358:6].* காக்கைப் பேடை தன் குஞ்சுகளுடனும், கிளையுடனும் கருனைக்கிழங்கின் பொரிக்கறியோடு கூடிய, செந்நெல் அரிசியாலாக்கிய வெளிய சோற்றுத் திரளையாகிய, தெய்வத்துக்கிடும் பலியை உண்ணும் *[நற்.367:4].*

குன்றக்குறவனுடைய காதன் மகளொருத்தி தனக்கு விரைவில் மணம் நிகழவேண்டி வேங்கை மலரால் தன் குல தெய்வத்தை வழிபாடு செய்து தேனாகிய பலியை அள்ளிச் சொரிந்தாள் *[ஐங்.259:4].*

இரவுக்குறிக்கு வந்த தலைவனிடம், தோழி, 'பெருமானே! தாமரை மலர் மாலையைத் தலையில் அணிந்தும், மணம் வீசும் சந்தனத்தை மார்பில் பூசியும், நீ தலைவி குறித்த குறிக்கு இரவில் வந்தால், நின்னை மலையில் பலியைப் பெற்று உறையும் முருகனோ, என்று எம்மூரிலுள்ளார் அஞ்சுவர்', என்று கூறி, வரைவு கடாயினாள் *[கலி.52:9].* தலைவன் வரும் இரவுக்குறிக்கண் போர்த்திக் கொண்டு தோழி நிற்பதைத் தோழி என்று அறியாத தொழுநோய் பிடித்த முதுபார்ப்பனன் ஒருவன் வந்து, அவளைப் பெண்பேய் என்று கருதி, நான் ஆண்பேய்; எனக்கருள் செய்; அருளாது என்னை வருத்தினால் இவ்வூரில் நீ பெறும் பலியைப் பெறாமல் செய்து விடுவேன்', என்று கூறினான்' என்று, தோழி கூறினாள் *[கலி.65:18].* கடவுளைக் கண்டு வந்தேன் என்று கூறிய பரத்தமைத் தலைவனிடம், தலைவி, ஒப்பனை செய்து மயிர்ச்சாந்தும், புழுகும் மணம் கமழும் நீண்ட கூந்தலுக்கு நீ இட்ட பூப்பலியை ஏற்றுக் கொண்ட கடவுளைக் (பரத்தையை) கண்டாயோ?' என்று கூறி, இடித்துரைத்தாள் *[கலி.93:24].*

**பவ்வம்** - கடல். பாண்டியரின் படைத்தலைவனும், நாஞ்சில் மலைநாட்டிற்குத் தலைவனுமாகிய நாஞ்சில் வள்ளுவன் தென் பவ்வத்து-கடலில்-குளித்தெடுத்த முத்து மாலையை அணிந்திருந்தான் *[புற.380:1].* ஞாயிறு பவ்வத்தின் மீது தன் சுடர்களைப் பரப்பித் தோன்றிப், பின்னர் மெல்ல விண்முழுதும் ஒளியை விரியச்செய்ததைப் போன்று, சோழன் கரிகால் வளவனும், தவழும் பருவம் தொடங்கிச், சிறந்த நாடுகளைத் தன் வலிமையுள் அடக்கினான் *[பொரு.135].* 'தலைவி கூறுவது போல, யான் தலைவிக்கு ஊறு விளைவித்திருந்தேனானால் வேளிருக்குரிய குன்றூருக்கும் கிழக்கிலுள்ள தண்ணிய பெரிய பவ்வம் எம்மை வருத்துவதாக', என்று காதற் பரத்தை கூறினாள் *[குறு.164:4].*

**பவத்திரி**-ஒரூரின்பெயர். திரையன் என்பானுக்குரியது பலபூக்களையுடைய சோலைகள் பொருந்திய பவத்திரி என்னும் ஊர் *[அக.340:7].*

**பவர்**-கொடி. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், வேம்பின் தளிரை நீண்ட கொடியாகிய உழிஞையின் பவருடனே - கொடியுடனே- விரவிச் செறியத் தொடுக்கப்பட்ட மாலையை அணிந்து பகைவரை வென்றான் *[புற.76:5].* பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், இளம்பருவத்துக் குடுமிகளைந்த நுதலிலே, வேம்பின் ஒள்ளிய தளிரை, நெடுங்கொடியாகிய உழிஞைப் பவரோடு சூடியும், கையில் வில்லேந்தியும் போர்க்களத்தே தேரில் நின்றான் *[புற.77:3].*

புன்செய் நிலமாகிய பசிய காட்டினை எருதுகள் பூண்ட பல ஏரால் உழுது பின்னிய பவரினை உழக்கிப், பண்படுத்துவர் *[அக.262:1].* குறிய முயல்கள் வரகினது குருத்தினைத் தின்று, காய்களைக் கொண்ட பவரில் புகுந்து உறங்கும் *[அக.284:4].*

ஒன்றோடொன்று பின்னிக் கொண்டிருக்கும் படியான பவராகிய பிரம்பினது பழத்தைக் குளத்திலுள்ள கெண்டைமீன் கவ்வி உண்ணும் *[குறு.91:1].* பனிபெய்கின்ற காலத்தில் விடியற்காலையில் குளிர்ந்த தாளியறுகின்பவரைப் ஆக்கள் மேயும் *[குறு.104:3].* நீர் நாயின் முதுகிலுள்ள கோடுகள் பிணக்கத்தையுடைய பவராகிய பிரம்பினது கோடுகளைப் போன்றிருக்கும் *[குறு.364:1].*

குறவர் காட்டையழிக்கும்போது வெட்டப் பட்ட குறைபட்ட நறைப்பவர் மீண்டும் தளிர்த்துக் கொடியாகி நறுமணங்கமழ்கின்ற சந்தன மரத்தின் மீது படர்ந்து சுற்றியேறும் *[நற்.5:3].* நன்னது கொண்கான நாட்டில் மரச்செறிவினிடையே படர்ந்த ஈரிய பவரை எருமைமாடு மேய்ந்தது *[நற்.391:3].*

**பவழம்**- 1. பவளம் பசிய அரும்புகளையுடைய அவரை, பவழம்- பவளம் - கோத்தாற் போன்று பூத்தது *[சிறு.164].* கார்ப்பருவத்தில் தம்பலப்பூச்சி காயாம்பூவில் மறைதல், நீலமணியுடன் கூடிய பவழம் போலக் காட்சியளித்தது *[அக.374:13].*

முருகப்பெருமான் பவழத்தை ஒத்த சிவந்த நிறத்தையுடைவர் *[குறு.க.வா.2].*

தலைவி, தன் புதல்வனிடம், ' மகனே! என் கண்கள் கண்டு களிக்கும்படியாக, முத்துக்கள் விளிம்பில் அரும்புகளாக வைத்து இழைக்கப்பெற்றுப் பவழத்தால் செய்த வட்டப்பலகை மீதுள்ள யானையை மெல்ல இழுத்து இவன் வருக', என்று கூறினாள் *[கலி. 80:5].*

முருகவேளின் திருப்பரங்குன்றத்தில் கார்ப்பருவம் அல்லாத வேனிற்பருவத்தும் முகில் மழையைப் பொழிவதால், கார்ப்பருவமே போலத், தோன்றியானது பவழம் போன்ற செந்நிறமுடைய மலர்களைக் கொண்டது *[பரி.14:16]*. முருகவேளின் திருப்பரங்குன்றத்தில் முருகனின் யானையினுடைய முதுகின்மேல் பொலிவுடைய பவழத்தாலாய அழகிய காம்பினையுடைய குடையினை ஏற்றி மக்கள் சுற்றி வந்து பூசை செய்வர் *[பரி.19:87]*. முருகவேளின் வேற்படை, பகைவரின் குருதி தோயப் பெற்றுப் பவழக்கொடியின் நிறம் போன்று, செந்நிறத்தையடையும் *[பரி.19:87]*.

பவளம் - பவழம் (நவமணிகளுளொன்று). செவ்வரக்கினை ஒத்த சிவந்த நெறியில் பரவிக்கிடக்கும் காயாவின் பூக்களோடு, தம்பலப் பூச்சிகள் வரிவரியாக ஊர்ந்து செல்வது, பவளமோடு - பவழமோடு-நீலமணி நெருங்கியிருந்ததை ஒக்கும் *[அக.14:3]*. வண்டுகள் கோங்கம் பூக்களிலுள்ள தாதுக்களை இலவம் பூக்களில் உதிர்ப்பது, பொன்விற்போர் பவளச்சிமிழில் பொற்பொடியைச் சொரிந்து வைத்ததைப் போன்றிருந்தது *[அக.25:11]*. நீலமணியுடன் கலந்த செம்பவளம் போல அழகுமிகக் காயாம்பூவும், தம்பலப் பூச்சியும் ஒருசேரப் பரவி நிலத்தை அழகு செய்தன *[அக.304:13]*.

வையையாற்றில் நீராடும் மகளிருள் ஒருத்தி பவளவளையல் அணிந்திருந்தாள்; *[பரி.11:101]*. பாண்டியனுடைய மதுரையில் வாழும் பவளம் போன்ற சிவந்த வாயினையுடைய கற்புடைக் குலமகளிர் தத்தம் கணவரொடு நீராட வையையின் புதுநீர் தணியாதோடியது. *[பரி.தி.2:48]*.

பவழம் - காண்க.

பழங்கண்-துன்பம். நல்லோர் முதியனிடம், கள்ளில் ஆத்திரையனார், 'நல்லோர் முதியனே! நின் முன்னோனாகிய ஆதனுங்கன் போல, நீயும் பசித்த எனது சுற்றத்தினுடைய பழங்கண்-துன்பம்-கெடும்படியாகச் சிறந்த நன்கலன்களை நல்குவாயாக! 'என்று கூறினார் *[புற.389:14]*. 'தொடக்கமுதலே பழகியறியாத பழங்கண் வாழ்க்கையானது இளைய மனைவியுடன், மதி நுட்பத்தையும் கெடுக்கும்', என்று நல்லிறையனார் கூறினார் *[புற.393:1]*.

இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனிடம், குமட்டூர்க் கண்ணனார் 'எனது ஒக்கலினுடைய, நெடுநாட்களாகப் பசியால் வருந்திய பழங்கண் ஒழியும்படியாக, இறைச்சியையும், வெண்ணெல்லின் சோற்றையும், கட்டெளிவையும் இடுவாயாக', என்று கூறினார் *[பதி.12:15]*. களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல், பகைவர்க்கு மிகவும் பழங்கண்ணையும், பாணர் முதலிய நகைவர்க்கு நன்கலன்களையும் அருளியவன் *[பதி.37:3]*.

பிரிவுத் தலைவியின் குவளையின் இதழை ஒக்கும் கண் இமையானது, நறவத்தின் சிவந்த இதழ் அனையவாகி, உள்ளம் கொதித்தலால் வற்றிப் பழங்கண் மிகுந்து கண்களிலிருந்து நீர் அற்று அற்று விழுந்தது *[அக.19:13]*. தலைவன் மீது காதல் கொண்ட தலைவி, பழங்கண் அடைந்து, பாலும் உண்ணாமல், பசப்பினையடைந்தாள் *[அக.48:2]*. காதலனைப் பிரிந்த காதலிக்கு முகில் நிறைந்த ஞாயிறு மறைந்த மாலைக்காலம் பழங்கண்ணை மிகுதியாகத் தரும் *[அக.71:9]*. காதலனைப் பிரிந்திருக்கின்ற காதலி மழை நீர் பெய்து முழங்குந்தொறும் காதலனை வெறுத்துச் செயலற்று ஒடுங்கிப் பழங்கண்ணையடைந்து பசந்த மேனியள் ஆயினள் *[அக.174:9]*. கடலில் நீரைக் கொண்ட கருமுகில் சுமையால் பழங்கண்ணை அடைந்தது *[அக.374:3]*.

தலைவனைப் பிரிந்திருக்கின்ற தலைவியை நாண் துன்புறுத்துதலால் வருத்தமுற்று அவளுடைய கொங்கைகள் பழங்கண் கொண்டு பசலையடைந்தன *[நற்.93:10]*. களிறு காலால் உதைத்தலால் மேல் கீழாகப் படிந்த மிக்க புழுதி, வயிரமேறிய வேலமரங்கள் நெருங்கிய, செல்லுவோருக்குப் பழங்கண் செய்தலையுடைய, முதிர்ந்த நெறியை மறைக்கும் *[நற்.302:9]*.

பழம்-கனி. சோழநாட்டில் உழவரின் சிறார் தெங்கம் பழத்தில்-கனியில்-வெறுப்பேற்பட்டால் போரின் மீது ஏறி நின்று, பனம்பழத்தைப் பறிக்க உந்துவர் *[புற.61:9,11]*. பாரியின் பறம்புநாடு உழவின்றியே இனிய சுளையை உடைய பலாப்பழம் முதலிய நான்கு உணவுப் பொருள்களை யுடையதாகும் *[புற.109:5]*. குமணவள்ளலுக்குரிய முதிரமென்னும் மலையில் பலாப்பழம் முதலிய கனிகள் நிறைந்திருக்கும் *[புற.163:8]*. 'தெய்வம் உறையும் ஆலமரத்தின் பழங்களை நேற்று உண்டேம் என்னாது நாள்தோறும் பறவைகள் சென்று உண்ணும்; இரவலரும், அவைகளைப் போன்றவரே', என்று, பெரும்பதுமனார் கூறினார் *[புற.199:1]*. சோழன் நலங்கிள்ளியின் படைஞரில் முன் செல்லும் தூசிப்படையோர் பனையின் நுங்கினது இனிய செறிவை உண்ணப், பனம் பழத்தினது செவ்விக் கனியை இடையோர்நுகரக், கடையோர் கிழங்கு நுகர்வர் *[புற.225:2]*. பாரியின் பறம்பு மலையில் முசுக்கலை கிழித்துண்ட முழவு போன்ற பலாப்பழம் குறவர்க்குச் சில நாளைக்கு இட்டுவைத்துண்ணும் உணவாகும் *[புற.236:1]*. போரை விரும்பும் ஒரு தலைவன் புரக்கும் ஊர், பறித்துத் தின்னப்படும் பழம் நிறைந்ததாகும் *[புற.321:8]*. புறத்திணை நன்னாகனார், கரும்பனூர்கிழானிடம் நீண்டநாள் தங்கியிருந்து விடை வேண்டவே, அவன் பிரியாவிடை கொடுத்து, 'முட் புதரிடையில் பழுத்த பழம் போன்ற செல்வமிருந்தும், ஈயாத புல்லரிடம் நீங்கள் செல்ல வேண்டா; எங்கிருந்தாலும், எப்பொழுது வேண்டுமானாலும் என்னிடம் வாருங்கள்', என்று கூறியனுப்பினான் *[புற.381:8]*.

ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், புறத்தே வண்டினம் மொய்ப்பத், தீவிய சுவையில் மாறுபடாமல் மரத்தில் உண்டாகிய கனியாகிய தேன் நிறைந்த முட்டை போன்ற முதிர்ந்த பழங்கள்

வழிச்செல்வோர்க்கு உணவாகி அவர்தம் வழி நடந்த களைப்பைப்போக்கும் வளமான நாட்டையுடையவன் *[பதி.60:6]*. கொல்லி நாட்டிலுள்ள செல்வர் முழவு போன்ற பெரிய பலாப்பழத்தையுண்டு மூங்கிற்குழாயில் பெய்து முதிர்ந்த கள்ளையருந்துவர் *[பதி.81:19]*.

முருகப்பெருமான், உச்சியினின்றும் குதிக்கும் அருவியையுடைய பழம் முற்றிய சோலைகளையுடைய மலைக்கு உரியவராவார் *[முரு.317]*. சோழன் கரிகாலனின் சோழநாட்டில் காஞ்சி மரத்தினும், மருதமரத்தினும் இருந்த மயில்கள் பசிய பாகற்பழத்தைத் தின்று ஆரவாரிக்கும் *[பொரு.191]*. பலாமரத்தின் அடியிலே குலைகொண்டு இருமருங்கும் தொங்குகின்ற சிறிய சுளைகளையுடைய பெரிய பழம் போன்று, கழுதைகளின் முதுகில் இருமருங்கிலும் சமமாகத் தொங்கும்படியாக மிளகு மூட்டைகளை ஏற்றி விற்பனைக்குக் கொண்டு செல்வர் *[பெரு.78]*. தொண்டைமான் இளந்திரையனின் நாட்டிலுள்ள தண்டலையுழவரின் மனைகளில் தங்கும் இரவலராகிய பாணர்க்கு, அவ்வுழவர், தாழ்ந்த குலைகளையுடைய பலாமலரத்தினது, சக்கை சூழாது, சுளையே சூழ்ந்த, பெரிய பழத்தையளித்தும், பிடியானையின் கொம்பு போன்ற குலையிலே இருந்து முதிர்ந்த வளைந்த தோலுரிக்கப்பட்ட வெள்ளிய வாழைப்பழத்தை உண்ணும்படி செய்தும் உவப்படைவர் *[பெரு.356,359]*. மரங்களில் பழத்தின் பருமையாலும், இனிமையாலும் மேலாகவைத்துப் புகழப்படும் பலாமரத்தையொப்ப, நகரங்களில் காஞ்சிநகர் சிறப்புற்று விளங்கியது *[பெரு.408]*. மதுரை நகரில் இளஞ்செல்வரின் செல்வத்தைப் பறிக்குமளவும் இனியனபேசி, இன்புறுத்திக், கூடிப், பின், மீண்டும் பழுமரங்களை நாடிச் சென்று அவற்றின் பழங்களைக் கவர்ந்துண்ணும் பறவைகளைப் போன்று, கொழுத்த செல்வரை நாடிச் செல்லும் வரைவின் மகளிர் இருந்தனர் *[மது.576]*. உதிர்ந்த மாங்கனியினாலும், வண்டுகள் கூடித் தேனைச் சிந்துகின்ற பலாப்பழத்தினாலும் உண்டான மதுவின் தெளிவினை நீரென்று கருதி உண்ட மயில், ஆடுமகள் கழாய்க்கயிற்றிலே ஏறி ஆடும்பொழுது தளருவது போலத், தளரும் *[குறி.190]*. நன்னின் நாட்டிலுள்ள குறமகளிரின் இல்லங்கட்குக் கூத்தர் முதலிய இரவலர் சென்றால் அருவிநீர் கொண்டுவந்த பலாப்பழம் உதிர்த்த விதையினைக், கடமான், பன்றி, உடும்பு முதலியவற்றின் தசைகளோடு, புளியைச் சேர்த்து உண்டாக்கிய உணவைப் பெறுவர் *[மலை.174]*. ஆண்குரங்கு தோண்டிய பெரிய பலாப்பழம் தேன் ஊறுவதால், மலைகளின் திசைகள் தோறும் அதன் மணம் கமழும் *[மலை.292]*. பலாமரத்தின், உண்போர் உண்டதுபோக எஞ்சிக்கிடக்கின்ற, பழங்களிலுள்ள விதைகளைப் பயன் கொள்ளச் சிறார் கடா விடுவர் *[மலை.337]*. நன்னனின் அரண்மனை முன்றிலில் காணப்படும் கையுறைப் பொருள்களில், முழவு போன்ற பெரிய பலாப் பழங்களும், கற்கண்டின் இனிப்பையொத்த சாற்றினையுடைய மாம்பழங்களும் இருந்தன *[மலை.511,513]*.

கரகளின் கூட்டம், நிலத்திலே தூளி பரக்கச் சென்று, கொன்றையின் கிளைகளிலுள்ள குழல் போன்ற பழத்தைக் கோதும் *[அக.15:15]*. உயர்ந்த நீண்ட மலையின்கண் மரங்களின் செறிவினுள் பழங்கள் நிறைந்து தொங்கும் *[அக.18:15]*. கரடி இருப்பையின் இனிய பழத்தினை உண்டு வெறுப்பின், கறையான் புற்றினை இடந்து இரையினை ஆராய்ந்தெடுத்து உண்ணும் *[அக.81:2]*. மாமரத்தினது முறையாக முற்றிய காம்பு இற்று வீழ்ந்த வெள்ளிய பழத்தினைப் பொய்கையிலுள்ள யாமை தன் பார்ப்போடு கவர்ந்து உண்ணும் *[அக 117:15]*. கரடிகட்கு அஞ்சிய மக்கள் அம்பினராய்த் திரண்டு பரந்து வருதலின், கரடிகள் தரையில் கிடக்கும் உணவினை உண்ணாவாய்ப் பழங்களைப் போல இனிக்கும், சாற்றினையுடைய, இனிய துறையையுடைய இருப்பைப் பூக்களையுண்ண, இருப்பை மரத்தில் ஏறும் *[அக.171:13]*. வேங்கைப் பூக்களைச் சூடிக்கொண்டு, வலியவில்லைத் தோளில் தாங்கித் தம் ஏவலிளைஞருடன், இனிய பலாப்பழத்தின் சுளையினின்றும் உண்டாகிய தேனை அருந்தி, வேட்டைநாயுடன் குறவன் வேட்டை மேற்செல்வான் *[அக.182:3]*. செவ்வி வாய்ந்த பழத்தினைக் கொண்ட பலாமரங்களையுடைய காடு வெதும்பும் படியாக, வேனிற்காலத்தில் மழையின்றி வெப்பம் மிகுந்தது *[அக.189:1]*. வல்வில் ஓரி என்பானுக்குரிய கொல்லிமலையில், பல பழங்களையுடைய பலாமரங்கள் நிறைந்திருக்கும் *[அக.208:22]*. பாகற் கொடியின் பழங்கள் பலாக்காய் போன்ற புறத்தினையுடையதாகும் *[அக.255:13]*. கள்ளில் என்னும் ஊரினையுடைய அவியனின் மலைப்பிளவில் பழங்கள் நிறைந்திருக்கும் *[அக.271:13]*. மாங்காடு என்னும் ஊரிலுள்ள குன்றத்தின்கண் குட்டியை ஈன்ற பெண்குரங்கின் பசியைப் போக்குதற்கு ஆண்குரங்கு பலாப்பழத்தின் சுளையினைத் தோண்டினும், தெய்வக் குற்றம் உண்டாகி, அக்கடுவனுக்குத் துன்பம் வந்து சேரும் *[அக 288:13]*. இரவில் மேயவரும் யானையை விரட்டுவதற்குக் கானவனால் கவணிலிருந்து எறியப்பட்ட கல், அம்பினைப் போல் விரைந்து சென்று, வேங்கைப் பூக்களைச் சிதறித் தேனை அழித்துப் பலாப்பழத்தினுள் தங்கிவிடும் *[அக.292:14]*. பலாமரத்தின் குடம் போன்ற பெரிய பழத்தினைத் தழுவிக்கொண்டு, பாறையில் ஆடும் மயிலிற்குப் பின்னால் நிற்கும் ஆண்குரங்கு, விழாவில் ஆடும் விறலிக்குப் பின்னால் நிற்கும் முழவன் போலத் தோன்றும் *[அக.352:1]*. அருவியின்கண் பாய்ந்த பெண்குரங்கு, வளமுறக் காய்க்கும் பலாவின் பழத்தினைத் தெப்பமாகக் கொண்டு, பக்கமலையிலுள்ள ஊரின் துறைமுன்பு வந்து இறங்கும் *[அக.382:10]*. வரகினை மகளிர் திரிகையால் தேய்த்துச் சுளகினால் கொழித்த வெள்ளிய அரிசி, பண்ணைக் கீரையின் வெள்ளிய பழத்தின் அரிசியை ஒத்திருக்கும் *[அக.393:9]*.

வயலருகிலுள்ள மாமரத்தின் கனிந்து வீழ்கின்ற இனிய பழத்தைப் பொய்கையிலுள்ள வாளை மீன்கள் கவ்வி உண்ணும் *[குறு.8:1]*. பலாமரத்தின் சிறிய கொம்பில் பெரிய

பழம் தொங்கியது போல், தலைவியின் உயிரோ மிகச் சிறியது; அவளது காமமோ மிகப் பெரியதாயிருந்தது *[குறு.18:4]*. ஏழு நண்டுகளால் மிதிக்கப்பட்ட அத்திப்பழம் குழைவது போலத், தலைவி வருந்தும்படி ஊரினர் பழி கூறினர் *[குறு.24:4]*. கிளி, வளைந்த அலகினிடத்திலே கொண்ட வேம்பினது ஒள்ளிய பழமானது, புதிய பொற்கம்பியை ஊடு செலுத்தும் பொற்கொல்லனது கூரிய கைந்நகத்திற்கொண்ட பொற்கலத்திற்குரிய ஒரு காசையொக்கும் *[குறு.67:2]*. தலைவன், தம்முயற்சியால் உண்ணும் உணவு போன்று, இன்சுவையைத் தருவனவாகிக் கொம்புதோறும் இனிய பழங்கள் தொங்குகின்ற பலாமரங்களையுடைய மலைக்கு உரியவனாவான் *[குறு.83:4]*. வேளிருக்குரிய குன்றூர், கருக்கொண்ட வாளைமீன் தேமாவினது உதிர்ந்த இனிய பழத்தைக் கவ்வுதற்கிடமாகும் *[குறு.164:2]*. ஆண் குரங்கு தன் கையால் தோண்டிய மணங்கமழ்கின்ற சுளைகளையுடைய பெரிய பலாப்பழத்தைப் பறிகொடுத்த கானவன், குரங்குகள் படுதற்குரிய வலையை மரங்கள் தோறும் மாட்டுவான் *[குறு.342:1]*. பலாமரத்திலுள்ள பழத்தை உண்ட ஆண்குரங்குகள், வேட்டுவனுடைய குறி தவறாத அம்பினுக்கு அஞ்சிப் போர்க்களத்துக் குதிரைபோல மேலெழுந்து, சாரலிலுள்ள மூங்கிலினது நீண்ட கோல் அசையும்படி பாயும் *[குறு.385:1]*.

மாந்தை என்ற கடற்றுறை நகரில் காம்பு இற்று வீழ்ந்த நாவற் கனியைத் தம் இனமென்று மொய்க்கும் வண்டுகளை, நாவற் பழமென்று கருதி நண்டு கவ்வ, அங்கு இரையைத் தேடிவரும் நாரையைக் கண்டு, நண்டு கைவிட்டோடும் *[நற்.35:3]*. தலைவன் சிறைப்புறமாகத், தோழி, தலைவிக்குரைப்பாளாய்த், 'தோழியே, நம் தலைவன் நமக்குச் செய்த கொடுமையை நினைந்து அவருடைய பழங்கள் உதிர்கின்ற குன்றுகள் நம்மீது கொண்ட அன்பினாலே தம் வருத்தத்தை அடக்க முடியாமல் தம் கண்ணீரை அருவியாகப் பெருகி அழும்', என்று கூறினாள் *[நற்.88:9]*. தலைவனுடைய மலையில் பெரிய பழங்கள் குலைகுலையாகப் பழுத்தன *[நற்.93:1]*. 'பலாவின் கிளையிலிருந்து கனிந்து விழுகின்ற பெரிய பழம் பிறர் உண்ணமுடியாத மலையின் பிளப்பாகிய முழையினுள் விழுந்தழிந்தாற்போலத், தலைவனின் நட்பும் அழிந்துவிட்டது', என்று தலைவி, தோழியிடம் கூறினாள் *[நற்.116:7]*. ஆவினது கன்று பிணிக்கப்பட்ட மன்றம் போன்ற பலாமரத்தின் வேரிலே காய்த்துத் தொங்குகின்ற கொழுவிய சுளையையுடைய பெரிய பழத்தை ஆவானது தின்று பக்கத்திலுள்ள குளிர்ந்த நீரைப்பருகும் *[நற்.213:3]*. மூங்கில் முள்ளால் கட்டிய வேலியையுடைய சிறிய குடியின்கண்ணுள்ளார் அஞ்சி அலறும்படி சிவந்த அடியையுடைய பலாவினது இனிய பழத்தை யானைகள் வந்து தின்னும் *[நற்.232:5]*. வேம்பின் ஒள்ளிய பழத்தைத் தின்னுதலை வெறுத்து, இருப்பையின் தேன்போலும் பால் வற்றிய இனிய பழத்தை விரும்பிய வெளவால், கிளைகள் தோறும் செல்லுதலால், அதன்மேல், பனித்துளிகள், திரிச் சுடர்விடுதல் போல், விழுந்து துன்புறுத்தும் *[நற்.279:1,2]*. கொக்கு, வந்து உட்கார்ந்ததால் கிளை அசைந்து உதிர்ந்த இனிய மாம்பழம், கொக்கு குவிந்திருக்கும் நிலை போன்ற அரும்புகளையுடைய, ஆம்பல் உள்ள, ஆழமுள்ள நீரிலே, 'துடும்' என விழும் *[நற்.280:1]*. மலையில், பலாமரத்திலுள்ள, குடம் போன்ற பெரிய பழத்தின் சுளையைக் குறவரின் இளையமகள் மந்தியை விருந்தாக ஏற்று அதற்குக் கொடுத்து ஓம்புவாள் *[நற்.353:4]*. கடற்கரைச் சோலையிலுள்ள, பனையின், தேனுள்ள அழித்த பழம், காம்பு இற்று, நெய்தலைச் சிதைத்துக், கழியின் சேற்றிலே புதையுமாறு விழும் ஓசைக்கு அஞ்சி, நாரைகள் இனத்துடன் ஓடும் *[நற்.372:2]*.

மத்தி என்னும் மன்னனுக்குரிய கழாஅர் என்னும் ஊரிலுள்ள மாமரத்திலிருந்து முதிர்ந்து விழுகின்ற இனிய பழம் பொய்கையின் ஆழத்தில் 'துடும்' என்னும் ஒலியுண்டாகும்படி விழும் *[ஐங்.61:1]*. மலைச்சாரலிலுள்ள பலா மரத்தினது கொத்திலுள்ள இனிய பழம் மலையின் வெடிப்பிலுள்ள முழையின்கண் வீழ்ந்து அங்கிருந்த பெரிய தேனடையைச் சிதைத்தது *[ஐங்.214:1]*. காட்டில், யானைக் கன்றினைப் பிடித்து உண்பதற்குப், புலி, பழங்கள் தொங்கும்படியான பலாமரத்தின் செறிந்த நிழலில் பதுங்கியிருக்கும் *[ஐங்.216:4]*. வேப்பமரத்தினது நறிய பழங்களை, வெளவால் உண்டது *[ஐங்.339:2]*. தலைவனுடன் உடன் போக்குச் சென்றுவிட்ட தலைவியது ஊரினர், அவள் செல்லுகின்ற சுரநெறியில், கனி தேர்ந்துண்ணும் இயல்புடைய பறவைகளும் கண்டிராத புதுமையுடைய பல்வேறு பழங்கள் மிக்கு உண்டாக்குக என்று வாழ்த்தினர் *[ஐங்.339:2]*. கொத்தாகக் காய்க்கின்ற காயையுடைய கொன்றை மரத்தின் குழலை (துளையை)யுடைய பழங்கள் கார்ப்பருவத்தில் உதிர்ந்தன *[ஐங்.458:1]*.

மலையிலே புன்செய்யிலே மேயவரும் யானைகளை விரட்டுவதற்குக் கானவனால் பரணிலிருந்து கவணால் எறியப்பட்ட வேங்கையின் பூக்களைச் சிதறி, ஆசினிப்பலாவின் மெத்தென்ற பழத்தை உதிர்த்துத், தேனடையைச் சிதைத்து மாமரத்தினது கொத்துக்களை உழக்கி, வாழையின் மடலைக் கிழித்துப் பலாவினது பழத்துக்குள்ளே தங்கும் *[கலி.41:12,16]*. சீர்மிகுசிறப்பினோன் (தக்கணாமூர்த்தி) சேர்ந்திருக்கும் கல்லால மரத்தில் கட்டித் தொங்கவிட்ட கமண்டலங்கள் போலக், கடற்றுறையில் தாழை மரத்தில் பழங்கள் தொங்கும் *[கலி.133:4]*.

பழன் - காண்க.

**பழமை** - தொன்மை. பொதியிலில் தெய்வம் போய்விட்ட தூணில், நெடுங்காலம் குடியிருந்த, பழமை - தொன்மை - காரணமாக அதனைவிட்டு நீங்காமல் பெரிய புறாக்கள் பெட்டைகளோடு கூடி ஒலித்துக் கொண்டிருக்கும் *[அக.307:13]*.

**பழமொழி** - முதுமொழி. தான் முடிக்கச் செல்லும் மற்றோர் திருமணத்தைத் தனது புதல்வன் மீது கொண்ட அன்பினால் தவிர்த்த தலைவனின் செயலைக் கண்ட தலைவி, தோழியிடம், 'தோழியே! மக்களைப் பெற்றவர் இவ்வுலகில் சிறப்போடு வாழ்ந்து மறுமை உலகினையும் குற்றமின்றி அடைவர், என்று பலருங் கூறிய பழமொழிகளெல்லாம் - முதுமொழிகளெல்லாம் - உண்மையாதலை இன்று கண்டோம்', என்று கூறினாள் *[அக.66:5].* பிரிவிடை வேறுபட்ட தலைவி, தோழியிடம் இம்மையில் (இவ்வுலக வாழ்வில்) நன்று செய்தால், தீது வருவதில்லை, என்று, கூறப்படும் தொன்று தொட்டு வழங்கும் பழமொழி, இன்று பொய்யாயதோ?' என்று கூறினாள் *[அக.101:3].*

**பழவினை** - முன்வினை. பொருள்வயிற் பிரியக் கருதும் தலைவனிடம், தோழி, 'பெருமானே! நீ தேடியலையப போகும் பொருள், நினது முயற்சிக்கேற்பக் கிடைக்காமல் நீ செய்த பழவினைக்கு-முன்வினைக்கு-ஏற்பவே வந்தடையும், ஆகவே தலைவியைப் பிரியாதே', என்று கூறினாள் *[கலி.21:11].*

**பழன்** - பழம். பரிசில் நீட்டித்த மூவனிடம், பெருந்தலைச் சாத்தனார், 'வானிலே நெடுந்தொலை, மிகவுயரம் பறந்து கனிமரம் நாடிச் சென்ற பறவையினம், அம்மரம், பழன் - பழம் - அற்றுவிடக் கண்டு வருந்தித் திரும்புவது போல, நின்னிடத்துப் பரிசில் விரும்பி வந்த யானும் வறிதே திரும்புவதோ?' என்று கூறினார் *[புற.209:9].* முற்ற விளைந்த இனிய கந்தாரம் என்னும் மது முன்தாளையுடைய காரையினது முதிர்ந்த பழனையொப்ப இருந்தது *[புற.258:1].*

குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை, பழன்களும், கிழங்குகளும் பலரும், பலவும் உண்டாலும் குறைவு படாத நாட்டையுடையவன் *[பதி.89:4].*

மதுரை நகரில் பாகற்காய், வாழைக்காய் முதலிய காய்களையும், வாழைக்கனி, முந்திரிக்கைகனி, முதலிய பழன்களையும் பெற்றோர் பலவிடங்களிலும் உண்டு நின்றனர் *[மது.529].* நன்னனின் நாட்டிலுள்ள குறத்தியர், கூத்தருக்குக் கடமானின் தசை, பன்றியின் தசை, உடும்பின் தசை முதலிய ஊனினை, வெள்ளிய புறத்தைக் கொண்ட புளியம்பழனின் புளிப்பையுங் கலந்து உண்ணக் கொடுப்பர் *[மலை.178].* நன்னனைக் காணச் செல்லும் கூத்தர், ஒருகால் நுகர்ந்தவர் மறந்திருத்தற்கியலாத பழன்கள், தெய்வத் தன்மை வாய்ந்தவாகலின், அவற்றை அணுகாமல் செல்லுங்கள் என்று ஆற்றுப்படுத்தப்பட்டனர் *[மலை.263].* 'நன்னனின் நாட்டிலுள்ள மலை வழிகளில் நுங்கட்கு வழிதவறின், இசைக்கருவிகளை முழக்குவீராயின், அவ்விடமெல்லாம் காவல் காக்கும் கானவர் விரைந்து வந்து நீயிர் உண்ணுதற்கு இனிய பழனைத் தந்து செவ்விய நெறியில் நும்மைச் செலுத்துவர்', என்று, புதிய கூத்தரைப், பழைய கூத்தர் ஆற்றுப்படுத்தினர் *[மலை.282].*

பழம் - காண்க.

**பழனம்** - 1. வயல். சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி, பழனத்திடத்து - வயலிடத்து - மயிலுதிர்த்த பீலியை, ஆங்குள்ள உழவர், நெற்சூட்டுடனே திரட்டும் வளமான நாட்டிற்கு உரியவனாவான் *[புற.13:10].*

இளமகளிர், மருத மரத்தில் ஏறி, நெற்கதிர்களை மேயும் புட்களை விரட்டுதற்காகத் தெளிந்த தம் விளிக்குரலால் இசைப்பாராயின், பழனத்தின் அருகிலுள்ள சோலைகளில் தங்கும் மயில்கள் அவ்விசைக்கேற்ப ஆடும் *[பதி.27:8].* பழனப்பாலுள் - மருதநிலப்பகுதியில் - ஊர்களும், ஆண்டு முழுதும் கரும்பறுத்துக் கொள்வதோடமையாது, அதன் அரிகாலையும் அகழ்ந்து, சிதைத்து, அவ்விடத்தில் மலரும் மலர்களைக் கொண்டு எடுக்கும் விழாக்களும் நிறைந்திருக்கும் *[பதி.30:21].* குடக்கோ இளஞ்சேரலிரும் பொறையின் நாட்டில் கழனியில் தொழில் புரியும் உழவரின் தண்ணுமையின் முழக்கத்தைக் கேட்டுப் பழன நிலங்களில் வாழும் மயில்கள் முகிலின் முழக்கமெனக் கருதி ஆடும் *[பதி.90:42].*

மீன்களைப் பிடித்து விற்று வாழும் வலைஞர் கொறுக்கச்சியை யுடைய பழன நிலத்தில் மீனைக் கொன்று குவிக்கும் ஓசை நிறைந்திருக்கும் *[மது.257].* சண்பங்கோரை அடர்ந்த பழனநிலத்தில் மலர் மணம் கமழ அலைத்து வலையை வீசி வலைஞர் வாளைமீனைப் பிடிப்பர் *[மலை.454].*

மத்தி என்பானுக்குரிய கழாஅர் என்னும் ஊரில் தாமரைப் பூக்களையுடைய நீர் மிகுந்த பழனத்தில் வள்ளையின் கொடிகளை உழக்கி, வாளைமீன்களைத் தின்ற நீர் நாய் முட்கள் பொருந்திய தண்டினையுடைய பிரம்பின், பழைய தூறுகளில் தங்கியிருக்கும் *[அக.6:16].* சேற்றில் நிற்றலை வெறுத்த எருமை ஊரார் துயின்ற இருளில் தனது தளையை அறுத்துக்கொண்டு, முள்வேலியைத் தனது கொம்பினால் அகற்றிவிட்டு, நீர்மிக்க பழனத்திலுள்ள மீன்கள் ஓடும்படியாக வள்ளைக் கொடியை மயங்கச் செய்து, தாமரையின் மலரைத் தின்னும் *[அக.46:4].* பழன நிலத்தின் பொய்கைக்கரையில் அரத்தின் வாய்போன்ற முட்களையுடைய நீண்ட கொடியாகிய பிரம்புவிளையும் *[அக.96:3].* தாமரைப் பூக்களையுடைய பழனத்திலுள்ள சிறிய மீன்களை உண்ணுவதற்காகப், பசிய இலையில் சிச்சிலிப்பறவை மெல்மெல்ல அசைந்து தங்கியிருக்கும் *[அக.106:1].* எருமைக்கடா பொய்கையில் பகலையெல்லாம் கழித்துப், பெண் எருமையினை அணைத்துத், தோட்டங்களில் மேய்ந்து, பழனங்களில் தங்கும் *[அக.146:4].* கடலைப் போன்ற பரந்த நீர்ப்பரப்பினையுடைய பழனத்தில், புன்சிரிப்பினையுடைய முகம்போலத், தாமரை பூத்திருக்கும் *[அக.176:7].* வள்ளைக்கொடியின் இலைச்செறிவில் துயின்று கொண்டிருத்தலை வெறுத்த யாமை நீர்த் துறையின்கண், தனது பிளந்த வாய் நிறையும்படியாகப், பனங்கள்ளின் ஒழுக்கினையுண்டு, களிப்புடன் சென்று, இனிய பெரிய பழனத்தைக் கலக்கி, அதன் அயலதாகிய ஆம்பலின் இலைக்குள்ளே ஒடுங்கிக்கிடக்கும் *[அக.256:6].*

பழனத்தருகிலுள்ள பலா மரத்தின் இலைகளைக் கூடாக்கி, முயிறுகள் முட்டையிட்ட கூடுகளை, நாரைகள் உரிஞ்சும் *[நற்.180:1]*. தலைவியின் ஊர், ஆம்பல் நிறைந்த இனிய பெரிய பழனத்தை உடையதாகும் *[நற்.200:6]*. கழுநீர் மலரை மேய்ந்த எருமை பழனத்துள் படர்ந்துள்ள தாமரை மலரைத் தின்று, வெறுத்து, வெளிய மணலில் துயிலும் *[நற்.260:2]*. குன்றூரிலுள்ள மள்ளர், பழனத்து யாமையின் கற்போன்ற முதுகிலே, தாம், சுடுகின்ற நத்தையை உடைத்துத் தின்பர் *[நற்.280:..]*. நெற்கதிரை அறுக்கும் மள்ளர், முழங்குகின்ற தண்ணுமைக்கு அஞ்சிப், பழனத்திலுள்ள, பலவாகிய புள்ளினமெல்லாம் அஞ்சிப் பறந்து மருதமரத்தில் தங்கும் *[நற்.350:2]*.

அணையுடைத்துப் புதுநீர் பாய்ந்த கழனியிலுள்ள தாமரைகள் கலங்கிப் பின் மலர்தற்கிடனானதும் பழனத்தையுடையதுமான ஊருக்குரியவன் தலைவன் *[ஐங்.53:4]*. தலைவியின் ஊர், எருமைக்கடாக்கள் பெண் எருமைகளோடு உறையும் நன்னிழல் மிக்க நீரோடையையுடைய பழனத்தின் நடுவே இருப்பதாம் *[ஐங்.94:3]*. பழனங்களையுடைய ஊர்த் தலைவனாகிய தலைவனுக்குத் தலைவி இனிய பாயலின்கண் சிறந்த துணைவியாவாள் *[ஐங்.96:4]*. பழனத்தின்கண் படர்ந்த பாகற் கொடியின்கண் முயிற்றெறும்புகள் மொய்த்தியற்றிய கூட்டினைக் கழனி எருமை கெடுத்தது *[ஐங்.99:1]*.

ஆண் அன்னத்தைத் தாமரை இலை மறைத்துவிடவே, பெண் அன்னம் அதனைத் தேடி, நீரில் விழும் திங்களின் நிழலைத் தன் துணை என்று கருதி, நெருங்கும்பொழுது, இலை மறைவிலிருந்து ஆண் அன்னம் வருவதைக் கண்டு, பெடை, நாணமுறும் பழன நிலத்தையுடையவன், தலைவன் *[கலி.70:6]*. தலைவன் தன் காதலனை நினைந்து அழும் காதலியின் கண்ணீர் அவளுடைய முலைகளின்மீது பட்டுத் தெறித்து விழுவதுபோல், இருமொட்டுக்களுக்கு நடுவே உள்ள தாமரை மலரைப் பறவைகள் தாக்குவதால் அது சாய்ந்து அம்மொட்டுகள் மீது தன்னுள்ளேயிருந்த நீரைச் சொரியும் பழன நிலத்து ஊரை உடையவனாவான் *[கலி.77:5]*. பழன நிலத்தில் வகைவகையாக மலர்ந்து இருக்கும் பல்வகை மலர்களோடு கட்கினிய தாமரை மலரும் *[கலி.78:1]*.

2. நீர்நிலை. சோழநாட்டில் பழனத்தில் - நீர்நிலையில் - பிடித்த பருத்த வாளைமீனைத் துணைக்கறியாகக் கொண்டு புது நெல்லின் வெண்சோற்றை விலாப்புடைக்கத் தின்று உழவர் மகிழ்வர் *[புற.61:4]*. பழனங்களில் தீப்போன்ற நிறத்தையுடைய தாமரைப்பூக்கள் நெருங்கி மலர்ந்திருக்கும் *[புற.249:3]*. குறுமுயலின் தூயமயிர் அழகிய பழனத்தில் - வளர்ந்திருக்கும் சம்பங்கோரையின் கதிர் போன்றிருக்கும் *[புற.334:1]*.

வயல்களைச் சார்ந்த பழனங்களிலெல்லாம் தீயின் நிறத்தினை யொத்த செந்தாமரை மலர்கள் அல்லி மலர்களோடு மலர்ந்து வளமாக விளங்கிய பகைவரின் நாடுகளெல்லாம் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் படைகளால் பாழாயின *[பதி.19:19]*.

பழனத்தை அடுத்துள்ள வயல்களில் செந்தாமரை மலர்களும், அல்லிப்பூக்களும் மலர்ந்து இருந்த வளமான பகைவரின் நாடுகள் பல்யானைச் செல்கெழுகுட்டுவனின் படைகளால் அழிந்து காடுகளாயின *[பதி.23:22]*.

மகளிர் புனல்விளையாட்டை வெறுப்பின், பழனத்திலுள்ள கோரைகளைக் கிழித்துச் செய்யின் கண்ணுள்ள நாரையை விரட்டுவர் *[அக.226:5]*. பழனத்துள் உள்ள யாமை ஈங்கையின் பூவும், மாமரத்தின் தளிரும் தன்னைத் தடவும்படியாகக் கரும்பின் வயலிலே ஊர்ந்து சென்று இளவெயிலிற் காயும் *[அக.306:7]*.

கிளவித் தலைவன், பலருகிலுள்ள மாமரத்தின் கனிந்து விழுகின்ற இனிய பழத்தைப் பழனத்து வாளைமீன்கள் கவ்வி உண்ணுதற்கிடமாகிய ஊருக்கு உரியவனாவான் *[குறு.8:2]*. அழகிய தன்மையையுடைய பழனத்திடத்து அயிரைமீன் பரவலாக மேயும் *[குறு.178:1]*.
பழனத்துள் உள்ள சம்பங்கோழிகள் காதலாலே தம்பெடையை அழைத்துக் கொள்ளும் ஊரையுடையவன் தலைவன் *[ஐங்.60:1]*. பழனத்தின்கண் வாழு' பல்வகை மீன்களையும் பிடித்துத் தின்ற நாரை கழனியிலுள்ள மருதமரத்தின் உச்சியிலே, போய்த் தங்கும் *[ஐங்.70:1]*. பெட்டைச் சம்பங்கோழி குளிர்ந்த, நறிய பழனத்தின்கண் தன் சேவலின்றியும் தனது இனத்தோடிருந்து மகிழ்ந்து ஆரவாரிக்கும்படியான ஊருக்குரியவனாவான், தலைவன் *[ஐங்.85:2]*. பழனத்துள் மலர்ந்த மலரின்கண் வண்டுகள் சென்று தாதூதும் *[ஐங்.89:2]*.

**3. ஊர்ப்பொது நிலம்.** பரத்தைமையில் திருந்திய தலைவன், தோழியிடம் எனது முந்தைய நிலை குறித்து யாது கருதியிருந்தீர், என்ற தலைவனிடம், தோழி, 'பெருமானே! எம் தலைவனுடைய மார்பு பழனம் - ஊர்ப்பொதுநிலம் - போலப் பலருக்கும் ஆகாமல் தலைவி ஒருத்திக்கே ஆகவேண்டு மென்று விரும்பியிருந்தோம்', என்று கூறினாள் *[ஐங்.4:6]*.

**பழனவெதிர் - கரும்பு.** தலைவி பழனவெதிரின் - கரும்பின் - பூவால் தொடுக்கப்பட்ட நீண்ட மாலையினை அணிந்திருக்கின்ற இளையோளாவாள் *[ஐங்.91:4]*.

**பழி - குற்றம்.** சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி, பிறருடைய பழியினைக் - குற்றத்தினைக் - கூறுவாரது சொற்களைக் கேட்கமாட்டான் *[புற.10:2]*. என்னை இளைஞன் என்று இகழ்ந்து போருக்கு வரும் பகைவரைப் பொருது வெல்லேனாயின் என் குடிமக்கள் பழி தூற்றும் கொடுங்கோலனாகுக', என்று பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் சூளுரைத்தான் *[புற.72:12]*. ஏறைக்கோன் போரிடத்துப் பழி உண்டாகாத பேராற்றலுடையவன் *[புற.157:3]*. மாட்சிமைப்பட்ட உயர்ந்த வாழ்வினையுடையவர் பழி எனின் உலகமே கிடைப்பதாயிருந்தாலும் ஏற்றுக்கொள்ளார் *[புற.182:5]*. தன் புதல்வரிடம் போரிட எண்ணும்

கோப்பெருஞ்சோழனிடம், 'அரசே! நின் புதல்வர் தோற்பின் நின்னுடைய செல்வத்தை வேறு யாருக்குக் கொடுப்பாய், நீ அவர்கட்குத் தோற்றால் நினக்குப் பழிதான் எஞ்சும்', என்று புல்லாற்றூர் எயிற்றியனார் கூறினார் *[புற.213:18]*. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் காலமானபொழுது, ஆடுதுறை மாசாத்தனார், 'கூற்றமே! பகைவரின் படைகளைக் கொன்று நினது பசியைப் போக்கினவனும் பழியற்ற வலிமையான கொலைத் தொழிலில் நின்னை யொத்துவனுமாகிய அவனைக் கவர்ந்தனையே', என்று இரங்கிக் கூறினார் *[புற.227:7]*.

இமயவரம்பன் நெடுஞ்சேரலான் பழி தீர்த்த யானையையுடையவன் *[பதி.11:18]*. தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறையின் பகைவர் மதிற்குள்ளே இருந்து வெளியேவந்து போர் செய்யாமல் தமக்குப் பழியையே உண்டாக்கிக் கொண்டனர் *[பதி.71:11]*.

முத்துக்கள் போன்ற பழிதீர்ந்த பற்களையுடையவள், பாடினி *[பொரு.28]*. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், பழியோடு வருவதாயிருந்தால், தென்திசைக்கண்ணுள்ள மலைகள் தோறும் வாணன் என்பவன் வைத்துள்ள சிறந்த பொருள் முழுதும், கிடைப்பதாயிருந்தாலும் பெற விரும்பமாட்டான் *[மது.204]*. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் அமைச்சராகிய காவிதிப்பட்டம் பெற்ற வேளாளர், சான்றோரால் பழித்தொதுக்கப்பட்ட தீவினையினின்றும் விலகி, அதனாலே உயர்ச்சி எய்தினவராவர் *[மது.498]*. தலைவி, தோழியிடம், 'தந்தையின் காவலைக் கடந்து சென்று யானே தேர்ந்து கொண்ட களவு மணத்தை யானே யாய்க்கு அறிவுறுத்துவதால் நமக்குப் புகழன்றிப் பழியுண்டாகுமோ என்று கூறினாள் *[குறி.22]*. தலைவன், ஆயத்துடன் கூடிய தலைவியிடம், 'மெல்லியலீர், கெட்டனவற்றைக் காட்டித் தாரீராயினும் என்னுடன் பேசுதலும் நுமக்குப் பழியாகுமோ?' என்று கூறினான் *[குறி.145]*. பலதேயங்களுக்குச் சென்று பழகுதல் காரணமாகத் தத்தம் தாய்மொழி தவிர, வேறுபல மொழிகளையும் கற்றுப் பழிதீர்ந்த, தம் நாட்டினின்றும் பெயர்ந்துவந்த வணிகர் காவிரிப்பூம்பட்டினத்தில் கலந்து வாழ்ந்தனர் *[பட்.216]*.

தலைவி, பழி தீர்ந்த கண்களையுடையவள் *[அக.11:15]*. சான்றோராவார், மிக்க காதல் கொண்டார் ஆயினும், பழியுடன் கூடிவரும் இன்பத்தினை விரும்பார் *[அக.112:12]*. என்றும் விழாவினையுடைய பகைவர்க்கு அச்சத்தைத் தரும் இம்முதிய ஊரில் பழியில்லாதோர் பலர் வாழினும், அலர் கூறுகின்ற சேரிப்பெண்டிரும் வாழ்ந்தனர் *[அக.115:2]*. 'பழியற்ற நம் காதலர் தாம் சென்றுள்ள அந்நாட்டில் இனிமேல் தங்காது விரைவில் வருவர்', என்று தோழி, தலைவியிடம் கூறினாள் *[அக.127:18]*. 'பிரிந்த தலைவர் பழியுடையோர் ஆகார்; அவரை விடாது பற்றிக்கொள்ளுதலையறியாத என் தோள்களே தவறுடையன', என்று, தலைவி, தோழியிடம் கூறினாள் *[அக.267:14]*. தலைவி, தோழியிடம், 'நின்னோடும் கலக்காமல், தந்தையின் அரிய காவலையும் தாண்டி வருந்துதற் கேதுவாகாத நல்ல வினையைச் செய்தமையால், உண்மையாகாத பெரிய பழிகளை நான் அடைந்துள்ளேன். என்று கூறினாள் *[அக.268:14]*. 'நம் தலைவர் வேங்கடமலையைத் தாண்டி வேற்று மொழி வழங்கும் தேயத்தைக் கடந்து சென்றுள்ளாராயினும் நினது அழகிய தோளில் பழி தீர்ந்த சிறந்த நலத்தினை வந்து தந்தருள்வார்', என்று, தோழி, தலைவியிடம் கூறினாள் *[அக.295:18]*. 'உன்னையும் அழைத்துச் செல்கிறேன்; சில நாள் அமைந்திருப்பாயாக, என்று கூறிய தலைவர், என்னைவிட்டு விட்டுச் சென்றுவிட்டார் ஆதலின், பழி யாதாகுமோ', என்று, தலைவி, தோழியிடம் கூறினாள் *[அக.325:22]*. பிரிவிடைத், தலைவியிடம், தோழி, 'தோழியே! அரக்குப் பொடிச் சிதறினாற்போன்று, நினது மேனியில் பசலை பரந்த வருத்தம் மிகவுடையையாகி, அவரிடத்தே பழியைச் சேர்க்க விரும்புகின்றனை; நின் துயரைக் கேள்விப்பட்டால் துன்பம் தாங்காமல் விரைவில் வருவர்', என்று கூறினாள் *[அக.333:4]*. தன்குறை முடிக்க உடம்படாளாய தோழியிடம், 'தலைவியின் பொருட்டு யான் மடலேறினால் அவளுக்குப் பழியுண்டாகும்; மடலேறாது யான் வாழ்ந்திருத்தல், எனக்குப் பழியாகும்; ஆகவே, நீ குறை, நேர்வாயாக', என்று தலைவன் கூறினான் *[குறு.32:5,6]*. பிரிவால் வருந்தும் தலைவியிடம், தோழி, 'தலைவர் இரக்க குணமுடையவர்; மேலும் பழியையும் அஞ்சுவார்; ஆகவே, நினது பசலை தீர விரைவில் வருகுவர்', என்று கூறினாள் *[குறு.143:2]*. குறையைத் தோழி மறுத்தாளாகத், தலைவன், 'ஊரிலுள்ளார் தலைவியைப் பழி கூறும்படியாக மடலேறும் வழி ஒன்றுதான் உளது; என்று கூறினான் *[குறு.173:6]*. இரவுக்குறியும், பகற்குறியும் இயலாமையினால் நின்னை உடன்கொண்டு செல்லத் தலைவர் விரும்பினார்; 'யானும், அதுவே அறிவுடைமையாகும் என்றும், ஆயினும் ஊரார் பழி கூறுவர் என்றும் கூறினேன்' என்று, தோழி, தலைவியிடம் கூறி உடன்போக்கை நயக்கச் செய்தாள் *[குறு.217:7]*. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனை முகம் கோணாது ஏற்றுக்கொண்டனையே! என்ற தோழிக்குத், தலைவி, 'தலைவர் பழிக்கு அஞ்சுபவர்; ஆகவேதான் ஒன்றுங்கூறாமல் ஏற்றுக்கொண்டேன்', என்று கூறினாள் *[குறு.252:8]*. பரத்தையிடமிருந்து வந்த தலைவனிடம், 'தலைவியினுடைய பழியற்ற மாட்சிமைப்பட்ட அழகு அழிந்துவிட்டது; ஆகவே, நீ இனி வாராதே', என்று, தோழி கூறி, வாயின் மறுத்தாள் *[குறு.258:8]*. தலைவன் சிறைப்புறத்தானாகத், தலைவி, தோழியிடம், 'தோழியே! தலைவரோடு நாம் ஒருநாளேனும் மகிழ்ந்து விளையாடிய பழிஇலமே; தலைவரோடு நாம் ஒருநாளேனும் மகிழ்ந்து வீணே அலரைத் தூற்றுவர்', என்று கூறினாள் *[குறு.320:5]*. 'நல்ல

நாளிலே நம்மைவிட்டு நீங்கிய பழியற்ற மாமையை வன்மையிற் பொறுப்பேம் அல்லது சொல்வதற்கு ஆற்றேம் என்று, தலைவி, தோழியிடம் கூறினாள் *[குறு.368:2]*.

வரைவு நீட்டித்த தலைவனிடம், தோழி, 'பெருமானே! தன்னைப் பிறர் கூறும் பழிச்சொற்கஞ்சி, வளைகள் கழலாவாறு, செறித்து, மறைத்துத், தோள்கள் வாடாவாறு, தலைவி காத்து வருகிறாள்', என்று கூறி வரைவு கடாயினாள் *[நற்.23:1]*. 'தலைவரின் பிரிவால் எனக்குற்ற காமநோயை, அயலார், முருகணங்கியதென்று பழி பிறிதொன்றாகக் கூறல் பண்பன்றாதலின் யான் உயிர் வாழேன்', என்று தலைவி, தோழியிடம் கூறினாள் *[நற்.117:11]*. 'எனக்குற்ற தலைவனின் பிரிவுத்துயரை அறிந்தவன்போல, என் தந்தை, தோளிலேயே தங்கித், தோளின் பழியை மறைக்கும்படியான வளையல்களைச் செய்து கொடுத்துள்ளான்', என்று தலைவன் சிறைப்புறமாகத், தலைவி, தோழியிடம் கூறினாள் *[நற்.136:8]*. சுவரில் எழுதிய பாவை போன்ற பழி தீர்ந்த காட்சியினையுடையவள், தலைவி *[நற்.252:7]*. தலைவியைத், தலைவன், 'நீதான் புலவராலே பாடுதற்கமைந்த பழியற்ற, சிறிய அடிகளையுடையவள்', என்று பாராட்டினான் *[நற்.256:1]*. 'நமது ஊரும், துறைமுதலியவையும் இனியவையாயிருந்தும், தலைவர் நம்மை வந்து கூடும் கடற்கரை சோலையொன்று மட்டுமே, ஊரார் கூறும் ஒரு பழியை உடையதாய் உள்ளது', என்று தோழி, தலைவியிடம் கூறினாள் *[நற்.31t8]*. 'தலைவருடைய மார்பு நமக்கு இனியதாகும்; அது பழியாகுமானால் சாதல் நமக்கு இனியதாகும்; இவ்விரண்டனுள் ஒன்றை நாம் அடைவது நமக்கு நன்மையாகும்', என்று தோழியிடம், தலைவி வருந்திக் கூறினாள் *[நற்.327:1]*. பிரிவினால் தன் வருத்தத்திற்காக வருந்தும் தோழியிடம், தலைவி, 'தோழியே! 'களவிற்காக வரும் நம் காதலரைச் சேரிப் பெண்டிரும், மற்றவரும் பழிச் சொற்களைக் கூறித் தூற்றுவதால், நமது உயிரே போவதாயினும் நமது வருத்தத்தை மறைத்து வாழ்கிறேன்; நீயும் வருந்தாதே', என்று கூறினாள் *[நற்.382:9]*.

பொருளுக்காகத் தலைவன் பிரியப் போவதை அறிந்த தோழி, அவனிடம், 'பெருமானே! நிலையில்லாத பொருளை நீ விரும்புதல் கூடாது; நீ செலவைத் தவிர்த்தல் வேண்டும்; ஆராயின், நாடாளும் அரசன் பழியின்றி அரசாண்டு, மனைவி மகிழுமாறு கூடிவாழ்வதே சிறந்த செல்வமாகும்', என்று கூறிச், செலவழுங்குவித்தாள் *[கலி.8:20]*. பிரியக் கருதும் தன் காதலனைக் குறித்துத் தலைவி, தோழியிடம், 'தோழியே! துயிலின், கனாவால் காதலர் பிரியப் போவதை யறிந்தேன்; மனைவியை மறந்து போய்விட்டாரே என்று அயலார் கூறும் பழிமொழி அவரிடமே தங்கவும், அவரோடு கூடவே என்னுயிரும் போய்விடும் என்பதை, நீ அவரிடம்கூறிவிடு', என்று கூறினாள் *[கலி.24:16]*. அருகில் இருக்கும்போது புகழந்தும், இல்லாதபோது, இகழ்ந்தும் பழி தூற்றும் புல்லியர்போல, நீ இருக்கும்பொழுது மகிழ்ந்து மலரைப்போலக் காட்சி அளித்துவிட்டு, நீ இல்லாதபோது, அழுது தூற்றும் தலைவியின் கண்களும் உள்ளனவே' என்று, பிரியக் கருதும் தலைவனிடம், தோழி கூறிச் செலவழுங்குவித்தாள் *[கலி.25:16]*. தோழியிடம் கூறினால், அவள் தலைவனைப் பிறர் முன்னே பழி கூறுவாள் என்று கருதித், தலைவி, தன் பிரிவுத் துயரைத் தோழியிடமும் மறைத்தாள் *[கலி.44:10]*. இரவுக்குறிக்கண் தடையேற்பட்டதைத் தலைவன், தலைவியின் தவறாகக் கொண்டு அவள் மீது தோழியிடம் பழி கூறினான் *[கலி.46:19]*. தலைவனின் குறையை ஏற்றுக்கொண்ட தோழி, தலைவியிடம் 'தோழியே! ஒருவன் என்னைக் கண்டு நீ, யின்றி நான் வாழேன் என்று கூறுகிறான்; அவனுக்காக நான் வருந்துவது, ஊரார் அறிந்தால், இவள் அறிவில்லாத பேதைபெண்ணே யாவள், என்று பழி தூற்றுவர்; ஆகவே நாம் அது குறித்து ஆராய்வோம் வா', என்று கவர்படுபொருளில் கூறிக் குறைநயப்பித்தாள் *[கலி.47:16]*. அயலார் கூறும் அலர்மொழியைக் கேட்டு, நீலமலர், மழை நீரைச் சொரிவது போல், கண்ணீரைச் சிந்தும் இவளுடைய கண்களின்மீது நினக்குப் பழிகளுண்டோ? ஒளி இழந்த இவளதுமேனி ஊராருக்கு உள்ளக் காதலை உணர்த்திவிடுகின்றது; இவள் இவ்வாறு ஆவதற்கு இவளுடைய மாமை செய்த பழி ஏதேனும் உண்டோ? என்று, தோழி, தலைவியைப் பற்றித் தலைவனிடம் கேட்டாள் *[கலி.48:13,17]*. உன் மீதுத் தவறில்லை; உன்னை அழகுறுத்தி வெளியே செல்லவிட்ட நின் சுற்றத்தினர் மீதே தவறாகும்; என்னால் பொறுக்கமுடியாத அளவிற்குக் காமநோய் மிகுமாயின் பொதுவிடத்தில் மடலேறிப் பெரும்பழியை நினக்கு உண்டாக்கிவிடுவேன்', என்று காதல் கொண்ட தலைவனொருவன், காமஞ்சாலா தலைவியிடம் கூறினான் *[கலி.58:23]*. ஒருகாதலன், ஆணாகிய தான், பெண்களைத் தொழுது நிற்பதைக் கண்டால், பிறர் பழிதூற்றுவரே என்று கருதாமல், அவர்களைப் பார்க்கும் பொழுதெல்லாம் தொழுதான் *[கலி.63:2]*. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம், தலைவி, என் உயிர் தேய்ந்து நான் அழிவதற்குள் பரத்தையர் பின் திரியும் அப்பழி உடையானின் மனைவி இவள் என்று, பிறர் கூறும் இழிசொல் மாறப்பெறின் வர்ந்த கவின் வேண்டேன் என்று கூறினாள் *[கலி.77:11]*. போர்வினைமேல் சென்றிருக்கும் அரசனாகிய தலைவனிடம் சான்றோர், 'வேந்தே! உன் நினைவு வருத்துகையினாலே வருந்தி நின் காதலியின் பழியற்ற ஒளிமுகம் பசலை படர்ந்து பாழடைவதைப் பார்க்குமிடத்துச் செங்கோலால் நீதி வழங்கும் உன் நீதிக்குக் குற்றம் உண்டாகாதோ?' என்று கூறினர் *[கலி.100:18]*. பனைக்கொடியினையும், பால் போன்ற வெண்மேனியையுமுடைய பலதேவன் போன்ற பழியற்ற வெள்ளிய ஏற்றை ஆயர் தொழுவினுள் விட்டனர் *[கலி.104:8]*. சிறுகுழலே! பிரிந்த தலைவர் இப்பொழுது வரினும் அவர் செய்த பழி அகன்றுவிடும் என்று கருதிக் கலங்கும் மகளிரின்

துயர்கண்டு, நீயும் கலங்குகின்றாயா? முன்பு இன்பம் அளித்துப் பின்பு பிரிந்து விட்டவரை எம்மைப்போல நீயும் உடையையோ?' என்று குழலை நோக்கிக் காதல் மிக்கூர்ந்த தலைவி வினவினாள் *[கலி.129:17]*. அழகுகெட்டு நெடுங்காலம் கழுவாது விட்ட மணிபோல், மாசுபடிந்து தோன்றும் தலைவியின் தோள்களின் வளைகள் கழல்வது, நறும் பொழிலிலே, அவளைப் பழியின்றிப் புணர்ந்திருந்தபோது, நின்னைப் பிரியேன் என்று நறும் கூறியதனாலல்லவா? என்றும், காக்கும் தெய்வமே கைவிட்டுக் கொடுமை செய்தது போல், தலைவிக்கு நீ செய்த பழி எங்கும் பரந்து அலர் தூற்றும்படி பிரிவது மிகவும் கொடிது', என்றும், தோழி, தலைவனிடம் கூறினாள் *[கலி.132:12,23]*. பிரிவினால் துயர் மீக்கூர்ந்த தலைவி, 'பழிநீங்கிய ஞாயிறே! உலகியல் துறந்தாரை மிகவும் சினப்பாய் என்று கேட்டு, உன்னை வணங்கி வழிபாடாற்றி ஒன்று வேண்டுவேன்; என் காதலனைச் சீறி என்னைக் கைவிட்டுவிடாதே', என்று கூறினாள் *[கலி.143:22]*.

**பழு-பேய்.** இரவுக்குறிக்குத் தலைவன் வரும் வழியில் பழுவும்-பேயும்-இருப்பதால் தலைவி வருந்தினாள் *[குறி.259]*.

**பழுது-1.** குற்றம். கோப்பெருஞ்சோழன், தன் பதவியைத் துறந்து, உயிர்விடத் துணிந்தது, வியப்பைத் தருவதாகும்; அதை விடப் பெருவியப்பு, பிசிராந்தையார் வருவார்; என் கூடவே உண்ணாநோன்பிருந்து உயிர்விடுவார், என்று, அவன் கூறிய சொல் பழுது-குற்றம்-ஆகாதவாறு அவர் வந்ததும், உயிர்விடத் துணிந்ததுமாகும்', என்று புலவர் பொத்தியார் கூறினார் *[புற.217:8]*. சோறாக்குதற்கு ஏற்றிய உலைப் பானையில் சோறு வாராது, நெருப்பு வந்தது போலப் பரிசில் பெறலாம் என்று பெருவிருப்போடு சென்ற பெருஞ்சித்திரனாரின் வேட்கை பழுதுபடும்படியாக வெளிமான் இறந்தான் *[புற.237:6]*. கானவர், தேன் முதலியவற்றோடு, பன்றியின் தசையில் பழுதானவற்றைப் போக்கி எஞ்சியவற்றையும் யானைக் கொம்பைக் காவு மரமாகக் கொண்டு தம் ஊருக்கு எடுத்துச் சென்றனர் *[மலை.153]*.

'வளை கழன்றிடும் துயரையுடைய நம்மிடத்து மேவிய தமது உள்ளம் பழுது அற்றதாக, நம் காதலர், சுரநெறி கடந்து இரவுக்குறிக்கு வந்துள்ளார்', என்று, தோழி, தலைவியிடம் கூறினாள் *[அக.68:13]*. 'தோழியே! நமக்கு அச்சம் இன்றாகக் கூறிய சொல் பழுதுபடும் எனவும் அஞ்சாமல், நம் தலைவர், பாறைகளைக் கடந்து போய்விட்டார்', என்று, தலைவி, தோழியிடம் கூறினாள் *[அக.281:3]*. முன்பு கைவிட்ட தலைவன் நம்மை அருளாது துன்புறுத்தினனாயினும் பழங் கண்ணோட்டமுடைய நாம் அதைப் பழுதாகக் கொள்ளல் ஆகாது' என்று, தோழி, தலைவியிடம் கூறினாள் *[அக.356:17]*. தலைவன் சிறைப்புறத்தானாகத், தோழி, தலைவியிடம், இரவுக்குறிக்குக் காதல் கொண்டு வந்த நன்மையாளராகிய நம் தலைவர், திங்கள் ஒளியின் காரணத்தால், தம் நசை பழுதாக, நம்மைப் புணராது மீளின், இவ்விரவும் யான் உயிர் தரித்திரேன்', என்று, கூறினாள் *[அக.362:9]*.

தலைவியின் வேறுபாடு குறித்து வினாவிய செவிலியிடம், தோழி, 'அன்னையே! வெறியாடுபவன் முருகனாலாயது என்று கூறியதைப் பொறாளாகித் தலைவன் தனக்களித்த நீலமலரைக் கண்டு அவள் அழுதது பழுது அன்று', என்று கூறி, அறத்தொடு நின்றாள் *[குறு.366:7]*.

தலைவி, தோழியிடம், 'தோழியே! நம் தலைவர் குறித்த காலத்தில் வந்து நம்மைக் கூடித் தலையளி செய்யாமையால் எனது நசை பழுதாக ஊரார் அலர் தூற்றும்படியான நோயாகிவிட்டது' என்று கூறினாள் *[நற்.272:7]*. குறித்த பொழுதில் புதல்வனால் பாலுண்ணப்படாத தாயின் முலையில் பால் பெருக்கெடுத்துக் காம்பற்று வீழ்ந்த வடுமாங்காயின் பால் பெருகி வழிவது போல, வழிந்து பழுதாகியது *[கலி.84:4]*.

**2. வறுமை (ஆகுபெயர்).** தன்னிடம் வந்த பரிசிலரைக் கரிகாலன் கன்றீன்ற ஆவைப் போல ஆர்வுற்று அவரின் பழுது-வறுமை-தீருமளவு நல்கிப் பாதுகாப்பான் *[பொரு.150]*.

**பழுப்பு-பழுப்புநிறம்.** முல்லை நில மக்கள் செம்மறியாட்டினுடைய பழுப்பு-பழுப்புநிறம்-முற்றிய தயிரோடு, வரகரிசிச் சோற்றையும், ஈயலையும் கலந்து இனிய புளிப்பு வாய்ந்த உணவினை நெய்யோடு உண்பர் *[அக.394:2]*.

**பழூஉ - பேய்.** களிற்றின் பருத்த காலின் பெரிய நகம் பழூஉ - பேயின் - பல்லைப் போன்றிருக்கும் *[குறு.180:1]*.

**பழையர்-1.** வலைஞர் தம் நாட்டிற்கு வரும் விருந்தினர்க்குப் பகன்றை மலரணிந்த, பழையரின்-வலைஞரின்-மகளிர் வாளை மீனின் தசையோடு, வரால் மீனின் தடியையுங், கலந்து கள் தெளிவுடன் அளித்து வரவேற்பர் *[மலை.459]*. பாண்டியனுக்குரிய கொற்கையின் கடற்றுறையிலே பழையரது பெண்டிர் முத்துக்களுடன், வலம்புரிச் சங்கினையும் சொரிந்து தெய்வத்தினைப் பரவுவர் *[அக.201:7]*.

**2. எயினர்.** பசிய தளிர்களாலாய தழையுடையராகிய பழையரின் -எயினரின்-மகளிர் கரடிகள் உண்டு எஞ்சிய இருப்பைப் பூக்களை மூங்கிலின் குழாயில் திரட்டிச் சென்று சீறூரின் தெருக்கள் தோறும் விற்பர் *[அக.331:5]*.

**பழையன்-1. ஒரு குறுநிலமன்னன்.** பழையன் காவல் மரமாக வைத்துக் காத்து வந்த வேம்பின் அடிமரத்தை வெட்டச் செய்து, போரிலே அவனையும் கொன்று, அவனுரிமை மகளிரின் கூந்தலைக் கொய்து திரிக்கப்பட்ட கயிற்றினால், அவனுடைய களிறுகளையே கடாக்களாக வண்டிகளிற் பூட்டி, அவ்வேம்பினை ஏற்றிக் கொணர்ந்தான், கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் *[பதி.ப..5:13]*. பழையனின் மோகூரிடத்து, நன்மக்கள் அவையிலே, நான்கு வகையாகிய கோசர்

சிறப்புற்று விளங்கினாற்போன்று, நாற்பெருங்குழு பாண்டியனின் மதுரையில் மேம்பட்டு விளங்கியது *[மது.508]*.

**2 ஒரு சோழன் மறவன்.** நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்றுறை என்று கூறப்பட்ட (சேரன் படைத்தலைவர்) அறுவரும் தம்முள் கூடிவந்து பொருதற்கு நின்ற பாசறைக் கண்ணே பருந்து சுற்றிப் பறக்கும்படி போர் செய்து பழையன் மாண்டானாக (அவன் வேந்தனான) பெரும்பூட்சென்னி அதனைக் கண்டு பொறாதவனாய் அவன்னார் படை முதலியான வலிய தேரினையுடைய கணையன் அகப்படுமாறு கழுமலம் என்னும் ஊரைக் கைப்பற்றினான் *[அக.44:11]*. வெற்றி வேலையும், மழைத்துளி போலும் மிக்க அம்பினையும் முகில் போலும் கரிய கேடகத்தினையுமுடைய பழையனுக்குரியது காவிரி நாட்டிலுள்ள போர் என்னும் ஊர் *[அக.186:15]*. வெற்றி வேலையும், அணிகலன்கள் அணிந்த யானையையுமுடைய சோழன் மறவனும் (படைத்தலைவனும்) காவிரிக்கரை சார்ந்த தோட்டங்களையும், நீர்நிறைந்தோடும் மதகுகளையுமுடைய போர் கிழவோனும், ஆகிய பழையன் பகைவர் மீது செலுத்திய வேல் தன் குறி தப்பாது *[அக.326:12]*. சோழர் கொங்கரைப் பணிவிக்கும் பொருட்டு நிகழ்த்திய போரில் வெண்கோட்டி யானைகளையுடையவனும், போர் கிழவோனுமான பழையனது வேல் தப்பாது பகைவரை வீழ்த்தியது *[நற்.10:8]*.

**பழையன் மாறன்** - ஒரு பாண்டிய வேந்தன். மிக்க தானையுடன் வேற்றுப்புலங்களில் தங்கி அப்புலங்களை வென்று வரும் கிள்ளிவளவன், நெடுந்தேரினையும், யானையினையுமுடைய, பழையன் மாறனை அவனது கூடன்மாநகரிலேயே நற்போரில் வென்று, சாய்த்து, அவனுடைய புரவிகளோடு, களிறுகளையும் கைப்பற்றக் கண்ட கோதை மார்பன் பெரிதும் உவந்தனன் *[அக.346:19]*. - 'இளம் பழையன் மாறன்' - காண்க.

**பழையோள்** - கொற்றவை. துர்க்கை. முருகப்பெருமான், பூண் அணிந்த தலைமையினையுடைய பழையோளாகிய-கொற்றவையாகிய - காடு கிழாளின் மகனாவான் *[முரு.259]*.

**பள்ளம்** - நீர்நிலை. வெள்ளி தென்திசைக்குச் சென்றால் விளை வயல்களும், பள்ளங்களும் - நீர்நிலைகளும் - வற்றிப் பஞ்சம் உண்டாகும் *[புற.388:2]*. பள்ளத்துள் வளர்ந்துள்ள பஞ்சாய்க்கோரையால் பாவையைச் செய்து தலைவன் தலைவிக்குக் கொடுத்தான் *[குறு.276:2]*.

**பள்ளி** - **1. படுக்கை.** சுடுகாட்டுள் விறகு மூட்டிய தீயில் உள்ள அழல் பொருந்திய பள்ளியாகிய - படுக்கையாகிய - பாயலில் சேர்ந்து, மேலுலகத்தே என் மனைவி சென்றுவிட்டாள்; யான் இன்னும் உளேனே', என்று சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சியமாக்கோதை தன் பெருங்கோப்பெண்டு துஞ்சியபோழுது கூறினான் *[புற.245:5]*. பூதப்பாண்டியனின் தேவி பெருங்கோப்பெண்டு தீயில் பாயும் பொழுது தடுத்த, சான்றோரிடம், 'பருக்கைகளால் நிரப்பப்பெற்ற பள்ளியின்கண் பாயுமில்லாமல் கைம்மை நோன்பால் வருந்தும் பெண்டல்லேம் யாம்', என்று கூறினாள் *[நற்.246:9]*. கலங்கிக் கிடக்கும் நீர்நிலைபோலப் பாழ்பட்டு, வெடித்துச், சீரழிந்த தரையையுடைய மன்றத்தின் ஒரு பக்கம் இளைஞனுக்குப் பள்ளியாக இருந்தது *[புற.375:3]*.

எருமை செங்கழுநீர்ப் பூவை மேய்ந்து மிளகுக்கொடி படர்ந்த பலாவின் நிழலிலே மஞ்சளின் இலை தன் முதுகைத்தடவக் காட்டு மல்லிகையாகிய பள்ளியிலே துயில் கொண்டது *[சிறு.46]*. அண்மையில் மகவை ஈன்ற எயிற்றி மான்தோலாகிய பள்ளியில் குழவியோடு முடங்கிக் கிடந்தாள் *[பெரு.89]*. தொண்டைமான் இளந்திரையனின் காஞ்சிப் பதியிலுள்ள திருவெஃகாவில் அழகிய பக்கமலையிலே யானை கிடந்தாற்போலப் பாம்பணையாகிய பள்ளியிலே திருமால் துயில்கொண்டுள்ளார் *[பெரு.373]*. அரசனுடைய பாசறைப் பள்ளியறையுள் கையாலும், முகத்தாலும் மட்டுமே பேசுகின்ற ஊமையராகிய யவனர் காவலிருந்தனர் *[முல்.64]*. அரசன் பாசறையுள், புண்பட்ட யானைகளை நினைந்தும், பகைவரின் யானைகளை யழித்துப் பட்ட மறவரை நினைந்தும் ஒரு கையைப் பள்ளியின் மேலே வைத்தும் மற்றொரு கையை முடியோடு கடகம் சேரும்படி வைத்தும் நீளச் சிந்தித்து அவ்விரவைக் கழித்தான் *[முல்.75]*. மலைச்சார்பிலுள்ள அரிய வழிகளில், தழையால் வேயப்பட்ட குடிலிலிருக்கும் மான் தோல் பள்ளியினையும், கண்ணியினையும், வன்சொல்லினையுமுடைய இளைஞர் ஆறலைகள்வர் வாராமற் காவல் காப்பர் *[மது.310]*. கூதிர்ப்பருவமாகையனாலே மதுரையின்கண் உள்ள மனைகளில் இளவேனிற்காலப் பள்ளிக்கு இன்றியமையாத் தென்றல் காற்றைத் தரும் பலகணிகளின் கதவுகள் தாழிடப்பட்டுக்கிடந்தன *[நெடு.61]*. ஆடுகளின் உடலையுரித்து ஒன்றாகத் தைத்த தோல்பள்ளியிலே, கொடிய விலங்குகள் வாராதபடி, இடையர் கொளுத்திய நெருப்புத்துணையாகத் தங்கிப் போகும்படி கூத்தன் ஆற்றுப்படுத்தப்பட்டான் *[மலை.419]*. தலைவி இற்செறிக்கப்படுவதால், தலைவன், புட்கள் கூடி இன்புறுவதைக் கண்டாலும், காதலனும் காதலியுமாகிப் புணர்ந்து இன்புற்றாரைக் கண்டாலும், பள்ளியிலே கிடந்த யானை போலப் பெருமூச்சுசெறிந்தான் *[நற்.253:2]*.

**2. சாலை.** இயங்குதற்கு இனிய செறிந்த மணலையும், புதிய பூக்களையுமுடைய பள்ளியின்கண்-சாலையின்கண்-மாடங்களின் வாயில்தோறும் செம்மறிக்கிடாய்களை வெட்டி நீ நடத்தும் சிறுசோற்று விழாவினும், நினது பாசறைக் காட்சி பெரிதும் சிறப்புஉடையது, என்று, புலவர் கோவூர்கிழார், சோழன் நலங்கிள்ளியிடம் கூறினார் *[புற.33:20]*.

**3. இடம்.** தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனுக்கு அடங்கி வாழாதார் நாட்டின் பெரிய

மாளிகைகள், வெந்து வீழ்ந்த கரிந்த குதிரின் பள்ளிகளிலே - இடங்களிலே - கூகைச் சேவல் பெட்டையுடன் சேர்ந்து கதறும்படியாகப், பாழ்பட்டன *[மது.169]*. மதுரையில் மறைகளைக் கற்று, அதன்படி ஒழுகி, வீட்டின்பத்தை இவ்வுலகிலேயே பெற்றவராய் அறநெறியில் தவறாதவராய், எவ்வுயிரிடத்தும் செந்தண்மை பூண்டாமுகுபவராய் விளங்கும் அந்தணர் வாழும் பள்ளிகளும் இருந்தன *[மது.474]*. மதுரையில், வேந்தனின் அரண்மனையில், பாவை விளக்கிலே ஒளி குன்றாவாறு காத்தலால் பலவாய் வேறுவேறு ஆகிய பள்ளிகளில் பரந்த இருள் நீங்கிய, பாண்டியனல்லது வேறு ஆடவர் செல்லாத, காவலையுடைய கட்டுக்களும் இருந்தன *[நெடு.105]*. மலையின் பல ஓசைகளோடே, நெடிய முழையாகிய பள்ளியுள் வாழும் முள்ளுடைய பன்றியினால் தாக்கப்பட்டுக் கானவர் அழும் ஓசையும் கலந்திருந்தது *[மலை.300]*.

வீட்டின்கண் தங்கும் குருவிகள் தானியங்களைத் தின்று வீட்டினிறப்பிலுள்ள பள்ளிகளில் தம் குஞ்சுகளோடு தங்கியிருந்தன *[குறு.46:5]*.

முள்ளம்பன்றி தினைப்பயிரை உண்ணும் பொருட்டு இயந்திரப்புழை வழியிலே செல்லும்போது பல்லியடித்தலின் ஊறுக்கஞ்சி மெதுவாகப் பின்வாங்கித் தன் மலைமுழையிலுள்ள செல்லும்போது பல்லியடித்தலின் ஊறுக்கஞ்சி மெதுவாகப் பின்வாங்கித் தன் மலைமுழையிலுள்ள பள்ளியில் தங்கும் *[நற்.98:7]*. ஆண்பன்றி கானவருடைய தினையைத் தின்று, பக்கத்திலுள்ள மலைப்பிளப்பினைத் தனக்குத் தங்கும் பள்ளியாகவுடைய புலிக்கு அஞ்சாமல், மலைச்சாரலில் உறங்கும் *[நற்.386:4]*.

நீர்நிலையைத் தனக்குத் துயிலும் பள்ளியாகவுடைய நீர்நாய் நாள்தோறும் காலையில் வாளைமீனைப் பிடித்து உண்ணும்படியான ஊருக்குரியவன் தலைவன் *[ஐங்.63:1]*.

**4. துயில்.** மதுரை நகரில் யாமத்தில் சங்குகளின் ஒலியடங்கவும், பண்டங்கட்கு விலை கூறும் மாதர் சட்டக்காலை வாங்கி நெடிய கடைகளை அடைத்துப் பள்ளி - துயில் - அயர்ந்தனர் *[மது.623]*. பாசறையில் பாண்டியன் நடுயாமத்தும் பள்ளி கொள்ளானாய்ப் போரில் புண்பட்ட வயவரின் உள்ளம் மகிழும் பொருட்டு உசாவியறிவதற்காகச் சுற்றித்திரிவான் *[நெடு.186]*. மனைவியைத் தழுவிக்கொண்டு துயில்கொள்ளும் தலைவனின் மார்பில் அவனுடைய புதல்வன் ஏறி இறங்குவதுபோல், சூல்கொண்ட பிடியினைத் தழுவிக்கொண்டிருந்த களிறு, தன்மேல் கன்று ஏறி இறங்கும்படியாகப் பள்ளி கொள்ளும் சுரநெறியில் தலைவன் பிரிந்து சென்றான் *[அக.197:15]*. மலையில் நீண்டு வளர்ந்த செவ்வாழையின் காற்றினால் அசையும் இலைகள் பள்ளி கொள்ளும் யானையின் முதுகினைத் தடவும் *[அக.302:3]*. இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்கும் தலைவன், நான் தலைவியைப் பிரிந்து வந்த பின்னரும், நடுயாமத்துப் பள்ளி கொள்ளும் யானையைப் போலப் பெருமூச்சு விட்டுக்கொண்டு எனது உள்ளம் இன்னும் அவளிடத்திலேயே இருக்கின்றது', என்று கூறினான் *[குறு.142:4]*. ஊடல் தீராத தலைவியை ஊடல் தீர்க்க வேண்டித் தலைவன் மாலை நிலவில் படுக்கையில் படுத்த பள்ளியானையைப் போலப் பெருமூச்சுவிட்டு அவாவோடு தன்புதல்வனைத் தழுவினான்; அதைக்கண்ட தலைவி ஊடலைவிட்டுத் தலைவனது முதுகைத் தழுவிக்கொண்டாள் *[குறு.359:4]*.

கழியிலுள்ள நீர்நாயின் குருளை மீன்களைப் பிடித்துத் தின்றுவிட்டுத் தில்லை மரப்பொந்துகளிலே பள்ளிகொள்ளும் *[நற்.195:3]*.

ஞாயிறு மறைந்தும், திங்கள் தோன்றியும் பறவைக்கூட்டம் அடங்கியும் ஒலி குறைந்து மலர் குவிந்த உப்பங்கழி பள்ளி கொள்வது போல் தோன்றும் *[கலி.121:6]*.

**5. கோயில்.** சிறுவர்களின் கைகளைத் தம் கைகளால், தாமரைப் பூத் தாமரையின் முகிழைப் பிடித்தாற்போன்று, பிடித்துச் செல்லும் பேரிளம்பெண்டிர் பூவாலும், புகையாலும் தொழுது வாழ்த்தும் பௌத்தப்பள்ளியும் - கோயிலும் - மதுரை மாநகரின்கண் இருந்தது *[மது.467]*.

**6. கட்டில்.** மலையைப் போன்ற மனையின்கண் நுரையைப் போன்ற பூக்களாலாய படுக்கையையுடைய பள்ளியில் - கட்டிலில் - விளக்கின் ஒளியிலே தலைவனுடைய மார்பில், தலைவியின் மார்பகத்துப் பூண்கள் வடுக்களைச் செய்தன *[அக.93:14]*.

**7. சேரி.** நன்னனது நாட்டின் பொழில்களிலும், பள்ளிகளிலும் - சேரிகளிலும் - யாழின் பண்ணைமாற்றி இசை கண்டனர் *[மலை.451]*. சுரநெறியில் செல்லும் புதியர், புலிஉண்டு எஞ்சிய மானின் தசையை, மூங்கிலரிசியுடன் ஆயரின் பள்ளியில் உள்ள தயிரினைப் பெய்து அட்ட நிணச் சோற்றைத் தேக்கின் இலையில் வைத்து உண்ணுவர் *[அக.107:8]*.

**பளிங்கம் - பளிங்குக்கல்.** முதிய காட்டில் நெல்லியினது, பளிங்கம் - பளிங்குக்கல் — போன்ற பலகாய்கள், பெரிய பாறைகளில், சிறுவர் விளையாட்டிற்காகச் சேர்த்து வைத்திருக்கும் வட்டுக்களைப் போல, உதிர்ந்து கிடக்கும் *[அக.5:9]*.

**பளிங்கு-1. பளிங்குக்கல்.** இரும்பால் புனைந்து செய்யப்படாத, மிக்க புகழையுடைய, நள்ளிக்குரிய தோட்டி மலையில் பளிங்கைப் - பளிங்குக்கல்லைப் - போன்ற வெளிய நிறத்தையுடைய இனிய நீர் உள்ளது *[புற.150:27]*.

செல்வக்கடுங்கோ வாழியாதனின் நாட்டிலுள்ள உயரிய பளிங்கு விரவிய சிவந்த பரல்கள் கிடக்கின்ற முரம்பு நிலத்திலே வாழ்வோர் மிக்க ஒளியையுடைய அழகிய மணிகளைப் பெறுவர் *[பதி.66:18]*.

தலைவியும், தோழியும் தலைவனுடைய பளிங்கு போன்ற நீரையுடைய சுனையிலே குடைந்து நீராடினர் *[குறி.57]*.

மலையில் முத்துக்கள் சிதறிக்கிடப்பது போல், யானையின் முகத்தில் மோதி வீழ்ந்த புதிய ஆலங்கட்டி பளிங்கினைச் சொரிவது போலப், பாறையில் வீழ்ந்து அழகளித்தது *[அக.108:5]*. புறா துளைத்து உண்ட நெல்லிக்காய்கள், நூல் அற்று உதிர்ந்த துளையினையுடைய பளிங்குக் காசுகளை ஒத்திருந்தன *[அக.315:12]*. காட்டில் மரைமான் குற்றமற்ற பளிங்கினைப் போன்ற நெல்லியின் பசிய காய்களை உண்டு அசைபோடும் *[அக.399:13]*.

பாலைப்போன்ற வெளிய நிலா பளிங்கின் ஒளி செறிந்தாற் போன்ற கதிர்களை உடையது *[நற்.196:1]*. யானைகள் ஒன்றோடொன்று பொருதலால் இடிந்த பெரிய பள்ளங்களில் வெள்ளிய பளிங்குகள் மின்னும் *[நற்.292:6]*.

**2. கருப்பூரம்.** நன்னனின் அரண்மனை முன்றிலில் உள்ள கையுறைப் பொருள்களில் மரத்தினின்றும் உதிர்ந்தனவாகிய பளிங்கும் — கருப்பூரமும் - (உரை-நச்) இருந்தது *[மலை.516]*.

**பளிதம் - (பச்சைக்) கருப்பூரம்.** வையை யாற்றில் நீராடிக் களைத்த மகளிருள் சிலர் குங்குமச் சேறு, அகிற்சாந்து, பளிதம் - (பச்சைக்) கருப்பூரம் - ஆகியவற்றைச் சாந்தம்மியிலிட்டு, வேள்வி குண்டத்தில் எழும் தீயின் நிறம் பெறும்படியாக அரைத்தனர் *[பரி.10:82]*.

**பற்றாமாக்கள் - பகைவர்.** சோழன் நலங்கிள்ளியிடம், உறையூர் முதுகண்ணன் சாத்தனார், 'நல்லவளமான நாட்டைப் பெற்ற நின் படை மறவர் நின்னுடைய பற்றாமாக்களைப்-பகைவரைப்-போல-புல்வேய்ந்த குரம்பையில் வாழாமல், வறுமையோர்பால் இரக்கமுடையவராகி அவர்க்குதவும் நற்பண்புடையராய் வாழ்வாராக' என்று கூறினார் *[புற.29:1,18]*.

**பற்று - அன்பு.** செல்வமில்லாதாரிடத்துத் தம் பற்றினை - அன்பினை - விட்டு நீங்கும் இழிகுணத்தோர்போல, வண்டுகள் சுனைப்பூக்களை ஒழித்துச், சினைப்பூக்களை அடைந்தன *[அக.71:2]*.

**2. பிடிப்பு.** கமுக மரத்தின் எருத்தினிடத்துள்ள (கழுத்து) பாளை பற்று - பிடிப்பு - நீங்கிக் கீழே விழுந்தது *[அக.335:15]*. பனிப்பருவத்தில் குவிந்து, பற்று நீங்கின விரல்கள் போல், பயற்றுச் செடியில் சாய்கள் முற்றின *[அக.339:4]*. காதலன், காதலியிடம், 'உன்னை விரும்பினவர்க்கு உதவி செய்யாத நினது கொடுமையால் வந்த தீவினை உன்னைப் பற்று விடாது மேலும் நீ பிறருக்குக் காட்டும் அருளைப் பற்றுவிடுவையாயின் பிறரும் நின்னைக் கைவிட்டு விடுவர்', என்று கூறினான் *[கலி.59:25,26]*.

**3. இடம்.** முருகப்பெருமானுடைய திருப்பரங்குன்றம் திருமால் முதலிய கடவுளரும், தேவரும் அவரைக் காணவந்து உறையும் பற்று - இடம் - ஆகின்றது; ஆதலால் இமயமலையை ஒக்கின்றது *[பரி.8:10]*.

**பறந்தலை-1. போர்க்களம்.** வெற்றியைத் தேடித்தந்த தம் கணவரும், மைந்தரும் ஒருசேர மாண்டு கிடப்பதைக் கண்ட மறக்குடி மகளிர் 'இத்தகைய வெற்றியும் எமக்கு இனி உண்டோ?' எனக் கூறி இன்ப உவகையால் அழ, அதைக்கண்டு கூற்றமும் நாணிய அஞ்சத்தக்க பறந்தலையில் - போர்க்களத்தில் - சேர, சோழராகிய, இருபெரு வேந்தரையும், ஐம்பெருவேளிரையும் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் வென்றான் *[புற.19:16]*. பாண்டியன் நெடுஞ்செழியன், ஞாயிறு திங்களோடும் நிலத்தைப் பொருந்த இறங்கியது போன்று, அவனிடத்து வஞ்சினங் கூறிய இருபெரு வேந்தரும், கொடிய பறந்தலையில் அழியுமாறு போரிட்டுக் கொன்றான் *[புற.25:6]*. யானையின் துண்டங்கள் பனையின் துண்டுகளைப்போலப், பரந்து கிடக்கின்ற நினது படையின் பறந்தலை வெற்றியானது உழுபடையின் (உழவர்) வெற்றியால் உண்டாயது என்று சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனிடம், வெள்ளைக்குடி நாகனார் கூறினார் *[புற.35:23]*. 'கரிகால் வளவனே! நின்னைவிட, வெண்ணிப் பறந்தலையில், நின்னோடு போருடற்றித் தோற்றுப் புறப்புண்பட்டதால், நாணி உண்ணாநோன்பிருந்து உயிர்விட்டவன் நல்லவன் அல்லவா?' என்று, வெண்ணிக்குயத்தியார், கரிகாலனை இகழ்வது போலப் புகழ்ந்தார் *[புற.66:6]*. ஒரு தலைவன், ஊருக்குத் தொலைவிலே உள்ள பறந்தலையில், கோவலர் மலர்மாலை சூட்டி வழிபடும்படியாக, நடுகல்லாகி நின்றான் *[புற.265:1]*. ஒரு மறக்குடித் தாயின் மகன், பறந்தலையில், பகைவரால் வெட்டுண்டு வீழ்ந்து கிடக்கப் பெருவேந்தரும் கண்ணீர் விட்டுக் கசிந்துருகினர் *[புற.270:11]*. சோழன் குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளி வளவன், பறந்தலையின்கண், ஊரைச்சுட்டு எரிக்கும் எரிபோலப் பகைவரை அழிக்கும் கொலைவல்லோனாவான் *[புற.373:19]*.

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் போரிட்ட பகைவருடைய யானைகளின் மருப்புக்களும், தேரின் சக்கரங்களும் சிதறிக் கிடக்கும் பறந்தலையில் தலை துணிக்கப்பட்ட கவந்தம் எழுந்தாடும் *[பதி.35:6]*.

அன்னி குறுக்கைப் பறந்தலையில், திதியனது புன்னை மரத்தின் அடியை வெட்டித் துண்டித்து வாகை சூடினான் *[அக.45:9]*. கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலையில் போர் செய்து புறப்புண்பட்டமைக்கு நாணிய பெருஞ்சேரலாதன் வடக்கிருந்து உயிர்நீத்த பொழுது பல பெரியவர்களும் உண்ணாநோன்பிருந்து அவனுடன் உயிர்விட்டுத் துறக்கம் புக்கனர் *[அக.55:10]*. அஃதை என்பாளுக்குத் தந்தையாராகிய சோழரிடம் வெண்ணெல் விளையும் இடங்களையுடைய பருவூர்ப் பறந்தலையில் சேர, பாண்டியராகிய இருபெரு

வேந்தரும் போரிட்டு மாண்டனர் *[அக.96:14]*. பாண்டியன் என்றும் நீங்காத விழாவினையுடைய கூடற் பறந்தலையில் சேர, சோழர் ஆகிய இரு பெரு வேந்தரையும் வென்று புறமுதுகிட்டோடச் செய்தான் *[அக.116:14]*. கரிகால் வளவனிடம், வாகைப் பறந்தலையில், தம் ஒன்பது குடைகளையும் போட்டுவிட்டுப் பகைவர் ஓடினர் *[அக.125:19]*. அன்னி என்பான் குறுக்கைப் பறந்தலையில் திதியனுக்குரிய பழமையான புன்னையின் அடிமரத்தை வெட்டினான் *[அக.145:11]*. வெளியன் வேண்மான் ஆஅய் எயினன் என்பான் பாழி என்னும் ஊரினருகில் இருந்த பறந்தலையில் மிஞிலி என்பானுடன் போரிட்டுப் புண்பட்டு வீழ்ந்தபொழுது, அவனை, ஞாயிற்றின் வெப்பம் தாக்காது புட்கள் தம் சிறகுகளினால் பந்தரிட்டு நிழலைத் தந்து காத்தன *[அக.208:6]*.

வாகைப்பறந்தலையில், பசும்பூண் பாண்டியனுடைய ஏவலில் வல்ல அதிகன் கொங்கருடன் நடந்த போரில் யானையுடன் பட்டான் *[குறு.393:3]*.

**2. பாழிடம்.** அருஞ்சுரத்தில், புலி, ஆண்மானைப் பற்றக்கண்ட பெண்மான், தன் மறியை அணைத்துக் கொண்டே துள்ளியோடிப் பூளையோங்கிய அச்சந்தரும் பறத்தலையில் - பாழிடத்தில் - வேளையின் பூவைத் தின்னும் *[புற.23:20]*. சோழன் நலங்கிள்ளி காலமானபொழுது ஆலத்தூர் கிழார், 'அவனுடைய வலிமை எல்லாம் கள்ளியோங்கிய களர் நிலமாகிய பறந்தலையின்கண் முள்ளையுடைய புறங்காட்டில் அடங்கிவிட்டதே', என்று வருந்திக் கூறினார் *[புற.225:7]*. வெளிமான் காலமான பொழுது, பெருஞ்சித்திரனார், கள்ளியோங்கிய களர் நிலமாகிய பறந்தலையின்கண் வெளிமான் இறந்துபட்டான்; அவனைக் கொண்டுபோன கூற்றம் நோயின்றி வாழ்வதாக', என்று நொந்து கூறினார் *[புற.237:13]*. ஆய் அண்டிரன் காலமானபொழுது, குட்டுவன் கீரனார், காலன் என்ற கண்ணில்லாதவன் அவனைக் கொண்டுபோகத் தான் வாழும் பொந்திலிருந்து போராந்தை 'சுட்டுக்குவி', என்று செத்தோரை அழைக்கும் கள்ளியையுடைய பறந்தலையின்கண் தீச்சுட அவனுடம்பு மாய்ந்துவிட்டது', என்று வருந்திக் கூறினார் *[புற.240:9]*. தன் வேந்தனுக்கு பகைத்துயர் வரத் தான் ஒருவனே தாங்கும் மறவன் பலர் நடுகல்லாகிய பறந்தலையையுடைய வன்புலச்சிற்றூரினன் *[புற.314:3]*. தந்துமாறனிடம், சங்கவருணர், நல்லாட்சி புரிந்து வானுலகம் சென்றோர் சிலரேயாவர். இரவலர்க்குப் பொருளீந்து அவர்களைப் பாதுகாப்பாயாக! கண்டார்க்கு அச்சம் உண்டாக்கும் பறந்தலையின்கண் உள்ள சுடுகாட்டில் அடங்குவதைக்கண்ட பின்னும் சிலர் பகுத்துண்டு வாழாமல் உள்ளனரே', என்று கூறினார் *[புற.360:15]*.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனது பகைவரது வளநாடு பறந்தலையாய்ப் புழுதிபடியப் பாழாயிற்று. *[பதி.13:6]*. பல்யானைச் செல்கெழுகுட்டுவன் நாற்படையுடன் பறந்தலையைக் கடந்து சென்று பகைவர் அகப்பாவை அழித்தான் *[பதி.22:21]*. பாலையில் வெப்பம் குறையாத எரிபரந்த பறந்தலையில் வழிச்செல்லும் யானை, நீரற்று வருந்தி, நீரற்ற ஆற்றில் கிடக்கும் ஓடம் போலக் கிடக்கும் *[அக.29:15]*. போரில் இறந்த மறவர்களைத் தழைகளை இட்டு மூடிய கற்குவியல் களையுடைய பறந்தலையில், பேய்த்தேருடன் நிலத்தில் பொருந்திய மின்மினிப்புழுவைப் போல, எங்கும் பரற்கற்கள் ஒளிவிடும் *[அக.67:14]*. சுரநெறியிலுள்ள காட்டுவழி, கானவரால் கொல்லப்பட்டோருடைய விழுந்துகிடக்கும் மயிர் பொருந்திய தலைகளையுடைய கற்குவியல்கள், கள்ளியினையுடைய பறந்தலையின்கண், எங்கும் திரண்டு கிடத்தலின் நினைப்போரையும் நடுங்கச் செய்யும் *[அக.231:7]*.

**3. சுடுகாடு, புறங்காடு.** சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சியமாக்கோதை தன் மனைவி காலமான பொழுது, 'கள்ளி வளர்ந்த பறந்தலையில் - சுடுகாட்டில் - விறகு அடுக்கிய ஈமத்தில் அழற் பாயலிலே அவளைக்கிடத்தினேன்; அவள் மேலுலகம் போய்விட்டாள்; என் துயரம் எவ்வளவு பெரிதாயினும் என்னுயிர் போகவில்லையே' என்று வருந்தினான் *[புற.245:3]*. பறந்தலையில் உள்ள கூகைப்பேடைகள் இறைச்சித் துண்டுகள் வைத்த இடங்களை மறந்துவிட்டுக் கவலையோடிருக்கும் *[பதி.44:19]*.

**4. பாசறை.** வானத்தில் பறக்கும் பறவைகளை ஈர்க்கும் அளவிற்குத் தசைத்துண்டங்கள் சிதறிக் கிடக்கும்படியாகப் போருடற்றிப் பகைவரை வென்ற பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காணுவதற்கு யானை பொருத இடம் அகன்ற அவனுடைய பறந்தலைக்குப் - பாசறைக்குப் - பரிசு பெறுவதற்குப் போவோமா, விறலியே?' என்று நெடும்பல்லியத்தனார் கூறினார் *[புற.64:3]*.

**பறந்தவை** - பறந்தன (வண்டுகள்) ஒரு பெண் மதுவை மிகுதியாகக் குடித்துவிடவே கண்கள் மூடிக்கொண்டதால் பறந்தவை - பறந்தனவற்றை (வண்டுகளை) விரட்டத் தெரியாமல் கை சோர்ந்தாள் *[கலி.92:49]*.

**பறநாட்டுப் பெருங்கொற்றனார்** - ஒரு புலவர். பறநாட்டினர்; பெருங்கொற்றனார் என்பது இவர்தம் இயற்பெயர். வேறு பெருங்கொற்றனாரினின்றும் பிரித்துணரப் பெறுதற்கு இவர் பறநாட்டுப் பெருங்கொற்றனார் என்று குறிப்பிடப் பெற்றார். பாரியின் பறம்பு மலையைச் சூழ்ந்த நாடே பறம்புநாடு என்றும் பறநாடு என்றும் வழங்கும் (பிற நாட்டுப் பெண்டிர் முடிநாறும் பாரி, பறநாட்டுப் பெண்டிர் அடி' (காரிகை.26. மேற்கோள் காண்க). பறநாட்டுப் பெருங்கொற்றனார் என்னும் இவர் பெயர், அகநானூற்றிலுள்ள *[323]*. இவரது பாடலின்கீழ்ப், 'புறநாட்டுப் பெருங்கொற்றனார்', என்று காணப்படுகின்றது.

ஆயினும், வையாபுரிப்பிள்ளையின் சங்க இலக்கியப் பதிப்பு இவர் பெயரைப் பறநாட்டுப் பெருங்கொற்றனார் என்றே காட்டுகின்றது. இப்பெருங்கொற்றனார் பாடியதாக அகநானூற்றின் அவ்வொரு பாடலே உள்ளது. பிரிவின்கண் வேறுபட்ட தலைவியைத் தோழி பருவங்காட்டி வற்புத்துவதாக இவர் அப்பாடலை இயற்றியுள்ளார். 'பக்க மலையில் செல்லும் யானைக் கூட்டம்போல், வானிலே ஞாயிறு மழுங்குமாறு பரந்து, பாம்பின் படமழிய இடிக்கும் கடிய குரலினையுடைய இடியேற்றுடன், நீர்க்கட்டியொடும் கூடிய மிக்க துளிகளைப் பெய்து முகில் கால் வீழ்த்தது; இவ்வூரிலே நம்மைக் குறித்து அலரெழுப்புவோரின் செருக்குச் சொல் வாடுமாறு இனிக் காதலர் வருவர் என்பது உண்மையாதலை இப்பருவ வரவு கொண்டு காண்பதற்கு நீ மெல்லென நடந்து வருவாய்', என்று தோழியின் பேச்சினை இவர் பாடல் பொதிந்துள்ளது. தலைவியைக், 'கற்பு மேம்படுவி', என விளித்தும், 'அழகிய சிவந்த வலியற்ற சிறிய நின் அடி நிலத்திற் பொருந்துதலை அஞ்சி மெல்லென உடல் வளைந்து நடக்கும் நடை அழகுற நடந்து வருவாயாக', என்று புனைந்தும் பேசி அவளது ஆற்றாமையை மாற்றுகின்ற நயத்தினை இவர் தோழி கூற்றில் பொருத்தியுள்ள திறம் நன்று.

**பறம்பிற்கோமான்** - பறம்புமலைக்குத் தலைவன் (பாரி). நெடிய மலைக்கண் ஒலிக்கும் வெள்ளிய அருவி கல்லை உருட்டியோடும், பறம்பிற்கோமான் - பறம்பு மலைக்குத் தலைவன் - பாரி ஆவான் *[புற.158:4]*. ஊர்களை எல்லாம் இரவலர்க்கு வழங்கியதோடு தான் ஊர்ந்து வந்த தேரையும் முல்லைக்கு வழங்கியவன் பறம்பிற் கோமானாகிய பாரி *[புற.201:4]*. தன் தேரைத் தடுத்த முல்லைக்கொடிக்குத் தனது பெரிய தேரினை அளித்த, அருவிமிக்க பறம்பிற்கோமான், பாரியாவான் *[சிறு.91]*.

**பறம்பு** - ஒரு மலை. குறத்தி அடுப்பில் எரித்த சந்தனக் கட்டையின் நறும்புகை எழுந்து வேங்கைப் பூக்கொம்பினூடும் சென்று பரவும் பறம்பை - பறம்பு மலையைப் - பாடுவார்க்குப் பங்கிட்டுக் கொடுத்தான், பாரி *[புற.108:4]*. மூவேந்தரும் முற்றினாலும் நான்கு வகை உணவுகளைத் தன்னகத்தே கொண்டது, பறம்பு *[புற.109:1]*. 'மூவேந்தரும் முற்றினாலும் பறம்பினைக் கைக்கொள்ள முடியாது; முந்நூறு ஊர்களையுடைய பறம்பு நாட்டைப் பிரித்துப் பரிசிலர்க்குப் பாரி கொடுத்து விட்டான்', என்பர் கபிலர் *[புற.110:2,3]*. 'பறம்பே! வருவார்க்கு மதுவைக் கொடுத்தும், ஆட்டுக்கடாயின் ஊனை அருத்தியும் முன்பு எவ்வளவு வளமுடன் இருந்தாய்; பாரி இறந்தானாகக் கலங்கிக் கண்ணீர் வாரச் செல்கின்றோம்', என்று கபிலர் கூறினார் *[புற.113:7]*. பறம்பு நாட்டிலுள்ள எட்டாம் நாள் பிறை போன்ற இச்சிறுநீர்க்குளம் உடைந்து அழிவது போலும், என்று கபிலர் கூறினார் *[புற.118:5]*. பாரியின் பறம்பில் குளிநீர்ச்சுனைகள் எங்கும் இருத்தலால் நீர் வேண்டியபொழுது உண்ணலாமென யாவரும் கவலையற்றிருப்பர் *[புற.176:9]*. பாரியின் பறம்பில் குளிநீர்ச்சுனைகள் எங்கும் இருத்தலால் நீர் வேண்டியபொழுது உண்ணலாமென யாவரும் கவலையற்றிருப்பர் *[புற.176:9]*. மறக்குல மறவனின் மகளொருத்தி, வேள்பாரியின் பறம்பிலுள்ள குளிர்ந்த சுனைநீர்போலப், பிறர் காண்பதற்கு அரியவளாய் இருந்தாள் *[புற.337:6]*.

இரவலர்க்கீந்ததால் புகழைப் பெற்றுள்ள பாரியின் பறம்பிலுள்ள குருவிக் கூட்டம் நெற்கதிர்களைக் கொண்டு தருவதற்காகக் காலையில் போய்த் தேடியலைந்து மாலையில் மீளும் *[அக.303:10]*. நன்னனது பறம்பில் அரக்கொடு சேர்த்து சாணைக்கல் இயற்றப்பட்டது *[அக.356:8]*. அருவிநீர் பெருகும் போது ஆம்பல் தழைத்துள்ள முன் துறையினையுடைய நன்னனது அழகிய பறம்பு போன்று மின்னுகின்ற குளிர்ந்த கூந்தலையுடையவள், தலைவி *[அக.356:19]*.

பாரியின் பறம்பிலுள்ள தை மாதத்தில் குளிர்ந்த சுனையிலுள்ள தெளிந்த நீர் சுவையாயிருந்தது *[குறு.196:3]*.

**பறவாப் பூவை** - காயா. திருமால், பறவாப்பூவையின் — யாவின் — பூவினுடைய நிறத்தினை உடையவர் *[பரி.3:73]*.

**பறவை** - 1. புள். கரிகாற் பெருவளத்தானிடம், பழுத்த மரத்தை நினைத்துச் செல்கின்ற பறவையைப் - புள்ளினைப் - போலச் சென்றதாகப் பரிசில் பெற்றுவரும் பொருநன், பரிசில் பெறாத பொருநனிடம் கூறினான் *[பொரு.64]*. பாணர் தம் சுற்றத்தாருடன் பழுத்த மரத்தைத் தேடித் திரியும் பறவைகளைப் போல வள்ளல்களை நாடிச் செல்லுவர் *[பெரு.20]*. தம்மிடம் வந்தோரின் செல்வங்களைக் கவர்ந்து கொண்ட பின்னர், அவர்களைத் துறந்து, மீண்டும் பழுத்த மரங்களைத் தேடிச் செல்லும் பறவைகளைப் போலப் புதிய செல்வரைத் தேடிச் செல்லும் பரத்தையரும் மதுரையில் இருந்தனர் *[மது.576]*. கூதிர்க்காலத்தில் பறவைகள் காற்று மிகுதியால் மரத்திலிருந்து கீழே விழுந்தன *[நெடு.10]*. பறவைகள் தத்தம் சேக்கைகளிலே அடங்குமாறு முகில் மழையைப் பொழிந்தது *[குறி.46]*.

மாலைக்காலத்தில் வளைந்த சிறகுகளையுடைய பறவைகள் கூட்டிலிருக்கும் தம் குஞ்சுகளுக்கு உணவூட்டும் பொருட்டு இரையைத் தம் அலகுகளில் எடுத்துக் கொண்டு விரைந்து செல்லும் *[குறு.92:2]*.

ஞாயிறு மறைந்த மாலைக் காலத்தில் பறவைகள் தம் குஞ்சுகளிருக்கும் கூட்டிற்குச் சென்று தங்கும் *[நற்.69:3]*. தினையின் முற்றிய கதிர்களைப் பறவைகள் கொய்து கொண்டு செல்லும் *[நற்.251:9]*.

பறவைகள் தம் குஞ்சுகளை நினைந்து கூடுகளுக்குச் செல்லுமாறு மாலைக்காலம் வந்தது *[கலி.199:9]*.

2. வண்டு. வாகையினது துய்யினையுடைய பூப்போலப் பூத்த பூக்களையுடைய முல்லைப் புதரிடத்தே மொய்க்கும் பறவை-வண்டு-காட்டிலே பிடவ மரத்தில் தொடுத்ததுபோலப் பூக்கும் பூக்குலையிலே தங்கும் *[பதி.66:16]*.

இடையர் குழலிலே வாசிக்கும் குறிஞ்சிப் பண்ணின் ஓசையைக் கேட்டுப் பலகால்களையுடைய பறவை தம் சுற்றத்தின் ஓசையாகக் கருதிச் செவிகொடுத்துக் கேட்கும் *[பெரு.183]*.

யாழைப்போன்று ஒலிக்கும் தேனை உண்ணும் பறவை மயங்குமென்று அஞ்சி, தேரின் மணிகளின் நா, ஒலியாமல் கட்டித், தலைவன் அதனைச் செலுத்தினான் *[அக.4:11]*. மலையில் சுனைக்கண்ணே குவிந்த அரும்பினை விரித்த குறுகிய சிறையினவாய பறவை வேங்கைப் பூக்களின் தாதினை ஊதிக், காந்தளின் விரிந்த இலையில் துயின்று, யானையின் கன்னத்தில் வழியும் மதத்தினை உண்ணுவதாகக் கனாக் காணும் *[அக.132:10]*. ஆறுகால்களையுடைய பறவை யாழ் போன்ற இசையினை இசைக்கும் *[அக.332:8]*. காதலன் தன் காதலியின் கண்களைச் சுனையில் பூக்கும் பூவென்று கருதிப் பறவை, தேனுண்ண விரும்புவதாகப் பாராட்டிக் கூறினான் *[அக.371:13]*.

வேங்கைப் பூக்கள் மலர்ந்துள்ள காட்டில் இம்மென ஒலிக்கின்ற பறவைக் கூட்டம் இளையரின் செலவால் இரிந்தோடும் *[நற்.161:4]*. பொறையனின் கொல்லி மலையில் காந்தளின் பூக்குலையிலிருந்து தேனை எடுத்துப் பறவைகள் இறாலின்கண் வைக்கும் *[நற்.185:9]*. ஆண்பறவை, சிறிய குறிய பெண்பறவை மகிழும்படியாகப் புணர்ந்தது *[நற்.277:9]*.

தலைவனுடைய மார்பில் அணிந்துள்ள மலர்மாலையின்கண் பூந்துகள் உண்ணுகின்ற பறவைகள் தலைவியின் கூந்தலிலுள்ள மலர்களிலும் மொய்த்தன என்பதைக் கேட்டு அவனுடைய காதற் பரத்தை வெகுண்டாள் *[ஐங்.82:3]*.

மகளிரின் நலத்தை நுகர்ந்து பிரியும் ஆடவரைத் தாதைத் தேடி உண்டுவிட்டுப் பிரியும் பறவைக்குச் சமமாகத் தோழி கூறினாள் *[கலி.22:7]*.

மதுரையின்கண் வாழும் குடிமக்கள் தாமரைமலரின் தாதினை ஒப்பர்; அவரை நாடிவரும் இரவலர் அம்மலரின் தாது உண்டற்கு வரும் பறவைகளை ஒப்பர் *[பரி.தி.7:6]*.

3.வெளவால். சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட் சென்னியிடம், ஊன்பொதி பசுங்குடையார், பழுத்த மரங்களை எண்ணிச் செல்லும் பறவை - வெளவால் - களைப் போலப் பரிசில் கேட்டு வந்ததாகக் கூறினார் *[புற.370:11]*.

கார்கால மாலைப்போதில் பசை பொருந்திய தோலை நெய்யிற் தோய்த்தாற் போன்ற, கரிய சிறகினையுடைய பறவை பகலில் இருந்த மரம் தனித்திடப் போகும் *[அக.244:2]*.

பாலைப்போன்ற இனிமையையுடைய தேமாம்பழத்தினைத் தின்று தெவிட்டினால் கரிய மெல்லிய சிறகுகளையும், கூரிய நகங்களையும் உடைய பறவை மாற்றுச் சுவையாகிய நெல்லியினது புளித்த காயையுண்டு அயலிலுள்ள மூங்கிலில் தொங்கும் *[குறு.201:3]*. மாலைப்போதில், ஆம்பலினது இலையின் புறத்தைப்போன்ற வளைந்த மெல்லிய சிறகுகளையும், கூரிய நகங்களையும் உடைய பறவை பகற்போதில் தான் உறைந்த மரம் தனித்திடச் செல்லும் *[குறு.352:2]*.

4. குளவி. கொட்டப்பட்டார்க்குக் கடுக்கும் தன்மையைக் கொடுத்தலையுடைய பறவையின் - குளவியின் - திரளைப் போன்று முற்றின செந்நெல் விளங்கும் *[பெரு.229]*.

பறவைப் பெயர்ப்படு வத்தம் - கருடன் சம்பா நெல். அருந்ததியை யொக்கும் கற்பினையும், நறிய நுதலினையும், வளையலையும் அணிந்த பார்ப்பனி, செவ்வி அறிந்து அட்ட பறவைப் பெயர்ப்படுவத்தத்தால் — கருடன் சம்பாநெல்லால் - ஆகிய சோற்றை, இரவலர் பெறுவர் *[பெரு.305]*.

பறழ் - குட்டி. சேம்பினது அகன்ற இலையுடன் கூடிய பாசிப்பரப்பில் பறழுடன் - குட்டியுடன் - இருக்கும் உண்ணாத பெண்நீர்நாய்க்கு ஆண்நீர்நாய் உணவு கொண்டு வந்து தரும் *[அக.336:2]*. அழகிய காட்டில் முயலின் பறழ் தாவிக் குதித்தல் *[அக.384:5]*.

முள்ளைப் போன்ற கூரிய பற்களையும், செவ்விய வாயையுமுடைய மலைகளில் விளையாடும் குரங்கின் பறழ் தேமாவின் கனியை அருந்தும் *[குறு.26:7]*. ஆண் இறந்ததைக் கண்ட பெண் குரங்கு காதலால் தானும் சாதலை விரும்பி மரம் முதலியவற்றில் ஏறுதலைக் கல்லாத தன் பறழைத் தன் சுற்றத்திடம் ஒப்படைத்துவிட்டு, மலையிலிருந்து விழுந்து இறந்தது *[குறு.69:3]*.

வேங்கைமரத்தின் கீழ் ஆமான் தன்குட்டியுடன் உறங்குவதைக் கண்ட பெண்குரங்கு தன் தொழிலைக் கல்லாத வலிய தன் பறழுக்கு ஆமானின் பாலைக் கறந்து உண்பிக்கும் *[நற்.57:6]*. பலவாத்தியங்களும் முழங்கக் கழைக்கூத்தி யாடிய வலிய கயிற்றின்மீது, இனிய அத்திப்பழம் போன்ற சிவந்த முகத்தையும், பஞ்சுபோன்ற தலையையுமுடைய குரங்கினது வலிய பறழ் ஆடுதலைக் கண்ட குறவரின் இளம் மகார் தாளங்கொட்டினர் *[நற்.95:4]*. வேங்கை மரத்தின் தேனடையிலிருந்து கல்லின் குழிகளில் ஒழுகிய தேனைக் குறவரின் குழந்தைகள் உண்டது போக எஞ்சியதை மந்தியின் வலிய பறழ் நக்கும் *[நற்.168:5]*. ஆண் குரங்கு தன்னைக் காணாமையால் நடுங்குமாறு பெண்குரங்கு தன் மாட்சிமைப்படாத சிறிய வலிய பறழோடு மலையுச்சியில் முகில் மூட்டத்தில் மறைந்து கொள்ளும் *[நற்.233:2]*. குரங்கின் பறழ் வீட்டு வாயிலினின்றும் போகாமல் வேங்கைமரத்தின் தாழ்ந்த கிளைமீது மறைந்திருந்து கொடிச்சியின் கையிலிருந்த தேன் கலந்த இனிய பாலைக் கலத்தோடு கவர்ந்து செல்லும் *[நற்.379:1]*.

தன் தொழிலைக் கல்லாத குரங்கின் பறழ் ஏறமுடியாத மலை உச்சியில் தேனடையிலுள்ள தேனை விரும்பி, அதனிடத்துள்ள ஈக்களை எழுப்பிவிட்டு, அவற்றின் கொட்டுக்கு அஞ்சிப் பக்கத்திலுள்ள மரக்கிளையில் பாயும் *[ஐங்.272:1]*. மந்தியினது வலிய பறழ் அசோகினுடைய பவழம் போன்ற செந்நிற ஒளியுடைய இளந்தளிரைத் தின்னும் *[ஐங்.273:2]*. மலையிலுள்ள மூங்கிலிலிருந்து குரங்கின் வலிய பறழ் வேறு மூங்கிலிற்குப் பாய்ந்த பொழுது நீர் நிலையில் மீன்படுகின்ற தூண்டில்கோல் ஞெரேலென நிமிர்தல் போல, அம்மூங்கில் நிமிர்ந்தது *[ஐங்.278:2]*.

பறழ் மகன் - இளமகன். நீருள் நெளியும் நிழல் போல உடல் நெளிந்து செல்லும் கூனியே! நான் உன்னிடம் ஒன்று கேட்பதற்கு நீ என்ன தவம் செய்தனையோ? என்ற குறளனாகிய காதலனிடம், கூனியாகிய காதலி, இகழ்ந்து, காண வெறுக்கும் குறள் வடிவினனே! ஆண்டலைப் புள்ளுக்குத் தன் பெடையீன்ற பறழாகிய மகனே - இளமகனே - என்று சினந்து கூறினாள் *[கலி.94:6]*.

பறா அக்குருகு - உலைமூக்கு. 'நறவம்பூப்போன்ற என்னுடைய கையைத் தாங்கித் தலைவன் தன் கணகளில் ஒற்றிக் கொண்டு கொல்லனின் பறாஅக்குருகைப் - உலைமூக்கைப் - போலப் பெருமூச்சுவிட்டான்', என்று, தலைவி, தோழியிடம் அறத்தொடு நின்றாள் *[கலி.54:11]*.

பறாஅப்பருந்து - வளையல். காதலன், காதலியின் பறாஅப்பருந்து — வளையல் - கிடக்கின்ற கையைப் பிடித்துத் தெளிவித்துக் கூடினான் *[கலி.147:37]*.

பறி-1. பனைஓலைப்பாய். இடையன் பறியை - பனையோலைப் பாயை - முதுகில் அணிந்திருந்தான் *[அக.94:4]*.

பறியைக் கையிலேயுடைய இடையர் குட்டிகளையுடைய ஆட்டின் திரளோடு தங்குவர் *[குறு.221:2]*.

மழை பெய்யும்பொழுது பறியை முதுகில் கட்டிக்கொண்டு இடையன் பால் விற்றான் *[நற்.142:4]*.

2. மீன்பிடிக்கும் கருவி. வலைஞனுடைய குடிலின் முற்றத்தில் பறி — மீன் பிடிக்கும் கருவி - இருந்தது *[பெரு.265]*.

பரதவர் பறியால் மிகுதியான மீன்களைப் பிடித்து மணற்பரப்பில் வற்றலுக்காகக் காயவிடுவர் *[அக.300:3]*.

பறை - 1. ஒருவகைத் தோற்கருவி. போர்க்களத்தில் பேய் மகளிர் மறவரது புண்ணைத் தோண்டிக் குருதி கலந்த கையால் தமது கூந்தலைக் கோதி மேன்மேலும் கொட்டுகின்ற மந்தமான ஓசையையுடைய பறையினது - தோற்கருவியினது - தாளத்திற்கேற்ப ஆடுவர் *[புற.62:5]*. சோழன் நலங்கிள்ளியின் போர்மறவரைப் போருக்கு ஏவாததனால் நாமே போரிட்டு மடிவோமென்று அவர் தோள்களைத்தட்ட, அவ்வமயம் போர்ப்பறை முழங்குவதைக் கேட்டு மகிழ்ந்தனர் *[புற.68:14]*.

மலையமான் திருமுடிக்காரி, பறையொலி போலும் ஒலிபொருந்திய அருவியையுடைய முள்ளூர்க்குத் தலைவனாவான் *[புற.126:8]*. சோழன் நலங்கிள்ளியின் இனிய ஓசையையுடைய பறை வெற்றியை அறிவிக்கும் *[புற.225:10]*. சேரமான் யானைக்கட் சேய் மாந்தரஞ்சேரலிரும் பொறையின் மலைநாட்டிலுள்ள அருவி பறையைப் போல முழங்கி விழும் *[புற.229:14]*. இரவலனின் ஒரு கண்ணையுடைய பெரிய பறை களிற்றின் அடிபோலத் தோன்றும் *[புற.263:2]*. மறக்குலத் தாயொருத்தி முன்பு நடந்த போர்களிலே தன்னுடைய தந்தையும், கணவனும் பட்டனராக, இன்றும் முழங்கும் போர்ப்பறையின் ஒலிகேட்டுச், சிறுவனாகிய தன் ஒரே மகனைப் போருக்கனுப்பினாள் *[புற.279:7]*. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனிடம் பாசறையில் பரிசில் பெறவந்த பொருநன் பறையோடு, மற்ற இசைக்கருவிகளையும் வைத்துக் கட்டிய பையோடு இருந்தான் *[புற.371:5]*. வயல்களிலும், பள்ளங்களிலும் நீரற்றுப் போன பஞ்சகாலத்தில் சிறுகுடிகிழான் பண்ணனிடம் பரிசிலைப் பெற்ற பொருநன் பெரிய பறையை வைத்திருந்தான் *[புற.388:3]*. வாட்டாற்று எழினியாதனின் வளமான நாட்டில் விளைந்து கிடக்கும் நெல்லினைக் கவரவரும் புள்ளினங்களை அரித்த ஓசையையுடைய பறையை முழக்கி ஓட்டுவர் *[புற.396:4]*.

பல்யானைச் செல்கெழுகுட்டுவனால் பாழ்படுத்தப்படுமுன் பகைவரின் நாடுகள், நீர்மிக்குத் தோல் போர்த்துள்ள பறையை முழக்கி உழவரையழைத்துப் புனலை அடைக்கும் வளமுடையனவாய் இருந்தன *[பதி.22:28]*. அயிரை என்னும் மலையிலுள்ள அருவிகள் தேவர்களுக்கும் கேட்கும்படியாகப் பறை போன்ற முழக்கத்தோடு வீழ்ந்தன *[பதி.70:24]*. அரிய பறையையுடைய போர்மறவர் பகைவரைத் தோற்கடித்துத் தாம் பெற்ற பொருள்களைக் கள்ளுக்கு விலையாகக் கொடுப்பர் *[பதி.75:9]*.

பாண்டிய நாட்டிலுள்ள மருத நிலங்களில் நெல் முற்றிய கழனிகளில், அந்நெல்லை அறுப்பாருடைய அரித்தெழுகின்ற பறை, ஓசை மிக்கிருக்கும் *[மது.262]*. கண்கள் வளைந்திருக்கும் பறையினைக் கூத்தர் கொண்டிருந்தனர் *[மது.523]*. கூத்தர் கரிய பறையினை உடையவர் *[மலை.236]*. குறவர், மான்தோல் போர்த்த பறையை முழக்கித் தம் பெண்டிரோடு மலை உச்சியிலே குரவைக் கூத்தாடுவர் *[மலை.321]*. சேம்பையும், மஞ்சளையும் விதைத்து வளர்ந்த பின்பு பன்றி கிழங்கை அகழாமற், காப்போருடைய பன்றிக்குக் கொட்டும் பறையோசையும் மலையில் கேட்கும் *[மலை.344]*.

மயில்களின் தோகைகளில் உள்ள கண்கள், பறைபோல வட்டமாய் இருக்கும் *[அக.15:4]*. மண்ணிடமெல்லாம் குளிரும்படியாக மழையைப் பொழிந்த முகில், பறையின் ஒலிபோன்று முழுங்கியது *[அக.23:2]*. காட்டில் நீர்வற்றிய வாகையின் முதிர்ந்த நெற்றுக்களைக் கொண்ட கொத்து,

கூத்தர் ஆடுங்களத்தில் ஒலிக்கும் பறையைப் போல, விட்டுவிட்டு ஒலிக்கும் [அக.45:2]. அஃதை என்பானின் நாளோலக்கத்தில் பரிசில் பெறச் செல்லும் பொருநர் பறையை முழக்கிக்கொண்டு செல்வர் [அக.76:5]. சிறுகுடிப் பாக்கத்தின் தெருக்களில் வேங்கைப் பூக்களைச் சூடிக்கொண்டு குறவர் ஆணும் பெண்ணுமாகத் தொண்டகப் பறையை முழங்கிக்கொண்டு ஆடுவர் [அக.118:3]. வாகைமரத்தின் கிளையில் கொத்தாகக் காய்த்து முற்றிய வாகை நெற்று, காற்று வீசுந்தொறும் ஆடும் கூத்தியரது கோலால் அரித்தெழும் பறையைப்போல, ஒலிக்கும் [அக.151:10]. குழிந்து வட்டமாய் இருக்கும் சுனையானது, பறையின் கண்ணினைப் போன்றிருக்கும் [அக.178:3]. கலைமானின் கூட்டம் போல், ஓலைக்குடையைத் தலையில் சூடிய கொல்லை உழவர், ஒலிக்கும் பறையோடு, வரகின், பயிர்கள் வளையும்படி ஒதுக்கிக் களையைப் பறிப்பர் [அக.194:8]. வலிய களிற்றின் தாள் பறையினைப் போன்று வட்ட வடிவமாய் இருக்கும் [அக.211:3]. தலைவி, தோழியிடம் பறையை முழங்கினாலொத்த அலரினைத் தமக்கு உண்டாக்கிவிட்டுத் தலைவன் பிரிந்து சென்றுள்ளதாகக் கூறினாள் [அக.281:13]. பசியுற்ற யானையின் பொலிவற்ற கண் போன்ற நீரற்ற சுனையுள் புகுந்து வரும் மேல் காற்றின் தெளிந்த ஒலி, தோலினை இழுத்துக் கட்டிய பறையொலிபோல, மலைப்பிளப்பில் ஒலிக்கும் [அக.321:3]. நிறைதலையுடைய சுனை, பறையின் கண் போன்றிருக்கும் [அக.324:6]. மழை பெய்து நிரம்பிய பள்ளங்களிலுள்ள தேரைகள், ஆடுகளத்தே ஒலிக்கும் பறைபோல, ஒலித்தன [அக.364:3].

ஆரியக்கூத்தர் கழையில் கட்டிய கயிற்றின்மேல் நின்று ஆடும்பொழுது கொட்டப்படும் பறையைப் போல, மேல்காற்றின் தாக்குதலால் நிலை கலங்கி வாகையின் நெற்றுக்கள் பாலையில் ஒலிக்கும் [குறு.7:4]. 'தலைவனுடன், தலைவி கொண்ட நட்பு நாலூர்க்கோசரின் சொல் உண்மையாவதைப்போலப் பறை முழங்கி மணம் நிகழ்ந்துவிட்டது', என்று, செவிலி, நற்றாய்க்குக் கூறினாள் [குறு.15:1]. கள்ளினைப் பெய்யும் நீலக்குப்பிகளைப் போன்ற, பிளந்த வாயையுடைய தேரைகள், கிளிகடி கருவியாகிய தட்டைப் பறையைப் போல, ஒலிக்கும் [குறு.193:3]. மலைப்பக்கத்தில் முற்றிய தினையை இரவில் அறுப்போர், விலங்குகள் வாராமைப் பொருட்டுத், தொண்டகப் பறையை முழக்கிக் கொண்டு அறுப்பர் [குறு.375:4].

பாணர் பறையை முழக்கும் குறுந்தடிபோன்ற, கொன்றையின் இனிய கனிகள், காற்றடித்தலால் பாறையில் விழுந்தன [நற்.46:7]. தலைவியைப் பிரிந்து அழைத்துச் செல்லும் தலைவனுடைய குதிரைகள், செல்வக்குழந்தைகளின் பறையினது கண்ணில் எழுதிய குருவி அடிபடுவது போல, அடிபட்டுத் துன்புறுவன ஆகுக! 'என்று, தோழி கூறினாள் [நற்.52:2]. கூகையின் குரலோசை, பறையின் ஓசைபோல, ஒலிக்கும் [நற்.83:4].

குறமைந்தர்கள் கொட்டும் தொண்டகம் என்னும் சிறுபறை முழக்கம் அயலிலுள்ள செந்தினையில் வீழும் கிளிகளை ஓட்டும் [நற்.104:5]. குன்றச் சிறுவன் பறைகொட்டும் முயற்சியை வெறுப்பின், வட்டு விளையாடி அம்மகிழ்வும் தீரப் பாலுண்டு, கம்பை ஒச்சி விளையாடுவான் [நற்.341:1].

நாரை கொத்தியுண்ட யாமை இறைச்சியின் மிச்சிலைப் பறை கொட்டுவார் இட்டுவைத்துண்பர் [ஐங்.81:2].

இறைவன் பறைபல ஒலிக்க உயிர்கொண்ட பல வடிவங்களையும் தன்னுள்ளடக்கிக் கொடுகொட்டி என்னும் கூத்தினை ஆடினான் [கலி.1:5].

'மாதே! உன்னைக் காணப் பிறர் துன்பம் நீ, யறியாய். நீயும் குற்றமுடையாயல்லை; நின்னைப் புறம் போதவிட்ட நின் உறவினரும் குற்றமுடையாரல்லர். யானையை நீராட விட்டாற் போலப் பறையறைந்தல்லது போகற்க என்னாத மன்னனே தவறுடையான்', எனக், கைக்கிளைத் தலைவன் உரைத்தான் [கலி.56:33]. 'கொட்டுகின்றவன் தன் மனத்தில் கருதிய ஓசையைத் தானும் ஒலிக்கும் பறைபோல, நின் நெஞ்சத்து விரும்பியதையே கனவாகக் கண்டாய்', எனத், தலைவி, பரத்தையரைப் பிரிந்து வந்த தலைமகனை நோக்கிக் கூறினாள் [கலி.92:21]. புகைவலம் வர, நிறுத்தப்பட்ட ஏறுகள், பறையொலிக்கப், பலர் ஆரவாரிக்க, வலிகுறையாத மைந்தர் தம்மைத் தழுவிக்கொள்ளக் கருத, எதிரேற்று நின்றன [கலி.104:29]. யாழிசை கேட்டு இன்புற்ற அசுணமாவைப் பின் அருள் செய்யாது பறையறைந்து உயிர் கவர்வதுபோல, எனக்கு, முன் இன்பந்தந்து, பின் பிரிந்து, உயிர் பிரியும் வகைத்துன்பந் தந்தான் ஒருவன், எனத் தலைவி கூறினள் [கலி.143:12]. நிரைத்ததிமில்கள் கயிறாகத், திரையொலி பறையாகத், கரை சேர்ந்த புள்ளினம் படையாக, அரசன் படை கொண்டு சென்றாற் போன்றது கடல்துறை [கலி.149:1].

அன்பொத்த காதலரது உள்ளம் நிறையை உடைத்தாற் போல, வையை அணையையுடைத்தது; அதன் திரை கரையை உடைத்தது; அதனை அடைக்கப் பறையறையவே ஊரெழுந்தது [பரி.6:24]. நிலத்தில் பசி முதலிய துன்பம் நீங்கப், பூப், போர்வையுடன், மாந்தளிர், வாழையிலையைக் கெடுத்து, ஒலியெழக், கரை காவலரை அழைக்கும் பறையெழுப், போந்தது வையை [பரி.10:7]. மலர் நாற்றம், கனி நாற்றம், யாற்று நீர் நாற்றம் முதலிய கொண்டு பறையறையப் பரந்து சென்றது, வையை [பரி.20:14].

**2. பறவை.** இரையையுண்ட மெல்லிய பறைக் - பறவைக் - கூட்டம் இருளில் பனைமடல் கூட்டில் செறிந்தது [நற்.123:2]. கொக்கின் மென்பறையாகிய பார்ப்பு அழைக்கும் ஒலி ஊர் வயலை அடைந்து ஆரவாரிக்கும் [ஐங்.86:1].

**3. இறகு.** முதிய பருந்து தன் சிறகை அடிக்க உதிர்ந்த பறை - இறகு - உடைய புல்லிய தூவியைச் சிவந்த அம்பிலே

கட்டிய மறவர், வருவாரை எதிர்நோக்கியிருப்பர் *[நற்.329:5]*. 'இறகு வளராத குஞ்சுக்கு இரைதேடும் முயற்சியில் தளர்வில்லாத வலிய பறை போலப், பல கால் என்னிடமிருந்து அவள்பால் சென்று வர வருந்தினை; நெஞ்சே! 'எனத், தலைமகன் சொல்லியது *[நற்.350:6]*. ஞாயிறு சினந்தணிந்து மலைமறையப், பறையையுடைய நாரையின் கூட்டம் வானில் பறந்து மீள, மாலையில் முல்லைமலரும் *[நற்.369:2]*.

**4. பறத்தல்.** வலைஞர் தந்த கொழுமீனாகிய உணவருகே பறை - பறத்தல் - இயலாத முதிய நாரையிருக்கும் தொண்டி போன்ற அழகினள் தலைவி *[ஐங்.180:3]*.

தும்பி தன் துணையோடிருந்த் தாமரையைப் பெருநீர் சாய்ப்பப் புலந்து வேறோர் பொய்கை சென்று, பின் மலர் சாய்த்த நிறைபுனல் நீங்க, மீண்டு சென்று பறை - பறத்தல் - நீங்கப் பழைய மலரிலேயே தங்கும் *[கலி.78:10]*.

**பறையன் - பறைகொட்டுவோன்.** போரில் துடி கொட்டுவோன், பண்ணொடு பாடவல்லான், பறையன் - பறை கொட்டுவோன் - கடம்பன் இந்நான்கல்லது சிறந்த குடியுமில்லை *[புற.335:7]*.

**பன்மை - தொகுதி.** புலவர் 'தலையாலங்கானத்துக்கண் உயிரது பன்மையையும் - தொகுதியையும் - அவ்வுயிரைக் கொள்ளுங் கூற்றினது ஒருமையையும் செழியனொடு ஒப்பிடுவர் *[புற.19:3]*.

முள்ளூரில் ஆரியர் நெருங்கிச் செய்த போரின்கண், மலையனது ஒரு வேலுக்கு அஞ்சி, ஆரியர் ஓடியது போலப், பரத்தையர் சேரியில் சேர்க்கும் விறலிக்கு எதிராக நாம் தலைவனைக் காக்கவில்லையாயின் நம் பன்மை என்ன பயனுடையது', என்றாள் தோழி *[நற்.170:9]*.

**பன்றி - விலங்கு வகை.** ஓரியினுடைய யானையைக் கொன்று வீழ்த்திய அம்பு பின் புலியை வீழ்த்தி, மான் கலையை உருட்டிக், கேழலாகிய பன்றியை - விலங்கினை- வீழ்த்திப், புற்றின், உடும்பில் சென்று செறிந்தது *[புற.152:4]*.

குட்டிகளையுடைய பன்றியையும், பலகோழிகளையும், உறைக்கிணற்றினையும் உடையது புறச்சேரி *[பட்.75]*. தேன், கிழங்குடனே தசை நிறைந்த வட்டியினராய்ச், சிறுகண்ணினையுடைய பன்றியது பழுது நீக்கிய தசையினராய் யானையது கொம்பைக் காவாகக் கொண்டு கானவர் தூக்கிச் செல்வர் *[மலை.152]*.

'வெள்ளத்தை அஞ்சாமையையுடைய பன்றியைப் போலக் கடந்து துறையினைத் தாண்டி நள்ளிரவில் ஈண்டு மக்கள் வருவாருளரோ? ஒரு நாள் நீ துன்புறினும் என் தோழி உயிர் தரியாள்', எனத், தோழி தலைவனிடம் கூறினாள் *[அக.18:6]*. 'சிவந்த சிறிய கண்ணினையுடைய பன்றி சிறிய புதரில் தூங்க அதன் முதுகு மறைய முல்லை மலர் உதிரும் புறவினையுடைய ஊரில் தலைவி தங்கியுள்ளாள் *[அக.84:6]*. தினைக்கதிரை உண்ண வரும் பன்றியின் திறம் நோக்கிப் புனங்காப்போன் பரண்மீது கொளுததி வைத்த விளக்கம் நோக்கி வந்து தலைவியின் துயர் தீர்த்தான் தலைவன் *[அக.88:4]*. 'கோவலர், குறுநரியை ஓட்டுவதற்குச் செய்யும் ஒலி, பன்றியை ஓட்டற்குப் புனங்காவலர் ஊதும் கொம்பின் ஓசையோடு காட்டு நாட்டிலுள்ள தலைவியின் ஊரில் ஒருங்கிசைக்கும் *[அக.94:9]*. வயிரத்தையொத்த கொம்பினையும், மூங்கில் வேரினையொத்த மயிரினையும் உடையது பன்றி *[அக.178:2]*. வேட்டை நாயைக் கடித்து, வேட்டுவர் நெருங்குதலைத் தடுத்துக், குட்டிகளைத் தழுவித் தன்கிளையுடன் பிணவு பெயரக் காட்டினின்று வெளிவந்து அஞ்சாமையுடைய பன்றி இடுக்கரில் ஆளைக்குறித்து நின்றமைக்கண் கானவன் அதன்மீது அம்பெய்யாது மீண்டான் *[அக.248:6]*. வேங்கை, பெண்புலியின் கடும் பசியினைப் பொறாது அத்தத்தில் பனையின் செரும்பினைப் போன்ற மயிரினையும், சிறிய கண்ணினையும் உடைய பன்றியின் வரவு பார்க்கும் *[அக.277:8]*. பிறைமதியை யொத்த கொம்பினையும், அஞ்சாமையினையுமுடைய பன்றியினது இறைச்சியைத் தின்ற புலி முழங்கும் பக்கமலையினையும், குறவரும் எடுக்க முடியாத தேனையுடைய உச்சி மலையினையும் உடையது பொதியில் *[அக.322:10]*.

சிறிய கண்ணினையும், பெருஞ்சினத்தினையுமுடைய பன்றி, சேறாடிய புறத்தோடு மலைப்பிளப்பில் பட்டதாக, நாய் பற்றி மிகுந்த தசையைக் கானவர் கொள்வர் *[நற்.82:7]*. பருத்த மயிரினையும், சிறிய கண்ணினையுமுடைய பன்றி பொறிவைத்த புழையில் புகும்போது பல்லியொலி கேட்டு அஞ்சி மீண்டு தன் பள்ளி சென்றுறையும் *[நற்.98:2]*. சிறு கண்ணும், பெருஞ்சினமுடைய பன்றி தினையைத் தின்று, வேங்கைக்கு அஞ்சாது, மூங்கில் சாரலில் தூங்கும் *[நற்.386:1]*.

மெல்லிய தினையைத் தின்ற அஞ்சாமையையுடைய பன்றி மலைச் சாரலில் தூங்கும் *[ஐங்.261:1]*. மலைநாட்டில் சிறிய தினையை மேய்ந்த அஞ்சாமையையுடைய பன்றி சாரலில் தன் துணையோடு தங்கும் *[ஐங்.262:1]*. சிறிய கண்ணினையும், பெரிய சினத்தினையுமுடைய ஆண்பன்றியொடு குறுகிய கையையுடைய புலி பொரும் *[ஐங்.266:1]*. சிறுகண், பெருஞ்சினம் உடைய ஆண்பன்றி சாரலில் வில்லேந்திய காவலரை ஓட்டி மலைநெல்லைக் கவரும் *[ஐங்.267:1]*. சுரத்தில் செந்நாயேறு, பன்றிக் குட்டியை இரைக்குக் கொள்ளாது நீங்கும் *[ஐங்.397:2]*.

**பன்றிப் பறை - குடப்பறை / பன்றியோட்டும் ஒருவகைப் பறை.** பலாச்சுளையைத் தின்று கழிந்த விதையை உண்ணக் கன்றுகளைத் விடும் பிள்ளைகள் செய்யும் ஆரவாரமும், கரும்பினைச் சாறு கொள்ளும் ஆலைதோறும் எழும் ஓசையும், தினை குற்றும் மகளிரது வள்ளைப் பாட்டும், சேம்பு, மஞ்சள்

காப்போர் பன்றிகளை ஓட்டக்கொட்டும் பன்றிப்பறை-குடப்பறை-ஒலியும், மலையெதிரொலியும், பிறவுமாகிய எண்ணற்ற ஓசைகள் மலையில் பிறக்கும் *[மலை.344]*.

**பன்னல் - பருத்தி.** 'தையல் நயந்து படைகொண்டு வந்த வேந்தர் பலர். அவள் தன்னைமார், செருப்புகல் வேண்டி நிரல் இல்லோர்க்குப் பெண்கொடேம் எனக் கூறிப் பலகையர், வாளர், வேலராய் மறங்கொண்டு மண்டுகின்றனர். எனவே, பன்னல் - பருத்தி - வேலியையுடைய இவ்வூர் என்னாகுமோ', என, மகட்பாற் காஞ்சித் துறையில் புலவர் பாடுவர் *[புற.345:20]*.

**பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி** - ஒரு பாண்டிய வேந்தன். மாறன் வழுதி என்பது இவன் இயற்பெயர். பன்னாடு தந்த பாண்டியன் என்பதனால் இவன் பல நாடுகளையும் வென்று தன்னாடாக்கி ஆண்டமை தெளிவாம். 'கடல் கிளர்ந்து தன்னாட்டைக் கவர்ந்து கொண்டதனால் சோர்ந்தொழியாது மேற்சென்று பகைவர் நாடுகளை இடம்பட வென்று, அங்கங்கே பறந்த புலிக்கொடி, விற்கொடி ஆகியவற்றை நீக்கித், தன்புகழ் பொறித்த மீன்கொடியை உயர்த்தி, வலிமையால் அந்நாடுகளை வணக்கிய தென்னவன்' என்று கலித்தொகையிலும் *[104]*, 'பஃறுளியாற்றுடன் பல்மலையடுக்கங்களையுடைய குமரிக்கோட்டினையும் கொடிய கடல் கொண்டதாக, வடதிசைக் கங்கையையும், இமையத்தையும் வென்று கொண்டு தென்றிசையிலே இருந்தாண்ட தென்னவன்', என்று சிலப்பதிகாரத்திலும் *[19:21]*. பாராட்டப் பெறுபவன் இப்பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதியே போலும். இச்சிறப்புப் பற்றி இயற்பெயரே வேண்டாத முறையில், 'பாண்டியன் பன்னாடு தந்தான்', என்ற மட்டிலும் இவன் பெயர் வழங்கியது *[குறு.270]*. 'மாறன் வழுதி' எனவும் *[நற்.97]*, 'பாண்டியன் மாறன் வழுதி' எனவும் *[நற்.301]*, குறிக்கப் பெறுபவனும் இவனேயெனக் கருதலாம். பார் வேந்தனாகிய இவன் புலவனாகவும் திகழ்ந்தான். குறுந்தொகையில் ஒன்றும் *[270]*, நற்றிணையில் இரண்டும் *[97,301]*, ஆக மூன்று பாடல்கள் இவனால் பாடப்பட்டுள்ளன. வினைமுற்றி மீண்ட தலைவன், தலைவியுடன் கூடியிருந்து மழையை நோக்கிக் கூறியதாகவும், பருவம் கண்டு ஆற்றாளாகிய தலைவி தோழிக்கு உரைத்ததாகவும், தலைவனைச் சேட்படுத்து நின்று தோழி தன்னுள்ளே சொல்லியதாகவும், இவன் அப்பாடல்களை இயற்றியுள்ளான். 'செய்வினையை முடித்து வந்த செம்மல் உள்ளமொடு யாம் எம் காதலியாய இவளையடைந்து குவளை நாண்மலர் மணக்கும் இவளது நறுமென் கூந்தலாகிய மெல்லணையில் இருக்கின்றேம். வானமே, இனி நீ இருளழிய மின்னி, இனிய துளிகளைச் சிதறி, முரசு போல் முழங்கி, இடித்திடித்து நன்கு பெய்து வாழி', என்ற தலைவன் கூற்றில் இவன் அமைத்த உவகை உணர்ந்தின்புறத் தகுவதாகும் *[குறு.270]*. பிரிந்திருக்கும் தலைவி, குயிலின் குரலை, வெந்த புண்ணிடை வேல் பாய்ச்சுதல் போன்றதாய் வெறுத்து, அதனினும் கொடியது ஆற்றுநீர் வரவென்றும், அவ்வாற்றுநீர் வரவினும் கொடியவள் பூவிற்கும் பெண்டென்றும், ஆற்றாளாகித் தோழிக்கு உரைப்பதில் *[நற்.97]* இவன் பதித்த உணர்வு நலமும் சிறப்பு மிக்கதாம். தாயின் கூற்றைக் கொண்டுமொழிவாள் போல் தோழி, தலைவியின் நலத்தைத் தலைவன் கேட்பத் தன்னுள்ளே பாராட்டுவதாக அமைத்ததில் *[நற்.301]* மிக நுட்பமான கருத்துப் பொதிவைக் காணலாம். இத்தகைய புலமை நலம் சான்ற இவனே நற்றிணை நானூறு தொகைநூலைத் தொகுப்பித்தோனுமாவான்.

**பனம்பாரனார்** - ஒரு புலவர். இவர் தொல்காப்பியத்திற்குப் பாயிரம் பாடிய பனம்பாரனார் தாமோ, வேறொருவரோ விளங்கவில்லை. இவரது பாடலொன்று குறுந்தொகையில் *[52]* உள்ளது. வரைவு மலிவு கேட்டு மகிழ்ந்த தலைமகளுக்குத், தோழி, தான் முன்னாளில் அறத்தொடு நின்றமையால் இது விளைந்தது என்பது தோன்றக் கூறுவதாக இவர் தம் பாடலை இயற்றியுள்ளார். தலைவனுக்குத் தன்னை வரைவுநேராது தமர் மறுத்த நிலையில், தலைவி, மலைப் பக்கத்துத் தெய்வத்தால் விரும்பப் பெற்றவளைப் போல் நடுங்கியிருந்த வருத்தம் கண்டு, தோழி அறத்தொடு நின்றதை, அவள் கூற்றில் இவர் குறித்துள்ளார்.

**பனி - 1.** பனித்துளி. வடக்கில் பனி - ஆலங்கட்டி - படும் இமயத்தின் வடக்கும், தெற்கில் குமரியின் தெற்கும், குணக்கில், குடக்கில் கடலின் குணக்கும், மேலும், கீழும், உட்கும், புகழுமாகித், துலாக்கோல் போல ஒருபக்கம் கோடாதொழிக', என முதுகுடுமிப் பெருவழுதிக்குக் காரிகிழார் செவியறிவுறுத்துவர் *[புற.6:1]*. 'தலையில் சிதறிய மயிர் அடங்குமாறு, தண்ணிய பனி துளிக்கும், பொழுது புலராத காலத்துக் கிணைஞன் பலவினையுடைய மலையைப்பொருந்தி, மாக்கிணை கொட்டி, மலைபாடப், புலித்தோலில், முள்ளம்பன்றியிறைச்சி, சந்தனம், யானைக்கொம்பு எனும் மூன்றையும் ஆய் குவித்துக் கொடுப்பான் *[புற.374:4]*. பனி மிக்க யாமத்தில், சிதறிய தலைமயிர் நனைய, இனிதாகத் துயில் கொள்வர் *[புற.377:1]*. 'சேவல் எழுப்ப எழுந்து, பனி சிந்தும் பொழுது புலராத காலத்துச் சிறுகிணையினை ஒற்றி, அவன் புகழை ஏத்தினேனாகப், பூங்கலிங்கமுடுத்தி, வேண்டுவ வழங்கினான். அது தொட்டுப் பிறர் பாடுபுகழைப் பாடிச் செல்ல அறியேன்', என அவியனைக் கிணைஞன் கூற்றல் புலவர் புகழ்வர் *[புற.383:2]*. 'எழினியது நெடுங்கடையில் நின்று, நிலவில், பனி வீழும் விடியலில், ஒருகண்மாக்கிணை கொட்டிப் பாடி நின்றேனாகச், சிதைந்த ஆடையினை நீக்கிக், கலிங்கம் உடுத்தித் தேறலைப் பொற்கலத்தில் தந்து, ஈந்து, விருந்திறை நல்கினான் எனக் கிணைஞன் கூற்றில் பொகுட்டெழினியை, ஔவையார் பாடியுள்ளார் *[புற.392:3]*.

நார்முடிச்சேரலின் வியன்மார்பு, பனிமிக்க இமயம் போன்றது; தோள், தூங்கெயிலின் கதவிலுள்ள கணையம் போன்றது; அவன் வண்டன் அனையன் எனக் காப்பியாற்றுக் காப்பியனார் பாடுவர் *[பதி.31:17]*. 'மாரியென்னாது, பனியென மடிந்திராது, பகைதீர்க்க, அசையாத ஊக்கத்தோடு, வேறு புலத்து இறுக்கும் தானையோடு, யானை முழங்கும் பாசறையினன் சேரவேந்தன் *[பதிதி.4:4]*.

கொன்றையம் கொம்புகளில் பனி (பனியாவி) தவழ்வது போல், அல்குலில் மெல்லிய துகிலசைய, மயில் போல் உலாவிப் பொற்சிலம்பொலிப்ப மகளிர் பந்தாடி, மணலில் கழங்காடுவர் *[பெரு.323]*.

பனியொழுகும் சிமையங்களையுடைய கானத்தைக் கடந்து, நாட்டகம் சென்று, மதிலைக் கவர்ந்து தான் வேண்டிய நிலத்துத் தங்கி வெல்லும் போரினையுடையவன் செழியன் *[மது.148]*.

தன்னை நுகர்வாரை வேறொன்றை நுகராது தடுக்கும் தினைமாவோடு, சோற்றையும், உண்டு, விறகில் தீமூட்டிப் பனி நீங்க, இனிது தூங்கி, விடிந்தமையினைப் புட்குரலால் தெரிந்து செல்க', எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் *[மலை.447]*.

நெற்கதிர், வரம்பினை அணையாகக், கொண்டு அலையத், தனிமைத் துன்பினைக் கொண்டு வரும் வாடை பலதுளிகளையுடைய பனிக்காலத்தில் கரும்பின் தண்டின் மீதிருக்கும் வெண்குருகு ஒலிக்க வீசும், *[அக.13:24]*. பெருமழை விசும்பு உரிவதுபோல் ஒழுகித், தென்திசைக்கண் சென்று சேரும் பனியுடன் கூடிய கங்குல் வெள்ளத்தையும் தமியளாய் நீந்தித் தலைவி தம்மூரின்கண் உள்ளாள்; யாமோ, துயில் நீங்கிய தானையோடு சினத்தையுடைய வேந்தன் பாசறையிடத்தேம்', எனத், தலைமகன் கூறினான் *[அக.24:9]*. மூங்கிலின் அழகிய மலர்கள் உதிரவும், காந்தள் மலர் உதிரவும் வாடைக்காற்று பனியையுடைய முன்பனிக்காலத்தில் வீசும் *[அக.78:10]*. ஆலங்கட்டி போல், ஈங்கையதுமலர் சிதறக், குவளைபிணிப்பவிழ, மதம் ஒழிந்த யானை போலப், பெய்து வறிதாகிய கொண்மூ வானில் திரிய, நடு இரவில் பனி வருத்தும் *[அக.125:11]*. 'தோழி! பகல் இரவு என்னாது, குளிர்ந்த பனியையுடைய முன்பனிக்காலம் தனித்திருப்போர்க்குத் தாங்கற்கரிதென உணர்ந்து, கனவிலும் பிரிதலறியான். அதன் மேலும், தன் பண்பினால், முன்னினும் பெரிதும் அருள் செய்வானாயினன்', என்று தலைவியிடம் தோழி கூறினாள் *[அக.178:19]*. 'மாலைப் பொழுதில் பிடவ மலரினை வண்டுவாய் திறப்பக், கூதிர், அற்சிரக்கால வாடைக் காற்றுத் தூற்றப், பனியலைத்தலால் கலங்கிய நெஞ்சுடன், பிரிந்த தலைவர் பொருட்டு வருந்துதற்குரியேமல்லமோ', என்பது, தலைமகள் கூற்று *[அக.183:14]*. 'காதலர் நம்மைப் பிரிந்து செல்வரேல், பாழ்படு மேனியோடு, நோய் வருத்த, உடையும் நெஞ்சத்தோடு, அவரது கூட்டத்தை விரும்பிக், கடிய பனியால் வருந்திப், பற்களைத் தீப்பிறக்கக் கடித்து நடுங்குதும்', என்று தோழியிடம் தலைமகள் உரைத்தாள் *[அக.217:20]*. 'மனையின்கண் சிலம்பொலிக்க, ஆயமோடு பந்து சிறிதெறியினும், வரவழைத்துப், பகன்றை மலரில் பனி நிறைந்ததுபோல், பால் பெய்த வள்ளத்தைப் பற்றி, என் பகுதியோடு, உன் தந்தையின் பகுதியும் உண்ணெனச் சிறப்புச் செய்து வளர்க்கப்பட்டவள், இப்போது அறநெறியறியாதவனோடு சென்றனள்', என, மகட் போக்கிய தாய் வருந்தி மொழிந்தாள் *[அக.219:4]*. 'பனி தங்கிய நற்பண்பில்லாத வாடை, மயக்கந்தரும் மாலையோடு அருளின்றி வருத்த, நம் காதலர் பொருள் விரும்பி நம்மை மறந்தாரோ?' என்பது பிரிவின்கண் தலைமகள் கூற்று *[அக.235:15]*. நெல்லரிநர் இட்ட, கதிர்ச் சூடு நிறைந்த, பனி தங்கிய கோரையையுடைய களனெல்லாம், வயற் புறத்தேயுள்ள மாமரத்தின் புதுப்பூ, மழைத்துளிபோல, உதிர்ந்து கிடக்கும் *[அக.236:6]*. 'பெயல் பொழிந்து, மரந்தழைத்து, மலர் பெருகின. கானமும், மிக நன்றாகியது. பனி நீங்கிய பின்னாளாகிய இளவேனிற்கண், பால் எனப் பரந்த நிலவினைக் கொண்ட மாலைப்போது தூதாத வந்தது. எனவே, கலங்கா மனத்தையாகி, என்சொல்கேட்டு, உடன்போகத் துணிவாயாக', என்று தலைவியிடம் தோழி கூறினாள் *[அக.259:8]*. 'நம் தலைவர் நம்மினும் உறுதியுடையதாகத் துணிந்தபொருள், வானில் உயர்ந்து, புகைபோலப் பொலிவுற்றுப், பனிதவழும், இமயமலையினை ஒக்குமோ?' எனக் கிழத்தி தோழியிடம் வினவினாள் *[அக.265:2]*. 'தோழி! மலைக்குகையிருளைப் போக்கிய வேல், தான் செல்லும் வழியினைக் காட்டப், பனி வருத்தலை வெறாது, தமியனாய், நம் மனையிடத்து வரக், கண்ட அன்னை, முருகு என எண்ணிச், செந்தினையினை, நீரொடு தூவிப் பரவா நிற்கும்', என்று தலைவியிடம் தோழி உரைத்தாள் *[அக.272:6]*. 'தோழி! மணியொக்கும் மேனியழகு கெடும்படி, நீக்கமுடியாத துன்பத்தைச் செய்தோனுடைய அழகிய மலையைத் தோய்ந்து வரும் நீரின்கண், பனியையொத்த, குளிர்ந்த கண் சிவக்க, நள்ளிரவில் மூழ்குவோம்', என்று தோழி கூறினாள் *[அக.278:11]*. 'வடுகர் முன்னே துணையாகி வர, மோரியர் தென்திசை நாடுகளைப் பற்ற எண்ணி, உயர்ந்த பனியையுடைய மலையினைத் தேராழி தடையின்றிச் செல்லக்குறைத்த வழியைக் கடந்து, அலர் நமக்கொழியச் சென்றார் அவர்', என்பது தலைவி கூற்று *[அக.281:10]*. புலி தன் குட்டியை ஈனும் வறிய சுனையிடத்து, நீர் வேட்கையால், யானையிட்ட, கையைக் கடித்துப் புலிக்குட்டி முழங்கும், முகில் மறைத்த, பனி படிந்த, மலையைக் கடந்து தலைவர் போவாரோ?' எனத், தலைமகள், தோழியை வினவினாள் *[அக.329:14]*. 'தலைவன் பிரிந்தமையால் ஆகிய தனிமையும், அன்னையின் அமையாத பார்வையும், வாடையொடு வந்த பனியையுடைய மாலையும், பிறவும் கூடி வருத்தவும், வானையளாவும் அவரது

மலையுச்சியைக் காணப்பெறுதலின், உயிருடன் உளனாகின்றேன்', என்று, கிழத்தி, தோழியிடம் கூறினாள் *[அக.378:13]*.

'பனிக்காலத்துன்பம் போக்கும் மருந்து தலைவனின் மணந்த மார்பே' என்றாள் தலைவி *[குறு.68:3]*. 'வாடையோடு பனி துன்புறுத்தத் தலைவர், பொருள்வயிற் செல்ப என்ப', என்றாள் தலைவி *[குறு.76:6]*. மலைச்சாரலில், சிறுதினை யரிந்த மறுகாலிடத்து, அவரைக் கொடி மலர்கின்ற, பனியையுடைய காலத்தும் தலைவர் வாரார், நமக்கு அவர் யாராகுவர்?' எனத், தலைவி கூறினாள் *[குறு.82:6]*.

'காதலர் பனிபடு நாளில் பிரிந்தனர். பிரிந்த நாளும் பலவாயின', என்று தலைவியிடம் தோழி கூறினாள் *[குறு.104:4]*. 'நாடர், வாடை தென்புலம் வரும் தண்ணிய பனி நாளிலும், நம்மை விட்டுப் பிரிவாரோ?' என்று தலைவியைத் தோழி வினவினாள் *[குறு.317:7]*. 'குளிர் துவலையைக் கொண்ட பனியையுடைய திங்களில், மாலையில், பொருட்பிரிவுக்குச் சென்ற கணவர் வரக் காத்திருப்போரே, தவஞ்செய்தோராவர்', என்பது தலைவி கூற்று *[குறு.344:2]*. 'தோழி! நம் காதலர் நிலையாப் பொருட் செலவு மேற்கொள்ள முயலும் காலத்துப் பனியினது கடுமையைப், பிரிவால் பொறுத்தலாற்றேம், எனச் சொல்வேமாயின், செலவு தவிர்வாரோ?' எனத், தோழி தலைவியிடம் வினவினாள் *[அக.350:2]*. 'நெஞ்சே! நம் தலைவி, வேனிற் காலத்துப், பொதியில் மலைச் சந்தனத்தைப் போன்று, தண்மையுடையள். பனியில், பொதிந்த தாமரையின் உள்ளிடத்தைப் போன்ற, சிறு வெம்மையள்', எனக், கிழவன் நெஞ்சுநோக்கிக் கூறினான் *[குறு.376:3]*. 'காதலர் சேய் நாட்டார்; வருவதோ, பனிக்கடுநாள்; என்செய்வாம்', என்றாள் தோழி *[குறு.380:7]*.

வளை முழங்கப், பனியுண்டாக, வரிசையாக எடுக்கப்பட்ட விளக்குக்களுடன், பிரிந்துறை மகளிர் செயலற மாலைப் பொழுது வந்தது *[நற்.58:7]*. 'பனிக் காலத்தில், தலைவி நடுங்கப் பிரிந்தவர், இளவேனிலில் வந்தருளினர்' *[நற்.86:4]*. மழை பொழிந்து மாறிய பனிப்பருவத்தில், உழுந்தின் இலை சிதைய வீசி, நாளும் வாடை வருத்தும் *[நற்.89:5]*. 'தோழி! இருளும் வந்தது. அன்னையும் துஞ்சினள். கீழும், மேலுமாகிய காப்போரின்றி வரும் களிறு போலத், தமியன், பனியலைப்ப வந்த தலைவனது, மார்பைச், சென்று முயங்கிக் கண்டு வருவேமோ?' எனத், தோழி தலைவியிடம் சொல்லினாள் *[நற்.182:10]*. 'தோழி! இராக்காலம் வருதலும், பனிவிழத் தொடங்கிய துன்பந்தரும் நடுயாமத்தில், கண்கலுழ, நில்லாப் பொருள் கருதிச் சென்றோர், நினையார் கொல்?' எனக், கிழத்தி தோழியிடம் எதிரழிந்துரைத்தாள் *[நற்.241:10]*. 'இருள் நிரம்பிய பனியில், கான் யாற்றின் சுழிகளில், முதலை இயங்கும் வழியில் நீ வரின், உயிர் வாழேன்', எனத் தலைவனிடம் தோழி இரவுக்குறி மறுத்தாள் *[நற்.292:9]*. 'யாம் அருகிருந்தும் கோடைக் காலத்திலும் நடுங்குபவள், வாடையையுடைய பெரிய பனியில் என்னாவளோ? எனத், தலைமகன், தன் நெஞ்சிற்குக் கூறினான் *[நற்.312:9]*. 'தோழி! வருவர் என்ற பருவமும் கழிந்தது. இருள்மிக்க நடுயாமத்து, வாடைக்காற்றோடு பனியின் முனிவு என்மீது வர, இவ்வாறு நாள் சில கழியின், வாழலேன் போலும்', என்று தோழியிடம் கிழத்தி உரைத்தாள் *[நற்.364:4]*. தலைவர் தம் மாவினை விரையச் செய்து இப்பனிபடு நாளில் தங்காது வருவர்', என்றாள் தோழி *[நற்.367:12]*. 'பனிக்கடுநாளில், தேர் விரையச், சென்றவன், இன்று, கார்காலத்தில், சாந்தணிந்து, தண்ணியனாய், மனை நோக்கி மீள்கின்றான்', எனக், கண்டோர் கூறினர் *[நற்.394:6]*.

காப்பாள் போன்றான் தூவலில் நனைந்து, வாளினையும், கழலினையும் கொண்டு, பனியில் வைகினான்', என, இரவுக்குறிக்கண், தோழி சொன்னாள் *[ஐங்.206:5]*. 'காதலரைப் பிரிந்தோரை நலியும், குளிர்ந்த பனியோடு கூடிய வாடைக்காலம் வருமுன், வந்தனர், நம் காதலர்' என்று தலைவியிடம் தோழி மொழிந்தாள் *[ஐங்.223:4]*. 'புல்லால் வேயப்பட்ட குடிலை மழை மறைக்கும் நாடன், பனிகலந்த கூதிர்க்காலத்து வாடைக்காற்றின் முன் வந்தனன். வாழ்வானாக', எனத், தோழி உரைத்தாள் *[ஐங்.447:2]*. பனி வளர் முல்லை முகையின் வண்டவிழ்ப்பப்பருவங் கொண்டது. மன்னவன் பாசறைத் தொழில் விடுதலை பெறுக. ஒளிநுதலாளைக் காண்குவம், எனத் தலைமகன் கூறினான் *[ஐங்.447:2]*. 'பனியளவிய கூதிர்க்காலத்து, இவண், ஒருங்கிருப்பேம் எனத் தெளிவித்துச் சென்றோர், அதனை, நினையாரோ?' என்று தோழியிடம் கிழத்தி வினவினாள் *[ஐங்.456:4]*. 'பெய்யும் பனி வருத்தக், குருகினம் ஒலி செய்யும், பிரிய அரிய காலத்துக், காதலர் துறந்தமையார்; என நெஞ்சு மறந்தமையாது', என்றாள் தலைவி *[ஐங்.457:1]*. 'நிலம் குளிர்ப்பப் பனியளவிய காலத்துக் காதலர், நின்னை நினையாராயினும், நின் மாமைக்கவின் அவரை மறக்கவிடுமோ?' என்று தலைவியிடம் தோழி உரைத்தாள் *[ஐங்.470:2]*. தலைவியின் வளை நெகிழ, மேனி வாடக், கண்கலங்கப், பனிவருத்தத் துறந்தான், தலைவன் *[ஐங்.471:2]*. 'பனி கலந்த வாடை என் தனிமையை எள்ளும் பொழுதில், தலைமகள் சொல்லியதை எனக்குச் சொல்வாயாக', என்று பாணனை தலைமகன் கேட்டான் *[ஐங்.479:3]*.

'தோழி! பனியையேற்ற மலரையளாவி, வாடை வந்து, என் நிறையை அழிக்காதிருந்திருப்பின், பிரிந்தார்மாட்டுச் சென்ற என் நெஞ்சினை ஆற்றியிருப்பேன்', என்று தோழியிடம் கிழத்தி உரைத்தாள் *[கலி.29:12]*. இளவேனிற் காலம் வருந்துணையும் முன்பனிக்காலத்து வாடையாலும் மெய்வளைதற்குக் காரணமான பனியாலும் ஆற்றியிராதபடி துன்பம் மிகுகின்றது எனத் தலைவி தோழியிடம் உரைத்தாள் *[கலி.31:6]*. 'புகையெனப் புதலைச் சூழ்ந்த கடும்பனி, பகையை வென்று, திறையைக் கொண்டு, பாயுந் தேர்மேல்வரும்

செம்மலது அழகைக் காண விட்டு வைக்குமோ?' என்றாள் கிழத்தி *[கலி.31:20]*. 'கதிரவன் தோன்றப், பொய்கையுள் தனிநின்ற தாமரை, துனி மிகுந்தழும் காரிகையின் கணவன் அடிவீழ, மலரும் முகம் போலப், பனியொழுக மலர்ந்தது *[கலி.71:7]*. 'ஐய! உன்னை விரும்புவாரும், நீ விரும்புவாரும் மனம் வேறுபடக், கையால் முகையை மலர்வித்தல் போன்ற, செயற்கை முயக்கினும், தண்பனியில் தனித்து வைகல், தகையில்லையாகும்', என்று தலைவனிடம் காமக்கிழத்தி உரைத்தாள் *[கலி.78:27]*. 'குழலே! பனியோடு இருள் சூழத், தனியவர் துன்பத்தை மிகுக்க, ஒலிக்கின்றாயோ? எம்மைப் போல் பிரிந்தாரை நீயும் உடைமையோ?' என்று குழலைநோக்கித் தலைவி கையற்றுக் கூறினாள் *[கலி.129:16]*. 'நோய் செய்தாரை என் நெஞ்சு நினைக்கப், பனி அறிவைத் தின்ன, யான் கலங்க, அதனை நோக்கி, இரங்கித், தன் மெய்யில் அவலத்தைக் கொண்டது போலக் கடல் இரங்காநின்றது, என்னையோ', என்று தலைமகள் ஆற்றாது கூறினாள் *[கலி.134:12]*. 'நோய் செய்தவர் நம்மை நல்காமையால், கடும் பனியால் வருந்தி, என் அழகழிய, மணல் அதுகண்டு, இரங்கிக் குறைவது, என்னோ?' என்றாள் தலைவி *[கலி.134:16]*.

உருவறிய முடியாத வானம் தோன்றிய ஊழியும், அதனின்று வளியும், அதனின்று தீயும், அதனின்று பனியொடு, மழை பெய்த ஊழியும், ஆய பின், அதனாலாகிய வெள்ளத்தில் தோன்றிய, நிலத்தின் ஊழியை உருவாக்கினாய்', எனத் திருமாலைப் புலவர் ஏத்துவர் *[பரி.2:8]*. 'வையைப் பொழில்மீது, பரங்குன்றத்துப் பனிபொழி சாரல் மீது ஆணை. என் மீதாகிய நாற்றம், பரங்குன்றத்துக் கனியில், மலரில் வீசுங்காற்றால் வந்தது', எனவே, அயலார் நாற்றம் என முனியாய்', என்று தலைவியிடம் தலைமகன் கூறினான் *[பரி.8.52]*. மதுரை மாடங்களின் உள் நின்றெழும் பனி நீர் மணத்துடன் கலந்த அகிற்புகை, மலைப்பூங்கொடிகளில் தங்கி, மேலெழும் பனியாவியைப் போலும் *[பரி.10:123,124]*. கார், வானத்தில் நீங்கப், பனிபடுகின்ற நடுக்கத்தையுடைய, விதலைப் பருவ, மார்கழிமாதத் திருவாதிரை நாளில் நிலம் மழை பெறுகவெனக், கன்னியர் அம்பா ஆடல் தொடங்கினர் *[பரி.11:75]*.

**2. குளிர்ச்சி** கலந்த வள்ளையையும், மலர்ந்த ஆம்பலையும், பனி - குளிர்ச்சி - உடைய பகன்றையையும், பழத்தையுடைய பாகலையும் உடைய மருதநிலம் கரும்பல்லது பிறிது காடறியாதது *[புற.16:14]*. 'துணைவனும், துணைவியுமாகிய காம இருவரல்லது யாமத்துத் தனிமகன் வழங்காத பனிமலர்க் காவில், சாலை வாயிலில், மாடந்தோறும் செம்மறிக்கிடாயை வெட்டி விழாபல அயர்ந்தனர் *[புற.33:19]*. புனங்காப்போர் தட்டை புடைப்பின், அயலதாகிய வயலின்கண்ணும், கடற்கரையின் கண்ணும் புள் ஒருங்கு எழுமாதலின், தலைவனாகிய கோதையை, நாடன் என்பேனோ? ஊரன் என்பேனோ? பனிக்கடல் சேர்ப்பன் என்பேனோ?' எனத் கோதையின் நாட்டுவளம் சிறப்பிக்கப்பெறுகிறது *[புற.49:2]*. போர்க்களத்தை வென்றுகொள்வார்இன்றிப், இருபெருவேந்தரும் போரில் உடன் மடிந்தனர். பெண்டிரும், கைம்மையால் இலையுணவுண்ணாது. பனி நீரில் மூழ்காது, கணவரது மார்பகம் பொருந்தி மாண்டார் *[புற.62:14]*. மூதூரில், பனிப்பொய்கையில் நீராடி, மன்ற வேம்பின் தளிர் மலைந்து, பறைமுன் களிறுபோல், நடந்து, நெடுஞ்செழியனும் பொருதற்கு எழுந்தான் *[புற.79:1]*. 'ஓரி பனி நீரில் பூவாத, மணிமிடைந்த, குவளைப்பூவை, வெள்ளி நாரால் தொடுத்த மாலையினையும், பிற அணிகலன்களையும், யானையணிகளுடனே, பரிசிலர்க்கு அளித்ததால் அவர் பசியாராகலின், பாடுதலையும் மறந்து, ஆடுதலும் மாட்டாராயினார் *[புற.153:7]*. 'பாரியது பறம்பில், பனிச் சுனையிலுள்ள நீர், போய்த் தேடிக் கொள்ள வேண்டாது, ஒரூரின்கண்ணே உண்மையான், அதனை வேண்டிய போது உண்ணலாம் என மக்கள் நெகிழ்ந்திருந்தனர் *[புற.176:9]*. 'மாற! முன்பு காணாதது கண்டனம், வெயிலென்று போக்கை வெறேனாய்ப், பனி - குளிர் - என்று மடிந்திரேனாய், நல்குரவு மிக்க வளிமறையாகிய மனையிடத்து, நாணல்லதில்லாக் கற்பினையுடைய மகளை நினைந்து செல்குவன், நின் நாள் சிறக்க', என நன்மாறனை கடா நிலையில் ஆவூர் மூலங்கிழார் பாடினார் *[புற.196:11]*. பனிமலையின்கண், ஓங்கிய பலவின் பழத்தைக் கவர்ந்த கடுவன், தன் மந்தியுடனே, மூங்கிலுச்சியில் தூங்கும் *[புற.200:1]*. பனிநீர்த் துறையின் கண்ணுள்ள பகன்றை மலர் பிறரால் சூடப்படாது கழிந்தாற்போலப், பிறர்க்கொரு பொருளைக் கொடுக்காது மாய்ந்துபோம் உயிர் மிகப்பல *[புற.235:18]*. 'மகளிர் மாலை சூட்ட, நடுங்கும் பனி நீங்கக், கள்ளைப்பருகிப், புரவியை ஒப்பனை செய்ய மறவன் விரைந்தான் *[புற.304:2]*. 'வில்லேர் வாழ்க்கையையுடைய வல்லோன், பனிமிக, மாலையில், சிறு தீயைக் கடையும் இடையன் போல, இல்லது படைக்கவும் வல்லன். உள்ளது மிகச்சிறிதாயினும், மிகப் பலர் என்னாது, பந்தரில், உணவளிக்கும் மனையாள் போல, வரிசையோடு, அளிக்கவும் வல்லன்' *[புற.331:3]*. பாரி பறம்பில் பனிச்சுனைபோலக், காண்டற்கு அரியளாகிப், பெண்மை நிறைந்து, துகிலினது விரிப்புப்போல் நுடங்கிக், கபில நகரது நாற்றங் கொண்டு, மனையகத்திருந்தாள் *[புற.337:6]*. காஞ்சி மரத்தின் பனித்தளிர் ஆரஞ்சூடியவளது அல்குல் அழகு, ஊரோடு மிக்க பொருளைத் தருதல் அன்றி, எரிபரப்பிப், பண்பில் ஆண்மை தருதல், ஆகிய, இரண்டில் ஒன்றாகாமை அரிது, என, மகட்பாற் காஞ்சித் துறையில் பாடப்பெற்றுள்ளது *[புற.344:8]*. 'பனிக்கயம் போன்ற, சோழனது நகரையடைந்து, மாக்கிணை கொட்டி, வஞ்சியாகிய போர்ச் செலவினைப் பாட, அச்சோழன் மேம்பட்ட சிறப்பினையுடைய அருங்கலங்களை வழங்கினான்' *[புற.378:7]*.

நெய்தலது பசிய இலையையுடைய பனிக்கழியினைத் துழாவிக் கானலிலுள்ள புன்னையது கிளையில் குருகு தங்கும் *[பதி.30:3]*.

உண்ணா நோன்பு கொண்ட மக்கள் தொகுதி, பனி நீர்த்துறையில் நீராடித், திருப் பொருந்திய மார்பினையும், திகிரியினையும், துழாய் மாலையினையுமுடைய திருமாலைப் பரவி, உவகையராய்த், தம் பதிக்குப் பெயரும் *[பதி.31:6]*. 'வெற்றியாலுண்டாகும் சீர்த்தி ஒருங்கியைந்த, கடலலைப்பிசிர் உடையக் கடிது செல்லும் பரியூர்ந்த, பனிக்கடலில் வருந்திய, தாள், அவ்வருத்தத்தினின்று நீங்குமோ?' என கூறும் வாயிலாகச் சேரனின் மறம் போற்றப் பெறுகிறது *[பதி.41:27]*. மீனைத் தேரும் சுழற்சியோடு, பனிக்கயத்தில் மூழ்கிச், சிரல் எழுவது போன்று, நீண்ட ஊசியால் தைக்கப் பெற்ற, போர்வடுவினை உடையது பரந்த மார்பு *[பதி.42:2]*. மழை கொளக்குறையாது, புனல் புக மிகாது, முழங்கும் திரையினையுடைய பனிக்கடலில், வேலிட்டு வென்றோர், முன்னும் இல்லை; இனியாருளரோ?' எனக், கூறிக், கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனின் மறத்தைப் பரணர் புகழ்வர் *[பதி.45:22]*. பாணர்க்குப் பொற்றாமரை சூட்டி, விறலியர்க்கு ஆரம் பூட்டிக், கெடாத புகழை நிறுத்திய, கடற்போர் செய்து வென்ற பனித்துறைப் பரதவன் செங்குட்டுவன் *[பதி.48:4]*. 'பெருமலையும், முப்புறமும் பனிக்கடலும் சூழ்ந்த நிலத்து மன்னர் வணங்கற்கு அமைக்கப்பட்ட பந்தரில், மேல் கட்டில், வேய்ந்த நெய்தல், நறவம்பூவினோடு நாடு முற்றிலும், கமழ, விறலியரது பாடலமைந்து, வாழ்வை என, ஆடுகோட்பாட்டுச் சேரலாதனை நச்செள்ளையார் பாடினர் *[பதி.51:14]*. பகல் நீளாது, இரவு நீண்டு, விலங்கினம் குளிரால் நடுங்கும் மாதத்தில், பனிவழிச்செல்லும் பாணன் உவப்ப, இருள் நீங்கத் தோன்றும் ஞாயிறு போலத், தோன்றிய உடற்கவசம் போன்றவன் *[பதி.59:3]*. வானம் துளி சொரிய, உழவர், பனிநீர்த் துறையிலுள்ள பகன்றை மலரைக் கழுவிய ஆடை போன்று, சூடித் தம் நாட்டில் திருமணியைப் பெறுவர் *[பதி.76:12]*.

நிலம் சூழ்ந்த பனிக்கடல் கலங்க உள்ளே புகுந்து சூரவன்மாவைக் கொன்றவர் நெடுவேள் *[முரு.45]*. பனி நீர்க்குளங்களையுடைய எயிற்பட்டினத்தை யடையின், அகில்விறகால், நுளைமகளாக்கிய கள் தெளிவைப், பரதவர் வார்க்கக், குழல்மீன் சூட்டை மனைதோறும் பெறுகுவீர்', எனப் பாணர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் *[சிறு.153]*. சிறுப்புண் மாலைப் போதில் பனிக்கடலின் நீரைக் குடித்து, வலமாக மேலேயெழுந்து, மலை முகட்டை அடைந்து, செல்லும் முகில், பெருமழை பெய்தது *[முல்.4]*. ஆழ்ந்த நீரினையுடைய பனித்துறையின்கண், குவிந்த மணலை வெறுத்துக், கொம்புகளில் தளிரைக் கொய்து, குவளை மலரைச் செறியச் சூடி, மணங்கமழும் மலைதோறும் சென்று அவிளையாட்டயர்வர் கொண்டி மகளிர் *[மது.586]*. ஒலி அவிந்தடங்கிய பனிக்கடலைப் போன்று, படுக்கையில் சென்றோர் கண் இனிது தூங்கப், பேயும், அணங்கும் கழுதொடு சுழன்று திரிய, யானையின் மேல்தோல் போன்ற இருள் கொண்டது யாமம் *[மது.629]*. கூதிர்க்காலத்து நடுயாமத்தில் உடம்பிற்கொண்ட பனி வருத்தக், கையில் கொண்ட கொள்ளியராய்க், கன்னம் புடைப்ப நடுங்க, மாக்கள் மேய்ச்சலைவிட, மந்திகள் குளிரடையப், பறவைகள் வீழக், கறவை ஆனினம் தம் கன்றுகளைத் துரப்பக், குன்று குளிரும் *[நெடு.7]*. உவவு நாளாகையால், பரதவர் பனிக்கடலில் மீன் வேட்டைக்குச் செல்லாது, மகளிரொடு உண்டாடிக், கடலாடி, அலவனைப் பிடித்து விளையாடிப், பாவை செய்து, ஐம்பொறியால் மருண்டு காதலோடு பகல் விளையாடினர்' *[பட்.92]*. யாறு போலக் கிடந்ததெருவில், மலையென, மழையென மாடங்கள் உயர்ந்து தோன்றிக், கடலெனக், கார் என ஒலிக்கும் ஆரவாரத்தோடு கூடிய, பனியமைந்த காவினையுடையது தலைவனது மூதூர் *[மலை.486]*.

'சேற்றில் நிற்றலை வெறுத்த எருமை, ஊர் துயின்ற இருளில், கயிற்றை அறுத்து, முள்வேலியைக் கொம்பினால் அகற்றி, வயலில் மீன்கள் ஓட, வள்ளைக் கொடியை மயங்கச் செய்து, தாமரையின் பனிமலரை உண்ணும் *[அக.46:6]*. கடல் ஒலியடங்கித், தோணி கடலிற் செல்லாதொழியக், கழியில் மீன் செருக்கித் திரியினும், பெண்டிர் அலர் தூற்றினும், தேர் தாழ்த்து நிற்கப், பனி நீர்ச் சேர்ப்பன், பகலும் நம்மிடமிருந்து நீங்கானாகிப், பல கால் வருவன்', எனத், தோழி கூறினாள் *[அக.50:6]*. மூங்கில் துளையிடத்துக் காற்றுப்புக எழும் இசை, குழலிசையாக, அருவியின் பனிநீரின் இன்னிசை, முழவொலியாகக், கலைமானொலி, பெருவங்கியவொலியாக, வண்டொலி, யாழிசையாக, இவைகளைக் கேட்டு மந்திகள் வியந்து காண, ஆடுமயில், களமாடும் விறலிபோல் ஆடும் *[அக.82:3]*. 'பனிமலையடுத் துயர்ந்த பக்க மலையிடத்து, நம் தலைவர் உவந்தளித்த அவரது இனிய உள்ளம், இன்னாவாயினமையின், நம்மிடம் நிலைபெற்ற வருத்தம், அவர் மார்புறுவதொன்றானே தணிவதாதலை, நம் அன்னை அறியாள்', எனத், தோழி கூறினாள் *[அக.98:1]*. 'ஈன்றணிமையுடைய பெண்புலி, பசித்ததாக, ஆண்புலி, களிற்றினைக் கொன்று முழங்கும், பனியிருஞ்சோலையில், தமியேம் என்று கருதாயாய், ஈங்கு வருதலின், நீ தீங்கு செய்தாய்', எனத், தோழி தலைவனிடம் உரைத்தாள் *[அக.112:7]*. 'இடியேறு முழங்கினும், மாறெழுந்து முழங்கும், யானை திரியும் பாசறையில், மானடிபதித்த பள்ளங்களில், விண்மீன் போன்று உதிரம் மின்னப், பகைவர் வாண்முனை மழுங்க வென்ற செல்வத்தை, நம் தமர் உரைப்பக் கேட்டபொழுது, பனிபடும் நறிய மாலை குழைய, நம்மொடு முயக்கம் பெற்றாள்போல, உவக்குவளல்லளோ?' என, வினைமுற்றிய தலைமகன் கூறினான் *[அக.144:9]*. எருமைக்கடா, பனிமலர்ப்பொய்கையில், பகல் கழியச் சுழன்று, பெண்ணெருமையினை யணைந்து, வயலில் தங்கும் *[அக.146:2]*. 'இடியுடன் நீரைச் சிதறிய நடு இரவில், காவலர் நெகிழ்ந்த காலம் நோக்கிப், பனி பொருந்திய வாடைக்காற்று, வருத்தத், தன் தந்தையின் நெடுநகரில் நின்றேனாகத், தளிரென நுடங்கிவந்து, வருத்தம் நீங்க,

ஆனாது முயங்கினள்', எனத், தலைமகன் தன் நெஞ்சிற்குக் கூறினான் [அக.162:8]. பனித்துறையினையுடைய கடலில் சென்று, நீரைப்பருகி, வானத்துச் சூலுற்ற பிடிபோல, இடந்தொறுந் தோன்ற, ஒலி மிகக், கார் வந்தது [அக.183:6]. பனைவெளிற்றினைத் தின்னும் யானை, ஞாயிறு தோன்றிய காலையில், துயிலுங்கால், செயலொடுங்கி அசைந்து கொண்டிருக்கும் நிலை, பனித்துறை கடந்து, கடல் வேட்டஞ் சென்ற, பரதவரது, தோணிபோலத், தோன்றும் [அக.187:21]. கொற்கை முத்தம், வலம்புரி சொரிந்து, தழையால் அழகு செய்யப் பெற்ற, அல்குல் மகளிர், பனித்துறையில் தெய்வத்தைப் பரவப், பகலவன் மறைந்த அந்தியில், கடலில், முழுமதி தோன்ற, எழும் அலை, ஆரவாரிப்புப்போல, அலர், மன்றில் பரவியது [அக.201:7]. 'களிறு உரசுந்தொறும் மராஅம்பூ, ஆலங்கட்டி போல வீழ்ந்து, பாறையில், வெண்ணெல் வித்துப்போல் உணங்கும் பனிபடு சோலையினையுடைய, வேங்கடத்தும்பர், பிரிந்து சென்றனராயினும், போரில் பட்ட எழினியென்பானது பல்லைப் பிடுங்கி அழுத்திய, கதவினையுடைய, வெண்மணி என்னும் ஊர் வாயிலில், மத்தியென்பான் நட்ட, கல் பொருந்திய பனித்துறையில், அலையொலிப்பது போன்ற அலர் தந்து, அழப்பிரிந்தவர், விரைய வந்தருளுவர்', எனத், தோழி தலைவிக்குரைத்தாள் [அக.211:7,15]. 'தான் அகப்படுத்திய மீன் கூட்டங்களை என் ஐயர்க்குக் காட்ட என் தந்தையும் இரவில் மனைக்கண் போதரும்; யாயும், ஆயமோடு பனித் துறையில் தெய்வத்தை வணங்கிச் சிறப்புச் செய்யும். எனவே, தலைமகள் கூட்டம் வேண்டின், மணல் பரந்த புன்னையந் தண்பொழிலில் நீ பகல் வருக', என்று தோழி தலைவனுக்கியம்பினாள் [அக.240:8]. 'ஈங்கையின் பனி மலர் உதிருமாறு மழை சொரிந்த நடு இரவில், அலைவீசும் சிறிய கரையினையுடைய பெருங்குளத்தைக் காத்தல் செய்பவனைப் போல, அன்னையும், துயில் மறந்து என்னைக் காவல் மேற்கொண்டாள்', எனக், கிழத்தி கூறினாள் [அக.252:10]. பாம்புடைய மலைப்பிளவினின்றும் வரும் பனி நீர், ஒடுங்கிய துறைகளின் வழியாகத் தேனுடன் கூடி ஒழுகலின், யாறுகள் நிறைவுற்றன [அக.362:1]. பனித்துறைப் பரதவர், தம் வெள்ளுப்புக் கெட்டமையின், சினந்து, உழவரோடு மாறுபட்டு, இடும் போரினைக் கண்டு, நரை மூதாளர் போர் கெடுத்து, ஒன்றுபடுத்தித், தேறலைப் பரதவர்க்கு அளித்து மகிழும், எவ்வி என்பானது நீழல் என்னும் ஊர் போன்ற அழகினையுடையவள் அரிவை [அக.366:6].

'பூந்தாது முதலியவற்றாற் செய்த பனிப்பாவை காலையில் வருந்துதலாற், பிறந்த நின் செயலறவினை, நீக்குக, என, ஆயத்தார் கேட்டும், வருந்தும் தலைவியது பசலை நீங்கத், தலைவனிடமிருந்து ஒரு சொல் வாராதோ?' எனத், தோழி கூறினாள் [குறு.48:1]. கழி முள்ளியது பனிமாமலர் நூலற்ற முத்துப்போலக், காற்றாற் சிதறித் கடற்கரை துறைதோறும் பரவிக் கிடக்கும் [குறு.51:1]. என்தோழி, வேம்பின் பசிய காயைத் தரின் வெல்லக்கட்டி என்றீர். இப்போது, பாரி பறம்பின், தைத்திங்கள் பனிச்சுனையின் தெளிந்த நீரைத் தரினும் வெப்பமாக, உவர்க்கும் என்கின்றீர்; அன்பின் பகுதி அத்தகையது', என்று தலைவனிடம் தோழி குறிப்பிட்டாள் [குறு.196:3]. பனிப் புதலில் படர்ந்த கொடியாகிய அவரையது கிளிமூக்கையொத்த மலர்கள், காட்டுப்பூனையின் பல்லைப்போன்ற முல்லை மலரோடு நெருங்கும்படி, வாடை வந்ததன் மேலும், வருத்தம் வாட்டக், கடலில் ஆழும் கலம் போலத் தலைவர் மலையும் மாலை மறையும்,' என்றாள் தலைவி [குறு.240:1]. பெரிய கடற்கரைக் கண் உள்ளதாகிய, சிறிய, வெண்மையான காக்கை, பசிய இலையைக் கலக்கிப் பனிக்கழியை இரையின் பொருட்டுப் பாதியிரவில் துழவும் [குறு.246:3]. 'தந்தை மீன் வேட்டம் சென்றான். தாய் உப்பை மாறி, நெல்லைப் பெறச் சென்றாள். எனவே, பனியிரும்பரப்புடைய சேர்ப்பனுக்கு, இப்போது, இங்கு வருதல் எளிதாகும்', என்றாள் கிழத்தி [குறு.269:7]. அலைநீர்த் துளிகள் புறத்தை நனைப்பச், சிறிய, வெள்ளிய காக்கையினது கூட்டம், பன்மலர்ச் சோலையில் பனிபுலந்து உறையும் [குறு.334:3]. 'வருவேம் என்று தலைவர் கூறிய பருவம், இதோ, வந்தது. பிரிவினால் தனிமையுற்றவர் வருந்துதற்குக் காரணமாகிய பனிமிக்க மாலையில், கோவலர் சூடிய கண்ணியிலிருந்து முல்லை மலர் அதனை கூறும் என்றாள் தோழி [குறு.358:5].

'கரிய பெரிய நீர்ப்பரப்பை நோக்கிய, இறாமீனைப் பற்றிய, வெண்காக்கை பனிக்கழியைத் துழாவி, அழைத்துத், தன் பேடைக்களிக்கும் [நற்.31:3]. 'செயலற வந்த மாலைப் பொழுதோடு, மெய் சோர்ந்து, துன்பத்தையுடைய நெஞ்சினேமாக இருக்க, எம்மை விட்டுப்பிரியக் கருதும் பனித்துறைச் சேர்ப்பனது தேரின்மா, கோல் கொண்டு அடிக்கப்படுவனவாக', எனத், தோழி கூறினாள் [நற்.58:10]. 'பனிக்கடலில் எமர் விளக்கங்கொண்டு வேட்டம் புக்கனர். அதனால், கடற்கரையிலுள்ள எம் இனிய ஊரில் இன்றிரவு தங்கின், என்ன குறையுண்டாகுமோ?' என்று தலைவனிடம் தோழி வினவினாள் [நற்.67:8]. 'தோழி! அவர் நாட்டுப் புன்னையின் பனியரும்பு நெகிழ்ந்து துறையில் மேயும் இப்பியது ஈரிய புறத்தில் உறைக்கும்', எனத், தலைவி தோழிக்குரைத்தாள் [நற்.87:6]. ஒலிக்கின்ற பனிக்கடலைத் துழாவி, நாரை, தன் பெடையோடு, சிறுமீனை உயர்ந்த, கிளையில் கூட்டிலிருக்கும் பிள்ளையின் வாயில் சொரியும் [நற்.91:3] 'பனிபடும் திரைப், புதுமணலில் அழுந்த வந்த புரவியினையுடைய தேரோர் நம்மொடு கூடுவதன்முன், இச்சிறூர் இனியதாயிருந்தது', எனத், தோழி கூறினாள் [நற்.135:5]. கழுநீர் மலரை மேய்ந்த எருமை வயலில் படர்ந்த தாமரையின் பனிமலரைத் தின்பதனை வெறுத்து, வயவர் போல் செருக்கி, ஊரில் மணல்மீது துயிலும் [நற்.260:2]. 'மழை பெய்த இருளையுடைய

நடுயாமத்தில் நம்மை முயங்கியிருப்பாராகவும், நாம் பனிக்கடுமையால் வருந்தித், துஞ்சாதிருத்தலையும் அறிந்தோர், இப்போது, நம்மைக் கைவிட்டகன்றனர். ஆதலின், அன்பிலர் போலும்', எனத், தலைவி எதிரழிந்து தோழிக்குக் கூறினாள் *[நற்.281:9]*. 'பனிநீர்ச்சேர்ப்பன், முதலைக்கும் அஞ்சாது, காமத்தால் வந்தபோது, என் நெஞ்சம் துயில் மறந்தது', என்றாள் தலைவி *[நற்.287:5]*. பனிப்புதலின் ஈங்கையது குழை தடவச், சிறை குவிந்திருந்த பார்வை வெண்குருகை, வேட்டுவன், பனிக்காலத்தில் காற்கட்டை அவிழ்த்து விடுவான் *[நற்.312:2]*. 'பனி நீர்ச்சேர்ப்பன் நட்பு, அயலாரது அலரை ஆக்கியது', என்றாள் தோழி *[நற்.378:11]*. பனிக்கொடியை மேய்ந்த எருமை மிதித்த இலைகளை, மகளிர் தம் இழையணிக்காக ஈட்டுவர் *[நற்.391:3]*.

வேழந்தீண்ட, அயலதாகிய மாவின் தளிரசையும் ஊரன் மார்பு, பனித்துயிலைச் செய்யும் இனிய சாயலையுடையது', எனக், கிழத்தி கூறினாள் *[ஐங்.14:4]*. 'மணலில் ஞாழல், செருந்தி மலரொடு மணம் வீசப், பனிபடுதுறை, தண்துளியினை வீசிப், பசலையைச் செய்தது,' என்றாள் கிழத்தி *[ஐங்.141:3]*. 'பனி நீர்ச்சேர்ப்ப! நீ கொண்ட இவள் அழகைத் தந்து செல்க, என, நின்னிடம் இரப்பேனல்லேன்', என வாயில் வேண்டிய தலைமகற்குத், தோழி கூறினாள் *[ஐங்.159:3]*. 'அரிவை, என் நெஞ்சங்கொண்டாள்; அதனால், பனித்துறைத் தொண்டியின் கடலலைபோல, இரவிலுந் தூங்கேன்', என்றான் தலைமகன் *[ஐங்.172:2]*. 'தலைவி, பனித்துறைத் தொண்டி போன்று மணங்கமழும் பொழிலில், பகற்குறி நல்கினள்', என்றான் தலைமகன் *[ஐங்.174:1]*. 'வளையும், அலையும் முழங்கப், பனித்துறையில் கலஞ்செலுத்தும் சேர்ப்பன் பிரிய, நெகிழ்ந்த வளை, அவன் வரச்செறிந்தன', எனக், கிழத்தி கூறினாள் *[ஐங்.192:2]*. 'பனி மலர்க் குவளையது உள்ளிடம் கமழும் கூந்தலையுடையாளது நுதல் பசத்தலை அறியாரோ, நம் காதலர்', என்று தலைவியிடம் தோழி கூறினாள் *[ஐங்.225:2]*. அணி நெகிழத், துன்பந் தந்து, காதிறந்தோர், பனிமலர் போலும், பிரியுங்கால் துயின்ற கண்களோடு, புலந்து கூறும் பூசலைக் கேளார், சேயர் என்ப', எனத், தோழி கூறினாள் *[ஐங்.315:1]*. 'பனிமலர்க்கண் பச்லையடையப், பெருந்துன்படைவோளது செயலற்ற நெஞ்சிற்கு உசாத்துணையாகப் பாணனே, நீ சிறிது சென்றுதங்கின், எம் தேரை விரைவில் காண்குவை எனத், தலைவியிடம் தூதாக விடுத்த பாணனிடம் தலைமகன் கூறினான் *[ஐங்.477:1]*. 'வாடை என் தனிமையை எள்ளும் பொழுதில், பனிமலர் போலும் கண்ணுடையாள் கூறியதைப், பாண! எமக்குச் சொல்வாயாக', என்றான் தலைமகன் *[ஐங்.479:5]*.

'திருமணத்துள், மடந்தையைத் துணைக்கொண்டு, அந்தணன் எரிவலஞ் செய்வது போல், அன்னந் தன் பெடையோடு பனிப்பொய்கையில், தாமரைமலரொன்றினை வலம் வந்தது *[கலி.61:1]*. 'ஊர், அண்மையாயிருக்கக் காலம், நண்பகலாயிருக்க, மாயோய்! சுனையாடிப், பனி பூக்களை, முல்லையொடு பறித்துத் தண்பொழிலில் விளையாடிப் பனிபடும் காலத்துச் செல்வாய்', எனத் தலைவன் தலைவியிடம் கூறினான் *[கலி.108:42,44]*. 'ஐய! தோள் அழகிழக்க, நுதல் பசப்பூர, அவளை நீ துறந்தது, அழகிய பனித்துறையில், யாமத்து வந்து, நின்குறியிடத்துக் கூடினாள் என்பதற்காகவா?' எனக் கூறித், தோழி தலைவனுக்கு வரைவுகடாவினாள் *[கலி.127:14]*. 'பனிக்கடலே! துறைவன் எம்மைத் துறந்தான், என, வருந்துவாரை, மேலும் வருத்த முழங்குகின்றாயோ?' முன்னர்க் காதல் செய்தகன்றாரை, நீயும், எம்போல் உடையையோ?' என்பது, தலைவியின் கையாறு *[கலி.129:8]*.

பனிக்கடலில், நிலம் துகளாகச் சென்று, பிணிமுகத்தினை யூர்ந்து, போர் செய்து, சூரனை வென்றது முருகனது வேல் *[பரி.5:1]*. திரையையுடைய பனிக்கடலைச் செவ்விதாக முகந்து, உயர்ந்து இடி முழங்கப், பொறை தாங்காது, கரையுடைந்த குளம் போல, முகில் வயிறழிய, மலைதோறும் அருவி இழிந்தது *[பரி.7:1]*. 'நீ, அயல் மகளிர் நாற்றத்தைக் கொண்டாய், பனிமலர் போலும் கண்ணாரொடு ஆடக், காலை போய், மாலைக்கு மாலை வருகின்றாய். எனவே, நின் சூள் தவிர்', என்று தலைவனிடம் தலைமகள் உரைத்தாள் *[பரி.8:48]*.

3. துளி / நீர்த்துளி / நீர். மாலைக்காலத்தில், யாழைச் செவ்வழி பண்ணி, பேகனின் காட்டைப் புலவர் பாடினபோது மையுண்ட கண்கள் கலங்கி வீழ்ந்த பனி - துளி - பூணையுடைய மார்பை நனைப்பப் பேகன் மனைவி கண்ணகி பெரிதும் வருந்தினாள் *[புற.144:5]*. 'ஒருமனையின்கண் சாக்காட்டுப்பறை ஒலிப்ப, ஒருமனையின்கண் மணமுழவொலிப்பக், கணவனைப் புணர்ந்தோர் பூவணியப், பிரிந்தோர் கண்கள் பனி - நீர் - வார்ந்து துளிப்ப, அப்பண்பிலாளன்', உலகினைப் படைத்துள்ளான் *[புற.194:4]*.

'காலையது பண்பு, நன்றன்று, என்று, கட்பனி - துளி - ஆகிய மிக்க நீரைத் தாங்கி, மெலிவுடைய நெஞ்சினர் துன்பமடைய சேரனின் மறவர் சீறிய நாட்கள் நெருஞ்சிக் காடாகிய கடுநெறியாயின *[பதி.26:8]*.

கரிய கண்ணிதழ் ஏந்தி, மிக்கு வீழும் பனியைச், செவ்விரலால், சில தெறித்து, உயிர்த்து அரிவை தனிமையொடு தங்கியிருந்தாள் *[நெடு.164]*. கிழவனது இரவு வரும் வரவின் இயல்பை நினைந்து, மழை நீரால் எறியப்பட்ட மலர்போல் தளர்ந்து கலங்கும், கண்ணிலிருந்து அரித்து வீழும் பனி, மார்பில் வடிய, வலையிற்பட்டமயில் போலத் தலைவி நினையுந்தொறும் கலங்குவாள் *[குறி.249]*.

காதிறந்தோர் வாராமையால் வெறுத்த உள்ளமோடு, கண்கள் பனிவடிந்தொழுக நோவற்க. அவர், இனிய கூறி விரைய வருவர்', எனத், தோழி, தலைவியை வற்புறுத்தினாள் *[அக.25:14]*.

'சேரன், படைத்தலைவனாகிய பிட்டன், பகைமன்னரது போரில் உயர்த்திய வேல்போன்று, இவளது பனியொழுகும் கண்கள், அருந்துயர் தரும்', எனத், தலைமகன் கூறினான் [அக.77:19]. 'இளவேனிலில், ஆற்றின் கரையிடத்து, மாமரத்தின் பூச்செறிந்த சோலையில், வெண்முகில், தவழக், குயில்பாடும் குரல், கேட்போராகிய பிரிவுத் துன்பமுற்ற மகளிக்குக், கண்பனி நிறுத்தல் எளிதாகுமோ?' என்று தலைமகள் உரைத்தாள் [அக.97:16]. 'மாலையில், பனி வாரும் கண்ணினளாய்த், தன்னை வெறுத்துறையும் தலைவியது கூந்தலில், மலர் சூட்டினாய்; இனியது செய்தனை; என்று தலைவனிடம் தோழி கூறினாள் [அக.104:15]. 'என் கண்களில் தெளிந்த பனிததும்ப, யான் சிறிது வருந்திய துன்பங்கண்டு, அன்னை, இது தெய்வத்தால் ஆயதோ, என ஐயுற்றாள்', என்று கிழத்தி உரைத்தாள் [அக.138:2]. 'அருஞ்சுரம் கடந்து செல்வேம், என்ற சொல்லைக் கேட்டபோது, சேரன் படைத்தலைவனாகிய பிட்டனின் குதிரை மலைச்சாரலில், பாறைச் சுனையிடத்து, மழை நீரால் நனைந்த நீல மலர் போன்று, தலைமகளின் கண்கள் பனியைச் சொரிந்தன', எனத், தோழி கூறினாள் [அக.143:16].

மாயஞ்செய்யும் பரத்தமைத் தொழிலுடைய தலைவனது வாய்மை போலும் மொழியினை நம்பியதால் மழையால் நனையப் பெற்ற மலர் போலக், கண் பனி மார்பில் சொரிய, ஆயமும், அயலும் மயங்கத், தாய் காத்த அழகினைத் தலைவி வேண்டாளாயினாள்', [அக.146:11]. 'சுரத்தின் நீள்வழிச் சென்று, அரிதாக ஈட்டும் சிறந்த பொருளை எளிதாகப் பெறினும், முருகனது பரங்குன்றச் சுனையிடத்து நீலமலரின் இணைபோன்ற, இவளது, கண்கள், தெண்பனிகொள, வாரேன்', எனத், தலைமகன் தன் நெஞ்சிற்குக் கூறினான் [அக.149:19]. 'பொருள் விரும்பிக் கானங்கடக்கக் கருதினர் எனக் கேட்டனளோ? தலைமகளது ஆகம் நனையக், கண்களில் பனி பரந்தன', எனத், தலைவி குறித்துத் தோழி கூறினாள் [அக.161:14]. 'பெயல் பொழிதலின், கானம் மணங்கொண்டது. வேந்தன் போரினை முடிக்கப் பெறின், பனி சிந்தும் கண்ணோடு துன்பத்துள் உறைபவள் பழநலம் பெறும் காலம் இது' எனத், தலைமகன், தன் நெஞ்சிற்குக் கூறினான் [அக.164:9]. 'யாமத்தை நும்மொடு கூடிக் கழித்துத், துன்பம் மிக்குப் பனி வாருங்கண்ணேமாய், வருந்தும் ஆதலின், களிறு, ஈன்றணிமையினையுடைய பிடியினையும், கன்றினையும் காக்கப், புலி மலைக்குகையில் முழங்க, விலங்கு செல்லும் வழியில் இனி வருதலைத் தவிர்தல் வேண்டும்', எனத், தோழி தலைவனிடம் வரைவு கடாயினாள் [அக.168:2]. 'சுரங்கடந்த நம்வயின், தன் உள்ளம் செல்லக், கதிர் மாய்ந்த, மாலைக் காலத்தில், நெடிது நினைந்து, விரல் சேர்த்திய நெற்றியினளாய்க், கண்களில் பனி நிறைந்தொழுகப், பெருந்தோள் நெகிழ்ந்த துன்புடன், உறைவாள், இரங்கத்தக்காள்', எனத், தலைமகன், இடைச்சுரத்துத் தன் நெஞ்சிற்குக் கூறினான் [அக.169:12]. 'குன்ற நாட! முகில், இடியுடன் மழையைப் பொழிந்த அரைநாளாகிய இரவில், நீ தனியையாகி, வந்த வழித் துன்பத்தினை நினைந்து, இவள் கண், எப்பொழுதும் பனியொடு கலங்கும்', எனத், தோழி தலைவனிடம் கூறி பகல் வருமாறு உணர்த்தினாள் [அக.182:12]. 'வருவதறியும் அறிவுடைய வேலனே! கங்குலில், மாறாதொழுகும் பனியுடன் கலங்கும் கண், இனிது துயிலும் பொருட்டுத், தலைமகளை எம் மனையின்கண் தருமோ? அன்றித், தன் மனையின்கண் கொண்டு செல்லுமோ? கழங்கின் குறியைக் கூறுக', என வேலனிடம் மகட்போக்கிய நற்றாய் வினவினாள் [அக.195:16]. 'நெஞ்சே! யாம் பெருந்துன்பமடைய, அவளது கண்களில் பனிவருதலை மறைத்துத், தன் தலை கவிழ நின்றாள்' எனத் தலைமகளை நீங்கும் தலைமகன் தன் நெஞ்சிற்குக் கூறினான் [அக.230:14]. 'தோழி! கலங்கும் கண்ணினின்றும் பனி வார, முலை நனைய அழாதே. பிரிந்த தலைவர், நின் கூந்தல் துயில் மறந்து, காலந்தாழ்ப்பாரல்லர்', எனத், தோழி தலைவியிடம் பிரிவின்கண் கூறினாள் [அக.233:1]. 'பாக! வண்டின் கூட்டம் முல்லையூத, மாலையில், முல்லை நிலத்தூரில், மிக்க துன்பத்தோடு பனிவாரும் கண்ணளாய்ப், பசலை பரந்த மேனியளாய் உறையும், தலைவியது, கூந்தல் பிணிப்பு நீங்கக், காற்றினும் கடுகக், கண்பார்வை தவிரத், தேரைச் செலுத்துக', என்று பாகனிடம் தலைமகன் உரைத்தான் [அக.234:16]. 'துணையுடன் கூடியிராத வாழ்வால் வெறுப்புடனிருக்கும் என்னிலையை அவரிடம் கூறி, நீ, பிரிந்து நெடுங்காலந் தாழ்த்தனை என்னுமாயின், நன்று, அது செய்யாது, பனி வாரும் கண்ணேமாக, அவ்வாடை வந்து துன்பந்தருவது, நம்வினைப்பயன் போலும், என்பது வாடையில் நலிந்த தலைவி கூற்று [அக.243:13]. 'வேல் ஒன்றினையே ஏந்தித் தனி வருதலை அவனும் அஞ்சான். பனிவடியும் கண்ணேமாகப் பிரிதல் துன்பம் வருத்தத் தனித்திருத்தலை யானும் ஆற்றேன். கடிய காவலையுடைய அன்னையும் துயில் மறந்தனள். யாம் என் செய்வாம்' எனக், கிழத்தி உரைத்தாள் [அக.252:7]. 'தோழி! நம் தொடி நெகிழத், துன்பொடு கண்பனி கலுழ்ந்து, நாம் இவண் தமித்திருப்ப, நம் தலைவர்; நம்மை விட்டுப், பொருள் கருதிப்பிரிந்தது, என்னை கொல்லோ?' எனத், தலைவி தோழியிடம் நொந்து கூறினாள் [அக.265:11]. 'தோழி! நின் கண்பனி துடைத்து ஆற்றுவிக்க விரைய வந்தனர் நம் தலைவர், எனவே, தொடி நின் தோளேறுக; நின் துன்பமும் தீர்க; கூந்தலில் மாலையும் புனைக', என்று தலைவியிடம் தோழி கூறினாள் [அக.269:25]. பிணித்த கை சிறிது நெகிழ்ந்து விலகினும் வருந்தும் நம் தலைவி, பிரிவுற்ற தனிமையால் நாள்தோறும் கோடிட்டு வந்த சுவரினைப் பார்த்துக், கண்பனி, நூலற்ற முத்துப் போல, முலைமீது வீழ, அன்னத்தின் தூவியாலாகிய, சேக்கையில் படுத்து வலியற்றவளாவள்', எனத், தலைமகன், பிரிவிடைத், தன் நெஞ்சிற்குக் கூறினான் [அக.289:10]. 'செய்பொருள் குறித்துச் செல்லுதலைத்

தலைமகளுக்குச் சொல்ல, இரவு புலர்காலை, மதிபோல, ஒளிமழுங்கி, முகத்தைத் தாழ்த்திக், காலால் நிலம் கிளைத்துக், கண் சொரிகின்ற பனி மார்பம் நனைப்பக், கால் தளரக் கலங்கி, நா நடுங்கக், கூந்தலால் முகமறைத்துப், பெருமூச்செறிந்து மயக்குற்ற நிலைமறத்தற்கரிது', எனத், தலைமகன், தன் நெஞ்சிற்குக் கூறினான் *[அக.299:15]*. 'ஐய! நுதல் பசப்புற்றுத், தோள் மெலிந்து, அல்குல் வாட, பகலும், இரவும் மயங்கி மழையை ஏற்ற மலர் போலக், கண்பனி வார, இவள் வருந்துதலை எண்ணாது, பிரிதல் பொருந்துவதாமோ', எனத், தோழி தலைவனை வினவினாள் *[அக.307:4]*. 'சென்ற சுரநெறியை நினைந்து, நீரில் மூழ்கிச் செல்லும் கயல் போலக், கண்ணில் பனி பெருக, உயிர்த்து, இரவும், பகலும் வருந்தி, நுதல் ஒளியிழக்கத், தம்மை யல்லது களைகண்ணில்லாது, நாம் இவணிருக்க, அகன்றன ராயினும், அருள் செய்து வருவர்', எனத், தோழி தலைவிக்கு வன்புறை கூறினாள் *[அக.313:4]*. 'நெஞ்சே! நாளும், எழுது சுவர் நனைய, அழுதலாலாகிய கண்பனி, பொற்குழையில் தெறித்து வீழ, முன்கையைக் கன்னத்தில் ஊன்றிக், கிடக்கையில் கிடக்கும் தலைவியது காதில், நோய் மருந்தென, நம் வரவினைப், பல்லியின் குரல் தெரிவிக்குமோ?' என்று தலைவன் தன் நெஞ்சினைக் கேட்டான் *[அக.351:12]*. 'தோழி, பனி ஒழுகுங்கண்ணும், பசந்த தோளும் வாடப், பிறர் அறியாவாறு நாளும் மறைத்தொழுகும் நம்மியல்பறியாராய்ப், பிரிந்து நீடினர், எனச், செயலற்றது என்னையோ?' நம் நலத்தினை, அவர்தம்மொடு கொண்டு சென்றனர் என்பதனை அறியாயோ?' எனத் தலைவியிடம் தோழி கூறினாள் *[அக.359:1]*. 'நெஞ்சே! சுனையிடத்து மலரைப் போன்மென, வண்டுகள் விரும்பும் நம் காதலியின் கண்கள், பாழ்த்த பாலை வழியில் தமியேமாகக் கடக்கும் எம்மினும் பனி வார்ந்து என்னவாகுமோ?' எனக், கிழவன் நெஞ்சு நோக்கிக் கூறினான் *[அக.371:10]*. 'நம் தலைவி, நடு இரவில், அணையின்கண்கிடந்து, வெறுத்த உள்ளமுடன், உயிர்த்துக், கண்கள், தோளை நனைக்கும் பனியொழுக, அதனை நகத்தால் தெறித்துப், பலமன்னரால் படையுடன் முற்றுகையிடப்பட்ட மதிலையுடைய மன்னன் போலத், துயில் துறந்தனளோ?' என்று, இடைச்சுரத்துத் தலைமகன், தன் நெஞ்சிற்குக் கூறினான் *[அக.373:14]*. பாழ்பட்ட மேனியளாகிக், குவளையது இணைந்த இருமலர்களைப் போன்ற கண்கள் தெளிந்த பனியினைக் கொள்ளப், பெருமூச்செறிந்து, வருந்தி|யி ருப்பாளோ? இரங்கத்தக்காள்', என இடைச்சுரத்துத் தலைவன் நெஞ்சிற்குரைத்தான் *[அக.381:21]*. 'தோழி! குவளை மலர் மழையை ஏற்றுக்கொண்டாற் போன்ற கண்களினின்றும் பனியொழுகும் துன்பந்தீர, இப்போது வரின், நன்றுமன்', எனக், கிழத்தி தோழியிடம் உரைத்தாள் *[அக.395:4]*. 'ஆதிமந்தி, பனியொழுகும் கண்ணையுடையளாய் வெறுப்புற்றிருக்க, ஆட்டன் அத்தியின் ஆடல் அழகு காணல் வேண்டிக், காவிரி அவனைக் கொண்டு மறைத்தது போல, நின்மனையோள் நின்னைப் பற்றிக்கொள்ள அஞ்சுவேன்', எனக், காதற்பரத்தை தலைவனிடம் கூறினாள் *[அக.396:12]*. 'யான் படர் மெலிந்து வருந்த, அருளானாய்ச் செய்த கொடுமைக்குக், கண்களினின்றும் பனிபெருக, அறங் கை விட்டு நீங்குதல், நின்குன்றுகெழு நாடனுக்கு யாது பயனோ?' எனத், தலைமகள் நொந்து ஆற்றொடு புலந்து கூறினாள் *[அக.398:8]*.

'பனி (நீர்) உடைந்து துளியாக விழும்கண்ணோடும், பொறுக்கவியலாத நோயோடும் கலங்கி, நடுயாமத்திலும் வருந்துவார், என்னையன்றிப் பிறரும் உளராவரோ?' என்றாள், தலைவி *[குறு.86:1]*. 'அரிய சுரத்தைக் கடந்து சென்றவரை நினைந்து அரையிரவில் துயில் கொள்ளவியலாத கண்ணிற்குப் பனி, எளிதில் உண்டாவதாம் *[குறு.329:7]*. 'யானையின் கொம்பிடத்தே முறிந்து தங்கிய சிறிய பூக்களையுடைய முல்லைக்கொடியைப் போல, இதழ் கடந்து வடியும் கண்பனி, நின் நகிலை நனைக்க. நின் வாட்டத்தைக் காணாராய்க் கடந்து செல்வரோ?' எனத், தோழி தலைவியிடம் உரைத்தாள் *[குறு.348:4]*. 'தோழி! இப்போது வெறுக்கத்தக்க துன்பத்தால் வருந்திய, துயில் துறந்த கண்களினின்றும் பனி வீழ, நின்தோள், மெல்லியவாதலின், முன், வெற்பன் மணப்பதன் முன் நல்லவாயிருந்தன', என்று தலைவியிடம், தோழி கூறினாள் *[குறு.357:2]*. 'நாட! நின்னால் விரும்பப்பட்டவள் கண்கள், வளையை நெகிழச் செய்து, துயிலாது கலங்கிப், பனியொழுகுதலில் அமையாவாயின', எனத், தலைவனிடம் தோழி உரைத்தாள் *[குறு.365:2]*. 'தோழி! மாலையில், தலைவர் வந்தாராக, விருந்து செய்ய உவகையோடு வந்து, முன் கலங்கியகண் பனி நீக்குவோரை அறியேம்', என்று தோழியிடம் கிழத்தி கூறினாள் *[குறு.398:8]*.

'கண்களில் பனியொழுகத், தோள்வளை நெகிழ, மூதூர் அலர் கூறினும், அஞ்சத்தக்க நெறியில், மலைநாடன் வாராதிருக்க', எனத், தோழியுரைத்தாள் *[நற்.85:1]*. மடந்தாய்! நீ கடற்பரப்பிலுறை நீரர மகளோ? அன்றிக், கழியருகுள்ள மாதோ? என, அதனெதிர், முள்ளெயிறும் திறந்தன; கண்களிலும் பனி பரந்தன', என்று தலைவியிடம் தலைமகன் உரைத்தான் *[நற்.155:10]*. 'மலையுறையும் புறவின் பேடையொடு, சேவல் சேரப், புன்கண் மாலையில், தனியேயிருத்தல் ஆற்றேன், என்று, பனிவாருங் கண்ணோடு, நும்மொடு வருவேன்', என்கின்றாய்', எனத் தலைவி குறித்துத் தலைமகன் கூறினான் *[நற்.162:5]*. 'தோள், வளை நெகிழ்ந்தன. நுதல், பசலை கொண்டது. கண்ணும் பனி பெருகின. இவை என்னுயிர் இறந்தொழிதற் பொருட்டே என அழாதே', என்ற தலைவியைத் தோழி தேற்றினாள் *[நற்.197:3]*. 'தோளும் பசந்து வாடின; பனி மிக்க கண்ணும் வேறுபட்டன. இன்னுயிரன்ன பிரிய அரிய காதலர் பிரிந்து நீடினர் என்பதனை, உள்ளத்துள் கொண்டு ஊடினாயுமல்லை. என்ன வியப்பு?' என்று தலைவியிடம் தோழி

வியந்துரைத்தாள் *[நற்.237:2]*. 'யாம் பிரிந்து செல்ல விரைவுறும் அரவத்தை எண்ணிக், கண்பனிவார, யாம் அழைப்ப நாணி வந்து, யாதும் பேசாது, முடி தயங்கப், பொறியழிந்த பாவை போலத் தலைவி கலங்கி, என் ஆகம் அடைந்தாள்', எனத், தலைமகன் கூறினான் *[நற்.308:2]*. 'தோழி! நின் மலர்க்கண்களில் பனி கொளக், கொண்கானத்து நன்னன் நாட்டு ஏழிற்குன்றம் பெறினும், பொருள்வயிற் பிரிகிற்பவர் யாரோ?' எனத், தோழி தலைவியை வற்புறுத்தினாள் *[நற்.391:10]*. 'சேயிழையே! பல மலர்களையுடைய நறும் பொழிலில் செல்வேமோ என்ன, மார்பம் நனையுமாறு கண்களில் பனி கொளச் சிலவேனும் சொல்லாது நின்றனள்', எனத், தோழி, தலைமகனிடம் கூறினாள் *[நற்.398:10]*.

புணர்ந்தோர், மெய்ம்மணங்கமழும் ஊரனாகலின், கலக்கமுற்று, மழை பெய்த மலர் போன்று கண்களில் பனியுகும்', எனக் கிழத்தி உரைத்தாள் *[ஐங்.19:5]*. 'மகிழ்நன், தன்னை விரும்பியோரது கண்களில் பனி பெருகச் செய்தல் வல்லவன். பொய்த்தலிலும் வல்லன். செய்த சூளுறவின்படி நடவாதவன்', எனக், காதற்பரத்தை கூறினாள் *[ஐங்.37:2]*. 'நெய்தலை நீக்கி, நெல்லரியும் நிலத்தலைவன், கண்ணில் பனியொழுகச் செய்தான்', எனத், தோழி அறத்தொடு நின்றாள் *[ஐங்.190:4]*. 'அன்னாய்! கிழங்ககழ் குழியில் வேங்கையின் பொன்மலர் வீழ்ந்து நிறையும் அவரது மலைமறைதொறும், இவள் கண்ணில் பனி நிறையும்', எனத், தோழி அறத்தொடு நின்றாள் *[ஐங்.208:5]*. 'ஆண்பன்றியொடு புலி பொரூஉம் நாட! நின்னால் விரும்பப்பட்டவள் கண், பனியைப் பெற்றன', எனத், தோழி தலைவனிடம் வரைவு கடாயினாள் *[ஐங்.266:4]*.

'நின் பிரிவையுணர்த்துகையினால் வளைகழலக், கண்ணில் பனிமல்க, நீ கடக்கவிருக்கும் சுரம் நினைந்து, நோயொடு நுதல், பசந்து அழகழியவும், வினை மேற்செல்ல எண்ணினாய், எனத் தலைவனிடம் தோழி மொழிந்தாள் *[கலி.3:31]*. 'தலைவ! எரியுந் திரியுமிழும் நெய் போன்று, அவள் கண்கலங்கிப் பனிவீழுங்கால், பிறநாடு சென்று தேடிய கல்விப் பொருளால் கழிந்த இளமையை மீட்டுத் தரல் இயலுமோ?' என்று தலைவனைத் தோழி வினவினாள் *[கலி.15:21]*. 'துயிலின்றிப் பசந்த கண்கள் பனி பெருக அழகு கெடுகையினாலே பிரிந்தவர் திறத்து நாம் செய்யும் தெய்வம் பரவுதல் முதலிய செயல்கள் நங் கற்புக்குப் பொருந்துவது அல்ல என்றாள், தலைமகள் *[கலி.16:1]*. 'பூக்களை மிகக் கொண்ட கொம்பில், வண்டினம் ஊத, அக்காலத்தும் நிறைதளராதார் செய்த தீமையை மறைப்பேன். அதனால் என்ன பயன்? முறைதீர்ந்த மன்னவன்கீழ்க் குடிகள் போலக், கண்கள் கலங்கிப் பனியொழுகுவனவாயினவே', என்றாள், தலைமகள் *[கலி.34:15]*. 'ஆற்றில் அறல் ஒழுகும் காலம் இதுவெனக் கருதிப், பிரிந்தார் திறத்து, என்கண்கள் வெய்ய பனியற்றொழுகும்', என்றாள், தோழி *[கலி.36:15]*. 'அலர் கூறும் அயலார்முன், நின் சுனையிடத்து நீலம் போல், கண்கள் பனியைச் சொரிவனவாயின. எனவே, நின்வரவை விரும்பித் துன்புறுவோளது துயிலில்லாத கண்மீது பழியுண்டோ?' என்று தலைவனிடம் தோழி உரைத்தாள் *[கலி.48:15]*. 'அயலார் அலர்தூற்ற அழகிழந்த கண் பனியைக் கலுழாக்கால், தலைவர் துறந்தபின் கைவளை நெகிழாது காத்துக் கொள்ளவும் இயலும்', எனத், தோழி வரைவு கடாயினாள் *[கலி.53:11]*. 'முகங்கவிழ்ந்து அழுகின்ற பெண்ணின் கண்ணீர் முலைமீது தெறிப்ப போல், முகையிரண்டின் இடைநின்ற தாமரைத் தனி மலரின் அகவிதழ்ப்பனி, பறவையொற்ற, அயல் முகைமேல் தெறிக்கும் *[கலி.77:7]*. 'உன்தந்தையின் பொய்ச்சூளை மெய்யாகத் தெளிந்து நோய் மிகக், கண்ணில் பனிபரப்பக், கண்ணுறங்காத தாய்மார் கூறாக இப்பாலை உண்பாயாக,' எனப், பரத்தையரிடம் சென்று வந்த தலைமகன் சிறைப்புறமாகப், பால் குடிக்கும் மகனுக்குத் தலைமகள் உரைத்தாள் *[கலி.85:27]*. 'நெஞ்சே! பனி வார்தல் நீங்காத, துயில் கொள்ளாத கண், அதுகொள்ளுமாறு, இனிமேல் சொல்ல வேண்டுவது என்னுளது? எதுவும் இலம், என்னும் தகுதிப்பாட்டினைக் கொள்வாயாக', என்று தலைமகன் பரத்தமையறிந்த, தலைமகள் தன் நெஞ்சு நோக்கிக் கூறினாள் *[கலி.87:15]*. 'ஐய! நீ தெளிவித்த சொல்லை உண்மையென்று தெளிந்தவள் கண், பனி நிறையக் காணுங்கால், யாரிடத்தும் பெருந்தவ முதல்வன் போல், பொய்கூறாய் எனப் புகழ்வது கெடாதோ? என்று தலைவனைச் சான்றோர் வினவினர் *[கலி.100:10]*. 'ஐய! முலை தோன்றுங் காலத்தே தோன்றிய தொடர்பினையுடையவள்; கண்களின்றும் பனி சிந்தவும் அருளாது விடுவாய்' கொடியை', என்று தோழி தலைவனை, வரைவு கடாயினாள் *[கலி.125:10]*. 'ஐய! மணற் பரப்பில், நின் நோய் தீரக், குறியிடத்து வந்தாள் என்பதனாற் போலும், கடிதாகச் செல்லும் பனி அறலாக, அதில் செல்லும் கயல் போன்ற கண், பனி நிறையத்துன்பத்தோடு தனித்திருக்குமாறு, நீ துறந்தது' எனத், தோழி, தலைவனிடம் வரைவு கடாஅயினாள் *[கலி.127:8(2)]*.

வைகையில் உடைந்த மடையை அடைத்த பின்னும் கசியும் நீர் போல, நீ அடைந்த பின்னும், துளித்துப் பனி வடியும் கண்ணினையுடையவர் நெஞ்சக்கனலை மாற்ற ஈண்டு வாரற்க', என்று தலைவனிடம் ஊடிய தலைமகள் உரைத்தாள் *[பரி.6:85]*.

**4. நடுக்கம்.** 'நின் பகைவர் உடல் பனி - நடுக்கம் - மிகுந்து நின்னைத் தெய்வம் என வணங்கலின், உயிர் கொள்ளாது பலியைக் கொண்டு நீங்கும் பேய் போலப், பகைவர் உயிர் கொள்ளாது, திறை கொண்டு செல்கின்றாய்', எனச், சேரமன்னனைப் புலவர் பராட்டுவார் *[பதி.71:22]*.

கானம் கடக்க எண்ணுதிராயின், அறத்தாறன்றென்று என்னுநள் போலக், குறிப்பாலுணர்த்தி, ஓவியம் போல் நின்று, ஒன்று நினைந்து, தன் கண்ணை மறைத்த பனிநீர்ப் பார்வையோடு' ஆகத்தொடுக்கிய புதல்வனது தலைமாலையை

மோந்து உயிர்த்த காலை, அது உருவிழந்தவாறு கண்டு, செலவொழிந்தனம்', எனத், தலைமகன் கூறினான் [அக.5:21]. கொண்மூ, இடியுடன் மழை பெய்ய, எழுந்த வெள்ளம், யானைக்கன்றை இழுத்துச் செல்லுதலால், பிடி பூசலிடக், களிறு, பிளிறித் துழவும் பனிக் கடுஞ்சுரம் பகலினும் அச்சந்தரும் [அக.68:21]. 'முல்லையம் புறவில், ஆன்மானினது விரும்பத்தக்க பெண்மானின் நோக்கத்தினைக் காணுந்தொறும், நின்னை நினைந்து, வினைமுடித்த வெற்றியோடு, தேரை விரையச் செலுத்தப்பணித்து, இன்னே வருகுவர்; நாம், பனி நீங்கி அமைவேம், என்னும் வன்புறை இன்சொல்லுக்கு அமைவேன், கோவலரது குழல் வருத்தாக்கால்', எனக் கிழத்தி கூறினாள் [அக.74:12]. 'இம்மையில் நன்று செய்யத், தீது வருவதில்லை என்னும் பழமொழி பொய்யாயதோ? பனிபடும் பல மலைகளைக் கடந்தோர்க்கு வெறுக்கத்தக்கச் செயல் யாதும் செய்திலமே', என்றாள், கிழத்தி [அக.101:17]. மனைவியைத் தழுவிய தலைவன் மார்பில், புதல்வன் ஏறி யிரங்குவதுபோல், மடப்பிடி தழுவிய வேழம், கன்று ஏறியிறங்கப்படுத்திருக்கும், பனிச்சுரம் கடந்து சென்றனராயினும், நீடியாது விரைந்து வருவர், எனத், தோழி தலைவியிடம் வற்புறுத்தியுரைத்தாள் [அக.197:15]. 'மந்தியின் பசி நீங்குமாறு, குட்டியின் தந்தையாகிய கடுவன், பலாப்பழத்தின் சுளையினைத் தோண்டினும் மிக்க துன்பம் வரும் பனிமிக்க பக்கமலையையுடைய மகளிர் உறையும் மாங்காடு போன்றது, இவள் தந்தையின் காப்பிடம்', எனத், தோழி, தலைவனுக்குச் செறிப்பறிவுறுத்தினாள் [அக.288:14]. பகலும் பெய்து, யாமத்திலும் பெருவெள்ளந் தோன்றப் பெய்தமையால் வாடையொடு, பனிமிகும் வருத்தத்தையுடையது நள்ளிரவு [அக.305:4]. 'நெஞ்சே! பனியிருளில் மழை பெய்தமையால், குளிர் கொண்ட வாடையால் வருந்துவள் எனக்கூறிக், காட்டு வழியில் யாம் தமியமாக, நீ மீண்டு வந்தாயன்றோ! எனத், தலைமகன் நெஞ்சு நோக்கிக் கூறினான் [அக.337:18].

'நடுநாள் மிக்க மழை பெய்தமையால் இலையும், மலரும் சுமந்து வரும் புதிய நீர் மருந்துமாகும். அதனையுண்டு, அதன்கண் ஆடப்பெறின், இவள் பனியும் தீரும்' என்றனள் அன்னை', எனத், தோழி, தலைவன் சிறைப்புறமாகக் கூறினாள் [அக.53:11]. கரிய கழியினைத் துழாவும் பனித்தலையினையுடைய பரதவர் திமிலின் விளக்கினை எண்ணுவர் [நற்.372:11].

'பனியிருங்குன்றம் கடந்து சென்றோர்க்கு நம் முயக்கினும் பொருள் இனிது', எனத், தலைமகள் உரைத்தாள் [ஐங்.337:4]. 'பனிமலையையுடைய களிறு வழங்குங்காட்டில் புணர்ந்துடன் செல்லல், தன் தமரோடு நிகழ்த்தும் மண நுகர்ச்சியினும் இனிதாமோ?' என்றாள், நற்றாய் [ஐங்.379:2].

'ஊர் அலர் தூற்ற, நுதல் பீர்க்கம்பூவின் அழகைக் கொண்டு, பிறையினது வனப்பினை இழவாதிருக்குமாயின், இவள் பனிதெய்வத்தால் வந்ததெனப் பரவுக்கடன் பூணாமையும் கூடும்', எனத், தோழி வரைவு கடாயினாள் [கலி.53:13]. 'ஞாயிறே! எம் காதலரைக் கொண்டு காலையில் வரின் பனியோடு, மாலையென்னும் பகையினையும் தாங்கி அவனைக் காண்பேன்', என்றாள், தலைவி [கலி.145:33].

**பனிச்சை** - மகளிரது ஒருவகைத் தலைமுடிப்பு. பனிச்சையுடன்— தலைமுடிப்புடன்— நுதலையுடைய புருவத்தோடு, மகளிரும், கருநரையோரும், தூநரையோரும், அறிவும், புகழுமுடையோரும், களிறு, விடையன்ன நடையுடையோரும், உணவுப் பொருளையும், மலர்ச் செப்பையும், நறும் புகையையும் ஏந்தி, நாகர்நகர் நோக்கிச் சென்றனர் [பரி.தி.1:36].

**பனிநீர்** - பன்னீர். மதுரையின் மாடங்களில் தூய பனிநீருடன், பன்னீருடன்-கலந்து மேலெழும் நறும்புகை, மலைப் பூங்கொடிகளில் தங்கி, மேலெழும் பனியாவியைப் போல் தோன்றும் [பரி.10:124].

**பனிப்பு** - நடுக்கம். தெய்வப் பனிப்பு - நடுக்கம் - போன்று, நடுக்கத்தினைச் செய்யும், பனிக் கட்டியோடு, மழை பெய்யும் வைகறை [அக.304:3].

**பனிப்போள்** - நடுங்குபவள். 'நாம் அருகிருக்கக், கோடை காலத்தும் பனிப்போள் - நடுங்குபவள் - வாடைக்கண்ணுள்ள பெரும்பனிக்கு என்னுறுவாளோ?' எனத், தலைமகன், தன்நெஞ்சிற்குக் கூறினான் [நற்.312:8].

**பனிவரை** - இமயம். பனிவரை - இமயம் - போலும் மார்பையுடைய வீமன், ஆக்கிய, நூல் விதி தவறாதாக்கிய, பல்வேறு உணவுப்பொருளைப் பொற்கலம் பரப்பித்,தான், நின்று ஊட்டுவான்' என, நல்லியக்கோடன் விருந்தோம்பற் சிறப்புக் கூறப்படுகிறது [சிறு.240].

**பனுவல்** - அறநூல். நல்ல பனுவல் - அறநூல் - நான்மறைகளில் சொல்லப்பட்டவாறு, மேலீடாக நெய்முதலிய ஆவுதி நிறைய வேள்வி செய்யப் பெற்றது [புற.15:17].

வீமன் ஆக்கிய நுண்ணிய பனுவல் - நூல் (மடைநூல்) - கூறிய விதியினின்றும் வழுவாது பல்வகையுணவு செய்யப்பெற்றது. [சிறு.241].

'அஞ்சியின் பாணமகன் நல்ல இசைகளை வகுத்துக் கூறிய, இனிய பனுவலினும் - இசை நூலினும் - பண்ணினும், புதிய திறத்தினும், வதுவையயர்ந்த நாளினும் நம் தலைவன் நமக்கு இனியவன்', என்றாள், தலைவி [அக.352:13].

2. **பஞ்சு.** பருத்தி. நூற்கும் பெண்ணின் பனுவல் - பஞ்சு - போன்றது நிணம் பரந்த இறைச்சி [புற.125:1].

'மாமலையில் பனுவலைப் போலப் பொங்கியெழுந்த முகில் துவலை தூற்றுமாதலால் நும்இயங்கள் நனையாதபடி கிணறு

போன்ற மலை முழைஞ்சினுள் செல்க', எனத் கூத்தரை ஆற்றுப்படுத்தினர் *[மலை.361]*.

காதலனில்லாத பெண்டிர் உணவுக்காக நூற்கும் பனுவல் போல, முகில் தவழும் மலை *[நற்.353:2]*.

**3. பாடல்.** பனுவல்-பாடல்-வல்ல பாணர் பரிசிலாகக் கொண்டு சென்றதால் ஆய்கோயில் களிறில்லாத் தறியையுடைமையான் பொலிவிழந்தது *[புற.127:2]*. பொன்னை வார்ந்தாலொத்த முறுக்கடங்கின நரம்பினையுடைய வரிப்பொருள் பயிலும் பனுவல், நிலந்தோறும் மாறிமாறி யொலிப்பச் சீறியாழில் படுமலைப்பாலைப்பண் நிலை பெற்றது *[புற.135:6]*.

புகழினையுடைய நுண்ணிய பனுவலை - செய்யுளைப் - பாடும் புலவனால் பாடப் பெற்றது மழை தவழும் ஏழிற்குன்றம் *[அக.345:6]*.

'நரம்பினால் பாடும் பனுவலை வல்ல பாணன் செய்த துன்பம் பல. எனவே, இவனது பொய் பொதிந்த கொடுஞ்சொல்லைப் பரிகரிமின்', எனத், தோழி கூறினாள் *[நற்.200:8]*.

**4. கேள்வி.** கோடைக்காலத்துக் கொழுநிழல் போன்றாகி, வழுங்கத் தவறாத வள்ளியோனது செவியில் விதைத்த பனுவல் - கேள்வி - நன்கு விளைந்தது என, விரும்பியிருக்க, அட்ட பானை அழலைப் பயந்தது போல, அறனில் கூற்றம் அவனைக் கொண்டது', என, வெளிமான் துஞ்சிய நிலையில் பெருஞ்சித்திரனார் கையறுநிலையாகப்பாடினார் *[புற.237:5]*.

**5. சொல்.** 'பயனைத் தெரிந்து பேசும் பனுவலை - சொல்லை - யுடைய பாண! நின் பணிமொழி, தலைவியது நுதல் பசப்பினைக் களையாவாதலிற், செல்க', எனத், தோழி பாணணிடம் வாயில் மறுத்துரைத்தாள் *[நற்.167:6]*.

பனை - ஒருவகை மரம். பொன்னாற் செய்யப்பட்ட தும்பையுடனே, பனையினது - பனைமரத்தினது - தோட்டைத் தலைக்கணியாகச் செருகி வயவர் வெறியாடும் குரவையயர்ந்தனர் *[புற.22:21]*. மகளிர், பனை நுங்கின் நீரும் கரும்பின் சாறும், தெங்கின் தீ நீரும் ஆகிய முந்நீரையுண்டு, முந்நீரில் பாய்ந்தாடுவர் *[புற.24:12]*. 'நின்னொடு பொருவோன், பனையின் தோடணிந்த சேரனுமல்லன். வேம்பின் தாரினையணிந்த பாண்டியனுமல்லன். இருவர் கண்ணியும் ஆத்தியாலாயன. ஒருவீர் தோற்பினும் தோற்பது சோழர் குடியே; ஒரு குடிக்குள் போர் வேண்டா எனக் கோவூர் கிழார் சோழமன்னர்க்கு அறங்கூறினார் *[புற.45:1]*. 'பனை போன்ற துதிக்கையோடு, முத்துடைய கொம்போடு, கரிய மலை போன்ற களிற்றின் மீது, முகபடாம் பொலிய, மணிமாறியொலிக்க, ஏறிச், செம்மாந்து செல்ல விரும்பினேன்', எனப், பெருஞ்சித்திரனார் குமணனிடம் கூறினார் *[புற.161:16]*. வலைஞர் பனையினது நுகும்பையொத்த வராலோடு, வேல் போலும் கயலை முகந்து கொள்வர் *[புற.249:5]*. 'பனைபோன்ற பெரிய கையையுடைய யானையைப் பெயர்க்கும் பெருந்தகுதிப் பாட்டினையுடைய மன்னர்க்குத் தன்மகளை கொடுக்கவிருந்தான், அவள் தந்தை' *[புற.340:7]*.

பனைமரம் வெட்டுண்டு கிடந்தாற் போன்று, யானையின் துதிக்கைகள் வெட்டப்பட்டுக்கிடந்தன *[பதி.36:5]*.

வெளிற்றினை யுடைத்தாகிய கரிய பனையினது புல்லிய செறும்பையொத்த கரிய மயிரினையுடைய உடம்பினையும், வளைந்த அடியினையுமுடையது கரடி *[முரு.312]*.

பனையை யொத்த பருத்த வளைந்த கையினையும், கொல்லும் சினம் நீங்காத செருக்குப் பொருந்திய வலிமையினையும் வண்டு மொய்க்கும் மதத்தினையும், உயர்ந்த கொம்பினையும் உடையது யானை *[அக.148:1]*. பனையின் வெளிற்றை யுண்ட யானை காலையில் தூங்கியசையும் நிலை, விடியலில் கடலில் அசையும் தோணி போலத் தோன்றும் *[அக.187:12]*. ஈன்றிளைத்த பெண்புலியின் பசி நீக்க வேண்டி வேட்டை மேற்சென்ற, பனை போன்று திரண்ட எருத்தினையுடைய ஆண்புலி, ஆமான் அலறத்தாக்கி, நிலம் சிவப்ப அதனை இழுத்துச் செல்லும் *[அக.238:5]*. வேனிலில், குருத்து இன்றி, உச்சி கூம்பிய, வெளிற்றுப்பனை போன்று, கையையுயர்த்தி, யானையின் கூட்டம் வானத்தை நோக்கிப் பிளிறும் *[அக.333:11]*. மீன் இனங்களை உண்ட நாரையொடு, அன்றில் பனைமரத்தில் தங்கியிருக்கும் *[அக.360:16]*. மாலையில், நடுகல்லை, ஆள் எனக்கருதி உதைத்த காட்டுயானையின் கால் நகம், கரிய பனை நுங்கின் தோடு போலக் கழன்று விழுந்தது *[அக.365:6]*.

ஆவிரையின் புதுமலரைக் கட்டி, மாலைபிறவற்றையும் அணிந்த, பனங்கருக்கால் செய்த குதிரை ஏறித், தலைவன் இன்னவள் செய்தது இது வென, அலர் எழச் செய்தான் *[குறு.173:2]*. கடற்கரைச் சோலையிடத்து அடியிடம் மறையுமாறு மணற்குவியல் பரவ, நெடும்பனை, குறும்பனையாயிற்று *[குறு.248:5]*. பனையுச்சியிடத்தாகிய கருக்கையுடைய மடல், குருத்தொடு மறையக், காற்று மணலைக் குவித்தது *[குறு.372:1]*.

களர்நிலத்தின் நீற்றினை அளைந்த யானை, ஆளைக்கொல்லும் விருப்பொடு சென்று, யாரையும் காணாது, அச்சினத்தைப் பனையில் தீர்த்துக் கொள்ளும் *[நற்.126:6]*. 'திங்களும் வானத்தில் எழுதரும். கடலலையும் ஒலிசெய்யா நிற்கும். தாழை மலர, அதன் நாற்றம் வீசப் பனைமேல் இருக்கும் அன்றிலும் ஒலியாநிற்கும். யாழும் இசைசெய்யும். காமமோ பெரிது', என்பன, தலைவியின் காமமிக்க கழிபடர் கிளவி *[நற்.335:7]*.

வானில் விளங்குமாறு பனையினது கொடியை யுயர்த்திய, பாலின் நிறத்தையுடையவனைப் போன்றது வெள்ளையேறு *[கலி.104:7]*. 'சுடரிழையாள் எனக்குத் தந்தவை, துன்பமும், பனையீன்ற மடலாலாகிய குதிரையுமேயாம்', எனத், தலைமகன்,

பாங்காயினார்க்குக் கூறினான் *[கலி.138:12].* 'மன்றப் பனைமீது தோன்றும் மலையிடத்து மாந்தளிர் போலும் நிறத்தையுடைய வெயிலே! என் மெல்லிய தோளை மெலிவித்தானது வடிவழகின் தன்மையையல்லது அவன் செய்த நன்று, தீதென்ற பிறவற்றைக் காணேன்', என்பது பெருந்திணைத் தலைவி கூற்று *[கலி.142:47].*

கரிய பனைமிசைப் பல பதினாயிரங்குலைகள் அதன் தலையின் நீங்கித், தரைக் கண் உதிர்வன போலத், தலைகள் பல தாரொடும் புரள, அவுணர் உயிரைத் திருமாலின் ஆழிப்படை செகுத்தது *[பரி.2:43].*

**பனைக்கொடியோன் - பலராமன்.** பால் போலும் நிறத்தினையுடைய பனைக்கொடியோனும் - பலராமனும் - நீல நிறமுடைய ஆழிப்படையோனும் என்ற இருபெருந்தெய்வமும் உடன் நின்றதுபோல, வளவனும் வழுதியும் ஒன்றுபடின், இதனின் இனியதும் உளதோ?' எனப் புலவர் பாடினார் *[புற.58:14].*

'வெண்மை நிறமுடையோனுக்குப் பிறப்பு நிலையால் இளையன் என்போர்க்கு இளையை; பனைக்கொடியோனாகிய அவனுக்குச், சிறப்பு நிலையால், முதியன் என்போர்க்கு முதியை; எனத், திருமாலை புலவர் ஏத்திக் கூறுவர் *[பரி.2:22].*

**பனைமீன் - ஒருவகை மீன்.** பனைமீன் என்னும் மீன்வகை வழங்கும் கடலில், நெடுஞ்சுழிப்பட்ட நாவாய் போல் கடாஅயானை தோன்றும் *[மது.375].*

**பனையீன்றமா- மடன்மா.** கனவினால் கண்ணில் படவில்லையாயின், நனவில், ஞாயிறே! நீ காட்டாயாயின் பனையீன்ற மா - மடன்மா - ஏறியவன் வரக், காமன் காலைப்பிடித்துக் காமனது மலரம்பு கேட்பேன்', என்பது, பெருந்திணைத் தலைவி கூற்று *[கலி.147:59].*

# பா

பா - பரப்பு. களிறு, 'பா-பரப்பு-உடைய அடியோடு வெருட்சி பொருந்திய பார்வையினையும், விளங்கிய கொம்பினையும் உடையது *[புறம்.15:8]*. பெருங்கையொடு தலையெடுத்து நடக்கும் உயர்நடையையும், மாறுபட்டொலிக்கும் மணியுடனே உயர்ந்த கோட்டினையும், பிறைவடிவாகிய மத்தகத்துடனே சினம் பொருந்திய பார்வையினையும், பாவடியொடு, பருத்த கழுத்தினையும், தேனழிந்த மலைபோலத் தேனியொலிக்க மதம் வடியும் தலையினையும் உடையது இளங்களிறு *[புற.22:4]* மணிமாறியொலிக்கும் பாவடியினையும் பெரிய காலினையும் உடைய உயர்ந்த நல்ல யானையும், தேரும் மாவும், மறவருமுடையவர் வேந்தர் *[புற.72:3]* பாவடியினையுடைய யானையைப் பரிசிலர்க்குக் குறைவறக் கொடுப்பான் அகுதை *[புற.233:2]*.

மாரிக்காலத்து வானத்தில் பா (பரத்தலைச் செய்யும்) மழையை ஒப்ப வரகு வைக்கோலாலே வேய்ந்த குடியிருப் பினையுடையது. சீறூர் *[பெரு.190]*.

மூடாத பரிய கண்ணினையும், பாவடியினையும், பெரிய வாயினையும் உடைய மதம் மாறிய யானையைப்போல, நீரினைப் பெய்து, வறுமையெய்திய, முகில் பொங்கியெழுந்தது *[அக.125:7]* 'நீ அன்பிலாய் ஆதலை நான் முன்பு அறிந்துளேனாயின் என் தலைவியின் நீலமணிபோலும் சிறந்த அழகு கெடப் பொன்னையொத்த பசலை பா-பரத்தல் - இல்லையாகும்', எனத் தலைவனிடம் தோழி வரைவுகடாவினாள் *[அக.172:18]*. களிறு பறையினையொத்த வட்டமாகிய பாவடியினையுடைய வலிய தாளினையும், திண்ணிய கோட்டினையும் உடையது *[அக.211:3]*.

'பொறையனது கொல்லியின்கண்ணுள்ள பாவை போலும் மெல்லியல்பினையுடைய தலைவி, பாவடியினையுடைய உரலில் தானியம் இடிக்கும் போது, தலைவனது பெயரைக் குறித்த வள்ளைப்பாட்டை பாட, ஊரார் குறை கூறினர் *[குறு.89:1]*. பருத்த உகிரோடு, பாவடியினையுடைய களிற்றின் ஏந்தல் வரக், கெட்டழியும் கரும்பின் கணுவிடைப்பகுதி போன்றது சுரத்திலுள்ள ஒற்றை மூங்கில் *[குறு.180:1]*.

பச்சிலை மரத்தை முரித்துழக்கிய பாவடியையுடைய சேறு பூசிய நெற்றியையுடைய களிற்றியானை ஆசினியை முறிக்க, அதன் மலர், வேங்கை மரமுடைய மலையில் பரவக்கிடக்கும் *[நற்.51:8]*. வேங்கைமரத்தின்மீது கட்டிய பா அமைந்த பரண்மீதேறித் தினைப்புனத்துக் கிளியினத்தைப் போக்குவர் *[நற்.373:7]*.

கொடிச்சி தினைப்புனத்தைக் காவல் செய்யுமாறு, கிளிகள் பாத்தரும் -(பரத்தல்-செய்யும்), *[ஐங்.288:4]*.

'படைக்கலங்களைப் புதியவாகப் பண்ணிக் கைசெய்யவும் (செயல் நினைவால்) பா (பரத்தல்) மாட்சிமைப்பட்ட பலவாகிய அணையிடத்தே முயக்கந் தவிர்ந்து ஒடுங்கிக் கிடக்கவும், அது பொறாது புல்ல நெட்டுயிர்ப்புக் கொள்ளவும், அவனுள்ளதுள்ளது என்னென்று இடையூறளந்து நடுங்கற்க, நறுநுதால்! என்று, தோழி தலைவனைச் செலவழுங் குவித்தமை கூறினாள் *[கலி.17:1]*.

2. ஆடை நெய்யும் பா. ஆடை ஆய்ந்து நெய்யுங்கால் பா-நெய்யும்பா - விரிந்தது போல, வெயில் (கதிர்) விளங்கி வெப்பமுடைய காட்டில் நுடங்கும் *[அக.293:4]*.

3. பதிதல். பாலை ஒக்கும் மருப்பினையும், உரலின் அடியையொக்கும் நிலத்தே பா-பதிதலையுடைய- அடியினையும், நறுமதத்தினையும் உடையது களிறு *[கலி.21:1]*.

பாஅர், பாஅரம் - (பா.வே.பாரம்) பருத்தி. யானை தன் தாளால் உதைத்த வெண்மையான பாழ்நிலப் புழுதி மூழ்கச் சுரத்தில் நடந்த வருத்தத்தை பாஅர்-பருத்தி (பாரம்)- மிகுந்த சிறிய கிணற்றில் சென்று தணித்துக்கொள்ளும். *[நற்.41.:4]*.

பாஅல் - பால் (உணவு) 'பாஅல் - பாலுணவு - தன் இனிமையொழிந்து புளிப்பினும், ஞாயிறு தன் விளக்கம் ஒழிந்து இருளினும், நான்மறையினது ஒழுக்கம் வேறுபடினும் வேறுபாடில்லாத சூழ்ச்சியையுடைய அமைச்சுச் சுற்றத்தோடு ஒழியாது நெடுங்காலம் விளங்கித் துளக்கமின்றி நிற்பாயாக!, எனச் சேரலாதனைப்புலவர் வாழ்த்துவர் *[புற.2:17]*. பெருந்தலைச் சாத்தனாரின் மனைவி மிகுந்த பசியான் வருந்திப் பாஅல் இன்மையால் தோலாந்தன்மையுடனே திரங்கித் துளை தூர்ந்த பொல்லாத வறிய முலையை வறிதே சுவைக்குந் தோறும் அழுகின்ற தன் பிள்ளையது முகத்தைப் பார்த்து, நீரால் நிரம்பிய கண்ணுடன் வருந்தினாள் *[புறம்.164:3]*. 'பாஅல் இல்லாமையால் பலபடிச் சுவைத்து முலையுண்டலை வெறுத்த பிள்ளையுடனே மனையின்கண்ணே வறுமையுற்றிருந்த என்னுடைய ஒளிபொருந்திய நுதலுடையாளை நினைந்து யான் போவேன்', எனப் பெருங்குன்றூர்கிழார் பாடினார் *[புற.211:20]*.

2. பக்கம். பாஅல் - பக்கம் - நின்று ஒளிக்க திரை விடுகின்ற வானத்தின்கண்செல்லும் திங்கள் போலும் முத்துமாலையையுடைய வெண்கொற்றக்குடையினது நிழலை உடையவன் மன்னன் *[புற.22:10]*.

ஈன்றணிமையையுடைய காரான் உழவனாற் கட்டப்பட்ட கன்றின் பக்கத்தினின்றும் அகலாது பாஅல் பசிய பயிர்களை மேயும் *[குறு.181:5]*.

3. பகுத்துக்கொள்ளுதல். 'ஊடல் கொண்ட நின் மனைவியின் கையதாகிய சிறு செங்குவளையினை ஈயென இரந்தும் பெறாயாய், உருத்தநோக்கமோடும் அதனைப் பாஅல்-

பகுத்துக்கொள்ளுதல்-மாட்டாயாயினை. அவ்வாறிருக்க, நீ, ஞாயிற்றின் வண்ணங்கொண்ட வெண்குடையினையுடைய வேந்தர்தம் எயிலைப் பாஅல்- பகுத்துக் கொள்ளுதல் - எவ்வாறு வல்லாய் ஆயினையோ?' என, ஆடுகோட்பாட்டுக் சேரலாதனைக் 'காக்கை பாடினியார் பாடினார் *[பதி.52:26(2)]*.

4. பகுதி பாஅல் - (தத்தம்) பகுதிகளையும் - அழகிய செவிகளையும், பெருமையை உடைய கால்களையும், மதத்தாலுள்ள மயக்கத்தினையுமுடைய யானைத் திரளோடே, ஒழிந்த விலங்கின் திரள்களும், மறவரும் மயங்கு கையினாலே தூறுகளெல்லாம் வழிபட்டுப் பழைய வழிகள் மயங்கின *[கலி.5:1]*.

**பாக்கம்** - நெய்தல் நிலத்து ஊர். இமயவரம்பன் வெகுண்டு தங்கிய நீரழிந்த பாக்கம்-நெய்தல் நிலத்து ஊர்- கூற்றத்தால் அடப்பட்ட உயிர் நீங்கிய உடல் போலப் பொலிவழிய, விடத்தர், உடை முதலிய முள்மரங்கள் படர்ந்து, நெருஞ்சி பரந்த பாழிடமாகி, நினைப்பார் நடுங்கும் இயல்பினதாயிற்று *[பதி.13:12]*.

தெங்கினையும், வாழையினையும், காந்தளினையும், சுர புன்னையினையும், துடிபோலும் ஒலியெழுப்பும் பேராந்தை யினையும் உடைய குடியிருப்புக் கொண்ட பாக்கத்தில் யாழ்போல் ஒலிக்கும் வண்டின் பாடற்கேற்ப மயில் தோகையினை விரித்தாடும் *[பொரு.210]*. செல்வம் நிறைந்த பாக்கத்தில் வழிச்செல்லும் புதியோர் தமது மிக்க பசி தீரும்படி சோற்றை ஆக்கும் பானை அடுப்பினின்றும் அசைந்து வீழும்படி, கமுகின் பக்கத்தே சூழ்ந்த தெங்கின் காய் வீழும் *[பெரு.367]*. கொற்றை சீரிய முத்தினையும், வளையினையும் உடைய சேரியினையும், கள்ளாகிய உணவினையுடைய குடிகளுறையும் பாக்கத்தினையும் உடையது *[மது.137]*. மகளிர், உணங்கும் உணவைக்கவர வரும் கோழியை எறிந்த பொற்குழை புதல்வர் உருட்டும் முக்காற் சிறுதேரை விலக்கும் விலங்குபகையல்லாது கலங்குவதற்குக் காரணமாகிய பகையை அறியாத வளமான பல குடிகளையுடையது. பாக்கம் *[பட்.27]*. அசையும் மூங்கில் ஒலிக்கும் அரிதாய்ச் செல்லும் வழிகளையுடையது சிலம்பைச் சேர்ந்த பாக்கம் (மலைச் சீறூர்) *[மலை.162]*.

உயர்ந்த மணலையுடைய அடைகரையில் வந்து கிடக்கும் சுறாமீனை, மணம் வீசும் பாக்கத்தின்கண் பலர்க்கும் பகுத்துக் கொடுப்பர் *[அக.10:12]*. பரதவர், மீன் வேட்டை நன்கு கைகூடிற்றாகப் புலால் நாற்றம் வீசும் சிறுகுடிகளையுடைய பாக்கத்தில், வலையின் பயனைப் பாராட்டி அயிலை மீனை, யாவர்க்கும் பகுத்துக் கொடுப்பர் *[அக.70:2]*. மலைச் சாரற்கண் வேங்கைப் பூக்களைச் சூடித் தொண்டகம் என்னும் பறையின் தாளத்திற்கொப்ப ஆடவர் பெண்டிரொடு கலந்து சிறுகுடிப் பாக்கத்தின்கண் (மலைச் சீறூர்க்கண்) தெருக்களில் ஆடுவர் *[அக.118:4]*. 'ஞெமை மரங்களையுடைய ஆள் வழக்கற்ற இடங்களில் மலையைச் சார்ந்திருந்த குடிகளையுடைய பாக்கத்து (மலைச்சீறூர்) உயர்ச்சி கருதிய இரவில் விருந்து செய்யும் பொருள் வேண்டித் தலைவர் பிரிவு கருதினர்'. என்று தோழி கூறினாள் *[அக.187:12]*. கொடி அசையும் கள் மலிந்த பாக்கத்தில் விடியற்கால வேட்டையிற் பட்ட வரால் மீனின் துண்டத்தை விற்றுக், கள்ளுண்டு, மீண்டும் வேட்டம் போதலை மறந்து உறங்கும் கணவர்க்குப் பாணமகளிர் ஆம்பல் இலையில் சோற்றைப் பிரம்பின் தீம்புளிப்பழத்துடன் விடியலில் இடுவர் *[அக.196:1]*. கள் விற்கும் மாதர், தம் கள்ளிற்குரிய விலைப்பொருள் பெறாராகி, யானையின், கொம்பினை எடுத்து வருதல் குறித்து மன்றின்கண் ஓடி விளையாடும் புதல்வனது தலையைத தடவி ஏவும் அரிய போர் முனையையுடையது பாக்கம் (மலைச்சீறூர்) *[அக.245:13]*. புலால் நாற்றம் வீசும் தெருவினையுடைய சிறிய குடியிருப்புடைய பாக்கத்தில் மீன் வேட்டம்புரிபவர், உப்பங் கழியில் வளர்ந்த நீல மலர்களைப் புலிநகக் கொன்றைப் பூக்களோடு சூடுவர் *[அக.270:2]*. சோழனது பண்டங்கள் நிறைந்த பாக்கத்தின்கண் கடல் அலை இடையறாது சென்று மீளும் *[அக.338:19]*.

நறுமணமுடைய அகிலினது புகை, துளியற்ற வெண்முகில் போற்சென்று மலைச்சாரலிலுள்ள குறவருடைய பாக்கத்தில் படியும் *[குறு.339:3]*. 'பிடியினது மெல்லிய தலையினையுடைய கன்று கள்மிக்க பாக்கத்தில் குறமகள் ஈன்ற புதல்வரோடு சுற்றி ஓடி இனியதாகிப், பின் அவர் தினையை மேயந்து விட்டது *[குறு.394:2]*.

'உப்பங்கழியிடத்துள்ள இறாமீனின் குவியல் காயும் வகையை ஆராய்ந்து புன்னையின் கொழுநிழல் எதிரே இட்டுப் பரப்பும்,துறைககு அணித்தாகிய பாக்கமும் பரதவர் மகளது பார்வையைக் காணாமுன் இனியதாயிருந்தது', என்றான் தலைமகன் *[நற்.101:5]*. படகின் மேலேறிக் கடல் மேற்சென்று சுறாவும், பிறவுமாகிய மீன்களைப் பிடித்து வந்து மணற்குவியலில் இறக்கும் பெரிய கழிசூழ்ந்தது பாக்கம் *[நற்.111:9]*. கழியிலே இரை தேடித் துழாவிய நாரை தன் சிறகை உதறுகின்ற திவலையாலே பாக்கம் குளிரால் நடுங்கும் *[நற்.127:2]*. நடுயாமத்து முரிந்து விழுகின்ற அலையின் ஒலியைக் கேட்டும் கடற்கரைக்கண்ணதாகிய குடி யிருப்புடைய பாக்கம் துயிலும் *[நற்.159.11]*. யாட்டுத் தொகுதியை மேய்க்கச் சென்ற இடையன் கள்ளியின் மேற் படர்ந்த முல்லையின் மலரைத் தொடுத்த மாலையின் நறுமணம் மாலைப் பொழுதினையுடைய சிறுகுடிப்பாக்கத்தே கமழும் *[நற்.169.10]*. அலை, கொழித்தமணல் மேட்டில், வெண்மையான பூவையுடைய, தாழை மீது, அலை மோதுதலானே, தாதுதிர்ந்து சிறுகுடிகளையுடைய பாக்கத்துப் புலால் நாற்றத்தைப் போக்கும் *[நற்.203:6]*. கழிசூழ்ந்த கண்டல் மரங்களாலாகிய வேலியையுடைய பரப்பில் முண்டகமாகிய முள்ளிச் செடிகளால் வேய்ந்த குறுகிய கூரையையுடைய சிறுகுடில் நிறைந்தது மீன் கொள்பவர் உறையும் பாக்கம். *[நற்.207:3]*. நீலநிறப்பரப்பில் அலைமோதக் கரையிடத்திருந்த ஆரவாரமிக்க பாக்கத்து மகளிர் தத்தம் அகன்ற

மாளிகைகளில் மாலையை எதிரேற்க, மீன் கொழுப்பை உருக்கிய நெய் வார்த்து விளக்கேற்றுவர் *[நற்.215:7]*. வேங்கைமலர் உதிரும்படி அகன்ற முற்றத்தையுடைய மலையிற் பொருந்திய குடியிருப்பை யுடையது பாக்கம் (மலைச்சீறூர்). *[நற்.232:9]*. ஓசை அவிந்தடங்கி நடுயாமமாகலும், கட்குடியின் செருக்கு அடங்கிப், பாக்கம் உறங்கியது *[நற்.303:2]*. சிறுகுடியையுடைய பாக்கம், உயர்ந்து தோன்றுகின்ற, கள் வடிதலையுடைய பனைகளின் நடுவில் உள்ளது *[நற்.323:6]*.

தலைவர் சென்ற வழி, குருந்தமலர் மாலையைத் தலையிற் சூடி மகிழும் கோவலர் குடியிருக்கும் குளிர்ந்த இயல்பினையுடைய பாக்கமும் உடைத்து *[ஐங்.439:3]*.

பாடுவார் இருந்த பாக்கத்தை வளைத்துக் கொண்டதெனவும், கூத்தர்கள் உள்ள சேரியை அடைந்ததெனவும், கழனிகளில் வெள்ளம் வந்து பொருந்தியதெனவும் பவாறாக ஆரவாரிக்க, வையை பெருகியோடியது *[பரி.7:31]*.

**பாக** - தேர்ப்பாக. 'பாக! - தேர்ப்பாக! - முற்படச் செல்லும் நின் தேராகிய ஊர்தியினை இனிப் பின்னலில்லாதபடி இச்சுரத்தைக் கடக்க விரைந்து செலுத்துவாயாக', என்று பாகனிடம் தலைவன் கூறினான் *[அக.44:6]*. பாக!. ஓவியம்போன்ற இந்திரகோபப் பூச்சிகளையுடைய சிவந்த நிலத்தே உருளை பதிந்து உருளுமாறு தேரினைச் செலுத்துவாயாக', என்று பாகனிடம் தலைமகன் உரைத்தான் *[அக.54:6]*. 'பா! பிடரிமயிரணிந்த, உலகத்தையே கடப்பது போன்ற, பறவையை யொத்த விரைவு கொண்ட பரியின் கடிவாளவாரினை நீ ஆய்ந்து கொள்ள, நம் தலைவியின் செயலற்ற நிலையினை நீக்கும் காலம் இதுவேயாகும்', என்று, தலைவன் பாகனிடம் கூறினான் *[அக.64:1]*. 'பாக! காட்டில், வண்டின் தொகுதி மணம் வீசும் முல்லை மலரில் மாலையில் ஆரவாரிக்கக் கார்காலம் வந்துவிட்டது. எனவே நின் நல்ல தொழில் திறம் அமைந்த தேர் மிகவிரைந்து செல்வதாக', என்று, பாகனிடம் தலைமகன் மொழிந்தான் *[அக.204:9]*. 'பாக! பொழுதும் இரவாயிற்று. அடங்கிச் செல்வதற்குரிய கயிற்றினைப் பூட்டக், கொல்லன் துருத்திபோல, வெப்பமாகப் பெருமூச்சுவிட்டுக், கடுநடையும், காற்றின் விரைவு போன்ற ஓட்டமும் கொண்ட பரிகளின், பால்கடையுங்கால் வெண்ணெய் மிதப்புப்போன்ற வாயின் தெவிட்டலாகிய நுரை, சிலம்பின் நூல்போல, நுணுகிச்சிதறிச், சாந்து பூசிய மார்பில் மறுச் செய்ய, விரைந்து செல்வதாக, நம் தேர்'. என்று, தலைமகன் பாகனிடம் உரைத்தான் *[அக.224:1]*. 'பாக! வானம் பெயலைத் தொடங்கியது. எனவே தலைவியை இப்பொழுதே காண்டற்கு, வானத்து அன்னக்கூட்டம் பறப்பது போன்று, காற்றெனச் செல்லும் பரி நான்கு பூட்டப்பெற்ற கொடுஞ்சி நெடுந்தேரின் ஆழி, மயிலாடும் ஈர நிலத்தைக் கிழித்துச் செல்லுமாறு, செலுத்துவாயாக', என்று பாகனிடம் தலைமகன் கூறினான் *[அக.334:3]*.

'பாக.' கற்களையுடைய பள்ளத்தில் தங்கிய நீரை உண்டு, ஆண்மான், பெண்மானோடு குதித்து விளையாடும் மாலைக்காலம் வருமுன், தலைவியது துன்பம் நீங்க விரையும் பரியைச் செலுத்துவாயாக', என்று தலைமகன் பாகனிடம் மொழிந்தான் *[குறு.250:4]*.

'பாக! நம் மடப்பத்தையுடைய தலைவி மகிழ்ந்து தழுவிக் கொண்டாடிய நிலை மறத்தற்கு அரிது. அவ்வாறாகத், தேரை விரைந்து செலுத்துக', என்பது தலைமகன் கூற்று. *[நற்.42:1]*. 'பாக! வேந்தனும் பகை தணிந்தனன். எனவே எமக்கு விருந்து செய்யும் விருப்பினளாகிய தலைவியது இனிய நகையைக் கண்டு மகிழ, நிலம் குழியும்படி நடக்கும் வலிய கால்களையுடைய குதிரைகளின் பிடரியில் மணியொலிப்பத், தேரைச் செலுத்துவாயாக', என்று, தலைமகன் பாகற்குரைத்தான் *[நற்.81:5]*. 'பாக! முன், நான் வினைவயிற் செல்ல வேண்டிய கவற்சியைக் கூறிய அளவில், மறுமொழி கூறாது, அறிவு மயங்கிய அவளது நிலையினை நீ அறிவையாயின், அதற்கேற்றபடி தேரைக் கடாவுவாயாக', என்று தலைவன் பாகனிடம் உரைத்தான் *[நற்.106:1]*. 'பாக! வரும் விருந்தை எதிரேற்க விருப்பங்கொண்ட தலைவி, நடத்தலைப் பயின்றறியாத தன்புதல்வன் தூங்குமிடம் சென்று, 'எந்தாய், 'வருக', என்னும் அழகிய சொல்லை நாம் கேட்டும் மகிழும்படி, வழியிடம் சுவடுபடத் தேரை விரைவில் செலுத்துவாயாக', என்று தலைவன் பாகனை ஏவினான் *[நற்.221:7]*. 'பாக! இன்று கார் தொடங்கியது. களர் நிலத்தில், பிணைமான், தன் குட்டியோடு, இனத்தினின்றும் இரிந்தோட, விரும்பிய நெஞ்சத்தோடு தேடா நின்ற ஆண்மானைப் பாராய்! எனினும், நின்தேர் விரைந்து செல்வதாக', என்று, பாகனை, தலைவன் பணித்தான் *[நற்.242:6]*.

'பாக! அரிவைக்குப் பெருவிருந்தாக, நின் தேர் விரைந்து செல்வதாக', என்று பாகனிடம் தலைவன் கூறினான் *[ஐங்.482:2]*. 'பாக! வேந்தனும் விடை கொடுத்தான்; மாவும் விரைவனவாயின; ஆறும் மலர் பரந்தன; எனவே, தலைவியின் பேரழகினை அடைந்து நுகருமாறு குறிப்பிட்ட காலத்தின் முன் சென்று சேரத் தேரை விரையச் செலுத்துக', என்று, தலைமகன், பாகனிடம் கூறினான் *[ஐங்.483:3]*. 'பாக! கார்பெயக் காடு கவின் பெற்றது. நம் தலைவியையும், குறித்த பருவத்தினையும் மறந்து பெரிதும் காலந் தாழ்ந்து விட்டேம். எனவே, மிக விரையத் தேரைச் செலுத்துவாயாக', என்று தலைவன் பாகனிடம் உரைத்தான் *[ஐங்.484:3]*.

**பாகம்** - கூறு. நீலமேனியையும், தூய அணிகலன்களையும் உடைய உமையம்மையாரைத் தன் பாகம்-கூறு-ஆகக் கொண்ட முழு முதல்வனுடைய இரு திருவடிக்கீழ் மூவகையான உலகம் முறைமையால் தோன்றி நிலைபெறுவனவாயின *[ஐங்.க.வா.1]*.

மூவகையையுமுடைய அரிய மதில்கள் ஒரு தீயாகிய அம்பாலே தீய, அவற்றைத் திசைகள் வெதும்ப எய்து, அமரர்க்குச் செய்யும் வேள்விக்கண், அவிர் பாகத்தை உண்டவன் இறைவன் *[பரி.5:27].*

**பாகர் - 1. யானைப்பாகர்.** காடு பற்றிய தீச்சுடர் போலச், சினத்தீச் சிதற, வெப்பத்தை வெளிப்படுத்தியும், பாகர்-யானைப்பாகர்-ஏவலினால் அங்குசத்தின் வரையறையைக் கடவாது பொருந்தி நின்று, வலிமையோடு யானை, போர்ச் செயலை விரும்பும் *[பதி.40:28].*

காட்டாற்றின் பெருஞ்சுழியில் அகப்பட்ட யானையது வலிய சினத்தைத் தணியப் பண்ணிப், பெரிய கம்பத்தில் சேர்த்தற்குத் தமதேவல் தொழிலைச் செய்யப் பாகர் தம் மொழியால் பயிற்றுவர் *[மலை.327].*

'கரிய கூந்தலையுடைய நின் பெண்டிரெல்லாரும் நின்னை வெகுளாதபடி எம்மில்லில் வந்தாய். அதற்கு அப்புத்தியானை, நீவிர் ஏறமாட்டாத சிறுபாகராகும்படியாகக், கைகடந்து மதம்படும். எனவே, அதனைவிடாதே பரிகரித்துக் கொள்க', என்று தலைவனிடம், தலைவி கூறினாள் *[கலி.97:29].*

**2. தேர்த்தட்டின் மேல், பலகையாற் செய்த சுற்றுச்சுவர் தேர் (ஆகுபெயர்)** 'கைவினைமுற்றுத், தச்சர் செய்த, அழகிய செலவினையுடைய பாகரோடு-பாகராகிய பலகைச் சுவருடைய தேரோடு-பரியின் ஓட்டத்தையும் கடக்கும் எருத்தினையும், செலுத்தும் பாகனோடு பரிசிலர்க்குத் தந்துவிடுப்பன் நல்லியக்கோடன்' *[சிறு.258].*

**3. குழம்பு.** 'முற்றிய தயிரைப் பிசைந்த கையை ஆடையில் துடைத்துக், கண் சிவக்கத், தாளிப்புப்புகை கமழத், தலைவி ஆக்கிய புளிப்புடைய பாகரை-குழம்பை-தலைவன் இனிதெனக் கூறி உண்ண, அவள் முகம் மகிழ்ந்தது' *[குறு.167:4].*

**4. பாகு.** நீராடற்கமைந்த அணிகளை அணிந்த ஆடவர், மகளிரோடு இன்புறுதற் பொருட்டுப் பாகரோடு-பாகோடு-கூடிய இளைதுவை நுகர்ந்து, களிப்பு மிக்குச், செவி நிறையப், பாட்டைக் கேட்டு இன்புற்று, அழகாகிய மதுவை ஒருவரினொருவர் கண்ணாலுண்பர் *[பரி.11:66].*

**பாகல்-1. ஒரு வகைக்கொடி.** மருதம் வள்ளையையும், ஆம்பலையும், பகன்றையையும், கனியுடைய பாகலையும்- ஒரு வகைக் கொடி-உடையது *[புற.16:14].* சோறடுமகள், வெண்ணெல்லின் குற்றரிசியை உலையிலிட்டு, மாவின் தீங்கனிப் புளிப்போடு, வரால், சுறாவின் துண்டங்கள், வள்ளைக் கீரை, சிறு கொடியில் காய்த்த பாகல் எனும் இவற்றோடாக்கிய புழுக்கலைச் செய்தாள் *[புற.399:6].*

பசிய பாகல் பழத்தையும், சிவந்த சுளையையுடைய பலாக்கனியையும் உண்ட மயில் ஆரவாரித்துத் தன் இணையை அழைத்தது *[பொரு.191].*

ஆர்க்கினைத் தலையிலே கொண்ட, திரண்ட, பசிய காய் முற்றிய பாகற் பழத்தைத் தின்னும் தோகைகளையுடைய மயில் மிக்க சோலை நிறைந்தது கோசரது துளுநாடு *[அக.15:4].* நெல்லின் இளங்கதிரை முதியஆ தின்றலை அஞ்சி, வயற் காவலர், கரும்பினை உண்பித்துப், பாகலின் கொடியைப் பகன்றைக் கொடியுடன் அறுத்துக் காஞ்சிமரத்தில் அதனைக் கட்டுவர் *[அக.156:5].* பசிய பாகற் கொடியின் சிவந்த பழத்தினை விரும்பி, நிறைந்த சூலினைக் கொண்ட மயிலின் பேடை, அயிரியாற்றின் கரையின்கண் ஊதுகொம்பு போன்று ஒலிக்கும் *[அக.177:9].* பலாக் காய்போலும் புறத்தினையுடைய அழகிய பழத்தினையுடைய பாகற்கொடியைக் கூதாளியின் கொடிக் கூட்டத்தோடு அசையச் செய்து வாடை பிரிந்திருப்போரை அறனின்றி வருத்தும் *[அக.255:13].*

வயலிற் படர்ந்த பாகற் கொடியின்கண் முயிற்றெறும்புகள் மொய்த்தியற்றிய கூட்டினை, வயல்வரப்பில் மேயும் எருமைகள், ஆண்டுள்ள நெற்கதிரோடு ஒருசேரக் கெடுக்கும் *[ஐங்.99:1].* (பாகர்-பா.வே.)

**2. பலா.** வயலருகிலிருக்கின்ற பாகல்-பலா-மரத்திலுள்ள இலைகளைக் கூடாக்கி, முயிறுகள் முட்டையிட்டு உறைகின்ற அக்கூடுகளை, இரையுண்ணப் போந்த நாரை, உரிஞ்சுதலானே, இம்முயிறுகளும், முட்டைகளும் மழுக்கிய சிவந்த நெல்லோடு கலந்து, அரிசியுதிர்ந்து பரவினாற்போல, உதிர்ந்து பரவும் *[நற்.180:1].*

**பாகன்-1. யானைப்பாகன்.** 'பெருஞ்சோற்றை வழங்கிப் பல்யாண்டு பாதுகாத்த பெரிய களிற்றை இழந்த வருத்தத்தினையுடைய பாகன்-யானைப் பாகன்-அது சேர்ந்து தங்கிய இரக்கத்தையுடையகூடத்தின்கண், கம்பம் வறிதே நிற்கப், பார்த்துக் கலங்கின தன்மைபோலக், கிள்ளியிழந்த உறையூர் மன்றம் பார்த்துக் கலங்கினேன்', என்றார், பொத்தியார் *[புற.220:2].*

பாகன் நெடுங்காலம் உயிருடன் வாழ்தல், மிக்க சினத்தையுடைய கொல்லும் களிறு அவனைக் கொல்லாது அருள் செய்தலால் ஆவது போலும் *[அக.336:13].*

வேல் தைத்துச் செறிந்த கதவினையுடைய எயிலைப் பிளிறிக் குத்தும் களிறே போல, இடுமணற் சிமையத்தைக், காற்றே, பாகனாக, வலம்புரிகள், கொம்புகளாகக் கொண்டு முழங்கும் அலை நீர்த்திரையையுடைய துறை குத்தும் *[கலி.135:2].*

**2. தேர்ப்பாகன்** 'கடிய செலவினையுடைய குதிரை பூண்ட தேரினைச் செலுத்துந் திறமை மிக்க பாகன் - தேர்ப்பாகன்-

செலுத்த, நாம் அவனை அணுகினமாகத் தலைவி கண்களில் நீர் வருதலை மறைத்துத், தன் தலையினை மெல்லக் கவிழ்த்தனள், என்றான், தலைமகன் *[அக. 230:12]*. காண்க — பாக.

மணிகள் கட்டிய தேரைப், பாகன் செலுத்துதலாலே, நின்னூர்க்குச் செல்லும் பொருட்டுப் போகா நின்றனை யாதலின், பின்பு நீ வருவாய் என்று குறிப்பிட்ட, சில நாளளவும், இவள் உயிர்வாழ மாட்டாள், என்பதனை, நன்கறிந்து செல்வாயாக', என்றாள் தோழி *[நற். 19:6]*.

ஈண்டு வருதலாலே நின் அளியைப் பெற்றேம். அருளினை, அதுவேயமையும். விரும்பியோர் திறத்தே நீ செல்லுதலை விரும்பிய நின் பாகனும், பூட்டுதலை விடாத கடிய திண்ணிய தேரை நீ இவ்விடத்தே தாழ்த்தாய் என்று கருதி அது நிற்கும் நிலையிலே செலுத்தும். அதற்கு முன்னே சென்று, அப்பரத்தையர் அன்பு கெடாமல், அவ்வன்பை நிறுத்துவாயா', என்று தலைவனிடம் தலைமகள் கூறினாள் *[கலி.66:23]*. 'நீ மணஞ்செய்கின்ற மனையாகக் கருதி, எம்முடைய மனையிலே, பொலிக, என்று கூறிப்புகுந்த, நின் பாணனைக் கண்ட யாங்கள், சேரிதோறுஞ் சென்று நீ சேர்ந்த இல்லை வினாயினனாய்த், தேரோடே கூடத் திரிதலைச் செய்யும் பாகனைக் குறைகூறுவேமோ?' என்று காமக்கிழத்தி தலைவனிடம் உரைத்தாள் *[கலி.68:17]*. 'பரத்தையரது நெஞ்சு, வலிதென்றறியாது, பாகனைத், தேரோடும் போகவிட்டுக் காணாமையால், நின்னெஞ்சத்திடத்தன வேறாக, நிறையிலள் இவள், எனக் கருதிப், பொய்வன்மையாலே இவ்விடம் வந்து, அலைக்கக் கருதுவையோ? அது, நின்னை வருத்தாதோ?' என்று காமக்கிழத்தி தலைவனிடம் கூறினாள் *[கலி.69:12]*. 'அவன் பெண்டிர், நின்னை யொழியப் பிறரில்லையெனத் தன் தெய்வமாகிய தேரைத் தொட்டுச் சூளுற்ற பாகன், ஈண்டு வந்து, பரத்தையர் பலர் தம் புலவியாலே அழுந்தின பலவடுக்களைக் காணானோ!, எனக், காமக்கிழத்தி கூறினாள் *[கலி.71:10]*.

**3. ஊர்வான்.** விடைப்பாகன் - ஊர்வான் - ஆகிய இறைவன் முப்புரத்தை அழித்த காலத்தில் மேரு மலையாகிய வில்லுக்கு நாணாக இருந்து புகழ் தந்தவர் திருமால் *[பரி.தி.1:76]*.

**பாகு - 1.** பகுதி. தேவலோகம் போன்ற பாகு - பகுதி - கொண்ட நாடு தம்முடையதாயினும், வேற்றோருடைய தாயினும் அதற்குரிய தவஞ்செய்வார்க்கே அஃது உரியதாகும். *[புற.367:1]*.

**2. வெல்லப்பாகு.** 'ஊனும், ஊணும் உண்டு வெறுத்து, இனியவென கருதிப், பாலிற் பெய்தனவற்றையும், பாகு - வெல்லப்பாகு - கலந்து செய்தனவற்றையும் உண்டு, பசி நீக்கி இருந்தனம்', எனப், பொருநன் கூறினான் *[புற.381:2]*.

அப்ப வாணிகர், சட்டியிலே, பாகுடன் வேண்டியவற்றைக் கூட்டிச் சேர்த்த, நூல் போல் சூழ்ந்து கிடக்கின்ற, அப்பம், பின்பு பாலிலே கிடந்தவை போலக், குருக்கத்தியினுடைய பூக்கள், மணலிடத்துக், குழிகளின் நீரிடத்தே விழுந்து கிடக்கும். *[பெரு.377]*.

**3. பாக்கு.** பலதானியமாகிய உணவு வகைகளையுடைய கொட்டகாரத்தின்கண் பணியத்தோடு, தூய அரிசியைப் பலியாகச் சிதறிப் பாகு - பாக்கு - (வெற்றிலையோடு), சொரிந்து, மெழுக்கமைந்த இடத்தில் கம்பு நட்டுக், கவிந்த கிடுகாகிய முகட்டின் மேல் கட்டிய துணிக்கொடி கரும்பின் பூப்போல் தோன்றும் *[பட்.166]*.

**4. வாக்கு.** கால், கை, பாயு, உபத்தம் ஆகிய கன்மேந்திரியங்கள் ஐந்து-சொல்லல், இயங்கல், கொடுத்தல், விடுத்தல், இன்புறுதல் - எனும் தொழிலாற்பாகு பட்டமையின் பாகு எனப்பட்டது.

பாழ் (புருடன்), கால் (ஐம்பூதம்), பாகு - கன்மேந்திரியங்கள் ஐந்து - எனவும், ஒன்று (ஓசை), இரண்டு (ஊறு), மூன்று (உருபு), நான்கு (சுவை), ஐந்து (நாற்றம்), ஆறு (செவி, தோல், கண், நா, மூக்கு, மனம்), ஏழு (அகங்காரம்), எட்டு (மான்), தொண்டு (மூலப்பகுதி) எனவும், நால்வகை ஊழிகளிலும் இவ்வெண்களால் நவிலப்படும் சிறப்பினை யுடையவை. *[பரி.3:77]*.

பாகுடி - கூர்மை. பல பயன்களைக் கொண்ட, உயர் சிமையத்தையுடைய, நீரொழுகும் கருமண்ணொழுங்காகிய அறலிடத்துச் செல்லாத பாகுடி - கூர்மை - உடைய பார்வைகொண்ட கொக்கின் விரைந்த விருப்புக்கஞ்சாதது அயிரையென்னும் பெயர் கொண்ட மீனல்லாத, மலை *[பதி.21:26]*.

**பாங்கர் - 1.** ஓமை மரம். பாங்கர் - ஓமைமரம் - மரவம், தணக்கம், ஈங்கை, இலவம், கொன்றை முதலியவற்றின் மலர்களைத் தோழியுடன் தலைவியும் பறித்துக் குவித்தனர். *[குறி.85]*.

**2. பக்கம்.** குதிரைகளைச் செலுத்தி முடுக்குகின்ற எம்மைக் காட்டிலும், என் நெஞ்சு முன் சென்று, நாணொடு, செறிந்த கற்பினையும், ஒள்ளிய நெற்றியினையும், அழகிய இனிய சொல்லினையும் உடைய இளையோளை அடைந்து, அவளது இல்லில் பாங்கர் - பக்கத்தில் - பல்லியது ஒலியைப் போற்றி, மாலையில் மயங்கி நின்றவளைக், கண்ணைப் புதைத்துக் கூந்தலைத் தீண்டி, கையைத் தழுவியது போலும் என்று தலைவன் கூறினான் *[அக.8:19]*. மேட்டு நிலத்தில் தழைத்த செந்தினையின் கதிரை உண்ணப், பல்லி பாங்கர் செய்த ஒலியாகிய நற்குறியினை உணர்ந்து பன்றி அணுகும் *[அக.88:2]*. தேன் அடை பொருந்திய உச்சிமலையின் பாங்கர் முகண்டையின் வெள்ளிய பூக்கள், வானம் மீனைப் பூத்தது போல, நள்ளிரவில் தோன்றும் *[அக.94:1]*.

முள்ளம்பன்றி தினைப்புனத்திற் சென்றுண்ணும் விருப்பமுடையதாய், எந்திரமமைந்த சிறுவழியில் சென்று புகும்போது, பாங்கர்ப் பல்லி ஒலி செய்ய, அதனையறிந்து, ஊறுவரும் என்றஞ்சிப், பின்வாங்கித், தன் கல்லளையில் வந்து தங்கியது *[நற். 98:5]*. வேனிலில் மாறிமாறித் தன் நிறம் வேறுபடுகின்ற முதிய ஒந்திப் போத்து, பாணர் யாழ் வாசிப்பக் கேட்டுப், பின், பாங்கர் நின்ற உயர்ந்த மாமரத்தில் ஏறியது *[நற். 186:6]*.

பரங்குன்றத்தின்கண் ஆடல்பயின்றவரை அவ்வாடல் பயின்றார் வெல்லவும், பாடல் பயின்றோரை அப்பாடல் பயின்றோர் வெல்லவும், சூதாடுதல் பயின்றோரை அச் சூதுவல்லார் வெல்லவும், பிற கல்வி வெற்றிகளால் புகழ் பரவத் தடாகம் போன்ற சுனைப் பாங்கர் கொடி நின்றது. *[பரி.9:77]*. மகளிர் சுனையருகில் மரங்களின் தளிர்களை உதிர்த்தனர். அவை, அச்சுனையிலுள்ள மலர்களையும், அரும்புகளையும், பொருந்தித் தலை தூக்கிக் கிடந்தன. இவற்றுள் மலரோடு பொருந்திக் கிடந்ததை ஐந்தலையுடைய அரவென்றும், அருகில் முதிர்ந்த பேரரும்போடு பொருந்திக்கிடந்ததை அதன் மூத்த பிள்ளையென்றும், முதிராத இளைய அரும்போடு கிடந்ததை அதன் இளைய பிள்ளை யென்றும் மயங்கினர். அதன் பாங்கர் அருகே பச்சிலையது கொழுந்தும், ஆம்பலும், காந்தளும், பிறவும் தெற்றின, கோத்த, தொடுத்த, தூக்கிய மாலை போன்றன, விடியல் வானம் போலப், பரங்குன்றில் தோன்றும் *[பரி.19:74]*.

**3. ஒருவகைக் கொடி.** பொதுவர், கல்லிடத்தனவும், காட்டிடத்தனவுமாய கொன்றை, காயா, வெட்சி, பிடவம், முல்லை, கஞ்சங்குல்லை, குருந்து, கோடல், பாங்கர் - ஒரு வகைக் கொடி - முதலிய பூவால் செய்த கண்ணியைச் சூடி, ஏற்றைத் தழுவுதலைக் காண வேண்டி, ஆயமகளிர் பரணைக் கைக்கொண்டார் *[கலி.103:3]*. 'பாலைக்கறந்த கலங்களை எடுத்து வைத்துக், கன்றுகளையெல்லாம் கயிற்றால் கட்டி, மனைக்கண் நிறுத்தி, பூவும், கரையுமுடைய நீல ஆடையை உடுத்திப், பாங்கரும், முல்லையும் படர்ந்த தோட்டத்தில் ஆயமகளிரோடு விளையாடா நிற்ப, அவ்விடம் வந்தகுருந்தம் பூங்கண்ணிப் பொதுவன் என்னை நோக்கி, நீ இழைத்து விளையாடுஞ்சிற்றிலைச் சிறிது புனைவேனோ என்றான்', எனத், தலைமகள் கூறினாள் *[கலி.111:3]*.

**4. தோழியர்.** மலராத முகையைப் போன்ற பருவத்தினரும், புதுமலர் மலர்ந்தது போன்ற பருவத்தினருமாகிய இளைய மாதரும், கரும்மயிருக்கிடையே நரை விராவிய கூந்தலுடையவரும், முழுநரையாகிய கூந்தலுடையவருமாகிய முதிய மாதரும், கற்புடைய மகளிரும், பரத்தையரும், இவர்களுடைய பாங்கரும்-தோழியரும்-ஏவன் மகளிரும், தாளவியலாற் கூட்டப் பெற்ற பல இன்னியங்களின் மென்னடைபோல, நடந்து வையைக் கரை அடைந்தனர் *[பரி.10:23]*.

**பாங்கன்** - தோழன். பாங்கனுக்காக-தோழனுக்காக-ஆர்க்கால் சூழ்ந்த வண்டி உருளையின் குடம் போல், வேல்மார்பில் தங்க, உயிர் வெளியேறுமுன், வெகுட்சி தோன்றத் தும்பை மாலையை நுதலில் கட்டினான் *[புற.283:7]*.

**பாங்கு** - **1. நன்மை.** வானம் துளிசொரிந்ததாகப் பலவகையான வித்துக்களை வயலில் விதைக்கும் உழவர் நீர்த்துறையிலுள்ள பகன்றை மலராலாகிய பாங்கு-நன்மை - உடைய மாலையை, வெளுத்த ஆடையைப்போலச் சூடி, உழவிடையே விளங்கும் மணிகளைப் பெறுவர் *[பதி.76:12]*. மனையில் புள் நிமித்தங்களும் பாங்கின *[அக.141:3]*.

**2. பக்கம்.** 'தோழி! உவ்விடத்தே இனிய நிமித்தம் உண்டாகாநின்றன. நெடுஞ் சுவர்ப்பல்லியும் பாங்கு-பக்கம்-இருந்து தெளிவிக்கும். மனையகத்து மாமரக் கிளை யிலிருந்து குயிலும் கூவும். எனவே அவர் வருவேன் என்ற பருவம் இதுதான் போலும்', என்று தலைவியிடம் தோழி கூறினாள் *[நற்.246:2]*.

'தோழி! செவிலித்தாய் வெண்ணெய் தேய்க்க விரித்த மயிரிலிருந்து ஆயர்மகன் சூடிவந்த தொடையும், கண்ணியும் விழ்ந்தன. தீயைக் கையால் தொட்டவர் போலக் கைபிதிர்த்துப் புறம் போனாள் தாய். யானும், மயிர் முடித்து, ஆடையைக் கையாலே எறத்தழுவித், தளர்ந்து, பாங்காய கானம் சென்றொளித்தேன்' என்று தோழியிடம், தலைமகள் உரைத்தாள் *[கலி.115:15]*. பாங்கு, பயிர் செய்யுந் தோட்டத்தில் கன்றொடு. போகாநின்றேமாகிய எம் கயிற்றின் ஒரு தலையைப் பிடித்து, முன்பு ஓர்முறை விலக்கினாற்போல விலக்கியதற்கு, என்னபித்தேறினாய்', என்றாள், தலைவி *[கலி.116:1]*.

மதுரையில் ஒரு களிறு தன் பாங்காய பிடியைக் கண்டு, காமத்தால் மயக்கமுற்றுத், தன் மேலிருந்த மைந்தர் செலுத்தச்செல்லாமல், ஒருபுலிமுகமாடத்துக்கு, அருகிலே நின்றது *[பரி.10:41]*.

**3. நல்லிடம்.** 'தோழி! சுரத்தில் குட்டி கலக்கிய சிலவாகிய நீரைப் பிடியூட்டிக் களிறுண்ணும் பெடையின் வருத்தத்தைச் சிறகால் புறவு ஆற்றும். பிணைமானுக்குக் கலை தன் நிழலைக் கொடுக்கும். இவ்வகை நன்மையுடைய கானங்கடந்தவர், நம் நலம் கெடார். மனையில் பல்லியும் பாங்கு - நல்லிடத்தே - பொருந்தி ஒலித்தன. கண்ணும் இடந்துடித்தது; என்று தோழியிடம் தலைவி, கூறினாள் *[கலி.11:21]*.

**பாசம்** - 1. பேய். களிற்றோடு அரிய அணிகலன்களைத் தராதவர் நடுங்க, ஏனையோர் அவற்றைத் திறையாகத் தரப், பலியைப் பெற்று மீளும் பாசம் - பேய் - போலத், திறையினைக் கொண்டு சேரன் மீள்வான் *[பதி.71:23]*.

**2. கயிறு.** முடைதீர விளாம்பழம் இட்டு வைத்தலானே, அதன் மணம் கமழ்கின்ற தயிர்த்தாழியில், பாசம் - கயிறு - ஆடித்தேய்த்தலாலே தேய்ந்த தண்டினையுடைய மத்திட்டு, வெண்ணெய் தோன்றக் கடைதலால், வைகறைப் பொழுதில் ஓசையெழும் *[நற்.12:2]*.

**பாசவர்** - ஆட்டு வாணிகர். வருநர் விரும்பியவாறு வாரிக் கொள்ள வேண்டியும், விருந்தினர் உண்ண வேண்டியும் பாசவர் - ஆட்டு வாணிகர் - குறட்டில் கொத்திய இறைச்சித் துண்டுகளைத் தாளிக்குந்தோறும் ஆரவாரம் எழுந்தது *[பதி.21:9]*. எருத்தொடு பிற விலங்கின் இறைச்சியையும் விற்கும் பாசவரது வாளால் வெட்டுப்பட்ட குறட்டினைப் போன்று மறவர்பெருமகன் போரில் வடுப்பட்டான் *[பதி.67:16]*.

**பாசறை** - படைவீடு. பொன்னாற் செய்யப்பட்ட தும்பையுடனே பனந்தோட்டைச் செருகிப் போர் மறவர் வெறியாடும் குரவைக் கூத்தொலி, கடலொலி போல், கிளர்ந்து பொங்கப், படைப்பெருமையால் பகைவருட்கும் மதிப்புடையது பரந்து கிடக்கிற பாசறை - படைவீடு *[புறம்.22:25]*. வெண்கொற்றக்குடை திங்கள் போல் ஓங்கிச் சேய்மையில் விளங்க, நல்ல புகழைவிரும்பி வெல்லும் போரினைச் செய்யும் பாசறையின் கண்ணே இருத்தலல்லது, நகரின்கண் இருத்தலை உடம்படான் நலங்கிள்ளி *[புற.31:6]*. படைக்கலத்தினையுடையோர் தாதெரு மறுகில், பாசறைக்கண்ணே, பொலிவு பெறப், பசிய இலையை இடையிட்டுத் தொடுத்த மலராத முகையினையுடைய மாலையினது பந்து போன்ற, தசையொடு கூடிய பெருஞ்சோற்றுத் திரளையால், பாண் சுற்றத்தையூட்டும் தலைமையையுடைத்து, வெம்முனை *[புற.33:1]*. படைத்தொகுதி இடமில்லாதபடி தொக்க, அகன்ற இடத்தையுடைய பாசறையின் கண், போர்க்களம் தமதாக்கிக்கொள்ளுதற் குரியோர் ஒருவருமின்றிக், கண்டார்க்கு அச்சம் வர பூசல் உடனே மடிந்தது *[புற.62:11]*. **கொல்யானை** புண்பட்டு வருந்தும் கொடியெடுக்கப்பட்ட பாசறையின்கண், குருதிப் பரப்பின்கண்ணே யானையைக் கொன்று புலாலையுடைய போர்க்களத்தையுண்டாக்கியவன், உறையூர்ச்சோழன் *[புற. 69:9]*. பாசறையீரே! வள்ளல் தலைவன் போரில் பட்டொழியத் துடியன் கையது, அவனது வேலாயிற்று. பாணன் கையது தோலாயிற்று, எனக் கொடையும், படையும் சுட்டிப்புகழ்ந்தார் அரிசில் கிழார் *[புற.285:1]*. பாசறையின்கண், போருக்குரிய அடையாளப் பூக்கோள் நாள் இன்று, என்று, முரசொலிமுழக்கிக் காட்டும் *[புற.289:8]*. வெண்குடையாகிய முழுமதி, மேனின்று நிலவொளி தரப், பலரும் சேர்ந்து தங்கின, கடல் போன்று பரந்த பாசறையின்கண், புதிய படைக்கருவிகளை ஏந்திய கூற்றுத்தொழில் செய்யும் ஆடவர், தம்மவர், பிறர் என்று அறிய முடியாது மயங்கினர் *[புற.294:2]*. மணமுடியாத குமரிமகளிரது கூந்தல் பிற ஆடவரால் தீண்டற்கரியது போலப், பகைவரால் தீண்டற்கரிய முள்வேலியையுடைய ஆரவாரமுடைய பாசறையில் பல்வேறு வகைப்பட்ட மள்ளர் இருந்தனர் *[புற.301:4]*. நேற்று என் தமையனைக் கொன்றவனது தம்பியோடு நாளை ஒருபடித்தாகப் போர் செய்வேன், எனக் கூறி, உண்ணுவதுஞ் செய்யாது, தன் பரியைச் செலுத்தும், அவன் கூறியது, இரண்டுபடாதென, வேந்தன் பாசறை நடுங்கியது *[புற.304:10]*. 'நல்லபாம்புறையும் புற்றுப் போலவும், கொல்லும் ஏறு திரியும் மன்று போலவும், பாசறைக்கண்ணே பெருவலியோடுள்ள தலைவன், பிறரஞ்சும் பேரொளியெனத் தலைவன் திகழ்ந்தான் *[புற.309:5]*. ஞாயிறு போன்ற, மணி செறிந்த, மதி போன்ற, வட்டமான, ஆரம், மார்பிற் புரளுஞ் சான்றோனது பாசறையில், பலிபெறும்முரசம் முழங்கப் பொழிலகம் பரந்த, தெய்வம் உருக்கொண்டாற் போன்ற தானைக் கூட்டம் தங்கியது *[புற.362:3]*. அன்பில்லாத அம்பை செலுத்தப், பகைவர் உயிரை இரையாகச் கொள்ளும் பாசறை முரசு ஆரவாரிக்கும், புகழை விளைக்கும், *[புற.371:12]*. விளங்கும் வாளின் ஒளிவெற்றியுண்டாக, மின்னலை வெளிப்படுத்த, அம்பாகிய மழைத் துளியைப் பொழிந்தது பாசறை *[புற.372:4]*. முரசம், இடியோசையாக, வேழம் முகிலாகத், தேரும், மாவும் துளியாக, அம்புக் காற்று பாசறையில் வீசும் *[புற.373:4]*. காப்புடைய பாசறையில் முரசமொடு, வலம்புரி ஆரவாரிப்ப, இரவு பெயருங்காலையில், வேலொளி, இருளை அகற்றும் *[புற.397:7]*.

பெரிய கதவுகளை இடித்தழித்தமையால் நுனை முறிந்த கொம்பொடு, மதநீர் வடிந்து, கடுஞ்சினங்கொண்டு, காவல் மரங்களை அழிக்கும் களிறு பாசறையில் முழங்கும் *[பதி.16:8]*. பல நாளாகப் பகைக்கொடுமையினால் பாசறைக்கண்ணே பொருந்திக் கண்துயிலுதல் அரிதாகலினால் சேரனதுகண் சிறிய அளவு துயிலும் இயலாது, கோடுகளின் முழக்கம் எழுப்பும் பெருமை பொருந்திய போர்ச்செல்வத்தோடு பொருந்தியது *[பதி. 50:23]*. 'வாளால் வெட்டப்பட்ட களிற்றால் புலால் நாற்றம் வீசும் பாசறைக்கண், விழாக்காலம் போலும் சேரனது மகிழிருக்கைக்கண், பாடினி, அவனது ஒளிகாலும் வேலைப் பாட, அவனது கொடைப்புகழ் தன்னை அழைக்க, அங்கு வந்தனள் *[பதி.61:15]*. 'நெய்தல் இதழ்போலும் வண்ணமும், கார்போலும் கொடையும் உடைய அண்ணலே! புகழ் மேம்படும் நின் பாசறைக்கண், என் சுற்றத்தின் பசி களையும் பொருட்டு, நின்னைக் காண வந்துளேன்', எனக், காட்சி வாழ்த்தாகச் செல்வக்கடுங்கோவைக் கபிலர் பாடினார் *[பதி.64:20]*. கார் மழைமுன் கொக்கொழுங்குபோலே, சேரன் களிறு, தோல் தொகுதிகளின் முன் தேர்க்கொடி பறக்கச் செல்வது, காணபோர்க்கு இனிது. ஆயின், அவனது கடுஞ்சினம் எதிர்ந்து மாறுகொள், வேந்தர் பாசறையோர்க்கு இன்னாது

[பதி.83:9]. அடிக்கப்படும் முரசொலி போன்று கார்மழை முழங்கினும் கட்டுத்தறியினின்று நீங்கிச் செல்லும் போர்ப்பயிற்சியுடைய யானை மாற்றார் காவற் பாசறையைத் தனதாக்கிக் கொள்ளும் [பதி.84:5]. பல்வேறு வகையான முரசங்கள் முழங்கும், வரிசையான் கிடுகுகளையுடைய பாசறையில் களிற்றின் மேல் வெல்லும் கொடியசையும் [பதி. 88:17]. நின்ற நிலை மாறாத மைந்தருடைய மாறுபாடு கெடக் கட்டுத்தறியை அழித்து மதயானை அளவிடமுடியாத எல்லையினையுடைய பாசறையில் முழங்கும் [பதி.தி.4:10].

மன்னன் ஒரு கையைப் படுக்கையில் வைத்து, ஒருகையைத் தலையொடு சேர வைத்து, வரும் போர்குறித்து நெடிது நேரம் சிந்தித்துப், பின் பகைவரைக் கருதிக்கருவி கொள்ளும் அக்கையால் தலைமாலையை வெற்றிக் கொள்ளுமாறு திருத்த முரசு முழங்கும் பாசறை பகையரசர் நடுங்குவதற்குக் காரணமாயிற்று [முல்.79]. தமக்குப் பணிந்தோரது நாடு தாம் ஏவியபடி நடப்பப், பணியாதோரது நாட்டைப் பணித்துச் சிறை கொள்ள வேண்டியமைந்தது பருந்தும் பறவாத காவற்சி மையத்தையுடைய பட்சறை [மது.231]. பக்கத்தே சரிந்து வீழும் துகிலை இடப்பக்கந் தழுவி, வாளைத் தோளில் கோத்த தலைவன், வெண்குடை, காற்று வீசும் துளியை மறைப்ப, நடு இரவிலும் தூங்காது, சிலரொடு சிந்தித்துப், பலரொடு மாறுபட்ட பாசறையில் திரிந்தான் [நெடு.188]. மனக்கவலை, பேரெரிபோல் பொங்கப், பகையுள்ளத்தோடு தலைவன் பாசறையிடத்துள்ளான். அவன் வாடைவருத்தவும், தன் தலைவியது தோளை உள்ளான் போலும் [நெடு.வெ.4:4].

நள்ளிரவிலும், யானையின் மணியொலியோட, கேடகத்துப் பொழியும் அம்புகளின் ஒலியும், முரசின் முழக்கமும் உடையது, சினவேந்தனது பாசறை [அக.24:18]. பகைவர் வணங்கித் திறையாக மருதநிலம் சூழ்ந்த கொடியசையும் எயிலைக் கொடுக்கவும், வேந்தன் கொள்ளானாகப், பாசறையில் அவன் தானை சினமிக்க, மேன்மேலும் போரின்கண் மனத்தைச் செலுத்தியது [அக.84:17]. மழை சூழ்ந்த இரவில், பரதவருடைய கடலில் மடுத்த அம்பியிலுள்ள விளக்கம், வேந்தனது பாசறைக்கண்ணுள்ள ஆடும் இயல்பினையுடைய யானையது முகபடாத்தின் ஒளிச்சுடர் போலத் தோன்றும் [அக.100:8]. 'பகைவர், நல்ல அணிகலன்களைக் களிற்றொடு திறையாகக் கொடுத்து வணங்கினராயின், வேந்தனும் நிலம் வருந்தும் பெருந்தானையொடு ஊர் மீளுதல் உண்மையாகும். எனவே. பாசறை வருத்தம் நீங்கக், காதலி இன்பமடையத் தேரினைக் கடாவுக, பாக!', என்று, தலைவன் பாகனிடம் கூறினான் [அக.124:8]. இடியேறுமுழங்கினும், அதற்கு எதிராக முழங்கும் களிறு திரியும் பாசறைக்கண் போர்வெட்டெழுந்த மள்ளர் வாண் முகஞ்சிதையப் பகைவரை அழிக்கச், சிந்திய குருதி, மானடிபதிந்த பள்ளங்களில் நிறைந்து, வானத்துமீன் போல இமைக்கும் [அக.144:13]. உலகம் முழுவதும் நிழல் செய்த வெண்குடையினையும், கடல் போன்ற படையினையும், செருக்கிய பரியினையும் உடைய பாண்டியன் போரில் முயன்று வென்ற, அகன்ற பெரிய பாசறைச் சென்று தலைவன் வினைமுடித்தான் [அக.204:3]. வானமும், களிற்றின் கூட்டம் குளிரப் பெய்து நில்லாது; வேந்தனும் பகையொடுமாறுபட்டு நெடுவேல் இமைக்கும் பாசறைக்கண்ணிருந்து வெல்புகழ் விரும்பித் துயில் செய்யான்; மாரியும், மாலையுங்கண்டு தலைவி தமியளாய் என்னாவளோ?' என்று, தலைமகன் நினைத்தான் [அக.214:6]. 'உயர் நடையினையும், காய்சினத்தையும் உடைய யானைகள் இராக்காலத்தே சூழ்ந்து நிற்கப், பகைவர் அஞ்சுவரத்தக்க தானையுடைய வேந்தனின் பாசறையிடத்தாராய நம் தலைவர் நம் துன்பியல் அறியாராயினும், தம்மியலாயினும் அறிந்துளாரோ?' என்று தோழியிடம் தலைமகள் வினாவினாள் [அக.264:15]. 'காயுஞ்சினமுடைய வேந்தனது பாசறைக்கண்ணே நெடிது தங்கி நம் துன்பினை அறியாத அறனிலாத தலைவரை எண்ணிய வாடையொடு, தனிமையொடு, பொருது பொறேனாயினேன்', என்று தோழியிடம் தலைமகள் கூறினாள் [அக.294:12]. 'கார் தோன்றிய பொழுதிலே நிமிர்ந்த கொம்புடைய யானையையுடைய அரசனது பாசறைக்கண்ணே, வினையினால் வேற்றுப்புலத்துத் தங்கி, நமக்கு அருளாதோர், அறனுடையரல்லர், என்று, நம் துன்பறியாளாய் எம்மை நொந்து வெறுப்பளோ?', எனத், தலைமகன், தன்நெஞ்சிற்குக் கூறினான் [அக.304:17]. 'மிக்க வலிமையையுடைய யானை, போர் வேட்டு மாறுபடும் பாசறையில் முரசம் இடியென முழங்க, வேந்தன் வென்று கொடி உயர்த்தினன்; இனித் தலைவியினது நுதல் பசப்பு எங்குத் தங்கும்?', என்று உழையோர் உரைத்தனர் [அக.354:1]. 'தோழி, நம் தலைவர் வெஞ்சினமுடைய வேந்தனது பாசறையின் வெற்றி வேட்கையொடு நம்மை நினையார். கொலை குறித்தன்ன மாலை விரைய வர, அதனைக் கடத்தலோ நமக்கரிது', என்று, தலைமகள் தோழிக்குரைத்தாள் [அக.364:10].

மூவன் என்பவனைப் போரில் வென்று அவனது பற்களைப் பிடுங்கி வைத்திழைத்த வாயிற் கதவினையுடைய தொண்டி நகரின் தலைவனாகிய பொறையனது பாசறையில் நெஞ்சு நடுக்கத்தால் துயிலாத மறவர் துயிலுமாறு மதயானை சினந்தணிந்தது [நற்.18:5]. 'நம் மடந்தை, சிறுகப் பேசும் தன் புதல்வனாகிய நற்றுணையினையுடையள். ஆயின், யாம் கூதிரொடு வாடைக் காற்றலைப்ப மயங்கித் துணைஇன்றித் தமியேமாய்ப் பாசறைக்கண் இராநின்றேம்', என்றான், தலைமகன் [நற்.341:10]. 'மன்னர் போரிலே மடிந்த பாசறையின்கண்ணே, களிறு படப் பொருதார் புண்ணுற்றுக் கிடந்தாரைப், பேய் காத்து நின்றார் போலத், தோழியின் பின்நிற்கும் நம்மிடத்துப் பரதவர் மகள் என் நினையுமோ', என்று, தலைமகன் தோழிகேட்பத் தனக்குள்ளே சொல்லிக் கொண்டான் [நற்.349:6]. 'தோழி! தலையாலங்கானத்துச் சென்று

தங்கிய வேற்படையையுடைய செழியனுடைய பாசறையில் உறைகழித்த வாளைப் போன்று மின்னிக் கடுமழை பொழியும். எனவே, அருஞ்சுரமிறந்தோர் விரைய வருவர்', என்று, தோழி தலைவிக்குரைத்தாள் *[நற்.387:8].*

கார் வருங்காலம் என, மடந்தை நீ, என்னைப்பிரிய விடாய். போருடைய வேந்தனது பாசறையிடத்துப் பகைமன்னன் வாரான், என, யான் செலவழுங்கினேன்', என்று தலைவியிடம் தலைமகன், கூறித் தேற்றினான் *[ஐங்.427:3].* 'பாசறையிடத்து வேந்தனுக்கு உற்றுழி உதவியபின், காதலுடைய நாட்டிற்கு மீண்டு வரும்போது, நன்கு காண்குவம், மாயோயே!' என்று உருவு வெளிப்பாடு கண்டு தலைவன் கூறினான் *[ஐங்.446:3].* 'வேந்தனும் பாசறை முனியான். வெற்பனது தூதும் தோன்றாது. வாடையும் நம்மை வருத்தும். எனவே, யான் இரங்கத்தக்கேன்', என்று, தலைவி கூறிக்கொண்டாள் *[ஐங்.460:1].* 'கார் தொடங்கிற்று ஆதலின், வெற்றி வேந்தன் பாசறையிடத்தோர் நின்னைத் துறந்து அமைதியுற்றிரார். கவலற்க', என்று தலைவியைத் தோழி வற்புறுத்தினாள் *[ஐங்.461:5].* 'அகன்ற பெரிய பாசறையிடத்து நீண்ட காலம் தங்கி விட்ட தோன்றலே! நீ வந்ததனால், தலைவியது பசந்த கண், சுனைக்குவளை போன்று, பழைய அழகினைப் பெற்றது', என்று தலைவனிடம், தோழிப் உரைத்தாள் *[ஐங்.500:4].*

சிலர், யானைகளை வழியினின்றும் அகற்றி, மரங்களில் கட்டி, உணவாகக் கரும்பை முறித்துக் கொடுப்பார். சிலர், குதிரைகளை வழியினின்றும் நீக்கினர். சிலர் தேர்களை வழியினின்றும் போக்கி நிறுத்தினர். இவை பரந்து காணப்பட்டமையால் திருப்பரங்குன்றத்தின் கீழ் நிலப்பரப்பு, பாண்டியனது பாசறை போலத், தோன்றியது *[பரி.19:35].*

**பாசி - 1. கீழ்த்திசை, கிழக்கு.** தொல்நாண் மீன் (மிருக சீரிடம்) துறையிடத்தே தாழப், பாசி - கீழ்த்திசை - செல்லாது, வடதிசையிற் போகாது நிலத்திற்கு விளக்காகக், காற்றாற் பிதிர்ந்து, ஒரு மீன்வானத்தினின்றும் வீழ்ந்தது. அதனால் மலை நாட்டு மன்னாகிய மாந்தரஞ்சேரல் நோயிலனாகப் பெறின் அழகிது என அஞ்சினேம்', என்று கூடலூர் கிழார் பாடியுள்ளார் *[புற.229:9].*

**2. நீர்ப்பாசி.** 'என் அரையில் உடுத்தியிருந்த, பழைய, நீரின் மேற்படரும் பாசி - நீர்ப்பாசி - போன்ற கந்தலுடையினைக் களைந்து, அழகிய மலர் போன்ற புத்தாடை வழங்கி, மட்டோடு, ஊனும், துவையுங் கலந்த உணவினை, வெள்ளிக்கலம் பரப்பி ஊட்டிப், பொருட்குவையினையும் நல்கினான்', என, இயன்மொழித்துறையில் ஔவையார் அதியமானைப் பாடினார் *[புற.390:14].* 'யான் சென்று நின்ற அளவில் நீர்க்கேணியிலுள்ள பாசியின் வேரையொத்த கந்தலாடையினை நீக்கிக், கரையுடைய நுண்ணிய நூலால் செய்த ஆடையை உடுத்தித், தேறலைப் பொற்கலத்தில் ஊற்றி உண்ணப் பண்ணிப், பெருவிருந்தளித்தான்', எனப், பொகுட்டெழினியை ஔவையார் பாடினார் *[புற.392:13].*

'கொட்டைப் பாசிவேர் போன்ற, மாசுபடிந்த, தையலையுடைய, சிதைந்த ஆடையினைக் களைந்து, முடிச்சுக்கரையுடைய, பட்டாடையினையுடுத்திப், பொற்கலத்துத் தேறல் தந்து, பொற்றாமரையைப் பொருநனது தலைபொலியச் சூடிப், பொன்னரி, முத்துமாலையினைப் பாடினியணியச் சூடிப், பரி பூண்ட தேர், யானை, ஆகியவற்றை நாட்டொடு தந்து விடை கொடுப்பான், கரிகாலன்' *[பொரு.153].* 'கொட்டைப் பாசி போன்ற சீரையாடையை நீக்கிப், பாலாவி போன்ற நூலுடையுடுத்தி, ஊன்சோற்றை மதியும், மீனும் போன்ற பொற்கலம் பரப்பி உண்பித்துப், பொற்றாமரையும், பொன்னரிமாலையும், முறையே, பாணன், பாடினி அணியச் செய்து, பரிபூண்ட தேரில், பரிசில், பிறவுடன் இளந்திரையன், அவர்கட்கு விடைகொடுப்பான் *[பெரு.468].* 'சாரலில், வீழ்ந்தோரை மறைக்கும் ஆழ்ந்த குளத்தருகே, வழுக்கு நிலத்தை மறைத்த, நீர்ப்பாசி, அடிபெயர்க்கும் அருவழியுடைத்தாதலின், சிறு மூங்கில், வேழம் இவற்றின் கோலை ஊன்றிச் சென்மின்', எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர். *[மலை.221].*

ஞாயிறு காய்தலால் அருவி இல்லையாகச், சுனையினைத் துழாவி, நீரில்லாமையால் பாசியினைத் தின்ற யானை, பிடியுடன் தளர்ந்தொடுங்கியது *[அக.91:5].* சேம்பினது அகன்ற இலையுடன் கூடிய, பாசியினையுடைய நீர்ப்பரப்பில், குட்டியுடன் கூடிய பெண்ணின் பசி களைய வேண்டி, ஆண்நீர்நாய், வாளைமீனுடன் போராடிக் கலங்கியதால், மகளிர் நீர்கொள்ளாது, தம் குடத்தினை வைத்துவிட்டுத், தம் கணவரது பரத்தமையைப் பாடிக், காஞ்சி நிழலில் குரவையாடுவர் *[அக.336:2].*

பசலை, காதலர் தொட்டகாலத்து நீங்கி, விட்ட காலத்துப் பரத்தலான் அது கேணியின் நீர்த்துறையிடத்துப் பாசி போன்றது *[குறு.399:2].*

கான்யாற்றின் பாசி, நீரலையால் எங்கும் பரவுமாறு, அருவிபாயும், நீர்த்துறையில் சென்று, புலியொடு போர் செய்து புண்பட்ட யானையின் கொம்பிற்கு அவாவிய கானவர், அம்பினை ஏவினார் *[நற்.65:3].*

மழை பொழியும் குன்றத்திடத்து நனைந்த வாளுடன், நீர் நிலையில் நடந்தமையால் பாசி சுற்றிய கழலினனாய்த் தலைவன் துளி படிந்த கச்சினனாய்க், காவலன் போன்று நின்றான். *[ஐங்.206:4].*

**பாசு - 1. பசுமை.** முதுகுடுமிப் பெருவழுதி பகைவர் நாட்டில், கடல் போலும் படைபரக்கப், பாசு - பசுமை - ஆகிய விளை நிலங்களையுடைய எயில் பல கொண்டு, பெற்ற

நன்கலங்களைப், பரிசிலர்க்கீந்தான் [புற.6:14]. கார் காலத்து, நறிய கடம்பினது பாசு இலையோடு விரவிய மாலையையுடையவன் முருகன் [புற.23:3]. பாசு இலையால் தொடுக்கப்பட்ட தழைக்கண்ணியையும், மாசுண்ட உடுக்கையையும், மடித்த வாயையும் உடையவன் இடையன், [புற.54:10]. பாடி வீட்டின்கண் போர்க்களத்தைத் தமதாக்கிக் கொள்வதற்குரியோர் ஒருவருமின்றி, உடன்மடிந்த போரில் பெண்டிரும், பாசு அடகு தின்னாராய்க், குளிர்ந்த நீரின்கண் மூழ்காராய், அவர் மார்பகம் பொருந்தி அக்களத்தின் கண்ணே உடன் கிடந்தார் [புற.62:14]. பிள்ளை வெருகினது முள் போன்ற பல்லையொப்பப், பாசு இலையுடைய முல்லை முகைக்கும் [புற.117:9]. பெருஞ்சித்திரனார் மனைவி மகவு தின்ன,வாடிய முலையளாய்ச் சோற்றுணவை மறந்து, குப்பைக் கீரையின் இளந்தளிர் கொய்து, காய்ச்சிய உப்பில்லாப் பாசு இலையைத் தின்னும், மாசொடு கூடித் துணிபட்ட உடையினளாய், வறுமையில் உழந்தாள் [புற. 159:12]. பாசு இலைப்பலாவின் பழத்தை உண்ட கடுவன், தன் மந்தியுடன், உயர்ந்த மலையிடத்து மூங்கில் நுனியில் தூங்கும் [புற.200:1]. பகைவரது முன்னணியை முறித்து, நிரைகவர்ந்து வரும் இறைவன்பக்க மறவர், பெருக இளைத்தவர். அவர்க்கு மதுவைப் பிழிமின்; ஆட்டு விடையை வீழ்மின்; பாசு தழையால் வேயப்பட்ட பந்தர்க்கீழ் இளமணல் பெய்ம்மின்', என, உண்டாட்டுத் துறையில் பேராலவாயார் பாடுவர் [புற.262:2]. ஆர்க்கால் சூழ்ந்த குறடு போன்று வேல் உடம்பில் தங்கியிருக்க, உயிர் உடம்பினின்றும் புறப்படும் அளவில் கூட, வெகுளி தோன்றப், பாசு இலையுடைய, கமழும் தும்பைப் பூவை நெற்றியில் கட்டினான் ஒரு மறவன் [புற.283:12].

வயல்களில் பாசு அடையிடைத் தழைத்துயர்ந்த நெய்தற் பூக்களை விழவு குறித்து ஒப்பனை செய்யும் மகளிர் தம் தழையுடைக்கு அணி செயப் பறிப்பர் [அக.70:11]. தீ எரிந்தாற்போலும் தாமரையையுடைய வயலில், நெற்பொரி தெறித்தாற் போல், துள்ளும் பல சிறிய மீனை உண்பதற்காகச், சிச்சிலிப் பறவை மணங்கொண்ட பாசு இலையில் வந்து தங்கும் [அக.106:3]. தோழி! தலைவர் வரும் இன்னாத வழியினை நினைந்து, நீர் நிறைந்த கண்ணோடு வருந்தியமை குறித்து, அன்னை, வேறு நினைந்து, வெறியயர, வேம்பின் பாசு இலையுடன், நீலமலர் சூடித், தென்னவனது பொதியில் அருவிபோல், இன்னியம் ஆர்ப்பப், பனந்தோடும், கடப்பமாலையும் கைக்கொண்டு, கடம்பும், களிறும் பாடி, முருகனை வருவித்து, ஆடுதல் நன்றாமோ?' என்று தோழியிடம் தலைமகள் கேட்டாள் [அக.138:5]. கடல் போன்ற நீர்ப்பரப்பில், நிலம் பிளக்க வீழ்ந்த வேரில், முதிர்ந்த கிழங்கோடு, மூங்கில் போன்ற தூம்புடைய காலோடு, களிற்றின் செவி போன்ற பாசு இலையிடையே, கழுவின் உயர்ச்சி போன்ற மொட்டுக்களிடையே, மலர்ந்த, முகம் போன்ற, தாமரை மலர்ந்தது [அக.176:4]. கடையப்பட்ட பஞ்சினது துய் போன்ற மழைத்தூவல் கழியக், கரும்பின் பூ கோடைக்காலத்துப் பூளைப் பூப்போல, வாடைக் காற்றோடசையப், பாசு இலைப் புதலில், பகன்றை, நீல நிறமூட்டப்பட்ட தோலில் பதித்த கண்ணாடி போல, மலர, அவரை, தோன்றி அவிழக், குருகினம் ஒலிக்கக், கணவனைப் பிரிந்தோர் அணி துறந்து நடுங்கப், பனிப்பருவம் வந்தது [அக.217:6]. பாசு அரும்பை ஈன்ற, சிவந்த மொட்டினையுடைய, முருக்கின் போது விரிந்த, அலரியைக் கொத்தி, அதன் பூம்பொடியை உண்டு, மாமரத்தின் உச்சியில் இருந்து குயில்இளவேனியிற் கூவும் [அக.229:16]. அவரை மலருதிரப், பவளம் போல ஈங்கை பூப்ப, பகன்றை மலர, மழை நீரின் புதுவரவு ஒழிய, வயலில் நெல்லொலி செய்யும் பாசு பள்ளங்களைத் துழாவி வாடை விரைந்து வரும் [அக.243:7]. 'பாசு இலை நிறைந்த பயற்றில், ஆடு புகுந்து மேய்ந்ததற்காகக், கோசர் அன்னிமிஞிலியின் தந்தையது கண்ணைப் பிடுங்கினர் [அக.262:4]. 'மணற்குவியல் மேலும், மணலிடத்துத் தாழை மடலிடத்தும், அடும்பின் பாசு கொடிகள் அரிபட ஏறி, இறங்கின [அக.330:14]. உழவர் காஞ்சி மரக் கம்பு நட்டுக், கரும்பின் கழைகளைக் குறுக்கே கட்டி அடைத்து, வயலின் பாசு பள்ளத்தில் நீரைத் தேக்க ஆக்கிய அணையின்மீது கொக்கின் சேவல், கயல் மீன் குறித்து வந்து தங்கும், [அக.346:8].

பாசு அடும்பு சிதைய, நெய்தலையழித்துத் தலைவியின் காம நோய்க்கு மருந்தாகிய, கொண்கன் தேர், வந்தது [ஐங்.101:2]. 'தோழி! பாசு இலைச்செருந்தி பரந்த சேர்ப்பன் வரக் காண்குவம். அதனை, நாமே மறந்தோம்', என்று தோழிக்குத் தலைவி உரைத்தாள் [ஐங்.112:1]. சுனையின் பாசு இலைக்குமேல், உயர்ந்து, வளர்ந்த, குவளை கமழும் கூந்தலுடையாள் தலைவி [ஐங்.225:2].

**2. செவ்வி.** இனிக் கழனிக்கண் ஆம்பல் தண்டால் செய்த வளையணிந்த கையினையுடைய மகளிர் பாசு - செவ்வி - அவலை வாய் மடுத்து உண்டு குளிர்ந்த புனலில் பாய்ந்தாடுவர் [புற.63:13]. நமக்கென்று வரையறுக்கப்பட்ட நாளில், பாசு இழையுடைய மகளிர், பொற்கலத்து ஏந்திய தேறலையுண்டு, மகிழ்ந்து, இரவலர்க்கு அரும்பொருளை ஈந்து, வாழ்தல் வேண்டும். இவ்வகை நல்வினையல்லது, துணை பிறிதில்லையாகும் என்பர் ஔவையார் [புற.367:6].

தலைவியின் ஐயன்மார், இவளது பாசு அணிகட்கு விலையாக அருந்திறலையுடைய கடவுளையுடைய, செல்லூரின் கீழ்ப்பாலுள்ள, கோசரது நியமம் என்னும் ஊரினைக், கொடுப்பினும், கொள்வார் அல்லர்' [அக. 90:14]. புது மணமகள், அடுப்பில் பாலை உலையாக இடப், பிற

மகளிர், நெல்லைப் பாசு அவலாக இடிக்கும் ஒலி கேட்டு அஞ்சிக், குருகு, வாழையின் மடலிலிராது, மாமரத்திற்குப் பறந்து செல்லும் *[அக.141:18]*. தீயில் சுட்ட, கொழுப்புடைய துண்டுகளைத், தினைச் சோற்றோடு கலந்து, கரும்பின் பாகுடன், பாலில் பெய்த செந்நெல் பாசு அவலை உறந்தையினர் பகுத்துக் கொடுப்பர் *[அக.237:13]*.

பாசு அவலை இடித்த உலக்கையை வயல் வரப்பில் வைத்து, மகளிர் விளையாட்டை மேற்கொள்ளுவர் *[குறு.238:1]*.

**3. பசுங்கிளி.** காதலர் வருதற்குக் குறிசெய்த மலையிடத்துத் தினைப் புனத்தே விழுகின்ற சிவந்த வாயையுடைய பாசு - பசுங்கிளி - இனத்தை ஓட்டும் பொருட்டு அன்னை தலைவியை ஏவினள் *[நற்.134:4]*. 'தினைக்கதிர்கள் தலை சாய்த்து அலைதல் கொண்டன. அக்கதிர்களைக் கொய்ய வேண்டிச் சிவந்த வாயையுடைய பாசு இனம் வருவதைத் தடுக்கத், தட்டைபுடைத்துக், கவணுந் தொடுக்க, என, எந்தை கூறினான்', என்று தலைவியிடம் தோழி உரைத்தாள் *[நற்.206:4]*. 'நம் நாடனொடு அருவியாடி, வேங்கைப் பரண் மீதேறிப் பாசு இனம் ஓட்டுவதற்கு நாளையும் நமக்கு வாய்க்குமோ', என்று தலைவியிடம், தோழி கூறினாள் *[நற்.373:7]*. 'தினையை உண்ணும், வளைந்த வாயினையுடைய பாசு இனமே! தலைவனை நீயிர் காணின், தலைவியை இல்வயிற்செறித்திருப்பதனைச் சிறிதளவேனும் அவனிடம் கூறுக, என்று, அக்கிளியினத்திடம் தோழி கூறினாள் *[நற்.376:4]*.

**4. மூங்கில்.** 'நெஞ்சே! பாசு-மூங்கில்-கொண்டு கட்டப்பெற்ற அறை (பாசறை) யிருந்து போர்த் தொழிலுக்குதவி, நாட்டுக்கு மீளும்போது நம் தலைவியது கூந்தல் மணங்கொளக் காண்பேம்', என்று, தலைமகன் தன் நெஞ்சுக்குரைத்தான் *[ஐங்.446:3]*.

**பாட்டம் - 1. மழை.** 'மீன் வேட்டை பொய்யாது, வலைவளம் பெருகப், பாட்டம் - மழை - பொய்யாது பெய்ய, அதனால், பரதவர் மீன் விற்ற பொருளால் கள்ளைப் பருகி மகிழும் புதுவருவாயுடையது ஊர் *[நற்.38:2]*.

**2. தோட்டம்.** 'தோழி! பால் கறந்த கலங்களை மாற்றிக் கன்றுகளைக் கயிற்றிற் கட்டிப், பூத்தொழிலும், கரையுமுடைய நீல ஆடை கட்டிப், பாங்கர்க் கொடியும், முல்லைக் கொடியும் பரந்த பாட்டங்கால் - தோட்டத்திடத்து - சென்று ஆயர் மகளிரோடு விளையாடா நிற்பப், பொதுவன் வந்து, நீ விளையாடும் சிற்றிலை, யானும் சிறிது புனைவேனோ, என்றான்', எனத், தோழியிடம், தலைமகள் சொல்லினாள் *[கலி.111:4]*. 'பாட்டங்கால் கன்றொடு செல்வேமாக எம் கைக்கயிற்றின் ஒரு தலையைப் பிடித்து எம்மை விலக்குதற்கு என்ன பித்தேறினாய்', எனத், தலைவி, தலைவனிடம் கூறினாள் *[கலி.116:1]*.

**பாட்டி** - பாண் மகள். கள்ளுண்டு தூங்கும் கணவர்க்குத் தம் மனையாகிய பாட்டி - பாண்மகள் - ஆம்பல் அகலிலையில், சோற்றைப், பிரம்பின் இன்புளிப் பழத்துடன், வைகறையில் இட்டாள் *[அக.196:4]*.

**பாட்டியர் - 1. பாணிச்சியர்.** புலவரோடு பாணர், பாட்டியர்-பாணிச்சியர் - கூத்தர் வருகவென அழைத்துக் களிற்றோடு, தேர் வழங்கிக், கள்ளொடு, கறியை நெய்யில் பொரித்து வழுதி மதுரையில் உண்ணச் செய்தான் *[மது.749]*.

**2. கிழவியர் / முதுபெண்டிர்.** முகைப்பருவ மகளிர், பூவை நாடும் சுரும்பு போலத், தம்மை விரும்பும் காதற் கணவர் புணர்தற் பொருட்டுத்தமக்குக் காவலாக வந்து பாட்டியர் - கிழவியர் - தடுத்தலைக் கடந்து தப்பிப்போய், மீண்டு வரும் நாவாயை எதிர் கொள்வார் போல் கூடல் நகரில் வையையை எதிர்நோக்கினர் *[பரி.10:37]*.

**பாட்டு - 1. பாடல்.** சேற்றில் பிறந்த தாமரை மலரின் நிரையைக் கண்டாற்போன்ற, ஏற்றத் தாழ்வில்லாத குடியின்கண் பிறந்த வேந்தரை எண்ணுங்காலத்துப், புகழும், பாட்டும் - பாடலும் - உடையோர் சிலரே, ஆயின் தாமரை இலை போல (எழுச்சியும், பயனுமில்லாது) மாய்ந்தோர் பலராவர் *[புற.27:5]*.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனை, பல்யானைச் செல்கெழு குட்டுவனை, களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரலை, கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனை, ஆடுகோட்பாட்டுச் சேரலாதனை, செல்வக்கடுங்கோ வாழியாதனை, பெருஞ்சேரலிரும்பொறையை, இளஞ்சேரல் இரும் பொறையைப் பதிற்றுப்பத்தில் (2-9) முறையே பாடினார் பத்துப்பாட்டு *[பதி.ப.2:14,3:12,4:14,5:24,6:14,7:13,8:12,9:18]*.

**2. இசைப்பாடல்.** இயங்கறங்கக், குறிஞ்சி சூடிக், கடம்பின் முருகனை வழிபட்டு நின்ற குரவையும், உரையும், பாட்டும்-இசைப்பாட்டும் - ஆட்டும் விரவி, நன்னன் பிறந்த நாள் ஆரவாரம் போலச் சேரிதோறும் கம்பலை எழுந்தது *[மது.616]*.

'பகைவர் முதுகிட்ட அளவிலே, வெற்றி தோன்ற ஆரவாரிக்கப் பொறாது, மீண்டு வந்து உயிர் கொடுத்த, நாணத்தையுடைய மறவரது கெடாத நல்ல புகழினையுடைய, பெயரெழுதி நட்ட, முதுகிட்டவரைப் பழிக்குங்கற்கள், பல. அத்தகைய கல்லிற் கழிந்தோர்க்குத், தாளத்தையுடைய நும் பாட்டு விருப்பமாக, நும் யாழை இயக்கிச் செல்மின்', எனக் கூத்தரை ஆற்றுப்படுத்தினர் *[மலை.390]*.

'அகவன் மகளே! பாட்டைப்பாடுக! இன்னும் பாட்டைப்பாடுக! பாட்டை மீண்டும் பாடு', என்று கேட்டு, தோழி அறத்தோடுநின்றாள் *[குறு.23:3,4,5]*.

'வெகுளக் குறித்தாரையும் உவகைக் கூத்தாட்டும் இயல்புடையாய்! யான் பாராட்டும் பெரிய பாட்டுக்களோடு தாய் வழங்கும் பாலையும் பருகுக', எனத், தாய், தன் புதல்வனை நோக்கிக் கூறினாள் *[கலி.85:35].*

தலைவியது கண்ணியல்பைக் கண்டு ஏத்தித் தலைவன் பாட, அப்பாட்டுக் கேட்டு, வேறொருத்தி, அவனோடு கூடக் கருத, அதனைக் கண்ட தலைமகன், தன் தலைவியைச் சார்ந்து நடுக்குற, அவள் பகை கொண்டு தன் மாலை பரிந்தாள் *[பரி.7:66].* 'முருகன், கேளிர் வந்து புணர்ந்து, பின் நீங்காமைப் பொருட்டு, யாழை எழுவித் தன்னைப் பாடுகின்ற பாட்டை விரும்புபவன் *[பரி.14:24].* 'பாணா! தலைவனின் உடம்பிலுள்ள வடுக்கள் அவனது பரத்தமையைப் புலப்படுத்த அறிந்தேம், எனவே, நீ பாடிய பாட்டுப், பொய்ம்மிகுதியை உணர்த்திற்று', என்று தலைவி பாணனிடம் கூறினாள் *[பரி.18:21].*

**3. ஒலி.** மலையினின்று வீழும் அருவிப் பாட்டொடு-ஒலியொடு-வண்டின் ஒலி கூடி, முழவுடன் கூடிய யாழொலிபோல ஒலிக்கும் *[அக.318:5].*

அருவியது பாட்டு மிக்க மலை இடத்தில் உண்டாகிய வாழைக்கனியை மந்தி கவர்ந்துண்ணும் *[நற்.251:1].*

**4. வசைச்சொல்.** 'புதிய மலர்களை ஆராய்ந்து நுகரும் வண்டு போலப், புதிய பரத்தயரை நாளும் நுகர்தற்கு அவர் இருக்கின்ற இடந்தோறும், நின் தேர் செல்லும் தெருவெல்லாம், நின் பரத்தமை கூறிய பாட்டு-வசைச்சொல்- ஆக அமைந்த நின் மாயச்செயலை, நன்கு தெளிந்தேன்', என்று தலைவனிடம், தலைமகள் கூறினாள் *[கலி.98:6].*

பாடல் - 1. பாடுதல். வானை முட்டிய புகழினையும் வென்றியையுமுடைய வஞ்சியின்கண் பாடல் - பாடுதல் - பெறுந்தகுதியமைந்த அரசனும், பகைமையால் வெம்மையையுடைய அரணையழித்து, வலியோடு எதிர்ந்தோருடைய புறக்கொடையைப் பெற்றான் *[புற.11:7].* 'ஈயென்று இரத்தல் அரிது. நீ பரிசில் நல்கினும், நல்காயாயினும் நின்புறக்கிடாத ஆண்மையினையும், அருவி பாயும் நின்கொண்கானத்தினையும் பாடல் எனக்கெளிது', எனக், கொண்கானத்துக்கிழானை மோசிகீரனார் பாடினார் *[புற.154:13].*

முழவொலிக்கும் திருநாள் நிலைபெற்ற தெருவினையும், துணங்கைக் குரவை முதலிய கூத்தினையுடைய சேரியினையும், இனிய புதுவருவாயினோடு பல குடித்திரள் கூடிய, பாடல் சான்ற பெருமையையும் நாடு பெற்றிருந்தது *[மது.331].*

ஆட்டன் அத்தியைக் காவிரி கவர்ந்தமையின், அவனைத் தேடி, வாடிய, ஆதிமந்திக்கு மருதி கடல் புகுந்த, அவள் கணவனைக் காட்டித், தான் கடலில் மாய்ந்து, பாடல் சால் சிறப்பினைப் பெற்றாள் *[அக.222:11].*

புலவரால் பாடற்கமைந்த, குறையற்ற சிறிய அடிகளுடனே, அழகமைந்த கண்ணையுடையவள் தலைவி *[நற்.256:1].* 'பாணா! பரத்தையர் சேரிதோறும் செல்லும் தேரோற்கு ஒத்தனம் அல்லோம். நீ, யாழ்வல்லையாயினும், எம்மனைக்கண் நின்று பாடல் செய்யாதபடி, நெடும்பொழுது நிற்கும் தேரில் பூண்ட குதிரைகளும் பிணித்திருத்தலை வெறுக்கின்றன. யாம் விரும்பாத நிலையில் பயனில்லன பேசல் வேண்டா. செல்க', என்று பாணனிடம் தோழி உரைத்தாள் *[நற்.380:10].*

'மன்னவன் தொழிலிலிருந்து யான் விடுதலை பெறுக. செம்முல்லையின் முகை வண்டவிழ்ப்பப் பாடல் சான்றன. எனவே, ஒளி நுதலாளை இனிக் காண்போமாக', என்றான், தலைமகன் *[ஐங்.447:4].*

பாடல் சால் சிறப்பினையுடைய சினையில், சுனையில் உள்ள மலர்களைத் தேடிக் கொளல் வேண்டாது மகளிர் மலைந்து கொள்ளுமாறு தாமே கொடுப்பன போலத், துறைதோறும் மலர்களைத் தாழ்ந்து கொடுக்கும் *[கலி.28:1].*

பாடல் அமைந்து பல புகழும் முற்றுப்பெற்ற கூடற்கும் பரங்குன்றத்திற்கும் இடைநின்ற நிலம் மிக அணித்தாயினும், மகளிரும், மைந்தரும் நெருங்கிவிளையாடுதலால், மிகச் சேய்த்தாகத் தோன்றியது *[பரி.17:22].*

**2. இசைப்பாடல்.** ஆதன் ஓரி, பொன்னரி மாலையையும், பிற அணிகலங்களையும், யானையணிகளோடு வழங்க. அத்தகைய கொடை பெற்றமையாற், பரிசிலர் இன்னியங்கறங்க, ஆடலும், பாடலும் மறந்தனர், என்று. வன்பரணர் பாடுவர் *[புற.153:12].*

'அரவெறியும் இடி போன்று, பகைவர்க்குத் தோன்றிச், செருவத்துக் கடியையாகியநீ, விறலியர் பாடல் அமைய நெடிது தங்குதலின் அண்ணல் மெல்லியன் போலும், என உன்னையறியாதார் உள்ளுவரோ என்று ஆடு கோட்பாட்டுச் சேரலாதனை நச்செள்ளையார் பாடினார் *[பதி.51:22].*

சேர, சோழ, பாண்டியராகிய மூவருங்கூடி அரசவையிலிருந்த தோற்றம் போலப், பாடலும், பண்ணும், கூத்தும் உடைய கூட்டத்தின் தலைவனே! எனக் கூத்தர் தலைவன், விளிக்கப்பெற்றான் *[பொரு.56].* சிறு துவலையை, வாடைக்காற்றுப் பரப்புகையினால், கன்னல் தண்ணீர் உண்ணாராய்ப் பகுந்தவாயினையுடைய தடவின் நெருப்பார, ஆடல் மகளிரது பாடலை யாழ் தன்னிடம் கொள்ளும்படி, குளிரால் தன் நிலை குலைந்த யாழ் நரம்பை முலையின் வெப்பத்தில் தடவிச், சிறிய யாழைப் பண்முறையில் நிறுத்தக், காதலரைப் பிரிந்த மகளிர் வருந்தக், கூதிர் வந்தது *[நெடு.67].* பெருந்துறைஇடத்துத் தம் துணைவரோடு கூடிய மங்கையர், பட்டாடை நீக்கிப், பருத்தியாடை உடுத்தி, மட்டினை நீக்கி, மதுவுண்டு, இருவர் மாலையும் மயங்கப் பாடலைக் கேட்டு, நாடகத்தைக் கண்டு, நிலவின் பயனை நுகர்ந்து துயின்றனர்

*[பட்.113].* தம் கணவர், மார்பிலே புலி பாய்ந்ததால், உண்டாகிய புண்ணை ஆற்றுதற்குக் காவல் என்று கருதிக் கொடிச்சியர் பாடல் பாடினர் *[மலை.304].*

'நீ பகல் வரின் அலருக்கு அஞ்சுதும்; இரவு தனிவரின் புலியஞ்சுதும்; தலைவி பலநாள் கூட்டத்திற்காகக் குறிசெய்த தினைப்புனத்தில் கிளிகடியப்படும் பாடலும் ஒழிந்தனள். நின் அருளன்றிப் பிறிதொன்றுமிலள்', எனத், தலைவனிடம் தோழி கூறினாள் *[அக.118:13].*

புன்னை மலர்தோறும் சுரும்பும், தும்பியும் சேர ஒலிக்கப், பாடலோடு, யாழ்கேட்டுப் பள்ளி கொள்ளும் திருமாலைப்போலக், கடலும் கண்ணுறங்கும் *[கலி.12?·3].*

'திருமாலே! மண்ணகத்துத் தேவரும், விண்ணகத்_ ு தேவரும் நின்னை நயந்து பாடுவார், தமக்கு முன்னோராகிய பாடுவார் பாடும் வகையே. எம் பாடல் தாமும், எமக்கு முன்னோராகிய அப்பாடுவார் பாடும் வகையே அதனால், நின் தொன்மையும், பெருமையும் அறியாமைக்கண் எம்மொடு அவரிடை வேற்றுமையின்று, என்று புலவர் பாடுவர் *[பரி.3:29].* பரங்குன்றின்கண் ஆடல் பயின்றாரை அவ்வாடல் பயின்றார் வெல்லவும், பாடல் பயின்றாரை அப்பாடல் பயின்றார் வெல்லவும், சூதுவல்லாரைச் சூது வல்லார் வெல்லவும், பிற கல்வியுடையார் இங்ஙனமே வெற்றி பெறவும் இத்தகைய வெற்றிகளால் புகழ் பரவச் சுனைப்பக்கத்தில் கொடி நின்றது *[பரி.9:73].* யாழின் கூறு, மிடற்றுப்பாடல், ஆடல் இவை திண்மையழிப்ப, அழிந்த துனியுடைய மகளிரும், மைந்தரும் கூடுதற்கு ஒத்திருக்கவும், வெற்றி காரணமாக ஒருவரினொருவர் முற்படுதலை நாணிக் கூடாது மெலிவுற்றனர் *[பரி.10:56].* மாலை வர, மதி இருள் நீக்க, வையையிலிருந்து கூடல் செல்லப் புறப்பட்டு, நாளணி நீக்கிப், பூமாலை வேய்ந்து, பாடுவாரது பாடல், பல்லாண்டு முதலிய பரவல், புகழ்தல், ஆடுவாராடல், உரிய தாளம், தேனீயொலி இவை கூடக், கூடல் வண்டு எதிர் கொள்ளப் போயினர் *[பரி.10:116].* ஆடவர் மகளிரோடு நாகரைப் போலக் கூடற்கு, இளமதுவை நுகர்ந்து, தாளமமைந்த பாடலின்பத்தால் தம் செவியை நிறைத்துத், தம் அழகாகிய மதுவை ஒருவரினொருவர் கண்ணாலுண்டனர் *[பரி. 11:69].* பரங்குன்றத்தில் சினையிடத்து மயிலகவக், குயில் கூவக் குழலும், தாளமும் இயம்பப், பாடுவார் பாடலும், முழவும் எதிரொலிக்கும், *[பரி.15:43].*

ஒருபால் பாணர் யாழோசை எழ, அதனெதிர் வண்டிசை எழும், குழலெழ; அதனெதிர் தும்பி முரலும், முழவின் முழக்கெழ அதனெதிர் அருவியொலிக்கும்; பாடலோடு ஆடும் மகளசைய அதனெதிர் பூங்கொடி நுடங்கும்; பாடினி பாலைப்பண் பாட அதனெதிர் ஆடுமயிலது குரலெழும்; இவ்வாறு மாறுமாறாக எழுந்தன்மையையுடையது, முருகனது பரங்குன்றம் *[பரி.17:15].* பூமுடிநாகர் திருக்கோயிலில் வண்டும், தும்பியும் யாழைப்போல முரலும்; மதயானை மழைபோல் முழங்கும்; அருவியும், முழவும் ஒருங்கே ஆர்க்கும்; மகளிரும், மைந்தரும் கூடிச் செய்யும் ஆடலும், பாடலும் தோன்றும் *[பரி.தி.1:54].*

**3. பாட்டு.** எழினியாதன் புகழ், வானத்து மீன் நடுவண வெண்திங்கள் போல் விளங்கித் தோன்றுக. யாமும், பிறரும் வாழ்த்த அவன் புகழ் மேலும் பரந்து செல்ல, அவனது பாடல்-பாட்டு-அமையும் வளன் சிறப்படைவதாக, என வாட்டாற்று எழினியாதனைப் மாங்குடிகிழார் பாடுவர் *[புற.396:31].*

ஆடு, படிந்த, வயலில் நீர் நிரம்பி, ஆரல் மீன் பிறழ, ஏறு பொருத வயலில் உழாது விதைக்கக், கரும்பின் பாத்தியில் பூத்த நெய்தல் எருமைக் கூட்டத்தை இரையாகித் தடுக்கத், துணங்கையாடிய இடத்தில் சிதறிய ஆம்பலை முதிய ஆக்கள் உண்ணத், தெங்கு, மருது, நீர்வாய்த்தலை, பூம் பொய்கையுடைய பாடல் சான்றது ஊர் *[பதி.13:9].* புலவரால் புகழப்படும் பாடல் அமைந்து நாடு முற்றிலும் விளங்கும் உலகறி, புகழ் வாய்ந்தவன், பல்யானைச் செல்கெழு குட்டுவன் *[பதி.24:9].* பாணர் பைம்பொன் தாமரை சூட, விறலியர் ஆரம்பூணக், கடற்போரில் பெற்ற செல்வத்தை, மனங்கொள்ளாத, தன் புகழ் முழுவதையும் கொள்ளாத, பாடலுக்கு, எளிதினில் வழங்கும், கொடையுடைய வாய்மையன், கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் *[பதி.48:6].* பகைவர் வாழியாதனுக்குப் பணிந்து திறைதரின், பல்லுடைப் புலத்தில் ஆக்களை மேயவிட்டு, வயலில் விளைந்த நெல் உதிர்ந்தனவற்றைக் குவியலாகக் காஞ்சிமர நிழலில் சேர்த்திக், கள்ளையுண்டு, ஆம்பல் மலரைச் சூடி, அதனிடத்து வரும் வண்டுகளை ஓட்டும் அவர் நாடுகள் பாடல் மிக்கனவாகும், எனக், கபிலரால் வாழியாதனின் வீரம் பாராட்டப் பெறும் *[பதி.62:19].* 'பகைவர் நின்வழிப்படாராயின், வெள்ளைவரகும், கொள்ளும் வித்தும் கரம்பை நிலத்தையுடையராகச், செந்நெல்லுணவறியாது, தம் பாடல் சான்ற ஊர்களையுடைய நாட்டை ஆளல் இல்லையாகும், எனப், பெருஞ்சேரலிரும்பொறையைப் பெற்றி அரிசில்கிழார் பாடுவர் *[பதி.75:13].*

**4. புகழ்தல்,** புகழ். தாழை அன்னம்போற் பூப்பவும், செருந்தி தங்கம் போல் தோன்றவும், கழிமுள்ளி நீலமணிபோல் மலரவும், புன்னை முத்துப்போல் முகிழ்க்கவும், வெண்மணலில் கடல் நீர் ஏறி இறங்கவும் நெய்தல் நிலம் பாடல் - புகழ்தல்- அமைந்தது *[சிறு.151].*

**பாடலி** - பாடலிபுரம். 'நம் தலைவர் நம்மினும் சிறந்ததாகக் கருதிய பொருள், வானத்துயர்ந்து, பனிபரந்து தோன்றும் இமயமலையையொக்குமோ? (அன்றி), நந்தரது கங்கைக்கரைப் பாடலியில் - பாடலிபுரத்தில் - குவித்து வைத்த செல்வமோ? என்று தலைவி, தோழியை வினவினாள் *[அக.265:5].*

'பாண! காதலர் வரவை நீ கண்டனையா? கேட்டனையா? தெளியச் சொல்லின் நீ யானை படியும் சோணையாற்றங் கரையிலுள்ள பொன் மிகுந்த பாடலி நகரைப் பரிசாகப் பெறுவாய் என்றாள் தலைவி *[குறு.75:4].*

**பாடாண்** - பாடாண் திணை. குழவிநிலை, ஊரொடு தோற்றம், இயன்மொழி, கண்படைநிலை, துயிலெடைநிலை, குடைமரபு, வாள்மங்களம், மண்ணுமங்கலம், பெருமங்கலம் முதலிய பலதுறையுடையது பாடாண் திணை. ஒருதலைக் காமமாகிய கைக்கிளையது புறனாகும்.

**பாடி** - பாசறை. காட்டாறு சூழ்ந்த புறவில், பிடவமோடு, பசிய தூறுகளையும் வெட்டிப், பகைப்புலக்காவலாகிய வேட்டுவ இனத்தின் சிறுவாயிலுடைய அரண்களை அழித்துக், காட்டின் கண்ணவாகிய முள்ளாவிடும் மதிலைக் காவலுறும்படி வளைத்துக் கடல்போல் பரந்த பாடி - பாசறை- அமைத்தனர் *[முல்.28].*

பாசறை-காண்க

**பாடியோர்**- பாடியவர். மலையனைப் பாடியோர்- பாடியவர் - நல்ல நாளன்றாகப் போகிப் புள் நிமித்தம் தடுப்பச், செவ்வியன்றாகச் சென்று, கூறுபாடன்றாகக் கூறினும், வறிதாக மீள்வாரல்லர் *[புற.124:5].*

**பாடினி**-பாண்மகள். மன்னனது மறத்தைப் பாடிய பாடினியும்- பாண்மகளும் - சிறப்புடைய அணிகலத்தைப் பெற்றாள். அவ்வணிகலம் பெற்ற பாடினிக்குப் பொருந்தும் அளவையுடைய பாட்டை வல்ல பாணனும் வெள்ளி நாரால் தொடுத்த பொற்றாமரையைப் பெற்றான் *[புற.11:11,14].* வார்பொருந்த வலித்துக் கட்டப்பெற்ற, மார்ச்சனை செறிந்த, தண்ணுமையையுடைய பாடினி பாடும் வஞ்சிப் பாட்டிற்கேற்ற வலிமையுடையவன் முதுகுடுமிப் பெருவழுதி *[புற.15:24].* ஆண்மை தோன்ற ஆடவரை வென்ற வல்வேற்சாத்தன் மாய்ந்தபின், இளையோர், வளையோர், பாணன், பாடினி பறித்துச் சூடாராக, முல்லையே! நீ, ஒல்லையூர் நாட்டின் கண் பூக்கக் கடவையோ? எனக், கையறு நிலையாகக் குடவாயிற்கீரத்தனார் பாடியுள்ளார் *[புற.242:3].* 'ஆமான் குழவியைச் சிறார் கன்றெனப் பூட்டும் சீறூர் மன்னன், வேந்தன் விடுத்த தொழில் மேல் சென்றான். அவன் வந்ததும், நின் பாடினி மாலையணிய, நினக்குப் பொற்பூச்சூட்டுவன்; பாண! இருந்து செல்க', என ஆலங்குடி வங்கனார் வல்லாண்முல்லைத் துறையில் பாடியுள்ளார் *[புற.319:14].* மாலையராகிய பாடினியும், பொற்றாமரைப் பூவணிந்த பாணரும் அரசிருக்கையில் கலந்திருந்தனர் *[புற. 361:1].* பொன்னரி மாலை பாடினி யணியப், பாணன் பொற்றாமரை அணிய, நறவொடு, ஆட்டின் கொழுங்குறையினை உண்டும், தின்றும், இரப்போர்க்கீந்தும் மகிழப் புரவலன் அவர்கட்குப் பரிசில் நல்கினான் *[புற.364:1].*

களிற்றொடு, வெல்கொடி அசையும் படையோர் உழவ்! பாடினியின் கொடை வேந்தே! ஆணையாழியால் உலக முழுதாண்ட நின் முன்னோர் போல, நற்புகழை நிலை பெறச்செய்து வாழ்க', என, இமயவரம்பனைக் குமட்டூர்க் கண்ணனார் வாழ்த்தினார் *[பதி.14:17].* பைம்பூண் மார்ப! பாடினி வேந்தே! ஞாயிறும், மழையும், காற்றும் செறிந்த நிலப்பரப்பில் காப்பினைக் காணமாட்டாது திசைதோறும் தேடும் மக்கட் கூட்டம் வருக, இந்நிழல், என, நின்வான்தோய் வெண்குடை நுவலும்', என, நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர்க் கண்ணனார் ஏத்துவர் *[பதி. 17:14].* முழவின் தாளத்திற்குத் தக்கவாறு பாடினி, விழவு போன்ற வாழியாதனின் மகிழ்விருக்கையினையுடைய, புலவு நாறும் பாசறையில் பாடுவாள் *[பதி.61:16].* பல வேலையுடைய இளஞ்சேரல் இரும்பொறை, அளித்தல் வல்லன்; ஆதலின், பாடினி,நீ செல்க; அணிகலன் பெறுகுவை!' எனப் பெருங்குன்றூர் கிழார் விறலியாற்றுப்படையாகப் பாடியுள்ளார் *[பதி.87:1].*

மயில் போலும் சாயலுடைய பாடினி ஓடியிளைத்த நாயினது நாப்போலும் சிறிய அடி, அரக்கு உருவினையுடைய செந்நிலத்தே நடப்பதனால், பரற்கல் வருத்த வருந்திய துன்பத்தோடு, மரல் பழுத்தது போலும் கொப்புளங் கொள்ள, நண்பகலில் நடைதவிர்த்தாள் *[பொரு.47].* திருமாவளவன் பரிசிலர் இசை கேட்டு, கந்தலாடை நீக்கிப், பட்டுடை நல்கிப், பொற்கலத்தில் தேறல் வார்த்தளித்துப், பொற்றாமரையைப் பொருநன் சூடப், பொன்னரிமாலையை முத்தமொடு பாடினியணியப், புரவி பூட்டிய நெடுந்தேர், களிறு, நாடு தருதலில் தவிரான்', என அவனது கொடைக் குணம் பாராட்டப்பட்டுள்ளது. *[பொரு.162].*

பரங்குன்றின் ஒருபுறம் பாடினியின் பாலைப்பண் ஒலிக்க, அதனெதிர் ஆடும் மயிலினது அரித்தெழும் குரல் தோன்றும், *[பரி.17:17].*

**பாடு** - 1. ஒலி புனங்காப்போர் கிளிகடி கருவியைப் புடைக்க, வயலின்கண்ணும், கடற்கரையின்கண்ணுமுள்ள புட்கள் எழுமாதலின், இத்தகைய நாட்டின் தலைவனாகிய கோக்கோதையைக், குறிஞ்சி நிலமுடைமையால் நாடன் என்கோ? மருதநிலமுடைமையால் ஊரன் என்கோ? பாடு - ஒலி - முழங்குகின்ற குளிர்ந்த கடலையுடைமையால் சேர்ப்பன் என்கோ?', எனப் பொய்கையார் பாடுவர் *[புற.49:2].* 'பாடு இனிய தெளிந்த போர்ப்பறை ஒலிப்பச், செழியனது பெருமையும், தலைமையும் அறியாராய்ப், பொருவேம் என்று வந்த ஏழரசரையும் தான் ஒருவனாய் நின்று வென்றிகொண்டதை இன்றையின்முன் கேட்டறியோம்', என, இடைக்குன்றூர்கிழார் கூறினார் *[புற.76:8].* பாடு நிறைந்த ஒலிக்கும் அருவியையுடைய மலையமான் திருமுடிக்காரியின் மலையைப் பாடியோர் நாள், புள், பதன் குறைபடச் சென்று, திறனின்றிப் பேசினும், வறிது மீளார் *[புற.124:4].* ஊர் மன்றத்துப் பலாக்கிளையில் வாழும் மந்தி, பரிசிலர் தூக்கிய முழவின் பாடு இனிய தெளிந்த

கண்ணைப், பலாப்பழம் என்று கருதியடிக்க, அன்னச் சேவல் அவ்வோசைக்கு மாறாக ஒலிக்கும் *[புற.128:3]*. பாடு நிறைந்து, மழை படிந்து, ஒலிக்கும் அருவியையுடைய இலங்கும் சிமையத்தது இமயம் *[புற.369:22]*. 'விடியலில் தன்வாயிலன்றிப், பிறிதோர் வாயிலில், என் தடாரிப் பறையின் பாடுகேட்டு, அருள்செய்து, என் வறுமை நீங்கல் வேண்டி, வெளியதுடுத்திப், பசிகளைந்தான் அம்பர் கிழவன்அருவந்தை; அவன் வாழ்வானாக', எனக் கிணைஞன் வாழ்த்தினான் *[புற. 385:4]*. வைகறையில் ஒருகண் மாக்கிணை கொட்டிப் பாடிமிழும் முரசினையுடைய திருக்குட்டுவனின் தந்தையது சிறப்பைக் கிணைஞன், பாடினான் *[புற.394:8]*. வெள்ளியும் வானத்தில் மேல் நோக்கி எழும். பறவைகளும் மரக்கிளைக் கூட்டில் குரலெழுப்பின. பொய்கையில் போதுகளும் மலர்ந்தன. மதியும் ஒளி மழுங்கியது. இரவில் பாடு எழுந்து முரசத்தோடு, வலம்புரியும் ஆரவாரித்தது *[புற.397:4]*.

களிறு, புரவி, தோலொடு சென்று பகைவர் எயிலை வளைத்துப் புறத்தே தங்கியவன், பல ஞாயிறும் திரண்ட மயக்கத்தோடு, பாடு இமிழ்ந்து திரியும் வடவைத் தீப்போலும், வண்ணங்கொண்ட, கடுந்திறலையுடைய சேரவேந்தனாவான் *[பதி.62:7]*.

முருகனது பன்னிருகைகளுள் ஒன்று பாடு இனிதாகி, ஒலிக்கின்ற மணியை மாறியொழிக்கச் செய்தது *[முரு.115]*. குடிலினுடைய முற்றத்தே அவலை யிடிக்கும் உலக்கையது பாடுமிக, அயலிடத்தவாகிய கிளிகள் பகையாக நினைந்து அஞ்சும் *[பெரு.226]*. சங்கின் முழக்கம் அடங்கக், கடையடைத்து மகளிர் தூங்க, அப்ப வாணிகர் கண் மடிய, கூத்தர் துயில் கொள்ளப், பாடு அடங்கிய கடலையொப்பப், படுக்கையில் கிடப்போர் உறக்கங்கொள்ள நள்ளிரவு வந்தது *[மது.629]*. நெடுவெண்முற்றத்து மகரவாயாகப் பகுத்த அம்பண நீர்வீழ்வு, பாடு செறிந்து, மயிலகவ, மலையின் ஆரவாரம் போலக் கோயில் ஆரவாரிக்கும் *[நெடு.97]*. பாடு இனிதாகிய அருவியினையுடைய மலையுச்சியிற் காடு காக்குங் கானவருளர் *[மலை.278]*.

மண்ணகம் குளிர்ப்பக் குளிர்ந்த மழையைப் பெய்து முழவின் குரல் போன்ற ஒலியினையுடைய முகில் தன் பாடு அடங்கியது *[அக.23:2]*. கழியில் மலர்கள் கூம்பவும், கடல் பாடு எழுந்து ஒலிக்கவும், மீனுண்ணும் பறவைக் கூட்டம், புன்னை மரத்துக் கூடுகளிற் சேரவும், வண்டார்க்கவும் மாலை வந்தது *[அக. 40:2]*. தலைவன் (முன்பு) கடல் தன்பாடு அவியத் தோணி கடலில் செல்லாதொழியக், கழியில் சுறா முதலிய மீன் செருக்கித் திரியினும், பெண்டிர் அலர் தூற்றினும் தலைவியைப் பிரியானாகி அடுத்தடுத்து வருவான் *[அக.50:1]*. 'அன்னையே! நம் தோட்டத்திலுள்ள குளிர்ந்த பள்ளத்தே நிறைந்த கூதளம் சிதையுமாறு, வீழும் இனிய இசையையுடைய அருவிப்பாடும், கேட்டாயோ?' எனத், தோழி தன் தலைவியை வினவினாள் *[அக.68:3]*. மூங்கில் துளையிடத்தே காற்றின் ஒலி, குழலிசையாக, பாடு இனிய அருவியின் ஓசை, முழவிசையாக, மான் கூட்டத்தின் கடுங்குரல், பெருவங்கியத்தின் இசையாக, வண்டொலி, யாழிசையாக, மந்தியினம் வியப்புற்றுக் காண, மலையாடும் மயில் விறலி போல் ஆடும் *[அக.82:3]*. பல்லி நற்பக்கத்தே செய்த பாடு உணர்ந்து செந்தினையுண்ண வரும் பன்றியின் வருகையினை நோக்கிப், புனங்காப்போன் பரண் மிசை விளக்கொளி காட்டினான் *[அக.88:3]*. எஞ்ஞான்றும் கல்லைப் பொருது மெலிவுறாத பாடு இனிய (செருப்புடைமையால்), வலிய அடியினை உடையவன் பாணன் *[அக.113:10]*. மன்று பாடவிய, மனைகளும் துயின்றன *[அக.128:1]*. கொண்மூ உறங்குவது போல இருண்டு, கண்ணிமைப்பது போல மின்னி, நீரைக்கொண்டு ஏறுவது போலப் பாடுசிறந்து பரந்த,நிலம் நடுங்க இடித்து, மிக்க நீரைப் பொழிந்தது *[அக.139:3]*. முகில் திரள், கடலில் மிக்குச் சென்று, நீரைப்பருகி, மேற்கெழுந்து, சூழுற்ற பிடித்திரள் போல், இடந்தொறும் பரந்து, பாடு மிகக் கார்ப்பருவம் வந்தது *[அக. 183:5]*. பாணன் என்பானோடு கூடிக், கட்டி என்பான் போர் செய வந்து தித்தன் வெளியன் என்பானது உறையூரின் கண்ணுள்ள நாளோலக்கத்தில் எழுந்த பாடு இனிய கணையொலி கேட்டஞ்சிப், பொராது ஓடிய போதுண்டாகிய ஆர்ப்பினும், தலைவன் பரத்தையோடு ஆடியதால், எழுந்த அலர் பெரிது *[அக.226:15]*. ஞாயிறு ஒளி மழுங்க, மலை ஒளி பெற, வண்டூதத், தாழையில் குருகினம் ஒலிப்ப, அலவன் வளையில் செறியத், திரைபாடு அடங்கப், படகு தொழில் மடியச், செக்கர் தோன்றத், துணைபுணர் அன்றில் மடலகம் சேரக், கழிமலர் குவியப், புன்னை விரியப், பகல் கழிந்து இரவு வந்தது *[அக.260:5]*. அரையில் பூங்கொத்துக்கள் தழையுடன் அசையப், பாடுபரந்தெழும் ஊதுகொம்பொலிக்க, வண்டல் பாவை கொணர்ந்து மகளிர் குரவையயரும் கடற்கரைச்சோலை சூழ்ந்தது வாணன் சிறுகுடி *[அக.269:17]*. பாடு இனிய கிணைப்பறை ஒலிக்கக் கூத்தியற்றும் கூத்தர் கழிந்த மன்றங்காணின், முன் ஆர்ப்புடைய ஊர்க்குத் துன்பந்தருவதாகும் *[அக.301:10]*. முகில் பாடு இமிழும் கடலின்கண் முகந்தெழுந்த முழக்கினோடு, பிடிக் கூட்டம் போல் திரண்டு, களிற்றின் கைபோல் கால் வீழ்த்துப், பனிக்கட்டியுடன் துளிகளைச் சிதறும் *[அக.334:4]*. அலவன் வளையினின்றும் வெளிப்படச், செல்வோர் இன்மையால் துறைபாடு அவிந்தது *[அக.350:5]*. பலரும் ஆடும்ஊசலினது கயிறு போன்று, செல்கையானும், வருகையானும் வருந்தி, அஞ்சியது போர்க்களத்தை வருத்திய மறவர் ஆனிரைகொள்ளும் பூசலிடத்துப் பாடு சிறந்து அடிக்கும் துடியின் வார் போன்று, செறிந்தும், நெகிழ்ந்தும் தலைவனது நெஞ்சம் வாடுதலுற்றது' *[அக.372:11]*. வருடைக்கடாக்களின் பாடு கேட்டு அஞ்சித், தோகை மயில், ஆடும் கலத்து கொம்புபோல ஒலித்துப், பறந்து சென்று, மூங்கிலின்கண் தங்கியிருக்கும் *[அக.378:7]*. 'பலாவின் கனிகவர்ந்த கல்லா மந்தி, கடுவனோடு,

பாடு இனிதாகிய அருவியையுடைய குன்றில் துள்ளியாடும்' [அக.378:23]. காட்டில் கணிச்சியால் குழித்த குழி ஊறல் நீரைக் கொண்ட பாடு இனிய மணி கட்டிய ஆனிரை, வாடிய புலம் புகுந்தது [அக.399:8]. தலைவியின் ஊர் பாடு எழுந்து இரங்கும் கடற்கரைக் கண்ணுள்ளது [அக.400:25].

'இப்பேரூர் தூங்கினும், நொச்சியினது கொம்பு உதிர்த்த மலர்களின் பாடு மிகக் கேட்டு, யாம் தூங்காதிருந்தேம்' எனத், தோழி, தலைவன் சிறைப்புறமாகக், கூறினான் [குறு.138:5]. 'கடல், பாடு அடங்கிக், கழிக்கானல் மயக்கமடைந்து, பொலிவழிந்தது. பனைமடல் சேர்ந்த அன்றிலும் மெல்ல ஒலிக்கும், இத்தகைய மாலையில், நம்தலைவர் வருவர் போலும்', எனத் தோழி உரைத்தாள் [குறு.177:1]. 'வெற்பன் மார்பு புணையாக, மலையில், பகலில் பாடு இனிய அருவியாடுதல் இனிது. ஆயின், இல்லத்தில், இரவில் அன்னை முயங்கப் பொருந்தாக் கண்ணோடு துயிலுதல் இன்னாது', எனத், தோழி தலைவியிடம் கூறினாள் [குறு.353:3]. 'சிறுபிடி போன்றாருக்குத் துணையாகியவனே! கதிரும் ஒளியின்றி மறைந்தது. வாணிகச் சாத்து வந்ததாக ஆறலைப்பாரது தண்ணுமையது பாடும் கேட்பாயாக. எனவே, செல்லாதீர்', எனக், கண்டோர் தலைவனிடம் கூறினர் [குறு.390:1].

காடும், கம்மென்று ஒலியடங்கியது. வானமும், இருளைப்பரப்பித் தன்பாடு நீங்காதாகியது. களிறு வீழ்த்திய புலியும் முழங்கும். எனவே. இன்று அவர் வாராதிருப்பின் நன்று', எனத், தோழி, சிறைப்புறமாகத் தலைவனிடம் வரைவு கடாவினாள் [நற்.154:3]. யாழோசை போன்ற இனிய குரலையுடைய வண்டுகள் அருவியாகிய முழவின் பாடோடு (பாட்டோடு) சாரலில் ஒலிக்கும் [நற்.176:9]. அருவியினது பாடு (பாட்டு) மிகுந்த இடத்தில் உண்டாகிய வாழையின் கனியை மலையில் மந்தி கவரும் [நற்.251:1]. காட்டின் கண்ணுள்ள பாடு இனிய மணி கட்டிய யாட்டின் கூட்டம் மேய்ச்சல் நீங்கிப் பெயரப், பார்ப்பனமகளிர் முல்லை மலரை அணிய, மாலைமாய்ந்தது [நற்.321:2]. திங்களும், எழுதரும். கடலும், பாடு அடங்காது. அன்றிலும், நரலும். யாழும், யான் பிழையாவாறு யாமத்திசைக்கும். காமமும், பெரிது. களையும் தலைவரும் இலர்', என்று, தலைவி கூறினாள் [நற்.335:2]. 'தலைமகனும், இளையரும் முல்லை சூடினர். மணிபாடு மிகுந்தொலிப்பப், பரி மாலையில் தேரை வாயிலில் கொண்டு நிறுத்தின. (அதனால்) துன்பமகலத் தலைவி விருந்தயர் விருப்பினளாயினள்', என்று, தோழி உரைத்தாள் [நற்.361:5].

'வளையோடு, கடல் எழப்பாடு செய்கின்ற நீர்த்துறையில், மரக்கலத்தைச் செலுத்தும் துறைவன் பிரிய, நெகிழ்ந்தவளை அவன் வரைய வரச், செறிந்தன', என்றாள், தலைமகள் [ஐங்.192:2]. மன்னன் போர்த்தொழிலைத் துறந்தனனாதலின், முரசு பாடு உலகை அதிர வைக்கப், படைகளை ஏவும் போர்க்கண் செல்லுதலைத் தவிர்ந்தனன் [ஐங்.426:3].

நான், கூடுதல் வேட்கையொடு, இரவுக்குறி பார்த்து, நொச்சியினது பூ வீழ்தலாலுண்டாகும் பாடு கேட்டு, தலைவர் செய்த குறியோ எனக் கருதி, வருந்த, அவர், இருளிடை, இரவுக்குறியினது செவ்வி பெறாது, பகற்குறியை யான் மாற்றினேன், என, மனங்கொண்டு வருந்துவர்', எனத், தலைவி ஆற்றாளாய் உரைத்தாள் [கலி.46:13]. திரையினது பாடு ஓவாத கடலே! எம் துணைவன் துறந்தானாக, அதனாலாகிய காமநோய் வருத்த வேண்டி முழங்குகின்றாயோ? எம்மைப்போல் நீயும் காதல் செய்து அகன்றாரை உடையையோ?' எனத், தலைவி தன் ஆற்றாமை மீதூரக் கடலை நோக்கி வினவினாள் [கலி.129:8].

திருமணியையும், அலைபாடவிந்த, கடலையும், சூன் முதிர்ந்த மழையினையும் ஒக்கும் மேனியையுடையவர் திருமால் [பரி.4:6].

**2. செவ்வி.** மேட்டுநிலத்துக், கார்காலத்து மழையால், மிகுந்த பெரிய பாடு - செவ்வி - உடைய ஈரத்தின் கண் உழுது, வரகு விதைக்கப்பட்டது [புற.120:2]. பகை அரணை யழித்துக், கொழுப்புக்கலந்த குருதிப் பெருக்காலாகிய பெரும் பாடு (பாட்டு) ஈரத்தில், கழுதையால் உழுது, வெள்வரகும், கொள்ளும் உழவன், விதைத்தான் [புற.392:7].

**3. பெருமை.** 'பாடு - பெருமை - பெற்ற பரிசிலன் வாடினனாகப் பெயர்தல், தனக்கு நாடிழந்ததனினும் மிக இன்னாதென நினைந்து, பெருந்தலைச்சாத்தனார்க்குக் கொடுக்கப் பொருளில்லாமையின் குமணன் பெரிதும் வருந்தினான் [புற.165:10]. பெருக எடுத்துரைத்தாலும் சிறிது முணராத, சிறப்பில்லாது பெருகிய செல்வத்தினையுடைய, பாடு இல்லாத மன்னரை புலவர் பாடாதொழிவாராக [புற.375:21].

'மலையவும், கடலவுமாகிய பண்டம் பலவற்றையும் பிறர்க்குப் பகுத்துக் கொடுக்கும், நாடுகாக்கும் அறத்தை விரும்பியொழுகும், பகைவர் ஆராய்தல் அமைந்த வலியுடைய, நினைக்குப், பாடு சான்ற அணிகலன்களைத் தரும் நாடுகளை, நின் தோளில் வைத்துக் காத்தல் நின் கடன்', என, ஆடு கோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கை பாடினியார்நச்செள்ளையார் பாடினார் [பதி.59:18]. 'கடவுள் விரும்பும் காந்தலை ஊதிய தும்பி, தன் பறையும், பண்ணும் கெடும்பாடு சான்ற நேரியென்னும் நெடுவரைக்குரிய செல்வக்கோமானைப்பாடிச் செலின், அவன் பந்தர் முத்தும், கொடுமணக்கலனும் தருகுவன் [பதி.67:21].

நெடுங்கயிறு கட்டப்பட்ட, குறிய கண்களையுடைய, வலையில், கடலின் பாடு அழியுமாறு, இனமீன்களை இளையரும், முதியருமாகிய பரதவர் முகப்பர் [அக.30:2]. 'சுரநெறிகள் செல்லுதற்கரிய என்னாது, இத்துணையும் போந்து, தலைவியது

மலர் தன்பாடு இழத்தற்குக் காரணமான, கண்ணின் மயங்கியநோக்கத்தினை நினைந்தனையாய், யாம் தமியேமாக, நீ எம்மை விட்டுப்பிரிந்தேகக் கருதினை', எனத் தலைமகன், தன்நெஞ்சு நோக்கிக் கூறினான் *[அக.33:9]*. 'மாடங்களால் மாண்புற்ற நம் மாளிகையில், பாடு அமைந்த படுக்கையில், வெறுப்புற்ற கொள்கைஉடைய நம் தலைவி, இனிமையுறவும், நமக்குப் பாசறை வருத்தம் நீங்கவும், நம் புரவியை, மாலையில், நாம் எய்திடச், செலுத்துவாயாக', எனப்,பாகனிடம், தலைமகன் உரைத்தான் *[அக.124:6]*. 'சேரலாதன், கடம்பறுத்து, இமயத்து விற்பொறிக்க, மாந்தையென்னும் ஊர்முற்றத்துப் பகைவர் திறை தந்த பாடு சால் நன்கலம், பொற்பாவை, வயிரம் முதலியவற்றை இடம் நிறையக் குவித்து, நிலம் தின்னுமாறு விட்டொழித்த பொருள், போன்ற, செல்வத்தை ஒரு பகலில் பெறினும், நம் காதலர் இற்றை ஞான்று தங்காது வருவர், எனத், தோழி தலைவியிடம் உரைத்தாள் *[அக.127:7]*. பசும்பூண்பாண்டியனது கூடல்நகர் பாடு அமைந்த சிறப்பினையுடையது *[அக.231:13]*.

'பாண்! பரத்தையர் சேரி செல்லும் தேரையுடைய தலைவரைக் கூடும், தகுதியுடையேமல்லேம். ஊரனைக் கொண்டு செல். பாடுமனையின்கண், அவர் தேர்ப்பரியும் பிணிப்பை வெறுக்கின்றன. (எனவே) பயனில மொழியல்', எனத் தோழி பாணனிடம் வாயில் மறுத்தாள் *[நற்.380:10]*.

செம்முல்லை, வண்டவிழ்ப்பப், பாடு மிகுந்தது *[ஐங்.447:4]*. தலைவியிடம் களிற்றின் கொம்பு உலக்கையாகச், சேம்பிலை, சுளகாக, மூங்கில் நெல்லைப், பாறையுரலில் பெய்து, குற்றி, வள்ளையாகப் பாடு - புகழ்தல் - உற்றுப், பாடுவேமாக, மலைகெழுவெற்பனைப் பாடுற்று பாடுவேமாக என்றாள் தோழி *[கலி.41:4, 17]*. தன்பிடி தன் பக்கத்ததாக, மாறுகொண்ட வேழத்தைக் குத்தி எடுத்த கோடு போலக், காந்தள் முகை, நாளும் புதிதீன, அருவியார்க்கும், பாடு - பெருமை - உடையது. தலைவனது வெற்பு *[கலி.53:7]*.

பாண்டியன், மகளிரோடும், அமைச்சரோடும் நாடும், நகரும் அடைய வந்து, பரங்குன்றேறிப், பாடுண்டாக, வலம் வந்தான் *[பரி.19:24]*.

**4. பாடுதல்.** புலவர் 'பாடு - பாடுதல் - அமைந்த துறைகளை முடித்த வெற்றியினையுடைய வேந்தன் உக்கிரப் பெருவழுதியாவன் *[புற.21:11]*. 'பாடு இனிய பாட்டை வல்ல பாணர், பரிசில் பெற்றுச் சென்றமையின், களிறுகள் இல்லையாய்த் தறிகள் பொலிவிழந்தன என்று ஆய் அண்டிரனது அரண்மனையை முடமோசியார் குறிப்பர் *[புற.127:2]*. உலையை ஏற்றுக! சோற்றை ஆக்குக! மதுவையும் நிறைய உண்டாக்குக! அணிகலத்தையுடைய பாடு - பாடுதல் - வல்ல விறலியர், மாலையும் சூடுக! எனக்கூறிப் பிட்டங்கொற்றனைப் புலவர் வாழ்த்துவர் *[புற.172:3]*. பெருங்குன்றூர்கிழார் தம் நுண்ணிய நா வருந்தப் புகழ்ந்து, நாடொறும் பாடப் பாடப், பாடு புகழை ஏற்றுக்கொண்டவன், குடக்கோச்சேரல் இரும்பொறை *[புற. 211:15]*. என் தலைவன் மார்பிற், புண்ணும் கொடிது; நடுநாளிரவில், தும்பியும் வந்து ஒலி செய்யும். வீட்டில், விளக்கும் நில்லாது. புறத்துக், கூகையும் குழறும். முதுபெண்டின் விரிச்சியும், நிறைவுறாது. துடிய! பாண! பாடுவல் விறலி' எண்ணாகுவீர்? நீயிர் இரங்கத்தக்கீர் என்று மாறோக்கத்து நப்பசலையார் பாடுவர் *[புற.280:8]*. 'சிறுவர்களே! துடிப்பறை கொட்டு பவர்களே! பாடுவல் பாண்மக்களே! தூய வெள்ளாடை யணிந்த கரிய நிறத்தினையுடைய தலைவனை அடைந்து, இரும்பு உண், பெரும்புண்ணால் வந்த பூசலைப்பரிகரிமின்! யானும், இரங்கற்பண்ணால், வரும் நரிகளை ஓட்டுவேன். என்போல் ஏவிய வேந்தனும் நடுக்கமடைக', என, வேத்தியலாக நெடுங்கழுத்துப் பரணர் பாடியுள்ளார் *[புற.291:1]*. 'கான்கெழுநாடனாகிய அவியனைப் பற்றுக்கோடாக உடையேன். அவன், தன் கொடைக்குணத்தினின்றும் குன்றான். எனவே, பிறரது பாடுபுகழைப் பாடிச் செல்வது அறியேன். வானத்து வெள்ளியின் நிலைக்கு யான் வருந்தேன்', என மாறோக்கத்து நப்பசலையார் கடைநிலைத்துறையில் பாடியுள்ளார் *[புற.383:17]*.

'தம்மை அடைந்தவரோடு பாதுகாவாது உண்டு, பரிசிலாளர்க்கு அணிகலன் வழங்கிப், பாடுவல் விறலியர் பிடிபெற, மள்ளர் களிறுபெறப், பாணர் பரிபெறப், பகைவரும் புகழும் நும் இயல் கண்டேன்', எனக், கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனைப் பரணர் பாடுவர் *[பதி.43:22]*.

**5. முறைமை.** குதிரையோடு, தேர், யானை, தானையுடைய வெற்றி மேம்பட்ட வெண்குடை மன்னராயினும், மதித்தலில்லேம். முள்வேலியையுடைய தோட்டத்து, மறி, தின்ன, ஒழிந்து நின்ற முஞ்ஞையது கண்ணிற் கிளைக்கப்பட்ட புல்லிய இலையை, வரகினது சோற்றுடன் பெறுகின்ற சீறூர் மன்னனாயினும், எம்மிடத்துச் செய்யும்-பாடு-முறைமை-அறிந்து நடக்கும் குணத்தினையுடையோரே மதிக்கப்படுவர். அறிவிலோர் செல்வத்தினும், அஃதுடையோர் வறுமை பயன் பெரிதுமுடையது' எனப், பெருந் திருமாவளவனிடம் மதுரைக்குமரனார் கூறினார் *[புற.197:14]*.

**6.முறை** (தடவை). நாள்தோறும் உணவின்மையான், இடந் தோறும் மாறிமாறி அகழ்தலால், இல்லெலி மடிந்த வீட்டில், பாலில்லாமையால், பால் பாடு-முறை-சுவைத்து, முலையுண்டலை வெறுத்த பிள்ளையுடன் வறுமையுற்று வருந்தியிருந்தாள் பெருங்குன்றூர்கிழாரின் மனைவி *[புற.211:20]*.

**7. வழக்கம்.** 'பருவத்துக்கு உதவினவாயினும், பல எருத்துள்ளும், நல்லெருத்து நோக்கி ஆயும் உழவன் போலப், பெருமை பொருந்திய பழங்குடியில் பாடு-வழக்கம்- பலவற்றைக்

கொண்ட முதுகுடிப்பிறந்தோருள்ளும், அன்பினால், தனக்காக முகந்து தந்த மதுவை, இவற்கு வழங்குக எனத் தலைவன், ஒரு மறவனுக்கு நல்குமாறு கூறினான் எனக் கழாத்தலையார பாடியுள்ளார் *[புற.289:4]*.

**8. கேடு.** காக்கும் புரவலரை உலகிற் காணாது, மரத்தடி சேர்ந்து, பட்டினி கிடந்து, கட்டி வைத்த சமையல் கலங்களையுடைய பையோடு, சிதைந்த வாயினையுடைய சமையற் பானையையும், பாடு - கேடு - அடையாதபடி, கட்டித் தூக்கிச், செயல் வேண்டாதசிந்தையுடன், நெடுஞ்செழியனை நோக்கி வந்ததாகக் கல்லாடனார் குறிப்பர் *[புற.371:6]*.

**9. வருத்தம்.** பெருவாயிலில் நின்ற என்னை யழைத்துப், புதுமடி உடுத்தி, மட்டொடு, ஊன், துவை கூடிய உணவை, வெள்ளிக்கலத்தால் ஊட்டிச், செந்நெல்லை நெற்போரோடு வழங்கனான். என் பாடு - வருத்தம் - மிக்க பசியினை அதியமான் போக்கினான் என்று ஔவையார் பாடியுள்ளார் *[புற.390:27]*.

**10. போக்கு.** குட்டுவனின் போரில் செலுத்தப்படும் தேரின் உருளை, தான் ஊர்கின்ற பாடு-போக்கு-தன்னிலேயே, தலைபல துணியச் சென்றது *[பதி. 46:9]*. -காண்க-பாட்டு-3

**11. தூக்கம்** 'பகையால் பாசறையில் பொருந்திப், பாடு - தூக்கம் - அரிதாகப் பொருந்தும் சிறு துயிலும் இயலாது, கோடு முழங்கும் முழக்கம் எழுப்புகின்ற படைச் செல்வத்தில் பழகிய கண்ணுக்கு, மகளிரது மார்புகவர் முயக்கத்தால் வரும் மெல்லிய தூக்கம் வந்து கழிய, நாள் எவ்வளவு செல்லுமோ?' எனக், குட்டுவனை, நோக்கிப் பரணர் பாடியுள்ளார் *[பதி.50:24]*. 'கானவன் கள்ளுண்டு மயங்கக், கொடிச்சி தன் கூந்தலைக் கோதிக் குறிஞ்சி பாட, யானை, தினையினையும் கவராது, நின்ற நிலையிலும் நீங்காது பாடு பெற்று உறங்கியது *[அக.102:8]*.

'குருகுஉறங்கும், அலை நீர்த்திவலையால் மலரும் புன்னையையுடைய, கடற்கரைத்தலைவன் பிரிந்தானாக, என் கண்கள் பாடு கொள்ளாவாயின. காமநோய் அத்தகைத்தோ?' என்று தோழியிடம் தலைவி கூறினாள் *[குறு.5:5]*. 'நெஞ்சே! எழுக. அவர் மொழிவேறுபட்ட நாட்டினராயினும் ஆண்டுச் செல்லக் கருதினேன். அதனால், வளை நெகிழ, நாளும் பாடு இல்லாது கலங்கும் கண்ணோடு புலம்புற்று இங்குத் தனித்திருத்தலினின்றும் உய்குவம்! என்று, தலைமகள் நெஞ்சு நோக்கி உரைத்தாள் *[குறு. 11:2]*. 'வெறுக்கத்தக்க துன்பத்திலுழந்த பாடு இல்லாத கண்ணின் துளியால் நெகிழ்ந்த தோள் இன்று மெல்லியவாயின. ஆயின், வெற்பன் வந்து கூடும் முன் நல்லவென்னும் சொல்லைப் பெற்றிருந்தன', என்று தலைவிக்குத், தோழி கூறினாள் *[குறு.357:1]*. பெருமலைநாடனே! உன்னால் விரும்பப்பட்ட தலைவியின் வளைநெகிழ, நாள்தோறும் பாடு இல்லாதனவாகிக், கண், நீர்த்துளியும் நீங்காவாகும்' என்று தலைவனிடம், தோழி உரைத்தாள் *[குறு.365:2]*.

'தோழி! நம்மை விரும்பும் காதலரை நாமும் விரும்பியொழுகுதல் பழியெனின், பாட இல்லாது கலங்கும் கண்ணோடு மெலிந்து சாதலும் இனிதாகும்', என்று தோழியிடம் தலைவி உரைத்தாள் *[நற்.327:2]*.

தலைவியின் பாடின்றிப் பசந்த கண்கள் துன்பமுடையவாய் நீர் நிறைய, உடல்வனப்பழிய, வளை கழல, இவ்வகை அழிவுக்கஞ்சாது தலைவர் பிரிந்தார் *[கலி. 16:1]*. சுனையின் மழையேற்ற நீலமலர் போலத் தலைவியின் கண்கள் அழுகின்றன. உன் வரவு விரும்பி, நின்னையே நினைத்ததனாலுண்டாகிய அவளது பாடு இல்லாத, கண் செய்த பழி ஏதேனும் உண்டோ?' எனத், தோழி தலைவனை வினாவினாள் *[கலி.48:13]*. நம்மை நீத்தவன் நாணிலனாயின், அவனை ஊடுதலால் பெற்ற பயன் யாது? எனவே, நெஞ்சே!' நீர் நீங்காத பாடு இல்லாத கண், இனியேனும் துயிலைப் பெற, இனிமேலும் கூறும் சொல் நமக்கில்லை என்னும் தகுதியினை அடைவாயாக', என்று, தலைவி, தன் நெஞ்சு நோக்கிக் கூறினாள் *[கலி.87:16]*.

**12. இடம்.** நீரை (இடாவால்) முகந்திறைக்கும் தொழிலாளர் பாடு - இடம் - நின்று எழும் இசை, பன்றிப் பத்தரின் ஓசை, பூட்டைப் பொறியின் ஓசை, கடாவிடுநர் ஓசை, எருதுகளின் மணியோசை, பயிர் கவரும் பறவை ஓட்டும் இசை எல்லாம் பரதவர் மகளிர் குரவைக் கூத்திசையோடு சேர்ந்து ஊரில் ஆரவாரம் செய்தன *[மது.90]*.

உயர்ந்த கொம்பின் பாட்டில் (இடத்தே) வைத்த பட்டுப் பூச்சியின் நிறத்தைக் கொண்ட, எருத்தினை அஞ்சாத, பொதுவனை அது சாவக் குத்திக், குலைத்தது, கூந்தலைப் பற்றியிழுத்தவன் (துச்சாதனன்) நெஞ்சை, வீமன் பிளந்து, குலைத்தது போலும் *[கலி.101:15]*.

**13. இயல்பு.** குடப்பெற்ற பூவினையும், பாடு - இயல்பு - புலர்ந்த சந்தனத்தையுமுடைய சிறந்த படைத்தலைவர் மன்னனைச் சுற்றயிருந்தனர் *[மது.226]*.

'பாக! வேனில் நீங்க, மழை பெயப், பொழுது பாடு சிறக்கக், காடு கவின் பெற்றது. நேரிழையை மறந்து நெடிது தாழ்த்தனம். எனவே, தேரை விரையச் செலுத்துக, என்று பாகனிடம் தலைமகன் கூறினான் *[ஐங். 484:2]*.

'பரத்தையர் மார்பு மூழ்கிப் பாடு அழிந்த சாந்தினனாய்ப், பண்பின்றி வரின் தலைவனை ஊடுவேன் என்பேன். ஆயின், அத்தகைய அவனைக் காணின் கூடுவேன் என்றும், கொள்கைப் பிடிப்பில்லாத என் நெஞ்சம் கூறுகின்றது என்று தோழியிடம் தலைவி உரைத்தாள் *[கலி.67:11]*.

**14. கூறு.** களத்தில் நெல்லைத் தொகுத்த உழவர் போல, மீனை, இரந்தோரது வறிய கலம் நிறையுமாறு வழங்கிப், பாடு-கூறு-பல செய்து விலைப்படுத்தி, மணற் குன்றில் பரதவர் துயில்வர் *[அக.30:10]*. மனையின்கண் சிலம்பொலிக்க ஆயமொடு பந்தெறியினும், அழைத்துப், பால் பெய்த வள்ளத்தைப் பற்றி, என்பாடு (பகுதி) - உண்டனையாயின், உன் தந்தை பாடும் உண்க, என, உண்பித்துப் பாராட்டி வளர்க்கப் பெற்றவள் தலைவி *[அக.219:6,7]*.

**15. மிகுதி.** பலாமரத்தின் குடம்போலும் பழத்தினைக் கடுவன் பாடு-மிகுதி-ஆக ஒலிக்கும் அருவியையுடைய பாறையில், ஆடும் மயில் முன்னதாக, விறலியின் பின்னிற்கும் முழவன் போலத், தழுவிப் பெண்குரங்கையழைக்கும் *[அக.352:3]*.

**16. மழை, பெயல்.** கானவன் எரித்த புனத்தில், கரிய இடங்களைக் கழுவிய மிக்க பாடு - மழை - ஈரத்தில் வளர்ந்த தினையை மகளிர் காத்தனர் *[அக.368:2]*. - காண்க -பாட்டு-6.

**17. படுத்தல், கிடத்தல்.** 'தோழி! தலைவரோ பொருள் தேட வேண்டிக், காடு கடந்து சென்றார். யானோ, வளை நெகிழ ஏங்கிப் பாடு-படுத்தல்-அமைந்த படுக்கைக்கண்ணே துன்பமுழக்கின்றேன். மழையும், என்னுயிர் குறித்து இன்னும் பெய்ய முழங்கி மின்னும்', என்று தோழியிடம் தலைமகள் கூறினாள் *[குறு.216:4]*.

**18. பக்கம்.** பாடு - பக்கத்தே - குழலொலிப்ப, இன்னியம் பல கறங்க, ஆடுமகள் நடந்த கயிற்றில், குரங்கின் குட்டி ஆடக்கண்ட குறமகார், பாறைக்கண்ணுள்ள மூங்கிலில் ஏறித், தாளங்கொட்டுவர் *[நற்.95:1]*. 'ஊர்! நின் பரத்தை மகளிரை எம்மனைக்கண் அழைத்து வந்து மணப்பினும் அவர் உளத்தில் உண்மை இராது. அன்றியும், மக்களைப் பெற்று நன்மை யமைந்த கற்போடு எம்பாடு அமர்தல் அதனினும் அரிதாகும்', என்று தலைவனிடம் தோழி கூறினாள் *[நற்.330:11]*.

**19. உலக ஒழுக்கம்.** 'நண்ப! இவளது மதர்த்த கண்ணைக் காண்பதன் முன் நயன், நண்பு, நாணம், பயன், பண்பு, பாடு - உலக ஒழுக்கம் - அறிந்து ஒழுகல் என்னும் இவற்றை நும்மினும் நன்குடையேன் என்று தலைவன், பாங்கனிடம் கூறினான். *[நற்.160:2]*.

மக்கட்பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகுதல் *[கலி.133:8]*.

'ஞாயிறே! பாடு அறியாதாரிடத்துக் கழியச் சீறுதற்கு விரைந்து செல்வையென்று கூறக் கேட்டு நின்னை வழிபட்டு என்னெஞ்சங் கைவிட்டவனைச் சீறாதபடி இரந்து கொள்ளவந்தேன். சீறின், என்னை நீங்க விடாதே கொள்', என்று ஞாயிற்றை நோக்கித் தலைவி உரைத்தாள் *[கலி. 143:22]*.

**20. பயன்.** சுறாவேட்டை குறித்துக் கடல்மேற் சென்ற தந்தை உடன் கொண்டு செல்லாததால், அழுது ஒழிந்த சிறார், நுங்காகிய கொங்கையின் பாடு - பயன் - பெற்று மகிழும், பனையுடையது சீறூர் *[நற்.392:5]*.

**21. படுதல்.** எருத்தினது கொம்பின் பாடு - படுதலைத் - தம்மார்பில் ஏற்றுக் கொள்பவர், அதன் மேற் பாய்ந்து ஊர்பவர், அதன் கொம்பிடைப்புகுபவர், அதனைக் கைக்கொண்டமை சாற்றுபவர் உட்படப் பலரும் நிறைந்த தொழுவம் நூற்றுவர் பட, ஐவர் அட்ட போர்க்களம் போலத், தோன்றியது *[கலி. 104:55]*. எருத்தது கொம்பிடத்தே பிடித்தும், மார்புறத் தழுவியும், கழுத்தில் அடங்கிக் கிடந்தும், நெருங்கிக், கொம்பின் பாடு ஏற்றுச் சென்றாரைக் குத்தி ஏறுகள் தழுவ விடாது நீக்கி நிறுத்தின *[கலி.105:32]*. ஏறுகளின் கொம்பின்பாடு மார்பிலே ஏற்றவர்களைக் குத்தி, மேனோக்க, வடியும் செந்நீர் நனைத்த கழுத்தின் மணிகள், நறவம்பூவின் இதழ் விரியும் செவ்விநோக்கிச் சூழும் தும்பிகளைப் போலும் *[கலி.105:39]*.

**22. இமைத்தல்.** ஏற்றைத் தழுவிய, வெல்புகழுடைய பொதுவன் முகம் நோக்கிய ஆயமகள், கண், பாடு - இமைத்தல் - இலவாயின *[கலி.105:52]*.

**23. முறிதல்.** பாடு - முறிதல் - உடைத்தாகி ஒலிக்கின்ற கடலிடத்துப், பாம்பணையில் பள்ளிகொள்பவன் மாலவன் *[கலி.105:71]*.

**24. தோல்வி.** 'மாலையே, நீ, போரில் தோற்றிருந்தவர்களது பாடு - தோல்வியை - எள்ளி நகைப்பவர் போன்று, அன்பில்லாத எம் காதலர் அருள் செய்யாது பிரிந்தவிடம் நோக்கித், துன்புற்ற எம்மை மீண்டும் துன்புறத்தவந்தாயோ? என்று, தலைவி மாலைப்பொழுதை நோக்கி வினாவினாள் *[கலி.120:14]*.

**25. மறைதல்.** பொய்யைக் கெடுத்து நன்கு ஆண்ட அரசனோடு கெட்ட செல்வம் போலக், கதிரையுடைய ஞாயிற்றின் பாடொடு - மறைதலொடு - பகற்காலமும் போகக், கல்லாது மூத்தவனது அறிவுக்கண்ணில்லாத நெஞ்சு போலப், புற்கென்ற இருள் உலகில் பரந்தது *[கலி.130:5]*.

**பாடுநர்** - பாடுவார். 'போரின்கண் சேயை ஒப்பாய்! நின்னைப் பாடுநர் - பாடுவார் - கைகள், ஊனையும், துவையையும், கறியையும், சோற்றையும் உண்டு வருந்தும் செயல்லது வேறு செயலறியாவாகலின் அவை தாம் பெரிதும் மெல்லியவாயின', எனச், செல்வக்கடுங்கோ வாழியாதனிடம் கபிலர் கூறினார். *[புற.14:19]*. 'நின்னைப் பாடுநர் நினது மேற்செலவைப் பாடப் படைக்கலமுடையோர் பாசறைக் கண்ணே, பச்சிலையை இடையிட்ட முகையினையுடைய மாலையினது பந்து போன்ற, தசையோடு கூடிய சோற்றுத்திரளையைக் கொண்டு பாண் சுற்றத்தையூட்டும் தலைமையையுடைத்து, நின் போர்முனை', என, நலங்கிள்ளியைக் கோவூர்கிழார் ஏத்தினார் *[புற.33:10]*.

'ஏழரசரோடு பகைத்துப் போரின் கண் நின் வலியைத் தோற்றுவித்த அற்றைநாளும் பாடுநர்க்குப் பாட அரியை; இற்றைநாளும், கோவலூரரை வென்ற நின் தோளைப் பரணன் பாடினன், என அதியமானை ஔவையார் புகழ்ந்தார் *[புற.99:14]*. பாணரும், பாடுநரும், கூத்தர் முதலாயினோருமாகியோர் தம்பொருளென வளைத்துக் கொள்வாராயின், அதனை எம்முடையதென்று, கைக்கொள்ளுதலைத் தெளியாதவன் ஆய்அண்டிரன் *[புற.135:16]*. கண்டீரக்கோன் நெடுந்தொலை செல்லின், அவன் பெண்டிரும் அணியொடு, பிடியைப் பரிசிலாகப் பாடுநர் உவப்பக் கொடுக்கும் பண்பினர் *[புற.151:1]*. 'பாடுநர்க்கு அடைத்த கதவுடைமையால் நும்மலையைப் பாடுதல் தவிர்ந்தனர், எம்மவர்', என இளவிச்சிக்கோவைப் பெருந்தலைச் சாத்தனார் பாடினார் *[புற.151:10]*. மதி சேர்ந்த மீன்போலப், பொற்கலம்பரப்பித், துவையொடு, நெய்யுடைய அடிசிலைப் பொலங்கலத்தொடு வழங்கிப், பாடுநர் சுற்றத்துடன், தன் நட்டோரினும் நட்புச் செய்தவன் குமணன் *[புற.160:10]*. யானையைப் பாடுநர்க்கு வழங்கும் புகழுடைய தலைவன் குமணன் *[புற.165:7]*. பாடுநர்க்கு வழங்கிய புகழோன்; கூத்தரின் பேரன்பினன்; அறவோர் புகழும் செங்கோலன்; சான்றோர் நண்பன்; மகளிர்க்கு மெல்லியன்; மைந்தர்க்கு வலியன்; கேள்வியாளரின் புகலிடம்; எனத் திகழ்ந்தவன் கோப்பெருஞ்சோழன் *[புற.221:1]*. கூற்றம், பாடுநர் போலக், கைதொழுது வளவனை ஏத்தி, இரந்து, உயிர்கொண்டதாகல் வேண்டும். ஏனைய வழி, அதற்குப் பிழைத்தலுண்டாகாது, எனக், கையறு நிலையில், கிள்ளிவளவனை நப்பசலையார் பாடியுள்ளார் *[புற.226:3]*. அதியன் மார்பில் தைத்த வேல், பாணரது மண்டையைத் துளைத்து, இரப்பாரது கையுட்புகுந்து, புரக்கப்பட்டாரது கண் பாவை மழுங்கப் புலவரது நாவிலும் சென்ற வீழ்ந்தது; எனவே. இனிப் பாடுநரும் இல்லை; பாடுநர்க்கு ஒன்று ஈகுநரும் இல்லை, என, ஔவையார் அதியமானைப் புகழந்து பாடியுள்ளார் *[புற.235:17]*. கட் காமுறுவோன், காடு சேர்ந்தனன். எனவே, அவனது வளைகழிக்கப்பட்ட மகளிரைப்போலப், பொலிவிழந்து, பாடுநர் சுற்றமும் ஒளி மழுங்கியது. முரசங்கண் கிழிந்தன. களிறும், கொம்பிழந்தன, என, கையறுநிலைத்துறையில், வெளிமானைப் பெருஞ்சித்திரனார் பாடியுள்ளார் *[புற.238:7]*. புரவியும், களிறும், தேரும், நாடும், ஊரும் பாடுநர்க்கு வழங்கும் அண்டிரன், தன் மகளிரொடு காலனுய்ப்ப, மேலோர் உலகமெய்தினன். எனவே, புலவர் பிறர் நாட்டின் கண் செல்லும் செலவினையுடையராயினார், எனக், கையறுநிலைப் பாடலில் அண்டிரனைக்குட்டுவன்கீரனார் குறிப்பிடுவர் *[புற.240:3]*. தன் அருள் பாடுநர்க்கு, ஒருவள்ளலமாவொடு, களிறு வழங்கினன். பொன்மாலையைப் பாடினிக்கும் பொற்றாமரையைப் பாணருக்கும் சூடினான். இவற்றோடு, நில்லாவுலகின் நிலைமை தூக்கி மகளிர் மடுப்ப, மது மாந்தினான் *[புற.361:8]*. நரியொடு, பேயும், பூதமும் காப்பப், போர்க்களத்தைத் தழுவிப், பாடுநருக்காகவிருந்த பீடுடையவன் சேரமான் வேல்கெழுகுட்டுவன் *[புற.369:18]*.

பாடுநர் கொள்ளக்கொள்ளக் குறையாத செல்வத்தினையும், பகைவர் கொல்லக் கொல்லக் குறையாத தானையினையும், நர்புகழினையும், பகை நிலந்தரு திருவினையும் உடைய நெடியோன், இளஞ்சேரலிரும்பொறையாவான் *[பதி.82:12]*. நற்புகழை நிறுவிய அகன்ற இம்மண்ணுலகில், பொருளில்லோரது துன்பந்தீருமாறு, பொருளை வழங்கி, அன்பினையுடைய நெஞ்சோடு, பாடுநரது புரவலனாகத் திகழ்ந்தவன், இளஞ்சேரலிரும்பொறை *[பதி.86:8]*.

பாடுநரை வளைத்துக்கொள்ளும் கைவண்மை வாய்ந்த கோமான் பெரியன் என்பானுக்குரியது புறந்தை *[அக.100:11]*. வறுமையால் அழிந்த சுற்றத்துடன் பாடுநர் செல்லின், ஊக்கம் மிக்க நெஞ்சுடனே, மாற்றோர் போர்முனை எறிந்த அணிகலன் முதலாய செல்வங்களை அவர்க்கு ஆராயாது அளிப்பவன் நன்னன் *[அக.349:5]*.

**பாடுவார் - 1.** புகழ்வார். கடலில் அழுந்துகின்ற நிலமகளை கேழலாகிக் (வராகமாகிக்)கொம்பினால் எடுத்தோயெனவும், மழை பொழிவதனால் வீழ்கின்ற நீரை அன்னச் சேவலாகி நின்சிறகினால் வறளச் செய்தோய் எனவும், முனிவரும் தேவரும் திருமாலைப் புகழ்வர். அவ்வாறு பாடுவார் - புகழ்வார் - புகழும் வகையிலேயே யாமும் நின்ஜப் புகழ்வேண எனக் கடுவனிளாவயினனார் குறிப்பிடுவர் *[பரி.3:30]*.

**2. பாணர்.** வையயைப்புனல், பாடுவார்-பாணர்- பாக்கத்தைக் கொண்டதெனவும், ஆடுவாராகிய கூத்தர் குடியிருப்பை அடைந்ததெனவும், கழனிகளில் வெள்ளமாக வந்து பொருந்தியதெனவும் பலரும் பலவாறாகக் கூறுமாறு ஆரவாரிக்கச் சென்றது *[பரி.7:31]*. பாடுவாரது பாட்டிற்குரிய தாளமும், ஆடுவாரது கூத்திற்குரிய தாளமும், மஞ்சு சூழும் பரங்குன்றத்தில் எதிரொலியும் கலத்தலால் ஆண்டுப் பெருமுழக்கமுண்டாயிற்று *[பரி.8:109]*. பாடுவாரது பாடலும், பல்லாண்டு, முதலாய பரவுதலும், புகழ்தலும், ஆடுதற்குரியாரது ஆடலும், அதற்குப் பொருந்திய சீருடன் கூடிய பாணியென்னுந்தாளமும், மேல் ஆர்க்கின்ற தேனீக்களது ஓசையுமாகிய, பண்ணொலியைக் கேட்டுத், தம்மினமென்று ஊரிலிருந்து வந்த வண்டுகள் எதிர்வந்து ஊதின *[பரி.10:116]*. ஆடுவார், பாடுவார், ஆர்ப்பார், நகுவார், ஓடுவார், ஓடித்தளர்வார், தேடுவார், ஊர்க்குத் திரிவாராகக் கற்றாரும், கல்லாதவரும், இழிந்தவரும், கணவரும், கணவருக்கு மாறாக நடவாத பெண்டிரும்; பாண்டியனும், மதுரையிலுள்ள பிறரும் வையைத் துறையை அடைந்தனர் *[பிர.தி.2:21]*.

**பாடுவி**-புகழ்கின்றவள். 'தலைவற்கு, என்னையொத்த பிறரும் உண்டென்று காட்டுமாறு, தன்னழகை மிகுத்துப் பாடுவி - புகழ்கின்றவள் - தந்தாள்போலும், இத்தொடி', எனத், தன்மகன் கையில் தொடி கண்ட தலைமகள் புலந்து கூறினாள் *[கலி.84:34]*.

**பாடுவோர்** - 1. உரைப்போர். 'வயவேந்தே! நின்னை இகழ்ந்து பாடுவோர் - உரைப்போர் - கழுத்திறைஞ்சப், புகழ்ந்து பாடுவோர் பொலிவு தோன்ற இன்று கண்டாற் போலக் காண்போம். எந்நாளும் இனிய மொழியோடு எளிய செவ்வியை யாகுக!' எனச், கிள்ளிவளவனிடம் ஆவூர் மூலங்கிழார் கூறினார் *[புற.40:6,7]*.

**2. புகழ்வோர்**. கேழலின்கொம்பினால் நிலமெடுத்தோய்! அன்னச் சேவலாய்ச் சிறகரால் மழைநீரை வற்றச் செய்தோய்! என முனிவரும், தேவருமாகிய நின்னைப் பாடுவோர் - புகழ்வோர் - புகழும் வகையே யாம் புகழ்ந்தேம் எனத் திருமாலைக் கடுவனிளவெயினனார் போற்றுவர் *[பரி.3:28]*.

**பாண். 1**. பாண்சுற்றம். பொன்னானியியன்ற மாலையைத் தலை பொலிவுறச் சூடிப், பாண் - பாண்சுற்றம் - சூழ்வதாக, நின் நாளோலக்கம். பாண்சூழல் ஒழிந்தபின்னர், நின் சாந்து, புலர்ந்த மார்பு, மகளர் தோள்சூழ்வதாக,' என நலங்கிள்ளியை மதுகண்ணன் சாத்தனார் பாடினார் *[புற.29:5,6]*. பாசறை பொலிவு பெறும்படி ஊன் சோற்றுத் திரளையால் பாண் சுற்றத்தை ஊட்டும், தலைமையையுடைத்து, நின்போர் முனையிருக்கை', என, நலங்கிள்ளியைக் கோவூர்கிழார் பாடுவார் *[புற.33:14]*. 'முத்தத்தை விறலியருக்குக் கொடுத்துக் கள் தெளிவைப் பாண் சுற்றத்திற்கு வழங்கி, இவ்வாறு, பரிசிலர்க்கு மெல்லியனாதல்லது, பகைவர்க்கு உலைக் களத்து அடைகல் போலும் வலியன்', எனப் பிட்டங்கொற்றனை மருத்துவன் தாமோதனார் குறிப்பிடுவர் *[புற.170:13]*. மருந்துக்குக் கொள்ளப்பட்ட மரம்போல, வாளுற்ற, விழுப்புண்ணால் வசையில்லாத உடம்பையுடையனாய்ப், பாண் பசிப்பகைஞனாயினான், ஈர்ந்தூர்கிழான் தோயன் மாறன், *[புற.180:7]*. 'வேளிருள் வேளே! ஆண்தன்மையை உடைமையால் பாண் கடனைச் செய்து முடித்த புலி கடிமாலே! யான் தர, இவரைக்கொள்வாயாக எனப், பாரிமகளிர் பொருட்டு, இருங்கோவேளைப், பரிசில் துறையில் கபிலர் பாடினார் *[புற.201:14]*. பகைவரது அரண் அவரிடத்ததாகவும், அதனை அழித்துக் கொள்வதன் முன்னே, நம்முடையதெனப் பாண் கடனிறுக்கும் வள்ளியோன், நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி *[புற.203:11]*. அரண்காவாது போர் வென்று, மது நுகர்ந்து, பெரும்பாண் சுற்றம் புரந்து, பிறவும் செய்த அறிவுடையாளன் கரிகாற்பெருவளத்தான் *[புற.224:3]*. 'பெரிய பாண்சுற்றத்திற்குத் தலைவனாகத் திகழ்ந்தவன் போரடுதானையையுடைய எவ்வி *[புற.233:5]*. பாண் உவப்ப ஆவர் பசியை மாற்றினான். நடுநிலை நீங்கிய மயக்குடைய சொற்களை விடுத்தனன். இவ்வாறு பலவாறாகச் செய்ப வெல்லாஞ் செய்தவன். நம்பி நெடுஞ்செழியன் *[புற.239:17]*. 'மீன் சீவும் பாண்டேரியையுடையது தழும்பனது ஊனூர் *[புற.348:4]*.

கோங்கின் பூவும், ஏனை மலர்களும் பரந்து மாலையொழு கினாற்போல, ஓடும் நீர் வருதலையுடைய வையையிடத்துத் துறைதோறும், பூந்தோட்டங்கள் சூழப்பட்டு, நெடுங்காலம் அடிப்பட்டிருந்தது பெரிய பாண்குடியிருப்பு *[மது.342]*.

"நீ, நின் பாணொடு முழவியம்ப நின் துணைச்சுற்றத்துடன் மதுவுண்டு எம்மனை வாராயாகி, நம்மனையாகிய பரத்தை இல்லின்கண் சேர்ந்தனை" எனத், தோழி, தலைவனை வாயின் மறுத்தாள் *[அக.346:13]*.

மாளிகையிடத்து, மணியொலிக்க மணல் பரப்பிய பந்தரில், பரத்தமை கொண்ட தலைமகனைப் பாண் சூழந்து காவல் மேற்கொண்டாற்போல, மகளிர் சூழ்ந்து விரிச்சி நிற்பச், செவிலியும், மகவும், தலைவியும் துயில் மேற்கொள்ளத், தலைமகன், கள்வன் போல், வந்துற்றான் *[நற்.40:3]*. 'பிறர்க்கென முயலும் பேரருள் உள்ளமோடு, காதலர், பொருளால் பிணிக்கப்பட்டுச் சென்ற நெறி, வேனிலின் கண் ஒதிப்போத்து, வழிச்செல்லும் பாண்யாழ் வாசிப்பக், கேட்டுத், தன் வருத்தந்தீர்ந்து, பக்கத்திலுள்ள யா மரத்திலேறும் [illegible]வினையுடையது *[நற்.186:6]*. பெரும் பாண்சுற்றத் தலைவ! நீ தலைமகனோடு பரத்தை இல்லத்திற்குச் செல்லாது, தழும்பன் ஊனூரில், பிச்சைக்கு வந்த பெருங்களிறு நிற்பது போன்று, எம் அடுகளத்துக் கூரையைப் பற்றி நிற்கின்றாயே!' எனத், தோழி, வாயில் மறுத்தாள் *[நற். 300:9]*.

'நெய்தற்பூவையொத்த கண்கள், நறவை ஆர்ந்தபொழுது, நறவம்பூவை யொத்தன கண்டு, தலைவன், பாண்போலப் பலவகையாற்பாட, அது தன் காதலியைப் பாடுகின்ற தென்றறியாது, வெறொருத்தி மயங்கக், காதலி ஊடினாள் *[பரி. 7:66]*.

**2. பாண்மை/பாண்தொழில்/பாணர்செயல்/பரத்தமை**. 'தலைமேல் ஏறட்டுக்கொண்ட பாண் - பாண்மைத் - தொழிலாலே பொய்யை மறைத்துப் பலவும் வல்ல பாணனைத் தூண்டிலாக் கொண்டு, பரத்தையை அகப்படுத்தித், தாம் விரும்பியோரை நுகரும் தொழில் கொண்டு திரியும் நும் தந்தையின் கூறாக, ஒரு சிறிது (பால்) உண்பாயாக', எனத், தலைமகள், புதல்வனை நோக்கிக் கூறினாள் *[கலி.85:22]*.

**பாண்டரங்கண்ணனார்**-ஒரு புலவர். இவர் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியின் போர்ச்செயலை மழபுலவஞ்சித்துறையில் சிறப்பித்துப் பாடிய பாடலொன்று புறநானூற்றில் *[16]*. உள்ளது. 'தலைவ, நீ பகைவரது பெரிய

மருதநிலம் பாழாகுமாறு அவரது காவலையுடைய நல்ல நாட்டைத் தீயூட்டி, அஞ்சத்தக்க போரைச் செய்ய, நின் கருத்திற்கேற்ப, நின் களிறுகள் ஒரு பெற்றிப்படப் பொருதன', என்று, அவன் களிறுகளின் போர்த்திறத்தையும் உள்ளிட்டு, அவனது போர்வன்மையை இவர் பாடியுள்ளார். கேடகங்களுக்கு முகிலையும், நாடுசுடுதீயின் விளக்கத்திற்கு ஞாயிற்றின் செக்கர் நிறத்தையும், இவர் உவமித்துள்ளார்.

**பாண்டி** - 1. எருது பூண்ட வண்டி. வையைப்புனலில் ஆடும் பொருட்டு, மகளிர், மேகலையைப் புனைந்து. வண்ண நீரை வீசும் கருவிகளையும், பனிநீர் கலந்த சந்தனத்தையும் எடுத்துக் கொண்டு, பரிமீதும் பிடிமீதும், பாண்டியின் - எருதுபூண்ட வண்டியின் மீதும் - கோவேறுகழுதையின் மீதும், குதிரை வண்டியின் மீதும், சிவிகையின்மீதும் ஏறிச் சென்றனர் *[பரி.10:16]*.

2. எருது. வையையில் நீராடும்பொருட்டு விரைந்து, சிலர், தேர்க்குதிரையை வையத்திற் பூட்டினர்; வையத்திற்குரிய பாண்டியை - எருதை - தேரிற் பூட்டினர். *[பரி.20:17]*.

**பாண்டியம்** - உழவு. 'தலைவ! நீ பலர் கூறும் அலர்க்கஞ்சாய். இவளை வரைதற்கு அருள் செய்து அதன் திறமறிந்து செயல் மேற்கொள்க. அவ்வாறாயின், பாண்டியம் - உழவு - செய்வானது பொருளினும், மிகுதலாகும் இவள் அழகு', எனத், தோழி தலைவனிடம் கூறினாள் *[கலி.136:20]*.

**பாண்டியர்** - பாண்டிய வேந்தர். வடதிசைக் கண்ணதான வேங்கடமலை நாட்டின் அரசர் திறையாகக் கொடுத்த வெண்கோட்டு யானைகளையுடைய மறப்போர் வல்ல பாண்டியர் அறநெறி வழாது காக்கும் கொற்கையம் பெருந்துறையின் முத்தைப் போன்றது, தலைவியின் முறுவல் *[அக.27:8]*.

**பாண்டியன்** - பாண்டிய வேந்தன். பொன்னின் விளக்கம் மிக்க, அழகு மிளிரும் நெற்றிப் பட்டமணிந்த, போர்ச்செயலிற் பயின்ற யானைகளையுடைய, வெற்றி கொள்ளும் போரில்வல்ல பாண்டியனுக்குரியது, கொற்கை முன்றுறை *[அக.201:3]*.

**பாண்டியன் அறிவுடைநம்பி**-பாண்டிய வேந்தன். அறிவுடைநம்பி என்பது இவனது இயற்பெயர். அப்பெயர்க்கேற்ப இவனைஅறிவுடைவேந்தன்' என்று பிசிராந்தையாரும் பாடுவர் *[புற.184]*. ஆயினும், அரசன் வரிசையறியாத ஆரவாரத்தையுடைய சுற்றத்தைக் கூடி அன்புகெட மக்களிடத்திருந்து கொள்ளும் பொருளை விரும்புவதன் கேட்டினைக் கூறும் முறையில் அவர் இவனுக்குச் செவியறிவுறூஉவாகப் பாடிய அப்பாடலால், இவன் ஒருகால் சிற்றினச் சேர்க்கையின்பாற்பட்டு, நாட்டு மக்களிடத்து இறைப்பொருளை மிகுதியும் வலிந்து கொண்டனனோ, என்றும், எண்ணத் தோன்றுகிறது. பாராளும் வேந்தனான இவன் பாப்புனையும் புலவனாகவும் திகழ்ந்தான். 'படைக்கப்படும் செல்வம் பலவற்றையும் படைத்துப் பலருடனே கூடவுண்ணும் உடைமை மிக்க செல்வராயினும், குறுகக் குறுக நடந்து சென்று சிறுகையை நீட்டிக் கலத்திலுள்ள உணவைத் தரையிலேயிட்டும், கூடப்பிசைந்து, தோண்டியும், வாயாற் கவ்வியும், கையால் துழாவியும், நெய்யுடைய அடிசிலை மெய்யிற்படச் சிதறியும், இங்ஙனம் காண்பார் அறிவை இன்பத்தினால் மயக்கும் மக்களைப் பெறாதோர்க்குப் பயனாகும் பொருள் ஏதும் வாழ்நாளில் இல்லை', என்னும் கருத்தமைந்த புறப்பாடலில் *[188]* மக்கட் செல்வத்தின் மாண்பினை இவன் சிறப்பாகப் பாடியுள்ளான். அஃதன்றியும், அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை ஆகிய தொகைநூல்களில் இவன் பாடல்கள் ஒவ்வொன்று காணப்படுகின்றன. தினைப்புனங்காக்கும் தலைவி, தலைவனைக் குறித்த நினைவு மிகுதியில் கிளியோப்புதலையும் மறந்து ஆழ்ந்திருக்கையில், பகலே சிறைப்புறமாகத் தலைவன் வந்து நிற்கக் கண்ட தோழி, அத்தலைவியைக் காவலில் முடுக்குவாள் போல் தலைவனை வரைவு முடுக்குவாளாய்க் கூறுவதை இவனது அகப்பாடல் *[28]* நயமுற அமைக்கும். தலைவனுக்குக் குறை நேர்ந்த தோழி, தலைவியிடம் வந்து, அவள் அவனது குறையை நயக்குமாறு அவன்பால் இரக்கம்வர மொழிவதைக் குறுந்தொகைப்பாடல் *[230]* குறிக்கும். தலைவன் வரைவு நீட்டித்தபோது தோழி அவனை எதிர்ப்பட்டு அவன் தொடர்பு குறித்தெழுந்த அலரால் தம் நாணழிந்த நிலைமையைக் கூறி வரைவு கடாவுவதாக இவனது நற்றிணைப் பாடல் *[15]* அமைந்துள்ளது. 'மாசில் கற்பின் மடவோளொருத்தி தன் குழவியைப் பேய் வாங்கத் தான் அதனைக் கைவிட்டாற்போல, யாமும் எம்முடன் நெடுங்காலமிருந்த நாணைக் கைவிட்டோம்', என்று, அப்பாடலில், தோழி கூற்றில் இவன் அமைத்த உவமை நயம் உணர்ந்தின்புறத் தகுவதாகும்.

**பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்** - பாண்டிய வேந்தன்; புலவன். நெடுஞ்செழியனென்பது இவன் இயற்பெயர். இவன் ஆரியப்படையைக் கடந்த (வென்ற) குறிப்புச் செய்தியளவில் காணப்படவில்லை. இந் நெடுஞ்செழியன் புலமைத் திறனொடு பாடிய பாடலொன்று புறநானூற்றில் *[183]* உள்ளது. அப்பாடலில் கல்வியின் சிறப்பையும், கற்றலின் நன்மையையும், கற்றாரின் மேன்மையையும் இவன் தெளிவுறக் குறித்துள்ளான். ஆசிரியர்க்கு ஓர் ஊறுபாடு உற்றவிடத்து அதனைத் தீர்த்தற்கு வந்துதவியும், மிக்க பொருளைக் கொடுத்தும், வழிபாட்டு நிலைமையை வெறுக்காது கற்றல் ஒருவனுக்கு என்றும் நன்றேயெனக் கற்றலை இவன் வலியுறுத்துவான். 'பிறப்பு ஒரு தன்மையாகிய ஒருவயிற்றுப் பிறந்தோருள்ளும் கல்விச்சிறப்பினால் தாயும் மனம் வேறுபடுவாள்; ஒருகுடிப்பிறந்த பலருள்ளும் மூத்தோனை வருகவென்னாது

அறிவுடையோன் நெறியே அரசனும் செல்வான்; வேறுபாடு தெரியப்பட்ட நாற்குலத்துள்ளும் கீழ்க்குலத்துளொருவன் கற்பின் மேற்குலத்துளொருவனும் இவன் கீழ்க்குலத் தானென்று பாராது கல்வியின் பொருட்டு இவனிடத்தே சென்று வழிபடுவான்', என்ற, இம்மூன்றையும் அக்கற்றலின் நன்மைக்குக் காரணங்களாகக் காட்டி இவன் தன் பாடலை முடித்துள்ளான்.

**பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன்** - பாண்டிய வேந்தன். நன்மாறனென்பது இவன் இயற்பெயர். இலவந்திகைப் பள்ளி என்னுமிடத்தே இறந்தமை பற்றிப் பின்னர் இவன் இவ்வாறு குறிக்கப்பெற்றான். மதுரை மருதனிளநாகனார் *[புற.55]*, மதுரைக்கணக்காயனார் மகனார் நக்கீரனார் *[புற.56]*, காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணார் *[புற.57]*, ஆவூர் மூலங்கிழார் *[புற.196]*, வடமவண்ணக்கன் பேரிசாத்தனார் *[புற.198]* ஆகிய ஐவரும் இவனைப் பாடியுள்ளனராயினும் நக்கீரனார் பாடலொன்றே இவனை நேர்படப் புகழ்வதாயுள்ளது. அதன்படி, இவன், விலக்குதற்கரிய வெகுளியால் மணிமிடற்றோனாகிய கூற்றத்தையும், வலிமையால் வாலியோனையும் (நம்பி மூத்த பிரானையும்), புகழால் மாயோனையும், கருதியது முடித்தலால் முருகனையும் ஒத்தவன். அவ்வாறு கடவுளரை ஒத்தலான் இவனுக்கு எவ்விடத்தும் அரியவென்று எவையுமின்றி எல்லாம் எளியவாயின. ஆயினும், இவனது அரசாட்சியில் அறநெறிக் குறையும், ஈகைக்குறையும் சேர்ந்து நின்று இவன் பெருமைக்குச் சிறுமை செய்தமையை ஏனையோர் பாடல்கள் விளக்குகின்றன. கறைமிடற்றண்ணலின் முக்கண்களுள்ளும் நெற்றியிலே விளங்கும் ஒருகண் போல, மூவேந்தருள்ளும் மேம்பட்டுத் திகழ்ந்த இவன் பெருமையை உடன்பட்டு, அதனையே முகமனாகக் கூறி, 'அறநெறியையே முதலாகவுடையது அரசின் வெற்றி; அதனால், ஒருவரை இவர் நம்மவர் எனக்கொண்டு அவரது கொடுந்தொழிலைப் பொறுத்துக் கோல் வளையாதும், இவர் அயலார் என்றெண்ணி அவருடைய நற்குணங்களைக் கெடுக்காதும், மறமும், மென்மையும், வண்மையுமென்ற மூன்றையுமுடையையாய், நீ நீடு வாழ்வாயாக', என்று மதுரை மருதனிளநாகனார் இவனுக்குச் செவியறிவுறுத்துவர். இவன் பகையரசரொடு மாறுபட்டுப் போருடற்றி அவர்தம் நாடுகளைப் பாழ்செய்யும் இயல்பினனாயிருத்தல் கண்டு சந்து செய்விக்கும் நினைவுடன் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனாரும் இவனது புகழையே முற்கிளந்து, 'நினது செய்தியொன்று சொல்லுவதுடையேன். அஃதியாதெனின், நீ நின் பகைவர் நாட்டைக் கொள்ளுங்கால் அவர் நாட்டின் விளைவயலை நின் மறவரும் கொள்ளை கொள்க; ஊர்களைத் தீயும் சுடுக; நின் நெடுவேல் பகைவரை அழிக்கினும் அழிக்க; மற்று, அவர் காவல் மரத்தை வெட்டுதலை மட்டும் பரிகரிப்பாயாக; ஏனெனில், அவை இளமரமாதலால் நின் நெடுநல்யானை கட்குத் தறியாகப் பொறையாற்றாவாம்; எனக் கூறுவார்போல், 'இவை யாவற்றையுமே தவிர்க' என்று குறிப்பினாலுணர்த்தினார். ஆவூர் மூலங்கிழார்க்கும், வடமவண்ணக்கன் பேரிசாத்தனார்க்கும் இவன் பரிசில் நீட்டித்து அப்புலவர் இருவராலும் வெறுத்துப் பாடப்பெற்றமையால் இவனது ஈகைக்குறைபாடு புலனாம். 'தனக்கு இயலாததனை இயலுமென்றலும், இயலும் பொருளை இல்லையென மறுத்தலும் ஆகிய இரண்டும் இரப்போரை மெலிவித்தலன்றி, 'ஈவோர் புகழைக் குறைக்கும் வழியுமாம்; இப்பொழுது நீ எம்மளவில் செய்த செயலும் அத்தன்மைத்தே. இஃது, எத்துணையும் எம் குடியினர் முன்பு காணாதது யாம் கண்டோம். இத்தீங்கினால் நின் பிள்ளைகள் நோயின்றியே இருப்பாராக; நின் ஆயுளும் மிகுவதாக', என்று தமக்கீயாமையால் இவனுக்கு வரும் கேட்டினைக் குறிப்பு மொழியிற் பாடினார் ஆவூர் மூலங்கிழார். 'திண்ணிய தேரையுடைய அண்ணலே, நின் செல்வத்தையெல்லாம் கண்டோம்; கண்டதொடு விடையும் கொண்டோம். வாழக நின் கண்ணி! பகைவர் வாட அவருடைய அருங் கலங்களைக் கொள்ளைகொண்டு வந்து தம் பொன்னுடைய நெடுநகர் நிறைய வைத்தவர் நும் முன்னோர்; தமிழ்நாட்டெல்லை முழுதும் கொள்ளையாகக் கொண்டு பகைவரைப் பணித்து அவர்தம் பொருள்களையும் வாங்கியுண்ணும் தணித்தற்கரிய மிக்க வலிமையுடையை நீ; நின்னையொத்தவர் நின் புதல்வர்; அவரும் பெருங்கண்ணோட்டத்தால் (எவர்க்கும் வழங்காதே வைத்த) நும் முன்னோர் போல்க. நீயும் நின் வாழ்நாள் மேன்மேல் பெருகி நின் புதல்வர் பெறுகின்ற புதல்வரைக் காணுந்தொறும் விருப்பமுறும் செல்வத்துடனே புகழும் இனிது விளங்கி நெடுங்காலம் வாழ்வாயாக', என்ற பேரிசாத்தனார் கூற்று இவன் சிறுமையோடே, இவன் குடியின் சிறுமையையும் வெளிப்படுத்துவதாயுள்ளது.

**பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனார்** - ஒரு புலவர். நெடுங்கண்ணனார் என்பதே இவரியற்பெயர். பாண்டிய வேந்தனால் படைத்தலைவர்க்குரிய ஏனாதிப் பட்டம் பெற்றவராதலால் பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனார் என்று இவர் பெயர் அமைந்தது. இவர் பாடியனவாய் அகநானூற்றில் ஒன்றும் *[373]* குறுந்தொகையில் ஒன்றும் *[156]* ஆக இரு பாடல்கள் உள்ளன. பிரிந்து போகும் தலைவன் இடைச்சுரத்தே தங்கியிருக்கையில் தலைவியை நினைந்து தன்னெஞ்சிற்குச் சொல்லியதாக இவர்தம் அகப்பாடலை அமைத்துள்ளார். போர்முனை அகப்படுத்தி கொண்டதனால் பாழ்பட்ட மன்றத்தின்கண் உள்ள விட்டம் வீழ்ந்த முதிய தூண்களையுடைய அம்பலத்தில் தலைவன் தங்கியிருப்பதாகவும், வேந்தர் பலர் ஒருங்கு திரண்டு முற்றுகையிட்ட நிலையில் முறிதலுற்ற சூட்டினையுடைய ஒரெயிலின்கண்ணே அகப்பட்ட மன்னனைப் போலத் தலைவி

துயில் துறந்தனளோ, என்று அவன் நினைப்பதாகவும் இவர் பாடியுள்ள அப்பாடற் பகுதிகள் படைத்தலைவராய் விளங்கிய இவரது பண்பிற்குப் பொருந்தவுள்ளன. தலைவியின்பால் காதலுற்ற தலைவனை இடித்துரைத்த பாங்கனுக்கு அத்தலைவன் மறுமொழி கூறுவதை இவரது குறுந்தொகைப் பாடலில் காணலாம். முருக்க மரத்தின் நார்களையப்பட்ட தண்டொடு பிடித்த தாழ்கமண்டலத்தை உடையனாகவும், படிவவுண்டி உண்பவனாகவும், மறைநூல் பயின்றவனாகவும் உள்ள பார்ப்பனப் பாங்கனை விளித்து, 'மறை மொழிகட்குப் பொருந்த நீ கூறும் அறிவுரைகளுள் பிரிந்த காதலரைப் புணர்க்கும் பண்பினையுடைய மருந்தாகும் சொற்கள் எவையுமுண்டோ? இல்லாத நிலையில், நின் இடித்துரை என்பது, பொருளற்ற மயக்குரையே', என்று தலைவன் கூறுவதாக இவர் அப்பாடலை இயற்றியுள்ளார்.

**பாண்டியன் கருங்கையொள்வாட் பெரும்பெயர் வழுதி** -பாண்டிய வேந்தன். 'கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி' காண்க.

**பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதி** - பாண்டிய வேந்தன். 'கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி', என்ற பெயரே, 'கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதி', எனவும் வழங்கியது *[புற.367]*. - கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி' காண்க.

**பாண்டியன் கானப்பேரெயில் தந்த உக்கிரப் பெருவழுதி** - பாண்டிய வேந்தன். 'கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி', என்ற பெயரே, 'கானப்பேரெயில் தந்த உக்கிரப் பெருவழுதி', என வந்தது *[அக.26]*. - கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி', காண்க.

**பாண்டியன் கீரஞ்சாத்தன்** - ஒரு குறுநில மன்னன். பாண்டியன் என்பது கொண்டு இவனை முடிவேந்தன் என்று கருதுதற்கில்லை. பாண்டிய வேந்தர்க்கு அடங்கிய குறுநில மன்னனாதலால் இவனும் பாண்டியன் எனும் சிறப்புப் பெயர் பெற்றான் (நோக்கு. ஔவை. து. புற. 178 : முன்னுரை). கீரனுக்கு மகனான சாத்தன் கீரஞ்சாத்தன் எனப் பெயர் பெறுவான். ஆதலால் சாத்தன் என்பதே இவன் இயற்பெயர். கீரன் என்பது தந்தை பெயராம். ஆவூர் மூலங்கிழார் இவனைப் பாடியதொரு பாடலிலும் *[புற. 178]* சாத்தன் என்ற இயற்பெயரளவிலேயே இவன் குறிக்கப் பெறுகின்றான். அப்பாடலால் இவன் மென்மையும், வன்மையும் நன்கு விளங்கும். 'தன் முற்றத்தின்கண் புகுந்த சன்றோர் அப்பொழுது உண்ணாராயினும், 'நீர் உண்ணீராயின் யானும் உண்ணேன்', என்று தன்னோடே சார்த்திச் சூளுற்று, 'உண்ணுவீர்', என்று இரந்து வேண்டும் பெரும் பெயரையுடைய சாத்தன் இங்கே எம்போல்வாரிடத்து இனிய மென்மையுடையவன்; இங்ஙனம் மெல்லியனாயினும் போரின்கண் சிறுபேராண்மையுடையோர் அஞ்சிப் புறங்கொடுத்து ஒடுங்காலத்து அவர்க்கு அரணாகத் தான் தன் வலிமையால் முந்துற்று நிற்பன்', என்று, இவனுடைய இருபெரும் பண்புகளையும் பாராட்டுகின்றது அப்பாடல்.

**பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி** - ஒரு பாண்டிய வேந்தன். மாறன் வழுதியென்பது இவன் இயற்பெயர். கூடகாரம் என்னுமிடத்தே இறந்தமையால் பின்னர் இவன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதியென்று குறிக்கப்பெற்றான். இவனுடைய வன்மையும், சினமும் வாய்ந்த போராற்றலை ஐயூர் முடவனாரும் *[புற.51]*, மருதனிளநாகனாரும் *[புற.52]* வியந்து பாடியுள்ளனர். 'நீர் மிகுமாயின் அதனைத் தாங்கும் அரணுமில்லை; நெருப்பு மிகுமாயின் உலகத்துயிர்களை நிழல் செய்து காக்கும் நிழலுமில்லை; காற்று மிகுமாயின் அதனைப் பொறுக்கும் வலிமையுமில்லை; அவற்றையொத்த சினம் பொருந்திய போராற்றல் மிக்க வழுதி, தமிழ்நாடு, மூவேந்தர்க்கும் பொதுவென்று கூறப்பொறாதவனாய்ப் போரையேற்றுத் திறையை வேண்டுவனாயின், கொள்க எனச் சொல்லி முன்னமே கொடுத்த மன்னர் நடுக்கம் தீர்ந்தார்; கொடாமையால் அவனருளை இழந்த அரசர் யாவரானாலும் மிக இரங்கத்தக்கார். கறையான் அரிதாக முயன்றெடுத்த செம்புற்றினின்றும் புறப்பட்ட ஈயலைப் போல ஒரு பகல் வாழ்க்கைக்கே அவர் சுழல்வோராவார்', என்பர் ஐயூர் முடவனார். 'உறங்கியெழுந்து மூரிநிமிர்ந்த புலியேற்றை, ஊனை விரும்பிய உள்ளம் செலுத்துதலால், அவ்விரையைக் கருதித் தான் வேண்டுமிடத்தே விரும்பிச் சென்றாற்போல், வடநாட்டு வேந்தர் வாட அவரைக் கொல்லக் குறித்து, வழுதியே, நீ கருதியது இப்போராயின் காடாகிக் கெடும் நாடுடையோர் இப்பேருலகில் யாரோ? அவர் இரங்கத்தக்கார்', என்பர், மருதனிளநாகனார்.

**பாண்டியன் சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன்** - ஒரு பாண்டிய வேந்தன். நன்மாறன் என்பது இவன் இயற்பெயர். சித்திரமாடம் என்னுமிடத்தே இறந்தமை பற்றிப் பின்னர்ச் சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன் என்று குறிப்பிடப்பெற்றான். மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார், பூவை நிலைத்துறையில், இவனைப் பாராட்டிப் பாடியதொரு பாடலால் *[புற.59]* இவன் பண்புகள் தெரிய வருகின்றன. அப்பாடலின்படி ஆரந்தாழ்ந்த அழகு மிக்க மார்பினையும், முழந்தாளிலே தோய்ந்த பெரிய கையினையும் உடைய அழகு மாட்சிமைப்பட்ட இவன், யாவர்க்கும் உவந்து அருள் செய்தலில் வல்லவன்; மெய்யாக யாவரிடத்தும் பொய்யைத் தெளியான்; தன் பகைவர்க்கு எந்நாளும் சுடுகின்ற ஞாயிற்றையொப்பான்; நெருங்கிப் பயிலும் நண்பர்க்குத் தண்ணிய திங்களையொப்பான்.

**பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்** - பாண்டிய வேந்தன். 'தலையாலங்

கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்' காண்க.

**பாண்டியன் நெடுஞ்செழியன்** - பாண்டிய வேந்தன். 'தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்' காண்க.

**பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி** - ஒரு பாண்டிய வேந்தன். குடுமியென்பதே இவன் இயற்பெயர். பல வேள்விகளை இயற்றிய சிறப்பினால் பல்யாகசாலை என்ற அடையும், முதுமை பெற்ற பின் முது என்ற அடையும் சேர்த்து, பல்யாகசாலை முதுகுடுமி என்றும், குடிமை பற்றிப் பெருவழுதி என்றும், இவன் பெயர் நீண்டு அமைந்தது. காரிகிழார் *[புற.6]*, நெட்டிமையார் *[புற.9,12,15]*, நெடும்பல்லியத்தனார் *[புற.64]* ஆகிய மூவரும் இவனை நேரிற்பாடியுள்ளனர்; மாங்குடிமருதனார், தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு அறமுரைக்கையில், 'நீ பல்யாகசாலை முதுகுடுமி போல, நல்வேள்வித் துறைகளில் முயல்வாயாக', என்று, வேள்விச் சிறப்புக்கு இவனை எடுத்துக்காட்டுவர் *[மது.759.760]*. தன்னாட்சியிற்பட்ட பரந்த நிலவெல்லையின்கண் தன்னைக் குறித்த அச்சமும், புகழும் பரவ, நடுநிலை கோடாமலும், படை, குடி முதலிய கூறுபாடுகள் சிறக்கவும் ஆண்டு, பகைவரை வென்று கொண்ட நல்லணிகளைப் பரிசிலர்க்கு வரிசையின் நல்கி, முக்கட்செல்வராகிய சிவபெருமான் கோயிலை வலம் வருதற்குக் கொற்றக்குடை பணியவும், நான்மறை முனிவராகிய அந்தணரின் வாழ்த்துக்கெதிரே முடிவணங்கவும், பகைவரது நாட்டைச் சுடும் புகைப்பட்டுத் தலைமாலை வாடவும், உரிமை மகளிரின் ஊடல் கொண்ட முகத்தின் முன் சினம் தணியவும் பெற்றுத் தண்கதிர் மதியம் போலவும், ஒண்கதிர் ஞாயிறு போலவும், நிலமிசை நிலைபெறுமாறு இவனை வாழ்த்துவர் காரிகிழார். தான் பகைவரை வென்று பெற்ற வெற்றி முழுவதையும் வியவாது தன்னகத்தே உட்கொண்டவனென்றும், தணியாத வண்மையமைந்தவனென்றும், தகுதி மாட்சிமைப்பட்டவ னென்றும் இவனை அவர் பாராட்டி விளிப்பர். "ஆவும், ஆனினது இயல்பையுடைய அந்தணரும், மகளிரும், நோயுடையீரும், பிள்ளைகளைப் பெறாதீரும், ஆகிய நீவிர் நுமக்கு அரணாகிய இடத்தை அடைவீராக; யாம் எம் அம்புகளை விரையச் செலுத்துவேம்', என்று அறிவித்துப் பின் அறப்போர் செய்யும் மேற்கோளினையும் அதற்கேற்ற மறத்திறனையுமுடைய எம்வேந்தனாகிய குடுமி, பஃறுளியாற்றின் மணலிலும் பலகாலம் வாழ்வானாக', என்று, இவன் பண்புகளைப் பாராட்டி வாழ்த்துவர் நெட்டிமையார் *[புற.9]*. இவன் தன் பகைவர்க்குத் துன்பமாக அவர் நாடுகளைக் கைப்பற்றிப் பாணர் பொற்றாமரைப் பூச்சூடவும், புலவர் பட்டம் பொலிந்த மத்தகத்தையுடைய யானைகளுடனே புனையப்பட்ட தேர்களை ஏறுதற்கேற்ப அமைக்கவும், இவ்வாறு தன் ஆர்வலர்க்கு இனியவற்றைச் செய்தலை அப்புலவரே பழிப்பவர் போலப் புகழ்வார் *[புற.12]*. பகை நாடுகளையெல்லாம் அழித்த சினத்தையுடைய நின்னை எதிர்த்துப் பொரவந்து தோற்று வசைபட வாழ்ந்தோர் பலரோ, நீ வேள்விகளை முற்றுவிக்கத் தூண்களை நாட்டிய வேள்விச் சாலைகள் பலவோ, என்று அவர் இவனை வினவுவதனால் *[புற.15]* இவன் பெற்ற வெற்றிகளும், செய்த வேள்விகளும் எண்ணற்றவையென்பது விளங்கும். 'பகைப்புலத்திலே யானையணி பொருத இடமகன்ற பாசறைக்கண் தங்கியிருக்கும் குடுமிக் கோமானைக் கண்டு, மிக்க நீரால் அளாவி அடப்பட்ட புல்லரிசிக் கூழைக் கைவிட்டு வறுமையை யொழித்துச் செல்வம் பெற்று வருதற்கு, விறலியே, செல்வேமோ?, என்று, பொருநன் கூற்றில், நெடும்பல்லியத்தனார் பாடியுள்ளது கொண்டு *[புற.64]*. இவனுடைய வெற்றிச்சிறப்பையும், ஈகைச்சிறப்பையும் உணரலாம்.

**பாண்டியன் பன்னாடு தந்தான்** - ஒரு பாண்டிய வேந்தன். புலவன். 'பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி' காண்க.

**பாண்டியன் மறவன்** - குறுநில மன்னன். திருமகள் விரும்பும் நுண்ணிய தொழில் பொருந்திய அணிகலன்களையுடைய பாண்டியன் மறவன் என்று, நாலைக்கிழவன் நாகனைக் குறிப்பிடுவர், வடநெடுந் தத்தனார் - நாலைக் கிழவன் நாகன்' காண்க *[புற.179:5]*.

**பாண்டியன் மாறன் வழுதி** - பாண்டிய வேந்தன்; புலவன். 'பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி' காண்க.

**பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி** - ஒரு பாண்டிய வேந்தன். பெருவழுதி என்பது இவன் இயற்பெயர். மதுரையின்கண் உள்ள வெள்ளியம்பலத்தே இறந்தமையால் பின்னர் இவ்வாறு குறிக்கப் பெற்றான். இவன், சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனுடன் நட்புக் கொண்டு ஒருங்கிருந்த போது அவ்வொற்றுமை கண்டு காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனாரால் உடனிலைத் துறையில் அவனுடனே பாராட்டி வாழ்த்தப் பெற்றான் *[புற.58]*. 'பருத்த அடி மாய்ந்த ஆலமரத்தின் நெடிய கொம்புகளை அதன் வீழ்து தாங்கினாற் போலத், தமக்கு முன்னுள்ளோர் இறந்தபின், தாம் தளராது, நல்ல புகழையுடைய முதுகுடியைத் தடுமாற்றமற அணைத்து, தான் சிறிதேயாயினும் பாம்புகளை இனத்தோடே எறியும் இடியேறு போல இளமைக்காலத்தும் பகைவரைப் பொறாத வேந்தரையுடையது போரின்கண் மாட்சிமைப்பட்ட பாண்டியர் குடி; அப்பாண்டியர் குடியுள் இவன் ஏறுபோல்வான்; இவன், நெல்லும், நீரும் யாவர்க்கும் எளியவெனக் கருதி, அவை போலாது, யாவர்க்கும் பெறுதற்கரிய பொதியின்மலைச் சந்தனமும் கடல் முத்துமென

இவற்றைமுரசம் மூன்றுடனே ஆளும், தமிழ் பொருந்திய மதுரைக்கண் குளிர்ந்த செங்கோலையுடைய வேந்தன்', என்று, அவ்வாழ்த்துப் பாடலில் குடிச் சிறப்போடே, தனிச் சிறப்பும் விளங்க இவன் பாடப்பெறுகின்றான்.

**பாண்டில் - 1. கிண்ணி.** எழினியின் வாள், பகைவர் தசை கிழித்து உருவிழந்தன. வேல், நாடழித்துச் சுரையும், காம்பும், ஆணியும் கலங்கின. களிறு, மதில் பொருது கிம்புரி சுழன்றன. குதிரை, பகைவர் மார்பழிய ஒடிக் குருதி படிந்த குளம்பின. அவன்தானும், கழல்வடிவாகவும், பாண்டில் - கிண்ணி - வடிவமாகவும் செய்யப்பட்ட, துளைக்கப்பட்ட பரிசையையுடையவன். அதனால், அவனொடு பொருதார் பிழைத்தல் அரிதாகும், என, எழினியைப் பற்றி ஔவையார் பாடியுள்ளார் *[புற.97:15]*.

**2. விளக்குக் கால்.** குட்டுவன் பகைவரை வென்று அமையான், பரிசிலர் களிறு பெற்று அமையார், மலையருவி போன்று மாடத்துக் கொடிநுடங்கும் தெருவில், பாண்டில் - காலுடைய - விளக்கு எரிய, விறலியர் ஆடும் நாட்டெல்லையில், அவனது புகழ் கூறியமையாது" எனக், குட்டுவனைப் பரணர் பாராட்டுவர் *[பதி.47:6]*. 'ஆடவர் பலர் உயர்நிலை யுலகமெய்த, நற்போரைக் கடந்த நின் தடக்கை, இரப்போர்க்குக் கவிதலல்லது, இரத்தற்கு மலராது. பாண்டிலையுடைய, விளக்கின் ஒளியில், மகளிர் ஆடும் துணங்கைக்கு, முதற்கை கொடுத்தலால் நின் மனைவி சினந்துழல்வாள் என்று ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைப் பற்றி நச்செள்ளையார் குறிப்பிடுவர் *[பதி.52:13]*. வாடை வீசப், பாண்டில் விளக்கின் சுடரில், படைத்தலைவன் காட்டப், புண்பட்டோரை வேந்தன் கண்டான் *[நெடு.175]*.

**3. எருது.** சிறைப்புறமாகக் கூத்தரைக் காணின், புரவியையும், பாண்டிலையும் - எருதினையும் - தக்க அணிகலன்களோட ஈக, எனக் கூறும் கொள்கையையுடையவன் வாழியாதன் *[பதி.64:10]*. தேரோடு, பரியின் ஒட்டத்தையும் புறக்கிடச் செய்யும் வலிய தாளினையும், ஒளி பொருந்திய முகத்தினையுமுடைய பாண்டிலைப் பாகனோடு தந்து, பிற பரிசிலுடன் பாணரை நல்லியக்கோடன் அனுப்புவன் *[சிறு.260]*. 'நெஞ்சே! மழை நிறையப் பெய்தவிடத்தே புல்லை நிறையத் தின்ற நாகு, போர்த்தொழில் அமையாத ஏற்றினுக்கீன்ற, இளைய பாண்டில், வண்டியிற் கட்டி ஊரச் செம்மாந்தது போல், மதர்த்த அழகும், இளமையுங்கொண்டு. மோர்ப் பானையுடன் ஊரூராய்ச் செல்வாளது, ஒவ்வாமையுடைய அழகைக் காண்பாயாக', எனத், தலைமகன் நெஞ்சிற்குக் கூறினான் *[கலி.109:4]*.

**4. வட்டத்தோல்.** 'புள்ளிகளையுடைய மானின் தோலைத், தீது நீக்கி, ஒளிவிடுகின்ற பாண்டில் - வட்டத்தோல் -ஆக்கி, அதன் வட்டவிளிம்பில் அருங்கலம், முத்து என்பவற்றைக் கட்டிக், கருவிகளால் உள்வேலைப் பாடமைத்துச், சேரமாதேவி அதனை வேள்வி செய்யும்போது அணிந்து கொண்டாள். *[பதி.74:11]*.

**5. பக்கரை / குதிரைச் சேணம் / வட்டப்பக்கரை.** வில்லை மார்பிற் பொருந்த வளைத்து,வில்லி நாண்பொருத தடக்கையால், வானத்தில் மீன் பூத்தாற் போன்று, மணிகள் கட்டிய, பாண்டிலும் - (வட்டமான) பக்கரையும்- மயிர்க்கவரியுமுடைய பாய்மாமீதிருந்து இளஞ்சேரல் வேலைப் பிடித்தெறிவான் *[பதி.90:35]*.

**6. வட்டக்கட்டில்.** மகளிரது பருத்த முலைபோலும் குடத்தினையும் உள்ளி முதல் போலும் நடுப்பகுதியினையும் கொண்ட காலமைத்துப், பேரளவினதாகச் செய்யப் பெற்றது பாண்டில் - வட்டக் கட்டில் *[நெடு.123]*.

**7. கஞ்சதாளம்.** முழவு, ஆகுளி, உருக்குற்ற தகடாகத் தட்டின பாண்டில் - கஞ்சதாளம் - கொம்பு, யானைக்கை போலும் நெடுவங்கியம், குறுந்தூம்பு, குழல், தட்டை, எல்லரி, பதலை பிறவுமாகப் , பாலாக்காயின் கொத்தையொப்பக், கட்டப் பெற்ற வாச்சியமுட்டுக்களையுடையபையை யுடையவர் கூத்தர் *[மலை.4]*. கழாஅர் முன்றுறையில் கரிகால் வளவன் காணப், பெரிய பாண்டில் ஒலிக்கக், காவிரிப்புனலின்கண் அத்தி ஆடினான் *[அக.376:9]*.

**8. வட்டக்கண்ணாடி.** மழை, கடையப்பட்ட பஞ்சின் துய் போன்று தூவ, கரும்பின் வெண்பூ, கோடைப் பூளைப்பூப்போல் அசைய, புதலில் பகன்றை, கிடுகிற்பதித்த பாண்டில் - வட்டக்கண்ணாடி - போன்று மலர, அவரை, தோன்றி அவிழ, குருகினம் ஒலிப்பப் பிரிவுற்ற மகளிர் அணி துறந்து நடுங்கப், பனிப்பருவம் வந்தது *[அக.217:8]*.

**9. வெள்ளிவட்டில்.** வேல்போல விரிந்த மேற் கதுப்பினையுடைய பகன்றை, பாண்டில்-வெள்ளி வட்டில்- போல முன்பனிக்காலத்தில் மலரும் *[நற்.86:3]*.

**10. தேர்.** 'நெஞ்சே! அருஞ்சுரம் கடத்தல் நினக்கு எளிதாகும். (ஆயின்) யான், பருந்து படப் பாண்டிலோடு - தேரோடு - போர் செய்த யானையினையுடைய கிள்ளியது அம்பர் நகரைச் சுற்றி ஓடும் அரிசிலாற்றின் அறல் போன்ற இவள் கூந்தலைவிட்டமையேன்', எனத், தலைமகன் நெஞ்சிற்குக் கூறினான் *[நற்.141:8]*.

**11. வட்டம்.** 'தலைவ! பொன்னாற் செய்த பாண்டில் - வட்டம் - ஆகிய காசுகளை நிரைத்துக் கட்டிய அல்குலையும், விளங்கும் வளையினையும், மெல்லிய தோளினையும் உடைய தலைவியின் இழை நெகிழப் பிரிதல் வல்லாயாயின், இவளது நுதற்கவின் மீட்டற்கரிதாகும்'. எனத், தோழி தலைவனிடம் சொல்லிச் செலவழுங்குவித்தாள் *[ஐங்.310:1]*. தலைவியின் பொன்னாற் செய்த பாண்டிற் கலங்கள் பொலிவழிய, அல்குல்

அழகு கெடத், தலைவர் தாம் புலி வழங்கும் கானத்தைக் கடந்தனர் *[ஐங்.316:1]*.

**12. கால் விளக்கு.** புதல்வனின் தாய் பாண்டிலின் - கால் விளக்கின் - செவ்விய சுடர் போல் மனைக்கு விளக்காயினாள் *[ஐங்.405:1]*.

**13. தாளம்.** சோலைமலையில் மந்திபாய, முல்லை மலர, மயிலகவக், குருக்கத்தியின் இலையுதிரக், குயில்கூவ, இசையுணர்த்தும் குழலும், பாண்டிலும் - தாளமும் - இயம்பப் பாடுவாரது மிடற்றுப் பாடலும், முழவோசையும் எதிர்ந்தாற்போல் தோன்றும் *[பரி.15:42]*.

**பாண்டில் விளக்கு** - கால் விளக்கு. பாண்டில் விளக்கு-கால் விளக்கு - சுடர் விட்டெரிய விறலியர் நகரில் ஆடுவர் *[பதி.47:6]*. வாடைக்காற்று வீசுந்தொறும் பலவாகிய பாண்டில் விளக்கில் எரிகின்ற கொழுந்து அசைய, வேப்பந் தாரைத் தலையிலே கட்டின காம்பினையுடைய வேலோடு, முன் செல்லும் படைத்தலைவன், புண்பட்டோரைக் காட்டப் பாண்டியன் கண்டனன் *[நெடு.175]*. காண்க *[2,12]* பாண்டில்

**பாண்மகள்-1.** விறலி. 'பாண்மகள்! - விறலி! - சேரலாதன் போராகிய வினையை விரும்புதலையுடையனாகி, அவ்விடத்தே பெற்ற அரிய பொருள்களை அமையாது கொடுப்பான், ஆதலால், அவனைக் காணும் பொருட்டுப் போதலை விரும்புவோமோ?' என விறலியாற்றுப் படைத்துறையில் அவன் கொடையை ஏத்துவர் நச்செள்ளையார் *[பதி.60:3]*.

**2. பரத்தி/பரதவப் பெண்.** பாண்மகள் - பரத்தி - வாளை மீனுக்கு விலையாகப் பழைய செந்நெல்லைக் கொள்ளாது, கழங்கினை யொத்த பெரிய முத்துக்களோடு சிறந்த அணிகளைப் பெறுவாள் *[அக.126:9]*. தூண்டிலால் மீனைப் பிடிக்கும் பாண்மகள் புனல் அடைகரையில் அகப்படுத்திய வரால்மீனை, வஞ்சிமர விறகினால் சுட்டுக் கள்ளையுண்டு களித்திருந்த தன், தந்தையை உண்பிப்பாள் *[அக. 216:1]*. பாண்மகள் கெடிறு சொரிந்த வட்டி நிறைய மனையோள் பெரும்பயற்றை இட்டுக் கொடுப்பாள் *[ஐங்.47:1]*. ஊரில் பாண்மகள் சிலவாகிய மீனைச் சொரிந்து, பலவாகிய நெல்லைப் பெறுவள் *[ஐங்.49:1]*.

**பாண்மகன். 1. பாணன்.** வேந்தனது மறம் பாடிய பாடினி, அணிகலன் பெற்றாள். அவ்வணிகலம் பெற்ற விறலிக்குமுதல் நிலையாகிய குரலிலே வந்து பொருந்தும் பாட்டை வல்ல பாண்மகன் - பாணன் - வெள்ளிநாரால் தொடுக்கப் பெற்ற பொற்றாமரையைப் பெற்றான் *[புற.11:15]*. பகல் நீடுதல் ஆகாமல், இராப்பொழுது மிக்கு, மாக்கள் குளிரால் நடுங்கும் மாதத்தில், குளிர் வழிச்செல்லும் பாண்மகன் உவப்பப், பரிசிலரது சிறுகுடும்பங்கள் வளர, இருள் நீங்க ஞாயிறு தோன்றுவது போலச், சேர்ந்தோர்க்கரணாகியவன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் *[பதி.59:3]*. சிறிய யாழை இடப்பக்கந் தழுவிப், பாலையாழை வாசித்தல் வல்ல பாண்மகன், முறையறிந்தியக்கப், பரிசில் தருவாரை விரும்பி, வறுமைத் துன்பம் வழிப்படுத்தச் சென்றான், அறிவுவாய்த்தலையுடைய இரவலன் *[சிறு.37]*. 'அதியமானஞ்சியின் புகழை நிலைபெறச் செய்த பாண்மகன், நல்லிசையினை வரையறை செய்த நூலின், எண்ணின் முறைப்படி இயற்றிய பண்ணினும், புதியதாக இயற்றிய திறத்தினும், வதுவை செய்த நாளினும் இனியவன், தலைமகன்', என்றாள், தலைவி *[அக.352:14]*. 'ஊர்! நின் பாண்மகன், யார் அழகு, கெடும்படி, இனிப் பொய்க்குமோ?' என்று தலைவனிடம் தலைமகள் உரைத்தாள் *[ஐங்.49:3]*.

**2. பரதவன்.** மீனைக் கொள்ளுதல் வல்ல பாண்மகன் - பரதவன் - இட்ட தூண்டிலின் இரையைக் கௌவி, அகப்படாது சென்ற வாளைமீன், குளத்தின் அணித்தாகிய பிரம்பினது காற்றாலசையும் நிழலை, நீரிற்கண்டு தூண்டிலென அஞ்சும் *[பெரு.284]*. மீனைப் பிடிக்க வலைவீசுதல் வல்ல பாண்மகன் மடமகளது வரால் மீன் சொரிந்த வட்டியில் மனையோள், பழைய வெண்ணெல்லை நிறைக்கும் *[ஐங்.48:1]*.

**பாண!** - யாழ்ப்பாணனே! 'உடும்புரித்தாற்போன்ற, எலும்பெழுந்த, விலாப்புடையையுடைய, சுற்றத்தின், மிக்க பசியைத் தீர்ப்பாரைக் காணாது, அறிவார் சிலராதலின், சில செவிப்படும் யாழினை வெறுத்து, இங்கே என் செய்கின்றாயோ? பாண! - யாழ்ப்பாணனே - என்றழைத்துப், பாணனை ஆற்றுப்படுத்தினர் *[புற.68:4]*. கையது யாழ்; மெய்யது பசி; அரையது வேற்றிழை ஊடு போன, வேர்ப்பால் நனைந்த சீரை இவையுடைய பாண! எனக்கூறிப் பாணனை விளிகொள்வர் ஆலத்தூர்கிழார் *[புற.69:4]*. தேன் போலும் தொடை பொருந்திய சிறிய யாழையுடைய, பாண! கயத்து வாழ் யாமையைக் காழிற் கோத்தாற் போன்று, நுண்ணிய கோலால் பிணிக்கப்பட்ட கிணையோசையைக் கேட்க, எனக் கூறும் இரவல! என்று இரவலராகிய பாணன் விளிக்கப் பெறுகிறான் *[புற.70:1]*. ஆனினது இனம் பெருகிய வழி நடந்து, மானினது இனம் பெருகிய மலை கடந்து. மீனினது இனம் பெருகிய துறை பின்னொழிய வந்தான் சிறிய யாழையும், சிதார்உடையயையும்உடைய பாண என்று மருதனிளநாகனார் பாணனை விளித்தார் *[புற.138:5]*. சிறிய யாழை, வாடிய மருங்கில் தழுவி, இதனை உணர்வோர் யாவர்? என் துன்பத்தைத் தீர்க்க, என, எடுத்துச் சொல்லும் பாண! *[புற.155:3]* என்று மோசிகீரனார் பாணனை விளித்தார் இரங்கற்பண்ணாகிய விளரியைச் சென்றுறுகின்ற நரம்புத் தொடையினது தீங்கை நினைந்து, வழியிடை விரித்து வரும் மனையோள் கூந்தலைப் பார்த்துக், களர் நிலத்துக் கள்ளிமர நிழற்கடவுளை ஏத்திப்

பசி தங்கிய வயிற்றோடு, நம் குருசிலைக் காணமாட்டேன் கொல்லோ, எனக், கேட்டு வரும் பாண!" என்று அவனை வடமோதங்கிழார் அவலநிலையில் விளிப்பார் *[புற.260:8]*. 'துடிய! பாண! விறலி! நீவிர் என்னாகுவீர்? அளியீர்! இவ்வுலக வாழ்வோ அரிது. யானும், மழிதலையோடு, கழிகலமகளிர் போல வருவது நினைந்து வாழ்தல், அதனினும் அரிது! என ஒரு தலைவன் துன்பநிலை பற்றி நப்பசலையார் பாடுவர் *[புற.280:8]*. பாண! தலைவன் மூதிலாளருள்ளும் இவற்குக் கள்ளை முகந்து கொடுக்க என்னும், அன்றியும், பாசறையில், தண்ணுமை, பூக்கோள் இன்று என்று அறையும் எனப், பாணனை விளித்துக் கூறுவதாகக் கழாத்தலையார் பாடுவர் *[புற.289:8]*. பொற்கம்பியினை ஒத்த முறுக்கு அடங்கின நரம்பினையும், மின்னலை ஒத்த தோலினையும், மிஞிறு போன்ற ஓசையையுடைய, சிறிய யாழ்க்கல்வியின் நன்மை நிறைந்த பாண! என்பது ஒரு பாணனைப் பற்றிய விளி *[புற.308:3]*. 'மூதறிவுடைய பாண! முயலைச் சுட்டாயினும் தருவேம். புகுதருக. சீறூர் மன்னன், வேந்தன் ஏவிய தோழிலில் சென்றவன், வந்ததும், நின் பாடினிமாலையணியப் பொற்றாமரையினை நினக்குச் சூட்டுவன், எனப், பாணனை நோக்கி ஆலங்குடி வங்கனார் பாடுவர் *[புற.319:9]*. உணங்கு தினையைக் கானக்கோழியோடு, இதல் கவர்ந்து உண்டதாகச், சூடுற்ற ஆரல் மீனோடு, இறைச்சியை நின் பெரிய சுற்றத்துடன் உண்டு, தங்கிச் செல்க, பாண! எனப் பாணனை விளித்து வீரைவெளியனார்பாடுவர் *[புற.320:15]*. பாண! வாள் வடுச்செறிந்த குருசில் காக்கும் ஊர், வன்புலவைப்பினது, எனப், பாணனுக்கு மருத்துவன் தாமோதரனார் கூறுவர் *[புற.321:8]*. 'பாண! புன்புலம் நெல் விளையாது. வரகுந் தினையும் இரவலர்க்கு ஈயத் தொலைந்தன. ஆயினும், வாடிய ஊனை நெய் பெய்து, கொய்த குரலரிசியோடு சமைத்த களிகொள் வெண்சோற்றை உண்டிருந்தபின், மன்னனை பாடப், பரிசில் தருகுவன், என்று ஒருசீறூர் மன்னனின் சிறப்பு பாடப்பட்டுள்ளது *[புற.328:6]*. 'யாழ் வாசிக்கும் முறையறிந்த கைவல்ல பாண! நேரிப்பொருநனாகிய செல்வக் கடுங்கோவைப் பாடிச் செலின், கொடுமணம் எனும் ஊரிலுள்ள அணிகலன்களையும், பந்தர் என்னும் ஊரிலுள்ள முத்துக்களையும் பரிசிலாகப் பெறுகுவை', எனப், பாணாற்றுப்படையாகக் கபிலர் பாடியுள்ளார் *[பதி.67:3]*. பொன் கம்பியாய் ஒழுகினாலொத்த முறுக்கடங்கின நரம்புடைய யாழை இடப்பக்கந்தழுவி, உலகில் புரப்பாரைப்பெறாது, பழுமரத்தைத் தேரும் பறவைபோல, வருந்தும் சுற்றத்துடன், திரியும் பொலிவழிந்த வடிவினையும், வெறுத்துப் பேசும் வாயினையும் உடைய பாண! எனப், பாணனை விளித்து ஆற்றுப்படுத்தினர் *[பெரு.22]*.

ஆனினம், பால் பிலிற்றக், கன்றை அழைக்கும் குரலோடு மன்றிற் புகும் மாலையும், தலைவர் நம்மை நினைந்து வாராராயின், காலையில், எந்நிலையடைவோம் பாண! என்று கூறிய மனையோருக்கு, மறுமொழி கொடுக்கவியலாது, செவ்வழிப் பண்ணையாழில் இசைத்துக், கடவுள் வாழ்த்தி, அவர் மாட்டுச் செல்லத், தலைவன் தேர் வரவு கண்டேன்; எனப் பாணன் கூறினான் *[அக.14:13]*. 'பாண! முன் களவுக் காலத்து தலைவன் அடுத்தடுத்து வருவார். இப்பொழுது வாராதோர் நமக்கு என்ன உறவினர், என்னாது, இரவில் மனைப்பனையில், துணை பிரிய, அன்றில் அரற்றி துயிலாதிருத்தலை, நெஞ்சே! காண்பாயாக,' எனக் கூறித், தலைவி அழுதலை அவரிடம் சென்று சொல்லின், என்ன தவறாகும்?' எனத், தோழி பாணனிடம் உரைத்தாள் *[அக.50:10]*. பாண! கார் செய்காலையும் தலைவர் வாராராயின், அவர்தம் நிலையாதாகுமோ? என்று, கடவுள் கற்பினையுடைய தலைவி கூறச் செய்வினையழிந்த மயக்கம் பொருந்திய நெஞ்சின் துன்பம் அகல, நீ வந்துற்றனை', எனத், தோழி பாணனிடம் கூறினாள் *[அகம்.314:14]*.

'பாண! தலைவன் நிலவொளியில் கட்டிலில் கிடந்து தன் புதல்வனைத் தழுவப், புதல்வன் தாய் அவனைத் தழுவி, ஊடல் தீர்ந்த பண்புடைமையினைக் காணாய்', எனத், தோழி பாணனிடம் உரைத்தாள் *[குறு.359:1]*.

'பாண! தலைவன் இல்லையாகவும், பண்டு, தானாடிய பாவையைக் கொண்டு ஆயமொடு விளையாடச் செல்வேமாக, என்றனள் தலைவி. எனவே, தலைவன் இனி வரல் யாது பயன்?' எனத், தோழி, பாணனிடம் வாயின் மறுத்தாள் *[நற்.127:3]*. 'பாண! நும் பெருமகன் சேரிவந்து, தாரும், கண்ணியும் காட்டி, ஒருமைப்பாடுடைய என் நெஞ்சம் கொண்டமை விடுவதமையுமோ?' எனப் பாணனிடம் பரத்தை கூறினாள் *[நற்.150:1]*. 'தலைவர் விடுப்பத், தூதாக வந்த பயனைத் தெரிந்து பேசும் வருத்தமில்லாத பாண! நின் பணிந்தமொழி தலைவியது பசப்பினைக் களையா', எனக் கூறித், தோழி பாணனிடம் வாயின் மறுத்தாள் *[நற்.167:6]*. 'பாண, முயங்கும் விருப்போடு, புதல்வனொடு சென்றும், அஞ்சும் மான்பிணைபோல் அகன்று, நீயாரோ எனக் கூறி, இகழ்ந்து நின்றதனை நகுவேம். வாராய்', எனத், தலைவன் பாணனிடம் கூறினான் *[நற்.250:1]*. 'பாண! தலைவியது அழிந்த நலன் குறித்து நீ கண்டவாறே தலைவனிடம் உரைத்தாய் இல்லை. இது, நினக்கு நன்றோ?' என்று, தோழி பாணனை வினாவினாள் *[நற்.291:6]*. 'பாண! புதல்வனைப் பெற்றுக் கிடந்தோளை யடைந்து, குவளை மலரால் ஒற்ற, என்னைக் கண்டு முறுவலைத் தோற்றுவித்துக் கண்புதைத்து, உவந்ததனை நினைந்து, இன்று வேறுபட்டமையால் நகுவேம். வாராய்', எனத், தலைமகன் பாணனிடம் வருந்திக் கூறினான் *[நற்.370:1]*. 'பாண! எம் கலிங்கம், நெய்யும், குய்யும் பட்டு மாசடைந்துள்ளது. தோளும் தீம்பால் பருகப் புதல்வனை அணைத்து ஈன்றணிமையானாகிய முடை வீசும். எனவே, பரத்தையர் சேரிக்குச் செல்லும்

தேரோனுக்கு யாம் ஒப்பல்லேம். அதனால், பொன் போலும் நரம்புடைய, இனிய குரலுடைய சிறிய யாழை இயக்கவல்லையாயினும், எம்மைத் தொழுது பாடற்க, ஊரனையும் கொண்டு செல்க', எனப், பாணனிடம் தோழிவாயில் மறுத்தாள் *[நற்.380:9].*

'பாண! நின் தலைமகளாய்ப் பரத்தை, தலைவனது தார் மலர் நுகர்ந்த வண்டு, எம், போதுபொருந்திய கூந்தலில், வந்திருந்ததென, வெகுண்டனள், என்ப', எனத் தலைமகன் கேட்பப் பாணனிடம் கூறினாள் *[ஐங்.82:1].* 'பாண! என் தங்கையாய் தலைவியைத் தலைவன் மிகுதியும் அருள் செய்வான் என்பர். அவ்வாறு, அவளை ஊரனது பெண்டு என விரும்பியது, அவள் தன் பண்பாலாகும்', என்று பாணனிடம், காதற் பரத்தை உரைத்தாள் *[ஐங்.89:1].* 'பாண! இவ்வூரில் (தலைவன் பரத்தமையால்) அலர் எழாத காலத்துக் கொண்கனது நட்பு நன்றேயாகும்', என்று, தலைமகள் பாணனிடம் கூறினாள் *[ஐங்.131:1].* 'பாண! இவ்வூரில் அவர் என்னையருளுமாறு பரத்தமையால் அலராகின்றது என்று பாணனிடம் தலைமகள் உரைத்தாள் *[ஐங்.132:1].* பாண! புலம்பன் பிரிய என் தோள் பொலிவழிகின்றதற்கு யான் என் செய்வது', எனத், தலைமகள் பாணனிடம் கூறினாள் *[ஐங்.133:1].* 'பாண! கொண்கனோடு எனது மாமைப் பேரழுகும் வந்தது', என்பது பாணனிடம் தலைமகள் கூறியதாகும் *[ஐங்.134:1].* 'பாண! நெய்தலங்கண்ணியாகிய பரத்தையையாம் உடம்பட்டேம்; துன்படையேம்', என்று, தலைமகள் பாணற்குரைத்தாள் *[ஐங்.135:1].* 'பாண! வளை நெகிழ்த்த துறைவனுக்காக, என்பால், சொல்லைப் பாழ்படுத்துகின்றாயே! நீ நாணிலை', எனத், தலைவி பாணனிடம் வாயின் மறுத்தாள் *[ஐங்.136:1].* 'பாண! கொண்கனை நயந்தோர் பழைய தம்அழகைப் பெறுவதோ?', எனத் தலைவி கூறினாள் *[ஐங்.137:1].* 'பாண! கொண்கனை, அன்பில்லாத சொற்களைச் சொல்லி இடித்துரைத்து மீட்டுத் தர மாட்டாதவனாகிய நீ, பண்பிலை,' என்று பாணனைத், தலைவி எள்ளினாள் *[ஐங்.138:1].* 'பாண! கொண்கன் பிரிந்தனனாகக், கைவளை கழன்ற நிலையில், நீயே அவற்கு உரைத்தற்குரியை' எனப் பாணற்குத் தலைவி உரைத்தாள் *[ஐங்.140:1].* 'கைவல்ல சிறிய யாழையுடைய பாண! நும் தலைவர், குறித்த பருவம் வந்ததை உணரராராயினும் கூறிய பொய் குறித்து நாண அறியாமைக்கு யான் நோவேன்', எனத், தோழி பாணனிடம் கூறினாள் *[ஐங்.472:1].* 'கைவல் பாண! நும் தலைவரை நினைந்து செல்ல விரும்பினையாயின், எம்வயின் பெருந்துன்பினைச் செய்த அப்பொய்யில் வல்லவர் போல, எம்மை மறத்தலைச் செய்யற்க', என்றாள், தலைமகள் *[ஐங்.473:5].* 'பாண! கார் ஆர்ப்ப, முல்லை பருவஞ்செய்தது. கோவலர், மலரை மாலைக்குக் கூட்டும் மாலைக்காலமும், அவர் சென்ற நாட்டில் உண்டோ என்று பாணனைத் தலைவி வினாவினாள் *[ஐங்.476:5].* 'பாண! பசலைபாயப் பெருந்துன்படைவோளது செயலற்ற நெஞ்சிற்குப் பெருந்துணையாக எம் தேரை விரையக் காண்பாய்!, என்றான், தலைமகன் *[ஐங்.477:5].* 'யாழ்ப்பாண! காலந்தாழ்த்தேமென்று கொடுமையைச் சொல்லி, வாடிப் பிறிது நினைந்து, எம் காதலி மெலிந்து சொல்லியதனை எனக்குரைப்பாயாக', எனத், தலைவன் பாணனிடம் கேட்டான் *[ஐங்.478:5].* 'பாண! நாடிடை இட்டு வந்து என்னைப் பனிகலந்தவாடை எள்ளும் பொழுதில் மலர்க்கண்ணி கூறியதை எனக்குரைப்பாயாக', என்று, தலைமகன் பாணனைக் கேட்டான் *[ஐங்.479:5].*

'மாஅல்! இயலறிந்த புலவ! யாழையுடைய பாண! வனமாலை யணிந்தோய்! நினது நேமியே உலகிற்கு நிழலாவது; அருள்க' எனக் கடுவனிளவெயினனார் வேண்டுவர் *[பரி.3:86].*

**பாணர்- 1.** யாழ்ப்பாணர். 'வேற்றரசர்க்கு இன்னாவாக அவர் மண் கொண்டு நின் பரிசிலர்க்கு இனியவாகப் பாணர் - யாழ்ப்பாணர் - பொற்றாமரை சூடவும், புலவர் கூட்டம் பொலிந்த யானையுடன், தேரேறவும் செய்தல் அறனோ?' என, முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் வினவினார் *[புற.12:1].* 'மன்றத்து மறையாத உள்ளத்தோடு வேண்டுவன கூறிக் கட்டியாகிய கொழுவிய சோற்றையுண்ட பாணர்க்கு நீங்காத செல்வமெல்லாவற்றையும், கொடுத்தவன் கிள்ளிவளவன் *[புற.34:14].* பறம்புமலையில் ஒருபக்கம் அருவியார்ப்ப, ஒருபக்கம், பாணரது உண்கலன் நிரம்ப வாக்க வடிக்கும் கள், கல்லையுருட்டியொழுகும் *[புற.115:2].* 'பகைவரது யானையின் பட்டத்தின் பொன்கொண்டு பாணரது தலைபொலியப் பொற்றாமரையைச் செய்து சூட்டும் தலைமையினையுடயவன் மலையமான் திருமுடிக்காரி *[புற.126:2].* 'சிறிய யாழைக்கொண்டு பாடும் இனிய பாட்டை வல்ல பாணர் ஆயிடத்துப் பரிசில் பெற்றுச் சென்றாராகக் களிறுகள் இல்லையாகிய தறியின்கண், காட்டு மயில்கள் தங்கின *[புற.127:2].* பாணரும் புலவரும், கூத்தர் முதலாகிய, பரிசிலரும் தமவெனக் கொள்வாராயின், என்னுடையதென மீண்டு, கைக்கொள்ளுதலையறியாத தன்மையன் ஆய் ஆண்டிரன் *[புற.135:16].* 'பாணர்! இப்பரிசிலனது சுற்றத்தின் பசித்துன்பத்தைக் காண்க. இத்தகைய பசிப்பிணி மருத்துவனாகிய பண்ணன், யான் உயிர்வாழும் நாளையும் பெற்றுவாழ்வானாக'. எனக் கிள்ளிவளவன் அவனை வாழ்த்துவர் *[புற.173:2].* 'நல்ல சோழநாட்டுள்ளும், பாணரது வருத்தமுற்ற சுற்றத்தினது பசிக்குப் பகையாய், உறையூரிலிருந்தான், கோப்பெருஞ்சோழன் *[புற.212:6].* 'அதியமானது மார்பில் தைத்த வேல், பெரிய பாணரது உண்கலனைத் துளைத்து, இரப்போர் கையுளும் தைத்துருவித், தன்னாற் புரக்கப்படும் சுற்றத்தினது கண்பாவை ஒளி மழுங்க, அறிவோர் நாவின்கண் சென்று வீழ்ந்தது'. என்பர் ஔவையார் *[புற.235:10].* பாணர் சென்னியில் வண்டு சென்று ஆரவாரம் செய்யா; விறலியரது கையும் தொடியால் பொலிவடையா, எனப், புலவர் ஒருவர், வள்ளல் மாறனைப் பாடுவர் *[புற.244:1].* செம்பூங்கண்ணியொடு, பீலி சூட்டிப், பெயர் பொறித்துக்

கல்லை இனி நட்டனர். கன்றொடு கறவையைத் தந்து, பகைவரை ஒட்டிய, நெடுந்தகை மறைந்தமையறியாது, இன்றும் வருமோ பாணரது சுற்றம்' என மறவன் புகழ் ஏத்தப் பெறும் *[புற.264:7]*. இவர் மா, தாவிக் குதிக்கும், வேலின் அட்ட களிறு, வான்மீனினும், மழைத்துளியினும் பல. இத்தகையோன் அளித்த பொற்பூ விறலியர் கூந்தலின. வழங்கிய சீறூர், சீறியாழ்ப் பாணரிடத்தன'. எனத் தலைவனின் புகழ்பாடுவர் காமக்கண்ணியார் *[புற.302:6]*. 'செத்தை நிறைந்த பெருக்காத முன்றிலில் கள் மயக்கால் துஞ்சுவோன், எம் தலைவன். யாம் அவன் பாணர். வந்த விருந்திற்கு நேற்றுப் பழவாள்பணையம் வைத்தனன். இன்று, சீறியாழ்ப்பணையம். இதனால் ஈயான் என்னாது சென்று சிறப்புற்று வருக', என வெண்ணாகனார் தலைவன் புகழ் பாடுவர் *[புற.316:4]*. 'இலைக்கறி, வாட, விறகுணங்க மனைவியோடு, பெருந்தகையோன் ஊரும், பசியினையுடையது. ஆயின் அவனால் பகைவேந்து துன்புறின் சேவல், பேடைக்குருவியோடு அரிசி தின்று, பாணர் நரம்பின் சுகிரொடு, பீலியின்இழைத்த குடம்பையில் வதியும் வருவாயுடையதாகும், எனப் பெருங்குன்றூர்கிழார் பாடுவர் *[புற.318:5]*. 'பந்தரில், இடையன் மூட்டிய சிறு தீ விளக்கில், பாணரோடிருந்த மானமுடையம் நெடுந்தகை, தானை வேந்தன் இறந்துழி இறக்கும் இயல்பினன் என, ஆலத்தூர் கிழார் குறிப்பர் *[புற.324:12]*. மனைவி, வேட்டச் சிறுவர் தொலைவில் செல்லாது, படப்பையில் கொண்ட உடும்பின் ஊன் பெய்த, தயிர் கலந்த சோற்றைப், பாணரோடு, வருவிருந்துக்கு வழங்கும், விருப்பினள். கிழவன், பெரும்போரில் பகைவரைத் தாக்கித் தலைமையமைந்த யானையின் பொற்பட்டத்தைப் பரிசிலாகப் பெறுமியல்பினன்'. எனத் தங்கால் பொற்கொல்லனார் மூதின்முல்லையாக பாடுவர் *[புற.326:11]*. 'சிலவாக விளைந்த வரகினைக் கடனாக வழங்கியோர்க்குக் கொடுத்து, எஞ்சியதைப், பசித்த பாணர் உண்டு செல்லின், குடும்ப வறுமை தீர்க்க, மீண்டும் வரகினைக் கடனாகப் பெறும் நெடுந்தகை, அரசே எதிர்த்து வரினும் தாங்கும் வல்லாளனாவான் *[புற.327:4]*. 'மனையோள், பாணரை உண்பிக்கவும், பரிசிலரைப் பேணவுமாக ஊணொலி நிரம்பத் தன்கையொழியாள். யானையின் பொற்பட்டத்தைப் பரிசிலர்க்கீயக், கணவனும், கையொழியான் *[புற.334:6]*. 'பெருந்தகை, மாலையைப் பாடினியணியப், பொற்றா மரையைப் பாணர் பெற, வழங்கினான் *[புற.361:12]*. 'அந்தியில், என் தடாரியைத் தழுவிப், பாணர் உண்ணும் அளவில், யான் அவன் தன் மனைவாயிலில் நின்றனென். அன்று முதல், பிறர் வாயிலில், என் கிணைப்பறையின் குரல் ஒலித்தறியாது; என, ஓய்மான் நல்லியாதனின் கொடைச் சிறப்பு கூறப்படுகிறது *[புற.376:5]*. வெள்ளியெழச், சேவல் கூவப், பொய்கைப் பூ மலரப், பாணர் கைவண்மையால் தம் சிறிய யாழை முறையறிந்து இயக்க, வாய் மொழியையுடைய சேரமான் வஞ்சன், புகழ் பரக்க, அருளினான் *[புற.398:4]*.

பரிசில் பெற வருவாருடைய செல்வமாக இருப்பாய். பாணரையுடைய நாளோலக்கத்தையுடையாய். பகுத்துண்ணும் இயல்போடு பிறர்க்கென வாழ்தி', என, நார்முடிச் சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார் பாடுவர் *[பதி.38:9]*. 'விறலியர் அணிகலன் பெற்று அழகு விளங்கப், பாணர் பொற்பூவணிய, இளைஞர் உள்ள உவகையராய்ப் போர்க்களத்தை வாழ்த்த, யானை பல நல்குவன்' நார்முடிச்சேரல் *[பதி.40:24]*. பொற்றாமரையைப் பாணர்க்குச் சூட்டி, விறலியர் முத்தமாலையனியச் செய்து, கடல் புகுந்து, பகைவரை வென்று, பெற்ற பெரும்பொருளைப் பாடுநருடைய, மனங்கொள்ளாத பாடலுக்கு மகிழ்ந்து கொடுக்கும் இயல்புடையவன் கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவஹன் *[பதி.48:1]*. 'சிலவளைகளையணிந்த விறலி! பாணர் பேரியாழைப் பாலைப் பண்ணோடமைத்துத், தழிஞ்சி யென்னும் துறையைப் பாட, இரவலர் துன்பங்கண்டு அஞ்சும், புரத்தலை மேற்கொள்பவனைக் கண்டு வரற்குச், செல்லாமோ?' என, விறலியாற்றுப்படையாக ஆடு கோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கைபாடினியார் பாடியுள்ளார் *[பதி.57:7]*. 'அருந்ததியினும் மிக்க கற்பினையுடைய சேயிழையின் கணவ! பாணரது புரவல! பரிசிலர் செல்வமே! நின் நாட்காலத்து ஓலக்க இருக்கையை இனியதாகக் கண்டு மகிழ்ந்தேம்', எனச், செல்வக் கடுங்கோவைக் கபிலர் பாடினார் *[பதி.65:11]*.

மெல்லிய ஆடையுடுத்தித், தேறல் நல்கி அடிசிலைப் பொற்கலத்தில் வைத்துத், தானின்று ஊட்டி, விரும்பிவருவாராகிய பாணர் முதலியோரது வறுமைத் துன்பினைப் போக்கித், தேரொடு, எருத்தினையும் தந்து, பரிசில் பலவற்றுடன் நல்லியக்கோடன் அனுப்பிவைப்பான *[சிறு.248]*. விறலியருடைய வறிய கைகள் குறங்கொடு செறிக்கப், பாணர் களிறு பல பெற, நாட்காலத்து வந்து தன்னைத் துயிலெடைபாடுவார்க்குப் பாண்டியன் தேரொடு மாவும் வழங்கினான் *[மது.219]*. பாணர் வருக; பாணிச்சியர் வருக; புலவர் வருக; கூத்தர் வருக, என. அழைத்து. இரவலர்க்கெல்லாம் சுற்றத்துடன் நெடுந்தேரையும், களிற்றையும் வழங்கினான் நெடுஞ்செழியன் *[மது.749]*. இசையை எக்காலமும் கேட்கின்ற செல்வத்தையுடைய அரசரின் அவைக்களத்தே அவர்கள் செவி கொள்ளும்படி தாம் வாசிக்கும் துறைகள் பலவற்றையும் வாசித்து முடித்த, இளமை தீர்ந்த பாணரோடு, விறலியருமாகிய சுற்றம் சூழ இருக்கும் *[மலை.40]*.

எவ்வி என்பான் வீழ்ந்த போர்க்களத்தே, பாணர்கள், கைதொழும் மரபினையுடைய, யாழின் வளைந்த கோட்டினை ஒடித்திட்டாற் போன்று, கொன்றையினது முற்றிய நெற்றுக்கள் பாறையில் வீழ்ந்து கிடக்கும் *[அக.115:8]*. அரிய இசைத்துறைகளை முற்றவுணர்ந்த, சிறிய யாழினையுடைய பாணர் ஆரவாரம் செய்யப் பல அணிகலன்களையளித்து

நாளோலக்கத்தில் திதியன் சிறப்புச் செய்தான் [அக.331:11]. பாணரது வடித்தல் உற்ற நல்ல யாழ்நரம்பு ஒலிப்பது போன்ற இனிய குரலுடன், மிக்க துளியைப் பெய்து, மனை கழிந்தது [அக.374:7].

'எவ்வியை இழந்தனால் வறுமையுற்ற யாப்பாணரது பொற்பூ வில்லாத வறிய தலையைப் போல, நெஞ்சே! நீ பொலிவிழந்து வருந்துகின்றாய்', எனத், தலைவன், தலைவியது ஊடற்கண் கூறினான் [குறு.19:1]. 'ஊர! உன் பாணன் ஒருவன் பொய்யனாக, நீயகலத் தனித்திருக்கும் மகளிர்க்கு, மற்றுள்ள பாணர் யாவரும் பொய்யராகத் தோன்றுவர்', எனத், தோழி தலைவனிடம் சொன்னாள் [குறு.127:5]. 'பாணரது படுமலைப்பாலை யென்னும் பண்ணின் எழுச்சியினையொப்ப, மழை பெய்த, கொல்லை பூத்த, முல்லை, நாறும் நுதலாளது தோளில், துயிலும் நாளே, வாழும் நாளாகும்', எனத், தலைமகன் கூறினான் [குறு.323:2]. 'துறைவன் தண்ணளிசெய்த நாளோ சில. ஆயின், அதனால் தோன்றிய அலர், விச்சிக்கோன், வேந்தரொடு போர் செய்த காலத்துப், பாணரது புலி போலும் பார்வை கொண்ட குறும்பூர் செய்த ஆரவாரத்தினும் பெரிதாகியது [குறு.328:6].

புதிய பாணரது இளையதாகிய இசைப்பாட்டுப் போல, வலம்புரி ஒலியாநிற்கும் [நற்.172:7]. பாணர் பரிசிலாகப் பெற்ற குதிரையின் குளம்பு மோத அமைந்த சிறு நெறியில், மெலியாது இரவலர், பொறையனது கொல்லிமலையில் ஏறிச்செல்வர் [நற்.185:3].

'தலைமகள் பாணரது யாழ் நரம்பினும் இனிய சொல்லினை யுடையவள்' [ஐங்.100:4]. 'புதல்வனைத் தழுவிய தாயின் புறந்தழுவிக் கிடந்த தலைவன் செயல், பாணரது நரம்பினின்றெழும் துள்ளலிசை போன்று இனிமையும், பண்பும் உடையது', என்றாள், செவிலி [ஐங்.402:2]. தலைவன், விரும்பும் காதலியைத் தழுவிப், பாணரது இனிய துள்ளலிசை போன்ற இன்புறு கூட்டம் நுகர்ந்தான் [ஐங்.407:1]. பாணர் முல்லைப் பண்ணைப் பாட, அரிவை முல்லை மலரை அணிய, நெடுந்தகை, புலவி தீரும் குறிப்புடன் புதல்வனொடு இனி திருந்தனன்', [ஐங்.408:1]. 'கொன்றையின் மழையை ஏற்ற மலர், பாணரது தலைவன் பிரிந்தனனாக, அழகிழந்து அழும் என்கண்போன்றன', என்றாள், தலைமகள் [ஐங்.458:3]. 'நின் காதலி தன் மனையில் தனித்து அழுத கண்ணீரொடு வெளிப்படுத்திய துன்பத்தைக் கேட்டும் அருளாதோய்! நீ எமக்குக் குருசிலுமல்லை. நினக்கு யாம் பாணருமல்லர்', எனப், பாணர் தலைவனிடம் கூறினர் [480:1].

பரங்குன்றத்தின்கண், ஆடல் பயின்றவரை, அவ்வாடல் பயின்றார் வெல்லவும், பாடல் பயின்றோரைப், பாணர், வெல்லவும், சூதாடுதல் வல்லாரைச் சூது வல்லார் வெல்லவும், பிற கல்வியுடையார் இவவாறே வெற்றி பெறவும், இத்தகைய வெற்றிகளால் ஒப்பில்லாத புகழ் பரவத் தடாகம் போன்ற சுனைப்பக்கத்தில் கொடி நின்றது [பரி.9:73]. பரங்குன்றில் ஒரு புறம் பாணர் யாழோசை எழ, அதனெதிர் வண்டின் இன்னிசையெழும். இவ்வாறே, குழலும் தும்பியும், முழவும் அருவியும், ஆடுமகளிரும் பூங்கொடியும், பாடுமகளும் மயிலின் குரலும், மாறுமாறு கொண்டன [பரி.17:9]. திருமருதமுன்றுறையின்கண், யாழ்ப்பாணர் குறுகி, மருதப் பண்ணைப் பாடினர். அவர்கள் பாடப்பாட, ஆடியும், ஊடியும், உணர்ந்தும், கூடியும், மகிழ்ந்தும், தேடியும், சிதைந்தும், சூடியும், தொழுதும், மகளிரும், மைந்தரும் விளையாடும் வையை எச்சிலாயிற்று. [பரி.தி.2:73].

**2. பரதவர்.** ஐய! நும்மொடு சிரித்த என் பல், மலை குத்திய யானையது கொம்பு போல, முறிவனவாகுக. பாணர் - பரதவர்- பச்சை மீனைச் சொரிந்த மட்கலன் போல, எம்முயிர் பெருவெறுப்பாகி நும்மைப் பெறாது அழிக', என்றாள், தலைமகள் [குறு.169:4].

**3. பறையறைவார்.** பாணர் - பறையறைவார் - ஐயுறுமாறு, அவர் தம் பறையை அடிக்கும் குறுந்தடி போன்று, கொன்றையங்கனிகள் பாறையில் விழுமாறு, கிளையாடக், காற்று வீசும் [நற்.46:5].

**பாணன் -** பண்வல்லான். வையாவிக்கோப்பெரும் பேகனால் சிறப்பிக்கப்பெற்ற பாணன் - பண் வல்லான் - ஒட்டற்ற பொன்னால் செய்யப்பட்ட தாமரைப் பூச்சூடியிருந்தான் [புற.141:1]. 'சாத்தன் இறந்துவிட்ட பின்பு பாணன் நல்ல யாழ்க்கோட்டினால் மெல்ல வளைத்துப் பறித்து முல்லையைச் சூடிக்கொள்ளான்; ஆதலால், முல்லையாய நீயும், அவனது ஒல்லையூர் நாட்டின் கண் பூக்கக் கடவையோ', என்று, குடவாயிற் கீரத்தனார் கையறுநிலை பாடுவர் [புற.242:3]. போர்க்களத்தே பகைவர் எறிந்த வேல் தன் மார்பில் உருவிச் சென்றதால், வீழ்ந்த தலைவனது கேடகப் படை, வளைந்த கரிய கோட்டினையும் இனிய இசையை யெழுப்பும் நரம்பினை யுமுடைய சீறியாழ்ப்பாணன் கையதாயிற்று [புற. 285:4]. முல்லை நிலத்துக், குடிவகை நான்கினுள், பாணன் குடியும் ஒன்று [புற.335:7]. 'பாணன் தன்சென்னியின்கண், கேணியிற் பூவாத எரிபோலும் தாமரை (பொற்றாமரை) யாகிய பெருமலரை யணிந்து விளங்க, இரப்போர்க்கு ஈந்து மகிழ்வோம், வருக', என்று, கூகைக்கோழியார், தலைவனொருவனை அழைத்துப் பாடினார் [புற.364:2].

'ஊரனாகிய தலைவனோடு புதுப்பரத்தையரைப் புணர்க்கப் பரிந்து வந்த பாணன், தெருவின்கண் ஈன்றணிமை யுடையதோர் ஆ, தன் மீது பாய்ந்தமையினால், கலக்க முற்றுத், தன் கையிலிருந்த யாழைக் கீழே போகட்டு விட்டு, அப்பரத்தையரில்லினுள் புகுதற்கு மாறாகத், தலைவி யில்லினுள் புகுந்தான் [அக.56:10]. தலைவன், பண்ணின் திறம் பொருந்திய நல்ல யாழினையுடைய தன் பாணனுடன் முழவின்

கண்கள் முழங்கியொலிக்கச் சுற்றத்துடனே சேர்ந்து சள்ளுண்டு தலைவியின் மனையின்கண் வாரானாய்ப் பரத்தை மனைக்கண் சென்று தங்கினான் *[அக.346:13]*.

ஊரனாகிய தலைவன், தான் வாயிலாக விடுத்த பாணனது சொல்லளவில் எல்லாரினும் இனியன்; எம்மிடத்துப் பேரன்பினன்; என்று, தோழி பழித்துத் தலைவனை வாயில் மறுத்தாள் *[குறு.85:6]*. 'ஊரனே, நின் பாணன் ஒருவன் எம்மிடத்தே நின்னைப் பாராட்டிப் பொய் பேசினமையால் ஏனைப் பாணரெல்லோரும் கள்வர் போலத் தோன்றுகின்றனர்', என்று, தோழி, தலைவனிடம் கூறினாள் *[குறு.127:4]*.

பாணன் கையில் உள்ள பண்பமைந்த சீறியாழ் வண்டு போல் இம்மென ஒலிக்கத், தலைவன் தன் பரத்தையர் உறையும் தெருவினுள் எழுந்து வந்தான் *[நற்.30:2]*. 'இன்று இவ்வூரிலே திருவிழா நடக்கின்றதெனத் தெருக்கள் தோறும் அறிவிக்கும் குயவனே, நீ அத்தெருக்களில் உள்ள மகளிரை யழைத்து, 'மகளிர், கைவிரும்புதற்குக் காரணமான நரம்பமைந்த யாழிலே இசைப் பாட்டுப் பாடவல்ல பாணன் செய்த துன்பங்கள் மிகப்பலவாய் வளர்வனவாயின; ஆதலால், அவன் கூறும் பொய் பொதிந்த கொடுஞ் சொற்களை நம்பாது நும்மைக் காத்துக்கொண்மின்', என்று, இதனையும் கூட்டி அவர்க்கு அறிவிப்பாயாக', என்று, தோழி, தலைவனின் பாணனைக் குறித்துப் பழித்தாள் *[நற்.200:8]*. கன்றுகளைப் பரிசிலாகப் பெற்று அதுகொண்டு உண்ணும் உணவினையுடைய பாணன் கையில் தண்ணுமை ஏந்தியிருப்பான் *[நற்.310:9]*.

தலைவன் ஒழுகிய பரத்தைமை யொழுக்கத்தால் அவனுக்கும், அவனொழுக்கத்திற்குத் துணைபோகும் தூதுவனுக்கும் தீங்கு வருமென்றஞ்சித், தலைவியின் தோழியர்', 'ஊரன் வாழ்க; அவன் பாணனும் வாழ்க; என விரும்பினர் *[ஐங்.1:6]*. 'ஊரனே, நின்னினும் நின் பாணன் பொய்யன்; பல சூள்மொழிகளை மொழிபவன்.' என்று தலைவி, தலைவனிடம் கூறினாள் *[ஐங்.43:4]*. 'ஊரனே, நின் பாணன் போல நீயும் பல பொய்ம்மொழிகள் கூறுதலை என் தோழியர் அறிவர்', எனத், தலைவனிடம், தலைவி கூறினாள் *[ஐங்.47:5]*. 'கொண்கனே, எம்மிடத்து அழகினைக் கலங்கச் செய்து கெடுக்கும் நின்னினும், நின் பாணன் (பொய்ம்மையால்) எம்போல்வராகிய மகளிரின் அழகைச் சிதைக்கின்றான்', என்று, தலைவி, தலைவனிடம் கூறினாள் *[ஐங்.139:3]*. 'மாலைப் பொழுதில், முன்வாசலிலே, கட்டிலில், மனையோள் துணையாயிருக்கவும், புதல்வன் தன் மார்பினின்மேல் தவழவும், தங்கியுள்ள தலைவனது இன்பச் செவ்விக்குப், பாணனது யாழ், மெல்லிய பிணிப்புடையது; பொருந்தியது', என்று, செவிலி கண்டு உவந்தாள் *[ஐங்.410:5]*. 'படையுடனே குதிரை பூட்டிய தேரைச் செலுத்திப், பிரிந்து சென்று தலைவரை, யான் தூதுபோய்க் கொணர்வேன்', என்று, கூறும் பாணனது அறிவு மிக நன்று', எனத், தலைவி, அவனைத் தூதுவிட இசைந்து கூறினாள் *[ஐங்.474:5]*. 'தோழி, கையிலணிந்த தொடி தன்னிலையினின்றும் கழன்று வீழும்படி மெலிந்த என் தோளையும், மாவடு போன்ற தம்மழகினையிழந்த கண்ணையும் நோக்கி, இச் சீறியாழ்ப்பாணன், பெரிதும் வருந்துகின்றான்; எம்மை விரும்பிய காதலோடு பிரிந்தோராகிய தலைவரின், தம்மவன் போலானாகி, இவன் பேரன்பினனாய் இருக்கின்றான்', என்று, தலைவி, தோழியிடம் மகிழ்ந்துரைத்தாள் *[ஐங்.475:3]*.

நின் பரத்தையரில்லிலே, வாசித்த யாழைத் தழுவிக்கொண்டு, வாயிலாய்த் திரிவதொழியப், பாட்டினைத் திருத்தமுறக் கல்லாத வாயினையுடைய நின் பாணன், எம்மில்லின்கண் வாராக்கால், எமக்கு வருந்தமில்லை', என்று, தோழி, தலைவனிடம் கூறினாள் *[கலி.70:23]*. 'தலைவர் பரத்தையரிடம் செல்லும் போது, அதனை யான் நினக்கு மறைப்பது கூறுவேன்', என்று, தன் யாழாகிய தெய்வத்தோடும், வேறுபல தெய்வங்களோடும் கூட்டி, எம்மிடத்தே சூள்பல செய்த, நின் பாணன், இப்போது, அப்பரத்தையரைக் கூடின, நினது கழுத்தின்கண்ணே வெளிப்படக் கிடக்கும், தொடித் தழும்பைக் காண்பதற்கு வாரானோ', என்று, காமக்கிழத்தி, தலைவன்முன் கூறினாள் *[கலி.71:14]*. 'புணர்ச்சியின்பத்தைக் கருதி, நீ காவல் கொண்ட பரத்தையரைச் செறியுந்தோறும், யாம் அழும்படி. நின்னைப் பண்ணினால் பாடிக் களிப்பிக்கும் பாணன், நின் தோள் சேர்ந்த பரத்தையரின் பற்கள் பதித்த நின் இதழை, எனக்குக் காட்டுமாறு சொன்னானோ; என்று, காமக்கிழத்தி, தலைவனை வினவினாள் *[கலி.72:10]*. 'தலைவன் அன்புடையனல்லன், அறனுடையனல்லன், என்று, சொல்லப்படான்'. என, நின்னைப் புகழ்ந்து, நின்புகழ் பலவற்றையும் என்னிடத்தே பாடிக்காட்டும் பாணனும் நின் செய்கையால் பித்தேறினான்', எனத், தலைவனிடம், அவன் காமக்கிழத்தி கூறினாள் *[கலி.74:7]*. 'நின்பாணன், நோதிறப் பண்ணைப் பாடியவாறு, நீ சேர்ந்த பரத்தையர் மனையைக் கேட்டு, எம் மனையிடத்தே வாராதிருத்தலை யான் பெறுவேனாயின், என் கருங்கூந்தல் பூவணிந்து அழகு பெறுதலையும் யான் விரும்பேன்; அதனால் பெற்றதென்? அவன் அவ்வாறு வினவி வருதலைத் தவிரானே', என்று தலைவி, தலைவனிடம் கூறினாள் *[கலி.77:18]*. தலைவி தனக்கு அறிமுகமுடைய பாணனை 'நீ இப்போது எங்குள்ளாய்', என்று வினவினாளாக, அவன், பரத்தையரிடத்தே நினைவுடையனாய், அத்தலைவிக்குச் சேயனாய், வாய்தவறி, 'யாம் ஏனாதிப் பாடியிடத்தே (ஏனாதிப் பட்டம் கட்டினானொருவன் அமைத்த பரத்தையர் சேரியிடத்தே) இருக்கிறேம்' என்றான் *[கலி.81:16]*. 'நீ நின் பரத்தைய ரெல்லாரையும், அவர், நின் பிரிவினால் வருந்தாதபடி, நின் பாணனாலே அழைத்துக் கொணர்ந்து, அவர் மனம் தெளிய அளி செய்து ஆடுவாயாக' என்று, தலைவி, தலைவனிடம் ஊடிக் கூறினாள் *[கலி.95:31]*. பாண

தொழிலுக்கு ஏதிலனாகிய பெரும்பாணன் தூது சென்று, பரத்தை யொருத்தியைத் தலைவனுடன் புணர்த்தான் [கலி.96:35]. 'நீ நின் பாணனைப் புணையாகப், புதிய பரத்தையாகிய புதுப்புனலை, முன் மாலைப் பொழுதிலே ஆடினாய்', என்று, தலைவி, தலைவனிடம் ஊடிக் கூறினாள் [கலி.98:19].

**2. முழவிசைப்பான்.** செழியன் போரில்பகைவரை வெல்லுந்தோறும் பாணன் - முழவிசைப்பான் - தன் மத்தளத்தின் கண்ணதிர முழக்குவான். [அக.106:12].

**3. மீன்பிடிபாணன்.** பாணன் - மீன்பிடிபாணன் - தூண்டில் நாணில் இரையைப் பொருத்தி உப்பங்கழியில் மீனைப்பிடிப்பான் [ஐங்.111:1].

**4. குறுநில மன்னன்.** எந்நாளும் கற்களோடு மோதி மெலியாத, ஓசையினிய, வலிய அடியினனும், மூங்கிற் குழாயிற் பெய்த உணவினனும், தன்னாட்டெல்லைக்கு அப்பால் சேய்மையிடத்தனவாயினும் கவரும் செவ்வி பார்த்துப் பகைவருடைய அரண்களிற் சென்று அவர் பாதுகாத்துறையும் பகைப்புலத்து ஆக்களைக் கவர்ந்து செலுத்துபவனும், நீண்ட வேலினையும், விழாச் செய்தாலொத்த கொழுத்த பல உணவுகளையும் உடையவனும், பகைவர்க்குப் புறங்காட்டாதவனும் ஆகிய பாணனது நன்னாட்டிற்கு அப்பாற்பட்ட நீரற்ற துறைகளாகிய நுண்மணற் கரைகளைக் கடந்து, தலைவன், பொருள்வயிற் பிரிந்து சென்றதை நினைந்து, தலைவி வருந்தினாள் [அக.113:17]. கட்டி யென்பான் ஆற்றல் மிக்க வலிமையுடைய பாணனுடன் கூடித், தித்தன் வெளியனொடு பொருதற்கு வந்து, அவனது உறந்தை நாளோலக்கத்தில் எழுந்த கிணையொலி கேட்டே அவனாற்றலையுணர்ந்து அஞ்சிப் போர் செய்யாதே ஓடியபோது பெரிய ஆரவாரம் எழுந்தது [அக.226:13]. 'வடக்கே நல்ல வேலினையுடைய பாணனது நன்னாட்டிலே உள்ள வெம்மை மிக்க சுரத்தின் காட்டு வழியிலே சென்றார் காதலர்', என்று, தலைவனின் பிரிவைத், தோழியிடம் கூறி வருந்தினாள், தலைவி [அக.325:17]. எதிர் நின்று பொருதலை மேற்கொண்ட ஆரியப்பொருநனுடைய வலிமை நிறைந்த, திரண்ட முழவு போன்ற தோள்கள், பாணனது மற்போர் வல்ல மார்பின் வலிமை மிகுதலை யாற்றாது, வருந்தி, அவனது கையகப்பட்டு, ஒழிந்து, கிடந்த, உயிரற்ற கிடக்கையைக் கண்டு, நற்போர் வல்ல கணையன் நாணினான் [அக.386:3].

**பாணா!-யாழ்ப்பாணனே!** 'மெய்யழகு பூத்தற்குப் பொன்னணியினை யணிந்த பாணா! ஐந்துவளமும் பொலிந்த பரங்குன்றில், மழைக்கண்ணாரது முயக்கத்தை, அவர் கை செய்த வடுவால் அறிந்தேம். நைவளம் என்னும் பண்ணைத் தரும் யாழ் நரம்பிற்கியைந்த நின்பாட்டு (தலைவனது) பரத்தைமையுணர்த்துவதால், நின் பொய்ம்மிகுதியை உணர்த்திற்று' எனத், தலைமகள் பாணனிடம் கூறினாள் [பரி.18:21].

**பாணாடு** - பாணன் நாடு. பலவிடத்தும் ஆனிரை சேர்ந்துள்ள பாணாடு - பாணன் நாடு - என்னுமிடத்தே கோவலர் கிணற்றினின்றும் முகந்த நீர், பத்தலினின்றும் வடிந்து செல்லும் சிறுகுழி காய, அதன்கண், நீருண்ண வந்த யானையின் அடிச் சுவடு படப் பின், அதன்மீது புலி நடந்த வடுப்பதிய, அது, கூத்தரது மத்தளக் கண்ணில் அவரது விரல் வடுப்போல், தோன்றியது [அக.155:7].

**பாணி-1.** ஓசை. 'ஒருமனையில் சாப்பறை ஒலிப்ப, ஒருமனையில், மணமுழவினது பாணி - ஓசை - மிகவொலிப்பப், புணர்ந்தோர் பூவணியப், பிரிந்தோர் கண், நீர்துளிப்பப், படைத்தான், பண்புஇலாதவன், (எனவே), இவ்வுலகு இன்னாதது. இயல்புணர்ந்த மக்கள் இனிய செய்க', எனப் பக்குடுக்கை நன்கணியார் பாடுவர் [புற.194:2].

சிற்றூர்க்கண்ணே பெண்டிர் உலக்கையாற் குற்றும் உரலினின்றும் எழும் பாணி பக்கமலையில் ஆந்தை யொலியோடு மாறிமாறி ஒலிக்கும் [அக.9:12]. மறவரின் காட்டரண்களில் எழுந்த தண்ணுமைப்பறையின் பாணி, சுரநெறிச் செல்வோர் நெஞ்சு நடுக்குற ஒலிக்கும் [அக.87:8]. புலி, களிற்றினைக் கொன்று முழங்கும் ஓசையினையும், கானவர் கள்ளுண்டு ஒலி செய்யும் கடுந்துடியின் பாணியினையும் கேட்டுத் தலைவி அஞ்சுவாள், எனத், தலைவன் அவளைச் சிறிதுமுன் நடக்க, என, அவள் நாணினாள் [அக.261:15].

புலியேறு களிற்றொடு பொர, அஞ்சாத குறக்குறுமைந்தர்கள், ஆண்டுள்ள பாறை உச்சி ஏறிச், செருக்கொடு தொண்டகச் சிறுபறை கொட்ட எழும் பாணி, அடுத்துள்ள தினைப்புனக் கிளிகளை ஓட்டும் [நற்.104:5]. புன்னை மரக்கிளையில் வந்த புதிய நாரை நரலுதல், ஆயது நாளவையில் பரிசிலாகப் பெற்று, ஒப்பனை செய்யப்பெற்ற தேரின் பாணி போல், ஒலிக்கும் [நற்.167:4]. 'தோழி! யாமமும் நீண்டு செல்லும். காமமும் கண்மூட வொட்டாது பெருகும். கடல் திரையும், முழவின் பாணிபோன்று முழங்கிப் புண்ணுற்றாரைப் போலப் புரளும். இவ்வாறாகவும், இரவு நீங்கி ஞாயிறு தோன்றிய பாடில்லை', என்று தோழியிடம், தலைமகள் கூறினாள் [நற்.378:3].

**2. தாளம்/தாளஇசை.** பொய்கையில் மேய்ந்த நாரை போரின்கண் தூங்கும்; வயலில் நெல்லையரியும் உழவர் ஆம்பலிலையால் மதுவுண்டு, கடல் திரையின் இனிய சீராகிய பாணிக்கு - தாளத்துக்கு - ஏற்ப ஆடுவர் [புற.209:5]. சீறூர், அழகிதாக அமைந்த பாணியினையும், வளைந்த மருப்பினையும் உடைய சிறிய யாழின் நரம்பினை இயக்கும் பாணர்க்கு வழங்கப்பட்டது. [புற.332:5].

பல்யானைச் செல்கெழுகுட்டுவன் பகைவரது மருத நிலத்தைச் சீறினனாதலின், அப்பகைநாடு நண்பகலில் நரி கூவக், கூகை செய்யும் குரலாகிய பாணிக்கேற்பப் பேய் கூத்தாடுமாறு பாழாகியது *[பதி.22:36].*

'பாடினி பாடிய பாணிக்கு ஏற்ப மெல்லிய நிழலுள்ள காட்டிலுறையும் கடவுளுக்குச் செய்புங்கடன் முறை கழித்தனர் *[பொரு.48].* கிணைஞன் தடாரிப்பறையில் தோற்றுவித்த இரட்டைப் பாணிக்கேற்ப ஒரு பாட்டினைப் பாடுமுன், விடியலில், முன் நட்டாரைப் போல, அவன் முன் வந்து விரும்பு மொழி கூறித் தன், கண்ணிற் காணுமாறு, அண்மையில் இருத்தினான்! கரிகாற்பெருவளத்தான் *[பொரு.71].* 'புழுக்கிய, சுட்ட இறைச்சியை உண்டு வெறுக்க, இனிமையையுடைய பல்வேறு வகையான பண்டங்களைத் தின்ன வைக்கச், சிறிய யாழையுடைய விறலியர், முழவின் பாணிக்கேற்ப, ஆடும்படி கள்ளுண்டு களித்துப் பின் சோறுண்க!', எனப் பொருநரை ஆற்றுப்படுத்தினர் *[பொரு.110].* கிடங்கிற்கோமானைப் பாடிக், குழலோசைப் பாணிக்கேற்ப ஆடின மகளிரோடு, சுட்ட குழல் மீனை உணவாக இடந்தோறும் பெறுவீர்', எனப் பாணர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் *[சிறு.162].* சுனையில், மாவின் பழம், பலவின் பழம், தேன் முதலியன சிதறி வடிந்து சேர, நீரெனக் கருதியுண்ட மயில், ஊரில், விழவில், இன்னியங்கறங்கக் கழைக்கயிற்றில் ஆடும் மகள், பாணியில் தளருவதுபோல், தளர்ந்தாடும் *[குறி.194].*

முழவு, ஆகுளி, பாண்டில், கொம்பு, நெடுந்தூம்பு, குறுந்தூம்பு, குழல், தட்டை, எல்லரி, நொடியளந்த பாணியையுடைய பதலையும், பிறவுமாகிய இன்னியங்களைப், பலவின் கொத்தைப்போலக் கட்டிய பையினையுடையர் கூத்தர் *[மலை.11].*

இன்னியம் ஒலிக்க வெறியாடும் களனை இயற்றியமைந்த பந்தலில், கடப்ப மாலையைச்சூடி, இனிய பாணியோடு பொருந்தி, முருகன் பெரும்புகழை ஏத்திக் கட்டுவிச்சியர் ஆடுதலை விரும்பின், என்னாமோ? எனத் தலைவியிடம் தோழி உரைத்தாள் *[அக.98:17].* பந்துபுடைக்கப்பட்டு எழுவதொத்த பாணியோடு கூடிய அடியீட்டினையும், சிலவாகிய செலவினையும், உடைய குதிரைகளையும், பலவேற்படையினையு முடையவன் எழினி *[அக.105:9].* 'கார் பெயக், காயாவில் மூதாய்பரக்க, முல்லை சிதற, ஓவியம் போலும் முல்லைப் பெருவழியில், தாவிச் செல்லும், பாணி விளங்கும், நடையுடைய குதிரையினைச் செலுத்துக, பாக! 'எனத், தலைமகன் உரைத்தான் *[அக.134:7].* அம்பினையும், வில்லினையும் உடைய மறவர், பல ஆனிரை தழுவிப், பகைவரை அலைத்த வெற்றியினையும், செருக்கினையும் உடையராய்த் துடியின் ஒலிக்கொத்த பாணியொடு ஆடிக், கண்ணியராய், ஊனைப் புழுக்கியுண்டனர் *[அக.159:9].* 'சேர்ப்ப! பாணியை ஒத்து, நடத்தல் தப்பாத குதிரை, ஊர்துஞ்சும் யாமத்தில் கனைத்தலைக் காக்கத், தேரினை, நீக்கி நிறுத்தி, மணல் மேட்டினை நடந்து, கடந்து, குறியிடத்திற்கு இரவில் வருக', எனத், தோழி தலைவனிடம் இரவுக்குறி நேர்ந்தாள் *[அக.360:11].*

பதலையை இயக்கும் பாணியையுடைய பரிசிலராகிய பாணர் முதலியோரைப் புரக்கும் கோமகனது அரலைக்குன்றத்துச் சுனையின் குவளை, காட்டு மல்லிகையோடு நாறும் நுதலையுடையாள் தலைவி *[குறு.59:1].*

(வீட்டின்) வாயில்களைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள், என்று, கூறும் யாமத்தைக் காவல் மேற்கொள்பவரது மணி, ஒன்றுபடு, பாணியைப் போலப் பேரூரில் ஒலிக்கும் *[நற்.132:10].*

புலித்தோலை உடுத்துக், கொன்றை மாலை தோளில் புரளத், தலையைக் கையேந்திக், காபாலம் என்னும் கூத்தைச் சிவன் ஆடுங்காலத்து, முல்லை முறுவலாளாகிய உமை தாளத்தின் முதற்கூறாகிய பாணியைத் தருவாளோ? *[கலி.1:13].*

இறைவா! பாணியும், தூக்கும், சீரும் என்னப்பட்ட மூன்று தாளக்கூறுகளை உமையாள் காப்ப, ஆடி, ஒரு வடிவு கொண்டு எம்மில் பொருந்தினாய்', எனச், சிவபெருமானைப் போற்றினர் *[கலி.1:15].* 'திண்தோளும், திறல் விளக்கமும், மாயப் போரும், கருமேனியும், துவராடையுமுடைய பொதுவன் தோளையும், முறுவலாள் மென்றோளையும் பாராட்டி மன்றில் உரைபரந்தது. இனி, மணத்திற்குத் தண்ணுமையின் பாணி தளராதெழுப்புவார்களாக', எனச், சுற்றம் கூறியது *[கலி.102:34].*

பொய்ச்சூளென்று கருதி என்னை இறை துயர் கூரச் சுடும். அது செய்யாமல், நீ சென்று, அவனடியைச் சேர்ந்து ஆற்றுவாயாக. முருகன் தாளை யாவரும் தொழும் பரங்குன்றின்கண் சென்று, மலரை ஏற்றதும். அவியையூட்டுதும். பாணிப் பாட்டைத் தோற்றுவிப்பேம். கிணையை முழக்குவேம்', என்று தோழியிடம், தலைமகன் கூறினான் *[பரி.8:81].* 'மாலையில் மதிதோன்ற மக்கள் கூடல் செல்லும் குறிப்போடு, நாளணி நீக்கி, மாலை மலரோடு, தோளணி, தோடு, சுடரிழை, முத்துவடம் இவையணிந்து, பாடுவார் பாடலும், பல்லாண்டு பரவுதலும், ஆடுவார் ஆடலும், அதற்குப் பொருந்திய சீருடன் கூடிய பாணியும், தேனியாரவாரமும் சேர, ஊர் வண்டு எதிர்வந்தூதத் தென்றிசை நோக்கிச் சென்றனர் *[பரி.10:117].* இரு சிறகையும் விரித்து மயில்கள் ஆடின. குழலோசை போல, வண்டொலித்தன. அருவிநீர், பாணியையுடைய முழவுபோல், ஒலித்தது. பரங்குன்றில் இவ்வாறான ஒலிகள் ஒருங்கே பரந்தன, *[பரி.21:36].*

**3. காலம்/செவ்வி.** 'மகளிர் புணர்தற்குப் பாணி - காலம் - பார்க்கும் பெரிய மலை போலும் மார்பினையுடைய சேயை ஒப்பவன், *[புற.209:17].*

கங்கையைக் கடக்க விருக்கும் மக்கள் ஒரு கட்டுமரத்தின் வருகைப் பாணியில் தூங்கியிருப்பாரைப் போன்று, அளவு செய்யப்படாத செல்வத்தோடு, பணிந்தமன்னர் காலம் பார்த்துக் காத்திருக்கும் முற்றத்தினையுடைய நகர்க்குரியவன் இளந்திரையன் *[பெரு.433]*. 'மெல்லியலீர்! எம்மிடம் பேசலும் பழியாகுமோவெனத் தலைவன் கூறி மலர் நிறைந்த கொம்பை முறித்துக் குரைக்கும் வேட்டைநாய்களின் கடிய குரலை அடித்து மாற்றி, எம் சொல்லற்பாணியினைப் பார்த்து நின்றனன் என்று தோழி கூறினாள் *[குறி.152]*.

காமம், வருத்தமும், நோயுமன்று. அதுகண்டு மகிழ்வாரைப் பெறின், வெளிப்படும் பாணியை - (செவ்வியை) - உடையது *[குறு. 136:5]*. 'யா' ஒன்று சொல்லும் பாணி - (காலத்தளவும்)- நில் நீ. நீன்சூளைக் காலந்தாழ்த்துச் சொல்லுக; சான்றோர் ஈன்ற தகுதியில்லாத மகனே! நினக்கு நின் சூளால் துன்பமுண்டாயின் இவள் இறந்துபடுவாள். இவள், தாய்க்கு ஒரு பெண்', என்று தலைவனிடம் தோழி கூறினாள் *[பரி. 8:56]*. 'கண்ணைக் கயிறாகக் கொண்டு, தோளாகிய தறியோடு பிணித்துக், காமம் மிகுதற்பொருட்டு, அவர்க்கு யாழிசையை ஆர்த்தும் பாணியில், எம்மிழைபூண்டு, வளைதொட்டு, நின் அழகையும் ஆர்த்தும் இன்பத்தில், துறை போலப், பொதுவாயுள்ளாய்', எனப், பரத்தையைத், தலைமகளாயத்தார் எள்ளினர் *[பரி.20:57]*.

**4. கைச்சரடு.** 'வரகுந், தினையும் யாவும் இரவலர் உண்ணக், கொள்ளத் தீர்ந்தமையால், விதைத்தினையை ஆக்கி மனையோள் உணவளிப்பாள். உடும்புத் தோலாலாகிய பாணி - கைச்சரடு - கொண்ட மா பூண்டதேரோடு, யானையுடைய வேந்து எதிரினும், அவள் குருசில், உண்பதும் அதுவே. எனத், தலைவியின் விருந்தோம்பற் சிறப்பு கூறப்பட்டது *[புற.333:16]*.

**5. இசைப்பாட்டு.** ஈயா மன்னரது வாயிலில் நின்று, தடாரியை அடித்து, விரலது விசையைத் தடுக்கும், குற்றம் இல்லாத, பாணியினாள் - இசைப்பாட்டினால் - வறுமையைப் போக்கல் இயலாது என, நன்னாகனார் கூறுவர் *[புற.381:14]*.

விறலியர், மரபுநிலை திரியாது அருந்திறற் கடவுளை முதலில் பாடிப், பின், புதிதாகப் பாடும் பாணியைப் பாடுவர் *[மலை.539]*.

பரங்குன்றில், பாடுவாரது பாணித்தாளமும், ஆடுவாரது கூத்திற்குரிய தாளமும், மலை எதிரொலியும் கலந்து பெரு முழக்கமுண்டாயிற்று *[பரி.8:109]*.

**6. காலந்தாழ்த்தல்.** 'கடலொலியவியத் தோணி கடலிற் செல்லாதொழியக், கழியில் சுறாமுதலியன செருக்கித் திரியினும், பெண்டிர் அலர் தூற்றினும், தலைவனது தேர்பாணி - காலந்தாழ்த்து - நிற்பப், பகலும் தலைவியிடத்தினின்றும் பிரியானாகி, அடுத்தடுத்து வருவன் *[அக.50:4]*.

'ஏடா! யானொன்று சொல்லுங்காலத்தளவும் நில். நின்சூள் பாணி பெறுக. நின் சூள் துன்பம் தாய்க்கு ஒருமகளாய தலைவியை இறக்கவைக்கும்', என்று தலைவனிடம் தோழி உரைத்தாள் *[பரி.8:56]*.

**7. இசை.** ஆயர்தம் குழற் பாணி - இசை - என, மூங்கிலில், வண்டு துளைத்த துளையில் காற்றுப்புக எழும் ஓசை இசைக்கும் *[அக.225:8]*.

**8. கை.** மழைபொழிந்து மாறும் நாளில், பாணியில் - கையிற்-கொண்ட உறியைப் பையோடு, பாயோடு, முதுகிற் தூக்கிய இடையன், வாயை மடித்து விடும் வீளையால், யாட்டின் தொகுதி அவ்விடமே தங்கும் *[நற்.142:2]*.

'தேடும் பொருள்தான் இன்பம் என்கின்றவனே! நீ தேடி வருமளவும் இளமையும், காமமும் நின்பாணி நில்லாவாய் நாளும் கழியும்.' என்று தலைவனிடம், தோழி கூறினாள் *[கலி.12:12]*.

**பாத்தி-1.** சிறுவயல். வயல், நெல்லுக்கு வேலியாகும் கரும்பின் பாத்தியால் - சிறுவயலால் - பல மலர்களையுடையது *[புற.386:11]*.

கரும்பின் பாத்தியில் பூத்த நெய்தல்மலர் எருமைக் கூட்டத்தைப் பிறவிடம் செல்லாது தன்னையே யுண்ணுமாறு தடுக்கும் *[பதி.13:3]*.

'நீ தலைவரோடு, நெல்லி தின்று, கரும்பு நட்டபாத்தியைப் - போன்ற. ஆண்யானையின் அடிச்சுவட்டில் தேங்கிய நீரை, உண்டு செல்வாய் என்று நினைத்தேன்', என்று தலைவியிடம் தோழி கூறினாள் *[குறு.262:7]*.

கரும்பினை நட்டபாத்தியில் வளர்ந்த ஆம்பல் சுரும்பின் பசியைப் போக்கும் *[ஐங்.65:1]*.

**2.** பகுப்பு - பகுத்தல் - பிளத்தல். பாத்தி - பகுத்தல் - செய்யப்பட்டது போன்ற தலையினையுடைய, தீட்டப்பட்டன போலத் தேய்ந்த, கூரிய கற்கள், காட்டில் வழி□செல்வாரது விரலின் நுனியைச் சிதைக்கும் *[அக.5:13]*.

**பாதம்-அடி.** 'நெஞ்சே! பரங்குன்றில் பன்னிருகைக் கோமானது பாதம் - அடியைக் - கண்குளிரக் கண்டு, கையில் தொழுது, 'குறையாத ஆர்வத்தோடு, திருமுருகாற்றுப்படையைப் பூசைப் பொருளாகக் கொண்டு நீ புகல்க' என்பது புலவர் வேண்டுக்கோள் *[முரு.வெ.9:1]*.

**பாதிரி** - ஒருவகை மரம். பாதிரி - ஒருவகை மரத்தின் - மலர் மணக்கும் கூந்தலினையும், ஒள்ளிய நுதலினையும், இனிய முறுவலினையும் உடைய விறலியுடன் கிள்ளிவளவனிடம் செல்வையாயின், பாண! நீ செல்வத்தை யுடையையாகுவை', எனக் கோவலூர்கிழார் பாணாற்றுப்

படையாகப் பாடினார் *[புற.70:14]*. பாதிரியின் மொட்டவிழ்ந்தாற் போன்றது சோறு *[புற.399:7]*.

வேனிலில் இலையுதிர்ந்த பாதிரிப் பூவின் வகுந்த வயிற்றிடத்தின் உட்புறத்தைப்போன்றது நிறமூட்டுதலுற்ற யாழின் போர்வைத் தோல் *[பெரு.4]*. 'போங்கம், திலகம், தேன் நாறும் பாதிரிப்பூ, செருந்தி முதலிய மலர்களைப் பறித்துத், தழையும், கோதையும் செய்தணிந்து, அசோகினது நிழலில் தலைவியும், தோழியும் விளையாடினர் *[குறி.74]*.

முருக்கு. கோங்கம், அதிரல், அழகிய குளிர்ந்த பாதிரி, வெண்கடம்பு முதலிய மலர்கள் கானத்தில் உதிர்ந்து கிடப்பது, கோயிலின்கண் கலந்து கிடக்கும் மலர்களைப் போலத் தோன்றும் *[அக.99:6]*. பாலையில் வளர்ந்த பாதிரியின் துய்யினைத் தலையிற்கொண்ட புதிய பூவினைச் செவ்வலரிப் பூவோடு இடை இட்டுத், தாழம்பூவின் இதழோடு கட்டிய கண்ணியினை உமணர் சூடுவர் *[அக.191:1]*. பாதிரியின் புல்லிய காம்பினையுடைய, வரி பொருந்திய, நிறமுடைய திரண்டமலர், கொடிப்புனலி மலரோடு வீழ்ந்து, அறல் நீர்க்கு அழகு செய்யும் *[அக.237:1]*. வேனிலில் பாதிரியின் தேன் பொருந்திய வளைந்த மலரின் வாடல் சுரத்தில் கமழும் *[அக.257:1]*. வேனிலில்கானப் பாதிரியின் கரிய புறவிதழையுடைய ஒளி பொருந்திய மலர்களை, அதிரலொடு, வெண்கடம்பின் மலரோடு சூடி வளையொலிக்கச் சிலம்பு விளங்க, தலைவனுக்குச் சிறிதுமுன் நடக்கத் தலைவி நாணினள்' *[அக.262:1]*.

வேனிற்கண் பாதிரியின் வளைந்தமலர் போன்ற (மலரின் துய் போன்ற) மயிர் எழுந்து ஒழுகிச் செல்லும் வயிற்றினை யுடையவள் மடந்தை *[குறு.147:1]*.

கரிய கொடியினையுடைய அதிரலொடு, தூய தகடு போன்ற பாதிரி மலரையும் எதிர்வைத்துக் கட்டிய மாலையைத் தலைவி கூந்தலிற் சூடினாள் *[நற்.52:1]*. ஓவியர், அரக்கினையூட்டிய எழுதுகோல் போலத் தலையில் நுண்ணிய பஞ்சினையுடைய பாதிரியின் வெண்மையான இதழையுடைய மலரை வண்டு மொய்க்க (வட்டியில்) ஏந்தித் தெருவுதோறும் விலைகூறிப் பூவிலை மடந்தை செல்வாள் *[நற்.118:8]*. 'இளவேனிலில், அதிரல், பருத்த அடியையுடைய பாதிரியின் குறுகிய மயிருடைய (துய்யுடைய) மலர், மாரோட மலர் இவற்றை அடைத்துவைத்த செப்பினைத் திறந்தாற்போன்ற மணமுடையது தலைவியின் கூந்தல் *[நற்.337:4]*.

தலைவரோ வாரார்; இளவேனில் வந்தது என, அழகிய கிளையினையுடைய பாதிரியின் மலர் அலர்ந்ததனால் குயில் கூவிக் காட்டும் *[ஐங்.346:2]*. காட்டாற்றின் கரையில், மணல் பரந்த இடத்தில், வேனிற் காலத்துப் பாதிரியின் விரிந்த மலரைக் குவித்து மாலையாக மடந்தை தொடுப்பாள் *[ஐங்.361:2]*.

மல்லிகை, முல்லை, சண்பகம், அல்லி, செங்கழுநீர், தாமரை, ஆம்பல், துளவு, வகுளம், குருக்கத்தி, பாதிரி, நாகம், நறவம், சுரபுன்னையாகிய எல்லா[illegible]களும் மணக்கின்ற இரு கரையிடையே வையை [illegible] *[பரி.12:79]*.

பாந்தட்படாஅர் - பாம்புச் செடி. மழை பெய்ய, வெள்ளம் யானைக் கன்றை ஈர்க்கப் பிடி பூசலிடக் களிறு துழவும், பாந்தட்பாடார் - பாம்புச் செடி - உடைய சுரம் பகலினும் அஞ்சத்தக்கது *[அக.68:20]*.

பாந்தள் - பெரும்பாம்பு. 'புலியும், யாளியும், கரடியும், யானையும், முதலையும், பாந்தளும் - பெரும்பாம்பும் - பிறவும் இரவில் தலைவர் வரும் மலையிடத்தில் உள்ளன என்பதை நினையுந்தொறும் தலைவி கலங்கியழுவாள் *[குறி.259]*.

'அயலாரைப்போல வந்த தலைவன் தழுவிச் செல்லின் அலர் பரக்கும். அது கழிய, இன்று, பாந்தட்பை போன்ற அல்குலில் அசையும் தழையை (உடையைக்) காட்டிலும் மிக அணிமையிலிருந்து அவன் போகான்', எனத், தோழி கூறினாள் *[குறு.294:5]*. - பா.வே.

களிறு பாந்தளின் வாயில்பட்டதாகப் பிடிசெய்த பேரொலி மலைப்பிளவில் எதிரொலித்தது *[நற்.14:8]*.

பாம்பு - அரவு. மலைவில்லில் பாம்பை - அரவை - நாணாகக் கொண்டு, ஒப்பில்லாத அம்பு கொண்டு மூன்று அரண்களையும் இறைவன் அழித்தான் *[புற.55:1]*. பாம்பினது பல்லினின்றும் பிழைத்துப் போந்த திங்களைப்போல, மறவருடைய கையினின்றும் பிழைத்துப் போந்த கன்றையுடைய ஆனிரையுடனே வந்த தோலுரித்த அரவு போன்றவன், விண்ணுலகு சென்றான் *[புற.260:16]*. 'பாம்பின் உரித்த தோல் போன்ற வடிவுடைய, மூங்கிலின் உள்ளிடத்துத் தோல் போன்ற, மெல்லிய, நூல் ஒழுங்கு தெரியமுடியாத, ஆடை முதலிய நல்கி, அவியன், கிணைஞரை ஓம்பினான் *[புற.383:9]*. பெருவாயிலில் சென்று நிற்கப், பரிசிலன் இவனெனக்கருதியழைத்துக் கிள்ளிவளவன் நெய்யிற் பொரித்த இறைச்சியையும், தேறலையுந்தந்து, பாம்பின் உரித்த தோல்போன்ற ஆடையும், பிறவற்றையும் நல்கினன் *[புற.397:15]*.

காய்ந்த மயிரினையும், பிறழ்ந்த பல்லினையும், பெரிய வாயினையும், சுழலும் விழியையும், கொடிய பார்வையினையும், கூகையொடு, கடிய பாம்பும் தூங்கும் காதினையும், சருச்சரையையுடைய உடம்பினையும், அஞ்சத்தகு நடையினையுமுடையவள் பேய்மகள் *[முரு.49]*. நஞ்சோடு, துளையுடனாகிய பல்லினையும், நெருப்பென நெட்டுயிர்ப்புக் கொள்ளும் அஞ்சத்தக்க கூடிய வலியினையுமுடைய பாம்பு அழிய, அடிக்கும் சிறகினையுடைய கருடக் கொடியினையுடைவர் திருமால் *[முரு.150]*. பாம்பு தலையெடுத்தாற் போன்ற ஓங்கிய, கரிய தண்டினையும், மாயோளது கையில் தொடிபோலும் வார்க்கட்டினையு முடையது யாழ் *[பொரு.13]*. 'திருமாவளவனின் வாயிலில் நுழைந்து,

தம்மிடும்பை தீரப், படம் விரித்த பாம்பின் பொறியை ஒப்பக், கையின் வடுப்பட்டுக் கிடந்த தோலுடைய தடாரியது தாளத்திற்கேற்பப், பாடி நின்றேம்', எனக் கிணைஞர் தம்நிலை கூறினர் *[பொரு.69]*. கருங்குரங்கு பாம்பைப் பிடிக்க, அப்பாம்பு குரங்கின் கையைச் சுற்றியது போன்ற, நெகிழ்ந்தும், இறுகியும் சுற்றிய வார்க் கட்டினையுடைய, தண்டினையுடையது யாழ் *[சிறு. 221]*. பாணன் சில சொல்வதன் முன், தான் வந்து, மூங்கிலின் உள்ளுரி போன்ற உடையுடுத்திப், பாம்பு கடிக்க மயங்குவது போன்று, மயக்கத்தையூட்டும் கள்ளைத் தந்து. பொற்கலத்தில் பல்வேறுணவு வழங்குபவன்', நல்லியக்கோடன் *[சிறு. 233]*. சந்தனம் குளிர்ச்சிசெய்யும், பாம்பு போன்ற இடையினையுடைய கொடி போல்வாள் தவழும் மார்பினையுடையவன் நல்லியக்கோடன் *[சிறு.வெ.2:2]*.

காலைப், பொதியும் செருப்பை இட்டு, அம்பு அழுத்திய வடுவுடைய மார்பு மறையச் சட்டையிட்டு, மலையில் ஊர்ந்து செல்லும் பாம்பு போலக் கச்சில் வாள் தூங்க, வில் தாழும் தோளினையும், வேலேந்திய கையினையும் உடையவர் வழி நடக்கும் புதியோர் *[பெரு.72]*. செந்நெல்லை யரிந்த உழவர், பாம்புறையும் மருதமர நீழலில் களம் நிரம்புமாறு சூடாகக் குவித்துக் கடா விட்டுக், குப்பை நீக்கிக், குவித்த நெல் செம்பொன்மலைபோல் தோன்றும் *[பெரு.232]*. 'வலைஞர் குடியிருப்பை அடையின், கொழியலரிசிக் கூழோடு, பாம்புறையும் புற்றின்கட் கிடக்கும் புற்றாம் பழச்சோற்றை யொக்கும் நெல் முளை இடிப்பைக் கலந்து, இருநாள் சாடியில் வைத்து, அரித்த கள்ளைச், சுட்ட மீனோடு பெறுவிர்', எனப் பாணர் ஆற்றுப்படுத்தப்பெற்றனர் *[பெரு.277]*. பாம்பின் துடிப்புபோல் யானையின் கையற்று வீழப் பொருது சோற்றுக் கடன் கழித்து மாய்ந்தோரையும், அம்பு பாயப் புண்பட்டு உண்ணாது வருந்தும் குதிரைகளையும் சிந்தித்து. மன்னன் பாசறையில் தங்கியிருந்தான் *[முல்.70]*. ஞாயிறு மறைய, மான்கூட்டம் மரத்தடியில் அதையிட. ஆனிரை, கன்றுகளை நினைந்து கதற, அன்றில் அகவப், பாம்பு மணியை உமிழக், கோவலர் குழலூத, ஆம்பல் மலர, மகளிர் மனைவிளக்கேற்ற, அந்தணர் அந்தி அயரக், கானவர் பரணில் விளக்கங்கொள்ளப், புள்ளொலிப்ப, வேந்தன் படைச் செலவு போல, மாலை வந்தது *[குறி.221]*. 'நிலப்பிளப்பில் பாம்பு மறைந்து கிடக்கும் பள்ளங்களுமுள. அவற்றைக் குறியாகக் கொண்டு, கொட்டிப் பார்த்து நடையற்ற வறு நெறியை நீங்கிச் செல்க', எனக் கூத்தரை ஆற்றுப்படுத்தினர் *[மலை.199]*. 'புகை, வானைப் போர்த்ததோ? பகல் செய்வான் பாம்பின் வாயில் பட்டானோ? நன்னனின் நறுநுதலாரது உடல் ஒளியிழக்கப் பசப்பூர்ந்ததோ' எனப், பசலைபாய்தல் கூறப்படுகிறது *[மலை.வெ.1:2]*.

ஈயல்களையுடைய புற்றின் மேற்புறப் புற்றாஞ்சோற்றை இரையாகப் பெறும் ஆண்கரடியின் நகம் பற்றப், பாம்பின் வலிமையழியும் *[அக.8:4]*. பாம்பு அடங்கிய புற்றின் மேற்புறத்தைக் குத்திக், கொம்பில் மண் கொண்ட ஏறு, தன்னுடன் நிற்றலை விரும்பிய தன் ஆனினைத் தழுவிக் கொண்டு ஊரின்கண் மீண்டு வரும் *[அக.64:10]*. அசோகினது கிளையிற் கட்டிய ஊசற்கயிற்றினைப் பாம்பெனக் கருதி அடிமரம் தூண்டுபட இடிவீழ்ந்தது *[அக.68:6]*. பாம்பு இறந்துபட வளைந்த விரலினையுடைய கரடி தோண்டும், வடுக்கள் பொருந்திய, புற்றுக்களையுடையன செல்லுதற்கரியவழிகள் *[அக.88:13]*. 'அருவி வீழும் சுனையின் ஒருபுறம், இடிதாக்கலின், வலியழிந்த பாம்பினது தலைமணிவிளக்கில், தலைவியின் இருண்ட கூந்தலின் இன்பத்துயிலைப் பெறுவாய்', எனத், தோழி தலைவனுக்குக் குறியிடம் கூறினாள் *[அக.92:11]*. வழிச்செல்வோர் அறுத்திட்ட பிரண்டைக் கொடி, இடியால் தாக்கப் பெற்ற பாம்பின் துண்டுகளைப் போலக் காட்டு வழியில் வதங்கிக் கிடக்கும் *[அக.119:6]*. புரவி, குளிர்ந்த உப்பங்கழியினைக் கடந்து செல்லத், தேர் உருளையினால் குறைக்கப்பட்ட முகிழ்த்த நெய்தல், பாம்பின் தூக்கிய தலை போலத் தோன்றும் *[அக.160:14]*. பெரிய செல்வத்தை வெளியே சொரிந்த துணிப்பை போன்று வறட்சி மிக்ககாட்டில் பாம்பு உடல் வாடிக் கிடக்கும் *[அக.313:12]*. 'நெஞ்சே! தலைவி, பொதியில் மலைபோல, அடைவதற்கு அருமையுடையவள். அதுணராது, மழை பொழிந்த நடுஇரவில் அமையாத காமம் வருத்தப், பாம்பை அடித்த கோல்போலத் தனித்திருந்து வாடுவையோ?' என்று, தலைமகன் தன் நெஞ்சுக்குக் கூறினான் *[அக.322:5]*. கதிரவன் மறைய, யானைக் கூட்டம் போல், வானில் பரந்து, பாம்பின் படம் அழிய இடிக்கும் புயல், கூந்தலைப் போன்று, கால் வீழ்த்துப், பனிக்கட்டியுடன், துளிகளைப் பெய்தது *[அக.323:10]*. நிலத்திடத்தே தேரின் காலாகிய உருளை பிளந்து சென்ற சுவட்டில், வரிசையாகச் செல்லும் பாம்பு போல, நீர் விரைந்து செல்லத், தலைவன் தேர், நகரின் கண்புகுந்தது *[அக.324:13]*. விரையும் குதிரைகள் பூட்டப்பட்ட தேரின் உருளை ஆழ்ந்து செல்லும் சுவட்டில், பாம்பு போல, விரைவாக நீர் ஓடப், பனிப்பருவம் பொருந்தியது *[அக.339:3]*. பாம்பின் வெகுட்சியை யொத்த கள்ளினைக், கடவுள் உறையும் மலைக்கு முதலில் படைத்துப், பின், மகளிர் உண்பிக்கக், குறவர் உண்டு, புனங்காவல் மறப்பர் *[அக.348:7]*. களிறு வேங்கையின் தளிர் மலராலாகிய கவளத்தையுண்டு, தன் நெற்றியில் வைத்தகை, குன்றில் ஏறும் பாம்பு போலத், தோன்றும் *[அக.349:13]*. பாம்புடைய மலைப்பிளவினின்றும் பாயும் குளிர்த்த நீர், துறைகளின் வழியாகத் தேன் கலந்து ஒழுக, யாறுகள் நிறைவுற்றன *[அக.362:1]*. 'மேயும் பொருட்டு உமிழ்ந்து வைத்த மணியினைஇழந்த பாம்பு போல, நெஞ்சே! நீ மிகவும் வாடினை', என, அல்லகுறிப்பட்டுத், தலைவன் கூறினான் *[அக.372:13]*. யானை தன் கொம்பினை அசைக்கமாட்டாது தன் வாயில் கொண்ட துதிக்கை, மலை முழையுள் புகும் பாம்பு போலத் தோன்றும் *[அக.391:13]*.

கருப்புமுடைய பச்சைப் பாம்பினது கருமுதிர்ச்சி போன்ற, கரும்பின கூம்பு, விரிந்து மலருமாறு வந்த மழைத்துளியுடைய வாடைக்காலம் தோன்றியது *[குறு.35:2].* கற்களிடையே வளர்ந்த வேங்கை சிதறக், கற்களை அடித்து வீழும் மலைஅருவி, நிலத்தே ஊர்ந்து செல்லும் பாம்பு போல, இழியும் *[குறு.134:6].* பாம்பின் உரிமேலெழுந்தாற்போன்று, வெப்பம் வெளிப்படும் வேனில் நண்பகலில், இரைவிரும்பி மேலெழுந்த சேவலை நினைந்து, பெண்புறா, கள்ளிமரக் கவட்டிலிருந்து கூவும் *[குறு.154:1].* மலைப்பக்கத்துப் பாம்பு இறக்க, இடியோடு, காற்றோடு நிறைசூலுடைய மழை வந்தது *[குரு.158:1].* பாம்பினது படம் ஒடுங்கியதைப்போன்ற, குவிந்து, கீழ்காற்றால் வீழ்த்தப்பட்ட செங்காந்தள் மலர், பாறைமீது கவிந்து கிடக்கும் *[குறு.185:5].* 'பாம்பின் நாலுகின்ற உரியை யொக்கும், தூய, வெள்ளிய அருவியையுடைய மலையில், நல்லோளது ஊர் உள்ளது. *[குறு.235:1].* பக்கமலை முழுதும் மணம் வீசும் காந்தளின் தாதினை ஊதும் தும்பி, பாம்பினால் உமிழப்படும் மணிபோல், தோன்றும் *[குறு.239:5].* 'பாம்பின் படத்தையுடைய தலையைத் துணிக்கும் இடியோடு கூடிய நள்ளிரவு என்று எண்ணாராகி, ஈண்டு வந்து, தலைவர் தலைவியின் மெல்லிய தோளையடைந்தார் *[குறு. 268:3].* 'பெரும! பரத்தையால் எம்மைப் பிரிவையாயின், எம் தந்தையின் ஊரில், கொடிய பாம்பு வழங்குந் தெருவில், எம் நடுக்கம் நீக்கி, நீ, எம் வீட்டிற்கு அழைத்துச் சென்று விடுக', என்று தலைவனிடம் தோழி உரைத்தாள் *[குறு.354:5].* எருது வெறுத்து உழாது மடிய, மான் வெம்மையோடு கிடக்க, மழை நீங்கிய முல்லை நிலத்தில், இடியால், பாம்பின் படம் அழிய, மழை வீழ்ந்தது *[குறு.391:3].*

மலையிடமெல்லாம் எதிர் ஒலிப்பப், பாம்புகள் துணிபட, இடியொடு துளியைப் பொழிந்தது மழை *[நற்.51:2].* 'அகன்ற படத்தினையுடைய பாம்பு, உயிர்களைக் கடித்து வருத்தினாற் போன்ற, நகைத்துரைப்பதாகிய இது, தகாது', எனத், தலைமகன், சேட்படுத்திய தோழிக்குக் கூறினான் *[நற்.75:3].* 'நடுயாமத்தில், பாம்புறையும் பிளப்புக்களையுடைய மலை பிறழ, இடியெறியும் பொழுதையும் நடந்து செல்லக் கூடாதவாறு, பெருவெள்ளங், குறுக்கிட்டு ஓடும், சாரல் நெறியையும், கருதுவோர் யாவரேனும் உளரோ', எனத் தலைவி ஆறு பார்த்து அஞ்சிச் சொல்லினாள் *[நற்.104:9].* இடியேறு, பாம்பு கெட, மலைமீது மோதிப், பிடி வருந்தக், களிற்றின்மீது பாய்ந்து கொன்றது *[நற்.114:10].* 'பகற்பொழுதில் எரிகின்ற விளக்கு ஒளி மழுங்கியிருத்தல் போல, தலைவியின் மேனி வாடப், பாம்பினால் பற்றப்பட்ட மதியைப் போல, நெற்றியின் ஒளி மறைந்தது *[நற்.128:2].* 'பாம்பு படமடங்குமாறு செய்வதன்றித் தலைவரது நெஞ்சங்கனியச் செய்யவல்லன அல்ல ஆதலால், மழையே! நின் இடிக்குரல் எனக்கு இனிமை செய்வனவல்ல'. என்று தலைவி, மழை நோக்கிக் கூறினாள் *[நற்.238:9].* பாம்பு வளையினுள் பதுங்கிக் கிடக்குமாறு இடித்து, வானம், மழைபொழியும் *[நற்.264:1].* கடல் நீரை முகந்து, வானம் மறையப் பரந்து, மழை பிறழப், பாம்புபட, இடித்து மழை பொழியும் *[நற்.347:3].* 'பெரும! இரவில், பாம்பின் மீது வீழ்ந்த கொல்லும் இடி முழங்கும்போழுது எம்மை நினைந்து வருதலான், நீ எம்மீது அருள் செய்தாய் போலினும், அருள் செய்தாயல்லை,' என்று தலைவனிடம் தோழி கூறினாள் *[நற்.383:8].*

'மதியொக்கும் தலைவியின் திருமுகம், பாம்பால் பற்றப்பட்ட மதிபோலப், பசப்புப் பரந்து கெட்டவிடத்து, மெய்ப்பொருளுணந்தோரையடைந்து பெற்ற கேள்வியால், கெட்டதை மீட்டல் கூடுவதாமோ?', என்று, பிரிவுணர்ந்த தோழி தலைவனை வினவினாள் *[கலி.15:17].* 'பாம்பும் அவைக்கண்படின் பிழைத்தலுண்டாம். சான்றோர் அவைப்படிற்பிழைக்கவும் கூடுமாயிருக்க, நல்லாள் செய்த காமநோயின் வருத்தமறிந்தும் இவ்வூர் அது தீர்க்கும் வகையறியாது', என்று மடலேறும் தலைவன் கூறினான் *[கலி.140:22].* 'திங்களுள்ளிருக்கும் குறுமுயலே! என் கணவன் இருக்குமிடத்தைக் காட்டியுதவாயாயின், நாயைத் தூண்டியும், வேட்டுவருக்குக் காட்டியும் நின்னைப் பற்ற வைப்பேன். நீ உறையும் மதியைப் பாம்பால் பற்ற வைப்பேன்', என்று தலைமகள் உரைத்தாள் *[கலி.144:22].*

திருமாலின் கொடியாகப் பனை, கலப்பை, யானை என உளவேனும், அவை கருடக்கொடி போன்றுயர்ந்தவையல்ல. அக்கருடன் வயிற்றில் கட்டப்பட்டிருப்பது பாம்பு; தொடிபாம்பு; கண்ணிபாம்பு; கழுத்துஆண்பாம்பு; சூட்டுப்பாம்பு, சிறகுகளின் மேலிருப்பன யாவும் பாம்பு, பாம்பின் படிமதம் சாய்த்தோய்! அவன் இரையும் பாம்பு *[பரி.4:43, 44 (2), 45 (2), 46, 47, 48].* வெள்ளி ஏற்றைச் (இடபம்) சேரச், செவ்வாய் வருடையை (மேடம்) அடையப், புதன்மிதுனத்தைப் பொருந்தக், கார்த்திகை உச்சமடைய, வியாழம் மீனத்தைச் சாரச், சனி மகாத்தை மேவ, பாம்பு மதி மறையவருநாளில், சையமலையில் மழை பொழிய, வையையில் புனல் பெருகியது *[பரி.11:9].*

**பாய் - 1** மரக்கல விரிப்பு. கம்போடு மேல் விரிக்கப்பட்ட பாயை - விரிப்பை - மாற்றாமல், அதன் மேற் பாரத்தையும் நீக்காமல் புகாரில் (ஆற்றுமுகத்தில்) புகுந்தது மரக்கலம் *[புற.30:11].*

**2. படுக்கை விரிப்பு.** நெய் தீண்டாமல், இலை யிடை கலந்த, கையால் பிழிந்து கொள்ளப்பட்ட, நீர்ச் சோற்றுத் திரளுடன், எள்துவையுடன், புளி கட்டி வெந்த வேளைக் கீரையை உணவாகக் கொண்டு பருக்கைக் கல்லுடைய படுக்கையில் பாய் - (படுக்கை) விரிப்பு - இன்றிக் கிடக்கும் கைம்மை நோன்பால் பெண்டிர் வருந்தினர் *[புற.246:9].* 'முற்றத்தில் படுத்திருக்கும் களிப்புடையானுக்குத் துயில் கொள்வதற்கு விரிப்பாகத், தோலையோ, பாயையோ யாதேனும் கொடுக்க', எனத் தலைவன் பணிக்கின்றான் *[புற.317:3].*

**3. தாக்குதல்.** காட்டில் பாய் - தாக்குதல் - கொண்டு புலிக்குட்டி நீர் வேட்கையால் சுனையின்கண் இட்ட யானையது கையைக் கடித்து முழங்கும் *[அக.329:9].*

**பாய்க்குநர்** - செலுத்துநர். சிலர் மென்னடைக்குதிரை மேலும், பிடிமேலும், கடுநடைக் குதிரை மேலும், களிற்றின் மேலும் ஏறினர். சிலர் தேரின் குதிரைமீது முள்ளைப் பாய்க்குநராய் - செலுத்துநராய் - விரைந்து வையைக் கரை வந்தனர் *[பரி.12:29].*

**பாய்மா-குதிரை.** மணியணிந்த பக்கரையையும், மயிர்க்கவரியையும் உடைய பாய்மா - குதிரை - மீதேறி, வேலைப்பிடித்தெறிந்து, பகைவர்க்குத் துன்பஞ்செய்யும் விருப்பம் நீங்காத ஆண்மையும், நிலையாமையும், தம் நெஞ்சிலேயுடையவன் வயவர் பெருமகன் *[பதி.90:36].*

ஆவிரை, எருக்கு எனும் மலரணிந்து, பனைமடல் பாய்மாவை ஏறி அதனை மனத்தே நிறுத்தி என் காமநோயைத் தாங்க மாட்டாமையால், ஆறுதலாக, மாதர் என்னை வருத்திய கூறுபாடொன்றினைப் பாடுவேன்', என்று மடலேறும் தலைமகன் கூறினான் *[கலி.139:13].*

காண்க - பாய்மான்.

**பாய்மான்** - குதிரை. 'குழையுடையாய்! நீ பாய்மான் - குதிரை- பூண்ட தேரையுடைய பாண்டியனது பகைவர் நெஞ்சில் தைத்த, அம்பினும் மிக்க நோயைச் செய்தல் பெருங்கொடுமையன்றோ', என்று, தலைமகன் தலைவியைக் கேட்டான் *[கலி.57:14].* - காண்க பாய்மா.

**பாயம்** - 1. புணர்ச்சி. 'பெண்பன்றியுடனே பாயம் - புணர்ச்சி- கருதிப்போகாது, நெல் மாவாகிய உணவைத் தின்னப் பண்ணிக், குழியில் நிறுத்திக் காத்த, ஆண் பன்றியின் தசையுடன், கள்ளைப் பெறுகுவீர்'. எனப் பாணர் ஆற்றுப்படுத்தப்பெற்றனர் *[பெரு.342].*

**2. விருப்பம்.** 'மலையில் மழைபொழிய, அருவிபாய, அதன் கண் ஆடிச் சுனைவிளையாடிப், பாயம் - விருப்பம் - ஆயவற்றைப் பாடிக் கூந்தல்பிழிந்து சிவந்த கண்ணேம் ஆயினம்', எனத், தோழி, அறத்தொடு நிலையில் கூறினாள், *[குறி.58].*

'மகிழ்ந! அழகிய இனிய பாயம்பொருந்திய புதுப்புனலில், நேற்றுக், களிற்றினைப் போன்று, துணைமகளிரோடு விளையாடினை என்ப', எனத், தலைமகனிடம் தலைவி கூறினாள் *[அக.266:2].*

**பாயல்** - 1. படுக்கை. 'கள்ளி வளர்ந்த புறங்காட்டில், விறகின் அழலாகிய பாயலில் - படுக்கையில் - பொருந்தி, மடந்தை மாய்ந்தனள். யானோ இன்னும் வாழ்வேன். இப்பண்பு எத்தகையது', எனக், கையறுநிலையாகக், கணவன் கூறினான் *[புற.245:5].*

'வல்லோய்! நீ பாசறையிடத்தாயாக, நின் ஆறிய கற்பினாள், தன் பாயல் துணைத்திலிருந்து பிழைப்பாளாவளோ? நின் மார்பு, மென்மையுடையாளின் துயிலுக்கு இனிய பாயல்லவோ?' என்று தலைவனிடம் தூதுவன் உரைத்தான் *[பதி.16:14,18].*

விழாவில் ஆடுகின்ற கூத்தர் துயில் கொள்ள, ஒலியடங்கிய கடல் போன்று, பாயலில் படுத்திருப்போர் கண் இனிது மடியும் *[மது630].*

'பரந்த பாயலருகே, வளைகழலச் செறித்து, தாழ்ந்த நோக்கத்துடன் நிலத்தைக் காலாற்கிளறும் வருந்திய நினைவினையுடையளாய நின்னைக் கனவில் கண்டு யாம் வருந்தியிருப்பவும், எம்வயின் ஊடல் வந்தது என்னோ?' என்று, தலைவியைத் தலைமகன் வினவினான் *[அக.39:16].*

'பொருள்தேடச்சென்றோர் துயில்வதற்கினிய இரவில் துயிலையும் மறந்தார். அன்றியும், பழகிய நம் கூந்தலாகிய பாயலையும் நினையாராயினர்', எனக், கிழத்தி, தோழியிடம் கூறினாள் *[குறு.254:5].*

நெய்தல் ஆம்பலோடு பெருக வளரும் வயலூரன் மகள் தலைமகனுக்குப் பாயலின்கண் இனிய துணையாயினாள் *[ஐங்.96:4].* 'அன்னாய்! அருவி பாயும் உயர்மலை நாடனது மார்பாகிய பாயலில் தூங்கும் விருப்பமுடையாள், என் தோழி', என்று, பாங்கி அன்னைக்குரைத்தாள் *[ஐங்.205:4].* 'என் கண்ணை நின் காந்தள் கையால் புதைத்தவளே! பாயலில் எனக்கு இனிய துணையாகிய நீ யல்லாது என் நெஞ்சமர்ந்தோர் பிறருளரோ?' என்று, தலைமகன் தலைவியிடம் கூறினாள் *[ஐங்.293:3].*

எம் அழகழியத் துறந்து நீ அருளாது விடுதலால் பல நாளும் துயிலாத கண் பாயல் கொண்டு துயிலவும் செய்யும். அதனைப் பரத்தையர் மனையிடத்தே நின் மனத்தை எமக்குணர்த்தும் முழவோசை வந்து நீக்கும்', என்று தலைவனிடம் தோழி உரைத்தாள் *[கலி.70:18].*

'முருகன் இமயமலையின் பசிய சுனையிடத்துத், தாமரை மலர்ப்பாயலில், தோன்றினான் *[பரி.5:49].* திருப்பரங்குன்றம், சோலையிலுள்ள பூப்பாயலின்கண், தலைவரோடு தலைவியர் அளாவும் களவுப் புணர்ச்சியையும், தன் அடிவரையிலுள்ள மகளிர் தமக்குரிய காதலர்களுடைய மார்பினின்றும் அகலாமல் பூவின் கண் வாழும் மகன்றிலைப்போல, இடைவிடாதமைந்த நல்லபுணர்ச்சியையும் தரும் சிறப்புடையது. *[பரி.8:40].*

**2. ஓர் மலை.** 'பாயல் - ஓர்மலை - தலைவன், மான் இறைச்சியோடு, சோற்றினை இரவலர் சுற்றம் உண்ண அருளினான்' *[புற.398:30].*

**3. துயில்.** 'மன்னவன் போர்வினையில் பொருந்தியிருத்தலின் பகலில் அவன் பிரிவை ஆற்றியிருந்து, இரவில், அரிநாய்ப்

பெறுகின்ற பாயலின் - துயிலின் - சிறிது மகிழ்வின் கண்ணும், கனாவால் வரும் துன்பத்தால் அரிவை ஒடுங்கினாள் *[19:12]*. தலைவி பாயலின்மையால், இழை நெகிழச், சுவரில், பிரிந்த நாள் பலவற்றை எழுதிச் சிவந்த விரலுடையளாயினாள் *[பதி.68:15]*.

மீன் சிதைய நடந்து, கழுநீர் மலரை மேய்ந்த எருமை, கறிக்கொடி படர்ந்த பலாமரநிழலில், மஞ்சளது இலை முதுகைத் தடவ, கள்மணம் கமழத் தின்றதைச் அசை போட்டுக், காட்டுமல்லிகைப்படுக்கையில் பாயல் கொள்ளும் *[சிறு.46]*.

'வேனிலில், குடியோடிய இடத்துப் பனை வெளிற்றைத் தின்னும் யானை, கண்மூடிப், பாயல் கொண்டு செயலற்று அசையும் நிலை, கடலிடத்துத் தோணிபோலத் தோன்றும் -*[அக. 187:20]*. 'தோழி! நம்துறைவன் நம் தோளை நினைந்து வந்த காலை, நம் கானலின் அழகினைப் பலபடப் பாராட்டிப் புகழ்ந்தான். இனி, தம் மெல்லிய மார்பில் நம் பாயலை மாற்றி, கைதைச்சினை தேரினை விலக்க, வந்து செல்லல், அரிதாகும் என்னும்', எனத், தோழி தலைவியிடம் மொழிந்தாள் *[அக.210:11]*.

'தளிர் மேனியினை யுடையாள், என் பண்பினையும், பாயலையும் கவர்ந்து கொண்டாள். இதனுக்கு யான் செய்த தவறு யாது? கூறுவாயாக', என்று, தோழியைத் தலைவன் வினாவினான் *[ஐங்.176:1]*. 'கொண்கன்மகள், எனக்கு நீக்க முடியாத துன்பத்தைத் தந்து என் இனிய பாயலை வௌவிக் கொண்டாள்', என்றான், தலைமகன் *[ஐங்.195:4]*. 'தோழி! நாடன், என் மெல்லிய தோளின் அழகினையும், பாயலினையும் கொண்டு சென்றனள்', என்று கிழத்தி தோழியிடம் கூறினாள் *[ஐங்.274:5]*. 'காடு கடந்து சென்றோர் போகும் காலத்து விலக்காத வகையில், பாயல் கொண்ட கண்ணினது பூசலைக் கேளாராய்ச், சேய்மையிடத்தவர் என்ப', எனத், தோழி சொல்லினாள் *[ஐங்.315:1]*.

'படுக்கையில் பாயலில் அறியாது முயங்கிய கையைவிட்டுச் சிறிது புடை பெயர்வாயாயினும் வருந்துமவள் பிரிதலை மனத்திற்கொண்டு பொருள் தேடச் செல்வையாயின் ஒளி கெட உயிர்வாழ்வளோ?' என்று தலைவனிடம் தோழி கூறினாள் *[கலி.10:10]*. 'தோழி! படுக்கையில், என் தோளில், பாயல் கொண்டு கனாக் காண்கின்றவர், யாம் பிரிந்து மீளும் வரையும் கவலாது இல்லறத்தைக் காத்துக்கொள்ள வல்லளோ', என்றார்', எனத், தோழியிடம் தலைமகள் கூறினாள் *[கலி.24:7]*. 'அறல்நீர், ஆற்றில் அமையச், சினைகளில், சுரும்புகள் ஆரவாரிப்ப, மாமரங்கள் தளிரைக் கொள்ள, நம் தலைவர் நம்மை மறந்துளாராயின், நம்கண்கள் தனிமை கொள்ளப், பாயல் நோய்மிகுந்து தோன்றுமாயின், அவர் நம் மாட்டுக்காடும் தலையளிதான் யாதோ?' என்று, கிழத்தி கூறினாள் *[கலி.28:19]*. 'தோழி! ஒருவன், யானை அடிச்சுவடு தேடுவான்போல், என்னைப் பார்த்துத், தன் நோயைக் குறிப்பாலுணர்த்து வானேயன்றிக், கூற்றாய்க் கூறானாய்ப், பலநாளும் வரும். அதுகண்டு, எவ்வகை உறவுமில்லாத யானும் பாயல் பெறேனாய் வருந்துகின்றேன்', என்று தோழி தலைவிக்குரைத்தாள் *[கலி.37:6]*. 'நெஞ்சே! நம்மைத் துறந்தவன், நாணமில்லானாயின், நம் துயிலாத கண், பாயல் பெற, மேலும் அது குறித்துக் கூறும் கூற்றை இல்லேம் ஆயினம், என்னும் தகுதிப்பாட்டைக் கொள்க *[கலி.87:16]*. பாயல் பெற்ற மகளிர்கண்போல, மலர் கூம்பியது *[கலி.119:5]*. கதிரவன் மறையப், பாயல் கொள்வன போல, மலர் குவிந்தது *[கலி.134:8]*. 'எம் கண் பாயலைக் கைக்கொண்டு, எம்மை நினையாத காதலவன் செய்த நோய்க்கு மருந்தாகிக் காக்குங் கதிரவனே! மாலைவரின் என்னைக் கொல்லாது போகாதாதலின், நீ, பகற்பொழுதோடு போகாது நிற்றலை விரும்பினேன்', என்று, தலைமகள் கதிரவனை நோக்கிக் கூறினாள் *[கலி.145:24]*. 'பாயலைக் கைக்கொண்டு தன்னை நினையாதவரை நினைந்து கவல, அவர் வரக் கண்டு மாயவன் மார்பில் திருமகள் போலச் சேர, ஞாயிற்றின் முன் இருள் போலத் தலைமகள் துயர் மாய்ந்தது *[கலி.145:63]*.

பார் - 1. நிலம். பாரை - நிலத்தை - இடித்து அமைக்கப்பெற்றது ஆழ்ந்த அகழி *[புற. 14:5]*. ஊரைமிகவும் கடந்த, பார் - ஆகிய முதிர்ந்த பறந்தலையிடத்து, வேங்கையினது மலரைப், பனையோலையால் அழகு செய்து தொடுத்துக், கோவலர் மாலை சூட்ட ஒரு தோன்றல் கல்லாயினன், எனக், கையறு நிலைபாடுவர் சிறுகருந்தும்பியார். *[புற.265:1]*.

பாரைச் சுற்றிய கடல் கலங்குமாறு உள்ளே சென்று சூரபன்மன் முதன்மையை முருகனின் வேல் அழித்தது *[முரு.45]*.

வன்கையினையுடைய ஆடவர் தீப்பொறி பறக்கப் பாறையை வெட்டிப் பாரையுடைத்த பள்ளத்தில் ஊறிய நீரை, உண்ண வேண்டிக் கொங்கரது ஆவின் கூட்டம் செல்லும் *[அக.79:4]*.

பார் பிளவுபடுமாறு வீழ்ந்த வேரினோடு, கிளைகளையுடைய விளாமரத்திலிருந்து, மூக்கு ஊழ்த்துக் கம்பலத்தை விரித்தாலொத்த பசிய பயிரிடத்து, விளையாட்டொழிந்த பந்து கிடப்பது போன்று, விளாம்பழம் கிடக்கும் *[நற்.24:1]*.

2. வண்டி நெடுஞ்சட்டம்/அச்சின் மேல் சட்டம். பாரமிகுதியால் பார் - வண்டி நெடுஞ்சட்டம் - அச்சு மரத்தோடு வந்து தாக்கி உற இருத்தலின், பண்டங்களையுடைய சகடத்தின் ஆழ்ச்சியைப் போக்கிச் செலுத்த, மனச் செருக்கினையுடைய கடாவிற்கு, அரிய துறை என்பதொன்றில்லை *[புற.90:6]*. உருளையையும், பாரையும் கோத்து நிலத்தில் செலுத்தும் காப்புடைய சகடந்தான், அதனைச் செலுத்துவோன் மாட்சிமைப்படின் ஊறுபாடில்லையாய் வழியை இனிதாகக் கடக்கும் *[புற. 185:1]*.

மத்தளத்தை யொத்த குறட்டிடத்தே தைத்த ஆரை சூழ்ந்த வளைமரத்தையுடைய உருளையையும், கணைய மரம் போன்ற

வலிய பாரையும், குன்றும் மலையைச் சுமந்தாற் போன்ற பாபாலே வேய்ந்த கூரையினையும் உடையது சகடம் *[பெரு.48].*

மலைபோல் குவிந்த உப்பினை, மலை நாட்டகத்துக் கொண்டு சென்று விலைப்படுத்திவரும் உமணர், பண்டி முறிந்தவிடத்தில், விட்டொழிக்கும் பழைய பாரின்கண், நாரை முட்டையிடும் *[நற்.138:4].*

**3. பார்வை.** ஊரின் வேலிப்புறத்தெயுள்ள கூரிய பார் - பார்வை - கொண்ட நடையினையுடைய காட்டுப் பூனையால், இருளில் வரும் பகைக்கு அஞ்சிய பேடை, பக்கங்களில் சிறு தூறுகளைச் சிதைத்தொதுக்கும் பருத்திப் பெண்டின் கை விளக்கால், தன் சேவலைக் கண்டு, அச்சம் தணியும் *[புற.326:1].*

**4. பருமை.** நொச்சிமாலையைச் சூடிய பார் - பருமை - உடைய, முதிய குயவன் மன்றத்தில் பலியிடுவான் *[நற்.293:2].*

**5. பார் - கரை.** தெய்வம் எனப் பெயர் கொண்ட யாண்டுகள் பல என்றதனால் பார் - கரை - அடுத்த துறையிலே, கடல் நீர்த்திரை மோத முதிர்ந்து தொழிலுக்கு உதவாதொழிந்த முரிந்த வாயையுடைய தோணியைப் புன்னையில் பிணித்தனர் *[நற்.315:2].*

**6. மண்டலம்.** பார் - மண்டலம் - தந்த விளைபொருள்களும், கடல் தந்த முத்தும் உடையது பாண்டியரது முதுகுடி *[கலி.105:4].*

**7. பாறை.** பார் - பாறை - துகள் படக் கடலுட்புகுந்து, முருகனால் தீயெழ எறியப்பட்ட வேல் சூரபன்மாவோடு, அவுணரை அழித்தது *[பரி.5:1].*

**8. ஊர்.** காமம் மிக்கெழ, அதனாலுண்டாகிய கண்ணின் களிப்புப் புலப்படவும், ஊரார்க்கஞ்சி, அதனைச்சிலர் ஒளித்தனர். அவரது நிலைமை, கள்ளையுண்டு, அதனால் உண்டான மயக்கம் எழ, அம்மயக்கத்தால் உண்டான மதர்ப்பே அவர்கள் நிலையை வெளிப்படுத்தி நிற்கவும், பார் - ஊரின் - பழிக்கஞ்சி மறைப்பார் நிலையைப் போன்றது *[பரி. 10:67].*

**பார்காப்பான்** - ஒரு புலவர். இவர் பெயர் ஏடுகளில் பார்காப்பன், பாரகாபரன், பாரகாபரன், பாரகாபான் என்று பலவாறு வேறுபட்டுக் காணப்பட்டமையினை உ.வே.சா.வின் குறுந்தொகைப் பதிப்பினால் அறியலாம். அவற்றுள், பார்காப்பன் என்பதொன்றைத் தவிர ஏனைய வடிவங்கள் பொருள் புலப்படாதனவாய் உள்ளன. பார்காப்பன் என்பதற்கும் பொருள் விளக்கமாகுமளவு அதன் இயைபு (காரணம்) விளங்கவில்லை, ஆயினும், பார்காப்பான் என்று பெயரின் விகுதியை நீட்டிக் கொண்டதுன், தொழிலால் பெயர் பெற்றவராக இப்புலவரை வையாபுரிப்பிள்ளையின் சங்க இலக்கியப் பதிப்பு நிறுத்துவதனால் (ச. இ. புலவர்களின் பெயர்வகை) பார்காத்தல் இவர் தொழில் எனக் கருதலாம். இப்புலவர் பாடியதாகக் குறுந்தொகையில் 254-ஆம் பாடலொன்றே காணப்படுகின்றது. தலைவனது பிரிவை ஆற்றியிருத்தல் வேண்டுமென வற்புறுத்தும் தோழிக்குத், தலைவி பருவவரவினைக்கூறி, 'இக்காலத்தும் தலைவர் வருதற்குரிய தூதுவர் வாராமையால், அவர் என்னுடன் துய்க்கும் இன்பத்தை நினையாது மறந்தனர்', என்று, வருந்தியுரைப்பதாக, இவர்தம் பாடலை இயற்றியுள்ளார். 'இலையில்லாத அழகய கிளைகளில் வண்டின் கூட்டம் ஆரவாரிக்கும்படி முலைபோலும் மெல்லரும்புகள் விரிந்த கோங்க மரத்தின் முதல் மலர்கள் தோன்றின', என்ற, இயற்கைப் புனைவினாலேயே இவர் கார்ப்பருவ வரவினையுணர்த்தும் நுட்பம் பாராட்டத்தகுவதாம்.

**பார்த்தவள்-நோக்கியவள்.** ஒருத்தி நின்னைக் களவில் பார்த்தாள் எனத், தலைவி கூறி வெகுளப், பார்த்தவள் - நோக்கியவள்-பொய்யள் என்பதனை யானறியேன், எனத், தலைவன் மெய்யாக ஆணையிட்டுத் தெளிவித்தான் *[பரி.12:62].*

**பார்த்தோர் - கண்டோர்.** ஒருமறவன் வேல் மார்பில் பாய நிலஞ்சேர்ந்தனன். அனைப் பார்த்தோர் - கண்டோர் - யாவரும், இவன், இரவல் சுற்றத்தின் தலைவனுக்குச், சீறூர் நல்கினோன், என்று புகழ, அவன் நாணித் தலைதாழ்த்தான் *[புற.285:13 பா.வே].*

**பார்ப்பன மகளிர்** - பார்ப்பனப் பெண்டிர். பார்ப்பன மகளிர் - பார்ப்பனப் பெண்டிர் - காட்டு முல்லையைச் சூடா நிற்ப, மாலையில் மலையில் கதிர் மறைந்தது *[நற்.321:4].*

**பார்ப்பன மகன் - அந்தணன்.** 'பார்ப்பன மகனே! பார்ப்பனமகனே! - அந்தணனே! - சிவந்த பூவினையுடைய முருக்க மரத்தினது பட்டை களைந்த தண்டோடு, தூங்கும் கமண்டலத்தையும், வரையறுக்கப்பட்ட உணவினையும் உடைய பார்ப்பனமகனே! எழுதப்படாத கல்வி (கேள்வியளவாகிய வேதம்) ஆகிய நின் சொல்லுள் பிரிந்தோரைப் புணர்க்கும் மருந்து ஏதேனும் உண்டோ!' எனப் பார்ப்பனப் பாங்கனைத், தலைமகன் வினாவினான் *[குறு. 156:1(2), 4].*

**பார்ப்பன மாக்கள்** - பார்ப்பனர். ஆவும், எம் அம்பை விரைந்து செலுத்துவோம் ஆதலினாலே அதனியல்புடைய பார்ப்பன மாக்களும் - பார்ப்பனரும் - பெண்டிரும், நோயுடையாரும், புதல்வரைப் பெறாதோரும் தத்தமக்குப் பாதுகாப்பாகிய இடத்தினையடைக, எனப் போரிலும் அறநெறியைச் சொல்லும் குறிக்கோளுடையவன் முதுகுடுமிப்பெருவழுதி *[புற.9:1].*

**பார்ப்பனி** - பார்ப்பனப் பெண். பாடிப் பெறும் பரிசிலாகத் தாமும், தம் மனைவியாகிய பார்ப்பனியும் - பார்ப்பனப் பெண்ணும் - துறக்கம் பெறல் வேண்டுமெனப் பாலைக்

கௌதமனார் கேட்கப் பார்ப்பனப் பெரியோரால் சேரன் பத்துப் பெருவேள்வி செய்ய, இறுதியதில், பார்ப்பானாகிய பாடியோனும், மனைவியாகிய பார்ப்பனியும் காணாராயினார் *[பதி.ப.3(2)].*

பார்ப்பார் - மறையோர். ஆன்முலைப்பயனைக் கொடுத்தோர்க்கும், மகளிர் கருச்சிதைத்தோர்க்கும், பார்ப்பாரை - மறையோரை - அழித்தோர்க்கும் தாம் செய்த கொடுமைக்குத் தீர்வும் உண்டு. ஆயின், ஒருவன் செய்த நன்றியைச் சிதைத்தோர்க்குப் பிழைப்பே யில்லையென, அறம் கூறும் *[புற. 34:3].* 'சோழர் குடிப்பிறந்த நின் முன்னோர் யாவரும் பார்ப்பார் வெறுக்கத் தகுவன செய்யார். அது, நினக்கு நீர்மையுடைத்தோவென்று 'நீ வெறுக்கச் சொல்லிய என் தவற்றிற்கு வெறாய் எனினும், நீ தவறினாய் போல மிக நாணினாய்', என மாவளத்தானை தாமப்பல்கண்ணனார் போற்றினார் *[புற.43:14].* 'பாரி மாய்ந்தானாகக் கலங்கிச் செயலற்றுப் பறம்பினை விடுத்து நீங்கிப் பாரிமகளிரை மணந்துக்கொள்ளத் தக்காரைத் தேடிச் செல்கின்றோம்', எனப், பார்ப்பார்ப் படுக்கக் கொண்டு செல்லும் கபிலர் கூறினார் *[புற.113.அ.கு.].* 'பாரி மாய்ந்தானாக, இப்பிறப்பில் நீயும், யானும் கூடி இன்புற்றவாறு போல, மறுமையினும் கூடி வாழ, விதி கூட்டுவதாக', எனக் கூறிப் பாரிமகளிரைப் பார்ப்பார்ப் படுத்து, வடக்கிருந்தார், கபிலர் *[புற.236.அ.கு.].* 'ஏற்றலை மேற்கொண்ட பார்ப்பார்க்குக் கைந்நிறையப் பூவும், பொன்னும், வழங்கி, மகளிர் வார்ப்பக், கள் தெளிவை உண்டு, மகிழ்ந்து, இரவலரக்கிந்து, நுமக்கென்று வரையறுக்கப்பட்ட நாட்கள் வாழ்தல் வேண்டும்', என ஔவையார் மூவேந்தரை வாழ்த்தினார் *[புற.367:4].*

'நீர் பார்ப்பார்க்கல்லது, பணிதலையறியாய். நின்னிடம் நட்புச் செய்தோரக்கல்லது கண்ணோட்டத்தால் அஞ்சமாட்டாய். எனக் கபிலர், செல்வக்கடுங்கோவைப் பாடினார் *[பதி. 63:1].* பார்ப்பாரிற் பெரியோரால் பத்து பெருவேள்வி செய்ய இறுதியில் பார்ப்பானும், பார்ப்பனியும் துறக்கமடைந்தனர் *[பதி.ப.3].* பார்ப்பார்க்கு ஆனுடன் குடநாட்டு ஒரூர் ஈந்தான், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் *[பதி.ப.6:4].*

பகைவர் தோல்வியுற்றுப் புல்லுண்க. பார்ப்பார் மறை நுவல்க. வாழ்க ஆதன் அவினி என யாய் விரும்பினாள். யாமோ, கழனியூரன் மார்பு பொதுவாகற்க, என, விரும்பினோம், எனத், தோழி, தலைவனிடம் கூறினாள் *[ஐங்.4:2].*

'வையக் கரைப் பொழில்மேல், பரங்குன்றச் சாரல்மேல், பார்ப்பார்மேல், ஆணை; மலர்க்கண்ணாய்! வெகுளல் இந்நாற்றம் பரங்குன்றத்துக் கனியிலும், மலரிலும் தோய்ந்த காற்றால் வந்தது; என்று, தலைவியிடம் தலைமகன் சூளுரைத்தான் *[பரி.8:52].* ஈப்பாயும் கள்ளைக் கொண்டது, இவ்வாறு, எனக்கருதிப், பார்ப்பார் மூழ்குதல் தவிர்ந்தனர் *[பரி.ப.2:59].*

பார்ப்பான் - 1. மறையோன். வயலைக்கொடி போன்ற வாட்டமுற்ற இடையினையுடைய, வருந்திய நடையினையுடைய இளைய பார்ப்பான் - மறையோன் - இரவு வந்து சொல்லிய சொல், சில. அதற்கு, ஏணி, வாயிற்கதவின் சீப்பு ஆகிய இவைமாற்றப்பட்டு, யானையது மணியும் களையப்பட்டுப் போர் நின்றது *[புற.305:2].*

பத்தாம் பெருவேள்வியிற் பார்ப்பானையும், பார்ப்பனியையும் காணாராயினார் *[பதி.ப.3].*

துகிலைக் காவிக்கல்லைத் தோய்த்துடுத்த, படிவமுடைய, பார்ப்பான், முக்கோலை நட்டு, அவ்வுடையினை இட்டுவைத்த தன்மை போன்று மறவர் வில்லையூன்றி, அதில் தூணிகளைத் தூக்கினர் *[முல்.37].*

வேள்விசெய்யாத ஊர்ப்பார்ப்பான் அரத்தால் அறுத்தெடுத்த வளைகள் போக, எஞ்சிய வளையின் தலைபோன்றது பிணிப்பு அவிழாத சுரிந்த, முகமுடைய பகன்றை *[அக. 24:1].* பாறைகளின் வழியே பலகாலும் தூது செல்லும் பார்ப்பான், ஒலைச் சுருளுடன் வரும் இயல்பினைநோக்கி, உண்ணாமையால் ஒடுங்கிய இவன் கையில் உள்ளது. பொன்னாதலும் கூடும், என எண்ணிக், அவனை மழவர் கொன்றனர் *[அக. 337:7].*

தட்டையான தலையினையுடைய கருங்குட்டத்தால் உறுப்புக்குறைந்த முதிர்ந்த பார்ப்பான் ஊரில் ஒளிந்து திரிந்தான் *[கலி. 65:8].* நீ, பலிபெறாமல் செய்வேன் என்று கூறி முதிய பார்ப்பான், தோழியைப் பெண்பேயென்று கருதி அஞ்ச, அவள் தன் கையால் மணல் வாரி அவன் மேல் தூவக் கண்டு, கடிதாகக் கதறினான் *[கலி.65:20].* தன் காம வேட்கையால், மேல் விழுதலாகக் கொண்ட முதிய பார்ப்பானுடைய நாடகம், நம் காதலர் குறியிடத்து வந்து நம்மைக் காணும் காட்சியைக் கெடுத்து என்றாள், தோழி *[கலி. 65:28].*

2. சிவன். வேள்விக்கண் அவியையுண்ட பசிய கண்ணையுடைய பார்ப்பான் - சிவன் - உமையோடு கூடியதால் முருகன் பிறந்தான் *[பரி.5:27].*

பார்ப்பு - குஞ்சு / குட்டி. பலிச்சோற்றை உண்ட காக்கை வீட்டின் நொச்சி மர நிழலில் யாமைப் பார்ப்பை - குஞ்சினைப் - பின்,தின்பதற்குப் பாதுகாத்து வைக்கும் *[பொரு.186].* 'கோவலர் குடியிருப்பில் தங்கின் நண்டினது பார்ப்பினை யொத்த தினைச் சோற்றைப் பாலோடு பெறுகுவீர் எனப் பாணனை ஆற்றுப்படுத்தினர் *[பெரு.167].* 'யானையது நிலையைக் கெடுக்கும் கவண்கல், உயிரைப் போக்கும் கூற்றம் போன்று, குரங்குகள், பார்ப்போடு- குட்டியோடு - கெட்டோட மூங்கிலைக் கட்ந்து விரைந்து வரும். அதற்கு,மரத்தில் மறைந்து செல்க', எனக் கூத்தரை ஆற்றுப்படுத்தினர் *[மலை.208].* களிறு காக்கும் சூல் கொண்ட பிடிமீது புலி பாயப்,

பிடி, தன் சுற்றத்துடன் முழங்கக் கேட்டுத், தழுவிக் கொள்ளத் தவறியதால், மலைப் பிளவில் வீழ்ந்த பார்ப்புக்காக, மந்திதன் சுற்றமுடன் ஆரவாரம் செய்தது *[மலை.312]*.

மறவர் அம்பெய்யச், செவ்வலரி மாலை இடப்பட்டது போன்று, 'குருதி சொரியக் கிடந்தோரது கண்ணைக் கவர்ந்து, கழுகு, யாமரத்திருக்கும் தன் பார்ப்புக்குக் கொடுக்கும் *[அக.31:6]*. ஊழ்த்துவீழ்ந்த மாவின் பழத்தை யாமைதன் பார்ப்போடு கவர்ந்துண்ணும் *[அக.117:16]*. நிறைசூலுடைய யாமை, அடும்பினைக் கொடி சிதைய இழுத்துக், கழியிடத்து மணல் மேட்டில் சேர்த்து, அதன்கண், மறைவாக ஈன்று புதைத்த, முட்டையை, ஆண் யாமை, பார்ப்பு - குஞ்சு - வெளிப்படும் அளவும் காக்கும் *[அக.160:7]*. புலிநகக் கொன்றையின் கிளையில் தனித்திருக்கும் தன் பார்ப்பினை நினைத்த நாரை, நெய்தல் மலர் நிறைந்த கழியிலிருந்துபறந்திடக், கானல் தனிமையுற்றது *[அக.240:2]*. குட்இகளையுடைய மந்தியின் பசியினைப் போக்கப், பார்ப்பின் தந்தையாகிய கடுவன் பாலப்பழத்தின் சுளையனைத் தோண்டியது *[அக.288:13]*.

'தாய் முகம் நோக்கிவளரும் யாமைப் பார்ப்பைப் போலத், தலைவனைப் பல்கால், காண்டலால் தலைவியின் காமம், வளரும் *[குறு.152:4]*. கானத்தே கருங்குரங்கு, பார்ப்பொடு நடுங்கப், பெருமழை பொழிந்தது *[குறு.249:2]*. கடுவன் முதிர்ந்த இனிய பழங்களை மரத்தின் மேலிருந்து உதிர்க்கக், கீழிருந்து ஏற்பனவற்றைப் பார்ப்புடைய மந்தி தின்னும் *[குறு.278:7]*. மகளிர் பாறையிடத்துச் சிவந்த தினையைப் பரப்பிச், சுனையில் பாயும் சோர்புடைய சமயம் பார்த்து, மரக்கிளையிலிருந்து இறங்கி, மந்தி தன் பார்ப்போடு அத்தினையைக் கவரும் *[குறு.335:4]*.

ஞாயிறு மறையப், பறவை தன் பார்ப்புவயின் சென்றடையக், கலைமான் தன் பிணையினைத் தழுவ, முல்லை, தோன்றியொடு மலர, ஆவின் மணி, கோவலர் குழலோடு இசைப்ப மாலை அருளில்லாது வரும் *[நற்.69:3]*. நெஞ்சே! கடலருகே சென்று இரை தேடிய அன்னப் பறவை, இமய மலை உச்சியில் வாழும் வானரமகளிர்க்கு விளையாடுதற்காகும் சிறகு வளராத பார்ப்பிற்கு, உணவு கொடுக்கச் செல்லும் பொழுது வருந்துதலில்லாச் சிறகு வருந்தினாற்போல, ஏன்பால் நின்றும் அவள் பால் சென்று வருந்தினை'. எனத், தலைமகன் நெஞ்சிற்குக் கூறினான் *[நற்.356:5]*. பகல் செல்ல மலருங் குவிந்தன. கடலடை கரையில் பார்ப்போடு, அலவனும் அளையிற் செறிந்தன. பறவையும், மரத்தில் பிள்ளையொடு தங்கின *[நற்.385:2]*.

தன் பார்ப்பினைத் தின்னும் அன்பில்லாத முதலையோடு வெண்பூவுடைய பொய்கையினையும் உடையது, தலைவன் ஊர், எனத், தலைமகள் கூறினாள் *[ஐங்.41:1]*. 'யாமையின் முதுகிலேறிப் பார்ப்புப் பல துயில் கொள்ளும் *[ஐங்.43:2]*. 'பொய்கையில் யாமையின் இளைய பார்ப்புத் தாயின் முகம் பார்த்து வளர்ந்தாற் போன்று, எமக்கு நின் மார்பு. இதனையறிந்தொழுகுக. அறனும், அதுவாகும்', எனத், தோழி தலைவனிடம் கூறினாள் *[ஐங்.44:1]*. 'மந்தியின் இளம் பார்ப்பு மூங்கிலில் ஏறிச் சிறிய கோலால் மதியைப் புடைப்பது போல் தோன்றும் நாட்டின் தலைவ', எனத், தோழி, தலைவனை விளித்தாள் *[ஐங்.280:1]*.

பறவைகள் தம் பார்ப்பினை நினையக், கறவைகள்தம் கன்றை நினைந்து மன்றில் புகப், பிரிந்த மகளிர், உயிரை, உடலாகிய பொதியிலிருந்து வெளிப்படுத்தும் காலமாகிய மாலை வந்தது *[கலி.119:9]*.

மகளிர் சுனையருகிலிருந்த மரத்தளிர்களை உதிர்க்க, அவை, சுனையிலுள்ள, மலர்ந்த மலரோடு பொருந்திக் கிடந்தவை ஐந்தலை அரவென்றும், அருகே முதிர்ந்த, பேரரும்போடு பொருந்திக்கிடந்தவை அதன் மூத்தபிள்ளையென்றும், இளைய அரும்போடு பொருந்திக் கிடந்தவை அதன் இளைய பார்ப்பென்றும் மகளிர் மயங்கினர் *[பரி.19:73]*.

**பார்ப்போர்** - காண்போர். வெயிலில் கல்லாக விளைந்த உப்பினை ஏற்றி நீண்ட வழியில் செலுத்தும் வண்டிகளை நிரையாகச் செல்லுமாறு பார்ப்போர் - காண்போர் - உமணர் *[நற். 354:9]*.

**பார்வல்** -1. பார்வை / பார்த்தல் / நோக்கல். சேய்மைப் பார்வல் - பார்வை - கொண்ட இருக்கையினையும், கையாற்கவிக்கப்பட்ட கண் பார்வையினையும், பிழையாத அம்புத் தொடையினையும் உடைய மறவர் அம்புவிட வீழ்ந்தோரது உடலைக் கற்குவையால் மூடினர் *[புற.3:19]*.

நீரற்றவிடத்தில் செல்லாத கூரிய பார்வல் உடையது கொக்கு *[பதி.21:27]*.

களிறாகிய இரையைத் தெரிதற்பொருட்டு ஒதுங்கிய பார்வலோடு மறைவாக புலி நடக்கும் *[அக.22:14]*. கொக்கின் சேவல், கயல் மீனைக் குறித்து, அணை மீது வடியும் நீரைப் பார்வல் கொள்ளும் *[அக.346:11]*. தன் இரையைப் பார்வல் கொள்ளும் காட்டுப் பூனையின் கூரிய பற்களைப் போன்ற, மெல்லிய அரும்புடையது அதிரற்கொடி *[அக.391:1]*.

கொக்கினது பார்வலை அஞ்சிய நண்டு தாழைவேரிலுள்ள வளையில், கயிற்றை அறுத்துச் செல்லும் எருதுபோல், விரையும் *[குறு.117:2]*.

**2. காவல்.** போர் முரசம் முழங்குவது போல, மழைமுழங்கிலும் கட்டுத் தறியினின்றும் நீங்கித், தலை நிமிர்ந்து, போர்ச்செயலை விரும்பும் யானையினையுடைய, பார்வல் மிக்கது பாசறை *[பதி.84:5]*.

தம்மை வழிபட்டோரது நாடு தம் ஏவல் கேட்பப், பணியாதோரது நாடு பணியத், திறைகொள்ள அமைத்த, பருந்தும் பறக்கலாற்றாத, பார்வல் - காவல் - உடையது பாசறை *[மது.231]*.

**பார்வை. 1. காட்சி** அதியமான் மார்பில் தைத்த வேல், பாணரது உண்கலத்தை, இரப்போர் கையைத்துளைத்துப், புரக்கப்படுவோரத சுற்றத்தின் கண்ணினது, பார்வை - காட்சி — மழுங்கப் புலவர் நாவில் சென்று வீழ்ந்தது *[புற.235:12].*

**2. பார்வைமான், மகளிர், பறவை.** கொடிப் பந்தர்க்கீழ்க் கணவன் தூங்கக், கலைமான் பார்வை- பார்வை மான் - ஆகிய பிணையோடு விலையாடக் கணவன் எழுதலுக்கும், கலைமான் பிரிதலுக்கும் அஞ்சி, மனையோள் இல்லத்தில் இயங்காளாயினள் *[புற.320:4].*

பார்வை கட்டப் பெற்ற விளாமர நிழலையுடைய முற்றத்து நிலவுரலில், புல்லரிசியைச் சொரிந்து, உலக்கையால் குற்றிக், கிணற்று நீரில், வாய் முறிந்த பானையை, இடிந்த அடுப்பில் வைத்து, ஆக்கிய சோற்றை, வாடிய ஊன் புழுக்கலோடு தேக்கிலையில் குவித்து உண்பிப்பார், எயிற்றியர் *[பெரு.95].* பார்வையினை- பார்வைப் பறவை - யுடைய வேட்டுவனது வலையினைக் கண்டு அஞ்சிக், கணந்துள் புறவை எழுப்பும் விளி, சுரத்தில் செல்லும் கூத்தருடைய யாழிசையோடு ஒலிக்கும் *[நற்.212:1].*

ஈங்கையின் குழை முதுகைத் தடவச், சிறகு குவிந்திருந்த, வருத்த மிக்க கொக்கினைப் பார்வையாக்கி, வேட்டுவன், அதன் காற்கட்டை அவிழ்த்துவிட அது நின்றது *[நற்.312:4].* 'சிலரை அகப்படுத்தி வருதற்குப் பார்வை - பார்வை மகளிர்- செல்ல, அதனால் வந்த புலவிப் போரோடு தொடர்ந்த கலவிப் போரையும் கண்டாய் போல், நின் தோளிற் புண் ஈரமாயேயுள்ளன', என்று தலைவனிடம் கிழத்தி உரைத்தாள் *[கலி.95:17].*

**பாரதம் பாடிய 'பெருந்தேவனார்** - ஒரு புலவர். பெருந்தேவனார் என்பது இவர் இயற்பெயர். இப்பெயருடன் பிறரும் *[அக.51;நற்.83]*, விளங்கினமையால் இவர் பாரதம் பாடிய பெருந்தேவனார் என வேறு பிரித்துக் குறிக்கப்பெற்றார். இதனால் இவர் மாபாரதத்தைத் தமிழிலே பாடினார் என்பது புலப்படுகின்றது. ஆயினும், இவர் பாடிய பாரதம் எதுவென்று இப்போது விளங்கவில்லை. பெருந்தேவனாரால் பாடப்பெற்றதாகவே பாரத வெண்பாவென இக்காலத்து வழங்கும் நூல் இவருடையதன்று எனக் காரணங்காட்டி மறுப்பர் பி.நா. (நற்.பா.வ.). அதன்கண் கடவுள் வாழ்த்தினையடுத்து அமைந்துள்ள பாடலில் தெள்ளாற்றிலே போர் வென்ற பிற்காலத்து அரசனது சிறப்புக் குறிக்கப் பெற்றிருத்தல், கடைச்சங்கப் புலவரான இப்பெருந்தேவனார் காலத்தொடு முரணுவதென்பது அவர் காட்டும் காரணமாம். ஆகவே, அப்பாரத வெண்பாப் பாடிய பெருந்தேவனார் சங்கப் புலவரல்லரென்பதும், அவர் இவரினும் வேறானவரென்பதும், அவரெனக் கருதிக் கொண்டு இவரைத் தொண்டை மண்டலத்தினர் எனல் தவறென்பதும், இவர் பாடிய பாரதத்திலிருந்து தொல்காப்பிய உரைகளில் மேற்கோள் காட்டப் பெற்றவையொழிந்த ஏனைய பாடல்களெல்லாம் இறந்தனவென்பதும் மேற்குறித்த உரையாசிரியர் கூற்றால் விளங்குகின்றன. இப்பெருந்தேவனார் எட்டுத்தொகை நூல்களுள் புறநானூறு, அகநானூறு, குறுந்தொகை நற்றிணை, ஐங்குறுநூறு ஆகிய ஐந்து நூல்களுக்குக் கடவுள் வாழ்த்துப் பாடல்கள் பாடியுள்ளார். அவற்றுள் புறநானூறு, அகநானூறு, ஐங்குறுநூறு ஆகிய மூன்றிலே சிவபெருமானையும், குறுந்தொகையிலே செவ்வேளையும், நற்றிணையிலே திருமாலையும் இவர் வாழ்த்தியுள்ளார். எல்லாவுயிர்க்கும் ஏமமாகிய நீர் தொலைவறியாத கரகத்தாலும் தாழ்ந்த திருச்சடையாலும் சிறந்த செயற்கருந்தவத்தோன் என்றும் (புற), யாழிசையுடன்பொருந்திய மணி மிடற்றினையுடைய அந்தணன் என்றும் (அக), நீலமேனி வாலிழை பாகத்து ஒருவன் என்றும் (ஐங்) சிவனைக்குறித்து, அவன் தாள் நிழலில் மூவகையுலகும் முறையே முகிழ்த்தன என்றும் (ஐங்) தங்கின என்றும் (அக) கூறி, அப்பெரியோனை மனம், மொழி, மெய்களான் வணங்குதற் கருத்தாக இவர் வாழ்த்தியுள்ளார். சிவனுடைய உருவ வண்ணனையும் இவர் வாழ்த்துக்களிற் காணலாம். 'தாமரை மலர்போலும் அழகிய சேவடியையும், பவழம் போலும் செம்மேனியையும், திகழும் ஒளியையும், குன்றிமணியை ஒக்கும் சிவந்த ஆடையையும், கிரவுஞ்ச மலையின் நடுவிடம் பிளக்கும்படி எறிந்த நெடுவேலையும், கோழிச் சேவல் எழுதப்பட்ட கொடியையும் உடைய முருகவேள் காத்தருளுதலால் உலக உயிர்கள் இன்ப நாட்களை எய்துகின்றன (குறு) என்று செவ்வேளை வாழ்த்தும் இவர், 'மாநிலமே சேவடியாகவும், கடலே ஆடையாகவும், விசும்பே மெய்யாகவும், திசைகளே கைகளாகவும், திங்களும், ஞாயிறுமே கண்களாகவும் கொண்டு விளங்குவதன்றி, நில முதலாய எல்லாப் பொருட்களையும் தன்னுளடக்கிய மறை முதல்வனே எனறும் குற்றமற விளங்கிய திகிரிப் படையேந்திய மாயோனைக் கூறுவர்' (நற்) எனப் பிறர் கூற்றினைக் கொண்டு மொழிந்து திருமாலை வாழ்த்துவர்.

**பாரம்** - 1. குடி. 'ஏரைக் காப்போருடைய பாரத்தைக் - குடியைக் - காத்து அதனால் ஏனைக் குடிகளையும் பாதுகாப்பாயாயின் நின் பகைவர் நின் அடியைப் போற்றுவர்; எனக் கிள்ளிவளவனுக்கு வெள்ளைக்குடி நாகனார் அறிவுறுத்தினார் *[புற.35:32].* 'யாம் பசித்து வருவேம் அல்லேம். எம்மாற் பாதுகாக்கப்படும் பாரமும் இலம். நின்பால் யாமிரந்த பரிசில், அருளோடு, அறத்தினைச் செய்வாயாக, என்பது. துன்புடன் இருக்கும் துணையது துயரை நீ துடைப்பாயாக', எனப், பரணர் பேகனிடம் கூறினார் *[புற.145:4].*

நீ குடி காக்கும் உழவரது பாரத்தைக் காக்க வேண்டுங்கால் மழை பெய்தலான் நின் நாடு நோயும், பசியுமில்லாது பொலி

வடைந்தது, 'என இமயவரம்பனைக் குமட்டூர்க்கண்ணனார் சிறப்பிப்பார்' [பதி.13:24].

**2. பருத்தி** நந்தி, நறவம், புன்னாகம், பாரம் - பருத்தி — பீர்க்கு, குருக்கத்தி முதலிய மலர்களைக் கொய்து, தழையுடையாகவும், கூந்தற்கோதையாக ஆக்கி, அணிந்து, தலைவியும், தோழியும் அசோகின் நிழலில் இருந்தனர் [குறி.92].

யானை தன் காலால் உதைத்த பாழ் நிலப்புழுதி மூழ்கச், சுரதத்தில் வந்துவருந்திய வருத்தத்தைத் தலைவர் பாரம் சூழ்ந்து வளர்ந்த கிணற்றில் சென்று தணித்துக் கொள்வர் [நற்.41:4].

**3. ஓரூர்.** பிண்டன் என்பானது போர்முனையைக் கடந்த வேலினையும், களிறு வழங்கும் வண்மையினையும் உடைய பாரமென்னும் ஊரின் தலைவனான, நன்னனது ஏழில் குன்றத்துப், பாழியென்னும் பக்கமலையிலுள்ள, மயிலினது தோகை போலும் ஐம்பால் கூந்தலையுடையவள் தலைவி [அக.152:12].

'மிஞிலி என்பவனால் காவல் செய்யப்பட்டு வரும் பாரம் என்னும் ஊரைப் போன்றவள் தலைவி [நற்.265:5].

**பாராட்டு-புகழ் / மேம்பாட்டுரை / மீக்கூற்றம் / ஏற்றிக்கூறுதல் / சொல்லுதல்.**

'என் குடிப் பகுதியில்லாத பாராட்டுக் - புகழ் - கேட்டு மகிழ்ந்தனை' இனி, என் குடிக்கண் பட்ட சிறிய பாராட்டினைக் கேட்பாயாக'., எனக் கிழத்தி, தன்புதல்வன் முகம் நோக்கி கூறினாள் [கலி.85:32,33].

**பாரி-வள்ளல்** -எழுவருள் ஒருவன். முந்நூறு ஊர்களையுடைய பறம்பு நாட்டிற்கும், பறம்பு மலைக்கும் தலைவனான இக்குறுநில மன்னன் [புற.110], நிழலில்லாத நெடுவழிக்கண் நின்ற தனிமரத்தை யொப்ப முரசுகெழு செல்வத்து வேந்தர் மூவரினும் மிகுதியாய் இரவலர்க்கு வழங்கும் வண்மையமைந்து விளங்கினான் [புற.119]. தன் மலையின் சிமையந்தோறும் இழியும் அருவிநீரினும் இனிய மென்மையமைந்த இவன் [புற.105], யாதும் அறிவிலாதோரும், புல்லிய பண்புடையோரும் தன்னிடத்து வரினும் அவர்க்கு வழங்கும் கைவண்மைக் கடப்பாடுடையவன் [புற.105]. இவற்றின் மேலும், இவனது உணர்வார்ந்த கொடைமடத்திற்கு உரையாணியாய்த் திகழ்வ , தான் சென்ற வழியிடையே கொழுகொம்பின்றி ஆடிநின்ற முல்லைக் கொடி பற்றிப் படர்தற்கு ஆராயாதே தான் ஏறிவந்த தேரினைக் கொடுத்துச் சென்ற நிகழ்ச்சியாம். தன்னை அம்முல்லைக்கொடி நாத்தழும்பேறப் புகழ்ந்து பாடாதாயினும் அதற்குத் தன் நெடுந்தேரைக் கொடுத்த இவன் சிறப்பினைப் பெருமையோடு குறிப்பர், கபிலர் [புற.200,201]. இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனாரும் அதனையே பாராட்டி இவனைக் குறிப்பிடுவர் [சிறு.88-91]. இவனுடைய பறம்பு நாட்டு முந்நூறு ஊர்களையும் இவனைப் பாடி வந்த பரிசிலர் பெற்றனர் [புற.110]; பறம்பு மலையும் பாடுவார்க்கே உரியதாம்; அன்றியும், பாடிவரும் பரிசிலர் இரப்பின் இவன் தானும் அவருடன் சென்று அவர்வழி நிற்பான் [புற.108]. அதனால் செந்நாப் புலவரெல்லாரும் பாரி பாரி என்று இவன் புகழ் பலவற்றையும் வாழ்த்தி இவனொருவனையே புகழ்ந்தனர்; இப்பாரியையன்றி உலகைப் புரப்பதற்கு மாரியேயுண்டு; வேறு மாந்தர் எவருமில்லை என்னுமளவு இவனது வண்மைப்புகழ் வளர்ந்திருந்தது [புற.107]. இவன் பெற்ற இவ்வண்மைப் புகழில் அழுக்காறுற்றோ, மகட்கொடை மறுக்கப் பெற்றோ மூவேந்தரும் கூடி இவனையழித்தற்கு இவனது பறம்புமலையை முற்றுகையிட்டனர். இவனுடன் ஆருயிர்த் தோழமை பூண்டு அவைக்களப் புலவராய் விளங்கிய கபிலர் அந்நிலையில் அம்மூவேந்தரையும் அணுகி, 'நீவிர் அவன் மலையின்கண் உள்ள மரந்தோறும் கட்டப்பட்ட யானைகளையுடையீராயினும், இடந்தோறும் பரப்பி நிறுத்தப்பட்ட தேர்களையுடையீராயினும். நும் முயற்சியால் அவன் மலையைக் கைக்கொள்ள மாட்டீர்; நும் வாள் வலிமையால் அவன் தாரான்; மற்று, யாழிசைத்தவாறே நீவிர் நும் விறலியர் பின்வர, ஆடிப்பாடி வருவீராயின், அவன் நுமக்குத் தன்னாட்டையும், மலையையும் ஒருங்கே ஈவான்', என்ற, கருத்தினை எள்ளலுடன் பல பாடல்களில் அமைத்து முன்னிலையாகவும், புறமொழியாகவும் பாடினார் [புற.109-111]. வேந்தர் மூவரும் தொடர்ந்து பன்னாள் இவனது பறம்பினை முற்றியிருந்த நிலையில் அரணிற்குள் உணவுப் பொருள் வருதற்கு வழியின்மை கண்டு, கபிலரின் சூழ்ச்சித் திறத்தால், பல கிளிகளையும், குருவிகளையும் பழக்கி, அவற்றைக் காலையில் வெளியே பறந்து போகவிட்டு, விளைவயல்கள் பலவற்றிலுமிருந்து நெற்கதிர்களைக் கொண்டு மாலையில் வரும்படி செய்து, அந்நெல்லரிசியை ஆம்பல் மலருடன் கூட்டிச் சமைத்துண்டு, ஆண்டுக்கணக்கில் அரணைவிட்டுப் புறப்படாமலே காத்திருந்து, அவ்வேந்தரது சோர்பு நோக்கிப் போருடற்றி வென்றோட்டினான். இச்செய்தி, நக்கீரர், ஔவையார் ஆகிய இருவர் பாடல்களாலும் புலனாகின்றது [அக.78,303]. பகைவ்ரை வென்று, அவர் புறக்கொடுத்தோடும் ஆரவாரத்தைக் கேட்டு நாணிப், பின்செல்லாது, கண்டு நின்ற பெரிய வெற்றியையுடையான், என்று, இவனைக் கபிலர் குறிப்பது [புற.120] இப்போர் வென்றியையே என்று கருதலாம். பேரரசுடன் பொருத போர்ச்சிறப்பினைச் சுட்டிப் பெருஞ்சித்திரனாரும் இவனைக் குறிப்பார் [புற.158]. இவனை எதிர்த்து வெல்ல மாட்டாத வேந்தர், கபிலர் எள்ளலுடன் குறிப்பிட்ட முறையிலோ, வேறுமுறையிலோ வஞ்சித்து இவனைக் கொன்று, இவன் மலையையும், நாட்டையும் பாழ்படுத்திக் கைக்கொண்டனர். கொண்டபின் பாரியின் இறப்பினால் கலங்கி செயலற்ற கபிலர், அவன்

மகளிரைத் தக்கார்க்கு மணம் புரிவிக்கக் கருதி அழைத்துக் கொண்டு, நீரொழுகும் கண்ணராய்ப் பறம்பு மலையையும் பிரிதலாற்றாது, புலம்பியவாறே பிரிந்து போயினர் *[புற.113]*. போகுங்கால், இவனை நினைந்து அவர் இரங்கிப் பாடிய பாடல்களால் *[புற.113-120]* இவன் பண்புகளும், செங்கோற் சிறப்பும் பலபட விளங்குகின்றன. இவன் மகளிரை அழைத்துச் சென்ற கபிலர், இளவிச்சிக்கோ, இருங்கோவேள் ஆகிய இருவரையும் அணுகி, அம்மகளிரை மணந்து கொள்ளக் கூறியும், அவர் மறுத்தமையால் *[புற. 200-202]* மனம் நொந்து, பார்ப்பனரிடத்தே ஒப்புவித்துவிட்டு, இவனது பிரிவையாற்றாது வருந்தி வடக்கிருந்து உயிர் நீத்தார் *[புற.236]*. இவன் இறந்த மறுதிங்களில் இவன் மகளிர் இவனை நினைந்து இரங்கி, 'அற்றைத் திங்களின் அவ்வெண்ணிலவிலே யாம் எம் தந்தையையும் உடையேம், எம்மலையையும் பிறர் கொள்ளார்; இற்றைத் திங்களின் இவ்வெண்ணிலவிலே வேந்தர் எம் மலையைக் கைப்பற்றிக் கொண்டார், யாம் எம் தந்தையையும் இழந்தேம்', என்று, நொந்து மொழிந்தனர் *[புற.112]*. இவனது பறம்புமலைப் பனிச்சுனைத் தெண்ணீரின் சிறப்புப் புறத்திணை நன்னாகனாராலும் *[புற.176]*, மிளைக்கந்தனாலும் *[குறு. 196]*, இதன் அருமை கபிலராலும் *[புற.337]* குறிக்கப் பெற்றுள. இவனது ஈகைச் சிறப்பும், இவன் குன்றத்தின் வளமும், அழகும், காவலும் கபிலரால் புறப்பாடல்களில் மட்டுமன்றி, அகப்பாடலிலும் *[நற். 253]* உவமை வாயிலாகப் பாடப்பெற்றுள்ளன.

**பாரிமகளிர்** - பாரியின் பெண்மக்கள். பாரி மூவேந்தரால் வஞ்சித்துக் கொல்லப்பட்டபின் அவன் மகளிர் வருந்தியிருந்து மறுதிங்களில் அவனை நினைந்து இரங்கிப் பாடிய பாடல் ஒன்று புறநானூற்றில் *[112]* உள்ளது. 'அற்றைத் திங்களின், அவ்வெண்ணிலவிலே, யாம் எம் தந்தையையும் உடையேம்; எம் மலையையும் பிறர் கொள்ளார்; இற்றைத் திங்களின், இவ்வெண்ணிலவிலே, வென்றறைந்த முரசினையுடைய வேந்தர் எம் மலையைக் கைப்பற்றிக் கொண்டார்; யாம் எம் தந்தையையும் இழந்தேம்', என்ற, அப்பாடலில் இவர் தம் இரக்கவுணர்வை நன்கு பதித்துப் பாடியுள்ளனர். வென்றறைந்த முரசினையுடைய வேந்தர் என்ற அடைமொழித் தொடரால், அம்மூவேந்தரும் ஒருவனை முற்றியிருந்தும் எதிர்த்து வெல்லமாட்டாமல் வஞ்சித்துக் கொன்றமையை இம்மகளிர் குறிப்பின் இகழ்வர். பாரியோடே ஆருயிர்த் தோழமை பூண்டொழுகிய கபிலர், அவன் மாய்ந்தபின் அவன் மகளிரான இவரைத் தக்கார்க்கு மணம் புரிவிக்கக் கருதி அழைத்துக் கொண்டு பறம்பினை விடுத்துச் சென்றார் *[புற.113]*. செல்லுமிடையே புல்மொய்த்த கவர்த்த வழிகளையும், முள் நெருங்கிய வேலியையும், பஞ்சுபரந்த முற்றத்தையுமுடையதோர் சிறுமனையின்கண் தங்கியிருக்கையில், இம்மகளிர் பீர்க்கு முளைத்துச், சுரை படர்ந்தவிடத்தே, ஈத்திலைகள் கிடக்கும் குப்பைமேல் ஏறிநின்று, உமணர் உப்பேற்றிச் செலுத்தும் சகடங்களை எண்ணினர். அது கண்ட கபிலர் 'முற்காலத்தே உயர்ந்த வரையின்கண்ணே ஏறி நின்று, தம் தந்தையாகிய பாரியின் அருமையறியாராய், அவனோடு போரேற்று வந்த வேந்தரின் தானைக் குதிரைகளை அஞ்சாது எண்ணிய இம்மகளிர், இன்று இந்த ஈத்திலைக் குப்பைமேல் ஏறி, உமணரின் ஒழுகையை எண்ணுகின்றனரே; இதற்கு யான் நோவேன்; என்வாழ்நாள் கெடுவதாக', என மனம் நொந்து மொழிந்தார் *[புற.116]*. தொடர்ந்து இவரை அழைத்துச் சென்ற அவர், இவர் தந்தை நாட்டின் முன்னை வளங்களை நினைந்தும், பின்னை அழிவுகளுக்கு இரங்கியும் *[புற.117,120]* போய், விச்சிக்கோவை அணுகி இம்மகளிரை மணந்து கொள்ளுமாறு வேண்டியும் *[புற.200]*, அவன் மறுக்கவே, பின்னர் இருங்கோவேளிடத்துக் கொண்டு சென்று வேண்ட *[புற.201]*, அவனும் மறுத்தமையால் *[புற.202]* மனம் நொந்து, வேறு செயலின்றி, இவரைப் பார்ப்பனரிடத்தே ஒப்புவித்துவிட்டுத், தாம் வடக்கிருந்து உயிர் நீத்தார் *[புற.236]*.

**பாரிவேள்** - வள்ளல் எழுவருள் ஒருவன். 'மழை பெய்யினும், பெய்யாதொழியினும், அருவி, உழுத நிலத்திடையே நீரோடுகாலாக ஓடக், கண்ணேணியையுடைய நெடிய (பறம்பு) மலையின் சிமையந்தோறும் இழிதரும் நீரினும் மிக இனிய மென்மையமைந்த பாரிவேள் பக்கலிலே நீ பாடிச் செல்லின், விறலியே, சிவந்த அணிகளைப் பெறுகுவாய்', என்று கபிலர் பாரியிடத்தே விறலியை ஆற்றுப்படுத்திப் பாடினார் *[புற.105]*. 'பாரி' காண்க.

**பால் 1.** இடம். கலைமான், புலிப்பால்- இடம் - அகப்பட்டதாகச், சிறிய மறியை அணைத்துக் கொண்ட பிணைமான் பூளைச் செடி வளர்ந்த பாழிடத்தில், வேளைச்செடியின் வெண்மையன பூவைத் தின்னும் *[புற.23:18]*. 'விறலி! நீரினும் இனிய சாயலுடைய பாரிவேள்பால் பாடிச் செல்லின், பொன்னாலாகிய அணிகலங்களைப் பெறுகுவை', என, விறலியாற்றுப்படுத்தப் பெற்றாள் *[புற.105:8]*. புலியின் பால் பட்ட ஆமானினது கன்றினுக்கு முதிய ஆ (தன்பாலை) தன் கன்றினோடு சேர்த்து ஊட்டும் *[புற.323:1]*. வில்லின்பாற்பட்ட முள்ளம்பன்றி யிறைச்சி, சந்தனம், யானைக்கொம்பு எனும் மூன்றனையும் புலித்தோலை விரித்துக் குவித்து விருந்தினர்க்கு ஆய் அண்டிரன் வழங்கினான் *[புற.374:11]*.

'செவ்வானம் பரவ மலைப்பால் வீழும் அருவியைப் போலத் தேரின் மணி இயம்பும் *[அக.184:17]*. 'நிழற்பால் அறம் போன்ற கூந்தலினையும், குழலிசைபோன்ற குரலினையுமுடையவள் தலைவி *[அக.265:8]*. சேய்மைப் பாலுள்ள ஆனிரை பருகக், கோவலர் ஆக்கிய கிணற்றினைக், கன்றினையுடைய பிடி, களிற்றுடன் நீருக்காகத் தடவும் *[அக.321:6]*.

கடம்பின் தாரோய்! நின்பால் யாமிரப்பவை பொருளும், பொன்னும், போகமும் அல்ல. அருளும், அன்பும், அறனும் மூன்றுமாகும்', என, முருகனை அன்பர் வேண்டுவர் *[பரி.5. 0].* 'எந்தை எனக்கிட்ட வளையும், ஆரமும் நின்பால் வந்தடைந்தி மாயக்களவு அன்றாயின், நினக்குத் தந்தவனைக் காட்டித் தரக்கடவாய்; எனத், தலைவி, பரத்தையிடம் கூறினாள் *[பரி. 20:77].* 'புணர்ச்சி இனிய பரத்தையர்பாற் செல்வானை, மனையாளாற் செல்லாமற் காத்தலும், சென்றானென்று நீக்கி ஒழுகுதலும், கூடுமோ? கற்புடைய மங்கையர், தம் கேள்வர் இகழினும், தாம் அவரை ஏத்தாநிற்பர்', என்று, கூடடந்தார் கூறினர் *[பரி.20:86].*

**2. ஆவின்பால் / மகளிர் முலைப்பால்.** காலையும், மாலையும் புறவின்முட்டை போன்ற வரகரிசியைப் பாலில் - ஆவின் பாலில் - சொரிந்து சமைத்த சோற்றைத், தேனொடுண்டு, முயலினது சூட்டிறைச்சியைச், சோற்றுத் திரளுடன் உண்ட பாணர்க்குச், செல்வமெல்லாம் வழங்கியவன் வளவன் *[புற.34:10].* 'யானை முழங்கப், பாலில்லாத குழவி அழ, மகளிர்பூவில்லாத வறிய தலையை முடிப்ப, மனையகத்தார் வருந்திக் கூப்பீடு செய்ய, முற்றுகை இடப்பட்ட மதிலுள் கதவையடைத்துப் பதுங்கியிருத்தல், நாணும் தன்மையுடையது', என, நெடுங்கிள்ளியிடம் கோவூர்கிழார் கூறினார் *[புற.44:6].* 'பெருந்திருமாவளவ! பெருவழுதி! பால்போலும் நிறமுடைய பனைக்கொடியோனும், நீலநிறமுடைய நேமியோனும் ஆகிய இரு பெருங்கடவுளரும் ஒருங்கு நின்றாற் போல, இவ்வியல்பினராக நீவிர் என்றுமிருப்பின் இதனினும் இனியதில்லையாகுமெனச் சோழபாண்டியரிடம் காரிக்கண்ணனார் உரைத்தார் *[புற.58:14].* 'மார்பில் தாரையணிந்து, ஐம்படைத் தாலியைக் கழித்ததும் இலன். பாலையொழித்து, உணவை இன்றுண்ட இளையனாய் இருந்தும், போரில், மேல் வந்தவரை வியத்தலும், இழித்தலும் செய்திலன். உடல் நிலஞ்சேரக் கொன்றதற்கு மகிழ்ந்ததும், தன்னை மதித்ததும் இலன்', என, நெடுஞ்செழியனை இடைக்குன்றூர்கிழார் பாராட்டுவர் *[புற.77:7].* 'நெல்லிக் கனியின் பயனைக் கூறாது, சாதல் ஒழிய எனக்களித்தாயாகலான் பால் போன்ற பிறையை நுதலுக்கணிந்த சென்னியையும், நீலமணிபோலும் மிடற்றினையும் உடைய ஒருவன் போல நீ நிலைபெற்று வாழ்க' என அதியனை ஔவையார் வாழ்த்தினார் *[புற.91:5].* புதல்வன், பால் - தாய்ப்பால் - இல்லாத வறுமுலையைச் சுவைத்துப், பால்பெறானாய்க், கூழையும், சோற்றையும் வேண்டி, வறிய அடுகலத்தைத் திறந்து அஃதொற்றையும் காணாது அழக் கண்டு தாய் துயருற்றாள் *[புற.160:19].* தினையின் புது வருவாயையுடைய கதிரை, நல்ல நாளின்கண் புதிதுண்ண வேண்டி, மரையா கறந்த நுரையுடைய இனிய பாலைப்பானையில் உலையாக வார்த்துச், சந்தன விறகால் சமைக்கப்பட்ட சோற்றைக், கூதளமும், மலை மல்லிகையும் நாறும் முற்றத்தில், வாழையிலையில், பலருடன் பகுத்துண்பான் பிட்டங்கொற்றன் *[புற.168:8].* சோறாறக் கொண்டு, இனிய பாலை வேண்டும் புதல்வர் தந்தை புறங்காட்டை அடைந்தபின், இரவலரது கண்ணீரைத் துடைத்த திருநகர், கூந்தலைக் கொய்து, வளைகளைந்து, அலலியரிசியாகிய உணவினையுடைய மனைவியோடு பொலிவழிந்தது *[புற.250:7].* 'முது பெண்டின் காதற் சிறுவன், குடப்பாலுக்கு ஓர் மோர்த்துளிபோலப், பகைப்படைக்கு நோய் ஆயினன் *[புற.276:5].* 'பாலையூட்டவும் உண்ணாது வருந்தியோடிய சிறுவன் இப்பொழுது, களிற்றினைக் கொன்று, அம்புபட்டதனையும் அறியானாய்த், தோலுடன்மாய்ந்து கிடந்தான்' *[புற.310:1].*

சீறூர் மன்னனின் வரகுந்தினையும் இரவலர்க்கு ஈயத் தொலைந்தன. இத்தன்மையாயினும், பாலில் உலையிடக், கொய்த குரலரிசியோடு, நெய்யும் பெய்து ஆக்கிய வெண்சோற்றினை உண்டபின், அவன் பரிசில், நல்குவன் *[புற. 328:7].* 'பாலை உண்பித்தலின், ஈன்றதாயோ, தன்மகளை விரும்பாள் அல்லள் (உடனுறைவு விரும்புகின்றாள்). வல்லாளனாகிய கலைவல்லானோ அதற்குடம்படான். எனவே, இவள் அழகுபெரும் பாழ் செய்யும்', என மகட்பாற் காஞ்சித்துறையில் அண்டர்மகன்குறுவழுதி பாடுவர் *[புற.346:1].* 'ஊனையும், ஊணையும் வெறுப்பின், இனிதென்று கருதிப், பாலிற் பெய்தனவற்றை, வெல்லப்பாகிற் செய்தனவற்றை அளவாகக் கரும்பனூர்கிழான் பரிசிலர்க்கு வழங்கினான் *[புற.381:2].* குறுகிய முலைகுடிப்பதற்காகச் சுழன்று பாலுண்ணும் ஆட்டுக்குட்டி, பெருங்குரங்கினோடு குதித்து விளையாடும், கான்பொருந்திய நாட்டின் தலைவன், அவியன் *[புற.383:18].*

காரிகாற்பெருவளத்தானைப் பாடி நிற்பின் அவன் பரிசிலரின் சிதைந்த ஆடை களைந்து, பட்டுடை நல்கித், தேறல் வார்த்து உணவின்பின் பொற்றாமரை, பொன்னரிமாலை சூட்டி, ஊர் பல தந்து, பால் போன்ற வெள்ளிய பரி நான்கு பூட்டப்பட்ட தேரில் ஏற்றிவிடுப்பான்', *[பொரு.165].* திறவாத கண்ணையுடைய குட்டி இதுவரையும் கறக்கப்படாத பாலினையுடைய முலையைக் கவர்தல் பொறாது, ஈன்றணிமையையுடைய நாய் அட்டியில் கிடந்து குரைக்கும் அட்டிலில் *[சிறு.131].* அறியார்முன் அறியாராகி, அறிஞர்முன் அறிஞராகிப், பரிசிலர் தரமறிந்து கொடுத்துப், பரிசிலர் ஏத்தப், பலமீன் நடுவில் பால் போலும் மதி,போல, ஆன்றோர் நடுவில் நல்லியங்கோடன் இருப்பான் *[சிறு.219].* மதிபால் போலும் கதிர்களைப் பரப்பியது *[சிறு.250].* மோரை விற்றுச் சுற்றத்தை உண்பித்து, நெய்யை விற்றுக் கட்டித் தங்கம் கொள்ளாது, எருமை, ஆன், கரிய எருமை நாகு ஆகியவற்றைக் கொள்ளும் கோவலர் குடியிடத்துச் செல்லின், தினைச் சோற்றைப், பாலொடும் பெறுவீர்', எனப் பாணரை ஆற்றுப்படுத்தினர் *[பெரு.168].* செருப்புடைய காலினையும், தண்டூன்றிய, கோடரி பிடித்துத் தழும்பிருந்த கையினையும், உறி தாழ்ந்த தோளினையும், பால்

தேய்க்கப்பெற்ற மயிரில், கொம்பில், கொடியில் பெற்ற மலராலாகிய மாலையணிந்த தலையினையும், உடையவன் இடையன் *[பெரு.172]*. நெற்கூடுகள் நிறைந்த முற்றத்தில் சிறு தேரை உருட்டி விளையாடிய புதல்வர் கள்ளப்பு நீங்கச் செவலியரைத் தழுவிப் பாலுண்டு படுக்கையில் துயில்வர் *[பெரு.251]*. பால் போல் வெள்ளிய தலைமயிரினையுடைய குதிரைகளோடு, வடதிசைக் கண்ணிருந்து வரும் பொருள்களையும் சுமந்து வரும் மரக்கலங்கள் கடற்பகுதியில் நிறைந்தன *[பெரு.319]*. அப்பவாணிகரால், கரிய சட்டியில், பாகுடன் சேர்த்துச் செய்யப்பட்டு, நூல் போல் சூழ்ந்து கிடக்கின்ற அப்பம், பாலிலே பின் கிடந்தாற் போலக், காஞ்சி மரத்தைச் சுற்றிப் படர்ந்து இலையிடையே கூடி மலர்ந்த குருக்கத்தியின் மலர், பின் மழை நீர் உறைப்ப வீழ்ந்து, மணற்குழி நீரில் செறிந்து கிடந்தது *[பெரு.378]*. விருந்துண்டு அமையாத பெருஞ்சோற்று அட்டிலையுடைய பால் நிறைந்த வீட்டின் திண்ணையிலிருந்து பசுங்கிளிகள் பேசும் *[பட்.264]*.

'வேற்றுப்புலம் சென்று, ஏறுகளுடன் மேய்ந்த ஆவின் இனிய பாலைக், கோவலர் மகளிர் மகிழச் சொரிவதனால், நும் வழி வருத்தம் நீங்கப் புதுவிர் ஆகுவீர் எனக், கூத்தரை ஆற்றுப்படுத்தினர் *[மலை.409]*. கடல் போலொலிக்கும் யாட்டின் திரளுடைய காட்டகத்து இரவு செல்லின், பாலும், மிதவையும் (பாற்சோறும்) பெறுவீர்', எனக், கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் *[மலை.417]*.

புல்லை மேய்ந்த ஆனினங்களின் மடி பாலைச் சொரியக் கன்றை நினைந்த குரலோடு அவை மாலையில் மன்றிற் புகும் *[அக.14:10]*. 'இப்பொழுது, புதல்வன் உள்ளத்தைப் பிறிதிற் செல்லவிடாத பாலால் சரிந்த முலை தலைவரது மார்பில் பட முயங்குதலை யாம் விரும்பத், தமது மார்பில் இனிய பால் படும் என்றுஅவர் அஞ்சினர்', எனத், தலைமகள் கூறினாள் *[அக.26:12,16]*. உழவர், வேனிலில் மாங்காய்களால் ஆக்கிய புளிச்சாற்றைப் பசிய ஓலைக்குடையில் ஊற்றிக் குடித்துக், கொள்ளும் பயறும், பாலோடு கலக்க ஆக்கிய சோற்றுக் கஞ்சியை வயிறாரவுண்டு, நெற்குவியலைக் கூடுகளில் சேர்த்து, மருதமர நிழலில், எருதொடு தங்கியிருப்பர் *[அக.37:12]*. 'அன்னையே! நின்மகள் துன்பங்கொண்டு பாலும் உண்ணாள். மிகவும் பசந்தாள் என வினவுகின்றாய். மேனாள், வேங்கை மலர் கொய்யப், புலி புலி என்னும் பூசல் செய்ய, அம்பு தெரிந்து ஒருவன் வந்து, நின் மகளைப் பலகால் பார்த்து, மீள, இவனோர் மகனே என்றாள். இதில் யாதும் குறிப்புண்டோ', என்று அன்னையிடம் தோழி தெரிவித்தாள் *[அக.48:2]*. 'மதியே! பொற்றாலியணிந்த என்மகனை நினைந்து வுரின் நினக்கும் பால் தருவேன், என அதனிடம் சொல்லித், தன் புதல்வனைத் தன் கருத்துணராமல் மறைக்கும் எம் காதலியின் நிலையினைக் காணத் தேரை விரையச் செலுத்துக," எனப் பாகனிடம் தலைவன் கூறினான் *[அக.54:19]*. 'தேன் கலந்த தீம்பாலை அலைத்து ஊட்டவும் உண்ணாது, மணல் பரப்பிய பந்தருள் ஓடுபவள், சேவடி மெலியக், காடு கடக்க, வல்லுநள் கொல்லோ?', எனச் , செவிலித்தாய் தன்மகளைக்கருதிக் கூறினாள் *[அக.89:20]*. மணிகள் பதித்த பொற்கலத்தில், தேனொடு கலந்த பாலை ஏந்தி உண்பிக்கவும் உண்ணாள்; தலைமகன் பாராட்ட, மயங்கிக், கானத்தில், வேனிலில் கடுவழிநடக்க என்மகள் எவ்வாறு வல்லுநள் ஆயினளோ?' என்றாள், செவிலி *[அக.105:5]*. 'புதிய மணமகள், அடுப்பில் பாலை உலையாக வார்த்து, மகளிருடன், நெல்லை அவலாகக் குற்றினாள் *[அக.141.15]*. யானை தன் முதுகை உரச, நெடுஞ்சுவரின் விட்டம் வீழச் சிதைந்த வீட்டில் கடவுட் பலி மாறிய மெழுகாத திண்ணையில் பால் நாய் தங்கியது *[அக.167:17]*. 'தேன் கலந்த தீம்பாலை ஏந்திக், கூந்தலை வாரி, நயமொழி கூறவும், வெறுத்துண்ணாதவள், சுரத்தில் யானையின் கைபுரண்ட கிணற்றின் குறைநீரை, அறனிலாளன் முகந்து கொடுப்ப, உண்பாள் கொல்லோ?' என்று, மகட்போக்கிய தாய் கவன்றுரைத்தாள் *[அக.207:14]*. 'பெரிய மனையில்பந்து சிறிது விளையாடினும், அழைத்துப், பால் பெய்த வள்ளத்தை ஏந்தி, என் பகுதி உண்டனை; உன் தந்தையின் பகுதியும் உண், என, ஊட்டிச் சிறந்தது செய்து வளர்க்கப் பெற்றவள், அறனிலாளனோடு சென்றமைக்கு நெஞ்சம் நோவேன்', என, மகட்போக்கிய தாய் கூறினாள் *[அக.219:5]*. தேர் செல்லும்போது பால் கடைய எழும் வெண்ணெய் மிதப்புப் போலும், குதிரையின் வாயின் தெவிட்டல், சிலம்பின் நூல் போல் நுணங்கிச், சந்தனம் பூசிய தலைவன் மார்பில் மறுச் செய்தது *[அக.224:6]*. 'தீயில் சுட்ட இறைச்சித் துண்டுகளைத் தினைச்சோற்றில் சொரிந்து, கரும்பின் சாறட்ட பாகுடன், பாலினையும் பெய்த செந்நெல் அவலை உறந்தைமக்கள் பகுத்துக் கொடுப்பர் *[அக.237:13]*. 'பால் எனப் பரவிய நிலவினைக்கொண்ட மாலைப் பொழுது தூதாக வந்தது. வீட்டில் செடி, கொடி வாடினும், அன்னை அல்லல் எய்தினும், ஐயர் சீறினும், கலங்காது உடன்போக்கிற்கு உடன்படுக', எனத், தோழி தலைவிக் குரைத்தாள் *[அக.259:9]*. கிளிகளும் தீம்பால் உண்ணா; ஆயமும் விளையாட்டயரா; பூஞ்செடிகளையுடைய தாழிகளும் பல மலர் கொள்ளா; பாவையும் பலி கொள்ளா, ஓர் ஆ கட்டிய ஒரு தூண் முன்றிலையுடைய, வறிய புல் வேய்ந்த குடிலில், சிலம்பு கழித்து மணங்கொண்டனளோ என வருந்துவேன், யானும்', என்று, மகட்போக்கிய செவிலி வருந்தியுரைத்தாள் *[அக.369:4]*. 'சோற்றை, ஆவின் பாலோடு பகுத்துக் கொடுக்கும், புல்லி என்பானது நாட்டின் அப்பாற்பட்ட வேங்கடத்தைக் கடந்து தலைவன் செல்லினும், தலைவியை மறந்து நீடலராவர்', என்பது தோழி கூற்று *[அக.393:17]*. 'தலைவ! முற்றிய தயிருலையில் வரகரிசியிட்டு, ஈயலுடன் சமைத்த ஆனெய் கலந்த புளிவெஞ்சோற்றை, நின் இளையர் அருந்திய பின், செம்மண்

பூசிய சிற்றிலில், நின் மனைவி விருந்து செய்யப், பாலுணவுண்ண, ஒருநாள் வந்து செல்க', எனத், தலைவனிடம் தோழி வரைவு கடாயினாள் *[அக.394:11]*. 'பால் போன்ற வெண்மணலில், சுவடுபடத் தேரைச் செலுத்தித் தலைவன் மணக்க வந்தபோது அலர் சுமந்த ஊர் புதிய தன்மையினைப் பெற்றது', என்றாள், தோழி *[அக.400:15]*.

'கன்றும் உண்ணாது, கலத்திலும் பாயாது, ஆவின்தீம்பால், நிலத்தில் சொரிவது போல, என் கவின், எனக்கும் பயன்படாது, என் தலைவர்க்கும் பயன்படாது, பசலை உண்ணும்', எனக், கிழத்தி உரைத்தாள் *[குறு.27:2]*. மான் மறி, தீம்பாலை மாந்தி, மலை நிழலில் குதிக்கும் *[குறு.187:2]*. பாலைக் கலந்தாற்போன்ற இனிமையையுடைய தேமாம்பழத்தைத் தின்று, நெல்லியினது புளித்த காயையுண்டு, வாவல் மூங்கிலில் தூங்கும் *[குறு.201:2]*. பாலொடு வந்து, உணவொடு மீளும், இடையன் தலையில் சூடியன, முல்லை முகையாகும் *[குறு.221:3]*. மேய்புலத்தில் பயிரை அருந்திய எருதோடு வந்த பருத்த மடியையுடைய ஆக்கள், பால் ஒழுகக் கன்றுகளை நினைந்து, நிரையினின்றும் நீங்கி, மாலையில் ஊரில் புகும் *[குறு.344:5]*. 'பொற்கலத்தில் பொரி கலந்த பாலும், மிகுதியாகும், என உண்ணாளாகிய தளிரன்னோள், நிழலற்ற பாலையில், நீர் குறுகிய சுனையில், மிக்க வெப்பமுடைய கலங்கல் சின்னீரைக் குடிக்க, எவ்வாறு வலியளாயினாளோ?' என, மகட்போக்கிய செவிலி வருந்தினாள் *[குறு.356:7]*. 'பாலும் உண்ணாது, பந்தையும் விரும்பாது, மகளிர் கூட்டத்தோடு மேவுவோள், ஓமை மரத்தைக் குத்திய யானை நீருக்காக, மலைச்சாரலில் நின்று, மழை முழக்கத்தைக் கூர்ந்து கேட்கும், மூங்கில் கரிந்த காட்டிடை, அவனோடு செலவை எளிதென எண்ணினளே', எனக் கூறிச் செவிலி புலம்பினாள் *[குறு.396:1]*.

'உருக்கிய நெய்யில் பாலைச் சிதறினாற் போன்ற, பல பொறிகளைக் கொண்ட கானங்கோழி, மழை பெய்து ஈரம் புலராத மண்ணின் உணவினைக் கிளறியெடுத்துத், தன் பெடையை நோக்கியது *[நற்.21:6]*. பால்போலும் வெண்ணிறமுடைய மணல்மேட்டில் வளைக்கையர் விளையாட்டை நீக்கி இல்லம் சென்றமையால், துறை தனிமையுற்றது *[நற்.49:1]*. வேங்கை மரத்தின் கீழ், ஆமான் நிரை, தம் கன்றொடு தங்கக் கண்ட மந்தி, அவை தூங்கும் பதம் பார்த்து, தன் சுற்றத்தைக் கையமர்த்தி, ஆமானின் மடியைக் கையால் அழுத்திப், பாலைக் கறந்து, குட்டியின் கையில் பிழியும் *[நற்.57:5]*. காரானாகிய எருமையின் இனிய பாலைக்கொள்வதற்காகக், கன்றைத் தொழுவத்தில் விட்டு, ஊர்சிறாா் அதன் முதுகிலேறி, விடியலில் மேய்விடம் நோக்கிச் செல்வர் *[நற்.80:2]*. வேட்டை மேற்சென்ற செந்நாய் ஏற்றை, பால் இல்லாத தோல் முலையையுடைய பசி வருத்த முடங்கிக் கிடந்த தன் பிணவினை நினைந்து வருந்தும் *[நற்103:5]*. 'தேன் கலந்த தீம்பாலைப் பொற்கலத்தேந்திச் சிறுகோலை ஓச்சி உண்பிக்கவும், மறுத்தோடிய தன் மகள், கொழுநன் குடிவறுமையுற்றதாகத், தந்தையது வளமிக்க உணவினைக் கருதாளாய்ப், பொழுதுமறுத்துண்ணும் அறிவும், ஒழுக்கமும் யாண்டுணர்ந்தனளோ?', என்று, நற்றாய் வியந்தாள் *[நற்.110:1]*. உறியுடனே, தீக்கடைகோல் முதலிய கருவிகளை இட்டுக்கட்டிய தோற்பையைப் பாயோடு முதுகிற் கட்டிய பால் விலை கூறும் இடையன்,வீளை செய்யப், பிறபுலம் செல்லாது, நின்ற நிலையிலேயே, யாட்டின் தொகுதி காட்டில் தங்கியது *[நற்.142:4]*. 'விளையாட்டாயமோடு வெண்மணலில் புதைத்து வைத்த புன்னை விதையை மறந்தனமாக, அது முளைதோன்ற. நெய்யுடைத் தீம்பால் ஊற்றி வளர்ப்ப, அன்னை, நும் தங்கையாகிய அது, நும்மினும் சிறந்த தென்றாள். ஆகவே, அதனருகே நும்மொடு நகுதலை நாணுகின்றேம்', என்று தலைவனிடம் தோழி உரைத்தாள் *[நற்.172:3]*. நம் களவை அன்னை அறிந்தாளுமல்லள். சேரியம் பெண்டிர், அலரை நம்பிக், கொதிக்கும் பால்போல் பசலை பரந்த என் மேனியைச் சுடுவதுபோலப், பார்ப்பர் எனத், தோழி, சிறைப்புறமாகக் கூறினாள் *[நற்.175:9]*. வயலைக் கொடியை, ஈன்ற ஆன் தின்றதாகப், பந்து நீக்கிப், பாவை எறிந்து, வயிற்றில் அடித்துத், தேனொடு தீம்பாலை யானும், செவிலியும் ஊட்டவும் தலைவி உண்ணாள்; ஆனால் இன்று காளையது, பொய்யினை நம்பி, அரிய சுரத்தைக் கடந்தனள்', என, நற்றாய் மருண்டனள் *[நற்.179:6]*. 'பாலை முகந்துவைத்தாற் போன்ற மதியமே! நின்னை மறைத்த உலகில்லை; என்னை மறைந்து உறைவோரைக் காட்டுவாய், எனவேண்டியும், காட்டாயாதல், என் தோள்போல் கவினழிந்து, கலை குறைந்து, சிறுகியதனாள் போலும்', என்றாள், தலைமகள் *[நற்.196:2]*. 'பாலுண்ணும் பவளவாயுடைய புதல்வன் மார்பில் தவழக், குறைதீர்ந்த கொள்கையுடைய உயிர் போன்ற காதலியது கண்கள், மரத்தைச் சுற்றிய கொடிபோலப், பிணிக்கும் எனக் கருதாது தலைவர் சுரங்கடந்தார்', எனத், தோழி கூறினாள் *[நற்.269:2]*. 'பொன்னால் செய்யப் பெற்ற வள்ளத்தில் பால் கீழிருப்பச், சேவடியால் இயங்காது, படுக்கையைப் பகையாக நினைந்து, மகிழாது மகிழ்ந்தனை போல இருத்தலின், நின் உட்குறிப்பு, மிகப் பெரிதாகும்', நாடன் நின் நல்லகம் பெற்றமை குறித்து, அன்னை மயக்கமுறுவாள்'', என்று, தோழி, தலைமகன் கேட்பத் தலைவிக்குரைத்தாள் *[நற்.297:1]*. 'சிறுபறை கொட்டி வெறுப்பின், பாலை உண்டு, சிறுகப் பேசும், புதல்வனாகிய துணை நன்குடையள், மடந்தை. யாமே, துணையிலேம்; பாசறையேம்', என்று, வினைவயிற்பிரிந்த தலமகன் உரைத்தான் *[நற்.341:3]*. 'நிலவு பாற்கடல் போல் பரந்தது. ஊர்,விழாவயரும். கானம் தம் துணையோடு, வண்டுகள் ஆரவாரிக்கும் பொழிலுடையது. யானோ, வளை நெகிழ, அவலத்தோடு இரவு கண்படைபெறேன். எனவே, என்னொடு உலகமோ, உலகொடு என் நெஞ்சோ பகையென அறியேன்',

என்றாள், **தலைமகள்** *[நற்.348:2]*. குரங்கின் குட்டி, கொடிச்சியின் கையகத்திருந்த தேன் கலந்த பாலைக் கவர்ந்து கொண்டதனால், அவளது அழுதகண், குடந்தைக்கிடங்கில், மழையினை ஏற்ற நீல மலர் போன்றன. வயிற்றில் அடித்த கை, பொதியிலின் காந்தள் மலர் போன்றன! என்றாள், தோழி *[நற்.379:5]*. 'நெய்யும் குய்ப்புகையும் பட்டு ஆடை அழுக்கடைந்தது. தோளும், முலைத் தீம்பால் சுரப்பப் புதல்வனை அணைத்து நாற்றம் கொள்ளும், எனவே, சேரி செல்லும் தேரோனுக்கு யாம் ஒப்பலேம்', எனத், தோழி, பாணனுக்கு வாயில் மறுத்தாள் *[நற்.380:3]*. மலையில் கடுஞ்சூலையுடைய பிடி கன்றினை ஈன்று வருந்த, அதன் பால் நிறைந்த ஈன்றணிமைப் பசி தீரக் களிறு தினைக் கதிரைக் கவரும் *[நற்.393:3]*.

'ஆவின் பால் பெருகுக; உழும் எருதுகள் சிறப்படைக, என வேட்டோள், யாய்; யாம், ஊரன் தன் மனையில் வாழும் வாழ்க்கை பொலிவடைக, என, வேட்டோம் என்று தலைவனிடம் தோழி கூறினாள் *[ஐங்.3:2]*. 'துறைவனை நல்கின், அரிவை, பால் ஆர்வள்'. எனத், தோழி, செவிலிக்கு அறத்தொடு நின்றாள் *[ஐங்.168:4]*. 'தலைவர்நாட்டுக் கிணற்றின் அடியிலுள்ள மானுண்டு எஞ்சிய கலங்கல் நீர், நம் தோட்டத்துத் தேன் கலந்த பாலினும் இனியதாகும்', என்றாள், தலைமகள் *[ஐங்.203:2]*.

பால் போலும் கொம்பினையும், உரலின் அடியை ஒக்கும் அடியினையும், நறியவாகக் கமழும் மதத்தினையும் உடையது யானை *[கலி.21:1]*. பல்கதிர் பரப்பில் பால் போலும் பொழுதோடு வந்த வாடை, போரில் வென்று, மண் கொண்டு, களிற்றின் மேல் வரும் தலைவனின் மேம்பாட்டினைக் காண, விட்டு வைக்குமோ?' எனத், தலைவி ஆற்றாமையாற் கூறினாள் *[கலி.31:11]*. அணையைச் சார்ந்திருந்து, வெள்ளி வட்டிலில் பாலைக் காட்ட உண்ணாது, வெறுத்திருந்த கிளி, அதனை உண்டற்கு வேண்டும் மொழிகளைக் கூறி, உண்ணக் கண்டவள் முகம் போல, மாவினது வடுத்தீண்ட தாமரைமுகை மலர்ந்தது *[கலி.72:3]*. 'பாலால் பெருகிய முலையினை மறந்து, முற்றத்தே தேரைச் செலுத்தி, நடத்தலைக் கற்று, முருகன் போல வரும், என்னுயிர், எனத் தன் புதல்வனைத் தாய் கூறினாள் *[கலி.81:7]*. 'பாலாலே முலை விம்மும்படி சென்று, நீளுங்காலம் நீட்டித்தாய்; தேவர் கோட்டம் வலம் வந்து இப்புதல்வனோடு சென்றவிடமெல்லாம் செப்பு', என்று தோழியிடம் தலைமகள் கேட்டாள் *[கலி.82:3]*. பிள்ளைகள் விளையாடும் இடுமணலையுடைய தெருவில் பிள்ளையை விளையாட அழைத்துக் கொண்டுபோன நீ, இனிய பாலைப் பிள்ளைக்கு ஊட்டாமல் சுரக்கும் அளவெல்லாம், வருத்தமிலையாய் நீட்டித்த காரணமென்', எனத், தோழியைத் தலைமகள் வினாவினாள் *[கலி.83:5]*. 'நடக்க நின் சீறடி [illegible] எனவே, நின் தேரின் தாமரை முகையினைக் கையாலே பிடித்து என் கையிடத்துவருக, நினக்கென்று வைத்த பாலை உண்க.' என்று புதல்வனை நோக்கித், தலைமகள் கூறினாள் *[கலி.85:21]*. பால் நிறம் போலும் வெள்ளிய நிறமுடைய எருத்தினது கழுத்தில் பாய்ந்தானைப் பொறாது மேற்சென்றுகுத்தும் கரிய ஏற்றினது தோற்றம், பால் போலும் மதியைச் சேர்ந்த பாம்பினை விடுவிக்கும் நீலவண்ணனைப் போன்றிருந்தது *[கலி.104:35,37]*. கழுத்தைத் தழுவியனோடு பரணின் மேற்பாயும் வெள்ளேறு பாம்பால் சிறிதிடம் விழுங்கப்பட்டு, அப்பாம்புடனே விசும்பில் போதரும் பால் போன்ற மதியைப் போலும் *[கலி.105:46]*. 'இவள் தெய்வத்திற்குப் பலியாகச் சமைக்கும் பாலொடு காமன் கோயிலில் செல்லின், அக்காமனும் நெஞ்சழிந்து தன் கையிற் படையை இடுவான்', என, ஓர் தலைவன், ஒருதலையாகக் கூறினான் *[கலி.109:20]*. 'நெய்யைக் கடைந்து வாங்கின பாலைப் போல், பயனில்லையாகக், கைதோயும் அளவன்றிச் செய்வதோர் செயலறியாது; என் உயிர் அளித்து என்று தலைவியிடம் தலைவன் கூறினான் *[கலி.110:17]*. பாலைக் கறந்த கலங்களை மாற்றிக் கன்றுகளைக் கயிற்றாற் கட்டி, நீலவாடை பக்கந்தாழ உடுத்தி, ஆயமகளிரோடு தலைவி விளையாடினாள் *[கலி.111:1]*. 'என் தோழியது நுதலின் அழகை நுகர்ந்து, அவளைத் துறத்தல், இனியதாகிய பாலையுண்டு அக்கலத்தைக் கவிழ்த்து விடுதல் போல்வது. ஆகையால் நின்னிடத்து வருந்தியவள் துயரத்தை வரைந்து களைக', எனத் தோழி தலைவனை வரைவு கடாயினாள் *[கலி. 133:17]*.

**3.கூறு.** 'குருதியைப் பலிஆகக் கொள்ளும் முரசம் நீராடி வருவதன் முன்னே எண்ணெயினது நுரையை முகந்தாற் போன்ற, மெல்லிய பூவையுடைய கட்டிலின்கண், அது, முரசு கட்டிலென்றறியாது, ஏறிக்கிடந்த என்னை, இரு பால் - கூறு - படுக்கும் நின் வாளின் செயல் மாற்றியது, தமிழ் முழுதறிந்தமைக்குச் சான்றாகும் எனப், பெருஞ் சேரலிரும்பொறையிடம், மோசிகீரனார் கூறினார் *[புற. 50:9]*. காளையின் பொருட்டு என் வளை கழல, யான் யாயை அஞ்சுவேன். அவன் தோளைத் தழுவ, அவையை அஞ்சுவேன். ஒருபாற்படாது அவ்விருபாற்பட்ட ஊர், என்னைப் போல், நடுக்கமுறுவதாக', என, நக்கண்ணையார் கைக்கிளையாகப் பாடியுள்ளார் *[புற.83:5,6]*. பிறப்பு ஒரு தன்மைத்தாகிய ஒருவயிற்றுப் பிறந்தோருள்ளும் கல்வியாகிய சிறப்பின் பாலால், தாயும் மனந்திரியும். எனவே, ஆசிரியர்க்கு உதவியும், பொருள் கொடுத்தும், வழிபாட்டு நிலையை முனியாது கற்றல் நன்று என்பது நெடுஞ்செழியன் கூற்று *[புற.183:4]*. தம்மால் இயல்வதனை இயலும் என்றலும், இயலாததனை இயலாது என்றலும் முயற்சியின் பக்கத்துள்ள நட்பின் பால் பட்டன. மாறாக, இயலாததனை இயலும் என்றலும், இயல்வதனை இயலாது என மறுத்தலும், இரப்போரை வாட்டிப், புரப்போரின் புகழைக் குறைப்பனவாகும் என்பர் ஆவூர் மூலங்கிழார் *[புற.196:3]*.

'சிற்றரையம், பேரரையம் என இருபாற்பெயர் பெற்ற, பல கோடியாக அடுக்கப்பட்ட, பொன்னையுடையது மூதூராகிய, அரையம் *[புற.202:6]*. மென் பாலாகிய மருதநிலத்தின் வஞ்சி மரத்து நாரை, கரும்பின் பூவைக் கோதும். வன்பாலாகிய முல்லை நிலத்து வரகின்கண்ணுள்ள முயல் அஞ்சும்படியாக, இருப்பையின் பூச்சிதறும் *[புற.384:1,4]*. 'சமையலை மறந்த எம் கலத்தை மலரவைக்கும் கடப்பாட்டினையறிந்தோர்,பிற நாட்டில் இன்மையால், வள்ளன்மையால் உன்னை நினைந்த உள்ளமொடு ஒருபாற்பட்ட நினது நற்புகழைக் கருதி வந்தேம்', எனக், கிள்ளிவளவனிடம் நல்லிறையனார் கூறினார் *[புற.393:8]*.

பெருவெள்ளத்தை அணையிட்டுத் தடுத்த ஆரவாரத்தோடு கூடிய மக்கள் தொகுதி, முழவொலிக்கும் மூதூரில் சென்று விழாவினைக் கண்டுப் பெயரும் வளம் பொருந்திய குடியிருப்பினையுடையது பழனப்பால் (வயற்பகுதி) *[பதி. 30:21]*.

தலைவயின் பசலை தலைவனது மார்பை நெஞ்சத்தில் கொள்ள வந்தது, என அறிவிப்பேங்கொல் அறிவியேங்கொல், என, இருபாற்பட்ட ஆராய்ச்சி ஒருபாற்பட்டது. உயிர்கழியினும், இவள் கண்ணின் மேலுள்ள பசலை காமநோயால் வந்ததென உரையாதே', என்று தலைமகள் தோழயிடம் கூறினாள் *[அக.52:11(2)]*. 'அம்பு பட வீழ்ந்தோரை மூடிய எண்ணிலடங்காத தழைக் குவியலையுடைய கவர்த்த வழி, ஆறலைப்பார்பால் பட்டதாக சுரநெறியில் வழிப்போவார் இல்லையாயினர் *[அக.109:9]*. 'நெல்மிக்க தந்தையின் மாளிகையில் நடக்கினும் வருந்தும் என்மகளது ஐம்பாற் கூந்தலை, மாலையுடன் பற்றிக் கோல் சிதைய அடிப்பினும், பிறிது கருதாது நின்றவளை அடித்த என்கை துன்புறுவதாக', எனச், செவிலித்தாய் கூறினாள் *[அக.145:18]*.

'ஆளைக்கொல்லும் யானை வழி பார்த்திருக்கும் சுரநெறியில், மாலை போகி, நம்மை நீங்கியோராதலால், நோயைத் தரும் பாலால் யாது பழியாகுமோ?" எனத், தலைமகள் கூறினாள் *[அக.325:22]*.

'ஐய! வேம்பின் காயைத் தரினும், முன்பு, பூங்கட்டி என்றீர். இப்பொழுது பாரி பறம்பின் சுனையின் தை மாதத் தண்ணீர் தரினும் வெப்பத்தோடு உவர்க்கும் என்றீர். நும் அன்பின் பால் அத்தகையது', எனத், தோழி தலைவனிடம் உரைத்தாள் *[குறு. 196:6]*.

தோழி! அவர் இருந்த என் நெஞ்சு, காமம் மிகின், அவர்பாற் சென்று, நாம் அவர் திறத்து வருந்தினோமாயின், நம்முடனாகி, ஒருபாற் படாது, கழிநீர் பெருகிக் குறைய, அலையும் தாழை போன்று அலைந்து வருந்தும்', என்று, தலைமகள் தோழியிடம் உரைத்தாள் *[குறு.340:3]*.

ஐந்து பாலாக வகுக்கப்பட்ட கூந்தலையுடைய தலைவியது இருகுவளை மலர் போன்ற கண்களைக் காணும்முன் நயனும், நட்பும், நாணும், பயனும், பண்பும், ஒழுக்கமும் நும்மினும் மிகவுடையேன் எனத், தலைவன் கழற்றெதிர் மறையாகப்பாங்கனிடம் கூறினான் *[நற்.160:6]*.

'ஆண்புலி, மெய்ம்மை போல ஆக்கிவைத்த பெண்பாலைப் புணர்ந்து, தன் நோய்தீரும் குன்றநாடன் தந்த நோய்க்கு, வேலன் வெறி செறித்தனன்', எனத், தோழி தலைமகன் கேட்பத் தலைவிக்குக் கூறினாள் *[ஐங்.246:4]*. பன்றி, தன் பெண்பாலைப் புணரும் சிலம்ப, நீ விரும்பியவளது கண்பசந்தன காண்க', எனத், தோழி தலைவனிடம் கூறி வரைவு கடாயினாள் *[ஐங். 264:2]*. புலியால் கொல்லப் பெற்ற பெண்பால் பன்றியின் குட்டியை, அதன் தந்தையாகிய ஆண்பன்றி காக்கும், குன்ற நாடன், தன் பொன் போற் புதல்வனோடு என்னை நீத்தான்', எனத், தலைமகள் தலைவன் விடுத்த வாயில்கட்குக் கூறினாள் *[ஐங். 265:1]*. பரத்தையரை அகப்படுத்தும் தொழிலைக் கொண்ட நுந்தை பாலாக உண்பாய் சில', எனத் தலைமகள், தன் புதல்வனிடம் கூறினாள் *[கலி.85:25]*. 'நுந்தையின் பொய்ச்சூளை மெய்யாகத் தெளிந்து, கண்ணீர்சிந்த, நோய்மிக, கண்துயிலாத தாய்மாரது பாலை உண்பாய் சில', எனப், புதல்வனை நோக்கித், தலைமகள் கூறினாள் *[கலி.85:28]*. 'என் பால் அல்லாத சில பாராட்டைக் கேட்டு உவந்தோய்! என்பால் பாராட்டுச் சில கேட்பாயாக', எனத், தன் புதல்வனை நோக்கித், தலைமகள் கூறினாள் *[கலி.85:32,33]*. 'சினங்கொள்ளக் கருதியவரை உவகையாகிய கூத்தாட்டுவிக்கும் சிறப்போடு, நின் தாய்மாருக்குப்பட்ட பாலை (கூற்றையுடையபாலைப்) பருகுவாயாக,' எனத், தன் புதல்வனை நோக்கித் தலைமகள் கூறினாள் *[கலி85:36]*. 'இமைப்பில் மறையும் இயல்புடையாய் நீ. எனவே கைவிடப்பெற்றாய். அந்நிலைப் பாலை அறிந்தும், நின்னை நொந்து வெறுப்பாரே தவறுடையர்', எனப் பரத்தைமாட்டுச் சென்ற தலைமகனைத், தலைவி, உறழ்ந்து கூறினாள் *[கலி.87:7]*. 'நீ ஏறின குதிரையை யானறிவேன். ஐம்பாற் பகுதி நீங்காத கூந்தலையுடைய, கிண்கிணி ஆர்க்கும் குதிரை. அதனை, வெளியிலன்றி, மாடத்து நிலாமுற்றத்து, ஆதியென்னும் செலவை ஊட்டி இளைத்தாய். வாதுவன் நீ, வாழ்வாயாக', எனத், தலைமகனிடம், தலைமகள் கூறினாள் *[கலி.96:8]*. 'காமநோயால் மிக்க நெஞ்சந்தான், யாமத்தில், நம் துயிலை வாங்கிக் கொண்டு ஒளித்தவர் பால் (இடனுமாம்) பட்டதாயின் இனிநாம் உயிர் வாழ்தல் நகையாகும்', என்றாள், தலைமகள் *[கலி.122:23]*.

**4. விதி.** 'பால் - விதி -. தரவந்த அரசுரிமையைச் சிறியோன் பெறின், ஆளமுடியாத பாரமாகும். எழுச்சியும், முயற்சியுமுடைய சீரியோன் பெறின், அது எளிதாகும்', என, நலங்கிள்ளி கூறுவர் *[புற.75:2]*. 'மாவிலங்கை யென்னும் ஊர்க்குத் தலைவன், வறியோர் புரவலன் நல்லியக் கோடனைத் துணையாக நீ உடையையாதலால், என்னைப் பொருந்தியபாலே! நீ ஒரு

குறையையும் உடையையல்ல', எனப் புறத்திணைநன்னாகனார் உரைப்பர் *[புற.176:8]*. இப்பிறப்பின் கண் நீயும், யானுங் கூடி இன்புற்றிருந்தவாறு போல, மறுபிறப்பனும் நின்னோடு கூடி வாழ்தலை உயர்ந்த பால் கூட்டுவதாக, எனக், கையறு நிலையில், பாரியை நினைந்து, கபிலர் கூறினார் *[புற.236:12]*.

'நெஞ்சே! கீழ் கடற்கரையிலுள்ள இறக்கை நீங்கிய நாரை, மேல் கடற்கரையிலுள்ள தொண்டித்துறையின் அயிரை மீனுக்கு அவாக் கொண்டது போல், சேயளும் அரியளும் ஆகிய தலைவியை அடைய நினைக்கின்றாய். நீ வருத்தமுடையை. நோயின் பாலும் உடையாய்', எனத், தலைமகன் நெஞ்சு நோக்கிக் கூறினான் *[குறு.128:5]*. 'மலையையுடைய நாட்டில், பாலையில், பால் (பா.வே), பரற்கற்களிடையே என் மகளைச் செல்லுமாறு செய்தது', என, மகட்போகிய செவிலி கூறினாள் *[குறு.144:5]*. 'முன் இவளும், இவனும் கூந்தலையும், தலைமுடியையும் பிடித்திழுத்துச் சிறுபோர் விளைப்பர். இப்பொழுது மலர்களைப் பிணைத்த மாலைபோல அவர்களை மணத்தால் மகிழ்வு விளைத்த பாலே!, நீ நல்லை', என்று, கண்டோர் கூறினர் *[குறு.229:5]*. 'பாலால் வரையறுத்துப் பொருத்தப்பட்டதன்றி, அவரது சால்பினை அளந்தறிதலுக்கு யாம் யார்? அழுத கண்ணோடாகிய கிழத்தியது துணிவு பழுதன்று', எனத், தோழி கூறி அறத்தொடு நின்றாள் *[குறு.366:1]*.

'துறைவனை எம் தலைவன் என்கின்றேம். ஆயின், இவ்வூர், பிறிதொன்றாகக் கூறும். பால் அவ்வாறு ஆக்குமோ?' எனத், தோழி அறத்தொடு நின்றாள் *[ஐங்.110:5]*. நல்வினையுடைய எம்பேரில் கலக்கமடைய, எம்மகளை உடன் போக்காகப் போக்கிய, அறனில்லாத பாலே, காடு பற்றிய தீப்போலக் கனன்றெரிவதாக', என, நற்றாய் கூறினாள் *[ஐங்.376:5]*.

**5. பக்கம்.** 'நின்னை எதிர்த்தோர் போரில் கெட்டுப் போதலினால், நோய்ப் பால் - பக்கம் - பட்டதனால் இறந்த உடம்பைப் புல்லில் கிடத்தி வாளோக்கியடக்கும் இழிதகவு நீங்கினர்', என அதியமானை ஔவையார் பாடுவார் *[புற.93:5]*. 'வடபால் முனிவனது தடவினுள் தோன்றித், துவரை யென்னும் படை வீட்டை ஆண்ட, கொடைக்குணமுடைய வேளிர் குலத்தவன்', என, இருங்கோவேளைக் கபிலர் குறித்தார் *[புற.201:8]*.

கதிர் விரித்து கடாவிட்டபின், வைக்கோலையும், துரும்பினையும் நீக்கி, மேல்காற்றில் கையால் தூற்றிய பொலி, வடபால் மலை போன்று சிறப்பத் தோன்றும், *[பெரு.240]*.

'பெரும! ஒருபால் கொளலின்றிப், பகலாணிபோல், முறைமை யெய்தற்கு அவனை ஒப்பாய். ஆயின், அவன் சான்றாண்மை தெளிந்த மகளிரைக் காற்றுப் பொருத பூப்போல வாடவிடுதலின், ஒவ்வாதே', எனத், தன் புதல்வனைப் பார்த்துத், தலைமகள் கூறினாள் *[கலி.86:17]*.

முகில் முழங்கும் இடங்களில் தம் இருபாற் சிறகையும் சாந்தாற்றிபோல் விரித்துப் பரங்குன்றில் மயில்கள் ஆடின *[பரி.21:31]*.

**6. குலம்.** வேறுபாடு தெரியப்பட்ட நானகு பாலுள்ளும்-குலத்துள்ளும்-கீழ்ப்பால் ஒருவன் கற்பின், மேற்பால் ஒருவனும், கல்வியின் பொருட்டு, அவனிடம் சென்று வழிபடுவான் *[புற.183:8,9,10]*.

**7. இயல்பு.** மடப் (மென்மை) பால்-இயல்பு-கொண்ட ஆய்மகளது குடத்தளவு பாலில், தெளித்த மோரின் துளிபோலப், பெரும்படை கலங்க மறவனொருவன் அதற்கு நோயாயினன் *[புற.276:4]*.

'இவள் என் பண்பினையும் பாலினையும் கவர்ந்து கொண்டாள். யான் செய்த தவறு யாது?' எனத், தலைமகன் கூறினான் *[ஐங்.176:1]*.

**8. பகுத்தல்.** 'நின் மார்பாகிய படுக்கையை, நின் மகளிர் நுகர்தற்கு, வேற்றுப் புலத்து வினையில்வழிப் பாலும் - பகுத்தலும் (பகுத்துக் கொடுத்தலும்), வினையுள் வழி அம்மகளிர் பால் நின்று வாங்கிக் கொள்ளுதலும், வல்லோய்' என, இமையவரம்பனைக், குமட்டூர்க் கண்ணனார் பாடுவர் *[பதி.16:19]*.

**9. அரிசியாகும் நீர்ப்பொருள்.** மலை நெல்லும், வெண்ணெல்லும் பால் - நீர்ப்பொருள் - அடைக்கப் பெற்றுச், சிறப்பாக விளையும் *[மலை.114]*.

செந்தினை, பால்நிரம்பியதால் கதிர் முற்றிக் குறடு போல் வளைந்தது *[குறு.198:3]*.

'தினை, பால் நிறைந்து முற்றித் தலை சாய்த்துத் தோடுகள் அலைத்தல் கொண்டன. *[நற்.206:1]*. 'செந்தினையின் பால் நிறைந்த கதிரைக், கிளி கவர்ந்தது *[நற்.288:8]*.

**10. (பழச்) சாறு.** வேம்பின் பழத்தைத் தின்னுதலை வெறுத்து வாவல் இருப்பையின், தேன்போலும் பால்-சாறு-வற்றிய இனிய கனியை விரும்பிச் செல்லும் *[நற்.279:2]*.

**11. கள்.** மடந்தை அருவியாடி வெறுப்படையின் பால்-கள்-குடித்துக், குறவனோடு குறுநொடி பயிற்றுவள் *[நற்.341:3]*.

**பாலத்தனார்** - புலவர். நப்பாலத்தனார் பெயரே சிறப்பிடைச் சொலின்றிப் பாலத்தனார் என்றும் காணப்படுகின்றது. 'நப்பாலத்தனார்' காண்க.

**பாலர்** - பக்கத்தார். எந்நாளும் சான்றோர் சான்றோர் பாலர்-பக்கத்தர்-ஆவார். சாலார் சாலார் பாலர் ஆவர் *[புற.218:6,7]*.

**பாலவர்** - பகுதியவர். 'யாம் எம மகனைப் பாராட்டத் தலைவர், தம், பாலவர்-பகுதியவர்-ஆகிய பாணன்

முதலானாரோடு கடுக வந்தார். இவ்விடத்து வருக வென்றார் யார்?' என, ஊடலுற்றுத், தலைவி, தன்னெஞ்சொடு கூறினாள் *[கலி.85:30].*

**பாலன்ன மேனியான்** - நம்பி மூத்தபிரான். உலகளந்த பெருமானின் மூத்த, பாலன்ன மேனியான் - பால் போல் மேனியான் (நம்பி மூத்தபிரான்) - உடுத்த நீலநிற ஆடைபோன்று, வெள்ளியிடுமணலைச் சூழ்ந்த, கடல் காணப்பெற்றது *[கலி.124:2].*

**பாலை** — பாலைப்பண். 'கூந்தல் முடியைப் புனைந்த மகளிர், பேரியாழில் பாலை - பாலைப் பண்ணை - அமைத்து, உழிஞைத் திணையைப் பாட, அவரைக் காத்து, இன் மகிழ் சுரப்பான், குட்டுவன்' *[பதி.46:5].* 'விறலி! பேரியாழைப், பாலை பண்ணித், தழிஞ்சியென்னும் துறைப் பொருள் தோன்றப் பாட, மகளிர் துனித்த கண்ணினும் இரவலர் துன்பத்திற்கு அஞ்சும் பண்புடையானைக் கண்டு வரற்குச் செல்வேமோ?' என, விறலியாற்றுப்படைத்துறையில் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கைபாடினியார் பாடியுள்ளார் *[பதி.57:8].* 'பேரியாழைப் பாலை பண்ணிச் செல்லும் இரவல! செல்வக் கடுங்கோ, பாசறையில் திறையாகத் தந்த களிற்றொடு, தன்னாட்டு நெல்லையும் உணவுக்குக்கொடுக்கும் என்ப!' எனக் கபிலர் இரவலனை விளித்துப் பாடுவர் *[பதி.66:2].* குழலால் எழுப்பின இனியபாலையை வெறுப்பின், குமிழின் உட்பொய்யாகிய கொம்பிடத்தே, வளைத்துக் கட்டிய மரற்கயிறாகிய நரம்பினையுமுடைய, வில்லாகிய யாழ், ஒலிக்கும் குறிஞ்சிப் பண்ணை, வண்டுகள் தன் இனத்தின் ஒலியாகக் கருதிச், செவி கொடுத்துக் கேட்கும் *[பெரு.180].*

யாழ்வல்லோன் தடவ, நரம்பிலிருந்து வெளிப்படும் இனிய பாலை ஒலித்தாற்போன்ற இசையுடன், வண்டினம் ஒலிக்கும் *[அக.355:4].*

பாலை ஏழினையுமுடைய நரம்பின் இனிய இசையைத் தரும் யாழும், மிடற்றுப் பாடலும் தம்முள் ஒக்க, வங்கியம், அளந்து நிற்ப, முழவார்ப்பத், தலைக்கோல் மகளிரும், பாணரும் ஆடலைத்தொடங்க, அவ்வொலியோடு, வையை நீரொலியும் சேர்ந்தது *[பரி.7:77].* 'இசைப்பொருள் தெரிதரக் கொளுத்தாதிருக்க, எழும் சுரும்பின் பாலையிசையைக் கேண்மின்', என, வந்தோர் கூறினர் *[பரி.11:127].* பரங்குன்றத்தில் ஒரு பக்கத்தில் பாடுமகளது பாலைப்பண் நிறை, குறையோடு ஒலிக்க, அதனெதிர், ஆடுமயிலது அரித்தெழும் குரல் எழும் *[பரி.17:17].*

**2. பாலையாழ்.** 'இனிய நரம்புக்கட்டையுடைய பாலை - பாலையாழ் - வாசித்தலில் வல்லோன், பண்கள் யாவற்றினும் துன்பத்தைச் செய்யும் உறுப்பையுடைய பாலைப் பண்களை, மாறி மாறி வாசித்தாற் போலப், பலவகை, மதுவால் பரிசிலரை மகிழ்வுறச் செய்வான் செல்வக்கடுங்கோ *[பதி.65:14].*

'வழியை அலைக்கின்ற கள்வர், தம் கையின் படைக்கலங்களைக் கைவிடும்படி, அருளின் மாறாகிய மறத்தினை அவர்களிடமிருந்து நீக்கும் இனிய பாலை (யாழ்)! *[பொரு.22].*

நைவளம் என்னும் பண் நிறைந்த, இனிய பாலையை இயக்க வல்ல பாணமகன் முறையறிந்து இயக்கப், பரிசில் தருவாரை விரும்பி, வெறுப்பைத் தரும் துன்பத்தோடு, அதுதானே வழிப்படுத்துச் சென்று வழித்துயர் தீர்ந்திருந்தான் *[சிறு.36].*

நைவளம் முற்றுப் பெற்ற பாலை வல்லோன் இயக்கிய நரம்பின் ஒலி போன்று வண்டு இம்மென இமிரும் *[குறி.146].*

**3. பாலைத்திணை: பிரிவும் அதனைச் சார்ந்தனவும்.** ஐந்திணை ஒழுக்கங்களுள் ஒன்றாகிய பாலைத்திணை, பிரிதலும், பிரிதல் நிமித்தங்களையும் உரிப்பொருளாகக் கொண்டு, மலையும், காடும், வேனில், பின்பனியில் பாழ்பட்ட பாலையாக, அம்முதற்பொருளில், கொற்றவை, எயினர், எயிற்றியர், பருந்து, செந்நாய் முதலாகிய கருப்பொருளைக் கொண்டுவரும். இது வாகையைப் புறனாகக் கொள்ளும். பல்யானைச் செல்கெழுகுட்டுவனைப், பாலைத்திணை - கௌதமனார் பாடினார் பத்துப்பாட்டு *[பதி.ப.3:11].*

இளையோர் வில்லேந்திக் கவர்த்த வழிகளைக் காப்ப, நிழல் தன் வடிவிழக்கும் முதுவேனிலில், பாலை - பிரிவு - எனும் உணர்வு தோன்றும் *[மது.314].*

**4. பாலைத்தன்மை வறன் / வறட்சி.** வேனிலாகிய வெப்பம் நிலை பெற்ற காலத்தில், பாலை - பாலைத்தன்மை - நிலை பெற்றது நெடுஞ்சுரம் *[சிறு.11].*

**5. பாலை நிலம்.** வெப்பம் நிலை பெற்ற வேனிலில், வறன் நிலைபெற்றது பாலை - பாலை நிலம் *[சிறு.11].*

மாவின் உதிர்ந்த வடுக்களை, மழையொடு வீழும் ஆலங்கட்டி போல, மறவர், பாலையில் தொகுப்பர் *[ஐங்.213:2].* 'தோழி! பாழ்பட்டுப், பசுமையற வெந்த பாலையாகிய கொடிய காட்டிடைக் கடந்து சென்றோரை நினைந்து சென்ற என் நெஞ்சம், மீண்டு வாராது, காலந்தாழ்த்தது ஏனோ?' என்று தோழியிடம் தலைமகள் கூறினாள் *[ஐங்.317:2].*

**6. ஓர் வகைச் செடி / அதன் பூ.** தில்லைப்பூப், பாலை - பாலைப்பூ - முல்லைப்பூ, குல்லைப்பூ முதிய மலர்களைப் பறித்து, உடையாக, மாலையாகக் கட்டி அணிந்து, அசோகின் அடிநிழலில் தோழியும், தலைவியும் தங்கினர் *[குறி.77].*

**7. ஓர் வகை மரம்.** பிடி, தோலைப் பறித்ததனால் நாரில்லாத வெள்ளிய கொம்பினையுடைய, கொடிறு போன்ற காயினையுடைய, பாலையின் - பாலை மரத்தின் - நெற்றுக்கள், காற்று வீசக், கல்லில் பாயும் அருவிபோல, ஒலிக்கும் *[நற்.107:3].*

'முருகன் விரும்பி உறைவது, மேலோர் நாவிலிருந்து எழும் புகழ் நிறைந்த, ஏழிலைப்பாலையையுடைய, தாழ்வரையினையும், அருவியினையுமுடைய, விசும்புற நிவந்த பரங்குன்றம்' *[பரி.2:13]*.

**பாலைக்கௌதமனார்** - ஒரு புலவர். பல்யானைச் செல்கெழுகுட்டுவனைப் பதிற்றுப்பத்தின் மூன்றாம் பத்தினால் பாடிய புலவர் பெயர் பாலைக்கௌதமனார் என்றுள்ளது. மற்று, புறநானூற்றிலே, 'அறவோன் மகனே', என்று கோதமனாரால் விளித்துப் பாடப்பெற்ற *[366]* தருமபுத்திரன், பாரத வேந்தனும், பாண்டவர் தலைவனுமான தருமபுத்திரனே என்று கொண்டு, பாரதப் போரில் இருதிறப் படைகளுக்கும் உணவளித்த *[புற.2]* உதியஞ்சேரலின் மகனே பல்யானைச் செல்கெழுகுட்டுவன் என்பதனால், அவனைப் பாடிய இப்பாலைக் கௌதமனார் தருமபுத்திரனைப் பாடிய கௌதமனாரே என்று கருதுவர், அபிதான சிந்தாமணியாசிரியர். அவர் கருத்துப்படிக், கோதமனார் என்ற இப்பாலைக்கௌதமனார் பாரத காலத்தவராவார். 'இவர் பெயர் கௌதமனாரெனவும், பாலைக் கௌதமனாரெனவும் வழங்கும்', என்று உ.வே.சா, கோதமனார் வரலாற்றின்கீழ்க் குறித்துள்ளது *[புற.பா.வ.]*. கொண்டு நோக்க, கௌதமனார் என்ற பெயரே மொழி மரபுக்கேற்பக், கோதமனார் என்று மாற்றம் பெற்றதாகக் கொள்ளலாம். ஆகவே, பதிற்றுப்பத்து மூன்றாம் பத்தும், மேற்குறித்த புறப்பாடலும் ஆகிய பதினொன்றும் இவர் பாடல்களாம். வையாபுரிப்பிள்ளையின் சங்கஇலக்கியப் பதிப்பும் இப்பதினொரு பாடல்களையும் பாலைக்கௌதமனார் பெயரின் கீழேயே அடக்கியுள்ளது. பதிற்றுப்பத்துப் பாடல்களால் இவர் பல்யானைச் செல்கெழு குட்டுவனது நாடுகாத்தற்சிறப்பு, வென்றிச்சிறப்பு, கொடைச்சிறப்பு, பெருமை ஆகியவற்றைப் பாடி வாழ்த்தியுள்ளார். சினம், காமம், அளவிறந்த கண்ணோட்டம், பகைவர்க்கஞ்சுதல், பொய் கூறுதல், அளவிறந்த பொருட்பற்று, அறவிறந்த தண்டனை ஆகிய இவற்றொடு, இவை போன்ற பிறவும், இவ்வுலகிலே அறந்தெரிந்து செலுத்தும் ஆணைச் சக்கரத்திற்கு வழித்தடையாகும் என்று அவனுக்கு அறிவுறுத்தி, அவன் முன்னோர் அரசு செலுத்திய முறைமையைக் கூறும் போக்கில் இவர் அடுக்கியுரைக்கும் அரசியல் நெறிகள் சிறப்புடையன *[பதி.22]*. 'ஓதல், வேட்டல், அவற்றைப் பிறரால் செய்வித்தல் (ஓதுவித்தல், வேட்பித்தல்), ஈதல், ஏற்றல் என்ற ஆறினையும் புரிந்தொழுகும் அறம் விரும்பும் அந்தணர்' *[பதி.24]* என்று, இவர் பாடுவது தொல்காப்பியத்தில், 'அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கம்', என்று அந்தணரியல்பு கூறும் நூற்பாவிற்கு *[புறத்திணை.20]*. ஏற்ற சான்றாகவுள்ளது. மென்பாலும் (நெய்தலும்), புன்புலவைப்பும் (பாலையும்), பழனப்பாலும் (மருதமும்), புறவணி வைப்பும் (குறிஞ்சியும்), கடறும் (முல்லையும்) என்று அடுக்கி ஐந்திணை முதலும், கருவும் ஆகியவற்றோடு, உரிப் பொருளையும் குறிப்பினிற் பொருத்தி இவர் சிறப்புறப் புனைந்துள்ளார் *[பதி.30]*. தன்னை இவர் பாடிய பத்துப் பாடல்களுக்கும் பரிசிலாகப் பல்யானைச் செல்கெழு குட்டுவன் 'நீர் வேண்டியது கொண்மின்' எனப், பார்ப்பனரான இவர், 'யானும், என் பார்ப்பனியும் சுவர்க்கம் புகல் வேண்டும்', என்றாராக, அவன் பார்ப்பாரிற் பெரியோரைக் கேட்டு, ஒன்பது பெருவேள்வி வேட்பிக்கப், பத்தாம் பெருவேள்வியில், இவரும், இவர் மனைவியும் காணப் பெறாராயினர் *[பதி.பு.3]*. 'கோதமனார்' காண்க.

**பாலைபாடிய பெருங்கடுங்கோ** - புலவர்; சேரவேந்தர். 'சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோ' காண்க.

**பாவை** - 1. படிமம்/பதுமை. பேதை மகளிர் வண்டலிழைத்த சிற்றிற்கண் செய்த பாவைக்கு - படிமைக்குக் - கோட்டுப் பூவை பறித்து, ஆன்பொருந்தத்தில் பாய்ந்து விளையாடுவர் *[புற.11:3]*. கைவல்லோனால் புனைந்து செய்யப்பட்ட அழகு பொருந்திய அல்லிப்பாவை என்னும் கூத்தையாடும் அழகையொப்ப, அன்பினையுடைய துணைவனும், துணைவியுமாகிய இருவரல்லது, இடையாமத்தின்கண், தனிமகன் நடமாட முடியாதது மலர்க்கா *[புற.33:17]*. 'மணலில் செய்த பாவைக்குப் பூவைச்சூடிப்,பொய்கையில், மகளிரோடு, விளையாடி, மருத மரத்திலிருந்து மடுவின்கண் பாய்ந்து, மணலை முகந்து காட்டிய கல்லாவிளமை இனி, எவ்விடத்ததோ? அது, நினைந்து இரக்கமாகின்றது எனத் தொடித்தலை விழுத்தண்டினார் கூறுவர் *[புற.243:2]*. ஆர் சூழ்ந்த குறடுபோல், வேல் உடம்பில் தைத்திருக்க, உயிர் உடம்பினின்றும் நீங்குமுன், மணலின்கண், பாவை செய்து விளையாடும் மகளிர் காப்பத், தும்பைமாலையினை நுதலில் சூடினான் ஒருமறவன் *[புற.283:10]*.

போர் வென்ற நெடுங்கொடியோடு, பந்தோடு பாவை தூங்கப் பொருவாராகிய பகைவர் இன்மையால், போரில்லையான வாயிலையும், திருமகள் குடியிருக்கும் அங்காடி முதலிய தெருக்களையும், மாடங்களையும், உடையது கூடல் *[முரு.68]*.

பசும் பொன்னாற் புனைந்த பாவை, பசுவெயிலில் தோன்றினாற்போன்ற, சிவந்த நிறத்தினையும், ஆடவர்க்கு வருத்தம் செய்யும் பார்வையினையும், உடையவர் மயிலியலோர் *[மது.410]*. 'மகளிர் தோள்புணர்ந்து, பள்ளியெழுந்து, சாந்தம் பூசி, ஆரம் பூண்டு, காடி கொண்ட கலிங்கத்தை உடுத்துக், கைவல்லோனால் புனையப்பெற்ற பாவை, கடவுள் தன்மை பெற்றுப் பொலிவது போன்ற, பொலிவுடையனாகுவை', என, நெடுஞ்செழியனை மாங்குடி மருதனார் வாழ்த்தினார் *[மது.723]*. யவனர் பண்ணிய வினைத்திறம் பெற்ற பாவை, தன்கையில் ஏந்திய தகளி நிறைய நெய்வார்க்கப்பட்டுத், திரிவைக்கப்பட்டு, மேல்நோக்கி எரியும் விளக்கை, ஒளிமழுங்குங்காலந்தோறும் நெய்வார்த்துத் தூண்ட இடந்தோறும் இருள்நீங்கச் செய்தனர் *[நெடு.101]*.

காவிரி கலக்கும் புகார் முகத்தே கடலாடியும், உப்பு நீங்க நன்னீராடியும், நண்டுகளைப்பிடித்து விளையாடியும், பாவைகளைச் செய்தும், பலவேறாக மகளிர் இன்பம் நுகர்ந்து நீங்காத விரும்புடன் பகற்பொழுதைப் போக்குவர் *[பட்.102].*

முருகனால் வந்தது இது என முதுபெண்டிர் கூறலின், ஓவியம் போன்ற இல்லில், பாவையைப் போலும் பலராலும் ஆயும் வனப்பு, என் மகட்கு, முன்போல் சிறக்க என அன்னை கடவுட் பேணி, இன்னியங்கறங்க வெறியாடும் களனை ஆக்கி, முருகனது புகழைப் பாடி, வல்லோன் ஆட்டும் பொறியமைந்த, பாவையைப் போல, ஆட விரும்பின் என்னாகுமோ?' எனத், தோழி கூறினாள் *[அக.98:12,20].* 'சேரலாதன் கடல் நடுவண் பகைவரை ஓட்டி, இமையத்து விற்பொறித்துத், தன் மாந்தை என்னும் ஊரில் பகைவர் தந்த திறையாகிய அணியும், பொற்பாவையும், வயிரமுமாகிய நிலம், தின்னும்படியாக விட்டொழித்தவற்றை, ஒருநாள், ஒருபகலில் பெறினும், சென்ற நாட்டில் பிற்றை நாள் தங்கார், நம் காதலர்', எனத், தோழி தலைவியை வற்புறுத்தினாள் *[அக.127:8].* 'இடையாமத்தில், செய்தொழிலால் சிறந்த பாவை நடைகற்பது போலும் நடையினளாய்ப், பையவந்து, மாலை, யாழ் போல் இனிய மொழிந்து, தொடி வடுக்கொள முயங்கினள்; எனத், தலைமகன், தன் நெஞ்சிற்குக் கூறினான் *[அக.142:21].* 'போர் நிகழ்வால் குடி இடம் பெயர்ந்தமையால், பொலிவிழந்த மன்றத்தில் மழை பெய்ய, இளகி, வெயில் காய நுணுகிய வேலைப்பாடழிந்த பாவைபோல வாடி, மனையின்கண் தலைவரைப் பிரிந்து தனித்திருத்தலை வல்லவர்க்குத், தலைவர், அவர் மனம் விரும்பி ஏற்றுக் கொள்ளும்படி செய்வர். யான் அவ்வாறு தனித்திரேன்', என்று, தலைமகள் உரைத்தாள் *[அக.157:13].* 'தாயும், என் உயிர் கெடுக எனக் கூறி, மணலில் கிடந்த மகளது பாவையை எடுத்து, அதன் கண்ணையும், நெற்றியையும் தடவி, நொச்சி நிழலில் கிடத்திக், குவளையின் வாடிய மலர் சூட்டி, என் அருமகளே! நின் இனிய தோளைத் தருவாயாக எனத், தழுவி அழும்', எனக், கண்டோர் கூறினர் *[அக.165:12].* 'முக்கட் செல்வனது ஆலமுற்றம் என்னுமிடத்துள்ள பொழிற்கண், சிற்றில் விளையாடும் சிறுமியர்களால் புனைந்து செய்யப்பெற்ற பாவைகளையுடையது துறை *[அக.181:19].* 'பொன்னாற் செய்யப்பெற்ற பாவை இளவெயிலைக் கொண்டு நின்றாற்போன்ற அழகினை உடையவள் தலைவி *[அக.212:1].* 'அறல் போன்ற கூந்தலோடு, குழல் போன்ற குரலுடைய பாவை போல்வாள் இரங்க, வளை நெகிழக், கண்ணீர் சொரியத் தலைவர் அவனைப் பிரிந்தார் *[அக.265:9].* விளையாட்டுக்குரிய பாவையை நீருண்ணும் துறையில் கொணர்ந்து வைத்துப், பெண்கள் குரவை கூத்தாடுவர் *[அக.269:19].* 'சேர்ப்ப! என் தோழியின் துன்பமும், அலரும் அழிய அருளாது பொய்ப்பினும், யாம் புனைந்து விளையாடிய வண்டற்பாவை சிதைய, நின்தேரினைச் செலுத்தி வந்து, இவள் தோள்களைப் புதியதாக நுகர்ந்து, கடல் சான்றாகக் கூறிய சூளும் பொய்யாகுமோ?' எனத், தோழி தலைவனை வரைவு கடாவினாள் *[அக.320:12].* 'கழியிடத்துப் பூக்களைக் கொய்தும், கடற்சோலையில் தங்கியும், மணலில் வண்டற்பாவை செய்து விளையாடியும், இன்புறக் கூடியும், சிறுமை தோன்றப் பணிந்தும், தவறில்லாத நம் துயர் அறியாமையால், சோர்ந்த நெஞ்சுடன் செல்லும்', எனத், தோழி தலைமகட்குக் குறை நயப்பக் கூறினாள் *[அக.330:2].* 'கிளியும் பாலுண்ணா. ஆயமும் ஆடா. தாழியும் மலர் கொளா. சுவர்ப்பாவையும் பலி கொளா. இவை கண்டு வருந்துவதன்மேலும், அறிவிலேன், அவள் எண்ணியதை உணரேன்', என, மகட்போக்கிய செவிலித்தாய் கூறினாள் *[அக.369:8].* 'பொற்பாவை போலும் மகள்வயின் தீங்கில்லையாம்படி புணையாகப் புகுவாயாக, என, இரந்து வேண்டுவான், வறிதே மீள்வானாயின், நமக்குத் துன்பந் தருவதாகும்', எனத், தோழி தலைவிக்குக் குறை நயப்பக் கூறியனாள் *[அக.392:6].*

'பூந்தாது முதலியவற்றாற் செய்த விளையாட்டுப் பாவை காலையில் தனியே கிடந்து வருந்துதலாற் பிறந்த செயலறவினை நீக்குக, எனத், தன் ஆயம் கூறக் கேட்டும், தலைவனைக் காணாது தலைமகள் மிக்க வருத்தமடைந்தாள் எனத், தோழி கூறினாள் *[குறு.48:1].* 'நெய்தற் பரப்பில் எனது பாவையை விட்டு நின்னிடம் வந்தேன். அதனை நாரை மிதிக்குமுன் யாம் செல்லவிடை தருக', என்று, தோழி தலைவனைக் கேட்டாள் *[குறு.114:1].* 'மயிலினது பீலிக் கண்களைப் போன்ற முடியினையுடைய பாவை போல்வாளாகிய பரதவர் மகளது கண்வலையிற் பட்டு, என்னெஞ்சம் ஆண்டொழிந்தது', என்று, தலைமகன் கூறினான் *[குறு.184:5].* 'காற்று என் மெய்யில் படப், புனையப்பட்ட பாவை போன்ற என் மெய் வேறுபாடு அடைதலை யறியாதவர், வினைமேற்சென்றார். அவர் யாண்டுள்ளாரோ? இம்மாலை துன்பந்தரத் தக்கது, அவள் வருந்துமே என்று நினையாராயினார்', எனத், தலைவி வருந்திக் கூறினாள் *[குறு.195:6].* 'குறமகளுக்குப் பாவையைச் செய்தும், அதன் பொருட்டுப் பஞ்சாய்க் கோரை வளர்ந்த பள்ளமாகிய நீர்நிலையைச் சுற்றியும், அவளது நகிலில் எழுதிய தொய்யிலை இவளைக் காப்போர் அறியார்', எனத், தலைமகன் கூறினான் *[குறு.276:1].* 'கடுவன் கனியுதிர்ப்பக், கீழிருந்து வேண்டுவன உண்ணும் பார்ப்பும், மந்தியுமுடைய மலையிறந்தோர், பாவையையும், எம்மையும் நினையாராயினர் எனத், தலைவி கூறினாள் *[குறு.278:3].* 'ஒருநாள் தலைவன் வரப் போரூர் மக்கள் போல் துஞ்சாத அன்னை, நீராடச் சென்ற பெண் நீர்தந்த பசிய காயைத் தின்ற தவறுதலுக்காக, எண்பத்தொரு களிற்றொடு, அவளது நிறைக்குத் தக்க ஈடாகும் பொற்பாவை கொடுப்பவுங் கொள்ளாது, பெண்கொலை புரிந்த நன்னன் போல, மீளா நிரயத்தில் செல்க,' எனத், தோழி கூறினாள் *[குறு.292:4].*

'பரத்தியர் மனையகத்துத் தூங்கத், துறை தனிமையுற்றது. பாவை போலும் இறாலில், படும் பறவைகளை ஓட்டி முடிதலின், பகலும் மாய்ந்தது. சுறா எறிந்தமையால் எமரும் வேட்டம் செல்லாராயினர். நீயின்றி மயங்கினோம், என, அவனூர் சென்று சொல்லின் என்?' எனத், தோழி :சிறைப்புறமாகக் கூறினாள் [நற். 49:3]. 'ஆயத்தோடு பண்டு தான் ஆடிய ஈனாத (புனைந்து செய்த) பாவையைத் தலையிட்டுப் புலம்பன் இன்றியும், நாம் விளையாடல் குறித்துச் செல்வோம் என்றனள், தலைவி, எனக் கூறிப் பாணற்குத் தோழி வாயில் மறுத்தாள் [நற்.127:7]. வயலைக் கொடியை ஆ, தின்னப்பந்தையெறிந்து, பாவையை நீக்கி, வயிற்றிலடித்துக் கொண்ட குறுமகள், காளை யொருவனுடன் அருஞ்சுரங், கடந்தனள் என்ப' எனச் செவிலித்தாயர் மனைமருண்டு கூறினாள் [நற்.179:2]. 'நிலவுமறைய இருளும் வந்தது. ஓவியம் போன்ற இல்லில் பாவை போன்ற நம்மைக் காக்கும் அன்னையும் தூங்கினள். களைந்த அணிகலம் மீண்டு பெறப்பட்டது போன்று, அவன் மார்பினை முயங்கிக் கண்டு வருவேமோ?' எனத், தோழி தலைவனிடம் கூறி, வரைவு கடாயினாள் [நற்.182:3]. மகளிர் மணலில் இழைத்த பாவையின், முலைப்பரப்பின் சுணங்கு போல, அதன்மேல் ஞாழலினது பூங்கொத்துக்கள் வீழ்ந்து கிடக்கும் [நற்.191:3]. 'சுவரில் அமைத்த பாவையைப் போலும் தோற்றமுடையவளது குணங்கள், இல்லிருந்தோர்க்கு அரும்பொருள் ஆதலில்லையாகும் என, நெஞ்சம் தூண்டச், சென்ற தலைவனது வினையை, விலக்கல போலும்,' என்று தோழி கூறினாள் [நற்.252:7]. 'பொருள்வயிற் பிரியவருந்தமை, யுணர்ந்து, அழைக்கவருவோள், பேசவும் இயலாது, பொறியழிந்த பாவைபோலக்கலங்கி, ஆகம் அடைந்தாள். அதுகண்டு, பசுமட்கலம் மழையையேற்றுக் கரைந்து ஒன்றுபடுமாறு, அவளோடமைந்தேன்', என்று, தலைமகன் கூறினான் [நற்.308:7]. நொடித்துவிட்டாற்போன்று, காய்கள் ஒலித்துத் தெறிக்கும் கள்ளியின் அசைகின்ற பாவை போலும் கிளைகளில் ஏறிப் புறா, தன் பேடையை அழைக்கும் [நற்.314:10].

'கொண்க! காண்க! நின் கேளாகியவள் விளையாட்டிற்குரிய பாவையைக் கடல்கவர்தலால், கையில் மணலைவாரிக், கடலை எறிந்தோளாவாள்', எனத்தலைவனிடம் ஆயத்தார் கூறினர் [ஐங்.124:2]. 'கொண்க! காண்க! நின் கேளாகிவள், நீர்த்திரை பாவையைக் கவரக், கண் சிவப்ப, அழுது நின்றாளாவள்', என, ஆயம் தலைவனிடம் கூறியது [ஐங்.125:2]. 'கொண்க! காண்க! நின் கேளாகியவள், பாலூறாத வறுமுலையை வாய் மடுத்து, உண்ணமாட்டாத, மட்பாவையைக் கூட்டியோளாவள்', என, ஆயம் கூறியது [ஐங்.128:3]. 'நாரை மிதிப்ப, நெய்தல் முறிந்து, நீரொடு நீங்கும் துறைவனுக்குப், பஞ்சாய்க்கோரை யாலாகிய பாவையை, யான் ஈன்றனென்', எனத், தலைமகள், அவன் பரத்தமை நோக்கிக் கூறினாள் [ஐங்.155:5]. 'எம்மொடுவந்து கடலில் விளையாடும் மகளிரும் (இந்)நெய்தல் மலர்த்தழையால்அவர் விளையாடும் பாவையையும் ஒப்பனை செய்யார்', எனத், தோழி, தலைவனின் கையுறை மறுத்தாள் [ஐங்.187:3]. 'பாவை போன்ற என் அழகு கெடக், காதலர் மலைநாடு செல்வேன் என்கின்றார்', எனத், தலைமகள் கூறினாள் [ஐங்.221:2]. 'பாலை போலும், நின் துணையைப் பிரிய, வரும் பொருள் நன்றன்று', என்று, தோழி தலைவனிடம் உரைத்தாள் [ஐங்.307:4]. 'இது என் பாவை போல்வாளது விளையாட்டுப் பாவை. இது, என், பசுங்கிளி போல் வாளுக்குரிய பைங்கிளி, எனக், காணுந்தொறுங்கலங்க, நீங்கினளோ என் பூங்கண்ணோள்!' என, மகட்போக்கிய தாய் இரங்கிக் கூறினாள் [ஐங்.375:1(2)]. 'விளையாடும் பந்தும், பாவையும், கழங்கும் எமக்கு வைத்து, நீர் நசை, யானை பெருமூச்செறியும் சுரஞ்சென்றனளே, என்மகள்', எனத், தாய் புலம்பிக் கூறினாள் [ஐங்.377:4]. 'வெண்கடம்பினது கிளையைத் தலைவன் தாழ்க்க மலர்பறித்து, மங்கை, தனக்கும், தன் பஞ்சாய்க்கோரைப் பாவைக்குமாக, ஆய்வதைக் கண்டு, அவன் மகிழ்ந்தனன்', என உடன்போகிய சுரத்துக் கண்டோர் கூறினர் [ஐங்.383:5]. 'காளையொடு, பாவையன்ன என்மடந்தை சென்றனள் என்றீர்! அதற்கு, அவள் அடிபொருந்தினவோ?' என்று, செவிலித்தாய் கவன்று மொழிந்தாள் [ஐங்.389:3].

'மரத்தாற் செய்த சிறுபானை, பாவை கொண்டு விளையாடச், சிலம்பொலிக்க நடக்கும் நின் ஐம்பாலின் அழகு கண்டு, என்னறிவு முதலிய என்னிடத்தினின்று நீங்கிப் போகப், போகின்றவளே! யான் கூறுகின்றதனைக் கேட்பாயாக', என்று தலைவியிடம் தலைமகன் கூறினான் [கலி.59:5]. 'சிவந்த விரல்,மேலும் சிவக்கும்படியாக, நெடும்பொழுது நின்று முயன்றாய் என்று சொல்லிக், கழியிடத்துக் கோரையைப் பறித்துப், பாவையாக்கித் தந்த அவனது சிறிய் உதவிக்காகவா, நீயும், ஊரார், கூற்றோடு, ஒட்டி நின்று சொல்கின்றாய்!', எனத், தலைவி, தோழியை நோக்கிக் கூறினாள் [கலி.76:7]. 'யாம் கொண்டு விளையாடும் சாய்ப்பாவையையும், மலர்களையும், கொண்டு வந்து நமக்குக் காட்டி, யான் தன் பின்னே செல்லும்படி அவற்றைக் கொண்டோடிய இடத்தை உவ்விடத்தே காண்பாயாக', எனத், தலைமகள் தோழியிடம் கூறினாள் [கலி.144:33]. 'மழையெல்லாம் என்னிடம் பெய்யினும் என்காமநோய் ஆறாது. தலைவன் என் நெஞ்சிடம் விடாமலிருப்பினும், அதனாலும் அமையாது. புனைந்த பாவைபோல இடும்பையிலே அழுந்தி மயங்கிய யாக்கையுடையேன்', என்றாள், தலைமகள் [கலி.146:49].

வையை வெள்ளம் ஒருசார் இளம்பெண்கள் மணலில் எழுதிய பாவைகளைச் சிதைத்ததனால் அவர்கள், அழுதனர் [பரி.7:26].

**2.கண்ணின் கருமணி.** 'அதியமான் மார்பிடத்துத் தைத்த வேல், பாணரது உண்கலத்தைத் துளைத்துப், புரக்கப்படுவாரது, கண்ணிற் பாவை - கருமணி - ஒளிமழுங்க, அறிவுடையோர்

நாவின் கண்ணே போய் வீழ்ந்தது', எனக் , கையறுநிலையாக ஔவையார் பாடியுள்ளார் *[புற.235:12]*.

தலைவி ஓவியம் வாளா நிற்பது போல் நின்று, உடன்படாமையை நினைந்து, கண்ணின் பாவையை மறைத்து நிற்கும் நீரையுடைய பார்வையுடன், தன்மார்பில் அடக்கிய புதல்வன் தலையில் சூடிய மாலையை மோந்து பெருமூச்சுவிட, மலர் உருவிழந்த தோற்றத்தினைக் கண்டு, பிரிந்து செல்லுதலைத் தவிர்ந்தேன்', எனக், கூறித் தலைமகன் செலவழுங்கினான் *[அக. 5:21]*. 'தோழி! வருத்த மிகுதியினால் வரும் கண்ணீர், கண்ணின் பாவையை மறைக்கப், பொன்னையொத்த பசலை பரக்க, மேனியினது அழகு தொலைதற்கஞ்சி வருந்தாதே! என்கின்றாய். இன்னே வருதும் என்றவர், இன்னிளவேனிலும் வாரார்', என்று தலைமகள் தோழியிடம் கூறினாள் *[அக.229:12]*.

'வேலும், பலகையும் பீலி சூட்டப்பெற்று, மணி அணியப்பட்டன. தலைவர் பண்டினும் மிகுதியாக அன்புகாட்டுவர். எனவே, நொந்து நொந்து, கண்பாவை மறைய வரும் வெள்ளம் நீந்தும் நாள் வந்தது போலும்', என்றாள், தலைமகள் *[நற்.177:9]*. தலைவி அருஞ்சுரம் சென்றனள். கண்ணின் பாவை நடைகற்றதுபோல் அவள் நடந்து ஆடிய நொச்சியும், திண்ணையும் கண்டு உள்ளம் வேகும்', என்பது மகட்போக்கிய தாயின் மனைமருட்சியாகும் *[நற்.184:7]*.

**3. கொல்லிப்பாவை.** 'ஓவியம் போலும் இல்லின்கண் பாவை-கொல்லிப்பாவை - போலும் வடிவுடைய மகளிரது அணிகலங்கள் கழலும் வகை செய்த தலைவன், இப்போது மலையருவியாடித், தீவேட்டுப், புரிசடை புலர்த்து வோனாயினான் *[புற.251:2]*.

'ஓவிய வனப்புடைய வேலைப்பாடமைந்த நல்லில்லின் பாவை போலும் நல்லியல்புடையோளுக்குக், கணவனாகிய வாழியாதன் உன்னமரத்தின் பகைவன்', எனக், கபிலர் கூறுவர் *[பதி.61:4]*. 'சேயிழை கணவ! ஓவியம் போன்ற அழகுடைய பகைவர்க்கு அச்சந்தரும் அரண்மனையின்கண், பாவைபோலும் மகளிர் நடுவே, ஞாயிறு போல் விளங்குக', என, இளஞ்சேரலிரும் பொறையைப் பெருங்குன்றூர் கிழார் செந்துறைப் பாடாண்பாட்டாக வாழ்த்தினார் *[பதி.88:29]*.

வேலினையும், களிற்றினையுமுடைய பொறையனது கொல்லிமலையிடம், அழகுறக் கடவுளாக அமைக்கப்பட்ட பாவை போன்றவள் மடப்பத்தால் மாட்சிமைப்பட்ட மாயோள் *[அக.62:15]*. 'முள்ளூர் மன்னன் காரி, ஓரியைக் கொன்று, சேரமன்னர்க்கு உரிமையாக்கிய கொல்லிமலையில், உள்ள பலரும்புகழும் பாவை போன்ற தலைவி அழகை, தலைவர், குன்றுகளைக் கடப்பினும், நினையாராதல் இல்லை', எனத், தோழி தலைவிக்கு வற்புறுத்தினாள் *[அக.209:17]*.

'சேரனது கொல்லிமலையின்கண் எழுதிய பாவையைப் போலும் இம்மெல்லியலாள், தலைவன் பெயரைக் கூறி வள்ளைப்பாட்டு பாடுவாளாயின், ஊர் மக்கள் குறை கூறவும் செய்வார்கள்', எனக், கூறித் தோழி தலைவனை வரைவுகடாயினாள் *[குறு.89:6]*. 'ஓரியினது கொல்லிமலையின் மேல் பக்கத்திலுள்ள பாவையைப் போல (நான் காமுற்ற மகள்) மடப்பம் வரப்பெற்றாள். (ஆயின்) அவள் தோள்கள் தழுவுதற்குஅரியன என்றான், தலைமகன் *[குறு.100:6]*.

'பொறையனது கொல்லி மலையின் மேல்புறத்துத் தெய்வத்தால் செய்து வைத்த பாவை போன்றாள், என்னைக் கொலை செய்யத் சூழ்ந்தனள்', என்றான், தலைமகன் *[நற்.185:11]*. 'கொல்லிமலையின் மேற்பக்கத்தில் பூதத்தால் செய்து வைக்கப்பட்ட பாவை, இளவெயிலில் தோன்றினாற்போன்ற, நினது ஆய்ந்த அழகினை நினைந்து வர, எனக்கு மலைநெறி பாதுகாப்பாகும்', எனத் தலைமகன் தலைவியிடம் கூறினான் *[நற்.192:9]*. 'கொல்லிமலைச் சாரலில் காற்று மோதினும், மழை பொழியினும் இடிப்பினும், துன்பம் பல நேரினும் அழியாத இயல்புடைய பாவை போல என் நெஞ்சினின்றும் தலைவி நீங்காவியல்பினளாயினாள்', என்றான், தலைமகன் *[நற்.201:11]*. 'பாவை போன்ற அழகினோடு, அகிலின் நெய்ம்மணம் வீசும் கூந்தலையுடையாள், என, விரும்பிய உள்ளத்தோடு பலபடியாகப் பாராட்டி, அன்னைமறக்கவறியாத மடந்தை', எனத், தோழி, தலைவியைக் குறித்துத், தன்னுள் கூறினாள் *[நற்.301:6]*. 'கூகைச் சேவல் தன் பெடையோடு குழறும். மீன்கள் துஞ்சும், நடு இரவிலும், பாவை போல்வாளது மார்பை முயங்கக் கருதி, யான் கண் துயிலேன்', எனத், தலைமகன், தன்னுட் கூறினான் *[நற்.319:7]*. 'கொல்லிப்பாவை போல நடந்து, நுந்தையின் மனைப் பரப்பைக் கடந்து, என்னுடன் வந்தனை. செம்மூதாய் நோக்கி, நீ, சிறிது விளையாடுக; யானோ, களிறு உராவிய வேங்கை மரத்தொடுங்கி, ஆறலைப்போர் வரின் ஓடச் செய்து, நுமர்வரின் மறைவன்', என்று, உடன்போக்கில் தலைவன் தலைவியிடம் மொழிந்தான் *[நற்.362:1]*.

'வருகின்ற இவள் யார்தான்? கொல்லிப்பாவையோ? நல்லார் உறுப்பெல்லாம் ஒருங்குகொண்டு அமைக்கப்பட்டவள் ஒருத்தியோ? பெண்ணுருக் கொண்ட கூற்றமோ? இவளைக் காவாராய்ப் புறப்படவிடுதல் கொடிது', எனக், கைக்கிளைக் குறிப்பில் தலைவன் கூறினான் *[கலி.56:7]*.

**4. கிழங்கு.** இஞ்சியின் முதல், ஒருவரால்பண்ணப்படாத பாவையாக - கிழங்காக - வளர்ந்து, காழ்ப்பைக் கொண்டது *[மலை.125]*.

பள்ளங்களிலுள்ள வெண்காந்தளது பசிய பயிரோடு, அறுகம்பாவையைத் தின்று, வெறுத்து, ஆண்மான், தன் பிணையைத் தழுவிக், குளிர்ந்த நீரைப் பருகித் தங்கியது *[அக.23:7]*. முதல் மழையால் ஈன்ற அறுகினது, பாவையிடத்துத்

தோன்றிய அரும்புடன், வெள்ளிய நூலைச் சூட்டி, தூய உடையணிந்து, மணம் மிகுந்த பந்தரில், தமர் தலைவியைத் தலைவனுக்களித்தனர் *[அக.136:13]*.

**5. பெண்.** 'அந்திக் காலத்துக், கடல் தெய்வம் கரைக்கண் நிற்பது போல், நீ கடற்கரைச் சோலையில் தனித்து நிற்க', யான், வெறியாட்டம் மேவிய பாவை - பெண் - போன்று நீங்குதல் இயலாதவளாகின்றேன்', எனச், சிறைப்புறமாகத், தோழி, தலைவிக்குக் கூறினாள் *[அக.370:14]*.

'கூத்துக்களை ஆடிமுடித்த, விழவொழிந்த களத்திலுள்ள பாவை போல, முன்புணர்ந்த பரத்தையரது, அழகழியப், புதுப்பரத்தையர் நலன் நுகரச் செல்வை. நின் பரத்தமை நீடு வாழ்க', எனத், தோழி தலைவனுக்கு வாயில் மறுத்தாள் *[நற்.360:2]*.

**6. நிழலுரு.** 'ஊரன், எம்மிடம் பெருமொழிபேசித், தன் புதல்வன் தாயாகிய மனைவிக்குக் கையும், காலும் தூக்கத் தூக்கும் ஆடியின்கண் பாவை - நிழலுருப் - போல அவள் விரும்பியவற்றைச் செய்வான்' எனக், காதற்பரத்தை கூறினாள் *[குறு.8:5]*.

**7. அரிதாள்.** 'மழையிற் கலித்த, வரகின், மான் மேய்ந்ததனால் குறைந்த தலையினையுடைய பாவை - அரிதாள் - ஆகிய இருவியிடத்தில் முல்லை மலர்ந்தது *[குறு.220:2]*.

**8. குரவம்பூ.** 'அவரோ வாரார். ஆயின் குராமரம் பயந்த பிறர் செய்யாத பாவை - குரவம்பூக் - கொய்யும் பொழுது வந்தது', எனத், தலைவி வருந்திக் கூறினாள் *[ஐங்.344:3]*.

**9. ஓவியம்.** ஓவியன் உயிர்ப்புக் கொடுத்த பாவை - ஓவியம்-தான் அழியுமளவும் அவ்வுயிர்ப்புக் குறிப்பு நிற்குமாறு போல, நற்குணமுடையார் தாம் கூறிய மொழியிடத்துப் பிறழாது நிலைத்து நிற்பர் *[கலி.22:5]*.

**10. உப்புக் கட்டி / படிவம்.** 'பொறுத்தல் என், எல்லைக்குட்பட்ட தன்றாக, நிறையழிதற்குக் காரணமான அவள் தந்த காமநோயை நீந்திப், பாத்தியில் கிடந்த உப்பால் இயன்ற பாவை - கட்டி - மழைத்துளி பட்டது போன்று, என்னுயிர் கரையாநின்றது', என்றான், மடலூர்ந்த தலைவன் *[கலி.138:16]*.

**பாவைக் கொட்டிலார்**-ஒரு புலவர். இவரது பெயர்க்காரணம் பொருத்தமுறப் புலப்படவில்லை. பாவைக்கொட்டிலென்பது மகளிர் படையினர் விற்றொழில் பயிலும் இடத்தை குறிக்கிறது போலும் என்பர் மொ.அ.துரை அரங்கசாமி (ச.கா.சி.பெ.பக்.102).எனினும் இவர் பெயர்க்கு அதன் இயைபு தோன்றவில்லை. இப்புலவர் பாடியதாக அகநானூற்றில் மட்டும் ஒரு பாடல் *[336]* உள்ளது. நயப்புப் பரத்தை இற்பரத்தைக்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியதாக இவர் அப்பாடலை இயற்றியுள்ளார். 'ஊரனாகிய தலைவனின் தேர் கொணர்ந்த முறையில் வந்த மகளிர் என் அழகினை ஏசுகின்றனர் என்பர். அச்செயல், சினத்தையுடைய கொல் களிற்றியானை கொல்லா தருளுதலால் பாகன் உயிர் வாழ்தலைப் போன்றது; அம்மகளிரெல்லாம் சிறப்புடையார் போல் அத்தலைவனுடன் செல்லுதல், துணங்கைக் கூத்தாடும் விழாக்காலத்தே யான் அங்கு வாராமையால் ஆனதே. யான் அவ்விடத்துவரின் ஞாயிற்றின் செல்கையை நோக்கிச் சுழலும் நெருஞ்சிப்பூப்போல், யான் செல்லுமிடமெல்லாம் அவனை என்னொடு திரியச் செய்வேன்; அங்ஙனம் செய்யேனாயின், சோழரது வல்லத்துப் புறத்தேயுள்ள காவற்காட்டின்கண் வந்து போரிட்டுத் தோற்றோடிய ஆரியர் படைபோல, என் வளைகள் உடைத்தொழிவனவாக' என்று, நயப்புப் பரத்தையின் வஞ்சினத்தை இவர் அழகுறப் புனைந்துள்ளார். இப்பாடலில் இவர் அமைத்துள்ள உவமைகள் உணர்ந்தின்புறத் தகுவனவாம்.

**பாவையர்** - மகளிர். பரங்குன்றில் சுனையுள் பாய்ந்தெழும் பாவையர் - மகளிர் - கண், முகம், தாள், கையாகிய தாமரை மலரும், கொங்கையாகிய தாமரை முகையும், நீரின் தாமரையோடு வேறுபாடுறாதவராய்த், தம்முலைப்பூணொடு, கணவர் மார்பின் தார் மயங்கும் *[பரி.8:112]*. பாவையர் தாம் இழைத்த சிற்றிலில் அட்ட சிறுசோற்றையிட அதைச் சிலர் உண்ணச் சென்றனர் *[பரி.10:104]*.

**பாவை விளக்கு** - படிமவிளக்கு. பாவை விளக்கில் - படிம விளக்கில் - பரிய சுடர் எரிய, எழுநிலை மாடத்தில், மூட்டுவாயினின்று சொரியும் அருவியிசையைக் கேட்டுத் தலைவி கிடந்தாள் *[முல்.85]*.

**பாழ் - 1. அழிவு.** 'விரைந்த தேர் குழித்த தெருவின்கண்ணே கழுதையைப் பூட்டிப் பகைவர் எயிலை உழுது பாழ் - அழிவு - செய்தான் முதுகுடுமிப்பெருவழுதி *[புற.15:3]*. 'கரும்பல்லது பிறிது காடறியாத பெரிய மருதம் பாழாகக் காவலையுடைய நாட்டை எரியூட்டினன், பெருநற்கிள்ளி *[புற.16:16]*. மாறன் வழுதி கருதியது போராயின் கடவுள் தூணத்தைக் கைவிடப், பலி மாறிய பாழ்பட்ட பொதியிலில், நரை மூதாளர் சூதாடுமிடத்தில், காட்டுக் கோழிமுட்டையிடும் காடாகிப்பகை நாடுகள் கெடும் *[புற.52:13]*. யாவரினும் முன்னே நினைக்கப்படும் ஆயைப் பின்பே நினைத்தேன். அவ்வாறு, நினைந்த குற்றத்தால் எனதுள்ளம் அமிழ்ந்திப்போவதாக. அவனையன்றிப் பிறரைப் புகழ்ந்த நா பிளக்கப்படுவதாக. அவன் புகழன்றிப் பிறர் புகழ் கேட்ட செவி பாழ்பட்ட ஊரின்கண் கிணறுபோலத் தூர்வதாக', என, முடமோசியார் கூறுவர் *[புற.132:3]*. 'பாழூரின் கண்ணுள்ள நெருஞ்சியினது பூ, ஞாயிற்றை நோக்கினாற்போல வறுமையுற்ற யாழ்ப்புலவரது மண்டை, கொண்கானத்துக் கிழவனது மார்பினை நோக்கியது', என, மோசிகீரனார் பாடியுள்ளார் *[புற.155:4]*. 'இவளை ஈன்றதாயோ மகட்கொடைக்கு விரும்பாள். வல்லாண் சிறுவனோ அதற்கு உடம்படான்; ஆக, இவள்

அழகு, பெரும்பாழ் செய்யும்', என, மகட்பாற் காஞ்சித் துறையில் குறுவழுதி பாடுவர் *[புற.346:7].*

'இமயவரம்பன் சிவந்திறுத்தபுலம், கரும்பினையுடைய கழனி பொலிவழிய, விடத்தரொடு, உடைபரந்து,நெருஞ்சியை யுடைய, புழுதி படிந்த பறந்தலையாகிப் பிறர் நடுங்குதற்குக் காரணமாகிய பாழாயின', *[பதி.13:19].* சேரன் பொருந்தப் பகைவரின் மருதநிலம், நரி கூவக், கூகை குழற, அதற்கேற்பப் பேய்மகளாடும் பெரும்பாழாயிற்று *[பதி.22:38].* பல்யானைச் செல்கெழுகுட்டுவன் போர் செய்த பகை மன்னர் மதில்கள் தீப்பரந்து, தீந்து போன கடுவழியுடையவாகி, ஆண்டலையென்னும் பறவை வழங்கும் பெரும்பாழாயின' *[பதி.25:9].* பல்யானைச் செல்கெழு குட்டுவனின் வயவர் சீறிய நாடு, பீர்க்கங்கொடி பரந்த வேலியையுடைய பாழ் மனை, நெருஞ்சிக் காட்டில் பொருந்திய கடுவழியாக மாறியது *[பதி.26:10].* 'பட்ட பிணங்கள் குவிந்து உயரப், பாழ்பலவாகச் செய்து, போர் முரசம் முழங்க, வளங்கெட வாழ்வோர் பலராகக், காவல் மரமாகிய வேம்பினை அறுத்த குட்டுவனைக் கண்டு வரற்குச் செல்வோம், விறலி', என, விறலியாற்றுப்படையாகப் பரணர் பாடியுள்ளார் *[பதி.49:13].* 'பதிகள் பாழாக வேற்றுப் புலம் சென்று, உயிரைக் கொள்ளாது பலியைக் கொண்டு மீளும் பேய் போலப், பகைவரது உயிரைக் கொல்லாது திறையைக் கொண்டு பெருஞ்சேரல்இரும்பொறை மீண்டான் *[பதி.71:18].*

கச்சியோனை மாறுபட்டுப் பொருதார்து நாட்டு மன்றங்கள் பாழ்பட, அவன் தன்னை விரும்பி நட்டோர் நாடு பொன்கொழிக்க, நட்புக் கொளல் வேண்டுவோரும் அவன் வலியைத் துணையாகப் பெறல் வேண்டுவோரும் காலம் பார்த்து இளந்திரையனுக்காக முற்றத்தில் காத்திருப்பர் *[பெரு.423].* நெடுஞ்செழியனைப் பகைத்தோரது மருதநிலத்தை நெருப்புண்ண, நாடு காடாக, ஆக்கள் சேர்ந்தவிடம் காட்டு மாக்கள் சேர, ஊர் இருந்தவிடம் பாழாக, மக்கள் வாழாது போகையினால், வழிகெட்டுப், பலவகையில் பாழாயின', *[மது.158,176].* பகைப் புலத்தைப் பாழ்படுக்கும் வயவர் போன்று நெருங்குந்தோறும் நாய் வெகுளும் *[குறி.128].* ஊர் அழகழியப் பெரும்பாழ் செய்தும் அமையானாகி, மலையகழ்வேன், கடல் தூர்ப்பேன், வான் வீழ்ப்பேன், வளி மாற்றுவேன் என்று தான் கருதியவாறு செய்வான், கரிகாலன் *[பட்.270].* பகைப்புலத்தைப் பாழ்படுத்தும் வழி, பரிசிலர்க்கு அளி, நல்லதையே உணரும் சிந்தனை, ஆகியவை உடையவன் நன்னன் *[மலை.59].*

பாழ் நாட்டில் பருந்து, ஓமை மரத்தின் மீதேறி, இரக்கந் தோன்றத் தன் பெடையினை அழைக்கும் *[அக.117:7].* கன்றினையுடைய பிடி தன் கன்றுண்ண வேண்டித் தழையுணவை உண்ணாது மறுத்தமையால் வாடிய உடம்பினைக் கொண்டு பாழ்பட்ட ஊரில் உள்ள குடிசைபோலத் தோன்றும் *[அக.229:6].* ஆண்கரடி இருப்பைப் பூவினை வெறுத்துப் புற்றினைப் பெயர்க்கும் அரிய காடு என்று கருதாராய்ப் போரால் பாழ்பட்ட இடத்தையும் கடந்து தலைவர் சென்றார் *[அக.247:8].* காக்கையது கூட்டம் ஆலமரத்தின் கிளையிலேறி, மறவர் வில்லம்பு படத் தொலைந்தோர் படுபிணங்களைப் பாழ்பட்ட நிலத்தில் கவரும் *[அக.319:5].* 'பகைவரது நாடு பாழ்படும்படியாக அழிக்கும் வலியினையுடைய சேரனுடையது கொல்லிமலை *[அக.338:12].* நன்னன் ஊக்கம் கொண்ட நெஞ்சுடன் பகைவர் முனை பாழாக அவரது அரண்களைத் தொலைத்துப் பெற்ற அணிகலன்களை ஆராயாது வழங்குவான் *[அக.349:6].* மறவர் அம்பினால் மாண்ட, தன் பிணையினை நினைந்து, தன் குட்டிகள் பக்கத்தில் விளையாட, ஆண்மான், மேயாது, நீரும் உண்ணாது, பாழ்பட்ட சுரநெறியில் அம்புபட்டோர் போன்று வருந்திச், சோர்ந்து கிடக்கும் *[அக.371:9].* போரில் கவர்ந்து கொண்டதால் கலங்கிப், பீர்க்குப் படர்ந்து, மனை பாழ்பட்டுப் போன மன்றத்தில் மான் தங்கியது *[அக.373:2].* கோடை நீடியதால் எறும்புகள் தம் வளையிற் சேர்த்து வைத்த புல்லரிசியைக் கவரும், வில்லேந்திய மறவர் பலமுறை புகுந்து ஆக்களைக் கவர்ந்தமையால் குடிகள் வெளியேறி மன்றம் பாழ்பட்டது *[அக.377:6].* 'இரப்போர் ஏந்துங்கை நிறையப், புரப்போர் கவலையில்லாத உள்ளத்துடன் பொருளை வழங்கியுதவ, அரும்பொருளை ஈட்டிவர விரும்பிப், பகைவரது இழிசொல் பாழ்படத், தம்மிடம் நற்புகழ் நிலைபெற, தலைவர் மலை கடந்தார்', எனத், தலைமகள் உரைத்தாள் *[அக.389:14].*

களர் நிலத்தின் புழுதியை வாரிப் பூசிய யானை, ஆளைக்கொல்ல, வழியில் குறுக்கிட்டு, வருவாரைக் காணாது, தன் சினத்தைப் பாழ்பட்ட பாலைப் பெருவழியில் பனையைத் தாக்கித் தீர்க்கும் *[நற்.126:6].*

'பாழ்பட்டுப் பசுமையற வெந்த பாலைவழியினைக் கடந்து சென்றோரிடம் சென்ற என் நெஞ்சம், இதுவரையும் மீளாது காலந்தாழ்த்தது, குறித்துத் தலைவி கவன்றாள் *[ஐங்.317:1].* 'ஆள் நடமாட்டமில்லாத பாழ்பட்ட வெம்மை மிக்க சுரத்தினைக் கடந்து நம்மொடு வந்த நம் நெஞ்சம், நம்மைப் பிரிந்தவளைக் கருதிச் சுழல்வது தகுமோ?' எனத், தலைமகன் கூறினான் *[ஐங்.329:1].*

மண்ணுலகும், பொன்னுலகும் பாழ்பட, ஒன்றற்கொன்று மாறிவரும் இயல்பினையுடைய மதியமும், ஞாயிறும் கெடுதலால், விசும்பு கெட்ட ஊழிகள் முறையே கழிந்தன *[பரி.2:3].*

**2. வறிது.** பெருஞ்சோறு பயந்து பல்லியாண்டு காத்த களிற்றினை இழந்து அது சேர்ந்த கம்பம் பாழ் - வறிது - ஆகக் கண்டபாகனைப் போலக், கிள்ளியை இழந்த உறையூரின் மன்றத்தைக் கண்டு கலங்கினேன்', எனப், பொத்தியார் அழுது பாடினார் *[புற.220:4].*

'மகள்மீது கொண்ட விருப்பு என்னைச் சுடுகின்றது. மிக்க துயர் கொண்டு, உயிர் செல்லும்படியாக மெலிந்து பாழ்பட்ட

நெஞ்சத்தோடு கலங்கக், காதலாள் காடு கடந்தாள்', என, நற்றாய் சொல்லி வருந்தினாள் [ஐங்.313:3].

3. பயனில்லது. குலை கொண்டதனைக் கொள்ளவியலாது பழங்கள் ஊழ்த்து, வீழ்ந்து, பயனை நுகரமுடியாது மயங்கிக் கிடந்த முதிர்ந்த பாழில் - பயனில்லதில் - மழை பெய்தாற் போன்ற, செல்வத்தையுடையவர் ஈயா மன்னர் [புற.381:9].

4. பாலை நிலம். மழைபெய்யாமையால் எவ்விடத்தும் குடிகள் தத்தம் பதிகளினின்றும், பெயர்தற்குக் காரணமாகிய வெம்மை மிக்கது பாழ் - பாலை - நிலம் [அக.77:6]. வணிகச் சாத்தினைக் கொன்று அவர் பொருள் கொண்டுண்ணும் மறவரது பகைக்கஞ்சிக் குடிபெயர்ந்தமையான், அவ்வூர் பீர்க்குப் பரந்த முதுபாழ் ஆயிற்று [அக.167:10].

'வெஞ்சின வேந்தன் பகையால் வருந்தக், கலங்கி, வாழ்வோர் சென்றுவிட்ட, பேரூரது பாழ் பாத்திருந்த தனியொருமகன் போல, என் நெஞ்சம், அவர்வயின் செல்ல, உண்டல் மாத்திரையாக, என் உடம்பு இரங்கத்தக்க நிலையில், உள்ளது', எனத், தலைவி கூறினாள் [நற்.153:10]. கள்ளியின் கிளையிலுள்ள கூட்டில் ஈன்று இளைத்துவிட்ட பேடைக்காக, ஆண்புறா, வேற்றரசர் வந்து பொருது யாவற்றையும் கவர்ந்தமையால், மாந்தர் யாவரும் போகிய, முதிய பாழில் தானே வளர்ந்து உதிரும் நெல்லைப் பெறும் [நற்.384:5].

5. பொலிவின்மை. தலைவர் பாலைவழிச் செல்லாராயினும், தீயில்லாத அடுப்பினையுடைய களத்தை போன்று, தலைவியது நுதல், பெரும் பாழ் - பொலிவின்மை - கொண்டது [அக.137:12]. அருளாத காதலர் நம்மைப் பிரியின், நம் அழகை நுகர்ந்து துறந்து பாழ்பட்ட மேனியைக் கண்டு, நோய் வருத்த, உடையும் நெஞ்சத்துடன், அவர் புணர்தலை விரும்பிக், கடிய பனியால் துன்புற்று நடுங்குவேம்', எனத், தலைமகள் கூறினாள் [அக.217:17]. 'சேரன் பொருதழித்த பகைவரது மதில்போலப், பெரிதும் பாழ் பட்ட மேனியளாகிக், கண்கள் நீர்சொரியப் பெருமூச்செறிந்து வருந்துவள். அவள் இரங்கத்தக்காள்', என, இடைச்சுரத்துத் தலைமகன், தன் நெஞ்சிற்குக் கூறினான் [அக.381:17]. 'இழைநெகிழ, உள்ளந் துன்புறப், பசலை பரக்கக், கொன்றையினது காம்பு ஊழ்த்த மலரைப் போன்று, பாழ்பட்ட மேனியொடு இத்தகைய நிலையினேமாக, அருளாது செய்த கொடுமைக்குக், குன்றுகெழுநாடனுக்கு எப்பனாகுமோ?' எனத், தலைமகள் கவன்று கூறினாள் [அக.398:4]. 'பரற்கற்கள் தன் அடியைப் பாழ்படுத்தக் குறுக்கிடும் மலைகளையுடைய பாலைப் பெருவழியில் சென்றனளே', என மகட்போக்கிய செவிலி புலம்பினாள் [குறு.144:5]. 'ஆளும் அரசர் கலக்கமடைய, அதனால் துன்புற்ற நாடுபோல், தலைவன் பிரியப் பாழ்பட்ட முகத்தோடு தலைவி துன்புற்று அமைவாளோ என்று தோழி தலைவனிடம் கூறிச் செலவழுங்குவித்தாள் [கலி.5:13].

6. புருடன். 'பாழ் — புருடன் — காற்று முதலாகிய ஐம்பூதம், வாக்கு முதலாகிய கன்மேந்திரியங்கள், ஒன்றாகிய ஓசை முதல் தொண்டு (ஒன்பது) ஆகிய மூலப்பகுதி ஈறாகவுள்ளனவற்றால் எடுத்தியம்பப்படும் சிறப்பினை யுடையாய்' எனத், திருமாலைக் கடுவனிள வெயினனார் புகழ்வர். [பரி.3:77].

பாழி —1. நன்னனது ஊர். 'நன்னனது பாழி - நன்னனது ஊர் - ஒத்த, காவல் மிக்க, தந்தையது மனையைக் கடந்து, துணைவனை நினைந்த கொள்கையோடு தலைவி கரடிகளின் கூட்டம் செல்லும் காட்டுவழிச் சென்றனள். அவ்வழி, கோசருடைய துளு நாடு போன்று, புதியவரைப் புரக்கும் பண்புடைய, முகமறிந்த மக்களையுடையதாகுக', என, மகட்போக்கிய தாய் கூறினாள் [அக.15:11]. முறை வழுவாது, கடமையினைச்செய்த, நன்னனது பாழியிலுள்ள பேய்க்கு, ஊட்டு ஏற்றுக்கொண்ட மிஞிலியென்பான், அதிகன் என்பானைக் கொன்றாடிய, வாள் அமலைக் கூத்துள் எழுந்த பூசலைப் போன்ற, அலர் எழுந்தது [அக.142:9]. 'பாழிப் பறந்தலையில், வெளியன் வெண்மான் ஆஅய் எயினன், மிஞிலியொடு பொருது புண்பட்டு வீழ, நன்னன் அருளின்றி மறைய, வேளிர் மகளிர் செய்த பூசலை, அகுதை யென்பான் நீக்கினது போல, மாயோள் வந்து நல்கினள்', எனத், தலைமகன், தன் நெஞ்சிற்குக் கூறினான் [அக.208:6]. நன்னன் என்பான், புன்னாடு நோக்கி வெகுண் டெழுந்தானாகப், பாழியில் நின்று அஞ்சாதீர் என்று கூறிய ஆஅய் எயினன், வந்து மிஞிலி என்பானொடு பொருது மடிந்தனன் [அக.396:3].

2. நன்னனது மலை / ஓர்மலை. 'தித்தன் வெளியனது கானலம் பெருந்துறையைத் தாக்கிய பிண்டனை வென்ற புகழ் பொருந்திய பாரம் என்னும் ஊர்க்குத் தலைவனாய நன்னனது பாழியென்னும் மலையின் மயில்தோகைபோன்றது தலைவியின் கூந்தல் [அக.152:13]. 'நன்னன உதியனது பாழியில், வேளிர், பாதுகாத்து வைத்த பொன்னினும், தலைவி எய்துதற்கு அரியள் [அக.258:1]. பெருந்தேன் தூங்கும் பாழி மலையில், வேள் முதுமக்கள் மறைத்து வைத்த அருங்கலம் போலத் தலைவி அடைதற்கு அரியள் [அக.372:3].

3. ஓர் அரண். 'சென்னி என்பான் செம்பினையொத்த மதிலையுடைய பாழியென்னும் அரணை அழித்துப், புதியவடுகரது தலையை மிதித்து, யானையைக் கொன்றான் [அக.375:13].

பாளை - பூப்பொதி. கமுகினது பாளை - பூப்பொதி - விரியாமல் கருவாயிருந்தாற்போன்ற, இரண்டு கண்ணுங்கூடிய செறிந்த, துளைகளையுடைய, போர்வை கொண்டது யாழ் [பெரு.7].

கள் விற்கும் மகளிர் இடையில் சுமந்து வந்த, சீவப்பட்ட பாளையின் முனையிலிருந்து சுரந்த, அரிக்கப்பட்ட கலங்கலை, போர் விரும்பும் ஆடவர் நிறைய உண்டனர் [அக.157:2]. (கமுகின்)

தொடுத்தல் அமைந்த பல மலர்த் தொகுதியைப் பொதிந்த குடை போன்ற பாளை, பற்றுவிட்டொழிய, வடித்த வாள் போன்ற உள்ளீட்டில், புதுப்பூ ஆரம் போல் அமைந்து தோன்றும் *[அக.335:15].*

ஆதி அருமன் மூதூரில் கள்குடிக்கும் விருப்புடையோரது பயணம், உள்ளூரில் பாளை விரியத்தந்த பனையது நுங்குடன் மீளும் *[குறு.293:2].*

வையை நீர், தென்னை, கமுகு முதலியவற்றின் கழுத்தளவு உயர்ந்தமையால், வாளை மீன்கள், அவற்றின் பாளையை உண்டன *[பரி.7:34].*

**2. மூங்கிற் கணுப்பொதி (பட்டை).** பிறர் குற்றங்கூற அறியாதவன் குன்றத்தில், மானின் செவியைப் போன்ற, மூங்கில் முளையின் கண்ணைப் பொதித்த, பாளை கழன்று விழும் *[கலி.43:17].*

**பாற்கடல் - பால்மயக்கடல்.** தன் நீலநிறத்தோடு மாறுபடும் வெண்ணிறமுடைய பாற்கடல் - பாலமயக்கடல் - நடுவே, தலையாயிரமுடைய பாம்பாகிய படுக்கைக்கண், துளவஞ்சூடிய அறிதுயிலோன் பாயல் கொள்வான் *[பரி.13:26].*

**பாறு - 1. சிதறல்.** 'அரச! நின் நாளோலக்க இருக்கை, பொற்றாமரையைப் பொற்கம்பியிலிட்டுக் கட்டிய மாலை, பாறு - சிதறல் - கொண்ட மயிருடைய தலை பொலிவுறச் சூடப்பெற்றுப், பாண் சுற்றம் சூழ்வதாகுக', என, நலங்கிள்ளியை முதுகண்ணன் சாத்தனார் பாடினார் *[புற.29:4].* தலைமைனும், கொழுநனும் முன்னிரு நாட்களில் முறையே போரில் பட, இன்றும், போர்ப்பறை கேட்டு, விருப்புற்றுப், பாறு மயிர்க்குடுமிக்கு எண்ணெய் தடவி, வெள்ளாடையுடுத்தி, வேல் கைக்கொடுத்துத், தன் ஒரேமகனைப், போர்க்களம் நோக்கிச் செல்க, என மூதின் மகளொருத்தி அனுப்பினாள் *[புற.279:9].* ஆண்மானின் நெற்றி போன்ற கிணைஞனின் தலையிலுள்ள பாறுமயிர் அடங்கக், குளிர்ந்த பனி பெய்தது *[புற.374:3].* பனி நிறைந்த யாமத்தில், பாறு தலையிலுள்ள மயிர் நனையக், கவலையின்றித் திருநகரினர் இனிதாகத் துயின்றனர் *[புற.377:2].*

பருத்த ஈன்று உறையும் பாறு தலை ஓமை மரங்களையுடையது மலைப்பிளவு *[அக.21:15].* சோலையில் பகல் சென்றதாகத் தலைவியின் வளை திருத்திப், பாறு மயிரைத் தடவி, நின்தோழியொடு மனை செல்வாயாக, என்று தலைவன் கூற அவள் பெரிதும் அழுது வருந்தினாள் *[அக.300:7].*

**2. அழிவு.** பாறு - அழிவு படச் சிதைந்த காட்டிடத்தில் கூகை குழற, குறுநிரி வழங்கப், பேய்மகளிர் பிணம் தின்ற நாற்றத்தோடு ஈம விளக்கில் ஆடும் *[புற.359:1].*

**3. பருந்து.** பாறு - பருந்து - தங்கும் புறந்தலையாகிய கள்ளி வளர்ந்த களரியில், கள்ளும், பருக்கையுணவும், பாடையிலிருந்து நீங்கிப் புல்மேல்கிடக்கவுண்டு, தீயில் புகக் கண்டும், தாம் பருக்க வுண்டோர் பிறர்க்கு உதவாராயினார் *[புற.360:15].*

மறவர் அம்பு படுதலால் வழிச் செல்லும் புதியவரது உயிர் கெடப், பாறு தன் சுற்றத்தினை அழைத்துப் புலாவை உண்ணும் *[அக.175:5].* புலால் நாற்றத்தை விரும்பிப் பறக்கும் நீண்ட கழுத்தினையுடைய பாறு மலையில் மரக்கிளைகளில் தங்கியிருக்கும் *[அக.247:12].* கொன்றிடப்பட்ட பிணங்களின், தீ நாற்றமுடைய இடத்தில் சென்று, கொத்தியுண்ண வியலாத ஈன்றணிமையுடைய முதிய பாறு, தன் இறகையடித்தமையால் இற்ற தூவியை மறவர் அம்பொடு சேர்த்துக் கட்டுவர் *[நற்.329:4].*

**பாறை - கல்திட்டை.** கொன்றை நிழலில், பரப்பி வைத்தாற் போன்ற பாறை - கல்திட்டை - அழகுசெய்யப், பசிய பயிரின் மீது முசுண்டை, முல்லை வெண்பூப்பரக்க, வெறியாடுகளம் போன்ற பரப்பில், தொய்யிற் கொடி போல, நெய்தல் செறிய, முல்லையம் புறவு அமைந்திருந்தது. *[மது.278].* பாறைச் சுனையில் மாவின் பழம், பலவின் கனி, உதிர, வடியும் சாற்றோடு, தேனும் வந்து திரள, அதனை, நீரெனக்கருதியுண்ட மயில், கயிற்றில் ஆடும் மகள் போல் தளர்ந்தாடும் *[குறி.187].* படுத்துவைத்தாற் போன்ற பாறை மருங்கில் எடுத்து நிறுத்திவைத்தாற் போன்றது இடுகிய, சிறிய வழி *[மலை.15].* 'குறுங்காட்டில், ஞாயிறு சுடாத இடத்தில், திசை தெரியா இரவில், விலலேந்தி விலங்கு வேட்டைக்குத் திரியும் குறவரும் மருளும் குன்றத்துச் செல்லின், வழியே செல்லாது அகன்ற பாறையில் கூடி, நும் இயங்களை இயக்குமின்', எனக் கூத்தரை ஆற்றுப்படுத்தினர் *[மலை.276].* 'வேல் காய்ந்தாற்போலும் கூர்ங்கற்களையுடைய பாறையில், வெயிலால் இன்னாமை தரும் வழியில், ஞாயிறு சினந்தணிந்த பின் அந்திப் பொழுதில் செல்வீராக', எனக், கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் *[மலை.373].*

வாழையின் கனியாலும், பலவின் பழத்தாலும் பாறைச் சுனையில் விளைந்த தேறலை, அறியாதுண்டகடுவன், கறிக்கொடி படர்ந்த சந்தன மரம் ஏற இயலாது, அயலதாகிய நறிய பூப்படுக்கையில் கண்ணுறங்கும் *[அக.2:4].* முதிய காட்டில், நெல்லியினது பளிங்குபோன்ற காய்கள், உயர்ந்த பெரிய பாறைகளில், சிறுவரது விளையாட்டு வட்டுப்போல, உதிர்ந்து கிடக்கும் *[அக.5:10].* மலைத்தலையில் முத்துக்கள் சிதறுவன போல, யானை முகத்தில், ஆலங்கட்டி வீழ, அவை, பளிங்கினைச் சொரிவன போலப், பாறையில் வீழ்ந்து கோலஞ்செய்யும் *[அக.108:5].* விழாவில் கூத்தாடும் விறலியின் பின்னின்று முழவு கொட்டுவான் போல, அருவியையுடைய பாறையிடத்தே, ஆடுமயில் முன்னிற்க, கல்லாக் கடுவன், குடம்போலும், பலாப்பழத்தைத் தழுவித், தன் துணையை அழைக்கும் *[அக.352:3].* வரகினைப் பாறையில் குவித்துத், திரிகையிலிட்டுத் திரித்துச், சுளகினால் புடைத்த, வெள்ளிய

அரிசியை, உரலிலிட்டுத் துவைத்துச், சுனைநீர் உலையிலிட்டு ஆக்கிய சோற்றைப் பாலோடு, புல்லியின் நாட்டினர் பகுத்துண்பர் *[அக.393:7].*

'எறும்பின் வளைகளைப் போன்ற குறுகிய பல சுனைகளையுடைய, கொல்லனது உலைக்களத்துப் பட்டடைக் கல்லைப் போன்ற வெம்மையுடைய பாறையில், ஏறி, எயினர் தம் அம்புகளைத் தீட்டுவர் *[குறு.12:2].*

அன்னை, தூங்குவாயல்லையோ குறுமகளே எனக் கேட்க மழை பொழிந்த பாறையின் பக்கம், அரும்புகளையுடைய முல்லை சூழ்ந்த நாட்டின் தலைவனைக் கருதியிருப் போர்க்குக் கண்ணும்படுமோ என்றேன்', எனத், தோழி தலைவிக்குச் சொல்லுவாளாய்க் கூறினாள் *[நற்.61:7].*

மாலையில், பாறையின் பரப்பினைப் போன்று அணைகளால் தேங்கி நின்று தெளிந்து, துறக்கத்தெழிலைத் தன் நீரிற்காட்டும் வையையாறு, காலையில், கலங்கிச் செங்குருதி போன்றிருந்தது *[பரி.12:83].*

பான்மை - தன்மை. கூத்தயர்கின்ற விழாவினையுடைய மூதூரின்கண் ஆடைகளை ஆராய்ந்து கழுவும் பான்மையில்-தன்மையிற்-பெரிதும் தன்கையொழியாது ஆடை ஒலிப்பவள், சோற்றின் கஞ்சியிட்டுப் பூத்தொழிலையுடைய ஆடையைப் புலர்த்தினாள் *[நற்.90:2].*

பானாள் - நடுயாமம். பானாளில் - நடுயாமத்தில் - வினைஞர் மரக்கலங்களைக் கொண்டு செல்வதும், வருவதுமாகத் திரிதலின் அல்லங்காடியில் எழும் ஓசை, பல்வேறு வகையான பறவைக் கூட்டத்தின் ஒலி எழுந்தது போலும் *[மது.542].* படுக்கையில் கிடந்து துயில்வோர் கவலையின்றிக் கண்ணயர்கின்ற பானாளில், யானைத் தோல்போன்ற இருளில், களிற்றைத் தேடும் புலி போலக், கள்வரை ஊர்க்காப்பாளர் தேடுவர் *[மது.631].*

காந்தள் கலங்கக், கையில் நெருப்புடன் பலர் நடுங்க, விலங்குகள் மேயல் மறப்ப, மந்தி மயங்கப், பறவைகள் நிலத்துப் பாடிய கறவைகள் தம் கன்றைக் கடியக், குன்றும் குளிரவந்தது கூதிர் காலத்துப் பானாள் *[நெடு.12].*

ஈயற்புற்றின் மேற்புறப் புற்றாஞ்சோற்றை இரையாகக் கொள்ளும் ஆண்கரடியின் நகம்படப், பாம்பு பானாள் கங்குலில் தன் வலிமை நீங்கும் *[அக.8:4].* செழியன் முசிறியை முற்றுகையிட்டுப் பொருத, போரில் புண்பட்டோரைப் போன்று பெரிதும் மனமுடைந்து பானாட் கங்குலும், பகலும், பிரிவினால் தலைவி இடைவிடாது அழுவாள்', எனத், தலைமகன் கூறினான் *[அக.57:18].* கூதிர்க் காலத்து, இடியுடன் மிக்க மழை பெய்ய, உயிரெல்லாம் பானாட் கங்குலில் துயின்றன *[அக.58:2].* உயர்ந்த மலைப்பக்கங்களில் கண்ணொளி கெட மின்னி, மிக்க மழை பொழிந்த பானாட் கங்குலில், யானையை நடுங்கும்படி தாக்கிப், புலி முழங்கும், *[அக.92:2].* உச்சி மலையில் முசுண்டை வெண்பூக்கள், வான், மீனைப் பூத்தது போலத் தோன்றும், பானாட் கங்குலில், ஆட்டுக்குடிகளை இடையன் சேரத் தொகுத்தான் *[அக.94:3].* ஆலங்கட்டி பளிங்கு சொரிவது போலல் பாறைமீது விழக் கொள்ளிபோல மின்னி முகில் சினக்கும் பானாட் கங்குலில் நாளும் தனியே வருவதால் நமக்குச் சிறிதும் அருள் செய்வானல்லன் எனத், தோழி தலைவியிடம் கூறினாள் *[அக. 108:8].* மதம் மாறிய யானை போல, மழை பெய்து வறிதாகிய, பொங்குசெல்லும் வெண்முகில், நீலவானில் திரியப், பானாட் கங்குலில் பனி வருத்தும் *[அக.125:11].*

யானை, நீரை உயிர்ப்பதுபோலும், பனித்துளியால், தாமரை மலர் கரிந்திடும் முன்பனிக்காலப் பானாளில் மலையையும் நடுங்கச் செய்வது போன்ற குளிர் கொண்ட வாடை வீசியது *[அக.163:8].* இடியோடு, மழை கால் வீழ்ந்த பானாட் கங்குலில், தலைவன் தனியாய் வந்த ஆறு நினைந்து தலைவியின் கண், எப்பொழுதும் நீர் கொண்டு அழாநிற்கும்', எனத், தோழி கூறினாள் *[அக.182:10].* 'கான்கோழி கவர்ந்துண்ணுமாறு தினையும் வளைந்த கதிர்களை ஈன்றன. பானாள், நீ வந்து அளிப்பாய் எனின், அருவி தந்த மணிகள் சீறூர்த் தெருவினை இருளகற்றலால் இரவும் கூட்டம் இழந்தனள்', எனத், தோழி தலைவனுக்கு இரவுக்குறியும் மறுத்தாள் *[அக.192:8].*

'பானாள், இடி முழங்கும் இடத்தே தடைபடாத உள்ளத்துடன் வேலே துணையாக இருள்செறிந்த ஒடுங்கிய நெறியில் துன்பத்தை ஆராயாது வரும் நின்னிடத்து வரும் துன்பத்தை நீந்துவோர், எம்மையன்றிப் பிறரும் உளரோ?' எனத், தோழி தலைவனிடம் வரைவு கடாயினாள் *[அக.202:9].* பானாள் இரவில் நம்தோளினை நினந்து நம் கானலம் பெருந்துறையின் அழகினைப் பாராட்டினான். இப்பொழுது, கைதையின் கிளையால் தேர்தடைப்படுதலால், செல்லுதல் அரிதாகும் என்கின்றான்', எனத், தோழி தலைவியிடம் கூறினாள் *[அக.210:7].* பானாள் இடியொலி கேட்ட மூங்கிலைத் தின்னும் யானை, புலியொலியெனக் கருதி, அஞ்சி, மலை எதிரொலி செய்ய முழங்கி நீங்கும் *[அக.232:1].* 'வேலேந்தித் தனியன் வருதலை அவனும் அஞ்சான். நீர் வடியுங் கண்ணோடு, பிரிதல் வருத்தத், தனித்திருத்தலை யானும் ஆற்றேன். மழை பொழிந்த பானாட் கங்குலில் சிறிய கரையையுடைய பெரிய குளத்தின் காவலன் போல, அன்னையும் தூங்குதல் மறந்தாள்', எனத், தலைமகள் உரைத்தாள் *[அக.252:11].* முகில், வானம் அதிர முழங்கி, நீரைப் பொழிந்து, கார்ப்பருவத்தினைச் செய்த பானாட் கங்குலில் மழையில் நனைந்த இடையன் வீளை இசைப்ப மறியைப் பார்த்த குறுநரி வெருவி ஓடியது *[அக.274:3].* வானம் பிளக்க மின்னிப் பானாள், மலை சூழ்ந்து மழை பெய்ய, அருவி ஆறாகி நம் ஊர் நீர்த்துறை வரும். அம்மலை

தழுவி வரும் நீரில், கண் சிவக்கப், பானாள் பெற்ற துன்பம் நீங்க, மூழ்குவமோ?', எனச், சிறைப்புறமாகத், தோழி தலைவியிடம் கூறினாள் *[அக.278:5,11]*. பானாட் கங்குலும், புல்லிய மாலையும் தலைவி நம்மை நினையும் துன்பம் அளவின் மிக, நம்பால் என்ன தீங்கு நிகழுமோ?' எனத், தலைமகன், தன் நெஞ்சிற்குக் கூறினான் *[அக.297:1]*. எம் தந்தையின் காவலையுடைய பெரிய மனையின்கண் எம்மைக் காத்து, நீங்காதிருக்கும் எம் தாய் அறிந்திடலை அஞ்சிப், பானாள், மறைத்த மனத்தோடு எம் காமத்தைச் சொல்லேன்', எனத், தலைமகள் கூறினாள் *[அக.298:17]*. பலினும் நீங்காதாகிப் பெய்து, இரவிலும் பெருவெள்ளமாக மழை பொழிந்த வாடையொடு, பனி மிகும் பானாள், வளமிக்க படுக்கைக்கண், பருகுவது போலும் காதலொடு, மெய்புகுவது போலும் முயக்கத்தோடு, ஈருடலுக்கு ஒருயிர் போலும் காதலரும் வருந்துவர் *[அக.305:4]*. 'நெஞ்சே! மின்னல் பிளந்திட மழையைச் சொரிந்த பானாட் கங்குலில் காமம் அலைத்திட, மலையுச்சியினின்றும் வீழ்ந்திறப்பாரைப் போல நீ நடுங்கி வாடுகின்றனை, என, அல்ல குறிப்பட்ட தலைவன், தன் நெஞ்சிற்குக் கூறினான் *[அக.322:2]*. 'கூத்தரது முழவதிர்ந்தாற் போலும் இடியுடன் கூடி மழை பொழிந்த இரவில், பாம்பின் தலையை இடறிப், பானாள் வந்து, எம் முலையிடைப்பொருந்தி, நம் வருத்தம் நீங்கத் தழுவி, இரவெல்லாம் இனிதின் இயைந்த நட்பு, வளை நெகிழத், துயர் தந்தது', எனத், தலைமகள் சிறைப்புறமாகக் கூறினாள் *[அக.328:4]*.

'என்னைப் பிரிந்திருக்குந் தலைவர், அருவி, மலையில் வீழ, மழைக்குரலைப் பானாட் கேட்பின், என்னாவரோ?' எனத், தலைமகள் வருந்தியுரைத்தாள் *[குறு.94:3]*. 'பானாள் துயிலும் யானையைப் போலப், பெருமூச்சுவிட்டு, என்னெஞ்சம், நான் பிரிந்து வந்த பின்னரும், அவளிடத்திலேயே இருக்கின்றது. இதனை அவள் அறிந்தனளோ, இல்லையோ?' எனத், தலைமகன் கூறினான் *[குறு.142:3]*. 'சேர்ப்பனது கொடுமையை நினைந்து, பானாள், துயிலாமல் தங்குவாரை, ஏனென்று வினவாத ஊர் நாம் தங்கியிருத்தற்குரிய ஊரன்று', எனத், தலைமகள் கூறினாள் *[குறு.145:3]*. 'பானாள், தனித்து ஓர் தேர் வந்து மீளும் என்பர். அது தொடங்கி, என்னை அன்னை துன்புறுத்துகின்றாள். (ஆயின்) தாய்மாரால் துன்புறுத்தப்படாத, இளையர், மடவோர் மகளிர்பிறரும் உளர், எனத், தலைவி கூறினாள் *[குறு.246:3]*. பனையின் மடலில் உள்ள கூட்டில் உறையும் தடுஞ்சூலுடைய பேடை அன்றில், தன் ஆண் அன்றிலை பானாட் கங்குலில் நினைந்தழைக்கும் *[குறு.301:4]*. 'தோழி! தலைவனது தேரை,யான் கண்டனனோ, இலையோ. பானாள், புன்னை மலர் பறிக்கும் மகளிர் கூட்டம் ஒருங்கே கண்டது', எனத், தலைமகள் தோழியிடம் உரைத்தாள் *[குறு.311:4]*. மழை கண்ணை மறைக்க, வானத்தைக் காணாய் : நீர் பரந்து ஓட நிலத்தைக் காணாய். ஞாயிறு மறைய இருளும் உண்டாயிற்று. பலரும் தூங்கும் பானாட் கங்குலில், எவ்வாறு ஈண்டு வந்தனையோ?' எனத், தோழி தலைவனை வினவினாள் *[குறு.355:4]*. 'இரவு தினையரிவார் போல, இராக்காவலர் தூங்காமையால், தொண்டகம், பானாள் யாமத்தும் ஒலிக்கும் (எனவே). இன்று தலைவர் வாராதிருப்பின் நன்று', எனத், தோழி கூறினாள் *[குறு.375:5]*.

'மலைநாடனது மார்பை விரும்பித் தனித்துறையும் யானொருத்தியல்லாது, பானாள், இடி முழங்க, நடக்க முடியாதவாறு, வெள்ளம் ஓடும் சாரலின்கண், சிறு நெறியைக் கருதுவோர், வேறுயாரேனும் உளராவரோ?' என்று தலைவி ஆறு பார்த்துற்ற அச்சத்தினாள் உரைத்தாள் *[நற்.104:8]*. 'மலைநாடன் சுரநெறியில் செல்லின், பேய் உலாவும் பானாளில் நெஞ்சங்கலந்து, அவன் மார்புறப்படுக்கக் கருதிய கண், இனி எவ்வாறு துயில் கொள்ள வல்லுநவாகும்?' எனத், தோழி கவன்றாள் *[நற்.171:9]*. 'பானாள், சேரிப் பெண்டிரது சிறு சொல்லை நம்பி, அன்னை, பசலை படர்ந்த மேனியைச் சுடுவது போல நோக்கும்', எனத், தோழி சிறைப்புறமாகக் கூறினாள் *[நற்.175:6]*. 'உயர்ந்த மலைப் பக்கத்தில் மின்னி, மழை பெய்து மயங்கிய பானாள், பாம்பு வருந்த இடி எறியும் (ஆகவே) மென்றோள் நெகிழ்ந்து நாம் வருந்தினும், அவர் வாராதிருப்பின் நன்றாகும்', எனத், தலைமகள் ஆறுபார்த்துக் கூறினாள் *[நற்.255:9]*. 'தோழி! சேர்ப்பன் இதுகாறும் வராது நம்மை நடுங்க வைத்துள்ளான். ஆதலின், இப்பானாள், நம் குறியிடத்து நம்மைக் காணாதவனாகிய அவன் படுகின்ற துன்பத்தினையும் நாம் சிறிது காண்போம். அதுகாறும் புன்னையின் அடி மரத்தின் பின்னே மறைந்து கொள்வோம்', எனத், தோழி தலைவியிடம் மொழிந்தாள் *[நற்.307:7]*. 'தோழி! நம் சிறிய ஊரிலுள்ள நம் மனையகத்தை நம் காதலர் அறியின் நல்லது. காதலர் பேரன்பினர், பானாள், நம்மை வருத்தும் துன்பத்தைப் போக்க வேண்டுமெனினும் அவ்வண்ணம் அவண் வந்து செய்ய வல்லவர்', என்று, தோழி தலைவியிடம் கூறினாள் *[நற்.392:9]*.

'பானாள், யாம் துன்புற அணை போலும் தோளையும், மான் போலும் நோக்கினையுமுடைய பரத்தையரோடு தலைவன் கூடி அமைந்திருப்பான். இக்காலம், மதுரையிடத்து முல்லையில் தேனினம் ஆரவாரிக்கும் காலமென்று தெரிவிப்பாருளராயின் நன்றுமன்', என்றாள், தலைவி *[கலி.30:9]*. 'ஒருத்தி தானுற்ற காமநோயையும் அதனாலுற்ற அலரையும் பிறரறியாமல் மறைத்து, மழை மாறாத பானாள் இரவில், தோளும், முலையும் கூந்தலுமாகிய பாரஞ்சுமக்க முடியாத வஞ்சிக்கொடிபோலும் இடை கொண்டு, தளர நடந்து, நின்னைப் பாய்ந்தது தவறாகுமோ?' எனப், பரத்தையிற் பிரிந்து வந்தானைத் தலைவி சீறினாள் *[கலி.90:6]*.

**பானிற வண்ணன்** - பலதேவன். பால்நிறவண்ணன் - பலதேவன் - போன்ற வெண்ணிற ஏற்றையும், திருமறுமார்பன் போன்ற காரியையும், முக்கணானது உருவு போன்ற

குராலையும், முருகனது உருவு போன்ற சேயையும், பிற வண்ணமுடையவற்றையும் ஆயர் தொழுவில் செலுத்தினர் *[கலி.104:8]*.

**பானை** - ஓரளவு கொண்ட கலன். கள் விற்கும் மகளிர், இடையிற் சுமந்து வந்த, விரிந்த வாயினையுடைய, பானையின் - கலனது - கள்ளை நிரம்பவுண்டு போரை விரும்பி செங்கண் ஆடவர் ஆர்ப்பரிப்பர் *[அக.157:2]*. முகில் கீழ்கடலை முகந்து, மேற்கே சென்று, இருள் கொள்ளப் பரந்து, (கடையுங்கால்) - செம்பினைச் சொரியும் பானை - கலன் - போன்று மின்னி, எவ்விடத்தும் மழை பெய்தது *[நற்.153:3]*.

இடையன் கடையும் கோலினின்றெழுந்த சிறு தீயைப் பற்ற வைத்து, உறியையுடையனாய்ப், - பானையையுடையனாய்த்- தோலையுடையனாய்த், கோலினைக் காலுடன் ஊன்றி நின்றான் *[அக.274:6]*.

**பிச்சை**-ஐயம். 'தெருவினிடத்தே நாய் இல்லாத அகன்ற வாயிலில், செந்நெற்சோற்று உருண்டையும், நெய்யுமாகிய ஒரு வீட்டுப் பிச்சையைப்—ஐயத்தைப்-பெற்று வயிறு நிரம்ப உண்டு, அற்சிரக் காலத்திற்குரிய விரும்பத்தக்க வெப்பத் தண்ணீரைச், சேமித்து வைக்கும் செப்பிலே பெறுவீராக', என்று, தோழி அறிவுரை வாழ்த்தித், தலைவன் மீண்டு வரும் பருவத்தை வினவினாள் *[குறு.277:3]*. தழும்பனது ஊணூரிடத்தே பிச்சைக்கு வருகின்ற பெருங்களிறு இல்லங்களின் முன்னே கூரையோலையைத் தொட்டு நிற்கும் *[நற்.200:11]*.

**பிசாசு**–பேய். தலைவனை எதிர்நோக்கி இரவுக்குறியிடத்தே நின்ற தோழியைக் கண்டு பேசிய முதுபார்ப்பான் தன் பேச்சிற்கு எதிர் பேசாது நிற்கும் அவளைப் பெண்பாற்பேயென அஞ்சியவனாய், 'யான் பெண்பாற்பேயாகிய நின்னையொழிந்த ஆண்பாற் பிசாசு- பேய்-ஆகையால், நீ எனக்கு அருள்வாயாக; அங்ஙனம் அருளாது என்னை வருத்துவையாயின் இவ்வூரில் நீ பெறும் பலியைப் பெறவிடாமல் யான் எடுத்துக்கொள்வேன்', என்று பலவும் பிதற்றினான் *[கலி.65:17]*.

**பிசிர்**-1.துளி. மலைபோலும் கடலலைகள் வெள்ளிய சிறு பிசிராக — துளியாக-உடையுமாறு காற்று மோதியடித்தது *[பதி.11:1]*. அலைகள் பிசிராக உடையுமாறு கடலைக்கடந்து சென்று அங்குள்ள பகைவரின் காவல் மரமான கடம்பினை யறுத்து முரசு செய்தான் சேரலாதன் *[பதி.17:4]*. அலைகளெழுந்து ஒலிக்கும் கடலில், காற்றினால் சிதறுகின்ற நுண்ணிய பிசிர், பின்னும் உடையுமாறு, பரவியை யூர்ந்து சென்று கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் தன் பகைவரை வென்றான் *[பதி.41:25]*. கடற்பரப்பின்கண் நுரையாகிய வெள்ளிய தலையையுடைய அலைகள் நிறமுள்ள பிசிராக உடையும்படி பலப்பலவாய் எழுந்து வந்தன *[பதி.42:22]*. ஆடுகோட்பாட்டுச் சேரலாதனுக்குரிய நறவென்னும் ஊரிலுள்ள மறவர் பொங்குகின்ற பிசிரையுடைய அலைகளோடும், முகில்களோடும கலந்து வரும் குளிர்ந்த கடற்காற்றினால் மட்டுமே உடல் நடுங்குவர் *[பதி.60:10]*. பொங்கும் பிசிரையுடைய வெள்ளத்தை வற்றச் செய்யும் பொருட்டுச் சிவந்த ஒளி நிகழ்தலையுடையது, வடவைத்தீ *[பதி.72:14]*.

பசும்பிசிரையுடைய அலைகள் நெருங்கியது கடற்பரப்பு *[அக.210:4]*. நெருங்கிய பிசிரையுடைய அலைகளால் அசையும் நிலையினையுடைய புன்னை மரம் வருந்தியது *[அகம்.250:1]*.

கடற்கரையில் பொங்குகின்ற பிசிரையும், முழவுபோல் ஒலித்தலையுமுடைய அலைகள் எழுந்து உடைந்துவிழும் *[நற்.67:10]*. வில்லால் அடிக்கப்படும் பஞ்சுபோலக் கடற்கரையின்கண் நிரம்பிய அலைகளிலே காற்று மோதுதலால் விளக்கமுடைய பிசிர்கள் பொங்கியெழும் *[நற்.299:8]*.

முகில் சிதறிய பிசிர்த்தொகுதியினால் பிடாமலர் மொட்டுக்கள் அழகுற்றுத் தோன்றவும், காட்டிலுள்ள மரங்கள் மழையை ஏற்றுத் தாமும் பிசிர் தூவுதலைக் கற்பவும் கார்காலம் தொடங்கியது *[ஐங்.461:1,2]*.

**2. தீப்பொறி.** பல்யானைச் செல்கெழுகுட்டுவனால் எரிபரந்தெடுக்கப்பட்ட பகைவர் நாடுகளை ஒளிபொருந்திய தீ, கடுங்காற்று மோதியடிக்கச், சுடர் மிகுந்து, பசிய பிசிர் — தீப்பொறி — பறக்கப் பற்றி அழித்தலால் அவை பெரும்பாழாயின *[பதி.25:7]*. செல்வக்கடுங்கோ வாழியாதனின் தானை பகைநாட்டினை முற்றுகையிட்டு மூட்டிய பசிய பிசிரையுடைய ஒளிபொருந்திய அழல் ஊழித் தீயின் வண்ணத்தைக் கொள்ளும் *[பதி.62:5]*.

**3. ஊர்ப்பெயர்.** 'அன்ன சேவலே! நீ குமரியம் பெருந்துறைக்கண் அயிரை மீனையுண்டு, வடமலைநோக்கிப் போகின்றாயாயின், இடையேயுள்ள சோழநாட்டை உடையுங்கால், உறையூரிலே, உயர்நிலை மாடத்தினிடத்தே, நின் பேடையோடே தங்கித் தடையின்றிக் கோயிலின் உட்புகுந்து, எம் பெருங்கோவாகிய கிள்ளி கேட்குமாறு, 'பெரிய பிசிர் என்னும் ஊரின்கண் வாழும் ஆந்தை யெனபானின் அடிக்கீழ் யான்', என்று, நின்னைக் குறித்துச் சொல்வையாயின் நின் பேடை பூணுமாறு அவன், நினக்கு நல்லணிகலன்களை அளிப்பான்', எனக், கோப் பெருஞ்சோழனிடம், பிசிராந்தையார், அன்னச் சேவலைத் தூது விடுத்துப் பாடினார் *[புற.67:11]*.

**4. குருத்து.** முன்செல்லும் தூசிப்படையோர் பனைமரத்தின்கண் காய்த்த நுங்கினது இனிய செறிவை அருந்த, இடைச்செல்வோர் பழத்தின் செவ்விக்கனியை நுகர, பின் செல்வோர் நீங்கிய வாயையுடைய பிசிருடனே- குருத்துடனே — சுடப்பட்ட கிழங்கினை உண்ண, இவ்வாறு ஒழுங்குபட்டு உலகினை வலமுறையாகச் சூழ்ந்து

பகைவேந்தரை வலியழித்த படையையுடையவன், சோழன் நலங்கிள்ளி *[புற.225:3]*.

**5. பிதிர், (துய்).** மழை, பொழிந்தக்கால் காட்டிலே செந்நிறமூட்டிய பஞ்சின் பிசிர்-பிதிர்-பரவியது போன்ற வண்ணமுடைய தம்பலப்பூம்சிகள் குளிர்ந்த நிலத்தை அழகுறுத்தும் *[அக.283:14]*.

**6. கசிவு.** 'வையைக்கண் உடைந்த மடையை அடைத்தவிடத்தும் பின்னும் ஒழுகும் பிசிர்-கசிவு — போல முன்வருத்திய துன்பம் கெட, நீ வந்து சேர்ந்தவிடத்தும், நீரொழுகும் கண்ணினையுடைய மகளிர் நெஞ்சத்தை இன்னும் வருத்தியவாறு வருதலைத் தவிர்வாய்', எனக், காதற்பரத்தை, தலைவனிடம் கூறினாள் *[பரி.6:83]*.

**பிசிராந்தையார்**-ஒரு புலவர். இவர், தென்னம்பொருப்பன் நன்னாடான பாண்டி நாட்டினுள் பிசிரென்னும் ஊரினர் *[புற.215:6,7]*. ஆந்தையென்பது இவரியற்பெயர் *[புற.67:12]*. இவர் தன்னாட்டு வேந்தனான பாண்டியன் அறிவுடைநம்பி சிற்றினச் சேர்க்கையால் குடிமக்களிடத்து அன்புகெட இறைப்பொருளை வாங்கியபோது, அவனுக்குச் செவியறிவுறூஉவாகப் பாடிய பாடல் *[புற.184]*. கருத்தாழமும் நயமும் மிக்கது. 'காய்ந்த நெல்லையறுத்துக் கவளமாகக் கொண்டால் ஒருமாவினும் குறைந்த நிலத்தில் விளைந்த கதிரும் பல நாளைக்காகும்; அவ்வாறன்றி நூறு வயலாயினும் யானை தனித்துப்புகுந்து உண்ணுமாயின் அதன் வாயின்கண் புகுந்த நெல்லினும் கால் மிகவும் கெடுக்கும். அதுபோல, அறிவுடையரசன் இறைகொள்ளும் நெறியையறிந்து கொள்வானாயின் அவன் நாடு கோடிப்பொருளினை ஈட்டிக்கொடுத்துத், தானும் மிகத் தழைக்கும்; வேந்தன் அறிவு மெல்லியனாய் நாளும் தரமறியாத, உறுதி கூறாது அவன் விரும்புவதனையே கூறும், ஆரவாரத்தையுடைய சுற்றத்தோடு கூடி, அன்புகெடக்கொள்ளும் பொருளை விரும்புவானாயின், அந்த யானை புக்க புலம்போலத் தானும் உண்ணப்பெறான்; உலகமும் கெடும்', என்பது, அப்பாடற்பொருள். பாண்டியனது நாட்டின்கண் விளக்கம் அமைந்து திகழ்ந்த இச்சான்றோர் வேற்றுநாட்டு வேந்தனான கோப்பெருஞ்சோழனைக் காண்டலுமின்றி, அவனது புகழைக் கேட்டல் மாத்திரையே உணர்ச்சியொன்றிய நட்புடையவராய் அவனிடத்து மிகவும் ஈடுபாடு கொண்டிருந்தார். அந்த ஈடுபாட்டிலே அன்னச் சேவலை அவனிடத்தே தூது விடுதலாகவும் *[புற.67]*, 'நும்கோ யாரென வினவின் எம்கோ கோப்பெருஞ்சோழன்', என்று கூறுவதாகவும் *[புற.212]* இவர் தம் உள்ளார்ந்த நட்பினை வெளிப்படுத்திப் பாடியுள்ளார். இவரைப்போன்றே கோப்பெருஞ்சோழனும் இவரிடத்து உள்ளொன்றிய நட்புணர்ச்சி உடையனாயிருந்தான். பின்னாளில் அவன் தன் மக்களின் மாறுபாட்டினால் மனம் நொந்து வடக்கிருந்த போது தன்னோடு வடக்கிருக்கப் பிசிராந்தையாரும் வருவரென்று உடனிருந்த சான்றோர்க்குக் கருத்துரைத்தானாக, இருவர்க்கும் நேரிடைப் பழக்கமின்மையுணர்ந்த அச்சான்றோர் அவர் வாராரென அவன் கருத்தை மறுத்தனர். அதற்கு அவன் மீண்டும், 'என்னுயிரைப் பாதுகாப்போன் (பிசிரோன்) எமக்குச் செல்வமுடைய காலத்து வாராதே நிற்பினும், யாம் அல்லலுறும் இக்காலத்தே நில்லலன் *[புற.215]*. எமக்குள் கேட்டல் மாத்திரையேயன்றிக் காண்டல் இல்லை என்பது கொண்டு அவன் வரவில் ஐயம் கொள்ளன்மின்; அவன் என்னை என்றும் இகழ்விலனாய் இனியவன்; பிணித்த நட்பினன்; புகழ் அழிய வரும் பொய்மையை விரும்பான்; தன் பெயரைப் பிறர்க்குச் சொல்லுங்கால், 'என்பெயர் சோழன்', என்று, எனது பெயரையே தனக்குப் பெயராகச் சொல்லும் மிக்க அன்புபட்ட உரிமையுடையவன்; அதற்கு மேலே இப்படி யான் துயரமுறுங்காலத்து வாராது நில்லான்; இப்பொழுது வருவான்; அவனுக்கும் வடக்கிருக்க இடமொழித்து வைப்பிர்' *[புற.216]* என்று உறுதியுடன் கூறியிருந்தான். அவன் கூறிய உறுதிக்கேற்பவே பிசிராந்தையாரும் அங்கு வந்து அவனுடன் தாமும் வடக்கிருந்தார். அவ்வாறு கோப்பெருஞ்சோழன் கூறியதும் பிசிராந்தையார் வந்ததும், ஆகிய இவற்றை உடனிருந்த சான்றோரான பொத்தியார் வியந்து பாடியுள்ளார் *[புற.217]*. நாடிடையிட்ட இருவரும் கூடி வடக்கிருந்த பண்பினைக் கண்ணகனார் புகழ்ந்துள்ளார் *[புற.218]*. கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்தவிடத்துப் பிசிராந்தையார் சென்றபோது, இவரது முதுமைக்குரிய நரையின்மை கண்ட சான்றோர் இவரை நோக்கி, நுமக்கு யாண்டு பலவாகவும் நரையில்லாதிருத்தல் எவ்வாறு? என்று வினவியதற்கு இவர், 'என் மாட்சிமைப்பட்ட பண்புகளையுடைய மனைவியுடனே மக்களும் அறிவு நிரம்பினர்; என் ஏவலரும் யான் கருதியதனையே தாமும் கருதிச் செய்வர்; அரசனும் முறையல்லாதன செய்யானாய்க் காப்பன்; அதற்கு மேலே, யான் வாழும் ஊரின்கண் நற்பண்புகளால் அமைந்து பணியவேண்டும் உயர்ந்தோரிடத்துப் பணிந்து ஐம்புலனும் அடங்கிய கோட்பாட்டினையுடைய சான்றோர் பலருளர்; ஆதலால் எமக்கு நரையில்லை', என்று, விடை கூறுவாராய்ப் பாடிய பாடல் *[புற.191]* சிறந்த கருத்தமைந்தது. இரவுக்குறிக்கண் வரும் தலைவனைத் தோழி மறுத்துப் பகலில் வருமாறு கூறுவதாகவும் *[அக.308]*, தலைவன் தலைவியை வரைய வருவதனைத் தோழி உணர்ந்து அவளுக்கு உவந்துரைப்பதாகவும் *[நற்.91]*, இவர் அகத்துறைப்பாடல்கள் இரண்டையும் பாடியுள்ளார்.

**பிசிரோன்**-பிசிர் என்னும் ஊரினன் (பிசிராந்தையார்). கோப்பெருஞ்சோழன் வடக்கிருக்கையில் பிசிராந்தையாரை நினைந்து, 'என் உயிரை ஓம்புவோன் தென்னம் பொருப்பனது நன்னாட்டினுள்ளும் சேய்த்தாகிய பிசிரோன்- பிசிர் என்னும்

ஊரினன் — என்று சொல்லுவர்; அவன் எமக்குச் செல்வமுடைய காலத்து வாராது நிற்பினும் யாம் அல்லலுறும் இக்காலத்து நில்லலன்', என்று அருகிருந்த சான்றோரிடம் கூறினான் *[புற.215:7]*.

**பிட்டங்கொற்றன்**-ஒரு குறுநில மன்னன். இவன் குதிரை மலைக்குத் தலைவன் *[புற.168:14]*; 'வில்லோர் பெரும *[புற.168:16]* என விளிக்கப்பெறும் இவனுக்கு இறைவனாகக் கோதை கூறப் பெறுதலால் *[புற.172:9,10]*, இவன் சேரவேந்தனுடைய படைத்தலைவன் என்பதும் விளங்கும். இவனைக் கருவூர்க்கந்தப்பிள்ளைச்சாத்தனார் *[புற.168]*, காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் *[புற.169,171]*, உறையூர் மருத்துவன் தாமோதரனார் *[புற.170]*, வடம வண்ணக்கன் தாமோதரனார் *[புற.172]*, ஆகிய நால்வரும் நேருற்றுப் பாடியுள்ளனர். மற்றும், மருதனிள நாகனார் *[அகம்.17]*, ஆலம்பேரி சாத்தனார் *[அகம்.143]*, இருவரும் அகப் பாடல்களில் இவன் செய்திகளை இடைப்பட அமைத்துப் பாடுவர். 'கையால் வழங்கும் வள்ளிய கொடையினையும் கடிய குதிரையையுமுடைய கொற்ற! உலகத்தெல்லையுள் தமிழகமெங்கும் கேட்குமாறு கெடாது பரந்த நினது வசையில்லாத வான்புகழை நாள்தோறும் பரிசிலர் தம் செந்நா வருந்தும்படி வாழ்த்திப் பாடுவரென்பர்' *[புற.168]* என்று இவனது வண்மையைப் பாராட்டுவர், கருவூர்க் கந்தப்பிள்ளைச் சாத்தனார். இவன் எப்பொழுதும் படைமுகத்தேயிருத்தலால் காண்பதற்கியலாத செவ்வியருமை உடையனாதலை ஒரு பாடலில் *[புற.169]* கூறி, இவனிடத்தே பரிசில் வேண்டும் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் மற்றொரு பாடலில் *[புற.171]* இவனது வண்மைச் சிறப்புக்களையெல்லாம் எடுத்து மொழிந்து வாழ்த்துவர். இவன் தன்னிடத்து நச்சி வந்தோர்க்கு மெல்லியனாயிருத்தலல்லது, பகைவர்க்குக் கொல்லன் விசைத்தடிக்கப்பட்ட கூடத்தோடே ஏற்று மாறுபடும் உலைக்களத்து அடைகல் போலும் வல்லாளன்' *[புற.170]* என்று இவனுடைய மென்மை, வன்மைகளைப் பாடுவர் உறையூர் மருத்துவன் தாமோதரனார். இவனது தவறாத ஈகைத் திறத்தைப் பாடி வாழ்த்துவர், வடமவண்ணக்கன் தாமோதரனார் *[புற.172]*. அகப்பாடல்களில் இவன் வானவன் மறவன் *[அகம்.77:15,143:10]* என்று குறிக்கப் பெறுதல் சேரன் படைத்தலைவன் என்பதை வலியுறுத்தும்.

பிட்டன் காண்க.

**பிட்டன்**-ஒரு குறுநிலமன்னன். 'மலை பொருந்திய நாட்டையுடையவனாகிய கூரிய வேலையேந்திய பிட்டனைப் போர் குறித்து அணுகுதலைத் தவிர்மின் பகைவீர்! அவன்தான், தன்பாற் பரிசில் நச்சி வந்தோர்க்கு மெல்லியனாயிருத்தலல்லது பகைவர்க்குக் கொல்லன் விசைத்தடிக்கப்பட்ட கடத்தோடே ஏற்று மாறுபடும் உலையிடத்து அடைகல் போலும் வல்லாளன்', என்று, பிட்டங்கொற்றனைப் பாடுவர். உறையூர் மருத்துவன் தாமோதரனார் *[புற.170:8]*. 'வன்புல நாடனாகிய வலிய குதிரையையுடைய பிட்டனது பொருதற்கரிய போரை வெல்லும் வேலும், அவன் தலைவனாகிய பெரிய வள்ளிய கொடையமைந்த கோதையும், அவனொடு பகைத்த வேந்தரும் நெடிது வாழ்க', என்று, வடமவண்ணக்கன் தாமோதரனார் வாழ்த்துவர் *[புற.172:8]*. 'வானவன் மறவனாகிய வளைந்த வில்லேந்திய தடக்கையினையும், அமையாத கள்ளின் மகிழ்ச்சியையுமுடைய பிட்டன், பகைவரது அரிய போரில் உயர்த்தியெடுத்த வேல்போல், தலைவியின் கண்கள் தோன்றி எனக்கு அருந்துயர் தரும்', என்று, தலைவன் கூற்றில் வைத்து இவனது வேலைப் புகழ்வர் மருதனிளநாகனார் *[அக.77:16]*. வசையில்லாத வெம்போர்வல்ல வானவன் மறவனும், பரிசில் வாழ்வார்க்கு நன்கலன்களை யளிப்பவனும், தப்பாத வென்றி வாய்க்கும் வாளினையும், புனைகழலையுமுடையவனுமான, பிட்டனது குதிரைமலையின் பக்கவரைப் பாறையிலுள்ள சுனையிடத்து மலர்ந்த நீலமலர்போலத், தலைவியின் கண்கள் நீரைச் சொரிந்தன', என்று, தோழியின் கூற்றில், இவனையும், இவன் மலையையும் பாடுவர், ஆலம்பேரிசாத்தனார் *[அக.143:12]*.

பிட்டங்கொற்றன் காண்க.

**பிட்டை-பிளவு.** பிட்டை— பிளவு — ஆகிய புண்ணை உவந்தேற்று மறமைந்தர் போராடினர் *[புற.373:6]*.

**பிடகை-பூந்தட்டு.** மழவர்முன் கொட்டும் முழவினது வலிய கண்போல் உருண்ட பிடகையிலே-பூந்தட்டிலே-இட்டு வைத்த நறும்பூக்களையுடைய மகளிரும், பிறரும் மதுரை வீதிகளில் விற்பாராய் மாடங்களில் நிழலிலே இருந்தனர் *[மது.397]*. மகளிர் பிடகையிலேயிட்டு வைத்த பித்திகத்தின் செவ்வியரும்புகள் அழகிய இதழ் விரியும் பதத்தே மணங்கமழ்தலால் கூதிர்க்காலத்து மாலைப்பொழுதை அறிந்தனர் *[நெடு.39]*.

**பிடர்-பின்கழுத்து.** பெருங்கை யானையினது பெரிய பிடரின்கண் - பின்கழுத்தின்கண் - அமர்ந்து, அதன் கொம்பையே படைக்கலமாகக் கொண்டு பகைவரது மதிற்கதவைக் குத்திக், கூற்றத்தின் கொலைத்தொழிலுக்கு இளையாத, வலிய கையில் வாளேந்தியவன் பெரும்பெயர் வழுதி *[புற.3:11]*. முயல், கரிய பிடர் பொருந்திய தலையினையுடையது *[புற.333:3]*.

**பிடவம்-பிடா (ஒருவகைப் பூஞ்செடி).** காட்டிடத்தே சேய்மையிலும் மணக்கின்ற மலர்களையுடைய பிடவமொடு-பிடாவோடு-ஏனைப் பசிய தூறுகளையும் வெட்டி, முள்ளாலிடும் மதிலைக் காவலுறும்படி வளைத்து, அமைக்கப் பெற்ற பாசறையிடத்தே முல்லைத் தலைவனான அரசன் தங்கியிருந்தான் *[முல்.25]*.

தலைவியும், தோழியும் பிடவம்பூ உள்ளிட்ட பல பூக்களையும் பறித்துக் குவித்திருந்தனர் *[குறி.78].*

மழை பெய்தடங்கியவுடன் புதர்மீது படர்ந்த செம்முல்லையின் அரும்பு, நெருங்கிய குலையினையுடைய பிடவத்தின் அரும்புடன் ஒருங்கே மலர்ந்தமையால் காடு கம்மென மணம் வீசியது *[அக.23:4].*

'கடல்நீரை முகந்து வந்த முகில் தாங்க மாட்டாமே பெய்தொழித்த வம்ப மழையைக் கார்கால மழையெனக் கருதித், தெளிவில்லாதனவாய்ப் பிடவமும், கொன்றையும், கோடலும் அறியாமையுடையனவாகலின் பலவாக மலர்ந்தன', என்று, தோழி, கார்ப்பருவமன்மையைக் காட்டித் தலைவியை வற்புறுத்தினாள் (பிடவு எனவும் பாடமுண்டு) *[நற்.99:9].* வறட்சி கொல்லுதலால், பட்டுப்போன மரங்களையுடைய காட்டிலே, குறும்பூக்களையணிந்த கூந்தலையுடைய ஆயர் மகளிர் கூடி நின்ற கட்டம்போலக், கார்கால மாலைப்பொழுதில், பிடவம், வண்டுகள் வாய் திறந்து பாடித் தேனுண்ணும்படி, மலர்ந்தன *[நற்.238:3].* பழுத்துதிர்தலாலே, இலைகளில்லாத பிடவமெல்லாம், மென்மலர்கள் நிரம்பவும் அரும்புமாறு, கார்காலம் தொடங்கியது *[நற்.242:1].*

'நெய்தல் மலரக், கொன்றை மலர்களையும் பிடவ மலர்களையும் கொண்டுள்ளமையால் காதலர் சென்ற வழி நன்றே', எனத், தோழி, தலைவன் பிரிந்து போன காட்டுவழியின் நன்மையைத் தலைவிக்குக் கூறி ஆற்றுவித்தாள் *[ஐங்.435:3].* பிடவம் மலரவும், தளவம் அரும்புவிடவும் கானம் கார்ப்பருவத்தால் கவின் கொண்டது *[ஐங்.499:1].*

கார்காலத்து முதல் மழையை ஏற்று, முன்பு உலர்ந்திருந்த முதலிடத்தே தழைத்து, அரும்பை ஈன்ற, முள்ளைப் புறத்தேயுடைய பிடவத்தின் பூக்களையும், பிற பூக்களையும் அழகுறச் சூடிய கண்ணியையுடையவர், ஆயர் *[கலி.101:2].* விசும்பிலே விரைந்து வருகின்ற மழைபெய்து கலத்தலால் அதனை ஏற்ற தண்ணிய நறிய பிடவத்தின் மலர்களையும், பிறவற்றையும் கொண்டு தழை, கோதை, இழை ஆகியவற்றைக் கட்டியணிந்து மகிழ்ந்து தலைவியின் ஆயத்தார் திளைத்து விளையாடியிருந்தனர் *[கலி.102:2].*

பிடவு - காண்க.

**பிடவு-பிடவம் (ஒரு வகைப் பூஞ்செடி).** பூத்த பூக்களையுடைய முல்லைப் புதரைச் சூழ்ந்து பறந்த வண்டுகள் அக்காட்டிடத்தே உள்ள பிடவின் -பிடவத்தின்- மாலைபோலும் பூங்கொத்தில் சென்று தங்கும் *[பதி.66:17].*

காட்டிலே சிறிய கரிய பிடவின் வெள்ளிய உச்சியையுடைய குறும்புதர், மாலைகளைப் போல் மலரும் *[அக.34:1].* கார்ப்பருவக் கடைநாளில் குளத்து நீரையுண்டு, அறுகம்புல்லை மேய்ந்த, இரலைமான் நீண்டொழுகிய மணற்பரப்பின் ஒரு பக்கத்தே மலர்ந்த பிடவின் கொழுநிழலில், தன் பிணையுடன் இன்புறத் தங்கியிருக்கும் *[அக.139:5].* மலைச்சாரலில், பிடவுடன், வேங்கை மலரும் *[அக.147:1].* மிக்க மழைபொழிந்த பயன்மிக்க முல்லைநிலத்தே குறும்புதராகிய பிடவின் நீண்ட காம்பினையுடைய மலர்கள் செம்மண் நிலத்தின் நுண்மணலில் உதிர்ந்து கோலஞ்செய்யக் காடு கவின் பெற்றது *[அக.154:4].* கார்காலத்து மாலைப்பொழுதிலே, குளிர்ச்சி பொருந்திய பிடவின் கூர்முகையாகிய அலரும் செவ்வியிலுள்ளதனை, வண்டு வாய்நெகிழ்ந்து மலர்வித்தலால், எழும் மணத்தினைக், கூதிர், முன்பனி ஆகிய காலங்களுக்குரிய வாடைக்காற்றுத் தூற்றும் *[அக.183:11].* முல்லை நிலத்திலே வெள்ளிய பிடவின் விரிந்த மலர்கள் மணக்கும் *[அக.184:7].* மழை பொழிந்துவிட்ட வைகறைப் பொழுதில் வண்டுகள் ஒலித்து ஊதப், பிடவின் அரும்புகள் கட்டவிழ்ந்து மலரக், கார்காலத்தே காட்டு நிலம் அழகுறும் *[அக.304:11].* மரங்கள் அடர்ந்த காட்டு நெறியில் வளமழை பொழிந்த களர் நிலத்திலே குளிர்காற்று வீசுந்தோறும், நிலவொளிபோல் தொகுதிபட்ட, அரும்புகள் மலர்ந்த, வளைந்த அடியினையுடைய, பிடவின்கண்ணே, மெல்லென மயிலினம் பயிலும் *[அக.344:3].*

கழிந்த கார்காலத்திற் பெய்யாது எஞ்சியிருந்த பழைய நீரைச் சொரிந்து விட்டுப் புதுநீர் கொள்ளும் பொருட்டாய்ப் பொழியும் வம்ப மழையின் குரலைக் கேட்டுப், பருவமழை பெய்தது போல் கருதி, அம்மழைக்கெதிரே, மயிலினம் ஆடுதலைச் செய்தன; பிடவும் பூத்தன. அவை அறியாமையுடையன வாதலின் இது கார்காலமன்று', எனத், தோழி, தலைவியை வற்புறுத்தினாள் *[குறு.251:3].*

'காட்டின்கண் கொன்றையுடனே பிடவும் மலர, முகில் முழங்குகின்றது. பிரிந்த தலைவர் மீண்டு வருவதாகக் கூறிய பருவம் இதுதான் போலும்', எனத், தோழி, பருவம் காட்டித், தலைவியை வற்புறுத்தினாள் *[நற்.246:8].* களாவின் மலர்கள் ஒருங்கே மலர்ந்து மணங்கமழவும், பிடவின் அரும்புகள் கட்டவிழ்ந்து மலரவும் கார்காலம் மழையைப் பெய்தது *[நற்.256:6].*

'காயாவும், கொன்றையும், நெய்தலும், முல்லையும், தளவமும் ஆகிய இவற்றோடு பிடவும் மலர்ந்து, அழகு பெற்று, முல்லை நிலம் பூவணி கொண்டது; *[ஐங்.412:2].* முகில் சிதறிய மழைத்துளிகளால் பிடவின் மொட்டுக்கள் அழகுற்றுத் தோன்றக் கார்காலம் தொடங்கியது *[ஐங்.461:1].*

ஆவினையுயை பொதுவர் மலையிடத்தனவும், காட்டிடத்தனவுமான கொன்றையும், காயாவும், வெட்சியும், பிடவும், தளவும், குல்லையும், குருந்தும், கோடலும், பாங்கரும் என்ற இப்பூக்களாற் செய்த மணங்கமழும் கண்ணியைச் சூடினராய் ஏறுதழுவினர் *[கலி.103:2].*

பிடவம் - காண்க.
பிடவூர்-ஊர்ப்பெயர். 'தித்தனுக்குரிய உறந்தைக்கும், கிழக்கின் கண்ணதாகிய, நெடுங்கை வேண்மானுக்குரிய அருங்காவல் அமைந்த பிடவூரில், அக்கிழான் மகனாய், அறப்புகழொடு விளங்கும் சாத்தன் சுற்றத்தினர் யாம்', என நக்கீரர் கிணைஞன் கூற்றில் பாடியுள்ளார் [புற.395:20].

பிடி-பெண்யானை. 'ஒரு பிடி - பெண்யானை - படியும் சிறிய இடம், ஏழு களிற்றியானைகளைக் காக்கும்படி விளையும் வளமிக்க நாட்டையுடையோய்', என்று, குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை, ஆவூர்மூலங்கிழார் விளித்துப் பாடுவர் [புற.40:10]. சோழன் நலங்கிள்ளி ஆவூரை முற்றியிருந்த காலத்து, அவன் பகைஞனான நெடுங்கிள்ளி, எதிர்த்துப் போரிடாமல், அரணை அடைத்துக்கிடந்தமையால், போர்ச்சினம் மிக்க நலங்கிள்ளியின் களிற்றியானைகள், கரிய பிடிக் கூட்டத்தோடு, பெரிய குளத்தின்கண் படியாதனவாய்க் கவளமும் பெறாது, கட்டப்பட்டிருக்கும் கம்பங்கள் வருந்தச் சாய்த்து, வெய்துயிர்த்துச், சுழன்று, உருமேறுபோல் முழங்கின [புற.44:1]. 'ஆயே! நின் நாட்டின்கண் இளம்பிடியொன்று ஒரு சூலில் பத்துக்கன்றுகளைப் பெறுமோ', என, அவன் பரிசிலர்க்கு உவந்தளித்த யானைப் பரிசிலின் மிகுதியை வியப்பர் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் [புற.130:2]. கணவன் நெடுந்தூரத்தே சென்றிருப்பானாயின், மனைவியராகிய பெண்டிரும், பாடிவருவோர் விரும்புமாறு, தம்மளவில் புல்லிய தலையையுடைய மெல்லிய பிடியைப் பரிசிலாக இழையணிந்து கொடுக்கும் வண்புகழ் அமைந்த நாட்டையுடையவன், கண்டீரக்கோன் [புற.151:4]. மன்றத்தின்கண் நிற்கும் விளாவின் வீழ்ந்த பழத்தை, மறத்தியின் மகனுடனே, காட்டின் கண் வாழும் கரிய பிடியின் கன்றும் ஓடிவந்தெடுக்கும் வன்புல இருப்பினையுடையது, பண்ணனது வலார் என்னும் ஊர் [புற.181:3]. 'பிடியின் அடிபோலும் சிறிய இடத்தினை மெழுகிக் காதலியாகிய மனைவி, புல்லில் மேல்வைத்துப் படைத்த சிறு பிண்டத்தை எவ்வாறுண்டானோ', என, வேள் எவ்வியை நினைந்து இரங்கிப் பாடுவர் வெள்ளெருக்கிலையார் [புற.234:2]. 'நேற்றைய போரில், வேந்தர், முன்னே படையைப் பிளந்துபோய், அவர்தம் மெல்லிய தலையையுடைய இளைய பிடியானைகள் புலம்புமாறு, களிற்றியானையைக் கொன்று வீழ்த்திய, என்னைக் குறித்துக் காண்பதற்கு ஆற்றலுடைய காளையாகிய, இம்மறவன், கூர்வேலை நெஞ்சுவடு விளைக்கும் வகையில் ஆட்டிவருகின்றான்', எனப், போர்க்களத்தில் ஒருவன் அஞ்சாது கூறி நின்றான் [புற.303:8]. 'மிக்க வலிமையுடைய தலைவன், தம் மார்பிற் பகை வேந்தன் பாய்ச்சிய வேலைப்பறித்து எறிந்தபோது, அவ்வேந்தன் ஏறியிருந்த புல்லிய தலையையுடைய மெல்லிய பிடி நாணுமாறு, அப்பக்கத்துக் களிறுகளெல்லாம் புறங்கொடுத்தோடின', என, மறவனொருவன், தன் தலைவனது ஆற்றலைக் கூறினான் [புற.308:10]. உலைத் துருத்தியின் வாயிரும்பு, பிடி மூச்சுவிடுவதுபோல், காற்றினை வெளிவிடும் [புற.345:8]. 'உடுக்கைக் கண் போன்ற அடியையுடைய, கன்றை நீங்காத பிடி பல நெருங்கிய, களிற்றி யானைகளாகிய பரிசிலை நல்குவாயாக', எனச், சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவனிடம் பரணர் வேண்டிப் பாடுவர் [புற.369:26]. வேங்கட நாட்டிலே காடுகளிலுள்ள புல்லிய தலையையுடைய மெல்லிய பிடி வருந்துமாறு, அதன் கன்றினைப் பிரித்துக் கொணர்ந்து, குன்றை அகத்தேயுடைய நல்லூர் மன்றத்தே பிணிப்பர் [புற.389:9].

உதிராத பசுமயிரையும், இளைய அசைநடையினையுமுடைய அண்ணல் மழகளிறு, கன்றுடன் கூடிய தம் காதற்பிடியின்மேல் மொய்க்கும் வண்டுகளை மணங்கமழும் காட்டுமல்லிகையைக் கொண்டு ஓட்டும் [பதி.12:13]. உரல்போற் பெருங்கால்களையும், விளங்கும் வெண்மருப்புக்களையும் பெருங்கையையுமுடைய யானைகள் வரும்போது அவற்றுள் புதியனவாய் வரும் விருப்பத்திற்குரிய பிடியானைகளை ஊசல் மகளிர் எண்ணியளவிடமுடியாத சிறப்புடையது, இமயமலை [பதி.43:5]. 'யாழ் நரம்பின் இசையோடு ஒன்றிய இனிய குரலையுடைய பாடல் மகளிர், பல பிடியானைகளைப் பெறுக', என்று, கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் பரிசில் வழங்கினான் [பதி.43:22]. இளஞ்சேரலிரும்பொறை தங்கியிருந்த பாசறையிடத்துப், பகையழித்த போர் யானைகள், மதம் பெருகிக், கடுஞ்சினம் மூண்டு, வண்டுகள் மொய்க்கும் தலையுடையனவாய்த், தம் மதம் தணிதற்குப், பாகரால் புணர்க்கப்பெற்ற பிடிகளைப் புணர்ந்து இயலும் [பதி.82:6].

புகரணிந்த மத்தகத்தையுடைய பெரிய பிடி குளிரும்படி வீசி இழியும் அருவியையுடையது, பழமுதிர்சோலை [முரு.304]. பெரிய பிடியின் தடக்கைபோல் செறிந்து திரண்ட துடையினையுடையவள், பாடினி [பொரு.40]. கரிகாற் பெருவளத்தான் தன்னை நாடிவந்த பொருநர்க்குப் பிடியொடு புணர்ந்த களிறுகளைக், கன்றுகளுடனே கொடுத்தான் [பொரு.126]. இழுக்கப்பட்டு நிலத்தே தோயும் கரிய பிடியினது தடக்கை போல், அடியுடனே தொடர்புபட்டு முறையே பருத்துத் திரண்டு ஒன்றுடனொன்று நெருங்கிய துடைகளையுடையவர், விறலியர் [சிறு.19]. பிடிக்கணங்களைப் பலர்க்கும் வழங்கும் தடக்கையினையிடையவன், நல்லியக்கோடன் [சிறு.124]. பிடியினது கையையொத்தது மயிர்ப்பின்னல் [சிறு.191]. மூங்கில் முளைபோலும் கொம்பினையுடைய கரிய பிடியினது முழந்தாளையொக்கும் வடிவுடையது, சிறிய உரல் [பெரு.53]. பிடிக்கணம் போன்றன குதிர்கள் [பெரு.186]. பிடியினது வாயையொத்த வளைந்த வாயையுடையது, கலப்பை [பெரு.199]. கவைத்த முலையையுடைய பெரிய பிடியினுடைய கவுளிடத்து கொம்புகளையொப்பன, குலையுதிர் வாழையின் கூனலையுடைய வெண்பழம் [பெரு.358]. போர்க்களத்தே ஒச்சி

வெட்டுகின்ற பகைவரின் வாள் அழுந்துதலால், புண்மிக்க வேழங்கள், பிடித்திரளை மறந்து, பாசறையிலே இருந்தன *[முல்.68]*. கரிய பிடியின் மேற் பொருந்திய தோலையொத்த கருமையைத் தமக்கு இயல்புறப் பெற்றவர், கள்வர் *[மது.634]*. பிடியோடே கூடிய பெரிய களிறுகள் முழங்க இரவு நீங்கும் *[மது.676]*. பாண்டிமாதேவியின் கோயில் நெடுநிலைக்கண், நாளின் பெயரைப் பெற்ற சிறந்த மரத்திலே (உத்தரக் கற்கவியிலே) போதாய் அவிழ்ந்த குவளைப் பூவோடே, புதிய பிடிகளும் அமைக்கப்பட்டிருந்தன *[நெடு.83]*. பெருங்கை யமைந்த யானை தான் அகப்பட்ட குழியினின்றும் ஏறுதற்குக், கரைகளை இடியும்படி கோட்டினால் குத்திக், குழியைத் தூர்த்துப், பிடியிடத்தே சென்றாற்போலத், திருமாவளவன் தான் காவற்பட்டிருந்த பகைவர் காவலைக் கடந்து வெளியேறித் தன்னரசெய்தினான் *[பட்.224]*. பகைவர் நாட்டிலே, தெய்வம் உறையும் அம்பலத்தில் நின்ற பருத்த நிலைமையினையுடைய நெடுந்தூண் சாயுமாறு, தம்முடம்பினை உராய்ந்து பெருநல்யானையொடு பிடிகள் கூடித் தங்கும்படி, அந்நாடுகளைப் பாழ் செய்வான், திருமாவளவன் *[பட்.251]*. கொழுத்த கொடியினையுடைய கவலைக்கிழங்கு, வலிய பிடியின் மடித்த முழந்தாளை யொக்கும்படி, முற்றிக், குழிகள்தோறும் கீழே வளர்ந்தன *[மலை.127]*. கன்றினை வயிற்றிலே கொண்ட மெல்லிய தலையினையுடைய மடப்பம் பொருந்திய பிடியை, வலிமைக்கு வரம்பாகிய கணவன் (களிறு) கவளம் தேடிக் கொடுத்துக், காத்துச் சென்ற செலவினைக் குறித்து, ஒளித்திருந்த வலிய புலி பாய்ந்ததாக, அச்சூல் கொண்ட யானை, தன் சுற்றத்தோடே, கணவனைக் கூப்பிடுகின்ற இடியோசை போலும் முழங்குகுரல், மலையிடத்தே ஒலிக்கும் *[மலை.307]*. பிடியினது கையையொத்தது, வரால்மீன் *[மலை.457]*.

மலையிலே தாழ்விடத்து நீர்க்குழியில் அகப்பட்ட கடுங்களிற்றின் வருத்தத்தினை நீக்கி, அது மேலேறுதற்குப்படியாக, அதன் பிடியானை பெரிய மரத்தினை முறித்திட்ட ஓசை, வானளாவிய அம்மலையின் முழைஞ்சிலே சென்றொலிக்கும் *[அக.8:11]*. வினைமுற்றி மீளும் தலைவன், தேர்ப்பாகனிடம், "என் காதலியிடம் சென்றுவிட்ட என் நெஞ்சமானது, பிடியின் கையையொத்த, அவளுடைய பின்னின கூந்தலைத் தீண்டி மகிழ்ந்ததோ", என்று கூறினான் *[அக.9:22]*. ஞாயிற்றின் வெம்மையால் வருந்திய புல்லிய தலையையுடைய மெல்லிய பிடி மேலேயுயர்த்திய கையும் மறையத்தக்க ஆழ்ந்த வெள்ளத்தில், களிற்றுடனே படிந்து விளையாட, மழை பெய்தது *[அக.43:3]*. புல்லிய தலையையுடைய மெல்லிய பிடி அழகிய தளிர்களை யுண்ணுதற்குக், களிறு, நெடிய நிலையினையுடைய யாமரத்தினை வளைத்துத் தரும் *[அக.59:7]*. மழை பெய்து இடந்தோறும் நீர் மிகுதலால் தன் கன்றின் கால்களை இழுத்துச் செல்லும் கடுஞ்சுழி வெள்ளத்தில், புல்லிய தலையினையுடைய மெல்லிய பிடியும் அகப்பட்டுப் பூசலிடக், களிற்றியானை விளிக்குரலோடே நீரிலிறங்கித் துழாவும் *[அக.68:18]*. கானத்தின்கண், ஆளியினையஞ்சித் தன்னினத்தைத் தன்னிடத்தே கூட்டிக் கொள்ளும் மிக்க வலிமையுடைய தலைமைக் களிறு, கரிய சருச்சரைகள மைந்த பெரிய கையால், காவலுறத் தழுவியிருக்கவும், முதற்சூலையுடைய மெல்லிய பிடி நடுங்கும் *[அக.78:6]*. வேங்கடங்கிழவோனான புல்லியென்பானின் இளையர், கானத்தின்கண்ணே உரல் போலும் அடியினையுடைய மெல்லிய பிடி பிரிந்தலறுமாறு, களிற்றுக்கன்றினைப் பிரித்துக் கொண்டு செல்வர் *[அக.83:3]*. வேங்கட நெடுவரைச் சாரலிடத்தே ஈன்று நாள் கழிந்த மென்னடையையுடைய மெல்லிய பிடியினதும், அதன் கன்றினதுமான பசியைப் போக்குதற்குக், களிற்றியானை, மூங்கிலின் முற்றாத முளையைக் கொணர்ந்து உண்பிக்கும் *[அக.85:6]*. ஞாயிறு பெருமலையின் பயன்கெட்டொழியக் காய்தலால் அருவியற்ற பக்கமலையிடத்தே, சுனையைத் துழாவி, நீரைக்காணாது, பாசியைத் தின்ற, பசிய கண்ணினையுடைய களிற்றியானை, அயர்ந்த பசியினையுடைய பிடியோடே ஒரு புறம் ஒடுங்கிக் கிடக்கும் *[அக.91:6]*. பிடிகள் சூழப்பெற்ற களிறுகளைப் போல் தோன்றும் குன்றங்களைக் காட்டியவாறே, தலைவன், தலைவியை உடன் கொண்டு சென்றான் *[அக.99:13]*.

கூத்தர் தம் பெருமகனாகிய அஃதையென்பான், அவர்க்குப் புல்லிய தலையையுடைய மெல்லிய பிடிகளைப் போர்க்களத்தின்கண்ணே வழங்குவன் *[அக.113:3]*. கரிய பிடியோடும், கன்றோடும் கூடிய யானையைக் கொள்ளுதல் தப்பி, அவற்றை ஓடவிட்ட, அடுபுலி நள்ளிரவில் திரியும் *[அக.118:7]*. வேனில் நீடிய கோடைக் காலத்து, வறுமை மிக, நீர்ச் சிறுகுளத்தின் தோண்டப்பட்ட குழி மருங்கிலே கிடந்த உண்ணற்காகாத கலங்கல் நீரால் கன்றையுடைய இளைய பிடியானையின் மெல்லிய தலையைக் கழுவிப், பின் நீரின்மையால், சேற்றினைக்கொண்டு ஆடிய களிறு மராமரத்தில் தன்னுடம்பைத் உராய்ந்துத் தினவைத் தீர்த்துக்கொள்ளும் *[அக.121:5]*. காட்டாற்றுச் சுரநெறியில் வழிப்போகும் வம்பலர் சேற்றைக்கிளைத்து, ஊறிய நீரையுண்டு, விட்டுப்போன சிறிய பல கேணிகளைத், தன் பிடியின் அடிச்சுவடென விரும்பிக், களிறு தொட்டுப் பார்த்துக் கடந்து செல்லும் *[அக.137:2]*. மெல்லிய தலையையுடைய இளைய பிடி குழியிலே அகப்பட்டதாகக், களிறு கூப்பிட்ட ஆரவாரத்திற்கு ஆஞ்சி, விரைந்தோடிய அதன் கன்று, மூதூரிடத்தே சென்று, எருமையாகிய நல்லானின் முலைப்பாலையுண்ணும் *[அக.165:1]*. அருவிகள் ஆரவாரிக்கும் பக்க மலையிலே, ஈன்றணிமையுடைய பெரிய பிடியைத் தழுவியவாறே, களிறு, தன் கன்றுறங்கும் இடத்தினைத் காத்திருக்கும் *[அக.168:6]*. 'சிறு கண்ணையுடைய பெரிய பிடியின் தடக்கையொப்பச், சேரக்கட்டிவிட்ட, நினது கூந்தற் கண்ணே, மலர் சூடுதலை

நினைந்து, தலைவர் விரைவில் வருவர்', எனத், தோழி, தலைவியை வற்புறுத்தியிருந்தாள் *[அக.177:4]*. பன்றி பிடிபடுத்துக்கிடந்தாலொத்த கல் (குன்று) மீது இறங்கி வந்து தினையுண்டு தூங்கும் *[அக.178:6]*. முகில் கூட்டங்கள் கடலிலே சென்று, நீரருந்தி, மிகுதியையுடையனவாய், மேற்றிசையிலே எழுந்து, சூலுற்ற பிடியினம் போல், இடந்தோறும் தோன்றிப் பெய்தற்கு நெருங்கக், கார்காலம் வந்தது *[அக.183:8]*. பழத்தினைக் கொண்ட பலா மரங்களையுடைய கானம் வெதும்புமாறு, வேனில் நீடிக், குளங்கள் நீரற்ற மலையிடங்களில் தங்குதற்கியலாமையால், களிறு, பெருமூச்சுவிடும் மெல்லிய பிடியைத் தழுவிப், பலாப்பழத்தையும் ஏந்திக்கொண்டு, வேற்றுநாட்டிற்கு விழாவை நினைந்து விறலியரைத் தழுவி முழவேந்திச் செல்லும் கூத்தரைப் போல், சென்றது *[அக.189:4]*. மடப்பத்தையுடைய மனைவியைத் தழுவிக்கிடக்கும் தலைவன் மார்பில் புதல்வன் ஏறியிறங்குவதுபோல், கடுஞ்சூலினையுடைய மெல்லிய பிடியைத் தழுவிக் கிடக்கும், வெண் கோட்டினையுடையதும், இனத்துடன் கூடியதுமான, வேழம், தன்மேல், கன்று ஏறியிறங்கப் பள்ளிகொள்ளும் *[அக.197:13]*. மலைச்சாரலில் மெல்லிய தலையையுடைய இளைய பிடி இனத்துடனே இன்புறுமாறு, புலியாகிய பகையை வென்று, புண்கொண்ட யானை கையை உயர்த்திப் பெருமூச்செறியும் *[அக.202:2]*. வேட்டுவர் கன்றுடைய பெருநிரையாகிய பிடிகளைக் குழிகளிடையே அகப்படுத்தி, ஆரவாரத்தோடு பிணித்துக் கொள்ளுவர் *[அக.211:10]*. மூங்கில்கள் வாடி அழகிழக்குமாறு, முகில் மழைபெய்யாது மேலே போய்விட்ட அகன்ற பாலை நிலத்தே களிறாகிய இரை தப்பிவிடவே, வேங்கை சினமிக்கு முழங்குதால் கரிய பிடி வெருவியோடும் *[அக.221:13]*. பிடி மிதித்தமையால், வழுதுணங்காய் போல் உண்டான (பெரும் பெயரையுடைய) தழும்பன், ஊணூர்த்தலைவன் ஆவான் *[அக.227:17]*. வானிடத்தே விரிந்த பகலொத்த நிலவொளியில், மலைமேலுள்ள வேங்கை மரத்தின் ஒளிபொருந்திய மலர்கள் புலியின் உடற்புள்ளிகள் போல் தோன்றுதலின், பெரிய வாயினையுடைய கரிய பிடி வெருவியோடும் *[அக.228:12]*. பருதியஞ்செல்வனான ஆழி உலகைப் பிளத்தலால், நீரற வறந்த நீண்ட நெறியிடத்தே, மெல்லிய தலையையுடைய கன்றினையும், கவிந்த நகத்தினையும், உடைய இளையபிடி அக்கன்று உண்ண வேண்டித்,தான் தழையுணவை உண்ணாது, மறுத்து, வாடிய உடம்புடன், பாழூர்க் குடிசை போல் தோன்றும் *[அக.229:4]*. பிடிபடுத்துக் கிடந்தா லொத்தது குன்று *[அக.269:6]*. ஆரியர் பழக்கிவிடுக்கும் பிடி, தானே சேர்ந்தொழுகிப் பெருங்களிற்றை அழைத்துவரும் *[அக.276:10]*. கானத்தே, வேங்கைப் புலியை வென்ற மலைபோலும் யானை வருந்தி, மதம் வாடி, நிலாப்போலும் நிறத்தையுடைய கொம்பிலே, தனது பெருங்கையை சேர்த்துக்கொண்டு பல மரங்களையுடைய ஒரு பக்கத்தே தன் பிடியோடு தங்கிக்கிடக்கும் *[அக.295:7]*. தன் பகையைக் கொன்று சினந்தணியாமலும், அதனை வென்றோட்டி, மாறுபாட்டினை மெலிவிக்காமலும், கரிய பிடிக்கூட்டமாகிய இனத்துடன் கலவாமலும், பெருமழை போலும் மதத்தினால் செருக்குற்றுக், கரிய களிறு, காட்டுநெறியிலே திரியும் *[அக.298:8]*.

செறிந்த நடையினையுடைய பிடியின் உயிர்ப்பொலியுடன், களிற்றின் உயிர்ப்பொலி கூடினாற்போலச், சிறுவங்கியம், பெருவங்கியம் ஆகிய இரண்டின் இசையும் கலந்தொலிக்கும் *[அக.301:16]*. கரிய பிடியினைப், பரிசில் பெறும் பாணர், மனைவாயிலில் நின்று பெறுவர் *[அக.311:1]*. ஆனிரைகள் பருகுதற்குக் கோவலர் தரிசு நிலத்தே கற்களை உடைத்துத் தோண்டிய ஊற்றுக்குழியைக் கன்றையுடைய மெல்லிய பிடி தன் களிற்றுடனே சென்று தடவிப்பார்க்கும் *[அக.321:9]*. முகில் தவழும் பக்க மலையில் மெல்லிய பிடி தன் கடுஞ்சூலை ஈன்று, மூங்கிலைத் தின்னும் தன்னுடம்பைத் தன்பால் விருப்பமுடைய களிறு தடவிக் கொண்டிருக்க, வாழைகளையுடைய அழகிய அப்பக்கமலையிலே துயிலும் *[அக.328:11]*. தன் இனத்துடன் சென்று மூங்கிலையொடித்து மேய்ந்த களிற்றியானை, தன்னைத் தாக்குதற்கு ஒடுங்கியிருந்த புலியைப் பொருது கொன்று, குருதி தோய்ந்த கொம்புகளை மழையிலே கழுவிக்கொண்டு, பக்க மலையில் மென்மெலச் சென்று, செற்றங்கொண்ட பகையைத் தொலைத்த செருக்குடனே, வண்டொலிக்கப், பிடியைப் புணர்ந்து, வாழைகளையுடைய அழகிய பக்க மலையில் துயிலும் *[அக.332:8]*. முகில் கடலிலிருந்து நீரை முகந்தெழுந்த முழக்கத்தோடே, கரிய பிடிக்கூட்டம் போல், சேர்ந்து திரண்டு, பெருங்களிற்றின் தடக்கை போல், கால் வீழ்த்துப் பனிக் கட்டியுடன் துளிகளைச் சிதறி மழை பெய்தலைத் தொடங்கியது *[அக.334:6]*. மழை பெய்யாது ஒளித்தமையால் மூங்கில்கள் வாடிய பக்கமலையில், வலிய புலி பாய்ந்ததாகக், களிறு முழக்கிய ஒலிகேட்டு அஞ்சித்,தன் கன்றினை விட்டு ஓடிய புல்லிய தலையினையுடைய மெல்லிய பிடி, கையைத் தலைமீது வைத்துக்கொண்ட, மயக்கமுடைய விரைவுடன், மகவைக் காணாதொழித்த மகளிர் போல், அக்கன்றைத் தேடித் திரியும் *[அக.347:13]*. புல்லியென்பானுக்குரிய பெருமலை பொருந்திய காட்டிலே தான் விரும்பும் பிடியினையிழந்த களிற்றியானை, அருஞ்சுரநெறிகளில் தங்கிய கூத்தரது வாச்சிய ஒலி, பெரிய மலைமேல் எதிரொலித்ததாற்போலத், தன் குரல் மலைப்பக்கத்தே இடியோசையோடு மாறுபடுமாறு, முழங்கும் *[அக.359:10]*. பிடியுடன் கூடிய களிறுபோல், தலைவியுடன் கூடித், தலைவன் சுனையிலே நீராடினான் *[அக.368:11]*. பெரும்புலியுடன் போர் செய்து வருந்திய வடுவமைந்த கொம்பினையுடைய களிற்றின் பொருட்டுப், பிடி பூசலுடன் அடியிட்டோடியமையால் குழிந்த நீர்வழியில், தலைவன் பொருள்வயிற் பிரிந்து செல்வான் *[அக.379:25]*. காட்டிலே தான் விரும்பும் பிடியையிழந்த களிறு, உண்ணும் தழையினை மறுத்த

வாட்டம்போல், தலைவன் தலைவியைப் பெறுதல் குறித்து மெலிவுடையவனாய்த், தோழியை இரந்து பின்னன்றான் *[அக.392:2]*. தலைவனது உயர்ந்த மலைநாட்டில், பெரிய புலி தாக்கியதனாலாகிய புண்மிகுந்து, வலிமை குன்றியதும், வருந்தும் பிடியினால் தழுவப்பெற்றதுமாகிய களிற்றியானை, மூங்கிலாற் செய்யப்பட்ட தூம்பு போல், ஒலிக்கும் *[அக.398:23]*.

தலைவர் பிரிந்து சென்ற வழிகள், பிடியின் பசியைக் களையும் பொருட்டுப் வேழம் யாமரத்தின் பட்டையை உரித்து, அதன் நீரை அப்பெண்யானை பருகும்படி உதவுகின்ற, அன்பினவாம்', எனத், தோழி, தலைவியைப், பிரிவாற்றிப் பேசினாள் *[குறு.37:2]*. குறுகிய கரிய பிடியினது கை மறைந்தாற்போலும், வடிவும், நிறமும் உடையது கருந்துறுகல் *[குறு.111:4]*. செந்தினையின் செறிந்த குலையையுடைய பசுங்கதிர்கள், மெல்லிய பிடியினது தடக்கை போன்றனவாய், வளைந்து விளையும் *[குறு.198:3]*. தனது பாலுள்ள முலையைச் கன்று குடித்து நிற்பப், பிடி, வீட்டின் முன்னிடத்தேயுள்ள தினைப்பயிரை மேயும் மலை நாட்டினையுடையவன், தலைவன் *[குறு.225:2]*. அகுதையிடத்தே மெல்லிய பிடிப் பரிசில் பெறும் அகவன் மகளிரது குறிப்பு, வேறொன்றாயிருந்தது *[குறு.298:7]*. வருந்திய நடையையுடைய மெல்லிய பிடியினது பசி வருத்தத்தைப் பொறாது, களிறு, யாமரம் அழியும்படி தன் கொம்பினால் குத்திப், பசையற்ற வெள்ளிய நாரைக் கைக்கொண்டு, வறுங்கையைச் சுவைத்து, அண்ணாந்து, வருத்தமுடைய நெஞ்சோடு முழங்கும் *[குறு.307:5]*. சோலையின்கண் உள்ள வாழையின் சுருண்ட குருத்து மத்தகத்தைத் தடவுதலால், வலிமையழிந்து, கலங்கிய துயரமடைந்த, மயக்கத்தையுடைய, களிறு, வருந்திய மூச்சையுடைய மெல்லிய பிடி தனது வருத்தம்மிக்க முதுகைத் தடவ, நீர் இறங்கியோடும் மலைப்பக்கத்தே அரிதில் துயிலும் *[குறு.308:4]*. துதிக்கையையுடைய நல்ல களிறுகள், பிடிகளோடு சேர்ந்து, முகில் சூழ்ந்த பக்கங்களையுடைய மலையிடத்தை யடையும்படி, கார்காலத்திற்குரிய பெருமழை மாலையிலே வந்தது *[குறு.319:3]*. மணம் வீசும் மூச்சையுடைய மெல்லிய பிடிகளைத் தழுவி, வளைந்த கையையுடைய யானை, குன்றினிடத்தேயுள்ள சிறுகுடிக்கண் இறங்கும் *[குறு.332:4]*. இளைய பிடியை நயந்த இளங்களிறு குன்றத்தே சென்று, அங்குள்ள குறவர் ஆரவாரித்தலால், அவரது ஊர்மன்றத்தை ஊடறுத்துச் செல்லும் *[குறு.346:1]*. பிடியினது கையையொத்த பெரிய கதிரையுடைய, தினையில் படியும் கிளியைக் கொடிச்சிகைக் குளிர் கடியும் *[குறு.360:5]*. முழந்தாளையுடைய கரிய பிடியினது மெல்லிய தலையையுடைய கன்று மலைப்பக்கத்தூரில் குறமகள் ஈன்ற புதல்வரோடு சுற்றியோடி முன்னாளில் இனியதாய்ப் பழகிப், பின்னாளில் அவர்தம் தினையை மேய்ந்தது *[குறு.394:1]*.

புல்லியென்பானுக்குரிய மலைச்சாரலின்கண்ணே, களிற்றியானை பெரும் பாம்பின் வாய்ப்பட்டதாகத், துஞ்சாத் துயரத்தையுடைய அச்சம் மிக்க பிடி பிளிறும் பூசற்பேரொலி, நீண்ட மலையிடத்துள்ள, விடரகத்தே சென்று, எதிரொலி யெழுப்பும் *[நற்.14:9]*. பொலிவமைந்த நெற்றியையுடைய கரிய பிடி புலம்புமாறு, காட்டினிடத்தே பெரிய களிற்றியானையைப் புலியேறு தாக்கிக் கொல்லும் *[நற்.36:2]*. பெருங்களிற்றைப் புலி கொன்றமையால், கரிய பிடி, வாடிய துன்பத்தோடும், வருத்தத்தோடும், இயங்கமாட்டாமல், நெய்தலின் பாசிலையை ஒக்கும் அழகிய செவியையுடையதும், துன்பமிக்கதுமான தன் கன்றைத் தழுவிக்கொண்டு, விரைவுறத் தீர்த்தற்கரிய புண்ணுற்றாரைப்போல, வருத்தமுற்றிருக்கும் *[நற்.47:1]*. வறட்சியுற்ற குன்றத்து உச்சியின் பக்கத்தேயுள்ள, வேட்டுவச் சீறூரையடுத்த, கேணியின்றும், ஆனிரைக்காக எடுத்து வைத்த நீர்ப்பத்தரிலுள்ள நீரைப், புல்லிய தலையையுடைய மெல்லிய பிடி, தன் கன்றுடனே உண்ணக் களிறு, அப்பத்தரின் வாய்மூடிய விற்பொறியை முறித்து உண்பிக்கும் *[நற்.92:7]*. பெரிய உகிரையுடைய பிடி தின்னுதற்பொருட்டு, பட்டையைப் பிளந்து எடுத்துக்கொண்டபின், வெட்பாலையின் கிளைகள் நாரின்றி வெளுத்திருக்கும் *[நற்.107:2]*. கரிய நிறத்தையுடைய இளம்பிடி வருந்துமாறு, இடியேறு களிற்றின்மேல் பாய்ந்து, அதனைக் கொன்றொழித்தது *[நற்.114:11]*. சூல் முதிர்ந்த இளம்பிடி, அறியாமையால் தன் வயிற்றிலுள்ள சூல் அழிந்து புறம் போந்து விழுமாறு, மூங்கிலின் இலையில்லாத கொழுத்த முளையினை, விடியலில் சென்று மேயும் *[நற்.116:5]*. செவ்விய மலையருவியின் கண்ணே அமைந்த நீரில்லாத நீண்ட நெறியிடத்தில் மெல்லிய தலையையுடைய இளம்பிடியின் வருந்துபசியைப் போக்குமாறு, பெருங்களிறு, ஓமைமரத்தை முறித்து வளைவுபடுத்தியது *[நற்.137:6]*. பெருங்களிற்றைப், புலி தாக்குதலால், வருந்திய கரிய பிடி, தொகுதி கொண்ட முகில் முழங்குவதுபோல், பிளிறும் *[நற்.141:1]*. பாலை வழியில் இற்றி மரத்தின் நெடுவிழுது, வைகறைப் பொழுதிலே, மேல்காற்று வீசுந்தோறும், ஊசலைப்போல், அசைந்தாடிக் கீழே துயிலுகின்ற பிடியின் உடலை வருடும் *[நற்.162:11]*. காடுமுற்றும் வெப்பமடைந்த வறன்மிக்க கற்சுரத்தில், கல்லூற்று நீரைத், தனது கரிய சருச்சரையையுடைய நீண்ட துதிக்கையை நீட்டி முகந்துகொண்டு, பெருங்கையமைந்த களிற்றியானை, பிடியினெதிரே அதற்கு ஊட்டுமாறு ஓடும் *[நற்.186:3]*. தலைமையமைந்த களிற்றியானை, பெரிய வாயினையுடைய கன்றை மருங்கிலேயுடைய பிடியோடு கூடிச்செல்லும் *[நற்.194:3]*. புலியொடு பொருதலால் குருதி தோய்ந்து சிவந்த புலால் நாற்றம் வீசும் மருப்பின் அடியிலே முத்துக்கள் ஒலிக்க, வலி மிகுந்து வேங்கை மரத்தின் பருத்த அடியினை முறித்துக் கொண்டு, தன் கன்றுடனே இளம்பிடியைத் தழுவிய களிற்றியானை அவ்வேங்கை மரத்தின் பொன்போலும் பூக்களாகிய உணவுக் கவளத்தை அவற்றிற்கு ஊட்டும் *[நற்.202:4]*. பக்கமலைச் சோலையில் துயில்கின்ற பிடியின் மருங்கிலே முகில் தவழ்ந்து மறைத்தலால் அதனைக் காணப்பெறாது பெருங்களிறு பிளிறும் *[நற்.222:8]*. பிடியின் செவிபோன்றது, ஆம்பலின் பசிய இலை *[நற்.230:1]*. பசிமிக்க பிடி உதைத்துப், பட்டையைப் பொளிந்து, தின்றதால் சிவந்து

தோன்றும் ஓமையின் அடிமரம், புலியொடு பொருத யானையின் புண்மிக்க கால் போல, வெயிலில் விளங்கும் *[நற்.279:7]*. ஓமை மரத்தினிடத்தே வந்து தழையை ஒடித்துத் தின்ற களிற்றியானை, பிறிதோர் நெறியில்செல்லத் தொடங்கிய அளவில், அதன் குறிப்பினை வேறுபட உணர்ந்து, புல்லிய தலையையுடைய மெல்லிய பிடி, மலையின் பிளப்பிடமெல்லாம் எதிரொலியெழுமாறு புலம்பியது *[நற்.318:9]*. கரிய பிடியின் வளைந்த கைபோலும் வளைவமைந்தது, தினைக்கதிர் *[நற்.344:3]*. நெடிய மூங்கில்கள் ஓங்கிய நிழல்மிக்க பக்கமலையில் கடுஞ்சூலினையுடைய வலிய பிடி, கன்றீன்று வருந்திய நிலையில், அதன்பால் நிரம்பிய, பசிய ஈன்றணிமை யாலுண்டான பசிநோயைத் தீர்க்க வேண்டிக், களிப்பு மிக்குக், கரிய களிற்றியானை, தினைக் கதிர்களைக் கவரும் *[நற்.393:6]*. அருவி ஆரவாரிக்கும் பெரிய மூங்கில் மிக்க பக்க மலையிலே, காந்தள் மலர்வதும், வாழை வளர்வதுமாகிய அழகிய சாரலின் கண், பன்றி கிளைத்த நிலத்திலே வெளிப்பட்டு விளங்கும் பலவான அழகிய மணிகளின் ஒளிவிடும் விளக்கத்தில் கன்றீன்ற இளம்பிடி தன்னைக் களிறு புறங்காத்து நிற்பக், கன்றோடு தங்கியிருக்கும் *[நற்.399:6]*.

நெடிய புதர்களையுடைய கானத்திலே மெல்லிய பிடியீன்ற நடுங்குநடைக் கன்றினைக் கொள்ளுதற்குப், புலியேறு பலாமரத்தின் பழந்தொங்குகின்ற கொழுநிழலில் ஒளித்திருக்கும் *[ஐங்.216:2]*. வண்டுகள் உண்ணும்படி, மதமிக்கு ஒழுகப்பெற்ற வேழம், கரிய சருச்சரைகளையுடைய துறுகல்லைப் பிடியெனக் கருதித் தழுவும் *[ஐங்.239:2]*. பசுமையற்ற குன்றத்தின்கண், களிறு, பிடியைத் தழுவிப், பசிதன்னை வருத்தவும், தான் பிறபுலம் செல்லாமல் தங்கியிருந்தது *[ஐங்.305:1]*. முல்லை நிலத்தே பூந்தாதுக்களையுண்டு, வண்டுகள் ஒலிக்கின்ற அழகிய புதரின்கண், களிறுகள், மெல்லிய பிடிகளைத் தழுவின *[ஐங்.416:4]*.

காட்டிலே யானைக்கன்றுகள் இழிந்து, தாயும் தந்தையும் உண்ண வேண்டுமெனக் கருதாமல் கலக்கிய சிறிதளவு நீரைக், களிறு, முதற்கண் பிடியை ஊட்டிப், பின்பு தானும் உண்ணும் *[கலி.11:9]*. தன்னைச் சேர்ந்தோரிடத்திலிருந்து, 'நீங்க மாட்டேம்', என்றிருக்கும் தலைவனுடைய மலையின்கண், மடிந்திராத எழில்வேழம் தான் விரும்பிய பிடிக்குக் கடுஞ்சூலினால் உண்டான் வயவு நோய்க்கு மனம் பொருந்தி, இனிய கரும்பினை முறிக்கும் *[கலி.40:26]*. பிடியுடன் கூடி எங்கும் கலந்து பெய்த மழையினால் இருண்ட நள்ளிரவின் மின்னொளியிலே, பிடியுடன் வந்து, புன்செய் நிலத்தின்கண் மேயும் யானைகளின் அடியோசை கேட்ட கானவன், உயர்ந்த மலையில் ஆசினிப், பலாமரத்தின்மேல் இடப்பட்ட பரணிலேறிக், கடுவிசையுடைய கவண்கல்லை எறிந்தான் *[கலி.41:7]*. வெற்பின்கண், இரவில், மூங்கிற்கோலை நெல்லுடனே வளைத்துத் தின்னும் முழந்தாளையுடைய கரிய பிடி அம்மலையில் வாழைகள் செறிந்த இடத்தே புகுந்து, வருடைமான் குட்டி திரியும் அங்கே, ஞாயிறு தோன்றும் விடியற் காலத்தே, துயில் கொள்ளும் *[கலி.50:2]*. மலையிலே, அகன்ற பாறையிடத்தே, தான் விரும்புமாறு தன்னருகே இருக்கப்பெற்ற வேழம், தன் வலிமையினால் தனக்கு மாறாகிய பிடியைக் குத்தி அதன் நெற்றியைப் புண்ணாக்கும் *[கலி.53:2]*. தலைவன், தான்தொய்யிலெதிய தலைவியின் இளமுலைகளை இனியவாகத் தடவி, மதநீரையுடைய அழகிய வளைந்த கையினால் தான் விரும்பும் பிடியை அருள்செய்கின்ற மயக்கமுடைய யானைபோல், அவளது மெய்ம்முழுதினையும் தடவினான் *[கலி.54:13]*. தலைவியைக் கண்டு பிடிகள் துஞ்சுவனவற்றையொத்த பாறைகள் சுனையில் நீராடி, மாலை செல்வாம் என்றான் தலைவன் *[கலி.108:40]*.

கிளர்ச்சியையுடைய வையையில் நீராடுதற்கு அணிந்த அணிகளுடனே, பிடிகள், போரணிகளையுடைய களிற்றினம் சிறந்தாற்போல், நிரை நிரையாகச் சென்றன *[பரி.6:26]*. வையையில் புனலாடச் செல்லும் மகளிருள் சிலர், பிடி மீதேறிச் சென்றனர் *[பரி.10:29]*. மதுரை நகரமாந்தர், வையை நீரணி விழாவிற்கு, யானைகளின் மேலேறிச் செல்லும்போது, ஒரு வலிய களிறு, தனக்குப் பக்கத்தே வந்த மெல்லிய பிடியைக் கண்டு, காமத்தால் மயக்கமுற்று, மேலிருந்த மைந்தர் நடத்தவும் நடவாமல், மாடத்தின் அருகே நின்றது; நின்ற, அம்மெல்லிய பிடி தானும் அக்களிற்றின்மேல் சென்ற மனம் மயக்கமுறுத்த, மேலிருக்கும் மகளிரோடு நடை சுருங்கிச் சென்றது; சென்று, களிறு நின்ற அப்புலி முகமாடத்தின்மேல் பண்ணிவைக்கப்பட்டிருந்த வேங்கையைக் கண்டவளவிலே அதனை மெய்வேங்கை யென்றும் கரிமேல் பாயுமென்றும், கருதி, வெருவி, அம்முகிலையொத்தபிடி, அம்மகளிர் நடுங்கப், பாகர்க்கும் அடங்காமல் சிதைந்தது; அதன் சிதைவிற்கு ஆற்றாமல் பிளிறுகின்ற களிறு சிதையுமளவில், அதன் பாகர், அதனைப் புலிமுக மாடத்தினின்றும் வாங்கி பிடி சிதையாமல் அதனோடு அணைவித்தனர் *[பரி.10:42,43,47,51]*. வையை நீர் விழாவிற்குச் செல்லும் மகளிருள் சிலர் பிடிகளின் மேல் அன்னப்பெடைகளைப் போல் ஏறிச் செலுத்தினர் *[பரி.12:27]*. நாணுக்குறையில்லாத குலமகளொருத்தி, தனக்குச் சிறந்தவளாகிய கணவன், தன் தோள்நலத்தை உண்டபின், பரத்தையிற் பிரிந்தானென்று அவனோடு புலந்திருந்தவள், வையை நீர் விளையாட்டின்போது அப்புலவி தீர்ந்து புனல்வெள்ளத்திலே அவனோடு கரிய பிடியின் முதுகிலே ஏறினாள் *[பரி.12:47]*.

**2. கைப்பிடி.** அதியமானின் வேலினைக் கண்ட பகைவர் தம் கிடுகுப்படையை காம்புடனே பிடி-கைப்பிடி-செறித்தனர் *[புற.98:11]*. திண்ணிய பிடியுடைய வாளை மங்கையர் கச்சில் கட்டினர் *[முல்.46]*. தினைப்பனத்துச்சேணோன் பிடியினை கையிற்கொண்டு தீக்கொள்ளியை வீசி எறிவதுபோல் மின்

மழை பெய்தது [அக.73:15]. சோழன் தன் பகைவர் விண்ணுலகு எய்துமாறு உருவிய திண்ணிய பிடியினையுடைய வாளைப் பெற்றிருந்தான் [அக.338:17].

**3. குசை (கடிவாளம்).** பாண்டியன் நெடுஞ்செழியன் தங்கியிருந்த கூதிர்ப்பாசறைக்கண், மணிகள் இடப்பெற்ற பெரிய தாளினையுடைய பிடியோடு - குசையோடு (கடிவாளத்தோடு) - பக்கரையைக் களையாத குதிரைகள், தெருவிலே தம்மேல் வீசும் நீர்த்துளிகளை உதறின [நெடு.178]. பரத்தையிற்பிரிந்து மீண்ட தலைவன் தான் குதிரையேற்றம் புரிந்துவந்தானாகக் கூறக்கேட்ட தலைவி, 'நீ ஏறிய குதிரைதான், நூலாற் செய்யப்பட்ட, உத்தரியமாகிய திண்ணிய பிடியினையுடையது', என்று, அப்பரத்தையைக் குதிரையாகக் குறித்து மொழிந்தாள் [கலி.96:13].

**4. கைப்பிடியளவு.** கொல்லையில் விதைக்கப்பட்ட எள் காய்த்து இளங்காயாகிய தன்மை மாறிய கரிய காய்கள் பிடியின்கண்-கைப்பிடியளவில்-ஏழாக, நெய்கொண்டு விளைந்தன [மலை.105].

**5. பிடிபோன்றவள்.** தலைவியை உடன்கொண்டு போகும் தலைவனை இடைச்சுரத்துக் கண்டோர், 'சிறிய பிடிக்கு- பிடி போன்றவளுக்கு — துணைவனே', என்று, அவனை விளித்துப் பேசினர் [குறு.390:2]. 'காதலன் நயந்து பாராட்ட, அவனோடே கூடி, என் அன்பிற்குரிய மெல்லிய பிடி சென்ற சுரநெறிகள், ஞாயிறு காய்தலால் நீரற்றுக், குளங்கள் துகள்பட்ட வெம்மையோடு இன்னாதனவெனினும், அவளுக்கு இனியனவேயாக', என்று, மகட்போக்கிய தாய் விரும்பிக் கூறினாள் [ஐங்.தி.7].

**6. அகப்படுத்துதல்.** ஊரவர் கூறும் அலருக்கு வருந்தாது தங்குதலையுடைய தலைவனது மார்பின் தாரிடத்தே கையினால் அணைத்துக்கொண்டு தழுவிப், பிடியாலே- அகப்படுத்துதலாலே-மாட்சிமைப்பட்டு, அவனைக் கைக்கொண்டு நுகரும் பரத்தையின் கலவிப்போரை அவன் கண்டு வந்தானெனத், தலைவி, அவனிடத்தே ஊடிக் கூறினாள் [கலி.95:15].

**7. பிடித்தல்.** 'கழுத்திலே மணியைக் கட்டிக்,கையால் பிடி- பிடித்தல்-அமைந்த வாய்க்கயிற்றோடே யான் கைப்பிற்கொண்டது மடன்மாவன்று; ஏறுவார் ஏறும் குதிரையாம்', என, மடலேற்றம் கூறும் தலைவன் மொழிந்தான் [கலி.140:6].

**பிண்டம்-திரள்.** உணவால் உளதாகிய பிண்டம்-திரள் (உடம்பு)-உணவையே முதலாகவுடையது [புற.18:20]. வடிவில்லாத பிண்டம் (தசைத்திரள்) உள்பட, உலகத்தே உயிர்வாழ்வார்க்கு எட்டு வகையில் பெரிய எச்சமெனச் சொல்லப்பட்டவை யெல்லாம் பேதைமையுடைய பிறப்பாவதல்லது அவற்றால் பயனில்லை [புற.28:1]. வேந்தன் அறிவால் மெல்லியனாகித் தரமறியாத ஆரவாரச் சுற்றத்துடன் கூடி அன்புகெட வாங்குகின்ற பிண்டத்தை (வரிப்பொருள்திரளை) விரும்புவானாயின், யானை புகுந்த புலம்போல் உலகமும் கெடும்; அவன் தானும் முழுமையுற உண்ணப்பெறான் [புற.184:9]. 'உலகத்தார் யாவரும் புகும்படித்திறந்த வாயிலையுடைய மனையில் பலரோடும் கூடியுண்டலை விரும்பியோன், பிடியின் அடி போன்ற சிறிய இடத்தினை மெழுகித் தன்னை விரும்பும் காதலி புல்லின்மேல் இட்டுப் படைத்த சிறிய பிண்டத்தை (உணவுத்திரளை) எவ்வாறுண்டானோ', என்று, மாண்டோர்க்குரிய படையலிடப்பெற்ற வேள்எவ்வியைக் குறித்து, வெள்ளெருக்கிலையார் இரங்கிப் பாடினார் [புற.234:4]. கைம்மை நோன்பினால் வருந்தும் பெண்டிர் நறுநெய் தீண்டாமல், இலையிடையே பயின்றதும், கையால் பிழிந்து வைக்கப்பட்டதுமான பிண்டத்தை (நீர்ச் சோற்றுத்திரளை) வெள்ளிய எள்ளரைத்த விழுதுடனும் புளிகட்டி அடப்பட்ட வேளைக்கீரையுடனும் உணவாகக் கொள்வர் [புற.246:6]. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பகைவரைக் கொன்றழித்த பாசறையிலே, அப்பகைவரின் அரியப்பட்ட தலைகளால் கூட்டப்பட்ட அடுப்பின்கண், கூவிள விறகினையெரித்து ஆக்கிய கூழ்க்கொதியலை, மண்டையோடாகிய அகப்பையொடு பொருந்திய வன்னிமரத் துடுப்பினால், ஈனாவேண்மாளாகிய பேய்மகள் இடப்பக்கமாய்த் துழாவி. அடப்பட்டதும், யானைகளும், குதிரைகளுமாகிய மாக்கள் மறிந்து கிடப்பதுமாகிய பிண்டத்தை (ஊனுணவுத்திரளை) பேய்மடையன் ஏந்தி வழங்குமாறு களவேள்வி செய்தான் [புற.372:9].

முரசுறை கடவுளை வழிபடும் பொருட்டு அவ்வழிபாட்டிற்கு உரியோனாகிய உயர்ந்தோன், பேய்மகள் கைக்ளைப் புடைத்து நடுங்குமாறு, பெறுதற்கரிய பிண்டத்தை (உணவுத்திரளை) ஏந்தி வழிபட்ட பின், அதனையும், எறும்பும் மொய்க்காத வியத்தகு மரபினையுடைய குருதி கலந்த கள்ளினையுடைய பலியினையும் காக்கைகளோடு, பருந்துகள் இருந்துண்ணும் [பதி.30:35].

பிண்டமுற்ற நெல்லினையுடையது, உறந்தை [அக.6:5]. பிண்டமுற்ற நெல்லினையுடையது, அள்ளூர் [அக.46:14]. பிண்டர் போன்றது, சேம்பின் கொழுங்கிழங்கு [அக.178:5].

மலையையொக்கும் அடுக்கிய நிலைகளமைந்த நெடுங்கூட்டிலே, பிண்டமுற நிரம்பிய நெல்லினையுடைய வீட்டைக் கைவிட்டுத், தலைவி, தலைவனுக்குத் துணையாய்க், காட்டு வழியிலே, அவனுடன் போனாள் [நற்.26:4].

**2. கரு.** சூல் முதிர்ந்த மெல்லிய பிடி, தன் வயிற்றிலுள்ள பிண்டம் - கரு - அழிந்து புறம்போந்து விழுமாறு, அறியாமையுற்று, மூங்கிலின் கொழுமுளையை, விடியற்காலத்தே மேயும் [நற்.116:3].

**பிண்டன்** - ஒரு குறுநில மன்னன். தித்தன் வெளியனின் கானலம் பெருந்துறை என்னும் பட்டினத்தே பொன்கொண்டு வரும் நல்ல மரக்கலம் சிதையுமாறு தாக்குகின்ற இறாமீன் தொகுதி போன்ற, மிக்க பகையைச் செய்யும், வலிமை மிக்க பிண்டனது போர் செய்யும் மாறுபாடு கெட, வென்ற வெற்றி வேலையுடையவன், பாரத்துத் தலைவனான நன்னன் *[அக.152:9]*.

**பிண்டி-அசோகு**. சூரரமகளிர் தம் காதிலே தம்மிலொப்புமை பொருந்துமாறு இட்டு நிறைந்த பிண்டியின்-அசோகின்-ஒள்ளிய தளிர் மார்பிடத்தே அசையாநிற்க, முருகனுடைய கோழிக்கொடியை வாழ்த்தி, மலையிடமெல்லாம் ஆரவாரிக்கப் பாடியாடுவர் *[முரு.31]*. கொம்புகள் தம்மில் கலந்தனவும், சுரும்புகள் ஒலித்துச் சூழப்பெற்றனவும், செந்தீப்போலும் ஒள்ளிய பூக்களையுடையனவுமான, பிண்டி மரங்கள் மலர்ந்துள்ள பொழிலிடத்தே, அந்தி ஞாயிற்றின் இளவெயில் தோன்றினாலொத்த, பொன்னொளி சூழ்ந்து விளங்கும், பேரணிகலன்களால் பொலிவுற்றவர், பாண்டியன் நெடுஞ்செழியனின் காதன் மகளிர் *[மது.701]*. பல பூக்களையுடைய பிண்டி உள்ளிட்ட மலர்கள் பலவற்றைத் தலைவியும், பறித்துக் குவித்தனர் *[குறி.88]*. தலைவன் தனது திரண்ட தோளிலே வீழ்ந்தலைக்கும்படிச் சிவந்த நெருப்புப் போலும் ஒள்ளிய பூக்களையுடைய பிண்டியின் அழகிய தளிரை ஒரு காதிலே செருகி, வேட்டைமேல் வந்து, தலைவியைக் கண்டனன் *[குறி.119]*.

வையை வெள்ளத்தில் மகளிர் தைந்நீராடும்பொழுது ஒருத்தி குழைந்த பிண்டியின் மெல்லிய தளிரைத் தன் காதின்கண் செருகிக் கொண்டாளாக, அத்தளிரின் ஒளியால், மற்றொருத்தியின் நீலமலர், இளவெயிலின் ஒளியைப் பெற்றது *[பரி.11:95]*. வையை நீர் விழவின்கண், ஒருத்தி, தன் காதிலே சுடு பொன்னாலமைந்த குழைபோல் தொங்கும்படி, சிவந்த பிண்டிப் புதுமலரைச் செருகிக், கொண்டு கட்டுவிட்ட மலரையுடைய பூங்கொடிபோல் அசைந்து, முன்கையினால் தன் கூந்தலிற் கண்ணியை அழகுறத் திருத்தி, அருகிருக்கும் கணவனுக்குக் குறிப்புக் காட்டினாள் *[பரி.12:88]*. திருமால் அமர்ந்த இருந்தையூரின் ஒரு பக்கத்தே, வேங்கை, மராம், மகிழம், அரும்புகள் மலர்ந்த பிண்டி ஆகிய மரங்கள் ஓங்கி வளர்ந்த மணி நிறம் கொண்ட மலை உள்ளது *[பரி.தி.1:8]*.

**பிண-பெண்பால்**. குளிர்ந்த சோலையில் இரவுப் பொழுதிலே ஈன்றணிமையால் வேட்கையினையுடைய பிண-பெண்புலி-பசியுற்றதாக அதனிடத்துக் காதலையுடைய மறப்புலி, ஏந்து கோட்டினையுடைய களிற்றியானையைக் கொன்று முழங்கும் *[அக.112:5]*. மரங்கள் நெருங்கிய காட்டின்கண், ஈன்று காவற்பட்ட வேட்கையினையுடைய பிண (புலி) பசியுற்றதாக, அதற்கு இளமானாகிய உணவைத்தர, நடு இரவிலே, இருண்ட குகைகளையுடைய பக்கமலையில், இரையை விரும்பிப் புறப்பட்ட பெரிய ஆண்புலி, ஆமான் அல்றுமாறு வளைந்த கோட்டினையுடைய தலைமை பொருந்திய ஆமானேற்றினை வலப்புறம் வீழக் கொன்று வீழ்த்திப், பாறைகள் குருதியால் சிவந்திட, அதனை இழுத்துச் செல்லும் *[அக.238:2]*. வேங்கை மலர்களால் தொடுக்கப்பட்ட மாலைபோன்ற நிறமுடைய குட்டிகளையீன்ற வேட்கையினையுடைய கரிய பிண (புலி) பசியுற்றதாக, அதனிடத்துக் காதலையுடைய ஆண்புலி, நடுஇரவிலே, எதிர்ப்பட்ட களிற்றியானையை, அதன் புள்ளிகளமைந்த முகம் சிதையத் தாக்கிக்கொன்று, இடிபோல் முழங்கும் *[நற்.383:3]*.

**பிணவு** காண்க.

**பிணம்-சவம்**. முதுகுடி முதியோள் கைக்கொண்ட வாளால் செங்களத்தே மிகைபடக் கிடந்த பிணம்-சவம்-பலவற்றையும் புரட்டிப் பார்த்து, அங்கே சிதைந்து வேறுவேறாகிய, மாண்ட மகன் கிடக்கையைக் கண்டு, அவனை ஈன்ற பொழுதினும் பெரிதுவந்தாள் *[புற.278:6]*. மூதிலாளன் போர்க்களத்தே தடுத்தற்கரிய பகைப்படையைத் தடுத்து, முன்னின்று வெட்டி வீழ்த்திய யானையாகிய கரிய பிணத்தின் எயிறுகட்கிடையே புகுத்தித், தன் திரிந்த வாளினைத் திருத்தினான் *[புற.284:6]*. மகட்கொடை வேண்டி வந்த வேந்தர், அவளைப் பெறாமை காரணமாகப், பெரும்போர் புரிதலால், மாய்ந்த மறவர்தம் பிணம், உயர்ந்த நெற்கதிர்ப் போராகவும், அவற்றை அழித்துழக்கும் களிறுகளே எருதுகளாகவும் அமைய, அவள் தன்னைமார் நாள்தோறும் அதரிதிரித்தனர் *[புற.342:13]*. புறங்காட்டிலே வேறுபட்ட குரல்களையுடைய வெவ்வாய்க் கூகைகளுடன் கூடிப் பிணந்தின்னும் குறுநரிகள் நிணந்திகழ் பற்களையுடையனவாய் இருக்க, பிணத்தைத் தழுவிப் பற்றிக்கொண்டு, பேய் மகளிர், வெள்ளிய ஊனைத் தின்றமையால், புலால் நாறும் உடம்பினையுடையராய்க், களர் நிலத்தே கால்பெயர்த்தாடி, ஈமத்தீயாகிய விளக்கொளியில் கண்டார்க்கு அச்சம் வரும்படி பெயர்வர் *[புற.359:3,4]*. இப்பெரிய இடத்தையுடைய மாநிலத்தை இடைபிறர்க்கின்றித் தாமேயாண்ட காப்பமைந்த காவலர் இறுதியில் சுடுபிணக்காடே பதியாகப் போய்த், தத்தம் நாடுகளைப் பிறர் கொள்ளுமாறு சென்று மாய்ந்தவர், கடலலைகள் கொழித்தொதுக்கும் மணலினும் பலராவர் *[புற.363:4]*. பிடித்தெறியும் வெள்ளிய வேலையும், கணைய மரத்தையும் விதைகளாகக் தூவிப், பகைப்படை மறவரின் தலைகளை வீழ்த்தி, அச்சமுண்டாகத்தக்கதும், பேய்மகள் பற்றியெடுத்ததுமான பிணமாகிய பயிர்களின் விளக்கமிக்க போர்களை நரிகளோடு, பேய்கள் களம் படுக்கவும், பூதம் காக்கவும், சேரமான் கடலோட்டிய வேல்கெழுகுட்டுவன், களத்தே தங்கியிருந்தான் *[புற.369:15]*. போர்க்களத்தில் கொன்று குவித்த பகைமறவரின் படுபிணமாகிய பலபோர்களையும் அழித்துப், பரப்பிக், களிறுகளே எருதுகளாக, வாளாகிய மடலால் ஒச்சி, அதரி

திரித்து அமர்ந்திருந்தான், சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னி *[புற.370:15]*.

பகைவரின் தூசிப்படையிலிருந்து யானைகள், குதிரைகள் ஆகிய விலங்குகளும், மறவரும் பட்டு வீழ்ந்த பிணம் பலவற்றையும் உண்ணுதற்குப், பெடையுடன் கூடிய பருந்துச் சேவல், புல்லூற்றொடு சேர்ந்து கீழிறங்குமாறு களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் பலபோர்களைச் செய்வான் *[பதி.36:7]*. பிணம் உயர்ந்து தோன்றும் போர்க்களத்தே, வெற்றிபெற்ற வேந்தர் துணங்கையாடினர் *[பதி45:12]*. மோகூர் மன்னனின் மறவரைக் கொன்று, அவருடம்பினின்றும் ஒழுகுகின்ற குருதி நிலத்தின்கண் பரந்தோடி, மழைநாள் புனலைப்போல், பள்ளங்களில் பாயவும், இறந்துபட்ட அவர்தம் பிணம் உயர்ந்து தோன்றவும், போருடற்றி வென்றான், கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் *[பதி.49:13]*. வெட்டி வீழ்த்தப்பட்ட பகை மறவர் பிணம் பலவற்றையும் இடறிக், குதிரைகள் சிவந்த கறையேறிய குளம்பினவாயின *[பதி.65:1]*. செல்வக்கடுங்கோ வாழியாதன் தன் பகைவரது போரையழித்துப் படை மறவரைக்கொன்று பிணம் நெருங்கிய போர்க்களப் பரப்பிலே, அப்பகைவரால் திறையாகத் தரப்பட்ட களிறுகளோடு, நெல்லையும் இரவலர்க்கு வழங்குவான் *[பதி.66:6]*. போரிலே பட்டு மாய்கின்ற மறவரின் பிணம் உயர்ந்து தோன்றும்படி பகைவரைக் கொன்று, பின் அவரது நாட்டிலுள்ள கெடுதியுற்ற குடிகளை வாழ்வித்த வெற்றிவேந்தன், செல்வக் கடுங்கோ வாழியாதன் *[பதி.69:9]*. எதிர்ப்பட்ட படை தோற்றோடவும், அரசர் போர்க்களத்தே இறக்கவும், கொன்று, கைவீசி, வென்றாடும் துணங்கைக் கூத்தினையாடப் பகைவரது பிணத்தின்மேல் உருண்டுசெல்லும் சக்கரம் அமைந்தவை, தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறையின் தேர்கள் *[பதி.77:5]*.

அழகிய வளர்பிறையைத் தன்மேலே சூடிக்கொண்டு, செக்கர் வானமாகிய அந்திக்காலத்தே உலாவுகின்ற முகிலைப்போல், வெண்கோட்டினையுடைய கரிய யானையின் பிணம் வர, அதனைக் குருதியாறு இழுத்துப்போகும்படி பொருது (கவுரவர்) நூற்றுவரும் களத்தே மடிய (பாண்டவர்) ஐவரும் பெரும்போரை வென்றனர் *[பெரு.414]*. போரிலே எதிர்ப்பட்ட மறவரைக் குத்திக் கொன்றெடுத்த பிணத்தைக் கொண்ட கொம்புகளையுடைய களிறுகள் தாமும் பட்டொழிய, அவற்றின் நிணத்தைப் பேய்மகளிர் உண்டு துணங்கை யாடினர் *[மது.24]*.

ஆண் பேய்களுடனே. பிணத்தைத் தின்னும் பேய்மகள் நெருங்கும்படியாகத் திருமாவளவன் பகைவரூர்களைப் பாழ் செய்தான் *[பட்.260]*.

ஆறலைகள்வர், வழிப்போகும் ஆட்களைக் கொன்று அவர்களை இட்டு மூடிய கற்குவியல்களில் கிடக்கும் இறந்துபட்ட பிணத்தின் பசுந்தலையைத் தோண்டும் பருந்துச் சேவல், கண்மணியைப் பெயர்த்துத், தன் பேடையின்,வாயிலே சொரியும் *[அக.215:13]*. பாலை வழிகளில் எயின்குடி மறவர் வில்லினால் எய்ய இறந்துபட்டோராகிய வழிப்போக்கரது பிணத்தைக் காக்கைக் கூட்டம் கவர்ந்துண்ணும் *[அக.319:5]*. ஆறலைகள்வர் வழிச் செல்வோரின் பின்னேயிருந்து இரக்கமுறாது அவரைக் கொன்று வீழ்த்திய பாலை நிலத்துக் கவர்த்த வழிகளில் கிடக்கும் பிணத்தின் பசிய நிணத்தைக் காக்கை கவரும் *[அக.327:16]*.

பிணன் காண்க.

**பிணர்** - சருச்சரை. பலவாகிய பிணர் - சருச்சரை - அமைந்தது, யானையின் தடக்கை *[புற.371:19]*. கரிய பிணரமைந்த தடக்கையினையுடையது, யானை *[புற.387:10]*. பிணர் பொருந்திய கொம்பினையுடையது, யானை *[புற.387:29]*.

பேய்மகள், பிணரமைந்த வயிற்றினையுடையவள் *[முரு.50]*. கரிய பிணரினை உடைய தனது பெரிய கையைச் சுருட்டி, நிலத்தே எறிந்து கூற்றுவனைப் போலக் களிறு தலைவியின் கூட்டத்தினர் மேல் வந்தது *[குறி.163]*. பிணரையுடையது, பனைமரம் *[பட்.89]*. கரிய பிணரமைந்த கழுத்தினையுடையது, காட்டுப்பன்றி *[மலை.246]*.

கரிய பிணரையுடையது, துறுகல் *[அக.57:7]*. ஆண் யானைகளின் தலைவனாகிய யானை, ஆளியினைக் கண்டஞ்சித் தனது கரிய பிணரினை உடைய கையினாலே, பாதுகாவலாகத் தனது பிடியினைத் தழுவும் *[அக.78:5]*. பிணர் பொருந்திய அடியினையுடையது தாழை *[அக.130:5]*. பிணர் மிகுந்த பெருங்கையினையுடையது, யானை, *[அக.207:10]*. பிணர் பொருந்திய வயிற்றினையுடையது, சங்கு *[அக.246:1]*. நல்லேற்றின் கழுத்துபிணர் பொருந்தியது *[அக.253:14]*. பிணர் படுமாறு மிகுதியும் கொய்த மயிரமைந்த பிடரியினை உடையது, குதிரை *[அக.4006:6]*.

புழுதி நீங்கக் கழுவப்பட்ட யானை போலப் பெரிய பிணரினையுடைய துறுகல் மழை நீரால் கழுவப்பட்டது *[குறு.13:2]*. இறாமீனின் புறம் போலும் பிணர் பட்ட அடியினையுடையது, தாழை *[நற்.19:1]*. முற்றாத இளமஞ்சட்கிழங்கின் பசிய புறத்தைப் போலச் சுற்றியிருக்கின்ற பிணர்களையுடையன, இறாமீன்கள் *[நற்.101:2]*. கிள்ளி வளவன், பகைவருடைய படைகள் பிணங்களாக வீழுமாறு கொல்லும் பிணரினையுடைய நீண்ட கைகள் பொருந்திய யானைப் படையைப் பெற்றிருந்தான் *[நற்.141:8]*. கல்லின்கண்ணே ஊறுகின்ற நீரினைத் தனது பெரிய பிணரினையுடைய துதிக்கையினால் முகந்து கொண்டு களிறு பிடியிடம் ஓடும் *[நற்.186:2]*. பிணர்பட்ட பெரிய அடியையுடையது, தாழை *[நற்.235:1]*. பிணர் பொருந்திய பிடரியையுடையது, எருமைக்கடா *[நற்.330:1]*. பன்றியின் கழுத்து, பிணருடையது *[நற்.336:1]*.

களிறு காமமயக்கத்தாலே கரிய பிணரினையுடைய குண்டுக் கல்லைப் பிடியென்று கருதித் தழுவும் *[ஐங்.239:2]*. ஆறலைகள்வர்

அம்பெய்தலால் இறந்தோராகிய, வழிப்போவார்க்கு நடப்பட்ட எழுத்துடைய நடுகல் போன்ற சிறந்த பிணர் பொருந்திய பெரிய கையினையுடையது யானை *[ஐங்.352:2]*.

பிணர் பொருந்திய முகிழையுடையது, பனையின் பசுங்குரும்பை *[கலி.83:8]*. போரை விரும்பும் ஏற்றினது பிணர் பொருந்திய கழுத்தின்கண் பாய்ந்து அதனைத் தழுவினான், ஆயர் மகன் *[கலி.103:34]*. பெரும்புகழ் பெற்ற கணிச்சிப் படையேந்தியோனது (சிவபெருமானது) நீலமணிபோலும் திருமிடற்றின் அழகு போலக், கரிய பிணரையுடைய கழுத்தமைந்தது, குரால் நிறப்பசு *[கலி.105:14]*.

அறுபட்ட பிணரையுடைய கொம்பினால் நீரை வீசி மகளிர் வையைப் புனலாடினர் *[பரி.11:57]*.

**பிணவல்** - பெண்பால். மலைமுழைஞ்சினிடத்தே ஈன்று காவற்பட்ட பிணவு பசியுற்றதாக அதற்கு உணவு தேடிப் புறப்பட்ட செந்நாயேற்றை, எதிர்ப்பட்ட ஆண்பன்றியைத், தாக்க, அதற்கஞ்சியோடும் பன்றிப் பிணவல் - பெண்பால் - மோதியதனால் ஈந்தின் செங்காய்கள் உதிர்ந்தன *[அக.21:19]*. தொங்கும் முலையினையுடைய பிணவல் தன் குட்டிகளையணைத்துக் கொண்டு சுற்றத்துடனே பெயர்ந்து போதற்குத் துணையாகத் தறுகண்மிக்க ஆண்பன்றி, வேட்டை நாயைக் கடிந்து விலக்கி, வேட்டுவரையும் நெருங்காமல் தடுத்துக், காட்டினின்றும் வெளிவந்து, அரிய புழையாகிய முடுக்கின்கண் பின்னும் வேட்டத்திற்கு வரும் ஆட்களை எதிர்நோக்கி நின்றது *[அக.248:4]*.

பிண, பிணவு காண்க.

**பிணவு** - பெண்பால். ஈந்திலையால் வேயப்பட்ட குடிலில், மகவீன்றபிணவு - பெண்பால் (எயிற்றி) - மான் தோலாகிய படுக்கையிலே, அம்மகவோடே முடங்கிக்கிடக்க, அவளையொழிந்த எயிற்றியர், போய்ப் பாறைகளால் நிலத்தையகழ்ந்து, அங்கே, எறும்புகளால் சேர்த்து வைக்கப் பெற்ற புல்லரிசியை வாரியெடுத்து வருவர் *[பெரு.90]*. கள் சமைக்கும் மகளிர் முன்றிலின்கண், வட்டில் கழுவினமையால், வடிந்து நிரம்பிய நீர்ச்சேற்றிலே படிந்து பூசிக்கொண்ட, கரிய குட்டிகள் சூழப்பெற்ற, பல மயிர்களையுடைய பிணவொடு, புணர்ச்சிக்கருத்தினால் போகாமல், நெல்லின் மாவாகிய உணவைத் தின்று வளர்ந்த ஆண் பன்றியின் கொழுநிணத்தைத், தொண்டைமான் இளந்திரையனின் பட்டினத்தே தங்குவோர் பெறுவர் *[பெரு.342]*. நல்லெருதுகள் உழுத, விருப்பம் நிறைந்த, விளைவயல்களிலெல்லாம் பல மயிரினையுடைய பிணவொடு, ஆண்பன்றி ஓடித்திரியுமாறு, தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனின் பகைவர் நாடுகள், அவனால் பாழ்படுத்தப்பட்டன *[மது.174]*.

நன்னனது நாட்டில் கூத்தர் சென்று தங்கின் பிணவு நாய் கடித்துக் கொணர்ந்த உடும்பின் துண்டங்களோடு பிற ஊன்களையும் உணவாகப் பெறுகுவர் *[மலை.177]*.

மலை முழைஞ்சில் ஈன்று இளைப்பட்ட ஈன்றணிமையுடைய பிணவு பசித்தாக, அதற்கு உணவு தேடிச் சென்ற செந்நாய் ஏற்றை எதிர் வந்த ஆண் பன்றியைத் தாக்கியது *[அக.21:17]*. செந்நாய் பசி வருத்தமுடைய தன்பிணவோடு சுரநெறியில் மறவர் அம்பெய்தலால் மாய்ந்தவனின் பெயரும் பீடுமாகிய எழுத்துக்களையுடைய நடுகல்லின் இன்னிழற்கண் தங்கியிருக்கும் *[அக.53:6]*. அசைகின்ற மூங்கில் ஒலிக்கும் பக்கமலையில், தன்னுயிரோடு, கருவிலிருக்கும் குட்டியின் உயிருமாகிய ஈருயிரையுமுடைய பிணவின் வயாநோயுடன் கூடிய பசியைக் களைதற்குக் ஆண்பன்றியைக் கொன்று வீழ்த்திய பெருஞ்சினப் புலியேறு நல்லரா உமிழ்ந்து வைத்த மணியொளி விளக்கிலே அப்பன்றியை இழுத்துச் செல்லும் *[அக.72:12]*. குன்றின் முழைஞ்சில் மூன்று குட்டிகளை ஒருங்கு ஈன்ற பிணவு பசியுற்றதாக அதற்கு உணவு தேடும் ஆண்புலி ஆண்மானின் குரலை உற்றுக் கேட்கும் *[அக.147:5]*. வானளாவிய மலையின் சாரலாகிய வேனில் நீடிய சுரநெறியிலே, இருள் துணிக்கப்பட்டு வைத்தாற்போன்ற திரண்ட மயிரையுடைய குட்டியொடும், தோலாய்த் திரங்கிய முலையினையுடைய பிணவொடும், கரடியேறு இன்புற்றி ருக்கும் *[அக.201:18]*. காட்டின்கண் பிளவு வாயினை யுடைய பிணவின் மிகு பசியைப் பொறாமல், புலியேறு அவ்வழியே பன்றி வருவதனை எதிர்பார்த்திருக்கும் *[அக.277:6]*. காட்டு வழியிலே கூரிய பற்களையுடையதும், ஊனுண்ணுதலில் விருப்பமுடையதுமான பிணவினது மிக்க பசியைக் களைதற்குச், செந்நாயேறு, பிணைமான் அஞ்சியலறுமாறு, கலைமானின் தொடையைக் கவ்வித் துணிக்கும் *[அக.285:4]*. சேம்பின் கொழுமடலில் அமைந்த அகன்ற இலையுடன் கூடிய பாசிபடர்ந்த நீர்ப்பரப்பின்கண், குட்டிகளுடன் தங்கியிருந்த பிணவின் பசிவருத்தத்தைக் களைதற்குக் காலைப் பொழுதிலே இரைகொண்டு வர எழுந்த நீர்நாய், வாளைமீனைக் கவ்வி, அதனோடு போரிட்டமையால், நீர்த்துறை கலக்கமுற்றது *[அக.336:3]*. வளைந்த முள்ளினையுடைய ஈங்கைச் செடி, சூரலுடன் கூடி, வளர்ந்து செறிந்துள்ள குறுங்காட்டின்கண், சூல் வேட்கையொடு தங்கியிருந்த பிணவின் பசிவருத்தத்தைப் போக்குதற்குக், களிற்றியானையை வலப்பக்கத்தே வீழுமாறு கொன்று, பாறைகள் குருதியால் சிவக்கும்படி வாங்கியிழுத்து, மூரி நிமிர்ந்த, புலால் நாற்றமுடைய, புலி, புல்லின்மேல் கிடந்து புரளும் *[அக.357:3]*. யானை பாய்ந்து குத்தியதால் புண்பட்ட ஆண்புலி கற்குகையில் ஒடுங்கியிருக்க செம்முருக்க அரும்புபோன்ற கூரிய நகத்தையுடைய வலிய பிணவு அதனைக் காவல் செய்தது *[அக.362:5]*. ஊனுணவை விரும்பிய பிணவின் பசிவருத்தத்தைக் களைய விரும்பி வெருகின் ஏற்றை, காட்டரண்களின் சார்பில், அழகிய குடிகளையுடைய

சிற்றூரின்கண், மேட்டு நிலத்தில், நின்ற வரகுக் கூட்டின் ஒரு பக்கத்தேயிருந்து, அவ்வழி வரும் கோழிச்சேவலைப் பிடிக்கப் பார்த்திருக்கும் [அக.367:9].

பாலைநிலத்தில் நிற்க நிழல் பெறாது குட்டிகளை ஈன்ற, பிணவு பசித்தாக, அதற்கு உணவு தேடி மாலையில் அவ்வழி வருவாரைக் கொல்ல ஆண்புலி எதிர்பார்க்கும் [நற்.29:3]. காட்டிலே களிறு கழித்துச் சென்ற நீரல்லாத ஈரத்திலே தன் வயிற்றைப் பொருத்தியவாறு பசியால் வருந்தி முடங்கிக் கிடந்த செந்நாயை விடுத்து வேட்டை மேற்சென்ற ஆண் செந்நாய் அப்பிணவை நினைந்திரங்கும் [நற்.103:8]. பிளந்த வாயினையுடைய பிணவுப்புலி இரைதேடி இயங்கும் துன்பமிக்க வழியிலே தலைவன் இரவுக்குறிக்கு வருவான் [நற்.144:6]. மலைமுழைஞ்சிலே தங்கிய பெரிய நகங்களையுடைய பிணவின் ஈன்றணிமையால் உண்டான நோயும் பசியும் தீரப் புலியேற்றை, மறவர் மராமரத்தின் அடிப்பக்கத்தே மறைந்திருப்பக் கண்டும் அஞ்சாது சினமிகக் கொண்டு களிற்றின் முகத்திற் பாயும் [நற்.148:7]. மலை முழஞ்சிலே தங்கியிருந்ததும், ஊன் தின்னும் விருப்பமுடையதுமான பிணவின் அஞ்சத்தக்க பசியைக் களைதற்குக் கடுங்கண்ணையுடைய வலிய புலி, ஆட்கள் இயங்கும் வழியையடுத்த அரிய புழையிலே மறைந்து பார்த்திருக்கும் [நற்.322:5]. மலைமுழைஞ்சிலே குட்டிகளையீன்ற பிணவினை அவ்விடத்தே தங்கவிட்டு வந்த கொலைத்தொழில் வல்ல புலி, இரையை விரும்பி, மலையடிச் சிறுநெறியில் திரியும் [நற்.332:6]. ஆண்பன்றி, தோலாய் வற்றிய முலைகளையுடைய பிணவொடு வந்து, தினைக்கதிரை மிகவும் கவர்தலால், கானவன், மலைவழியின் அரும்புழையில் பதுங்கியிருந்து, வெண்கோட்டினையுடைய அப்பன்றியேற்றை வில்லினால் எய்து, வீழ்த்தி, எடுத்துப்போயினன் [நற்.336:1].

கூரிய பற்களையுடைய செந்நாய், வயவு நோயுற்ற பிணவின் பசியைத் தீர்த்தற்குக் கள்ளியங்கடத்திடையே எதிர்ப்படுதற்குரிய பன்றியின் வரவினைப் பார்த்திருக்கும் [ஐங்.323:1]. பிணவைப் புணர்ந்த செந்நாயேற்றை அந்நினைவோடே சென்றமையின் எதிர்வரும் மறியுடை மான்பிணையைத் தாக்கவில்லை [ஐங்.354:1].

வையைப் புனலில் ஆடும் பொருட்டு, மதுரை நகர மகளிரிற் சிலர், வேழப்பிணவின் (பிடியானையின்) மேல் ஏறிப்புறப்பட்டனர் [பரி.10:15].

பிணவல், பிணா காண்க.

**பிணன்** - சவம். போர்க்களத்தின்கண் பட்டோரது பிணன் - சவம் - உருவழியுமாறு அக்களத்தை உழக்கிச் செல்லுதலால், அதியமான் நெடுமானஞ்சியின் குதிரைகள் குருதிக் கறை பொருந்திய குளம்புடையவாயின் [புற.98:5]. போர்க்களத்தில் தலைகள் குறைக்கப்பட்ட பிணன் பலவுட தன்னெதிரே குவிய, அவ்வுடற்குவையாகிய போரையழித்துப், பரப்பி, யானைகளாகிய எருதுகளால், வாளாகிய பனைமடல் கொண்டு, அதரிதிரித்தான், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் [புற.371:14].

போர்க்களத்திலே தாம் கொன்ற பிணன் பலவற்றின் தலைகளைக் காலாலே இடறிச் சிவந்த பெரிய நகங்கள் அமைந்த யானையின் கால்கள், நிணனுண்டு சிரித்த பேய்மகளின் எயிறுகளின் தோற்றத்தை ஒக்கும் [சிறு.199].

ஆறலைகள்வர் கொன்று வழியிலேயே விடுத்துச் சென்ற புதியோரின் கொலையுண்ட பிணனாகிய குமைந்த முடையினருகே சென்று தொட்டுத் தின்பதற்கின்றி முதுகழுகு இறகினைப் புடைத்தது [புற.329:2].

பிணம் காண்க.

**பிணா** - பெண். 'குறவர் குலப்பிணா - பெண் - ஆகிய (வள்ளியை) கொடியை மணந்தோய்', என்று, செவ்வேள் விளிக்கப்பெறுவர் [பரி.19:95].

**பிணி** - 1. கட்டு. கயிற்றால் பிணி - கட்டு - செய்த கவிழ்ந்த மணியையணிந்த மருங்கினையுடைய பெருங்கையானையின் பிடர்த்தலையிலேயிருந்து கருங்கையொள்வாட் பெரும்பெயர் வழுதி போர்த்தொழில் புரிவான் [புற.3:10]. வார் பொருந்திய வலித்துப் பிணி செய்யப்பெற்ற முழவினையுடையவள் பாடினி [புற.15:23]. பகைவர்தம் பிணியுறு முரசத்தை கொண்டதனால் நெடுஞ்செழியனது வேல் சிதைத்தல் உய்ந்தது [புற.25:7]. பகைவர் அழிந்தமையின் திண்பிணி முரசம் முழங்க இனிப் போர் செய்ய வேண்டுவதில்லை என அதியமான பொருது புண்பட்டு நின்றவனைக்கண்டு ஔவையார் பாடினார் [புற.93:1]. அதியமானின் களிறுகள், கணைய மரத்தால் தடுக்கப்பட்ட கதவைப் பொருது பகைவரின் அரணையழித்தலால் பருத்த பிணியமைந்த கிம்புரிகள் கழன்றன [புற.97:10]. யாழ்ப்பத்தரினது புறத்தையொப்ப ஆடையின் இழைசூழ்ந்த பல தையலின் இடையிலேயுண்டாகிய புரைகளைப் பற்றிக்கொண்டு ஒன்றோடொன்று தொடர்ந்த, பிணி விடாது கிடக்கின்ற, ஈரினது திரளோடு தங்கிய பேனை, ஒரு பகையெனக் கூறித் தம் வறுமையையுணர்த்துவர், துறையூர் ஓடைகிழார் [புற.136:3]. வாரால் வலித்த பிணியையுடையன இன்னியங்கள் [புற.153:10]. வலித்த பிணியையுடையது முரசம் [புற.179:4]. கூம்பு விடுதலாகிய மெல்லிய பிணி அவிழ்ந்தது ஆம்பல் [புற.209:3]. கோச்சேரமான் யானைக்கட் சேய்மாந்தரஞ்சேரல் இரும்பொறை துஞ்சியதால் திண்ணிய வாரால் பிணிபட்ட முரசம் கண்கிழிந்து உருண்டு கிடந்தது [புற.229:19]. போரில் வெற்றி பெற்ற ஆனேற்றின் தோலால் போர்த்தப்பட்டுத் திண்ணிதாய்ப் பிணிபட்ட போர்முரசு போர்க்களத்தில் முழங்கும் [புற.288:4]. விசித்த பிணியமைந்த போர்வையினையுடையது, தடாரிப்பறை [புற.369:19]. களவேள்வி செய்து சிறப்பெய்திய நெடுஞ்செழியனிடம் மாலையைப் பெறும் விருப்பத்தால் பொருநன் விசித்துப் பிணிபட்ட

கிணைப்பறையைக் கொட்டி ஏத்துவன் *[புற.372:1]*. அவியன், கிணைப்பொருநனுக்குக் குவிந்திருந்து விரியும் மெல்லிய பிணி அவிழ்ந்த ஆம்பல் பூவைப் போன்ற மடாரில், கள் தெளிவைப் பெய்து உண்ணச்செய்வான் *[புற.383:8]*. பிணியமைந்த முரசு இயம்பும் *[புற.388:14]*.

திண்ணிய பிணியமைந்த படைக்கலன்கள் *[பதி.19:4]*. கொங்கு நாட்டினர் ஆவினத்தைப் புரத்தற்கு இரும்பினாலான குந்தாலியால் பாறைகளின் திண்ணிய பிணியையுடைத்துத் தோண்டிய குழிகளில் சிறிதளவே நீரூறும் *[பதி.22:12]*. கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் தன் மார்பினாற் பிணிபட்ட மகளிரின் கூந்தல் மெல்லணையிலே தங்கித் தழுவலினால், இராப்பொழுதைப் பயன்கொண்ட முறைமையினையுடைய மெல்லிய துயிலை அவிழ்த்துக் கண்மலர்வான் *[பதி.50:18]*. வளவிய பிணியவிழ்ந்தது நெய்தல் *[பதி.51:17]*. இரும்பினாலாகிய பிணியையுடைய பலகைகளாலானது, எயிற்கதவு *[பதி.53:15]*. கார்காலத்து முகில் முழங்கினாலும் அதனைப் போர் முரசின் முழக்கமெனக் கருதித் தறியிடத்துப் பிணியையறுத்துக் கொண்டு நெற்றியை உயர்த்தி எழுகின்ற போர் யானைகளை யுடையவன், இளஞ்சேரலிரும்பொறை *[பதி.84:3]*.

யாழின் திவவு, திண்ணிய பிணியமைந்தது *[பொரு.15]*. முருக்க மரத்தின் கிளைகளில் பூங்கொத்துக்கள் பிணியவிழ்ந்த தோற்றம் போலச், செவ்வரக்கு வழிக்கப்பெற்றது, தேர்த்தட்டின் பலகை *[சிறு.255]*. மரக்கலத்தின் இறுகிய பிணியமைந்த பாய்கட்டிய கயிற்றை அறுத்துக் காற்று மோதியது *[மது.376]*. மதம் மிக்க யானை தன் காலில் கட்டப்பட்ட மெல்லிய பிணியமைந்த வலிய சங்கிலியைத் தனக்குக் காவலெனப் பேணாமல் வலித்துக், கட்டுத்தறியை முறித்துச் சென்றது *[மது.382]*. மழை, பருவத்தே பெய்து வளர்த்தலால் கீரைச்செடிகள் அழகு பெற்று மெல்லிய பிணி விரிந்து சிறிய இலைகளுடன் வளரும் *[மது.531]*. அரும்புகள் பிணிவிட்டு மலர்ந்த மணங்கமழும் பொய்கையில் தும்பிகள் தாதுண்டு ஒலித்தன *[மது.654]*. இல்லத்து மகளிர் தாம் விரும்பிய கணவரது முயக்கமாகிய பிணியில் அடங்கித் துயின்றனர் *[மது.663]*. தலைவியையும், தோழியையும் நோக்கிச் சினந்து வந்த யானையைத் தலைவன் அம்பெய்து போக்கிய பின்னும் அவ்விருவரும் மாலைபோலத் தம் கைபிணியை விடாது நடுங்கிநின்றனர் *[குறி.177]*. வலித்த பிணியையுடைய முழவுடைய வேந்தர் சூடிய கழற்காலை உடையவர் கரிகாலன் *[பட்.293]*. கொடி பிணங்கிய சிறுகாட்டையுடைய வழிகள்தோறும் நீவிர் செல்லுங்கால், முன்போகின்றவன் முகத்தில் அடியாமல் வாங்கிவிட்ட, கடுவிசையையுடைய, வளாராகிய கோல், நும் இனிய இசையையுடைய யாழின் பத்தரையும், வலித்த பிணியினையுடைய மார்ச்சனை செறிந்த முழவின்கண்ணையும், வீசிக்கெடுக்காதபடி காத்துக் கைபிணியை விடாது மெல்லமெல்லப் போவீராக', என்று, கூத்தர் ஆற்றுப்படுத்தப்பெறுகின்றனர் *[மலை.381,383]*.

தேற்றாமரத்தின் அரும்புகளோடு கொன்றையரும்புகள் மெல்லிய பிணியவிழ, மழைத்துளிகளைச் சிதறிக் கார்ப்பருவம் வந்தது *[அக.4:2]*. புதர்மீது படர்ந்த செம் முல்லையின் அரும்பு, பிடவமொடு ஒருங்கே பிணியவிழக், காடு கம்மென மணம் கமழ்ந்தது *[அக.23:4]*. மழைக்காலத்துக் கடைநாட்களில் அரும்பு பிணியவிழாத சுரிந்த முகத்தையுடைய பகன்றை, மழைத்துளி வீசுதலால், மலரும் *[அக.24:3]*. 'நிலைபேறில்லாத பொருளிடத்துப் பிணியினால் (பற்றினால்) சென்று அதனை ஈட்டிக் கொணருதற்குத் தலைவர் பிரிந்து செல்வர்', என, ஊரார் கூறியதாகத், தலைவி, தோழியிடம் கூறினள் *[அக.27:4]*. தினைப்புனங்காத்திருந்த தன்னிடத்து வந்த தலைவன், தன்னை வினவித் தழுவியதாகவும், அந்நிலையில் தன்னுள்ளத்து நெகிழ்ச்சியை அவன் அறிதலஞ்சித், தான் உள்ளத்தொடு படாத கடுமொழி கூறி, அவனது கைபிணியை விட்டு, வெருவும் பெண்மானைப்போல் விலகி நின்றதாகவும், தோழி, தலைவியிடத்துப் பொய்ம்மொழி புனைந்துரைத்து, அவளைக் குறை நயப்பித்தாள் *[அக.32:12]*. 'பொருளிடத்துப் பிணியினால் (பற்றினால்) இரக்கமின்றித் தம் இனிய துணைவியைப் பிரிந்து போகும் மடமையுடையோர், என்றும் இரங்கத்தக்கவராவார்', எனத், தலைவன், தன்னெஞ்சிற்குக் கூறினான் *[அக.43:14]*. 'நெஞ்சே. நீ பிணியினால் வருந்திச் செய்யும் வினையிடத்து எய்தும் பொருள், காதலியிடத்தின்றின்றும் பிரிந்து செல்வதனால் மட்டுமே கூடுவதாயின், அதனை வெறுத்து, அவளை நீங்குதல் மறந்து மனையின்கண் உவந்திருத்தலையே நினைவாயாக', என்று தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறினான் *[அக.51:8]*. 'தொலைவிலுள்ள நாட்டிடத்தே சென்று அரிதில் ஈட்டுகின்ற பொருளின் மேல் பிணி கருதித் தலைவர் நம்மைப் பிரிந்து சென்றார்', என்று, தோழி, தலைவியிடம் கூறினாள் *[அக.59:17]*. செம்முல்லையரும்புகள் பிணியவிழ்ந்து, மலர்ந்த, குளிர் பதமுடைய பெருவழியிலே, தலைவன் மீண்டு வந்தனன் *[அக.64:4]*. 'நெஞ்சே, நிலையாத பொருளிடத்துப் பிணியினால், காதலியைப் பிரிந்து வந்த நீ, பெரிதும் வருந்தினை', எனத், தலைவன், இடைச்சுரத்தே, தன்னெஞ்சொடு மொழிந்தனன் *[அக.79:17]*. பிணிமுரசுடைய குட்டுவனது நாடு பசியறியாது *[அக.91:13]*. மகளிரது முலைபோலும் கோங்கரும்புகள் பிணியவிழ்ந்து உதிர்ந்து கிடத்தன *[அக.99:5]*. 'நம்மைப் பிரிந்து சேய் நாட்டிலே உறைதற்கேதுவாகிய பொருட்பிணி இன்னும் முற்றுப்பெறாமையால், மீளாது பிரிவு நீட்டித்திருக்கும் காதலர் நோயிலராக', எனத், தலைவி, தோழியிடம் கூறினாள் *[அக.115:17]*. 'பிணிகொண்ட, அரிய சிறைபோன்ற, அன்னை', என்று, தலைவி, தன் தாயைக் குறிப்பிட்டாள் *[அக.122:5]*. ஒதியின் கரிய தாடியையொப்பக் குவளையரும்பு பிணியவிழப் மழை பெய்தது *[அக.125:6]*. மிக்க மழை பொழிந்த முல்லை நிலத்தில் வெஞ்சின அரவின்படம் மேலெழுந்தாற்போன்ற, கோடற்பூவின் தாது, பிணியவிழக், காடு கவின் பெற்றது *[அக.154:7]*. புதரின் கிளைகளில் வெண்ணாரை இருந்தாலொத்த, பிணியவிழ்ந்த,

வெண்கூதாள மலர்க்கொத்தினைத் தீண்டி, அதன் பூம்பொடி மேலே உதிரப்பெற்ற, பன்றி, பொன்னுரைத்து, மாற்றறியும் கட்டளைக்கல் போன்றிருந்தது *[அக.178:9]*. பாகனே, யாம் பிரிந்து வந்தமையால், நல்லூரின்கண், மாலைப்பொழுதிலே, மிக்க துன்பத்தால் வருந்திய காதலியின் மின்னையொத்த கூந்தல் அணிசெய்யப்பெறாமையால், பின்னலாகிய பிணிவிட, மிக விரைந்து தேரைச் செலுத்துவாயாக', என, வினைமுற்றி மீளும் தலைவன், தேர்ப்பாகனிடம் கூறினான் *[அக.234:18]*. வாடைக்காற்றால் எழுந்த தோன்றியின் அரும்பு, சுருங்கியிருந்த நிலையைவிட்டுச், சுடரைக் கொண்ட அகல் போன்று, பிணியவிழ்ந்தது *[அக.235:8]*. நள்ளியின் பக்கமலையில் வளர்ந்த காந்தளின் மெல்லிய பிணியுள்ள அரும்பு, விரிந்து மலர்ந்த குளிச்சியொடு, மணங்கமழும் புதுமலர்போல், மணக்கும் நறுநுதலையுடையவள், தலைவி *[அக.238:17]*. தலைவியைப் பிரிந்து சென்று ஈட்டி வருகின்ற நிலையில்லாத பொருட்பிணியைத்; தலைவன் நினைந்தான் *[அக.271:10]*. தலைவனது மெத்தென்ற கைபிணி சிறிதே நெகிழ்ந்து விலகினும், வருந்துகின்ற, அழகிய மடப்பமுடையவள், தலைவி *[அக.289:7]*. தன் மார்பில் அணிந்த தாழ்பூங்கோதையில் ஊதுகின்ற வண்டுகள் படிந்து குடைந்தமையால், அக்கோதையின் அரும்புகள் பிணியவிழ்ந்து மலர்ந்த நடுநாளாகிய இரவின்கண், தலைவன், தலைவியைக் கூடுதற்குக், குறியிடத்தே வந்தான் (தாழ்பூங்கோதை ஊது வண்டு இரீஇ, மென்பிணி அவிழ்ந்த அரைநாள் இரவு, என நேரே பொருள் தரும் இவ்வடிகளைச் சிதைத்து, 'மென்பிணி அவிழ்ந்த தாழ்பூங்கோதை, ஊதுவண்டு இரீஇ, எனக் கொண்டு கூட்டி, 'மெல்லிய அரும்பு மலர்ந்த தாழ்ந்த பூமாலைக்கண் ஊதும் வண்டினை ஒட்டி' என்று தலைவன் தனக்குத்தானே வண்டோச்சி வந்த முறையில் உரைப்பர் வே.வி.உரைகாரர்) *[அக.298:13]*. பிணியுற்ற விழுதுகளையுடையது, ஆலமரம் *[அக.319:2]*. , இறுகிய பிணியுடைய முழவு இயம்ப, மட்டு மாந்தி எம்மனை வாராய் ஆயினை, எனத், தோழி தலைவனை வாயில் மறுத்தாள் *[அக.346:13]*.

பிணியையுடைய கிணைப்பறை போல யாமை கள்ளின் கலங்கலையுண்டு பிறழும் *[அக.356:3]*. உழவர் போரடித்துத் தூற்றிய துரும்புகள் உப்பளத்திற்படிந்து உப்பினைக் கெடுக்க அவற்றிற்குரிய பரதவர் சினந்து, அவ்வுழவரோடு போர் செய்யக்கண்டு, நரைமூதாளராகிய சிலர் இடைபுகுந்து, இருசாராரையும் கைபிணி விடுத்து விலக்கினர் *[அக.366:10]*.

காட்டுப்பூனை திரிந்தாற்போன்ற தோற்றத்தையுடைய முல்லையின் மென்பிணியையுடைய குறுமுகையவிழ்ந்த நறுமலரையுடையது, முல்லை நிலம் *[குறு.220:4]*. 'எம் நெஞ்சு அச்சமின்றிக் காதலியைத் தழுவுதற்குப் பிரிந்து எமக்கு முன்னே சென்றதாயினும், அதற்கு இயலாது எஞ்சிய கைகளால் தழுவும் பிணி இல்லாதபோது, தனித்துச் சென்றமையால் அது பெறும் பயன் யாது', என, வினைமுற்றி மீளும் தலைவன், பாகனிடம் வினவினான் *[குறு.237:3]*. தன் கடமைகளைக் கருதி, விருப்பத்தையுடைய பொருட் பிணியினால், தலைவியைப் பிரிந்து பலவிடங்களுக்குச் சென்றான் *[குறு.255:7]*. நீலமணி நீண்டொழுகினாற்போன்ற கரிய கொடியாகிய அறுகம்புல்லின் பிணி நீங்கிய மெல்லிய தண்டினை, மானேறுதன் காதற்பிணையொடும் மேய்ந்தது *[குறு.256:2]*. 'அரிதிற்பெறுதற்குரிய பொருட்பிணியினால் பிரிந்து சென்ற காதலரை மாலைப் பொழுதிலே மீண்டு வரக்காணும் மகளிர் உறுதியாக நோற்றோராவர்', என்று, பிரிவிடையாற்றாத தலைவி, தோழியிடம் கூறினாள் *[குறு.344:7]*. நிலையாத பொருட்பிணியினால் தலைவன் தலைவியைப் பிரிந்து சென்றான் *[குறு.350:8]*. சுனையிலே பலவாகிய பிணியவிழ்ந்த நீலமலரை நோக்கித், தலைவி, தலைவன் தந்த கையுறை மலரை நினைந்து அழுதாள் *[குறு.366:4]*.

நிலையாத பொருட்பிணி கருதித் தலைவன் தோழியைக் கண்டு, 'யான் பொருள் வயிற்பிரியும் இதனை நின்தோழிக்கு (தலைவிக்கு) அறிவிப்பாயாக', என்றான் *[நற்.71:7]*. அரிதில் ஈட்டுகின்ற பொருட்பிணிக்குத் தலைவன் தலைவியிடத்தே பிரிவுணர்த்தினான் *[நற்.113:5]*. 'நெஞ்சமே நிலையாத பொருட்பிணி கருதிக் காமத்தைக் கருதாது, காதலியைப் பிரிந்து செல்வையாயின், நீயே செல்; யான் வாரேன்', எனத், தலைவன் செலவழுங்கினான் *[நற்.126:11]*. பிறர்க்கென்றே முயலும் பேரருள் நெஞ்சமொடு தலைவன், அழகிய பொருட்பிணி கருதித் தலைவியைப் பிரிந்து போயினன் *[நற்.186:9]*. அரிதில் ஈட்டும் பொருட்பிணி கருதித், தலைவன், தலைவியைப் பிரிந்தனன் *[நற்.193:7]*. ஊரின் விழாவில் நன்றாய் இறுகப்பிணி கொண்ட முழவு முழங்கும் *[நற்.220:5]*. நிலையாத பொருட்பிணி கருதித், தலைவியைப் பிரிந்து சென்றான், தலைவன் *[நற்.241:12]*. பிணியமைந்த அடியினையுடையது, மலைவாழை *[நற்.251:2]*. நிறம் பொருந்திய யானை, நல்லாடையை அணிந்துகொண்டாற்போல், நெருங்கிய பிணியவிழ்ந்த மலர்களையுடைய தாழைப் புதரில், மேல்காற்று மோதுதலால், அம்மலர்களிலுள்ள நுண்தாதுக்கள், மகளிரின் கைவளைகள் உடைந்தன போல், உதிர்ந்து பரவும் *[நற்.299:2]*.

குளிர்ந்த நீரின்கண் ஆடும் எருமை திண்ணிய பிணியினையுடைய தோணிபோல் தோன்றும் *[ஐங்.98:2]*. உலகில் யாரிடத்தும் நின்றதில்லாத பொருட்பிணியை நிறைவேற்றிக்கொள்ளுதற்குத், தலைவன், வெயில் நீடிய சுரநெறியைக் கடந்து சென்றான் *[ஐங்.336:3]*. 'திருந்திழை அரிவையே, நின் நலத்தை விரும்பி, நினைந்து, பிரிவை, நீட்டியாமல், 'அரிதில் ஈட்டுதற்குரிய பொருட்பிணி, பெருஞ்செல்வம் பெறுவதாக', என்று, அதனையும் விரும்பாது, உடனிருந்தோரிடமும் சொல்லாது, நின்னிடத்து மீண்டேன்',

எனத், தலைவன், தலைவியிடம் கூறினான் *[ஐங்.355:2]*. வேந்தனுக்குத் துணையாகிப் போர்த்தொழிலின் பொருட்டுப் பிரிந்த தலைமகன் பாசறைக்கண் இருக்கையில் பருவவரவு கண்டு தலைமகளை நினைந்து மிகும் விருப்பமுடையனாய்ப் 'மன்னவனது போர்த்தொழில் பிணி நீக்கம் பெறுவதாகுக', எனக், கருதினான் *[ஐங்.447:]*

'பெரும, ஒருநாள், ஒருபொழுது கூடுதல் இடையீடுபடப் பிரிவீராயின் என் தோழியாகிய நின் காதலி பின் உயிர்கொண்டு வாழாளாதலின், பொருட்பிணியால் மேற்கொள்ளும் நின் பிரிவைத் தவிர்வாயாக', என்று, தோழி, தலைவனைச் செலவழுங்குவித்தாள் *[கலி.4:25]*. வருந்தித் தங்கியிருந்த தலைவியின் கைகளினின்று வளைகள் கழன்று விழும்படியாகத் தலைவன் பிரிந்து தேடும் பொருட் பிணியினால் தொலைவான நாட்டிற்குச் சென்றான் *[கலி.29:24]*. மகளிர் கூந்தலின்கண் பல ஒளிகளையுடைய அணிகளுக்கிடையே இடப்பட்ட பொன்னங்கண்ணிபோல் மணலிலே, பிணி நெகிழ்ந்து மலர்ந்துதிர்ந்த பல பூக்களுக்கிடையே, வேங்கைப் பூக்களும் விரிந்து கிடந்தன *[கலி.32:5]*. பளிங்கு மணியையொக்கும் கண்ணாடிக்குள் பவழம் அழுந்தப்பட்டவைப் போலப், பிணி நெகிழ்ந்த முருக்கம் பூவின் இதழ்கள் குளங்களில் வீழ்ந்து தோன்றின *[கலி.33:4]*. 'நீலப்பூப்போலும் மையுண்ட கண்ணினையுடையாய், காதலர் தாம் பிரிந்து சென்று மீளும் எல்லையை நம் நெஞ்சிலே நிறுத்திக் கூறிய கூற்றுக்கள் பொய்யாகாதவாறு, நமது நெறித்த கூந்தலைப் பிணி (பின்னல்) விடும்படி விரைந்து மீண்டனர்', என்று, தோழி, தலைவனது வரவினைத், தலைவிக்குணர்த்தினாள் *[கலி.33:28]*. தோழி தொடர்ந்து தலைவனை இயற்பழிக்கக் கேட்ட தலைவி, பொறாதவளாய், 'ஏடி, ஒழியாமல் அவனது கொடுமையைக் கூறாதே. என்னெஞ்சைப் பிறரஞ்சும் கொடுந்தொழிலுக்கு அஞ்சாத அறனிலியல்லன்', என்றாள் *[கலி.42:27]*. நீர்த்துறை அழகுபெறும்படி பகன்றைப் பூவையுடைத்து வளர்ந்த தாமரை மொட்டு, வெள்ளி வள்ளத்தினால் நறுங்கள்ளை உண்பவள் முகம்போல, வளவிய பிணிநெகிழும் *[கலி.73:5]*. 'பார்வையாலே பிறரைப் பிணிகொள்ளும் கண்களையுடைய கடவுளரைக் கண்டாயோ', என்று, பரத்தையரைக் குறித்துத், தலைவனிடம், வினவினாள் தலைவி *[கலி.93:23]*. ஆயனொருவன், தன் முயற்சியாலே துணிந்து, ஏற்றினைத் தழுவுதலாகிய பிணியின்கண் புகழ் தவிர்தலின்றிச் சென்று, தோள் வலிமையால் துணிந்த பிணி துறந்து, உடல் தளர்ந்து, பிடி வழுக்கி, விழுந்தான் *[கலி.104:45,46]*.

பிணி நெகிழ்ந்து மலர்ந்த குளிர்ந்த மாலைகளையணிந்தவர் அவுணர் *[பரி.3:55]*. 'பிருங்காலாதன் நின்னைப் புகழ்ந்தமையால் அவன் தாதை (இரணியன்) சினத்தாற் புகைந்த நெஞ்சுடன் அவனைப் பலபல பிணி (நோயுமாம்) படுமாறு கட்டினான் *[பரி.4:12]*. வையையில் நீர்விழாவிற்குச் செல்ல விரும்பிய மதுரை நகர மகளிருட் சிலர் இருவேரியுடனே, பிணியமைந்த பலமலர்களாலான மாலையைக் கூந்தலில் அணிந்து புறப்பட்டனர் *[பரி.12:16]*. திருப்பரங்குன்றத்தின்கண் ஒருத்தி கள் குடித்த மகிழ்ச்சியால் தளர்ந்து துகில் பிணி நெகிழவும், கண்கள் சிவப்பவும் பூங்கொடிபோல் அசைந்து, தன் காதலன் இசைத்த துடியிசைக்கேற்ப ஆடினாள் *[பரி.21:58]*. இசையினால் பிணி கொள்ளும் இயல்பமைந்த யாழினையுடையோர், பாணர் *[பரி.தி.2:73]*.

**2. துயில்.** செங்குட்டுவன் தன் மார்பினால் கவரப்பட்ட மகளிர் கூந்தலணையில் இரவைக் கழித்துப் பிணி - துயில் - அவிழ்த்துக் கண் மலர்ந்தான் *[பதி.50:21]*.

**3. நோய்.** 'யாம் எம் அம்பினை விரையச் செலுத்துவேம்; ஆவும், ஆனின் இயல்புடைய அந்தணரும், பெண்டிரும், பிணி - நோய் - உடையீரும், தென்றிசைக்கண் வாழ்வோராகிய நும் குடியில் இறந்தோர்க்குப் பேணிக் கடன்களைச் செய்தற்குரிய பொன்போலும் பிள்ளைகளைப் பெறாதீரும் ஆகிய நீவிர் நுமக்கு அரணாகிய இடத்தை அடைவீராக', என்று கூறும் அறநெறியைக் கூறி, மறப்போர் செய்யும் மேற்கோள் அமைந்தவன், பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி *[புற.9:2]*. 'பசிப்பிணி தீர்க்கும் மருத்துவனது மனை அணித்தோ, சேய்த்தோ', என்று, சிறுகுடிகிழான் பண்ணனது இல்லத்தைக் குறித்துப் பரிசிலன் வினவுவதுபோல் பாடியுள்ளான், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் *[புற.173:11]*.

குடிமக்கள் மூப்பும், பிணியுமின்றி நல்லுடம்போடு நெடுங்காலம் வாழுமாறு நாட்டினையாண்ட அறிவாண்மை அமைந்தோரின் வழித்தோன்றலாவான், பல்யானைச் செல்கெழுகுட்டுவன் *[பதி.22:10]*. கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன், தன் மார்பினால் கட்டப்பட்ட மகளிரின் கூந்தல் மெல்லணையிலே தங்கி, வருத்துகின்ற காமமாகிய பிணியை மாற்றும்பொருட்டு மார்பு தழுவலினால், இராப்பொழுதைப் பயன்கொண்ட முறைமையில் கழித்து, மெல்லிய துயிலையுணர்ந்து கண்மலர்வான் *[பதி.50:20]*.

'காமம் காமம் என்று உலகினர் கூறும்அக்காமம் புதியதாய்த் தோன்றும் வருத்தமோ, பிணியோ அன்று', எனத், தலைவன், பாங்கனிடம் கூறினான் *[குறு.136:2]*. காமம் என்பது வருத்தத்தையும், பிணியையும் தரக்கூடிய இழிந்ததன்று, அது புதிய இன்பத்தைத் தரக்கூடியதாகும் என்று பாங்கன், தலைமகனுக்கு உரைத்தான் *[குறு.204:2]*. கலைமான் பசிப்பிணியைத் தணித்துக்கொள்ளுதற்காக, காலினால் உதைத்து வளைத்த மரப்பட்டையைத், தன் குட்டிக்கு ஊட்டிப்பின் எஞ்சினால் தான் உண்ணும் *[குறு.213:3]*.

தலைவனைக் கூடப்பெறாமையால், நெடிது நீட்டித்த, பிணி தங்கிய, தோள்களையுடையவளாய்ப், பரத்தை, அவனது தெருவழிச் சென்றாள் *[நற்.20:10]*. பெரிய களிற்றினைப் புலி கொன்றதாக, அக்களிற்றின் காதற் பிடி வாடுகின்ற பிணியோடும், வருத்தத்தோடும் இயங்க மாட்டாமல் தன் கன்றினைத் தழுவிக்கொண்டு, புண்ணுற்றாரைப்போல வருந்தித், தங்கியிருக்கும் *[நற்.47:2]*. 'தலைவரால் என்னிடத்தே உண்டாகிய காமமாகிய பிணியையறியாது, இதனை முருகனால் நேர்ந்த வேறுபாடாக ஊரார் கூறுகின்றனர்', என்று, தலைவி, தோழியிடம் கூறினாள் *[நற்.117:10]*. அறவோனாகிய மருத்துவன், அரும்பிணி உறுவோர்க்கு அவர் விரும்பிய மருந்தினைக் கொடுக்காமல், நோய் தீர்க்கும் மருந்தினையே ஆராய்ந்து கொடுப்பான் *[நற்.136:2]*. தான் பொருள்வயிற்பிரிந்தால், தலைவி, நடுயாமத்தே நடுங்குதற்குக் காரணமான (காமமாகிய) பிணி நலிதலால் நல்லழகு குன்றித், துன்புறும் தோள்களில் சுணங்கு அரும்பப் பெறுவாள் எனத், தலைவன் கருதிச் செலவழுங்கினான் *[நற்.262:4]*. 'பனைமடலாற் செய்யப்பட்ட குதிரைமேலேறியூர்ந்து, ஆவிரை, எருக்கம், பூளை, உழிஞை முதலிய பூக்களை விரவித் தொடுத்த மாலையை யணிந்து, நாடுகள்தோறும், ஊர்கள்தோறும் சென்று, காதலியின் அழகைச் சிறப்பித்துக் கூறிப், பொதுவிடங்களில் செல்லேமாய், எம்முள்ளத்தை அரிதே நிலைநிறுத்தி, அதுவேபிணியாகக் கிடந்து, இறந்தொழிய மாட்டேமோ?' என்று, மடலேற்றம் கருதிய தலைவன், தோழி கேட்கக், கூறினான் *[நற்.377:5]*. 'நாடுகாவற் பொருட்டு, அரசனாகிய ஆதனவினி வாழ்க; நாட்டின்கண் பசி இல்லையாகுக; பிணி, நெடுந்தொலைவிலே சென்று நீங்குக', எனத், தலைவி இல்லறமே விரும்பியொழுகினாள் *[ஐங்.5:2]*.

நிலம் ஈரம் அறும்படி ஞாயிறு காய்தலால், தணிவில்லாத வெப்பமிக்க கோடைக்காலத்தில், குளிர்ச்சியை விரும்பித் திரளுகின்ற. பசிப்பிணி சுடுதலால் வந்த வருத்தத்தை யுடைய பெருங்களிற்றினங்களைத் தாங்கும் மலையும் வெம்பியது *[கலி.20:4]*. 'வாடைக்காற்று அசைத்தலால் வளைந்த தாழையின் கிளையிலிருந்த நாரை, இரவின்கண் நம்மிடத்து அருளிலாமையோடே, தனக்குக் காமமாகிய பிணியின் வருத்தமுமின்றி, இடைவிடாமல் கூவும், 'எனத், தலைவி, வரைவிடையாற்றாத வருத்தத்திலே, தோழியிடம் கூறினாள் *[கலி.128:5]*. காதலன் பிரிந்து வரைவு நீட்டித்தமையால், காமக் கலக்கமுற்றுக், [illegible]வோடே பேசிப் புலம்பிய தலைவியின் கலக்கம், தீரக், காதலன் வந்தவுடன், அவளது பிணி நீங்கி, நெற்றிப் பசப்பும் கெட்டது *[கலி.144:69]*.

'தன்னைச் சிந்தித்த அளவிலேயே அவ்வாறு சிந்தித்தோரின் பிணி (நோய்) தீர்தற்குக் காரணமான கற்பமைந்தவள்', எனத், தலைவி, தன்னைச் சார்ந்தோரால் போற்றிக் குறிப்பிடப் பெறுகின்றாள் *[பரி.20:68]*. இருந்தையூரில் குளவாயின்கண் அமர்ந்தோனாகிய திருமாலின் திருக்கோயிலை இறைஞ்சுவோர்க்குப், பிணி நீங்க, நல்லவையெல்லாம் வந்துகூடும் *[பரி.தி.1:63]*.

1. அரும்பு. தாமரையின் முறுக்கவிழ்ந்த பிணி - அரும்பு - நீருக்குமேலே உயர்ந்திருந்தது *[கலி.59:1]*. திருமால் எழுந்தருளியிருக்கும் இருந்தையூரின் ஒரு பக்கத்தே, பிணியவிழ்ந்த, அசோகமரம் உள்ளிட்ட பல மரங்கள், ஓங்கி வளர்ந்து, மணி நிறம் கொண்டு மலை திகழ்ந்தது *[பரி.தி.1:8]*

**பிணித்தோர்** - பற்றிக்கொண்டோர். 'இனி நீ வருந்துதற்கு உரியது ஒன்றுண்டோ; அஞ்சுதலை ஒழிவாயாக', என்று கூறி, அழகொளி பெருகுமாறு தழுவி, நம்நெஞ்சம் பிணித்தோர் - பற்றிக் கொண்டோர் - ஆகிய தலைவர், பிரிந்து சென்றவழி நினைந்து, கண்பனி மல்க, நாம் இங்கே தனித்திருக்கின்றோம்', எனத், தோழி, தலைவியிடம் கூறினாள் *[அக.313:3]*.

**பிணித்தோன்** - தளைத்தோன். வெகுண்டெழுந்து ஆரியரை அலறத் தாக்கி, வடமலையிலே விற்பொறியைப் பொறித்துப், பகைவராகிய வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன் - தளைத்தோன் - ஆன சேரனுக்குரியது, வஞ்சிமாநகர் *[அக.396:18]*

**பிணிமுகம்** - (முருகன் ஊர்தியாகிய) யானை / மயில். ஒள்ளிய செய்யோனாகிய முருகன், நீலமணிபோலும் நிறத்தையுடைய மயிற்கொடியையுயர்த்திய மாறாத வென்றியையும், பிணிமுகம் என்ற பெயரையுடைய ஊர்தியையும் (யானை / மயில்) உடையவன் *[[illegible] 56:8]*.

வெறியாடுகளம் ஆரவாரிக்குமாறு ஏற்பன [illegible] கொம்புகள் பலவற்றையும் ஊதி, மணியையும் ஒலித்து [illegible] கெடாத வலிமையினையுடைய பிணிமுக[illegible] வேண்டுவோர் வேண்டியாங்கு வழிபட. முருகன் [illegible] உறைதலுமுரியன் *[முரு.247]*.

கடலினிடையே பாறைகள் துகள்படுமாறு [illegible]. மிகவுயர்ந்த பிணிமுகத்தை யூர்ந்து அமர் புரிந்து முருகன், சூர்மாவின் முதலைவெட்டினான் *[பரி.5:2]*. திருப்பரங்குன்றத்து முருகனுக்குப் பூசை விழாவெடுக்க மதுரையிலிருந்து புறப்பட்டோர், பிணிமுகம் உளப்பட, அவனுக்குரிய பிற பொருள்களையெல்லாம் ஏந்திக்கொண்டு போய், அம்மலையை [illegible] தொழுதனர் *[பரி.8:101]*. 'மணிநிற மயிற்கொடியையும் பிணிமுகத்தை யூர்ந்து செய்யும் வெல்போரையுமுடைய இறைவன் [illegible] முருகனை ஏத்திப்பாடுவர், நல்லழிசியார் *[பரி.17:49]*

**பிணியகம்** - சிறைச்சாலை. புலிக் [illegible] வளர்ந்தாற்போலத், திருமாவளவன் [illegible] பகைவரது பிணியகத்தே - சிறைச்சாலையில் [illegible] தனக்குப் [illegible]

கூரிதாக உணரும்படி ஆராய்ந்து, யானை, தான் அகப்பட்ட குழியினின்றும் ஏறுதற்கு அரிய கரைகளை இடியுமாறு கோட்டினால் குத்திக், குழியைத் தூர்த்துத் தன் பிடியிடத்தே சென்று சேர்ந்தாற்போல, அப்பகைவரின் நெருங்கிய திண்ணிய காவலாகிய வாட்படையை ஓட்டி, அவ்விடத்தினின்றும் தப்பிவந்து தன்னரசை முறைப்படி எய்தினான் *[பட்.222]*.

**பிணை - 1.** பெண்பால். இமயமலையடுக்கத்தின்கண் சிறுதலையையுடைய மறிகளையுடையவாகிய பெருங்கண் மான், பிணை - பெண்பால் - அந்திக் காலத்தே அந்தணர் அருங்கடனான ஆவுதியைப் பண்ணும் முத்தீயாகிய விளக்கொளியில் துயிலும் *[புற.2:2]*. காட்டுவழியில், கலைமான் புலியினிடத்தே அகப்பட்டதாகச், சிறுமறியை அணைத்துக்கொண்ட துள்ளுநடையையுடைய மெல்லிய (மான்) பிணை, பூளையோங்கிய பாழிடத்து வேளை வெண்பூவைத் தின்னும் *[புற.23:19]*. இமயமலையில் நரந்தையையும், நறும்புல்லையும் மேய்ந்த கவரிமான், சுனையின் நீரைக்குடித்துப், பின், அதன் பக்கத்திலுள்ள தகரமரத்தின் தண்ணிழலின்கண் தன் பிணையொடு தங்கும் *[புற.132:6]*. குறவர் பெருமகனாகிய ஏறைக்கோனுக்குரிய பெரிய மலையின் உச்சியில், ஞாயிறு படுகின்ற காலத்தில், தன் இனத்தினின்றும் தடுமாறித் தான், சேருமிடம் காணாத கடமானாகிய நல்லேறு, மெல்லிய மானாகிய இளம்பிணையை அழைப்பின் அவ்வோசையை முழையிற்கிடக்கும் பெரும்புலியேறு செவிதாழ்த்துக் கேட்கும் *[புற.157:11]*. முன்றிலிலே வளர்ந்த முஞ்ஞையோடே, முசுண்டைக்கொடியும் பம்பிப், பந்தரும் வேண்டாதே படர்ந்திருந்த நீழலின்கண், மனைக்குரியோனான யானை வேட்டுவன் துயில் மடிந்து உறங்கினனாக, அங்கே அவனால் கட்டப்பட்டிருந்த பார்வை மானாகிய மெல்லிய பிணையைத் தழுவிப், பிறிதொரு கலைமான் திளைத்து விளையாட, அவற்றின் இன்புறு புணர்நிலையைக் கண்ட மனையோள் தன் கணவன் உறக்கம் தீர்ந்து எழுதற்கும் அஞ்சி, அக்கலைமான் பிணையிடத்தின்று பிரிந்து போதற்கும் அஞ்சித் தான் சிறிதும் இல்லத்தின்கண் நடமாடாதிருந்தாள் *[புற.320:4,8]*. 'சுணங்கணிந்து எழிலுற்ற நிமிர்ந்தேந்திய இள மலைகளையும், புடைத்த கைச்சந்தினையும், பணைத்த தோள்களையுமுடைய இம்மடந்தையின் மான்பிணை நோக்கொத்த மகிழ்மட நோக்கு, மாற்று வேந்தரால் காமுறப்பட்டுப், போருக்குக் காரணமாகித், தான் பிறந்து வளர்ந்த ஊர் அழகிழந்து அழியுமாறு தோன்றுமோ?' என்று, பெண்ணொருத்தியின், பார்வை புனையப்படுகின்றது *[புற.354:10]*.

முருகன் வேலனாகி மெல்லிய தோளினையுடைய பலவாகிய (மான்) பிணைபோலும் மகளிரைத் தழுவித், தலைக்கை தந்து, குன்றுதோறும் ஆடுதல், தனக்கு நிலைத்த பண்பாகும் *[முரு.216]*. பெருங்கவின் பெற்ற சிறுதலை நௌவிமான், காட்டின்கண் மாற்றற்ற பொன் மேற்படுமாறு, மடப்பம் தங்கிய கண்களையுடைய பிணையோடே, சுழல்வனவாய்த் துள்ளித்திரியும் *[மது.276]*. மாலைப்பொழுது நீங்கி இரவு வர, நெடுநகரின் எல்லையெல்லாம், பண்புச் சிறப்பினால் பெண்ணினம் விருப்பமுற்ற (மான்) பிணைபோலும் நோக்கினையுடைய மகளிர் நெடுஞ்சுடர் விளக்கங்களைக் கொளுத்தினர் *[மது.555]*. தினைத்தாளால் வேயப்பட்ட குறுங்கால்களையுடைய குடிலிலிருக்கும் (மான்) பிணையின் நோக்கினை யொத்த பார்வைமைந்த மனைவி கொடுக்கத், தேனால் சமைக்கப்பட்ட கள்ளின் தெளிவையுண்டு, மகிழ்ச்சி மிக்குத், தினைப்புனங்காவலர் தம் தொழிலை மறந்தனர் *[குறி.154]*. கரும்பொடு செந்நெல் ஓங்கி வளர்ந்து, குவளையொடு நெய்தல் மலர்ந்து, மயங்கி, முதலைகளும் செருக்கித் திரிந்த பொய்கைகளிடத்தே, அறுகம்புல்லொடு, கோரைப்புல் அடர்ந்து, வயலும், வாவியும் வேற்றுமையின்றி, நீரற்று, இரலை மான்களுடனே, மாண்பிணைகள் துள்ளித் திரியுமாறு, திருமாவளவன், பகைவர் நாட்டு மருதநிலங்களைப் பாழ்படுத்தினான் *[பட்.245]*. காட்டிலே புலி பாய்ந்தமையால் பட்ட பிணையை நினைந்து சோர்ந்த கலைமான் நெடும்பொழுது நின்று கூப்பிடும் *[மலை.404]*.

'என்மகள் தன்னுள்ளத்துச் சிதைவினை யான் அறிந்தமைக்கு அஞ்சி, வலையைக் கண்ட (மான்) பிணை, அதனை வெருண்டு தப்பியோடுமாறுபோல், எம் இல்லத்தின் அரிய காவலைக் கடந்துபோய்த், தன் காதலனுடன் சுரநெறியிலே சென்றாள்', என்று, மகட்போக்கிய செவிலித்தாய் இரங்கிக் கூறினாள் *[அக.7:11]*. அழகிய காட்டிடைப் பொருந்திய வழிகளில், மாலைப்பொழுதிலே, திரிகொம்புகளையுடைய இரலைமான், மெல்லிய பிணையைத் தழுவிப், புல்மேய்ந்து, துள்ளித்திரியும் *[அக.14:5]*. மழைபெய்து ஓய்ந்து, புதர்களில், பிடவ மலர்களோடு செம்முல்லையும் மலர்ந்து, காடு கம்மென மணங்கமழும் காலத்தே, பள்ளங்களில் வளர்ந்துள்ள வெண்காந்தட் செடிகளோடே, அறுகம்புல்லின் கிழங்குகளையும் தின்று தெவிட்டுதலால் வெறுத்துச், செருக்கிய நடையினையும், தலைமையினையுமுடைய இரலைமான், விருப்பம் மிக்க பிணையைத் தழுவிச் சென்று, குளிர்ந்த நீரைப்பருகித், தங்கியது *[அக.23:8]*. தினைப்புனங்காவலிடத்தே வந்து, பணிமொழி பேசிக், கிளியோட்டித், தழுவிய தலைவனொடு தன் உள்ளம் ஒன்றிக் குழைந்ததனை, அவன் அறிவது பற்றி அஞ்சி, மனத்தொடு படாத கடுஞ்சொல் கூறி, அவனது கையைவிடுத்து, வெருவுகின்ற மான்பிணை போல், தான் விலகி நின்றதாகத், தோழி, தலைவியிடம் படைத்து மொழிந்து, அவளது கருத்தறியலுற்றாள் *[அக.32:13]*. சிறுகரும்பிடவினது வெள்ளிய உச்சியையுடைய குறும்புதர் மலர்கின்ற குளிர்ந்த நறிய முல்லைநிலத்தே, திரிகொம்புகளையுடைய

தலைமையமைந்த இரலைமான், அறுகம்புல்லினைக், குட்டியைப் பக்கத்தே கொண்ட மெல்லிய பிணைக்கு உணவாக அருத்தியபின், அக்குட்டியும், பெண்மானும் அசையிடும் கவுளோடு நீர் தழுவிய மணற்கரையிலே துயில, அவற்றைக் காத்து நிற்கும் அவ்விரலைமானின் பெருந்தன்மைகண்டு, வினைமுற்றி மீளும் தலைவன், நெஞ்சுநெகிழ்ந்தனன் *[அக.34:6]*. வினையை வெற்றியுற முடித்த மேம்பாட்டுடன், தமது முயற்சியைப், போர் இளையர் வாழ்த்தி வர, மீண்டுவரும் தலைவர், முல்லை நிலத்தே இரலைமானின் அழகிய மெல்லிய பிணைமானினது மருண்ட நோக்கினைக் காணுந்தோறும், நின்னை நினைந்து, தம் தேர்ப்பாகனை விரைந்து செலுத்துமாறு ஏவி, இன்றே வருவர்', என்று, தோழி, பிரிவின்கண்ணே, தலைவியை ஆற்றிவற்புறுத்தினாள் *[அக.74:9]*.

பாலையாகிய காட்டின்கண், புல்லைக் காணாமையால், அதனை மறந்துவிட்டு, மூங்கிலின் நெல் உதிர்வனவற்றை நோக்கிக், கலைமான் பிணையை அழைக்கும் *[அக.129:5]*. மிளைநாட்டுப் பாலையின்கண், ஈரமுடைய மேட்டு நிலத்தே, தழைத்த வரிகளையுடைய மரலினைக் கடித்துத் தின்னும், மெல்லிய பிணையுடன் கூடிய திரிகொம்பினையுடைய இரலைமான்கள் வாழும் காட்டைக் கடந்து, தலைவன் பொருள்வயிற் பிரிந்து சென்றான் *[அக.133:17]*. 'பாகனே, வாழையின் பூ முற்றி, மடல்கள் உதிர, எஞ்சிநின்ற மொட்டும் ஒழிந்தபின், நின்ற குலைபோலும் திரிகொம்பினையுடைய, ஏற்றொடு, திரண்ட கால்களையுடைய, அழகிய (மான்) பிணையின் விருப்பம் வாய்ந்த புணர்நிலையாகிய நள்ளிரவுக்கூட்டம், நம் தேரொலி கேட்பின் இடையூறு பட்டு நிகழாதாகலின், குதிரைகளின் கால்கள் மெல்ல நடக்கும்படித், தாற்றுக்கோலால் இடித்தலை மறந்து ஏவுவாயாக', என்று, வினைமுற்றி மீளும் தலைவன், பாகனிடம் கூறினான் *[அக.134:12]*. கயிற்றால் பிணித்த வண்டியைப் பகடுகளின் பிடரியில் பூட்டி, ஏற்றமான துறைகளில் ஒட்டுமிடத்து, உமணர் அவற்றை உரப்பும் ஓசைகேட்டு அஞ்சி, ஆண்மான்களுடன் கூடிய அழகிய பிணையினம் கெட்டோடுமாறு கோடைக்காலம் பரவியது *[அக.173:11]*. வெள்ளிய பிடவின் மலர்கள் மணக்கும் முல்லை நிலத்தே கள்ளியின் உச்சியிற் படர்ந்த முல்லையின் காம்புகளின்றும் கழன்றுஉதிர்ந்த புதுப்பூக்களை மூச்செறிந்து ஒதுக்கித் தெளிந்த நீரினைப் பருகிய திரி கொம்புகளையுடைய அழகிய கலைமான், புள்ளிகளையுடைய அழகிய பிணையோடே தங்கும் *[அக.184:12]*. 'மான்பிணையின் நோக்கினை யொத்த நோக்கமமைந்த நல்லாள்', எனத், தலைவியை நற்றாய் குறிப்பிடுவள் *[அக.195:6]*.

காட்டின்கண் தழைகளை மிகத்தின்று வெறுத்த, துள்ளுநடையையுடைய இடையபிணை (மான்) ஏற்றொடு கூடிய மகிழ்ச்சியுடைதாய் இடையூறின்றித் துள்ளித் திரிய, மாலை வந்தது *[அக.234:10]*. பாலைவழியிலே, பிணவினது மிகுபசியைக் களைதற்கு இரைவேட்டெழுந்த செந்நாயேற்றை, காடுதேரும் இளைய பிணை கண்டு அலறுமாறு, கலைமானின் ஓடித் தப்புதற்குரிய தொடையினைக், கவ்வியறுத்தது *[அக.285:5]*. தலைவியைப் பிரிந்து செல்லும் தலைவன் இடைச்சுரத்தே திரண்ட காலினையுடைய அழகிய பிணை (மான்) தன் கலையினது முதுகினை நக்கி நிற்றலை யாமரத்து நிழலின்கண் தங்கிக் கண்டு, தலைவியை நினைந்து வருந்தினான் *[அக.287:10]*. மலையுச்சிகளையடுத்த நெறிகளில் நெல்லிக்காய்கள் உதிர்ந்து பரவுவனவற்றைப் புள்ளிகளையுடைய அழகிய பிணை (மான்) வந்து உண்ணுமாறு நினைந்து, கலைமான் தன் அறுகொம்பு விழுப்பெற்ற தலையிடத்துத் தோல் பொதிந்து முளைக்கும் இளங்கொம்பு அதிரும்படி கூவி அழைக்கும் *[அக.291:18]*.

மழை பொழிந்த வைகறைப் பொழுதில் செம்மண் நிலத்தில் தெளிந்து நின்ற நீரைக் குடித்துத் தன் சிறுகுட்டியைத், தழுவிக்கொண்ட துள்ளு நடையையுடைய இளைய பிணை (மான்) தலைமையமைந்த இரலை மானொடு குருந்த மரத்தின் நிழலிலே தங்கும் *[அக.304:8]*. குட்டியையுடைய இளைய பிணையைத் தழுவிக் கொண்டு காட்டிலே இரலைமான் பசிய பயிர்களிடத்துத் துள்ளித் திரியுமாறு மழை மிகுபெயலைத் தந்து கார்ப்பருவம் வந்தது *[அக.314:5]*. பாலையாகிய மலைவழியில், மெலிந்து நீண்ட காலையுடைய அழகிய பிணை உண்ணும்பொருட்டு, அதனிடத்து விருப்பமுள்ள மானேறு, இருப்பைப் பூக்களைத்,தான் உண்ணாமல், தன் ஆண்குரல் தோன்ற அதனையழைக்கும் *[அக.321:4]*. கொடிய வெயில் முறுகிய வேனிற்காலத்து வெங்காட்டில், வருந்துநடையையுடைய இளைய பிணையை உடன்கொண்ட, புள்ளிகளையும், அறுகோட்டினையுமுடைய கலைமான், நீர் வேட்கையுற்ற சிறுமையினால், தழையுணவை மறந்து, நீரற்ற குளத்தை நோக்கிச் சென்று, அங்கும் நீரின்மையால் மெலிந்து, தளரும் *[அக.353:11]*. 'தோழீ, பிணையின் நோக்கினையொத்த நின் மையுண்ட கண்களின் நோக்கம் பெருங்கவின் கொள்ளுமாறு, தலைவர் வினைமுற்றி மீண்டு வந்தனர்', என்று, தோழி, தலைவியிடம் கூறினாள் *[அக.363:19]*. ஞாயிற்றின் கதிர் தெறுதலால் நீரற்ற அகன்ற இடத்தில் மரங்களின் நிழலுமொழிந்த பாலைவழியில், கவர்த்த கொம்பினையுடைய கலைமான், பேய்த்தேரினை நீரென விரும்பியோடித், தனிமை யுற்றமையாலான கலங்கிய உள்ளத்துடன், மேய்கின்ற தன் பிணையையழைக்கும், மெலிந்த துன்பக்குரலைக்கேட்கும், அருஞ்சுரம் செல்வோர், அதனை, ஆளின் குரலெனக் கருதி ஆராய்வர் *[அக.395:11]*.

'தோழீ, நம்மைப் பிரிந்து சென்ற தலைவர் தாம் சென்ற நாட்டில் இக்கார்காலத்தே தம்மைப்போல், சிறுதலைப் பிணையைப் பிரிந்திருக்கும் இரலைமானையும் காண்பரோ',

என்று, தலைவி, தோழியை வினவினாள் *[குறு.183:3]*. காட்டின்கண், அறுகினது மெல்லிய தண்டைப் பிணையொடும் கூடி வயிறு நிரம்பவுண்ட மானேறு துள்ளித் திரியும் *[குறு.256:2]*. மானேறு, இளைய பிணையைத் தழுவி, மயக்கம் மிக்குக், காட்டினிடத்தே பொருந்திய புதரின்கண் மறைந்து ஒடுங்கியிருக்குமாறு கார்காலத்து மாமழை, மாலைப் பொழுதிலே வந்தது *[குறு.319:1]*. முன்பனிக்காலத்தே திரிகொம்புடைய இரலைமான் மென்மையையும், மடப்பத்தையுமுடைய பிணையொடு, நிழலிலே தங்கித் தூற்றினிடத்தே துஞ்சி, மாலைப் பொழுதிலே செழிப்புற்ற பயற்றம் பயிரைக் கறித்துத் தின்னும் *[குறு.338:2]*.

'கலைமானைப்பிரிந்த பிணைபோல், கலங்கி, நீர் நிரம்பிய குவளை மலர் போல் கண் அழுமாறு, அன்பில்லாதீராய், நீயிர் தலைவியைப் பிரிந்து செல்வீராயின், கார்கால மாலைப்பொழுதிலே அவள் படும் துன்பம் என்னாலே தாங்கப்படுவதொன்றன்று', எனத், தோழி, தலைவனைப் பிரிவு விலக்கினாள் *[நற்.37:6]*. தலைவியின் காமவேட்கையைத் தன் மேலேற்றிப் பேசும் தோழி, அவ் வேட்கை நலிய, இரவெல்லாம் வெய்துயிர்த்து, அம்பு பட்ட மான் பிணைபோல், வருந்தியதாகக் கூறினாள் *[நற்.61:3]*. காட்டின் கண். இரலைமான், இளைய பிணையைத் தழுவும்படி மாலைப் பொழுது தோன்றியது *[நற்.69:4]*. விதைப்போர், விதைத்து விளைந்த, வரகின் கவைக் கதிரைக் தின்ற அழகிய இளைய பிணை, மரல் வித்துக்கள் உதிர்ந்து கிடக்கும் காட்டின்கண், இரலைமானொடு தங்கியிருக்கும் முல்லைநிலத்தேயுள்ளது, தலைவனால் விரும்பப்பட்ட, தலைவியின் ஊர் *[நற்.121:3]*. தலைவன் சொல்லையேற்றுத், தலைவி, தான் செய்த குறியிடத்தே வந்து, அவனொடு இனிய மொழிகளைப் பேசிப்,பின் ஏற்றினைப் பிரியும் இளைய பிணை (மான்) போல, அவனைப் பிரிந்து, தன் சிறுகுடிக்குச் சென்றாள் *[நற்.204:9]*. பரத்தையிற் பிரிந்து மீளும் தலைவன் தலைவியின் ஊடலைத் தவிர்ப்பதற்காகப், புதல்வனையும் உடன் கொண்டு புகுந்து, அவளைத் தழுவ நெருங்கினனாக, அவள் வெருவுகின்ற மான்பிணைபோல் நீங்கி, நின்றாள் *[நற்.250:9]*. முகில் மழை பெய்த அழகிய கார்காலத்தில், இளைய பிணையைத் தழுவிய இரலைமான், வேலமரத்து நிழலிலே தங்கியிருக்கும் *[நற்.256:8]*. மழை பெய்த மலைச்சாரலிக்ண், உழைமானாகிய அழகிய பிணை உராய்ந்தமையால், குமிழ மரத்தினின்றும் பழங்கள் உதிர்ந்து பரவும் *[நற்.274:3]*. அழல் விளங்குகின்ற அகன்ற இடத்திலே நிழலிடம் பெறாது இளைய மானாகிய அழகிய பிணை, தன் குட்டியொடு வாடப், பாலைநிலம் நீரற்று வறண்டது *[ஐங்.326:2]*. அன்புடைய பிணையைப் புணர்ந்த செந்நாயேற்றை, அந்நினைவோடே செல்கையில், தன்னெதிர்பட்ட குட்டியையுடைய மான்பிணையை உணவெனப் பற்றாமலே செல்லும் சுரநெறி வழியே, தலைவன் மீண்டு வந்தனன் *[ஐங்.354:2]*. புலியின் பற்றிலிருந்து தப்பியோடிய கலைமான், தன் பிணை, தன்னிடத்தே வந்து சேருமாறு, ஆண்குரலால் அழைக்கும் *[ஐங்.373:3]*. 'பெரிய மடப்பம் அமைந்த மான்பிணையைத் தன் நோக்கின் சிறப்பினால் வருந்திய என்மகள், காதலனுடன், வெஞ்சுரம் கடந்துபோய் மீண்டு வந்தனள்; அவளைக்காண வாரீர்' என, நற்றாய், சுற்றத்தினரை அழைத்தாள் *[ஐங்.394:4]*. குட்டியை இடைப்படுத்திக்கிடக்கும் மானும், பிணையும் போலப், புதல்வன் நடுவிலே உள்ளானாகத், தலைவனும், தலைவியும் படுக்கையில் கிடந்த நிலைமையைக் கண்டு உவந்து பாராட்டுவள், செவிலி *[ஐங்.401:1]*. 'காதலர் பிரிந்து பொருள் தேடச் சென்றவழி குட்டியையுடைய மான்பிணை துள்ளித்திரியுமாறு, குளிர்ந்த மழை பொழிந்த இன்பத்தையுடையதாகலின், நன்றேயாம்', என்று, தோழி, தலைவியிடம் கூறி ஆற்றுவித்தாள் *[ஐங்.434:2]*. அன்புடைய மான்பிணை தான் குட்டியொடு துள்ளித் திரியுமாறு, கார்காலம் தொடங்கியது *[ஐங்.493:2]*.

தலைவர், தாம் பொருள்வயிற் பிரிந்து செல்லும் இடைவழிப்பட்ட காட்டினுள், இனிய நிழலின்மையால் வருந்திய இளைய பிணைக்குத், தன்னிழலையே கொடுத்து அருள் செய்யும் கலைமானும் உண்டென உரைத்தார்', என்று, தலைவி, தோழியிடம் கூறினாள் *[கலி.11:16]*. 'என்னைப் பிரிந்து நீர் செல்லும் காட்டு வழியிலே, மானேற்றின்பின், நீங்காமல் திரியும் பிணையையும் காணீரோ; அவை, நீர் அறியுமளவு பிரியாவே; ஆதலால், நும்மைப் பிரியாத என்னையும் உடன் கொண்டு சென்மின்', எனத், தலைவி, தலைவனிடம் வேண்டினாள் *[கலி.20:23]*. 'மான்பிணையின் அழகிய நோக்கொத்த நோக்கினையுடையவர், மகளிர் *[கலி.27:3]*. 'மான்பிணையின் அழகிய நோக்கொத்த நோக்கினை யுடையவர், மகளிர் *[கலி.27:3]*. 'மான்பிணையின் அழகிய நோக்கொத்த நோக்கினையுடையவளே', எனக், கைக்கிளை இளைஞன், காமஞ்சாலா இளமையோளை விளித்தான் *[கலி.58:2]*. கடவுள் தன்மையுடையவராகக் கொண்டாமுகும் மான்பிணை போலும் நோக்கினையுடைய பரத்தையர் பலருள், நீ கூறும் கடவுள் எக்கடவுள்', எனத், தலைவி, தலைவனிடம் ஊடி வினவினாள் *[கலி.93:8]*. 'குரால் நிறக் கண்களையுடைய இக்கொலையேற்றைத் தழுவி யடக்குவோன், வெருவுதலையுடைய பிணையாகிய மானோக்குப் போலும் நோக்கமைந்த இந்நல்லாளைக் கூடுவான்', என்று, ஆயர் பறை சாற்றினர் *[கலி.104:22]*. 'இளைய மெல்லிய மான் பிணையின் நோக்கியல்பை வென்றவளே', என்று, தோழி, தலைவியை விளித்தாள் *[கலி.131:12]*. 'மருள் மிக்க (மான்) பிணை போல் யான் மயங்கும்படி, வெவ்விய காமநோயை உண்டாக்கும் மாலைக் காலம் வந்தது' எனப், பிரிவினால் காமக்கலக்கமெய்திய தலைவி கூறினாள் *[கலி.146:32]*.

**2. செறிவு.** போர்க்களத்தில் நிணந்தின்ற பேய்மகளிருடைய துணங்கைக் கூத்தின் சீர்க்குத் தக, பிணை - செறிவு - அமைந்த குறைத்தலைப் பிணம் எழுந்து நின்று ஆடும் *[மது.27].*

**3. பிணைப்பு.** 'நின்னொடு கூடி நண்டுகளைப் பிடித்தாட்டி விளையாடியவளாகிய என் தோழியின் சிலம்பு உடைந்தமையால், கம்மியன் அச்சிலம்பின் பொறியறுகின்ற பிணையை - பிணைப்பை - கூட்டிச் செய்தற்கு வேண்டப்படும் துறைமணலை நீயே கொண்டு வருவாயாக', என்று, தோழி, தலைவனிடம் கூறினாள் *[நற்.363:5].*

வையையாற்றில் ஒருவர் முகத்தில் ஒருவர் நீரை வீசி விளையாடிய மகளிருள் ஒருத்தி, அந்நீர் வீச்சினுக்காற்றாது கண்மூடி மற்றொருத்தியால் கட்டிச் சிறை பிடிக்கப்பட்டாளாக, வேறொருத்தி அவளுக்குப் பரிந்து அவளது கைகளின் பிணையை நீக்குமாறு நீரிலே பாய்ந்தாள் *[பரி.7:57].* மதுரை வீதியில் சிதைந்தோடிய களிற்றையும், பிடியையும் சிதைவு மாற்றி, அணைவித்த மைந்தர் செயல், பாயும், கயிறும், பிணையும் (பாய்மரப்பிணைப்பும்) நீங்கியமையால் சிதையும் நிலையிலுள்ள மரக்கலத்தைத் திருத்திச் சிதையாமல் காக்கும் நீகானின் செயலை ஒத்தது *[பரி.10:53].*

**பிணையல் - 1. மாலை.** சூரரமகளிர் நீர்க்கீழ் நின்ற செவ்வரும்புகளை இணைத்துக் கட்டுதலுறுகின்ற பிணையலை மாலையை - வளையச் சூடி, முருகனின் கோழிக்கொடியை வாழ்த்திப் பாடியாடுவர் *[முரு.30].* நன்னன் சேய் நன்னனுடைய மலை, பன்னிறம் பொருந்திய பெரிய பிணையலாகிய கோதை சூடிய மகளிர் ஆடுதற்கேற்ற, முழவு இசைத்தலொழியாத, ஊரிடத்துக்கொண்ட, திருநாளை ஒத்துச், சிறந்திருக்கும் *[மலை.349].*

தலைவன் பொருள்வயிற் பிரியக் கருதிய நிலையில் அவனருகில் வந்த தலைவி கண்ணீரையுடைய பார்வையுடன் தனது மார்பிலொடுக்கிய புதல்வனின் தலையில் அணிந்திருந்த, நீர்ப்பூக்களாலான இரட்டையமைந்த பிணையலை மோந்து உயிர்த்தபோது, அதிலுள்ள சிறந்த மலர்கள் தம் மணியுருவிழந்து அழகழிந்தன *[அக.5:23].* பிணையலாகிய அழகிய கண்ணி சூடியவன், பெரும்பூட் சென்னி *[அக.44:14].* 'முருகனுக்குரிய திருப்பரங்குன்றத்துச் சுனையில் பூத்த நீலங்களில் புதுமலர்கள் இரண்டைச் சேரத்தொடுத்த பிணையல் போன்ற இவள் கண்கள், நீரினைக் கொள்ளுமாறு, யான் பிரிந்து பொருளீட்ட வாரேன்', எனத், தலைவன், தன்னெஞ்சொடு கூறிச் செல வழுங்கினான் *[அக.149:18].* ஏழிற்குன்றத்து வேங்கை மரத்தின் செம்பூக்களால் தொடுத்த பிணையலைத், தலைவன், தலைவியின் அல்குலின்கண் அணிந்து உவப்பான் *[அக.345:8].* 'தன்னால் விரும்பப் பெற்ற துணைவன், தன் வளைகள் பொருந்திய முன்கையினைப் பற்றியும், பலகிளையினவாய் நெருங்கிய பெரிய பிணையலாகிய அழகிய வடங்களைக் கொண்ட மேகலையணிந்த அல்குலையணைத்தும், ஊக்கமுறுத்த, ஊக்கம் கொண்டு, வழி வருத்தம் கருதாது சென்றாள்', எனச், செவிலி, தலைவனுடன் போன தலைவியை நினைந்து இரங்கினாள் *[அக.385:12].*

'இவன், இவளது கூந்தலைப்பற்றியிழுக்கவும், இவள் இவனது தலைமயிரை வளைத்து இழுப்பாளாய் ஓடவும், இருவரிடத்தும் அன்புடைய செவிலியர் இடைபுகுந்து தவிர்க்கவும், தவிராது, இவரிருவரும் இளமையிலே ஏதில் பிறு பிணக்கம் செய்வர்; இப்போது, இரட்டை மலர்களால் தொடுக்கப்பெற்ற பிணையல் போன்ற இவர் இருவரும், மணம் கூடி மகிழும் இயல்பையுண்டாக்கினாய்; ஆதலின், வினையே, நீ மிச நன்மையுடையாய்', என்று, இடைச்சுரத்திலே தலைவனும், தலைவியும் உடன்போகக் கண்டோர் தமக்குள் கூறினர் *[குறு.229:6].*

'பொய்கையிலே மலர்ந்த குவளையின் புதுமலர்களை இரட்டையாகத் தொடுத்த பிணையல் போன்ற இவள் கண்களைக் காண்பதற்கு முன், யான், நும்மினும் மேலாக நயன் முதலிய பண்புகளை உடையேனாயிருந்தேன்; இவள் கண்களைக் கண்டு காமுற்ற இப்போது, அப்பண்புகள் என்னைவிட்டுக் கழிந்தன', என்று, தலைவன், பாங்கனிடம் கூறினான் *[நற்.160:9].*

வயலைச் செங்கொடியினால் பிணையல் புனைந்து தன் செவ்விரல்கள் மேலும் சிவக்கப்பெற்றவள், தலைவி *[ஐங்.52:1].* 'ஒருத்தி, மின்னுப்போல் தோன்றித், தன்னுருவினைக் காட்டி, என்னெஞ்சைத், தான் வந்துபோகும் வழியாகக் கொண்டது முதலாக, யான் துயில் கொள்ளேனாய், ஆவிரைப்பூவோடே, எருக்கின் பிணையலாகிய அழகிய கண்ணியையும் சூடிப்,பனைமடலாற் செய்த குதிரையையேறி வந்து, அவள் என்னை வருத்திய திறத்தைப் பாடுவேன்', என்று, மடலேறும் தலைவன், சான்றோர்க்குக் கூறினான். *[கலி.139:9].*

'நின்கண்கள், தாமரை மலர்களிரண்டின் பிணையலை யொக்கும்' என அந்தணர்தம் அருமறை கூறும்', என்று, திருமாலைப்,பாடுவர், கீரந்தையார் *[பரி.2:53].*

**2. தழையுடை.** 'வயலைக்கொடியாலாகிய அழகிய பிணையல் - தழையுடை - தாழ்ந்த துடையினையுடைய குறுமகள்', என்று, செவிலி, தலைவனுடன் போன தலைவியைக் குறித்து இரங்கிக் கூறினாள் *[அக.189:8].*

தலைவனால் வாயிலாக விடுக்கப்பட்ட விறலி, தன் துடையின்கண், பிணையலாகிய அழகிய தழையையுடுத்துத், தலைவியின் மனையிடத்து வந்து நின்றாள் *[நற்.170:3].*

**3. ஊசல்.** தலைமகனால் கேண்மை கொண்டு ஒழுகப் பெற்ற குறுமகளாகிய இளைய பரத்தை, பெருங்கயிற்றிலே

தொங்குவதான பெரிய பனைநார்ப், பிணையலை - ஊசலை - ஆயத்தார் பிடித்தாட்டி விடவும், தான் அதன்கண் அமர்ந்தாடாமல் அழுதுபோனாள் *[நற்.90:6].*

பிணையலள் - மாலையணிந்தவள். 'இவள் கரும்பின் பூவால் தொடுக்கப்பட்ட நீண்ட பிணையலள் - மாலையணிந்தவள் - 'என்று, தலைவியைக் குறித்துப், பேதைமை மாறாத இளையள் என்பதையுணர்த்துமாறு, தோழி, பின்னின்ற தலைவனிடம் கூறினாள் *[ஐங்.91:4].*

பிணையிலி - பேணப்படுதலில்லாதாய். 'நின் பெண்மையது பொதுமையால் ஒருவரால் பிணையிலி - பேணப்படு தலில்லாதாய் - 'என்று தலைவியின் ஆயமகளிர், பரத்தையைப் பழித்தனர் *[பரி.20:50].*

பித்திகம் - பிச்சி. பூந்தட்டிலே இட்டு வைத்த பசிய காலினையுடைய பித்திகத்தின் - பிச்சியின் - அலரும் செவ்வியமைந்த அரும்பிதழ்கள் பகற்பொழுதைக் கடந்து விரிபதம் கமழ்தலாலே, மகளிர், அந்திப்பொழுதை அறிந்து, விளக்கேற்றி, நெல்லும், மலரும் தூவி, இல்லுறை தெய்வத்தை வணங்கி, மாலைக்காலத்தைக் கொண்டாடுமாறு, கூதிர்க்காலம் நிலைபெற்றது -*[நெடு.40].* பித்திகம் உள்ளிட்ட பலமலர்களைத் தலைவியும், தோழியும் கொய்து விளையாடினர் *[குறி.89].* தலைவன் தொடையலையும், கண்ணியையும் தலையிலே சூடிப், பசிய காம்பினையுடைய பித்திகத்தின், அழகிய இதழ்களமைந்த பூக்களால் தொடுத்த அழகமைந்த தொடையாகிய ஒரு வடத்தைச் சுற்றி, அவற்றால் அழகுற்ற தலைமுடியனாய் வந்தான் *[குறி.117].*

'மாரிக்காலத்துப் பூப்பதாகிய பித்திகத்தின், கொய்தற்கரிய மிகுதியையுடைய, மழைக்கு எழுச்சி பெற்ற, மணம் தங்கிய அரும்பினது சிவந்த பின்புறத்தை ஒக்கும் கொழுங்கடையமைந்த, குளிர்ந்த கண்களையுடையவளே', எனத், தோழி, தலைவியை விளித்துத், தலைவன் வரைய வரும் நற்செய்தியைக் கூறினாள் *[அக.42:1].* 'மாரிக்காலத்தே பூக்கும் பித்திகத்தின் ஈரமான இதழையொக்கும் அழகொழுகும் சிவந்த கடையினையுடைய குளிர்ந்த கண்களையுடையவளே', எனத், தலைவியை விளித்துத், தோழி பிரிவாற்றினாள் *[அக.295:19].*

'தோழி, மாரிக்காலத்தே பூப்பதாகிய அறியாமையுடைய பித்திகத்தின் அரும்புகள் தாம் சிவக்க வேண்டிய பருவத்திற்கு முன்பே மிகச் சிவந்தன; அவற்றைக்கண்டு, இது தலைவர் வரவு குறித்த கார்காலமென யானோ மருள்வேன்', என்று, தலைவி, தோழியிடம் கூறினாள் *[குறு.94:1].* 'நெஞ்சே, தலைவி மாரிக்காலத்தே மலரும் பித்திகத்தின், நீரொழுகும் கொழுமுகைகள் பலவற்றைப் பெரிய பசும்பனங்குடையில் ஒருங்கு வைத்து மூடி, பெருமழை பெய்த விடியலில் விரித்து விட்டாற்போன்ற, நறுமையையும், குளிர்ச்சியையுமுடைய நல்ல மாமை நிற மேனியள்', என்று, தலைவன் தலைவியை நினைந்து பொருள் வயிற்பிரியக் கருதிய நெஞ்சினை மறுத்துரைத்தான் *[குறு.168:1].* 'மாட்சிமைப்பட்டதும், மாரிக்காலத்தே மலர்வதுமாகிய பித்திகத்தின், நீரொழுகும் கொழுமுகையது சிவந்த புறத்தையொக்கும் கொழுங்கடையமைந்த குளிர்ந்த கண்களையுடையவள்', எனத், தலைவன், தலைவியைக் குறித்து நினைந்தான் *[குறு.222:5].*

'மாரிக்காலத்தே மலர்வதாகிய பித்திகத்தின் ஈரமான இதழ்களையுடைய மலர்களால் தொடுக்கப்பட்ட மாலையைச், சந்தனம் பூசப்பெற்றதோடே அணியப்பெற்ற எனது மார்பிலே, தலைவியின் முலைகள் அழுந்தத் தழுவியபடியே இரவுகளெல்லாம் கழிவனவாக', எனத், தலைவன் பொய்யுரைத்துப் பிரிந்தான் *[நற்.314:3].*

பித்திகை - காண்க

பித்திகை - பிச்சி. 'குருக்கத்தி மலர்களுடனே விரவிய பித்திகை - பிச்சி - மலர்களை விலைக்குக் கொள்ளீரோ', என்று, கூறியவாறே அம்மலர்களையிட்டு ஏந்திய கடகப் பெட்டியை வண்டுகள் மொய்க்கத் திரிந்து விற்கும் உழவர் மகள், மிகக்கொடியள்' என்பது, பருவங்கண்டு பிரிவாற்றாத தலைவியின் கூற்றாம் *[நற்.97:7].*

பித்திகம் — காண்க

பித்தை - ஆடவர்தலைமயிர். பகைவர் தொலைதற் கேதுவாகிய பனந்தோட்டையும், வெட்சி மலரையும், வேங்கைப் பூவுடனே விரவிச் சுருண்ட கரிய பித்தை - தலைமயிர் - பொலிவு பெறுமாறு சூடிப், பொருது மீண்ட பின்னும் சினம் நீங்காது நின்றான், அதியமான் நெடுமானஞ்சி *[புற.100:6].* அதிரல் பூக்களால் பலவடங்களாகத் தொடுத்த மாலையைக், கரிய பெரிய பித்தை பொலியுமாறு சூட்டிப், போர் மறவர் உண்டாட்டயர்ந்தனர் *[புற.269:3].* உலகத்திலே தம்மைப் புரப்போரைக் காணப்பெறாமையால், பொருநர், மரத்தடியில் பட்டினி கிடந்து, போதவிழ்ந்து மலர்ந்த பூக்களை நாரால் தொடுத்து, விளக்கமுடைய கரிய பித்தை பொலியுமாறு சூடியிருந்தனர் *[புற.371:4].*

கரிகால் வளவனால் தரப்படும் பொற்றாமரைப் பூவைப் பொருநன் தன் சுருண்ட கரிய பித்தை பொலியுமாறு சூட்டிக் கொள்வான் *[பொரு.160].* தொண்டைமான் இளந்திரையன் தன்னிடத்தே நாடிவரும் பெரும்பாணர்க்கு அவர்தம் நீண்டகரிய பித்தை பொலியுமாறு பொற்றாமரைப் பூச்சூட்டுவான் *[பெரு.482].*

மழவர், செம்மறியாட்டுக் கிடாயின் கொம்பையொப்பச், சுற்றிக் கடை சுருண்டதும், பிடரியை மறைப்பதுமான பித்தையை

யுடையவர் *[அக.101:5].* மழவர் வெண்கடப்பம் பூங்கொத்தினைத், தம் சுரிந்து, வளைந்த பித்தை பொலியுமாறு சூடிக்கொண்டு, வில்லேந்தியவராய், வழிவருவோரைப் பார்த்திருப்பர் *[அக.127:14].* வன்கண் ஆடவராகிய ஆறலைகள்வர், வளைந்து சுருண்ட கோதப் பெறாத பித்தையையுடையவர் *[அக.161:2].* விடியற்காலத்தே மலரும் அதிரற்பூக்களாலாகிய மாலையைச், சுருண்ட, கரிய பித்தையின்கண் வண்டுகள் மொய்க்குமாறு சூடி, வடுகர், பகைவரது போர் முனையினின்றும் ஆனிரை கவர்தற்கு, நாட்பலி கொடுப்பர் *[அக.213:5].* தொகுதியுற்ற கரிய சுருள் பிணைந்த பித்தையினையுடையவன், ஆட்டனத்தி *[அக.236:15].*

வையையாறு, தன்னிடத்தே நீராடும் மாந்தர்தம் கூந்தலினின்றும், பித்தையினின்றும் சோர்ந்து விழுந்த பூக்களும், சந்தனம் முதலிய பிறவும் நிறைதலால், நீர் நிறம் தோன்றாதோடியது *[பரி.தி.2:85].*

**பித்தையர்**— பித்தையையுடையவர் (ஆடவர்) ஆறலைகள் வராகிய மறவர் சுருண்டு வளர்ந்த பித்தையர் - பித்தையையுடையவர் - *[கலி.4:2].*

வையை நீர்விழாவிற்கு நெய்யணிந்த கூந்தலராகிய மகளிரும், நெய்யணிந்த பித்தையராகிய ஆடவரும் முறையே குதிரைகளின் மேலும், யானைகளின் மேலும் சென்றனர் *[பரி.தி.2:13].*

**பிதிர்** - பிசிர். நள்ளிரவிலே மின்மினிகள் மொய்த்திருக்கும் புற்றினிடத்தே, அம்மின்மினிகள், காய்ச்சிய இரும்பினை யடிக்கும்போது தெறிக்கும் பிதிர் - பிசிர் - போல், ஒளிவிடுமாறு, மண்ணைத் தோண்டிப், புற்றாம் பழஞ்சோற்றைக் கிளறியெடுக்கும் கரடியேறு, இரும்புவேலை செய்யும் கொல்லன்போல் தோன்றும் *[அக.72:4].* கானல் துறையில், இறாமீன் கலக்கினமையால், நுரைகளாகிய பிதிர்கள் பொருந்திய அலைகள், புன்னை மரக்கிளைகளில் தோயும் *[அக.270:5].*

அலைகளிடத்தே பொங்கியபிதிராகிய துவலைகளோடே முகிலையும் பொருந்திப், பிரிந்த காதலர் செயலறும்படி, வாடைக்காற்று வந்தது *[குறு.55:2].*

மலையின்கண், வேங்கைப்பூக்கள், கொல்லன் உலைக்களத்தில் காய்ச்சியடிக்கும் இரும்பின் பிதிர் சிதறுமாறுபோல், உதிரும் *[நற்.13:6].* கீழ்காற்றுச் செலுத்துதலா வானத்தில், அலையின் பிதிர்போல் பரந்து, மழை மலைமுகட்டின்மேல் ஏறியது *[நற்.89:2].*

கயத்திலே பசிய தூறுகளின் மேல் அலைகள் மோதுதலால், பிதிர் மிக்கன *[கலி.72:5].*

**பிதிர்வு** - பிதிர்ச்சி (சிதல்). தினையரிதாள்தோறும், முற்றின தயிரினது பிதிர்வு - பிதிர்ச்சி - போலும் அவரைப் பூக்கள் உதிர்ந்து காய்த்தன *[மலை.109].*

வெவ்விய சுரநெறியின்கண், முருங்கையின் குலைந்த வெண்பூக்கள், சூறாவளி வீசுதலால் உடைந்த அலைகளின் பிதிர்வு போல், பரந்து கிடத்தலின், காடுகடல்போல் தோன்றியது *[அக.1:18].* மலைச்சாரலின்கண், புலியாகிய பகையை வென்ற புண்மிக்க களிற்றியானை, கையினையுயர்த்திப் பெருமூச்செறிதலால், வேங்கையின் நறுமலர்கள், கொல்லனது துருத்தியை மிதித்தூதுகின்ற உலையினின்றும் எழுகின்ற பிதிர்வு (தீப்பொறி) போல், பரந்து மின்மினிகளைப் போல் தாவும் *[அக.202:6].*

**பிதிர்வை** - சுற்றுதல் 'வளமனைக்கு உரியவளாகும் செல்வியே, நீ இளமைத் தகைமையை உடையாய்ப் பந்து விளையாடிப் பிதிர்வை - சுற்றுதல் - இயல்பினை உடையையாகின்றாய், நின் பெண்மை அழிவதாக', என்று, தலைவியைத், தாயர் கடிந்து கூறினர் *[அக.275:5].*

**பிரகத்தன்** - ஆரியவரசன். ஆரியவரசன் பிரகத்தனைத் தமிழறிவித்தற்குக், கபிலர், குறிஞ்சிப்பாட்டினைப் பாடினார் *[குறி.அடிக்குறிப்பு].*

**பிரசம்** - தேன்கூடு / தேனீ / தேன். பிரசம் - தேன்கூடு - தொங்குகின்ற, இடையறாத செல்வ வருவாயையுடைய மலைத்தோட்டங்கள் அமைந்த நல்ல நாட்டுக்குத் தலைவன், ஆஅய் அண்டிரன் *[புற.375:9].*

காலைப்பொழுதிலே சந்தனம் பூசி ஒளிவிடும் மார்பின்கண், வரிகள் பொருந்திய பின்புறத்தையுடைய பிரசமும் - தேனீயும்- மற்றும் மொய்ப்பனவாகிய வண்டுகளும் மொய்க்க, மாலையணிந்து விளங்குமாறு, பாண்டியன் நெடுஞ்செழியனை வாழ்த்துவர், மாங்குடி மருதனார் *[மது.717].* பழுத்த மிளகுகள் உதிர்ந்து கிடக்கும் பாறையிலுள்ள சுனையின்கண் வீழ்ந்த மாங்கனியாலும், வண்டுகள் சிதறிய பிரசத்தாலும் - தேனாலும் - பலவின் தீம்பழத்தாலும், விளைந்த தேறலை நீரெனக் கருதிப் பருகிய மயில் விழாக்களத்திலே ஆடுமகள் தளர்ந்தாடுவாளைப்போல், தளரும் சாரலையுடையவன், தலைவன் *[குறி.189].* 'நெடிய மலையினிடத்தே தெய்வம் விரும்பிய பக்கமலையிலே தேருருள் போல் வைக்கப்பட்ட பிரசத்தைக் காணினும், அதனை ஞெரேரெனக் கடுகிப் பார்த்தலைத் தவிர்மின்; காரணம் என்னவெனில், நீவிர் செல்ல வேண்டிய வழி தவறுவீர்', என்று, கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெறுவர் *[மலை.239].*

பக்கமலையிலே பிரசமொடு கலந்த அருவி இழியும் *[அக.172:2].* பிரசமுண்ணும் பல வண்டின் இனங்களும் ஆரவாரிக்க மலையினின்றும் அருவியிழியும் *[அக.228:1].* தேன்கூடுகள் நிரம்பிய பக்க மலையிலே நீண்டு வளர்ந்த சந்தன மரத்தின் கிளைகள் தீண்டுமாறு மேலிடத்தாகிய பிரசம் தொங்கும் *[அக.242:21].* மலையினின்றும் வீழ்கின்ற அருவியொலியுடன், பிரசம், முழவுடன் கூடிய யாழ்நரம்புபோல், இம்மென ஒலிக்கும் *[அக.318:5].*

அரசர் தம் வரிசையாகச் செல்லுதலையுடைய நுண்ணிய கேடகங்களைப் போல் பிரசம் தொங்குகின்ற மலைக்குரியோன், தலைவன் *[குறு.392:8].*

கிளைகள் தோறும் பிரசம் தொங்கப், பெரிய பழங்கள் குலைகுலையாகப் பழுக்க, அருவி இழியக், கூலம் செழிக்க, எந்நாளும் வளமுடையது, தலைவனுடைய மலைநாடு *[நற்.93:1].* பிரசம் கலந்த சுவையுடைய வெள்ளிய தீம்பாலைப் பொற்கலத்திலே ஏந்திச் செவிலியர் உண்ணென்று ஏவவும் உண்ணாது மறுக்கும் சிறுவிளையாட்டியாகத் தலைவி, இருந்தாள் *[நற்.110:1].* குன்றத்தின்கண் வேட்டுவர் இல்லங்களில் தேனீக்கள் இழைக்கும் தேனடைக்கு வேண்டுமளவு மணங்கொண்ட பிரசத்தைக், குறிஞ்சியின் வலுவில்லாத வெள்ளி பூச்சுரக்கும் *[நற்.268:5].* 'புன்னை மலரின் தாதருந்திக் களிப்பினையுடைய கரிய பிரசம் நன்னிமித்தமாக எதிர்வந்தொலிக்கத், தலைவர் வருவதாகிய நெடுந்தேரின் இனிய ஒலியைக் கேட்பதொன்றே நம்மூரில் அரிதாயிருக்கின்றது' எனத், தோழி, தலைவியிடம் கூறினாள் *[நற்.311:10].*

தாதருந்திய பிரசம் மகிழ்ந்தூதுகின்ற, மலர்கள் நிறைந்த காட்டு நாட்டிற்குரியோன், தலைவன் *[ஐங்.406:3].* 'அழகு பொருந்திய தாதருந்திய பிரசம் மொய்ப்ப, மலர்கள் நிறைந்த கூந்தலையுடைய காதலி எம்மை முயங்கினள்' என்று, தலைவன் உவந்துரைத்தான் *[ஐங்.417:3].*

பிரண்டை - கொடிவகை. காட்டின்கண் வழிப்போவோர் அறுத்துப்போகட்ட பிரண்டை - பிரண்டைக்கொடி - இடியேற்றால் தாக்கப்பட்ட பாம்பின் பசிய துண்டம்போல், வழியின் பக்கத்தே பயனின்றி வாடிக்கிடக்கும் *[அக.119:5].*

பிரப்பு - படையற்பொருள். கிடாயினது குருதியொடு கலந்து பிசைந்த தூய வெள்ளரிசியைச் சிறுபலியாக இட்டுப், பலபிரப்பும் - படையற் பொருளும் - வைத்துக், குறமகள் முரணினோர் அஞ்சும்படி, முருகனை வரவழைப்பாள் *[முரு.234].* 'நம் வருத்தம், தலைவனது மார்பைத் தழுவுதல் ஒன்றினாலேயே தணிவதென்பதை, அறியாதவளாய், அன்னை, நம் கைவளை நெகிழ்ந்தமை நோக்கி வினவியதனால், முதிய பொய்கூறவல்ல பெண்டிராய கட்டுவிச்சியர், பிரப்புக்களைப்பரப்பி வைத்து, 'இவள் நோய், முருகனால் நேர்ந்த அருநோய்' என்றனர்', எனத், தோழி, தலைவியிடம் கூறுவாள்போல், சிறைப்புறத்தலைவன் கேட்ப மொழிந்தாள் *[அக.98:9].* அன்னை, 'தன் மகளது துயர் வந்த காரணத்தை அறிய வேண்டும்' என்று, பல பிரப்புக்களையும் வைத்து, வேலனை அழைத்து வெறியாட்டு எடுப்பாள் *[அக.242:9].*

'தோழி, நம் காதலனாகிய நாடனிடத்துத் தவறுபடாத நாம் இக்களவொழுக்கத்திலே வருந்தியிருப்ப, ஆட்டினது கழுத்தையறுத்துத், தினையரிசியாகிய பிரப்பினை வைத்து, ஆற்றிடைக்குறையின்கண், இசைக்கருவிகள் ஒலிக்கத், தாம் வெளிப்படுதலன்றி, நம் நோய்க்கு மருந்தாகாத வேறு பெருந்தெய்வங்கள் பலவற்றை ஒருங்கு வாழ்த்திப்பின், 'இவள் பேயினால் பிடிபட்டாள்', என்று கூறப்படுதல், நாம் வருந்தத் தகுவதன்றோ' எனத், தோழி, தலைவன் சிறைப்புறத்தானாகத், தலைவியை வினவினாள் *[குறு.263:1].*

பிரம்பு - கொடிவகை. தூண்டிலில் பொதிந்த இரையைக் கௌவி அகப்படாது போன வாளைமீன், அக்குளத்தின் நீர்க்கு அண்மையில் நின்ற பிரம்பினது - பிரப்பங்கொடியினது - அசைநிழலை அந்நீரிலே கண்டு அஞ்சும் *[பெரு.288].* தேர்த்தட்டின்கண் அமைந்த பிரம்பினிடத்தே, ஆடையின் முன்றானை கிடந்து புரளும்படி, செல்வர், தேரூர்ந்து செல்வர் *[மது.435].*

தாமரைப் பூக்களையுடைய நீர்மிக்க வயலில் வள்ளைக் கொடிகளை உழக்கி வாளை மீன்களை மேய்ந்த நீர்நாய், முட்கள் பொருந்திய தண்டினையுடைய பிரம்பின் பழந்தூறுகளிடத்தே தங்கும் *[அக.6:19].* மருத நிலத்துப் பொய்கையின் அடைகரையிலுள்ள பிரம்பினது, அரத்தின் வாய்போன்ற அழகிய முட்களையுடைய நீண்ட கொடி, ஆம்பலின் அகன்ற இலையைச் சுற்றிட, வாடைக்காற்று அசைத்தலால், அவ்விலை ஊதுலையில் விசைத்தெழும் துருத்திபோல் புடைத்துச் சுருங்கும் *[அக.96:3].* மீன்பிடித்து விற்றுக், கள்ளுண்டு துஞ்சும், கணவன்மார்க்குப், பாண்மகளிர், விடியற்காலத்தே, ஆம்பல் இலையிலிட்ட சோற்றிலே, இனிய புளிப்பினையுடைய பிரம்பின் திரண்ட கனியைப் பெய்து கொடுப்பர் *[அக.196:6].* பொய்கைக்கண் பிரம்பொடு, ஈங்கையும் நீண்டு வளர்ந்திருக்கும் *[அக.306:2].*

பிணக்கத்தையுடைய கொடிப்பிரம்பின் வரிகளமைந்த புறத்தையுடைய விளைந்த கனியைக் குளத்திலுள்ள கெண்டைமீன் கவ்விக்கொள்ளுதற்கிடமான நீர்த் துறையூரன், தலைவன் *[குறு.91:1].* பிணக்கையுடைய கொடிப்பிரம்பின் தூற்றில் தங்கும் நீர்நாய், வாளைமீனை நாட்காலையுணவாகப் பெறுதற்கிடமான ஊரன், தலைவன் *[குறு.364:1].*

பிரமசாரி - ஒரு புலவர். இவரது பெயரால் இவர் அந்தணரென்பதும், மணவாழ்க்கை மேற்கொள்ளாதவ ரென்பதும் புலனாகின்றன. இவர் பாடலொன்று குறுந்தொகையில் *[34]* உள்ளது. தலைவனால் தலைவிக்கு நேர்ந்த காமநோயை அறியாத செவிலி, அந்நோய் தெய்வத்தாலானதெனப் பிறழவுணர்ந்து, வேலனைக் கொண்டு வெறியாட்டெடுக்கையில், அதனை விலக்குமுகத்தான், தோழி கூறியதாக இவர் அப்பாடலை இயற்றியுள்ளார். 'முருகவேளே! நாடனான தலைவனது மார்புதர வந்த நோய் நின்னால் உண்டானதன்று என்பதை நீ நன்றாக அறிந்திருந்தும், வேலன் வேண்டுதலால் இவ்வெறிக்களத்துப் பலிபெற வந்தோய்! நீ கடவுளாயினு மாகுக! திண்ணமாய் அறியாமையையுடைய

காண்', என்று, வேலன்மேல் வந்த முருகனிடம் கூறுவாள்போலத், தலைவியின் நோய்க் காரணத்தைத் தோழி செவிலிக்குணர்த்தும் நயத்தினை, இவர் பாடலில் காணலாம். 'கடவுள் தன்மை பொருந்திய மலையிலுள்ள சுனையில், இலைகளின் மேலெழுந்து மலர்ந்ததும், பலிக்கன்றிப் பிறரால் பறிக்கப்படாததுமான, குவளை மலரைப் பறித்து, அவற்றோடு காந்தள் மலர்களை வடிவு விளங்கக் கட்டிச் சூடி, மலைப்பக்கமெல்லாம் பொலிவுபெற, அருவியொலியையே வாச்சிய முட்டுக்களாகக்கொண்டு, சூரரமகள் ஆடுதற்கிடானான நாட்டையுடையவன்' என்று, தலைவனைத் தோழி கூற்றில், இவர் புனைந்து கூறுவதும் நோக்கத்தகும்.

**பிரமதாயம்** - அந்தணர்க்கு அரசரால் கொடுக்கப்படும் இறையிலி நிலம். இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் தன்னைப் பத்துப்பாடல்களால் சிறப்பித்துப் பாடிய குமட்டூர்க்கண்ணனார்க்குப், பிரிசிலாக, உம்பற்காட்டு ஐந்நூறு ஊர்களைப் பிரமதாயம் - (அந்தணர்க்களிக்கும்) இறையிலிநிலம் — கொடுத்து, முப்பத்தெட்டாண்டுகள் தென்னாட்டுள் வருவதனிலும் பாகம் கொடுத்தான் *[பதிப.2]*.

**பிரமம்** - பிரமவீணை. வழுதியுடன் திருப்பரங்குன்றத்திற்குச் சென்றோருள் சிலர், தெய்வத்தன்மையையுடைய பிரமம் - பிரமவீணை - இசைத்தனர் *[பரி.19:40]*.

**பிரமனார் - ஒரு புலவர்.** பெயரைக் கொண்டே இவரை அந்தணரென்று நினைத்தற்கு இடமுண்டு. இவர் நிலையாமையை நன்குணர்ந்தவர்; அதனைப் பிறர்க்கு உணர்த்தவும் வல்லவர். இவை, இவரது ஒரே பாடலால் *[புறு.357]* உணரக்கிடக்கின்றன. இம்மண்ணுலகில் பொதுமை சுட்டிய மூவேந்தர் நாடுகளையும் பொதுமையின்றி ஆண்டோர்க்கும் ஆண்டமட்டில் அவர்தம் வாழ்நாட்கள் அமைந்து கழிந்தன; செல்வமென்பது யார்க்கும் துணையென்று வைக்கப்பட்டதன்று; அவர் போகுங்கால் அவருடனே போவதுமன்று; துணையோர் அழுமாறு கூற்றுவன் தமர் வந்து உயிரை வௌவுங் காலத்து இவ்வுலகில் அறப்புணையைக் கைவிட்டிருந்தோர்க்கு வீட்டுவகை பெறுதல் அரிது' என்ற, கருத்தமைய, இவர் அப்பாடலை இயற்றியுள்ளார்.

**பிரான்சாத்தனார்** - ஒரு புலவர். நற்றிணையில் 68-வது எண்ணில் அமைந்த ஒரு பாடலே இவருடையதாயுள்ளது. தலைவன் சிறைப்புறத்தானாய் நிற்கையில், தோழி தலைவிக்குரைப்பாளாய் இற்செறிப்பினை அவனுக்கு அறிவிப்பதாக இவர்தம் பாடலை இயற்றியுள்ளார். 'இளமகளிர் தாம் விளையாடும் தோழியர் கூட்டத்தோடு சென்று ஒரையாடாமல் வீட்டில் இற்செறிந்திருத்தல் அறநெறியன்று; அன்றிச் செல்வமும் தேய்ந்தொழியும்', என, விரைந்து சென்று அன்னையை வணங்கிச் சொல்லுபவரை நாம் பெறுவோமாயின், அவள் நம்மைப் புறத்தே விடுவளோ? விடுவளாயின், தலைவர் மலையிற் பெய்த மழையால் குறுநுரை சுமந்து நறுமலரை உந்திக்கொண்டு பொங்கிவரும் புதுநீரை நெஞ்சார மகிழ்ந்தாடுவோம்; அங்ஙனம் கூறுவாரைப் பெற்றிலேமாதலால், நம் அவா வீணே கழிந்தது காண்', என்று, தம் இற்செறிப்பையும், அருவியாடல் அவாவையும் ஒருங்கேயுணர்த்தித், தலைவனைத் தோழி கடாவும், நயத்தினை, இவர்தம் பாடலில் பதித்துள்ளார்.

**பிரிகிற்பவர்—பிரிபவர்.** 'ஒளிபொருந்திய நெற்றியை யுடையவளே, பிரிவுத் துயரால் நீரொழுகும் கண்களையுடையையாகி நீ இங்கே தனித்திருக்க நின்னைப் பிரிகிற்பவர் - பிரிபவர் - யார்' எனத், தோழி, தலைவனது பிரிவுக்குறிப்பறிந்து ஆற்றாளாகிய தலைவியை வற்புறுத்தினாள் *[குறு.22:2]*.

'மடந்தாய், நன்னனது கொண்கான நன்னாட்டில் பொன்விளையும் ஏழிற்குன்றத்தையே பெறுவதாயினும், குவளையின் நீரொழுகும் விளக்கம் மிக்க மலர் போன்ற நின் பெரிய அமர்த்த குளிர்ந்த கண் நீரைக்கொண்டு அழும்படி பொருள் கருதி நின்னைப் பிரிகிற்பவர் யார்', என்று, தோழி, பிரிவுணர்ந்து ஆற்றாளாகிய தலைவியை வற்புறுத்தினாள் *[நற்.391:8]*.

**பிரிந்தவர்** - பிரிவுற்றவர். கணவரைப் பிரிந்தவர் - பிரிவுற்றவர் - ஆகிய மகளிரின் நெற்றியிற் பசலையைப் போலப் பூத்த பீர்க்கம்பூ உதிர, இளவேனிற்காலம் வந்தது *[கலி.31:4]*. 'மாலையே, நீ கணவரைப் பிரிந்தவர்க்கு அப்பிரிவால் தோன்றிய நோயின் வடிவாகி, மற்றும் அவ்வாறே நன்மையாகாத செயல்களைச் செய்தொழுகுவதல்லது, நினக்கு, நன்மையாகச் செய்யும் செயல்கள் இல்லையோ', எனத், தலைவி, தலைவனைப் பிரிந்த கலக்கத்தில், மாலையொடு புலம்பினாள் *[கலி.148:18]*. 'ஆயிழாய், வெஞ்சுரமிறந்து தாம் கருதிய பொருளையீட்டுதல் வேட்கையால், அறத்தைத் துறந்து, ஆக்கம் காரணமாய் நின்னைப் பிரிந்தவர், நின்னிறம் பசந்து நீ இத்தன்மையையாக நின்னைக் கைவிடுதலும் செய்வரோ', எனத், தோழி, தலைவன் பிரிந்திருக்கையில் தலைவியை ஆற்றுவித்தாள் *[கலி.150:8]*.

**பிரிந்தார் - பிரிந்தவர்.** 'அன்றிலே, முன்பு இனிய துணையாகிப், பின்பு பிரிந்தாரை - பிரிந்தவரை - காதலராக எம்மைப்போல் நீயும் உடையைாய் வருந்துகின்றாயோ', என்று, தலைவி, தலைவன் பிரிவினால், தன்னுள் செயலற்று, அன்றிலை வினவினாள் *[கலி.129:15]*.

**பிரிந்திசினோர் - பிரிந்தவர்.** 'தோழி, தலைவர் தாம் குறித்துச் சென்ற கார்காலம் வந்தது; இக்காலத்து மாலைப்பொழுதிலே, பிடவமலரின் மணத்தை வாடைக்காற்றுத்

தூற்றுகையில் கலங்கிய நெஞ்சமொடு நாம் நம்மைப் பிரிந்திசினோர் - பிரிந்தவர் - ஆகிய அவர் பொருட்டு வருந்துவமல்லமோ', என்று, தலைவி, தோழியிடம் வினவினாள் *[அக.183:15]*. 'தோழி, சுரநெறியைக் கடந்து மலைவழியிலே வினைவலியுறுத்த நெஞ்சமொடு சென்று, நின் நிரைவளைகள் நெகிழுமாறு இங்ஙனம் அருளிலராய்ப் பிரிந்திசினோர், கண்ணன் எழினியின் முதுகுன்றத்தின் அப்பால் போயிருப்பினும், நீடலராய் மீள்வர்', என்று, தோழி, பிரிவிடையே தலைவியை வற்புறுத்தியிருந்தாள் *[அக.197:18]*.

'தோழி, வாடைக்காற்று வீசும் கூதிர்க்காலத்தும் பிரிந்திசினோராகிய காதலர்ப் பொருட்டு அழுதலால் என் கண்கள் நாணமில்லாதன', என்பது, பிரிவிடை மெலிந்த தலைவி கூற்று *[குறு.35:5]*. 'தோழி, அருவி பெரிய மலையிலே தத்தி விழும்படி பெரிய முகிலின் முழக்கோசையை நடுஇரவில் கேட்பாராயின், இன்னும் தனித்திருப்போராகிய பிரிந்திசினோர் தாம் முன்னமே பிரிவினால் வருந்துவதன்றி, மீண்டும் என்னாவரோ', என்று, தலைவி, தலைவன் பொருட்டு இரங்கித், தோழியிடம் கூறினாள் *[குறு.94:5]*. 'தோழி, வழிப்பக்கத்தேயிருக்கும் கூட்டமாகிய கணந்துட் பறவைகள் அவ்வழிப்போகும் புதியோரைக் காணுங்கால் ஊறு விளைப்போராகிய ஆறலைகள்வர் இருத்தலை அவர்க்கு அறிவுறுத்தி நீங்கச் செய்யும் மலைக்காட்டு வழியைக் கடந்து பொருட் பற்றினால் பிரிந்திசினோர்க்கு முன்னின்று', யாம் பனிக்கு வருந்தும் கடுமையையுடையேமாதலின் பிரிந்து செல்லன்மின்' எனச் சொல்லியிருந்தேமாயின் அவர் செல்லாது இருந்திருப்பர்', எனத், தோழி, தலைவிக்குக் கூறினாள் *[குறு.350:8]*.

'தோழி, யாமத்தே நாம் கண்கலங்கியழுமாறு நிலையில்லாத பொருட் பற்றின் காரணமாகப் பிரிந்திசினோர், இங்கே தனித்திருக்கும் நம்மை நினைக்கவும் மாட்டாரோ', என்று, தலைவி, தலைவனைக் குறித்துத் தோழியை வினவினாள் *[நற்.241:12]*.

**பிரிந்திசினோள் - பிரிந்தவள்** (பிரியப்பட்டவள்). 'துறைவனே, நீ பிரிந்திசினோள் - பிரிந்தவள் - ஆகிய நின் காதலி நினது தேருருள் மேலூர்ந்து போனமையால் நலிந்த நெய்தல் மலரைப்போல, வருந்தினள்', எனத், தோழி, தலைவியைப் பற்றித், தலைவனிடம் கூறினாள் *[குறு.336:6]*.

**பிரிந்தோர் - பிரிந்தவர்.** 'காதலரோடு கூடிய மகளிர் பூவணியை அணியப், பிரிந்தோர் - பிரிந்தவர் — தம் வருத்தத்தையுடைய உண்கண்கள் நீர் வார்ந்து துளிப்ப, இப்படி ஒத்தும் ஒவ்வாமைப்படவும் படைத்தான், அப்பிண்பில்லாதோனாகிய நான்முகன்', என்று, பக்குடுக்கை நன்கணியார் உலகியலை வெறுத்துப் பாடுவர் *[புற.194:3]*. காதலரைப் பிரிந்தோர் வருந்துமாறு காலமழை செறிந்து கூதிர்காலம் நிலைபெற்றது *[நெடு.71]*.

'தோழி, தலைவர் பிரிதலால் பலவற்றையும் வெறுத்து உண்ணாத வருத்தத்தால் உயிர் மெலியவும், தோள்கள் பழைய அழகு கெடவும், பிரிந்தோரது பிரிவுக்கு நாளும் இரக்கமுற்று அதனைப் போக்கும் மருந்து பிறிதொன்றில்லா மையால் செயலொழிந்தேன்' எனத், தலைவி, தன்னிடம் தலைவனது பிரிவையுணர்த்திய தோழிக்குக் கூறினாள் *[அக.147:13]*. 'தோழி, அலர் நமக்கொழிய நாம் அழுமாறு பிரிந்தோராகிய தலைவர் வேங்கடத்திற்கு அப்பாற்பட்ட மொழி பெயர் நாட்டினராயினும், விரைந்து வந்து அருள் செய்வர்', என்று, தோழி, தலைவனது பிரிவின்கண் வேறுபட்ட தலைவியை ஆற்றுவித்தாள் *[அக.211:17]*. 'நீர் வறண்ட விளைநிலம்போல வாடிவருந்தித் துன்பம் மிகுமாறு பிரிந்தோராகிய காதலரைப் பலகாலும் நினைந்து வருந்துதலைத் தவிர்த்துச் சிறிது போது ஆற்றியிருப்போம்', என்று, தோழி, தலைவியைப், பிரிவிடை வற்புறுத்தினாள் *[அக.301:2]*. 'நம் காமம் அலரெழுமாறு பிரிந்தோர் பொருள்தேடி வருவரென்று உணர்ந்த நெஞ்சமே, சுரநெறியைக் கடந்து அவர்போன வழியில் செல்லுதலை யான் துணிந்தேன்', என்று, தலைவனது பிரிவின்கண், வேட்கை மீதூர்ந்த தலைவி, தன் நெஞ்சொடு கூறினாள் *[அக.303:7]*.

'தோழி, தண்டேந்திய கையினரும், நரைத்தலையில் துகிலணிந்தவருமாகிய தலைவனின் தமரோடு நமர் கூடியிருந்த அவை, நின்னைத் தலைவனக்காக மணம் பேசி வந்த இந்நாள் பெருமையுடையதென்று முகமன் கூறுமாதலின், நம்மூரில் பிரிந்தோரைக் கூட்டிவிடுவோர் இருந்தனர் காண்', எனத், தோழி, தலைவியிடம் தமர் தலைவனுக்கு மணம் நேர்ந்ததை அறிவித்தாள் *[குறு.146:2]*. 'கனவே, காதலியைக் கொணர்ந்து கொடுத்தாய் போல, இனிய துயிலினின்றும் என்னை, எழுப்புகின்றாய்; ஆதலின், தம் துணைவியரைப் பிரிந்தோர் நின்னை இகழார்', என்று, தலைவன் பிரிந்து சென்ற இடைச்சுரத்தே, தலைவியைக் கனவிற்கண்டு, அதனைப் பாராட்டினான் *[குறு.147:5]*. 'பார்ப்பன மகனே, எழுதாக் கல்வியை (மறையை)யுடைய நின் சொல்லுள்ளும் பிரிந்தோரைப் (காதலரைப்) புணர்க்கும் மருந்தும் இருக்கின்றதோ', எனத், தலைவன் தன் காமத்தைக் கழறிய பார்ப்பனப்பாங்கனிடம் மனமழிந்து கூறினான் *[குறு.156:6]*. 'தோழி, அன்றிற் சேவல் தன் பெடையோடு தடாமரத்தின் உயர்ந்த கிளையிலுள்ள கூட்டிலிருந்தவாறே பிரிந்தோர் செயலறும்படி ஒலிக்கும், வாடைக் காலத்திலும், காதலர் மீண்டு வந்திலரே', எனத், தலைவி, தோழியிடம் நொந்து கூறினாள் *[குறு.160:3]*. மரக்கிளைகளிலிருந்து புள்ளினம் தத்தம் துணைகளோடு புணர்ந்தமையால், பிரிந்தோர் துன்பத்தை நினையாதனவாய் இனிய குரலால் அகவின *[குறு.191:3]*. 'தோழி, பொருள்வயிற் பிரிந்தோராகிய காதலர், முல்லை நிலத்திலே முல்லை

முகையவிழ்ந்த இக்கார்கால மாலைப்பொழுதிலும் மீண்டு வந்திலரே', என்று, தலைவி தோழிக்கு உரைத்தாள் *[குறு.220:7]*. நாம் அழுமாறு காட்டு வழியாகிய நீண்ட இடத்தைக் கடந்து பிரிந்தோர் நம்மை மறந்தனரோ' எனத் தலைவி, தலைவனது பிரிவின்கண், தோழியை வினவினாள் *[குறு.307:9]*. 'பெய்த மழையை ஏற்றுப் பிரிந்தோர் செயலறும்படி வந்த துன்பத்தையுடைய மாலைக்காலத்தில், மயில்கள் கூவுகின்றனவே' எனத், தலைவி, பருவ வரவின்கண் தலைவன் மீளாமையால், வருந்திக் கூறினாள் *[குறு.391:5]*.

'பிரிந்தோராயினும் காதலர் மீண்டு வந்து நம்மைப் புணர்ந்திருக்க வேண்டிய காலத்தில், முன்னமே புணர்ந்திருப்போராகிய அவர், பிரிதலைக் கருதுவதினும், அரியதொரு கொடுமையுண்டோ', என்று, தலைவி தோழிக்குரைத்தாள் *[நற்.79:5]*. 'கிளைகள்தோறும் தேன்கூடுகள் தொங்கப், பெரிய பழங்கள் குலைகுலையாகப் பழுக்க, மலை வெள்ளருவிகள் மாலைபோல் இழியக், கூலங்கள் செழிக்க எந்நாளும் வளமுடையது இம்மலைநாடு', என்று, அதனைப் பிரிந்தோர் இரக்கமுறும் சிறப்புடையது, தலைவனது பெருங்கல்நாடு *[நற்.93:5]*. நின் மேனியின் மென்மையை நோக்கியும், நீ தம்முடன் பாலை வழியில் வருதற்கு ஆற்றாய் என மென்மொழி கூறியும், ஆள்வினை கருதிப் பிரிந்தோர் இன்று அருஞ்சுரங்கடந்து செல்வர்', எனத் தோழி, தலைவியிடம் கூறினாள் *[நற்.148:3]*. 'இப்பெரிய முகிலின் முழக்கம் இனிய துணையைப் பிரிந்தோரை நாடித் தருவது போல் இருக்கின்றதாதலின், தலைவர் வருவர்; நீ வருந்தாதே', என்று, தலைவியை ஆற்றுவித்தாள், தோழி *[நற்.208:11]*. 'பிரிந்தோர் இரங்குதற்கேதுவாகிய, கொன்றை மலர்கின்ற, கார்காலத்திலும், வினையே நினைந்த உள்ளமொடு, காதலர் பிரிந்து செல்வர்', எனத், தலைவி, தோழியிடம் நொந்துரைத்தாள் *[நற்.296:6]*.

'தோழி, காதலரைப் பிரிந்தோர் செயலற நலியும் வாடையையுடைய முன்பனிக்காலத்திற்கு முன்னமே நம் காதலோர் வினைமுடித்து மீண்டனர்', என்று, தோழி, தலைவனது வரவையறிந்து, தலைவியிடம் உவந்துரைத்தாள் *[ஐங்.223:3]*. தோழி, நம் உண்கண் அழவும், மலைகள் வெம்பிய பாலை வழியில் நம் பேதை நெஞ்சம் பின்செல்லவும், சென்றோராகிய பிரிந்தோர், கல்லினும் வன்னெஞ்சர் காண்' என்று, தலைவி, தோழியிடம், தலைவனைப் பழித்துரைத்தாள் *[ஐங்.334:5]*. 'பகைப்படையை நோக்கிப் பாசறையில் பின்னும் தங்கியிருத்தல், வேந்தன் செய்தியாதலால், இக் கார்காலத்திலே யான் செயலறப் பிரிந்தோராகிய காதலர், தேர்தர வந்து என்பால் தங்குதல் எவ்வாறு நிகழும், எனத், தலைவி, பருங்கண்டு நொந்தனள் *[ஐங்.451:1]*. 'என் தொடி நிலை கலங்க வாடிய தோளையும், மாவடுவினை யொத்த அழகையிழந்த கண்ணையும் நோக்கிப், பெரிதும் புலம்பினனாதலால், இச்சீறியாழ்ப்பாணன், என் விருப்பமிக்க காதலொடு பிரிந்தோராகிய தலைவரைச் சார்ந்தோன் போன்றிலன்; பேரன்பினன்', எனத், தலைவி, தோழியிடம் கூறினாள் *[ஐங்.475:4]*. 'பாகனே! இது பிரிந்தோரை நினைக்கும் காலமாதலால், காதலி உள்ளம் உவக்கும்படித் தேரினை விரைந்து ஏவுவாயாக', என, வினைமுற்றி மீளும் தலைவன், தேர்ப்பாகனுக்குரைத்தான் *[ஐங்.487:1]*.

**பிரிந்தோள்** - பிரிந்தவள் (பிரியப்பட்டவள்). 'நீ வரையாமல் பிரிந்தோளொடு - பிரிந்தவளொடு - கொண்ட உறவு தொடர்தலை நீ அருளல் வேண்டும்', எனத், தோழி தலைவனிடம் கூறி வரைவு கடாவினாள் *[கலி.48:21]*.

**பிரியுநன்** - பிரிபவன். 'தோழி, வெற்பன் நின்மேல் வைத்த காதலால் தனது யாக்கை மெலிவை நன்கு அறிந்தும் நம்மிடத்து இரந்து பின்னிற்றலை வெறாதவனாய், நம்மைப் பிரியுநன் - பிரிபவன் - ஆகலோ அரிது; அன்றித் தனக்கு உரியதல்லாப் பண்பினால் ஒருகால் அவன் பிரியுநன் ஆயின் அவனை நின்பால் கூட்டிவைத்து நின் நலத்தை யான் மீண்டும் தருவேன்' எனத், தோழி, தலைவி குறை நயக்குமாறு கூறினாள் *[அக.392:19,20]*.

**பிரிவு** - நீக்கம். கரும்பனூர் கிழான் தன்னிடத்து விடை வேண்டிய கிணைஞர்பால் அன்பு மிகவுடைமையால், அவர் பிரிவு - நீக்கம் - குறித்து அஞ்சினன் *[புற.381:7]*.

'யாம் பிரிவின்றி இயைந்த உவர்த்தலில்லாத நட்பினால் இருதலைப்பறவை போல், எம் இருவுடற்கும் ஒருயிரையுடையேம்', என்று, தோழி, தலைவிக்கும் தனக்கும் இடைப்பட்ட உணர்வுத் தொடர்பைத், தலைவனுக் குணர்த்தினாள் *[அக.12:4]*. 'பகலும், இரவுமென்றில்லாது மழை பொழிந்த விடியற்காலத்தே குளிர்ந்த பனியையுடைய அற்சிரக்காலம், தனித்திருப்போர்க்குத் தாங்குதலரிதாகும், என உணர்ந்து, கனவிலும் நின்னைப் பிரிவறியான்', எனத், தோழி, தலைவியிடம், தலைவனின் வரைவு மலிவைக் கூறினாள் *[அக.178:20]*. இன்பமும், துன்பமும் புணர்வும், பிரிவும் ஆகிய இவை பகலும், இரவும்போல் வேறு வேறு தன்மையினவாய் மாறுபட்டு வருவனவாம் *[அக.327:1]*. உடம்பிற்கு உயிர் ஒன்றினாலொத்த நட்பினொடு அவ்வுயிர் வாழ்தல்போலும் காதலையும், அது சாதல் போலும் பிரிவருமையையும் உடையவள்', எனப், பிரிந்து போகும் தலைவன், தலைவியைக் குறித்து எண்ணினாள் *[அக.339:14]*.

காதலிற் பிரிவு நேருமாயின், அப்போது குதிரையெனப் பனைமடலாற் செய்த உருவத்தொடு தெருவிலே தோன்றிக் காதலியால் நேர்ந்த துயரை யாவர்க்கும் விளங்கும்படி அறிவித்தலும் பழியைத் தரும்; அறிவியாமல் அவளையின்றித் தனித்து உயிர்வாழ்ந்திருத்தலும் பழியையே தரும்', எனத்,

தலைவன், தோழியிடத்து இரந்து பின்னின்று கூறினான் *[குறு.32:6]*. 'பிறவிதோறும் காதலொடு யாம் இருவேமாய்ப் பயின்றுவந்த இவ்வுலகத்தே, இப்பொது பிரிந்து ஒருவேமாய்த் தனித்த இத்துன்பத்தினின்றும் யாம் தப்புதற்கு, குளத்திலே பூ இடைப்படப்பிரியினும் அக்காலம் யாண்டுகள் பல கடந்தாற்போலும் துயரை உறுகின்ற மகன்றிற் பறவைகளின் புணர்ச்சியைப் போலப், பிரிவரிதாகிய குறையாத காதலொடு யாமிருவரும் உடனிருக்கையில், எம்முயிர் ஒருங்கே போவதாக', என்று, காவல் மிகுதிக்கண் தலைவனைக் கூடப் பெறாத தலைவி, நொந்து கூறினாள் *[குறு.57:3]*. 'தோழி, நாடனொடு நாம் கலந்த நட்பு நம்மொடு அவனுக்குப் பிரிவின்றி அமையுமாயின் நன்றாம்', எனத், தலைவி, தலைவன் வரைவிடைப் பிரிந்திருக்கையில், தோழியிடம் ஆற்றாதுரைத்தாள் *[குறு.134:2]*. 'எம்மகள் தன்னொடு பிரிவில்லாத ஆயமகளிர், கழியினிடத்து மலர்ந்த காவி மலர்களைப் பறித்தும், கடலலைகளில் விளையாடியும், தத்தமக்கு உரியதோர் விளையாட்டை அயரத், தான் இவ்விடத்தே இருத்தற்கும் உடம்பாடாளாய், அங்கே மலைநாட்டு வழிகளில் பரற்கற்கள் தன் கால்களை உறுத்தச் சென்றனள்', எனச், செவிலித்தாய், தலைவனுடன் போன தலைவியை நினைத்திரங்கினாள் *[குறு.144:3]*. 'தோழி, தாம் தம்மைப் புலந்து அகன்றாலும் தாம் பிரிவஞ்சி நீங்குதற்கரிய காமவின்பத்தை நம்மிடமிருந்து வலிந்து பெற்றவராகிய காதலர் இன்று மீண்டு வருவர்', என்று, தலைவனது வரவைத், தோழி, தலைவிக்குணர்த்தினாள் *[குறு.177:6]*.

'ஆழ்ந்துபட்ட விழுப்புண்ணின் நிண வாய்காயாத துன்பத்தையுடைய மார்பகத்தே வேலெறிந்தாற் போலத், தலைவரது அகற்சியால் வருந்தியிருக்கும் யான், மேலும் வருந்துமாறு, பிரிவில்லாதனவாக அருகிலேயே இருந்து புலம்பிக் கூவுகின்ற குயிலினும், தெளிந்த நீர் பொருந்திய ஆறுமிகக் கொடியது', என்று, பருவங்கண்டு ஆற்றாத தலைவி வெறுத்துரைத்தாள் *[நற்.97:3]*. 'நாடனே, பழகிய பகையும் பிரியுமிடத்து, அச்செலவு இன்னாததாயிருக்க, முல்லையரும்பு போன்று விளங்கும் எயிறுகளையும், இனிய முறுவலையுமுடைய இக்காதல் மடந்தையது திருநெற்றி பசக்குமாறு நீ இவளது தொடர்பினை எவ்வாறு கைவிட்டாய்?' எனத், தோழி, தலைவனை வினவி வரைவு கடாவினாள் *[நற்.108:6]*. " 'இனிய உயிர்போன்ற பிரிவரிய காதலர் கைவிட்டுச் சென்று காலம் தாழ்த்தனரே', என்னும் புலவியை, நீ நின்னுள்ளத்தே கொண்டு ஊடுகின்றதும் இல்லையோ'' எனத், தலைவி, பிரிவாற்றியிருக்கும் அருமையைத் தோழி வினவினாள் *[நற்.237:3]*. 'குன்ற நாடனது பிரிவினாலே நின் நன்னெற்றியில் பரந்த பசலையைக் கண்டு அன்னை செம்முது பெண்டிருடனே கட்டுக் கேட்பாளாயின், அக்கட்டுக்குறி, நெடுவேள் வருத்தியது நம் நோயெனக் கூறுமோ', எனத், தோழி, சிறைப்புறத்தலைவன் கேட்குமாறு, தலைவியை வினவினாள் *[நற்.288:4]*.

'வெற்பனே, நின் காதலியாய அரிவையது மாமையழகு தேயவும், பசலை பாயவும் பிரிவு நீட்டித்தற்கு நீ எவ்வாறு வல்லவனானாயோ', என்று, தோழி, தலைவனை, வினவினாள் *[ஐங்.23t4]*. 'தோழீ, பிரிவரிய காலத்திலும் பிரிதல் மிக வல்லவர், நம் காதலர்', எனத், தலைவி, தோழியிடம் இரங்கிக் கூறினாள் *[ஐங்.338:4]*. 'பெய்பனி நலிய, உய்வழியின்றிக் குருகினம் ஒலிக்கின்ற இப்பிரிவருங்காலத்தே, காதலர் என்னைப் பிரிந்து அமைதியுற்றார்; என்னெஞ்சும் அவரை மறந்து அமையாது', எனத், தலைவி, பருவரவின்கண், தோழிக்குக் கூறினாள் *[ஐங்.457:2]*.

'விளங்குகின்ற பூணினையுடையாய், பொருள்வயிற் பிரிவை நன்றென்று எண்ணிப் போன நம் காதலர் வருவர் போல் இருந்தது; இப்பொழுது அதற்குக் காரணம் கேள்', எனத், தலைவி, தோழிக்குக் கூறினாள் *[கலி.11:4]*. 'அலர்ந்த காஞ்சிப் பூவின் தாதை அளைந்து கருங்குயில்கள் கூவவும், இக்காலத்தே, பிரிவிற்கு அஞ்சாத காதலரின் கொடுமையை யான் மறைப்பேன்', எனத், தலைவி நொந்துரைத்தாள் *[கலி.34:9]*. தமக்குள் போர்புரியும் ஆனேறுகளின் போரை மாற்றி, அவற்றின் பிரிவுகருதி, அவை இருகூறாக நீங்கும்படி, நடுவே வேறு சில ஏறுகளைச் செலுத்தி விலக்கிப் பின்னர்ப் ஆவின்திரளோடே மேய்புலத்தில் ஏற்றி, ஆயர் தத்தம் இனங்களைப் பிரித்தனர் *[கலி.106:16]*.

**பிரிவோர்** - பிரிபவர். 'அருளையும், அன்பையும் துறந்து தம் துணைவியாகிய நம்மையும் விட்டுப் பொருள்வயிற் பிரிவோர் - பிரிபவர் - ஆகிய அவ்வாற்றலையுடையோர் அறிவுடையவரேயாகுக; அவரைப்பிரிந்திருக்கும் ஆற்றலில்லாத நாம் அறிவிலேமாகுக', எனத், தலைவி, தலைவனின் செலவுணர்த்திய தோழியிடம் கூறினாள் *[குறு.20:2]*.

'வடபுலத்து வாடைக்காற்று வீசுகின்ற கூதிர்ப்பருவத்திலே, காதலியைப் பிரிவோர், இவ்வுலகத்தே மடவர்', எனத், தலைவன், பொருள்வலித்த நெஞ்சிற்குக் கூறினான் *[நற்.366:11]*.

'தும்பிகள் இசைக்கும் புதரிடத்து மலர்கள் மலரும் மாலைக் காலத்தும் நம்மைப்பிரிவோர், அதனினும் கொடிய செயல்களைச் செய்குவர், அன்னாய்', எனத், தலைவி, தலைவன் சிறைப்புறத்தானாகத், தான் இரவுக்குறி நயந்து, தோழியிடம் கூறினாள் *[ஐங்.215:5]*.

**பிருங்கலாதன்** - பிரகலாதன். 'சினத்தாலன்றி இயல்பாகவே சிவந்த கண்களையுடைய செல்வனே, பிருங்கலாதன் - பிரகலாதன் - நின்னைப் புகழ்தலாலே இரணியன் சினத்தியாற் புகைந்த நெஞ்சொடும், புலர்ந்த சாந்தொடும் அவன் பலப்பல பிணிப்புப்படுமாறு பிணித்தபோது, அம்மிக்க நோயினால் ஒடுங்குதற்குக் காரணமான நடுக்கத்தையுடைய அம்மிகு புகழோன் (பிருங்கலாதன்), தன் தந்தையாகிய

அவ்விகழப்படுவோனை (இரணியனை) இகழாத நெஞ்சினனாக, நீ அவனை யிகழ்ந்து, தனக்கு நன்றாக நின்னொடு நட்புப்பூண்ட அவன் (அப்பிருங்கலாதன்) வருந்தாமல் அவனது நெஞ்சிற்பொருந்தி, நின்னொடு ஒன்றாக வரம்பெற்றவனது (இரணியனது) மார்பின் வலிமைகெட நீ புறப்படுதலால் வெடித்தொடிந்த தூணின் பிளப்போடொத்த, நின்னால் பிளக்கப்பட்ட அவனது ஊன்தடி, பலபட வகிர்தல் வாய்ந்த நகமுடையை', என்று, திருமாலைப் பாடுவர், கடுவனிளவெயினனார் *[பரி.4:12].*

பிழா- தட்டுப்பிழா. குற்றாத கொழியலரிசியைக் களியாகத் துழாவிய கூழை, அகன்ற வாயையுடைய பிழாவிலே - தட்டுப்பிழாவிலே - இட்டு ஆற்றுவர் *[பெரு.276].*

பிழி - கள் / சாறு. உண்டாட்டிலே பிழி - கள் - ஆகிய மகிழ்ச்சியளிக்கும் உணவை வழங்கினர் *[புற.269:7].*

கரும்பு வெட்டுவோர் அக்கரும்பினின்றும் இனிய பிழி - சாறு- எடுக்கும் எந்திரத்தின் பத்தல் (சாறு வடியும் கூன்) நைந்து வருந்துமாறு, மிக்க விளைவோடே நல்லவாயிருந்த பகைவர் நாடுகளை இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் அழித்துப் பாழ்படுத்தினான் *[பதி.19:23].* குன்றுகள் கலந்த புல்லிய பாலை நிலத்துக் கொலைவில் வேட்டுவர், தாம், வேட்டையாடிய ஆமானின் ஊனொடு யானைக் கொம்பினையும், கொண்டுபோய்க் கடைத்தெருவிலே தாம் வாங்கும் பிழிக்கு விலையாகக் கொடுப்பர் *[பதி.30:12].* கொல்லிமலையில் வாழும் செழுங்குடிச்செல்வர் பலாப்பழத்தின் களைகளையுண்டு, மூங்கிற் குழாயிலே கிடந்து முதிர்ந்ததும், விழாக்கொண்டாடினாற்போன்ற இனியதுமான பிழியையருந்தி மகிழ்ச்சியுடையராய் இரவலர்க்கு ஈவர் *[பதி.81:21].*

தொண்டைமான் இளந்திரையனைக் காணச் செல்லும் நீவிர் இடையே வலைஞர் குடியின்கண் தங்குவிராயின், குற்றாத கொழியலரிசையைக் களியாகத் துழாவி அட்ட கூழை, பிழாவிலே இட்டு உலற ஆற்றி, அதிலே முளைகளை இடித்துக் கலந்து, இனிமை பிறக்கும்படி இருபகலும், ஈரிரவும் அரியாமல் வைத்துச், சாடியின்கண் இளமையற முற்றியதும், விரலாலே அலைத்து அரிக்கும் தன்மையை உடையதாகிய வெவ்விய நீர்மையமைந்த நறும்பிழியைச், சூட்டு மீனொடு பெறுகுவீர்', எனப், பெரும்பாணர், ஆற்றுப்படுத்தப் பெறுகின்றனர் *[பெரு.281].* தினைப்புனங்காக்கும் கானவன், தன் குடிலின்கண், மனைவி எடுத்துக் கொடுப்பத், தேனால் சமைத்த பிழியின் தெளிவை உண்டு, மகிழ்ச்சி மிகுந்து, தனது காவற்றொழிலை மறந்தான் *[குறி.155].* பரதவர் உவாநாளிலே கடல்வேட்டம் செல்லாது மடிந்து தத்தம் மகளிரொடே பனைமரத்தின் பிழியை மாந்தியும், நெற்கள்ளை உண்டாடியும் பகல் விளையாடுவர் *[பட்.89].*

தேனால் சமைத்த பிழியாகிய நறவினையுடையவர் குறவர் *[அக.78:7].* பெரிய தினைப்புனத்தில் ஓங்கிய பரணின்மேல் இருந்து காவல் புரியும் கானவன் பிழியுண்டு மகிழ்ந்து காவலை மறந்தான் *[அக.102:2].* எழினியென்பான், ஏவிவிட்ட தொழிலை முடிக்கும் பொருட்டுப், போர்த்திறம் வாய்ந்த மறவர், தேனாற் சமைந்த பிழியாகிய நறுங்கள்ளையுண்ட மகிழ்ச்சியினால், பகைமுனையை வென்று, அப்பகைவரது ஆனிரையைக் கவர்ந்து தருவர் *[அக.105:14].* 'பெரிய பிழியையருந்தும் மக்களையுடைய ஆரவாரம் மிக்க மூதூர் விழாவில்லையாயினும் துயிலாது' *[அக.122:1].* கானவன் யானையை வேட்டையாடி, அதன் கோடுகளைக் கொணர்ந்து, தன் குடிலின்கண் ஊன்றிவிட்டு, பலவின் பழத்தினின்றும் எடுத்த பிழியை உண்டு, மகிழ்ந்த உவகையனாய்ச், சுற்றத்துடன், சந்தன விறகினால் ஊன்சோறு சமைத்துண்பான் *[அக.172:12].* வடுகர், பிழியுண்ட மகிழ்ச்சியுடையராய்ச் செருக்கு மிகுந்து ஆரவாரிப்பர் *[அக.295:16].*

மீன்வேட்டம் பொய்யாது வலைவளம் சிறத்தலால் கிடைத்த மீன்களைப் பரதவர் வேற்றூர்களிற் சென்று விற்று, அப்பொருளை ஈந்து, கரிய பனையினது இனிய பிழியை யுண்போர் மகிழ்ந்திருக்கும் மிக்க ஆரவாரம் அமைந்த புது வருவாயுடையதாயினும், எம் ஒலிமிக்க ஊர், காதலர் பிரிதலால், எமக்குப் புல்லென்று தனிமை வருத்தம் தருவதாயிருக்கின்றது; எனத், தலைவி, தோழியிடம் வன்புறை எதிரழிந்து கூறினாள் *[நற்.38:3].*

**பிழை - தவறு.** இற்பரத்தையொடு வையையில் புனலாடிய தலைவன், காதற்பரத்தையின் ஊடலைத் தணிக்க வேண்டித், தளிரைக் கையுறையாகக் கொண்டுவந்து, கொடுத்தானாக, அத்தளிரின் வாட்டத்தைக் குறித்து மேலும் ஊடிய காதற் பரத்தையிடம், அவன், 'வையை வெள்ளத்தில் நான் புணையேறி வரநேர்ந்தமையால் பொழுது தாழ்த்து இத்தளிர்கள் வாடின; திருப்பரங்குன்றத்தின்மேல் ஆணை', என்று கூறித் தெளிவிக்க முயலவும் தெளியாத அவள், 'நீ வேண்டாது சூளுற்றுப் பிழை - தவறு - பெற்றாய். இனிச் சூளுறாதே', என்றாள் *[பரி.6:74].* தவைனிடத்து மிக்க ஊடலுற்ற காதற்பரத்தையை, அவள் குடியின் முதுபெண்டிர் தடுத்து, 'நீ, இருட்பொழுதில் இவனை விட்டு நீங்கற்பாலையல்லை; நீங்குவையாகில், இடனறிந்து ஊடி இனிதின் உணரும் ஒழுக்கத்திற்குப் பிழையாகும், என்று உணர்த்தினர் *[பரி.6:100].* திருப்பரங்குன்றத்தில் முருகனின் அடிமலர்களைத் தொழுது வணங்கிய மகளிருட்சிலர், 'யாம் கனவிலே எம் காதலரைத் தொட்டது பிழையாகாமல் நனவிலே எய்துதற்கு, வையையாறு புதுப்புனலை அணிவதாக', என, வரம் வேண்டினர் *[பரி.8:103].* வையைக்கரையில் தன் கணவனை அமிர்தையொத்த நோக்கினால் அணங்கொப்பாளாகிய மற்றொருத்தி பார்க்கப், பொறாத அவன் மனைவி, மாலையையே கோலாகக் கொண்டு

அவனை புடைத்துத் தன் மார்பின் வடத்தை வாங்கி அவன் முன் கைகளை இறுகக் கட்டி, நீ பிழையுடையை', என்றாளாகத், தான் செய்த பிழையொன்றையும் காணாதவனாகிய அத்தூயவன் மனைவியைத் தொழுது தன் பிழையாதெனக் கேட்டான் *[பரி.12:60(2),61]*.

**பிழைக்குவது** - தவறுவது. வில்லேந்திய மாறாத கொடுமையையும், வடித்த அம்பினையுமுடைய ஆறலை கள்வர் தாம் குறித்த இலக்குப் பிழைக்குவது - தவறுவது - ஆயின், அம்புதொடுத்த கைவிரலை 'வாயிலிட்டுக் கவ்வுவர் *[அக.215:7]*.

**பிழைத்தது** - தவறியது. சோழன் நலங்கிள்ளி தம்பி மாவளத்தானும், புலவர் தாமப்பல்கண்ணனாரும் வட்டாடியபோது புலவர் தம் கையால் கவற்றினைப் புதைத்தமையால் வெகுண்ட சோழன் வட்டினைக் கொண்டு அவர்மேல் எறிந்தானாக, அவர், 'கைவண் தோன்றலே நின் முன்னோரெல்லாம் பார்ப்பார் நோவத்தக்க செயல்களைச் செய்யார்', மற்று, நீ செய்த இவ்வெறுக்கத்தக்க செய்கை நின் குடிப்பெருமைக்குப் பொருந்துமோ? அதனால், நின் பிறப்பின்கண் ஐயமுடையேன்', என்றாராக, அவன் நாணியது கண்டு, தம் சொற்பிழையுணர்ந்த புலவர், அவனது பண்பு மேம்பாட்டை மதித்து, 'நீ வெறுக்கும்படி சொல்லி, நின்னிடத்தே யான் பிழைத்தது - தவறியது - குறித்து நொந்திலையாயினும் நீயே பிழைத்தாய் போல் மிகவும் நாணினையே', எனக் கூறித், தம் பிழையை அவன் பொறுத்தது பற்றிப் பாராட்டி வாழ்த்தினார் *[புற.43:16]*.

**பிழைத்தோர்** - தவறியோர். சோழன் நலங்கிள்ளி தம்பி மாவளத்தானும், புலவர் தாமப்பல்கண்ணனாரும் வட்டாடிய போது புலவர் தம் கையால் கவற்றினைப் புதைத்தமையால் வெகுண்ட சோழன் வட்டினைக் கொண்டு அவர் மேல் எறிந்தானாக, அவர், 'கைவண்தோன்றலே, நின்முன்னோரெல்லாம் பார்ப்பார் நோவத்தக்க செயல்களைச் செய்யார்; மற்று, நீ செய்த இவ்வெறுக்கத்தக்க செய்கை நின் குடிப்பெருமைக்குப் பொருந்துமோ? அதனால், நின் பிறப்பின்கண் ஐயமுடையேன்', என்றாராக, அவன் நாணியது கண்டு தம் சொற்பிழையுணர்ந்த புலவர் அவனது பண்பு மேம்பாட்டை மதித்து, 'நீ வெறுக்கும்படி சொல்லி நின்னிடத்தே யான் பிழைத்தது குறித்து நொந்தி லையாயினும் நீயே பிழைத்தாய்போல் மிகவும் நாணினையே. தம்மிடத்தே பிழைத்தோரை - தவறியோரை - பொறுக்கும் தலைமை இக்குலத்தின்கண் பிறந்தோர்க்கு எளிமையுடையது காணும் என, நீ அறிவித்தாய்; ஆதலின், யானே பிழைத்தேன், நின் வாழ்நாள் பலவாய்ச் சிறப்பதாக', என்று, அவனைப் பாராட்டி வாழ்த்தினார் *[புற.43:18]*.

**பிழைப்பு** - பொய்ப்பு / பெயர்வு. சனிமீன் புகைகளோடு கூடிப்புகையினும், எல்லாத் திசைகளிலும் புகை தோன்றினும், தென்திசைக்கண் வெள்ளி சாயினும் கோல் (ஆட்சி) செவ்விதாகலானும், சான்றோர் பலர் வாழ்தலானும், வயலிடம் விளைவு மிகவும், புதலிடத்துப் பூ மலரவும், மனையிடத்துக் கன்றீன்ற ஆமாவின் நெடிய கூட்டம் நன்புல்லை மேயவும் மழை பிழைப்பு - பொய்ப்பு - அறியாத புன்செய் நிலத்தின் கண்ணது, பாரியின் பறம்புநாடு *[புற.117:7]*.

'சேரலாத, உண்மையே சொல்லி ஐம்புலன்களும் அடங்கிய கோட்பாட்டோடே நரகத்துன்பத்திற்குச் செல்லாது நீங்கிய மேலோர் பலரும் நினது செங்கோற்சிறப்பினால் பதியினின்றும் பிழைப்பு (பெயர்வு) அறியாது நிலையாய்த் தங்கி நுகர்ச்சியெய்தி விரும்பியுறையும் நின்னாட்டினைக் கண்டு வியந்தேன்', என, இமையவரம்பன் நெடுஞ் சேரலாதனைப் பாடுவர், குமட்டூர்க்கண்ணனார் *[பதி.15:30]*. 'அயிரைமலைத் தலைவனே, ஓர் யாண்டும் பிழைப்பறியாது பயன்மழை சுரந்து, நோயில்லாத மாந்தர்க்கு நெடுங்காலம் வாழ்வுண்டாகும்படி நீ நின் பெருந்தேவியாகிய இவளோடே பலவாயிரவெள்ளம் (காலம்) வாழிய', என்று, பல்யானைச் செல்கெழுகுட்டுவனை வாழ்த்துவர், பாலைக்கௌதமனார் *[பதி.21:30]*.

மலை நாட்டிற்குரியோனான நன்னன், இலம்படு புலவரின் ஏற்ற கைந்நிறையும்படி தன் கைகளிடத் துண்டாகிய வளம் பிழைப்பறியாது, நவிரமலையுச்சியிலே மழை பொழிந்தாற்போன்ற கொடையை நல்கி விடுப்பான்', என்று, கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெறுகின்றனர் *[மலை.578:]*.

இரவலர்க்கு அவர் விரும்பிய விருப்பம் பிழைப்பறியாது நல்கும் ஈகைப்பண்பினன், அதிகன் *[அக.162:18]*.

"தோழி, சேர்ப்பனாகிய காதலனை யான் மாலையையே கோலாகக் கொண்டு அடிப்பேன் போலவும், அவ்விடத்தே அவன், 'யான் செய்த பிழைப்பு யாது', என வினவி நடுங்கியவாறே, 'நீ பெரிதும் அறியாமையுடையை' என்று, என்னைத் தெளிவிப்பான் போலவும், கனவினில் கண்டேன்', எனத், தலைவி, தோழியிடம் கூறினாள் *[கலி.128:20]*.

2. வாழ்வு. 'ஊரனே, நின்னையின்றி யான் அமைந்திருப்பேனாயின், இங்கே இனிமையில்லாத நோக்கத்துடனே எனக்கு என்ன பிழைப்பு - வாழ்வு - இருக்கிறது', என்று, பரத்தை, தலைவனிடம் கூறினாள் *[நற்.400:6]*.

**பிள்ளை** - இளமைப்பெயர். வெருகுப்பூனையின் பிள்ளையது-குட்டியது - கூரிய பல்லையொப்ப, முல்லை அரும்பும் *[புற.117:8]*. கொக்கினது அகன்ற வாயையுடைய பிள்ளை - குஞ்சு - அடைகரையில் வரும் மீன்களைத் தானே மேய்ந்துண்டபின் ஆரல் மீனின் ஐயவிக் கடுகு போன்ற முட்டைகளை இறாமீனின் பிள்ளையொடு - குஞ்சொடு தாய்தரப் பெற்றுண்ணும் *[புற.342:7,10]*. பிள்ளையஞ்சிறாஅர் *[புற.380:13]*. 'குளம்

நீரற்றுக் களிமயமாதற்குரிய கோடைக்காலமாயினும் இப்பிள்ளையம்பொருநன் பரிசில் கருதி எம்மையும் நினைப்பானோ', என்று, ஆதனுங்கன் எனக்கு மிகவும் ஈந்தனன்' எனக், கள்ளிலாத்திரையனார் கூறுவர் [புற.389:5].

உழவர் தம் தோட்டத்தின் விளைவை அறுக்கும் காலத்தே, அதன்கண் தங்கியிருந்த குறும்பூழ்ப்பறவை, வெண்ணிறமுடைய கடம்பின் நறுமலர் போன்று வளரும் இளம்பிள்ளைகள் மிகவும் பறத்தல் மாட்டாவென்று, அவற்றையும் தானே கூட்டிக் கொண்டுபோய்க், காட்டின்கண்ணே தங்கும் [பெரு.204].

குறுகிய மலையிடத்தே வளர்ந்த யாமரத்தின் அரிய கவட்டினின்றெழுந்த உயர்ந்த கிளைகளில் உள்ள பிள்ளைக்குக் கழுகு உண்பிக்கையில், விரைந்து அக்குஞ்சினது வாயினின்றும் வழுக்கி வீழ்ந்த கொழுத்த ஊன்துண்டு, அம்மரத்தின்கீழ் இருந்த பழம் பசியையுடைய முதுநரிக்கு உணவாகும் [அக.193:8]. மலை வழிகளில் சிறுதூறுகள் படர்ந்த புற்றுக்களில் கிடைக்கும் புற்றாம்பழஞ் சோறாகிய இரையை விரும்பிப், பிள்ளைக்கரடி, வெள்ளரவு மிளிரும்படி கிளைக்கும் [அக.257:21]. சேற்றுப்புலத்தில் மீன்பிடிக்குமாறு காலை வேட்டத்திற்குச் சென்ற சிறுவர் இட்ட நுண்வலையின்கண், சேவல் அகப்பட்டதாகக், கொக்கின் பேடை இரைகொள்ளாது வருத்தமுடைய பிள்ளையைத் தழுவிக்கொண்டு பனைமரத்திலே தங்கியிருந்து அச்சேவலை நினைந்து அன்புறக் கூவும் [அக.290:6]. காட்டில் சிறுகுடியின் முள் வேலியையுடைய முற்றத்தே, பூனையின், பூளைப்பூப்போலும் பொங்குகின்ற மயிரையுடைய பிள்ளைகள், திங்களைச் சூழ்ந்த விண்மீன்களைப் போல், தம் தாயைச் சூழ்ந்திருக்கும் [அக.297:14]. தளிரின் இயல் வாய்ந்த கிளி, இனிதே வளர்த்த முற்ற வளராத பிள்ளையின் தூவியைப் போன்றன, பெய்ம்மழை வளர்த்த பசம்பயிர்கள் [அக.324:4].

மனையுறை குருவிகள் முன்றிலின்கண் உலரும் தானியங்களைத் தின்று, பொதுவிடத்து எருவின் நுண்பொடியிற் குடைந்து விளையாடிப், பின்னர் மாலைப்பொழுதில், மனையிறப்பிலேயுள்ள தமது கூட்டின்கண், பிள்ளையோடே, தங்கியிருக்கும் [குறு.46:5]. பறவைகள் தாம் தங்கியிருக்கும் மராமரக் கிளையிலுள்ள கூட்டின்கண் உள்ள பிள்ளையின் வாய்க்குள் செருகி ஊட்டும் பொருட்டு, இரைகொண்டமையால், ஞாயிறு மறைந்த வானத்திலே விரைந்து பறந்தன [குறு.92:4]. சிவந்த கொண்டையையுடைய சேவலே, ஊரனொடு தங்கியிருந்த இன்பமிக்க துயிலினின்றும் எம்மை எழுப்பிய நீ, நள்ளிருள் யாமத்தே, இல்லெலியை இரையாகப் பற்றப்பார்த்திருக்கும் பிள்ளையாகிய காட்டுப்பூனைக்குச் சின்னாள் இட்டு வைத்துண்ணும் உணவாகி, மிக்க துன்பத்தை அடைவாயாக', என்று, பொருள்முற்றி மீண்ட தலைவனுடனிருந்த தலைவி கூறினாள் [குறு.107:4]. வேலியின்கண் இருக்கும் வெருகுப் பூனைக் கூட்டம், மாலைக் காலத்தே வந்ததாக, அப்பூனைகளிடத்தே அகப்படாமல் சென்று தப்புமிடத்தைக் காணாது, ஒருங்கு குழுமுதற்கு அச்சமிக்க பிள்ளைகளை மனையுறை கோழிப்பெடை கூவியழைக்கும் [குறு.139:4].

கடலிலே துழாவித் தன் பெடையோடே ஒருசேர இரைதேரும் நாரை, சிறுமீன்களைப் பிடித்துக் கொணர்ந்து, கானற் சோலையிடத்து மேலோங்கிய கிளைகளின் உச்சியிலுள்ள கூட்டின்கண் இருந்து, தாயைக் கூவியழைக்கின்ற தன் பிள்ளையின் வாயினுள் படுமாறு கொடுக்கும் [நற்.91:7]. மனையகத்து இறப்பிலே தங்கியிருக்கும் குருவிச்சேவல், பிறபுலத்தே சென்று வேற்றுப்பெடையொடு தங்கியிருந்து வந்த குறிப்பு நோக்கி, அதன் உரிமைப்பெடை, தன் பிள்ளையொடு சேர்ந்து எதிர்த்து, சேவலைக் கூட்டினுள் வாராது கடிந்து, பின், மழையிலே நனைந்து அச்சேவல் நடுங்கியிருக்கக் கண்டு, ஈர நெஞ்சோடு தன்னிடத்தே அழைக்கும் [நற்.181:5]. அருமன் என்பானின் சிறுகுடியில் காக்கைப் பேடை தனது நடுங்கும் சிறகுகளையுடைய பிள்ளையைக் கூட்டிக்கொண்டு இனத்தையும், கூவியழைத்துக், கருனையொடு கூடிய செந்நெற்சோற்றைத், தெய்வபலியோடே சேரக் கவருதற்கு, மனைகளிடத்தே குழுமியிருக்கும் [நற்.367:2]. இரைதேடும் விருப்பத்தால் கழிகளிடத்தே துழாவியலைந்த வருத்தம் ஒழியுமாறு, பறவைகளெல்லாம், ஞாயிறு மறைந்த மாலைக் காலத்தே தத்தம் பிள்ளையொடு மரங்களில் தங்கின [நற்.385:5].

'தாய் சாகத் தாம் பிறக்கின்ற நண்டுகளுடனே, தன் பிள்ளையைத் தானே தின்னுகின்ற முதலையையும் உடையது, அவனூர்', எனத், தலைவனது ஊரைப்புனைந்து, அவன் பண்புகளைப் பழித்துரைப்பாள், தோழி [ஐங்.24:2]. வெள்ளாங்குருகினது பிள்ளை இறந்ததாக, அதனைக் கண்டு கேட்கச் சென்ற நாரை மிதித்தலால் மகளிரின் கண்ணைப் போன்ற நெய்தல் பூக்கள் சிதைவுற்றன [ஐங்.151:1]. வெள்ளாங்குருகினது பிள்ளை இறந்ததாக அதனைக் கண்டு கேட்கச் சென்ற நாரை அப்பார்ப்பு இறந்ததற்கு வருந்தியது மட்டுமல்லாமல், அதன் தாயின் துன்பத்திற்கும் வருந்தியது [ஐங்.160:1].

**பிளவை** - (பிளக்கப்பட்ட) துண்டு. 'நன்னன் சேய் நன்னனைக் காணச் செல்லுமிடையே மலைகளை அடுத்திருக்கும் சிற்றூர்களைச் சேர்வீராயின், பிணவு நாய் ஓடிக் கடித்துக் கொணர்ந்த உடும்பின் ஊனோடே, கடமான் தசையையும், எய்ப்பன்றியைக் கொன்ற பசிய நிணத்தையுடைய பிளவையையும் - (பிளக்கப்பட்ட) துண்டினையும் - கலந்து சமைக்கப்பட்ட ஊனுணவை மனைதொறும் பெறுவீர்', எனக், கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெறுவர் [மலை.176].

பிற்பகல் - பகற்பொழுதின்பிற்கூறு. முன்பகல் ஒருத்தியுடன் கூடி நண்பகலில் நீங்கிப் பிற்பகலில் - பகலின் பிற்கூற்றில் - பிறரைத் தேடும் தலைவன் *[கலி.74:11]*.

பிற்றை - 1. பின்புறம் (முதுகு). பிற்றை - பின்புறத்திலே - தாழ்ந்த கரிய புனை, நெடுங்கூந்தலையுடையவள், தலைவி *[நற்.374:5]*.

2. பிறகு. 'பசிய கிளிக்கூட்டமே, தினை முற்றினமையால் கொய்த பின் எம்மை அறனில்லாத அன்னை இற்செறித்து வருத்துவதோடே, வறிய புனத்திற்குக் காவலாக விடமாட்டாமையையும் நீவிர் அறிந்தனிரல்லிரோ? - பிற்றை - பிறகு - எம்மெய் வேறுபாடு காரணமாக அவள் வெறியெடுத்தலாலே தெய்வமும் தோன்றி எம்மை வருத்தும் போலும், நீவிர், தலைவனைக் காணின், அவனுக்குச் சிறிதே அறியும்படி நன்றாக உரைமின்', எனத், தோழி, தலைவன் சிறைப்புறமாகக், கிளிகளுக்குக் கூறுவாள் போல், அவன் கேட்பக் கூறினாள் *[நற்.376:9]*.

பிற்றைநிலை - வழிபாட்டு நிலைமை, வழிபாடு. தன் ஆசிரியர்க்கு ஓர் ஊறுபாடு உற்றவிடத்து, அது தீர்த்தற்கு வந்து உதவியும், மிக்க பொருளைக் கொடுத்தும், பிற்றை நிலையை - வழிபாட்டு நிலைமையை - வெறாது கற்றல் ஒருவர்க்கு நல்லது *[புற.183:2]*.

பிறக்கிடுவது - பின்னிடுதல். 'நிலம் பிறக்கிடுவது — பின்னிடுதல் — போல், குளம்புகளைச் செலுத்தி, உள்ளத்தின் விசையையும் ஒப்பாகாதென்று ஒழிக்கும் விரைவுச் சுழற்சியையுடைய குதிரை மேல் அமர்ந்து, பகைவரையழிக்கும் காளையாகிய மறவன், கூர்வேலால் என்னெஞ்சின்கண் வடுவிளைக்குமாறு, அதனை ஆற்றியவாறே, என்னொடு போரிட்டுக் காணவருகின்றான்', எனக் கூறிப், போர்க்களத்தே ஒருவன் அஞ்சாது நின்றான் *[புற.303:1]*.

பிறக்கு - பின். பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியின் விரைந்த தூசிப் படையது வலிமையைக் கெடுத்தல் வேண்டி, பலகையோடே நெடுவேலையேந்தித் தம் நசை செலுத்த வந்து அது பிறக்கு - பின் - ஒழிய, வசையுண்டாக உயிர் வாழ்ந்த பகைவர் பலராவர் *[புற.15:15]*. 'கள்ளிகள் பரந்ததும், முள்ளிகள் நிறைந்ததுமான புறங்காட்டிலே, உப்பின்றி வேகவைத்த சோற்றைக் கையிலே கொண்டு, பிறக்கு நோக்காது, இழிபிறப்பினோனாகிய புலையனால் கொடுக்கப்பெற்று,நிலனே உண்கலனாக, வேண்டாத பலியுணவை ஏற்கும், துன்பம் பொருந்திய இறுதிநாள் வருமுன்பே, இந்நிலவுலக வாழ்வைப் பற்றறத் துறந்து, நீ கருதிய தவமாகிய வினையைச் செய்வாயாக', என்று, ஐயாதிச் சிறுவெண்டேரையார் அறமுரைப்பார் *[புற.363:13]*.

செங்குட்டுவன் கடல் பின்னோடும்படி குதிரையூர்ந்து பகைவரை வென்றமையால் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் என்று குறிக்கப்பெற்றான் *[பதி.ப.5:22]*. பிறக்கடியிடாத (பின்வாங்காத) மேற்கோளமைந்த பகைவர் முன்னின்று, 'நும்மைப் பாதுகாத்தலை ஏற்றுக்கொண்டோனாகிய எம் வேந்தனுக்குத் திறையை இடுக', என்று, பெருஞ்சேரலிரும்பொறையின் படைமறவர் அவனை உயர்த்திப்பரவுவர் *[பதி.80:8]*.

'தொண்டைமான் இளந்திரையனைக் காணச் செல்லுமிடையே அவனாட்டுக் கலங்கரையும் துறைபிறக்கொழியப் போய்த், தோப்புக்குடிகளையுடைய உழவர் மனைகளிலே தங்குவீராயின் பலாப்பழம், இளநீர், வாழைப்பழம், பனை, நுங்கு மற்றும் பிறவும் தின்று வெறுத்தால், கிழங்குகளை உண்ணப்பெறுவீர்', எனப், பெரும்பாணர் ஆற்றுப்படுத்தப் பெறுவர் *[பெரு.351]*. கானம் தழைத்த செந்நிலப் பெருவழியிலே வெண்முகில் சிறுதுளிகளைத் தூவுகின்ற முன்பனி தொடங்கும் திங்களில் வள்ளியங்காடு பிறக்கொழியுமாறு குதிரைகளைக் கடிது செலுத்தும் செலவினையுடையனாய்த் தலைவன் வினைமுற்றி மீண்டான் *[முல்.101]*. மதுரையிலே விலைமகளிர் வெள்ளிய பூக்களால் செய்த மாலைகளை விசும்பிலே சென்று மணக்கும்படி, பிறக்கே (பின்னே கொண்டையிலே) முடித்துத், தொடிகள் விளங்கக், கைகளை வீசி, மனைதொறும் சென்று, இளையரோடு விளையாடுவர் *[மது.562]*.

'எந்தாய், வேந்தன் வினைமுடித்தவுடனே நீ நெடுந்தேரேறிச் சீறூர்கள் பல பிறக்கொழிய வந்து, மாலைப்பொழுதிலே நீரொழுகும் கண்ணினளாய்ப் பலவற்றையும் வெறுத்திருந்த நின் காதலியாகிய அரிவையது கூந்தலின்கண் மலரணிந்தனையாதலின், இனிது செய்தனை', எனத், தோழி, தலைவனைப் பாராட்டினாள் *[புற.104:13]*. 'தோழி, சீறூர் நாடுகள் பல பிறக்கொழியுமாறு பிரிந்து சென்றோராகிய காதலர், அன்பிலர் காண்', எனத், தலைவி, தலைவனது பிரிவின்கண் தோழிக்குரைத்தாள் *[அக.331:8]*.

தினைப்புனத்தின்கண் மேய்தற்கு இயந்திரப்புழைவழியே புகும்போது, பல்லியடிக்கக் கேட்ட பன்றி, தான் சென்றால், ஊறுவிளையுமென்றஞ்சி, மெல்ல மெல்லப் பிறக்கே பெயர்ந்து தன் கல்லளைப் பள்ளியிலேயே தங்கும் *[நற்.98:6]*. 'கிளிகடி கருவியாகிய குளிருடைய கொடிச்சியே, நீ மனைபுகுவாயாக' என்று, இன்மொழி கூறிக், கானவர் மெல்லக் கொய்தல் தொடங்கினராதலால் தினைப்புனத்திலே மெல்ல மெல்லக் கிளியோப்புதல் பிறக்கு எங்ஙனம் இயலுமோ, எனத், தோழி, தலைவனுக்குத், தலைவியது இற்செறிப்பினை அறிவித்து வரைவு கடாவினாள் *[நற்.306:2]*.

'வழிப்போகும் மக்களே, எனது நல்ல தோளை விரும்பிப் பாராட்டி வளர்த்தும் என் காதலனுக்கு, என்னை மணஞ் செய்து கொடுக்க மறுத்ததன் வழி என்னைக் கெடுத்திருந்த அறனில்லாத அன்னையைக் காணின், 'நின்மகள் தன் காதலனாகிய காளையோடே, நெடுந்தேரேறி, வேங்கைப்

புலிகளையுடைய மலைபிறக் கொழியுமாறு, அருஞ்சுரங்களைக் கடந்து, சென்றனள்', என்று கூறுவீராக', எனத், தலைவனுடன் போகும் தலைவி, இடைச்சுரத்தே, கண்டார்க்குக் கூறினாள் *[ஐங்.385:2]*.

**பிறங்கடை** - பின் தோன்றியோன், வழிமுறை. அரிதே பெறுதற்குரிய அந்தரத்து அமிழ்தம் போன்ற கரும்பினை இவ்வுலகிற்குக் கொணர்ந்தோனாகிய அதியமான் நெடுமானஞ்சியின் பெரிய பிறங்கடை - பின்தோன்றியோன் (பொகுட்டெழினி) - என் சிதாராகிய கந்தையாடையைக் களைந்து, கலிங்கமுடுத்தித், தேறலைப் பொற்கலத்திலே கொடுத்ததோடு விருந்தும் நல்கினான்', என்று, கிணைப்பொருநன் கூற்றிலே அவனைப்பாடுவர் ஒளவையார் *[புற.392:21]*.

'யாம் அவனிடத்தினின்றும் வருகின்றோம்; நீயிரும் முந்நீர் வண்ணனின் (திருமாலின்) பிறங்கடையாகிய திரையனை நினைந்து செல்வீராயின் அவனிலையைக் கேண்மின்', என்று, தொண்டைமானிளந்திரையனிடம், பெரும்பாணர் ஆற்றுப்படுத்தப் பெறுகின்றனர் *[பெரு.30]*.

**பிறங்கல்** - 1. மலை. வேங்கடநாட்டின் வடபுலத்தார், திருமாலையொத்த, வானளாவிய, பிறங்கல் - மலை (மலை போலும் போர்) - உச்சிப்பட, உயர்ந்த நெல்லின் பெருவளத்தை வாழ்த்திப், பெற்று. உண்டுவப்பர் *[புற.391:2]*.

'தோழீ, தலைவர் நாட்டில் எண்ணற்கரிய பிறங்கலின் பக்கமாகச் செல்லும் மான்களின் வழிகளிலே மயங்கித் திரியாது, மின்னல் வழிகாட்ட மெல்லப் போதல், பாதியிரவிலேயும் நமக்கு அரியதன்று', எனத், தலைவி, தலைவன் சிறைப்புறமாக நிற்கையில், தோழியிடம் கூறினாள் *[அக.8:13]*. 'ஞாயிற்றின் கதிர்கள் முறுகிய, மூங்கில்கள் அடர்ந்த, பிறங்கலையுடைய அருஞ்சுரநெறியிலே செல்லுதற்கு, என் சிறுமுதுக்குறைவியாகிய மகளின் சீறடிகள் வல்லனவோ', எனத், தலைவனுடன் போய்விட்ட தலைவியைக் குறித்துச், செவிலி இரங்கினாள் *[அக.17:15]*. எனது நெஞ்சு நடுங்கும் அரிய காதல் நோய் தீருமாறு வந்து தழுவிச் செல்வோளாகிய காதலியின் தோள், ஆய் அண்டிரனது கானகத்தில் தலையாறு என்னுமிடத்தே நிலைபெற்ற மிகவுயர்ந்த பிறங்கலையின் மூங்கில் கணுக்களுக்கு இடைப்பட்ட நடுவிடத்தையொத்து விளங்கும்', எனத், தலைவன், இரவுக்குறியிடை வந்து நீங்கும் தலைவியைக் குறித்து நினைந்தான் *[அக.152:22]*. 'அரிவையே, காய்கின்ற ஞாயிறு முடுகுதலால், அழகழிந்த பிறங்கலையும், மூங்கில் கணுக்கள் தெறித்த சிமையங்களையுமுடைய மலையைக் கடந்து சென்றோராகிய காதலர் நின் மார்பினைக் காதல் உள்ளமொடு தழுவுதலின்றி அங்கே தாழ்ந்திருக்க மாட்டார்', என்று, தலைவனது பிரிவிடைத் தோழி, தலைவியை வற்புறுத்தினாள் *[அக.39:16]*.

வண்டுகள் ஆரவாரிக்கின்ற பிறங்கலின்கண் மைந்தர் தாம் பூசிக்கொண்ட சாந்தத்தைத் தடவிப் புலர்த்துகின்ற காற்றையுடையது, திருப்பரங்குன்றம் *[பரி.21:46]*.

**2. விளக்கம்.** 'தோழீ, விண்ணைத் தோய்வதும், பிறங்கல் - விளக்கம் - உடையதுமான மலையைக் கடந்து சென்றோராகிய காதலர், விரைந்து வருவர்', எனத், தலைவியைத், தோழி ஆற்றுவித்தாள் *[அக.11:15]*. நிலையுயர்ந்த பிறங்கலையுடைய மலையைக் கடந்து சென்றோராகிய காதலர் நம் தோள் அழகழியுமாறு நம்மைத் துறந்து, இரும்பினாலான உயிருடையார்போல் வலித்திருக்க வல்லராயினர்', எனப், பிரிவிடை வேறுபட்ட தலைமகள் தோழிக்குரைத்தாள் *[அக.185:13]*. 'தோழீ, சிமையங்களுயர்ந்த பிறங்கலையுடைய மலையைக் கடந்து சென்றோராகிய காதலர், பொருளை விரும்பி நம்மைத் துறந்தனராதலின், அருளிலர்காண்', என்று, தலைவி, தலைவனது பிரிவினிடையே வேறுபட்டுத், தோழியிடம் கூறினாள் *[அக.247:13]*. 'தோழீ, மூங்கில்கள் வற்றி மாய்ந்த பிறங்கலையுடைய மலையைக் கடந்து சென்றோராகிய காதலர், எனது நல்லெழில் இளநலம் தொலையினும் நல்கார்', என்று, தலைவி, பிரிவிடை நொந்து, தோழிக்கு உரைத்தாள் *[அக.249:19]*. 'தோழீ, கற்கள் உயர்ந்த பிறங்கலையுடைய மலையைக் கடந்து சென்றோராகிய காதலர், தம்மை இன்றியமையாத நாம் இங்கே தனித்திருக்கப், பொருளை விரும்பி அகன்றனராயினும், அருள்புரிந்து விரைய வருவர்', எனத், தோழி, தலைவனது பிரிவிடை வேறுபட்ட தலைவியை வற்புறுத்தினாள் *[அக.313:7]*. 'மூங்கில்கள் உயர்ந்த பிறங்கலையுடைய மலையைக் கடந்து சென்றோளாகிய என் மகள், சீறூரின்கண், ஓர் ஒதுக்கிடத்தே, தன் துணைவனுடன் தங்கியிருப்பாளோ', என்று, மகட்போக்கிய செவிலி அவளை நினைந்திரங்கினாள் *[அக.321:17]*. "தோழீ, கோடுயர்ந்த பிறங்கலையுடைய குன்றுகள் பலவற்றைக் கடந்துபோய்ப் பொருள் தேடித்தரும் ஊக்கத்தால் வேங்கடத்தைக் கடந்திருப்பாராயினும், காதலர், நின் இன்பப்புணர்ச்சியை மறந்து ஆங்கே நீட்டித்திரார்', எனத், தோழி, தலைவனது பிரிவிடை வேறுபட்ட தலைவியை, வற்புறுத்தினாள் *[அக.393:1]*.

'முகில் தவழும் உச்சியையுடையதும், வானில் உயர்ந்ததும், பிறங்கலையுடையதுமான மலைநாட்டிலே தன் அடியின் அழகைப் பரற்கற்கள் சிதைக்கும்படி நடந்து என்கமள் தன் காதலனுடன் போயினள்', என்று, மகட்போக்கிய செவிலி இரங்கிக் கூறினாள் *[குறு.144:7]*. 'தோழீ, சிமையங்களுயர்ந்ததும், பிறங்கலையுடையதுமான மலையைக் கடந்து சென்றிருப்போராகிய காதலர் தம்மைப் பிரிந்து தனித்து வருந்தும் நின் துயரைக் கேளாதவராவர்; கேட்டிருப்பின், பிரிவினை நீட்டித்திரார்', என்று, தோழி, தலைவனின் பிரிவிடைத், தலைவியை வற்புறுத்தினாள் *[குறு.253:8]*. 'தோழீ, வானிலுயர்ந்ததும், பிறங்கலையுடையதுமான மலையைக்

கடந்து சென்றோராகிய காதலர் ஒவ்வொரு நாளும் பகலிலும் வாரார்; இரவிலும் தோன்றார்; எங்கேயிருக்கின்றாரோ', என்று, தலைவன் குறித்த பருவத்து மீளாத நிலையில், பருவங்கண்டு ஆற்றாத தலைவி, தோழியின் வற்புறுத்தலுக்கு எதிர் மொழிந்தாள் *[குறு.285:8]*. 'மூங்கில்கள், விசும்பின் கண்ணே ஓடுகின்ற முகிலைக் கிழிக்கும்படி, ஓங்கிய, உச்சியையுடைய கொடுமுடிகளோடு, உயர்ந்ததும் பிறங்களையுடையதுமான மலைக்குரியோன்', என்று தலைவனைக் குறித்துக் கூறினாள், தலைவி *[நற்.28:9]*.

'கொடுமுடிகளுயர்ந்த, பிறங்கலையுடைய மலையைக் கடந்து சென்றோராகிய காதலர் என் விருப்பத்தை மிகவும் கொன்றோராவர்', எனத், தலைவி, தான் கருதாதபோது பிரிந்த தலைவனைக் குறித்து வருந்திக் கூறினாள் *[ஐங்.318:5]*. 'பேதையம் பெண்டே, நின்மகள் தன் இனிய துணைவன் இனிதே பாராட்டக் குன்றுகள் உயர்ந்ததும், பிறங்கலையுடையதுமான மலையைக் கடந்து சென்றாள் என்று, தலைவனுடன் போய்விட்ட தலைவியைத் தேடிப் பின் சென்ற செவிலிக்கு, வழியெதிர்ப்பட்ட அந்தணர் கூறினார் *[ஐங்.387:6]*.

3. (பிறங்கின) கற்கள் / செறிகற்கள் / உயர்கற்கள். திருப்பரங்குன்றத்து மலையிலே தமரைப் பிரிந்து ஒரு பேதைப்பெண் 'சிறந்தவரே, யான் பிறங்கலின் - (பிறங்கின்) கற்களின் - இடையிடையே புகுந்து வழிதவறி வந்த வழியை மறந்தேன்', என்று ஒருவரை யழைத்துக் கூறினாள் *[பரி.19:59]*.

பிறத்தல் - தோன்றுதல். உலகத்திலேயே வளர்ந்தொன்று பின் தேய்தலுண்டாதலும், தேய்ந்ததொன்று பின் வளர்தலுண்டாதலும், பிறந்ததொன்று பின் இறத்தலுண்டாதலும், இறந்ததொன்று பின் பிறத்தல் - தோன்றுதல் - எனும் இவற்றை' உண்டாதலும் அறியாத மடவோரையும் அறியும்படிக் காட்டித், திங்களாகிய தெய்வம் இயங்குகின்றது *[புற.27:12]*.

'காலையிலே புறப்பட்டுத், தேரையமைத்துப், பரத்தையரைத் தழுவச் சென்ற ஊரனாகிய தலைவன் மிகவும் விளக்கமுடையவன் என்று எண்ணிச், சிறுவன்தாயாகிய தலைவி, அவனை ஏற்றுக்கொள்வாளாயினும் மனஞ்சுழலுவாள்; இங்ஙனம் மனஞ்சுழலுதற்குரிய செயலைத் தலைவன் செய்யினும், அதனை மறந்து, வாயில் நேருதற்குரிய இக்குடியிற் பிறத்தல் துன்புறுவதேயாகும்', என்றாள், தோழி *[குறு.45:5]*.

பிறந்தோய் - பிறந்தோனே (விளி). 'குமணனே! கூத்தரது வறுமையைத் தீர்க்கும் குடியின்கண் பிறந்தோயே! - பிறந்தோனே! - எனது வறுமை நிலையை நீ அறிந்தாயாயின், இவ்வாறு வறுமையுற்ற நிலையிலே நின்னை வளைத்தாயினும் யான் பரிசில் கொள்ளாது விடேன்', என்று, குமணனிடம், பெருந்தலைச்சாத்தனார் கூறிப் பரிசில் வேண்டினார் *[புற.164:13]*.

'இமயலையுச்சியிலே, கற்பினால் நன்கு மதிக்கப்படும் ஆரலிடத்தே (கார்த்திகையிடத்தே) மணிமிடற்றண்ணலுக்குப் (சிவபெருமானுக்குப்) பிறந்தோய்', என்று செவ்வேளை விளித்துப் பாடுவர், குன்றம்பூதனார் *[பரி.9:7]*.

பிறந்தோர் - பிறந்தவர். காணத்தக்க வலிமையுடையோய், நீ வெறுக்குமாறு சொல்லி, யான் நின்னிடத்தே தவறியதற்கு நொந்திலையாயினும், நீயே தவறினாய்போல் மிகவும் நாணினையே! தம்மிடத்துத் தவறியோரைப் பொறுக்கும் தலைமை இக்குடியிலே பிறந்தோர்க்கு - பிறந்தவர்க்கு - எளிமையுடையது காணும், என்று, இதனால் நீ அறிவித்தனையாதலின் நின் ஆயுள் சிறப்பதாக', என்று, சோழன் நலங்கிள்ளியின் தம்பி மாவளத்தானைப் தாமப்பல்கண்ணனார் பாடினார் *[புற.43:19]*.

பிறந்தோன் - தோன்றியோன். 'மாயோய், தாமரைப் பூவினுள் பிறந்தோனும் - தோன்றியோனும் - (நான்முகனும்) அவனுக்குத் தந்தையும் நீயேயென்று அந்தணரருமறை சொல்லுகின்றது' எனத், திருமாலைப் போற்றுவர் கடுவனிளவெயினனார் *[பரி.3:13]*. தாமரையாகிய பூவினுள் பிறந்தோனது (நான்முகனது) நாவினுள் பிறந்தது, நான்மறை *[பரி.தி.7:7]*.

பிறப்பித்தோர் - தோற்றுவித்தோர். 'உலகிலே முதலிலும், இடையிலும், இறுதியிலும் படைப்பு, அளிப்பு, அழிப்பு என்னும் தொழில் வேற்றுமை பற்றி நீ பிறவாப் பிறப்பு இல்லை; அங்ஙனம் நீ பல பிறப்புக்கள் பிறந்தும் நின்னைப் பிறப்பித்தோர் - தோற்றுவித்தோர் - ஒருவருமில்லை', என்று திருமாலைப் பாடுவார், கடுவனிளவெயினனார் *[பரி.3:72]*.

பிறப்பு - தோற்றம். `பிறப்பு - தோற்றம். ஒரு தன்மையாகிய ஒரு வயிற்றுப் பிறந்தோருள்ளும் கல்விச்சிறப்பினால் தாயும் மனம் வேறுபடுவாள் *[புற.183:3]*. தோழீ, நாடன் (தலைவன்) பிறப்பு மிக உயர்ந்ததேயன்றி நம்மோடொத்த தன்மையதன்று என்பதை அறிந்தனம்', எனத், தோழி, தலைவியிடம் கூறினாள் *[நற்.328:4]*.

புரவி நூல் கூறும் இலக்கணம் அமைந்த பிறப்புப் பொருந்திய நல்ல நான்கு குதிரைகளைப் பூட்டிய தேரினைப், பாகன் செலுத்தத், தலைவன், தலைவியை மணக்க வந்தனன் *[அக.400:5]*.

காதலனின் பிரிவால் யான் இங்கே தனித்து வருந்திச் சாதற்கு அஞ்சினேனில்லை; மற்று யான் இறந்தால் மீண்டும் பிறக்கின்ற பிறப்பு மக்களுள் அன்றிப் பிறிதாகுவதாயின், என் காதலனை அப்போது மறப்பேனா என்று அதற்காகவே அஞ்சுகின்றேன்', எனத், தலைவி, தோழியிடம் உரைத்தாள் *[நற்.397:8]*.

'உழுந்தினுங் காட்டிலும் துய்க்கப்பட்டிருக்கின்ற குறுகிய வட்டின் தன்மையையுடையாய்; நின்னினும் இழிந்ததோ என்

கூனின் பிறப்பு', எனக் கூனி, குறளனை வினவினாள் *[கலி.94:28]*.

'பணிந்தோர்க்கு மறுபிறப்பினை அறுக்கின்றதும், மாசில்லாததுமான சேவடிகளையுடைய மாயோயே', என்று, திருமாலை விளித்துப் பாடுவர், கடுவனிளவெயினனார் *[பரி.3:2]*. 'உலகிலே முதலிலும், இடையிலும், கடையிலுமாகப் படைப்பு, அளிப்பு, அழிப்பு என்னும் முத்தொழில் வேற்றுமைபற்றி நீ பிறவாத பிறப்பு இல்லை', எனத், திருமால் போற்றப்படுகிறார் *[பரி.3:72]*. 'நின்னையொழிந்தார், நல்வினையால் தாம் எய்தும் சிறப்பினுள் உயர் பிறவியினராதலும், தீவினையால் தாம் எய்தும் பிறப்பினுள் இழிபாதலும் ஆகிய இது நின் ஆணையின்பாற்பட்டது', என்று, கடுவனிளவெயினனார், செவ்வேளைப் போற்றுவர் *[பரி.5:20]*. 'இப்பிறவியின் நுகர்ச்சியேயன்றி, மறுபிறப்பு இல்லையென்னும் மடவோர், செவ்வேளின் தாள்நிழலை அடையார்' *[பரி.5:76]*. 'இருபிறப்பினையும், அவற்றால் வந்த இரு பெயரையுமுடையவர், அந்தணர் *[பரி.14:27]*.

**4. குடிப்பிறப்பிற்குரிய ஒழுக்கம்.** 'நாணையும், நிறையையும் நயத்தலிலாததுடன் பிறப்பு - குடிப்பிறப்பிற்குரிய ஒழுக்கம் - நெஞ்சில் இல்லாதவன்', என்று, தலைவனைக் குறித்துப், பழிப்பாள், தோழி *[கலி.60:29]*.

**பிறர் - மாற்றார் / பகைவர்.** 'வளவனே, முன்னர், குளிர்ந்த நீர் பரந்த ஓசையையுடைய உடைப்புக்களை மீன்களே எதிர்சென்று அடைக்கும் புதுவருவாயினையுடைய பயன்விளைக்கும் ஊர்கள் பொருந்திய பிறர் - மாற்றார் - நாடுகள், நீ கொள்ளையை விரும்புதலால் பின்னர் நல்ல பொருள்கள் இல்லாதனவாயின', என்று, கரிகாற் பெருவளத்தானைப் பாடுவர், கருங்குழலாதனார் *[புற.7:13]*. வெற்றி மாட்சிமைப்பட்ட குடுமியே, பிறர் நாட்டை அவர்க்குத் துன்பமாகக் கைப்பற்றி, நீ, நின் பரிசிலரிடத்தே இனியவற்றைச் செய்கின்ற இஃது, அறனோ' எனப், பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை, நெட்டிமையார் வினவிப் பாடினார் *[புற.12:4]*. 'போர்செய்யும் கூறுபாட்டை அறியும் மறவருடனே பகைவர் மாய, அப்பிறருடைய மண்ணைக்கொண்டு உண்ணும் தலைவனே', என்று, சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறையை, விளித்துப் பாடுவர், குறுங்கோழியூர் கிழார் *[புற.20:13]*. 'பிறருடைய பாதுகாத்த மறம் நிலைபெற்ற அரண்களை நீ பாதுகாவாது எதிர், நின்றழித்து அவரைக் கொன்று, அவர்தம் முடிபுனைந்த பசும்பொன்னால் நின் அடி பொலியக் கழல் செய்து புனைந்த வலிய ஆண்மையுடையை', என்று, குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப், பாராட்டிப் பாடினார் ஆவூர் மூலங்கிழார் *[புற.40:1]*. 'மாறனே, நீ பிறர் நாட்டைக் கைப்பற்றிக் கொள்ளும் காலத்து, அவர் நாட்டின்கண் கதிரையுடைய வயலை நின் வயவரும் கொள்ளை கொள்க; அகன்ற இடத்தையுடைய ஊரைத் தீயும் சுடுக; நின் வேல் பகைவரை அழிக்கினும் அழிக்க; அவர்தம் காவல் மரத்தை மட்டும் வெட்டுவதனைத் தவிர்வாயாக', என்று, பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனுக்குக் கூறுவர், காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் *[புற.57:5]*. இன்றே போல்க நும் இணைப்பு: வென்று வென்று போர்க்களத்தின்கண், மேம்படுக நும்வேல்: வளைந்த வரியையுடைய புலிவடிவாகச் செய்யப்பட்ட இலாஞ்சனையைக், கயல்மீனுடனே பொறிக்கப்பெற்ற சிமையங்களை யுடையனவாகுக பிறர் நாட்டுக் குன்றுகள', என்று, சோழன் குராப்பள்ளித் துஞ்சியபெருந்திரு மாவளவனும், பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கிருந்தாரைக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் வாழ்த்தினார் *[புற.58:32]*. 'மூவேந்தரும் முற்றுகையிட்டிருந்த அற்றைத்திங்களின், அவ் வெண்ணிலாவிலே, யாம், எம் தந்தையையும் உடையேம்; எம் குன்றையும் பிறர் கொண்டிலர்; இற்றைத் திங்களின், இவ்வெண்ணிலாவிலே, வென்றறைந்த முரசினையுடைய வேந்தர், எம் குன்றையும் கொண்டார்; யாம் எம் தந்தையையும் இழந்தேம்', என்று, பாரி கொல்லப்பட்டபின், அவன் மகளிர் இரங்கிக் கூறினர் *[புற.112:2]*. பேகன் தான் எவ்விடத்தும் வரையாது பெய்யும் மழைபோல, யாவர்க்கும் கொடுக்கும் கொடையிலே, அறியாமைப்படுதலல்லது, பிறர் படை வந்து போரிடுமாயின், அப்படை முன்னே தான் அறியாமைப்படமாட்டான் *[புற.142:6]*. 'தமரென்றும், பிறரென்றும் அறியப்படமாட்டாத, போர் மயங்கிய களப்பரப்பிலே, 'நும்மில் வாழ்நாளை முடித்தோர் வம்மின்', என்று, நெடுமொழி கூறி நின்றானாக, நின் கணவனைப், பிறர் யாவரும், பாம்புமிழ்ந்து வைத்த மணிபோல் கருதி, நெருங்கமாட்டாதவராயினர்', என்று மறவனொருவனது தானைமறம், அவன் மனைவிக்குக் கூறப்படுகின்றது *[புற.294:4,9]*. 'அறவோன் மகனே, மறவோர் செம்மலே, நின் வலிமையைப் பிறரறியாது மறைத்தும், பிறர் கூறிய மொழியின் உட்பொருளைத் தெரிந்தும், நீ அரசு புரிவாயாக', என்று, தருமபுத்திரனுக்குக், கோதமனார் அறமுரைத்தார் *[புற.366:8,9]*. 'தம் பகைவரை வென்ற தேரையுடைய பிறரது வேத்தவையின்கண், நின் பகைஞராகிய அவர் கேட்குந்தோறும் நடுங்குமாறு, நின்னை அவர்முன் ஏத்துவேன்', எனக் கூறிப், பொருநன், சோழன் நலங்கிள்ளியிடம் பரிசில் விடை வேண்டினான் *[புற.382:22]*.

'நீ நெடுந்தேரோட்டிய பிறரது அகன்ற இடத்தையுடைய நாடு பெரிய பாழ்வெளியாக நிலைபெற்றது' எனப், பல்யானைச் செல்கெழுகுட்டுவனைப் பாடினார், பாலைக் கௌதமனார் *[பதி.25:13]*.

வென்று பிறருடைய விருப்பமிக்க நாடுகளைக் கைப்பற்றிக் கொண்ட பெரும்படையோடே தலைவன் மீண்டனன் *[முல்.89]*. புலிக்குட்டி கூட்டிடத்தே அடைபட்டிருந்து வளர்ந்தாற்போலத், திருமாவளவன், பிறரது காவலிடத்தேயிருந்து, தனக்குப்

பெருமை வயிரமாக முற்றி, ஆராய்ந்து, அப்பகைவரது காவலாகிய வாட்படையை ஒட்டி வெளிப்போந்து, தன் அரசவுரிமையை முறையாலே பெற்றான் *[பட்.222]*.

'கூற்றம் கொள்ள இறவாது பிறர் தம்முயிரைக் கொள்ளுமாறு போரிட்டு மாண்டோர், உறுதியாக நோற்றோராவர்', என்று, ஊக்கத்தினால் வெற்றியை விளைவிக்கக் கருதித், தலைவன் வினைவயிற் பிரிந்தான் *[அக.61:2]*.

2. **அயலார்.** 'பிறருடைய - அயலாருடைய - பழியைக் கூறுவோரது மொழியை நீ தெளியாதவன், என்று சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னியின் பண்புகளைப் பாராட்டுவர், ஊன்பொதி பசுங்குடையார் *[புற.10:2]*. 'நின்னைப்பாடிய செந்நா பின், பிறர் புகழைப் பாடாதபடி, நினக்கென ஒன்றையும் வைத்துக்கொள்ளாமல் கொடுக்கும் ஆற்றலமைந்த எம்கோவே', எனச், சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறையைக், குறுங்கோழியூர்கிழார் பாராட்டி விளிப்பர் *[புற.22:32]*. சோழன் நலங்கிள்ளியிடமிருந்து உறையூர் புகுந்த இளந்தத்தனென்னும் புலவனை ஒற்றுவந்தான் என்று நெடுங்கிள்ளி கொல்லப்போகையில், கோவூர்கிழார் இடையிலே புகுந்து, 'தம்மைப் புரப்போரால் பெறும் சிறப்புக்குறித்து மட்டுமே வருந்தும் இப்பரிசில் வாழ்க்கை பிறர்க்குக் தீங்கு நினைத்தலை அறிந்தததில்லை', எனக், கூறி, அப்புலவனை உய்யக்கொண்டார் *[புற.47:7]*. 'மாறனே, மாட்சிமைப்பட்ட அறநெறியையே முதலாகவுடையது, அரசரின் வெற்றியாதலால், இவர் நம்முடையரென, அவர் செய்த கொடுந்தொழிலைப் பொறுத்துக், கோல்வளையாமலும், இவர் பிறராவரென, அவர்தம் நற்குணங்களைக் கெடுக்காமலும், நீ நெடுங்காலம் வாழ்வாயாக', என்று, பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறனுக்கு அறமுரைப்பர், மதுரை மருதனிளநாகனார் *[புற.55:12]*. 'என்னொடு பொருவது சொல்லி வந்த வேந்தரைப் பொறுத்தற்கரிய போரிலே அலறப் பொருது, தேருடனே, அவர் உடைந்தோடும் புறக்கொடையைக் கண்டிலேனாயின், பல்லுயிரையும் பாதுகாக்கும் அரசர் குலத்திற் சிறந்த பாண்டி நாட்டைக் காக்கும் காவலினின்றும் நீங்கிப், பிறருடைய வன் புலங்களைக் காக்கும் காவலுக்காக இக் குடிப்பிறப்பினின்றும் மாறி யான் பிறப்பேனாகுக', என்று, பூதப்பாண்டியன் வஞ்சின முரைத்தான் *[புற.71:18]*. 'நுகர்தற்கினிய தாளிப்புடைய அடிசிலைப் பிறர்க்கு உதவுதலின்றித், தம் வயிற்றையே நிறைத்துப், புகழினின்றும் நீங்கிய, முரசு பொருந்திய செல்வத்தையுடைய அரசர் கோயில் ஆய் அண்டிரனது கோயிலை ஒவ்வாது', என்பர், உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் *[புற.127:8]*. 'வறுமையுற்ற எமக்கு ஈவோரன்றோ, பயன்கருதாது பிறர்க்கு இடுவோராவர், எனவும், எம்மையொழிந்தோர்க்கு ஈவோர், பயன்கருதியிடுதலால், தமக்கே இடுவோரெனவும், அவ்வளவில் யான் சொன்னேனாக, நினக்குப் பொருந்தியதை நீ ஆராய்ந்து எமக்குப் பரிசில் தந்துவிடுவாயாக', என்று, துறையூர் ஓடைகிழார், ஆய் அண்டிரனை வேண்டுவர் *[புற.136:20]*. 'எம் இறைவன் பேகன்; அவனது கைவண்மை, எவ்வளவாயினும் கொடுத்தல் அழகிதென்று மறுமையை நோக்கிற் றோவெனின் அன்று; பிறரது வறுமையையே நோக்கிற்று', என்பர், பரணர் *[புற.141:15]*. 'தனக்குச் சிறந்தோராகிய தமர் தன்னிடத்தே பிழை செய்யின் அதனைப் பொறுத்தலும், பிறரது வறுமைக்குத், தான் நாணுதலும் நும்மால் மதிக்கப்படும் தலைவர்க்குத் தகுவனவல்ல; எம்முடைய ஏறைக்கோனுக்குத் தகும்', என்று, அவனைக் குறித்துப் பாடுவார், குறமகள் இளவெயினி *[புற.157:2]*. பிறர் அஞ்சும் துன்பத்திற்கத் தாமும் அஞ்சி அதனைத் தீர்த்தற் பொருட்டுச் சோம்பியிருத்தல் இல்லாதவர் உட்பட, அத்தகைய மாட்சிமையுடையராய்த் தமக்கென்று முயலாத வலிய முயற்சியையுடைய, பிறர் பொருட்டு முயல்வோர் உள்ளமையால், இவ்வுலகம் உண்டு *[புற.182:49]*. தீதும் நன்றும் தாமே வரினல்லது பிறர்தர வாரா *[புற.192:2]*. 'இனிப்பாடுவாரும் இல்லை; பாடுவார்க்கு ஒன்றீவாரும் இல்லை. பகன்றையின் தேனையுடைய பெரிய மலர் சூடப்படாது கழிந்தாற்போலப் பிறர்க்கு ஒன்றை ஈயாது மாயும் உயிர்கள் மிகப்பலவாம்', என்று, அதியமான நெடுமானஞ்சியின் இறப்பிற்குப் பின், ஔவையார் இரங்கிப் பாடினார் *[புற.235:19]*. 'பிறரிடத்தே சென்று தானொன்றை ஈயென வேண்டி இரந்தறியான்; தன்னைச் சூழ்ந்து நின்று இரந்தோர்க்குத் தான் யாதும் இல்லையென்று மறுத்தலையுமறியான்', என, நம்பி நெடுஞ்செழியனின் பண்புகளைப் பாராட்டுவர், பேரெயின் முறுவலார் *[புற.239:8]*. 'பாடுநர்க்குக் குறையறக் கொடுக்கும் ஆய் அண்டிரன் மேலோருலகம் எய்தினனாகலின், புலவர் பொலிவழிந்த கண்ணராய்த், தம்மைப் புரப்போரைக் காணாது ஆரவாரிக்கும் சுற்றத்துடனே செயலற்று வாடிப் பசியுடையராகிப் பிறருடைய நாட்டின்கண் போகும் போக்கினை மேற்கொண்டனர்', *[புற.240:13]*. கரந்தைப் போரில் ஆனிரை மீட்டு மாண்ட, உயர்ந்த கீர்த்தி மிகவும் தோன்றிய மறவனது பெயர், மயிற்பீலி சூட்டப்பெற்றுப் பிறர் இடங்கொள்ளப்படாத சிறிய இடத்திலே, புடைவையாற் செய்யப்பட்ட பந்தர்க் கீழ், நட்ட கல்லின் மேல் உள்ளது *[புற.260:27]*. 'போருக்குப் புறப்படுமாறு யானைமேலோனாகிய வள்ளுவனது ஏவல் தண்ணுமை நாணுடையோர்க்கு இசைக்குமாயின் பூவிலைப்பெண்டு எம் மனையைவிடுத்துப் பிறர்மனை புகுவாளோ', என்று, மறவனொருவன் கூறினான் *[புற.293:5]*. 'பிறர்வேல் போலின்றி இவ்வூர் மறவன் வேல் பெருந்தகைமையுடையது', என்று முதுகுடிமறவனொருவனது வேல் சிறப்பிக்கப்படுகிறது *[புற.332:1]*. 'வெல்லும் வேலேந்திய நெடுந்தகாய், திருமகளும் நயக்கத்தக்க பண்புகளைகளையுடைய இவள் நலன் போர்மறவர்க்கல்லது, பிறர்க்கு எய்தலரிது', எனச், சீறூர் மன்னன் மகளொருத்தியின் அழகு குறிக்கப்பெறுகின்றது *[புற.342:6]*. கடல் சூழ்ந்த இப்பெரிய உலகத்தை உடைவேலிலையளவும் பிறர்க்கின்றித்,

தாமேயாண்ட காவலராகிய வேந்தர் கடலலைகள் கொழித்தொதுக்கும் மணலினும் பலர்; அவரெல்லாரும் சுடுபிணக்காடே பதியாகப் போகித் தத்தம் நாட்டைப் பிறர் கொள்ளுமாறு சென்று மாய்ந்தனர் *[புற.363:2,6]*. 'பெரும, நின்னையொப்பார் பிறர் யாரும் இவ்வுலகில் இன்மையால் யான் எனது கிணைப்பறையை அதிரமுழக்கி, நீ பகை மன்னரின் எயிலிடத்துக் கொண்ட பொருள்களைப் பரிசிலாகப் பெறவந்தேன்', என்று, சோழன் குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளிவளவனைக், கோவூர்கிழார் பாடுவர் *[புற.373:33]*. 'இரவலர்க்கு மறைத்தலில்லாததும், இடக்கவிந்ததுமான வண்கையினராகலின் நெடிது வாழ்க, எனப், புலவரால் வாழ்த்தப்பெற்றோராகிய பிறர்க்கெல்லாம் தான் உவமமாவதல்லது தனக்குப் பிறர் உவமமில்லாதவன் என்று, சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியைப், பரிசிலர் பாராட்டுவர் *[புற.377:10,11]*. 'யாம் நலங்கிள்ளியிடத்தே விருப்புடைய பொருநராவேம்; அவன் தாள் வாழியவென்று அவனையே பாடுவேம்; பிறரைப் பாடிப் பெறுவதனை வேண்டேம்', என்று, சோழன் நலங்கிள்ளியைக், கோவூர்கிழார், பொருநர் கூற்றிலே பாடுவர் *[புற.382:6]*. அவியனென்னும் ஒருவனை யான் எமக்குத் தலைவனாக உடையேனாதலால், பிறருடைய, பாடுதற்குரிய புகழைப் பாடிப், பரிசில் கருதிச் செல்லுதலறியேன்', என்பர் மாறோக்கத்து நப்பசலையார் *[புற.383:17]*. முன்பொருநாள் தன்னிடத்தே பரிசில் கருதிச் சென்று நின்ற என்னைக்கண்டு, அவன் பரிசளித்தற்கு அருங்கலம் வரவருளினனாய்த் தன் மனைவியாகிய பொன்போல் மடந்தையைக் காட்டி, அவளிடம், 'இவனையும் என்போல் போற்றுக' என்றான்; அதனைக் கண்டபின் யான் அவனை மறந்திலேன்; பிறரை நினைந்திலேன்' என்று, கிணைஞன் கூற்றிலே சோழநாட்டுப் பிடவூர் கிழான்மகன் பெருஞ்சாத்தனைப் பாடுவர், நக்கீரர் *[புற.395:32]*. கிள்ளி வளவனை நினைந்து அவனிடத்தே செல்கின்றோம்; ஆதலால், யான் பிறிதோர் இடத்திற்குச் செல்லேன்; பிறர் முகத்தை நோக்கேன்', என்று, தாமான்தோன்றிக் கோனைக், கிணைஞன் கூற்றிலே பாடுவர், ஐயூர் முடவனார் *[புற.399:14]*.

இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் யவனரைப் போருள் அகப்படுத்திப் பின் விடுத்தற்பொருட்டாக அருவிலையுடைய நன்கலங்களை வயிரங்களுடனே பெற்றுக்கொண்டு பெரிய வெற்றியமைந்த தனது மூதூரிடைக் கொணர்ந்து பரிசிலராகிய பிறர்க்கு வழங்கியுதவினான் *[பதி.ப.2:11]*. கடலும், காடும் பல பயன்களை உதவுதலால் அவற்றைப் பெற்றுப் பிறர், பிறரை நலியாமலும், வேற்றோர் பொருளை விரும்பாமலும், குடிமக்கள் நெடுங்காலம் வாழும்படி ஆண்ட வலியோர் மரபில் வந்தவன், பல்யானைச் செல் கெழுகுட்டுவன் *[பதி.22:7(2)]*. ஓதல், வேட்டல், அவற்றைப் பிறரைக் கொண்டு செய்தலாகிய ஓதுவித்தல், வேட்பித்தல், மற்றும் ஈதல், ஏற்றல் என்ற ஆறினையும் புரிந்தொழுகுவோர், அந்தணர் *[பதி.24:6]*. 'களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலே, நீ பிறர்க்கென வாழ்கின்றாயாதலால், உலகத்தோராகிய செல்வர் எல்லாருள்ளும் நினது புகழே மேம்பட்டு விளங்கும்', என்று, காப்பியாற்றுக் காப்பியனார் பாடுவர் *[பதி.38:16]*. 'நார்முடிச் சேரலே, நீ பிறர்க்கென வாழ்கின்றாயாதலால் நின் படை மறவர் தாமும் தம்மிடத்தே இரந்து செல்லும் எமக்கு இல்லையென்று சொல்லார்' எனக், காப்பியாற்றுக் காப்பியனார் பரிசிலர் கூற்றிலே பாடுவார் *[பதி.39:1]*. 'பகைவருடைய சிற்றரண்களிலே நின் தானை சென்று முற்றுகையிட்டுத் தங்கக் கண்டு, நிலைபெற்ற அவ்வரண்களிலுள்ள மறவர், 'இனி இவ்விடத்தே நம் துயரைக் களைபவர், சேரனையல்லார், பிறர் யாருளர்', என்று விரும்பி வந்து தம் போராரவாரம் அடங்கிப் பணிந்தனர்', என்று, காப்பியாற்றுக் காப்பியனார் களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலைப் பாராட்டுவர் *[பதி.40:7]*. 'அறிவுடையோர் எண்ணினாலும், அறிவில்லோர் எண்ணினாலும் பிறர்க்கு நீ உவமையாகப் பொருந்தினாலல்லது நினக்குப் பிறர் உவமமாகக் கூறுதற்கியலாத ஒப்பற்ற பெருமையுடைய வேந்தே', என்று, தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறையை, அரிசில்கிழார் பாடுவர் *[பதி.73:2,3]*. 'நின்னிடத்தினின்றும் பிரிந்து பல திசைகளிலும் சென்ற நின் நற்புகழ்கள் கனவினும் பிறரை விரும்புதலறியா', என்று, அரிசில்கிழார், பெருஞ்சேரலிரும்பொறையிடம் கூறுவர் *[பதி.79:5]*. பொத்தியென்னும் புலவரை நட்பாண்ட கோப்பெருஞ் சோழனையும், வித்தையையாண்ட இளம்பழையன் மாறனையும் தான் கூறிய வஞ்சினம் நிறைவேற வென்று, அவரிடத்தினின்றும் கைக்கொண்ட பொருள்களைத், தன் தலைநகராகிய வஞ்சி மூதூர்க்குக் கொணர்ந்து, பிறர்க்கு உதவினான், இளஞ்சேரலிரும்பொறை *[பதி.ப..9:9]*.

ஏரிபாய்ச்சலாலும், ஏற்றமிறைத்த பாய்ச்சலாலும் பிறர் நாட்டு நிலங்கள் விளைக்கும் வளங்களெல்லாவற்றையும், தேர்ந்தால், அவை, கரிகாலனது காவிரிசூழ்ந்த நாட்டு வயல்களில் அரிகாலின் கீழே சிந்துகின்ற அவ்வளவு நெல்லே அமையும் *[பொரு.வெ.1:1]*.

'தோழீ, நீ அடிக்கடி எழுந்து சென்று கிளிகளை ஓட்டும் தெளிந்த ஓசைகளை இடையிடையே எழுப்பி, அங்கங்கே நடவாயாயின், 'இவள் கிளி கடிதல் தேற்றாள்', என்று, அன்னை பிறரைக் கொணர்ந்து காவலுக்கு நிறுத்துவளாயின், நின் காதலனான அவனது மார்பு நின்னால் அடைதற்கரியதாகும்', என்று, தோழி தலைவியிடம் கூறினாள் *[அக.28:13]*. 'நெஞ்சே, காதலியிடத்தினின்றும் நீ முன்னமே பிரியாதிருந்திருப்பின் நன்று; அன்று நம்மியல்பையறியாது பிரிந்து இன்று நமது செய்வினைக் குரிய இடைவழியிலே மேற்செல்லவிடாது விலக்குவையாயின், பிறர் இகழ்ந்து நகைக்கும் பழியை எய்துவை அல்லையோ', எனத், தலைவன் பிரிந்துபோகும் இடைச்சுரத்தே, தன்னெஞ்சிற்குக் கூறினான் *[அக.33:20]*. பண்ணன், தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்

[அக.54:13]. 'நெஞ்சே, பிறர்போல் காதலியைப் பிரிந்து கானம் பிற்படுமாறு செல்வேமாயின், அச்செலவு நன்று என்னும், நசையுள்ளம் செலுத்த, நீயே தனித்துச் செல்லுதற்குரியை', என்று, தலைவன் பொருள்கடைக்கூட்டிய நெஞ்சிற்குக் கூறினான் [அக.199:13]. தலைவனிடத்துத், தலைவி கொண்ட காமம் இடையே பிறர் அறிதலையஞ்சி மறைய அடக்கி, நுண்ணிதில் இயைந்தது [அக.303:1]. தலைவனது பிரிவினை ஆற்றாத தலைவியின் நீரொழுகுகின்ற மையுண்ட கண்களும், பசலையுற்ற தோள்களும் பிறர் அறியும்படி மிகவும் வாடின [அக.359:2]. பிறர் உறுகின்ற துன்பத்திற்கு, நல்லோராயின், பிறரும் நோவர் [அக.382:1(2)].

'மகளைத் தேடி நடந்து நடந்து என் கால்கள் நடை ஓய்ந்தன; எதிர் வருவோரைப் பார்த்துப் பார்த்து என் கண்களும் ஒளியிழந்தன; அகன்ற கரிய வானத்தின்கண் உள்ள மீனினும் பலராவர், இவ்வுலகத்துப் பிறரே', எனத், தலைவனுடன் போய்விட்ட தலைவியைத் தேடிப் பின்சென்ற செவிலி இரங்கிக் கூறினாள் [குறு.44:4]. 'தோழி, காதலனாகிய சேர்ப்பன் பொருட்டும் யான் இரங்கேன்; 'இவளுற்ற நோய் என்கொல்', என்று, இங்கே பிறர்பிறர் அறியக் கூறுதலாகிய அம்பலும் அமைந்தபடி அமைக; அஃது எனக்கு என்ன துன்பத்தைத் தருவதாகும்', என்று, தலைவி, தலைவனது பிரிவிடை வற்புறுத்தும் தோழியிடம், கூறினாள் [குறு.175:6(2)]. 'நெஞ்சே, பேதையாகிய தோழி நம்மிடத்து நெகிழ்ந்திலளாக, நாம் அவளிடத்தே விடுதற்கமைந்த தூது, இனி பனை மடலூர்ந்து, வெள்ளெலும்பை அணிந்து, தெருவிலே பிறர் எள்ளுமாறு தோன்றி, நாணை நீக்கிச் செல்லவும் செய்யுமோ', என்று, தலைவன், தோழியால் குறைமறுக்கப்பட்ட நிலையில், மடலேற்றம் கருதித், தன்னெஞ்சொடு கூறினான் [குறு.182:3].

'நீயும், யானும் நேற்றுக் கானலின்கண் விளையாடியதன்றி மறைத்துச் செய்ததொன்றுமில்லை; உண்டெனின், அது பரந்து பிறரால் அறியப்பட்டதுமில்லை. அவ்வாறாகவும், நீவிர் போய், நெய்தற்பூக்களைப் பறித்துச் சூடிக் கொண்மின், என, நம்மை ஏவாத அன்னை என்ன கருதினள்', என்ற, தோழி, தலைவியை வினவுவாள் போல், சிறைப்புறத்தலைவன் கேட்பச் செறிப்பறிவுறுத்தினாள் [நற்.27:6]. 'பிறரால் விடுவித்தற்கு இயலாதவாறு பிணிப்புண்ட என்னெஞ்சு, குன்றத்துக் கொழுத்த காவற்காடமைந்த சீறூரில் வாழும் கொடிச்சியின் கையத்தேயுள்ளது', என்று, தலைவன், பாங்கனிடம் கூறினான் [நற்.95:9]. பிறர்க்கென முயலும் பேரருள் நெஞ்சமொடு தலைவன் பொருள்வயிற் பிரிந்து சென்றான் [நற்.186:8]. 'என்னைத் தலைவர் பிரிந்தது பற்றிக் கேட்டோர் இரங்குவராயினும், அவருள், என்னை விரும்பினோரல்லது, பிறர் எனக்கென வருந்தார், எனப், பரத்தை கூறினாள் [நற்.216:11]. 'தன் சிலம்புகழிதற்குச் செய்யும் விழாச் சிறப்பினை யான் காணுதற்கின்றிப், பிறர் கண்டு உவக்குமாறு சென்ற, என் மகள் அடிகள் அருஞ்சுர நெறியிலே நடக்கமாட்டாது வருந்தி மெலிந்தனவோ', என்று, மகட்போக்கிய தாய் இரங்கினாள் [நற்.279:11]. 'சேர்ப்பனே, வெறுத்தலில்லாத எம் நல்ல ஊர், சுற்றத்தார் ஒருவரையொருவர் அறியாத சேரியையுடையதாதலால் அங்கு வரும் நின்னைப் பிறர்பிறர் அறிதல் எவ்வாறியலும்? இயலாதெனவே, இனி நீ வரின் தவறில்லை', என்று, தோழி, தலைவனை இரவுக்குறிக்கு அழைத்தனள் [நற்.331:11(2)].

'அன்னாய், ஊரனாகிய காதலன் எம்மையும், பிறரையும் (பரத்தையரையும்) அறியாதவனாய் இத்துணைத் தீச்செயல் உடையனாதல் என்னோ', எனத், தோழி, தலைவனது பரத்தமை குறித்துத் தலைவியை வினவினாள் [ஐங்.26:3]. 'நின் காதலியாகிய இவளால் துன்பமுற்றாய் போலிருக்கும் நீ பிறரிடத்தும் (பரத்தையரிடத்தும்) இத்தன்மையை உடையை', என்று, தோழி, உணர்ப்புவயின் வாராத் தலைவியின் ஊடலால் புலந்த தலைவனிடம் கூறினாள் [ஐங்.58:4]. 'பெரும, எம் அழகே அழிவதாயினும் பிறரைத் (பரத்தையரை) தோய்ந்த நின் மார்பினை அணைய மாட்டோம்', என்று, தலைவி, பரத்தைமைத் தலைவனிடம் கூறி மறுத்தாள் [ஐங்.63:4].

தாம் மருவி மனங்கொண்டாரைக், கொண்ட காலம்போல் ஆகாமல், பிரியுமிடத்துப், பிறர் இகழும்படி அவர்க்கு வலிமையின்றாக, அப்புறமே மனமாறும், திருமகளினும் நிலைபேறில்லாதது, பொருள் [கலி.8:13]. 'நின்னைப் பிணித்த நசையாகிய சங்கிலியை அறுத்துப், பிறர் நாட்டிடத்தே போய், நிலைபெற்ற உண்மைப்பொருள்களைக் (தத்துவங்களைக்) கூடிய கூட்டத்தால், நின் காதலியொடு - இன்பந்துய்க்கும் இளமையை மீட்டல் பொருந்துமோ', என்று, தோழி, தலைவனை வினவிப் பிரிவு விலக்கினாள் [கலி.15:18]. இருவர் நெஞ்சும் பொருந்திய நட்பினில், ஒருவர் கூறிய மறைப்பொருளையறிந்து, பின், அதனை அவரது பிரிவின்கண், பிறர்க்குரைப்போர் பீடில்லாதோராவர் [கலி.25:24]. தன் செல்வம் முதலியவற்றோடு மாறுகொண்டு, அவற்றைப் பெறாதிருப்பர், என்று, பலரும் கூறினும், தான், பிறர் குற்றத்தைக் கூறுதல் அறியாதவன், தலைவன் [கலி.43:18]. 'என் தோழி, தன் வருத்தம் மிகுதியாகவும், நீ செய்த அருளின்மையை யான் கேட்டுப், பிறர்முன், நின்னைக் குறித்துப் பழி கூறுதலைத்,தான் நாணி, அவ் வருளின்மையை என்னிடமும் வெளியிடாது மறைத்தாள்; என் தோழி, தன் காமநோய் வருத்துதலால் வருந்தியும், நீ செய்த அருளின்மையை ஆயத்தார் கேட்டு, மாயம் வல்ல நின் பண்பின்மையைப் பிறர் (அவ்வாயத்தார்) கூறுதலைத் தான் நாணி, அவ்வருளின்மையை ஆயத்தாரிடமும் வெளியிடாது மறைத்தாள்', என்று, தோழி, தலைவனிடம் கூறி, வரைவுகடாவினாள் [கலி.44:10,16]. 'நறிய நெற்றியையுடையாய்; ஒருவன் என்னிடத்தே வந்து, 'நின்னையின்றி யான் உயிர் வாழேன்', எனக் கூறுவானாயின், இங்ஙனம் இறந்துபடும் தன்மையையு டையவனது கூற்றை நம்புதல் இவ்விடத்து யார்க்கும் அரிதாயின், இந்நிலையில்

என்னைச் சேர்ந்த வருத்தங்கள் பிறர்க்கும் உளவோ', என்று தோழி, தலைவனது குறை நயப்புக் குறித்து தலைவியிடம் கூறினாள் *[கலி.47:11]*. 'பேதுற்றாய் போலப் பிறருடைய வருத்தத்தை அறியாயாய்க், கேட்டார்க்கு யாதொன்றும் சொல்லாயாய்க் கடந்து போகின்றவளே', என்று, காமஞ்சாலா இளமையோளை விளித்துப் பேசினான், கைக்கிளைத் தலைவன் *[கலி.56:28]*. 'தலையிலே கிடந்தசையும் தலைப்பாளையை உடையவளே, 'இவன் மனத்தில் உண்டாகிய நோய் யாது எனக் கேட்கும் அருள் இவளுக்கில்லை', என்று, அயலார் நின்னைப் பழிக்குங்கால், நோன்பாகிய அருள் இவளுக்கில்லை', என்று, அயலார் நின்னைப் பழிக்குங்கால், நோன்பாகிய விளையாட்டிலே, பிறர் மனையின்கண் பாடி, நீ ஐயமேற்று வந்தவற்றைப் பிறர்க்குக் கொடுத்தனாலுள்ள பயன் நினக்குப் பயனாகுமோ', எனத், தலைவன், தலைவியிடம், இரந்து குறையுற்றுப், பின்னின்று ஆற்றானாய் வினவினான் *[கலி.59:16]*. 'நின்மேனி தழுவுதற்கு இனிதாயிருத்தலால், நின்னை யான் தழுவினேன்', என்று, தலைவன் கூறக்கேட்ட தலைவி, தமக்கு இனிதென்று கருதிப், பிறர்க்கு இன்னாதனவற்றை வலிதில் செய்வது இன்பத்தைத் தருமோ', என, வினவினாள் *[கலி.62:7]*. 'தான் தொழுகின்ற தன்மையைப் பிறர் காண்பாராக, மனத்தால் தூக்குதல் இல்லாதவன், நாம் நோக்குங்கால் நம்மை நோக்கித் தொழுகின்றான், என்று தோழி, தன்னிடத்துக் குறையிரந்த தலைவனைக் குறித்துத், தலைவியிடம் கூறினாள் *[கலி.63:1]*. பிறர்க்கும் இம்மண்ணுலகம் பொதுவென்னும் மொழியின்றாக, உலகமுழுதையும் ஆளுகின்ற வேந்தர்க்கு அறிவு சொல்லும் இயல்புடையவர், அமைச்சர் *[கலி.68:1]*. 'ஊரனுக்குப் பெண்டிர் நின்னையொழியப் பிறரில்லை; இதனை ஓர்ந்து பார்', என்று, தலைவனுடைய காமக்கிழத்தியிடம், பாகன் கூறித், தனக்குத் தெய்வமாகிய தேரைத் தொட்டுச் சூளுற்றான் *[கலி.71:9]*. 'முன்பகலில் ஒருத்தியைக் கூடியிருந்து நண்பகலில் அவளைக் கைவிட்டுப், பலரிடத்தே சென்று, பின்பகலில் கூடுதற்குப் பிறரை ஆராயும் நின்னெஞ்சமும் பித்தேறப் பெற்றாய்', என்று, காமக்கிழத்தி, தலைவனைப் பழித்தாள் *[கலி.74:11]*. 'உண்டென்று கூறுதற்கு அமையாத என்னுயிர் சாதலை உணர்ந்தும், நின் பெண்டெனப் பிறர் கூறும் பழிபோகப் பெறின், எழிலையுடைய மாமையையும், சுணங்கையும் என்னிடமிருந்து வாங்கிக்கொண்டு, நீ தராதுவிட்ட அழகை மீண்டும் பெறுதலை, யான் விரும்பேன்' எனத், தலைவி, பரத்தைமைத் தலைவனோடு ஊடிக் கூறி ஊடல் தீர்ந்தாள் *[கலி.77:11]*. பிறர் (பரத்தையர்) கூந்தலின் மணம் கமழ்கின்ற மார்பினனாய்த் தலைவன் காமக்கிழத்தியின் இல்லத்திற்குச் சென்றான் *[கலி.78:17]*. 'பல ஆக்களையும் தெவிட்டாமல் கூடும் ஏறுபோல, நீ, நாள்தோறும், பதின்மரை, ஒருவரைப்போல விருப்பமுற்று, அவர்மேல் செல்வாயாதலால், நீ பிறர்க்கு என்ன நன்மை செய்வாய்; இத்தன்மையையுடைய நினக்கு யாம் என்ன நன்மை செய்வேம்' என்று, முல்லைநிலத் தலைவி, தலைவனிடம் கூறினாள் *[கலி.108:50]*. 'நல்லவளே, நீ இழைத்து விளையாடும் சிற்றிலை யானும் சிறிது புனைவேனோ', என்று, தலைவன் வினவக் கேட்ட தலைவி, 'ஏடா, எம்மை வரைந்து கொண்டு எமக்கு ஓரில்லை அமைத்தலறி யாதவனாய்ப், பிறர் செய்த இல்லிலே இருந்து கொண்டு, 'யாம் இதனைப் பெற்றேம்', என்று இறுமாந்திருப்பவன் நீ; ஆதலால், உலகியலில் நீயே தனித்துக் கற்ற தொன்றுமில்லை', என்று பழித்தாள்; பின்னும் அவன், 'மாதராய், நின் மென்முலைமேல் யான் தொய்யில் எழுதவோ', என்றானாக, 'யாம் பிறர் செய்கின்ற கோலத்தைப் பார்த்திருப்பேமோ', என்று அவள் எதிர்மொழிந்தாள் *[கலி.111:10,17]*. முல்லைத் தலைவியை எதிர் நின்று தலைவன் விலக்கிச் சொல்லாடியபோது, அவள், தன் தாய் வருவாளென அச்சுறுத்தினளாக, அவன், 'நீ அருள் செய்து என்னைக் கூடப் பெறின், இவ்விடத்தே, ஒன்று, தாய் வருக; ஒன்று, பிறர் வருக; அன்றி, நின் தந்தைதான் வரினும் வருக; யான் அதற்கு வருந்தேன்', என்று, துணிவு கூறினான் *[கலி.116:10]*. 'பிறர் தன் களவொழுக்கத்தை அறியாமல் மறைத்துத், தலைவி காமநோயிலே அழுந்தியது, நீ, தெளிவித்ததனை மெய்யென்று உட்கொண்ட கோட்பாடன்றோ', எனத், தோழி, தலைவனை எதிர்ப்பட்டு வரைவு கடாவினாள் *[கலி.132:19]*. நிறையெனப்படுவது மறைவானதொரு செயலைப் பிறரறியாமல் ஒழுகுதலாம் *[கலி.133:12]*. 'மின்னின் அசைவும், கனவின் தோற்றமும்போல், தன் வடிவை முற்படக் காட்டிப், பிற்படப், பிறர் இகழ்ந்து சிரிப்பனவற்றையும் எனக்கும் காட்டி மறைந்தாள்', என்று, மடலேறும் தலைவன், தலைவியைக் குறித்துக் கூறினான் *[கலி.138:4]*. பிறர் நோயும் தம் நோய் போலே எந்நாளும் போற்றி, அதனால் பெறும் அறனையறிதல் உலகத்துள்ள சான்றவர்க்கெல்லாம் கடனாம் *[கலி.139:2]*. 'வழுவிய சொற்கள் சொல்லாதபடி தெள்ளிய நாவினாலே பேசவல்லவர், முன் சொல்வல்லேனாகிய என்னைப், பிறர் முன்னே, ஒன்றையும் கல்லாத தன்மையனாகக் காட்டியவள்', என்று, தன்னை மதிமயக்கிய தலைவியைக் குறித்துத், தலைவன் மடலேறிக் கூறினான் *[கலி.141:19]*.

'வேள்விக்கண் மறைமுறைப்படிக் கனலை மூட்டுங்கால் அதனுள் தோன்றும் சுடர், நின் பெருமைக்குத் தக்கவாறும், பிறர் (நீ இல்லையென்னும் கடவுள் மறுப்புக் கொள்கையார்) உடன்படுமாறும், அந்தணர் காண்கின்ற நின் வெளிப்பாடாகும்', என்று, திருமால் போற்றப் பெறுவர் *[பரி.2:66]*.

**3. எஞ்சியோர் / ஏனையோர்.** 'என்னொரு பொருவது சொல்லிவந்த வேந்தரைப், பொறுத்தற்கரிய போரிலே அலறப் பொருது, தேருடனே அவர் உடைந்தோடும் புறக்கொடையைக் கண்டிலேனாயின், மையலென்னும் ஊர்க்குத் தலைவனாகிய மாவனும், எயிலென்னும் ஊரையுடைய ஆந்தையும், புகழமைந்த அந்துவஞ்சாத்தனும், ஆதனழிசியும், வெஞ்சினத்தையுடைய இயக்கனும், என இவருட்படப், பிறரும் - எஞ்சியோரும் -

ஆகிய எனது கண்போலும் நண்பினையுடைய சுற்றத்தினரொடு கூடிய மகிழ்நகையை நான் இழப்பேனாக', என்று ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் வஞ்சினமுரைத்தான் *[புற.71:14]*. சான்றோர் பிறரும் சென்ற நெறியென்று உலகத்தார் கருத அந்நற்செய்கையிலே பட்டது,. ஆய் அண்டிரனது கைவண்மை *[புற.134:2]*. 'வறுமையுற்ற எமக்கு ஈவோரன்றோ பயன்கருதாது அயலார்க்கு இடுவோராவர், எனவும், எம்மையொழிந்த பிறர்க்கு ஈவோர், பயன் கருதியிடுதலால் தமக்கே இடுவோரெனவும், கூறி எமக்குப் பரிசில் தந்து விடுவாய் என்று, துறையூர் ஓடைகிழார், ஆய் அண்டிரனை வேண்டுவர் *[புற.136:21]*. காட்டு வழியிலே எம்மைக் கண்டு எம் வருத்தத்தையும், மெலிவையும் நோக்கித்தான் வேட்டையாடிய இறைச்சியைத், தானே கடைந்த தீயினிற் சுட்டுத், தந்து, பசியாற்றிய பின், மார்பின் முத்தாரத்தைக் கைக்கடங்களோடே ஈத்த தோன்றலாகிய வல்வில் வேட்டுவனை, 'நும் நாடு எந்நாடோ', என்று கேட்டேமாக, அவன் தன்னாட்டையும் சொல்லான்; 'நீர் யார்' எனக் கேட்டேமாகத், தன் பெயரையும் சொல்லாது, போனான்; பின்னர் வழியின்கண் பிறர்பிறர் கூற, தோட்டியென்னும் பெயரையுடைய மலையைக் காக்கும் நள்ளியாவான், என்று, அவனாட்டையும், பெயரையும் கேட்டறிந்தேம்', எனப், பாடுவர் வன்பரணர் *[புற.150:24(2)]*. வண்மையோ, வலிமையோ, யாதாயினும் ஒரு நன்மையேயுடையன பிறர் மலைகள்; கொண்கான மலை எந்நாளும் இவ்விரு நன்மைகளையுமே உடையது', என்பர் மோசிகீரனார் *[புற.156:1]*. 'பாரியும், ஓரியும், காரியும், அதியனும், பேகனும், ஆயும், நள்ளியுமெனச் சொல்லப்பட்ட எழுவரும், இறந்தபின் கண்டோர்க்கு இரக்கம் வருமாறு பாடி வருவோரும், பிறரும் கூடி வர,விரைந்து நின்னிடத்தே பரிசில் பெற நினைந்து வந்தேன்', என்று, குமணணிடத்தே, பெருஞ்சித்திரனார் கூறினார் *[புற.158:18]*. 'மழை நீங்கிய கோடைக்காலத்து உயிர்ப்பன்மைகளெல்லாம் சென்று நீருண்டற்குக் கங்கை வெள்ளம் நிறைந்து தோன்றியவாறு போல, எமக்கும், பிறர்க்கும் நீயே தலைமையையுடையை', எனப், பெருஞ்சித்திரனார், குமணனிடம் கூறிப் பரிசில் வேண்டினார் *[புற.161:8]*. 'இனமாகிய மிக்க காளைகளைத் தொழுவோடே வேண்டினும், களத்தின்கண் மலிந்த நெற்குவையை வேண்டினும், பெறுதற்கரிய அணிகலன்களைக் களிற்றோடே வேண்டினும், பெருந்தகைமையையுடையனாகிய பிட்டங்கொற்றன் எமக்கேயன்றிப், பிறர்க்கும் வழங்கும் அத்தன்மைப்பட்ட அறஞ்செய்வோனாவன்', என்பர், காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் *[புற.171:11]*. 'கார்த்திகை நாளின் முதற்காலிலே பாதியிரவின்கண் அனுட நாளின் அடிமீன் (கோட்டை) முதலாகப் புனர்பூசத்துக் கடைமீன் (திருவாதிரை) முடிவாக இடைப்பட்ட மீன்கள் விளங்கிக் காயப், பங்குனித் திங்களின் முதற் பதினைந்தில், உச்சி மீனாகிய உத்தரம், உச்சியினின்றும் சாய, எழுமீனாகிய மூலம் எழ, மறையுமீனாகிய மிருகசீரிடம் கடற்றுறையிலே தாழ்ந்து மறையக், கீழ்த்திசையிலும் போகாது, வட திசையிலும் போகாது, ஒரு மீன் வானத்தினின்றும் வீழ்ந்ததைப் பார்த்து, யாமும், பிறருமாகிய பல்வேறு இரவலர் எம் மலைநாட்டு வேந்தன் நோயிலனாகப் பெறின் நன்றென இரங்கிய நெஞ்சத்தோடு அஞ்சினேம்', என்று யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறையின் இறப்புக்கு அறிகுறியான விண்மீன் வீழ்ச்சியைப் பாடுவர், கூடலூர்கிழார் *[புற.229:13]*. 'எமக்கும், பிறர்க்கும், யார்க்கும் ஈந்து துயிலேற்றலை யுடையானாதலால் முன்வாயிலிற் படுத்துக்கிடந்த மிக்க களிப்பினையுடையானுக்குப் படுத்தற்குரிய தோலிருப்பினும், பாயிருப்பினும், யாதிருப்பினும் விரைந்து கொடுமின்', என்று, தலைவனொருவனது இயல்பு பாடப்பெறுகின்றது *[புற.317:6]*. 'யாமும், பிறரும் வாழ்த்த நாள்தோறும் வரிசை பொருந்திய நன்கலன்களைப் பரிசிலர்க்கு நல்கிப், புகழ் பரக்குமாறு, அவனது பாடல் சான்ற வளன் சிறப்புறுவதாக', என்று, வாட்டாற்றெழினியாதனது வளத்தினை வாழ்த்துவர், மாங்குடிகிழார் *[புற.396:29]*.

'கண்டாரால் மதிக்கப்படும் தோற்றமிலராயினும், ஒரு கல்வியும் வல்லமையில்லாராயினும் பரிசின் மாக்களாகிய எமர்க்கும், பிறர்க்கும் கொடுத்தலாகிய கடமையை விரும்பிச் செய்கின்ற நெஞ்சினன்', என்று, இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனைப் பாராட்டுவர், குமட்டூர்க்கண்ணனார் *[பதி.20:21]*. 'பொறையனே, நின் வளனும், ஆண்மையும், கைவண்மையும் உலகத்து மக்கள் அளவைக் கடந்தனவென்றும், நின்னொடு மாறுபடுதல் தமக்கு உறுதியன்றென்றும் பன்னாள் யான் சென்றுரைப்பினும், நின் பகைவர் தேறிற்றிலராயினும், உலகத்து மதிப்புடைய சான்றோர் பிறரும் சொன்னால் தேறுவரோ, எனக் கருதின், அவர் சென்று சொன்னவிடத்தும் அப்பகைவர் மதிமருண்டதையே காண்கின்றேன்' எனப், பெருஞ்சேரலிரும் பொறையிடத்தே, அரிசில்கிழார் கூறினார் *[பதி.73:14]*. 'பொறையனே, நீ புலியைக் கொன்று, களிற்றையும் கொல்லும் வயமான் போன்றனை யாதலால், வேந்தரும், வேளிரும், பிறரும் நின்னடிக் கீழ்ப்பணிந்து தமக்குரிய வயல் நிலத்தூர்களில் இருந்து, முறைப்படி, நின்வழி ஒழுகாராயின், வெள்வரகுழுத கொள்ளுடைய கரம்பை நிலத்தே விளைந்த வெள்வரகை உண்பதன்றித் தாம் முன்னர் உண்ட செந்நெற்சோறு உண்ணக் கிடைக்காதபடி வறுமையுறுவர்', என்று, பெருஞ்சேரலிரும்பொறை, ஏனையரசரை அடக்கியாண்ட திறத்தைப் பாடுவர், அரிசில்கிழார் *[பதி.75:4]*.

'கரிகால் பெருவளத்தானிடமிருந்து நீவிர் பெற்ற பரிசிற்பொருள்களைப் பிறர்க்குப் பிறர்க்குக் கொடுத்த விரைவில் அவனிடத்திருந்து புறப்பட்டுப் போகும் போக்கினை முடிவு செய்வீராயின், அது பொறாமல் அவன் பலமுறையுட் வெறுத்து நம்மை விரைந்து விடுவானல்லன்', என்ற

திருமாவளவனது இயல்பைக் கூறிப், பொருநர் ஆற்றுப்படுத்தப் பெறுவர் *[பொரு.174(2)]*. சங்கறுத்துக் கடைவோர் முதல் கண்ணுள் வினைஞர் முடிய அவரும், பிறரும் கூடிக், கம்மியரும் குழுமி, மதுரை நகரத்து நால்வேறு தெருக்களிலும் நிற்க, அதனாலெழுகின்ற ஓசையும், பிறவும் பட்டினத்து ஓசைபோல் கல்லென ஒலிக்கும் *[மது.518]*. மதுரை நகரத்து வளவிய குடியிற் பிறந்த செல்வரும், பிறரும் மேவிய மனைகளில் மணம் புணர்ந்து, உயர்ச்சியுற்ற மகளிர், விளக்கொளியிலே நெருங்கியிருந்தனர் *[மது.577]*. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் அரசவையின்கண் சிறப்பிக்கப் பெறுவோரைத் தனித்தனித் தருவித்துச் சிறப்பித்தபின் 'பிறரும், யாவரும் வருக' என அழைத்து, அவர்க்கும் பரிசில் வழங்குவான் *[மது.746]*. 'பெரும, நீ கடல் நடுவே தோன்றும் ஞாயிற்றைப் போலவும் பலமீன்களுக்கு நடுவே தோன்றும் நிறைமதி போலவும் பொலிவுபெற்ற சுற்றத்தார் நடுவே இனிது விளங்கிப், பெரிய புகழைமைந்த மாறன் தலைவனாக இளம்பல் கோசரும், ஐம்பெருங்குழுவினரும், உட்படக், குறுநில மன்னராகிய அவரும், பிறரும் நெருங்கி நின் வாய்மொழி கேட்பப், புகழினையுடைய அறங்கூறவையத்தார் நின் அறத்தன்மையைப் புகழ்ந்து வாழ்த்த, நாள்தோறும் மகிழ்ந்து இனிது வாழ்க', என்று, பாண்டியன் நெடுஞ்செழியனை வாழ்த்துவர், மாங்குடி மருதனார் *[மது.777]*.

எந்நாளும் மூப்படையாத அமரரும், முனிவரும், பிறரும் ஆகிய யாவரும் அறியாத பழமையமைந்த தன்மையையுடைய நீலமணிமிடற்று அந்தணனது (சிவபெருமானது) அழிவில்லாத திருவடி நிழலில் உலகம் தங்கிற்றாதலின் அதற்கு ஓர் இடையூறில்லை *[அக.க.வா.12]*. 'ஊரனே, நீண்டு தாழ்ந்த கரிய கூந்தலையுடையாளொருத்தியை எம்மனையிலே கொணர்ந்து காட்டி நீ வதுவை அயர்ந்தனை என்று இவ்வூரார், பிறரும் கூறுவர்', எனத், தோழி, தலைவனுக்கு வாயில் மறுத்தாள் *[அக.46:9]*. 'ஊரன் தேரிலே கொண்டு வர வந்த மகளிர் என் அழகினை ஏசுகின்றனர் என்பர். அம் மகளிரும் பிறரும் சிறப்புள்ளோர் போலத் துணங்கைவிழாவிற்குச் செல்லுதல் யான் அவ்விடத்து வாராமையாலேயே ஆகும்', எனத், தலைவனுடைய நயப்புப் பரத்தை, அவனுடைய இற்பரத்தைக்குப் பாங்காயினார் கேட்குமாறு கூறினாள் *[அக.336:15]*.

'மழைத்துளி மிகுந்து வாடை வீசுகின்ற கூதிர்ப்பருவ நள்ளிரவில் தன்மேல் ஈ படிந்து ஒலிக்குந்தோறும் எருது அலைக்கின்ற மணியின் மெல்லிய ஓசையை, நீரொழுகும் கண்ணோடும், பொறுத்தற்கரிய காமநோயொடும் தனிமை வருத்துதலால் கலங்கிக் கேட்போர், என்னையன்றிப், பிறரும் உளரோ', எனத், தலைவி, பிரிவினிடையே நொந்து தோழியை வினவினாள் *[குறு.86:3]*. 'பாதியிரவிலே தனித்து ஒரு தேர் இங்கே வந்து மீண்டதென்று அயலார் கூறுவது கொண்டு, அன்னை என்னைத் துன்புறுத்துகின்றாள்; இளையரும் மடப்பமுடையோருமாகிய மகளிருள் அலைக்காத தாயரொடு நல்வினையுமுடையோர் பிறரும் உளர்', என்று, தலைவி, சிறைப்புறத் தலைவன் கேட்பத், தோழியிடம் கூறினாள் *[குறு.246:5]*.

'என்னை யொத்துப் பிறரும் இவனுக்கு அணியணிவித்துக் காண்க', என்று தலைவியின் புதல்வனுக்குத், தலைவனுடைய பரத்தையொருத்தி, தொடியணிவித்தாள் *[கலி.84:33]*.

'சேயே, குழவிப் பருவத்து, வளரா உடம்பினையுடைய, நீ, விரும்பி விளையாடிய போரின்கண் நின் வறுங்கைக்கே புரந்தரன் தோற்றலால் இவ்வாற்றலுடைய இவனே இனி நம் படைக்குத் தலைவனெனக் கருதி, அனலன் தன் மெய்யினின்றும் பிரித்துக் கோழியைக் கொடுத்தான்; அப்புரந்தரன் தானும் தன் மெய்யினின்றும் பிரித்து மயிலைத் தந்தான்; ஞமன் தன் மெய்யிலிருந்து பிரித்து வெள்ளாட்டு மறியைத் தந்தான்; அவ்வாறே அவரும், பிறரும் உவந்து தத்தம் மெய்யினின்றும் வாங்கிப் படையாகத், தந்த மறியும், மயிலும், கோழிச் சேவலும், வில்லும், தோமரமும், வாளும், ஈட்டியும், குடாரியும், கணிச்சியும், கனலியும், மாலையும், மணியுமாகிய வேறுவேறு உருவினவாகிய இவற்றை நீ நின் ஆறிரு கைகளிலும் கொண்டிருக்கின்றனை' என்று, முருகனைப் பரவுவர், கடுவனிளவெயினனார் *[பரி.5:63]*. துழாய் மாலையையும், செல்வத்தையுமுடையவனாகிய பறவைக் கொடியோனும் (திருமாலும்), ஏற்றினை ஊர்வோனும் (சிவபெருமானும்), மலர்மேலமர்ந்த முதல்வனும் (நான்முகனும்), அவனிடத்தே தோன்றி உலகின் இருளை அகற்றிய கதிரவர் பன்னிருவரும், மருத்துவர் இருவரும் (அச்சுவினி, தேவர்), திருந்திய நூலையுடைய எண்மரும் (வசுக்கள்), ஆதிரை முதல்வன் (உருத்திரன்) பெயரால் சொல்லப்பட்ட நாதர் (உருத்திரர்) பதினொருவரும், திசை காப்போரும் (இந்திரன் முதலிய திசைக் காவலர் எண்மர்), இவரெல்லோரும், பிறருமாகிய அமரரும், அவுணரும், தவமுதல்வரும் நின்னைக் காண்டல் காரணமாக மண்மிசை வந்துறையும் இடமாதலால், நின் பரங்குன்று, அவர்தம் பழைய இடமாகிய இமயக்குன்றத்தை யொக்கும்', என்று, முருகனது பரங்குன்றைப் பாடுவர், ஆசிரியன் நல்லந்துவனார் *[பரி.8:8]*.

பிறவியை - பிறவியுடையை. 'மூவிரு கயந்தலையுடனும், முந்நான்கு முழவுத் தோளுடனும், ஞாயிற்றின் எழுச்சிபோலும் நிறவழகுடனும், தாமரைப்பூவின்கண் பிறந்த பிறவியை - பிறவியுடையை - என்று, செவ்வேளைப் பாடுவர், கடுவனிளவெயினனார் *[பரி.5:12]*.

பிறழ்ந - பிறழுதற்கிடமாவன. ஆட்டுக்கிடை கட்டிய வயல்கள் தம்பால் நீர் நிரம்பி ஆரல்மீன் பிறழ்நவாய் - பிறழுதற்கிடமாவனவாய் - வளத்தினால் பாடல் சான்ற பயன்பொருந்திய ஊர்களையுடைய பகைநாடுகள்

அழகழியுமாறு, அச்சம் தோற்றுவித்து, இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் படையொடு சென்று தங்கினான் *[பதி.13:1]*.

**பிறள் - அயலாள்.** 'என் பேதை மகள் தன்னை ஈன்று பாதுகாத்து வளர்த்த எம்மையும் நினையாளாய், அருஞ்சுரத்தின் வழியே, தன் தலைவனொடு செல்லுதலைத் துணிந்து பிறள் - அயலாள் - ஆயினள்', என, மகட்போக்கிய நற்றாய் இரங்கினாள் *[அக.35:11]*. 'ஊரன், ஒண்டொடிமகளிர் யாழிசைக்கவும், முழவொலிக்கவும் குளிர்ந்த நறுஞ்சந்தனம் மணக்கும் தோளைக்கூடி, இன்னும் பிறளிடத்தே இருக்கின்றான்; அங்ஙனமிருக்கவும், அவன் மனைவி எம்மை வெறுக்கின்றாள், என்பர்', என, இல்லிடைப் பரத்தை கூறினாள் *[அக.186:13]*. 'சுரநெறியில் செல்லத் துணிந்து, என் குறுமகள், தன் தலைவனொடு சென்று பிறளாகியபோது, என்னினும் இவ்வூர் தன் விருப்பமிக்கதொரு பொருளை இழந்தது', என்று, மகட்போக்கிய செவிலி நொந்துரைத்தாள் *[அக.189:10]*. 'அந்தணீர், வெவ்விய காட்டிடத்தே போதலை இயல்பாகவுடைய ஒழுக்கத்தையுடையீராகலான், உம்மை வினவுகின்றேன்; இக்காட்டிடத்து என் மகளொருத்தியும், பிறள் மகனொருவனும் வேறுயாருமறியாமல் தாமேயறிந்து தம்முளே கூடிய கூட்டமுடையார் இருவரைக் காணீரோ', என்று, மகட்போக்கிய செவிலி, பின் தேடிச்சென்று, எதிர்ப்பட்ட முக்கோற்பகவரை வினவினாள் *[கலி.9:6]*.

**பிறன்-அயலான்.** 'பாண, தலைவன் உறையூரிடத் தேயுள்ளான்; அவனிடத்தே நீ பரிசில் கருதிச் செல்வையாயின் பின்னர் நீ பிறன் - அயலான் - வாயிலை நினையாதபடி, அவன் நினக்கு அளிப்பான்', என்று, சோழன் நலங்கிள்ளியிடம், பாணன் ஆற்றுப்படுத்தப் பெறுகின்றான் *[புற.68:19]*. 'பிறனது (வேற்று வேந்தனது) நாட்டின் கண் விளக்கம் அமைந்த சான்றோன் போற்றிப், புகழே மேம்பாடாக, நட்பே பற்றுக்கோடாக, இத்தன்மைத்தாகியதோர் இன்னாக்காலத்து இங்கே வருதல் மிகவும் வியக்கும் தன்மையுடையது', என்று, கோப்பெருஞ்சோழன் வடக்கிருக்கையில் வந்த பிசிராந்தையாரின் வரவினை வியப்பர், பொத்தியார் *[புற.217:3]*. 'விடியற் காலத்தே தன்னுடைய பகடுகள் பலவற்றையும் வாழ்த்தித், தனது வாயிலில் யான் தோன்றவுமில்லேன்; பிறன் வாயிலிடத்தே நின்று பாடியிருக்கும் எனது தடாரிப் பறையின் ஓசையைக் கேட்ட அளவிலேயே என்னையருளினான்', என்று, அம்பர்கிழான் அருவந்தையின் அருட்சிறப்பினைப், பொருநன் கூற்றிலே பாடுவர், கல்லாடனார் *[புற.385:3]*. என்றும் அறக்கழிவிலே படாத வாழ்க்கையும், பிறன் மனைவாயிலில் சென்று நில்லாத மேம்பாடும், ஆகிய இரண்டும் பொருளினாலாகும் *[அக.155:2]*. 'மகிழ்நனே, தெறுதற்கரிய தெய்வத்தின்முன் தெளிவித்து, எனது முன்கையைப் பற்றிச் சொல்லிய சொல்லைக்கடந்து, நின் மார்பினைத் தாராயாய்ப், பிறனாயினையே, நின்னை இனி யான் விடுவேனல்லேன்', என்று, காதற்பரத்தை, தலைவனைப் பற்றிக் கொண்டு கூறினாள் *[அக.396:10]*.

'தனக்குப், பிறனாகிய தந்தையையுடைய பரத்தையர் கொடுத்தவற்றை இவனொருவன் வாங்குவானாம்; மிகவும் நம்மால் சினக்கத் தக்கான்', என்று, தலைவி, தன் புதல்வன் கடவுட்கடிநகரை வலங்கொளச் சென்று, பரத்தையரால் தொடிகளணியப்பெற்று வந்தபோது, தன்னெஞ்சொடு கூறினாள் *[கலி.84:17]*.

**2. இறந்தோன்.** 'அறனில்லாத கூற்றம் திறப்பாடின்றி உயிர்கொள்ளுதற்குத், துணியக், கணவன் பிறன் - இறந்தோன் - ஆயினன் கொல்லோ? என்னுயிர் கெடுவதாக', என்று, என்னை நினைந்து கூறும் நோயையுடையளாய்ப், பலபட வெறுத்துறையும் என் மனைவியின் துன்பம் தீர்க்க வேண்டி, இறைவனே, யான் இப்பொழுதே விடைகொண்டேன்; நீ வாழ்வாயாக', என்று, பெருங்குன்றூர்கிழார், சேரமான் குடக்கோச்சேரலிரும்பொறை பரிசில்நீட்டித்த, நிலையில் வருந்திக் கூறி விடைபெற்றார் *[புற.210:9]*.

**பிறிது - வேறு.** 'புலால் நாற்றத்தையுடைய செவ்விய தசையைப், பூநாற்றத்தையுடைய புகையை கொளுத்தி யமைந்த ஊனையும், துவையையும், கறியையும், சோற்றையும் உண்டு வருந்தும் தொழிலல்லது பிறிது—வேறு— தொழிலை அறியாவாகலின் பெரும, நின்னைப் பாடுவோர் கைகள் பெரிதும் மெல்லியவாயின', என்று, கபிலர், தம் கையின் மென்மையைப் பற்றி வினவின சேரமான் செல்வக்கடுங்கோ வாழியாதனிடம் கூறினார் *[புற.14:15]*. பொறுத்தற்கரிய வலிமையால் பகையை மதியாமல் பாண்டியன் நெடுஞ்செழியனால் பிணிக்கப்பட்ட சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும் பொறை, தானுற்ற பெருந்தளர்ச்சி நீங்குமாறு, பிறிதொரு சூழ்ச்சியால், சிறையினின்றும், தப்பிப் போய்ப், பலரும் மகிழத், தன் உரிமைச் சுற்றத்தினர் பலர்க்கு நடுவே மிகுத்துச் சொல்லப்பட்டான் *[புற.17:22]*. 'சோற்றையாக்கும் தீயுடனே, செஞ்ஞாயிற்றின் வெம்மையல்லது, பிறிது வெம்மையையறியார், நின்குடை நிழற்கண் வாழ்வோர்', என்று, சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும் பொறையின் ஆட்சியைப் பாராட்டுவர், குறுங்கோழியூர் கிழார் *[புற.20:9]*. 'தன்னையும் நினையேனாய்ப், பிறிது நாட்டிற்குப் போமாறு சென்ற எனது ஒய்ந்த வழிவருத்தத்தையும், வறுமையையும் நோக்கித், தானே வேட்டையாடிய இறைச்சியைச் சுட்டுத், தந்து, பசியாற்றியபின், தன்னை யான் விடுத்துச் செல்லத் தொடங்கினேனாக, விரையவந்து, 'பெறுதற்கரிய பெருமை வாய்ந்த நல்லணிகலன்கள் தருதற்குப் பிறிதொன்றுமில்லை; யாம் காட்டு நாட்டின் கண்ணே இருக்கின்றேம்', எனக் கூறித், தனது மார்பிலே பூண்டிருந்த விளங்கிய முத்து வடங்களையுடைய ஆரத்தைக், கைக்கடங்களோடே தந்தனன்', என்று கண்டீரக் கோப்பெருநள்ளி, வழியிடையே வழங்கிய

வண்மையைப் பாடுவர், வன்பரணார் *[புற.150:3,19]*. 'பாவலர்க்கு யானைகளை மிகக் கொடுக்கும் அழிவில்லாத நல்ல புகழையுடைய தலைவனைப் பாடி நின்றேனாகப், பெருமைபெற்ற பரிசிலன் வாடினனாய்ப் பயனின்றிப் பெயர்தல், எனது நாட்டை யான் இழந்ததனினும் மிக இன்னாததென நினைந்து, அங்கே தருதற்குத் தன்னிற் சிறந்த பொருள் பிறிதொன்றின்மையின், தனது தலையை எமக்கீய, வாள் தந்தனன்', என்று, தம்பியால் நாடு கொள்ளப்பட்டுக், காடு பற்றியிருந்த குமணனைக் கண்டு, அவன் தன் வாள் கொடுப்பக் கொணர்ந்த பெருந்தலைச் சாத்தனார், அதனை இளங்குமணனுக்குக் காட்டிக் கூறினார் *[புற.165:13]*. குன்றத்தன்ன களிற்றையெறிந்து, அதனொடு தானும் பட்டு வீழ்ந்தோனாகிய படைத் தலைவன் பின்னும் பகைமறவர் பலருயிரைக் கவரக் கண்டு, வேந்தனும் இத்தகைய போர்க்களத்தே முனைந்து போரிட்டு மாள்வதினும் சிறந்தது பிறிதொன்றில்லையென அதன் அருமை நோக்கி, நெஞ்சிற் புண்பட்டு வீழ்ந்தான் *[புற.307:12]*. முன்றிலின்கண், முஞ்ஞையோடு, முசுண்டைக்கொடியும் பம்பிப் படர்ந்து, பந்தரும் வேண்டாமல், பலரும் தூங்குதற்கேற்ற நிழலில், யானை வேட்டுவன் துயில் மடிய அவனால் கட்டப்பட்டிருந்த பார்வை மானாகிய இளம்பிணையைத் தழுவிப் பிறிதொரு கலைமான் திளைத்து விளையாடியது *[புற.320:4]*. வாழும்போது செய்த நல்வினை யல்லது, ஒருவர்க்கு, இறக்குங்காலத்து, உயிர்த் துணையாவது பிறிதில்லை *[புற.367:11]*. 'வைகறைப்பொழுதிலே யான் ஒருகண் மாக்கிணையை இசைத்துத் தன் தந்தையது வஞ்சிப்போரினைப் பாடியதற்குத் தான் அகமலிந்த உவகையொடு வெஞ்சின வேழம் ஒன்றை நல்கினனாக, அதுகண்டஞ்சி, யான் அதனைத் திருப்பி விடவும், தான் அப்பரிசிலைச் சிறிதென யான் உணர்ந்தமைபோல் நாணிப், பிறிதுமோர் பெருங்களிற்றை நல்கினான்', என்று, சோழிய ஏனாதி திருக்குட்டுவனது வண்மைச் சிறப்பினைப் பாடுவர், மாடலன் மதுரைக் குமரனார் *[புற.394:14]*.

'நீ விரும்பிய பகைப்புலங்களிலே படையொடு சென்று தங்கி, அப்பகைவர் திறை கொடுக்கப்பெற்று, அவரையருளி, நின் மூதூர்க்குச் செல்லுங்கால், நின் முன்னோரால் பாதுகாத்து வரும் நட்பரசருடைய எயில்வழிச் செல்லுதல் நன்றன்று; காரணம், அவ்வழிச் சென்றால், அவ்வரண்வாயிலைக் காணின், நின் களிறுகள் அடங்குவனவாகா; ஆகலின், வளைந்து செல்லினும் பிறிது வழியில் செல்வாயாக', என்று, ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைப் பாடுவர், காக்கைபாடினியார் நச்செள்ளையார் *[பதி.53:14]*.

'தினைப்புனத்தின்கண் வந்து எனது சிறுபுறத்தைத் தழுவிய தலைவனை உள்ளத்தொடு படாத கடுமொழி கூறி, அவன் கைகளை யகற்றிவிட்டு வெருவிய மான்பிணை போல் விலகி நின்ற என் வன்னிலை கண்டு கூசித், தன் காதலை யடக்கிக் கொண்டு, என்னிடத்தே பிறிதொன்றும் சொல்ல வலிமையும் இல்லாதவனாய், அவன் அல்லாந்து பெயர்ந்தான்' என்று, தோழி, தலைவனைக் குறித்துத், தலைவியிடம் புனைந்துரை முறையில் குறை நயப்பக் கூறினாள் *[அக.32:14]*. 'நம் தலைவர் உறுவித்த காம நோயினாலாகிய இவ்வல்லலைத் தெரிந்தருளுதலால், வெறியாடலில் வெளிப்படும் நெடுவேள், நம் முன்னையழகினைத் தந்தருள்வானாயின், பின்னர்ச், 'செறி தொடி அணிந்தவளாகிய காதலியுற்ற துன்பம் நம்மிடத்துக் காதலானன்றிப் பிறிதொன்றானெய்தியது', எனத், தலைவன் கேட்டறியின், பிறகு யான் உயிர் வாழ்தல் அரிது', எனத், தோழி, சிறைப்புறத் தலைவன் கேட்குமாறு, தலைவியிடம் கூறினாள் *[அக.98:28]*. 'அன்னை அறியினும் அறிக; அலர் வாயினையுடைய சேரி கேட்பினும் கேட்க; நிகழ்ந்தது பிறிதொன்றுமில்லையென்பதை நீயறியக் கூறிப், புகாரிடத்தேயுள்ள தெய்வத்தை நோக்கி யான் நினக்குச் சூள் செய்து தருவேன்', என்று, தொடங்கித் தோழி, தலைவனைக் கண்டது பற்றிச், செவிலியிடம் கூறி, அறத்தொடு நின்றாள் *[அக.110:3]*. 'தோழீ, நோய் பெருகி ஆதிமந்தி போல் யானும் அறிவு பிறிதாகி (வேறுபட்டு) மயங்கியுள்ளேன்', என்று, தலைவனது பிரிவிடை வேறுபட்ட தலைவி, தோழியிடம் கலங்கி மொழிந்தாள் *[அக.135:5]*. 'தோழீ, நன்மலை நாடனாகிய தலைவன் இரவுக் குறிக்கண் வரும் நடுஇரவில், துன்பத்தையுடையதாகிய நெடுவழியை என்னெஞ்சு நினைந்து, கண்களில் நீர் ததும்ப, யான் சிறிதே வருந்திய வருத்தத்தை, அன்னை, பிறிதொன்றுபோல் ஐயுற்று நினைந்தனளாகி முருகனை மனைக்கண் வருவித்து, வெறியாடலெடுத்தல் நன்றாகுமோ', எனத், தலைவி, தலைவன் சிறைப்புறத்தே நிற்கையில், தோழியிடம் வினவினாள் *[அக.138:4]*. 'தோழீ, பலவற்றையும் வெறுத்து உண்ணாத வருத்தத்தால் உயிர் மெலிந்து கெடவும், தோள் பழைய அழகை யொழியவும், நாள்தோறும் பிரிந்தோராகிய தலைவரது நீக்கத்திற்கு இரங்கியும், இத்துன்பத்திற்கு மருந்து பிறிதில்லாமையால் செய்யும் செயலொழிந்தேன்', என்று, தலைவி, தோழியிடம் கூறி வருந்தினாள் *[அக.147:14]*. 'தோழி, பொருள் கருதிக் காட்டைக் கடந்து சென்ற நம் தலைவர், அம்மிகு பொருளையே நினையும் நெஞ்சமொடு, நம்மை மறந்து, அருள் பிறிதாவர் காண்', எனத், தலைமகள் வருந்தித், தோழியிடம் கூறினாள் *[அக.151:4]*. 'நண்டே, துறைவனாகிய தலைவனுக்குக் கானலும் உரையாது; கழியும் கூறாது; புன்னையும் மொழியாது; யான் நின்னையல்லது, பிறிது யாதையும் துணையாகப் பெற்றிலேன். அதனால், 'பன்னாளும் யாமத்தே வந்து நின் துயர் நீக்கியோள், நின் பிரிவை யாற்றாமல் உறுகின்ற தன் துயரினைக் கடக்க வல்லளோ', என்று, நீயே அவனுக்குக் கூற வேண்டும்', எனத், தலைவி, பிரிவிடையே, காமமிக்க கழிபடர்கிளவியால், நண்டை நோக்கி வேண்டினாள் *[அக.170:3]*. 'பெரும, பகற்பொழுது சென்றதாக நீ நின் தேரினைப் பூட்டுமாறு பாகரை ஏவி, மடந்தையே, இனி நின் தோழியோடு மனைக்குச் செல்',

எனச் சொல்லியதற்கே இவள் பெரிதும் அழுது வருந்துவளாயின், நீ பிரிந்தால், விரைந்து பிறிதொன்று (இறப்பு) எய்துவளாதலையும் எண்ணி அஞ்சுகின்றேன்', என்று தோழி, தலைவியைக் குறித்துத், தலைவனிடம் கூறி வரைவு கடாவினாள் *[அக.300:12]*. 'இனி நமக்குள் கூட்டமின்றிப் பிறிதுண்டோ? இல்லையாதலின் நீ பிரிவெண்ணி அஞ்சுதலைத் தவிர்வாயாக', என்று கூறி, அழகொளி பெருகத் தழுவி, உள்ளங்கவர்ந்தோனாகிய தலைவன் பிரிந்து சென்ற வழியை நினைந்து, தலைவி கண்களில் நீர் பெருக வருந்தினாள் *[அக.313:1]*.

காமநோய் முதிர்வுற்றால், பனை மடலையும் குதிரை எனக்கொண்டு ஏறுவர்; எருக்கம்பூ மாலையையும் அடையாளமாலை, போல் சூடுவர்; தெருவில் தம்மைக் கண்டு பிறர் ஆரவாரிக்கவும் படுவர்; இவற்றால், தம் கருத்து முற்றாதாயின் பிறிதும் (சாதலும்) ஆவர் *[குறு.17:4]*. 'முன்பனிக் காலத்தால் எனக்குண்டாகும் துயரினைத் தீர்க்கும் மருந்து, என்னை மணந்து கூடிய தலைவரது மார்பேயன்றிப் பிறிதில்லை', எனப், பிரிவிடைத் தலைவி வருந்திக் கூறினாள் *[குறு.68:4]*. 'தாய்முகம் நோக்கி வளரும் தன்மையையுடைய ஆமையின் பார்ப்பைப்போலத், தலைவரைப் பலகாலும் காண்பதால் வளருவதாகிய என் காமம், நாம் செயலறும்படி அவர் நம்மைப் பிரிந்து கைவிட்டால், தாயில்லாத முட்டை கிடந்தபடியே அழிவதுபோல, உள்ளத்துள்ளே கிடந்து மெலிவதன்றிப் பிறிதென்ன உறுதியையடையும்' எனத், தலைவி, தலைவன் வரைவு நீட்டித்தபோது, தோழியிடம் ஆற்றாதுரைத்தாள் *[குறு.152:3]*. 'அசைந்துவரும் காற்று என்னுடம்பின்கண் பாய்ந்து தீண்ட, அதனால், அணி செய்தலுற்ற பாவையைப் போன்ற எனது மெய், நலமழிந்து பிறிதாகுதலை அறியாதோராகிய தலைவர், தாம் விரும்பிச் சென்ற வினையை முடித்தற் பொருட்டு, இம்மாலைக் காலத்தே எங்குள்ளாரோ' என்று, தலைவி, தலைவனது பிரிவிடையே பருவ வரவு கண்டு மெலிந்துரைத்தாள் *[குறு.195:7]*. 'தினைப்புனத்திற் படியும் கிளிகளைக் கடிதற்குத் தாய் எம்மை விடுவாளாயின், பகற்காலம் நின்னொடு அளவளாவுதற்குப் பொருந்தும்; அங்ஙனம் பொருந்தாமையின், இரவுக் காலத்து நீ வருதலால், வழியிடையூறுகளுக்கு யான் அஞ்சுகின்றேன்; இந்நிலையில், துன்பந்தரும் எம் காமநோய்க்கு என்ன தீர்வு காண்போம்', என்று, தோழி கூறியதற்குத், தலைவன் பிறிதொன்றை (உடன்போக்கை) நினைந்து வெய்துயிர்த்தான் *[குறு.217:4]*. 'தோழீ, நம் சேரியின்கண் பலமுறையும் மெல்ல வந்துவந்து, அரிதின் வாய்திறந்து, இனிதின் மொழிந்து, நாள்தோறும் தன் கருத்து நிறைவேறாமையால் நிறம் மாறித் தங்கியிருக்கின்ற தலைவனது துன்ப நோக்கினை நினைத்துப்பார்; அவன், இவ்வாறு நெடிது பின்னிற்றல் பிறிதொன்றைக் குறித்ததாகும்', எனத், தலைவியிடம், தோழி, தலைவனைக் குறித்துக் கூறினாள் *[குறு.298:8]*. துறைவன் என்னை மணத்தலைக் கருதானாயினும், கருதினும், வேற்று மணமாகிய பிறிதொன்றை அறியாதவனாகிய அவனுக்குப் பிழையாமையைப் புலப்படுத்தும் வஞ்சினம் செய்த கள்வனும், அவ்வஞ்சினத்தை நிறைவேற்றும் கடப்பாடுடையவனும், எனக்குப் புணைபோல்வானும், தானே என்று சொல்லுவேனோ', எனத், தலைவி, தலைவன் தன் அண்மையனாயிருக்க, அவன் கேட்குமாறு, தோழியிடம் கூறினாள் *[குறு.318:4]*. 'தோழி, சேர்ப்பனாகிய, தலைவன் பிரிந்தால், நாம் இழக்கும் பொருள், நம் இன்னுயிரையன்றிப் பிறிதொன்று யாது', எனத், தலைவி, வரைவிடை நொந்துரைத்தாள் *[குறு.334:5]*.

'விரும்பி வந்து தழையுடையும், மாலையும் தந்தான் இவனெனக் கருதி, என்னையடையுமாறு, தான் ஏற்ற நோன்பிற்காகத், தைத்திங்களின் விடியலிலே, தண்ணிய குளத்து நீரிலே முழுகுகின்ற பெருந்தோட்குறுமகளல்லது, யானுற்ற நோய்க்கு மருந்து பிறிதில்லை', என்றான், தலைவன் *[நற்.80:9]*. 'தோழீ, தலைவனால் என்னிடத்தே தோன்றிய காமநோயாகிய பிணியைப் பிறிதாக (முருகனால் நேர்ந்ததாக) ஊரார் கூறுவர்; இவ்வாறு பழி பிறிதாதல் பண்பன்று; எனவே, இனியான் பன்னாள் வாழேன்', என்றாள், தலைவி *[நற்.117:10,11]*. 'விரிந்த கடலால் சூழப்பட்ட வையகத்தெல்லை யளவையும் கடந்த என் துன்ப நோயையன்றி எனக்கு உசாத்துணை பிறிது யாதுமில்லை', எனத், தலைவி, தலைவனது பிரிவிடை மெலிந்து, வன்பொறை எதிரழிந்து கூறினாள் *[நற்.130:12]*. 'தன் தந்தையின் நெடுந்தேர் இயங்குகின்ற மணல் பரவிய முன்றிலின்கண், பந்தொடு விளையாடச் செல்லுகின்ற வளாகிய நம்மிடத்துப் பரிவில்லாத இளையவள், நம்மை அருளினும், அருளாளாயினும், நெஞ்சே, நீ பெரிதும் மனமழிந்து அவளிடத்தே இரந்து பின்னிற்றலை வெறாதே; காரணம், யானுற்ற நோய்க்கு அருந்துயராகிய அவலத்தைத் தீர்க்கும் மருந்து, அவள் தானேயன்றிப் பிறிதில்லை' என்று, தலைவன், குறைமறுக்கப்பட்ட நிலையில், தன்னெஞ்சொடு கூறினான் *[நற்.140:11]*. 'நாடனே, நீ அருளாயாயினும், நயனில்லாதவற்றைச் செய்தாயாயினும் நின்னுள்ளஞ் சென்ற வழியே நடக்கும் என் தோழியின் நெற்றியில் தோன்றிய பசலைக்கு மருந்து, நீயேயன்றிப் பிறிதில்லாமையை நன்கு அறிந்து செல்வாயாக', எனத், தோழி, தலைவியின் நிலைமை கூறித், தலைவனை வரைவு கடாவினாள் *[நற்.247:9]*. ஓமை, மரக்கிளைகளை ஒடித்துத் தின்ற களிற்றியானை, கையைச் சுருக்கிப், பிறிதோர் வழியிலே போகத் தொடங்கிய அளவில், அதன் போக்கினை வேறுபட உணர்ந்த பிடி யானை, மலையின் பிளப்பிடமெல்லாம், எதிரொலிக்குமாறு புலம்பியது *[நற்.318:6]*. 'நாடனே, என்தோழி, நின் கண்ணோட்டமன்றிப், பிறிது யாதையும் துணையெனப் பெற்றிலளாகலின், நீ அவளை அருளிக்காப்பாயாக', என்று, தலைவனிடம், தோழி கூறினாள் *[நற்.355:11]*. ஐயனே, எம்முடைய கூந்தலின் நறுமணம் கமழும் நல்ல புதுநாற்றத்தையும், பசலை பரவிய நெற்றியையும்

நோக்கிப் பயனின்றிச் சிதைந்த உள்ளத்தினளாய்ப், பிறிதொன்றைச் சுட்டி நின்றாள்போல, எம் அன்னை வெய்தாக மூச்செறிந்து வெகுண்டனள்', எனத், தோழி, தலைவனிடம் கூறினாள் *[நற்.368:8]*. 'என் அறிவும் என்னை நீத்து மயக்கமடைந்து பிறிதாகின்றது. இவ்வுலகில், பிறந்தோர் இறப்பது இயற்கையாதலின், யானும் சாதற்கு அஞ்சேன்; மற்று, யான் சாவேனெனில் இனி வரும் பிறப்புப் பிறிதாகுவதாயின், அப்பொழுது, என் காதலனை மறக்குவேனா, என்றே, யான் அஞ்சுகின்றேன்' எனத், தலைவி, தலைவனது பிரிவிடையே, தோழியிடம் கூறினாள் *[நற்.397:4,8]*.

'அன்னையே, துறைவனே எம் தலைவனென யாம் கூறுகின்றோம்; மற்று, இவ்வூரோ பிறிதொன்றாகக் (வேற்றோர் வரைய வருவதாகக்) கூறுகின்றது; ஊழ் அவ்வண்ணமும் ஆக்குமோ', என, வினவுவாள் போலத், தோழி செவிலியிடம் அறத்தொடுநின்றாள் *[ஐங்.110:4]*. 'தோழி, நாடன் பொருட்டு, நீ, கொய்யப்பட்ட தளிரைப் போல வாடி, நினது மெய்பிறிதாதல் என்னோ', என்று, தோழி, தலைவியை வினவினாள் *[ஐங்.216:6]*. கொதித்தலையுடைய அருஞ்சுரத்தில், வேனிற்காலத்து, அரசு மரத்தின் இலையொலியைக் கேட்டு வெருவிப் பறவைகள் இரைகொள்ளாமல், பிறிது புலத்திற்குச் செல்லும் *[ஐங்.325:2]*. 'பாணனே, பிரிந்தவிடத்தே, யாம், நீட்டித்தேம் என்று, எம்மேல் கொடுமை தூற்றி வாடிய நெற்றியளாய்ப், பிறிது நினைந்து, யாம் விரும்பும் காதலி,. பிரிவு நோயினால் மிக மெலிந்து சொல்லியவற்றை உரைப்பாயாக', எனத், தலைவன், தூதுவந்த பாணனை வினவினான் *[ஐங்.478:2]*.

திருந்திய இழையணிந்தவளே, நின்னைக் குறித்து, என்னிடத்தே குறைவேண்டி வந்தானொருவன், இக்காலத்து, நின்முகத்தைக் கண்டு அருளைப் பெறுவானாயின், அவ்வருளே, அவனது நோய்க்கு மருந்தாவதல்லது, பிறிது யாதும் மருந்தின்றாயின், இனி நாம் என் செய்யக் கடவேம்', எனத், தோழி, தலைவியிடம், தலைவனுக்குக் குறைநயப்பக் கூறினாள் *[கலி.60:21]*. 'ஊரனே, சிலம்பு ஆரவாரிப்ப வந்து, தெருவிடத்தே தாக்கணங்கு போலத் தாக்கி, நின்னெஞ்சை அகப்படுத்திக்கொண்டு, பின்னர், கைவிட்டவளிடம், நின் வருத்தத்தைச் சொல்லி அழைத்துக்கொள்ளக் கருதி நின்ற நீ, எண்ணி வந்த எண்ணம் பிறிதொன்றாயிருக்க, என்னிடத்தே தாழ்ந்தாய் போல் வந்து, பயனில்லாத சொற்களைச் சொல்லக்கடவையோ', எனக், காமக்கிழத்தி, பரத்தையர் சேரியினின்றும் வந்த தலைவனொடு ஊடிக் கூறினாள் *[கலி.69:10]*. தாமரை மலர்களுள், தம்மிற் சேர்ந்து இணையொத்த இருமுகைகளுக்கு நடுவே, பிறிது யாதும் தனக்கு ஒப்பின்றித் தளையவிழ்ந்து உயர்ந்து நின்றது, ஒரு தனி மலர் *[கலி.77:1]*. பலமலர்களையுடைய பழனத்தின்கண், ஒரு தாமரை மலரிடத்தே, ஆரவாரித்து ஊதிய தும்பி அம்மலரைப் புனல் மிகுந்து சாய்ப்ப, அகன்று போய்ப், பிறிதுமொரு பொய்கையைத் தேர்ந்து, அதனிடத்தே சுழன்றது *[கலி.78:6]*. 'ஒள்ளிய நெற்றியையுடையவளே, யாய் கோலையுடையளாய் என்னை வருத்தியற்கு, இவ்வூர், மலரணிந்த கண்ணியையுடைய பொதுவனோடே எனக்குக் கூட்டமுண்டென்று எண்ணி, அலரையுண்டாக்கிவிட்டது; இத்தன்மைத்தாகிய உவகை நமக்குப் பிறிது யாதுதான்', என்று, தலைவி, தோழியிடத்து மகிழ்ந்து கூறினாள் *[கலி.105:62]*. தலைவனது பிரிவிடைக் கலங்கிய தலைவி, சிற்றிலிழைத்துப், பின் கணவனைக் கூடுதலாகிய பிறிதொன்றை நாடிக் காண்பவளாய்க், கூடற்சுழியிழைக்கத் தொடங்கிக், கோடுவாய் கூடாத இளம்பிறையைக் கண்டாள் *[கலி.142:24]*.

'யான் குளித்த தடத்தின் கரையில் நின்றிருந்த ஒருத்தி தன் பேதைமையால் தடத்தினும் புகுந்து, அலையினுள் அழுந்தி, எழுந்து, என்மேல் அல்லாந்து விழுந்தாளை யான் அணுகியெடுக்குமளவில் அவளேயெழுந்தாள்; அதனால் அவள் காம நுகர்ச்சி அறியும் பருவத்தளல்லள்; அவளொழியக், கோதை போலே, என் மார்பினுள் அழுந்தியவள் யாவள்? அவளோடு யான் ஆடியயாறு யாது? எனத், தலைவன் வினவியதற்கு, அதனை நீயே தெளிய அறிவாயாக; அத்தன்மையது, பிறிதுமோர் யாறுண்டோ? அஃது இவ்வையையாறே காண்', என்றாள், காதற் பரத்தை *[பரி.6:92]*. செவ்வேள் காரணமாகத், தேவசேனையின் தோழியர்க்கும், வள்ளியின் தோழியர்க்கும் இடையே நிகழ்ந்த போரில் அம்மகளிர் தம் பேதைமையையுடைய மெல்லிய நோக்கு வெகுளியினால் பிறிதாகத் திரிந்து பொருதனர் *[பரி.9:48]*.

**பிறை** - குறைமதி, இளந்திங்கள். எல்லாவுயிர்க்கும் காவலாகிய அருந்தவத்தோனுக்கு (சிவபெருமானுக்கு) பிறை - குறைமதி - திருநெற்றிக்கு அழகானது; மற்றும், அப்பிறைதான் அப்பெரியோன் சூடுதலால், பதினெண் கணங்களாலும் புகழவும் படும் *[புற.1:9(2)]*. பிறை வடிவாக அமைந்த மத்தகத்தையுடையன, போர் யானைகள் *[புற.22:3]*. கருநிறஞ்சேர்ந்த மிடற்றையுடைய இறைவனது அழகிய முடிப்பக்கத்தே அணிந்த பிறை, நெற்றியைச் சேர்ந்து திகழ்ந்தது *[புற.55:5]*. நீலமணிபோலும் கரிய மிடற்றையுடைய ஒருவனாகிய இறைவன், பால்போலும் பிறை, நெற்றியிடத்தே பொலிந்த, திருமுடியையுடையவன் *[புற.91:5]*. சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னியின் கோயில் மாடம், புதுப்பிறை போலும் வெள்ளிய சுதைவேலைப்பாடுகள் கொண்டது *[புற.378:6]*.

வளரும் இளம்பிறை தங்கிய நெற்றியுடையசிவன், சூலத்தையும் ஒளிபொருந்திய பிற படைக்கலங்களையும் ஏந்திய காலங்கடந்த கடவுள் *[பதி.க.வா.9]*.

பிறை போலும் அழகமைந்த நெற்றியினையுடையவள், பாடினி *[பொரு.25]*. பிறந்த பிறை (முதற்பிறை) உயர்ந்திருந்தாற்போன்ற,

பின்புறம் ஏந்தியிருக்கின்ற, கவைத்த கடையினையுடையது, யாழ் *[பெரு.11]*. அழகிய இடனமைந்த வளர்பிறையைத் தன் மேலே சூடிக்கொண்டு அந்திக்காலச் செக்கர் வானத்தே உலவுகின்ற முகில் போல, வெள்ளிய கொம்பையுடைய கரிய யானைப் பிணத்தைக், குருதியாறு ஈர்த்துப்போகுமாறு தொலையாத போரினையுடைய ஐவரும் (பாண்டவர்) நூற்றுவருடன் பொருது அவர்கள் களத்தேமடியுமாறு பெரும்போருடற்றி வென்றனர் *[பெரு.412]*. 'மேற்றிசைக்கண் தோன்றிய தொன்மையானதும், எல்லோராலும் தொழத்தக்கதுமாகிய பிறை, நாளும் சிறக்குமாறுபோல, நின் வெற்றியாலே பின்னுள்ளோர்க்கு உண்டாகும் கொற்றம் அவர்களுடைய வழிவழியே மிகுவதாக', என்று, தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை வாழ்த்துவர், மாங்குடிமருதனார் *[மது.193]*. செவ்வானன்ன சிவந்த திருமேனியையும், அவ்வானின்கண் விளங்கும் பிறை போன்ற வளைந்த வெள்ளிய கூரிய எயிற்றினையும் உடையவன், நீலமணி போலும் திருமிடற்று அந்தணன் (சிவபெருமான்) *[அக.க.வா.9]*. பிறைபோலும் வெண்கொம்பையுடையது, தலைமையமைந்த யானை *[அக.115:13]*. திருமணம் கூடிய தலைநாள் இரவில், புத்துடையால் உடல் முழுவதையும் வளைத்து மூடியிருந்த தலைவியைத் தலைவன் நெருங்கி, மிக்க புழுக்கமுற்ற நின் பிறைபோலும் நெற்றியில் அரும்பிய வியர்வையைக் காற்று வீசி ஆற்றுமாறு சிறுபொழுது திறவாய்', என்று கூறி ஆர்வநெஞ்சோடு, அவளது போர்வையைக் கவர்ந்தான் *[அக.136:21]*. 'வெஞ்சுரத்தை ஊடறுத்துச் செல்லும், அச்சந்தோன்றும் கவர்த்த வழிகளில், களிறுகள் நீர் வேண்டித் துழாவிப்பார்த்த கிணற்றினைத், தன் காதலனான அறனிலாளன் தோண்ட, ஊறித்தெளிந்த உவர் நீராகிய, குறைகுடமாக முகக்கப்பட்டதைத், தான் தனது பிறைபோலும் நெற்றி வியர்ப்ப அருந்தினளோ', என்று, தலைவனுடன் போய்விட்ட தலைவியை நினைந்து, தாய் இரங்கினாள் *[அக.207:13]*. மாலைக் காலத்தே, ஒள்ளிய அணிகளை யணிந்த மகளிர், உயர்ந்த பிறையைத் தொழுவர் *[அக.239:9]*. பிறைபோலும் மருப்பினையுடையது, பன்றி *[அக.322:10]*.

'யாவரும் தொழுது காணுகின்ற பிறை (மூன்றாம் பிறை, கார்த்திகைப் பிறையுமாம்) போல் தோன்றி யாம் நும்மால் காண்டற்கரியேமாகிய களவுக் காலத்தே, நீர் பெரிய வருத்தத்தையும் பொறுத்தீர்', என்று, தோழி, தலைவனிடம், அவன் தலைவியை மணந்து கூடியும் ஆராக்காதலுறும் அளவினில் கூறினாள் *[குறு.178:5]*. இளம்பிறை போன்று ஒளிவிட்டு விளங்குவது ஒளியையுடைய தேருருள் *[குறு.189:3]*. 'தோழீ, சேர்ப்பனொடு சிரித்துப் பழகுதற்கு முன்பு பிறையெனக் கருதும்படி, அறிவை மயக்கும் நமது நெற்றியும் மிக நன்றாயிருந்தது', எனத், தலைவி, வரைவிடையாற்றாது, தோழியிடம் கூறினாள் *[குறு.226:2]*. 'காதலர் பிரிவாலுண்டான துன்பநோய், வளர்பிறைபோல், மேன்மேலும் பெருகி, நம் வளையை நெகிழ்த்தது', என்று, தலைவி வருந்தினாள் *[குறு.289:1]*. 'தோழி, வளையை உடைத்தாற்போன்ற வடிவையுடையதாக, பலரும் தொழுமாறு, சிவந்த இடமகன்ற வானத்திலே விரைந்து தோன்றிக், காதலர் பிரிந்திருக்கும் இக்காலத்தும் பிறை பிறந்தது; நாம் அழுமாறு பிரிந்த காதலர் தாம் மீண்டிலராதலின் அவர் நம்மை மறந்தனர் போலும்', என்பது, தலைவியின் இரக்கமொழி *[குறு.307:3]*.

பரத்தையிற் பிரிந்த தலைவன் விருந்தினரை வாயிலாகக் கொண்டு மனைக்குள் புகுந்தானாக, வரவேற்ற தலைவி, புகையுண்டு அமர்த்த கண்களையுடையவளாய்ப், பிறை போன்ற நெற்றியில், அழகு பெறப் பொறித்த சிறிய நுண்பல் துளிகளாகிய வியர்வையை, அழகிய முன்றானை நுனியினால் துடைத்தவளாய், அவனைப் புலந்த நெஞ்சோடு, அடிசிற்சாலையிலிருந்தாள் *[நற்.120:7]*. பிறைபோலும் அழகிய நெற்றியினள், தலைவி *[நற்.167:11]*. பிறைபோலும் அழகுற்ற மாசற்ற சிறந்த நெற்றியையுடைய எம் காதலி', என்று, தலைவன், தலைவியைக் குறித்துப் பாணனிடம் கூறினான் *[நற்.250:7]*. தலைவன் வரையாது களவு நீட்டித்தலால் தலைவியின் நெற்றி பிறைபோலும் அழகினை யிழந்தது *[நற்.263:1]*.
இளம்பிறைபோன்ற கொம்பினையுடையது, பன்றி *[ஐங்.264:1]*. 'பிறை போலும் நெற்றியையுடைய குறுமகள்', என்று, தலைவியைக் குறித்துத், தாய் கூறினாள் *[ஐங்.371:5]*. 'வானுயர்ந்த அரண்கள் பலவற்றை வென்று கொண்ட வேந்தன், பாசறைத் தொழிலை விடுவானாயின், யாம் தேரேறிச் சென்று, காதலியின் அழகுபெற்ற ஒளியுடைய நெற்றியை, விளங்குகின்ற நிலவின் இளம்பிறை போல் காண்பேம்' எனத், தலைவன், பாசறையிடத்தேயிருந்து நினைந்தான் *[ஐங்.443:2]*.

'பிறைபோலும் நெற்றியையுடையவளே', எனத், தோழி, தலைவியை விளித்தாள் *[கலி.45:23]*. தலைவியை இயற்கைப் புணர்ச்சியின்கண் தெளிவகப்படுத்திவிட்டுப் பிரிந்து, தலைவன் அருமைசெய்து அயர்த்ததனால், ஊரினர் அலர் தூற்றவும், அவளது நறுநுதல் ஒளிகெட்டுப், பீர்க்கம் பூவினது அழகைத் தான் கொண்டு (பசலை பாயப்பெற்று) பிறையினது அழகை இழந்தது *[கலி.53:15]*. தலைவன், தலைவியின் நெற்றியை நெடிது நோக்கி உவமை கூற நினைந்து, 'நின் நெற்றி வியப்பையுடையதாய்த் தேய்ந்தது; ஆயினும், அது பிறையன்று', என்றான் *[கலி.55:9]*. 'பிறையையொத்த அழகிய நுதலினையுடையவளே', எனத், தலைவி, தோழியை விளித்தாள் *[கலி.67:19]*. தலைவியின் புதல்வன் தலையில் அணியப்பட்டுக் கிடந்த பொன்னாற் செய்த பிறையினுள் சேர்ந்த முத்து வடத்தோடு, நெற்றியில் தொங்கிய சுட்டி, விளக்கத்துடனே அசைந்தது *[கலி.81:3]*. தலைவனது பிரிவினால், தலைவி, தன் பிறைபோலும் நெற்றியில் பசலை பாயப், பெரிதும் நடுக்கமுற்றாள் *[கலி.99:10]*. தொழுவினுட் புகுந்து, தழுவவந்த பொதுவரை, ஏறுகள் தெரிந்து குத்தியபொழுது, இறைவன்

சூடிய பிறையிடத்துக் கிடந்த செந்நிற மாலைபோல், அவ்வேறுகளின் குருதி தோய்ந்த கொம்புகளில், குடர்கள் சுற்றிப்பிணித்தன *[கலி.103:25]*. தாழ்ந்த சடையோடு பொருந்துவதாகிய பிறையணிந்த நெற்றியிடத்தொரு கண்ணும் சேர, மூன்றுகண்களையுடையவன், இறைவன் *[கலி.104:11]*. நாற்றிசையும் சேர நடுக்கமுறும் ஊழிமுடிவிலே, கூற்றுவன் சிரித்தாற்போல, விளக்கம் அமைந்த செக்கர்வானிடத்துத் தோன்றிய நுதியையுடைய பிறையையே தனக்கு எயிறாகக் கொண்டு, கடிய மாலைப்பொழுது, பிரிவிடையாற்றாத தலைவிக்கு அச்சம் வரும்படி சிரித்துத் தோன்றியது *[கலி.120:7]*. தலைவன், தலைவியை நினையாது பொருள்வயிற் பிரிந்தானாக, அவள் தன் அழகுகெடும்படி, மனங்கலங்குதலால், பிறைபோலும் அவளது நெற்றி, அப்பொழுதே பீர்க்கம்பூவின் அழகைத் தன்னிடத்தே கொண்டது *[கலி.124:8]*. 'பெரும, நீ இவளை அருளி மணந்து கூடிவிடின், நின்னையின்றிக் கைவளை நில்லாமற் கழன்ற இவளுக்குப் பிறைபோலும் அழகிய நெற்றியில் தோன்றிய பசலை, இனி, ஒருகாலமும் வராமல் மறையும்', என்று, தோழி, தலைவனை வரைவுகடாவினாள் *[கலி.125:23]*. தலைவனது பிரிவிடைக் கலங்கிய தலைவி, சிற்றிலிழைத்துப், பின் கணவனைக் கூடுதல் குறித்து, நாடிக் காண்பவளாய்க், கூடற்சுழி இழைக்கத் தொடங்கிக், கோடு வாய் கூடாத இளம்பிறையைக் கண்டாள் *[கலி.142:24]*.

பிறையாய் வளரும் மதியை உணவாக உடையவர், அமரர் *[பரி.3:52]*. பிறைபோலும் நெற்றியராகிய மகளிர், வையைத்துறையில் நீராடினர் *[பரி.தி.2:30]*.

**பின் - 1. பின்னிடம்.** சிறப்பு முறைமையால் பொருளும், இன்பமும் அறத்தின் வழியிலே அடுத்துத் தோன்றும் காட்சிபோலச், சேர பாண்டியருடைய இரு குடைகளும் பின்னே - பின்னிடத்தே - அமையச், சோழன் நலங்கிள்ளியின் வெண்கொற்றக்குடை ஓங்கி விளங்க, அவன், நல்ல புகழ் வேட்கையை விரும்பிப், போர் செய்யும் பாடிவீட்டின்கண் தங்கியிருந்தான் *[புற.31:3]*. 'சீறியாழை வாசித்து, நும் விறலியர் நும் பின் வர, நீவிர் ஆடியும், பாடியும் சென்றால், நுமக்குப் பாரி, தன்னாட்டையும், மலையையும் ஒருங்கே ஈவான்', எனக், கபிலர் பாரியது பறம்பு மலையை முற்றுகையிட்டிருந்த மூவேந்தரை இகழ்ந்து கூறினார் *[புற.109:16]*. பாணன் ஆனினம் மிக்க வழிபலவும் கடந்து, மானினம் மிக்க மலை பின்னேயொழிய, மீனினம் மிக்க துறை பலவற்றை நீந்தி, நாஞ்சில் வள்ளுவனிடம், பரிசில் பெற வந்தனன் *[புற.138:2]*. அதியமான் நெடுமானஞ்சியிடம் சென்ற பெருஞ்சித்திரனார், 'குன்றும், மலையும் பல பின்னேயொழியுமாறு வந்தேன்', என்றார் *[புற.208:1]*. 'பகைவரது தூசிப்படையை முறித்துப் பெயரும் தன் படைக்குப் பின்னே நின்று, ஆனிரையுடன் வருகின்ற தலைவனுக்குப் பக்க மறவராய், நிரைகொண்டு வருவோர், அவனினும் பெரிய இளைப்பையுடையர்', என்று தலைவனொருவன், தன் படையொடும் வைத்தும் பாடப்பெறுவன் *[புற.262:4]*. 'பெரும, மூங்கில் காய்ந்து உலறிய வறட்சிமிக்க நீண்ட இடத்திலே மரல்கள் நீர்வற்றி வாடிய கானம் பின்னேபடுமாறு நடந்து யானைப் பரிசிலுக்காக வந்தேன்', என்று, தடாரிப்பொருநன் கூற்றிலே, சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னியிடம் கூறினார், ஊன்பொதி பசுங்குடையார் *[புற.370:10]*. 'நினது ஈகைத் திறனைக் குறித்து நின் கிணைஞன் கூறக் கேட்டது முதல், நின்னைக் காணும் வேட்கை அடங்காமல் எழுதலால், வானளாவிய குன்றங்கள் பின்னடையுமாறு, யான் அவற்றையெல்லாம் கடந்து வந்தனென்', என்று, ஓய்மான் வில்லியாதனிடம், புறத்திணை நன்னாகனார், கிணைஞன் கூற்றில் கூறினார் *[புற.379:13]*.

'வேந்தரும், வேளிரும் பின்னேவந்து பணியும்படி, வெற்றியடைந்த பெரியோர் மரபில் உள்ளவனே', என்று, இளஞ்சேரலிரும்பொறையைப் பாராட்டி விளிப்பர், பெருங்குன்றூர்கிழார் *[பதி.88:13]*.

சோழன் கரிகாற்பெருவளத்தான் தன்னிடத்து வந்து தங்கியிருந்து விடைவேண்டுகின்ற பொருநர்க்குத் தேரிலே புரவிகள் நான்கினைப் பூட்டி, (ஏழிசைக்கும் வழிபாடு செய்வானாக ஏழடி வருதல் மரபாதலின்) தான் காலாலே ஏழடி பின்னே வந்து அவரை இங்ஙனம் ஏறுவீரென்று ஏற்றிவிடுப்பான் *[பொரு.166]*. தொழுவிலே சிறிய தாம்பினால் கட்டப்பெற்ற பச்சிளங் கன்றுகள் பாலுண்ணாமையால் பசி வருத்தத்திலே சுழலுவதைப் பார்த்துக், குளிரால் நடுங்கும் தன் தோள்களில் கட்டிய கைகளையுடையளாய் ஆயர்குலச் சிறுமி, 'கோலையுடைய கோவலர் பின்னே நின்று செலுத்த 'நும் தாயர் இப்பொழுதே வருவர்', என்றாள் *[முல்.15]*. போரிலே இட்ட அடி பின் வாங்கிப்பெயராத படையோர்க்குப், பேய்மடையன் வேள்வி அயருமாறு, அமர்கடக்கும் தானையையுடையவன், தென்னவன் *[மது.37]*.

'அகன்ற பாலை வழியிலே சென்று அணிகலன்களை ஈட்டிவரும் எண்ணத்தாலே, அவ்வழியைக் கடந்து செல்வதாகக் காட்டி, எம்மைப் பின்னின்று தூண்டும் நெஞ்சமே', எனத், தலைவன், பொருள்வயிற் பிரியக் கருதும் தன்னெஞ்சினை விளித்து மறுத்தான் *[அக.3:13]*. 'அருஞ்சுரத்துக் கள்வர் ஆக்களைத் தொழுவினின்றும் கவர்ந்து கொண்டு அகன்றனராக, ஆக்களுக்குரியோர், அக்கள்வர் பின் சென்று செய்யும் போரிலே, வழிதோறும் ஓடுமாறு போல் யான் ஓடித்தேடியும், என் மகள் மேனியைக் காணப்பெற்றிலேன்', என்று, மகட்போக்கிய செவிலித்தாய், தேடிச் சென்று வருந்தினாள் *[அக.7:15]*. வினைமுற்றித் தலைவியிடத்து மீளும் தலைவன், குன்று பின்னொழியத் தேரூர்ந்து விரைந்து சென்றான் *[அக.9:14]*. 'நெஞ்சே, நீண்ட பெரிய குன்றத்தை எம்மோடே தொடர்ந்து கடந்து வாராமல், பின்னே நின்று

மீண்டுபோதலைக் கருதினையாயின், தடையின்றி, நீ, இப்பொழுதே விரைந்து செல்வாயாக', என்று, பொருள்வயிற் பிரிந்து செல்லும் தலைவன், இடைவழியில், தலைவியை நினைத்த நெஞ்சினைக் கழறினான் *[அக.19:6]*. 'நெஞ்சே, நம் காதலியின் நல்ல நெற்றி பசந்திடவும், முயற்சியால் பொருளீட்டுதற்குக் காட்டு வழியிலே போதல் நன்றென, நீ என் பின்னின்று எண்ணினையாயின், மிகவும் கொடியதொன்றையே எண்ணினையாவாய்', எனத், தலைவன், பொருள் வலித்த நெஞ்சினைமறுத்துச், செலவு தவிர்ந்தான் *[அக.77:3]*. 'மலைச்சாரற்கண் வேங்கைப் பூக்களைச் சூடித், தொண்டகப் பறையின் தாளத்திற்கிசைய, ஆடவர் பெண்டிரோடு கலந்து தெருக்களில் ஆடுகின்ற சிறுகுடிப் பாக்கத்திலே, இயங்கும் முருகனை ஒப்பாயாகி, வலிய நாய் நின் பின்னேவரப், பகலிலே நீ வருவையாகில், ஊரார் கூறும் அலர்மொழிக்கு யாம் அஞ்சுகின்றோம்', என்று, தோழி தலைவனைப் பகற்குறி மறுத்தாள் *[அக.118:5]*. 'நெஞ்சே, நீ யாம் செல்லுதற்குரிய கானத்தே செல்லுதலைத் துணிதலாற்றாயாய்ப், பின்னின்று காதலியிடம் பெயரக் கருதினையாயின், அவளிடம் சென்று, என்னிலையை, அவளுக்குக் கூறுவாயாக', என்று, பொருள்வயிற் பிரியும் தலைவன், இடைச்சுரத்தே, தன்னெஞ்சிற்குரைத்தான் *[அக.181:2]*. குறவன் வேங்கைப் பூச்சூடி, வில்லினைத் தோளிலே இருத்தி, விலங்குகளைத் துரத்திப் பற்றும் இயல்பு தவறாத, வலிய நாய், தன் பின்னேவர, வேட்டைக்குச் சென்றான் *[அக.182:5]*. தலைவன் அருந்தொழில் முடித்த உள்ளத்தொடு வண்டுகள் ஒலிக்கின்ற மலர்களையுடைய கானம் பின்னே போகத், தலைவியிடம் மீண்டு வந்தான் *[அக.184:6]*. 'நெஞ்சே, பிறர்போல் காதலியைப் பிரிந்து பொருள்வயிற் செல்வேமாயின், எம் செலவு நன்றென்னும் நசையுள்ளம் செலுத்தக் கடல்போலும் கானம் பின்னடையும்படி, நீ செல்லுதற்குரியை; யான், அவள் தனித்தொழிய வாரலன்', என்று, தலைவன், பொருள் வலித்த நெஞ்சினை மறுத்துச் செலவழுங்கினான் *[அக.199:13]*. 'காட்டினது நீண்ட வழி பின்படுமாறு, தேரை விரைந்து செலுத்துவாயாக', என்று, வினைமுற்றி மீளும் தலைவன், பாகனிடம் கூறினான் *[அக.254:17]*. வேற்றுநாட்டிற் சென்று தங்கிப், பொருள் தேடுதலை விருப்பமெனக் கொண்டு, சுற்றத்தார் பின்வந்து விடைதரப்போய்ப், பொருளீட்டிய தலைவன், விருப்பமிக்க நெஞ்சத்துடன் மீளலுற்றான் *[அக.351:2]*.

'பொலிவையுடைய குழையை அணிந்தவளே, மானேறு துள்ளித்திரியும் கானம் பிற்படுமாறு சென்று, யான் தொழிலின் நன்மை வாய்க்கப்பெற்ற மீண்டு வருமளவும், என் பிரிவினை, நின்னால் பொறுத்திருத்தல் இயலுமோ', என்று, தலைவன், தலைவியிடம் வினவினான் *[குறு.256:3]*.

'தோழீ, மலைப்பாறைகள் காய்ந்து சுடுகின்ற பாலைவழியிலே, நம் பேதை நெஞ்சம், தமக்குப் பின்னே தொடர்ந்து செல்ல, சென்றோராகிய காதலர், நம் கண்கள் அழுமாறு பிரிவு நீட்டித்தலால், கல்லினும் வலிய நெஞ்சினர் காண்', என்று, தலைவி, தோழியிடம் ஆற்றாதுரைத்தாள் *[ஐங்.334:3]*. 'மடந்தையே, காடு பின்னடைந்தொழியுமாறு, காதலர் வந்தனர்', என்று, தோழி, தலைவியிடம், தலைவனது வரவையுரைத்தாள் *[ஐங்.351:3]*. 'தோழீ, கார்ப்பருவம் ஆக்கமுறுத்திய கானம் பின்னடையுமாறு, தேரைச் செலுத்திக்,காதலர் விரைந்து வருவர்', எனத், தோழி, தலைவியிடம் கூறினாள் *[ஐங்.465:2]*.

பிரிந்துபோய் ஈட்டுகின்ற பொருட்பிணியினால் தலைவன் தொலைநாட்டிற்குப், பின்னோக்காது சென்றான் *[கலி.29:24]*. 'யாம் நின்னை விரும்புவேம்' என்று கூறிக், குறளன் தன் பின்னே செல்லவும், அதற்கு மனம் பொருந்தாத கூனி, அவனிடத்தினின்றும் விலகிப்போய், அசைந்து நின்றாள் *[கலி.94:29]*. பாண்டியரது குடிக்குப்பின் வந்த சிறப்பினையுடையது, ஆயர்குடி *[கலி.105:7]*. ஒருவரது உயிர் தேய்கின்ற நாளில், கூற்றுவன் அவர்பின்னே சென்று சினந்து உயிருண்பான் *[கலி.105:37]*. தலைவன் பிரிவு நீட்டித்தலால், கலக்கமுற்றுப் பேசிய தலைவி, தான் கூறியவற்றைக் கேட்டு வந்த சான்றோரை நோக்கி 'இவள் ஒருநாளிலேயாயினும், தன் கணவனைக் கூடுவாள்', என்று கருதி என்பின்னே வருகின்றீர்'' என்றாள் *[கலி.143:17]*.

வையைப் புனலாடலின்போது வாழைத்தண்டைப் புணையாகக் கொண்டு ஆடியிருந்த ஒருவன், கரையில் நின்ற ஒருத்தியைக் கண்டானாக, அவனெஞ்சழிதலால், புனல் அவன் கைகளையிழுக்கப், புணையும் புன லோட்டத்திலேயோட, அப்புனல் அவனை அவளிடத்தே செலுத்தாமல், தன் போக்கிலே செலுத்த, அவனிலையைக் கண்ட அவளும், ஆயத்துடன் நில்லாமல், அவன்பின் தொடர்ந்து ஓடினாள் *[பரி.11:111]*. வையைப்புனலாடலில் ஒருத்தி நெறிசெல்வான் ஒருவன் பின் தனது நெஞ்சைப் போக்கினாள் *[பரி.12:53]*. வையைப் புனலாட்டிற்கு மதுரையிலிருந்து புறப்பட்ட மகளிரும், மைந்தரும் பத்துவகைத் துவர்கள் முதலிய பலவற்றையும் ஏந்திக்கொண்டு பின் பின் தொடர்ந்து சென்றார் *[பரி.22:20(2)]*.

2. முதுகு. போர்வைக்கோப்பெருநற்கிள்ளி ஆமூரிடத்தே மல்லனது மிக்க வலிமையைக் கெடுத்து, ஒருகாலை மண்டியிட்டு, அவனது மார்பிலே மடித்து வைத்து, மற்றொரு காலை அவன் செய்யும் எதிர்ச்செய்கையைத் தடுத்தவாறு அவனது பின்னே - முதுகிலே - வளைத்துத், தலையும், காலுமாகிய இரண்டிடமும் முறிய மோதி, அக்களத்தே அம்மல்லனைக் கொன்றான் *[புற.80:4]*.

இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன், நயனில்லாத வன்சொற்களையுடைய யவனரைப்போரிலே அகப்படுத்திப் பிணித்து, அவர்தம் தலையிலே நெய்யையூற்றிக், கைகளைப் பின்னே கட்டினான் *[பதிப.2:9]*.

இருள் நீங்க, அழகிய நிலவொளி பரப்பித், திகழ்ந்த பின், பகற்காலத்தே திங்கள் ஒளிகெட்டு ஒழியும் *[கலி.143:1]*.

வையையாற்றின்கண் உடைந்த மடையை அடைத்தவிடத்தும், பின்னும், ஊற்றுநீரொழுகும் *[பரி.6:83]*. வையைப்புனல் விழாவிலே, காதலரொடு பல்வகை விளையாட்டுக்களை அயர்ந்திருக்கவும், பின்னும், மகளிர் கண்கள் அப்புனல் மேற்சென்றன *[பரி.10:99]*. கார்வானம் அதிர்குரல் நீங்கப், பனி மிகுதலால், குளிரால் நடுங்குதலையுடைய முன்பனிப் பருவத்து, ஞாயிறு சுடாத மாரிக்குப் பின், வருவது, குளமெனப்பட்ட மார்கழித்திங்கள் *[பரி.11:74]*. வையைக் கரையில் ஒரு தும்பி, தான் விரும்பிய பூவை நெரித்த ஒருத்தியை, முன், சினத்தோடே அடித்துப் பின்னும், அடிக்க வந்தது *[பரி.11:131]*. திருப்பரங்குன்றத்தில் ஒருத்தி, தன் முலையிடைச் சந்தனம் பூசி, உதிர்த்து, மணம் நிலைபெற்ற வழிக் காதலன் தழுவுவானெனக் கருதி, அதனைப் பின்னும், பொருந்துமாறு விரும்பிப் பூசினாள் *[பரி.21:26]*.

**4. பிற்பகுதி.** முதற்பிறை பிறந்து ஏந்தியிருந்தாற்போன்ற, பின் - பிற்பகுதி - ஏந்தியிருக்கின்ற, கவைத்த கடையினையிடையது, பேரியாழ் *[பெரு.11]*.

**5. பின்னல்.** பாண்டியன் நெடுஞ்செழியன், பாசறையிற் பிரிந்த காலத்து, அவன் பெருந்தேவி, முன்னர் முத்தாற் செய்யப்பட்ட கச்சுச் சுமந்த பருத்த முலையினையுடைய மார்பிடத்தே, பின் - பின்னல் (பின்னுதல்) - அமைந்த நெடிய தாலி நாணொன்றுமே தொங்கத், தனிமையோடே படுக்கையிற் கிடந்தாள் *[நெடு.137]*. தினைப்புனங்காத்து, அருவியாடிச், சுனைகுடைந்த தலைவியும் தோழியும் பொன்னிலே அழுத்தப்பட்ட நீலமணிபோல், தம் சிறிய முதுகிடத்தே தாழ்ந்துகிடந்த பின் அமைந்த கருங்கூந்தலை, நீர் பிழிந்து, ஈரம் புலர்த்தினர் *[குறி.60]*.

தலைவனது பிரிவுக்காலத்தே, தலைவி பின்னொடுமுடித்த, நீராட்டப்பெறாத முச்சியில் நெய் தடவப்பெற்றுத், தாழும் குழலினையும் சேரக்கட்டியிருந்தாள் *[அக.73:1]*.

பின்னமைந்த குளிர்ந்த கூந்தலையுடையவள், தலைவி *[நற்.227:4]*.

பின்னமைந்த கருங்கூந்தலையுடையவள், குறமகள் *[ஐங்.285:1]*. நன்மனையிலே வதுவை நன்மணம் அயருமாறு தலைவன் களவுக்காலத்திலேயே தலைவன் பின்னமைந்த கருங்கூந்தலில் மலரணிந்தான் *[ஐங்.294:5]*.

'நீ பிரியப்பட்டாளொடு கொண்ட உறவு, பின் அமைய, நீ அருளல் வேண்டும்', என்று, தோழி, தலைவனை வரைவு கடாவினாள் *[கலி.48:21]*. 'நின அழகிய முகம், மதியையொப்ப, மணிகள் விளங்கும், நின் பின்னின் மயிர், அம்மதியை மிகப் பொருந்திய கரிய மேகத்தையொப்ப, அப்பின்னின் மயிர்க்கண்ணே கிடந்து அலர்ந்த பூக்கள் கரும்பாம்பிடத்தே கிடந்து அதன் கருநிறத்தோடே மாறுபடுகின்ற ஆரல் (கார்த்திகை) மீனின் அழகையொப்ப, நின்னைக் கண்டாரை அருந்துயர் செய்து போகின்ற பரந்து தழைத்த கூந்தலை யுடையாய்', என்று, தலைவன், தலைவியை விளித்தான் *[கலி.64:2(2)]*. சிலம்பணிந்த சின்மொழியுடையளாகிய தலைவிக்குக் கூந்தலைப் பின்னி முடிக்கின்ற பின்னொடு கூடிய இளமைப்பருவத்தே தலைவனது உறவு வந்து பொருந்தியது *[கலி.125:17]*.

**6. பின்னிகழ்வு,** 'தோழி, இன்று யான் அறனில்லாதவனாகிய காதலனைக் கண்டபொழுதில் அவனைச் சினப்பேனாகவும், தடுத்து நிறுத்துவேனாகவும், கருதிச் சென்றேனாயினும், பின் - பின்னிகழ்வு - கருதி, இரங்கிப் பெயர்ந்தேன்', எனத், தலைவி, பரத்தமைத் தலைவனை மறுக்காமல் ஏற்றது குறித்துத், தோழியிடம் கூறினாள் *[ஐங்.118:4]*.

**பின்பனி** - பின்னிரவிற் பெய்யும் பனி. 'அரிவையே, இரலைமானேறு தன் பிணையோடே நிழலிடத்துத் தங்கி, மலர்கள் நெருங்கிய அகன்ற பிணக்கத்தையுடைய தூற்றினிடத்தே துயின்று, பொழுதுபோனமையால், செழுவிய பயற்றம்பயிரைக் கறித்துத் தின்னும் மாலைக்காலத்தையும், பின்பனியை - பின்னிரவிற் பெய்யும் பனியை - உடைய கடையாமத்தையும், குளிர்ந்த நடுக்கத்தையுமுடைய அச்சிரக் காலத்தில், நின் தனிமைத் துயர் தீரும் வண்ணம், காதலர் தேர் வந்தது', எனத், தோழி தலைவியைப், பிரிவிடை வற்புறுத்தினாள் *[குறு.338:5]*.

குரவ மரங்கள் முன்பனிப் பருவத்துக் கொழுந்தை முற்படவிட்டுப், பின்பனிப் பருவம், இனி வருமெனக், காட்டுவனபோல் அரும்பின *[நற்.224:2]*.

**பின்றை - 1.** பிற்பாடு. 'நாட்காலத்தே மகிழ்ந்திருக்கும் நினது ஓலக்கத்திலே நின்னைப் பாண் சுற்றம் சூழ்ந்து ஒழிந்த பின்றை - பிற்பாடு - நினது மார்பினை, நின் உரிமை மகளிரின் தோள்கள் சூழ்வனவாக', என்று, சோழன் நலங்கிள்ளியை வாழ்த்துவர், உறையூர் முதுகண்ணன் சாத்தனார் *[புற.29:6]*. 'பாணனே, நீ கிள்ளி வளவனிடத்தே செல்குவையாயின், பகற்பொழுதின்கண் அவன் பரிசிலர்க்குத் தேர் வழங்கியிருக்கும் இருப்பினைக் கண்ணாரப் பார்த்து அவனைக் கண்ட பின்றை, நீ பொற்றாமரைப் பூவைச் சூடாயாதலில்லை; அதனால், செல்க', என்று, சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனிடம், பாணனை ஆற்றுப்படுத்துவர், ஆலத்தூர்கிழார் *[புற.69:19]*. பாரியும், ஓரியும், மலையனும், எழினி அதியமானும், பேகனும், ஆய் அண்டிரனும், நள்ளியும் எனச் சொல்லப்பட்ட எழுவரும் மாய்ந்த பின்றை

இரந்தோரது துன்பத்தைத் தீர்க்கக் கடவேன் யானென்று நீயிருத்தலால் யான் விரைந்து நின்னிடத்தே பரிசில் பெற நினைந்து வந்தேன்', என்று குமணனிடம் கூறி வேண்டுவர், பெருஞ்சித்திரனார் *[புற.158:17]*. தன் ஆண்மைப்பாடு யாவர்க்கும் வெளிப்படுமாறு, பகைவராய ஆடவரை எதிர்நின்று கொன்று வென்ற, வலிய வேலையுடைய சாத்தன் இறந்த பின்றை, அவனது ஒல்லையூர் நாட்டின்கண் முல்லையாய நீயும் பூக்கக் கடவையோ', என்று ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தனது இறப்புக் குறித்து, வருந்திப் பாடுவர், குடவாயிற் கீரத்தனார் *[புற.242:5]*. வெட்சி மறவர் புதிய அகலின்கண் கொண்ட, புலிக்கண் போலும் நிறத்தையுடைய வெம்மையமைந்த கள்ளை, ஒருமுறைக் கிருமுறை, அமர்ந்துண்ட பின்றைத், துடியன் வந்து துடிகொட்டிப் போர்ப்புறப்பாட்டை அறிவித்தான் *[புற.269:5]*. சுடுகாட்டின்கண் பாடையைக் கொண்டு நிறுத்திப் பின்றைப் பரப்பிய தருப்பைப் புல்லின் மேல், கள்ளோடு இட்ட சிலவாகிய சோற்றுணவைப், புலையன் படைப்பான் *[புற.360:17]*. ஞாயிற்றின் கதிர் மழுங்கிய, அந்திப் பொழுது, சிறிதே பிறந்த பின்றைப், பொருநன் தடாரிப் பறையை இசைத்து, ஒய்மான் நல்லியாதனது மனையின்கண் நின்றான் *[புற.376:3]*. 'இந்நிலவுலகமே கூலமின்றிக் கெடுமாறு நின்றகோடைக்காலம், எதிர்வருகின்ற மழை முகிலின் ஓசைக்குத் தோற்றோடிய பின்றை, நீ, இது கொண்டு, என்னை நினைவாயாக', எனக், கரும்பனூர்கிழான், கிணைஞனுக்குப் பரிசளித்தான் *[புற.381:18]*.

இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனிடத்துச் செல்லும் இரவலர் பசியாற உண்டு, தமது கந்தையாடையைக் களைந்த பின்றை, நூலாக்கலிங்கமாகிய பட்டாடைகளை இடையிலே உடுத்திக்கொள்வர் *[பதி.12:20]*.

பாடினி பாடிய பாணியாகிய தாளத்திற்குப் பொருந்தத், தடாரிப் பறையையிசைத்துக், காடுறைகடவுளுக்கு மன மகிழ்ச்சியாகச் செய்யும் கடன்களைச் செய்த பின்றை, அக்காட்டின்கண்ணே பொருநர் அமர்ந்திருந்தனர் *[பொரு.52]*. கரிகாற்பெருவளத்தான் தன்னைக் காணவந்த பொருநரை அருகே வருமாறு அழைத்து, அக்காட்சியின்கண்ணே அவர்தாம் செய்தற்குரிய முறைமைகளைச் செய்து முடித்தபின்றை, அவரை உண்பித்தான் *[பொரு.102]*. 'மறக்குடிப் பிறந்த மறவர் பகற்பொழுதிலே மகிழ்ச்சியுடன் ஆடும் பாலைநிலக் குடியிருப்பினைக் கடந்த பின்றை, நீவிர் கோவலர் குடியிருப்பின்கண் சென்று தங்குவிராயின், தினைச் சோற்றைப், பாலுடனே பெறுகுவிர், வன்புலமாகிய முல்லை நிலத்தைக் கடந்தபின்றை, அசையாத குடியிருப்பினையுடைய பேரூரின்கண்ணே தங்குவிராயின், வினை செய்வார் கொண்டுவந்த வெண்ணெற் சோற்றைக், கோழிப் பெடையினாற் சமைத்த பொரியலோடே பெறுகுவிர்'. என்று, பெரும்பாணர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் *[பெரு.147,206]*. மருதநிலத்து உழவர், விளைந்த நெல்லின் தாள்களை அறுத்துக் கொணர்ந்து களத்தேற்றிய போரினை அழித்துப் பகடுகள் கடாவிட்டுப் போன பின்றை, வைக்கோலையும், கூளத்தையும் அதனிடத்தினின்றும் நீக்கித் தூற்றுவர் *[பெரு.238]*. 'தொண்டைமானிளந்திரையனைக் காணச் செல்லுமிடையேயுள்ள, வள்ளிக் கூத்தினை ஆடுதற்குக் காரணமான, வளங்கள் பலவற்றையும், நாடாதே தருகின்ற, நாடுகள் பலவற்றையும் கடந்த பின்றை, நீவிர், பாம்பணைப் பள்ளியில் துயில் கொண்டோனுடைய, திருவெஃகாவிடத்து, இளமரக்காவிலே தங்கி, நும் மகளிரொடே பகலில் விளையாடிச் செல்மின்', என்று, பெரும்பாணர், ஆற்றுப்படுத்தப் பெறுவர் *[பெரு.371]*. மதுரை நகர வீதிகளில் பூ முதலியவற்றை விற்போர், தாம் வழங்கும் தெருவின்கண், நால்வகைப் படைகளும் வழங்குதலால் உயிர்க்கு அஞ்சி, ஒதுங்கியிருந்து, அவை நீங்கிய பின்றை, அப்பண்டங்களை விற்றுத் திரிந்து வெயிற்பொழுதில் மாடங்களின் நிழலிலே தங்கியிருந்தனர் *[மது.404]*. மதுரை நகரச் சேரிகள் தோறும் வேறுவேறு ஓசைகளையுடைய முதல்யாமம் சென்ற பின்றை வளை ஆரவாரமொழிந்து அடங்கவும், பண்டகக் கடைகளையடைத்துவிட்டு, மகளிர் துயிலவும், அப்ப வணிகர் அவற்றோடேயிருந்து தூங்கிச் சோரவும், கூத்தாடுவோர் துயிலவும், ஏனையோர் துயிலவும், இவ்வாறே இரவில் நடுயாமம் கழியும் *[மது.620]*. விறலியர் நன்னனது முற்றத்தை நெருங்கி, மரபு முறை வழுவாமல் கடவுளை வாழ்த்திய பின்றைப், புதிய இசைப்பாடல்களைப் பாடி, அவனது புகழை வெற்றியோடே ஏத்துவர் *[மது.538]*.

உழவர், விடியற்காலத்தே வைக்கோற்போரைப் பிரித்துக் கடாவிட்டு, நெல்லை தூற்றித், தொழிற் செருக்கினால் வந்த மயக்கந்தீர, மாங்காயினின்றும் வடித்த புளிப்பதன் அமைந்த சாற்றைக் குடித்துக், கொள்ளும், பயறும், பாலுடன் கலந்தாக்கிய அவிழ்க்கஞ்சியை வாங்கியுண்ட கை, போதுமெனத் தடுத்த பின்றை, நெற்குவியலைக் கூடாக்கிச் சுற்றி, மருத மரநிழலில் தங்குவர் *[அக.37:14]*. 'துறைவன் நம்மைக் களவினிற் கூடிய தொடர்பு குறித்து, முன்னே அலர்வாய்ப் பெண்டிர் அம்பல் தூற்றுதலால், அதனைப் பலரும் அறிந்தனர்; இப்போது, அவனொடு மணங்கூடிய பின்றை, இவ்வூர் ஒலியவிந்தது', எனத், தோழி, தலைவிக்குரைத்தாள் *[அக.70:8]*. வதுவையாகிய நன்மணம் முடிந்த பின்றைத், தலைவியைப் பேரிற்கிழத்தியாமாறு வாழ்த்தித், தமர் தரத், தலைவன் அவளையேற்று, ஓர் அறையிலே உடன் கூடினான் *[அக.86:17]*. வெண்ணெல்லை யறுப்போர், அறுத்துப் பெயர்ந்த பின்றைக், கொண்டுபோய்ப் போகட்ட நெற்கட்டுக்களின் புறத்தே, மாமரத்தின் புதுப்பூக்கள் உதிர்ந்து பரவும் *[அக.236:4]*. முகில் விண்ணிடை அதிர்ந்து முழங்கி மழையைப் பெய்து முடித்த பின்றைப், புகைபோல, நுண்ணிய பனித்துளிகள் பூக்களினுள்ளே நிறையும்படி அற்சிரக்காலம் வந்தது *[அக.294:2]*.

'நாடனே, நீ இரவுக்குறிக்கண் வருவையாகில், வந்து எம்மைக் கண்டு பெயருங்கால், நின்னைக் குறித்து யாம் இவ்விடத்தே உறுகின்ற மயக்கமாகிய துயரம் நீங்குமாறு, நீ நின் சிறுகுடியை எய்திய பின்றை, ஊதுகொம்பினைச் சிறிதே ஊதல் வேண்டும்', என, வேண்டுகின்ற முறையில், தோழி, தலைவனை, இரவுக்குறி விலக்கி வரைவு கடாவினாள் *[அக.318:12]*. அதியனென்பான் துஞ்சியபின்றை, அவனுடையபெரிய கிணை ஒலியடங்கியது *[அக.325:8]*. சிறந்த தளிர்களை ஈன்று, மரக்கொம்புகள் தழைக்குமாறு மழைபெய்து நீங்கிய பின்றைக், குன்றுகளிடத்தவாகிய அருவிகளின் நீர்த்துளியால், நுணாமரம் மலரும் *[அக.345:14]*. 'நின் ஏவலர் முன்னே உண்ண, அவருண்ட பின்றை, நீயும், நின் மனையோள் விருந்தயரப், பால் பெய்த உணவுண்ணுதற்கு ஒருநாள் எம் சிறுநல்லூர் வந்து செல்வாயாக', என்று தலைவனை அழைக்குமுறையில், தோழி வரைவு கடாயினாள் *[அக.394:7]*.

'நமக்குப் பற்றுக்கோடாகிய தலைவன் பன்னாளும் வந்து பணிந்த மொழிகளைக் கூறி, என்னெஞ்சத்தை நெகிழ்த்த பின்றை, மலையிடத்தே முதிர்ந்து வீழ்ந்த தேனிறால் போல், போயினன்; இப்போது எங்குள்ளானோ? என்னெஞ்சு கலங்குகின்றது', என்று தோழி, தலைவியிடம், தலைவனைக் குறித்துக் குறை நயப்பக் கூறினாள் *[குறு.176:3]*.

'வளைந்த தினைக் கதிர்களைக் கொய்து கொண்டு போகும் பைங்கிளியே, அஞ்சாதே. நீ இக்கதிர்களைக் கொய்தல் காரணமாக யாரேனும் நின்னை அச்சுறுத்துவரோ, என்னும் ஐயத்தைப் போக்கி, வேண்டுமளவு உணவைக் கொண்டு, நின் குறையெல்லாம் முடித்த பின்றை, என் குறையைக் கேட்டு முடித்தல் வேண்டும்', எனத், தலைவி, காமம் மிக்க கழிபடர் கிளவியாகக், கிளியைத், தலைவனிடம் தூதுபோக வேண்டுவாள் *[நற்.102:3]*. 'இளமையினும் சிறந்த வளமை இல்லை; இளமை கழிந்த பின்றை, வளமை, காமவின்பத்தைத் தருதலும் இல்லை', என்று தலைவன் பொருள் வலித்த நெஞ்சினை மறுத்துச் செலவு தவிர்ந்தான் *[நற்.126:9]*. தண்ணென இயங்குகின்ற, பெய்து நீங்கிய முகிலின் பின்றை, வாடை வரும் *[நற்.229:10]*.

'நின்னாட்டுக்குச் சென்ற பின்றை, நீ இவளது தோள் மெலியுமாறு, பிரிவு நீட்டித்து, இங்கே வாராயாயின், யாம் உயிர் வாழேம்', எனத், தோழி, தலைவன் வரைவிடை வைத்துப் பிரியும்போது கூறினாள் *[ஐங்.239:3]*.

**2. பின்னிடம்.** கழனியில் வெண்ணெல் அறுப்போரின் பின்றை - பின்னிடத்தே - தண்ணுமை முழங்கும் *[அக.40:13]*. கோலைக் கையிலே உடையராகிய கோவலர் கொன்றைக் கனியாலாகிய குழலினை யிசைப்பவராய்ப், பின்றை, கறவையினம் கன்றுகளை நினைந்து கனைக்கின்ற குரலையுடையனவாய் மாலைக் காலத்தே மனைதோறும் மீளும் *[அக.54:11]*. நீர் பருகச் செல்லும் கூட்டமாகிய ஆனிரைக்குப் பின்றை, ஆயர்தம் குழலிசை மெல்ல ஒலிக்கும் *[அக.225:7]*. கூத்தர் விழாக் கொண்டாடும் மூதூரில் ஆடுகின்ற விறலியின் பின்றை, முழவன் இசைத்து வருவான் *[அக.352:5]*.

அகுதையென்பான் பின்றை, வெண்முனையுடைய, சிறுகோலேந்திய, அகவன் மகளிர், யானைப் பரிசில் கருதிப் பாடுவர் *[குறு.298:5]*.

**3. முதுகு.** கூத்தர் தம் பின்றை - முதுகில் - முழவினைக் கட்டியிருப்பர் *[அக.155:13]*.

**பின்னகம்** - பின்னல். 'காதலியாகிய இளையோளின், மெல்லிய தோளைத் தழுவுதற்கு எம்மினும் விரும்பிச் சென்ற எம் நெஞ்சு, மிக விரைந்து போய், அவளையெய்திக் கைகவித்துச் சென்று குறுகிக், கண்புதைத்து நின்று, பிடியானையின் கையையொத்த அவளது பின்னகத்தைத் - பின்னலைத் - தீண்டி, அவளைத் தழுவியதோ', என்று, வினைமுற்றி மீளும் தலைவன், தேர்ப்பாகன் கேட்பக் கூறினான் *[அக.9:22]*.

**பின்னது** - பிற்பட்டது. 'பகைப்புலத்தின்கண் தங்கிவிட்டுக், கீழ்கடல் பின்னதாக - பிற்பட்டதாக - மேற்கடலின் அலைகள் நின் குதிரைக்குளம்பை அலைப்ப, நீ வலமாக முறையே வருதலுமுண்டாமென்று, சுழன்று, நெஞ்சு நடுங்கும் அவலம் பாய, வடபுலத்தரசுகள் துஞ்சாக் கண்களையுடையவாயின', என்று, சோழன் நலங்கிள்ளியைப், பாடுவர் கோவூர் கிழார் *[புற.31:13]*.

**பின்னர்** - 1. பிற்பாடு. பகைவராற் கிட்டுதற்கரிய வலிமையினையுடைய பழைமை முதிர்ந்த கடவுளின் (அகத்தியனின்) பின்னர் - பிற்பாடு - (சான்றோனாகத்) தோன்றியவன், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் *[மது.41]*. தம்மேல் வந்த மதயானைக்கஞ்சிய தலைவியும், தோழியும் உய்விடமறியாது விரைந்து நாணத்தை மறந்து தம்மருகே நின்ற தலைவனைப் பொருந்தி நடுங்கக் கண்ட அவன், அந்த யானையின் முகத்தே அம்பெய்தலால், குருதி வழிய, அங்கே நில்லாமல் அஃது அயர்ந்து புறங்கொடுத்தோடிய பின்னர், அவ்விடம், நெடுவேளுக்கு மகளிர் வெறியாடும் களம்போல் தோன்ற, அவ்விருவரும் தலைவனைத் தழுவிய கைபிணி விடாது நின்றனர் *[குறி.174]*.

**2. பின்னிடம்.** பாண்டியன் நெடுஞ்செழியன் தான் தங்கியிருந்த பாசறையிலே விழுப்புண்பட்டுக்கிடந்த மறவரையெல்லாம் முன்செல்லும் படைத்தலைவன் முறைமுறையே காட்டக் கண்டு செல்லுகையில், பின்னர் - பின்னிடத்தே - யானைகளும் குதிரைகளும் சேற்றையுடைய தெருவின்கண் துளிகளை விதிர்த்தன *[நெடு.177]*.

இயவர் குறுகிய துறையின்கண், தட்டை, தண்ணுமை ஆகிய இசைக்கருவிகளை இசைத்துச் செல்ல, அவற்றின் பின்னர், இனிய ஆம்பற் குழலின் இசைபோல், தும்பி முரலும் [ஐங்.215:3].

'நீர் செல்லும்காடு, யான் அணைதற்கரிய வெம்மை யுடையதெனக் கூறுகின்றவரே, அக்காட்டிலே, ஏற்றின் பின்னர்ப், பிரியாமல் திரிகின்ற பிணைமானையும் காணீரோ?' எனத், தலைவி, தலைவனை வினவித், தன்னையும் உடன்கொண்டு போகுமாறு வேண்டினாள் [கலி.20:22].

**பின்னல்** - பின்னப்பட்டது. பனையின் பசிய குரும்பையைக், கொடியாற் கட்டிய பின்னலை - பின்னப்பட்டதனை - இழுத்து விளையாடிக், குறும்பிள்ளைகள் இளைத்தனர் [கலி.83:9].

**பின்னள்** - பின் தொடர்வோள். 'நெடிய மலையின்கண் ஏறுதற்கரிய பிளப்பின் சிறு வழியை ஏறுதலால், வருத்த முற்று, உடல் வளைவைப் பொருந்திய, மெல்லிய நடையையும், வளையணிந்த கைகளையும் உடைய விறலி என் பின்னளாக - பின் தொடர்வோளாக - யான் வரிப்பொருண்மையோடு பயிலும் பாட்டுப் பண்தோறும் மாறியொலிப்பப், படுமலைப் பாலை நிலைபெற்ற சீறியாழை ஒரு மருங்கிலே அணைத்துக் கொண்டு நினது நல்ல புகழை நினைந்து வந்தேன்', என்று, பாணன் கூற்றிலே, ஆய் அண்டிரனைப் பாடுவர், உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் [புற.135:4].

**பின்னிலை** - 1. பின்னிற்றல், தாழ்த்தல். 'பாகனே, முற்படச் செல்லும் நின் தேராகிய ஊர்தியைப் பின்னிலை - பின்னிற்றல் - செய்யாது, இச்சுரத்தைக் கடக்குமாறு விரைந்து செலுத்துவாயாக', என்று, வினைமுற்றி மீளும் தலைவன், தேர்ப்பாகனுக்குக் கூறினான் [அக.44:5].

2. வழிபடல். 'காதலியைப் பணிந்து பின்னிலையை - வழிபடலை — விடாத அறியாமை மிக்க நெஞ்சே', எனத், தலைவன் தனது உணர்ப்புவயின் இசைந்து வாராத் தலைவியது ஊடற்கண், தன்னெஞ்சை விளித்துப் பேசினான் [அக.126:22]. 'தோழீ, தனது பண்புடைய யாக்கையின் மெலிவை நன்கறிந்தும், என்பால், பின்னிலை முனியானாய் என்னை நின்பால் தூது செல்லுமாறு வேண்டுகின்ற தலைவன் நெஞ்சழியப் பெயர்ந்து போதல், மிகவும் துன்பமேயாம்', என்று தோழி, தலைவனது குறையை நயக்குமாறு, தலைவிக்குரைத்தாள் [அக.392:5].

'நெஞ்சே, தன் தந்தையது நெடுந்தேர் இயங்கும் வெண்மணல் முற்றத்தே தோழியர் குழாம் உவக்குமாறு பந்தொடு செல்வோளாகிய, நம்பால் பரிவில்லாத, காதலி, மீண்டும் நம்மை அருளினும், அருளாளாயினும், நீ பெரிதும் இரங்கி அவளிடத்துப் பின்னிலையை முனியாதே. காரணம் யானுற்ற காமநோயொடு கூடிய அருந்துயர் அவலத்தைத் தீர்க்கும் மருந்து அவளேயன்றிச், சிறிதளவும் பிறிதில்லை', எனத், தலைமகன் குறைமறுக்கப்பட்ட நிலையில், தன்னெஞ்சினை நெருங்கிக் கூறினான் [நற்.140:9]. 'விரைந்த செலவையுடைய தேரிலேறிச் சென்றும், பின்னர்க் காலால் நடந்து சென்றும், இத்தோழிக்கு ஏவல் செய்தொழுகுபவனாய்க், கழியருகிலுள்ள அடும்பின் மலரைக் கொய்தும், தாழம்பூவைப் பறிக்குமாறு இவளைத் தூக்கி நின்றும், நெய்தல் மலரைப் பறித்தும், கொடுத்துப் பின்னிலை முனியாத நம்மைக் குறித்துக் காதலியாகிய பரதவர் மகள் எவ்வெண்ணம் கருதுவாள்', என்று, தோழியை இரந்து பின்னிற்கும், தலைவன், அவள் கேட்குமாறு, தன்னுள்ளே கூறினான் [நற்.349:9].

**பின்னு** - பின்னல். ஓய்மானாட்டு நல்லியக்கோடனது ஆமூர் உழவரின் தங்கை, பிடியானையின் கை போன்ற பின்னு - பின்னல் - தாழ்ந்த முதுகையுடையவள் [சிறு.191].

'மயிர்ச்சாந்து பூசிய வளைந்த கொத்தாகிய கூந்தலை வாரி வகைப்படுத்தி யான் மலர்களைச் சூட்டிவிட, அதற்குடன் பட்டுத், தகரம் பூசிக்கொள்ளாதவளாய்ப், புறப்பட்டுச் சென்ற என் மகளுக்குத், தன்னையொத்ததகைமையும், விருப்பமும் உடைய தன் காதலன், மணங்கமழும் பலவகை மலர்களைச் சூட்டி, அணி செய்தற்குப், பின்னுச் செய்ய, அப்பின்னல்கள் அவளது சிறுபுறமாகிய முதுகு மறையுமாறு தாழ்ந்தனவோ', என்று, மகட்போக்கிய செவிலி இரங்கிக் கூறினாள் [அக.117:13]. பின்னுச் செய்யுமாறு நெறித்த கூந்தலையும், பொன்போல் மார்பிலே தோன்றிய தேமலையும், கச்சறக், கண்ணோடு உருத்தெழுந்த முலையையும் நோக்கி, 'நீ பெரிதும் அழகுடையளாயினை', என்று, பலமுறையும் கூறித், தலைவியை, அன்னை, அரிய காவலில் வைத்தனள் [அக.150:1]. 'நடு இரவிலே பின்னு நெகிழ்ந்தமையால், நெறியினின்றும் கிளைத்த கூந்தலையுடையளாய், மலையினின்று இறங்கும் மயில் போல், தளர்ந்தொதுங்கி, இவள் பரணினின்றும் இறங்கி வரக் கண்டேன்', என்று, தலைவியைக் குறித்துச், செவிலி ஐயமுற்றுத், தோழியை வினவினாள் [அக.158:4]. 'தோழீ, யான் தோழியரோடே மணல் மேட்டிலேறி வண்டலயர்ந்து விளையாடியிருக்கையில், ஒருவன் தேரினைச் செலுத்தி வந்து, குவளைப் பூங்கண்ணியை, எனது பின்னுக்கண்ணே, முதுகில் தாழுமாறு, வீணே சூட்டி, இளமுலையை நோக்கி, நீள நினைந்து, பின்னர் நில்லாமற் பெயர்ந்தனன்', எனத், தோழி, தலைவனது குறையை நயக்குமாறு, தலைவியிடம் கூறினாள் [அக.180:7]. 'பாகனே, நாம் பிரிந்திருந்தமையால் தனிமையுற்று மாலைப்பொழுதிலே மிக்க துன்பத்தால் வருந்திய காதலியின் நெளிந்த கூந்தலிடத்தே ஒப்பனையில்லாது பிணைந்த பின்னுப், பிணிவிட்டு ஒப்பிக்கப்படுமாறு, நாம் செல்லுதற்குத் தேரினை மிக விரைந்து செலுத்துவாயாக', என்று, வினைமுற்றி மீளும் தலைவன், தேர்ப்பாகனிடம் கூறினான் [அக.234:18].

'பின்னுச் செய்த கூந்தலையுடைய மகளிருள், இளையரும், மடப்பமுடையோருமாகிய பிறரும் உள்ளனர்; அவரெல்லாம் அலையாத் தாயரொடு நல்வினையுடையர்', எனத், தலைவி, தன்னை ஐயுற்றலைக்கும் அன்னையைக் குறித்துக் கூறுகையில், இரங்கி மொழிந்தாள் *[குறு.246:6]*. 'இரவிலே பஞ்சினாலாகிய திரியையுடைய செவ்விய விளக்கெரியும் வீட்டின்கண், நமது பின்னு வீழ்கின்ற முதுகைத் தழுவி, அன்னை அணைக்க, நாம் இமை பொருந்தாக் கண்ணோடு துயிலுதல் இன்னாமையுடையது', என்று அன்னையது காவல் மிகுதி கூறித், தோழி, தலைவனை, இரவுக்குறி மறுத்தாள் *[குறு.353:6]*.

'என் காமநோயறியாது அன்னை வெறியெடுக்கக் கருதியவளவில், வேலன் வந்தமையால், எனது பின்னுச் செய்த கொண்டைக்கண் இனி மலரணிந்து காத்தலும் இயலாது', எனத், தலைவி, தலைவன் சிறைப்புறமாகக் கூறினாள் *[நற்.5:7]*.

'இளமை நீங்குதலால் பின்னுச் செய்து இருண்ட நின் ஐம்பாலைக் கண்டு, என் அறிவு முதலாயின என்னை விட்டுப் போகும்படி, நடந்துபோகின்றவளே, யான் கூறுவதனைக் கேள்', என்று, தலைவன், தலைவியை விளித்துப் பேசினான் *[கலி.59:8]*.

**பின்னை** - பிற்பாடு. நெல்லறுக்கும் தொழுவர், தம் கூரிய அரிவாள் வாய் மழுங்குமாயின், பின்னை — பிற்பாடு - அது கருக்குடன் அரியுமாறு, சேற்றிலே உறையும் யாமையைக் கல்லென நினைந்து, அதன் முதுகோட்டிலே தீட்டும், நெல்வயல்கள் நெருங்கிய, மாவிலங்கைக்குத் தலைவன், வில்லியாதன் *[புற.379:4]*.

**பீடர்** - பெருமையுடையர் (வயவர்). அரசனுக்குச் சோறு வேறு என்னாத, பொதுவாகிய, ஊனும், துவையும் கூடிய உணவினையுண்ட, புறங்கொடுத்து ஓடாத, பீடர் - பெருமை யுடையர் (வயவர்) — உள்ள, பகைவரது அம்பின் விரைவைத்தடுத்த, கிடுகினையொத்த, பண்பினையுடையது தானை *[பதி.45:14]*.

**பீடிலார்** - பெருமையிலார். 'மனம் பொருந்திய நட்பால் கூறிய மறைப்பொருளை, அவன் நீங்கியக்கால், அணி செய்யக் கூடினாற் போன்று ஒளி செய்து, ஒருநாள் நீர் அளியாக்கால் நும் குணத்தைப் பிறர்க்கு அறிவித்துப் பசந்து காட்டும் நுதல் என்னும் ஓர் பகையுண்டன்றோ', என்று தலைவனிடம் தோழி கூறினாள் *[கலி.25:24]*.

**பீடு** - பெருமை சிறப்பு. 'நெடுங்குழியிலகப்பட்ட பீடு - பெருமை - உடைய கொல் களிறு அக்குழியைத் தூர்த்துப், பெயர்ந்து, தன்னினத்தோடு சேர்ந்தது *[புற.17:16]*. 'பெரும! நின் பீடு பொருந்திய வலிய தாளைப் பாடேனாயின் ஞாயிறு தோன்றாதிருக்குமாக, சான்றோர் செய்த நன்மையுண்டாயின், மழைத்துளியினும் பலகாலம் வாழ்வாயாக', எனக் கிள்ளிவளவனை ஆலத்தூர்கிழார் வாழ்த்துவர் *[புற.34:17]*. 'பீடுகெழு வேந்தே! முறை வேண்டினார்க்குக் காட்சிக்கு எளியோர் மழை வேண்டுங்காலத்து அதனைப் பெற்றோராவர். நின்படைதரும் வெற்றி உழுபடை ஊன்றிய சாலில் விளைந்த நெல்லினது பயனேயாகும். இவற்றையுணரின், நின் பகைவர் நின்னடி போற்றுவர்', எனக், கிள்ளிவளவனுக்கு வெள்ளைக்குடி நாகனார் செவியறிவுறுத்தினார் *[புற.35:12]*. 'வளவ! அளந்தறியப்படாத உயர்ந்த சிமயத்தினையுடைய இமயத்தில் விற்பொறித்த வானவன் அழிய, அவனது அழிக்கமுடியாத வஞ்சியை அழிக்கும் நின் பீடுகெழுதாளைப் பாடுங்கால் எவ்வாறு எடுத்தியம்புவனோ?' எனக், கிள்ளிவளவனைப்பற்றி மாறோக்கத்து நப்பசலையார் பாடுவர் *[புற.39:18]*. 'பாண! மென்மையான் மகளிர்க்குத் தாழ்ந்து, வன்மையான் மறவரை அகப்படுக்கும் பீடுகெழு நெடுந்தகையாகிய உறந்தையோன், நீ செலின் பிறர் வாயிலை நினையாதிருக்குமாறு நினக்களிப்பன்', என நலங்கிள்ளியைப் பாணாற்றுப்படைத் துறையில் கோவூர்கிழார் பாடுவர் *[புற.68:7]*. 'பசும்பூட்செழியனது பீடும், செம்மலும் அறியாராகி இவனோடு பொருவேம், என, வந்த எழுவரைப் போரில் கொல்லுதல் என்பது, இதன் முன் யாம் கேட்டதில்லை', என, நெடுஞ்செழியன் மறத்தை இடைக்குன்றூர்கிழார் ஏத்துவர் *[புற.76:10]*. 'பெருந்தகை! நீ போரை வென்று விழுப்புண்பட்டமையால், நினது முற்படைக்கஞ்சி, ஓடலை மேற்கொண்ட, பீடில் மன்னரது நோயால் மடிந்த யாக்கையைப், பசிய புல்லில் கிடத்தி, மறவர் செல்வுழிச் செல்க, என, வாளால் போழ்ந்து அடக்கலும் நீங்கித், துறக்கமடைந்தனர்', என்று அதியனை ஔவையார் புகழ்வர் *[புற.93:4]*. 'நாளும், பொழுதும், புள்ளும் பொருந்தா நிலையில் சென்று திறப்பாடில்லாது மொழியினும், பீடுகெழு மலையனைப் பாடியோர் வறிதாக மீள்வாரல்லர்', எனக், காரியது இயல்பினைக் கபிலர் பாராட்டுவர் *[புற.124:5]*. ஆயது பொதியின்மலை, ஆடுமகள் அடைதற்கு எளிதல்லது பீடு கெழு மன்னர் அடைதற்கரிது *[புற.128:7]*. 'நள்ளி அளித்தலால், பீடில்லாத அரசருடைய செய்யாத செயல்களைக் கூறியறியாதாயிற்று, தன் சிறிய நா', எனக் கூறுவர் வன்பரணர் *[புற.148:5]*. 'நொச்சியே! மரங்களுள் விரும்பத்தக்காய் நீயே. மகளிர் அரையிலும் தழையுடையாகக் கிடக்கின்றாய்; மதிலுள்ளிருந்து மாறழித்து ஊர்ப்புறத்தைப் பகைவர் கவரக் கொடாத நெடுந்தகையது பீடுகெழு சென்னியின் உரிமையும் நினதேயாம்', எனச், செருவிடை வீழ்தல் துறையில் மோசிசாத்தனார் பாடுவர் *[புற.272:8]*. மாரிபோல அம்பு தைப்பினும், கெண்டைமீன் போல் வேல் பிறழினும், யானையின் நுனிக் கொம்பூன்றினும், பீடுடையாளர் புறங்காட்டார் *[புற.287:7]*. 'உழவுக்குதவும் பலவெருத்துள்ளும் நல்ல எருத்தினை வேறுவேறாக ஆராயும் உழவனைப் போலப் பீடு பெற்ற பழைமையான குடியில் வந்த மூதிலாளருள்ளும் சிறந்தவனைத் தேர்ந்தெடுத்து ஒருவன்,

தனக்கு வழங்கிய கள்ளை இவனுக்கே என்றும் கூறினான் *[புற.289:4]*. நரிக்கூட்டத்தோடு பேயும் தோன்றப், பூதம் காப்பப், போர்க்களத்தைத் தழுவிப் பாடி வருவோர்க்கு ஈதற் பொருட்டு பீடுடையாளன் அங்குத் தங்கினான் *[புற.369:18]*. பேரளவாகக் கற்பினும், சிறிதேனும் உணராத பீடில்லாது பெருகிய செல்வத்தினையுடைய உயர்ச்சியும், முயற்சியுமில்லாத மன்னரைப் புலவர் பாடுவாரல்லர் *[புற.375:20]*. 'கோடையாயினும், காவிரிகாக்கும் சோழ நாட்டு வேந்தன் வாழ்வானாக; அவனது பீடுகெழுதாளைப் பலவாகப் பாடுவேம்', எனக், கிள்ளிவளவனை நல்லிறையனார் பாடினார் *[புற.393:25]*.

தும்பைப் பகைவரது போர்ப்பீடு அழித்த போரை விரும்பும் வலியவன்; கூற்றுவனே வெகுண்டுவரினும் மாற்றும் ஆற்றலுடையவன். இமயவரம்பன் நெடுஞ்சேரலான் *[பதி.14:9]*. மின்னல் பரந்தது போல வேலை ஆடவர் வலனாக உயர்த்திப் பகைவரது அரிய அரணைக் கடந்த பீடு கொண்ட இயல்பினையுடைய பெரும்படைத்தலைவன் பல்யானைச் செல்கெழுகுட்டுவன் *[பதி.24:5]*.

'பீடுகெழு திருவினையுடைய மூவரும் கூடி அரசவையிருந்த தோற்றம் சிறந்து விளங்கியது *[பொரு.53]*. 'பகைவர் பீடு அழிய, எதிர் சென்று வென்று, அவர் நாடழிய அரணைக் கவர்ந்து, சுற்றத்தோடு வலிகெடுத்து அவர் நின்வழி நடப்ப, அரசியல் பிழையாது அறநெறியொழுகப் பெரியோர் சென்ற வழி பிழையாது, வழிவழியாகச் சிறக்க', என, நெடுஞ்செழியனை மாங்குடிமருதனார் வாழ்த்தினார் *[மது.186]*. 'பீடு கெழு சிறப்பினையுடைய பெருந்தக்கோனாகிய மன்னனல்லது சிறு தொழில் செய்யும் ஆண்மக்களும் அணுகமுடியாதது அருங்கடி வரைப்பு *[நெடு.106]*. பகைவரது காவலில் இருந்து, தன் பீடு வயிரமாக முற்றி, யானைதான் அகப்பட்ட குழியைக் குத்தி, நிரப்பிப் பிடியிடம் சேர்ந்தாற்போலக் கரிகாலன் பகைவரது காப்பை யழித்துப் போந்து, அரசுரிமையைப் பெற்றும் மகிழான் *[பட்.222]*.

போரை வென்று மடிந்த நாணுடை மறவரது பெயரும், பீடும், எழுதி, மயில்தோகை சூட்டிய வழிதோறும் நடுகல் விளக்கம் பெறும் *[அக.67:9]*. பிரிந்து சென்றோர்வரின், கரிகாலன் முன்னிலையில் செல்லாராகி, வாகைப் பறந்தலையில், தம் ஒன்பது குடையினையும் விட்டோடிய பீடில் மன்னர் ஒன்பதின்மரையும்போல, வாடையே, நீ ஓடுவை', எனத், தோழி கூறினாள் *[அக.125:21]*. கன்றினது கடைக் கண்ணினின்றொழுகும் நீரைத் துடைத்த கரந்தையோரது பெயரும், பீடும் எழுதிப் பீலி சூட்டிய நடுகல் காட்டிடையே விளங்கும் *[அக.131:10]*.

'யானும் ஓர் ஆடுகளமகளே, என்கை வளையினை நெகிழச் செய்த பீடு கெழு குரிசிலும் ஓர் ஆடுகளமகனே', எனக், கூறித் தலைவி அறத்தொடு நின்றாள் *[குறு.31:6]*.

'பீடுகெழு வேந்தன் போரில் பகை தீர்ந்து தன் நாட்டை நினைப்பானாகுக, வெப்பமாகப் பெருமூச்செறியும் என்நோய் தணிய, என்கண், தலைவியது இள முலையில் தூங்குக', எனத், தலைமகன் பாசறையிருந்து கூறினான் *[ஐங்.450:2]*.

முன்னும் ஓர் உதவியைச் செய்து, பின்னும், ஓர் உதவியைக், கேட்டிடத்தும், செய்யும் பீடுடையாளர் போல், பன்னீரால் பரந்தூட்டியபின்னும், நீர் குறையைச் சின்னீரால் இளவேனிலில் உதவும் *[கலி.34:5]*. 'சிவந்த நூற்கழியை ஒருவன் இருகையிலும் கோத்துப் பிடித்திருக்க, அந்நூலை, மூன்றாக்கிக் கொள்வானைப்போல், கொம்புகளோடே சுற்றிக், குடர்கள் பிணித்த, ஏற்றின் முன்னே நின்று, ஆடி, அக்குடரைக் கையால் வாங்கி, வயிற்றிலிடுவானது பீடு காண்க', எனத், தோழி கூறினாள் *[கலி.103:29]*. வானிருந்து வளியும், அதிலிருந்து தீயும், அதிலிருந்து நீரும், அதிலிருந்து நிலமும் தோன்றியதால், பீடாக, உயர்வாகச் செறிந்த, கூறிய அந்நான்கிற்கும் உள்ளீடாகிய, நிலத்தினூழி முதல்வன் திருமால் *[பரி.2:11]*.

**2. வலிமை.** தூசிப்படையோர் பனையின் நுங்கினை அயில, இடையோர் அதன் கனியினை நுகரப், பின்செல்வோர் அதன் கிழங்கினைத் தின்ன வலமுறையாக வந்து மன்னரது பீடு - வலியை - கெடுத்த, தானையையுடையவன் நலங்கிள்ளி *[புற.225:5]*. களிறு முகந்து செல்வேமெனின், அவையெல்லாம் அம்பு பட்டழிந்தன. தேர் முகக்குவம் எனின், ஈர்க்கும் குதிரையெல்லாம் நெடும்பீடழிந்து நிலத்து வீழ்ந்தன. குதிரை முகக்குவமெனினே, யாவும் வடுப்பட்டுக் குருதிப்புனலில் குவிந்தன, என, இரப்போர் இரங்கும் இன்னாத களம், எனப் போர்க்களத்தைக் கழாத்தலையார் புனைவர் *[புற.368:6]*. 'பண்ணனை நாளும் பாடேனாயின் பீடு (பெருமையுமாம்) கெழுதானைத் தென்னவன் என் பெருஞ்சுற்றத்தைப் புரத்தலில் கண்ணோட்டம் ஒழிவானாக', என்று மள்ளனார் பாடினார் *[புற.388:14]*.

பகைக்கொடுமையால் பலநாள் பாசறையிலே தங்கிப் பழகுதலால், தூங்குதல் அரிதாகப் பொருந்தும் சிறுதுயிலும் இயலாமல், வளையும், கொம்பும் முழங்கும் முழக்கு எழுப்பும் பீடு (பெருமையுமாம்) கெழுபடையாகிய செல்வத்திற்பழகிய செங்குட்டுவனுடைய கண் மகளிரது கூந்தல் மெல்லணையில் தங்கி இரவினைப் பயன் கொண்டதால் உண்டான சிறுதுயில் நீங்க எவ்வளவுநாள் ஆகுமோ என்று பரணர் பாடுவர் *[பதி.50:26]*. 'கொண்டவர்களைத் தாம் கொண்டகாலம் போலல்லாது, பிரியுமிடத்துப், பிறரிகழுமாறு, அவர்க்கொரு பீடின்றாகப், புறமே செல்லும் திருமகளைக் காட்டிலும், நிலைபேறில்லாத பொருளை, அறிவுடையோர் விரும்புவரோ?' எனத், தோழி, தலைவன் செலவழுங்கக் கூறினாள் *[கலி.8:13]*. அறிவிலாவமைச்சன் வினைசெய்யப், பீடிலாத அரசன் நாட்டில், பகைவேந்தன் படைவருதல் போலக், காதலரைக் கூடியோர் கூந்தலழகு போல், தகைபெற இளவேனில் வந்தது *[கலி.27:7]*.

**3. வளம்.** கரிந்த இடங்களையுடைய நிலத்தைப், பீடு - வளம் - பொருந்தி, வேறிடங்களுக்கு ஓடும் மழை, துறந்துவிட்டதாகத், தசையொழிந்த யானை வருந்தும் வேனில் *[அக.233:4].*

**பீர் -** பீர்க்கு. இமயவரம்பனின் களிற்றுக்கூட்டமாகிய நிரைய பாலரைப் போலும், படைவெள்ளம் பரந்தமையால் பகைவர் நாடு பழைய அழகு கெட்டு, வேளையொடு, சுரை மிகுந்து, பீர்- பீர்க்குக் கொடி - பரந்த நீரற்ற குறும்பு ஆயிற்று *[பதி.15:10].* குட்டுவனின் வயவர் சீறிய நாடு, பீர் படர்ந்த வேலியையுடைய பாழ்மனையோடு, நெருஞ்சிக் காடாகிய கடிய வழிகளையுடையவாயின *[பதி.26:10].*

'நம்காதலர் பிரிந்து காடு கடந்து சென்றனர். என் மாமை நிறம், பசலை பரத்தலால், பீரது அழகிய மலரை ஒப்பதாகும்', என்று தோழியிடம் தலைவி கூறினாள் *[அக.45:7].* 'நெஞ்சே! காட்டில் யாம் தமியேமாக, அவளது மதிபோலும் ஆய்ந்த அழகழியச், சிறுநுதல் பீரது மலர்போலும் வண்ணம் கொண்டது போலும்', என்று தலைமகன் நெஞ்சிற் குரைத்தான் *[அக.57:12].* 'நம் காதலர் காடு கடந்தனர். அதனால் தேமலுடன் கூடிய என்மாமை நிறமும், தளிர்போலும் அழகும் கெடப் பீரது புதிய மலரினையொத்த பசலை பாய்ந்த நுதலேனாகிக், கண்கலங்க, ஆதிமந்தி போல அறிவு மயங்கினேன்', என்று தலைமகள் தோழிக்குரைத்தாள் *[அக.135:2].* வாணிகச் சாத்தினை எறிந்து அவர் பொருளைக் கொள்ளை கொண்டுண்ணும் அம்பும், வில்லுமுடைய ஆடவர் பகைக்கஞ்சிக் குடி இடம் பெயர்ந்தமையால், ஊர் வளனற்ற, பீர், படர்ந்த பாழிடம் ஆயிற்று *[அக.167:10].* போர்முனை அகப்படுத்திக் கொண்டதால் பீர் படர்ந்து, மனைகள் பாழ்பட்டு மன்றத்தில் மான் வந்தடைந்து *[அக.373:1].*

'நம் தோட்டத்திலுள்ள மாரிக்காலப் பீரத்தின் மலர் சிலவற்றைக் கொண்டு சென்று, நல் நுதலவள் இத்தன்மையளாயினள் என்று தலைவனிடம் சொல்லுவாரைப் பெறின், நன்று', என்று தலைவி தோழியிடம் கூறினாள் *[குறு.98:5].*

'தோள்வளை நெகிழ்ந்தன. நெற்றி, பீர் மலர் போன்று பசலை பரந்தது. கண்களும், நீர் கொண்டன. இவை, என் உயிர் இறந்தொழிதற் பொருட்டே என வருந்தாதே', என்று தலைவனிடம் தோழி உரைத்தாள் *[நற்.197:2].*

பிரிந்தவர் நுதல்போலப், பீர்மலர்கழியப், புணர்ந்தவர் முகம்போலப், பொய்கையில் பூப்புதியனவாய்த் தோன்றப் பனியொடும், வாடையொடும் வந்து துன்பத்தைத் தலைவிக்குப் பொழுது மிகுவிக்கும் *[கலி.31:4].* நீ இனிய செய்து இன்னாமை தோன்றப் பிரிய, ஊரலர் தூற்ற, உடல் ஒளியிழந்து, நுதல் பீரலரின் அழகைக் கொண்டு, பிறைவனப்பினை இழவாத காலமாயின், தெய்வத்திற்குப் பரவுக்கடன் பூணாமையும் பொருந்தும்', என்று தலைவனிடம் தோழி கூறினாள் *[கலி.53:15].*

'தன் அழகு கெட, மனங்கலங்குதலாலே, பீரது மலரழகைத் தன்னிடத்தே கொண்ட பிறைநுதல் எடுத்துக்காட்ட வில்லையாயின், ஊரலர் தூற்ற, நீ இவளைக் கைவிடுகையால், தன்னை வருத்தும் காமநோயை என்னையும் மறைத்திருப்பாள்', எனத், தோழி தலைவனிடம் வரைவு கடாயினாள் *[கலி.124:8].* 'நீரில் அலர்ந்த நீலமலர் எனத், தலைவர் பாராட்ட, அவர்க்கு அன்று பெருந்துன்பத்தைச் செய்த கண்கள், இன்ற ஊரலர் தூற்றும் துன்பத்தால் பீரலர் போல, மிகப் பசந்தன', என்றாள் தலைவி *[கலி.143:49].*

**பீரம், பீரை - காண்க**

**பீரம் -** பீர்க்கு. முசுண்டையின் வெள்ளிய பொன்போற் பீரமொடு - பீரொடு - புதல்தோறும் மலரக் கூதிர் வந்தது *[நெடு.14].* பாரம், பீரம், குருக்கத்தி, ஆரம் முதலிய பல வண்ண, நறுமலர்களைக் கொய்து தழையுடையாகக், கோதையாக அமைத்து அணிந்து, அசோகமரநிழலில், தோழியும், தலைவியும் இருந்தனர் *[குறி.92].*

'தும்பி! நீ கொடியை. பீரம் ஊதி, மாறாக, நாற்றமின்மையால் என் பசலை ஊதாயாயினை. நின்பேடு, மகிழ ஓடி, நெஞ்சு நெகிழச்செய்ததன் பயனோ, அருஞ்சுரங்கடந்த என் காதலரிடம் சென்று எனது நிலையினை உரையாயாயினை! நின் மெய்யன்றி அறிவும் கரிதோ?' என்று, தலைவி தும்பியை நோக்கி வினவினாள் *[நற்.277:7].* 'தலைவ! நீ எம்புணம் வருதலுண்டெனினும் அதனை உணராது நீலமலர்போலும் இவள் கண், நுண்ணிய கொடிக்கண் காணும் பீரமலர் போலப் பசலை பரக்கும்', என்று தலைவனிடம் தோழி கூறினாள் *[நற்.326:6].*

'வளங்கொழிக்கக் கார் வந்தது. (இருந்தும்), நம் தலைவரது பகைவென்று திறைபெறும் முயற்சி, நம் தோளழகு கெடப், பொன்போலும் பீர மலர் வண்ணஞ்செய்தது', என்று, தலைமகள் கூறினாள் *[ஐங்.452:5].* 'தோழி! நின் நல்ல தோளைத் தழுவச் சுழலுவோராகிய நம் தலைவர், கண்போல் கருவிளைமலரப், பொன்போல் பீரம் மலரும் முன்பனிக்காலத்தை மறப்பாரல்லர்', எனத், தோழி தலைவியை வற்புறுத்தினாள் *[ஐங்.464:2].*

**பீர், பீரை — காண்க**

**பீரை -** பீர் / பீர்க்கு (காண்க- பீர், பீரம்). பாரி மகளிர், முள்வேலியையும், பஞ்சு பரந்தமுற்றத்தினையும் உடைய சிறிய மனையிடத்துப், பீரை - பீர் - முளைத்த, சுரை படர்ந்தவிடத்தில், ஈத்திலையையுடைய குப்பையின்கண் ஏறி, உமணரது உப்புச் செலுத்தும் சகடத்தை எண்ணினர் *[புற.116:6].*

**பீர், பீரம் — காண்க.**

**பீலி -** 1. தோகை / மயில். வயலிடத்து மயிலுதிர்த்த பீலியை - தோகையை - உழவர் நெற்சூட்டுடனே திரட்டும், கொழுவிய

மீனையும், விளைந்த கள்ளையுமுடைய, நீர் வேலியையுடையது நாடு [புற.13:10]. வலித்துப் பிணித்த வாரையுடைய கரிய பக்கம் பொலிவு பெற, மயிலினது நெடிய பீலியால் தொடுக்கப்பட்ட, நீலமணி போலும் நிறத்தையுடைய தாரை, உழிஞையோடு சூடிய, குருதிப்பலி கொள்ளும் வேட்கையுடையது அச்சம் பொருந்திய முரசம் [புற.50:3]. தொண்டைமானின் வேல் முதலிய, படைக்கலங்கள் பீலியணியப் பெற்று, மாலை சூட்டப்பட்டுக், காம்பு திருத்தப் பெற்று, நெய் தடவப்பட்டுக், காவலையுடைய அகலிடத்தன. அதியனின் படைக்கலங்கள் பகைவரைக் குத்திக், கங்கும், நுனியும் சிதைந்து, கொல்லனது பணிக்களரியாகிய குறிய கொட்டிலிடத்தன, என, வாண்மங்கலமாகக் ஔவையார் பாடியுள்ளார் [புற.95:1]. மலை பொருந்திய நாடு முழுவதும் கொடுப்பவும், கொள்ளாதவனுடைய கல்லின்கண், பீலியைச் சூட்டித், தேறலைச், சிறிய கலத்தான் உகுப்பவும், அதனைச் நெடுமானஞ்சி கொள்வனோ?' எனக், கையறுநிலையில் ஔவையார் பாடுவர் [புற.232:3]. பகைவரைப் புறங்கண்டு ஆநிரைத் தந்த நெடுந்தகைக்குப் பருக்கைக் கற்களையுடைய திட்டையில், சிவந்த பூவால் தொடுக்கப்பட்ட கண்ணியுடனே, பீலியைச் சூட்டிக் கல்லில் பெயரை எழுதி, நட்டனர் [புற.264:3]. நீலக்கச்சையும், பூத்தொழிலாடையும், பீலிக்கண்ணியும் உடைய மறவன், தன்னைத் தாக்கவந்த களிற்றொடு, வேலை எறிந்து போக்கி, இனித், தன்னையும் செலுத்துவான் போலும். வேலோடு, பகைவர் தன்னைப் பரிமேல் வந்து சூழ, அவற்றைக் கையினால் வாங்கி, மெய்யில் கொண்டனன், என, அம்மறவனது சிறப்பினை உலோச்சனார் பாடுவர் [புற.274:2].

மகளிர், கொன்றையின் மெல்லிய சினையில் பனி, தவழ்பவைபோல், அல்குலில் துகிலசைய, மலையில் பீலியையுடைய மயில்போல மாடத்து நடந்து, காலில் சிலம்பொலிப்பப், பந்து விளையாடிக், கையில் தொடியசைய, முத்துப்போன்ற மணலில், கழங்காடி மகிழ்வர் [பெரு.331].

தழைத்த நீண்ட பீலி ஒடுங்கச் செருக்கிய மயிலினது, ஊது கொம்பின் ஒலி போன்ற குரல், மலையின் எதிரொலி போன்று எதிரொலி செய்யும் [நெடு.98]. பீலியணிந்த கொம்புடன், யானையின் கைபோலும் நெடுவங்கியம், குறிய தூம்பு முதலிய பல இன்னியங்களைக் கட்டிய பையினர் கூத்தர் [மலை.5]. பீலியையுடைய மயில் அடியிளைத்து நிற்பினும், நெடிய மூங்கிலில் கடுவன் பாயினும், பக்கமலையில் தேருருள் போலும் தேன் கூடுகளைக் காணினும், கடுகப் பார்த்தலைத் தவிர்க்க, பார்க்கின், வழி தவற நேரும்', எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் [மலை.234].

பாகற் பழத்தைத் தின்னும், பறை போலும் வட்டமான கண்களைக் கொண்ட, பீலியையுடைய மயில் மிக்க சோலைகளையுடையது துளுநாடு [அக.15:4]. 'ஆனிரையை மீட்டு, வெட்சியாரை வீழ்த்திய, வில்லையே ஏராகக் கொண்டு வாழும் மறவர், கடவுளை வழிபட, நடுகல்லில் பீலி சூட்டித், துடி கொட்டித், தோப்பிக் கள்ளொடு, செம்மறியைப் பலி கொடுப்பர் [அக.35:8]. நல்ல போரை வென்று பட்ட நாணுடைய மறவரது பெயரும் பீடும் எழுதிப் பீலி சூட்டிய நடுகல் வழிதோறும் காணப்பெறும் [அக.67:10]. மயில் நீக்கிய பீலியை வார்ந்து, வில்லைச் சுற்றிப், பகையரண் பலவற்றைக் கடந்து வயவர் நல்லணிகலம் கொணர்வர் [அக.69:14]. நெய்தற்பூப் போலும் உருவினையுடைய இலையினையும், பீலியால் பொலிவுற்ற காம்பினையும், மூட்டுவாய் அமைந்த சுரையினையும் உடைய வேல் [அக.119:12]. போரில் மாண்போடு மடிந்த ஆடவரது பெயரும், பீடும் எழுதிப், பீலி சூட்டிய, விளங்கும் தோற்றமுடையது நடுகல் [அக.131:11]. வடுகர் மயில் கழித்த பீலியை, வில்லில் கட்டிய, விரையும் அம்புகளையுடையவர் [அக.281:4]. 'நீலமணி போன்ற நிறம் விளங்கும் கழுத்தினையும், அழகிய பீலியாகிய தோகையினையுமுடைய மயில் ஆடும் அழகினையொப்பக், குவளை மலரினைத் தொடுத்த, மாலையினை அடைச்சிய, கூந்தல் பரக்கத் தலைவியைச் சுனையின்கண் ஆயமோடு ஆடுக, என்று அன்னை வேண்டினள், எனச், சிறைப்புறமாகத், தோழி கூறினாள் [அக.358:2]. மலைவாழும் வருடையின் இளங்கடாக்கள் எழுப்பும் ஒலிகேட்டுப், பீலியுடைய மயில், அஞ்சி, ஆடுகளத்தின் கொம்பு போன்று ஒலித்து, வானில் பறந்து சென்று, மூங்கில், வளைய அதன் மீதிருக்கும் [அக.378:5]. 'ஆடு மயிலின் பீலிபோலக் கூந்தல் பொங்கத், துணைவனால் ஊக்கங்கொண்டு, வழிவருந்தக் கருதாது சென்ற இளையள், அறியப்படாத தேயத்துச். சிலம்பு கழித்து, வதுவை கொள்ளுதல், கொடிது', என, மகட்போக்கிய செவிலி உரைத்தாள் [அக.385:14].

வாடைக்காற்று நீலப்போதை மலரச் செய்து, பீலியின்கண்ணைப் போன்ற கருவிளை மலரை அசைத்து, ஈங்கையின் செவ்விய மலர்களை உதிர்த்தது [குறு.110:4]. 'தலைக்கொண்டை சிதையப், பீலி சாய, நல்ல மயில் வலையின்கண் பட்டது போன்று, யாம் வருந்துந்தோறும் யாய் எம்மை முயங்கும். அதனால் நின் குறிப்பறிந்தும், வரவியலவில்லை', எனக் கூறித், தலைவனிடம், தோழி வரைவு கடாயினாள் [குறு.244:4]. மழை பொருந்திய காட்டாற்றின் கரையிடத்துத் தழைத்த பீலி அசைய, நடந்து, ஆடும் மயில், அகவும் [குறு.264:2].

'தோழி! வேலின் இலையை மாசு போகத் துடைப்பர். கிடுகினையும் பீலி சூட்டி மணியணிவர். பண்டினும் பலபடிப் பாராட்டி அன்பு செய்வர். அவரது இச்செயற்குறிப்பு அறிந்தே, கண்ணீர் வெள்ளத்தில் நீந்தும் நாள் வந்தது போலும், என்று தோழியிடம் தலைமகள் உரைத்தாள் [நற்.177:6]. ஆடுமயிலின் பீலியினைப் போல், கண்போன்ற கருவிளைமலர், வாடைக்காற்றோடு அசைய, மழைத்தூவல் யாமத்தில் ஊரில் பரவியது [நற்.262:12]. அருவி ஆரவாரிக்கும் நெடுஞ்சிமையத்துக், காலைவெயிலில் காய்தல் வேண்டி, உயர்ந்த மரக்கிளையில்,

தன் பெடையோடு பீலியையுடைய மயில் ஆடும் *[நற்.288:3]*. பக்க மலையில் நனைந்து, மயிர் சிலிர்த்த நீலமணி போலும் குடுமியையும், பீலியையுமுடைய மயில் சோலையில் ஆடும் *[நற்.357:6]*.

நூலாலே, நீலமணி போலும் பீலியையும், பூளை, ஆவிரை, எருக்கம்பூவினையும் தொடுத்து அணிந்து மடல் மாவிலிருந்து, ஊர்த்தெருவில் தலைவன் தலைவியைப் பாடும் *[கலி.138:8]*. 'இதுமடலன்று; மாவென்றுணர்க. இவை, ஏனைப் பூவல்ல; பூளை, உழிஞை, (மயில்) மலையிலுதிர்த்த பீலி, ஆவிரை இவையிற்றை நூலில் பிணைத்துக் கட்டிச் சூடிய தார். என்னெஞ்சம் இடிய, என்னைக் கொள்ளும் சாயலாளுக்கு, யான் அடியுறை என்பது காட்டச் செல்கின்றேன்'. என, மடலேறுந் தலைவன் கூறினான் *[கலி.140:5]*.

'இளமையில் ஆடிய வறுங்கைப் போரால், இந்திரன் உடைய, இவனே நம் படைத்தலைவன் எனத், தீக்கடவுள் கோழியை, இந்திரன், பொறியையுடைய பீலி மயிலைக், கூற்றுவன் யாட்டைத், தர, இவை முதலானவற்றைப் பன்னிரு கையிலுங் கொண்டவன் செவ்வேள் *[பரி.5:60]*. 'முருகன் திருவடியில் கொண்டது, தாமரை போலும் அவ்வடிக்கியைந்ததும், தோலால் தைத்த முதுகுடையதும், பீலிப் போழால் அணி செய்யப்பட்டதுமாகிய, செருப்பு', *[பரி.21:7]*.

**2. மயிர்.** குருவியின் சேவல், பாணர் நரம்பினை வகிர்ந்த கோதோடு, குதிரை முதலிய விலங்கின் செறிந்த பீலி - மயிர் - (பிடரி, வால்மயிர்) கொண்டாக்கிய கூட்டில், வயல் நெல்லின் அரிசியை யுண்டு, தன் பெடையோடு வதியும் *[புற.318:6]*.

**பீள் - சூல் / கரு / குருத்து / கதிர்.** வரகு கரிய தண்டு நீண்டு எல்லாம் ஒருங்கு பீள் - சூல் - விரிந்து, கதிரின், அடியும், முடியும் ஒழியாமல் மிகக்காய்த்துச், சீரிதாக விளைந்தது *[புற.120:7]*. பூழின் சேவல், வெள்ளெள்ளைக் கவர்ந்து, எலியினை அலைக்க, அது வரகின் பீளிடை - கருவிடை - ஒளித்தது *[புற.321:6]*.

மழைநீராகிய புதிய வரவு நீங்கக், கிளைத்து பீள் விரிந்து, வளைந்த கதிர்களையுடைய வயலின், நெல்,ஒலி செய்யும் பள்ளங்களைத் துழாவிக், கல்லென்ற ஒலியுடன் வாடை விரைந்து வந்தது *[அக.243:6]*. நெல்லிக்காய் போன்ற, குறு விழிகளையுடைய முயல், வளைந்த வரகினது பருத்த பீளைத் - தின்று, கொடியிடைக் கிடந்துறங்கி, எழுந்து, துணையொடு போகி, வீட்டு முற்றத்திலுள்ள நீரைப்பருகும் *[அக.284:3]*. சேற்றிலுள்ள வள்ளைக் கொடியைச் சிதைத்து, நெல்லின் வளைந்த பீள் விரிய இறால் பாயும், *[அக.376:15]*.

'உலகத்துக் குளங்கள் எல்லாம் வற்றிய ஈரமில்காலைப், பீளொடு - சூலொடு - வாடிய நெற்பயிர்க்கு நடுயாமத்து மழை பெய்தது *[நற்.22:10]*.

'தலைவ, மழைக்கு அவாவுற்ற பீள் வாடும் நெல்லிற்கு, அப்பருவத்து நிறைய்ப் பெய்யாது, ஆராத சிறுதுவலையைப் பெய்தது போலும். நீ, ஓரியாண்டு ஓர்முறை வருவது? எனக், காமக்கிழத்தி தலைவனிடம் புலந்துரைத்தாள் *[கலி.71:24]*.